THE

# HOLY BIBLE,

CONTAINING THE

## OLD AND NEW TESTAMENTS.

IN THE TAMIL LANGUAGE.

---

# சத்தியவேதம்.

---

இதிலே

மனிதர் இரட்சிக்கப்படும்படிக்காக

சர்வலோக

தயாபரரான கர்த்தர்

அருளிச்செய்த

## பழையஏற்பாடும் புதியஏற்பாடும்

அடங்கியிருக்கின்றன.

---

கி. பி. ௲௮௱௪௰ - ௵ - லே
சென்னபட்டணத்தில் அச்சுப்பதிப்பிக்கப்பட்டது.

MADRAS:
PRINTED FOR THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY, AT THE AMERICAN MISSION PRESS.
1840.

மோசேயெழுதின

# முதலாம் ஆகமம்.

## ௧. அதிகாரம்.

பராபரன் லோகத்தை ஆறுநாளைக்குள்ளே உண்டாக்கின விவரம்.

௧ ஆதியிலே பராபரன் * வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார். * சங்கீ. ௩௩, ௬. ௱௨, ௨௫. யோவா. ௧, ௰௬. எபி. ௰௧, ௩.

௨ பூமியோவெனில் ஒழுங்கின்றதும் வெறுமையுமாயிருந்தது. ஆழத்தின்மேலிருளுமாயிருந்தது. அன்றியும் * பராபரனுடைய ஆவி தண்ணீர்களின்மேலே அசைவாடிக்கொண்டிருந்தார். * சங்கீ. ௩௩, ௬.

௩ பராபரன் வெளிச்சமுண்டாகக்கடவதென்றார். அப்பொழுது வெளிச்சமுண்டாயிற்று. ௨. கொரி. ௪, ௬.

௪ பராபரன் வெளிச்சத்தை நல்லதென்று கண்டார். வெளிச்சத்தையும் இருளையும் பராபரன் வெவ்வேறாகப் பிரித்தார்.

௫ பராபரன் வெளிச்சத்திற்குப் பகலென்று பேரிட்டார். இருளுக்கோ இரவென்று பேரிட்டார். இப்படியே சாயங்காலமான நேரமும் விடியற்காலமான நேரமும் முதலாம் நாளுண்டாயிற்று.

௬ பிற்பாடு பராபரன் தண்ணீர்களுக்கு நடுவாக * ஆகாயவிரிவுண்டாகக்கடவதென்றும், அது தண்ணீர்களுக்குந் தண்ணீர்களுக்கும் பிரிவுண்டாகக் கடவதென்றுஞ் சொன்னார். * சங்கீ. ௱௪, ௨.

௭ அப்படியே பராபரன் ஆகாயவிரிவை உண்டுபண்ணி, ஆகாயவிரிவுக்குக் கீழாயிருக்கிற தண்ணீர்களுக்கும், * ஆகாய விரிவுக்கு மேலாயிருக்கிற தண்ணீர்களுக்கும் பிரிவுண்டாக்கினார். அது அப்படியேயாயிற்று. * சங்கீ. ௱௪௮, ௪.

௮ ஆகாயவிரிவுக்குப் பராபரன் வானமென்று பேரிட்டார். இப்படியே சாயங்காலமான நேரமும் விடியற்காலமான நேரமும் இரண்டாம் நாளுண்டாயிற்று.

௯ பிற்பாடு பராபரன் வானத்தின் கீழிருக்கிற தண்ணீர்கள் * ஒரு இடத்திலே சேரவும் வெட்டாந்தரை காணப்படவுங் கடவதென்றார். அது அப்படியேயாயிற்று. * யோபு. ௩௮, ௮. ௰, ௰௧. சங்கீ. ௩௩, ௭. ௱௪, ௭—௯.

௰ பராபரன் வெட்டாந்தரைக்குப் பூமியென்றும் சேர்ந்த தண்ணீர்களுக்குச் சமுத்திரங்களென்றும் பேரிட்டார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௧ அப்பொழுது பராபரன், பூமியானது புல்லையும் விதையைப் பிறப்பிக்கிற பூண்டுகளையும், பூமியின்மேலே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைத் தங்கள் தங்கள் சாதியின்படியே கொடுக்குங் கனிவிருட்சங்களையும் முளைப்பிக்கக்கடவதென்றார். அது அப்படியேயாயிற்று.

௰௨ பூமி தங்கள் தங்கள் சாதியின்படியே புல்லையும் விதையைப் பிறப்பிக்கிற பூண்டுகளையுந், தங்கள் தங்கள் சாதியின்படியே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைக் கொடுக்கும் விருட்சங்களையும் முளைப்பித்தது. பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௩ அப்பொழுது சாயங்காலமும் விடியற்காலமுமான மூன்றாம் நாளுண்டாயிற்று.

௰௪ பிற்பாடு பராபரன் பகலுக்கும் இரவுக்கும் வித்தியாசம்பண்ணத்தக்க * வெளிச்சங்கள் வானமென்ற ஆகாயவிரிவிலேயுண்டாகக்கடவதென்றும், அவைகள் அடையாளங்களாகவுங் குறித்தகாலங்கள் நாட்கள் வருஷங்களையறிகிறதற்காகவுமிருந்து, * சங்கீதம். ௱௩௬, ௭—௯.

௰௫ பூமியின்மேலே பிரகாசிக்கும்படிக்கு வானமென்ற ஆகாயவிரிவிலே வெளிச்சங்களாயிருக்கக்கடவதென்றுஞ் சொன்னார். அது அப்படியேயாயிற்று.

௰௬ பராபரன் பகலை ஆளப் பெரிதாயிருக்கிற வெளிச்சமும், இரவை ஆளச் சிறிதாயிருக்கிற வெளிச்சமுமாகிய இரண்டு பெரிய வெளிச்சங்களையும் நட்சத்திரங்களையும் உண்டாக்கினார்.

௰௭ அவைகளைப் பராபரன் பூமியின்மேற் பிரகாசிக்கவும்,

௰௮ பகலையும் இரவையும் ஆளவும், வெளிச்சத்திற்கும் இருளுக்கும் வித்தியாசமுண்டாக்கவும், வானமென்ற ஆகாய விரிவிலே வைத்தார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௯ அப்பொழுது சாயங்காலமும் விடியற்காலமுமான நாலாம் நாளுண்டாயிற்று.

௨௰ பிறபாடு பராபரன் தண்ணீர்களானது நீந்தும் உயிர்ப்பிராணிகளையும் பூமியின்மேலே ஆகாசவிரிவிலே பறக்கும் பறவைகளையும் திரளாய்ச் ஜெனிப்பிக்கக்கடவதென்றார்.

௨௧ அப்படியே பராபரன் பெரிய திமிங்கலங்களையும் தண்ணீர்கள் சாதிசாதியாகத் திரளாய்ச் ஜெனிப்பித்த சகலவித நீச்சுப்பிராணிகளையும் சாதிசாதியாயிருக்கிற செட்டைகளுள்ள சகலவிதப் பட்சிகளையும் சிஷ்டித்தார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௨௨ பராபரன் அவைகளை ஆசீர்வதித்து *நீங்கள் பலுகிப் பெருகிக் கடல்களிலுள்ள தண்ணீர்களை நிரப்புங்களென்றும் பறவைகள் பூமியிற் பெருகக்கடவதென்றுஞ் சொன்னார். * அ, ய௭.

௨௩ அப்பொழுது சாயங்காலமும் விடியற்காலமுமான ஐந்தாம் நாளுண்டாயிற்று.

௨௪ பிறபாடு பராபரன் பூமியானது சாதிசாதியான ஜீவஜெந்துக்களாயிருக்கிற மிருகங்களையும் ஊர்வனங்களையும் பூமியின் காட்டு மிருகங்களையுஞ் சாதிசாதியாக எழும்பப்பண்ணக்கடவதென்றார். அது அப்படியேயாயிற்று.

௨௫ பராபரன் சாதிசாதியான பூமியின் காட்டு மிருகங்களையும், சாதிசாதியான மிருகங்களையும், சாதிசாதியான சகல பூமியின் ஊர்வனங்களையும் உண்டாக்கினார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௨௬ பிறபாடு பராபரன் * நம்முடைய சாயலாக நம்முடைய ரூபத்தின்படியே மனுஷனை யுண்டாக்குவோமாக. அவர்கள் சமுத்திரங்களின் மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும், மிருகஜீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனங்களையும் ஆளக்கடவர்களென்றார்.

* ௫, க. ௬, ௯. க. கொரி. ய௧, ௭. எபேசி. ௪, ௨௩—௨௪. கொலொ. ௩, ய.

௨௭ அப்படியே பராபரன் மனிதனைத் தம்முடைய சாயலாகச் சிஷ்டித்தார். அவனைப் பராபரனுடைய சாயலாகச் சிஷ்டித்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிஷ்டித்தார். * மத்தே. ய௯, ௪.

௨௮ அப்பொழுது பராபரன் அவர்களை யாசீர்வதித்து * நீங்கள் பலுகிப்பெருகிப் பூமியை நிரப்பப்பண்ணி அதைக்கீழ்ப்படுத்திச் சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும் பூமியின்மேல் நடமாடுகிற சகல மிருகஜீவன்களையும் ஆண்டுகொள்ளுங்களென்று பராபரன் அவர்களுக்குச் சொன்னார். * அ, ய௭. ௯, க.

௨௯ பின்னையும் பராபரன் சொன்னதாவது, * இதோ, பூமியின்மீதெங்கு மிருக்கிற விதைதருஞ் சகலவித பூண்டுகளையும், விதை தருங்கனிமரங்களாகிய சகலவித விருட்சங்களையும் உங்களுக்குக் கொடுத்தோம். அவைகள் உங்களுக்கு ஆகாரமாயிருக்கக்கடவது. * ௯, ௩.

௩௰ ஜீவப்பிராணனுள்ள பூமியினுடைய சகலமிருகங்களுக்கும், ஆகாயத்தினுடைய சகலபறவைகளுக்கும், பூமியின்மேல் ஊருகிறதெல்லாவற்றிற்குஞ் சகல பச்சைப்பூண்டுப் பயிர்களையும், ஆகாரமாகக் கொடுத்தோமென்றார். அது அப்படியேயாயிற்று.

௩௧ அப்பொழுது பராபரன் தாமுண்டாக்கின தெல்லாவற்றையும் பார்த்தார். இதோ, * மெத்தவும் நன்றாயிருந்தது. அப்படியே சாயங்காலமும் விடியற்காலமுமான திருல ஆறும்நாளுண்டாயிற்று.

* ௫. மோசே. ௩௨, ௪.

## ௨. அதிகாரம்.

ஓய்வுநாளின் கட்டளை.

இந்தப்பிரகாரமாக வானமும் பூமியும் அவைகளுடைய எல்லாச் சேனையும் உண்டாக்கப்பட்டு நிறைந்தது.

௨ பராபரன் உண்டாக்கின தம்முடைய கிரியையை ஏழாம்நாளிலே நிறைவேற்றினபிறகு, அவர் தாமுண்டாக்கின தம்முடைய கிரியையெல்லாம் முடிந்தபின் ஏழாம்நாளிலே ஓய்ந்திருந்தார்.

* உ. மோசே. ௨௰, ய௧. ௩௧, ய௭.

௫. மோசே. ௫, ய௪. எபிரே. ௪, ௪.

௩ பராபரன் ஏழாம்நாளையாசீர்வதித்து அதைப் பரிசுத்தமாக்கினார். அதேதெனில் பராபரன் உண்டுபண்ணிச் சிஷ்டித்த தம்முடைய கிரியையெல்லாம் முடிந்தபின், அதிலே ஓய்ந்திருந்தார்.

௪ பராபரனாகிய கர்த்தர் பூமியையும் வானத்தையும் உண்டாக்குகிற நாளிலே வானமும் பூமியுஞ் சிஷ்டிக்கப்பட்ட பூர்வோத்திரங்கள் இவைகளே.

பராபரன் பூமியைச் செடிகளாலும் பூண்டுகளாலும் மூடித்ததும் ஆதாமைச் சிஷ்டித்து அவனை ஏதேன்தோட்டத்தில் வைத்ததும், அவனுக்குத் துணையாக ஏவாளைச் சிஷ்டித்ததும் பின்னையும் வயணமாய் விவரிக்கப்பட்டது.

௫ நிலத்தினுடைய சகலவிதச் செடிகள் பூமியின்மேல் இன்னமிருந்ததில்லை. நிலத்தினுடைய சகலவிதப் பூண்டுகள் இன்னமுளைத்ததுமில்லை. ஏனென்றால் பராபரனாகிய கர்த்தர் பூமியின்மேல் இன்னம் மழையைப் பெய்யப்பண்ணினதில்லை. நிலத்தைப் பண்படுத்துகிற மனிதனுமில்லை.

௬ அப்பொழுது மூடுபனி பூமியிலிருந்தெழும்பிப் பூமியையெல்லாம் நனைத்தது.

௭ பராபரனாகிய கர்த்தர் மனிதனைப்* பூமியின் மண்ணினாலே யுருவாக்கி ஜீவனின் சு

௬ * அப்பொழுது ஸ்திரீயானவள் அந்த விருட்சம் போசனத்திற்கு நல்லதென்றும், அது கண்களுக்கு விருப்பமும், புத்தியைத் தருகிறதற்கான இச்சிக்கப்பட்டதுமான விருட்சமுமாயிருக்கிறதென்றும் பார்த்து, அதின் கனியிலே யெடுத்துப் புசித்துத் தன் புருஷனுக்குங் கூடக் கொடுத்தாள். அவனும் புசித்தான். * க. திமோ. உ, ௰௪.

௭ அப்பொழுது அவர்களிருவருடைய கண்களுந் திறக்கப்பட்டது. அவர்கள்* தாங்கள் நிருவாணிகளென்று கண்டறிந்து, அத்திமிலைகளைத் தைத்துத் தங்களுக்குக் கச்சைகளையுண்டுபண்ணினார்கள். * உ, உ௫

௮ பகல் குளிர்ச்சியான வேளையிலே வெண்டுலத் தோட்டத்திலே உலாவிக்கொண்டிருக்கிற பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக் கேட்டார்கள். அப்பொழுது ஆதாமும் அவன் பெண்சாதியும் பராபரனாகிய கர்த்தரின் சன்னிதியை விலக்கத் தோட்டத்து விருட்சங்களின் நடுவில் ஒளித்துக்கொண்டார்கள்.

௯ ஆனாற் பராபரனாகிய கர்த்தர் ஆதாமைக் கூப்பிட்டு, அவனுக்கு நீ எங்கேயென்றார்.

௰ அதற்கவன் நான் தேவரீருடைய சத்தத்தைத் தோட்டத்திலே கேட்டு, நான் நிருவாணியானபடியினாலே பயந்து, ஒளித்துக்கொண்டேனென்றான்.

௰௧ அப்பொழுது அவர் நீ நிருவாணியென்று உனக்கறிவித்தவனார்? *புசிக்கவேண்டாமென்று நான் உனக்குக் கற்பித்த விருட்சத்தின் கனியிலே புசித்தாயோ என்றார்? * உ, ௰௭—௰௭.

௰௨ அதற்கு ஆதாம், என்னுடனேயிருக்கத் தேவரீர் கட்டளையிட்ட ஸ்திரீயானவள் விருட்சத்தின் கனியை யெனக்குக் கொடுத்தாள். நான் புசித்தேனென்றான்.

௰௩ அப்பொழுது பராபரனாகிய கர்த்தர் ஸ்திரீக்கு, நீ யிதைச் செய்ததென்னவென்றார். ஸ்திரீயானவள், சர்ப்பம் என்னை மோசம்போக்கினதினாலே புசித்தேனென்றாள்.

௰௪ அப்பொழுது பராபரனாகிய கர்த்தர் சர்ப்பத்துடனே சொன்னதாவது நீ யிதைச் செய்தபடியினாலே, எல்லா மிருகங்களிலும் வெளியிலுடைய எல்லா ஜீவன்களிலும் நீ சபிக்கப்பட்டது, நீ உன் வயிற்றினாலே நகர்ந்து, உயிரோடிருக்கிற நாளெல்லாம் மண்ணைத் தின்னுவாய்.

௰௫ உனக்கும் ஸ்திரீக்கும், உன்னுடைய வித்துக்கும் அவளுடைய வித்துக்கும், பகையையுண்டாக்குவேன். * இவர் உன் தலையை நசுக்குவார், நீ அவர் குதிகாலை நசுக்குவாயென்றார். *க. யோவ. ௩, ௮.

௰௬ ஸ்திரீயோடே அவர் சொன்னதாவது நீ கர்ப்பவதியாயிருக்கும் வருத்தத்தை மிகவும் பெருகப்பண்ணுவேன். வேதனையோடே பிள்ளைகளைப் பெறுவாயென்றும், உன்னுடைய இச்சை உன் புருஷனுக்குக் கீழாயிருப்பதாக. அவன் உன்னை ஆளக்கடவனென்றுஞ் சொன்னார். *க. கொரி. ௰௪, ௩. ௰௪, ௩௪. எபேசி. ௫, உ௨ உ௩.

௰௭ பிற்பாடு ஆதாமோடே அவர் சொன்னதாவது நீ உன் பெண்சாதியின் சத்தத்திற்குச் செவிகொடுத்துப் புசியாயாகவென்று நானுனக்குக் கற்பித்த விருட்சத்தின் கனியைப் புசித்தபடியினாலே, பூமி உன்னிமித்தஞ் சபிக்கப்பட்டிருக்கும் நீ உயிரோடிருக்கிற நாளெல்லாம் வருத்தத்தோடே அதன் பலனைப் புசிப்பாய்.

௰௮ அது உனக்கு முள்ளுங் குருக்குமுளைப்பிக்கும். வெளியின் பயிர்வகைகளைப் புசிப்பாய்.

௰௯ நீ பூமிக்குத் திரும்புமட்டும்,* உன் முகத்தின் வேர்வையால் அப்பம் புசிக்கக்கடவாய். அதேனெனில் அதிலே யெடுக்கப்பட்டாய். ஏனென்றால் † நீ மண்ணாயிருக்கிறாய். மண்ணுக்குத் திரும்புவாயென்றார்.

*உ. தெச. ௩, ௰. † ௰௮, உ௭

உ௰ ஆதாம் தன் பெண்சாதிக்கு ஏவாளென்று பேரிட்டான் ஏனெனில் அவள் ஜீவனுள்ளோருக்கெல்லாந் தாயானவள்.

உ௧ பராபரனாகிய கர்த்தர் ஆதாமுக்கும் அவன் பெண்சாதிக்குந் தோலால் அங்கிகளையுண்டாக்கி அவர்களுக்குத் தரிப்பித்தார்.

உ௨ பிற்பாடு பராபரனாகிய கர்த்தர் இதோ, மனிதன் நன்மை தீமையறியத்தக்கவனாய் நம்மிலொருவனைப்போலவிருந்தான். இப்பொழுதும் அவன் தன் கையை நீட்டி ஜீவவிருட்சத்தின் கனியையும் புசித்து, என்றைக்கும் உயிரோடிராதபடிக்குக் கட்டளையிடவேண்டுமென்று சொல்லி,

உ௩ பராபரனாகிய கர்த்தர் அவனை அவன் எடுக்கப்பட்ட பூமியைப் பயிரிடும்படிக்கு, ஏதேன் தோட்டத்திலிருந்தனுப்பிவிட்டார்.

உ௪ அவர் மனிதனைத் துரத்திவிட்டு, ஏதேனென்ற தோட்டத்திற்குக் கிழக்கே கெருபீன்களையும் அசைவாடுகிற சுடர் ஒளிவுள்ள பட்டயத்தையுஞ் ஜீவவிருட்சத்திற்குப் போகிற வழியைக் காப்பதற்காக வைத்தார்.

## ௪. அதிகாரம்.

### காயீன் ஆபேலைக் கொன்றது.

பிற்பாடு ஆதாம் தன் பெண்சாதியாகிய ஏவாளையறிந்தான். அவள் கர்ப்பந்தரித்துக் காயீனைப் பெற்றுக் கர்த்தராகிய புருஷன் எனக்கிருக்கிறானென்றாள்.

உ அப்புறம் அவன் சகோதரனாகிய ஆபேலைப் பெற்றாள். ஆபேல் ஆடுமேய்ப்ப

னுன். காயீனோவெனில் நிலத்தைப் பயிரிடுகிறவனுனுன்.

௩ சிலநாட் சென்றபிற்பாடு சம்பவித்ததென்னவென்றால், காயீன் நிலத்தின் கனியிலே கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தான்.

௪ ஆபேலுமென்னவென்றால் அவனுந் தன்மந்தையின் தலையீற்றுகளிலும் அவைகளின் கொழுப்பிலுஞ் சிலத்தைக் கொண்டுவந்தானாகையால் * கர்த்தர் ஆபேலையும் அவன் காணிக்கையையும் நோக்கிப்பார்த்து, * எபிரே. யக, ச.

௫ காயீனையும் அவன் காணிக்கையையும் நோக்கிப்பாராதேபோனார். அப்பொழுது காயீனுக்கு மிகவும் எரிச்சலுண்டாய் அவனுடைய முகநாடி வேறுபட்டது.

௬ அப்பொழுது கர்த்தர் காயீனோடே சொன்னதாவது உனக்கேன் எரிச்சலுண்டாகிறது? உன்முகநாடி ஏன் வேறுபட்டது?

௭ நீ நன்மைசெய்தால் மேன்மையில்லையோ? நீ நன்மைசெய்யாமேயானால், பாவம் வாசற்படியிலே படுத்துக்கொண்டிருக்கிறது. அதின் இச்சை உன்மேலிலவைக்கப்பட்டது * நீயோவெனில் அதை ஆண்டுகொள்ளுவாயாகவென்றார். * றோம. ௬, யஉ.

௮ அப்பொழுது காயீன் தன் சகோதரனாகிய ஆபேலோடே பேசினான். அவர்கள் வெளியிலேயிருக்கிறபொழுதாவெனில் சம்பவித்ததென்னவென்றால், காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுக்கு விரோதமாயெழும்பி,* அவனைக்கொன்றுபோட்டான். * மத்தே. உ௩, ௩௫. க யோவ. ௩, யஉ. யூதா. யக. வசனம்.

௯ கர்த்தர் காயீனுடனே உன்சகோதரனாகிய ஆபேலெங்கேயென்றார். அதற்கவன் நானறியேன். நான் என்சகோதரனுக்குக் காவலாளியோவென்றான்.

ய அப்பொழுது அவர் சொன்னதாவது, என்னசெய்தாய்? உன் சகோதரனுடைய இரத்தத்தின் சத்தம் * பூமியிலிருந்து தம்மை நோக்கிக் கூப்பிட்டுக்கொண்டிருக்கிறது. * எபிரே. யஉ, உ௪.

யக இப்பொழுதும் உன் சகோதரனுடைய இரத்தத்தை யுன்கையிலேவாங்கிக்கொள்ளத் தன் வாயைத் திறந்த இந்தப் பூமியிலே நீ யிராதபடிக்குச் சபிக்கப்பட்டிருப்பாய்.

யஉ நீ நிலத்தைப் பயிரிடும்பொழுது அது இனித்தன் சாரத்தை யுனக்குக் கொடாது. நீ பூமியிலே நிலையற்றவனும் அலைகிறவனுமாயிருப்பாயென்றார்.

ய௩ அப்பொழுது காயீன் கர்த்தரோடே சொன்னதாவது, என் அக்கிரமம் மன்னிக்கப்படக் கூடாதபடிக்குப் பெரிதாயிருக்கிறது.

ய௪ இதோ, இன்றென்னை யிந்தத் தேசத்திலிருந்து துரத்திவிடுகிறீர். நான் தேவரீருடைய சமுகத்தைவிலகி மறைந்து, * பூமியிலே நிலையற்றவனும் அலைகிறவனுமாயிருப்பேன். இப்படி என்னைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் என்னைக் கொன்றுபோடுவானென்றான். * யோபு. ய௫, உய. உக.

ய௫ அப்பொழுது கர்த்தர் அவனுடனே ஆகையாற் காயீனைக் கொல்லுகிற எவன்பேரிலும் ஏழுபழி சுமருமென்று சொல்லிக் காயீனைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் அவனைக் கொன்றுபோடாதபடிக்குக் கர்த்தர் அவனுக்கொரு அடையாளம்போட்டார்.

ய௬ அப்படியே காயீன் கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப் புறப்பட்டு ஏதேனுக்குக் கிழக்கான் நோதென்றதேசத்திற் குடியிருந்தான்.

### காயீனுடைய சந்ததி.

ய௭. காயீன் தன்பெண்சாதியையறிந்தான். அவள் கர்ப்பந்தரித்து, ஏனோக்கைப் பெற்றாள். ஒருபட்டணத்தைக் கட்டி, அந்தப் பட்டணத்திற்குத் தன்குமாரன் ஏனோக்குடைய பேரைத் தரித்தான்.

ய௮ ஏனோக்குக்கு ஈராத் பிறந்தான். ஈராத் மெகுயவேலைப் பெற்றான் மெகுயவேல் மெத்தூசவேலைப் பெற்றான். மெத்தூசவேல் லாமேக்கைப் பெற்றான்.

ய௯ லாமேக் இரண்டுபெண்சாதிகளை விவாகம்பண்ணினான். முதலாம்பெண்சாதியின் பேர் ஆதாள். இரண்டாம்பெண்சாதியின் பேர் சில்லாள்.

உய ஆதாள் யாபாலைப்பெற்றாள். அவன் கூடாரங்களில் வாசம்பண்ணி மந்தை வைக்கிறவர்களுக்குத் தகப்பனானான்.

உக அவன்சகோதரனுடையபேர் யூபால், அவன் சகல சுரமண்டலக்காரருக்குங் கின்னரக்காரருக்குந் தகப்பனானான்.

உஉ சில்லாளுங் கர்ப்பந்தரித்துத் தூபாள்காயீனைப் பெற்றாள். அவன் சகலகன்னாருக்குங் கொல்லருக்கும் முதலாளி. தூபாள் காயீனுடைய சகோதரி நாமாள்.

உ௩ லாமேக் தன்பெண்சாதிகளாகிய ஆதாளோடுஞ் சில்லாளோடுஞ் சொன்னதாவது லாமேக்கின்பெண்சாதிகளே! என் சத்தத்தைக் கேட்டு என் சொல்லுக்குக் கவனமாயிருங்கள். ஒருமனிதனை எனக்குக் காயமுண்டாகவும் ஒருவாலிபனை யெனக்குத் தழும்புண்டாகவுங் கொன்றுபோட்டேன்.

உ௪ காயீனுக்காக ஏழுபழியும் லாமேக்குக்காக எழுபத்தேழுபழியுஞ் சுமருமென்றான்.

### சேத் ஆதாமுக்குப் பிறந்தது.

உ௫ ஆதாம் பின்னையுந் தன்பெண்சாதியையறிந்தான். அவள் ஒருகுமாரனைப் பெற்றுக் காயீன் கொன்றுபோட்ட ஆபேலுக்குப் பதிலாகப் பராபரன் எனக்கு வேறொரு

வினைக்கொடுத்தாரென்றுசொல்லி, அவனுக்குச்* சேத் என்றுபேரிட்டாள். * ரு, ங.

௨௬ சேத்துக்கும் ஒருகுமாரன்பிறந்தான். அவனுக்கு * ஏனோஸ் என்றுபேரிட்டான். அப்பொழுது கர்த்தருடையநாமத்தைத் தொழுதுகொள்ளத் துவக்கமாயிற்று. * ரு, சா.

## ரு. அதிகாரம்.

ஆதாம்முதற்கொண்டுநோவாமட்டும் உண்டானதலைமுறைகள்.

ஆதாமுடையசந்ததிகளின் அட்டவணையாவது: * பராபரன் மனிதனைச் சிருஷ்டிக்கிறநாளிலே † அவனைப்பராபருடைய சாயலாகவுண்டாக்கினார். * க. நாளா. ச, ழ. † க, உஎ.

௨ அவர்களை ஆணும் பெண்ணுமாகச் சிருஷ்டித்து, அவர்களையாசீர்வதித்து, அவர்களைச் சிருஷ்டிக்கப்பட்ட நாளிலே அவர்களுக்கு மனிதர்களென்றுபேரிட்டார்.

௩ ஆதாம் நூற்றுமுப்பதுவருஷம் உயிரோடிருந்தபொழுது தன்சாயலாகத் தன்னுடைய ரூபத்தின்படியே ஒருகுமாரனைப்பெற்று, * அவனுக்குச் சேத்தென்றுபேரிட்டான். * ச, உரு.

௪ ஆதாம்சேத்தைப்பெற்றபிறபாடு, எண்ணூறுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங்குமாத்திகளையும்பெற்றான்.

௫ ஆகையால் ஆதாம் உயிரோடிருந்த நாளெல்லாந்தொளாயிரத்து முப்பதுவருஷமாயிருந்தது. பிற்பாடுமரித்தான்.

௬ சேத் நூற்றைந்துவயதாயிருந்து, * ஏனோசைப்பெற்றான். * ச, உசா.

௭ சேத் ஏனோசைப்பெற்றபிறபாடு, எண்ணூற்றேழுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங்குமாத்திகளையும்பெற்றான்.

௮ ஆகையாற்சேத்துடைய நாளெல்லாந்தொளாயிரத்துப்பன்னிரண்டுவருஷமாயிருந்தது. பிறபாடுமரித்தான்.

௯ ஏனோஸ்தொண்ணூறுவயதாயிருந்து கேனானைப்பெற்றான்.

௰ ஏனோஸ் கேனானைப் பெற்றபிறபாடு எண்ணூற்றுப்பதினைந்துவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாத்திகளையும்பெற்றான்.

௰௧ ஆகையால் ஏனோசுடைய நாளெல்லாந்தொளாயிரத்தைந்துவருஷமாயிருந்தது. பிற்பாடு மரித்தான்.

௰௨ கேனான் எழுபதுவயதாயிருந்து மகலாலேயேலைப்பெற்றான்.

௰௩ கேனான் மகலாலேயேலைப்பெற்றபிற்பாடு எண்ணூற்றுநாற்பதுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங்குமாத்திகளையும்பெற்றான்.

௰௪ ஆகையாற் கேனானுடைய நாளெல்லாந்தொளாயிரத்துப்பத்துவருஷமாயிருந்தது. பிற்பாடுமரித்தான்.

௰௫ மகலாலேயேல் அறுபத்தைந்துவயதாயிருந்து யாரேதைப்பெற்றான்.

௰௬ மகலாலேயேல் யாரேதைப்பெற்றபிற்பாடு எண்ணூற்றுமுப்பதுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங்குமாத்திகளையும்பெற்றான்.

௰௭ ஆகையால்மகலாலேயேலுடையநாளெல்லாம் எண்ணூற்றுத்தொண்ணூற்றைந்துவருஷமாயிருந்தது. பிற்பாடுமரித்தான்.

௰௮ யாரேத் நூற்றறுபத்திரண்டு வயதாயிருந்து ஏனோக்கைப்பெற்றான்.

௰௯ யாரேத் ஏனோக்கைப் பெற்றபிற்பாடு எண்ணூறுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங்குமாத்திகளையும்பெற்றான்.

௨௰ ஆகையால் யாரேத்துடையநாளெல்லாந்தொளாயிரத்தறுபத்திரண்டு வருஷமாயிருந்தது. பிற்பாடுமரித்தான்.

௨௰௧ ஏனோக் அறுபத்தைந்துவயதாயிருந்து, மெத்தூசலாவைப்பெற்றான்.

௨௰௨ ஏனோக் மெத்தூசலாவைப் பெற்றபிற்பாடு, முந்நூறுவருஷம் பராபரனோடே சஞ்சரித்துக்கொண்டிருந்து குமாரரையுங் குமாத்திகளையும்பெற்றான்.

௨௰௩ ஏனோக்குடையநாளெல்லாம் முந்நூற்றறுபத்தைந்து வருஷமாயிருந்தது.

௨௰௪ * ஏனோக் பராபரனோடே சஞ்சரித்துக்கொண்டிருக்கக்கொள்ள இராமற்போனான். ஏனெனிற் பராபரன் அவனையெடுத்துக்கொண்டார். * எபிரே. ௰௧, ரு. யூதா. ௰௪. வச. † உ. இராசா. உ, ௰௧.

௨௰௫ மெத்தூசலா நூற்றெண்பத்தேழு வயதாயிருந்து லாமேக்கைப்பெற்றான்.

௨௰௬ மெத்தூசலா லாமேக்கைப்பெற்ற பிறபாடு எழுநூற்றெண்பத்திரண்டு வருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாத்திகளையும்பெற்றான்.

௨௰௭ ஆகையால் மெத்தூசலாக்குடைய நாளெல்லாந்தொளாயிரத்தறுபத்தொன்பதுவருஷமாயிருந்தது. பிற்பாடுமரித்தான்.

௨௰௮ லாமேக் நூற்றெண்பத்திரண்டுவயதாயிருந்து ஒருகுமாரனைப்பெற்று,

௨௰௯ கர்த்தர்சபித்த பூமியிலே உண்டான நம்முடைய வேலையிலும் நம்முடையகைகளின்வருத்தத்திலும் இவன் நம்மைத்தேற்றுவானென்றுசொல்லி, அவனுக்கு நோவாவென்றுபேரிட்டான்.

௩௰ லாமேக் நோவாவைப்பெற்றபிறபாடு ஐந்நூற்றுத்தொண்ணூற்றைந்து வருஷம் உயிரோடிருந்து குமாரரையுங்குமாத்திகளையும்பெற்றான்.

௩௰௧ ஆகையால் லாமேக்குடையநாளெல்லாம் எழுநூற்றெழுபத்தேழுவருஷமாயிருந்தது. பிறபாடுமரித்தான்.

௩௨ நோவா ஐந்நூறு வயதானபொழுது, நோவா * சேமையுங் காமையும் யாப்பேத்தையும் பெற்றான். * ௬, ௰.

## ௬. அதிகாரம்.

*சலப்பிரளயம் முன்னறிவிக்கப்பட்டது.*

மனிதர் பூமியின்மேற் பெருகத்துவக்கி அவர்களுக்குக் குமாரத்திகள் பிறந்தபொழுது, சம்பவித்ததேதென்றால்,

௨ பராபரனுடைய குமாரர் மனிதருடைய குமாரத்திகளை அவர்கள் சவுந்தரியமுள்ளவர்களென்று பார்த்துத் தாங்கள் தெரிந்துகொண்ட அனைவரிலும் பெண்களைக் கொண்டார்கள்.

௩ அப்பொழுது கர்த்தர் *நம்முடைய ஆவி என்றென்றைக்கும் மனிதரோடே போராடுவதில்லை. ஏனெனில் அவர்கள் தானும் மாம்சம், அவர்கள் இருக்கப்போகிற நாட்கள் நூற்றிருபது வருஷமென்றார். * ஏசா. ௫௭, ௰. அப்ப. ௭, ௫௧.

௪ அந்நாட்களில் இராட்சதர் பூமியிலே இருந்தார்கள். பிற்பாடு பராபரனுடைய குமாரர் மனிதருடைய குமாரத்திகளோடே கூடிவந்ததினாலவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றபொழுது இவர்களும் பூர்வத்திற் பேர்பெற்ற மனிதராகிய பலவான்களானார்கள்.

௫ ஆனால் மனிதனுடைய அக்கிரமம் பூமியிலே பெரியதென்றும்* அவன் இருதயத்தினுடைய நினைவுகளின் தோற்றமெல்லாம் நித்தமும் பொல்லாததேயென்றும் † கர்த்தர் கண்டபொழுது, * ௮, ௨௧. மத்தே. ௰௫, ௰௯. † சங்கீதம். ௰௪, ௨.

௬ தாம் பூமியிலே மனிதனை உண்டாக்கினதற்குக் கர்த்தர் மனஸ்தாபப்பட்டார். அது அவர் இருதயத்திற்கு நோவாயிருந்தது.

௭ அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது, நான் சிஷ்டித்த மனிதனைப் பூமியின்மேலே வைக்காமல், மனிதன் முதற்கொண்டு மிருகங்கள் பரியந்தமும் ஊர்வனங்கள் பரியந்தமும் ஆகாயத்துப் பறவைகள் பரியந்தமும் உண்டாயிருக்கிறதை நிர்க்கிரகம்பண்ணுவோம். ஏனெனில் நாம் அவர்களையுண்டாக்கினது நமக்கு மனஸ்தாபமாயிருக்கிறதென்றார்.

௮ ஆனால் * நோவாவுக்குக் கர்த்தருடைய கண்களிற் கிருபைகிடைத்தது. * எபிரே. ௰௧, ௭.

௯ நோவாவின் சந்ததியாவது, நோவா தன்காலத்தில் இருந்தவர்களுக்குள்ளே நீதியும் உத்தமுமான மனிதனாயிருந்தான். நோவா பராபரனோடே சஞ்சரித்து வந்தான். * ௫, ௨௨.

௰ நோவா சேம், காம், யாப்பேத்தென்ற மூன்று குமாரரைப் பெற்றான். * ௫, ௩௨.

௰௧ பூமியோவெனிற் பராபரனுக்கு முன்பாகக் கெடுக்கப்பட்டிருந்தது. கொடுமையினாலே பூமி நிறைந்தது.

௰௨ பராபரன் பூமியைப் பார்த்தார். இதோ, கெடுக்கப்பட்டதாயிருந்தது. ஏனெனில் மாம்சமெல்லாம் பூமியின்மேல் தன்வழியைக் கெடுத்தது.

௰௩ அப்பொழுது பராபரன் நோவாவுக்குச் சொன்னதாவது, எல்லா மாம்சத்தின் முடிவும் நமக்கு முன்பாக வந்தது. ஏனெனில் அவர்களாற் பூமி கொடுமையினாலே நிறைந்தது. இதோ, நாம் அவர்களைப் பூமியோடுங்கூட அழித்துப்போடுவோம்.

௰௪ நீ கொப்பேர் மரங்களால் உனக்கொரு பேழையையுண்டாக்கு. அந்தப் பேழையிலே அறைகளையுண்டாக்கி அதை உள்ளும் புறம்புமாகக் கீல் பூசுவாயாக.

௰௫ நீ அதைப் பண்ணவேண்டிய பிரகாரமாவது, பேழையின் நீளம் முந்நூறு முழமும் அதின் அகலம் ஐம்பது முழமும் அதின் உயர்த்தி முப்பது முழமுமாயிருப்பதாக.

௰௬ நீ பேழைக்கு வெளிச்சம் வருந் திறப்பைப்பண்ணி, மேல்தட்டுக்கு ஒருமுழத் தாழ்த்தியிலே அதைச் செய்து முடித்துப் பேழையின் கதவை அதின்பக்கத்திலே வைத்துக் கீழ் அறைகளையும் இரண்டாந்தட்டின் அறைகளையும் மூன்றாந்தட்டின் அறைகளையும் பண்ணுவாயாக.

௰௭ ஏனென்றால் இதோ, வானத்தின் கீழே ஜீவசுவாசமுள்ள எல்லா மாம்சத்தையும் அழிக்க, நாம் பூமியின்மேற் சலப்பிரளயத்தை வரப்பண்ணுவோம். பூமியிலுள்ளதெல்லாம் மாண்டுபோம்.

௰௮ ஆனால் உன்னோடே நம்முடைய உடம்படிக்கையை நிலைநிறுத்துவோம். நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் உன் பெண்சாதியும் உன் குமாரரின் பெண்சாதிகளும் பேழைக்குட் பிரவேசிக்கக்கடவீர்கள்.

௰௯ உன்னோடேகூட உயிரோடே காப்பதற்கு நீ எல்லாவித மாம்சமான சகல ஜீவன்களிலும் * வகையொன்றுக்கு ஆணும் பெண்ணுமாயிருக்கிற ஒருசோடு பேழைக்குட் சேர்த்துக்கொள்ளுவாயாக. * ௭, ௯.

௨௰ சாதிசாதியான பறவைகளிலுஞ் சாதிசாதியான மிருகங்களிலும் சாதிசாதியான பூமியின் எல்லா ஊர்வனங்களிலும் வகை ஒவ்வொன்றுக்கு ஒவ்வொருசோடு உயிரோடே காக்கப்படுவதற்கு உன்னண்டைக்கு வரக்கடவது.

௨௧ ஆகையால் நீ தின்னுகிற சகலவிதப் பண்டங்களையும் எடுத்துக்கொண்டு உனக்கும் அவைகளுக்கும் ஆகாரமாயிருப்பதற்காக, உன்னண்டையிலே சேர்த்துக்கொள்ளக்கடவாயென்றார்.

௨௨ *நோவா அப்படிச்செய்தான். பராபரன் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் அவன்செய்தான். *எ, ரு எபிரே. ௰௧, ௭.

## ௭. அதிகாரம்.

சலப்பிரளயம் உண்டானது.

பிற்பாடு கர்த்தர் நோவாவோடே சொன்னதாவது *நீயும் உன்வீட்டார் யாவரும் பேழைக்குட்பிரவேசியுங்கள். ஏனெனில் இந்தச்சந்ததியில் உன்னை நமக்குமுன்பாக நீதிமானாகக் கண்டோம். *௨. பேது. ௨, ரு.

௨ பூமியின்மீதெங்கும் வித்தை உயிரோடேகாக்கும்படிக்கு நீ சுத்தமான சகலமிருகங்களிலும் ஆணும் பெண்ணுமாயிருக்கிற எவ்வேழுசோடும் சுத்தமல்லாதமிருகங்களிலேயென்றால் ஆணும்பெண்ணுமாயிருக்கிற ஒவ்வொருசோடும்,

௩ ஆகாயத்துப் பறவைகளிலும் சேவலும் பேடுமாயிருக்கிற எவ்வேழுசோடும் உன்னண்டைசேர்த்துக்கொள்ளக்கடவாய்.

௪ ஏனெனில் இன்னம் ஏழுநாட்சென்ற பிற்பாடு நாம் பூமியின்மேல் இரவுபகல் நாற்பதுநாளாக மழையை வருஷிக்கப்பண்ணி, நாம் உண்டாக்கின சீவசெந்து அனைத்தையும் பூமியின்மேலிராதபடிக்குத் திறக்கிக்கப்பண்ணுவோமென்றார்.

௫ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் நோவா செய்தான்.

௬ பூமியின்மேற் சலப்பிரளயத்தின் தண்ணீர்கள் உண்டாகிறபொழுது நோவா அறுநூறுவயதாயிருந்தான்.

௭ நோவாவும் அவனோடேகூட அவன்குமாரரும், அவன்பெண்சாதியும் அவன்குமாரரின்பெண்சாதிகளும், சலப்பிரளயத்தின் தண்ணீர்களுக்குத் தப்பப் *பேழைக்குட்பிரவேசித்தார்கள். *மத்தே. ௨௪, ௩௮—௩௯. லூக்கா. ௰௭, ௨௬—௨௭.

௮ பராபரன் நோவாவுக்குக் கற்பித்தபடியே, சுத்தமானமிருகங்களிலும் சுத்தமல்லாதமிருகங்களிலும் பூமியின்மேல் ஊருகிறதெல்லாவற்றிலும்,

௯ *ஆணும்பெண்ணுமாய்ச் சோடுசோடாய் நோவாவண்டையிலே பேழைக்குட்பட்டது. *௬, ௰௯.

௰ ஏழுநாட் சென்றபிற்பாடு சம்பவித்ததென்னவென்றால், பூமியின்மேற் சலப்பிரளயத்தின் தண்ணீர்களுண்டாயிற்று.

௰௧ நோவா அறுநூறுவயதாகிறவருஷத்தில் இரண்டாமாதம் பதினேழாந்தேதியாகிய அந்நாளிலே மகா ஆழத்தின் ஊற்றுகளெல்லாம் பிளந்தது. வானத்தின் மதகுகளுந் திறவுண்டது.

௰௨ இரவும்பகலும் நாற்பதுநாளாகப் பூமியின்மேற்பெருமழையுண்டாயிருந்தது.

௰௩ அந்த நாளிலேதானே நோவாவும் நோவாவின்குமாரராகிய சேமும் காமும் யாப்பேத்தும் அவர்களோடேகூட நோவாவின் பெண்சாதியும் அவன்குமாரரின் மூன்று பெண்சாதிகளும் பேழைக்குட் பிரவேசித்தார்கள்.

௰௪ இவர்களுந்தவிர, சாதிசாதியான சகலவித சீவசெந்துக்களும், சாதிசாதியான சகலவித மிருகங்களும் பூமியின்மேல் ஊருகிற சாதிசாதியான சகலவித ஊர்வனங்களும், சாதிசாதியான சகலவிதப்பறவைகளும் [illegible] கொத்தசிறகுமுள்ள சகலவிதப் பட்சிகளும் உட்பட்டது.

௰௫ இப்படியே சீவசுவாசமுள்ள எல்லா மாம்சத்திலேயும் சோடுசோடானவைகள் நோவாவண்டையிலே பேழைக்குட் போயிற்று.

௰௬ உட்போனவைகள், பராபரன் அவனுக்குக் கற்பித்தபடியே சகலவித மாம்சத்திலும் ஆணும் பெண்ணுமாய் உட்போயிற்று. அப்பொழுது கர்த்தர் அவனுக்குப்பின்னாக்கதவையடைத்தார்.

௰௭ சலப்பிரளயம் நாற்பதுநாள் பூமியின்மேலுண்டாகிறபொழுது தண்ணீர்கள் பெருகிப் பேழையைக் கிளம்பப்பண்ணி அது பூமியைவிட்டு உயர்ந்தது.

௰௮ தண்ணீர்கள் மகாவெள்ளமாகிப் பூமியின்மேல் மிகவும் பெருகிற்று. அப்பேழை தண்ணீர்களின்மேல் மிதந்துகொண்டிருந்தது.

௰௯ தண்ணீர்கள் பூமியின்மேல் மிகவும் மிகுந்தவெள்ளமானதினாலே வானத்தின்கீழ் எங்குமுள்ள உயர்ந்த பர்வதங்களெல்லாம் மூடப்பட்டது.

௨௰ மூடப்பட்ட பர்வதங்களுக்குமேலாய்ப் பதினைந்துமுழம் உயர்த்திக்குத் தண்ணீர்கள் பெருகிப்போயிற்று.

௨௧ அப்பொழுது பூமியின்மேல் அசைவாடுகிற எல்லா மாம்சமுமாகிய பறவைகளும் நாட்டுமிருகங்களும் துஷ்டமிருகங்களும் பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனங்களும், *எல்லாமனிதசீவனும் மாண்டது. *லூக். ௰௭, ௨௭.

௨௨ வெட்டாந்தரையிலுண்டானதெல்லாவற்றிலும் நாசியிற் சுவாசமான ஆவியையுடையதெல்லாஞ்செத்துப்போயிற்று.

௨௩ பூமியின்மேல் மனிதர்முதல் மிருகங்களீறியந்தமும், ஊர்வனங்கள் முதல் ஆகாயத்துப்பறவைகளீறியந்தமும் இருந்த உயிருள்ளவெல்லாம் யாவும் [illegible]மாயிற்று, அவைகள் பூமியிலிராதபடிக்கு நிர்மூலமாயிற்று. நோவாவும் அவனுடனே பேழையிலிருந்ததுமாத்திரமே உயிரோடேவைக்கப்பட்டு மீதியாயிற்று.

௨௪ தண்ணீர்கள் பூமியின்மேல் நூற்றைம்பதுநாள் மிகவும் பெருகியிருந்தது.

## ௮. அதிகாரம்.

சலப்பிரளயத்தின் முடிவு.

பின்பு பராபரனோவென்றால் நோவாவையும் அவனோடேகூடப் பேழையிலிருந்த எல்லாச் சீவஜந்துக்களையும் எல்லாமிருகங்களையும் நினைத்தார். ஆகையாற் பராபரன் பூமியின்மேற் காற்றையடிக்கப்பண்ணினார். அப்பொழுது தண்ணீர்கள் அமர்ந்தது.

௨ ஆழத்தின் ஊற்றுகளும் வானத்தின் மதகுகளும் அடைபட்டு, வானத்திலிருந்துண்டான மழை நிறுத்தப்பட்டுப்போயிற்று.

௩ அப்பொழுது தண்ணீர்கள் போகப் போகப் பூமியைவிட்டு வற்றிப்போயிற்று.* நூற்றைம்பது நாளைக்குப் பிறபாடு தண்ணீர்கள் குறைந்தது. * எ, உச.

௪ ஏழாம் மாதம் பதினேழாந் தேதியிலே பேழை * அரராத்தென்ற மலைகளின்மேல் தங்கிற்று. * ஏசா. ௩௭, ௩௮.

௫ பத்தாம் மாதமட்டுந் தண்ணீர்கள் குறைந்துவருகையில், பத்தாம் மாதம் முதலாந் தேதியிலே பர்வதங்களின் சிகரங்கள் காணப்பட்டது

௬ நாற்பது நாட் சென்றபிறபாடு சம்பவித்ததென்னவென்றால் நோவா தான் பேழையிலுண்டாக்கியிருந்த பலகணியைத் திறந்து,

௭ ஒரு காகத்தை வெளியே விட்டான். அது புறப்பட்டு பூமியின்மேலிருந்த தண்ணீர்கள் வற்றிப்போகுமட்டும் போகிறதும் வருகிறதுமாயிருந்தது.

௮ பிறபாடு பூமியின்மேல் தண்ணீர்கள் கொஞ்சமாயிற்றோவென்று பார்க்கிறதற்கு ஒரு புறாவைத் தன்னிடத்திலிருந்து வெளியிலே விட்டான்.

௯ அந்தப் புறாவோவென்றால், பூமியின்மீதெங்குந் தண்ணீர்கள் இன்னமிருந்தபடியினாலே தன்னுள்ளங்காலுக்கு இளைப்பாறுமிடத்தைக் காணாமல் திரும்ப அவனண்டை பேழைக்குவந்தது. அப்பொழுது அவன் தன் கையை நீட்டி அதைப் பிடித்து அதைத் தன்னிடமாகப் பேழைக்குட் சேர்த்துக்கொண்டான்.

௰ இன்னமவேறே ஏழுநாட் பொறுத்து மறுபடியும் புறாவைப் பேழையிலிருந்து வெளியிலேவிட்டான்.

௰௧ அந்தப் புறா சாயங்காலத்திலே அவனண்டைக்கு வந்துசேர்ந்தது. இதோ, அது கொத்திக்கொண்டுவந்த ஒரு ஒலிவமரத்தின் இலை அதின் வாயிலே யிருந்தது. அதனாலே நோவா பூமியின்மேல் தண்ணீர்கள் கொஞ்சமாயிற்றென்றறிந்தான்.

௰௨ அவன் இன்னம் வேறே ஏழுநாட் பொறுத்துப் புறாவை வெளியிலேவிட்டான். அது மறுபடியும் அவனண்டைக்குத் திரும்ப வந்ததில்லை.

௰௩ அவன் அறுநூற்றொரு வயதாயிருந்த வருஷம் முதலாம் மாதம் முதலாந் தேதியிலே சம்பவித்ததென்னவென்றால், பூமியின்மேலிருந்த தண்ணீர்கள் வற்றிப்போனபடியினாலே நோவா பேழையின் மேல்தட்டை வாங்கிப்போட்டுப் பார்த்தான். இதோ, பூமியின்மேல் தண்ணீரில்லாதிருந்தது.

௰௪ இரண்டாம் மாதம் இருபத்தேழாந் தேதியிலே பூமி காய்ந்திருந்தது.

௰௫ அப்பொழுது பராபரன் நோவாவோடே சொன்னதாவது,

௰௬ நீயும் உன்னோடேகூட உன் பெண்சாதியும் உன் குமாரரும் உன் குமாரரின் பெண்சாதிகளும் பேழையிலிருந்து புறப்பட்டு வாருங்கள்.

௰௭ பறவைகளும் மிருகங்களும் பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனங்களுமாகிய எல்லாவித மாம்சத்திலும் உன்னண்டையிலேயிருக்கிற சீவனுள்ளவைகளையெல்லாம் உன்னோடேகூட வெளியே வரவிடு * அவைகள் பூமியிலே திரளாய்ப் பெருகிப் பூமியின்மேற் பலுகிப் பெருக்கடவதென்றார். * க, உஉ.

௰௮ அப்பொழுது நோவாவும் அவனோடேகூட அவனுடைய குமாரரும் அவன் பெண்சாதியும் அவன் குமாரருடைய பெண்சாதிகளும் புறப்பட்டுவந்தார்கள்.

௰௯ சகல மிருகங்களுஞ் சகல ஊர்வனங்களுஞ் சகல பறவைகளுமாகிய பூமியின்மேல் நடமாடுகிறயாவுஞ் சாதிசாதியாகப் பேழையிலிருந்து புறப்பட்டுவந்தது.

௨௰ அப்பொழுது நோவா கர்த்தருக்குப் பலிபீடங்கட்டி, சுத்தமான சகல மிருகங்களிலுஞ் சுத்தமான சகல பறவைகளிலுஞ் சிலவற்றையெடுத்துப் பலிபீடத்தின்மேல் தகனபலிகளாகப் பலியிட்டான்.

௨௰௧ ஆறுதலின் வாசனையைக் கர்த்தர் முகர்ந்தார். அப்பொழுது கர்த்தர் தமதுடைய இருதயத்திலே சொன்னதாவது, நான் இனி பூமியை மனிதனிமித்தமாகத் திரும்பச் சபியேன். ஏனெனில் * மனிதனுடைய இருதயத்தின் தோற்றங்கள் அவன் சிறுவயது துவக்கிப் பொல்லாததாயிருக்கின்றது. இனித் திரும்ப, நான் செய்ததுபோலே, எல்லாச் சீவாத்துமாக்களையுஞ் சங்கரியேன்.

* ௬, ௫. மத்தே. ௰௫, ௰௯.

௨௨ பூமியிருக்குஞ் சகல நாளமட்டும் விதைப்பும் அறுப்பும், குளிரும் உஷ்ணமும், கோடைகாலமும் மாரிகாலமும், பகலும் இரவும் ஒய்ந்துபோகாதிருக்குமென்றார்.

## ௯. அதிகாரம்.

சலப்பிரளயத்திற்குப்பிறபாடு பராபரன் மனிதருக்காக நவமாய்ப்பண்ணியருளின கட்டளைகளும் அவைகளோடும் எல்லாச் சீவஜந்துக்களோடும் பண்ணின உடம்படிக்கையும்.

௨௬ பின்னையும் அவன் சொன்னதாவது, சேமுடைய பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். கானானென்கிறவனவனுக்கடிமையாயிருக்கக்கடவன.

௨௭ யாப்பேத்தைப் பராபரன் பரிபாலனம்பண்ணக்கடவர். அவன் சேமுடைய கூடாரங்களிலே குடியிருப்பானாக. கானானென்கிறவனவனுக்கடிமையாயிருக்கக்கடவனென்றான்.

௨௮ சலப்பிரளயத்துக்குப் பிற்பாடு நோவா முந்நூற்றைம்பது வருஷம் உயிரோடிருந்தான.

௨௯ ஆகையால் நோவாவின நாட்களெல்லாந் தொளாயிரத்தைம்பது வருஷமாயிருந்தது. பிற்பாடு மரித்தான.

## ௰. அதிகாரம்.

நோவாவுடைய குமாரரின சந்ததிகள.

நோவாவுடைய குமாரராகிய * சேம், காம, யாப்பேத்தென்றவர்களின் சந்ததிகளாவது, அவர்களுக்குச் சலப்பிரளயத்துக்குப் பிற்பாடு பிறந்த குமாரர் ஆனவர்கள,

* ௫, ௩௨,

௨ * யாப்பேத்துடைய குமாரர் கோமேர், மாகோக, மாதாய், யாவான், தூபால், மேசேக், தீராஸ. * ௧. நாளா, ௧.௫ மு.

௩ கோமேருடைய குமாரர் அஸ்கேனாஸ், ரீப்பாத, தோகற்மா.

௪ யாவானுடைய குமாரர் எலீசா, தர்சீஸ், கித்தீம், தோதானீம.

௫ இவர்களாற் சாதிகளுடைய தேசத்தீவுகள அவனவன் பாஷைகளின்படியேயும அவர்களுடைய சாதிகளிலான அவர்களுடைய வங்கிஷங்களின்படியேயும அவரவர்க்குத்தக்கதாய்ப் பிரிந்தது.

௬ காமுடைய குமாரர் கூஸ், மிஸ்ராயீம், பூத், கானான.

௭ கூசுடைய குமாரர் சேபா, காவிலா, சப்தா, ராமா, சப்தகா. ராமாவினுடைய குமாரர் சேபா, தேதான்.

௮ கூஸ் நிம்ரோதைப் பெற்றான. இவன் பூமியிலே பலவானாயிருக்கத் துவக்கினான.

௯ இவன் கர்த்தருக்கு முன்பாகப் பலத்த வேட்டைக்காரனாயிருந்தான். ஆகையால் நிம்ரோதைப்போலக் கர்த்தருக்கு முன்பாகப் பலத்த வேட்டைக்காரனாயிருக்கிறவனென்று சொல்லப்படும.

௰ சிநெயார் தேசத்திலுள்ள பாபேலும, ஏரேக்கும், அக்காதும், கல்நேயும அவனுடைய ராச்சியத்தின் துவக்கமாயிருந்தது.

௰௧ இந்தத் தேசத்திலிருந்து அசூர் புறப்பட்டுப்போய், நினிவேயையும, ரெகொபோத் பட்டணத்தையும, காலாகையும,

௰௨ நினிவேக்கும் காலாகுக்கும் நடுவாக ரேசேனையுங் கட்டினான். இது பெரிய பட்டணம.

௰௩ மிஸ்ராயீம் லூதீமையும் அனாமீமையும லெகாபீமையும், நப்துகீமையும,

௰௪ பத்ருசீமையும பெலிஸ்தரின சந்ததியுண்டான கஸ்லூகீமையுங் கப்தோரீமையும பெற்றான.

௰௫ கானான சீதோனென்ற தன் தலைச்சனையும் கேத்தையும்.

௰௬ எபூசியையும எமோரியையுங் கிர்காசியையும.

௰௭ ஈவியையும், அற்கியையும், சீனியையும.

௰௮ அர்வாதியையும், செமாரியையும், காமாத்தியையும் பெற்றான். பிற்பாடு கானானியரின் வம்சங்கள சிதறிப்போயிற்று.

௰௯ கானானியரின எல்லை சீதோனிலிருந்து கேராருக்குப் போய்க் காசாமட்டுக்கும் போய்ச் சோதோம் கொமோரா, அத்மா, செபோயிம் வழியாய் லாசாமட்டுக்கும் போயிற்று.

௨௰ இவர்களே தங்கள் தேசங்களிலும் தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள் வங்கிஷங்களின்படியேயும் தங்கள் பாஷைகளின்படியேயும் காமுடைய பிள்ளைகளானவர்கள.

௨௧ சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள. அவன் ஏபேருடைய புத்திரருக்கெல்லாந் தகப்பனும யாப்பேத்தென்கிற மூத்தவனுக்குத் தம்பியுமாயிருந்தான.

௨௨ சேமுடைய குமாரர், ஏலாம், அசூர், அற்பக்சாத், லூத், ஆராம்.

௨௩ ஆராமுடைய குமாரர், ஊத்ஸ், கூல், கேத்தேர், மாஸ.

௨௪ * அற்பக்சாத் சாலாக்கைப் பெற்றான், சாலாக் ஏபேரைப்பெற்றான்.

* ௰௪, ௰௨.

௨௫ * ஏபேருக்கு இரண்டு குமாரர் பிறந்தார்கள. ஒருவன் பேர் பேலேக், ஏனெனில அவன் நாட்களில் பூமி பிரிபட்டது. அவனுடைய சகோதரன் பேர் யொக்தான். * ௰௪, ௰௯.

௨௬ யொக்தான அல்மோதாதையும், சாலேப்பையும், அசர்மாவெத்தையும், யாராகையும,

௨௭ அதோராமையும், ஊசாலையும, திக்லாவையும,

௨௮ ஓபாலையும், அபிமாவேலையும், சேபாவையும,

௨௯ ஓப்பீரையும, காவிலாவையும யோபாபையும பெற்றான. இவர்கள அனைவரும யொக்தானுடைய குமாரர்.

௩௰ இவர்களுடைய குடியிருப்பு மேசா துவக்கிக் கிழக்குமலையாகிய செப்பாருக்குப் போகிற வழிமட்டுமிருந்தது.

௩௧ இவர்களே தங்கள் தேசங்களிலுந் தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள் வம்சங்களின்படியேயுந் தங்கள் பாஷைகளின்படியேயும் சேமுடைய குமாரரானவர்கள்.

௩௨ இவைகளே தங்கள் சாதிகளிலுள்ள தங்களுடைய சந்ததிகளின்படியே நோவாவுடைய குமாரரின் வம்சங்களானது. சலப்பிரளயத்துக்குப்பிறபாடு இவர்களாற் பூமியிலே சாதிகள் பிரிந்தது.

## ௰௧. அதிகாரம்.

பாபேலின் கோபுரத்தை மனுஷபுத்திரர் கட்டப்போனபொழுது, பராபரன் அவர்கள் பாஷையைத் தாறுமாறாக்கினது.

அக்காலத்திலே பூமியெங்கும் ஒரே பாஷையும் ஒரே வார்த்தைகளுமிருந்தது.

௨ அப்பொழுது சம்பவித்ததென்றால், அவர்கள் கிழக்கேயிருந்து பயணம்பண்ணுகையில் * சிநெயார் தேசத்திலே பள்ளத்தாக்கைக் கண்டு, அங்கே குடியிருந்து,

* ௰, ௰.

௩ ஒருவரோடொருவர், நாம் செங்கலை அறுத்து, அவைகளை நற்கோட்டாய்ச் சுடுவோம் வாருங்களென்றார்கள். பிறபாடு செங்கல் அவர்களுக்குக் கல்லாகவும் பிசின் அவர்களுக்குச் சாந்தாகவுமிருந்தது.

௪ அவர்கள் நாம் பூமியின்மீதெங்குஞ் சிதறுண்டுபோகாதபடிக்கு நமக்கு நாம் ஒரு பட்டணத்தையும் * வானத்தைமுட்டுகிற சிகரமுள்ள ஒரு கோபுரத்தையுங் கட்டி நமக்குப் பேர் உண்டாக்குவோம் வாருங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.

* ௫. மோசே. ௧, ௨௮. ௯, ௧.

௫ அப்பொழுது மனுஷபுத்திரர் கட்டுகிற பட்டணத்தையுங் கோபுரத்தையும் பார்க்கிறதற்காகக் * கர்த்தர் இறங்கினார். * ௰௮, ௨௧.

௬ அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது, இதோ, சனம் ஒரே கூட்டமானது. அவர்களனைவருக்கும் ஒரே பாஷையுமிருக்கின்றது. இதை அவர்கள் செய்யத்தொடங்கினார்கள். இப்பொழுது தாங்கள் செய்ய நினைத்ததெல்லாவற்றிலுந் தங்களுக்குத் தடுக்கப்படுவதில்லையென்றிருக்கிறார்கள்.

௭ நாமிறங்கி, ஒருவர் பாஷையை மற்றொருவர் அறியாதபடிக்கு அங்கே அவர்கள் பாஷையைத் தாறுமாறாக்குவோமாகவென்றார்.

௮ அப்படியே கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்குஞ் சிதறிப்போகப்பண்ணினார். அப்பொழுது பட்டணத்தைக் கட்டி ஓய்ந்தார்கள்.

௯ ஆனதினாலே பூமியனைத்தின் பாஷையைக் கர்த்தர் அங்கே தாறுமாறாக்கினபடியினாலேயும், கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்குஞ் சிதறிப்போகப்பண்ணினபடியினாலேயும், அதின்பேர் பாபேலென்னப்பட்டது.

### சேமுதற்கொண்டு ஆபிரகாமட்டும் உண்டான சந்ததிமுறைகளின் அட்டவணை.

௰ * சேமுடைய சந்ததியாவது, சேம் நூறு வயதாயிருந்து, ஆர்ப்பக்சாதைச் சலப்பிரளயம்போன இரண்டுவருஷத்துக்குப்பிறபாடு பெறுகிறான். * ௰, ௨௨.

௰௧ சேம் ஆர்ப்பக்சாதைப் பெற்றபிறபாடு, ஐந்நூறுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௰௨ ஆர்ப்பக்சாத் முப்பத்தைந்து வயதாயிருந்து, சாலாவைப் பெறுகிறான்.

௰௩ சாலாவைப் பெற்றபிறபாடு, ஆர்ப்பக்சாத் நானூற்றுமூன்று வருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௰௪ சாலா முப்பது வயதாயிருந்து, ஏபேரைப் பெறுகிறான்.

௰௫ ஏபேரைப் பெற்றபிறபாடு சாலா நானூற்றுமூன்று வருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௰௬ ஏபேர் முப்பத்துநாலு வயதாயிருந்து, பேலேகைப் பெறுகிறான்.

௰௭ பேலேகைப் பெற்றபிறபாடு, ஏபேர் நானூற்றுமுப்பது வருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௰௮ பேலேக் முப்பது வயதாயிருந்து ரேகூவைப் பெறுகிறான்.

௰௯ ரேகூவைப் பெற்றபிறபாடு பேலேக் இருநூற்றொன்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௨௰ ரேகூ முப்பத்திரண்டு வயதாயிருந்து செரூகைப் பெறுகிறான்.

௨௧ செரூகைப் பெற்றபிறபாடு, ரேகூ இருநூற்றேழுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௨௨ செரூக் முப்பது வயதாயிருந்து, நாகோரைப் பெறுகிறான்.

௨௩ நாகோரைப் பெற்றபிறபாடு செரூக் இருநூறுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௨௪ நாகோர் இருபத்தொன்பது வயதாயிருந்து தேராகைப் பெறுகிறான்.

௨௫ தேராகைப் பெற்றபிறபாடு நாகோர் நூற்றுப்பத்தொன்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும் பெறுகிறான்.

௨௬ தேராக் எழுபது வயதாயிருந்து ஆபிராமையும், நாகோரையும், ஆரானையும் பெறுகிறான்.

௨௭ தேராகுடைய சந்ததியாவது, தேராக் ஆபிராமையும் நாகோரையும், ஆரா

யும் பெற்றான். ஆரான் லோத்தைப் பெற்றான்.

௨௮ ஆரானோவெனில் தன் ஜென்மப்பூமியாகிய ஊர் என்கிற கல்தேயர் தேசத்துப் பட்டணத்திலே தன் தகப்பனாகிய தேராகுக்கு முன்னே மரித்தான்.

௨௯ ஆபிராமும் நாகோரும் தங்களுக்குப் பெண் கொண்டார்கள். ஆபிராமுடைய பெண்சாதியின் பேர் சாறாய். நாகோருடைய பெண்சாதியின் பேர் மில்க்காள். இவள் ஆரானின் குமாரத்தி. இவளுடைய தகப்பன் மில்க்காளுக்கும் இஸ்காளுக்கும் தகப்பனானவன்.

௩௰ அந்தச் சாறாய் புத்திரசந்தானமில்லாமல் மலடியாயிருந்தாள்.

௩௰௧ தேராக் தன் குமாரனாகிய ஆபிராமையும் ஆரானின் குமாரனும் தன் பேரனுமாகிய லோத்தையும், தன் குமாரன் ஆபிராமுடைய பெண்சாதியாகிய தன் மருமகள் சாறாயையும் அழைத்துக்கொண்டு, அவர்களோடேகூட * ஊர் என்கிற கல்தேயருடைய பட்டணத்திலிருந்து கானான் தேசத்திற்குப் போகப் புறப்பட்டான். ஆனால் அவர்கள் ஆரான் மட்டுக்கும் வந்தபொழுது அங்கேயிருந்துவிட்டார்கள். * ௰௫, ௭.

௩௰௨ தேராகுடைய நாட்கள் இருநூற்றைந்து வருஷமாயிருந்தது. பிற்பாடு தேராக் ஆரானிலே மரித்தான்.

## ௰௨. அதிகாரம்.

ஆபிராம் பராபரனுடைய கட்டளையின்படி கானான் தேசத்திலே வந்ததும், அதிலே இடம் மாறி மாறித் தன் கூடாரத்தைப் போட்டதும்,

கர்த்தர் ஆபிராமோடே சொன்னதாவது, * நீ உன் தேசத்தையும் உன் இனத்தையும் உன் தகப்பனுடைய வீட்டையும் விட்டுப் புறப்பட்டு, நாம் உனக்குக் காண்பிக்கப் போகிற தேசத்திற்குப் போ. * அப்போஸ். ௭, ௩. எபிரே. ௰௧, ௮.

௨ நாம் உன்னைத் திரட்சியான சாதியாக்கி உன்னை ஆசீர்வதித்து உன் பேரை மேன்மையாக்குவோம். நீ ஆசீர்வாதமாக இருப்பாய்.

௩ உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்போம். உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்போம், * உன்னிலே பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படுமென்றார். * ௰௮, ௰௮. ௨௨, ௰௮. ௨௬, ௪. ௨௮, ௰௪. அப்போஸ்தலர். ௩, ௨௫. கலாத். ௩, ௰௮ ௰௬.

௪ அப்பொழுது ஆபிராம் கர்த்தர் தனக்குச் சொன்னபடியே போனான். லோத்தும் அவனோடேகூடப் போனான். ஆபிராம் ஆரானிலிருந்து புறப்பட்டபொழுது எழுபத்தைந்து வயதுள்ளவனாயிருந்தான்.

௫ ஆபிராம் தன் பெண்சாதி சாறாயையும் தன் சகோதரன் குமாரனாகிய லோத்தையும் தாங்கள் சம்பாதித்திருந்த தங்கள் சம்பத்தெல்லாவற்றையும் ஆரானிலே சவதரித்துக்கொண்ட ஆத்துமாக்களையும் கூட்டிக்கொண்டு பிற்பாடு கானான் தேசத்திற்குப் போகப் புறப்பட்டுக் கானான் தேசத்திற்கு வந்தார்கள்.

௬ ஆபிராம் சீகேம் என்கிற இடமட்டுக்கும், மோரே என்கிற சமனான பூமிமட்டுக்கும் தேசத்தைக் கடந்து வந்தான். கானானியன் அப்பொழுது தேசத்திலேயிருந்தான்.

௭ கர்த்தர் ஆபிராமுக்குத் தரிசனையாகி * உன் வித்துக்கு இந்தத் தேசத்தைக் கொடுப்போமென்றார். அப்பொழுது அவன் தனக்குத் தரிசனையான கர்த்தருக்கு அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினான். * ௰௩, ௰௫. ௰௫, ௰௮. ௰௭, ௮. ௨௬, ௩.

௮ பிற்பாடு அவன் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து, பெத்தேலுக்குக் கிழக்கேயிருக்கும் மலைக்கு வந்து, பெத்தேல் தனக்கு மேற்காகவும் ஆயி கிழக்காகவுமிருக்கக் கூடாரம் போட்டு, அங்கே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டிக் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டான்.

௯ அதின் பிறகு ஆபிராம் புறப்பட்டுத் தெற்கே பயணம் பண்ணிக்கொண்டே போனான்.

### பஞ்சத்தினிமித்தம் அவன் எகிப்துதேசத்திற்குப் போனது.

௰ அந்தத் தேசத்திலே பஞ்சமுண்டாயிற்று. ஆகையால் ஆபிராம் எகிப்துதேசத்திற்கு அங்கே தங்கும்படிக்கு இறங்கிப்போனான். ஏனெனில் தேசத்திலே பஞ்சம் கடினமாயிருந்தது.

௰௧ அப்பொழுது சம்பவித்ததேதென்றால் அவன் எகிப்திற்குச் சமீபமாய் வந்தபொழுது தன் பெண்சாதி சாறாயோடே சொன்னதாவது, இதோ, நீ பார்வைக்கு அழகுள்ள ஸ்திரீயென்றறிவேன்.

௰௨ ஆனதுகொண்டு சம்பவிப்பதேதென்றால், எகிப்தியர் உன்னைக் காணும்பொழுது இவள் அவன் பெண்சாதியென்று சொல்லி, என்னைக் கொன்று உன்னை உயிரோடே வைப்பார்கள்.

௰௩ ஆகையால் உன்னிமித்தம் எனக்கு நலமாகும்படிக்கும், உன்னைத் தொட்டு என் ஆத்துமம் உயிரோடிருக்கும்படிக்கும், * உன்னை என் சகோதரியென்று நீ சொல்லேன் என்றான். * ௨௰, ௨. ௰௨. ௨௬, ௭.

௰௪ ஆபிராம் எகிப்திலே வந்தபொழுது சம்பவித்ததேதென்றால், எகிப்தியர் அந்த ஸ்திரீயை மகா அழகுள்ளவளென்று பார்த்தார்கள்.

ன் உன்னதமானபராபரனுடைய ஆசாரியனுமாயிருந்து, * சங்கீ. ௱௰, ௪. எபிரேயர். ௭, ௧. ௩.

௰௯ அவனை ஆசீர்வதித்து, வானத்துக்கும் பூமிக்கும் எசமானாகிய உன்னதமான பராபரனாலே ஆபிராம் ஆசீர்வதிக்கப்பட்டவனென்றும்,

௨௰ உன் சத்துருக்களை உன் கையிலே ஒப்புக்கொடுத்த உன்னதமான பராபரன் ஸ்தோத்திரிக்கப்பட்டவரென்றுஞ் சொன்னான். அவனுக்கு ஆபிராம் எல்லாவற்றிலும் பத்திலொன்றைக் கொடுத்தான்.

௨௰௧ சோதோமின் இராசா ஆபிராமுடனே, ஆத்துமாக்களையெனக்குத்தா. ஆஸ்தியை நீ எடுத்துக்கொள்ளென்றான்.

௨௰௨ ஆனால் ஆபிராம் சோதோமின் இராசாவோடே சொன்னதாவது, நான் ஆபிராமை ஐசுவரியவானாக்கினேனென்று நீ சொல்லாதபடிக்கு நான் ஒரு சரட்டையாகிலும், பாதரட்சையின் வாரையாகிலும் உனக்குண்டானதிலே யாதொன்றையாகிலும் எடுத்துக்கொள்ளேனென்று,

௨௰௩ வானத்துக்கும் பூமிக்கும் எசமானாகிய உன்னதபராபரனான கர்த்தருக்கு நேராக என் கையையேறெடுக்கிறேன்.

௨௰௪ வாலிபக்காரர் சாப்பிட்டதும் என்னோடே கூடவந்த ஆனேர், எஸ்கோல், மம்ரேயென்ற புருஷருடைய பங்குமாத்திரம் வரவேண்டும். இவர்கள் தங்கள் பங்கை எடுக்கட்டுமென்றான்.

# ௰௫. அதிகாரம்.

ஆபிராமுக்கு நவமாய் அருளிச்செய்யப்பட்ட வாக்குத்தத்தம்.

இந்தக்காரியங்கள் நடந்தபிறபாடு ஆபிராமுக்குத் தரிசனத்திலே கர்த்தருடைய வார்த்தையுண்டாகி, அவர் சொன்னதாவது, ஆபிராமே! * பயப்படாதே. நானுனக்குக் † கேடயமும் உன்னுடைய மகா பெரியபலனுமாயிருக்கிறேனென்றார்.

* ஏசா. ௪௧, ௰. † சங். ௩, ௪.

௨ அப்பொழுது ஆபிராம், கர்த்தராகிய ஆண்டவரே! அடியேனுக்கென்ன தருவீர்? நான் பிள்ளையில்லாமல் போகிறேனே. தமஸ்குவூரானாகிய இந்த எலியேசர் என் வீட்டு விசாரிப்புக்கர்த்தனாயிருப்பானேயென்றான்.

௩ பின்னையும் ஆபிராம், இதோ, தேவரீர் எனக்கு விதைகொடுக்கவில்லை. இதோ என் வீட்டிற்பிறந்த பிள்ளை எனக்குச் சுதந்தரவாளியாயிருப்பானென்றான்.

௪ அப்பொழுது இதோ, கர்த்தருடைய வார்த்தை அவனுக்குண்டாகி, இவன் உனக்குச் சுதந்தரவாளியாகாமல், உனக்குப் பிறப்பாயிருப்பவனேயுனக்குச் சுதந்தரவாளியாவானென்று சொல்லி,

௫ அவனை வெளியேபுறப்படப்பண்ணி, நீ வானத்தை அண்ணாந்துபாரேன்? * நட்சத்திரங்களை யெண்ண உனக்குக் கூடுமானால், அவைகளை யெண்ணென்றுசொல்லிப் பிறபாடு அவனோடே, உன் சந்ததியவ்வண்ணமாயிருக்குமென்றார். * ௰௩, ௰௬.

௬ * அவன் கர்த்தர்பேரிலே விசுவாசித்தான். அதை அவர் அவனுக்கு நீதியாக எண்ணினார். * ரோம. ௪, ௩. கலாத். ௩, ௬. யாக்கோ. ௨, ௨௩.

௭ பின்னையும் அவனுடனே, இந்தத்தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்வதற்கு உனக்குக்கொடுக்க, உன்னை ஊர் என்கிற கல்தேயருடைய பட்டணத்திலிருந்து அழைத்துவந்த கர்த்தர் நானேயென்றார்.

௮ அப்பொழுது அவன், கர்த்தராகிய ஆண்டவரே! நான் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவேனென்பதை எதினாலே அறிவேனென்றான்.

௯ அவர் அவனுடனே, மூன்று வயதான கிடாரியையும் மூன்று வயதான வெள்ளாட்டையும் மூன்று வயதான ஆட்டுக்கிடாயையும் ஒரு காட்டுப்புறாவையும் ஒரு புறாக்குஞ்சையும் நமக்குக்கொண்டுவாவென்றார்.

௰ அவன் அவருக்கு இவைகளையெல்லாங்கொண்டுவந்து, அவைகளை நடுவாகத்துண்டித்துத் துண்டங்களை ஒன்றுக்கொன்று எதிராகவைத்தான். பட்சிகளையோவென்றால் அவன் துண்டிக்கவில்லை.

௰௧ அந்த உடல்களின்மேல் உருஞ்சுகிற பட்சிகள் இறங்குகிறது. ஆனால் ஆபிராம் அவைகளைத் துரத்தினான்.

௰௨ சூரியன் அஸ்தமிக்கும் பொழுதானபோது ஆபிராமின்மேல் கன்னித்திரை இறங்கிறது. இதோ, திகிலும் மகா இருளும் அவனைப்பிடித்தது.

௰௩ அப்பொழுது அவர் ஆபிராமோடே சொன்னதாவது, உன் சந்ததியார் தங்களுடைய தல்லாத தேசத்திலே * நானூறு வருஷம் பரதேசிகளாயிருந்து, அந்தத்தேசத்தாரைச் சேவிப்பார்களென்றும், அவர்களவர்களை உபத்திரவப்படுத்துவார்களென்றும் நீயறியவே அறியவேண்டும். * ௨. மோசே. ௰௨ ௪௰. அப்போ. ௭, ௬.

௰௪ ஆனால் இவர்கள் சேவிக்குஞ்சாதியையும் நான் நியாயந்தீர்ப்பேன். பிறபாடு * வெகு ஆஸ்தியுடனே புறப்பட்டு வருவார்கள். * ௨. மோசே. ௩ ௨௧. ௨௨. ௰௨, ௨. ௩, ௰௨, ௩௫. ௩௬.

௰௫ நீயோவென்றால் சமாதானத்தோடே உன் பிதாக்களண்டையிலே சேருவாய். * நல்ல நரைவயதிலே அடக்கம்பண்ணப்படுவாய். * ௨௫, ௭. ௮.

௰௬ நாலாந்தலைமுறையாரோ இவவிடத்திற்குத்திருமபவருவார்கள? ஏனெனில ஏமோரியருடைய அககிரமம் இறறையிலவரைககும நிறைவேறினதில்லையென்றார்.

௰௭ சூரியன அஸதமிததுககன் இருளாளபிறபாடு, இதோ, புகைகிறசூளையும அநததுணடஙகளின நடுவேகடநதுபோகிற அககினிச்சுவாலையுமுணடாயிறறு.

௰௮ அநநாளிலே கர்ததர் ஆபிராமோடேஉடம்படிககைபணணிசசொன்னதாவது, எகிப்துவின நதிதுவககி ஐபிருததேநதியெனற பெரியத்திமடடுககுமிருககிறதும,

௰௯ கேனியரையுங கெனிசியரையுஙகதமோனியரையும,

௨௰ ஏததியரையும பெரிசியரையும ரெபபாயியரையும,

௨௧ எமோரியரையுங கானானியரையும, கிர்காசியரையும எபூசியரையுமெனறவர்களிருககிறதுமான இநததேசததை*உனவிததுக்குககொடுததோமெனறார். * ௰௨, எ. ௰௭, எ. அ.

## ௰௬. அதிகாரம்.

ஆகாரிடததிலே ஆபிராமுககு இஸமவேல பிறநதது.

ஆபிராமுடையபெணசாதியாகியசாருயா அவனுககுபபிளளைபெறாதிருநதாள. ஆனால ஆகாரெனறுபேர்கொணட எகிப்துதேசததாளாகிய ஒரு அடிமைபபெண அவளுககிருநதாள.

௨ சாருயா ஆபிராமுடனே, இதோ, நான பிளளைபெறாதபடிககுககர்ததர்என்னை கர்பபததையடைததார். என்னடிமைபபெணணோடேசேரும்மென? ஒருவேளை அவளாலேனகிடைககபபடுமெனறாள.ஆபிராமசாருயின சொற்கேட்டான்.

௩ ஆபிராம கானான்தேசததிறபததுவருஷங்குடியிருநதபினபு ஆபிராமினபெணசாதியாகியசாருயா எகிப்துதேசததாளாயிருககிறதன்னடிமைபபெணணாகிய ஆகாரையழைததுஅவளைததனபுருஷனாகிய ஆபிராமுககுபபெணசாதியாகக்கொடுததாள.

௪ அவன ஆகாரோடேசேர்நத பொழுது அவள கர்பபததரிததாள. தான கர்பபந்தரித்ததையவள கணடபொழுதோவெனில, அவளநாசசியார் அவளபார்வைககுககொசசையாக எணணப்பட்டாள.

௫ அபபொழுதுசாருயா ஆபிராமுடனே நான அனுபவிககிற அநியாயம உமமுடையமேறகமருமதானளென அடிமைபபெணணை உமமுடையமடியிலேகொடுததேன. தான கர்பபததரிததததையவளகணடபொழுதோவெனில நான்வளபார்வைககுககொசசையாணேன.கர்ததர்எனககும உமககும நடுவாகநியாயததீர்பபாராகவெனறாள.

௬ அபபொழுது ஆபிராம சாருயுடனே இதோ, உன்னடிமைபபெண உனகையில அகபபடடிருககிறாள. உனபார்வைககுநலமானபடிஅவளுககுசசெயயெனறான். அபபொழுதுசாருயா அவளைததணடிககையில இவள அவளைவிடடோடிபபோனாள.

௭ ஆனாற்கர்ததருடையதூதர் அவளைவனாநதிரததிலே சூருககுபபோகிற வழியருகேயிருககிற நீரூறறாகிய கிணறறணடையிலேகணடுபிடிதது,

௮ சாருயின அடிமைபபெணணாகிய ஆகாரே! எஙகேயிருநதுவருகிறாய? எஙகே போகிறாயெனறார். அவள, நான என்நாசசியாராகிய சாருயைவிடடு ஓடிபபோகிறேனெனறாள.

௯ அபபொழுது கர்ததருடையதூதர் அவளுடனே, நீ உனநாசசியாரணடைககுததிருமபிபபோய அவளகையினகீழ் அடஙகியிருவெனறார்.

௰ பினனையுங கர்ததருடையதூதர் அவளோடே, உனவிததை மிகவுமபெருகபபணணுவோம. திரட்சியினாலே அது எணணததொலையாததாயிருககுமெனறார்.

௰௧ அப்புறங்கர்ததருடையதூதர் அவளோடேசொனனதாவது, இதோ, கர்பபவதியாயிருககிறாய. நீயொருகுமாரனைபபெறுவாய. கர்ததர் உன அஙகலாயபபைககேட்டபடியினாலேயவனுககு இஸமவேலெனறுபேரிடுவாயாக.

௰௨ இவன துஷ்டமனிதனாயிருபபான. இவனகை எலலாருககும விரோதமாகவும எலலாருடையகை இவனுககுவிரோதமாகவுமிருககும. தனசகோதரரெலலாருககும எதிரேகுடியிருபபானெனறார்.

௰௩ அபபொழுது அவளதனனோடேபேசினகர்ததனைததேவரீர் பார்ககிறபர்ராபரனெனற நாமமாக அழைததாள. ஏனெனில எனனைபபார்ததவரைபபிறபாடு நானவரை யிவவிடததிலே கணடு மிருககவிலலையோ? எனறாள.

௰௪ ஆகையால அநதககிணறுஎனனைப பார்ககிறசீவனுளளவரினகிணறெனனபபடடது. இதோ, காதேசுககும்பேரேதுககும நடுவே அதிருககினறது.

௰௫ ஆகார் ஆபிராமுககொருகுமாரனைபபெறறாள. அபபொழுது ஆபிராம ஆகார்பெறற தனகுமாரனுககு இஸமவேலெனறுபேரிடடான.

௰௬ ஆகார் ஆபிராமுககு இஸமவேலைபபெறுகிறபொழுதுஆபிராம எண்பததாறுவயதாயிருநதான.

## ௰௭. அதிகாரம்.

பர்ராபரன ஆபிராமுக்குததரிசனையாகிததெயவ உடமபடிககையினமுததிரையாகிய சுனனததைககடடளையிடடது.

ஆபிராம் தொண்ணூற்றொன்பது வயதானபோது கர்த்தர் ஆபிராமுக்குத் தரிசனையாகி, அவனோடே சொன்னதாவது, நானே சர்வசத்தியும் வல்லபராபரன். * நீ நம்முடைய முகத்திற்கு முன்பாக நடந்து கொண்டு, உத்தமனாயிரு. * ௨௪, ௬.

௨ நாம் நமக்கும் உனக்கும் நடுவாக * நம்முடைய உடம்படிக்கையையேற்படுத்தி, உன்னை மிகுதியும் மிகுதியாய்ப் பெருகப்பண்ணுவோமென்றார். * ௰௫, ௰௮.

௩ அப்பொழுது ஆபிராம் முகங்குப்புற விழுந்தான். பராபரன் அவனோடே பேசிச் சொன்னதாவது,

௪ இதோ, நான் உன்னோடே பண்ணுகிற நம்முடைய உடம்படிக்கையாவது, * நீ திரள் சாதிகளுக்குத் தகப்பனாவாய். * ரோமர். ௪, ௰௭.

௫ இனி உன்பேர் ஆபிராமென்னப்படாததாக. நான் உன்னைத் திரள் சாதிகளுக்குத் தகப்பனாக்கவைத்தபடியினாலே உன்பேர் ஆபிரகாமென்றிருக்கக்கடவது.

௬ உன்னை மிகுதியும் மிகுதியுமாய்ப் பலுகப்பண்ணி, உன்னைச் சாதிகளாக்குவோம். உன் சந்ததியில் இராசாக்கள் பிறப்பார்கள்.

௭ நாம் உனக்கும் உனக்குப்பிறபாடு உன் வித்துக்கும் பராபரனாயிருக்கத் தக்கதாக நாம் நமக்கும் உனக்கும், உனக்குப்பிறபாடு தலைமுறை தலைமுறையாகவிருக்கப்போகிற உன் வித்துக்கும் நடுவே நம்முடைய உடம்படிக்கையை நித்திய உடம்படிக்கையாகத் திடப்படுத்துவோம்.

௮ உனக்கும் உனக்குப்பிறபாடு உன் வித்துக்கும் நீ பரதேசியாய்த் தங்கிவருகிற கானான் தேசத்தையெல்லாம் நித்திய உம்பிளிக்கையாகக் கொடுத்து, அவர்களுக்குப் பராபரனாயிருப்போமென்றார்.

௯ பின்னையும் பராபரன் ஆபிரகாமோடே சொன்னதாவது, இப்பொழுதும் நீயும் உனக்குப்பிறபாடு தலைமுறை தலைமுறையாகவிருக்கப்போகிற உன் வித்தாரும் நம்முடைய உடம்படிக்கையைக் கைக்கொள்வீர்களாக.

௰ நமக்கும் உங்களுக்கும், உனக்குப்பிறபாடு உன் வித்துக்கும் நடுவேயுண்டாகிறதும் நீங்கள் கைக்கொள்ளவேண்டியதுமான நம்முடைய உடம்படிக்கையாவது, உங்களில் ஆணாய்ப்பிறந்ததெல்லாம் சுன்னத்துப் பண்ணப்படவேண்டியது.

௰௧ உங்கள் நுனித்தோலின் மாம்சத்தைச் சுன்னத்துப்பண்ணக்கடவீர்கள். அது நமக்கும் உங்களுக்குமிருக்கிற * உடம்படிக்கையின் அடையாளமாயிருக்கும்.
* ரோமர். ௪, ௰௧.

௰௨ உங்களில் தலைமுறை தலைமுறையாக ஆணாய்ப்பிறக்கிறதெல்லாம் எட்டுநாள் பிள்ளையாய்ச் சுன்னத்துப்பண்ணப்படவேண்டியது. வீட்டுப்பிள்ளையும் உன்னுடைய வித்தல்லாத எந்த அந்நியனிடத்திலும் பணத்தினாலே கொள்ளப்பட்ட பிள்ளையும் அப்படித்தானே.

௰௩ உன் வீட்டுப்பிள்ளையும் உன் பணத்தினாற் கொள்ளப்பட்டவனும் அவசியமாய்ச் சுன்னத்துப்பண்ணப்படவேண்டும். இப்படி நம்முடைய உடம்படிக்கை உங்கள் மாம்சத்திலே நித்திய உடம்படிக்கையாக விருக்கக்கடவது.

௰௪ நுனித்தோலின் மாம்சம் சுன்னத்துப்பண்ணப்படாதிருக்கிற நுனித்தோலுள்ள ஆண்பிள்ளையிருந்தால், அந்த ஆத்துமா நம்முடைய உடம்படிக்கையை முறித்தபடியினாலே தன் சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டுபோவானென்றார்.

௰௫ பின்னையும் பராபரன் ஆபிரகாமோடே சொன்னதாவது, உன்பெண்சாதி சாறாயினுடைய பேரைச் சாறுவென்றழையாயாக. சாறுளென்பது அவளுடைய பேராயிருக்கும்.

௰௬ நாம் அவளை ஆசீர்வதித்து, அவளாலே உனக்கொரு குமாரனையுந்தந்து, அவள் சாதிகளாய்ப் பலுகவும், அவளால் சாதிகளின் இராசாக்களுண்டாகவும் அவளை ஆசீர்வதிப்போமென்றார்.

௰௭ அப்பொழுது ஆபிரகாம் முகங்குப்புற விழுந்து, நகைத்து நூறு வயதானவனுக்குப் பிள்ளை பிறக்குமோ? தொண்ணூறு வயதான சாறாள் பெறுவாளோ? என்று தன்னிருதயத்திற் சொல்லிக்கொண்டு,

௰௮ இஸ்மவேல் உமக்கு முன்பாகப் பிழைப்பானாகவென்று ஆபிரகாம் பராபரனை விண்ணப்பம்பண்ணினான்.

௰௯ அப்பொழுது பராபரன் சொன்னதாவது, * உன்பெண்சாதியாகிய சாறாளே உனக்கொரு குமாரனைப் பெறுவாள். அவனுக்கு ஈசாக்கென்று பேரிடுவாயாக. அவனோடே நாம் நம்முடைய உடம்படிக்கையையவனுக்குப்பிறபாடு அவன் வித்துக்கு என்றென்றைக்கும் நிற்கிற உடம்படிக்கையாக ஏற்படுத்துவோம். *, ௰௮, ௰. ௨௧, ௩.

௨௰ இஸ்மவேலுக்காகவும் உன் விண்ணப்பத்தைக் கேட்டோம். இதோ, நாம் அவனை ஆசீர்வதித்து, அவனை மிகுதியும் மிகுதியுமாகப் பலுகவும் பெருகவும்பண்ணுவோம். * பன்னிரண்டு பிரபுக்களைப் பெறுவான். அவனைப் பெரிய சாதியாக்குவோம்.
* ௨௫, ௰௬.

௨௧ ஆனாலும் நம்முடைய உடம்படிக்கையை நாம் மறுவருஷத்தில் இக்காலத்திலே சாறாள் உனக்குப் பெறப்போகிற ஈசாக்குடனே ஏற்படுத்துவோமென்றார்.

௨௨ பராபரன் அவனோடே பேசிமுடித்த பிறபாடு அவர் ஆபிரகாமைவிட்டேறினார்.

௨௩ அப்பொழுது ஆபிரகாம் தன் குமாரனாகிய இஸ்மவேலையும், தன் வீட்டிலே பிறந்தவர்களையும், தான் பணத்தினாற் கொண்டவர்களையும், ஆபிரகாமாகிய தன் வீட்டு மனிதரிலுள்ள ஆண்பிள்ளைகளையெல்லாஞ் சேர்த்துப் பராபரன் தன்னோடே சொன்னபடி, அவர்கள் நுனித்தோலின் மாம்சத்தை அந்நாளிலேதானே சுன்னத்துப்பண்ணினான்.

௨௪ ஆபிரகாமுடைய நுனித்தோலின் மாம்சஞ் சுன்னத்தடைகிறபொழுது அவன் தொண்ணூற்றொன்பது வயதாயிருந்தான்.

௨௫ அவனுடைய குமாரன் இஸ்மவேலோவெனில், அவனுடைய நுனித்தோலின் மாம்சஞ் சுன்னத்துப்பண்ணப்படுகிறபொழுது பதின்மூன்று வயதாயிருந்தான்.

௨௬ அந்நாளிலேதானே ஆபிரகாமும் அவன் குமாரன் இஸ்மவேலுஞ் சுன்னத்தடைந்தார்கள்.

௨௭ வீட்டிற்பிறந்தவர்களும் அன்னியரிடத்திற் பணத்திற்குக் கொள்ளப்பட்டவர்களுமாகிய அவன் வீட்டு மனிதரெல்லாரும் அவனோடேகூடச் சுன்னத்தடைந்தார்கள்.

## ௰௮. அதிகாரம்.

*ஈசாக்கின் பிறப்பும் மறுபடியும் முன்னறிவிக்கப்பட்டது.*

பிறபாடு கர்த்தர் அவனுக்கு மம்ரேயின் சமபூமியிலே தரிசனையானார். அவன் பகலின் உஷ்டணவேளையிலே கூடாரவாசலிலே உட்கார்ந்திருந்து,

௨ தன் கண்களையேறெடுத்துப் பார்க்கச் செய்ய, இதோ மூன்று புருஷர் அவனுக்கெதிராக நின்றார்கள். அவர்களைக் காணவே அவன் கூடாரவாசலிலிருந்து அவர்களுக்கெதிர்கொண்டோடித் தரைமட்டுங் குனிந்து,

௩ ஆண்டவரே! உம்முடைய கண்களில் எனக்குக் கிருபை கிடைத்ததானால், * நீர் உம்மடியானைவிட்டு விலகிப்போகாதிருப்பீராக. * எபிரே. ௰௩, ௨.

௪ கொஞ்சந் தண்ணீர் கொண்டுவரட்டுமே? உங்கள் கால்களைக் கழுவி மரத்தின் கீழ்ச் சாய்ந்துகொண்டிருங்கள்.

௫ நீங்கள் உங்களிருதயத்தைத் திடப்படுத்த ஒரு துணிக்கை அப்பங்கொண்டுவருவேன். பிறபாடு அப்புறம் நடப்பீர்கள். ஏனெனில் இதற்காக உங்கள் அடியானண்டைக்குக் கடந்துவந்தீர்களென்றான். அதற்கு நீ சொன்னபடியே செய்யென்றார்கள்.

௬ அப்பொழுது ஆபிரகாந் தீவிரமாய்க் கூடாரத்திற் சாறாளண்டைக்குப் போய் நீ சீக்கிரமாய் மூன்றுபடி மெல்லிய மாவெடுத்துப் பிசைந்து, அப்பங்களைச் சுடுவென்றான்.

௭ மாட்டுமந்தைக்கும் ஆபிரகாம் ஓடி இளசாயிருக்கிற நல்ல கன்றுக்குட்டியைப் பிடித்துப் பணிவிடைக்காரன் கையிலே கொடுத்தான், அவன் அதைச் சமைக்கத் தீவிரித்தான்,

௮ அவன் வெண்ணெயையும் பாலையுந் தான் சமைப்பித்த கன்றுக்குட்டியையும் எடுத்துவந்து அவர்கள் முன்பாக வைத்தான். அவனோவென்றால் அவர்களண்டை மரத்தின் கீழ் நின்றுகொண்டிருந்தான். அவர்கள் போசித்து,

௯ பின்பு அவனுடனே, உன் பெண்சாதி சாறாள் எங்கேயென்றார்கள். அதோ, கூடாரத்திலிருக்கிறாளென்றான்.

௰ அப்பொழுது அவர் ஒருபிராண உற்பத்திக்காலத்திட்டத்திலே உன்னண்டைக்குத் திரும்ப வருவோம். அப்பொழுது இதோ, * உன் பெண்சாதியாகிய சாறாளுக்கு ஒரு குமாரன் இருப்பானென்றார். சாறாள் அவருக்குப் பின்புறமான கூடாரவாசலிலிருந்து இதைக் கேட்டாள். * ௰௭. ௰௯. ௨௧.

௰௧ ஆபிரகாமுஞ் சாறாளுமோவெனில் முதிர்ந்தவர்களும் வயதுசென்றவர்களுமாயிருந்தார்கள். ஸ்திரீகளுக்குள்ள வழிபாடு சாறாளுக்கு நின்றுபோயிற்று.

௰௨ ஆகையாற் சாறாள் * தன் உள்ளத்திலே நகைத்து, நான் கிழவியும் † என் எசமான் முதிர்ந்த வயதுள்ளவருமானபின்பு எனக்கு இன்பம் உண்டாயிருக்குமோ? என்றாள்.

* ௰௭, ௰௭. † ௧. பேது. ௩, ௬.

௰௩ அப்பொழுது கர்த்தர் ஆபிரகாமோடே சொன்னதாவது, சாறாள் நகைத்து நான் கிழவியாயிருந்தும் பிள்ளைபெறுவதும் மெய்யோவென்பானேன்?

௰௪ * கர்த்தரால் ஆகாத அதிசயமுண்டோ? ஒருபிராண உற்பத்திக்காலத்திட்டத்திலே யுன்னண்டைக்குத் திரும்ப வருவோம். அப்பொழுது சாறாளுக்கொரு குமாரனிருப்பானென்றார். * மத்தே. ௰௯, ௨௬.

௰௫ சாறாளோவெனில், நான் நகைத்ததில்லையென்று மறுதலித்தாள். ஏனெனில் பயந்தாள். ஆனால் அவர், இல்லை நீ நகைத்தாயென்றார்.

*சோதோமின் பாவத்தை விசாரிப்போமென்று கர்த்தர் ஆபிரகாமுக்கு அறிவித்ததும், இவன் அதற்காக ஆறுவிசை விண்ணப்பம்பண்ணினதும்.*

௰௬ பிறபாடு அந்தப் புருஷர் எழுந்திருந்து அவ்விடம்விட்டுச் சோதோமை நோக்கிப் போனார்கள். ஆனால் ஆபிரகாம் அவர்களை வழிவிட்டனுப்ப அவர்களோடேகூடப் போனான்.

௰௭ அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது, ஆபிரகாம் பெரிதான பலத்த சாதியாய்ப்போகக்கொள்ளவும், அவனில் * பூமியின் சாதிகளெல்லாம் ஆசீர்வதிக்கப்படுவதாயிருக்கக்கொள்ளவும், * ௰௨, ௩.

௰௮ நாம் செய்யப்போகிறதை நாம் ஆபிரகாமுக்கு மறைப்போமோ?

௰௯ ஏனெனில் கர்த்தர் ஆபிரகாமுக்குச் சொன்னதை யவன்மேல் வரப்பண்ணத்தக்கதாக, அவன் தன் பிள்ளைகளுக்குந் தன்க்குப்பிறபாடு இருக்குந் தன் வீட்டாருக்கும், நீங்கள் நீதியும் நியாயமுஞ் செய்யும்படிக்குக் கர்த்தருடைய வழியைக் காத்து நடவுங்களென்று கற்பிப்பவனென்று அவனை யறிவோமென்று சொல்லி,

௨௰ கர்த்தர் அப்புறஞ் சொன்னதாவது * சோதோம் கொமோரு ஊர்களின் கூக்குரல் பெரிதானபடியினாலும் அவைகளின் பாவம் மகாக்கனமானபடியினாலும்,

* ௰௩, ௰௩.

௨௧ நாம் இப்பொழுது இறங்கிப்போய், நம்மண்டைக்கு வந்தெட்டின அதினுடைய கூப்பிடுதலின்படியே அவர்கள் செய்து நிறைவேறிற்றோ இல்லையோவென்று பார்த்து அறிவோமென்றார்.

௨௨ அப்பொழுது அந்தப் புருஷர் அவ்விடம் விட்டுச் சோதோமை நோக்கிப்போனார்கள். ஆனால் ஆபிரகாம் இன்னுங் கர்த்தருக்கு முன்பாக நின்றுகொண்டிருந்தான்.

௨௩ ஆபிரகாஞ் சேர்ந்து வந்து சொன்னதாவது, ஆகாதவனோடே நீதிமானையும் அழிப்பீரோ?

௨௪ பட்டணத்திற்குள்ளே ஐம்பது நீதிமான்கள் இருப்பார்களாக்கும். அதற்குள்ளிருக்கும் ஐம்பது நீதிமான்களினிமித்தம் ஸ்தலத்திற்கு மன்னியாமல் அதையழிப்பீரோ?

௨௫ இப்படிக்கொத்த செயல் உமக்குத் தூரமாயிருப்பதாக. நீதிமானும் பொல்லாதவனுஞ் சரியாக, பொல்லாதவனோடே நீதிமானையுங் கொல்லுவது உமக்குத் தூரமாயிருப்பதாக. * பூமிக்கெல்லாம் நியாயாதிபதியானவர் நீதிசெய்யாதிருப்பாரோ? என்றான். * அப்போ. ௰௭, ௩௧.

௨௬ அதற்குக் கர்த்தர், சோதோம் பட்டணத்திற்குள் ஐம்பது நீதிமான்களைக் கண்டோமாகில், அவர்களினிமித்தம் ஸ்தலத்திற்கெல்லாம் மன்னிப்போமென்றார்.

௨௭ அப்பொழுது ஆபிரகாம் பிரதியுத்தாரமாக இதோ, அடியேன் தூளுஞ் சாம்பலுமாயிருந்தும், ஆண்டவரோடே பேசத் துணிந்தேன்.

௨௮ ஐம்பது நீதிமான்களுக்கு ஒருவேளை ஐந்து பேர் குறைந்தால், அந்த ஐந்து பேர் நிமித்தம் பட்டணத்தையெல்லாம் அழிப்பீரோ? என்றான். அதற்கவர், நாம் நாற்பத்தைந்து நீதிமான்களை அங்கே கண்டால், அதையழிப்பதில்லையென்றார்.

௨௯ அவனின்னம் அவரோடே பேசத்தொடர்ந்து, ஒருவேளை நாற்பது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான். அதற்கவர், நாற்பது நீதிமான்களினிமித்தம் அப்படிச்செய்யாதிருப்போமென்றார்.

௩௰ அப்பொழுது அவன், நான் அப்புறம் பேச ஆண்டவருக்குக் கோபம் வாராமல் வேண்டுகிறேன். ஒருவேளை முப்பது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான். அதற்கவர் நாம் முப்பது நீதிமான்களை அங்கே கண்டால், அப்படிச்செய்யாதிருப்போமென்றார்.

௩௧ அப்பொழுது அவன், இதோ, ஆண்டவரோடே பேசத்துணிந்தேன். ஒருவேளை இருபது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான். அதற்கவர், நாம் இருபது நீதிமான்களினிமித்தம் அதையழிக்காதிருப்போமென்றார்.

௩௨ அப்பொழுது அவன், நானின்னம் இந்த ஒருவிசையாத்திரம் பேச ஆண்டவருக்குக் கோபம் வாராமல் வேண்டுகிறேன். ஒருவேளை பத்து நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான். அதற்கவர், பத்து நீதிமான்களினிமித்தம் அதையழிக்காதிருப்போமென்றார்.

௩௩ கர்த்தர் ஆபிரகாமோடே பேசி முடித்தபிறபாடு புறப்பட்டுப்போனார். ஆபிரகாந் தன்னிடத்திற்குத் திரும்பினான்.

## ௰௯. அதிகாரம்.

கர்த்தர் லோத்தைத் தப்பவிட்டனுப்பின்பின் சோதோமை யழித்தது.

அந்த இரண்டு தூதர் சாயங்காலத்திலே சோதோமுக்கு வந்தார்கள். லோத்து சோதோமின் வாசலிலே உட்காந்திருந்தான். அப்பொழுது லோத்து அவர்களைக் கண்டு எதிர்கொண்டெழுந்திருந்து தரைமட்டும் முகங்குனிந்து,

௨ என்னுடையவர்களே! * இதோ, உங்களூழியக்காரனின் வீட்டுமுகமாய் நீங்கள் திரும்பி, இராத்தங்கி, உங்கள் கால்களைக் கழுவிக்காலமே யெழுந்திருந்து உங்கள் வழிப்பயணம் போங்களென்றான். அதற்கவர்கள் அல்ல, வீதியிலே இராத்தங்குவோமென்றார்கள். * எபிரே. ௰௩, ௨.

௩ அவன் வெகுவாய் அவர்களை மிகவும் வருந்திக்கொண்டான். அப்பொழுது அவனண்டைக்குத் திரும்பி, அவன் வீட்டுக்கு வந்தார்கள். அவனவர்களுக்கு விருந்துபண்ணிப் புளிப்பில்லா அப்பங்களைச் சுட்டான். அவர்கள் போசித்தார்கள்.

௪ ஆனால் அவர்கள் சயனித்துக்கொள்ளுகிறதற்குமுன் சோதோமிலே வாலிபக்காரர்முதல் கிழவர்மட்டுமுள்ள ஊர்மனிதராகிய சனங்களனைவருங் கடைக்கோடிகளிலுமிருந்து வந்து, * வீட்டைச் சூழ்ந்துகொண்டு, * நியாயா. ௰௯, ௨௨.

லோத்தைக் கூப்பிட்டு, இந்த இராத்திரியிலே உன்னிடத்துக்கு வந்த மனிதரெங்கே? நாங்கள் அவர்களை யறியும்படிக்கு அவர்களை எங்களிடத்துக்கு வெளியே கொண்டுவா என்று அவனோடே சொன்னார்கள்.

சு லோத்தோவெனில் அவர்களிடத்து வாசற்படியிலே புறப்பட்டுப் போய்த் தனக்குப் பின்னாலே கதவைப் பூட்டி,

எ என் சகோதரரே! * பொல்லாப்புச் செய்யாதேயுங்கோளேன்? * நியா. யகூ, உங.

அ இதோ, புருஷனையறியாத இரண்டு குமாரத்திகள் எனக்குண்டே: அவர்களை யாகிலும் உங்களிடத்துக்கு வெளியே கொண்டுவருவேன். உங்கள் பார்வைக்குச் சம்மதியானபடி அவர்களுக்குச் செய்யுங்கள். இந்தப் புருஷருக்கு மாத்திரம் ஒன்றுஞ் செய்யாதேயுங்கள். ஏனெனில் இதற்காக என் கூரையின் நிழலில் வந்தார்களென்றான்.

கூ ஆனால் அவர்கள், அப்பாலே ஒதுங்கிப் போவென்றும், பரதேசியாய் வந்த இவனொருவன் நியாயம் பேசவே பேசுவானென்றும், இப்பொழுது அவர்களைப் பார்க்கிலும் உனக்குப் பொல்லாப்புச் செய்வோமென்றுஞ் சொல்லி, லோத்தென்ற புருஷனை மிகவும் நெருங்கிக் கதவையுடைக்கக் கிட்டினார்கள்.

ய அப்பொழுது அந்தப் புருஷர் தங்கள் கைகளை வெளியே நீட்டி, லோத்தைத் தங்களிடத்துக்கு வீட்டுக்குள் இழுத்துக்கொண்டு கதவைப் பூட்டி,

யக வாசலுக்கு முன்னிருந்த சிறியோர் பெரியோருமாகிய மனுஷருக்குக் குருட்டாட்டம் பிடிக்கப்பண்ணினார்கள். அப்பொழுது அவர்கள் வாசலைத் தேடி இளைத்துப் போனார்கள்.

யஉ அப்பொழுது அந்தப் புருஷர் லோத்தோடே சொன்னதாவது இன்னமிவ்விடத்தில் உனக்காரிருக்கிறார்கள்? மருமகனாவது உன் குமாரராவது உன் குமாரத்திகளாவது, பட்டணத்தில் உனக்கிருக்கிற எவர்களானாலுஞ்சரி; அவர்களை இந்த ஸ்தலத்திலிருந்து வெளியே யழைத்துப்போ.

யங ஏனெனில் நாங்கள் இந்த ஸ்தலத்தை யழிக்கப்போகிறோம். * அந்தபடியினாலே அவர்களுக்குள்ள கர்த்தருடைய முகத்துக்கு முன்பாகப் பெரிதாயிருக்கின்றது. அதை யழிக்கக் கர்த்தர் எங்களை யனுப்பினாரென்றார்கள். * யஅ, உய.

யச அப்பொழுது லோத்து புறப்பட்டுத் தன் குமாரத்திகளை விவாகம்பண்ணப்போகிற தன் மருமக்களோடே பேசி நீங்கள் எழுந்து இந்த ஸ்தலத்தைவிட்டுப் புறப்படுங்கள். ஏனென்றால் கர்த்தர் இந்தப் பட்டணத்தை யழிப்பாரென்றான். ஆனால் அவனுடைய மருமக்களின் பார்வைக்கு அவன் பரியாசம்பண்ணுகிறதாய்க் கண்டது.

யரு கிழக்கு வெளுக்கும்பொழுது அந்தத் தூதர் லோத்தை யத்திவிரத்து, நீ பட்டணத்தின் அக்கிரமத்திலே அழியாதபடிக்கு எழுந்து, உன் பெண்சாதியையும் இங்கேயிருக்கிற உன் இரண்டு குமாரத்திகளையும் அழைத்துப்போவென்றார்கள்.

யசு அவன் தாமதித்துக்கொண்டிருக்கிறபொழுது அந்தப் புருஷர் கர்த்தர் அவன்மேல் வைத்த இரக்கத்தினாலே அவன் கையையும் அவன் பெண்சாதியின் கையையும் அவனிரண்டு குமாரத்திகளின் கையையும் பிடித்து, அவனைப் பட்டணத்திற்கு வெளியே கொண்டுபோய் விட்டார்கள்.

யஎ அப்பொழுது சம்பவித்ததேதென்றால் இவர்கள் அவர்களை வெளியே கொண்டுவந்த பிறபாடு அவர் சொன்னதாவது, உன் ஜீவனைத் தப்ப ஓடிப்போ; பின்னிட்டுப் பாராதே; இந்தச் சமபூமியெங்கும் நில்லாதே; நீ யழியாதபடிக்குப் பர்வதத்திற்கு ஓடிப்போவென்றார்.

யஅ ஆனாலே லோத் அவர்களோடே சொன்னதாவது, ஆ! அப்படியல்ல, ஆண்டவரே!

யகூ இதோ, உம்முடைய கண்களில் உம்முடைய அடியானுக்குக் கிருபை கிடைத்ததே. என் பிராணனை உயிரோடே காக்கத் தேவரீர் எனக்குச் செய்த கிருபையைப் பெரிதாயிருக்கப்பண்ணினீர். ஆனால் நான் பர்வதத்திற்கு ஓடிப்போகமாட்டேன். தீங்கெனைத் தொடர்ந்து பிடித்தால் மரிப்பேனே.

உய அதோ, அந்த ஊர் நான் அதற்கு ஓடிப்போகக் கிட்டியிருக்கின்றதே. அது சின்னதுமாயிருக்கின்றது. என் பிராணன் பிழைக்க நான் அங்கேயாகிலும் ஓடிப்போகட்டுமே? அது சின்னதல்லவோவென்றான்.

உக அப்பொழுது அவர் அவனுடனே சொன்னதாவது, இதோ, நீ சொன்ன ஊரை நான் கவிழ்த்துப்போடாதபடிக்கு இந்தக் காரியத்திலும் உன் முகத்தைப் பார்த்தேன்.

உஉ தீவிரமாய் அங்கே ஓடித் தப்பித்துக்கொள். ஏனெனில் நீ அங்கே வந்து சேருமட்டும் நான் ஒன்றுஞ் செய்யக்கூடாதென்றார். ஆகையால் அந்த ஊர் சோவாரென்னப்பட்டது.

உங லோத் சோவாருக்குள் வந்தபொழுது பூமியின்மேல் சூரியனுதித்தது.

உச அப்பொழுது கர்த்தர் * சோதோமின்மேலுங் கொமோராவின்மேலுங் கர்த்தராலே வானத்திலிருந்து கெந்தகத்தையும் அக்கினியையும் வருஷிக்கப்பண்ணி,

* ரு. மோசே. உகூ, உங. எசா. யங, யகூ. எரே. ருய, சய. ஓசே. யக, அ. ஆமோ. ச, யக. லூக். யஎ, உகூ. உ. பேது. உ, சு. யூதா. எ. வசனம்.

௨௫ அந்தப்பட்டணங்களையும் அந்தச் சமபூமியனைத்தையும் அந்தப்பட்டணங்களின் எல்லாக்குடிகளையும் பூமியின்பயிரையுங் கவிழ்த்துப்போட்டார்.

௨௬ ஆனால் * அவன்பெண்சாதி பின்னிட்டுப்பார்த்து, உப்புத்தூணானாள்.

* லூக்கா. ௰௭, ௩௨.

௨௭ ஆபிரகாமோவென்றால் காலமே யெழுந்திருந்து, தான்கர்த்தருக்குமுன்பாக நின்ற இடத்திற்குப்போய்,

௨௮ சோதோம்கொமோரா பட்டணங்களின் திக்கையுஞ் சமபூமியினுடைய எல்லாத்திக்கையும் நோக்கிப்பார்த்தான். அப்பொழுது இதோ, நிலத்துப்புகை சூளையின்புகையைப்போல எழும்பிற்று.

௨௯ அப்படியே பராபரன் அந்தச்சமபூமியின்பட்டணங்களை யழிக்கிறபொழுது பராபரன் ஆபிரகாமைநினைத்து, லோத்துக்குடியிருந்த பட்டணங்களைத் தாங்கவிழ்த்துப்போடுகையில், லோத்தை அந்தக்கவிழ்த்தலின் நடுவிலிருந்து தப்பவிட்டனுப்பினார்.

லோத்தின்குமாரத்திகள் தங்கள்தகப்பனுக்குவித்தைப் பிறப்பிக்கும்படிக்குச் செய்த முறைகேடானகாரியம்.

௩௰ பிற்பாடு லோத்துசோவாரைவிட்டுப்போய், அவனும் அவனோடேகூட அவனிரண்டுகுமாரத்திகளும் பர்வதத்திலேகுடியேறினார்கள். ஏனெனில் சோவாரிலேகுடியிருக்கப் பயந்தான். அங்கே அவனும் அவனிரண்டுகுமாரத்திகளும் ஒருகெபியிலே குடியிருந்தார்கள்.

௩௧ அப்பொழுது மூத்தவள் இளையவளோடே சொன்னதாவது, நம்முடைய தகப்பன்முதிர்வயதானார். பூமியெங்கும் நடக்கிறமுறைமையின்படியே நம்மோடேசேரப் பூமியில் ஒருபுருஷனுமில்லையே.

௩௨ வா, நம்முடையதகப்பனுக்குவித்தைப் பிறப்பிக்கும்படிக்கு அவருக்கு மதுபானங்குடிக்கக்கொடுத்து, அவரோடேசயனிப்போமென்றாள்.

௩௩ அப்படியே அன்று இராத்திரியில தங்கள்தகப்பனுக்கு மதுபானங் குடிக்கக்கொடுத்தார்கள். மூத்தவள்போய்த்தன்தகப்பனோடேசயனித்தாள். ஆனால் அவள்சயனித்துக்கொண்டதையும் எழுந்திருந்ததையும் உணராதிருந்தான்.

௩௪ மறுநாளிலே சம்பவித்ததேதென்றால், மூத்தவள் இளையவளோடே இதோ, நேற்று என்தகப்பனோடே சயனித்தேன். நம்முடையதகப்பனுக்குவித்தைப் பிறப்பிக்கும்படிக்கு அவருக்கு இன்று இராத்திரிக்கும் மதுபானங்குடிக்கக்கொடுப்போம். அப்பொழுது நீபோய் அவரோடேசயனியென்றாள்.

௩௫ அப்படியே அன்று இராத்திரியிலுந் தங்கள்தகப்பனுக்கு மதுபானங்குடிக்கக் கொடுத்தார்கள். அப்பொழுது இளையவளெழுந்துபோய் அவனோடேசயனித்தாள். ஆனால் அவள்சயனித்துக்கொண்டதையும் எழுந்திருந்ததையும் உணராதிருந்தான்.

௩௬ இந்தவிதமாய் லோத்தின் குமாரத்திகளிருவருந் தங்கள்தகப்பனாலே கர்ப்பந்தரித்தார்கள்.

௩௭ மூத்தவள் ஒரு குமாரனைப்பெற்று அவனுக்கு மோவாபென்றுபேரிட்டாள். அவனே இந்நாள்வரைக்குமிருக்கிற மோவாபியருக்குத் தகப்பன்.

௩௮ இளையவளும் ஒருகுமாரனைப்பெற்று, அவனுக்குப்பென் அம்மி என்றுபேரிட்டாள். அவன் இந்நாள்வரைக்குமிருக்கிற அம்மோன்புத்திரருக்குத் தகப்பன்.

## ௨௰. அதிகாரம்.

கேராரிலே சாராளுக்கு வருமோசத்தைக் கர்த்தர் திருப்பினது.

ஆபிரகாம் அவ்விடத்தைவிட்டுத் தெற்குத்தேசத்திற்குப் பயணம்பண்ணிக் காதேசுக்கும்சூருக்கும் நடுவாகக் குடியேறிக் கேராரிலே தங்கி,

௨ * தன்பெண்சாதியாகிய சாராளைத் தன்சகோதரியென்றான். அப்பொழுது கேராரின் இராசாவாகிய அபிமெலேக் ஆளனுப்பிச் சாராளையெடுத்துக்கொண்டான்.

* ௰௨, ௰௩. ௨௬, ௭.

௩ ஆனால் இராத்திரியிற் சொப்பனத்திலே பராபரன் அபிமெலேக்கினிடத்துக்கு வந்து அவனுடனே, இதோ, நீ எடுத்துக்கொண்ட ஸ்திரியினிமித்தம் நீசாவுக்குள்ளானவன். ஏனெனில் அவள் புருஷனுக்குட்பெண்சாதியாயிருக்கிறாளென்றார்.

௪ அபிமெலேக்கோவென்றால் அவளோடே சேராதிருந்தான். ஆகையால் அவன்சொன்னதாவது, ஆண்டவரே! நீதியுள்ளசாதியையும் கொல்லுவீரோ?

௫ இவள் தன்சகோதரியென்று அவன் என்னோடேசொன்னதில்லையோ? இவன் தன்சகோதரனென்று அவள்தானுஞ்சொன்னாளே; என்னிருதயத்தின் உத்தமத்தோடும் என்கைகளின் குற்றமில்லாமையோடும் இதைச்செய்தேனேயென்றான்.

௬ அப்பொழுது பராபரன் சொப்பனத்தில் அவனோடேசொன்னதாவது, உன்னிருதயத்தின் உத்தமத்தோடே நீ இதைச்செய்தாயென்று நாமறிந்துமிருக்கிறோம். நீ நமக்குவிரோதமாகப் பாவஞ்செய்யாதபடிக்கு நாமுன்னைத்தடுத்துமிருந்தோம். ஆகையால் உன்னையவளைத்தொட ஒட்டாதிருந்தோம்.

௭ இப்பொழுது அமஸ்திரியைப்புருஷனுக்குத்திருமபக்கொடு. ஏனெனில * அவன் தீர்க்கதரிசி. நீ பிழைக்கும்படிக்கு அவன உனக்காக வேணடுதல்செயவான. திருமபக்கொடாமெயபோனால, நீயும உனக்குள்ளயாவருஞ்சாவவே சாவீர்களென்றறியென்றார். * சங்கீதம. ௱௫. ௰௪. ௰௫.

௮ அபிமெலேக் அதிகாலமேயெழுநதிருந்து தன் ஊழியக்காரரையெல்லாம அழைப்பித்து, இந்த எல்லாவார்த்தைகளையும அவர்கள கேட்கசசொனனான. அநதமனிதர்மிகவும பயநதார்கள.

௯ அப்பொழுது அபிமெலேக் ஆபிரகாமை யழைப்பித்து அவனுடனே, நீ எங்களுக்கு என்னசெயதாய? நீ என்மேலும என இராச்சியத்தின்மேலும் பெரும்பாவத்தைச் சுமத்தப்பண்ணுகிறதற்கு உனக்கென்னகுற்றஞ்செயதேன? செய்யத்தகாதகாரியங்களை என்னிடத்திலே செயதாயென்றான.

௰ பினனையும அபிமெலேக்ஆபிரகாமோடே, நீ இநதக்காரியத்தைச்செயவதற்குக் என்னத்தைக்கணடாயென்றான.

௰௧ ஆபிரகாஞ்சொனனதாவது, இவவிடத்திலதெயவபயமேயிலலையென்றுமஎன பெணசாதியினிமித்தம என்னைக்கொலலுவார்களென்று நினைத்தேன.

௰௨ அவள என்சகோதரியென்பதும மெய்தான. அவள என தகப்பனுக்குக்குமாரத்தி; ஆனால என தாயாருக்குக்குமாரத்தியலல, அவள எனக்குப்பெணசாதியானாள.

௰௩ பராபரன என்னை என தகப்பனவீட்டிலிருநது சிதறப்பணணினபொழுது சமபவித்ததென்றால, நாம எநதஸதலத்திலேவநதாலும இவன என்சகோதரனென்று சொலவது நீ எனக்குச்செயயவேணடிய தயவென்று அவளோடே சொலலியிருக்கிறேனென்றான.

௰௪ அப்பொழுது அபிமெலேக் ஆடுமாடுகளையும வேலைக்காரரையும வேலைக்காரிகளையும ஆபிரகாமுக்குக்கொடுத்து, அவன பெணசாதியாகியசாராளை அவனுக்குத்திருமபக்கொடுத்து,

௰௫ இதோ, என தேசம உனக்குமுனபாகவிருக்கின்றது. உனபார்வைக்குச்சமமதியான இடத்திலேகுடியிருவென்று அபிமெலேக்சொலலி,

௰௬ சாராளுடனே, இதோ, உன சகோதரனுக்கு ஆயிரம வெளளிக்காசைக்கொடுத்தேன. இதோ, உன்னோடிருக்கிற எலலாருக்குமுனபாகவும மற்ற அனைவர் முனபாகவும இது உனக்குக்கணகளின முக்காடாகஇருக்குமென்றான. இப்படிப் புததிசொலலப்பட்டாள.

௰௭ ஆபிரகாமபராபரனைவேணடிக்கொணடான. அப்பொழுதுபராபரன அபிமெலேக்கையும அவனபெணசாதியையும அவனவேலைக்காரிகளையும, பிளளைகளைப்பெறும்படியாகக்குணமாக்கினார்.

௰௮ ஏனெனில ஆபிரகாமுடைய பெணசாதியாகியசாராளினிமித்தங்கர்த்தர் அபிமெலேக்குடைய வீட்டுக்கர்ப்பங்களையெலலாம அடைக்கவேயடைத்திருநதார்.

## உ௧. அதிகாரம்.

### சாராள ஈசாக்கைப்பெற்றது.

கர்த்தரோவென்றால * தாம்சொலலியிருநதபடியே சாராளைநோக்கிப்பார்த்தார். கர்த்தர்தாம் உரைத்தபடியேசாராளுக்குச்செயதார். * ௰௭, ௰௯. ௰௮, ௰.

உ * சாராள கர்ப்பநதரித்து, ஆபிரகாமுக்கு அவனமுதிர்வயதிலே, பராபரனஅவனுக்குச் சொலலியிருநத காலத்திட்டத்திலே ஒருகுமாரனைப்பெற்றாள.
* எபிரேயர். ௰௧, ௰௧. ௰௨.

௩ அப்பொழுது ஆபிரகாந்தனக்குப்பிறநதவனும சாராள தனக்குப்பெற்றவனுமான தனகுமாரனுக்கு * ஈசாக்கென்றுபேரிட்டான. * ௰௭, ௰௯.

௪ எட்டுநாளகுழநதையான் தன குமாரன ஈசாக்கை ஆபிரகாம, பராபரனதனக்குக்கற்பித்திருநதபடியேசுன்னத்துப்பணணினான.

௫ ஆபிரகாமுக்கு அவனகுமாரனாகிய ஈசாக்குப்பிறநதபொழுது அவன நூறுவயதாயிருநதான.

௬ சாராள சொனனதாவது, பராபரன எனக்கொருநகைப்பையுணடாக்கினார் இதைக்கேட்கிறயாவரும என்னோடேகூடநகைப்பார்கள.

௭ சாராளபிளளைகளுக்குமுலைகொடுப்பாளென்று ஆபிரகாமுக்கெவனசொலலுவான? என்னென்றால அவர்முதிர்வயதிலே அவருக்கொருகுமாரனைப்பெற்றேனே யென்றாள.

௮ பிளளைவளர்நதுமுலைமறநதது. ஈசாக்முலைமறநதநாளிலே ஆபிரகாம பெரியவிருநதுபணணினான.

### ஆகாருமஅவள மகனாகிய இஸமவேலும அனுப்பிவிடப்பட்டது.

௯ பிறபாடுசாராளஎகிப்துதேசத்தாளாகிய ஆகார் ஆபிரகாமுக்குப்பெற்றகுமாரன ஆகடியமபணணுகிறவனென்றுகணடு,

௰ ஆபிரகாமுடனே, * இநத அடிமைப்பெணணையும அவளமகனையுமபுறமபேதளளும. ஏனெனில இநத அடிமைப்பெணணின மகன என்குமாரனாகிய ஈசாக்கோடேகூடச் சுதந்தரவாளனாயிருப்பதிலலையென்றாள.
* கலா. ௪, ௩௰.

௰௧ தன குமாரனைக்குறிததுசசொலலபபடட இநதவார்த்தை ஆபிரகாமினபார்வைக்குமிகவும ஆகாததாயிருநதது.

௰௨ அபபொழுது தேவன ஆபிரகாமோடே சொனனதாவது, அநதபபிளளையையும உன அடிமைபபெணணையுஙகுறிததுசசொலலபபடடது உனபார்வைக்கு ஆகாததாயிருக்கவேணடாம. சாராள உனனோடே சொனனதெலலாவறறிலும அவள சொல்லைக்கேள. ஏனெனில * ஈசாக்கினிடததில உனவிததுவிளஙகும. * ௰௭, ௨௧. ரோமர். ௯, ௭.

௰௩ அடிமைபபெணணின குமாரனையும அவன உனவிததானபடியினாலே, ஒருசாதியாக்குவேனெனறார்.

௰௪ ஆபிரகாம அதிகாலமேயெழுநதிருநது, அபபததையும ஒருதுருததித்தணணீரையுமெடுதது, ஆகாருக்குத்தோளினமேலதூக்கிவிடடுபபிளளையையுஙகொடுதது அவளையனுபபிவிடடான. அவளபுறபபடடுபபோயப பேயேர்சேபாவின வனாநதிரததிலேவழிதபபித்திரிநதாள.

௰௫ துருததியிலிருநததணணீர்போனபிறபாடு அவளபிளளையை ஒரு செடியினகீழேவிடடுபபோய,

௰௬ எதிராகவிலலெயயுநதூரததிலே உடகாநதாள. ஏனெனிற்பிளளைசாகிறதைநானபார்க்கமாடடேனெனறாள. அவளெதிரே உடகாநது தன சததமெடுததழுதாள.

௰௭ அபபொழுது தேவன பிளளையின சததத்தைக்கேடடார். தேவனுடைய தூதனவானததிலிருநது ஆகாரைககூபபிடடு, அவளுடனே, ஆகாரே! உனக்கெனன வேணடும? பயபபடாதே. தேவன பிளளையிருக்கிற இடததிலே அவனுடைய சத்தத்தைக்கேடடார்.

௰௮ நீயெழுநதிருநதுபிளளையையெடுதது, அவனை உனகையினாற் பிடிததுக்கொணடுபோ. ஏனெனில அவனைபபெரியசாதியாக்குவேனெனறார்

௰௯ தேவன அவளகணகளைததிறநதார். அபபொழுது அவளொருதணணீர்த்துரவைக்கணடுபோயத் துருததியைத் தணணீரினாலநிரபபிபபிளளைக்குக்குடிக்கக்கொடுததாள.

௨௰ தேவனபிளளையோடேகூடவிருநதார். அவனவளர்நதுவனாநதிரததிறகுடியிருநது, வில்வித்தையிலே வலலவனாயிருநதான.

௨௧ அவன பாரானெனற வனாநதிரததிலேகுடியிருநதான. அவனுடையதாய எகிப்துதேசததாளாகிய ஒருபெணணை அவனுக்குவிவாகமபணணுவிததாள.

அபிமெலேக்கும ஆபிரகாமும உடனபடிக்கைபணணிக்கொணடது.

௨௨ அக்காலததிற்சமபவிதததேதெனறால, அபிமெலேக்கும அவனசேனாபதியாகிய பீகோலும ஆபிரகாமோடேசொனனதாவது, நீசெயகிறதெலலாவறறிலுமதேவன உனனோடேகூடவிருக்கிறார்.

௨௩ இபபொழுதும நீயெனனையாகிலும என குமாரனையாகிலும எனபேரனையெனகிலுமவஞசிக்கவேயாமல, நானுனக்குச்செயத்தயவினபடியே நீயெனக்கும, நீதஙகியிருக்கிற இநதத்தேசததிற்குஞசெயவாயெனறு தேவனபேரிலே எனக்கிஙகே ஆணையிடுவெனறான.

௨௪ அபபொழுது ஆபிரகாம, நான ஆணையிடுகிறேனெனறான.

௨௫ ஆனால அபிமெலேக்குடையவேலைக்காரர்பறிததுக்கொணட தணணீர்த்துரவினிமிததம ஆபிரகாம அபிமெலேக்கைக்கடிநதுகொணடான.

௨௬ அதறகு அபிமெலேக், அநதக்காரியததைச்செயதானெனறு அறியேன. நீயெனக்கறிவிதததுமிலலை; இனறுநான அதைக்கேடடதேயொழிய இதற்குமுன் அதைநானகேடடதுமிலலையெனறான.

௨௭ அபபொழுது ஆபிரகாம ஆடுமாடுகளைக்கொணடுவநது அபிமெலேக்குக்குக் கொடுததான. அவர்களிருவரும உடனபடிக்கைபணணிக்கொணடார்கள.

௨௮ ஆபிரகாம ஏழுபெண் ஆட்டுக்குடடிகளைததனியேநிறுததினான.

௨௯ அபபொழுது அபிமெலேக் ஆபிரகாமோடே, நீதனியேநிறுததின் இநத ஏழுபெண் ஆடடுககுடடிகளஎதற்கெனறான.

௩௰ அதறகவன, நானிநதத்துரவையெடுத்ததற்கு எனக்குசசாட்சியாக நீரிநத ஏழுபெண்குடடிகளை எனகையில வாஙகிக்கொளளவேணடுமெனறான.

௩௧ அவர்களிருவரும அவவிடததில ஆணையிடடுக்கொணடபடியினாலே அநத இடமபேயேர்சேபாவெனனபபட்டது.

௩௨ அவர்களபேயேர்சேபாவிலே உடனபடிக்கைபணணிக்கொணடபிறபாடு அபிமேலேக்கும அவனசேனாபதியாகியபீகோலும எழுநதிருநதுபெலிஸ்தருடையதேசததிறகுத்திருமபினார்கள.

௩௩ ஆபிரகாமபேயேர்சேபாவிலே ஒருதோபபைநாடடி எனறுமுளளதேவனாகியகர்த்தருடையநாமததை அவவிடததிலே தொழுதுகொணடான.

௩௪ ஆபிரகாம அநேகநாளபெலிஸ்தருடையதேசததிலதஙகினான.

## ௨௨. அதிகாரம்.

*ஈசாக்கைத் தகனபலியிடும்படி பராபரன் ஆபிரகாமைச் சோதித்தது.*

இந்த நடபடிகளுக்குப் பிறபாடு சம்பவித்ததென்னவென்றால், பராபரன் ஆபிரகாமைச் சோதித்து, அவனுடனே, ஆபிரகாமே! என்றார். அதற்கவன் இதோ, அடியேனென்றான்.

௨ அப்பொழுது அவர் சொன்னதாவது. * நீ சிநேகிக்கிறவனும் உனக்கு ஒரே பேறானவனுமாகிய உன்னுடைய குமாரன் ஈசாக்கை நீ இப்பொழுது அழைத்துக்கொண்டு மோரியதேசத்திற்குப் போய், அங்கே நான் உனக்குச் சொல்லப்போகிற மலைகளில் ஒன்றின்மேல் தகனபலியாகப் பலியிடுவென்றார். * எபிரே. ௰௧, ௰௭.

௩ அப்பொழுது ஆபிரகாம் அதிகாலமே எழுந்திருந்து, தன் கழுதையின்மேல் விரிக்கட்டித் தன் வேலைக்காரரில் இரண்டு பேரையுந் தன் குமாரன் ஈசாக்கையுங் கூட்டிக்கொண்டு, தகனபலிக்குக் கட்டைகளைப் பிளந்து, புறப்பட்டுப் பராபரன் தனக்குச் சொன்ன ஸ்தலத்திற்கு நடந்துபோனான்.

௪ மூன்றாம் நாளிலே ஆபிரகாம் தன் கண்களை யேறெடுத்துத் தூரத்திலே அந்த ஸ்தலத்தைக் கண்டான்.

௫ அப்பொழுது ஆபிரகாம் தன் வேலைக்காரரோடே, நீங்கள் இங்கே கழுதையை நிறுத்தி உட்கார்ந்திருங்கள். நானும் பிள்ளையாண்டானும் அவ்விடமட்டும் போய்ப் பணிந்துகொண்டு உங்களண்டைக்குத் திரும்பிவருவோமென்றான்.

௬ ஆபிரகாம் தகனபலிக் கட்டைகளை எடுத்துத் தன் குமாரனாகிய ஈசாக்கின்மேல் வைத்துத் தன் கையிலே நெருப்பையுங் கத்தியையும் எடுத்துக்கொண்டு, இருவரும் ஏகமாய்ப் போனார்கள்.

௭ அப்பொழுது ஈசாக் தன் தகப்பனாகிய ஆபிரகாமோடே, என் தகப்பனே! என்று சொன்னான். அதற்கவன், என் மகனே! இதோ, நானென்றான் அப்பொழுது அவன், இதோ, நெருப்புங் கட்டையுமிருக்கின்றது. ஆனால் தகனபலிக்கு ஆட்டுக்குட்டி எங்கேயென்றான்.

௮ அப்பொழுது ஆபிரகாம், என் மகனே! பராபரன் தமக்குத் தகன பலிக்கான ஆட்டுக்குட்டியைப் பார்த்துக்கொள்ளுவாரென்றான். அப்புறம் இருவரும் ஏகமாய்ப் போய்,

௯ பராபரன் அவனுக்குச் சொல்லியிருந்த ஸ்தலத்திற்கு வந்தார்கள். அப்பொழுது ஆபிரகாம் அங்கே ஒரு பீடத்தைக் கட்டி, கட்டைகளை அடுக்கித் தன் குமாரனாகிய ஈசாக்கைக் கட்டி அவனைப் பீடத்திலே கட்டைகளின் மேல் கிடத்தினான்.

௰ பிறபாடு ஆபிரகாம் தன் கையை நீட்டித் தன் குமாரனைக் கொல்லும்படிக்குக் கத்தியை எடுத்துக்கொண்டான்.

௰௧ அப்பொழுது கர்த்தருடைய தூதர் வானத்திலிருந்து அவனைக் கூப்பிட்டு, ஆபிரகாமே! ஆபிரகாமே! என்றார். அவன் இதோ, அடியேனென்றான்.

௰௨ அப்பொழுது அவர், பிள்ளையாண்டான்மேல் உன் கையைப் போடாதே. அவனுக்கொன்றுஞ் செய்யாதே; ஏனெனில் நீ பராபரனுக்குப் பயந்திருந்து, நமக்காக உனக்கொரே பேறான உன்னுடைய குமாரனைப் பாராதே போனாயென்று இப்பொழுது அறிந்திருக்கிறோமென்றார்.

௰௩ ஆபிரகாம் தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கிறபொழுது இதோ, பின்னுக்குப் புதரிலே தன் கொம்புகளால் சிக்கிக்கொண்டிருந்த ஒரு ஆட்டுக்கடாவைக் கண்டான். அப்பொழுது ஆபிரகாம் போய்க் கடாவைப் பிடித்து, அதைத் தன் குமாரனுக்குப் பதிலாகத் தகனபலியிட்டான்.

௰௪ ஆபிரகாம் அந்த ஸ்தலத்திற்குக் கர்த்தர் பார்த்துக்கொள்ளுவாரென்று பேரிட்டான். அதினால் இந்நாள் வரைக்கும், கர்த்தருடைய பர்வதத்திலே பார்த்துக்கொள்ளப்படுமென்று சொல்லப்படும்.

௰௫ கர்த்தருடைய தூதர் இரண்டாம் விசை வானத்திலிருந்து ஆபிரகாமைக் கூப்பிட்டுச் சொன்னதாவது,

௰௬ நீ நம்முடைய சொல்லைக் கேட்டு, இந்தக் காரியத்தைச் செய்து, நமக்காக உனக்கொரே பேறான உன்னுடைய குமாரனைப் பாராதே போனபடியினாலே,

௰௭ நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, * உன் வித்தை வானத்து நட்சத்திரங்களைப் போலவுங் கடற்கரையி லிருக்கிற மணலைப் போலவும் பெருகவே பெருகப்பண்ணுவோமென்றும், உன் வித்தார் தங்கள் சத்துருக்களின் வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்களென்றும்,

* ௰௩, ௰௬. ௰௫, ௫.

௰௮ * உன் வித்தினாலே பூமியினுடைய எல்லாச் சாதிகளும் ஆசீர்வதிக்கப்படுமென்றும், † நம்முடைய பேரிலே ஆணையிட்டோமென்று, கர்த்தர் சொல்லுகிறாரென்றார். * ௰௨, ௩. ௰௮, ௰௮. † எபிரே. ௬, ௰௩. ௰௪.

௰௯ ஆபிரகாம் தன் வேலைக்காரரண்டைக்குத் திரும்பி வந்தான். அப்பொழுது எழுந்து புறப்பட்டு, ஏகமாய்ப் பெயெர்செபாவுக்குப் போனார்கள். ஏனென்றால் ஆபிரகாம் பெயெர்செபாவிலே குடியிருந்தான்.

௨௰ இந்த நடபடிகளுக்குப் பிறபாடு ஆபிரகாமுக்கு அறிவிக்கப்பட்டதாவது, இதோ, மில்க்காளும் உன் சகோதரனாகிய நாகோருக்குப் பிள்ளைகளைப் பெற்றாள்.

நேதிரேயிடக்கிற மக்பேலா என்கிற நிலத்தின் கெபியிலே யடக்கம்பண்ணினான்.

உ௰ இப்படியே ஏத்தின்புத்திரர்கையிற் கொள்ளப்பட்ட அந்த நிலமும் அதிலுள்ள கெபியும் ஆபிரகாமுக்குப் பிரேதங்களையடக்கம்பண்ணுஞ்சொந்த நிலமாக ஏற்பட்டது.

## உச. அதிகாரம்.

ஈசாக் ரெபேக்காளைவிவாகம்பண்ணினது.

ஆபிரகாம் வயதுசென்ற கிழவனானான். கர்த்தர் ஆபிரகாமை யெல்லா வற்றிலும் ஆசீர்வதித்துக்கொண்டிருந்தார்.

உ அப்பொழுது ஆபிரகாந்தன்வீட்டிலே யெல்லா மூத்தவனுந் தனக்குண்டானதை யெல்லாம் ஆளுகிறவனுமாகிய தன் ஊழியக்காரனோடே சொன்னதாவது,

௩ * நான்குடியிருக்கிற கானானியருடைய குமாரத்திகளில் நீ என்குமாரனுக்குப் பெண்ணைக்கொள்ளாமல், * உ௮, ௧.

௪ நீ என்சீமைக்கும் என்இனத்தனிடத்துக்கும் போய், என்குமாரனாகிய ஈசாக்குக்குப் பெண்ணைக்கொள்வதற்கு நான் உன்னை வானத்திற்குப்பராபரனும் பூமிக்குப்பராபரனுமாகிய கர்த்தர்பேரிலே ஆணையிடும்படிக்கு, * உன்கையை என்னிடுப்பின்கீழே போடென்றான். * சஎ, உ௯.

௫ அப்பொழுது அந்த ஊழியக்காரன் அவனுடனே, ஒருவேளை அந்தப்பெண் என்பிறகாலே இந்தத்தேசத்திற்குவர மனதில்லாதிருப்பாள். அப்பொழுது உமமுடைய குமாரனை நீர்விட்டுவந்த தேசத்திற்குத் திரும்ப மறுபடியும் அழைத்துப் போவேனோவென்றான்.

௬ அதற்கு ஆபிரகாம் அவனோடே சொன்னதாவது, நீ என்குமாரனை மறுபடியும் அங்கேயழைத்துப்போகாதபடிக்கு எச்சரிக்கையாயிரு.

௭ * என்னை என்தகப்பனுடைய வீட்டிலும் என்னினத்தாரிருக்கிறதேசத்திலுமிருந்து அழைத்துவந்தவரும், † உன்வித்துக்கு இந்தத்தேசத்தைக் கொடுப்போமென்று எனக்குச்சொன்னவரும் எனக்காணையிட்டவருமான வானத்திலுடைய பராபரனாகிய கர்த்தர் நீ அங்கேயிருந்து என்குமாரனுக்கு ஒருபெண்ணைக்கொண்டு வரும்படிக்குத் தமமுடைய தூதனையுனக்கு முன்னே அனுப்புவார். * ௰உ, ௧. † ௰உ, ௭. ௰௩, ௰௫. ௰௫, ௰௮.

௮ பெண் உன்னைப்பின்செல்ல மனதில்லாதிருந்தாளேயாகில், அப்பொழுது நீ இந்த என்னுடைய ஆணைக்கு நீங்கலானவனாவாய். அல்லாமற்றிரும்ப என்குமாரனை மறுபடியும் அழைத்துப்போகாயாகவென்றான்.

௯ அப்பொழுது அந்த ஊழியக்காரன் தன்கையைத்தன்எசமானாகிய ஆபிரகாமுடைய இடுப்பின்கீழேபோட்டு, இந்தக்காரியத்திற்காக அவனுக்காணையிட்டான்.

௰ பிறபாடு ஊழியக்காரன் தன் எசமானுடைய ஒட்டகங்களிற்பத்து ஒட்டகங்களைக் கூட்டிக்கொண்டு போனான். அவன் எசமானுடைய சகலவித உச்சிதங்களும் அவன்கையிலிருந்தது. அவன் எழுந்து புறப்பட்டுப்போய் மெசொப்பொத்தாமியாவிலே நாகோருடைய ஊருக்குவந்து,

௰௧ ஊருக்குப்புறம்பே ஒருதண்ணீர்த்துரவண்டையில, தண்ணீர்மொள்ளுஸ்திரீகள் புறப்படுகிற சாயங்காலவேளையிலே ஒட்டகங்களைமடக்கிச்சொன்னதாவது,

௰உ என் எசமானாகிய ஆபிரகாமுடைய பராபரனாயிருக்கிற கர்த்தாவே! தேவரீர் இன்றைக்கெனக்குக்காரியம்நேரிடப்பண்ணி, என் எசமானாகிய ஆபிரகாமுக்குக் கிருபைசெய்யுமே?

௰௩ இதோ, நான் தண்ணீர்த் துரவண்டையில் நிற்கிறேன். ஊராரின்குமாரத்திகள் தண்ணீர்மொள்ளப் புறப்பட்டுவருவார்களே.

௰௪ நான்குடிக்கஉன்பானையைச்சாயென்று நான் சொல்லும்பொழுது குடி, உன் ஒட்டகங்களுக்குங் குடிக்கவார்ப்பேனென்றுசொல்லும்பெண்பிள்ளையே நீர் உமமுடைய ஊழியக்காரனாகிய ஈசாக்குக்கு நியமித்தவளாயிருக்கவும், என் எசமானுக்குக் கிருபைசெய்தீரென்று நான் இதினால் அறியவுங்கடவதென்றான்.

௰௫ அவன் இன்னம்பேசி முடியவில்லை. அப்பொழுது சமட்வித்தத்தேதென்றால் இதோ, ஆபிரகாமுடைய சகோதரனாகிய நாகோரின்பெண்சாதியில்க்காளுடைய குமாரனாயிருக்கிற பெத்துவேலுக்குப்பிறந்த * ரெபேக்காள் தன்பானையைத்தன்தோளின் மேலவைத்துக்கொண்டு புறப்பட்டுவந்தாள். * உஉ, உ௩.

௰௬ அந்தப்பெண்பிள்ளை மகாரூபவதியும் புருஷனையறியாத கன்னியாஸ்திரியுமாயிருந்தாள். அவள் துரவுக்கிறங்கிப்போய்த் தன்பானையை நிரப்பிக்கொண்டேறிவந்தாள்.

௰௭ அப்பொழுதூழியக்காரன் அவளுக்கெதிர்க்கொண்டோடி, உன்பானையிலே நானொருகொந்தண்ணீர் குடிக்கட்டுமேன? என்றான்.

௰௮ அதற்கவள், குடியும் என்னுடையவனே! என்று, சீக்கிரமாய்த் தன்பானையைத் தன்கையிலிறக்கிக்கொண்டு அவனுக்குக் குடிக்கக்கொடுத்தாள்.

௰௯ கொடுத்துத் தீர்ந்தபின்பு, உமமுடைய ஒட்டகங்களுக்கும் அவைகளகுடித்துத்தீருமட்டும் மொண்டுவார்ப்பேனென்று சொல்லி,

௨௰ தீவிரமாய்த் தன் பானைத் தண்ணீரைத் தொட்டியிலே ஊற்றி, இன்னம் மொண்டுவரத் துரவண்டையிலே ஓடி, அவனுடைய ஒட்டகங்களுக்கெல்லாம் மொண்டு வார்த்தாள்.

௨௧ அந்தப் புருஷன் அவள்மேல் ஆச்சரியப்பட்டுக் கர்த்தர் தன் பயணத்தை வாய்க்கப்பண்ணினாரோ இல்லையோவென்றறிய மவுனமாயிருந்தான்.

௨௨ ஒட்டகங்கள் குடித்துத் தீர்ந்தபிறபாடே அந்தப் புருஷன் அரைச் சேக்கலிடைப் பொன்னான நெற்றிப்பட்டத்தையும் அவள் கைகளுக்குப் பத்துச் சேக்கல் இடைப்பொன்னான இரண்டு சரிகளையுமெடுத்துக் கொடுத்து,

௨௩ நீ ஆருடைய குமாரத்தியென்றெனக்கு அறிவிப்பாயா? உன் தகப்பன் வீட்டில் இராத்தங்க எங்களுக்கு இடமுண்டோ? என்றான்.

௨௪ அவள் அவனுடனே, நான் நாகோருக்கு மில்க்காள் பெற்ற குமாரனாகிய பெத்துவேலின் மகளென்று சொல்லி,

௨௫ அவனுடனே, எங்களிடத்தில் வைக்கோலுந் தீனியும் நிரம்பவிருக்கிறது. இராத்தங்க இடமுமிருக்கின்றதென்றாள்.

௨௬ அப்பொழுது அந்தப் புருஷன் தலைகுனிந்து கர்த்தரைப் பணிந்து கொண்டு,

௨௭ என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்கிற கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். அவர் தம்முடைய கிருபையையுந் தம்முடைய உண்மையையும் என் எசமானைவிட்டு விலகப்பண்ணினதில்லை. நான் வழிப்பயணமாய் வருகையில் கர்த்தர் என்னை என் எசமானுடைய சகோதரர் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுவந்தாரென்றான்.

௨௮ பெண்பிள்ளை ஓடித் தன் தாயின் வீட்டிலே இந்த நடபடியையறிவித்தாள்.

௨௯ ரெபெக்காளுக்கொரு சகோதரனிருந்தான். அவன்பேர் லாபான். இந்த லாபான் வெளியே துரவருகேயிருக்கிற அந்தப் புருஷனண்டைக்கோடினான்.

௩௰ அதெனெனில் இவன் அந்த நெற்றிப்பட்டத்தையுந் தன் சகோதரியின் கைகளிலிருக்கிற சரிகளையுங் கண்டபடியினாலும், இன்னின்னபடி அந்தப் புருஷன் என்னோடே சொன்னானென்று தன் சகோதரி ரெபெக்காள் சொல்லுகிற வார்த்தைகளைக் கேட்டபடியினாலும், அந்தப் புருஷனண்டைக்கு வந்தான். இதோ, அவன் துரவருகே ஒட்டகங்களண்டையிலே நின்றிருந்தான்.

௩௧ அப்பொழுது இவன், கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்டவனே! உள்ளேவா. நீ வெளியே நிற்பானேன்? நான் வீட்டையும் ஒட்டகங்களுக்கு இடத்தையும் ஆயத்தம்பண்ணினேனென்றான்.

௩௨ அப்பொழுது அந்தப் புருஷன் வீட்டுக்கு வந்தான். இவனுமென்றால் ஒட்டகங்களைக் கட்டவிழ்த்து ஒட்டகங்களுக்கு வைக்கோலுந் தீனியும் போட்டு, அவன் கால்களையும் அவனோடேகூட இருந்த மனிதர் கால்களையுங் கழுவுகிறதற்குத் தண்ணீர் கொடுத்தான்.

௩௩ பிறபாடு அவனுக்கு முன்பாகச் சாப்பாடு வைக்கப்பட்டது. ஆனால் அவன், நான் என் வார்த்தைகளைச் சொல்லாததற்கு முன்னே சாப்பிடேனென்றான். அதற்கவன் சொல்லென்றான்.

௩௪ அப்பொழுது அவன் சொன்னதாவது, நான் ஆபிரகாமுடைய ஊழியக்காரன்.

௩௫ கர்த்தர் என் எசமானை மிகவும் ஆசீர்வதித்தார். இவர் பெரியவரானார். அவர் இவருக்கு ஆடுமாடுகளையும் வெள்ளியையும் பொன்னையும் வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் ஒட்டகங்களையுங் கழுதைகளையுங் கட்டளையிட்டார்.

௩௬ என் எசமான் பெண்சாதியாகிய சாராள் முதிர்வயதான பிறபாடு என் எசமானுக்கொரு குமாரனைப் பெற்றாள். இவனுக்கவர் தமக்குண்டானதையெல்லாங் கொடுத்தார்,

௩௭ நான் குடியிருக்கிற கானான் தேசத்தாருடைய குமாரத்திகளில் நீ என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்ளாமல்,

௩௮ நீ என் தகப்பன் வீட்டுக்கும் என் இனத்தண்டைக்கும் போய், என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்வாயாகவென்று என் எசமான் என்னையாணையிட்டார்.

௩௯ அப்பொழுது நான் என் எசமானோடே, ஒருவேளை அந்தப் பெண் என் பிறகாலே வாராதே போவாளென்றேன்.

௪௰ ஆனால் அவர் எனக்குச் சொன்னதாவது, நான் பயந்து நடக்கிற கர்த்தரானவர் உன்னோடே தம்முடைய தூதனையனுப்பி, நீ என் இனத்திலும் என் தகப்பன் வீட்டிலும் என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்வதற்காக உன் பயணத்தை வாய்க்கப்பண்ணுவார்,

௪௧ நீ என் இனத்தண்டைக்குப் போனால், அப்பொழுது என் ஆணைக்கு நீங்கலாயிருப்பாய். அவர்கள் உனக்குக் கொடாதே போனார்களாகில் என்னாணைக்கு நீங்கலாயிருப்பாயென்றார்.

௪௨ அப்படியே இன்று நான் அந்தத் துரவண்டையிலே வந்து சொன்னதாவது, என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாகிய கர்த்தரே! இப்பொழுது நான் பயணம்பண்ணுகிற என் வழியைத் தேவரீர் வாய்க்கப்பண்ணினீரானால்,

௪௩ இதோ, நான் தண்ணீர்த் துரவண்டையிலே நிற்கிறேன். தண்ணீர் மொள்ளப் புறப்பட்டுவரப்போகிற பெண்ணும், நான் அவளுடனே, உன் பானையிலிருக்கிற தண்ணீரிலே கொஞ்சம் எனக்குக் குடிக்கத்தாவென்று சொல்ல,

௪௪ அவளென்னுடனே, நீயுங்குடி; உன் ஒட்டகங்களுக்கும் மொண்டுவார்ப்பேனென்று சொல்லுவளுமான கன்னியாஸ்திரீயே கர்த்தர் என் எசமானுடைய குமாரனுக்கு நியமித்த ஸ்திரீயாவதாகவென்றேன்.

௪௫ இன்னமிதை நான் என் இருதயத்திலே சொல்லிமுடிக்கவில்லை. அப்பொழுது இதோ, ரெபெக்காள் தன் பானையைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு வெளியப்புறப்பட்டுவந்து, துரவுக்கிறங்கிப்போய் மொண்டாள். அப்பொழுது அவளோடே, எனக்குக் குடிக்கத்தாவென்றேன்.

௪௬ அவள் தீவிரமாய்த் தன்மேலிருந்த பானையையிறக்கி, குடியும்; உம்முடைய ஒட்டகங்களுக்கும் வார்ப்பேனென்றாள்; அப்படியே நான் குடித்தேன். அவள் ஒட்டகங்களுக்கும் வார்த்தாள்.

௪௭ அப்பொழுது நீ யாருடைய குமாரத்தியென்று அவளைக் கேட்டேன். அதற்கவள் நாகோருக்கு மில்க்காள் பெற்ற குமாரனாகிய பெத்துவேலின் மகளென்றாள். அப்பொழுது நான் அவள் நெற்றியிலே நெற்றிப்பட்டத்தையும் அவள் கைகளிற் சரிகைகளையும் போட்டு,

௪௮ தலைகுனிந்து கர்த்தரைப் பணிந்துகொண்டு, நான் என் எசமானுடைய சகோதரன் குமாரத்தியை யவர் குமாரனுக்குக் கொள்ள என்னை உண்மையான வழியிலே நடத்திவந்த என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்கிற கர்த்தரை ஸ்தோத்திரித்தேன்.

௪௯ இப்பொழுதும் நீங்கள் என் எசமானுக்குத் தயவும் உண்மையுஞ்செய்கிறவர்களானால், எனக்கறிவியுங்கள். அல்லவென்றால் நான் வலதுபுறத்தையாகிலும் இடதுபுறத்தையாகிலும் நோக்கிப்போகும்படிக்கு அதையுமெனக்கறிவியுங்களென்றேன்.

௫௦ அப்பொழுது லாபானும் பெத்துவேலும் பிரதியுத்தாரமாக, இந்தக்காரியங் கர்த்தராலே வந்தது. உனக்கு நாங்கள் இலப்பமானாலும் நலமானாலுஞ் சொல்லக்கூடாது.

௫௧ இதோ, ரெபெக்காள் உன் முன்பாக இருக்கிறாள். கர்த்தர் சொன்னபடியே அவள் உன் எசமானுடைய குமாரனுக்குப் பெண்சாதியாகும்படிக்கு அவளையழைத்துக்கொண்டுபோவென்றார்கள்.

௫௨ அப்பொழுது சம்பவித்ததென்னவெனில் ஆபிரகாமின் ஊழியக்காரன் அவர்கள் வார்த்தைகளைக் கேட்டபொழுது, தரைமட்டுங்குனிந்து கர்த்தரைப் பணிந்துகொண்டான்.

௫௩ பிறபாடு அந்த ஊழியக்காரன் வெள்ளியுடைமைகளையும் பொன்னுடைமைகளையும் வஸ்திரங்களையுமெடுத்து ரெபெக்காளுக்குக் கொடுத்து, அவள் சகோதரனுக்குந் தாயுக்கும் உச்சிதங்களைக் கொடுத்தான்.

௫௪ பிறபாடு அவனும் அவனோடிருந்த மனிதரும் போசித்துக் குடித்து இராத்தங்கினார்கள். காலமே எழுந்திருந்தபின்பு அவன் என் எசமானனிடத்துக்கு என்னையனுப்புங்களென்றான்.

௫௫ அப்பொழுது அவள் சகோதரனும் அவளுடைய தாயும், பெண் பத்துநாளாகிலும் எங்களோடேயிருந்து, பிறபாடு போகட்டுமென்றார்கள்.

௫௬ அவனோவெனில் அவர்களோடே, கர்த்தர் என் பயணத்தை வாய்க்கப்பண்ணியிருக்கக்கொள்ள என்னைத் தடுக்காதேயுங்கள். நான் என் எசமானனிடத்துக்குப் போக என்னையனுப்புங்களென்றான்.

௫௭ அப்பொழுது அவர்கள், பெண்ணையழைத்து அவள் வாய்ப்பிறப்பைக் கேட்போமென்று சொல்லி,

௫௮ ரெபெக்காளையழைத்து, அவளுடனே, நீயிந்தப் புருஷனோடேகூடப் போவாயோவென்றார்கள். அவள் போவேனென்றாள்.

௫௯ அப்படியே அவர்கள் தங்கள் சகோதரியாகிய ரெபெக்காளையும் அவள் தாதியையும், ஆபிரகாமின் ஊழியக்காரனையும் அவன் மனிதரையும் அனுப்புவித்து,

௬௦ ரெபெக்காளை ஆசீர்வதித்து அவளுடனே, எங்கள் சகோதரியே! நீ ஆயிரம்பதினாயிரங்களாகவும், உன் வித்துத் தன் பகைஞருடைய வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்ளவுங்கடவதென்றார்கள்.

௬௧ அப்பொழுது ரெபெக்காளும் அவள் வேலைக்காரிகளும் எழுந்து ஒட்டகங்கள் மீதிலேறி, அந்த மனிதனைப் பின்சென்றார்கள். ஊழியக்காரன் ரெபெக்காளையழைத்துக்கொண்டுபோனான்.

௬௨ ஈசாக்கோவெனில் * என்னைப் பார்க்கிற சீவனுள்ளவருடைய கிணற்றினின்று வழியாய்ப் புறப்பட்டுவந்தான். ஏனெனில் தெற்குத்தேசத்திற் குடியிருந்தான். * ௰௬, ௰௩. ௰௪.

௬௩ ஈசாக்குச் சாயங்கால வேளையிலே செபத்தியானம்பண்ண வெளியே போயிருந்து, தன் கண்களையேறெடுக்கையில் இதோ, ஒட்டகங்கள் நடந்துவரக்கண்டான்.

௬௪ ரெபெக்காள் தன் கண்களையேறெடுத்து ஈசாக்கைக் காண்கிறபொழுது ஒட்டகத்தைவிட்டிறங்கி,

௬௫ ஊழியக்காரனோடே, இங்கே வெளியிலே நமக்கெதிரே நடந்துவருகிற அந்தப் புருஷன் யார்? என்றாள். அவர் என் எசமானென்று ஊழியக்காரன் சொன்னான். அப்பொழுது அவள் முக்காடிட்டுக்கொண்டாள்.

௬௬ ஊழியக்காரன் தான் செய்த சகல காரியங்களையும் ஈசாக்குக்கு விவரித்தான்.

௬௭ அப்பொழுது ஈசாக்கு இவளைத் தன் தாய் சாராளுடைய கூடாரத்திலே அழைத்துப்போய், ரெபெக்காளை விவாகம்பண்ணினான். அவள் அவனுக்குப் பெண்சாதியானாள். அவன் அவளைச் சிநேகித்தான். இப்படி ஈசாக்குத் தன் தாயுக்குப் பிறபாடு ஆறுதலடைந்தான்.

## ௨௫. அதிகாரம்.

### ஆபிர்காமின் கடைசி நடபடிகள்.

ஆபிர்காம் மறுபடியும் ஒரு பெண்சாதியை விவாகம்பண்ணினான். அவள் பேர் கேத்தூராள்.

௨ இவள் அவனுக்குச் சிம்ரானையும், யக்கெஷானையும், மெதானையும், மீதியானையும், இஸ்பாக்கையுஞ் சூவாகையும் பெற்றாள்.

௩ யக்கெஷான் சேபாவையும், தேதானையும் பெற்றான். தேதானுடைய குமாரர் அசூரீம், லெத்தூரீம், லெயூமீம் என்பவர்கள்.

௪ மீதியானுடைய குமாரர் ஏப்பா, ஏப்பேர், ஆனோக், அபிதா, எல்தா என்பவர்கள். இவர்களெல்லாருங் கேத்தூராளின் பிள்ளைகள்.

௫ ஆபிர்காம் * தனக்குண்டானதெல்லாவற்றையும் ஈசாக்குக்குக் கொடுத்தான்.

* ௨௪, ௩௬.

௬ ஆனால் ஆபிர்காமுக்கிருந்த வைப்பாட்டிகளின் பிள்ளைகளுக்கு ஆபிர்காம் ஈவுகளைக் கொடுத்துத் தானின்னம் உயிரோடிருக்கையில் அவர்களைத் தன் குமாரனாகிய ஈசாக்கைவிட்டுக் கிழக்கே போகக் கீழ்த்தேசத்திற்கு அனுப்பிவிட்டான்.

௭ ஆபிர்காம் உயிரோடிருந்த ஆயிசுநாள் நூற்றெழுபத்தைந்து வருஷம்.

௮ பிற்பாடு ஆபிர்காம் நல்ல நரைவயதிலும் முதிர்ந்த பூர்ண ஆயிசுள்ளவனாய் ஜீவித்து மரித்துத் தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

௯ அப்பொழுது அவனை அவன் குமாரராகிய ஈசாக்கும் இஸ்மவேலும் * மம்ரேக்கெதிரே ஏத்தியனான சோகாரின் குமாரனாகிய எப்பெரோனின் நிலத்திலுள்ள மக்பேலா என்னப்பட்ட கெபியிலே அடக்கம்பண்ணினார்கள். * ௨௩, ௨௰.

௰ அந்த ஆபிர்காம் ஏத்தின் புத்திரர் கையிலே கொண்ட நிலந்தான். அங்கே ஆபிர்காமும் அவன் பெண்சாதியாகிய சாராளும் அடக்கம்பண்ணப்பட்டார்கள்.

௰௧ ஆபிர்காம் மரித்த பிற்பாடு சம்பவித்ததேதென்றால், பராபரன் அவன் குமாரனாகிய ஈசாக்கை ஆசீர்வதித்தார். என்னைப் பார்க்கிற சீவனுள்ளவருடைய கிணறென்னப்பட்ட கிணற்றண்டையிலே ஈசாக்குக் குடியிருந்தான்.

### இஸ்மவேலின் சந்ததி.

௰௨ சாராளுடைய அடிமைப்பெண்ணாகிய எகிப்துதேசத்தாளான ஆகார் ஆபிர்காமுக்குப் பெற்ற குமாரனாகிய இஸ்மவேலின் சந்ததியும், பலபல சந்ததிகளாய்ப்போன இஸ்மவேல் புத்திரர் அழைக்கப்பட்ட நாமங்களுமாவது,

௰௩ இஸ்மவேலுடைய முதற்பேறான குமாரன் நெபாயோத், மற்றவர்கள் கேதார், அத்பேயேல், மிப்சாம்,

௰௪ மிஷ்மா, தூமா, மாசா,

௰௫ ஆதாத், தேமா, யத்தூர், நாபீஸ், கெத்மா.

௰௬ தங்கள் கிராமங்களிலும் அரண்மனைகளிலுங் குடியிருந்து, தங்கள் சனத்தாருக்கு * பன்னிரண்டு பிரபுக்களான இஸ்மவேலின் குமாரர் இவர்கள்தான். அவர்களுடைய நாமங்களும் இவைகள்தாமே.

* ௰௭, ௨௰.

௰௭ இஸ்மவேலின் வயது நூற்றுமுப்பத்தேழு வருஷமாயிருந்தது, பிற்பாடு சீவித்து மரித்துத் தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

௰௮ ஆவிலாதுவக்கி எகிப்துக்கெதிராக அசூருக்குப் போகிற வழியிலிருக்குஞ் சூர்மட்டுங் குடியிருந்தார்கள். இது அவன் சகோதரரெல்லாருக்கும் எதிராய் அவன் பங்கிலே விழுந்த பூமி.

### ஈசாக்குக்கு ஏசாவும் யாக்கோபும் பிறந்தது.

௰௯ ஆபிர்காமின் குமாரனாகிய ஈசாக்குடைய சந்ததியாவது ஆபிர்காம் ஈசாக்கைப் பெற்றான்.

௨௰ ஈசாக்குப் பதானாராமென்கிற சூரியாவின் தேசத்தானாகிய பெத்துவேலுக்குக் குமாரத்தியுஞ் சூரியதேசத்தானாகிய லாபானுக்குச் சகோதரியுமான ரெபெக்காளை விவாகம்பண்ணுகிறபொழுது நாற்பது வயதாயிருந்தான்.

௨௧ ஈசாக்கு மலடியாயிருந்த தன் பெண்சாதிக்காகக் கர்த்தரை வேண்டிக்கொண்டான். கர்த்தர் அவன் வேண்டுதலைக் கேட்டருளினார். அவன் பெண்சாதி ரெபெக்காள் கர்ப்பந்தரித்தாள்.

௨௨ ஆனால் அவள் கர்ப்பத்திலே பிள்ளைகள் ஒன்றுக்கொன்று மோதிக்கொண்டிருந்தது. அப்பொழுது அவள் இப்படியானால் இந்தக் கர்ப்பத்தோடே நானிருப்பானேனென்று சொல்லிக் கர்த்தரைக் கேட்கப்போனாள்.

௨௩ அப்பொழுது கர்த்தர் அவளுடனே இரண்டு சாதிகள் உன் கர்ப்பத்திலுண்டாய இரண்டு சனசதளங்கள் உன் குடல்களிலிருந்து பிரியும். * அவைகளில் ஒரு சனசதளம் மற்ற சனசதளத்தைப் பார்க்கப் பலத்துப்

போம். பெரியவன் சிறியவனைச் சேவிப்பானென்றார். * ரோமர். ௯, ௰. ௰௩.

௨௪ பெற அவளுக்கு நாட்கள் நிறைவேறினபொழுது, இதோ, ரெட்டைப்பிள்ளைகள் அவள்கர்ப்பத்திலிருந்தது.

௨௫ முந்தினவன் சிவந்தவனும் முழுதும் ரோமமான உடையின் சாயலுமாயிருந்து வெளிப்பட்டான். அவனுக்கு ஏசாவென்று பேரிட்டார்கள்.

௨௬ அதற்குப்பிறகு அவன் சகோதரன் ஏசாவின் குதிகாலைத் தன் கையினாலே பிடித்துக்கொண்டு வெளிப்பட்டான். அவனுக்கு யாக்கோபென்றும் பேரிட்டார்கள். அவர்களைப் பெறும்பொழுது ஈசாக்கு அறுபதுவயதாயிருந்தான்.

ஏசாவு தன்னுடைய முதற்பிறப்புச்சுதந்தரத்தை யாக்கோபுக்கு விற்றது.

௨௭ இந்தப்பிள்ளைகள் பெரியவர்களானபொழுது ஏசாவு வேட்டையையறிந்த வெளிச்சுசார்மனிதனும் யாக்கோபோ வெளிக்கூடாரங்களில் தங்கித்திரிகிற நற்குணமனிதனுமாயிருந்தான்.

௨௮ ஈசாக்கு ஏசாவின்மேற்பட்சமாயிருந்தான். ஏனெனில் வேட்டையாடினது அவன்வாய்க்கு ருசிகரமாயிருந்தது. ஆனால் ரெபேக்காள் யாக்கோபின்மேற் பட்சமாயிருந்தாள்.

௨௯ ஏசாவு வெளியிலிருந்து வருகிற ஒருநாளிலே இளைப்பாயவருகிறபொழுது யாக்கோப் ஒருகூழைச் சமைத்திருந்தான்.

௩௰ அப்பொழுது ஏசாவு யாக்கோபோடே போட்சிவப்பாயிருக்கிறதே; அந்தச்சிவப்பானதிலே நான் ருசிபார்க்கட்டுமே? ஏனெனில் இளைப்பாயிருக்கிறேனென்றான். இதைத்தொட்டு அவன்பேர் ஏதோமென்னப்பட்டது.

௩௧ அப்பொழுது யாக்கோப், உன்னுடைய முதற்பிறப்புச்சுதந்தரத்தை இன்றைக்கு விலலென்றான்.

௩௨ அதற்கு ஏசாவு இதோ, நான் சாகப்போகிறேனே; இந்த முதற்பிறப்புச்சுதந்தரம் எனக்கென்னத்துக்கென்றான்.

௩௩ அப்பொழுது யாக்கோப் இன்றெனக்கு ஆணையிடுவென்றான். * அவனிவனுக்கு ஆணையிட்டுத் தன் முதற்பிறப்புச்சுதந்தரத்தை யாக்கோபுக்கு விற்றான்.
* எபிரேயர். ௰௨. ௰௬.

௩௪ அப்பொழுது யாக்கோப் ஏசாவுக்கு அப்பமும் பயற்றங்கூழையுங் கொடுத்தான். அவன் போசித்துக் குடித்து எழுந்திருந்து போனான். இப்படி ஏசாவு முதற்பிறப்புச்சுதந்தரத்தை அசட்டைபண்ணினான்.

## ௨௬. அதிகாரம்.

ஈசாக்குச் சிலகாலம் பெலிஸ்தருக்குள்ளே குடியிருந்தது.

ஆபிர்காமின் நாட்களில் வந்த முந்தின பஞ்சத்தைத்தவிர பின்னொருபஞ்சந் தேசத்திலுண்டாயிற்று. அப்பொழுது ஈசாக்குக் கேராருக்குப் பெலிஸ்தருடைய இராசாவாகிய அபிமெலேக்கண்டைக்குப்போனான்.

௨ கர்த்தர் அவனுக்குத் தரிசனையாகிச் சொன்னதாவது, நீ எகிப்துக்கிறங்கிப்போகாமல் நானுனக்குச் சொல்லுகிற சீமையிலே குடியிரு.

௩ இந்தச்சீமையிலே தங்கியிரு. நானுன்னோடேகூடவிருந்து உன்னையாசீர்வதிப்போம். ஏனெனில் நாமுனக்கும் உன்வித்துக்கும் இந்தத்தேசங்களையெல்லாங்கொடுத்து, * உன்தகப்பனாகிய ஆபிர்காமுக்கு நாமிட்ட ஆணையைத் திட்டப்படுத்துவோம்.
* ௨௨, ௰௬—௰௮.

௪ ஆபிர்காம் நம்முடைய சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து, நம்முடைய திட்டத்தையும் நம்முடைய கற்பனைகளையும் நம்முடைய கட்டளைகளையும் நம்முடைய நியாயப்பிரமாணங்களையுங் கைக்கொண்டபடியினாலே,

௫ நாமுன் வித்தை வானத்தின் நட்சத்திரங்களைப்போலப் பெருகப்பண்ணி, உன்வித்துக்கு இந்தத்தேசங்களையெல்லாங் கொடுப்போம். உன்வித்தினாலே பூமியினுடைய சாதிகளெல்லாம் ஆசீர்வதிக்கப்படுமென்றார்.

௬ அப்படியே ஈசாக்குக் கேராரிலே குடியிருந்தான்.

௭ அவ்விடத்து மனிதர் அவன் பெண்சாதியின் செய்தியை விசாரிக்கும்பொழுது அவன், * இவளென் சகோதரியென்பான். ஏனெனில் ரெபேக்காள் பார்வைக்கு அழகியானபடியால் அவ்விடத்து மனிதர் அவள்நிமித்தமாய்த் தன்னைக் கொல்லுவார்களென்றும் அவளைத் தன் பெண்சாதியென்று சொல்லப் பயந்தான். * ௰௨, ௰௩.

௮ ஆனால் அவனங்கே நெடுநாளிருக்கும்பொழுது சம்பவித்ததேதெனில், பெலிஸ்தரின் இராசாவாகிய அபிமெலேக் பலகணிவழியாய்ப்பார்த்து, இதோ, ஈசாக்குத் தன் பெண்சாதியாகிய ரெபேக்காளோடே சரசம்பண்ணுகிறதைக் கண்டான்.

௯ அப்பொழுது அபிமெலேக் ஈசாக்கையழைத்து இதோ, அவளுன் பெண்சாதியாமே; பின்னையேன் அவளை உன் சகோதரியென்று சொன்னாய்? என்றான். அப்பொழுது ஈசாக்கு அவனுடனே, அவள்நிமித்தம் நான் சாவாதபடிக்கு அப்படிச் சொன்னேனென்றான்.

௰ ஆனால் அபிமெலேக், இப்படியெங்களுக்கேன் செய்தாய்? சனத்திலொருவன்

உன்பெண்சாதியோடே சயனிக்கவும் இப்படியே நீயெங்களமேற் குற்றமவரப்பண்ணவும் வெகுமோசமாயிருந்ததேயென்றன்.

௰௧ பிறபாடு அபிமெலேக் எல்லாச்சனத்தித்தும், இந்தப்புருஷனையாகிலும் அவன்பெண்சாதியையாகிலுந் தொடுகிறவன் கொலையுண்கவே கொலையுண்பானென்று கட்டளையிட்டான்.

௰௨ ஈசாக்கு அந்தத்தேசத்திலேவிதை விதைத்து, அந்தவருஷத்திலே நூற்த்தனை பலனடைந்தான். ஏனெனிற்கர்த்தர் அவனையாசீர்வதித்தார்.

௰௩ அப்படியே அந்தப்புருஷன்பெருகினன். அவன்மித்திப்பும் பலத்தவனாகுமட்டும் வர்வர்பெருகினன்.

௰௪ அவனுக்கு ஆட்டுமந்தையுமாட்டுமந்தையும் வெகுபணிவிடைச்சனமுமிருந்தது. ஆகையாற்பெலிஸ்தர் அவன்மேற்பொறாமையாகி,

௰௫ அவன்தகப்பனுடைய வேலைக்காரர் அவன்தகப்பனாகிய ஆபிரகாமின்நாட்களிலவெட்டின * துரவுகளையெல்லாந் தூற்று மண்ணினாலநிரப்பிப்போட்டார்கள்.

* ௨௧, ௩௰.

௰௬ அபிமெலேக் ஈசாக்குடனே, எங்களைவிட்டுப்போ. ஏனெனில் எங்களைப்பார்க்கமிகவும் பலத்தவனானாயென்றான்.

௰௭ அப்பொழுது ஈசாக்கு அவ்விடம்விட்டுப்புறப்பட்டுக்கேராரின் பள்ளத்தாக்கிலே கூடாரமபோட்டு, அங்கே குடியிருந்து,

௰௮ தனதகப்பனாகிய ஆபிரகாமின் நாட்களிலவெட்டினதும் ஆபிரகாம் மரித்தபிறபாடு பெலிஸ்தர் தூற்றிப்போட்டதுமான துரவுகளை மறுபடியுமெடுத்து, தன தகப்பன் அவைகளுக்கிட்டிருந்த பேர்களினபடியே அவைகளுக்குப்பேரிட்டான்.

௰௯ ஈசாக்குடையவேலைக்காரர்பள்ளத்தாக்கிலேவெட்டி அங்கேசுரக்கிற நீரூற்றைக்கண்டுபிடித்தார்கள்.

௨௰ அப்போது கேராரூர் மேய்ப்பர், இந்தத்தண்ணீர் தங்களுடையதென்று ஈசாக்குடையமேய்ப்பருடனே சண்டைபண்ணினார்கள். அவர்கள்தன்னோடே சண்டைபண்ணினபடியினாலே அந்தத்துரவுக்கு ஏசேக்கென்றுபேரிட்டான்.

௨௧ வேறொருதுரவைவெட்டினார்கள். அதினிமித்தமும் சண்டைபண்ணினார்கள். ஆகையால் அதற்குச்சித்னாவென்று பேரிட்டான்.

௨௨ அவ்விடத்தைவிட்டுப்பேர்ந்துபோய், வேறொருதுரவைவெட்டினான் அதின்பேரில் அவர்கள்சண்டைபண்ணாதிருந்தார்கள்; அப்பொழுது அவன், நாம்தேசத்திற் பலுகும்படிக்கு இப்பொழுதுகர்த்தர் நமக்கிடமுண்டாக்கினாரென்றுசொல்லி, அதற்குரேகொபோத்தென்றுபேரிட்டான்.

௨௩ அங்கேயிருந்து பேர்சேபாவுக்குப்போய் ஏறினான்.

௨௪ அன்று இராத்திரியிலேகர்த்தர் அவனுக்குத்தரிசனையாகி, நாம் உன்தகப்பனாகிய ஆபிரகாமுடையபராபரன். பயப்படாதே; ஏனெனில்நாம் உன்னோடேகூடவிருந்து, நம்முடைய ஊழியக்காரனாகிய ஆபிரகாமினிமித்தம் உன்னையாசீர்வதித்து, உன்விந்தைப்பெருகப்பண்ணுவோமென்றார்.

௨௫ அங்கேயவன் ஒருபலிபீடத்தைக்கட்டிக்கர்த்தருடையநாமத்தைத்தொழுதுகொண்டு, அங்கேதன்கூடாரத்தைப்போட்டான். அங்கே ஈசாக்கின்வேலைக்காரர் ஒருதுரவைவெட்டினார்கள்.

௨௬ ஆனால் * அபிமெலேக்கும் அவன்சிநேகிதனாகிய அகுசாத்தும் அவன்சேனாபதிபிகோலுங்கேராரிலிருந்து அவனண்டைக்குவந்தார்கள். * ௨௧, ௨௨.

௨௭ அப்பொழுது ஈசாக்கு அவர்களுடனே, ஏன் என்னண்டைக்கு வருகிறீர்கள்? நீங்களென்னைப்பகைத்து, என்னை உங்களிடத்திலிராதபடிக்கு அனுப்பிவிட்டீர்களேயென்றான்.

௨௮ அதற்கவர்கள்சொன்னதாவது, கர்த்தர் உம்மோடே கூடவிருக்கிறாரென்றதைக்கண்டோம். ஆகையால் எங்களுக்கு முமக்கும் ஒரு ஆணையேற்பாடு உண்டாகக்கடவதென்று சொல்லிக்கொண்டோம்.

௨௯ இப்பொழுதும் நாங்களுமமைத் தொடாமல் நன்மையையே உமக்குச்செய்து, உம்மைச்சமாதானத்தோடேயனுப்புவித்ததுபோலே, நீரெங்களுக்குத்தீங்கு செய்யாதபடிக்குஉம்மோடே உடம்படிக்கைபண்ணிக்கொள்ளுவோம். நீர் இப்பொழுதுகர்த்தரால ஆசீர்வதிக்கப் பட்டவராமேயென்றார்கள்.

௩௰ அவர்களுக்கு விருந்துபண்ணினான். அவர்கள்போசித்துக்குடித்தார்கள்.

௩௧ அதிகாலமேயெழுந்திருந்து ஒருவருக்கொருவர் ஆணையிட்டார்கள். பிறபாடு ஈசாக்கு அவர்களையனுப்புவித்தான். அவர்கள் சமாதானத்தோடே யவனைவிட்டுப்போனார்கள்.

௩௨ அந்நாளிலதானே ஈசாக்கின்வேலைக்காரர்வந்து, தாங்களவெட்டின துரவின செய்தியையவனுக்கறிவித்துத் தண்ணீரைக்கண்டுபிடித்தோமென்றார்கள்.

௩௩ அப்பொழுது அதற்குச்சேபாவென்றுபேரிட்டான். ஆகையால் அந்த ஊரின்பேர் இந்நாளவரைக்கும் பேர்சேபாவென்னப்படும்.

ஏசாவின் விவாகம்.

௩௪ ஏசாவு நாற்பதுவயதானபொழுது, ஏத்தியனானபேயெரியின் குமாரத்தியாகிய

பஸ்மாத்தையும் விவாகம்பண்ணினான்.

௩௫ இவர்கள் ஈசாக்குக்கும் ரெபெக்கா ளுக்கும் மனநோவாயிருந்தார்கள்.

## ௨௭. அதிகாரம்.

ஈசாக்குத் தன் மூத்தகுமாரனாகிய ஏசாவுக்குக் கொடுக்கப்போகிற ஆசீர்வாதத்தை யாக்கோபு தந்திரமாய் எடுத்துக்கொண்டது.

ஈசாக்கு முதிர்வயதாகிறதினாலே அவன் கண் இருளடைந்து பார்வையற்றுப்போன பொழுது சம்பவித்ததென்னவென்றால், அவன் தன் மூத்தகுமாரனாகிய ஏசாவையழைத்து, அவனோடே, என் மகனே! என்றான். இவன் அவனுடனே இதோ, இருக்கிறேனென்றான்.

௨ அப்பொழுது அவன் சொன்னதாவது, இதோ, முதிர்வயதானேன்; என் மரணநாளையறியேன்.

௩ இப்பொழுதும் நீ உன் ஆயுதங்களாகிய உன் அம்பறாத்தூணியையும் உன் வில்லையுமெடுத்துக்கொண்டு வெளியே போய் எனக்காக வேட்டையாடிக்கொண்டுவந்து,

௪ எனக்குப் பிரியமாயிருக்கிற ருசியுள்ள ஒரு பதார்த்தத்தைப் பண்ணி நான் புசிக்கவும் மரிக்காததற்குமுன்னே என் ஆத்துமம் உன்னை யாசீர்வதிக்கவும் என்னண்டைக்குக் கொண்டுவாவென்றான்.

௫ ஆனால் ஈசாக்குத் தன்குமாரனாகிய ஏசாவோடே பேசுகையில் ரெபெக்காள் கேட்டுக்கொண்டிருந்தாள். ஏசாவு வேட்டையாடிக் கொண்டுவர வெளியே போனான்.

௬ அப்பொழுது ரெபெக்காள் தன் குமாரனாகிய யாக்கோபோடே சொன்னதாவது, இதோ, உன் தகப்பன் உன் சகோதரனாகிய ஏசாவோடே,

௭ நான் புசித்து என் மரணத்திற்கு முன்னே உன்னைக் கர்த்தருக்கு முன்பாக ஆசீர்வதிப்பதற்காக நீ எனக்காக வேட்டையாடிக்கொண்டுவந்து, ருசியுள்ள ஒரு பதார்த்தத்தை எனக்குப் பண்ணென்று சொல்லக்கேட்டேன்.

௮ இப்பொழுதும் என் மகனே! நான் உனக்குக் கற்பிக்கிறபிரகாரமாக என் சொல் கேட்டுச்செய்.

௯ நீ ஆட்டு மந்தைக்குப்போய், இரண்டு நல்ல வெள்ளாட்டுக்குட்டிகளை எனக்குக் கொண்டுவாயேன்? நான் அவைகளை உன் தகப்பனுக்குப் பிரியமானபடி ருசியுள்ள பதார்த்தமாக்குவேன்.

௰ உன் தகப்பன் தம்முடைய மரணத்திற்கு முன்னே உன்னை யாசீர்வதிக்கும்படிக்கு நீ அவைகளை அவரண்டைக்கு அவர் புசிக்கக் கொண்டுபோவாயாக வேண்டும்,

௰௧ ஆனால் யாக்கோபு தன் தாயாகிய ரெபெக்காளோடே சொன்னதாவது, இதோ, என் சகோதரனாகிய ஏசாவு* ரோமமுள்ளமனுஷன்; நானோவெனில் ரோமமில்லாதவன்.

* ௨௫, ௨௬.

௰௨ ஒருவேளை என் தகப்பன் என்னைத் தடவிப்பார்ப்பார்; அப்பொழுது நான் அவருக்கு எத்தனாய்க் காணப்பட்டு, என்மேல் ஆசீர்வாதத்தையல்ல சாபத்தை வருவித்துக் கொள்ளுவேனேயென்றான்.

௰௩ ஆனால் அவன் தாய் அவனுடனே என் மகனே! உனக்கு வரும் சாபம் என்மேலிருக்கட்டும். என் சொல்லைமாத்திரம் நீ கேட்டுப்போய் எனக்குக் கொண்டுவாவென்றாள்.

௰௪ அவன் போய்ப் பிடித்துத் தன் தாயண்டைக்குக் கொண்டுவந்தான். அப்பொழுது அவனுடைய தாய் அவன் தகப்பனுக்குப் பிரியமானபடி ருசியுள்ள ஒரு பதார்த்தத்தைப் பண்ணினாள்.

௰௫ பிறகு ரெபெக்காள் வீட்டிலே தன்னிடமாயிருந்த தன் மூத்தகுமாரனாகிய ஏசாவின் நல்ல வஸ்திரங்களையெடுத்துத் தன் இளையகுமாரனாகிய யாக்கோபுக்குடுத்தி,

௰௬ வெள்ளாட்டுக் குட்டிகளின் தோலைகளை அவன் கைகளின்மேலும் ரோமமில்லாத அவன் கழுத்திலும் தரித்து,

௰௭ தான் பண்ணின ருசியுள்ள பதார்த்தத்தையும் அப்பத்தையுந் தன் குமாரனாகிய யாக்கோபின் கையிலே கொடுத்தாள்.

௰௮ அவன் தன் தகப்பனண்டையிலே வந்து, என் தகப்பனே! என்றான். அதற்கவன், இதோ, இருக்கிறேன் என் மகனே! நீ ஆரென்றான்.

௰௯ அப்பொழுது யாக்கோபு தன் தகப்பனுடனே, நான் உமக்கு மூத்தப்பிறந்தவனாகிய ஏசாவு. நீர் என்னோடே சொன்னபடியே செய்தேன். இப்பொழுதும் உம்முடைய ஆத்துமம் என்னை யாசீர்வதிக்கும்படிக்கு நீர் எழுந்து உட்கார்ந்து நான் வேட்டையாடினதிலே புசியுமென்றான்.

௨௰ அப்பொழுது ஈசாக்குத் தன்குமாரனுடனே, என் மகனே! இது உனக்கித்தனை சீக்கிரமாய் அகப்பட்டதெப்படி? என்றான். இவன், உம்முடைய பராபரனாகிய கர்த்தர் எனக்கு நேரிடப்பண்ணினாரென்றான்.

௨௧ அப்பொழுது ஈசாக்கு யாக்கோபுடனே, என் மகனே! நீ என் குமாரனாகிய ஏசாவுதானோ? அல்லவோ? என்று நான் உன்னைத் தடவிப்பார்க்கக் கிட்டவாவென்றான்.

௨௨ யாக்கோபு தன் தகப்பனாகிய ஈசாக்கண்டையிலே கிட்டப்போனான். அவன் இவனைத் தடவிச் சத்தம் யாக்கோபின் சத்தம். கைகளோ ஏசாவின் கைகளென்று சொல்லி,

௨௩ இவன் கைகள் இவன் சகோதரனாகிய ஏசாவின் கைகளைப்போல ரோமமானபடி

யிருந்ததால இவனை யறியாதேபோய, இவனை யாசீர்வதிதது,

உ௪ நீ என குமாரனாகிய ஏசாவுதானே? என்றான. இவன நானதானென்றான.

உ௫ அபபொழுது அவன, என குமாரனாகிய நீ வேட்டையாடினதிலே நான புசிதது என ஆததுமம உன்னை யாசீர்வதிககும்படிககு என்னிடததிற கொண்டுவாவென்றான. அவனிடததிற கொண்டுவநதான. அப்பொழுது அவன புசிததான. பிறபாடு திராட்சப்பழ இரசம அவனுககுக கொண்டுவநதான; அவன குடிததான.

உ௬ அபபொழுது இவன தகபபனாகிய ஈசாககு இவனோடே, என மகனே! நீ கிட்டவநது என்னை முததஞ்செய்யேனென்றான

உ௭ இவன கிட்டவநது அவனை முததஞ்செயதான அபபொழுது அவன இவனவஸதிரஙகளினவாசனையை முகரநது இவனையாசீர்வதிததுச்சொன்னதாவது, இதோ, என குமாரனுடைய வாசனை கர்ததர் ஆசீர்வதிதத வயலவெளியின வாசனையைபபோலிருக்கின்றது.

உ௮ * பராபரன உனககு வானததுப்பனியிலும பூமியின புஷடியிலும கொடுததுத் திரளதானியததையுந திராட்சப்பழ இரசததையுங கட்டளையிடுவாராக.

* எபிரேயர். ௰௧, உ௰.

உ௯ சனசதஙகள உன்னைச்சேவிககவும, சாதிகள உன்னை வணஙகவுங கடவது, * உன சகோதரருககு எசமானாயிரு. உன தாயின பிள்ளைகள உன்னை வணஙகக்கடவர்கள. † உன்னைச் சபிககிறவர்கள சபிககபபட்டவர்களும, உன்னை யாசீர்வதிககிறவர்கள ஆசீர்வதிககபபட்டவர்களுமாயிருபபார்களாகவென்றான. * உ௫, உ௩. † ௰௨, ௩.

௪. மோசே. உ௪, ௬.

௩௰ ஈசாககு யாககோபை ஆசீர்வதிததுத் தீர்நதபொழுது சமபவிததததென்றால, யாககோபு தன தகபபனாகிய ஈசாககின முகததைவிட்டுப புறபபட்ட வுடனே அவன சகோதரனாகிய ஏசாவுவேட்டையாடிககொண்டுவநதான.

௩௧ இவனும ருசியுள்ள பதார்ததததைப பணணித் தன தகபபனண்டைககுக கொண்டுவநது, தன தகபபனுடனே, உமமுடைய ஆததுமம என்னை ஆசீர்வதிககும்படிககு என தகபபனெழுநதிருநது, தமமுடைய குமாரன வேட்டையாடினதிலே புசிபபாராகவென்றான.

௩௨ அபபொழுது அவன தகபபனாகிய ஈசாககு அவனுடனே, நீ யார்? என்றான அதறகவன, நான உமககு முதற்பிறநத குமாரனாகிய ஏசாவென்றான.

௩௩ அபபொழுது ஈசாககுமகா அதிராய அதிர்நது, சொன்னதாவது, வேட்டையாடி எனககுககொண்டுவநதானே; அவன யார்? நீ வாராததறகுமுன்னே நான அதெலலாவறறிலும புசிதது அவனையாசீர்வதிததேனே; அவன ஆசீர்வதிககபபட்டவனுமாயிருபபானென்றான.

௩௪ ஏசாவு தன தகபபனுடைய வார்ததைகளைககேட்டபொழுது, * மகா உரததசசபபான சததமாய அலறி தன தகபபனோடே, என தகபபனே! என்னையும ஆசீர்வதியுமென்றான. * எபிரேயர். ௰௨, ௰௭.

௩௫ அதறகவன, உன சகோதரன தநதிரமாயவநது உனனுடைய ஆசீர்வாதததைப பெறறுககொண்டானென்றான.

௩௬ அபபொழுது இவன, அவனபேர் யாககோபு எனனபபடுகிறது சரியலலவோ? அதேனென்றால இரணடுதரம இரணடுமுறை என்னை மோசமபடுததினான. * என சேஷடபுததிரபாகததைப பெறறுககொண்டான. இதோ, என ஆசீர்வாதததையும இபபொழுது எடுததுககொண்டானென்று சொலலி, நீ எனககு ஒரு ஆசீர்வாதததையாகிலும வைககவிலலையோ? என்றான.

* உ௫, ௩௩.

௩௭ ஈசாககு ஏசாவுககுப பிரததியுததரமாக, இதோ, நான அவனை உனககு எசமானாககவைததேனே. அவன சகோதரரையெலலாம அவனுககு ஊழியககாரராகக் கொடுதது, அவனைத் தானியததினாலுந திராட்சப்பழ இரசததினாலும ஆதரிததேனே; இபபொழுதும உனககு நான என்ன செய்யலாம என மகனே! என்றான.

௩௮ ஏசாவு தன தகபபனோடே, என தகபபனே! இநத ஒரே ஆசீர்வாதம உமககிருககிறதோ? என்னையும ஆசீர்வதியும என தகபபனே! என்று ஏசாவுசொலலித் தன சததததையுயர்ததியழுதான.

௩௯ அபபொழுது அவன தகபபனாகிய ஈசாககு அவனுககுப பிரததியுததரமாகச் சொன்னதாவது, இதோ, உன குடியிருபபு பூமியின புஷடியோடும உயர் வானததிலிருநதிறஙகும பனியோடுமிருககும.

௪௰ உன பட்டயததினாலே நீ பிழைதது, உன சகோதரனைச் சேவிபபாய. * நீ மேற்கொளளுஙகாலம வரும்பொழுதோவெனில, நீ உன கழுததிலிருககிற அவனுடைய நுகததடியையுதறிப்போடுவாயென்றான.

உ. இராசா. ௮, ௨௰.

௪௧ ஏசாவோவெனில யாககோபைததன் தகபபன அவனையாசீர்வதிதத ஆசீர்வாததததினிமிததம பகைதது: என் தகபபனுககாகத துககிககும நாட்கள சமீபிககும. அபபொழுது என சகோதரனாகிய யாககோபைககொன்றுபோடுவேனென்று ஏசாவுதன இருதயததிலே சொலலிககொண்டான.

௪௨ ஆனாலரெபேககாளுககு அவளுடைய மூதத குமாரனாகிய ஏசாவின வார்ததைகள அறிவிககபபட்டது. அபபொழுது அவ

௰௭ அவன் பயந்து இந்த ஸ்தலம் எத்தனை பயப்படத்தக்கதாயிருக்கிறது. இது பராபரனுடைய வீடொழிய வேறொன்றல்ல, இது வானத்தின் வாசலென்று சொல்லி,

௰௮ யாக்கோபு அதிகாலமே யெழுந்திருந்து, தன் தலைமாட்டிலே போட்டுக்கொண்டிருந்த கல்லை யெடுத்துக்கொண்டு அதைத் தூணாக நிறுத்தி, அதின் மீதில் எண்ணெயை வார்த்து,

௰௯ அந்த ஸ்தலத்திற்குப் பெத்தேலென்று பேரிட்டான். அவ்வூரிலே முந்தின பேரோவென்றால் லூஸ் என்பது.

௨௰ யாக்கோபு ஒரு பொருத்தனையைப் பண்ணிச் சொன்னதாவது, பராபரன் என்னோடே கூடவிருந்து, நான் நடக்கிற இந்த வழியிலே என்னைக் காப்பாற்றிப் புசிக்க அப்பமும் உடுக்க வஸ்திரமும் எனக்குக் கொடுத்து,

௨௰௧ என்னை என் தகப்பன் வீட்டுக்குச் சமாதானத்தோடே திரும்பிவரப்பண்ணி, இப்படியே கர்த்தர் எனக்குப் பராபரனாயிருந்தாராகில்,

௨௰௨ நான் தூணாக நிறுத்தின இந்தக் கல்லு பராபரனுடைய வீடாகும். தேவரீர் எனக்குக் கொடுப்பதெல்லாவற்றிலும் பத்திலொன்றை யுமக்குச் செலுத்துவேனென்றான்.

## ௨௰௯. அதிகாரம்.

யாக்கோபு லாபானண்டையிலே வந்திருந்து பண்ணின விவாகங்கள்.

பிற்பாடு யாக்கோபு கால் எட்டி நடந்து கிழக்கத்தியரின் தேசத்தில் வந்தான்.

௨ அப்பொழுது இதோ, வயல்வெளியிலே ஒரு கிணற்றையும், அங்கே அதினருகே மடக்கியிருக்கிற மூன்று ஆட்டுமந்தைகளையுங் கண்டான். ஏனென்னில் அந்தக் கிணற்றிலே மந்தைகளுக்குத் தண்ணீர் மொண்டு காட்டுவார்கள். கிணற்றினுடைய வாயின்மேலோவென்றால் ஒரு பெரிய கல்லு வைக்கப்பட்டிருந்தது.

௩ அவ்விடத்தில் மந்தைகளெல்லாஞ் சேர்ந்ததற்குப் பிற்பாடு அவர்கள் கிணற்றுவாயின்மேலிருக்குங் கல்லைப்புரட்டி ஆடுகளுக்குத் தண்ணீர்காட்டி, மறுபடியுங் கல்லை அதின் தானத்திற் கிணற்றுவாயின்மேல் வைப்பார்கள்.

௪ யாக்கோபு அவர்களுடனே, என் சகோதரரே! நீங்கள் எவ்விடத்தாரென்றான். அவர்கள், நாங்கள் ஆரானூர் மனிதர்களென்றார்கள்.

௫ அப்பொழுது அவர்களோடே, நாகோரின் குமாரனாகிய லாபானை யறிவீர்களோ? என்றான். அறிவோமென்றார்கள்.

௬ அப்பொழுது அவர்களை, அவன் சுகமாயிருக்கிறானோ என்று கேட்டான். அவர்கள், சுகமாயிருக்கிறானென்றும் அதோ, அவன் குமாரத்தியாகிய ராகேல் ஆடுகளையோட்டி வருகிறாளென்றுஞ் சொன்னார்கள்.

௭ அப்பொழுது அவன், இதோ, இன்னம் வெகு பொழுதிருக்கிறது. இது மந்தைகள் சேர்க்கிற வேளையல்லவே; ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டிப்போய் மேயுங்களென்றான்.

௮ அதற்கவர்கள், எல்லா மந்தைகளுஞ் சேருமட்டும் எங்களுக்குக் கூடாது. கிணற்றுவாயின்மேலிருக்குங் கல்லைப்புரட்டுவார்கள். அதற்குப்பிறகு மந்தைகளுக்குத் தண்ணீர் காட்டுகிறோமென்றார்கள்.

௯ அவனிவர்களோடே இன்னம் பேசிக்கொண்டிருக்கையில், ராகேல் தன் தகப்பனுடைய ஆடுகளோடே வந்தாள். ஏனென்னில் அவைகளை மேய்க்கிறவளாயிருந்தாள்.

௰ சம்பவித்ததேதென்றால் யாக்கோபு தன் தாயின் சகோதரனான லாபானுடைய குமாரத்தியாகிய ராகேலையுந் தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடுகளையுங் கண்டபொழுது, யாக்கோபு சேர்ந்துபோய்க் கிணற்றுவாயின்மேலிருந்த கல்லைப்புரட்டித் தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடுகளுக்குத் தண்ணீர்காட்டினான். * ௨. மோசே. ௨, ௰௭.

௰௧ பிற்பாடு யாக்கோபு ராகேலை முத்திசெய்து சத்தமிட்டழுது,

௰௨ தான் அவள் தகப்பனுடைய தம்பியென்றும், ரெபெக்காளின் குமாரனென்றும் யாக்கோபு ராகேலுக்கறிவித்தான். அப்பொழுது அவளோடித் தன் தகப்பனுக்கறிவித்தாள்.

௰௩ அப்பொழுது சம்பவித்ததேதென்றால், லாபான் தன் சகோதரியின் குமாரனாகிய யாக்கோபுடைய செய்தியைக் கேட்டபொழுது அவனிவனுக்கெதிர்கொண்டோடி, இவனைக் கட்டிக்கொண்டு முத்திசெய்து, தன் வீட்டுக்கழைத்துப் போனான். அப்பொழுது இவன் லாபானுக்கு இந்தக்காரியங்களையெல்லாம் விவரித்தான்.

௰௪ அப்பொழுது லாபான் இவனுடனே, நீயென்னெலும்பும் என் மாம்சமுமாமேயென்றான். அவனண்டையிலே இவனொரு மாதக்காலமிருந்த பிற்பாடு,

௰௫ லாபான் யாக்கோபுடனே, நீயென் தம்பியானதினாலே, இலவசமாய் எனக்கு வேலைசெய்யவேண்டுமோ? உனக்குக் கூலியென்னவென்று எனக்குச் சொல்லென்றான்.

௰௬ லாபானுக்கோவென்னில் இரண்டு குமாரத்திகளிருந்தார்கள். மூத்தவள் பேர் லேயாள், இளையவள் பேர் ராகேல்,

௰௭ ஆனால் லேயாளுடைய கண்கள் கூச்சப்பார்வையாயிருந்தது. ராகேலோவென்னி

௮ அப்பொழுது ராகேல், நான் தேவ போராட்டமாய் என் சகோதரியோடே போராடி மேற்கொண்டேனென்று சொல்லி அவனுக்கு நப்தலியென்று பேரிட்டாள்.

௯ லேயாள் தான் பெறுகிறது நின்றுபோனதைக் கண்டு, தன் வேலைக்காரியாகிய சில்பாளை அழைத்து அவளை யாக்கோபுக்குப் பெண்சாதியாகக் கொடுத்தாள்.

௰ லேயாளின் வேலைக்காரியாகிய சில்பாள் யாக்கோபுக்கொரு குமாரனைப் பெற்றாள்.

௰௧ அப்பொழுது லேயாள் ஏராளமாகிறதென்று சொல்லி, அவனுக்குக் காத்தென்று பேரிட்டாள்.

௰௨ பிற்பாடு லேயாளின் வேலைக்காரியாகிய சில்பாள் யாக்கோபுக்கு இரண்டாங் குமாரனைப் பெற்றாள்.

௰௩ அப்பொழுது லேயாள், என் பாக்கியத்துக்காயிற்று. ஏனெனில் குமாரத்திகள் என்னைப் பாக்கியவதியென்பார்களென்று சொல்லி, அவனுக்கு ஆசேர் என்று பேரிட்டாள்.

௰௪ கோதுமையறுப்பு நாட்களிலே ரூபன் புறப்பட்டு வெளியிலே தூதாயிகளைக் கண்டுபிடித்து, அவைகளைத் தன் தாயாகிய லேயாளண்டைக்குக் கொண்டுவந்தான். அப்பொழுது ராகேல் லேயாளுடனே உன் குமாரனுடைய தூதாயிகளில் எனக்குக் கொஞ்சந்தாவென்றாள்.

௰௫ அப்பொழுது அவள் இவளுடனே, நீ என் புருஷனை யெடுத்துக்கொண்டது கொஞ்ச காரியமோ? என் குமாரனுடைய தூதாயிகளையும் எடுத்துக்கொள்வாயோ? என்றாள். அப்பொழுது ராகேல், உன் குமாரனுடைய தூதாயிகளுக்கீடாக இன்று இராவைக்கு அவர் உன்னோடே சயனம் பண்ணட்டுமென்றாள்.

௰௬ யாக்கோபு சாயங்காலத்திலே வெளியிலிருந்து வருகையில் லேயாள் புறப்பட்டு அவனுக்கெதிர்கொண்டுபோய், என்னிடத்தில் வருவீராக. ஏனெனில் என் குமாரனுடைய தூதாயிகளாலே உம்மைச் சம்பாதித்தேனென்றாள். ஆகையால் அன்று இராத்திரியில் அவளோடே சயனித்தான்.

௰௭ பராபரன் லேயாளைக் கேட்டருளினார். அவள் கர்ப்பந்தரித்து யாக்கோபுக்கு ஐந்தாங் குமாரனைப் பெற்றாள்.

௰௮ அப்பொழுது லேயாள்; நான் என் வேலைக்காரியை யென் புருஷனுக்குக் கொடுத்தபடியினாலே பராபரன் எனக்குச் சந்தாரென்று சொல்லி, அவனுக்கு இசக்காரென்று பேரிட்டாள்.

௰௯ அப்புறம் லேயாள் கர்ப்பந்தரித்து யாக்கோபுக்கு ஆறாங் குமாரனைப் பெற்றாள்.

௨௰ அப்பொழுது லேயாள், பராபரன் எனக்கு நல்ல ஈவைத் தந்தார். இந்த முறை என் புருஷன் என்னுடனே வாசமாவார். ஏனெனில் அவருக்கு ஆறு குமாரரைப் பெற்றேனென்று சொல்லி, அவனுக்குச் செபுலோனென்று பேரிட்டாள்.

௨௰௧ பிற்பாடு அவள் ஒரு குமாரத்தியைப் பெற்று, அவளுக்குத் தீனாளென்று பேரிட்டாள்.

௨௰௨ அல்லாமல் பராபரன் ராகேலை நினைந்தார். அவளைப் பராபரன் கேட்டருளி அவள் கர்ப்பந் திறந்தார்.

௨௰௩ அவள் கர்ப்பந்தரித்து, ஒரு குமாரனைப் பெற்றுப் * பராபரன் என் நிந்தையை நீக்கிப்போட்டாரென்றும், * லூக். ௧, ௨௫.

௨௰௪ கர்த்தர் எனக்கு இன்னமொரு குமாரனைக் கொடுப்பாரென்று சொல்லி, அவனுக்கு யோசேப்பென்று பேரிட்டாள். யாக்கோபு லாபானுடைய சேவகத்திலே இடைத்த ஆஸ்தி.

௨௰௫ அப்பால் சம்பவித்ததேதெனில் ராகேல் யோசேப்பைப் பெற்றபிற்பாடு யாக்கோபு லாபானை நோக்கி: நான் என் ஸ்தலத்துக்கும் என் தேசத்துக்கும் போகும்படி என்னை அனுப்பிவிடும்.

௨௰௬ நான் உமக்கு ஊழியஞ்செய்து சம்பாதித்த என் பெண்சாதிகளையும் என் பிள்ளைகளையும் எனக்குத் தாரும். நான் போவேன். ஏனெனில் நான் உமக்குச் சேவித்த சேவகத்தை நீர் அறிந்திருக்கிறீரென்றான்.

௨௰௭ அப்பொழுது லாபான் அவனோடே சொன்னதாவது, உன் கண்ணில் எனக்குத் தயவு கிடைத்ததேயானால் இரு. உன்னிமித்தம் கர்த்தர் என்னையாசீர்வதித்தாரென்கிறது எனக்குத் தெரியவந்தது.

௨௰௮ உன் சம்பளம் இன்னதென்று எனக்குக் குறித்துச் சொல்லு; நான் தருவேனென்றான்.

௨௰௯ அப்பொழுது அவன் இவனோடே சொன்னதாவது, நான் உம்மை யெப்படிச் சேவித்தேனென்றும், உம்முடைய மந்தை என்னிடத்தில் எப்படியிருந்ததென்றும் அறிந்திருக்கிறீர்.

௩௰ ஏனெனில் எனக்கு முன் உமக்கிருந்தது கொஞ்சம். அது திரளாயிற்று. கர்த்தர் உம்மை என் கால்வருத்தத்தினாலே ஆசீர்வதித்தார். இப்பொழுதும் நான் என் வீட்டுக்குச் சம்பாதித்துக்கொள்வது எப்பொழுதென்றான்.

௩௰௧ அப்பொழுது இவன், நானுனக்கென்ன கொடுக்கவேண்டுமென்றான். யாக்கோபு சொன்னதாவது, நீர் எனக்கு ஒன்றுங் கொடுக்கவேண்டாம். நான் சொல்லுகிறதை நீர் எனக்குச் செய்தால் உம்முடைய மந்தையைத் திரும்ப மேய்த்துக் காப்பேன்.

௩௰௨ நான் இன்றைக்கு உம்முடைய மந்தையையெல்லாங் கடந்துவந்து அதிலேயிருக்கிற ஆடுகளிற் புள்ளியுள்ளதும் மறுப்பற்றினதுமான யாவையுங் கறுப்பான யாவையும், வெள்ளாடுகளில் மறுப்பற்றினதும் புள்ளி

புள்ளதுமானதையும் பிரித்துப்போடுவேன். அப்படிக்கொத்தது இனி என்னுடைய சம்பளமாயிருப்பது.

௩௩ அப்படியே இனிமேல் என் சம்பளக் காரியம் உமக்கு முன்பாகத் தீர்த்துக்கத்தாக நீர் வரும்பொழுது, என்னுடைய நீதி எனக்கு ஒப்பாகும். வெள்ளாடுகளிற் புள்ளியில்லாததும் மறுப்பற்றதுமாய் இராததும் ஆடுகளிற் கறுப்பில்லாததுமானது ஏதாகிலும் என்னிடத்திலேயிருந்தால், அது திருடினதாயிருக்குமென்றான்.

௩௪ அப்பொழுது லாபான், இதோ, உன் வார்த்தையின்படியாகட்டும் வாசியென்று சொல்லி,

௩௫ அந்நாளிலே கலப்பு நிறமுள்ளதும் மறுப்பற்றதுமான கடாய்களையும், புள்ளிபுள்ளதும் மறுப்புள்ளதுமான எல்லா வெள்ளாடுகளையும், ஆடுகளில் வெண்மையுள்ள தெல்லாவற்றையும் கறுப்பான தெல்லாவற்றையும் பிரித்துக்கொண்டு, தன் குமாரர்கையிலே ஒப்புவித்து,

௩௬ தனக்கும் யாக்கோபுக்கும் மூன்று நாட் பயணதூரம் வைத்தான். லாபானுடைய மற்ற ஆடுகளையாக்கோபு மேய்த்தான்.

௩௭ அப்பொழுது யாக்கோபு பச்சையாயிருக்கிற புன்னைமரமும் அலிவலான் கொட்டைச்செடியும் கஸ்தானியக் கொட்டை மரமுமான கொப்புகளை வாங்கிக்கொண்டு, கறுத்தனையாய் வெண்மைகாணப் பட்டையை உரித்து,

௩௮ தான் உரித்த கொப்புகளை ஆடுகள் குடிக்கவருகிற கால்வாய்களிலும் தண்ணீர்த் தொட்டிகளிலும் ஆடுகளுக்கெதிராகப் போட்டுவைத்தான். ஏனென்றால் அவைகள் குடிக்கவருகையிற் பொலியும்.

௩௯ ஆடுகள் கொப்புகளுக்கு முன்பாகப் பொலிந்தபடியினாலே ஆடுகள் கலப்பு நிறமுள்ளதும் புள்ளிபுள்ளதும் மறுப்புள்ளதுமான குட்டிகளைப் போட்டது.

௪௰ அந்த ஆட்டுக்குட்டிகளை யாக்கோபு பிரித்து, ஆடுகளை லாபானுடைய மந்தைப் பிரிக்குக் கலப்பு நிறமானவைகளுக்கும் கறுப்பானதெல்லாவற்றுக்கும் எதிராக நிறுத்தி, தனக்குத் தனிப்புற மந்தைகளை வைத்துக்கொண்டு, இவைகளை லாபானின் மந்தையோடே வைக்காதிருந்தான்.

௪௧ சமயம் வந்ததென்றாற், காலத்திலே பொலிகிற ஆடுகள் பொலியும் பொழுதெல்லாம் யாக்கோபு அந்தக் கொப்புகளைக் கால்வாய்களில் ஆடுகளின் கண்களுக்கு முன்பாக, அவைகள் கொப்புகளுக்கெதிரே பொலியும்படிக்குப் போட்டுவைப்பான்.

௪௨ ஆடுகள் காலம் பிந்திப் பொலியும் பொழுதோவெனில் அவைகளைப் போடாதே போனான். ஆகையாற் காலம் பிந்திப்பிறந்தவைகள் லாபானையும் காலத்திலே பிறந்தவைகளோவெனில் யாக்கோபையுஞ் சேர்ந்தது.

௪௩ இந்தப்பிரகாரமாக இந்தப்புருஷன் மிகுந்த ஐசுவரியம் பெருகினான். அவனுக்குத் திரளான ஆடுகளும் வேலைக்காரிகளும் வேலைக்காரரும் ஒட்டகங்களுங் கழுதைகளுமுண்டாயிற்று.

## ௩௧. அதிகாரம்.

யாக்கோபு தன் சீமைக்குத் திரும்பும்படிக்கு லாபானை விட்டோடிப்போனதும் லாபான் அவனைத் தொடர்ந்ததும் இருவருஞ் சமாதானமாகி உடம்படிக்கை பண்ணினதும்.

எங்கள் தகப்பனுக்குண்டானதையெல்லாம் யாக்கோபு எடுத்துக்கொண்டானென்றும், எங்கள் தகப்பனுக்குண்டானதினாலே இந்த ஆஸ்தியையெல்லாஞ் சம்பாதித்தானென்றும் லாபானின் குமாரர் சொன்ன வார்த்தைகளையவன் கேட்டான்.

௨ லாபானின் முகத்தை யாக்கோபு பார்த்தபொழுது, இதோ, அது நேற்றும் முந்நேற்றும் இருந்ததுபோலத் தனக்கிருந்ததில்லையென்று கண்டான்.

௩ கர்த்தரோவென்றால் யாக்கோபுடனே, உன் பிதாக்களின் தேசத்திற்கும் உன் இனத்தாரிடத்துக்குந் திரும்பிப்போ. * உன்னோடே கூடவிருப்பேனென்றார். * உ௮, ௰௫.

௪ அப்பொழுது யாக்கோபு ராகேலையும் லேயாளையும் வெளியிலே தன் மந்தையண்டைக்கழைத்தனுப்பி,

௫ இவர்களோடே சொன்னதாவது, உங்கள் தகப்பனுடைய முகம் நேற்றும் முந்நேற்றும் இருந்ததுபோல எனக்கிருக்கவில்லையென்று நான் காண்கிறேன். ஆனால் என் தகப்பனுடைய பராபரன் என்னோடே கூடவிருந்தார்.

௬ உங்கள் தகப்பனுக்கு என் முழுப்பலத்தினாலும் ஊழியஞ்செய்தேனென்று நீங்கள் அறிவீர்கள்.

௭ உங்கள் தகப்பனோவெனில் என்னை எத்தி என் சம்பளத்தைப் பத்துமுறை மாற்றினான். ஆனால் எனக்குத் தீங்குசெய்யப் பராபரன் அவனுக்கிடங்கொடுத்ததில்லை.

௮ புள்ளியுள்ளவைகள் உன் சம்பளமாயிருக்குமென்று அவன் சொன்னபொழுது மந்தையெல்லாம் புள்ளிபுள்ள குட்டிகளைப் போட்டது. கலப்பு நிறமானவைகள் உன் சம்பளமாயிருக்குமென்று அவன் சொன்னபொழுதோவெனில் மந்தையெல்லாங் கலப்பு நிறக் குட்டிகளைப் போட்டது.

௯ இந்தப்பிரகாரமாகப் பராபரன் உங்கள் தகப்பனுடைய மந்தையைப் பறித்து எனக்குக் கொடுத்தார்.

௰ ஆடுகள் பொலியுங் காலத்திலே சம்பவித்ததென்றால், நான் சொப்பனத்திலே என்

கண்களை யேறெடுக்கும்பொழுது, இதோ, ஆடுகளின்மேலேறுகிற கிடாய்கள் கலப்புநிறமானவைகளும் புள்ளியுள்ளவைகளும் பொட்டுள்ளவைகளுமாயிருந்ததென்று கண்டேன்.

௰௧ பராபருடைய தூதனானவர் சொப்பனத்தில் என்னுடனே, யாக்கோபே! என்றார், இதோ, இருக்கிறேனென்றேன்.

௰௨ அப்பொழுது அவர் சொன்னதாவது, உன் கண்களை யேறெடுத்துப்பாரேன்? ஆடுகளின்மேல் ஏறுகிற கிடாய்களெல்லாங் கலப்புநிறமானவைகளும் புள்ளியுள்ளவைகளும் பொட்டுள்ளவைகளுமாயிருக்கின்றது. ஏனெனில் லாபான் உனக்குச்செய்கிறதையெல்லாங் கண்டோம்.

௰௩ * நீ தூணையபிஷேகம்பண்ணி நமக்கொரு பொருத்தனையைப் பண்ணின பெத்தேலிலே உனக்குத் தரிசனையான பராபரன் நாமதானே. இப்பொழுதும் நீயெழுந்து, இந்தத்தேசத்தை விட்டுப்புறப்பட்டு, உன்னினத்தின்தேசத்திற்குத் திரும்பிப்போவென்று சொன்னாரென்றேன். *௨௮, ௰௮. மூ.

௰௪ அப்பொழுது ராகேலும் லேயாளும் அவனுக்குப்பிரத்தியுத்தாரமாகச்சொன்னதாவது, எங்கள் தகப்பன்வீட்டிலே எங்களுக்கினிப் பங்கும் சுதந்தரமுமுண்டோ?

௰௫ அவரால் நாங்கள் அந்நியராய் எண்ணப்பட்டதில்லையோ? ஏனெனில் அவர் எங்களைவிற்று, எங்கள் பணத்தைத் தின்னவேதின்றார்.

௰௬ ஆகையாற்பராபரன் எங்கள் தகப்பனிடத்திற் பறித்த ஐசுவரியமெல்லாம் எங்களுடையதும் எங்கள் பிள்ளைகளுடையதுந்தானே. இப்பொழுதும் பராபரன் உம்மோடே சொன்னதெல்லாவற்றையுஞ் செய்யுமென்றார்கள்.

௰௭ அப்பொழுது யாக்கோபு எழுந்து தன் பிள்ளைகளையுந் தன் பெண்சாதிகளையும் ஒட்டகங்களின்மேல் ஏற்றிக்கொண்டு,

௰௮ தன் மிருகசீவன்களனைத்தையுந் தான் பதான் அராமிலே தேடிச் சம்பாதித்த தன்னுடைய மந்தையாஸ்தியெல்லாத்தையுங் கூட்டிக்கொண்டு, கானான்தேசத்திலே தன் தகப்பனாகிய ஈசாக்கண்டைக்குப் போகப் புறப்பட்டான்.

௰௯ லாபானோவெனில் தன் ஆடுகளை மயிர்கத்திரிக்கப்போயிருந்தான். அந்தச்சமயத்திலே ராகேல் தன் தகப்பனுடைய விக்கிரகங்களைத் திருடிக்கொண்டாள்.

௨௰ அப்படியே யாக்கோபு, தானோடிப் போகிறதைச் சூரியனாகிய லாபானுக்கு அறிவியாததினால் அவன் மனதைக் களவுசெய்து,

௨௧ தனக்குண்டானதையெல்லாங் கூட்டிக்கொண்டு ஓடிப்போனான். அவனெழுந்து ஆற்றைக்கடந்து, கிலெயாத் பர்வதத்திற்கு நேராய்த் தன்முகத்தைத் திருப்பிப்போனான்.

௨௨ ஆனால் யாக்கோபு ஓடிப்போனது மூன்றாம்நாளிலே லாபானுக்கு அறிவிக்கப்பட்டது.

௨௩ அப்பொழுது அவன் தன் சகோதரரைக் கூட்டிக்கொண்டு, ஏழுநாட் பயணம் அவனைப் பின்தொடர்ந்து, கிலெயாத் பர்வதத்திலே அவனைக் கிட்டிச்சேர்ந்தான்.

௨௪ ஆனாற் பராபரன் இராத்திரியிலே சூரியனாகிய லாபானண்டைக்குச் சொப்பனத்திலே வந்து, அவனோடே, நீ யாக்கோபோடே நலந்தப்பித் தீங்காய்ப் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிருவென்றார்.

௨௫ லாபான் யாக்கோபைக் கிட்டிச்சேர்ந்தான். யாக்கோபு பர்வதத்திலே தன் கூடாரத்தைப் போட்டிருந்தான். லாபானுந் தன் சகோதரரோடேகூடக் கிலெயாத்பர்வதத்திலே கூடாரம்போட்டான்.

௨௬ அப்பொழுது லாபான் யாக்கோபோடே சொன்னதாவது, நீ என் மனதைக் களவுசெய்து, என் குமாரத்திகளைப் பட்டயத்தினாற் பிடித்தவர்களைப்போலே கொண்டுபோனது என்னசெய்கை?

௨௭ நீ ஓடிப்போவதை மறைத்து, எனக்கறிவியாமல் திருட்டளவாய் என்னை விட்டுப்போனதென்ன? நான் உன்னைச் சந்தோஷத்தோடுஞ் சங்கீதங்களோடும் மேளத்தோடுஞ் சுரமண்டலத்தோடும் அனுப்புவேனே.

௨௮ என் பிள்ளைகளையும் என் குமாரத்திகளையும் நான் முத்தஞ்செய்ய நீ இடங்கொடாதேபோனதென்ன? இப்பொழுதும் நீ இப்படிச்செய்தது மதியில்லாமற்செய்தாய்,

௨௯ உங்களுக்குப் பொல்லாப்புச்செய்ய என் கையிலே வல்லமையிருக்கும். ஆனால், நீ யாக்கோபோடே நலந்தப்பித் தீங்காய்ப் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிருவென்று உங்கள் தகப்பனுடைய பராபரன் இராத்திரி என்னோடே சொன்னார்.

௩௰ இப்பொழுதும் உன் தகப்பனுடைய வீட்டின்மேலுள்ள வாஞ்சையினாலே நீ புறப்பட்டுப்போகிறபொழுது என் தேவர்களை ஏன் திருடிக்கொண்டாயென்றான்.

௩௰௧ யாக்கோபு லாபானுக்குப் பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது, உம்முடைய குமாரத்திகளை என்னிடத்திலிருந்து பறித்துக்கொள்வீரோ? என்று நான் பயப்பட்டதினாலேயிப்படி வந்துவிட்டேன்.

௩௰௨ ஆனால் ஆரிடத்திலே உம்முடைய தேவர்களைக் கண்டுபிடிப்பீரோ அவன் உயிரோடிருக்கவேண்டாம் என்வசத்திலே உம்முடையதாயிருக்கிறதேதென்று நீர் நம்முடைய சகோதரருக்கு முன்பாகப் பார்த்தறிந்து அதையெடுத்துக்கொள்ளுமென்றான். ஏனெனில் ராகேல் அவைகளைத் திருடினதை யாக்கோபு அறியாதிருந்தான்.

௰௩ அப்பொழுது யாக்கோபின் குமாரர் தங்கள் சகோதரியாகிய தீனாளைத் தீட்டுப்படுத்தினபடியால், சீகேமுக்கும் அவன் தகப்பனாகிய ஏமோருக்குஞ் சற்பனையாய் மறுமொழி கொடுத்து, அவர்களோடே சொன்னதாவது.

௰௪ எங்கள் சகோதரியைச் சுன்னத்தில்லாத புருஷனுக்குக் கொடுக்குங் காரியத்தை நாங்கள் செய்யக்கூடாது. ஏனென்றால் அது எங்களுக்கு நிந்தையாயிருக்கும்.

௰௫ நீங்கள் உங்களிலிருக்கும் ஆண் அனைத்தையுஞ் சுன்னத்துப்பண்ணுகிறதினாலே எங்களைப்போலானீர்களேயானால் நாங்கள் உங்களுக்குச் சம்மதித்து,

௰௬ உங்களுக்கு எங்கள் குமாரத்திகளைக் கொடுத்து உங்கள் குமாரத்திகளை யெங்களுக்குக் கொண்டு, உங்களோடே குடியிருந்து ஏகசனமாவோம்.

௰௭ சுன்னத்துப்பண்ணிக்கொள்ள எங்களுக்குச் சொற்கேளாதே போனீர்களேயானால், நாங்கள் எங்கள் குமாரத்தியை யழைத்துக் கொண்டுபோவோமென்றார்கள்.

௰௮ அவர்கள் வார்த்தைகள் ஏமோருக்கும் ஏமோரின் குமாரனாகிய சீகேமுக்கும் நன்றாய்க் கண்டது.

௰௯ அப்படிச்செய்ய அந்த வாலிபக்காரன் தாமதம்பண்ணினதில்லை. ஏனெனில் யாக்கோபுடைய குமாரத்தியின்மேற் பிரியம் வைத்தான். அவன் தன் தகப்பன் வீட்டார் அனைவரிலுங் கனமாய் எண்ணப்பட்டவனுமாயிருந்தான்.

௨௦ ஏமோரும் அவன் குமாரன் சீகேமுந் தங்கள் பட்டணத்தின் ஒலிமுகவாசலில் வந்து, தங்கள் பட்டண மனிதரோடே பேசிச் சொன்னதாவது,

௨௧ இந்த மனிதர் நம்மோடே சமாதானமாயிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் தேசத்திலே குடியிருந்து அதிலே வியாபாரம்பண்ணட்டும். இதோ, அவர்களுக்கு முன்பாகத் தேசம் இருபுறமும் விஸ்தாரமாய்க் கிடக்கிறது. அவர்கள் குமாரத்திகளை நாம் நமக்குப் பெண்சாதிகளாகக் கொண்டு நம்முடைய குமாரத்திகளை அவர்களுக்குக் கொடுப்போமே?

௨௨ இந்த மனிதர் சுன்னத்துப்பண்ணப்பட்டவர்களாயிருக்கிறதுபோல நாமும் நம்மிலுள்ள ஆண் அனைத்தையுஞ் சுன்னத்துப்பண்ணினாலல்லாமல் அவர்கள் நம்மோடே ஏகசனமாய்க் குடியிருப்பதற்குச் சம்மதிப்பார்களா.

௨௩ அவர்கள் மந்தைகளும் அவர்கள் ஆஸ்தியும் அவர்கள் மிருகஜீவன்களெல்லாம் நம்முடையதாகுமல்லவோ? அவர்களுக்குச் சம்மதமாக மாத்திரஞ் செய்தோமானால் நம்மோடே குடியிருப்பார்களென்றார்கள்.

௨௪ அப்பொழுது ஏமோரின் பட்டணத்து வாசலாற் புறப்படுகிறவர்களாகிய அனைவரும் அவன் சொல்லையும் அவன் குமாரனாகிய சீகேமின் சொல்லையுங் கேட்டு அவன் பட்டணத்து வாசலாற் புறப்படுகிறவர்களாகிய ஆண்சாதியார் எல்லாருஞ் சுன்னத்தடைந்தார்கள்.

௨௫ மூன்றாநாளில் அவர்களுக்கு நோவெடுத்துக்கொண்டபொழுது சம விதத்தே சென்றல் யாக்கோபின் குமாரரும் தீனாளின் சகோதரருமாகிய* சிமியோனும் லேவியுமென்ற இரண்டுபேர் அவனவன் தன்னுடைய பட்டயத்தை யெடுத்துக்கொண்டு, பயமில்லாமற் பட்டணத்தின் மேல்வந்து ஆண் அனைத்தையுங் கொன்று, * ௪௯, ௫. ௬.

௨௬ ஏமோரையும் அவன் குமாரன் சீகேமையும் பட்டயக் கருக்காலே கொன்றுபோட்டுத் தீனாளைச் சீகேமின் வீட்டிலிருந்து அழைத்துப் புறப்பட்டுப் போனார்கள்.

௨௭ யாக்கோபின் குமாரர் வெட்டுண்டவர்கள்மேல் வந்து, அவர்கள் தங்கள் சகோதரியைத் தீட்டுப்படுத்தினதற்காகப் பட்டணத்தைக் கொள்ளையிட்டு,

௨௮ அவர்களுடைய ஆடு மாடுகளையுங் கழுதைகளையும், ஊரிலும் ஊர்வெளியிலு மிருந்த எல்லாவற்றையு மெடுத்து,

௨௯ அவர்களுடைய எல்லாத் தட்டுமுட்டுகளையும் அவர்களுடைய எல்லாக் குழந்தைகளையும் பெண்சாதிகளையும் வீட்டிலிருந்த எல்லாவற்றையும் பிடித்துக்கொண்டு கொள்ளையாடினார்கள்.

௩௦ அப்பொழுது யாக்கோபு சிமியோனோடும் லேவியோடுஞ் சொன்னதாவது நீங்கள் தேசத்திற் குடியிருக்கிற கானானியரிடத்திலும் பெரிசியரிடத்திலும் என் வாசனையைக் கெடுத்ததினாலே என்னைக் கலங்கப்பண்ணினீர்கள். நான் கொஞ்சசனமாயிருக்கிறேன். அவர்கள் எனக்கு விரோதமாகக் கூட்டங் கூடி, நானும் என் வீடும்பிய என்னை வெட்டுவார்களேயென்றான்.

௩௧ அதற்கவர்கள், எங்கள் சகோதரியை அவர்கள் ஒரு வேசியைப்போலே நடத்தலாமோ? என்றார்கள்.

## ௩௫. அதிகாரம்.

யாக்கோபு தேவகட்டளையினாலே பெத்தேலுக்கு வந்தது.

பராபரனோவென்றால் யாக்கோபுடனே, நீ எழுந்து பெத்தேலுக்குப் போய் அங்கே குடியிருந்து, நீ உன் சகோதரனாகிய ஏசாவின் முகத்துக்கு விலகி ஓடிப்போகிறபொழுது* உனக்குத் தரிசனையான பராபரனுக்கு அங்கே ஒரு பலிபீடத்தை யுண்டாக்கென்றார். * ௨௮, ௰௨—௰௯.

௨௨ லோத்தானுடைய குமாரர் ஓரி, ஏமாம், லோத்தானின் சகோதரி திம்னாள்.

௨௩ சோபாலுடைய குமாரர் அல்வான், மனகாத், ஏபால், செப்போ, ஓனாமென்பவர்கள்.

௨௪ சிபெயோனுடைய குமாரர் அயா, ஆனா, என்றவர்கள. வனாந்திரத்திலே தன்தகப்பனாகிய சிபெயோனின் கழுதைகளை மேய்க்கையில், கோவேறுகழுதைகளை பிறக்கும் விதத்தைக்கண்டுபிடித்த ஆனா இவன்தான்.

௨௫ ஆனாவின் பிள்ளைகள் திஷோனும், அகோலிபாமாளுமென்றவர்கள். இவள் ஆனாவின் குமாரத்தி.

௨௬ திஷோனுடைய குமாரர் எம்தான், எஸ்பான், இத்தரான், கேரானென்றவர்கள்.

௨௭ ஏத்சேருடைய குமாரர் பில்கான், சாவான், ஆக்கானென்றவர்கள்.

௨௮ திஷானுடைய குமாரர் ஊத்ஸ், ஆரானென்றவர்கள்.

௨௯ ஓரியரின் சந்ததிப்பிரபுக்களிலோத்தானபிரபு, சோபாலபிரபு, சிபெயோனபிரபு, ஆனாபிரபு,

௩௰ திஷோனபிரபு, ஏத்சேர்பிரபு, திஷானபிரபு, இவர்களே சேயீர்தேசத்திலே தங்கள்தங்கள் இடங்களிலிருந்த ஓரியர்சந்ததியானபிரபுக்கள்.

௩௧ இஸ்ரவேலபுத்திரரை யொரு இராசா ஆளுகிறதற்குமுன்னே ஏதோம்தேசத்திலே ஆண்ட இராசாக்களாவது,

௩௨ ஏதோமிலே பேயோருடைய குமாரனாகிய பேலா இராசாவாயிருந்தான். அவனுடையபட்டணத்தின்பேர் தின்காபா.

௩௩ பேலாமரித்தபொழுது போஸ்றா பட்டணத்தானாகிய சேராகுடைய குமாரனான யோவாப் அவன்பட்டத்திற்குவந்தான்.

௩௪ யோவாப் மரித்தபொழுது, தேமானியதேசத்தானாகிய ஊஷாம் அவன்பட்டத்திற்குவந்தான்.

௩௫ ஊஷாம் மரித்தபொழுது, அவன்பட்டத்திற்கு மோவாபினாட்டிலே மீதியானியரை முறியடித்த பேதாதின்குமாரனாகிய ஆதாத்வந்தான். அவனுடைய பட்டணத்தின்பேர் ஆவீத்.

௩௬ ஆதாத் மரித்தபொழுது, மஸ்ரேக்கா ஊரானாகிய சம்லா அவன்பட்டத்திற்குவந்தான்.

௩௭ சம்லா மரித்தபொழுது நதிக்கருகான ரெகொபோத் ஊரானாகிய சவுல் அவன்பட்டத்திற்குவந்தான்.

௩௮ சவுல் மரித்தபொழுது, அக்போருடைய குமாரனாகிய பாகால் ஆனான் அவன்பட்டத்திற்குவந்தான்.

௩௯ அக்போருடைய குமாரனாகிய பாகால் ஆனான்மரித்தபொழுது, அவன்பட்டத்திற்கு ஆதார்வந்தான். அவனுடைய பட்டணத்தின்பேர் பாகு. அவன்பெண்சாதியின்பேர் மெகேதபேயேல், அவள் மத்ரேத்துடைய குமாரத்தியும் மேசகாவின் பேத்தியுமாயிருந்தாள்.

௪௰ பலபல வம்சத்தாருந் தலத்தாரும் நாமத்தாருமாகிய ஏசாவுடைய பிரபுக்களுடைய நாமங்களாவது, திம்னாபிரபு, அல்வாபிரபு, எதேத்பிரபு,

௪௧ அகோலிபாமாபிரபு, ஏலாபிரபு, பினோன்பிரபு,

௪௨ கேனாஸ்பிரபு, தேமான்பிரபு, மிப்சார்பிரபு,

௪௩ மக்தியேல்பிரபு, ஈராம்பிரபு, இவர்களே. தங்கள்கைவசமானதேசத்திலே பலபல இடங்களிலே குடியிருந்த ஏதோமுசந்ததிப்பிரபுக்கள். இந்த ஏதோமியருடையத் தகப்பன் ஏசாவுதானே.

## ௩௭. அதிகாரம்.

யோசேப்பு தன்சகோதரரால எகிப்திற்கு யபோகிறவர்களுக்கு விற்கப்பட்டது.

யாக்கோபு தன்தகப்பன்தங்கின கானான்தேசமான சீமையிலே குடியிருந்தான்.

௨ யாக்கோபுடைய சந்ததியின் நடபடியாவது, யோசேப்பு பதினேழுவயதிலே தன்சகோதரரோடே ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான். அந்த இளைஞன் பில்காளென்பவளென்ற தன்தகப்பனுடைய பெண்சாதிகளின் குமாரரோடே யிருந்து, இவர்கள் துற்கீர்த்தியை யவர்கள் தகப்பனண்டைக்குவந்துசொல்லுவான்.

௩ யோசேப்பு தனக்கு முதிர்வயதிலே பிறந்தபடியினாலே இஸ்ரவேல்தன்னுடைய எல்லாக்குமாரரையும்பார்க்கிலும் அவனை சிநேகித்து அவனுக்குப் பலவர்ணமான அங்கியை யுண்டுபண்ணுவித்தான்.

௪ தங்கள்தகப்பன் அவனை அவனுடைய எல்லாச் சகோதரரைப் பார்க்கிலும் அதிகமாய் நேசிக்கிறதை யவன் சகோதரர்கண்டபொழுதுதாவெனில, அவர்கள் அவனோடே சமாதானமாய்ப்பேசமாட்டாதபடியாய் அவனைப் பகைத்தார்கள்.

௫ இதுவுமல்லாமல் யோசேப்பு ஒரு சொப்பனத்தைக்கண்டு தன்சகோதரருக்கு அறிவித்தான். அதனிமித்தம் அவனை இன்னமதிகமாய்ப்பகைத்தார்கள்.

௬ அவன் இவர்களோடே சொன்னதேதெனில், நான் கண்ட சொப்பனத்தைக்கேளுங்கள்?

௭ இதோ, நாம் நடுவயல்வெளியிலே அறுத்த அரிக்கட்டுக்களைக் கட்டிக்கொண்டிருந்தோம். அப்பொழுது இதோ, என்னுடைய அரிக்கட்டு நிமிர்ந்து மத்தியிலிருந்தது. அல்லாமலும் இதோ, உங்கள் அரிக்கட்டுகள் சுற்றிலும் நின்று, என்னுடைய அரிக்கட்டை வணங்கிக்கொண்டதென்றான்.

அ அப்பொழுது அவன் சகோதரர் அவனோடே, நீ எங்கள்மேல் ராசாத்தனம்பண்ணவே பண்ணுவாயோ? நீ எங்களையாள்வே யிருவாயோ? என்றுசொல்லி, அவனை அவன் சொப்பனங்களினிமித்தமும் அவன் வார்த்தைகளினிமித்தமும் இன்னம் அதிகமாய்ப் பகைத்தார்கள்.

கூ அவன் வேறொரு சொப்பனத்தைக் கண்டு, அதைத் தன் சகோதரருக்கு விவரித்துச் சொன்னதாவது, இதோ, இன்னம் ஒரு சொப்பனத்தைக் கண்டேன். இதோ, சூரியனும் சந்திரனும் பதினொரு நட்சத்திரங்களும் என்னை வணங்கிக்கொண்டதென்றான்.

ய இப்படியவன் தன் தகப்பனுக்கும் தன் சகோதரருக்கும் விவரித்தபொழுது, அவன் தகப்பன் அவனையதட்டி, அவனோடே, நீ கண்ட இந்தச் சொப்பனமென்ன? தரையிலே விழுந்து உன்னைவணங்க நானும் உன் தாயும் உன் சகோதரரும் வருவோமோ? என்றான்.

யக அவன் சகோதரர் அவன்மேற் பொறாமைகொண்டார்கள். அவன் தகப்பனோவெனில் இந்த வார்த்தையைத் தம் மனதிலே வைத்துக்கொண்டான்.

யஉ அவன் சகோதரர் சீகேமிலே தங்கள் தகப்பனுடைய ஆடுகளை மேய்க்கப்போனார்கள்.

யங இஸ்ரவேல் யோசேப்பைப் பார்த்து, உன் சகோதரர் சீகேமிலே ஆடுகளை மேய்க்கிறார்களல்லவோ? அங்கேபோ, உன்னை அவர்களண்டைக்கனுப்புவேன் வாவென்றான். அவனிதோ, நான்போகிறேனென்றான்.

யச அப்பொழுது அவன் நீபோய் உன் சகோதரர் எப்படியிருக்கிறார்களென்றும் ஆடுகள் எப்படியிருக்கிறதென்றும் பார்த்து, எனக்கு மறுசெய்தி கொண்டுவாவென்று அவனுக்குச் சொல்லி, எபிரோன் பள்ளத்தாக்கிலே யிருந்து அவனை யனுப்பினான். அப்படியே சீகேமுக்குப் போனான்.

யரு அப்பொழுது இதோ, ஒருமனிதன் அவனை வெளியிலே வழிதப்பி நடக்கக்கண்டு என்னதேடுகிறாயென்று அவனைக் கேட்டான்.

யசா அதற்கவன், என் சகோதரரைத் தேடுகிறேன். அவர்கள் எங்கே ஆடுமேய்க்கிறார்களென்றெனக்கு அறிவியுமென்றான்.

யஎ அந்தமனிதன், அவர்கள் இங்கேயிருந்து புறப்பட்டுப்போனார்கள். ஏனென்றால் தோத்தானுக்குப் போவோமென்று அவர்கள் சொல்லக்கேட்டேனென்றான். அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரைப் பின்தொடர்ந்துபோய், அவர்களைத் தோத்தானிலே கண்டுபிடித்தான்.

யஅ அவர்கள் அவனைத் தூரத்திலே கண்டபொழுது, அவன் தங்களண்டைச் சேருமுன்னே அவனுக்கு விரோதமாய் அவனைக் கொலைசெய்யச் சதியோசனைபண்ணி,

யகூ ஒருவரோடொருவர் இதோ, சொப்பனக்காரன் அங்கேவருகிறான்.

உய இப்பொழுது நாம் அவனைக் கொன்று, குழிகளில் ஒன்றிலே அவனைப்போட்டு ஒருதுஷ்டமிருகம் அவனைப் பட்சித்ததென்று சொல்லி, அவன் சொப்பனங்கள் என்னமாமென்று பார்ப்போம் வாருங்களென்றார்கள்.

உக ஆனால் ரூபேன் இதைக்கேட்டு, அவன் சீவனைக் கொல்லாதிருப்போமாகவென்று சொல்லி, அவனை அவர்கள் கைக்குத் தப்புவித்து,

உஉ நீங்கள் இரத்தஞ்சிந்தவேண்டாம். நீங்கள் அவன்மேற் கைபோடாமல் அவனை வனாந்தரத்திலிருக்கிற அந்தக் குழியிலே போடுங்களென்றான். ரூபேன் அவனையவர்கள் கைக்குத் தப்புவிக்கும்படிக்கும் அவனையவன் தகப்பனண்டைக்குத் திரும்பக்கொண்டுபோகும்படிக்கும் அவர்களோடே சொன்னான்.

உங சம்பவித்ததென்னவென்றால் யோசேப்பு தன் சகோதரரண்டைக்கு வந்தபொழுது அவர்கள் யோசேப்பு உடுத்திக்கொண்டிருந்த பலவர்ண அங்கியாகிய அவன் அங்கியைக் கழற்றி,

உச அவனையெடுத்து அந்தக் குழியிலே போட்டார்கள். அது தண்ணீரில்லாத வெறுங்குழியாயிருந்தது.

உரு பிற்பாடு அவர்கள் அப்பஞ்சாப்பிட உட்கார்ந்தார்கள். அவர்கள் தங்கள் கண்களையேறெடுக்கும்பொழுதோவெனில், இஸ்மவேலருடைய கூட்டத்தை வரக்கண்டார்கள். அவர்களுடைய ஒட்டகங்கள் சாம்பிராணியையும் பிசின்தயிலத்தையும் வெள்ளைப்போளத்தையும் எகிப்துக்குக் கொண்டுபோகச் சுமந்து நடந்தது.

உசா அப்பொழுது யூதா தன் சகோதரரோடே சொன்னதாவது, நாம் நம்முடைய சகோதரனைக் கொன்று அவன் இரத்தத்தை மறைப்பதினாலே ஆதாயமென்ன?

உஎ அவனை இஸ்மவேலருக்கு விற்போம் வாருங்கள். நமதுகை அவன்மேலாகாதிருப்பதாக. ஏனெனில் அவன் நம்முடைய சகோதரனும் நம்முடைய மாமிசமுமாயிருக்கிறானென்றான். அவன் சகோதரர் அவன் சொல்லைக் கேட்டார்கள்.

உஅ ஆனால் வர்த்தகரான மீதியானியர் கடந்துபோகிறபொழுது அவர்கள் யோசேப்பை அந்தக் குழியிலிருந்து தூக்கியெடுத்து, யோசேப்பை இஸ்மவேலர் கையில் இருபது வெள்ளிக்காசுக்கு விற்றார்கள். இவர்கள் யோசேப்பை எகிப்துவுக்குக் கொண்டுபோனார்கள்.

உகூ ரூபேன் திரும்ப அந்தக் குழியண்டைக்கு வந்து இதோ, யோசேப்பு குழியிலில்லையென்று கண்டு தன் வஸ்திரங்களைக் கிழித்து,

லெல்லாங் கர்த்தருடைய ஆசீர்வாதமிருந்தது.

௬ ஆகையால் அவன் தனக்குண்டானதையெல்லாம் யோசேப்பின் கையிலே யொப்புவித்துவிட்டுத் தான் போசிக்கிற போசனந்தவிர வேறொன்றுக்குங் கவலைப்படாதிருந்தான். யோசேப்போவெனில் அழகான ரூபமும் பார்வைக்குச் சவுந்தரியமுமாயிருந்தான்.

௭ இந்த வர்த்தமானங்களுக்குப் பிற்பாடு சம்பவித்ததென்னவெனில் அவனுடைய எசமானின் பெண்சாதி யோசேப்பின் மேலே கண்ணோட்டமாகி என்னோடே சயனியென்றாள்.

௮ ஆனால் அவன் அவள் சொல்லைக் கேளாமல் தன் எசமானின் பெண்சாதியோடே சொன்னதாவது இதோ, வீட்டிலே என்னோடிருக்கிற ஒன்றுக்காகிலும் என்னாண்டவன் கவலைப்படாமல், தமக்குண்டானதையெல்லாம் என் கையிலே யொப்புவித்தார்.

௯ இந்த வீட்டிலே என்னிலும் பெரியவனில்லை. உன்னைத் தவிர வேறொன்றையும் அவரெனக்கு விலக்கிவைத்ததில்லை. ஏனெனில் நீ அவருடைய பெண்சாதி. இப்பொழுதும் நானித்தனை பெரிய இந்தப் பொல்லாப்பைப் பண்ணிப் பராபரனுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்வதெப்படியென்றான்.

௰ அவள் நித்தம் நித்தம் யோசேப்போடே அப்படிக்கொத்த பேச்சைச் சொல்லுவாள். ஆனால் அவன் அவளுக்குச் சம்மதப்பட்டுக்கொள்ளவும் அவளோடிருக்கவும் அவளுக்குச் செவிகொடாதே போகிறபொழுது,

௰௧ ஒருநாள் சம்பவித்ததென்னவெனில் அவன் தன் வேலையைச் செய்கிறதற்கு வீட்டிற்குள் வந்தான். வீட்டுமனிதரில் ஒருவரும் அப்பொழுது அங்கே வீட்டிலேயில்லை.

௰௨ அப்பொழுது அவள் அவனையவன் வஸ்திரத்தைப் பற்றிப்பிடித்து, என்னோடே சயனியென்றாள் அவனோவென்றால் தன் வஸ்திரத்தை அவள் கையிலேவிட்டோடி வெளியே புறப்பட்டுப்போனான்.

௰௩ அவன் தன் வஸ்திரத்தைத் தன் கையிலேவிட்டு வெளியே ஓடிப்போனதை அவள் கண்டபொழுது,

௰௪ அவள் தன் வீட்டுமனிதரைக் கூப்பிட்டு அவர்களுக்குச் சொன்னதாவது பாருங்கள். எபிரேய மனிதனை நம்மைச் சரசம்பண்ணும்படிக்கு நமக்குக் கொண்டுவந்தார். அவன் என்னோடே சயனிக்கிறதற்காக என்னண்டை வந்தான். ஆனால் மகா சத்தமாய்க் கூப்பிட்டேன்.

௰௫ நானென் சத்தத்தையுயர்த்திக் கூப்பிடுகிறதை அவன் கேட்டபொழுது அவன் தன் வஸ்திரத்தை என்னண்டைவிட்டோடி வெளியே புறப்பட்டுப் போனானென்று சொல்லி,

௰௬ அவனுடைய எசமான் வீட்டிற்கு வருமட்டும் அவன் வஸ்திரத்தைத் தன்கிட்ட வைத்து,

௰௭ அவரோடே அந்த வார்த்தைகளுக்குச் சரியாகப் பேசி நீர் எங்களுக்குக் கொண்டுவந்த அந்த எபிரேய வேலைக்காரன் என்னைச் சரசம்பண்ண என்னண்டை வந்தான்.

௰௮ அப்பொழுது சம்பவித்ததென்னவெனில் நானென் சத்தத்தையுயர்த்திக் கூப்பிடுகிறபொழுது அவன் தன் வஸ்திரத்தை என்னண்டைவிட்டு வெளியே ஓடிப்போனானென்றாள்.

௰௯ உம்முடைய வேலைக்காரன் எனக்கிப்படிச் செய்தானென்று தன் பெண்சாதி தன்னோடே சொன்ன வார்த்தைகளை அவனுடைய எசமான் கேட்டபொழுது அவனிலே அவனுக்குக் கோபமூண்டது.

௨௰ அப்பொழுது யோசேப்பின் எசமான் அவனைப் பிடித்து, இராசாவின் கட்டளையால் கட்டுண்டவர்களிடுகிற காவல்வீட்டிலே அவனையொப்புவித்தான். அங்கே அந்தக் காவல்வீட்டில் அவனிருந்தான்.

௨௧ ஆனாற் கர்த்தர் யோசேப்போடே கூடவிருந்து அவன்மேலே கிருபைவைத்து அவனுக்குக் காவல்வீட்டுத் தலைவன் கண்ணிலே தயவுகிடைக்கப் பண்ணினார்.

௨௨ காவல்வீட்டுத் தலைவன் காவல்வீட்டிலே கட்டுண்டிருக்கிற யாவரையும் யோசேப்பின் கையிலே யொப்புவித்தான். அங்கே செய்யவேண்டியதையெல்லாம் அவன் செய்தான்.

௨௩ அவன் கையிலிருந்த ஒன்றையுங் காவல்வீட்டுத் தலைவன் கண்டுக்கினதில்லை. ஏனெனில் கர்த்தர் அவனோடே கூடவிருந்தார். அவன் என்னத்தைச் செய்தாலும் அதைக் கர்த்தர் வாய்க்கப்பண்ணினார்.

## ௪௰. அதிகாரம்.

காவல்வீட்டில் வைக்கப்பட்ட இரண்டுபேருடைய சொப்பனங்களுக்குள்ள அர்த்தத்தை யோசேப்பு சொன்னது.

இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு சம்பவித்ததென்னவெனில் எகிப்தின் இராசாவுக்குப் பானங்கொடுக்கிறவனும் அப்பஞ்சுடுகிறவனும் எகிப்தின் இராசாவாகிய தங்களாண்டவனுக்குக் குற்றஞ்செய்தார்கள்.

௨ அப்பொழுது பார்வோன் தனனுடைய இரண்டு பிரதானிகளாகிற பானங்கொடுக்கிறவர்களின் தலைவன்பேரிலும் அப்பஞ்சுடுகிறவர்களின் தலைவன்பேரிலுங் கடுங்கோபமாகி,

௩ அவர்களை யோசேப்பு கட்டுண்டிருந்த காவல்வீடாகிய தலையாரிகளின் தலைவன்வீட்டிலே காவற்பண்ணுவித்தான்.

௪௯ அப்படியே யோசேப்பு தானியத்தைக் கடற்கரைமணலைப்போல மிகவுந்திரட்சியாக எண்ணி ஒடுமட்டுங்குவித்துவைத்தான், ஏனெனில் எண்ணிக்கைக்கடங்காததாயிருந்தது.

௫௦ பஞ்சமுள்ளவருஷங்கள் வாரதற்கு முன்னே யோசேப்புக்கு இரண்டுகுமாரர் பிறந்தார்கள். அவர்களை ஒன்பட்டணத்து ஆசாரியனாகிய போத்திப்பேராவின் குமாரத்தியாகிய அஸநாத் அவனுக்குப் பெற்றாள்.

௫௧ யோசேப்பு முந்திப்பிறந்தவனுக்கு மனாசேயென்று பேரிட்டான். ஏனெனில் என்னுடைய எல்லாவருத்தத்தையும் என் தகப்பனுடைய வீட்டனைத்தையும் பராபரன் என்னை மறக்கப்பண்ணினாரென்றான்.

௫௨ இரண்டாங்குமாரனுக்கு எப்பிராயீமென்று பேரிட்டான். ஏனெனில் நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்திலே பராபரன் என்னைப் பலுகப்பண்ணினாரென்றான்.

௫௩ எகிப்துதேசத்திலுண்டான பரிபூரணமுள்ள ஏழுவருஷங்களும் முடிந்தபொழுது,

௫௪ பஞ்சமுள்ள ஏழுவருஷங்கள் யோசேப்புசொன்னபடியே வரத்துவங்கிற்று. அப்பொழுது எல்லாத்தேசங்களிலும் பஞ்சமுண்டாயிற்று. ஆனால் எகிப்துதேசமெங்கும் ஆகாரமிருந்தது.

௫௫ எகிப்துதேசமெங்கும் பஞ்சமுண்டாகக்கொள்ளச் சனம் அப்பத்துக்காகப் பார்வோனை நோக்கிக்கூப்பிட்டது. அப்பொழுது பார்வோன் எல்லா எகிப்தியருக்கும் நீங்கள் யோசேப்பண்டைக்குப்போய், அவனுங்களுக்குச்சொல்லும்படிச்செய்யுங்களென்றான்.

௫௬ பஞ்சந்தேசமெங்கு முண்டாகக் கொள்ள யோசேப்பு களஞ்சியங்களையெல்லாந்திறந்து எகிப்தியருக்கு விற்றான். ஏனெனில் பஞ்சம் எகிப்துதேசத்திற்கனமானதாயிற்று.

௫௭ சகலதேசங்களின் மனிசரும் யோசேப்பினிடத்திலே கொள்ள எகிப்திற்கு வந்தார்கள். ஏனெனிற்பூமியெங்கும் பஞ்சமிகுதியாயிருந்தது.

## ௪௨. அதிகாரம்.

யோசேப்பின்சகோதரர் எகிப்திற்குப்போன முதற்பயணம்.

௧ எகிப்திலே தானியமுண்டென்று யாக்கோபு அறிந்தபொழுது யாக்கோபு தனது குமாரருக்கு நீங்கள் ஒருவரையொருவர் பார்க்கிறதென்ன?

௨ இதோ, எகிப்திலே தானியமுண்டென்று கேட்டேன். நாஞ்சாகாமல் உயிரோடிருக்கும்படிக்கு அங்கே இறங்கிப்போய் நமக்காகத் தானியங்கொள்ளுங்களென்றான்.

௩ அப்பொழுது யோசேப்பின்சகோதரர் பத்துப்பேர் எகிப்திலே தானியங்கொள்ளத் தாழப்போனார்கள்.

௪ ஆனால் யோசேப்பின்தம்பியாகிய பென்யமீனை யாக்கோபு அவன் சகோதரரோடேகூட அனுப்பாமலிருந்தான். ஏனென்றால் அவனுக்கொருவேளை சேதம்வருமோவென்று சொன்னான்.

௫ அப்படியே கொள்ளுகிறதற்கு வருகிறவர்களோடேகூட இஸ்ரவேலின் குமாரரும் வந்தார்கள். ஏனெனிற்கானான்தேசத்திலே பஞ்சமுண்டாயிருந்தது.

௬ யோசேப்போவென்றால் தேசத்தின்மேல் அதிகாரியாயிருந்து, அவன் தேசத்தின் சனத்துக்கெல்லாம் விற்றான். யோசேப்பின் சகோதரர் வந்து, முகங்குப்புறத் தரையிலே விழுந்து அவனை வணங்கினார்கள்.

௭ யோசேப்பு தன்சகோதரரைப்பார்க்கிறபொழுது அவர்களையறிந்தான். ஆனால் அறியாதவன்போல அவர்களுக்குக்காண்பித்து அவர்களோடே கடினமாய்ப்பேசி அவர்களுடனே எங்கேயிருந்து வருகிறீர்களென்றான். அப்பொழுது அவர்கள் ஆகாரங்கொள்ளக் கானான்தேசத்திலிருந்து வந்தோமென்றார்கள்.

௮ யோசேப்பு தன்சகோதரரை யறிந்தான். அவர்களோவென்றால் அவனையறியாதிருந்தார்கள்.

௯ யோசேப்பு அவர்களைக்குறித்துத்தான் கண்டிருந்த ✻ சொப்பனங்களை நினைத்து, அவர்களோடே நீங்கள் வேவுகாரர், தேசம் எங்கே திறந்திருக்கிறதென்று பார்க்க வந்தீர்களென்றான். ✻ ௩௭, ௫—௰.

௰ அவர்கள் அவனோடே சொன்னதாவது அல்ல, எங்களாண்டவனே! ஆகாரங்கொள்ள உமதடியார் வந்தார்கள்.

௰௧ நாங்களெல்லாரும் ஒருவருடைய பிள்ளைகள். நாங்கள் உண்மையுள்ளவர்கள் உமதடியார் வேவுகாரரல்லவென்றார்கள்.

௰௨ அவன் அவர்களோடே இப்படியல்ல, தேசம் எங்கே திறந்திருக்கிறதென்று பார்க்க வந்தீர்களென்றான்.

௰௩ அப்பொழுது அவர்கள் சொன்னதாவது உமதடியார் கானான்தேசத்திலிருக்கிற ஒருவனுக்குக்குமாரராகிய பன்னிரண்டு சகோதரர். ஆனால் இதோ, இளையவன் இந்நாளில் எங்கள் தகப்பனண்டையிலிருக்கிறான். ஒருவனோவென்றால் காணாமற்போனானென்றார்கள்.

௰௪ யோசேப்பு அவர்களோடே சொன்னதாவது நீங்கள் வேவுகாரரென்று நானுங்களோடே சொன்னபடியேயிருக்கும்.

௰௫ உங்கள் இளையசகோதரன் இங்கே வந்தாலொழிய நீங்கள் இங்கேயிருந்து புறப்படுவதில்லையென்று பார்வோனின் சீவனைக

த்தையும் அவனுடைய தானியத்தின் பணத்தையும் போட்டான்; அவன் யோசேப்பு சொன்ன வார்த்தையின்படியே செய்தான்.

௩ காலமே வெளிச்சமாகிறபொழுது அந்த மனிசர் தங்கள் கழுதைகளோடுங்கூட அனுப்பிவிடப்பட்டார்கள்.

௪ அவர்கள் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுத் தூரமாய்ப் போகாததற்கு முன்னே யோசேப்பு தன் வீட்டு விசாரிப்புக்காரனோடே சொன்னதாவது, நீ எழுந்து அந்த மனிசரைப் பின்தொடர்ந்து, அவர்களைக் கிட்டிப் பிடிக்கும்பொழுது அவர்களோடே சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் நன்மைக்குத் தீமையைச் சரிக்கட்டினதென்ன?

௫ என் எசமான் குடிக்கிற பாத்திரம் அல்லவோ? அதினாலே அவர் குறிசொல்லுகிறார் என்று தெரியாதோ? நீங்கள் செய்தது பொல்லாத காரியமாயிருக்கிறதென்று சொல்லென்றான்.

௬ அவன் அவர்களைத் தொடர்ந்து பிடித்து, இந்த வார்த்தைகளை யவர்களோடே சொன்னான்.

௭ அப்பொழுது அவர்கள் அவனோடே சொன்னதாவது, எங்கள் ஆண்டவன் இப்படிக்கொத்த வார்த்தைகளைச் சொல்லுவானேன்? இப்படிக்கொத்த காரியத்தை உம்மடியார் ஒருக்காலுஞ்செய்வதில்லை.

௮ இதோ, சாக்குகளின் வாயிலே நாங்கள் கண்டபணத்தைக் கானான்தேசத்திலிருந்து திரும்ப உம்மண்டைக்குக் கொண்டுவந்தோமே; நாங்கள் உம்முடைய எசமானின் வீட்டிலிருந்து வெள்ளியையாகிலும் பொன்னையாகிலுந் திருடிக்கொண்டுபோவதெப்படி?

௯ உம்மடியாரில் எவனிடத்திலே அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன் சாவக்கடவன், நாங்களும் எங்கள் ஆண்டவனுக்கு அடிமைகளாவோமென்றார்கள்.

௰ அதற்கவன், இப்பொழுதும் நீங்கள் சொன்னவார்த்தைகளின்படியே ஆவதாக. எவனிடத்தில் அது கண்டுபிடிக்கப்படுமோ அவன் எனக்கடிமையாவான். நீங்களோ வென்றால் குற்றமற்றிருப்பீர்களென்றான்.

௰௧ அவர்கள் தீவிரித்து, அவனவன் தன் சாக்கைத் தரையிலே யிறக்கிப் போட்டு, ஒவ்வொருவரும் தங்கள் சாக்குகளைத் திறந்து வைத்தார்கள்.

௰௨ அவன் மூத்தவனைத் துவக்கி இளையவன்மட்டுஞ் சோதிக்கிறபொழுது பாத்திரம் பென்யமீனுடைய சாக்கிலே கண்டுபிடிக்கப்பட்டது.

௰௩ அப்பொழுது அவர்கள் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, அவனவன் தன் கழுதையின்மேலே சுமையையேற்றிப் பட்டணத்திற்குத் திரும்பினார்கள்.

௰௪ யூதாவும் அவன் சகோதரரும் யோசேப்பின் வீட்டிலே வந்தார்கள். ஏனெனில் அவன் இன்னம் அங்கேயிருந்தான். அவனுக்கு முன்பாகத் தரையிலே விழுந்தார்கள்.

௰௫ யோசேப்பு அவர்களோடே, நீங்கள் செய்த இந்தக் கிரியையேது? என்னைப்போலொத்த மனிசனுக்குக் காரியம் ஞானதிஷ்டியினாலே தெரியுமென்று அறியாதேபோனீர்களோவென்றான்.

௰௬ அப்பொழுது யூதா, என்னுடைய ஆண்டவனுக்கு நாங்களென்ன சொல்லப்போகிறோம். என்னத்தைப் பேசுவோம். எதினாலே எங்களை நிதிமான்களாக்குவோம். பராபரன் உம்மடியாரின் அக்கிரமத்தைக் கண்டுபிடித்தார். இதோ, நாங்களென்னுடைய ஆண்டவனுக்கு அடிமைகள். நாங்களும் பாத்திரங் கண்டுபிடிக்கப்பட்ட அவனுந்தானே யென்றான்.

௰௭ அவனோவென்றால் இப்படிக்கொத்த செய்கை எனக்குத் தூரமாயிருப்பதாக. எவன் வசத்திற் பாத்திரங் கண்டுபிடிக்கப்பட்டதோ அவனே எனக்கடிமையாயிருப்பான். நீங்களோவெனில் சமாதானத்தோடே உங்கள் தகப்பனண்டைக்குப் போய் விடுங்களென்றான்.

௰௮ அப்பொழுது யூதா அவனண்டையிலே சேர்ந்து சொன்னதாவது, ஆ, என்னுடைய ஆண்டவனே! உம்மடியான் என்னுடைய ஆண்டவனுடைய செவிகளுக்கு முன்பாக ஒருவார்த்தையைப் பேசட்டுமே? உம்மடியான்மேல் உம்முடைய கோபம் எரியாதிருப்பதாக. ஏனெனில் நீர் பார்வோனைப்போலிருக்கிறீர்

௰௯ * உங்களுக்குத் தகப்பனாவது சகோதரனாவது உண்டோவென்று என்னுடைய ஆண்டவன் உம்மடியாரைக் கேட்டார்

* ௪௨, ௭.

௨௰ அப்பொழுது என்னுடைய ஆண்டவனுக்கு, எங்களுக்கு முதிர்வயதுள்ள தகப்பனும் அவருக்கு முதிர்வயதிலே பிறந்த இளைய சகோதரனுமுண்டு. இவனுடைய தமையன் செத்துப்போனான். இவனொருவன் தன் தாயாருக்கு மீதியானவன். இவனுடைய தகப்பன் இவன்மேலே பட்சமாயிருக்கிறாரென்றோம்.

௨௧ அப்பொழுது நீர் உம்மடியாரோடே அவனை என்னண்டைக்கழைத்து வாருங்கள். என் கண்ணை அவன்மேலே வைப்பேனென்றீர்.

௨௨ நாங்களோவென்றால் என்னுடைய ஆண்டவனோடே, அந்த இளைஞன் தன் தகப்பனை விட்டுக்கூடாது. தன் தகப்பனைவிட்டால் அவர் செத்துப்போவாரென்றோம்.

௨௩ நீரோவெனில் உம்மடியாருடனே, உங்கள் இளைய சகோதரன் உங்களோடேகூட இறங்கிவராதே போனால் நீங்கள் என் முகத்தை இனிப் பார்ப்பதில்லை யென்று சொன்னீர்.

உச நாங்களுமடியாருகிய எங்கள் தகப்பனிடத்துக்கு வந்தபோது நாங்கள் ஆண்டவனுடைய வார்த்தைகளை அவருக்கு அறிவித்தோம்.

உரு நீங்கள் திரும்பப்போய்க் கொஞ்சம் ஆகாரந்தாக்கொள்ளுங்களென்று எங்கள் தகப்பன் சொல்லுவார்.

உசு அதற்கு நாங்கள் சொன்னதேதெனில் நாங்கள் இறங்கிப்போகக் கூடாது. எங்கள் இளைய சகோதரன் எங்களோடிருந்தாலொழிய இறங்கிப்போவோம். ஏனென்றால் எங்கள் இளைய சகோதரன் எங்களோடேயிராவிட்டால் நாங்கள் அந்தப் புருஷனுடைய முகத்தைப் பார்க்கக்கூடாதென்றோம்.

உஎ அப்பொழுது உமதடியாருகிய என் தகப்பன் எங்களோடே சொன்னதாவது, என் பெண்சாதி எனக்கிரண்டு பிள்ளைகளைப் பெற்றுளென்றதையும்,

உஅ அவர்களில் ஒருவன் என்னிடத்திலிருந்து புறப்பட்டுப்போனன். அவன் பீறுண்டே பீறுண்டானென்று சொல்லி இதுவரைக்கும் அவனைக்காணுதிருக்கிறேனென்றதையும் நீங்கள் அறிவீர்கள்.

உகூ நீங்களிவனையுமென் முன்பாக இராதபடிக்கு அழைத்துப் போகக் கொள்ள நேரிட்டு அவனுக்கு வந்தால் என் நரைப்பை நிர்ப்பந்தத்தோடே குழியிலிறங்கப்பண்ணுவீர்களென்றார்.

ங0 இப்பொழுதும் இளைஞன் எங்களோடிராமல் நான் என் தகப்பனுகிய உமதடியான் கிட்டப்போய்க் கேட்டால், அவருடைய ஆத்துமம் இவனுடைய ஆத்துமத்தோடே ஒட்டிக்கொண்டிருக்கிற படியினாலே

ஙக அவர் இளைஞனில்லையென்று காணும்பொழுது செத்துப்போவார். அப்படியே உமதடியாருமுடைய ஊழியக்காரருகிய எங்கள் தகப்பனுடைய நரையைச் சஞ்சலத்தோடே குழியிலிறங்கப்பண்ணுவோமே.

ஙஉ ஏனெனில் * நானவனை உம்மண்டைக்கழைத்து வாராதேபோனுல் நானெக்காலமும் என் தகப்பனுக்குக் குற்றவாளியிருப்பேனென்று உமதடியாருகிய நான் என் தகப்பனிடத்தில் இந்த இளைஞனுக்காகப் பிணைப்பட்டேன். * சாக, கூ.

ஙங இப்பொழுதும் இளைஞன் தன் சகோதரரோடே கூடப்போய் விடும்படிக்கு உமதடியானுகிய நான் இளைஞனுக்குப் பதிலாக இங்கே என்னுடைய ஆண்டவனுக்கடிமையாயிருக்கட்டும்.

ஙச ஏனெனில் இளைஞன் என்னோடிராவிட்டால் எப்படி என் தகப்பனண்டைக்குப் போவேன்? என் தகப்பனைப் பிடிக்கும் தீங்கை அப்பொழுது காணவேண்டியதேனென்றான்.

## சரு. அதிகாரம்.

### யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை அறியப்படுத்தினது.

அப்பொழுது யோசேப்பு தன்னண்டை நின்ற எல்லாருமுன்பாகவுந் தன்னையடக்கிக்கொண்டிருக்கக்கூடாமல் யாவரையும் என்னைவிட்டு வெளியே போகப்பண்ணுங்களென்று கூப்பிட்டான். யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை அறியப்பண்ணுகையில் ஒருவரும் அவனண்டையில் நின்றதில்லை.

உ அவன் சத்தமிட்டழுதான். அதை எகிப்தியர் கேட்டார்கள். பார்வோனின் வீட்டாருங் கேட்டார்கள்.

ங யோசேப்பு தன் சகோதரரோடே நான் யோசேப்பு. என் தகப்பன் இன்னமுயிரோடிருக்கிறாரோவென்றான். ஆனால் அவன் சகோதரர் அவனுக்குமுன்பாகக் கலங்கினதினாலே அவனுக்குப் பிரத்தியுத்தாரஞ்சொல்ல அவர்களுக்குக் கூடாதேபோயிற்று.

ச அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரோடே என்னண்டையிலே கிட்டவாருங்களேனென்றான். அவர்கள் கிட்டப்போனார்கள். அப்பொழுது அவன் சொன்னதாவது, நீங்கள் எகிப்திற்குப் போகிறவர்களுக்கு விற்ற உங்கள் சகோதரனுகிய யோசேப்பு நானே.

ரு இப்பொழுதும் நீங்களென்னை இவ்விடத்திற்கு விற்றுப்போட்டதினாலே நீங்கள் சஞ்சலப்படவும் அது உங்களுக்கு மனவருத்தமாயிருக்கவும் வேண்டாம். ஏனெனில் உங்கள் ஜீவனுக்காகப் பராபரன் என்னை உங்களுக்குமுன்னுக அனுப்பினார்.

சு ஏனென்றால் இந்த இரண்டு வருஷத்தேசத்திற்குள்ளே பஞ்சமுண்டாயிருந்தது. உழவும் அறுப்புமில்லாத ஐந்து வருஷங்களும் இன்னமிருக்கும்.

எ ஆனால் உங்களைத் தேசத்தில் மீதியாக வைப்பதற்கும் உங்களைப் பெரிய இரட்சிப்பினாலே உயிரோடே காப்பாற்றுமாகப் பராபரன் என்னை உங்களுக்குமுன்னுக அனுப்பினார்.

அ அப்பொழுதும் நீங்களல்ல பராபரனே என்னை இங்கே அனுப்பி என்னைப் பார்வோனுக்குத் தகப்பனாகவும் அவர் வீட்டிற்கெல்லாந் துரையாகவும் எகிப்து தேசத்தையெல்லாம் ஆளுகிறவனாகவும் வைத்தார்.

கூ நீங்கள் தீவிரத்தோடே என் தகப்பனண்டைக்குப்போய் நீர் அவரோடே சொல்லவேண்டியதேதெனில், உம்முடைய குமாரனுகிய யோசேப்பு சொல்லுகிறதாவது, பராபரன் என்னை எகிப்திற்கெல்லாந் துரையாக வைத்தார். என்னண்டைக்கு இறங்கிவாரும் தாமதியாதேயும்.

ய நீர் கோசேனென்னுந் தேசத்திலே வாசம்பண்ணி எனக்குச் சமீபத்திலேயிருப்பீர். நீரும

உம்முடைய பிள்ளைகளும் உம்முடைய பிள்ளைகளின் பிள்ளைகளும், உம்முடைய ஆடுகளும், உம்முடைய மாடுகளும் உமக்குண்டான யாவுங்கூடத்தானே.

௰௧ நீரும் உம்முடைய வீட்டாரும் உமக்கிருக்கிறயாவுந் தாழ்ச்சிப்படாதபடிக்கு அங்கே உம்மைப் பராமரிப்பேன். ஏனெனில் பஞ்சம் இன்னும் ஐந்து வருஷமட்டுமிருக்குமென்கிறானென்று சொல்லுங்கள்.

௰௨ இதோ, என்னுடைய வாயே உங்களோடே பேசுகிறதென்பதை உங்கள் கண்களும் என் தம்பியாகிய பென்யமீனின் கண்களுங் காண்கிறதே.

௰௩ எசிப்திலே எனக்கிருக்கிற என்னுடைய எல்லா மகிமையையும், நீங்கள் கண்டதெல்லாவற்றையும் என் தகப்பனுக்கு அறிவித்து, நீங்கள் தீவிரமாய் என் தகப்பனை இவ்விடத்துக்கழைத்துவரப் பண்ணுங்களென்று சொல்லி,

௰௪ தன் தம்பியாகிய பென்யமீனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டழுதான். பென்யமீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டழுதான்.

௰௫ தன்னுடைய எல்லாச் சகோதரரையும் முத்தஞ்செய்து அவர்கள்முன்னாக அழுதான். அதற்குப்பிறகு அவன் சகோதரர் அவனோடே பேசினார்கள்.

௰௬ யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்று பார்வோனின் வீட்டிலே செய்தி கேட்கப்பட்டபொழுது, அது பார்வோனின் பார்வைக்கும் அவனூழியக்காரரின் பார்வைக்கும் நன்றாயிருந்தது.

௰௭ அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னது. நீயுன் சகோதரரோடே சொல்லவேண்டியதாவது நீங்கள் செய்யவேண்டியதேதெனில், உங்கள் மிருகஜீவன்களின்மேல் பொதியேற்றிப் புறப்பட்டுக் கானான்தேசத்திற்குப் போய்,

௰௮ உங்கள் தகப்பனையும் உங்கள் வீட்டாரையுங் கூட்டிக்கொண்டு என்னண்டைக்கு வாருங்கள். நான் உங்களுக்கு எசிப்து தேசத்தின் நன்மையைக் கொடுப்பேன். தேசத்தின் கொழுப்பைச் சாப்பிடுவீர்கள்.

௰௯ நீங்கள் செய்யவேண்டியதேதெனில், நீங்கள் உங்கள் குழந்தைகளுக்காகவும் உங்கள் பெண்சாதிகளுக்காகவும் வண்டில்களை எசிப்துத்தேசத்திலிருந்து கொண்டுபோய் உங்கள் தகப்பனையேற்றி வாருங்கள்.

௨௰ உங்கள் கண் உங்களுடைய தட்டுமுட்டுகளைப் பார்க்கவேண்டாம். ஏனெனில் எசிப்துதேசமெங்கும் நன்மையாயிருக்கிறது. உங்களுடையதாயிருக்குமென்று அவர்களோடே சொல்லக் கட்டளைபெற்றாயென்றான்.

௨௰௧ அப்படியே இஸ்ரவேலின் குமாரர் செய்தார்கள். யோசேப்பு அவர்களுக்குப் பார்வோனுடைய கட்டளையின்படியே வண்டில்களைக் கொடுத்து வழிக்கு ஆகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்தான்.

௨௰௨ அவர்களில் ஒவ்வொருவனுக்கும் அவனவன் மாற்றுவஸ்திரங்களைக் கொடுத்து, பென்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசையும் ஐந்து மாற்றுவஸ்திரங்களையுங் கொடுத்தான்,

௨௰௩ அப்படியே தன் தகப்பனுக்கு எசிப்தின் உச்சிதங்களைச் சுமந்துபோகிற பத்துக்கழுதைகளைத் தன் தகப்பனுக்காக வழிக்குத் தானியமும் அப்பமுந் தீனண்டங்களையுஞ் சுமந்துபோகிற பத்துக்கோளிகைக்கழுதைகளையும் அனுப்பினான்.

௨௰௪ அப்படியே அவன் தன் சகோதரரை அனுப்பிவிட்டு அவர்கள் போகிறபொழுது, வழியிலே சண்டையிடாதேயுங்களென்று அவர்களோடே சொன்னான்.

௨௰௫ அவர்கள் எசிப்திலிருந்து போய்க் கானான்தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டைக்கு வந்து,

௨௰௬ யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறானென்றும் அவன் எசிப்துதேசத்தையெல்லாம் ஆளுகிறவனென்றும் அவனுக்கு அறிவித்தார்கள். அதில் அவன் இருதயந் தளம்பிற்று. ஏனெனில் அவர்களை நம்பாதிருந்தான்.

௨௰௭ அவர்களோவென்றால் யோசேப்பு தங்களுடனே பேசின எல்லா வார்த்தைகளையும் அவனுக்குச் சொல்லும்பொழுதும், தன்னையேற்றிக்கொண்டுபோக யோசேப்பு அனுப்பின வண்டில்களையவன் காண்கிறபொழுதும் அவர்களுடைய தகப்பனாகிய யாக்கோபின் ஆவிக்கு உயிர்வந்தது.

௨௰௮ அப்பொழுது இஸ்ரவேல் என் குமாரனாகிய யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறபொழுதும், நான் மரணமடையாததற்கு முன்னேபோய் அவனைப் பார்ப்பேனென்றான்.

## ௪௬. அதிகாரம்.

யாக்கோபும் அவன் வீட்டாரும் எசிப்திலே வந்தது.

இஸ்ரவேல் தனக்குண்டானதையெல்லாங் கூட்டிக்கொண்டு பயணம்புறப்பட்டுப் பேர்செபாவுக்கு வந்து தன் தகப்பனாகிய ஈசாக்குடைய பராபரனுக்குப் பலிகளையிட்டான்.

௨ இராத்தரிசனங்களிலே பராபரன் இஸ்ரவேலோடே பேசி யாக்கோபே! யாக்கோபே! என்றார். அவன் இதோ, அடியேனென்றான்.

௩ அப்பொழுது அவர் சொன்னதாவது, நாம் உன் தகப்பனுடைய தேவனாகிய பராபரன் எசிப்திற்கிறங்கிப்போகப் பயப்படா

யாக. எனெனில அங்கே உன்னைப்பெரிய சாதியாக்குவோம.

௪ நாம உன்னோடேகூட எகிப்திற்கிறங்கிப்போவோம. நாமுன்னைத்திரும்பவுந்தேசிவும்பண்ணுவோமென்றும யோசேப்பு தனகையால உன்கண்களைமூடுவானென்றுஞ் சொன்னார்.

௫ அதற்குப்பிற்பாடு யாக்கோபு பேர்சேபாவிலிருந்து பயணம்புறப்பட்டுப்போனான. இஸ்ரவேலின்குமாரர் தங்களதகப்பனாகிய யாக்கோபையுந் தங்களகுழந்தைகளையுந் தங்களபெண்சாதிகளையும பார்வோன அவனையேற்றிவர அனுப்பினவண்டிகளின்மேல ஏற்றிக்கொண்டுபோனார்கள.

௬ அவர்கள தங்கள ஆடுமாடுகளையுந் தாங்கள் கானான்தேசத்திற்சம்பாதித்த தங்கள ஆஸ்தியையுங்கூட்டிக்கொண்டுபோய எகிப்திலே வந்தார்கள. யாக்கோபும அவன வித்தார் அனைவரும அவனோடேகூடத்தானே.

௭ தனகுமாரரையுந் தனகுமாரரின்குமாரரையுந் தனகுமாரத்திகளையுந் தனகுமாரரின்குமாரத்திகளையுந் தனவித்தார் அனைவரையும அவன தன்னோடேகூட எகிப்திற்கு அழைத்துக்கொண்டுவந்தான.

௮ எகிப்திலே வந்த இஸ்ரவேல புத்திரரின நாமங்களாவன யாக்கோபும அவன குமாரரும. யாக்கோபுடைய மூத்தபேறானவன ரூபேன.

௯ ரூபேனுடைய குமாரர் ஆனோக், பலலூ, எஸ்ரோன, கர்மீயென்றவர்கள.

௰ சிமெயோனுடைய குமாரர் எமூவேல, யமீன, ஓகாத், யாகீன், சோகார், கானானிய ஸ்திரீயின குமாரனாகிய சவுலென்றவர்கள.

௧௧ லேவியின குமாரர் கெர்சோன், கெகாத், மெராரி யென்றவர்கள.

௧௨ யூதாவின குமாரர் ஏர், ஓனான், சேலா, பேரேஸ், சேரா என்றவர்கள. ஏருமோனானுமோவென்றால் கானான தேசத்திலே செத்துப்போனார்கள. பேரேசுடைய குமாரர் எஸ்ரோன், ஆமூலென்றவர்கள.

௧௩ இசக்காருடைய குமாரர் தோலா, பூவா, யோப், சிம்ரோனென்றவர்கள.

௧௪ செபுலோனுடைய குமாரர் சேரேத், ஏலோன் யாலேயேலென்றவர்கள.

௧௫ இவர்கள லேயாளின குமாரர் இவர்களையும யாக்கோபுடைய குமாரத்தியாகிய தீனாளையும அவள அவனுக்குப்பதனாராமிலே பெற்றாள. அவள குமாரரும அவள குமாரத்திகளுமாகிய எல்லா ஆத்துமாக்களும முப்பத்துமூன்று.

௧௬ காத்துடைய குமாரர் சிப்பியோன, ஆகி, சூனி, எத்ஸ்போன், ஏரி, அரோதி, அரேலியென்றவர்கள.

௧௭ ஆசேருடைய குமாரர் இம்னா, இஸ்வா, இஸ்வி, பெரீயாவென்றவர்கள. இவர்களுடைய சகோதரி சேராகென்றவள. பெரீயாவின குமாரர் ஏபேர் மல்கியேலென்றவர்கள.

௧௮ இவர்கள லாபான தன குமாரத்தியாகிய லேயாளுக்குக்கொடுத்த சில்பாளுடையபிள்ளைகள. அவள யாக்கோபுக்கு இந்தப்பதினாறு ஆத்துமாக்களைப்பெற்றாள.

௧௯ யாக்கோபின பெண்சாதியாகிய ராகேலுடையகுமாரர் யோசேப்பும பெனயமீனுந்தானே.

௨௰ யோசேப்புக்கு எகிப்துதேசத்திலே மனாசேயும எப்பிராயீமும பிறந்தார்கள. அவர்களை ஓன் பட்டணத்து ஆசாரியனாகிய போத்திப்பிராவின குமாரத்தியாகிய ஆஸ்னாத் அவனுக்குப்பெற்றாள.

௨௧ பெனயமீனுடையகுமாரர் பேலா, பேகேர், அஸ்பேல, கேரா, நாமான், ஏகி, ரோஷ், மூப்பிம உப்பிம, ஆர்தென்றவர்கள.

௨௨ ராகேல யாக்கோபுக்குப் பெற்ற குமாரராகிய இவர்களெல்லாரும பதினாலு ஆத்துமாக்கள.

௨௩ தாணுடைய குமாரன ஊசிமென்றவன.

௨௪ நப்தலியின குமாரர் யாத்சேயேல கூனி, எத்சேர், சில்லேமென்றவர்கள.

௨௫ இவர்கள லாபான தன குமாரத்தியாகிய ராகேலுக்குக்கொடுத்த பில்காளயாக்கோபுக்குப் பெற்றவர்கள. இவர்களெல்லாரும ஏழு ஆத்துமாக்கள.

௨௬ யாக்கோபுடைய குமாரரின பெண்சாதிகளைத்தவிர அவனுடைய கர்ப்பத்திற பிறந்து அவனோடேகூட எகிப்திலே வந்த ஆத்துமாக்களெல்லாரும அறுபத்தாறு ஆத்துமாக்கள.

௨௭ யோசேப்புக்கு எகிப்திலே பிறந்த குமாரரும இரண்டு ஆத்துமாக்கள. எகிப்திலே வந்த யாக்கோபின வீட்டாராகிய ஆத்துமாக்களெல்லாம எழுபது.

௨௮ கோசேனுக்குப்போகிற வழியைத தனக்குக்காட்டுவிக்க அவன தனக்கு முன்னுகே யோசேப்பண்டைக்கு யூதாவையனுப்பினான. அப்படியே கோசேன்தேசத்திலே வந்தார்கள.

௨௯ யோசேப்பு தன இரதத்தை அயத்தம்பண்ணியேறிக் கோசேனுக்குத தனதகப்பனாகிய இஸ்ரவேலுக்கு எதிர்கொண்டுபோய, அவனுக்குத்தன்னைக்காண்பித்து, அவனுடையக்கழுத்திலேகட்டிக்கொண்டு அநேகநேரமாய அவனகழுத்தைவிடாமலழுதான.

௩௰ அப்பொழுது இஸ்ரவேல யோசேப்புடனே நீ இன்னம உயிரோடிருக்கிறயென்று நான உன்முகத்தைக்கண்டபடியினாலே இனிமரணம எனக்கெப்போவாகிலும வரட்டுமென்றான.

சுக்காரனல்ல. ஏனெனில் நான் திக்குவாயனுந் திக்குநாக்குக்காரனுமானவனென்றான்.

௰௧ அப்பொழுது கர்த்தர் அவனோடே சொன்னதாவது, மனுஷனுக்கு வாயைக் கொடுத்தவர் யார்? அல்லவென்று ஊமையனையும் அல்லது செவிடனையும் அல்லது பார்வையுள்ளவனையும் அல்லது குருடனையும் உண்டாக்கினவர் யார்? கர்த்தராகிய நாமல்லவோ?

௰௨ இப்பொழுதும் நீ போ. நாம் உன் வாயோடேயிருந்து, * நீ பேசவேண்டியதை உனக்குப் போதிப்போமென்றார்.

* மத். ௰, ௰௯. ௨௰.

௰௩ அவனோவென்றால் ஆ, ஆண்டவரே! நீர் அனுப்பச் சித்தமாயிருக்கிற ஆளையாகிலும் அனுப்புமென்றான்.

௰௪ அப்பொழுது கர்த்தர் மோசேயின் மேற்கோபமூண்டவராகிச் சொன்னதாவது லேவியனாகிய ஆரோன் உன் சகோதரனல்லவோ? அவன் நன்றாய்ப் பேசுகிறவனென்றறிவோம். இதோ, அவன் உன்னைச் சந்திக்கவும் புறப்பட்டு வந்து உன்னைக் கண்டு தன்னிருதயத்திலே மகிழ்ச்சியாயிருப்பான்.

௰௫ * நீ அவனோடே பேசி வார்த்தைகளை அவன் வாயிலே போடுவாயாக. நாமோவென்றால் உன் வாயோடும் அவன் வாயோடுமிருந்து, நீங்கள் செய்யவேண்டியதை உங்களுக்குப் போதிப்போம். * ௭, ௨.

௰௬ அவனுனக்குப் பதிலாய் ஜனத்தோடே பேசுவான். இப்படியே அவன் உனக்கு வாயாகவிருப்பான். நீயவனுக்குத் தேவனாகவிருப்பாய்.

௰௭ நீ அடையாளங்களைச் செய்யும் இந்தக் கோலை உன் கையிலே பிடித்துக்கொண்டு போவென்றார்.

மோசே எகிப்திற்குத் திரும்பினது.

௰௮ மோசே போய்த் திரும்பத் தன் மாமனாகிய எத்திரோவண்டைக்கு வந்து நான் புறப்பட்டு எகிப்திலிருக்கிற என் சகோதரரண்டைக்குத் திரும்பிப்போய் அவர்களின்னம் உயிரோடேயிருக்கிறார்களோவென்று பார்க்கட்டுமென்று அவனோடே சொன்னான். அப்பொழுது எத்திரோ மோசேக்குச் சமாதானமாய்ப் போவென்றான்.

௰௯ பின்னையுங் கர்த்தர் மீதியானிலே மோசேயோடே எகிப்திற்குத் திரும்பிப்போ. ஏனெனில் உன் பிராணனை வாங்கத்தேடின மனிதரெல்லாருஞ் செத்துப்போனார்களென்றார்.

௨௰ அப்பொழுது மோசே தன் பெண்சாதியையுந் தன் பிள்ளைகளையுங் கூட்டிக்கொண்டு, அவர்களைக் கழுதையின்மேலேற்றி எகிப்து தேசத்திற்குத் திரும்பினான். மோசே பராபரனுடைய கோலைத் தன் கையிலே பிடித்துக்கொண்டுபோனான்.

௨௧ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது நீ எகிப்திலே திரும்பி வந்துசேர்ந்த பொழுது நாம் முன் கையிலே கொடுத்த எல்லா அற்புதங்களையும் பார்வோனுக்கு முன்பாகச் செய்யப்பார். நாமோவெனில் அவனிருதயத்தைச் சனங்களை விடாதபடிக்குக் கெட்டிப்படுத்துவோம்.

௨௨ அப்பொழுது நீ பார்வோனோடே சொல்லவேண்டியதாவது கர்த்தர் உரைக்கிறதேதெனில் இஸ்ரவேல் நம்முடைய முதற்பேறான குமாரன்.

௨௩ நம்முடைய குமாரனை நமக்காராதனை செய்யும்படிக்கு விடுவென்று நானுன்னோடே சொல்லியும் நீ அவனை விடமாட்டேனென்றாய். இதோ, நான் உன் முதற்பேறான உன் குமாரனைக் கொன்றுபோடுவேனென்று மாத்திரமொன்று சொல்லுவாயாக வென்றார்.

௨௪ வழியிலே தங்குமிடத்திலே சம்பவித்ததேதென்றால் கர்த்தர் அவனுக்கெதிர்ப்பட்டு அவனைக் கொல்லவேண்டுமென்றிருந்தார்.

௨௫ அப்பொழுது சிப்போராள் * கருக்கான கல்லையெடுத்துத் தன் பிள்ளையின் நுனித்தோலையறுத்து அதை அவன் கால்களுக்கு முன்பாகப் போட்டு நீரெனக்கு இரத்தப்பழிக்கான மாப்பிள்ளையாமேயென்றாள்.

* யோசு. ௫, ௨.

௨௬ அப்பொழுது அவனைவிட்டு விலகினார். அவள் சுன்னத்துகளினிமித்தம் அப்பொழுது அவனை இரத்தப்பழிக்கான மாப்பிள்ளையென்றாள்.

௨௭ கர்த்தர் ஆரோனுடனே நீ வனாந்தரத்திலே மோசேக்கு எதிர்கொண்டு போவென்றார். அவன் போய்ப் பராபரனுடைய பர்வதத்திலே அவனைச் சந்தித்து அவனை முத்திசெய்தான்.

௨௮ அப்பொழுது மோசே தன்னையனுப்பின கர்த்தருடைய எல்லா வார்த்தைகளையும் அவர் தனக்குக் கற்பித்த எல்லா அடையாளங்களையும் ஆரோனுக்கறிவித்தான்.

௨௯ மோசேயும் ஆரோனும் போய் இஸ்ரவேல் புத்திரரின் மூப்பரையெல்லாங் கூட்டினார்கள்.

௩௰ ஆரோனென்றால் கர்த்தர் மோசேயோடே பேசின எல்லா வார்த்தைகளையுஞ் சொல்லிச் சனத்தினங்களுக்கு முன்பாக அந்த அடையாளங்களைச் செய்தான்.

௩௧ சனம் விசுவாசித்தது. கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை விசாரித்தாரென்றும் அவர்கள் சிறுமையைப் பார்த்தாரென்றும் அவர்கள் கேட்டபொழுது குனிந்து பணிந்துகொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

பார்வோன் சனத்தை யதிகமாய் உபத்திரவப்படுத்தினது.

௧ பிறபாடு மோசேயும் ஆரோனும் உட்பிரவேசித்துப் பார்வோனோடே நமக்கு வனாந்தரத்திலே பண்டிகையாசரிக்கும்படிக்கு நம்முடைய சனத்தைப் போகவிடுவென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்கள்.

௨ பார்வோனோவென்றால் நான் இஸ்ரவேலைப் போகவிடக் கர்த்தரின் சத்தத்தைக் கேட்கிறதற்கு அவர் ஆர்? நான் கர்த்தரை அறியேன். நான் இஸ்ரவேலை விடுவதுமில்லையென்றான்.

௩ அப்பொழுது அவர்கள் எபிரேயருடைய பராபரன் எங்களைச் சந்தித்தார். அவர் பெருவாரிக்காய்ச்சலோடும் அல்லவென்று பட்டயத்தோடும் எங்களுக்கு நேரிடாதபடிக்கு நாங்கள் மூன்று நாட்பயணம் வனாந்தரத்திலே போய் எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடட்டுமென்றார்கள்.

௪ ஆனால் எகிப்தின் இராசா அவர்களுடனே மோசே ஆரோனென்றவர்களே! நீங்கள் சனத்தைத் தங்கள் வேலைகளை விடுகைக்கப் பண்ணுகிறதென்ன? உங்கள் சுமைகளைச் சுமக்கப்போங்களென்றான்.

௫ பின்னையும் பார்வோன் இதோ, தேசத்தின் சனம் அப்பொழுதே திரட்சியாயிருக்கிறது அவர்களை நீங்கள் தங்கள் சுமைகளை விட்டு ஓயப்பண்ணுவீர்களோவென்று சொல்லி,

௬ அந்நாளிலே பார்வோன் சனத்தின் விசாரிப்புக்காரருக்கும் அதின் தலைவருக்குங் கற்பித்துச் சொன்னதாவது,

௭ நீங்கள் இனிச்சனத்திற்கு நேற்றைப்போலும் முந்தநேற்றைப்போலுஞ் செங்கலுக்கு வைக்கோல் கொடுக்க வேண்டாம். அவர்கள் தானே போய்த் தங்களுக்கு வைக்கோல் சேர்க்கக்கடவர்கள்.

௮ ஆனால் அவர்கள் நேற்றும் முந்தநேற்றுஞ் செய்த செங்கலுகளுடைய இலக்கத்திட்டத்தைத்தானே யவர்கள்மேல் சுமத்துவீர்களாக. அதிலே நீங்கள் ஒன்றுங் குறைக்கவேண்டாம். ஏனெனில் அவர்கள் சும்மாயிருக்கிறார்கள். ஆகையால் நாங்கள் போவோம். எங்கள் பராபரனுக்குப் பலியிடுவோமென்று கூப்பிடுகிறார்கள்.

௯ அந்த மனிதர்கள் பொய் வார்த்தைகளைக் கவனிக்காமல் தங்கள் பணிவிடை வேலைகளில் அலுவலாயிருக்கும்படிக்கு அது அவர்கள் மேல் அதிகமாக்கப்படக்கடவதென்றான்.

௰ அப்பொழுது சனத்தின் ஆளோட்டிகளும் அதின் தலைவரும் புறப்பட்டுச் சனத்தோடே சொன்னதாவது, நான் உங்களுக்கு வைக்கோல் கொடுப்பதில்லையென்றும்,

௰௧ நீங்கள் தானே போய் உங்களுக்ககப்படுகிற இடங்களில் வைக்கோல் சம்பாதியுங்கள். உங்கள் பணிவிடை வேலையிலோவென்றால் ஒன்றுங் குறைக்கப்படுவதில்லையென்றும் பார்வோன் சொன்னானென்றார்கள்.

௰௨ அப்பொழுது வைக்கோலுக்குப் பதிலாய்த் தாளடிகளைச் சேர்க்கும்படிக்குச் சனம் எகிப்துதேசமெங்குஞ் சிதறிப் போயிற்று.

௰௩ ஆளோட்டிகளோவென்றால் துருசுபண்ணி வைக்கோலிருந்த நாளிற் செய்ததற்குச் சரியாக உங்கள் பணிவிடைவேலைகளை ஒவ்வொரு நாளிலே முடித்துத் தீருங்களென்றார்கள்.

௰௪ பிற்பாடு நீங்கள் முந்தியதுபோலே செங்கலில் உங்கள் திட்டத்தை நேற்றும் இன்றும் முடிக்காதேபோனதென்னவென்று பார்வோனுடைய ஆளோட்டிகள் இஸ்ரவேல் புத்திரர் மேலே வைத்த இவர்களுடைய தலைவர்களைக் கேட்டடித்தார்கள்.

௰௫ ஆகையால் இஸ்ரவேல் புத்திரரின் தலைவர் உட்பிரவேசித்துப் பார்வோனை நோக்கிக் கூப்பிட்டு, உமதடியாருக்கு நீரிப்படிச் செய்வானேன்?

௰௬ உமதடியாருக்கு வைக்கோல் கொடுபடாவிட்டாலுஞ் செங்கலை யறுத்துத் தீருங்களென்றெங்களுக்குச் சொல்லுகிறார்கள் இதோ, உம்முடைய சனத்தின்மேலே குற்றமிருக்கக்கொள்ள உமதடியார் அடிக்கப்படுகிறார்களென்றார்கள்.

௰௭ அதற்கவன் சொன்னதாவது, நீங்கள் சும்மாயிருக்கிறீர்கள். சும்மாயத்தானிருக்கிறீர்கள். ஆகையினாலே போவோம். கர்த்தருக்குப் பலியிடுவோமென்கிறீர்கள்.

௰௮ இப்பொழுதும் போங்கள்; பணிவிடை செய்யுங்கள். உங்களுக்கு வைக்கோல் கொடுக்கப்படுவதில்லை; செங்கலுகளுடைய இலக்கத்தின் திட்டத்தையோவெனில் நீங்கள் ஒப்புவிக்கவேண்டுமென்றான்.

௰௯ நீங்கள் ஒவ்வொரு நாளிலே அறுத்துத் தீர்க்கவேண்டிய செங்கலுகளிலே ஒன்றுங் குறைக்காதேயுங்களென்னப்பட்டதினாலே தங்களுக்கு வந்த இக்கட்டை இஸ்ரவேல் புத்திரரின் தலைவர் கண்டு,

௨௰ பார்வோனை விட்டுப் புறப்படுகையில் தங்களுக்கெதிரே நிற்கிற மோசேக்கும் ஆரோனுக்கும் எதிர்ப்பட்டு,

௨௧ அவர்களுடனே, நீங்கள் பார்வோனின் கண்களுக்கு முன்பாகவும் அவருடைய ஊழியக்காரின் கண்களுக்கு முன்பாகவும் எங்கள் வாசனையை நாறப்பண்ணி, எங்களைக் கொல்ல அவர்கள் கையிலே பட்டயத்தைக் கொடுத்ததினிமித்தங் கர்த்தர் உங்களை நோக்கிப் பார்த்து நியாயந்தீர்க்கக்கடவரென்றார்கள்.

உஉ அப்பொழுது மோசே கர்த்தரண்டைக்குத் திரும்பி ஆண்டவரே! இந்தச்சனத்துக்கேன் தீங்குவரப்பண்ணினீர்? நீரென்னையேனனுப்பினீர்?

உங நான் உம்முடைய நாமத்திலே பேசப் பார்வோனண்டையிலே உட்பிரவேசித்தது முதற்கொண்டு அவன் இந்தச்சனத்தைத் துன்பப்படுத்துகிறான். நீரோவென்றால் உம்முடைய சனத்தை விடுவித்ததேயில்லையென்றான்.

## சா. அதிகாரம்.

இஸ்ரவேலைத் தொடங்கக் கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்டது.

க அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே நான் பார்வோனுக்குச் செய்வதை யிப்பொழுது காண்பாய். ஏனென்றால் பலத்த கையைக் கண்டு அவர்களைப் போகவிடுவான், பலத்த கையைக் கண்டு அவர்களைத் தன்தேசத்திலிருந்து துரத்திவிடுவானென்றார்.

உ பின்னையும் பராபரன் மோசேயுடனே பேசி அவனோடே சொன்னதாவது நான் கர்த்தர்.

ங நான் சர்வத்திற்கும் வல்ல பராபரனாய் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்குந் தரிசனையானோம். ஆனாற் கர்த்தரென்கிற நம்முடைய நாமத்தினாலே நாம் அவர்களுக்கு அறியப்பட்டதில்லை.

ச அவர்கள் பரதேசிகளாய்த் தங்கின தேசமாகிய கானான் தேசத்தை யவர்களுக்குக் கொடுக்க நாம் அவர்களோடே நம்முடைய உடன்படிக்கையை ஏற்படுத்தி,

ரு எகிப்தியர் அடிமைகொள்ளுகிற இஸ்ரவேல் புத்திரரின் தவிப்பையும் நாங்கேட்டு நம்முடன்படிக்கையை நினைத்தோம்.

சா ஆகையால் இஸ்ரவேல் புத்திரருக்கு நீ சொல்லவேண்டியதேதெனில் நான் கர்த்தர். நானுங்களை எகிப்தியருடைய சுமைகளின் கீழிருந்து புறப்படப்பண்ணி உங்களையவர்கள் அடிமைத்தனத்திற்கு நீங்கலாக்கி விடுவித்து உங்களை நீட்டப்பட்ட புயத்தினாலும் மகா நியாயத்தீர்ப்புகளினாலும் மீட்டு,

எ உங்களை நமக்குச் சனமாகச் சேர்த்துக்கொண்டு, உங்களுக்குப் பராபரனாயிருப்போம். நாம் உங்களை எகிப்தியருடைய சுமைகளின் கீழிருந்து புறப்படப்பண்ணுகிற உங்கள் பராபரனாகிய கர்த்தரென்றறிவீர்கள்.

அ நாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்குங் கொடுப்போமென்று நம்முடைய கையையெடுத்த தேசத்திலே உங்களைக் கொண்டுபோய் அதை யுங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுப்போம். நான் கர்த்தரென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.

கூ இந்தப்பிரகாரமாக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே பேசினான். ஆனாலவர்கள் ஆவியின் இடுக்கண்ணினாலுங் கடின வேலையினாலும் மோசேயைக் கேளாதே போனார்கள்.

ய பின்பு கர்த்தர் மோசேயுடனே பேசி,

யக நீ உட்பிரவேசித்து எகிப்தின் இராசாவாகிய பார்வோன் இஸ்ரவேல் புத்திரரைத் தன் தேசத்திலிருந்து போகவிட அவனோடே பேசு என்றார்.

யஉ அப்பொழுது மோசே கர்த்தருக்கு முன்பாகப் பேசி இதோ, இஸ்ரவேல் புத்திரர் என்னைக் கேட்கவில்லை. பார்வோன் என்னை யெப்படிக் கேட்பான்? நானசுத்தமில்லாத உதடுகளுமுள்ளவனென்றான்.

யங கர்த்தரோவென்றால் மோசேயோடும் ஆரோனோடும் பேசி, இஸ்ரவேல் புத்திரரை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு போகும்படிக்கு அவர்களை இஸ்ரவேல் புத்திரரண்டைக்கும் எகிப்தின் இராசாவாகிய பார்வோனண்டைக்கும் அனுப்பிக் கட்டளைகளைக் கொடுத்துவந்தார்.

ரூபன், சிமெயோன், லேவி, என்றவர்களுடைய சந்ததியாரின் நாமங்கள்.

யச அவர்களுடைய பிதாக்களின் வீட்டாரிலே தலைவராவது. இஸ்ரவேலுக்கு முதற் பிறந்தவனான ரூபனின் குமாரர் ஆனோக்கு, பலூ, எத்ஸ்ரோன், கர்மீ, இவர்கள் ரூபனுடைய வம்சங்களின் தலைவர்.

யரு சிமெயோனின் குமாரர் எமுவேல், யாமீன், ஓகாத், யாகின், சோகார், கனானித்திப் பெண்ணின் குமாரனாகிய சவுல் இவர்கள் சிமெயோனுடைய வம்சங்களின் தலைவர்.

யசா தங்கள் சந்ததிகளாய்ப் பிரிந்த லேவியினுடைய குமாரரின் நாமங்கள். கெர்சோன், கேகாத், மெராரியென்றவைகள். லேவி உயிரோடிருந்த வருஷங்களோவென்றால் நூற்றுமுப்பத்தேழு வருஷங்களானது.

யஎ தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த கெர்சோனின் குமாரர் லிப்னியுஞ் சிமேயியுந் தானே.

யஅ கேகாத்தின் குமாரர் அம்ராம், இத்சேயார், எப்ரோன், ஊசியேலென்றவர்கள். கேகாத் உயிரோடேயிருந்த வருஷங்களோவென்றால் நூற்றுமுப்பத்துமூன்று வருஷங்களானது.

யகூ மெராரின் குமாரர் மகேலியும், மூசியுந்தானே. இவர்கள் தங்கள் சந்ததிகளாய்ப் பிரிந்த லேவியினுடைய வம்சங்களின் தலைவர்.

உய அம்ராம் தன்னுடைய அத்தையாகிய யோகெபேத்தை விவாகம் பண்ணினான். இவள் அவனுக்கு ஆரோனையும் மோசேயையும் பெற்றாள். அம்ராம் உயிரோடிருந்த

௨௨. உங்களிலொருவனாகிலும் விடியற்காலமட்டுமே ஒருவருந்தன் வீட்டுவாசலிலிருந்து புறப்படவேண்டாம்.

௨௩ ஏனெனில் கர்த்தர் எகிப்தியரை வாதிப்பதற்குக் கடந்துவருவார். ஆனால் வாசற்கால் மேற்சட்டத்திலும் வாசலின் இரண்டு நிலைகளிலும் அந்த இரத்தத்தைக் காணும்பொழுது கர்த்தர் அழிக்கிறவனை உங்கள் வீடுகளில் வாதிக்கிறதற்கு வரவொட்டாமல் வாசற்படியை விலகிக் கடந்துபோவார்.

௨௪ இந்தக் காரியத்தை என்றைக்கும் உனக்கும் உன் பிள்ளைகளுக்குங் கட்டளையாகக் கைக்கொள்ளக்கடவீர்கள்.

௨௫ கர்த்தர் உங்களுக்குத் தாமே சொன்னபடி கொடுக்கப்போகிற தேசத்திலே நீங்கள் வந்திருக்கும்பொழுது இந்த ஆராதனையைக் கைக்கொள்ளக்கடவீர்கள்.

௨௬ * அப்பொழுது உங்கள் பிள்ளைகள் உங்களுக்கிருக்கிற இந்த ஆராதனை என்னவென்று உங்களைக் கேட்கும்பொழுது,

* ௰௩. ௰௪.

௨௭ நீங்கள் சொல்வதாவது. எகிப்தியரை வாதிக்கையிலே எகிப்திலிருந்த இஸ்ரவேல் புத்திரருடைய வீடுகளை விலகிக்கடந்து எங்கள் வீடுகளைத் தப்பப்பண்ணின கர்த்தருக்குப் பஸ்கா என்னப்பட்ட பலியென்பீர்களென்றான். அப்பொழுது சனங்குனிந்து பணிந்துகொண்டது.

௨௮ இஸ்ரவேல் புத்திரர் போய் அப்படிச் செய்தார்கள். கர்த்தர் மோசேக்கும் ஆரோனுக்குங் கற்பித்தபடியே செய்தார்கள்.

முதற்பேறனைத்தெல்லாருஞ் சேதத்திலே எகிப்து வாதிக்கப்பட்ட பத்தாம் வாதை.

௨௯ அப்பொழுது சமயவிதத்தே தெனி நடு இராத்திரியிலே கர்த்தர் பார்வோனுடைய சிங்காசனத்தின்மேல் இருக்கக்கூடிய அவனுடைய தலைச்சன் குமாரனைத் தொடங்கி காவல் வீட்டிலிருக்கிற சிறையின் தலைச்சன் பிள்ளைமட்டும் எகிப்து தேசத்திலிருந்த முதற்பேறனைத்தையும் மிருகஜீவன்களின் தலைச்சனைத்தையும் அடித்தார்.

௩௰ அப்பொழுது பார்வோனும் அவனுடைய எல்லா ஊழியக்காரரும் எல்லா எகிப்தியரும் இராத்திரியிலே எழுந்திருந்தார்கள். மகாக்கூக்குரல் எகிப்திலேயுண்டாயிற்று. ஏனெனில் செத்தவனில்லாத ஒரு வீடுமிருந்ததில்லை.

௩௧ அவன் மோசேயையும் ஆரோனையும் இராத்திரியிலே அழைப்பித்துச் சொன்னதாவது. நீங்களும் இஸ்ரவேல் புத்திரருமாய் எழுந்து என் சனத்தினடுவிலிருந்து புறப்பட்டுப்போய் நீங்கள் சொன்னபடி கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள்.

௩௨ உங்கள் ஆடுமாடுகளையும் நீங்கள் சொன்னபடிக்கு ஓட்டிக்கொண்டுபோய் என்னையும் ஆசீர்வதியுங்களென்றான்.

இஸ்ரவேலர் எகிப்திலிருந்து புறப்பட்டது.

௩௩ எகிப்தியர் தீவிரமாய்ச் சனத்தைத் தேசத்திலிருந்து அனுப்பிவிட அவர்களை வெகு துரிதப்பண்ணினார்கள். ஏனெனில் நாங்களெல்லாருஞ் சாகிறோமென்றார்கள்.

௩௪ ஆகையால் சனம் இன்னம் உப்பாத தங்களுடைய பிசைந்தமாவிலிருந்த தங்கள் தொட்டிகளைத் தங்கள் சீலைகளிற் கட்டித் தங்கள் தோள்களின்மேல் எடுத்துப்போனார்கள்.

௩௫ இஸ்ரவேல் புத்திரர் மோசேயினுடைய வார்த்தையின்படி செய்து * எகிப்தியரை வெள்ளியுடைமைகளையும் பொன்னுடைமைகளையும் வஸ்திரங்களையுங் கேட்டிருந்தார்கள். * ௩, ௨௧. ௰௧, ௨.

௩௬ அன்றியுங் கர்த்தர் சனத்திற்கு எகிப்தியரின் கண்களிலே தயவுகிடைக்கப்பண்ணியிருந்தார். கேட்டதை அவர்களுக்குக் கொடுத்தார்கள். அப்படியே எகிப்தியரைக் கொள்ளையிட்டார்கள்.

௩௭ இஸ்ரவேல் புத்திரர் குழந்தைகளொழிய அறுநூறாயிரம் புருஷர் காலநடையாய் இராமேசேசைவிட்டுப் பயணம்பண்ணிச் சுக்கோத்திற்கு வந்தார்கள்.

௩௮ அவர்களோடே கூடப் பல்சாதியான திரளான சனமும் ஆடுமாடுகளுமுதலான ஏராளமான மிருகஜீவன்களும் எழும்பிவந்தது.

௩௯ அவர்கள் எகிப்திலிருந்து கொண்டுவந்த பிசைந்த மாவைப் புளிப்பில்லாத அப்பங்களாகச் சுட்டார்கள். ஏனெனில் அவர்கள் தரித்து நிற்கக்கூடாமல் எகிப்திலிருந்து துரத்தப்பட்டபடியினாலே அது உப்பாதிருந்தது. அவர்கள் தங்களுக்கு வழிக்கு ஒன்றுஞ் சேகரம்பண்ணினதுமில்லை.

௪௰ இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலே குடியிருந்த குடியிருப்பு * நானூற்றுமுப்பது வருஷமானது. * கலாத்தியர். ௩, ௰௭.

௪௧ நானூற்றுமுப்பது வருஷங்களின் முடிவிலே சமயவிதத்தே தெனில அந்நாளிலேதானே கர்த்தருடைய சேனைகளெல்லாம் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்டது.

௪௨ கர்த்தர் அவர்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணினதினாலே இது அவருக்குக் கவனமாய் ஆசரிக்கப்படவேண்டிய இராத்திரி. இதுதானே இஸ்ரவேல் புத்திரரெல்லாருந் தங்கள் தலைமுறைகளிலே கர்த்தருக்குக் கவனமாய் ஆசரிக்கவேண்டிய இராத்திரி.

லுள்ள யாதொரு வேலையுஞ் செய்யவேண்டாம்.

௰௧ ஏனென்றாற் கர்த்தர் ஆறு நாளைக்குள் வானத்தையும் பூமியையுஞ் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள சகலத்தையும் உண்டாக்கி * ஏழாநாளிலே ஓய்ந்திருந்தார். ஆகையாற் கர்த்தர் ஓய்வுநாளை ஆசீர்வதித்து அதைப் பரிசுத்தமாக்கினார்.

* ௧. மோசே. ௨, ௨௩.

௰௨ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்குந் தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருக்கும்படிக்கு உன் தகப்பனையும் உன் தாயையுங் கனம்பண்ணுவாயாக.

௰௩ கொலைசெய்யாயாக.

௰௪ விபசாரம்பண்ணாயாக.

௰௫ களவுசெய்யாயாக.

௰௬ உனக்கடுத்தவனுக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சி சொல்லாயாக.

௰௭ உனக்கடுத்தவனுடைய வீட்டை இச்சியாயாக. உனக்கடுத்தவனுடைய பெண்சாதியையும் அவனுடைய வேலைக்காரனையும் அவனுடைய வேலைக்காரியையும் அவனுடைய எருதையும் அவனுடைய கழுதையையும் பின்னை உனக்கடுத்தவனுக்குள்ள யாதொன்றையும் இச்சிக்காயாக வென்றார்.

௰௮ சனமெல்லாம் இடிமுழக்கங்களையும் மின்னல்களையும் எக்காளசத்தத்தையும் பர்வதம் புகைகிறதையுங் கண்டது. அதைக் காணுகையிற் சனம் பின்வாங்கித் தூரத்திலே நின்று,

௰௯ மோசேயுடனே நீர் எங்களோடே பேசும் நாங்கள் கேட்போம். நாங்கள் சாவாதபடிக்குப் பராபரன் எங்களோடே பேசாதிருப்பாராக வென்றார்கள்.

௨௰ மோசே சனத்துடனே பயப்படாதேயுங்கள். ஏனெனில் உங்களைச் சோதிப்பதற்காகவும் நீங்கள் பாவஞ்செய்யாதபடிக்கு அவர் பயம் உங்கள் முகத்திற்கு முன்பாக இருப்பதற்காகவும் பராபரன் வந்தாரென்றான்.

௨௧ சனந் தூரத்திலே நின்றது. மோசேயோவென்றாற் பராபரன் இருந்த இருளுக்குள்ளே சேர்ந்துபோனான்.

௨௨ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது. நீ இஸ்ரவேல்புத்திரரோடே சொல்லவேண்டியதேதெனில் நாம் வானத்திலிருந்து உங்களோடே பேசினதை நீங்கள் கண்டீர்கள்.

௨௩ நீங்கள் நமக்கு முன்பாக வெள்ளித்தேவர்களையாகிலும் பொன்தேவர்களையாகிலும் உங்களுக்குண்டாக்கவே உண்டாக்கவேண்டாம்.

௨௪ நீ மண்ணால் பலிபீடத்தை நமக்குண்டாக்கி அதின்மேல் உன் தகனபலிகளையும் உன் சமாதானபலிகளையும் உன் ஆடுகளையும் உன் மாடுகளையும் பலியிடுவாயாக. நாம் வெளிப்படுத்திலாகும் நம்முடைய நாமத்தைப் பிரஸ்தாபம்பண்ணினால் வெளிப்படுத்தில் உன்னண்டைக்கு வந்து உன்னை யாசீர்வதிப்போம்.

௨௫ கல்லான பலிபீடத்தை நமக்குண்டாக்கப்போனாயானால் அதை வெட்டின கல்லுகளால் கட்டாயாக. ஏனென்றால் நீ உன் உளியை அதின்மேல் நடமாடப்பண்ணினதினால் அதைப் பரிசுத்தக்குலைச்சலாக்குவாய்.

௨௬ நமது பலிபீடத்தில் உன் நிருவாணங் காணப்படாதபடிக்கு நீ அதற்குப் படிகளாலே ஏறவேண்டாம்.

## ௨௧. அதிகாரம்.

அடிமைகளுக்காகக் கட்டளையிட்ட கற்பனைகள்.

பின்னையும் நீ அவர்களுக்கு அறியப்பண்ணவேண்டிய நியாயங்களாவது.

௨ எபிரேயசாதியான அடிமையைக் கொண்டாயானால், அவன் ஆறு வருஷஞ் சேவித்து, ஏழாம் வருஷத்திலே இலவசமாகத் தன்னிச்சைக்காரனாய்ப் புறப்பட்டுப் போவானாக.

௩ ஒண்டிக்காரனாய் வந்திருந்தானானால் ஒண்டிக்காரனாய்ப் புறப்படுவானாக. பெண்சாதிக்குப் புருஷனாயிருந்தானானால் அவன் பெண்சாதி அவனோடேகூடப் புறப்படுவாளாக.

௪ அவன் எசமான் அவனுக்குப் பெண்சாதியைக் கொடுத்தும் அவள் அவனுக்கு ஆண்பிள்ளைகளையாகிலும் பெண்பிள்ளைகளையாகிலும் பெற்றதுமுண்டானால், பெண்சாதியும் அவள் பிள்ளைகளும் அவள் எசமானைச் சேர்வார்களாக. அவனோ ஒருவனாய்ப் புறப்படுவானாக.

௫ அந்த வேலைக்காரனோவென்றால், என் எசமானையும் என் பெண்சாதியையும் என் பிள்ளைகளையுஞ் சிநேகிக்கிறேன். நான் விடுதலைக்காரனாய்ப் புறப்படுவதில்லையென்று சொல்லுவானானால்,

௬ அவன் எசமான் அவனைத் தேவர்சன்னிதானத்துக்குக் கொண்டுபோய் அவனைக் கதவின் கிட்ட அல்லது கதவுநிலையின் கிட்டச் சேர்ப்பிக்கக்கடவன். அங்கே அவன் எசமான் அவன் காதைக் கம்பியினாலே குத்தக்கடவன். அதற்குப்பின் என்றைக்கும் அவனுக்கு வேலைசெய்யக்கடவன்.

௭ ஒருவன் தன் மகளை வேலைக்காரியாய் விற்றுப்போட்டானானால், அவள் வேலைக்காரர் புறப்பட்டுப்போகிறதுபோலே புறப்படவொண்ணாது.

அ அவளைத் தனக்கு நியமித்த எசமானின் பார்வைக்கு ஆகாதே போனால், அவள் மீட்கப்பட்டும். அவன் அவளைத் துரோகம் பண்ணி அவளை அன்னிய சாதியார் கையில் விற்றுப்போட அவனுக்கு அதிகாரமில்லை.

கூ அவன் தன் குமாரனுக்கு அவளை நியமித்தானேயாகில் குமாரத்திகளின் நியாயத்தின்படி அவளுக்குச் செய்யக்கடவன்.

ய அவனுக்கு வேறொருத்தியைக் கொண்டானேயானால், அவளுடைய போசனத்தையும் உடுப்பையும் குடியிருப்பையும் குறைக்காமலிருப்பானாக.

யக அவன் இந்த மூன்றும் அவளுக்குச் செய்யாதே போனால், அவள் கிரயமில்லாமல் இலவசமாய்ப் புறப்படவேண்டும்.

மனுஷனின் சேதத்தையும் மிருகஜீவனின் சேதத்தையும் குறித்துக் கட்டளையிடப்பட்டதின் விவரம்.

யஉ * ஒருவனைச் சாக அடித்தவன் கொலையுண்கவே கொலையுண்கக்கடவன்.

* க. மோசே. கூ, சா.

யங * இவன் அவனுக்குச் சதிபண்ணாமல் பராபரன் அவனை இவன் கைக்கு நேரிடப் பண்ணியிருந்தால் இவன் ஓடிப்போயிருக்கும் அடைக்கலத்தைக் குறிக்கக் கடவோம். * ச. மோசே. ஙரு, சா.

யச ஒருவன் தனக்கடுத்தவனுக்கு விரோதமாக அவனைச் சற்பனையாய்க் கொன்றுபோடும் அகங்காரத்தைப் பண்ணினானால் அவன் சாவுமடிக்கு அவனை நம்முடைய பீடத்தண்டையிலிருந்து பிடித்துக் கொண்டுபோவாயாக.

யரு தன் தகப்பனையாகிலும் தன் தாயையாகிலும் அடிக்கிறவன் கொலையுண்கவே கொலையுண்கக்கடவன்.

யசா யாதொருவன் ஒரு மனிதனைத் திருடி அவனை விற்றுப்போட்டால் அல்லது அவன் அவன் கையிலே கண்டுபிடிக்கப்பட்டானால் அவன் கொலையுண்கவே கொலையுண்கக்கடவன்.

யஎ * தன் தகப்பனையாகிலும் தன் தாயையாகிலும் சபிக்கிறவன் கொலையுண்கவே கொலையுண்கக்கடவன். * ரு. மோ. உ0, கூ.

யஅ மனிதர் சண்டைபண்ணி ஒருவன் தனக்கடுத்தவனைக் கல்லினாலேயாவது கையினாலேயாவது அடித்ததினாலே இவன் சாகாமல் கிடையாய் விழுந்து,

யகூ திரும்ப எழுந்திருந்து வெளியிலே தன் தடியைப் பிடித்து நடமாடினால் அடித்தவன் குற்றத்துக்கு நீங்கலாயிருப்பான்; ஆகிலும் அவனுக்கு வேலையின் கெட்டு நஷ்டத்தைக் கொடுத்து, அவனை நன்றாகக் குணமாக்குவிக்கக்கடவன்.

உய ஒருவன் தன்னடிமையை அல்லது தன்னடிமைப் பெண்ணைக் கோலினால் அடிக்கிறதினாலே இவன் அவன் கையின் கீழ்ச் செத்துப்போனால் பழிக்குப் பழிவாங்கப்படவேண்டும்.

உக ஒருநாள் அல்லது இரண்டுநாள் இருந்தானேயாகில் பழிவாங்கப்படவேண்டாம்; ஏனெனில் இவன் அவனுடைய உடைமையாயிருந்தவன்.

உஉ மனிதர் சண்டைபண்ணிக் கர்ப்பவதியான ஒரு ஸ்திரீயை அடிக்கிறதினாலே அவளுக்கு வேறே சேதமில்லாமல் கர்ப்பம் விழுந்து போனால், அப்பொழுது அடித்தவன் ஸ்திரீயின் புருஷன் தன்மேலே சுமத்துகிறதற்குத் தக்கதாய்த் தருமத்தாருடைய தீர்ப்பின்படியே தண்டங்கொடுக்கவே கொடுக்கவேண்டும்.

உங வேறே சேதமுண்டாயிருந்தேயானால் ஜீவனுக்கு ஜீவன்,

உச கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக் கை, காலுக்குக் கால்,

உரு சூட்டுக்குச் சூடு, காயத்துக்குக் காயம், தழும்புக்குத் தழும்பு பழிகொடுக்கக்கடவாய்.

உசா ஒருவன் தன்னடிமையின் கண்ணிலே அல்லது தன்னடிமைப் பெண்ணின் கண்ணிலே அடிக்கிறதினாலே அதைக் கெடுத்தால், அவன் இவன் கண்ணுக்குப் பதிலாக இவனைத் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடவேண்டும்.

உஎ அவன் தன்னடிமையின் பல்லை அல்லது தன்னடிமைப் பெண்ணின் பல்லை விழப்பண்ணினால், அவன் இவன் பல்லுக்குப் பதிலாக இவனைத் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடவேண்டும்.

உஅ ஒரு மாடு ஒரு ஆண்சாதியை அல்லது ஒரு பெண்சாதியை முட்டிப்போட்டதினாலே சாவுண்டானால், அந்த மாடு கல்லெறிந்து கொல்லப்படவும் அதின் மாம்சம் போசிக்கப்படாதே போகவுங்கடவது. அப்பொழுது மாட்டின் எசமான் ஆக்கினைக்கு நீங்கலானவன்.

உகூ அந்த மாடு முந்தியே முட்டுகிறதாயிருந்து, அது அதின் எசமானுக்கு அறிவிக்கப்பட்டும், அவன் அதைப் பத்திரம் பண்ணாததினாலே அது ஒரு ஆண்சாதியை அல்லது ஒரு பெண்சாதியைக் கொன்றுபோட்டால், மாடு கல்லெறியப்படவேண்டும்; அதின் எசமானுங் கொலைசெய்யப்படவேண்டும்.

ஙய மீட்புக்கு அபராதம் அவன்மேலே சுமத்தப்பட்டதேயானால் அவன் தன் ஜீவனை மீட்கும்பொருளாகத் தன்மேலே சுமத்தப்பட்டபடி எல்லாஞ் செலுத்தக்கடவன்.

ஙக அது ஒருவன் மகனை முட்டிப்போட்டாலும் சரி ஒருவன் மகளை முட்டிப்போட்

க்களுக்குச் செய்யவேண்டியதாவது. நீ ஒரு காளை எருதையும் பழுதற்ற இரண்டு ஆட்டுக்கிடாய்களையும்,

உ கோதுமையின் மெல்லியமாவினாலே சுட்டபுளிப்பில்லாத அப்பத்தையும் எண்ணெயிலே பிசைந்தபுளிப்பில்லாத அதிரசங்களையும் எண்ணெய் பூசப்பட்டபுளிப்பில்லாத அடைகளையும் வாங்கு.

ங நீ இவைகளை ஒரே கூடையிலே வைத்துக் கூடையோடே இவைகளையுங் காளையெருதையும் இரண்டு ஆட்டுக்கிடாய்களையுங் கொண்டுவந்து,

ச ஆரோனையும் அவன் குமாரரையும் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுமுன்பாகச் சேர்ப்பண்ணி அவர்களைத் தண்ணீரிலே கழுவி,

ரு வஸ்திரங்களையெடுத்துக்கொண்டு ஆரோனுக்குச் சட்டையையும் ஆசாரியசால்வையின் அங்கியையும் ஆசாரியசால்வையையும் மார்ப்பதக்கத்தையும் உடுத்தி அவனுக்கு ஆசாரியசால்வையின் விசித்திரமான கச்சையைக் கட்டி,

சு அவன் தலையிலே பாகையைப்போட்டுப் பரிசுத்த கிரீடத்தைப் பாகையிலே தரித்து,

எ அபிஷேகத்தெண்ணெயையை வாங்கி அவன் தலையின்மேலே வார்த்து அவனையபிஷேகம்பண்ணி,

அ பிற்பாடு அவன் குமாரரைச் சேர்ப்பண்ணி ஆசாரிய ஊழியம் அவர்களுக்கு நித்தியகட்டளையாக விருக்கும்படிக்கு அவர்களுக்குச் சட்டைகளையுடுத்தி,

கூ ஆரோனையும் அவன் குமாரரையும் நடுக்கட்டுகளால் அரைக்கட்டி இவர்களுக்குக் குல்லாக்களைப்போட்டுக்கட்டி ஆரோனுடைய கையையும் அவன் குமாரரின் கையையும் நிரப்பி,

ய காளையெருதை ஆசரிப்பின் கூடாரத்திற்கு முன்பாகக் கொண்டு வருவாயாக. அப்பொழுது ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளைக் காளையெருதினுடைய தலையின்மேலே வைக்கக்கடவர்கள்.

யக பிற்பாடு நீ அந்தக்காளையெருதை ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலண்டையிலே கர்த்தருக்கு முன்பாகக் கொல்லவேண்டியது,

யஉ அதின் இரத்தத்திலேகொஞ்சம் வாங்கி உன் விரலினால் பலிபீடத்தின் கொம்புகளின் மேலிட்டு மற்ற இரத்தத்தையெல்லாம் பலிபீடத்தடியிலே வூற்றி,

யங குடல்களைமூடிய எல்லாக்கொழுப்பையும் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின் மேலிருக்கிற கொழுப்பையுமெடுத்துப் பலிபீடத்தின்மேலே கொளுத்திப்போட்டு,

யச காளையெருதின் மாம்சத்தையும் அதின் தோலையும் அதின் சாணியையும் பாளயத்திற்குப்புறம்பே அக்கினியாற்சுட்டெரிக்கக்கடவாய். அது பாவம்போக்கும்பலி.

யரு பிறகு அந்த ஆட்டுக்கிடாய்களில் ஒன்றைக்கொண்டுவந்து நிறுத்துவாயாக. அதினுடைய தலையின்மேலே ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளை வைக்கக்கடவர்கள்.

யசு பிற்பாடு நீ அதைக்கொல்லவேண்டியது அதின் இரத்தத்தைப்பிடித்துப் பலிபீடத்தின்மேலே சுற்றிலுந்தெளித்து,

யஎ ஆட்டுக்கிடாயை யதின் சந்துசந்தாய்த்துண்டித்து அதின் குடல்களையும் அதின் தொடைகளையுங் கழுவி அவைகளை யந்தத் துண்டங்களின்மேலும் அதின் தலையின்மேலும் வைத்து,

யஅ ஆட்டுக்கிடாயை முழுவதும் பலிபீடத்தின்மேற் கொளுத்திப்போடுவாயாக. அது கர்த்தருக்கான சர்வாங்கதகனபலி. அது ஆற்றுகிறவாசனையுள்ள கர்த்தருக்கான தகனமுமாயிருக்கும்.

யகூ அதற்குப்பிறகு நீ மற்ற ஆட்டுக்கிடாயைக்கொண்டுவந்து நிறுத்துவாயாக. அதினுடைய தலையின்மேல ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளை வைக்கக்கடவர்கள்.

உய பிற்பாடு நீ அதைக் கொல்லவேண்டியது அதின் இரத்தத்திற்கொஞ்சம் வாங்கி ஆரோனின் வலதுகாதுமடலிலும் அவன் குமாரரின் வலதுகாதுமடலிலும் அவர்கள் வலதுகையினுடைய பெருவிரலின்மேலும் அவர்கள் வலதுகாலுடைய பெருவிரலின் மேலுமிட்டு மற்ற இரத்தத்தைப்பலிபீடத்தின்மேற்சுற்றிலுந்தெளித்து,

உக பலிபீடத்தின்மேலிருக்கும் இரத்தத்திலும் அபிஷேக எண்ணெயிலுங்கொஞ்சமெடுத்து ஆரோனும் அவன் வஸ்திரங்களும் அவனோடேகூட அவன் குமாரரும் அவர்கள் வஸ்திரங்களும் பரிசுத்தமாகப்படும்படிக்கு அவன்மேலும் அவன் வஸ்திரங்களின்மேலும் அவன் குமாரர்மேலும் அவர்கள் வஸ்திரங்கள்மேலுந்தெளித்து,

உஉ அந்த ஆட்டுக்கிடாய்களே நிரப்புதலின் ஆட்டுக்கிடாயானபடியினாலே அதின் கொழுப்பையும் வாலையுங் குடல்களை மூடியகொழுப்பையுங் கல்லீரலின் மேலிருக்கிற சவ்வையும் இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்மேலிருக்கிற கொழுப்பையும் வலது முன்னந்தொடையையும்,

உங கர்த்தருக்கு முன்பாக வைத்திருக்கிற புளிப்பில்லாத அப்பங்களின் கூடையில் ஒரு அப்பத்தையும் எண்ணெய் அப்பமாகிய ஒரு அதிரசத்தையும் ஒரு அடையையுமெடுத்து,

உச அவைகளையெல்லாம் ஆரோனின் உள்ளங்கைகளின்மேலும் அவன் குமாரரின் உள்ளங்கைகளின்மேலும் வைத்து அவைகளை

கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டப்படும் காணிக்கையாக அசைவாட்டி,

௨௫ பிற்பாடு அவைகளை அவர்கள் கைகளிலிருந்து பலிபீடத்தின்மேலே சர்வாங்கதகன பலியின்மீதில் வைத்து, கர்த்தருக்கு முன்பாக சுகந்த வாசனையாகக் கொளுத்திப் போடக்கடவாய். அது கர்த்தருக்கு தகனம்.

௨௬ ஆரோனின் கைகளை நிரப்புதலின் ஆட்டுக்கடாவிலே நீ மார்க்கண்டத்தை யெடுத்து, அதைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டப்படுங் காணிக்கையாக அசைவாட்டக்கடவாய். அது உன் பங்காயிருக்கும்.

௨௭ ஆரோனின் கைகளோடும் அவன் குமாரரின் கைகளோடும் நிரப்புதலின் ஆட்டுக்கடாவிலே அசைவாட்டப்படுகிற மார்க்கண்டத்தையும் ஏறெடுத்துப் படைக்கப்படும் முன்னந்தொடையையும் பரிசுத்தமாக்குவாயாக.

௨௮ இஸ்ரவேல் புத்திரர் பலியிடுகிறதிலே அப்படிக் கொடுத்தவைகள் நித்திய கட்டளையாக ஆரோனையும் அவன் குமாரரையும் சேர்வதாக. ஏனெனில் அது ஏறெடுக்கப்படும் படைப்பு. இஸ்ரவேல் புத்திரருடைய சமாதான பலிகளிலே ஏறெடுக்கப்படும் அவர்களுடைய படைப்பு கர்த்தருடையது.

௨௯ ஆரோனுக்கிருக்கிற பரிசுத்த வஸ்திரங்கள் அவனுக்குப் பிறபாடு அவன் குமாரர் உடுத்து அபிஷேகம்பண்ணப்படவும் அவர்கள் கைகள் நிரப்பப்படவும் அவைகள் இவர்களைச் சேர்வதாக.

௩௰ பரிசுத்த ஸ்தலத்திலே ஆராதனை செய்ய ஆசரிப்பின் கூடாரத்திற்குட் பிரவேசிக்கத்தக்கதாக அவன் குமாரரில் அவன் பட்டத்திற்கு வருகிற ஆசாரியன் அவைகளை ஏழுநாளமட்டும் உடுத்திக்கொள்ளக்கடவன்.

௩௧ கைகளை நிரப்புதலின் ஆட்டுக்கடாவை நீ யெடுத்து, அதின் மாம்சத்தைப் பரிசுத்த இடத்திலே வேவிப்பாயாக.

௩௨ அந்த ஆட்டுக்கடாவின் மாம்சத்தையும் கூடையிலிருக்கிற அப்பத்தையும் ஆரோனும் அவன் குமாரரும் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலிலே புசிக்கக்கடவர்கள்.

௩௩ ஏனெனில் அவர்களுடைய கைகளை நிரப்பவும் அவர்களைப் பரிசுத்தம்பண்ணவும் அதனாலே பாவநிவிர்த்தி செய்யப்பட்டது. அந்நியனொருவனும் அவைகளிலே புசிக்கவேண்டாம். ஏனெனில் அவைகள் பரிசுத்தம்.

௩௪ கைகளை நிரப்புதலின் மாம்சத்திலும் அப்பத்திலும் ஏதாகிலும் விடியற்காலமட்டும் மீதியாயிருந்தால், அதை அக்கினியிலே சுட்டெரிப்பாயாக. அது புசிக்கப்படவேண்டாம். ஏனெனில் அது பரிசுத்தம்.

௩௫ இந்தப் பிரகாரமாக நீ ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் நாமுனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்வாயாக. நீ ஏழுநாளமட்டும் அவர்கள் கைகளை நிரப்பி,

௩௬ பாவநிவிர்த்திக்காக ஒவ்வொருநாளில் ஒருகாளை எருதைப் பாவம்போக்கும் பலியாகப் படைத்து, பலிபீடத்தைப் பாவநிவிர்த்தியை அதற்காகச் செய்கிறதினாலே பாவமற்றதாக்கி, அதைப் பரிசுத்தமாக்கும்படிக்கு அதை அபிஷேகம்பண்ணுவாயாக.

௩௭ ஏழுநாள்மட்டும் பலிபீடத்திற்காகப் பாவநிவிர்த்தியைப் பண்ணி, அதைப் பரிசுத்தமாக்கக்கடவாய். பலிபீடம் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருப்பதினால் பலிபீடத்தைத் தொடுகிறதெல்லாம் பரிசுத்தமாயிருப்பதாக.

௩௮ பலிபீடத்தின்மேல் நீ பலியிடவேண்டியதேதெனில் எப்பொழுதும் ஒவ்வொருநாளிலே ஒருவயதான இரண்டு ஆட்டுக்குட்டிகளைத்தானே.

௩௯ ஒரு ஆட்டுக்குட்டியைக் காலமேயும் மற்ற ஆட்டுக்குட்டியை அந்திநேரமான வேளையிலும் பலியிடுவாயாக.

௪௰ ஒருமரக்காலிலே பத்திலொரு பங்கான மும் இடித்து வடிக்கப்பட்ட காற்படி எண்ணெயிலே பிசைந்ததுமாகிய மெல்லியமாவையும் தீர்த்தாட்சப்பழ இரசத்திலே காற்படியாகிய ஒரு ஊற்றுதலையும் ஒரு ஆட்டுக்குட்டிக்காகப் படைத்து,

௪௧ மற்ற ஆட்டுக்குட்டியை அந்திநேரமாகிற வேளையிலே பலியிடுகிறபொழுது, காலமே படைத்த காணிக்கைக்கும் அதின் ஊற்றுதலுக்கும் ஒத்தபிரகாரமாக அதை யாறுகிற வாசனைக்காகச் செய்யக்கடவாய். அது கர்த்தருக்கு தகனம்.

௪௨ நாமுனனுடனே பேச உங்களைச் சந்திக்கப்போகிறதானமாகிய ஆசரிப்புக்கூடாரத்தினுடைய வாசலென்ற கர்த்தரின் சந்நிதியிலே இவைகள் உங்கள் தலைமுறைதலைமுறையாக எப்பொழுதும் செலுத்தப்படவேண்டிய சர்வாங்கதகனபலிகள்.

௪௩ * அங்கே இஸ்ரவேல்புத்திரரைச் சந்திப்போம். அந்த ஸ்தலம் நம்முடைய மகிமையினாலே பரிசுத்தமாக்கப்படும்.

* ௨௰, ௨௪.

௪௪ நாம் ஆசரிப்பின் கூடாரத்தையும் பலிபீடத்தையும் பரிசுத்தமாக்கி ஆரோனையும் அவன் குமாரரையும் நமக்கு ஆசாரியஊழியஞ்செய்யும்படிக்குப் பரிசுத்தமாக்கி,

௪௫ இஸ்ரவேல்புத்திரரின் நடுவே வாசம்பண்ணி, அவர்களுக்குப் பராபரனாயிருப்போம்.

௪௬ தங்கள் நடுவே நாம் வாசம்பண்ணும்படிக்குத் தங்களை எஜிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அறிவார்களாக. நாம் அவர்கள் பராபரனாகிய கர்த்தர்.

## ௩௰. அதிகாரம்.

### தூபபீடத்தைப் பண்ணுகிறதற்கான கட்டளை.

தூபங்காட்டுகிறதற்கு * ஒரு தூபபீடத்தையும் சித்திம் மரங்களினாலே உண்டாக்குவாயாக. * ௩௭, ௨௫.

௨ அது ஒருமுழ நீளமும் ஒருமுழ அகலமுமான சதுரமும் இரண்டுமுழ உயரத்திருக்கும், அதின் கொம்புகள் அதனோடேயேகமாயிருப்பதாக.

௩ நீ அதையெல்லாம், அதின் மேல் பலகையையும் சுற்றிலுமிருக்கும் அதின் பக்கங்களையும் அதின் கொம்புகளையும் சுத்தப் பொற்றகட்டால் மூடிச் சுற்றிலும் அதற்குப் பொன் திரணையையும் பண்ணி,

௪ அதினுடைய திரணையின் கீழ் அதின் இரண்டு பக்கங்களிலும் அதைச் சுமக்கும் வார்களின் இடங்களாகிற இரண்டு பொன் வளையங்களை, அதற்குப் பக்கத்தின் இரண்டு கோடிகளருகே யுண்டாக்கி,

௫ அந்த வார்களையும் சித்திம் மரங்களாலே பண்ணிப் பொற்றகட்டால் மூடக்கடவாய்.

௬ சாட்சியினுடைய பெட்டியின் முன்னேயும் சாட்சியின் மேலிருக்கிறதும் நாமுனைச் சந்திப்பதுமான கிருபாசன மூடியின் முன்னேயுமிருக்குந் திரைக்கு முன்பாக அதை வைக்கக்கடவாய்.

௭ ஆரோன் காலமாறு விளக்குகளைச் சீர்ப்படுத்துகிற பொழுதும் அந்தி நேரமாகிற வேளையிலே விளக்குகளையேற்றுகிற பொழுதும் அதின் மேல் சுகந்தவர்க்கங்களினாலே தூபங்காட்டக்கடவன்.

௮ அது எப்பொழுதும் உங்கள் தலைமுறை தலைமுறையாய்க் கர்த்தருக்கு முன்பாகக் காட்டப்படுந் தூபம்.

௯ அதின் மேல் அந்நிய தூபவர்க்கத்தையாகிலும் ஒரு தகனபலியையாகிலும் காணிக்கையையென்கிலும் ஏறப்பண்ணீர்களாக. அதின் மேல் ஒரு ஊற்றுதலையும் ஊற்றீர்களாக.

௰ வருஷத்திலொருமுறை ஆரோன் அதின் கொம்புகளின் மேல் பாவங்களை நிவர்த்திபண்ணும் பலியின் இரத்தத்தாலே பாவநிவர்த்தி பண்ணுவானாக. அப்படியவன் உங்கள் தலைமுறை தலைமுறையாக வருஷத்தில் ஒருமுறை பாவநிவர்த்தி பண்ணுவானாக. அது கர்த்தருக்குப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்குமென்றார்.

### ஆசரிப்புக் கூடாரத்தின் வேலைக்குச் செலுத்தப்படவேண்டிய வரியின் கட்டளை.

௰௧ பின்னுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது,

௰௨ நீ இஸ்ரவேல் புத்திரரை அவர்கள் இலக்கத்தின்படியே கணக்குப்பார்க்கிற பொழுது, அவர்களை எண்ணுகையில் அவர்களுக்குள்ளே ஒருவாதையுமுண்டாகாதபடிக்கு அவர்களில் ஒவ்வொருவர் தங்கள் ஆத்துமத்திற்காகக் கர்த்தருக்கு மீட்கும் பொருளைக் கொடுக்கக்கடவர்கள்.

௰௩ எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வருகிறவனெவனும் பரிசுத்த ஸ்தலத்துச் சேக்கலின் கணக்குப்படி அரைச்சேக்கலைக் கொடுக்கவேண்டும். சேக்கலானது இருபது கேரா. அரைச்சேக்கலே கர்த்தருக்குச் செலுத்தப்படுவது.

௰௪ எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வருகிற இருபது வயசு முதற்கொண்டு மேற்பட்டவனெவனும் அதைக் கர்த்தருக்குச் செலுத்தவேண்டும்.

௰௫ உங்கள் ஆத்துமங்களுக்காகப் பாவநிவர்த்திபண்ணுங் கட்டளையை நீங்கள் கர்த்தருக்குச் செலுத்துகையில் அரைச்சேக்கலுக்கு ஐசுவரியவான் ஏறக்கொடுக்கவும் வேண்டாம். தரித்திரன் குறையக்கொடுக்கவும் வேண்டாம்.

௰௬ பாவநிவர்த்தியின் அந்தத் திரவியத்தை நீ இஸ்ரவேல் புத்திரர் கையிலே வாங்கி அதை ஆசரிப்புக் கூடாரத்தின் வேலைக்குக் கொடுப்பாயாக. அப்படியே உங்கள் ஆத்துமங்களுக்காகப் பாவநிவர்த்தியாகும்படிக்கு அது கர்த்தருக்கு முன்பாக இஸ்ரவேல் புத்திரரின் நினைப்புக்காக இருக்குமென்றார்.

### வெண்கலத்தொட்டியின் கட்டளை.

௰௭ பின்னுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது,

௰௮ * கழுவுகிறதற்கு நீ வெண்கலத்தால் ஒரு தொட்டியையும் வெண்கலத்தால் அதின் பீடத்தையும் உண்டாக்கி அதை ஆசரிப்பின் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே வைத்து, அதிலே தண்ணீர் வார்ப்பாயாக. * ௩௮, ௮. ௪௰, ௩௰.

௰௯ அதினிடத்திலே ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளையும் தங்கள் கால்களையும் கழுவக்கடவர்கள்.

௨௰ அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்திற்குட்பிரவேசிக்கும் பொழுதும் அல்லவென்றால் கர்த்தருக்குத் தகனமானதைக் கொளுத்தப் பலிபீடத்தண்டைக்கு ஆராதனைசெய்யச் சேரும் பொழுதும், அவர்கள் சாவாதபடிக்குத் தண்ணீரினாலே தங்களைக் கழுவக்கடவர்கள்.

தேறிவரப்பண்ணின உன்னுடையதேவர்களென்றார்களென்றுசொல்லி,

௯ பின்னுங்கர்த்தர் மோசேயோடே சொன்னதென்னவென்றால், இந்தச்சனத்தைப்பார்த்தோம். இதோ, அது கடினக்கழுத்துள்ள சனம்.

௰ இப்பொழுது நாம் அவர்களையழிக்கும்படிக்கு நமது கோபம் அவர்களுக்கு விரோதமாக எரியத்தக்கதாய் நம்மைவிட்டுவிடு. அப்பொழுது * உன்னைப்பெரியசாதியாக்குவோமென்றார். * ௪. மோசே. ௰௪, ௰௨.

௰௧ * அதினால் மோசே தன் பராபரனாகிய கர்த்தருடைய முகத்தை நோக்கிக் கெஞ்சிச் சொன்னதாவது. கர்த்தாவே! தேவரீர் பெரும்பெலத்தினாலும் வல்லமையான கையினாலும் எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உம்முடைய சனத்துக்கு விரோதமாய் உம்முடைய கோபம் எரிவானேன்?
* ௪. மோசே ௰௪, ௰௩. முழு

௰௨ அவர்களை மலைகளிலே கொன்றுபோடவும் அவர்களைப் பூமியின்மேலிராதபடிக்கு நிர்மூலமாக்கவும் அவர்களைத் தீமைக்கென்று புறப்படப்பண்ணினாரென்று எகிப்தியர் சொல்லுவானேன்? உம்முடைய கோபத்தின் உக்கிரத்தை விட்டுத் திரும்பி உம்முடைய சனத்துக்குத் தீங்குசெய்யாதபடிக்குப் பச்சாத்தாபமாயிரும்.

௰௩ உம்முடைய ஊழியக்காரராகிய ஆபிரகாமையும் ஈசாக்கையும் இஸ்ரவேலையும் நினைத்தருளும். உங்கள் சந்ததியை வானத்து நட்சத்திரங்களைப்போலப் பெருகப்பண்ணி நான் சொன்ன இந்தத்தேசத்தையெல்லாம் உங்கள் சந்ததிக்குக் கொடுத்து அவைகளைச் சுதந்தரிக்கும்படிக்குக் கொடுப்போமென்று உம்மைக்கொண்டு ஆணையிட்டு அவர்களோடே சொன்னீரேயென்றான்.

௰௪ அப்பொழுது கர்த்தர் தமது சனத்துக்குச் செய்வோமென்று சொன்ன தீங்கைச் செய்யாதபடிக்குப் பச்சாத்தாபப்பட்டார்.

௰௫ அப்பொழுது மோசே திரும்பிப் பர்வதத்திலிருந்திறங்கிப்போனான். சாட்சியின் இரண்டு பலகைகள் அவன் கையிலிருந்தன. அந்தப் பலகைகள் இருபுறங்களிலும் இந்தப்புறமும் அந்தப்புறமும் எழுதப்பட்டவைகளாயிருந்தது.

௰௬ * அந்தப்பலகைகள் பராபரனுடைய வேலையும் அவைகளிலே பதிந்த எழுத்து பராபரனுடைய எழுத்துமாயிருந்தது. * ௩௧, ௰௮.

௰௭ சனங்கள் கெம்பீரமிட்டுக் கூப்பிடுகிற சத்தத்தை * யோசுவா கேட்டு மோசேயோடே யுத்தத்தின் இரைச்சல் பாளயத்திலுண்டாயிருக்கிறதென்றான். * ௨௪. ௰௩.

௰௮ அவனோ அது செயித்துக் கூப்பிடுகிறவர்களின் சத்தமுமல்ல முறிந்து கூப்பிடுகிறவர்களின் சத்தமுமல்ல பாடுகிறவர்களின் சத்தத்தை நான் கேட்கிறேனென்றான்.

௰௯ அவன் பாளயத்துக்குச் சமீபித்துக் கன்றுக்குட்டியையுங் கூத்துகளையுங் கண்டபொழுது சம்பவித்ததேதெனில் மோசேக்குக் கோபமூண்டவனாகித் தன் கையிலிருக்கிற பலகைகளைப் பர்வதத்தின் அடியிலே எறிந்துடைத்துப்போட்டு,

௨௰ அவர்கள் பண்ணின கன்றுக்குட்டியை எடுத்து அக்கினியிலே சுட்டுப்போட்டு அதைப் பொடியாகும்மட்டும் அரைத்துத் * தண்ணீரின்மேல் தூவி இஸ்ரவேல் புத்திரருக்குக் குடிக்கக்கொடுத்தான்.
* ௫. மோசே. ௯, ௨௧.

௨௧ மோசே ஆரோனோடே நீ இந்தச் சனத்தின்மேல் பெரும் பாவத்தைச் சுமத்தப்பண்ண அது உனக்கென்ன செய்ததென்றான்.

௨௨ அப்பொழுது ஆரோன் சொன்னதாவது. என் ஆண்டவனுக்குக் கோபமூளாதிருப்பதாக. இந்தச்சனத்தை நீர் அது பொல்லாததென்றறிவீர்.

௨௩ அவர்கள் என்னோடே எங்கள் முன் நடந்துபோகிற தேவர்களை எங்களுக்கு உண்டுபண்ணும். ஏனெனில் எங்களை எகிப்து தேசத்திலிருந்து தேறிவரப்பண்ணின அந்த மோசேயென்கிறவனுக்கென்ன சம்பவித்ததென்றறியோமென்றார்கள்.

௨௪ அப்பொழுது நானவர்களோடே எவர்களுக்குப் பொன்னுடைமையுண்டோ அவர்கள் அதைக் கழற்றி எனக்குத் தரக்கடவர்களென்றேன். அதை அக்கினியிலே போட்டேன். அதினால் இந்தக் கன்றுக்குட்டி உண்டாயிற்றென்றான்.

௨௫ சனம் நிருவாணமானதென்றும் அதற்கு விரோதமாய் எழும்புகிறவர்களுக்கு முன்பாக அதைத் தீங்கிலாக்கினவர் ஆரோன் அதை நிருவாணப்படுத்தினானென்றும் மோசே பார்த்து,

௨௬ அவன் பாளயத்தின் வாசலிலே நின்றுகொண்டு எவர்கள் கர்த்தருடையவர்களோ அவர்கள் என்னிடத்தில் சேரக்கடவர்களென்றான். அப்பொழுது லேவியின் புத்திரரெல்லாரும் அவனண்டையிலே வந்து கூடினார்கள்.

௨௭ அவர்களோடே அவன் சொன்னதாவது. நீங்கள் அவனவன் தன் பட்டயத்தைத் தன்னரையிலே கட்டிக்கொண்டு பாளயத்தில் வாசலுக்கு வாசல் கடந்து திரிந்து அவனவன் தன் சகோதரனையும் அவனவன் தன் சிநேகிதனையுந் தனக்கடுத்தவனையுங் கொன்றுபோடுங்களென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௮ மோசே தீவிரமாகத் தரைமட்டுந் தணிந்து பணிந்துகொண்டு,

௯ ஆண்டவரே! உமது கண்களில் எனக்குக் கிருபை கிடைத்ததானால் ஆண்டவர் எங்கள் நடுவிலே நடந்துபோவாராக. ஏனெனில் வணங்காக் கழுத்துள்ள சனம். நீரோவெனில் எங்கள் அக்கிரமத்தையும் பாவங்களையுந் தயவாய் மன்னித்து எங்களைச் சுதந்தரித்துக் கொள்வீராக வென்றான்.

௰ அப்பொழுது அவர் சொன்னதாவது. இதோ, நாம் உடம்படிக்கை பண்ணுகிறோம். பூமியெங்கும் எந்தச் சாதிகளிடத்திலுஞ் சிருஷ்டிக்கப்படாதிருக்கிற அதிசயங்களை உன்னுடைய எல்லாச் சனத்திற்கு முன்பாகச் செய்வோம். நீ தங்கியிருக்கிற சனமெல்லாங் கர்த்தருடைய செய்கையைப் பார்க்கப்போம். ஏனெனில் நாமுன்னோடேயிருந்து செய்யப்போகிறது பயங்கரமாயிருக்கும்.

௰௧ இன்று நாம் உனக்குக் கற்பிக்கிறதைக் கைக்கொள். இதோ, எமோரியனையுங் கானானியனையும் ஏத்தியனையும் பெரிசியனையும் ஏவியனையும் எபூசியனையும் உனக்குமுன்பாகத் துரத்திவிடுகிறோம்.

௰௨ நீ போய்ச்சேருந் தேசத்தின் குடி உனக்குக் கண்ணியாகாதபடிக்கு நீ அவனோடே உடன்படிக்கை பண்ணாதபடிக்கு எச்சரிக்கையாயிரு.

௰௩ அவர்களுடைய பலிபீடங்களையிடித்து அவர்கள் சிலைகளைத் தகர்த்து அவர்கள் தோப்புகளை வெட்டிப்போடக் கடவீர்கள்.

௰௪ ஏனெனில் அந்நிய தேவனை நீ பணிந்து கொள்ளலாகாது. ஏனென்றால் கர்த்தருடைய நாமம் எரிச்சலுள்ளவரென்பது. அவரெரிச்சலுள்ளவரானவர்.

௰௫ அத்தேசத்தின் குடிகளோடே உடன்படிக்கை பண்ணாயாக. மற்றப்படி அவர்களுடைய தேவர்களின் பிறகாலே சோரம்போய் அவர்கள் தேவர்களுக்குப் பலியிடுவார்கள். அவர்களுன்னை யழைக்கையிலே நீ போய் அவர்கள் பலியிட்டதிலே போசிப்பாய்.

௰௬ அவர்கள் குமாரத்திகளில் உன் குமாரருக்குப் பெண்களைக்கொள்ளுவாய். அப்படியே அவர்கள் குமாரத்திகள் தங்கள் தேவர்களின் பிறகாலே சோரம்போகையிலே உன் குமாரரையுந் தங்கள் தேவர்களின் பிறகாலே சோரம்போகப்பண்ணுவார்கள்.

௰௭ வார்ப்பிக்கப்பட்ட தேவர்களை உனக்கு உண்டாக்காயாக.

௰௮ நீ புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையைக் கைக்கொண்டு நாமுனக்குக் கற்பித்தபடி ஆபீப்மாதத்தின் திட்டமான காலத்திலே ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் பொசிப்பாயாக. ஏனெனில் ஆபீப்மாதத்திலே எகிப்திலிருந்து புறப்பட்டாய்.

௰௯ கர்ப்பந் திறந்து பிறக்கிற யாவும் உன் ஆடுமாடுகளின் தலையீற்றான ஆணாயாவும் நம்முடையது.

௨௰ ஆனால் கழுதையின் தலையீற்றை ஒரு ஆட்டுக்குட்டியாலே மீட்டுக்கொள்வாயாக. மீட்காதேயானால் அதின் தலையை வெட்டிப்போடக்கடவாய். உன் பிள்ளைகளின் முதற்பேறனைத்தையும் மீட்டுக்கொள்வாயாக. வெறுங்கையாய் நமக்குமுன்பாக் காணப்படார்களாக.

௨௧ ஆறுநாள் வேலைசெய்து ஏழாநாளிலே ஓய்ந்திருப்பாயாக. உழுகிற காலத்திலும் அறுக்குங் காலத்திலும் ஓய்ந்திருப்பாயாக.

௨௨ கோதுமையறுப்பின் முதற்பலனுக்கேற்றதும் ஏழுவாரங்களின் பண்டிகையையும் வருஷமுடிவிலே சேர்ப்பின் பண்டிகையையும் ஆசரிப்பாயாக.

௨௩ வருஷத்திலே மூன்றுதரம் உன் ஆண்சாதியெல்லாம் இஸ்ரவேலின் பராபரனாயிருக்குங் கர்த்தராகிய ஆண்டவரின் சந்நிதிக்கு முன்பாகக் காணப்படக்கடவது.

௨௪ ஏனெனில் நாம் புறசாதிகளை உனக்குமுன் துரத்திவிட்டு உன் எல்லைகளை விஸ்தாரமாக்குவோம். நீ வருஷத்தில் மூன்றுதரம் உன் பராபரனாகிய கர்த்தரின் சந்நிதிக்கு முன்பாகக் காணப்படப்போகையிலே ஒருவரும் உன் தேசத்தை இச்சிப்பதில்லை.

௨௫ புளித்தமாவிருக்கக்கொள்ள நமது பலியின் இரத்தத்தைப் பலியிடாயாக. பஸ்காப் பண்டிகையின் பலியை விடியற்காலமட்டும் வைத்திருக்கவும் வேண்டாம்.

௨௬ உன் நிலத்தின் முதல் விளைச்சலின் முதற்கனியை உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிற்குக் கொண்டுவருவாயாக. வெள்ளாட்டுக்குட்டியை அதின் தாயின் பாலோடே சமைக்காயாக வென்றார்.

௨௭ பின்னையுங் கர்த்தர் மோசேயுடனே இந்த வார்த்தைகளை யெழுதிக்கொள். ஏனெனில் இந்த வார்த்தைகளின்படியே உன்னோடும் இஸ்ரவேலோடும் உடன்படிக்கைபண்ணினோமென்றார்.

௨௮ அவனங்கே கர்த்தரோடே இரவும் பகலும் நாற்பதுநாள் அப்பம்போசியாமலுந் தண்ணீர் குடியாமலுமிருந்தான். அவர் பத்து வசனங்களாகிய உடன்படிக்கையின் வார்த்தைகளைப் பலகைகளிலெழுதினார்.

௨௯ மோசே சாட்சியின் இரண்டு பலகைகளைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு சீனாய்ப் பர்வதத்திலிருந்திறங்குகிறபொழுது அவர் தன்னோடே பேசினதினாலே தன் முகத்தின் தோல்பிரகாசிக்கிறதை அவன் அறியாதிருந்தான்.

னுமாகிய சித்திரத்தையல் வேலையாயிருந்தது. அதின் நீளம் இருபது முழமும் அகலமாகிய அதின் உயரம் பிராகாரத்தின் வெளியாடைகளுக்குச் சரிசமானமாய் ஐந்து முழமுமானது. * ௨௭, ௰௬.

௰௯ அவைகளின் தூண்கள் நான்கு. அவைகளின் நான்கு காலகள் வெண்கலமும் அவைகளின் கொக்கிகள் வெள்ளியும் அவைகளின் குமிழ்கள் மூடப்பட்ட தகடும் அவைகளின் வளையங்களும் வெள்ளியுமாயிருந்தது.

௨௰ வாசஸ்தலத்துக்கும் பிராகாரத்துக்குஞ் சுற்றிலுமிருந்த எல்லா முளைக்கூச்சுகளும் வெண்கலம்.

## செலவான பொன்னும் வெள்ளியும் வெண்கலமும் எம்மாத்திரமென்பது.

௨௧ சாட்சியின் வாசஸ்தலத்துக்குச் செலவானவைகளின் கணக்கேதென்றால் அவைகள் மோசேயின் சொற்படி ஆசாரியனாகிய ஆரோனின் குமாரனான இத்தமாரின் கையிலே லேவியரின் ஊழியத்துக்கென்று எண்ணப்பட்டது.

௨௨ யூதா கோத்திரத்து ஊரின் மகனாகிய ஊரியின் குமாரன் பெத்சாலெயேல் கர்த்தர் மோசேக்குக் கற்பித்ததையெல்லாம் பண்ணினான்.

௨௩ அவனோடே கூடத் தாண் கோத்திரத்து அகிசாமாகின் குமாரனாகிய அகொலியாப் சுட்ச வேலை செய்கிற தொழிலாளியும் இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலும் சிவப்பு நூலாலும் மெல்லிய பஞ்சு நூலாலும் சித்திரத்தையல் வேலை செய்கிறவனுமாயிருந்தான்.

௨௪ பரிசுத்த ஸ்தலத்தின் வேலைக்கெல்லாம் அசைவாட்டுங் காணிக்கையாய்க் கொடுக்கப்பட்டுச் செலவான பொன்னெல்லாம் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாலே இருபத்தொன்பது தாலந்தும் எழுநூற்றுமுப்பது சேக்கல் நிறையுமாயிருந்தது.

௨௫ சபையில் எண்ணப்பட்டவர்களின் வெள்ளி பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலால் நூறு தாலந்தும் ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலுமாயிருந்தது.

௨௬ அதேதெனில் எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வந்த இருபது வயது முதற்கொண்டு மேல்தரமான அறுநூற்று மூவாயிரத்தைந்நூற்றைம்பது பேர்களில் ஒவ்வொரு தலைக்காகப் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாலே அரைச்சேக்கல் விழுக்காடு சேர்ந்தது.

௨௭ வெள்ளியிலே நூறு தாலந்து பரிசுத்த ஸ்தலத்தின் கால்களையுந் திரையின் கால்களையும் வார்ப்பிக்கிறதற்குச் செலவாயிற்று. காலுக்கு ஒரு தாலந்து விழுக்காடு நூறு கால்களுக்கு நூறு தாலந்துதானே.

௨௮ ஆனால் அந்த ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலாலே தூண்களுக்குக் கொக்கிகளைப் பண்ணி அவைகளின் குமிழ்களைத் தகடுகளால் மூடி அவைகளுக்கு வளையங்களையுண்டாக்கினான்.

௨௯ அசைவாட்டுங் காணிக்கையாய்ச் செலுத்தப்பட்ட வெண்கலமோவெனில் எழுபது தாலந்தும் இரண்டாயிரத்து நானூறு சேக்கல் நிறையுமாயிருந்தது.

௩௰ அதினாலே ஆசரிப்புக் கூடாரவாசல் மறைவின் கால்களையும் வெண்கலப் பலிபீடத்தையும் அதற்கிருக்கிற வெண்கலச் சல்லடையையும் பலிபீடத்தின் சகல முட்டுகளையும்,

௩௧ சுற்றிலுமிருக்கிற பிராகாரத்தின் கால்களையும் பிராகாரவாசல் மறைவின் கால்களையும் வாசஸ்தலத்தின் சகல முளைக்கூச்சுகளையும் சுற்றிலுமிருக்கிற பிராகாரத்தின் சகல முளைக்கூச்சுகளையும் உண்டுபண்ணினான்.

## ௩௯. அதிகாரம்.

ஆசாரிய வஸ்திரங்கள் பண்ணப்பட்டது.

இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலும் சிவப்பு நூலாலும் அவர்கள் பரிசுத்த ஸ்தலத்தில் ஆராதனை செய்கிறதற்கு வேண்டிய சீலைகளையும் * ஆரோனுக்குப் பரிசுத்த வஸ்திரங்களையுங் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே பண்ணினார்கள். * ௨௮, ௪.

௨ ஆசாரிய சால்வையைப் பொன்னிலும் இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலும் சிவப்பு நூலாலும் திரித்த மெல்லிய பஞ்சு நூலாலும் பண்ணினான்.

௩ பொன்னை இளநீல நூலுக்கும் இரத்தாம்பர நூலுக்குஞ் சிவப்பு நூலுக்கும் மெல்லிய பஞ்சு நூலுக்கும் நடுவே விநோதமாய் நெய்யும்படிக்கு அதின் தகடுகளை வார்த்தினார்கள். அவைகளை நூல்களாக அறுத்தான்.

௪ இரண்டு தோளின்மேலும் அதையிணை இரண்டு முனைகளாலே சேர்த்தார்கள். அங்கே இணைக்கப்பட்டிருந்தது.

௫ அதின்மேல் அதற்கேற்ற ஏகத்துண்டாயிருக்கிற விசேஷமான கச்சை அந்த வேலையாய்ப் பொன்னினாலும் இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலுஞ் சிவப்பு நூலாலுந் திரித்த மெல்லிய பஞ்சு நூலாலுங் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி பண்ணப்பட்டது.

௬ முத்திரைகள் வெட்டப்படுகிற வேலையாய் இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களைக் கோமேதகக் கற்களில் வெட்டிச் சுற்றிலுமிருக்கிற பொன்னில் இவைகளைப் பதித்து வைக்கிறார்கள்.

௭ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவைகளை இஸ்ரவேல் புத்திரருக்கா

நினைப்புக்கல்லுகளாக ஆசாரியசால்வையினுடைய தோட்களின்மேலே வைத்தான்.

௮ ஆசாரியசால்வையின வேலைகொத்தவிசித்திரவேலையாக மார்ப்பதக்கத்தையும பொன்னினாலும இளநீலநூலாலும இரத்தாம்பரநூலாலுஞ்சிவப்புநூலாலுந்திரித்தமெல்லிய பஞ்சுநூலாலும பண்ணினான்.

௯ அந்தமார்ப்பதக்கத்தைச்சதுரமும இரட்டையும் ஒருசாண்நீளமும ஒருசாண் அகலமுமாகச்செய்து,

௰ அதிலே இரத்தினக்கல்லுகளை நான்கு பத்திநிறையப்பதித்தார்கள். முதலாம்பத்தியிலேயும புஷபராகமும மரகதமும,

௰௧ இரண்டாம்பத்தியிற்சிவப்புக்கல்லும நீலக்கல்லும வச்சிரமும,

௰௨ மூன்றாம்பத்திப் பத்மராகமும் வயிடூரியமும அமெதிஸதும,

௰௩ நாலாம்பத்தித் தார்சிஸஇரத்தின முங்கோமேதகமும யஸபியுமானது. அவைகள் தங்கள்தங்களிலே சுற்றும பொன்னிற்பதிக்கப்பட்டிருந்தது.

௰௪ இந்தக்கல்லுகள இஸரவேல்புத்திரர்நாமங்களின்படியே பன்னிரண்டும அவர்களுடைய நாமங்களுள்ளவைகளுமாயிருந்த[illegible] பன்னிரண்டுக்கோத்திரங்களில் ஒவவொன்றின்நாமம ஒவவொன்றில் முத்திரைவெட்டாயவெட்டியிருந்தது.

௰௫ மார்ப்பதக்கத்தற்கென்று சரியன[illegible] முடிச்சுக்குத்திகள் வேலையுமான சங்கிலிகளையுஞ் சுத்தப்பொன்னினாலே பண்ணி,

௰௬ இரண்டுபொன்வளையங்களையும இரண்டுபொன்மோதிரங்களையும பண்ணி இந்த இரண்டுமோதிரங்களை மார்ப்பதக்கத்தின் இரண்டுமுனைகளிலவைத்து,

௰௭ பொன்னுன அந்த இரண்டுமுடிச்சுக்கொத்துகளை மார்ப்பதக்கத்தின முனைகளிலிருக்கிற இரண்டுமோதிரங்களில்மாட்டி,

௰௮ இரண்டுமுடிச்சுக் குத்திகளின இரண்டுகளை ஆசாரியசால்வையினுடைய தோட்களின்மேல் அதின் முன்புறத்திலிருக்கிற அந்த இரண்டுவளையங்களில மாட்டிப்போட்டார்கள்.

௰௯ பின்னேயும இரண்டுபொன்மோதிரங்களைப்பண்ணி அவைகளை யாசாரியசால்வையின் உட்புறத்திற்கெதிரான மார்ப்பதக்கத்தின மற இரண்டுமுனைகளில் அதின ஓரத்திலுள்ளாகவைத்து,

௨௰ வேறே இரண்டுபொன்வளையங்களைப்பண்ணி அவைகளையாசாரியசால்வையினுடைய முன்புறத்தின இரண்டுகீழ்ப்பக்கத்தில் அதின இணைப்புக்கெதிராகவும ஆசாரியசால்வையின் விசித்திரமான கச்சையின் மேலாகவும வைத்து,

௨௧ மார்ப்பதக்கம ஆசாரிய சால்வையின் விசித்திரமானகச்சைக்கு மேலாகவிருக்கும்படிக்கும ஆசாரியசால்வையிலிருந்து விட்டுப் போகாதபடிக்கும அதையதின மோதிரங்களால ஆசாரிய சால்வையின மோதிரங்களோடே இளநீலமானகயிற்றினாலேபர்த்தார்கள்; கர்த்தர்மோசேக்குக் கற்பித்தபடியேகட்டினார்கள்.

௨௨ ஆசாரியசால்வையின கீழிருக்கும அங்கியையோவென்றால முழுவதும இளநீலநூலநெசவாக உண்டாக்கினான்.

௨௩ அங்கியின நடுவில மார்க்கவசத்தின வாய்க்கொப்பான் அதினவாயும அது கிழியாதபடிக்குச்சுற்றிலும அதற்கான ஓரமுமிருந்தது,

௨௪ அங்கியின கீழோரங்களிலேதொங்கத்திரித்த இளநீலநூலும இரத்தாம்பரநூலுஞ் சிவப்புநூலுமான வேலையாயமாதளம்பழங்களைப்பண்ணி,

௨௫ சுத்தப்பொன்னினாலே மணிகளையும்பண்ணி, அந்தமணிகளை அங்கியின ஓரங்களிற்சுற்றிலும மாதளம்பழங்களின நடுவேதொங்கவைத்தார்கள்,

௨௬ ஆராதனைசெய்ய அங்கியின ஓரங்களிலேசுற்றிலும ஒருமணியும ஒருமாதளம்பழமுமாயக் கர்த்தர்மோசேக்குக் கற்பித்தபடியேதொங்கியிருக்கத்தானே.

௨௭ ஆரோனுக்கும அவன்குமாரருக்கும மெல்லிய பஞ்சுநூலநெசவாய உட்சட்டைகளையும,

௨௮ பாகையையும அலங்காரமான குல்லாக்களையுந்திரித்தமெல்லியநூல நெசவாயச்சணல நாற்சல்லடங்களையும,

௨௯ திரித்தமெல்லிய பஞ்சுநூலாலும இளநீலநூலாலும இரத்தாம்பரநூலாலுஞ் சிவப்புநூலாலுஞ் சித்திரத்தையலவேலையாய நடுக்கட்டையுங் கர்த்தர்மோசேக்குக்கற்பித்தபடியே பண்ணினார்கள்.

௩௰ * சுத்தப்பொன்னினாலேபரிசுத்தக்கிரீடமென்றபட்டத்தையும பண்ணி அதிலே கர்த்தருக்குப்பரிசுத்தமென்பதை முத்திரைவெட்டாயவெட்டி, * ௨௯, ௩௬—௩௮.

௩௧ அதைப்பாகையில உயர்க்கட்டும்படிக்கு இளநீலமானகயிற்றிலேகர்த்தர்மோசேக்குக்கற்பித்தபடியேகோத்தார்கள்.

பண்ணித்தீர்ந்ததெல்லாமமோசேக்கு ஒப்புவிக்கப்பட்டது.

௩௨ இப்படியே ஆசரிப்பின்கூடாரமென்றவாசஸதலத்தின வேலையெல்லாம முடிந்தது. கர்த்தர்மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம இஸரவேலபுத்திரர் செய்திருந்தார்கள்.

௩௩ பிறபாடுவாசஸதலத்தை மோசேயண்டைக்குக்கொண்டுவந்தார்கள். கூடாரத்தையும அதினுடைய எலலாமுட்டுகளையும அதின்தொறடுகளையும அதின பலகை

௩ அவன் செலுத்துவது மாட்டுமந்தையிலெடுக்கிற சர்வாங்கத்தகனபலியானால் அவன் பழுதற்ற காளையைச் செலுத்துவானாக. கர்த்தரின் சன்னிதியிலே தன்மேலே பிரியமவர அவன் அதை * ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்குக் கொண்டுவந்து,

* ௫. மோசே. ௰௨, ௰௩. ௰௪.

௪ அது தன் பாவநிவர்த்திக்கென்று அங்கீகரிக்கப்படும்படிக்குத் தன் கையை அதினுடைய தலையின்மேல் வைத்து,

௫ கர்த்தருக்கு முன்பாகக் காளையின் குரல்வளையை அறுக்கக்கடவன். அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்கள் அதின் இரத்தத்தைக் கொண்டுவந்து அதை ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலிலிருக்கிற பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளிக்கக்கடவர்கள்.

௬ பிற்பாடு அவன் தகனபலியைத் தோலுரித்து அதை அதின் சந்துசந்தாகத் துண்டித்துப்போடுவானாக.

௭ அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோனின் குமாரர் பலிபீடத்தின்மேலே அக்கினியைப்போட்டு அக்கினியின்மேலே கட்டைகளை அடுக்கி,

௮ பிற்பாடு அவன் குமாரராகிய அந்த ஆசாரியர்கள் துண்டங்களையுந் தலையையுங் கொழுப்பையும் பலிபீடத்தின்மேலே அக்கினியின் பேரிலிருக்கிற கட்டைகளின் மீதிலே அடுக்கிவைக்கக்கடவர்கள்.

௯ அதின் குடல்களையும் அதின் தொடைகளையும் அவன் தண்ணீரிலே கழுவுவானாக. அதையெல்லாம் ஆசாரியன் பலிபீடத்தின் மேலே சர்வாங்கத்தகனபலியாகக் கொளுத்திப்போடக்கடவன். அது கர்த்தருக்காற்றுகிற வாசனையாகுந் தகனம்.

௰ அவன் ஆட்டுமந்தையிலுள்ள ஆடுகளிலாகிலும் வெள்ளாடுகளிலாகிலும் எடுத்துச் சர்வாங்கத்தகனபலியைச் செலுத்தப்போனானேயாகில் அவன் பழுதற்ற கடாவைக் கொண்டுவந்து,

௰௧ கர்த்தருக்கு முன்பாகப் பலிபீடத்தின் வடபுறத்திலே அதின் குரல்வளையை அறுக்கக்கடவன். அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்கள் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளிக்கக்கடவர்கள்.

௰௨ பிற்பாடு அவன் அதை அதின் சந்துசந்தாகத் துண்டித்து அதின் தலையையும் அதின் கொழுப்பையுங் கூட வைப்பானாக. அவைகளை ஆசாரியன் பலிபீடத்தின்மேலே அக்கினியின்பேரிலிருக்கிற கட்டைகளின்மீதில் அடுக்கிவைக்கக்கடவன்.

௰௩ குடல்களையுந் தொடைகளையும் அவன் தண்ணீரிலே கழுவுவானாக. அதையெல்லாம் ஆசாரியன் கொண்டுவந்து பலிபீடத்தின்மேலே கொளுத்திப்போடக்கடவன். அது சர்வாங்கத்தகனபலி. அது கர்த்தருக்காற்றுகிற வாசனையாகுந் தகனம்.

௰௪ அவன் பறவைகளில் எடுத்துக் கர்த்தருக்குச் சர்வாங்கத்தகனபலியைச் செலுத்தப்போனானேயாகிற் காட்டுப்புறாக்களிலாகிலும் புறாக்குஞ்சுகளிலாகிலும் எடுத்துச் செலுத்தக்கடவன்.

௰௫ அதை ஆசாரியன் பலிபீடத்தண்டை கொண்டுவந்து அதின் தலையைக் கிள்ளிப்பிடுங்கிப் பலிபீடத்திலே கொளுத்திப்போட்டு அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின் சுவரிலே விழவிட்டு,

௰௬ அதின் இரைப்பையை அதின் இறகுகளோடுங் கூடவாங்கி அதைப் பலிபீடத்தண்டையிலே கிழக்கே சாம்பலிருக்கிற இடத்திலே போட்டு,

௰௭ பிற்பாடு அதை அதின் செட்டைகளுக்குள்ளே இரண்டாக்காமற் பிளப்பானாக. பிற்பாடு ஆசாரியன் அதைப் பலிபீடத்தின்மேலே அக்கினியின்பேரிலிருக்கிற கட்டைகளின்மீதிற் கொளுத்திப்போடக்கடவன். அது சர்வாங்கத்தகனபலி. அது கர்த்தருக்காற்றுகிற வாசனையாகுந் தகனம்.

## ௨. அதிகாரம்.

சுயமனப்பூர்வமாய்ச் செலுத்துங் காணிக்கைகளின் கட்டளை.

ஒரு ஆத்துமா கர்த்தருக்குக் காணிக்கையான படைப்பைச் செலுத்துவதுண்டானால் அவன் படைப்பு மெல்லிய மாவாயிருப்பதாக. அவன் அதின்மேல் எண்ணெய் வார்த்து அதின் மீதிற் குந்தலிக்கம்போட்டு,

௨ அதை ஆரோனின் குமாரரான ஆசாரியர்களண்டைக்குக் கொண்டுவருவானாக. அப்பொழுது ஆசாரியன் அந்த மாவிலும் எண்ணெயிலும் ஒரு கைப்பிடிநிறைய எல்லாக் குந்தலிக்கத்தோடுங்கூட எடுத்து நினைப்புக்கான அதைப் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன். அது கர்த்தருக்காற்றுகிற வாசனையாகுந் தகனம்.

௩ காணிக்கையில் மீதியானதோவென்றால் ஆரோனையும் அவன் குமாரரையுஞ் சேர்க்கடவது. கர்த்தருடைய தகனங்களில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௪ அடுப்பிலே சுட்ட காணிக்கையான படைப்பைச் செலுத்தப்போனானேயாகில் அது எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவின் புளிப்பில்லாத அதிரசங்களும் எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத அடைகளுமாயிருப்பதாக.

௫ நீ படைப்பது தட்டின்மேற் சுட்ட காணிக்கையேயானால் அது எண்ணெயிலே பிசைந்த புளிப்பில்லாத மெல்லிய மாவினுடையதாயிருப்பதாக.

௬ அதைத் துண்டுகளாகப்பிட்டு அதின்மேலெண்ணெய்வார்ப்பாயாக. அது ஒரு காணிக்கை.

௭ நீ பண்டப்பாத்திரச்சட்டியிலே செய்யப்பட்ட காணிக்கையைப் படைப்பாயானால் அது எண்ணெயிலே மெல்லியமாவினாலே செய்யப்படுவதாக.

௮ இப்படிச்செய்யப்பட்டகாணிக்கையைக் கர்த்தருக்குச்செலுத்துவாயாக. அது ஆசாரியனண்டைச் சேர்ந்தபொழுது அவன் அதைப் பலிபீடத்திற்குக் கொண்டுபோய்,

௯ நினைப்பூக்கானபங்கைக் காணிக்கையிலிருந்தெடுத்துப் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன். அது கர்த்தருக்கு சுகந்தவாசனையாகுந்தகனம்.

௰ காணிக்கையில் மீதியானதோவென்றால் ஆரோனையும் அவன் குமாரரையுஞ்சேரக்கடவது. கர்த்தருடைய தகனங்களில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௰௧ கர்த்தருக்குச்செலுத்தும் ஒரு காணிக்கையும் புளிப்பினாற்செய்யப்படலாகாது. ஏனெனிற் புளித்தமாவுள்ளதொன்றையுந் தேனுள்ளதொன்றையுங் கர்த்தருக்குத் தகனமாகக்கொளுத்தீர்களாக.

௰௨ முதற்கனிகளின் படைப்பாக அவைகளைக் கர்த்தருக்குச் செலுத்தலாம். பலிபீடத்தின்மேல் அவைகள் சுகந்தவாசனையாக ஏற்றப்படவேண்டாம்.

௰௩ உன்காணிக்கையாகிற எந்தப்படைப்பும் * உப்பினாற்சாரமேற்றப்படுவதாக. உன்காணிக்கையிலே உன்பரமபரனுடைய உடம்படிக்கையின் உப்பைக்குறையவொட்டாமல் நீ படைப்பதிலெல்லாம் உப்பைச்செலுத்தக்கடவாய். * மாற்கு. ௯, ௪௯. கொலொ ௪, ௬.

௰௪ நீ முதற்பலன்களின்காணிக்கையைக் கர்த்தருக்குச்செலுத்துகிறதுண்டானாற் பச்சையான நிறைந்தகதிர்களை நெருப்பிலே சுட்டுத்திரித்து இப்படியே உன்முந்தின பலன்களின் காணிக்கையைக்கொண்டுவந்து,

௰௫ அதின்மேலெண்ணெய்வார்த்து அதின்மீதிற் தூபவர்க்கம்போடுவாயாக. அது ஒருகாணிக்கை.

௰௬ பிற்பாடு ஆசாரியன் உதிர்க்கப்பட்டதிலும் எண்ணெயிலும் நினைப்பூக்கான பங்கை அதினுடைய எல்லாத்தூபவர்க்கத்தோடுங்கூட எடுத்துக்கொளுத்தக்கடவன். அது கர்த்தருக்கான தகனம்.

## ௩. அதிகாரம்.

சம்பன்னபூர்வமாயச்செலுத்துஞ் சமாதானபலிகளின் கட்டளை.

௧ அவன் செலுத்துவது சமாதானபலியானால் அப்பொழுது அதை மாட்டுமந்தையிலெடுத்துச் செலுத்தப்போனானேயாகில் அவன் அது ஆணானாலும் பெண்ணானாலும் பழுதற்றிருக்கிறதைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்து,

௨ அதினுடைய தலையின்மேலே தன்கையைவைத்து ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்குமுன்பாக அதினைக்கொல்லவேண்டும். அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளிக்கக்கடவர்கள்.

௩ பிற்பாடு சமாதானபலியிலே குடல்களை மூடியகொழுப்பையுங் குடல்களின்மேலிருக்கிற எல்லாக்கொழுப்பையும்,

௪ இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்மேலே சிறுகுடல்களிடத்திலிருக்குங் கொழுப்பையுங் குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிடுங்கிக் கர்த்தருக்குத் தகனமாகச் செலுத்துவானாக.

௫ அதை ஆரோனின்குமாரர் பலிபீடத்திலே அக்கினியின்மேலுள்ள கட்டைகளின்பேரிலேபோட்டிருக்குஞ் சர்வாங்கதகனபலியின்மீதிற் போட்டுக்கொளுத்தக்கடவர்கள். அது கர்த்தருக்குச் சுகந்தவாசனையாகுந்தகனம்.

௬ அவன் ஆட்டுமந்தையிலெடுத்துக் கர்த்தருக்குச் சமாதானபலியைச் செலுத்தப்போனானேயாகில் அப்பொழுது அது ஆணானாலும் பெண்ணானாலும் பழுதற்றிருக்கிறதைச் செலுத்துவானாக.

௭ ஆட்டைச்செலுத்தவேண்டுமென்றால் அவன் அதைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்து,

௮ அதினுடைய தலையின்மேலே தன்கையைவைத்து ஆசரிப்பின்கூடாரத்திற்குமுன்பாக அதினைக்கொல்லவேண்டும். அப்பொழுது ஆரோனின்குமாரர் அதின் இரத்தத்தைப்பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளிக்கக்கடவர்கள்.

௯ பிற்பாடு அவன் சமாதானபலியிலே அதின்கொழுப்பையும் நடுவெலும்பிலேபிடுங்கின முழுவாலையுங் குடல்களை மூடிய கொழுப்பையும் அவைகள்மேலிருக்கிற எல்லாக்கொழுப்பையும்,

௰ இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்மேலே சிறுகுடல்களிடத்திலிருக்கிற கொழுப்பையுங் குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிடுங்கிக் கர்த்தருக்குத் தகனமாகச்செலுத்துவானாக.

௰௧ அதை ஆசாரியன் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன். அது கர்த்தருக்கான தகன ஆகாரம்.

௰௨ அவன் செலுத்துவது வெள்ளாடாயிருந்தேயானால் அவன் அதைக் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்து,

௰௩ அதினுடைய தலையின்மேல் தன்கையை வைத்து ஆசரிப்பின் கூடாரத்திற்கு முன்பாக அதின் குரலையை யறுப்பாருக. அப்பொழுது ஆரோனின் குமாரர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல் சுற்றிலுந் தெளிக்கக்கடவர்கள்.

௰௪ அதிலே அவன் குடல்களை மூடிய கொழுப்பையும் அவைகளின்மேலிருக்கிற எல்லாக் கொழுப்பையும்,

௰௫ இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்மேல் சிறுகுடல்களிடத்திலிருக்குங் கொழுப்பையுங் குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிரித்துக் கர்த்தருக்குத் தகனமாகச் செலுத்துவாருக.

௰௬ அவைகளை ஆசாரியன் பலிபீடத்தின்மேல் கொளுத்தக்கடவன். அது ஆறுதல்வாசனையாகுந்தகன ஆகாரம். எல்லாக் கொழுப்புங் கர்த்தருடையது.

௰௭ * கொழுப்பும் இரத்தமுமென்னப்பட்டதொன்றையும் நீங்கள் புசிக்கவேண்டாமென்பது உங்கள் வாசஸ்தலங்களெங்குமுள்ள உங்கள் தலைமுறைகளுக்கு நித்தியகட்டளையாயிருப்பதென்று சொல்லென்றார். * ௭, ௨௩—௨௭. ௰௭, ௰. ௰௪.

## ௪. அதிகாரம்.

பாவம்போக்கும் பலிகளின் கட்டளை.

பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது.

௨ நீ இஸ்ரவேல்புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதென்னவெனில். ஒரு ஆத்துமா கர்த்தருடைய சகல கற்பனைகளிலும் யாதொன்றைத் தப்பிதத்தினாலே மீறிச்செய்யத்தகாததைச் செய்து பாவம்பண்ணினால் அறியவேண்டியதாவது.

௩ அபிஷேகம்பண்ணப்பட்ட ஆசாரியன் சனத்தைக் குற்றத்திற்குள்ளாகப் பாவஞ்செய்தால் அவன்செய்த பாவத்தினிமித்தங் கர்த்தருக்குப் பாவம்போக்கும் பலியாக மாடுகளிலே பழுதற்ற ஒரு காளையெருதைச் செலுத்தி,

௪ அதை ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலிலே கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்து அதினுடைய தலையின்மேலே தன்கையை வைத்துக் கர்த்தருக்கு முன்பாக அதின் குரலையை யறுப்பாருக.

௫ அப்பொழுது அபிஷேகம்பண்ணப்பட்ட ஆசாரியன் காளையெருதின் இரத்தத்திலே கொஞ்சமெடுத்து அதை ஆசரிப்பின் கூடாரத்திலே கொண்டுவந்து,

௬ தன்விரலை இரத்தத்திலே தோய்த்து ஏழுதரங் கர்த்தருக்கு முன்பாகப் பரிசுத்த ஸ்தலத்தின் திரைக்கு முன் தெளிக்கக்கடவன்.

௭ பிற்பாடு ஆசாரியன் அந்த இரத்தத்திலே கொஞ்சம் ஆசரிப்பின் கூடாரத்திலே கர்த்தருக்கு முன்பாகவிருக்கிற சுகந்தவர்க்கங்களுடைய தூபபீடத்துக் கொம்புகளின்மேல் பூசக்காளையெருதுடைய இரத்தத்தையெல்லாம் ஆசரிப்புக் கூடாரவாசலுக்கு முன்பாகவிருக்கிற தகனபலிபீடத்தின் அடியிலே ஊற்றிப்போட்டு,

௮ பாவம்போக்கும் பலியான காளையெருதின் சகல கொழுப்பையுங் குடல்களை மூடியிருக்கிற கொழுப்பையும் அவைகளின்மேலிருக்கிற எல்லாக் கொழுப்பையும்,

௯ இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்மேல் சிறுகுடல்களிடத்திலிருக்கிற கொழுப்பையுங் குண்டிக்காய்களோடே கூடக் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிரித்து,

௰ சமாதானபலியான மாட்டிலிருந்தெடுக்கிறதுபோல அதிலிருந்தெடுத்து அவைகளை ஆசாரியன் தகனபலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்.

௰௧ அந்தக் காளையெருதின் தோலையும் அதின் எல்லாமாமிசத்தையும் அதற்றோடேகூட அதின் தலையையுங் கால்களையும் அதின் குடல்களையும் அதின் சாணியையும்,

௰௨ காளையெருதை முழுவதும் அவன் பாளயத்திற்குப் புறம்பே சாம்பலைக்கொட்டுகிற சுத்தமான இடத்திலே கொண்டுபோய்க் கட்டைகளின்மேலேபோட்டு அக்கினியாலே சுட்டெரிக்கக்கடவன். கொட்டியிருக்குஞ் சாம்பலின்மேலேதானே அதைச் சுட்டெரிக்கக்கடவன்.

௰௩ அன்றியும் இஸ்ரவேலின் சபையெல்லாந் தப்பிநடந்து காரியஞ் சபையின் கண்களுக்கு மறைவாயிருந்தவளவிலே கர்த்தருடைய சகல கற்பனைகளிலும் யாதொன்றைமீறிச் செய்யத்தகாததைச்செய்து குற்றவாளிகளாய்ப்போனாலே,

௰௪ அப்பொழுது அவர்கள் செய்த பாவம் அறியப்பட்டதாகில் சபையார் ஒருகாளையெருதைப் பாவம்போக்கும் பலியாகச்செலுத்தி அதை ஆசரிப்புக்கூடாரத்திற்கு முன்பாகக்கொண்டுவந்து,

௰௫ சபையின் மூப்பர் கர்த்தருக்கு முன்பாகத் தங்கள் கைகளை அதினுடைய தலையின்மேல் வைப்பார்களாக. பிற்பாடு கர்த்தருக்கு முன்பாகக் காளையெருதின் குரலையறுக்கப்படுவதாக.

௰௬ அப்பொழுது அபிஷேகம்பண்ணப்பட்ட ஆசாரியன் அதின் இரத்தத்திலே கொஞ்சம் ஆசரிப்பின் கூடாரத்திலே கொண்டுவந்து,

௨௫ நீ ஆரோனோடும் அவன் குமாரரோடுஞ் சொல்லவேண்டியது. பாவம்போக்கும் பலியின் நியாயப்பிரமாணம் என்னவெனில், சர்வாங்க தகனபலி கொல்லப்படுகிற இடத்திலே பாவம்போக்கும் பலியுங் கர்த்தருக்கு முன்பாகக் கொல்லப்படக்கடவது. அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௨௬ பாவம்போக்க அதைப் பலியிடுகிற ஆசாரியன் அதைப் போசிக்கக்கடவன். ஆசரிப்புக் கூடாரத்தின் பிராகாரமென்ற பரிசுத்த ஸ்தலத்திலே அது போசிக்கப்படுவதாக.

௨௭ அதின் மாம்சத்தைத் தொடுகிறவனெல்லாரும் பரிசுத்தமாயிருப்பார்களாக. அதின் இரத்தத்திலே கொஞ்சம் ஒருவன் வஸ்திரத்திலே தெறித்ததானால் அதைப் பரிசுத்த ஸ்தலத்திலே கழுவுவாயாக.

௨௮ அது வேவிக்கப்பட்ட மண்பாண்டம் உடைக்கப்படக்கடவது. செம்புப்பாண்டத்திலே வேவிக்கப்பட்டதேயானால் அது விளக்கப்பட்டுத் தண்ணீரிலே அலம்பப்படக்கடவது.

௨௯ ஆசாரியரில் ஆண்சாதியானவனெல்லாரும் அதைப் போசிப்பார்களாக. அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௩௦ அன்றிப் பாவம்போக்கும் எந்தப் பலியின் இரத்தத்திலே கொஞ்சம் பரிசுத்த ஸ்தலத்திலே பாவத்தை நிவர்த்தியாக்கும்படிக்கு ஆசரிப்புக் கூடாரத்திற்குள்ளே கொண்டுவரப்பட்டதோ அந்தப் பலி போசிக்கப்படாமல் அக்கினியாலே சுட்டெரிக்கப்படக்கடவது.

## எ. அதிகாரம்.

அப்பாலுஞ் சில பலிகளுக்கடுத்த பிரமாணங்கள்.

௧ குற்றம்போக்கும் பலியின் பிரமாணமென்னவெனில், அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௨ சர்வாங்க தகனபலியைக் கொல்லுகிற இடத்திலே குற்றம்போக்கும் பலியையுங் கொல்லுவார்களாக. அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளிக்க,

௩ அதினுடைய எல்லாக் கொழுப்பையும் அதின் வாலையுங் குடல்களை மூடிய கொழுப்பையும்,

௪ இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்மேலே சிறுகுடல்களிடத்திலிருக்கிற கொழுப்பையுங் குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிடுங்கச் செலுத்துவானாக.

௫ இவைகளை ஆசாரியன் பலிபீடத்தின்மேலே கர்த்தருக்குத் தகனமாகக் கொளுத்தக்கடவன். அது குற்றம்போக்கும்பலி.

௬ ஆசாரியரில் ஆண்சாதியானவனெல்லாரும் அதைப் போசிப்பார்களாக. பரிசுத்த ஸ்தலத்திலே அது போசிக்கப்படக்கடவது. அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௭ பாவம்போக்கும் பலிக்குங் குற்றம்போக்கும்பலி சரிசமானம். இரண்டிற்கும் ஒரே நியாயப்பிரமாணமிருக்கும். அதினாலே பாவத்தை நிவர்த்தியாக்கின ஆசாரியனையது சேர்வதாக.

௮ ஒருவனுடைய சர்வாங்கதகனபலியை ஆசாரியன் செலுத்தினாலே அதின் தோலை அவன் அதைச் செலுத்தின ஆசாரியனுடையதாயிருக்கும்.

௯ அடுப்பிலே சுடப்பட்டதுஞ் சட்டியிலுந் தட்டினமேலுஞ் செய்யப்பட்டதுமான காணிக்கையாவும் அதைச் செலுத்தின ஆசாரியனுடையதாயிருக்கும்.

௰ எண்ணெயிலே பிசைந்ததும் எண்ணெயில்லாததுமான சகல காணிக்கையும் ஆரோனுடைய எல்லாக் குமாரருக்கும் அவனவனுக்குச் சரியானபடிச் சேரும்.

௰௧ கர்த்தருக்குச் செலுத்துஞ் சமாதானபலியின் நியாயப்பிரமாணமென்னவெனில்,

௰௨ அதை ஸ்தோத்திரத்திற்காகச் செலுத்தினாலே அவன் ஸ்தோத்திரப்பலியோடேகூட எண்ணெயிலே பிசைந்த புளிப்பில்லாத அதிரசங்களையும் எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத அடைகளையும் எண்ணெயிலே பிசைந்து வறுக்கப்பட்ட மெல்லிய மாவு அதிரசங்களையும்,

௰௩ அவைகளுடனே புளித்தமாவப்பத்தையுந் தன்னுடைய சமாதானபலியாகிய ஸ்தோத்திரப்பலியோடேகூடத் தன் படைப்பாகக் கொண்டுவந்து,

௰௪ அந்த எல்லாப் படைப்பிலும் ஒன்றைக் கர்த்தருக்கு ஏறெடுத்துச் செலுத்துவானாக. அது சமாதானபலியின் இரத்தத்தைத் தெளித்த ஆசாரியனுடையதாயிருக்கும்.

௰௫ அவனுடைய சமாதானபலியாகிய ஸ்தோத்திரப்பலியின் மாம்சமோவென்றால் அவன் அதைச் செலுத்தின அன்றே போசிக்கப்படக்கடவது. அதிலொன்றும் விடியற்காலமட்டும் வைக்கப்படவேண்டாம்.

௰௬ அவன் செலுத்துகிற பலி ஒரு பொருத்தனையும் அல்லது உற்சாயப்பலியுமாயிருந்ததேயானால் அது செலுத்தப்பட்ட அந்நாளிலும் அதில் மீதியானது மறுநாளிலும் போசிக்கப்படுவதாக.

௰௭ அந்தப் பலியின் மாம்சத்தில் மூன்றாம் நாளில் மீதியாயிருக்கிறது அக்கினியாலே சுட்டெரிக்கப்படக்கடவது.

௰௮ அவனுடைய சமாதானபலியின் மாம்சத்திலே மூன்றாம் நாளிலே போசிக்கவே போசிக்கப்பட்டால் அதைச் செலுத்தின

௰௧ அந்த மாம்சத்தையுந் தோலையும் பாளயத்திற்குப் புறம்பே அக்கினியாலே சுட்டெரித்தான்.

௰௨ பிற்பாடு சர்வாங்கதகனபலியின் குரல்வளையையறுத்தான் ஆரோனின் குமாரர் அதின் இரத்தத்தை அவனிடத்திலே கொண்டுவந்தார்கள். அதைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளித்தான்.

௰௩ துண்டங்களாக்கப்பட்ட சர்வாங்கதகனபலியையுந் தலையையும் அவனண்டைக் கொண்டுவந்தார்கள். அவன் அவைகளைப் பலிபீடத்தின்மேலே கொளுத்தப்பட வைத்து,

௰௪ குடல்களையுந் தொடைகளையுங் கழுவிப் பலிபீடத்தின்மேலே சர்வாங்கதகனத்தின்மீதிற் கொளுத்தப்பட வைத்தான்.

௰௫ பிற்பாடு அவன் சனத்தின் பலியைக் கிட்டக்கொண்டுவந்து சனத்திற்காகிய பாவமீட்பாகத்தின் வெள்ளாட்டுக்கிடாயைப் பிடித்து அதின் குரல்வளையையறுத்து முந்தினவைக்குச் சரியாக அதைப் பாவம்போக்கும் பலியாக்கி,

௰௬ சர்வாங்கதகனபலியைக் கிட்டக் கொண்டுவந்து நியாயமுறைமையின்படியே செலுத்தி,

௰௭ காணிக்கையையுங் கிட்டக்கொண்டுவந்து தன் உள்ளங்கையை யதினால் நிரப்பி அதைக் காலமே செலுத்தப்படுஞ் சர்வாங்கதகனமுமல்லாமற் பலிபீடத்தின்மேற் கொளுத்தப்பட வைத்தான்.

௰௮ பிற்பாடு சனத்தின் சமாதானபலியாகிய எருதையும் ஆட்டுக்கிடாயையுங் குரல்வளையறுத்தான். அதின் இரத்தத்தை ஆரோனின் குமாரர் அவனிடத்திற் கொண்டுவந்தார்கள். அதைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலுந் தெளித்தான்.

௰௯ எருதிலும் ஆட்டுக்கிடாயிலும் எடுத்த கொழுப்புகளையும் வாலையுங் குடல்களை மூடியதையுங் குண்டிக்காய்களையுங் கல்லீரலின்மேலிருந்த சவ்வையுங் கொண்டுவந்து,

௨௰ கொழுப்புகளை மார்க்கண்டங்களின் மேலே வைத்தார்கள். அந்தக் கொழுப்புகளைப் பலிபீடத்தின்மேலே கொளுத்தப்பட வைத்தான்.

௨௰௧ ஆரோன் மார்க்கண்டங்களையும் வலது முன்னந்தொடையையும் மோசே கற்பித்தபடியே கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டுங் காணிக்கையாக அசைவாட்டினான்.

௨௰௨ பிற்பாடு ஆரோன் தன் கைகளைச் சனத்திற்கு நேராக ஏறெடுத்து அவர்களை ஆசீர்வதித்துப் பாவமீட்பாகத்தின் பலியையுஞ் சர்வாங்கதகனபலியையுஞ் சமாதானபலியையுஞ் செலுத்தின இடத்திலிருந்திறங்கினான்.

௨௰௩ மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக் கூடாரத்திற் பிரவேசித்து வெளியே வந்து சனத்தை ஆசீர்வதித்தார்கள். அப்பொழுது கர்த்தருடைய மகிமை யெல்லாச் சனத்திற்குந் தோன்றப்பட்டது.

௨௰௪ * அக்கினி கர்த்தருடைய சந்நிதியிலிருந்து புறப்பட்டுப் பலிபீடத்தின்மேலிருந்த சர்வாங்கதகனபலியையுங் கொழுப்புகளையும் எரித்துப்போட்டது. சனமெல்லாரும் அதைக் கண்டபொழுது கெம்பீரித்து முகங்குப்புற விழுந்தார்கள். *

* ௧. இராசா. ௰௮, ௩௮. ௨. நாளா. ௭, ௧.

# ௰. அதிகாரம்.

அந்நிய அக்கினியைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்த நாதாப்புக்கும் அபியூவுக்கும் ஆக்கினை வந்தது.

நாதாப் அபியூ என்ற ஆரோனின் குமாரரில் ஒவ்வொருவன் தன் தன் தூபகலசத்தை யெடுத்து அவைகளில் நெருப்பையும் அதின்மேல் தூபவர்க்கத்தையும் போட்டுக் கர்த்தர் தங்களுக்குக் கற்பியாதிருந்த அந்நிய அக்கினியை அவருக்குமுன்பாகக் கொண்டுவந்தார்கள்.

௨ அப்பொழுது அக்கினி கர்த்தருடைய சந்நிதியிலிருந்து புறப்பட்டு அவர்களைப் பட்சித்தது. அங்கே கர்த்தருக்குமுன்பாகச் செத்தார்கள்.

௩ அப்பொழுது மோசே ஆரோனோடே நம்மண்டைச் சேருகிறவர்களாலே நாம் பரிசுத்தமாய் விளங்கி எல்லாச் சனத்திற்கு முன்பாக மகிமைப்படுவோமென்று கர்த்தர் பேசிச் சொன்னது இதுதானென்றான். ஆரோன் பேசாதிருந்தான்.

௪ பிற்பாடு மோசே ஆரோனின் சிறிய தகப்பனான உசியேலின் குமாரராகிய மீசவேலையும் எல்சாப்பானையும் அழைத்து நீங்கள் சேர்ந்து உங்கள் சகோதரரைப் பரிசுத்தஸ்தலத்திற்கு முன்பாகவிருந்தெடுத்துப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோங்களென்றான்.

௫ இவர்கள் மோசே சொன்னபடி சேர்ந்து அவர்களை அவர்கள் சட்டைகளோடே யெடுத்துப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோனார்கள்.

௬ மோசே ஆரோனோடும் எலெயாசார் இத்தாமார் என்ற அவன் குமாரரோடுஞ் சொன்னதாவது. நீங்கள் சாவாதபடிக்குஞ் சபையின்மேலே கோபம் வராதபடிக்கும் நீங்கள் உங்கள் தலைகளைத் திறவாமலும் உங்கள் வஸ்திரங்களைக் கிழிக்காமலுமிருப்பீர்களாக. உங்கள் சகோதரராகிய இஸ்ரவேல் வீட்டாரெல்லாருங் கர்த்தர் சுட்ட இந்தச் சுட்டிற்காக அழுவார்கள்.

௪௮ பஞ்சுநூலும் அல்லது ஆட்டு மயிருமான பாவிலாகிலும் ஊடை நூலிலாகிலும் ஒரு தோலிலாகிலும் தோலான எந்த விதவேலையிலெங்கிலும் குஷ்டத்தின் ரூபுண்டாகி,

௪௯ வஸ்திரத்திலாகிலும் தோலிலாகிலும் பாவிலாகிலும் ஊடைநூலிலாகிலும் தோலான எந்தவிதவேலையிலெங்கிலும் அது கொஞ்சம் பச்சை அல்லது சிவப்பாயிருந்தால் குஷ்டமாயிருக்கும். அது ஆசாரியனுக்குக் காண்பிக்கப்படக்கடவது.

௫௰ ஆசாரியன் அதைப்பார்த்து ஏழுநாள் அடைத்துவைக்க,

௫௧ ஏழாம்நாளிலே அதைப்பார்க்கக்கடவன். வஸ்திரத்திலேயாவது பாவிலேயாவது ஊடைநூலிலேயாவது தோலிலேயாவது தோலால் எந்தவிதமுமான செய்யப்பட்ட வேலையிலேயாவது அது அதிகப்பட்டிருந்தால் அது அரிக்கிற குஷ்டமாயிருக்கும் தீட்டாயிருக்கின்றது.

௫௨ அந்த ரூபிருக்கிற ஆட்டுமயிரும் அல்லது பஞ்சுநூலுமான வஸ்திரத்தையும் அல்லது பாவையும் அல்லது ஊடைநூலையும் அல்லது தோலான எந்தவிதமுமான பணிமுட்டையும் சுட்டெரிக்கக்கடவன். ஏனெனில் அது அரிக்கிற குஷ்டம். அக்கினியாலே சுட்டெரிக்கப்படுவதாக.

௫௩ ஆனால் வஸ்திரத்திலாகிலும் பாவிலாகிலும் ஊடைநூலிலாகிலும் தோலான எந்தவிதமுமான பணிமுட்டிலெங்கிலும் இதோ, அந்த ரூபு அதிலே அதிகப்படவில்லையென்று ஆசாரியன் கண்டால்,

௫௪ அப்பொழுது ஆசாரியன் அதைக்கழுவச்சொல்லி இரண்டாம்முறையே ஏழுநாள் அடைத்துவைக்க,

௫௫ அது கழுவப்பட்டபின்பு அதைப்பார்க்கக்கடவன். இதோ, அந்த ரூபு அதிகப்படாதிருந்தாலும் மாறாதிருந்தால் தீட்டாயிருக்கும். அக்கினியால் அதைச்சுட்டெரிக்கவேண்டும். அது அதின் உட்புறத்திலாகிலும் வெளிப்புறத்திலாகிலும் உருவ அரிக்கிறதாயிருக்கின்றது.

௫௬ கழுவப்பட்டபின்பு இதோ, அது குறைந்ததென்று ஆசாரியன் கண்டானேயாகில் அதை வஸ்திரத்திலே அல்லது தோலிலே அல்லது பாவிலே அல்லது ஊடைநூலிலே யிராதபடிக்குக் கிழித்துப்போடவேண்டும்.

௫௭ அது இன்னம் வஸ்திரத்திலாகிலும் பாவிலாகிலும் ஊடைநூலிலாகிலும் தோலையான எந்தவிதமுமான பணிமுட்டிலெங்கிலும் காணப்பட்டதேயானால் அது துளிர்க்கிறதாயிருக்கும். ஆகையால் அதை அக்கினியாலே சுட்டெரிக்கவேண்டும்.

௫௮ வஸ்திரமும் அல்லது பாவும் அல்லது ஊடைநூலும் அல்லது எந்தவிதத் தோற்பணிமுட்டுங் கழுவப்பட்டபின்பு அந்த ரூபு அதை விட்டுப்போயிற்றேயானால் அது இரண்டாம்முறை கழுவப்படட்டும். அப்பொழுது சுத்தமாயிருக்கும்.

௫௯ ஆட்டுமயிர் அல்லது பஞ்சுநூலுடைய வஸ்திரத்தையாகிலும் பாவையாகிலும் ஊடைநூலையாகிலும் எந்தவிதத் தோற்பணிமுட்டையெங்கிலும் சுத்தமாக அல்லது தீட்டாகத்தீர்க்கிறதற்கு குஷ்டத்தினுடைய ரூபுவாதைக்குறித்த நியாயப்பிரமாணம் இதுவே.

## ௰௪. அதிகாரம்.

அப்பாலும் குஷ்டத்திற்கும் அதினசுத்திகரிப்புக்கும் அடுத்த நியாயப்பிரமாணம்.

பின்னும் கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது.

௨ குஷ்டரோகியினுடைய சுத்திகரிப்பின் நாளிலே அவனுக்கடுத்த நியாயப்பிரமாணமென்னவெனில், * அவன் ஆசாரியனண்டைக்குக் கொண்டுவரப்பட, ஆசாரியன் பாளயத்துக்குப்புறம்பே போகவேண்டும்.

* மத்தேயு. ௮, ௪.

௩ இதோ, குஷ்டரோகியின் குஷ்டவாதை குணமாயிற்றென்று ஆசாரியன் கண்டால்,

௪ அவன் சுத்திகரிக்கப்படப்போகிறவனுக்காகச் சுத்தமாயிருக்கிற உயிருள்ள இரண்டு குருவிகளையும் ஒரு கேதுருக்கட்டையையும் சிவப்புநூலையும் ஈசோப்பையும் வாங்கவேண்டுமென்று கற்பிப்பானாக.

௫ பிறகு ஆசாரியன் அந்தக்குருவிகளில் ஒன்றையொரு மண்பாண்டத்திலுள்ள சுர்ப்புத்தண்ணீர்மேற் கழுத்தையறுக்கச்சொல்லி,

௬ உயிருள்ள குருவியையுங் கேதுருக்கட்டையையுஞ் சிவப்புநூலையும் ஈசோப்பையும் எடுத்துக்கொண்டு இவைகளையும் உயிருள்ள குருவியையுஞ் சுர்ப்புத்தண்ணீரின்மேற் கழுத்தறுக்கப்பட்ட குருவியின் இரத்தத்திலே தோய்த்து,

௭ குஷ்டமறச் சுத்திகரிக்கப்படப்போகிறவன்மேல் ஏழுதரந் தெளித்து அவனைச் சுத்தம்பண்ணி உயிருள்ள குருவியை வெளியின் விசாலத்திலே விட்டுவிடக்கடவன்.

௮ சுத்திகரிக்கப்படுகிறவன் தன் வஸ்திரங்களைவெளுத்துத் தன் மயிரையெல்லாஞ் சிரைத்துத் தண்ணீரிலே முழுகுவானாக. பின்பு சுத்தமாகும் அதற்குப்பின்பு பாளயத்திற்குட் பிரவேசிக்கக்கடவன். ஆனாலும் தன் கூடாரத்திற்குப் புறம்பே ஏழுநாள் தங்கி,

௯ ஏழாம்நாளிலே தன் தலையையுந் தாடியையும் புருவங்களையுந் தன்னுடைய எல்லாமயிரையுஞ் சிரைத்துத் தன் வஸ்திரங்களை வெளுத்துத் தன் மாம்சத்தைத் தண்ணீரிலே கழுவிச் சுத்தமாயிருப்பானாக.

௨௮ அவளுடைய உதிரமாச்சுத்தமானால் அவள் ஏழுநாளெண்ணிக் கொள்ளவாளாக. பிற்பாடு சுத்தமாயிருப்பாள்.

௨௯ எட்டாம்நாளிலே அவள் இரண்டு காட்டுப்புறாக்களையாகிலும் இரண்டு புறாக்குஞ்சுகளையாகிலும் ஆசரிப்புக்கூடாரவாசலிலே ஆசாரியனண்டைக்குக் கொண்டுவரக்கடவள்.

௩௰ ஆசாரியன் அவைகளிலொன்றைப் பாவம்போக்கும்பலியும் மற்றதைச் சர்வாங்கதகனபலியுமாக்கி அவளுக்காகக் கர்த்தரின் சன்னிதியிலே அவளுடைய உதிரவோட்டினிமித்தம் பாவநிவர்த்தியை யுண்டாக்கக்கடவன்.

௩௧ இஸ்ரவேல்புத்திரர் தங்களை நடுவேயிருக்கிற என்னுடைய வாசஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தித் தங்கள் தீட்டுகளாற் சாவாதபடிக்கு இப்படி நீங்கள் அவர்கள் தீட்டுகளுக்கு அவர்களை விலக்கிவைக்கவேண்டும்.

௩௨ இது பிரமியக்காரனுக்கும் இந்திரியஸ்கலிதமானதினாலே தீட்டானவனுக்கும்,

௩௩ தன் விலக்கத்திலே பலவீனப்பட்டவளுக்கும் மாமிசம் ஊறலிருக்கிற ஆண்சாதிக்கும் பெண்சாதிக்கும் தீட்டாயிருக்கிறவளோடே படுத்துக்கொண்டவனுக்கும் செல்லும் நியாயப்பிரமாணமென்று சொல்லுங்களென்றார்.

## ௰௬. அதிகாரம்.

வருஷத்திலொருமுறை யெல்லாருக்காகவும் பாவநிவர்த்தியையுண்டாக்கும் பரிசுத்தநாளின் கட்டளை.

ஆரோனின் இரண்டுகுமாரர் * கர்த்தரின் சன்னிதியிலே சேருகையிற் செத்துப்போனபிற்பாடு கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது. * ௰, ௧. ௨.

௨ உன் சகோதரனாகிய ஆரோன் சாவாதபடிக்குப் பரிசுத்தஸ்தலத்திலே திரைக்குட்புறத்திலிருக்கிற பெட்டியின்மேலுள்ள கிருபாசனமான மூடிக்கு முன்பாகச் சகலவேளையிலும் வரவேண்டாமென்று அவனுக்குச் சொல்லு. ஏனெனில் கிருபாசனமான மூடியின்மேலே மேகத்திலே காணப்படுவோம்.

௩ ஆரோன் பரிசுத்தஸ்தலத்திற்குட்பிரவேசிக்கப்போனால் ஒரு காளையெருதைப் பாவம்போக்கும்பலியாகவும் ஒரு ஆட்டுக்கிடாயைச் சர்வாங்கதகனபலியாகவுஞ் சேர்த்துப்பிரவேசிக்கவேண்டும்.

௪ அவன் பரிசுத்தமான பஞ்சுநூல்சட்டையையுடுத்துத் தன் மாம்சத்தின்மேலே பஞ்சுநூல்சல்லடத்தைப்போட்டுப் பஞ்சுநூல் இடைக்கட்டைக்கட்டிப் பஞ்சுநூல் பாகையைப்போட்டுக்கொண்டிருக்கவேண்டும் இவைகள் பரிசுத்தமான வஸ்திரங்கள். அவன் தன் மாம்சத்தைத் தண்ணீரிலே கழுவி அவைகளையுடுத்திக்கொண்டு,

௫ இஸ்ரவேல்புத்திரருடைய சபையினிடத்திலே பாவம்போக்கும்பலியாக இரண்டு வெள்ளாட்டுக்கிடாய்களையுஞ் சர்வாங்கதகனபலியாக ஒரு ஆட்டுக்கடாவையும் வாங்கி.

௬ பிற்பாடு தனக்காகவுந் தன் வீட்டாருக்காகவும் பாவநிவர்த்தியையுண்டாக்கும்படிக்குத் தன்னுடைய பாவம்போக்குதலின் காளையெருதைச் சேர்ப்பண்ணி,

௭ அந்த இரண்டு வெள்ளாட்டுக்கிடாய்களையுங்கொண்டுவந்து ஆசரிப்புக்கூடாரவாசலிலே கர்த்தருக்கு முன்பாக நிறுத்தி.

௮ அந்த இரண்டு வெள்ளாட்டுக்கிடாய்களின்பேரிலே ஒருசீட்டைக் கர்த்தருக்கென்றும் பின்னொருசீட்டைப் போக்கவிடப்படும் வெள்ளாட்டுக்கிடாய்க்கென்றும் போட்டு,

௯ கர்த்தருக்கென்று சீட்டுவிழுந்த வெள்ளாட்டுக்கிடாயைப் பாவம்போக்கும்பலியாக இறத்தற்குச் சமர்ப்பண்ணி,

௰ போக்கவிடப்படச் சீட்டுவிழுந்த வெள்ளாட்டுக்கிடாயையோவென்றால் அதின்பேரிலே பாவநிவர்த்தியையுண்டாக்க அதை வனாந்தரத்திலே போகவிடுகிறதற்குக் கர்த்தருக்கு முன்பாக உயிரோடே நிறுத்தி,

௰௧ பிற்பாடு தனக்காகவுந் தன் வீட்டாருக்காகவும் பாவநிவர்த்தியையுண்டாக்குகிறதற்குத் தன்னுடைய பாவம்போக்குதலின் காளையெருதைச் சேர்ப்பண்ணி அதின் குரல்வளையையறுத்து,

௰௨ கர்த்தருக்கு முன்பாகப் பலிபீடத்தின்மேலிருக்கிற தணலாலே கலசத்தை நிரப்பிப் பொடியாக்கப்பட்ட சுகந்த தூபவர்க்கங்களிலே தன் கைப்பிடிகள் நிறையவெடுத்துத் திரைக்குட்புறமாகக் கொண்டுவந்து.

௰௩ தூபத்தின்மேகஞ் சாட்சியின்மேலிருக்கிற கிருபாசனமான மூடியைத் தான் சாவாதபடிக்கு மூடத்தக்கதாக அந்தத் தூபவர்க்கத்தைக் கர்த்தருக்கு முன்பாக அக்கினியின்மேலே போட்டு,

௰௪ பிற்பாடு காளையெருதின் இரத்தத்திலே கொஞ்சமெடுத்துக் கிழக்குப்புறமாகத் தன் விரலினாலே கிருபாசனமான மூடியின்மேலே தெளித்து ஏழுமுறை தன் விரலினாலே அந்த இரத்தத்திலேயெடுத்துக் கிருபாசனமான மூடிக்கு முன்பாகவுந் தெளிப்பானாக.

௰௫ பிற்பாடு அவன் சனத்தினுடைய பாவம்போக்குதலின் வெள்ளாட்டுக்கிடாயின் குரல்வளையையறுத்து அதின் இரத்தத்தைத் திரைக்குட்புறமாகக் கொண்டுவந்து தான் காளையெருதின் இரத்தத்தாலே செய்ததுபோல அதின் இரத்தத்தாலுஞ் செய்து அதைக் கிருபாசனமான மூடியின்மேலும் அதற்கு முன்பாகவுந் தெளித்து,

௰௬ இஸ்ரவேல்புத்திரருடைய தீட்டுகளினிமித்தமும் அவர்களுடைய எல்லாப்பாவ

க்களினும் உண்டான மீறுதல்களினிமித்த
மும் பரிசுத்தஸ்தலத்திற்காகப் பாவநிவர்த்
தியையுண்டாக்கி இந்தப்படியாக அவர்களி—
த்தில் அவர்கள் தீட்டுகளின் நடுவே தங்கியிரு
க்கிற ஆசரிப்பின் கூடாரத்திற்காகச் செய்
யக்கடவன்.

௧௭ அவன் பாவநிவர்த்தியையுண்டாக்க
பரிசுத்த ஸ்தலத்திற்குட் பிரவேசிக்கிறது
முதற்கொண்டு அவன் புறப்படுமட்டும் ஒரு
மனிதனும் ஆசரிப்பின் கூடாரத்திலிருக்க
வேண்டாம். அவன் தனக்காகவுந் தன் வீட்
டாருக்காகவும் இஸ்ரவேலின் முழுச்சபைக்
காகவும் பாவநிவர்த்தியையுண்டாக்கி,

௧௮ புறப்பட்டுக் கர்த்தருக்கு முன்பாக
இருக்கிற பீடத்தண்டைக்கு வந்து அதற்காகப்
பாவநிவர்த்தியையுண்டாக்கக் காளையெரு
தின் இரத்தத்திலும் வெள்ளாட்டுக்கிடாயி
னிரத்தத்திலுங் கொஞ்சம் பிடித்துக் கொ
ம்புகளின்மேல் சுற்றிலும் பூசி,

௧௯ தன் விரலினால் அந்த இரத்தத்திலே
எடுத்து ஏழுதரம் அதின்மேல் தெளித்து
அதை இஸ்ரவேல் புத்திரரின் தீட்டுகளறச்
சுத்திகரிக்கவும் பரிசுத்தமாக்கவுங் கட
வன்.

௨௦ அவன் பரிசுத்த ஸ்தலத்திற்கும் ஆச
ரிப்புக் கூடாரத்திற்கும் பீடத்திற்குமாகப்
பாவநிவர்த்தியை யிப்படியுண்டாக்கித்தீர்
ந்தபிற்பாடு உயிரோடேயிருக்கிற வெள்ளா
ட்டுக்கிடாயைச் சேர்ப்பண்ணி,

௨௧ அதினுடைய தலையின்மேல் ஆரோன்
தன்னிரண்டு கைகளையும் வைத்து அதின்மே
ல் இஸ்ரவேல் புத்திரருடைய எல்லா அக்கிர
மங்களையும் அவர்களுடைய எல்லாப் பாவ
ங்களாலுண்டாகிய அவர்களுடைய சகல மீ
றுதல்களையும் அறிக்கையிட்டு அவைகளை
வெள்ளாட்டுக்கிடாயினுடைய தலையின்மே
லே சுமத்தி அதை யதற்கான ஆட்கையிலே
வனாந்தரத்திற்கனுப்பிவிடக்கடவன்.

௨௨ அந்த வெள்ளாட்டுக்கிடாய் தன்
மேல் அவர்களுடைய அக்கிரமங்களையெ
ல்லாம் வெட்டிப்போடப்படுதலின் நிலத்தி
ற்குச் சுமந்துகொண்டு போவதாக. பிறகு
அந்த வெள்ளாட்டுக்கிடாயை வனாந்தரத்தி
லே போகவிடக்கடவன்.

௨௩ ஆரோன் பின்பு ஆசரிப்புக் கூடா
ரத்திற்குள் வந்து தான் பரிசுத்த ஸ்தலத்திற்
குட் பிரவேசிக்கிறபொழுது உடுத்திருந்த ப
ஞ்சுநூல் வஸ்திரங்களைக் களைந்து அங்கே வை
த்துவிட்டு,

௨௪ தன் மாம்சத்தைப் பரிசுத்த இடத்
தில் தண்ணீரிலே கழுவித் தன்னுடைய
வஸ்திரங்களையுடுத்திக்கொண்டு புறப்பட்டு
தன்னுடைய சர்வாங்கதகனத்தையுஞ் ஜ
னத்தின் சர்வாங்கதகனத்தையும் படை
த்துத் தனக்காகவுஞ் ஜனத்திற்காகவும் பா
வநிவர்த்தியையுண்டாக்கி,

௨௫ பாவம் போக்கும் பலியின் கொழுப்
பைப் பலிபீடத்தின்மேல் கொளுத்தக்கட
வன்.

௨௬ போகவிடப்படும் வெள்ளாட்டுக்கி
டாயைக் கொண்டுபோய் விட்டவன் தன் வ
ஸ்திரங்களை வெளுத்துத் தன் மாம்சத்தைத்
தண்ணீரிலே கழுவிப் பிற்பாடு பாளயத்தி
லே வருவானாக.

௨௭ குரல்வளையறுக்கப்பட்டு இரத்தம்
பாவநிவர்த்திக்கென்று பரிசுத்த ஸ்தலத்தி
ற்குட் கொண்டுபோகப்பட்ட பாவம் போக்
குதலின் காளையெருதையும் பாவம் போக்
குதலின் வெள்ளாட்டுக்கிடாயையும் பாளய
த்திற்குப் புறம்பே கொண்டுபோய் அவைக
ளின் தோல்களையும் மாம்சத்தையும் சாணி
யையும் அக்கினியால் சுட்டெரிக்கக்கட
வர்கள்.

௨௮ அவைகளைச் சுட்டெரித்தவன் தன்
வஸ்திரங்களை வெளுத்துத் தன் மாம்சத்தை
த் தண்ணீரிலே கழுவிப் பிற்பாடு பாளயத்
திலே வருவானாக.

௨௯ ஏழாம் மாதம் பத்தாந்தேதியிலே நீங்க
ளுங்களாத்துமாக்களைத் தாழ்மைப்படுத்துவ
தும் தேசத்திலே பிறந்தவனும் உங்களுக்குள் உங்
கள் நடுவே தங்குகிற பரதேசியானவனுஞ் சரி
ஒரு வேலையுஞ் செய்யாதிருப்பதும் உங்க
ளுக்கு நித்தியகட்டளையாயிருக்கக்கடவது.

௩௦ ஏனென்றால் உங்களைச் சுத்திகரிக்கும்
படிக்கு அந்நாளில் உங்களுக்காகப் பாவநிவ
ர்த்தியுண்டாக்கப்படும். கர்த்தருக்கு முன்
பாக உங்களுடைய எல்லாப் பாவங்களுமறச்
சுத்திகரிக்கப்படுவீர்கள்.

௩௧ உங்களுக்கது ஓய்ந்திருக்கும் ஓய்வு
நாள். அதிலே உங்களாத்துமாக்களைத் தாழ்
மைப்படுத்தக்கடவீர்கள். இது நித்தியகட்
டளை.

௩௨ அபிஷேகம்பண்ணப்பட்டவனுந் தக
ப்பன் பட்டத்திற்கு வந்து ஆசாரிய
ஊழியஞ் செய்யக் கைநிரப்பப்பட்டவனு
மாகிய ஆசாரியனே பாவநிவர்த்தியையுண்
டாக்கக்கடவன். அவன் பரிசுத்த வஸ்திரங்க
ளாகிய பஞ்சுநூல் வஸ்திரங்களையுடுத்துக்
கொண்டு,

௩௩ பரிசுத்தமாகிய பரிசுத்த ஸ்தலத்திற்
கும் ஆசரிப்புக் கூடாரத்திற்கும் பீடத்திற்
குமாகப் பாவநிவர்த்தியையுண்டாக்கி
ஆசாரியருக்காகவுஞ் சபையின் எல்லா ஜ
னத்திற்காகவும் பாவநிவர்த்தியையுண்டா
க்கக்கடவன்.

௩௪ இப்படி வருஷத்திலே ஒருமுறை இஸ்
ரவேல் புத்திரருக்காக அவர்களுடைய எல்
லாப் பாவங்களுக்கும் நிவர்த்தியையுண்டா
க்குவது உங்களுக்கு நித்தியகட்டளையாயி
ருக்கக்கடவதென்று சொல்லென்றார். கர்த்
தர் மோசேக்குக் கற்பித்தபடியே ஆரோன்
செய்தான்.

படிககுககைககொளளககடவீர்கள. நாமு ஙகளபாபரஞுயகர்த்தர்.

௫ ஆகையாலநமததகடடளைகளையுமநம துநியாயஙகளையுங்கைககொளளககடவீர்க ள. அவைகளினபடிச்செய்கிறமனிதன * அ வைகளாலேபிழைபபான. நாம்காததர்.

* எசேக. ௨௰, ௰௧.

௬ ஒருவனுந்தனககுககிட்டினசதையா கியொருத்தியாடும அவளுடையநிருவாண ததைததிறக்கிறதற்குச சேரவேணடாம. நாமகாத்தர்.

௭ உனதகப்பனுடைய நிருவாணததை யும உனதாயின நிருவாணததையுநதிறவா யாக. அவள உனதாயானவள. அவள நிருவா ணததைததிறவாயாக.

௮ உனதகப்பனுடைய பெணசாதியின நிருவாணததைததிறவாயாக. அது உனத கப்பனுடையநிருவாணம.

௯ உனதகப்பனுககு அலலது உனதா யககுமகததியாகிய உனசகோதரிவீ டடிலேபிறநதிருநதாலுமபுறத்தியிலே பிற நதிருநதாலுஞசரி. அவளுடைய நிருவாண ததைததிறவாயாக.

௰ உனகுமாரனுடையமகளினநிருவாண ததையாகிலும உனகுமாரத்தியினுடைய மகளின நிருவாணததையெனகிலுநதிறவா யாக. ஏனெனில அது உனனுடையநிருவா ணம.

௰௧ உனதகபபனுககு அவனபெணசாதி யினிடத்திலேபிறநதகுமாரததியின நிருவா ணததைததிறவாயாக. அவளுனக்குசசகோ தரி.

௰௨ உனதகபபனுடைய சகோதரியின நிருவாணததைததிறவாயாக. அவள உனத கப்பனுடையசதையானவள.

௰௩ உனதாயினுடையசகோதரியின நிரு வாணததைததிறவாயாக. ஏனெனில அவள உனதாயினசதையானவள.

௰௪ உனதகபபனுடைய சகோதரனின நிருவாணததைததிறவாயாக. அவனபெண சாதியோடேசேராயாக. அவள உனககுச சிறியதாய.

௰௫ உனமருமகளின நிருவாணததைததி றவாயாக. அவளஉனகுமாரனுககுபபெண சாதி. அவளுடையநிருவாணததைததிறவா யாக.

௰௬ உனசகோதரனுடைய பெணசாதி யினநிருவாணததைததிறவாயாக அது உன சகோதரனுடையநிருவாணம.

௰௭ ஒருபெணசாதியோடேகூட அவள மகளினநிருவாணததையுநதிறவாயாக. அவ ளுடையகுமாரனின மகளையும அலலது அவ ளகுமாரத்தியின மகளையும இவளுடையநிரு வாணததைததிறககுமபடிககு விவாகமப ணணுயாக. இபபடிககொததவர்கள அவ ளுடையசதையானவர்கள. அதுதோஷம.

௰௮ பெணசாதியுணடையிலே உயிரோ டேயிருக்கக்கொளள அவளுககு உபததிர வமாக அவளசகோதரியினநிருவாணததை யுநதிறககிறதற்கு இவளைககூடவிவாகமப ணணுயாக.

௰௯ பெணசாதி தனவிலக்கததிலிருக்க க்கொளள அவளுடையநிருவாணதலைத்தி றககுமபடிககு அவளோடேசேராயாக.

௨௰ நீ உனககடுத்தவனுடையபெணசா திககு உன அனுபோகததைககொடுககவு ம அவளால உனனைததீட்டாககவுமவேண டாம.

௨௧ நீ உனவிததிலெதையாகிலுநதீயை க்கடக்கிறதற்குமோளேகுககுக கொடுக்கி றதிலெல உனபாரபரனுடைய நாமததைப பரிசுத்தக்கொலைசசலாக்காயாக. நாமகர் ததர்.

௨௨ ஸ்திரியின அனுபோகமாய ஆணோ டேசயனிக்காயாக. அதுஅருவருபபானது.

௨௩ யாதொருமிருகததினிடத்தில நீ உ ன அனுபோகததைககொடுககவும அதினா ல உனனைததீட்டாக்கவுமவேணடாம. ஸ்தி ரிமிருகததினமுனநினறு அதைத் தனமே லேறபபணணவுமவேணடாம. அது அருவ ருபபானகாரியமாறு.

௨௪ இவைகளில ஒனறிலும உஙகளைத தீட்டாக்காதிருபபீர்களாக. ஏனெனறால நா ம உஙகளுககுமுனபாகததுரத்துகிற சாதி கள இவைகளாலெல்லாந்தஙகளைததீட்டா க்கினபடியாலேதேசநதீட்டாயிறறு.

௨௫ ஆனதுகொணடுதேசநதனகுடிகளை கக்கிப்போடத்தக்கதாக அதின அக்கிரமததைவிசாரிக்கிறேன.

௨௬ ஏனெனில இநத அருவருபபுகளை யெலலாம உஙகளுககுமுனனிருநத அநத தேசத்தினமனிதர்செயததினாலே தேசந தீட்டாயிறறு.

௨௭ இபபொழுதும உஙகளுககுமுனனி ருநதசசனஙகளைததேசங கக்கிபபோட்டது போலே அது உஙகளையும நீஙகள அதைத தீட்டாககுமபொழுது கக்கிபபோடாதப டிககு,

௨௮ நீஙகள நமமுடையகட்டளைகளையு ம நமமுடைய நியாயஙகளையுங கைககொ ணடு தேசததிலேபிறநதவனுமதுஞசரி உங களநடுவேதஙகுகிற பரதேசியானுமதுஞசரி இநத அருவருபபுகளிலொனறையுஞ செய யாதிருபபீர்களாக.

௨௯ ஏனென்றால எவர்களாகிலும இந த எலலா அருவருபபுகளிலும யாதொனறை ச்செயதாற்செயத அநத ஆத்துமாக்கள தஙகளசனததிலிராதபடிககு அறுபபுணடா ர்கள.

௩௰ ஆகையால உஙகளுககுமுன நடநத அருவருபபானமுறைமைகளில யாதொனறி னபடியுநீஙகள்செயது அவைகளாலதீட்

டாகாதபடிக்கு நம்முடைய கட்டளையைக் கைக்கொள்வீர்களாக. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

## ௰௯. அதிகாரம்.

பரிசுத்தத்திற்கு நடக்குமதற்கும் அடுத்த பலவிதக் கட்டளைகள்.

பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது.

௨ நீ இஸ்ராவேல் புத்திரரின் சபையனைத்தோடும் பேசிச் சொல்லவேண்டியதேதெனில் * பரிசுத்தவான்களாயிருக்கக்கடவீர்கள். ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தராகிய நாம் பரிசுத்தர். * ௧. பேது. ௧, ௰௬.

௩ நீங்கள் அவனவன் தன் தாய்க்குந் தன் தகப்பனுக்கும் பயந்திருக்கவும் நம்முடைய ஓய்வுநாட்களைக் கைக்கொள்ளவுங்கடவீர்கள். நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௪ விக்கிரகங்களை நோக்காமலும் வார்ப்பிக்கப்பட்ட தேவர்களை யுங்களுக்குண்டாக்காமலுமிருப்பீர்களாக. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௫ நீங்கள் சமாதானபலியைக் கர்த்தருக்குச் செலுத்தினால் அதை யுங்கள் மனப்பூர்வத்தினாலே செலுத்துவீர்களாக.

௬ நீங்கள் அதைச் செலுத்துகிற அந்நாளிலும் மறுநாளிலும் அது போசிக்கப்படவும் மூன்றாம் நாள் மட்டும் மீதியானது அக்கினியாலே சுட்டெரிக்கப்படவுங்கடவது.

௭ மூன்றாம் நாளில் அதில் ஏதையாகிலும் போசிக்கப்பட்டால் அக்களிப்பாயிருக்கும் பிரியமாயிராது.

௮ அப்படிப் போசிக்கிறவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான். ஏனெனிற் கர்த்தருக்குப் பரிசுத்தமானதைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினான். அந்த ஆத்துமா தன் சனத்தாரில்லாதபடிக்கு அறுப்புண்பான்.

௯ உங்கள் தேசத்தின் வெள்ளாண்மையை நீங்கள் அறுக்கையில் உன் வயலின் ஓரத்திலிருக்கிறதைத் தீர அறுக்காமலுஞ் சிந்திக்கிடக்கிற கதிர்களைப் பொறுக்காமலும்,

௰ உன் திராட்சத்தோட்டத்திலே பின்னறுப்பை யறுக்காமலும் அதிலே சிந்திக்கிடக்கிற பழங்களைப் பொறுக்காமலும் அவைகளை யெளியவனுக்கும் பரதேசிக்கும் விட்டுவிடுவாயாக. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௰௧ களவு செய்யாமலும் பொய் சொல்லாமலும் ஒன்றுக்கொன்று வஞ்சனையும்,

௰௨ நமது நாமத்தைக் கொண்டு பொய்யாணையிடுகிறதினால் உங்கள் பராபரனுடைய நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்காமலுமிருப்பீர்களாக. நாம் கர்த்தர்.

௰௩ உனக்கடுத்தவனை யொடுக்காமலுங் கொள்ளையிடாமலுமிருப்பாயாக. கூலிக்காரனுடைய கூலி உன்னிடத்தில் விடியற்காலமட்டும் இராத்தங்கலாகவேண்டாம்.

௰௪ செவிடனைச் சபிக்காமலுங் குருடன் முன்பாகத் தடுக்கலை வைக்காமலும் உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக. நாம் கர்த்தர்.

௰௫ நியாயத்திலே நியாயக்கேடு செய்யீர்களாக. சிறியவனுடைய முகத்தைப் பாராமலும் பெரியவனுடைய முகத்தைப் பேணாமலும் உனக்கடுத்தவனுக்கு நீதியாக நியாயந்தீர்ப்பாயாக.

௰௬ உன் சனத்தாருக்குள்ளே பின் போணிக்காரனாய்த் திரியாயாக. உனக்கடுத்தவனுடைய இரத்தத்திற்கு விரோதமாய் நிற்காயாக. நாம் கர்த்தர்.

௰௭ உன் சகோதரனை யுன்னிருதயத்திலே பகையாயாக. உனக்கடுத்தவனாலே பாவத்தையிருக்கவொட்டாமல் அவனைக் கடிந்துகொள்ளவே கொள்வாயாக.

௰௮ சிரிச்சிக்கட்டாமலும் உன் சனப் புத்திரர்மேலே கோபம் வைக்காமலும் உனக்கடுத்தவனை யுன்னைப்போலே சிநேகிப்பாயாக. நாம் கர்த்தர்.

௰௯ நமது கட்டளைகளைக் கைக்கொள்வீர்களாக. உன் மிருகஜீவன்களை வேற்றுச்சாதியோடே கூடவிடாயாக. உன் வயலில் வெவ்வேறு வகை விதைகளை விதையாயாக. இருவகை நூலுள்ள வஸ்திரம் உன் மேலேறிருப்பதாக.

௨௰ ஒருவனுக்கு அடிமையாயிருந்து அவனாலே கைப்பிடிக்கப்பட்டும் மீட்கப்படாமலும் தன்னிச்சையாய் விடப்படாமலும் போன பெண்ணோடே ஒருவன் சயனித்தால் அவர்கள் சாவாமல் அடிக்கப்படவேண்டும். ஏனெனில் அவள் தன்னிச்சையானவளல்ல.

௨௰௧ அவன் தன் குற்றத்தைப் போக்கும் பலியாகக் கர்த்தருக்கு ஒரு ஆட்டுக்கிடாயை யாசரிப்புக்கூடாரவாசலிலே கொண்டுவரக்கடவன்.

௨௰௨ அதினாலே ஆசாரியன் அவன் செய்த பாவத்தினிமித்தம் அவனுக்குக் கர்த்தருக்கு முன்பாகப் பாவநிவர்த்தியையுண்டாக்கக்கடவன். அப்பொழுது அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்கப்படும்.

௨௰௩ நீங்கள் தேசத்திலே வந்து போசிக்குங் கனிகளைத் தருகிற பலவித மரங்களை நட்டால் அவைகளின் கனியைச் சுன்னத்தில்லாததாக எண்ணுவீர்கள். மூன்று வருஷம் அது போசிக்கப்படாமல் உங்களுக்குச் சுன்னத்தில்லாததாய் எண்ணப்படுவதாக.

௨௰௪ பிறகு நான்காம் வருஷத்திலே அவைகளின் கனியெல்லாங் கர்த்தருக்குத் துதி செலுத்தப் பரிசுத்தமாயிருப்பதாக.

௨௰௫ ஐந்தாம் வருஷத்திலோவென்றால் அவைகளின் கனியைப் போசிக்க அவைகள் உ

ங்களுக்குத்தங்களைப்பலனைக் கொடுத்துவர்க் கடவது. நாம உங்களை பராபரனுகிய கர்த்தர்.

௨௬ இரத்தத்தோ டிருக்கிறதைப்பொசிப்பீர்களாக. நிமித்தம்பாராமலும நாட்கள்பாராமலுமிருப்பீர்களாக.

௨௭ உங்களதலைமயிரைச்சுற்றிலுமமொதுக்காமலுந்தாடியின ஓரங்களைக்கெடுக்காமலும,

௨௮ செத்தவனுக்காக உங்கள மாம்சத்தைக்கீறிக்கொள்ளாமலும அடையாளமான எழுத்தை யுங்களிலேபோடாமலுமிருப்பீர்களாக. நாமகர்த்தர்.

௨௯ தேசமவேசித்தனம பணணித்தோஷத்தால நிறையப்படாதபடிக்கு உனகுமாரத்தியை வேசித்தனமபணண விடுகிறதினால பரிசுத்தக்கொலைச்சலாக்காயாக.

௩௰ நமமுடைய ஓயவுநாட்களைக் கைக்கொணடு நமமுடைய பரிசுத்தஸ்தலத்திற்குப்பயப்படுவீர்களாக. நாம கர்த்தர்.

௩௧ அஞ்சனமபார்க்கிறவர்களையுங் குறிகாரரையுமநோக்காதிருப்பீர்களாக. அவர்களைத்தேடி யவர்களாலே தீட்டுப்படாதீர்களாக. நாம உஙகளபராபரனுகியகர்த்தர்.

௩௨ நரைததவனுக்குமுனபாக எழுநது முதிர்வயதுளளவன முகத்தைக கனமபணணி உனபராபரனுக்குப பயப்படுவாயாக. நாமகர்த்தர்.

௩௩ பரதேசி உங்களதேசத்திலஉனனோடேதங்கினுல் அவனைச்சிறுமைப்படுத்தீர்களாக.

௩௪ உஙகளிடத்திலே தஙகுகிறபரதேசி உஙகளுக்குள்ள தேசத்திலே பிறநதவனைப்போலிருப்பானுக. அவனை யுனனைப்போல நேசிப்பாயாக. ஏனெனில எகிப்து தேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்கள. நாம உங்களபராபரனுகியகர்த்தர்.

௩௫ அளவிலும நிறுக்கிற நிறையிலும படியிலும் நியாயக்கேடுசெயயீர்களாக.

௩௬ சுமுத்திரையான திராசும சுமுத்திரையான படிக்கல்லும சுமுத்திரையானமரக்காலும சுமுத்திரையான படியும உஙகளுக்கிருக்கக்கடவது. நாம உஙகளை எகிப்துதேசத்திலிருந்துபுறப்படப்பணணின உஙகளபராபரனுகியகர்த்தர்.

௩௭ ஆகையாலநமமுடைய எல்லாக்கட்டளைகளையும நமமுடைய எல்லாநியாயங்களையுங்கைக்கொணடு அவைகளின்படிச்செயயக்கடவீர்கள. நாம கர்த்தரென்று சொலலென்றார்.

## ௨௰. அதிகாரம்.

பாவங்களுக்குக் குறிக்கப்பட்ட ஆக்கினைகள.

௧ கர்த்தர் மோசேயோடேபேசிச்சொனனதாவது.

௨ பின்னையும நீ இஸ்ரவேலபுத்திரரோடேசொல்லவேணடியதேதெனில இஸ்ரவேல்புத்திரரிலும இஸ்ரவேலிலே தஙகுகிறபரதேசிகளிலும எவனுகிலுந்தனவித்திலேயாதொனறை மோளோகுக்குக் கொடுத்தாற் கொலையுண்கவே கொலையுண்கக் கடவன. தேசத்தின்சனம அவனைக் கலலெறிவார்களாக.

௩ நாம அப்படிக்கொடுத்தவனுக்கு விரோதமாகநமது முகத்தைத்திருப்பி அவன நமது பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தி நமதுபரிசுத்தநாமத்தைப பரிசுத்தக்குலைச்சலாக்குமபடிக்குத தன வித்தை மோளோகுக்குக்கொடுத்தபடியினாலே அவனைத்தனசனத்தாரிலிராதபடிக்குச்சங்காரமபணணுவோம்.

௪ அப்படிக்கொடுத்தவன தனவித்திலே யாதொனறைமோளோகுக்குக் கொடுக்கக் கொளளதேசத்தின் சனம் அவனைக்கொலைசெய்யாதபடிக்குத்தஙகள்கணகளை அவனை விடடுமறைக்கவேமறைத்தால,

௫ நாம அந்தமனிதனுக்கும அவன வமசத்திற்கும விரோதமாகநமமுடையமுகத்தைத்திருப்பி அவனையும அவனபிறகாலே மோளோகைப்பினதொடர்ந்து சோரமபோனயாவரையுந்தஙகளசனத்திலிராதபடிக்குச்சஙகாரமபணணுவோம

௬ அஞ்சனமபார்க்கிறவர்களையுங் குறிகாரரையும பினதொடர்ந்து சோரமபோக எந்த ஆத்துமா அவர்களைநோக்கியிருக்கிறதோ அந்த ஆத்துமாவுக்கு விரோதமாகவும நமதுமுகத்தைத்திருப்பி அவனைத்தனசனத்திலிராதபடிக்குச் சஙகாரமபணணுவோம. * ௰௯, ௩௧.

௭ ஆனபடியினாலே உஙகளைப்பரிசுத்தமாக்கிக்கொணடு பரிசுத்தவான்களாயிருங்கள. ஏனெனிலநாம உஙகளபராபரனுகிய கர்த்தர்.

௮ நமதுகட்டளைகளைக்கைக்கொணடு அவைகளினபடிச்செயயுஙகள. நாம உஙகளைப்பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.

௯ எவனுகிலுந்தனதகப்பனையுந்தனதாயையுஞ்சபித்தாற் கொலையுணகவே கொலையுணகக்கடவன். தனதகப்பனையுந் தனதாயையுஞ்சபித்தால அவன இரத்தப்பழி அவனமேலிருப்பதாக.

௰ ஒருவனுடையபெணசாதியோடேயாதொருவனவிபசாரமபணணிஞல அப்பொழுத்தனக்கடுத்தவன பெணசாதியோடே விபசாரமபணணின அநதவிபசாரனும அநதவிபசாரியுங் கொலையுணகவே கொலையுணகக்கடவர்கள.

௰௧ தனதகப்பன பெணசாதியோடேசயனிக்கிறவன தனதகப்பனநிருவாணத்தைத்திறநததால, இருவருங கொலையுணகவே

கொலையுண்கக்கடவர்கள். அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருப்பதாக.

௰௨ ஒருவன் தன் மருமகளோடே சயனித்தால் இருவரும் கொலையுண்கவே கொலையுண்கக்கடவர்கள். தாறுமாறானதைச் செய்தார்கள். அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருப்பதாக.

௰௩ ஒருவன் ஸ்திரீயினோடே சம்போகம் பண்ணுகிறது போல ஆணோடே சயனித்தால் அருவருப்பானகாரியஞ் செய்த இருவரும் கொலையுண்கவே கொலையுண்கக்கடவர்கள். அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருப்பதாக.

௰௪ ஒருவன் ஒரு பெண்சாதியையும் அவள் தாயையும் படைத்தால் அது தோஷம். உங்கள் நடுவே தோஷமிராதபடிக்கு அவனையும் இவர்களையும் அக்கினியாலே சுட்டெரிப்பார்களாக.

௰௫ ஒருவன் மிருகத்தினிடத்திலே தன் சம்போகத்தை விட்டால் கொலையுண்கவே கொலையுண்கக்கடவன். அந்த மிருகத்தையுங் கொல்லக்கடவீர்கள்.

௰௬ ஒரு ஸ்திரீயானவள் ஒரு மிருகத்தோடே அதைத் தன்மேலேறப்பண்ணச் சேர்ந்தால் அந்த ஸ்திரீயையும் அந்த மிருகத்தையுங் கொல்லக்கடவாய். இரண்டுங் கொலையுண்கவே கொலையுண்கக்கடவது. அவைகளின் இரத்தப்பழி அவைகளின் மேலிருப்பதாக.

௰௭ ஒருவன் தன் தகப்பனுக்கு அல்லது தன் தாய்க்குக் குமாரத்தியாகிய தன் சகோதரியைச் சேர்த்துக்கொண்டு அவன் இவள் நிருவாணத்தையும் இவள் அவன் நிருவாணத்தையும் பார்த்தால் அது பாதகம். அவர்கள் தங்கள் ஜனப்புத்திரர்களுடைய கண்களுக்கு முன்பாக அறுப்புண்கக்கடவர்கள். தன் சகோதரியின் நிருவாணத்தைத் திறந்த அவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான்.

௰௮ ஒருவன் தூரஸ்திரீயோடே சயனித்து அவளுடைய நிருவாணத்தையும் ஊற்றையுந் திறந்து அவளுந் தன் உதிரத்தின் ஊற்றைத் திறந்து வைத்தால் இருவருந் தங்கள் ஜனத்தாரின் நடுவிலிராதபடிக்கு அறுப்புண்கக்கடவர்கள்.

௰௯ உன் தாயினுடைய சகோதரியின் நிருவாணத்தையும் உன் தகப்பனுடைய சகோதரியின் நிருவாணத்தையுந் திறவாயாக. அப்படிச் செய்தவன் தன் சரீரத்தை அவமானமாக்கினான். தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.

௨௰ ஒருவன் தன் சிறிய தகப்பன் பெண்சாதியோடே சயனித்தால் அவன் தன் சிறிய தகப்பன் நிருவாணத்தைத் திறந்தான். தங்கள் பாவத்தைச் சுமப்பார்கள். சந்தானமில்லாமற் சாவார்களாக.

௨௧ ஒருவன் தன் சகோதரன் பெண்சாதியைப் படைத்தால் அது அசுத்தம். தன் சகோதரன் நிருவாணத்தைத் திறந்தான். சந்தானமற்றிருப்பார்கள்.

௨௨ ஆகையால் நீங்கள் குடியிருப்பதற்காக நாம் உங்களைக் கொண்டு போகிற தேசம் உங்களைக் கக்கிப் போடாதபடிக்கு நீங்கள் நம்முடைய சகல கட்டளைகளையுஞ் சகல நியாயங்களையுங் கைக்கொண்டு அவைகளின்படிச் செய்யுங்கள்.

௨௩ நாம் உங்களுக்கு முன்பாகத் துரத்திவிடுகிற சாதியினுடைய வழிபாடுகளிலே நடவாதேயுங்கள். ஏனெனில் அப்படிக்கொத்த காரியங்களையெல்லாஞ் செய்தார்கள். ஆகையால் நாம் அவர்களை அரோசித்து,

௨௪ நீங்கள் அவர்கள் தேசத்தைச் சுதந்தரிப்பீர்களென்று உங்களோடே சொன்னோம். பாலுந் தேனும் ஓடுகிற அந்தத் தேசத்தை உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுப்போம். நாமுங்களை ஜனசாதிகளைவிட்டுப் பிரித்தெடுத்த உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௨௫ ஆகையாற் சுத்தமான மிருகங்களுக்குந் தீட்டான மிருகங்களுக்குந் தீட்டான பறவைகளுக்குஞ் சுத்தமான பறவைகளுக்கும் நீங்கள் வித்தியாசம் பண்ணி நாமுங்களுக்குத் தீட்டாக எண்ணச்சொல்லிவிலக்கின மிருகங்களாலும் பறவைகளாலுந் தரையோடே ஊருகிறயாதொன்றாலும் உங்கள் ஆத்துமங்களை அருவருப்பாக்காதிருப்பீர்களாக.

௨௬ நமக்குப் பரிசுத்தவான்களாயிருப்பீர்களாக. ஏனெனிற் கர்த்தராகிய நாம் பரிசுத்தராயிருந்து நீங்கள் நம்முடையவர்களாயிருக்கும்படிக்கு உங்களைச் சனசாதிகளைவிட்டுப் பிரித்தெடுத்தோம்.

௨௭ *அஞ்சனம்பார்க்கிற ஆவியுள்ள அல்லது குறிசொல்லுகிற மனிதருக்குள் ஒரு ஸ்திரீயாகிலுங் கொலையுண்கவே கொலையுண்கக்கடவர்கள். அவர்களைக் கல்லெறிவார்களாக. அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருக்கக்கடவதென்று சொல்லென்றார்.

* ௨. மோ. ௨௨, ௰௮.

## ௨௧. அதிகாரம்.

### ஆசாரியனைச் சந்திக்கடுத்த நியாயப் பிரமாணங்கள்.

பிறபாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது. ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்களிலொருவனுந் தன் ஜனத்தாரிற் செத்துப்போன ஒருவராலே தன்னைத் தீட்டுப்படுத்தவேண்டாமென்று அவர்களோடே சொல்லு.

௩ நீ அவர்களோடே சொல்லவேண்டியதேதெனில்: உங்கள் தலைமுறைகளிலுள்ள உங்களெல்லா வித்தாரிலும் எவனாகிலுந் தன்மேல் தீட்டிருக்கையில் இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்கு நியமமாய்ச் செலுத்துகிற பரிசுத்த வஸ்துக்களண்டை சேர்ந்தால் அந்த ஆத்துமா நம்முடைய சமுகத்துக்கு முன்பாக இராதபடிக்கு அறுப்புண்பான். நாம் கர்த்தர்.

௪ ஆரோனின் வித்தாரில் எவன் குஷ்டரோகியாயாவது பிரமியக்காரனாயாவது இருந்தால் அவன் சுத்தமாகுமட்டும் பரிசுத்த வஸ்துக்களிலே போசிக்கவேண்டாம். செத்த உடலினாலே தீட்டானதைத் தொட்டவனும் அல்லது இந்திரியங்கழிந்தவனும்,

௫ அல்லது தீட்டுப்பட்டதொரு ஊர்வனத்தையாகிலும் எந்தத் தீட்டுமுள்ள மனிதனையாகிலுந் தொட்டவனும் அப்படித்தானே.

௬ அப்படித் தொட்டவன் சாயங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பான். அவன் பரிசுத்த வஸ்துக்களிலே போசியாமல் தன் மாம்சத்தைத் தண்ணீரிலே கழுவக்கடவன்.

௭ சூரியன் அஸ்தமித்த பிறபாடு சுத்தமாயிருப்பான். பிறகு அவன் பரிசுத்த வஸ்துக்களிலே போசிக்கலாம். ஏனெனில் அது அவனுடைய அப்பம்.

௮ தானாய்ச் செத்ததையும் பீறுண்டதையும் அவன் போசிக்கிறதினாலே தீட்டுப்படவேண்டாம். நாம் கர்த்தர்.

௯ ஆகையாற் பரிசுத்தமானதையவர்கள் பரிசுத்தக் குலைச்சலாக்குகிறதினாலே தங்கள்மேல் பாவஞ்சுமத்திச் சாவாதபடிக்கு நம்முடைய காவலைக் காக்கக்கடவர்கள். நாம் அவர்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.

௰ அந்நிய மனிதனொருவனும் பரிசுத்த வஸ்துக்களிலே போசிக்கவேண்டாம். ஆசாரியன் வீட்டில் விருந்தாயிருக்கிறவனுங் கூலிவேலை செய்கிறவனும் பரிசுத்த வஸ்துவிலே போசிக்கவேண்டாம்.

௰௧ ஆசாரியன் தன் பணத்தினாலே கொண்டவனும் அவன் வீட்டிலே பிறந்தவனுமோவெனில் அவனுடைய அப்பமாகிய அதிலே போசிப்பார்களாக.

௰௨ ஆசாரியனுடைய குமாரத்தி அந்நியனுக்கு வாழ்க்கைப்பட்டாற் பரிசுத்த வஸ்துக்களின் படைப்பிலே போசிக்கவேண்டாம்.

௰௩ கைம்பெண்சாதியாய்ப்போன அல்லது தள்ளப்பட்டவளான ஆசாரியனுடைய குமாரத்தி வித்தில்லாதிருந்து தன் தகப்பன் வீட்டிலே தன்னுடைய இளவயதிலிருந்ததுபோலே திரும்ப வந்திருந்தாளேயாகில் தன் தகப்பன் அப்பத்திலே போசிப்பாளாக. ஆனால் அந்நியனாகிய ஒருவனும் அதிலே போசிக்கவேண்டாம்.

௰௪ ஒருவன் அறியாமற் பரிசுத்த வஸ்துவிலே போசித்ததுண்டானால் அவன் அதின்மேல் ஐந்திலொரு பங்கை அதிகமாகக் கூட்டிப் பரிசுத்த வஸ்துவோடேகூட ஆசாரியனுக்குக் கொடுக்கக்கடவன்.

௰௫ அவர்கள் கர்த்தருக்குச் செலுத்துகிற இஸ்ரவேல் புத்திரரின் பரிசுத்த வஸ்துக்களைப் பரிசுத்தக் குலைச்சலாக்காமலும்,

௰௬ அவைகளைப் போசிக்கிறதினாலே அவர்கள் மேலே குற்றமான அக்கிரமத்தைச் சுமரப்பண்ணாமலுமிருப்பார்களாக. ஏனென்றால் நாம் அவர்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தரென்று சொல்லென்றார்.

பலிமிருகங்கள் எப்படிக்கொத்தவைகளாயிருக்கவேண்டுமென்பது.

௰௭ பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது.

௰௮ நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடும் பேசிச் சொல்லவேண்டியதேதெனில்: இஸ்ரவேல் வீட்டாரிலும் இஸ்ரவேலிலே தங்குகிற பரதேசிகளிலும் எவர்கள் தங்களுடைய சகல பொருத்தனைகளின்படியாகிலும் உற்சாயத்தின்படியாகிலுஞ் சர்வாங்கத்தகனமாகக் கர்த்தருக்குத் தங்கள் காணிக்கையைச் செலுத்தப்போகிறார்களோ,

௰௯ அவர்கள் தங்கள் மனதின்படியே மாடுகளிலாகிலும் ஆடுகளிலாகிலும் வெள்ளாடுகளிலாகிலும் பழுதற்ற ஒரு ஆணைப் பிடித்துவந்து செலுத்துவார்களாக.

௨௰ பழுதுள்ள ஒன்றையுஞ் செலுத்தீர்களாக. ஏனெனில் அது உங்களுக்காகக் கர்த்தருக்குப் பிரியமாயிருப்பதில்லை.

௨௰௧ ஒருவன் விசேஷித்த பொருத்தனைக்காக அல்லது உற்சாயமனதாகக் கர்த்தருக்கு மாடுகளிலாகிலும் ஆடுகளிலாகிலுஞ் சமாதானபலியைச் செலுத்தப்போனால் அது பிரியமாயிருக்கும்படிக்குக் கொஞ்சமும் பழுதில்லாத உத்தமமாயிருக்கவேண்டும்.

௨௰௨ குருடும் நெரிசலுமானதுங் கழிச்சலுள்ளதுஞ் சொறியுள்ளதும் முதலானவைகளை நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தாமலும் அவைகளாலே கர்த்தருக்குப் பலிபீடத்தின்மேல் தகனபலியைச் செய்யாமலுமிருப்பீர்களாக.

௨௰௩ நீண்ட அல்லது குறைந்த அவயவமுள்ள மாட்டையும் ஆட்டையும் நீ உற்சாயபலியாக்கலாம். ஆனாற் பொருத்தனைக்காக அது பிரியமாயிருப்பதில்லை.

௨௰௪ நசுங்கினதையும் நொறுங்கினதையுங் காயம்பட்டதையும் விதையறுக்கப்பட்டதையும் நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தாமலும் உங்கள் தேசத்திலே பலியிடாமலுமிருப்பீர்களாக.

௨௰௫ அந்நியபுத்திரன் கையிலும் இப்படிக்கொத்ததை வாங்கி உங்கள் பராபரனுடை

உக மிருகத்தைக் கொன்றவன் வதிற் கொடுக்கக்கடவன். மனிதனைக் கொன்றவனோ கொலையுண்கக்கடவன்.

உஉ உங்களிலே பரதேசிக்கும் தேசத்திலே பிறந்தவனுக்கும் ஏகமான நியாயமிருக்கக்கடவது. ஏனெனில் நான் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

உங அப்படியே தூஷணித்தவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய் அவனைக் கல்லெறிவதற்காக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னான். கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே இஸ்ரவேல் புத்திரர் செய்தார்கள்.

## உரு. அதிகாரம்.

தேசத்தின் நிலங்களுக்கு ஓய்விருக்கவேண்டிய ஏழாம் வருஷத்தின் கட்டளை.

க கர்த்தர் சீனாய்ப் பர்வதத்தில் மோசேயோடே பேசிச் சொன்னதாவது.

உ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில் நாம் உங்களுக்குக் கொடுக்கும் தேசத்திலே நீங்கள் வந்திருக்கும்பொழுது தேசம் கர்த்தருக்கென்று ஓய்வுசலைக் கொண்டாடவேண்டும்.

ங * ஆறு வருஷம் உன் வயலை விதைத்து உன் திராட்சத் தோட்டத்தைக் கிளைநறுக்கி அதின் பலனைச் சேர்ப்பாயாக.

* உ. மோசே. உங, ய. யக.

ச ஏழாம் வருஷத்திலோவென்றால் கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும் ஓய்வு தேசத்திற்கிருக்கவேண்டும். உன் வயலை விதைக்காமலும் உன் திராட்சத் தோட்டத்தைக் கிளைநறுக்காமலும்,

ரு சுயமாய் உனக்கு விளைந்த பயிரானதை யறுத்துக்கொள்ளாமலும் நீ கிளைநறுக்காதே விட்ட திராட்சியின் பழங்களைச் சேர்க்காமலுமிருப்பாயாக. தேசத்திற்கது ஓய்ந்திருக்கும் வருஷமாயிருக்கக்கடவது.

சு தேசத்தின் ஓய்விலே பயிராகிறது உங்களுக்கு ஆகாரமாயிருப்பதாக. உனக்கும் உன் வேலைக்காரனுக்கும் உன் வேலைக்காரிக்கும் உன் கூலியாளுக்கும் உன்னிடத்திலே தங்குகிற உன்னுடைய பரதேசிக்கும்,

எ உன் மிருகஜீவனுக்கும் உன் தேசத்திலிருக்கிற காட்டுச்சீவனுக்கும் அதின் பலனெல்லாம் ஆகாரமாயிருப்பதாக.

### சீர்திருந்தும் ஐம்பதாம் வருஷத்தின் கட்டளை.

அ பின்னையும் ஏழு ஓய்வு வருஷங்களுள்ள ஏழேழு வருஷங்களையெண்ணுவாயாக. அந்த ஏழு ஓய்வு வருஷங்களுள்ள நாட்கள் உனக்கு நாற்பத்தொன்பது வருஷமாகும்.

கூ அப்பொழுது ஏழாமாதம் பத்தாந் தேதியிலே தொனிக்கிற எக்காளத்தைச் சூறறிவிக்கப்பண்ணுவாயாக. பாவ நிவர்த்தியாகுதலின் நாளிலே அதையுங்கள் தேசமெங்கும் தொனிக்கப்பண்ணி,

ய ஐம்பதாம் வருஷத்தைப் பரிசுத்தமாக்கித் தேசத்தின் குடிகளுக்கெல்லாம் விடுதலையைக் கூறக்கடவீர்கள். அது உங்களுக்குச் சீர்திருந்தும் வருஷம். அதிலே நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்கும் அவரவர் தங்கள் வம்சத்திற்கும் திரும்புவீர்கள்.

யக அந்த ஐம்பதாம் வருஷம் உங்களுக்குச் சீர்திருந்தும் வருஷமாயிருப்பதாக. அதிலே விதைக்காமலும் சுயமாய் விளைந்த பயிரானதை யறுத்துக்கொள்ளாமலும் கிளைநறுக்காதே விடப்பட்ட திராட்சியின் பழங்களைச் சேர்க்காமலுமிருப்பீர்களாக.

யஉ ஏனெனில் அது சீர்திருந்தும் வருஷம். அது உங்களுக்குப் பரிசுத்தமாயிருக்கவேண்டும். அதின் பலனை வயலிலேயிருந்து பொறுக்கிக்கொண்டிருப்பீர்களாக.

யங சீர்திருந்தும் அந்த வருஷத்திலே நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்குத் திரும்புவீர்கள்.

யச ஆகையால் ஏதாகிலும் உங்களுக்கடுத்தவனுக்கு விற்று அல்லவென்று அவன் கையிலே கொண்டீர்களானால் ஒருவரையொருவர் இடுக்கண்செய்யீர்கள்.

யரு சீர்திருந்தும் வருஷத்திற்குப்பிறகு சென்ற வருஷங்களின் தொகைக்குத் தக்கதாக உனக்கடுத்தவன் கையிலே கொள்ளுவாயாக. பலனுள்ள வருஷங்களின் தொகைக்குத் தக்கதாக அவன் உனக்கு விற்பானாக.

யசு வருஷங்கள் அநேகமானால் அதின் விலையையுயர்த்திக்கொள்ளுவாயானால் அதைத் தாழ்த்துவாயாக. ஏனெனில் பலனுள்ள வருஷங்களின் தொகையைப் பார்த்து அவன் உனக்கு விற்கிறான்.

யஎ உங்களிலொருவனும் தனக்கடுத்தவனை யிடுக்கண்செய்யவேண்டாம். உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக. ஏனெனில் நான் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

யஅ நம்முடைய கட்டளைகளின்படி செய்து நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்யக்கடவீர்கள். அப்பொழுது தேசத்திலே சுகமாய்க் குடியிருந்து,

யகூ பூமிதன் கனியைத் தருகிறதினாலே திருப்தியாய்ச் சாப்பிட்டு அதிலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

உய ஏழாம் வருஷத்திலென்னத்தைப் போசிப்போம். இதோ, நாங்கள் விதைக்காமலும் எங்கள் பலனைச் சேர்க்காமலுமிருக்கவேண்டுமேயென்றீர்களேயானால்,

உக ஆறும் வருஷம் மூன்று வருஷங்களின் பலனைத் தர நமது ஆசீர்வாதத்தை யுங்களுக்காகக் கட்டளையிடுவோம்.

௰௨ அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் சீனாய் வனாந்தரத்திலிருந்து தங்கள் பிரயாணங்களாய்ப் புறப்பட்டார்கள். மேகம் பாரான் வனாந்தரத்திலே தங்கித்தரித்தது.

௰௩ இப்படியே கர்த்தர் மோசேயைக் கொண்டு கட்டளையிட்டபடியே முதற்பயணம் பண்ணினார்கள்.

௰௪ முதலாவது யூதா புத்திரருடைய பாளயக் கொடியின் கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவனுடைய சேனைக்கு அம்மினதாபின் குமாரனான நகசோன் தலைவனாயிருந்தான்.

௰௫ இசக்கார் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குச் சூவாரின் குமாரனான நெதனெயேல் தலைவனாயிருந்தான்.

௰௬ செபுலோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஏலோனின் குமாரனான எலியாப் தலைவனாயிருந்தான்.

௰௭ அப்பொழுது வாசஸ்தலம் இறக்கி வைக்கப்பட்டது. அதைக் கெர்சோன் புத்திரரும் மெறாரி புத்திரரும் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள்.

௰௮ பிறகு ரூபென் புத்திரருடைய பாளயக் கொடியின் கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவன் சேனைக்குச் சேதேயூரின் குமாரனான எலிசூர் தலைவனாயிருந்தான்.

௰௯ சிமியோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குச் சூரிஷதாயின் குமாரனான செலூமியேல் தலைவனாயிருந்தான்.

௨௰ காத் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குத் தேகுவேலின் குமாரனான எலியாசாப் தலைவனாயிருந்தான்.

௨௧ அப்பொழுது கேகாத்தியர் பரிசுத்தமானதைச் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள். இவர்கள் வருமட்டும் அவர்கள் வாசஸ்தலத்தை எடுத்து நிறுத்தினார்கள்.

௨௨ பிறகு எப்பிராயீம் புத்திரருடைய பாளயக் கொடியின் கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவனுடைய சேனைக்கு அம்மியூதின் குமாரனான எலிஷாமா தலைவனாயிருந்தான்.

௨௩ மனாசே புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குப் பெதாசூரின் குமாரனான காமாலியேல் தலைவனாயிருந்தான்.

௨௪ பென்யமீன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குக் கீதெயோனியின் குமாரனான அபிதான் தலைவனாயிருந்தான்.

௨௫ பிறகு தாண் புத்திரருடைய பாளயக் கொடியின் கீழிருக்கிறவர்கள் எல்லாப் பாளயங்களுக்கும் பின்பாளயமாகத் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவனுடைய சேனைக்கு அம்மிஷதாயின் குமாரனான அகியேசேர் தலைவனாயிருந்தான்.

௨௬ ஆசேர் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஒக்கிரானின் குமாரனான பாகியேல் தலைவனாயிருந்தான்.

௨௭ நப்தலி புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஏனானின் குமாரனான அகீரா தலைவனாயிருந்தான்.

௨௮ இந்த வரிசையாய் இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சேனைகளின்படியே பயணம் போனார்கள்.

௨௯ மோசே தன் மாமனாகிய ரேகுவேலென்ற மீதியனியனுடைய குமாரனாகிய ஓபாபுடனே, உங்களுக்குக் கொடுக்கிறேனென்று கர்த்தர் சொன்ன ஸ்தலத்துக்கு நாங்கள் பயணம் போகிறோம். எங்களோடேகூட வா. உனக்கு நன்மை செய்வோம். ஏனெனில் கர்த்தர் இஸ்ரவேலுக்கு நல்லவாக்குத்தத்தம் பண்ணினாரென்றான்.

௩௰ அதற்கவன்: நான் வாராமல் என் தேசத்துக்கும் என் இனத்தாரிடைக்கும் போவேனென்றான்.

௩௧ அப்பொழுது அவன் சொன்னது: நீ எங்களை விடாயாக. ஏனெனில் வனாந்தரத்திலே நாங்கள் பாளயமிறங்குந்தலங்களை நீ அறிந்திருக்கிறபடியாலே எங்களுக்குக் கண்களைப்போலிருப்பாய்.

௩௨ நீ எங்களோடேகூட வந்தால் அப்பொழுது கர்த்தர் எங்களுக்குச் செய்யும் நன்மையின்படியே உனக்கு நன்மை செய்வோமென்றான்.

௩௩ அவர்கள் கர்த்தருடைய பர்வதத்தை விட்டு மூன்று நாட்பயணம் போனார்கள். மூன்று நாட்பயணத்திலும் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டி அவர்களுக்கு இளைப்பாறுந்தலத்தை விசாரித்துக்கொடுக்கும்படிக்கு அவர்கள் முன்பாகப் போயிற்று.

௩௪ அவர்கள் பாளயத்திலிருந்து பயணமாய்ப் போகிறபொழுது கர்த்தருடைய மேகம் பகலமாறு அவர்கள்மேலிருந்தது.

௩௫ பெட்டி புறப்படும்பொழுது மோசேயென்றவன் ※ கர்த்தாவே! உம்முடைய சத்துருக்கள் சிதறடிக்கப்படவும் உம்மைப் பகைக்கிறவர்கள் உமக்கு முன்பாக ஓடிப்போகவும் எழுந்தருளுமென்பான்.

※ சங்கீதம் ௬௮, ௨.

௩௬ அது தங்குகிறபொழுது அவன் கர்த்தாவே! அநேகமாயிரங்களாகிய இஸ்ரவேலர்களிடத்துக்குத் திரும்புமென்பான்.

## ௰௧. அதிகாரம்.

பொறுமையில்லாத ஜனத்துக்குள்ளே அக்கினி பற்றியெரிந்தது.

௧ ஆனாற் சனம் முறையிட்டுக்கொண்டிருந்தது. அது கர்த்தருடைய செவிகளிலே பொல்லாப்பாயிருந்தது. ஏனெனில் கர்த்தர்

ரிகிறதாம அவனுக்குத தரிசனையில்நம மெய்வெளிப்படுத்துவோம. சொப்பனத்தில அவனோடேபேசுவோம.

எ நம்முடைய தாசனாகியமோசேயப்படியல்ல * நம்முடைய வீட்டினைத்திலும்வன உண்மையுள்ளவன. * எபிரேயர். ௩, உ.

அ மறைபொருளாகவல்ல * முகமுகமாயும் திருஷ்டாந்தமாகவும் அவனோடே பேசுவேன. அவன கர்த்தரின்சாயலைக் காண்கிறான. இப்படியிருக்க நீங்கள நம்முடைய தாசனாகியமோசேக்கு விரோதமாகப்பேசப் பயப்படாமற்போனதென்னவென்றார்.

* உ. மோசே. ௩௩, ௰௧. ரு மோசே. ௩௪, ௰.

௯ கர்த்தருடையகோபம அவர்களமேல மூண்டது. அவர்போயவிட்டார்.

௰ மேகங்கூடாரத்தை விட்டு அகன்று போயிற்று. இதோ, மிரியாம உறைந்தமழையின வெண்மையாயக் குஷ்டம்பிடித்திருந்தாள. ஆரோன மிரியாமைப்பார்த்தான. இதோ, அவள குஷ்டம்பிடித்தவள.

௰௧ அப்பொழுது ஆரோன மோசேயோடேசொன்னதாவது. ஆ என்னுடையவனே! நாங்கள பயித்தியங்கொண்டு செய்த இந்தப்பாவத்தை யெங்கள்மேலே சுமத்தாதிருமேன?

௰உ தனதாயின கர்ப்பத்திலிருநது புறப்படுகையிற்றானே மாமசம அழுகியிருக்கிற செத்தபிள்ளையைப்போலே அவள இராதிருப்பாளாகவேண்டுமென்றான.

௰௩ அப்பொழுதுமோசே ஆ, பராபரனே! அவளைக்குணமாக்கும்மென்று கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டான.

௰௪ அப்பொழுது கர்த்தர்மோசேயுடனே, அவளுக்கப்பன அவளமுகத்திலே காறித்துப்பினதுண்டானால, அவளேழுநாள வெட்கப்படவேண்டாமோ? அவள * ஏழுநாள பாளயத்துக்குப்புறம்பே அடைக்கப்பட்டிருந்து பிற்பாடு சேர்க்கப்படக் கடவளென்றார். * ௩. மோசே. ௰௩, ௩.

௰ரு அப்படியே மிரியாம ஏழுநாள்பாளயத்துக்குப்புறம்பே அடைக்கப்பட்டிருந்தாள. மிரியாள சேர்க்கப்படுமட்டும் சனமானது போகாதிருந்தது.

௰௬ பிற்பாடு சனம ஆசரோத்திலிருந்துப்புறப்பட்டுப்பாறான வனாந்தரத்திலேபாளயமிறங்கிற்று.

## ௰௩. அதிகாரம்.

கானானதேசத்தைச சோதித்தறிய மனிதர் அனுப்பப்பட்டுப போயவந்து செய்தி சொன்னது.

க கர்த்தர் மோசேயோடேபேசிச்சொன்னதாவது,

உ நாம இஸ்ரவேல புத்திரருக்குக்கொடுக்குங்கானானதேசத்தைச சோதித்துப் பார்க்கிறதற்கு மனிதரையனுப்பு. அவர்களுடையபிதாக்களின ஒவ்வொரு கோத்திரத்திலே ஒவ்வொருபிரபுக்களாகியமனிதரையே அனுப்பக்கடவீர்களென்றார்.

௩ அப்படியேமோசேகர்த்தருடையவாக்கின்படியே அவர்களைப்பாறான வனாந்தரத்திலிருந்து அனுப்பினான. அந்தமனிதரெல்லாரும இஸ்ரவேல்புத்திரரில தலைவரானவர்கள.

௪ அவர்கள நாமங்களாவது ரூபன கோத்திரத்திலே சக்கூரின்குமாரன சமமூவா.

ரு சிமெயோனகோத்திரத்திலேஒறியின குமாரன சாப்பாத்.

௬ யூதாகோத்திரத்திலே எப்புன்னேயின்குமாரனகாலேப்.

எ இசக்கார்கோத்திரத்திலே யோசேப்பின குமாரன இகேயால.

அ எப்பிராயீம கோத்திரத்திலே நூனின குமாரன ஓசேயா.

௯ பென்யமீன கோத்திரத்திலே ரப்பூவின குமாரனபல்த்தி.

௰ செபுலோன கோத்திரத்திலே சோதியின்குமாரன்காதியேல.

௰௧ யோசேப்பின்கோத்திரத்திற்குடுத்த மனாசே கோத்திரத்திலே சூசியின்குமாரன காதி.

௰உ தாண்கோத்திரத்திலே கெமல்லியின்குமாரன் அம்மியேல,

௰௩ ஆசேர்கோத்திரத்திலேமிகவேலின குமாரன்சேத்தூர்,

௰௪ நப்தலிகோத்திரத்திலே வொப்பெசியின குமாரன்நாகேபி.

௰ரு காத்கோத்திரத்திலே மாகியின குமாரன கூவேல.

௰௬ இவைகள தேசத்தைச சோதித்துப் பார்க்க மோசே அனுப்பின மனிதரின நாமங்கள. நூனின குமாரனாகிய ஓசேயாவுக்கோவென்றால மோசே யோசுவாவெனப்பேரிட்டான.

௰எ அவர்களை மோசேகானான தேசத்தைச்சோதித்தறிய அனுப்பி அவர்களோடேசொன்னதாவது. நீங்கள இப்படித்தெற்காகப்போய மலைத்தேசத்திலேறி,

௰அ தேசம எப்படிக்கொத்தது. அதிலே குடியிருக்கிற சனம பலத்ததோ? பலமற்றதோ? கொஞ்சமோ? அநேகமோ?

௰௯ அவர்குடியிருக்கிறதேசம என்னமாயிருக்கும்? அது நலலதோ? ஆகாததோ? அவர்குடியிருக்கிற ஊர்கள என்னமாயிருக்கும்? அவைகள பாளயங்களோ? கோட்டைகளோ?

உ௰ நிலம என்னமாயிருக்கும்? அது புஷ்டியோ? இளப்பமோ? அதிலவிருட்சங்கள உண்டோஇல்லையோவென்றுபார்த்து

னத்திடமிருந்து தேசத்தின் கனிகளிலே சிலதை யெடுத்துக்கொண்டு வாருங்களென்றான். அந்நாள்களோவென்றால் திராட்சக்குலைகளுடைய முதற்கனிகளின் நாள்களாயிருந்தது.

௨௧ அவர்கள் போய் ஏறி சீன் வனாந்தரந்துவக்கி ஆமாத்துக்குப் போகிற வழியாகிய ரேகோபமட்டுக்கும் தேசத்தைச் சோதித்துப்பார்த்து.

௨௨ தெற்கேயும் போய் எப்ரோன்மட்டும் வந்தார்கள். அங்கே ஏனாக்கின் குமாரராகிய அகிமானும் சேசாயும் தல்மாயுமிருந்தார்கள். எப்ரோனோவென்றால் எகிப்திலுள்ள பட்டணமாகிய சோவான் கட்டப்பட்ட ஏழு வருஷத்துக்கு முன்னே கட்டப்பட்டது.

௨௩ பிறபாடு எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டும் வந்து அங்கே ஒரு திராட்சக்குலையுள்ள ஒரு கொடியை யறுத்தார்கள். அதையிரண்டுபேர் ஒரு தடியிலே தூக்கிக்கொண்டுபோனார்கள். மாதளம்பழங்களிலும் அத்திப்பழங்களிலும் சிலவைகளை யெடுத்துக்கொண்டு போனார்கள்.

௨௪ இஸ்ரவேல் புத்திரர் அங்கே அறுத்த திராட்சக்குலையைத் தொட்டு அவ்விடம் எஸ்கோல் பள்ளத்தாக்கென்னப்பட்டது.

௨௫ அவர்கள் தேசத்தைச் சோதித்துப்பார்த்து நாற்பதாம் நாளின் முடிவிலே திரும்பி,

௨௬ பாரான் வனாந்தரத்திலிருக்கிற காதேசுக்கு வந்து, மோசே ஆரோன் இஸ்ரவேல் புத்திரரெல்லாச் சபையினண்டையிலும் சேர்ந்து அவர்களுக்கு வர்த்தமானத்தைத் திருப்பிச் சொல்லி அவர்களுக்குத் தேசத்தின் கனிகளைக் காண்பித்து,

௨௭ அவனுக்கு விவரித்துச்சொன்னதாவது. நீர் எங்களை யனுப்பின தேசத்துக்கு நாங்கள் போய்வந்தோம். ※ அது பாலுந் தேனும் ஓடுகிற தேசந்தான். இது அதினுடைய கனி. * ௨. மோசே ௩, அ.

௨௮ ஆனாலும் தேசத்திலே குடியிருக்கிற சனம் பலத்ததும் பட்டணங்கள் அரணிப்பானவைகளும் மகா பெரியவைகளுமாயிருக்கிறது. அங்கே ஏனாக்கின் குமாரரையுங் கண்டோம்.

௨௯ அமலேக்கியர் தென்புறமான தேசத்திலே குடியிருக்கிறார்கள். ஏத்தியரும் எபூசியரும் எமோரியரும் மலைசீமையிலே குடியிருக்கிறார்கள். கானானியரோவென்றால் கடலண்டையிலும் யோர்தானண்டையிலுங் குடியிருக்கிறார்களென்றார்கள்.

௩௰ அப்பொழுது காலேப் மோசேக்கு முன்பாகச் சனத்தை யமர்த்தி ஏறிப்போய் அதைச் சுதந்தரிக்கக்கடவோம். ஏனெனில் அதை நாம் கட்டிக்கொண்டு செயிக்கவே செயிப்போமென்றான்.

௩௧ அவனோடேகூட ஏறிப்போய் வந்த மனிதரோவென்றால், நாம் அந்தச் சனத்துக்கு விரோதமாய் ஏறிப்போகக்கூடாது. ஏனெனில் அவர்கள் நம்மைப்பார்க்கிலும் பலத்தவர்களென்று சொல்லி,

௩௨ நாங்கள் சோதித்துப்பார்த்த தேசத்தைக் குறித்து இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே அவதூறைப் பிறக்கப்பண்ணி, நாங்கள் சோதித்துப் பார்க்கக் கடந்துவந்த அந்தத் தேசம் தன் குடிகளைப் பட்சிக்கிற தேசமாமே. நாங்கள் அதிலே கண்ட சனமெல்லாம் உயர்ந்த மனிதர்.

௩௩ அங்கே இராட்சதர் சந்ததியான ஏனாக்கின் குமாரராகிய இராட்சதரையுங் கண்டோம். நாங்கள் எங்கள் பார்வைக்கு வெட்டுக்கிளிகளைப்போலிருந்தோம். அப்படியே அவர்கள் பார்வைக்குமிருந்தோமென்றார்கள்.

# ௰௪. அதிகாரம்.

சனங்கலகம் பண்ணி ஆக்கினையடைந்தது.

அப்பொழுது சபையெல்லாம் எழும்பிக் கூப்பிட்டுச், சனம் அன்று இராத்திரி அழுதுகொண்டிருந்தது.

௨ இஸ்ரவேல் புத்திரரெல்லாரும் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமுறுத்தார்கள். சபையெல்லாம் அவர்களை நோக்கிச் சொன்னதாவது. எகிப்து தேசத்திலே செத்துப்போனோமானால் நலமாயிருக்கும். அல்லது இந்த வனாந்தரத்திலே நாங்கள் செத்தாலும் நலமாயிருக்கும்.

௩ நாங்கள் பட்டயத்தால் மடியும்படிக்கும் எங்கள் பெண்சாதிகளுங் குழந்தைகளுங் கொள்ளையாகும்படிக்குங் கர்த்தர் எங்களை யந்தத் தேசத்துக்குக் கொண்டுபோகிறதென்ன? எகிப்துக்குத் திரும்பிப்போகிறது எங்களுக்கு வாசியல்லவோவென்று,

௪ ஒருவரோடொருவர் ஒரு தலைவனை வைத்து எகிப்துக்குத் திரும்பிப்போவோமென்று சொல்லிக்கொண்டார்கள்.

௫ அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல் புத்திரருடைய சபை கூட்டமெல்லாவற்றுக்கும் முன்பாகவும் முகங்குப்புற விழுந்தார்கள்.

௬ தேசத்தைச் சோதித்துப்பார்த்தவர்களில் நூனின் குமாரனாகிய யோசுவாவும் எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுந் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,

௭ இஸ்ரவேல் புத்திரரின் சபையோடெல்லாஞ் சொன்னதாவது, நாங்கள் சோதித்துப்பார்க்கக் கடந்துவந்த தேசம் மகா நல்ல தேசம்.

௮ கர்த்தர் நம்முடையமேலே பிரியமாயிருந்தால் அவர் நம்மைப் பாலுந் தேனும் ஓடுகிற தேசமாகிய அந்தத் தேசத்திலே கொண்டுபோய் அதை நமக்குக் கொடுப்பார்.

ய எல்லாத் தொகைகளுள்ளும் எண்ணப்பட்டு நமக்கு விரோதமாய் முறுமுறுத்திருக்கிற அனைவரின் பிரேதங்களுந்தானே.

௩௰ எப்புன்னேயின் குமாரனான காலேபையும் நூனின் குமாரனான யோசுவாவையுந் தவிர மற்றவர்களாகிய நீங்கள் நாமுங்களைக் குடியேற்றுவோமென்று நம்முடைய கரத்தையெடுத்த தேசத்திலே வாராதிருப்பீர்கள்.

௩௧ கொள்ளையாவார்களென்று நீங்கள் சொன்ன உங்கள் குழந்தைகளையோவென்றால் நாம் அதிலே வரப்பண்ணுவோம். அவர்கள் நீங்கள் அசட்டைபண்ணின தேசத்தையறிந்து கொள்ளுவார்கள்.

௩௨ உங்கள் பிரேதங்களோவென்றால் இந்த வனாந்தரத்திலே விழும்.

௩௩ அவைகள் வனாந்தரத்திலே விழுந்து தீருமட்டும் உங்கள் பிள்ளைகள் நாற்பது வருஷம் வனாந்தரத்திலே மேய்ப்பராயிருந்து நீங்கள் சோரம்போனதைச் சுமப்பார்கள்.

௩௪ நீங்கள் தேசத்தைச் சோதித்துப் பார்த்த நாற்பது நாளுடைய இலக்கத்தின்படியே நீங்கள் நாற்பது வருஷம் உங்கள் அக்கிரமங்களைச் சுமந்து நம்முடைய உடம்படிக்கைக்கு வந்த மாறுதலை யுணருவீர்கள். ஒவ்வொரு நாள் ஒரு வருஷமாகத்தானே.

௩௫ கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம். நமக்கு விரோதமாய்க் கூட்டங் கூடின இந்தப் பொல்லாத சபைக்கெல்லாம் இப்படியே செய்வோம். இந்த வனாந்தரத்திலே சரியாவார்கள் இங்கே சாவார்களென்று சொல்லென்றார்.

௩௬ தேசத்தைச் சோதித்துப் பார்க்க மோசேயால் அனுப்பப்பட்டுத் திரும்பி வந்து தேசத்திற்குத் தூர்க்கீர்த்தியையுண்டாக்கி,

௩௭ சபையையெல்லாம் அவனுக்கு விரோதமாய் முறுமுறுக்கப்பண்ணின அந்த மனிதர் கர்த்தருக்குமுன்பாக வாதையினாலே செத்தார்கள்.

௩௮ தேசத்தைச் சோதித்துப் பார்க்கப் போன அந்த மனிதரில் நூனின் குமாரன் யோசுவாவும் எப்புன்னேயின் குமாரன் காலேபுமாத்திரம் உயிரோடிருந்தார்கள்.

௩௯ மோசே இந்த வார்த்தைகளை இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடுஞ் சொன்னபோது சனம் மிகவுந் துக்கித்தது.

௪௰ அதிகாலமே எழுந்திருந்து இதோ, நாங்கள் கர்த்தர் சொன்ன இடத்திற்கேறிப் போவோம். ஏனென்றாற் பாவஞ் செய்தோமென்று சொல்லிப் பர்வதத்தின் கொடுமுடியிலேறினார்கள்.

௪௧ மோசேயோவென்றாற் சொன்னதாவது. நீங்களிப்படிக் கர்த்தருடைய வார்த்தையை மீறுவானேன்? அது உங்களுக்கு வாய்க்காது.

௪௨ நீங்கள் உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக முறியடிக்கப்படாதபடிக்கு ஏறாதிருப்பீர்களாக. ஏனெனிற் கர்த்தர் உங்கள் நடுவிலில்லார்.

௪௩ ஏனென்றால் அமலேக்கியருங் கானானியரும் அங்கே உங்களுக்கு முன்னேயிருக்கிறார்கள். பட்டயத்தினாலே விழுவீர்கள். ஏனெனில் நீங்கள் கர்த்தரைவிட்டுப் பின்வாங்கினபடியினாலே கர்த்தர் உங்களோடிருப்பதில்லையென்றான்.

௪௪ அவர்களோவென்றாற் பர்வதத்தின் கொடுமுடியில் ஏறத் துணிவாயேறினார்கள். ஆனாற் கர்த்தருடைய உடம்படிக்கைப் பெட்டியும் மோசேயும் பாளயத்தைவிட்டசைந்ததில்லை.

௪௫ அப்பொழுது அந்த மலைத்தேசத்திலே குடியிருக்கிற அமலேக்கியருங் கானானியரும் இறங்கிவந்து அவர்களை முறியடித்து அவர்களை ஒர்மாமட்டுந் துரத்தி நொறுக்கினார்கள்.

## ௰௫. அதிகாரம்.

சிலபலிகளுக்கும் படைப்புகளுக்கும் அடுத்த கட்டளைகள்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது,

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி அவர்களோடே சொல்லவேண்டியதேதெனில். நாம் உங்களுக்குக் கொடுக்கும் உங்கள் குடியிருப்பாகிற தேசத்திலே நீங்கள் வந்து,

௩ விசேஷித்த பொருத்தனைக்காகிலும் உச்சாயமனதினாலாகிலும் உங்கள் பண்டிகைகளிலே செலுத்துவதற்காகிலுங் கர்த்தருக்கு மாடுகளிலாவது ஆடுகளிலாவது சர்வாங்கதகனபலியையாவது வேறொருபலியைக் கர்த்தருக்கு ஏற்றிய வாசனையாகுந் தகனமாகப் பலியிடும்பொழுது,

௪ தன் காணிக்கையைக் கர்த்தருக்குச் செலுத்துகிறவன் சர்வதகனமும் இல்லது வேறொரு பலியுமாகிய ஒரு ஆட்டுக்குட்டிக்காக மரக்காலிலே பத்திலொரு பங்கான மாவை காற்படி எண்ணெயிற் பிசைந்ததுமான மெல்லியமாவின் காணிக்கையைச் செலுத்தக்கடவன்.

௫ ஊற்றுதலாகக் காற்படித் திராட்சப்பழ இரசத்தையும் படைப்பாயாக.

௬ ஆட்டுக்கிடாயாயிருந்ததேயாகில் நீ பத்திலிரண்டு பங்கான மாவையும் மூன்றத்தொருபங்காகிய எண்ணெயிலே பிசைந்ததுமான மெல்லியமாவின் காணிக்கையையும்,

௭ ஊற்றுசலாகப்படியில் மூன்றத்தொருபங்காகிய திவிதாட்சிப்பழ ரசத்தையுங் கர்த்தருக்காற்றிய வாசனையாகச் செலுத்துவாயாக.

௮ நீ விசேஷித்த பொருத்தனைக்காகிலும் சமாதானபலிக்காகிலும் ஒருகாளையைக் கர்த்தருக்குச் சர்வாங்கதகனமாகிலுந் தேவபலியாகச் செலுத்தினாயேயானால்,

௯ நீ அந்தக் காளையோடேபத்தில் மூன்றுபங்காகும் அளவுபடியெண்ணெயிலே பிசைந்ததமான மெல்லியமாவின் காணிக்கையையும்,

௰ ஊற்றுசலாக அரைப்படி திவிதாட்சிப் பழரசத்தையுங் கர்த்தருக்காற்றிய வாசனையாகுந் தகனமாகப் படைக்கக்கடவாய்.

௰௧ இந்தத்திட்டமாய் ஒவ்வொருமாட்டுக்காகவும் அல்லது ஆட்டுக்கிடாய்க்காகவும் அல்லது ஆட்டுக்குட்டி வெள்ளாட்டுக்குட்டிக்காகவும் படைப்பாயாக.

௰௨ இப்படி நீங்கள் பலியிடுகிறவைகளின் இலக்கத்திற்குத்தக்கதாய் ஒவ்வொன்றுக்குச் செய்யக்கடவீர்கள்.

௰௩ தேசத்திலே பிறந்தவனெல்லாங் கர்த்தருக்காற்றிய வாசனையாகுந் தகனத்தைச் செலுத்துகையில் இப்படிச் செய்யவேண்டும்.

௰௪ ஒரு பரதேசி உங்களிடத்திலே தங்கி அல்லது உங்கள் நடுவே உங்கள் தலைமுறைகளுக்குள்ளே குடியிருந்து கர்த்தருக்காற்றிய வாசனையாகுந் தகனத்தைச் செலுத்தும்போது நீங்கள் செய்கிறபடியே அவனுஞ்செய்யவேண்டும்.

௰௫ * சபையாகிய உங்களுக்கும் உங்களிடத்திலிருக்கிற பரதேசிக்கும் ஒரேபிரமாணமிருக்கவேண்டுமென்பது உங்கள் தலைமுறைகளில் நித்தியகட்டளையாயிருக்கக்கடவது. கர்த்தருக்குமுன்பாகப் பரதேசி உங்களைப்போலிருக்கவேண்டும். * உ. மோசே. ௰௨, ௪௯.

௰௬ உங்களுக்கும் உங்களிடத்தில் தங்குகிற பரதேசிக்கும் ஒரேபிரமாணமும் ஒரே நியாயமுமிருக்கக்கடவதென்று சொல்லென்றார்.

௰௭ பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது.

௰௮ நீ இஸ்ரவேல்புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதென்னவெனில் நாம் உங்களைக் கொண்டுபோகிற தேசத்திலே நீங்கள் சேர்ந்து,

௰௯ தேசத்தின் அப்பத்திலே புசிக்கையில் கர்த்தருக்கு ஏறெடுக்குங் காணிக்கையைப் படைக்கக்கடவீர்கள்.

௨௰ உங்கள் பிசைந்தமாவிலே முதற்பலனாய் ஒரு அதிரசத்தை ஏறெடுத்துப் படைப்பீர்களாக. போரடிக்கிறகளத்திலே படைப்பையேறெடுக்கிறதுபோலே அதையேறெடுப்பீர்களாக.

௨௧ இப்படி உங்கள் தலைமுறைகளிலே கர்த்தருக்கு உங்கள் பிசைந்தமாவின் முதற்பலனிலே படைப்பையேறெடுத்துக்கொடுக்கக்கடவீர்கள்.

௨௨ கர்த்தர் மோசேயோடே சொன்ன இந்த எல்லாக் கற்பனைகளின்படியேயும்,

௨௩ கர்த்தர் மோசேயைக் கொண்டு கற்பனை தந்த நாள்முதற்கொண்டு அவர் உங்களுக்கும் உங்கள் தலைமுறைகளுக்குங் கற்பித்த எல்லாவற்றின்படியேயும் நீங்கள் செய்யாமல் ஒருதப்பிதம்பண்ணினீர்களானால்,

௨௪ அப்பொழுது சபையின் சனங்களுக்கு மறைவாக யாதொன்றைத் தப்பிதமாகச் செய்யப்பட்டதுண்டாகிற் சபையெல்லாங் கர்த்தருக்காற்றிய வாசனைக்கென்று சர்வாங்கதகனமாக மாடுகளிலொரு காளையெருதையும் முறைமை நியாயத்தின்படியிருக்கிற அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையும் பாவம்போக்கும் பலியாக ஒருவெள்ளாட்டுக்கிடாயையுஞ் செலுத்துவதாக.

௨௫ அதினால் ஆசாரியன் இஸ்ரவேல்புத்திரின் சபையனைத்திற்காகவும் பாவநிவர்த்தியையுண்டாக்கக்கடவன். அப்பொழுது அவர்களுக்கு மன்னிக்கப்படும். ஏனெனில் அது ஒருதப்பிதமாயிருந்தது. அவர்கள் அதினிமித்தங் கர்த்தருக்குத் தகனமான தங்கள் படைப்பையும் பாவம்போக்குந் தங்கள் பலியையுங் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்தார்களே.

௨௬ ஆகையால் அது இஸ்ரவேல் புத்திரின் சபையனைத்திற்கும் அவர்களுக்குள்ளே தங்குகிற பரதேசிக்கும் மன்னிக்கப்படும். ஏனெனில் சனத்திற்கெல்லாம் அது தப்பிதத்தினாலே வந்தது.

௨௭ ஒரு ஆத்துமா தப்பிதத்தினாலே பாவஞ்செய்ததானால் ஒருவயதான வெள்ளாட்டைப் பாவம்போக்கும் பலியாகச் செலுத்துவானாக.

௨௮ அப்பொழுது கர்த்தருக்குமுன்பாக அவன் பாவத்தைத் தீர்க்கும்படிக்கு ஆசாரியன் தப்பிதத்தினாலே பாவஞ்செய்த அந்த ஆத்துமாவுக்காகப் பாவநிவர்த்தியையுண்டாக்கக்கடவன். அப்பொழுது அவனுக்கு மன்னிக்கப்படும்.

௨௯ தப்பிதஞ்செய்தவனுக்காக இஸ்ரவேல் புத்திரராகிய உங்களிற் பிறந்தவனுக்கும் உங்களுக்குள்ளே தங்குகிற பரதேசிக்கும் ஏக நியாயப்பிரமாணமிருப்பதாக.

௩௰ ஆனால் தேசத்திலே பிறந்தவர்களிலாகிலும் பரதேசிகளிலாகிலும் எந்த ஆத்துமம் ஓங்கினகையால் யாதொன்று

செய்தாரே? அவன் கர்த்தரைத் தூஷணித்தான். அந்த ஆத்துமா தன் சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டுபோகவேண்டும்.

௩௧ ஏனெனில் கர்த்தரின் வார்த்தையை யசட்டைபண்ணி அவர் கற்பனையை மீறித் தகர்த்துப்போட்டான். அப்படிக்கொத்த ஆத்துமா அறுப்புண்கவே அறுப்புண்டுபோகவேண்டும். அவன் அக்கிரமம் அவன்மேலிருக்குமென்று சொல்லென்றார்.

ஓய்வுநாளைப் பரிசுத்தக்குலைச்சலாக்கின ஒருவனைக் கல்லெறிந்தது.

௩௨ இஸ்ரவேலின்புத்திரர் வனாந்தரத்திலிருக்கக் காலே ஓய்வுநாளிலே விறகுகளைப் பொறுக்குகிற ஒரு மனிதனைக் கண்டுபிடித்தார்கள்.

௩௩ அவன் விறகுகளைப் பொறுக்குகிறவனைக் கண்டுபிடித்தவர்கள் அவனை மோசே ஆரோன் என்றவர்களண்டைக்கும் சபையனைத்தண்டைக்குங் கொண்டுவந்தார்கள்.

௩௪ * அவனுக்குச் செய்யவேண்டியதென்னவென்று நிச்சயமான உத்தரவில்லாதபடியினாலே அவனைக் காவலிலே வைத்தார்கள். * ௩. மோசே. ௨௪, ௰௨.

௩௫ கர்த்தர் மோசேயுடனே அந்த மனிதன் கொலையுண்கவே கொலையுண்கக்கடவன். சபையெல்லாம் அவனைப் பாளயத்திற்குப் புறம்பே கல்லெறிவதாகவென்றார்.

௩௬ அப்பொழுது சபையெல்லாங் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய்க் கல்லெறிந்தார்கள். அவன் செத்தான்.

தெய்வகற்பனைகளை நினைக்கும் எத்தினத்தைப் பராபரன் கட்டளையிட்டது.

௩௭ பின்னையுங் கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது.

௩௮ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி அவர்கள் தங்கள் தலைமுறைகளிலே தங்களுக்கு * தங்கள் வஸ்திரங்களின் ஓரங்களிலே தொங்கலுண்டாக்கி ஓரத்தின் தொங்கலிலே இளநீலமான கயிற்றைப் போடவேண்டுமென்று அவர்களோடே சொல்லு. * ௫. மோசே. ௨௨, ௰௨. மத்தே. ௨௩, ௫.

௩௯ நீங்கள் பின்பற்றிச் சோரம்போகிற உங்களிருதயமும் உங்கள் கண்களும்போகும் போக்கின்படி நீங்கள் போகாமல் அந்தக் கயிற்றைப் பார்த்துக் கர்த்தரின் கற்பனைகளையெல்லாம் நினைத்து அவைகளின்படியே செய்யும்படிக்கு அது அந்தத் தொங்கலில் உங்களுக்கு இருக்கவேண்டும்.

௪௰ நீங்கள் நம்முடைய கற்பனைகளையெல்லாம் நினைத்து அவைகளின்படியே செய்து உங்கள் பராபரனுக்குப் பரிசுத்தராயிருக்கத்தக்கதாமே.

௪௧ நாம் உங்களுக்குப் பராபரனாயிருக்கும்படிக்கு உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர். நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

## ௧௬. அதிகாரம்.

கோருதாத்தான் அபிராமென்றவர்களின் கூட்டம் பண்ணின கலகமும் அடைந்த ஆக்கினையும்.

லேவிக்குப் பிறந்த கேகாத்திற்குக் குமாரனான இத்செயாரின் மகன் * கோருவென்றவன் எலியாபின் குமாரராகிய தாத்தானையும் அபிராமையும் ரூபென்புத்திரரிற் பெலேத்தின் குமாரனாகிய ஓனையுங் கூட்டிக்கொண்டு, * ௨௬, ௯. யூதா. ௰௧.

௨ இஸ்ரவேல்புத்திரரிற் சபைக்குத் தலைவருஞ் சபையிலே அழைக்கப்பட்டவர்களும் பேர்பெற்ற மனிதருமாகிய இருநூற்றைம்பது பேரோடுங் கூட மோசேக்கு முன்பாக எழும்பி,

௩ மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய்க் கூட்டங்கூடி அவர்களோடே, நீங்கள் மிஞ்சிச்செய்கிறீர்கள். ஏனென்றாற் சபையாரெல்லாரும் ஏகமாய்ப் பரிசுத்தமானவர்கள். கர்த்தர் அவர்கள் நடுவிலிருக்கிறார்; பின்னையேன் உங்களைக் கர்த்தருடைய சபையின்மேல் உயர்த்துகிறீர்களென்றார்கள்?

௪ மோசே இதைக் கேட்டபொழுது * முகங்குப்புற விழுந்தான். * ௰௪, ௫.

௫ பிற்பாடு அவன் கோருவோடும் அவனுடைய எல்லாக் கூட்டத்தோடும் பேசிச் சொன்னதாவது. நாளைக்குக் கர்த்தர் தம்முடையவர் இன்னாரென்றும் தம்மண்டையிலே சேரத்தாம் கட்டளையிட்ட பரிசுத்தவான் இன்னாரென்றும் அறியப்பண்ணுவார். அப்பொழுது எவனைத் தெரிந்துகொள்ளுவாரோ அவனைத் தம்மண்டைச் சேரக்கட்டளையிடுவார்.

௬ ஒன்று செய்யுங்கள். கோருவே! அவனுடைய எல்லாக் கூட்டமுமானவர்களே! நீங்கள் தூபகலசங்களை யெடுத்துக்கொண்டு,

௭ நாளைக்கவைகளில் அக்கினிபோட்டு அவைகளிற் கர்த்தருக்குமுன்பாகத் தூபவர்க்கம்போடுங்கள். அப்பொழுது கர்த்தர் எவனைத் தெரிந்துகொள்ளுவாரோ அவன் பரிசுத்தவானாயிருப்பான். லேவியின்புத்திரராகிய நீங்களே மிஞ்சிப்போகிறீர்களென்றான்.

௮ பின்னையும் மோசே கோருவோடே சொன்னதாவது. லேவியின்புத்திரரே! கேளுங்களேன்?

கள் உயிரோடே பாதாளத்தில் இறங்க அவர்களையும் அவர்களுக்குண்டான யாவையும் விழுங்கிப்போட்டதேயானால் இந்த மனிதர் கர்த்தரைத் தூஷணித்தார்களென்கிறதை யறிவீர்களென்றான்.

௩௧ அவன் இந்த வார்த்தைகளையெல்லாஞ் சொல்லித்தீர்ந்தபொழுது சம்பவித்ததென்னவென்றால் *. அவர்களிருந்த பூமி பிளந்து, * ௫. மோசே. ௰௧, ௬.

௩௨ பூமி தன் வாயைத் திறந்து அவர்களையும் அவர்கள் வீடுகளையுங் கோராகுக்கடுத்த எல்லா மனிதரையும் எல்லா ஆஸ்தியையும் விழுங்கிப்போட்டது.

௩௩ அவர்கள் தங்களுக்குண்டான எல்லாவற்றோடுங்கூட உயிரோடே பாதாளத்திலிறங்கினார்கள் பூமி அவர்களின்மேல் மூடிக்கொண்டது. இப்படிச் சபையின் நடுவிலிருந்தழிந்தார்கள்.

௩௪ அவர்களைச் சுற்றிலுமிருந்த இஸ்ரவேலரெல்லாரும் அவர்கள் கூக்குரலைக் கேட்டுப் பூமி நம்மையும் விழுங்குமேயென்று ஓடிப்போனார்கள்.

௩௫ அக்கினியுங் கர்த்தரிடத்திலிருந்து புறப்பட்டுத் தூபங்காட்டின இருநூற்றைம்பது பேரையும் பட்சித்தது.

௩௬ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது.

௩௭ அக்கினிக்குள்ளகப்பட்ட தூபக்கலசங்களையெடுத்து அவைகளிலிருக்கிற அக்கினியை அப்பாலே கொட்டிப்போட ஆசாரியனான ஆரோனின் குமாரனாகிய எலெயாசாருக்குச் சொல்லு. ஏனென்றால் அவைகள் பரிசுத்தமாயிற்று.

௩௮ தங்கள் ஆத்துமாக்களுக்கு விரோதம்பண்ணின அந்தப்பாவிகளின் தூபக்கலசங்களைப் பலிபீடத்தை மூடத்தக்க தட்டையானத்தகடுகளாக அடிக்கக்கடவர்கள். ஏனென்றால் அவர்கள் கர்த்தருக்குமுன்பாக அவைகளைக் கொண்டுவந்ததினாலே அவைகள் பரிசுத்தமாயிற்று. அவைகள் இஸ்ரவேல் புத்திரருக்கு அடையாளமாவதாக வென்றார்.

௩௯ அப்படியே ஆசாரியனாகிய எலெயாசார் வெந்துபோனவர்கள் கொண்டுவந்திருந்த வெண்கலத் தூபக்கலசங்களையெடுத்து,

௪௰ * ஆரோனின் வித்தல்லாத யாதொரு அந்நியன் கர்த்தருக்குமுன்பாகத் தூபங்காட்டும்படி சேராதபடிக்கும் கோராகைப்போலும் அவன் கூட்டத்தாரைப்போலுமிராதபடிக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கு நினைப்புண்டாக அவைகளைக் கர்த்தர் மோசேயைக்கொண்டு தனக்குச் சொன்னபடியே பலிபீடத்தை மூடுந் தகடுகளாக அடிப்பித்தான். * ௩, ௰.

முறுமுறுக்கிறசனத்தின்மேல்வந்ததுந்திரும்ப நிறுத்தப்பட்டதுமானவாதை.

௪௧ மறுநாளிலே இஸ்ரவேல் புத்திரின் சபையெல்லாம் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாக முறுமுறுத்துக் கர்த்தருடைய சனத்தைக் கொன்றுபோட்டீர்களென்றார்கள்.

௪௨ சபை மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாகக் கூடுகையிற் சம்பவித்ததென்னவென்றால் அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் பக்கமாக முகத்தைத் திருப்புகிறபொழுது இதோ, மேகம் அதை மூடிக் கர்த்தரின் மகிமை காணப்பட்டது.

௪௩ மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக் கூடாரத்துக்குமுன்பாக வந்தார்கள்.

௪௪ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே பேசி,

௪௫ * இந்தச் சபையின் நடுவிலிருந்து விலகுங்கள், அசுப்பிலே அவர்களை நாசமாக்குவேனென்றார். அப்பொழுது முகங்குப்புற விழுந்தார்கள். * ௨௧, ௨௨. ௰௪, ௰௨.

௪௬ மோசே ஆரோனுடனே நீ தூபக்கலசத்தையெடுத்துப் பலிபீடத்திலிருக்கிற அக்கினியை அதிலே வைத்து அதின்மேல் தூபவர்க்கம்போட்டுச் சீக்கிரமாய்ச் சபையண்டையிலே போய் அவர்களுக்காகப் பாவநிவர்த்தியையுண்டாக்கு. ஏனென்றாற் கர்த்தரின் சந்நிதியிலிருந்து கடுங்கோபம் புறப்பட்டது. வாதை துவக்கிற்றென்றான்.

௪௭ மோசே சொன்னபடி ஆரோன் அதையெடுத்துக்கொண்டு சபையின் நடுவிலே ஓடினான். இதோ, சனத்திலே வாதை துவக்கியிருந்தது. அவன் தூபவர்க்கம்போட்டுச் சனத்துக்காகப் பாவநிவர்த்தியையுண்டாக்கி,

௪௮ செத்தவர்களுக்கும் உயிரோடிருக்கிறவர்களுக்கும் நடுவே நின்றான். அப்பொழுது வாதை நிறுத்தப்பட்டது.

௪௯ கோராகுடையவர்த்தமானத்தினிமித்தஞ் செத்தவர்களைத் தவிர அந்த வாதையிலே செத்தவர்கள் பதினாலாயிரத்தெழுநூறுபேர்.

௫௰ ஆரோன் ஆசரிப்புக்கூடாரவாசலுக்கு மோசேயண்டைக்குத் திரும்பிவந்தான். ஏனென்றால் வாதை நிறுத்தப்பட்டுப்போயிற்று.

## ௰௭. அதிகாரம்.

ஆரோனின்கோல் துளிர்த்ததினாலே கர்த்தர் அவன் ஆசாரியப்பட்டத்தைத் திடப்படுத்தினது.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது.

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி அவர்களில் அவர்கள் பிதாக்களின் வீடுகளாகிய ஒவ்வொரு வீட்டிலுடைய பிரபுவின் கை

கொடுத்தோம். அபிஷேகத்தினிமித்தம் அவைகளையுனக்கும் உன் குமாரருக்கும் நித்திய கட்டளையாகக் கொடுத்தோம்.

௯ பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதிலே அக்கினிக்குட்படாமல் உன்னுடையதாயிருப்பது: அவர்கள் தங்களுடைய எல்லாக் காணிக்கைகளிலும் பாவம்போக்கத் தங்களுடைய எல்லாப் பலிகளிலும் குற்றம்போக்க நமக்குச் செலுத்துகிற தங்களுடைய எல்லாப் பலியிலும் படைக்கிறதெல்லாந்தானே. இது உனக்கும் உன் குமாரருக்கும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருப்பது.

௰ பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்திலே அதைப் புசிப்பாயாக. ஆண்சாதியானவனெல்லாம் அதைப் புசிப்பானாக. அது உனக்குப் பரிசுத்தமாயிருக்கக்கடவது.

௰௧ இஸ்ரவேல் புத்திரர் அசைவாட்டுகிற அவர்களுடைய எல்லாக் காணிக்கைகளின் படைப்பும் உன்னுடையதாயிருக்கும். அவைகளையுனக்கும் உன் குமாரருக்கும் உன் குமாரத்திகளுக்குங்கூட நித்திய கட்டளையாகக் கொடுத்தோம். உன் வீட்டிலே சுத்தமானவர்களெல்லாரும் அதைப் புசிப்பார்களாக.

௰௨ அவர்கள் கர்த்தருக்குக் கொடுக்கும் அவர்களுடைய முதற்பலன்களாகிய மேலானதான எல்லா எண்ணெயையும் மேலானதான திராட்சப்பழ இரசத்தையுந் தானியத்தையும் உனக்குக் கொடுத்தோம்.

௰௩ தங்கள் தேசத்திலே விளைகிற யாவிலும் அவர்கள் கர்த்தருக்குக் கொண்டுவரும் முதற்பலன்கள் உன்னுடையதாயிருக்கும். உன் வீட்டிலே சுத்தமானவர்களெல்லாரும் அதைப் புசிப்பார்களாக.

௰௪ இஸ்ரவேலிலே * சாபத்தீடானதெல்லாம் உன்னுடையதாயிருக்கும்.

* ௩. மோசே. ௨௭, ௨௮.

௰௫ மனிதரும் மிருகஜீவன்களுமான சகல மாம்சத்திலுங் கர்ப்பந்திறந்து கர்த்தருக்குச் செலுத்தப்படுகிற யாவும் உன்னுடையதாயிருக்கும். ஆனாலும் மனிதனின் முதற்பேற்றை நீ மீட்கவே மீட்கச் சொல்லவேண்டும். தீட்டான மிருகஜீவனின் முதலீற்றையும் மீட்கச்சொல்லக்கடவாய்.

௰௬ மீட்கப்படுபவைகள் ஒருமாதத்திற்கதிகமாயிருந்தால் உன் மதிப்பின்படி ஐந்து சேக்கலாலே அவைகளை மீட்கச்சொல்லுவாயாக. பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்காகத்தானே. அது இருபது கேரு.

௰௭ ஆனாலும் மாட்டின் தலையீற்றும் ஆட்டின் தலையீற்றும் வெள்ளாட்டின் தலையீற்றும் மீட்கப்படவேண்டாம். அவைகள் பரிசுத்தம். நீ அவைகளின் இரத்தத்தைப் பீடத்தின்மேலே தெளித்து அவைகளின் கொழுப்பைக் கர்த்தருக்குகந்த வாசனையான தகனமாகக் கொளுத்தக்கடவாய்.

௰௮ அவைகளின் மாம்சம் அசைவாட்டும் மார்க்கண்டத்தைப்போலும் வலத்தொடையைப்போலும் உன்னுடையதாயிருக்கும்.

௰௯ இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்குச் செலுத்திப் படைக்கிற பரிசுத்த படைப்புகளெல்லாம் உனக்கும் உன் குமாரருக்கும் உன் குமாரத்திகளுக்குங்கூட நித்திய கட்டளையாகக் கொடுத்தோம். கர்த்தருக்கு முன்பாக அது உனக்கும் உன் வித்துக்குங்கூட என்றைக்குஞ் செல்லும் மாறாத உடன்படிக்கையென்றார்.

௨௰ பின்னையுங் கர்த்தர் ஆரோனோடே சொன்னதாவது: * அவர்களுடைய தேசத்திலே நீயொன்றையுஞ் சுதந்தரித்துக்கொள்ளவேண்டாம். அவர்கள் நடுவே உனக்குப் பங்குண்டாயிருக்கவும் வேண்டாம். இஸ்ரவேல் புத்திரரின் நடுவே நாமே உன் பங்கும் உன் சுதந்தரமுமானவர்.

* ௫. மோசே. ௰௮, ௧. ௨. யோசு. ௰௩, ௩௩.

௨௧ பின்னையும் இதோ, லேவி புத்திரர் ஆசரிப்புக்கூடாரத்தின் பணிவிடைவேலையைச் செய்கிற அவர்களுடைய வேலைக்காக நாம் அவர்களுக்கு இஸ்ரவேலிலே பத்திலொருபங்கானதையெல்லாஞ் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௨௨ இஸ்ரவேல் புத்திரர் குற்றஞ்சுமந்து சாவாதபடிக்கு இனி ஆசரிப்புக்கூடாரத்தைக் கிட்டிச் சேராதிருக்கக்கடவர்கள்.

௨௩ லேவியர் ஆசரிப்புக்கூடாரத்தின் பணிவிடைவேலையைச் செய்து தங்கள் அக்கிரமத்தைச் சுமக்கக்கடவர்கள். அது அவர்களுடைய தலைமுறைகளுக்கு நித்திய கட்டளையாயிருக்கும். அவர்கள் இஸ்ரவேல் புத்திரர் நடுவே சுதந்தரத்தைச் சுதந்தரித்துக்கொள்ளவேண்டாம்.

௨௪ ஏனெனில் இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்குப் படைப்பாகப் பத்திலே எடுக்கும் ஒன்றை லேவியருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம். ஆகையால் இஸ்ரவேல் புத்திரர் நடுவே சுதந்தரஞ் சுதந்தரிக்கவேண்டாமென்று அவர்களுக்குச் சொன்னோமென்றார்.

௨௫ பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨௬ நீ லேவியரோடே பேசி அவர்களோடே சொல்லவேண்டியதேதெனில்: இஸ்ரவேல் புத்திரர் கையிலே வாங்குகிறதற்கு நாம் உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுத்த பத்திலொன்றை நீங்கள் அவர்கள் கையிலே வாங்கினபொழுது அந்தப் பத்திலொன்றிலே பத்திலொன்றைக் கர்த்தருக்குப் படைப்பாகச் செலுத்துவீர்களாக.

௨௭ அது நீங்கள் களத்திலே தானியத்தையும் ஆலையிலே இரசத்தையும் படைப்

பாகம் எடுக்குமாப்போலே உங்களுக்கெண்ணப்படும்.

௨௮ இப்படியே நீங்கள் இஸ்ரவேல்புத்திரரிடத்தில் வாங்கும் பத்திலொன்றாகிய உங்கள் தசமபாகங்களிலெல்லாம் நீங்களும் கர்த்தருக்கென்று ஒரு படைப்பையெடுத்து, எடுத்த அந்தப் படைப்பை ஆசாரியனாகிய ஆரோனுக்குச் செலுத்தக்கடவீர்கள்.

௨௯ உங்களுக்குக் கொடுக்கப்படுகிற எல்லாக் காணிக்கைகளிலும் கர்த்தருக்கென்று படைப்பையெடுத்து, அவைகளில் மேலானதிலெல்லாம் அதின் பரிசுத்த பங்கைச் செலுத்துவீர்களாகவென்று சொல்லு.

௩௰ பின்னையும் நீ அவர்களோடே சொல்லவேண்டியதாவது, நீங்கள் அதில் மேலானதையெடுத்துச் செலுத்தும்போது அது லேவியருக்குக் களத்தின் வர்த்தியும் ஆலையின் வர்த்தியும் எடுத்துச் செலுத்துமாப்போலெண்ணப்படும்.

௩௧ அதை நீங்களும் உங்கள் வீட்டாரும் சகல இடத்திலும் புசிக்கலாம். ஏனென்றால் அது நீங்கள் ஆசரிப்புக் கூடாரத்திலே செய்கிற பணிவிடைக்கீடான உங்கள் சம்பளம்.

௩௨ இப்படி அதில் மேலானதையெடுத்துச் செலுத்தினீர்களானால் நீங்கள் அதற்காகப் பாவஞ்சுமக்காமலும், இஸ்ரவேல்புத்திரர் பரிசுத்தமாக்கினவைகளைப் பரிசுத்தக்குலைச்சலாக்காமலும் சாவாமலிருப்பீர்களென்று சொல்லென்றார்.

## ௰௯. அதிகாரம்.

தொட்டினசாம்பலைப் போட்டுப்பட்ட தண்ணீர்த்தெளிப்பின் கட்டளை.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பின்னுஞ்சொன்னதாவது.

௨ கர்த்தர் கற்பித்த நியாயப்பிரமாணக் கட்டளையேதென்றால், இஸ்ரவேல்புத்திரர் பழுதற்றதும் ஊனமில்லாததும் நுகத்தடி ஏறாததுமான சிவப்பான கிடாரியையுன்னண்டை கொண்டுவர அவர்களோடே சொல்லு.

௩ அதை எலெயாசாரென்ற ஆசாரியனுக்குக் கொடுப்பீர்களாக. அவன் அதைப் பாளயத்திற்கு வெளியே கொண்டுபோகக்கடவன். அங்கே அது அவனுக்கு முன்பாகத்தான் வதையுறக்கப்படுவதாக.

௪ அப்பொழுது ஆசாரியனாகிய எலெயாசார் தன்விரலினாலே அதின் இரத்தத்திலே கொஞ்சமெடுத்து ஆசரிப்புக்கூடாரத்திற்கெதிராக * ஏழுமுறை தெளிக்கக்கடவன். * ௩. மோசே. ௪, ௬. ௰௭.

௫ பிறப்பு கிடாரியையொருவன் அவன் கண்களுக்கு முன்பாகச் சுட்டெரிப்பானாக. * அதின் தோலும் அதின் மாம்சமும் அதின் இரத்தமும் அதின் சாணியுங் கூடச்சுட்டெரிக்கப்படக்கடவது.

* ௨. மோசே. ௨௯, ௰௪.

௬ அப்பொழுது ஆசாரியன் கேதுருக்கட்டையையும் ஈசோப்பையும் சிவப்பு நூலையும் எடுத்துக் கிடாரி எரிக்கப்படுகிற நெருப்பின் நடுவிலே போடக்கடவன்.

* ௩. மோசே. ௰௪, ௬.

௭ பிறபாடு ஆசாரியன் தன் வஸ்திரங்களை வெளுத்துத் தன் மாம்சத்தைத் தண்ணீரிலே முழுகி அதின்பிறகு பாளயத்தில் வருவானாக. ஆசாரியன் சாயுங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பான்.

௮ அதைச் சுட்டெரித்தவனுந் தன் வஸ்திரங்களைத் தண்ணீரிலே வெளுத்துத் தன் மாம்சத்தைத் தண்ணீரிலே முழுகிச் சாயுங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பான்.

௯ ஆனால் சுத்தமான ஒருவன் கிடாரியின் சாம்பலைவாரிக்கொண்டு பாளயத்திற்குப் புறம்பே சுத்தமான ஒரு ஸ்தலத்திலே கொட்டிவைக்கக்கடவன். * அது தீட்டை நீக்குந் தண்ணீருக்கென்று இஸ்ரவேல்புத்திரரின் சபைக்காகக் காத்துவைக்கப்படக்கடவது. அது பாவம்போக்குகிறது.

* எபிரே. ௯, ௰௩.

௰ கிடாரியின் சாம்பலை வாரினவன் தன் வஸ்திரங்களை வெளுத்துச் சாயுங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பான். இது இஸ்ரவேல்புத்திரருக்கும் அவர்கள் நடுவில் தங்குகிற பரதேசிக்கும் நித்திய கட்டளையாயிருப்பதாக.

௧௧ செத்துப்போன யாதொரு மனிதனுடைய பிரேதத்தைத் தொட்டவன் ஏழுநாள் தீட்டுப்பட்டிருப்பான்.

௧௨ அவன் மூன்றாம் நாளிலும் ஏழாம் நாளிலும் அதினாலே பாவம்போக்கக்கடவன். அப்பொழுது சுத்தமாயிருப்பான். மூன்றாம் நாளிலும் ஏழாம் நாளிலும் பாவம்போக்கானேயாகில் சுத்தமாகான்.

௧௩ செத்த மனிதனுடைய பிரேதத்தைத் தொட்டும் பாவம்போக்காதவனெவனோ அவன் கர்த்தரின் வாசஸ்தலத்தைத் தீட்டுப்படுத்துகிறான். அந்த ஆத்துமா இஸ்ரவேலிலிராமல் அறுப்புண்பான். ஏனெனில் தீட்டை நீக்குந் தண்ணீர் அவன்மேல் தெளிக்கப்படவில்லை. அவன் தீட்டுப்பட்டிருப்பான். அவன் தீட்டு இன்னம் அவன்மேலிருக்கும்.

௧௪ கூடாரத்திலொரு மனிதன் செத்தால் அதற்கான நியாயப்பிரமாணமாவது, கூடாரத்திற்குட் பிரவேசிக்கிறவனுக்குங் கூடாரத்திலிருக்கிறவனுக்குமெல்லாம் ஏழுநாள் தீட்டுண்டாயிருக்கும்.

௧௫ மூடிக்கட்டப்பட்டிராமல் திறந்திருக்கிற பண்டமுமெல்லாந் தீட்டுப்பட்டிருக்கும்.

௰௬ வெளியிலேபட்டயத்தாலவெட்டு ண்டவனையாவது செத்தவனையாவது மனித எலும்பையாவது பிரேதக்குழியையாவது தொட்டவனெல்லாம ஏழுநாளதீட்டுப்பட்டிருப்பான.

௰௭ ஆகையால தீட்டுப்பட்டவனுக்காகப் பாவம்போக்குங் கிடாரியின சாம்பலிலே கொஞ்சமெடுத்து ஒருபாத்திரத்திலே போட்டு அதின்மேலே சுத்தத்தண்ணீர் வார்க்கவேண்டும.

௰௮ பிற்பாடு சுத்தமான ஒருவன ஒரு ஈசோப்பை யெடுத்துக்கொண்டு அந்தத் தண்ணீரிலே தோயத்துக் கூடாரத்தின்மேலுஞ் சகல பணிமுட்டுகளின்மேலும அங்கேயிருக்கிற ஆத்துமாக்களின்மேலும அல்லவென்று எலும்பையாகிலும வெட்டுண்டவனையாகிலுஞ் செத்தவனையாகிலும பிரேதக்குழியையாகிலுந் தொட்டவன்மேலுந் தெளிக்கக்கடவன.

௰௯ சுத்தமாயிருக்கிற ஒருவன தீட்டுப்பட்ட வன்மேலே மூன்றுமநாளிலும ஏழாம நாளிலுந் தெளித்து இப்படி ஏழாம நாளிலே அவனுடைய பாவத்தைப்போக்கக்கடவன. இவன தன வஸ்திரங்களைவெளுத்துத் தண்ணீரிலேமுழுகிச்சாயுங்காலத்திலேசுத்தமாயிருப்பான.

௨௰ தீட்டுப்பட்டிருந்தும பாவம்போக்காதேபோகிற ஆத்துமாவோவெனிற் சபையிலிராதபடிக்கு அறுப்புண்பான. ஏனெனிற்கர்த்தரின பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினான. தீட்டு நீக்குந் தண்ணீர் அவன்மேலேதெளிக்கப்பட்டதில்லை. அவனதீட்டுப்பட்டிருக்கிறான.

௨௧ இது அவர்களுக்கு நித்தியகட்டளையாயிருக்கக்கடவது. தீட்டை நீக்குந்தண்ணீரைத்தெளித்தவனுந் தனவஸ்திரங்களைவெளுக்கக்கடவன. தீட்டைநீக்குந்தண்ணீரைத்தொட்டவனுஞ் சாயுங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பான.

௨௨ தீட்டுப்பட்டிருக்கிறவன தொடுகிறதெல்லாந் தீட்டுப்படும. அதைத்தொடுகிற ஆத்துமாவுஞ்சாயுங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பானென்றார்.

## ௨௰. அதிகாரம்.

மிரியாம மரித்ததுங் கல்பலிசனத்திற்குத் தண்ணீர்கொடுத்ததும.

இஸ்ரவேல புத்திரரான சபையெல்லாம முதலாமாதத்திலே சீனவனாந்தரத்திலேவந்தது. அங்கேசனங் காதேசிலேதங்கித்தரித்தது. அங்கேமிரியாம மரணமடைந்து அங்கே அடக்கம்பண்ணப்பட்டாள.

௨ சனத்திற்குத்தண்ணீரில்லாதிருந்தது. அப்பொழுது * மோசேக்கும ஆரோனுக்கும விரோதமாயக்கூட்டங் கூடினார்கள. * ௨. மோசே. ௰௭, ௨.

௩ சனம்மோசேயோடே வாக்குவாதம பண்ணிச்சொன்னதாவது. எங்களசகோதரர் கர்த்தருக்குமுன்பாகமாண்டபொழுது நாங்கள மாண்டுபோமானாலதாவினை.

௪ நாங்களும எங்களமிருகங்களும இங்கேசாக நீங்கள கர்த்தரின சபையை இந்த வனாந்தரத்திலே கொண்டுவந்ததேன்ன?

௫ விதையும அத்திமரமுந் திராட்சச்செடியும மாதளஞ்செடியுங் குடிக்கத்தண்ணீருமில்லாத இந்த ஆகாத இடத்திற்கெங்களைக் கொண்டுவரும்படிக்கு நீங்கள எங்களை எகிப்திலிருந்து ஏறிவரப்பண்ணினதேனென்றார்கள.

௬ அப்பொழுது மோசேயும ஆரோனுஞ் சபைக்குமுன்பாக இருந்து ஆசரிப்புக்கூடாரத்தின வாசலுக்குப்போய முகங்குப்புற விழுந்தார்கள. * அப்பொழுது கர்த்தருடைய மகிமை அவர்களுக்குக்காணப்பட்டது.

* ௰௪, ௰.

௭ கர்த்தர் மோசேயோடேபேசிச்சொன்னதாவது.

௮ நீ கோலையெடுத்துக்கொண்டு, நீயும உன் சகோதரனாகிய ஆரோனுஞ்சபையைக் கூட்டி அவர்களகண்களுக்குமுன்பாகக் கல்மலையோடே பேசுங்கள. அப்பொழுது அது தன தண்ணீரைக்கொடுக்கும. இப்படி நீயவர்களுக்குக்கல்மலையிலிருந்து தண்ணீர்புறப்படப்பண்ணிச்சபைக்கும அவர்கள மிருகங்களுக்குங் குடிக்கக்கொடுப்பாயாகவென்றார்.

௯ அப்பொழுது மோசேகர்த்தருடைய சமூகத்திலிருக்கிறகோலை அவர்தனக்குக் கற்பித்தபடியே யெடுத்துக்கொண்டான.

௰ மோசேயும ஆரோனுஞ் சபையைக் கல்மலைக்குமுன்பாகக் கூட்டினார்கள. அப்பொழுது மோசே அவர்களுடனே, கலகக்காரரே! கேளுங்களேன? உங்களுக்கிந்தக் கல்மலையிலிருந்து தண்ணீர் புறப்படப்பண்ணுவோமோவென்று சொல்லி,

௰௧ தனகையையோங்கிக் கல்மலையைத் தனகோலினால்இருமுறையடித்தான. அப்பொழுது பரிபூரணமானதண்ணீர்களபுறப்பட்டதினாலே சபையும அவர்கள மிருகங்களுங்குடித்தது.

௰௨ கர்த்தரோவெனில மோசேயோடும ஆரோனோடுஞ்சொன்னதாவது. * நமமை இஸ்ரவேலபுத்திரரின கண்களுக்குமுன்பாகப்பரிசுத்தம்பண்ணும்படிக்கு நீங்களநம்மைவிசுவாசியாதேபோனபடியினாலே நீங்கள இந்தச்சபையைநாம அவர்களுக்குக்கொடுக்கிற தேசத்திற்குட்கொண்டுபோவதில்லையென்றார். * ௫. மோ. ௧, ௩௭.

௰௩ இவைகளஇஸ்ரவேலபுத்திரர் கர்த்தரோடேவாக்குவாதம்பண்ணினதும அவர்

இவர்களுக்குப்பரிசுத்தம விளங்கினதுமான மேரிபாவின்தண்ணீர்கள.

தங்களதேசத்து வழியாயக கடநதுபோக ஏதோமியர் இஸ்ரவேலுக்குத்தாரங்கொடாதேபோனது

௰௪ பிறபாடு மோசே காதேசிலிருநது ஏதோமின இராசாவணடைககுத தாதுப தியையனுப்பிச் சொலலச சொனனதாவது,

௰௫ எஙகளபிதாககள எகிப்திலேபோயி றஙகினதும நாஙகள எகிப்திலே நீடியநாள குடியிருந்ததும எகிப்தியர் எஙகளையும எஙகளபிதாககளையும உபததிரவபபடுததி னதுமான எஙகளுககுவநத பிரயாசததை யெலலாம நீ அறிநதிருககிறாய.

௰௬ கர்த்தரைநோககி நாஙகளகூபபிட டோம. அபபொழுது அவரெஙகளசத்தத் தைககேட்டு ஒருதூதனையனுபபி எஙகளை எகிப்திலிருநதுபுறபபடபபணணினார். இப பொழுதும இதோ, நாஙகள உன சமைசி யெலலைககுச்சமீபமான காதேஸ ஊரிலிரு ககிறோம.

௰௭ நாஙகள உன தேசத்து வழியாயக கடநதுபோகடடுமே? நாஙகள வயல வெளிகள வழியாய அலலது திராடசித தோட்டஙகள வழியாயபபோகாமலும துரவு களின தணணீரைககுடியாமலும இராச பாதையாயபபோய உன எலலையைக கட நதிருமடடும வலது இடதுபுறமாகசசா யாதபடிபோவோமென்று உன சகோதரனாகிய இஸ்ரவேல சொலலியனுபபுகிறேனென்று சொலலசசொனனான.

௰௮ ஏதோமோவெனில நீ யென வழியா யக்கடநதுபோகவேணடாம மறுபபடிப படையத்தோடேயுனககெதிராகப்புறப் படுவேனென்று அவனுககுச சொலலச சொனனான.

௰௯ அபபொழுது இஸரவேல புதத்திரர் அவனோடே நடபபான வழியிலே யேறிப போவோம. நாஙகளும எஙகளமிருகஙகளு மும உன தணணீரிலே குடிததால அதின விலகிரயததைக கொடுபபோம காலநடையாயமாததிரம கடநதுபோவோம, பினனொனறுமவேணடாமெனறார்கள.

௨௰ ஏதோமோவெனறால, நீ கடநது போகவேணடாமெனறு சொலலி வெகுச னத்தோடும பலததோடும அவர்களுக் கெதிராகப்புறபபடடு,

௨௧ தன எலலைவழியாயககடநதுபோக இஸரவேலுககுத்தாரங்கொடாதேபோனான. ஆகையால இஸரவேல அவனைவிடடுவிலகினது.

௨௨ இஸரவேல புததிரரான சபையெல லாம காதேசை விடடுப பயணமபணணி, ஓரொனறபர்வதததிறகுவநதது.

ஆரோனமரிததது.

௨௩ ஏதோம தேசத்தின எலலைககருகான ஓரொனறபர்வதத்திலேகர்த்தர் மோசே யோடும ஆரோனோடுஞ சொனனதாவது,

௨௪ ஆரோன தன சனததாரோடேசேர்த் துககொளளபபடுவான. ஏனெனில மேரி பாவின தணணீர்கள காரியததிலே நீஙகள நமது வாககுககுககீழ்ப்படியாமற் போன படியினாலே அவன நாம இஸ்ரவேலபுததிர ருககுககொடுககிற தேசததிலவருவதிலலை.

௨௫ நீ ஆரோனையும அவன குமாரனாகிய எலெயாசாரையுஙகூடடிககொணடு அவர் களை ஓரொனறபர்வதததிலேறபபணணி,

௨௬ ஆரோன உடுததிருககிற அவனவஸ திரஙகளைககழறறி அவைகளையவன குமார னாகிய எலெயாசாருககு உடுததுவாயாக. ஏனெனில ஆரோன சேர்ததுககொளளப படடு அஙகே மரிபபானெனறார்.

௨௭ கர்த்தர் கறபிததபடியே மோசே செயதான. சபையெலலாமபார்ககஅவர் கள ஓரொனறபர்வதத்திலேறினார்கள.

௨௮ அஙகே மோசே ஆரோனுடுததிருந்த வஸதிரஙகளைககழறறி அவைகளையவன குமாரனாகிய எலெயாசாருககுடுததினான. அபபொழுது ஆரோன அஙகே பர்வததின கொடுமுடியிலே மரிததான. பிறபாடு மோசேயும எலெயாசாரும பர்வதத்திலிருநதிறங கிவநதார்கள.

௨௯ ஆரோன மரிததுபபோனானென றதைச சபையெலலாம கணடபொழுது இஸ ரவேல வீட்டாரெலலாரும ஆரோனுக்காக முபபதுநாள அழுதுகொணடிருநதார்கள.

## ௨௧. அதிகாரம்.

கானானியரை மேற்கொணட முதறசெயம.

வேவுகாரர்காணபித்தவழியாய இஸ ரவேலர்வருகிறதைத் தெனதேசமாயிருக கிற ஆராதின இராசாவாகிய கானானியன கேடடபொழுது அவன இஸ்ரவேலருககு விரோதமாயயுததமபணணி அவர்களிற்சில ரைச சிறைபிடிததுக கொணடுபோனான.

௨ அபபொழுதுஇஸரவேலதேவரீர்அந்த சசனததையெனகையிலொபபுககொடுக கவே ஒபபுககொடுததால அவர்களுடைய பட்டணஙகளைச சஙகாரமபணணுவேனெ னறுஇஸரவேலகர்த்தருககுபபொருததனை பணணினான.

௩ கர்த்தர் இஸரவேலின சத்ததைக கேடடுக் கானானியரை யொபபுககொடுத தார். அபபொழுது அவர்களையும அவர்கள பட்டணஙகளையுஞ சஙகாரமபணணி அவ விடத்திற்கு ஓர்மாவெனறுபேரிட்டார்கள.

கொள்ளிவாயச் சர்ப்பங்களாற் கடிக்கப்பட்டவர்களுக்காக வெண்கலச் சர்ப்பம் ஒரு கம்பத்தில் உயர்த்தப்பட்டது.

௪ அவர்கள் ஏதோம் தேசத்தைச் சுற்றிப்போகும்படிக்கு ஓரென்ற பர்வதத்தை விட்டு நாணற்சமுத்திரத்தின் வழியாய்ப் பயணம்பண்ணினார்கள். அந்த வழியிலே சனத்தின் ஆத்துமம் விசனமடைந்தது.

௫ சனம் பராபரனுக்கும் மோசேக்கும் விரோதமாகப் பேசி, நாங்கள் வனாந்தரத்திலே சாவும்படிக்கு நீங்கள் எங்களை எகிப்துத்தேசத்திலிருந்தேறிவரப்பண்ணினதென்ன? என்னென்றால் இங்கே அப்பமுமில்லை, தண்ணீருமில்லை. * அற்பமான இந்த அப்பம் எங்கள் ஆத்துமத்திற்கு வெறுப்பாயிருக்கின்றதென்றார்கள். * ௰௧, ௬.

௬ அப்பொழுது கர்த்தர் * கொள்ளிவாயச் சர்ப்பங்களைச் சனத்துக்குள் அனுப்பினார். அவைகள் சனத்தைக் கடித்ததினாலே இஸ்ரவேலில் வெகு சனஞ் செத்தது.

* ௧. கொரி. ௰, ௯.

௭ அப்பொழுது சனம் மோசேயண்டைக்கு வந்து, நாங்கள் கர்த்தருக்கும் உமக்கும் விரோதமாய்ப் பேசினதினாலே பாவஞ்செய்தோம். சர்ப்பங்களை யெங்களைவிட்டகற்றக் கர்த்தரை விண்ணப்பம் பண்ணுமென்றார்கள். மோசே சனத்திற்காக விண்ணப்பம் பண்ணினான்.

௮ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே: * நீ ஒரு கொள்ளிவாயச் சர்ப்பத்தின் ரூபத்தையுண்டாக்கி அதை யொரு கம்பத்தின்மேலே தூக்கிவை. அப்பொழுது சர்ப்பத்தினாற் கடிக்கப்பட்டு அதை நோக்கிப் பார்க்கிறவனெல்லாம் பிழைப்பானென்றார். * யோவா. ௩, ௰௪.

௯ அப்பொழுது மோசே ஒரு வெண்கலச் சர்ப்பத்தையுண்டாக்கி அதையொரு கம்பத்தின்மேலே தூக்கிவைத்தான். சம்பவித்ததென்னில் ஒருவனை யொரு சர்ப்பங் கடித்தபொழுது அவனந்த வெண்கலச் சர்ப்பத்தை நோக்கிப்பார்த்துப் பிழைப்பான்.

இஸ்ரவேல் பண்ணின சில பயணங்கள்.

௰ இஸ்ரவேல் புத்திரர் பயணப்பட்டுப்போய் ஓபோத்திற் பாளயமிறங்கினார்கள்.

௰௧ அவர்கள் ஓபோத்திலிருந்து பயணப்பட்டுப்போய்ச் சூரியோதயத்திற்கு நேராய் மோவாபுக்கெதிரான வனாந்தரத்திலிருக்கிற ஆபரீமின் மேடுகளிலே பாளயமிறங்கினார்கள்.

௰௨ அங்கேயிருந்து பயணப்பட்டுப்போய்ச் சாரேத்பள்ளத்தாக்கிலே பாளயமிறங்கினார்கள்.

௰௩ அங்கேயிருந்து பயணப்பட்டுப்போய் எமோரியரின் எல்லையிலிருந்து வருகிறதும் வனாந்தரத்திலே ஓடுகிறதுமான அர்னோன் ஆற்றுக்கு இப்புறம் பாளயமிறங்கினார்கள். ஏனெனில் அர்னோன் மோவாபுக்கும் எமோரியருக்கும் நடுவேயிருக்கிற மோவாபின் எல்லை.

௰௪ ஆகையாற் சுப்பாவிலிருக்கிற வாகேபும் அர்னோனின் ஆற்றுக்கால்களும்,

௰௫ ஆர் என்ற வாசஸ்தலத்திற்குத் திரும்புகிற ஆற்றுக்கால்களின் ஓடையும் மோவாபின் எல்லையோடேயிருக்கிறதென்று கர்த்தருடைய யுத்தங்களின் புஸ்தகத்திலே எழுதியிருக்கின்றது.

௰௬ அங்கேயிருந்து பேயேருக்கு வந்தார்கள். சனத்தைக் கூட்டு, அவர்களுக்குத் தண்ணீர் கொடுப்போமென்று கர்த்தர் மோசேக்குச் சொன்ன ஊற்றிருக்கிற ஸ்தலம் அதுதான்.

௰௭ அப்பொழுது இஸ்ரவேல் பாடின பாட்டாவது: ஊற்றுத்தண்ணீரே! பொங்கிவா. அதினிமித்தம் பாடுவோம் வாருங்கள்.

௰௮ நியாயங் கற்பிக்கிறவனோடேகூடப் பிரபுக்கள் தங்கள் ஊன்றுகோல்களைப் பிடித்துக்கொண்டிருந்து இந்தத் துரவை வெட்டுவித்தார்கள். சனத்தில் மேன்மையானவர்கள் அதைத் தோண்டினார்களென்று பாடினார்கள். அந்த வனாந்தரத்திலிருந்து மாத்தனாவுக்கும்,

௰௯ மாத்தனாவிலிருந்து நகாலியேலுக்கும், நகாலியேலிலிருந்து பாமோத்துக்கும்,

௨௰ பாமோத்திலிருந்து மோவாபின் வெளியிலிருக்கிறதும் வனாந்தரத்துக்கு எதிராயிருக்கிற பிஸ்காவின் கொடுமுடிக்கடுத்ததுமான பள்ளத்தாக்குக்கும் வந்தார்கள்.

எமோரியர் தேசத்தையும் பாசான் தேசத்தையும் இஸ்ரவேல் கட்டிக்கொண்டது.

௨௧ அப்பொழுது இஸ்ரவேல் எமோரியரின் இராசாவாகிய சீகோனண்டைக்குத் தானாபதிகளையனுப்பி,

௨௨ உன் தேசத்து வழியாய் நான் கடந்துபோகட்டும். நாங்கள் வயல்களிலுந் திராட்சத்தோட்டங்களிலுஞ் சாயாமலும் துரவுகளின் தண்ணீரைக் குடியாமலும் உன் எல்லையைக் கடந்து தீருமட்டும் இராசபாதையாய் நடந்துபோவோமென்று சொல்லச்சொன்னார்கள்.

௨௩ சீகோனோவென்றால் தன் எல்லைவழியாய்க் கடந்துபோக இஸ்ரவேலுக்கு உத்தாரங்கொடாமல் தன் சனத்தையெல்லாங் கூட்டி இஸ்ரவேலுக்கெதிராக வனாந்தரத்திலே புறப்பட்டு யாகசாவுக்கு வந்து இஸ்ரவேலுக்கு விரோதமாய் யுத்தம்பண்ணினான்.

௨௪ * ஆனால் இஸ்ரவேல் அவனைப் பட்டயக் கருக்கினால் வெட்டி அர்னோன்

கடலாபோகமட்டுக்கும் அம்மோன்புத்திரின் தேசமட்டுக்குமிருக்கிற அவன் தேசத்தைக் கட்டிக் கொண்டார்கள். ஏனெனில் அம்மோன்புத்திரின் எல்லையரணிப்பாயிருந்தது. * சங்கீதம். ௱௩௫, ௰௧ ௰௨.

௨௫ இஸ்ரவேல் அந்தப் பட்டணங்களையெல்லாம் பிடித்து ஏமோரியருடைய எல்லாப் பட்டணங்களுமாகிய எஸ்போனிலும் அதினுடைய எல்லா ஊர்க்கிராமங்களிலும் குடியிருந்தார்கள்.

௨௬ ஏனெனில் எஸ்போன் ஏமோரியரின் இராசாவாகிய சீகோனின் பட்டணமாயிருந்தது. அவனென்றால் இவன் மோவாபியரின் முந்தின இராசாவுக்கு விரோதமாய் யுத்தம்பண்ணி அர்னோன்மட்டுக்குமிருந்த அவன் தேசத்தையெல்லாம் அவன் கையிலே பிடித்துக்கொண்டிருந்தான்.

௨௭ ஆகையால் பழமொழிக்காரர் சொன்னது. எஸ்போனுக்கு வாருங்கள். சீகோனின் பட்டணங் கட்டியாயக் கட்டப்படுவதாக.

௨௮ ஏனெனில் எஸ்போனிலிருந்து அக்கினியும் சீகோனின் பட்டணத்திலிருந்து சுவாலையும் புறப்பட்டு மோவாபியரின் ஆரோனையும் அர்னோனுடைய மேடுகளின் எசமானர்களையும் பட்சித்தது.

௨௯ மோவாபே! உனக்கையோ. காமோஸ் தேவனின் சனமே! நீ கெட்டாய். அதைப் பின்பற்றியோடின தன் குமாரரையுந் தன் குமாரத்திகளையும் ஏமோரியரின் இராசாவாகிய சீகோனுக்குச் சிறைகளாக ஒப்புக்கொடுத்தது.

௩௦ அவர்களை எய்துபோட்டோம் எஸ்போன் பட்டணந் தீபோன்மட்டும் கெட்டுப்போயிற்று. மெதேபாமட்டும் ஆண்டிருந்த நோப்பாப் பட்டணபரியந்தம் அவர்களைப் பாழாக்கடித்தோமென்பார்கள்.

௩௧ அப்படியே இஸ்ரவேல் ஏமோரியரின் தேசத்திலே குடியிருந்தது.

௩௨ பின்பு மோசே யாசேசேர் பட்டணத்தை வேவுபார்க்கிறவர்களை அனுப்பினான். அதின் ஊர்களைக் கட்டிக்கொண்டு அங்கேயிருந்த ஏமோரியரைத் துரத்திவிட்டார்கள்.

௩௩ பிறகு பாசானுக்குப்போகிற வழி நோக்கித் திரும்பிக்கொண்டு ஏறிப்போனார்கள். அப்பொழுது பாசான் இராசாவாகிய ஓகு அவனுடைய எல்லாச்சனமுங்கூட அவர்களுக்கெதிராக யுத்தம்பண்ணும்படிக்கு எத்ரேயிக்குப் புறப்பட்டு வந்தார்கள்.

௩௪ கர்த்தர் மோசேயுடனே, அவனுக்குப் பயப்படாயாக. ஏனெனில் அவனையும் அவனுடைய எல்லாச்சனத்தையும் அவன் தேசத்தையும் உன் கையிலே ஒப்புக்கொடுத்தேம். எஸ்போனிலே குடியிருந்த ஏமோரியரின் இராசாவாகிய சீகோனுக்கு நீ செய்தபடியே அவனுக்குஞ் செய்யக்கடவாயென்றார்.

௩௫ அப்படியே அவனையும் அவன் குமாரரையும் அவனுடைய எல்லாச்சனத்தையும் ஒருவரும் அவனுக்குத் மீதிருக்கத் தக்கதாய் வெட்டிப்போட்டு அவன் தேசத்தைக் கட்டிக்கொண்டார்கள்.

## ௨௨. அதிகாரம்.

இஸ்ரவேலைச் சபிக்கிறதற்குப் பாலாக பீலேயாமை அழைத்தனுப்பினது.

பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் பயணம்பண்ணி எரிகோவிட்டவிருக்கும் யோர்தானுக்கப்பாலே மோவாபின் சமபூமிவெளிகளிலே பாளயமிறங்கினார்கள்.

௨ அன்றியும் இஸ்ரவேல் ஏமோரியருக்குச் செய்ததையெல்லாஞ் சிப்போரின் குமாரனாகிய பாலாக் கண்டான்.

௩ அப்பொழுது மோவாபியர் அந்தச் சனம் ஏராளமென்று அதற்கு முன்பாகவே பயமடைந்து இஸ்ரவேல் புத்திரின்மேல் மனமடிவாகி,

௪ மீதியானியரின் மூப்பரோடே மாடு வெளியின் புல்லை மேய்கிறதுபோலே இப்பொழுது இந்தக் கூட்டம் நம்மைச் சுற்றிலும் இருக்கிறதையெல்லாம் மேயுமென்றார்கள். சிப்போரின் குமாரனாகிய பாலாக் கோவெனில் அக்காலத்திலே மோவாபின் இராசாவாயிருந்தான்.

௫ அவன் பேயோரின் குமாரனாகிய பீலேயாமை அழைப்பிக்க அவனுடைய சனப்புத்திரின் தேசத்தில் நதியண்டையிலிருக்கிற பெத்தோருக்குத் தானூதிகளை அனுப்பி இதோ, ஒரு சனசதளம் எகிப்திலிருந்து புறப்பட்டுவந்தது. இதோ, பூமியின் விசாலத்தையும் மூடி எனக்கெதிரேயிறங்கியிருக்கின்றது.

௬ இப்பொழுதும் நீ வந்து எனக்காக அந்தச் சனத்தைச் சபியேன்; ஏனெனில் அது என்னிலும் பலத்தது. அப்பொழுது ஒருவேளை நான் அதை முறியடித்து அதைத் தேசத்திலிருந்து துரத்தலாம். ஏனென்றால் நீ ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்பட்டவன் நீ சபிக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்றறிவேனென்று சொல்லியனுப்பினான்.

௭ அப்படியே மோவாபின் மூப்பரும் மீதியானின் மூப்பரும் * குறிசொல்லுதலின் கூலியைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டுபோய்ப் பீலேயாமண்டைக்கு வந்து பாலாகின் வார்த்தைகளை அவனுக்குச் சொன்னார்கள். * ௨. பேது. ௨, ௰௫.

௮ அவன் அவர்களோடே, இராவைக்கிங்கே தங்கியிருங்கள். கர்த்தர் என்னோடே சொல்லும்படியே உங்களுக்கு மறுமொழி கொண்டுவருவேனென்றான். அப்படியே மோ

வாபின் பிரபுக்கள் பீலேயாமிடத்திலே தங்கியிருந்தார்கள்.

௯ பராபரன் பீலேயாமண்டைக்கு வந்து, உன்னிடத்திலிருக்கிற இந்த மனிதர் ஆரென்றார்.

௰ பீலேயாம் பராபரனோடே சொன்னதாவது. சிப்போரின் குமாரனாகிய பாலாக்கென்கிற மோவாபின் ராசா அவர்களை என்னண்டைக்கு அனுப்பி,

௰௧ இதோ, எஜிப்திலிருந்து வந்திருக்கிற ஒரு சனக்கூட்டம் பூமியின் விசாலத்தை மூடுகிறது. இப்பொழுது நீ வந்து எனக்காக அதைச் சபி. அப்பொழுது ஒருவேளை நான் அதோடே யுத்தம்பண்ணி அதைத் துரத்திவிடலாமென்று சொல்லச் சொன்னானென்றான்.

௰௨ அப்பொழுது பராபரன் பீலேயாமோடே, நீ அவர்களோடே போகவேண்டாம். அந்தச் சனத்தைச் சபிக்கவும் வேண்டாம். ஏனெனில் அது ஆசீர்வதிக்கப்பட்டதென்றார்.

௰௩ ஆகையால் பீலேயாம் காலமே யெழுந்திருந்து பாலாக்கின் பிரபுக்களுடனே உங்கள் தேசத்துக்குப் போய்விடுங்கள். ஏனெனில் உங்களோடே கூடப் போகிறதற்குக் கர்த்தர் எனக்கு உத்தரவு கொடுக்கமாட்டோமென்று சொன்னான்.

௰௪ அப்படியே மோவாபியருடைய பிரபுக்கள் எழுந்து போய்ப் பாலாக்கண்டைக்கு வந்து, பீலேயாம் எங்களோடே வரமாட்டோமென்றானென்று சொன்னார்கள்.

௰௫ மறுபடியும் பாலாக் அவர்களிலும் கனமுள்ள அதிகமான பிரபுக்களை அனுப்பினான்.

௰௬ அவர்கள் பீலேயாமண்டைக்கு வந்து அவனோடே சொன்னதாவது. நீ என்னண்டைக்கு வரமாட்டேனென்று சொல்லாயாகவேண்டும்,

௰௭ உன்னை மிகவுங் கனம்பண்ணுவேன். நீ என்னோடே சொல்வதை யெல்லாஞ் செய்வேன். நீ வந்து எனக்காக அந்தச் சனத்தைச் சபியென்னுஞ் சிப்போரின் குமாரனாகிய பாலாக் சொல்லச் சொன்னானென்றார்கள்.

௰௮ பீலேயாம் பாலாக்கின் ஊழியக்காரருக்குப் பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது. பாலாக் எனக்குத் தன் வீடு நிறைய வெள்ளியும் பொன்னுங் கொடுத்தாலும் நான் சின்னக்காரியமானாலும் பெரியகாரியமானாலுஞ் செய்கிறதிலே என் பராபரனாகிய கர்த்தரின் கட்டளையை மீறக்கூடாது.

௰௯ இப்பொழுதுங் கர்த்தர் அப்புறம் என்னோடே என்ன சொல்லுவாரென்கிறதை நான் அறியும்படிக்கு நீங்களும் இந்த இராத்திரியிலே இங்கேயிருங்களேனென்றான்.

௨௰ இராவிலே பராபரன் பீலேயாமண்டைக்கு வந்து அவனுடனே, அந்த மனிதர் உன்னை அழைக்க வந்தார்களானால் நீ யெழுந்து அவர்களோடே கூடப்போ. ஆனாலும் நானுன்னோடே சொல்லும் வார்த்தையின்படி மாத்திரம் நீ செய்யக்கடவாயென்றார்.

௨௰௧ பீலேயாம் காலமே யெழுந்திருந்து தன் கழுதையின்மேலே சேணம்போட்டு மோவாபின் பிரபுக்களோடே கூடப்போனான்.

௨௰௨ ஆனால் அவன் போகிறதினாலே பராபரனுக்குக் கோபமூண்டது. கர்த்தரின் தூதனானவர் வழியிலே அவனுக்கெதிரியாய் நின்றுகொண்டார். அவனோவெனில் தன் கழுதையின்மேலேறிப்போனான். அவனோடே வேலைக்காரர் இரண்டுபேரும் அவனோடிருந்தார்கள்.

௨௰௩ உருவின சமது பட்டயத்தைத் தம்முடைய கையிலே பிடித்து வழியிலே நிற்கிற கர்த்தருடைய தூதனைக் கழுதை கண்டு வழியை விட்டு வயலிலே விலகிப்போயிற்று. அதை வழிக்குத் திருப்பப் பீலேயாம் அதை யடித்தான்.

௨௰௪ பின்பு கர்த்தருடைய தூதன் இருபுறத்திலும் சுவரிருந்த திராட்சத்தோட்டங்களின் பாதையிலே போய் நின்றார்.

௨௰௫ கழுதை கர்த்தருடைய தூதனைக் கண்டு மதிலோடே ஒதுங்கிப் பீலேயாமின் காலை மதிலோடே நெருக்கிற்று. அப்பொழுது திரும்ப அதையடித்தான்.

௨௰௬ கர்த்தருடைய தூதன் அப்புறம் போய் வலதுபுறத்திலும் இடதுபுறத்திலும் விலக வழியில்லாத இடுக்கமான இடத்திலே நின்றுகொண்டார்.

௨௰௭ அப்பொழுது கழுதை கர்த்தருடைய தூதனைக் கண்டு பீலேயாமின் கீழ்ப்படுத்துக்கொண்டது. பீலேயாமோவெனில் கோபமூண்டவனாகிக் கழுதையைத் தடியினாலே அடித்தான்.

௨௰௮ அப்பொழுது கர்த்தர் * கழுதையின் வாயைத் திறந்தார். அது பீலேயாமோடே, நீர் என்னை இத்தோடே மூன்றுதரம் அடித்ததற்கு நானும்மைக் கென்ன செய்தேனென்றது. * ௨. பேது. ௨, ௰௬. யூதா. ௰௧.

௨௰௯ அப்பொழுது பீலேயாம் கழுதையைப் பார்த்து, நீ என்னைப் பரியாசம்பண்ணிவருகிறாய். என் கையில் ஒரு பட்டயமிருந்தாலதாவிலை. இப்பொழுது தானே உன்னைக் கொன்றுபோடுவேனென்றான்.

௩௰ கழுதையோவென்றால் பீலேயாமோடே, நீர் என்னைக் கையாண்டகாலமெல்லாம் இந்நாள்வரைக்கும் நீர் ஏறின கழுதை நானல்லவோ? உமக்கு அப்படிச் செய்ய எப்போவாகிலும் எனக்குப் பழக்கமாயிருந்ததோவென்றது. அதற்கவன் இல்லையென்றான்.

௩௧ அபபொழுது கர்த்தர் பிலெயாமின கணகளைததிறந்தார். வழியிலே நினறு உருவினதமதபட்டயததைத தமமுடையகைகயிலேபிடிததிருககிற கர்ததருடையதூதனையவனகணடு குனிநதுமுகங்குபபுறப்பணிநதான.

௩௨ கர்ததருடையதூதனவர் அவனோடேசொனனதாவது. நீ உனகழுதையை யிநதமூனறுதரம அடிதத தெனன? இதோ.நாமஎதிரியாயபபுறப பட்டுவநதோம. ஏனெனில இநதவழி நமககு முனபாக மாறுபாடாயிருககினறது.

௩௩ கழுதையோவெனில நமமைககணடு இநதமூனறுதரம நமதுமுகததைவிட்டு விலகிறறு. நமதுமுகததைவிட்டு விலகாதிருநததானால இபபொழுது நாம உனனைக்கொனறுபோட்டுக்கழுதையையுயிரோடேவைபபோமேயெனறார்.

௩௪ அபபொழுது பிலெயாம கர்ததருடைய தூதனுடனே நானபாவஞசெயதேன. ஏனெனில தேவரீர்வழியிலே எனககெதிராகநிறகிறதை யறியாதிருநதேன. இபபொழுதும உமதுபார்வைககு இது பொலலாபபாயிருநதால திருமபிககொளளுவேனெனறான.

௩௫ கர்ததருடைய தூதன பிலெயாமுடனே, அநதமனிதரோடேகூடப்போ. ஆனாலுமநானுனனோடேசொலலும வசனததைமாததிரமே நீ சொலலககடவாயெனறார். அபபடியே பிலெயாம பாலாககின பிரபுககளோடே கூடபபோனான.

௩௬ பிலெயாம வருகிறதைபபாலாக கேடடபொழுது கடைசி எலலையான அர்னோனதியின ஓரத்திலிருககிறமோவாபினபட்டணமட்டும அவனுககெதிர்க கொணடுபோய,

௩௭ பிலெயாமுடனே, உனனையழைபபிககததூதனுனனணடைககு அனுபபவிலலையோ? எனனணடைககேனவாராதேபோனாய? உனனையேறறசிங்காரமாககநான கனமபணண மாடடேனோ எனறான.

௩௮ அபபொழுது பிலெயாம் பாலாககுடனே இதோ, உமமணடைககு வநதேன. இபபொழுதும ஏதாகிலுஞசொலல எனனாலே ஆகுமோ? பர்ாபரன எனவாயிலேகொடுககுமவசனததையேசொலலுவேனெனறுசொலலி,

௩௯ பாலாககுடனே கூடபபோனான். அவர்கள கீரியாத் ஊசோததிறகுவநதார்கள.

௪௰ அஙகேபாலாக ஆடுமாடுகளையடிததுப் பிலெயாமுககும அவனோடிருநத பிரபுககளுககும அனுபபினான.

௪௧ மறுநாட்காலமேபோவெனறுற்பாலாக பிலெயாமைககூட்டிககொணடு அவனைப்பாகாலுடையமேடுகளிலேறபபணணினான. அவவிடததிலிருநது சனததினகடைசிபபாளயததைபபார்ததான.

## ௨௩. அதிகாரம்.

பிலெயாம இஸ்ரேவேலைசசபிககஆசையாயிருநதும இரணடுதரம அதையாசீர்வதிததது.

பிலெயாம பாலாககுடனே நீர் எனககிஙகே ஏழுபலிபீடஙகளைககட்டி ஏழுகாளையெருதையும ஏழு ஆட்டுககிடாயையும இஙகே எனககாயததமாக நிறுததுமெனறான.

௨ பிலெயாஞசொனனபடியே பாலாக செயதான. பாலாககும பிலெயாமும ஒவவொருபீடததிலொருகாளையெருதையும ஒரு ஆட்டுககிடாயையும பலியிட்டார்கள.

௩ அபபொழுது பிலெயாம பாலாககுடனே, உமமுடையசர்வாஙகத தகனததணடையிலே நினறிரும. நானபோகிறேன ஒருவேளைகர்ததர்வநதெனனைச சநதிபபார். அவர் எனககுக்காணபிககிறதை யுமககறிவிபபெனெனறுசொலலி ஒருமேட்டினமேலேபோனான.

௪ பர்ாபரன பிலெயாமைசசநதிததார். அபபொழுது அவருடனே, நான ஏழுபலிபீடஙகளையாயததமபணணி ஒவவொருபலிபீடததிலொருகாளையெருதையும ஒரு ஆட்டுககிடாயையும பலியிட்டேனெனறான.

௫ அபபொழுது கர்ததர் பிலெயாமின வாயிலே வசனததைககொடுதது, நீபாலாககணடையிலே திருமபிபபோய இனனபடி சொலலககடவாயெனறார்.

௬ அவனணடைககுத திருமபிபபோனான. இதோ, பாலாக மோவாபுடைய சகல பிரபுககளோடுங்கூட தனசர்வாஙகதகனததணடை நினறிருநதான.

௭ அபபொழுது அவன தனவாககியததையெடுததுச சொனனதாவது. நீவநது எனககாக யாககோபைச சபி. நீவநது இஸ்ரேவேலை வெறுததுபபோடெனறு மோவாபின இராசாவாகிய பாலாக எனனைக்கிழககுபபர்வதஙகளிலிருககிற சீரியாவிலிருநது அழைததுவரபபணணினான்.

௮ பராபரன சபிககாதவனை நானசபிபபதெபபடி? கர்ததர் வெறுககாதவனை நானவெறுபபதெபபடி?

௯ ஏனெனில நானகல்மலைகளின கொடுமுடியிலிருநதவனைககணடு மேடுகளிலிருநதவனைப பார்ததுககொணடிருககிறேன. இதோ, அநதச்சனஞ சாதிகளோடே கலவாமலதனியேவாசமாயிருககும.

௰ யாககோபின [illegible] தூளையும இஸ்ரேவேலுடையகாற்பஙகின இலககததையும எணணுபவன்? எனனுததமமநதமானகளின

பிணமாயமரித்து என்முடிவு அவர்களுமுடிவைப்போலிருக்கக்கடவதென்றான்.

* ௧. மோசே. உ௮, ௰௪.

௰௧ அப்பொழுது பாலாக் பீலேயாமுடனே, நீ யெனக்கென்னசெய்து வருகிறாய்? என் சத்துருக்களைச் சபிக்க உன்னையழைப்பித்தேன். ஆனால் இதோ அவர்களையாசீர்வதிக்கவே ஆசீர்வதித்தாயென்றான்.

௰௨ அவன் பிரதியுத்தாரமாகக் கர்த்தர் என் வாயிலே கொடுத்ததையே சொல்ல நான் கவனமாயிருக்கவேண்டாமோ? என்றான்.

௰௩ அப்பொழுது பாலாக் அவனுடனே நீ அவர்களைக் காணத்தக்கவேறொரு இடத்திற்கென்னோடே கூட நடந்து வாவேன்? அங்கேயவர்களையெல்லாங்காணாமல் அவர்களடைசிப்பாளயத்தைமாத்திரங் காண்பாய். அங்கேயிருந்து எனக்காக அவர்களைச் சபியென்றுசொல்லி,

௰௪ அவனைப்பிஸ்காவின் கொடுமுடியிலிருக்கிற சோப்பீமவெளியிலே யழைத்துக்கொண்டுபோய் ஏழுபலிபீடங்களைக் கட்டினான். ஒவ்வொருபீடத்திலொருகாளையெருதையும் ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான்.

௰௫ அவன்பாலாகுடனே, இங்கே உம்முடைய சர்வாங்கதகனத்தண்டையிலே நின்றிரும். நான் அங்கே அவரைச்சந்தித்துக்கொள்ளப்போவேனென்றான்.

௰௬ கர்த்தர் பீலேயாமைச்சந்தித்து வசனத்தையவன்வாயிலேகொடுத்து, நீ பாலாக்கண்டையிலே திரும்பிப்போய் இன்னபடிச்சொல்லக்கடவாயென்றார்.

௰௭ அவனண்டையவன் வருகிறபொழுது இதோ, அவன்மோவாபின்பிரபுக்களோடுங்கூடத்தன்னுடைய சர்வாங்கதகனத்தண்டை நின்றிருந்தான். பாலாக் அவனுடனே கர்த்தர்சொன்னதென்னவென்றான்.

௰௮ அப்பொழுது அவன்தனவாக்கியத்தையெடுத்துச்சொன்னதாவது. பாலாகே! எழுந்துகேளும். சிப்போரின்குமாரனே! எனக்குச்செவிகொடும்.

௰௯ * பராபரன்பொய்சொல்ல ஒருமனிதனல்ல. சொன்னதற்மனஸ்தாபமாயிருக்க அவனொருமனுபுத்திரனல்ல. அவர்சொல்லியுஞ்செய்யாதிருப்பாரோ? அவர்வசனித்தும் அதை நிறைவேற்றாதிருப்பாரோ? * ௧. சாமுவேல். ௰௫, உ௯.

௨௰ இதோ, ஆசீர்வதிக்கக்கட்டளை பெற்றேன். அவர் ஆசீர்வதிக்கிறார். அதைநான்திருப்பக்கூடாது.

௨௧ யாக்கோபிலேவருத்தந்தெரிகிறதுமில்லை. இஸ்ரவேலிலே பிரயாசங்காணப்படுகிறதுமில்லை. அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் அவர்களோடிருக்கிறார். ராசாவின்கெம்பீரம்வர்களிடத்திலிருக்கின்றது.

௨௨ பராபரன் அவர்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார். காண்டாமிருகத்திற்கொத்த சத்துவம் அவர்களுக்கிருக்கின்றது.

௨௩ ஏனெனில் யாக்கோபுக்கு விரோதமாகத் தக்க நிமித்தம் பார்க்குதலுமில்லை இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தக்க குறிசொல்லுதலுமில்லை. பராபரன் செய்ததேதென்று கொஞ்சக்காலத்திலே யாக்கோபிடமும் இஸ்ரவேலிடமுங் குறித்துச்சொல்லப்படும்.

௨௪ இதோ, சனம் கொழுத்த சிங்கத்தைப்போலெழும்பிச் சிங்கத்தைப்போலெழும்பும். அது எடுத்த இரையைப்பட்சித்துவெட்டுண்டவர்களின் இரத்தத்தைக் குடியாதிருக்குமட்டும் படுத்துக்கொள்ளாதென்றான்.

௨௫ அப்பொழுது பாலாக் பீலேயாமுடனே, நீ அதைச்சபிக்கவே சபிக்கவும்வேண்டாம். ஆசீர்வதிக்கவே ஆசீர்வதிக்கவும்வேண்டாமென்றான்.

௨௬ பீலேயாம் பாலாகுக்குப் பிரதியுத்தாரமாகக் கர்த்தர் சொல்லும்படியெல்லாஞ்செய்வேனென்று உம்மோடேதான் சொல்லவில்லையோ? என்றான்.

௨௭ அப்பொழுது பாலாக் பீலேயாமுடனேவாவேன்; வேறொரு இடத்திற்குன்னையழைத்துக்கொண்டுபோவேன். நீ அங்கேயிருந்து எனக்காக அதைச்சபிக்க ஒருவேளை பராபரனுடைய பார்வைக்குச் செவ்வையாயிருக்குமென்றுசொல்லி,

௨௮ அவனையெசிமோனுக்கு நேராயிருக்கிற பேயோரின் கொடுமுடிக்கழைத்துக்கொண்டுபோனான்.

௨௯ அப்பொழுது பீலேயாம் பாலாகுடனே இங்கே எனக்கேழு பலிபீடங்களைக் கட்டி இங்கே எனக்கேழு காளையெருதையும் ஏழு ஆட்டுக்கடாவையும் ஆயத்தமாக நிறுத்துமென்றான்.

௩௰ பீலேயாஞ்சொன்னபடி பாலாக்செய்தான். அப்பொழுது ஒவ்வொருபீடத்திலொருகாளையெருதையும் ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான்.

## உ௪. அதிகாரம்.

பீலேயாம் மூன்றுதரம் இஸ்ரவேலை ஆசீர்வதித்தது.

இஸ்ரவேலையாசீர்வதிக்கிறது கர்த்தருக்குப் பிரியமாயிருக்குமென்றதைப் பீலேயாங்கண்டபொழுதோவெனில் அவன் முந்திச்செய்துவந்ததுபோலே நிமித்தங்களைச்சந்திக்கப் போகாமல் தன்முகத்தை வனாந்தரத்திற்கு நேராகத்திருப்பி,

௨ தன்கண்களையேறெடுத்து இஸ்ரவேலர்தன்கோத்திரங்களின்படியே தங்கியிருக்

சுத்தெலாகியரின் வம்சமும், பெகேரின் சந்ததியான பெகேரியரின் வம்சமும், தாகானின் சந்ததியான தாகானியரின் வம்சமும்,

௩௬ சுத்தெலாக்குப் பெற்ற ஏரானின் சந்ததியான ஏரானியரின் வம்சமுந்தானே.

௩௭ இவைகளே எப்பிராயீம் புத்திரரின் வம்சங்கள். அவைகளில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் முப்பத்தீராயிரத்தைந்நூறு பேர். இவைகளே யோசேப் புத்திரரின் வம்சங்கள்.

௩௮ பென்யமீனுடைய குமாரரின் வம்சங்களாவது: பேலாவின் சந்ததியான பேலாவியரின் வம்சமும், அஸ்பேலின் சந்ததியான அஸ்பேலியரின் வம்சமும், அகிராமின் சந்ததியான அகிராமியரின் வம்சமும்,

௩௯ சுப்பாமின் சந்ததியான சுப்பாமியரின் வம்சமும், ஊப்பாமின் சந்ததியான ஊப்பாமியரின் வம்சமும்,

௪௰ பேலாவுக்குப் பெற்ற ஆரோதின் சந்ததியான ஆரோதியரின் வம்சமும், நாமானின் சந்ததியான நாமானியரின் வம்சமுந்தானே.

௪௧ இவைகளே பென்யமீன் புத்திரரின் வம்சங்கள். அவைகளில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தையாயிரத்தறுநூறு பேர்.

௪௨ தாணுடைய குமாரரின் வம்சங்கள்: சூகாமின் சந்ததியான சூகாமியரின் வம்சந்தானே. இவைகளே தாணின் வம்சங்கள்.

௪௩ சூகாமியரின் வம்சங்களில் இலக்கம் பார்க்கப்பட்டவர்களெல்லாரும் அறுபத்துநாலாயிரத்து நானூறு பேர்.

௪௪ ஆசேருடைய குமாரரின் வம்சங்களாவது: இம்னாவின் சந்ததியான இம்னாவியரின் வம்சமும், ஈஸ்வியின் சந்ததியான ஈஸ்வியரின் வம்சமும், பெரீயாவின் சந்ததியான பெரீயாவியரின் வம்சமும்.

௪௫ பெரீயாவுக்குப் பெற்ற ஏபேரின் சந்ததியான ஏபேரியரின் வம்சமும், மல்கியேலின் சந்ததியான மல்கியேலியரின் வம்சமுந்தானே.

௪௬ ஆசேருடைய குமாரத்தியின் பேர் சாராள்.

௪௭ இவைகளே ஆசேர் புத்திரரின் வம்சங்கள். அவைகளில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்துமூவாயிரத்து நானூறு பேர்.

௪௮ நப்தலியினுடைய குமாரரின் வம்சங்களாவது: யாத்சேயேலின் சந்ததியான யாத்சேயேலியரின் வம்சமும், கூனியின் சந்ததியான கூனியரின் வம்சமும்,

௪௯ எத்சேரின் சந்ததியான எத்சேரியரின் வம்சமும், சில்லேமின் சந்ததியான சில்லேமியரின் வம்சமுந்தானே.

௫௰ இவைகளே நப்தலியின் வம்சங்கள். அவைகளில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தையாயிரத்து நானூறு பேர்.

௫௧ இஸ்ரவேல் புத்திரரில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஆறுநூறாயிரத்தோராயிரத்தெழுநூற்று முப்பது பேராயிருந்தார்கள்.

௫௨ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௫௩ இவர்களுக்குத் தேசம் பேர்களின் இலக்கத்திற்குத் தக்கதாய்ச் சுதந்தரமாகப் பங்கிடப்படக்கடவது.

௫௪ அநேகருக்கு அதிகமும், கொஞ்சமானவர்களுக்குக் கொஞ்சமுமாய்ச் சுதந்தரமாகக் கொடுப்பாயாக. அவர்களில் எண்ணப்பட்டவர்களின் இலக்கத்திற்குத் தக்கதாக அவரவர்களுக்கு அவர்கள் சுதந்தரங் கொடுக்கப்படக்கடவது.

௫௫ ஆகிலும் சீட்டுப்போட்டுத் தேசம் பங்கிடப்படக்கடவது. தங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களுக்குரிய நாமங்களின்படியே சுதந்தரிக்கக்கடவார்கள்.

௫௬ அநேகமானவர்களுக்குங் கொஞ்சமானவர்களுக்கும் அவர்களுடைய சுதந்தரங்கள் சீட்டுகள் விழுகிறபடியே பங்கிடப்படுவதாக என்றார்.

௫௭ இலக்கம் பார்க்கப்பட்ட லேவியரின் வம்சங்களாவது: கெர்சோனின் சந்ததியான கெர்சோனியரின் வம்சமும், கேகாத்தின் சந்ததியான கேகாத்தியரின் வம்சமும், மெராரியின் சந்ததியான மெராரியரின் வம்சமும்,

௫௮ லேவியின் மற்ற வம்சங்களாவன: லிப்னியரின் வம்சமும், எப்ரோனியரின் வம்சமும், மகேலியரின் வம்சமும், மூசியரின் வம்சமும், கொராகியரின் வம்சமுந்தானே. கேகாத் அம்ராமைப் பெற்றான்.

௫௯ அம்ராமுடைய பெண்சாதியின் பேர் யோகெபேத். அவள் லேவிக்கு எகிப்திலே பிறந்த குமாரத்தி. அவள் அம்ராமுக்கு ஆரோனையும் மோசேயையும் அவர்கள் சகோதரியான மிரியாமையும் பெற்றாள்.

௬௰ ஆரோனுக்கு நாதாபும் அபியூவும் எலெயாசாரும் இத்தாமாரும் பிறந்தார்கள்.

௬௧ ஆனால் நாதாபும் அபியூவும் அந்நிய அக்கினியைக் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவருகிறபொழுது செத்துப்போனார்கள்.

௬௨ அவர்களில் ஒரு மாதமுதற்கொண்டிருந்து இலக்கம் பார்க்கப்பட்ட ஆண்சாதியானவர்களெல்லாரும் இருபத்துமூவாயிரம் பேர். ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரரின் நடுவே அவர்களுக்குச் சுதந்தரங் கொடுக்கப்படாதபடியினாலே அவர்கள் இஸ்ரவேல் புத்திரரின் இலக்கத்திற்குட்பட்டதில்லை.

௬௩ மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் எரிகோ கிட்ட இருக்கும் யோர்தானுக்கப்பாலே மோவாபின் சமனான வெளிகளில் இஸ்ரவேல் புத்திரரை இலக்கம் பார்க்கிறபொழுது இருந்தவர்களிவர்கள்தான்.

௬௪ முதல் மோசேயும் ஆசாரியனாகிய ஆரோனும் சீனாய் வனாந்தரத்திலே இஸ்ரவேல் புத்திரரை இலக்கம் பார்க்கும்போது இருந்தவர்களில் இவர்களில் ஒருவருமில்லை.

௬௫ ஏனென்றால் வனாந்தரத்திலே சாவவே சாவார்களென்று கர்த்தர் அவர்களுக்குச் சொல்லியிருந்தார். எப்புன்னேயின் குமாரனாகிய காலேபையும் நூனின் குமாரனாகிய யோசுவாவையும் ஒழிய வேறொருவரும் அவர்களில் மீதியாயிருந்ததில்லை.

## ௨௭. அதிகாரம்.

புத்திரனில்லாமல் மரிக்கிறவனின் சுதந்தரம் ஆருடையதாக வேண்டுமென்பது.

யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின் வம்சங்களில் மனாசேயின் குமாரனாகிய மாகீரின் மகனான கிலேயாத்திற்குப் பிறந்த எப்பேருக்குக் குமாரனாயிருந்த * செலொப்பியாத்தின் குமாத்திகளாகிய மக்லாள் நோவாள் ஒக்லாள் மில்காள் திர்சாள் என்னப்பட்டவர்கள் சேர்ந்துவந்து,

* ௨௬, ௩௩.

௨ ஆசரிப்புக் கூடார வாசலிலே மோசேக்கும் ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் பிரபுக்களுக்கும் சபையனைத்திற்கும் முன்பாக நின்றுகொண்டு சொன்னதாவது.

௩ எங்கள் தகப்பன் வனாந்தரத்தில் மரணமடைந்தார். ஆனால் அவர் கர்த்தருக்கு விரோதமாகக் கூடின கோரகின் கூட்டத்தாரிலொருவராயிராமல் தம்முடைய பாவத்திலே மரித்தார். அவருக்குக் குமாரரில்லை.

௪ எங்கள் தகப்பனுக்குக் குமாரனில்லாததினாலே அவர் பேர் அவருடைய வம்சத்தில் அற்றுப்போவானேன்? எங்கள் தகப்பனுடைய சகோதரருக்குள்ளே எங்களுக்குக் காணியாட்சியைத் தாருமென்றார்கள்.

௫ மோசே அவர்கள் நியாயத்தைக் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுபோனான்.

௬ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது.

௭ செலொப்பியாத்தின் குமாத்திகள் சொல்லுகிறது நிதானம். அவர்கள் தகப்பனுடைய சகோதரருக்குள்ளே அவர்களுக்குச் சுதந்தரங் கொடுக்கவே கொடுக்கப்படக்கடவது. அவர்கள் தகப்பனின் சுதந்தரத்தை அவர்களுக்குவரப்பண்ணுவாயாக.

௮ இஸ்ரவேல் புத்திரருக்கும் நீ சொல்லவேண்டியதேதெனில் ஒருவன் குமாரனில்லாமல் மரித்தால் அவனின் சுதந்தரத்தை அவன் குமாத்திக்கு வரப்பண்ணக்கடவீர்கள்.

௯ அவனுக்குக் குமாத்தியில்லாதிருந்தால் அதை அவன் சகோதரருக்குக் கொடுக்கக்கடவீர்கள்.

௰ அவனுக்குச் சகோதரரில்லாதிருந்தால் அதை அவன் தகப்பனுடைய சகோதரருக்குக் கொடுக்கக்கடவீர்கள்.

௰௧ அவன் தகப்பனுக்குச் சகோதரரில்லாதிருந்தால் அதை அவன் வம்சத்திலே அவனுக்குக் கிட்டின உறவின்முறையானுக்குச் சுதந்தரமாகக் கொடுக்கக்கடவீர்கள். இது கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே இஸ்ரவேல் புத்திரருக்கு நியாயப்பிரமாணமாயிருக்கக்கடவதென்று சொல்லென்றார்.

யோசுவா மோசேயின் ஸ்தலத்திலே பட்டந்தரிக்கப்பட்டது.

௰௨ பிறபாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது. * நீ இந்த அபரீம் பர்வதத்திலேறி நாம் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுத்த தேசத்தைப்பார்.

* ௫. மோசே. ௩௨, ௪௮. ௪௯.

௰௩ நீ அதைப்பார்த்தபிறகு நீயும் உன் சகோதரனாகிய ஆரோன் சேர்க்கப்பட்டதுபோல உன் சனத்தாரிடத்திலே சேர்க்கப்படுவாய்.

௰௪ ஏனென்றால் சபை வாக்குவாதம்பண்ணின சீன்வனாந்தரத்தில் நம்மைத் தண்ணீரின் சமீபத்திலே அவர்கள் கண்களுக்கு முன்பாகப் பரிசுத்தம் பண்ணவேண்டிய நீங்கள் * நம்முடைய கட்டளைக்கு இரண்டகம்பண்ணினீர்களென்றார். அது சீன்வனாந்தரத்திலே காதேஸ் ஊர்கிட்ட உண்டான மேரிபாவின் தண்ணீர்தானே.

* ௨௰. ௰௨.

௰௫ அப்பொழுது மோசே கர்த்தரோடே சொன்னதாவது.

௰௬ கர்த்தருடைய சபை மேய்ப்பனில்லாத மந்தையைப்போலிராதபடிக்கு.

௰௭ அவர்களுக்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருக்கிறதற்கும் அவர்களைப் போகவும் வரவும் பண்ணுகிறதற்குமான ஒரு புருஷனைச் சகல மாம்சத்தினுடைய ஆவிகளின் பராபரனாகிய கர்த்தர் அவர்கள் மேல் அதிகாரியாக வைப்பாராகவென்றான்.

௰௮ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது. ஆவி வாசமாயிருக்கிற புருஷனாகிய யோசுவாவென்ற நூனின் குமாரனை நீ சேர்த்துக்கொண்டு அவன்மேலே உன் கையை வைத்து,

௰௯ அவனை ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் சபையனைத்திற்கும் முன்பாக நிறுத்தி அவர்கள் கண்களுக்கு முன்பாக அவனுக்குக் கற்பனை கொடுத்து.

௨௰ இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் அவனுக்குக் கீழ்ப்படியும்படிக்கு உன் மகிமையிற் சிலவற்றை அவன்மேலே வை.

உக அவன் ஆசாரியனாகிய எலெயாசாருக்கு முன்பாக நிற்பானாக. அவன் ஊரீமென்னுங் காசுக்கொத்தாகக் கர்த்தருக்கு முன்பாக அவனுக்கு யோசனை கேட்கக்கடவன். அவனுடைய கட்டளையின்படியே அவனும் அவனோடேகூட இஸ்ரவேலின் எல்லாப்புத்திரருஞ் சபையனைத்தும் போகவும் அவனுடைய கட்டளையின்படி வரவும் வேண்டியதென்றார்.

உஉ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே மோசே செய்து யோசுவாவைச் சேர்த்துக்கொண்டு அவனை ஆசாரியனாகிய எலெயாசாருக்குஞ் சபையனைத்திற்கு முன்பாக நிறுத்தி.

உங அவன்மேலே தன்கைகளை வைத்துக் கர்த்தர் தனக்குச் சொன்னபடியே அவனுக்குக் கற்பனை கொடுத்தான்.

## உஅ. அதிகாரம்.

அந்திசந்தியும் ஓய்வுநாளிலும் பண்டிகை நாள்களிலுஞ் செலுத்தும் பலிகளின் கட்டளையை மறுபடியுந் தெரியக்காண்பித்தது.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது.

உ நமக்கு ஏற்றிய வாசனைக்கான நம்முடைய பலிகளுக்கடுத்த நம்முடைய காணிக்கையையும் நம்முடைய அப்பத்தையும் அவைகளின் திட்டமான காலத்திலே நமக்குச் செலுத்தும்படிக்குச் சவதானமாயிருக்கக்கடவீர்களென்று நீ இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்து,

ங அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது. நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தவேண்டிய தகனபலி என்னவென்றால் நாடோறும் இடைவிடாத சர்வாங்கதகனபலியாக ஒருவயதுள்ள பழுதற்ற இரண்டு ஆட்டுக்குட்டிகளாமே.

ச விடியற்காலத்தில் ஒரு ஆட்டுக்குட்டியையும் அந்திநேரம் வேளையில் மற்ற ஆட்டுக்குட்டியையுஞ் செலுத்தி,

ரு காணிக்கையாக ஒரு மரக்காலிலே பத்திலொருபங்கானதும் இடித்துவடிக்கப்பட்ட காற்படி எண்ணெயிலே பிசைந்ததுமாகிய மெல்லிய மாவையுஞ் செலுத்தக்கடவாய்.

கூ இது சீனாய்ப்பர்வதத்திலே கட்டளையிடப்பட்ட நித்திய சர்வாங்கதகனபலி. இது கர்த்தருக்கு ஏற்றிய வாசனைக்கான தகனம்.

எ இவ்விடத்திற்குப் பானத்தப்பலியானது ஒரு ஆட்டுக்குட்டிக்குக் காற்படி ஊற்றாம். பரிசுத்த ஸ்தலத்திலே கர்த்தருக்கு அந்த இரசம் ஊற்றலாக ஊற்றப்படக்கடவது.

அ விடியற்காலத்துக் காணிக்கைக்கும் அதின் ஊற்றலுக்குஞ் சரியாக அந்திநேரமான வேளையிலே இரண்டாம் ஆட்டுக்குட்டியைக் கர்த்தருக்கு ஏற்றிய வாசனையான தகனமாகச் செலுத்தவாயாக.

கூ ஓய்வுநாளிலோவென்றால் ஒருவயதுள்ள பழுதற்ற இரண்டு ஆட்டுக்குட்டிகளையும் பத்திலிரண்டுபங்கானதும் எண்ணெயிற் பிசைந்ததுமான மெல்லிய மாவின் காணிக்கையையும் அதின் ஊற்றலையுஞ் செலுத்தக்கடவாய்.

ய அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும் அதின் ஊற்றலையுந் தவிர இது ஒவ்வொரு ஓய்வுநாளிலே செலுத்தப்படவேண்டிய சர்வாங்கதகனம்.

யக உங்கள் மாதப்பிறப்புகளில் நீங்கள் கர்த்தருக்குச் சர்வாங்கதகனமாக மாடுகளில் இரண்டு காளைகளையும் ஒரு ஆட்டுக்கடாவையும் ஒருவயதுள்ள பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும்.

யஉ ஒவ்வொரு காளையெருதிற்காகப் பத்திலே மூன்றுபங்கானதும் எண்ணெயிலே பிசைந்ததுமான மெல்லிய மாவின் காணிக்கையையும் அந்த ஒரு ஆட்டுக்கடாய்க்காகப் பத்திலிரண்டுபங்கானதும் எண்ணெயிலே பிசைந்ததுமான மாவின் காணிக்கையையும்.

யங ஒவ்வொரு ஆட்டுக்குட்டிக்காகப் பத்திலொருபங்கானதும் எண்ணெயிலே பிசைந்ததுமான மாவின் காணிக்கையையுஞ் செலுத்துவீர்களாக. அது கர்த்தருக்கு ஏற்றிய வாசனையான சர்வாங்கதகனம்.

யச அவைகளின் ஊற்றல்களாவன காளையெருதிற்கு அரைப்படியும் ஆட்டுக்கடாய்க்குப் படியிலே மூன்றிலொருபங்கும் ஆட்டுக்குட்டிக்குக் காற்படியுமான திராட்சப்பழ இரசமாயிருப்பதாக. அது வருஷத்திலே ஒவ்வொருமாதமுஞ் செலுத்தப்படவேண்டிய சர்வாங்கதகனம்.

யரு அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும் அதின் ஊற்றலையுந் தவிரப் பாவமோசனமும் பலியாகக் கர்த்தருக்கு ஒரு வெள்ளாட்டுக்கடாயுஞ் செலுத்தப்படக்கடவது.

யகூ முதலாமாதம் பதினான்காந்தேதியிலே கர்த்தருக்குப் பஸ்காவாகிறது.

யஎ அந்தமாதம் பதினைந்தாந்தேதி பண்டிகைநாள். ஏழுநாளட்டும் புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்படவேண்டும்.

யஅ முதலாம்நாளிலே பரிசுத்தசபைகூடுதலுமாயிருக்கும். அதிலே யாதொரு சாதாரண வேலையையுஞ் செய்யீர்களாக.

யகூ அப்பொழுது நீங்கள் கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலியாக மாடுகளிலே இரண்டு காளையெருதுகளையும் ஒரு ஆட்டுக்கடா

௰௩ நீஙகள கர்ததருககாறறிய வாசனையினதகனமான சர்வாஙகத தகனபலியாக மாடுகளிலே பதினமூனறுகாளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையும ஒருவயதுளளபழுதறறிருககிறபதினனாலு ஆடடுககுடடிகளையும,

௰௪ அவைகளின காணிககையாக எணணெயிலே பிசைநத மெலலிய மாவிலே அநதப்பதினமூனறுகாளையெருததுகளிலே ஒவவொனறிறகாகப்பததிலே மூனறுபஙகையும அநத இரணடு ஆடடுககிடாயகளிலே ஒவவொனறிறகாக இரணடுபஙகையும,

௰௫ பதினனாலு ஆடடுககுடடிகளிலே ஒவவொனறிறகாக ஒருபஙகையும,

௰௬ அனறனறுளள சர்வாஙகத தகனபலியையும அதினகாணிககையையும அதின ஊறறுதலையுநதவிரப் பாவமபோககும பலியாக ஒருவெளளாடடுககிடாயையும,

௰௭ இரணடாமநாளிலேமாடுகளிலேபனனிரணடுகாளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையும ஒருவயதுளள பழுதறற பதினனாலு ஆடடுககுடடிகளையும,

௰௮ காளையெருததுகளும ஆடடுககிடாயகளும ஆடடுககுடடிகளுமிருககிற இலககததிறகுததககநியாயமாய அவைகளின காணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௰௯ அனறனறுளள சர்வாஙகத தகனபலியையும அதினகாணிககையையும அவைகளின ஊறறுதலகளையுநதவிரப் பாவமபோககும பலியாக ஒருவெளளாடடுககிடாயையும,

௨௰ மூனறாம நாளிலே பதினொரு காளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையும ஒருவயதுளள பழுதறற பதினனாலு ஆடடுககுடடிகளையும,

௨௰௧ காளையெருததுகளும ஆடடுககிடாயகளும ஆடடுககுடடிகளுமிருககிற இலககததிறகுததகக நியாயமாய அவைகளினகாணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௨௰௨ அனறனறுளள சர்வாஙகத தகனபலியையும அதினகாணிககையையும அதின ஊறறுதலையுநதவிரப பாவமபோககும பலியாக ஒருவெளளாடடுககிடாயையும,

௨௰௩ நாலகாம நாளிலே பததுக காளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையும ஒருவயதுளள பழுதறற பதினனாலு ஆடடுககுடடிகளையும,

௨௰௪ காளையெருததுகளும ஆடடுககிடாயகளும ஆடடுககுடடிகளுமிருககிற இலககததிறகுததகக நியாயமாய அவைகளின காணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௨௰௫ அனறனறுளள சர்வாஙகத தகனபலியையும அதினகாணிககையையும அதின ஊறறுதலையுநதவிரப பாவமபோககும பலியாக ஒருவெளளாடடுககிடாயையும,

௨௰௬ ஐநதாம நாளிலே ஒனபது காளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையும ஒருவயதுளளபழுதறறபதினனாலு ஆடடுககுடடிகளையும,

௨௰௭ காளையெருததுகளும ஆடடுககிடாயகளும ஆடடுககுடடிகளுமிருககிற இலககததிறகுததககநியாயமாய அவைகளினகாணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௨௰௮ அனறனறுளளசர்வாஙகத தகனபலியையும அதினகாணிககையையும அதின ஊறறுதலையுநதவிரப பாவமபோககும பலியாக ஒருவெளளாடடுககிடாயையும,

௨௰௯ ஆறாமநாளிலே எடடுககாளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையும ஒருவயதுளளபழுதறறபதினனாலு ஆடடுககுடடிகளையும,

௩௰ காளையெருததுகளும ஆடடுககிடாயகளும ஆடடுககுடடிகளுமிருககிறஇலககததிறகுததகக நியாயமாய அவைகளினகாணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௩௰௧ அனறனறுளள சர்வாஙகததகனபலியையும அதினகாணிககையையும அதின ஊறறுதலகளையுநதவிரபபாவமபோககும பலியாக ஒருவெளளாடடுககிடாயையும.

௩௰௨ ஏழாமநாளிலேஏழுகாளையெருததுகளையும இரணடு ஆடடுககிடாயகளையுமஒருவயதுளளபழுதறறபதினனாலு ஆடடுககுடடிகளையும,

௩௰௩ காளையெருததுகளும ஆடடுககிடாயகளும ஆடடுககுடடிகளுமிருககிற இலககததிறகுததககநியாயமாய அவைகளினகாணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௩௰௪ அனறனறுளளசர்வாஙகததகனபலியையும அதினகாணிககையையும அதின ஊறறுதலையுநதவிரபபாவமபோககுமபலியாக ஒருவெளளாடடுககிடாயையுஞ செலுததககடவீர்கள.

௩௰௫ எடடாம நாள உஙகளுககாசரிப்பு நாளாயிருககககடவது. யாதொரு வேலையைசசெயயீர்களாக.

௩௰௬ அபபொழுது நீஙகளகர்ததருககாறறியவாசனைததகனமான சர்வாஙகததகனபலியாக ஒருகாளையெருதையும ஒருஆடடுககிடாயையும ஒருவயதுளள பழுதறற ஏழு ஆடடுககுடடிகளையும,

௩௰௭ காளையெருதும ஆடடுககிடாயும ஆடடுககுடடிகளுமிருககிற இலககததிறகுததககநியாயமாய அவைகளின காணிககையையும அவைகளின ஊறறுதலகளையும,

௩௰௮ அனறனறுளள சர்வாஙகததகனபலியையும அதினகாணிககையையும அதின

சுத்தமாயிருப்பீர்கள். பிற்பாடு நீங்கள் பாளயத்திலே வரலாமென்றான்.

௨௫ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது.

௨௬ பிடித்துக்கொண்டுவரப்பட்ட மனிதரையும் மிருகங்களையும் நீயும் ஆசாரியனாகிய எலெயாசாருஞ் சபையிலுள்ள பிதாக்களின் தலைவருமாய்த் தொகைபார்த்து,

௨௭ பிடிக்கப்பட்டதை யுத்தத்துக்குப் புறப்பட்டுவந்த இராணுவ மனிதருக்குள்ளுஞ் சபையினத்தாருக்குள்ளும் பாதிபாதியாகப் பங்கிடுங்கள்.

௨௮ சேவகத்துக்குப்போன யுத்தமனிதர் கையிலேயென்றாற் கர்த்தருக்குப் பகுதியாக மனிதரிலும் மாடுகளிலுங் கழுதைகளிலும் ஆடுகளிலும் ஐந்நூற்றிலொரு சீவனெடுப்பாயாக.

௨௯ கர்த்தருக்கேறெடுக்கும் படைப்பாக அதை அவர்களுடைய பாதியிலெடுத்துக்கொண்டு ஆசாரியனாகிய எலெயாசாருக்குக் கொடுக்கக்கடவாய்.

௩௦ இஸ்ரவேல் புத்திரரின் பாதியிலேயென்றால் நீ மனிதரிலும் மாடுகளுங் கழுதைகளும் ஆடுகளுமாகிய சகலவித மிருகங்களிலும் ஐம்பதிலொன்றைப் பிடித்தெடுத்து அவைகளைக் கர்த்தருடைய வாசஸ்தலத்தின் காவலைக்காக்கிற லேவியருக்குக் கொடுக்கக்கடவாயென்றார்.

௩௧ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாருஞ் செய்தார்கள்.

௩௨ இராணுவசனங் கொள்ளையிட்டுப் பிடித்ததில் மீதியாயிருந்தது அறுநூற்றெழுபத்தையாயிரம் ஆடுகளும்,

௩௩ எழுபத்திராயிரம் மாடுகளும்,

௩௪ அறுபத்தோராயிரங் கழுதைகளும்.

௩௫ ஸ்திரீகளிலே புருஷனையறியாத மனிதரெல்லாம் முப்பத்தீராயிரஞ் சீவனுமாயிருந்தது.

௩௬ யுத்தத்துக்குப் புறப்பட்டவர்களின் பங்காகிய பாதியின் இலக்கமானது. ஆடுகள் முந்நூற்று முப்பத்தேழாயிரத்தைந்நூறு.

௩௭ இந்த ஆடுகளிலே கர்த்தருக்குப் பகுதியானது அறுநூற்றெழுபத்தைந்து.

௩௮ மாடுகள் முப்பத்தாறாயிரம். அவைகளிலே கர்த்தருக்குப் பகுதியானது எழுபத்திரண்டு.

௩௯ கழுதைகள் முப்பதினாயிரத்தைந்நூறு. அவைகளிலே கர்த்தருக்குண்டான பகுதி அறுபத்தொன்று.

௪௦ மனிதசீவன் பதினாறாயிரம். அவைகளிலே கர்த்தருக்குண்டான பகுதி முப்பத்திரண்டு சீவன்.

௪௧ கர்த்தருக்கேறெடுத்த அந்தப் பகுதியை மோசே கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே ஆசாரியனாகிய எலெயாசாருக்குக் கொடுத்தான்.

௪௨ யுத்தம்பண்ணின மனிதருக்குள்ளும் இஸ்ரவேல் புத்திரருக்குள்ளும் மோசே பாதியாகப் பங்கிட்டபடியே சபையின் பாதிப்பங்கானதென்னவெனில்,

௪௩ ஆடுகளில் முந்நூற்று முப்பத்தேழாயிரத்தைந்நூறு.

௪௪ மாடுகளில் முப்பத்தாறாயிரம்.

௪௫ கழுதைகளில் முப்பதினாயிரத்தைந்நூறு.

௪௬ மனிதசீவனிலே பதினாறாயிரந்தானே.

௪௭ இஸ்ரவேல் புத்திரரின் பாதிப்பங்காகிய இந்த மனிதரிலும் மிருகசீவன்களிலும் மோசே ஐம்பதிலொன்றைப் பிடித்தெடுத்து அவைகளைக் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே கர்த்தருடைய வாசஸ்தலத்தின் காவலைக் காக்கிற லேவியருக்குக் கொடுத்தான்.

௪௮ பிற்பாடு இராணுவசேனைகளின் தலைவராகிய ஆயிரத்துச் சேர்வைகாரரும் நூற்றுக்குச் சேர்வைகாரரும் மோசேயண்டைக்குச் சேர்ந்துவந்து,

௪௯ அவனோடே சொன்னதாவது. உம்முடைய ஊழியக்காரராகிய நாங்கள் எங்களுக்கிருக்கிற யுத்தமனிதரைத் தொகைபார்த்தோம். எங்களிலொருவனுங் குறையவில்லை.

௫௦ ஆகையாற் கர்த்தரின் சந்நிதியிலே எங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவநிவர்த்தியுண்டாகும்படிக்கு நாங்கள் அவரவர் கண்டுபிடித்தபடியே பொற்பணிகளாகிய சடையங்களையுஞ் சரிகளையும் மோதிரங்களையுங் கடுக்கன்களையுங் காப்புகளையுங் கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தோமென்றார்கள்.

௫௧ அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாருஞ் சகலவிதவேலையுள்ள பணிகளான அந்தப்பொன்னை யவர்கள் கையிலே வாங்கினார்கள்.

௫௨ இப்படி ஆயிரத்துச் சேர்வைகாரராலும் நூற்றுக்குச் சேர்வைகாரராலுங் கர்த்தருக்கேறெடுக்குங் காணிக்கையாகச் செலுத்தப்பட்ட பொன்னெல்லாம் பதினாறாயிரத்தெழுநூற்றைம்பது சேக்கல் நிறையாயிருந்தது.

௫௩ சேவகத்துக்குப்போன மனிதர் அவரவர் தங்களுக்காகக் கொள்ளையிட்டிருந்தார்கள்.

௫௪ அந்தப்பொன்னை மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் ஆயிரத்துச் சேர்வைகாரர் கையிலும் நூற்றுக்குச் சேர்வைகாரர் கையிலும் வாங்கி இஸ்ரவேல் புத்திரரின் நினைப்புக்காக ஆசரிப்புக்கூடாரத்திலே கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்து வைத்தார்கள்.

௨௨ அப்பொழுது தேசம் கர்த்தருக்கு முன்பாகக் கீழ்ப்பட்டபிறபாடு நீங்கள் கர்த்தருக்கும் இஸ்ரவேலுக்கு முன்பாகக் குற்றமில்லாதவர்களாய்த் திரும்பலாம். அப்பொழுது இந்தத் தேசம் கர்த்தருக்கு முன்பாக உங்களுக்குக் காணியாட்சியாயிருக்கும்.

௨௩ இப்படிச் செய்யாதேபோனீர்களேயானால் அப்பொழுது இதோ, கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தீர்களென்பதையும் உங்கள் பாவம் உங்களைக் கண்டுபிடிக்கும்பொழுது உணருவீர்கள்.

௨௪ உங்கள் பிள்ளைகளுக்காகப் பட்டணங்களையும் உங்கள் மந்தைக்காகத் தொழுவங்களையும் உங்களுக்குக் கட்டி உங்கள் வாயிலிருந்து புறப்பட்டதின்படியே செய்யுங்களென்றான்.

௨௫ அப்பொழுது காத்புத்திரரும் ரூபேன்புத்திரரும் மோசேயோடே சொன்னதாவது. எங்கள் ஆண்டவன் கற்பித்தபடியே உமதுடைய ஊழியக்காரர் செய்வார்கள்.

௨௬ எங்கள் பிள்ளைகளும் எங்கள் பெண்சாதிகளும் எங்கள் ஆடுமாடுகளும் எங்களுடைய எல்லாமிருகஜீவன்களும் அங்கே கிலேயாத்தின் பட்டணங்களிலிருக்கும்.

௨௭ உமதுடைய ஊழியக்காரரோவெனில் எங்கள் ஆண்டவன் சொன்னபடியே ஒவ்வொருவரும் சேவகத்திற்காயத்தப்பட்டவர்களாய்க் கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்குப் போவார்களென்றார்கள்.

௨௮ அப்பொழுது மோசே அவர்களுக்காக ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் நூனின்குமாரனாகிய யோசுவாவுக்கும் இஸ்ரவேல்புத்திரருடைய கோத்திரங்களின் பிதாக்களிலே தலைவரானவர்களுக்குங் கற்பித்து,

௨௯ அவர்களோடே சொன்னதாவது. காத்புத்திரரும் ரூபேன்புத்திரரும் அவரவர் கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்காயத்தப்பட்டவர்களாய் உங்களோடேகூட யோர்தானைக் கடந்துபோனால் அப்பொழுது தேசம் உங்களுக்கு முன்பாகக் கீழ்ப்பட்டபிறபாடு அவர்களுக்குக் கிலேயாத்தேசத்தைக் காணியாட்சியாகக் கொடுக்கக்கடவீர்கள்.

௩௦ உங்களோடேகூட யுத்தத்திற்காயத்தப்பட்டவர்களாய்க் கடந்துபோகாதிருந்தார்களேயாகில் அவர்கள் உங்கள் நடுவே கானான்தேசத்திலே காணியாட்சியடையக்கடவர்களென்றான்.

௩௧ காத்புத்திரரும் ரூபேன்புத்திரரும் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது. கர்த்தர் உமதுடைய ஊழியக்காரருக்குச் சொன்னதின்படியே செய்வோம்.

௩௨ நாங்கள் கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்காயத்தப்பட்டவர்களாய்க் கானான்தேசத்திற் கடந்துபோவோம். அப்படியே யோர்தானுக்கிப்பாலே எங்கள் சுதந்தரத்தின் காணியாட்சி எங்களுக்கிருக்குமென்றார்கள்.

௩௩ அப்பொழுது மோசே காத்புத்திரருக்கும் ரூபேன்புத்திரருக்கும் யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்கும் அமோரியரின் இராசாவாகிய சீகோனின் இராச்சியமும் பாசானின் இராசாவாகிய ஓகின் இராச்சியமுமான தேசத்தையும் அதின் எல்லைகளிலே சுற்றுமிருக்கிற அதின் பட்டணங்களோடேகூடக் கொடுத்தான்.

௩௪ காத்புத்திரர் திபோனும் அதரோத்தும் அரோவேரும்,

௩௫ அத்ரோத்சோப்பானும் யாசேரும் யொகிபேகாவும்,

௩௬ பெத்நிம்ராவும் பெத்தாரானுமென்ற அரணான பட்டணங்களையும் ஆட்டுத்தொழுவங்களையுங் கட்டினார்கள்.

௩௭ ரூபேன்புத்திரர் எஸ்போனையும் எலெயாலேயையுங் கிரியத்தாயீமையும்,

௩௮ நாமங்கள் மாற்றப்பட்ட நேபோவையும் பாகால்மெயோனையுஞ் சிப்மாவையுங் கட்டித் தாங்கள் கட்டின பட்டணங்களுக்கு வேறே நாமங்களைத் தரித்தார்கள்.

௩௯ மனாசேயின் குமாரனாகிய மாகீரின் புத்திரர் கிலேயாத்துக்குப்போய் அதைக் கட்டிக்கொண்டு அதிலிருந்த அமோரியரைத் துரத்திவிட்டார்கள்.

௪௦ அப்பொழுது மோசே கிலேயாத்தை மனாசேயின் குமாரனாகிய மாகீரின் புத்திரருக்குக் கொடுத்தான். அவர்கள் அதிலே குடியேறினார்கள்.

௪௧ மனாசேயின் குமாரனாகிய யாவீர் போய் அவர்களுடைய கிராமங்களைக் கட்டிக்கொண்டு அவைகளுக்கு யாவீரின் கிராமங்களென்று பேரிட்டான்.

௪௨ நோபாக் போய்க் கேனாத்தையும் அதின் கிராமங்களையுங் கட்டிக்கொண்டு அதற்குத் தன் நாமத்தின்படி நோபாக்கென்று பேரைத் தரித்தான்.

## ௩௩. அதிகாரம்.

இஸ்ரவேலருடைய பயணப்பாடு.

மோசே ஆரோன் என்றவர்களுடைய கையின் கீழ்த் தங்கள் சேனைகளின்படியே எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேல்புத்திரருடைய பயணங்களாவது.

௨ ஏனெனில் அவர்கள் தங்கள் பயணங்களிலே புறப்பட்டுவிட்ட இடங்களை மோசே கர்த்தருடைய கட்டளையின்படியே எழுதினான். அவர்கள் ஒவ்வொரு இடங்களிலிருந்து புறப்பட்டுப் பண்ணின பயணங்களாவது.

௩ அவர்கள் முதலாம் மாதத்தின் பதினைந்தாந்தேதியிலே ராமசேசிலிருந்து பயண

மிபோனார்கள். பஸ்காவின் இரண்டாம்நாளிலே இஸ்ரவேல்புத்திரர் எல்லா எகிப்தியருடபார்க்க உயர்ந்தகையினாலே புறப்பட்டார்கள்.

௪ அப்பொழுது எகிப்தியர் கர்த்தர் தங்களுக்குள்ளே சங்கரித்த தலைச்சன்பிள்ளைகளையெல்லாம் அடக்கம்பண்ணினார்கள். அவர்களுடைய தேவர்களிலேயுங் கர்த்தர் நியாயத்தீர்ப்பு செய்திருந்தார்.

௫ இஸ்ரவேல்புத்திரர் ரமெசேசிலிருந்து பயணம்போய்ச் சுக்கோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௬ சுக்கோத்திலிருந்து பயணம்போய் வனாந்தரத்தின் கடைசியான ஏத்தாமிலே பாளயமிறங்கினார்கள்.

௭ ஏத்தாமிலிருந்து பயணம்போய்ப் பாகால்சேபோனுக்கெதிராகவிருக்கிற ஈரோத்பள்ளத்தாக்கின் முன்னடிக்குத் திரும்பி மிக்தோலுக்கு முன்பாகப் பாளயமிறங்கினார்கள்.

௮ ஈரோத்தைவிட்டுப் பயணம்பண்ணிச் சமுத்திரத்தை நடுவாகக் கடந்து வனாந்தரத்திற்குப்போய் ஏத்தாம்வனாந்தரத்திலே மூன்றுநாள் நடந்து மாராவிலே பாளயமிறங்கினார்கள்.

௯ மாராவிலிருந்து பயணம்போய் ஏலீமுக்கு வந்தார்கள். ஏலீமிலே பன்னிரண்டு நீரூற்றுகளும் எழுபது பேரீச்சமரங்களுமிருந்தது. அங்கே பாளயமிறங்கினார்கள்.

௰ ஏலீமிலிருந்து பயணம்போய் நாணற்சமுத்திரத்தண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

௰௧ நாணற்சமுத்திரத்தைவிட்டுப் பயணம்போய்ச் சீன்வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்.

௰௨ சீன்வனாந்தரத்திலிருந்து பயணம்போய்த் தொப்பாக்காவிலே பாளயமிறங்கினார்கள்.

௰௩ தொப்பாக்காவிலிருந்து பயணம்போய் ஆலூசிலே பாளயமிறங்கினார்கள்.

௰௪ ஆலூசிலிருந்து பயணம்போய் ரப்பீதீமிலே பாளயமிறங்கினார்கள். அங்கே சனத்திற்குக் குடிக்கத் தண்ணீரில்லாதிருந்தது.

௰௫ ரப்பீதீமிலிருந்து பயணம்போய்ச் சீனாய்வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்.

௰௬ சீனாய்வனாந்தரத்திலிருந்து பயணம்போய் இச்சையின் பிரேதக்குழிகளுக்கு வந்து பாளயமிறங்கினார்கள்.

௰௭ இச்சையின் பிரேதக்குழிகளைவிட்டுப் பயணம்போய் ஆத்செரோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௰௮ ஆத்செரோத்திலிருந்து பயணம்போய் ரித்மாவிலே பாளயமிறங்கினார்கள்.

௰௯ ரித்மாவிலிருந்து பயணம்போய் ரிம்மோன்பேரேத்திலே பாளயமிறங்கினார்கள்.

௨௰ ரிம்மோன்பேரேத்திலிருந்து பயணம்போய் லிப்னாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௧ லிப்னாவிலிருந்து பயணம்போய் ரீசாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௨ ரீசாவிலிருந்து பயணம்போய்க் கேலத்தாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௩ கேலத்தாவிலிருந்து பயணம்போய்ச் சாப்பேர்மலையிலே பாளயமிறங்கினார்கள்.

௨௪ சாப்பேர்மலையிலிருந்து பயணம்போய் ஆரதாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௫ ஆரதாவிலிருந்து பயணம்போய் மக்கெலோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௨௬ மக்கெலோத்திலிருந்து பயணம்போய்த் தாகாத்திலே பாளயமிறங்கினார்கள்.

௨௭ தாகாத்திலிருந்து பயணம்போய்த் தாருகிலே பாளயமிறங்கினார்கள்.

௨௮ தாருகிலிருந்து பயணம்போய் மித்காவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௯ மித்காவிலிருந்து பயணம்போய் அஸ்மோனாவிலே பாளயமிறங்கினார்கள்.

௩௰ அஸ்மோனாவிலிருந்து பயணம்போய் மொசெரோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௩௧ மொசெரோத்திலிருந்து பயணம்போய்ப் பெனெயாக்கானிலே பாளயமிறங்கினார்கள்.

௩௨ பெனெயாக்கானிலிருந்து பயணம்போய்க் கித்காத்மலையிலே பாளயமிறங்கினார்கள்.

௩௩ கித்காத்மலையிலிருந்து பயணம்போய் யொத்பாத்தாவிலே பாளயமிறங்கினார்கள்.

௩௪ யொத்பாத்தாவிலிருந்து பயணம்போய் ஆபெரோனாவிலே பாளயமிறங்கினார்கள்.

௩௫ ஆபெரோனாவிலிருந்து பயணம்போய் எத்செயோன்கெபேரிலே பாளயமிறங்கினார்கள்.

௩௬ எத்செயோன்கெபேரிலிருந்து பயணம்போய்க் காதேசாகிய சீன்வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்.

௩௭ காதேசிலிருந்து பயணம்போய் ஏதோம்தேசத்தின் எல்லையிலிருக்கிற ஓர்பர்வதத்தண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

௩௮ அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோன் கர்த்தருடைய கட்டளையின்படியே ஓர்பர்வதத்தின்மேலேறி அங்கே இஸ்ரவேல்புத்திரர் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாற்பதாம்வருஷம் ஐந்தாமாதம் முதல்தேதியிலே மரணமடைந்தான்.

௨௮ ஏனெனிற்பிரதான ஆசாரியன் மரணமடையுமட்டுங் கொலைசெய்தவன் தன்னடைக்கலப்பட்டணத்திலிருந்து பிரதான ஆசாரியன் மரணமடைந்தபிற்பாடுதான் தன்காணியாட்சியான பூமிக்குத்திரும்பப்போகவேண்டியதாயிருந்தது.

௨௯ இவைகள் உங்கள் எல்லாவாசஸ்தலங்களிலுமிருக்கும் உங்கள் தலைமுறைகளிலுங்களுக்கு நியாயக்கட்டளையாயிருக்கக்கடவது.

௩௰ எவனாகிலும் ஒருமனிதனைக் கொன்றுபோட்டால் அப்பொழுது சாட்சிகளுடைய வாக்கின்படியே அந்தக்கொலைபாதகனைக்கொன்றுபோடக்கடவர்கள். ஒரு மனிதன்பேரிலேசாவுக்கென்று ஒரேயொரு சாட்சியுத்தரவுசொல்லவேண்டாம்.

௩௧ சாகிறதற்குக் குற்றஞ்சுமந்த கொலைபாதகனுடைய சீவனுக்காக நீங்கள்மீட்கும்பொருளை வாங்கவேண்டாம். அவனைக் கொலையுண்கவே கொலையுண்கவேண்டும்.

௩௨ தன்னடைக்கலப் பட்டணத்திற்கோடிப்போனவன் ஆசாரியன் மரணமடையாததற்குமுன்னே தன்சீமைக்குத்திரும்பிவர நீங்கள் அவனுக்காகமீட்கும்பொருள் வாங்கவும்வேண்டாம்.

௩௩ நீங்களிருக்குந்தேசத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கீர்களாக. ஏனென்றால் அப்படிக்கொத்த இரத்தந்தேசத்தைப்பரிசுத்தக்குலைச்சலாக்கும். தேசத்திலேசிந்தின இரத்தத்திற்காக இரத்தஞ்சிந்தப்போட்டவனுடைய இரத்தத்தினாலேயொழியவேறொன்றாலுந்தேசத்தின்பாவம் நிவர்த்தியாகாது.

௩௪ நாம்வாசம்பண்ணும் உங்கள்குடியிருப்பான்தேசத்தைத்தீட்டுப்படுத்தீர்களாக. ஏனென்றாற்கர்த்தராகிய நாம் இஸ்ரவேல்புத்திரரின் நடுவே வாசம்பண்ணுகிறோமென்றுசொல்லென்றார்.

## ௩௬. அதிகாரம்.

ஒவ்வொரு கோத்திரத்தின் சுதந்தரங்கள் ஒவ்வொரு கோத்திரத்தோடே யிருக்கவேண்டுமென்பது.

யோசேப்புடைய குமாரரின் வர்க்கத்தாரில் மனாசேயின் குமாரனாகிய மாகீருக்குப்பிறந்த கிலேயாத்தின் வம்சப்பிதாக்களானதலைவர் சேர்ந்துவந்து மோசேக்கும் இஸ்ரவேல்புத்திரருடைய பிதாக்களில் தலைவராகிய பிரபுக்களுக்குமுன்பாகப்பேசி

௨ சொன்னதாவது. சீட்டுகளைப்போட்டு தேசத்தை இஸ்ரவேல்புத்திரருக்குச்சுதந்தரமாகக்கொடுக்கக்கர்த்தர் எங்களாண்டவனுக்குக் கற்பித்தாரே; எங்கள் சகோதரனுடைய செலொப்பேயாத்தின் சுதந்தரத்தையவன் குமாரத்திகளுக்குக் கொடுக்கவேண்டுமென்றும் எங்களாண்டவனுக்குக் கர்த்தராலே கற்பிக்கப்பட்டதே.

௩ அப்பொழுதவர்கள் இஸ்ரவேல்புத்திரருடைய வேறேதுங்கோத்திரங்களின் புத்திரருக்குப் பெண்சாதிகளானால் அவர்கள் சுதந்தரம் எங்கள்பிதாக்களுடைய சுதந்தரத்திலே குறைந்துபோய் அவர்கள் உட்பட்டிருக்குங்கோத்திரத்தின் சுதந்தரத்தோடே சேர்ந்து எங்கள் சுதந்தரத்திற்குச் சீட்டுகளிலேவிழுந்தபங்கிலேகுறையும்போம்.

௪ அப்பொழுது இஸ்ரவேல்புத்திரருக்குச் சீர்வருஷம் வந்தாலும் அவர்களுடைய சுதந்தரம் அவர்கள் உட்பட்டிருக்கிற கோத்திரத்தின் சுதந்தரத்தோடே சேர்ந்திருந்து எங்கள்பிதாக்களுடைய கோத்திரத்தின் சுதந்தரத்திலே குறைந்துபோமென்றார்கள்.

௫ அப்பொழுது மோசே கர்த்தருடைய கட்டளைப்படியே இஸ்ரவேல்புத்திரருக்குக் கற்பித்துச்சொன்னதாவது. யோசேப்பு புத்திரரின்கோத்திரத்தார் சொல்லுகிறது நியாயம்.

௬ கர்த்தர் செலொப்பேயாத்தின் குமாரத்திகளுக்காகக் கற்பிக்கிறவார்த்தையாவது. அவர்கள் தங்கள் பார்வைக்குச்சம்மதியானவர்களுக்குப் பெண்சாதிகளாகலாம் ஆனால் தங்கள் பிதாவின்கோத்திரவம்சத்தாருக்கு மாத்திரம் அவர்கள் பெண்சாதிகளாகவேண்டும்.

௭ அப்படியே இஸ்ரவேல்புத்திரரின்சுதந்தரம் ஒருகோத்திரத்தைவிட்டு மறுகோத்திரத்துக்குத் தாண்டாதிருக்கும். ஏனெனில் இஸ்ரவேல்புத்திரரில் அவரவர் தங்கள் பிதாக்களுடையகோத்திரத்தின் சுதந்தரத்திலே நிலைகொண்டிருக்கவேண்டும்.

௮ இஸ்ரவேல்புத்திரரில் அவரவர் தங்கள்பிதாக்களின் சுதந்தரத்தை யனுபவிக்கும்படிக்கு இஸ்ரவேல் புத்திரருடைய யாதொருகோத்திரத்திலே சுதந்தரமடைந்திருக்கிற எந்தக்குமாரத்தியுந்தன் பிதாவின் கோத்திரவம்சத்தாரில் ஒருவனுக்குப்பெண்சாதியாகவேண்டும்.

௯ அப்படியே சுதந்தரம் ஒருகோத்திரத்தைவிட்டு வேறேகோத்திரத்துக்குத் தாண்டாது. ஏனெனில் இஸ்ரவேல்புத்திரரின் ஒவ்வொருகோத்திரந் தன்சுதந்தரத்திலே நிலைகொண்டிருக்கவேண்டுமென்று கற்பித்தாரென்றான்.

௰ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே செலொப்பேயாத்தின் குமாரத்திகள் செய்தது.

௧௧ மக்லாள் திர்சாள் ஒக்லாள் மில்காள் நோவாளென்ற செலொப்பேயாத்தின்கு

மார்த்திகள் தங்கள் தாயத் தகப்பனோடே கூடப்பிறந்தவர்களின் குமாரரென்றே யோசேப்பின் குமாரனாகிய மனாசே புத்திரரின் வம்சத்தாரை விவாகம்பண்ணினார்கள்.

௰௨ இப்படியே அவர்களுடைய சுதந்தரம் அவர்கள் பிதாவின் வம்சமான கோத்திரத்தோடேயிருந்துவிட்டது.

௰௩ எரிகோவிட்ட யோர்தானுக் கப்பாலேயிருக்கிற மோவாபின் சமனான வெளிகளிலே கர்த்தர் மோசேயைக்கொண்டு இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்த கற்பனைகளும் நியாயங்களுமிவைகள்தானே.

மோசேயெழுதின நான்காமாகமம் முடிந்து முற்றும்.

மோசேயெழுதின

# ஐந்தாம் ஆகமம்.

## ௧. அதிகாரம்,

ஓரேபைவிட்டுக் காதேஸ்பர்னேயாவுக்கு வருமட்டும் நடந்தகாரியத்தையும் அங்கே இஸ்ரவேலர் காண்பித்த முருட்டாட்டங்களையும் மோசேயவர்களுக்கு நினைப்பூட்டினது.

சேயீர்ப் பக்கவழியாய்ப்போனால் ஓரேபுக்குப் பதினொருநாள் பயணத் தூரமான காதேஸ்பர்னேயாவிலிருந்து,

௨ சூப்புக்கெதிராகவும் பாறானுக்கும் தோப்பேலுக்கும் லாபானுக்கும் ஆத்சரோத்துக்கும் திசாகாபுக்கும் நடுவாகவுமிருக்கிற யோர்தானுக் கிக்கரையான வனாந்தரத்தின் சமனான வெளியிலே வந்தபொழுது மோசே இஸ்ரவேலோடெல்லாருஞ் சொன்ன வசனங்கள்,

௩ நாற்பதாம் வருஷம் பதினோராமாதம் முதல்தேதியிலேதானே மோசே இஸ்ரவேல் புத்திரரோடே கர்த்தர் அவர்களுக்குச் சொல்லத் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் பேசினான்.

௪ எஸ்போனிலே குடியிருந்த எமோரியரின் ராசாவாகிய சீகோனையும் அஸ்தரோத்திலே குடியிருந்த பாசானின் ராசாவாகிய ஓகையும் எத்ரேயிலே அவன் முறியடித்தபின்பு,

௫ யோர்தானுக்கப்பாலிருக்கிற மோவாபின் தேசத்திலே மோசே யிந்த நியாயப்பிரமாணத்தை விவரித்துக் காண்பிக்கத் துவக்கிச் சொன்னதாவது.

௬ ஓரேபிலே நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நம்மோடே சொன்னதேதென்றால் நீங்கள் இந்தப் பர்வதத்தண்டையிலிருந்தது போதும்,

௭ நீங்கள் திரும்பிக்கொண்டு பயணம்பண்ணி எமோரியரின் மலைகளுக்கும் அவைகளுடைய எல்லா அசலபுறங்களுமாகிய சமனான வெளிகளிலும் மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் தெற்கிலும் கடலோரத்திலுமிருக்கிற கானானியரின் தேசத்திற்கும் லீபனோனுக்கும் ஐபிராத்து நதியென்கிற பெரிய நதிமட்டுக்கும் வாருங்கள்.

௮ இதோ, அந்தத் தேசத்தை யுங்களுக்கு முன்பாக வைத்தோம். நீங்கள் வந்து கர்த்தர் உங்கள் பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் அவர்களுக்குப் பிற்பாடிருக்கும் அவர்கள் வித்திற்குங் கொடுப்போமென்று ஆணையிட்ட அந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள் என்றார்.

௯ அக்காலத்திலே நான் உங்களோடே சொன்னது. நான் ஒருவனாக உங்களைச் சுமக்கக்கூடாது.

௰ உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களைப் பெருகப்பண்ணினார். இதோ, இந்நாளிலே நீங்கள் ஆகாசத்து நட்சத்திரங்களைப்போல ஏராளமாயிருக்கிறீர்கள்.

௰௧ உங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் உங்களை யிப்பொழுதிருக்கிறதைப் பார்க்க இன்னம் ஆயிரந்தரமாக்கித் தாம் உங்களுக்குச் சொன்னபடியே யுங்களை ஆசீர்வதிப்பாராக.

௰௨ நான் ஒருவனாக உங்களால் உண்டாம் வருத்தத்தையும் பிரயாசத்தையும் உங்கள் வழக்குகளையுஞ் சுமப்பதெப்படி?

௰௩ நான் உங்கள்மேல் தலைவர்களை வைக்கும்படிக்கு உங்கள் கோத்திரங்களிலே ஞானமும் உணர்வும் அறிவுமுள்ள மனிதரைச் சம்பாதியுங்களென்றேன்.

௰௪ அப்பொழுது நீங்களெனக்குப் பிரதியுத்தாரமாக நீர் செய்யச்சொன்னகாரியம் நல்லதென்றீர்கள்.

௰௫ ஆகையால் நான் ஞானமும் அறிவுமுள்ள மனிதராகிய உங்கள் கோத்திரங்க

ளின் தலைவரைச்சேர்த்துக்கொண்டு அவர்களையுங்களுக்கு மேல் தலைவராயிருக்க ஆயிரம் பேருக்கதிபதிகளாகவும் நூறு ஐம்பது பத்துப்பேருக்கதிபதிகளாகவும் உங்கள் கோத்திரங்களில் மணியகாரராகவும் வைத்தேன்.

௰௬ உங்களுடைய நியாயாதிபதிகளுக்கு அக்காலத்திலே நான் கற்பித்ததாவது. நீங்கள் உங்கள் சகோதரருக்குள்ளே வியாச்சியங்களைக்கேட்டு மனிதனுக்கும் அவன் சகோதரனுக்கும் அவர்களோடிருக்கிற பரதேசிக்கும் நீதியாய் நியாயங்களைத்தீருங்கள்.

௰௭ நியாயத்திலே முகம்பாராமற் சிறியவனைப் பெரியவனுக்குச் சரியாய்க் கேட்கக்கடவீர்கள். ஒருவர் முகத்திற்கும் பயப்படீர்களாக. ஏனெனில் நியாயத்தீர்ப்பு பராபரனுடையது. ஆனால் உங்களுக்கு மிஞ்சின அரிதாகிய காரியத்தை யென்னண்டைக்கொண்டுவாருங்கள். நான் அதைக் கேட்டேனென்று சொல்லி,

௰௮ நீங்கள் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் அக்காலத்திலே யுங்களுக்குக் கற்பித்தேன்.

௰௯ பிற்பாடு நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக் கற்பித்தபடியே நாம் ஓரேபைவிட்டுப் பயணம்பண்ணி நீங்கள் கண்ட அந்தப் பயங்கரமான பெரிய வனாந்தரவழியாய் எல்லாம் எமோரியரின் மலைகளுக்கு நேராக நடந்துவந்து காதேஸ்பறனேயாவிலே சேர்ந்தோம்.

௨௰ அப்பொழுது நான் உங்களோடே சொன்னதாவது. நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக்கொடுக்கிற எமோரியரின் மலைகளமட்டும் வந்தீர்கள்.

௨௰௧ இதோ, உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குமுன்பாக அந்தத்தேசத்தை வைத்தார். உன் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடியே நீ போய் அதைச்சுதந்தரித்துக்கொள். பயப்படாமலுங் கலங்காமலுமிருவென்றேன்.

௨௰௨ அப்பொழுது நீங்களெல்லாரும் என்னண்டைசேர்ந்துவந்து நமக்காக அந்தத்தேசத்தைச் சோதித்துப்பார்க்கிறதற்கும் நாம் எந்தவழியாய் அதிலேபோய் ஏறலாம் எந்தப்பட்டணங்களுக்குப்போகலாமென்று நமக்கு மறுசெய்திகொண்டுவருகிறதற்கும் நமக்குமுன்னே மனிதரையனுப்புவோமாக என்றீர்கள்.

௨௰௩ அது எனக்கு நன்றாய்க்கண்டது. அப்படியே ஒவ்வொரு கோத்திரத்திலொருவனாக உங்களிலே பன்னிரண்டு மனிதரையெடுத்தனுப்பினேன்.

௨௰௪ அவர்கள் போய் மலைகளிலேறி எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டுஞ்சேர்ந்து அதைவேவுபார்த்து,

௨௰௫ அந்தத்தேசத்துக்கனிகளிலே சிலத்தைத் தங்கள் கைகளிலெடுத்துக்கொண்டு நம்மண்டைக்கிறங்கிவந்து நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக்கொடுக்கிற அந்தத்தேசம் நன்றாயிருக்கிறதென்று நமக்கு மறுசெய்திகொண்டுவந்தார்கள்.

௨௰௬ ஆனாலும் நீங்கள் போய் ஏறமாட்டோமென்று உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய வாக்குக்குக்கீழ்ப்படியாமற்போய்,

௨௰௭ உங்கள் கூடாரங்களில் முறுமுறுத்துக் கர்த்தர் நம்மைப்பகைத்து நம்மை யழிக்கிறதற்கென்று நம்மை எமோரியரின் கையிலொப்புக்கொடுக்கும்படிக்கு நம்மை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

௨௰௮ எங்கே நாம் போயேறலாம்? ஜனம் பெரியதும் நம்மைப்பார்க்கிலும் உயர்ந்ததும் பட்டணங்கள் பெரியவைகளும் ஆகாசமட்டும் அரணிப்பாக்கப்பட்டவைகளுமாயிருக்கிறதென்றும் ஏனாக்புத்திரரையும் அங்கேகண்டோமென்றும் நம்முடைய சகோதரர் சொல்லி நம்முடைய இருதயத்தைக் கரையப்பண்ணினார்களென்றீர்கள்.

௨௰௯ அப்பொழுது நான் உங்களோடே சொன்னது. நீங்கள் கலங்காமலும் அவர்களுக்குப் பயப்படாமலுமிருப்பீர்களாக.

௩௰ உங்களுக்குமுன்னே நடக்கிற உங்கள் பராபரனாகிய கர்த்தர்தாமே எகிப்திலே உங்களோடிருந்து உங்கள் கண்களுக்குமுன்பாகச் செய்ததெல்லாவற்றிற்கும் வனாந்தரத்திலே செய்துவந்ததற்கும் ஒத்தபடி உங்களுக்காக யுத்தம்பண்ணுவார்.

௩௰௧ ஒரு மனிதன் தன் பிள்ளையைச் சுமக்கிறபோலே நீங்கள் இவ்விடத்திலே சேருமட்டும் நடந்துவந்த எல்லாவழியிலும் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சுமந்துவந்தாரென்று கண்டாயேயென்றேன்.

௩௰௨ இப்படிச் சொன்னாலும் நீங்கள் உங்களுக்குப் பாளயமிறங்கத்தக்க இடங்களை விசாரிக்கவும் நீங்கள் போகவேண்டிய வழியையுங்களுக்குக் காட்டவும்,

௩௰௩ இராவிலே அக்கினியிலும் பகலிலே மேகத்திலும் உங்களுக்குமுன்னே வழியிலே நடந்த உங்கள் பராபரனாகிய கர்த்தரை விசுவாசியாமற்போனீர்கள்.

௩௰௪ ஆகையாற் கர்த்தர் உங்கள் வார்த்தைகளின் சத்தத்தைக்கேட்டுக் கடுங்கோபமடைந்து,

௩௰௫ கொடுப்போமென்று நாம் உங்கள் பிதாக்களுக்காணையிட்ட அந்த நல்லதேசத்தை இந்தப் பொல்லாத சந்ததியான இந்த மனிதரிலொருவனுங் காண்பதில்லையென்றும்,

௩௰௬ எப்புனேயின் குமாரனாகிய காலேப் மாத்திரம் அதைக்காண்பான். அவன் கர்த்தரை யுத்தமமாய்ப் பின்பற்றின படியினாலே

நாம் அவன் மிதித்துவந்த தேசத்தை யவனுக்கும் அவன் பிள்ளைகளுக்குங் கொடுப்பே னென்றும் ஆணையிட்டார்.

௩௭ கர்த்தர் உங்கள் நிமித்தமாக என்பேரிலுங் கோபமாகிச் சொன்னதாவது நீயும் அதற்குட் பிரவேசிப்பதில்லை.

௩௮ உனக்குமுன்பாக நிற்கிற நூனின் குமாரனாகிய யோசுவா அதற்குட்பிரவேசிப்பான். அவனைத் திடப்படுத்து. ஏனென்றால் அவனே அதை இஸ்ரவேலருக்குச் சுதந்தரமாகப் பங்கிடுவான்.

௩௯ கொள்ளையாமென்று நீங்கள் சொன்ன உங்கள் குழந்தைகளும் இந்நாளில் நன்மை தீமையறியாத உங்கள் பிள்ளைகளும் அதற்குட் பிரவேசிப்பார்கள். அவர்களுக்கு அதைக்கொடுப்போம். அவர்கள் அதைச் சுதந்தரிப்பார்கள்.

௪௰ நீங்களோவென்றால் திரும்பிக்கொண்டு செங்கடல் சமுத்திரத்திற்குப் போகிறவழியே வனாந்தரத்திற்குப் பயணம் பண்ணுங்களென்றார்.

௪௧ அப்பொழுது நீங்களெனக்குப் பிரத்தியுத்தாரமாகக் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தோம். நாங்கள் போயெங்கள் தேவனுடையபராபரனாகிய கர்த்தர் எங்களுக்குக் கற்பித்தபடியெல்லாம் யுத்தம்பண்ணுவோமென்று சொல்லி அவரவர் உங்கள் யுத்த ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு மலைகளின்மேலேற ஆயத்தமாயிருந்தீர்கள்.

௪௨ அப்பொழுது கர்த்தர் என்னுடனே நீங்கள் உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்துபோகாதபடிக்கேறவும் யுத்தம்பண்ணவும் வேண்டாம். ஏனெனில் நாம் உங்கள் நடுவேயிரோமென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.

௪௩ அப்படியுங்களோடே சொன்னேன். நீங்களோவெனிற் கேள்விகொடுக்கவில்லை. நீங்கள் கர்த்தருடைய வாக்குக்குக் கீழ்ப்படியாதே போய் இடும்புசெய்து மலைகளின்மேலேறினீர்கள்.

௪௪ அப்பொழுது அந்த மலைகளிலே குடியிருக்கிற எமோரியர் உங்களுக்கெதிராகப் புறப்பட்டுவந்து தேனீக்கள் செய்கிறாப்போலே உங்களைத் துரத்தி உங்களைச் சேயிரிலே ஓர்மாமட்டுக்கு முறியடித்தார்கள்.

௪௫ அப்பொழுது நீர் திரும்பிவந்து கர்த்தருக்கு முன்பாக அழுதீர்கள். ஆனாற் கர்த்தர் உங்கள் சத்தத்தைக் கேட்கவில்லை, உங்களுக்குச் செவிகொடுக்கவுமில்லை.

௪௬ இப்படியே காதேசிலே அநேகநாள் தங்கியிருந்தீர்கள்.

## ௨. அதிகாரம்.

சேயிரிலே ஏதோமியரோடும் மோவாபியரோடும் அம்மோன்புத்திரரோடும் யுத்தங்கலவாமல் எஸ்போனின் இராசாவாகிய சீகோனோடே யுத்தங்கலந்து அவனைச் செயித்த செய்திகளின்விவரம்.

கர்த்தர் என்னோடே சொன்னபடியே நாந் திரும்பிக்கொண்டு நாங்கள் செங்கடலுக்குப் போகிறவழியே வனாந்தரத்திற்குப் பயணம் பண்ணி அநேகநாளாய்ச் சேயீர்மலைகளைச் சுற்றினோம்.

௨ பிறபாடு கர்த்தர் என்னோடே சொன்னதாவது.

௩ நீங்கள் இந்த மலைகளைச் சுற்றினது போதும். வடக்கே திரும்புங்கள்.

௪ சனத்திற்கு நீ கற்பிக்கவேண்டியதேதென்றாற் சேயீரிலே குடியிருக்கிற ஏசாவு புத்திரரான உங்கள் சகோதரரின் எல்லையைக் கடக்கப்போகிறீர்கள். அவர்கள் உங்களுக்குப் பயப்படுவார்கள். நீங்களோவென்றால் வெகு எச்சரிக்கையாயிருங்கள்.

௫ அவர்களோடே போர்கலவாதேயுங்கள். ஏனென்றால் அவர்கள் தேசத்திலே ஒரு அடியமாத்திரம் உங்களுக்குக் கொடோம் ஏனெனிற் சேயீர்மலைகளை ஏசாவு புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௬ போசனத்தையவர்கள் கையிலே பணத்திற்கு வாங்கிப் புசித்துத் தண்ணீரையும் அவர்கள் கையிலே பணத்திற்கு வாங்கிக் குடிப்பீர்களாக.

௭ ஏனெனில் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னுடைய கைகளின் கிரியைகளிலெல்லாம் ஆசீர்வதித்துவருகிறார். இந்தப் பெரியவனாந்தர வழியாய் நீ நடக்கிறதை யறிவார். இந்த நாற்பது வருஷம் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னோடேயிருந்தார். உனக்கொன்றுங் குறைபட்டதில்லையென்று சொல்லென்றார்.

௮ அப்படியே நாஞ் சேயீரிலே குடியிருக்கிற ஏசாவுபுத்திரரான நம்முடைய சகோதரரைவிட்டுக் கடந்து அந்த வெளிவழியாய் ஏலாத்மேலும் எத்சேயோன் கேபேர்மேலும் போய்த் திரும்பிக்கொண்டு மோவாப் வனாந்தர வழியாய்க் கடந்துவந்தோம்.

௯ அப்பொழுது கர்த்தர் என்னோடே சொன்னதாவது. நீ மோவாபை நெருக்கப்படுத்தாமலும் அவர்களோடே யுத்தங்கலவாமலுமிருப்பாயாக. ஏனெனில் அவர்கள் தேசத்திலே உனக்கொன்றுஞ் சுதந்தரமாகக் கொடோம். அதேனென்றால் ஆர் என்ற பட்டணத்தின் சீமையை லோத்புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௰ முற்காலத்தில் ஏனாக்கியரைப்போலே உயர்ந்தமான பெரிய சனசதளமாகிய ஏமியர் முதல் அதிலே குடியிருந்தார்கள்.

௰௧ இவர்களும் ஏனாக்கியரைப்போலே இராட்சதரென்றெண்ணப்பட்டார்கள் மோவாபியர் அவர்களை ஏமியரென்றார்கள்.

உரு அவர்கள் தேவர்களின் சுருபங்களை டக்கினியிலே சுட்டெரிக்கக் கடவாய. நீ அவைகளால் சிக்கிக்கொள்ளாதபடிக்கு அவைகளிலிருக்கிற வெள்ளியையும் பொன்னையும் இச்சியாமலும் அதையெடுத்துக்கொள்ளாமலுமிருப்பாயாக. ஏனெனில அவ்வளன உனபராபரனாகிய கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கினறது.

உசு ஆகையால அவைகளைப்போல நீசாபமாகாதபடிக்கு அருவருப்பானதை யுன வீட்டிலே கொணடுபோகாயாக. அதைச சீயென்றெணணி அதை யருவருக்கவே வெறுக்கக்கடவாய. ஏனெனில அது சாபத்தீடானது.

## அ. அதிகாரம்.

தேவனுடைய கற்பனைகளை கைக்கொள்ளவும பராபரனை மறவாதிருக்கவும புத்தி சொன்னது.

௧ நீங்கள் பிழைத்துப் பெருகி கர்த்தர் உங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திலே பிரவேசித்து அதைச் சுதந்தரிக்கும்படிக்கு நான் இன்றையத்துக்கு கற்பிக்கிற எல்லாக் கற்பனைகளின்படியுஞ் செய்யக் கவனமாயிருப்பீர்களாக.

௨ உன பராபரனாகிய கர்த்தர் உன்னைத் தாழ்மைப்படுத்தும்படிக்கு நீ யவருடைய கற்பனைகளை கைக்கொள்ளுவையோ கைக்கொள்ளாயோவென்று அவர் உன்னைச்சோதித்து உன இருதயத்திலிருக்கிறதை யறியும்படிக்கும உன்னை இந்த நாற்பது வருஷமும் வனாந்தரத்திலே நடத்தின எல்லா வழியையும் நினைப்பாயாக.

௩ அவர் உன்னைத் தாழ்மைப்படுத்தி யுன்னைப் பசியாயிருக்கப்பண்ணி மனிதன அப்பத்தினாலமாத்திரம பிழைக்காமற் கர்த்தருடைய வாயப்பிறப்பிலெல்லாம பிழைக்கிறானென்பதை யுனக்கறியப்படுத்தும்படிக்கு நீயும உன பிதாக்களும அறியாதிருந்த மன்னாவினால உன்னைப்போஷித்தார்.

௪ இந்த நாற்பது வருஷமும உனமேலிருந்த வஸ்திரம பழசாய்ப்போனதுமில்லை உன காலகள் வீங்கிப்போனதுமில்லை.

௫ ஆகையாலொருவன தன குமாரனை சிட்சிக்கிறபிரகாரமாக உன பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சிட்சிக்கிறாரென்று நீ உன இருதயத்திலேயறிந்து,

௬ உனபராபரனாகிய கர்த்தருடைய வழிகளில் நடந்து அவருக்குப் பயப்படும்படிக்கு அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளக்கடவாய.

௭ ஏனெனில உனபராபரனாகிய கர்த்தர் உன்னை நல்ல தேசத்திலே பிரவேசிக்கப்பண்ணுகிறார். அது பள்ளத்தாக்குகளிலும மலைகளிலுமிருந்து புறப்படுகிற ஆறுகளும ஊற்றுகளும மடுக்களுமுள்ள தேசம.

௮ கோதுமையும வாற்கோதுமையுந திராட்சச்செடிகளும அத்திமரங்களும மாதளஞ்செடிகளுமுள்ள தேசமும ஒலிவமரங்களும எண்ணெயுந் தேனுமுள்ள தேசமும,

௯ நீ தாட்சியிலலாமல அப்பம புசிக்கத்தக்கதும ஒன்றும உனக்குக் குறைபடாததுமான தேசமும கல்லுகள் இரும்புமாயிருக்கிறதும நீ மலைகளில வெண்கலம வெட்டியெடுக்கத்தக்கதுமான தேசமுமாயிருக்கின்றது.

௰ ஆகையால நீ சாப்பிட்டுத் திர்ப்தியடைந்த பொழுது உனபராபரனாகிய கர்த்தரையவர் உனக்குக்கொடுத்த நலல தேசத்திற்காகத் தோத்திரிக்கக்கடவாய.

௰௧ உன பராபரனாகியகர்த்தரை மறவாதபடிக்கும நான இன்றுனக்குக் கற்பிக்கிற அவருடைய கற்பனைகளையும நியாயங்களையுங் கட்டளைகளையுங் கைக்கொள்ளாமற்போகாதபடிக்கும எச்சரிக்கையாயிரு.

௰௨ நீ சாப்பிட்டுத் திர்ப்தியாகி நல்ல வீடுகளைக் கட்டி அவைகளிற் குடியிருக்கும பொழுதும,

௰௩ உன ஆடுமாடுகள திரட்சியாகி உனக்கு வெள்ளியும பொன்னும பெருகி உனக்குண்டானதெல்லாம வர்த்திக்கும பொழுதும,

௰௪ உன இருதயம மேட்டிமையடையாமலும உன்னையடிமைத்தனவீடாகிய எகிப்திலிருந்து புறப்படப்பணணினவரும,

௰௫ உன்னைச் சிறுமைப்படுத்தி யுன்னைச் சோதித்து உனனுடைய பின்னாட்களிலே உனக்கு நன்மைசெய்வதற்காகக் கொள்ளிவாய சர்ப்பங்களுந் தேட்களுந் தண்ணீரிலலா வறட்சியுமுள்ள பயங்கரமான பெரிய வனாந்தரவழியாய உன்னையழைத்துவந்தவரும உனக்காகத் தண்ணீரைக்கற்பாறையான கன்மலையிலிருந்து புறப்படப்பணணினவரும,

௰௬ உனபிதாக்கள அறியாத மன்னாவினாலே போஷித்துவந்தவருமான உனபராபரனாகிய கர்த்தரை மறக்காமலும,

௰௭ என்சாமர்த்தியமும என கைகளின பலனுமிந்த ஆஸ்தியையெனக்குச் சம்பாதித்ததென்று நீ யுன்னிருதயத்திலே சொலலிக்கொள்ளாமலுமிருக்க எச்சரிக்கையாயிருந்து,

௰௮ உனபராபரனாகிய கர்த்தரை நினைப்பாயாக. ஏனெனில்தாம உன பிதாக்களுக்காணையிட்ட தமமுடைய உடம்படிக்கையையுறுதிப்படுத்த அவர்இந்நாளிலேயிருக்கிறதுபோல உனக்கு ஆஸ்தியைச் சம்பாதிக்கிறதற்கானபலனைக்கொடுக்கிறவர்.

௧௭ அப்பொழுது நான் அந்த இரண்டு பலகைகளையும் பிடித்து அவைகளை என் இரண்டு கைகளிலிருந்தெறிந்து அவைகளை உங்கள் கண்களுக்கு முன்பாக உடைத்துப் போட்டேன்.

௧௮ நீங்கள் கர்த்தரை மனமடிவாக்குவித்தற்கு அவர் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து பாவித்த உங்களுடைய எல்லாப் பாவங்களினிமித்தமும் நான் கர்த்தருக்கு முன்பாக முன்போலே இரவும் பகலும் நாற்பது நாள் விழுந்து கிடந்தேன். நான் அப்பம் போசித்ததுமில்லை தண்ணீர் குடித்ததுமில்லை.

௧௯ ஏனெனில் கர்த்தர் உங்களை அழிப்பேனென்று உங்கள் மேல் கொண்ட கோபத்திற்கும் உக்கிரத்திற்கும் பயப்பட்டிருந்தேன். கர்த்தர் அந்த முறையும் என் மன்றாட்டைக் கேட்டார்.

௨௦ ஆரோன் மேலும் கர்த்தர் மிகவுங் கோபமாகி அவனை அழிப்பேனென்றார். நான் ஆரோனுக்காகவும் அக்காலத்திலே விண்ணப்பம்பண்ணினேன்.

௨௧ உங்கள் பாவக் கிரியையாகிய கன்றுக்குட்டியை நான் வாங்கி அதை அக்கினியிலெரித்து அதை நொறுக்கித் தூளாய்ப் போகுமட்டும் நன்றாய் அரைத்துப்போட்டு அந்தத் தூளைப் பர்வதத்திலிருந்தோடுகிற ஆற்றிலே போட்டுவிட்டேன்.

௨௨ தபேராவிலும் மாசாவிலும் இச்சையின் பிரேதக்குழிகளான இடத்திலும் கர்த்தருக்குச் சினங்கோபமுண்டாக்குகிறவர்களாயிருந்தீர்கள்.

௨௩ நீங்கள் போயேறி நான் உங்களுக்குக் கொடுத்த தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்களென்று கர்த்தர் உங்களைக் காதேஸ்பர்னேயாவிலிருந்தனுப்புகையிலும் நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரை விசுவாசியாமலும் அவர் சத்தத்திற்குக் கேள்வி கொடாமலும் அவர் வாக்குக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினீர்கள்.

௨௪ நான் உங்களையறிந்திருக்கிற நாள்முதற்கொண்டு கர்த்தருக்கு விரோதமாகக் கலகம்பண்ணுகிறவர்களாயிருந்தீர்கள்.

௨௫ உங்களையழிப்பேனென்று கர்த்தர் சொன்னபடியினாலே நான் கர்த்தருக்கு முன்பாக இரவும் பகலும் நாற்பது நாள் விழுந்துகிடந்தேன். அப்பொழுது நான் கர்த்தரை நோக்கிப் பண்ணின விண்ணப்பமாவது:

௨௬ கர்த்தராகிய ஆண்டவரே! தேவரீர் உம்முடைய மகத்துவத்தினாலே மீட்டுக்கொண்டு பலத்த கையினாலே எகிப்திலிருந்து புறப்படப்பண்ணின உம்முடைய ஜனத்தையும் உம்முடைய சுதந்தரத்தையும் அழிக்காதிருப்பீராக.

௨௭ கர்த்தர் அவர்களுக்குச் சொல்லியிருந்த தேசத்திலே அவர்களைப் பிரவேசிக்கப்பண்ணக் கூடாதே போனபடியினாலும் அவர்களைப் பகைத்தபடியினாலும் அவர்களை வனாந்தரத்திலே கொன்றுபோடும்படிக்குப் புறப்படப்பண்ணினாரென்று எங்களைப் புறப்படப்பண்ணின தேசத்தின் மனிதர் சொல்லாதபடிக்கு,

௨௮ தேவரீர் இந்த ஜனத்தின் முரட்டாட்டத்தையும் அதின் அக்கிரமத்தையும் அதின் பாவத்தையும் நோக்காமல் ஆபிரகாம் ஈசாக் யாக்கோபென்ற உம்முடைய ஊழியக்காரரை நினையும்.

௨௯ நீர் உம்முடைய பெரிய பலத்தினாலும் நீட்டப்பட்ட உம்முடைய புயத்தினாலும் புறப்படப்பண்ணின உம்முடைய ஜனமும் உம்முடைய சுதந்தரமும் அவர்கள்தானே என்றேன்.

## ௰. அதிகாரம்.

தேவபத்திக்கெழுப்புகிறதற்குச் சொன்ன புத்தி.

௧ அக்காலத்திலே கர்த்தர் என்னோடே சொன்னதாவது: நீ முந்தினவைகளுக்கொத்த இரண்டு கற்பலகைகளை உனக்கு வெட்டி நம்மண்டைக்குப் பர்வதத்திலேறிவா. ஒரு மரப்பெட்டியையும் உனக்குச் செய்ப்பண்ணுவாயாக.

௨ நீ உடைத்துப்போட்ட முந்தின பலகைகளிலிருந்த வார்த்தைகளை நாம் அந்தப் பலகைகளிலெழுதுவோம். பிற்பாடு அவைகளைப் பெட்டியிலே வைப்பாயாகவென்றார்.

௩ அப்படியே நான் சீத்திம் மரத்தினாலே பெட்டியையுண்டாக்கி முந்தினவைகளுக்கொத்த இரண்டு கற்பலகைகளை வெட்டி அவைகளை என் கையிலே பிடித்துப் பர்வதத்திலேறினேன்.

௪ சபை கூட்டப்பட்டிருந்த நாளிலே கர்த்தர் பர்வதத்திலே அக்கினியின் நடுவிலிருந்து உங்களோடே சொல்லியிருந்த பத்து வார்த்தைகளை அப்பொழுது அவர் முந்தின எழுத்திற்குச் சரியாக அந்தப் பலகைகளிலெழுதி அவைகளை எனக்குக் கொடுத்தார்.

௫ அப்பொழுது நான் திரும்பிக்கொண்டு பர்வதத்திலிருந்திறங்கி அந்தப் பலகைகளை நான் பண்ணியிருந்த பெட்டியிலே வைத்தேன். கர்த்தர் எனக்குக் கற்பித்தபடி அதிலே வைத்திருக்கின்றது.

௬ பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் பெனெயாக்கானுக்கடுத்த பேரோத்திலிருந்து மோசேராவுக்குப் பயணம்பண்ணினார்கள். அங்கே ஆரோன் மரித்து அடக்கம்பண்ணப்பட்டான். அவன் ஸ்தலத்திலே அவன் குமாரனாகிய எலெயாசார் ஆசாரியனானான்.

௭ அங்கேயிருந்து குத்கோதாவுக்கும் குத்கோதாவிலிருந்து ஆறுகளுள்ள தேசமாகிய யோத்பாத்திற்கும் பயணம்பண்ணினார்கள்.

௮ அக்காலத்திலே கர்த்தர் லேவிகோத்திரத்தைக் கர்த்தருடைய உடம்படிக்கையி

௨ விடுதலையின்வர்த்தமானமாவது. தன் கடன்காரனுக்குக் கடன் கொடுத்தவனெல்லாம் கர்த்தரின் விடுதலை கூறப்பட்டபடியினாலே அதைத் தனக்குக் கடன்பட்டவனாகிய பிறனிடத்திலும் தன் சகோதரனிடத்திலும் கேளாமல் விட்டுவிடக்கடவன்.

௩ அந்நியசாதியானவனிடத்திலே நீ கடனைத் தண்டலாம். ஆனால் உன் சகோதரனிடத்திலே உனக்கு வரவேண்டியதை உன் கை விட்டுவிடக்கடவது.

௪ எளியவன் உங்களுக்குள் இல்லாதிருக்கும்படியாகத்தானே. ஏனெனில் இன்று நான் உனக்குக் கற்பிக்கிற இந்த எல்லாக் கற்பனைகளின்படியும் நீ செய்யக் கருத்தாயிருக்கும்படிக்கு உன் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தை மாத்திரம் கேட்கவே கேட்டாயானால்,

௫ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரித்துக்கொள்ளக் கொடுக்கும் தேசத்திலே கர்த்தர் உன்னை யாசீர்வதிக்கவே ஆசீர்வதிப்பார்.

௬ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடி உன்னை யாசீர்வதிப்பதினாலே அநேக சாதிகளுக்குக் கடன் கொடுப்பாய். நீயோவெனில் கடன் வாங்குவதில்லை, அநேக சாதிகளை யாளுவாய். உன்னையோவெனில் அவைகள் ஆளுவதில்லை.

௭ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கும் உன் தேசத்து வாசல்களிலொன்றில் உன் சகோதரரில் எளியவனொருவனாகிலும் யாதொருவன் உனக்குள் இருந்தால், நீ உன் எளிய சகோதரனுக்கு முன்பாக உன் இருதயத்தை அழுத்தமாக்காமலும் உன் கையை மூடாமலும்,

௮ உன் கையை அவனுக்குத் திறக்கவே திறந்து, அவன் அவசரத்தின் நிமித்தம் அவனுக்குத் தேவையானமட்டுங் கடன் கொடுக்கவே கொடுப்பாயாக.

௯ விடுதலையின் வருஷமாகிய ஏழாம் வருஷங் கிட்டியிருக்கிறதென்று சொல்லி உன்னிருதயத்திலே பேலியாளின் நினைவுண்டாய் உன் ஏழைச் சகோதரனுக்குக் கொடாதே போக அவன் பேரில் உன் கண் விதனமாகாதபடிக்கும் அவன் உன் பேரிலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடாதபடிக்கும் எச்சரிக்கையாயிரு. மற்றப்படி அது உன் மேலே பாவமாயிருக்கும்.

௰ அவனுக்குக் கொடுக்கவே கொடுப்பாயாக. அவனுக்குக் கொடுக்கையில் உன் இருதயம் விதனப்படாதிருப்பதாக. ஏனெனில் அதினிமித்தமாக உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை உன்னுடைய எல்லாக் கிரியையிலும் நீ கையிட்டுச் செய்வதெல்லாவற்றிலும் ஆசீர்வதிப்பார்.

௰௧ ஏனெனில் தேசத்திற்குள்ளே எளியவர்கள் இல்லாதிருப்பதில்லை. ஆகையால் உன் தேசத்திலே சிறுமைப்பட்டவனும் எளியவனுமாகிய உன் சகோதரனுக்கு உன் கையைத் திறக்கவே திறப்பாயாகவென்று நான் உனக்குக் கற்பிக்கிறேன்.

௰௨ உன் சகோதரனாகிய எபிரேயனொருவனாகிலும் எபிரேய ஸ்திரியாகிலும் உனக்கு தன்னை விற்றால், ஆறு வருஷம் உன்னைச் சேவிப்பான். ஏழாம் வருஷத்திலே அவனைத் தன்னிச்சைக்காரனாக உன்னை விட்டு அனுப்பக்கடவாய்.

௰௩ அவனை நீ தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடும்பொழுது அவனை வெறுமையாய் அனுப்பாமல்,

௰௪ உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை யாசீர்வதித்த உன் ஆட்டுமந்தையிலும் உன் களத்திலும் உன் ஆலையிலும் எடுத்து அவனுக்கு ஈவுகளைக் கொடுக்கவே கொடுக்கக்கடவாய்.

௰௫ நீ எகிப்து தேசத்திலே அடிமையாயிருந்ததையும் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை மீட்டுவிட்டதையும் நினைவுகூரக்கடவாய். ஆகையால் தான் இன்று இதை யுனக்குக் கற்பிக்கிறேன்.

௰௬ நான் உன்னைவிட்டுப் புறப்பட்டுப் போகிறதில்லை. ஏனென்றால் உன்னையும் உன் வீட்டையும் நேசிக்கிறேன். அதேனென்றால் உன்னிடத்தில் நான் நன்றாயிருக்கிறேனென்று அவன் உன்னோடே சொன்னானேயாகில்,

௰௭ நீ ஒரு கம்பியை யெடுத்து அவன் காதைக் கதவிலே படக் குத்தவாயாக. பிற்பாடு அவன் என்றைக்கும் உனக்கு அடிமையாயிருக்கக்கடவான். உன் அடிமைப் பெண்ணுக்கும் அப்படியே செய்யக்கடவாய்.

௰௮ அவனைத் தன்னிச்சைக்காரனாக உன்னைவிட்டு அனுப்புவது உனக்குத் தன்மையாய்க் காணவேண்டாம். ஏனெனில் இரட்டிப்பான கூலிக்கு ஈடாக ஆறு வருஷம் உன்னைச் சேவித்தான். அப்படியே உன் பராபரனாகிய கர்த்தர் நீ செய்கிறயாவிலும் உன்னை யாசீர்வதிப்பார்.

ஆடுமாடுகளுடைய தலையீற்றுகளுக்கு அடுத்தகட்டளை.

௰௯ உன் ஆடுமாடுகளிலே தலையீற்றாகிய ஆணையெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பரிசுத்தம் பண்ணுவாயாக. உன் மாட்டின் தலையீற்றால் வேலை செய்யாமலும் உன் ஆட்டின் தலையீற்றை மயிர்கத்தரிக்காமலும் இருப்பாயாக.

௨௰ கர்த்தர் தெரிந்துகொள்ளுந் தலத்திலே நீயும் உன் வீட்டாருமாய் வருஷாந்தரம் அப்படிக் கொத்ததுகளை உன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாகப் போசிக்கக்கடவீர்கள்.

௨௰௧ சப்பாணி அல்லது குருடாயிருக்கிறது முதலான யாதொரு ஆகாத ஊனம்

அதிலிருந்தேயானால் நீ உன் பராபரனுடைய கர்த்தருக்கதைப் பலியிடவேண்டாம்.

௨௨ அப்படிக்கொத்ததை நீ உன் வாசல்களிலே மானை போலும் வெளிமானைப் போலும் புசிக்கலாம். தீட்டுப்பட்டவனும் சுத்தமானவனும் கூடத் தானே.

௨௩ அதின் இரத்தத்தை மாத்திரம் புசியாமல், அதைத் தரையிலே தண்ணீரைப் போல ஊற்றிவிடக்கடவாய்.

## ௰௬. அதிகாரம்.

மூன்று பண்டிகைகளின் கட்டளை.

ஆபிப் மாதத்தைக் கவனித்துக்கொண்டு, அதிலே உன் பராபரனுடைய கர்த்தருக்குப் பஸ்காவை யாசரிக்கக்கடவாய். ஏனெனில் ஆபிப் மாதத்திலே உன் பராபரனுடைய கர்த்தர் இராக்காலத்திலே உன்னை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

௨ கர்த்தர் தமது நாமத்தை வாசமாயிருக்கப்பண்ணத் தெரிந்துகொண்டிருக்கும் ஸ்தானத்திலே உன் பராபரனுடைய கர்த்தருக்குப் பஸ்காவையும் ஆடு மாடுகளையும் பலியிடுவாயாக.

௩ நீ எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாளை உயிரோடிருக்கும் நாளெல்லாம் நினைக்கும்படிக்கு அதின்தோடே புளித்த அப்பம் புசியாமல் சிறுமையின் அப்பமாகிய புளிப்பில்லாத அப்பங்களை அதோடே ஏழு நாள்மட்டும் புசிக்கக்கடவாய். ஏனெனில் தீவிரத்தோடே எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்டாய்.

௪ ஏழுநாள்மட்டும் உன் எல்லைகளிலெல்லாம் புளித்தமாவானது உன்னிடத்திலே காணப்படவும் வேண்டாம். நீ முதல்நாள் சாயுங்காலத்திலே அடித்த பலியின் மாம்சத்திலே ஏதாகிலும் விடியற்காலமட்டும் இருக்கவும் வேண்டாம்.

௫ உன் பராபரனுடைய கர்த்தர் உனக்குக் கொடுக்கும் உன்னுடைய வாசல்களிலியாதொன்றிலே நீ பஸ்காவை யடிக்கப்படாது.

௬ உன் பராபரனுடைய கர்த்தர் தமது நாமத்தை வாசமாயிருக்கப்பண்ணத் தெரிந்துகொள்ளுந் தானத்திலே நீ எகிப்திலிருந்து புறப்பட்டபோகிற நேரமாகிய சாயுங்காலத்திலே சூரியன் அஸ்தமிக்கிற பொழுது பஸ்காவை யடித்து,

௭ உன் பராபரனுடைய கர்த்தர் தெரிந்துகொண்ட தானத்திலே அதைப் பொரித்துப் புசித்து, விடியற்காலத்திலே திரும்பிக்கொண்டு உங்கள் கூடாரங்களுக்குப் போவாயாக.

௮ நீ ஆறுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசித்தபிறகு ஏழாம்நாள் உன் பராபரனுடைய கர்த்தருக்காசரிக்கப்படும் நாளாயிருக்கும். அதிலே யாதொரு வேலையையுஞ் செய்யாயாக.

௯ ஏழுவாரங்களை யெண்ணிவிடுவாயாக. வெள்ளாமையை யறுக்கத் துவக்குகிறது முதற்கொண்டு நீ யந்த ஏழுவாரங்களையெண்ணத் துவக்கி,

௰ அவைகள் சென்றபொழுது வாரங்களின் பண்டிகையை யுன் பராபரனுடைய கர்த்தருக்காசரித்து, உன் பராபரனுடைய கர்த்தர் உன்னையாசீர்வதித்ததற்குத் தக்கதாக உன் கையின் மனப்பூர்வமான பகுதியைக் கொடுத்து,

௰௧ உன் பராபரனுடைய கர்த்தர் தமது நாமத்தை வாசமாயிருக்கப்பண்ணத் தெரிந்துகொள்ளுந் தானத்திலே நீயும் உன் குமாரனும் உன் குமாரத்தியும் உன் வேலைக்காரனும் உன் வேலைக்காரியும் உன் வாசல்களிலிருக்கிற லேவியனும் உன்னிடத்திலிருக்கிற பரதேசியுந் திக்கற்றவனுங் கைம்பெண்சாதியும் உன் பராபரனுடைய கர்த்தருக்கு முன்பாகச் சந்தோஷப்பட்டு,

௰௨ நீ எகிப்திலே அடிமையாயிருந்ததை நினைத்து இந்தக் கட்டளைகளைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்யக்கடவாய்.

௰௩ நீ உன் களத்தின் பலனையும் உன் ஆலையின் பலனையும் சேர்த்தபிற்பாடு கூடாரப்பண்டிகையையேழுநாளாய் ஆசரித்து,

௰௪ உன் பண்டிகையிலே நீயும் உன் குமாரனும் உன் குமாரத்தியும் உன் வேலைக்காரனும் உன் வேலைக்காரியும் உன் வாசல்களிலிருக்கிற லேவியனும் பரதேசியுந் திக்கற்றவனுங் கைம்பெண்சாதியுஞ் சந்தோஷப்பட்டு,

௰௫ கர்த்தர் தெரிந்துகொள்ளும் ஸ்தலத்திலே உன் பராபரனுடைய கர்த்தருக்கு ஏழுநாளாய்ப் பண்டிகையை யாசரிப்பாய். உன்னுடைய எல்லாவர்த்தத்திலும் உன் கைகளுடைய எல்லாக் கிரியையிலும் உன் பராபரனுடைய கர்த்தர் உன்னை யாசீர்வதித்தபடியினாலே சந்தோஷித்திருப்பாயாக.

௰௬ வருஷத்திலே மூன்றுமுறையாகிய புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையிலும் வாரங்களின் பண்டிகையிலுங் கூடாரப்பண்டிகையிலும் உன் ஆண்மக்களெல்லாம் உன் பராபரனுடைய கர்த்தர் தெரிந்துகொள்ளுந் தானத்திலே அவர் சந்நிதிக்கு முன்பாக வந்து காணப்படக்கடவர்கள்.

௰௭ ஒருவருங் கர்த்தருக்கு முன்பாக வெறுங்கையோடே அல்ல உன் பராபரனுடைய கர்த்தர் உனக்குக் கட்டளையிட்ட அவருடைய ஆசீர்வாதத்துக்குத் தக்கதாக அவரவர் தன் காணிக்கையோடே காணப்படுவார்களாக.

உனக்கோவென்றால் உன் பராபரனாகிய கர்த்தர் அப்படிச்செய்ய உத்தாரங்கொடார்,

### பெரிய தீர்க்கதரிசியாகிய கிறிஸ்துவைக் குறித்துச்சொன்னது.

௰௫ என்னைப்போலொரு தீர்க்கதரிசியை யுன் பராபரனாகிய கர்த்தர் உனக்கு உன் நடுவே உன் சகோதரரிலிருந்தெழும்பப்பண்ணுவார். அவரைக் கேட்பீர்களாக.

௰௬ நான் சாவாதபடிக்கு இனி என் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேளாமலும் இந்தப் பெரிய அக்கினியைக் காணாமலுமிருப்பேனாகவென்று நீ ஓரேபிலே சபைகூட்டப்பட்டநாளில் உன் பராபரனாகிய கர்த்தரை வேண்டிக்கொண்டதின்படியெல்லாம் ஆகும்படிக்குத்தானே.

௰௭ அப்பொழுது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது. அவர்கள் சொன்னது நல்லது.

௰௮ நாம் உன்னைப்போலொரு தீர்க்கதரிசியையவர்களுக்கு அவர்கள் சகோதரரின் நடுவிலேயிருந்தெழும்பப்பண்ணி நம்முடைய வார்த்தைகளையவர் வாயிலே கொடுப்போம். நாம் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் அவரவர்களோடே சொல்லுவார்.

௰௯ அப்பொழுது சம்பவிப்பதேதெனில் அவர் நமது நாமத்தினாலே சொல்லும் நம் வார்த்தைகளைக் கேளாதவனை நாம் விசாரிப்போம்.

௨௰ ஆனால் எந்தத் தீர்க்கதரிசியானாலுஞ்சொல்லத் தனக்கு நாம் கற்பிக்காதிருக்கிற விசேஷத்தை நமது நாமத்திலே சொல்லத் துணிந்து மேலும் மற்றத் தேவர்களின் நாமத்திலே பேசுவானேயானால் அந்தத் தீர்க்கதரிசி சாவக்கடவன்.

௨௧ ஆனால் நீ உன்னிருதயத்தில் கர்த்தர் சொல்லாதிருக்கிற வார்த்தையை யெப்படியறிவேனென்றாயேயாகில்,

௨௨ தீர்க்கதரிசி கர்த்தரின் நாமத்திலே சொன்ன காரியம் உண்டாகாமலும் வராமலும்போனால் அது கர்த்தர் சொல்லாதிருக்கிற வார்த்தை. தீர்க்கதரிசி அதைத் துணிகரத்தினாலே சொன்னான். அவனுக்குப் பயப்படாயாக.

## ௰௯. அதிகாரம்.

### அடைக்கலப்பட்டணங்களின் கட்டளை.

௧ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்குந் தேசத்தின் சாதிகளை யுன் பராபரனாகிய கர்த்தர் வேரறுப்புப்போகப்பண்ணுகையால் நீயவர்கள் தேசத்தைச் சுதந்தரித்து அவர்கள் பட்டணங்களிலும் அவர்கள் வீடுகளிலுங் குடியேறின பொழுது,

௨ நீ யுன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரிக்கக்கொடுக்கிற உன் தேசத்தின் நடுவிலே மூன்று பட்டணங்களை யுனக்குப் பிரித்து வைக்கக்கடவாய்.

௩ கொலைசெய்தவனெல்லாரும் அங்கே யோடிப்போகத்தக்கதாக நீ யுனக்கு வழியை யாயத்தப்படுத்தி உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சுதந்தரிக்கப்பண்ணப்போகிற உன் தேசத்தின் எல்லையை மூன்று பங்காகப் பகுக்கக்கடவாய்.

௪ கொலைசெய்து அங்கேயோடிப்போய் உயிரோடிருக்கத் தக்கவனெவனென்றால், முன் நாட்களிற் பகைத்திராத தனக்கடுத்தவனை மனதறியாமற் கொன்றவன்தானே.

௫ விறகுவெட்ட ஒருவன் தனக்கடுத்தவனோடே காட்டிலேபோய் விறகைவெட்டத் தன் கையிலே கோடாலியோங்கும்பொழுது இரும்பு காம்பைவிட்டுத் தெறித்து அவனுக்கடுத்தவனுக்குப் பட்டு அவன் சாவும்படியாய்ப்பட்டால்,

௬ அப்படிக் கொன்றவன் முதலான பிரகாரமாகக் கொலைசெய்தவனைப் பழிக்காரன் தன் மனதெரிச்சலினாலே தொடர்ந்து வழிதூரமாயிருக்கிறதினாலே யவனைக் கிட்டி அவன் சீவனைச் சம்பண்ணாதபடிக்கு அவன் அந்தப் பட்டணங்களில் ஒன்றில் ஓடிப்போய் உயிரோடிருப்பானாக. ஏனென்றால் இவன் அவனை முன் நாட்களிற் பகைக்காதபடியினாலே இவன்மேலே சாவுக்கான குற்றஞ் சுமத்தவில்லை.

௭ இதனிமித்தம் மூன்று பட்டணங்களை யுனக்குப் பிரித்துவைக்கக்கடவாயென்று நான் உனக்குக் கற்பிக்கிறேன்.

௮ நீ யுன் பராபரனாகிய கர்த்தரை நேசித்துச் சகல நாளும் அவர் வழிகளிலே நடப்பதற்காக நான் இன்று உனக்குக் கற்பிக்கிற இந்த எல்லாக் கற்பனையையும் அதின்படிச் செய்யும்படிக்குக் கைக்கொண்டு,

௯ அப்படியே யுன் பராபரனாகிய கர்த்தர் உன் பிதாக்களுக்கு ஆணையிட்டபடியே உன் எல்லையை விஸ்தாரமாக்கி உன் பிதாக்களுக்குக் கொடுப்போமென்று சொன்ன தேசத்தையெல்லாம் உனக்குக் கொடுத்தால்,

௰ அப்பொழுது குற்றமில்லாத இரத்தம் உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கிற உன் தேசத்தின் நடுவிலே சிந்தப்படுகிறதினாலே உன்மேல் இரத்தப்பழி சுமராதபடிக்கு இந்த மூன்று பட்டணங்களோடே யுனக்கின்னம் மூன்று கூட்டக்கடவாய்.

௰௧ ஒருவன் தனக்கடுத்தவனைப் பகைத்து அவனுக்குப் பதிவிருந்து அவனுக்கு விரோதமாயெழும்பி அவன் சாவும்படிக்கு அவன் சீவனைத் தம்பண்ணி இந்தப் பட்டணங்களிலொன்றில் ஓடிப்போனானேயாகில்,

௰௨ அவன் பட்டணத்தின் மூப்பர் ஆளனுப்பி யவனை அங்கேயிருந்து கொண்டுவரச்சொல்லி அவன் சாவும்படிக்கு அவனை

இரத்தப்பழிக்காரன் கையில் ஒப்புக்கொடுக்கக்கடவர்கள்.

௰௩ உன்கண் அவனுக்கு இரங்கவேண்டாம். நீ நன்றாயிருக்கும்படிக்கு நீ குற்றமில்லாத இரத்தத்தின் பழியை இஸ்ரவேலைவிட்டு விலக்கக்கடவாய்.

எல்லைகளையொத்தாரிருக்கச்சொன்னதும், பொய்ச்சாட்சிகளுக்குத் தக்க ஆக்கினையைக் குறித்ததும்.

௰௪ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரிக்கக்கொடுக்கிற தேசத்தில் உன் வசமாயிருக்குங் காணியாட்சியிலே முந்தினவர்கள் குறித்திருக்கிற உனக்கடுத்தவனுடைய எல்லையை யொத்திப்போகாயாக.

௰௫ யாதொருவன் எந்த அக்கிரமத்தையும் எந்தப் பாவத்தையுஞ் செய்தானென்று சொல்லப்பட்டாலும் ஒரே சாட்சி அவன்மேலே சாட்சியிட்டுத் தீர்க்கவேண்டாம். இரண்டு மூன்று சாட்சிகளுடைய வாக்கினாலே காரியம் நிலைவரப்படுவதாக.

௰௬ ஒருவன்மேல் ஒரு துரோகத்தினக் குற்றத்தைச் சாட்ட ஒரு கொடுமையான சாட்சி அவன்மேலெழும்பினால்,

௰௭ வழக்காடுகிற இருவருங் கர்த்தருக்கு முன்பாகவும் அந்நாளிலிருக்கும் ஆசாரியர்களுக்கும் நியாயாதிபதிகளுக்கும் முன்பாகவும் வந்து நிற்பார்களாக.

௰௮ அப்பொழுது நியாயாதிபதிகள் நன்றாய்க் கேட்டு விசாரிக்கக்கடவர்கள். சாட்சிக்காரன் சாட்சியென்றுந் தன் சகோதரன்மேலே பொய்யாய்க் குற்றஞ் சாட்டினானென்றுங் கண்டால்,

௰௯ அப்பொழுது அவன் தன் சகோதரனுக்குச் செய்ய நினைத்தபடியே யவனுக்குச் செய்யக்கடவீர்கள்.

௨௰ இப்படியே மற்றவர்களுங் கேட்டுப் பயந்து இனி உன் நடுவிலே அந்தத் தீவினைக்கொத்த காரியத்தைச் செய்யாதிருப்பதற்காகப் பொல்லாப்பையுன் நடுவிலிருந்து விலக்குவாயாக.

௨௧ உன்கண் இரங்கவேண்டாம். சீவனுக்குச் சீவன் கண்ணுக்குக் கண் பல்லுக்குப் பல் கைக்குக் கை காலுக்குக் கால்.

## ௨௰. அதிகாரம்.

யுத்தத்திற்கடுத்த கட்டளைகள்.

நீ உன் சத்துருக்களுக்கெதிராக யுத்தத்திற்குப் புறப்பட்டுக் குதிரைகளையும் இரதங்களையும் உன்னைப்பார்க்கத் திரட்சியான சனத்தையுங் கண்டால் அவர்களுக்குப் பயப்படாயாக. ஏனெனில் உன்னை எகிப்து தேசத்திலிருந்து வரப்பண்ணின உன் பராபரனாகிய கர்த்தர் உன்னோடேயிருக்கிறார்.

௨ நீங்கள் யுத்தத்திற்குக் கிட்டுகிறபொழுது ஆசாரியன் சேர்ந்துவந்து சனத்தோடே பேசி அவர்களோடே சொல்லவேண்டியதாவது. இஸ்ரவேலே! கேள்.

௩ இன்று உங்கள் சத்துருக்களோடே யுத்தங்கலக்கப்போகிறீர்கள். உங்கள் இருதயந் துவளவேண்டாம். நீங்கள் அவர்களைப் பார்த்துப் பயப்படவுங் கலங்கவுந் தத்தளிக்கவும்வேண்டாம்.

௪ ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்காக உங்கள் சத்துருக்களோடே யுத்தம்பண்ணவும் உங்களை இரட்சிக்கவும் உங்களோடே கூடப்போகிறார் என்பானாக.

௫ பிற்பாடு சேர்வைக்காரர் சனத்தோடே சொல்லவேண்டியதாவது. எவன் புது வீட்டைக் கட்டி யதைப் பிரதிஷ்டை பண்ணாதிருக்கிறானோ அவன் யுத்தத்திலே செத்து வேறொருவன் அதைப் பிரதிஷ்டைபண்ணாதபடிக்குத் தன் வீட்டிற்குத் திரும்பிப் போகக்கடவன்.

௬ எவன் திராட்சத்தோட்டத்தை நாட்டி அதைய னுபவியாதிருக்கிறானோ அவன் யுத்தத்திலே செத்து வேறொருவன் அதை அனுபவியாதபடிக்குத் தன் வீட்டிற்குத் திரும்பிப்போகக்கடவன்.

௭ எவன் ஒரு பெண்ணைத் தனக்கு நியமித்துக்கொண்டு அவளை விவாகம்பண்ணாதிருக்கிறானோ அவன் யுத்தத்திலே செத்து வேறொருவன் அவளை விவாகம்பண்ணாதபடிக்குத் தன் வீட்டிற்குத் திரும்பிப்போகக்கடவனென்பார்களாக.

௮ இன்னுஞ் சேர்வைக்காரர் சனத்துடனே பேசி எவன் பயங்காளியுந் திடனற்றவனுமாயிருக்கிறானோ அவன் தன் சகோதரரின் இருதயத்தைத் தன்னிருதயத்தைப்போலக் கரையப்பண்ணாதபடிக்குத் தன் வீட்டிற்குத் திரும்பிப்போகக் கடவனென்பார்களாக.

௯ சேர்வைக்காரர் சனத்தோடே பேசி முடித்த பிற்பாடு சேனைகளின் தலைவர் சனத்தை இலக்கம்பார்க்கக்கடவர்கள்.

௰ நீ ஒரு பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ணக்கிட்டும்பொழுது சமாதானத்திற்கான விசேஷத்தையதற்குக் கூறக்கடவாய்.

௰௧ அது சமாதானமான உத்தரவு உனக்குக்கொடுத்து உனக்குத் திறந்தால் அதிலே அகப்பட்டிருக்கிற சனமெல்லாம் உனக்குப் பகுதிகட்டுகிறவர்களாகி உன்னைச் சேவிக்கக்கடவர்கள்.

௰௨ அது உன்னோடே சமாதானம்பண்ணாமல் உன்னோடே யுத்தம்பண்ணிற்றேயானால் நீ அதை முற்றிக்கைபோட்டு,

௰௩ உன் பராபரனாகிய கர்த்தர் அதை உன் கையில் ஒப்புக்கொடுத்தால் அதிலுள்ள

விடுவாயாக. நீயவளைத் தாழ்மைப்படுத்தினபடியினாலே அவளாலே ஆதாயந்தேடாதிருப்பாயாக.

இரண்டு தாரத்தின் பிள்ளைகளுடைய சுதந்தரகாரியத்துக்கடுத்த நியாயம்.

௧௫ ஒருவனுக்கு இரண்டு பெண்சாதிகளாயிருக்கப்பட்ட ஒருத்தி [illegible] க்கப்பட்ட ஒருத்தியுமிருந்து இருவரும் அவனுக்குப் பிள்ளைகளைப் பெற்று முதற்பேறானவன் பகைக்கப்பட்டவளிற் பிறந்திருந்தால்,

௧௬ அவன் தனக்குண்டானதைத் தன் பிள்ளைகளுக்குச் சுதந்தரமாகப் பங்கிடுகிற நாளிலே பகைக்கப்பட்டவளிற் பிறந்த முதற்பேறானவனுக்கு முன்பாகச் சிநேகிக்கப்பட்டவளிற் பிறந்தவனுக்கு முதற்பேறு சுதந்தரத்தைக் கொடுக்கப்படாது.

௧௭ பகைக்கப்பட்டவளிற் பிறந்தவனைய வன் முதற்பேறானவனாக அறிந்து தனக்குண்டானதெல்லாவற்றிலும் இரண்டு பங்கையவனுக்குக் கொடுக்கவேண்டும். ஏனெனில் இவன் அவனுடைய முதற்பலன். இவனுக்கு முதற்பேறு சுதந்தரஞ் செல்லும்.

முரட்டாட்டமான மகனுக்குக் குறிக்கப்பட்ட ஆக்கினை.

௧௮ தன் தகப்பன் சொல்லையுந் தன் தாயின் சொல்லையுங் கேளாமலும் அவர்களால் தண்டிக்கப்பட்டாலும் அவர்களுக்குக் கீழ்ப்படியாமலும் போகிற அடங்காத முண்டுத்தனக்காரனாகிய மகனொருவனுக்கிருந்தால்,

௧௯ அவன் தகப்பனும் அவன் தாயும் அவனைப் பிடித்து அவனையவன் பட்டணத்தின் மூப்பரண்டைக்கும் அவ்விடத்து வாசலுக்குங் கொண்டுபோய்,

௨௰ இந்த எங்கள் மகன் அடங்காத முரட்டாட்டக்காரன். எங்கள் சொல்லைக் கேளான். பெருந்தீனிக்காரனுங் குடியனுமாயிருக்கிறானென்று அவன் பட்டணத்தின் மூப்பரோடே சொல்லுவார்களாக.

௨௧ அப்பொழுது அவன் பட்டணத்து மனிதரெல்லாரும் அவன் சாக அவனைக் கல்லெறியக்கடவார்கள். இப்படியே இஸ்ரவேலெல்லாருங் கேட்டுப் பயப்படப் பொல்லாப்பை உன் நடுவிலிருந்து விலக்கக்கடவாய்.

தூக்கிப்போடப்பட்டவனுக்காக இட்ட கட்டளை.

௨௨ கொலைசெய்யப்பட ஒருவன்மேற் சாவுக்குப் பாத்திரமான பாவம் உண்டாயிருக்கக்கொள்ள அவனை மரத்திலே தூக்கிப்போட்டாயானால்,

௨௩ அவன் பிரேதம் மரத்திலே இராக்கவேண்டாம். அதையந்நாளிலேதானே அடக்கம்பண்ணவேண்டுவாயாக. ஏனெனில் தூக்கிப்போடப்பட்டவன் பராபரனாலே சபிக்கப்பட்டவன். ஆகையால் உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கிற உன்னுடைய சீமையைத் தீட்டுப்படுத்தாயாக.

## உஉ. அதிகாரம்.

தயவுக்கும் வேறே சில நியாயங்களுக்கும் அடுத்த கட்டளைகள்.

௧ உன் சகோதரனுடைய மாடாகிலும் ஆடாகிலும் வழிதப்பிப்போகிறதைக் கண்டாயானால் அவைகளைக் காணாதவன்போலிராமல் அவைகளை உன் சகோதரனண்டைக்குத் திருப்பவே திருப்பக்கடவாய்.

௨ உன் சகோதரன் உனக்குச் சமீபமாயிராமலும் உனக்கறிமுகமாயிராமலுமிருந்தால் நீ அதை உன் வீட்டிற்குட் சேர்த்துக்கொண்டு அதை உன் சகோதரன் தேடுமட்டும் உன்னிடத்திலே வைத்து அவனுக்குத் திரும்பக் கொடுக்கக்கடவாய்.

௩ அப்படியே அவன் கழுதைக்குஞ் செய்யக்கடவாய். அப்படியே அவன் வஸ்திரத்திற்குஞ் செய்யக்கடவாய். அப்படியே உன் சகோதரனுக்குக் காணாமற்போன சகலத்திற்கும் அதைக் கண்டுபிடித்தாயானாற் செய்யக்கடவாய். அதை நீ காணாதவன்போல விட்டுப்போகப்படாது.

௪ உன் சகோதரனுடைய கழுதையாகிலும் அவன் மாடாகிலும் வழியிலே விழுந்திருக்கிறதைக் கண்டாயானால் அவைகளைக் காணாதவன்போல விட்டுப்போகாமல் அவனோடே கூட அவைகளை யெடுக்கவே யெடுத்துவிடுவாயாக.

௫ ஆண்பிள்ளையின் உடைமானதைப் பெண்பிள்ளை தரித்திருக்கவேண்டாம். பெண்பிள்ளையின் வஸ்திரத்தை ஆண்பிள்ளையுடுத்திக்கொள்ளவும் வேண்டாம். ஏனெனில் அப்படிச் செய்கிறவர்களெல்லாரும் உன் பராபரனாகிய கர்த்தருக் கருவருப்பானவர்கள்.

௬ யாதொரு மரத்திலே அல்லது தரையிலே குஞ்சுகளும் அல்லது முட்டைகளுமிருக்கிற ஒரு குருவிக்கூடு உனக்கு வழியிலே தென்பட்டுத் தாய் குஞ்சுகளின்மேல் அல்லது முட்டைகளின்மேல் அணைந்துகொண்டிருந்தால் நீ குஞ்சுகளோடே தாயையும் பிடிக்காமல்,

௭ நீ நன்றாயிருக்கவும் உன் நாட்கள் நீடித்திருக்கவுந் தாயைப் போகவே போகவிட்டுக் குஞ்சுகளை யெடுத்துக்கொள்வாயாக.

௮ நீ புது வீட்டைக் கட்டினால் அப்பொழுது ஒருவன் உன் மெத்தைவீட்டிலிருந்து விழுகிறதினாலே நீ இரத்தப்பழியை உன் வீட்டின்மேற் சுமப்பண்ணாதபடிக்கு அதற்குக் கிராதியையுண்டுபண்ணக்கடவாய்.

கூ உன் திராட்சத்தோட்டத்திலே வெவ்வேறே சாதிவிதையை விதையாயாக. மற்றப்படி நீ விதைத்த விதைகளின் பயிரையும் திராட்சத்தோட்டத்தின் பலனையும் தீட்டுப்படுத்துவாய்.

ய மாட்டையுங் கழுதையையுங் கூட்டிப் பிணைத்து உழாயாக.

யக ஆட்டுமயிரும் பஞ்சுநூலுங் கலந்த வஸ்திரத்தையுடுத்துக்கொள்ளாயாக.

யஉ நீ போட்டுக்கொள்ளுகிற உன் மேற்சட்டையின் நாலோரங்களில் உனக்குத் தொங்கல்களையுண்டுபண்ணுவாயாக.

விபசாரபாவத்திற்கடுத்த சில நியாயங்கள்.

யங ஒரு ஸ்திரீயை விவாகம் பண்ணின ஒருவன் அவளிடத்திற் பிரவேசித்த பிற்பாடு அவளைப் பகைத்து,

யச இந்தப் பெண்சாதியை விவாகம்பண்ணினேன். நான் அவளண்டை சேர்ந்தபொழுதோவெனில் அவளிடத்திற் கன்னிகைக்கற்பைக் கண்டுபிடித்ததில்லையென்று அவள்மேல் ஆவலாதியான விசேஷங்களைச் சாட்டி அவளுக்குத் துர்க்கீர்த்தியைப் பிறக்கப்பண்ணினால்,

யரு பெண்பிள்ளையின் தகப்பனும் அவள் தாயும் அவளைச் சேர்த்து அவளுடைய கன்னிக்கற்பின் ருசுவைப் பட்டணத்தின் மூப்பரண்டையிலே பட்டணத்து வாசலிற் கொண்டுவரக்கடவர்கள்.

யசு அங்கே பெண்பிள்ளையின் தகப்பன் என் மகளை இந்த மனிதனுக்குப் பெண்சாதியாகக் கொடுத்தேன். ஆனால் அவன் அவளைப் பகைத்து,

யஎ நான் உன் மகளிடத்திற் கன்னிமுத்திரையைக் கண்டுபிடித்ததில்லையென்று இதோ, ஆவலாதியான விசேஷங்களையவள் மேற்சாட்டுகிறான். ஆனால் என் மகளுடைய கன்னிமுத்திரையின் ருசுகம் இங்கேயிருக்கிறதென்று மூப்பரோடே சொன்னபிற்பாடு பட்டணத்தின் மூப்பருக்கு முன்பாக வஸ்திரத்தை விரித்துப்போடுவார்களாக.

யஅ அப்பொழுது அந்தப்பட்டணத்தின் மூப்பர் அந்த மனிதனைப் பிடித்து அவனைத் தண்டித்து,

யகூ அவன் இஸ்ரவேலில் ஒரு கன்னியாஸ்திரியை யவதூறு பண்ணினபடியினாலே யவன் கையில் நூறு வெள்ளிக்காசை அபராதமாக வாங்கிப் பெண்பிள்ளையின் தகப்பனுக்குக் கொடுக்கக்கடவர்கள். அவளோவெனில் அவனுக்குப் பெண்சாதியாயிருப்பாள். அவன் தன் நாட்களிலெல்லாம் அவளைத் தள்ளிவிடக்கூடாதிருக்கும்.

உய பெண்பிள்ளையினிடத்திற் கன்னிமுத்திரை கண்டுபிடிக்கப்படவில்லையென்று விசேஷம் மெய்ப்பட்டதேயானால்,

உக பெண்பிள்ளையையவள் தகப்பனுடைய வீட்டின் வாசலுக்கு முன்பாகக் கொண்டுபோய் அவள் இஸ்ரவேலில் மதிகெட்ட காரியத்தைச் செய்து தன் தகப்பன் வீட்டிலே வேசித்தனம் பண்ணினபடியினாலே யவள் பட்டணத்து மனிதர் அவளைச் சாகுமட்டுங் கல்லெறிவார்களாக. இப்படிப் பொல்லாப்பையுன் நடுவிலிராதபடிக்கு விலக்கக்கடவாய்.

உஉ புருஷனுக்கு வாழ்க்கைப்பட்ட பெண்சாதியோடே சயனிக்கிறபோதவன் கண்டுபிடிக்கப்பட்டால், பெண்சாதியோடே சயனித்த மனிதனும் பெண்சாதியுமிருவருஞ் சாவக்கடவர்கள். இப்படிப் பொல்லாப்பை இஸ்ரவேலைவிட்டு விலக்கக்கடவாய்.

உங கன்னியஸ்திரீயான ஒரு பெண் ஒருவனுக்கு நியமிக்கப்பட்டிருக்கக்கொள்ள ஒருவன் அவளை யூரிலே கண்டுபிடித்து அவளோடே சயனித்தால்,

உச அப்பொழுது அந்தப் பெண் ஊரிலிருந்துங் கூப்பிடாதே போனபடியினாலும் அந்த மனிதன் தனக்கடுத்தவன் பெண்சாதியைக் கற்பழித்தபடியினாலும் இருவரையும் அந்தப் பட்டணத்தின் வாசலுக்குக் கொண்டுபோய் அவர்கள் சாகுமட்டுக்கு அவர்களைக் கல்லெறியக்கடவீர்கள். இப்படிப் பொல்லாப்பையுன் நடுவிலிராதபடிக்கு விலக்கக்கடவாய்.

உரு நியமிக்கப்பட்ட பெண்ணையொருவன் வெளியிலே கண்டு அவளைப் பலவந்தமாய்ப் பிடித்து அவளோடே சயனித்தானேயானால் அவளோடே சயனித்த மனிதன் மாத்திரஞ் சாவக்கடவன்.

உசு ஆனாற் பெண்ணுக்கொன்றுஞ் செய்யாயாக. பெண்ணின்மேற் சாவுக்கானக் குற்றமில்லை ஏனெனில் அது ஒருவன் தனக்கடுத்தவன்மேலெழும்பி அவன் சீவனை வாங்கினதுபோலேயிருக்கின்றது.

உஎ ஏனெனில் வெளியிலே அவளைக் கண்டுபிடித்தான். நியமிக்கப்பட்ட பெண் அப்பொழுது கூப்பிட்டும் அவளைக் காப்பாற்றுவாரில்லை.

உஅ நியமிக்கப்படாத கன்னியாஸ்திரீயாகிய ஒரு பெண்ணையொருவன் கண்டு கைப்பிடித்து அவளோடே சயனித்து அவர்கள் கண்டுபிடிக்கப்பட்டால்,

உகூ அவளோடே சயனித்த மனிதன் பெண்ணின் தகப்பனுக்கு ஐம்பது வெள்ளிக்காசைக் கொடுக்கக்கடவன். அவன் அவளைக் கற்பழித்தபடியினாலே யவள் அவனுக்குப் பெண்சாதியுமாயிருப்பாளாக. அவன் தன் நாட்களிலெல்லாம் அவளைத் தள்ளிவிடக்கூடாதிருக்கும்.

கூய ஒருவருந் தன் தகப்பன் பெண்சாதியை விவாகம்பண்ணித் தன் தகப்பன் உடைமானத்தைத் திறக்கவேண்டாம்.

சனம்பராபரனுக்கும் பராபரன் சனத்திற்கும் பண்ணின உடம்படிக்கை.

௧௬ இந்தக் கட்டளைகளின்படியேயும் நியாயங்களின்படியேயுஞ் செய்ய இன்றுன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கற்பிக்கிறார். ஆகையால் அவைகளின்படியே உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்துமத்தோடுஞ் செய்யக்கவனமாயிருப்பாயாக.

௧௭ கர்த்தரே உனக்குப் பராபரனாயிருப்பாரென்றும் நான் அவர் வழிகளில் நடந்து அவர் கட்டளைகளையும் அவர் கற்பனைகளையும் அவர் நியாயங்களையுங் கைக்கொண்டு அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படிவேனென்று நீயின்றைக்கு வார்த்தை கொடுத்தாய்.

௧௮ கர்த்தர் உனக்குச் சொல்லியிருக்கிறபடி நீ தமக்குச் சொந்தச் சனமாயிருப்பாயென்றும் நீ தம் கற்பனைகளையெல்லாங் கைக்கொண்டால்,

௧௯ தாமுண்டுபண்ணின எல்லாச் சாதிகளிலேயும் உன்னை உன்னதமாகவும் புகழ்ச்சியாகவும் மகிமையாகவும் வைப்பேனென்று தாஞ்சொன்னபடி நீயுன் பராபரனாகிய கர்த்தருக்குப் பரிசுத்த சனமாயிருப்பாயென்றும் அவர் இன்றைக்கும் வார்த்தை கொடுத்தாரென்றான்.

## உ௭. அதிகாரம்.

பெரிய கல்லுகளை நாட்டி அவைகளில் நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை யெழுதக் கற்பித்தது.

பிறகு மோசே இஸ்ரவேலின் மூப்பர்களோடே கூடவிருந்து சனத்திற்குக் கற்பித்ததாவது: நான் இன்றுங்களுக்குக் கற்பிக்கிற கற்பனைகளையெல்லாங் கைக்கொள்ளுங்கள்.

௨ உன் கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்திற்கு நீங்கள் யோர்தானைக் கடந்த நாளிலே நீயுனக்குப் பெரிய கல்லுகளை நாட்டி அவைகளைச் சாந்து பூசி,

௩ உன் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடி உனக்குக் கொடுக்கிற பாலுந் தேனும் ஓடுகிற தேசத்திற்குட் பிரவேசிக்க நீ கடந்துபோனபின் இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளையெல்லாம் அவைகளில் எழுதக்கடவாய்.

௪ நான் இன்றுங்களுக்குக் கற்பிக்கிறபடி இந்தக் கல்லுகளை யோர்தானைக் கடந்தபொழுது ஏபால் பர்வதத்திலே நாட்டி அவைகளைச் சாந்து பூசி,

௫ இரும்புபடாத கல்லுகளாலே அங்கே உன் பராபரனாகிய கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டக்கடவாய்.

௬ நீயுன் பராபரனாகிய கர்த்தரின் பலிபீடத்தை முழுக்கல்லுகளாலே கட்டி அதின்மேல் உன் பராபரனாகிய கர்த்தருக்குச் சர்வாங்கதகனப் பலிகளைப் பலியிட்டு,

௭ சமாதானப் பலிகளையும் பலியிட்டு அங்கே உன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாகப் போசித்துச் சந்தோஷமாயிருந்து,

௮ அந்தக் கல்லுகளில் இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளையெல்லாந் திட்டமாயெழுதக்கடவாயென்றான்.

௯ பின்னையும் மோசே லேவியராகிய ஆசாரியர்களோடே கூடவிருந்து இஸ்ரவேலரெல்லாரோடும் பேசி, இஸ்ரவேலே! கவனித்துக் கேள். இந்நாளிலேயுன் பராபரனாகிய கர்த்தருக்குச் சனமானாய்.

௧௦ ஆகையால் நீயுன் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து நானின்றுனக்குக் கற்பிக்கிற அவருடைய கற்பனைகளின்படியும் அவருடைய கட்டளைகளின்படியுஞ் செய்வாயாகவென்றான்.

கீழ்ப்படியாதவர்களுக்குக் கூறப்படுஞ் சாபம்.

௧௧ அந்நாளிலே மோசே சனத்திற்குக் கற்பித்ததாவது:

௧௨ நீங்கள் யோர்தானைக் கடந்தபொழுது சனத்தையாசீர்வதிக்கக் கெரிசிம் பர்வதத்திலே நிற்பவர்கள் சிமெயோன் லேவி யூதா இசக்கார் யோசேப்பு பென்யமீனென்ற கோத்திரங்கள்.

௧௩ சாபத்தைக் கூற ஏபால் பர்வதத்திலே நிற்பவர்கள் ரூபன் காத் ஆசேர் செபுலோன் தாண் நப்தலி என்ற கோத்திரங்கள்.

௧௪ அப்பொழுது லேவியர் இஸ்ரவேல் மனிதரெல்லாரையும் பார்த்து உரத்தசத்தமிட்டுச் சொல்லுவதாவது:

௧௫ தொழிலாளிகளுடைய கையின் செய்கையால் வெட்டப்படுகிற அல்லது வார்ப்பிக்கப்படுகிற கர்த்தருக்கு அருவருப்பான யாதொரு சுரூபத்தையுண்டுபண்ணி ஒளிப்பிடத்திலே வைக்கிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் பிரதியுத்தாரமாக ஆமென்பதாக.

௧௬ தன் தகப்பனையாவது தன் தாயையாவது தாழ்த்துகிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௧௭ தனக்கடுத்தவனின் எல்லையை யொதுக்கிடுகிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௧௮ குருடனை வழிதப்பவிடுகிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௧௯ பரதேசி திக்கற்றவன் கைம்பெண்சாதி என்றவர்களின் நியாயத்தைப் புரட்டுகிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௰ தன் தகப்பனின் பெண்சாதியோடே சயனிக்கிறவன் தன் தகப்பனுடைய மறைவிடத்தைத் திறந்தபடியினாலே சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௧ யாதொரு மிருகத்தோடே புணர்ச்சிபண்ணுகிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௨ தன் தகப்பனுக்கும் அல்லது தாய்க்குங் குமாரத்தியாகிய தன் சகோதரியோடே சயனிக்கிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௩ தன் மாமியோடே சயனிக்கிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௪ ஒளிப்பிடத்திலே தனக்கடுத்தவனைக் கொலைசெய்கிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௫ குற்றமில்லாத ஆத்துமாவைக் கொலைப்படுத்தும்படிக்குப் பரிதானம் வாங்குகிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

௨௬ இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை அவைகளின்படி செய்யும்படிக்குக் கைக்கொள்ளாதவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெல்லாம் ஆமென்பதாக.

## ௨௮. அதிகாரம்.

கீழ்ப்படிகிறவர்கள் மேல்வரும் ஆசீர்வாதமுங் கீழ்ப்படியாதவர்கள் மேல்வருஞ் சாபமும்.

நான் இன்றுனக்குக் கற்பிக்கிற உன் பராபரனாகிய கர்த்தருடைய கற்பனைகளின்படியெல்லாஞ் செய்யக் கவனமாயிருக்கும்படிக்கு அவர் சத்தத்திற்குச் செவிகொடுக்கவே கொடுக்கிறதுண்டானால் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைப் பூமியின் சாதிகள் மேலெல்லாம் உன்னதமாக வைப்பார்.

௨ நீ உன் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குச் செவிகொடுக்கும்பொழுது இப்பொழுது சொல்லப்படும் ஆசீர்வாதங்களெல்லாம் உன்மேல் வந்து உனக்குப் பலிக்கும்.

௩ நீ பட்டணத்திலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய். நீ வெளியிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்.

௪ உன் கர்ப்பத்தின் கனியும் உன் நிலத்தின் கனியும் உன் மிருகஜீவன்களின் பலனும் உன் மாடுகளின் பலுகுதலும் உன் ஆடுகளின் மந்தைகளும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும்.

௫ உன் கூடையும் மாப்பிசைகிற உன் தொட்டியும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும்.

௬ நீ வருகையிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய். நீ புறப்பட்டுப்போகையிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்.

௭ உனக்கு விரோதமாய் எழும்பும் உன் சத்துருக்களைக் கர்த்தர் உனக்கு முன்பாக முறியடிக்கப்படுகிறவர்களாகக் கொடுப்பார். ஒருவழியிலே உனக்கெதிராகப் புறப்பட்டு வருவார்கள். ஏழுவழிகளில் உனக்கு முன்பாக ஓடிப்போவார்கள்.

௮ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்குந் தேசத்திலே உன்னை ஆசீர்வதித்து [illegible] உன் களஞ்சியங்களிலும் நீ கையிடுமெல்லா வேலையிலும் ஆசீர்வாதந் தங்கியிருக்கும்படிக் கட்டளையிடுவார்.

௯ நீ உன் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொண்டு அவர் வழிகளில் நடக்கும்பொழுது கர்த்தர் உனக்கு ஆணையிட்டபடியே உன்னைத் தமக்குப் பரிசுத்த சனமாக நிறுத்துவார்.

௰ அப்பொழுது கர்த்தருடைய நாமம் உனக்குத் தரிக்கப்பட்டதென்று பூமியின் சனங்களெல்லாங் கண்டு உனக்குப் பயப்படும்.

௰௧ உனக்குக் கொடுப்போமென்று கர்த்தர் உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திலே கர்த்தர் உன் கர்ப்பத்தின் கனியிலும் உன் நிலத்தின் மிருகஜீவன்களின் பலனிலும் உன் நிலத்தின் கனியிலும் உனக்கு நன்மையாகப் பரிபூரணங் கட்டளையிடுவார்.

௰௨ ஏற்றகாலத்தில் உன் தேசத்திற்கு மழையைக் கொடுக்கவும் உன் கையின் வேலையையெல்லாம் ஆசீர்வதிக்கவுங் கர்த்தர் உனக்குத் தமது நல்ல பொக்கிஷசாலையாகிய வானத்தைத் திறப்பார். அநேக சனங்களுக்குக் கடன் கொடுப்பாய். நீயோவென்றால் கடன்வாங்காதிருப்பாய்.

௰௩ நான் இன்றுனக்குக் கற்பிக்கிற வார்த்தைகளையெல்லாம் நீ வேறே தேவர்களைச் சேவிக்கப் பின்பற்றும்படிக்கு வலது இடதுபுறமாகத் திரும்புகிறதினாலே விட்டு விலகாமல்,

௰௪ நான் இன்றுனக்குக் கற்பிக்கிற உன் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொள்ளவும் அவைகளின்படி செய்யவும் அவைகளுக்குச் செவிகொடுத்து வந்தால் கர்த்தர் உன்னை வாலாக்காமல் தலையாக்குவார். நீ கீழாகாமல் மேற்கொண்டிருப்பாய்.

௰௫ நான் இன்றுனக்குக் கற்பிக்கிற உன் பராபரனாகிய கர்த்தருடைய எல்லாக் கற்பனைகளின்படியேயுங் கட்டளைகளின்படியேயுஞ் செய்யக் கவனமாயிருக்கிறதற்கு அவர் சத்தத்திற்குச் செவிகொடாமற்போனாயானால் இப்பொழுது சொல்லப்படுஞ் சாபங்களெல்லாம் உன்மேல் வந்து உனக்குப் பலிக்கும்.

௰௬ நீ பட்டணத்திலுஞ் சபிக்கப்பட்டிருப்பாய். நீ வெளியிலேயுஞ் சபிக்கப்பட்டிருப்பாய்.

னியமுந் திராட்சப்பழ ரசமுமுள்ள தேசத்திலிருக்கும் அவருடைய வானமும் பனியைப் பெய்யப்பண்ணும்.

௨௯ இஸ்ரவேலே உன்சகாயத்தின் கேடயமும் உன்முக்கியத்தின் பட்டயமுமாகிய கர்த்தரால் இரட்சிக்கப்பட்ட சனமே, நீ பாக்கியமான சனம். உன்னைப்போலிருக்கிறவர்கள் ஆர், உன்சத்துருக்கள் உனக்கிச்சகம்பேசியடங்குவார்கள். நீயோவெனில் அவர்கள் மேடுகளின்மேல் மிதிப்பாயென்றான்.

## ௩௪. அதிகாரம்.

### மோசேயின் மரணம்.

பிறபாடு மோசே மோவாபின்சமனான வெளிகளிலிருந்து எரிகோவுக்கெதிரான நேபோபர்வதத்திலிருக்கும் பிஸ்கா என்றகொடுமுடியின்மேலேறினான். அப்பொழுது கர்த்தர் அவனுக்குத் தாண் மட்டும்போகிற கிலேயாத்தேசமனைத்தையும்,

௨ நப்தலிதேசமனைத்தையும், எப்பிராயீமென்பவர்கள் தேசத்தையுங் கடைசிச்சமுத்திரமட்டும் போகிற யூதாதேசமனைத்தையும்,

௩ தெற்குப்புறத்தையும், பேரீச்சுகளின் பட்டணமென்கிற எரிகோவின் பள்ளத்தாக்கையும் சோவார்மட்டும்போகிற சமனான பூமியையுங் காண்பித்து,

௪ அவனுடனே நாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் உங்கள் வித்துக்குக் கொடுப்போமென்று ஆணையிட்ட தேசமிதுதான். உன்கண்களுக்கதைக் காண்பித்தோம். ஆனாலும் நீயவ்விடத்துக்குக் கடந்துபோவதில்லையென்றார்.

௫ அப்படியே மோவாப்தேசமான அவ்விடத்திலே கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே கர்த்தருடைய வார்த்தையின்படியே மரித்தான்.

௬ அவர் அவனை மோவாப்தேசத்திலே பெத்பேயோருக்கெதிரான பள்ளத்தாக்கிலே யடக்கம்பண்ணினார். இந்நாள்வரைக்கும் ஒருத்தனும் அவன்பிரேதக்குழியையறியான்.

௭ மோசே மரிக்கிறபொழுது நூற்றிருபது வயதாயிருந்தான். அவன்கண் இருளடையாமலும் அவன்பெலன் வாங்காமலுமிருந்தது.

௮ இஸ்ரவேல்புத்திரர் மோவாபின்சமனான வெளிகளில் மோசேக்காக முப்பதுநாள் அழுதுகொண்டிருந்தார்கள், மோசேக்காகப் புலம்புகிற அழுகையின்நாட்கள் முடிந்தது.

௯ ஆனால் மோசே தன்கைகளை நூனின்குமாரனாகிய யோசுவாவின்மேல் வைத்ததினாலே அவன் ஞானத்தின் ஆவியினாலே நிறையப்பட்டான். இஸ்ரவேல்புத்திரர் அவனுக்குக் கீழ்ப்படிந்து கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே செய்தார்கள்.

௧௦ கர்த்தர் முகமுகமாய் மோசே அறிந்ததையுங் கர்த்தர் அவனை எகிப்துதேசத்திலே பார்வோனுக்கும் அவனுடைய எல்லா ஊழியக்காரருக்கும், அவனுடைய தேசமனைத்திற்குஞ்செய்ய அனுப்பின சகல அடையாளங்களையும் அற்புதங்களையும்,

௧௧ அவன் இஸ்ரவேலெல்லாம் பார்க்கச்செய்த எல்லா வல்லமையான கிரியையையுஞ் சகல பெரிய பயங்கரத்தையும் பார்த்தால்,

௧௨ மோசேயைப்போலொத்த தீர்க்கதரிசி இஸ்ரவேலிலே அப்புறம் எழும்பினதில்லை.

மோசே யெழுதின ஐந்தாம் ஆகமம் முடிந்தது முற்றும்.

# யோசுவாவின் புஸ்தகம்.

## ௧. அதிகாரம்.

யோசுவாதன் உத்தியோகத்திற்குட்பட்டது.

கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே மரித்தபிறபாடு சம்பவித்ததேதென்றால் கர்த்தர் மோசேயின் வேலைக்காரனான நூனின் குமாரன் யோசுவாவோடே சொன்னதாவது,

௨ நம்முடைய ஊழியக்காரனாகிய மோசே மரித்தான். இப்போதும் நீயும் இந்த எல்லாச் சனமுமாய் எழும்பி, இந்த யோர்தானைக் கடந்து, இஸ்ரவேல் புத்திரருக்கு நாம் கொடுக்கும் தேசத்திற்குப் போங்கள்.

௩ உங்கள் காலடி மிதிக்கும் எவ்விடத்தையும் நாம் மோசேக்குச் சொன்னபடி உங்களுக்குக் கொடுத்தோம்.

௪ வனாந்திரமும் அந்த லீபனோனும் முதற்கொண்டு ஐப்பிருத்தே நதியான பெரிய நதிமட்டுமுள்ள எத்தியரின் தேசமனைத்தும் சூரியன் அஸ்தமிக்கிற திசையான பெரிய சமுத்திரமட்டு மிருக்கிறதும் உங்கள் எல்லையாயிருக்கும்.

௫ நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் ஒருவனும் உனக்கு முன்பாக நிற்பதில்லை. நாம் மோசேயோடிருந்ததுபோலே உன்னோடுமிருப்போம், நாமுன்னைத் தள்ளிவிடுவதில்லை உன்னைக் கைவிடுவதுமில்லை.

௬ பலத்துக்கொண்டு திடமனதாயிரு. ஏனெனில் இந்தச் சனத்திற்கு நாம் அவர்கள் பிதாக்களுக்குக் கொடுப்போமென்றாணையிட்ட தேசத்தை நீ பங்கிடுவாய்.

௭ நம்முடைய ஊழியக்காரனாகிய மோசே உனக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்தின்படியெல்லாஞ் செய்யக்கவனமாயிருக்கமாத்திரம் மிகவும் பலத்துக்கொண்டு திடமனதாயிரு. நீ போகிற இடத்திலெல்லாம் புத்திமானாய் நடந்துகொள்ளும்படிக்கு, அதை விட்டு வலது இடதுபுறத்திற்கு விலகாதிருப்பாயாக.

௮ இந்த நியாயப்பிரமாணத்தின் புஸ்தகம் உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக. அதிலெழுதியிருக்கிறதின்படியெல்லாம் நீ செய்யக்கவனமாயிருக்கும்படிக்கு இரவும்பகலும் அதை யோசித்துக்கொண்டிருப்பாயாக. ஏனெனில் அப்போது நீயுன் வழியை யனுகூலவாய்க்கப்பண்ணி அப்போது புத்திமானாய் நடந்துகொள்ளுவாய்.

௯ பலத்துக்கொண்டு திடமனதாயிருவென்று நாம் உனக்குக் கற்பித்தில்லையோ? திகையாமலுங் கலங்காமலுமிரு. ஏனெனில் நீ போகிற இடத்திலெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னோடிருக்கிறாரென்றார்.

௰ அப்போது யோசுவா சனத்தின் அதிகாரிகளுக்குக் கற்பித்துச் சொன்னதாவது,

௰௧ நீங்கள் பாளயத்தில் நடுப்புறம் நடந்துபோய்ச் சனத்திற்குக் கற்பிக்கவேண்டியதேதெனில், தவசத்தை யுங்களுக்காயத்தம்பண்ணுங்கள். ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குச் சுதந்தரிக்கக்கொடுக்கும் தேசத்தை நீங்கள் சுதந்தரிக்கப்போகும்படிக்கின்னமூன்றுநாளைக்குள்ளே இந்த யோர்தானைக் கடப்பீர்களென்றுசொல்லி,

௰௨ ரூபேனியருக்குங் காத்தியருக்கும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாருக்குஞ் சொன்னதாவது,

௰௩ கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே உங்களுக்குக் கற்பித்த வார்த்தையை நினைத்துக்கொள்ளுங்கள். உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களை யிளைப்பாறப்பண்ணி, உங்களுக்கிந்தத் தேசத்தைக் கொடுத்தார்.

௰௪ உங்கள் பெண்சாதிகளும் பிள்ளைகளும் மிருகஜீவன்களும் மோசே உங்களுக்கு யோர்தானுக்கிப்பாலே கொடுத்த தேசத்திலிருக்கட்டும். உங்களிலவா வெனிற் பராக்கிரம சாலிகளெல்லாம் உங்கள் சகோதரருக்கு முன்பாக அணியணியாய் நடந்துபோய்,

௰௫ கர்த்தர் உங்களைப்போலே உங்கள் சகோதரரையும் இளைப்பாறப்பண்ணி

அவர்களும் உங்கள் பராபரனாகிய கர்த்தர் தங்களுக்குக் கொடுக்குந் தேசத்தைச் சுதந்தரித்துக் கொள்ளுமட்டும் அவர்களுக்குச் சகாயம் பண்ணக்கடவீர்கள். பிற்பாடு நீங்கள் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே யுங்களுக்கு யோர்தானுக்கிப்பால் சூரியன் உதிக்குந் திசைக்கு நேராகக் கொடுத்த உங்கள் சுதந்தரமான தேசத்திற்குத் திரும்பி, அதைச் சுதந்தரித்துக் கொண்டிருப்பீர்களாகவென்றார்.

௧௬ அப்பொழுது அவர்கள் யோசுவாவுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது, நீர் எங்களுக்குக் கற்பித்ததையெல்லாஞ் செய்து, நீர் எங்களை யனுப்புமிடமெல்லாம் போவோம்.

௧௭ நாங்கள் மோசேக்குக் கீழ்ப்பட்டு நடந்தபடியெல்லாம் உமக்குங் கீழ்ப்பட்டு நடப்போம். உம்முடைய பராபரனாகிய கர்த்தர் மோசேயோடிருந்தது போல உம்மோடுமிருப்பாராக.

௧௮ நீர் எங்களுக்குக் கற்பிக்குஞ் சகல காரியத்திலும் உம்முடைய சொற்கேளாமல் உம்முடைய வாக்குக்கு முரட்டாட்டம் பண்ணுபவனெல்லாங் கொலை செய்யப்படக்கடவன். பலத்துக்கொண்டு திடமனதாயிரும் என்றார்கள்.

## ௨. அதிகாரம்.

எரிகோபட்டணத்தை வேவுபார்த்தவயனம்.

நூனின்குமாரனாகிய யோசுவா சித்திமிலிருந்து வேவாட்களாகிய இரண்டு மனுஷரை இரகசியமாய் அனுப்பி, நீங்கள் போய்த் தேசத்தையும் எரிகோவையும் பார்த்து வாருங்களென்றான். அவர்கள் போய் இராகாபென்னும் பேர்கொண்ட வேசியாயிருந்த ஓர் ஸ்திரீயின் வீட்டிற்குட் பிரவேசித்து, அங்கே தங்கினார்கள்.

௨ ஆனால் எரிகோவின் இராசாவுக்கு இதோ, இஸ்ரவேல் புத்திரரிற் சில மனுஷர் தேசத்தை வேவுபார்க்க இந்த இராத்திரிவேளையிலே இங்கே வந்தார்களென்று சொல்லப்பட்டது.

௩ அப்பொழுது எரிகோவின் இராசா இராகாபண்டைக்கு மனுஷரையனுப்பி, உன்னண்டைக்குவந்து உன் வீட்டிற்குட் பிரவேசித்த மனுஷரை வெளியே வரவிடு. ஏனெனில் தேசத்தையெல்லாம் வேவுபார்க்கவந்தார்களென்று சொல்லச்சொன்னான்.

௪ அந்த ஸ்திரீயோவெனில் அவ்விரண்டு மனுஷரைச் சேர்த்து அவர்களையொளித்துவைத்துச் சொன்னதாவது. மெய்தான். என்னண்டை மனுஷர் வந்திருந்தார்கள். ஆனால் அவர்கள் எவ்விடத்தாரென்றறியாதிருந்தேன்.

௫ வாசலைச்சாத்தும் இருட்டான வேளையிலேயென்றால் அந்தமனுஷர் புறப்பட்டுப்போனார்கள். அவர்கள் எங்கே போனார்களென்றறியேன். அவர்களைச் சீக்கிரமாய்ப் பின்றொடருங்கள். ஏனென்றால் நீங்கள் அவர்களைச் சேர்ந்து பிடிக்கலாமென்றாள்.

௬ அவளோவென்றால் இவர்களை வீட்டின் மேலேற்பண்ணி, வீட்டின் மேலே பரப்பப்பட்ட சணல்த்தழிகளால் மறைத்து வைத்தாள்.

௭ அந்த மனுஷர் யோர்தானுக்குப் போகிறவழியில் ஆற்றுத்துறைகள்மட்டும் இவர்களைப் பின்றொடர்ந்து போனார்கள். இவர்களைப் பின்றொடருகிறவர்கள் புறப்பட்ட பிறபாடு வாசற் பூட்டிப் போடப்பட்டது.

௮ ஆனால் இந்தமனுஷர் படுத்துக்கொள்ளாததற்கு முன்னே அவள் வீட்டின் மேலே இவர்களண்டைக்கேறிப்போய்,

௯ இவர்களோடே சொன்னதாவது, கர்த்தர் உங்களுக்குத் தேசத்தை யொப்புக்கொடுத்தாரென்றும் உங்கள் பயங்கரம் எங்கள்மேலிறங்கிற்றென்றும் உங்களுக்குமுன்பாகத் தேசத்தின் குடிகளெல்லாம் முனையறுப்போனார்களென்றும் அறிவேன்.

௧௦ ஏனெனில் நீங்கள் எசிப்திலிருந்து புறப்படுகையிற் கர்த்தர் உங்களுக்குமுன்பாகச் சமுத்திரத்தின் தண்ணீரை வறப்போகப்பண்ணினதையும் நீங்கள் சங்காரம்பண்ணின யோர்தானுக்கப்பாலிருந்த எமோரியரின் இரண்டு இராசாக்களாகிய சீகோனுக்கும் ஓகுக்குஞ் செய்ததையுங் கேட்டோம்.

௧௧ கேட்டபோது எங்கள் இருதயங் கரைந்துபோயிற்று. உங்களுக்குமுன்பாக ஒருவருக்குள்ளும் இனிப் புலேயில்லை. ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தரே உயரவானத்திலுங் கீழே பூமியிலும் பராபரனானவர்.

௧௨ இப்பொழுதும் நானுங்களுக்குத் தயவுசெய்தபடியினாலே நீங்களும் என் தகப்பன்வீட்டிற்குத் தயவுசெய்வோமென்று கர்த்தர்பேரிலே எனக்காணைசத்தியம் பண்ணி,

௰௩ நீங்கள் என் தகப்பனையும் என் தாயையும் என் சகோதரரையும் என் சகோதரிகளையும் அவர்களுக்கிருக்கிறதெல்லாவற்றையும் உயிரோடே வைத்து, எங்களைச் சாவுக்குத் தப்புவிப்பதற்கென்கு நிச்சயமான அடையாளத்தைக் கொடுங்களென்றாள்.

௰௪ அப்போது அந்த மனுஷர் அவளுடனே, நீங்களிந்த எங்கள் காரியத்தை வெளிப்படுத்தாதிருந்தால், அப்போது கர்த்தர் எங்களுக்குத் தேசத்தைக் கொடுக்கையில் உனக்குத் தயவையும் உண்மையையுஞ் செய்வோமென்பதற்கு எங்கள் சீவனை உங்களுக்காக ஈடுவைக்கிறோமென்றார்கள்.

௰௫ அப்போது அவர்களைக் கயிற்றினாலே பலகணிவழியாய் இறக்கிவிட்டாள். ஏனென்றால் அவள் வீடு அலங்கத்தின் மதிலிலிருந்தது. அலங்கத்திலே அவள் குடியிருந்தாள்.

௰௬ அவள் அவர்களுடனே, பின்தொடருகிறவர்கள் உங்களுக்கு நேரிடாதபடிக்கு நீங்கள் பருவதத்துக்குப் போய் அவர்கள் திரும்பிவருமட்டும் அங்கே மூன்றுநாள் ஒளித்திருந்து, பிற்பாடு உங்கள் வழியே போங்களென்றாள்.

௰௭ அப்போது அந்த மனுஷர் அவளோடே சொன்னதாவது, இதோ, நாங்கள் தேசத்திற்குட் பிரவேசிக்கையில் நீ இந்தச் சிவப்புக் கயிற்றை நீ யெங்களை இறக்கிவிட்ட பலகணியிலே கட்டி, உன் தகப்பனையும் உன் தாயையும் உன் சகோதரங்களையும் உன் தகப்பன் வீட்டார் அனைவரையும் உன்னண்டை வீட்டிலே சேர்த்துக் கொண்டிருக்கக்கடவாய்.

௰௮ இல்லாவிட்டால் நீ யெங்களைக் கையில் வாங்கிக்கொண்ட இந்த உன்னுடைய ஆணைக்கு நீங்கலாயிருப்போம்.

௰௯ எவனாகிலும் உன் வீட்டு வாசலகளிலிருந்து வெளியே புறப்பட்டால், அவனுடைய இரத்தப்பழி அவன் தலையின்மேலிருப்பதாக. நாங்களோ வெனில் குற்றமற்றவர்கள். உன்னோடே வீட்டிலிருக்கிறவன்மேலாகிலுங் கைபோடப்பட்டதேயாகில், அவனுடைய இரத்தப்பழி எங்கள் தலையின்மேலிருப்பதாக.

௨௰ நீயிந்த எங்கள் காரியத்தை வெளிப்படுத்தினாயானால் நீ யெங்களைக் கையில் வாங்கிக்கொண்ட உன்னுடைய ஆணைக்கு நீங்கலாயிருப்போமென்றார்கள்.

௨௧ அதற்கவள், உங்கள் வார்த்தைகளின்படியே ஆகக்கடவதென்று சொல்லி, அவர்களை யனுப்பிவிட்டாள். அவர்கள் போய்விட்டார்கள். பிற்பாடவள் அந்தச் சிவப்புக் கயிற்றைப் பலகணியிலே கட்டிப் போட்டாள்.

௨௨ அவர்கள் போய்ப் பருவதத்திலே சேர்ந்து பின்தொடர்ந்தவர்கள் திரும்பிவருமட்டும் மூன்றுநாள் அங்கே தரித்தார்கள். பின்தொடருகிறவர்கள் வழியிலெல்லாம் அவர்களைத் தேடியுங் காணாதே போனார்கள்.

௨௩ அந்த இரண்டு மனுஷர் திரும்பிப் பருவதத்திலிருந்திறங்கி ஆற்றைக் கடந்து, நூனின் குமாரனாகிய யோசுவாவண்டைக்கு வந்து, தங்களுக்குச் சம்பவித்த யாவையும் அவனுக்கு விவரித்து,

௨௪ கர்த்தர் தேசத்தையெல்லாம் எங்கள் கையிலே ஒப்புக்கொடுத்தார். தேசத்தின் குடிகளெல்லாம் எங்களுக்கு முன்பாக முனையற்றுப் போனார்களென்றவனோடே சொன்னார்கள்.

## ௩. அதிகாரம்.

இஸ்ரவேலர் காலநனையாமல் யோர்தானைக் கடந்த தெய்வ அதிசயம்.

யோசுவா அதிகாலமே எழுந்திருந்தபின்பு அவனும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரும் சித்தீமிலிருந்து பயணம்பண்ணி, யோர்தான்மட்டும் வந்து அதைக் கடவாததற்குமுன் அங்கே இராத்தங்கினார்கள்.

௨ மூன்றுநாட் சென்றபோது ஆதிக்கக்காரர் பாளயத்தில் நடுப்புற நடந்துபோய்,

௩ சனத்திற்குக் கற்பித்ததாவது, நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியையும் அதைச் சுமக்கிற லேவியராகிய ஆசாரியர்களையுங் காண்கையில் நீங்களும் உங்களிடத்தைவிட்டுப் பயணப்பட்டு அதைப் பின்செல்லுங்கள்.

௪ ஆனால் உங்களுக்கும் அதற்கும் இரண்டாயிர முழத்தூரமான இடம் விட்டிருக்கக்கடவது. நீங்கள் நடக்கப்போகிற வழியையறியும்படிக்கு அதினண்டைக் கிட்டாதிருப்பீர்களாக. ஏனென்றால் நீங்கள் முதலொருக்காலும் அந்தவழியாய்க் கடந்துபோனதில்லையென்றார்கள்.

௫ யோசுவா சனத்துடனே, உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொள்ளுங்கள். ஏனென்றால் நாளைக் கர்த்தர் உங்கள் நடுவிலே அற்புதங்களைச் செய்வாரென்றான்.

௬ ஆசாரியர்களோடேயோசுவா, நீங்கள உடமபடிக்கையினபெட்டியையெடுத்துககொணடு சனத்தின முனனேபுறப்பட்டுப்போங்களென்றான. அப்படியே உடமபடிக்கையின பெட்டியை யெடுத்துககொணடு, சனத்தின முனனேபோனாாகள.

௭ கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது, நாம மோசேயோடிருந்தது போல் உன்னோடிருக்கிறதை இஸரவேலெலலாம அறியும்படிக்கு இன்றுமுதல் அவர்களகண்களுக்குமுன்பாகப பெரியவனாக்கத்துவக்குவோம.

௮ உடமபடிக்கையின பெட்டியைச சுமக்கிற ஆசாரியர்களுக்கு, நீங்களயோர்தானுடைய தணணீரின ஓரமடடுமவந்திருக்கையில யோர்தானிலநிறகக்கடவீர்களென்று நீகற்பிப்பாயாகவென்றார்.

௯ யோசுவா இஸரவேல புத்திரருடனே, நீங்களிங்கேசேர்நது, உங்களபராபரனாகிய கர்த்தருடையவார்த்தைகளைக் கேளுங்களென்றுசொலலி,

௰ பிறகுசொன்னதாவது, சீவனுள்ள பராபரன உங்களநடுவே யிருக்கிறதையும, அவர்கானானியரையும ஏத்தியரையும ஏவியரையும பெரிசியரையும கிர்காசியரையும எமோரியரையும எபூசியரையும உங்களுக்குமுன்பாகத் துரத்தவே துரத்துவதையும நீங்களறியும அடையாளமாவது,

௰௧ இதோ, சர்வபூமிக்கும ஆணடவருடைய உடமபடிக்கையினபெட்டி உங்களுக்குமுனனேயோர்தானுக குட்போகினறது.

௰௨ இப்போதும இஸரவேலகோத்திரங்களிலேபனனிரணடுபேரை ஒவவொரு கோத்திரத்திற கொருவராகப பிரித்தெடுங்கள.

௰௩ சமபவிப்பதேதெனறால, சர்வபூமிக்கும ஆணடவராகிய கர்த்தரினபெட்டியைச்சுமக்கிற ஆசாரியர்களின உளளங்காலகள யோர்தானினதணணீரிலே தரிகொளளுகையில, மேலேயிருநதோடிவருகிற யோர்தானினதணணீர்களோடாமல ஒருத்திடலாகநிறகுமெனறான.

௰௪ சனமயோர்தானைககடக்கத்தங்கள கூடாரங்களிலிருநது புறப்பட்டார்கள. ஆசாரியர்கள உடமபடிக்கையினபெட்டியைச சனத்திற்குமுனனேசுமந்துபோய,

௰௫ யோர்தானமடடும வநதார்கள. யோர்தானேவெனில அறுப்புநாட்களிலெலலாந்தனகரைகளினமேலெங்குமபுரணடிருநதது. அப்போது சமபவித்ததேதெனறால பெட்டியைச்சுமக்கிற ஆசாரியர்களினகாலகள தணணீரின ஓரத்திலவைக்கப்படுகையில.

௰௬ மேலேயிருநதோடிவருகிற தணணீர்களநினறு, சாரேதானுககடுத்த ஆதாம ஊர் அத்தனைதூரமடடும ஒருத்திடலாகக்குவிநதது. உப்புக்கடலெனற சமபூமியின கடலுக்கோடிப்போகிற தணணீர்களோவெனறால பிரிநதோடிப்போயிறறு. அப்போதுசனம எரிகோவுக்கெதிரேகடநதது.

௰௭ கர்த்தருடைய உடமபடிக்கையின பெட்டியைச்சுமக்கிற ஆசாரியர்கள யோர்தானினநடுவிலே தணணீரிலலாத தரையிலுறுதியாயநினறார்கள. அப்படியேசகலசனமும யோர்தானைககடநதிருமடடும இஸரவேலெலலாந்தணணீரறறதரைவழியாயக் கடநதுபோனார்கள.

## ௪. அதிகாரம்.

காலநனையாமல யோர்தானைக கடநத அதிசயத்தை இஸரவேலநினைக்கிறதற்காக யோசுவாநாட்டின அடையாளங்கள.

சனமெலலாம யோர்தானைககடநதிருகையிற் கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது,

௨ நீங்கள சனத்திற் பனனிரணடுபேரை ஒவவொரு கோத்திரத்திற் கொருவராகவெடுத்து,

௩ இங்கேயோர்தானினநடுவிலே ஆசாரியர்களினகாலகள நிலையாயநிற்கிற இடத்திலே பனனிரணடு கலலுகளையெடுத்துககொணடு, அவைகளையுங்களோடேகூடக்கரைப்படுத்தி நீங்கள இராவைக்குத்தங்குநதானத்திலே அவைகளை வையுங்களென்றவர்களுக்குக்கற்பியுங்களென்றார்.

௪ அப்போது யோசுவா இஸரவேலபுத்திரரில ஒவவொருகோத்திரத்திற் கொருவராக ஆயத்தமாயவைத்திருநத பனனிரணடுபேரையழைத்து,

௫ அவர்களோடே சொன்னதாவது, நீங்களயோர்தானின நடுமையத்தில உங்களபராபரனாகிய கர்த்தரின பெட்டிக்குமுன்பாகப்போய, இஸரவேல புத்திரருடையகோத்திரங்களின இலக்கத்திற்குச்சரியாக உங்களில ஒவவொருவன ஒருககலலைத் தனதோளினமேல எடுத்துககொணடுபோங்கள. அது வுங்களுக குளளே

ஒரு அடையாளமாயிருக்கும்படிக்குத்தானே.

௬ இந்தக்கல்லுகள் உங்களுக்கு ஏதென்று நாளையுங்கள் பிள்ளைகள் உங்களைக் கேட்கும்போது,

௭ நீங்கள் அவர்களுடனே, யோர்தானின் தண்ணீர்கள் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டிக்கு முன்பாகப் பிரிந்துபோனதினாலே அவைகளிருக்கின்றது. அது யோர்தானைக் கடக்கையில் யோர்தானின் தண்ணீர்கள் பிரிந்துபோயிற்று, ஆகையால் இந்தக்கல்லுகள் இஸ்ரவேல் புத்திரருக்கு என்றைக்கும் நினைக்கும் அடையாளமென்பீர்களாகவென்றான்.

௮ யோசுவா கற்பித்தபடி இஸ்ரவேல் புத்திர் செய்து, கர்த்தர் யோசுவாவோடே சொன்னபடியே இஸ்ரவேல் புத்திருடைய கோத்திரங்களின் இலக்கத்திற்குச் சரியாகப் பன்னிரண்டு கல்லுகளை யோர்தானின் நடுவிலெடுத்து அவைகளைத் தங்களோடேகூட அக்கரைக்குக் கொண்டுபோய்த் தங்குமிடத்திலே வைத்தார்கள்.

௯ யோர்தானின் நடுவிலும் உடம்படிக்கையின் பெட்டியைச் சுமந்த ஆசாரியரின் கால்கள் நின்ற இடத்திலே யோசுவா பன்னிரண்டு கல்லுகளை நாட்டினான். அவைகள் இந்நாள்மட்டும் அங்கேயிருக்கும்.

௰ மோசே யோசுவாவுக்குக் கற்பித்திருந்ததெல்லாவற்றின்படி சனத்திற்குச் சொல்லக் கர்த்தர் யோசுவாவுக்குக் கட்டளையிட்டதெல்லாஞ் செய்தாகுமட்டும் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர் யோர்தானின் நடுவே நின்றார்கள். சனந்தீவிரித்துக் கடந்துபோயிற்று.

௰௧ சனமெல்லாங் கடந்து தீர்ந்தபின்பு கர்த்தருடைய பெட்டியுங் கடந்தது. ஆசாரியர் சனத்திற்கு முன்னாலே நடந்தார்கள்.

௰௨ ரூபன் புத்திரருங் காத்புத்திரரும் மனாசேயின் பாதிக் கோத்திரத்தாரும் மோசே தங்களோடே சொன்னபடி அணியணியாய் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகக் கடந்தார்கள்.

௰௩ ஏறக்குறைய நாற்பதினாயிரம்பேர் ஆயுதபாடானவர்களாய்க் கர்த்தருடைய முகத்திற்கு முன்பாக யுத்தம் பண்ணஎரிகோவின் சமனான வெளிகளுக்குக் கடந்துபோனார்கள்.

௰௪ அந்நாளிலே கர்த்தர் யோசுவாவை இஸ்ரவேல் அனைத்தின் சனங்களுக்கு முன்பாகப் பெரியவனாக்கினார். அவர்கள் மோசேக்குப் பயந்ததுபோலே அவனுக்கு அவனுயிரோடிருந்த நாளெல்லாம் பயந்திருந்தார்கள்.

௰௫ கர்த்தர் யோசுவாவுடனே,

௰௬ யோர்தானிலிருந்து கரையேறச் சாட்சியின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியருக்குக் கற்பியென்றுசொன்னபோது

௰௭ யோசுவா அவர்களுக்கு யோர்தானிலிருந்து கரையேறி வாருங்களென்று கற்பித்தான்.

௰௮ அப்போது சம்பவித்ததேதெனில் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர் யோர்தான் நடுவிலிருந்தேறி, அவர்கள் உள்ளங் கால்கள் கரையில் ஊன்றிக்கொள்ளுகையில், யோர்தானின் தண்ணீர்கள் தங்களிடத்திற்குத் திரும்பி முந்தியதுபோலே தங்கள் எல்லாக்கரைகளிலும் புரண்டது.

௰௯ இந்தப்பிரகாரமாகச் சனம் முதல் மாதம் பத்தாந் தேதியிலே யோர்தானிலிருந்து கரையேறி, எரிகோவுக்குக் கீழ்த்திசையான கில்காலிலே பாளயமிறங்கினார்கள்.

௨௰ அவர்கள் யோர்தானிலெடுத்துக்கொண்டுவந்த அந்தப்பன்னிரண்டு கல்லுகளை யோசுவா கில்காலிலே நாட்டி,

௨௰௧ இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னதாவது, இந்தக்கல்லுகளேதென்று நாளையுங்கள் பிள்ளைகள் தங்கள் பிதாக்களாகியவுங்களைக் கேட்கும்போது,

௨௰௨ நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கறிவிக்கவேண்டியதேதெனில், இஸ்ரவேல் கால்நனையாமல் இந்த யோர்தானைக் கடந்துவந்தது.

௨௰௩ என்னென்றாற் பூமியின் சனசதளங்களெல்லாங் கர்த்தருடைய கரத்தை அது பலத்ததென்று அறியும்படிக்கும், நீங்கள் சகல நாளும் உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பயப்படும்படிக்கும்,

௨௰௪ உங்கள் பராபரனாகிய கர்த்தர் நாணல் சமுத்திரத்தின் தண்ணீர்களை எங்களுக்கு முன்பாக நாங்கள் கடந்திருமட்டும் அறுப்போகப்பண்ணினதுபோலே உங்கள் பராபரனாகிய கர்த்தர் யோர்தானின் தண்ணீர்களுக்குஞ்செய்து, அவைகளை யுங்களுக்கு முன்பாக நீங்கள் கடந்துவந்திருமட்டும் அறுப்போகப்பண்ணினாரென்றறிவிக்கக்கடவீர்களென்றான்.

## ௫. அதிகாரம்.

கில்காவிலே இஸ்ரவேல் புத்திரர் சுன்னத்துப்பண்ணப்பட்டதும் பஸ்காவை ஆசரித்துத்தேசத்தின் தானியத்திலே போசிக்கத்துவக்கினதும்.

சமபவித்ததேதென்றால் யோர்தானின் அணைக்கரை இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அவர்கள் கடந்துதீருமட்டும் அதைவற்றப்பண்ணினதைக் யோர்தானுக்கிக்கரையிலே மேற்கேகுடியிருந்த எமோரியரின் சகல இராசாக்களும் சமுத்திரத்தருகே குடியிருந்த கானானியரின் சகலஇராசாக்களுங்கேட்டதுமுதற்கொண்டு அவர்களிருதயங்கரைந்து, அவர்களுக்கு இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அவர்களுக்குமுனைபில்லாதேபோயிற்று.

௨ அக்காலத்திலே கர்த்தர் யோசுவாவோடே நீயுனக்குக்கருக்கானகத்திகளையுண்டாக்கித் திரும்ப இரண்டாம்விசை இஸ்ரவேல் புத்திரரைச் சுன்னத்துப்பண்ணென்றார்.

௩ அப்போது யோசுவா தனக்குக்கருக்கான கத்திகளையுண்டாக்கி இஸ்ரவேல் புத்திரரை ஆர்லோத்மேட்டிலே சுன்னத்துப்பண்ணினான்.

௪ யோசுவா இப்படிச் சுன்னத்துப்பண்ணினமுகாந்திரமென்னவெனில், எகிப்திலிருந்து புறப்பட்ட சகல ஆண்சாதியாராகிய யுத்தமனுஷரெல்லாம் எகிப்திலிருந்துபுறப்பட்டபிற்பாடுவனாந்திரத்தின் வழியிலேசென்றுபோனார்கள்.

௫ எகிப்திலிருந்து புறப்பட்ட எல்லாச்சனமுமோ சுன்னத்துப்பண்ணப்பட்டிருந்தது. ஆனால் அவர்கள் எகிப்திலிருந்துபுறப்பட்டபிற்பாடுவனாந்திரத்தின்வழியிலே பிறந்த சகல சனமுமோவென்றால் சுன்னத்துப்பண்ணப்படாதிருந்தது.

௬ ஏனெனில் கர்த்தருடைய சத்தத்திற்குக்கீழ்ப்படியாதேபோன எகிப்திலிருந்து புறப்பட்ட யுத்தமனுஷரான சாதியெல்லாம் மாளுமட்டும் இஸ்ரவேல்புத்திரர் நாற்பதுவருஷமவனாந்தரத்திலேநடந்து திரிந்தார்கள். அதேதென்றால் எங்களுக்குக்கொடுக்கக்கர்த்தர்வர்கள் பிதாக்களுக்காணையிட்ட பாலுந்தேனுமோடிய தேசத்தையவர்கள்காணப்படமாட்டார்களென்று கர்த்தர் அவர்களுக்காணையிட்டிருந்தார்.

௭ அவர்கள் ஸ்தலத்திலே அவர்கள் பிள்ளைகளையெழும்பப்பண்ணினார். இவர்களையே யோசுவா சுன்னத்துப்பண்ணினான். ஏனெனில் சுன்னத்தில்லாதிருந்தார்கள். வழியிலே யவர்களைச் சுன்னத்துப்பண்ணாதே போனார்கள்.

௮ அச்சாதியெல்லாம் சுன்னத்துப்பண்ணப்பட்டுத்தீருமட்டும் அவர்கள் சுகமாகுமட்டும் தங்களிடத்திற் பாளயத்திலே தரித்திருந்தார்கள்.

௯ கர்த்தர் யோசுவாவுடனே, இன்று எகிப்தினுடைய நிந்தையையுங்கள்மேலிராதபடிக்குப்புரட்டிப்போட்டோமென்றார். அதைத்தொட்டு அந்த ஸ்தலம் இந்நாளவரைக்குங் கில்காலென்னப்படுகின்றது.

௧௦ இஸ்ரவேல்புத்திரர்கில்காலிற்பாளயமிறங்கிக்கொண்டிருந்து, பதினாலாந்தேதி அந்திநேரத்திலே எரிகோவின சமனான வெளிகளிலே பஸ்காவையாசரித்தார்கள்.

௧௧ பஸ்காவின் இரண்டாம் நாளாகிய அன்றையத்தினம் அவர்களந்தேசத்தினுடைய தானியத்தின் புளிப்பில்லா அப்பங்களையுஞ்சுட்டகதிர்களையும்போசித்தார்கள்.

௧௨ அவர்களந்தேசத்தின் தானியத்திலே போசிக்கிறமறுநாளிலே மன்னாவும் நின்றுபோயிற்று. அக்முதலிஸ்ரவேல்புத்திரருக்குமன்னாவில்லாமற்போய் அவர்கள் கானானேதேசத்துப்பலனிலே அந்தவருஷத்திலேதானே போசித்தார்கள்.

### யோசுவாவுக்குண்டான தேவதரிசனை.

௧௩ சமபவித்ததேதென்றால் யோசுவா எரிகோவின் வெளியிலிருந்து, தன்கண்களையேறெடுத்துப் பார்க்கும்போது, இதோ, ஒருவர் அவனுக்கெதிரே நின்றார். உருவின அவருடையபட்டயம அவர்கையிலுமிருந்தது. யோசுவா அவரண்டைக்குப்போய் அவருடனே, நீ எங்களுக்கடுத்தவனோ எங்களசத்துருக்களுக்கடுத்தவனோவென்றான்.

௧௪ அதற்கவர், அல்ல. நாம்கர்த்தருடையசேனையின் அதிபதி. இப்போதுவந்தேனென்றார். அப்போது யோசுவாமுகங்குப்புறத்தரையிலே விழுந்து பணிந்துகொண்டு, அவருடனே, என்னுடையவர் தமதடியானுக்குச் சொல்லுகிறதென்னவென்றான்.

௧௫ அப்போது கர்த்தருடையசேனையின் அதிபதி யோசுவாவோடே, உன்காலகளிலிருக்கிற உன்பாதரட்சைகளைக் கழற்றிப்போடு. ஏனெனில் நீநிற்கிறஇடம் பரிசுத்தமானதென்றார். அப்படியே யோசுவாசெய்தான்.

## ௬. அதிகாரம்.

எரிகோப்பட்டணம் அலங்கமவிழுந்திரு லேபிடிக்கப் பட்டது.

எரிகோவோவென்றில் இஸ்ரவேல்புத்திரருக்குமுன்பாக அடைக்கப் பட்டது. ஒருவரும் வெளியே வராதபடிக்கும் உள்ளே போகாதபடிக்கும் அது அடைக்கப்பட்டிருந்தது.

௨ கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது, இதோ, எரிகோவையும் அதின் இராசாவையும் இராணுவமனுஷரையும் உன்கையிலே ஒப்புக்கொடுத்தோம்.

௩ யுத்தமனுஷராகிய நீங்களெல்லாரும் பட்டணத்தைச்சுற்றிலும் ஒருசுற்றுவந்து இப்படி ஆறுநாட்செய்யக்கடவீர்கள்.

௪ ஏழு ஆசாரியர்பெட்டிக்குமுன்பாக க்கொம்பான ஏழு எக்காளங்களைப்பிடித்துக்கொண்டுபோவார்களாக. ஏழாம்நாளிலேபட்டணத்தை யேழுவிசைச்சுற்றிவரக்கடவர்கள். ஆசாரியரோ எக்காளங்களையூதுவார்களாக.

௫ அவர்கள் கொம்புத் தொனியை நெடுந்தொனியாகக்கொள்ளவும், நீங்கள் எக்காளசத்தத்தைக்கேட்கக்கொள்ளவும், சனமெல்லாமகா ஆர்ப்பரிப்பாக ஆர்ப்பரிக்கக்கடவது. அப்போதுபட்டணத்தின்அலங்கம் இடிந்துவிழும். அப்போதுசனம்அவரவர்தங்களுக்குநேர்வழியாக ஏறக்கடவார்களென்றார்.

௬ அப்போது நூனின் குமாரனாகிய யோசுவா ஆசாரியரையழைத்து, அவர்களுடனே, உடன்படிக்கைப் பின்பெட்டியையெடுத்துப்போங்கள். தொனிக்கும் ஏழு எக்காளங்களையும் ஏழு ஆசாரியர்கர்த்தருடையபெட்டிக்கு முன்பாகப்பிடித்துக்கொண்டு போகக்கடவார்களென்று சொல்லி,

௭ சனத்துடனே, பட்டணத்தைச் சுற்றிநடந்துபோங்கள். ஆயுதமணிந்தவர் கர்த்தரின்பெட்டிக்கு முன்நடக்கக்கடவார்களென்றான்.

௮ யோசுவாசனத்தோடே சொன்னபடிசெய்யப்பட்டது. தொனிக்கும் ஏழு எக்காளங்களைப்பிடிக்கிற ஏழு ஆசாரியர் கர்த்தருக்குமுன்பாகநடந்து எக்காளங்களையூதினார்கள். கர்த்தருடைய உடன்படிக்கைப்பின்பெட்டிஅவர்களைப்பின்சென்றது.

௯ ஆயுதமணிந்தவர்கள் எக்காளங்களையூதுகிற ஆசாரியருக்குமுன் நடந்தார்கள். பின்தண்டோவென்றில் எக்காளங்களையூதப்பட்டுக்கொள்ள, போகிற பெட்டியைப்பின்சென்றது

௰ யோசுவாசனத்துக்கு, நான்சொல்லுமந்நாள்மட்டும்நீங்கள் ஆர்ப்பரியாமலும் உங்களசத்தத்தைக் கேட்கப்பண்ணாமலுமிருப்பீர்களாக. உங்களவாயிலிருந்து ஒருபேச்சுப்புறப்படவும்வேண்டாம். ஆர்ப்பரியுங்களென்றுங்களோடே நான்சொல்லுமந்நாளிலேயென்றால் ஆர்ப்பரிப்பீர்களாகவென்றுகற்பித்தான்.

௰௧ அப்படியேகர்த்தரின்பெட்டியை பட்டணத்தைச்சுற்றிலும் ஒருசுற்றுவரப்பண்ணினான். திரும்பப்பாளயத்திலே வந்துபாளயத்திலிராத்தங்கினார்கள்.

௰௨ யோசுவா அதிகாலமேஎழுந்திருந்தான். ஆசாரியர்கர்த்தரின்பெட்டியை சுமந்துபோனார்கள்.

௰௩ தொனிக்கும் ஏழு எக்காளங்களை பிடிக்கிற ஏழு ஆசாரியர்கர்த்தரின்பெட்டிக்குமுன்பாகநடந்துவந்து எக்காளங்களையூதினார்கள். ஆயுதமணிந்தவர்கள் அவர்களுக்குமுன்னாலே நடந்தார்கள் பின்தண்டோவென்றில் எக்காளங்களை ஊதப்பட்டுக்கொள்ள, போகிறகர்த்தரின்பெட்டியைப்பின்சென்றது.

௰௪ அப்படியே இரண்டாம் நாளிலும் பட்டணத்தை யொருசுற்றுச்சுற்றிவந்து, பாளயத்திற்குத்திரும்பினார்கள். அந்தப்படியாய் ஆறுநாட்செய்தார்கள்.

௰௫ ஏழாம்நாளிலேயென்றால் அதிகாலமேகிழக்குவெளுக்கும்போது எழுந்திருந்துபட்டணத்தையந்தப் பிரகாரமாக ஏழுவிசைச்சுற்றிவந்தார்கள். அன்றையத்தினத்திலே மாத்திரம் பட்டணத்தை ஏழுவிசைச்சுற்றிவந்தார்கள்.

௰௬ ஏழாம்விசைச்சமபவித்தநேரமென்றால் ஆசாரியர் எக்காளங்களையூதுகையில்யோசுவாசனத்தோடே சொன்னதாவது, ஆர்ப்பரியுங்கள் ஏனெனிற்கர்த்தருங்களுக்குப்பட்டணத்தை யொப்புக்கொடுத்தார்.

௰௭ ஆனால் இந்தப்பட்டணமும் அதிலுள்ளயாவுங்கர்த்தருக்குச்சாபத்திடாயிருப்பது. இராகாப்பென்னும்வேசியும் அவளோடே வீட்டுக்குள்ளிருக்கிற அனைவரும் மாத்திரம் உயிரோடிருக்கக்கடவார்கள். ஏனெனில் நாமனுப்பின ஆட்களைமறைத்தாள்.

௰௮ சாபத்திடானதில் ஏதாகிலுமெடுத்துக்கொள்ளுகிறதினாலே நீங்கள் சாபத்திடாகாதபடிக்குமிஸ்ரவேல்பாளயத்தை

சசாபததிடாககி அதைக கலஙகபபணணாதபடிககும. நீஙகள சாபததிடானததிறகுமாததிரம எசசரிககையாயிருஙகள.

௰௯ சகல வெளளியும பொனனுமவெணகலமும இருமபுமான தட்டுமுட்டுகர்த்தருககுபபரிசுத்தம, கர்த்தரினபொககிஷததிற்குசசேருமெனறுன.

௨௰ எககாளஙகளையூதுகையிற சனம ஆர்பபரித்தது. எககாள்சசத்தத்தைசசனஙகேட்டுமகா ஆர்ப்பரிப்பாக ஆர்ப்பரிககையில அலஙகம இடிநது விழுநதது. அப்போதுசனம அவர்வர்தஙகளுககுநேர்வழியாகபபட்டணததிலேறிப பட்டணத்தைபபிடிததது,

௨௧ பட்டணததிலிருநத புருஷரையுமஸதிரீகளையும வாலிபரையுங கிழவரையும ஆடுமாடுகளையுஙகழுதைகளையுஞ சகலத்தையும பட்டையககருககினுலெசஙகாரமபணணினுர்கள.

௨௨ அநதேசத்தை வேவுபார்த்த இரணடுமனுஷருககு யோசுவா நீஙகள அநதவேசி ஸதிரியின வீட்டிலேபோய, அநத ஸதிரியையும அவளுககுணடான யாவையும நீஙகள அவளுககாணையிட்டபடி அஙகேயிருநதுவெளியே அழைததுவாருஙகளெனறுன.

௨௩ அப்போதுவேவாட்களான வாலிபர் உள்ளேபோய, இராகாபபையுமஅவளதகபபனையும அவளதாயையுஞசகோதரஙகளையும அவளுககுளளயாவையும அவளவம்சததார்னைவரையுமவெளியே அழைததுககொணடுவநது, இஸரவேலபாளயததிறகுபபுறமபே அவர்களை யிருககபபணணினுர்கள.

௨௪ பட்டணததையும அதிலுளளயாவையும அககினியாற்சுட்டெரிததார்கள. வெளளியையும பொனனையும வெணகலமும இருமபுமானமுட்டுகளையு மாததிரங கர்த்தரின வீட்டுப பொககிஷததிற்குககொடுததார்கள.

௨௫ அப்படியே இராகாபபெனறவேசியையும அவளதகபபன வீட்டாரையும அவளுககிருநதயாவையுமயோசுவா உயிரோட்டவைததான. எரிகோவைவேவுபார்ககயோசுவா அனுபபின ஆட்களை அவளமறைததபடியினுலே இநநாளவரைககும இஸரவேலின நடுவிலே குடியிருககிறுள.

௨௬ அககாலததிலேயோசுவா, இநத எரிகோபட்டணத்தை யெடுபபிததுககட்டுகிறமனுஷன கர்த்தருககு முனபாகச சபிககபபட்டிருககககடவான. அவனதின அஸதிவாரத்தைபபோடுகிறபோது தனமூதத்குமாரனையும அதினவாசலகளை வைககிறபோது தன இளையகுமாரனையுஞ சாகக்கொடுபபானுக வெனறு சபித்தான.

௨௭ அப்படிக்கர்த்தர் யோசுவாவோடேகூட இருநதார். அவனகீர்த்திதேசமெஙகுமபரமபிறறு.

# எ. அதிகாரம்.

ஆகானசாபததீடானதிலே சிலதையெடுததுககொணடதினுல உணடானகலககம.

ஆனால இஸரவேலபுததிரர் சாபததீடானதிலே துரோகம பணணினுர்கள. அதெனனெனிலயூதாகோததிரததுசசேரா குடையகுமாரனுகியசப்தியின மகனகரமிககுபபிறநத ஆகான சாபததீடானதிலே சிலதை யெடுததுக கொணடான. ஆகையாற்கர்த்தருககு இஸரவேலபுததிரரினபேரிலே கோபமூணடது.

௨ யோசுவா எரிகோவிலிருநது மனுஷரைபபெததேலுககுககிழ்ககான பெததாவெனகிறவிடததிலிருககிற ஆயிபட்டணததிற்கனுபபி, அவர்களோடே, நீஙகளேறிப்போய, அநததேசத்தை வேவுபாருஙகளெனறுன. அநதமனுஷர் ஏறிப்போய ஆயியைவேவுபார்த்து,

௩ யோசுவாவணடைககுததிருமபிவநது, அவனுடனே, சனமெலலாம ஏறிபபோகததேவையிலலை. ஏறககுறைய இரணடாயிரம மூவாயிரமபேர் ஏறிப்போய ஆயியை முறியடிககலாம. எலலாசசனத்தையும அஙகே பிரயாசபபடுததாதே. ஏனெனில அவவிடததார் கொஞசநதரெனறுர்கள.

௪ அப்படியேசனததில ஏறககுறைய மூவாயிரமபேர் அவவிடததிற்கேறிப போனுர்கள ஆனால அவர்கள ஆயினமனுஷருககுமுனபாகமுறிநதார்கள.

௫ ஆயினமனுஷர் அவர்களில ஏறககுறையமுப்பததாறுபேரை வெட்டிப்போட்டார்கள ஏனெனிற் பட்டணவாசலின வெளிதுவககிசசேபாரிம மட்டுககும அவர்களைததுர்ததி, மலையிறஙகலிலே அவர்களைவெட்டினுர்கள. அப்போதுசனததினஇருதயஙகரைநது தணணீராயபபோயிறறு.

௬ அப்போதுயோசுவாதன வஸதிரஙகளைககிழிததுககொணடு, அவனும இஸரவேலினமூபபருஞசாயுஙகாலமட்டுகர்த்

த்தின்பெட்டிக்குமுன்பாக முகங்குப்புறத்தரையிலேவிழுந்து, தங்கள்தலைகளின்மேற்புழுதியைப்போட்டுக்கொண்டிருந்தார்கள்.

௭ யோசுவாசொன்னதாவது, ஆ, கர்த்தராகிய ஆண்டவரே! எங்களையழிக்கும்படிக்கெங்களை எமோரியர்கைகளிலொப்புக்கொடுப்பதற்காகத் தேவரீர் இந்தச்சனத்தையோர்தானைக் கடக்கப்பண்ணினதென்ன? நாங்கள் மனத்திருத்தியாக யோர்தானுக்கப்பாலே யிருந்துவிட்டாலத்தாவிலை.

௮ ஆ, ஆண்டவரே! இஸ்ரவேல்சனஞ் சத்துருக்களுக்கு முதுகைக்காட்டியிருக்கிற இப்போதென்னசொல்லுவேன்?

௯ கானானியரும் தேசத்துக்குடிகளனைவரும் இதைக்கேட்டு எங்களைவளைந்துகொண்டு, எங்கள்பேரைப் பூமியிலிராதபடிக்குவேரறுப்போகப்பண்ணுவார்களே. அப்போது உமதுமகத்துவமான நாமத்திற்கென்னசெய்வீரென்றான்.

௰ அப்போதுகர்த்தர்யோசுவாவுக்குச்சொன்னதாவது, எழுந்திரு. நீ இப்படிமுகங்குப்புறக்கிடக்கிறதென்ன?

௰௧ இஸ்ரவேல்பாவஞ்செய்து நாமஞ்களுக்குக்கற்பித்தநமது உடம்படிக்கையை அவர்கள்மீறினதுமன்றி சாபத்தீடானதிலெடுத்துக்கொண்டதுமன்றி களவுசெய்ததுமன்றி ஒளித்துத்தங்கள்பண்டம்பாடிக்குள்வைத்ததுமுண்டு.

௰௨ இஸ்ரவேல்புத்திரர் தங்கள்சத்துருக்களுக்குமுன்பாகநிற்கக்கூடாது. தங்கள்சத்துருக்களுக்கு முதுகைக்காட்டுவார்கள். ஏனெனில்சாபத்தீடானார்கள். நீங்கள் சாபத்தீடானதையுங்கள் நடுவிலிருந்து அறுப்போகப்பண்ணுவிட்டாலன்றி இனி உங்களோடிரோம்.

௰௩ எழுந்திரு. நீசனத்தைப்பரிசுத்தம்பண்ணிச்சொல்லவேண்டியதேதெனில் நாளைக்கென்று உங்களைப்பரிசுத்தம்பண்ணிக்கொள்ளுங்கள். ஏனென்றால் இஸ்ரவேலே! சாபத்தீடானது உன்நடுவேயிருக்கிறது. நீங்கள்சாபத்தீடானதை யுங்கள்நடுவிலிருந்து விலக்காதிருக்குமட்டும், நீயுன்சத்துருக்களுக்குமுன்பாக நிற்கக்கூடாதென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர்சொல்லுகிறார்.

௰௪ நாளையத்தினம் உங்கள்கோத்திரங்களின்படியேசேர்வார்கடவீர்கள். அப்போதுகர்த்தர்பிடிக்கிறகோத்திரம்வம்சம்வம்சமாகச்சேர்வுங் கர்த்தர்பிடிக்கும்வம்சம்வீடுவீடாகச்சேர்வுங், கர்த்தர்பிடிக்கும்வீட்டார்பேர்பேராகச்சேர்வுங்கடவதென்றுசொல்லு.

௰௫ அப்போதுசாபத்தீடானதையெடுத்தவனாய்ப்பிடிக்கப்படுபவன் கர்த்தரின் உடம்படிக்கையைமீறி இஸ்ரவேலிலேமதிகேடானகாரியத்தைச்செய்தபடியினாலே, அவனும் அவனுக்குள்ளயாவும் அக்கினியாற் சுட்டெரிக்கப் படக்கடவதென்றார்.

௰௬ யோசுவா அதிகாலமே எழுந்திருந்து இஸ்ரவேலைக் கோத்திரங்கோத்திரமாகச்சேர்ப்பண்ணினபோது யூதாவின் கோத்திரம்பிடிக்கப்பட்டது.

௰௭ அவன்யூதாவின்வம்சங்களைச்சேர்ப்பண்ணினபோது சேராகியரின்வம்சம் பிடிக்கப்பட்டது. அவன்சேராகியரின்வம்சத்தைப்பேர்பேராகச் சேர்ப்பண்ணினபோது சப்தி பிடிக்கப்பட்டான்.

௰௮ இவன்வீட்டாரை அவன்பேர்பேராகச்சேர்ப்பண்ணினபோது, யூதாகோத்திரத்துச்சேராவின்குமாரனாகியசப்திக்குப்பிறந்தகர்மியின்மகன் ஆகான்பிடிக்கப்பட்டான்.

௰௯ அப்போதுயோசுவா ஆகானுடனே, என்மகனே! நீஇப்போது இஸ்ரவேலின்பராபரனாகிய கர்த்தருக்கு மகிமையைச்செலுத்தி, அவருக்குமுன்பாக அறிக்கைபண்ணி என்னசெய்தாயென்றெனக்கறிவியேன். எனக்கதை யொளிக்காயாகவென்றான்.

௨௰ அப்போது ஆகான்யோசுவாவுக்குப்பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது, மெய்யாகவேநான் இஸ்ரவேலின்பராபரனாகியகர்த்தருக்கு விரோதமாகப்பாவஞ்செய்தேன். இன்னின்னபிரகாரமாகச்செய்தேன்.

௨௧ நான்கொள்ளையிலே நேர்த்தியான ஒருபாபிலோனிய சால்வையையும் இருநூறுவெள்ளிச்சேக்கலையும் ஐம்பதுசேக்கல்நிறையான ஒருபொன் நாக்கையுங்கண்டு அவைகளையிச்சித்து,எடுத்துக்கொண்டேன். இதோ, இவைகள் என்கூடாரத்தின்நடுத்தரையிலும், வெள்ளி அதின்கீழும்புதைத்திருக்கின்றதென்றான்.

௨௨ அப்போதுயோசுவா ஆட்களையனுப்பினான். அவர்கள்கூடாரத்திற்கோடினார்கள். இதோ, அவன் கூடாரத்தில் அதுவும் அதன்கீழ்வெள்ளியும்புதைத்திருந்தது.

௨௩ அவைகளைக் கூடாரத்தின் நடுவிலேயெடுத்து, யோசுவாவண்டைக்கும் எல்லா இஸ்ரவேல் புத்திரரண்டைக்கும்

கொணடுவநது, கர்த்தருககு முனபாகக கொடடினார்கள.

௨௪ அபபோது யோசுவாவும இஸ்ரவேல்லெலலாருஙகூடசசேரானபுசதிரனாகிய ஆகானையும அநதவெள்ளியையுஞ சால்வையையுமபொன்பாளத்தையும அவனகுமாரரையுஙகுமாரததிகளையும, அவனமாடுகளையுஙகழுதைகளையும ஆடுகளையும அவன கூடாரத்தையும அவனுககுளளயாவையுமபிடிதது, ஆகோர்பளளததாககிலே கொணடுபோனார்கள.

௨௫ அபபோதுயோசுவா, நீயெஙகளைககலஙகபபணணினபடியினாலேஇனறு கர்த்தர் உனனைககலஙகபபணணுவாரெனறான. அபபோது இஸ்ரவேலெலலாம அவனைககலலெறிநது அவைகளையககினியாற் சுடடெரிததுக கலலுகளினாலமூடி,

௨௬ அவனமேல இநநாளவரைககுமிருககிறபெரிய கற்குவியலைககுவிததார்கள. இபபடியே கர்த்தர் தமது கோபததினுககிரததைவிடடுததிருமபினார். ஆகையால அவவிடம இநநாள வரைககும ஆகோர்பளளததாககெனனபபடும.

## ௮. அதிகாரம்.

ஆயிப்பட்டணம்பிடிககபபடடது.

அபபோது கர்த்தர் யோசுவாவோடேசொனனதாவது, பயபபடாமலுங கலஙகாமலு மிருபபாயாக. நீயுததசனம அனைததையுங கூடடிககொணடு எழுநது ஆயினமேலேபோ. இதோ, ஆயின இராசாவையும அவன சனததையுமபடடணததையுஞ சீமையையும உனகையிலொபபுககொடுததோம.

௨ நீ எரிகோவுககும அதின இராசாவுககுஞசெயததுபோலே ஆயிககும அதினஇராசாவுககுஞசெயயககடவாய். அதினகொளளையையுமமிருகசீவனகளையுமோவெனறால உஙகளுககெனறு எடுததுக கொளளுவீர்களாக. படடணததிற்குபபுறகாலே உனககுபபதிவிடையைவையெனறார்.

௩ அபபோது ஆயினமேலே போக யோசுவாவும எலலாயுததசனமும எழுநதுபுறபபடடார்கள ஆனாலயோசுவா பராககிரமசாலிகளான முபபதினாயிரமபேரைத தெரிநதெடுதது, இராததிரியிலே அவர்களையனுபபி,

௪ அவர்களுககுக கறபிததததாவது, இதோ, நீஙகளபடடணததினபுறகாலே அதற்குபபதிவிடையாயிருபபவர்கள. நீஙகள படடணததிற்கு வெகு தூரமாயப போயிராமல, எலலாரும ஆயததபபடடிருஙகள.

௫ நானும எனனோடிருககிற சனமுமோவெனறாற் படடணததணடைகிடடிசசேர்நது, அவர்கள முநதினதுபோல எஙகளுககெதிராகப புறபபடடு வரும போது, அவர்களுககு முனனாக ஓடிப போவோம.

௬ அபபோது முநதினதுபோலநமககுமுனனாக முறிநது போகிறார்களெனறு சொலலி எஙகளைததுரத்தப் புறபபடுவார்கள. நாஙகளோவெனறால அவர்களைப படடணததைவிடடு இபபாலேவரபபணணுமடடும அவர்களுககுமுனனாக வோடிபபோவோம.

௭ அபபோது நீஙகளபதிவிலிருநதெழுமபிவநது, படடணததைபபிடிக்கக்கடவீர்கள ஏனெனில உஙகளபராபரனாகியகர்த்தர் அதை யுஙகளகைகளில ஒபபுககொடுபபார்.

௮ நீஙகள படடணததைப பிடிககும போது, அதைநெருபபுபபோடடுககொளுததககடவீர்கள கர்த்தருடையசொற்படிசெயவீர்களாக. இதோ, அதையுஙகளுககுககற்பிததோமெனறுசொலலி,

௯ அவர்களையனுபபினான. அவர்கள போயப் பெததேலுககும ஆயிககும நடுவே ஆயிககுமேற்காகப பதிவிருநதார்கள. யோசுவாவோவெனில அனறு இராததிரிசனததிறகுளதஙகி,

௰ அதிகாலமே எழுநதிருநது சனததை இலககமபார்தது, இஸ்ரவேலினமூபபரோடுஙகூடசசனததிற்கு முனனாலே நடநது, ஆயினமேலேபோனான.

௰௧ அவனோடிருநதயுததசனமெலலாம நடநது, படடணததிற்கெதிரேவநது சேர்நது ஆயிககுவடககேபாளயமிறஙகினாறு. அதற்கும ஆயிககும நடுபபுற ஒருபளளததாககிருநதது.

௰௨ பினனையும ஏறககுறைய ஐயாயிரமபேரைப பிரிததெடுதது, அவர்களைப பெததேலுககும ஆயிககும நடுபபுறப படடணததிற்குமேல்னடைப பதிவிடையாகவைததான.

௰௩ படடணததிற்குவடககேயிருககுஞசகலபாளயததினசனததையும அதற்குமேற்கேயதற்குபபதிவிருககிறவர்களையுந திடடமபணணினபிறபாடு யோசுவா அனறு இராததிரி பளளததாககுககுளளேபோனான.

௰௪ ஆயின இர்ராசா அதைககணட போது அவனுமபட்டணத்தின மனுஷரும அவனுடைய எலலாசசனமுந்தீவிரித்து அதிக விடியற்காலமான குறிககபபட்டவேளையில இஸ்ரவேலுககெதிரோயுத்தம பணணசசமனுனவெளிககு நேராக புறப்பட்டார்கள. ஆனாலதனககுப பதிவிடைபட்டணத்திற்குப புறகாலேயிருககிறதையறியாதிருந்தான.

௰௫ அவர்களுககுமுனனுகயோசுவாவும இஸ்ரவேலனைத்துமமுறிந்து வனாந்திரத்திற்குபபோகிற வழியிலோடிப்போனார்கள.

௰௬ அப்போது பட்டணத்திற்குளளிருககிறசனமெலலாம அவர்களைத்துரத்தபபினறொடர்வேணடு மெனறுகூபபிட்டு, யோசுவாவைத்துரத்திப பட்டணத்தைவிட்டுப்புறப்பட்டார்கள.

௰௭ ஆயியிலும பெதேலிலும இஸ்ரவேலைப்பினறொடராதமனுஷனிருந்ததிலலை. பட்டணத்தைத திறந்து வைத்துப போய இஸ்ரவேலைத துரத்திககொணடிருந்தார்கள.

௰௮ அப்போதுகர்த்தர் யோசுவாவோடே, உனகையிலிருககிற ஈட்டியை ஆயிககுநேராகநீட்டு. ஏனெனில அதையுனகையிலொப்புக கொடுப்பேனெனறார். அப்படியேயோசுவா தனகையிலிருககிற ஈட்டியைப்பட்டணத்திற்குநேராக நீட்டினான.

௰௯ அப்போதுபதிவிடைதிவர்மாயத்தனதலத்திலிருந்தெழும்பி அவனதனகையை நீட்டினபோது பட்டணத்திற்கோடிவந்து, அதைபபிடித்துத் தீவிரத்தோடே அதைநெருப்புபபோட்டுககொளுத்தினார்கள.

௨௰ ஆயியினமனுஷர் பினனிட்டுப்பார்ககிறபோது இதோ, பட்டணத்தினபுகைககாடு ஆகாயத்திற்கெழும்புகிறதைககணடார்கள. அப்போது இப்படியாவது அப்படியாவது ஓடிபபோகிறதற்கு அவர்களுககிடமறறுப்போயிற்று ஏனெனிலவனாந்திரத்திற்கோடிப்போனசனங்களைத துரத்துகிறவர்களமுகமாயத்திருமபிககொணடது.

௨௧ அதேனெனிற்பதிவிடைபட்டணத்தைப பிடித்ததையும பட்டணத்தினபுகைககாடெழும புகிறதையுமயோசுவாவும இஸ்ரவேலனைத்தும பார்ககிறபோது, திருமபிககொணடு ஆயியினமனுஷரைமுறியடித்தார்கள.

௨௨ அவர்களுமபட்டணத்திலிருந்து இவர்களுககெதிர்ப்பட்டதினால இவர்களிலஇந்தணடையும அந்தணடையுமிருககிற இஸ்ரவேலினநடுவே யகப்பட்டார்கள. ஆகையால அவர்களிலொருவருந்தபபிமீர்ந்திராதபடிக்கு அவர்களை வெட்டிப்போட்டு,

௨௩ ஆயியின இர்ராசாவையுயிரோடே பிடித்து, யோசுவாவணடைககுககொணடுவந்தார்கள.

௨௪ இஸ்ரவேலவனாந்திர வெளியிலேதங்களைத்துரத்தின ஆயியின குடிகளையெலலாமவெட்டித்தீர்ந்தபோதும இவர்கள் எலலாருஞசரியாககமட்டுமபட்டையக்கருககினாலேவிழுந்துதீர்ந்தபோதும இஸ்ரவேலெல்லாம ஆயிககுத்திருமபி அதைப்பட்டையக்கருககினால அடித்தார்கள.

௨௫ அந்நாளிலேவிழுந்த ஆண்சாதியும பெண்சாதியுமான ஆயியினமனுஷரெலலாம பனனீராயிரமபேர்.

௨௬ ஆயியின குடிகளையெலலாஞசஙகரித்துத்தீருமட்டுமயோசுவா ஈட்டியை நீட்டிககொணடிருககிற தனகையைவாஙகினதிலலை

௨௭ மிருகசீவனையும அந்தப்பட்டணத்தினகொளளையையும்மாத்திரம இஸ்ரவேலர்கர்த்தர் யோசுவாவுககுக்கட்டளையிட்டவார்த்தையினபடியெடுத்துககொணடார்கள.

௨௮ யோசுவா ஆயியைசசுட்டெரித்து, அதையிந்நாளவரைககுமிருககிறபடி எனறைககும்பாழாயககிடககுமமணமேடாககி,

௨௯ ஆயியின இர்ராசாவை யொருமரத்திலேதூககிப்போடுவித்துச சாயஙகாலமட்டும அதிலேதொஙகவிட்டானசூரியன அஸ்தமிககிறபோதோவெனில யோசுவா அவன உடலை மரத்தைவிட்டிறககச்சொனனான. அதைப்பட்டணத்தினஒலிமுகவாசலிற்போட்டு இந்நாளவரைககுமிருககிற பெரியகற்குவியலை அதினமேலேகுவித்தார்கள.

## ஆசீர்வாதமுஞசாபமுங கூறப்பட்டது.

௩௰ அப்போதுயோசுவா கர்த்தரின ஊழியககாரனானமோசே இஸ்ரவேலபுத்திரருககுககற்பித்தபடியேயுமமோசேயினநியாயபபிர்மாண ஆகமத்திலெழுதியிருககிறபடியேயும, ஏபாலபர்வதத்தில இஸ்ரவேலினபராபரனாகிய கர்த்தருககு இருமபுபடாதமுழுககலலுககளாலொரு பலிபீடத்தைககட்டினான.

௩௧ அதின்மேலே கர்த்தருக்குச் சர்வாங்கத் தகனங்களையுஞ் சமாதானப்பலிகளையும் இட்டார்கள்.

௩௨ அங்கேயவன் மோசே இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக எழுதியிருந்த நியாயப்பிரமாணத்தைக் கல்லுகளிலே பேர்த்தெழுதினான்.

௩௩ முழு இஸ்ரவேலும் அதின் மூப்பருந் தலைவரும் அதின் நியாயாதிபதிகளும் பரதேசிகளும் இஸ்ரவேலிற் பிறந்தவர்களுங் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற லேவியரான ஆசாரியருக்கெதிரே பெட்டிக்கிந்தண்டையும் அந்தண்டையும், பாதிக்கெரீசிம் பர்வதப் புறமாகவும் பாதி ஏபால் பர்வதப்புறமாகவும் இஸ்ரவேல் சனத்தை ஆசீர்வதிக்கும்படிக்குக் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே முதற் கற்பித்தபடி நின்றார்கள்.

௩௪ அதற்குப்பிறகு ஆசீர்வாதமுஞ் சாபமுமென்னும் நியாயப்பிரமாணத்தின் சகலவார்த்தைகளையும் நியாயப்பிரமாண ஆகமத்திலெழுதியிருக்கிறபடியெல்லாங் கூறினான்.

௩௫ மோசே கற்பித்ததிலெல்லாம் யோசுவா இஸ்ரவேலின் முழுச்சபைக்கும் ஸ்திரிகளுக்கும் பிள்ளைகளுக்கும் அவர்களுக்குள் நடமாடின பரதேசிகளுக்கும் முன்பாகக் கூறாதே போனவார்த்தையில்லை.

## ௯. அதிகாரம்.

தந்திரம்பண்ணின கிபெயோனியருக்கு உடம்படிக்கைகட்டளைபண்ணப்பட்டது.

யோர்தானுக்கிப்பாலே மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் லீபனோனுக்கெதிரான பெரிய சமுத்திரத்தினுடைய சகல கரையோரத்திலுமிருந்த சகல இராசாக்களும் ஏத்தியரும் எமோரியருங் கானானியரும் பெரிசியரும் ஏவியரும் எபூசியரும் அதைக்கேட்டபோது சம்பவித்ததென்னவென்றால்,

௨ அவர்களேகமாய் யோசுவாவோடும் இஸ்ரவேலோடும் யுத்தம்பண்ண ஒருமனப்பட்டுக் கூடினார்கள்.

௩ கிபெயோனின் குடிகளோவென்னில் யோசுவா எரிகோவுக்கும் ஆயிக்குஞ் செய்ததைக் கேட்டபோது,

௪ ஒரு தந்திரமான யோசனையைப்பண்ணித் தானாபதிகளைப்போலக் காண்பித்துப் பழைய இரட்டுப்பைகளையும் பீறிப்போனதுமான பழைய திராட்சிப்பழ இரசத்துருத்திகளையுந் தங்கள் கழுதைகள்மேல் வைத்து,

௫ அழுக்கான பழைய பாதஇரட்சைகளைத் தங்கள் கால்களிற்போட்டுப் பழைய வஸ்திரங்களை யுடுத்துக்கொண்டார்கள். அவர்கள் வழிக்கு எடுத்துக்கொண்ட அப்பமெல்லாம் அழுத்தமும் பூஞ்சணம்பூத்ததுமாயிருந்தது.

௬ அவர்கள் கில்காலிலிருக்கிற பாளயத்திற்கு யோசுவாவண்டைக்குப் போய் அவனோடும் இஸ்ரவேல் மனுஷரோடுந், தூரதேசத்திலிருந்து வந்தோம். இப்போதும் எங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்ணுங்களென்றார்கள்.

௭ அப்போது இஸ்ரவேல் மனுஷர் அந்த ஏவியரோடே நீங்கள் எங்கள் நடுவிலே குடியிருக்கிறவர்களாக்கும். எப்படி உங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்ணலாமென்றார்கள்.

௮ அவர்கள் யோசுவாவுடனே, நாங்கள் உம்மடியாரென்றார்கள். யோசுவா அவர்களை, நீங்கள் ஆர்? எங்கேயிருந்து வந்தீர்களென்றுகேட்டான்.

௯ அவர்கள் அவனோடே சொன்னதாவது, உம்முடைய பராபரனாகிய கர்த்தரின் நாமப்பிரஸ்தாபத்தினாலே உம்மடியார் மகா தூரதேசத்திலிருந்து வந்தோம். ஏனென்னில் அவருடைய கீர்த்தியையும் அவர் எகிப்திலே செய்ததெல்லாவற்றையும்,

௰ அவர் எஸ்போனின் இராசாவாகிய சிகோனும் அஸ்தரோத்திலிருந்த பாசானின் இராசாவாகிய ஓகும் என்றயோர்தானுக்கப்பாலிருந்த எமோரியரின் இரண்டு இராசாக்களுக்குஞ் செய்ததெல்லாவற்றையுங் கேட்டோம்.

௰௧ ஆகையால் உங்கள்கைகளில் வழிக்கு ஆகாரம் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கெதிர்கொண்டுபோய், அவர்களுடனே, நாங்கள் உங்கள் அடியார் இப்போதும் எங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்ணுங்களென்பீர்களாகவென்று எங்கள் மூப்பரும் எங்கள்தேசக்குடிகளுமெல்லாம் எங்களோடே சொன்னார்கள்.

௰௨ உங்களண்டைவர நாங்கள் புறப்படுகிற அன்றே எங்கள் வழிப்பயணத்திற்கு இந்த எங்கள் அப்பத்தைச் சுடுகிறதாக எங்கள் வீட்டிலிருந்தெடுத்துக்கொண

உபிரோடிருக்கக்கொல்லக்கொண்டவர்களைப்பார்க்க அதிகமாயிருந்தார்கள்.

௩௧ பிற்பாடு அவன்சகோதரரும் அவன் தகப்பன் வீட்டாரனைவரும் இறங்கிப் போய், அவனை யெடுத்துக்கொண்டுவந்து சோருவுக்கும் எஸ்தாவோலுக்கும் நடுவே அவன்தகப்பனாகிய மனோவாகினது கல்லறையிலே அடக்கம் பண்ணினார்கள். அவன் இஸ்ரவேலை இருபதுவருஷம் நியாயம்விசாரித்தான்.

## ௰௭. அதிகாரம்.

மீகா விக்கிரக ஆராதனையை யுண்டாக்கினது.

௧ எப்பிராயீமின் மலைத்தேசத்தானாகிய மீகாவென்று பேருள்ள ஒரு மனுஷனிருந்தான்.

௨ அவன் தன் தாயுடனே, உனக்குக் களவுபோனதும் என் காதுகளுங்கேட்க நீ சாபமிட்டுப் பேசிக்கொண்டதுமான அந்த ஆயிரத்தொருநூறு வெள்ளிக்காசு இதோ, என்னிடமா யிருக்கிறது. அவைகளையெடுத்தவன் நானென்றான். அதற்கு அவன்தாய், என்மகனே! நீ கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படுவாயாகவென்றாள்.

௩ அவன் அந்த ஆயிரத்தொருநூறு வெள்ளிக்காசைத் தன்தாய்க்குத் திரும்பக்கொடுத்தபோது, அவள் வார்ப்பிக்கப்பட்ட ஒரு சுரூபத்தையுண்டுபண்ண, நான் என்கையிலிருந்த இந்தவெள்ளியை என்மகனுக்காகக் கர்த்தருக்கென்று நியமிக்கவேநியமித்தேன். இப்போதும் அதை உனக்குத் திரும்பக் கொடுக்கிறேனென்றாள்.

௪ அவனோவென்றால் அந்தவெள்ளியைத் தன்தாய்க்குத் திரும்பக்கொடுத்தான். அப்போது அவன்தாய் இருநூறு வெள்ளிக்காசையெடுத்துத் தட்டான்கையிலே கொடுத்தாள். அவன் அதினால் வார்ப்பிக்கப்பட்ட ஒருசுரூபத்தைப் பண்ணினான் அது அப்படியே மீகாவின் வீட்டிலிருந்தது.

௫ சுவாமிக்கு நியமித்த அறைவீடு மீகாவுக்குண்டானபடியினாலே அவன் ஒரு ஆசாரிய சால்வையையும் விக்கிரகங்களையும் உண்டுபண்ணித் தன் குமாரரில் ஒருவனுடைய கையை நிரப்பினான். இவன் அவனுக்கு ஆசாரியனானான்.

௬ அந்நாட்களில் இஸ்ரவேலிலே இராசாவில்லை. அவனவன் தன்பார்வைக்குச் சரிப்போனபடி செய்துவந்தான்.

௭ யூதாவிலுள்ள பெத்லகேமூரானும் யூதாகோத்திரத்துப்பெத்லகேமூரானுன் லேவியனாகிய ஒருபிள்ளையாண்டானிருந்தான். அவன் அங்கே பரதேசியாயிருந்தான்.

௮ அந்தமனுஷன் எங்கேயாகிலும் பரதேசியாய்ப்போய்த் தங்கும்படிக்கு, யூதாவிலுள்ள பெத்லகேமூரைவிட்டுப் புறப்பட்டு, எப்பிராயீமின் மலைத்தேசத்திலிருக்கிற மீகாவின்வீடுமட்டும், அப்புறம் பயணம்போகவந்தான்.

௯ எங்கேயிருந்து வந்தாயென்று மீகா அவனைக்கேட்டதற்கு இவன் அவனுடனே, நான் யூதாவிலுள்ள பெத்லகேமூரானாகிய லேவியன். எங்கேயாகிலும்போய்த் தங்கப்போகிறேனென்றான்.

௰ அப்போது மீகா, நீ என்னிடத்திலிரு. நீ எனக்குத் தகப்பனும் ஆசாரியனுமாயிருப்பாய். நான் உனக்கு வருஷத்திலே பத்துவெள்ளிக்காசையும் உடுப்புடவைகளையும் உன்னுடைய ஆகாரத்தையுங் கொடுப்பேனென்று அவனுக்குச் சொன்னான். அப்படியே லேவியன் உள்ளே போய்,

௰௧ அவனிடத்திலிருக்கச் சம்மதித்தான். அந்தப்பிள்ளையாண்டான் அவனுக்கு அவன் குமாரரிலொருவனைப்போலிருந்தான்.

௰௨ அந்தப்பிள்ளையாண்டானாகிய லேவியன் தனக்கு ஆசாரியனாயிருக்கும்படிக்கு மீகா அவன்கையை நிரப்பினான். அப்படியே மீகாவின்வீட்டிலிருந்தான்.

௰௩ அப்போது மீகா, எனக்கு ஒருலேவியன் ஆசாரியனானபடியினாலே கர்த்தர் எனக்கு நன்மைசெய்வாரென்பதை இப்போது அறிவேனென்றுசொன்னான்.

## ௰௮. அதிகாரம்.

மீகாவுண்டாக்கின விக்கிரக ஆராதனை தாண்கோத்திரமனுஷரால் அப்புறம் வளர்ந்துபோனது.

௧ இஸ்ரவேலிலே இராசாவில்லாத அந்நாட்களிலே தாண்கோத்திரமனுஷர் குடியிருக்கிறதற்குத் தங்களுக்குச் சுதந்தரந் தேடினார்கள். ஏனென்றால் அந்நாள்வரைக்கும் அவர்களுக்கு இஸ்ரவேல்கோத்திரங்களின் நடுவே போந்த சுதந்தரங் கிடைத்ததில்லை.

௨ ஆகையால் ஒரு சீர்மையை யுளவுபார்த்து ஆராய்ந்தறிகிறதற்காகத் தாண்புத்திரர் தங்கள்கோத்திரத்துப் பலத்தமனுஷராகிய ஐந்துபேரைத் தங்கள் எல்லைக

னிலிருக்கிற சோராவிலும் எஸ்தாவோலி லுமிருந்தனுப்பி, நீங்கள்போய்ச் சீமை யை ஆராயுங்களென்று அவர்களோடே சொன்னார்கள். இவர்கள் எப்பிராயீம்மலை த்தேசத்திலிருக்கிற மீகாவின்வீடுமட்டும் வந்து, அங்கே இராத்தங்கினார்கள்.

௩ அவர்கள்மீகாவின்வீட்டண்டையிலி ருக்கையில், லேவியனான வாலிபனுடை ய சத்தத்தையறிந்து அங்கே அவனண் டைக்குத் திரும்பிப்போய், உன்னையிங்கே அ ழைத்துவந்தவனார்? இவ்விடத்தில் என்ன செய்கிறாய்? உனக்கு இங்கேயிருக்கிறதெ ன்னவென்று அவனைக் கேட்டார்கள்.

௪ அவர்களோடே அவன், இன்னின் னபடி மீகா எனக்குச் செய்தான். எனக் குச் சம்பளம் கொடுத்தான். அவனுக்கு ஆசாரியனானேனென்றான்.

௫ அப்போது அவர்கள் அவனுக்கு நாங்கள் போகிற எங்களுடைய வழி செய மாமோ வென்பதையறியப் பராபரனைக் கேளென்றார்கள்.

௬ அவர்களுக்கு அந்த ஆசாரியன், ச மாதானத்தோடே போங்கள். நீங்கள் போகிற உங்கள்வழிகர்த்தருக்கு நேரான தென்றான்.

௭ அப்போது அந்த ஐந்துமனுஷர் போய், லாயீசுக்குவந்து, அதிற் குடியிரு க்கிறசனங்கள் சீதோனியருடைய வாடிக்கை யின்படியே பயமில்லாத அமரிக்கையுஞ் சுகமுமாயிருக்கிறதையும், தேசத்திலே துன்மார்க்கராய் ஆண்டுகொண்டு உபத்திர வஞ்செய்கிறவர்கள் இல்லையென்பதையும், அவர்கள் சீதோனியருக்குத் தூரமானவர்களென்பதையும், அவர்களு க்கு ஒருவரோடேயுங் கலகாரியமில்லை யென்பதையுங்கண்டு,

௮ சோராவிலும் எஸ்தாவோலிலுமிரு க்கிற தங்கள்சகோதரரண்டைக்கு வந்தா ர்கள். நீங்கள்கொண்டுவருகிறசெய்தியெ ன்னவென்று அவர்கள்சகோதரர் அவர்க ளைக் கேட்டதற்கு,

௯ அவர்கள்சொன்னதாவது, எழும்பி அவர்கள்மேலே போயேறுவோம் வாருங்க ள். நாங்கள் அந்தத்தேசத்தைப் பார் த்தோம். இதோ, மெத்தவும் நன்றாயிரு க்கிறது. நீங்கள்சும்மாயிருப்பீர்களோ? அந்தத்தேசத்தைச் சுதந்தரித்துக்கொ ள்ளுகிறதற்குப் புறப்பட்டுப்போக அசதி யாயிராதேயுங்கள்.

௰ நீங்கள் அங்கே வருகிறபோது சுக மாயக் குடியிருக்கிற சனத்தண்டைக்கு வ ருவீர்கள். அந்தத்தேசம் விஸ்தாரமுமா யிருக்கின்றது. பராபரன் அதையுங்கள் கையிலே ஒப்புக்கொடுத்தார். அது பூமியி லுள்ள சகலமுந் தாழ்ச்சியில்லாமலிருக்கி ற ஸ்தலமென்றார்கள்.

௰௧ அப்போது சோராவிலும் எஸ்தா வோலிலுமிருக்கிற தாண்கோத்திரத்தா ரில் அறுநூறுபேர் ஆயுதபாடானவர்க ளாய் அங்கேயிருந்து புறப்பட்டுப்போய்,

௰௨ யூதாவிலிருக்கிற கீரியாத் யாரீமி லே பாளயமிறங்கினார்கள். ஆனபடியால் இதோ, கீரியாத்யாரீமின் புறகாலேயிருக் கிற அவ்விடம் இந்நாள்வரைக்குந் தாணி யரின் பாளயமென்னப்படும்.

௰௩ அங்கேயிருந்து எப்பிராயீம்மலை க்குப்போய், மீகாவின் வீடுமட்டும் வந் தார்கள்.

௰௪ அப்போது லாயீசின் சீமையை யுளவுபார்க்கப்போயிருந்த ஐந்துமனுஷ ர் தங்கள்சகோதரருடனே, இந்த வீடுக ளில் ஆசாரியச்சால்வையும் விக்கிரகங்களு மவார்ப்பிக்கப்பட்ட சுரூபமுமிருக்கின்ற தென்றறிவீர்களோ? இப்போதும் நீங்க ள் செய்யத்தக்கதேதென்று பார்த்துக் கொள்ளுங்களென்றார்கள்.

௰௫ அப்போது அவ்விடத்திற்குத் தி ரும்பி, மீகாவின்வீட்டிலிருக்கிற லேவிய னான வாலிபனுடைய வீட்டிலே வந்து அவனைச் சுகசெய்தி கேட்டார்கள்.

௰௬ ஆயுதபாடான தாண்புத்திரரா கிய அறுநூறுபேரோவெனில் வாசற்படி யிலே நின்றார்கள்.

௰௭ தேசத்தையுளவுபார்க்கப்போயிரு ந்த அந்த ஐந்துமனுஷர் உட்பிரவேசித்த அந்த ஆசாரியனும் யுத்த ஆயுதபாடான அறு நூறுபேரும் வாசற்படியிலே நிற்கையில் கொ த்தின சுரூபத்தையும் ஆசாரியச்சால்வையை யும் விக்கிரகங்களையும் வார்ப்பிக்கப்பட்ட விக்கிரகங்களையுமெடுத்துக்கொண்டுவந்தார்கள்.

௰௮ அவர்கள் மீகாவின்வீட்டிற்குட்பி ரவேசித்துச் சுரூபத்தையும் ஆசாரியச் சால்வையையும் வார்ப்பிக்கப்பட்ட விக் கிரகங்களையுமெடுத்துக்கொண்டு வருகிற போது, நீங்கள் செய்கிறதென்னவென்று ஆசாரியன் அவர்களைக் கேட்டான்.

௰௯ அவர்கள் அவனுடனே, நீ பேசா மல் உன்வாயைமூடி எங்களோடே கூட வந்து எங்களுக்குத் தகப்பனும் ஆசாரி யனுமாயிரு. நீ ஒரு மனுஷனுடைய வீட்டுக்கு ஆசாரியனாயிருக்கிறது நல்லதோ? இஸ்ரவேலில் ஒரு கோத்திரத்திற்கும் வம் சத்திற்கும் ஆசாரியனாயிருக்கிறது நல் லதோவென்றார்கள்.

௨௰ அபபோது ஆசாரியனமனதிதமி பபபடடு, அவன ஆசாரியச்சால்வையை யும விக்கிரகஙகளையுஞசுருபததையுமெடுததுக்கொணடுசனததினநடுவேவநதான.

௨௧ அவர்கள திருமபிக்கொணடுபோயப், பிளளைகளையும ஆடுமாடுகளையுநதட டுமுடடுகளையுந தஙகளுககுமுனனேபோகபபணணினுர்கள.

௨௨ அவர்களபுறபபடடு மீகாவினவீ டடிற்குதூரமாயபபோனபோது மீகா வினவீடடிற்கணடைவீடடார் கூடிவரவழைககபபடடுத் தாண்புததிரரைததொடர்நதுவநது,

௨௩ அவர்களைப பார்ததுக கூபபிட டார்கள. அவர்கள திருமபிபபார்தது, மீகாவுடனே, நீயிபபடிக் கூபபிடுகிறகாரியமெனனவெனறூர்கள.

௨௪ அபபோது அவன நானுணடுப ணணின எனனுடைய தேவர்களையும அநத ஆசாரியனையுஙகூட நீஙகளகொணடுபோகிறீர்கள. இனி யெனககெனன விருககிறது? நீ கூபபிடுகிறகாரியமெனனவெனறு நீஙகளெனனை யெபபடிக கேட்கிறீர்களெனறுன.

௨௫ ஆனால தாண்புததிரர் அவனைப பார்தது, உன கூககுரலையெஙகளுககுக் கேட்கபபணணுதே. மறறபபடி உனசிவனும உனவீடடாரினசிவனும போகததககதாயககோபமுள்ளமனுஷர் உஙகளமேலவிழுவார்களெனறுசொலலி,

௨௬ தஙகளவழியே நடநதுபோனுர்கள. அவர்களதனனைபபார்க்கிலும பலததவர்களெனறு மீகாகணடு, அவன தனவீடடிற்குததிருமபிபபோனுன்.

௨௭ அவர்களோ மீகா உணடுபணணினதையும அவனுககிருநத ஆசாரியனையும அவர்களகூடடிககொணடுபோய்ப்பயமிலலாமற்சுகமாயிருககிற லாயிஸ ஊர்சசனததினமேலவநது, அவர்களைப படடயக கூர்மையினுலே வெடடிப்படடணததை யககினியாற் சுடடுபபோடடார்கள

௨௮ அவர்களைத தபபுவிபபாரருமிலலாமலிருநதது. ஏனெனில அதுசீதோனுககுததூரமானது வேறேமனுஷரோடே அவர்களுககுக்கவைகாரிய மிலலாமலுமிருநதது. அநதபபடடணமபெத்ரொகோபுககுசசமீபமான பளளததாககிலிருநதது அவர்கள அதைத் திருமபககடடியஙகேகுடியிருநது,

௨௯ பூர்வததிலே லாயிஸ எனறுபேரிருநத அநதபபடடணததிறகு இஸரவேலுககுப பிறநத தஙகளதகபபனுகிய தாணுடையநாமததினபடியேதாண் எனறுபேரிடடார்கள.

௩௰ அபபோதுதாண்புததிரர் அநதச்சுருபததைத்தஙகளுககு ஸதாபிததுககொணடார்கள. மனுசேயினகுமாரனுகியகேர்சோனினமகனயோனததானும அவனகுமாரரும அநதத் தேசததார் சிறைகளாகக்கொணடுபோகபபடட நாளமடடுந தாண்கோததிரததாருககாசாரியரா யிருநதார்கள.

௩௧ பர்ராபரனுடையவீடு சீலோவிலிருநதசகலநாளிலும அவர்கள மீகா உணடுபணணின சுருபததை வைததுககொணடிருநதார்கள.

## ௰௯. அதிகாரம்.

ஒருபெயா ஊர்மனுஷர்செயத அருவருபபான அககிரமம்.

இஸரவேலிலே இராசாவிலலாத அநத நாட்களிலே நடநததேதெனில, எபபிறயீம் மலைகளருகே பரதேசியாயததஙகின ஒருலேவிமனுஷனிருநதான. அவனயூதாத்தேசததுப் பெத்லகேம ஊராளாகிய வைபபாடடியான ஒருஸதிரியைபபடைததுககொணடிருநதான.

௨ அவளவனுககுத துரோகமாயவிபசாரமபணணி, அவனைவிடடு யூதாத்தேசததுப்பெத்லகேமூரிலிருககிற தனதகபபனவீடடுககுபபோய, அங்கே ஒருவருஷமுமநாலுமாதமுமிருநதாள.

௩ அவளபுருஷன அவளோடே நலமாயபபேசவும அவளைததிருமப அழைததுவரவும தனவேலைககாரனையும இரணடுகழுதைகளையுங கூடடிககொணடு புறபபடடு அவளணடைககுப போனுன. அபபோது அவள அவனைத்தன தகபபனவீடடுககழைததுபபோனுள. பெண்பிளளையினதகபபன அவனைககணடபோது சநதோஷபபடடு அவனையெதிர்கொணடுபோயழைததான.

௪ பெண்பிளளையினதகபபனுகிய அவனுடையமாமன அவனையிருததிககொணடதினுல மூனறுநாள அவனேடிருநதான. அஙகேபொசிததுககுடிதது இராததஙகினுர்கள.

௫ நாலாம நாளிலேயவனறுக்காலமேயெழுநதிருநதபோது அவன பயணபபடுகையிற் பெண்பிளளையின தகபபனதனமருமகனேடே, கொஞசம அபபமபொசிதது உனமனதைத் தேறறிககொள. பிறபாடு நீஙகளபோகலாமெனறுன.

௬ அவர்கள் உட்கார்ந்து, இருவருங் கூடப்போசித்துக்குடித்தார்கள். பெண்பிள்ளையினுடைய தகப்பன் அந்த மனுஷனோடே: நீ தயவுபண்ணி உன் இருதயம் மகிழ்ச்சியடைய இராவைக்குமிருவென்றான்.

௭ அப்படியே போகிறதற்கந்த மனுஷனெழுந்திருக்கிறபோது அவனுடைய மாமன் அவனை வருந்திக்கொண்டதினாலே அவன் அன்றைக்கு இராத்திரியும் அங்கேயிருந்தான்.

௮ ஐந்தாம் நாளிலே அவன் போகிறதற்குக் காலமே எழுந்திருந்தபோது பெண்ணினுடைய தகப்பன்: உன் இருதயத்தைத் தேற்றிக்கொள்ளென்றான். அப்படியே அந்திநேரமாகுமட்டுந் தாமதித்திருந்து, இருவரும் போசனம்பண்ணினார்கள்.

௯ பின்பாடு போகிறதற்கு அவனும் அவனுடைய வைப்பாட்டியும் அவன் வேலைக்காரனும் எழுந்திருக்கிறபோது பெண்ணினுடைய தகப்பனாகிய அவனுடைய மாமன் அவனோடே, இதோ, பகல் அஸ்தமிக்கப்பொழுது சாய்ந்துபோகின்றது. இங்கே இராவைக்கிருங்கள். இதோ, சாயங்காலமாகின்றது. இங்கே இராத்தங்கி, உன் இருதயஞ் சந்தோஷமாயிருக்கட்டும். நாளையிருட்டோடெழுந்திருந்து உன் கூடாரத்திற்குப்போக வழிநடவுங்களென்றான்.

௰ அந்த மனுஷனோவென்றால் இராவைக்கிருக்கமனதாயிராமல், எழுந்து முஸ்திப்புப்பண்ணப்பட்ட இரண்டு கழுதைகளோடுந் தன் வைப்பாட்டியோடும் புறப்பட்டுப்போய், எருசலேமாகிய எபூசுக்குநேராக வந்தான்.

௰௧ அவர்கள் எபூசுக்குக் கிட்டவருகையிற் பொழுதுமெத்தவுஞ் சாய்ந்திருந்தது. அப்போது வேலைக்காரன் தன் எசமானுடனே, இந்த எபூசியரின் பட்டணத்திற்குத் திரும்பிக்கொண்டு அங்கே இராத்தங்கப்போவோமேயென்றான்.

௰௨ ஆனாலே அவன் எசமான் அவனோடே: இஸ்ரவேல்புத்திரரல்லாத மறுசாதியாரின் ஊருக்குத் திரும்பிக்கொள்ளாமல் அப்பாலே கிபெயாமட்டும் போவோமென்றுசொல்லி,

௰௩ நாம் கிபெயாவிலாகிலும் ராமாவிலென்கிலும் இராத்தங்கும்படிக்கு, அவைகளில் ஒருவிடத்திற்குப் போய்ச்சேர்க்கத்தக்கதாக நடந்துபோவோமென்று தன்வேலைக்காரனுக்குச் சொன்னான்.

௰௪ அப்படியே அப்பாலே நடந்துபோனார்கள். பென்யமீன் சீமையான கிபெயாக்கிட்ட அவர்கள் வருகையிற் சூரியன் அவர்களுக்கஸ்தமித்துப்போயிற்று.

௰௫ ஆகையாற் கிபெயாவிலே வந்து இராத்தங்கும்படிக்கு அவ்விடத்திற்குத் திரும்பினார்கள். அவனுட்பிரவேசித்துப் பட்டணவீதியிலுட்கார்ந்தான். இராத்தங்குகிறதற்கவர்களை வீட்டிலே சேர்த்துக்கொள்ளவாரில்லாதிருந்தார்கள்.

௰௬ ஆனாலே இதோ, ஒரு கிழவன் வயல்வெளியிலே தன் வேலையைச் செய்திருந்து பொழுதுபுகுந்துவந்தான். அந்த மனுஷன் எப்பிராயீம் மலைத்தேசத்தானுங் கிபெயாவிலே பரதேசியுமாயிருந்தான். அவ்விடத்து மனுஷரோவென்றால் எமினிபுத்திரராயிருந்தார்கள்.

௰௭ அந்தக்கிழவன் தன் கண்களை ஏறெடுத்துப் பட்டணத்தின் வீதியிலே அந்தப் பயணக்காரனைக் கண்டு, எந்தமட்டும் போகிறாய்? எங்கேயிருந்து வந்தாயென்றான்.

௰௮ அவன் இவனோடே சொன்னதாவது, நாங்கள் யூதாவினூராகிய பெத்லகேமிலிருந்து வந்து, நான் குடியிருக்கிற எப்பிராயீம் மலைத்தேசமானபுறங்களமட்டும் போகிறோம். நான் யூதாவூரான பெத்லகேம்மட்டும் போய்வந்தேன். நான் கர்த்தருடைய வீட்டிற்குப் போகிறேன். ஒருவரும் என்னை வீட்டிலே சேர்த்துக்கொள்ளுவாரில்லை.

௰௯ எங்கள் கழுதைகளுக்கு வைக்கோலும் மேய்ச்சலுமிருக்கின்றது. எனக்கும் உமதுடைய ஊழியக்காரிக்கும் உம்முடைய ஊழியக்காரனோடேயிருக்கிற வேலைக்காரனுக்கும் அப்பமுந் திராட்சைப்பழ இரசமுமிருக்கின்றது. ஒருகாரியத்திலுங் குறைச்சலில்லையென்றான்.

௨௰ அப்போது அந்தக்கிழவன், உனக்குச் சமாதானம் உன் குறைச்சலெல்லாம் என்மேலிருக்கட்டும் வீதியிலேமாத்திரம் இராத்தங்காதேயென்றுசொல்லி,

௨௰௧ அவனைத் தன் வளவுக்கழைத்துக்கொண்டுபோய்க் கழுதைகளுக்குத் தீனிபோட்டான். அவர்கள் தங்கள் கால்களைக் கழுவிப்போசித்துக் குடித்தார்கள்.

௨௰௨ அவர்கள் தங்களிருதயத்தைத் தேற்றிக்கொண்டிருக்கும்போது இதோ, பேலியாளின் பிள்ளைகளாகிய அந்த ஊர்மனுஷர் அந்த வீட்டைச் சூழ்ந்துகொண்டு, கதவைத் தட்டி, உன் வீட்டிலே வந்த அந்த மனுஷனை நாங்களறியும்படி வெளியே கொண்டுவாவென்று வீட்டுக்காரனாகிய அந்தக்கிழவனோடே சொன்னார்கள்.

உங அபபோது வீட்டுக்காரனாகிய அந்தமனுஷன அவர்களண்டைக்குப புறப்பட்டு அவர்களோடே சொன்னதாவது, அப்படிவேண்டாம என்சகோதரரே! அப்படிககொத்த பொலலாப்பைச் செயயாதிருங்கள்; அந்தமனுஷன என்வீட்டிற்குட்பிரவேசித்திருக்கக்கொள்ள அப்படிககொத்தமதிகேட்டைச்செய்யீர்களாக.

உச இதோ, கன்னியாஸ்திரியாகிய என்மகளையும அவனுடையவைப்பாட்டியையும உங்களுக்குவெளியே கொண்டுவருவேன. அவர்களை யவமானப்படுத்தி, உங்கள்பார்வைக்குச் சரிப்போன பிரகாரமாய அவர்களுக்குச்செயயுங்கள். ஆனால இந்தமனுஷனுக்கப்படிக்கொத்தமதிகேடான காரியத்தைச் செயயீர்களாகவென்றான.

உரு ஆனால அந்தமனுஷர் அவனசொற்கேட்க மாட்டோமென்றார்கள. அப்போது அந்தமனுஷன தன்வைப்பாட்டியைப்பிடித்து, அவர்களண்டைக்கு வெளியே கொண்டுவந்துவிட்டான. அவர்கள அவளையறிந்துகொண்டு, இராமுழுதும விடியுங்காலமட்டும அவளை பிலச்சைபாயநடத்திக் கிழக்குவெளுக்கிறபோது அவளைப்போகவிட்டார்கள.

உகூ அப்போது அந்த ஸ்திரீவிடியுங்காலத்திற்குமுன்னேவந்து, வெளிச்சமாகுமட்டும அங்கேதன எசமானிருந்தவீட்டுவாசற்படியிலே விழுந்துகிடந்தாள.

உஎ அவளஎசமானகாலமே எழுந்திருந்து வீட்டினகதவைத்திறந்து, தனவழியேபோகப்புறப்படுகிறபோது, இதோ, அவனவைப்பாட்டியாகியஸ்திரீவீட்டுவாசலுக்குமுன்பாகத் தனகைகளை வாசற்படியின்மேலவைத்தவளாயக் கிடந்தாள.

உஅ எழுந்திருபோவோமென்று அவளோடே சொன்னதற்குப்பிரத்தியுத்தாரம்பிறக்கவில்லை. அப்போது அந்தமனுஷன அவளைக்கழுதையின்மேலே போட்டுப்பயணப்பட்டுத் தன்தானத்திற்குப்போய,

உகூ தன வீட்டுக்கு வந்தபோது ஒருகத்தியை யெடுத்துத் தன வைப்பாட்டியைப்பிடித்து அவளையவளுடைய எலும்புகளோடுங் கூடப் பன்னிரண்டு துண்டமாகப்போட்டு இஸ்ரவேலின எலலைகளுக்கெலலாம் அனுப்பினான.

௩௰ அப்போது அதைக்கண்டிறவனெலலாம, இஸ்ரவேலபுத்திரர் எகிப்திலிருந்துவந்தேதினமுதற்கொண்டு இந்நாளவரைக்கும இதைப்போலொத்தகாரியஞ்செயயப்பட்டதுமிலலை காணப்பட்டதுமிலலையென்றும, இதின்மேற்சிந்தனையாகி, ஆலோசனைபண்ணிச்செயயவேண்டிய தென்னவென்று சொலலுங்களென்பார்கள.

# உ௰. அதிகாரம்.

கிபெயா ஊரார்செயத அக்கிரமத்திற்கு இடப்பட்ட ஆக்கினை.

அப்போது தாண்பட்டணந்துவக்கிப் பெயர்சேபாமட்டுங் கிலேயாத்தேசத்திலுமிருக்கிற இஸ்ரவேல புத்திரர் அனைவரும மிஸ்பாவுக்குக் கர்த்தருக்குமுன்பாக ஏகசலையான கூட்டமாய வரவழைக்கப்பட்டு,

உ இஸ்ரவேலுடைய எலலாககோத்திரங்களுக்கும அடுத்த சகல எலலைகளிலுமிருந்துவந்து, பட்டையமுருவுகிறநானூறாயிரங் காலாளான் பராபரனுடைய சனக்கூட்டமாயக்கூடினார்கள.

ங இஸ்ரவேலபுத்திரர்மிஸ்பாவுக்குவந்ததேதின செயதியைப பென்யமீனபுத்திரர்கேட்டார்கள. அந்தப்பொலலாப்புநடந்தவிபரமென்னவென்றுசொலலுங்களென்று இஸ்ரவேலபுத்திரர்கேட்டார்கள.

ச அப்போதுகொன்றுபோடப்பட்டஸ்திரீயின புருஷனாகிய லேவி மனுஷன மறுவுத்தரவு கொடுத்துச்சொன்னது வது. நானும என்வைப்பாட்டியும பென்யமீனார்ன கிபெயாவுக்கு இராத்தங்குகிறதற்காகவந்தோம.

ரு அப்போது கிபெயாபட்டணத்தாரெனக்குவிரோதமாயெழும்பி நானிருந்தவீட்டை இராத்திரியிலே சுற்றிக்கொண்டு என்னைக்கொன்றுபோட்டநினைத்து என்வைப்பாட்டியை யவமானப படுத்தினார்கள. அதினாலேயவளசெத்துப்போனாள.

கூ ஆகையால இஸ்ரவேலிலே அவர்களிப்படிக்கொத்த அக்கிரமத்தையும மதிகேட்டையுஞ் செயதபடியினாலே தான என்வைப்பாட்டியைப்பிடித்துத் துண்டித்து, இஸ்ரவேலினசுதந்தரமான எலலா நாட்டுப்புறத்திற்கும அனுப்பினேன.

எ இதோ, நீங்களெலலாரும இஸ்ரவேலபுத்திரராமே? நீங்கள உங்களுக்காகச் செயயத்தக்கதென்னவென்றிங்கயோசனைபண்ணுங்களென்றான.

அ அப்போது எலலாச சனமும ஏகமாயெழும்பிச் சொன்னதாவது, நம்மில ஒருவருந் தன கூடாரத்திற்குப்போகவும

ஒருவருந் தன் வீட்டிற்குத் திரும்பவும் வேண்டாம்.

௯ இப்போது கிபியாவுக்குச் செய்ய வேண்டியதேதெனில், அதற்கு விரோதமாகத் தாயம்போட்டு,

௰ பென்யமீன் கோத்திரமான கிபியா பட்டணத்தார் இஸ்ரவேலிலே செய்த எல்லாமுங் கேட்டுக்குத்தக்கதாகச் சனம் வந்து செய்யும்படிக்கு, நாம் தானியத் தவசங்களைச் சம்பாதிக்கிறதற்கு இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாம் நூறுபேரிற் பத்துப்பேரையும் ஆயிரம்பேரில் நூறுபேரையும் பதினாயிரம்பேரில் ஆயிரம்பேரையும் எடுப்போமென்று சொல்லி,

௰௧ இஸ்ரவேலரெல்லாம் ஏகவொப்பந்தமாய் அந்தப் பட்டணத்திற்கு முன்பாகக் கூட்டங்கூடி,

௰௨ அங்கேயிருந்து இஸ்ரவேலின் கோத்திரங்கள் பென்யமீன் கோத்திரமெங்கும் மனுஷரையனுப்பி உங்களில் நடந்த இந்தப் பொல்லாப்பென்ன?

௰௩ இப்போதுங் கிபியாவிலிருக்கிற பேலியாளின் பிள்ளைகளாகிய அந்த மனுஷரை நாங்கள் கொலைசெய்து பொல்லாப்பை இஸ்ரவேலை விட்டு விலக்கும்படிக்கு அவர்களையொப்புக் கொடுங்களென்று சொல்லச்சொன்னார்கள். ஆனாற் பென்யமீன் புத்திரர் இஸ்ரவேல் புத்திரராகிய தங்கள் சகோதரரின் சொற்கேட்க மனதாயிராமல்,

௰௪ இஸ்ரவேல் புத்திரரோடு யுத்தம்பண்ணப் புறப்படும்படிக்குப் பட்டணங்களிலிருந்து கிபியாவுக்கு வந்துகூடினார்கள்.

௰௫ கிபியாவின் குடிகளிலே தெரிந்துகொள்ளப்பட்ட எழுநூறுபேரின் இலக்கத்தைத் தவிரப் பட்டணங்களிலிருந்து வந்துகூடின பட்டயமுருவுகிற மனுஷரின் இலக்கம் அந்நாளில் இருபத்தாறாயிரம்பேரென்று காணப்பட்டது.

௰௬ அந்தச் சனத்திலெல்லாந் தெரிந்துகொள்ளப்பட்ட இடதுகை வாகான எழுநூறுபேரிருந்தார்கள். அவர்களனைவரும் ஒரு மயிரிழைத் தப்பாதபடிக்குக் கவண்டினாற் கல்லெறிவார்கள்.

௰௭ பென்யமீன் கோத்திரத்தைத் தவிர இஸ்ரவேலிலே பட்டயமுருவுகிற மனுஷர் நானூறாயிரம்பேரென்று இலக்கம் பார்க்கப்பட்டார்கள். இவர்களெல்லாரும் யுத்தமனுஷராயிருந்தார்கள்.

௰௮ இஸ்ரவேல் புத்திரரானவர்கள் எழும்பிப் பராபரனுடைய வீட்டிற்குப் போயேறி, எங்களிலேறிப்போய்ப் பென்யமீன் புத்திரரோடு யுத்தம்பண்ணத் தலைக்கம்பண்ணுபவர்களாரென்று பராபரனைக் கேட்டார்கள். அதற்குக் கர்த்தர் யூதா துவக்கவேண்டுமென்றார்.

௰௯ அப்போது இஸ்ரவேல் புத்திரர் காலமே எழுந்து புறப்பட்டுக் கிபியாவுக்கெதிராகப் பாளயமிறங்கினார்கள்.

௨௰ பிற்பாடு இஸ்ரவேல் மனுஷர் பென்யமீனோடே யுத்தம்பண்ணப் புறப்பட்டுக் கிபியாவண்டையிலே அவர்களுக்கெதிராகப் போர்செய்ய ஆயத்தம்பண்ணினார்கள்.

௨௰௧ ஆனாற் பென்யமீன் புத்திரர் கிபியாவிலிருந்து புறப்பட்டு, இஸ்ரவேலில் இருபத்தீராயிரம்பேரை அந்நாளிலே தரையிலே விழ அடித்தார்கள்.

௨௰௨ இஸ்ரவேல் மனுஷராகிய சனமோவென்றால், தன்னைத் திடப்படுத்திக்கொண்டு முந்தின நாளில் ஆயத்தம்பண்ணின ஸ்தலத்திலே மறுபடியும் போர்செய்ய ஆயத்தம்பண்ணினார்கள்.

௨௰௩ அவர்களேறிப்போய்க் கர்த்தருக்கு முன்பாகச் சாயங்காலமட்டும் அழுது, என் சகோதரனாகிய பென்யமீன் புத்திரரோடே அப்புறம் யுத்தங் கலக்கப்போவேனோவென்று கர்த்தரைக் கேட்டார்கள். அப்போது கர்த்தர் அவர்களண்டைக்குப் போய் ஏறுங்களென்றார்.

௨௰௪ மறுநாளிலே இஸ்ரவேல் புத்திரர் பென்யமீன் புத்திரர் கிட்டச் சேருகிறபோதோவென்றால்,

௨௰௫ பென்யமீன் கோத்திரத்தாரும் அந்நாளிலே கிபியாவிலிருந்தவர்களுக்கெதிராகப் புறப்பட்டுவந்து இன்னும் இஸ்ரவேல் புத்திரரிற் பட்டயமுருவுகிற சேவகராகிய பதினெண்ணாயிரம்பேரைத் தரையிலே விழ அடித்தார்கள்.

௨௰௬ அப்போது இஸ்ரவேல் புத்திரர் அனைவருஞ் சகலசனமும் ஏறிப்போய்ப் பராபரனுடைய வீட்டிற்கு வந்து அங்கே கர்த்தருக்கு முன்பாக அழுது தரித்திருந்து, அன்று சாயங்காலமட்டும் உபவாசித்துக் கர்த்தருக்கு முன்பாகச் சர்வாங்கதகனங்களையுஞ் சமாதானப்பலிகளையும் பலியிட்டு,

௨௰௭ கர்த்தரைக் கேட்டார்கள். ஏனென்றாற் பராபரனுடைய உடம்படிக்கைப்பெட்டி அந்நாட்களிலங்கேயிருந்தது.

௨௰௮ ஆரோனின் குமாரனாகிய எலெயாசாரின் மகன் பினெகாஸ் அந்நாட்களில் அவருக்கு முன்பாக நின்றான். என் சகோதரனாகிய பென்யமீனின் புத்திரரோடே இன்னும் யுத்தம்பண்ணப் புறப்படுவேனோ புற

ப படாதிருபபேனுவெனறு அவர்கள
கேடடார்கள. அபபோது கர்ததர் போ
யேறுஙகள. ஏனெனில நாளையவர்களையுங
களகையிலொபபுககொடுபபோமெனருர்

௨௯ அபபோது இஸர்வேலபுததிரர்
கிபெயாவைசசுறறிலுமபதிவிடையாட்க
ளைவததது,

௩௰ மூனறுமநாளிலே பெனயமீனபுத
திரருககெதிராகபபோயேறி, முதலிரண
டுதரஞசெயததுபோலேகிபெயாவுககுச
சமீபமாயபபோருக்காயத்தமபணணிஞ
ர்கள.

௩௧ அபபோதுபெனயமீனபுததிரர்ச
னததிறகெதிராகபபுறபபடடுபபடடண
ததைவிடடு இப்பாலேவநது வெளியிலே
பெததேலுககுங கிபெயாவுககுமபோகி
றஇரணடுவழிகளில இஸர்வேலசனததிலே
ஏறககுறையமுபபதுபேரை, முதலிரணடு
தரஞசெயததுபோலே வெடடிபபோட
வுங குததிபபோடவுந துவககி,

௩௨ அவர்களமுனபோலே நமககுமுன
பாகமுறியடிக்கப்படுகிருர்க ளெனறார்க
ள. இஸர்வேலபுததிரரோவெனில நாம அ
வர்களைப்பட்டணததைவிடடிப்பாலேயி
ருக்கிறவழிகளிலேவரப்பணணும படிககு
ஓடுவோமெனறுசொலலியிருநதார்கள.

௩௩ அபபோது இஸர்வேலமனுஷரெ
லலாருநதஙகளதானததிலிருந தெழுமபி
ப்பாகாலதாமாரிலேயுத்தத்திற் காயத்த
மபணணிஞர்கள. இஸர்வேலுடையபதி
விடையுஙகாபாவினபளளத்தாக்காகியத
ஙகளதானததிலிருந துபுறப்படடு,

௩௪ அவர்களில எலலா இஸர்வேலிலு
நதெரிநது கொளளப்படட பதினாயிரம
பேர்கிபெயாவுககெதிரேவநதார்கள.யுத
தமோவெனறுற்பலத்தது. ஆனாலவிககி
னநதஙகளமேலநேரிடுமெனறு அவர்கள
றியாதிருநதார்கள.

௩௫ கர்த்தர் இஸர்வேலுககுமுனபாக
பபெனயமீனை முறியடித்தார். அநநாளி
லே இஸர்வேலபுததிரர்பெனயமீனிலேப
டடையமுருவுகிறசேவகராகிய இருபத
தையாயிரததொருநூறுபேரைமடித்தா
ர்கள.

௩௬ அதேனென்றால முறியடிக்கப்படு
கிருர்களெனறு பெனயமீன புததிரர்கா
ணுமபோது இஸர்வேலர் கிபெயாவுக்கப
பாலேவைத்தபதிவிடையை நமபியிருநத
படியினலேபெனயமீனருககிடஙகொடுத
திருநதார்கள.

௩௭ அபபோதுபதிவிடையிருநதவர்க
ளதீவிரமாயக கிபெயாவினமேல வநதுவி
ழுநது, படடணததிலிருககிறவர்களையெ
லலாம படடையககூர்மையால வெடடி
ஞர்கள.

௩௮ படடணததிலிருநதுமகாபபெரி
யபுகையை யெழுமபபபணணும வேலை
யே இஸர்வேலருககும பதிவிடைககும அ
டையாளமாகக் குறித்த வேலையாயிருந
தது.

௩௯ ஆகையால இஸர்வேலர்யுத்தத்தி
லேபினவாஙகினதினலே பெனயமீனர் இ
ஸர்வேலரில ஏறககுறையமுப்பதுபேரை
வெட்டவுங குத்தவுந துவககி, முநதியுத்த
த்திலானதுபோல அவர்கள நமககுமுன
பாகமுறியடிக்கப்படுகிருர்களேயெனறு
சொலலுகிறபோது,

௪௰ பட்டணததிலிருநது புகைததூ
ண உயர எழுமபததுவககிறறு. பெனய
மீனமனுஷர் பினனுககப்பார்ககிறபோது
இதோ, படடணமெஙகுமபடடெருபபு
வானபரியநதமேறிறறு.

௪௧ அபபோது இஸர்வேலர் திருமபிக
கொணடார்கள, பெனயமீனமனுஷரோ
வெனறுலவிககினநதஙகளமேல நேரிடுகி
றதைக்கணடு திகைதது,

௪௨ இஸர்வேலபுததிரரைவிடடு வனாந
திரததினவழிககுத திருமபி யோடிபபோ
னர்கள. ஆனாலயுத்தம அவர்களைததொ
டர்நதது. படடணஙகளினமனுஷருமந
டுவேயகப்படட அவர்களைமடித்தார்கள.

௪௩ இபபடியேபெனய மீனரைவளைந
துகொணடுதுர்ததிக்கிபெயாவுககுககிழ
ககுபபுறமாகவருமடடும அவர்களைவருத்
தமிலலாமலமிதிததுபபோடடார்கள.

௪௪ அதினுற்பெனயமீனரிலே பதினெ
ணணுயிரமபேர் விழுநதார்கள. அவர்க
ளெலலாருமவலலாளராயிருநதவர்கள.

௪௫ மறறவர்களவிலகி, வனாநதிரததிலி
ருககிற ரிம்மோன்கலமலைககோடிபபோ
ஞர்கள. அவர்களினுைம ஐயாயிரமபே
ரைவழிகளிலேகொனறு, மறறவர்களைககி
தெயோமடடுமபினறொடர்நது, அவர்க
ளில இரணடாயிரமபேரைவெடடிபபோ
டடார்கள.

௪௬ அப்படிப்பெனயமீனரில அநநா
ளிலவிழுநதவர்களெலலாருமஇருபததை
யாயிரமபேர். அவர்களெலலாரும பட
டையமுருவுகிறபலவானகளா யிருநதவர்
கள.

௪௭ திருமபிககொணடோடி வனாநதி
ரததிலிருககிறரிமமோனகல்மலைககுவநத
வர்கள அறுநூறுபேர். இவர்களரிமமோ
னகல்மலையிலே நாலுமாதமிருநதார்கள.

சஅ இஸ்ரவேலரோவென்றால் பென்யமீன்புத்திரர் மேலேதிரும்பிப் பட்டணத்திலமனுஷரைத்துவக்கிமிருகங்கள் மட்டுங்கண்டதெல்லாவற்றையும் பட்டயக்கூர்மையாலவெட்டிக்கண்ட எல்லாப்பட்டணங்களையும அக்கினியாற் கொளுத்திப்போட்டார்கள்.

## உக. அதிகாரம்.

பென்யமீனகோத்திரந்திரும்பப்பரிபாலனமாகும்படிக்கு இஸ்ரவேலர் வகைபார்த்தது.

நம்மிலொருவருந் தன்குமாரத்தியைப் பென்யமீனமனுஷனுக்கு விவாகப்படுத்திக்கொடுப்பதில்லையென்று இஸ்ரவேலர் மிஸ்பாவிலே ஆணையிட்டிருந்தார்கள்.

உ ஆகையாற சனம பராபரனுடைய வீட்டுக்குவந்து, அங்கேபராபரனுக்குமுன்பாகச்சாயங்காலமட்டுமிருந்து சத்தமிட்டுமிகுதியும அழுதுகொண்டு,

ங இஸ்ரவேலின்பராபரனாகிய கர்த்தாவே! இன்று இஸ்ரவேலில ஒருகோத்திரங்குறைந்துபோன இந்தக்காரியம இஸ்ரவேலில நடந்ததென்னவென்றார்கள்.

ச மறுநாளிலேசனங்காலமே எழுந்திருந்து அங்கே ஒருபலிபீடத்தைக்கட்டிச்சர்வாங்கத்தகனங்களையுஞ் சமாதானப்பலிகளையுஞ்செலுத்தினார்கள்.

ரு பிறபாடு இஸ்ரவேலபுத்திரர், கர்த்தருக்குமுன்பாகச் சபை கூடினபோது இஸ்ரவேலுடைய எல்லாக்கோத்திரங்களிலுமேறிவராதேபோனவர்களாரென்று கேட்டார்கள். ஏனெனிற் கர்த்தருக்குமுன்பாக மிஸ்பாவுக்கேறிவராதவன கொலையுண்கவேகொலையுணகக் கடவனென்று பெரிய ஆணையிடப்பட்டிருந்தது.

சா இப்போதும இஸ்ரவேலபுத்திரர்தங்களசகோதரனாகியபென்யமீனைநினைத்துமனஸ்தாபப்பட்டுச் சொன்னதாவது, இன்று இஸ்ரவேலிலொருகோத்திரம அறுப்புண்டுபோயிற்று.

எ மீதியானவர்களுக்குப்பெண்சாதிகள்கிடைக்க நாமவர்களுக்காகச் செய்வதென்ன? ஏனென்றால நம்முடையகுமாரத்திகளிலொருத்தியையும அவர்களுக்குக் கொடாதபடிக்குநாம கர்த்தர்பேரிலே ஆணையிட்டுக்கொண்டோமே.

அ இஸ்ரவேலின்கோத்திரங்களிலமிஸ்பாவிலே கர்த்தருக்குமுன்பாக ஏறிவராதேபோனயாதொருவருண்டோ வென்றார்கள். அப்போது இதோ, கீலேயாத்திலிருக்கிறயாபேசினமனுஷர் ஒருவருஞ்சபையண்டைக்குப் பாளயத்தில வந்ததில்லை.

கூ ஏனெனிறசனம இலக்கம்பார்க்கப்பட்டது. இதோ, கீலேயாத்திலிருக்கிறயாபேசினகுடிகளில அங்கே ஒருவருமிருந்ததில்லை.

ய அப்போதுசபையானது பலவான்களிற்பன்னிராயிரம்பேரை அங்கேயனுப்பி, அவர்களுக்குக்கற்பித்ததாவது, நீங்கள்போயக்கீலேயாத்திலிருக்கிற யாபேசின்குடிகளையும்பெண்சாதிகளையும பிள்ளைகளையும பட்டயக் கூர்மையாலேவெட்டி,

யக செய்யவேண்டியதேதெனிற், சகல ஆணபிள்ளைகளையும்புருஷனையறிந்தசகலபெண்பிள்ளைகளையுஞ் சங்கரிக்கக்கடவீர்களென்றுகற்பித்தார்கள்.

யஉ இவர்கள்கீலேயாத்திலிருக்கிறயாபேசின குடிகளிடத்திலே புருஷனையறியாதகன்னிகைகளாகியநானூறுபெண்பிள்ளைகளைக்கண்டுபிடித்து அவர்களைக்கானானதேசமானசீலோவிலிருக்கிற பாளயத்திலேகொண்டுவந்தார்கள்.

யங அப்போதுரிம்மோனகல்மலையிலிருக்கிறபென்யமீனபுத்திரரோடேபேசவும அவர்களுக்குச்சமாதானத்தைக்கூறவுஞ்சபையாரெல்லாரும மனுஷரை யனுப்பினார்கள்.

யச அப்படியே அக்காலத்திற்பென்யமீனர் திரும்பவந்தார்கள். கீலேயாத்திலிருக்கிறயாபேசினஸ்திரீகளில உயிரோடேவைத்தபெண் பிள்ளைகளை யவர்களுக்குக்கொடுத்தார்கள். ஆனாலுமின்னும அவர்களுக்குத்தேவையானவர்களை இந்தப்பிரகாரமாகக் கண்டுபிடிக்கக் கூடாதிருந்தது.

யரு இஸ்ரவேலகோத்திரங்களிலே கர்த்தர் ஒருகிழிவையுண்டாக்கினாரென்றுசனம்பென்யமீனருக்காகமனஸ்தாபப்பட்டது.

யசா பென்யமீன்கோத்திரஸ்திரீகள அழிந்தபடியினாலே குறைபட்டிருக்கும்பெண்சாதிகளையடைகிறதற்காக என்னசெய்வோமென்றுசபையின மூப்பானவர்கள கேட்டு,

யஎ இஸ்ரவேலில ஒருகோத்திரம்நிர்மூலமாகாதபடிக்குத் தப்பினவர்களுடையசுதந்தரம பென்யமீனுக்குத்தானேயிருக்கவேண்டுமேயென்றும,

யஅ நாமோவென்றால நம்முடையகுமாரத்திகளில அவர்களுக்குப்பெண்கொ

க்கக்கூடாது. ஏனெனில் பென்யமீனருக்குப்பெண்கொடுக்கிறவன் சபிக்கப்பட்டவனென்று இஸ்ரவேல்புத்திரர் ஆணையிட்டார்களென்றுசொல்லிக் கொண்டார்கள்.

௰௯ அப்போது இதோ, சீலோவிலே வருஷந்தோறும் கர்த்தரின் பண்டிகையாயிருக்கின்றது. அந்தப்பெத்தேலுக்கு வடக்கேபெத்தேலிலிருந்து சீகேமுக்கேறிப்போகிறபாதைக்குச்சூரியோதயமுனையாகவும்லெபோனாவுக்குத் தெற்காகவும் ஆசரிக்கப்படுமென்றுசொல்லி,

௨௰ அவர்கள் பென்யமீன் புத்திரருக்குக்கற்பித்ததாவது. நீங்கள்போய்த்திவிதாட்சத்தோட்டங்களிலேபதிவிருந்து,

௨௧ இதோ, சீலோவின்குமாரத்திகள் தேவாலயத்தோடே நடனம்பண்ணும்படிக்குப்புறப்பட்டுவருகிறதை நீங்கள்காணும்போது, திவிதாட்சத்தோட்டங்களிலிருந்துபுறப்பட்டு உங்களில்லவரவர்சீலோவின்குமாரத்திகளிலே தனக்கொருபெண்ணைப்பிடித்துப் பென்யமீன்தேசத்திற்குப்போங்கள்.

௨௨ அவர்களுடையதகப்பன்மாராகிலும் அவர்கள்சகோதரராகிலும் எங்களோடேவழக்காடவருகிறதுண்டானால், நாங்களவர்களுடனே, எங்களுக்காக அவர்களைப்பேரில் இரக்கமாயிருங்கள். ஏனெனில் நாங்கள்யுத்தம்பண்ணி அவனவனுக்குப்பெண்சாதியை வாங்கிக்கொடுக்கவில்லை உங்கள்மேல் இப்போது குற்றமுண்டாக நீங்கள் அவர்களையிவர்களுக்குக் கொடுக்கவுமில்லை யென்பேமென்று சொன்னார்கள்

௨௩ பென்யமீன் புத்திரர் அப்படிச்செய்து நிருத்தியமவாடுகிற பெண்பிள்ளைகளிலேதங்கள் இலக்கத்திற்குச் சரியானவர்களைப்பறித்துக்கொண்டு, தங்கள்சுதந்தரத்திற்குத்திரும்பப் போய்ப்பட்டணங்களைக்கட்டி, அவைகளிற்குடியிருந்தார்கள்.

௨௪ இஸ்ரவேல்புத்திரரும் அக்காலத்திலே அவ்விடம்விட்டு அவரவர் தங்கள் கோத்திரத்திற்குந்தங்கள்வம்சத்திற்கும் போனார்கள். இப்படியே அவரவர் தங்கள் சுதந்தரத்திற்குப் புறப்பட்டுப்போய்விட்டார்கள்.

௨௫ அந்நாட்களில் இஸ்ரவேலிலராசாவில்லை. அவரவர் தங்கள்பார்வைக்குச்சரியானதைச்செய்தார்கள்.

நியாயாதிபதிகளின் புஸ்தகம் முடிந்ததுமுற்றும்.

# ரூத்தென்பவளின்சரித்திரம்.

## ௧. அதிகாரம்.

மோவாப்சாதியாள்ரூத்தென்றவள்தன்புருஷன்மரணமடைந்ததற்குப் பிற்பாடுதன்மாமியாகியநகோமியோடே கூடபெத்லகேமுக்குவந்தவயணம்.

நியாயாதிபதிகள்நியாயம்விசாரிக்குமநாட்களில்தேசத்திலே பஞ்சமுண்டாகையாற்சம்பவித்ததேதெனில், யூதாககோத்திரமானபெத்லகேமூராகிய ஒருமனுஷன்தன்பெண்சாதியோடும் இரண்டுகுமாரரோடுங்கூடமோவாப் தேசத்திலேபரதேசமாயிருக்கப்போனான்.

௨ அந்தமனுஷனுடையபேர் எலிமெலேக் அவன்பெண்சாதியின்பேர் நகோமி அவனுடையஇரண்டுகுமாரரிலொருவன்பேர்மக்லோன் பின்னொருவன்பேர் கிலியோனயூதாககோத்திரத்துப் பெத்லகேமூராகிய எப்பிருத்தியரான அவர்கள் மோவாப்தேசத்துநாட்டுப் புறங்களில்வந்து அங்கேயிருந்தார்கள்.

௩ நகோமியின்புருஷனாகிய எலிமெலேகோவென்றற்சென்றுபோனான். அவளும்அவளுடைய இரண்டுகுமாரரும் மீதியாயிருந்தார்கள்.

௪ இவர்கள்மோவாப்சாதியானபெண்சாதிகளைவிவாகம்பண்ணினார்கள். ஒருத்தியின்பேர் ஒர்ப்பாள். மற்றவள்பேர் ரூத் அங்கே ஏறக்குறையப்பத்துவருஷம் இருந்தபிறபாடு,

௫ மக்லோனகிலியோனென்ற அவர்களிருவருஞ்சென்றுபோனார்கள். அப்படியே அந்தப்பெண்சாதித்தன் இரண்டுகுமாருக்குந்தன்புருஷனுக்கும்பிறகுமீர்ந்திருந்தாள்.

௬ ஆனாற்கர்த்தர் தம்முடைய சனத்தினுக்கு அப்பங்கொடுக்கும்படிக்கு அவர்களைச் சந்தித்தாரென்று அவள் மோவாபின் நாட்டுப்புறத்திலே கேட்டபடியினாலே அவள் தன் மருமக்களோடேகூட மோவாபின் நாட்டுப்புறங்களிலிருந்து திரும்பிப்போகும்படிக்கெழுந்து,

௭ தன் இரண்டு மருமக்களோடுங்கூடத் தானிருந்த ஸ்தலத்தைவிட்டுப் புறப்பட்டாள். யூதாவின் தேசத்துக்குத் திரும்பிப்போக அவர்கள் வழியிலே நடக்கக்கொள்ள,

௮ நகோமி தன் இரண்டு மருமக்களோடே சொன்னதாவது, நீங்கள் ஒவ்வொருத்தி தன் தன் தாய் வீட்டுக்குத் திரும்பிப்போய்விடுங்கள். நீங்கள் மரித்தவர்களுக்கும் எனக்குஞ் செய்ததுபோலக் கர்த்தர் உங்களுக்குத் தயவுசெய்வாராக.

௯ கர்த்தர் உங்களில் ஒவ்வொருத்திக்குத் தனக்கு வாய்க்கப்போகிற புருஷனுடைய வீட்டிலேயிளைப்பாறுதல் கிடைக்கப்பண்ணுவாராகவென்று சொல்லி, அவர்களை முத்தமிட்டுக்கொண்டாள். அப்போது அவர்கள் சத்தமிட்டழுது அவளுடனே,

௰ உம்முடைய சனத்தண்டைக்கு நாங்களே உம்முடன்கூட வருவோமென்றார்கள்.

௰௧ ஆனால் நகோமி சொன்னதாவது, நீங்கள் திரும்புங்கள். என் குமாத்திகளே! என்னோடே ஏன் வருகிறீர்கள்? உங்களுக்குப் புருஷராகும்படிக்கு இன்னும் என் கெர்ப்பத்திலே எனக்குப் பிள்ளைகளுண்டாகுமோ?

௰௨ என் குமாத்திகளே! திரும்பிக்கொண்டு போங்கள். ஏனென்றால் நானொரு புருஷனுக்கு ஸ்திரியாகிறதற்கு வயது சென்றவள். அப்படிக்கொத்த நம்பிக்கையெனக்குண்டென்று சொல்லி நானின்று இராவைக்கொரு புருஷனுக்கு வாழ்க்கைப்பட்டாலும் நான் பிள்ளைகளைப் பெற்றாலும்,

௰௩ இவர்கள் பெரியவர்களாகுமட்டும் புருஷருக்கு வாழ்க்கைப்படாதபடிக்குப் பொறுத்திருப்பீர்களோ? அது கூடாது. ஏனெனில் என் குமாத்திகளே! கர்த்தருடைய கை என் மேலிறங்கினதினாலே உங்களைப் பார்க்கிலும் எனக்கு மசங்கஸ்தியாயிருக்கின்றதென்றாள்.

௰௪ அப்போது அவர்கள் சத்தமிட்டு அதிகமாயழுதார்கள். ஓர்ப்பாள் தன் மாமியை முத்தமிட்டுப் போனாள். ரூத்தோவென்றால் அவளைவிடாதிருந்தாள்.

௰௫ அப்போது அவள், இதோ, உன்னுடைய ஓர்கத்தித் தன் சனத்தண்டைக்குந் தன்னுடைய தேவர்களண்டைக்குந் திரும்பிக்கொண்டுபோனாளே; நீயுமுன் ஓர்கத்தியின் புறக்காலே திரும்பிக்கொண்டு போவென்றாள்.

௰௬ ஆனால் ரூத் சொன்னதாவது, நானும்மைவிட்டுவிட்டுத் திரும்பிக்கொண்டு போகவேண்டுமென்பதைக் குறித்து, என்னோடே பேசாதிரும். ஏனென்றால் நீர் போகிற இடத்துக்கு வருகிறேன். நீர் இராத்தங்குகிற இடத்திலே தங்குகிறேன். உம்முடைய சனம் என்னுடைய சனம். உம்முடைய பராபரன் என்னுடைய பராபரன்.

௰௭ நீரெங்கே மரணமடைகிறீரோ அங்கே நானும் மரணமடைந்து அடக்கம்பண்ணப்படுவேன். மரணமேயல்லாமல் வேறொன்றும் உம்மையும் என்னையும் பிரித்தால் கர்த்தர் எனக்கு இப்படியும் அப்படியுஞ் செய்யக்கடவரென்றாள்.

௰௮ ஆகையால் தன்னோடேகூடவர அவள் உறுதியாயிருக்கிறதைக் கண்டு, அப்புறம் அவளோடே பேசாதிருந்தாள்.

௰௯ அப்படியே இருவரும் பெத்லகேமட்டும் நடந்துபோனார்கள். அவர்கள் பெத்லகேமுக்குட் பிரவேசிக்கிறபோது, ஊரொல்லாம் அவர்களுக்காக அமளிப்பட்டு, இவள் நகோமியோ? என்று பேசிக்கொண்டார்கள்.

௨௰ ஆனால் அவள் இவர்களோடே சொன்னதாவது, நீங்கள் என்னை நகோமியென்று சொல்லாமல், என்னை மாராவென்று சொல்லுங்கள். ஏனெனிற் சர்வத்திற்கும் வல்லவர் எனக்கு மிகவுங் கசப்பைக்கட்டளையிட்டார்.

௨௧ நான் நிறைவுள்ளவளாய்ப் போனேன். கர்த்தரென்னை வெறுமையுள்ளவளாய்த் திரும்பவர்ப்பண்ணினார். கர்த்தரென்னைச் சிறுமைப்படுத்தி சர்வத்திற்கும் வல்லவர் எனக்குத் தீங்கு கட்டளையிட்டிருக்கக்கொள்ள நீங்களென்னை நகோமியென்பானேனென்றாள்.

௨௨ இந்தப்பிரகாரமாக நகோமி மோவாப் சாதியான தன் மருமகளாகிய ரூத்தோடுங்கூட மோவாபின் நாட்டுப்புறங்களிலிருந்து திரும்பிவந்தாள். வாற்கோதுமையையறுக்கிறநாளதுவக்கிறபோது அவர்கள் பெத்லகேமுக்கு வந்தார்கள்.

## ௨. அதிகாரம்.

ரூத் போவாசுக்கு அறிமுகமானது.

நகோமிக்கோவென்றால் அவளுடைய புருஷனாகிய எலிமெலேக்கினுறமுறையிற போவாசென்றுபேருள்ள பலத்த ஆஸ்திக்காரனாகிய உறமுறையான் ஒருவனிருந்தான்.

உ மோவாப்சாதியான ரூத்தென்பவள் நகோமியுடனே நான் வயல்வெளிக்குப் போய் ஆருடைய கண்களில் எனக்குத் தயவு கிடைக்குமோ அவர் பிறகே கதிர்களை பொறுக்கிக்கொண்டுவருவேனென்றாள். இவள் அவளோடே என்மகளே! போவென்றாள்.

௩ அவள்போய்ச்சேர்ந்து வயல்வெளியில அறுக்கிறவர்களபிறகாலேபொறுக்கினாள். தற்செயலாய் அவளுக்குநேரிட்ட அந்தவயல்நிலம் எலிமெலேக்கின்வம்சத்தாரானபோவாசுடையதாயிருந்தது.

௪ இதோ, போவாசுபெத்லெகேமிலிருந்துவந்து அறுக்கிறவர்களோடே, கர்த்தர் உங்களோடேகூட இருப்பாராகவென்றான். இவர்கள் அவனுடனே, கர்த்தர் உம்மையாசீர்வதிப்பாராகவென்றார்கள்.

௫ பிறகுபோவாசு அறுக்கிறவர்கள மேலேகண்காணியாகவைக்கப்பட்ட தனவேலைக்காரனை, இந்தப்பெண்பிள்ளையாருடையவளென்றுகேட்டான.

௬ அறுக்கிறவர்களமேலேகண்காணியாகவைக்கப்பட்ட அந்தவேலைக்காரன பிரதியுத்தாரமாகச்சொன்னதாவது, இவள்மோவாப் நாட்டுப்புறங்களிலிருந்து நகோமியோடேகூடவந்தமோவாப்சாதியான பெண்பிள்ளை.

௭ அறுக்கிறவர்களபிறகாலே அரிக்கட்டுகளிலேசிந்தினதைத்தானே பொறுக்கிச் சேர்த்துக்கொள்ளட்டுமேயென்று அவள்சொல்லிவந்துகாலமே துவக்கி இந்நமட்டும் இங்கேநின்றாள். அவள்வீட்டிலே தங்கினது கொஞ்சநேரந்தானென்றான்.

௮ அப்போது போவாசு ரூத்தோடே சொன்னதாவது, என்மகளே! கேள் பொறுக்கிக்கொள்ளவேறே வயலிற்போகாமலும் இவ்விடத்தைவிட்டுப் புறப்படாமலும் இங்கே என் ஊழியக்காரப்பெண்களோடே கூடிக்கொண்டிரு.

௯ அவர்கள் அறுப்பறுக்கும் வயலின்மேல் நீ கண்ணோக்கமாயிருந்து, அவர்களபிறகாலேபோவாயாக. ஒருவரும் உன்னைத்தொடாதபடிக்கு வேலைக்காரருக்குக்கற்பித்தேன் உனக்குத்தாகமுண்டானால் நீபாண்டங்களண்டைக்குப்போய், வேலைக்காரர்மொண்டுகொண்டதிலேகுடியென்றான்.

௰ அப்போது அவள் முகங்குப்புறவிழுந்து வணங்கி, அவனுடனே, நானமறுதேசத்தாளாயிருக்கக்கொள்ள நீரென்னைவிசாரிக்க எனக்குகேதினாலே உம்முடைய கண்களிலே தயவு கிடைத்ததென்றாள்.

௰௧ போவாசு அவளுக்குப்பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது, உன்புருஷன மரணமடைந்தபிறபாடு நீ உன்மாமியாருக்காகச்செய்ததும், நீ உன்தகப்பனையும் உன்தாயையும், நீ பிறந்ததேசத்தையும்விட்டு முன்னே நீ யறியாதிருக்கிற சனத்தண்டைக்கு வந்ததுமெல்லாம் எனக்குநன்றாயறிவிக்கப்பட்டது.

௰௨ நீசெய்ததற்குத்தக்கபலனைக்கர்த்தர் உனக்குக்கட்டளையிடுவாராக. இஸ்ரவேலுடைய பராபரனாகிய கர்த்தரின் செட்டைகளுக்குக் கீழாக அடைக்கலமாயவந்த உனக்கு அவராலேவருகிற உன்னுடையபலன நிறைவாயிருக்கக்கடவதென்றான்.

௰௩ அதற்கவள், என்னுடையவனே! உம்முடையகண்களில் எனக்குத் தயவுகிடைக்கட்டும். ஏனெனில்நான உம்முடையவேலைக்காரிகளில் ஒருத்திகொத்தவளாயிராவிட்டாலும், நீரெனக்கு ஆறுதல் சொல்லி, உமதடியாளோடேபட்சமாய்ப்பேசினீரென்றாள்.

௰௪ பின்னையும்போவாசு சாப்பாட்டுவேளையிலஅவளுடனே, நீயிங்கேசேர்ந்து வந்து இந்த அப்பத்திலே புசித்து, உன்துண்டைக்காடியிலே தோயத்துக்கொள்ளென்றான். அப்படியே அவள் அறுக்கிறவர்களருகே யுட்கார்ந்தாள். அவளுக்குவறுத்தகோதுமையைக்கொடுத்தான். அவள் சாப்பிட்டுத்திருத்தியடைந்து இன்னம் மீதியாகவைத்தாள்.

௰௫ அவள்பொறுக்கிக்கொள்ள எழுந்திருக்கிறபோது போவாசு தனவேலைக்காரருக்குக் கற்பித்துச்சொன்னதாவது, அவள் அரிக்கட்டுகள நடுவிலும்பொறுக்கட்டும். அவளையீனமபண்ணீர்களாக.

௰௬ அவளுக்காக அரிகளிலே சிலதைச் சிந்தவிட்டு அவள்பொறுக்கும்படிக்கு வைத்துப்போய் அவளை யதட்டாதிருங்களென்றான்.

௰௭ அப்படியே அவள்சாயங்காலமட்டும் வயலிலே கதிர்பொறுக்கினாள். பொறுக்கினதையவள் தட்டியடித்தது தீர்ந்தபோது அது ஏறக்குறைய ஒருமரக்கால் வாற்கோதுமையாயிருந்தது.

௰௮ அவள் அதை யெடுத்துக்கொண்டுபட்டணத்திற்குவந்தாள். அவள்பொறுக்கினதையவளுடைய மாமி பார்த்தாள். தான்திருத்தியாய்ச் சாப்பிட்டு மீதியாக வைத்ததையுமெடுத்து அவளுக்குக்கொடுத்தாள்.

௧௯ அப்போது அவளுடைய மாமி இன்று எங்கே கதிர் பொறுக்கினாய் எவ்விடத்திலே சம்பாதித்தாயென்றவளைக் கேட்டு, உன்னை விசாரித்தவன் ஆசீர்வதிக்கப்பட்டவனென்றாள். அப்போது அவள் ஆரிடத்திலே தான் அதைச் சம்பாதித்தாளென்று தன் மாமிக்கறிவித்து, நான் இன்று இதைச் சம்பாதித்தவயற்காரன்பேர் போவாசென்றாள்.

௨௰ அப்போது நகோமி தன் மருமகளோடே உயிரோடிருக்கிறவர்களுக்காகவும் மரித்தவர்களுக்காகவுந் தம்முடைய கிருபையை விடாதிருக்கிற கர்த்தராலே அவன் ஆசீர்வதிக்கப்பட்டவனென்றாள். பின்னையும் நகோமியவளுடனே, அந்த மனுஷன் நம்மைச் சேர்ந்த உறமுறையானும் நம்மையாதரிக்கிற சுதந்தரவாளிகளிலொருவனுமாயிருக்கிறானென்றாள்.

௨௧ பின்னையும் மோவாப்சாதியான ரூத், என்னுடைய அறுப்பெல்லாம் அறுத்துத் தீருமட்டும் நீ என் வேலைக்காரிகளோடே கூடிக்கொண்டிரு என்கிறதையும் அவன் என்னோடே சொன்னானென்றாள்.

௨௨ அப்போது நகோமி தன் மருமகளாகிய ரூத்துடனே, என் மகளே! வேறொருவயலிலே மனுஷர் உன்னை யுசம்புகிறதைப் பார்க்கிலும் நீ அவன் வேலைக்காரிகளோடே புறப்பட்டுப் போகிறது நல்லதென்றாள்.

௨௩ அப்படியே வாற்கோதுமையறுப்புங் கோதுமையறுப்புந் தீருமட்டும் அவள் கதிர் பொறுக்கும்படிக்குப் போவாசுடைய வேலைக்காரிகளோடே கூடிக்கொண்டு, தன் மாமியினிடத்திலிருந்தாள்.

## ௩. அதிகாரம்.

போவாசு ரூத்தைச் சுதந்தர்முறைமையாய் விவாகம் பண்ணும்படிக்கினம் பண்ணுமா பேசிக்கொள்ளப்பட்டது.

பிற்பாடு அவள் மாமியாகிய நகோமி அவளுக்குச் சொன்னதாவது, என் மகளே! நீ நன்றாயிருக்கிறதற்கான இளைப்பாறுதலை யுனக்குத் தேடாதிருப்பேனோ?

௨ இப்போதும் நீ கூடிக்கொண்டிருக்கிற வேலைக்காரிகளின் எசமானாகிய போவாசு நம்முடைய உறமுறையானல்லவோ? இதோ, அவன் இராவைக்குக் களத்திலே வாற்கோதுமை தூற்றுவான்.

௩ நீ குளித்து எண்ணெய் பூசி உன் வஸ்திரங்களை யுடுத்துக்கொண்டு, அந்தக் களத்திற்கிறங்கிப்போ. ஆனால் அந்த மனுஷன் போசித்துக் குடித்துத் தீருமட்டும் அவனுக்கு உன்னையறியப்படுத்தாதே.

௪ அவன் படுத்துக்கொண்டபோதோவெனில் அவன் படுத்திருக்குமிடத்தை நீ பார்த்துக்கொண்டிருந்து, போய், அவன் கால்களின் மேல் மூடியிருக்கிறதைக் கிளப்பிப் படுத்துக்கொள். அப்போது நீ செய்யவேண்டியதேதென்று அவனுனக்கறிவிப்பானென்றாள்.

௫ அப்போது இவள் அவளுடனே, நீர் எனக்குச் சொன்னபடியெல்லாஞ் செய்வேனென்று சொல்லி,

௬ அந்தக் களத்துக்கிறங்கிப்போய்த் தன்னுடைய மாமி தனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்தாள்.

௭ போவாசு போசித்துக் குடித்து மனமகிழ்ச்சியாயிருந்து ஒரு அம்பாரத்தடியிலே வந்து படுத்துக்கொண்டான். அப்போது அவள் மெள்ள வந்து அவன் கால்களின் மேல் மூடியிருக்கிறதைக் கிளப்பிப் படுத்துக்கொண்டாள்.

௮ பாதி இராத்திரியிலோவென்றால் அந்த மனுஷன் அருண்டு காலைமுடக்கி இதோ, ஒரு பெண்சாதி தன் பாதத்தண்டையிலே படுத்திருக்கிறதைக் கண்டு,

௯ நீ ஆரென்று கேட்டான். அப்போது அவள், நான் உம்மடியாளாகிய ரூத். நீர் உம்மடியாள் பேரிலே உம்முடைய செட்டையை விரியும். ஏனெனில் நீர் சுதந்தரவாளியென்றாள்.

௰ அதற்கு அவன் சொன்னதாவது, என் மகளே! நீ கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படுவாயாக. நீ தரித்திரவான்களும் அல்லது ஐசுவரியவான்களுமான வாலிபக்காரரின் பிறகாலே போகாதே. போனதிலும் உன்னுடைய முந்தின நற்குணத்தைப் பார்க்கிலும் உன்னுடைய பிந்தின நற்குணம் உத்தமமாயிருக்கின்றது.

௧௧ இப்போதும் என் மகளே! நீ பயப்படாயாக. நீ சொன்னபடியெல்லாம் உனக்குச் செய்வேன். ஏனெனில் நீ புண்ணியவதியென்கிறதை என்னுடைய சனமாகிய ஊராரெல்லாரும் அறிவார்கள்.

௧௨ இப்போதும் நான் சுதந்தரவாளியென்கிறது மெய்தானே. ஆனாலும் என்னிலுங் கிட்டின சுதந்தரவாளியொருவனிருக்கிறான்.

௧௩ இராவைக்குத் தங்கியிரு. நாளைக்கு அவன் உன்னைச் சுதந்தரநியாயமாய் விவாகம் பண்ணச் சம்மதித்தால் நல்லது, விவாகம்பண்ணட்டும். அவன் உன்னை விவாகம்பண்ண மனதில்லாதிருந்தானேயாகில்

ம, நான உன்னைச சுதநதரிபோயமாயவிவாகமபணணுவேனென்று கர்த்தருடைய ஜீவனைக்கொணடுசொலலுகிறேன. விடியற்காலமட்டும படுத்துக்கொண டிருவென்றான.

௰௪ அவள விடியறகாலமட்டும அவனபாதத்தணடை படுத்திருந்து ஒருவரையொருவர் அறியககூடாத நேரத்துக்குமுனனே எழுந்திருந்தாள. ஏனெனில ஒரு பெணசாதி களத்திலேவநத செய்தி அறியபபடாதிருககவேணடுமென்று அவனசொன்னான.

௰௫ பிறபாடு அவன, நீபோர்த்துககொணடிருககிற போர்வையை விரித்துபபிடியென்றான அவள அதைபபிடிக்கிறபோது அவன அதிலே ஆறுபடி வாற்கோதுமையை யளநதுபோட்டு அவளுக்குககொடுத்துவிட்டுப்பட்டணத்திற்குப புறப்பட்டுவந்தான

௰௬ அவள தனமாமியண்டைககுவநதபோது இவள, என மகளே! உன்னுடையசெய்தி என்னவென்றுகேட்டாள. அப்போது அவள அந்தமனுஷன தனக்குச செய்ததையெல்லாம அவளுக்கறிவித்து,

௰௭ நீ உன்மாமியாரண்டைககு வெறுமையாயப்போகவேண்டாமென்று அவன் இந்த ஆறுபடி வாற்கோதுமையையெனக்குக்கொடுத்தானென்றாள.

௰௮ அப்போது இவள, என மகளே! இந்தக்காரியம என்னமாயப்போகுமென்று நீயறியுமட்டும அமர்ந்திரு. ஏனெனில அந்தமனுஷன இன்றைக்கு இந்தக்காரியத்தைமுடிக்குமுன இளைப்பாறுவதிலலையென்றான.

## ௪. அதிகாரம்.

போவாசு ரூத்தைவிவாகமபணணினது.

போவாசு பட்டணவாசலில ஏறிபபோய உட்காரந்துகொணடிருநதான அப்போது இதோ, போவாஸ சொலலியிருந்த அந்தச சுதநதரவாளி கடநதுபோகையில, அவன ஓகோய், சறறு இபபாலேவநது உட்காருமென்றான. அவன வநது உட்காரந்தான.

௨ அப்போது அவன பட்டணத்துமூபபானபேர்களிற் பத்துப்பேரையழைத்து, இங்கேயுட்காருங்களென்றான. அவர்கள உட்காரந்தார்கள.

௩ அப்போது அவன அந்தச சுதநதரவாளிக்குச சொன்னதாவது, எலிமேலேனறநமமுடையசகோதரனுக்கிருநதவயலவெளியினபஙகைமோவாப் நாடடிபபுறங்களிலிருந்துதிருமபிவந்த நகோமியிவிற்றுபபோடுகிறாள.

௪ ஆகையால நீர்அதைமீட்கமனதானால, நீர இங்கேயிருக்கிறவர்களுக்குமுனபாகவும என சனத்தின்மூப்பருக்குமுனபாகவும மீட்டுவாஙகத்தக்கதாக, இதையுமமுடையசெவிகளில அறிவிக்கவேண்டுமென்றிருந்தேன. அதைநீர்மீட்கமனதிலலாதிருந்தாலோ நான் அதையறியுமபடிக்கு எனக்கறிவியும. ஏனென்றால உமமையும உமக்குப்பிற்கு என்னையுந்தவிர அதைமீட்கத்தக்கவனவேறொருவருமிலலையென்றான. அதறகிவன நானதைமீட்பேனென்றான.

௫ அப்போதுபோவாசென்றவன, நீர் நகோமியின்கையிலே அந்தவயலவெளியை வாஙகுகிறநாளிலே நீர்மரித்தவனுடைய சுதநதரத்தில அவனபேரை நிலைநிறுத்தபபணணுமபடிக்கு, அதை மரித்தவனபெணசாதியாகிய மோவாப் சாதியான ரூத்கையிலுமவாஙகவேண்டியதென்றான.

௬ அப்போது அநதசசுதநதரவாளி, நான என்னுடைய சுதநதரத்தைககெடுக்காதபடிக்கு நானதை மீட்டுககொள்ள மாட்டேன. நானமீட்கத்தக்கதைநீர்மீட்டுககொளளும. ஏனென்றால அதைமீட்டுககொளளமாட்டேனென்றான.

௭ மீட்கிறதிலும்மாறறுகிறதிலும்சகலகாரியத்தையுமுறுதியாக்குமபடிக்கு இஸ்ரவேலிலேமுற்காலமுதற்கொண்டுபழக்கம என்னவென்றால, ஒருவனதனனுடைய செருப்பைக்கழற்றி மறறவனுக்குககொடுப்பான. இது இஸ்ரவேலிலே சாட்சிக்கானது.

௮ அப்படியே அநதசசுதநதரவாளி போவாசுககு நீரதைககொளளுமென்று தனசெருப்பைக்கழறறிபபோட்டான.

௯ அப்போதுபோவாசு மூப்பருக்கும எலலாச்சனத்திறகும சொன்னதாவது, எலிமேலேக்குககிருநத தெலலாவறறையும கிலியோனுககும மக்லோனுக்கும இருநததெலலாவறறையும நகோமியின்கையிலேகொணடேனென்கிறதற்கு இன்றையத்தினம நீஙகளசாட்சி.

௰ இதுவுமலலாமல மரித்தவனுடைய சகோதரருக்குளளும ஊராருக்குளளும அவனுடையபேர் வேரறறுபபோகாமல மரித்தவனுடையசுதநதரத்திலே அவனபேரைநிலைநிறுத்தபபணண நானமக்லோனினபெணசாதியாயிருந்த மோவாப்சாதியானரூத்தையெனக்குபபெணசாதியாகப்பலடத்துககொளளுகிறேன. அதற

ரும் இன்றையத்தினம் நீங்கள் சாட்சிகளென்றான்.

௰௧ அப்பொழுது ஒலிமுகவாசலிலிருக்கிற எல்லாச்சனமும் மூப்பானவர்களும் சொன்னதாவது, நாங்கள் சாட்சி. உன் வளவிலே வருகிற பெண்சாதியைக் கர்த்தர் இஸ்ராவேல் வீட்டைக் கட்டுவித்த இரண்டுபேராகிய இராகேலைப் போலும் லேயாளைப்போலும் இருக்கப் பண்ணுவாராக. நீ எப்பிராத்தாவிலே பலத்துப்போய்ப் பெத்லெகேமிலே பேர் பெற்றவனாகக்கடவாய்.

௰௨ இந்தப் பெண்ணிடத்திலே கர்த்தர் உனக்குக் கட்டளையிடப்போகிற வித்தினாலே உன்னுடைய வீடு தாமார் யூதாவுக்குப் பெற்ற பேரேசின் வீட்டைப்போலாகக்கடவதென்றார்கள்.

௰௩ அப்படியே போவாசு ரூத்தை விவாகம்பண்ணினான். அவள் அவனுக்குப் பெண்சாதியானாள். அவன் அவளிடத்தில் உட்பிரவேசித்தபோது அவள் கெர்ப்பந்தரித்து ஒரு ஆண்பிள்ளையைப் பெறக் கர்த்தர் கட்டளையிட்டார்.

௰௪ அப்பொழுது ஸ்திரீகள் நகோமியோடே சொன்னதாவது, இன்று உனக்குச் சுதந்தரவாளியைக் குறைந்துபோகப்பண்ணாத கர்த்தர் இஸ்தோத்தரிக்கப்பட்டவர். அவன் பேர் இஸ்ராவேலிலே பிரபலியமாகக்கடவது.

௰௫ அவன் உன் ஆத்துமத்திறகாரத்தலாய் உன் முதிர்ந்த வயதிலே உன்னைப் பராமரிப்பான். ஏனெனில் உன்னைச் சிநேகித்து ஏழு குமாரரைப்பார்க்கிலும் உனக்கு நலமாயிருக்கிற உன்னுடைய மருமகள் அவனைப் பெற்றாளேயென்றார்கள்.

௰௬ நகோமி அந்தப் பிள்ளையை எடுத்துத் தன் மடியிலே வைத்துக்கொண்டு அதை வளர்க்கிறதாதியானாள்.

௰௭ அயல்வீட்டுக்காரிகள் நகோமிக்கு ஒரு ஆண்பிள்ளை பிறந்ததென்று சொல்லி அதற்குப் பேரிட்டு, அதனை ஓபேத் என்றார்கள். இவன் தாவீதின் தகப்பனாகிய ஈசாயின் தகப்பனானவன்.

௰௮ பேரேசுடைய சந்ததியின் வரிசையாவது, பேரேச் எசுரோனைப் பெற்றான்.

௰௯ எசுரோன் ராமைப் பெற்றான். ராம் அம்மினதாபைப் பெற்றான்.

௨௰ அம்மினதாப் நகசோனைப் பெற்றான். நகசோன் சல்மாவைப் பெற்றான்.

௨௰௧ சல்மா போவாசைப் பெற்றான். போவாசு ஓபேதைப் பெற்றான்.

௨௰௨ ஓபேத் ஈசாயைப் பெற்றான். ஈசாயி தாவீதைப் பெற்றான்.

ரூத்தென்பவளின் சரித்திரம்.
முடிந்தது முற்றும்.

## சாமுவேலின்

# முதலாம் புஸ்தகம்.

### ௧. அதிகாரம்.

சாமுவேலின் பிறப்பு.

௧ எப்பிராயீமின் மலைத்தேசத்திலிருக்கிற சோப்பீமென்னப்பட்ட ராமத்தாயீம் ஊரான ஒரு மனுஷனிருந்தான். அவனுக்கு எல்க்கானாவென்று பேரிருந்தது. அவன் எப்பிராயீமியனாகிய சூப்புக்குப் பிறந்த தோகூவின் குமாரனாகிய எலிகூவின் மகனான எரோகாமின் குமாரன்.

௨ அவனுக்கு இரண்டு பெண்சாதிகளிருந்தார்கள். ஒருத்தி பேர் அன்னாள். மற்றவள் பேர் பெனின்னாள். பெனின்னாளுக்குப் பிள்ளைகளிருந்தது. அன்னாளுக்கோவென்றால் பிள்ளைகளில்லை.

௩ அந்த மனுஷன் சீலோவிலே சேனைகளுடைய கர்த்தரைப் பணிந்துகொள்ளவும் அவருக்குப் பலியிடவும் வருஷந்தோறும் தன் பட்டணத்திலிருந்து போவான். அங்கே கர்த்தரின் ஆசாரியர்களாகிய ஒப்னியும் பினெகாசுமென்ற ஏலியின் இரண்டு குமாரரிருந்தார்கள்.

௪ அங்கே எல்க்கானா பலியிடும் நாளிலே அவன் தன் பெண்சாதியாகிய பெனின்னாளுக்கும் அவளுடைய எல்லாக் குமாரருக்கும் குமாரத்திகளுக்கும் பங்குகளைக் கொடுத்து,

௫ அன்னாளுக்கோவென்றால் ஒரு நல்ல பங்கைக் கொடுப்பான். ஏனெனில் அன்னாளைச் சிநேகித்துக்கொண்டிருந்தான். க

ளும் கர்த்தர் அவள் கெர்ப்பத்தையடைத்திருந்தார்.

௬ கர்த்தர் அவள் கெர்ப்பத்தையடைத்தபடியினாலே அவளுடைய சக்களத்தி அவளை மிகவும் மனமடிவாக்குவாள்.

௭ அவள் கர்த்தருடைய வீட்டிற்குப் போகிற சமயத்திலே வருஷந்தோறும் அந்தப்பிரகாரமாய்ச் செய்வாள்; ஆகையால் இவள் அவளை மனமடிவாக்குவாள். அப்போது அவள் அழுதுகொண்டு போசியாதிருப்பாள்.

௮ அவள் புருஷனாகிய எல்க்கானா அவளுடனே, அன்னாளே! ஏன் அழுகிறாய்? ஏன் போசியாதிருக்கிறாய்? ஏன் மனஞ்சலிப்பாயிருக்கிறாய்? பத்துக் குமாரரைப் பார்க்கிலும் நான் உனக்கு நலமாயிருக்கவில்லையோ என்றான்.

௯ அப்போது அன்னாள் சீலோவிலே போசித்துக் குடித்த பிற்பாடு எழுந்திருந்தாள். ஆசாரியனாகிய ஏலியோவென்றால் கர்த்தருடைய தேவாலயத்தின் வாசல் நிலையண்டையிலே ஒரு ஆசனத்தின்மேல் உக்கார்ந்திருந்தான்.

௰ அவள் போய் மனத்துக்கமாய்க் கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணி, அழவே அழுது,

௰௧ ஒரு பொருத்தனைபண்ணிச் சொன்னதாவது, சேனைகளுடைய கர்த்தாவே! தேவரீர் உமதடியாளின் சிறுமையைப் பார்க்கவே பார்த்து, உமதடியாளை மறவாமல் என்னை நினைத்து, உமதடியாளுக்கு ஒரு ஆண்பிள்ளையைக் கொடுத்தால், நான் அவனை அவன் உயிரோடிருக்குஞ் சகல நாளுங் கர்த்தருக்கொப்புக்கொடுப்பேன். அவன் தலையின்மேல் சவர்க்கத்தி படுவதில்லையென்றாள்.

௰௨ அவள் கர்த்தருக்கு முன்பாக அநேகநேரம் விண்ணப்பம்பண்ணுகிறபோதோவெனில், ஏலி அவள் வாயைக் கவனித்துக்கொண்டிருந்தான்.

௰௩ ஏனென்றால் அன்னாள் தன் இருதயத்திலே பேசினாள். அவளுடைய உதடுகள் மாத்திரம் அசைந்தது. அவள் சத்தமோ கேட்கப்படவில்லை. ஆகையால் அவள் வெறித்திருக்கிறாளென்று ஏலி நினைத்து,

௰௪ அவளுடனே, எந்தமட்டும் வெறித்திருப்பாய். உன் வெறி உன்னைவிட்டு நீங்கட்டுமென்றான்.

௰௫ அன்னாளோவென்றால் பிரத்தியுத்தரமாகச் சொன்னதாவது, அப்படியில்லை. என்னுடையவனே! நான் மனக்கிலேசமுள்ள பெண்சாதி. நான் திராட்சப்பழரசமாகிலும் லாகிரியுள்ள பானமெனகிலுங் குடிக்கவில்லை. நான் கர்த்தருக்கு முன்பாக என் இருதயத்தை ஊற்றிப்போட்டேன்.

௰௬ உமதடியாளைப் பேலியாளின் மகளாக எண்ணாதிருப்பீராக. ஏனென்றால் என்னுடைய பெரிய விசாரத்தினாலும் மனஸ்தாபத்தினாலும் இந்நேர மட்டாகப் பேசிக்கொண்டிருந்தேனென்றாள்.

௰௭ அப்போது ஏலி பிரத்தியுத்தரமாக, நீ சமாதானத்துடனே போ. நீ இஸ்ரவேலின் பராபரனைக் கேட்ட உன் விண்ணப்பத்தை அவர் உனக்குக் கட்டளையிடுவாரென்றான்.

௰௮ அப்போது அவள், உமதடியாளுக்கு உம்முடைய கண்களிலே தயவு கிடைக்கக்கடவதென்றாள். பிற்பாடு அந்தப் பெண்சாதி தன்வழியே போய்ச் சாப்பிட்டு அப்புறந் துக்கமுகமாயிராதிருந்தாள்.

௰௯ அவர்கள் காலமே எழுந்திருந்து கர்த்தரைப் பணிந்துகொண்டு, திரும்பிப் போய், இராமாவிலிருக்கிற தங்கள் வீட்டுக்கு வந்தார்கள். எல்க்கானா தன் பெண்சாதியாகிய அன்னாளை அறிந்தபோது, கர்த்தர் அவளை நினைத்தார்.

௨௰ சிலநாட் சென்ற பிற்பாடு அன்னாள் கெர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்று, அவனுக்குச் சாமுவேலென்று பேரிட்டாள். ஏனெனில் கர்த்தரிடத்தில் அவனைக் கேட்டேனென்றாள்.

௨௧ எல்க்கானாவென்கிற புருஷன் கர்த்தருக்கு வருஷாந்தரஞ் செலுத்தும் பலியையுந் தன் பொருத்தனையையுஞ் செலுத்துகிறதற்குத் தன் வீட்டாரனைவரோடுங்கூட ஏறிப்போகிறபோதோவெனில்,

௨௨ அன்னாள் கூடப்போகவில்லை. ஏனென்றால் பிள்ளை முலைமறந்த பிற்பாடு அவன் கர்த்தரின் சந்நிதியிலே காணப்படவும், அங்கே என்றைக்குமிருக்கவும், நான் அவனைக் கொண்டுபோய் விடுவேனென்று தன் புருஷனுக்குச் சொன்னாள்.

௨௩ அப்போது அவள் புருஷனாகிய எல்க்கானா அவளுடனே, நீ உனக்குச் சம்மதியானபடி செய்து, அவனை முலைமறக்கப்பண்ணுமட்டும் இரு. கர்த்தர் தம்முடைய வார்த்தையை மாத்திரம் நிறைவேற்றுவாராகவென்றான். அப்படியே அந்தப் பெண்சாதி தன் பிள்ளையைப் பால்மறக்கப்பண்ணுமட்டும் அதற்கு முலைகொடுத்தாள்.

௨௪ அவள் அவனைப் பால்மறக்கப்பண்ணின்பிறபாடு மூன்று காளையெருதுகளையும் ஒரு மரக்காலமாவையும் ஒரு துருத்தி திராட்சப்பழ இரசத்தையும், அவனையுங்கூட்டிக்கொண்டுபோய்ச் சீலோவிலிருக்கிற கர்த்தருடைய வீட்டுக்கு வந்தாள். பிள்ளையின்னங் குழந்தையாயிருந்தது.

௨௫ அவர்கள் ஒரு காளையெருதைப் பலியிட்டுப் பிள்ளையை ஏலியண்டைக்குக் கொண்டுவந்துவிட்டார்கள்.

௨௬ அவள் சொன்னதாவது, என்னுடைய ஆண்டவனே! கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ண இங்கே உம்மண்டையிலே நின்றபெண்ணாகிய நான்தானென்று என்னுடையவனாகிய உம்முடைய ஆத்துமத்தின் ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.

௨௭ இந்த ஆண்பிள்ளையைக் கட்டளையிட விண்ணப்பம்பண்ணினேன். நான் கர்த்தரைக் கேட்ட என் விண்ணப்பத்தை அவர் எனக்குக் கட்டளையிட்டார்.

௨௮ ஆகையால் அவன் கர்த்தருக்கென்று கேட்கப்பட்டபடியினாலே அவனை அவனுயிரோடிருக்கிற சகல நாளும் கர்த்தருக்கே ஒப்புக்கொடுக்கிறேனென்றாள். அவர்களங்கே கர்த்தரைப் பணிந்துகொண்டார்கள்.

## ௨. அதிகாரம்.

அன்னாள் கர்த்தருக்குச் செலுத்தின இஸ்தோத்திரம்.

அப்போது அன்னாள் ஜெபம்பண்ணிச் சொன்னதாவது, என் இருதயங் கர்த்தருக்குள் களிகூருகிறது, என்னுடைய கொம்பு கர்த்தருக்குள் உயர்ந்திருக்கிறது. என் சத்துருரின்பேரிலே வாய்விரிவாயிருக்கிறது ஏனெனில் உம்முடைய இரட்சிப்பினாலே சந்தோஷப்படுகிறேன்.

௨ கர்த்தரைப்போலே பரிசுத்தவானில்லை. ஏனெனில் உம்மையல்லாமலவேறொருவரில்லை. எங்கள் பராபரனைப்போலே கன்மலையில்லை.

௩ பெருமையும் மேட்டிமையுமான அகங்கம்பேச்சைப்பேசாதேயுங்கள் கடினமான பேச்சு உங்கள் வாயிலிருந்து புறப்படவேண்டாம். ஏனென்றால் கர்த்தர் மகா அறிவுள்ள பராபரன். அவர் செய்கைகள் நிதானிக்கப்படுகிறதல்லவோ?

௪ பலவான்களின் வில் உடைந்தது. தள்ளாடினவர்களோவென்றால் பலத்தினாலே இடைகட்டப்பட்டார்கள்.

௫ அப்பத்தால் திருப்தியாயிருந்தவர்கள் கூலிக்கு வேலைசெய்கிறார்கள். பசியாயிருந்தவர்களோ இனி அப்படிக்கொத்தவர்களல்ல. மலடியானவள்தானே ஏழுபெற்றாள். அநேகம்பிள்ளைகளைப்பெற்றவளோ பலட்சயப்பட்டாள்.

௬ கர்த்தர் கொல்லுகிறவரும் உயிர்ப்பிக்கிறவருமாயிருக்கிறார்; பாதாளத்தில் இறங்கவும் அதிலிருந்தேறவும் பண்ணுகிறவருமாயிருக்கிறார்.

௭ கர்த்தர் ஏழையாக்குகிறவரும் ஐசுவரியமடையப்பண்ணுகிறவரும், தாழ்த்துகிறவரும் உயர்த்துகிறவருமாயிருக்கிறார்.

௮ பிரபுக்களோடே உட்காரப்பண்ணவுங் கனமுள்ள ஆசனத்தைச் சுதந்தரிக்கப்பண்ணவும் அவர் எளிமையானவனைத் தூளிலிருந்தெடுத்து, தரித்திரனைக் குப்பையிலிருந்துயர்த்துகிறார். ஏனென்றால் பூமியின் அஸ்திவாரங்கள் கர்த்தருடையவைகள் அவைகள்மேலே பூச்சக்கரத்தை வைத்தார்.

௯ தம்முடைய சன்மார்க்கரின் கால்களைக் காப்பார். ஆகாதவர்களோ இருளிலே அமர்ந்திருக்கப்பண்ணப்படுவார்கள். ஏனென்றால் பலத்தினால் ஒருவனும் மேற்கொள்ளக்கூடாது.

௰ கர்த்தரோடே வழக்காடுகிறவர்கள் நொறுக்கப்படுவார்கள். வானத்திலிருந்து அவர்கள்மேலே குமுறுவார். கர்த்தர் பூமியின் கடையாந்தரங்களை நியாயந்தீர்த்துத் தம்மால் வைத்த இராசாவுக்குப் பலன் கொடுத்துத் தாம் அபிஷேகம்பண்ணினவரின் கொம்பை உயரப்பண்ணுவாரென்றாள்.

௧௧ பிறபாடு எல்க்கானா இராமாவிலிருக்கிற தன் வீட்டுக்குப்போனான். அந்தப் பிள்ளையோவென்றால் ஆசாரியனாகிய ஏலிக்குமுன்பாகக் கர்த்தரைச் சேவித்துக்கொண்டிருந்தது,

ஏலியின் குமாரருக்குக் கொடுத்த இளக்காரம்.

௧௨ ஆனால் ஏலியின் குமாரர் பேலியாளின் பிள்ளைகளாயிருந்தார்கள். அவர்கள் கர்த்தரையறிந்ததில்லை.

௧௩ அந்த ஆசாரியர்கள் சனத்தைநடப்பித்தவயனம் என்னவென்றால், எவனாகிலும் யாதொரு பலியைச் செலுத்துகிறபோது, இறைச்சிவேகக்கொள்ள ஆசாரியனுடைய வேலைக்காரன் மூன்று கூருள்ள ஒரு ஆயுதத்தைத் தன்கையிலே பிடித்து வந்து,

௰௪ அதிலே கொப்பரையிலே அல்லது பானையிலே அல்லது சருவத்திலே அல்லது சட்டியிலேகுத்துவான். அந்த ஆயுதத்திலேவருகிறதையெல்லாம் ஆசாரியன்வாங்கிக்கொள்வான். அப்படி அங்கே சீலோவிலேவருகிற இஸ்ரவேலருக்கெல்லாஞ்செய்தார்கள்.

௰௫ கொழுப்பைக்கொளுத்தாததற்கு முன்னும் ஆசாரியனுடைய வேலைக்காரன் வந்து, பலியிடுகிற மனுஷனோடே, ஆசாரியனுக்குப் பொரிக்கத்தக்கதாக இறைச்சிகொடு. ஏனென்றால் பச்சை இறைச்சியேயல்லாமல் அவித்ததை உன்கையிலே வாங்குகிறதில்லையென்பான்.

௰௬ அந்த மனுஷன் இவனுடனே, இன்றுசெய்யவேண்டியபடி முந்திக்கொழுப்பைக்கொளுத்திப்போட்டும். பிற்பாடு உன்மனவிருப்பத்தின்படி எடுத்துக்கொள்ளென்றுசொன்னாலும், இல்லை, அப்படியல்ல இப்பொழுதே கொடு. இல்லாவிட்டாற் பலவந்தமாயெடுத்துக்கொள்வேனென்பான்.

௰௭ ஆனதுகொண்டு அந்தவாலிபரின் பாவங் கர்த்தரின்சந்நிதிக்குமுன்பாக மிகுதியும்பெரியதாயிருந்தது. ஏனெனில் மனுஷர் கர்த்தரின் காணிக்கையை யசட்டைபண்ணினார்கள்.

௰௮ சாமுவேலாவென்றாற் சணல்நூற்சால்வைதரித்த பிள்ளையாண்டானாய்க் கர்த்தருக்கு முன்பாகச் சேவித்திருந்தான்.

௰௯ அவனுடையதாய்வருஷந்தோறுஞ்செலுத்தும்பலியைச்செலுத்துகிறதற்காகத்தன் புருஷனோடுங்கூடவந்தேறும்போதெல்லாம் அவனுக்கு ஒருசின்னச்சட்டையைத் தைத்துக்கொண்டு வருவாள்.

௨௰ ஏலி எல்க்கானாவையும் அவன்பெண்சாதியையும் ஆசீர்வதித்து. இந்தஸ்திரீ கர்த்தரைக்கேட்டவிண்ணப்பத்திற்காகக் கர்த்தர் உனக்கு அவளாலேசந்தானங்கட்டளையிடுவாராகவென்றான். அவர்கள் திரும்பத்தங்கள் தானத்திற்குப்போய்விட்டார்கள்.

௨௧ அப்படியே கர்த்தர் அன்னாளைவிசாரித்தார். அவள்கெர்ப்பந்தரித்து மூன்றுகுமாரரையும் இரண்டு குமாரத்திகளையும்பெற்றாள். ஆனாற்சாமுவேலென்றபிள்ளையாண்டான் கர்த்தருக்குமுன்பாக வளர்ந்தான்.

௨௨ ஏலியோவென்றால் மெத்தக்கிழவனாயிருந்தான். அவன் தன்னுடையகுமாரர் இஸ்ரவேலுக்கெல்லாஞ்செய்கிறதெல்லாவற்றையும் அவர்கள் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலிற்கூடித் திரட்சியாய்வருகிற ஸ்திரீகளோடே சயனிக்கிறதையுங்கேட்டு.

௨௩ அவர்களோடேசொன்னதாவது, நீங்கள் இப்படிக்கொத்த காரியங்களைச்செய்கிறதென்ன? ஏனென்றால் நான் இந்த எல்லாச்சனத்தின்வாயிலும் உங்கள் பொல்லாத அக்கிரமங்களைக் கேட்கிறேன்.

௨௪ என்குமாரரே! வேண்டாம். ஏனென்றால் நான்கேட்கிற இந்தக்கீர்த்திநல்லதல்ல. கர்த்தருடைய சனம்மீறிநடக்கிறதற்குக்காரணமாயிருக்கிறீர்கள்.

௨௫ மனுஷனுக்கு விரோதமாக மனுஷன்பாவஞ்செய்தால், நியாயாதிபதிகள் அவனைத் தீர்ப்பார்கள். ஒருவன் கர்த்தருக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்தானேயானால், அவனுக்காகவிண்ணப்பஞ்செய்யத்தக்கவனார்என்றான். ஆனால் அவர்கள் தங்கள் தகப்பன்சொற்கேளாமற்போனார்கள். அதேதென்றால் அவர்களைக்கொன்றுபோடக்கர்த்தர்சித்தமாயிருந்தார்.

௨௬ சாமுவேலென்றபிள்ளையாண்டானோவெனில் வளர்ந்தேறிக்கர்த்தருக்கும மனுஷருக்கும்பிரியமாகநடந்தான்.

## ஒரு தீர்க்கதரிசியினாலே ஏலிகடிந்துகொள்ளப்பட்டது.

௨௭ பராபரனுடையமனுஷன் ஒருவன் ஏலியண்டைக்கு வந்து, அவனோடே சொன்னதாவது, கர்த்தர் உரைக்கிறதேதெனில், உன்பிதாவின்வீட்டார் எகிப்திலே பார்வோனின்வீட்டிலிருக்கக்கொள்ள நாம் நம்மையவர்களுக்குவெளிப்படுத்தி,

௨௮ நம்முடையபலிபீடத்தின்மேலே பலியிடுகிறதற்குந் தூபங்காட்டுகிறதற்கும், நமக்கு முன்பாக ஆசாரியச்சால்வையைப்போர்த்துக்கொண்டிருக்கிறதற்கும், இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாம் அவனைநமக்கு ஆசாரியனாகத் தெரிந்துகொண்டு உன்பிதாவின் வீட்டாருக்கும், இஸ்ரவேல்புத்திரருடைய தகனபலிகளையெல்லாங்கொடுத்திலலையோ?

௨௯ வாசஸ்தலத்திலே செலுத்தநாம் கற்பித்த நம்முடைய பலியையும் நம்முடைய காணிக்கையையும் நீங்கள் உதைப்பானேன்? நம்முடையசனமாகிய இஸ்ரவேலின் காணிக்கைகளிலெல்லாம் பிரதானமானதுகளு

ல் உங்களைக் கொழுக்கப்பண்ணும்படிக்கு நீ நம்மைப்பார்க்கிலும் உன் குமாரரை யெண்ணுவானேனென்கிறார்.

௩௰ ஆகையால் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது, உன் வீட்டாரும் உன் பிதாவின் வீட்டாரும் என்றைக்கும் நம்முடைய சந்நிதியிலே நடந்துகொள்வார்களென்று நாம் சொல்லிச் சொல்லியிருந்தாலும். இப்போது அது நமக்குத் தூரமாயிருப்பதாக. ஏனென்றால் நம்மைக் கனம்பண்ணுகிறவர்களைக் கனம்பண்ணுவோம் ஆனால் நம்மையசட்டைபண்ணுகிறவர்கள் கனவீனமாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௰௧ இதோ, உன் வீட்டில் ஒரு கிழவனுமிராதபடிக்கு உன் புயத்தையும் உன் பிதாவுடைய வீட்டாரின் புயத்தையும் நாம் தறித்துப்போடும் நாட்கள் வரும்.

௩௰௨ இஸ்ரவேலுக்குச் செய்யப்படும் சகல நன்மைக்குப் பதிலாக வாசஸ்தலத்திலே நெருக்கத்தைக் காண்பாய். என்றைக்கும் உன் வீட்டில் ஒரு கிழவனுமிருப்பதில்லை.

௩௰௩ நம்முடைய பலிபீடத்தைச் சேவிக்க நாம் உன் சந்ததியில் நிர்மூலமாக்காதவர்களோவென்றால் உன் கண்களைப் பூத்துப்போகப்பண்ணவும் உன் ஆத்துமத்தை வேதனைப்படுத்தவும் வைக்கப்படுவார்கள். உன் வீட்டாரின் திரளெல்லாம் புருஷரானபோது சாவார்கள்.

௩௰௪ ஒப்னி பினெகாசென்ற உன்னுடைய இரண்டு குமாரரின் மேல் வருங்காரியம் அதற்குனக்கு அடையாளமாயிருக்கும். அவர்கள் இருவரும் ஒரே நாளிலே சாவார்கள்.

௩௰௫ ஆனால் நம்முடைய இருதயத்திற்கும் நம்முடைய ஆத்துமத்திற்கும் ஏற்றபடி செய்யப்போகிற உண்மையான ஒரு ஆசாரியனை நமக்கு எழும்பப்பண்ணி, அவனுக்கு நிச்சயமான வீட்டைக் கட்டுவோம். அவன் நம்மால் அபிஷேகம்பண்ணப்பட்டவனுக்கு முன்பாகச் சகல நாளும் நடந்துகொள்வான்.

௩௰௬ சம்பவிப்பதேதென்றால் உன் வீட்டில் மீதியாயிருப்பவனெல்லாம் அவன் ஒரு வெள்ளிப்பணத்தையும் ஒரு அப்பத் துண்டையும் கேட்கிறதற்கு வந்து, நான் கொஞ்சம் அப்பம் சாப்பிட என்னை யாதொரு ஆசாரிய ஊழியத்தில் சேர்த்துக்கொள்ளும் என்பார்களென்று சொன்னாரென்றான்.

## ௩. அதிகாரம்.

சாமுவேலுக்குக் கர்த்தருண்டான தரிசனம்.

சாமுவேலென்ற பிள்ளையாண்டான் ஏலிக்கு முன்பாகவிருந்து கர்த்தரைச் சேவித்துக்கொண்டிருந்தான். அந்நாட்களிலே கர்த்தருடைய வசனம் அபூருபமாயிருந்தது. வெளியரங்கமான தரிசனமிருந்ததில்லை.

௨ ஒருநாளிலே சம்பவித்ததேதென்றால் ஏலி தன்னுடைய தானத்திலே படுத்துக்கொண்டிருந்தான். அவன் பார்க்கக்கூடாதபடிக்கு அவனுடைய கண்கள் அப்போது இருளடையத்துவக்கிறது.

௩ பராபரனுடைய பெட்டியிருக்கிற கர்த்தருடைய தேவாலயத்திலே பராபரனுடைய விளக்கு அவிக்கப்படுகிறதற்குமுன்னே சாமுவேலும் படுத்துக்கொண்டிருந்தான்.

௪ அப்போது கர்த்தர் சாமுவேலைக் கூப்பிட்டார். அதற்கு அவன், இதோ, இங்கேயிருக்கிறேனென்று சொல்லி,

௫ ஏலியண்டைக்கு ஓடி, இதோ, இங்கேயிருக்கிறேன். ஏனென்றால் என்னைக் கூப்பிட்டீரேயென்றான். அவனோவென்றால், நான் கூப்பிட்டதில்லை. திரும்பிப்போய்ப் படுத்துக்கொள்ளென்றான். அவன் போய்ப் படுத்துக்கொண்டான்.

௬ மறுபடியுங் கர்த்தர் சாமுவேலே! என்று கூப்பிட்டார். அப்போது சாமுவேல் எழுந்திருந்து ஏலியண்டைக்குப்போய் இதோ, இருக்கிறேன். ஏனெனில் என்னைக் கூப்பிட்டீரேயென்றான். ஆனால் அவன் என் மகனே! நான் உன்னைக் கூப்பிடவில்லை. திரும்பிப்போய்ப் படுத்துக்கொள்ளென்றான்.

௭ சாமுவேலோவெனில் கர்த்தரை இன்னம் அறிந்ததில்லை. ஏனெனில் கர்த்தருடைய வார்த்தை அவனுக்கின்னம் வெளிப்பட்டதில்லை.

௮ கர்த்தர் மறுபடியும் மூன்றாம்விசை, சாமுவேலே! என்று கூப்பிட்டார். அவன் எழுந்திருந்து ஏலியண்டைக்குப்போய், இதோ இருக்கிறேன். ஏனென்றால் என்னைக் கூப்பிட்டீரேயென்றான். அப்போது கர்த்தர் பிள்ளையாண்டானைக் கூப்பிடுகிறாரென்று ஏலி அறிந்து,

௯ சாமுவேலுடனே, நீ போய்ப் படுத்துக்கொள். உன்னைக் கூப்பிடுகிறதுண்டானால், அப்போது நீ கர்த்தாவே! சொ

## ௫. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டியைப் பெலிஸ்தர் தங்கள் தேசத்திலே கொண்டு போனது.

பெலிஸ்தரோவென்றால் பராபரன் பெட்டியைப் பிடித்து, அதை எபெனேசரிலிருந்து அஸ்தோத்திற்குக் கொண்டு போனார்கள்.

௨ பெலிஸ்தர் பராபரனுடைய பெட்டியைப் பிடித்துத் தாகோனின் வீட்டிலே கொண்டுவந்து தாகோனண்டையிலே வைத்தார்கள்.

௩ அஸ்தோத்தூரார் மறுநாட்காலமே யெழுந்திருந்து வந்தபோதோவென்றால், இதோ, தாகோனென்ற விக்கிரகம் கர்த்தருடைய பெட்டிக்கு முன்பாக முகங்குப்புறத் தரையிலே விழுந்து கிடந்தது. அப்போது அவர்கள் தாகோனை யெடுத்து அதையதின் தானத்திலே திரும்ப நிறுத்தினார்கள்.

௪ அவர்கள் மறுநாட்காலமே யெழுந்திருந்து வந்தபோதோவென்றால், இதோ, தாகோன் கர்த்தருடைய பெட்டிக்கு முன்பாக முகங்குப்புறத் தரையிலே விழுந்து கிடந்ததுமல்லாமல் தாகோனின் தலையும் அதின் இரண்டு கைகளும் வாசற்படியின்மேல் வெட்டப்பட்டுக் கிடந்தது. உடல் மாத்திரந் தாகோனிலே மீதியாயிருந்தது.

௫ ஆனதுகொண்டு இந்நாள்வரைக்குந் தாகோனின் பூசாரிகளுந் தாகோனின் வீட்டிற்குட் பிரவேசிக்கிற ஒருவரும் அஸ்தோத்திலிருக்கிற தாகோனுடைய வாசற்படியை மிதிக்காதிருக்கிறார்கள்.

௬ ஆகிலும் பராபரனுடைய கை அஸ்தோத்தாரின்மேல் அவர்களைப் பாழாக்குமடிக்குப் பாரமாயிருந்தது. அவர் அஸ்தோத்தின் மனுஷராகிய அவர்களையும் அதின் எல்லைகளுக்குள்ளிருக்கிறவர்களையும் மூலவியாதியினால் வாதித்தார்.

௭ இப்படியாயிற்றென்கிறதை அஸ்தோத்தின் மனுஷர் கண்டபோது, இஸ்ரவேலுடைய பராபரனின் பெட்டி நம்மிடத்திலிருக்கப்போகாது. ஏனெனில் அவருடைய கை நம்முடையமேலும் நம்முடைய தேவனாகிய தாகோனின்மேலும் கடினமாயிருக்கின்றதென்று சொல்லி,

௮ பெலிஸ்தரின் அதிபதிகளை யெல்லாம் அழைத்தனுப்பித் தங்களண்டையிலே கூட்டிக்கொண்டு, இஸ்ரவேலுடைய பராபரனின் பெட்டிக்கு நாஞ்செய்ய வேண்டியதென்னவென்றார்கள். அவர்கள் அதைக்காத்ப் பட்டணமட்டுஞ் சுற்றியெடுத்துக்கொண்டு போகவேண்டுமென்றார்கள். அப்படியே இஸ்ரவேலுடைய பராபரனின் பெட்டியைச் சுற்றியெடுத்துக் கொண்டுபோனார்கள்.

௯ அதைச் சுற்றியெடுத்துக் கொண்டு போனபிறபாடோவென்றால் கர்த்தருடைய கை அந்தப் பட்டணத்தின் மேலே மகா பெரிய மும்முரமாக வந்தது, சிறியவர்களைத் துவக்கிப் பெரியவர்கள் மட்டுமிருக்கிற அந்தப் பட்டணத்தின் மனுஷருக்குள்ளே மூலவாதைகளையுண்டாக்கி அவர்களையடித்தார்.

௰ ஆகையாற் பராபரனுடைய பெட்டியை எக்கிரோனுக்கனுப்பினார்கள். அது எக்கிரோனுக்கு வருகிறபோதோவென்றால் எக்கிரோனூரார் கூப்பிட்டுக்கொண்டு, என்னையும் என்னுடைய சனத்தையுங் கொன்றுபோட இஸ்ரவேலுடைய பராபரனின் பெட்டியைச் சுற்றியெடுத்து என்னண்டைக்குக் கொண்டுவந்தார்களென்று சொல்லி,

௰௧ பெலிஸ்தரின் அதிபதிகளை யெல்லாம் அழைத்தனுப்பிக் கூட்டி, இஸ்ரவேலுடைய பராபரன் என்னையும் என்னுடைய சனத்தையுங் கொன்றுபோடாதபடிக்கு அவருடைய பெட்டியை யதின் தானத்திற்குத் திரும்ப அனுப்புங்களென்றார்கள். ஏனென்றால் அந்தப் பட்டணமெங்குஞ் சாவுமும்முரமாகிப் பராபரனுடைய கையங்கே மகாப் பாரமாயிருந்தது.

௰௨ செத்துப் போகாதிருந்த மனுஷர் மூலவாதைகளால் வாதிக்கப்பட்டிருந்தார்கள். அந்தப் பட்டணத்தின் கூக்குரல் வானபரியந்தமேறிற்று.

## ௬. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டியைப் பெலிஸ்தர் திரும்ப இஸ்ரவேல் தேசத்திற்கனுப்பினது.

கர்த்தருடைய பெட்டி பெலிஸ்தரின் சீர்மையில் ஏழுமாதமிருந்தபோதோவென்றால்,

௨ பெலிஸ்தர் பூசாரிகளையுஞ் சாஸ்திரஞ் சொல்லுகிறவர்களையும் அழைப்பித்துக் கர்த்தருடைய பெட்டிக்கு நாஞ்செய்ய வேண்டியதென்ன? அதை நாங்களென்னமாய் அதின் தானத்திற் கனுப்பவேண்டுமென்று எங்களுக்கறிவியுங்களென்றார்கள்.

௩ இவர்கள் சொன்னது, இஸ்ரவேலுடைய பராபரனின் பெட்டியை நீங்கள் அனுப்பினால் அதை வெறுமையாய் அனுப்பாமல் குற்றம்போக்கு காணிக்கையைத் திருப்பிச் செலுத்தவே செலுத்துவீர்களாக. அப்பொழுது நீங்கள் குணமாகிறதுமல்லாமல் அவருடைய கை உங்களை விடாதிருந்த முகாந்தரமேதென்று உங்களுக்குத் தெரியவருமென்றார்கள்.

௪ அப்பொழுது அவர்கள் குற்றம்போக்க நாங்கள் அதற்குச் செலுத்தவேண்டியதென்னவென்று கேட்டதற்கு இவர்கள் சொன்னதாவது, பெலிஸ்தருடைய அதிபதிகளின் இலக்கத்திற்குச் சரியாய் மூலவியாதியின் சாயலான ஐந்து பொற்சுரூபங்களும் பொன்னான ஐந்து எலிகளுந்தானே; ஏனென்றால் உங்களெல்லாருக்கும் உங்கள் அதிபதிகளுக்கும் ஏகமான வாதையாயிருக்கின்றது.

௫ ஆகையால் உங்கள் மூலவியாதியின் சாயலான சுரூபங்களையும், தேசத்தைக் கெடுத்துப்போட்ட உங்கள் எலிகளின் சாயலான சுரூபங்களையும் நீங்கள் பண்ணி இஸ்ரவேலின் பராபரனுக்கு மகிமையைச் செலுத்துங்கள். அப்போது ஒருவேளை உங்கள் மேலும் உங்கள் தேவர்கள் மேலும் உங்கள் தேசத்தின் மேலுமிருக்கிற அவருடைய கை உங்களை விட்டு விலகுவாம்.

௬ எகிப்தியரும் பார்வோனுந் தங்கள் இருதயத்தைக் கடினமாக்கினதுபோலே நீங்களுங்கள் இருதயத்தைக் கடினப்படுத்துவானேன்? இவர்களை யவர் தீங்காய் நடப்பித்த பிற்பாடு, அவர்களை இவர்கள் அனுப்பிவிட்டதும் அவர்கள் போனதுமில்லையோ?

௭ இப்போதும் நீங்கள் ஒரு புது வண்டிலைச் செய்து, நுகத்தடி பூணாதிருக்கிற இரண்டு கறவைப் பசுக்களைப் பிடித்து அவைகளை வண்டியிலே கட்டி, அவைகளின் கன்றுக்குட்டிகளை யவைகளுக்குப் பின்னாகப் போகாதபடிக்கு வீட்டிலே கொண்டுவந்து வைத்து,

௮ பிற்பாடு கர்த்தருடைய பெட்டியையெடுத்து அதை வண்டியின்மேலே வைத்து, நீங்கள் குற்றம்போக்க அவருக்குச் செலுத்தும் பொன்னுருப்படிகளை யதனண்டையிலே ஒரு சின்னப் பெட்டியிலே போட்டு, அதைப் போகவிடுங்கள்.

௯ அப்போது பாருங்கள். அது தன் எல்லைக்குப் போகிற வழியிலே பெத்ஷேமேசுக்கேறிப்போனால், இந்தப் பெரிய தீங்கை நமக்குச் செய்தவர் அவர்தாமே. போகாதிருந்தால், அவருடைய கை நம்மைத் தொடாமல் அது தற்செயலாய் நமக்கு நடந்ததென்றறிந்து கொள்ளுவோமென்றார்கள்,

௰ அந்த மனுஷர் அப்படிச் செய்து அர்ணிக்கறவைப் பசுக்களைப் பிடித்து அவைகளை வண்டியிலே கட்டி அவைகளின் கன்றுக்குட்டிகளை வீட்டிலே அடைத்து,

௰௧ கர்த்தருடைய பெட்டியையும் பொன்னான எலிகளும் தங்கள் மூலவியாதியின் சாயலான சுரூபங்களுமிருக்கிற சின்னப் பெட்டியையும் அந்த வண்டியின்மேலே வைத்தார்கள்.

௰௨ அப்போது அந்தப் பசுக்கள் பெத்ஷேமேசுக்குப் போகிற வழியிலே செவ்வையாய்ப் போய், வலது இடதுபக்கமாய் விலகாமல் நடப்பான் ஒரே வழியிலே கூப்பிட்டுக்கொண்டு நடந்தது. பெலிஸ்தரின் அதிபதிகள் பெத்ஷேமேசின் எல்லைமட்டும் அவைகளின் பிறகாலே போனார்கள்.

௰௩ பெத்ஷேமேசின் மனுஷர் பள்ளத்தாக்கிலே கோதுமையை அறுப்பறுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் கண்களை யேறெடுக்கும்போது பெட்டியைக் கண்டு அதைப் பார்க்கிறதினாலே சந்தோஷப்பட்டார்கள்.

௰௪ அந்த வண்டில் பெத்ஷேமேசூரானாகிய யோசுவாவின் வயல்வெளிக்கு வந்தபோது அங்கே நின்றது. அங்கே ஒரு பெரிய கல்லிருந்தது. அப்போது வண்டியின் மரங்களைப் பிளந்து, பசுக்களைக் கர்த்தருக்குச் சர்வாங்கத் தகனபலியாக்கினார்கள்.

௰௫ லேவியர் கர்த்தருடைய பெட்டியையும் அதோடிருந்த பொன்னுருப்படிகளுள்ள சின்னப் பெட்டியையுமிறக்கி அந்தப் பெரிய கல்லின்மேலே வைத்துக்கொண்டிருந்தார்கள். பெத்ஷேமேசின் மனுஷரோவென்றால் அந்நாளிலே கர்த்தருக்குச் சர்வாங்கத்தகனங்களையும் பலிகளையும் செலுத்தினார்கள்.

௰௬ பெலிஸ்தருடைய ஐந்து அதிபதிகளும் இவைகளைக் கண்டபிற்பாடு அந்த நாளிலே எக்ரோனுக்குத் திரும்பிப் போனார்கள்.

௰௭ பெலிஸ்தர் குற்றம்போக்கத்தக்கதாகக் கர்த்தருக்குச் செலுத்தின மூலவியாதியின் சாயலான பொற்சுரூபங்களாவது, அஸ்தோத்துக்காக வொன்று, காசாவுக்காக வொன்று, அஸ்கலோனுக்காக வொன்று, காத்துக்காக வொன்று, எக்ரோனுக்காக வொன்று.

௧௨ ஆனதுகொண்டு சாமுவேல் ஒரு கல்லையெடுத்து, மிஸ்பாவுக்குஞ் சேனுக்கும் நடுவாக நிறுத்தி, இவ்விடமட்டுங் கர்த்தரெங்களுக்கு ஒத்தாசை பண்ணினாரென்று சொல்லி, அதற்கு ஏபெனேசரென்று பேரிட்டான்.

௧௩ இந்தப் பிரகாரமாகப் பெலிஸ்தர் அப்புறம் இஸ்ரவேலின் எல்லையிலே வாராதபடிக்குத் தாழ்த்தப்பட்டார்கள். ஏனெனிற் சாமுவேலிருந்த நாளெல்லாங் கர்த்தருடைய கை பெலிஸ்தருக்கெதிராயிருந்தது.

௧௪ பெலிஸ்தர் இஸ்ரவேல் கையிலே பிடித்திருந்த, எக்கிரோன் துவக்கிக் காத்மட்டுமுள்ள பட்டணங்களும் இஸ்ரவேலுக்குத் திரும்ப வந்தது. அவைகளையும் அவைகளின் எல்லைகளையும் இஸ்ரவேலர் பெலிஸ்தர் கையிலே இராதபடிக்கு விடுவித்துக்கொண்டார்கள் இஸ்ரவேலுக்கும் எமோரியருக்குஞ் சமாதானமுண்டாயிருந்தது.

௧௫ சாமுவேலோவென்றால் உயிரோடிருந்த நாளெல்லாம் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தான்.

௧௬ அவன் வருஷந்தோறும் புறப்பட்டுப் பெத்தேலையுங் கில்காலையும் மிஸ்பாவையுஞ் சுற்றிப்போய், அவ்விடங்களிலெல்லாம் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தபிறபாடு,

௧௭ அவன் இராமாவுக்குத் திரும்பிவருவான் ஏனெனில் அங்கே அவனுடைய வீடிருந்தது. அங்கே இஸ்ரவேலை நியாயம் விசாரித்து, அங்கே கர்த்தருக்கொரு பீடத்தைக் கட்டினான்.

## ௮. அதிகாரம்.

இஸ்ரவேல் சனங்கள் தங்களுக்கொரு இராசா வேண்டுமென்று கேட்டது.

சாமுவேல் முதிர்ந்த வயதானபோதோவெனில், தன் குமாரரை இஸ்ரவேலின் பேரிலே நியாயாதிபதிகளாக வைத்தான்.

௨ அவனுடைய மூத்த குமாரனுக்கு யோவேலென்று பேரும் இளையவனுக்கு அபியாவென்று பேருமிருந்தது. அவர்கள் பேர்செபாவிலே நியாயாதிபதிகளாயிருந்தார்கள்.

௩ ஆனால் அவனுடைய குமாரர் அவன் வழியில் நடவாமற் பொருளாசைக்குச் சாய்ந்து பரிதானம் வாங்கி நியாயத்தைக் கோணலாக்கினார்கள்.

௪ அப்போது இஸ்ரவேலின் மூப்பரெல்லாருங் கூடிக்கொண்டு, ராமாவிலே சாமுவேலண்டைக்கு வந்து,

௫ அவனுடனே, இதோ, நீர் முதிர்ந்த வயதுள்ளவரானீர். உம்முடைய குமாரரோவென்றால் உம்முடைய வழியில் நடக்கிறதில்லை இப்போதுஞ் சகல சாதிகளுக்குமிருக்கிறபடியே, எங்களை நியாயம் விசாரிக்கிறதற்கொரு இராசாவை எங்களுக்கு வையுமென்றார்கள்.

௬ ஆனால் எங்களை நியாயம் விசாரிக்கிறதற்கு எங்களுக்கொரு இராசாவைக் கொடுமென்று அவர்கள் சொன்ன வார்த்தை சாமுவேலுக்கு ஆகாததாய்க் கண்டது. ஆகையாற் சாமுவேல் கர்த்தரை நோக்கி, விண்ணப்பம் பண்ணினான்.

௭ அப்போது கர்த்தர் சாமுவேலோடே சொன்னதாவது, சனம் உன்னோடே சொன்னபடியெல்லாம் அவர்கள் சொல்லைக்கேள் ஏனெனில் அவர்கள் உன்னைத் தள்ளாமல், நாம் அவர்களை அரசாளாதபடிக்கு நம்மைத்தான் தள்ளினார்கள்.

௮ நாம் அவர்களை எகிப்திலிருந்து ஏறப்பண்ணின நாள் துவக்கி இந்த நாள்மட்டும், அவர்கள் நம்மைவிட்டு, வேறே தேவர்களைச் சேவித்துவந்த தங்கள் எல்லாக்கிரியைகளின்படியுஞ் செய்ததுபோலே, அவர்கள் உனக்குஞ் செய்கிறார்கள்.

௯ இப்போதும் அவர்கள் சொல்லைக் கேள். ஆனால் அவர்களை அரசாளும் இராசாவின் நியாயத்தை அவர்களுக்குத் திடச்சாட்சியாயறிவியென்றார்.

௰ அப்போது சாமுவேல் தன்னை ஒரு இராசாவைக் கேட்ட சனத்தோடே கர்த்தருடைய வார்த்தைகளையெல்லாஞ் சொல்லி,

௧௧ உரைத்ததாவது, உங்களை அரசாளும் இராசாவின் நியாயமென்னவென்றால், அவன், தன் இரதத்திற்கு முன்னோடே ஓட, உங்கள் குமாரரையெடுத்துத் தன் இரதத்திற்கு முன்னோடே அவர்களைத் தன் இரதக்காரராகவுந் தன் குதிரைக்காரராகவும் வைத்துக்கொள்வான்.

௧௨ ஆயிரம்பேருக்கும் ஐம்பதுபேருக்குந் தலைவராகவுந் தன் உழவிடையை உழுகிறவர்களாகவுந் தன்னுடைய அறுப்பை அறுக்கிறவர்களாகவுந் தன்னுடைய யுத்த ஆயுதங்களையுந் தன்னுடைய இரதங்களின் பணிமுட்டுகளையுஞ் செய்பண்ணுகிறவர்களாகவும் அவர்களை வைத்துக்கொள்வான்.

௧௩ உங்கள் குமாரத்திகளைத் தயிலவிழ்க்கச் செய்கிறவர்களாகவும் சமையற்பண்ணுகிறவர்களாகவும் அப்பஞ்சுடுகிறவர்களாகவும் வைத்துக்கொள்வான்.

௧௪ நல்லதாகிய உங்கள் வயல்களையும் உங்கள் திராட்சத் தோட்டங்களையும் உங்கள் ஒலிவத்தோப்புகளையும் எடுத்துத் தன் ஊழியக்காரருக்குக் கொடுப்பான்.

௧௫ உங்கள் பயிர்களிலும் உங்கள் திராட்சப் பலனிலும் பத்திலொன்று வாங்கித் தன் பிரதானிகளுக்குந் தன் வேலைக்காரருக்குங் கொடுப்பான்.

௧௬ உங்கள் வேலைக்காரரையும் உங்கள் வேலைக்காரிகளையும் உங்கள் வாலிபரையும் உங்கள் புஷ்டியுள்ள கழுதைகளையும் பிடித்துத் தன்னுடைய வேலைக்கு வைப்பான்.

௧௭ உங்கள் ஆடுகளில் பத்திலொன்று வாங்குவான். நீங்களோவென்றால் அவனுக்குப் பணிவிடை செய்கிறவர்களாயிருப்பீர்கள்.

௧௮ நீங்கள் உங்களுக்குத் தெரிந்துகொண்ட உங்கள் இராசாவினிமித்தம் அந்நாளிலே கூப்பிடுவீர்கள் ஆனாலும் கர்த்தர் உங்களை அந்நாளிலே கேட்பதில்லையென்றான்.

௧௯ சனமோவென்றால் சாமுவேலின் சொல்லைக் கேட்கமனதில்லாமற் சொன்னதாவது, அப்படியல்ல. ஒரு இராசா எங்கள்மேலிருக்கவேணும்.

௨௰ சகல சாதிகளைப்போலே நாங்களுமிருப்போம். எங்கள் இராசா எங்களை நியாயம் விசாரித்து, எங்களுக்கு முன்பாகப் புறப்பட்டு, எங்கள் யுத்தங்களை நடத்தவேண்டுமென்றார்கள்.

௨௧ சாமுவேல் சனத்தின் வார்த்தைகளையெல்லாங் கேட்டு, அவைகளைக் கர்த்தருடைய செவிகளுக்கு முன்பாகச் சொன்னான்.

௨௨ கர்த்தரோவென்றால் சாமுவேலுடனே, நீ அவர்கள் சொல்லைக் கேட்டு, அவர்களை ஆளும் இராசாவை அவர்களுக்கு ஏற்படுத்தென்றார். அப்போது சாமுவேல் இஸ்ரவேல் மனுஷருடனே, அவரவர் உங்கள் ஊர்களுக்குப் போய்விடுங்களென்றான்.

## ௯. அதிகாரம்.

சவுல் இஸ்ரவேலுக்கு இராசாவாகக் குறிக்கப்பட்டது.

கீசென்றுபேருள்ள பென்யமீன் கோத்திரத்தானாகிய பலத்த ஒரு மனுஷனிருந்தான் அவன் எமினிமனுஷனாயிருந்த ஒருவனுடைய குமாரனாகிய அபீயாவின் மகனான பெகோராத்துக்குப் பிறந்த செரோரின் மகனாகிய அபீயேலின் குமாரனானவன்.

௨ அவனுக்குச் சவுலென்றுபேருள்ள சவுந்தரியமான வாலிபனாகிய ஒரு குமாரனிருந்தான் இஸ்ரவேல் புத்திரரில் அவனைப்பார்க்கிலுஞ் சவுந்தரியமானவனில்லை. எல்லாச் சனத்திலுந் தன் தோள் உசந்தவனாயிருந்தான்.

௩ சவுலின் தகப்பனாகிய கீசுடைய பெட்டைக்கழுதைகள் காணமற்போயிற்று. ஆகையாற் கீசு தன் குமாரனாகிய சவுலோடே, நீ வேலைக்காரரில் ஒருவனைக் கூட்டிக்கொண்டு, கழுதைகளைத் தேடப்புறப்பட்டுப் போவென்றான்.

௪ அப்படியே அவன் எப்பிராயீம் மலைகளையுஞ் சலீசாத் தேசத்தையுங் கடந்துபோனான். அங்கே அவைகளைக் கண்டுபிடியாமற் சாலீம் தேசத்தைக் கடந்தார்கள். அங்கேயுமில்லாமற் போயிற்று. எமினி தேசத்தையுருவக் கடந்துங் கண்டுபிடித்ததில்லை.

௫ அவர்கள் சூப்பென்ற தேசத்திற்கு வந்தபோது, சவுல் தனோடிருந்த வேலைக்காரனுடனே, என் தகப்பன் கழுதைகளின் பேரிலிருக்கிற நினைப்பைவிட்டு நமக்காகக் கவலைப்படாதபடிக்குத் திரும்பிப் போவோம் வாவென்றான்.

௬ இவனோவென்றால் அவனுடனே, இதோ, இந்தப் பட்டணத்திலே பராபருடைய மனுஷன் ஒருவனிருக்கிறான். அவன் பெரிய மனுஷன். அவன் சொல்லுகிறதெல்லாந் தப்பாமல் வரும் இப்போதும் அங்கே போவோம். ஒருவேளை அவன் நாம் போகவேண்டிய நம்முடைய வழியை நமக்கறிவிப்பானென்றான்.

௭ அப்போது சவுல் தன் வேலைக்காரனோடே, இதோ, நாம் போனாலும், அந்த மனுஷனுக்கு என்னகொண்டுபோவோம். ஏனென்றால் நம்முடைய அசும்பியிலிருந்த தின்பண்டங்கள் போயிற்று. பராபருடைய மனுஷனாகிய அவனுக்குக் கொண்டுபோகத்தக்க காணிக்கை நம்மிடத்திலில்லையேயென்றான்.

௮ அந்த வேலைக்காரன் அப்புறஞ் சவுலுக்குப் பிரதியுத்தரமாக, இதோ, என் கையில இன்னுங் காற்சேக்கல் வெள்ளியிருக்கின்றது. பராபருடைய மனுஷன் நமக்கு நம்முடைய வழியை யறிவிக்கும்படிக்கு அதை அவனுக்குக் கொடுப்பேனென்றான்,

லேயிது இந்தவேளைக்கு உனக்காக வைக்கப்பட்டதென்றான். அப்படியே சவுல் அந்நாளிலே சாமுவேலோடே சாப்பிட்டான்.

௨௫ அவர்கள் மேட்டிலிருந்து பட்டணத்திற்கிறங்கிவந்த பிற்பாடு அவன் மேல்வீட்டிலே சவுலோடே பேசிக்கொண்டிருந்தான்.

௨௬ அவர்கள் காலமே கிழக்குவெளுக்கிறநேரத்திலெழுந்திருந்த போதோவெனில், சாமுவேல் சவுலை மேல்வீட்டின்மேலில் அழைத்து, நான் உன்னை அனுப்பும்படிக்கு ஆயத்தப்படுவென்றான்; சவுல் ஆயத்தப்பட்டபோது அவனும் சாமுவேலும் இருவருமாக வெளியே புறப்பட்டார்கள்.

௨௭ அவர்கள் பட்டணத்தின் முடிவுமட்டும் இறங்கிவந்த போதோவென்றால் சாமுவேல் சவுலுடனே, நான் பராபரனுடைய வார்த்தையை உனக்கு அறியப்பண்ணும்படிக்கு நீ இப்போது தரித்துநின்று வேலைக்காரனை நமக்கு முன்னே நடந்து போகச் சொல்லென்றான். அப்படியே அவன் நடந்துபோனான்.

## ௰. அதிகாரம்.

### சவுல் இராசாவாக்கப்பட்டது.

அப்போது சாமுவேல் எண்ணெய்ப் பாத்திரத்தையெடுத்து, அவன் தலையின் பேரிலே வார்த்து, அவனை முத்தஞ்செய்து சொன்னதாவது, கர்த்தர் உன்னைத் தம்முடைய சுதந்தரத்தின்பேரிலே தலைவனாக அபிஷேகம்பண்ணினாரல்லவோ?

௨ நீ இன்றைக்கு என்னைவிட்டுப்போகிறபோது, பென்யமீன் எல்லையாகிய செல்சாகிலே ராகேலின் கல்லறையண்டையிலிரண்டு மனுஷரைக் காண்பாய்; அவர்கள் உன்னிடத்தில், நீ தேடப்போன கழுதைகள் அகப்பட்டது. இதோ, உன் தகப்பன் கழுதைகளின்மேலிருந்த விசாரத்தைவிட்டு உங்களுக்காகக் கவலைப்பட்டு, என் மகனுக்காக என்ன செய்வேனென்கிறானென்று சொல்லுவார்கள்.

௩ நீ அவ்விடத்தைவிட்டு அப்பாற்கடந்து, ஏலோன் தாபோர்மட்டும் வருகிறபோது, பெத்தேலிலே பராபரனைப் பணிகிறதலத்திற்கேறிப்போகிற மூன்று மனுஷர் அங்கே உன்னைக்கண்டு சந்திப்பார்கள். ஒருவன் மூன்று ஆட்டுக்குட்டிகளையும், ஒருவன் மூன்று அப்பங்களையும், மற்றொருவன் திராட்சிப்பழ இரசமிருக்கிற ஒரு துருத்தியையுஞ் சுமந்துவந்து,

௪ உன்னுடைய சுகசெய்தியை விசாரித்து, உனக்கு இரண்டப்பங்களைக் கொடுப்பார்கள்; அவைகளை நீ அவர்கள் கையிலே வாங்கவேண்டும்.

௫ பிற்பாடு பெலிஸ்தரின் தாணையமிருந்த பராபரனுடைய மேட்டுக்கு வருவாய். அங்கே நீ பட்டணத்திற்குட்பிரவேசிக்கையிலே மேட்டிலிருந்திறங்கிவருகிற தீர்க்கதரிசிகளின் கூட்டத்திற்கெதிர்ப்படுவாய். அவர்களுக்கு முன்பாகத் தம்பூரும் மேளமும் நாகசுரமும் சுரமண்டலமும் போகும்; அவர்களோவென்றால், தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்.

௬ அப்போது கர்த்தருடைய ஆவியுன்மேலிறங்குகிறதினாலே நீயவர்களோடே கூடத் தீர்க்கதரிசனஞ்சொல்லி, வேறே மனுஷனாய்ப்போவாய்.

௭ இந்த அடையாளங்கள் உனக்கு வந்தபோது உனக்கு நேரிடுகிறதைச் செய். ஏனென்றால் பராபரன் உன்னோடேயிருக்கிறார்.

௮ ஆனால் நீ எனக்கு முன்னே கில்காலுக்கிறங்கிப்போவாயாக. ஏனென்றால் இதோ, சர்வாங்கத்தகனங்களையுஞ் சமாதான பலிகளையுஞ் செலுத்தும்படிக்கு நான் உன்னண்டைக்கிறங்கிவருவேன். நான் உன்னண்டைக்கு வந்து, நீ செய்யவேண்டியதை உனக்கறிவிக்குமட்டும் ஏழுநாட்காத்திருப்பாயாகவென்றான்.

௯ அவன் சாமுவேலை விட்டுப் புறப்படத் தன் தோளைத் திருப்பினபோது சம்பவித்ததேதெனில், பராபரன் அவனுக்கு வேறே இருதயத்தை மாற்றிக்கொடுத்தார். அந்த எல்லா அடையாளங்களும் அந்நாளிலேதானே அவனுக்கு வந்தது.

௰ அவர்கள் அந்த மேட்டுக்கு வந்தபோதும், இதோ, தீர்க்கதரிசிகளின் கூட்டம் அவனுக்கெதிராக வந்தது. அப்போது பராபரனுடைய ஆவி அவன்மேலிறங்கினதினாலே அவர்களுக்குள்ளிருந்து தீர்க்கதரிசனஞ்சொன்னான்.

௰௧ அதற்குமுன்னே அவனையறிந்தவர்களெல்லாரும் அவன் தீர்க்கதரிசிகளோடிருந்து தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறதைக்கண்டபோது, அந்தச்சனம் ஒருவரோடொருவர் கீசின் குமாரனுக்கு வந்ததென்ன? சவுலுந் தீர்க்கதரிசிகளுக்குள்ளிருக்கிறானோவென்றார்கள்.

௰௨ அதற்கு அங்கேயிருக்கிறவர்களில் ஒருவன் பிரதியுத்தாரமாக, ஆனால் இவர்களுடைய தகப்பன் யாரென்றான். ஆனதுகொண்டு, சவுலுந் தீர்க்கதரிசிகளுக்

ளிருக்கிறானோவென்கிற பழமொழியுண்டாயிற்று.

௰௩ அவன் தீர்க்கதரிசனஞ்சொல்லிமுடித்தபிற்பாடு மேட்டின்பேரில் வந்தான்.

௰௪ அப்போது சவுலுடைய சிறியதகப்பன் நீங்களெங்கே போனீர்கள்? என்று அவனையும் அவன் வேலைக்காரனையுங் கேட்டான். அதற்கவன் நாங்கள் கழுதைகளைத் தேடப்போய் அவைகளைக் காணாதே போனபடியினாலே சாமுவேலண்டைக்கு வந்தோமென்றான்.

௰௫ அப்போது சவுலின் சிறியதகப்பன், சாமுவேல் உங்களுக்குச் சொன்னதென்னவென்றெனக்குச் சொல்லென்றான்.

௰௬ சவுல் தன் சிறிய தகப்பனுடனே, கழுதைகள் அகப்பட்டதென்றெங்களுக்குத் தெளிவாய் அறிவித்தானென்று சொன்னான். ஆனால் சாமுவேல் சொன்ன இராச்சியபாரத்தின் வர்த்தமானத்தை அவனுக்கறிவிக்காமற்போனான்.

௰௭ சாமுவேலோவென்றால் சனத்தை மிஸ்பாவிலே கர்த்தாவண்டைக்கு வரவழைத்து,

௰௮ இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னதாவது, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதென்னவென்றால், நான் இஸ்ரவேலை எகிப்திலிருந்து வரப்பண்ணி, உங்களை எகிப்தியர் கைக்கும் உங்களை இறுகப்பிடித்த எல்லா இராச்சியத்தாரின் கைக்கும் நீங்கலாக்கிவிட்டேன்.

௰௯ நீங்களோவென்றால் உங்களுடைய எல்லாத் தீங்குகளுக்கும் நெருக்கங்களுக்கும் உங்களை நீங்கலாக்கி இரட்சித்த உங்கள் பராபரனை இந்நாளிலே புறக்கணித்து, அவருடனே, ஒரு இராசாவை எங்கள்மேல் வையுமென்றீர்கள். இப்போது நீங்கள் கர்த்தருக்கு முன்பாக உங்கள் வம்சங்களின்படியேயும் ஆயிரங்களான உங்கள் சேனைகளின்படியேயும் உங்களை நிறுத்துங்களென்றான்.

௨௰ இஸ்ரவேலின் கோத்திரங்களையெல்லாஞ் சாமுவேல் சேரப்பண்ணினபிற்பாடு, பென்யமீன் கோத்திரத்தின்மேலே சீட்டுவிழுந்தது.

௨௰௧ அவன் பென்யமீன் கோத்திரத்தை அதினுடைய வம்சங்களின்படியே சேரப்பண்ணினபிற்பாடு, மாத்திரி வம்சத்தின்மேலும் அதிலே கீசின்குமாரனாகிய சவுலின்மேலுஞ்சீட்டுவிழுந்தது. அவனைத் தேடுகிறபோதோவென்றால் அவன் தென்படாதேபோனான்.

௨௰௨ அவன் இன்னமிங்கே வருவானோவென்று அவர்கள் திரும்பக் கர்த்தரிடத்தில் கேட்டபோது, இதோ, அவன் தளவாடங்களின் கிடக்கிற இடத்திலே ஒளித்துக்கொண்டிருக்கிறானென்று கர்த்தர் சொன்னார்.

௨௰௩ அப்போது அவர்களோடி அங்கேயிருந்து அவனையழைத்துவந்தார்கள். அவன் சனத்தின்நடுவே வந்து நிற்கிறபோது எல்லாச்சனத்திலுந் தன் தோள் உசரத்தவனாயிருந்தான்.

௨௰௪ அப்போது சாமுவேல் எல்லாச்சனத்தோடும், கர்த்தர் தெரிந்துகொண்டவனைப் பார்க்கிறீர்களல்லவா? என்று எல்லாச்சனத்திலும் அவனுக்குச் சரியானவனில்லையென்றான். அப்போது சனமெல்லாம் ஆர்ப்பரித்து, இராசாவானவர் வாழ்கவென்றார்கள்.

௨௰௫ சாமுவேலோவென்றால் இராச்சியபாரத்தின் நியாயத்தைச் சனத்திற்குச் சொல்லிக்காட்டி, அதை ஒரு புஸ்தகத்திலெழுதிக் கர்த்தருக்கு முன்பாக வைத்துவிட்டுப்பிற்பாடு சனத்தையெல்லாம் அவரவர்கள் வீட்டுக்கனுப்பிவிட்டான்.

௨௰௬ சவுலுங் கிபேயாவிலிருக்கிற தன் வீட்டுக்குப் போய்விட்டான். இராணுவத்திற்பட்டான எவர்கள் மனதை தேவன் தொட்டாரோ அவர்களும் அவனோடேகூடப்போனார்கள்.

௨௰௭ ஆனால் பேலியாளின் பிள்ளைகள் இவன் நம்மை இரட்சிப்பானோவென்று அவனையசட்டைபண்ணி, அவனுக்குக் காணிக்கைக் கொண்டுபோகாதிருந்தார்கள். அவனோவென்றால் அதற்குக் காதுகேளாதவனைப்போலிருந்தான்.

## ௰௧. அதிகாரம்.

சவுல் அம்மோனியரைச் செயித்தது.

ஆனால் நாகாசென்ற அம்மோனியன் எறிவந்து, கிலெயாத்திலிருக்கிற யாபேசை முற்றிக்கைபோட்டான். அப்போது யாபேசின் மனுஷரெல்லாரும் நாகாசுடனே, எங்களோடே உடன்படிக்கைபண்ணும். அப்போது உம்மைச் சேவிப்போமென்றார்கள்.

௨ ஆனால் அம்மோனியனாகிய நாகாசு அவர்களுடனே, நான் உங்கள் எல்லாருடைய வலதுகண்ணைப்பிடுங்கி, இதினாலே இஸ்ரவேலெல்லாவற்றின்மேலும் நிந்தை வரப்பண்ணுவேனென்கிறதாய் உங்களோடேயுடன்படிக்கைபண்ணுவேனென்றான்.

௩ அப்போது யாபேசின் மூப்பானவர்கள் அவனுடனே, நாங்கள் இஸ்ரவேலின் எல்லைகளெல்லாந் தூதர்களையனுப்ப ஏழுநாள் எங்களுக்குத் தவணைகொடும். எங்களை இரட்சிப்பாரில்லாவிட்டால், அப்போது உம்மண்டைக்குப் புறப்பட்டுவருவோமென்றார்கள்.

௪ அந்தத் தூதர்கள் கிபெயாவிலே சவுலண்டைக்குவந்து, சனத்தின் காதுகள் கேட்க அந்த வார்த்தைகளைச் சொன்னார்கள். அப்போது சனமெல்லாருஞ் சத்தமிட்டழுதார்கள்.

௫ இதோ, சவுல் மாடுகளின் பிறகாலே வயல்வெளியிலிருந்துவந்து, சனம் அழுகிறதுகாரணமென்னவென்று கேட்டான். அவனுக்கு யாபேசு மனுஷரின் வார்த்தைகளை விவரித்தார்கள்.

௬ சவுல் இந்த வார்த்தைகளைக் கேட்கையிற், பராபரனுடைய ஆவி அவன்மேல் இறங்கினதினாலே அவன் மிகவுங் கோபமூண்டவனாகி,

௭ ஓரிணைமாட்டைப் பிடித்து, அதைத் துண்டித்துப்போட்டு, அந்தத் தூதர்கள் கையிலே இஸ்ரவேலின் எல்லைகளெல்லாம் அனுப்பி, சவுலின் பிறகாலேயும், சாமுவேலின் பிறகாலேயும், புறப்படாதவனுடைய மாடுகளுக்கு இப்படிச்செய்யப்படுமென்று சொல்லி, அனுப்பினான். அப்போது கர்த்தருண்டான பயங்கரம் சனத்தின்மேல் இறங்கினதினால் ஒருவனைப்போலே புறப்பட்டார்கள்.

௮ அவர்களைப் பேசேக்கிலே இலக்கம் பார்த்தான். இஸ்ரவேல் புத்திரரில் முந்நூறாயிரம்பேரும் யூதமனுஷரில் முப்பதினாயிரம்பேருமிருந்தார்கள்.

௯ அப்போது வந்த தூதர்களுக்கு அவர்கள் சொன்னதாவது, கிலெயாத்திலிருக்கிற யாபேசின் மனுஷருக்கு நீங்கள் சொல்லவேண்டியதேதெனில், நாளை வெயில் ஏறுகையில், உங்களுக்கு இரட்சிப்புண்டாமென்று சொல்லுங்களென்றார்கள். தூதர்கள் வந்து, யாபேசின் மனுஷருக்கு அதையறிவிக்கிறபோது, அவர்கள் சந்தோஷப்பட்டார்கள்.

௰ பிறபாடு யாபேசின் மனுஷர், நாளை உங்களண்டைக்குப் புறப்படுவோம். அப்போது உங்கள் பார்வைக்குச் சரியானபடியெல்லாம் எங்களுக்குச் செய்யுங்களென்றார்கள்.

௰௧ மறுநாளிலோவென்றால் சவுல் சனத்தை மூன்று வகுப்பாக நிறுத்தினான். பிறபாடு அதிகாலச்சாமத்திலே பாளயத்திற்குள் வந்து, பகலின் வெயிலேறுமட்டும் அம்மோனை முறியடித்தான். தப்பிப்போனவர்களிலோவெனில் இரண்டுபேராகிலும் ஒன்றாய்க் கூடிப்போகாதபடியாகச் சிதறினார்கள்.

௰௨ அப்போது சனங்கள் சாமுவேலுடனே, சவுல் நம்முடையமேல் இராசாவாயிருப்பதேதென்றவர்களார்? அந்த மனுஷரை நாங்கள் கொன்றுபோடும்படிக்கு, ஒப்புக்கொடுங்களென்றார்கள்.

௰௩ சவுலோவென்றால், இந்த நாளிலே ஒருவருங் கொன்றுபோடப்படவேண்டாம். ஏனெனில் இன்று கர்த்தர் இஸ்ரவேலிலே இரட்சிப்பை யுண்டுபண்ணினாரென்றான்.

௰௪ அப்போது சாமுவேல் சனத்துடனே, நாம் கில்காலுக்குப்போய், அங்கே இராச்சிய பாரத்தைப் புதிதாக்குவோம் வாருங்களென்றான்.

௰௫ அப்படியே சனமெல்லாங் கில்காலுக்குப்போய், அவ்விடத்திலே கர்த்தருக்கு முன்பாகச் சவுலை இராசாவாக வைத்து, அங்கே கர்த்தருக்கு முன்பாகச் சமாதான பலிகளைச் செலுத்தி, அங்கே சவுலும் இஸ்ரவேல் மனுஷர் அனைவரும் மிகவும் மகிழ்ந்துகொண்டிருந்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

சாமுவேல் தன்னுடைய நியாயாதிபதி உத்தியோகத்தை ஒப்புவித்துவிட்டது

அப்போது சாமுவேல் இஸ்ரவேலைநோக்கிச் சொன்னதாவது, இதோ, நீங்கள் எனக்குச் சொன்னபடியெல்லாம் உங்கள் சொற்கேட்டு, உங்கள்மேல் ஒரு இராசாவை வைத்தேன்.

௨ இப்போதும் இதோ, இராசாவானவர் உங்களுக்கு முன்பாக நடந்துவருகிறார். நானோவெனிற் கிழவனும் நரைத்தவனுமானேன். என் குமாரரோவென்றால் உங்களோடிருப்பார்கள். நான் என் சிறுவயதுதுவக்கி இந்நாளவரைக்கும் உங்களுக்கு முன்பாகச் சஞ்சரித்தேன்.

௩ இதோ, நானிங்கேயிருக்கிறேன். நான் ஆருடைய எருதையெடுத்துக்கொண்டேன்? ஆருடைய கழுதையையெடுத்துக்கொண்டேன்? ஆருக்கு இடுக்கண்செய்தேன்? ஆரையொடுக்கினேன்? நான் கண்சாய்ப்பாயிருக்க ஆர் கையிலே பரிதானம் வாங்கினேனென்று கர்த்தருக்கு முன்பாகவும் அவர் அபிஷேகம்பண்ணினவைத்தவருக்கு முன்பாகவும் எனக்கெதிராக

மறுவுத்தரவுசொலலுஙகள. அபபோது அதைஉஙகளுககுததிருமபக கொடுபபே னெனறான.

௪ அபபோது அவர்கள நீர் எஙகளுககு இடுக்கண்செயததுமிலலை எஙகளைஒடுககி னதுமிலலை ஒருவர்கையிலுமஒனறுமஎடு ததுககொணடதுமிலலையெனறார்கள.

௫ அபபோது அவன அவர்களுடனே நீஙகள எனகையிலே ஒனறுஙகணடுபிடிதததிலலையெனறதறகுக்கர்த்தர் உஙகளுககெதிராகச்சாட்சியானவர். அவர் அபிஷேகமபணணிவித்தவருமஇனறு அதறகுசசாட்சியெனறான. அதறகு இவர்கள அவர்சாட்சிதானெனறார்கள.

௬ அபபுறஞசாமுவேல சனததோடே சொனனதாவது, மோசேயையும ஆறோனையுஙகட்டளையிடடவரும, உஙகளபிதாக்களை எகிப்து தேசததிலிருநதேறிவரப்பணணினவருஙகர்த்தரானவர்தானே.

௭ இபபோதுஙகர்த்தர் உஙகளுககும உஙகள பிதாக்களுககுஞ செயதிருககிற எலலாநீதி நியாயஙகளுக்காகவும நான கர்த்தருககுமுனபாக உஙகளோடேநியாயமபேசுமபடிககு உஙகளைநிறுததுஙகள

௮ யாககோப் எகிப்திலே வநததற்குப பிறபாடு உஙகளபிதாக்கள கர்த்தரை நோககிககூபபிடடார்கள. அபபோது கர்த்தர்மோசேயையுமஆறோனையுமனுபபினார். இவர்கள உஙகளபிதாக்களை எகிப்திலிருநதழைததுவநது, அவர்களை இநத ஸ்தலததிலேகுடியிருக்கபபணணினார்கள

௯ அவர்கள தஙகளபராபரனாகியகர்த்தரை மறநதுபோகிற போதோவெனில, இவர் அவர்களை ஆத்சோரினசேனாபதியாகிய சிசோராவினகையிலும பெலிஸ்தரின கையிலும மோவாபுடைய இராசாவின கையிலுமவிறறுபபோடடார். இவர்கள அவர்களுககுவிரோதமாகயுத்தமபணணினார்கள.

௰ ஆகையால அவர்களகர்த்தரைநோககிககூபபிடடு, நாஙகளகர்த்தரைவிடடுப்பாகாலகளையுமஅஸ்தரோததையுஞசேவித்ததினாலே பாவஞசெயதோம. இபபோதும எஙகளசததுருக்களின கையககு எஙகளைநீஙகலாககிவிடும. இனி உமமைசசேவிபபோமெனறார்கள.

௧௧ அபபோதுகர்த்தர் எருபாகாலையுமபேதானையும யெப்தாவையுஞசாமுவேலையுமனுபபி, நீஙகளபயமிலலாமற்குடியிருககுமபடிககுசசுறறிலுமிருநத உஙகளசததுருக்களினகையககும உஙகளை நீஙகலாககிவிடடார்.

௧௨ அமமோனபுததிரரின இராசாவாகியநாகாசு உஙகளுககுவிரோதமாயவருகிறதைநீஙகளகாணகிறபோதோவெனில உஙகளபராபரனாகியகர்த்தர்தானே உஙகள இராசாவாயிருநதாலும, நீஙகள எனனுடனே, அப்படிவேணடாம. ஒரு இராசா எஙகளமேலே அரசாளவேணடுமெனறீர்கள.

௧௩ இபபோதும இதோ, நீஙகளவேணடுமெனறுகேடடுத்தெரிநதுகொணட இராசா இஙகேயிருககிறார். இதோ, கர்த்தர் உஙகளமேல இராசாவைவைத்தார்.

௧௪ நீஙகள கர்த்தருடைய வாககுககு விரோதமாயக்கலகமபணணாமற், கர்த்தருககுபபயநது, அவரைசசேவிதது, அவருடையசத்தத்திற்குக கீழ்ப்படிநதால, நீஙகளும உஙகளமேல அரசுகிற இராசாவும உஙகளபராபரனாகியகர்த்தரைபபினபறறுகிறவாகளாயிருபபீர்கள.

௧௫ நீஙகளகர்த்தருடையசத்தத்திற்குக கீழ்ப்படியாமற்,கர்த்தரினவாககுக்குவிரோதமாயக் கலகமபணணினீர்களேயாகில், கர்த்தருடையகை உஙகளபிதாக்களுககுவிரோதமாயிருநததுபோலே உஙகளுககுமவிரோதமாயிருககும.

௧௬ இபபோதுமநீஙகள உஙகளைநிறுததிக்கர்த்தர் உஙகளகணகளுககுமுனபாகசசெயயும பெரியகாரியததைபபாருஙகள.

௧௭ இபபோது கோதுமையறுபபினநாளலலவோ? நீஙகள உஙகளுககு ஒரு இராசாவைககேடடதினாலே, கர்த்தரின பார்வைககுசசெயத உஙகளுடையபொலலாபபு பெரியதெனறுநீஙகள அறிநது, உணர்நதுகாணுமபடிககு, நான்கர்த்தரைநோககிககூபபிடுவேன. அபபோது இடிமுழக்கஙகளையும மழையையுஙகட்டளையிடுவாரெனறுசொலலி,

௧௮ சாமுவேல கர்த்தரைநோககிககூபபிட்டான. அபபோது அந்நாளிலேதானேகர்த்தர் இடிமுழக்கஙகளையும மழையையுஙகடடளையிட்டார். அபபோதுசனமெலலாஙகர்த்தருககுஞ சாமுவேலுககும மிகவுமபயநதிருநதது,

௧௯ சாமுவேலுடனேநாஙகள சாகாதபடிககு உமமுடையபராபரனாகியகர்த்தரையுமதடியாருக்காகவிணணபபஞசெயயும. ஏனென்றால எஙகளுடைய எலலாபபாவஙகளோடுமநாஙகள எஙகளுககு ஒரு இராசாவைககேட்ட பொலலாபபையுஙகூடடினோமெனறு சனமெலலாஞசொலலிறறு.

௨௰ அபபோது சாமுவேல சனததோடே சொன்னதாவது, பயப்படாதேயுங்கள். நீங்கள இநதப பொலலாபபையெலலாஞ செயதீர்கள. ஆகிலுங் கர்த்தரைவிட்டுப் பின்வாங்காமற் கர்த்தரையுங்கள முழு இருதயத்திலுஞ் சேவியுங்கள.

௨௰௧ விலகிப்போகாதேயுங்கள. மறறப்படிக்குப பிரயோசனமற்றதும இரட்சிக்கமாட்டாததுமாயிருக்கிற விருதாக்காரியங்களைப பினபறறுவீர்கள. ஏனென்றால அவைகள விருதாத்தானே.

௨௰௨ அதேதெனிற் கர்த்தர் உங்களைத் தமக்குச சனமாககிககொளளப் பிரியமானபடியினாலே, கர்த்தர் தமமுடையமகத்துவமான நாமத்திற்காகத் தமது சனத்தைக்கைவிடாதிருப்பார்.

௨௰௩ நானும உங்களுக்காக விணணபபஞசெயயாதேபோகிறபாவததைக் கர்த்தருக்கு விரோதமாகச செயவது எனக்குத் தூரமாயிருக்கக்கடவது. நனமையுஞ செவவையுமானவழியையும உங்களுக்குப போதித்துககொணடிருபபேன.

௨௰௪ ஆனாலநீங்கள கர்த்தருக்குப்பயந்து உங்கள முழு இருதயத்திலும உணமையாய அவரைச சேவிக்கக்கடவீர்கள. ஏனெனில அவர் உங்களிடத்திலெத்தனை நன்மையானகாரியங்களைச செயதாரென்றதைப்பாருங்கள.

௨௰௫ நீங்கள பொலலாப்பைச செயயவேசெயதீர்களானால, நீங்களும உங்கள இராசாவுங்கெட்டுப்போவீர்களென்றான.

## ௰௩. அதிகாரம்.

சவுல் பெலிஸ்தரோடே யுத்தமபண்ணபபோகையில அவசரமபிக்கையினாலேபாவஞ்செயதது.

சவுல இராசரிய பாரமபணணி, அபபோது ஒருவருஷமாயிருநதது. அவன இஸ்ரவேலை இரணடுவருஷம அரசாணடபோதோவெனில,

௨ அவன இஸ்ரவேலில மூவாயிரமபேரைத்தனக்குத தெரிநது கொணடான. அவர்களில இரணடாயிரமபேர் சவுலோடேகூடமிக்மாசிலும பெதேலமலையிலும, ஆயிரமபேர் யோனத்தானோடேகூடப பென்யமீன்தேசத்துக கிபெயாவிலுமிருநதார்கள. ஆனாலமற்றச சனத்தையவரவர்கூடாரங்களுக் கனுபபிவிட்டான.

௩ யோனத்தானென்றவன் கிபெயாவிலேதாணையமிருநதபெலிஸ்தரை முறியடித்தான. அதைபபெலிஸ்தர்கேட்டார்கள. ஆகையினாலே சவுல தேசமெங்கும இதை எபிரோயர் கேட்கக்கடவர்களென்று எக்காளமஊதுவித்தான.

௪ தாணையமிருநத பெலிஸ்தரைச சவுல முறியடித்தானென்றும பெலிஸ்தருக்கு இஸ்ரவேல நாற்றமாயப்போயிற்றென்றும இஸ்ரவேலெல்லாங்கேட்டபோது, சனஞ்சவுலுக்குப்பின்செல்லக்கில்காலுக்கு வர அழைப்பிக்கப்பட்டுவநதது.

௫ பெலிஸ்தர் இஸ்ரவேலோடேயுத்தமபணணும்படிக்கு முப்பதினாயிரம வணடிக்காரரும ஆறாயிரங்குதிரைக்காரருங் கடற்கரைமணலத்தனைச்சனமுமாய்க்கூடிககொணடு, வந்தேறிப் பெத்தாவேனுக்குக் கிழக்கான்மிக்மாசிலேபாளயமிறங்கினார்கள.

௬ அபபோது இஸ்ரவேலமனுஷர் தங்களுக்குணடான இக்கட்டைக்காணகிறதினாலே சனநதனக்குணடான நெருக்கத்தினிமித்தங்கெபிகளிலும முட்காடுகளிலுங் கனமலைகளிலுந் துருக்கங்களிலுங்குகைகளிலும ஒளித்துககொணடார்கள.

௭ எபிரோயர் யோர்தானையுங்கடநது காத்தேசத்திற்குங் கிலெயாததேசத்திற்குமபோனார்கள. ஆனாற்சவுல இன்னுங்கில்காலிலிருநதான. சனமெல்லாநடுக்கத்தளிப்பாய அவனுக்குப்பின்சென்றார்கள.

௮ அவனசாமுவேல தனக்குக்குறித்தகாலத்தினபடி, ஏழுநாள்மட்டுங்காத்திருநதான. ஆனாற்சாமுவேல கில்காலுக்குவராதிருக்கிறபோதுசனம அவனைவிட்டுச சிதறிபபோயிற்று.

௯ அபபோதுசவுல சர்வாங்கத்தகனபலியையுஞசமாதானபலிகளையும என்னனடைக்குக் கொணடு வாருங்களென்று சொலலிச சர்வாங்கத்தகனத்தைச்செலுத்தினான.

௰ அவன சர்வாங்கத் தகனததைச்செலுத்திமுடிக்கிறபோதோவெனில, இதோ, சாமுவேலவநதான. அபபோது அவனை மினவிக்கொள்ள சவுல அவனுககெதிர்கொணடுபோனான.

௰௧ நீர்செயததென்னவென்று சாமுவேலகேட்டதற்குச சவுலசொன்னதாவது, சனம எனனைவிட்டுச்சிதறிபபோகிறதையும், குறித்தநாட்களின்திட்டத்திலே நீர்வாராததையுமபெலிஸ்தர் மிக்மாசிலேகூடிககொணடிருக்கிறதையும நான்கணடபடியினாலே,

௰௨ இபபோதுபெலிஸ்தர் கில்காலிலிருக்கிற என்னனடைககிறங்கி வருவார்களென்றும, நானோவென்றால இன்னுங்கர்

த்தருடைய சமுகத்தை நோக்கிக் கெஞ்சினதில்லையென்று சொல்லித் துணிந்து, சர்வாங்கத் தகனத்தைச் செலுத்தினேனென்றான்.

௰௩ அதற்குச் சாமுவேல் சவுலோடே சொன்னதாவது, புத்தியீனமாய்ச் செய்தீர். உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உமக்குக் கற்பித்த கற்பனையைக் கைக்கொள்ளாதே போனீர். மற்றப்படி இப்போது கர்த்தர் இஸ்ரவேலின் மேல் உம்முடைய இராச்சியபாரத்தை என்றைக்கும் திடப்படுத்துவார்.

௰௪ இப்போதோவென்னில் உம்முடைய இராச்சியபாரம் நிலை நிற்காது. கர்த்தர் தம்முடைய இருதயத்திற்கேற்ற ஒரு புருஷனைத் தமக்குத் தேடி, அவனைக் கர்த்தர் தம்முடைய சனத்தின் மேலே தலைவனாயிருக்கக் கட்டளையிட்டார். ஏனெனில் கர்த்தர் உமக்குக் கற்பித்ததை நீர் கைக்கொண்டதில்லையென்று சொல்லி,

௰௫ சாமுவேல் எழுந்திருந்து, கில்காலைவிட்டுப் பென்யமீன் தேசத்துக் கிபெயாவுக்கேறிப் போனான். பிற்பாடு சவுல் தன்னோடே கூடவிருக்கிற சனத்தைத் தொகை பார்க்கிறபோது, ஏறக்குறைய அறுநூறு பேராயிருந்தார்கள்.

௰௬ சவுலும் அவன் குமாரனாகிய யோனத்தானும் அவர்களோடே கூடவிருக்கிற சனமும் பென்யமீன் தேசத்துக் கிபெயாவிலிருந்துவிட்டார்கள். பெலிஸ்தரோவென்றால் மிக்மாசிலே பாளயமிறங்கியிருந்தார்கள்.

௰௭ அழிக்கிறவர்கள் பெலிஸ்தரின் பாளயத்திலிருந்து, மூன்று தண்டாய்ப் புறப்பட்டார்கள். ஒரு தண்டு ஒப்ரு வழியாய்ச் சூவால் தேசத்திற்கு நேராகப் போயிற்று.

௰௮ வேறொரு தண்டு பெத்தொரோன் வழியாகப் போயிற்று. வேறொரு தண்டு வனாந்திரத்திலிருக்கிற சேபோயீமின் பள்ளத்தாக்குக்கெதிரான எல்லை வழியாய்ப் போயிற்று.

௰௯ இஸ்ரவேல் தேசத்திலோவென்றால், எங்கும் ஒரு கருமான் அகப்படவில்லை. ஏனென்றால் எபிரேயர் பட்டயங்களையாகிலும் ஈட்டிகளையாகிலும் செய்யாதபடிக்குப் பார்க்க வேண்டுமென்று பெலிஸ்தர் சொல்லியிருந்தார்கள்.

௨௰ ஆகையால் இஸ்ரவேலர் எல்லாரும் அவரவர் தங்கள் கொழுவிரும்புகளையும் தங்கள் மண்வெட்டிகளையும் தங்கள் கோடாலிகளையும் தீட்டி, ஆணிகளைக் கூர்மையாக்குகிறதற்கும் பெலிஸ்தரண்டைக்கிறங்கிப் போகவேண்டியதாயிருந்தது.

௨௧ அரிவாட்களையும் மண்வெட்டிகளையும் முக்கூருள்ள ஆயுதங்களையும் கோடாலிகளையும் கூர்மையாக்குகிறதற்கு அவர்களுக்கு அரங்களமாத்திரமிருந்தது.

௨௨ யுத்தநாள் வந்தபோது, சவுலோடும் யோனத்தானோடுமிருக்கிற சகல சனத்தின் கையிலும் பட்டையமும் ஈட்டியுமில்லாதிருந்தது. சவுலுக்கும் அவன் குமாரனாகிய யோனத்தானுக்கும் மாத்திரமிருந்தது.

௨௩ பெலிஸ்தரின் பாளயமோவென்றால், மிக்மாசிலிருந்து போகிற வழியாய்ப் புறப்பட்டு வருகிறதாயிருந்தது.

## ௰௪. அதிகாரம்.

இஸ்ரவேல் பெலிஸ்தரைச் செயங்கொண்டது.

ஒரு நாளிலே சமபவித்த தேதெனில், சவுலின் குமாரனாகிய யோனத்தான் தன் ஆயுதங்களைப் பிடிக்கிற பிள்ளையாண்டானுடனே, நமக்கு எதிராக அந்தண்டையிலிருக்கிற பெலிஸ்தரின் தாணையத்திற்குக் கடந்து போவோம் வாவென்று சொல்லி அதைத் தன் தகப்பனுக்கு அறிவிக்காதிருந்தான்.

௨ சவுலோவென்றால் கிபெயாவின் கடைசிமுனையாகிய மிக்ரோனிலே ஒரு மாதளமரத்தின் கீழிருந்தான். அவனோடே கூடவிருந்த சனம் ஏறக்குறைய அறுநூறு பேராயிருந்தார்கள்.

௩ சீலோவிலே கர்த்தருடைய ஆசாரியனாயிருந்த ஏலியின் குமாரனாகிய பினெகாசுக்குப் பிறந்த இக்கபோத்தின் சகோதரனும் அகித்தோபின் குமாரனுமாகிய அகியாவென்கிறவன் ஆசாரியச்சால்வையையணிந்தவனாயிருந்தான். யோனத்தான் போனதைச் சனம் அறியாதிருந்தது.

௪ யோனத்தான் பெலிஸ்தரின் தாணையத்திற்குக் கடந்து போகப் பார்த்த வழிகளின் நடுவே இந்தண்டை ஒரு கன்மலைக்குன்றும் அந்தண்டை ஒரு கன்மலைக்குன்றுமிருந்தது. ஒன்று போத்சேஸ் என்றும் மற்றொன்று சேனே என்றும் பேர் கொண்டது.

௫ அந்தக் குன்றுகளில் ஒன்று வடக்கே மிக்மாசுக்கெதிராகவும் மற்றொன்று தெற்கே கிபெயாவுக்கெதிராகவுமிருந்தது.

௬ யோனத்தான் தன் ஆயுதங்களைப் பிடிக்கிற பிள்ளையாண்டானோடே, சுன்னத்தில்லாதவர்களின் அந்தத் தாணையத்திற்குக்

கடநதுபோவோம்வா. ஒருவேளைக்கர்த்த ர்நமக்காக ஒருகாரியஞ்செயவார். ஏனெ ன்றால அநேகமபேரைககொணடாகிலு மகொஞசமபேரைககொணடாகிலுமஇரட்சிக்கக் கர்த்தருக்குத் தடையிலலையென்றான.

௭ அபபோது அவன ஆயுதங்களைபபிடிக்கிறவன அவனுடனே, உமமுடைய இருதயததிலிருககிறதையெல்லாஞ்செயயும. அப்படிப்போம. இதோ, உமமுடையமனதுககேற்றபடிநானுமஉமமோடேகூடவருகிறேனென்றான.

௮ அபபோதுயோனத்தானசொன்னதாவது, இதோ, நாஙகடநது அநதமனுஷர்ணடைககுபபோகிறவர்களாய அவர்களுககுநமமைக்காணபிபபோம.

௯ நாஙகளுஙகள்ணடைககு வருமடடுமநிலலுஙகளென்று நமமோடேசொன்னார்களானால நாமவர்கள்ணடைககேறிபபோகாமலநமமுடைய நிலையிலேநிறபோம.

௰ எஙகளணடைககு ஏறிவாருஙகளென்றார்களேயாகில் ஏறிபபோவோம ஏனென்றால்கர்த்தர் அவர்களை நமமுடையகையிலே ஒபபுககொடுத்தார். இதுநமககு அடையாளமென்றான.

௰௧ அப்படியே அவர்கள இருவரும பெலிஸ்தரினதாணையததிற்குத் தஙகளைக் காணபித்தார்கள. அபபோதுபெலிஸ்தர் இதோ,எபிரெயர் ஒளிததுககொணடிருநதவளைகளை விடடுபபுறப்படுகிறார்களென றுசொலலி,

௰௨ தாணையமிருககிறமனுஷர் யோனத்தானையும அவன ஆயுதஙகளைபபிடிககிறவனையுமபார்தது, எஙகள்ணடைக்கேறிவாருஙகள.உஙகளுககுபபுததிகறபிபபோமென்றார்கள. அபபோது யோனத்தான தன் ஆயுதஙகளைபபிடிககிறவனோடே, என்பிறகாலே ஏறிவா. ஏனென்றால்கர்த்தர் அவர்களை இஸ்ரவேலின கையிலே ஒபபுககொடுத்தாரென்றுசொலலி,

௰௩ யோனத்தான தன்கைகளாலுந தனகால்களாலுந தவழ்ந்தேறினான. அவன ஆயுதஙகளைபபிடிககிறவன அவனபிறகாலே ஏறினான. அபபோது அவர்களயோனத்தானுககுமுனபாகவிழுநதார்கள. அவன ஆயுதஙகளைபபிடிககிறவன அவனபிறகாலேவெடடிககொணடேபோனான.

௰௪ யோனத்தானும அவன ஆயுதஙகளைபபிடிககிறவனும அடித்த அநதமுநதின அடியிலே ஏறககுறைய இருபதுபேர் அரையேர்நிலமான விஸதாரததிலவிழுநதார்கள.

௰௫ அபபோதுவெளியிலிருநத பாளயததிலுஞ்சகலசனததிலும பயஙகரமுணடாயததாணையமிருநதவர்களுஙகொளளையிடப்போனதணடுஙகூடததிகிலடைநதிருநதுபூமியதிர்நதது. ஏனெனில அது பராபரனாலுணடான பயஙகரமாயிருநதது.

௰௬ இதோ, அநத ஏராளமானகூட்டங்கலைநது, ஒருவர்மேல ஒருவர் விழுகிறதைபபென்யமீன்கேபாவிலேசவுலுககிருநதசாமக்காரர்கணடார்கள.

௰௭ அபபோதுசவுல தனனோடேகூடவிருககிறசனததுடனே, நமமிடததிலிருநதுபோனவர்களாரென்று இலக்கமபாருஙகளேனென்றான. அவர்கள இலக்கமபார்ககிறபோது இதோ, யோனத்தானும அவன ஆயுதஙகளைபபிடிககிறவனுமிலலாதிருநதார்கள.

௰௮ அபபோதுசவுல அகியாவுடனே பராபரனுடையபெடடியைசசேர்ககொணடுவாவென்றான. ஏனென்றாற்பராபரனுடையபெடடி அந்நாளில இஸ்ரவேலபுததிரரிடததிலிருநதது.

௰௯ இப்படிச்சவுல ஆசாரியனோடே பேசுகையிற், பெலிஸ்தரினபாளயததிலுணடானகலககமவெகுவதிகமாயிறறு. அபபோதுசவுல் ஆசாரியனோடே, இருக்கடடுமென்றான.

௨௰ சவுலும அவனோடிருநத சனமுமஒருவரையொருவர்கூபபிடடுயுத்தக்களத்திற்குவநதார்கள.இதோ, ஒருவர்படடையமஒருவருககுவிரோதமாயிருநததுமகாபபெரிய அமளியாயிறறு.

௨௧ முந்நாளிலேபெலிஸதரிடததிலிருநது, அவர்களோடேகூடப் பாளயததிலேதிரிநதுவநதேறின எபிரெயருஞ் சவுலோடுமயோனத்தானோடுமிருககிற இஸ்ரவேலரோடேகூடிககொணடார்கள.

௨௨ எபபிராயீம் மலைகளில ஒளிததுககொணடிருநதசகல இஸ்ரவேலருமபெலிஸ்தர் முறிநதோடுகிறதைககேட்டபோது,இவர்களுமயுத்தத்திலே அவர்களைபபினதொடர்நதார்கள.

௨௩ இப்படிக்கர்த்தர் அனறையததினம இஸ்ரவேலைரட்சிககிறதினாலே அநதயுத்தமபெத்தாவேனமடடுககும நடநதது.

௨௪ ஆனால இஸ்ரவேலர் அனறையததினமவெகுவருத்தமடைநதார்கள. ஏனென்றலநான் எனசததுருக்கள கையிலேபழிவாஙகுமபடிககு. எவனசாயஙகாலமடடுமபொசிக்காமற் போசனஞ்சாபபிடுகி

றானே, அவன் சபிக்கப்பட்டவனென்று சவுல் சனத்தை ஆணையிட்டான். ஆகையால் சனமெல்லாம் போசனம் ருசிக்காதிருந்தார்கள்.

௨௫ தேசத்தின் சனமெல்லாம் ஒரு காட்டிலே வந்தார்கள். அங்கே வெளியிலே தேன் கட்டியிருந்தது.

௨௬ சனங்கள் காட்டிலே வந்த போது, இதோ, தேன் ஒழுகிக்கொண்டிருந்தது. ஆனால் ஒருவரும் அதைத் தன் கையினாலே தொட்டுத் தன் வாயிலே கொடுத்துக்கொண்டதில்லை. ஏனென்றால் சனம் அந்த ஆணையினிமித்தம் பயப்பட்டது.

௨௭ யோனத்தானோவென்றால் தன் தகப்பன் சனத்தை ஆணையிட்டதைக் கேள்விப்படாதிருந்து, தன் கையிலிருந்த கோலை நீட்டி, அதின் முனையினாலே தேன் கூட்டிலே குத்தி, அதையெடுத்துத் தன் வாயிலே போட்டுக்கொண்டான். அதினால் அவன் கண்கள் தெளிவாயிற்று.

௨௮ அப்பொழுது சனத்தில் ஒருவன், இன்றைக்குப் போசனஞ் சாப்பிடுகிறவன் சபிக்கப்பட்டவனென்று உம்முடைய தகப்பனார் சனத்தை ஆணையிட்டுவைத்தார். ஆகையினாலே சனம் விடாய்த்திருக்கின்றதென்றான்.

௨௯ அப்பொழுது யோனத்தான் சொன்னதாவது, என் தகப்பன் தேசத்தின் சனத்தைக் கலக்கமாக்கினார். நான் இந்தத் தேனிலே கொஞ்சம் ருசித்ததினாலே என் கண்கள் தெளிவாயிற்றென்று பாருங்களேன்.

௩௦ இன்றையத்தினம் சனங்கள் தங்களுக்கு அகப்பட்ட தங்கள் சத்துருக்களின் கொள்ளையிலே ஏதாகிலும் பொசிக்கவே பொசித்திருந்தால் எத்தனை நலமாயிருக்கும். இப்பொழுதோவென்றால் பெலிஸ்தரை முறியடிக்குதல் அத்தனை பெரியதாயிராதென்றான்.

௩௧ அவர்கள் அன்றையத்தினம் மிக்மாசிலிருந்து ஆயலோன்மட்டும் பெலிஸ்தரை முறியடித்தபோது சனம் மெத்தவும் விடாய்த்திருந்தது.

௩௨ அப்பொழுது சனங்கள் கொள்ளையின் மேற்பறப்பாகி, ஆடுகளையும் மாடுகளையும் கன்றுக்குட்டிகளையும் பிடித்துத் தரையிலே போட்டடித்து இரத்தத்தோடிருக்கிறதாகப் பொசித்தார்கள்.

௩௩ அப்பொழுது இதோ, இரத்தத்தோடிருக்கிறதைப் பொசிக்கிறதினாலே சனங்கள் கர்த்தருக்கே விரோதமாய்ப் பாவஞ்செய்கிறார்களென்று சவுலுக்கு அறிவித்தார்கள். அப்பொழுது அவன், நீங்கள் துரோகம் பண்ணினீர்கள். இன்னேரமே ஒரு பெரிய கல்லை என்னண்டைக்கு உருட்டிக்கொண்டு வாருங்களென்றும்,

௩௪ நீங்கள் சனத்திற்குள்ளே சிதறிப்போய், இரத்தத்தோடேயிருக்கிறதைச் சாப்பிடுகிறதினாலே கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்யாதபடிக்கு அவரவர் தங்கள் மாட்டையும் அவரவர் தங்கள் ஆட்டையும் என்னண்டைக்குக் கொண்டுவந்து, இங்கே அடித்துப் பிற்பாடு சாப்பிடவேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லுங்களென்றும் சொன்னான். ஆகையால் சனமெல்லாம் அவரவர் தங்கள் மாடுகளை அன்று இராத்திரி தங்கள் கையினாலே கொண்டுவந்து அங்கே அடித்தார்கள்.

௩௫ பிற்பாடு சவுல் கர்த்தருக்கு ஒரு பீடத்தைக் கட்டினான். அது அவன் கர்த்தருக்குக் கட்டின முந்தின பீடமானது.

௩௬ அதற்குப்பிறகு சவுல், நாம் இந்த இராத்திரியிலே பெலிஸ்தரின் பின்னாலே இறங்கிப்போய், விடியற்காலம் வெளிச்சமாகுமட்டும் அவர்களைக் கொள்ளையிட்டு, அவர்களில் ஒருவரையும் மீதியாக வைக்காதிருப்போமாகவென்றான். அதற்கு அவர்கள், உம்முடைய கண்களுக்கு நலமானபடியே உம்முடைய கண்களுக்கு நலமானபடியே செய்யுமென்றார்கள். ஆனால் ஆசாரியன், இங்கே பராபரனண்டைக்குச் சேர்க்கடவோமென்றான்.

௩௭ அப்படியே பெலிஸ்தருக்குப் பின்னாக இறங்கிப்போவேனோ, அவர்களை இஸ்ரவேலின் கையிலே ஒப்புக்கொடுப்பீரோவென்று சவுல் பராபரனைக் கேட்டான். ஆனால் அவர் அந்நாளிலே அவனுக்கு மறுவுத்தரவருளினதில்லை.

௩௮ அப்பொழுது சவுல் சொன்னதாவது, நீங்கள் இங்கே சனத்தின் சகல சேனைகளே! நீங்களிங்கே சேர்ந்து, எதினாலே இன்று இந்தக் குற்றமிருக்கின்றதென்றறிந்து பாருங்கள்.

௩௯ ஏனெனில் அது என் குமாரனாகிய யோனத்தானிடத்திலிருந்தாலும் அவன் சாகவே சாகவேண்டுமென்று இஸ்ரவேலை இரட்சிக்கிற கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றான். ஆனால் சகல சனத்திலும் ஒருவனும் அவனுக்கு பிரதியுத்தாரஞ்சொல்லவில்லை.

௪௰ அதற்குப்பிறகு அவன் இஸ்ரவேலோடெல்லாம், நீங்கள் அந்தப்புறத்திலேயிருங்கள். நானும் என் குமாரனும் யோனத்தானும் இந்தப்புறத்தில் இருப்போமென்றான். சனங்கள் சவுலுடனே, உம்முடைய கண்களுக்கு நலமானபடி செய்யுமென்றார்கள்.

சக அப்போது சவுல் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரை நோக்கி, நீதான் மெய்க்கட்டளையிடுவீராகவென்றான். அப்போது யோனத்தானும் சவுலும் பிடிபட்டார்கள். ஜனமோ தப்பிப்போயிற்று.

சஉ என்க்கும் என் குமாரனுக்கும் யோனத்தானுக்கும் சீட்டுப்போடுங்களென்று சவுல் சொன்னபோது யோனத்தான் பிடிபட்டான்.

சங அப்போது சவுல் யோனத்தானோடே, நீ செய்ததென்னவென்று எனக்கறிவியென்றான். யோனத்தான் அவனுக்கறிவித்து, என் கையிலிருக்கிற கோலின் முனையிலே நான் கொஞ்சந் தேனெடுத்து ருசிக்கவே ருசித்தேன் இதோ, அதற்காக நான் சாகவேண்டுமென்றான்.

சச அப்போது சவுல், யோனத்தானே! நீ சாகவே சாகவேண்டும். இல்லாவிட்டால் பராபரன் எனக்கு இப்படியும் அப்படியும் செய்யக்கடவரென்றான்.

சரு ஜனமோ வென்றால் சவுலுடனே, இஸ்ரவேலிலே இந்தப் பெரிய இரட்சிப்பைச் செய்த யோனத்தான் கொலைசெய்யப்படலாமோ? அது வேண்டாம். அவன் தலையிலிருக்கிற ஒரு மயிருந்தரையிலே விழப்போகிறதில்லையென்று கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறோம். ஏனென்றால் பராபரன் துணையாய் அவன் இன்று காரியம் நடப்பித்தானென்றார்கள். அப்படியே யோனத்தான் சாகாதபடிக்கு ஜனம் அவனை மீட்டுக்கொண்டது.

சசு சவுல் பெலிஸ்தரைத் தொடருகிறதைவிட்டு வந்தேறினான். பெலிஸ்தரும் தங்கள் ஸ்தலத்திற்குப் போய்விட்டார்கள்.

சஎ இப்படிச் சவுல் இஸ்ரவேலையாளுகிற இராசரீயபாரத்தைக் கட்டிக்கொண்டதுமன்றி, சுற்றிலுமிருக்கிற தன்னுடைய எல்லாச் சத்துருக்களுமாகிய மோவாபியருக்கும் அம்மோன் புத்திரருக்கும் ஏதோமருக்கும் சோபாவின் இராசாக்களுக்கும் பெலிஸ்தருக்கும் விரோதமாக யுத்தம்பண்ணி, எவர்கள் மேலே திரும்பினானோ, அவர்களையெல்லாம் ஆக்கினையிட்டான்.

சஅ அவன் பலத்துக்கொண்டு, அமலேக்கியரை முறியடித்து, இஸ்ரவேலைக் கொள்ளையிடுகிறயாவர் கைக்கும் அதை நீங்கலாக்கிவிடுவித்தான்.

சகூ சவுலுக்கிருந்த குமாரர் யோனத்தான், இஸ்வி, மல்கிசூவா, என்றவர்கள். அவனுடைய இரண்டு குமாரத்திகளின் நாமங்களேதென்றால், மூத்தவளுக்கு மேராப் என்றநாமமும் இளையவளுக்கு மீகாளென்ற நாமமுமிருந்தது.

ரு௦ சவுலுடைய பெண்சாதியின் பேர் அகினோவாம். அவள் அகிமாத்சின் குமாரத்தியாயிருந்தாள். அவனுடைய சேனாபதியின் பேர் அப்னேர். இவன் சவுலுடைய சிறிய தகப்பனாகிய நேரின் குமாரனாயிருந்தான்.

ருக கீசு சவுலின் தகப்பனானவன். அப்னேரின் தகப்பனாகிய நேரோவென்றால் அபியேலின் குமாரனாயிருந்தான்.

ருஉ சவுலிருந்த நாளெல்லாம் பெலிஸ்தரின்மேலே கடினமான யுத்தம் நடந்தது. சவுல் ஒரு பராக்கிரம மனுஷனையும் ஒரு பலசாலியையுங் காணுகிறபோது, அவர்களையெல்லாந் தன்னிடமாகச் சேர்த்துக்கொண்டான்.

## யரு. அதிகாரம்.

சவுல் அமலேக்கியரோடே பண்ணின யுத்தத்திலே கர்த்தருக்குக் கீழ்ப்படியாதேபோனதினிமித்தம் அவராலே புறக்கணிக்கப்பட்டது.

பிறபாடு சாமுவேல் சவுலோடே சொன்னதாவது, இஸ்ரவேலராகிய தம்முடைய ஜனத்தின்மேல் உம்மை இராசாவாக அபிஷேகம்பண்ணுகிறதற்குக் கர்த்தர் என்னையனுப்பினார்; இப்போது கர்த்தருடைய வார்த்தைகளின் சத்தத்தைக் கேளும்.

உ சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், இஸ்ரவேல் எகிப்திலிருந்து வந்தேறுகிறபோது, அமலேக் அதற்கு வழியை மறித்து அதினிமித்தம் செய்கையை மனதிலே வைத்தேன்.

ங இப்போது நீ போய், அமலேக்கை முறியடித்து, அவனுக்குண்டானதெல்லாவற்றையும் சங்கரித்து, அவன்மேல் இரக்கம் வைக்காமல் புருஷரையும், பெண்சாதிகளையும், பிள்ளைகளையும், குழந்தைகளையும், மாடுகளையும், ஆடுகளையும், ஒட்டகங்களையும், கழுதைகளையுங் கொன்றுபோடக்கடவாயென்று கர்த்தர் சொன்னார்.

ச அப்போது சவுல் ஜனத்தை அழைப்பித்து, தெலாயிமிலே அவர்களைத் தொகைபார்த்தான். அவர்கள் இருநூறாயிரங் காலாட்களும், யூத மனுஷரில் பதினாயிரம் பேருமாயிருந்தார்கள்.

ரு சவுல் அமலேக்குடைய பட்டணமட்டும் வந்து, பள்ளத்தாக்கிலே ஒரு பதிவிடையை வைத்தான்.

௬ ஆனாற்சவுல் கேனியருடனே, நான் அமலேக்கியரோடேகூட உங்களையும் வாரிக்கொள்ளாதபடிக்கு, நீங்கள் அவர்கள் நடுவிலிருந்து புறப்பட்டு விலகிவாருங்கள். ஏனெனில் இஸ்ரவேலர் எகிப்திலிருந்து வந்தேறுகிறபோது, நீங்கள் அவர்களெல்லாருக்கும் தயவுசெய்தீர்களென்றான். அப்படியே கேனியர் அமலேக்கியரின் நடுவிலிருந்து விலகிப்போனார்கள்.

௭ அப்பொழுது சவுல் ஆவிலா துவக்கி எகிப்திற்கெதிரேயிருக்கிற சூருக்குப் போகும் எல்லைமட்டுமிருந்த அமலேக்கியரை மடங்கடித்து,

௮ அமலேக்கியரின் இராசாவாகிய ஆகாகை உயிரோடே பிடித்தான். ஆனாற் சனமனைத்தையும் பட்டயக்கருக்கினாலே சங்காரம்பண்ணினான்.

௯ ஆனாற்சவுலும் சனமும் ஆகாகையும் ஆடுமாடுகளில் முதற்றரமானதையும் இரண்டாந்தரமானதையும் ஆட்டுக்குட்டிகளையும், நலமான தெல்லாவற்றையுஞ் சங்காரம்பண்ண மனதில்லாமல் தப்பவைத்துப் புறக்கணிக்கப்படத்தக்கதும் ஆகாததுமான சகலவஸ்துவையுமே சங்காரம்பண்ணினார்கள்.

௰ அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை சாமுவேலுக்குண்டாய், அவர் சொன்னதாவது,

௰௧ நான் சவுலை இராசாவாக்கினது நமக்கு மனஸ்தாபமாயிருக்கின்றது. ஏனெனில் அவன் நம்மைவிட்டுத் திரும்பி நம்முடைய வார்த்தைகளை நிறைவேற்றாமற்போனானென்றார். அப்பொழுது சாமுவேல் மனஎரிச்சலாகி இராமுழுதுங் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான்.

௰௨ மறுநாள் அதிகாலமே சாமுவேல் சவுலைச் சந்திக்கப்போனான். அப்பொழுது சவுல் கர்மேலுக்குவந்து, இதோ, தனக்கு ஒரு வெற்றிவிருதை நாட்டினானென்றும், பிறகு சுற்றிக்கொண்டு கடந்து கில்காலுக்கிறங்கிப்போனானென்றுஞ் சாமுவேலுக்கறிவிக்கப்பட்டது.

௰௩ சாமுவேல் சவுலண்டைக்கு வந்தபோது, சவுல் அவனுடனே, நீர் கர்த்தருக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவர். கர்த்தருடைய வார்த்தையை நிறைவேற்றினேனென்றான்.

௰௪ அதற்குச்சாமுவேல், ஆனால் என் காதுகளில் விழுகிற அந்த ஆடுகளின் சத்தமும் நான் கேட்கிற மாடுகளின் சத்தமுமென்னவென்றான்.

௰௫ அப்பொழுது சவுல், அமலேக்கியரிடத்திலிருந்து அவைகளைக் கொண்டுவந்தார்கள். ஏனெனிற் சனம் ஆடுமாடுகளில் நலமானதை உம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடும்படிக்குத் தப்பவைத்தார்கள். ஆனால் மற்றதைச் சங்காரம்பண்ணினோமென்றான்.

௰௬ அப்பொழுது சாமுவேல் அந்தப் பேச்சைவிட்டு, கர்த்தர் இந்த இராத்திரியிலே என்னோடே சொன்னதை உமக்கறிவிப்பேனென்று சவுலோடே சொன்னான். இவன் அவனுடனே, சொல்லுமென்றான்.

௰௭ அப்பொழுது சாமுவேல் சொன்னதாவது, நீர் உம்முடைய பார்வைக்குச் சிறியவராயிருக்கிறபோதல்லவோ இஸ்ரவேல் கோத்திரங்களுக்குத் தலைவரானீர்? அப்போது கர்த்தர் உம்மை இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணிவித்தார்.

௰௮ இப்போதுங் கர்த்தர் உம்மை யாத்திரை வழியாயனுப்பி, நீ போய், அமலேக்கியராகிய அந்தப் பாவிகளைச் சங்கரித்து, அவர்கள் நிர்மூலமாகுந்தீருமட்டும் அவர்களோடு யுத்தம்பண்ணென்றாரே.

௰௯ இப்படியிருக்கக்கொள்ள, நீர் கர்த்தருடைய சொற்கேளாமற், கொள்ளையின்மேற் பாய்ந்து, கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்ததென்னவென்றான்.

௨௰ அப்பொழுது சவுல் சாமுவேலோடே சொன்னதாவது, நான் கர்த்தருடைய சொற்கேட்டுக் கர்த்தர் என்னை யனுப்பின வழியாயப்போய், அமலேக்கின் இராசாவாகிய ஆகாகைக்கொண்டுவந்து, அமலேக்கியரைச் சங்காரம்பண்ணினேனே.

௨௧ சனமோவென்றால் உம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குக் கில்காலிலே பலியிடுகிறதற்காகக் கொள்ளையிலே சாபத்தீடாகும் ஆடுமாடுகளில் பிரதானமானதைப்பிடித்து ஓட்டி வந்தார்களென்றான்.

௨௨ அதற்குச் சாமுவேல் சொன்னதாவது, கர்த்தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்படிகிறதைப்பார்க்கிலும் சர்வாங்கதகனங்களும் பலிகளுங் கர்த்தருக்குப் பிரியமாயிருக்குமோ? இதோ, பலியைப்பார்க்கிலும் கீழ்ப்படிதலும், ஆட்டுக்கடாக்களின் கொழுப்பைப்பார்க்கிலும் கவனித்திருக்குதலும் நல்லது.

௨௩ ஏனென்றால் இரண்டகம்பண்ணுதல் பில்லிசூனியப்பாவத்திற்கும் முரட்டாட்டம்பண்ணுதல் விக்கிரகாராதனைக்கும் ஒ

சுரூபங்களையும் கும்பிடுகிறதற்குஞ் சரியாயிருக்கின்றது. நீர் கர்த்தருடைய வார்த்தையைப் புறக்கணித்தபடியினாலே அவர் உம்மையும் நீர் இராசாவாயிராதபடிக்குப் புறக்கணித்தாரென்றான்.

௨௪ அப்போது சவுல் சாமுவேலோடே சொன்னதாவது, நான் கர்த்தருடைய வாக்கையும் உம்முடைய வார்த்தைகளையும் மீறினதினாலே பாவஞ்செய்தேன். ஏனென்றால் நான் சனத்திற்குப் பயந்து, அவர்கள் சொற்கேட்டேன்.

௨௫ இப்போதும் நீர் என் பாவத்தை மன்னித்து, நான் கர்த்தரைப் பணிந்துகொள்ளும்படிக்கு, என்னோடே கூடத் திரும்பிக்கொண்டுவாரும் என்றான்.

௨௬ ஆனாற் சாமுவேல் சவுலுடனே நான் உம்மோடே கூடத் திரும்புவதில்லை. ஏனெனில் நீர் கர்த்தருடைய வார்த்தையைப் புறக்கணித்தீர். நீர் இஸ்ரவேலின் மேல் இராசாவாயிராதபடிக்குக் கர்த்தர் உம்மையும் புறக்கணித்தாரென்றான்.

௨௭ போகிறதற்காகச் சாமுவேல் திரும்புகிறபோது அவன் இவன் அவன் சால்வையின் தொங்கலைப் பிடித்துக்கொண்டான். அது கிழிந்துபோயிற்று.

௨௮ அப்போது சாமுவேல் அவனோடே சொன்னதாவது, உம்மிடத்திலிருந்த இஸ்ரவேலின் இராச்சியபாரத்தை இன்று கர்த்தர் கிழித்துப்போட்டு, உம்மைப் பார்க்க நல்லவனாயிருக்கிற உம்முடைய தோழனுக்கதைக் கொடுத்தார்.

௨௯ இஸ்ரவேலின் செயபலமானவர் பொய்சொல்லுகிறதுமில்லை. தாஞ்சொன்னதற்கு மனஸ்தாபப்படுகிறதுமில்லை. ஏனென்றால் அதற்கு மனஸ்தாபப்பட அவர் மனுஷனல்லவென்றான்.

௩௰ அதற்கவன், நான் பாவஞ்செய்தேன். இப்போதும் என் சனத்தின் மூப்பருக்கு முன்பாகவும், இஸ்ரவேலுக்கு முன்பாகவும், நீர் என்னைக் கனம்பண்ணி, நான் உம்முடைய பராபரனாகிய கர்த்தரைப் பணிந்துகொள்ளும்படிக்கு, என்னோடே கூடத் திரும்பிக்கொண்டு வாரும் என்றான்.

௩௧ அப்போது சாமுவேல் திரும்பிக்கொண்டு சவுலுக்குப் பின் சென்றான். சவுல் கர்த்தரைப் பணிந்துகொண்டான்.

௩௨ பிற்பாடு சாமுவேல், அமலேக்கின் இராசாவாகிய ஆகாகை என்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான். ஆகாக் சந்தோஷமுள்ளவனாய் அவனண்டைக்குப் போய், மரணத்தின் கசப்பு அறறுப்போனது நிச்சயமென்றான்.

௩௩ சாமுவேலோ வென்றால், உன்னுடைய பட்டயம் ஸ்திரிகளைப் பிள்ளைகளற்றவர்களாக்கினது போலே, ஸ்திரீகளுக்குள்ளே உன்னுடைய தாயாரும் பிள்ளைகளற்றவளாவாளென்று சொல்லிச் சாமுவேல் கில்காலிலே கர்த்தருக்கு முன்பாக ஆகாகைத் துண்டித்துப்போட்டான்.

௩௪ பிற்பாடு சாமுவேல் ராமாவுக்குப் போனான். சவுலோவென்றால் தன் ஊராகிய கிபெயாவிலிருக்கிற தன் வீட்டுக்குப் போயேறினான்.

௩௫ சவுல் மரணமடைந்த நாள் மட்டுஞ் சாமுவேல் அப்புறம் அவனைக் காணப் போகவில்லை. ஏனென்றால் இஸ்ரவேலின் மேல் சவுலை இராசாவாக்கினதற்குக் கர்த்தர் மனஸ்தாபப்பட்டதினிமித்தஞ் சாமுவேல் சவுலுக்காகத் துக்கித்துக் கொண்டிருந்தான்.

## ௰௬. அதிகாரம்.

தாவீது முதல்விசை அபிஷேகம்பண்ணப்பட்டது.

கர்த்தர் சாமுவேலுடனே, இஸ்ரவேலின் மேல் இராசாவாயிராதபடிக்கு நாம் புறக்கணித்த சவுலுக்காக நீ எந்தமட்டுந் துக்கமாயிருப்பாய். நீ உன் கொம்பை எண்ணெயால் நிரப்பிவா. பெத்லெகேமியனாகிய ஈசாயண்டைக்கு உன்னை அனுப்புவோம். ஏனெனில் அவன் குமாரரில் ஒருவனை நமக்கு இராசாவாகத் தெரிந்துகொண்டோமென்றார்.

௨ அதற்குச் சாமுவேல், நான் போவதெப்படி? சவுல் அதைக் கேட்டு, என்னைக் கொன்றுபோடுவானே என்றான். அப்போது கர்த்தர் சொன்னதாவது, நீ ஒரு கிடாரிக் கன்றைக் கையோடே கொண்டுபோய்க் கர்த்தருக்குப் பலியிட வந்தேனென்று சொல்லி,

௩ ஈசாயைப் பலிவிருந்துக்கு அழைப்பாயாக. அப்போது நீ செய்யவேண்டியதை நாம் உனக்கறிவிப்போம். நாம் உனக்குச் சொல்லப்போகிறவனை நமக்கு அபிஷேகம்பண்ணுவாயாகவென்றார்.

௪ கர்த்தர் சொன்னபடியே சாமுவேல் செய்து பெத்லெகேமுக்கு வந்தான். அப்போது ஊரின் மூப்பர் தத்தளித்துப்போய் அவனுக்கெதிர்கொண்டுவந்து நீர் வருகிறது சமாதானமோவென்றார்கள்.

௫ அதற்கு அவன், சமாதானந்தானே கர்த்தருக்குப் பலியிட வந்தேன். நீங்கள் உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டு

மேன. இனனில எனகணகளில அவனுக
குத தயவுகிடைததென்று சொலலச
சொனனான.

௨௩ அபபடியே பரபரனாலவிடபபட
ட ஆவி சவுலைபபிடிககுமபோது தாவீது
சுரமணடலததை யெடுதது கொணடு
தனகையினால வாசிபபான. அதினாலே
சவுலுககு மூசசுபபாறுதலுணடாகி, அவ
னுககு தாவிலையாயபபோயப பொல
லாத ஆவி அவனைவிட்டு நீஙகும.

## ௰௭. அதிகாரம்.

இராட்சதனாகிய கோலியாததென்கிறபெ
லிஸ்தனைத தாவீதுசெயித்த அதிசயம.

பெலிஸ்தரோவென்றால யுத்தமபண
ணுகிறதற்குத தஙகள இராணுவஙகளைச்சே
ர்த்து யூதாவிலிருககிற சொகோ கோவிலே
கூடிச்சொகோவுககும அசெககாவுககு
நடுவேயிருககிற தமமீமின எலலையிலே
பாளயமிறஙகினார்கள.

௨ ஆனால சவுலும இஸ்ரவேல மனுஷ
ருஙகூடிககொணடு, கர்வாலிப பள்ளததா
ககிலே பாளயமிறஙகிப பெலிஸ்தருககெ
திராக யுத்தத்திறகாயததம பணணினார்
கள.

௩ பெலிஸ்தர் அநதணடை ஒருமலையி
னமேலும இஸ்ரவேலர் இநதணடை ஒரு
மலையினமேலுமநினறார்கள. பளளததாக
கு அவர்களுககு நடுவேயிருநதது.

௪ அபபோது காததூராகிய கோலி
யாததென்னுபேருள்ள ஒருமனுஷன பெ
லிஸ்தரினபாளயஙகளிலிருநது புறபபட்டு
நடுவேநிறபான. அவன உயர்த்தி ஆறுமு
ழமும ஒரு சாணுமானது.

௫ அவன தனதலையின மேலே பஞச
லோகமான தலைசசோட்டைப போட்டு
ச்சொறிசொறியான் ஒரு சீராவைத்தரித்
துககொணடிருநதான. அநதசசீராவின
நிறை ஐயாயிரஞசேககலான் பஞசலோ
கமாயிருநதது.

௬ அவன தனகால்களிலே பஞசலோ
கமான தொபபாரததையுந தனதோட்
களினமேலேபஞசலோகமானகேடையத
தையும போட்டுககொணடிருநதான.

௭ அவனுடையஈட்டித்தாஙகுநெய்கி
றவர்களின படைமரததினகனதிபம அவ
னஈட்டியின அலகு அறுநூறுசேககலா
ன இருமபுமாயிருநதது. பரிசைபபிடிககி
றவன அவனுககுமுனனாக நடபபான.

௮ அவன நினறுகொணடு, இஸ்ரவே
லுடைய இராணுவப பவுஞசுகளுககெதி
ராககூபபிட்டு அவர்களுககுச சொனன
தாவது, நீஙகள யுத்தத்திற்காயததமாக
புறபபட்டுவநது நிறகிறதென்ன? நான்
பெலிஸ்தனும நீஙகள சவுலினவேலைக
காரருமலலவோ? எனனணடைககிறஙகி
வரஉஙகளிலொருவனைததெரிநதெடுஙகள.

௯ அவன எனனோடே யுத்தமபணண
சமர்த்தனாயிருநது, எனனைமடஙகடித
தால, உஙகளுககு வேலைககாரராயிருப
போம. நான் அவனைமேறகொணடு அவ
னை மடஙகடித்தால நீஙகள எஙகளுககு
வேலைககாரராயிருநது எஙகளைச சேவிக
கவேணடுமென்று சொல்லி,

௰ பின்னையும நான இனறையததினம
இஸ்ரவேலுடைய இராணுவப பவுஞசுக
ளை நிநதித்தேன். நாம ஒனறுககொன்று
யுத்தமபணண ஒருவனையெனககுவிடுஙக
ளென்று அநதப் பெலிஸ்தன சொலலு
வான.

௧௧ சவுலும இஸ்ரவேலனைததும அந
தப பெலிஸ்தனுடைய வார்ததைகளைக
கேட்கிறபோது மிகவுங கலஙகிப்பயப்ப
ட்டார்கள.

௧௨ தாவீதோவென்றால யூதாவுககடுத
த பெத்லகேம ஊராகிய ஈசாயென்று
பேருள்ள எபிறாத்திய மனுஷனுடைய
குமாரனானவன். இவனுககு எட்டுககுமா
ரரிருநதார்கள. இநதமனுஷன் சவுலி
னநாட்களிலே மறறமனுஷருககுளளே
வயதுசென்றகிழவனாயிருநதான்.

௧௩ ஈசாயினுடைய மூன்று மூத்தகு
மாரர் சவுலின பிறகாலே யுத்தத்திற்கு
ப போயிருந தார்கள. யுத்தத்திற்குப
போயிருநத அவனுடைய மூனறுகுமார
ரில தலைசசனுககு எலியாபபென்றும,
இரணடாஙகுமாரனுககு அபினதாபபெ
னறும, மூன்றாஙகுமாரனுககுச்சமமாவெ
ன்றுமபேரிருநதது.

௧௪ தாவீதென்றவன எலலாரிலும இ
ளையவனாயிருநதான். மூத்தவர்களாகிய
அநதமூனறுபேரும சவுலின்பிறகாலே
போனறபோது,

௧௫ தாவீதுபெத்லகேமிலிருககிற தன
தகபபனுடைய ஆடுகளைமேயககுமபடிக
குச்சவுலைவிட்டுததிருமபிப போனான.

௧௬ அநதப பெலிஸ்தனோ வென்றால
காலைமாலையும அநதியாயும நாற்பது நா
ளாகசசேர்நதுவநது நினறு கொணடிரு
பபான.

௧௭ ஈசாயோவென்றால தனகுமாரனா
கிய தாவீதோடேசொன்னதாவது, உன
சகோதரருககாக இநத ஒரு மாககால்

றுத்தப்பயறையும் இந்தப்பத்து அப்பங்களையும் எடுத்து, ஓடி, பாளயத்திலிருக்கிற உன் சகோதரருக்குக் கொண்டுபோய்,

௰௮ இந்தப் பத்துச்சேஸ் கட்டிகளை ஆயிரத்துச்சேர்வைக்காரனுக்குக் கொடுத்து, உன் சகோதரர் சுகமாயிருக்கிறார்களோவென்று விசாரித்து, அவர்களுடைய அடையாளம் வாங்கிக்கொண்டுவாவென்றான்.

௰௯ அப்போது சவுலும் இவர்களும் இஸ்ரவேல் மனுஷரெல்லாரும் கர்வாலிய பள்ளத்தாக்கிலே பெலிஸ்தரோடு யுத்தம்பண்ணியிருந்தார்கள்.

௨௰ தாவீது அதிகாலமேயெழுந்திருந்து, ஆடுகளைக்காக்கிறவன் வசமாய்விட்டு ஈசாய் தனக்குக் கற்பித்தபடியேயெடுத்துக்கொண்டுபோய், இரதங்களிருக்கிற இடத்திலேவந்தான். இராணுவமோ வெளிப்படுஞ்சாக நிற்கப்புறப்பட்டு யுத்தத்துக்கென்று ஆர்ப்பரித்தார்கள்.

௨௧ இஸ்ரவேலரும்பெலிஸ்தரும் ஒன்றுக்கொன்று எதிராகப்பவுஞ்சுகளை நிறுத்தினார்கள்.

௨௨ அப்போதுதாவீது தான்சுமந்துவந்தவைகளையிறக்கி, இரஸ்துக்களைக்காக்கிறவன்வசமாகவைத்துவிட்டு, இராணுவத்தினிடத்தில் ஓடி, அங்கேவந்தபோது, சுகமாயிருக்கிறீர்களோவென்றுதன சகோதரரைக்கேட்டான்.

௨௩ அவன் இவர்களோடேபேசிக்கொண்டிருக்கையில், இதோ, காத்தூரானாகிய கோலியாத்தென்றுபேருள்ள அந்தப்பெலிஸ்தன்பெலிஸ்தரின் இராணுவங்களிலிருந்தெழும்பிவந்துநடுவேநின்று, அந்தவார்த்தைகளுக்குச்சரியாகப்பேசினான். அதைத்தாவீதுகேட்டான்.

௨௪ இஸ்ரவேல்மனுஷரெல்லாரும் அந்தமனுஷனைக்காணும்போதோவெனில அவனைவிலகியோடிமிகவும்பயப்படுவார்கள்.

௨௫ அந்நேரத்திலே இஸ்ரவேல்மனுஷர் சொன்னதாவது, எழும்பின அந்தமனுஷனைக்கண்டீர்களோ, ஏனென்றால் இஸ்ரவேலை நிந்திக்கவெழும்பிநிற்கிறான். எவன் அவனை மடங்கடிக்கிறானோ, அவனை இராசா மிகவும் ஐசுவரியமுள்ளவனாக்கி, அவனுக்குத்தம்முடைய குமாரத்தியைக்கொடுத்து, அவன் தகப்பன்வீட்டை இஸ்ரவேலிலே இஷ்டயாக்குவாரென்றார்கள்.

௨௬ அப்போது தாவீது தன்னண்டையிலே நிற்கிற மனுஷருடனே, இந்தப் பெலிஸ்தனைமடங்கடித்து நிந்தையை இஸ்ரவேலைவிட்டுவிலக்குகிறவனுக்கென்ன செய்யப்படும்? ஏனெனிற்சீவனுள்ளபராபரனுடைய இராணுவங்களை நிந்திக்கிறதற்குச்சுன்னத்தில்லாத இந்தப்பெலிஸ்தனவன் எம்மாத்திரமென்றான்.

௨௭ அப்போது சனம், அவனைமடங்கடிக்கிறவனுக்கு இன்னின்னபடி செய்யப்படுமென்று அந்தவார்த்தைக்குச்சரியாக அவனுக்குச்சொன்னார்கள்.

௨௮ அந்தமனுஷரோடே அவன் பேசிக்கொண்டிருக்கிறதை அவன் மூத்தசகோதரனாகிய எலியாப் கேட்டபோது, அவன் தாவீதின்பேரிலே கோபமாயெரிந்து, நீ இங்கேயிறங்கிவந்ததென்ன? வனாந்தரத்திலிருக்கிற அந்தக்கொஞ்ச ஆடுகளை நீ ஆர்வசமாய்விட்டாய்? யுத்தத்தைப்பார்க்க இறங்கிவந்தாயென்று, உன்னுடைய துணிகரத்தையும், உன் இருதயத்தினுடைய அகங்காரத்தையும், நானறிவேனென்றான்.

௨௯ அதற்குத்தாவீது, நான் இப்போதுசெய்ததென்ன? நான்வந்ததற்கு முகாந்தரமில்லையோவென்றுசொல்லி,

௩௰ அவனைவிட்டுவேறொருவனுக்குநேரே திரும்பிக்கொண்டு அந்தப்பிரகாரமாகச்சொன்னான் அப்போதுசனம்முந்தின சொல்லுக்குச்சரியாக அவனுக்குமறுமொழிகொடுத்தார்கள்.

௩௧ தாவீது சொன்னவார்த்தைகளையவர்கள்கேட்டபிறபாடு அதைச்சவுலுக்கு முன்பாக அறிவித்தார்கள். அப்போது அவனையழைப்பித்தான்.

௩௨ தாவீது சவுலுடனே, அவனிமித்தமாக ஒருவனுடைய இருதயமுந்திடனற்றுப்போக வேண்டாம். உமதடியான் போய், இந்தப்பெலிஸ்தனோடே யுத்தம்பண்ணுவானென்றான்.

௩௩ அப்போது சவுல தாவீதுடனே, நீ இந்தப்பெலிஸ்தனோடே யுத்தம்பண்ண அவனுக்கெதிராகப்போகக் கூடாது. ஏனென்றால நீ இளைஞன் அவனோ சிறுவயதிலேதுவக்கி நல்ல சேவகனாயிருக்கிறானென்றான்.

௩௪ அதற்குத்தாவீது சவுலோடேசொன்னதாவது, உமதடியான் என்தகப்பனுடைய ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கிறபோது, ஒருவிசை ஒருசிங்கமும் ஒருவிசை ஒருகரடியும்வந்து மந்தையிலிருக்கிற ஒரு ஆட்டை யெடுத்துக்கொண்டது.

௩௫ ஆனால் அதின்பிறகாலே நான்புறப்பட்டுப்போய், அதையடித்து, இதை

அதின் வாயக்குத் தப்புவித்தேன். அப்போது அது என்மேல் பாயுகிறபோது நான் அதின் தாடியைப் பிடித்துக்கொண்டு அதையடித்துக் கொன்றுபோட்டேன்.

௩௬ அந்தச் சிங்கத்தையும் அந்தக் கரடியையும் உமது அடியான் அடங்கடித்தான். சுன்னத்தில்லாத இந்தப் பெலிஸ்தனும் அவைகளிலொன்றைப்போலிருப்பான். ஏனென்றால் அவன் சீவனுள்ள பராபரனுடைய இராணுவங்களை நிந்தித்தானென்றான்.

௩௭ பின்னையும் தாவீது, என்னைச் சிங்கத்தினுடைய கைக்கும் கரடியினுடைய கைக்கும் தப்புவித்த கர்த்தரானவர் இந்தப் பெலிஸ்தனுடைய கைக்கும் என்னைத் தப்புவிப்பாரென்றான். அப்போது சவுல் தாவீதுடனே, போ. கர்த்தர் உன்னுடனே கூடவிருப்பாராகவென்று சொல்லி,

௩௮ சவுல் தாவீதுக்குத் தன் வஸ்திரங்களையுடுத்துவித்துப் பஞ்சலோகமான ஒரு தலைச்சோட்டை அவன் தலையின்மேற் போட்டு, ஒரு சீராவை அவனுக்குத் தரிப்பித்தான்.

௩௯ தாவீது அவன் பட்டயத்தைத் தன் வஸ்திரங்கள் மேற் கட்டிக்கொண்டு, நடக்கத் துவக்கினான். ஏனெனில் அதை அவன் பரிட்சை பார்த்திருந்ததில்லை. அப்போது தாவீது சவுலுடனே, நான் இதோடே போகக்கூடாது. ஏனென்றால் நான் இப்படி அப்பியாசம் பண்ணினதில்லையென்று சொல்லி, அவைகளைக் களைந்து போட்டு,

௪௦ தன் தடியைத் தன் கையிலே பிடித்து, ஆற்றிலிருக்கிற ஐந்து கூழாங்கல்லுக்களைத் தெரிந்தெடுத்து, அவைகளைத் தன் சகிருந்த மேய்ப்பரின் அடைப்பமான பையிலே போட்டுத் தன் கவண்டைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு, அந்தப் பெலிஸ்தனண்டை சேரப்போனான்.

௪௧ பெலிஸ்தனும் நடக்கவே நடந்து, தாவீதண்டைக்குக் கிட்டிவந்தான். அவன் பரிசையைப் பிடிக்கிறவன் அவனுக்கு முன்னே நடந்தான்.

௪௨ பெலிஸ்தனானவன் தாவீதைநோக்கிப் பார்த்து, அவன் இளைஞனுஞ் சிவந்திருப்பான் சிவந்தமேனியுமாயிருந்தபடியினாலே அவனை அசட்டைபண்ணி,

௪௩ தாவீதுடனே, நீ தடிகளோடே என்னண்டையிலே வர நான் நாயோவென்று சொல்லி, அந்தப் பெலிஸ்தன் தன்னுடைய தேவர்களைக்கொண்டு தாவீதைச் சபித்தான்.

௪௪ பின்னையும் அந்தப் பெலிஸ்தன் தாவீதுடனே, என்னண்டைக்கு வா. நான் உன் மாம்சத்தை ஆகாயத்துப் பறவைகளுக்கும் வெளியின் மிருகங்களுக்குங் கொடுப்பேனென்றான்.

௪௫ அதற்கு தாவீது பெலிஸ்தனோடே சொன்னதாவது, நீ பட்டயத்தோடும் ஈட்டியோடுங் கேடயத்தோடும் என்னண்டைக்கு வருகிறாய். நானோவென்றால் நீ நிந்தித்த இஸ்ரவேலுடைய இராணுவங்களின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தரின் நாமத்திலே உன்னண்டைக்கு வருகிறேன்.

௪௬ இன்றையத்தினங் கர்த்தர் உன்னை என் கையிலொப்புக்கொடுப்பதினாலே நானுன்னை மடங்கடித்து உன் தலையையுன்னைவிட்டு வாங்கிப் பெலிஸ்தருடைய பாளயத்தின் பிணங்களையின்றையத்தினம் ஆகாயத்துப் பறவைகளுக்கும் பூமியின் காட்டு மிருகங்களுக்குங் கொடுப்பேன். அப்படியே இஸ்ரவேலுக்குப் பராபரனுண்டென்று பூலோகத்தாரெல்லாரும் அறிந்து,

௪௭ கர்த்தர் பட்டயத்தினாலும் ஈட்டியினாலும் இரட்சிக்கிறதில்லையென்று இந்தச் சவையெல்லாம் அறிந்துகொள்ளும். ஏனென்றால் யுத்தமானது கர்த்தருடையது. அவர் உங்களை யெங்கள் கையிலொப்புக்கொடுப்பாரென்றான்.

௪௮ அப்போது சம்பவித்ததேதென்றால் அந்தப் பெலிஸ்தன் எழும்பித் தாவீதுக்கு எதிராகச் சேர்ந்து வருகிறபோது, தாவீது தீவிரமாய் அந்த இராணுவத்திற்கும் அந்தப் பெலிஸ்தனுக்கும் எதிராக ஓடி,

௪௯ தன் கையைப் பைக்குள்ளே போட்டு, அதிலே ஒரு கல்லையெடுத்துக் கவண்டிலே வைத்துச் சுழற்றிப் பெலிஸ்தனுடைய நெற்றியிலே பட்டப்போட்டான். அந்தக் கல்லு அவன் நெற்றிக்குள் உருவிப் போனதினாலே அவன் முகங்குப்புறத் தரையிலே விழுந்தான்.

௫௦ அப்படியே தாவீது ஒரு கவண்டினாலும் ஒரு கல்லினாலும் பெலிஸ்தன் மேலே பலங்கொண்டு, பெலிஸ்தனை மடங்கடித்து அவனைக் கொன்றுபோட்டான். ஆனாலே தாவீதின் கையிலே ஒரு பட்டயமுமில்லை.

௫௧ ஆகையால் தாவீது பெலிஸ்தனண்டையிலே ஓடிநின்று அவன் பட்டயத்தைப் பிடித்து, அதை அதின் உறையைவிட்டு உருவி அவனைக் கொன்று அதினாலே அவன் தலையை வெட்டிப்போட்டான். ...

போது தங்கள் பராக்கிரமசாலி செத்துப்போனானென்று பெலிஸ்தர் கண்டு ஓடிப்போனார்கள்.

௫௨ அப்போது இஸ்ரவேல் மனுஷரும் யூதா மனுஷரும் எழும்பி ஆர்ப்பரித்து, பள்ளத்தாக்கின் எல்லைமட்டுக்கும் எக்ரோனின் வாசல்களமட்டுக்கும் பெலிஸ்தரைத் துரத்தினார்கள். சாராயீமின் வழியிலுங் காத்பட்டணமட்டுக்கும் எக்ரோன் பட்டணமட்டுக்கும் பெலிஸ்தர் வெட்டுண்டு விழுந்தார்கள்.

௫௩ இஸ்ரவேல் புத்திரர் பெலிஸ்தரை யுக்கிரமமாய்த் துரத்தின பிற்பாடு அவர்கள் திரும்பிவந்து அவர்களுடைய பாளயங்களைக் கொள்ளையிட்டார்கள்.

௫௪ தாவீது பெலிஸ்தனுடைய தலையை எடுத்து அதை எருசலேமுக்குக் கொண்டுவந்தான். அவன் ஆயுதங்களையோ, தன் கூடாரத்திலே வைத்தான்.

௫௫ தாவீது பெலிஸ்தனுக்கெதிராகப் புறப்பட்டுப்போகிறதைச் சவுல் கண்டபோது, அவன் அப்னேர் என்ற சேனாபதியோடே, அப்னேரே! இந்த வாலிபன் ஆருடைய குமாரனென்றான். அதற்கு அப்னேர், இராசாவே! நானறியேனென்று உம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றான்.

௫௬ அப்போது இராசா, அந்தப் பிள்ளையாண்டான் ஆருடைய குமாரனென்று நீ விசாரியென்றான்.

௫௭ ஆகையால் தாவீது பெலிஸ்தனை மடங்கடித்துத் திரும்பினபோது, அப்னேர் அவனையழைத்துச் சவுலுக்கு முன்பாகக் கொண்டுவந்துவிட்டான். பெலிஸ்தனுடைய தலையவன் கையிலுமிருந்தது.

௫௮ அப்போது சவுல், வாலிபனே! நீ ஆருடைய குமாரனென்று அவனைக் கேட்டதற்குத் தாவீது, உமதடியானாகிய பெத்லெகேமூரானாயிருக்கிற ஈசாயின் குமாரன் நானென்றான்.

## ௰அ. அதிகாரம்.

தாவீது யோனத்தானுடைய பிராணசிநேகத்திற்குள்ளாகிச் சனத்தினாலே மிகவும் புகழப்பட்டது.

அவன் சவுலோடே பேசித்தீர்ந்த பிற்பாடோவென்றால், யோனத்தானுடைய ஆத்துமந் தாவீதின் ஆத்துமத்தோடே ஒன்றாயிணைக்கப்பட்டது. யோனத்தான் அவனைத் தன்னுடைய ஆத்துமத்தைப் போலச் சிநேகித்தான்.

௨ சவுல் அவனையவன் தகப்பன்வீட்டுக்குத் திரும்பிப்போக வொட்டாமல் அந்நாளிலே தன்னிடத்தில் வைத்துக்கொண்டான்.

௩ யோனத்தான் தாவீதைத் தன் ஆத்துமத்தைப்போலச் சிநேகிக்கிறதினாலே அவனும் இவனும் உடம்படிக்கைபண்ணிக்கொண்டு,

௪ யோனத்தான் போர்த்துக்கொண்டிருந்த சால்வையைக் கழற்றி, அதையுந் தன் வஸ்திரத்தையுந் தன் பட்டயத்தையுந் தன் வில்லையுந் தன் கச்சையுங்கூடத் தாவீதுக்குக் கொடுத்தான்.

௫ சவுல் தாவீதையனுப்பும் எவ்விடத்திற்காகிலும் அவன் புறப்பட்டுப் புத்தியாய்க் காரியத்தை நடப்பிக்கிறபடியாற் சவுல் அவனை யுத்தமனுஷர்மேலில் அதிகாரியாக்கினான். அவன் எல்லாச்சனத்தின் கண்களுக்குஞ் சவுலுடைய ஊழியக்காரரின் கண்களுக்குங் கூடப்பிரியமாயிருந்தான்.

௬ ஆனால் தாவீது பெலிஸ்தனை மடங்கடித்துத் திரும்பினதாலுஞ் சனங்கள் திரும்பவந்ததாலும் பிற்பாடு சம்பவித்ததென்னவெனில், ஸ்திரிகள் இஸ்ரவேலின் சகலபட்டணங்களிலுமிருந்து பாடிக்கொண்டாடிப் புறப்பட்டு மேளங்களோடுங் களிப்போடும் வீணைகளோடும் இராசாவாகிய சவுலுக்கெதிர்க்கொண்டுவந்தார்கள்.

௭ அந்த ஸ்திரிகள் ஒன்றுக்கொன்று பாடி வீணைவாசித்துச் சவுல் ஆயிரம்பேரையுந் தாவீது பதினாயிரம்பேரையும் மடங்கடித்தார்களென்றார்கள்.

௮ அந்தவார்த்தை சவுலின் பார்வைக்கு ஆகாததாய்க் கண்டு, அவன் மிகவும் எரிந்துகொண்டு, தாவீதுக்குப் பதினாயிரம்பேரைக் கொடுத்து, எனக்கு ஆயிரம்பேரைக் கொடுத்தார்கள். இன்னம் இராசாங்கந்தானும் அவனுடையதாகுமென்று சொல்லி,

௯ அந்நாள்முதற்கொண்டு சவுல் தாவீதைக் காமகாரமாய்ப் பார்த்தான்.

௰ மறுநாளிலே பராபரனால் விடப்பட்ட பொல்லாத ஆவி சவுல்மேலிறங்கிற்று. அவன் வீட்டின் நடுவே தீர்க்கதரிசனஞ் சொல்லியிருந்தான். அப்போது தாவீது சாதினஞ்செய்கிறபடித் தன்கையினாலே சுரமண்டலத்தைக் கொட்டிக் கொண்டிருந்தான். ஆனாற் சவுலுவின் கையிலே ஈட்டியிருந்தது.

௰௧ அப்போது சவுல் தாவீதைச் சுவரோடே உருவக் குத்திப்போடுவேனென்று ஈட்டியை யவன்மேலெறிந்தான். ஆனால் தாவீது இரண்டுதரஞ் சுழன்று அவனுக்கு விலகிப்போனான்.

௰௨ ஆகையாற் கர்த்தர் தாவீதோடே கூடவிருக்கிறாரென்றுந் தன்னைவிட்டுவிலகினாரென்றுஞ் சவுல் தாவீதுக்குப் பயந்திருந்து,

௰௩ அவனைத் தன்னைவிட்டப்புறப்படுத்தி, அவனை ஆயிரம்பேருக்குத் தலைவனாக வைத்துக்கொண்டான். அப்படியே அவன் சனத்திற்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருந்தான.

௰௪ ஆனால் தாவீது தன் வழிகளிலெல்லாம் புத்திமானாய் நடந்தான். ஏனென்றாற் கர்த்தர் அவனோடே கூடவிருந்தார்.

௰௫ அவன் மகா புத்திமானாய் நடக்கிறதைச் சவுல் கண்டு, அவனுக்கு ஐயமாயிருந்தான.

௰௬ இஸ்ரவேல்சனமும் யூதசனமும் எல்லாந் தாவீதைச் சிநேகித்தார்கள். ஏனெனில் அவர்களுக்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருந்தான.

தாவீதின விவாகம்.

௰௭ சவுல் தாவீதோடே இதோ, என் மூத்தகுமாரத்தியாகிய மேரோபையுனக்கு ஸ்திரீயாகக் கொடுப்பேன. நீ யெனக்கு நல்ல சேவகனாய் மாத்திரமிருந்து கர்த்தருடைய யுத்தங்களை நடத்துவென்றான. ஏனென்றால் என்கையல்ல பெலிஸ்தரின கை யவனுக்கு விரோதமாயிருப்பதாகவென்று சவுல் நினைத்துக்கொண்டான.

௰௮ அப்போது தாவீது சவுலுடனே நான இராசாவுக்கு மருமகனாகிறதற்கு நான் எம்மாத்திரம்? என் சீவனும இஸ்ரவேலில என் தகப்பன வம்சமும் எம்மாத்திரமென்றான.

௰௯ சவுலின குமாரத்தியாகிய மேரோப் தாவீதுக்குக் கொடுக்கப்படுங் காலம் வந்தபோதோவெனில, அவள் மேகோலாத்தியனாகிய ஆதரியேலுக்கு ஸ்திரியாகக் கொடுக்கப்பட்டாள்.

௨௰ ஆனாற் சவுலின குமாரத்தியாகிய மீகாள தாவீதைச் சிநேகித்தாள். அது சவுலுக்கறிவிக்கப்பட்டபோது அது அவனுக்கு நலலதாய்க்கண்டது.

௨௧ அவள அவனுக்குக் கண்ணியாயிருக்கவும பெலிஸ்தரின கை யவன்மேல் வாரத்தக்கதாகவும அவளை யவனுக்குக் கொடுப்பேனென்று சவுல் நினைத்துத் தாவீதுடனே, நீ யென்னுடைய இரண்டாங் குமாரத்தியினால் இன்றெனக்கு மருமகனாகுவென்றான.

௨௨ பிற்பாடு சவுல் தன் ஊழியக்காரருக்கு நீங்கள தாவீதோடே இரகசியமாய்ப் பேசி, இதோ, இராசா உன மேலே பிரியமாயிருக்கிறார். அவருடைய எல்லா ஊழியக்காரரும உம்மைச் சிநேகிக்கிறார்கள். இப்போதும நீர் இராசாவுக்கு மருமகனாகுமென்று சொல்லுங்களென்று கற்பித்தான.

௨௩ சவுலின ஊழியக்காரர் இந்த வார்த்தைகளைத் தாவீதின செவிகளிற் பேசினார்கள. அப்போது தாவீது நான் இராசாவுக்கு மருமகனாகிறது உங்கள பார்வைக்குக் கொஞ்சக் காரியமோ? ஏனென்றால நான தரித்திரவானுங் கொஞ்ச எண்ணிக்கையான மனுஷனுமாயிருக்கிறேனென்றான.

௨௪ இன்னின்ன வார்த்தைகளைத் தாவீது சொன்னானென்று சவுலின ஊழியக்காரர் அவனுக்கறிவித்தார்கள.

௨௫ அப்போது சவுலென்கிறவன இராசாவானவர் பரிசமேயல்ல, இராசாவின சத்துருக்களுக்குச் சரிக்குச்சரிக்கட்டும்படிக்குப் பெலிஸ்தரின நூறு நுனித்தோல்களின்மேலே விருப்பமாயிருக்கிறார் என்று தாவீதுக்குச் சொல்லுங்களென்றான. ஏனென்றாற் சவுல் தாவீதைப் பெலிஸ்தரின் கையினால் விழப்பண்ண நினைத்தான.

௨௬ அவன ஊழியக்காரர் தாவீதுக்கு இந்த வார்த்தைகளை யறிவிக்கிறபோது, இராசாவுக்கு மருமகனாகிறது தாவீதுக்கு நலலதாய்க்கண்டது.

௨௭ அதற்குக் குறித்தநாள் நிறைவேறுகிறதற்கு முன்னே, தாவீது எழுந்து தன மனுஷரைக் கூட்டிக்கொண்டு போய்ப், பெலிஸ்தரில இருநூறுபேரை வெட்டி யவர்கள நுனித்தோல்களைக் கொண்டுவந்து, தான் இராசாவுக்கு மருமகனாகும்படிக்கு அவைகளை இராசாவுக்கு அந்த நிறைவாகச் செலுத்தினான. அப்போது சவுல் தன் குமாரத்தியாகிய மீகாளை யவனுக்கு ஸ்திரியாகக் கொடுத்தான.

௨௮ கர்த்தர் தாவீதோடிருக்கிறாரென்று சவுல் கண்டறிந்து கொண்டான. சவுலின குமாரத்தியாகிய மீகாளும அவனைச் சிநேகித்துக்கொண்டிருந்தாள.

௨௯ ஆகையாற் சவுல் பின்னையும அதிகமாய்த் தாவீதுக்குப் பயந்து தான உயிரோடிருந்த நாளெல்லாந் தாவீதுக்குச் சத்துருவாயிருந்தான.

௩௰ ஆனாலும் பெலிஸ்தருடைய பிரபுக்கள் புறப்படுகிறபோதெல்லாம் தாவீது சவுலினுடைய எல்லா ஊழியக்காரரைப்பார்க்கப் புத்தியாய்ச் செய்தான். அவன் பேர் மெத்தவுங் கனங்கொண்டது.

## ௰௯. அதிகாரம்.

*யோனத்தான் தாவீதுக்காகத் தன் தகப்பனை மனுக்கேட்டது.*

தாவீதைக் கொன்றுபோடும்படிக்குச் சவுல் தன் குமாரனாகிய யோனத்தானோடும் தன் எல்லா ஊழியக்காரரோடும் பேசினான். சவுலின் குமாரனாகிய யோனத்தானோவெனில் தாவீதின்மேல் மிகவும் பிரியமாயிருந்தான்.

௨ ஆகையால் யோனத்தான் தாவீதுக்கதையறிவித்து என் தகப்பனாகிய சவுல் உன்னைக் கொன்றுபோடவகைதேடுகிறார். இப்போதும் நாளைக்காலமே நீ எச்சரிக்கையாயிருந்து மறைவான இடத்தில் ஒளித்துக்கொண்டேயிரு.

௩ நானோவென்றாற் புறப்பட்டு வந்து, நீ வெளியிலிருக்கும் இடத்தில் என் தகப்பன்பக்கத்திலே நின்று, உனக்காக என் தகப்பனோடேபேசிநடக்குமவயனத்தைக் கண்டு உனக்கறிவிப்பேனென்றான்.

௪ அப்படியே யோனத்தான் தன் தகப்பனாகிய சவுலோடே, தாவீதுக்காக நன்மையாய்ப்பேசி அவரோடேசொன்னதாவது, இராசா தமதடியானாகிய தாவீதுக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்யாராக. ஏனெனில் உமக்குவிரோதமாக அவன் பாவஞ்செய்ததில்லை. அவன் செய்கைகள் உமக்குவெகு பிரயோசனமுமாயிருக்கின்றதே.

௫ அதேதென்றால் அவன் தன்பிராணனைத் தன்கையிலேவைத்து அந்தப் பெலிஸ்தனைமடங்கடித்ததினாலே கர்த்தர் இஸ்ரவேலுக்கெல்லாம் பெரிய இரட்சிப்பைக் கட்டளையிட்டதை நீர் கண்டுசந்தோஷப்பட்டீரோ? இப்போதும் முகாந்திரமில்லாமல் தாவீதைக் கொல்லுகிறதினாலே குற்றமில்லாத இரத்தத்திற்குவிரோதமாக நீர்பாவஞ்செய்வானேனென்றான்.

௬ அப்போது சவுல் யோனத்தானுடையசொற்கேட்டு, அவன் கொலைசெய்யப்படுவதில்லையென்றுகர்த்தருடையஜீவனைக்கொண்டு ஆணையிட்டான்.

௭ ஆனதுகொண்டு யோனத்தான் தாவீதையழைத்து அந்தவார்த்தைகளையெல்லாம் அவனுக்கறிவித்து, அவனைச்சவுலண்டையிலே கூட்டிக்கொண்டுவந்துவிட்டான். அப்படியே யவன் முன்போலே யவனுக்குமுன்பாகவிருந்தான்.

*சவுல் தாவீதைக்கொல்லப்பார்த்தபடியினாலேயிவன் சாமுவேலண்டைக்கு ஓடிப்போனது.*

௮ திரும்ப ஒரு யுத்தமுண்டாயிற்று. அப்போது தாவீது புறப்பட்டுப்போய்ப் பெலிஸ்தரோடே யுத்தம்பண்ணி, அவர்களைவெகுவாய் மடங்கடித்ததினாலேயவர்கள் அவனுக்கு முன்பாக முறிந்தோடிப்போனார்கள்.

௯ ஆனாற்கர்த்தரால்விடப்பட்டபொல்லாத ஆவி சவுலின்மேல்வந்தது. அவன்தன் வீட்டிலுட்கார்ந்து தன் ஈட்டியைத்தன்கையிலேபிடித்துக்கொண்டிருந்தான். தாவீது தன்கையினாலே சுரமண்டலங்கொட்டினான்.

௰ அப்போது சவுல் தாவீதையீட்டியினாலே சுவரோடே உருவக்குத்திப்போடப்பார்த்தான். ஆனால் இவன் சவுலுக்கு விலகினதினாலேயவன் எறிந்த ஈட்டி சுவரிலேபட்டது. தாவீதோவென்றால் ஓடிப்போய் அன்று இராத்திரித் தப்புவித்துக்கொண்டான்.

௰௧ ஆனால் தாவீதைக் காவற்பண்ணி, மறுநாட்காலமே அவனைக்கொன்றுபோடும்படிக்குச்சவுல் அவன் வீட்டிற்குச்சேவகரையனுப்பினான். இதைத்தாவீதுக்கு அவன் பெண்சாதியாகிய மீகாள் அறிவித்து, நீர் இன்று இராத்திரியில் உம்முடையபிராணனைத்தப்புவித்துக்கொள்ளாவிட்டால், நாளை நீர் கொன்றுபோடப்படுவீரென்றுசொல்லி,

௰௨ மீகாள் தாவீதைப்பலகணிவழியாயிறக்கி விட்டாள். அவன் தப்புவித்துக்கொண்டு ஓடிப்போனான்.

௰௩ மீகாளோவெனில் ஒருசிலையையெடுத்துக் கட்டிலின்மேல்வைத்து, அதின் தலைமாட்டிலே ஒருவெள்ளாட்டுத்தோலைப்போட்டுப்புடவையினாலேமூடிவைத்தாள்.

௰௪ தாவீதைக்கொண்டுவர் சவுல் சேவகரையனுப்பினபோது அவர்வியாதியாயிருக்கிறாரென்றாள்.

௰௫ அப்போது தாவீதைப் பார்க்கிறதற்குச்சவுல் சேவகரையனுப்பி, அவனைக் கொன்றுபோடும்படிக்குக் கட்டிலோடேகூட அவனை யென்னண்டைக்கு எடுத்துவாருங்களென்றான்.

௰௬ சேவகர் வந்தபோதோவெனில், இதோ, சிலை கட்டிலின்மேலும் வெள்ளா

டுத்தோல் அதின் தலைமாட்டின்மேலுங் கிடந்தது.

௰௭ அப்போது சவுல், நீ இப்படியென்னை யேய்த்து என் பகைஞனைத் தப்பவிட்டனுப்பினதென்னவென்று மீகாளைக் கேட்டான். அப்போது மீகாள் சவுலுக்கு, நான் உன்னைக் கொல்லாதபடிக்கு என்னை யனுப்பிவிடென்று அவன் என்னோடே சொன்னானென்றாள்.

௰௮ அப்படி தாவீது தப்பியோடிப்போய், ராமாவிலிருக்கிற சாமுவேலண்டைக்கு வந்து சவுல் தனக்குச் செய்ததெல்லாவற்றையும் அவனுக்கறிவித்தான். பிற்பாடு அவனுஞ் சாமுவேலும்போய் நாயோத்திலே தரித்திருந்தார்கள்.

௰௯ ஆனால் இதோ, தாவீது ராமாவுக்கடுத்த நாயோத்திலே யிருக்கிறானென்று சவுலுக்கறிவிக்கப்பட்டது.

௨௰ அப்போது சவுல் தாவீதைக் கொண்டுவரச் சேவகரை யனுப்பினான். அவர்கள் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் கூட்டத்தையுஞ் சாமுவேல் அவர்களின் தலைவனாக நிற்கிறதையுங் கண்டார்கள். அப்போது சவுலினுடைய சேவகரின்மேலே பராபரனுடைய ஆவி யிறங்கினதினால் இவர்களுந் தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள்.

௨௰௧ இது சவுலுக்கறிவிக்கப்பட்டபோது அவன் வேறே சேவகரை யனுப்பினான். அவர்களுந் தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள். மூன்றாந்தரமுஞ் சவுல் சேவகரை யனுப்பினான். அவர்களுந் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்.

௨௰௨ அப்போது அவன் தானும் ராமாவுக்குப்போய்ச் சேக்குவிலிருக்கிற பெரிய கிணற்றண்டையிலே வந்து, சாமுவேலுந் தாவீதும் எங்கே யிருக்கிறார்கள்? என்று கேட்டான். அதோ, ராமாவுக்கடுத்த நாயோத்திலே யிருக்கிறார்களென்று சொல்லப்பட்டது.

௨௰௩ அப்போது ராமாவுக்கடுத்த அந்த நாயோத்திற்குப் போனான். ஆனால் பராபரனுடைய ஆவி அவன்மேலும் இறங்கினதினாலே யவன் ராமாவுக்கடுத்த நாயோத்திலே சேருமட்டுந் தீர்க்கதரிசனஞ்சொல்லிக்கொண்டே நடந்துவந்து,

௨௰௪ தானுந் தன் வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டுத் தானுஞ் சாமுவேலுக்கு முன்பாகத் தீர்க்கதரிசனஞ்சொல்லி அன்று பகல்முழுதும் இராமுழுதும் வஸ்திரமில்லாமல் விழுந்து கிடந்தான். ஆகையினாலே சவுலுந் தீர்க்கதரிசிகளிலொருவனோவென்பார்கள்.

## ௨௰. அதிகாரம்.

யோனத்தான் தாவீதோடே பண்ணின உடன்படிக்கையைப் புதிதாக்கித் தாவீதுக்காக மிகவும் பிரயாசப்பட்டது.

தாவீதோவென்றால் ராமாவுக்கடுத்த நாயோத்திலிருந்து ஓடிப்போய், யோனத்தானுக்கு முன்பாக வந்து, உம்முடைய தகப்பன் என் பிராணனை வாங்கத் தேடுகிறதற்கு நான் செய்ததென்ன? என் அக்கிரமமென்ன? அவருக்கு முன்பாக என்னுடைய பாவமென்னவென்றான்.

௨ அவன் இவனுடனே, அப்படியொருக்காலுமவராது நீர் சாவதில்லை. இதோ, என் செவிகளுக்கு வெளிப்படுத்தாமல் என் தகப்பன் பெரிய காரியமானாலுஞ் சின்னக்காரியமென்கிலுஞ் செய்கிறதில்லை. இந்தக்காரியத்தை யென் தகப்பன் எனக்கு ஒளிப்பானேன்? அது இல்லையென்றான்.

௩ அப்போது தாவீது உம்முடைய கண்களில் எனக்குத் தயவு கிடைத்ததென்று உம்முடைய தகப்பன் நன்றாயறிவார். ஆகையால் யோனத்தானுக்கு மனநோவுண்டாகாதபடிக்கு அவன் இதை யறியப்போகாதென்பார். ஆனால் மெய்யாகவே யெனக்கும் மரணத்திற்கும் ஒரு அடி தூரமாத்திரமிருக்கின்றதென்று கர்த்தருடைய சீவனையும் உம்முடைய சீவனையுங் கொண்டு சொல்லுகிறேனென்று, மறுமொழியாகச் சொல்லி ஆணையிட்டான்.

௪ அப்போது யோனத்தான் தாவீதுடனே, உன் ஆத்துமம் எப்படிக் கேட்கின்றதோ? அப்படியுனக்குச் செய்வேனென்றான்.

௫ தாவீது யோனத்தானோடே சொன்னதாவது, இதோ நாளைக்கு அமாவாசையானபடியினாலே நான் இராசாவோடே சாப்பிடப்பந்தியிருக்கவேண்டியதாயிருக்கும். ஆனால் நான் மூன்றாம் நாட்சாயங்காலமட்டும் வெளியிலே யொளித்திருக்க என்னைப்போகவிடும்.

௬ நான் எங்கே யென்று உம்முடைய தகப்பன் கேட்டால், தன்னூராகிய பெத்லகேமிலே வருஷந்தோறும் பலியிடுகிற நாள் வம்சத்திற்கெல்லாமிருக்கிறபடியினாலே தாவீது அவ்விடத்திற்கோட என்னையுத்தரவு கேட்கவே கேட்டானென்று நீர் சொல்லும்.

௭ அதற்கவர் நல்லதென்றால் உமதடியானுக்குச் சமாதானமிருக்கும் அவர்

கோபமாயெரிந்தாரேயானால் அவராலே பொல்லாப்புத் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றதென்று அதினால் அறிந்துகொள்வீர்.

அ ஆகையால் உமதடியானுக்குத் தயவுசெய்வீராக. ஏனெனில் கர்த்தருக்குமுன்பாக உமதடியானை உம்மோடே உடன்படிக்கைக்குள்ளாக்கிக்கொண்டீர். ஏனெனில் ஒரு அக்கிரமமிருந்ததேயானால் நீரே என்னைக் கொன்றுபோடும். நீர் என்னை உம்முடைய தகப்பனண்டைக்குக் கொண்டுபோவதென்னவென்றான்.

கூ அப்போது யோனத்தான், அப்படி உனக்கு வராதிருப்பதாக. பொல்லாப்பு உன்மேல் வரப்பண்ண என் தகப்பனாலே தீர்மானிக்கப்பட்டதென்று நானறிந்தேனே யாகில், நானதை உனக்கறிவிக்காதிருப்பேனோவென்றான்.

ய தாவீது யோனத்தானுடனே, உம்முடைய தகப்பன் உமக்குக் கடினமான பிரத்தியுத்தரஞ் சொன்னாரோவென்கிறதை எனக்கறிவிப்பவனார் என்றான்.

யக அப்போது யோனத்தான் தாவீதுடனே, வா நாம் வெளியே போவோம் வாவென்றான். இருவரும் வெளியே புறப்பட்டுப்போனார்கள்.

யஉ அப்போது யோனத்தான் தாவீதோடே சொன்னதாவது, நான் நாளைத் தினமாவது மூன்றாந் தினமாவது என் தகப்பனை ஆராய்ந்துகொண்டு, இதோ, தாவீதின்மேலே தயவாயிருக்கிறதென்று கண்டும், அதை அப்போது உன் செவிகளுக்கு வெளிப்படுத்தும்படிக்கு உனக்குச் சொல்லியனுப்பாதிருந்தால்,

யங இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் யோனத்தானுக்கு இப்படியும் அப்படியுஞ் செய்யக்கடவர். ஆனால் உனக்குத் தீங்குசெய்ய என் தகப்பனுக்கு நன்றாய்க் கண்டால் அதையுன் செவிகளுக்கு வெளிப்படுத்தி, நீ சமாதானத்தோடே போகும்படிக்கு உன்னைப் போகவிடுவேன். கர்த்தர் என் தகப்பனோடிருந்ததுபோல உன்னோடேயிருப்பாராக.

யச அப்போது நானின்னமுயிரோடிருந்தால் நான் சாகாதபடிக்கு நீ கர்த்தரினிமித்தமாய் எனக்குத் தயவுசெய்யாவிட்டாற் கர்த்தர் உனக்கும் அப்படிச் செய்யக்கடவர்.

யரு கர்த்தர் தாவீதின் சத்துருக்களாகிய அவரவரைப் பூமியின்மேல் வாராதபடிக்கு வேரறுக்கும்போதும், நீ என்றைக்கும் உன் தயவை என் வீட்டை விட்டு அகற்றிப்போடாயாகவென்றான்.

யசு இப்படி யோனத்தான் தாவீதின் வீட்டோடே உடன்படிக்கை பண்ணித் தாவீதுடைய சத்துருக்களின் கையிலே கர்த்தர் கணக்குக் கேட்பாராகவென்று சொல்லி,

யஎ யோனத்தான் தாவீதை மிகவுஞ் சிநேகித்தபடியினாலே பின்னையும் அவனுக்கு ஆணையிட்டான். ஏனெனில் தன் ஆத்துமத்தைச் சிநேகித்ததுபோல அவனைச் சிநேகித்தான்.

யஅ பிற்பாடு யோனத்தான் அவனுக்குச் சொன்னதாவது, நாளை அமாவாசை யானபடியினாலே நீ யுனக்கா வேண்டியவிடத்திலே நீ யில்லையென்று காணப்படுவாயே.

யகூ மூன்றுநாளிலே நீ தீவிரமாய்ப் பண்ணி, இந்தக் காரியம் நடந்த நாளிலே நீ யொளித்திருந்த ஸ்தலத்திற் கிறங்கிவந்து, ஏசேலென்கிற கல்லண்டையிலிருக்கக்கடவாய்.

உய அப்போது நான் குறிப்பார்த்தெய்கிறதுபோலே அதற்குப் பக்கமாக மூன்று அம்புகளையெய்து,

உக இதோ, நீ போய் அந்த அம்புகளைத் தேடிவாவென்று பிள்ளையாண்டானை யனுப்புவேன். இதோ அம்புகளுனக்கிப்பாலே கிடக்கின்றது அவைகளையெடுத்துவாவென்று பிள்ளையாண்டானோடே நான் சொல்லவேசென்னால், நீ வா. ஏனெனில் அப்போது ஒன்றுமில்லாமல் உனக்குச் சமாதானமாயிருக்குமென்று கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.

உஉ இதோ, அம்புகள் உனக்கு அப்பாலே கிடக்கின்றதென்று நான் பிள்ளையாண்டானோடே சொன்னேனேயாகில், நீ போய்விடுவாயாக. ஏனெனில் அப்போது கர்த்தருன்னைப் போகச்சொல்லுகிறார்.

உங ஆனால் நாலும் நீயும் பேசிக்கொண்ட காரியத்திற்கு இதோ, கர்த்தர் எனக்கும் உனக்கும் என்றைக்குஞ் சாட்சியானவரென்றான்.

உச அப்படியே தாவீது வெளியிலே யொளித்துக்கொண்டிருந்தான். அமாவாசையானபோது இராசா அசனம்பண்ண உட்கார்ந்தான்.

உரு இராசா சுவரண்டையிலிருக்கிற தன்னுடைய ஸ்தலத்தில் எப்போதும் போலே உட்கார்ந்தபோது, யோனத்தான் எழுந்திருந்தான். அப்னேரோவெனில் சவுலுடைய பக்கத்திலுட்கார்ந்தான். தாவீதிருக்குமிடம் வெறுமையாயிருந்தது.

௨௬ ஆனால் அவன் சுத்தமாயிராதபடிக்கு அவனுக்கேதாகிலுஞ் சம்பவித்தது, சுத்தமில்லாதிருக்கிறானென்று அன்றையத்தினஞ் சவுல் ஒன்றுஞ்சொல்லவில்லை.

௨௭ அமாவாசைக்கு மறுநாளிலுந் தாவீதிருக்குமிடம் வெறுமையாயிருந்தது. அப்போது சவுல், ஈசாயின் மகன் நேற்றும் இன்றுஞ் சாப்பாட்டுக்கு வராதே போனதென்னவென்று தன் குமாரனாகிய யோனத்தானைக் கேட்டான்.

௨௮ யோனத்தான் சவுலுக்குப் பிரதியுத்தாரமாகப் பெத்லகேமட்டும் போகத் தாவீது என்னை உத்தரவு கேட்கவே கேட்டு,

௨௯ அங்கே நான் போகட்டுமே, ஏனென்றால் எங்கள் வம்சத்திற்குப் பட்டணத்திலே பலியிடுதலிருக்கின்றது. என்னை வரச்சொல்லி, என் சகோதரன் தானே எனக்குக் கற்பித்தான். இப்போதும் உம்முடைய கண்களில் எனக்குத் தயவு கிடைத்ததானால், நான் என் சகோதரரைப் பார்க்கிறதற்குத் தப்பிப் போகட்டுமேயென்றான். ஆகையினாலே அவன் இராசாவின் பந்திக்கு வராதே போனானென்று சொன்னான்.

௩௰ அப்போது சவுல் யோனத்தான் பேரிலே கோபமூண்டவனாகி அவனுக்குச் சொன்னதாவது, இரண்டகத்திலே மாறுபாடானவளின் மகனே! நீ உனக்கு வெட்கமாகவும் உன் தாயாரின் அவமானத்திற்கு வெட்கமாகவும் ஈசாயின் மகனைத் தெரிந்துகொண்டிருக்கிறதை நான் அறியேனோ?

௩௧ அதேனென்றால் ஈசாயின் மகன் பூமியின்மேல் உயிரோடிருக்கும் நாளெல்லாம் நீயானாலும் உன் இராச்சியபாரமானாலும் நிலைப்படுவதில்லை. இப்போதும் அவனையழைத்தனுப்பி என்னண்டைக்குக் கொண்டுவா. ஏனென்றால் அவன் மரணத்திற்குள்ளானவனென்றான்.

௩௨ யோனத்தான் தன் தகப்பனாகிய சவுலுக்குப் பிரதியுத்தாரங்கொடுத்து, அவனுடனே, அவன் என்னத்திற்காகக் கொலைசெய்யப்படவேண்டும். அவன் என்னசெய்தானென்றான்.

௩௩ அப்போது சவுல் அவனைக் குத்திப்போட ஈட்டியையவன்மேலெறிந்தான். ஆகையால் தாவீதைக் கொன்றுபோடத் தன் தகப்பனிடத்திலே தீர்மானமாயிறென்றதை யோனத்தானறிந்துகொண்டு.

௩௪ கோபதாபமாய்ப் பந்தியைவிட்டெழுந்திருந்துபோய் அமாவாசையின் மறுநாளாகிய அன்றையத்தினம் அன்னமுண்ணாதிருந்தான். ஏனென்றால் தன் தகப்பன் தாவீதை நிந்தித்துச் சொன்னது அவனுக்கு மனநோவாயிருந்தது.

௩௫ மறுநாட்காலமேயோவென்றால் யோனத்தான் தாவீதுக்குக் குறித்தநேரத்திலே ஒரு சின்னப்பிள்ளையாண்டானைக் கூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டுவந்து,

௩௬ நீ ஓடி, நான் எய்கிற அம்புகளைத் தேடென்று பிள்ளையாண்டானுக்குச் சொல்லி. அந்தப் பிள்ளையாண்டான் ஓடுகையில் அவனுக்கப்பாலே போகும் ஒரு அம்பை எய்தான்.

௩௭ யோனத்தான் எய்த அம்பிருக்குமிடமட்டும் பிள்ளையாண்டான் வந்தபோது, அம்பு உனக்கின்னம் முன்னாலே இல்லையோவென்று யோனத்தான் பிள்ளையாண்டானுக்குப் பிறகாலேயிருந்து கூப்பிட்டான்.

௩௮ நீ தரித்து நிற்காமல் தீவிரித்துப் பொட்டென்னப் போவென்றும் யோனத்தான் பிள்ளையாண்டானுக்குப் பிறகாலேயிருந்து கூப்பிட்டான். அப்படியே யோனத்தானின் பிள்ளையாண்டான் அம்புகளைப் பொறுக்கித் தன் எசமானண்டைக்குக் கொண்டுவந்தான்.

௩௯ அந்தப் பிள்ளையாண்டானொன்றும் அறியாதிருந்தான். யோனத்தானுந் தாவீதுமேயந்தக் காரியத்தையறிந்திருந்தார்கள்.

௪௰ அப்போது யோனத்தான் தன் ஆயுதங்களைத் தன்னுடைய பிள்ளையாண்டானுக்குக் கொடுத்து அவனுடனே, அவைகளைப் பட்டணத்திற்குள்ளே கொண்டுபோவென்றான்.

௪௧ பிள்ளையாண்டான்போனபிற்பாடு தாவீது தென்புறமான இடத்திலிருந்தெழுந்துவந்து, முகங்குப்புறத் தரையிலே விழுந்து, மூன்றுவிசை வணங்கிக்கொண்டான். அவர்களொருவரையொருவர் முத்தஞ்செய்து, ஒருவரையொருவர் பார்த்தழுதார்கள். தாவீது மிகுதியாயழுதான்.

௪௨ அப்போது யோனத்தான் தாவீதுடனே, நீ சமாதானத்தோடே போய்க். கர்த்தர் என்றைக்கும் எனக்கும் உனக்கும், என் வித்தாருக்கும், உன் வித்தாருக்கும், நடுவான சாட்சியென்று கர்த்தருடைய நாமத்தைக்கொண்டு நாம் இருவருஞ் சொல்லி ஆணையிட்டுக்கொண்டதை நினைத்துக்கொள்ளென்றான்.

௪௩ பிற்பாடு இவன் எழுந்து புறப்பட்டுப்போனான். யோனத்தானோவெனிற் பட்டணத்திலே பிரவேசித்தான்.

## ௨௧. அதிகாரம்.

*தாவீது அகிமெலேக்கின் கையிலே தேவ சமுகத்தப்பங்களை வாங்கிக்கொண்டு போனது.*

தாவீதோவென்றால் நோபிலிருக்கிற ஆசாரியனாகிய அகிமெலேக்கண்டைக்கு வந்தான். அகிமெலேக் நடுக்கத்தோடே தாவீதுக்கெதிர்கொண்டுபோய் ஒருவரும் உம்மோடேகூடவராமல் நீர் ஒண்டியாய் வருகிறதென்னவென்று அவனைக் கேட்டான்.

௨ தாவீது ஆசாரியனாகிய அகிமெலேக்குச் சொன்னது, இராசா எனக்கு ஒருகாரியத்தைக் கற்பித்து, நான் உன்னையனுப்பின காரியமும் உனக்குக் கற்பித்ததும் இன்னதென்று ஒருவரும் அறியாதிருக்க வேண்டுமென்று என்னோடே சொன்னார். இவ்விடத்திற்கு வர நான் வேலைக்காரருக்குக் குறித்திருக்கிறேன்.

௩ இப்போதும் உம்முடைய கையின் கீழிருக்கிறதென்ன? ஐந்து அப்பமானாலும் எம்மாத்திரம் அகப்படுகின்றதோ அம்மாத்திரமாகிலும் என்கையிலே கொடுமென்றான்.

௪ ஆசாரியன் தாவீதுக்குப் பிரத்தியுத்தாரமாகப் பரிசுத்த அப்பமிருக்கிறதேயொழிய பொது அப்பம் என்கையின் கீழில்லை. வேலைக்காரர் ஸ்திரீகளோடாகிலும் சேராதிருந்தாற் கொடுப்பேனென்றான்.

௫ தாவீது ஆசாரியனுக்குப் பிரத்தியுத்தாரமாக, நான் புறப்படுகிறதற்கு முன் நேற்றும் முந்தநாளும் ஸ்திரீகள் எங்களுக்கு விலகியிருந்தார்கள். வேலைக்காருடைய அசம்பிகளும் சுத்தமாயிருக்கின்றது. இந்தவழி பலவேலைக்கடுத்தவழியாயிருந்தாலும் அந்த அப்பம் அசம்பிகளில இன்றைக்குப் பரிசுத்தமாயிருக்குமென்றான்.

௬ அப்போது கர்த்தருக்கு முன்பாக இருந்து வாங்கப்பட்ட சமுகத்தப்பங்களைத்தவிர வேறே அப்பம் அங்கேயிராதபடியினாலே, ஆசாரியன் அவனுக்குப் பரிசுத்தமான அப்பத்தைக் கொடுத்தான். ஏனென்றால் அவைகள் வாங்கப்படுகிற நாளிலே அதற்குப் பதிலாகச் சூடான அப்பம் வைக்கப்படும்.

௭ ஆனால் சவுலுடைய வேலைக்காரரில் ஏதோமியனாகிய தோவேக்கென்றுபேருள்ள ஒருவன் அன்றையத்தினம் அங்கே கர்த்தருக்கு முன்பாக அடைக்கப்பட்டிருந்தான். அவன் சவுலுக்கிருக்கிற மேய்ப்பரில் மகாவல்லவனாயிருந்தான்.

௮ தாவீது அகிமெலேக்குடனே, இங்கே உம்முடைய கையின் கீழ் ஒரு ஈட்டியாகிலும் பட்டயமாகிலும் இல்லையோ? ஏனெனில் இராசாவின் காரியத்தின் அவசரத்தினாலே நான் என்பட்டயத்தையாகிலும் என் ஆயுதங்களையாகிலும் என்கையிலே பிடித்துவரவில்லையென்றான்.

௯ அதற்கு ஆசாரியன், இதோ, நீர் ஏலாவின் பள்ளத்தாக்கிலே மடங்கடித்த பெலிஸ்தனாகிய கோலியாத்தின் பட்டயம் ஆசாரியசால்வைக்குப் பின்னாலே ஒரு புடவையிலே சுருட்டி வைத்திருக்கின்றது. அதை நீர் வாங்க மனதானால் வாங்கும். ஏனென்றால் அதுவேயல்லாமல் வேறொன்றும் இங்கேயில்லையென்றான். அப்போது தாவீது அதைப்போல ஒன்றுமில்லை. அதையெனக்குத் தாருமென்றான்.

*தாவீது காத்தூரிலிருக்கிற இராசாவாகிய ஆகீஸ்வசமாய் ஓடிவந்தபோது அவனுக்கு வந்த இக்கட்டு.*

௰ பிறகு தாவீது எழுந்து அன்றையத்தினம் சவுலுக்குத் தப்பியோடி, காத்தின் இராசாவாகிய ஆகீஸ் அண்டைக்கு வந்தான்.

௰௧ ஆனால் ஆகீஸின் ஊழியக்காரர் அவனுடனே, இவன் தேசத்தின் இராசாவாகிய தாவீது அல்லவோ? சவுல் ஆயிரம்பேரையும் தாவீது பதினாயிரம்பேரையும் மடங்கடித்தார்களென்று இவனைக் குறித்தல்லவோ களிகூருதலோடே பாடினார்களென்றார்கள்.

௰௨ இந்தவார்த்தைகளைத் தாவீது தன் மனதிலே வைத்துக் காத்தின் இராசாவாகிய ஆகீசுக்கு முன்பாக மிகவும் பயப்பட்டு,

௰௩ அவர்கள் கண்களுக்கு முன்பாகத் தன் முகத்தோற்றத்தை வேறுபடுத்தி, அவர்கள் கையின் கீழிருந்து பித்தம் மேற்கொண்டவனைப் போலக் காண்பித்து, வாசலின் கதவுகளிலே கீறிக்கொண்டிருந்து, தன் வாயின் நுரையைத் தன் தாடியில் விழப்பண்ணினான்.

௰௪ அப்போது ஆகீஸ் தன் ஊழியக்காரருடனே, இதோ, இந்த மனுஷன் பயித்தியங்கொண்டவனென்று காண்கிறீர்கள். அவனை நீங்கள் என்னண்டைக்குக் கொண்டுவந்ததென்ன?

ணினபோது அவர்களோடே பண்ணின உடம்படிக்கை யிருக்கிற பெட்டிக்கு அதிலொரு ஸ்தானத்தை யுண்டாக்கினேனென்றான்.

௨௨ பிறபாடு சாலோமோன் கர்த்தருடைய பலிபீடத்திற்கு முன்னே இஸ்ரவேல் சபைக்கெல்லாம் எதிராக நின்றுகொண்டு, தன்கைகளை வானத்திற்கு நேராகவிரித்துச் சொன்னதாவது,

௨௩ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே! நீங்கள்முழு இருதயத்தாலும் உமக்கு முன்பாக நடக்கிற உம்முடைய ஊழியக்காருக்கு உடம்படிக்கையையும் கிருபையையும் காக்கிற தேவரீரைப்போலே உயர்பரமண்டலங்களிலுங் கீழே பூமியிலும் யாதொருதேவனுமில்லை.

௨௪ தேவரீர் என்தகப்பனாகிய தாவீதென்ற உமதூழியக்காரனுக்குச் சொன்னதையவனுக்குத் தவறாமல் நிறைவேற்றினீர். அதை உம்முடைய வாக்கினாலுஞ் சொன்னீர். இந்நாளிலிருக்கிறபடி உம்முடைய கர்த்தத்தினாலும் நிறைவேற்றினீர்.

௨௫ இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே! நீ நமக்குமுன்பாக நடந்ததுபோலே உன்னுடைய குமாரர் நமக்கு முன்பாக நடக்கும்படிக்குத் தங்கள்வழியைக் காத்தார்களேயானால் இஸ்ரவேலின் இராசாசனத்தின்மேல் உட்காரும்புருஷன் நமக்கு முன்பாக உனக்கில்லாதிருப்பதில்லையென்று தேவரீர் என்தகப்பனாகிய தாவீதென்ற உம்முடைய ஊழியக்காரனுக்குச்சொன்னதையவனுக்கு வர்ப்பண்ணியருளும்.

௨௬ இப்போதும் இஸ்ரவேலின் பராபரனே! தேவரீர் என்தகப்பனாகிய தாவீதென்ற உம்முடைய ஊழியக்காரனுக்குச்சொன்ன உம்முடையவார்த்தை மெய்ப்படுவதாக.

௨௭ ஆனால் மெய்தான். பராபரன் பூமியிலே வாசமாயிருப்பாரோ? இதோ, வானங்களும் வானங்களின் வானங்களும் உம்மைக்கொள்ளாதே. நான் கட்டின இந்தவீடு அதற்கு எம்மாத்திரம்?

௨௮ என்றாலும் என்பராபரனாகிய கர்த்தாவே! உமதடியான் இன்று உமக்கு முன்பாக விண்ணப்பம் பண்ணுகிற கூப்பிடுதலையும் வேண்டுதலையுங் கேட்க, உமதடியானுடைய வேண்டுதலையும் மன்றாட்டையும் நோக்கியருளும்.

௨௯ உமதடியான் இவ்விடத்திலே செய்யும் விண்ணப்பத்தைக் கேட்க, உம்முடையகண்கள் நம்முடைய நாம மிருக்குமென்று நீர் சொன்னஸ்தலமாகிய இந்தவீட்டின்மேல் இரவும்பகலுந் திறந்திருப்பதாக.

௩௰ உமதடியானும் இந்த ஸ்தலத்திலே விண்ணப்பம்பண்ணப்போகிற உம்முடைய சனமாகிய இஸ்ரவேலும் பண்ணும் ஜெபத்தைக்கேட்பீராக. ஆம், நீர் பரமண்டலங்களாகிய உம்முடைய வாசஸ்தலத்திலேயதைக்கேளுங், கேட்டுமன்னியும்.

௩௧ ஒருவன் தனக்கடுத்தவனுக்குக் குற்றஞ்செய்திருக்க, கொள்ள இவன் அவனை யாணையிட்டுச் சத்தியம்பண்ணச்சொல்லும்போது, அந்த ஆணையிந்த வீட்டிலேயும் உம்முடைய பலிபீடத்திற்கு முன்வந்தால்,

௩௨ அப்போது பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர்கேட்டு ஆகாதவனுடைய வழியையவன் தலையின்மேற் சுமர்ப்பண்ண அவனை நேர்ஸ்தரோகதிக்கவும், நீதிமானுக்கு அவனுடைய நீதிக்குத்தக்கதாயச்செய்ய அவனை நீதி விளங்கப்பண்ணவும் நடப்பித்து உம்முடைய ஊழியக்காரை நியாயந்தீர்ப்பீராக.

௩௩ உம்முடைய சனமாகிய இஸ்ரவேல் உமக்குவிரோதமாய்ப்பாவஞ்செய்ததினாலே சத்துருவுக்கு முன்பாக முறிந்துபோய், உம்மண்டைக்குத் திரும்பி யும்முடைய நாமத்தை மகிமைப்படுத்தி, இந்தவீட்டிலேயும்மை நோக்கி விண்ணப்பத்தையும் வேண்டுதலையுஞ்செய்தால்,

௩௪ பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர்கேட்டு உம்முடைய சனமாகிய இஸ்ரவேலின் பாவத்தை மன்னித்து, அவர்கள் பிதாக்களுக்கு நீர்கொடுத்த சீமைக்கு அவர்களைத் திரும்பவரப்பண்ணுவீராக.

௩௫ அவர்கள் உமக்குப்பாவஞ்செய்ததினாலே வானம் அடைபட்டுமழைபெய்யாதிருக்கும்போது, அவர்கள் இந்த ஸ்தலத்திலே விண்ணப்பம் பண்ணி, உம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தித் தேவரீர் தங்களைக்கலங்கப்படுத்துகையால் தங்கள்பாவங்களை விட்டுத்திரும்பினால்,

௩௬ பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர்கேட்டு, உமதடியாரும் உமது சனமாகிய இஸ்ரவேலுஞ் செய்த பாவத்தை மன்னித்து, அவர்கள்நடக்கவேண்டிய நல்வழியையவர்களுக்குப்போதித்துத் தேவரீர் உம்முடைய சனத்திற்குச் சுதந்தரமாகக் கொடுத்த உமது தேசத்திற்கு மழையைக்கட்டளையிடுவீராக.

௩௭ தேசத்திலே பஞ்சமுண்டாகிறபோது, பெருவாரிக்காய்ச்சலுண்டாகிறபோது, வறட்சி, சாவி, வெட்டுக்கிளி, பச்சை

கிளியுண்டாகிறபோது, அவர்கள் சத்துருதேசத்திலிருக்கிற அவர்கள் வாசல்களில் அவர்களை முற்றிக்கைபோடுகிறபோது, எந்த வாதையும் எந்த வியாதியும் வந்திருக்கிறபோது,

௩௮ உம்முடைய சனமாகிய இஸ்ரவேலில் எந்த மனுஷனாகிலும் தன் தன் இருதயத்தின் கஸ்தியை உணர்ந்து இந்த வீட்டுக்கு நேராகத் தன் கைகளை விரித்துச் செய்யும் சகல விண்ணப்பத்தையும் சகல வேண்டுதலையும்,

௩௯ உம்முடைய வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் கேட்டு மன்னித்து,

௪௰ தேவரீர் எங்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தேசத்தில் அவர்கள் உயிரோடிருக்கும் நாளெல்லாம் உமக்குப் பயப்படும்படிக்குத் தேவரீர் அவனவன் இருதயத்தை அறிந்திருக்கிறபடியே அவனவனுடைய எல்லா வழிகளுக்கும் தக்கதாய் அவனவனுக்குச் செய்து பட்டளையிடுவீராக. ஏனென்றால் தேவரீர் ஒருவர் எல்லா மனுஷபுத்திரரின் இருதயத்தையும் அறிந்தவர்.

௪௧ உம்முடைய சனமாகிய இஸ்ரவேல் சாதியல்லாத அந்நியதேசத்தார் உம்முடைய பெரிய கீர்த்தியையும் உம்முடைய பலத்த கரத்தையும் நீட்டியிருக்கிற உம்முடைய புயத்தையுங் கேள்விப்படுவார்களே,

௪௨ அப்படிக்கொத்த அந்நியசாதியானும் உம்முடைய நாமத்தினிமித்தம் தூரதேசத்திலிருந்து வந்து இந்த வீட்டுக்கு முன்பாக விண்ணப்பம் பண்ணினால்,

௪௩ உமது வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் அதைக் கேட்டுப் பூமியின் சனங்களெல்லாம் உமது சனமாகிய இஸ்ரவேலைப்போல உமக்குப் பயப்படும்படிக்கும், நான் கட்டின இந்த வீட்டுக்கு உம்முடைய நாமந் தரிக்கப்பட்டதென்று அறியும்படிக்கும், உம்முடைய நாமத்தை அறியத்தக்கதாக, அந்த அந்நியசாதியான் உம்மை நோக்கிக் கூப்பிடும் எல்லாக் காரியத்திற்குந் தக்கதாய்த் தேவரீர் செய்வீராக.

௪௪ உம்முடைய சனம் தங்கள் சத்துருக்களை எதிர்த்து யுத்தம்பண்ணப் புறப்பட்டு, நீர் தெரிந்துகொண்ட இந்தப் பட்டணத்திற்கும் உம்முடைய நாமத்திற்கு நான் கட்டின இந்த வீட்டுக்கும் நேராகக் கர்த்தரை நோக்கி, விண்ணப்பம்பண்ணும்போது,

௪௫ பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தையும் வேண்டுதலையுங் கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரிப்பீராக.

௪௬ பாவஞ்செய்யாத மனுஷனில்லாமலிருக்கிறபடியினாலே அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து தேவரீர் அவர்கள்மேற் கோபமாகி, அவர்கள் சத்துருக்களுக்கு அவர்களைத் தூரத்திலும் அல்லது சமீபத்திலுமிருக்கிற தங்கள் தேசத்திற்கு அவர்களைச் சிறைபிடித்துக்கொண்டு போகிறதற்கு ஒப்புக்கொடுக்கையில்,

௪௭ அவர்கள் சிறைப்பட்டுப் போயிருக்கிற தேசத்திலே தங்கள் இருதயங்களில் அதை உணர்ந்து மனந்திரும்பி, நாங்கள் பாவஞ்செய்து அக்கிரமம்பண்ணித் துன்மார்க்கமாய் நடந்தோமென்று தங்களைச் சிறையிருப்பான தேசத்திலேயும் உம்மை நோக்கி வேண்டுதல் பண்ணி,

௪௮ தங்களைச் சிறைபிடித்துக்கொண்டு போன தங்கள் சத்துருக்களின் தேசத்திலே தங்கள் முழு இருதயத்தோடும் தங்கள் முழு ஆத்துமத்தோடும் உம்மண்டைக்குத் திரும்பித் தேவரீர் தங்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தங்கள் தேசத்திற்கும் தேவரீர் தெரிந்துகொண்ட இந்தப் பட்டணத்திற்கும் உம்முடைய நாமத்திற்கும் நான் கட்டின இந்த வீட்டிற்கும் நேராக உம்மை நோக்கி விண்ணப்பம்பண்ணும்போது,

௪௯ உமது வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தையும் வேண்டுதலையுங் கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரித்து,

௫௰ உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்த உமது சனத்திற்கு அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பண்ணின அவர்கள் துரோகங்களையெல்லாம் மன்னித்து, அவர்களைச் சிறைபிடித்திருக்கிறவர்கள் அவர்களுக்கு இரங்கத்தக்கதான இரக்கத்தை அவர்களுக்கு இவர்கள் முன்பாகக் கிடைக்கப்பண்ணுவீராக.

௫௧ ஏனெனில் அவர்கள் தேவரீர் எகிப்தென்ற இருப்புக் காளவாயின் நடுவிலிருந்து புறப்படப்பண்ணின உம்முடைய சனமும் உம்முடைய சுதந்தரமும் அவர்கள்தாமே.

௫௨ அவர்கள் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறதிலெல்லாம், தேவரீர் அவர்களைக் கேட்க, உம்முடைய கண்கள் உமதடியானின் வேண்டுதலுக்கும் உமது சனமாகிய

இஸ்ரவேலின் வேண்டுதலுக்குந் திறந்திருப்பதாக.

௫௩ ஏனெனிற் கர்த்தராகிய ஆண்டவரே! நீர் எங்கள் பிதாக்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணுகையில் உம்முடைய தாசனாகிய மோசேயைக்கொண்டு சொன்னபடியே தேவரீர் பூமியின் சகல சனசதனங்களிலும் அவர்களையுமக்குச் சுதந்தரமாகப் பிரித்தெடுத்தீரேயென்றான்.

௫௪ சாலோமோன் கர்த்தரை நோக்கி இந்தச் செபத்தையும் வேண்டுதலையுமெல்லாம் விண்ணப்பம்பண்ணித் தீர்த்தபிறபாடோவென்றால் அவன் கர்த்தருடைய பலிபீடத்திற்கு முன்பாகத் தன் முழங்கால்படியிடுகிறதையுந் தன் கைகளை வானத்திற்கு நேராக விரித்திருக்கிறதையும் விட்டெழுந்திருந்து,

௫௫ நின்றுகொண்டு, இஸ்ரவேல் சபையையெல்லாம் ஆசீர்வதித்து உரத்த சத்தத்தோடே சொன்னதாவது,

௫௬ தான் சொன்னபடியெல்லாந் தம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்கு இளைப்பாறுதலைக் கட்டளையிட்ட கர்த்தர் இஸ்தோத்திரிக்கப்பட்டவர். அவர் தம்முடைய தாசனாகிய மோசேயைக்கொண்டு சொன்ன அவருடைய நல்வார்த்தைகளிலெல்லாம் ஒருவார்த்தையாகிலும் விழுந்துபோனதில்லை.

௫௭ நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நம்மைக் கைவிடாமலும் நம்மைக் கைநெகிழாமலும், அவர் நம்முடைய பிதாக்களோடிருந்ததுபோல நம்மோடுமிருந்து,

௫௮ நாம் அவருடைய வழிகளிலெல்லாம் நடக்கிறதற்கும், அவர் நம்முடைய பிதாக்களுக்குக் கற்பித்த அவருடைய கற்பனைகளையும் அவருடைய கட்டளைகளையும் அவருடைய நியாயங்களையுங் கைக்கொள்ளுகிறதற்கும் நம்முடைய இருதயத்தைத் தம்மண்டைச் சாயப்பண்ணுவாராக.

௫௯ அவர் தமதடியானுடைய நியாயத்தையுந் தமது சனமாகிய இஸ்ரவேலின் நியாயத்தையும், ஏவ்வொன்றைய தற்கொத்த காலத்திலே விசாரிப்பதற்கு நான் கர்த்தருக்கு முன்பாக விண்ணப்பம்பண்ணின இந்த என்னுடைய வார்த்தைகள் இரவும்பகலும் நம்முடைய பராபரனாகிய கர்த்தரிடத்திலே கிட்டியிருப்பதாக.

௬௰ கர்த்தரே பராபரன். வேறொருவரில்லையென்கிறதைப் பூமியின் சனசதனங்களெல்லாம் அறியும்படியாகத்தானே.

௬௧ ஆனால் இந்நாளிலிருக்கிறதுபோல நீங்கள் அவர் கட்டளைகளில் நடந்து அவர் கற்பனைகளைக் கைக்கொள்ள, உங்களிருதயம் நம்முடைய பராபரனாகிய கர்த்தரோடு உத்தமமாயிருக்கக்கடவதென்றான்.

௬௨ பிறபாடு இராசாவும் அவனோடேகூட இஸ்ரவேலனைத்தும் கர்த்தருக்கு முன்பாகப் பலிகளைச் செலுத்தினார்கள்.

௬௩ சாலோமோன் கர்த்தருக்குச் சமாதானபலிகளாக இருபத்திரண்டாயிரம் மாடுகளையும் நூற்றிருபதினாயிரம் ஆடுகளையும் பலியிட்டான். இப்படியே இராசாவும் இஸ்ரவேல் புத்திரர் அனைவருங் கர்த்தருடைய வீட்டைப் பிரதிஷ்டைபண்ணினார்கள்.

௬௪ அந்நாளிலே இராசா கர்த்தருடைய வீட்டிற்கு முன்னிருக்கிற பிராகாரத்தின் நடுமையஸ்தலத்தைப் பரிசுத்தம்பண்ணினான். ஏனென்றாற் கர்த்தருக்கு முன்பாக இருக்கிற வெண்கலப்பலிபீடஞ் சர்வாங்க தகனங்களையுங் காணிக்கைகளையுஞ் சமாதானபலிகளின் கொழுப்புகளையுங் கொள்ளமாட்டாச் சிறிதானபடியினாலே, அங்கே சர்வாங்கதகனங்களையுங் காணிக்கைகளையுஞ் சமாதானபலிகளின் கொழுப்புகளையுஞ் செலுத்தினான்.

௬௫ அக்காலத்திற்றானே சாலோமோனும் அவனோடேகூட ஆமாத்தின் எல்லைதுவக்கி எகிப்தின் நதிமட்டுமிருந்து வந்த பெரிய கூட்டமாகிய இஸ்ரவேலனைத்தும் நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக ஏழுநாளும், அதற்குப்பிறகு வேறே ஏழுநாளும் ஆகப் பதினாலுநாளாகப் பண்டிகையை யாசரித்தார்கள்.

௬௬ எட்டாநாளிலே சனத்திற்கு விடைகொடுத்தனுப்பினான். அவர்கள் இராசாவை யாசீர்வதித்துக் கர்த்தர் தம்முடைய தாசனாகிய தாவீதுக்குந் தமது சனமாகிய இஸ்ரவேலுக்குஞ் செய்த எல்லா நன்மைகளுக்காகவுஞ் சந்தோஷமும் மனமகிழ்ச்சியுமாய்த் தங்கள் கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.

## ௯. அதிகாரம்

பராபரன் மறுபடியுஞ் சாலோமோனுக்குத் தரிசனையானது.

சாலோமோன் கர்த்தருடைய வீட்டையும் இராச அரண்மனையையும், செய்யத்தான் மனதும் விருப்பமுமாயிருந்த தெல்லாவற்றையுங் கட்டித் தீருகையிற் சம்பவித்ததேதெனில்,

௨ கர்த்தர் கிபெயோனிலே சாலொமோனுக்குத் தரிசனையானதுபோல இரண்டாம்விசையவனுக்குத் தரிசனையானார்.

௩ ஆனால் கர்த்தர் அவனோடே சொன்னதாவது, நீ நமக்கு முன்பாகப் பண்ணின உன் விண்ணப்பத்தையும் உன் வேண்டுதலையுங் கேட்டோம். நீ கட்டின இந்த வீட்டிலே நம்முடைய நாமத்தை யென்றைக்கும் வைக்கத்தக்கதாக அதைப் பரிசுத்தம்பண்ணினோம். நம்முடைய கண்களும் நம்முடைய இருதயமுஞ் சகல நாளும் அங்கேயிருக்கும்.

௪ நாமுனக்குக் கற்பித்தபடியெல்லாம் நீ செய்து நம்முடைய கட்டளைகளையும் நம்முடைய நியாயங்களையுங் கைக்கொள்ளும்படிக்கு, நமக்கு முன்பாகமன உத்தமமுஞ் செம்மையுமாய் உன் தகப்பனாகிய தாவீது நடந்ததுபோலே நடந்தாயானால்,

௫ அப்போது இஸ்ரவேலின் இராசாசனத்தின்மேலுனக்கொரு புருஷன் உனக்கில்லாதிருப்பதில்லையென்று உன் தகப்பனாகிய தாவீதோடே நான் சொன்னபடியே இஸ்ரவேலின்மேலுள்ள உன் இராசரிய பாரத்தின் ஆசனத்தை யென்றைக்கும் நிறைப்பண்ணுவோம்.

௬ நீங்களும் உங்கள் பிள்ளைகளும் நம்மைவிட்டுப் பின்வாங்கி, நாம் உங்களுக்கு முன்பாக வைத்த நம்முடைய கற்பனைகளையும் நம்முடைய கட்டளைகளையுங் கைக்கொள்ளாமற்போய், வேறே தேவர்களைச் சேவித்து அவைகளைப் பணிந்துகொண்டீர்களேயாகில்,

௭ நாம் இஸ்ரவேலுக்குக் கொடுத்த சீமையிலே அவர்களை வைக்காதபடிக்கு நிர்மூலமாக்கி, நம்முடைய நாமத்தின் பொருட்டு நாம் பரிசுத்தம்பண்ணின இந்த வீட்டை நம்முடைய முகத்தைவிட்டுத் தள்ளுவோம். அப்போது இஸ்ரவேலெல்லாச் சனசதளங்களுக்குள்ளும் பழமொழியாகவும் நிந்துமொழியாகவுமிருக்கும்.

௮ அப்போது உயர்ந்திருந்த இந்த வீட்டைக் கடந்துபோகிறவனெல்லாம் பிரமித்துப் பரிகாசமாய் ஊசிக்கர்த்தர் இந்தத் தேசத்திற்கும் இந்த வீட்டிற்கும் இப்படிச்செய்ததென்ன? என்றுகேட்கிறதற்கு,

௯ அவர்கள் தங்கள் பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின தங்கள் பராபரனாகிய கர்த்தரை விட்டுவேறே தேவர்களைப் பற்றிக்கொண்டு அவைகளை நமஸ்கரித்துச் சேவித்தபடியினாலே கர்த்தர் இந்தச் சகலத்தையுமெல்லாம் அவர்கள்மேல் வரப்பண்ணினாரென்று சொல்லுவார்களென்றார்.

## சாலொமோனுடைய இராசரியபாரத்தின் பலவித நடத்தைகள்.

௰ சாலொமோன் இரண்டு வீடுகளாகிய கர்த்தருடைய வீட்டையும் இராச அரண்மனையையுங் கட்டுகிற இருபது வருஷகாலஞ்சென்றபோது,

௰௧ தன்னுடைய எல்லாவிருப்பத்திற்குந் தக்கதாய்த் தனக்குக் கேதுரு மரங்களையும் பாய்மர விருட்சங்களையும் பொன்னையுங் கொடுத்திருந்த தீருவின் இராசாவாகிய ஈராமுக்கு இராசாவாகிய சாலொமோன் கலிலேயாத் தேசத்திலிருக்கிற இருபது பட்டணங்களைக் கொடுத்தான்.

௰௨ அப்போது ஈராமு சாலொமோன் தனக்குக் கொடுத்த பட்டணங்களைப் பார்க்கிறதற்குத் தீருவிலிருந்து புறப்பட்டான். அவைகள் அவன்பார்வைக்கு இரசிப்படாமல்,

௰௩ என் சகோதரனே! நீ எனக்குக் கொடுத்த இந்தப் பட்டணங்கள் எப்படிக்கொத்தவைகளென்றான்? அவைகள் இந்நாள்மட்டுங் காபூல்தேசமென்னப்படுகின்றது.

௰௪ ஈராமோவென்றால் இராசாவுக்கு நூற்றிருபது தாலந்துபொன் அனுப்பியிருந்தான்.

௰௫ இதினிமித்தமாயத்தானே சாலொமோனென்கிற இராசா தான் கர்த்தருடைய வீட்டையுந் தன்வீட்டையும் மில்லோவையும் எருசலேமின் மதிலையும் ஆத்சோரையும் மெகிதோவையுங் கேசேரையுங் கட்டுகிறதற்கு வரிபோட்டு வாங்கினான்.

௰௬ ஏனெனில் எகிப்தின் இராசாவாகிய பார்வோன் ஏறிவந்து அந்தக் கேசேர்பட்டணத்தைப் பிடித்து அதையக்கினியாற் சுட்டெரித்து அதிலே குடியிருந்த கானானியரைக் கொன்றுபோட்டு அதைச் சாலொமோனின் பெண்சாதியாகிய தன்குமாரத்திக்குச் சீதனமாகக் கொடுத்திருந்தான்.

௰௭ சாலொமோன் அந்தக் கேசேர்பட்டணத்தையுந் தாழ்வான பெத்தொரோனையும்,

௰௮ பாலாத்தையும் நதேசத்தின் வனாந்திரத்திலுள்ள தாத்மோரையும்,

௰௯ தனக்கிருக்கிற இரஸ்துக்களை வைக்கும் எல்லாப்பட்டணங்களையும் இரத

ளிருக்கும் பட்டணங்களோடுங் குதிரைக்காரிருக்கும் பட்டணங்களையும், தான் எருசலேமிலும் லிபனோனிலுந் தன் இராச்சியமான தேசமெங்குங் கட்டத் தனக்கிச்சையானதினைத்தையுங் கட்டினான்.

௨௰ இஸ்ரவேல்புத்திரர் சங்காரம்பண்ணக்கூடாதிருந்த இஸ்ரவேல்புத்திரரின் சாதியல்லாத எமோரியர் எத்தியர் பெரிசியர் எவியர் எபூசியருமான சகலசனத்திலும் மீதியாயிருந்து,

௨௰௧ அவர்களுக்குப் பிறகு தேசத்தில் வைக்கப்பட்ட அவர்களுடைய பிள்ளைகளைச் சாலோமோன் அமஞ்சிவேலைசெய்ய இந்நாள்வரைக்கும் அடிமைப்படுத்தினான்.

௨௰௨ ஆனால் இஸ்ரவேல் புத்திரரிலொருவனையுஞ் சாலோமோன் அடிமைப்படுத்தினதில்லை. இவர்கள் யுத்தமனுஷரும் அவனுடைய ஊழியக்காரரும் அவனுடைய பிரபுக்களும் அவனுடைய சேர்வைக்காரரும் அவனுடைய இரதங்களுக்கும் அவனுடைய குதிரைக்காரருக்கும் அதிபதிகளுமாயிருந்தார்கள்.

௨௰௩ ஐந்நூற்றைம்பதுபேர் சாலோமோனின் வேலையைவிசாரித்து வேலைசெய்கிற சனத்தையாளுகிற தலையான விசாரிப்புக்காரராயிருந்தார்கள்.

௨௰௪ பார்வோனின் குமாரத்தியோவென்றால் தாவீதின் பட்டணத்திலிருந்து சாலோமோன் தனக்குக்கட்டின தன்வீட்டிலே குடியேறிவந்தாள். அப்போது மில்லோவைக்கட்டினான்.

௨௰௫ சாலோமோன் கர்த்தரின்வீட்டை முடித்தபிற்பாடு அவருக்குக்கட்டின பலிபீடத்தின்மேல் வருஷத்தில் மூன்றுதரம் சர்வாங்கதகனங்களையுஞ் சமாதானபலிகளையுஞ்செலுத்திக் கர்த்தரின் சன்னிதிக்குமுன்னிருக்கிற பீடத்தின்மேலே தூபங்காட்டிவந்தான்.

௨௰௬ இராசாவாகிய சாலோமோன் ஏதோந்தேசத்தில் நாணற்சமுத்திரக்கரையிலே ஏலோத்தூர் கிட்டவிருக்கிற எத்சியோன்கேபேரிலே கப்பல்களையுஞ் செய்வித்தான்.

௨௰௭ அந்தக் கப்பல்களின் ஈராம் சாலோமோனுடைய வேலைக்காரரோடேகூடச் சமுத்திரயாத்திரையையறிந்த கப்பல்மனுஷராகிய தன்னுடைய வேலைக்காரரையனுப்பினான்.

௨௰௮ அவர்கள் ஓப்பீருக்கு வந்து அவ்விடத்திலிருந்து நானூற்றிருபது தாலந்து பொன்னை இராசாவாகிய சாலோமோனண்டைக்குக்கொண்டுவந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

சாலோமோனின் பிரபலியமான நடபடி.

௧ கர்த்தருடைய நாமத்தினிமித்தஞ் சாலோமோனுக்கிருந்த கீர்த்தியைச் சேபாவின் இராசாத்தி கேள்வியானபோது, அவள் விடுகதைகளினாலே அவனைச் சோதிக்கிறதற்காக,

௨ மகாபெரிய தண்டோடுஞ் சம்பாரங்களையும் வெகுதிரட்பொன்னையும் இரத்தினங்களையுஞ்சுமக்கிற ஒட்டகங்களோடும் எருசலேமுக்கு வந்தாள். அவள் சாலோமோனண்டைக்கு வந்தபோது தன் மனதிலிருந்ததெல்லாவற்றையும் அவனோடே பேசினாள்.

௩ அப்போது சாலோமோன் அவள் சொற்களையெல்லாம் அவளுக்கு விவரித்தான். அவளுக்கு விவரிக்கக்கூடாதபடிக்கு ஒன்றாகிலும் இராசாவுக்கு மறைபொருளாயிருந்ததில்லை.

௪ சேபாவின் இராசாத்தி சாலோமோனுடைய எல்லா ஞானத்தையும் அவன் கட்டின வீட்டையும்,

௫ அவன் பந்தியின் சாப்பாட்டையும் அவன் ஊழியக்காரின் அடியிருப்பையும் அவன் வேலைக்காரின் வரிசையையும் அவர்கள் வஸ்திரங்களையும் அவனுக்குப் பானம்பரிமாறுகிறவர்களையும் அவன் கர்த்தருடைய வீட்டிற் சேறிப்போகிற போக்கையுங் காண்கையில் அவள் ஆச்சரியத்தாற்பிரமித்துக்கொண்டு,

௬ இராசாவோடே சொன்னது, உம்முடைய வர்த்தமானங்களையும் உம்முடைய ஞானத்தையுங்குறித்து நான் என் தேசத்திலே கேட்டசெய்தி மெய்யாயிற்று.

௭ நான் வந்து என் கண்கள் காணுமட்டும் அந்த வார்த்தைகளை நான் நம்பாதிருந்தேன். ஆனால் இதோ, இவைகளிற் பாதியாகிலும் எனக்கு அறிவிக்கப்பட்டதில்லை. நான்கேட்ட கீர்த்தியைப்பார்க்கிலும் உம்முடைய ஞானமும் நன்மையும் அதிகமாயிருக்கின்றது.

௮ உம்முடைய மனுஷர் பாக்கியவான்கள். எப்போதும் உமக்குமுன்பாக நின்று உம்முடைய ஞானத்தைக்கேட்கிற இந்த உம்முடைய ஊழியக்காரர் பாக்கியவான்கள்.

௯ உம்மை இஸ்ரவேலின் இராசாசனத்தின்மேல் வைக்க உம்முடைய மேற்பிரியமான உம்முடைய பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டிருப்பாராக. கர்த்தர் இஸ்ரவேலையென்றைக்குஞ் சிநேகி

கிறபடியினாலே உமமை நியாயமுமநீதியுஞசெய்கிறதறகு இர்ாசாவாகவைததாரெனறாள.

௰ அவள இர்ாசாவுககு நூறறிருபதுதாலநதுபொனனையும மிகுதியுமான சமபார்ஙகளையும இர்ததினஙகளையுங கொடுததாள. சேபாவின இர்ாசாததி இர்ாசாவாகிய சாலோமோனுககுக கொடுதத அததனைசமபார்ஙகள பிறபாடு ஒருககாலுமவநததிலலை.

௰௧ ஓபபீரிலிருநதுபொனனைககொணடுவருகிற ஈர்ாமின கபபலகளும ஓபபீரிலிருநது வெகுதிரளாய வாசனைமர்ஙகளையும இர்ததினஙகளையுங கொணடுவநதது.

௰௨ அநதவாசனைமர்ஙகளால இர்ாசாகர்ததருடையவீட்டிற்கும இர்ாச அர்ணமனைககும ஊனறுகால்களையும பாடுகிறவர்களுககாகச சுர்மணடலஙகளையுந தமபூறுகளையும உணடாககினான. அபபடிககொதத வாசனை மர்ஙகள பிறபாடு இநநாளவரைககுமவநததுமிலலைகாணபபடடதுமிலலை.

௰௩ இர்ாசாவாகிய சாலோமோனதானே சநதோஷமாயசசேபாவின இர்ாசாததிககுககொடுததுமலலாமல அவளவிருமபபபட்டுககேடடதெலலாவறறையும அவளுககுககொடுததான. அபபடியேயவளதனனூழியககார்ரோடேகூடததிரும்பிககொணடுதனதேசததிற்குபபோனாள்.

௰௪ சாலோமோனுககு மலவிகைக்கார்ர்ாலுஞசமபார்வர்த்தகரினவர்ததகததினாலும அருபியாவின சகல இர்ாசாககளாலுந தேசததின துரைகளாலும வரும பொனனலலாமல,

௰௫ அவனுககு ஒவவொருவருஷததினவர்ததினையாக அறுநூறறறுபததாறுதாலநதுநிறையானபொன்வநதது.

௰௬ இர்ாசாவாகியசாலோமோன தகடாய் அடிததபொனனினாலே இருநூறு பரிசைகளையுணடாககினான. ஒவவொரு பரிசைககு அறுநூறுசேககலநிறைபொனனைசசெலவழிததான.

௰௭ தகடாயடிதத பொனனினாலேமுநநூறுகேடையஙகளையுமுணடாககினான ஒவவொருகேடையததிற்குமூனறு இருததலபொனனைசசெலவழிததான. அவைகளை இர்ாசாலீபனோனகாடடுமர்ஙகளினவீட்டிலேவைததான.

௰௮ இர்ாசா தநதத்தினாலே பெரிய இர்ாசாசனததையும பணணுவிததது, அதையபர்ஞசிததகட்டினாலமூடினான.

௰௯ அநத ஆசனததிற்கு ஆறுபடிகள உணடாயிருநதது. ஆசனததினதலை பினனுககவளைவாயிருநதது. உளுக்காருமிடததிற்கு இருபுறமுஙகைசசாய்மானஙகளிருநதது. இர்ணடுசிஙகஙகளுஙகைசசாய்மானஙகளருகேநினறது.

௨௰ ஆறுபடிகளினமேலும இநதணடையும அநதணடையுமபனனிர்ணடுசிஙகஙகளநினறது. எநத இர்ாசசியஙகளிலும அபபடிப்பண்ணபபட்டிருநததிலலை.

௨௧ இர்ாசாவாகியசாலோமோனுககிருநதகுடிககும பாததிர்ஙக ளெலலாம பொனனும லீபனோன காடடு மர்ஙகளுடைய வீட்டின பணிமுட்டுகளெலலாம அபர்ஞசிடமா யிருநதது. ஒனறிலும வெளளியலல. ஏனெனில இது சாலோமோனினநாட்களில ஒரு பொருட்டாய எணணபபடடதிலலை.

௨௨ ஏனெனில இர்ாசாவுககுச சமுததிர்ததிலே ஈர்ாமினகப்பலகளோடேகூடததர்சீசின கபபலகள உணடாயிருநது, தர்சீசினகப்பல்கள்மூனறுவருஷஙகளில ஒருதர்மபொனனையும வெளளியையும யானைததநதஙகளையுங குர்ஙகுகளையும மயிலகளையுஙகொணடுவநதது.

௨௩ பூமியின இர்ாசாக்களெலலாரையுமபார்க்க இர்ாசாவாகியசாலோமோன ஐசுவரியததிலுமஞானததிலும பெரியவனாயிருநதான.

௨௪ பர்ாபர்னசாலோமோனின இருதயததிலேகொடுத்த அவனுடையஞானததைககேட்கிறதற்காகசசகலதேசததாரும அவனமுகத்தரிசனையைததேடினார்கள.

௨௫ அவர்வர்வருஷததிற்குவருஷநதஙகளகாணிககையாகிய வெளளித்தட்டுமுட்டுகளையும பொன்தட்டுமுட்டுகளையுமவஸதிர்ஙகளையும ஆயுதஙகளையுஞசமபார்ஙகளையுஙகுதிரைகளையுங கோவேறுககழுதைகளையுஙகொணடுவருவார்கள.

௨௬ சாலோமோன இர்தஙகளையுஙகுதிரைககார்ரையுஞசேர்த்தான. அவனுககு ஆயிர்தது நானூறு இர்தஙகளுமபனனீர்ாயிர்ங குதிரைககார்ரின இர்ானுக்களுமிருநதது. அவைகளை இர்ாசா இர்தஙகளுடையபட்டணஙகளிலும எருசலேமிலேதனனிடததிலுமவைத்தான.

௨௭ இர்ாசாவானவன எருசலேமிலே வெளளியைக்கலலுககளத்தனையுங கேதுருமர்ஙகளைப பளளததாககுகளிலிருககிற காட்டத்திமர்ஙகளத்தனையுமாககினான.

௨௮ சாலோமோனுககிருககிறகுதிரைகளுமபுடவைகளும எகிப்திலிருநதுகொ

ணடுவர்ப்பட்டது. இராசாவினவர்த்தகர் புடவைகளையொப்பநத விலைகிரயததிற் குவாஙகிஞர்கள.

௨௯ எகிப்திவிருநதேறிவநத ஒவவொரு இரதத்தினவிலை அறுநூறுவெளளிக்காசும ஒவவொருகுதிரையினவிலைநூறறைமபதுவெளளிககாசுமாயிருநதது. அநதபபிரகாரமாக ஏததியரின இராசாக்களெலலாருககுஞசீரியாவின இராசாககளுககும அவர்களமுகாநதிரமாயககொணடுவாப்பட்டது.

## ௰௧. அதிகாரம்.

சாலோமோன்செய்தபாவமும அதறகுவநத ஆககினையும.

இராசாவாகிய சாலோமோஞெவெனிறபார்வோனினகுமாரததியை யலலாமலமோவாபியரும அமமோனியருமஏதோமியருஞசீதோனியரும ஏததியருமாகிய அநநியசாதியாரான அநேகமஸதிரிகளைசசிநேகிததான.

௨ நீஙகள அவர்களணடைககும அவர்கள உஙகளணடைககும பிரவேசிககவேணடாம. அவர்கள நிசசயமாய உஙகள இருதயததைத்தஙகள தேவர்கள பிறகாலேசாயபபணணுவார்களெனறு கர்ததர் இஸரவேலபுததிரரைககுறிததுச சொனனபுறசசாதிகளானஅநதஸதிரிகளோடேசாலோமோனசிநேக இணககமாயிருநதான.

௩ அவனுககுபபிரபுககளகுலமானஎழுநூறுபெணசாதிகளும முநநூறுவைபபாட்டிகளுமிருநதார்கள. அநத அவனுடையஸதிரிகள அவனிருதயததைசசாயபபணணிஞர்கள.

௪ அதேதெனிற்சாலோமோனபெரியவயதானபோது அவனுடையபெணசாதிகள அவனிருதயததைவேறேதேவர்களபிறகாலேசாயபபணணிஞர்கள. ஆனதுகொணடு அவனுடைய இருதயம அவனதகபபஞகிய தாவீதின இருதயததைபபோலேதனபராபரஞகிய கர்ததரோடேஉததமமாயிருநததிலலை.

௫ ஏனெனறுற்சாலோமோன சீதோனியரின தேவியாகிய அஸதரோததையும அமமோனியரின அருவருபபாகிய மிலகோமையும பினபறறிஞன.

௬ அபபடியேசாலோமோன தனதகபபஞகிய தாவீதைபபோலே கர்ததரைநிறைவாகப்பினபறறிககொணடிராமற்கர்ததரினபார்வைககுப பொலலாபபானதைசசெயதான.

௭ அபபோதுசாலோமோன்எருசலேமுககெதிரானபர்வதத்திலே மோவாபியரின அருவருபபாகியகாமோசுக்கும அம்மோனபுததிரரின அருவருபபான் மோளோகுக்கும மேடையைக்கட்டி,

௮ இநதபபிரகாரமாகததஙகளதேவர்களுககுத தூபஙகாட்டிபபலியிடுகிற அநநியசாதியாரான் தனனுடைய எலலாஸதிரிகளுககாகவுஞசெயதான.

௯ ஆகையாற் சாலோமோன தனககு இரணடுவிசை தரிசனையாகி வேறேதேவர்களைபபினபறறாதபடிககு இநதககாரியமாயததனககுக கற்பிததநத இஸரவேலின பராபரஞகிய கர்ததரைவிட்டுததனனிருதயததைத்திருபபி,

௰ கர்ததர் கற்பிததததைக கைககொளளாமற்போனதற்காகக்கர்ததர்அவனமேலேகோபமாஞர்.

௰௧ ஆகையாற் கர்ததர் சாலோமோனுககுச சொனனதாவது, நாம் உனககுககற்பிதத நமமுடைய உடமபடிக்கையையும நமமுடைய கட்டளைகளையும நீ கைககொளளாமற்போன இநதககாரியம உனனிடததிலிருநதபடியிஞலே நாம் இராச்சியபாரததை யுன்னிடததிலிருந்து பிடுஙகவேபிடுஙகி அதை யுன ஊழியககாரனுககுககொடுபபோம.

௰௨ ஆகிலும உன தகபபஞகிய தாவீதினிமிததம நாம் அதை உன நாட்களிலேசெயவதிலலை. உனகுமாரனுடையகையிலேயதைபபிடுஙகுவோம்.

௰௩ ஆஞலஇராசசியபாரததையெலலாமநாமபிடுஙகாமலநமமுடையதாசஞகியதாவீதினிமிததமுமநாநதெரிநதுகொணட எருசலேமினிமிததமும ஒரு கோததிரததை நாம உன குமாரனுககுக கொடுபபோமெனருர்.

௰௪ கர்ததர் ஏதோமியஞகிய ஆதாதெனற ஒருவிரோதககாரனையுஞசாலோமோனுககெழுபபிஞர். இவன ஏதோமிலிருநத இராசாவினவிததானவன.

௰௫ ஏனெனருல தாவீது ஏதோமிலிருக்கக்கொளளவும, படைத தலைவஞகிய யோவாப் வெட்டுணடவர்களை யடககமபணண ஏறிபபோய, ஏதோமிலுளள ஆண்சாதிகளையெலலாஞசஙகரிதது,

௰௬ அவர்களை யெலலாஞ சஙகரிககுமளவுநதானும இஸரவேலனைததும அஙகே ஆறுமாதமிருக்கக்கொளளவும,

௰௭ ஆதாதும அவனோடேகூட அவன தகபபனுடைய ஊழியககாரரிற் சில ஏதோமியரும எகிப்திற்குபபோகவோடிப போனார்கள. ஆதாத் அபபோது ஒருசிறு பிளளையாயிருநதான.

௰௮ அவர்களமீதியானிலிருநதெழுநது போயபபாரானுககுவநது, பாரானிலேமனுஷரைக கூடடிககொணடு, எகிப்திலே பார்வோனெனற எகிப்துவின இராசாவணடைககுவநதார்கள இவன அவனுககு ஒருவீடடைககொடுதது அவனுககு ஆகாரததைத்திடடமபணணி, ஒருசீமையைக ககடடளையிடடான.

௰௯ ஆதாதுககுபபார்வோனினகணகளில மிகுநத தயவு கிடைததபடியினாலே இவன அவனுககு இராசாததியாகிய தாபபெனேசென்ற இராசாததியாகிய தனனுடைய பெண்சாதியின சகோதரியைக கொடுததான.

௨௰ தாபபெனேசின சகோதரியாகிய இவள அவனுககுக கெனுபாதெனற ஒருகுமாரனைப பெறறாள அவனைத தாபபெனேசு பார்வோனின வீடடிலேவளர்ததாள அபபடியே கெனுபாத் பார்வோனினவீடடில அவனுடைய குமாரருககுளளேயிருநதான.

௨௰௧ தாவீது தனபிதாககளோடே நிததிரை யடைநதானெனறும, படைததலைவனாகிய யோவாப் செனறுபோனானெனறும, எகிப்திலே ஆதாத் கேடடபோது, ஆதாத் பார்வோனுடனே, நான என சீர்மைககுபபோகஎனனையனுபபுமெனறான

௨௰௨ பார்வோன அவனுடனே இதோ, நீபன சீர்மைககுப போகபபார்ககிறதறகு எனனிடததிலேயுனககெனனகுறைசசலிருககினறதெனறான. அதறகவன, ஒனறுமிலலை. எனறாலும எனனையனுபபுமெனறான.

௨௰௩ எலியாதாவின குமாரனாகிய ரேசோனெனற வேறொரு விரோதககாரனையும பராபரன அவனுககெழுபபினார். இவன தனனாணடவனாகிய அதாதேசெரெனற சோபாவினிராசாவைவிடடு ஓடிபபோய,

௨௰௪ தாவீது அவனமனுஷரைககொனறபோதிலே தனனோடே மனுஷரைச சேர்ததுககொணடு, அநதககூடடததிறகுததலைவனானான். அவர்கள தமஸ்குவுககுபபோய அஙகேகுடியிருநது, தமஸ்குவில இராசரியபாரமபணணினார்கள.

௨௰௫ ஆதாத் செயத பொலலாபபலலாமல ரேசோன சாலோமோனுடைய நாளெலலாம இஸ்ரவேலுககு விரோதககாரனாயிருநது, இஸ்ரவேலை அருவருததுச சூரியாவினமேல இராசாவாயிருநதான.

௨௰௬ சேரேதா ஊராரும எபபிறாயீமமனுஷனுமானநேபாத்தின குமாரன எரோபெயாமென்ற சாலோமோனினஊழியககாரனும இராசாவுககுவிரோதமாயக கையெடுததான. அவனுடைய தாயசெருகாளெனனுமபேருள்ள ஒருவிதமபெணசாதியாயிருநதாள.

௨௰௭ அவன இராசாவுககுவிரோதமாயககையெடுதத முகாநதரமெனனவெனில், சாலோமோன மிலலோவைககடடித் தனதகபபனாகியதாவீதுடைய படடணததின இடிதலகளைப பழுதுபார்ககிறபோது,

௨௰௮ எரோபெயாமெனறவன பராககிரமசாலியாயிருநதான. அவனவேலையை நடததிககததககவாலிபனெனறு சாலோமோனகணடு, யோசேப்வீடடாரினபாரததையெலலாம அவனவிசாரிபபுககொபபுவிததான.

௨௰௯ அககாலததிலே சமபவிதததெனனறால எரோபெயாம எருசலேமிலிருநதுபுறபபடுகையிற, சீலோனியனான அகியாவெனற தீர்ககதரிசி புதுசசாலவையைப போர்ததுககொணடிருநது, வழியிலேஅவனைககணடுபிடிததான. இருவருமவெளியிலேதனிததிருககையில,

௩௰ அகியா போர்ததுககொணடிருககிற அநதபபுதுச்சாலவையைபபிடிதது அதைப்பனனிரணடுதுணடாககக கிழிதது போடடு,

௩௰௧ எரோபெயாமுககுச சொனனதாவது, பததுததுணடுகளையெடுததுககொள. ஏனெனறால இஸ்ரவேலினபராபரனாகியகர்ததர்சொலலுகிறதேதெனில. இதோ,நானஇராசசியபாரததைசசாலோமோனுடையகையிலேயிருநதுககிழிதது உனககுபபததுககோததிரஙகளைக கொடுபபோம.

௩௰௨ ஆனாலநமமுடைய தாசனாகியதாவீதுககாகவும நாம இஸ்ரவேலகோததிரஙகளிலெலலாநதெரிநதுகொணட எருசலேமபடடணததிறகாகவும ஒருகோததிரம அவனுககு இருககும.

௩௰௩ அவர்களநமமைவிடடுச சீதோனியரினதேவியாகிய அஸ்தரோததையும மோவாபினதேவனாகிய காமோசையும, அமமோன புததிரரின தேவனாகிய மில்கோமையுமபணிநதுகொணடு, அவனதகபபனாகியதாவீதைபபோலே நமமுடைய பார்வைககுசசெமமையாயிருககிறதைச

செய்யவும நம்முடைய கட்டளைகளையும நம்முடைய நியாயங்களையுங் கைக்கொள்ளவும அவர்கள நம்முடைய வழிகளில நடவாதே போனபடியினாலே யப்படிச் செய்வோம.

௩௪ ஆனால இர்ாச்சியபார்த்தையெல்லாம நாம அவன் கையிலே தானே யெடுப்பதில்லை நாந்தெரிந்து கொண்டவனும நம்முடைய கற்பனைகளையும் நம்முடைய கட்டளைகளையுங் கைக்கொண்டவனுமான நம்முடைய தாசனாகிய தாவீதினிமித்தம அவனை யவன் உயிரோடிருக்கும நாளெல்லாம அதிபதியாக வைத்து,

௩௫ அந்த இர்ாச்சியபார்த்தையவன் குமாரனகையிலெடுத்தப்பத்துக் கோத்திரங்களாகிய அதை உனக்குக் கொடுத்து,

௩௬ நாம நம்முடைய நாமத்தை வைக்கும்படிக்குத் தெரிந்துகொண்ட பட்டணமாகிய எருசலேமிலே நம்முடைய முகத்திற்கு முன்பாக நம்முடைய தாசனாகிய தாவீதுக்குச் சகல நாளும ஒரு விளக்கிருக்கத்தக்கதாக அவன் குமாரனுக்கு ஒரு கோத்திரத்தைக் கொடுப்போம.

௩௭ நீயுன் ஆத்துமம் இச்சிப்பதையெல்லாம ஆண்டுகொண்டு, இஸ்ரவேலின்மேல இர்ாசாவாயிருப்பதற்காகவுனனை யெடுப்போம.

௩௮ நாம உனக்குக் கற்பித்ததையெல்லாம நீ கேட்டுக் கைக்கொண்டு நீ நம்முடைய வழிகளில நடந்து, நம்முடைய தாசனாகிய தாவீது செய்ததுபோலே நம்முடைய கட்டளைகளையும நம்முடைய கற்பனைகளையுங் கைக்கொள்ளும்படிக்கு நம்முடைய பார்வைக்குச் செம்மையானதைச் செய்தாயானால நாம உன்னோடிருந்து நாந்தாவீதுக்குக் கட்டினதுபோல உனக்கும் நிலைநிற்கிற வீட்டைக் கட்டி இஸ்ரவேலையுனக்குக் கட்டளையிடுவோம.

௩௯ இப்படி நாம அந்தக் காரியத்தினிமித்தந் தாவீதின வித்தாரைச் சிறுமைப்படுத்துவோம. ஆகிலும எல்லா நாளுமல்லவென்றொன்று சொன்னான.

௪௦ ஆனதுகொண்டு சாலோமோன எரொபெயாமைக் கொன்றுபோடப்பார்த்தான. ஆனால எரொபெயாம எழுந்து எகிப்திற்குச் சீசாகென்ற எகிப்தின இர்ாசாவண்டையிலோடிப்போய்ச் சாலோமோன மரணமடையுமட்டும எகிப்திலிருந்தான.

௪௧ சாலோமோனின மற்றவர்த்தமானங்களும அவன் செய்ததனைத்தும அவனுடைய ஞானமுஞ் சாலோமோனுடைய நடபடிப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௪௨ சாலோமோன எருசலேமிலே இஸ்ரவேலையெல்லாம அர்சாண்டநாட்கள நாற்பது வருஷம.

௪௩ சாலோமோன தன பிதாக்களோடே நித்திரையடைந்து தன தகப்பனாகிய தாவீதின பட்டணத்தில அடக்கம்பண்ணப்பட்டான். அவன் குமாரனாகிய ரெகொபெயாம அவன் ஸ்தலத்திலிர்ாசாவானான.

## ௰௨. அதிகாரம்.

எரொபெயாம இஸ்ரவேலிலே பத்துக் கோத்திரங்களின்மேல இர்ாசாவாகி விக்கிரக ஆராதனைக்குக் காரணனானது.

ரெகொபெயாஞ் சீகேமுக்குப் போனான. ஏனெனில அவனை இர்ாசாவாக்கும்படிக்கு இஸ்ரவேலெல்லாருஞ் சீகேமுக்கு வந்தது.

௨ இர்ாசாவாகிய சாலோமோனைவிட்டோடிப்போய எகிப்திலே குடியிருக்கிற நேபாத்தின குமாரனான எரொபெயாமோவென்றால எகிப்திலிருக்கக்கொள்ள அதைக் கேட்டபோது,

௩ அவர்கள அவனையழைத்தனுப்பினதினாலே வந்தான. பிற்பாடு எரொபெயாமும இஸ்ரவேல சபையனைத்தும வந்து, ரெகொபெயாமோடே பேசி,

௪ உம்முடைய தகப்பன எங்கள நுகத்தடியைக் கடினமாக்கினார். இப்போது நீர் உம்முடைய தகப்பனுடைய கடினமான வேலையையும அவர் எங்கள்மேல வைத்த அவருடைய பாரமான நுகத்தடியையும இலகுவாக்கும. அப்போது உம்மைச் சேவிப்போமென்றார்கள.

௫ அவன் அவர்களுடனே, நீங்கள போய மூன்றுநாட்பொறுத்து, என்னண்டைக்குத் திரும்பி வாருங்களென்றான. அப்படியே சனம போனார்கள.

௬ அப்போது இர்ாசாவாகிய ரெகொபெயாந் தன தகப்பனாகிய சாலோமோன உயிரோடிருக்கையில அவனுக்கு முன்பாக நின்றுகொண்டிருந்த மூப்பரோடே ஆலோசனைபண்ணி இந்தச் சனத்திற்கு மறுவுத்தரவு கொடுக்க நீங்கள எப்படிக்கொத்த ஆலோசனை சொல்லுகிறீர்கள? என்றுகேட்டான.

௭ அவர்கள அவனுடனே, நீர் இன்று இந்தச் சனத்திற்கு ஊழியக்காரனாகி அவர்களுக்கு இணங்கி அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக நல்வார்த்தைகளைச் சொன்னாற்

சகலநாளும அவர்கள உமககூழியககார ராயிருபபார்களெனறார்கள.

அ ஆனால ரூபபர் தனககுககொடுதத ஆலோசனையையவனவிடடுத்தனனோடே வளர்நததனககு முனபாகநிறகிறவாலிப ரோடேஆலோசனைபணணி,

கூ அவர்களுடனே, உமமுடையதகப பன எஙகளமேலவைதத நுகத்தடியை லகுவாககுமெனறு எனனோடே சொனன இநதசசனததிற்குமறுவுததர்வுகொடுகக நீஙகள எபபடிககொதத ஆலோசனை சொலலுகிறீர்கள? எனறான.

ய அபபோது அவனோடேவளர்நதவா லிபர் அவனோடேசொனனதாவது, உம முடையதகபபன எஙகள நுகததடியைப பார்மாககினார். நீர் அதையெஙகளுக்கு லகுவாககுமெனறு உமமோடேசொனன இநதசசனததிற்கு நீர்சொலல வேணடி யதேதெனில எனசுணடுவிரல எனதகப பனுடைய இடுபபைபபார்ககபபருமமாயி ருககும.

யக இபபோதும எனதகபபனபார்மா ன நுகததடியை யுங்களமேற்சுமததினார். நான உங்கள நுகததடியை யதிகபாரமா ககுவேன. எனதகபபன உஙகளைசசவுககு களாலேதணடிததார். நானோவெனிலதே ள்களினாலே உஙகளைததணடிபபேனென று நீர்அவர்களோடேசொலலவேணடுமெ னறார்கள.

யஉ மூனறுமநாளிலேஎனனணடைககு ததிருமபிவாருஙகளெனறு இராசாசொன னபடியே எரோபெயாமுஞசகலசனமும மூனறுமநாளிலே ரெகாபெயாமணடைக குவநதபோது,

யங இராசாசனததிற்குககடின உததி ர்வுகொடுதது மூபபர்தனககுசசொனன ஆலோசனையைவிடடு,

யச வாலிபருடைய ஆலோசனையினப டியே அவர்களோடேபேசி, எனதகபப ன உஙகளநுகததடியைபபார்மாககினார். நான உஙகளநுகததடியை அதிகபாரமா ககுவேன. எனதகபபன உஙகளைசசவுககு களாலேதணடிததார். நானோவெனிலதே ள்களினாலே உஙகளைததணடிபபேனென றுசொலலி,

யரு இராசா சனததிற்குக கேள்விகொ டாதே போனான. ஏனெனறாற் கர்ததர் சீ லோனியனான அகியாவைககொணடு நே பாததின குமாரனாகிய எரோபெயாமுக குசசொனன தமமுடைய வார்ததையை ததிடபபடுததுமபடிககுககர்ததராலஇப படிபபுரளபபடடது.

யசா இராசா தஙகளுககுச செவிகொ டாததை இஸரவேலெலலாங கணடபோ து, சனம இராசாவுககுமறுவுததர்வாக, தாவீதோடே எஙகளுககுப பஙகேது? ஈசாயினகுமாரனோடே எஙகளுககுச சுத நதரமிலலை. இஸரவேலே! உன கூடாரங களுககுபபோயவிடு. இபபோதுநதாவீ தே! உனவீடடைபபார்ததுககொளென று சொலலி இஸரவேல தஙகள கூடாரங களுககுபபோயவிடடார்கள.

யஎ ஆனால யூதாவினபடடணஙகளிலே குடியிருநத இஸரவேலபுததிரரினமேலே ரெகாபெயாம இராசாவாயிருநதான.

யஅ அபபோது இராசாவாகிய ரெகா பெயாம பகுதிவிசாரிபபுககாரனாகிய அ தோராமை யனுபபினான. ஆனால இஸர வேலெலலாம அவனைககலலெறிநதுகொ னறார்கள! அபபோது இராசவாகியரெகா பெயாம எருசலேமுககோடிபபோகததி விரமாய இரதத்தினமேலேறிபபோனான.

யகூ அபபடியே இஸரவேல இநநாள வரைககும தாவீதினவீடடைவிடடு மருணடு விழுநதிருககிறார்கள.

உய எரோபெயாம திருமபிவநதானெ னறு இஸரவேலுககெலலாங கேள்வியா னபோது அவனைசசபையணடைககழை ததனுபபி, அவனை இஸரவேலின மேலே லலாம இராசாவாககினார்கள. யூதாகோத திரமாததிரமே யலலாமல வேறொருவரு நதாவீதினவீடடைபபினசெனறதிலலை.

உக ரெகாபெயாம எருசலேமுககுவந தபோது இஸரவேல வீடடாரோடேயுத தமபணணவும இராசசியததைசசாலோ மோனின குமாரனாகிய தனனிடமாகததி ருபபிககொளளவும யூதாவீடடார்பென யமீன கோததிரததார் அனைவருமாகிய தெரிநதுகொளளபபடட யுததஞசெய யததகக நூறறெண்பதினாயிரம பேரைக கூடடிககொணடான.

உஉ ஆனாற்பர்ாபரனுடைய மனுஷனா கியசேமாயாவுககுப பராபரனுடையவா ர்ததையுணடாய அவர்சொனனதாவது,

உங நீயூதாவின இராசாவாகிய ரெகா பெயாமெனறசாலோமோனின குமாரனு ககுமயூதாவீடடார் அனைவருககுமபென யமீனுககும மறறுமுணடானசனததிற்கும,

உச நீஙகளேறிபபோகாமலும, இஸ ரவேலபுததிரரான உஙகளசகோதரரோ டேயுததமபணணாமலும அவாவர்தன்தன் வீடடிற்குததிருமபுஙகள. ஏனெனில நம மாலே இநதககாரியமநடநததெனறு கர்ததர் உரைககிறாரெனறு சொலலெனன

ஞர். அப்போது அவர்கள் கர்த்தருடைய சொற்கேட்டுக் கர்த்தருடைய வார்த்தையின்படியே போய்விடத் திரும்பினார்கள்.

௨௫ எரோபெயாம் எப்பிராயீம் மலைத் தேசத்திற் சீக்கேமைக் கட்டி அதிலே வாசம்பண்ணி அங்கேயிருந்து புறப்பட்டுப் பெனுவேலைக் கட்டினான்.

௨௬ ஆனால் எரோபெயாம் தன் மனதிலே, இப்போது இராசரியபாரம் தாவீது வீட்டுவசமாய்த் திரும்புமென்றும்,

௨௭ இந்தச் சனம் எருசலேமிலிருக்கிற கர்த்தரின் வீட்டிலே பலிகளைச் செலுத்த ஏறிப்போனால் இந்தச் சனத்தின் இருதயம் யூதாவின் இராசாவாகிய ரொகொபெயாமென்ற தங்கள் ஆண்டவன் வசமாய்த் திரும்பி அவர்கள் என்னைக் கொன்று, யூதாவின் இராசாவாகிய ரொகொபெயாமின் பாரிசமாய்த் திரும்புவார்களென்றும் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

௨௮ ஆகையால் இராசாவானவன் யோசனைபண்ணிப் பொன்னினால் இரண்டு கன்றுக்குட்டிகளையுண்டாக்கி, அவர்களுடனே, எருசலேமுக்கேறிப் போகிறது உங்களுக்கு வருத்தம். இஸ்ரவேலே! இதோ, இவைகளே உன்னை எகிப்துதேசத்திலிருந்தே வரப்பண்ணின உன்னுடைய தேவர்களென்று சொல்லி,

௨௯ ஒன்றைப் பெத்தேலிலும் ஒன்றைத் தாணிலும் ஸ்தாபித்தான்.

௩௰ இந்தக்காரியம் பாவமாகிச் சனம் இந்த ஒருகன்றுக்குட்டிக்காகத் தாண்மட்டும் போயிற்று.

௩௧ அவன் மேடைகளின் வீட்டையுங்கட்டி, லேவியின் புத்திராயிராத சனத்திலே சனமானவர்களை ஆசாரியராக்கினான்.

௩௨ யூதாவிலே ஆசரிக்கும் பண்டிகைக்கொப்பாக எட்டாமாதம் பதினைந்தாந் தேதியிலே எரோபெயாம் ஒரு பண்டிகையுங் கொண்டாடிப் பலிபீடத்தின்மேலே பலியிட்டான். இப்படித் தானுண்டாக்கின கன்றுக்குட்டிகளுக்குப் பலியிடப் பட அவன் பெத்தேலிலே செய்து தான் உண்டுபண்ணின மேடைகளின் ஆசாரியர்களைப் பெத்தேலிலே ஊன்றிவைத்து,

௩௩ தன்மனதிலேதானே நியமகம்பண்ணின எட்டாமாதம் பதினைந்தாந்தேதியிலே பெத்தேலிலே தானுண்டாக்கின பலிபீடத்தின்மேலே பலியிட்டு, இஸ்ரவேல் புத்திரருக்குப் பண்டிகையைக் குறித்துப் பலிபீடத்தின்மேலே பலியிடுத்தொடங் காட்டுவான்.

## ௰௩. அதிகாரம்.

எரோபெயாமின் விக்கிரகாராதனை ஒரு தீர்க்கதரிசியினாலே கண்டிக்கப்பட்டது.

ஆனால் இதோ, பராபரனுடைய மனுஷன் ஒருவன் கர்த்தருடைய வார்த்தையின்படியே யூதாவிலிருந்து பெத்தேலுக்கு வந்து எரோபெயாந் தூபங்காட்டப் பலிபீடத்தண்டையிலே நிற்கக்கொள்ள,

௨ கர்த்தருடைய வார்த்தையாய் அந்தப் பலிபீடத்திற்கெதிராகக் கூப்பிட்டுப் பலிபீடமே! பலிபீடமே! இதோ, தாவீதின் வீட்டிற்கு யோசியாவென்று பேருள்ள ஒரு குமாரன் பிறப்பான். அவனுன்மேலே தூபங் காட்டுகிற மேடைகளின் ஆசாரியர்களையுன் மேலே பலியிடுவான். மனுஷரின் எலும்புகளும் உன்மேலே சுட்டெரிக்கப்படுமென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்லி,

௩ அன்றையத்தினம் அவன் ஒரு அடையாளத்தைத் தந்து, இதோ, இந்தப் பலிபீடம் வெடித்து அதின்மேலுள்ள சாம்பலைச் சிந்திப் போமென்கிறது கர்த்தர் இட்ட அடையாளமென்றான்.

௪ சமபவித்ததென்றால் பெத்தேலிலிருக்கிற அந்தப் பலிபீடத்திற்கெதிராகப் பராபரனுடைய மனுஷன் கூப்பிட்டுச் சொன்னவார்த்தையை இராசாவாகிய எரோபெயாம் கேட்டபோதோவெனில், அவனைப் பிடியுங்களென்று தன்கையைப் பலிபீடத்தின் மேலிருந்து நீட்டினான். ஆகில் அவனுக்கு விரோதமாய் அவன் நீட்டின தன்னுடைய கையைத் தன்னண்டைக்கு முடக்கக்கூடாதபடிக்கு அது மார்த்துப்போயிற்று.

௫ பராபரனுடைய மனுஷன் கர்த்தருடைய வார்த்தையாற் குறித்திருந்த அடையாளத்தின்படியே பலிபீடம் வெடித்துச் சாம்பற் பலிபீடத்திலிருந்து கொட்டுண்டுபோயிற்று

௬ அப்போது இராசா பராபரனுடைய மனுஷனுக்குப் பிரத்தியுத்தாரமாக, நீ உன் பராபரனாகிய கர்த்தருடைய சமுகத்தைநோக்கி வேண்டிக்கொண்டு, என்னுடைய கை என்னண்டைக்குத் திரும்பும்படிக்கெனக்காக விண்ணப்பம் பண்ணென்றான். அப்போது பராபரனுடைய மனுஷன் கர்த்தருடைய சமுகத்தை நோக்கி விண்ணப்பஞ் செய்வதற்கு இராசாவின் கை அவனண்டைக்குத் திரும்பி முன்னிருந்த சீருக்கு வந்தது.

௭ அப்போது இராசா பராபரனுடைய மனுஷனோடே, நீயென்னோடே கூடவீ

டுக்கு வந்து தேறிக்கொள். உனக்கு வெகுமானங்கொடுப்பேனென்றான்.

௮ ஆனாற் பராபரனுடைய மனுஷன் இராசாவோடே சொன்னது, நீர் எனக்கு உம்முடைய பாதிவீட்டைக் கொடுத்தாலும், நான் உம்மோடே வருவதுமில்லை. இந்தஸ்தலத்தில் அப்பம் போசிப்பதுமில்லை. தண்ணீர் குடிப்பதுமில்லை.

௯ ஏனென்றால், நீ அப்பம் போசியாமலும் தண்ணீர் குடியாமலும், போனவழியாயத் திரும்பாமலுமிருவென்று கர்த்தர் தம்முடைய வார்த்தையால் எனக்குக் கற்பித்தாரென்று சொல்லி,

௰ அவன் பெத்தேலுக்கு வந்தவழியாயத் திரும்பாமல் வேறேவழியாயப் போய்விட்டான்.

௰௧ ஆனாற் கிழவனானொரு தீர்க்கதரிசி பெத்தேலிலே குடியிருந்தான். அவன் குமாரர் வந்து பராபரனுடைய மனுஷன் அன்றையத்தினம் பெத்தேலிலே செய்த எல்லாச்செய்கைகளையும் அவன் இராசாவோடே சொன்னவார்த்தைகளையுந் தங்கள் தகப்பனுக்கறிவித்தார்கள்.

௰௨ அப்பொழுது அவர்கள் தகப்பன் அவன் போனவழியேதென்றவர்களைக் கேட்டான். ஏனெனில் யூதாவிலிருந்து வந்த பராபரனுடைய மனுஷன் போனவழியேதென்று அவன் குமாரர் பார்த்திருந்தார்கள்.

௰௩ அவன் தன் குமாரருடனே, கழுதையின்மேலே சேணம் வைத்துத் தாருங்களென்றான். அவர்கள் கழுதையின்மேலே சேணம் வைத்துக் கொடுத்தபின் அவன் அதின்மேலேறி,

௰௪ பராபரனுடைய மனுஷன் பிறகாலே போய், ஒரு கர்வாலிமரத்தின்கீழ் உட்கார்ந்திருக்கிற அவனைக் கண்டுபிடித்து நீர் யூதாவிலிருந்து வந்த பராபரனுடைய மனுஷனோ? என்று அவனைக் கேட்டதற்கு, அவன் நான்தானென்றான்.

௰௫ அப்பொழுது அவனுடனே, என்னோடே வீட்டுக்கு வந்து அப்பம் போசியுமென்றான்.

௰௬ ஆனால் அவன் சொன்னது, நான் திரும்பிக்கொண்டு உம்மோடே கூடவாமாட்டேன். இந்தஸ்தலத்திலே உம்மோடே அப்பம் போசிப்பதுந் தண்ணீர் குடிப்பதுமில்லை.

௰௭ ஏனெனில் நீ அப்பம் போசியாமலும் அங்கே தண்ணீர் குடியாமலும் நீ போனவழியாய வரத் திரும்பாமலுமிருவென்று கர்த்தருடைய வார்த்தையாய் எனக்குச் சொல்லப்பட்டதென்றான்.

௰௮ அவனோவென்றால், நானும் உம்மைப்போலொத்த தீர்க்கதரிசியானவன். அவன் அப்பம் போசித்துத் தண்ணீர் குடிக்க நீ அவனைத் திருப்பி உன்வீட்டுக்கழைத்துக்கொண்டு வாவென்று ஒரு தூதன் கர்த்தருடைய வார்த்தையாய் என்னோடே சொன்னானென்று அவனுக்குப் பொய் சொன்னான்.

௰௯ அப்பொழுது அவன் இவனோடே திரும்பிப்போய், இவன்வீட்டிலே அப்பம் போசித்துத் தண்ணீர் குடித்தான்.

௨௰ அவர்கள் பந்தியிலுட்கார்ந்திருக்கிறபோதோவெனிற் சமயவிசேதத்தேனால் அவனைத் திருப்பிக் கொண்டுவந்த தீர்க்கதரிசிக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டானதினால்,

௨௧ அவன் யூதாவிலிருந்துவந்த பராபரனுடைய மனுஷனைப் பார்த்துக் கூப்பிட்டு, உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கற்பித்த கற்பனையை நீ கைக்கொள்ளாமற் கர்த்தருடைய வாக்குக்கெதிதைப் பண்ணி,

௨௨ நீ அப்பம் போசிக்கவுந் தண்ணீர் குடிக்கவும் வேண்டாமென்று அவருனக்குக் குறித்துச்சொன்ன ஸ்தலத்திற்குத் திரும்பி அப்பம் போசித்துத் தண்ணீர் குடித்தபடியினாலே, உன்னுடைய பிணம் உன் பிதாக்களின் கல்லறையிலே சேர்ப்போகிறதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௨௩ அவன் அப்பம் போசித்த பிற்பாடும் அவன் குடித்த பிற்பாடும் அந்தத் தீர்க்கதரிசியைத் திருப்பிக்கொண்டவன் அவனுக்குக் கழுதையின்மேலே சேணம் வைத்துக்கொடுத்தான்.

௨௪ ஆனால் அவன் போனபிற்பாடு வழியிலே ஒரு சிங்கம் அவனைக் கண்டுபிடித்து அவனைக் கொன்றுபோட்டது. பிறகு அவன் பிணம் வழியிலே கிடந்தது, கழுதை அதின் அண்டையிலே நின்றது. சிங்கமும் பிணத்தண்டையிலே நின்றது.

௨௫ இதோ, கடந்துவருகிற மனுஷர் வழியிலே கிடக்கிற பிணத்தையும் பிணத்தண்டையிலே நிற்கிற சிங்கத்தையுங் கண்டு கிழவனான தீர்க்கதரிசி குடியிருந்த பட்டணத்திலே வந்து சொன்னார்கள்.

௨௬ அவனை வழியிலிருந்து திருப்பினவனான தீர்க்கதரிசி அதைக்கேட்டபோது, இது, அவன் கர்த்தருடைய வாக்குக்கு இரண்டகம்பண்ணின பராபரனுடைய மனுஷன்தானென்று கர்த்தர் அவனுக்குச் சொன்ன வார்த்தையின்படியே கர்த்தர்

அவனை நொறுக்கத் திற்கொப்புக் கொடுத்தார். அது அவனை முறித்துக் கொன்று போட்டதென்று சொல்லி,

௨௭ தன் குமாரரிடத்திலே எனக்குக் கழுதையின்மேல் சேணம் வைத்துக் கொடுங்களென்றான். அதை அவர்கள் சேணம் வைத்துக் கொடுத்தார்கள்.

௨௮ அப்போது அவன் போய், வழியிலே கிடக்கிற அவன் பிணத்தையும் பிணத்தண்டையிலே கழுதையுஞ் சிங்கமும் நிற்கிறதையுங் கண்டான். அந்தச் சிங்கம் பிணத்தைத் தின்றதுமில்லை. கழுதையை முறித்துப் போட்டதுமில்லை.

௨௯ அப்போது கிழவனான அந்தத் தீர்க்கதரிசி, தேவனுடைய மனுஷனின் பிணத்தையெடுத்து அதைக் கழுதையின்மேல் வைத்து அதற்காகத் துக்கங் கொண்டாடவும் அதை அடக்கம் பண்ணவும் அந்தப் பட்டணத்திலே கொண்டுவந்து,

௩௰ அவன் பிணத்தைத் தன் கல்லறையிலே வைத்தான். அவனுக்காக, ஐயோ, என் சகோதரனேயென்று துக்கங் கொண்டாடினார்கள்.

௩௧ அவனையடக்கம் பண்ணின் பிறபாடேவெனில் அவன் தன் குமாரரோடே சொன்னது, நான் செத்துப்போனபோது, நீங்களென்னைப் பராபரனுடைய இஷ்டனுவின் அடக்கம் பண்ணப்பட்ட கல்லறையிலே யடக்கம் பண்ணி, அவன் எலும்புகளண்டையிலே என்னெலும்புகளை வையுங்கள்.

௩௨ ஏனென்றால் அவன் பெத்தேலிலிருக்கிற பலிபீடத்திற்கும், சாமாரியாவின் பட்டணங்களிலிருக்கிற மேடைகளுடைய சகல வீடுகளுக்கும், விரோதமாகக் கர்த்தருடைய வார்த்தையின்படியே கூப்பிட்டுச் சொன்னது நடக்கவே நடக்குமென்றான்.

௩௩ இந்த நடப்படிக்குப் பிற்பாடு எரோபெயாம் தன் பொல்லாத வழியை விட்டுத் திரும்பாமல் திரும்ப ஜனத்தில் சனமானவர்களை மேடைகளின் ஆசாரியராக்கினான். எவன் மேல் அவனுக்கு மனதிருந்ததோ அவனைக் கையைத் திரப்படுத்தினான், அப்படிக் கொத்தவர்கள் மேடைகளின் ஆசாரியரானார்கள்.

௩௪ எரோபெயாமின் வீட்டாரைப் பூமியின்மேல் வைக்காமல் அதம் பண்ணும்படியாக இந்தக் காரியம் அவர்களுக்குப் பாவமாய்ப் போயிற்று.

## ௰௪. அதிகாரம்.

தீர்க்கதரிசியாகிய அகியாவைக் கொண்டு பராபரன் எரோபெயாமுக்கு விரோதமாகச் சொல்லச் சொன்ன தீர்க்கதரிசனம்.

அக்காலத்திலே எரோபெயாமின் குமாரனாகிய அபியா வியாதியாய் விழுந்தான்.

௨ அப்போது எரோபெயாம் தன் பெண்சாதியோடே சொன்னதாவது, நீ யெழுந்து, நீ எரோபெயாமின் பெண்சாதியென்று ஆருமறியாதபடிக்கு வேஷம் மாறிச் சீலோவுக்குப் போயேன். இதோ, இந்த ஜனத்தின்மேல் நான் இராசாவாவேனென்று என்னோடே சொன்ன தீர்க்கதரிசியாகிய அகியா அங்கேயிருக்கிறான்.

௩ நீ உன் கையிலே பத்து அப்பங்களையுங் கச்சாயங்களையும் ஒரு கரகத்தேனையும் எடுத்து அவனண்டைக்குப் போ. பிள்ளைக்குச் சம்பவிக்கப் போகிறதேதென்று அவன் உனக்கறிவிப்பானென்றான்.

௪ அப்படியே எரோபெயாமின் பெண்சாதி செய்தாள். அவள் எழுந்து சீலோவுக்குப் போய், அகியாவின் வீட்டிற்குட் பிரவேசித்தாள். அகியாவோவெனிற் பார்க்கமாட்டாதிருந்தான். ஏனென்றால் அவனுடைய முதிர்வயதினால் அவன் கண்கள் கம்மலாய்ப் போயிற்று.

௫ ஆனாற் கர்த்தர் அகியாவுடனே, இதோ, எரோபெயாமின் பெண்சாதி வியாதியாயிருக்கிற தன் குமாரனுக்காக உன்னையொரு விசேஷங் கேட்க வருகிறாள். நீ யவளுக்கு இன்னின்னபிரகாரமாகச் சொல்லவேண்டும். அவள் உட்பிரவேசிக்கிறபோதோவெனில் அந்நிய ஸ்திரியாகக் காண்பிப்பாளென்றார்.

௬ ஆகையால் வாசற்படிக்குட் பிரவேசிக்க அவளுடைய கால்களின் சத்தத்தை அகியா கேட்டவுடனே, அவன் சொன்னதாவது, எரோபெயாமின் பெண்சாதியே! நீ உள்ளேவா. நீ அந்நிய ஸ்திரியாகக் காண்பிக்கிறதென்ன? கடினசெய்தியையுனக்கறிவிக்க நான் அனுப்பப்பட்டேன்.

௭ நீ போய், எரோபெயாமுக்குச் சொல்லவேண்டியது. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், ஜனத்திற்குள்ளிருந்த உன்னை நாம் உயர்த்தி, உன்னை இஸ்ரவேலென்ற நம்முடைய ஜனத்தின்மேல் அதிபதியாக வைத்தோம்.

௮ நாம் இராச்சியபாரத்தைத் தாவீதுவீட்டாரின் கையிலே பிடுங்கியுனக்குக்

கொடுத்தோம். ஆனால் நம்முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, நம்முடைய பார்வைக்குச் செம்மையானதை மாத்திரம் செய்யத் தன் முழு இருதயத்தோடும் நம்மைப் பின்பற்றின நம்முடைய தாசனாகிய தாவீதைப் போலே நீயிராமல்,

௯ உனக்கு முன்னிருந்த எல்லாரையும் பார்க்கப் பொல்லாப்புச் செய்தாய். எதனால் நமக்குக் கோபமுண்டாக்கி, நீ போய் உனக்கு வேறே தேவர்களையும் வார்க்கப்பட்ட விக்கிரகங்களையும் உண்டுபண்ணி, நம்மை உன் முதுகுக்குப் பின்னாக எறிந்து போட்டாய்.

௰ ஆகையால் இதோ, நாம் எரொபெயாமுடைய வீட்டின்மேல் பொல்லாப்பை வரப்பண்ணி எரொபெயாமுக்குச் சுவர்மேல் நீர்விடும் ஒரு நாய் முதலாயிராதபடிக்கு இஸ்ரவேலிலே அடைக்கப்பட்டவனையும் விடுவிடப்பட்டவனையுஞ் சங்காரம்பண்ணிக் குப்பைக்கழிச்சது போடப்படுகிறப்போலே எரொபெயாமின் பின்னடியாரானவர்கள் கட்டோடேயற்றுப்போகும்மட்டுங் கழித்துப்போடுவோமென்றார்.

௰௧ எரொபெயாமின் சந்ததியாரிற் பட்டணத்திலே சாகிறவனை நாய்கள் தின்னும். வெளியிலே சாகிறவனை ஆகாயத்தின் பறவைகள் தின்னும். ஏனென்றால் கர்த்தர் உரைத்தார்.

௰௨ இப்போதும் நீ எழுந்து உன் வீட்டுக்குப் போ. உன் கால்கள் பட்டணத்திற்குட் பிரவேசிக்கையிற் பிள்ளையாண்டான் செத்துப்போவான்.

௰௩ அவனுக்காக இஸ்ரவேலெல்லாந் துக்கங்கொண்டாடி அவனை அடக்கம்பண்ணுவார்கள். ஏனென்றால் எரொபெயாமின் வீட்டாரில் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக அவனிலே நற்குணமான காரியங் கண்டுபிடிக்கப்பட்டபடியினாலே எரொபெயாமின் சந்ததியில் அவனொருவனே கல்லறைக்குட்படுவான்.

௰௪ ஆனாற் கர்த்தர் தமக்கு இஸ்ரவேலின்மேல் ஒரு இராசாவை எழும்பப்பண்ணுவார். அவன் அந்நாளிலே தானே எரொபெயாமின் வீட்டாரைச் சங்கரிப்பான். இப்போதுதானும் என்ன நடக்குமோ?

௰௫ தண்ணீரிலே நாணல் அசைவாடுகிறதுபோலக் கர்த்தர் இஸ்ரவேலை முறிந்நிலைசெய்யப்பண்ணி, அவர்கள் பிதாக்களுக்குத் தாம் கொடுத்த இந்த நல்ல சீமையில் இஸ்ரவேலைப் பிடுங்கி, அவர்கள் தங்கள் தோப்புகளை வைத்துக் கர்த்தருக்குக் கோபமூட்டினபடியினாலேயவர்களை நதிக்கப்பாலே சிதறடிப்பார்,

௰௬ எரொபெயாம் செய்ததும் இஸ்ரவேலைச் செய்யப்பண்ணினதுமான பாவத்தினிமித்தம் இஸ்ரவேலை ஒப்புக்கொடுத்துவிடுவாரென்றான்.

௰௭ அப்போது எரொபெயாமின் பெண்சாதி எழுந்து புறப்பட்டுத் திர்சாவுக்கு வந்தாள். அவள் வாசற்படியிலே சேருகையிற் பிள்ளையாண்டான் செத்துப்போனான்.

௰௮ கர்த்தர் தீர்க்கதரிசியாகிய அகியாவென்ற தம்மூழியக்காரனைக்கொண்டு சொன்னவார்த்தையின்படியே யவர்கள் அவனை அடக்கம்பண்ணி, இஸ்ரவேலெல்லாம் அவனுக்காகத் துக்கங்கொண்டாடினார்கள்.

௰௯ எரொபெயாம் யுத்தம்பண்ணினதும் ஆண்டதுமான அவனுடைய மற்ற வர்த்தமானங்கள் இதோ, இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றது.

௨௰ எரொபெயாம் இராசரிகம்பண்ணின காலம் இருபத்திரண்டு வருஷம். அவன் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன் குமாரனாகிய நாதாப் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## யூதாவின் இராசாவாகிய ரெகொபெயாமின் நடபடிகள்.

௨௰௧ சாலொமோனின் குமாரனாகிய ரெகொபெயாம் யூதாவிலே இராசரிகம்பண்ணினான். ரெகொபெயாம் இராசாவாகிறபோது நாற்பத்தொரு வயதாயிருந்து, கர்த்தர் தம்முடைய நாமத்தை வைக்கும் இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாந் தெரிந்துகொண்ட பட்டணமாகிய எருசலேமிலே பதினேழு வருஷமாய் இராசரிகம்பண்ணினான். அம்மோன் சாதியாளான அவனுடைய தாயின் பேர் நாமாள்.

௨௰௨ யூதா கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, தாங்கள் செய்துவருகிற தங்களுடைய பாவங்களினாலே, தங்கள் பிதாக்கள் செய்ததையெல்லாம் பார்க்க அவருக்கு அதிக எரிச்சலைமூட்டி,

௨௰௩ உயர்ந்த சகல மேட்டின்மேலும் பச்சையான சகல மரத்தின்கீழும் அவர்களும் மேடைகளையுஞ் சிலைகளையுந் தோப்புகளையுந் தங்களுக்குண்டாக்கினார்கள்.

௨௰௪ தேசத்திலே இலச்சையான புணர்ச்சிக்காருமிருந்தார்கள். கர்த்தர் இ

ஸ்ரவேலபுத்திரருக்குமுன்பாகத் துரத்திவிட்டசாதிகளுடைய அருவருப்புகளின்படியெல்லாஞ்செய்தார்கள்.

௨௫ ரெகொபெயாம் இராசரியபாரம்பண்ணும் ஐந்தாம்வருஷத்திலேயென்னவெனில் எகிப்தின் இராசாவாகிய சீசாக் எருசலேமுக்கு விரோதமாய் எழும்பிவந்து,

௨௬ கர்த்தருடைய வீட்டின்பொக்கிஷங்களையும் இராசாவுடைய வீட்டின்பொக்கிஷங்களையுஞ் சகலத்தையும் எடுத்துக்கொண்டு, சாலொமோன்செய்வித்த பொன்பரிசைகளெல்லாவற்றையும் எடுத்துக்கொண்டுபோனான்.

௨௭ அவைகளுக்குப்பதிலாக இராசாவாகிய ரெகொபெயாம்வெண்கலப்பரிசைகளைச்செய்வித்து, அவைகளை இராசாவின் வாசற்படியைக்காக்கிற சேவகருடைய தலைவரின்கையிலொப்புவித்தான்.

௨௮ ஆகையால் இராசாகர்த்தருடைய வீட்டுக்குட்பிரவேசிக்கும்போது அரண்மனைச்சேவகர் அவைகளையெடுத்துவந்து, பிற்பாடு திரும்பத்தங்கள் அறையிலே வைப்பார்கள்.

௨௯ ரெகொபெயாமின்மற்றவர்த்தமானங்களும் அவன்செய்ததெல்லாம் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௩௦ ரெகொபெயாமுக்கும் எரொபெயாமுக்கும் அவர்களிருந்தநாட்களிலெல்லாம் யுத்தமாயிருந்தது.

௩௧ ரெகொபெயாம் தன்பிதாக்களோடே நித்திரையடைந்து தாவீதின்பட்டணத்தில் தன்பிதாக்களண்டையிலே யடக்கம்பண்ணப்பட்டான். அம்மோனிச்சாதியான அவன் தாயுக்கு நாமாளென்னும் பேரிருந்தது. அவன்குமாரனாகிய அபியாம் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௰௫. அதிகாரம்.

அபியாம் ஆசாவென்கிற யூதாவுடைய இராசாக்களின் நடபடிகள்.

நேபாத்தின்குமாரனாகிய எரொபெயாமென்கிற இராசாவின் பதினெட்டாம் வருஷத்திலே அபியாம் யூதாவின்மேல் இராசாவாகி,

௨ மூன்றுவருஷமாய எருசலேமில் இராசரியபாரம்பண்ணினான். அப்சலோமின்குமாரத்தியாகிய அவனுடையதாயின் பேர்மாகாள்.

௩ தன்தகப்பன் தனக்கு முன்னேசெய்த எல்லாப்பாவங்களிலும் இவன் நடந்தான். அவனிருதயம் அவன்தகப்பனாகிய தாவீதினிருதயத்தைப்போல அவன் பரனாகிய கர்த்தருக்குமுன்பாக உத்தமமாயிருந்ததில்லை.

௪ ஆனாலும் தாவீதினிமித்தம் அவனுடைய பராபரனாகியகர்த்தர் அவனுக்குப்பிற்பாடு அவன்குமாரனையெழும்பப்பண்ணுகிறதினாலும் எருசலேமை நிலைநிறுத்துகிறதினாலும் அவனுக்கு எருசலேமிலொரு விளக்கைக்கட்டளையிட்டிருந்தார்.

௫ என்னெனில் தாவீது ஏத்தியனாகிய உரியாவின்வர்த்தமானமேயொழிய கர்த்தர் தனக்குக்கற்பித்ததிலே தன் ஆயிசுநாளெல்லாம் ஒன்றையும் விட்டுவிலகாமல் அவர்பார்வைக்குச் செம்மையானதைச்செய்திருந்தான்.

௬ ரெகொபெயாமுக்கும் எரொபெயாமுக்கும் இருந்தபோர் அவனுயிரோடிருக்கிறநாளெல்லாம் நடந்தது.

௭ அபியாமின்மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததெல்லாம் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது. அபியாமுக்கும் எரொபெயாமுக்கும்போருண்டாயிருந்தது.

௮ அபியாம் தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைத் தாவீதின்பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்கள். அவன்குமாரனாகிய ஆசா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௯ இஸ்ரவேலின் இராசாவாகிய எரொபெயாமின் இருபதாம்வருஷத்திலே ஆசா யூதாவின்மேல் இராசாவாகி,

௰ நாற்பத்தொருவருஷமாக எருசலேமில் இராசரியபாரம்பண்ணினான். அப்சலோமின்குமாரத்தியாகிய அவனுடைய தாயின்பேர்மாகாள்.

௰௧ ஆசா தன்தகப்பனாகிய தாவீதைப்போலக் கர்த்தரின் பார்வைக்குச்செம்மையானதைச்செய்தான்.

௰௨ அவன் புணர்ச்சிக்காரரைத்தேசத்திலிருந்தகற்றித் தன்பிதாக்களுண்டுபண்ணின நரகலான விக்கிரகங்களையெல்லாமவிலக்கி,

௰௩ தோப்பிலே யருவருப்பானவிக்கிரகத்தையுண்டுபண்ணின தன்தாயாகிய மாகாளையும் இராசாத்தியாயிராதபடிக்கு விலக்கிப்போட்டான். அவனுடைய விக்கிரகத்தையும் ஆசா நிர்மூலமாக்கிக் கீத்றோன் ஆற்றண்டையிலே சுட்டெரித்துப்போட்டான்.

௰௨ எலியா அவர்களுக்குப் பிரதியுத்தாரமாக: நான் பராபரனுடைய மனுஷனானால், அக்கினி வானத்திலிருந்திறங்கி, உன்னையும் உன் ஐம்பது பேரையும் பட்சிக்கக்கடவதென்றான். உடனே, பராபரனுடைய அக்கினி வானத்திலிருந்திறங்கி அவனையும் அவன் ஐம்பது பேரையும் பட்சித்தது.

௰௩ திரும்ப மூன்றாஞ் சேர்வைக்காரனையும் அவனுடைய ஐம்பது சேவகரையும் அனுப்பினான். இந்த மூன்றாஞ் சேர்வைக்காரன் ஏறிவந்தபோது, எலியாவுக்கு முன்பாக முழங்காற்படியிட்டு, அவனை விண்ணப்பம் பண்ணி: அவனுடனே, பராபரனுடைய மனுஷனே! என்னுடைய பிராணனும் உமதடியாராகிய இந்த ஐம்பது பேரின் பிராணனும் உமது பார்வைக்கு அருமையாயிருக்கட்டுமே?

௰௪ இதோ, அக்கினி வானத்திலிருந்திறங்கி, முந்தின இரண்டு சேர்வைக்காரரையும் அவரவருடைய ஐம்பது பேரையும் பட்சித்தது. இப்போதும் என்னுடைய பிராணன் உமது பார்வைக்கு அருமையாயிருக்கட்டுமென்றான்.

௰௫ அப்போது கர்த்தருடைய தூதன் எலியாவுடனே, அவனோடே கூட இறங்கிப்போ. அவனுக்குப் பயப்படாதேயென்றான். அப்படியே அவனெழுந்து அவனோடே கூட இராசாவண்டைக்கிறங்கிப் போய்,

௰௬ அவனுடனே, வார்த்தையைக் கேட்க இஸ்ரவேலில் பராபரன் இல்லையென்கிறதுபோலே நீ எக்கிரோனின் தேவனாகிய பாகால் சேபூபைக் கேட்க ஆட்களை அனுப்பினபடியினாலே, நீ ஏறின கட்டிலிலிருந்திறங்காமல், சாவவே சாவாயென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௰௭ எலியா சொன்ன கர்த்தருடைய வார்த்தையின்படியே அவன் செத்துப்போனான். அவனுக்குக் குமாரனில்லாதபடியினாலே அவன் ஸ்தலத்திலே யோராம் யூதாவின் இராசாவாகிய யோசபாத்துடைய குமாரனான யோராமின் இரண்டாம் வருஷத்தில் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௰௮ அகசியா செய்த மற்ற வர்த்தமானங்கள் இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லோ எழுதியிருக்கின்றது.

## ௨. அதிகாரம்.

எலியா பரமண்டலத்திற் கெடுத்துக்கொள்ளப்பட்டது.

கர்த்தர் எலியாவைப் பெருங்காற்றிலே பரமண்டலத்திற் கெடுத்துக்கொள்ளப்போகிறபோதோவெனில், எலியா எலிசாவோடே கூடக் கில்காலிலிருந்து புறப்பட்டு,

௨ எலியா எலிசாவுடனே, இங்கேயிருந்துவிடு. அதேனென்றாற் கர்த்தரென்னைப் பெத்தேல் மட்டும் போகவனுப்பினாரென்றான். அதற்கு எலிசா, நான் உம்மைவிடுகிறதில்லையென்று கர்த்தரின் ஜீவனையும் உம்முடைய ஜீவனையுங்கொண்டு சொல்லுகிறேனென்றான். அப்படியே பெத்தேலுக்கிறங்கிப்போனார்கள்.

௩ அப்போது பெத்தேலிலிருக்கிற தீர்க்கதரிசிகளின் புத்திரர் எலிசாவண்டைக்குப் புறப்பட்டுவந்து, அவனுடனே, இன்றைக்குக் கர்த்தர் உன் தலைவனாயிருக்கிற உன் எசமானையுன்னைவிட்டெடுத்துக்கொள்வாரென்கிறதை அறிவாயோ? என்றார்கள். அதற்கவன், நானும் அறிவேன் சும்மாயிருங்களென்றான்.

௪ எலியா அவனுடனே, எலிசாவே! நீ இங்கேயிருந்துவிடு. ஏனென்றாற் கர்த்தர் என்னை எரிகோமட்டும் போகவனுப்பினாரென்றான். ஆனால் அவன், நானும்மைவிடுகிறதில்லையென்று கர்த்தருடைய ஜீவனையும் உம்முடைய ஜீவனையுங்கொண்டு சொல்லுகிறேனென்றான். அப்படியே எரிகோவுக்கு வந்தார்கள்.

௫ அப்போது எரிகோவிலிருக்கிற தீர்க்கதரிசிகளின் புத்திரர் எலிசாவண்டையிலே சேர்ந்து, இன்றைக்குக் கர்த்தர் உன் தலைவனாயிருக்கிற உன் எசமானையுன்னைவிட்டெடுத்துக்கொள்வாரென்கிறதை அறிவாயோ? என்று அவனைக் கேட்டார்கள். அதற்கவன், நானும் அறிவேன். சும்மாயிருங்களென்றான்.

௬ எலியா அவனுடனே, நீ யிங்கேயிருந்துவிடு. ஏனென்றாற் கர்த்தர் என்னை யோர்தான் நதிக்கனுப்பினாரென்றான். ஆனால் அவன் நானும்மைவிடுகிறதில்லையென்று கர்த்தருடைய ஜீவனையும் உம்முடைய ஜீவனையுங்கொண்டு சொல்லுகிறேனென்றான். அப்படியே இருவரும் போனார்கள்.

௭ தீர்க்கதரிசிகளின் புத்திரரில் ஐம்பதுபேர் போய், எதிரே தூரத்திலே நின

றார்கள். அந்த இருவருமோ யோர்தான் நதியோரத்தில் நின்றார்கள்.

௮ அப்போது எலியா தன் சால்வையை யெடுத்துச் சுருட்டித் தண்ணீரை யடித்தான். அப்போது அது இந்தண்டையும் அந்தண்டையும் பிரிந்ததினால் அவர்களிருவரும் தண்ணீர் நிறைந்தரையிலே அக்கரைக்குப் போனார்கள்.

௯ அவர்கள் அக்கரைப்பட்ட பிற்பாடு எலியா எலிசாவுடனே நானுன்னை விட்டெடுத்துக் கொள்ளப் படாததற்கு முன்னே நான் உனக்குச் செய்யவேண்டியதென்னவென்று கேளென்றான். அப்போது எலிசா, உம்முடைய ஆவியின் இரட்டிப்பான வரம் என்மேல் வரவேண்டுகிறேனென்றான்.

௰ அதற்கவன், அரிதான காரியத்தைக் கேட்டாய். உன்னைவிட்டெடுப்பட்டுப் போகிற என்னை நீ கண்டால் அப்படியே யுனக்காகும். இல்லாவிட்டால் ஆகாதென்றான்.

௰௧ அவர்கள் நடந்துவந்து பேசிக்கொண்டிருக்கிறபோது சம்பவித்ததென்னவென்றால், இதோ, அக்கினி இரதமும் அக்கினிக் குதிரைகளும் அவர்கள் நடுவாக வந்து இருவரையும் பிரியப்பண்ணிற்று. எலியா பெருங்காற்றிலே பரமண்டலத்துக்கேறிப் போனான்.

௰௨ அதை எலிசா கண்டு, என் தகப்பனே! என் தகப்பனே! இஸ்ரவேலுக்கு இரதங்களும் குதிரைக்காரருமாயிருந்தவனே! என்று கூப்பிட்டு, அவனை யப்புறங் காணாதே போய்த் தன் வஸ்திரங்களைப் பிடித்து அவைகளை யிரண்டு துண்டுகளாயக் கிழித்தான்.

எலிசா செய்த அற்புதங்களின் துவக்கம்

௰௩ பிற்பாடு அவன் எலியாவின் மேலிருந்து தாழவிழுந்த அவனுடைய சால்வையையெடுத்துத் திரும்பிக் கொண்டு, யோர்தான் நதியோரத்திலே நின்று,

௰௪ எலியாவின் மேலிருந்து தாழவிழுந்த அவனுடைய சால்வையைப் பிடித்துத் தண்ணீரையடித்து, எலியாவின் பராபரனாகிய கர்த்தர் எங்கே, என்று சொல்லித் தானுந் தண்ணீரையடித்தான். அப்போது அது இந்தண்டையும் அந்தண்டையும் பிரிந்துபோனதினால் எலிசா இக்கரைப்பட்டான்.

௰௫ எரிகோவில் எதிரே நின்றிருந்த தீர்க்கதரிசிகளின் புத்திரர் அவனைக்கண்டு கையில், எலியாவின் ஆவி எலிசாவின் மேலிறங்கியிருக்கின்றதென்று அவனுக்கு எதிர்கொண்டுபோய்த் தரைமட்டுங் குனிந்து, அவனை வணங்கி,

௰௬ அவனுடனே, இதோ, உம்முடைய அடியாரோடே ஐம்பது பலத்த மனுஷரிருக்கிறார்கள். அவர்கள் போய் உம்முடைய எசமானைத் தேடட்டுமே? ஒருவேளை கர்த்தருடைய ஆவி அவரையெடுத்துப் பர்வதங்களிலொன்றின்மேலாகிலும் பள்ளத்தாக்குகளிலொன்றிலாகிலுங் கொண்டுபோய் வைத்தாலென்றார்கள். அதற்கவன் அவர்களை அனுப்பாதேயுங்களென்றான்.

௰௭ அவர்கள் அவன் வெட்கப்படுமட்டும் அவனை யலட்டிக்கொண்டிருக்கிறபோது தேவையில்லை அனுப்புங்களென்றான். அப்படியே ஐம்பது பேரை யனுப்பினார்கள். இவர்கள் மூன்று நாளாய் அவனைத் தேடிக்காணாமற் போய்,

௰௮ எரிகோவிலே தரித்த அவனண்டைக்குத் திரும்பிவந்தபோது, அவன் இவர்களுடனே, போகாதேயுங்களென்று நானுங்களோடே சொல்லவில்லையோ? என்றான்.

௰௯ பிற்பாடு அந்தப் பட்டணத்தின் மனுஷர் எலிசாவுடனே, இதோ, எங்கள் ஆண்டவன் காண்கிறபடி இந்தப் பட்டணத்தின் குடியிருப்பு நல்லது. ஆனால் தண்ணீர் ஆகாததும் நிலம் பாழானதுமாயிருக்கின்றது.

௨௰ அப்போது அவன், ஒரு புதுத் தோண்டியையெனக்குக் கொண்டுவந்து அதில் உப்புப் போடுங்களென்றான். அதை யவனண்டைக்குக் கொண்டுவந்தபோது

௨௧ அவன் நீரூற்றண்டைக்குப் புறப்பட்டுப்போய், உப்பையதிலே போட்டு, இந்தத் தண்ணீரை யாரோக்கியமாக்கினேன். இனியதினாற் சாவும் நிலப்பாழும் வராதென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௨௨ எலிசா சொன்ன வார்த்தையின்படியே அந்தத் தண்ணீர் இந்நாள் வரைக்குமிருக்கிறபடி யாரோக்கியமாயிற்று.

௨௩ அவ்விடத்தைவிட்டு அவன் பெத்தேலுக்கேறிப் போனான். அவன் வழியிலே நடக்கக்கொள்ள பிள்ளைகள் பட்டணத்திலிருந்து புறப்பட்டுவந்து அவனை நிந்தித்து, மொட்டைத்தலையா! ஏறிவா. மொட்டைத்தலையா! ஏறிவா. என்று அவனைச் சொன்னார்கள்.

௨௪ அப்போது அவன் பின்திரும்பி அவர்களைப் பார்த்துக் கர்த்தரின் நாமத்திலேயவர்களைச் சபித்தான். அப்போது காட்டிலிருந்து இரண்டு கரடிகள் புறப்பட்டு வந்து அவர்களில் நாற்பத்திரண்டு பிள்ளைகளைப் பீறிப்போட்டது.

௨௫ அவன் அவ்விடத்தைவிட்டுக் கற்மேல்பர்வதத்திற்குப் போய், அங்கேயிருந்து, சமாரியாவுக்குத் திரும்பிக்கொண்டான்.

## ௩. அதிகாரம்.

இஸ்ரவேலின் இராசாவாகிய யோராமின் நடபடிகள்.

இயூதாவின் இராசாவாகிய யோசபாத்தின் பதினெட்டாம் வருஷத்தில் ஆகாபின் குமாரனாகிய யோராம் சமாரியாவிலே இஸ்ரவேலின்மேல் இராசாவாகிப் பன்னிரண்டு வருஷமாய் இராச்சியபாரம் பண்ணி,

௨ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். ஆனால் தன் தகப்பனைப்போலும் தன் தாயைப்போலுமல்ல. ஏனென்றால் தன் தகப்பன் பண்ணுவித்த பாகாலின் சிலையையகற்றிப் போட்டான்.

௩ என்றாலும் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமின் பாவங்களை அவன் விட்டுவிடாமல் அவைகளிலே சிக்கிக்கொண்டிருந்தான்.

௪ மோவாபின் இராசாவாகிய மேசா ஆடுமாடுகள் பெருத்தவனாயிருந்து இஸ்ரவேலின் இராசாவுக்கு நூறாயிரம் ஆட்டுக்குட்டிகளையும் நூறாயிரங்குறும்பாட்டுக்கடாய்களையுஞ் செலுத்திவந்தான்.

௫ ஆனால் ஆகாப் செத்துப்போனபின் மோவாபின் இராசா இஸ்ரவேலின் இராசாவைவிட்டு மருளவிழுந்தான்.

௬ அக்காலத்திலே யோராமென்ற இராசா சமாரியாவிலிருந்து புறப்பட்டு இஸ்ரவேலையெல்லாம் இலக்கம்பார்த்துப் போய்,

௭ மோவாபின் இராசா என்னைவிட்டு மருளவிழுந்தான். மோவாபியர்மேல் யுத்தம்பண்ண என்னோடே கூடவருவீரோவென்று யூதாவின் இராசாவாகிய யோசபாத்தைக் கேட்டனுப்பினதற்கு அவன், நான் ஏறிவருவேன். உம்மைப்போல நானிருப்பேன். உம்முடைய சனத்தைப்போல என் சனமும் உம்முடைய குதிரைகளைப்போல என் குதிரைகளுமிருக்குமென்று சொல்லி,

௮ எந்தவழியாயேறிப்போவோமென்று கேட்டான். அதற்கவன், ஏதோம் வனாந்திரவழியாயென்றான்.

௯ அப்படியே இஸ்ரவேலின் இராசாவும் யூதாவின் இராசாவும் ஏதோமின் இராசாவுமாய்ப் போனார்கள். ஆனால் அவர்கள் ஏழுநாளாய்ச் சுற்றித்திரிந்தபோது அவர்களைப் பின்செல்லுகிற இராணுவத்திற்கும் மிருகஜீவன்களுக்குந் தண்ணீரில்லாமற்போயிற்று.

௰ அப்போது இஸ்ரவேலின் இராசா ஐயோ, இந்த மூன்று இராசாக்களையுங் கர்த்தர் மோவாபியரின் கையிலொப்புக்கொடுக்கவழைத்தாரேயென்றான்.

௰௧ அப்போது யோசபாத், நாம் கர்த்தரைக்கேட்கத்தக்க கர்த்தருடைய தீர்க்கதரிசியொருவருமிங்கேயில்லையோ? என்று கேட்டதற்கு, எலியாவின் கைக்குத் தண்ணீர்வார்த்த சாப்பாத்தின் குமாரனாகிய எலிசா இங்கேயிருக்கிறானென்று இஸ்ரவேல் இராசாவின் ஊழியக்காரரிலொருவன் மறுமொழியாகச் சொன்னான்.

௰௨ அப்போது யோசபாத், அவனோடே கர்த்தருடைய வார்த்தையுண்டாயிருக்கிறதென்றான். அப்படியே இஸ்ரவேலின் இராசாவும் யோசபாத்தும் ஏதோமின் இராசாவுமாய் அவனண்டைக்கிறங்கிப்போனார்கள்.

௰௩ ஆனால் எலிசா இஸ்ரவேலின் இராசாவுடனே, எனக்கும் உமக்குமென்ன? நீர் உம்முடைய தகப்பனின் தீர்க்கதரிசிகளண்டைக்கும் உம்முடைய தாயாரின் தீர்க்கதரிசிகளண்டைக்கும் போமென்றான். இஸ்ரவேலின் இராசா அவனுடனே, அப்படியல்ல; ஏனென்றால் கர்த்தர் இந்த மூன்று இராசாக்களையும் மோவாபியரின் கையிலொப்புக்கொடுக்கிறதற்கு வரவழைத்தாரென்றான்.

௰௪ அப்போது எலிசா சொன்னதாவது, நான் யூதாவின் இராசாவாகிய யோசபாத்தின் முகத்தைப் பாராதிருந்தால் நான் உம்மை நோக்குவதுமில்லை உம்மைப் பார்ப்பதுமில்லையென்று நான் ஊழியஞ்செய்து நின்றிருக்கிற சேனைகளுடைய கர்த்தரின் ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.

௰௫ இப்போதும் ஒரு சுரமண்டலக்காரனை யென்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான். சுரமண்டலக்காரன்

வந்து வாசிக்கிறபோதோவென்றால் கர்த்தருடைய கரம் அவன்மேலிறங்கி,

௰௬ அவன் சொன்னதாவது, கர்த்தர் உரைக்கிறதேதென்றால் இந்தப் பள்ளத்தாக்கிலே அநேகம் வாய்க்கால்களை வெட்டுங்கள்.

௰௭ ஏனென்றால் நீங்கள் காற்றைக் காணாதிருந்தாலும் மழையைக் காணாதிருந்தாலும், நீங்களும் உங்கள் ஆடுமாடுகளும் உங்கள் மிருகசீவன்களும் குடிக்கும்படிக்கு இந்தப் பள்ளத்தாக்கு தண்ணீரால் நிரப்பப்படுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ இது கர்த்தரின் பார்வைக்கு அற்பக் காரியம். மோவாபியரையும் உங்கள் கையிலே ஒப்புக்கொடுப்பார்.

௰௯ நீங்கள் சகல கோட்டைகளையுந் தெரிந்துகொள்ளப்பட்ட சகல பட்டணங்களையும் இடித்து, நல்ல மரங்களையெல்லாம் வெட்டி, நீரூற்றுகளையெல்லாந் தூர்த்து, நல்ல நிலத்தையெல்லாங் கன் மேடுகளாக்கிக் கெடுப்பீர்களென்றான்.

௨௰ சமய்பலி செலுத்தும் காலமாகிய காலமேகாணிக்கைச் செலுத்தப்படும் நேரத்திலே இதோ, தண்ணீர் ஏதோமதேசவழியாய் வந்ததினால் தேசந் தண்ணீரால் நிரம்பிற்று.

௨௰௧ தங்களோடு யுத்தம்பண்ண இந்த இராசாக்கள் எதிர்வருகிறதை மோவாபியரெல்லாருங் கேட்டபோதோவென்றால் அவர்கள் ஆயுதந் தரிக்கத் தக்க வயதுக்கு வந்தவர்களையும் அதற்கு மேலதிகமானவர்களையுமெல்லாங் கூட்டியழைத்துக்கொண்டுவந்து எல்லையிலே நின்றார்கள்.

௨௰௨ மோவாபியர் அதிகாலமே சூரியன் அந்தத் தண்ணீரின்மேலே உதிக்கையிலே எழுந்திருந்து அந்தத் தண்ணீருக்கெதிராகப் பார்க்கிறபோது, அது அவர்களுக்கு இரத்தம்போலச் சிவப்பாயக் கண்டது.

௨௰௩ அப்போது அவர்கள், அது இரத்தமென்றும் அந்த இராசாக்கள் தங்களைத் தானே அழிக்கவேயழித்து ஒருவரையொருவர் வெட்டிக்கொண்டார்கள். இப்போதும் மோவாபியரே! கொள்ளைக்கு வாருங்களென்றுஞ் சொன்னார்கள்.

௨௰௪ அவர்கள் இஸ்ரவேலின் பாளயத்திற்கு வந்தபோதோவென்றால், இஸ்ரவேலர் எழும்பி, மோவாபியரைத் தங்களுக்கு முன்பாக ஓடிப்போகத்தக்கதாய் முறியடித்துத் தேசத்திற்குட்புகுந்து அங்கேயும் மோவாபியரை முறியடித்து

௨௰௫ பட்டணங்களையிடித்துச் சகல நல்ல நிலங்களையும் அவரவர் கற்போட்டு நிரப்பி, நீரூற்றுகளையெல்லாந் தூர்த்து, நல்ல மரங்களையெல்லாம் வெட்டினார்கள், கிறேசேத்திலே மாத்திரம் அதினுடைய கற்கள் இன்னம் இடிபடாதிருக்கிறபோது கவண்டிக்காரர் அதைச் சுற்றிக்கொண்டு அதையுஞ் சேதம்பண்ணினார்கள்.

௨௰௬ யுத்தம் தனக்கு மிஞ்சிப்போயிற்றென்று மோவாபியரின் இராசா கண்டபோது, அவன் ஏதோமின் இராசாவின்மேல் வலுமையாய் விழுகிறதற்குப் பட்டயமுருவுகிற எழுநூறுபேரைக் கூட்டிக்கொண்டான். ஆனால் அவர்களாலே கூடாமற்போயிற்று.

௨௰௭ அப்போது அவன் தன்ஸ்தலத்திலே இராசாவாகப் போகிற தன் தலையான குமாரனைப் பிடித்து, அலங்கத்தின்மேல் அவனைச் சர்வாங்கதகனபலியாகச் செலுத்தினான். அப்போது இஸ்ரவேலர்மேலே கடுங்கோபமுண்டானதினாலே அவர்கள் அவனை விட்டுப் புறப்பட்டுத் தங்கள் தேசத்திற்குத் திரும்பினார்கள்.

## ௪. அதிகாரம்.

எலிசா செய்த சில அற்புதங்கள்.

தீர்க்கதரிசிகளுடைய புத்திரரின் பெண்சாதிகளில் ஒருத்தி எலிசாவைப் பார்த்துக் கூப்பிட்டு, உமது அடியானாகிய என் புருஷன் மரணமடைந்தான் உமதடியானாகிய அவர் கர்த்தருக்குப் பயந்து நடந்தாரென்பதை யறிவீர். இப்போது கடன் கொடுத்தவன் என் இரண்டு குமாரரைத் தனக்கு அடிமைகளாக்கிக்கொள்ள வந்தானென்றாள்.

௨ எலிசா அவளுடனே, நான் உனக்கென்ன செய்யவேண்டும்? வீட்டிலுனக்கென்னவிருக்கிறதென்று எனக்கறிவியென்றான். அதற்கவள் ஒரு குடம் எண்ணெயையல்லாமல் உமதடியாளுக்கு வீட்டிலெங்கும் வேறொன்றுமில்லையென்றாள்.

௩ அப்போது அவன், நீ போய்ப் புறத்தியிலே உன்னுடைய எல்லா அயல்வீட்டுக்காரரிடத்திலுங் கொஞ்சமாயிராமல் வெறும் பாத்திரங்களைக் கேட்டு வாங்கி,

௪ உட்பிரவேசித்து உனக்கும் உன் பிள்ளைகளுக்கும் பின்னாகக் கதவைப் பூட்டி அந்தப் பாத்திரங்களெல்லாம் வார்த்து நிரப்பினதைப் பாலே வையென்றான்.

௫ அவள் அவனைவிட்டுப் போய்த் தனக்குந் தன் பிள்ளைகளுக்கும் பின்னாகக் கத

வைப் பூட்டினபின், இவர்கள் அவளண்டையிலே பாத்திரங்களைச் சேர்க்க அவள் நிரப்பினாள்.

௬ சம்பவித்ததென்னவென்றால் அந்தப் பாத்திரங்கள் நிறைந்தபிறபாடு, அவள் தன் குமாரனோடே, இன்னமொரு பாத்திரத்தை யென்னண்டைக் கொண்டுவாவென்றாள் அவன் அவளுடனே, இனிப் பாத்திரமில்லையென்றான். அப்போது எண்ணெய் நின்றுபோயிற்று.

௭ அவள் வந்து பராபரனுடைய மனுஷனுக்கறிவித்தாள் அப்போது அவன் நீ போய் அந்த எண்ணெயை விற்று உன் கடனைத் தீர்த்து மீந்ததைக்கொண்டு நீயும் உன் குமாரரும் ஜீவனம்பண்ணுங்களென்றான்.

௮ ஒருநாளிலே சம்பவித்ததென்னவென்றால் எலிசா சூனேமுக்குப் போயிருக்கும்போது அங்கேயிருக்கிற மேன்மையான ஒரு ஸ்திரீ அவனைப் போசனம்பண்ண வருந்திக் கொண்டாள். அப்படியே அவன் பயணப்பட்டுவருகிறபோதெல்லாம் அப்பம் புசிக்க அங்கே வந்து தங்குவான்.

௯ அவள் தன் புருஷனுடனே சொன்னதாவது, இதோ, நம்மிடத்தில் எப்போதும் வந்துபோகிற பராபரனுடைய மனுஷனாகிய இவர் பரிசுத்தவானென்கிறதை யறிவேன்.

௰ நாங்கள் சுவர்மறைவான ஒரு சின்ன அறைவீட்டைக்கட்டி, அதில் அவருக்கு ஒரு கட்டிலையும் மேசையையும் நாற்காலியையும் விளக்குத்தண்டையும் வைப்போமே? அப்போது அவர் நம்மிடத்திலே வருகையில் அங்கே தங்கலாமென்றாள்.

௰௧ ஒருநாள் அவன் அங்கே வந்து அந்த அறைவீட்டிலே தங்கி யங்கே படுத்துக் கொண்டிருந்த சமயத்திலே,

௰௨ அவன் தன் வேலைக்காரனாகிய கேயாசியுடனே, அந்தச் சூனேமியாளை யழையென்றான். அவளை யழைத்தான். அவள் இவனுக்கு முன்பாக நிற்கிறபோது,

௰௩ அவன் இவனுடனே, இதோ, இப்படிக்கொத்த சகல சலாக்கிரதையோடும் எங்களைப் பராமரித்தாயே, உனக்கு நான் செய்யவேண்டியதென்ன? இராசாவோடாகிலும் படைத்தலைவனோடாகிலும் உனக்காக நான் சொல்லத்தக்க காரியமுண்டோ? என்று அவளைக் கேளென்றான். அதற்கு அவள், என் சனத்தின் நடுவே நான் சுகமாய்க் குடியிருக்கிறேனென்றாள்.

௰௪ இப்போது அவளுக்குச் செய்யவேண்டியதென்னவென்று அவன் கேட்டதற்குக் கேயாசியென்பவன், அவளுக்குக் குமாரனில்லையே; அவள் புருஷனும் பெரியவயதுள்ளவனென்றான்.

௰௫ அப்போது அவன் அவளை யழையென்றான். அவளை யழைத்தபோது அவள் வந்து கதவடியில் நின்றாள்.

௰௬ அப்போது அவன் ஒரு பிராண உற்பத்தியாகுங் காலத்துக்கொத்த வருஷத்திட்டத்திலே ஒரு குமாரனை யணைத்துக் கொண்டிருப்பாயென்றான் அதற்கவள், ஏது? பராபரனுடைய மனுஷனாகிய என் ஆண்டவனே! உமதடியாளுக்கு அப்படிச் சொல்லவேண்டாமென்றாள். ௧. மோசே. ௰௮, ௰.

௰௭ அந்த ஸ்திரீ கெர்ப்பந்தரித்து எலிசா தனக்குச் சொன்னபடி ஒரு பிராண உற்பத்தியாகுங் காலத்திட்டத்திலே ஒரு குமாரனைப் பெற்றாள்.

௰௮ அந்தப் பிள்ளை வளர்ந்த போதோ வென்றால் அவன் அறுப்பறுக்கிறவர்களிடத்திலிருக்கிற தன் தகப்பனண்டைக்குப் புறப்பட்டுப் போயிருக்கையில்,

௰௯ தன் தகப்பனுடனே என் தலை நோகின்றது என் தலை நோகின்றதென்றான். அப்போது அவன் வேலைக்காரனுடனே அவனை அவன் தாயண்டைக்கு எடுத்துக் கொண்டுபோவென்றான்.

௨௰ அவனை யெடுத்து அவன் தாயண்டைக்குக் கொண்டுபோனபோது, அவன் மத்தியானமட்டும் அவள் மடியிலிருக்கக் காத்துச் செத்துப்போனான்.

௨௰௧ அப்போது அவள் ஏறிப் போய், அவனைப் பராபரனுடைய மனுஷனின் கட்டிலின்மேல் வைத்து, அவனை வைத்துவிட்ட அறையின் கதவைப் பூட்டிப் புறப்பட்டு,

௨௰௨ தன் புருஷனண்டைக்காளனுப்பி நான் சீக்கிரமாய்ப் பராபரனுடைய மனுஷனிருக்குமிடமட்டும் போய் வரும்படிக்கு வேலைக்காரரிலே ஒருவனையும் ஒரு கழுதையையும் எனக்கனுப்புமென்று சொல்லச்சொன்னாள்.

௨௰௩ அப்போது அவன், இது அமாவாசையுமல்ல, ஓய்வுநாளுமல்லவே. நீ இன்றைக்கு அவனண்டைக்குப் போவானேனென்று கேட்கச்சொன்னான். அவளோ வென்றால் எல்லாம் நன்றாயிருக்கின்றதென்று சொல்லியனுப்பி,

௨௰௪ கழுதையின்மேலே சேணம்வைத்து ஏறித் தன் வேலைக்காரனுடனே, இதை நடத்திக்கொண்டுநட. நான் உனக்குச் சொல்லுமட்டும் நான் போகிற வழியிலே என்னை நிறுத்தப்பண்ணாதேயென்றுசொல்லி,

௨௫ போய்க் கர்மேல் பர்வதத்திலிருக்கிற பராபருடைய மனுஷனண்டைக்கு வந்தாள். பராபருடைய மனுஷன் அவளை யெதிராக வரக் காண்கையில் தன் வேலைக்காரனாகிய கேயாசியுடனே, அதோ, சூனேமியாள் வருகிறாள்.

௨௬ இப்போதும் நீ யவளுக் கெதிர்கொண்டோடி, நீ சுகமாயிருக்கிறாயோ? உன் புருஷன் சுகமாயிருக்கிறானோ? அந்தப் பிள்ளை சுகமாயிருக்கின்றதோ? என்று அவளைக் கேளென்றான். அவள் சுகமாயிருக்கிறோமென்று சொல்லி,

௨௭ பர்வதத்திலிருக்கிற பராபருடைய மனுஷனண்டையிலே வந்து அவன் கால்களைப் பிடித்தாள். அப்போது கேயாசி அவளை விலக்கிவிடச் சேர்ந்தான். ஆனாற் பராபருடைய மனுஷன் அவளிருக்கட்டும். ஏனென்றால் அவள் ஆத்துமந் துக்கத்தோடிருக்கின்றது. கர்த்தரோ வெனில் அதை யெனக்கறிவிக்காமல் மறைத்தாரென்றான்.

௨௮ அப்போது அவள் நானென்னாண்டவனிடத்திலொரு குமாரனை மனுக்கேட்டேனோ? எனக்கு அபத்தஞ் சொல்லாதேயுமென்று நான் சொன்னதில்லையோ? என்றாள்.

௨௯ அப்போது அவன் கேயாசிக்கு நீ யுன்னிடையைக் கட்டிக்கொண்டு என் தடியை யுன் கையிற் பிடித்துப் போய் ஒருவனைச் சந்தித்தாலும் அவனை மினவாமலும் உன்னை யொருவன் மினவினாலும் அவனுக்கு மறுமொழி சொல்லாமலுமிருந்து என் தடியை யந்தப் பிள்ளை முகத்தின் மேல் வையென்றான்.

௩௰ பிள்ளையின் தாயோவென்றால் நான் உம்மை விடுகிறதில்லையென்று கர்த்தரின் சீவனையும் உம்முடைய சீவனையுங் கொண்டு சொல்லுகிறேனென்றாள். அப்போது அவன் எழுந்திருந்து அவள் பிறகே போனான்.

௩௧ கேயாசி அவர்களுக்கு முன்னுக்குப் போய் அந்தத் தடியைப் பிள்ளையின் முகத்தின் மேல் வைத்தும் ஒருசத்தமும் ஒரு உணர்த்தியுமில்லாமற் போயிற்று. ஆகையால் அவன் திரும்பி அவனுக் கெதிர்கொண்டுவந்து பிள்ளை விழிக்கவில்லையென்று அவனுக்கறிவித்தான்.

௩௨ எலிசா வீட்டிற்குள் வந்தபோது, இதோ, அந்தப் பிள்ளை யவன் கட்டிலின் மேலே செத்ததாய்த்தான் கிடந்தது.

௩௩ அவனுட்பிரவேசித்தபின் அவன் தங்களிருவருக்கும் பின்னுக்கதவைப் பூட்டிக் கர்த்தரை நோக்கி வேண்டுதல் செய்து,

௩௪ பிற்பாடு அவனேறித் தன் வாயைப் பிள்ளையின் வாயின் மேலுந் தன் கண்களை அவன் கண்களின் மேலுந் தன்னுள்ளங்கைகளை அவனுள்ளங்கைகளின் மேலும்பட அவன் மேற் குப்புறப்படுத்துக் கொண்டான். அப்போது பிள்ளையின் மாம்சம் அனலாயிற்று.

௩௫ அவனெழுந்திருந்து வீட்டில் இந்தண்டையும் அந்தண்டையும் உலாவித் திரும்ப ஏறியவன் மேலே குப்புறப் படுத்தான். அப்போது அந்தப் பிள்ளை யேழுதரந் தும்மித் தன் கண்களைத் திறந்தான்.

௩௬ அப்போது அவன் கேயாசியைக் கூப்பிட்டு, இந்தச் சூனேமியாளை யழையென்றான். அவளை யழைத்தான். அவள் அவனண்டைக்குட் பிரவேசித்த போது, அவன், உன் குமாரனை யெடுத்துக் கொண்டு போவென்றான்.

௩௭ அப்போது அவள் வந்து அவன் பாதத்திலே விழுந்து தரைமட்டும் பணிந்து தன் குமாரனை யெடுத்துப் புறப்பட்டுப் போனாள்.

௩௮ எலிசா கில்காலுக்குத் திரும்பிக் கொண்டுபோய் இருக்கையில் தேசத்திலே பஞ்சமாயிருந்தது. தீர்க்கதரிசிகளின் புத்திரரோவெனில் அவனுக்கு முன்பாக உட்கார்ந்திருந்தார்கள். அவன் தன் வேலைக்காரனுக்கு நீ பெரிய பானையையடுப்பிலே வைத்துத் தீர்க்கதரிசிகளின் புத்திரருக்குக் கூழ்க் காய்ச்சு என்றான்.

௩௯ ஒருவன் கீரைகளைப் பறிக்க வெளியிலே போய் ஒருகாட்டுக் கொடியைக் கண்டு அதிலே தன் சீலை நிறையப் பேய்க் கொம்மட்டிகளை யறுத்து வந்து அவைகளை யரிந்து கூழ்ப்பானையிலே போட்டான். ஏனெனில் அவைகளை யறியாதிருந்தார்கள்.

௪௰ சாப்பிட அதைச் சனங்களுக்கு வார்த்தார்கள். அவர்கள் அந்தக் கூழிலெடுத்துச் சாப்பிடுகிறபோதோ வெனில் அதைச் சாப்பிடக் கூடாமற் பராபருடைய மனுஷனே! சாவு பானையிலிருக்கின்றதென்று கூப்பிட்டார்கள்.

௪௧ அப்போது அவன் மாவைக் கொண்டுவாருங்களென்று அதைப் பானையிலே போட்டுச் சாப்பிடச் சனத்திற்கு வாரென்றான். அப்போது ஆகாத காரியம் பானையிலிருந்ததில்லை.

௪௨ பிற்பாடு பாலசலீசாவிலிருந்து ஒரு மனுஷன் பராபருடைய மனுஷனுக்கு முதற்பலனான வாற்கோதுமையின் இருபதப்பங்களையுந் தாட்கதிர்களையும்

கொண்டுவந்தான. அபபோது அவன சாபபிடச்சனததிற்குக கொடுவெனறான.

௪௩ அதறகு அவனுடைய பணிவிடைககார்ன, இதை நான் நூறுபேருககுவைபபதெபபடி? எனறான. அவனோவெனிற் சாபபிட அதைச சனததிற்குக கொடு. ஏனெனறாற் சாபபிடடபிறபாடு இனனமமீதியுணடாயிருககுமெனறு கர்ததர்சொலலுகிறாரெனறான.

௪௪ அபபோது இவன அவர்களுககு முனபாகவைததான. கர்ததருடைய வார்ததையினபடியே யவர்களசாபபிடடு மீர்ததுவைததார்கள.

## ௫. அதிகாரம்.

நாகமான குஷடரோகமறச சுததமானதும அது கேயாசிககு ஆககினையாக வநததும.

சூரிய இர்ாசாவினபடைத தலைவனாகிய நாகமான் தன் ஆணடவனுககு முனபாகபபெரியமனுஷனும எணணமுளளவனுமாயிருநதான. ஏனெனில அவனைககொணடு கர்ததர் சூரியாவுககு இர்ட்சிபபைககடடளையிடடார். பலததபர்ாககிர்மசாலியாகிய அவனோவெனறாற் குஷடரோகியாயிருநதான.

௨ ஆனாற் சூரியாவிலிருநது தணடுகள புறபபடடு இஸர்வேல தேசததிலிருநது ஒரு சினனபபெணபிளளையை சசிறைப்பிடிததுககொணடு வநதிருநதார்கள. இவள நாகமானின பெணசாதிககுப பணிவிடைசெயதாள.

௩ இவள தன் நாசசியாருடனே, என ஆணடவன சமாரியாவிலிருககிற தீர்ககதரிசிககுமுனபாக விருநதாரானால தாவிளை. அபபோது அவரை அவர்குஷடரோகததிற்கு நீஙகலாககிவிடுவாரொனறாள.

௪ அபபோது அவனபோய, இஸர்வேலதேசததாளாகிய பெணபிளளை, இனனின பிர்கார்மாயப பேசினாளெனறு தன் ஆணடவனுககறிவிததான.

௫ அபபோது சூரியாவின இர்ாசா, நீ போய் வா. இஸர்வேலின இர்ாசாவுககு நிருபததையனுபபுவெனெனறான. அபபடியவன தனகையிலே பததுததாலநதுவெளளியையும ஆறுயிர்ததுசசககல நிறைபொனனையும பததுமாறறுவஸதிரஙகளையும வைததுககொணடுபோய,

௬ இஸர்வேலின இர்ாசாவணடைககு அநத நிருபததைக கொணடு வநதான. அதிலே, இநத நிருபம உமமணடைககு வருமபோது, இதோ, அததோடேயெனனூழியககார்னாகிய நாகமானை நீர் அவனை அவனகுஷடரோகததிற்கு நீஙகலாககிவிட உமமணடைக கனுபபினேனெனறெழுதியிருநதது.

௭ இஸர்வேலின இர்ாசா அநத நிருபததை வாசிததபோதோவெனில, அவன தன் வஸதிர்ஙகளைக கிழிததுககொணடு, ஒருமனுஷனையவன குஷடரோகததிற்கு நீஙகலாககிவிட அவனெனனணடைககு நிருபம அனுபபுகிறதறகு நான் கொலலவும உயிர்பபிககவுநதககதேவனோ? ஆகையால அவன எனககுவிரோதமாகசசமயந தேடுகிறானெனகிறதை யுணர்நது பாருஙகளெனறான.

௮ இஸர்வேலின இர்ாசா தன் வஸதிர்ஙகளைக கிழிததுககொணட செயதியைப பர்ாபர்னுடையமனுஷனாகிய எலிசாகேடடபோதோவெனில, அவன இர்ாசாவுககு, நீர் உமமுடைய வஸதிர்ஙகளைககிழிததுககொளளுவானேன? அவன எனனணடைககுவநது, இஸர்வேலிலே தீர்ககதரிசியுணடெனகிறதையறிநதுகொளளடடுமேயெனறு சொலலியனுபபினான.

௯ அபபடியே நாகமான் தனகுதிரைகளோடுந தன் இர்தத்தோடுமவநது, எலிசாவினவாசற்படியிலே நினறான.

௰ அபபோது எலிசா அவனணடைககு ஆள் அனுபபி, நீர்போய, யோர்தானில ஏழுதர்மஸநானமபணணும. அபபோது உமமுடையமாம்சம உமககுமாறி, நீர் சுததமாவீரெனறு சொலலசசொனனான.

௰௧ அபபோது நாகமான கடுஙகோபமாகிபபுறபபடடுபபோயச சொனனதாவது, இதோ, அவன வெளியேவர்வே வநதுநினறு, தனபர்ாபர்னாகிய கர்ததருடைய நாமததைத் தொழுதுகொணடு, தனகையாலே யநத இடததிலேதடவி, இவவிதமாயக குஷடரோகியை நீஙகலாககிவிடுவாரெனறு எனககுள் நினைததேன.

௰௨ தான் ஸநானமபணணிசசுததமாகிறதறகுத் தமஸகுவின நதிகளாகிய ஆப்னாவும பற்பாருமஇஸர்வேலின தணணீர்களை யெலலாம பார்கக நலல தலலவோ? எனறுசொலலி, உககிர்ததோடே திருமபிககொணடு போனான.

௰௩ ஆனால அவனவேலைககார்ர் சேர்நது அவனோடேபேசி, எஙகளதகபபனே! அநதத்தீர்ககதரிசி ஒரு பெரியகாரியததையுமககுசசொலலியிருநதால அதைநீர்செயயவீர்லலவோ? ஸநானமபணணும. அபபோதுசுததமாவீரெனறு அவர் உம

மோடே சொல்ல எத்தனை யதிகமென்றார்கள்.

௧௪ அப்போது அவன் இறங்கிப் பராபரனுடைய மனுஷன் வார்த்தையின்படியே யோர்தானில் ஏழுதரம் முழுகினபோது அவன் மாம்சம் ஒரு சின்னப் பிள்ளையின் மாம்சத்தைப்போல மாறி, அவன் சுத்தமானான்.

௧௫ அப்போது அவன் தன் கூட்டத்தோடெல்லாம் பராபரனுடைய மனுஷனண்டைக்குத் திரும்பிவந்து, அவனுக்கு முன்பாக நின்று, இதோ, இஸ்ரவேலிலிருக்கிற பராபரனைத் தவிர பூமியெங்கும் வேறே தேவனில்லையென்கிறதை யறிந்தேன். இப்போதும் உமதடியான் கையில் ஒரு காணிக்கை வாங்குமென்றான்.

௧௬ அவரோவெனில், நான் வாங்குகிறதில்லையென்று நான் ஊழியஞ்செய்கிற கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றான். வாங்க அவனை வருந்தினும் தட்டுதல்பண்ணிப்போட்டான்.

௧௭ அப்போது நாகமான் சொன்னதாவது, என்றாலும் இரண்டு கோவேறு கழுதைகள் சுமக்கத்தக்க மண்பொதி, உமதடியானுக்குக் கட்டளையிடப்படட்டுமேன்? ஏனென்றால் உமதடியான் இனிக் கர்த்தருக்கேயல்லாமல் அந்நியதேவர்களுக்குச் சர்வாங்கத் தகனத்தையும் பலியையுஞ் செலுத்துவதில்லை.

௧௮ ஒருகாரியத்தையே கர்த்தர் உமதடியானுக்கு மன்னிப்பாராக. என்னாண்டவன் பணிந்துகொள்ள ரிம்மோன் வீட்டிற்குட்பிரவேசிக்கிறபோது, நான் அவருக்குக் கைலாகு கொடுத்து, ரிம்மோன் வீட்டிலே பணியவேண்டும். இப்படி ரிம்மோன் வீட்டில் நான் பணியவேண்டிய இந்தக்காரியத்தைக் கர்த்தர் உமதடியானுக்கு மன்னிப்பாராகவென்றான்.

௧௯ அவன் இவனுடனே, சமாதானத்தோடே போமென்றான். இவன் அவனைவிட்டுக் கொஞ்சத்தூரம் போனபோதோவெனில்,

௨௰ பராபரனுடைய மனுஷனாகிய எலிசாவின் வேலைக்காரன் கேயாசியென்றவன், இதோ, அந்தச் சீரியனாகிய நாகமான் கொண்டுவந்ததை என்னாண்டவன் அவன் கையிலே வாங்காதிருந்தார். நான் அவன் பிறகாலே யோடி அவன் கையிலே கொஞ்சம் வாங்குவேனென்பதற்குக் கர்த்தரின் சீவனாணையென்று சொல்லி,

௨௧ அவன் நாகமானைப் பின்தொடர்ந்தான். அவன் தன் பிறகாலே யோடிவருகிறதை நாகமான் கண்டபோது, அவனுக்கெதிர்கொண்டுபோக இரதத்திலிருந்து குதித்துச் சுகசெய்தியோ? என்று கேட்டான்.

௨௨ அதற்கவன், சுகசெய்தியாயிருக்கிறது. இதோ, தீர்க்கதரிசிகளின் புத்திரரில் இரண்டு பிள்ளையாண்டான்மார் இப்போதுதான் எப்பிராயீம் மலைத்தேசத்திலிருந்து என்னண்டைக்கு வந்தார்கள். அவர்களுக்கு ஒரு தாலந்து வெள்ளியையும் இரண்டு மாற்று வஸ்திரங்களையுங் கொடுமென்று சொல்ல என் எசமான் என்னையனுப்பினானென்றான்.

௨௩ அப்போது நாகமான், தயவுபண்ணி இரண்டு தாலந்தை வாங்கென்று சொல்லி அவனை வருந்தி, இரண்டு தாலந்து வெள்ளியை இரண்டு பைகளில் இரண்டு மாற்று வஸ்திரங்களோடே கட்டி அவனுக்கு முன்பாகச் சுமந்துபோகத் தன் வேலைக்காரரான இரண்டுபேர்கள்மேலே வைத்தான்.

௨௪ அவன் மேட்டண்டைக்கு வந்தபோதோவெனில் அவன் அதை அவர்கள் கையிலே வாங்கி ஒரு வீட்டிலே வைத்து அந்த மனுஷரை யனுப்பிவிட்டான். அவர்கள் போனபின்,

௨௫ இவன் உட்பிரவேசித்துத் தன் எசமானுக்கு முன்பாக நின்றான். கேயாசியே! எங்கேயிருந்து வந்தாய்? என்று எலிசா அவனைக் கேட்டதற்கு இவன், உமதடியான் இங்கும் அங்கும் போனதில்லையென்றான்.

௨௬ அப்போது அவன் இவனோடே சொன்னதாவது, உனக்கெதிர்கொண்டுவர அந்த மனுஷன் தன் இரதத்திலிருந்து இறங்கித் திரும்புகிறபோது என்னிருதயங்கூட நடக்கவில்லையோ? அந்த வெள்ளியை வாங்குகிறதற்கும் வஸ்திரங்களையும் ஒலிவத்தோப்புகளையும் திராட்சத்தோட்டங்களையும் ஆடு மாடுகளையும் வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் வாங்குகிறதற்கும் இது காலமாயிருந்ததோ?

௨௭ ஆகையால் நாகமானின் குஷ்டரோகம் உன்னையும் உன் வித்தாரையும் என்றைக்கும் பிடித்திருக்குமென்றான். அப்படியே இவன் உறைந்த மழை நிறமான குஷ்டரோகியாகி அவன் முகத்தைவிட்டுப் புறப்பட்டான்.

௰௮ இவர்கள் அவர்களண்டைக்கு இறங்கி வந்தபோது, எலிசா கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணி, அந்தச் சாதிக்குக் கண் மயக்கத்தை யுண்டாக்குமென்றான். எலிசாவுடைய வார்த்தையின்படியே யவர்களுக்குக் கண் மயக்கம் பிடிக்கப்பண்ணினார்.

௰௯ அப்போது எலிசா அவர்களுடனே, இது அந்த வழியல்ல. இது அந்தப் பட்டணமுமல்ல என் பிறகே வாருங்கள். நீங்கள் தேடுகிற மனுஷனண்டைக்கு நான் உங்களை வழிநடத்துவேனென்று சொல்லி அவர்களைச் சமாரியாவுக்கழைத்துக்கொண்டுபோனான்.

௨௰ அவர்கள் சமாரியாவுக்கு வந்தபோதோவெனில், எலிசாவென்றவன், கர்த்தாவே! இவர்கள் பார்க்கும்படிக்கு இவர்கள் கண்களைத் திறவுமென்றான். பார்க்கும்படிக்குக் கர்த்தர் அவர்கள் கண்களைத் திறக்கும்போது இதோ, சமாரியாவின் நடுவேயிருந்தார்கள்.

௨௧ இஸ்ரவேலின் இராசா அவர்களைக் கண்டபோது, எலிசாவை, என் தகப்பனே! நான் வெட்டவே வெட்டலாமோ? என்றுகேட்டான்.

௨௨ அதற்கவன், நீர் வெட்டாதேயும். நீர் உம்முடைய பட்டயத்தாலும் உம்முடைய வில்லினாலுஞ் சிறையாக்கிப்பிடித்தவர்களை வெட்டுகிறீரோ? இவர்கள் சாப்பிட்டுக் குடித்துத் தங்களாண்டவனண்டைக்குப்போகும்படிக்கு அப்பமுந் தண்ணீரும் அவர்கள் முன்னேவையுமென்றான்.

௨௩ அப்போது அவர்களுக்குப் பெரிய விருந்துண்டாக்கி, அவர்கள் சாப்பிட்டுக் குடித்த பிறபாடு அவர்களை யனுப்பிவிட்டான். அவர்கள் தங்களாண்டவனண்டைக்குப்போனார்கள். ஆனதுகொண்டு சீரியரின் தண்டுகள் இஸ்ரவேல்தேசத்திலேயப்புறம் வரமனதில்லாதிருந்தது.

சமாரியாவிலுண்டான கன்பஞ்சம்.

௨௪ இதற்குப்பிற்பாடோவெனில், சீரியாவின் இராசாவாகிய பெனாதாத் தன் இராணுவத்தையெல்லாங் கூட்டிக்கொண்டேறிவந்து, சமாரியாவை முத்திக்கைப்போட்டான்.

௨௫ அதினாற்சமாரியாவிற் கன் பஞ்சமுண்டாயிறது. இதோ, ஒருகழுதைத்தலை எண்பது வெள்ளிக்காசுக்கும் புறக்களுக்குப்போடுகிற காற்படியயறு ஐந்துவெள்ளிக்காசுக்கும் விற்கப்படுமட்டும் அதை முத்திக்கைப்போட்டார்கள்.

௨௬ சம்பவித்ததேதெனில், இஸ்ரவேலின் இராசா அலங்கத்தின்மேல் நடந்துபோகையில், ஒரு ஸ்திரீ அவனைப் பார்த்துக் கூப்பிட்டு, இராசாவாகிய என்னாண்டவனே! இரட்சியுமென்றாள்.

௨௭ அதற்கவன், கர்த்தருன்னையிரட்சிக்காதிருந்தால் நான் எதிலெடுத்து உன்னையிரட்சிக்கலாம்? களஞ்சியத்திலெடுத்தோ ஆலையிலெடுத்தோ என்றுசொல்லி,

௨௮ இராசா பின்னையும் அவளையுனக்கென்னவேண்டும்? என்றுகேட்டான். அவள் சொன்னதாவது, இந்த ஸ்திரீ என்னுடனே, உன் ஆண்பிள்ளையைத்தா. அவனையின்று சாப்பிடுவோம். நாளை என் ஆண்பிள்ளையைச்சாப்பிடுவோமென்றாள்.

௨௯ அப்படியே யென் ஆண்பிள்ளையையாக்கிச்சாப்பிட்டோம். மறுநாளில் நான் இவளுடனே, நாம் உன் ஆண்பிள்ளையைச்சாப்பிட அவனைத் தாவென்றேன். ஆனால் இவள் தன் ஆண்பிள்ளையையொளித்துவைத்தாளென்றாள்.

௩௰ அந்த ஸ்திரீயின் வார்த்தைகளை இராசா கேட்டபோதோவெனில், அலங்கத்தின்மேல்நடந்துபோகிற அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டான். இதோ, உள்ளே தன்சரீரத்தின்மேல் அவனரட்டுடுத்தியிருக்கின்றதை சனங்கண்டது.

௩௧ அவன், சாபாத்தின் குமாரனாகிய எலிசாவின் தலையின்று அவன்மேல்நின்றாற் பராபரன் எனக்கு இப்படியும் அப்படியுஞ் செய்யக்கடவரென்றுசொல்லி,

௩௨ எலிசா தன் வீட்டில் உட்கார்ந்திருக்கக்கொள்ளவும். மூப்பர் அவனோடேயுட்கார்ந்திருக்கக்கொள்ளவும், ஒரு மனுஷனைத் தனக்கு முன்னேயனுப்பினான். அந்த ஆள் எலிசாவண்டைக்கு வாராததற்கு முன்னே இவன் அந்த மூப்பருடனே: என் தலையைவாங்க, அந்தக்கொலைபாதகமகன் ஆளனுப்பினான். பார்த்தீர்களோ? அந்த ஆள்வருகிறபோது, நீங்கள் கதவைப்பூட்டிக் கதவால் அவனை மறிக்கட்டாருங்கள். அவனுக்குப்பின்னாக அவனுடைய ஆண்டவனுடைய கால்களின் ஓசைச்சல்லலோவுண்டாகின்றதென்றான்.

௩௩ அவர்களோடே யவன் இன்னம் பேசுகையில், இதோ, அந்த ஆள் அவனண்டைக்கு இறங்கிவந்து, இதோ, இந்தப் பொல்லாப்பு கர்த்தரால் உண்டானது. நான் இனிக்கர்த்தரால் பார்த்துக்கொள்ளவேண்டியதென்ன என்று இராசாசொல்லுகிறானென்றான்.

## ௭. அதிகாரம்.

சமாரியாவில் அகப்பிலேவந்த சம்பூர்ணமானகாலம்.

அப்போது எலிசா, கர்த்தருடைய வார்த்தையைக்கேளுங்கள். நாளையிந்நேரத்திலே சமாரியாவின்வாசலில் ஒருமரக்கால்கோதுமைமாவு ஒருசேக்கலுக்கும் இரண்டுமரக்கால் வாற்கோதுமை ஒருசேக்கலுக்கும் விற்கப்படுமென்று கர்த்தர்சொல்லுகிறாரென்றான்.

௨ அப்போது இராசாவுக்குக்கைலாகுகொடுக்கிற நிர்வன பராபரனுடைய மனுஷனுக்குப்பிரத்தியுத்தாரமாக, இதோ கர்த்தர் வானத்திலே மதகுகளையுண்டாக்கினாலும் இப்படியாகுமோ? என்றான் அதற்கவன், இதோ, நீர் உம்முடையகண்களினாலே யதைக்கண்டும் அதிலேசாப்பிடாமலுமிருப்பீரென்றான்.

௩ குஷ்டரோகிகளான நாலுமனுஷர் ஒலிமுகவாசலிலிருந்தார்கள். அவர்கள் ஒருவரோடொருவர், நாம், சாகுமட்டும் இங்கேயிருப்பானேன்?

௪ பட்டணத்திற்குட்போவோமென்றோமானால்பட்டணத்தில் பஞ்சமாயிருக்கிறதினால் அங்கேசாவோம். நாமிங்கேயிருந்தாலுஞ்சாவோம். இப்போதுஞ் சூரியருடைய இராணுவத்தின் வசமாய்ப்போவோம்வாருங்கள். அவர்கள் நம்மையுயிரோடேவைத்தாற் பிழைக்கிறோம். நம்மைக்கொன்றாற் சாகிறோமென்றுசொல்லி,

௫ சூரியருடைய இராணுவத்தண்டைக்குப்போக இருட்டோடெழுந்திருந்து சூரியருடையபாளயத்தின் முனையில்வந்தார்கள். ஆனால் இதோ, அங்கேயொருவருமில்லை.

௬ ஏனெனில் ஆண்டவர் சூரியரின் இராணுவத்திற்கு இரதங்களின் இரைச்சலையுங் குதிரைகளினிரைச்சலையும்மகா இராணுவத்தின் இரைச்சலையுங் கேட்கப்பண்ணினதினாலே அவர்களொருவரோடொருவர், இதோ, நம்முடையமேல் வர இஸ்ரவேலின் இராசா ஏத்தியரின் இராசாக்களையும் எகிப்தியரின் இராசாக்களையும் நமக்கு விரோதமாகக் கூலிபொருந்தினானென்றுசொல்லி,

௭ இருட்டோடெழுந்திருந்தோடிப்போய்த்தங்கள் கூடாரங்களையுந் தங்கள் குதிரைகளையுந்தங்கள் கழுதைகளையுந்தங்கள்பாளயத்தையும் அவைகளிருந்தபிரகாரமாக விட்டுத்தங்கள் பிராணனமாத்திரந்தப்பவோடிப்போனார்கள்.

௮ அந்தக்குஷ்டரோகிகள்பாளயத்தின்முனைமட்டும்வந்தபோது, ஒருகூடாரத்திற்குட்பிரவேசித்துப் போசித்துக் குடித்து, அதிலே வெள்ளியையும்பொன்னையும் வஸ்திரங்களையும் எடுத்துக்கொண்டுபோய் ஒளித்துவைத்துத் திரும்பிவந்து வேறொருகூடாரத்திற் குட்பிரவேசித்து அதிலும் அப்படியெடுத்துப்போய் ஒளித்துவைத்து,

௯ பிற்பாடொருவரோடொருவர் நாஞ்செய்கிறது நியாயமல்ல. இந்நாள் நற்செய்தியை யறிவிக்குநாள். நாமமௌனமாயிருந்து பொழுதுவிடியுமட்டுங் காத்திருந்தாற் குற்றம்நம்முடைய மேற்சுமரும். இப்போதும் இராசாவின்வீட்டுக்குத் தையறிவிக்கப்போவோம் வாருங்களென்றார்கள்.

௰ அப்படியே அவர்கள் வந்து பட்டணவாசலிலேகாப்பாளனை நோக்கிக்கூப்பிட்டு, நாங்கள்சூரியரின் பாளயத்திற்குப்போய்வந்தோம். இதோ, அங்கேயொருவருமில்லை ஒருமனுஷனுடையசத்தமுமில்லாமலே கட்டியிருக்கிற குதிரைகளுங் கட்டியிருக்கிற கழுதைகளுங் கூடாரங்களுமிருக்கிறபிரகாரமாகவிருக்கின்றதென்று அவர்களுக்குச்சொன்னார்கள்.

௰௧ அப்போது அவன்வாசற்காக்கிற மற்றவர்களைக் கூப்பிட்டான். இவர்கள் உள்ளேபோய் இராசாவின் வீட்டிலதை யறிவித்தார்கள்.

௰௨ அப்போது இராசா இராத்திரியிலெழுந்துதன் ஊழியக்காரருடனே, சூரியர்நமக்குச்செய்யுங்காரியத்தையுங்களுக்குத்தெரியப்பண்ணுவேன். நாம்பட்டினியென்று அவர்கள் அறிவார்கள். ஆகையால் இவர்கள்பட்டணத்திலிருந்து புறப்பட்டு வந்தால் அவர்களையுயிரோடேபிடித்துப்பட்டணத்திற்குட் பிரவேசிப்போமென்று அவர்கள்வெளியில் ஒளித்துக்கொள்ளுகிறதற்காகப்பாளயத்தைவிட்டுப்புறப்பட்டார்களென்றான்.

௰௩ ஆனால் அவனூழியக்காரரிலொருவன் பிரத்தியுத்தாரமாக, இங்கேமீதியான குதிரைகளில் ஐந்து குதிரைகளையெடுக்கட்டுமேன்? இதோ, இங்கேமீதியான இஸ்ரவேலின்சகல ஏராளத்தோடும் இதோ மாண்டுபோன இஸ்ரவேலின்சகல ஏராளத்தோடும் அவைகள் ஏகயோக்கியமாயிருக்கும் அவைகளை நாம் அனுப்பிப்பார்க்கக்கடவோமென்றான்.

௰௪ அப்படியே குதிரைகள் பூண்ட இரண்டு இரதங்களைக் கொண்டுவந்தார்கள். அவைகளை இராசா சீரியருடைய இராணுவத்தின் பிறகே யனுப்பிப் போய்ப்பாருங்களென்றான்.

௰௫ இவர்கள் அவர்கள் பிறகாலேயே யோர்தான்மட்டும் போனார்கள். ஆனாலும், இதோ, சீரியர் தீவரித்தோடுகையில் அவர்களெறிந்துபோட்ட வஸ்திரங்களாலுந் தட்டுமுட்டுகளாலும் வழியெல்லாம் நிறைந்திருந்தது. அனுப்பப்பட்டவர்கள் திரும்பிவந்து இராசாவுக்கதை யறிவித்தார்கள்.

௰௬ அப்போது சனம் புறப்பட்டுச் சீரியரின் பாளயத்தைக் கொள்ளையிட்டார்கள். கர்த்தருடைய வார்த்தையின்படியே ஒரு மரக்கால் கோதுமை மாவு ஒரு சேக்கலுக்கும், இரண்டு மரக்கால் வாற்கோதுமையொரு சேக்கலுக்கும், விற்கப்பட்டது.

௰௭ இராசாவோ வென்னில் தனக்குக் கைலாகைக் கொடுக்கிற அந்தத் தலைவனை யொலிமுக வாசலில் விசாரிப்பாயிருக்கக் கட்டளையிட்டிருந்தான். ஆனால் இராசா பராபரனுடைய மனுஷனண்டை யிறங்கிவந்தபோது இவன் சொன்னபடியே சனம் அவனை யொலிமுகவாசலிலே மிதித்ததினாலே செத்துப்போனான்.

௰௮ ஏனென்றால் இரண்டு மரக்கால் வாற்கோதுமை யொரு சேக்கலுக்கும் ஒரு மரக்கால் கோதுமை மாவு ஒரு சேக்கலுக்கும் நாளை யித்நேரத்திலே சமாரியாவின் ஒலிமுகவாசலில் விற்குமென்று பராபரனுடைய மனுஷன் இராசாவோடே சொன்னதின்படியே நடந்தது.

௰௯ அதற்கு அப்போது அந்தத் தலைவன் பராபரனுடைய மனுஷனுக்குப் பிரதியுத்தரமாக இதோ, கர்த்தர் வானத்திலே மதகுகளையுண்டாக்கினாலும் இந்த வார்த்தையின்படி நடக்குமோ? என்று சொல்ல, இவன், இதோ, நீர் உம்முடைய கண்களினாலே அதைக் கண்டும் அதிலே நீர் சாப்பிடப்போகிறதில்லை யென்றான்,

௨௰ இந்தப் பிரகாரமாகத்தானே அவனுக்கு நடந்தது. அதெதெனில் ஒலிமுகவாசலிலே சனம் அவனை மிதித்ததினாலே செத்துப்போனான்.

## ௮. அதிகாரம்.

சூனேம் ஊராளுக்கு இராசாவினாலே கிடைத்த உபகாரம்.

௧ எலிசா உயிர்ப்பித்த குமாரனின் தாயாகிய ஸ்திரியுடனே அவன், நீயுன் வீட்டாரோடுங் கூட எழுந்து புறப்பட்டு எங்கேயாகிலும் பரதேசம் போயிரு. ஏனெனில் கர்த்தர் பஞ்சத்தை வரவழைப்பார். அப்படியே ஏழுவருஷமாயத் தேசத்தில வந்து நிற்குமென்று சொல்லியிருந்தான்.

௨ அந்த ஸ்திரி எழுந்து பராபரனுடைய மனுஷனவார்த்தையின்படியே செய்து தன் வீட்டாரோடுங் கூடப் புறப்பட்டுப் பெலிஸ்தரின் தேசத்திலே ஏழுவருஷமாய்ப் பரதேசம் போயிருந்து,

௩ ஏழுவருஷஞ் சென்றபிறபாடு அவள் பெலிஸ்தரின் தேசத்தை விட்டுத் திரும்பி வந்து தன் வீட்டுக்காகவுந் தன் வயலுக்காகவும் இராசாவைப் பார்த்துக் கூப்பிடும்படிக்குப் புறப்பட்டாள்.

௪ அந்நேரம் இராசா பராபரனுடைய மனுஷனின் வேலைக்காரனாயிருந்த கேயாசியுடனே பேசி, எலிசா செய்த பெரிய காரியங்களையெல்லாம் நீ யெனக்கு விவரி யென்றான்.

௫ செத்துப்போனவனை யுயிர்ப்பித்தானென்று இவன் இராசாவுக்கு விவரிக்கிறபோதே, இதோ. இவன் உயிர்ப்பித்த குமாரனின் தாயாகிய அந்த ஸ்திரீ தன் வீட்டுக்காகவுந் தன் வயலுக்காகவும் இராசாவைப் பார்த்துக் கூப்பிட்டாள். அப்போது கேயாசி இராசாவாகிய என்னாண்டவனே! இவள்தானேயந்த ஸ்திரீ. எலிசா உயிர்ப்பித்த இவளுடைய குமாரன் இவன்தானென்றான்.

௬ இராசா அந்த ஸ்திரீயைக் கேட்டதற்கு அவள் அதை யவனுக்கு விவரித்தாள். அப்போது இராசா அவளுக்கொரு பிரதானியைக் கட்டளைபண்ணி, அவளுக்கு உண்டானதெல்லாவற்றையும் அவள் தேசத்தைவிட்டுப்போன நாள் துவக்கி இதுவரைக்குமுண்டான அந்த வயலின்வர்த்தமானத்தையும் அவளுக்குத் திரும்ப வரப்பண்ணென்றான்.

சீரியாவின் இராசசியபாரம் மாறிப்போனசெய்தி.

௭ சீரியாவின் இராசாவாகிய பெனாத்தாத் வியாதியாயிருக்கிறபோது எலிசா தமஸ்குவுக்கு வந்தான். பராபரனுடைய மனுஷன் இவ்விடமட்டும் வந்தானென்று அவனுக்கறிவிக்கப்பட்டபோது,

௮ இராசா ஆசகேலுடனே நீயுன் கையிலே ஒரு காணிக்கையையெடுத்துக்கொண்டு பராபரனுடைய மனுஷனுக்கெதிர்கொண்டுபோய் நான் இந்த வியாதிக்குப் பிழைப்பேனோ? என்று அவனாலே கர்த்தரைக் கேளென்றான்.

௯ ஆசகேல் தமஸ்குவின் சகல உச்சிதங்களாகிய நாற்பது ஒட்டகங்களின் சுமையான காணிக்கையை எடுத்துக்கொண்டு அவனுக்கெதிர்கொண்டுபோய்ச் சேர்ந்தபோது, அவனுக்கு முன்பாக நின்று, சூரியாவின் இராசாவாகிய பெனாதாத் என்கிற உம்முடைய குமாரன் என்னை உம்மண்டைக்கு அனுப்பி, இந்த வியாதிக்குப் பிழைப்பேனோ? என்று கேட்கச் சொன்னான் என்றான்.

௰ எலிசா அவனுடனே நீர் போய் அவனுக்குப் பிழைக்கவே பிழைப்பீர் என்று சொல்லும். ஆனால் அவன் சாவவே சாவான் என்கிறதைக் கர்த்தர் எனக்குக் காண்பித்தார் என்றான்.

௧௧ பிற்பாடு பராபரனுடைய மனுஷன் அவனுக்குக் கூச்சமுண்டாகத்தக்கதாய்த் தன் முகத்தைத் திருப்பாமல் அவனை நோக்கிக்கொண்டேயிருந்து அழுதான்.

௧௨ அப்பொழுது ஆசகேல், என் ஆண்டவன் அழுகிறதென்ன? என்று கேட்டான். அதற்கவன் நீர் இஸ்ரவேல் புத்திரருக்குச் செய்யுந் தீங்கை நான் அறிந்திருக்கிறபடியினாலேதானே. நீர் அவர்கள் கோட்டைகளை அக்கினிக்கிரையாக்கி அவர்கள் வாலிபரைப் பட்டயத்தால் கொன்று, அவர்கள் குழந்தைகளைத் தரையோடே மோதி அவர்களுடைய கெர்ப்பவதிகளைப் பீறுவீர் என்றான்.

௧௩ அப்பொழுது ஆசகேல், இத்தனை பெரிய காரியத்தைச் செய்ய நாயாகிய உம்முடைய அடியான் எம்மாத்திரம்? என்றான். எலிசாவோவென்றால், நீர் சூரியாவின்மேல் இராசாவாவீர் என்கிறதைக் கர்த்தர் எனக்குக் காண்பித்தார் என்றான்.

௧௪ அவன் எலிசாவை விட்டுப் புறப்பட்டுத் தன் ஆண்டவனண்டைக்கு வந்தபோது, இவன், எலிசா உனக்கென்ன சொன்னான்? என்று கேட்டதற்கு, அவன் நீர் பிழைக்கவே பிழைப்பீர் என்று எனக்குச் சொன்னான் என்று சொல்லி,

௧௫ மறுநாளிலோவென்றால், ஒரு சமுக்காளத்தை எடுத்துத் தண்ணீரிலே தோய்த்து அவன் முகத்தின் மேல் விரித்தான். அப்பொழுது செத்துப்போனான். ஆசகேலோவென்றால், அவனுக்குப் பதிலாய் இராசாவானான்.

## யோராம் அகசியாவென்கிற யூதாவுடைய இராசாக்களின் நடபடிகள்.

௧௬ இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாபின் குமாரனான யோராமுடைய ஐந்தாம் வருஷத்தில், யோசபாத் யூதாவிலே இன்னம் இராசாவாயிருக்கக்கொள்ள யோசபாத்தின் குமாரனாகிய யோராமென்கிற யூதாவின் இராசா இராச்சியபாரம் பண்ணத் துவக்கினான்.

௧௭ அவன் இராசாவாகிறபோது, அவன் முப்பத்திரண்டு வயதாயிருந்து, எட்டு வருஷமாய் எருசலேமில் இராச்சியபாரம் பண்ணினான்.

௧௮ அவன் இஸ்ரவேல் இராசாக்களின் வழியில் நடந்து, ஆகாபின் வீட்டார் செய்ததுபோலே செய்தான். ஏனெனில் ஆகாபின் குமாரத்தி அவனுக்குப் பெண்சாதியாயிருந்தாள். கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௧௯ கர்த்தரோவென்றால், உன் குமாரருக்குள்ளே சகல நாளும் ஒரு விளக்கையுனக்குக் கட்டளையிடுவேனென்று தம்முடைய தாசனாகிய தாவீதுக்குச் சொன்னதின்படியே, அவனிமித்தம் யூதாவைக் கெடுக்க மனதில்லாதிருந்தார்.

௨௰ அவன் நாட்களில் யூதாவுடைய கையின் கீழிருந்த ஏதோமியர் மருண்டு விழுந்து, தங்கள்மேல் ஒரு இராசாவை வைத்தார்கள்.

௨௧ அதற்காக யோராம் எல்லா இரதங்களோடுங்கூடச் சாயீருக்குப் புறப்பட்டுப் போனான். ஆனால் அவன் இராத்திரியிலெழுந்திருந்து, தன்னை வளைந்துகொண்ட ஏதோமியரையும் இரதங்களின் தலைவரையும் முறியடித்தபோது, சனங்கள் கூடாரங்களுக்கோடிப்போனார்கள்.

௨௨ அப்படியே யூதாவுடைய கையின் கீழிருந்த ஏதோமியர் இந்நாள்வரைக்கும் இருக்கிறதுபோல மருண்டு விழுந்தார்கள். அக்காலத்திலே தானே லிப்னா பட்டணமும் மருண்டு விழுந்தது.

௨௩ யோராமின் மற்ற வர்த்தமானங்களும் அவன் செய்தவைகளும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௨௪ யோராம் தன் பிதாக்களோடே நித்திரையடைந்து, தன் பிதாக்களிடத்திலே தாவீதின் பட்டணத்திலே அடக்கம்பண்ணப்பட்டான். அவனுக்குப் பதிலாக அவன் குமாரனாகிய அகசியா இராசாவானான்.

௨௫ இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாபின் குமாரனான யோராமுடைய பன்னிரண்டாம் வருஷத்திலே யூதாவின் இராசாவா

கிய யோராமின் குமாரன் அகசியா இராசாவானான்.

௨௬ அகசியா இராசாவாகிறபோது இருபத்திரண்டு வயதாயிருந்து, ஒரேவருஷம் எருசலேமில் இராச்சியபாரம் பண்ணினான். இஸ்ரவேலின் இராசாவாகிய ஒம்ரியின் குமாரத்தியான அவன் தாயின் பேர் அத்தாலியாள்.

௨௭ அவன் ஆகாபுடைய வீட்டாரின் வழியே நடந்து, ஆகாபின் வீட்டாரைப்போலக் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். ஏனெனில் அவன் ஆகாப்வீட்டாரோடே சம்பந்தங் கலந்தவனாயிருந்தான்.

௨௮ அவன் ஆகாபின் குமாரனாகிய யோராமோடே கூடக் கீலேயாத்திலுள்ள ராமோத்திற்குச் சீரியாவின் இராசாவாகிய ஆசகேலோடு யுத்தம் பண்ணப்போனான். அங்கே சீரியர் யோராமைக் காயப்படுத்தினார்கள்.

௨௯ அப்போது தான் சீரியாவின் இராசாவாகிய ஆசகேலோடு யுத்தம்பண்ணுகையில் சீரியர் ராமாவிலே தன்னை வெட்டின காயங்களை யெஸ்ரேயேலிலே யாறிக்கொள்ள இராசாவாகிய யோராந் திரும்பினான். ஆகாபின் குமாரனாகிய யோராம் வியாதியானபடியினாலே யூதாவின் இராசாவாகிய யோராமின் குமாரனான அகசியா யெஸ்ரேயேலிலிருக்கிற அவனைப் பார்க்கிறதற்கு இறங்கிப்போனான்.

## ௯. அதிகாரம்.

இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம் பண்ணப்பட்ட ஏகூ செய்த ஆக்கினைகள்.

அப்போது தீர்க்கதரிசியாகிய எலிசா, தீர்க்கதரிசிகளின் புத்திரரில் ஒருவனை யழைத்து, அவனுடனே, நீ இடைகட்டிக்கொண்டு இந்த எண்ணெய்ப்பாத்திரத்தை உன் கையிலே யெடுத்துக்கொண்டு கீலேயாத்திலுள்ள ராமோத்துக்குப்போ.

௨ நீ அங்கே சேர்ந்தபோது, நிம்சியின் மகனான யோசபாத்தின் குமாரனான ஏகூ எங்கேயிருக்கிறானென்று பார்த்து, அங்கே யுட்பிரவேசித்து, அவனைத் தன் சகோதரரின் நடுவிலிருந்தெழுந்திருக்கப் பண்ணி அவனை யுள்ளுக்குள்ளாக அறையிலழைத்துப்போய்,

௩ எண்ணெய்ப்பாத்திரத்தை யெடுத்து அவன் தலையின்மேல் ஊற்றி, உன்னை இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணினேனென்று கர்த்தர் சொல்லுகிறாரென்று சொல்லிக் கதவைத் திறந்து, தாமதியாமல் ஓடிப்போவென்றான்.

௪ அப்படியே தீர்க்கதரிசியின் வேலைக்காரனாகிய அந்த வாலிபன் கீலேயாத்திலுள்ள ராமோத்துக்குப் போனான்.

௫ அவன் உட்பிரவேசித்தபோது, இதோ, இராணுவத்தின் சேர்வைக்காரர் அங்கே உட்கார்ந்திருந்தார்கள். அப்போது அவன் சேர்வைக்காரனே! உமக்குச் சொல்லவேண்டிய வார்த்தை யெனக்கிருக்கிறதென்றான். எங்களெல்லாரிலும் ஆருக்கென்று ஏகூ கேட்டதற்கு அவன், சேர்வைக்காரனாகிய உமக்குத்தானென்றான்.

௬ இவன் எழுந்து அவ்வீட்டிற்குட் பிரவேசித்தபின் அவன் அந்த எண்ணெயை யவன் தலையின்மேலூற்றி இவனுடனே சொன்னது, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், உன்னைக் கர்த்தருடைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம் பண்ணினேன்.

௭ நாம் நம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளின் இரத்தப்பழியையும் சகல ஊழியக்காரரின் இரத்தப்பழியையும் யேசபேலின் கையிலே வாங்கும்படிக்கு, நீ உன் ஆண்டவனாகிய ஆகாபின் வீட்டாரை யழித்துப்போடக்கடவாய்.

௮ ஆகாபின் வீட்டாரெல்லாம் அழியும்படிக்கு நாம் ஆகாபுக்குச் சுவரில் நீர்விடும் ஒருநாயு முதலாய்த் தப்பாதபடிக்கு இஸ்ரவேலிலே அடைபட்டவனையும் விடுதலையாயிருக்கிறவனையுங் கருவறுத்து,

௯ ஆகாபின் வீட்டை நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமின் வீட்டிற்கும் அகியாவின் குமாரனாகிய பாஷாவின் வீட்டிற்குஞ் சரியாக்குவோம்.

௰ யேசபேலை யெஸ்ரேயேலின் நிலத்திலே நாய்கள் தின்னும்போது அவளை யடக்கம்பண்ணுபவனில்லையென்கிறாரென்று சொல்லிக் கதவைத் திறந்து ஓடிப்போனான்.

௰௧ ஏகூ தன் ஆண்டவனுடைய ஊழியக்காரரண்டைக்குப் புறப்பட்டு வந்தபோது, இவர்கள் அவனைச் சுகசெய்தியோ? அந்தப்பயித்தியக்காரன் உன்னண்டைக்கு வந்ததென்ன? என்று கேட்டார்கள். அவன் இவர்களுடனே, நீங்கள் அந்த மனுஷனையும் அவன் பேச்சையும் அறிவீர்களென்றான்.

௰௨ அதறகு அவர்கள, அது பொய், எஙகளுககு அறிவியென்றார்கள. அப்பொது அவன, நாம உனனை இஸ்ரவேலின மேல இராசாவாக அபிஷேகமபணணினேனென்று கர்த்தருரைககிறாரென்று இன்னின்ன பிரகாரமாக என்னோடே சொனனானென்றான.

௰௩ அப்பொது அவர்கள தீவிரமாய அவரவர் தஙகள வஸ்திரத்தைப்படிகளின உயர்த்திலே அவனுககுக்கீழே பரப்பி, எககாளமூதி, ஏகூ இராசாவானானென்றார்கள.

௰௪ அப்படியே நிமசியின மகனாகிய யோசபாத்தின குமாரனான ஏகூ என்பவன யோராமுககு விரோதமாக ஒ[illegible] பணணினான. யோராமோவெனனில, எலலா இஸ்ரவேலரோடுங்கூட முதறகீலேயாத்திலுள்ள ராமோத்திலே சீரியாவின இராசாவாகிய ஆசகேலினிமித்தங் காவல வைத்தான.

௰௫ ஆனால் சீரியாவின இராசாவாகிய ஆசகேலோடே பணணின யுத்தத்திலே சீரியர் தனனை வெட்டின காயஙகளை எஸ்ரேயேலிலே யாறறிக்கொள்ளுகிறதறகு இராசாவாகிய யோராம திருமபினானே? ஏகூவென்றவன, உஙகளுககுச சம்மதியாயிருந்தால், போய, எஸ்ரேயேலிலே இதையறிவிக்கிறதறகு ஒருவரும பட்டணத்திலிருந்து தப்பிப் புறப்படவேணடாமென்றான.

௰௬ அப்பொது ஏகூ இரதத்தின மேலேறி எஸ்ரேயேலுககு நேராகப்போனான; ஏனெனில யோராம அஙகே கிடந்தான; யோராமைப்பார்கக யூதாவின இராசாவாகிய அகசியாவும அஙகே இறஙகியிருந்தான.

௰௭ எஸ்ரேயேலிற் கோபுரத்தின மேலே நிற்கிற சாமககாரன வருகிற ஏகூவின திரள் கூட்டத்தைக்கண்டு, ஒரு திரளகூட்டத்தைநான காண்கிறேனென்றான. அப்பொது யோராம நீயொரு குதிரைககாரனை யழைத்து அவர்களுக்கெதிராக வனுப்பிச் சமாதானமோ? என்று கேட்கச்சொலலென்றான.

௰௮ அந்தககுதிரைககாரன அவனுககு எதிர்ககொண்டுபோய்ச் சமாதானமோ? என்று இராசா கேட்கச்சொனனாரென்றான. ஏகூவோவெனிற் சமாதானம உனக்குக்கவலையென்ன? என்பிறகாலே திருமபிவாவென்றான. அப்பொது அந்தச சாமககாரன அனுப்பப்பட்டவன அவர்களிடத்துககுமட்டும போயும திருமபினதிலலையென்றான.

௰௯ ஆகையாலவேறொரு குதிரைககாரனை யனுப்பினான. இவன அவர்களண்டைக்குவந்தபோது, சமாதானமோ? என்று இராசா கேட்கச்சொனனாரென்றான. ஏகூவோவெனிற் சமாதானம உனக்குக்கவலையென்ன? என்பிறகே திருமபிவாவென்றான.

௨௰ அப்பொது சாமககாரன அவன் அவர்களிடத்துக்குமட்டும போயும திருமபினதிலலையென்றும அந்த ஓடிவருகுதல நிம்சியின குமாரனாகிய ஏகூவின ஓடிவருதலைப்போலிருக்கின்றது. ஏனெனில வீரியமாய ஏகிவருகிறானென்றுஞ்சொனனான.

௨௧ அப்பொது யோராம இரதத்தைமுஸ்திப்பாககென்றான. அவனுடைய இரதத்தைமுஸ்திப்பாககினபோது, இஸ்ரவேலின இராசாவாகிய யோராமும யூதாவின இராசாவாகிய அகசியாவும அவனவன தன்தன் இரதத்திலேறி ஏகூவுககெதிராகப்புறப்பட்டு, எஸ்ரேயேலியனாகிய நாபோத்தின நிலத்திலே அவனுககுநேரிட்டார்கள.

௨௨ யோராம ஏகூவைககண்கையில ஏகூவே! சமாதானமோ? என்றான. ஏகூவோவெனில உன தாயாகிய யேசேபேலின வேசித்தனஙகளும அவளுடைய பிலலிசூனியஙகளும இத்தனையோராளமாயிருக்கும்போது சமாதானமேது? என்றான.

௨௩ அப்பொது யோராம தன இரதத்தைத்திருப்பியோடிப்போய அகசியாவுடனே அகசியாவே! இது சதியென்றான.

௨௪ ஆனால ஏகூ தனகையால வில்லை நாணேற்றி, அப்பு யோராமுடைய இருதயத்தை ஊருவிப் புறப்படத்தக்கதாய அவனையவன புயஙகளின நடுவேயெய்தான. அதினாலே தன இரதத்திலே சுருண்டு விழுந்தான.

௨௫ அப்பொது ஏகூ தனசேர்வைககாரனாகிய பித்காருடனே சொனனதாவது, அவனையெடுத்து, எஸ்ரேயேலியனாகிய நாபோத்தின வயல நிலத்திலெறிந்துபோடு. ஏனெனில நானும நீயும ஒருசோடாய அவன தகப்பனாகிய ஆகாபினபிறகாலே குதிரையேறிவருகிறபோது கர்த்தர் இந்த ஆககினையை யவன்மேலசுமத்தினாரென்பதை நினைத்துக்கொள.

௨௬ நேறறு நாபோத்தின இரத்தத்தையும அவனகுமாரரின இரத்தத்தையுங்கணடேனலலவோ? என்றும இந்த நிலத்திலே உனக்குப் பதிலபசரிக்கட்டுவேனென்றும அப்பொது கர்த்தர் சொனனாரே.

இப்போதும் அவனையெடுத்துக் கர்த்தருடையவார்த்தையின்படியே யிந்த நிலத்திலெறிந்துபோடென்றான்.

௨௭ இதை யூதாவின் இராசாவாகிய அகசியாகண்டு தோட்டத்தின்வீட்டுவழியாயோடிப்போனான். ஆனால் ஏகூ அவனைப் பின்றொடர்ந்து இவனையும் இரதத்திலேகொன்றுபோடுங்களென்றதினாலே அவர்கள் இப்லேயாம் கிட்டவிருக்கிற கூர் மலையின்மேலேறுகிற வழியிலே யிப்படிச் செய்தார்கள். அவன் மெகிதோவுக்கோடிப்போய் அங்கேசென்றுபோனான்.

௨௮ அவனுடைய ஊழியக்காரர் அவனை இரதத்தின்மேலெருசலேமுக்குக் கொண்டுபோய் அவனைத் தாவீதின்பட்டணத்தில் அவன் பிதாக்களிடத்திலிருக்கிற அவனுடையகல்லறையிலே அடக்கம்பண்ணினார்கள்.

௨௯ இந்த அகசியா ஆகாபுடைய குமாரனாகிய யோராமிருந்த பதினோராம் வருஷத்தில் யூதாவின்மேல் இராசாவானான்.

௩௰ ஏகூவோவென்றால் எஸ்ரேயேலுக்கு வந்தான். அதை யேசபேல்கேட்டபோது தன்கண்களுக்கு மையிட்டுத் தன் தலையைச் சிங்காரித்துக்கொண்டு பலகணியால் எட்டிப்பார்த்து,

௩௧ ஏகூ ஒலிமுகவாசலில் வந்தபோது அவள், தன்னாண்டவனைக்கொன்ற சிம்ரீ சுகப்பட்டானோ? என்றாள்.

௩௨ அப்போது அவன் தன்முகத்தை அந்தப்பலகணிக்கேறெடுத்து, என்னோடேயிருக்கிறவன் ஆர்? என்றதற்கு, இரண்டுமூன்று பிரதானிகள் அவனை நோக்கிப்பார்த்தார்கள்.

௩௩ அப்போது அவன் அவளைத்தாழத்தள்ளுங்களென்றான். அப்படியே அவளைத் தாழத்தள்ளினதினாலே அவளுடைய இரத்தஞ்சுவரிலுங்குதிரைகளிலுந்தெறித்தது. அவன் அவளை மிதித்து,

௩௪ உள்ளேபோய்ப் போசித்துக்குடித்தபிற்பாடு அந்தச்சபிக்கப்பட்டவளைப் பார்த்து அவளை யடக்கம்பண்ணுங்களேன்? அவளொரு இராசாவின்குமாரத்தியென்றான்.

௩௫ ஆனால் அவர்கள் அவளையடக்கம்பண்ணப்போகிறபோது அவளிலிருந்தத் தலையோட்டையுங் கால்களையும் உள்ளங்கைகளையுமே யல்லாமற்பின்னொன்றையுங்கண்டுபிடிக்காமல்,

௩௬ திரும்பவந்து அவனுக்கறிவித்தார்கள். அப்போது அவன் இது கர்த்தர் திஸ்பியனாகிய எலியாவென்ற தம்முடைய ஊழியக்காரனைக்கொண்டு சொன்னவார்த்தை, எஸ்ரேயேலின் நிலத்திலே நாய்கள் யேசபேலின் மாம்சத்தைத்தின்னுமென்றும்,

௩௭ இன்னது யேசபேலென்று சொல்லக்கூடாதபடிக்கு யேசபேலின் பிரேதம் எஸ்ரேயேலின் நிலத்திலேவயல்வெளியின்மேலேபோடும் எருவைப்போலாகுமென்றுஞ்சொன்னதோ? என்றான்.

## ௰. அதிகாரம்.

அப்புறம் ஏகூ செய்த ஆக்கினைகள்.

ஆகாபுக்கோவென்றால், சமாரியாவிலே எழுபது குமாரரிருந்தபடியினாலே ஏகூ சமாரியாவிலிருக்கிற எஸ்ரேயேலின் பிரபுக்களாகிய மூப்பர்ணடைக்கும் ஆகாபுடைய பிள்ளைகளை வளர்க்கிறவர்களண்டைக்கும் எழுதியனுப்பின திருமுகங்களாவது,

௨ உங்களாண்டவனுடைய குமாரர் உங்களோடிருக்கிறார்கள். இரதங்களும் குதிரைகளும் அரணான பட்டணமும் ஆயுதங்களும் உங்களுக்குண்டே.

௩ இப்போதும் இந்த திருமுகம் உங்களண்டைக்கு வருகிறப்போது, நீங்கள் உங்களாண்டவனுடைய குமாரரில் உத்தமனும் செம்மையுமாயிருக்கிறவனைப்பார்த்து அவனை யவன்தகப்பனுடைய ஆசனத்தின்மேல்வைத்து, உங்கள் ஆண்டவனுடைய வீட்டுக்காக யுத்தம்பண்ணுங்களென்றெழுதினான்.

௪ அவர்களோவெனில் மிகுதியும்பயந்து, இதோ, இரண்டு இராசாக்கள் அவனுக்குமுன்பாக நிற்கவில்லை. நாங்கள் நிற்பதெப்படி? என்றார்கள்,

௫ ஆகையால் அரண்மனை விசாரிப்புக்காரனும் பட்டணவிசாரிப்புக்காரனும் மூப்பரும் பிள்ளைகளின் விசாரிப்புக்காரரும் ஏகூவுக்கு நாங்கள் உமதடியார் நீர் எங்களுக்குச் சொல்வதையெல்லாஞ் செய்வோம். நாங்களொருவனையும் இராசாவாக்குவதில்லை. உமது பார்வைக்குச் சமம் தியானதைச் செய்யுமென்று சொல்லியனுப்பினார்கள்.

௬ அப்போது அவனிவர்களுக்கு இரண்டாந்திருமுகத்தையெழுதி நீங்களென் பாரிசமாயிருந்து என்சத்தத்தைக்கேட்கிறதுண்டானால் உங்களாண்டவனுடைய குமாரராகிய மனுஷரின் தலைகளைவாங்கி நாளையிந்நேரத்தில் எஸ்ரேயேலுக்கு எ

ன்னண்டையிலே வாருங்களென்றெழுதினான். இராசாவின் குமாரராகிய எழுபதுபேருமோவெனில் தங்களை வளர்க்கிற பட்டணத்தின் பெரிய மனுஷரோடிருந்தார்கள்.

எ இந்த நிருபம் அவர்களண்டைக்கு வந்தபோது, அவர்கள் இராசாவின் குமாரரைப்பிடித்து எழுபதுபேரையும் வெட்டி அவர்கள் தலைகளைக் கூடைகளில் வைத்து எஸ்ரேயேலிலிருக்கிற அவனண்டைக்கனுப்பினார்கள்.

அ அனுப்பப்பட்ட ஆள் வந்து இராசகுமாரரின் தலைகளைக் கொண்டுவந்தார்களென்று அவனுக்கறிவித்தபோது அவன் விடியற்காலமட்டும் அவைகளை யொலிமுகவாசலில் இரண்டு குவியலாகக் குவித்துவையுங்களென்றான்.

கூ மறுநாட் காலமேயோவென்றால் அவன் புறப்பட்டு நின்று சகல சனத்தோடுஞ்சொன்னது: நீங்கள் நீதிமானகளல்லவோ? இதோ, நான் என்னாண்டவனுக்கு விரோதமாகச் சதிபண்ணி அவனைக்கொன்றுபோட்டேன். ஆனால் இவர்களையெல்லாம் வெட்டினவனார்?

ய ஆனதுகொண்டு கர்த்தர் ஆகாபின் வீட்டாருக்கு விரோதமாகச்சொன்ன கர்த்தருடைய வார்த்தைகளில் ஒன்றுந்தரையிலே விழுந்ததில்லையென்பதை யறிந்து கொள்ளுங்கள். ஏனெனில் கர்த்தர் தம்முடைய தாசனாகிய எலியாவைக்கொண்டு சொன்னதைச்செய்தாரென்றான்.

யக எஸ்ரேயேலிலும் ஆகாபின் வீட்டாரில் மீதியானயாவரையும் அவனுக்கிருந்த எல்லாமந்திரிகளையும் அவனைச்சேர்ந்த மனுஷரையும் அவனுடைய ஆசாரியர்களையும் அவனுக்கொருவரையும் மீதியாகவைக்காதபடிக்கு, ஏகூ வெட்டிப்போட்டு,

யஉ பிற்பாடு எழுந்து சமாரியாவுக்குப் போகப்புறப்பட்டான். வழியிலே மேய்ப்பரின் உரோமங்கத்தரிக்கிற வீட்டுக்குச் சமீபமாய் வந்தபோது,

யங யூதாவின் இராசாவாகிய அகசியாவின் சகோதரரை யங்கேகண்டு நீங்கள் யார்? என்றுகேட்டான். அவர்கள், நாங்கள் அகசியாவினுடைய சகோதரர். நாங்கள் இராசாவின் பிள்ளைகளையும் இராசாத்தியின் பிள்ளைகளையும் வினவுகிறதற்கு இறங்கிப்போகிறோமென்றார்கள்.

யச அப்போது அவன், இவர்களையுயிரோடே பிடியுங்களென்றதற்கு, அவர்களையுயிரோடேபிடித்து நாற்பத்திரண்டு பேர்களாகிய அவர்களைப்பேத்தேகெத்தின் துரவண்டையிலே வெட்டிப்போட்டார்கள். அவர்களில் ஒருவனையும் அவன் மீதியாகவைத்ததில்லை.

யரு அவன் அவ்விடத்தை விட்டுப்புறப்பட்டபோது அவன் தனக்கெதிர்ப்பட்டு இறேகாபின் குமாரனாகிய யோனதாபைச் சந்தித்து அவனையுபசரித்து, அவனுடனே, உன்னிருதயத்திற்கு என்னிருதயமிருக்கிறதுபோலே உன்னிருதயஞ் செம்மையாயிருக்கின்றதோ? என்றான். அதற்கு யோனதாப் இருக்கின்றது. இருக்கின்றது என்றான். அப்போது அவன் உன் கையையெனக்குத் தாவென்றுசொல்லி, அவன் தன் கையைக்கொடுத்தபோது அவனைத் தன்னண்டை இரதத்தின்மேல் ஏறிவரச்சொல்லி,

யசா நீயென்னோடேகூட வந்து, கர்த்தருக்காக எனக்கிருக்கிறபத்திவைராக்கியத்தைப்பாரென்றான். அப்படியே இவனையவன் இரதத்தின்மேலேற்றினான்.

யஎ அவன் சமாரியாவுக்கு வந்தபோது சமாரியாவில் ஆகாபுக்கு மீதியானயாவரையும் அவர்களைக்கர்த்தர் எலியாவோடே சொன்ன வார்த்தையின்படியே யழித்துத்தீருமளவும், வெட்டிப்போட்டான்.

யஅ பிற்பாடு ஏகூ சனத்தையெல்லாங்கூட்டி யவர்களோடே சொன்னதாவது: ஆகாப் பாகாலைச் சேவித்தது மட்டு ஏகூ அவனைச் சேவிப்பது மிகுதி.

யகூ இப்போதும் பாகாலின் சகல தீர்க்கதரிசிகளையும் அவனுடைய சகல பணிவிடைக்காரரையும் அவனுடைய சகல ஆசாரியர்களையும் என்னண்டைக்கு வரவழையுங்கள். ஒருவனுங்குறையவேண்டாம். ஏனெனில் பாகாலுக்குப் பெரிய பலியிடுதலெனக்கிருக்கின்றது. வாராதவனெல்லாம் உயிரோடிருப்பதில்லையென்றான். பாகாலின் பணிவிடைக்காரரையழிக்கும்படிக்கு ஏகூ இதைத்தந்திரத்தினாலே செய்தான்.

உய பாகாலுக்குப் பண்டிகையின் ஆசரிப்பைக் கூறுங்களென்று ஏகூ சொன்னான். அப்படியே கூறினார்கள்.

உக ஏகூ இஸ்ரவேல் தேசமெங்கும் ஆளைச்சொல்லியனுப்பினபடியினாலே பாகாலின் பணிவிடைக்காரரெல்லாரும் வந்தார்கள். வாராதவனொருவனுமில்லை. அவர்கள் பாகாலின் வீட்டிற்குட் பிரவேசித்ததினாற் பாகாலின் வீடு தாம்சாரியும் நிரம்பிற்று.

௨௨ அப்போது அவன் வஸ்திரங்களின் வீட்டுவிசாரிப்புக்காரனுடனே, பாகாலின் பணிவிடைக்காரருக்கெல்லாம் வஸ்திரங்களையெடுத்துக்கொண்டுவாவென்றதற்கு, அவர்களுக்கு வஸ்திரங்களையெடுத்துக்கொண்டுவந்தான்.

௨௩ பிற்பாடு ஏகூ ரேகாபின்குமாரனாகிய யோனதாபோடே கூடப்பாகாலின் வீட்டிற்குட்பிரவேசித்துப் பாகாலின் பணிவிடைக்காரருடனே, பாகாலின் ஊழியக்காரரேயல்லாமற் கர்த்தரின் ஊழியக்காரரில் ஒருவருமிங்கே யுங்களோடிராதபடிக்கு ஆராய்ந்து பாருங்களென்றான்.

௨௪ அவர்கள் பலிகளையுஞ் சர்வாங்கதகனங்களையுஞ் செலுத்த உட்பிரவேசித்த பிற்பாடு ஏகூ வெளியிலே எண்பதுபேரைத்தனக்காயத்தமாகவைத்து, நான் உங்கள் கையிலொப்புவிக்கிற மனுஷரில் ஒருவனையெவனாகிலுந் தப்பவிடுகிறதுண்டானால், அவனுடைய ஜீவன் இவன் ஜீவனுக்கீடாயிருக்குமென்றான்.

௨௫ அவர்கள் சர்வாங்கதகனபலியைச்செலுத்தித்தீர்ந்தபோது ஏகூ சேவகருக்குஞ் சேர்வைக்காரருக்கும், உள்ளேபோய், அவர்களைவெட்டிப்போடுங்கள்; ஒருவரும்வெளியேபுறப்படவேண்டாமென்றான். அப்படியேபட்டயக்கருக்காற்சேவகருஞ் சேர்வைக்காரரும் அவர்களைவெட்டியெறிந்துபோட்டுப்பாகால்வீட்டுப்பட்டணமட்டுக்கும்போய்,

௨௬ பாகால்வீட்டின் சிலைகளை வெளியேயெடுத்துவந்து, அதைக்கொளுத்திப்போட்டு,

௨௭ பாகாலின்சிலையைத் தகர்த்துப் பாகாலின் வீட்டையிடித்து, அதையிந்நாள்வரைக்கு மிருக்கிறதுபோல மலசலாதி யிடங்களாக்கினார்கள்.

௨௮ இப்படியே ஏகூபாகாலை இஸ்ரவேலிலிராதபடிக்கு அழித்துப்போட்டான்.

௨௯ ஆனாலுபேத்தேலிலுந்தாணிலும் வைத்தபொன்னான கன்றுக்குட்டிகளால் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமின் பாவங்களை ஏகூ விட்டுப்பின்வாங்கினதில்லை.

௩௰ கர்த்தர் ஏகூவுடனே, நம்முடைய பார்வைக்குச்செம்மையானதை நன்றாய்ச்செய்து, நமது இருதயத்திலிருந்தபடியெல்லாம் ஆகாபின்வீட்டிற்குச் செய்தபடியினாலே உன்குமாரர் இஸ்ரவேலுடைய இராசாசனத்தின்மேல் நாலுதலைமுறையாகவுங் காத்திருப்பார்களென்றார்.

௩௧ ஆனால் ஏகூ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் நியாயப்பிரமாணத்திலே நடக்குந்தலைத் தன்முழு இருதயத்தாலுங் கைக்கொண்டதில்லை. இஸ்ரவேலைப்பாவஞ்செய்யப்பண்ணின எரோபெயாமின் பாவங்களையவன் விட்டு விலகாதேபோனான்.

௩௨ அந்நாட்களிலே கர்த்தர் இஸ்ரவேல் தேசத்தைக் குறுகிப்போகப்பண்ணினார். அதெப்படியென்றால் அசகேல் அவர்களை இஸ்ரவேலின் எல்லைகளிலெல்லாம் இடறடித்து, முறியடித்து,

௩௩ யோர்தானுக்குக் கிழக்கிசூரியவுதயத்தில் அற்நோனதிக்குச்சமீபமான அரோவேர்முதற்கொண்டிருக்கிற கிலெயாதிலும் பாசானிலுமுள்ள காத்தியர் ரூபேனியர் மனாசேமனுஷருடையதேசமாகிய முழுக்கிலெயாத்தையுமுறியடித்தான்.

௩௪ ஏகூவின்மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததனைத்தும் அவனுடைய எல்லா வல்லமையும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௩௫ ஏகூ தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைச் சமாரியாவில் அடக்கம்பண்ணினார்கள். அவன் ஸ்தலத்தில் அவன் குமாரனாகிய யோவாகாஸ் இராசாவானான்.

௩௬ ஏகூசமாரியாவிலே இஸ்ரவேலின் மேல் இராசரிகம்பண்ணினநாட்கள் இருபத்தெட்டுவருஷமானது.

## ௰௧. அதிகாரம்.

யோவாஸ்யூதாவின்மேல்இராசாவானது.

அகசியாவின் தாயாகிய அத்தாலியாள் தன்குமாரன் செத்துப்போனதைக்கண்டபோது எழும்பி, இராசவம்சமனைத்தையெல்லாஞ் சங்காரம்பண்ணினாள்.

௨ ஆனாலயோராமென்ற இராசாவின் குமாரத்தியும் அகசியாவின் சகோதரியுமாகிய யோசேபாள் கொன்றுபோடப்படுகிற இராசகுமாரரின் நடுவிலிருக்கிற அகசியாவின் குமாரனாகிய யோவாசைக்களவாயெடுத்தாள். அவன் கொல்லப்படாதபடியாய் அவனையும் அவன் தாதியையும் அத்தாலியாளுக்கு மறைவாயிருக்கிறசயனவீட்டிலொளித்தார்கள்.

௩ இவளோடேகூட அவன் ஆறுவருஷமாய்க் கர்த்தருடைய வீட்டிலே மறைக்கப்பட்டிருந்தான். அத்தாலியாளோ தேசத்தின்மேல் இராசரிகம்பண்ணினாள்.

௪ ஆனால் ஏழாம் வருஷத்திலே யோய்தா நூற்றுக்குச் சேர்வைக்காரரையுந் தலைவரையுஞ் சேவகரையும் அழைத்தனுப்பி அவர்களைத் தன்னண்டைக்குக் கர்த்தருடைய வீட்டிலே வரச்சொல்லி, அவர்களோடுடம்படிக்கைபண்ணி, அவர்களைக் கர்த்தருடைய வீட்டிலே ஆணையிடுவித்துக்கொண்டு, அவர்களுக்கு இராசாவின் குமாரனைக் காண்பித்து,

௫ அவர்களுக்குக் கற்பித்ததாவது, நீங்கள் செய்யவேண்டிய காரியமென்னவென்றால், உங்களில் முறையிருக்க ஓய்வுநாளில் வருகிறவர்களாகிய மூன்றத்தொருபங்கு இராசாவின் வீட்டைக் காவல்காப்பார்கள்.

௬ மூன்றத்தொருபங்கு சூர் என்னும் ஒலிமுகவாசலிலும் மூன்றத்தொருபங்கு சேவகருடைய காவலின் பிறகாலேயிருக்கிற ஒலிமுகவாசலிலுமிருந்து, வீட்டின் காவலைப் பத்திரமாய்க் காப்பார்கள்.

௭ இப்படியே ஓய்வுநாளில் முறைவிடுகிற இரண்டு பங்கானவர்களெல்லாரும் இராசாவினண்டையிலே கர்த்தருடைய வீட்டின் காவலைக் காப்பார்கள்.

௮ நீங்கள் அவரவர் தங்கள் ஆயுதங்களைக் கையிலே பிடித்தவர்களாய் இராசாவைச் சுற்றிலும் வரிசையாய் நின்றுகொண்டிருக்கவேண்டும்; வரிசைகளுக்குட்புகுகிறவன் கொலைபண்ணப்படக்கடவன். இராசா புறப்படுகிறபோதும் உட்பிரவேசிக்கிறபோதும் நீங்கள் அவரோடிருங்கள் என்றான்.

௯ ஆசாரியனாகிய யோய்தா கற்பித்தபடியெல்லாம் நூற்றுக்குச் சேர்வைக்காரர் செய்து, அவரவர் அவ்வாரத்தில் முறையிருக்கிறவர்களும் முறையிராதவர்களுமாகிய தங்கள் மனுஷரைக் கூட்டிக்கொண்டு, ஆசாரியனாகிய யோய்தாவண்டைக்கு வந்தார்கள்.

௰ ஆசாரியன் தாவீது இராசாவுக்கிருந்த கர்த்தரின் வீட்டிலுள்ள ஈட்டிகளையும் கேடகங்களையும் நூற்றுக்குச் சேர்வைக்காரருக்குக் கொடுத்தான்.

௰௧ சேவகர் அவரவர் தங்கள் ஆயுதங்களைப் பிடித்தவர்களாய் வீட்டின் வலதுபக்கந்துவக்கி அதின் இடதுபக்கமட்டும் பலிபீடத்திற்கெதிராகவும் வீட்டிற்கெதிராகவும் இராசாவைச் சுற்றிலும் நின்றார்கள்.

௰௨ அப்போது அவன் இராசாவின் குமாரனைப் புறப்படப்பண்ணிக் கிரீடத்தை அவன்மேல் வைத்துச் சாட்சியின் ஆகமத்தை அவனுக்குக் கொடுத்தான். இப்படி அவனை இராசாவாக்கி, அபிஷேகம்பண்ணிக் கைகொட்டி, இராசா வாழ்க என்றார்கள்.

அத்தாலியாளைக் கொன்றுபோட்டது.

௰௩ ஓடிவருகிற சனத்தின் சத்தத்தை அத்தாலியாள் கேட்டபோதோவெனில், அவள் கர்த்தருடைய வீட்டிற்குச் சனத்தண்டையில் வந்து,

௰௪ இதோ, இராசா முறைமையின்படியே தூணண்டையிலே நிற்கிறதையும் இராசாவண்டையில் நிற்கிற பிரபுக்களையும் எக்காளமூதுகிறவர்களையுந் தேசத்துச் சனமெல்லாஞ் சந்தோஷப்பட்டு எக்காளங்களையூதுகிறதையுங் காண்கையில், அத்தாலியாள் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, கலகம் கலகமென்று கூப்பிட்டாள்.

௰௫ ஆனால் ஆசாரியனாகிய யோய்தா இராணுவத்தின் தலைவராகிய நூற்றுக்குச் சேர்வைக்காரருக்குக் கற்பனைதந்து அவளை வரிசைகளுக்குப் புறம்பே கொண்டுபோங்கள். அவளைப் பின்செல்லுகிறவன் பட்டயத்தாலே சாகக்கடவனென்றான். ஏனென்றால் கர்த்தருடைய வீட்டிலே அவள் கொல்லப்படவொண்ணாதென்று ஆசாரியன் சொல்லியிருந்தான்.

௰௬ அவர்கள் அவளுக்கிடமுண்டாக்கினபோது, அவள் குதிரைகள் இராசாவின் வீட்டிற்குட்பிரவேசிக்கிற வழியிலே வந்தபின் அங்கே கொன்றுபோடப்பட்டாள்.

௰௭ அப்போது கர்த்தருடைய சனமாயிருக்கும்படிக்கு யோய்தா கர்த்தருக்கும் இராசாவுக்குஞ் சனத்திற்கும் பிற்பாடு இராசாவுக்குஞ் சனத்திற்கும் உடம்படிக்கைபண்ணினான்.

௰௮ பிற்பாடு தேசத்தின் சனமெல்லாம் பாகாலின் வீட்டிலே போய் அதையிடித்து அதின் பீடங்களையும் அதின் சுரூபங்களையும் நன்றாயுடைத்துப் பாகாலின் பூசாரியாகிய மாத்தானைப் பலிபீடங்களுக்கு முன்பாகக் கொன்றுபோட்டார்கள். ஆசாரியனோவென்றால் கர்த்தருடைய வீட்டை விசாரிக்கும் உத்தியோகங்களைத் திட்டப்படுத்தி,

௰௯ நூற்றுக்குச் சேர்வைக்காரரையுந் தலைவரையுஞ் சேவகரையுந் தேசத்தின்

சனமனைத்தையுங் கூட்டி, இராசாவைக் கர்த்தருடைய வீட்டிலிருந்திறங்கப்பண்ணி, அவனைச் சேவகரின் வாசல் வழியாய் இராச அரண்மனைக்கழைத்துக்கொண்டுபோனார்கள் அங்கேயவனிராசாக்களுடைய ஆசனத்தின்மேலுட்கார்ந்தான்.

௨௰ தேசத்து சனமெல்லாமகிழ்ந்து பட்டணம் அமரிக்கைப்பட்டது. அத்தாலியாளையோவென்றால் இராசாவின் வீட்டண்டையிற் பட்டயத்தாற் கொன்றுபோட்டார்கள்.

௨௧ யோவாசு இராசாவாகிறபோது ஏழுவயதாயிருந்தான்.

## ௰௨. அதிகாரம்.

யூதாவின் இராசாவாகிய யோவாசின் நடபடிகள்.

ஏகூவின் ஏழாம் வருஷத்தில் யோவாசு இராசாவாகி, எருசலேமிலே நாற்பது வருஷம் இராசரிய பாரம்பண்ணினான். பெயர்செபா ஊராளாகிய அவனுடைய தாயின்பேர் சிபியாள்.

௨ ஆசாரியனாகிய யோய்தா யோவாசைப் போதகம்பண்ணின நாளெல்லாம் அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௩ மேடைகளைமாத்திரம் அகற்றாதே போனார்கள். சனம் இன்னம் மேடைகள் மேலே பலியிட்டுத் தூபங்காட்டுகிறதாயிருந்தது.

௪ யோவாசு ஆசாரியரோடே சொன்னதாவது, பரிசுத்தம்பண்ணப்பட்ட காரியங்களாலே கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்படுமெல்லாத் திரவியத்தையும் இலக்கத்திற்குட்படுகிறவர்களின் திரவியத்தையும் மதிக்கப்பட்ட ஆத்துமாக்களின் திரவியத்தையுங் கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவர அவரவர் தன் மனதிலே நியமித்திருக்குமெல்லாத் திரவியத்தையும்,

௫ ஆசாரியர்கள் அவரவர் தங்களுக்கு அறிமுகமானவர்கள் கையில் வாங்கிக்கொண்டு வீட்டில் எங்கெங்கே பழுது காணுகிறதோ, அங்கேயெல்லாம் வீட்டைப் பழுதுபார்க்கக்கடவர்களென்றான்.

௬ ஆனால் இராசாவாகிய யோவாசின் இருபத்துமூன்றாம் வருஷமட்டும் ஆசாரியர்கள் வீட்டைப் பழுதுபாராதேபோனபடியினாலே,

௭ இராசாவாகிய யோவாசு ஆசாரியனாகிய யோய்தாவையும் மற்ற ஆசாரியர்களையும் அழைப்பித்து அவர்களுடனே நீங்கள் வீட்டைப் பழுதுபாராதேபோனதென்ன? இப்போதும் நீங்கள் உங்களுக்கறிமுகமானவர்கள் கையிலே திரவியத்தை வாங்கிவைத்திராமல் அதை வீட்டைப் பழுதுபார்க்கிறதற்காகக் கொடுங்களென்றான்.

௮ அப்பொழுது ஆசாரியர்கள் சனத்தினின் கையிலே தாங்கள் திரவியத்தை வாங்கிக்கொள்ளாமலும் வீட்டைப் பழுதுபாராமலுமிருக்கிறதற்குச் சம்மதித்தார்கள்.

௯ ஆசாரியனாகிய யோய்தாவோவென்னில், ஒரு பெட்டியை வாங்கி அதின் மூடியிலே ஒரு துவாரமிட்டு அதைப் பலிபீடத்தண்டையிலே கர்த்தருடைய வீட்டிற்குச் சனங்கள் உட்பிரவேசிக்கும் வலதுபக்கத்தில் வைத்தான். அதிலே வாசற்படியைக் காக்கிற ஆசாரியர்கள் கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட திரவியத்தையெல்லாம் போட்டார்கள்.

௰ பெட்டியிலே அநேகந் திரவியம் உண்டென்று அவர்கள் காணும்போதோவென்னில், இராசாவின் சம்பிரதியும் பிரதான ஆசாரியனும் எறிவந்து, கர்த்தருடைய வீட்டிலே கண்டுபிடித்த திரவியத்தை முடிப்புக்கட்டியெண்ணி,

௰௧ எண்ணின திரவியத்தைக் கர்த்தருடைய வீட்டின் விசாரிப்புக்காரராகிய வேலைக்காரர் கையிலே கொடுப்பார்கள். இவர்களோ கர்த்தருடைய வீட்டைப் பழுது பார்க்கிற தச்சருக்குஞ் சிற்பாசாரிகளுக்கும்,

௰௨ கொல்லத்துக்காரருக்குங் கற்றச்சருக்குங் கர்த்தருடைய வீட்டைப் பழுது பார்க்கத்தேவையான மரங்களையும் வெட்டின கல்லுகளையுங் கொள்ளுகிறதற்கும் வீட்டைப் பழுதுபார்க்கிறதற்குச் செல்லும் எல்லாச்செலவுகளுக்குங் கொடுப்பார்கள்.

௰௩ ஆனால் கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட திரவியத்தினாலே வெள்ளிக்கிண்ணிகளுங் கீதவாத்தியங்களுங் கலங்களும் எக்காளங்களும் பொன்னும் வெள்ளியுமான எந்தமுட்டுகளும் பண்ணப்படாமல்,

௰௪ கர்த்தருடைய வீட்டைப் பழுது பார்க்கும்படிக்கு வேலைசெய்கிறவர்களுக்கு அத்தத் திரவியத்தைக் கொடுத்தார்கள்.

௰௫ வேலைசெய்கிறவர்களுக்குக் கொடுக்கும்படிக்குத் திரவியத்தை ஒப்புவிக்கப்பட்ட மனுஷர் கையிலே கணக்குக் கேளாதிருந்தார்கள். ஏனெனில் இவர்கள் உண்மையாய் அதை நடப்பித்தார்கள்.

௰௬ குற்றம்போக்கும் பலிகளின் திரவியமும் பாவம்போக்கும் பலிகளின் திரவியமுமோவென்றால், கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்பட்டதில்லை. அது ஆசாரியருடையது.

௰௭ அதற்குப்பிற்பாடு சீரியாவின் இராசாவாகிய அசகேல் எழும்பிவந்து, காத்தூரின்மேல் யுத்தம்பண்ணி, அதைப்பிடித்தான். அதின்பிறகு எருசலேமுக்கு விரோதமாயெதிர்ப்போக ஆசகேல் தன்முகத்தைத் திருப்பினான்.

௰௮ அப்போது யூதாவின் இராசாவாகிய யோவாசு தன் பிதாக்களாகிய யோசாத்தும் யோராமும் அகசியாவுமென்ற யூதாவின் இராசாக்கள் பரிசுத்தம்பண்ணிவைத்தவெல்லாவற்றையும் தான் பரிசுத்தம்பண்ணிவைத்ததையுங் கர்த்தருடைய வீட்டிலும் இராசாவின்வீட்டிலுமுள்ள பொக்கிஷங்களில் அகப்பட்டசகல பொன்னையுமெடுத்துச் சீரியாவின் இராசாவாகிய ஆசகேலுக்கனுப்பினான். அப்போது இவன் எருசலேமைவிட்டுப் புறப்பட்டுப் போனான்.

௰௯ யோவாசின் மற்றவர்த்தமானங்களும் அவன்செய்ததெல்லாமும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௨௰ அவன் ஊழியக்காரர் எழும்பி ஒப்பந்தம்பண்ணிக்கொண்டு, சில்லாவுக்கிறங்கிப்போகிற வழியிலிருக்கிற மில்லோவீட்டிலே யோவாசைக்கொன்றுபோட்டார்கள்.

௨௧ சிமேயாத்தின்குமாரன் யோசகாரும் சோமேரின்குமாரன் யோசபாத்துமென்ற அவனுடைய ஊழியக்காரர் அவனைக் கொன்றவர்கள். செத்துப்போன அவனைத் தாவீதின்பட்டணத்தில் அவன்பிதாக்களிடத்திலேயடக்கம்பண்ணினார்கள். அவன்குமாரனாகிய அமத்சியா அவன் ஸ்தலத்திலே இராசாவானான்.

## ௰௩. அதிகாரம்.

யோவாகாசு யோவாசு என்ற இஸ்ரவேலுடைய இராசாக்களின் நடபடிகள்.

௧ அகசியாவென்ற யூதாவுடைய இராசாவின்குமாரனாகிய யோவாசுடைய இருபத்துமூன்றும் வருஷத்திலே ஏகூவின்குமாரனாகிய யோவாகாசு இஸ்ரவேலின்மேலே சமாரியாவிலே பதினேழுவருஷமாய இராசரீகபாரம்பண்ணி,

௨ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்து, இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின்குமாரனாகிய எரோபெயாமின்பாவங்களைப் பின்பற்றிநடந்தான். அவைகளைவிட்டு அவன் விலகினதில்லை.

௩ ஆகையாற் கர்த்தருக்கு இஸ்ரவேலின்மேலே கோபமூண்டு அவர்களைச் சீரியாவின் இராசாவாகிய அசகேலின்கையிலும் அசகேலின்குமாரனாகிய பெனாதாத்தின்கையிலும் அந்த எல்லா நாட்களிலும் ஒப்புக்கொடுத்தார்.

௪ இன்றல யோவாகாசு கர்த்தருடைய சமுகத்தை நோக்கிவருந்தினான். ஆகையாற் கர்த்தர் அவனைக்கேட்டார். ஏனென்றால் சீரியாவின் இராசா இஸ்ரவேலையொடுக்கினதினாலே அவர்கள் ஒடுங்கிப்போகிறதைப்பார்த்தார்.

௫ கர்த்தர் இஸ்ரவேலுக்கு ஒரு இரட்சகனைக் கொடுத்ததினாலே அவர்கள் சீரியருடையகையின்கீழிருந்து நீங்கலானார்கள். ஆனதுகொண்டு இஸ்ரவேல்புத்திரர் முன்போலத் தங்கள் கூடாரங்களிலே குடியிருந்தார்கள்.

௬ ஆகிலும் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின எரோபெயாமின் வீட்டாரின் பாவங்களை யவர்கள் விட்டுவிலகாமல் அதிலே நடந்தார்கள். சமாரியாவிலிருந்த தோப்பும் நிலையாயிருந்துபோயிற்று.

௭ யோவாகாசுக்குச் சீரியாவின் இராசா ஐம்பது குதிரைக்காரரையும் பத்து இரதங்களையும் பதினாயிரங்காலாட்களையு மே யல்லாமல் வேறொன்றும் மீதியாக வைக்காதிருந்தான். ஏனெனில் அவன் அவர்களை யழித்துப்போரடிக்குந்தவிடு போலாக்கியிருந்தான்.

௮ யோவாகாசின் மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததெல்லாமும் அவனுடைய வல்லமையும் இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௯ யோவாகாசு தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைச் சமாரியாவிலேயடக்கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய யோவாசு அவன் ஸ்தலத்திலே இராசாவானான்.

௰ யூதாவின் இராசாவாகிய யோவாசுடைய முப்பத்தேழாம் வருஷந்துவக்கி யோவாகாசின் குமாரனாகிய யோவாசு இஸ்ரவேலின்மேலே சமாரியாவிலே பதினாறுவருஷமாய இராசரீகபாரம்பண்ணி

௰௧ கர்த்தரின்பார்வைக்குப பொலலாபபானதைசசெயதான. இஸ்ரவேலைபபாவஞ்செயயப்பணணின நேபாதின்குமாரனாகிய எரோபெயாமின பாவங்களைவிலககாமல அவைகளிலெலலாம நடநதான.

௰௨ யோவாசின மறறவர்த்தமானங்களும அவனசெயத யாவையும, அவன யூதாவின இராசாவாகிய அமத்சியாவோடு யுததமபணணின அவன வலலமையும இஸரவேலுடைய இராசாககளின நாளாகமப் புஸ்தகததிலல்லோ எழுதியிருககினறது.

௰௩ யோவாசு தனபிதாககளோடே நிததிரையடைநதபின் எரோபெயாம அவன ஆசனததிலுடகார்நதான. யோவாசோவெனிற் சமாரியாவில இஸரவேலின இராசாககளிடததிலே யடககமபணணபபடடான.

௰௪ அவனநாட்களில எலிசா தானமரணமடையபபோகிற வியாதியோடேகிடநதான. அபபோது இஸரவேலின இராசாவாகிய யோவாசு அவனணடைககிறங்கிபபோய அவனமேலவிழுநது, அழுது, எனதகபபனே! எனதகபபனே! இஸரவேலுககு இரதஙகளுங குதிரைககாரருமாயிருநதவனே! எனறான.

௰௫ எலிசா அவனுடனே, விலலையும அமபுகளையும பிடியுமெனறான. அபபடியே விலலையும அமபையுமபிடிததுககொணடான.

௰௬ அபபோது அவன இஸரவேலின இராசாவுடனே, உமமுடையகையைவிலலினமேல வையுமெனறான. அவன தனகையை வைததபோது, எலிசா தனகைகளை இராசாவுடைய கைகளமேலவைதது,

௰௭ பிறபாடு, கிழககேயிருககிற பலகணியைததிறவுமெனறான. அவன அதைத திறநதபோது எலிசா, எயயுமெனறான. இவன எய்தபோது அவன, அதுகர்ததருடைய இரட்சிபபின அமபும சீரியருககு விரோதமான இரட்சிபபின அமபுமானது. நீர் ஆபேககிலே சீரியரைததீர் முறியடிபபீரெனறுசொலலி,

௰௮ அமபுகளைப பிடியுமெனறான. அவைகளைபபிடிததான. அபபோது அவன இஸரவேலின இராசாவுடனே; தரையிலே யடியுமெனறான. அவன மூனறுதரமடிததுநினறான.

௰௯ அபபோது பராபரனுடையமனுஷன அவனமேலே கடுஙகோபமாகி, நீர் ஐநதாறுவிசை யடிததீரானால, அபபோது சீரியரைததீர்முறியடிபபீர். இபபோது சீரியரை மூனறுவிசை முறியடிபபீரெனறான.

௨௰ எலிசா மரணமடைநதபின் அவனையடககமபணணினார்கள. மறுவருஷத்திலே மோவாபியரின தணடுகளதேசததிலேவநதது.

௨௰௧ அபபோது சமபவிதத தேதெனறால, அவர்கள ஒருமனுஷனை யடககமபணணபபோகையில இதோ, அநதத்தணடைககணடு, அநதமனுஷனை எலிசாவின கலலறையிற் போடடார்கள. அநதமனுஷன அதிலேவிழுநது, எலிசாவின எலுமபுகளின மேலே படட போதோவெனில, அவன உயிரடைநது தனகாலகளையூனறியெழுநதிருநதான.

௨௰௨ யோவாகாசின நாட்களிலெலலாஞ் சீரியாவின இராசாவாகிய ஆசகேல இஸரவேலை யிறுகபபிடிததிருநதான.

௨௰௩ ஆனாற் கர்ததர் அவர்களுககிரங்கி, ததமககு ஆபிரகாம, ஈசாககு, யாககோபெனறவர்களோடிருநத உடமபடிககையினிமிததமாக அவர்களை யழிககச சிததமாயிராமலும அவர்களையிநதமடடுநதமமுடைய முகததைவிடடுத தளளாமலும, அவர்களமேல மனதிருகி யவர்களவசமாயததிருமபினார்.

௨௰௪ சீரியாவின இராசாவாகிய ஆசகேல செனறுபோய, அவனகுமாரனாகிய பெனனாதாத் அவன ஸதலததில இராசாவானபிறபாடு,

௨௰௫ யோவாகாசினகுமாரனாகிய யோவாசு ஆசகேல யுததமபணணித்தனதகபபனாகிய யோவாகாசினகையிலே பிடிததிருநத படடணஙகளைத திருமப அவன குமாரனாகிய பெனனாதாதினகையிலே பிடிததுககொணடான. மூனறுவிசையோவாசு அவனைமுறியடிதது இஸரவேலின படடணஙகளைத திருமபக் கடடிககொணடான.

## ௰௪. அதிகாரம்.

யூதாவின இராசாவாகிய அமத்சியாவின நடபடிகள.

இஸரவேலின இராசாவாகிய யோவாகாசினகுமாரன யோவாசுடைய இரணடாமவருஷததிலே யூதாவின இராசாவாகிய யோவாசின குமாரன அமத்சியா இராசாவானான.

௨ அவன இராசாவாகிறபோது இருபததைநதுவயதாயிருநது, எருசலேமிலே இருபததொனபது வருஷமாய இராச

யபார்மபணணினுன. எருசலேம பட்டணத்தாளான் அவன தாயினபேர் யொவாதா.

௩ அவன கர்த்தரின பார்வைககுசசெம்மையானதைசசெயதான. ஆனுல தனதகப்பனுகிய தாவீதைபபோ லலல. தனதகப்பனுகிய யோவாசுசெயதபடி யெலலாஞசெயதான.

௪ மேடைகளமாததிரம அகறறபபடடதிலலை. சனம இனனமமேடைகளினமேலே பலியிடடுத தூபங்காட்டிககொணடிருநதது.

௫ இராசசியபாரம அவனகையிலே திடபபடடபோது, அவனுடைய தகப்பனுகிய இராசாவைக கொனறுபோட்டதனனூழியககாரரைக கொனறு போட்டான.

௬ ஆனுற் பிதாககள, பிளளைகளினிமித்தங கொலையுண்கப படாமலும, பிளளைகள, பிதாககளினிமித்தங கொலையுண்கபபடாமலும, அவனவன தன்தன் பாவத்தினிமித்தங கொலையுணபானுக வெனறு மோசேயின நியாயபபிரமாணப புஸ்தகத்திலெழுதியிருககிறபடி கர்த்தர்கறபித்த பிரகாரமாகக கொலைசெயதவர்களின பிளளைகளையவன கொலலாதிருநதான.

௭ அவன உபபுபபளளத்தாககிலே ஏதோமியரிற் பதினுயிரமபேரை மடங்கடித்துச் சேலாவை யுத்தத்தாற் பிடிததது, அதறகு இநநாளவரைக்குமிருககிற யொக்தேயேலெனற பேரைததரிததான.

௮ அபபோது அமத்சியா ஏகூவினகுமாரனுகிய யோவாகாசினகுமாரன யோவாசெனற இஸ்ரவேலின இராசாவண்டைககுத தாதுபதிகளையனுபபி, நமமுடைய சாமாரத்தியததைப பார்பபோமவாவெனறுசொலலச்சொனனுன.

௯ ஆனுல இஸ்ரவேலின இராசாவாகியயோவாசு யூதாவின இராசாவாகிய அமத்சியாவுககுச சொலலியனுபபின தாவது, லீபனோனிலிருககிற முட்செடி லீபனோனிலிருககிற கேதுரு மரத்திற்கு உனகுமாரததியை எனகுமாரனுககுப பெணசாதியாகக்கொடுவெனறு சொலலச்சொலலிறறு. ஆனுல லீபனோனிலிருககிறகாட்டு மிருகங்கள முட்செடியினமேலோடி யதைமிதிததது.

௰ நீ ஏதோமியரைமுறியடிககவேயடிததினுல உனனிருதயம உனனை மேட்டிமையாககிறறு. நீ பெருமைபாராட்டி உனவீட்டிலேயிரு. நீயுமுனனோடுங கூட யூதாவும்விழும்படிககுப பொலலாபபை

தேடிககொளளுவானேனெனறு சொலலியனுபபினுன.

௰௧ ஆனுல அமத்சியாசெவிகொடாதே போனுன. ஆகையால இஸ்ரவேலின இராசாவாகிய யோவாசு எறிவநதான. யூதாவிலிருககிற பெத்சேமேசிலே அவனும யூதாவின இராசா அமத்சியாவுந தங்கள சாமாரத்தியததைப பார்ககிறபோதோ வெனில,

௰௨ யூதா இஸ்ரவேலுககு முனபாகமுறிநது அவரவர் தங்களகூடாரங் களுககோடிபபோனுர்கள.

௰௩ அகசியாவினகுமாரனுகிய யோவாசினகுமாரனன் அமத்சியாவெனற யூதாவின இராசாவையோ இஸ்ரவேலின இராசாவாகியயோவாசு பெத்சேமேசிலே பிடிதது எருசலேமுககுவநது எருசலேமின அலங்கத்திலே எபபிராயீமவாசலதொடங்கி கோடிவாசலமட்டும நானூறுமுழநீளம இடிததுபபோட்டு,

௰௪ கர்த்தருடையவீட்டிலும இராசாவுடையவீட்டுபபொககிஷங்களிலும அகபபட்ட சகலபொனனையும வெளளியையுஞ சகலமுட்டுகளையும கிரி இருபபவர்களையும பிடிததுககொணடுபோயச் சமாரியாவுககுத திருமபினுன

௰௫ யோவாசுசெயத மறற வர்த்தமானங்களும அவனுடையவலலமையும அவன யூதாவின இராசாவாகிய அமத்சியாவோடுயுததமபணணினசெயதியும இஸ்ரவேல இராசாககளின நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருககினறது.

௰௬ யோவாசு தன பிதாககளோடே நித்திரையடைநதபின சமாரியாவில இஸ்ரவேலின இராசாககளணடையிலே அடககமபணணபபட்டான. அவன குமாரனுகிய எரோபெயாம அவன ஸ்தலத்தில இராசாவானுன.

௰௭ இஸ்ரவேலின இராசாவாகிய யோவாகாசினகுமாரன யோவாசுமரணமடைநதபின யூதாவின இராசாவாகிய யோவாசினகுமாரன அமத்சியா பதினைநதுவருஷம உயிரோடிருநதான.

௰௮ அமத்சியாவினமறறவர்த்தமானங்கள யூதாவுடைய இராசாககளின நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருககினறது

௰௯ எருசலேமிலே அவனுககுவிரோதமாக ஒபபநதம பணணினுர்கள. அபபோது லாகீசுககோடிபபோனுன. ஆனுல அவர்கள அவனபிறகாலே லாகீசுககு மனுஷரையனுபபி அஙகேயவனைக கொனறுபோட்டு,

௨௰ குதிரைகள்மேல் அவனையெடுத்து வந்தார்கள். அவன் எருசலேமிலிருக்கிற தாவீதின்பட்டணத்திலே தன்பிதாக்களண்டையிலே யடக்கம்பண்ணப்பட்டான்.

௨௧ யூதசனமெல்லாம் பதினாறுவயதுள்ள அசரியாவை யழைத்துவந்து அவனை யவன் தகப்பனாகிய அமச்சியாவின் ஸ்தலத்திலே இராசாவாக்கினார்கள்.

௨௨ இராசா தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபிறபாடு இவன் ஏலாத்தைக் கட்டியதைத் திரும்ப யூதாவின் வசமாக்கிக்கொண்டான்.

இஸ்ரவேலின் இராசாவாகிய இரண்டாம் எரொபெயாமின் நடபடிகள்.

௨௩ யூதாவின் இராசாவாகிய யோவாசின் குமாரனான அமச்சியாவின் பதினைந்தாம் வருஷத்திலே இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசின் குமாரனான எரொபெயாம் சமரியாவிலே நாற்பத்தொருவருஷமாய் அரசாண்டு,

௨௪ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனான எரொபெயாமின் சகல பாவங்களையும் அவன் விட்டுவிலகினதில்லை.

௨௫ காத்தேப்பேர் ஊராகிய அமித்தாயென்ற தீர்க்கதரிசியின் குமாரனான யோனாவென்ற தமதூழியக்காரனைக்கொண்டு இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லியிருந்த வார்த்தையின்படியே அவன் ஆமாத்தின் எல்லை முதற்கொண்டு சமனான பூமியின் கடல்மட்டுமுள்ள இஸ்ரவேலின் எல்லைகளைத் திரும்பச்சேர்த்துக்கொண்டான்.

௨௬ ஏனெனில் இஸ்ரவேலின் சிறுமை தனமெத்தக் கடுமையென்றும் அடைக்கப்பட்டவனுமில்லை. விடுதலையானவனுமில்லை. இஸ்ரவேலுக்கொத்தாசை செய்கிறவனுமில்லையென்றுங் கர்த்தர் பார்த்தார்.

௨௭ இஸ்ரவேலின்பேரை வானத்தின் கீழிருந்து குலைப்பேனென்று கர்த்தர் சொல்லாதிருந்து யோவாசின் குமாரனாகிய எரொபெயாமினைக்கொண்டு அவர்களை யிரட்சித்தார்.

௨௮ எரொபெயாமின் மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததெல்லாமும் அவனுடைய யுத்தம்பண்ணி யூதாவுக்கிருந்த தமஸ்குவையும் ஆமாத்தையும் இஸ்ரவேலுக்காகத் திரும்பச் சேர்த்துக்கொண்ட அவனுடைய வல்லமையும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௨௯ எரொபெயாம் இஸ்ரவேலின் இராசாக்களாகிய தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன் குமாரனாகிய சகரியா அவன் ஸ்தலத்திலே இராசாவானான்.

## ௰௫. அதிகாரம்.

யூதாவின் இராசாவாகிய அசரியாவின் நடபடிகள்.

இஸ்ரவேலின் இராசாவாகிய எரொபெயாமின் இருபத்தேழாம் வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய அமச்சியாவின் குமாரன் அசரியா இராசாவானான்.

௨ அவன் இராசாவாகிறபோது பதினாறுவயதாயிருந்து ஐம்பத்திரண்டுவருஷமாய் எருசலேமிலே அரசாண்டான். எருசலேம் பட்டணத்தாளாள் அவன் தாயின்பேர் எகோலியாள்.

௩ அவன் தன் தகப்பனாகிய அமச்சியா செய்தபடியெல்லாங் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௪ மேடைகள்மாத்திரம் அகற்றப்படவில்லை. சனம் இன்னம் மேடைகள்மேலே பலியிட்டுத் தூபங்காட்டுகிறதாயிருந்தது.

௫ கர்த்தர் இந்த இராசாவைவாதித்ததினாலே அவன் தன் மரணநாள்மட்டுங் குஷ்டரோகியாயிருந்து தனித்த வீட்டிலே வாசம்பண்ணினான். இராசாவின் குமாரனாகிய யோதாமோவெனில் அரண்மனை விசாரிப்புக்காரனாயிருந்து தேசத்தின் சனத்தை நியாயம்விசாரித்தான்.

௬ அசரியாவின் மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததெல்லாமும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௭ அசரியா தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைத் தாவீதின் பட்டணத்திலே அவன் பிதாக்களண்டையிலே யடக்கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய யோதாம் அவன் ஸ்தலத்திலே இராசாவானான்.

சகரியா, சல்லூம், மெனாகேம், பெக்காகியா, பெக்காவென்ற இஸ்ரவேல் இராசாக்களின் நடபடிகள்.

௮ யூதாவின் இராசாவாகிய அசரியாவின் முப்பத்தெட்டாம் வருஷத்திலே எரொபெயாமின் குமாரனாகிய சகரியா இ

ஸ்ரவேலின்மேலே சமாரியாவிலே ஆறுமாதமாய் இராசரியபாரம்பண்ணி,

௯ தன்பிதாக்கள் செய்ததுபோலே கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின்குமாரனாகிய எரோபெயாமின் பாவங்களை யவன் விட்டுவிலகினதில்லை.

௰ யாபேசின் குமாரனாகிய சல்லூம் அவனுக்கு விரோதமாகப் பந்துகட்டுப்பண்ணி, சனத்தின்முன்பாக அவனை வெட்டிக்கொன்றுபோட்டு அவன்ஸ்தலத்தில் இராசாவானான்.

௰௧ சகரியாவின் மற்றவர்த்தமானங்கள் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௰௨ உன்குமாரர் நாலாந்தலைமுறைமட்டும் இஸ்ரவேலுடைய ஆசனத்தின்மேலிருக்கக்கடவர்களென்று கர்த்தர் யேகூவோடே சொன்ன வார்த்தையிதுதான். அப்படியேயாயிற்று.

௰௩ யூதாவின் இராசாவாகிய உசியாவின் முப்பத்தொன்பதாம் வருஷத்தில் யாபேசின்குமாரனாகிய சல்லூம் இராசாவாகிச் சமாரியாவிலொருமாதம் அரசாண்டான்.

௰௪ அப்பொழுது காதியின் குமாரனாகிய மெனாகேம் திர்சாவிலிருந்து சமாரியாவுக்கேறிவந்து, யாபேசின்குமாரனாகிய சல்லூமைச் சமாரியாவிலே வெட்டிக்கொன்றுபோட்டு அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௰௫ சல்லூமின் மற்றவர்த்தமானங்களும் அவனுடைய ஒப்பந்தமும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௰௬ அப்பொழுது மெனாகேம் திப்சாபட்டணத்தையும் அதிலிருக்கிறதனைத்தையும், திர்சாவைத் துவக்கிப்போகிற அதின் எல்லைகளையும் அவர்கள் தனக்குத் திறந்திலலையென்று இடறடித்து, அவர்களை வெட்டி, அவர்களுடைய கர்ப்பவதிகளையெல்லாம் பீறினான்.

௰௭ யூதாவின் இராசாவாகிய அசரியாவின் முப்பத்தொன்பதாம் வருஷந்துவக்கிக் காதியின் குமாரனாகிய மெனாகேம் இஸ்ரவேல்மேலே சமாரியாவிலே பத்துவருஷமாய் இராசரியபாரம்பண்ணி, அவன் தன் நாட்களிலெல்லாங் கர்த்தரின்பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௰௮ இஸ்ரவேலைப்பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமின் பாவங்களை விட்டு விலகாதிருந்தான்.

௰௯ அசூரின் இராசாவாகிய பூல், தேசத்திற்கு விரோதமாய்வந்தான். அப்பொழுது பூலின்கைகள் தன்னோடிருக்கிறதற்கும் இராச்சியபாரத்தையவன் தன்கையிற் பலப்படுத்துகிறதற்கும், மெனாகேம் அவனுக்கு ஆயிரந் தாலந்து வெள்ளியைக் கொடுத்தான்.

௨௰ இந்தத்திரவியத்தை அசூரின் இராசாவுக்குக்கொடுக்க, மெனாகேம் இஸ்ரவேலிற் பலத்திருக்கிற அவ்வவர்கையிலும், ஒவ்வொருவனைக்கொண்டு ஐம்பது வெள்ளிச்சேக்கலாகத் தண்டினான். அப்படியே அசூரின் இராசா அங்கே தேசத்திலே தரிக்காமல், திரும்பப்போனான்.

௨௰௧ மெனாகேமின் மற்றவர்த்தமானங்களும் அவன்செய்ததனைத்தும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௨௰௨ மெனாகேம் தன்பிதாக்களோடு நித்திரையடைந்தபின் அவன் குமாரனாகிய பெக்காகியா அவன்ஸ்தலத்தில் இராசாவானான்.

௨௰௩ யூதாவின் இராசாவாகிய அசரியாவின் ஐம்பதாம்வருஷந்துவக்கி மெனாகேமின் குமாரனாகிய பெக்காகியா இஸ்ரவேலின்மேலே சமாரியாவில் இரண்டுவருஷமாய் இராசரியபாரம்பண்ணி,

௨௰௪ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்தான். அவன் இஸ்ரவேலைப்பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின்குமாரனாகிய எரோபெயாமின் பாவங்களை விட்டுவிலகினதில்லை.

௨௰௫ ஆனால் ரொமலியாவின் குமாரனாகிய பெக்கா என்ற அவனுடைய சேர்வைக்காரன் அவனுக்குவிரோதமாய்ப் பந்துக்கட்டுப்பண்ணிக் கிலெயாத் புத்திரரில் ஐம்பதுபேரைக் கூட்டிக்கொண்டு, அவனையும் அர்கோபையும் அரியேயையும் இராசாவின் வீடாகிய அரண்மனையிலே சமாரியாவில் வெட்டிக் கொன்றுபோட்டு, அவன்ஸ்தலத்தில் இராசாவானான்.

௨௰௬ பெக்காகியாவின் மற்றவர்த்தமானங்களும் அவன்செய்த தனைத்தும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௨௰௭ யூதாவின் இராசாவாகிய அசரியாவின் ஐம்பத்திரண்டாம் வருஷந் துவக்கி

ரெமலியாவின் குமாரனாகிய பெக்கா இஸ்ரவேலின்மேல் சமாரியாவில் இருபது வருஷமாய் இராச்சியபாரம்பண்ணி,

௨௮ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமின் பாவங்களை யவன் விட்டுவிலகினதில்லை.

௨௯ இஸ்ரவேலின் இராசாவாகிய பெக்காவின் நாட்களில் அசூரின் இராசாவாகிய திகிலாத்பிலேசேர்வந்து, ஈயோனையும் பெத்மாகக்காவென்ற ஆபேலையும் யனோவாகையுங் கேதேசையும் ஆத்சோரையுங் கிலெயாதையுங் கலிலேயாவாகிய நப்தலி தேசமனைத்தையும் பிடித்துக் குடிகளை அசூரியாவுக்குக் கொண்டுபோனான்.

௩௰ ஆனால் ஏலாவின் குமாரனாகிய ஓசேயா ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணி, அவனை உசீயாவின் குமாரனாகிய யோதாமின் இருபதாம் வருஷத்தில் வெட்டிக்கொன்றுபோட்டு, அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௩௧ பெக்காவின் மற்ற வர்த்தமானங்களும் அவன் செய்த யாவும், இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

## யூதாவின் இராசாவாகிய யோதாமின் நடபடி.

௩௨ இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலியாவின் குமாரன் பெக்காவின் இரண்டாம் வருஷத்தில் யூதாவின் இராசாவாகிய உசீயாவின் குமாரனாகிய யோதாம் இராசாவானான்.

௩௩ அவன் இராசாவாகிறபோது, இருபத்தைந்து வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறு வருஷம் அரசாண்டான். சாதோக்கின் குமாரத்தியாகிய அவன் தாயின் பேர் எருசாள்.

௩௪ அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். தன் தகப்பனாகிய உசீயா செய்தபடியெல்லாம் செய்தான்.

௩௫ மேடைகள் மாத்திரம் அகற்றப்படவில்லை. சனம் இன்னம் மேடைகளின் மேலே பலியிட்டுத் தூபங்காட்டுகிறதாயிருந்தது. இவன் கர்த்தருடைய வீட்டின் உயர்ந்த வாசலைக் கட்டினான்.

௩௬ யோதாமின் மற்ற வர்த்தமானங்களும் அவன் செய்த யாவும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௩௭ அந்நாட்களிலே கர்த்தர் சீரியாவின் இராசாவாகிய ரேத்சீனையும் ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவையும் யூதாவில் அனுப்பத்துவக்கினார்.

௩௮ யோதாம் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன் தன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்டையில் அடக்கம்பண்ணப்பட்டான். அவன் குமாரனாகிய ஆகாஸ் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

# ௰௬. அதிகாரம்.

## யூதாவுடைய இராசாவாகிய ஆகாசின் நடபடிகள்.

ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவின் பதினேழாம் வருஷத்தில் யூதாவின் இராசாவாகிய யோதாமின் குமாரன் ஆகாஸ் இராசாவானான்.

௨ ஆகாஸ் இராசாவாகிறபோது இருபது வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறுவருஷம் அரசாண்டான். ஆனால் அவன் தன் தகப்பனாகிய தாவீதைப் போல் தன் தேவனாகிய கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்யாமல்,

௩ இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலே நடந்து, கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே தன் குமாரனை முதலாய் அக்கினியை மிதிக்கப்பண்ணினான்.

௪ மேடைகளிலும் மேடுகளின்மேலும் பச்சையான சகல மரத்தின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டுவான்.

௫ அப்பொழுது சீரியாவின் இராசாவாகிய ரேத்சீனும் இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலியாவின் குமாரன் பெக்காவும் எருசலேமின்மேல் யுத்தம்பண்ண ஏறிவந்து, ஆகாசை முற்றிக்கைபோட்டார்கள். ஆனால் அதைப்பிடிக்க மாட்டாதே போனார்கள்.

௬ அக்காலத்திலே சீரியாவின் இராசாவாகிய ரேத்சீன் ஏலாத்தைத் திரும்பச் சீரியாவோடே சேர்த்துக்கொண்டு, யூதரை ஏலாத்திலிருந்து துரத்தினான். சீரியர் ஏலாத்திற்கு வந்து, இந்நாள்வரைக்கும் அவ்விடத்திலே குடியாயிருந்தார்கள்.

௭ ஆகாஸோவென்றால் அசூரின் இராசாவாகிய திகிலாத்பிலேசேரண்டைக்குத் தூதுபதிகளையனுப்பி, நான் உமதடியானும் உமதுடைய குமாரனுமாயிருக்

கிறேன். நீர் ஏறிவந்து, எனக்கு விரோதமாயெழும்பின சிரியாவுடைய இராசாவினகைக்கும் இஸ்ரவேல இராசாவினகைக்கும என்னை நீங்கலாக்கிவிடுமென்றுசொல்லச்சொல்லி,

௮ கர்த்தருடைய வீட்டிலும் இராசாவின வீட்டுப்பொக்கிஷங்களிலும அகப்பட்ட வெள்ளியையும பொன்னையும எடுத்து, அசூரின இராசாவுக்குக் காணிக்கையாக அனுப்பினான.

௯ அசூரின இராசா அவனுக்குச்செவிகொடுத்துத் தமஸ்குவுக்கேறிப்போய, அதைப்பிடித்து, அதின குடிகளைக்கீர்ப்பட்டணத்திற்குச சிறைப்பிடித்துப்போய ரேத்சினைக கொன்றுபோட்டான.

௰ அப்போது இராசாவாகிய ஆகாஸ தமஸ்குவிலிருக்கிற அசூரின இராசாவாகிய திகிலாத்பிலேசேருக்கெதிர்கொண்டுபோய்த் தமஸ்குவிலிருக்கிறபலிபீடத்தைக கண்டான. அப்போது இராசாவாகிய ஆகாஸ அந்தப்பலிபீடத்தின சாயலையும அதினுடைய சகலவேலைக்கொத்த அதின மாதிரியையும ஆசாரியனாகிய உரீயாவுக்கனுப்பினான.

௰௧ அப்போது இராசாவாகிய ஆகாஸ தமஸ்குவிலிருந்து வருகிறதற்குள் ஆசாரியனாகிய உரீயா அப்படிக்கொத்த பலிபீடத்தைக்கட்டி, இராசாவாகிய ஆகாஸ தமஸ்குவிலிருந்து அனுப்பின கட்டளையின்படியெல்லாஞ்செய்தான,

௰௨ இராசா தமஸ்குவிலிருந்து வந்தபோது அவன அந்தப்பலிபீடத்தைப்பார்த்து அந்தப்பலிபீடத்தண்டை சேர்ந்து அதினமேலேபலியிட்டு,

௰௩ தனனுடைய சர்வாங்கத்தகன பலியையுந் தனகாணிக்கையையும கொளுத்தித்தன ஊற்றுதலையூற்றித் தனக்கிருக்கிற சமாதானபலிகளின இரத்தத்தையந்தப் பலிபீடத்தினமேலே தெளித்தான.

௰௪ கர்த்தரினசன்னிதிக்குமுன்பாக விருந்தவெண்கலப்பலிபீடத்தையோவென்றால அவன தனனுடைய பலிபீடத்திற்குங் கர்த்தரினவீட்டுக்கும நடுவேவிட்டின்முகப்பிலிருந தெடுத்ததைத் தனனுடையபலிபீடத்திற்குவடபுறமாய வைத்தான.

௰௫ இராசாவாகிய ஆகாஸ ஆசாரியனாகிய உரீயாவுக்குக் கற்பித்ததாவது, இந்தப்பெரிய பலிபீடத்தினமேல நீவிடியுங்காலத்துச் சர்வாங்கத்தகன பலியையும அந்திக்காணிக்கையையும, இராசாவின சர்வாங்கத்தகன பலியையும அவருடைய காணிக்கையையுந், தேசத்தினுடைய சகலசனத்தின சர்வாங்கத்தகன பலியையும அவர்கள காணிக்கையையும அவர்கள ஊற்றுதலகளையுங் கொளுத்தி யதினமேலே சர்வாங்கத்தகனங்களின சகல இரத்தத்தையும பலிகளினசகல இரத்தத்தையுந்தெளிப்பாயாக. அந்த வெண்கலப்பலிபீடமோவென்றால நானகேள்விகேட்கிறதற்கெனக்காகுமென்றான.

௰௬ இராசாவாகிய ஆகாஸ கற்பித்தபடியெல்லாம ஆசாரியனாகிய உரீயாசெய்தான.

௰௭ பின்னையும இராசாவாகிய ஆகாஸ சித்திரங்களின சவுக்கைகளை யறுத்துப்போட்டு அவைகளின்மேலிருந்த கொப்பரைகளையெடுத்துக் கடல்தொட்டியைக் கீழ்நிற்கிற வெண்கல எருதுகளமேலிருந்திறக்கி யதைக்கல்லுகளின தளவரிசையிலேவைத்து,

௰௮ விட்டினருகேகட்டியிருந்த ஓய்வுநாளின தாழ்வாரத்தையும இராசா உட்பிரவேசிக்கிற புறத்தையையும அசூருடைய இராசாவினிமித்தமாகக் கர்த்தருடையவீட்டை விட்டு அப்புறப்படுத்தினான.

௰௯ ஆகாஸசெய்த மற்றவர்த்தமானங்கள யூதாவுடைய இராசாக்களின நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௨௰ ஆகாஸ தன பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன தாவீதினபட்டணத்திலே தன பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணப்பட்டான. அவன குமாரனாகிய எசேக்கியா அவனஸ்தலத்தில இராசாவானான.

## ௰௭. அதிகாரம்.

இஸ்ரவேலினபத்துக்கோத்திரங்கள அசூரியரின சிறையிருப்பிலேகொண்டுபோகப்பட்டது.

இயூதாவின இராசாவாகிய ஆகாஸினபன்னிரண்டாமவருஷத்திலேலாவின குமாரனாகிய ஓசேயா இஸ்ரவேலினமேல சமாரியாவிலொன்பது வருஷம இராச்சியபாரம்பண்ணி,

௨ கர்த்தரினபார்வைக்குப பொல்லாப்பானதைச்செய்தான. ஆனால தனக்குமுன்னிருந்த இஸ்ரவேலின இராசாக்களைப்போலல்ல.

௩ அவனுக்கு விரோதமாக அசூரின இராசாவாகிய சல்மனாசார் ஏறிவந்தான. அப்போது ஓசேயா அவனைசசேவிக்கிற

வருடி அவனுக்குக் காணிக்கையைச் செலுத்தினான்.

௪ ஆனால் ஓசேயா எகிப்துவின் இராசாவாகிய சோவண்டைக்குத் தானுபதிகளையனுப்பினதும் தனக்குவருஷந்தோறும் செய்ததுபோலக் காணிக்கையையனுப்பாதேபோனதுமான துரோகத்தை அசூரின் இராசா ஓசேயாவினிடத்திலேகண்டுபிடித்து அவனைமுத்திக்கைபோட்டுப்பிடித்துச் சிறைச்சாலையிலேகட்டிவைத்தான்.

௫ அதேதென்றால் அசூரின் இராசா தேசத்தின்மேலெல்லாம் ஏறிச்சமாரியாவுக்கும்வந்து, அதை மூன்று வருஷமாய் முற்றிக்கைபோட்டான்.

௬ ஓசேயாவின் ஒன்பதாம்வருஷத்தில் அசூரின் இராசா சமாரியாவைப்பிடித்து இஸ்ரவேலை அசூரியாவுக்குச் சிறைப்பிடித்துப்போய், அவர்களைக் கோசான் நதியோரமான ஆலாகிலும் ஆபோரிலும் மேதியரின்பட்டணங்களிலுங் குடியேற்றுவித்தான்.

௭ அதேதென்றால் எகிப்துவின் இராசாவாகிய பார்வோனுடையகையின் கீழிருந்த தங்களை எகிப்துதேசத்திலிருந்தேற்பண்ணின தங்கள்பராபரனாகிய கர்த்தருக்குவிரோதமாக இஸ்ரவேல் புத்திரர் பாவஞ்செய்து, வேறே தேவர்களுக்குப் பயந்துநடந்து,

௮ கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாகத் துரத்தினசாதிகளின் வழிபாடுகளிலும் இஸ்ரவேல் இராசாக்கள்பண்ணின வழிபாடுகளிலும் நடந்துகொண்டிருந்தார்கள்.

௯ செம்மையல்லாத காரியங்களுக்கு இஸ்ரவேல்புத்திரர் தங்கள்பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகப் போக்குச்சொல்லிக்கொண்டு, சாமக்காக்கிற கோபுரங்களைத்துவக்கி அரணான பட்டணங்களமட்டுமுள்ள தங்களெல்லா வூர்களிலுந் தங்களுக்கு மேடைகளைக்கட்டி,

௰ உயர்ந்தசகலமேட்டின்மேலும் பச்சையானசகலமரத்தின்கீழுந் தங்களுக்குச் சிலைகளையும் விக்கிரகத்தோப்புகளையும் நிறுத்தி,

௰௧ கர்த்தர் தங்களைவிட்டுக் குடிவிலக்கின சாதிகளைப்போலே அங்கேசகலமேடைகளிலுந் தூபங்காட்டிக் கர்த்தருக்குக் கோபமுண்டாகப் பொல்லாத காரியங்களைச்செய்து,

௰௨ இப்படிச்செய்யாதேயுங்களென்று கர்த்தர் தங்களைவிலக்கச்சொன்ன நரகலானதேவர்களைச்சேவித்துக் கொண்டிருந்தார்கள்.

௰௩ நீங்கள் உங்கள்பொல்லாதவழிகளைவிட்டுத்திரும்பி நானுங்கள்பிதாக்களுக்குக் கற்பித்ததும் நம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு உங்களுக்கனுப்பினதுமான நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் நம்முடையகற்பனைகளையும் நம்முடையகட்டளைகளையுங் கைக்கொள்ளுங்களென்று கர்த்தர் எல்லாத்தீர்க்கதரிசிகளையும் எல்லாஞானதிஷ்டிக்காரரையுங்கொண்டு இஸ்ரவேலுக்கும் யூதாவுக்குந் திடச்சாட்சியாயெச்சரித்துக்கொண்டிருந்தாலும்,

௰௪ அவர்கள்கேள்விகொடாமல் தங்கள்பராபரனாகிய கர்த்தர்பேரிலே விசுவாசியாதேபோன கடினக்கழுத்தான் தங்கள்பிதாக்களைப்போலே தங்கள்கழுத்தைக் கடினப்படுத்தி,

௰௫ அவருடைய கட்டளைகளையும் அவர் தங்கள்பிதாக்களோடேபண்ணின அவருடைய உடம்படிக்கையையும் அவர் தங்களுக்குத் திடச்சாட்சியாய்க் காண்பித்த அவருடையசாட்சிகளையும் வெறுத்துப்போட்டு மாயையைப்பின்பற்றி மாயைக்காரராகி அவர்களைச்சுற்றிலுமிருக்கிறவர்களைப்போல அவர்கள் செய்யவேண்டாமென்று கர்த்தர் அவர்களுக்குக் கற்பித்திருக்கிறாரோ. அந்தச்சாதிகளைத்தான் அவர்கள்பின்பற்றி,

௰௬ தங்கள் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளையெல்லாம் விட்டுவிட்டு இரண்டுகன்றுக்குட்டிகளாகிய வார்ப்பித்த சுரூபங்களைத் தங்களுக்குண்டாக்கி விக்கிரகத்தோப்புகளை நாட்டிவானத்தின் சேனையையெல்லாம் பணிந்துகொண்டு பாகாலைச்சேவித்தார்கள்.

௰௭ அவர்கள் தங்கள்குமாரரையுந் தங்கள்குமாரத்திகளையும் அக்கினி மிதிக்கப்பண்ணி, நிமித்தங்களைப்பார்த்துச் சகுனங்களை நம்பிக் கர்த்தருக்குக் கோபமுண்டாக அவர் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்கிறதற்குத் தங்களைவிற்றுப்போட்டார்கள்.

௰௮ ஆகையாற் கர்த்தர் இஸ்ரவேலின்மேல் மிகவுங்கோபமடைந்து அவர்களைத் தம்முடைய முகத்தைவிட்டகற்றினார். யூதாகோத்திரமாத்திரமே மீதியாயிற்று.

௰௯ யூதாவுந் தங்கள்பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொள்ளாமல் இஸ்ரவேல் இட்டமபண்ணின வழிபாடுகளில் நடந்தார்கள்.

௨௰ அதையாற் கர்த்தர் இஸ்ரவேலின் சந்ததியாரை யெல்லாம் புறக்கணித்து, அவர்களைத் தமது முகத்தைவிட்டுத் தள்ளுமட்டாக வொடுக்கி, அவர்களைப் பறிகாரர் கையில் ஒப்புக்கொடுத்தார்.

௨௰௧ ஏனென்றால் இஸ்ரவேல் தாவீதுவீட்டைவிட்டுப் பிரிந்து நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமை இராசாவாக்கினார்கள்; அப்போது எரோபெயாம் இஸ்ரவேலைக் கர்த்தரை விட்டுப் பின்வாங்கவும் பெரியபாவத்தைச் செய்யவும் பண்ணினான்.

௨௰௨ அப்படியே இஸ்ரவேல் புத்திரர் எரோபெயாம் செய்த எல்லாப் பாவங்களிலும் நடந்துகொண்டு,

௨௰௩ கர்த்தர் தீர்க்கதரிசிகளாகிய தமது ஊழியக்காரரைக்கொண்டு சொல்லியிருந்தபடி தமது முகத்தைவிட்டகற்றுமட்டாக அவைகளை விட்டுவிலகாதிருந்தார்கள். இப்படியே இஸ்ரவேல் இந்நாள்வரைக்குந் தங்கள் சீமையிலேயிருந்து அசூரியாவுக்குக் கொண்டுபோகப்பட்டது.

## அசீரியாளிகள் இஸ்ரவேல்தேசத்திலே குடியேறினது.

௨௰௪ அசூரின் இராசாவோவென்றால் பாபேலிலுங் கூத்தாவிலும் அவாவிலும் ஆமாத்திலுஞ் செப்பார்வாயிமிலுமிருந்து மனுஷரை வரப்பண்ணி, அவர்களை இஸ்ரவேல் புத்திரருக்குப் பதிலாகச் சமாரியாவின் பட்டணங்களிலே குடியேற்றினான்; இவர்கள் சமாரியாவைச் சொந்தமாய்க் கட்டிக்கொண்டு அதின் பட்டணங்களிலே குடியிருந்தார்கள்.

௨௰௫ கர்த்தருக்குப் பயப்படாதவர்கள் அங்கே குடியிருக்கத் துவக்கினபோதோவென்றால், கர்த்தர் அவர்களுக்குள்ளே சிங்கங்களை யனுப்பினார். அவைகள் அவர்களில் சிலரைக் கொன்றுபோட்டது.

௨௰௬ அப்போது அசூரின் இராசாவுக்கு, நீர் இங்கேயிருந்து அனுப்பிச் சமாரியாவின் பட்டணங்களிலே குடியேற்றுவித்த சாதிகள் அந்தத்தேசத்துத் தேவனின் நியாயத்தை யறியாதபடியினாலே அவர்களுக்குள்ளே சிங்கங்களை யனுப்பினார்; இதோ, அந்தத்தேசத்துத் தேவனின் நியாயத்தை யவர்கள் அறியாதபடியினாலே அவைகள் அவர்களைக் கொன்றுபோடுகின்றதென்று சொன்னார்கள்.

௨௰௭ அப்போது அசூரின் இராசா, நீங்கள் அங்கேயிருந்து கொண்டுவந்த ஆசாரியர்களிலே ஒருவனை யங்கேயழைத்துக்கொண்டு போங்கள். அவன் போய், அங்கே குடியிருக்கும்படிக்கு, இவன் அவர்களுக்கு அந்தத்தேசத்துத் தேவனின் நியாயத்தைப் போதிக்கக்கடவனென்று கற்பித்தான்.

௨௰௮ அப்படியே அவர்கள் சமாரியாவிலிருந்து கொண்டுபோயிருந்த ஆசாரியர்களிலொருவன் வந்து, பெத்தேலிலே குடியிருந்து, கர்த்தருக்குப் பயந்து நடக்கிற விதத்தை யவர்களுக்குப் போதித்தான்.

௨௰௯ ஆனாலும் அந்தந்தச் சாதி அந்தந்தத் தேவர்களைத் தங்களுக்குண்டாக்கி, ஒவ்வொருசாதியாகிய அந்தச் சமாரியர் குடியேறின தங்கள் தங்கள் பட்டணங்களிலுண்டுபண்ணின மேடைகளின் வீடுகளிலவைத்தார்கள்.

௩௰ பாபேலின் மனுஷர் சுக்கோத்பெனோத்தையுங் கூத்தின் மனுஷர் நேர்காலையும் ஆமாத்தின் மனுஷர் அசிமாவையும்,

௩௰௧ ஆவியர் நிபேகாசையுந் தர்த்தாக்கையும் உண்டாக்கினார்கள். செப்பார்வியார் செப்பார்வாயிமின் தேவர்களாகிய அதிராமேலேக்குக்கும் அனமேலேக்குக்குந் தங்கள் பிள்ளைகளை யக்கினியாற் றகனிப்பார்கள்.

௩௰௨ அவர்கள் கர்த்தருக்கும் பயந்தார்கள். மேடைகளின் வீடுகளிலே தங்களுக்காக ஆராதனை செய்கிறதற்காகத் தங்களுக்குள் நீசமானவர்களிலே தங்களுக்கு ஆசாரியர்களை யேற்படுத்தினார்கள்.

௩௰௩ அப்படியே கர்த்தருக்கும் பயந்தார்கள், தாங்கள் விட்டுவந்த சாதிகளுடைய முறைமையின்படியே தங்கள் தேவர்களையுஞ் சேவித்திருந்தார்கள்.

௩௰௪ இந்நாள்வரைக்கும் அவர்கள் தங்கள் முந்தின முறைமைகளின்படியே செய்கிறார்கள். அவர்கள் கர்த்தருக்குப் பயந்து நடக்கிறதுமில்லை. தங்கள் சுயதிட்டங்கள் முறைமைகளின்படியாகிலுங், கர்த்தர் இஸ்ரவேலென்று பேரிட்ட யாக்கோபின் புத்திரருக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்திற்குங் கற்பனைக்கும் ஏற்றபடியென்கிலுஞ் செய்கிறதுமில்லை.

௩௰௫ அதேதெனிற் கர்த்தர் இவர்களோடே உடன்படிக்கை பண்ணி, இவர்களுக்குக் கற்பித்ததாவது, நீங்கள் வேறே தேவர்களுக்குப் பயப்படாமலும் அவைகளை

ளும், மேன்கூரைகளின் புல்லிறதும், ஓங்கி வளராததற்கு முன் தீய்ந்துபோன பயிருக்குச் சமானமானார்கள்.

௨௭ ஆனால் உன் குடியிருப்பையும் உன் புறப்படுதலையும் உன் வருகையையும் நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளிக்கிறதையும் அறிவோம்.

௨௮ ஆனதுகொண்டு, நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளித்து, உன் பெருமை நமது செவிகளில் ஏறினபடியினாலே, நாம் நம்முடைய துறட்டை உன் மூக்கிலும் நம்முடைய கடிவாளத்தை உன் உதடுகளிலும் போட்டு, நீ வந்த வழியே உன்னைத் திருப்பிக்கொண்டு போவோமென்று அவனைக் குறித்துச் சொல்லுகிறார்.

௨௯ உனக்கு அடையாளமாயிருப்பதாவது, இந்த வருஷத்திலே தப்பிப் பயிரானதையும், இரண்டாம் வருஷத்திலே தானாய் விளைகிறதையுஞ் சாப்பிடு. மூன்றாம் வருஷத்திலோ விதைத்து அறுத்துத் திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளின் கனிகளைப் புசிப்பீர்கள்.

௩௰ யூதாவின் வீட்டாரில் தப்பி மீதியானது அப்புறந் தாழ வேர்பற்றி, உயரக் கனிகொடுக்கும்.

௩௧ ஏனெனில் மீதியானவர்கள் எருசலேமிலிருந்தும் தப்பினவர்கள் சீயோன் பர்வதத்திலுமிருந்து புறப்படுவார்கள். சேனைகளுடைய கர்த்தரின் சுறுசுறுப்பு அதை நடப்பிக்கும்.

௩௨ ஆகையாற் கர்த்தர் அசீரின் இராசாவைக்குறித்து உரைக்கிறதாவது, அவன் இந்தப் பட்டணத்திற்குட்படுவதுமில்லை. அதற்குள் அம்பை யெய்வதுமில்லை. அதற்கு முன் கேடயத்தோடே வருவதுமில்லை. அதற்கெதிராகக் கொத்தளம் போடுவதுமில்லை.

௩௩ அவன் இந்தப் பட்டணத்திற்குட் பிரவேசியாமல் தான் வந்த வழியே திரும்பிப் போவான்.

௩௪ ஏனெனில் நம்முடைய நிமித்தமும் நம்முடைய தாசனாகிய தாவீதின் நிமித்தமும் நாம் இந்தப் பட்டணத்தை இரட்சிக்கும்படிக்கு அதை ஆதரிப்போமென்பதைக் கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லியனுப்பினான்.

௩௫ அன்று இராத்திரியிலே சம்பவித்ததேதென்றால், கர்த்தருடைய தூதன் புறப்பட்டு, அசீரியரின் பாளயத்தில் நூற்றெண்பத்தையாயிரம் பேரைச் சங்கரித்தான். அவர்கள் அதிகாலமே யெழுந்திருக்கும்போது, இதோ, அவர்களெல்லாருஞ் செத்த சவங்களாகக் கிடந்தார்கள்.

௩௬ அப்போது அசீரின் இராசாவாகிய சனகெரிப் பயணப்பட்டுத் திரும்பிக்கொண்டுபோய் நினிவேயிலிருந்து விட்டான்.

௩௭ அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின் வீட்டிலே பணிந்துகொள்ளுகிறபோதோவெனில், அவன் குமாரராகிய அதிரமேலேக்குஞ் சரேத்சேரும் அவனைப் பட்டயத்தாலே வெட்டிப்போட்டு ஆராராத்தேசத்திற்குத் தப்பியோடினார்கள். அவன் குமாரனாகிய எசர்அத்தோன் அவன் பட்டத்திற்கு வந்து அரசாண்டான்.

## ௨௰. அதிகாரம்.

எசேக்கியாவின் மற்ற நடப்படிகள்.

அந்நாட்களில் எசேக்கியா சாவதற்கு ஏதுவான வியாதியாய்க் கிடந்தான். அப்போது ஆமோத்சின் குமாரனாகிய எசாயாவென்ற தீர்க்கதரிசி அவனிடத்தில் வந்து, அவனுடனே, நீ உன் வீட்டுக் காரியத்தைத் திட்டப்படுத்து. ஏனெனில் நீ பிழைக்காமல் மரிப்பாயென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௨ அப்போது அவன் தன் முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பிக் கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணி,

௩ ஆ, கர்த்தாவே! நான் உமக்குமுன்பாக உண்மையும் மன உத்தமுமாய் நடந்துகொண்டு, உமது பார்வைக்கு நலமானதைச் செய்துவந்ததை நினையுமேன்? என்று மிகுதியாய் அழுதான்.

௪ அப்போது சம்பவித்ததேதென்றால், எசாயா பாதி முற்றத்தைவிட்டு அப்புறப்படாததற்குமுன்னே, கர்த்தருடைய வார்த்தை யவனுக்குண்டாய் அவர் சொன்னதாவது,

௫ நீ திரும்பிக்கொண்டு, நமது சனத்தின் அதிபதியாகிய எசேக்கியாவுடனே சொல்லவேண்டியது. உன் தகப்பனாகிய தாவீதின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதென்றால், உன் விண்ணப்பத்தைக் கேட்டோம். உன் கண்ணீரைக் கண்டோம். இதோ, நாம் உன்னைக் குணமாக்குகிறோம். மூன்றாம் நாளிலே நீ கர்த்தருடைய வீட்டிலே போயேறுவாய்.

௬ நாம் உன் நாட்களோடே பதினைந்து வருஷங்களைக் கூட்டி, அசீரிய இராசாவின் கைக்கு உன்னையும் இந்தப் பட்டணத்தையுந் தப்புவித்து நம்முடைய நிமித்த

முடைநமாறுடையதாசசுகியதாவீதினிமித்தம் இந்தப் பட்டணத்தைக் காத்து இரட்சிப்பேனென்று சொல்லென்றார்.

எ ஏசாயா அதைச்சொல்லி, அத்திப்பழத்துவையலைக் கொண்டுவாருங்களென்றான். அதையவர்கள் கொண்டுவந்து எரிபந்தத்தின்மேல் போட்டபோது, அவன் பிழைத்தான்.

அ எசேக்கியா ஏசாயாவுடனே, கர்த்தர் என்னைக் குணமாக்குவதற்கும், மூன்றாம் நாளிலே நான் கர்த்தருடைய வீட்டிலே போயேறுவதற்கும், அடையாளமென்ன? என்றான்.

கூ அப்போது ஏசாயா, கர்த்தர் தாஞ்சொன்னவார்த்தையின்படியே செய்வாரென்பதற்குக் கர்த்தராலே உனக்குண்டாகும் அடையாளமாக நிழல் பத்துவரி முன்னிட்டுப்போகவேணுமோ? பத்துவரி பின்னிட்டுத்திரும்பவேண்டுமோ? என்றுகேட்டதற்கு,

ய எசேக்கியா, நிழல் பத்துவரி இறங்குகிறது லேசானகாரியம். அப்படிவேண்டாம் நிழல் பத்துவரி பின்னிட்டுத் திரும்புவதாக என்றான்.

யக அப்போது ஏசாயா தீர்க்கதரிசி கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், அவர் ஆகாசுடைய சூரியகடியாரத்திலே வரிகளில் இறங்கின நிழலைப் பத்துவரி பின்னிட்டுத் திரும்பப்பண்ணினார்.

யஉ அக்காலத்திலே பலாதானின் குமாரனாகிய பெரோதாக் பலாதான் என்னும் பாபேலின் இராசா எசேக்கியா வியாதிப்பட்டிருந்ததைக் கேட்டு, அவனண்டைக்கு நிருபங்களையும் வெகுமானத்தையும் அனுப்பினான்.

யங எசேக்கியா அவர்களுக்குச் செவிகொடுத்தபிறபாடு அவர்களுக்குத் தன் பொக்கிஷசாலையனைத்தையும், வெள்ளியையும்பொன்னையும் கந்தவர்க்கங்களையும் நல்லபரிமளதயிலத்தையும் தன் ஆயுதசாலையனைத்தையுந் தன் பொக்கிஷங்களிலுள்ளதெல்லாவற்றையுங் காண்பித்தான். தன்வீட்டிலும் தன் ஆளுகையனைத்திலும் எசேக்கியா அவர்களுக்குக் காண்பியாத பொருளில்லை.

யச அப்போது ஏசாயாதீர்க்கதரிசி எசேக்கியா இராசாவண்டைக்குவந்து, அவனுடனே, அந்த மனுஷர் என்னசொன்னார்கள்? எங்கேயிருந்து உம்மண்டைக்கு வந்தார்கள்? என்றான். அதற்கு எசேக்கியா பாபேலென்ற தூரதேசத்திலிருந்து வந்தார்கள்.

யரு அப்போது அவன் உம்முடைய வீட்டிலே என்னத்தைக் கண்டார்கள்? என்றான். அதற்கு எசேக்கியா என்வீட்டிலுள்ளதெல்லாவற்றையுங் கண்டார்கள். என் பொக்கிஷங்களில் நான் அவர்களுக்குக் காண்பியாத பொருளில்லையென்றான்.

யசா அப்போது ஏசாயா எசேக்கியாவுடனே சொன்னதாவது, கர்த்தருடைய வார்த்தையைக்கேளும்.

யஎ இதோ, நாட்கள் வரும். அப்போது உன்வீட்டிலுள்ளதிலும் உன்பிதாக்கள் இந்நாள்வரைக்குஞ் சேர்த்ததிலும் ஒன்றும் வைக்கப்படாமல் எல்லாம் பாபேலுக்குக்கொண்டுபோகப்படும்.

யஅ நீ பெறறிருக்கும் உன்சந்தானமாகிய உன்பிள்ளைகளிலும் சிலரைப் பாபேலுடைய இராசாவின் அரண்மனையிலே பிரதானிகளாயிருக்க எடுப்பார்களென்கிறதொன்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

யகூ அப்போது எசேக்கியா ஏசாயாவுடனே நீ சொன்ன கர்த்தருடையவார்த்தை நல்லதேயென்றுசொல்லி, என் நாட்களில்லலோ சமாதானமும் உண்மையுமிருக்குமென்றான்.

உய எசேக்கியாவின் மற்றவர்த்தமானங்களும் அவனுடைய எல்லாவல்லமையும் அவன் ஒருகுளத்தையுஞ் சாலகத்தையுமுண்டாக்கினதினாலே தண்ணீரைப் பட்டணத்திற்குள்ளே வரப்பண்ணினதும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

உக எசேக்கியா தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன்குமாரனாகிய மனாசே அவன் ஸ்தலத்திலே இராசாவானான்.

## உக. அதிகாரம்.

மனாசே ஆமோனென்ற யூதாவுடைய இராசாக்களின் நடபடிகள்.

மனாசே இராசாவாகிறபோது பன்னிரண்டுவயதாயிருந்து ஐம்பத்தைந்துவருஷம் எருசலேமிலே அரசாண்டான். அவன்தாயின்பேர் எப்சிபாள்.

உ கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே அவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,

ங தன்தகப்பனாகிய எசேக்கியா இடித்துப்போட்ட மேடைகளைத் திரும்பக் கட்டிப் பாகாலுக்குப் பலிபீடங்களையெடுப

லோனதேவர்களைச்சேவித்து அவைகளை பணிந்துகொண்டு,

உஉ கர்த்தரின்வழியிலேநடவாமல் தன்பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை விட்டுவிட்டான்.

உங ஆனால் ஆமோனின் ஊழியக்காரர் அவனுக்குவிரோதமாய்ப் பந்துகட்டுப்பண்ணிக்கொண்டு இராசாவாகிய அவனையவன்வீட்டிலே கொன்றுபோட்டார்கள்.

உச ஆனால் தேசத்தின்சனம் இராசாவாகிய ஆமோனுக்குவிரோதமாய் ஒப்பந்தம்பண்ணினவர்களையெல்லாம் வெட்டிப்போட்டு அவன்குமாரனாகிய யோசியாவையவன் ஸ்தலத்தில் இராசாவாக்கினார்கள்.

உரு ஆமோன்செய்த மற்றவர்த்தமானங்கள் யூதாவுடைய இராசாக்களின்நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

உசு அவன்ஊசாவின்தோட்டத்திலுள்ள அவனுடையகல்லறையில் அடக்கம்பண்ணப்பட்டான். அவன்ஸ்தலத்திலே அவன்குமாரனாகியயோசியா இராசாவானான்.

## உஉ. அதிகாரம்.

யூதாவின் இராசாவாகிய யோசியாவின் காலத்திலே நியாயப்பிரமாணப் புஸ்தகங்கண்டுபிடிக்கப்பட்டது.

யோசியா இராசாவாகிறபோது எட்டுவயதாயிருந்து, முப்பத்தொருவருஷம் எருசலேமில அரசாண்டான். போஸ்காத்தூரானாகிய அதாயாவின் குமாரத்தியான அவன்தாயின்பேர் எதிதாள்.

உ அவன் கர்த்தரின்பார்வைக்குச் செம்மையானதைச்செய்து தன்தகப்பனாகிய தாவீதின்வழியிலெல்லாம் வலது இடதுபுறமாய்விலகாமல் நடந்தான்.

௩ இராசாவாகிய யோசியாவின் பதினெட்டாம் வருஷத்திலே சம்பவித்ததென்னவெனில், இராசா மெசுல்லாமின் குமாரனாகிய அத்சலியாவின் மகன் சாப்பானென்ற சம்பிரதியைக் கர்த்தரின்வீட்டிற் கனுப்பிச்சொன்னதாவது,

௪ நீ பிரதான ஆசாரியனாகிய இல்கியாவண்டைக் கேறிப்போய்க் கர்த்தருடைய வீட்டிற்குக்கொண்டுவரப்பட்டது ம் வாசற்காக்கிறவர்கள் சனத்தின்கையிலே சேர்த்துக்கொண்டதுமான திரவியத்தையவன்றொகைபார்த்து,

௫ பிறபாடு அவர்கள் அதைக்கர்த்தருடையவீட்டின் வேலையை விசாரிக்கிறவர்கள் கையிலேகொடுத்து, இவர்கள் அதைக்கர்த்தரின்வீட்டைப் பழுதுபார்க்கிறதற்கு அதிலிருக்கிற வேலையைச்செய்கிற,

௬ தச்சருக்குஞ் சிற்பசாஸ்திரிகளுக்குங் கொல்லத்துக்காரருக்கும், வீட்டைப் பழுதுபார்க்கத்தேவையான மரங்களையும் வெட்டினகல்லுகளையும் வாங்குகிறதற்குங்கொடுக்கவும்,

௭ ஆகிலும் அந்தத் திரவியத்தைத் தங்கள்கையிலொப்புவித்துக்கொள்ளுகிறவர்களோ காரியத்தையுண்மையாய் நடப்பிக்கிறபடியினாலே அவர்களையதின் கணக்கைக்கேளாதிருக்கவும் வேண்டுமென்று சொல்லென்றான்.

௮ அப்போது பிரதான ஆசாரியனாகிய இல்கியா சம்பிரதியாகிய சாப்பானுடனே, நியாயப்பிரமாண புஸ்தகத்தைக் கர்த்தரின் வீட்டிலே கண்டுபிடித்தேனென்றுசொல்லி, அந்தப் புஸ்தகத்தைச்சாப்பானுக்குக்கொடுத்தான். இவன் அதைவாசித்தான்.

௯ அப்போது சம்பிரதியாகியசாப்பான் இராசாவண்டைக்குவந்து, இராசாவுக்குமறுஉத்தரவுசொல்லி, வீட்டிலேகண்டுபிடிக்கப்பட்ட திரவியத்தை யுமதடியார் சேர்த்துக்கட்டி, அதைக் கர்த்தருடையவீட்டின் வேலையை விசாரிக்கிறவர்களகையிலே கொடுத்தார்களென்றுசொல்லி,

௰ சம்பிரதியாகிய சாப்பான் பின்னையும் இராசாவுக்கு, ஆசாரியனாகிய இல்கியா எனக்கு ஒருபுஸ்தகத்தைக் கொடுத்தானென்றறிவித்து, அதை இராசாவுக்கு முன்பாக வாசித்துக்கொண்டிருந்தான்.

௰௧ இராசா நியாயப்பிரமாணப்புஸ்தகத்தின் வார்த்தைகளைக்கேட்டபோதோவெனில், அவன் தன்வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு,

௰௨ ஆசாரியனாகிய இல்கியாவுக்குஞ் சாப்பானின்குமாரனாகிய அகீக்காமுக்கும் மிகாயாவின்குமாரனாகிய அக்போருக்குஞ் சம்பிரதியாகிய சாப்பானுக்கும் இராசாவின் ஊழியக்காரனாகிய அசாயாவுக்கும் இராசா கற்பித்துச்சொன்னதாவது,

௰௩ கண்டுபிடிக்கப்பட்ட இந்தப்புஸ்தகத்தினுடைய வார்த்தைகளினிமித்தம் நீங்கள்போய், எனக்காகவுஞ் சனத்திற்காகவும் யூதாவனைத்திற்காகவுங் கர்த்தரைக்கேளுங்கள். ஏனெனில் நமக்காக எழுதியிருக்கிறதெல்லாவற்றின் படியேயு

ஞ்செய்ய நம்முடையபிதாக்கள் இந்தப் புஸ்தகத்தின் வார்த்தைகளுக்குச் செவிகொடாதபடியினாலே நம்முடையமேலே பற்றியெரிந்த கர்த்தருடைய உக்கிரம் பெரியதென்றான்.

௰௪ அப்போது ஆசாரியனாகிய இல்க்கியாவும் அக்கியாமும் அக்போருஞ்சாப்பானும் அசாயாவும் அற்காசின் குமாரனாகிய திக்வாவினமகனான சல்லுமென்ற வஸ்திரங்களுடைய விசாரிப்புக் காரனின் பெண்சாதியாகிய உல்தாள் என்ற தீர்க்கதரிசியானவளண்டைக்குப் போய், அவளோடே பேசினார்கள். அவள் எருசலேமின் இரண்டாம்வகுப்பிலேகுடியிருந்தாள்.

௰௫ இவள் அவர்களோடே சொன்னதாவது, உங்களையென்னண்டைக்கனுப்பினவனுக்கு நீங்கள்சொல்லவேண்டியதேதெனில், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதாவது,

௰௬ இதோ, நாம் இந்த ஸ்தலத்தின்மேலும் அதின்குடிகளின்மேலும் யூதாவின் இராசாவாசித்த புஸ்தகத்தின் வார்த்தைகளிலெல்லாம் விளங்கிய பொல்லாப்பை வரப்பண்ணுவோம்.

௰௭ அவர்கள் நம்மைவிட்டுத் தங்கள் கைகளின்கிரியைகளாலெல்லாம் நமக்குக் கோபமுண்டாக்கவேறேதேவர்களுக்குத் தூபங்காட்டினபடியினாலே நம்முடைய உக்கிரம் இந்த ஸ்தலத்தின்மேற் பற்றியெரிந்தது. அது அவிந்து போவதுமில்லையென்று கர்த்தர் சொல்லுகிறாரென்று சொல்லுங்கள்.

௰௮ கர்த்தரைக்கேட்கிறதற்கு உங்களையனுப்பினயூதாவின் இராசாவுக்கோநீங்கள்சொல்லவேண்டியது. நீர்கேட்டவார்த்தைகளைக்குறித்து இஸ்ரவேலின்பராபரனாகியகர்த்தர்சொல்லுகிறதேதெனில்

௰௯ நாம் இந்தஸ்தலத்திற்கும்அதின்குடிகளுக்குமவிரோதமாக, அவர்களபாழும் சாபமுமாவார்களென்று சொன்னதைநீகேட்டபோது, உன்னிருதயம் இளகிக்கர்த்தருக்குமுன்பாக உன்னைத்தாழ்த்தி, உன்வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு நமக்குமுன்பாக அழுதபடியினாலேஉன்னை நாமுங்கேட்டோம்.

௨௰ ஆகையால் இதோ, நாமுன்னையுன்பிதாக்களண்டையிலே சேர்த்துக்கொள்ளுவோம். நீசமாதானத்தோடேயுன்கல்லறையிற்சேர்க்கப்படுவாய். நாம் இந்த ஸ்தலத்தின்மேல் வரப்பண்ணுஞ் சகல பொல்லாப்பையுமுன்கண்கள் காண்பதில்லையென்றுகர்த்தர்சொல்லுகிறாரென்றிறதைச்சொல்லுங்களென்றாள். இந்தமறுத்தரவையவர்கள்போய் இராசாவுக்குச்சொன்னார்கள்.

## ௨௩. அதிகாரம்.

சத்தியவேதத்திற்காக யோசியாகாண்பித்தகன்பத்தியும் அவன் அடைந்தமரணமும்.

அப்போது இராசாயூதாவிலும் எருசலேமிலுமிருக்கிறமூப்பரையெல்லாமவழைத்தனுப்பினான். இவர்கள் அவனண்டையிலேகூடினபோது,

௨ இராசாவும் அவனோடேகூட யூதமனுஷர் எருசலேமின் குடிகளனைவரும் ஆசாரியர்களுந் தீர்க்கதரிசிகளுஞ் சிறியோர்துவக்கிப் பெரியோர்மட்டுமுள்ளசகலசனமுங் கர்த்தரின் வீட்டிற்குப்போயேறினார்கள். கர்த்தரின்வீட்டிலேகண்டுபிடிக்கப்பட்ட உடம்படிக்கையினுடையபுஸ்தகத்தின் வார்த்தைகளையெல்லாம் அவர்கள் காதுகள்கேட்க வாசிக்கப்பட்டது.

௩ அப்போது இராசா தூண் அண்டையிலேநின்றுகொண்டு கர்த்தரைப்பின்பற்றி நடக்கவும் அவருடையகற்பனைகளையும் அவருடையசாட்சிகளையும் அவருடைய கட்டளைகளையுமமுழுஇருதயத்தாலுமமுழு ஆத்துமத்தாலுங் கைக்கொள்ளவும், இப்படியே அந்தப்புஸ்தகத்திலெழுதியிருக்கிற அந்த உடம்படிக்கையின்வார்த்தைகளைத்திடப்படுத்தவும், கர்த்தருக்குமுன்பாக உடம்படிக்கைபண்ணினான். சனமெல்லாம் உடம்படிக்கைக்குட்பட்டது.

௪ பிற்பாடு இராசாபாகாலுக்குமவிக்கிரகத்தோப்பிற்குமவானத்தின் எல்லாச்சேனைக்குமென்று பண்ணப்பட்டிருந்தசகலமுட்டுகளையுங் கர்த்தருடையதேவாலயத்திலிருந்துபுறம்பாக்கப்பிரதான ஆசாரியனாகிய இல்க்கியாவுக்கும் இரண்டாந்தரமான ஆசாரியர்களுக்கும் வாசற்காக்கிறவர்களுக்குங்கற்பித்துஅவைகளைஎருசலேமுக்குப்புறம்பாயக்கீதரோன் வெளிகளிற்சுட்டெரித்து அவைகளின்சாம்பலைப் பேத்தேலுக்குக்கொண்டுபோகப்பண்ணி

௫ யூதாவின்பட்டணங்களிலும் எருசலேமைச்சுற்றிலும் மேடைகளின்மேலே தூபங்காட்ட யூதாவின் இராசாக்களவைத்தபூசாரிகளையும்பாகாலுக்குஞ் சூரியனுக்குஞ்சந்திரனுக்குங் கிரகங்களுக்குமவானத்தின்சகலசேனைக்குந்தூபங்காட்டினவர்களையும் அற்றுப்போகப்பண்ணி,

௬ விக்கிரகத்தோப்பைக் கர்த்தரின் வீட்டிலிருந்து எருசலேமுக்குப் புறம்பே கிதரோன் ஆற்றுக்குக் கொண்டுபோய் அதைக் கிதரோன் ஆற்றோரத்திலே சுட்டெரித்து அதைத் தூளாக்கி அந்தத் தூளைச் சனபுத்திருடைய பிரேதக்குழிகளின் மேல் தூவிப்போடுவித்து,

௭ ஸ்திரிகள் விக்கிரகத்தோப்பிற்குக் கூடாரங்களை நெய்த கர்த்தரின் வீட்டில் உள்ள இலச்சையான புணர்ச்சிக்காரரின் அறைகளை இடித்துப்போடுவித்தான்.

௮ அவன் யூதாவின் பட்டணங்களிலிருக்கிற எல்லா ஆசாரியரையும் வரச்சொல்லி, கேபாவைத் துவக்கிப் பெயர்செபாமட்டும் ஆசாரியர்கள் தூபங்காட்டியிருந்த மேடைகளைத் தீட்டாக்கி, ஒலிமுகவாசல்களின் மேடைகளையும், பட்டணத்தின் வாசலுக்குள் பிரவேசிக்கிறவனுக்கு இடதுபுறமாயிருக்கிற பட்டணத் தலைவனாகிய யோசுவாவின் வாசற்படியிலிருந்ததையும் இடிப்பித்தான்.

௯ மேடைகளின் ஆசாரியர்களோவென்றால் எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய பலிபீடத்தின்மேல் பலியிடாமல் தங்கள் சகோதரருக்குள்ளே புளிப்பில்லா அப்பங்களைப் போசிக்கிறதற்கு மாத்திரம் உத்தாரம்பெற்றார்கள்.

௰ ஒருவரும் மோளேகுக்கென்று தன் குமாரனையாகிலும் தன் குமாரத்தியையாகிலும் அக்கினியை மிதிக்கப்பண்ணாதபடிக்கு இன்னோமுபுத்திரரின் பள்ளத்தாக்கிலிருக்கிற தோப்பேத்தென்ற தலத்தையும் அவன் தீட்டாக்கி,

௰௧ கர்த்தரின் வீட்டிற்குட்போகிற முனைதுவக்கிப் பர்வாரிமிலிருக்கிற நாத்தான்மேலேக்கென்ற பிரதானியின் அறைவீடுமட்டும் யூதாவின் இராசாக்கள் சூரியனுக்கென்று வைத்திருந்த குதிரைகளை அகற்றி, சூரியனின் இரதங்களை அக்கினியாற்சுட்டெரித்தான்.

௰௨ யூதாவின் இராசாக்கள் உண்டாக்கினதும் ஆகாசுடைய மேல்வீட்டின்மேலிருக்கிறதுமான பலிபீடங்களையும், மனாசே கர்த்தருடைய வீட்டின் இரண்டு பிராகாரங்களிலும் உண்டாக்கின பலிபீடங்களையும் இராசா இடித்து, அவைகளின் தூளை அங்கேயிருந்தெடுத்துக் கிதரோன் ஆற்றிற் கொட்டுவித்தான்.

௰௩ எருசலேமுக்கெதிரே மஸ்கித்மலையின் வலதுபுறத்திலே இஸ்ரவேலின் இராசாவாகிய சாலோமோன் சீதோனியரின் அருவருப்பாகிய அஸ்தரோத்திற்கும் மோவாபியரின் அருவருப்பாகிய காமோசுக்கும் அம்மோன்புத்திரரின் அருவருப்பாகிய மில்கோமுக்குங் கட்டியிருந்த மேடைகளையும் இராசா தீட்டாக்கி,

௰௪ சிலைகளையுடைத்து விக்கிரகத்தோப்புகளை நிர்மூலமாக்கி, அவைகளின் ஸ்தலத்தை மனுஷரின் எலும்புகளால் நிரப்புவித்தான்.

௰௫ இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாம் பெத்தேலிலுண்டாக்கியிருந்த பலிபீடத்தையும் மேடையையும் அவ்விரண்டையும் அவன் இடித்து அந்த மேடையைச் சுட்டெரித்துத் தூளாக்கி விக்கிரகத்தோப்பைச் சுட்டுப்போட்டான்.

௰௬ யோசியா திரும்பிப்பார்க்கிறபோது அங்கே அந்த மலையிலிருக்கிற கல்லறைகளைக் கண்டு ஆள்களையனுப்பி அந்தக் கல்லறைகளிலுள்ள எலும்புகளையெடுத்துவரப்பண்ணி, இப்படி வருமென்று கூப்பிட்ட பராபரனுடைய மனுஷன் கூப்பிட்டுச் சொன்ன கர்த்தருடைய வார்த்தையின்படியே அவைகளை அந்தப் பலிபீடத்தின்மேலே சுட்டெரித்து அதைத் தீட்டாக்கினான்.

௰௭ அப்போது அவன், நான் காண்கிற அந்தக் குறிப்பென்ன? என்றுகேட்டதற்கு. அந்தப் பட்டணத்தின் மனுஷர் அவனுடனே, அது யூதாவிலிருந்து வந்து, நீர் செய்த இந்தக் கிரியைகளைப் பெத்தேலின் பலிபீடத்திற்கு விரோதமாய்க் கூப்பிட்டறிவித்த பராபரனுடைய மனுஷனின் கல்லறையென்றார்கள்.

௰௮ அப்போது அவன், அவனிருக்கட்டும். ஒருவரும் அவன் எலும்புகளைத் தொடவேண்டாமென்றான். அப்படியே அவன் எலும்புகளைச் சமாரியாவிலிருந்து வந்த தீர்க்கதரிசியின் எலும்புகளோடுங்கூடத் தப்புவித்தார்கள்.

௰௯ கோபமுண்டாக்க இஸ்ரவேலின் இராசாக்கள் சமாரியாவின் பட்டணங்களிலுண்டாயிருந்த மேடைகளின் வீடுகளையெல்லாம் யோசியா அகற்றிப் பெத்தேலிலே தான் செய்த செய்கைகளுக்கொத்தபடியெல்லாம் அவைகளுக்குச் செய்து,

௨௰ அவ்விடங்களிலிருக்கிற மேடைகளின் ஆசாரியர்களையெல்லாம் பலிபீடங்களின்மேலே கொன்றுபோட்டு, அவைகளின்மேல் மனுஷரின் எலும்புகளைச் சுட்டெரித்து, எருசலேமுக்குத் திரும்பினான்.

௨௰௧ பிற்பாடு இராசா எல்லாச் சனத்திற்கும் இந்த உடம்படிக்கையின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடியே உங்கள் பரா

பர்ஞகியகர்த்தருக்குப்பஸ்காவையாசரியு ஙகளெனறுகறபித்தான.

௨௨ இஸர்வேலை நியாயம்விசாரித்தநி யாயாதிபதிகளின நாட்களைத்துவக்கி இஸ ர்வேலின இராசாக்களயூதாவின இராசா க்களுடையசகலநாட்களிலும இந்தபப ஸ்காவைப்போலொத்தது ஆசரிக்கப்பட் டதேயில்லை.

௨௩ இராசாவாகிய யொசியாவினபதி னெட்டாமவருஷத்திலேயொவெனறல இந் தபபஸ்கா எருசலேமிலே கர்த்தருக்காசரி க்கபபட்டது.

௨௪ ஆசாரியனுகிய இலக்கியாகர்த்த ருடையவீட்டிலேகணடுபிடித்த புஸ்தகத் திலெழுதியிருக்கிற நியாயப்பிரமாணத்தி னவார்த்தைகளை நிறைவேறறும்படிக்கு யொசியா அஞ்சனக்காரரையுங்குறிசொ லலுகிறவர்களையுங் சுருபங்களையும நாக லானதேவர்களையும யூதேசத்திலும எ ருசலேமிலுங்காணப்பட்ட எல்லா அருவ ருபபுகளையுமமுதலறுப்போகப் பணணி ஞன.

௨௫ கர்த்தரணடைக்குத்தனமுழுஇரு தயத்தாலுந்தனமுழு ஆத்துமத்தாலுந் தனமுழுபலத்திஞலுமமோசேயின நியா யபபிரமாணத்திறகொத்தபடியெல்லாம மனசைத்திருபபின அவனைபபோலொத் த இராசா அவனுக்குமுனனிருந்ததுமில லை அவனுக்குப்பினனெழும்பினதுமிலலை.

௨௬ ஆகிலும் மனசே கர்த்தருக்குக் கோபமுணடாக்கின சகலகாரியங்களினி மித்தமும அவர்யூதாவினமேலமூணடத முமுடையமகாகோபத்தினுக்கிரதத்தைவி டடுததிருமபாமல,

௨௭ நாம இஸர்வேலைத்தளளிவிட்டது போலேயூதாவையும நமதுமுகத்தைவிட டுத்தளளி, நாமதெரிந்துகொணடிருந்த இந்த எருசலேமபட்டணத்தையும, நம முடையநாமந் தங்கியிருக்குமெனறுநா ஞசொனன வீட்டையும வெறுத்து விடு வோமெனறுகர்த்தர்சொனஞர்.

௨௮ யொசியாவின மறறவர்த்தமான ஙகளும அவனசெய்த்தனைத்தும யூதாவு டைய இராசாக்களின நாளாகமப்புஸதக த்திலல்லோ எழுதியிருக்கினறது.

௨௯ அவனநாட்களில எகிப்துவின இ ராசாவாகியபார்வோன நேகோ அசுரின இராசாவுககுவிரோதமாய ஐபிருத்நதிக் கேறிப போகிறபோது இராசாவாகிய யொசியா அவனுக்கெதிராகப புறப்பட் டான. அவனஇவனைக்காணகிறபோதோ வெனில, இவன அவனைமேகிதோவிலே கொனறுபோட்டான.

௩௰ அவனுடைய ஊழியக்காரர்மரண மடைந்த அவனை இரதத்தின்மேலேற றிமெகிதோவிலிருந்து எருசலேமுக்குக் கொணடுவந்து, அவனையவனகல்லறையி ல அடக்கமபணணினார்கள. அடடோது தேசத்தினசனமயொசியாவின குமாரனு கியயோவாகாசையழைத்து, அவனையபி ஷேகமபணணி, அவனையவனதகப்பன ஸதலத்தில இராசாவாக்கினுர்கள.

யோவாகாஸயோயாக்கீமெனறயூதாவு டைய இராசாக்களினசெய்தி.

௩௧ யோவாகாஸ இராசாவாகிறபோ து இருபத்துமூனறுவயதாயிருந்து, மூன றுமாதம எருசலேமில அரசாணடான. லிப்னுஊரானுகிய எரேமியாவினகுமாரத் தியான அவனதாயினபேர் அமூத்தாள.

௩௨ அவனதனபிதாக்கள செய்தபடி யெல்லாங்கர்த்தரினபார்வைக்குப்பொல லாப்பானதைச்செய்தான.

௩௩ ஆனால அவன எருசலேமிலஅரசா ளாதபடிக்குப்பார்வோனநேகோத் அவ னை ஆமாத்தேசமானரிப்லாவிலே பிடித் துக்கட்டுவித்துத்தேசத்தினமேல நூறு தாலந்து வெளளியையும ஒருதாலந்து பொனனையும அபராதமாகச்சுமத்தி,

௩௪ யொசியாவின குமாரனுகிய எலி யாக்கீமையவனதகப்பனுகிய யொசியா வினஸதலத்தில இராசாவாக்கவைத்து, அ வனபேரை யோயாக்கீமெனறு மாறறி, யோவாகாசைக்கொணடுபோனுன. இவ ன எகிப்துவிலேவந்து அங்கே மரணம டைந்தான.

௩௫ அந்தவெளளியையுமபொனனையும யோயாக்கீமபார்வோனுக்குக்கொடுத்தா ன. ஆனாற்பார்வோனுடைய கறபனையின படியந்தவெளளியைக் கொடுக்குமபடிக் கு, அவனதேசத்தைமதித்து அவரவர்ம திப்பினபடியந்த வெளளியையும பொன னையுமபார்வோனநேகோவுக்குக்கொடுக் கத்தக்கதாகத்தேசச்சனத்தினகையிலே தணடினான.

௩௬ யோயாக்கீம இராசாவாகிறபோ து இருபத்தைந்துவயதாயிருந்து, பதி னெருவருஷம எருசலேமில அரசாணடா ன. ருமாஊரானுகியபெதாயாவின குமார த்தியாகிய அவனதாயினபேர்செபுதாள.

௩௭ அவன தனபிதாக்கள செய்தபடி யெல்லாங்கர்த்தரினபார்வைக்குப்பொல லாப்பானதைச்செய்தான.

## உ௪. அதிகாரம்.

யூதாவின இராசாவாகியயோயாகீமின மறறநடபடி.

அவனநாட்களிலே பாபேலின இராசாவாகியநேபுகாத்நேத்சார் ஏறிவநதான. இவனையோயாகீமெ மூனறுவருஷஞ சேவிககிறவனுயிருநது, அதினபிறகுபுரணடு இவனைவிடடுமருளவிழுநதான.

௨ அபபோதுகர்ததர் கல்தேயரினதணடுகளையுஞசீரியரினதணடுகளையுமமோவாபியரின தணடுகளையும அமமோனபுத்திரின தணடுகளையும அவனமேலவரவிடடார். தீர்ககதரிசிகளாகியதமமுடைய ஊழியககாரர்னாலகொணடு, கர்த்தர் சொனனவார்த்தையினபடியே அவர் அவைகளை யூதாவினமேல அதையழிககும படிககுவரவிடடார்.

௩ மனசேதன னுடைய எலலாசசெய்கைகளினாலும பணணினபாவஙகளினிமித்தம யூதாவைத்தமது முகத்தைவிடடுவிலககஅபபடிககர்த்தருடைய கடடளையினபடிநடநதது.

௪ அவனசிநதிபபோடட குறறமிலலாத இரத்தத்திற்காகவும, எருசலேமைககுறறமிலலாத இரத்தத்தால் நிரபபினதற்காகவுஙகூடககர்த்தர் மனனிககசசித்தமிலலாதிருநதார்.

௫ யோயாகீமின மறறவர்த்தமானஙகளும அவன செயததனைத்தையும யூதாவுடைய இராசாககளின நாளாகமப்புஸதகத்திலல்லோ எழுதியிருககினறது.

௬ யோயாகீந தனபிதாககளோடே நித்திரையடைநதபின் அவனகுமாரனாகியயோயாகீமெ அவனஸதலத்தில இராசாவானன.

௭ அனறி எகிப்துவின இராசா அபபுறநதனதேசததிலிருநதுபுறபபடடுவநததிலலை. ஏனெனில எகிப்துவின இராசாவுககு எகிப்துவின நதியைத்துவககி ஐபிறாத்நதிமடடுமிருநதயாவையும பாபேலின இராசா பிடித்திருநதான.

யூதாவின இராசாவாகிய யோயாகீனும யூதரிற் பிரதானமான மனுஷரும பாபேலின சிறையிருபபுககுபபோனது.

௮ யோயாகீன் இராசாவாகிறபோது பதினெடடு வயதாயிருநது, எருசலேமிலேமூனறுமாத மரசாணடான எருசலேமூராளாகிய எல்நாத்தானினகுமாரத்தியான அவன தாயினபேர் நெகுஸ்தாள்.

௯ அவன தனதகபபனசெயதபடியெலலாஙகர்த்தரினபார்வைககுபபொலலாபபானதைசசெயதான.

௰ அககாலத்திலேபாபேலின இராசாவாகியநேபுகாத்நேத்சாரின ஊழியககாரர் எருசலேமுககேறிவநதார்கள. படடணம முற்றிககைபபோடடபபடடது.

௰௧ பாபேலின இராசாவாகிய நேபுகாத்நேத்சாருடைய ஊழியககாரர் படடணத்தைமுற்றிககைபபோடடபின் அவனதானுமதற்குவிரோதமாயவநதான.

௰௨ அபபோதுயூதாவினஇராசாவாகியயோயாகீனுமஅவனதாயுமஅவனஊழியககாரருமஅவனுடையபிரபுககளுமபிரதானிகளுமபாபேலின இராசாவணடைககுபபுறபபடடார்கள அவனைபபாபேலின இராசாதன இராசசியபாரத்தின எடடாமவருஷத்திலேபிடித்துக்கொணடு,

௰௩ அஙகேயிருநதுகர்த்தருடையவீடடின சகலபொககிஷஙகளையும இராசாவுடையவீடடினபொககிஷஙகளையும எடுத்துககொணடு, இஸரவேலின இராசாவாகியசாலோமோனகர்த்தரினதேவாலயத்திலுணடாககியிருநத பொனனான தடடுமுடடுகளையெலலாஙகர்த்தர் சொலலியிருநதபடியேயுடைத்துபபோடடு,

௰௪ எருசலேமியாரனைவரும எலலாபபிரபுககளும எலலாபபலசாலிகளுமாகிய பதினாயிரமபேரையும எலலாத்தசசரையுங கருமாரையுஞ சிறைபபிடித்துபபோனான. தேசத்தில நீசசனமெயலலாமலவேறொருவரும மீநதயானதிலலை.

௰௫ அவன யோயாகீனையும இராசாவினதாயையும இராசாவினஸதிரிகளையும அவன பிரதானிகளையுநதேசத்திறபலத்தவர்களையும எருசலேமிலிருநதுபாபேலுககுச சிறைபபிடித்துககொணடுபோனான.

௰௬ இபபடியே பாபேலின இராசா பலத்த சகலமனுஷராகிய ஏழாயிரமபேரையுந தசசருங கருமாருமாகிய ஆயிரமபேரையும நலலசேவகராகிய சகல பராககிரமரையும பாபேலுககுச சிறைபபிடித்துககொணடுபோனான.

௰௭ அவனுககுபபதிலாகபபாபேலின இராசா அவன சிறியதகபபனாகிய மத்தனியாவை இராசாவாக வைத்து அவனுககுசசிதேககியாவெனறு மறுபேரிடடான

சிதேககியா யூதாவினமேல இராசாவானது.

௰௮ சிதேககியா இராசாவாகிறபோது இருபத்தொருவயதாயிருநது பதினொரு

வருஷம் எருசலேமிலே அரசாண்டான். லிப்னாவூராகிய எரேமியாவின் குமாரத்தியான அவன் தாயின்பேர் அமீத்தாள்.

௰௯ யோயாக்கீம் செய்தபடியெல்லாம் அவன் கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௨௰ ஏனென்றால் எருசலேமையும் யூதாவையும் கர்த்தர் தம்முடைய முகத்தைவிட்டுத் தள்ளித் தீருமளவும் அவைகளின்மேலுள்ள அவருடைய கோபத்தினாலே இப்படி நடந்தது. நேபுகாத்நேச்சார் பாபிலோன் ராசாவை விட்டு மருள்விழுந்தான்.

## ௨௫. அதிகாரம்.

சிதேக்கியாவின் நாட்களில் எருசலேம் பிடிபட்டு யூதர் பாபிலோனிய சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்பட்டது.

அவன் இராசரிகம்பண்ணும் ஒன்பதாம்வருஷம் பத்தாம்மாதம் பத்தாந்தேதியிலே என்றால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் அவனும் அவனுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து அதற்கெதிரே பாளயமிறங்கிச் சுற்றிலும் அதற்கு எதிரே கொத்தளங்களைக் கட்டினார்கள்.

௨ அப்படியே பட்டணம் சிதேக்கியா இராசாவின் பதினோராம் வருஷமட்டும் முற்றிக்கைபோடப்பட்டிருந்தது.

௩ நாலாம் மாதம் ஒன்பதாந்தேதியிலே பஞ்சம் பட்டணத்திலே மிஞ்சித் தேசத்தின் சனத்திற்கு ஆகாரமில்லாதே போனபோதோவென்னில்,

௪ பட்டணம் திறப்பாயிற்று. அப்போது யுத்தமனுஷரெல்லாரும் கல்தேயர் பட்டணத்தைச் சூழ்ந்திருக்கக்கொள்ள இராத்திரிகாலத்திலே இராசாவுடைய தோட்டத்தின் வழியே இரண்டு மதில்களுக்கு நடுவான வாசலால் ஓடி அவர்களும் இராசாவுமாய் வயல் வெளிவழியே புறப்பட்டுப்போனார்கள்.

௫ ஆனால் கல்தேயரின் இராணுவத்தார் இராசாவைப் பின்தொடர்ந்து எரிகோவின் வயல்வெளிகளில் அவனை கிட்டவந்தார்கள். அப்போது அவன் இராணுவமெல்லாம் அவனைவிட்டுச் சிதறிப்போயிற்று.

௬ அவர்கள் இராசாவைப் பிடித்து அவனை ரிப்லாவிலிருக்கிற பாபேலின் இராசாவண்டைக்குக் கொண்டுபோய் அவனை நியாயந்தீர்த்து,

௭ சிதேக்கியாவின் குமாரரை அவன் கண்களுக்கு முன்பாக வெட்டிச் சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி அவனுக்கு இரண்டு வெண்கல விலங்குகளைப்போட்டு அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோனார்கள்.

௮ ஐந்தாம்மாதம் ஏழாந்தேதியாகிற நேபுகாத்நேச்சார் என்ற பாபேலுடைய இராசாவின் பத்தொன்பதாம் வருஷத்திலே பாபேலுடைய இராசாவின் ஊழியக்காரனாகிய நேபுசார்தான் என்ற தலையாரிகளின் அதிபதி எருசலேமுக்கு வந்து,

௯ கர்த்தரின் வீட்டையும் இராசாவின் வீட்டையும் எருசலேமின் சகல வீடுகளாகிய பெரிய வீடுகளெல்லாவற்றையும் அக்கினியாற் சுட்டெரித்துப்போட்டான்.

௰ தலையாரிகளின் அதிபதியோடிருக்கிற கல்தேயரின் இராணுவமெல்லாம் எருசலேமைச் சுற்றிலுமிருந்த அலங்கங்களை யிடித்துப்போட்டார்கள்.

௰௧ பட்டணத்தில் மீதியான மற்றச் சனத்தையும் பாபேலுடைய இராசாவின் வசமாக ஓடிவந்துவிட்டவர்களையும் மற்றச் சனக்கூட்டத்தையுந் தலையாரிகளின் தலைவனாகிய நேபுசார்தான் சிறைகளாகக் கொண்டுபோய்,

௰௨ நீசமான தேசத்தாரிற் சிலரைத் திராட்சத்தோட்டக்காரராகவும் பயிர்க்குடிகளாகவும் விட்டுவைத்தான்.

௰௩ கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலத் தூண்களையும் அதிலிருந்த ஆதாரங்களையும் கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலக்கடல் தொட்டியையுங் கல்தேயர் உடைத்துப்போட்டு அவைகளின் வெண்கலத்தைப் பாபேலுக்கெடுத்துக்கொண்டுபோய்,

௰௪ செப்புச்சட்டிகளையுஞ் சாம்பலெடுக்கும் ஆல்க்கரண்டிகளையும், வெட்டுகத்திகளையுந் தூபக்கலசங்களையும் ஆராதனைசெய்யப்பட்ட சகல வெண்கல முட்டுகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௰௫ சுத்தபொன்னும் சுத்தவெள்ளியுமான தூபக்கலசங்களையுங் கலசங்களையுந் தலையாரிகளின் அதிபதியெடுத்துக்கொண்டான்.

௰௬ சாலோமோன் கர்த்தருடைய வீட்டிற்காகப் பண்ணுவித்த அந்த இரண்டு தூண்களும் ஒரு கடல்தொட்டியும் ஆதாரங்களுமாகிய அந்தச் சகல முட்டுகளுடைய வெண்கலத்திற்கும் நிறையில்லை.

௰௭ ஒரு தூண் பதினெட்டுமுழ உசத்தியாயிருந்தது. அதின்மேல் அதற்கு மூன்றுமுழ உசத்தியான வெண்கல முடியுண்டாயிருந்தது. குமிழிலே சுற்றிலுமிரு

ந்த பின்னலும் மாதளம்பழங்களும் எல்லாம்வெண்கலமாயிருந்தது. மற்றத்தூணும் அதின் பின்னலும் அதற்குச்சரியாயிருந்தது.

௰௮ தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனாகிய செராயாவையும் இரண்டாம் ஆசாரியனாகிய செப்பனியாவையும் வாசற்படியின் மூன்றுகாவற்காரரையும்பிடித்தான.

௰௯ பட்டணத்திலேயெனில் அவன் யுத்தமனுஷரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானி ஒருவனையும் இராசாவின் மந்திரிகளிற் பட்டணத்தில் அகப்பட்ட ஐந்துபேரையுந் தேசத்தின்சனத்தைச் சேவகமெழுதுகிறதலையான இராணுவச்சம்பிரதியையுந் தேசச்சனத்திலே பட்டணத்திலகப்பட்ட அறுபது பேரையும் பிடித்தான.

௨௰ அவர்களைத்தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசார்தானபிடித்து ரிப்லாவிலிருக்கிற பாபேலின் இராசாவண்டைக்குக்கொண்டுபோனான்.

௨௧ அவர்களைப் பாபேலின் இராசா ஆமாத்தேசத்தின் பட்டணமான ரிப்லாவிலேவெட்டிக்கொன்றுபோட்டான. இப்படியே யூதர் தங்கள் தேசத்திலிருந்து சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்பட்டார்கள.

௨௨ ஆனாற் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் யூதேயாதேசத்திலமீதியாகவைத்த சனத்தின்மேல அவன் சாப்பானின்குமாரனாகிய அகிக்காமினமகன கெதலியாவை யதிகாரி யாகவைத்தான்.

௨௩ பாபேலின் இராசா கெதலியாவை யதிகாரியாகவைத்ததைச்சகல இராணுவச்சேர்வைக்காரரும், அவர்களுடைய மனுஷருங்கேட்டபோதோவெனில, அவர்களமிஸ்பாவிலிருக்கிறகெதலியாவண்டையிலேவந்தார்கள. ஆனெனில, நெத்தனியாவின்குமாரன இஸ்மவேலுங, காரேயாவின் குமாரன யோக்கனானும, நேத்தோப்பாத்தியனாகிய தன்கூமேத்தின்குமாரன செராயாவும, மாகாத்தியனான ஒருவனுடையகுமாரன யாசனியாவும, அவர்களும அவர்களமனுஷருமாயத்தானே.

௨௪ அப்போது கெதலியா அவர்களுக்கும அவர்களமனுஷருக்கும ஆணையிட்டு, அவர்களுடனே, நீங்களகல்தேயரைச சேவிக்கப்பயப்படவேண்டாம. தேசத்திலிருந்து பாபேலின இராசாவைசசேவியுங்கள அப்போது உங்களுக்குநன்மையாகுமெனறான.

௨௫ ஏழாமாதத்திலேயெனறால, இராசவிதத்திலேபிறந்த ஏலிசாமாவினகுமாரனாகியநெத்தனியாவினமகன இஸ்மவேல பத்துமனுஷரோடேகூடவந்து, கெதலியாவையும அவனோடேமிஸ்பாவிலிருந்த யூதரையுங கல்தேயரையும வெட்டிக்கொன்றுபோட்டான.

௨௬ அப்போதுசிறியோருமபெரியோருமாகிய சனம அனைத்தும இராணுவசசேர்வைக்காரருமெழுந்து புறப்பட்டு, எகிப்திற்குவந்தார்கள. ஏனெனிற்கல்தேயருக்குப்பயந்திருந்தார்கள.

௨௭ யூதாவின இராசாவாகியயோயக்கீனுடைய சிறையிருப்பின முப்பத்தேழாம் வருஷம பன்னிரண்டாமாதம இருபத்தேழாந்தேதியிலே சமபவித்த தேதெனறால, ஏவில்மெரோதாக்கென்ற பாபேலின இராசா, தானஇராசாவானவருஷத்திலே யூதாவின இராசாவாகிய யோயக்கீனின்தலையையுயர்த்தியவனைக் காவலவீட்டிலிருந்து புறப்படப்பண்ணி,

௨௮ அவனோடேயனபாயப்பேசி, அவனுடைய ஆசனத்தைத்தனனோடே பாபேலிலிருந்த இராசாக்களின ஆசனங்களுக்கு உயரமாக வைத்து,

௨௯ அவனுடைய காவலவீட்டு வஸதிரங்களைமாற்றினான. அவன உயிரோடிருந்த சகலநாளும நித்தம இவனுக்குமுனபாக அப்பஞ்சாப்பிட்டான.

௩௰ அவனுடைய செலவுக்கோவெனில், அவன உயிரோடிருந்த நாளெல்லாம அவனுக்கு இராசாவினால அனுதினக்கட்டளையான திட்டம எப்போதும அனுதினமுங்கொடுக்கப்பட்டது.

இராசாக்களுடைய இரண்டாமபுஸ்தகம

முடிந்தது முற்றும்.

### நாளாகமத்தின்

# முதலாம்புஸ்தகம்.

## ௧. அதிகாரம்.

ஆதாம் முதற்கொண்டு யாககோப்மட்டு மிருந்த கோத்திரப்பிதாக்களின் வம்ச வரிசை.

ஆதாம். சேத், ஏனோஸ்,
௨ கேனான், மகலாலெயேல், யாரேத்,
௩ ஏனோக், மெத்தூசலா, லாமேக்,
௪ நோவா, சேம், காம், யாப்பேத்,
௫ யாபேத்துக்கிருந்தகுமாரர் கோமேர், மாகோக் மாதாய், யாபான், தூபால், மேசேக், தீராஸ் என்பவர்கள்.
௬ கோமேரின் குமாரர் அஸ்கேனாஸ், தீப்பாத், தோகர்மா என்பவர்கள்.
௭ யாபானின்குமாரர் எலீசா, தர்சீஸ், கித்தீம், தொதானிமென்பவர்கள்.
௮ காமின் குமாரர் கூஸ், மிஸ்ராயிம், பூத், கானானென்பவர்கள்.
௯ கூஸின் குமாரர் சேபா, ஆவிலா, சப்தா, ராமா, சப்தேகாவென்பவர்கள். ராமாவின்குமாரர் சேபா, தேதானென்பவர்கள்.
௰ கூஸ் நிம்ரோதைப்பெற்றான். இவன் பூமியிலே பராக்கிரமசாலியாகத் துவக்கினான்.
௰௧ மிஸ்ராயிம், லூதியரையும். அனாமியரையும், லெகாபியரையும், நப்தூகியரையும்.
௰௨ பத்ரூசியரையும், பெலிஸ்தர்பிறந்த கஸ்லூகியரையுங்கப்தோரியரையும் பெற்றான்.
௰௩ கானான் சீதோனென்ற தன்மூத்த குமாரனையும் ஏத்தையும்,
௰௪ எபூசியரையும், எமோரியரையும், கிர்காசியரையும்,
௰௫ ஏவியரையும், அர்கீயரையும், சீனியரையும்.
௰௬ அர்வாதியரையும், சேமாரியரையும், ஆமாத்தியரையும்பெற்றான்.
௰௭ சேமின்புத்திரர் ஏலாம், அசூர் அர்பக்சாத், லூத், ஆராம், ஊஸ், ஊல், கேத்தேர், மேசேக்கென்பவர்கள்.
௰௮ அர்பக்சாத் சாலாவைப் பெற்றான். சாலாக் ஏபேரைப்பெற்றான்.
௰௯ ஏபேருக்கு இரண்டுகுமாரர்பிறந்தார்கள். ஒருவன்பேர் பேலேக், ஏனெனில் அவன் நாட்களிலே பூமி பிரிவுபட்டது அவன்சகோதரன்பேர் யோக்தான்.
௨௰ யோக்தான், அல்மோதாதையும், சேலேபையும் ஆத்சர்மாவேத்தையும், யேராகையும்,
௨௰௧ அதோராமையும், ஊசாலையும், திக்லாவையும்,
௨௰௨ ஏபாலையும், அபிமாவேலையும், சேபாவையும்,
௨௰௩ ஓப்பீரையும், ஆவிலாவையும், யோபாபையும் பெற்றான். இவர்களெல்லாரும் யோக்தானின்குமாரர்.
௨௰௪ சேம், அர்பக்சாத், சாலா,
௨௰௫ ஏபேர், பெலெக், ரேகூ,
௨௰௬ செரூக், நாகோர், தாரா,
௨௰௭ ஆபிர்காமாகிய ஆபிராம்,
௨௰௮ ஆபிர்காமின் குமாரர் ஈசாக்கும் இஸ்மவேலுமென்பவர்கள்.
௨௰௯ இவர்களுடைய சந்ததிகளாவது, இஸ்மவேலின் மூத்தகுமாரனாகிய நெபாயோத், கேதார், அத்பெயேல், மிப்சாம்,
௩௰ மிஸ்மா, தூமா, மாசா, ஆதாத், தேமா,
௩௰௧ யெத்தூர், நாப்பீஸ், கெத்மாவுந்தானே. இவர்கள் இஸ்மவேலின்குமாரர்.
௩௰௨ ஆபிர்காமின் வைப்பாட்டியாகிய கேத்தூராள்பெற்ற குமாரர் சிம்ரான், யொக்சான், மேதான் மீதியான், இஸ்பாக், சூவாவென்பவர்கள். யொக்சானின்குமாரர் சேபா, தேதானென்றவர்கள்.
௩௰௩ மீதியானின் குமாரர் ஏப்பா, ஏபேர், ஆனோக், அபிதா, எல்தாகாவென்பவர்கள். இவர்களெல்லாரும் கேத்தூராளின் புத்திரர்.
௩௰௪ ஆபிர்காம் ஈசாக்கைப் பெற்றான். ஈசாக்கின்குமாரர் ஏசாவும் இஸ்ரவேலுந்தானே.

ஏசாவின் சந்ததியும் ஏதோமையாண்டவர்களின் பேர்டாப்பும்.

௩௫ ஏசாவின் குமாரர் எலிப்பாஸ், ரெகுவேல், எகூஸ், யாலாம், கோராகென்பவர்கள்.

௩௬ எலிப்பாசின் குமாரர் தேமான், ஓமார், செப்பி, காத்தாம், கேனாஸ், திம்னா, அமலேக்கென்றவர்கள்.

௩௭ ரெகுவேலின் குமாரர் நாகாத், சேராக், சம்மா, மிசாவென்றவர்கள்.

௩௮ சேயீரின் குமாரர் லோத்தான், சோபால், சிபெயோன், ஆனா, திசோன், எத்சேர், திசானென்பவர்கள்.

௩௯ லோத்தானின் குமாரர் ஓரி, ஓமாமென்றவர்கள் லோத்தானின் சகோதரி திம்னாளென்றவள்

௪௰ சோபாலின் குமாரர் அல்யான், மனாகாத், ஏபால், செப்பி, ஓனாமென்றவர்கள். சிபெயோனின் குமாரர் அயா ஆனாவென்றவர்கள்.

௪௧ ஆனாவின் குமாரரில் ஒருவன் திசோனென்றவன். திசோனின் குமாரர் அம்ராம், எஸ்பான், இத்ரான், கேரானென்றவர்கள்.

௪௨ எத்சேரின் குமாரர் பில்லான், சாவான், யாக்கானென்றவர்கள். திசானின் குமாரர் ஊஸ் ஆரானென்றவர்கள்.

௪௩ இஸ்ரவேல் புத்திரரை யாதொரு இராசா ஆளாததற்கு முன்னே ஏதோம் தேசத்தில் அரசாண்ட இராசாக்களாவன, பேயோரின் குமாரன் பேலாவென்றவன். அவன் பட்டணத்தின்பேர் தின்காபா.

௪௪ பேலா மரித்தபின் போஸ்றா ஊரானாகிய சேராகின் குமாரன் யோவாப் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௪௫ யோவாப் மரித்தபின் தேமானியரின் தேசத்தானாகிய ஊசாம் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௪௬ ஊசாம் மரித்தபின் பேதாதின் குமாரனான ஆதாத் அவன் ஸ்தலத்தில் இராசாவானான். இவன் மீதியானியரை மோவாபின் வெளியிலே முறியடித்தவன். இவன் பட்டணத்தின்பேர் ஆவீத்.

௪௭ ஆதாத் மரித்தபின் மஸ்ரேக்கா ஊரானாகிய சம்லா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௪௮ சம்லா மரித்தபின் நதியோரமான ரெகோபோத் ஊரானாகிய சவுல் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௪௯ சவுல் மரித்தபின் அக்போரின் குமாரன் பால்கானான் அவன் ஸ்தலத்திலே இராசாவானான்.

௫௰ பால்கானான் மரித்தபின் ஆதாத் அவன் ஸ்தலத்தில் இராசாவானான். இவன் பட்டணத்தின்பேர் பாகியென்பது. மேசகாபின் குமாரத்தியாகிய மாத்ரேத்தின் மகளான அவன் பெண்சாதியின்பேர் மெகேதபேல்.

௫௧ ஆதாத் மரித்தபின் ஏதோமில் ஏற்பட்ட அதிபதிகளாவது திம்னா அதிபதி அல்யா அதிபதி எத்தேத் அதிபதி,

௫௨ அகோலிபாமா அதிபதி ஏலா அதிபதி பினோன் அதிபதி,

௫௩ கேனாஸ் அதிபதி தேமான் அதிபதி மிப்சார் அதிபதி,

௫௪ மக்தியேல் அதிபதி ஈராம் அதிபதி இவர்கள் ஏதோமின் அதிபதிகளானவர்கள்.

## உ. அதிகாரம்.

யாக்கோபின் குமாரனாகிய யூதாவின் சந்ததி.

இஸ்ரவேலின் குமாரர், ரூபன், சிமியோன், லேவி, யூதா, இசக்கார், செபுலோன்,

௨ தாண், யோசேப், பென்யமீன், நப்தலி, காத், ஆசேரென்றவர்கள்.

௩ யூதாவின் குமாரர், ஏர், ஓனான், சேலா, என்றவர்கள். இந்த மூன்று குமாரர் சூவாபின் மகளான கானானிய ஸ்திரியினிடத்தில் அவனுக்குப் பிறந்தார்கள். ஏர் என்ற யூதாவின் மூத்த குமாரன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாதவனானபடியால் அவனைக் கொன்றார்.

௪ அவன் மருமகளாகிய தாமார், அவனுக்குப் பேரேத்சையும், சேராகையும் பெற்றாள். யூதாவின் குமாரரெல்லாம் ஐந்துபேர்.

௫ பேரேத்சின் குமாரர், எஸ்ரோன், ஆமூலென்றவர்கள்.

௬ சேராகின் குமாரரெல்லாம், சிம்ரீ, ஏத்தான், ஏமான், கல்கோல், தாராவென்ற ஐந்துபேர்.

௭ சங்காரத்திற்கு நியமிக்கப்பட்டதிலே துரோகம்பண்ணி இஸ்ரவேலைக் கலக்கப்பண்ணின ஆகாரென்றவன் கர்மீபுத்திரரில் ஒருவன்.

௮ ஏத்தானின் குமாரர், அசரியா, முதலானவர்கள்.

௯ எஸ்ரோனுக்குப் பிறந்த குமாரர். எர்மெயேல், ராம், கெலுபாய் என்றவர்கள்.

௰ ராம் அம்மினதாபைப் பெற்றான். அம்மினதாப் யூதா புத்திரரின் பிரபுவாகிய நகசோனைப் பெற்றான்.

௰௧ நகசோன சல்மாவைப் பெற்றான். சல்மா போவாசைப் பெற்றான்.

௰௨ போவாஸ் ஓபேதைப் பெற்றான். ஓபேத் ஈசாயியைப் பெற்றான்.

௰௩ ஈசாய் தன் மூத்த குமாரன் எலியாபையும், அபினதாபென்ற இரண்டாங் குமாரனையும், சிமேயாவென்ற மூன்றாங் குமாரனையும்,

௰௪ நாதனெயேலென்ற நாலாங் குமாரனையும், ரதாயியென்ற ஐந்தாங் குமாரனையும்,

௰௫ ஒத்சேமென்ற ஆறாங் குமாரனையும், தாவீதென்ற ஏழாங் குமாரனையும் பெற்றான்.

௰௬ அவர்கள் சகோதரிகள் செருயாள், அபிகாயிலென்றவர்கள். செருயாளின் குமாரர், அபிசாய், யோபாப், ஆசகேலென்ற மூன்றுபேர்.

௰௭ அபிகாயில் அமாசாவைப் பெற்றாள். அமாசாவின் தகப்பன் இஸ்மவேலியனாகிய யெத்தேரென்றவன்.

௰௮ எஸ்றோனின் குமாரன் காலேப், எரீயோதென்னப்பட்ட தன் பெண்சாதியாகிய அசுபாளாலே பெற்ற குமாரர் யேசேர், சோபாப், அர்தோனென்றவர்கள்.

௰௯ அசுபாள் செத்துப்போனபின் காலேப் எப்பிராத்தை விவாகம்பண்ணினான். இவள் அவனுக்கு ஊரைப் பெற்றாள்.

௨௰ ஊர் ஊரியைப் பெற்றான். ஊரி பெத்சாலெயேலைப் பெற்றான்.

௨௰௧ பிற்பாடு எஸ்றோன் கிலெயாத்தின் தகப்பனாகிய மாகீரின் குமாரத்தியினிடத்தில் உட்பிரவேசித்தான்; தான் அறுபது வயதானபோது அவளை விவாகம்பண்ணினான். இவள் அவனுக்குச் செகுபைப் பெற்றாள்.

௨௰௨ செகுப் யாவீரைப் பெற்றான். இவனுக்குக் கிலெயாத் தேசத்தில் இருபத்துமூன்று ஊர்களிருந்தது.

௨௰௩ கேசூரும் ஆராமும் யவீரின் கிராமங்களையும் கேனாத்தும் அதற்கடுத்த கிராமங்களுமாகிய அறுபது ஊர்களையும் அவர்களைக் கைப்பிடித்தார்கள். இவர்களெல்லாரும் கிலெயாத்தின் தகப்பனாகிய மாகீரின் குமாரர்.

௨௰௪ காலேபின் ஊராகிய எப்பிராத்தாவில் எஸ்றோன் செத்துப்போனபின் எஸ்றோனின் பெண்சாதியாகிய அபீயாள் அவனுக்குத் தெக்கோவாவின் தகப்பனாகிய அசூரைப் பெற்றாள்.

௨௰௫ எஸ்றோனுக்கு மூத்தபிறந்த யெராமெயேலின் குமாரர், ராம் என்ற மூத்தவனும், பூனா, ஓரேன், ஒத்சேம், அகியா என்றவர்களுமே.

௨௰௬ அத்தாரா என்றபேருள்ள வேறொரு பெண்சாதியும் யெராமெயேலுக்கிருந்தாள். இவள் ஓனாமின் தாய்.

௨௰௭ யெராமெயேலுக்கு மூத்தபிறந்த ராமின் குமாரர், மாஸ், யாமின், எக்கேரென்றவர்கள்.

௨௰௮ ஓனாமின் குமாரர், சம்மாய், யாதாவென்றவர்கள். சம்மாயின் குமாரர் நாதாப், அபிசூரென்றவர்கள்.

௨௰௯ அபிசூருடைய பெண்சாதியின் பேர் அபிகாயில், அவள் அவனுக்கு அக்பானையும் மோளிதையும் பெற்றாள்.

௩௰ நாதாபின் குமாரர், சேலேத், அப்பாயிம் என்றவர்கள். சேலேத் குமாரரில்லாமல் மரித்தான்.

௩௰௧ அப்பாயிமின் குமாரர், இசேயி முதலானவர்கள். இசேயின் குமாரர், சேசான் முதலானவர்கள், சேசானின் குமாரத்தி அக்லாய்.

௩௰௨ சம்மாயின் சகோதரனாகிய யாதாவின் குமாரர் ஏத்தேர், யோனத்தானென்றவர்கள். ஏத்தேர் குமாரரில்லாமல் மரித்தான்.

௩௰௩ யோனத்தானின் குமாரர், பேலேத், சாசா என்றவர்கள். இவர்கள் யெராமெயேலின் புத்திரரானவர்கள்.

௩௰௪ சேசானுக்குக் குமாரத்திகளேயல்லாமல், குமாரரில்லாதிருந்தார்கள். ஆனால் சேசானுக்கு யர்கா என்ற பேருள்ள எகிப்திய வேலைக்காரனிருக்கையில்,

௩௰௫ அவன் தன் குமாரத்தியைத் தன் வேலைக்காரனாகிய யர்காவுக்குக் கொடுத்தான். அவள் அவனுக்கு அத்தாயியைப் பெற்றாள்.

௩௰௬ அத்தாயி நாத்தானைப் பெற்றான். நாத்தான் சாபாத்தைப் பெற்றான்.

௩௰௭ சாபாத் எப்லாலைப் பெற்றான். எப்லால் ஓபேதைப் பெற்றான்.

௩௰௮ ஓபேத் ஏகூவைப் பெற்றான். ஏகூ அசரியாவைப் பெற்றான்.

௩௰௯ அசரியா எலேத்சைப் பெற்றான். எலேத்ஸ் எலெயாசாவைப் பெற்றான்,

௪௰ எலெயாசா சிஸ்மாயைப் பெற்றான். சிஸ்மாய் சல்லூமைப் பெற்றான்.

௪௰௧ சல்லூம் எக்கமியாவைப் பெற்றான். எக்கமியா எலிசாமாவைப் பெற்றான்.

௪௰௨ யெராமெயேலின் சகோதரனாகிய காலேபின் குமாரர். சீபின் தகப்பனாகிய மேசா என்ற அவனுக்கு மூத்தப் பிறந்தவ

னும், எபிரோனின் தகப்பனாகிய மெரேசா வின் குமாரர்தானே.

௪௩ எபிரோனின் குமாரர், கோராக், தப்பூவா, ரெகேம், சாமா வென்றவர்கள்.

௪௪ சாமா யோர்க்கேயாமின் தகப்ப னாகிய ராகாமைப்பெற்றான். ரெகேம் சம்மாயைப்பெற்றான்.

௪௫ சம்மாயின் குமாரன் மாகோன் மா கோன் பெத்சூரின் தகப்பன்.

௪௬ காலேபின் வைப்பாட்டியாகிய எப்பாள் ஆரானையும் மோத்சாவையுங் கா சேசையும் பெற்றாள். ஆரான் காசேசை ப்பெற்றான்.

௪௭ எதாயின் குமாரர், ரேகேம், யோ த்தாம், கேசான், பேலேத், எப்பா, சா காப் என்றவர்கள்.

௪௮ காலேபின் வைப்பாட்டியாகிய மாகா வசேபேரையுந் திற்கானாவையும் பெற்றாள்.

௪௯ அவள் மத்மன்னாவின் தகப்பனாகிய சாகாபையும், மக்பேனாவுக்குங் கிபியா வுக்குந் தகப்பனாகிய சேவாவையும் பெற் றாள். காலேபின் குமாரத்தி அக்சாளென் றவள்.

௫௰ எப்பிராத்தாளிடத்தில் முதற்பிறந்த ஊருடைய குமாரனாகிய காலேபின் கு மாரர் கீரியாத்தியாரீமின் மூப்பனான சோ பாலும்,

௫௧ பெத்லேகேமின் மூப்பனாகிய சல்மா வும் பெத்காதேரின் மூப்பனான ஆரேப்பு ந்தானே.

௫௨ கீரியாத்தியாரீமின் மூப்பனான சோ பாலின் குமாரர் ஆரோவே ஆசியம் மெனு கோத் என்றவர்கள்.

௫௩ கீரியாத்தியாரீமிலிருந்த வம்சங்க ள் எத்திரியருந் பூத்தியருஞ் சுமாத்தியரும் மி ஸ்ராவியருந்தானே. இவர்களிற் சோராத் தியரும் எஸ்தவோலியரும் பிறந்தார்கள்.

௫௪ சல்மாவின் சந்ததிகள் பெத்லகே மியரும் நேத்தோபாத்தியரும் பெத்யோ வாப் என்ற ஆத்ரோத் ஊராரும், மானா த்தியரிலும் சோரியரிலும் பாதிச்சனங்க ளுந்தானே.

௫௫ யாபேத்சிற்குடியிருந்த கணக்கரி ன் வம்சங்கள். திராத்தியருஞ், சிமாத்திய ருஞ், சுக்காத்தியருந்தானே. ரேகாப்வீ ட்டாரின் தகப்பனாகிய அம்மாத்தின் சந் ததியாரான கேனியர் இவர்கள்தானே.

## ௩. அதிகாரம்.

### தாவீதின் சந்ததியார்.

தாவீதுக்கு எபிரோனிலே பிறந்த கு மாரராவது, இஸ்ரேயேலூராளான அகி

னோவாமினிடத்திலே பிறந்த அம்னோன் முதற்பேறானவன். கர்மேலின் ஊராளா ன அபிகாயேலினிடத்திலே பிறந்த தானி யேல் இரண்டாங்குமாரன்.

௨ கேசூரின் இராசாவாகிய தல்மாயின் குமாரத்தி மாக்காள் பெற்ற அப்சலோம் மூன்றாங்குமாரன். நாலாங்குமாரன் ஆகி த்பெற்ற அதோனியா வென்றவன்.

௩ ஐந்தாங்குமாரன் அபித்தாள் பெற் ற செப்பத்தியா வென்றவன். ஆறாங்குமா ரன் அவன் பெண்சாதியாகிய எக்லாள் பெற்ற எத்ரேயாமென்றவன்.

௪ இந்த ஆறு குமாரர் அவனுக்கு எபி ரோனிலே பிறந்தார்கள். எனெனில் அங் கே ஏழுவருஷமும் ஆறுமாதமும் அரசா ண்டான். எருசலேமிலோவென்றால், முப் பத்துமூன்றுவருஷம் அரசாண்டான்.

௫ எருசலேமில் அவனுக்குப் பிறந்தவர் களாவது, அம்மியேலின் குமாரத்தியாகி ய பத்சுவாளிடத்திலே சிமெயா, சோபா ப், நாத்தான், சாலொமோனென்ற நாலு பேரும்,

௬ இப்கார், எலிசாமா, எலிப்பேலெத்,

௭ நோகா, நேபேக், யப்பீயா,

௮ எலீசாமா, எலீயாதா, எலீபேலெ தென்ற ஒன்பதுபேருந்தானே.

௯ வைப்பாட்டிகளின் குமாரரையும் இ வர்கள் சகோதரியாகிய தாமாரையுந்தவி ர், அவர்களெல்லாருந் தாவீதின் குமாரர்.

௰ சாலொமோனின் குமாரன் ரெகொபெ யாம், இவனுடைய குமாரன் அபியா, இவ னுடைய குமாரன் ஆசா, இவனுடைய கு மாரன் யோசபாத்,

௰௧ இவனுடைய குமாரன் யோராம், இவனுடைய குமாரன் அகசியா, இவனு டைய குமாரன் யோவாஸ்,

௰௨ இவனுடைய குமாரன் அமத்சியா, இவனுடைய குமாரன் அசரீயா, இவனு டைய குமாரன் யோத்தாம்,

௰௩ இவனுடைய குமாரன் ஆகாஸ், இ வனுடைய குமாரன் எசக்கியா, இவனு டைய குமாரன் மனாசே

௰௪ இவனுடைய குமாரன் ஆமோன், இவனுடைய குமாரன் யொசியா,

௰௫ யொசியாவின் குமாரராவது, முத ற்பிறந்த யோகனானும் யோயக்கீமென்ற இரண்டாங்குமாரனும் சிதேக்கியா என் ற மூன்றாங்குமாரனுஞ் சல்லூமென்ற நாலாங்குமாரனுந்தானே.

௰௬ யோயக்கீமின் குமாரர், எகொனி யா முதலானவர்கள். இவனுக்கு மகனான வன், சிதேக்கியா

௰௭ கட்டுண்ட எகோனியாவின்குமாரர் செயாலத்தியேல்,

௰௮ மல்கீராம், பெதாயா, செனாக்சார், எக்கமியா, ஒசாமா, நெத்பீயாவென்றவர்கள்.

௰௯ பெதாயாவின் குமாரர், செருபாபேல், சிமேயி என்றவர்கள். செருபாபேலின்குமாரர், மெசுல்லாம், அனனீயா, இவர்கள் சகோதரியாகிய செலோமீத்தென்றவர்களும்,

௨௰ அசூபா, ஒகேல், பெரேகியா, அசதியா, யூசாப் எசேதென்ற ஐந்துபேருந்தானே.

௨௧ அனனீயாவின்குமாரர், பெலாத்தியா, எசாயாவென்றவர்கள். இவனுடைய குமாரன் ரெபாயா, இவனுடைய குமாரன் அர்னோன், இவனுடையகுமாரன் ஒபதியா, இவனுடையகுமாரன்செக்கானியா,

௨௨ செக்கானியாவின்குமாரன்செமாயா முதலானவர்கள், செமாயாவின் குமாரர், அத்தூஸ், எகேயால், பரியாக், நெயாரியா, சாப்பாத்தென்ற ஆறுபேர்.

௨௩ நெயாரியாவின்குமாரர், எலியோனாய், எசேக்கியா, அஸ்ரிக்காமென்ற மூன்றுபேர்.

௨௪ எலியோனாயின்குமாரர் ஒதவீயா, எலியாசிப், பெலாயா, அக்கூப், யோகனான், தெலாயா, ஆனானியென்ற ஏழுபேர்.

## ௪. அதிகாரம்.

யூதாவுடைய மறுசந்ததி.

இயூதாவுக்கிருந்தகுமாரர், பேரேஸ், எஸ்ரோன் கர்மி, ஊர், சோபாலென்றவர்கள்.

௨ சோபாலின்குமாரன் ராயா யாகாத்தைப்பெற்றான். யாகாத் அகுமாயியையும் லாகாதையும்பெற்றான். சோரோயா ஊரரின்வம்சங்களின் தலைவர்களேதானே.

௩ ஏதாமென்றமூப்பனின் சந்ததியார், இயெஸ்ரேயேல், இஸ்மா, இத்பாஸ் என்றவர்கள். இவர்களுடைய சகோதரியின்பேர் அத்செலெல்போனி,

௪ கேதோருக்கு மூப்பனான பெனுவேல், உஷாவுக்கு மூப்பனான ஏசேரென்றவர்கள். இவர்கள் பெத்லெகேமுக்கு மூப்பனான எப்பிறாத்தாவுக்கு முதற்பிறந்த ஊரின்குமாரர்.

௫ தெக்கோவாவுக்கு மூப்பனான அஸ்கூருக்கு எலாள் நாராளென்ற இரண்டு பெண்சாதிகளிருந்தார்கள்.

௬ நாராள் அவனுக்கு அகுசாமையும், எபேரையும், தேமனியையும் அகாஸ்தாரியையும்பெற்றாள். நாராளின்குமாரர்கள் இவர்கள்தான்.

௭ ஏலாளின்குமாரர், சேரேத், எத்சோகார், எத்னானென்றவர்கள்.

௮ கோசென்றவன் அனூபையுஞ்சோபேவாவையும அருமின்குமாரனாகிய அகர்கேலின் வம்சங்களையும்பெற்றான்.

௯ யாபேஸ் தன்சகோதரரைப்பார்க்கக் கனம்பெற்றவனாயிருந்தான். வாதையோடேயவனைப்பெற்றேனென்று அவன் தாய் அவனுக்கு யாபேசென்றுபேரிட்டிருந்தாள்.

௰ யாபேஸ் இஸ்ரவேலின் பராபரனை நோக்கித் தேவரீரென்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து என் எல்லையைப்பெரிதாக்கி, உமதுகரம் என்னோடிருக்கிறதினாலே தீங்கு என்னை வாதிக்காதபடிக்குக் காத்தருளுவீராக, நான் இன்னபடி செய்வேனென்று கூப்பிட்டான். அப்போது பராபரன் அவன்கேட்டதை வரப்பண்ணினார்.

௰௧ சூகாவின்சகோதரனாகிய கேலூப் மேகீரைப்பெற்றான். இவன் எஸ்தோனின் தகப்பன்.

௰௨ எஸ்தோன் பெத்ராப்பாவையும் பசேயாகையும் இர்நாகாஷின்தகப்பனாகிய தெகின்னாவையும்பெற்றான். இவர்கள் ரேகாவூர்மனுஷர்.

௰௩ கேனாசின் குமாரர், ஒத்னீயேல், செராயாவென்றவர்கள் ஒத்னீயேலின்குமாரரிலொருவன் ஆததாத்.

௰௪ மெயோனத்தாய் ஒபிறாவைப்பெற்றான். செராயா சிற்பாசாரிகளின்பள்ளத்தாக்குக்கு மூப்பனாகிய யோவாபைப் பெற்றான். அந்தஸ்தலத்தில் தொழிலாளிகளானார்கள்.

௰௫ எப்புன்னேயின் குமாரனாகிய காலேபின்குமாரர், ஈரு, ஏலா, நாகாம், ஏலாவின் குமாரரிலொருவன்கேனாஸ்,

௰௬ எகலெலெலின் குமாரர், சீப், சீபா, திரியா, அசாரேயேல்,

௰௭ எஸ்றாவின்குமாரர், எத்தேர், மேரேத், ஏபேர், யாலோன், மேரேத்தின் பெண்சாதி மிரியாமையும் சம்மாயியையும் எஸ்தெமோவாவூருக்கு மூப்பனாகிய இஸ்பாகையும் பெற்றாள்.

௰௮ அவன் பெண்சாதியாகிய எகுதியாள் கேதோரின்தகப்பனாகிய எரேதையும், சோகோவின் தகப்பனாகிய எபேரையும், சனோவாகின்தகப்பனாகிய எக்கூத்தியேலையும்பெற்றாள். மேரேத் விவாகப

பண்ணின பார்வோனின் குமாரத்தியாகிய பித்தியாளின் குமாரர் இவர்களேதான்.

௰௯ நாகாமின் சகோதரியாகிய ஒதியாவினுடைய பெண்சாதியின் குமாரர், கர்மியனாகிய அபிகேயிலாவும் மாகாத்தியனாகிய எஸ்தெமோவுந்தானே.

௨௰ சீமோனின் குமாரர், அம்னோன், ரின்னா, பென்கானான், தீலோனென்றவர்கள்; இசேயின் குமாரர் சோகேதும், பென்சோகேதுந்தானே.

௨௧ யூதாவின் குமாரனாகிய சேலாகின் புத்திரராவது லேக்காவூர் மூப்பனான ஏரும், மரேசாவூர் மூப்பனான லாதாகும், மெல்லியபுடவை நெய்த அஸ்பேயாவீட்டு வம்சங்களும்,

௨௨ யோக்கீமும் கோசேபாவின் மனுஷரும், மோபாவியரை ஆண்ட யோவாஸ், சாராப் என்றவர்களும் யசுபிலெகேமுந்தானே; ஆனால் அவைகள் பூர்வகாலத்தின் செய்திகள்.

௨௩ இவர்கள் குயவராயிருந்து நெத்தாயிமிலும் கெதேராவிலும் குடியிருந்தார்கள். அங்கே இராசாவோடே அவன் வேலையை விசாரிக்கிறதற்குக் குடியிருந்தார்கள்.

## சிமேயோனின் சந்ததி.

௨௪ சிமேயோனின் குமாரர் நெமுவேல், யாமின், யாரிப், சேராக், சவுலென்றவர்கள்.

௨௫ இவன் குமாரன் சல்லூம், இவன் குமாரன் மிப்சாம், இவன் குமாரன் மிஸ்மா என்றவன்.

௨௬ மிஸ்மாவின் குமாரரில் ஒருவன் அம்முவேல், இவன் குமாரன் சக்கூர், இவன் குமாரன் சீமேயி.

௨௭ சீமேயிக்குப் பதினாறு குமாரரும் ஆறு குமாரத்திகளுமிருந்தார்கள். அவன் சகோதரருக்கோவெனில், அநேகங் குமாரரிருந்ததில்லை. அவர்கள் வம்சமெல்லாம் யூதாவின் புத்திரரைப்போலப் பெருகினதுமில்லை.

௨௮ அவர்கள் பெர்சேபாவிலும் மொலாதாவிலும் ஆத்சார் சூவாலிலும்,

௨௯ பிலகாவிலும், எத்சேமிலும், தோலாதிலும்,

௩௰ பெத்துவேலிலும், ஒர்மாவிலும், சிக்லாகிலும்,

௩௧ பெத்மர்காபோதிலும், ஆத்சார்சூசிமிலும், பெத்பீரியிலும், சாராயிமிலும் குடியிருந்தார்கள். தாவீது இராசாவாகுமட்டும் இவைகளே அவர்கள் பட்டணங்களாயிருந்தது.

௩௨ அவர்களுடைய பேட்டைகள் ஏத்தாம், ஆயின், ரிம்மோன், தோகேம், ஆசானென்னும் ஐந்து ஊரும்.

௩௩ அந்தப் பட்டணங்களைச் சுற்றிலும் பாகால்மட்டுமுள்ள அவர்களுடைய எல்லாப் பேட்டைகளுந்தானே இவைகளே அவர்கள் வாசஸ்தலங்களும் அவர்களுக்கு இருக்கிற அவர்களுடைய வம்ச அட்டவணையுந்தானே.

௩௪ ஆனால் மெசோபாபும், யம்லேகும், அமசியாவின் குமாரன் யோஷாகும்,

௩௫ யோவேலும், ஆசியேலின் மகன் செராயாவுக்குப் பிறந்த யோசிபியாவின் குமாரன் ஏகுவும்,

௩௬ எலியோனாயும், யாக்கோபாவும், எசோகாயாவும், அசாயாவும், ஆதியேலும், எசிமியேலும், பெனாயாவும்,

௩௭ செமாயா பெற்ற சிம்ரியின் மகன் எதாயாவுக்குப் பிறந்த அல்லோனின் மகனாகிய சீப்பியின் குமாரன் சீசாவும் என்கிற

௩௮ பேர்பேராய் எழுதியிருக்கிற இவர்கள் தங்கள் வம்சங்களில் பிரபுக்களாயிருந்தார்கள். இவர்கள் பிதாக்களின் வீட்டார் ஏராளமாய்ப் பரம்பி,

௩௯ தங்கள் ஆடுகளுக்கு மேய்ச்சலைத் தேடும்படிக்குக் கேதோரின் எல்லையாகிய பள்ளத்தாக்கின் கீழ்ப்புறமட்டும் போய்,

௪௰ நல்ல புஷ்டியான மேய்ச்சலையும் அமரிக்கையுஞ் சுகமுமாகிய விஸ்தாரமான தேசத்தையுங் கண்டுபிடித்தார்கள். ஏனெனில் பூர்வத்திலே காமின் சந்ததியார் அங்கே குடியிருந்தார்கள்.

௪௧ பேர்பேராய் எழுதியிருக்கிற இவர்கள் யூதாவின் இராசாவாகிய எசக்கியாவின் நாட்களில் முன்னே அங்கே வந்து அங்கே கண்டுபிடித்தவர்களின் கூடாரங்களை யுத்தாயங்களையும் இடறடித்து இந்நாள்வரைக்கும் இருக்கிறதுபோல அவர்களைச் சங்காரம்பண்ணி, அங்கே தங்கள் ஆடுகளுக்கான மேய்ச்சலுண்டானபடியினாலே அவர்கள் ஸ்தலத்திலே குடியிறங்கினார்கள்

௪௨ சிமேயோனின் புத்திரராகிய இவர்களில் ஐந்நூறு மனுஷரும் அவர்கள் தலைமைக்காரராகிய இசேயின் குமாரரான பெலாத்தியாவும், நெகரீயாவும், ரெப்பாயாவும், ஊசியேலுமே, சேயீர்மலைத்தேசத்திற்குப் போய்,

௪௩ அமலேக்கியரில் தப்பிமீதியாயிருந்தவர்களைமடங்கடித்து இந்நாள்வரைக்குமிருக்கிறபடியங்கே குடியிறங்கினார்கள்

## ௫. அதிகாரம்.

ரூபேன், காத், மனாசே என்பவர்களின் சந்ததியும் இந்தக் கோத்திரங்கள் செய்த பாவமும், அடைந்த ஆக்கினையும்,

இஸ்ரவேலின் முதற்பேறான ரூபேனின் புத்திரர். ஏனென்றால் அவன் மூத்தபிறந்தவனாயிருந்தான். ஆனால் அவன் தன் தகப்பனுடைய மஞ்சத்தைத் தீட்டாக்கினபடியினாலே, கோத்திரத்தட்டவணையிலே அவன் முதற்பிறந்தவனாக எண்ணப்படாமல் அவனுடைய முதற்பேறான சுதந்தரம் இஸ்ரவேலின் குமாரனாகிய யோசேப்பின் குமாரருக்குக் கொடுக்கப்பட்டது.

௨ மெய்தான். யூதா தன் சகோதரரிலே பலத்திருந்து அதிபதியவன் சந்ததியிலுண்டானது. ஆகிலும் முதற்பேறான சுதந்தரம் யோசேப்புடையதாயிற்று.

௩ இஸ்ரவேலின் முதற்பேறான ரூபேனின் குமாரரோவெனில் ஆனோக், பல்லூ, எஸ்ரோன், கர்மீ என்பவர்கள்.

௪ யோவேலின் குமாரரில் ஒருவன் செமாயா, இவன் குமாரன் கோக், இவன் குமாரன் சீமேய்,

௫ இவன் குமாரன் மீகா, இவன் குமாரன் ராயா, இவன் குமாரன் பாகால்,

௬ இவன் குமாரன் பேரா, ரூபேனியரின் பிரபுவான இவனை அசீரின் ராசாவாகிய தில்காத்பில்நேசர் சிறைபிடித்துப் போனான்.

௭ தங்கள் சந்ததிகளின்படியே தங்கள் வம்ச அட்டவணைகளில் எழுதப்பட்ட அவன் சகோதரரிலே தலைவராமானவர் ஏயேல், சகரியாவும்,

௮ யோவேலின் மகனான சேமாவுக்குப் பிறந்த ஆசாசின் குமாரன் பேலாவுந்தான். இவன் சந்ததியார் ஆரோவேரிலும் நேபோமட்டுக்கும் பால்மெயோன்மட்டுக்கும் குடியிருந்தார்கள்.

௯ கிழக்கே ஐப்பிராத்து நதி துவக்கி வனாந்திரத்தின் எல்லைமட்டுக்கும் அவர்கள் குடியிருந்தார்கள் ஏனெனில் அவர்கள் ஆடுமாடுகள் கீலேயாத் தேசத்தில் மிகுதியாயிற்று.

௰ சவுலின் நாட்களில் ஆகாரியரோடும் அவர்கள் யுத்தம்பண்ணி அவர்கள் கையால் இவர்கள் விழுந்தபின் இவர்கள் கூடாரங்களிலே கீலேயாதின் கிழக்குப்புறமெல்லாங் குடியிருக்கிறார்கள்.

௰௧ காதின் புத்திரரோவெனில் அவர்களுக்கெதிரே பாசான் தேசத்திலே சல்காமட்டுங் குடியிருந்தார்கள்.

௰௨ அவர்களில் யோவேல் தலைவனும் சாப்பாம் அவனுக்கு இரண்டாவதுமாயிருந்தான். ஆனால் யானாயும் சாப்பாத்தும் பாசானிலிருந்தார்கள்.

௰௩ அவர்கள் பிதாக்களின் வீட்டாராகிய அவர்கள் சகோதரர் மிகாவேல், மெசுல்லாம், சேபா, யோராய், யாக்கான், சீகா, ஏபேர் என்ற ஏழுபேர்.

௰௪ இவர்கள் ஊரிக்குப் பிறந்த அபிகாயிலின் குமாரர். ஊரி என்றவன் யரோவாவுக்கும் யரோவா கீலேயாத்திற்கும் கீலேயாத் மிகாவேலுக்கும் மிகாவேல் எசிசாயிக்கும் எசிசாயி யாதோவுக்கும் யாதோ பூசுக்குங் குமாரனாயிருந்தவன்.

௰௫ கூனியின் குமாரனாகிய அப்தியேலின் மகன் ஆகி அவர்கள் பிதாக்களின் வீட்டுத் தலைவனாயிருந்தான்.

௰௬ அவர்கள் கீலேயாதிலிருக்கிற பாசானிலும் அதின் கிராமங்களிலுஞ் சாரோனின் எல்லாப் பேட்டைகளிலும் அவைகளின் கடையாந்தரங்கள் மட்டுங் குடியிருந்தார்கள்.

௰௭ இவர்களெல்லாரும் யூதாவின் இராசாவாகிய யோத்தாமின் நாட்களிலும் இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபெயாமின் நாட்களிலுந் தங்கள் வம்சத்து அட்டவணைப்படி தொகையேற்றப்பட்டார்கள்.

௰௮ ரூபேன் புத்திரரிலுங் காதியரிலும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரிலுங் கேடயமும் பட்டயமும் எடுத்து வில்லெய்து யுத்தத்திற்குப் பழகிப் படைக்குப் போகத்தக்க சேவகர் நாற்பத்து நாலாயிரத்து எழுநூற்றறுபது பேராயிருந்தார்கள்.

௰௯ அவர்கள் ஆகாரியரோடும் எத்தூர், நாப்பீஸ், நோதாப் என்பவர்களோடும் யுத்தம்பண்ணுகிறபோது,

௨௰ அவர்களோடே எதிர்க்கத் துணைபெற்றபடியினாலே ஆகாரியரும் இவர்களோடிருக்கிற யாவரும் அவர்கள் கையிலே ஒப்புக்கொடுக்கப்பட்டார்கள். ஏனெனில் அவர்கள் யுத்தத்திலே பராபரனை நோக்கிக் கூப்பிட்டு அவர்மேல் நம்பிக்கைவைத்தபடியினாலே அவர்களைக் கேட்டருளினார்.

௨௰௧ அவர்கள் இவர்களுக்கிருந்த இவர்களுடைய மிருகஜீவன்களாகிய ஐம்பதினாயிரம் ஒட்டகங்களையும் இருநூற்றைம்பதினாயிரம் ஆடுகளையும் இரண்டாயிரங் கழுதைகளையும் மனுஷரில் நூறாயிரம் ஆத்துமாக்களையும் பிடித்தார்கள்.

௨௨ ஏனெனில் யுத்தம் பராபரனாலே உண்டானபடியினாலே அநேகர் வெட்டுண்டு விழுந்தார்கள். தாங்கள் சிறைப்பட்டுப் போகுமட்டும் இவர்களுடைய ஸ்தலத்திலே குடியிருந்தார்கள்.

௨௩ மனாசேயின் பாதிக்கோத்திரத்துப் புத்திரரும் அந்தத் தேசத்திற் குடியிருந்து பாசானைத் துவக்கிப் பால் எர்மோன் மட்டுக்கும் செனீர் மட்டுக்கும் எர்மோன் பர்வதமட்டுக்கும் பெருகியிருந்தார்கள்.

௨௪ அவர்கள் தங்கள் பிதாக்களின் வீட்டுத் தலைவராகிய ஏப்பேர், இசெயி, எலியேல், அசரியேல், எர்மியா, ஒதவியா, யத்தியேலென்றவர்கள் பராக்கிரம சேவகரான மனுஷரும் பேர்போன தலைவருமாயிருந்தார்கள்.

௨௫ ஆனால் அவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனுக்கு விரோதந் துரோகம் பண்ணிப் பராபரன் அவர்களுக்கு முன்பாக அழித்திருந்த தேசத்து ஜனசதளங்களின் தேவர்களின் பிறகாலே சோரம் போனார்கள்.

௨௬ ஆகையால் இஸ்ரவேலின் பராபரன் அசூரின் இராசாவாகிய பூலின் ஆவியையும் அசூரின் இராசாவாகிய தில்காத்பிலனேசரின் ஆவியையும் எழுப்பினார். இவன் ரூபேனியரும் காதியரும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாருமாகிய அவர்களைச் சிறைப்பிடித்து, இந்நாள்வரைக்கு மிருக்கிறதுபோல ஆலாக்குக்கும் ஆபோருக்கும் ஆராவுக்கும் கோசான் நதிப்புறங்களுக்குங் கொண்டுபோனான்.

## ௬. அதிகாரம்.

லேவிபுத்திரரின் சந்ததியும் உத்தியோகமும் வாசஸ்தலங்களும்.

லேவியின் குமாரர் கேர்சென், காகாத், மேராரியென்றவர்கள்.

௨ காகாதின் குமாரர் அம்ராம், இஸ்கார், எபிரோன், ஊசியேலென்றவர்கள்.

௩ அம்ராமின் குமாரர் ஆரோனும் மோசேயும், மிரியாமுமென்றவர்களுந்தானே. ஆரோனின் குமாரர் நாதாப், அபியூ, எலெயாசார், இத்தாமாரென்றவர்கள்.

௪ எலெயாசார் பினெகாசைப் பெற்றான். பினெகாஸ் அபிசுவாவைப் பெற்றான்.

௫ அபிசுவா புக்கியைப் பெற்றான். புக்கி ஊசியைப் பெற்றான்.

௬ ஊசி சேராகியாவைப் பெற்றான். சேராகியா மேராயோதைப் பெற்றான்.

௭ மேராயோத் அம்ரியாவைப் பெற்றான். அம்ரியா அகித்தூபைப் பெற்றான்.

௮ அகித்தூப் சாதோக்கைப் பெற்றான். சாதோக் அகிமாசைப் பெற்றான்.

௯ அகிமாஸ் அசரியாவைப் பெற்றான். அசரியா யோகனானைப் பெற்றான்.

௰ யோகனான் அசரியாவைப் பெற்றான். சாலோமோன் எருசலேமிற் கட்டின வீட்டிலே ஆசாரியப் பணிவிடையைச் செய்தவன் இவன்தான்.

௰௧ அசரியா அம்ரியாவைப் பெற்றான். அம்ரியா அகித்தூபைப் பெற்றான்.

௰௨ அகித்தூப் சாதோக்கைப் பெற்றான். சாதோக் சல்லூமைப் பெற்றான்.

௰௩ சல்லூம் இல்க்கியாவைப் பெற்றான். இல்க்கியா அசரியாவைப் பெற்றான்.

௰௪ அசரியா செராயாவைப் பெற்றான். செராயா யோத்சதாக்கைப் பெற்றான்.

௰௫ கர்த்தர் நேபுகாத்நேச்சாரைக்கொண்டு யூதாவையும் எருசலேமியரையுஞ் சிறைபிடித்துக் கொண்டுபோகப்பண்ணுகிறபோது யோத்சதாக்கும் போனான்.

௰௬ லேவியின் குமாரர், கேர்சோம், காகாத், மேராரியென்றவர்களாமே.

௰௭ கேர்சோமுடைய குமாரரின் நாமங்கள் லிப்னீ, சிமேயியென்றவைகள்.

௰௮ காகாத்தின் குமாரர், அம்ராம், இஸ்கார், எபிரோன், ஊசியேலென்றவர்கள்.

௰௯ மேராரியின் குமாரர், மகேலி, மூசியென்றவர்கள். லேவியருக்கவர்கள் பிதாக்களைத் தொட்டுண்டான வம்சங்களாவது,

௨௰ கேர்சோமின் குமாரன் லிப்னீ, இவன் குமாரன் யாகாத், இவன் குமாரன் சிம்மா,

௨௧ இவன் குமாரன் யோவாக், இவன் குமாரன் இத்தோ, இவன் குமாரன் சேராக், இவன் குமாரன் யாத்திராயி,

௨௨ காகாதின் குமாரரிலொருவன் அம்மினதாப் இவன் குமாரன் கோராக், இவன் குமாரன் ஆசீர்,

௨௩ இவன் குமாரன் எல்க்கானா, இவன் குமாரன் எபியாசாப், இவன் குமாரன் ஆசீர்,

௨௪ இவன் குமாரன் தாகாத், இவன் குமாரன் ஊரியேல், இவன் குமாரன் ஊசியா, இவன் குமாரன் சவுல்.

௨௫ எல்க்கானாவின் குமாரர், அமாசாயி அகிமோத்தென்றவர்கள்.

௨௬ எல்க்கானாவின் குமாரரிலொருவன் சோபாயுந்தானே. இவன் குமாரன் நாகாத்,

௨௭ இவன் குமாரன் எலியாப், இவன் குமாரன் எரோகாம், இவன் குமாரன் எல்க்கானா,

௨௮ சாமுவேலின் குமாரர், வஸ்னியென்ற அவனுடைய முதற்பேறானவனும் அபியாவுமென்றவர்கள்.

௨௯ மெராரியின் குமாரரில் ஒருவன் மகேலி, இவன் குமாரன் லிப்னீ, இவன் குமாரன் சிமேயி, இவன் குமாரன் ஊசா.

௩௰ இவன் குமாரன் சிமேயா, இவன் குமாரன் அகியா, இவன் குமாரன் அசாயா.

௩௧ கர்த்தருடைய பெட்டிக்கு இடம் அமர்க்கையான போது, தாவீது அவருடைய வீட்டிலே பாடப்பாடுகிற உத்தியோகத்திற்கு ஸ்தாபித்தவர்களும்,

௩௨ சாலொமோன் எருசலேமிலே கர்த்தருடைய வீட்டைக்கட்டித்தீருமட்டும் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசஸ்தலத்திற்கு முன்பாகப் பாட்டுப்பாடிச் சேவித்துத் தங்கள் முறைமையின்படியே பணிவிடை செய்து நிற்கிறவர்களுமாகிய மனுஷரும் அவர்கள் குமாரருமாவது,

௩௩ காகாத்தியரின் குமாரரில் ஏமான் என்ற பாடகன். அவன் யோவேலின் குமாரன், இவன் சாமுவேலின் குமாரன்.

௩௪ இவன் எல்க்கானாவின் குமாரன், இவன் எரோகாமின் குமாரன். இவன் எலியேலின் குமாரன். இவன் தோவாகின் குமாரன்.

௩௫ இவன் சூப்பின் குமாரன், இவன் எல்க்கானாவின் குமாரன், இவன் மாகாத்தின் குமாரன், இவன் அமாசாயின் குமாரன்.

௩௬ இவன் எல்க்கானாவின் குமாரன், இவன் யோவேலின் குமாரன், இவன் அசரியாவின் குமாரன், இவன் செப்பனியாவின் குமாரன்.

௩௭ இவன் தாகாத்தின் குமாரன், இவன் ஆசீரின் குமாரன், இவன் எபியாசாப்பின் குமாரன், இவன் கோராகின் குமாரன்.

௩௮ இவன் இஸ்காரின் குமாரன், இவன் காகாத்தின் குமாரன், இவன் இஸ்ரவேலின் குமாரனாகிய லேவியின் குமாரனானவன்.

௩௯ இவன் சகோதரனாகிய ஆசாப் இவன் வலதுபக்கத்திலே நிற்பான். ஆசாப் பெரகியாவின் குமாரன், இவன் சிமேயாவின் குமாரன்,

௪௰ இவன் மிகவேலின் குமாரன், இவன் பாசெயாவின் குமாரன், இவன் மல்கியாவின் குமாரன்,

௪௧ இவன் எத்னீயின் குமாரன், இவன் சேராகின் குமாரன், இவன் அதாயாவின் குமாரன்,

௪௨ இவன் ஏத்தானின் குமாரன், இவன் சிம்மாவின் குமாரன், இவன் சிமேயின் குமாரன்,

௪௩ இவன் யாகாத்தின் குமாரன், இவன் கெர்சோமின் குமாரன், இவன் லேவியின் குமாரன்தானே.

௪௪ மெராரியின் புத்திரராகிய அவர்களுடைய சகோதரர் இடதுபக்கத்திலே நிற்பார்கள். அவர்களில் ஏத்தான் என்றவன் கிசியின் குமாரனானவன். இவன் அப்தியின் குமாரன், இவன் மல்லூகின் குமாரன்.

௪௫ இவன் அஸபியாவின் குமாரன், இவன் அமத்சியாவின் குமாரன், இவன் இல்க்கியாவின் குமாரன்,

௪௬ இவன் அம்சியின் குமாரன், இவன் பானியின் குமாரன், இவன் சேமேரின் குமாரன்,

௪௭ இவன் மாகேலியின் குமாரன், இவன் மூசியின் குமாரன், இவன் மெராரியின் குமாரன், இவன் லேவியின் குமாரன்தானே.

௪௮ அவர்கள் சகோதரராகிய மற்ற லேவியர் பராபரனுடைய வீட்டு வாசஸ்தலத்தின் பணிவிடைக்கெல்லாம் வைக்கப்பட்டிருந்தார்கள்.

௪௯ ஆரோனும் அவன் குமாரரும் மேன்மையான பரிசுத்த ஸ்தலத்தின் எல்லா வேலைக்கும், தேவனுடைய தாசனாகிய மோசே கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேலுக்காகப் பாவநிவர்த்தி பண்ணுகிறதற்கும் வைக்கப்பட்டிருந்தார்கள். தகனபலிபீடத்தின்மேலும் தூபங்காட்டும் பீடத்தின்மேலும் செலுத்தப்படும் பலிகளுக்குமானவர்கள்.

௫௰ ஆரோனின் குமாரரில் எலெயாசார் என்றவனுடைய குமாரன் பினெகாஸ், இவன் குமாரன் அபிசுவா,

௫௧ இவன் குமாரன் புக்கி, இவன் குமாரன் ஊசி, இவன் குமாரன் செராகியா,

௫௨ இவன் குமாரன் மெராயோத், இவன் குமாரன் அமரியா, இவன் குமாரன் அகித்தூப்,

௫௩ இவன் குமாரன் சாதோக், இவன் குமாரன் அகிமாஸ்,

௫௪ அவர்கள் ஆண்மனைகளின்படியே அவர்கள் எல்லைக்குள்ளான அவர்கள் வாசஸ்தலங்களாவது, காகாத்தியரின் வம்சமான ஆரோனின் புத்திரருக்கு விழுந்த சீட்டின்படியே,

௫௫ யூதா தேசத்திலிருக்கிற எப்ரோனையும் அதின் சுற்றுப்பட்டைகளையும் கொடுத்தார்கள்.

௫௬ ஆனால் அந்தப் பட்டணத்தின் வெளியையும் அதின் கிராமங்களையும் எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுக்குக் கொடுத்தார்கள்.

௫௭ இப்படியே ஆரோனின் புத்திரருக்கு எபிரோனென்ற அடைக்கலப்பட்டணங்களிலொன்றையும் லிப்னாவையும் அதின் பேட்டைகளையும், யத்தீரையும் எஸ்தெமோவாவையும் அதின் பேட்டைகளையும்,

௫௮ ஈலேனையும் அதின் பேட்டைகளையும், தெபீரையும் அதின் பேட்டைகளையும்,

௫௯ ஆசானையும் அதின் பேட்டைகளையும் பெத்சேமேசையும் அதின் பேட்டைகளையும்,

௬௰ பென்யமீன் கோத்திரத்திலே கேபாவையும் அதின் பேட்டைகளையும் அலெமேத்தையும் அதின் பேட்டைகளையும் ஆனதோத்தையும் அதின் பேட்டைகளையுங் கொடுத்தார்கள். இவர்கள் வம்சங்களுக்குக் கொடுத்த இவர்கள் பட்டணங்களெல்லாம் பதின்மூன்று.

௬௧ ஆனாற் கோகாத்தின் மற்றப்புத்திரருக்கு வேறொரு கோத்திர வம்சத்திலும் பாதிக் கோத்திரமாகிற மனாசேயின் பாதியிலும் விழுந்த சீட்டின்படியே பத்துப் பட்டணங்களிருந்தது.

௬௨ கெர்சோமின் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படியே இசக்கார் கோத்திரத்திலும் ஆசேர் கோத்திரத்திலும் நப்தலி கோத்திரத்திலும் பாசானிலிருக்கிற மனாசே கோத்திரத்திலும் பதின்மூன்று பட்டணங்களிருந்தது.

௬௩ மெராரியின் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படியே ரூபன் கோத்திரத்திலும் காத் கோத்திரத்திலும் செபுலோன் கோத்திரத்திலும் விழுந்த சீட்டின்படியே பன்னிரண்டு பட்டணங்களிருந்தது.

௬௪ அப்படியே இஸ்ரவேல் புத்திரர் லேவியருக்குக் கொடுத்த பட்டணங்களும் அவைகளின் பேட்டைகளுமென்னவென்றால்,

௬௫ சீட்டுப்போட்டுச் சிலருக்கு யூதா புத்திரரின் கோத்திரத்திலுஞ் சிமெயோன் புத்திரரின் கோத்திரத்திலும் பென்யமீன் புத்திரரின் கோத்திரத்திலும் பேர்பேராகச் சொல்லப்பட்ட அந்தப் பட்டணங்களைக் கொடுத்தார்கள்.

௬௬ கோகாத் புத்திரரில் மற்ற வம்சங்களுக்கோவென்றால் அவர்கள் எல்லையான பட்டணங்கள் அவர்களுக்கு எப்பிராயீம் கோத்திரத்திலே யிருந்தது.

௬௭ அதேதெனில் அடைக்கலப்பட்டணங்களில் அவர்களுக்கு எப்பிராயீம் மலைத்தேசத்திலிருக்கும் சீகேமையும் அதின் பேட்டைகளையுங் கேசேரையும் அதின் பேட்டைகளையும்,

௬௮ யொக்மெயாமையும் அதின் பேட்டைகளையும் பெத்தொரோனையும் அதின் பேட்டைகளையும்,

௬௯ ஆயலோனையும் அதின் பேட்டைகளையுங், காத்ரிம்மோனையும் அதின் பேட்டைகளையும்.

௭௰ மனாசேயின் பாதிக் கோத்திரத்திலே ஆனேரையும் அதின் பேட்டைகளையும் பீலேயாமையும் அதின் பேட்டைகளையுங் கொடுத்தார்கள். இவைகள் கோகாத் புத்திரரிலுள்ள மற்றவம்சங்களுக்கிருந்தது.

௭௧ கெர்சோம் புத்திரருக்கு மனாசேயின் பாதிக் கோத்திர வம்சத்திலே பாசானிலிருக்கிற கோலானும் அதின் பேட்டைகளும் அஸ்தரோத்தும் அதின் பேட்டைகளும்,

௭௨ இசக்கார் கோத்திரத்திலே கேதேசும் அதின் பேட்டைகளுந் தொபருத்தும் அதின் பேட்டைகளும்,

௭௩ ராமோத்தும் அதின் பேட்டைகளும் ஆனேமும் அதின் பேட்டைகளும்,

௭௪ ஆசேர் கோத்திரத்திலே மாஷாலும் அதின் பேட்டைகளும் அப்தோனும் அதின் பேட்டைகளும்,

௭௫ உக்கோக்கும் அதின் பேட்டைகளும் ரேகோபும் அதின் பேட்டைகளும்,

௭௬ நப்தலி கோத்திரத்திலே கலிலேயாவிலிருக்கிற கேதேசும் அதின் பேட்டைகளும் அம்மோனும் அதின் பேட்டைகளுங் கீரியாத்தாயிமும் அதின் பேட்டைகளுமிருந்தது.

௭௭ மற்றுமுண்டான மெராரியின் புத்திரருக்குச் செபுலோன் கோத்திரத்திலே ரிம்மோனும் அதின் பேட்டைகளுந், தாபோரும் அதின் பேட்டைகளும்,

௭௮ எரிகோவுக்கப்புறமாயிருக்கிற யோர்தானுக்கப்பாலே யோர்தானுக்குக் கிழக்காகவிருக்கிற ரூபன் கோத்திரத்திலே வனாந்தரத்திலுள்ள பேத்சேரும் அதின் பேட்டைகளும் யாத்சாவும் அதின் பேட்டைகளும்,

௭௯ கெதேமோத்தும் அதின் பேட்டைகளும் மேபாத்தும் அதின் பேட்டைகளும்,

௮௰ காத் கோத்திரத்திலே கிலெயாதிலுள்ள ராமோத்தும் அதின் பேட்டைகளும் மகனாயீமும் அதின் பேட்டைகளும்,

௮௧ எஸ்போனும் அதின் பேட்டைகளும் யாசேரும் அதின் பேட்டைகளுமிருந்தது.

## ௭. அதிகாரம்.

*ஈசஷார் பென்யமீன் நவுதலி மனுசே எப்பிருயீம் ஆசேரென்றவர்களின் சந்ததிகள்.*

௧ ஈசஷாருடைய குமாரர் தோலா, பூவா, யசீப், சிம்ரோனென்ற நாலுபேர்.

௨ தோலாவின் குமாரர் ஊசி, ரெப்பாயா, எரீயேல், யக்மாயி, இப்சாம், சாமுவேலென்றவர்கள். தோலாவுக்குப் பிறந்த இவர்கள் தங்கள் பிதாக்கள் வீட்டுத் தலைவரும் தங்கள் சந்ததிகளிலே பராக்கிரமக்காரருமாயிருந்தார்கள். தாவீதின் நாட்களில் அவர்கள் தொகை இருபத்திராயிரத்து அறுநூறுபேராயிருந்தார்கள்.

௩ ஊசியின் குமாரரிலொருவன் இஸ்றகியா, இஸ்றகியாவின் குமாரர் மிகவேல், ஒபதியா, யோவேல், இஷியாவென்றவர்கள். இவர்கள் ஐந்துபேரும் தலைவராயிருந்தார்கள்.

௪ அவர்கள் பிதாக்கள் வீட்டாரான அவர்கள் சந்ததிகளில் யுத்தமனுஷரான கூட்டங்கள் முப்பத்தாறாயிரம்பேர் அவர்களோடிருந்தார்கள். ஏனெனில் அவர்களுக்கு அநேகம் பெண்சாதிகளும் பிள்ளைகளுமிருந்தது.

௫ ஈசஷாருடைய மற்ற எல்லா வம்சங்களிலும் அவர்களுக்குச் சகோதரரான பராக்கிரமசாலிகள் தங்கள் வம்ச அட்டவணைகளின்படியெல்லாம் எண்பத்தேழாயிரம்பேராயிருந்தார்கள்.

௬ பென்யமீன் குமாரர் பேலா, பேகேர், எரியாவேல் என்ற மூன்றுபேர்.

௭ பேலாவின் குமாரர் எஸ்போன், ஊசி, ஊசீயேல், எரிமோத், ஈரியென்றவர்கள். இவர்கள் தங்கள் பிதாக்களின் வீட்டிற் பராக்கிரமக்காரரான ஐந்து தலைவராயிருந்தார்கள். இவர்கள் வம்ச அட்டவணைக்குள்ளான பேர், இருபத்திராயிரத்து முப்பத்துநாலு.

௮ பேகேரின் குமாரர் செமீரா, யோவாஸ், எலியேசர், எலியோனாய், உம்ரீ, எரிமோத், அபியா, ஆனதோத், அலாமேதென்றவர்கள். இவர்களெல்லாரும் பேகேரின் குமாரர்.

௯ தங்கள் பிதாக்களின் வீட்டுத் தலைவமாராகிய அவர்கள் சந்ததிகளின் அட்டவணைக்குள்ளான பராக்கிரமக்காரர் இருபதினாயிரத்திருநூறுபேர்.

௰ எரியாவேலின் குமாரரிலொருவன் பில்லான், பில்லானின் குமாரர் எகூஸ், பென்யமீன், ஏகூத், கெனானா, சேதான், தர்சீஸ், அகிஷாகாரென்றவர்கள்.

௰௧ எரியாவேலின் குமாரராகிய இவர்களெல்லாரும் தங்கள் பிதாக்கள் வீட்டாரில் தலைமைமாராயிருந்தார்கள். இவர்களில் யுத்தத்திற்குப் போகத்தக்க சேவகரான பராக்கிரமக்காரர் பதினேழாயிரத்திருநூறுபேர்.

௰௨ சுப்பிம், ஊப்பிம், ஈரின் குமாரரானவர்கள். ஊசிம், ஆகேரின் குமாரரிலொருவன்.

௰௩ நவுதலியின் குமாரரான பில்காளின் பேர்மார் யாதசீயேல், கூனி, எத்சர், சல்லூமென்றவர்கள்.

௰௪ மனுசேயின் புத்திரரிலொருவன் குலஸ்திரீயினிடத்திற் பிறந்த அஸ்ரியேல். அவனை, வைப்பாட்டியாகிய ஸுரிய ஸ்திரீயோவெனிற் கிலேயாதின் தகப்பனாகிய மாகீரைப் பெற்றுள்.

௰௫ மாகீர் மாக்காளென்னும் பேருள்ள ஊப்பீம் சுப்பீமென்றவர்களின் சகோதரியை விவாகம்பண்ணினான். மனுசேயின் இரண்டாங் குமாரன் செலொப்பேகாத், செலொப்பேகாத்துக்கோ குமாரத்திகளிருந்தார்கள்.

௰௬ மாகீரின் பெண்சாதியாகிய மாக்காள் ஒரு குமாரனைப் பெற்று அவனுக்குப் பேரேசென்று பேரிட்டாள். இவன் சகோதரன் பேர் சேரேஸ், இவனுடைய குமாரர் ஊலாம், ரேகேமென்றவர்கள்.

௰௭ ஊலாமின் குமாரரிலொருவன் பேதான். இவர்கள் மனுசேயின் குமாரனாகிய மாகீருக்குப் பிறந்த கிலேயாத்புத்திரர்.

௰௮ இவன் சகோதரியாகிய மொலேகேத் இஸ்கோதையும், அபியேசேரையும், மாகெலாவையும் பெற்றுள்.

௰௯ செமீதாவின் குமாரர், அகியான், சேகேம், லிக்கேகி, அனியாமென்றவர்கள்.

௨௰ எப்பிருயீமின் குமாரரிலொருவன் சுத்தேலா, இவனுடைய குமாரன் பேரேத், இவனுடைய குமாரன் தாகாத், இவனுடைய குமாரன் எலாதா, இவனுடைய குமாரன் தாகாத்.

௨௧ சுத்தேலாவைப் பெற்ற சாபாதும் ஏசேரும் எலாதும் எப்பிருயீமின் குமாரர். அந்தத்தேசத்திற் பிறந்த காத்தூர மனுஷர் இவர்களுடைய ஆடுமாடுகளைப் பிடிக்க இறங்கி வந்தபோது இவர்களைக் கொன்றுபோட்டார்கள்.

௨௨ அவர்கள் தகப்பனாகிய எப்பிருயீம் அநேகநாள் துக்கங்கொண்டாடுகை

யால் அவன் சகோதரர் அவனுக்கு ஆறுதல் சொல்லவந்தார்கள்.

௨௩ பிற்பாடு அவன் தன் பெண்சாதியினிடத்திற் பிரவேசித்ததினால் இவள் கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெற்றாள். அவனுக்கு அவன் வீட்டில் தீங்குண்டானதினால் இவனுக்குப் பெரீயாவென்று பேரிட்டான்.

௨௪ இவனுடைய குமாரத்தியாகிய சேராள் கீழ்ப்புறமும் மேற்புறமுமான பெத்தொரோனையும் ஊசேம்சேராவையுங் கட்டினவள்.

௨௫ அவனுடைய குமாரர் ரேப்பாக், ரேசேப் என்பவர்கள். இவனுடைய குமாரன் தேலாக், இவனுடைய குமாரன் தாகான்.

௨௬ இவனுடைய குமாரன் லாதான் இவனுடைய குமாரன் அம்மிகூத் இவனுடைய குமாரன் எலிசாமா,

௨௭ இவனுடைய குமாரன் நூன், இவனுடைய குமாரன் யோசுவா.

௨௮ அவர்களுடைய காணியாட்சியும் வாசஸ்தலங்களுங் கிழக்கேயிருக்கிற நாரானும் மேற்கேயிருக்கிற கேசேரும் அதின் கிராமங்களும், பெத்தேலும் அதின் கிராமங்களும் சீகேமும் அதின் கிராமங்களும் ஆசாமட்டுக்கும் அதின் கிராமங்கள் மட்டுக்குமுள்ள புறமும்,

௨௯ மனாசே புத்திரரின் பக்கத்திலே பெத்செயானும் அதின் கிராமங்களும், தானாகும் அதின் கிராமங்களும், மெகிதோவும் அதின் கிராமங்களும், தோரும் அதின் கிராமங்களுந்தானே. இவ்விடங்களில் இஸ்ரவேலின் குமாரனாகிய யோசேப்பின் புத்திரர் குடியிருந்தார்கள்.

௩௰ ஆசேரின் குமாரர், இம்னா, இஸ்வா, இஸ்வீ, பெரீயா என்றவர்களும் இவர்கள் சகோதரியாகிய சேராளுந்தானே.

௩௰௧ பெரீயாவின் குமாரர், எபேர், மல்கியேலென்றவர்கள். இவன் பிர்சாயீத்தின் தகப்பன்.

௩௰௨ எபேர் யப்லேத்தையும், சோமேரையும், ஒத்தாமையும், இவர்கள் சகோதரியாகிய சூகாளையும் பெற்றான்.

௩௰௩ யப்லேத்தின் குமாரர், பாசாக், பிம்மால், அஸ்வாத், என்றவர்கள். இவர்கள் யப்லேத்தின் குமாரர்.

௩௰௪ சோமேரின் குமாரரோவெனில் அகீ, ரொகா, எகூபா, ஆராமென்றவர்கள்.

௩௰௫ அவன் சகோதரனாகிய ஏலேமின் குமாரர் சோப்பாக், இம்னா, சேலேஸ், ஆமாலென்றவர்கள்.

௩௰௬ சோப்பாகின் குமாரர், சூவாக் அர்னெப்பர், சூகால், பேரி, இம்ரா,

௩௰௭ பேசேர், ஒத், சம்மா, சில்சா, இத்ரான், பேராவென்றவர்கள்.

௩௰௮ எதேரின் குமாரர், எப்புனே, பிஸ்பா, ஆராவென்றவர்கள்.

௩௰௯ உல்லாவின் குமாரர், ஆராக், அன்னியேல், ரித்சியாவென்றவர்கள்.

௪௰ ஆசேரின் புத்திரராகிய இவர்களெல்லாருந் தங்கள் பிதாக்களின் வீட்டுத் தலைவரும் தெரிந்துகொள்ளப்பட்ட பராக்கிரமசாலிகளும் பிரபுக்களின் தலைவருமாயிருந்தார்கள். அவர்கள் அங்கிஷ அட்டவணைகளில் யுத்தத்திற்குப் போகத்தக்க சேவகரின் இலக்கம் இருபத்தாறாயிரம்பேர்.

## ௮. அதிகாரம்.

பென்யமீன் கோத்திரத்து வம்சங்களுஞ் சவுலின் சந்ததியும்.

பென்யமீன் பேலாவென்ற தன் மூத்த குமாரனையும், அஸ்பாலென்ற இரண்டாங் குமாரனையும் அகாரென்ற மூன்றாங் குமாரனையும்,

௨ நோகாவென்ற நாலாங் குமாரனையும், ரப்பாவென்ற ஐந்தாங் குமாரனையும் பெற்றான்.

௩ பேலாவுக்கிருந்த குமாரர், அதார், கேரா, அபியூதென்றவர்கள்.

௪ அபிசுவா, நாமான் அகோவாக்.

௫ கேரா செப்புப்பான் ஊராமென்றவர்கள் ஏகூதின் குமாரர்.

௬ கேபாவின் குடிகளுக்கு மூப்பான் தலைவராயிருந்து, இவர்களை மனாகாத்திற் கழைத்துக்கொண்டுபோனவர்கள் நாமான், அகோவாக், கேராவென்றவர்கள்தானே.

௭ இவன் அவர்களையங்கே அழைத்துப்போனபிற்பாடு ஊசாவையும், அகீகூதையும் பெற்றான்.

௮ அவர்களையனுப்பிவிட்டபின், சகாரீம் மோவாப்தேசத்திலே ஊசீம், பாரா என்ற தன் பெண்சாதிகளாலே பெற்ற பிள்ளைகளைத் தவிர,

௯ தன் பெண்சாதியாகிய ஒதேசாலே யோவாபேயும், சீபீயாவையும், மேசாவையும், மல்காமையும்,

௰ எகூத்சையும், சோகியாவையும், மிர்மாவையும் பெற்றான். இவர்கள் பிதாக்களின் தலைமாரான அவனுடைய குமாரர்.

௰௧ ஊசிமாலே அவன் அபித்தூபையும் எல்பாலையும் பெற்றான்.

௰௨ எல்பாலின் குமாரர், ஏபேர், மீஷாம், சாமேர், இவன் ஓனோவையும், லோத்தையும் அதின் கிராமங்களையுங் கட்டினவன்.

௰௩ பெரியாவும், சேமாவும், ஆயலோன் குடிகளுடைய பிதாக்களில் தலைவராயிருந்தார்கள். இவர்கள் காத்தின் குடிகளையோட்டிவிட்டார்கள்.

௰௪ அகியோ, சாஷாக், எரேமோத்,

௰௫ செப்தியா, ஆராத், ஏதேர்,

௰௬ மிகாவேல், இஸ்பா, யோகாவென்றவர்கள், பெரீயாவின் குமாரர்.

௰௭ செப்தியா, மெசுல்லாம், இஸ்கி, ஏபேர்,

௰௮ இஸ்மேராயி, இஸ்லீயா, யோபாப் என்றவர்கள் எல்பாலின் குமாரர்.

௰௯ யாக்கீம், சிக்ரி, சப்தி,

௨௰ எலியேனாயி, சில்லெத்தாயி, எலியேல்,

௨௧ அதாயா பெராயா, சிம்ராத்தென்றவர்கள் சிமேயின் குமாரர்.

௨௨ இஸ்பான், ஏபேர், எலியேல்,

௨௩ அப்தோன், சிக்ரி, ஆனான்,

௨௪ அனனீயா, ஏலாம், அந்தோத்தியா,

௨௫ இப்தியா, பெனூவேலென்றவர்கள் சாஷாக்கின் குமாரர்,

௨௬ சம்சேராயி, செகரீயா, அத்தாலீயா,

௨௭ யரேஷியா, எலியா, சிக்ரியென்றவர்கள் எரோகாமின் குமாரர்.

௨௮ இவர்கள் தங்கள் சந்ததிகளின் பிதாக்களில் தலைவராயிருந்து எருசலேமிலே குடியிருந்தார்கள்.

௨௯ கிபெயோனிலே குடியிருந்தவன் கிபெயோனின் மூப்பன், அவன் பெண்சாதியின் பேர் மாக்காள்.

௩௰ அவன் மூத்த குமாரன் அப்தோனென்றவன். மற்றவர்கள் சூர், கீஸ், பாகால், நாதாப்.

௩௧ கேதோர், அகியோ, சேகேரென்றவர்கள்.

௩௨ மிக்லோத் சிமேயாவைப் பெற்றான். இவர்களுந் தங்கள் சகோதரரோடுங்கூட எருசலேமிலே தங்கள் சகோதரருக்கெதிர்முகமாய்க் குடியிருந்தார்கள்.

௩௩ நேர், கீசைப் பெற்றான், கீஸ், சவுலைப் பெற்றான், சவுல், யோனத்தானையும் மல்கிசூவாவையும், அபினதாபையும், எஸ்பாலையும் பெற்றான்.

௩௪ யோனத்தானின் குமாரன் மேரிபால், மேரிபால் மீகாவைப் பெற்றான்.

௩௫ மீகாவின் குமாரர், பித்தோன், மேலேக், தரேயா, ஆகாசென்றவர்கள்

௩௬ ஆகாஸ் யோகதாவைப் பெற்றான், யோகதா அலெமேத்தையும், அஸ்மாவேத்தையும், சிம்ரியையும் பெற்றான். சிம்ரி மோத்சாவைப் பெற்றான்.

௩௭ மோத்சா பினெயாவைப் பெற்றான். இவன் குமாரன் ரப்பா, இவன் குமாரன் எலியாசா, இவன் குமாரன் ஆத்சேர்,

௩௮ ஆத்சேருக்கு ஆறு குமாரரிருந்தார்கள். அவர்களுக்கு அஸ்ரீக்காம், பொக்குரு, இஸ்மவேல், சேகரியா, ஒபதியா, ஆனானென்று நாமங்கள். இவர்களெல்லாரும் ஆத்சேரின் குமாரர்,

௩௯ அவன் சகோதரனாகிய எசேக்கின் குமாரர், ஊலாமென்றவன் அவன் மூத்த குமாரனும் எகூசென்ற இரண்டாங் குமாரனும் எலிப்பெலேத்தென்ற மூன்றாங் குமாரனுந்தானே.

௪௰ ஊலாமின் குமாரர், வில்லாளரான பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள். இவர்களுக்கு நூற்றைம்பதுபேராகிய அநேகங் குமாரருங் குமாரருமிருந்தார்கள் இவர்களெல்லாரும் பென்யமீன் புத்திரர்.

## ௯. அதிகாரம்.

எருசலேம் பட்டணத்துக் குடிகள்.

இஸ்ரவேலரெல்லாருந் தங்கள் வம்சங்களின்படியே எண்ணப்பட்டது; இதோ, அவைகள் இஸ்ரவேல் இராசாக்களின் புஸ்தகத்திலெழுதியிருக்கின்றது. யூதாகோத்திரத்தார் தங்கள் துரோகத்தினிமித்தம் பாபேலுக்குச் சிறைப்பிடித்துக்கொண்டுபோகப்பட்டார்கள்.

௨ தங்கள் காணியாட்சியிலுந் தங்கள் பட்டணங்களிலும் முன் குடியிருந்தவர்கள் இஸ்ரவேலரும் ஆசாரியரும் லேவியருமாம் இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களுந்தானே.

௩ யூதா புத்திரரிலும், பென்யமீன் புத்திரரிலும் எப்பிராயீம் மனாசே என்றவர்களின் புத்திரரிலும் எருசலேமிலே குடியிருந்தவர்களாரென்றால்,

௪ யூதாவின் குமாரனாகிய பேரேசின் சந்ததியாற் பானியின் குமாரனாகிய இம்ரியின் மகனான உம்ரிக்குப் பிறந்த அம்மியூதின் குமாரனான ஊத்தாயி.

௫ சேலாவின் சந்ததியில் மூத்தவனாகிய அசாயாவும் அவன் பிள்ளைகளும்,

௬ சேராவின் சந்ததியில், எகுவேலும் அவன் சகோதரராகிய அறுநூற்றுத்தொண்ணூறுபேரும்.

௭ பென்யமீன்புத்திரரில் அசெனூவாவின் குமாரனாகிய ஒத்வியாவுக்குப்பிறந்த மெசுல்லாமின் மகன் சல்லூ.

௮ எரோகாமின் குமாரன் இப்னெயா, மிக்கிரியின் குமாரனாகிய உசீயின் மகன் ஏலா, இப்னியாவின் குமாரனாகிய ரெகுவேலுக்குப்பிறந்த செப்பத்தியாவின் மகன் மெசுல்லாமென்றவர்களும்.

௯ தங்கள் சந்ததிகளின்படியிருந்த இவர்கள் சகோதரராகிய தொளாயிரத்து ஐம்பத்தாறுபேரும், இந்த மனுஷரெல்லாரும் தங்கள் பிதாக்களின் வீட்டிலே பிதாக்களின் தலைவமாராயிருந்தார்கள்.

௰ ஆசாரியர்களில் எதாயா, யோயாரீப், யாகீன்,

௰௧ அகித்தூபின் குமாரனாகிய மெராயோதின் மகன் சாதோக்குக்குப்பிறந்த மெசுல்லாமின் குமாரனாகிய இல்க்கியாவின் மகன் அசரீயா என்ற பராபரனுடைய வீட்டின் தலைவன்.

௰௨ மல்கீயாவின் குமாரனாகிய பஸ்கூருக்குப்பிறந்த எரோகாமின் மகன் அதாயா, இம்மேரின் குமாரனாகிய மெசில்லேமித்தின் மகன் மெசுல்லாமுக்குப்பிறந்த யாசெராவின் குமாரனாகிய ஆதியேலின் மகன் மாசாயி என்றவர்களும்,

௰௩ தங்கள் பிதாக்களின் வீட்டுத்தலைவரான ஆயிரத்தெழுநூற்றறுபதுபேராகிய பராபரனுடைய வீட்டுவேலையின் கிரியைக்குப் பராக்கிரமக்காரரான அவர்கள் சகோதரரும்.

௰௪ லேவியரில் மெராரியின் சந்ததியான அசபியாவின் குமாரனாகிய அஸ்ரிக்காமுக்குப்பிறந்த அசூபின் மகன் செமாயா,

௰௫ பக்பக்கார், ஏரேஸ், காலால், ஆசாபின் குமாரனாகிய சிக்ரிக்குப்பிறந்த மீகாவின் மகன் மத்தனியா.

௰௬ எதுத்தூனின் குமாரனாகிய காலாலுக்குப்பிறந்த செமாயாவின் மகன் ஒபதியா, நெத்தோபாத்தியரின் கிராமங்களிற்குடியிருந்த எல்க்கானாவின் குமாரனாகிய ஆசாவின் மகன் பெரெகியா.

௰௭ வாசல்களின் காவற்காரராகிய சல்லூம், அக்கூப், தல்மோன், அகிமான் என்றவர்களும், இவர்கள் சகோதரரும், இவர்கள் தலைவன் சல்லூம்.

௰௮ லேவிபுத்திரரின் சேனைகளில் இவர்கள் கிழக்கேயிருக்கிற இராசாவின் வாசலிலே இந்நாள்மட்டுங் காவற்காத்தவர்கள்.

௰௯ கோராகின் குமாரனாகிய எபியாசாப்புக்குப்பிறந்த கோரேயின் மகன் சல்லூமும், அவன் பிதாவின் வீட்டாராகிய அவனுடைய சகோதரருமான கோராகியர் பணிவிடைவேலையை விசாரித்து அவர்கள் பிதாக்கள் கர்த்தருடைய பாளயத்தில் கூடாரத்திற்குப் போகிறவழியைக் காவற்காத்ததுபோலே கூடாரத்து வாசற்படிகளைக் காக்கிறவர்களாயிருந்தார்கள்.

௨௰ எலெயாசாரின் குமாரனாகிய பினேகாசு, முன்னே கர்த்தரிருந்தபடியினாலே அவன் முற்காலத்திலே அவர்கள்மேல் தலைவனாயிருந்தான்.

௨௰௧ மெசெலமியாவின் குமாரனாகிய செகரீயா ஆசரிப்புக்கூடாரத்தின் வாசற்படியைக் காவற்காத்தவனுந்தானே.

௨௰௨ வாசற்படிகளைக் காக்கிறதற்குத் தெரிந்துகொள்ளப்பட்ட இவர்களெல்லாரும் இருநூற்றுப்பன்னிரண்டுபேராயிருந்து, தங்கள் கிராமங்களின்படியே தங்கள் வம்சத்திட்டவணைகளில் எழுதப்பட்டார்கள். தாவீதும் ஞானதிருஷ்டிக்காரனாகிய சாமுவேலும் அவர்கள் உண்மையைப்பார்த்து அவர்களை வைத்தார்கள்.

௨௰௩ அப்படியே அவர்களும் அவர்கள் குமாரரும் கூடாரவீடாகிய கர்த்தருடைய வீட்டு வாசல்களைக் காக்கிறவர்களை முறைமுறையாய் விசாரித்தார்கள்.

௨௰௪ வாசல்களைக்காக்கிறவர்கள் நாலுசாரமுந்திசைகளாகிய கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலும் தெற்கிலுமிருந்தார்கள்.

௨௰௫ அவர்கள் சகோதரர் தங்கள் கிராமங்களிலிருந்து ஏழுநாளில் ஒருவிசைமாறி மாறி அவர்களோடிருக்க வருவார்கள்.

௨௰௬ ஏனெனில் உண்மையைப்பார்த்துக் கட்டளையிடப்பட்ட அந்த உத்தியோகத்தில் லேவியரான நாலுபிரதான வாசற்காவற்காரரிருந்தார்கள். இவர்கள் பராபரனுடைய வீட்டின் அறைகளின்மேலும் பொக்கிஷங்கள்மேலும் வைக்கப்பட்டிருந்தார்கள்.

௨௰௭ பராபரனுடைய வீட்டைச்சுற்றிலும் இராத்தங்குவார்கள். ஏனெனிற் காவல் அவர்களுக்குக் கொடுபித்திருந்தது. காலமாறு திறக்கிறவேலையையும் விசாரித்தார்கள்.

௨௰௮ அவர்களிற் சிலருக்கு ஊழியத்தின் தட்டுமுட்டுகள் ஒப்புவித்திருந்தது. ஏனென்றால் அவைகளை யெண்ணியுள்ளே கொண்டுபோய், எண்ணி வெளியே கொண்டுவருவார்கள்.

௨௰௯ அவர்களிற்சிலர் மற்றத்தட்டுமுட்டுகள்மேலும், பரிசுத்த பாத்திரங்கள் எல்லாவற்றின்மேலும் மெல்லியமா திவிதா

ட்சிப்பழ இரசம், எண்ணெயாகுந்தரிக்கள், சுகந்தவர்க்கங்களின்மேலும் வைக்கப்பட்டிருந்தார்கள்.

௩௰ ஆனால் ஆசாரியரின் குமாரரில் சிலர் சுகந்தவர்க்கத்தால் பரிமள தயிலமிறக்குவார்கள்.

௩௰௧ லேவியரிற் கோராகியனான சல்லூமின் மூத்தகுமாரனாகிய மத்தித்தியாவுக்குச் சட்டிகளிற் சுடுகிறவேலையின் விசாரிப்பு ஒப்புவித்திருந்தது.

௩௰௨ அவர்கள் சகோதரராகிய காகாத்தியரின் புத்திரரிற் சிலருக்கு ஓய்வுநாள்தோறும் சமுகத்தப்பங்களை ஆயத்தம்பண்ணும் விசாரிப்பிருந்தது.

௩௰௩ இவர்களில் லேவியருடைய பிதாக்களின் தலைவராகிய பாட்கர் அறைகளில் மற்றவேலைக்கு நீங்கலாயிருந்தார்கள். ஏனெனில் இரவும்பகலும் அவர்கள் வேலையின் விசாரிப்பு அவர்களுக்கிருந்தது.

௩௰௪ லேவியரிற் பிதாக்களின் தலைவராகிய இவர்கள் தங்கள் சந்ததிகளுக்குத் தலைமையானவர்கள். இவர்கள் எருசலேமிலே குடியிருந்தார்கள்.

சவுலின் வம்சத்தட்டவணை திரும்பச் சேர்க்கப்பட்டது.

௩௰௫ கிபெயோனிலே குடியிருந்தவர்களாவோனார், கிபெயோனின் மூப்பனாகிய ஏயெல், இவன் பெண்சாதியின்பேர் மாக்காள்.

௩௰௬ அவன் மூத்தகுமாரனாகிய அப்தோனும் சூர், கீஸ், பாகால், நேர், நாதாப்,

௩௰௭ கேதோர், அகியோ, சகரியா, மிக்லோத் என்றவர்களுந்தானே.

௩௰௮ மிக்லோத் சிமெயாமைப்பெற்றான். இவர்களுந் தங்கள் சகோதரரோடுங்கூட எருசலேமிலிருக்கிறதங்கள் சகோதரருக்கெதிரே குடியிருந்தார்கள்.

௩௰௯ நேர் கீசைப்பெற்றான், கீஸ் சவுலைப்பெற்றான், சவுல் யோனத்தானையும் மல்கிசூவாவையும், அபினதாபையும், எஸ்பாலையும் பெற்றான்.

௪௰ யோனத்தானின் குமாரன் மேரிபால், மேரிபால் மிகாவைப்பெற்றான்.

௪௰௧ மிகாவின் குமாரர் பித்தோன், மேலேக், தரேயா என்றவர்கள்.

௪௰௨ ஆகாஸ் யாராகைப்பெற்றான், யாராக் அலேமேத்தையும் அஸ்மாவேத்தையும், சிம்ரியையும் பெற்றான். சிம்ரி மோத்சாவைப்பெற்றான்.

௪௰௩ மோத்சா பினியாவைப்பெற்றான், இவன் குமாரன் ரெப்பாயா, இவன் குமாரன் எலாசா, இவன் குமாரன் ஆத்சேல்,

௪௰௪ ஆத்சேலுக்கு ஆறு குமாரரிருந்தார்கள். அவர்கள் நாமங்கள், அசரீக்காம், பொக்ரு, இஸ்மவேல், செரியா, ஒபதியா, ஆனானென்றது. இவர்கள் ஆத்சேலின் குமாரர்.

## ௰. அதிகாரம்.

சவுல் பெலிஸ்தரோடே பண்ணின யுத்தத்திலே மடிந்துபோனது.

பெலிஸ்தர் இஸ்ரவேலோடு யுத்தம்பண்ணினார்கள். ஆனால் இஸ்ரவேல் மனுஷர் பெலிஸ்தருக்கு முன்பாக முறிந்தோடிக் கில்போவா பர்வதத்திலே பட்டு விழுந்தார்கள்.

௨ பெலிஸ்தரோவெனில் சவுலையும் அவன் குமாரரையும் நெருங்கிச் சவுலின் குமாரராகிய யோனத்தானையும், அபினதாபையும் மல்கிசூவாவையும் வெட்டினார்கள்.

௩ அம்பெய்கிற வில்லாளர் சவுலுக்கு நேராக வந்ததினால் அவன்மேல் யுத்தம் பலத்தது. அப்போது சவுல் வில்லாளருக்கு மிகவும் பயப்பட்டு,

௪ தன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனோடே, அந்தச் சுன்னத்தில்லாதவர்கள் வந்து என்னைப் பரிகசிப்பண்ணாதபடிக்கு நீ உன் பட்டயத்தை உருவி என்னை அதினால் குத்திப்போடென்றான். ஆனால் அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் மிகவும் பயப்படுகிறதினால் அப்படிச் செய்யமாட்டேனென்றான். அப்போது சவுல் பட்டயத்தை நட்டு அதின்மேல் விழுந்தான்.

௫ சவுல் செத்துப்போனதை அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் கண்டபோது, அவனும் பட்டயத்தின்மேலே விழுந்து செத்துப்போனான்.

௬ அப்படியே சவுலும் அவன் மூன்று குமாரரும் அவன் வீட்டு மனுஷர் அனைவரும் கூடச் செத்துப்போனார்கள்.

௭ சனம் முறிந்தோடினதையும் சவுலும் அவன் குமாரரும் செத்துப்போனதையும் பள்ளத்தாக்கிலுள்ள இஸ்ரவேல் மனுஷரெல்லாருங் கண்டபோது தங்கள் பட்டணங்களைவிட்டு ஓடிப்போனார்கள். அப்போது பெலிஸ்தர் வந்து அவைகளிற் குடியிருந்தார்கள்.

௮ வெட்டுண்டவர்களை உரிந்துகொள்ளப் பெலிஸ்தர் மறுநாளில் வந்தபோதோவென்றால், அவர்கள் சவுலையும் அவன் கு

மார்களையும் கில்போவா பர்வதத்திலே பட்டுக்கிடக்கக்கண்டு,

௯ அவனை உரிந்து அவன் தலையையும் அவன் ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு, தங்கள் விக்கிரகங்களுக்கும் சனத்திற்கும் அதைப் பிரசங்கிக்க, பெலிஸ்தருடைய தேசத்திலே சுற்றிலும் செய்தியை அனுப்பி,

௰ அவன் ஆயுதங்களைத் தங்கள் தேவர்களின் வீட்டிலே வைத்து, அவன் தலையோட்டைத் தாகோன் வீட்டிலே அடித்து வைத்தார்கள்.

௰௧ பெலிஸ்தர் சவுலுக்குச் செய்ததெல்லாவற்றையும் கிலெயாத் தேசத்து யாபேஸ் பட்டணத்தாரெல்லாரும் கேட்டபோதோவெனில்,

௰௨ பராக்கிரமனுஷரெல்லாரும் எழுந்து போய்ச் சவுலின் உடலையும் அவன் குமாரரின் உடல்களையும் எடுத்து யாபேசுக்குக் கொண்டுவந்து, அவர்கள் எலும்புகளை யாபேசிலிருக்கிற ஒரு கர்வாலி மரத்தின் கீழ் அடக்கம்பண்ணி ஏழுநாள் உபவாசம்பண்ணினார்கள்.

௰௩ அப்படியே சவுல் கர்த்தருடைய வார்த்தையைக் கைக்கொள்ளாமல் கர்த்தருக்குச் செய்த தன் துரோகத்தினிமித்தமும் அவன் கர்த்தரைத் தேடாமல், அஞ்சனம் பார்க்கிறவர்களைக் கேட்கும்படிக்குத் தேடினதினிமித்தமும் செத்துப்போனான்.

௰௪ அதற்காக அவர் அவனைக் கொன்று இராச்சியபாரத்தை ஈசாயின் குமாரனாகிய தாவீது வசமாகத் திருப்பினார்.

## ௰௧. அதிகாரம்.

தாவீது இராசாவாக அபிஷேகம்பண்ணப்பட்டு எருசலேம் பட்டணத்தைப் பிடித்தது.

இஸ்ரவேலெல்லாம் எபிரோனிலிருக்கிற தாவீதினிடத்திலே கூடிவந்து இதோ, நாங்கள் உம்முடைய எலும்பும் உம்முடைய மாம்சமுமானவர்கள்.

௨ சவுல் இன்னம் இராசாவாயிருக்கிற அப்போதுந்தானும் நீர் இஸ்ரவேலை அழைத்துப் போயழைத்துவருவீர். நம்முடைய சனமாகிய இஸ்ரவேலை நீ மேய்த்து, நீ நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் அதிபதியாயிருப்பாயென்று உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உமக்குச் சொல்லியுமிருக்கிறாரென்றார்கள்.

௩ அப்படியே இஸ்ரவேலின் மூப்பரெல்லாரும் எபிரோனிலே இராசாவினிடத்துக்கு வந்தார்கள். தாவீது எபிரோனிலே கர்த்தருக்கு முன்பாக அவர்களோடு உடம்படிக்கைபண்ணிக்கொண்டபிறபாடு அவர்கள் கர்த்தர் சாமுவேலைக்கொண்டு சொன்ன வார்த்தையின்படியே தாவீதை இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணினார்கள்.

௪ பிறபாடு தாவீது இஸ்ரவேலனைத்தோடுங்கூட எபூசாகிய எருசலேமுக்குப் போனான். ஏனெனில் எபூசியர் அந்தத் தேசத்தின் குடிகளாயிருந்தார்கள்.

௫ அப்போது எபூசின் குடிகள் தாவீதுக்கு நீ இதற்குட் பிரவேசிப்பதில்லையென்றார்கள். ஆனாலும் தாவீது சீயோன் கோட்டையைப் பிடித்தான். அது தாவீதின் பட்டணம்.

௬ ஏனெனில் எவன் எபூசியரை முறியடிக்கிறதில் முந்தினவனாயிருக்கிறானோ அவன் தலைவனும் சேனாபதியுமாயிருப்பானென்று தாவீது சொன்னபோது செருயாவின் குமாரனாகிய யோவாப் ஏறுகிறதிலே முந்தினவனாயிருந்து, தலைவனானான்.

௭ பிறகு தாவீது அந்தக் கோட்டையிலே வாசம்பண்ணினபடியினாலே அது தாவீதின் பட்டணமென்னப்பட்டது.

௮ பிறபாடு அவன் பட்டணத்தை மில்லோ வைத்துவக்கிச் சுற்றிலுங் கட்டினான். யோவாபோவெனில் பட்டணத்தின் மற்ற இடங்களைப் பழுதுபார்த்தான்.

௯ தாவீது நாளுக்கு நாள் பெருகிப்போனான். ஏனெனில் சேனைகளுடைய கர்த்தர் அவனோடேகூடவிருந்தார்.

தாவீதுடைய பராக்கிரமசாலிகளின் கூட்டம்.

௰ கர்த்தர் இஸ்ரவேலுக்காகச் சொன்ன வார்த்தையின்படியே தாவீதை இராசாவாக்கும்படிக்கு அவன்வசமாயிருந்து இராச்சியபாரம்பண்ணுகிற அவனிடத்திலும் எல்லா இஸ்ரவேலினிடத்திலும் வீரத்தத்துவத்தைப் பாராட்டினபிரதானபராக்கிரமசாலிகளும்,

௰௧ தாவீதுக்கிருந்த அந்தப் பராக்கிரமசாலிகளின் இலக்கமுமாவது அக்மோனியின் குமாரனாகிய யாஷோபியாம் என்ற சேர்வைக்காரர்களின் தலைவன் இவன் முந்நூறுபேர்களின்மேல் தன் ஈட்டியையோங்கி அவர்களையொருமிக்கக் கொன்றுபோட்டான்.

௩௫ ஆராரியனுன் சாககாரினகுமாரன அகியாம, ஊரினகுமாரன எலிபபால்,

௩௬ மெகராததியனுன எபபேர், பெலோனியனுன அகியா,

௩௭ கர்மேலியனுன எஸ்ரோ, எஸ்பாயினகுமாரன நாராயி,

௩௮ நாததானினசகோதரன யோவேல் அகரியினகுமாரன மிப்கார்,

௩௯ அம்மோனியனுன சேலேக், செருயாவினகுமாரனுகிய யோவாபினை ஆயுதங்களைபபிடிக்கிற பெரோததியனுன நாராயி,

௪௦ இததரியனுகிய ஈரா, இததரியனுகிய காரெப்,

௪௧ எததியனுன உரியா அக்லாயினகுமாரன சாபாத்,

௪௨ ரூபேனியரின தலைவனுகிய சீசாவினகுமாரன அதினுவெனறு ரூபேனியன அவனணடையிலே முபபதுபேரிருநதார்கள.

௪௩ மாகாவினகுமாரன ஆனுன் மித்னியனுன யோசபாத்,

௪௪ அஸ்தெராததியனுன் உசியா அரோவேரியனுன ஒததாமினகுமாரர் சமாவும ஏயெலும,

௪௫ சிம்ரியின குமாரன எதியாயேல் திச்யனுன் அவன சகோதரன யோகா,

௪௬ மாகாவியரினபுததிரன எலியேல் எல்நாமின் குமாரர் எரிபாயும யோசவியாவும மோவாபியனுன இத்மா,

௪௭ மெசோபாயா ஊரானன் எலியேலும ஓபேதும யாசீயேலுமநதானே.

## ௰௨. அதிகாரம்.

பினனேபுநதாவீதுக்கு ஒத்தாசைபணணினசேவகரினவிபரம.

தாவீது கீசினகுமாரனுகியசவுலினிமிததம இனனம மறைவாயிருககையிற சிக்லாகிலிருக்கிற அவனணடைககு வநது,

௨ யுத்தத்திற்கு ஒத்தாசைசெயதவிற்காரரும கவணடெறிகிறதற்கும விலவினுல அமபெயகிறதற்கும வலது இடதுகைவாட்டமான பராக்கிரமமான மறற மனுஷருமாவது, சவுலின சகோதாராகிய பெனயமீனகோததிரததில,

௩ கிபெயா ஊரானுன் சேமாகினகுமாரராகிய அகியேசர் எனறதலைவனுமயோவாசும அஸ்மாவேததினகுமாரராகிய எசியேலும பேலேதும பேராகா ஆனதோததியனுன் ஏகூவெனறவர்களும,

௪ முபபதுபேரிற்பராக்கிரமனுமமுபபதுபேருககுப பெரியவனுமான இஸ்மாயாவெனற கிபெயோனியனும எரேமியா, யகாசியேல் யோகனுன கெதேரூரான யோசபாத,

௫ எலூசாயி எரிமோத பாலியா செமரியா ஆருபியனுன செபபததியா,

௬ எலகானு இஷியா அசாரியேல் யொவேசேர் யசோபெயாமெனற கோரேகியரும,

௭ யொவேலா செப்தியா எனற கேதோர் ஊரானுன் எரோகாமின குமாரருநதானே.

௮ காதியரிற்பரிசையுமஈட்டியுமபிடிததுச்சிஙகஙகளின முகஙகளைபபோலொதத முகபபார்வையும மலைகளிலிருககிற வெளிமானகளைபபோல வேகமுமாயிருநது யுததததுக்குசசேவகரான பராக்கிரமசாலிகளான சிலரும வனாநதிரததிலுள்ள அரணுன இடததிலிருககிற தாவீதுவசமாயசசேர்நதார்கள.

௯ ஆரெனறுல, ஏசெரெனற தலைவன. அவனுககு இரணடாவது ஒபதியா மூனறாவது எலியாப்,

௰ நாலாவது மிஸ்மனனு ஐநதாவது எரேமியா,

௰௧ ஆறுவது அததாயி ஏழாவது எலியேல்,

௰௨ எட்டாவது யோகனுன் ஒன்பதாவது எல்சபாத,

௰௩ பததாவது எரேமியா பதினோராவது மக்பனாயி,

௰௪ காதபுததிரரான் இவர்கள இராணுவததலைவராயிருநதார்கள. அவர்களிற்சினனவன நூறுபேருககும பெரியவன ஆயிரமபேருககுஞ சேர்வைககாரராயிருநதார்கள.

௰௫ யோர்தான தனகரைகளினமேலெலலாம பூரணமாய்ப்போயிருககிற முதலாமாதததில அதைககடநது கிழககேயும மேறகேயும பளளததாககுகளிலிருககிற யாவரையுநதுரத்திவிட்டவர்களிவர்களதான.

௰௬ பினனேயும பெனயமீன புததிரரிலும யூதாபுததிரரிலுஞசிலர் அரணுனஸ்தலததிலிருககிறதாவீதணடைககுவநதார்கள.

௰௭ தாவீதுபுறப்பட்டு அவர்களுககெதிரகொணடு அவர்களுககுததாவுகொடுதது நீஙகளெனககொததாசைபணணச சமாதானமாய எனனணடைககு வநதீர்களானுல எனனிருதயம உஙகளோடொனறாயிருக்கும. எனகைகளிற் கொடுமையிலலாதிருக்கக்கொளள எனனையென சததுருககளுககுக காட்டிககொடுககவநதீர்களேயாகில, நமமுடைய பிதாககளினுடைய

ராபரின அதைபபார்ததுககணடிபபாரா கவென்றான.

௰அ அபபொது முபபதுபெருககுத தத லைவனான அமாசாயினமெல ஆவி இறஙகி னதினால அவன தாவீதெ! நாஙகள உம முடையவர்கள. ஈசாயின குமாரனெ! உம அ பக்ஷமாயிருபபொம. உமககுச சமாதா னமுஞ சமாதானம. உமக்கொத்தாசைபண ணுகிறவர்களுக்குஞ சமாதானம. ஏனெ னில உமமுடைய பராபரன உமக்கு ஒத்தா சைசெயகிறாரென்றான. அபபொது தா வீது அவர்களைச்சேர்த்துக்கொணடு பின் பாடு அவர்களைத் தணடுத தலைவருக்குள ளெவைத்தான.

௰கூ சவுலினமெலயுத்தமபணணபபோ கிறபெலிஸ்தருடனெகூடத்தாவீது வருகி றபொது மனாசெயிலுஞ சிலர் அவன வச மாயச்சேர்ந்தார்கள. ஆனால அவர்களுக் குத்தவியாணதிலலை. ஏனெனிற் பெலிஸ்தரி னதிபதிகள யொசனைபணணி அவன நம முடைய தலைகளுக்கு மோசமாயத்தனனு டையவனாகிய சவுலின வசமாயபபொவா னெனறு அவனையனுபபிவிட்டார்கள.

உ௰ அபபடியெ அவன சிக்லாவுக்குத திருமபிபபோகையில மனாசெயில அத்னா க், யொசபாத், எதியாவெல், மிகவெல், யொசபாத், எலிகூ, சிலததாயியெனற மனாசெகோத்திரத்தாரின ஆயிரத்துச்சே ர்வைககார்ர் அவனவசமாயவந்தார்கள.

உக இவர்களதாவீதுக்கு அந்தத்தண டுககுவிரோதமாய ஒத்தாசைபணணினார் கள. ஏனெனில அவர்களெலலாரும பரா க்கிரமககாரரும இராணுவத்திற்சேர்வை ககாரருமாயிருந்தார்கள.

உஉ அந்தெனனால தாவீதினபாளைய ம பராபரனுடைய சேனையைபபோலப பெருகுமட்டும அககாலத்திலெ நாளுக்கு நாள் அவனுககொத்தாசைபணணு மனு ஷர் அவனணடைவந்தார்கள.

உங கர்த்தருடைய வாககினபடியெ சவுலின இராசசியபாரத்தைத் தாவீத ணடைக்குத திருபப எபிரொனிலிருககிற அவனணடைக்குவந்தசெவகத்திற்கு ஆயு தமணிநத தலைவரின இலககஙகளாவது.

உச யூதபுத்திரரிற் பரிசையும ஈட்டியு மபிடித்துச்செவகத்திற்கு ஆயுதமணிநத வர்கள ஆறாயிரத்தெணணூறுபெர்.

உரு சிமெயொன்புத்திரரிற் செவகத்தி றகுப பராக்கிரமமானவர்கள ஏழாயிரத தொருநூறுபெர்.

உசா லெவி புத்திரரில நாலாயிரத்தறு நூறுபெரும,

உஎ ஆரொனசநததியாரினமுனனாளி யாகிய யொயதாவும அவனொடிருநதமூ வாயிரத்தெழுநூறுபெரும,

உஅ பராககர்மசாலியானவாலிபனாகிய சாதொக்கெனறவாலிபனும அவன தகபபன வீட்டா ரானஇருபத்திரணடுபிரபுககளுநதானெ.

உகூ பென்யமீன்புத்திரரான சவுலின சகொதரரில மூவாயிரமபெர். ஏனெனி ல அநதமட்டுககும அவர்களில மிசசமா னவர்கள சவுலினவீட்டைககாபபாற்றிப பார்த்தார்கள.

ஙப எபபிராயீமபுத்திரரில தஙகளபிதா ககளின வீட்டாருக்குளளே பெர்பெற்ற மனுஷரான பராக்கிரமசாலிகள இருப தினாயிரத்தெணணூறுபெர்.

ஙக மனாசெயினபாதிக்கோத்திரத்தில தாவீதைராசாவாக்குகிறதற்குவரப்பெ ர்பெற்சொல்லபபட்டவர்கள பதினெ ணணாயிரமபெர்.

ஙஉ இசக்காரபுத்திரரில இஸ்ரவேலசெ யயவேணடியதெதெனறறிநது காலங களுக்குத்தக்க உணர்வுளளவர்களான அவ ர்களின இருநூறுதலைவருமாரும இருநூறு பெரும இவர்கள வாக்குககுச்செவிகொடு த்த இவர்களுடைய எலலாச்சகோதரரு நதாமெ.

ஙங செபுலோனிற் சகலவித யுத்த ஆயு தஙகளாலுமயுத்தஞசெயகிறதற்குமன் னஞசனையிலலாத வரிசையாயநிறகிறதற் கும பழகி யுத்தத்திற்குபபோகததக்கவ ர்கள ஐமபதினாயிரமபெர்.

ஙச நபதலியில ஆயிரம பிரபுககளும அவர்களொடெ கூடவிருநதுபரிசையுமஈ ட்டியுமபிடித்த முபபததெழாயிரமபெர்.

ஙரு தாணியரில யுத்தத்திற்காயத்தப பட்டவர்கள இருபத்தெணணாயிரத்தறு நூறுபெர்.

ஙசா ஆசெரில யுத்தத்திற்காயத்தப பட்டவர்களாயச செவகமபணணபபொக த்தக்கவர்கள நாற்பதினாயிரமபெர்.

ஙஎ யொர்தானுக்ககரையான ரூபெ னியரிலுங காதியரிலும மனாசெயினபாதி க்கோத்திரத்திலும யுத்தமபணணுஞசக லவித ஆயுதஙகளையுந்தரித்தவர்கள நூற றிருபதினாயிரமபெர்.

ஙஅ தாவீதை இஸ்ரவேலமேல இரா சாவாக்குகிறதற்கு இநதயுத்தமனுஷரெ லலாரும அணியணியாய வைககபபட்ட வர்களாய உத்தம இருதயத்தோடெ எபி ரோனுக்குவந்தார்கள. இஸ்ரவேலமற றெனைவரும தாவீதை இராசாவாக்குகிற தற்கு ஒருமனபபட்டிருந்தார்கள.

௩௯ அவர்கள் அங்கே தாவீதோடேகூட மூன்றுநாளிருந்து போசித்துக்குடித்தார்கள். ஏனென்றால் அவர்கள் சகோதரர் அவர்களுக்காகச் சேகரம்பண்ணினார்கள்.

௪௰ இசக்கார் செபுலோன் நப்தலியின் எல்லைமட்டும் அவர்களுக்குச் சமீபமாயிருந்தவர்களுங் கழுதைகளின்மேலும் ஒட்டகங்களின்மேலுங் கோவேறுகழுதைகளின்மேலும் மாடுகளின்மேலும் ஏற்றின் தின்பண்டங்களாகிய மாவினவர்க்கங்களையும் அத்திப்பழ அடைகளையும் வற்றலான திராட்சப்பழங்களையுந் திராட்சரசத்தையும் எண்ணெயையும் ஆடுமாடுகளையுந் திரளாய் ஏற்றிக்கொண்டுவந்தார்கள். ஏனென்றால் இஸ்ரவேலிலே மகிழ்ச்சியுண்டாயிருந்தது.

## ௰௩. அதிகாரம்.

கீரியாத் யெயாரீமிலிருந்தவுடம்படிக்கையின் பெட்டியைக்கொண்டுவந்து ஓபேதேதோமின்வீட்டிலே வைத்தது.

தாவீது ஆயிரத்திற்குச் சேர்வைக்காரரோடும் நூற்றிற்குச் சேர்வைக்காரரோடுஞ் சகல பிரபுக்களோடும் ஆலோசனைபண்ணி,

௨ இஸ்ரவேல் சபைக்கெல்லாஞ் சொன்னதாவது, உங்களுக்குச் சம்மதியும் நம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய சித்தமுமாயிருந்தால் இஸ்ரவேலின் தேசங்களெல்லாமிருக்கிற நம்முடைய மற்றச் சகோதரரும் அவர்களோடே தங்கள் பேட்டைகளின் பட்டணங்களிலிருக்கிற ஆசாரியர்களும் லேவியரும் நம்மோடேகூடும்படிக்கு நானாதிக்குமாக அவர்களண்டைக்கு ஆள்களையனுப்பி,

௩ நம்முடைய பராபரனுடைய பெட்டியைத் திரும்ப நம்மண்டைக்குக் கொண்டுவருவோமாக. ஏனென்றால் சவுலின் நாட்களில் அதைத் தேடாதேபோனோமென்றான்.

௪ அப்போது சபையெல்லாம் இப்படிச்செய்யவேண்டுமென்றார்கள். ஏனென்றால் இந்தக்காரியஞ் சகலசனத்தின்பார்வைக்குச் செம்மையாயிருந்தது.

௫ அப்படியே பராபரனுடைய பெட்டியைக் கீரியாத் யெயாரீமிலிருந்து கொண்டுவரத் தாவீது எகிப்தினுடைய சீகோர்நதியைத் துவக்கி ஆமாத்தின் எல்லைமட்டுமுள்ள இஸ்ரவேலையெல்லாங் கூட்டி,

௬ கேருபீன்களின் நடுவே வாசம்பண்ணுகிற கர்த்தராகிய பராபரனுடைய நாமந்தொழுதுகொள்ளப்படுகிற அவருடைய பெட்டியை யூதாவிலிருக்கிற கீரியாத் யெயாரீமுக்கடுத்த பாலாவிலிருந்தேற்றிவரப்பண்ணும்படிக்கு அவனும் இஸ்ரவேலனைத்துமாய் அவ்விடத்திற்கேறிப்போனார்கள்.

௭ அவர்கள் பராபரனுடைய பெட்டியை அபீனதாபின்வீட்டிலிருந்து ஒருபுது இரதத்தின்மேலேற்றிக்கொண்டுவந்தார்கள். ஊசாவும் அகியோவும் இரதத்தை நடத்தினார்கள்.

௮ தாவீதுஞ் சகல இஸ்ரவேலும் எல்லாப்பலத்தோடும் பராபரனுக்கு முன்பாகப் பாட்டுகளைப்பாடிச் சுரமண்டலங்களையுந் தம்புருக்களையும் மேளங்களையுங் கைத்தாளங்களையும் பூரிகைகளையும் மகிழ்ச்சியாய்ச்சேவித்துக்கொண்டிருந்தார்கள்.

௯ அவர்கள் கீதோனின்களமட்டும் வந்தபோதோவென்றால் மாடுகள் இடறினபடியினாலே ஊசா பெட்டியைப்பிடிக்கத் தன் கையை நீட்டினான்.

௰ அப்போது கர்த்தர் ஊசாவின்மேற் கோபமூண்டவராகி அவன் தன் கையைப் பெட்டியண்டைக்கு நீட்டின நிமித்தம் அவனையடித்தார். அங்கேயவன் பராபரனுக்கு முன்பாக மரித்தான்.

௰௧ அப்போது கர்த்தர் ஊசாவையடித்த இடிக்காகத் தாவீது மனஸ்தாபப்பட்டு அந்த ஸ்தலத்திற்கு இந்நாள்மட்டுமிருக்கிற ஊசாவினிடியென்று பேரிட்டு,

௰௨ அன்றையத்தினம் பராபரனுக்குப் பயந்து பராபரனுடைய பெட்டியை நான் என்னண்டைக்குக்கொண்டுவருவது எப்படி? என்றுசொல்லி,

௰௩ பெட்டியைத் தன்னண்டைக்குத் தாவீதின் பட்டணத்திலே கொண்டுவராமல் அதைக் கேத்தியனாகிய ஓபேதேதோமின்வீட்டிலே சேர்த்தான்.

௰௪ அன்றியும் பராபரனுடைய பெட்டி ஓபேதேதோமின் வீடாகிய அவனிடத்திலே மூன்றுமாதமிருக்கக்கொள்ளக் கர்த்தர் ஓபேதேதோமின்வீட்டையும் அவனுக்குண்டானதெல்லாவற்றையும் ஆசீர்வதித்தார்.

## ௰௪. அதிகாரம்.

தாவீதின் சுகசீரும் அவன் பெலிஸ்தரைச் செயித்த செயங்களும்.

தீருவின் இராசாவாகிய ஈராந் தாவீதண்டைக்குத் தானாபதிகளையும் அவனுக்கு ஒருவீட்டைக்கட்டுகிறதற்குக் கேதுரு

மரங்களையுங் கற்றச்சரையுந் தச்சரையும் அனுப்பினான்.

௨ கர்த்தர் தன்னை இஸ்ரவேலின்மேல் இராசாவாகத் திடப்படுத்தினாரென்பதைத் தாவீது கண்டறிந்தான். ஏனென்றால் இஸ்ரவேலென்கிற அவருடைய சனத்தினிமித்தம் அவனுடைய இராச்சியம் மிகவுமுயர்ந்தது.

௩ எருசலேமிலே தாவீது பின்னையுஞ் சிலஸ்திரிகளை விவாகம்பண்ணி இன்னுங் குமாரரையுங் குமாத்திகளையும் பெற்றான்.

௪ எருசலேமிலே யவனுக்குப் பிறந்த குமாரரின் நாமங்களாவது, சமுவா சோபாப் நாத்தான் சாலோமோன்,

௫ இப்கார் எலிசூவா எலிப்பெலேத்,

௬ நோகா நெபெக் யப்பியா,

௭ எலிஷாமா பெலியாதா எலிப்பெலேத்தென்பவர்கள்.

௮ தாவீது இஸ்ரவேலின்மேலெல்லாம் இராசாவாக அபிஷேகம் பண்ணப்பட்டதைப் பெலிஸ்தர் கேட்டபோதோவெனில் பெலிஸ்தரெல்லாருந் தாவீதைத் தேடவேறிவந்தார்கள். அதைத் தாவீது கேட்கிறபோதவர்களுக்கெதிராகப் புறப்பட்டான்.

௯ பெலிஸ்தரோவெனில் வந்து ரெப்பாயிம் பள்ளத்தாக்கில் விசாலத்திலிறங்கினார்கள்.

௰ பெலிஸ்தரின்மேலே போயேறுவேனோ? அவர்களை யென் கையிலொப்புக்கொடுப்பீரோ? என்று தாவீது பராபரனைக் கேட்டபோது கர்த்தர் அவனுக்கு ஏறு. அவர்களையுன் கையிலொப்புக்கொடுப்போமென்றார்.

௰௧ அவர்கள்பால் பிரச்சிமுக்கேறிவந்தபோது தாவீது அங்கேயவர்களை முறியடித்துத் தண்ணீர்கள் வடிந்துபோகிறபோலே பராபரன் என்கையினாலென் சத்துருக்களை வடிந்துபோகப்பண்ணினாரென்றான். அதைத்தொட்டு அந்தஸ்தலத்திற்குப் பால்பிரச்சிமென்று பேரிட்டார்கள்.

௰௨ அங்கேயவர்கள் தங்கள் தேவர்களை விட்டு ஓடினார்கள். அவைகள் தாவீது கற்பித்தபடியக்கினியாலே சுட்டெரிக்கப்பட்டது.

௰௩ ஆனாற் பெலிஸ்தர் மறுபடியும் அந்தப் பள்ளத்தாக்கின் விசாலத்திலே வந்திறங்கினார்கள்.

௰௪ அப்போது தாவீது திரும்பப் பராபரனைக் கேட்டதற்குப் பராபரன் அவனுக்கு நீ அவர்களுக்குப் பின்னாலே யேறிப்போகாமல் அவர்களுக்குப் பக்கமாய்ச் சுற்றி முசுக்கட்டைச் செடிகளுக்கெதிரேயிருந்து அவர்கள் மேல் வந்து,

௰௫ முசுக்கட்டைச் செடிகளின் நுனிகளில நடந்துவருகிற இரைச்சலை நீ கேட்கையில் அப்போது யுத்தத்திற்குப் புறப்படு. ஏனென்றால் அப்போது பெலிஸ்தரின் பாளயத்தைச் சமுறியடிக்கப் பராபரன் உனக்கு முன்னாகப் புறப்பட்டிருப்பாரென்றார்.

௰௬ பராபரன் தனக்குக் கற்பித்தபடியே தாவீது செய்கிறபோது பெலிஸ்தரின் இராணுவத்தைக் கிபெயோனைத் துவக்கிக் காசேர்மட்டும் முறியடித்தார்கள்.

௰௭ அப்படியே தாவீதின் கீர்த்தி சகல தேசங்களிலும் பிரசித்தமாம். அவனுக்குப் பயப்படுகிற பயத்தைக் கர்த்தர் சகல சாதிகளின்பேரிலும் வரப்பண்ணினார்.

## ௰௫. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டியை ஓபேதேதோமின் வீட்டிலிருந்து எருசலேமிலே கொண்டுபோகப்பட்ட கூடாரத்திலே கொண்டுவரப்பட்டது.

அவன் தனக்குத் தாவீதின் பட்டணத்தில வீடுகளையுண்டாக்கிப் பராபரனுடைய பெட்டிக்கு ஒரு ஸ்தலத்தை யாயத்தப்படுத்தி அதின்மேல ஒரு கூடாரத்தை விரித்தான்.

௨ பிற்பாடு தாவீது லேவியரையேயொழிய வேறொருவரும் பராபரனுடைய பெட்டியையெடுக்கலாகாது. ஏனென்றால் பராபரனுடைய பெட்டியையெடுக்கவும் என்றைக்கும் அவருக்குப் பணிவிடை செய்யவும் அவர்களைக் கர்த்தர் தெரிந்துகொண்டாரென்றான்.

௩ அப்படியே தான் கர்த்தருடைய பெட்டிக்கு ஆயத்தப்படுத்தின அதின் ஸ்தலத்திற்கு அதைக் கொண்டுவரப்பண்ணத் தாவீது இஸ்ரவேலையெல்லாம் எருசலேமிலே கூட்டி,

௪ ஆரோனின் புத்திரரையும்,

௫ லேவியராகிய கோகாத் புத்திரரில் பிரபுவாகிய ஊரியேலையும் அவன் சகோதரராகிய நூற்றிருபதுபேரையும்,

௬ மெராரியின் புத்திரரிற் பிரபுவாகிய அசாயாவையும், அவன் சகோதரராகிய இருநூற்றிருபதுபேரையும்,

௭ கெர்சோம் புத்திரரிற் பிரபுவாகிய யோவேலையும் அவன் சகோதரராகிய நூற்று முப்பதுபேரையும்,

௮ எலிசாப்பாம் புத்திரரிலே பிரபுவாகிய செமாயாவையும் அவன் சகோதரராகிய இருநூறுபேரையும்,

௯ எபிரோனின் புத்திரரிலே பிரபுவாகிய எலியேலையும் அவன் சகோதரராகிய எண்பதுபேரையும்,

௰ ஊசியேல் புத்திரரிலே பிரபுவாகிய அம்மினதாபையும் அவன் சகோதரராகிய நூற்றுப்பன்னிரண்டு பேரையுந் தாவீது கூடிவரப்பண்ணினான்.

௰௧ பிற்பாடு தாவீது ஆசாரியராகிய சாதோக்கையும் அபியத்தாரையும், லேவியராகிய ஊரியேல், அசாயா, யோவேல், செமாயா, எலியேல், அம்மினதாப் என்றவர்களையும் அழைத்து,

௰௨ அவர்களுடனே: லேவியரில் பிதாக்களுடைய சந்ததிகளின் தலைவர் நீங்கள். இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் பெட்டியைத் தற்கு நான் ஆயத்தம்பண்ணின ஸ்தலத்திற்குக் கொண்டுவரப்பண்ண, உங்களையும் உங்கள் சகோதரரையும் பரிசுத்தம்பண்ணிக்கொள்ளுங்கள்.

௰௩ ஏனென்றால் முதல் நீங்கள் அதைச் சுமக்காதபடியினாலும் நாம் நம்முடைய பராபரனாகிய கர்த்தரை நியாயமானபடியே தேடாதேபோனபடியினாலும் அவர் நமக்குள்ளே இடிக்குதலையுண்டாக்கினாரென்றான்.

௰௪ அப்படியே ஆசாரியர்களும் லேவியர்களும் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் பெட்டியையேற்றிவரப்பண்ணத் தங்களைச் சுத்தம்பண்ணிக்கொண்டார்கள்.

௰௫ பிற்பாடு லேவிபுத்திரர் கர்த்தருடைய வார்த்தையின்படியே மோசே கற்பித்தபிரகாரமாகப் பராபரனுடைய பெட்டியை யவைகளிலிருக்கிறவாரைகளினாலே தங்கள் தோள்களின்மேலெடுத்தார்கள்.

௰௬ தாவீது லேவியரின் பிரபுக்களுடனே: நீங்கள் உங்கள் சகோதரராகிய பாடகர்களாக கீதவாத்தியங்களாகிய தம்புருகளும் சுரமண்டலங்களும் கைத்தாளங்களாலுந் தங்கள் சத்தத்தையுயர்த்திச் சந்தோஷமுண்டாகக் கேட்கப்பண்ணும்படிக்கு நிறுத்தவேண்டுமென்று சொன்னான்.

௰௭ அப்படியே லேவியர் யோவேலின் குமாரனாகிய ஏமானையும் அவன் சகோதரரில் பெரகியாவின் குமாரனான ஆசாபையும் மெராரியின் புத்திரரான தங்கள் சகோதரரில் குஷாயாவின் குமாரனான ஏத்தானையும்,

௰௮ இவர்களோடுங்கூட இரண்டாவது வரிசையாகத் தங்கள் சகோதரராகிய சகரியா, பேன், யாசியேல், செமிரமோத், எகியேல், உன்னி, எலியாப், பெனாயா, மசெயா, மத்தித்தியா, எலிப்பெலேகூ, மிக்னேயா, ஒபேத்ஏதோம், ஏயேலென்ற வாசற்காப்பாளரை நிறுத்தினார்கள்.

௰௯ பாடகராகிய ஏமானும் ஆசாபும் ஏத்தானும் பஞ்சலோகக் கைத்தாளங்களைத் தொனிக்கப்பண்ணிப் பாடினார்கள்.

௨௰ சகரியா ஆசியேல் செமிரமோத் எகியேல் உன்னி எலியாப் மாசெயா பெனாயா வென்றவர்கள் கீச்சுக்குரலாய்ப் பாடத் தம்புருகளை வாசித்தார்கள்.

௨௰௧ அன்றியும் மத்தித்தியா எலிப்பேலேகூ மிக்னேயா ஒபேத்ஏதோம் ஏயேல் அசசியா வென்றவர்கள் ராகம்பிடிக்க எண்ணரம்பு சுரமண்டலங்களை வாசித்தார்கள்.

௨௰௨ லேவியரின் பிரபுவாகிய கெனனியாவென்றவன் பெட்டியைச் சுமக்கிற வேலையை விசாரித்து அதைச் சுமக்கும்விதத்தைப் போதித்தான். ஏனென்றால் அவன் உணர்வுள்ளவனாயிருந்தான்.

௨௰௩ பெரகியாவும் எல்க்கானாவும் பெட்டிக்குமுன்பாகக் காவற்காத்து நடந்தார்கள்.

௨௰௪ அன்றிச் செபனியா யோஷபாத் நெதனெயேல் அமாசாயி சகரியா பெனாயா எலியேசரென்ற ஆசாரியர் பராபரனுடைய பெட்டிக்குமுன்பாகப் பூரிகைகளை யூதினார்கள். ஒபேத்ஏதோமும் எகியாவுமோவென்றால் பெட்டியின்பிறகாலே காவற்காத்துவந்தார்கள்.

௨௰௫ இப்படித் தாவீதும் இஸ்ரவேலின் மூப்பரும் ஆயிரத்துச் சேர்வைக்காரருங் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியை ஒபேத்ஏதோமின் வீட்டிலிருந்து மகிழ்ச்சியோடே ஏற்றிவரப்பண்ணப்போனார்கள்.

௨௰௬ கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற லேவியருக்குப் பராபரன் அநுக்கிரகம்பண்ணுகிறபோதோவென்றால் அவர்கள் ஏழு காளைகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும் பலியிட்டார்கள்.

௨௰௭ தாவீதும் பெட்டியைச் சுமக்கிற எல்லாலேவியரும் பாடகர்களும் பாடகரின் வேலையை விசாரிக்கிற பிரபுவாகிய கெனனியாவும் மெல்லிய புடவையான சால்வைகளைத் தரித்திருந்தார்கள். தாவீது சணல்நூலான ஆசாரியச் சால்வையையும் போர்த்துக்கொண்டிருந்தான்.

௨௰௮ அப்படியே இஸ்ரவேலனைத்துங் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைக் கெம்பீரத்தோடும் எக்காளங்கள் பூரிகைகள் கைத்தாளங்களுடைய தொனிப்போடுந் தம்புருகளையுஞ் சுரமண்டலங்

களையும் வாசிக்கிற சத்தத்தோடும் ஏறிவரப் பண்ணினார்கள்.

௨௯ கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டி தாவீதின் பட்டணமட்டும் வந்தபோது சவுலின் குமாரத்தியாகிய மீகாள் பலகணிவழியாய்ப் பார்த்துத் தாவீது இராசா நடனம்பண்ணுகிறதையும் சீசவாத்தியம் பாடுகிறதையுங் கண்டு, அவனைத் தன் இருதயத்திலே அசட்டைபண்ணினாள்.

## ௰௬. அதிகாரம்.

தாவீது தெய்வ ஆராதனையையும் அதற்கடுத்த கீதவாத்தியத்தையுந் திட்டம்பண்ணினது.

அவர்கள் பராபரனுடைய பெட்டியையுள்ளே கொண்டுவந்தபோது அவர்கள் அதைத் தாவீது அதற்குப்போட்ட கூடாரத்தின் நடுவே வைத்துப் பராபரனுடைய சந்நிதியிற் சர்வாங்கதகனங்களையுஞ் சமாதானபலிகளையுஞ் செலுத்தினார்கள்.

௨ தாவீது சர்வாங்கதகனங்களையுஞ் சமாதானபலிகளையுஞ் செலுத்தி நிறைவேற்றின பிற்பாடு ஜனங்களைக் கர்த்தருடைய நாமத்திலே ஆசீர்வதித்து,

௩ புருஷர் தொடங்கி ஸ்திரீகளமட்டுக்கும் இஸ்ரவேலராகிய அனைவருக்கும் அவர்களில் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பணியாரத்தையும் ஒவ்வொரு இறைச்சித்துண்டத்தையும் ஒவ்வொருபடி திராட்சப்பழ இரசத்தையும் பங்கிட்டான்.

௪ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைப் பிரஸ்தாபம்பண்ணித் துதித்துப் புகழுகிறதற்குக் கர்த்தருடைய பெட்டிக்கு முன்பாகச் சேவிக்கத்தக்க லேவியரிற் சிலரை அவன் வைத்தான்.

௫ அவர்களில் ஆசாப் தலைவனும், சகரியா அவனுக்கு இரண்டாவதுமாயிருந்தான். ஏயேல், செமிரமோத், எகியேல், மத்தித்தியா, எலியாப், பெனாயா, ஓபேதேதோம், ஏயெலென்றவர்கள் தம்புருகள் சுரமண்டலங்களென்ற கீதவாத்தியங்களையும் ஆசாப்போவெனிற் கைத்தாளங்களையும் வாசிக்கவும்

௬ பெனாயா யகாசியேலென்ற ஆசாரியர்கள் எப்போதும் பராபரனுடைய உடன்படிக்கையின் பெட்டிக்குமுன்பாகப் பூரிகைகளை ஊதவும் வைக்கப்பட்டார்கள்.

௭ அப்படித் துவக்கப்பட்ட அந்நாளிலேதானே தாவீது ஆசாபையும் அவன் சகோதரரையுங்கொண்டு கர்த்தரைத் துதிக்கிறதற்கு வாசிக்கப்பண்ணின சங்கீதமாவது,

௮ கர்த்தரைத் துதித்து அவர் நாமத்தைப் பிரஸ்தாபமாக்கி அவர் செய்கைகளை ஜனசதளங்களுக்குள்ளே யறிவியுங்கள்.

௯ அவரைப்பாடி அவரைக் கீர்த்தனம்பண்ணி அவருடைய அதிசயங்களையெல்லாந் தியானியுங்கள்.

௰ அவருடைய பரிசுத்தநாமத்தைப் பற்றி மேன்மைபாராட்டுங்கள். கர்த்தரைத் தேடுகிறவர்களின் இருதயம் மகிழ்வதாக.

௰௧ கர்த்தருக்காகவும் அவர் வல்லமைக்காகவும் விசாரித்துக்கொண்டு நித்தம் அவர் சமுகத்தைத் தேடுங்கள்.

௰௨ அவருடைய தாசனாகிய இஸ்ரவேலின் வித்தானவர்களே! அவர் தெரிந்துகொண்டவர்களாகிய யாக்கோபின் புத்திரரே!

௰௩ அவர் செய்த அவருடைய அதிசயங்களையும் அவருடைய அற்புதங்களையும் அவர் வாக்கின் நியாயத்தீர்ப்புகளையும் நினையுங்கள்.

௰௪ அவரே நம்முடைய பராபரனாகிய கர்த்தர். பூமியெங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகள் விளங்கும்.

௰௫ உனக்குக் கானான்தேசத்தை உங்கள் சுதந்தரவீதமாகக் கொடுப்பேனென்றவர் ஆபிரகாமோடே,

௰௬ இவர்கள் கொஞ்சத்தொகைக்குட்பட்டபேரும் அதிற் பரதேசிகளுமாயிருக்கக்கொள்ள,

௰௭ பண்ணின அவருடைய உடன்படிக்கையும் ஈசாக்குக்கிட்ட ஆணையுமாகிய,

௰௮ அவருடைய ஏற்பாட்டையும் அவர் ஆயிரந்தலைமுறைக்குக் கட்டளையிட்ட வார்த்தையையும் என்றைக்கும் நினையுங்கள்.

௰௯ அதை யாக்கோபுக்குக் கட்டளையாகவும் இஸ்ரவேலுக்கு நித்திய உடன்படிக்கையாகவும் நிலைப்படுத்தினார்.

௨௰ அவர்கள் சாதிசாதிக்கும் ஒரு இராச்சியத்திலிருந்து மறுசனத்தண்டைக்கும் நடந்துபோனார்கள்.

௨௧ ஒருவரும் அவர்களையொடுக்கவொட்டாதிருந்தார்.

௨௨ நாம் அபிஷேகம்பண்ணினவர்களை நீங்கள் தொடாமலும் நம்முடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்கு செய்யாமலுமிருங்களென்று அவர்கள் நிமித்தமாக இராசாக்களைக் கடிந்துகொண்டார்.

௨௩ பூமியின் சகலகுடிகளே! கர்த்தரைப்பாடி நாளுக்குநாள் அவருடைய இரட்சிப்பைச் சுவிசேஷமாயறிவியுங்கள்.

௨௪ சாதிகளுக்குள் அவருடைய மகிமையையும் எல்லாச்சனசதளங்களுக்குள்ளும் அவருடைய அதிசயங்களையும் விவரியுங்கள்.

௨௫ ஏனெனில் கர்த்தர் பெரியவருமிகுதியாய்த் துதிக்கப்படத்தக்கவரும் எல்லாத் தேவர்களின்மேலும் பயங்கரருமானவர்.

௨௬ ஏனென்றால் சனசதளங்களுடைய எல்லாத்தேவர்களும் மாயைதானே. கர்த்தர் வானங்களையுண்டாக்கினார்.

௨௭ மகிமையும் பிரகாசமும் அவருக்குமுன்பாகவும் வல்லமையும் சந்தோஷமும் அவர் ஸ்தலத்திலுமிருக்கின்றது.

௨௮ சனசதளங்களின் வம்சங்களே! கர்த்தருக்கு மகிமையையும் பலனையுஞ்செலுத்துங்கள். கர்த்தருக்கு அதைச்செலுத்துங்கள்.

௨௯ கர்த்தருக்கு அவருடைய நாமத்தின் மகிமையைச்செலுத்திக் காணிக்கைகளைக்கொண்டுவந்து அவருக்குமுன்பாகச் சேருங்கள். கர்த்தரைப்பரிசுத்த அலங்காரத்துடனே பணியுங்கள்.

௩௦ பூமியின் சகலகுடிகளே! அவருக்குமுன்பாக நடுங்குங்கள். அவர் பூச்சக்கரத்தை யசையாதபடிக்கு உறுதிப்படுத்துகிறவர்.

௩௧ வானங்கள் மகிழ்ந்து பூமி பூரிப்பதாக. கர்த்தர் இராசரீகம்பண்ணுகிறாரென்று சாதிகளுக்குள்ளே சொல்லப்படுவதாக.

௩௨ சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்கி நாடும் அதிலுள்ளதனைத்துங்களிகூருவதாக.

௩௩ அப்போது கர்த்தருக்குமுன்பாகக் காட்டுமரங்களுங்கெம்பீரிக்கும். ஏனெனில் அவர் பூமியை நியாயந்தீர்க்கவருகிறார்.

௩௪ கர்த்தரைத் துதியுங்கள். ஏனெனில் அவர் நல்லவர். ஏனென்றால் அவர்கிருபையென்றுமுள்ளது.

௩௫ எங்கள் இரட்சிப்பின்பராபரனே! நாங்கள் உம்முடையபரிசுத்தநாமத்தைப்போற்றி உம்மைத்துதிக்கிறதினால் மேன்மைபாராட்டும்படிக்கு எங்களையிரட்சித்து எங்களைச்சேர்த்துக்கொண்டுசாதிகளுக்கெங்களை நீங்கலாக்கியருளுமென்று சொல்லுங்கள்.

௩௬ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சதாகாலங்கள் சதாகாலங்களாக ஸ்தோத்திரிக்கப்பட்டவரென்பதாமே. அதற்குச் சனமெல்லாம் ஆமென் என்று சொல்லிக் கர்த்தரைத் துதித்தது.

௩௭ பிற்பாடு பெட்டிக்குமுன்பாக நித்தம் அனுதினமுறையாய்ச் சேவிக்கும்படிக்கு அவன் அங்கே கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டிக்கு முன்பாக ஆசாபையும் அவன் சகோதரரையும் ஒபேத்தோமையும் அவர்களுடைய சகோதரராகிய அறுபத்தெட்டுப்பேரையும் வைத்துவிட்டு,

௩௮ எதித்தூனின் குமாரனாகிய இந்த ஒபேத்தோமையும் ஓசாவையும் வாசற்காக்கிறவர்களாக வைத்துவிட்டான்.

௩௯ அன்றியுங் கிபெயோனிலுள்ள மேட்டின்மேலிருக்கிற கர்த்தருடைய கூடாரத்திற்கு முன்பாகவிருக்கிற சர்வாங்கத்தகனபலிபீடத்தின்மேல் சர்வாங்கத் தகனங்களை நித்தம் அந்திசந்தி கர்த்தர் இஸ்ரவேலுக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்திலெழுதியிருக்கிறபடியெல்லாங் கர்த்தருக்குச்செலுத்துவதற்காக,

௪௦ அங்கேயவன் ஆசாரியனாகிய சாதோக்கையும் அவன் சகோதரராகிய ஆசாரியர்களையும்வைத்து,

௪௧ இவர்களோடுங் கூட ஏமானையும் எதித்தூனையும் பேர்பேராகக் குறித்துத் தெரிந்துகொள்ளப்பட்டமற்றச்சிலரையுங் கர்த்தருடையகிருபையென்றுமுள்ளதென்று அவரைத் துதிக்கவும்,

௪௨ இவர்களிலிருக்கிற ஏமானையும் எதித்தூனையும் பூரிகைகளையுங் கைத்தாளங்களையும் பராபரனைப் பாடுகிற கீதவாத்தியங்களையுந்தொனிக்கப்பண்ணவும் வைத்து எதித்தூனின்குமாரரைவாசற்காக்கிறவர்களாகக் கட்டளையிட்டான்.

௪௩ பிற்பாடு சனமெல்லாம் அவரவர் தங்களவீட்டிற்குப்போனார்கள். தாவீது தனவீட்டாரை யாசீர்வதிக்கத் திரும்பினான்.

## ௰௭. அதிகாரம்.

தாவீது தெய்வாலயத்தைக்கட்டமனதாயிருக்கிறபோது அவனுக்குப் பராபரனால் உண்டான வாக்குத்தத்தம்.

தாவீது தனவீட்டிலேவாசமாயிருக்கிறபோது அவன் தீர்க்கதரிசியாகிய நாத்தானுடனே இதோ, நான் கேதுருமரவீட்டிலேவாசம்பண்ணுகிறேன். கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியோவென்றால் திரைகளின் கீழிருக்கின்றதென்றான்.

௨ அப்பொழுது நாத்தான் தாவீதை நோக்கி: உம்முடைய இருதயத்திலிருக்கிறதையெல்லாஞ் செய்யும்; ஏனென்றால் பராபரன் உம்மோடிருக்கிறாரென்றான்.

௩ அன்று இராத்திரியிலே சம்பவித்ததேதென்றால், பராபரனுடைய வார்த்தை நாத்தானுக்குண்டாகியவர் சொன்னதாவது,

௪ நீ போய் நம்முடைய தாசனாகிய தாவீதுடனே சொல்லவேண்டியது: கர்த்தருரைக்கிறதேதென்றால் நாம் வாசமாயிருக்க நீ நமக்கு வீட்டைக் கட்டவேண்டாம்.

௫ ஏனென்றால் நாம் இஸ்ரவேலையேறிவரப்பண்ணின நாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் நாம் ஒரு வீட்டிலே வாசமாயிராமல் கூடாரங் கூடாரமாகவும் வாசஸ்தலம் வாசஸ்தலமாகவும் நடந்தோம்.

௬ நாம் இஸ்ரவேலரோடெல்லாம் உலாவிவந்த எவ்விடத்திலாகிலும் நாம் நம்முடைய சனத்தை மேய்க்கக் கற்பித்த இஸ்ரவேலின் நியாயாதிபதிகளிலொருவனோடாகிலும் நீங்கள் நமக்குக் கேதுருமர வீட்டைக் கட்டாதிருக்கிறதென்ன? என்று யாதொரு வார்த்தை சொன்னோமோ?

௭ இப்போதும் நீ நம்முடைய தாசனாகிய தாவீதுக்குச் சொல்லவேண்டியது: சேனைகளுடைய கர்த்தருரைக்கிறதேதென்றால் நீ நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் அதிபதியாயிருக்க நாம் ஆடுகளின் பின்னாலே நடந்த உன்னை ஆட்டுமந்தையைவிட்டெடுத்துக்கொண்டு,

௮ நீ போன இடமெல்லாம் உன்னோடுகூட இருந்து உன் பகைஞரையெல்லாம் உனக்குமுன்பாக நிர்மூலமாக்கி, பூமியிலிருக்கிற பெரியவர்களின் நாமத்திற்கொத்த நாமத்தையுனக்குண்டாக்கினோம்.

௯ நாம் நமது சனமாகிய இஸ்ரவேலுக்கு ஒரு இடத்தையும் ஏற்படுத்தி அது தன் தானத்திலே குடியிருக்கவும் அது இனி அலையாமலும் முன்போலும் நாம் நமது சனமாகிய இஸ்ரவேலின்மேல் நியாயாதிபதிகளைக் கட்டளையிட்டநாள்முதற்கொண்டு நடந்ததுபோலும் அக்கிரமப்புத்திரர் அதையினிச் சிறுமைப்படுத்தாமலிருக்கவுமாக அதை நாட்டி,

௰ உன் பகைஞரையெல்லாந் தாழ்த்திப்போட்டோம். இப்போது கர்த்தர் உனக்கு ஒரு வீட்டைக் கட்டுவாரென்கிறதையுனக்கறிவிக்கிறோம்.

௰௧ நீ உன் பிதாக்களிடத்திலே போக உன் நாட்கள் நிறைவேறினபோது நாம் உனக்குப்பிற்பாடு உன் புத்திரரில் ஒருவராகிய உன் வித்தையெழும்பப்பண்ணி அவன் இராச்சியத்தைத் திடப்படுத்துவோம்.

௰௨ அவர் நமக்கு வீட்டைக் கட்டுவார். அவருடைய ஆசனத்தை என்றென்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம்.

௰௩ நாம் அவருக்குப் பிதாவாயிருப்போம். அவர் நமக்குக் குமாரனாயிருப்பார். நாம் உனக்கு முன்னிருந்தவனை விட்டு நம்முடைய கிருபையை விலக்கப்பண்ணினதுபோல அதையவரைவிட்டு விலக்கப்பண்ணுமல்,

௰௪ அவரை நம்முடைய வீட்டிலும் நம்முடைய இராச்சியத்திலும் என்றென்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம். அவருடைய ஆசனம் என்றென்றைக்கும் நிலைவரமாயிருக்குமென்று சொல்லென்றார்.

௰௫ நாத்தான் இந்த எல்லா வார்த்தைகளுக்கும் இந்த எல்லாத் தரிசனத்திற்குஞ் சரியாயத் தாவீதுக்குச் சொன்னான்.

௰௬ அப்போது தாவீது இராசா உட்பிரவேசித்துக் கர்த்தருக்கு முன்பாகத் தரித்திருந்து சொன்னதாவது, பராபரனாகிய கர்த்தாவே! தேவரீர் என்னை இந்தமட்டுங் கொண்டுவந்ததற்கு நானெம்மாத்திரம்? என்னுடைய வீடும் எம்மாத்திரம்?

௰௭ பராபரனே! இது இன்னம் உம்முடைய பார்வைக்குக் கொஞ்சக்காரியமாயிருக்கின்றதென்று, பராபரனான கர்த்தராயிருக்கிற தேவரீர் உம்மடியானுடைய வீட்டைக்குறித்து இனி நெடுந்தூரமாயிருக்குங் காலத்துச் செய்தியையுஞ் சொல்லி, என்னை மகா மேன்மையான சந்ததியின் மனுஷனாகப் பார்த்தீர்.

௰௮ உம்மடியானுக்குண்டாகுங் கனத்தைக்குறித்துத் தாவீது அப்புறம் உம்மோடே சொல்வதென்ன? தேவரீர் உம்மடியானையறிவீர்.

௰௯ கர்த்தாவே! உம்மடியானிமித்தமும் உம்முடைய இருதயத்தின்படியேயும் இந்தப் பெரிய காரியங்களையெல்லாம் அறியப்பண்ணும்படிக்கு இந்தப் பெரிய காரியத்தையெல்லாஞ் செய்தீர்.

௨௰ கர்த்தாவே! நாங்கள் எங்கள் காதுகளாற் கேட்டதெல்லாவற்றின்படியே தேவரீரைப்போலொத்தவரில்லை. உம்மைத் தவிர வேறே தேவனுமில்லை.

௨௧ உம்முடைய சனமாகிய இஸ்ரவேலைப்போலொத்த சனமுமேது? பூலோகத்தில் இந்த ஒரே சாதியைப் பராபரனாகிய தேவரீர் உமக்குச் சனமாக மீட்கப்போய்ப் பயங்கரமான பெரிய காரியங்களினாலுமக்குக் கீர்த்தியையுண்டாக்கினீர் எகிப்திற்கு

நீங்கலாக்கிவிட்ட உம்முடைய சனத்திற்கு முன்பாகச் சாதிகளைத் துரத்தி,

உஉ உம்முடைய சனமாகிய இஸ்ரவேலை என்றைக்கும் உம்முடைய சனமாயிருப்பதற்கு அதை நிலைப்படுத்தி அவர்களுக்குக் கர்த்தராகிய தேவரீர் பராபரனானீரே.

உ௩ இப்போதும் கர்த்தாவே! தேவரீர் அடியேனையும் என்வீட்டையுங்குறித்துச் சொன்ன வார்த்தை என்றென்றைக்கும் நிலைவரப்பட்டிருப்பதாக. தேவரீர் சொன்னபடியே செய்யும்.

உ௪ ஆம். அது நிலைவரப்பட்டிருக்கவும் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் இஸ்ரவேலுக்குப் பராபரனென்றும் உமதடியானாகிய தாவீதின் வீடு உமக்குமுன்பாகத் திடமானதென்றுஞ் சொல்லப்படுவதினால் உம்முடைய நாமம் என்றைக்கும் மகிமைப்படவுங் கடவது.

உ௫ ஏனென்றால் உனக்கு வீட்டைக் கட்டுவோமென்று என்பராபரனாகிய தேவரீர் உமதடியான் செவிகேட்க வெளிப்படுத்தினீர். ஆகையால் உமக்குமுன்பாக விண்ணப்பம்பண்ண உமதடியானுக்கு மனதைரியங்கிடைத்தது.

உ௬ இப்போதுங் கர்த்தாவே! தேவரீர் பராபரனானவர். தேவரீர் உமதடியானைக்குறித்து இந்த நல்விசேஷத்தைச் சொன்னீர்.

உ௭ இப்போதும் உமதடியானின்வீடு என்றைக்கும் உமக்குமுன்பாகவிருக்கும்படிக்கு அதை ஆசீர்வதித்தருளினீர். கர்த்தராகிய தேவரீர் அதை ஆசீர்வதித்தபடியினாலே அது என்றைக்கும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்குமென்றான்.

## யஅ. அதிகாரம்.

தாவீதின் செயங்களும் அவன் பண்ணின இராசகியபாரமும்.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், தாவீது பெலிஸ்தரைமுறியடித்து அவர்களைக்கீழ்ப்படுத்திக் காத்பட்டணத்தையும் அதின்கிராமங்களையும் பெலிஸ்தரின்கையிலேவாங்கினான்.

உ அவன் மோவாபியரையும் முறியடித்ததினால் மோவாபியர் தாவீதைச் சேவித்து அவனுக்குக் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.

௩ சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேர் ஐபிராத் நதியண்டையில் தன் இராஜ்யத்தை நிறுத்தப் போகிறபோது, தாவீது அவனையும் ஆமாத்தினிடத்திலே முறியடித்தான்.

௪ அவனுக்கிருந்த ஆயிரம் இரதங்களையும் ஏழாயிரங் குதிரைக்காரரையும் இருபதினாயிரங் காலாள்களையும் பிடித்து, இரதங்களில் நூறு இரதங்களை வைத்து, மற்றவைகளையெல்லாமுறித்துப் போட்டான்.

௫ சோபாவின் இராசாவாகிய ஆதாரேசருக்கு ஒத்தாசைபண்ண தமஸ்குவின் சூரியர்வந்தார்கள். ஆனால் தாவீது சூரியரில் இருபத்தீராயிரம்பேரைவெட்டிப்போட்டு,

௬ தமஸ்கு இருக்கிற சூரியாவிலே தாணயம்வைத்தான். அப்படியே சூரியர் தாவீதைச்சேவித்து அவனுக்குக்காணிக்கைகளைச் செலுத்தினார்கள். தாவீது போன இடத்திலெல்லாங் கர்த்தர் அவனையிரட்சித்தார்.

௭ ஆதாரேசேரின் சேவகருக்கிருந்த பொற்பரிசைகளைத் தாவீது எடுத்து எருசலேமுக்குக்கொண்டுவந்தான்.

௮ ஆதாரேசேரின்பட்டணங்களாகிய திப்காத்திலுங் கூனிலுமிருந்து தாவீது வெகுதிரளான்வெண்கலத்தையுமெடுத்துவந்தான். அதினாலே சாலோமோன் வெண்கலக்கடல்தொட்டியையுந் தூண்களையும் வெண்கலத்தட்டுமுட்டுகளையும் உண்டாக்கினான்.

௯ தாவீது சோபாவினிராசாவாகிய ஆதாரேசேரின் இராணுவத்தையெல்லாமுறியடித்தசெய்தியை ஆமாத்தின் இராசாவாகிய தோகூ கேட்டபோது,

௰ அவன் தாவீது இராசாவின் சுகசெய்தியைவிசாரிக்கவும் அவன் ஆதாரேசேரோடு யுத்தம்பண்ணி, அவனைமுறியடித்ததற்காக அவனுக்குமினவுதிரவார்த்தையைச் சொல்லவுந் தன் குமாரனாகிய அதோராமையும் பொன்னும் வெள்ளியும் வெண்கலமுமான் சகலவித தட்டுமுட்டுகளையும் அவனண்டைக்கனுப்பினான். ஏனென்றால் ஆதாரேசேர் தோகினமேல் யுத்தங்களைப்பண்ணுகிற மனுஷனாயிருந்தான்.

யக அந்தத்தட்டுமுட்டுகளையுந் தான் ஏதோமியர் மோவாபியர் அம்மோனடுத்திரர் பெலிஸ்தர் ஆமலேக்கியரென்ற சகலசாதிகளின் கையிலும் வாங்கின வெள்ளியையும்பொன்னையுங்கூடத்தாவீது இராசா கர்த்தருக்குப்பரிசுத்தமாக்கினான்.

யஉ செருயாளின் குமாரன் அபிசாயி உப்புப்பள்ளத்தாக்கிலே பதினெண்ணாயிரம் ஏதோமியரையுமுறியடித்தான்.

ய௩ ஆகையால் தாவீது ஏதோமிலே தாணயம்வைத்தான். ஏதோமியரெல்லா

ரும அவனைச சேவிககிறவர்களானார்கள.
தாவீது போன இடத்திலெலலாங கர்த்
தர் அவனையிரட்சித்தார்.

௰௪ தாவீது இஸரவேலையெலலாம ஆ
ணடு தனனுடைய சனத்திற் கெலலாம
நியாயமும நீதியுஞசெயதான.

௰௫ செருயாளின குமாரன யோவாப
இராணுவத் தலைவனாயிருநதான. ஆகிலூ
தினகுமாரனாகிய யோசபாத மநதிரியா
யிருநதான.

௰௬ ஆகித்தூபின குமாரன சாதோ
கும அபபியததாரின குமாரன அபிமே
லேகும ஆசாரியராயிருநதார்கள. சவுஷா
சமபிரதியாயிருநதான.

௰௭ யோய்தாவின குமாரன பெனாயா
கிரேத்தியருககும பிலேத்தியருககுந தலை
வனாயிருநதான. ஆனாலதாவீதினமூத்தகு
மாரர் இராசாவுககு உதவியாயிருநதார்கள.

## ௰௯. அதிகாரம்.

### தாவீது அமமோனியரையுஞ சூரியரையு ஞசெயித்தது.

இதற்குபபிற்பாடு சமபவித்ததேதெ
னில், அமமோனபுத்திரரின இராசாவாகி
ய நாகாஸமரித்து அவனகுமாரன அவன
ஸதலத்தில இராசாவானபோது,

௨ தாவீது ஆனூனினதகபபனாகிய நா
காஸ எனககுத் தயவு செய்ததுபோலே
நான அவனகுமாரனாகிய இவனுககுத்தய
வுசெய்வேனென்று சொலலி, அவன தகப
பனுககாக அவனுககு ஆறுதல சொலலத்
தானபதிகளையனுபபினான. ஆனால தாவீ
தினூழியககாரர் ஆனூனுககாறுதலசொ
லல அமமோன புததிரரின தேசத்திலே
வநதபோது,

௩ அமமோனபுததிரரின பிரபுககள ஆ
னூனுககுச்சொனனதாவது, தாவீது ஆ
றுதல சொலலுகிறவர்களை யுமககனுபபி
னதினாலே உமமுடைய தகபபனைக கனம
பணணுகிறதாய உமககுத் தோனறுகின
றதோ? தேசத்தை யாராயவும அதைக
கீழ்தமேலாககுமபடிககும உளவுபார்
ககவுமலலவோ அவன ஊழியககாரர் உம
மணடைககுவநதார்கள?

௪ அபபோது ஆனூன் தாவீதினூழிய
ககாரரைபபிடித்து அவர்களைச் சிரைத்
து அவர்களுககிருநத வஸதிரஙகளையிடுப
புமட்டுமவைத்துவிட்டு மறுபபாதியைக
கத்தரித்துபபோட்டு அவர்களை யனுபபி
விட்டான.

௫ அநதமனுஷர்வருகையில அவர்கள
செயதிதாவீதுக்கறிவிக்கபபட்டது. அப
போது அவன அநதமனுஷர் மிகவுமநீஸ
காரமபணணபபட்டபடியினாலே அவர்க
ளுககெதிராக ஆள்களையனுபபி, உஙகள
தாடிமுளைககுமட்டும நீஙகள எரிகோவி
லிருநது பிற்பாடுதிருமபிவாருஙகளென்று
இராசா சொலலசசொனனான.

௬ தாஙகள தாவீதுககு நாறறமெடுத்
தவர்களானதை அமமோனபுத்திரர் கண
டபோது, ஆனூனும அமமோனபுத்திர
ரும மெசோபோத்தாமியாவிலும மாக
கா சோபாவென்ற சூரியரின தேசத்திலு
மிருநது தஙகளுக்கு இரதஙகளுஙகுதிரை
ககாரருங கூலிககு வருமபடிககு ஆயிரத
தாலநதுவெளளியையனுபபி,

௭ முபபத்திராயிரம இரதஙகளையும மா
ககாவின இராசாவையும அவனசனத்தை
யுஙகூலிபொருநதிககொணடார்கள. இவ
ர்களவநது மெதெபாவுககு முன் புறத்தி
லேபாளயமிறஙகினார்கள. அமமோனபுத்
திரருநதஙகளபட்டணஙகளிலிருநதுகூடி
ககொணடு யுத்தமபணணவநதார்கள.

௮ அதைத்தாவீதுகேட்டபோது யோ
வாபையும பலசாலிகளின இராணுவமனை
த்தையும அனுபபினான.

௯ அமமோனபுத்திரர்புறபபட்டுபபட
டணத்தின ஒலிமுக வாசலணடையிலும
வநத இராசாககளோவெனில, தனித்து
வெளியிலும போருககாயத்தமாய நினறா
ர்கள.

௰ யுத்த இராணுககளின முகபபுத்தன
ககு முனனும பினனு மிருககிறதை யோ
வாப்காணகையில, அவன இஸரவேலிலே
தெரிநதுகொளளபபட்ட அனைவரிலும
ஒருபஙகைபபிரித்தெடுத்ததைச சூரியரு
ககெதிராகநிறுத்தி,

௰௧ மறறசசனத்தை அமமோனபுத்தி
ரருககெதிராகபபோருககு ஆயத்தமாயி
ருககபபணணித்தன்சகோதரனாகிய அபி
சாயிககொபபித்துச சொனனதாவது,

௰௨ சூரியர் எனனைபபார்ககிலும பல
த்தால நீயெனககொத்தாசையாயிரு. அ
மமோன புத்திரர் உனனைப பார்ககிலும
பலத்தால நான் உனககொத்தாசையா
யிருபபேன.

௰௩ திடனாயிரு. நாம்நமமுடையசனத்
திற்காகவுமநமமுடைய பராபரனுடைய
பட்டணஙகளுககாகவுந திடனகொணடி
ருக்கக்கடவோம். கர்த்தர் தமதுபார்வை
ககு நலமானதைச செய்வாராக வென்று
சொலலி,

௰௪ யோவாபும் அவனோடிருந்த சனமு ஞ்சூரியரோடியுத்தம்பண்ணச் சேர்ந்தார் கள். அவர்கள் அவனுக்குமுன்பாகமுறிந தோடினார்கள்.

௰௫ சூரியர் முறிந்தோடுகிறதை அம் மோனபுத்திரர்கண்டபோது அவர்களும் அவன்சகோதரனாகிய அபிசாயிக்கு முன பாக முறிந்தோடிப் பட்டணத்திற்குட்ப ட்டார்கள். யோவாப் திரும்ப எருசலே முக்குவந்தான.

௰௬ தாங்கள் இஸ்ரவேலுக்குமுன்பாக முறியடிக்கப்பட்டதைச் சூரியர் கண்ட போதோவெனில, அவர்கள் நதிக்கப்பா லிருக்கிறசூரியரையழைத்தனுப்பி புறப படுவர்ப்பண்ணினார்கள் ஆதாரேசரின படைத்தலைவனாகிய சோப்பாக் அவர்களு க்குமுனனாலே நடந்தான.

௰௭ அது தாவீதுக்கறிவிக்கப் பட்ட போது அவன் இஸ்ரவேலையெல்லாங்கூட டிக்கொண்டு யோர்தானைக்கடந்து அவ ர்களுக்குச்சமீபமாய்வந்தபோது அவர்க ளுக்கெதிராக இராணுக்களை நிறுத்தினான. தாவீது சூரியருக்கெதிராக இராணுக்களை ப்போருக்கு ஆயத்தமாயிருக்கப்பண்ணி னபின் அவனோடு யுத்தம்பண்ணினார்கள்.

௰௮ ஆனாற்சூரியர் இஸ்ரவேலுக்குமுன பாக முறிந்தோடினார்கள். தாவீது சூரிய ரில் ஏழாயிரம் இரதங்களின்மனுஷரையும் நாற்பதினாயிரங்காலாள்களையுங்கொன்று படைத்தலைவனாகிய சோப்பாகையுமடிவி த்தான.

௰௯ தாங்கள் இஸ்ரவேலுக்குமுன்பாக முறியடிக்கப்பட்டதை ஆதாரேசரின சேவகர் கண்டபோதோவென்றால, அவர் கள்தாவீதோடே சமாதானம்பண்ணி அவ னைச்சேவித்தார்கள். அப்புறம் அம்மோ னபுத்திரருக்கு ஒத்தாசைபண்ணச் சூரிய ர்மனதில்லாதிருந்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

தாவீது அம்மோனியரையும் பெலிஸ்த ரையுஞ் செயித்தது.

மறுவருஷம் இராசாக்கள் யுத்தத்தி ற்குப்புறப்படுங்காலம்வந்தபோது, யோ வாப் இராணுவப்பலனைக்கூட்டிக்கொண் டுபோய் அம்மோனபுத்திரரின்தேசத்தை ப்பாழ்க்கடித்து வந்து ரப்பாவை முற்றிக் கைப்போட்டான. தாவீதோவெனில எரு சலேமிலிருந்துவிட்டான. யோவாப் ரப்பா வைப் பிடாடித்துப்போட்டபோது,

௨ தாவீதுவந்து அவர்கள் இராசாவு டைய தலையின்மேல் இருந்த கிரீடத்தை யெடுத்துக்கொண்டான. அது ஒரு தால ந்துபொன்நிறையும் இரத்தினங்கள் பதி ந்ததுவுமாயிருந்தது. அது தாவீதின்தலை யிலவைக்கப்பட்டது பட்டணத்தின்கொ ள்ளையையும் வெகுவிஸ்தாரமாய அதிவிரு ந்துகொண்டுபோனான.

௩ ஆனால அதிலிருந்தசனத்தை அவன வெளியேகொண்டுபோய அவர்களை வாள் அறுக்கிற வேலைக்கும் இருப்புப் பாரைக ளின்வேலைக்குங் கோடாலிகளின் வேலைக் குமவைத்து இப்படி அம்மோனபுத்திரரி னபட்டணங்களுக்கெல்லாந் தாவீது செ ய்து எல்லாச் சனத்தோடுங் கூட எருச லேமுக்குத்திரும்பினான.

௪ அதற்குப் பிற்பாடு காசேரிலே பெ லிஸ்தரோடு யுத்தமுண்டாயிற்று. அப் போது ஊஷாத்தியனான சிபெக்காயி இ ராட்சத புத்திரரிலொருவனான சிப்பாயி யென்றவனை மடங்கடித்தான. அதினால அவர்கள் தாழ்த்தப்பட்டார்கள்.

௫ திரும்பப்பெலிஸ்தரோடுயுத்தமுண் டாகிறபோது யாவீரின்குமாரனாகிய எல் க்கானான் காத்தூரானாகிய கோலியாத்தின சகோதரனான லாகேமியைமடங்கடித்தா ன. அவனீட்டிப்படங்கு நெய்கிறவர்களி னபடைமரம்த்தனையாயிருந்தது.

௬ மறுபடியும் ஒரு யுத்தங் காதிலே யுண்டாகிறபோது அங்கே உயர்ந்த ஒரு மனுஷனிருந்தான. அவனுக்கு அவ்வாறு விரலாக இருபத்துநாலுவிரல்களிருந்தது. அவனும் இராட்சத சந்ததியாயிருந்து,

௭ இஸ்ரவேலை நிந்தித்தான. ஆனால தா வீதின்சகோதரனாகிய சீமெயாவின்குமார னயோனத்தான அவனைமடங்கடித்தான.

௮ காத்தூரிலிருந்த இராட்சதனுக்குப் பிறந்த அவர்கள், தாவீதின் கையினாலும் அவன் சேவகரின்கையினாலும் மடிந்தா ர்கள்.

## ௨௧. அதிகாரம்.

சனத்தின இலக்கத்தைப் பார்க்கச்சொ ன்னதாவீதின பெருமைக்காகக்கினையா க வந்தபெருவாரிக்காய்ச்சவின்செயதி

சாத்தானென்பவனொ இஸ்ரவேலுக்கு விரோதமாயெழும்பித் தாவீதை இஸ்ர வேலத்தொகைபார்க்கிறதற்கு ஏவிவிட் டது.

௨ அப்படியே தாவீதுயோவாபுக்கும் சனத்தின சேர்வைக்காரருக்கும் நீங்கள போய்ப்பெர்சேபாவைத்துவக்கித்தாண்

மட்டுமிருக்கிற இஸ்ரவேலையெண்ணி அவர்கள் இலக்கத்தை நான் அறியும்படிக்கு என்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான்.

௩ அப்பொழுது யோவாப் என்றவன் கர்த்தருடைய சனம் இருக்கிறதைப் பார்க்கிலும் அவர்களை நூற்றத்தனையாய் வர்த்திக்கப்பண்ணுவாராக. ஆனால் இராசாவாகிய என்னாண்டவனே! அவர்களெல்லாரும் என்னாண்டவனின் சேவகரல்லவோ? என்னாண்டவன் இதை விசாரிப்பானேன்? இஸ்ரவேலின் மேற்குற்றமுண்டாக இது நடக்கவேண்டியதென்ன? என்றான்.

௪ ஆனால் யோவாப் அப்படிச்சொல்லியும் இராசாவின் வார்த்தை மேல்கட்டமானபடியினாலே யோவாப் புறப்பட்டு, இஸ்ரவேலெங்குஞ் சுற்றித்திரிந்து எருசலேமுக்கு வந்து,

௫ சனத்தையிலக்கம் பார்த்த தொகையைத் தாவீதுக்குக் கொடுத்தான். இஸ்ரவேலிலெல்லாம் பட்டயமுருவத்தக்கவர்கள் பதினொரு இலட்சம் பேரும் யூதாவிற்பட்டைய முருவத்தக்கவர்கள் நாலு லட்சத்தெழுபதினாயிரம் பேருமாயிருந்தார்கள்.

௬ ஆனால் லேவி பென்யமீன் கோத்திரங்களிலுள்ளவர்களை அவர்களுடைய இலக்கத்திற்குட்பட எண்ணாதே போனான். ஏனெனில் இராசாவின் வார்த்தை யோவாபுக்கருவருப்பாயிருந்தது.

௭ இந்தக்காரியம் பராபரனுடைய பார்வைக்கும் ஆகாத்தான்படியினாலே அவர் இஸ்ரவேலை வாதித்தார்.

௮ தாவீது பராபரனை நோக்கி நான் இந்தக் காரியத்தைச்செய்ததினாலே மிகவும் பாவஞ்செய்தேன். இப்பொழுதும் உம்முடைய அடியானின் அக்கிரமத்தை நீக்கிப்போடுமேன்? ஏனென்றால் வெகு பயித்தியமாய்ச்செய்தேனென்றான்.

௯ அப்பொழுது கர்த்தர் தாவீதுக்கு ஞானதிஷ்டி புருஷனாகிய காத்துடனே பேசி,

௰ நீ போய்த் தாவீதுக்குச் சொல்லவேண்டியதேதெனில், மூன்று காரியங்களை நாம் உனக்கு முன்பாக வைக்கிறோம். அவைகளில் நாம் உனக்குச்செய்ய ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௧ அப்படியே காத் தாவீதண்டைக்கு வந்து அவனுக்குச் சொன்னதாவது, கர்த்தருரைக்கிறதேதெனில்,

௰௨ மூன்று வருஷம் பஞ்சந்தையாகிலும் மூன்று மாதம் உன் பகைஞரின் பட்டயம் உன்னைத் தொடர்ந்தேற நீயுன் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்துபோகுதலையாகிலும் மூன்று நாட்கர்த்தருடைய தூதன் இஸ்ரவேலுடைய எல்லையெங்கும் அழிவுண்டாக்கும்படிக்குத் தேசத்திலுண்டாகுங் கர்த்தருடைய பட்டயத்தையென்கிலுந் தெரிந்துகொள்ளென்றார். இப்பொழுதும் என்னையனுப்பினவருக்கு நானென்ன மறு உத்தரவு கொண்டுபோகவேண்டும்? என்கிறதைப் பாருமென்றான்.

௰௩ அப்பொழுது தாவீது காத்துடனே, வெகு இடுக்கண் அடைந்திருக்கிறேன். இப்பொழுது கர்த்தரின் கையிலே விழுவேனாக. ஏனெனில் அவருடைய இரக்கங்கள் மகா பெரியவைகள். மனுஷர் கையிலே விழாதிருப்பேனாக என்றான்.

௰௪ ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலிலே பெருவாரிக்காய்ச்சலைக் கட்டளையிட்டார். அதினால் இஸ்ரவேலில் எழுபதினாயிரம் பேர் மடிந்தார்கள்.

௰௫ எருசலேமையும் அழிக்கப் பராபரன் தூதனையனுப்பினார். ஆனால் அவன் அழிக்கையிற் கர்த்தர் பார்த்து அந்தத் தீங்குக்கு மனஸ்தாபப்பட்டு அழிக்கிற தூதனுக்குப் போதும், இப்பொழுது உன் கையை வாங்கிக்கொள்ளென்றார். கர்த்தருடைய அந்தத் தூதன் எபூசியனாகிய ஒர்னானின் களத்தண்டையிலே நின்றான்.

௰௬ தாவீது தன் கண்களையேறெடுத்து பூமிக்கும் வானத்திற்கும் நடுவே நிற்கிற கர்த்தருடைய தூதனை எருசலேமின் மேல் நீட்டித் தன் கையிலுருவின தன்னுடைய பட்டயத்தைப் பிடித்தவனாகக் கண்டான். அப்பொழுது தாவீதும் மூப்பானவர்களும் இரட்டுகளைப் போர்த்தினவர்களாய் முகங்குப்புற விழுந்தார்கள்.

௰௭ தாவீது பராபரனுடனே சனத்தையெண்ணச்சொன்னவன் நானல்லவோ? பாவஞ்செய்து பொல்லாப்பு நடப்பிக்கவே நடப்பித்தவன் நான்தானே? இந்த ஆடுகள் செய்ததென்ன? என் பராபரனாகிய கர்த்தாவே! வாதைசெய்ய உம்முடைய கரம் உம்முடைய சனத்திற்கல்ல எனக்கும் என் தகப்பன் வீட்டிற்கும் விரோதமாயிருக்கட்டுமேன்? என்றான்.

௰௮ அப்பொழுது எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே கர்த்தருக்கொரு பலிபீடத்தையெடுப்பிக்கும்படிக்குத் தாவீது அங்கே போய் ஏறவேண்டுமென்கிறதைத் தாவீதுக்குச் சொல்லென்று கர்த்தருடைய தூதன் காத்துக்குச் சொன்னான்.

௰௯ அப்படியே தாவீது கர்த்தரின் நாமத்திலே காத் சொன்ன வார்த்தையின்படியே போயேறினான்.

௨௰ ஆனால் ஒர்னான் திரும்பிப்பார்த்து அவனும் அவனோடிருக்கிற அவனுடைய நாலு குமாரரும் அந்தத் தெய்வதூதனைக் கண்டு ஒளிந்துகொண்டார்கள். ஒர்னானோவெனிற் போரடித்துக் கொண்டிருந்தான்.

௨௧ தாவீது ஒர்னானண்டைக்கு வந்தபோது ஒர்னான் கவனித்துத் தாவீதைப் பார்க்கிறபோது, அவன் களத்திலிருந்து புறப்பட்டுத் தரைமட்டும் முகங்குனிந்து தாவீதை வணங்கினான்.

௨௨ அப்போது தாவீது ஒர்னானுடனே, இந்தக் களத்தின் நிலத்திலே நான் கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கு அதை யெனக்குக் கொடு. இந்த வாதை சனத்தைவிட்டு நிறுத்தப்பட எனக்கதைப் பெறுமதிலேக்குக் கொடுமென்றான்.

௨௩ அப்போது ஒர்னான் தாவீதுடனே இராசாவாகிய என்னாண்டவன் அதை வாங்கிக்கொண்டு, தம்முடைய பார்வைக்கு நலமானபடி செய்வாராக. இதோ, சர்வாங்கத்தகனங்களுக்கு மாடுகளும், விறகுக்குப் போரடிக்கிற உருளைகளுங் காணிக்கைக்குக் கோதுமையுமாகிய யாவையுங் கொடுக்கிறேனென்றான்.

௨௪ ஆனால் தாவீது இராசா ஒர்னானுக்கு அப்படியல்ல. நான் உன்னுடையதை இலவசமாய் வாங்கிக் கர்த்தருக்குச் சர்வாங்கத் தகனத்தைப் பலியிடாமல், அதைப் பெறுமதிலேக்கு வாங்கவே வாங்குவேனென்று சொல்லி,

௨௫ தாவீது அந்த நிலத்திற்கு அறுநூறு சேக்கல் நிறைபொன்னை ஒர்னானுக்குக் கொடுத்து,

௨௬ அங்கே கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டிச் சர்வாங்கத் தகனங்களையுஞ் சமாதானபலிகளையுஞ் செலுத்திக் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான். அப்போது அவர் வானத்திலிருந்து சர்வாங்கத்தகனபலிபீடத்தின் மேலிறங்கின அக்கினியினால் அவனுக்கு மறு உத்தரங் கொடுத்ததுமல்லாமல்,

௨௭ தெய்வதூதன் தன்னுடைய பட்டயத்தை யதின் உறையிலே திரும்பப் போடவேண்டுமென்று கர்த்தர் அவனுக்குச் சொன்னார்.

௨௮ எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே கர்த்தர் தனக்கு உத்தரவருளினதைத் தாவீது அக்காலத்திலே கண்டு அங்கே தானே பலியிடுவான்.

௨௯ ஏனென்றால் மோசே வனாந்திரத்திலே உண்டாக்கின கர்த்தருடைய வாசஸ்தலமுஞ் சர்வாங்கத்தகனபலிபீடமும் அக்காலத்திலே கிபேயோனின் மேட்டிலிருக்கக்கொள்ள,

௩௰ தாவீது அதின் முன்பாகப்போயப் பராபரனைத் தேடக்கூடாதிருந்தது ஏனென்றால் கர்த்தருடைய தூதனின் பட்டயத்திற்குக் கலங்கியிருந்தான்.

## ௨௨. அதிகாரம்.

கட்டப்படப்போகிற தெய்வாலயத்திற்காகத் தாவீது பராமரிக்கையாயிருந்தது.

அப்போது தாவீது பராபரனாகிய கர்த்தருடைய வீடு இருக்கும் ஸ்தலமிதுதானே. இஸ்ரவேல் பலியிடுஞ் சர்வாங்கத்தகன பலிபீடமிருக்கும் ஸ்தலமுமிதுதானே யென்றான்.

௨ பிற்பாடு தாவீது இஸ்ரவேல் தேசத்திலிருக்கிற அன்னியசாதியாரைக் கூட்டிக்கொள்ளச் சொல்லிப் பராபரனுடைய வீட்டைக் கட்டுகிறதற்கான கல்லுகளை வெட்டுங் கற்றச்சரை யேற்படுத்தினான்.

௩ தாவீது வாசல்களின் கதவுகளுக்கு வேண்டிய ஆணிகளுக்குங் கீல்களுக்கும் மிகுதியான இரும்பையும் நிறுத்து முடியாத் திரளவெண்கலத்தையும்,

௪ எண்ணிமுடியாத கேதுருமரங்களையுஞ் சம்பாதித்தான். ஏனெனிற் சீதோனியருந் தீரியருந் தாவீதுக்குத் திரளான கேதுருமரங்களைக் கொண்டுவந்தார்கள்.

௫ ஏனென்றால் தாவீதென்பவன், என் குமாரனாகிய சாலோமோன் வாலிபனும் இளந்தையுமாயிருக்கிறான். கர்த்தருக்குக் கட்டப்படும் வீடோவென்றாற் சகலதேசங்களுக்குங் கீர்த்தியும் மகிமையும் விளங்கத்தக்கதாக மகாப்பெரியதாயிருக்கும். ஆகையால் அதற்காகச் சிலதைச் சம்பாதிப்பேனாகவேணுமென்று சொல்லித் தாவீது தன் மரணத்திற்கு முன்னே திரளாய்ச் சவதரித்துவைத்து,

௬ தன் குமாரனாகிய சாலோமோனை யழைத்து, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு வீட்டைக் கட்டுகிறதற்காக அவனுக்குக் கற்பனை தந்து,

௭ சாலோமோனுக்குச் சொன்னதாவது என் குமாரனே! நான் என் பராபரனாகிய கர்த்தரின் நாமத்திற்கொரு வீட்டை

க்கட்ட என் இருதயத்திலே நினைத்திருந்தேன்.

அ ஆனாற் கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது, நீ திரளான இரத்தத்தைச் சிந்திப் பெரிய யுத்தங்களைப் பண்ணினாய். நீ நம்முடைய நாமத்திற்கு வீட்டைக் கட்டவேண்டாம். ஏனெனில் நமக்கு முன்பாக வெகு இரத்தத்தைத் தரையிலே சிந்தப்பண்ணினாய்.

௯ இதோ, உனக்குப் பிறக்கப்போகிற குமாரன் இளைப்பாறுகிற புருஷனாயிருப்பான். ஏனெனிற் சுற்றிலுமிருக்கும் அவன் சத்துருக்களையெல்லாம் விலக்கி அவனுக்கு இளைப்பாறுதலைக் கொடுப்போம். ஆகையால் அவன்பேர் சாலொமோனென்றிருக்கும் அவன் நாட்களில் இஸ்ரவேலின்மேற் சமாதானத்தையும் அமரிக்கையையுங் கட்டளையிடுவோம்.

௰ அவன் நம்முடைய நாமத்திற்கு வீட்டைக் கட்டுவான். அவன் நமக்குக் குமாரனாயிருப்பான். நாம் அவனுக்குப் பிதாவாயிருந்து அவனு இஸ்ரவேலையாளும் இராசியபாரத்தின் ஆசனத்தை யென்றென்றைக்குந் திடப்படுத்துவோமென்றார்.

௰௧ இப்போதும் என் குமாரனே! நீ பாக்கியவானாயிருந்து, கர்த்தர் உன்னைக் குறித்துச் சொன்னபடியே உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டைக் கட்டும்படிக்கு அவர் உன்னுடனே கூடவிருப்பாராக.

௰௨ கர்த்தர் உனக்கு விவேகத்தையும் உணர்வையுங் கட்டளையிட்டு, இஸ்ரவேலுக்காகவும் உன் பராபரனாகிய கர்த்தரின் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்வதற்காகவும் உனக்குக் கல்வியைக் கற்பிப்பாராக.

௰௩ கர்த்தர் இஸ்ரவேலுக்காக மோசேக்குக் கற்பித்த கட்டளைகளின்படியும் நியாயங்களின்படியுஞ் செய்ய நீ சவதானமாயிருந்தால், அப்போது பாக்கியவானாயிருப்பாய். நீ திடன்கொண்டு பலப்படு. பயப்படாமலுங் கலங்காமலுமிரு.

௰௪ இதோ, நான் என் சிறுமையிலே கர்த்தருடைய வீட்டிற்காக ஒரு லட்சந் தாலந்து பொன்னையும் பத்து லட்சந் தாலந்து வெள்ளியையும் நிறுத்து முடியாத் திரளான வெண்கலத்தையும் இரும்பையுஞ் சவதரித்து, மரங்களையுங் கல்லுகளையுஞ் சவதரித்து வைத்தேன். நீ யின்னம் அவைகளுக்கதிகமாய்ச் சவதரிப்பாய்.

௰௫ வேலைசெய்யத்தக்க திரள் சிற்பாசாரிகளுங் கற்றச்சருந் தச்சருமெந்த வேலைக்குமான சகலவித சாஸ்திரிகளும் உன்னோடிருக்கிறார்கள்.

௰௬ பொன்னுக்கும் வெள்ளிக்கும் வெண்கலத்திற்கும் இரும்புக்கும் இலக்கமில்லை. நீ யெழும்பிக் காரியத்தை நடப்பி. கர்த்தர் உன்னோடேயிருக்கிறார்.

௰௭ தன் குமாரனாகிய சாலொமோனுக்கு ஒத்தாசைசெய்யத் தாவீது இஸ்ரவேலின் பிரபுக்களனைவருக்குங் கற்பித்துச் சொன்னதாவது,

௰௮ உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களோடிருந்து, சுற்றுப்புறத்தாரையுங்கொண்டு உங்களுக்கு இளைப்பாறுதலைக் கொடுத்திலலையா? ஏனெனில் தேசத்தின் குடிகளை யென் கையி லொப்புக்கொடுத்தார். கர்த்தருக்கு முன்பாகவும் அவருடைய சனத்திற்கு முன்பாகவுந் தேசங் கீழ்ப்பட்டிருக்கின்றது.

௰௯ இப்போதும் நீங்கள் உங்கள் இருதயத்தையும் உங்கள் ஆத்துமத்தையும் உங்கள் பராபரனாகிய கர்த்தரைத் தேடுகிறதற்கு நேராக்கிக் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியையும் பராபரனுடைய பரிசுத்த பணிமுட்டுகளையுங் கர்த்தருடைய நாமத்திற்குக் கட்டப்படும் அந்த வீட்டிற்குக் கொண்டுபோகும்படிக்கு நீங்களெழும்பிப் பராபரனாகிய கர்த்தரின் பரிசுத்த ஸ்தலத்தைக் கட்டுங்களென்றான்.

## ௨௩. அதிகாரம்.

இலக்கம்பார்க்கப்பட்ட லேவியருக்குத் தாவீது திட்டம்பண்ணின உத்தியோகங்கள்.

தாவீது கிழவனும் பரிபூரண வயதானபோது தன் குமாரனாகிய சாலொமோனை இஸ்ரவேலின்மேல் இராசாவாக்கி,

௨ இஸ்ரவேலின் எல்லாப் பிரபுக்களையும் ஆசாரியரையும் லேவியரையுங் கூட்டிக்கொண்டான்.

௩ அப்போது முப்பது வயது முதற்கொண்டு அதற்குமேல் தரமான லேவியர் எண்ணப்பட்டார்கள். அவர்களுடைய இலக்கந் தலைக்குத் தலையாக முப்பத்தெண்ணாயிரம் புருஷரானது.

௪ இவர்களில் இருபத்து நாலாயிரம் பேர் கர்த்தருடைய வீட்டின் வேலையை விசாரித்து, ஆறாயிரம்பேர் தலைவரும் நியாயாதிபதிகளுமாயிருந்து,

௫ நாலாயிரம்பேர் வாசற்காக்கிறவர்களாயிருக்கவேண்டுமென்று தாவீது செ

லவீந் துதிசெய்கிறதற்கு நாம்பண்ணுவி த்தவாத்தியமுட்டுகளால் நாலாயிரம்பே ரோ கர்த்தரைத் துதிக்கிறவர்களாயிருக் கவேண்டுமென்று சொல்லி,

௬ அவர்களை லேவியின் குமாரராகிய கெர்சோன், கேகாத், மெராரியென்றவர் களுடைய சந்ததிகளின்படி பங்கு பிரித் தான்.

௭ கெர்சோனியரில், லாதானும், சீமே யும், இருந்தார்கள்.

௮ லாதானின்குமாரர். எகியேலென்ற தலைச்சன், சேத்தாம், யோவேலென்றமூன்றுபேர்.

௯ சீமேயின்குமாரர், செலோமித், ஆசீ யேல், ஆரான் என்ற மூன்றுபேர். இவர்க ள லாதானவம்சப பிதாக்களின் தலைவரா யிருந்தார்கள்.

௰ யாகாத், சீனா, எகூஸ், பெரீயாவென் றநாலுபேரும் சீமேயின் குமாரராயிருந் தார்கள்.

௧௧ யாகாத்தலைச்சனாயிருந்தான். சீனா இரண்டாங் குமாரனாயிருந்தான். ஆனால் எகூசுக்கும் பெரீயாவுக்கும் அநேகங்கு மாரரில்லாதபடியினாலேயவர்கள பிதாக்களி ன வீட்டாரில் ஒரேவம்சமாக எண்ணப்ப ட்டார்கள்.

௧௨ கேகாதின்குமாரர். அம்ராம், இ சேகார், எபிரோம், ஊசியேலென்றநா லுபேர்.

௧௩ அம்ராமின்குமாரர், ஆரோன்மோ சேயென்றவர்கள். ஆனால் ஆரோனும் அ வன்குமாரரும் பரிசுத்தத்திற்குப் பரிசுத் தமான ஸ்தலத்தையென்றைக்கும் பரிசு த்தமாய்க் காக்கிறதற்கும் என்றைக்குங் கர்த்தருக்குமுன்பாகத் தூபங்காட்டுகிற தற்கும் அவரைச்சேவிக்கிறதற்கும் அவர் நாமத்திலே ஆசீர்வாதங்கொடுக்கிறதற் குமபிரித்துவைக்கப்பட்டார்கள்.

௧௪ பராபருடையமனுஷனாகியமோ சேயின்குமாரரோவெனில் லேவிகோத்தி ரத்தாருக்குளெண்ணப்பட்டார்கள்.

௧௫ மோசேயின் குமாரர் கெர்சோம் எலியேசரென்றவர்கள்.

௧௬ கெர்சோமின் குமாரரிற் சேபுவே ல தலைச்சனாயிருந்தான்.

௧௭ எலியேசருடைய குமாரரிலரேகபி யாவென்ற அவன்குமாரன்தலைவனானவன் எலியேசருக்குவேறேகுமாரரிருந்ததில்லை ரேகபியாவின் குமாரரோவென்றால் மிக வும்பெருகினார்கள்.

௧௮ இசேகாரின்குமாரரிலேசெலோ மீத் தலைச்சனாயிருந்தான்.

௧௯ எபிரோனின குமாரர் எரியாவென் ற தலைச்சனும், அமரியா இரண்டாங்கு மாரனும் யகாசியேல் மூன்றாங் குமாரனு ம், எக்காமாம்நாலாங்குமாரனுமிருந்தானே.

௨௰ ஊசியேலின்குமாரர் மீகாவென்ற தலைச்சனும் இஷியாவென்ற இரண்டாங் குமாரனும்,

௨௧ மெராரியின்குமாரர் மகேலி, மூசி யென்றவர்கள். மகேலியின்குமாரர் எலெ யாசார், கீஸ் என்றவர்கள்.

௨௨ எலெயாசார் மரிக்கிறபோது அ வனுக்குக்குமாரத்திகளல்லாமற் குமாரர் உண்டாயிருந்ததில்லை. அவர்களைக் கீஸின் குமாரராகிய இவர்களுடைய சகோதரர் விவாகம்பண்ணினார்கள்.

௨௩ மூசியின்குமாரர் மகேலி, எதேர், எரேமோத்தென்று மூன்றுபேர்.

௨௪ இவர்கள் தங்கள்பிதாக்களுடைய வீட்டாரின்படியே பிதாக்களின் தலைவரா கிய லேவிபுத்திரர்பேர்களுடைய டாப்பி ன்படியே தலைதலையாக எண்ணப்பட்ட இருபதுவயதும் அதற்குமேலதுமுமான அவர்களுடையசந்ததியார் கர்த்தருடை யவீட்டுப்பணிவிடையைச் செய்பவர்கள்.

௨௫ ஏனென்றால் இஸ்ரவேலின்பராபர் ஆகிய கர்த்தர் தமதுசனத்தை இளைப்பா றப்பண்ணினார். அவர் என்றென்றைக்கு ம் எருசலேமில் வாசம் பண்ணுவாரென் றும்,

௨௬ இனி லேவியர் வாசஸ்தலத்தை யாகிலும் அதின்ஊழியத்திற்கடுத்த அதின் தட்டுமுட்டுகளில் ஒன்றையெனகிலுஞ்சும க்கத்தேவையில்லையென்றும்,

௨௭ தாவீது அவர்களைக் குறித்துச் சொன்ன கடைசிவார்த்தைகளின்படியே லேவிபுத்திரரில் தொகைக்குட்பட்டவர்க ள் இருபதுவயதும் அதற்குமேல தாமு மானவர்கள்தானே.

௨௮ ஏனென்றால் அவர்கள் ஆரோனு டையகுமாரரின்கீழ்க் கர்த்தருடையவீட் டின் ஊழியமாய்ந்நின்று பிரகாரங்களையும அறைகளையுஞ் சகல பரிசுத்தத்தட்டுமுட் டுகளின் சுத்திகரிப்பையும், பராபருடை ய வீட்டு ஊழியத்தின் கிரியையையுமவி சாரிப்பதும்,

௨௯ சமுகத்தப்பங்களையுங்காணிக்கை க்குமெல்லியமாவையும்புளிப்பில்லா அப் பங்களையுஞ் சட்டிகளிலேசெய்கிறதையு ஞ் சுடுகிறதையுந் திட்டமானசகலநிட்ட ளையையும் அளவையும்பராமரிப்பதும்,

௩௰ காலமாறும் அந்தப்படியே சாய ங்காலந்தோறுங் கர்த்தரைப்போற்றித்

துதித்து, ஓய்வுநாட்களிலும அமாவாசிகளிலும பண்டிகைகளிலுங கர்த்தருககுச சர்வாஙகததகனஙகள செலுத்தபபடுகிற சகலவேளையிலும,

௩௧ இலககத்திற்குளளான அவர்களதஙகள நியாயத்தினபடியே எபபோதும அநதபபிரகாரமாகசசெயயக கர்த்தருககுமுனபாகநிறபதும,

௩௨ ஆசரிபபுக கூடாரத்தின காவலையும பரிசுத்த ஸதலத்தினகாவலையுநதஙகளசகோதரர்ராகிய ஆரோனுடையகுமாரரினகாவலையுஙகாபபதும, அவர்களகர்த்தருடையவீட்டின பணிவிடையாயசசெயயும உத்தியோகமாயிருககும.

## உச. அதிகாரம்.

ஆசாரியர் இருபத்துநாலுமுறைவரிசைகளாக வகுககபபட்டது.

ஆரோன புத்திரரின வகுபபுகளாவது, ஆரோனின குமாரர் நாதாப், அபிகூ, எலெயாசார், இத்தாமாரென்றவர்கள.

௨ ஆனால நாதாபும அபிகூவுநதஙகள தகபபனுககுமுனனே குமாரரிலலாமலமரித்தபடியினாலே எலெயாசரும இத்தாமாரும ஆசாரிய ஊழியஞ செயதார்கள.

௩ தாவீதும எலெயாசாரின புததிரரிற் சாதோககென்கிறவனும இத்தாமாரின புததிரரில அகிமேலேகென்றவனும அவர்களை யவர்கள ஊழியஞசெயயுமுறைவரிசைகளாகவகுத்தார்கள.

௪ அவர்களை வகுககிறபோது இத்தாமாரின புததிரரைபபார்ககிலும எலெயாசாரின புததிரருககுளளே அதனமானததலைவராகிய புருஷர் காணபபட்டபடியினாலே எலெயாசாரின புததிரரிற் பதினாறுபேர் தஙகள பிதாககளுடைய வீட்டாருககும இத்தாமாரினபுததிரரில எட்டுபபேர் தஙகளபிதாககளுடைய வீட்டாருககுந தலைவராகவைககபபட்டார்கள.

௫ எலெயாசாரினபுத்திரரிலும இத்தாமாரின புததிரரிலும பரிசுத்தஸதலததையும பராபரனையுஞசேவிககிற பிரபுககளுண்டாயிருககும்படிக கவர்களை இவர்களுககும அவர்களுககுஞ சீட்டுகளைபபோட்டுபபகுத்தார்கள.

௬ லேவியரிற் சமபிரதியாகிய செமாயாவென்ற நேததானியேலின குமாரன் அவர்களை இராசாவுககும பிரபுககளுககும ஆசாரியனாகிய சாதோககுககும அபியத்தாரின குமாரனாகிய அகிமெலேககுககும ஆசாரியரும லேவியருமான பிதாககளின தலைவருககு முனபாகவெழுதினான. ஒரு பிதாவினவீட்டுச்சீட்டு எலெயாசாருககாக எடுககபபட்டது. பிறகு அநதபபடியே இத்தாமாருககாகவும எடுககபபட்டது.

௭ முதலாஞசீட்டு யோயாரிபினபேர்வழிககும, இரண்டாவது எதாயாவினபேர்வழிககும,

௮ மூனறாவது ஆரீமினபேர்வழிககும, நாலாவது செயோரீமினபேர்வழிககும,

௯ ஐநதாவது மல்கியாவினபேர்வழிககும, ஆறாவது மியாமீனினபேர்வழிககும,

௰ ஏழாவது அககோத்சின பேர்வழிககும, எட்டாவது அபியாவின பேர்வழிககும,

௰௧ ஒனபதாவது ஏசுவாவின பேர்வழிககும, பத்தாவது செககனியாவினபேர்வழிககும,

௰௨ பதினோராவது எலியாசிபினபேர்வழிககும, பனனிரண்டாவது யாககீமின பேர்வழிககும,

௰௩ பதினமூனறாவது உபபாவினபேர்வழிககும, பதினாலாவது எசெபெயாபின பேர்வழிககும,

௰௪ பதினைநதாவது பில்காவினபேர்வழிககும, பதினாறாவது இமமேரினபேர்வழிககும,

௰௫ பதினேழாவது ஏசீரின பேர்வழிககும, பதினெட்டாவது அபபித்சேசின பேர்வழிககும,

௰௬ பததொனபதாவது பெதகியாவினபேர்வழிககும இருபதாவது எசேககியேலின பேர்வழிககும,

௰௭ இருபத்தொராவது யாகினினபேர்வழிககும, இருபததிரண்டாவது காமூவேலினபேர்வழிககும,

௰௮ இருபததுமூனறாவது தெலாயாவினபேர்வழிககும இருபததுநாலாவது மாசியாவினபேர்வழிககும புறபபட்டது.

௰௯ இஸரவேலின பராபரனாகிய கர்ததர் அவர்கள தகபபனாகிய ஆரோனுககுக கறபித்தபடியே அவர்கள அவனுடையகட்டளையின பிரகாரமாகத தஙகள முறைவரிசைகளிற் கர்ததருடைய வீட்டிற்குட் பிரவேசிககும அவர்களுடைய ஊழியத்திற்காகப பணணபபட்ட வகுபபுகளிவைகளதானே.

### லேவியரிற்சிலர் ஆசாரியருககுதவியாகவைககபபட்டது.

௨௰ லேவியின மறறப புததிரருககுளளேயிருககிற அம்ராமின புததிரருக்குப்

௰௨ ஐந்தாவது நெத்தனியா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௩ ஆறாவது புக்கியா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௪ ஏழாவது எசரேலா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௫ எட்டாவது ஏசாயா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௬ ஒன்பதாவது மத்தனியா அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௭ பத்தாவது சீமேயா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௮ பதினோராவது அசாரேயெல், அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௰௯ பன்னிரண்டாவது அஷாபியா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௰ பதின்மூன்றாவது சுபவேல், அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௧ பதினாலாவது மத்தித்தியா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௨ பதினைந்தாவது எரேமோத், அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௩ பதினாறாவது அனனியா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௪ பதினேழாவது யோஸ்பேகாஷா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டு பேர்வழிக்கும்,

௨௫ பதினெட்டாவது அனானி, அவன் குமாரர், அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்.

௨௬ பத்தொன்பதாவது மல்லோத்தி அவன் குமாரர், அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௭ இருபதாவது எலியாத்தா, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௮ இருபத்தோராவது ஓத்திர், அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௨௯ இருபத்திரண்டாவது கித்தல்தி, அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௩௰ இருபத்துமூன்றாவது மகாசியோத், அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டுபேர்வழிக்கும்,

௩௧ இருபத்துநாலாவது ரோமந்தியேசர், அவன் குமாரர் அவன் சகோதரரொன்றப் பன்னிரண்டு பேர்வழிக்கும் புறப்பட்டது.

## ௨௬. அதிகாரம்.

வாசற்காப்பாருந் தேவாலய உக்கிராணக்காரருஞ் சிலமணியக்காரரும் நியாயாதிபதிகளும் வைக்கப்பட்டது.

வாசற்காக்கிறவர்களின் வகுப்புகளாவன, கோராகியர் சந்ததியான ஆசாபின் புத்திரரிலே கோரேயின் குமாரன் மெஷெலெமியாவென்றவன்.

௨ மெஷெலெமியாவின் குமாரர், மூத்தவனாகிய சகரியாவும், ௩ எதியாவேல், செபதியா, யத்னியேல், ஏலாம், யோகனான், எலியோனாயியென்ற இரண்டாம் மூன்றும் நாலாம் ஐந்தாம் ஆறும் ஏழாங் குமாரரும்,

௪ ஓபேத்ஏதோமின் குமாரர் மூத்தவனாகிய சேமாயாவும், ௫ யோசபாத், யோவாக், சாக்கார், நெத்தானெயேல், அம்மியேல், இசக்கார், பெயுள்தாயியென்ற இரண்டாம் மூன்றும் நாலாம் ஐந்தாம் ஆறும் ஏழாம் எட்டாங்குமாரருந்தானே. ஏனென்றால் பரன் அவனை ஆசீர்வதித்திருந்தார்.

௬ அவன் குமாரனாகிய சேமாயாவுக்குங் குமாரர் பிறந்து, தங்கள் தகப்பன் வீட்டாரை ஆண்டார்கள். ஏனெனில் பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள்.

௭ சேமாயாவுக்கிருந்த குமாரர், ஒத்னியும், பலசாலிகளாகிய ரெப்பவேல், ஓபேத், எல்சாபாத்தென்ற அவன் சகோதரரும், எலிகூவும், செமகியாவுந்தானே.

௮ ஓபேத்ஏதோமின் புத்திரரும் அவர்கள் குமாரரும் அவர்கள் சகோதரருமாகிய ஊழியத்திற்குப் பலத்த பராக்கிரமசாலிகளான அவர்களெல்லாரும் அறுபத்திரண்டு பேர்.

௯ மெஷெலெமியாவின் குமாரருஞ் சகோதரருமான பராக்கிரமர் பதினெட்டுப்பேர்.

௰ மேராரியின் புத்திரரில் ஓசாவென்றவனுடைய குமாரராவது, சிம்ரியென்ற

லவன். இவன் மூத்தவனாயிராவிட்டாலும் அவன் தகப்பன் அவனைத் தலைவனாக வைத்தான்.

யக இல்கியா, தெப்லீயா, சகரீயா என்ற இரண்டாம் மூன்றாம் நாலாங் குமாரர்களே. ஓசாவின் குமாரரும் சகோதரருமெல்லாம் பதின்மூன்று பேர்.

யஉ காவற்காரரான தலைவரின் கீழ்த் தங்கள் சகோதரருக்கொத்த முறையாய்க் கர்த்தருடைய வீட்டில் வாசற்காக்கிறவர்களாய்ச் சேவிக்க இவர்கள் வகுக்கப்பட்டு,

யங தங்கள் பிதாக்களின் வீட்டாராகிய சிறியவர்களும் பெரியவர்களுமாய் இன்ன வாசலுக்கு இன்னாரென்று சீட்டுகளைப் போட்டுக்கொண்டார்கள்.

யச கிழக்குப்புறத்திற்குச் செலேமியாவுக்குச் சீட்டு விழுந்தது. விவேகமுள்ள யோசனைக்காரனாகிய சகரீயா என்ற அவன் குமாரனுக்குச் சீட்டைப் போட்டபோது புறப்பட்ட அவன் சீட்டு வடபுறத்திற்கென்றிருந்தது.

யரு ஓபேத்ஏதோமுக்குத் தென்புறத்திலும், அவன் குமாரருக்குத் தருமப்பண்டகசாலை வீட்டிலும்,

யசு சுப்பீமுக்கும் ஓசாவுக்கும் மண்போட்டு உயர்த்தப்பட்ட வழியுங் காவலுமிருக்கிற மேற்புறமான வாசலுக்கு சீட்டு விழுந்தது.

யஎ கிழக்கே லேவியரான ஆறுபேரும் வடக்கே பகலுக்கு நாலுபேரும் தெற்கே பகல் நாலுபேரும் தருமசேரும் வீட்டண்டையில் இவ்விரண்டுபேரும்.

யஅ வெளிப்புறமான வாசலண்டையில் மேற்கேயிருக்கிற உயர்ந்த வழிக்கு நாலுபேரும், வெளிப்புறமான வழியில் இரண்டுபேருமிருப்பவர்கள்.

யகூ கோராகின் புத்திரருக்குள்ளும் மெராரியின் புத்திரருக்குள்ளும் வாசற்காக்கிறவர்களின் வகுப்புகளிவைகளே.

உ0 மற்ற லேவியரில் அகியா என்றவன் பராபரனுடைய வீட்டுப் பொக்கிஷங்களையும் பரிசுத்தம் பண்ணப்பட்ட பொருள்களின் பொக்கிஷங்களையும் விசாரிக்கிறவனாயிருந்தான்.

உக லாதானின் குமாரர் ஆனாலோ, கெர்சோனியனான அவனுடைய குமாரராகிய பிதாக்களின் தலைவராயிருந்தவர்கள் எகியேலியும்,

உஉ எகியேலியின் குமாரராகிய சேதாமும் அவன் சகோதரனாகிய யோவேலும் கர்த்தருடைய வீட்டுப் பொக்கிஷங்களை விசாரிக்கிறவர்களுமாயிருந்தார்கள்.

உங அம்ராமீயரிலும் இத்சேகாரியரிலும் எப்ரோனியரிலும் ஊசியேலியரிலும் சிலர் அப்படியே.

உச மோசேயின் குமாரனாகிய கெர்சோமின் சந்ததியான செபுவேல் பொக்கிஷங்களின் மேல் பிரதானியாயிருந்தான்.

உரு எலியேசரால் வந்த அவனுடைய சகோதரரானவர்கள், இவனுடைய குமாரனாகிய ரெகபியாவும் இவனுடைய குமாரனாகிய எசாயாவும், இவன் குமாரன் யோராமும், இவன் குமாரன் சிக்கிரியும், இவன் குமாரன் செலோமித்துமானவர்கள்.

உசு இராசாவாகிய தாவீதும் ஆயிரத்துக்கு அதிபதிகளும் நூற்றுக்கு அதிபதிகளுமான பிதாக்களின் தலைவரும் சேனாபதிகளும் யுத்தங்களில் பிடித்துக் கொள்ளையிட்டவைகளிலெடுத்து,

உஎ கர்த்தருடைய வீட்டைப் பலப்படுத்தும்படிக்குப் பரிசுத்தம் பண்ணின பொருள்களின் பொக்கிஷங்களையெல்லாம் அந்தச் செலோமீத்தும் அவனுடைய சகோதரரும் விசாரித்தார்கள்.

உஅ ஞானதிருஷ்டிப் புருஷனாகிய சாமுவேலும் கீசின் குமாரனாகிய சவுலும் நேரின் குமாரனாகிய அப்னேரும் செருயாவின் குமாரனாகிய யோவாபும் அவரவர் பரிசுத்தம் பண்ணினதெல்லாம் செலோமீத்தின் கையின் கீழும் அவன் சகோதரர் கையின் கீழுமிருந்தது.

உகூ இத்சேகாரியரில் கெனானியாவும் அவன் குமாரரும் வெளிப்புறத்து வேலைக்கு வைக்கப்பட்டு இஸ்ரவேலின் மேல் மணியகாரரும் நியாயாதிபதிகளுமாயிருந்தார்கள்.

ஙo எப்ரோனியரில் அசபியாவும் அவன் சகோதரருமாகிய ஆயிரத்தெழுநூறு பராக்கிரமசாலிகள் யோர்தானுக்கப்பால் மேற்கேயிருக்கிற இஸ்ரவேலின் மேல் கர்த்தருடைய எல்லா வேலைக்கும் இராசாவின் ஊழியத்திற்குமாக வைக்கப்பட்டார்கள்.

ஙக எப்ரோனியரில் எரியாவுமிருந்தான். அவன் தன் பிதாக்களின் வம்சங்களான எப்ரோனியரில் தலைவனானவன். தாவீது அரசாண்ட நாற்பதாம் வருஷத்திலே அவர்கள் தேடப்பட்டு, அவர்களுக்குள்ளே கிலெயாத் தேசத்தின் யசேரிலே பலத்த மனுஷர் கண்டுபிடிக்கப்பட்டார்கள்.

ஙஉ பலசாலிகளாகிய அவனுடைய சகோதரர் இரண்டாயிரத்தெழுநூறு பிரதான தலைவராயிருந்தார்கள். அவர்களைத்

தாவீது இராசாபரராபரனுடைய எல்லாக் காரியத்திற்காகவும் இராசாவின் காரியத்திற்காகவும் ரூபேனியர்மேலும் காதியர்மேலும் மனாசேயின் பாதிக் கோத்திரத்தின்மேலும் வைத்தான்.

## ௨௭. அதிகாரம்.

தாவீதுக்கிருந்த இராணுவத்தலைவரும் மற்றப் பிரதான வேலைக்காரரும்.

தங்கள் இலக்கத்தின்படியிருக்கிற இஸ்ரவேல் புத்திரருக்கு வம்சங்களின் தலைவரும் ஆயிரத்துச் சேர்வைக்காரரும் நூற்றுச் சேர்வைக்காரரும் இவர்களுடைய தலைவரும் வைக்கப்பட்டிருந்தார்கள். இவர்கள் வருஷத்திலுண்டான மாதங்களிலெல்லாம் மாதத்திற்கு மாதம் இராசாவைச் சேவிக்கிறதற்கு வகுக்கப்பட்ட வரிசைகளின்படியெல்லாம் மாறி மாறி வருவார்கள். ஒவ்வொரு வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௨ முதலாம் மாதத்தின் முதல் வகுப்பின்மேல் சப்தியேலின் குமாரன் யஷோபெயாமிருந்தான். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௩ பேரேசின் சந்ததியாரில் இவன் சகல சேனாபதிகளின் தலைவனாயிருந்து முதலாம் மாதத்தை விசாரித்தான்.

௪ இரண்டாம் மாதத்தின் வகுப்பின்மேல் அகோகியனான தோதாயிருந்தான். இவன் வகுப்பிலே மிக்லோத் தளகர்த்தனாயிருந்தான். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௫ மூன்றாவது மாதத்தின் மூன்றாஞ் சேனாபதி யோய்தாவின் குமாரனாகிய பெனாயாவென்ற தலையான பிரதானி. அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௬ இந்தப் பெனாயா அந்த முப்பது பராக்கிரமசாலிகளிலொருவனும் அந்த முப்பதுபேர்களின் தலைவனுமாயிருந்தான். அவனுடைய வகுப்பை அவன் குமாரனாகிய அம்மிசாபாத் விசாரித்தான்.

௭ நாலாவது மாதத்தின் நாலாஞ் சேனாபதி யோவாபின் சகோதரனாகிய ஆசகேலும், அவனுக்குப்பிற்பாடு அவன் குமாரனான செபதியாவுமாயிருந்தான். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௮ ஐந்தாவது மாதத்தின் ஐந்தாஞ் சேனாபதி இஸ்ராகியனான சம்கூத் என்றவன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௯ ஆறாவது மாதத்தின் ஆறாஞ் சேனாபதி இக்கேசின் குமாரன் ஈராவென்ற தெக்கோவியன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰ ஏழாவது மாதத்தின் ஏழாஞ் சேனாபதி எப்பிராயீம் புத்திரரிலொருவனாகிய ஏலேசென்ற பெலோனியன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰௧ எட்டாவது மாதத்தின் எட்டாஞ் சேனாபதி சாரியரிலொருவனாகிய சிபேகாயியென்ற ஊஷாத்தியன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰௨ ஒன்பதாவது மாதத்தின் ஒன்பதாஞ் சேனாபதி பென்யமீனரில் அபியேசேரென்ற ஆனதோத்தியன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰௩ பத்தாவது மாதத்தின் பத்தாஞ் சேனாபதி சாரியரிலொருவனாகிய மகராயியென்ற நெத்தோபாத்தியன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰௪ பதினோராவது மாதத்தின் பதினோராஞ் சேனாபதி எப்பிராயீம் புத்திரரில் பெனாயாவென்ற பிரத்தோனியன். அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰௫ பன்னிரண்டாவது மாதத்தின் பன்னிரண்டாஞ் சேனாபதி ஒத்னியேலின் சந்ததியான எல்தாயி என்ற நெத்தோபாத்தியனதாமே. அவன் வகுப்பிலும் இருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௰௬ இஸ்ரவேல் கோத்திரங்களுக்குத் தலைவராவது: ரூபேனியருக்குத் தலைவன் சிக்ரியின் குமாரனான எலியேசர், சிமியோனியருக்கு மாக்காவின் குமாரன் செப்பத்தியா.

௰௭ லேவியருக்குக் கேமுவேலின் குமாரன் அஷாபியா, ஆரோன் சந்ததிக்குச் சாதோக்.

௰௮ யூதாவுக்குத் தாவீதின் சகோதரரில் ஒருவனாகிய எலிகூ, இசக்காருக்கு மிகாவேலின் குமாரனான ஒம்ரி,

௰௯ செபுலோனுக்கு ஒபதியாவின் குமாரனான இஸ்மாயா, நப்தலிக்கு அஸ்ரியேலின் குமாரனான எரிமோத்.

௨௰ எப்பிராயீம் புத்திரருக்கு அசசியாவின் குமாரனான ஓசேயா, மனாசேயின் பாதிக்கோத்திரத்திற்குப் பெதாயாவின் குமாரன் யோவேல்,

௨௧ கிலெயாதிலுள்ள மனாசேயின் பாதிக் கோத்திரத்துக்குச் சகரியாவின் குமாரன் இத்தோ, பென்யமீனுக்கு அப்னேரின் குமாரனான யாசியேல்.

௬ எனக்குச் சொன்னதாவது, உன் குமாரனாகிய சாலொமோனே நம்முடைய வீட்டையும் நம்முடைய பிராகாரங்களையுங் கட்டக்கடவன். ஏனெனில் அவனை நமக்குக் குமாரனாகத் தெரிந்துகொண்டோம். நாம் அவனுக்குப் பிதாவாயிருப்போம்.

௭ இந்நாளில் நடக்கிறபடியே அவன் நம்முடைய கற்பனைகளின்படியும் நம்முடைய நியாயங்களின்படியுஞ் செய்யப் பலத்துக்கொண்டிருந்தானானால் அவன் இராச்சியபாரத்தை என்றென்றைக்குந் திடப்படுத்துவோமென்றார்.

௮ இப்போதும் நீங்கள் என்றென்றைக்கும் இந்த நல்ல தேசத்தைச் சுதந்தரமாய் அநுபவித்து, உங்களுக்குப் பிறகு அதை உங்கள் பிள்ளைகளுக்குச் சுதந்தரமாய்ப் பின்வைக்கும்பொருட்டாக, நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளையெல்லாங் கைக்கொண்டு விசாரியுங்களென்று கர்த்தரின் சபையாகிய இஸ்ரவேலனைத்தின் கண்களுக்கு முன்பாகவும் நம்முடைய பராபரனுடைய செவிகளுக்கு முன்பாகவும் உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்,

௯ என் குமாரனாகிய சாலொமோனே! நீ உன் பிதாவின் பராபரனையறிந்து அவரை உத்தம இருதயத்தோடும் மனப்பூர்வத்தோடுஞ் சேவி. ஏனென்றாற் கர்த்தர் எல்லா இருதயங்களையும் ஆராய்ந்து, சிந்தனைகளின் தோற்றங்களையெல்லாம் உணருகிறார். நீ அவரைத் தேடினால் உனக்குத் தென்படுவார். நீ அவரைவிட்டு விட்டாயேயாகில் உன்னை என்றைக்குந் தள்ளிப்போடுவார்.

௰ இப்போதும் எச்சரிக்கையாயிரு. ஏனெனிற் பரிசுத்தஸ்தலமாக ஒரு வீட்டைக் கட்டுவதற்குக் கர்த்தர் உன்னைத் தெரிந்துகொண்டார் நீ திடன்கொண்டு அதை நடப்பியென்று சொல்லி,

௰௧ தாவீது தன் குமாரனாகிய சாலொமோனுக்கு மண்டபமும் அதின் அறைகளும் அதின் பொக்கிஷசாலைகளும் அதின் மேல்வீடுகளும் அதின் உள்ளறைகளுங் கிருபாசன அறையும் இருக்கும் மாதிரியையும்,

௰௨ ஆவியினாலே தனக்குக் கட்டளையிடப்பட்டபடியெல்லாம் அவன் செய்ய வேண்டிய கர்த்தருடைய வீட்டுப் பிராகாரங்களும், பராபரனுடைய வீட்டுப் பொக்கிஷங்களையும் பரிசுத்தம்பண்ணப்பட்டவைகளின் பொக்கிஷங்களையும் வைக்குஞ் சகல சுற்றறைகளுமிருக்கும் மாதிரியையும்,

௰௩ ஆசாரியரையும் லேவியரையும் வரிசைகளாக வகுக்கிறதற்குங் கர்த்தருடைய வீட்டுப் பணிவிடை வேலையனைத்திற்குங் கர்த்தருடைய வீட்டு வேலையின் தட்டுமுட்டுகளனைத்திற்குமான கட்டளையையுங் கொடுத்தான்.

௰௪ அவன் பல்பல வேலைக்கு வேண்டிய சகல பொன் தட்டுமுட்டுகளுக்காக நிறையின்படி பொன்னையும், பல்பல வேலைக்கு வேண்டிய சகல வெள்ளித் தட்டுமுட்டுகளுக்காக நிறையின்படி வெள்ளியையும்,

௰௫ பொன் விளக்குத்தண்டுகளுக்கும் அவைகளின் பொன் விளக்குகளுக்கும், ஒவ்வொரு விளக்குத்தண்டுக்கும் அதின் விளக்குகளுக்கும் நிறையின்படி வேண்டிய பொன்னையும், வெள்ளிவிளக்குத்தண்டுகளில் ஒவ்வொரு விளக்குத்தண்டுக்கும் அதின் விளக்குகளுக்கும் நிறையின்படி வேண்டிய வெள்ளியையும்,

௰௬ சமுகத்தப்பங்களை வைக்கும் ஒவ்வொரு மேசைக்கு நிறையின்படி வேண்டிய பொன்னையும், வெள்ளி மேசைகளுக்கு வேண்டிய வெள்ளியையும்,

௰௭ முட்கோல்களுக்குங் கலசங்களுக்குந் தட்டங்களுக்கும் வேண்டிய சுத்தப் பொன்னையும் பொற்கிண்ணிகளில் ஒவ்வொரு கிண்ணிக்கு நிறையின்படி வேண்டியதையும், வெள்ளிக்கிண்ணிகளில் ஒவ்வொரு கிண்ணிக்கு நிறையின்படி வேண்டியதையும்,

௰௮ தூபங்காட்டும் பீடத்திற்கு நிறையின்படி வேண்டிய புடமிடப்பட்ட பொன்னையுங் காப்பத்துச் செட்டைகளை விரித்துக் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை மூடும் பொற்கேருபீன்களான வாகனத்தின் மாதிரியையுங் கொடுத்து,

௰௯ இந்த மாதிரியின் சகல கிரியைகளும் எனக்குத் தெரியப்பண்ண இவையெல்லாங் கர்த்தருடைய கரத்தினாலே எனக்கெழுதிக் கொடுக்கப்பட்டதென்றான்.

௨௰ தாவீது தன் குமாரனாகிய சாலொமோனுக்குச் சொன்னதாவது, நீ பலத்துத் திடன்கொண்டு நடப்பி. பயப்படாமலுங் கலங்காமலுமிரு. ஏனெனிற் பராபரனாகிய கர்த்தரென்னும் என்னுடைய பராபரன் உன்னோடிருப்பார். கர்த்தருடைய வீட்டு வேலையின் கிரியையனைத்தையும் நீ முடித்துத்தீருமட்டும் அவருன்னைக் கைநெகிழவதுமில்லை உன்னைக் கைவிடுவதுமில்லை.

௨௧ இதோ, பராபரனுடைய வீட்டு வேலைக்கெல்லாம் ஆசாரியர் லேவியருடைய வகுப்புகளிருக்கின்றது. அந்த எ

லாக்கிரியைக்கும் சகலவித வேலைக்கும் ஞானமுள்ள மனப்பூர்வமான சகல மனுஷரும் உன் சொற்படியெல்லாங் கேட்கும் பிரபுக்களுஞ் சகல சனங்களும் உன்னுடையவிருக்கிறார்களென்றான்.

## ௨௯. அதிகாரம்.

தேவாலயத்திற்காகச் சனம் மனப்பூர்வமாய்க் காணிக்கைகளைக் கொடுத்த பிறபாடு தாவீது பண்ணின செபமும் அவனுடைய மரணமும்.

பிறபாடு தாவீது இராசா சபைக்கெல்லாஞ் சொன்னதாவது, பராபரன் என் குமாரனாகிய சாலொமோனொருவனையே தெரிந்துகொண்டிருக்கச்சே அவன் இன்னம் வாலிபனும் இளந்தையுமாயிருக்கிறான். கிரியையோவென்றால் பெரியது. ஏனென்றால் அது ஒரு மனுஷனுக்கல்ல, பராபரனாகிய கர்த்தருக்குக் கட்டும் அரண்மனை.

௨ நானென்னாலேயானமட்டும் என் பராபருடைய வீட்டுக்கென்று பொன்வேலைக்குப் பொன்னையும் வெள்ளிவேலைக்கு வெள்ளியையும் வெண்கலவேலைக்கு வெண்கலத்தையும் இரும்புவேலைக்கு இரும்பையும் மரவேலைக்கு மரங்களையுங் கோமேதகக்கல்லுகளையும் பதிக்கப்படுங் கல்லுகளையும் ஒளிவான பலவர்ணக் கல்லுகளையும் விலையேறப்பெற்ற சகலவித இரத்தினங்களையும் வெண்கல்லுகளையும் ஏராளமாகச் சவதரித்தேன்.

௩ இன்னம் என் பராபருடைய வீட்டின்மேலெனக்கிருக்கிற விருப்பத்தினாலே நான் பரிசுத்த வீட்டுக்காகச் சவதரித்த யாவையுந்தவிர என்னுடைய சொந்தமாயிருக்கிற பொன்னையும் வெள்ளியையும் என் பராபருடைய வீட்டுக்கென்று கொடுக்கிறேன்.

௪ என்னவெனில் அறைகளின் சுவர்களை மூடுவதற்காகவும் பொன்வேலைக்குப் பொன்னும் வெள்ளிவேலைக்கு வெள்ளியும் உண்டாவதற்காகவும், கம்மாளர் செய்யும் வேலையனைத்திற்காகவும் ஓபீரின் பொன்னாகிய மூவாயிரந் தாலந்து பொன்னையும் புடம்பட்ட வெள்ளி ஏழாயிரந் தாலந்தையுங் கொடுக்கிறேன்.

௫ இப்போதும் உங்களில் இன்றைய தினங் கர்த்தருக்குத் தன் கைக்காணிக்கைகளைச் செலுத்த மனப்பூர்வமானவர்கள் ஆர்? என்றான்.

௬ அப்பொழுது வம்சங்களின் பிரபுக்களும் இஸ்ரவேல் கோத்திரங்களின் பிரபுக்களும் ஆயிரத்திற்குச் சேர்வைக்காரரும் நூற்றுக்குச் சேர்வைக்காரரும் இராசாவின் வேலைக்காரராகிய பிரபுக்களும் மனப்பூர்வமாய்,

௭ பராபருடைய வீட்டுவேலைக்கு ஐயாயிரந் தாலந்து பொன்னையும் பதினாயிரந் தங்கக்காசுகளையும், பதினாயிரந் தாலந்து வெள்ளியையும், பதினெண்ணாயிரந் தாலந்து வெண்கலத்தையும் நூறாயிரந் தாலந்து இரும்பையுங் கொடுத்தார்கள்.

௮ ஆர்கையிலே இரத்தினங்கள் அகப்பட்டதோ, அவர்கள் அவைகளையுங் கர்த்தருடைய வீட்டுப் பொக்கிஷத்திற்கென்று கெர்சோனியனான எகியேலின் கையிலே கொடுத்தார்கள்.

௯ இப்படி மனப்பூர்வமாய்க் கொடுத்ததற்காகச் சனங்கள் சந்தோஷப்பட்டது. ஏனென்றால் உத்தமமும் உற்சாகமுமாய்க் கர்த்தருக்குக் கொடுத்தார்கள். தாவீது இராசாவும் மிகுதியாய்ச் சந்தோஷப்பட்டான்.

௰ ஆகையால் தாவீது சபையனைத்தினர்களுக்கு முன்பாகவுங் கர்த்தருக்கு ஸ்தோத்திரஞ்செலுத்திச் சொன்னதாவது, எங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலின் பராபரனான கர்த்தாவே! தேவரீர் சதாகாலங்களாகிய என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

௰௧ கர்த்தராகிய உமக்கு மகிமையும் வல்லமையும் முக்கியமுஞ் ஜெயமும் மகத்துவமும் உண்டாவதாக. ஏனென்றால் வானத்திலும் பூமியிலுமுள்ளதெல்லாம் உம்முடையது. கர்த்தாவே! இராச்சியமும் உம்முடையது. தேவரீர் எல்லாரின்மேலுந் தலைவராயுயர்ந்திருக்கிறவர்.

௰௨ இந்த ஐசுவரியமுங் கனமும் உம்மாலேயுண்டாயிருக்கின்றது. தேவரீர் எல்லாவற்றையுமாளுகிறவர். உம்முடைய கரத்திலே பலமும் வல்லமையும், உம்முடைய கரத்திலேயெல்லாம் பெருகவும் பலக்கவும்பண்ணுதலுமிருக்கின்றது.

௰௩ இப்போதும், எங்கள் பராபரனே! நாங்கள் உமக்கு ஸ்தோத்திரஞ்செலுத்தி, உமது மகிமையுள்ள நாமத்தைத் துதிக்கிறோம்.

௰௪ ஏனெனில் இப்படி மனப்பூர்வமாய்க் கொடுக்குஞ் சாமார்த்தியம், எங்களுக்கிருக்கிறதற்கு நானெம்மாத்திரம்? என்னுடைய சனமும் எம்மாத்திரம்? ஏனென்றால் இதுவெல்லாம் உம்மாலுண்டானது; உமது கரத்திலேயுள்ளதை வாங்கி உமக்குக் கொடுத்தோம்.

நாளாகமத்தின்

# இரண்டாம் புஸ்தகம்.

## க. அதிகாரம்.

சாலோமோன் பராபரனை ஞானத்தைக் கேட்டவிண்ணப்பமும் அவனுக்குண்டான ஐசுவரியமும்.

தாவீதின் குமாரனாகிய சாலோமோன் தன் இராச்சியத்திலே பலத்துக்கொண்டான். ஏனென்றால் அவனுடைய பராபரனாகிய கர்த்தர் அவனுடனேயிருந்து அவனை மிகுந்தும் பெரியவனாக்கினார்.

உ சாலோமோன் ஆயிரத்துச் சேர்வைக்காரரும் நூறுபேருக்குச் சேர்வைக்காரரும் நியாயாதிபதிகளும் இஸ்ரவேலெங்குமிருக்கிற வம்சங்களின் தலைவராகிய சகல பிரபுக்களுமான இஸ்ரவேலைத் தேரோடே பேசி,

௩ அவனும் அவனோடே கூடச் சபையனைத்துமாய்க் கிபேயோனிலிருக்கிற மேட்டிற்குப் போனார்கள்.

௪ ஏனென்றால் தாவீது பராபரனுடைய பெட்டியைக் கீரியாத்யாரிமிலிருந்து தான் அதற்கு எருசலேமிலே கூடாரம் போட்டு ஆயத்தம் பண்ணின ஸ்தலத்திற் கேறிவரப் பண்ணியிருந்தான். ஆனால் கர்த்தரின் தாசனாகிய மோசே வனாந்திரத்திலே பண்ணுவித்த பராபரனுடைய ஆசரிப்புக் கூடாரம் அங்கேயிருந்தது.

ரு ஊரின் குமாரனாகிய ஊரியின் குமாரன் பெத்சாலேயேல் உண்டுபண்ணின வெண்கலப் பலிபீடமும் அங்கே கர்த்தரின் வாசஸ்தலத்திற்கு முன்பாகவிருந்தது. அதைச் சாலோமோனும் சபையுமாய்த் தேடிப் போனார்கள்.

௬ அங்கே சாலோமோன் ஆசரிப்புக் கூடாரத்திற்கு முன்பாகக் கர்த்தரின் சந்நிதியிலிருக்கிற வெண்கலப் பலிபீடத்தின் மேல் ஆயிரம் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்திப் பலியிட்டான்.

எ அன்று இராத்திரியிலே பராபரன் சாலோமோனுக்குத் தரிசனையாகி அவனுடனே நாம் உனக்கு என்ன கொடுக்க வேண்டும்? என்று கேளென்றார்.

அ அப்போது சாலோமோன் பராபரனுடனே சொன்னதாவது, தேவரீர் என் தகப்பனாகிய தாவீதுக்குப் பெரிய கிருபையைச் செய்து என்னை அவன் ஸ்தலத்திலே இராசாவாக்கினீர்.

௯ இப்போதும் பராபரனாகிய கர்த்தாவே! தேவரீர் என் தகப்பனாகிய தாவீதுக்குப் பண்ணின உமது வாக்குத்தத்தம் உறுதிப்படுவதாக. ஏனென்றால் தேவரீர் பூமியின் தூளத்தனை ஏராளமான சனத்தின் மேல் என்னை இராசாவாக்கினீர்.

௰ இப்போதும் நான் இந்தச் சனத்திற்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருக்கத் தக்க ஞானத்தையும் அறிவையும் எனக்குத் தாரும். ஏனென்றால் இந்த உம்முடைய பெரிய சனத்தை நியாயம் விசாரிக்கத் தக்கவனார்? என்றான்.

௰க அப்போது பராபரன் சாலோமோனுக்குச் சொன்னதாவது, இதை நீ உன் மனதிலே வைத்திருந்து நீ ஐசுவரியம் ஆஸ்திகளையாகிலும் மகிமையையாகிலும் உன் பகைஞரின் பிராணனையாகிலுங் கேளாமலும் நீடித்த ஆயுளைக் கேளாமலுமிருந்து, நாம் உன்னை ராசாவாக்கின நம்முடைய சனத்தை நியாயம் விசாரிக்கத் தக்க ஞானத்தையும் அறிவையும் உனக்குக் கேட்டபடியினாலே,

௰உ ஞானமும் அறிவும் உனக்குக் கொடுத்திருக்கிறதுமல்லாமல், உனக்கு முன் இருந்த இராசாக்களுக்காகிலும் உனக்குப் பின் இருப்பவர்களுக்காகிலும் இல்லாத ஐசுவரியத்தையும் ஆஸ்திகளையும் மகிமையையும் உனக்குக் கொடுப்போமென்றார்.

௰௩ இப்படிச் சாலோமோன் கிபேயோனிலிருக்கிற மேட்டிற்குப் போய் ஆசரிப்புக் கூடாரத்தின் சந்நிதியிலிருந்து எருசலேமுக்கு வந்து இஸ்ரவேலை யாண்டான்.

௰௪ சாலோமோன் இரதங்களையுங் குதிரைக்காரரையுஞ் சேர்த்தான். ஆயிரத்து நானூறு இரதங்களுங் குதிரைக்காரர் பன்னீராயிரமும் அவனுக்கிருந்தது. அவைக

லே இரதங்களின் பட்டணங்களிலும் இராசாவாகிய தன்னிடத்தில் எருசலேமிலும் வைப்பித்தான்.

௧௫ இராசா எருசலேமிலே வெள்ளியையும் பொன்னையுங் கல்லுகளைப்போலவுங் கேதுரு மரங்களைப் பள்ளத்தாக்கிலிருக்கிற முசுக்கட்டைச் செடிகளைப்போலவுந் திரளாயிருக்கப்பண்ணினான்.

௧௬ சாலோமோனுக்கிருக்கிற குதிரைகளும் புடவைகளும் எகிப்திலிருந்து கொண்டுவரப்பட்டது. இராசாவின் வர்த்தகர் புடவைகளையொப்பந்த விலைக்கிரயத்திற் கு வாங்குவார்கள்.

௧௭ அவர்கள் எகிப்திலிருந்து ஒரு இரதத்தை அறுநூறு வெள்ளிக்காசுக்கும் ஒரு குதிரையை நூற்றைம்பது வெள்ளிக்காசுக்குங் கொண்டுவந்தேறுவார்கள். அந்தப்படியே ஏத்தியரின் சகல இராசாக்களுக்குஞ் சீரியாவின் இராசாக்களுக்கும் அவர்கள் முகாந்திரமாயக் கொண்டுவரப்பட்டது.

## ௨. அதிகாரம்.

தேவாலயத்தைக் கட்டச் சாலோமோன் பண்ணின ஆயத்தம்.

சாலோமோன் கர்த்தருடைய நாமத்திற்கு ஒருவீட்டையுந் தன் இராசரிகத்திற்கு ஒருவீட்டையுங் கட்ட நிர்ண்யம் பண்ணி,

௨ சுமைசுமக்கிறதற்கு எழுபதினாயிரம் பேரையும் பர்வதத்தில் மரம் வெட்டுகிறதற்கு எண்பதினாயிரம்பேரையும் இவர்களமேலே தலைவராக மூவாயிரத்தறுநூறு பேரையும் எண்ணிவைத்து,

௩ தீருவின் இராசாவாகிய ஈராமுக்குச் சொல்லியனுப்பினதாவது, என்தகப்பனாகிய தாவீது தாம்வாசமாயிருக்கும்வீட்டைத்தமக்குக்கட்டும்படிக்கு நீர் அவருக்குத் தயவுசெய்து அவருக்குக் கேதுரு மரங்களை யனுப்பினதுபோலே யெனக்குஞ்செய்யும்.

௪ இதோ, என்பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாகச் சுகந்த வர்க்கங்களின் தூபங்காட்டுகிறதற்குஞ் சமுகத்தப்பங்களை யெப்போதும்வைக்கிறதற்கும் அந்திசந்தியும் ஓய்வுநாட்களிலும் மாதப்பிறப்புகளிலும் எங்கள் பராபரனாகிய கர்த்தரின் பண்டிகைகளிலும் இஸ்ரவேலநித்தியகாலமாகச் செலுத்தவேண்டியபடிச் சர்வாங்கதகனங்களைப்பலியிடுகிறதற்கும் அவருடைய நாமத்திற்கு ஒரு வீட்டையதை யவருக்குப்பிரதிஷ்டைபண்ணும்படியாக நான் கட்டப்போகிறேன்.

௫ நான் கட்டப்போகிறவீடோவென்றாற் பெரியதாயிருக்கும். ஏனெனில் எங்களபராபரன் எல்லாத்தேவர்களைப்பார்க்கிலும் பெரியவர்.

௬ அவருக்கு வீட்டைக்கட்டவுஞ் சாமார்த்தியமுள்ளவனார்? ஏனென்றால் வானங்களும் வானங்களின்வானங்களும் அவரைக் கொள்ளாதே? அவருக்குமுன்பாகத் தூபங்காட்டுகிறதற்கேயொழிய வேறேதுக்காய அவருக்கு வீட்டைக் கட்டுகிறதற்கு நான் எம்மாத்திரம்?

௭ இப்போதும் என் தகப்பனாகிய தாவீதுகுறித்தவர்களும் என்னண்டையிலே யூதாவிலும் எருசலேமிலுமிருக்கிறவர்களுமாகிய விவேகிகளும் பொன்னிலும் வெள்ளியிலும் வெண்கலத்திலும் இரும்பிலும் இரத்தாம்பர நூலிலுஞ் சிவப்பு நூலிலும் இளநீல நூலிலும் வேலைசெய்ய ஞானமுள்ளவனுங் கொத்துவேலைசெய்ய அறிந்தவனுமான ஒரு மனுஷனை யெனக்கனுப்பும்.

௮ லீபனோனிலிருந்து கேதுருமரங்களையுந் தேவதாரிப்பாய்மரவிருட்சங்களையும் வாசனை மரங்களையும் எனக்கனுப்பும். ஏனெனில் லீபனோனின் மரங்களை வெட்ட உம்முடையவேலைக்காரர் அறிந்தவர்களென்றதை நான் அறிவேன். இதோ, எனக்கு மரங்களைத் திரளாக ஆயத்தப்படுத்த என் வேலைக்காரர் உம்முடையவேலைக்காரரோடுங்கூடுவார்கள்.

௯ ஏனெனில் நான்கட்டப்போகிற அந்தவீடு பெரியதும் ஆச்சரியப்படத்தக்கதுமாயிருக்கும்.

௧௦ இதோ, அந்த மரங்களை வெட்டுகிற உம்முடையவேலைக்காரருக்கு இருபதினாயிரம் மரக்கால் கோதுமையரிசிகளையும் இருபதினாயிரம் மரக்கால் வாற்கோதுமையையும் இருபதினாயிரங்குடம் திராட்சப்பழ இரசத்தையும் இருபதினாயிரங்குடம் எண்ணெயையையுங்கொடுப்பேனென்று சொல்லியனுப்பினான்.

௧௧ அப்போது தீருவின் இராசாவாகிய ஈராஞ்சாலோமோனுக்குப் பிரதியுத்தாரமாகவனுப்பினகாகிதத்தின் விபரமாவது, கர்த்தர் தமது சனத்தைச்சிநேகித்ததினால் உம்மையவர்களமேல் இராசாவாகவைத்தாரென்றுமிறபாடு,

௧௨ அப்புறம் ஈராம் எழுதினது கர்த்தருக்கு ஒரு வீட்டையுந் தமது இராசரிகத்திற்கு ஒருவீட்டையுங் கட்டத்தக்க விவேகமும் உணர்வும் அறிந்த ஞானமுள்ள

குமாரனைத் தாவீதென்ற இராசாவுக்குக் கட்டளையிட்டவராகிய வானத்தையும் பூமியையும் உண்டாக்கின இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

௰௩ இப்போதும் ஈராம் அபியென்ற உணர்வறிந்த ஞானமுள்ள மனுஷனையனுப்பினேன்.

௰௪ அவன் தாண் குமாரத்திகளிலுள்ள ஒரு ஸ்திரியின் குமாரன். அவன் தகப்பன் தீருவின் மனுஷனாயிருந்தான். அவன் பொன்னிலும் வெள்ளியிலும் வெண்கலத்திலும் இரும்பிலுங் கல்லுகளிலும் மரங்களிலும் இரத்தாம்பர நூலிலும் இளநீல நூலிலும் மெல்லிய நூலிலுஞ் சிவப்பு நூலிலும் வேலைசெய்யவுஞ் சகலவித கொத்து வேலைசெய்யவும், என்னென்ன அவனுக்குக் காண்பிக்கப்படுமோ? அதற்கவன் உம்முடைய ஞானிகளோடும் உம்முடைய தகப்பனாகிய தாவீதென்ற என்னாண்டவனின் ஞானிகளோடுங் கூட வகையுண்டுபண்ணவும் அறிவான்.

௰௫ இப்போதும் என்னாண்டவன் தான் சொன்ன கோதுமையையும் வாற்கோதுமையையும் எண்ணெயையுந் திராட்சப்பழ இரசத்தையுந் தம்முடைய ஊழியக்காரருக்கனுப்பவும்,

௰௬ அப்போது நாங்களும்மக்குத் தேவையான மரங்களையெல்லாம் லீபனோனிலே வெட்டி, அவைகளையும்மக்குக் கடலின் மேல் தெப்பங்களாய் யோப்பே மட்டுக்குங் கொண்டுவருவோம். பிற்பாடு நீர் அவைகளை எருசலேமுக்கு ஏற்றுவிப்பீரென்பதுதானே.

௰௭ சாலொமோன் தன் தகப்பனாகிய தாவீது இஸ்ரவேல் தேசத்திலுண்டான மறுசாதியாரையெல்லாமெண்ணின தொகையின்படியவர்களையெண்ணினான். அவர்கள் நூற்றைம்பத்து மூவாயிரத்தறுநூறுபேரென்றுகண்டது.

௰௮ இவர்களில் அவன் எழுபதினாயிரம் பேரைச் சுமைசுமக்கவும் எண்பதினாயிரம் பேரைப் பர்வதத்தில் மரங்களை வெட்டவும் மூவாயிரத்தறுநூறுபேரைச் சனத்திற்கு வேலையைக் கற்பிக்குந் தலைவராயிருக்கவும் வைத்தான்.

## ௩. அதிகாரம்.

தேவாலயத்தைச் சாலொமோன் கட்டினது.

பிற்பாடு சாலொமோன் எருசலேமிலே தன் தகப்பனாகிய தாவீதுக்குக் காண்பிக்கப்பட்ட மோரீயாவென்ற பர்வதத்தில் எபூசியனாகிய ஒர்னானின் களமென்ற தாவீது குறித்துவைத்த ஸ்தலத்திலே கர்த்தருடைய வீட்டைக் கட்டத்துவக்கினான்.

௨ அவன் இராச்சியபாரம்பண்ணுகிற நாலாம் வருஷம் இரண்டாம் மாதம் இரண்டாந் தேதியிலே கட்டத்துவக்கினான்.

௩ பராபரனுடைய வீட்டைக் கட்டுகிறதற்குச் சாலொமோன் போட்ட அஸ்திபாரமானது முன் அளவான் முழங்களின்படியே அறுபது முழ நீளமும் இருபது முழ அகலமுமானது.

௪ முகப்பிலிருக்கிற மண்டபம் வீட்டினுடைய அகலத்தின்படியே இருபதுமுழ நீளமும் நூற்றிருபதுமுழ உயரமுமாயிருந்தது. அதின் உட்புறத்தைச் சுத்தப் பொன்னினாலே மூடிப்போட்டான்.

௫ பெரிய வீட்டையோவென்றால் பாய்மரவிருட்சப்பலகைகளாலும் பிறகு நல்ல பொன்னினாலும் இழைத்து அதின்மேலே பேரீச்சுகளின் வேலையையுஞ் சங்கிலிகளின் வேலையையுஞ் செய்து,

௬ அந்த வீட்டையலங்காரத்திற்காக இரத்தினங்களாற் பதித்தான். பொன்னோவெனில் பர்வாயிமின் பொன்னாயிருந்தது.

௭ அந்த வீட்டு உத்திரங்களையும் நிலைகளையும் அதின் சுவர்களையும் அதின் கதவுகளையும் பொன்னினாலே மூடிச் சுவர்களிலே கேருபீன்களின் கொத்து வேலையைச் செய்வித்தான்.

௮ பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான வீட்டையுங் கட்டினான். அது வீட்டினுடைய அகலத்தின்படி இருபதுமுழ நீளமும் இருபதுமுழ அகலமுமாயிருந்தது அதை அறுநூறு தாலந்து நற்பொன்னினாலிழைத்தான்.

௯ ஆணிகளின் நிறை ஐம்பது பொன் சேக்கலானது. மேல்வீடுகளையும் பொன்னினாலே இழைத்தான்.

௰ அவன் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான வீட்டிலே இரண்டு கேருபீன்களையும் அசைகிற பாவனையாய் உண்டுபண்ணினான் அவைகளைப் பொன்னினாலே மூடினார்கள்.

௰௧ அந்தக் கேருபீன்களுடைய செட்டைகளின் நீளம் இருபதுமுழமானது. ஒன்றினுடைய ஒரு செட்டை ஐந்துமுழமாயிருந்து வீட்டுச் சுவரைத் தொட்டது. மறு செட்டை ஐந்து முழமாயிருந்து மற்றக் கேருபீனின் செட்டையைத் தொட்டது.

௰௨ மற்றக் கேருபீனின் ஒரு செட்டையும் ஐந்து முழமாயிருந்து வீட்டுச் சுவரைத் தொட்டது. அதின் மறு செட்டையும

ஐநது முழமாயிருநது மறறககேருபீனின செடடையைபபிடிததது.

௰௩ இபபடியே அநதக கேருபீனகளின செடடைகள இருபதுமுழவிரிவாயிருநதது. அவைகள தஙகளகால்களால ஊனறிநினறது. அவைகளினமுகஙகளவீடடையுளளாகநோககியிருநதது.

௰௪ அவன இளநீல நூலாலும இரத்தாம்பர நூலாலுஞ சிவபபு நூலாலும மெலலிய நூலாலுந திரையையும அதிலே கேருபீனகளின ரூபுகளையுமுணடுபணணினான.

௰௫ அவன வீடடிறகு முனனாக முபபததைநதுமுழ உயரமான இரணடு தூண்களையும அவைகளுடைய முனைகளினமேலிருககும ஐநதுமுழ உயரமான குமிழ்களையுமுணடாககி,

௰௬ சனனிதிககுமுனனிருககச சஙகிலிகளையுமவனடணணுவித்துத்தூண்களின முனைகளமேறபறறவைததது, நூறுமாதளமபழஙகளையுமபணணுவிததது அநதசசஙகிலிகளிற்கோர்ததான.

௰௭ அநதத்தூண்களையவன தேவாலயத்திற்குமுனபாக ஒனறைவலததுபுறத்திலும ஒனறை இடததுபுறததிலுமநாடடி வலதுபுறமானததிறகு யாகினெனறும இடதுபுறமானததிற்குபபோவாசெனறுமபேர்தரிததான.

## ௪. அதிகாரம்.

தேவாலயத்தின தடடுமுடடுகள செயயபபடடது.

அவன இருபதுமுழநீளமும இருபதுமுழ அகலமும பததுமுழ உயர்முமான வெணகலப பலிபீடததையும் பணணுவிததான.

௨ கடலதொடடியையுமவார்பபிததான. சக்கரமான அதின உதடு ஒருபுறந துவக்கி மறறபபுறமடடும பததுமுழ அகலமும ஐநதுமுழ உயர்முஞ சுறறளவுமுபபததுமுழ நூலளவுமாயிருநதது.

௩ அதினகீழ்பபுறமாய எருதுகளினரூபஙகள ஒவவொருமுழததிறகுபபததுரூபமாக அநதககடலதொடடியினசக்கரத திறகிருநதது. தொடடியோடொனறாய வார்க்கபபடட அநதஎருதுகளினவரிசைகள இரணடிருநதது.

௪ அது பனனிரணடு எருதுகளமேல நினறது. இவைகளில மூனறு வடககேயும மூனறு மேறகேயும மூனறு தெறகேயும மூனறு கிழக்கேயும நோக்கியிருநதது. கடலதொடடி அவைகளினமேல உயரவிருநதது. அவைகளின பினபுறஙகளெலலாம உளளாகவிருநதது.

௫ அதினகனம நாலுவிரற்கடையும அதின உதடு குடிக்கிற பாததிரததின உதடடைபபோலவுமலிலியபுஷபததைபபோலுமிருநதது. அது மூவாயிரஙகுடநதணணீர் பிடிக்கத்தக்கதாயிருநதது.

௬ கழுவுகிறதறகுபபததுககொபபரைகளையுமுணடாக்கிச சர்வாஙகததகனமாகிறவைகளையவைகளில அலசுகிறதறகு ஐநதைவலதுபுறததிலும ஐநதை இடதுபுறததிலும வைததான. கடலதொடடியோவெனறால ஆசாரியர்கள அதிலேதஙகளைச சுததமபணணிக்கொளளுகிறதறகிருநதது.

௭ அவனபததுபபொன்விளக்குததணடுகளையும அவைகளுடைய பிரமாணததினபடிசெயவித்து அவைகளைத தேவாலயததில ஐநதைவலதுபுறமும ஐநதை இடதுபுறமுமாகவைததான.

௮ பததுமேசைகளையுஞ செயவிதது, அவைகளைததேவாலயததில ஐநதைவலதுபுறமும ஐநதை இடதுபுறமுமாயவைதது, நூறுபொற் கலஙகளையுமபணணுவிததான.

௯ அவன ஆசாரியரின பிரகாரததையுமபெரியபிரகாரததையும பிரகாரததவாசலகளையுமுணடாககி அவைகளினகதவுகளைவெணகலததாலமூடினான.

௰ கடலதொடடியையவன கிழக்கான வலதுபுறததிலே தெற்குக்கெதிராக வைததான.

௰௧ ஈராம செபபுசசடடிகளையுஞ சாமபலெடுக்கிற கரணடிகளையுங கலஙகளையுமுணடாக்கினான. அபபடியே ஈராம சாததருடைய வீடடிற்காக இராசாவாகிய சாலொமோனுக்குச செயய வேணடிய வேலையைமுடிததுபபோடடான.

௰௨ அது எனனவெனில அநத இரணடு தூண்களும இரணடு தூணகளுடைய முனையினமேலிருக்கிற குணடுகளும குமிழ்களுந தூணகளுடைய முனையினமேலிருக்கிற குமிழ்களான இரணடு குணடுகளை மூடுகிறதறகு இரணடுவலைபபினனல்களும,

௰௩ தூணகளினமேலுளள குமிழ்களான இரணடு குணடுகளை மூடுகிறதறகு ஒவவொருவலைபபினனலில இரணடுவரிசைமாதளமபழஙகளாக இரணடு வலைபபினனலுக்கும நானூறுமாதளமபழஙகளுநதானே.

௰௪ ஆதாரஙகளையும ஆதாரஙகளின மேலிருக்குஙகொபபரைகளையும,

௰௫ ஒருகடலதொடடியையும அதின கீழிருக்கும பனனிரணடு எருதுகளையும,

௰௬ செபபுசசடடிகளையுஞ சாமபலெ

பாத்திரங்களையும் முட்களையும் கலசங்களையும் அவைகளுக்கடுத்த பணிமுட்டுகளையும் ஈராம் ஆபி இராசாவாகிய சாலொமோனுக்குக் கர்த்தரின் வீட்டிற்காகத் துப்புரவான வெண்கலத்தாற் பண்ணினான்.

௰௭ யோர்தானுக்கடுத்த சமனான பூமியிற் சுக்கோத்திற்குஞ் சேரேதாத்தாவுக்கும் நடுவே இராசா அவைகளைக் களிமண் தரையிலே வார்ப்பித்தான்.

௰௮ இந்தத் தட்டுமுட்டுகளையெல்லாஞ் சாலொமோன் வெகு ஏராளமாய் உண்டுபண்ணினான். ஏனெனில் வெண்கலத்தின் நிறை தொகைக்கடங்காததாயிருந்தது.

௰௯ பராபரனுடைய வீட்டிற்குத் தேவையான சகல தட்டுமுட்டுகளையும் பொற் பீடத்தையுஞ் சமுகத்தப்பங்களையும் வைக்கும் மேசைகளையும்,

௨௰ முறைமையின்படியே சந்நிதிக்கு முன்பாக வெளிச்சங்கொடுக்கிறதற்குப் பசும்பொன்னான விளக்குத் தண்டுகளையும் அவைகளின் விளக்குகளையும்,

௨௰௧ சுத்தத் தங்கப்பொன்னான பூக்களையும் விளக்குகளையுங் கத்திரிகளையும்,

௨௰௨ பசும்பொன்னான வெட்டுக் கத்திகளையுங் கலங்களையுங் கலயங்களையுந் தூபக்கலசங்களையுஞ் சாலொமோன் பண்ணுவித்தான். வீட்டினுடைய வாசற்கதவுகளான பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்திற்கிருக்கிற உள்வாசற்கதவுகளுந் தேவாலய வீட்டின் கதவுகளும் பொன்னாயிருந்தது.

# ௫. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டிப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்திற்குள் வைக்கப்பட்டபோது கர்த்தருடைய மகிமையினாலே தேவாலயம் நிறையப்பட்டது.

கர்த்தருடைய வீட்டிற்காகச் சாலொமோன் செய்த வேலையெல்லாம் முடிந்தபோது, சாலொமோன் தன் தகப்பனாகிய தாவீது பரிசுத்தமாய்ப் பண்ணின வைகளைக் கொண்டுவந்து, வெள்ளியையும் பொன்னையுஞ் சகல தட்டுமுட்டுகளையும் பராபரனுடைய வீட்டுப் பொக்கிஷங்களிலே வைத்தான்.

௨ பிற்பாடு கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சீயோனென்றதாவீதின் பட்டணத்திலிருந்தே கொண்டுவரப்பண்ணச் சாலொமோன் இஸ்ரவேலின் மூப்பரையும் இஸ்ரவேல் புத்திரரில் வம்சங்களின் பிரபுக்களாகிய எல்லாக் கோத்திரத் தலைவரையும் எருசலேமிலே கூடிவரப்பண்ணினான்.

௩ அப்படியே இஸ்ரவேலரெல்லாரும் ஏழாம் மாதத்தின் பண்டிகையிலே இராசாவண்டையிற் கூடினார்கள்.

௪ இஸ்ரவேலின் மூப்பரெல்லாரும் வந்த பிற்பாடு லேவியர் பெட்டியையெடுத்து,

௫ பெட்டியையும் ஆசரிப்புக் கூடாரத்தையுங் கூடாரத்திலிருக்கிற பரிசுத்தமான எல்லாத் தட்டுமுட்டுகளையும் ஏறிவரப்பண்ணினார்கள் அவைகளையேறிவரப்பண்ணினவர்கள் லேவியரான ஆசாரியர்தானே.

௬ அல்லாமல் இராசாவாகிய சாலொமோனும் அவனோடே கூடின இஸ்ரவேல் சபையனைத்தும் பெட்டிக்கு முன்பாக எண்ணிக்கைக்குந் தொகைக்கும் அடங்காத ஏராளமாய் ஆடுமாடுகளைப் பலியிட்டுக்கொண்டிருந்தார்கள்.

௭ அப்படியே ஆசாரியர் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியை வீட்டின் சந்நிதியாகிய பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான அதின் ஸ்தலத்திலே கேருபீன்களுடைய செட்டைகளுக்குக் கீழாகக் கொண்டுவந்து வைத்தார்கள்.

௮ ஏனெனிற் கேருபீன்கள் பெட்டியிருக்குந்தானத்தின் மேல் தங்கள் இரண்டு செட்டைகளை விரித்து உயர்விருந்து பெட்டியையும் அதின் வாளைகளையும் மூடிக்கொண்டிருந்தது.

௯ பெட்டியிலிருக்கிற வாளைகளின் முனைகள் சந்நிதிஸ்தலத்திற்கு முன்னே காணப்படத்தக்கதாய் அந்த வாளைகளை யிழுத்தார்கள். அதற்குப் புறம்பே அவைகள் காணப்படவில்லை. அது இந்நாள்வரைக்கும் அங்கேயிருந்தது.

௰ இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலிருந்து புறப்பட்டபின் கர்த்தர் ஓரேபிலே அவர்களோடுடம்படிக்கை பண்ணினபோது மோசே அந்தப் பெட்டியிலே வைத்த இரண்டு கற்பலகைகளையல்லாமல் அதிலே வேறொன்றுமிருந்ததில்லை.

௰௧ வகுப்புகளின் முறைகளைப் பாராமலிருக்கிற எல்லா ஆசாரியருந் தங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

௰௨ ஆசாப், ஏமான், எதுத்தூனுடைய கூட்டத்தாரும் அவர்களுடைய குமாரர் சகோதரருடைய கூட்டத்தாருமாகிய பாடகரான லேவியரனைவரும் மெல்லிய புடவைகளைத் தரித்துக் கைத்தாளங்களையுந் தம்புருகளையுஞ் சுரமண்டலங்களையும் பிடித்துப் பலிபீடத்திற்குக் கிழக்கே நின்றார்கள். அவர்களோடுங்கூடப் பூரிகைகளை யூதுகிற ஆசாரியர்கள் நூற்றிருபதுபேராகநின்றார்கள்.

௧௩ அவர்க ளொருமிக்கப பூரிகைகளை யூதி ஒருசத்தத்தோடேகர்த்தரைத துதிதது ஸ்தோத்திரித்துப்பாடினார்கள். சமபவித்ததேதென்றல ஆசாரியர்பரிசுத்த ஸ்தலத்திலிருநது புறப்படுகையிலும, பாடகர் பூரிகைகளதாளங்கள கீதவாத்தியங்களுடைய சத்தத்தைததொனிக்கப்பணணிக் கர்த்தரை அவர் நலலவர். அவர்கிருபையென்றுமுளளதென்று ஸ்தோத்திரிக்கையிலுங, கர்த்தருடையவீடாகிய தேவாலயம ஒருமேகத்தினால நிறையப பட்டது.

௧௪ அநத மேகத்தினிமித்தம ஆசாரியர்கள ஊழியஞசெய்து நிறகமாட்டாதேபோனார்கள. ஏனெனிற் கர்த்தருடையமகிமை பராபரனுடையவீட்டை நிரப்பிறறு.

## ௬. அதிகாரம்.

சாலோமோனபணணின பிரசங்கமுஞ செபமும.

அப்போது சாலோமோன இருளிலே வாசமபணணுவோமென்று கர்த்தர்சொனனாரொன்றும,

௨ தேவரீர் என்றைக்குமிருக்கும ஸ்தானமாகிய வாசஸ்தலவீட்டை நானுமக்கு கட்டினேனென்றுஞ சொலலி,

௩ இராசா தனமுகத்தைததிருப்பி, இஸ்ரவேலசபையையெலலாம ஆசீர்வதித்தான. இஸ்ரவேலசபையெலலாம நினறுகொணடிருநதது.

௪ அவனசொனனதாவது, எனதகப்பனாகிய தாவீதுக்குத தமமுடையவாக்கினாலே சொனனதைத தமது கரஙகளினாலே நிறைவேறறின இஸ்ரவேலின பராபரனாகியகர்த்தர் ஸ்தோத்திரிக்கப படடவர்.

௫ நாம நமதுசனததை எகிப்துதேசத்திலிருநது புறப்படப்பணணின நாளமுதறகொணடு நமமுடைய நாமமிருக்கும ஒருவீட்டைக்கட்டவேணடுமென்று நாம இஸ்ரவேலுடைய எலலாக் கோத்திரங்களிலுமுளள வேறேயாதொரு பட்டணத்தைத தெரிநதுகொளளாமலும நமதுசனமாகிய இஸ்ரவேலினமேல அதிபதியாயிருக்க வேறே யாதொருவனைததெரிநதுகொளளாமலும,

௬ நமமுடையநாமமிருக்குநதான்மாக எருசலேமையும நமதுசனமாகிய இஸ்ரவேலினமேல அதிபதியாயிருக்கத தாவீதையுந தெரிநதுகொணடோமெனகிறதைததானே.

௭ இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தரின நாமததிறகு வீட்டைக்கட்டவேணடுமென்று எனதகப்பனாகிய தாவீதினமனதிலுமிருநதது.

௮ ஆனாற் கர்த்தர் எனதகப்பனாகிய தாவீதுடனே, நமது நாமததிறகு வீட்டைக்கட்ட வேணடுமென்று நீயுனமனதிலே நினைததது உனமனதின நலலநினைவுதானே.

௯ ஆகிலும நீயநதவீட்டைக்கட்டாமல உனகெர்ப்பப்பிறப்பாகிற உனனுடையகுமாரனே நமமுடையநாமததிறகு அநதவீட்டைக்கட்டுவானெனறார்.

௰ இப்போதுங கர்த்தர்சொலலியிருக்கிற தமதுவார்த்தையைத திடப்படுத்தினார். ஏனெனிற் கர்த்தர் சொனனபடியே நான எனதகப்பனாகிய தாவீதின ஸ்தலததிலெழும்பி, இஸ்ரவேலுடைய இராசாசனததினமேலுஞசகார்நது இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தரினநாமததிறகு வீட்டைக்கட்டி,

௧௧ கர்த்தர் இஸ்ரவேல புத்திரருடனே பணணின உடமபடிக்கை யிருக்கிறபெட்டியையதிலே வைத்தேனெனறுசொலலி,

௧௨ கர்த்தருடைய பலிபீடததுக்குமுனனே இஸ்ரவேலசபைக்கெலலாம எதிராக நினறுகொணடு தனகைகளைவிரித்தான.

௧௩ ஏனெனிற் சாலோமோன ஐநதுமுழநீளமும ஐநதுமுழ அகலமும மூனறுமுழ உயரமுமான வெண்கலமாகிய ஒருபீடத்தைத தொட்டியையுணடாக்கி, அதைநடுப்பிராகாரததிலேவைத்திருநதான. அதினமேல அவன நினறுகொணடு இஸ்ரவேலினசபைக்கெலலாம எதிராக இருநதமுழங்காற்படியிட்டுத் தனகைகளைவானததிறகுநேராகவிரிததது,

௧௪ சொனனதாவது, இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தாவே! தஙகளமுழுஇருதயத்தால உமககுமுனபாக நடக்கிற உமதடியாருககு உடமபடிக்கையையுங கிருபையையுங காக்கிற தேவரீரைப்போலே பரமணடலஙகளிலும பூமியிலும யாதொருதேவனிலலை.

௧௫ தேவரீர் உமதடியானாகிய தாவீதென்ற எனதகப்பனுக்குச சொனனதையவனுக்குக்காத்தீர். உமதுவாக்கினாலும அதைசசொனனீர். உமதுகரததினாலும அதை இநநாளிலிருக்கிறபடி நிறைவேறறினீர்.

௧௬ இப்போதும இஸ்ரவேலினபராபரனாகியகர்த்தாவே! நீ நமககுமுனபாக நடநததுபோலே உனகுமாரர் நமமுடைய

நியாயபபிரமாணததில நடககுமபடிககு தஙகளவழியைக காததார்களேயானால, இஸரவேலுடைய இராசாசனததினமேல உடகாருமபுருஷன நமககுமுனபாக உனககிலலாதேபோவதிலலையெனறு தேவரீர் உமதடியானாகிய தாவீதெனற எனதகப்பனுககுசசொனனதை யவனுககுவாபபணணியருளும.

௰௭ இபபோதும இஸரவேலினபராபரனாகியகர்த்தாவே! தேவரீர் உமதடியானாகிய தாவீதுககுசசொனன உமமுடைய வார்ததை மெயயபபடுவதாக.

௰௮ ஆனால மெய்தான. பராபரனமனுஷரோடே பூமியிலே வாசமபணணுவாரோ? இதோ, வானஙகளும வானஙகளின வானஙகளும உமமைககொளளாதே? நானகடடின இநதவீடு அதறகெமமாததிரம?

௰௯ எனறாலும என பராபரனாகிய கர்த்தாவே! உமதடியான உமககுமுனபாக கெஞசுகிற கூபபிடுதலையும விணணபபததையுஙகேட்க, உமதடியானுடைய விணணபபததையும மனறாடடையுமநோககியருளும.

௨௰ உமதடியான இவவிடததிலே செயயும விணணபபததைககேட்க, நமமுடையநாமமிருககுமெனறு நீர்சொனன ஸதலமாகிய இநதவீடடினமேல உமது கணகள இரவுமபகலுநதிறநதிருபபதாக.

௨௧ உமதடியானும உமதுசனமாகிய இஸரவேலும இநதஸதலததிலும விணணபபமபணணபபோகிற செபஙகளைக கேட்பீராக. ஆம, பரமணடலஙகளாகிய உமமுடைய வாசஸதலததிலே அதைக கேளும. கேடடுமனனியும,

௨௨ ஒருவன தனககடுதத வனுககுக குறறஞசெயதிருககககொளள இவன அவனையாணைசததியமபணணசசொலலும போது, அநத ஆணையிநத வீடடிலிருககிற உமமுடைய பீடததிறகு முனபாகவநதால,

௨௩ அபபோது பரமணடலஙகளிலிருககிற தேவரீர்கேடடு, ஆகாதவனுடைய வழியை அவனதலையினமேலே சுமரபபணண அவனுககு நீதியைசசரிககடடவும நீதிமானுககு அவனுடைய நீதிககுததககதாயசசெயயா அவனை நீதிவிளஙகபபணணவும நடபபிததது, உமதடியாரை நியாயநதீர்பபீராக.

௨௪ உமதுசனமாகிய இஸரவேல உமககுவிரோதமாகப பாவஞசெயததினாலே சததுருவுககு முனபாக முறிநது போய உமமணடைககுத திருமபி உமமுடைய நாமததை அறிககைபணணி, இநதவீடடிலே உமககுமுனபாக விணணபபததையும வேணடுதலையுஞசெய்தால,

௨௫ பரமணடலஙகளிலிருககிற தேவரீர்கேடடு, உமதுசனமாகிய இஸரவேலின பாவததைமனனிததது, அவர்களுககும அவர்களபிதாககளுககும நீர்கொடுதத சீர்மைக கவர்களைத திருமபிவரப பணணுவீராக.

௨௬ அவர்கள உமககு விரோதமாயப பாவஞசெய்ததினால வானம அடைபடடு மழைபெயயாதிருககுமபோது அவர்கள இநதஸதலததிறகுநேராக விணணபபம பணணி, உமதுநாமததை யறிககைபணணித்தேவரீர் தஙகளைச சிறுமைபபடுததினதினாலே தஙகளபாவஙகளை விடடுததிருமபினால,

௨௭ பரமணடலஙகளிலிருககிற தேவரீர்கேடடு, உமதடியாரும உமதுசனமாகிய இஸரவேலுஞ செயதபாவததைமனனிததது, அவர்களநடககவேணடிய நல்வழியையவர்களுககுப போதிததுத் தேவரீர் உமதுசனததிறகுச சுதநதரமாகக் கொடுதத உமமுடையதேசததினமேல மழையைககடடளையிடுவீராக.

௨௮ தேசததிலே பஞசமுணடாகிறபோது, பெருவாரிககாய்சச லுணடாகிறபோது, வறட்சிபயிர்ச்சாவி வெடடுககிளி பசசைககிளி உணடாகிறபோது, அவர்களுடைய சததுரு அவர்களவாசலகளிலிருககிற தேசததிலே அவர்களை முததிககைபபோடுகிறபோது, யாதொருவாதையாகிலுமயாதொருரோகமாகிலும வநதிருககிறபோது,

௨௯ எநதமனுஷனாகிலும இஸரவேலாகிய உமமுடையசனததில எவனாகிலுந தனதன வாதையையுங கவலையையும உணர்நது, இநத வீடடிறகுநேராக தனகைகளைவிரிததுசசெயயுஞ சகல விணணபபததையுஞ சகல வேணடுதலையும,

௩௰ உமது வாசஸதலமாகிய பரமணடலஙகளிலிருககிற தேவரீர் கேடடுமனனிததது,

௩௧ தேவரீர் எஙகள பிதாககளுககுக கொடுதத தேசததில அவர்கள உயிரோ

டிருக்கும் நாளெல்லாம் உமக்குப் பயப்பட்டு, உம்முடைய வழிகளில் நடக்கும்படிக்குத் தேவரீர் அவனவன் இருதயத்தை அறிந்திருக்கிறபடியே அவனவனுடைய எல்லா வழிகளுக்குந் தக்கதாய்க் கட்டளையிடுவீராக. ஏனெனில் தேவரீர் ஒருவரே மனுப்புத்திரரின் இருதயத்தை அறிந்தவர்.

௩௰௨ அந்தப்பிரகாரமாக உமது சனமாகிய இஸ்ரவேல் சாதியல்லாத அன்னிய சாதியான் உம்முடைய பெரிய கீர்த்தியினிமித்தமும் உம்முடைய பலத்த கரத்தினிமித்தமும் நீட்டியிருக்கிற உம்முடைய புயத்தினிமித்தமும் தூரதேசங்களிலிருந்து வந்து, இந்த வீட்டுக்கு நேராக நின்று விண்ணப்பம் பண்ணினால்,

௩௰௩ உமது வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் அதைக் கேட்டுப் பூமியின் சனசதளங்களெல்லாம் உமது சனமாகிய இஸ்ரவேலைப்போல உமது நாமத்தை அறிந்து உமக்குப் பயப்பட்டு, நான் கட்டின இந்த வீட்டிற்கு உமது நாமந் தரிக்கப்பட்டதென்று அறியும்படிக்கு, அந்த அன்னியசாதியான் உம்மை நோக்கிக் கூப்பிடும் எல்லாக் காரியத்திற்குந் தக்கதாய்ச் செய்வீராக.

௩௰௪ உமது சனம் நீர் தங்களை அனுப்பும் வழியிலே தங்கள் சத்துருக்களோடு யுத்தம் பண்ணப் புறப்பட்டு, நீர் தெரிந்துகொண்ட இந்தப் பட்டணத்திற்கும் உமது நாமத்திற்கும் நான் கட்டின இந்த வீட்டிற்கும் நேராக விண்ணப்பம் பண்ணினால்,

௩௰௫ பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தையும் வேண்டுதலையுங் கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரிப்பீராக.

௩௰௬ பாவஞ் செய்யாத மனுஷனில்லையே. ஆனதுகொண்டு அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்ததினாலே, தேவரீர் அவர்கள்மேலே கோபமாகி, அவர்களைச் சத்துருவுக்கு ஒப்புக்கொடுக்கிறதினாலே அவர்களைச் சிறைப்பிடிக்கிறவர்கள் அவர்களைத் [illegible] அல்லது சமீபத்திலுமிருக்கி[illegible] தேசத்திற்குக் கொண்டுபோயிருக்கும்[illegible],

௩௰௭ அவர்கள் சிறைப்பட்டுப்போன தேசத்திலே [illegible] தங்களில் உணர்த்தியடைந்து, ம[illegible], நாங்கள் பாவஞ்செய்து, அக்கிர[illegible] துன்மார்க்கமாய் நடந்தோமென்று தங்கள் சிறையிருப்பான தேசத்திலே உம்மை நோக்கிக் கெஞ்சி,

௩௰௮ தாங்கள் சிறைகளாகக் கொண்டுபோகப்பட்ட தங்கள் சிறையிருப்பான தேசத்திலே தங்கள் முழு இருதயத்தோடும் தங்கள் முழு ஆத்துமத்தோடும் உம்மண்டைக்குத் திரும்பித் தேவரீர் தங்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தங்கள் தேசத்திற்குந் தேவரீர் தெரிந்துகொண்ட அந்தப் பட்டணத்திற்கும் உமது நாமத்திற்கும் நான் கட்டின இந்த வீட்டிற்கும் நேராக உம்மை நோக்கி விண்ணப்பம் பண்ணினால்

௩௰௯ உமது வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தையும் வேண்டுதல்களையுங் கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரித்து, உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்த உமது சனத்திற்கு மன்னித்தருளும்.

௪௰ இப்போதும் என் பராபரனே! இந்த ஸ்தலத்திலே செய்யப்பட்டுப் போகிற விண்ணப்பத்திற்கு உம்முடைய கண்கள் திறந்ததும் உம்முடைய செவிகள் கவனிக்கிறதுமாயிருப்பதாக.

௪௰௧ இப்போதும் பராபரனாகிய கர்த்தாவே! உம்முடைய தாபர இடத்திற்குத் தேவரீரும் உம்முடைய வல்லமையின் பெட்டியுமாய் எழுந்தருளும். பராபரனாகிய கர்த்தாவே! உம்முடைய ஆசாரியர் இரட்சிப்புத் தரிப்பிக்கப்பட்டு உம்முடைய பரிசுத்தவான்கள் நன்மையினாலே மகிழ்வார்களாக.

௪௰௨ பராபரனாகிய கர்த்தாவே! நீர் அபிஷேகம்பண்ணுவித்தவனின் முகத்தைப் புறக்கணியீராக. தேவரீர் உமதடியானாகிய தாவீதுக்கு வாக்குத்தத்தம்பண்ணின கிருபைகளை நினைந்தருளுமென்றான்.

## ௭. அதிகாரம்.

தேவாலயத்தைப் பிரதிஷ்டைபண்ணித் தீர்ந்த வயணம்.

சாலோமோன் செபம்பண்ணி முடிக்கிறபோது, அக்கினி வானத்திலிருந்திறங்கிச் சர்வாங்கதகனபலியையும் மற்றப் பலிகளையும் பட்சித்ததுமல்லாமற் கர்த்தருடைய மகிமை வீட்டை நிரப்பிற்று.

௨ கர்த்தருடைய மகிமை கர்த்தரின் வீட்டை நிரப்பினதினாலே ஆசாரியர்கள் கர்த்தருடைய வீட்டிற்குட் பிரவேசிக்கக் கூடாதிருந்தது.

௩ அக்கினி யிறங்குகிறதையுங் கர்த்தரின மகிமை வீட்டின்மேலிருக்கிறதையும் இஸ்ரவேல்புத்திரரெல்லாருங் கண்டபோது தளவரிசையாகிய தரைமட்டுமா முகங்குப்புறக்கவிழ்ந்து. கர்த்தர் நல்லவர். அவருடைய கிருபை யென்றுமுள்ளதென்று அவரைப்பணிந்துகொண்டு துதித்தார்கள்.

௪ அப்போது இராசாவும் எல்லாச்சனமுங் கர்த்தருக்குமுன்பாகப் பலிகளைச் செலுத்தினார்கள்.

௫ இராசாவாகிய சாலொமோன் இருபத்தீராயிரமாடுகளையு நூற்றிருபதினாயிரம் ஆடுகளையும் பலியிட்டான். இப்படி இராசாவும் எல்லாச்சனமும் பராபரனுடைய வீட்டைப் பிரதிஷ்டைபண்ணினார்கள்.

௬ ஆசாரியர்கள் தங்கள் ஊழியங்களிலே நின்றார்கள். லேவியரோவென்றால், தாவீது இராசா, கர்த்தருடைய கிருபை யென்றுமுள்ளதென்று அவரைத் துதிக்கவுந் தங்கள் ஊழியத்தினாலே தோத்திரிக்கவும் பண்ணுவித்த கர்த்தரின் கீதவாத்தியங்களை வாசித்து நின்றார்கள். ஆசாரியர்கள் அவர்களுக்கெதிரே நின்று பூரிகைகளை யூதினார்கள். இஸ்ரவேலரெல்லாரும் நின்றுகொண்டிருந்தார்கள்.

௭ கர்த்தருடைய வீட்டிற்கு முன்னிருக்கிற பிரகாரத்தின் நடுமையத்தைச் சாலொமோன் பரிசுத்தமாக்கி, அங்கே சர்வாங்கதகனங்களையுஞ் சமாதானப்பலிகளின் கொழுப்புகளையுஞ் செலுத்தினான். ஏனென்றால் சாலொமோன் உண்டாக்கின வெண்கலப்பலிபீடஞ் சர்வாங்கதகனத்தையுங் காணிக்கைகளையுங் கொழுப்புகளையுங் கொள்ளமாட்டாதிருந்தது.

௮ அக்காலத்திலேதானே சாலொமோனும் அவனுடனேகூட ஆமாத்தின் எல்லை துவக்கி எகிப்தின் நதிமட்டுமிருந்து வந்த மகாபெரிய கூட்டமாகிய இஸ்ரவேலனைத்தும் ஏழுநாளாகப் பண்டிகையை யாசரித்தது,

௯ எட்டாம்நாளிலே பண்டிகையை முடித்தார்கள். ஏனெனில் ஏழுநாளாய்ப் பலிபீடத்தைப் பிரதிஷ்டைபண்ணி, ஏழுநாளாய்ப் பண்டிகையை யாசரித்தார்கள்.

௰ அன்றி ஏழாமாதத்தின் இருபத்துமூன்றாந்தேதியிலே சனத்தைத் தங்கள் தங்கள் கூடாரங்களுக்குப்போகவிடைகொடுத்தான். கர்த்தர் தாவீதுக்குஞ் சாலொமோனுக்குந் தமது சனமாகிய இஸ்ரவேலருக்குஞ் செய்த நன்மைகளுக்காகச் சந்தோஷமும் மனமகிழ்ச்சியுமாய்ப் போனார்கள்.

௰௧ அப்படியே சாலொமோன் கர்த்தருடைய வீட்டையும் இராச அரண்மனையையுங் கட்டித்தீர்ந்தது. கர்த்தரின் வீட்டிலுந் தன் அரண்மனையிலுஞ் சாலொமோன் செய்ய மனதாயிருந்ததெல்லாங் கைகூடிவந்தது.

௰௨ கர்த்தர் இராவிலே சாலொமோனுக்குத் தரிசனையாகி அவனுக்குச் சொன்னதாவது, நாம் உன் விண்ணப்பத்தைக் கேட்டு, இந்த ஸ்தலத்தை நமக்குப் பலியிடும் வீடாகத் தெரிந்துகொண்டோம்.

௰௩ இதோ, நாம் மழையில்லாதபடிக்கு வானத்தையடைத்து, எல்லாத்தேசத்தையழிப்பாக்க வெட்டுக்கிளிகளுக்குக் கற்பித்து, அல்லது நமது சனத்திற்குட்பெருவாரிக்காய்ச்சலையனுப்பும்போது,

௰௪ நம்முடைய நாமந்தரிக்கப்பட்ட நம்முடைய சனந்தங்களைத் தாழ்த்திச் செபம்பண்ணி, நம்முடைய முகத்தைத் தேடித் தங்கள் பொல்லாத வழிகளை விட்டுத் திரும்பினால், அப்போது பரமண்டலங்களிலிருக்கிற நாம் கேட்டு, அவர்கள் பாவத்தை மன்னித்து அவர்கள் தேசத்தைச் சொஸ்தமாக்குவோம்.

௰௫ இப்போதும் இந்த ஸ்தலத்திலே செய்யப்படப்போகிற செபத்திற்கு நம்முடைய கண்கள் திறந்தவைகளும் நமது செவிகள் கவனிக்கிறவைகளுமாயிருக்கும்.

௰௬ இப்போது நம்முடைய நாமம் இந்த வீட்டிலே யென்றென்றைக்கும் இருக்கும்படிக்கு நாம் அதைத் தெரிந்துகொண்டு பரிசுத்தம்பண்ணினோம். நம்முடைய கண்களும் நம்முடைய இருதயமுஞ் சகலநாளும் அங்கேயிருக்கும்.

௰௭ உன் தகப்பனாகிய தாவீது நடந்ததுபோலே நீ நமக்குமுன்பாக நடந்து, நாம் உனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்து, நம்முடைய கட்டளைகளையும் நம்முடைய நியாயங்களையுங் கைக்கொண்டாயானால்,

௰௮ அப்போது இஸ்ரவேலை யாளும் புருஷன் உனக்கில்லாதே போவதில்லையென்று நாம் உன் தகப்பனாகிய தாவீதோடே உடன்படிக்கைபண்ணினபடியே உன் இராசரியபாரத்தின் ஆசனத்தைத் திடப்படுத்துவோம்.

௰௯ நீங்கள் வழிவிலகி, நாம் உங்களுக்கு முன்வைத்த நம்முடைய கட்டளைகளையும் நம்முடைய கற்பனைகளையும் விட்டுப்போய், வேறே தேவர்களைச் சேவித்து, அவைகளைப் பணிந்துகொண்டீர்களேயாகில்,

உம் நாம் அவர்களுக்குக் கொடுத்த நம்முடைய தேசத்திலிருந்து அவர்களைப் பிடுங்கி நம்முடைய நாமத்திற்கு நாம் பரிசுத்தம் பண்ணின இந்த வீட்டை நம்முடைய முகத்தைவிட்டுத் தள்ளி, அதை எல்லாச் சனத்தாருக்குள்ளும் பழமொழியாகவும் பழிப்பாகவும் வைப்போம்.

௨௧ அப்போது உயர்ந்திருந்த இந்த வீட்டைக் கடந்து போகிறவனெல்லாம் பிரமித்துக் கர்த்தர் இந்தத் தேசத்திற்கும் இந்த வீட்டிற்கும் இப்படிச் செய்தது என்ன? என்று கேட்கிறபோது,

௨௨ அவர்கள் தங்கள் பிதாக்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின அவர்களுடைய பிதாக்களின் கர்த்தரை விட்டுவேறே தேவர்களைப் பற்றிக்கொண்டு அவைகளை நமஸ்கரித்து அவைகளைச் சேவித்தபடியினாலே கர்த்தர் இந்தத் தீங்கையெல்லாம் அவர்கள் மேல் வரப்பண்ணினாரென்று சொல்லுவார்களென்றார்.

## அ. அதிகாரம்.

சாலொமோன் பண்ணின இராசரீயபாரம்.

சாலொமோன் கர்த்தருடைய வீட்டையுந் தன்வீட்டையுங் கட்டுகிற இருபது வருஷகாலஞ் சென்றபோது,

௨ ஈராந் தனக்குக் கொடுத்துவிட்ட பட்டணங்களைச் சாலொமோன் கட்டி, அவைகளில் இஸ்ரவேல் புத்திரரைக் குடியேற்றினான்.

௩ பிற்பாடு சாலொமோன் சோபாத்சேதுக்கு ஆமாத்திற்குப் போய் அதைச் செயங்கொண்டான்.

௪ அவன் வனாந்திரத்திலுள்ள தத்மோரையும் ஆமாத்தின் தேசத்திலே இரஸ்துகளின் பட்டணங்கள் அனைத்தையுங் கட்டினான்.

௫ அவன் மேலான பெத்தொரோனையும் கீழான மேற்பெத்தொரோனையும் அலங்கங்களுங் கதவுகளுந் தாழ்ப்பாள்களுமுள்ள அரணான பட்டணங்களாகக் கட்டி,

௬ பாலாத்தையுந் தனக்கிருக்கிற இரஸ்துகளை வைக்க எல்லாப் பட்டணங்களையும் இரதங்களிருக்கும் எல்லாப் பட்டணங்களையுங் குதிரைக்காரிருக்கும் பட்டணங்களையுந் தான் எருசலேமிலும் லீபனோனிலும், தான் ஆளுந் தேசமெங்குங் கட்டத் தனக்கிச்சையானதனைத்தையுஞ் சாலொமோன் கட்டினான்.

௭ இஸ்ரவேல் புத்திரர் சங்காரம் பண்ணாதிருந்த இஸ்ரவேல் சாதியல்லாத ஏத்தியர் எமோரியர் பெரிசியர் ஏவியர் எபூசியரில் மீதியான எல்லாச் சனத்திலும்,

௮ அவர்களுக்குப் பிறகு தேசத்தில் வைக்கப்பட்ட அவர்கள் பிள்ளைகளைச் சாலொமோன் இந்நாள்வரைக்குமிருக்கிறதைப்போல அடிமைகளாய் வேலைசெய்ய வரிமுகக் கீழ்க்குடியாக்கினான்.

௯ ஆனாலும் இஸ்ரவேல் புத்திரரில் ஒருவரைச் சாலொமோன் தன் வேலையைச் செய்ய அடிமைப்படுத்தவில்லை. ஏனென்றால் அவர்கள் யுத்த மனுஷரும் அவனுடைய சேர்வைக்காரரின் தலைவரும் அவனுடைய இரதங்களுக்குங் குதிரைக்காருக்குந் தலைவருமாயிருந்தார்கள்.

௰ இராசாவாகிய சாலொமோனுடைய ஊழியக்காரரின் தலைவராகிய இவர்களில் இருநூற்றைம்பதுபேர் சனத்தையாண்டார்கள்.

௰௧ பார்வோனின் குமாரத்தியைச் சாலொமோன் தாவீதின் பட்டணத்திலிருந்து தான் அவளுக்குக் கட்டுவித்த வீட்டிற்குக் குடியேறப்பண்ணினான். ஏனென்றால் இஸ்ரவேலின் இராசாவாகிய தாவீதின் வீட்டிலே என் பெண்சாதி வாசம்பண்ணவேண்டாம் ஏனென்றால் கர்த்தருடைய பெட்டிவந்த ஸ்தலங்கள் பரிசுத்தமாயிருக்கின்றதென்றான்.

௰௨ அதுமுதற்கொண்டு சாலொமோன் தான் மண்டபத்திற்கு முன்பாகக் கட்டியிருந்த கர்த்தருடைய பலிபீடத்தின்மேல்

௰௩ ஒவ்வொரு நாளின் கட்டளைக்குத்தக்கதாய் மோசேயுடைய கற்பனையின்படி ஓய்வுநாட்களிலும் மாதப்பிறப்புகளிலும் வருஷத்தில் மூன்றுதரம் ஆசரிக்கிற பண்டிகைகளாகிய புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையிலும் வாரங்களின் பண்டிகையிலுங் கூடாரங்களின் பண்டிகையிலுங் கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்தினான்.

௰௪ அவன் தன் தகப்பனாகிய தாவீதுடைய பிரமாணத்தின்படியே ஆசாரியர்கள் தங்கள் தங்கள் ஊழியஞ்செய்யும் வகுப்புகளையும் லேவியர் ஒவ்வொருநாளின் கட்டளையின்படியே துதிபாடி ஆசாரியருக்கு முன்பாகத் தங்கள் ஊழியஞ்செய்யும் முறைகளையும் வாசற்காப்பார் ஒவ்வொரு வாசலிற் காவற்காக்கும் வகுப்புகளையும் நிற்கப்பண்ணினான். ஏனென்றால் தேவனுடைய மனுஷனாகிய தாவீது இப்படிக் கற்பித்திருந்தான்.

௰௫ சகலகாரியத்தையும் பொக்கிஷங்களின் காரியத்தையுங் குறித்து இராசா

ஆசாரியர்களுக்காகவும் லேவியருக்காகவுங் கொடுத்த கற்பனையை விட்டு விலகாதிருந்தார்கள்.

௰௬ இப்படியே கர்த்தருடைய வீட்டிற்கு அஸ்திபாரம் போடப்பட்ட நாள்முதற்கொண்டு அதை முடிக்குமட்டுக்குஞ் சாலொமோனின் வேலையெல்லாம் நடந்தேறிக் கர்த்தருடைய வீடு கட்டித் தீர்ந்தது.

௰௭ பிறபாடு சாலொமோன் ஏதோம் தேசத்திலுடைய கடலோரத்திலிருக்கும் எத்சியோன்கேபேருக்கும் ஏலோத்துக்கும் போனான்.

௰௮ அவனுக்கு ஈராம் தன் ஊழியக்காரர் முகாந்திரமாய்க் கப்பல்களையுஞ் சமுத்திரயாத்திரையை அறிந்த வேலைக்காரரையும் அனுப்பினான். இவர்கள் சாலொமோனின் வேலைக்காரரோடேகூட ஓப்பீருக்குப் போய் அங்கேயிருந்து நானூற்றைம்பது தாலந்து பொன்னை ஏற்றி, இராசாவாகிய சாலொமோனுக்குக் கொண்டுவந்தார்கள்.

## ௯. அதிகாரம்.

சாலொமோனின் கீர்த்தியும் பிரபலியமும் அவனடைந்த மரணமும்.

சேபாவின் இராசாத்தி சாலொமோனின் கீர்த்தியைக் கேட்டபோது, சாலொமோனை விடுகதைகளினாலே சோதிக்கிறதற்காக மகா பெரிய தண்டோடும், சம்பாரங்களையும் வெகுவான பொன்னையும் இரத்தினங்களையுஞ் சுமக்கிற ஒட்டகங்களோடும் எருசலேமுக்கு வந்தாள். அவள் சாலொமோனண்டையிலே வந்தபோது தன் மனதிலிருந்த தெல்லாவற்றையும் அவனோடே பேசினாள்.

௨ அப்போது சாலொமோன் அவள் மொழிகளையெல்லாம் அவளுக்கு விவரித்தான். ஒன்றாகிலும் அவளுக்கு விவரிக்காதபடிக்குச் சாலொமோனுக்கு மறைபொருளாயிருந்ததில்லை.

௩ சேபாவின் இராசாத்தி சாலொமோனின் ஞானத்தையும் அவன் கட்டின வீட்டையும்,

௪ அவன் பந்தியின் சாப்பாட்டையும் அவன் ஊழியக்காரரின் இருப்பையும் அவன் வேலைக்காரரின் வரிசையையும் அவர்கள் வஸ்திரங்களையும் அவனுடைய பானவிசாரிப்புக்காரரையும் அவர்கள் வஸ்திரங்களையுங் கர்த்தருடைய வீட்டிற்கு அவன் ஏறிப்போகிற அவன் நடையையுங் காண்கையில் அவள் பிரமித்துக்கொண்டு,

௫ இராசாவோடே சொன்னதாவது: உம்முடைய வர்த்தமானங்களையும் உம்முடைய ஞானத்தையுங் குறித்து நான் என் தேசத்திலே கேட்ட செய்தி மெய்யாயிற்று.

௬ நான் வந்து அதைக் கண்ணாரக் காணுமட்டும் அவர்கள் வார்த்தைகளை நம்பாதிருந்தேன். ஆனாலும் இதோ, உம்முடைய பெரிய ஞானத்தில் பாதியையாகிலும் அவர்கள் எனக்கு அறிவிக்கவில்லை. நான் கேட்ட கீர்த்தியைப் பார்க்கிலும் அதிகமுண்டாயிருக்கிறது.

௭ உம்முடைய மனுஷர் பாக்கியவான்கள், எப்போதும் உமக்கு முன்பாக நின்று உம்முடைய ஞானத்தைக் கேட்கிற இந்த உம்முடைய ஊழியக்காரர் பாக்கியவான்கள்.

௮ உம்முடைய பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக நீர் இராசாவாயிருக்கும்படிக்கு உம்மைத் தம்முடைய இராசாசனத்தின்மேல் இருக்கப்பண்ண உம்முடையமேல் பிரியம்வைத்த உம்முடைய பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். உம்முடைய பராபரன் இஸ்ரவேலை என்றைக்கும் நிலைநிறுத்தும்படிக்குச் சிநேகிக்கிறதினாலே அவர் உம்மை நியாயமும் நீதியுஞ் செய்கிறதற்கு அவர்கள்மேல் இராசாவாக வைத்தாரென்றாள்.

௯ அவள் இராசாவுக்கு நூற்றிருபது தாலந்து பொன்னையும் மிகுந்த சம்பாரங்களையும் இரத்தினங்களையுங் கொடுத்தாள். சேபாவின் இராசாத்தி இராசாவாகிய சாலொமோனுக்குக் கொடுத்த அப்படிக்கொத்த சம்பாரங்களுக்குச் சரியானவைகள் ஒருக்காலும் வந்ததில்லை.

௰ இதல்லாமல் ஓப்பீரிலிருந்து பொன்னைக் கொண்டுவருகிற ஈராமின் வேலைக்காரருஞ் சாலொமோனின் வேலைக்காரரும் வாசனைமரங்களையும் இரத்தினங்களையுங் கொண்டுவந்தார்கள்.

௰௧ அந்த வாசனைமரங்களால் இராசா கர்த்தருடைய வீட்டிற்கும் இராச அரண்மனைக்கும் மலழிகையையும் பாடுவானுக்குச் சுரமண்டலங்களையுந் தம்புருக்களையும் உண்டாக்கினான். அப்படிக்கொத்தவைகள் அதற்குமுன் யூதேயா தேசத்திலே ஒருக்காலுங் காணப்பட்டதில்லை.

௰௨ சேபாவின் இராசாத்தி இராசாவுக்குக் கொண்டுவந்தவிதங்களைத் தவிர அவள் ஆசைப்பட்டுக் கேட்டதெல்லாவற்றையும் இராசாவாகிய சாலொமோன் அவளுக்குக் கொடுத்தான். பிறபாடு அவள் தன் ஊழியக்காரரோடுங்கூடத் திரும்பிக்கொண்டு தன் தேசத்திற்குப் போனாள்.

௰௩ மனிக்கைக்காரரும் வர்த்தகரும் கொண்டுவரும் பொன்னைத் தவிர சாலோமோனுக்கு ஒவ்வொருவருஷத்து வர்த்தனையாக அறுநூற்றறுபத்தாறு தாலந்து நிறையான பொன் வந்தது.

௰௪ அறபியாவின் சகல இராசாக்களும் அந்தத் தேசத்து அதிபதிகளும் சாலோமோனுக்குப் பொன்னையும் வெள்ளியையுங் கொண்டுவருவார்கள்.

௰௫ இராசாவாகிய சாலோமோன் தகடாய் அடித்த பொன்னினாலே இருநூறு பரிசைகளையுண்டாக்கினான். ஒவ்வொரு பரிசைக்கு அறுநூறு சேக்கல் நிறைபொற்றகட்டைச் செலவழித்தான்.

௰௬ தகடாய் அடித்த பொன்னினாலே முந்நூறு கேடயங்களையு முண்டாக்கினான். ஒவ்வொரு கேடயத்திற்கு முந்நூறு சேக்கல் நிறைபொன்னைச் செலவழித்தான். அவைகளை இராசா லீபனோன் காட்டு மரங்களின் வீட்டிலே வைத்தான்.

௰௭ இராசா தந்தத்தினாலே பெரிய இராசாசனத்தையும் பண்ணுவித்து, அதைப் பசும்பொன்னினால் மூடினான்.

௰௮ அந்த ஆசனத்தோடே சேர்க்கப்பட்ட பொன்னான ஆறு படிகளும் ஒரு பாதப்படியும் உண்டாயிருந்தன; உட்காருமிடத்திற்கு இருபுறத்திலும் கைச்சாய்மானங்களும் அதற்கிருந்தது. இரண்டு சிங்கங்களுங் கைச்சாய்மானங்களருகே நின்றது.

௰௯ அந்த ஆறு படிகளின்மேலும் இந்தப்பக்கத்திலும் அந்தப்பக்கத்திலும் பன்னிரண்டு சிங்கங்கள் நின்றது. எந்த இராச்சியத்திலும் அப்படிப் பண்ணப்பட்டதில்லை.

௨௰ இராசாவாகிய சாலோமோனுக்கிருந்த குடிகலங்களெல்லாம் பொன்னும், லீபனோன் காட்டுமரங்களுடைய வீட்டின் தட்டுமுட்டுகளெல்லாம் அபரஞ்சியுமாயிருந்தது. வெள்ளி, சாலோமோனின் நாட்களில் ஒரு பொருட்டாய் எண்ணப்பட்டதில்லை.

௨௧ ஏனெனில் ஈராமின் வேலைக்காரரோடே கூடத் தர்ஷீசுக்குப் போகிற இராசாவின் கப்பல்கள் மூன்று வருஷங்களில் ஒருதரம் திரும்பிச்சேர்ந்து, பொன்னையும் வெள்ளியையும் யானைத்தந்தங்களையுங் குரங்குகளையும் மயில்களையுங் கொண்டுவந்தது.

௨௨ அப்படியே இராசாவாகிய சாலோமோன் பூமியின் இராசாக்களையெல்லாம் பார்க்க ஐசுவரியத்திலும் ஞானத்திலும் பெரியவனாயிருந்தான்.

௨௩ பார்பார்ன சாலோமோனின் இருதயத்திலே தேவன் கொடுத்த அவனுடைய ஞானத்தைக் கேட்கும்படிக்குப் பூமியின் இராசாக்களெல்லாரும் அவன் முகதரிசனையைத் தேடினார்கள்.

௨௪ இவர்களில் அவரவர் வருஷந்தோறுந் தங்கள் காணிக்கையாகிய வெள்ளிப் பாத்திரங்களையும் பொன் பாத்திரங்களையும் வஸ்திரங்களையும் ஆயுதங்களையுஞ் சம்பாரங்களையுங் குதிரைகளையுங் கோவேறுகழுதைகளையுங் கொண்டுவருவார்கள்.

௨௫ சாலோமோனுக்கு நாலாயிரங் குதிரை லாயங்களும் இரதங்களுமிருந்தது. பன்னீராயிரங் குதிரைக்காரருமிருந்தார்கள். அவைகளையும் இவர்களையும் இராசா இரதங்களின் பட்டணங்களிலும் எருசலேமிலே தன்னிடத்திலும் வைத்தான்.

௨௬ நதியைத் துவக்கிப் பெலிஸ்தரின் தேசமட்டுக்கும் எகிப்துவின் எல்லைமட்டுக்குமிருக்கிற சகல இராசாக்களையும் அவன் ஆண்டான்.

௨௭ இராசாவானவன் எருசலேமிலே வெள்ளியைக் கல்லுகளைப்போலும், கேதுருமரங்களைப் பள்ளத்தாக்கிலிருக்கிற காட்டத்திமரங்களைப்போலுமாக்கினான்.

௨௮ எகிப்திலும் சகல தேசங்களிலுமிருந்து சாலோமோனுக்குக் குதிரைகள் கொண்டுவரப்பட்டது.

௨௯ சாலோமோனுடைய முந்தினதும் பிந்தினதுமான மற்றவர்த்தமானங்கள் தீர்க்கதரிசியாகிய நாத்தானின் புஸ்தகத்திலும், நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமைக்குறித்துச் சீலோனூரானாகிய அகியா எழுதின தீர்க்கதரிசனத்திலும் ஞானதிருஷ்டிப்புருஷனாகிய இத்தோ எழுதின தரிசனங்களிலுமல்லவோ எழுதியிருக்கின்றது.

௩௰ சாலோமோன் எருசலேமிலே இஸ்ரவேலையெல்லாம் நாற்பது வருஷம் அரசாண்டான்.

௩௧ பிற்பாடு சாலோமோன் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தான். அவனைத் தன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்கள். அவன் ஸ்தலத்திலே அவன் குமாரனாகிய ரெகொபெயாம் இராசாவானான்.

## ௰. அதிகாரம்.

பத்துக்கோத்திரங்கள் ரெகொபெயாமை விட்டுப்பிரிண்டுபோனது.

ரெகொபெயாம் சீகேமுக்குப் போனான். ஏனெனில் அவனை இராசாவாக்கும்படி

போதோவெனில, அவள் கர்த்தருடைய வீட்டிற்குச் சனத்தண்டையிலே வந்து,

௰௩ இதோ, நடையிலுள்ள தன தூணண்டையிலே இராசா நிற்கிறதையும் இராசாவண்டையிலே நிற்கிற பிரபுக்களையும் பூரிகைகளை யூதுகிறவர்களையுந் தேசச்சனமெல்லாருஞ் சந்தோஷப்பட்டுப் பூரிகைகளை யூதுகிறதையும், பாட்டகர் கீதவாத்தியங்களைப் பிடித்துத் துதிக்க வகைகாண்பிக்கிறதையுங் கண்டாள். அப்போது அத்தலியாள் தன வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, ரொண்டகம் ரொண்டகமென்று கூப்பிட்டாள்.

௰௪ ஆனால் ஆசாரியனாகிய யோய்தா இராணுவத்தை விசாரிக்கிற நூற்றுக்குச் சேர்வைக்காரரைப் புறப்படப் பண்ணி யவர்களுடனே, அவளை வரிசைகளுக்குப் புறம்பே கொண்டுபோங்கள். அவளைப் பின்செல்லுகிறவன் பட்டயத்தாற் சாவக்கடவனென்றான். ஏனென்றாற் கர்த்தரின் வீட்டிலே யவளைக் கொன்றுபோடாதேயுங்களென்று ஆசாரியன் சொல்லியிருந்தான்.

௰௫ அவர்கள் அவளுக்கிடமுண்டாக்கினபோது, அவள் இராசாவின் வீட்டிற்கிருக்கிற குதிரைகளின் வாசலுக்குட் பிரவேசிக்குமிடமட்டும் போனாள். அங்கேயவளைக் கொன்றுபோட்டார்கள்.

௰௬ பிறபாடு யோய்தா, தாங்கள் கர்த்தருடைய சனமாயிருக்கும்படிக்குத் தனக்குமெல்லாச் சனத்திற்கும் இராசாவுக்கும் உடம்படிக்கை பண்ணிக்கொண்டான்.

௰௭ அப்போது சனமெல்லாம் பாகாலின் வீட்டிலே போய் அதை யிடித்து, அதின் பலிபீடங்களையும் அதின் சுரூபங்களையுந் தகர்த்துப் பாகாலின் பூசாரியாகிய மாத்தானைப் பலிபீடங்களுக்கு முன்பாகக் கொன்றுபோட்டார்கள்.

௰௮ தாவீது கட்டளையிட்டபிரகாரமாகச் சந்தோஷத்தோடுங் கீதத்தோடுங் கர்த்தரின் தகனபலிகளை மோசேயின் நியாயப்பிரமாணத்திலெழுதியிருக்கிறபடியே செலுத்தத்தக்கதாக, யோய்தா, கர்த்தருடைய வீட்டை விசாரிக்கும் உத்தியோகங்களைத் தாவீது கர்த்தருடைய வீட்டிற்கென்று பகுத்துவைத்த லேவியரான ஆசாரியர்களின் கையிலொப்புவித்து,

௰௯ யாதொரு காரியத்திலே தீட்டுப்பட்டவன் கர்த்தருடைய வீட்டிற்குட் பிரவேசியாதபடிக்கு, அதின் வாசல்களுக்கு வாசற்காப்பாளரை நிறுத்தி,

௨௰ நூற்றிற்குச் சேர்வைக்காரரையும் பெரியவர்களையுஞ் சனத்தையாளுகிறவர்களையுந் தேசச்சனமனைத்தையுங் கூட்டிக்கொண்டு, இராசாவைக் கர்த்தருடைய வீட்டிலிருந்திறங்கப்பண்ணி, உயர்ந்த வாசல்வழியாய் இராச அரமனைக்குள் ளழைத்துக்கொண்டுவந்து, இராசாவை அரசாளும் ஆசனத்தின்மேல உட்காரப்பண்ணினார்கள்.

௨௧ தேசச்சனமெல்லாம் மகிழ்ந்து அத்தலியாளைப் பட்டயத்தாற் கொன்றுபிறபாடு பட்டணம் அமரிக்கைப்பட்டது.

## ௨௪. அதிகாரம்.

யோவாஸ்பண்ணின இராச்சியபாரம்.

யோவாஸ் இராசாவாகிறபோது ஏழு வயதாயிருந்து, நாற்பது வருஷமாய் எருசலேமிலே அரசாண்டான். பெயர்செபா பட்டணத்தாளான அவன் தாயின்பேர் சிபியாள்.

௨ ஆசாரியனாகிய யோய்தாவின் நாளெல்லாம் யோவாஸ் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௩ அவனுக்கு யோய்தா இரண்டு பெண்சாதிகளை யேற்படுத்தினான். அவர்கள் குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றனர்.

௪ அதற்குப்பிறகு கர்த்தருடைய வீட்டைப் புதுப்பிக்க யோவாசுக்கு மனதுவந்தது.

௫ அவன் ஆசாரியரையும் லேவியரையுங் கூட்டி அவர்களுடனே, நீங்கள் யூதாப் பட்டணங்களுக்குப் புறப்பட்டுப்போய், உங்கள் பராபரனுடைய வீட்டை வருஷந்தோறும் பழுதுபார்க்கிறதற்கு இஸ்ரவேலெங்குந் திரவியஞ்சேருங்கள். இந்தக் காரியத்தை நீங்கள் தீவரியுங்களென்றான். ஆனாலலேவியர் தீவரித்துக்கொண்டதில்லை.

௬ அப்போது இராசா யோய்தாவென்கிற தலைவனை யழைப்பித்து அவனுக்குச் சொன்னதாவது, ஆசரிப்புக்கூடாரத்திற்குக் கொடுக்கக் கர்த்தரின் தாசனாகிய மோசே கற்பித்த வரியை யூதாவினிடத்திலும் எருசலேமியரிடத்திலும் இஸ்ரவேலசபையாரிடத்திலும் வாங்கி வருகிறதற்கு லேவியரை நீர் விசாரிக்காதே போனதென்ன?

௭ ஏனென்றால் அத்தலியாள் துன்மார்க்கமாயிருந்ததினால் அவளுடைய குமாரர் பராபரனுடைய வீட்டைப் பலவந்தமாய்த் திறந்து கர்த்தருடைய வீட்டிலுள்ள பரிசுத்தம் பண்ணப்பட்டவைகளையெல்லாம

பாகால்களுக்காகச் செலவுபண்ணினார்களென்றான்.

௮ அப்போது இராசாவின் சொற்படி ஒரு பெட்டியையுண்டாக்கி, அதைக் கர்த்தருடைய வீட்டுவாசலுக்குப் புறம்பே வைத்து,

௯ கர்த்தரின் தாசனாகிய மோசே வனாந்திரத்திலே இஸ்ரவேலுக்குக் கற்பித்த வரியைக் கர்த்தருக்குக் கொண்டுவாருங்களென்று யூதாவிலும் எருசலேமிலும் பறைமுறையிடுவித்தார்கள்.

௰ அப்போது எல்லாப் பிரபுக்களும் சனங்கள் அனைவரும் சந்தோஷப்பட்டுப் பெட்டி நிறையுமட்டுங் கொண்டுவந்து அதிலே போட்டார்கள்.

௰௧ அநேகத் திரவியமுண்டென்றுகண்டு லேவியராலே அந்தப்பெட்டி இராசாவின் விசாரிப்புக்காரண்டையிலே கொண்டுவரப்படும்போதோவெனில் இராசாவின் சம்பிரதியும் பிரதான ஆசாரியனுடைய விசாரிப்புக்காரனும் வந்து பெட்டியிலிருக்கிறதைக் கொட்டியெடுத்துக்கொண்டு, அதைத் திரும்ப அதின் தானத்திலே வைப்பார்கள். இப்படி நாளுக்குநாள் செய்து, மிகுந்த திரவியத்தைச் சேர்த்தார்கள்.

௰௨ அதை இராசாவும் யோயதாவுங் கர்த்தருடைய வீட்டின் வேலையை விசாரிக்கும் ஊழியக்காரர் கையிலே கொடுத்தார்கள். அதினாலே இவர்கள் கர்த்தருடைய வீட்டைப் புதுப்பிக்கும்படிக்குக் கற்றச்சரையுந் தச்சரையுங் கர்த்தருடைய வீட்டைப் பழுதுபார்க்கக் கருமாரையுங் கன்னாரையுங் கூலிபொருந்திக்கொண்டார்கள்.

௰௩ அப்படி வேலையை விசாரிக்கிறவர்கள் தங்கள் கையிலே வேலையை நடந்தேறப்பண்ணிப் பராபரனுடைய வீட்டை யதின் முந்தின சீராக வைத்துப் பலப்படுத்தினார்கள்.

௰௪ அதை முடித்துத் தீர்ந்தபிறபாடு மீந்த திரவியத்தை இராசாவுக்கும் யோய்தாவுக்கும் முன்பாகக் கொண்டுவந்தார்கள். அதினாலே கர்த்தருடைய வீட்டிற்குப் பணிமுட்டுகளாகிய ஆராதனைக்கும் பலியிடுகிறதற்குமான தட்டுமுட்டுகளையுங் கலசங்களையும் பொற்பாத்திரங்களையும் வெள்ளிப்பாத்திரங்களையும் பண்ணுவித்தான். யோயதாவின் நாளெல்லாம் நித்தங் கர்த்தருடைய வீட்டிலே தகனபலிகளைச் செலுத்திவந்தார்கள்.

௰௫ ஆனாலும் யோயதா கிழவனாகி நாள் நீடித்தவனாய் மரித்தான். அவன் மரணமடைகிறபோது நூற்றுமுப்பது வயதாயிருந்தான்.

௰௬ அவன் இஸ்ரவேலுக்கும் பராபரனுக்காகவும் அவருடைய வீட்டிற்காகவும் நன்மைசெய்தபடியினாலே யவனைத் தாவீதின் பட்டணத்தில் இராசாக்களண்டையிலே யடக்கம்பண்ணினார்கள்.

௰௭ யோயதா மரணமடைந்தபிறபாடோவெனில், யூதாவின் பிரபுக்கள் வந்து இராசாவைப் பணிந்துகொண்டார்கள். அப்போது இராசா அவர்களுக்குச் செவிகொடுத்தான்.

௰௮ அப்படியேயவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரின் வீட்டை விட்டுவிட்டுத் தோப்புகளையுஞ் சிலைகளையுஞ் சேவித்தார்கள். அப்போது இந்த அவர்களுடைய குற்றத்தினிமித்தம் யூதாவின்மேலும் எருசலேமின்மேலுங் கடுங்கோபமுண்டாயிற்று.

௰௯ அவர்களைத் தம்மண்டைக்குத் திரும்பப்பண்ணக் கர்த்தர் அவர்களிடத்திலே தீர்க்கதரிசிகளை யனுப்பினார். இவர்கள் அவர்களைத் திடச்சாட்சியாகக் கடிந்துகொண்டார்கள். ஆனாலும் அவர்கள் செவிகொடுக்கவில்லை.

௨௰ அப்போது பராபரனுடைய ஆவி ஆசாரியனாகிய யோய்தாவின் குமாரனுஞ் சகரீயாவின்மேலிறங்கினதினாலே, அவன் சனத்திற்கெதிரே நின்று அவர்களுடனே, நீங்கள் கர்த்தருடைய கற்பனைகளை மீறிப்போகிறதென்ன? என்று பராபரன் சொல்லுகிறார். ஆகையால் நீங்கள் பாக்கியவான்களாயிருப்பதில்லை. நீங்கள் கர்த்தரை விட்டுவிட்டதினாலே அவர் உங்களைக் கைவிடுவாரென்றான்.

௨௧ ஆனாலும் அவர்கள் அவனுக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணிக் கர்த்தருடைய வீட்டுப்பிராகாரத்தில் இராசாவினுடைய கற்பனையின்படியவனைக் கல்லெறிந்துகொன்றார்கள்.

௨௨ அப்படியேயிவனுடைய தகப்பனாகிய யோய்தா தனக்குச் செய்த தயவை இராசாவாகிய யோவாஸ் நினைக்காமல், அவனுடைய குமாரனைக் கொன்றுபோட்டான். இவன் சாகையிற் கர்த்தர் அதைப் பார்த்துக் கணக்குக்கேட்பாரென்றான்.

௨௩ ஆனதுகொண்டு மறுவருஷத்திலே சீரியாவின் இராணுவத்தார் அவனுக்கு விரோதமாகவந்தே யூதாவிலும், எருசலேமிலும் வந்து சனத்திலிருக்கிற சனத்தின் பிரபுக்களையெல்லாமழித்துக் கொள்ளையிட்ட அவர்கள் உடைமைகளையெல்

லாத்தமஸ்குவின் இராசாவுக்கனுப்பினார்கள்.

உச ஏனென்றால் சீரியாவின் இராணுவம் கொஞ்சமனுஷராய் வந்திருந்தாலும், இவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனைக் கைவிட்டுவிட்டபடியினாலே கர்த்தர் மகா பெரிய இராணுவத்தை அவர்கள் கையிலொப்புக்கொடுத்தார். அவர்கள் யோவாசினிடத்திலும் நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்றினார்கள்.

உரு அவர்கள் அவனை மகா வேதனைக்குள்ளாக்கிவிட்டுப்போனார்கள். ஆனதுகொண்டு அவர்கள் புறப்பட்டபின் அவனுடைய ஊழியக்காரர் ஆசாரியனாகிய யோய்தாவுடைய குமாரரின் இரத்தப்பழியினிமித்தம் அவனுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணி, அவனை அவன் படுக்கையிலே கொன்றுபோட்டார்கள். செத்துப்போன அவனைத் தாவீதின் பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்கள். ஆனால் இராசாக்களின் கல்லறைகளில் அவனை வைக்காதேபோனார்கள்.

உசா அவனுக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணிக்கொண்டவர்கள் சிமாத்தின் குமாரனாகிய சாபாத்தென்ற அம்மோனியனும் சிம்ரித்தின் குமாரனாகிய யோசபாத்தென்ற மோவாபியனுந்தானே.

உஎ அவன் குமாரரின் செய்தியும் அவன்மேலே சுமந்த பெரிய சுமையின் செய்தியும் பராபரனுடைய வீட்டையவன் பலப்படுத்தினதும் இதோ, இராசாக்களின் புஸ்தகமான சரித்திரத்திலெழுதியிருக்கிறது. அவன் குமாரனாகிய அமத்சியா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## உரு. அதிகாரம்.

அமத்சியாவின் இராசரியபாரம்

அமத்சியா இருபத்தைந்தாம் வயதிலே இராசாவாகி, இருபத்தொன்பது வருஷமாக எருசலேமில் அரசாண்டான். எருசலேமூராளாகிய அவனுடைய தாயின் பேர் யோவாதானி.

உ அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். ஆனாலும் முழு மனதோடேயல்ல.

ந இராசரியபாரம் அவனுக்குத் திடப்பட்டபோதோவெனில், அவன் தன் தகப்பனாகிய இராசாவைக் கொலைசெய்த தன்னுடைய ஊழியக்காரரைக் கொன்றுபோட்டான்.

ச ஆனாலும் பிதாக்கள் பிள்ளைகளினிமித்தமும் பிள்ளைகள் பிதாக்களினிமித்தமும் கொலையுண்கப்படாமல், அவனவன் தன் தன் பாவத்தினிமித்தம் கொலையுண்ணப்படவேண்டுமென்று மோசேயின் நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்திலெழுதியிருக்கிறபடி கர்த்தர் கற்பித்தப்பிரகாரமாக அவர்களுடைய பிள்ளைகளைக் கொல்லாதிருந்தான்.

ரு அமத்சியா யூதாமனுஷரைக் கூட்டி, அவர்களின் பிதாக்களுடைய வம்சங்களின்படியே யூதாவென்னும் தேசமெங்கும் ஆயிரத்துச்சேர்வைக்காரரையும் நூற்றுக்குச்சேர்வைக்காரரையும் வைத்து இருபது வயதுமுதற்கொண்டு அதற்குமேலானவர்களை இலக்கம்பார்த்து, யுத்தத்திற்குப் புறப்படவும் ஈட்டியையுங் கேடயத்தையும் பிடிக்கவுந்தக்க தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் முந்நூறாயிரம்பேரென்று கண்டான்.

சா இஸ்ரவேலிலும் நூறாயிரம் பராக்கிரமக்காரரை நூறு தாலந்து வெள்ளிக்குச் சம்பளத்திற்கு வைத்தான்.

எ ஆனால் பராபரனுடைய மனுஷனொருவன் அவனண்டைக்கு வந்து சொன்னதாவது, இராசாவே! இஸ்ரவேலின் இராணுவம் உம்மோடே போகாதிருப்பதாக. ஏனென்றால் கர்த்தர் இஸ்ரவேலராகிய எப்பிராயீமின் சகல புத்திரரோடுமிருக்கவில்லை.

அ ஏனென்றால் நீர்போய், யுத்தத்திற்குப் பலத்துக்கொண்டாலும், பராபரன் உம்மைச் சத்துருவுக்கு முன்பாக விழப்பண்ணுவார். அப்படியென்றால் ஒத்தாசைசெய்யவும் விழப்பண்ணவும் பராபரனிடத்தில் பலமுண்டென்றான்.

கூ அப்போது அமத்சியா, ஆனால் நான் இஸ்ரவேலின் சேனைக்குக்கொடுத்த நூறு தாலந்திற்காகச் செய்வதென்ன? என்று பராபரனுடைய மனுஷனைக் கேட்டான். அதற்குப் பராபரனுடைய மனுஷன், அதைப்பார்க்கிலும் அதிகமாய் உமக்குக் கொடுக்கக் கர்த்தருக்கிருக்கிறதென்றான்.

ய அப்போது அமத்சியா எப்பிராயீமிலே தன்னண்டைக்கு வந்த தண்டை தங்களிடத்திற்குப் போய்விடப் பிரித்தான். அதினாலவர்களுக்கு யூதாவின்மேற் கோபம் மிகுந்தியாய் மூண்டு உக்கிரமான எரிச்சலோடே தங்களிடத்திற்குத் திரும்பினார்கள்.

யக அமத்சியாவோவெனில் திடன்கொண்டு தன் சனத்தைக் கூட்டி, உப்புப்பள்ள

த்தாக்குக்குப்போய்ச்சேயீர் புத்திரரிற்
பதினாயிரம்பேரை வெட்டினான்.

௰௨ யூதபுத்திரர்பதினாயிரம்பேரை உ
யிரோடேபிடித்து, ஒருகன்மலைத்தலையின்
மேற்கொண்டுபோய், அவர்களெல்லாரும்
நசுங்கிப்போகத்தக்கதாய் அந்தக்க
ன்மலையின்சிகரத்திலிருந்து அதோமுகத்தள்ளி
னார்கள்.

௰௩ தன்னோடேகூடயுத்தத்திற்குவரா
தபடிக்கு அமத்சியா, திருப்பிவிட்டசே
னைமனுஷரோவென்றால், சமாரியாவைத்து
வக்கிப்பெத்தொரோன்மட்டும் யூதாவின்ப
ட்டணங்களின்மேல் விழுந்து, அவைகளில்
மூவாயிரம் பேரை வெட்டித் திரளாயக்
கொள்ளையிட்டார்கள்.

௰௪ அமத்சியா ஏதோமியரை முறிய
டித்துவந்து சேயீர்புத்திரரின் தேவர்க
ளைக்கொண்டுவந்த பிற்பாடோவென்றால்,
அவன் அவைகளைத்தனக்குத்தேவர்களா
கவைத்து, அவைகளுக்குமுன்பாகப்பணி
ந்து, அவைகளுக்குத்தூபங்காட்டினான்.

௰௫ அப்போது கர்த்தர் அமத்சியா
வின்பேரிற்கோபமுண்டவராகி, அவனண்
டைக்கு ஒருதீர்க்கதரிசியையனுப்பினார்.
இவன் அவனுடனே, தங்களசனத்தை உ
மதுகைக்குத் தப்புவிக்காதேபோனசன
த்தின்தேவர்களை நீர்தேடுவானேன்? என
றான்.

௰௬ தன்னோடே இவன் இப்படிப்பே
சினபோதோவென்றால், அவன் இவனுட
னே, உன்னை இராசாவுக்கு ஆலோசனை
க்காரனாக்கவைத்தார்களோ? அதைப்போ
ட்டுவிடு. உன்னை என்வெட்டிப்போடவே
ண்டும்? என்றான். அப்போது அந்தத்தீர்
க்கதரிசி அதைப்போட்டு விட்டு. நீர் இப்
படிச்செய்து, என் ஆலோசனையைக்கே
ளாமற்போனபடியினாலே, பராபரன் உ
ம்மையழிக்கயோசனையாயிருக்கிறார் என
றதை நானறிவேனென்றான்.

௰௭ பிறகுயூதாவின் இராசாவாகிய
அமத்சியாயோசனைபண்ணி, ஏகூவினகு
மாரனாகிய யோவாகாசின்குமாரன்யோ
வாசென்கிற இஸ்ரவேலின் இராசாவுக்குந
ம்முடைய சாமர்த்தியத்தைப் பார்ப
போமவாவென்று சொல்லியனுப்பினான்.

௰௮ ஆனால் இஸ்ரவேலின் இராசாவா
கியயோவாஸ் யூதாவின் இராசாவாகிய
அமத்சியாவுக்குச்சொல்லியனுப்பினதா
வது, லீபனோனிலிருக்கிற முட்செடி லீப
னோனிலிருக்கிற கேதுருமரத்திற்கு, உன
குமாரத்தியை என்குமாரனுக்குப்பெண
சாதியாகக்கொடு என்றுசொல்லியனுப
பினான். ஆனால் லீபனோனிலிருக்கிற காட்
டு மிருகங்கள் முட்செடியின்மேலோடி
அதைமிதித்தது.

௰௯ இதோ, ஏதோமியரையடித்தே
னென்று நீ பெருமைபாராட்ட உன்னி
ருதயம் உன்னைமேட்டிமையாக்கிறது.
இப்போதும் உன்வீட்டிலிரு. நீயும் உன்
னோடே யூதாவுங் கூட விழும்படிக்குப்
பொல்லாப்பைப்பதேடிக்கொள்வானேன்?
என்றுசொல்லியனுப்பினான்.

௨௰ ஆனால் அமத்சியா செவிகொடா
தேபோனான். ஏனென்றால் அவர்கள் ஏ
தோமின்தேவர்களைத்தேடின நிமித்தம்
அவர்களையொப்புக்கொடுக்கும்படிக்குப்
பராபரனாலேயப்படிவந்தது.

௨௧ அப்படியே இஸ்ரவேலின் இராசா
வாகியயோவாஸ் எறிவந்தான். யூதாவிலி
ருக்கிறபெத்செமேசிலே அவனும் அமத்சி
யாவென்றயூதாவின் இராசாவுந் தங்கள்
சாமர்த்தியத்தைப்பார்த்தார்கள்.

௨௨ ஆனால்யூதா இஸ்ரவேலுக்குமுன்
பாகமுறிந்து அவரவர் தங்கள்கூடாரங்
களுக்கோடிப்போனார்கள்.

௨௩ இஸ்ரவேலின் இராசாவாகியயோ
வாஸ் அகசியாவின்குமாரனான யோவாச
க்குப்பிறந்த அமத்சியாவென்றயூதாவின்
இராசாவைப் பெத்செமேசிலேபிடித்து,
அவனை எருசலேமுக்குக்கொண்டுவந்து,
எருசலேமின் அலங்கத்திலே எப்பிராயீம
வாசலைத் துவக்கிக் கோடிவாசல்மட்டும
நானூறுமுழ நீளம் இடித்துப்போட்டு,

௨௪ பராபரனுடைய வீட்டில ஓபே
தேதோமின் வசத்திலே யகப்பட்டசகல
பொன்னையும் வெள்ளியையுஞ் சகல த
ட்டுமுட்டுகளையும், இராசாவின் வீட்டுப்
பொக்கிஷங்களையுங், கிரியிருப்பவர்களை
யும் பிடித்துக்கொண்டு சமாரியாவுக்குத்
திரும்பிப்போனான்.

௨௫ யோவாகாசின்குமாரனாகிய யோ
வாசென்கிற இஸ்ரவேலின் இராசா மரண
மடைந்தபின்யோவாசின்குமாரனாகிய அ
மத்சியாவென்றயூதாவின் இராசாபதின
ந்துவருஷம் உயிரோடிருந்தான்.

௨௬ அமத்சியாவின்முன்பின் நடப்பி
யானமற்றவர்த்தமானங்கள் இதோயூதா
இஸ்ரவேலிராசாக்களின்புஸ்தகத்தில
லோ எழுதியிருக்கின்றது.

௨௭ அமத்சியா கர்த்தரைவிட்டபின
வாங்கினகாலமுதற்கொண்டு எருசலேமி
லிருக்கிறவர்கள் அவனுக்குவிரோதமாக
ஒப்பந்தம்பண்ணிக்கொண்டார்கள். அ
தினிமித்தம் லாகீசுக்கு ஓடிப்போனான்.

ஆனால் அவனைப் பிறகாலே லாகீசுக்கு மனுஷரையனுப்பினார்கள். அவர்கள் அங்கே அவனைக் கொன்றுபோட்டு,

௨௮ அவனைக் குதிரைகள் மேலெடுத்து வந்து யூதாவின் பட்டணத்தில் அவன் பிதாக்களண்டையிலே யடக்கம்பண்ணினார்கள்.

## ௨௬. அதிகாரம்.

உசியாவின் இராசரியபாரம்.

அப்போது யூதசனமெல்லாம் பதினாறு வயதான உசியாவை யழைத்து வந்து, அவனை யவன் தகப்பனாகிய அமத்சியாவின் ஸ்தலத்திலே இராசாவாக்கினார்கள்.

௨ இராசா தன் பிதாக்களோடே நித்திரையடைந்த பிறபாடு இவன் ஏலோத்தைக் கட்டி அதைத் திரும்ப யூதாவின் வசமாக்கிக்கொண்டான்.

௩ உசியா இராசாவாகிறபோது பதினாறு வயதாயிருந்து, ஐம்பத்திரண்டு வருஷமாய் எருசலேமில் அரசாண்டான். எருசலேம் பட்டணத்தாளான அவன் தாயின் பேர் எக்கோலியாள்.

௪ அவன் தன் தகப்பனாகிய அமத்சியா செய்தபடியெல்லாங் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்து,

௫ பராபரனுடைய தரிசனங்களில் உணர்வுள்ள சகரியாவின் நாட்களிலே பராபரனைத் தேட மனதிணங்கி யிருந்தான். அவன் கர்த்தனைத் தேடின நாட்களிலே பராபரன் அவனைப் பாக்கியவானாக்கினார்,

௬ அவன் புறப்பட்டுப்போய்ப் பெலிஸ்தரோடு யுத்தம்பண்ணிக் காத்தின் அலங்கத்தையும் யப்னேயின் அலங்கத்தையும் அஸ்தோதின் அலங்கத்தையும் இடித்துப்போட்டு, அஸ்தோத் சீமையிலும் பெலிஸ்தருக்குள்ளும் பட்டணங்களைக் கட்டினான்.

௭ பெலிஸ்தரையுங் கூர்பாகாலிலே குடியிருக்கிற அரபியரையும் மெகுனியரையும் வெல்லப் பராபரன் அவனுக்கொத்தாசைபண்ணினார்.

௮ அம்மோனியர் உசியாவுக்குக் காணிக்கைகளைக் கொடுத்தார்கள். அவனுடைய கீர்த்தி எகிப்துவின் எல்லைமட்டும் போயிற்று. ஏனென்றால் மிகவும் பலங்கொண்டான்.

௯ உசியா எருசலேமிலே கோடிவாசலின்மேலும் பள்ளத்தாக்கு வாசலின்மேலும் அலங்கச் சந்துகளின்மேலுஞ் சிகரங்களைக் கட்டி அவைகளைப் பலவாக்கினான்.

௰ அவனுக்குப் பள்ளத்தரையிலுஞ் சமனான தரையிலும் அநேகம் ஆடுமாடுகளும் மலைகளிலேயும் வயல்வெளியிலேயும் பயிர்க்குடிகளுந் திராட்சத்தோட்டக்காரரும் உண்டானபடியினாலே, அவன் வனாந்திரத்திலே கோபுரங்களைக் கட்டி அநேகந் துரவுகளை வெட்டுவித்தான். ஏனென்றால் வெள்ளாமைப்பிரியனாயிருந்தான்.

௰௧ உசியாவுக்கு யுத்தம்பண்ணுகிற இராணுவமுமிருந்தது. அது சம்பிரதியாகிய ஏயெலாலும் அதிகாரியான மாசேயாவினாலும் இலக்கம் பார்க்கப்பட்டபடியே இராசாவின் பிரபுக்களிலொருவனாகிய அனனியாவின் கீழ் வகுப்பாய்ச் சேவகம்பண்ணப் புறப்பட்டது.

௰௨ பராக்கிரமசாலிகளான வம்சத்தலைவரின் தொகையெல்லாம் இரண்டாயிரத்தறுநூறு.

௰௩ இவர்கள் கையின் கீழ் இராசாவுக்குச் சத்துருக்களுக்கு விரோதமாக ஒத்தாசை செய்யப் பராக்கிரமத்தோடே யுத்தம்பண்ணுகிற மூந்நூற்றேழாயிரத்தைந்நூறுபேரான இராணுவபலனிருந்தது.

௰௪ இந்த இராணுவத்தாருக்கெல்லாம் உசியா கேடகங்களையும் ஈட்டிகளையுந் தலைச்சோடுகளையுஞ் சீராவுகளையும் வில்லுகளையுங் கல்லெறிகிற கவண்களையுஞ் சவதரித்தான்.

௰௫ அம்புகளையும் பெரிய கல்லுகளையும் எய்யத்தக்கதாக விநோதமாயுண்டுபண்ணினதுஞ் சிகரங்களின்மேலும் அலங்கக் கோடிகளின்மேலுமிருப்பதுமான எந்திரங்களையும் அவன் எருசலேமிலுண்டாக்கினான். அப்படியே அவன் கீர்த்தி தூரத்திற்குப் பரம்பிற்று. ஏனென்றால் அவன் பலத்துப்போகுமட்டும் ஆச்சரியமானபடி ஒத்தாசைசெய்யப்பட்டான்.

௰௬ அவன் பலத்துப்போனபோதோவென்றால் தனக்குக் கேடுண்டாகுமட்டும் அவனுடைய மனம் மேட்டிமையாகித் தன் பராபரனாகிய கர்த்தருக்குத் துரோகமீறின வேலையைச் செய்து, தூபங்காட்டும்பீடத்தின்மேலே தூபங்காட்டக் கர்த்தருடைய தேவாலயத்திற்குட்பிரவேசித்தான்.

௰௭ ஆனால் ஆசாரியனாகிய அசரியாவும் அவனோடேகூடக் கர்த்தரின் ஆசாரியரான பராக்கிரமசாலிகளாகிய எண்பதுபேரும் அவன் பிறகாலேயுட்பிரவேசித்து,

௰௮ இராசாவாகிய, உசியாவோடே எதிர்த்துநின்று அவனுடனே, உசியாவே! கர்த்தருக்குத் தூபங்காட்டுகிறது உமக்

கடுத்ததல்ல. தூபங்காட்டப் பரிசுத்தமாக்கப்பட்ட ஆரோனின் குமாரராகிய ஆசாரியருக்கேயடுக்கும். பரிசுத்த ஸ்தலத்தைவிட்டு வெளியே போம். ஏனெனில் மீறின வேலை செய்தீர். இது பராபரனாகிய கர்த்தரால் மேன்மைக்கு ஏதுவாயிராது என்றார்கள்.

௰௯ அப்போது உசியா மனமடிவாகித் தூபங்காட்ட ஒரு கலசத்தைக் கையிலே பிடித்திருந்தான். அவன் ஆசாரியரோடே மனமடிவாய்ப் பேசுகிறபோதோ வெனில், கர்த்தருடைய வீட்டிலே தூபங்காட்டும் பீடத்துக்கு முன் நிற்கிற அவனுடைய நெற்றியில் ஆசாரியர்களுக்கு முன்பாகக் குஷ்டமெழும்பிற்று.

௨௰ பிரதான ஆசாரியனாகிய அசரியாவும் எல்லா ஆசாரியர்களும் அவனையே விட்டுப் பார்க்கும்போது, இதோ, அவன் தன் நெற்றியிலே குஷ்டம் பிடித்தவனென்று கண்டு அவனைத் தீவிரமாக அங்கேயிருந்து புறப்படப்பண்ணினார்கள். அவன் தானுங் கர்த்தர் தன்னையடித்ததினாற் புறப்பட ஏவப்பட்டான்.

௨௧ அப்படியே இராசாவாகிய உசியா தன் மரணநாள்மட்டுங் குஷ்டரோகியாயிருந்து கர்த்தருடைய வீட்டிற்குப் புறம்பாக்கப்பட்டபடியினாலே ஒரு தனித்த வீட்டிலே குஷ்டரோகியாய் வாசம்பண்ணினான். அவன் குமாரனாகிய யோதத்தாமோவெனில் இராசாவின் வீட்டு விசாரிப்புக்காரனாயிருந்து, தேசத்தின் சனத்தை நியாயம் விசாரித்தான்.

௨௨ உசியாவின் முன்பின் நடபடியான மற்ற வர்த்தமானங்களை ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா என்ற தீர்க்கதரிசி யெழுதினான்.

௨௩ உசியா தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனையவன் பிதாக்களண்டையில், இராசாக்கள் அடக்கம்பண்ணப்படுகிறதற்கருகான நிலத்திலே யடக்கம்பண்ணினார்கள். ஏனென்றால் அவன் குஷ்டரோகியென்றார்கள். அவன் குமாரனாகிய யோதத்தாம் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௨௭. அதிகாரம்.

யோதத்தாமின் நன்மார்க்கமான இராசரிய பாரம்.

யோதத்தாம் இராசாவாகிற போது இருபத்தைந்து வயதாயிருந்து பதினாறு வருஷமாக எருசலேமில் அரசாண்டான். சாதோக்கின் குமாரத்தியாகிய அவன் தாயின்பேர் எருஷாள்.

௨ அவன் தன் தகப்பனாகிய உசியா செய்தபடியெல்லாங் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். ஆனால் அவனைப்போலக் கர்த்தரின் தேவாலயத்திற்குட் பிரவேசியாதிருந்தான். சனமோவென்றால் இன்னந் தன்னைக் கெடுத்துக்கொண்டிருந்தது.

௩ இவன் கர்த்தருடைய வீட்டின் உயர்ந்த வாசலைக் கட்டி, ஒபேலின் மதிலும் வெகுவாய்க் கட்டினான்.

௪ யூதாவின் மலைகளிலே பட்டணங்களையுங் காடுகளிலே கோட்டைகளையுங் கோபுரங்களையுங் கட்டினான்.

௫ அவன் அம்மோன் புத்திரருடைய இராசாவோடு யுத்தம்பண்ணி யவர்களுக்கு மேற்கொண்டான். ஆனதுகொண்டு அம்மோன் புத்திரர் அவனுக்கு அந்த வருஷத்திலே நூறு தாலந்து வெள்ளியையும் பதினாயிரக்கலக் கோதுமையையும் பதினாயிரக்கல வாற்கோதுமையையுங் கொடுத்தார்கள். இப்படி அம்மோன் புத்திரர் இரண்டாம் மூன்றும் வருஷத்திலும் அவனுக்குச் செலுத்தினார்கள்.

௬ அப்படியே யோதத்தாந் தன் வழிகளைத் தன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக நேராக்கினதினாலே பலத்துப்போனான்.

௭ யோதத்தாமின் மற்ற வர்த்தமானங்களும் அவனுடைய எல்லா யுத்தங்களும் அவனுடைய வழிகளும் இதோ, இஸ்ரவேல் யூதா இராசாக்களின் புஸ்தகத்திலெழுதியிருக்கின்றது.

௮ அவன் இராசாவாகிறபோது இருபத்தைந்து வயதாயிருந்து, பதினாறு வருஷமாய் எருசலேமில் அரசாண்டான்.

௯ யோதத்தாந் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைத் தாவீதின் பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய ஆகாஸ் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௨௮. அதிகாரம்.

ஆகாசுடைய துன்மார்க்கமான இராசரிய பாரம்.

ஆகாஸ் இராசாவாகிறபோது இருபது வயதாயிருந்து, பதினாறு வருஷமாய் எருசலேமிலே அரசாண்டான். ஆனால் அவன் தன் தகப்பனாகிய தாவீதைப்போலக் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்யாமல்,

௨ இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலே நடந்து, பாகால்களுக்குச் சிலைகளையும் வார்ப்பித்தான்.

௩ அவன் இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்கிலே தூபங்காட்டிக் கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே தன் குமாரரையக்கினியாற் சுட்டுப்போட்டு,

௪ மேடைகளிலும் மேடுகளின்மேலும் பச்சையான சகல மரங்களின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டுவான்.

௫ ஆகையால் அவனுடைய பராபரனாகிய கர்த்தர் அவனைச் சீரியருடைய இராசாவின் கையிலே ஒப்புக்கொடுத்தார். இவர்கள் அவனை முறியடித்து அவனுக்கிருக்கிறவர்களிலே பெரிய கூட்டத்தைச் சிறைப்பிடித்துத் தமஸ்குவுக்குக் கொண்டுபோனார்கள். அவன் இஸ்ரவேலுடைய இராசாவின் கையிலும் ஒப்புக்கொடுக்கப்பட்டான். இவன் அவனை வெகுவாய் முறியடித்தான்.

௬ ஏனெனில் யூதா மனுஷர் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை விட்டபடியினாலே, ரெமலியாவின் குமாரனாகிய பேக்கா அவர்களில் ஒரே நாளிலே லட்சத்திருபதினாயிரம் பேரைக் கொன்றுபோட்டான். அவர்களெல்லாரும் நல்ல சேவகராயிருந்தவர்கள்.

௭ இதல்லாமல் எப்பிராயீமின் பலத்த மனுஷனாகிய சிக்ரீயும் இராசாவின் குமாரனாகிய மாசேயாவையும் அரமனைத் தலைவனாகிய அஸ்ரீக்காமையும் இராசாவுக்கு இரண்டாவதான எல்க்கானாவையுங் கொன்றுபோட்டான்.

௮ இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சகோதரரில் இருநூறாயிரம்பேராகிய ஸ்திரீகளையும் குமாரரையுங் குமாரத்திகளையுஞ் சிறைபிடித்து, அவர்களில் மகா ஏராளமாய்க் கொள்ளையிட்டுக் கொள்ளையைச் சமாரியாவுக்குக் கொண்டுபோனார்கள்.

௯ ஆனால் அங்கே ஓதேதென்றுபேருள்ள கர்த்தருடைய தீர்க்கதரிசி யிருந்தான். அவன் சமாரியாவுக்கு வருகிற இராணுவத்திற்கெதிராகப் புறப்பட்டு, அவர்களுடனே சொன்னதாவது, இதோ, உங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் யூதாவின்மேல் உக்கிரமானதினாலே அவர்களை யுங்கள் கைகளிலே ஒப்புக்கொடுத்தார். நீங்களோவென்றால் வானபரியந்தம் எட்டுகிற சினத்தோடே யவர்களிற் சங்காரமுண்டாக்கினீர்கள்.

௰ இப்போதும் யூதாவின் புத்திரரையும் எருசலேமியரையும் நீங்கள் உங்களுக்கு வேலைக்காரராகவும் வேலைக்காரிகளாகவுங் கீழ்ப்படுத்தவேண்டுமென்று நினைக்கிறீர்கள். உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமான குற்றமுள்ளவர்கள் நீங்கள்தானுமல்லவோ?

௰௧ இப்போதும் நீங்களெனக்குக் கேள்விகொடுத்து, நீங்கள் உங்கள் சகோதரரிடத்திலே சிறைபிடித்துக்கொண்டுவந்தவர்களைத் திரும்ப அனுப்பிவிடுங்கள். ஏனெனிற் கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் உங்கள்மேலிருக்கின்றதென்றான்.

௰௨ அப்போது எப்பிராயீம் புத்திரரின் தலைவரிற் சிலபேராகிய யோகனானின் குமாரன் அசரியாவும் மெஷிலேமோத்தின் குமாரன் பெரேகியாவுஞ் சல்லூமின் குமாரன் இஸ்கியாவும் அத்லாயின் குமாரன் அமாசாவும் இராணுவத்திலிருந்தவர்களுக்கு விரோதமாக எழும்பி,

௰௩ அவர்களுடனே, நீங்கள் சிறைபிடித்த இவர்களையிங்கே யுள்ளே கொண்டுவரவேண்டாம். ஏனென்றால் நம்முடைய மேல் திரளான குற்றமும் இஸ்ரவேலின்மேற் கோபத்தினுக்கிரமும் இருக்கக்கொள்ள நீங்கள் கர்த்தருக்கு முன்பாக நம்முடைய மேற் குற்றஞ்சுமரப்பண்ணத்தக்கதாய் நம்முடைய பாவங்களையும் நம்முடைய குற்றங்களையும் அதிகமாக்க நினைக்கிறீர்களென்றார்கள்.

௰௪ அப்போது ஆயுதஸ்திடபானவர்கள் சிறைபிடித்தவர்களையுங் கொள்ளையுடைமைகளையும் பிரபுக்களுக்கும் எல்லாச் சபைக்கும் முன்பாக விட்டுவிட்டார்கள்.

௰௫ அப்போது பேர்பேராகச் சொல்லப்பட்ட மனுஷர் எழும்பிச் சிறைபிடிக்கப்பட்டவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களில் அம்மணமானவர்களெல்லாருக்குங் கொள்ளையுடைமைகளால் வஸ்திரங்களைக் கொடுத்து அவர்களுக்கு உடுப்பையும் பாதரட்சைகளையும் போடுவித்து அவர்களுக்குச் சாப்பாடுந் தாகத்திற்குங் கொடுத்து அவர்களுக்கு எண்ணெய் வார்த்து அவர்களிற் பலட்சயமானவர்களையெல்லாங் கழுதைகளின்மேலேற்றிப் பேரீச்சுகளின் பட்டணமாகிய எரிகோவிலே அவர்கள் சகோதரரண்டைக்குக் கொண்டுவந்துவிட்டுச் சமாரியாவுக்குத் திரும்பினார்கள்.

௰௬ அக்காலத்திலே ஆகாசென்ற இராசா அசூரின் இராசாக்கள் தனக்கொத்தாசைபண்ண அவர்களண்டைக்காட்களை யனுப்பினான்.

௰௭ எதோமியருங்கூட வந்து யூதாவை முறியடித்துச் சிலரைச் சிறைபிடித்துப் போயிருந்தார்கள்.

௰௮ பெலிஸ்தரும் யூதாவிலே சமபூமியிலும் தெற்கேயுமிருக்கிற பட்டணங்களின்மேல் விழுந்து பெத்சேமேசையும் ஆயலோனையுங் கெதெரோத்தையுஞ் சோக்கோவையும் அதின் கிராமங்களையுந் திம்னாவையும் அதின் கிராமங்களையுங் கிம்சோவையும் அதின் கிராமங்களையும் பிடித்து அங்கே குடியேறினார்கள்.

௰௯ ஏனென்றால் யூதாவின் இராசாவாகிய ஆகாசினிமித்தங் கர்த்தர் யூதாவைத் தாழ்த்தினார். அதேதென்றால் அவன் யூதாவைச் சீர்கெடாக்கிக் கர்த்தருக்கு விரோதமாய் மிகவுந் துரோகம் பண்ணினான்.

௨௰ அசீரின் இராசாவாகிய தில்காத்பில்நேசர் அவனண்டைக்கு வந்தான். ஆனால் அவனைத் திடப்படுத்தாமல் அவனை நெருக்கம்பண்ணினான்.

௨௧ ஏனெனில் ஆகாஸ் கர்த்தருடைய வீட்டில் ஒருபங்கும் இராச அரண்மனையிலொருபங்கும் பிரபுக்களின் கையிலொருபங்கும் பிடித்து அசீரின் இராசாவுக்குக் கொடுத்தும் அவனுக்குதவாதே போயிற்று.

௨௨ தானெருக்கப்படுகிற காலத்திலுங்கூடக் கர்த்தருக்கு விரோதமாய் அந்த ஆகாசென்ற இராசா துரோகம்பண்ணிக்கொண்டேயிருந்தான்.

௨௩ அதெப்படியென்றால் தன்னை முறியடித்த தமஸ்குவின் தேவர்களுக்கவன் பலியிட்டுச் சீரியாவினுடைய இராசாக்களின் தேவர்கள் அவர்களுக்கொத்தாசை பண்ணுகிறபடியினாலே அவர்களெனக்கும் ஒத்தாசைபண்ண அவர்களுக்குப் பலியிடுவேனென்றான். ஆனால் அவைகள் அவனுக்கும் இஸ்ரவேலனைத்திற்கும் விழுகிறதற்கினமாயிற்று.

௨௪ ஆகாஸ் பராபரனுடைய வீட்டின் தட்டுமுட்டுகளைக் கூட்டிப் பராபரனுடைய வீட்டின் தட்டுமுட்டுகளைத் துண்டு துண்டாக்கிக் கர்த்தருடைய வீட்டின் கதவுகளைப் பூட்டிப்போட்டு எருசலேமிலெங்கு மூலையிலும் தனக்குப் பலிபீடங்களையுண்டுபண்ணி,

௨௫ அந்நிய தேவர்களுக்குத் தூபங்காட்டும்படிக்கு யூதாவின் ஒவ்வொரு பட்டணத்திலே மேடைகளையுமுண்டுபண்ணித் தன் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தருக்குக் கோபமுண்டாக்கினான்.

௨௬ அவனுடைய மற்ற வர்த்தமானங்களும் அவனுடைய முன்பின் வழிகளுமெல்லாம் இதோ, அவைகள் யூதா இஸ்ரவேல் இராசாக்களின் புஸ்தகத்திலெழுதியிருக்கிறது.

௨௭ ஆகாஸ் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனை எருசலேம் பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்கள். ஆனால் இஸ்ரவேல் இராசாக்களின் கல்லறைகளில் அவனைக் கொண்டுவந்து வைக்கவில்லை. அவன் குமாரனாகிய இஸ்கியா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௨௯ அதிகாரம்.

இஸ்கியா இராசாதேவ ஆராதனையைத் திரும்ப ஸ்தாபித்தது.

இஸ்கியா இருபத்தைந்தாம் வயதில் இராசாவாகி, இருபத்தொன்பது வருஷமாய் எருசலேமில் அரசாண்டான். சகரியாவின் குமாரத்தியாகிய அவனுடைய தாயின் பேர் அபியாள்.

௨ அவன் தன் தகப்பனாகிய தாவீது செய்தபடியெல்லாங் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௩ அவன் தன் இராசரீயபாரத்தின் முதலாம் வருஷம் முதலாம் மாதத்திலே கர்த்தருடைய வீட்டின் கதவுகளைத் திறந்து அவைகளைப் பழுதுபார்த்து,

௪ ஆசாரியரையும் லேவியரையுமழைத்து வந்து, அவர்களைக் கிழக்கு வீதியிலே கூட்டிக்கொண்டு,

௫ அவர்களுடனே சொன்னதாவது, லேவியரே! என்னைக் கேளுங்கள். நீங்கள் இப்போது உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டு உங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தருடைய வீட்டைப் பரிசுத்தம்பண்ணி அழுக்கைப் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து வெளியே கொண்டுபோங்கள்.

௬ ஏனென்றால் நம்முடைய பிதாக்கள் துரோகம்பண்ணி, நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, அவரை விட்டுத் தங்கள் முகங்களைக் கர்த்தருடைய வாசஸ்தலத்தை விட்டுத் திருப்பி அதற்குப் பிடரியைக் காட்டினார்கள்.

௭ அவர்கள் மண்டபத்தின் கதவுகளையும் பூட்டி விளக்குகளையணைத்துப்போட்டுத் தூபவர்க்கத்தைக் காட்டாமலும் பரிசுத்த ஸ்தலத்தில் இஸ்ரவேலின் பராபரனுக்குச் சர்வாங்கத் தகனபலியைச் செலுத்தாமலும் போனார்கள்.

அ ஆகையாற் கர்த்தருடைய கடுங்கோபம் யூதாவின்மேலும் எருசலேமின்மேலும் வந்து அவர் இவர்களை, நீங்கள் உங்கள் கண்களினாற் காண்கிறபடி அலைச்சலுக்கும் பாழாகுதலுக்கும் பயிற்போடுதலுக்கும் ஒப்புக்கொடுத்தார்.

கூ இதோ, இதினிமித்தமாக நம்முடைய பிதாக்கள் பட்டையத்தினால் விழுந்து நம்முடைய குமாரரும் நம்முடைய குமாரத்திகளும் நம்முடைய பெண்சாதிகளும் சிறையிருப்பில் அகப்பட்டார்கள்.

௰ இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் நம்மைவிட்டுத் திரும்பும்படிக்கு அவரோடே உடம்படிக்கைபண்ண என் மனதிலே தீர்மானித்துக்கொண்டேன்.

௰௧ என் குமாரரே! இப்போது அசதியாயிராதேயுங்கள். ஏனெனில் நீங்கள் கர்த்தருக்குப் பணிவிடைசெய்கிறதற்கு அவருக்கு முன்பாக நிற்கவும் அவருக்கு ஊழியஞ்செய்கிறவர்களும் தூபங்காட்டுகிறவர்களுமாயிருக்கவும் உங்களை அவர் தெரிந்துகொண்டாரென்றான்.

௰௨ அப்போது கேகாத்புத்திரரில் அமாசாயின் குமாரன் மகாத்தும் அசரீயாவின் குமாரன் யோவேலும் மேராரியின் புத்திரரில் அப்தியின் குமாரன் கீசும் எகலெலின் குமாரன் அசரீயாவும் கெர்சோனியரிற் சிம்மாவின் குமாரன் யோவாகும் யோவாகின் குமாரன் ஏதேனும்,

௰௩ எலிசாப்பானின் புத்திரரிற் சிம்ரீயும் ஏயெலும் ஆசாபின் புத்திரரிற் சகரீயாவும் மத்தனீயாவும்,

௰௪ ஏமானின் புத்திரரில் எகியேலும் சிமேயியும் எதுத்தூனின் புத்திரரிற் செமாயாவும் ஊசியேலுமென்ற லேவியர் எழும்பி,

௰௫ தங்கள் சகோதரரைக்கூட்டிப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டு கர்த்தருடைய வசனங்களுக்கொத்த இராசாவினுடைய கற்பனையின்படியே கர்த்தருடைய வீட்டைச் சுத்திகரிக்க வந்தார்கள்.

௰௬ ஆசாரியர்கள் கர்த்தருடைய வீட்டின் உட்புறத்திலே சுத்திகரிக்கும்படிக்குப் பிரவேசித்துக் கர்த்தருடைய தேவாலயத்திற் கண்டுபிடித்த சகல அசுத்தத்தையும் வெளியே கர்த்தருடைய வீட்டுப் பிராகாரத்திற் கொண்டுவந்தார்கள். அப்போது லேவியர் அதை வெளியே கீதரோன் ஆற்றுக்குக் கொண்டுபோக வாங்கிக்கொண்டார்கள்.

௰௭ முதல்மாதம் முதற்றேதியிலே அவர்கள் பரிசுத்தம்பண்ணத் துவக்கி, எட்டாந்தேதியிலே கர்த்தருடைய மண்டபத்திலே பிரவேசித்துக் கர்த்தருடைய வீட்டை எட்டுநாளிற் பரிசுத்தம்பண்ணி, முதலாம் மாதம் பதினாறந்தேதியிலே அதை முடித்து,

௰௮ இராசாவாகிய இஸ்கியாவண்டைக்கு உள்ளே பிரவேசித்து, நாங்கள் கர்த்தரின் வீடனைத்தையுஞ் சர்வாங்கத்தகனபலிபீடத்தையும் அதினுடைய எல்லாப் பணிமுட்டுகளையுஞ் சமுகத்தப்பங்களின் மேசையையும் அதின் சகல பணிமுட்டுகளையுஞ் சுத்திகரித்து,

௰௯ இராசாவாகிய ஆகாஸ் அரசாளுகிறபோது, தம்முடைய பாதகத்தினாலே எறிந்துபோட்ட சகல தட்டுமுட்டுகளையும் ஆயத்தப்பாக்கிப் பரிசுத்தம்பண்ணினோம். இதோ, அவைகள் கர்த்தரின் பீடத்திற்கு முன்பாகவிருக்கின்றதென்றார்கள்.

௨௰ அப்போது இராசாவாகிய இஸ்கியா காலமேயெழுந்திருந்து பட்டணத்தின் பிரபுக்களைக் கூட்டிக்கொண்டு, கர்த்தரின் வீட்டிற்குப் போயேறினான்.

௨௰௧ அப்போது இராச்சியபாரத்திற்காகவும் பரிசுத்த ஸ்தலத்திற்காகவும் யூதாவுக்காகவும் ஏழு காளைகளையும் ஏழு ஆட்டுக்கிடாய்களையும் ஏழு ஆட்டுக்குட்டிகளையும் ஏழு வெள்ளாட்டுக்கிடாய்களையும் பாவம்போக்கும்பலியாகக் கொண்டுவந்தார்கள். அவைகளைக் கர்த்தருடைய பலிபீடத்தின்மேற் பலியிடுங்களென்று அவன் ஆசாரியராகிய ஆரோனின் புத்திரருக்குச் சொன்னான்.

௨௰௨ அப்படியே எருதுகளைக் குர்லவளையறுத்தார்கள். அந்த இரத்தத்தை ஆசாரியர் பிடித்துப் பலிபீடத்தின்மேலே தெளித்தார்கள். ஆட்டுக்கிடாய்களைக் குர்லவளையறுத்து அவைகளின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே தெளித்தார்கள். ஆட்டுக்குட்டிகளையுங் குர்லவளையறுத்து அவைகளின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே தெளித்தார்கள்.

௨௰௩ பிற்பாடு பாவம்போக்குதலின் வெள்ளாட்டுக்கிடாய்களை இராசாவுக்குஞ் சபைக்கும் முன்பாகக் கொண்டுவந்தார்கள். அவைகள்மேல் இவர்கள் தங்கள் கைகளை வைத்தார்கள்.

௨௰௪ பிற்பாடு ஆசாரியர் அவைகளைக் குர்லவளையறுத்து, இஸ்ரவேலனைத்திற்கும் பாவநிவர்த்தியுண்டாக்க அவைகளின் இரத்தத்தாற் பலிபீடத்தின்மேற் பாவ

போகிறார்கள். ஏனென்றால் இஸ்ரவேல் அனைத்திற்காகவுஞ் சர்வாங்கத்தகனபலியையும் பாவப்போக்குப்பலியையுஞ் செலுத்துங்களென்று இராசா சொல்லியிருந்தான்.

௨௫ அவன் தாவீதும் இராசாவினுடைய ஞானதிஷ்டிப்புருஷனாகிய காதும் தீர்க்கதரிசியாகிய நாத்தானுங் கற்பித்தபடியே கைத்தாளங்களையுந் தம்புருகளையுஞ் சுரமண்டலங்களையும் வாசிக்கிற லேவியரையுங் கர்த்தருடைய வீட்டிலே நிறுத்தினான். ஏனென்றால் கர்த்தரால் இந்தக்கற்பனையவருடைய தீர்க்கதரிசிகளைக்கொண்டுண்டாயிருந்தது.

௨௬ அப்படியே லேவியர் தாவீதின் கீதவாத்தியமுட்டுகளையும் ஆசாரியர்கள் பூரிகைகளையும் பிடித்து நின்றார்கள்.

௨௭ அப்போது இஸ்கியா சர்வாங்கத்தகனபலிகளைப் பலிபீடத்தின்மேலே செலுத்தக்கற்பித்தான். அதைச்செலுத்தத் துவக்கப்படுகிற நேரத்திலே கர்த்தரின் கீதமும் பூரிகைகளுந் தாவீதென்னும் இஸ்ரவேலுடைய இராசாவின் கீதவாத்தியமுட்டுகளும் முழங்கத்துவக்கிறது.

௨௮ கீதத்தைப்பாடிப் பூரிகைகளையூதிக்கொண்டிருக்கையிலே சபையெல்லாம் பணிந்துகொண்டிருந்து சர்வாங்கத்தகனத்தைச் செலுத்தித்தீருமட்டும் இப்படியெல்லாமிருந்தது.

௨௯ பலியிட்டுத்தீர்ந்தபோது இராசாவும் அவரோடிருந்த அனைவருங் குனிந்து பணிந்துகொண்டார்கள்.

௩௰ பிற்பாடு இஸ்கியா இராசாவும் பிரபுக்களும் லேவியருடனே, நீங்கள் கர்த்தரைத் தாவீதும் ஞானதிஷ்டிப்புருஷனாகிய ஆசாபும் பாடினவார்த்தைகளினாலே துதியுங்களென்றார்கள். அப்போது மகிழ்ச்சியாகுமட்டுந் துதிசெய்து குனிந்துபணிந்துகொண்டார்கள்.

௩௧ அதின்பிறகு இஸ்கியா மறுஉத்தாரமாக இப்போது நீங்கள் கர்த்தருக்கென்று உங்கள் கைகளை நிரப்பினீர்களே; ஆகையால் சேர்ந்து, கர்த்தருடைய வீட்டிற்குப் பலிகளையுந் துதியின்பலிகளையுங் கொண்டுவாருங்களென்றான். அப்போது சபையார் பலிகளையுந் துதியின் பலிகளையும் மனப்பூர்வமானவனெல்லாஞ் சர்வாங்கத்தகனபலிகளையுங் கொண்டுவந்தார்கள்.

௩௨ சபைகொண்டுவந்த சர்வாங்கத்தகனபலிகளின் தொகை எழுபது காளைகளும் நூறு ஆட்டுக்கிடாய்களும் இருநூறு ஆட்டுக்குட்டிகளுமானது. இவ்வகையெல்லாங் கர்த்தருக்குச் சர்வாங்கத்தகனமாயிற்று.

௩௩ பரிசுத்தவேலைக்குக் கொடுக்கப்பட்டவைகளோவெனில் அறுநூறு காளைகளும் மூவாயிரம் ஆடுகளுமானது.

௩௪ ஆனால் அந்தச்சர்வாங்கத்தகனமாகுஞ் சீவன்களையெல்லாந் தோலுரிக்கக்கொஞ்சப்பேரான ஆசாரியர்களால் முடியாதபடியினாலே யந்தவேலை தீருமட்டாகவும் மற்ற ஆசாரியர் தங்களைப் பரிசுத்தம் பண்ணுமட்டாகவும், அவர்கள் சகோதரராகிய லேவியர் அவர்களுக்குதவி செய்தார்கள். ஏனெனில் தங்களைப் பரிசுத்தம்பண்ண லேவியர் ஆசாரியரைப்பார்க்கிலும் மனச்செம்மையாயிருந்தார்கள்.

௩௫ ஏனென்றால் சர்வாங்கத்தகனபலிகளும் ஸ்தோத்திரப் பலிகளின் கொழுப்புகளோடுஞ் சர்வாங்கத்தகனங்களுக்கடுத்த ஊற்றுதல்களோடுங்கூட அதிகமாயிருந்தது. அப்படியே கர்த்தருடைய வீட்டின் ஆராதனை திட்டம்பண்ணப்பட்டது.

௩௬ பராபரன் சனத்தை ஆயத்தப்படுத்தினதற்காக இஸ்கியாவுஞ் சனமனைத்துஞ் சந்தோஷப்பட்டார்கள். ஏனென்றால் இந்தக்காரியந் தீவிரத்துடனே செய்யப்பட்டது.

## ௩௰. அதிகாரம்.

இஸ்கியாவின் காலத்திலே பஸ்கா ஆசரிக்கப்பட்டது.

அதின்பிறகு இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்குப் பஸ்காவை யாசரிக்கும்படிக்கு எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டிற்கு வாருங்களென்று இஸ்கியா இஸ்ரவேல் யூதாவெங்கும் ஆட்களையனுப்பி எப்பிராயீம் மனாசே கோத்திரங்களுக்கும் நிருபங்களையெழுதியனுப்பினான்.

௨ ஏனெனில் பஸ்காவை இரண்டாம் மாதத்தில் ஆசரிக்கும்படிக்கு, இராசாவும் அவனுடைய பிரபுக்களும் எருசலேமிலுள்ள சபையனைத்துமாய் யோசனைபண்ணியிருந்தார்கள்.

௩ அதேதென்றால் ஆசாரியர் போந்தபிரகாரமாய்த் தங்களைப் பரிசுத்தம்பண்ணாமலும், சனம் எருசலேமிலே யின்னங்கூடிவராமலுமிருந்தபடியினாலே, அக்காலத்திலே அதையாசரிக்கக் கூடாதேபோயிற்று.

௪ இந்தக்காரியம் இராசாவின் பார்வைக்கும் எல்லாச் சபையின் பார்வைக்கும் நியாயமாய்க்கண்டு,

௫ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்குப் பஸ்காவையாசரிக்கிறதற்கு எருசலேமுக்கு வாருங்களென்று பெயெர்செபா முதல் தாண்மட்டுமுள்ள இஸ்ரவேல் தேசமெங்கும் பறை முறையிடுவிக்கத் தீர்மானம்பண்ணினார்கள். ஏனெனில் இது வெகு கூட்டமாய் அவர்கள் அதையெழுதியிருக்கிறபடி ஆசரிக்கவில்லை.

௬ அப்படியே இராசாவும் அவனுடைய பிரபுக்களும் கொடுத்த நிருபங்களை அஞ்சல்காரர் வாங்கி இராசாவுடைய கற்பனையின்படியே இஸ்ரவேல் யூதாவெங்கும் போய்ச் சொன்னதாவது, இஸ்ரவேல் புத்திரரே! ஆபிரகாம், ஈசாக், இஸ்ரவேலுடைய பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்புங்கள். அப்போது அசூருடைய இராசாக்களின் கைக்குத் தப்பி உங்களுக்கு மீதியானவர்களண்டைக்கு அவர் திரும்புவார்.

௭ தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தருக்குத் துரோகம்பண்ணின உங்கள் பிதாக்களைப்போலும் உங்கள் சகோதரரைப்போலுமிராதேயுங்கள். அதற்காக நீங்கள் காண்கிறபடியே யவர்களைப் பாழாக்குதலுக்கொப்புக்கொடுத்தாரே.

௮ இப்போதும் உங்கள் பிதாக்களைப்போலே உங்கள் பிடரியைக் கடினப்படுத்தாதேயுங்கள். நீங்கள் கர்த்தருக்குக் கைகொடுத்து அவர் என்றுமுள்ள காலமாகப் பரிசுத்தம்பண்ணின அவருடைய பரிசுத்தஸ்தலத்திற்கு வந்து உங்கள் பராபரனாகிய கர்த்தரைச் சேவியுங்கள். அப்போது அவருடைய கோபத்தின் உக்கிரம் உங்களைவிட்டுத் திரும்பும்.

௯ ஏனெனில் நீங்கள் கர்த்தரண்டைக்குத் திரும்பினால் உங்கள் சகோதரரும் உங்கள் பிள்ளைகளும் தங்களைச் சிறைபிடித்தவர்களுக்கு முன்பாக இரக்கம்பெறுகிறதுமல்லாமல் இந்தத் தேசத்திற்குத் திரும்புகிறதற்கும் அது உதவும். அதேதென்றால் உங்கள் பராபரனாகிய கர்த்தர் கிருபையும் இரக்கமுமுள்ளவர். நீங்கள் அவரண்டைக்குத் திரும்பினால் அவர் தம்முடைய முகத்தை உங்களைவிட்டு விலக்குவதில்லையென்றார்கள்.

௰ அப்படியந்த அஞ்சல்காரர் எப்பிராயீம் மனாசே தேசங்களிலுஞ் செபுலோன் மட்டுக்கும் ஊரூராகத் திரிந்தார்கள். ஆனால் அவர்கள் இவர்களை நகைத்துப் பரியாசம்பண்ணினார்கள்.

௰௧ ஆகிலும் ஆசேரிலும் மனாசேயிலுஞ் செபுலோனிலுஞ் சிலர் மனத்தாழ்மையாகி எருசலேமுக்கு வந்தார்கள்.

௰௨ கர்த்தருடைய வார்த்தையின்படியே இராசாவும் பிரபுக்களுங் கற்பித்த பிரகாரமாகச் செய்கிறதற்கு யூதாவின் மேலும் பராபரனுடைய கரம் அவர்களையொருமனப்படுத்தவிருந்தது.

௰௩ அப்படியே இரண்டாமாதத்திற் புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையையாசரிக்க வெகுசனம் எருசலேமிலே கூடிற்று. மகா பெரிய கூட்டமாயிற்று.

௰௪ அவர்களெழும்பி எருசலேமிலுண்டான பீடங்களையகற்றித் தூபங்காட்டுந் தட்டுமுட்டுகளையெல்லாமகற்றிக் கீதரோன் ஆற்றிலே போட்டார்கள்.

௰௫ பிற்பாடு அந்த இரண்டாமாதம் பதினாலாந்தேதியிலே பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் கொல்லவேயறுத்தார்கள். ஆசாரியரும் லேவியரும் வெட்கித் தங்களைச் சுத்தம்பண்ணிச் சர்வாங்கதகனபலிகளைக் கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவந்து,

௰௬ பராபரனுடைய மனுஷனாகிய மோசேயின் நியாயப்பிரமாணத்திற்கொத்த தங்கள் முறைமையின்படியே தங்கள் தானத்திலே நின்றார்கள். ஆசாரியர் லேவியரின் கையிலே இரத்தத்தை வாங்கித் தெளித்தார்கள்.

௰௭ ஏனெனிற் சபையிலே அநேகர் தங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொள்ளாதிருந்தார்கள். ஆகையாற் சுத்தமில்லாத எல்லாரையுங் கர்த்தருக்குப் பரிசுத்தம்பண்ண, லேவியர் அவர்களுக்காகப் பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் கொல்லவேயறுக்கும் வேலையை விசாரித்தார்கள்.

௰௮ அதேதென்றால் எப்பிராயீம் மனாசே இசக்கார் செபுலோன் மனுஷரில் ஏராளமான அநேகஞ்சனஞ் சுத்தம்பண்ணிக்கொள்ளாதிருந்தும் எழுதியிராதபிரகாரமாகப் பஸ்காவைச் சாப்பிட்டார்கள்.

௰௯ ஏனெனில் இஸ்கியா அவர்களுக்காக விண்ணப்பம்பண்ணித் தங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்தரான பராபரனைத் தேடும்படிக்குத் தங்களிருதயத்தைத் நேராக்கினவர்கள் பரிசுத்தஸ்தலத்திற் சுத்தாங்கம்பண்ணாதிருந்தாலுங் கிருபையுள்ள பராபரன் அவர்களெல்லாருக்கும் மன்னிப்பாராகவென்றான்.

௨௰ கர்த்தர் இஸ்கியாவின் விண்ணப்பங்கேட்டுச் சனத்திற்கு ஆரோக்கியங்கொடுத்தார்.

௨௰௧ அப்படியே எருசலேமிலே காணப்பட்ட இஸ்ரவேல் புத்திரர் புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையை ஏழுநாளாக

மகாமகிழ்ச்சியோடே யாசரித்தார்கள். லேவியரும் ஆசாரியரும் தினந்தினங் கர்த்தருக்கென்று ஓசையாய்த் தொனிக்கும் கீதவாத்தியங்களாற் கர்த்தரைத் துதித்துக்கொண்டிருந்தார்கள்.

௨௨ கர்த்தருக்கடுத்த காரியத்திலே நல்ல உணர்வுள்ள எல்லா லேவியரோடும் எஸேக்கியா பட்சமாய்ப் பேசினான். இப்படியவர்கள் பண்டிகைக்கானதை ஏழுநாட் பொசித்துஸ்தோத்திரப்பலிகளைச் செலுத்தித் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரைத் துதித்துக்கொண்டிருந்தபிறபாடு,

௨௩ வேறே ஏழுநாளையாசரிக்கச் சபையெல்லாம் யோசனைபண்ணி, அந்த ஏழு நாளையும் மகிழ்ச்சியோடே ஆசரித்தார்கள்.

௨௪ ஏனெனில் யூதாவின் இராசாவாகிய எஸேக்கியா சபைக்கு ஆயிரங் காளைகளையும் ஏழாயிரம் ஆடுகளையுங் கொடுத்தான். பிரபுக்களுஞ் சபைக்கு ஆயிரங் காளைகளையும் பதினாயிரம் ஆடுகளையுங் கொடுத்தார்கள். ஆசாரியரில் திரளான பேர்கள் தங்களைச் சுத்தம்பண்ணினார்கள்

௨௫ யூதாவின் சபையனைத்தும் ஆசாரியரும் லேவியரும் இஸ்ரவேலிலிருந்து வந்தவர்களுடைய சபையனைத்துமாகிய இஸ்ரவேல் தேசத்திலிருந்து வந்த அந்நியரும் யூதாவிற் குடியிருக்கிறவர்களும் மகிழ்ச்சியாயிருந்தார்கள்.

௨௬ அப்படியே எருசலேமில் மகாசந்தோஷமுண்டாயிருந்தது. ஏனெனில் தாவீதின் குமாரனாகிய சாலொமோனென்ற இஸ்ரவேலுடைய இராசாவின் நாட்கள் முதற்கொண்டு இப்படிக்கொத்தது எருசலேமில் நடந்ததில்லை.

௨௭ லேவியரான ஆசாரியர்கள் எழுந்து நின்று சனத்தையாசீர்வதித்தார்கள். அவர்களுடைய சத்தங் கேட்கப்பட்டு, அவர்கள் விண்ணப்பம் பரமண்டலங்களிலுள்ள அவருடைய பரிசுத்த வாசஸ்தலத்திற் சேர்ந்தது.

## ௩௧. அதிகாரம்.

இஸ்கியா விக்கிரகவேலையையெல்லாம் நிர்மூலமாக்கி, ஆசாரியரையும் லேவியரையும் பராமரித்தது.

இதையெல்லாம் முடித்தபிறபாடு வந்திருந்த இஸ்ரவேலரெல்லாம் யூதாவின் பட்டணங்களுக்குப் புறப்பட்டுப்போய் யூதாவெங்குமின்னுந்தம். எப்பிராயீமிலும் மனாசேயிலுங்கூட உண்டான சிலைகளையுடைத்துத் தோப்புகளை வெட்டி மேடைகளையும் பீடங்களையுமிடித்து அதையெல்லாம் நிர்த்தூளிப்பண்ணினபிறபாடு இஸ்ரவேல் புத்திரரெல்லாம் அவரவர் தங்கள் ஊர்களிலே திருந்த தங்கள் காணியாட்சிக்குத் திரும்பினார்கள்.

௨ இஸ்கியா ஆசாரியர்கள் லேவியருடைய வகுப்புகளையவர்கள் வரிசைகளின்படியேயும் அவரவரையவர்களூழியத்தின்படியேயும் திட்டப்படுத்தி, ஆசாரியரையும் லேவியரையுஞ் சர்வாங்கத் தகனத்தையும் ஸ்தோத்திர பலிகளையுஞ் செலுத்தவுங் கர்த்தருடைய பாளயத்தின் வாசல்களில் ஊழியஞ்செய்து துதித்து ஸ்தோத்திரிக்கவும் வரிசைப்படுத்தினான்.

௩ இராசா கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடியே காலைச் சந்தியில் செலுத்தும் சர்வாங்கத் தகனபலிகளுக்கும் ஓய்வுநாட்களிலும் மாதப்பிறப்புகளிலும் பண்டிகைகளிலுஞ் செலுத்துஞ் சர்வாங்கத் தகன பலிகளுக்குந் தன்னுடைய ஆஸ்தியிலே தன்பங்கைக் கொடுத்து,

௪ ஆசாரியரும் லேவியருங் கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தைத் திடனுடன் கைக்கொள்ளும்படிக்கு அவர்களுக்கவர்கள் பங்கைக் கொடுக்கச் சனத்திற்கும் எருசலேமின் குடிகளுக்குங் கற்பித்தான்.

௫ இந்த வார்த்தை பிரசித்தமானபோது இஸ்ரவேல் புத்திரர் தானியத்திலும் திராட்சப்பழ ரசத்திலும் எண்ணெயிலும் தேனிலும் நிலத்தின் எல்லாவர்த்தியிலும் முதற்பலன்களைத் திரளாகக் கொண்டுவந்து சகலத்திலும் பத்திலொன்றைப் பரிபூர்ணமாய்க் கொண்டுவந்தார்கள்.

௬ யூதாவின் பட்டணங்களிற் குடியிருந்த இஸ்ரவேல் புத்திரருங்கூட யூதபுத்திரரும் மாடுகளிலும் ஆடுகளிலும் பத்திலொன்றையுந் தங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பரிசுத்தம்பண்ணப்பட்டவைகளிற் பத்திலொன்றையுங் கொண்டுவந்து, அம்பாரங்களாகக் கொட்டினார்கள்.

௭ மூன்றாம் மாதத்திலே அம்பாரங்களைப் போடத் துவக்கம்பண்ணி, ஏழாம் மாதத்திலே முடித்துப்போட்டார்கள்.

௮ இஸ்கியாவும் பிரபுக்களும் வந்திருந்த அம்பாரங்களைக் கண்டபோது கர்த்தருக்கு ஸ்தோத்திரஞ் செலுத்தி அவருடைய சனமாகிய இஸ்ரவேலைப் புகழ்ந்தார்கள்.

௯ அந்த அம்பாரங்களைக் குறித்து இஸ்கியா ஆசாரியரையும் லேவியரையுங் கேட்டு விசாரித்தபோது,

௰ சாதோக்கின் சந்ததியானாகிய அசரியாவென்கிற பிரதான ஆசாரியன் அவனுடனே சொன்னதாவது, இந்தக் காணிக்கைகளைக் கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரத் துவக்கினது முதல் நாங்கள் சாப்பிட்டுத் திருப்தியடைந்தோம். நிரம்ப மீதியுமாயிருக்கின்றது. ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தை ஆசீர்வதித்ததினாலே இந்தத் திரட்சியுள்ள அம்பாரம் மீந்து வைக்கப்பட்டிருக்கின்றதென்றான்.

௰௧ அப்போது இஸ்கியா கர்த்தருடைய வீட்டில் அறைகளை ஆயத்தப்படுத்தச் சொன்னான்.

௰௨ அவைகளை ஆயத்தப்படுத்தின பின், அவர்கள் அவைகளிலே காணிக்கைகளையும் பத்திலொரு பங்கானதையும் பரிசுத்தம்பண்ணப்பட்டவைகளையும் உண்மையாய் எடுத்துவைத்தார்கள். அவைகளின்மேல் லேவியனாகிய கொனனியா தலைவனும் அவன் தம்பியாகிய சிமேயி இரண்டாவதுமாயிருந்தான்.

௰௩ ஆனால் இராசாவாகிய இஸ்கியாவும் பர்ரபரனுடைய வீட்டுத் தலைவனாகிய அசரியாவும் பண்ணின கட்டளையின்படியே எகியேலும் அசசியாவும் நாகாதும் ஆசகேலும் எரிமோதும் யோசபாதும் எலியேலும் இஸ்மகியாவும் மாகாதும் பெனாயாவும் கொனனியாவின் கீழும் அவன் தம்பியாகிய சிமேயியின் கீழும் விசாரிப்புக்காரராயிருந்தார்கள்.

௰௪ ஆனால் இம்னாவின் குமாரனாகிய கோரே என்கிற கிழக்குவாசலைக் காக்கிற லேவியன் கர்த்தருக்குச் செலுத்தப்பட்ட காணிக்கைகளையும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானவைகளையும் பங்கிடும்படிக்குப் பர்ரபரனுக்குச் சென்ற உச்சாயக் காணிக்கைகள்மேல் அதிகாரியானவன்.

௰௫ அவனுடைய கைக்குதவியாக ஆசாரியரின் பட்டணங்களில் வகுப்புகளின்படியிருக்கிற தங்கள் சகோதரரிலே பெரியவனுக்கும் சிறியவனுக்கும் சரிசமானமாய்க் கொடுக்கும்படிக்கு உண்மையுள்ளவர்களாக வேண்டப்பட்ட ஏதேனும் மின்யமீனும் எசுவாவும் செமயாவும் அமரியாவும் செக்கனியாவுமிருந்தார்கள்.

௰௬ வம்சத்தட்டவணைகளில் எழுதப்பட்ட மூன்று வயதுமுதற்கொண்டு அதற்கு மேன்தர்மாயிருந்த ஆண்பிள்ளைகளையும் நதவிக் கர்த்தருடைய வீட்டிற்குட்பிரவேசிக்கிற அவரவருக்குத் தங்கள் வகுப்புகளின்படியே தங்கள் முறைகளிலே தாங்கள் செய்கிற தங்கள் பணிவிடைக்குத் தக்க அனுகூலமான திட்டம் கொடுக்கப்பட்டது.

௰௭ தங்கள் பிதாக்களின் வம்சத்தட்டவணைகளில் எழுதப்பட்ட தங்கள் வகுப்புகளின்படியே தங்கள் முறைகளிலிருக்கிற இருபது வயதுமுதற்கொண்டு அதற்கு மேன்தர்மான ஆசாரியருக்கும் லேவியருக்கும்,

௰௮ அவர்களுடைய எல்லாக்கூட்டத்தின் அட்டவணையில் எழுதப்பட்ட அவர்களுடைய எல்லாக் குழந்தைகளுக்கும் பெண்சாதிகளுக்கும் குமாரருக்கும் குமாரத்திகளுக்குங்கூடக் கொடுத்தார்கள். ஏனென்றால் பரிசுத்தமானதைத் தங்கள் உண்மையின்படியே பரிசுத்தமாய் விசாரித்தார்கள்.

௰௯ ஆசாரியரில் எல்லா ஆண்பிள்ளைகளுக்கும் லேவியருக்குள்ளே அட்டவணையில் எழுதப்பட்டவர்களெல்லாருக்கும் படிகளைக் கொடுக்க, ஆசாரியருடைய வெவ்வேறு பட்டணத்து வெளிப்பாளயங்களிலே ஆரோன் புத்திரரிற் பேர்பேராகக் குறிக்கப்பட்ட மனுஷரிருந்தார்கள்.

௨௰ இந்தப்பிரகாரமாக இஸ்கியா யூதாவெங்கும் நடப்பித்துத் தன்னுடைய பர்ரபரனாகிய கர்த்தருக்கு முன்பாக நன்றும் செம்மையும் உண்மையுமானதைச் செய்தான்.

௨௰௧ அவன் பர்ரபரனுடைய வீட்டின் வேலையிலும் தன்னுடைய பர்ரபரனைத் தேடும்படிக்கு நியாயப்பிரமாணத்திலுங் கற்பனைக்கும் அடுத்த காரியத்திலும் என்னசெய்யத்துவக்கினானோ, அதையெல்லாம் தன் முழு இருதயத்தோடுஞ் செய்து பாக்கியமுள்ளவனாயிருந்தான்.

## ௩௨. அதிகாரம்.

இஸ்கியா அசூரிய இராசாவின் கைக்கு அதிசயமாய் நீங்கி விடுதலையாக்கப்பட்டது.

இந்த நடபடிகளுக்கும் உண்மைக்கும் பிற்பாடு அசூரின் இராசாவாகிய சனகெரிப் வந்து யூதாவுக்குட் பிரவேசித்து, அரணான பட்டணங்களுக்கு எதிராகப் பாளயமிறங்கி அவைகளைத் தன்வசமாக்கிக்கொள்ள நினைத்தான்.

௨ சன்கெரிப் வந்து எருசலேமின்மேல் யுத்தம்பண்ணத் தன் முகத்தைத் திருப்பினதை இஸ்கியா கண்டபோது,

௩ பட்டணத்திற்குப் புறம்பேயிருக்கிற ஊற்றுகளைத் தூர்த்துப்போடத் தன்னு

டையபிரபுக்களோடுந் தன்னுடைய பராக்கிரமசாலிகளோடும் ஆலோசனை பண்ணினான். அதற்காக அவனுக்கு ஒத்தாசை பண்ணினார்கள்.

௪ அப்படியே அநேக சனங்கூடி: அசீரிய இராசாக்கள் வந்து அநேகந் தண்ணீரைக் கண்டுபிடிப்பானேன்? என்று, எல்லா ஊற்றுகளையும் நடுத்தேசத்திலே பாயும் ஆற்றையும் அடைத்துப் போட்டார்கள்.

௫ அவன் பலன்கொண்டு இடிந்துபோன மதிலையெல்லாங் கட்டி அதையும் வெளியிலுள்ள மற்ற மதிலையுங் கொத்தளங்கள் மட்டும் உயர்த்தி தாவீதுடைய பட்டணத்தின் கோட்டையைப் பலப்படுத்தித் திரளான ஆயுதங்களையுங் கேடயங்களையும் பண்ணுவித்து,

௬ சனத்தின்மேலே படைத்தலைவரை வைத்து, அவர்களைப் பட்டணவாசலின் வீதியிலே தன்னண்டையிற் கூட்டிக்கொண்டு, அவர்களுடனே பட்சமாய்ப் பேசிச் சொன்னதாவது,

௭ பலன்கொண்டு தயிரியமாயிருங்கள். அசீரிய இராசாவுக்கும் அவனோடிருக்கிற எல்லா ஏராளத்திற்கும் பயப்படாமலுங் கலங்காமலுமிருங்கள். ஏனெனில் அவனோடிருக்கிறவர்களைப் பார்க்க நம்மோடிருக்கிறவர்கள் அதிகமானவர்கள்.

௮ அவனோடிருக்கிறது மாம்ச புயம். ஆனால் நமக்குச் சகாயம்பண்ணவும் நம்முடைய யுத்தங்களை நடத்தவும் நம்மோடிருக்கிறவர் நம்முடைய பராபரனாகிய கர்த்தர்தாமே என்றான். யூதாவின் இராசாவாகிய இஸ்கியா சொன்ன இந்த வார்த்தைகளின் பேரிலே சனம் நம்பிக்கை வைத்தது.

௯ இதின் பிறகு அசீரிய இராசாவாகிய சனகெரிப் தானுந் தன் சேனையினிலிருக்கிறவர்களுமாய் லாகீசுக்கெதிராயிருக்கக்கொள்ள, யூதாவின் இராசாவாகிய இஸ்கியாவண்டைக்கும் எருசலேமிலிருக்கிற எல்லா யூதசனத்தண்டைக்குந் தன்னூழியக்காரரையனுப்பிச் சொல்லச்சொன்னதாவது,

௰ அசீரிய இராசாவாகிய சனகெரிப் சொல்லுகிறதென்னவெனில், முற்றிக்கைப் போடப்படும் எருசலேமிலே நீங்களிருக்கும்படிக்கு நீங்கள் எதின்பேரிலே நம்பிக்கையாயிருக்கிறீர்கள்?

௰௧ நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நம்மை அசீருடைய இராசாவினுடைய கைக்குத் தப்பப்பண்ணுவாரென்று இஸ்கியா சொல்லி உங்களைப் பசியினாலுந் தாகத்தினாலும் உங்களைச் சாவப்பண்ணப் பிறவிக்கிறானல்லவோ?

௰௨ அவனுடைய மேடைகளையும் அவனுடைய பீடங்களையுந் தள்ளிப்போட்டவனும், ஒரே பீடத்திற்கு முன்பாகப் பணிந்து, அதின்மேலே தூபங்காட்டுங்களென்று யூதாவுக்கும் எருசலேமியாருக்குஞ் சொன்னவனும் அந்த இஸ்கியாதானல்லவோ?

௰௩ நானும் நம்முடைய பிதாக்களுந் தேசங்களின் சகல சனசதளங்களுக்குஞ் செய்ததையறியீர்களோ? அந்தத் தேசங்களுடைய சாதிகளின் தேவர்கள் அவர்கள் தேசத்தை நம்முடைய கைக்குத் தப்பப்பண்ண அவர்களுக்குப் பலனிருக்கவேயிருந்ததோ?

௰௪ உங்கள் பராபரன் உங்களை நம்முடைய கைக்குத் தப்புவிக்கக்கூடுமட்டுக்கு நம்முடைய பிதாக்கள் பாழாக்கின அந்தச் சாதிகளுடைய எல்லாத் தேவர்களிலும் எவன் தன்னுடைய சனத்தை நம்முடைய கைக்குத் தப்புவிக்கப் பலனாயிருந்தான்.

௰௫ இப்போதும் இஸ்கியா உங்களை மோசம்போக்கவும் இப்படி உங்களைப் பிறவிக்கவும் வேண்டாம். நீங்கள் அவனை நம்பாதேயுங்கள். ஏனென்றால் எந்தச் சாதிக்கும் எந்த இராச்சியத்திற்கும் இருந்த யாதொரு தேவன் தன்னுடைய சனத்தை நம்முடைய கைக்கும் நம்முடைய பிதாக்களின் கைக்குந் தப்புவிக்கக்கூடாதிருந்ததே? உங்கள் தேவன் உங்களை நம்முடைய கைக்குத் தப்புவிப்பதெப்படி? என்கிறோமென்று சொல்லி,

௰௬ அவனுடைய ஊழியக்காரர் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகவும் அவருடைய தாசனாகிய இஸ்கியாவுக்கு விரோதமாகவும் பின்னையும் அதிகமாய்ப் பேசினார்கள்.

௰௭ தேசங்களுடைய சாதிகளின் தேவர்கள் தங்கள் சனத்தை என் கைக்குத் தப்புவிக்காதிருந்ததுபோல, இஸ்கியாவின் தேவனுந் தன்னுடைய சனத்தை என் கைக்குத் தப்புவிப்பதில்லையென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரை நிந்திக்கவும் அவருக்கு விரோதமாகப் பேசவும் அவன் நிருபங்களையும் எழுதினான்.

௰௮ அலங்கத்தின்மேலிருக்கிற எருசலேமின் சனத்தைப் பயப்படுத்திக் கலங்கப்பண்ணும்படிக்குத் தாங்கள் பட்டணத்தைப் பிடிக்கும்படிக்கு, அவர்கள் அ-

தைப்பார்த்து யூதபாஷையிலே மகாசத்தத்தோடே கூப்பிட்டு,

௧௯ மனுஷகைகளின் வேலையான பூசக்கர்ச்சனச்சனங்களின் தேவர்களைக்குறித்துப் பேசுகிறபிரகாரமாக எருசலேமின் பராபரனைக்குறித்தும் பேசினார்கள்.

௨௰ இதினிமித்தம் இராசாவாகிய இஸ்கியாவும் ஆமோத்சின் குமாரனாகிய எசாயாதீர்க்கதரிசியுஞ் செபம்பண்ணிவானத்தையண்ணாந்து கூப்பிட்டுக்கொண்டிருந்தார்கள்.

௨௧ அப்போது கர்த்தர் ஒரு தூதனையனுப்பினார். இவன் அசூருடைய இராசாவின் பாளயத்திலுள்ள சகல பராக்கிரமசாலிகளையுந் தலைவர்களையுஞ் சேர்வைக்காரரையும் அதம்பண்ணினான். அப்படியேயவன் வெட்கமுகமாய்த் தன் தேசத்துக்குத் திரும்பினான். அங்கேயவன் தன் தேவனுடைய வீட்டிற்குட் பிரவேசிக்கும்போது அவனுடைய கெர்ப்பத்திற் பிறந்தவர்களில் சிலரவனைப் பட்டயத்தால் மடிவித்தார்கள்.

௨௨ இப்படிக் கர்த்தர் இஸ்கியாவையும் எருசலேமின் குடிகளையும் அசூருடைய இராசாவாகிய சனகெரிபின் கைக்கும் எல்லாருடைய கைக்கும் நீங்கலாக்கி ரட்சித்துச் சுற்றுப்புறத்தாருக்கு விலக்கியாதரித்து நடத்தினார்.

௨௩ அநேகம்பேர் கர்த்தருக்கென்று எருசலேமுக்குக் காணிக்கைகளையும் யூதாவின் இராசாவாகிய இஸ்கியாவுக்கு உச்சிதங்களையுங் கொண்டுவந்தார்கள். அவன் இதற்குப் பிற்பாடு எல்லாச்சாதிகளின் பார்வைக்கும் மேன்மைப்பட்டவனாயிருந்தான்.

௨௪ அந்நாட்களில் இஸ்கியா சாவுக்கினமாய் வியாதிப்பட்டான். அவன் கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணும்போது அவர் அவனுக்குவாக்குத்தத்தம்பண்ணி யொரு அற்புதத்தையவனுக்குக் கட்டளையிட்டார்.

௨௫ ஆனால் இஸ்கியா தனக்குச் செய்யப்பட்ட உபகாரத்திற்குத் தக்கதாய்ச் செய்யவில்லை. அதேதெனில் மனமேட்டிமையானான். ஆகையால் அவன்மேலும் யூதாவின்மேலும் எருசலேமின்மேலுங் கோபமுண்டாயிற்று.

௨௬ ஆனால் தன்னுடையமனமேட்டிமையினிமித்தம் இஸ்கியாவும் எருசலேமின் குடிகளுந் தங்களைத் தாழ்த்தினபடியினாலே கர்த்தருடையகோபம் இஸ்கியாவின் நாட்களிலேயவர்கள்மேல் வந்ததில்லை.

௨௭ இஸ்கியாவுக்கு மிகுதியான ஐசுவரியமுங் கனமுமுண்டாயிருந்தது. வெள்ளியும் பொன்னும் இரத்தினங்களுஞ் சுகந்தவர்க்கங்களுங் கேடயங்களும் இச்சிக்கப்பட்டதக்க சகலவித தட்டுமுட்டுகளுமான பொக்கிஷங்களையும்,

௨௮ தானியம் திராட்சரசம் எண்ணெயினுடையவர்த்துகளை வைக்குங் கிடங்குகளையுஞ் சகலவகையுள்ள மிருகசீவன்களுக்குக் கொட்டாரங்களையும் மந்தைகளுக்குத் தொழுவங்களையும் உண்டாக்கினான்.

௨௯ அவன் தனக்குப் பட்டணங்களைக் கட்டுவித்து ஏராளமான ஆடுமாடுகளை வைத்திருந்தான். ஏனென்றாற் பராபரன் அவனுக்கு மகாதிரள் ஆஸ்தியைக்கொடுத்தார்.

௩௰ இந்த இஸ்கியா கீகோனென்றதண்ணீரின்மேல் ஆற்றுக்காலையடைத்து, அதைமேற்கேயிருந்து தாழத் தாவீதின் பட்டணத்திற்கு நேராகத் திருப்பினான். ஏனெனில் இஸ்கியாவுக்கு அவன் செய்கையெல்லாம் கைகூடிவந்தது.

௩௧ ஆகிலும் பாபேலுடைய பிரபுக்களின் தானாபதிகள் தேசத்திலே நடந்த அற்புதத்தைக்கேட்க அவனண்டைக்கனுப்பப்பட்டுவருகையில், அவனிருதயத்திலுண்டானதெல்லாவற்றையும் அறியும்படிக்கு அவனைச் சோதிக்கிறதற்காகப் பராபரன் அவனைக்கைவிட்டார்.

௩௨ இஸ்கியாவின் மற்றவர்த்தமானங்களும் அவனுடைய உபகாரங்களுமோவென்றால், இதோ, அவைகள் ஆமோத்சின் குமாரனாகிய எசாயா தீர்க்கதரிசியின் தரிசனத்திலும் யூதா இஸ்ரவேல் இராசாக்களின் புஸ்தகத்திலும் எழுதியிருக்கின்றது.

௩௩ இஸ்கியா தன் பிதாக்களோடே நித்திரை அடைந்தபின் அவனைத் தாவீதுடைய குமாரரின் கல்லறைகளுக்கு உயர அடக்கம்பண்ணினார்கள். யூதாவனைத்தும் எருசலேமின்குடிகளும் அவன் மரணத்திலே யவனைக்கனம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய மனாசே அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௩௩. அதிகாரம்.

மனாசே ஆமோனென்றவர்களின் இராச்சியபாரம்.

மனாசே இராசாவாகிறபோது பன்னிரண்டுவயதாயிருந்து, ஐம்பத்தைந்து

வருஷம் எருசலேமிலே அரசாண்டான்.

௨ கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே அவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௩ அவன் தன் தகப்பனாகிய இஸ்கியா தகர்த்துப்போட்ட மேடைகளைத் திரும்பக் கட்டிப் பாகால்களுக்குப் பலிபீடங்களை எழுப்பித் தோப்புகளை உண்டுபண்ணி, வானத்தின் சேனையையெல்லாம் பணிந்துகொண்டு அவைகளைச் சேவித்து,

௪ எருசலேமிலே நம்முடைய நாமம் என்றென்றைக்கும் இருக்குமென்று கர்த்தர் சொன்ன தம்முடைய வீட்டிலே பலிபீடங்களைக் கட்டி,

௫ கர்த்தருடைய வீட்டின் இரண்டு பிராகாரங்களிலும் வானத்தின் சேனைக்கெல்லாம் பலிபீடங்களைக் கட்டினான்.

௬ அவன் இன்னோமின் குமாரனின் பள்ளத்தாக்கிலே தன் குமாரரைத் தீமிதிக்கப்பண்ணிச் சகுனமும் நிமித்தமும் பார்த்துச் சூனியம் பண்ணி, அஞ்சனம் பார்க்கிறவர்களையுங் குறிகாரரையும் வைத்துக் கர்த்தருக்குக் கோபமுண்டாகக் அவர் பார்வைக்கு மிகுதியும் பொல்லாப்பானதைச் செய்தான்.

௭ இந்த வீட்டிலும் இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாம் நான் தெரிந்துகொண்ட எருசலேமிலும் நம்முடைய நாமத்தை என்றென்றைக்கும் இருக்கப்பண்ணுவோமென்றும்,

௮ நாம் மோசேயைக்கொண்டு இஸ்ரவேலுக்குக் கொடுத்த சகல நியாயப்பிரமாணத்திற்கும் கட்டளைகளுக்கும் நியாயங்களுக்கும் ஒத்தபடியே அவர்கள் நாம் அவர்களுக்குக் கற்பித்ததை எல்லாஞ்செய்யச் சாவதானமாயிருந்தார்களேயாகில் நாம் இனியவர்கள் காலை அவர்கள் பிதாக்களுக்கு நாம் ஸ்தாபித்து வைத்த பூமியிலிருந்து விலகப்பண்ணுவதில்லையென்றும் பராபரன் தாவீதோடும் அவன் குமாரனாகிய சாலொமோனோடுஞ் சொன்ன பராபரனுடைய வீட்டிலேதானே அவன் தான் பண்ணுவித்த சுரூபமான சிலையை வைத்தான்.

௯ அப்படியே கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அழித்த சாதிகளைப் பார்க்க யூதாவும் எருசலேமின் குடிகளும் பொல்லாப்புச் செய்யத் தக்கதாய் மனாசே அவர்களை வழிதப்பிப் போகப்பண்ணினான்.

௰ கர்த்தர் மனாசேயோடும் அவனுடைய சனத்தோடும் பேசுவித்தாலும் அவர்கள் கவனிக்காதே போனார்கள்.

௰௧ ஆகையாற் கர்த்தர் அசீரிய இராசாவுக்கிருக்கிற சேனாதிபதிகளை அவர்கள் மேல் வரப்பண்ணினார். இவர்கள் முட்செடிகளில் மனாசேயைப் பிடித்து இரண்டு வெண்கலச் சங்கிலியால் அவனைக் கட்டிப் பாபேலுக்குக் கொண்டுபோனார்கள்.

௰௨ இப்படியவன் நெருக்கப்படுகையில் அவன் தன் பராபரனாகிய கர்த்தரை நோக்கிக் கெஞ்சித் தன் பிதாக்களின் பராபரனுக்கு முன்பாக மிகவுந் தன்னைத் தாழ்த்தினான்.

௰௩ அவரை நோக்கி அவன் விண்ணப்பம்பண்ணிக்கொண்டிருக்கிறபோது அவர் அவன் கெஞ்சுதலுக்கு இரங்கி, அவன் செபத்தைக் கேட்டு, அவனைத் திரும்ப எருசலேமுக்குத் தன் இராச்சியபாரத்திற்கு வரப்பண்ணினார். கர்த்தரே பராபரனென்று அப்போது மனாசே அறிந்தான்.

௰௪ அதற்குப் பிறபாடு அவன் தாவீதுடைய பட்டணத்தின் வெளியலங்கத்தைக் கீகோனுக்கு மேற்கேயிருக்கிற பள்ளத்தாக்கைத் துவக்கி மீன்வாசல் மட்டுங் கட்டி, அதை ஒபேலைச் சுற்றிலும் நடத்தி, அதை மிகவும் உயர்த்தி யூதாவிலுள்ள அரணான பட்டணங்களிலெல்லாம் இராணுவத் தலைவரை வைத்து,

௰௫ அந்நிய தேவர்களையும் அந்தச் சுரூபத்தையுங் கர்த்தருடைய வீட்டிலிருந்து எறிந்துபோட்டுக் கர்த்தருடைய வீட்டுள்ள பர்வதத்திலும் எருசலேமிலுந் தான் கட்டியிருந்த எல்லாப் பலிபீடங்களையும் அகற்றிப் பட்டணத்திற்குப் புறம்பாகப் போடுவித்து,

௰௬ கர்த்தருடைய பலிபீடத்தைச் செப்பனிட்டு, அதின்மேல் ஸ்தோத்திரப்பலிகளையும் நன்றிப்பலிகளையுஞ் செலுத்தி, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைச் சேவிக்கவேண்டுமென்று யூதாவுக்குக் கற்பித்தான்.

௰௭ ஆகிலுஞ் சனமின்னம் மேடைகளிற் பலியிடுவார்கள். ஆகிலும் அந்தச் சனம் பராபரனாகிய கர்த்தருக்கென்று செய்வார்கள்.

௰௮ மனாசேயின் மற்ற வர்த்தமானங்களும் அவன் தன் பராபரனை நோக்கப்பண்ணின விண்ணப்பமும் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் நாமத்தினால் அவனோடே பேசின ஞானதிஷ்டிப் புருஷரின் வார்த்தைகளும், இதோ, அவைகள் இஸ

ர்வேல் இராசாக்களின் பிரபந்தத்திலெழுதியிருக்கிறது.

௧௯ அவனுடைய விண்ணப்பமும் அவன் கெஞ்சுதலுக்கவர் இரங்கினதும் அவன் தன்னைத் தாழ்த்தாததற்கு முன்னே பண்ணின அவனுடைய எல்லாப் பாவமும் துரோகமும், அவன் மேடைகளைக் கட்டித் தோப்புகளையுஞ் சுரூபங்களையும் ஸ்தாபித்த இடங்களும், இதோ, ஓசாயின் பிரபந்தத்திலெழுதியிருக்கிறது.

௨௰ மனாசே தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனை அவன் வீட்டிலே அடக்கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய ஆமோன் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௨௧ ஆமோன் இராசாவானபோது இருபத்திரண்டு வயதாயிருந்து இரண்டு வருஷமாய் எருசலேமில் அரசாண்டான்.

௨௨ அவன் தன் தகப்பனாகிய மனாசே செய்திருந்தபடி கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். தன் தகப்பனாகிய மனாசே பண்ணுவித்திருந்த சுரூபங்களுக்கெல்லாம் ஆமோன் பலியிட்டு அவைகளைச் சேவித்தான்.

௨௩ ஆனால் தன் தகப்பனாகிய மனாசே தன்னைத் தாழ்த்திக்கொண்டதுபோலே இந்த ஆமோனென்றவன் கர்த்தருக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்தாமல் தன் குற்றத்தைப் பெருகப்பண்ணினான்.

௨௪ அவன் ஊழியக்காரர் அவனுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணி, அவனை அவன் வீட்டிலே கொன்று போட்டார்கள்.

௨௫ அப்போது தேசச்சனம் ஆமோனென்ற இராசாவுக்கு விரோதமாய் ஒப்பந்தம் பண்ணின யாவரையும் வெட்டிப் போட்டு, அவன் குமாரனாகிய யோசியாவை அவன் ஸ்தலத்திலே இராசாவாக்கினார்கள்.

## ௩௪. அதிகாரம்

யோசியாவென்ற தெய்வபத்தியுள்ள இராசா தெய்வ ஆராதனைக்காகக் காண்பித்த பத்திவயிராக்கியம்.

யோசியா இராசாவாகிற போது எட்டுவயதாயிருந்து, முப்பத்தொருவருஷம் எருசலேமில் அரசாண்டான்.

௨ அவன் கர்த்தருடைய பார்வைக்குச் செம்மையானதைச் செய்து, தன் தகப்பனாகிய தாவீதின் வழிகளில் வலது இடதுபுறமாக விலகாமல் நடந்தான்.

௩ அவன் தன் இராச்சியபாரத்தின் எட்டாம் வருஷத்தில், தான் இன்னும் இளவயதாயிருக்கக்கொள்ள, தன் தகப்பனாகிய தாவீதின் பராபரனைத் தேடத்துவக்கிப் பன்னிரண்டாம் வருஷத்தில் யூதாவையும் எருசலேமையும் மேடைகள் தோப்புகள் சுரூபங்கள் விக்கிரகங்களும் அற்சுத்திகரிக்கத்துவக்கினான்.

௪ அவனுக்கு முன்பாகப் பாகால்களின் பலிபீடங்களை இடித்தார்கள். உயர அவைகள் மேலிருந்த சிலைகளை வெட்டித் தோப்புகளையுஞ் சுரூபங்களையும் விக்கிரகங்களையும் உடைத்து நொறுக்கி, அவைகளுக்குப் பலியிட்டவர்களுடைய பிரேதக்குழிகளின்மேல் தெளித்தான்.

௫ பூசாரிகளின் எலும்புகளை அவர்களுடைய பீடங்களின்மேற் சுட்டெரித்து, இப்படியே யூதாவையும் எருசலேமையுஞ் சுத்திகரித்தான்.

௬ அப்படித்தானே மனாசே எப்பிராயீம் சிமேயோனிலுமுள்ள பட்டணங்களிலும் நப்தலிமட்டும் பாழான அவைகளின் சுற்றுப்புறங்களிலுஞ் செய்தான்.

௭ அவன் இஸ்ரவேல் தேசமெங்குமுள்ள பலிபீடங்களையுந் தோப்புகளையுந் தகர்த்துச் சுரூபங்களை நொறுக்கித் தூளாக்கி, எல்லாச் சிலைகளையும் வெட்டிப்போட்ட பிற்பாடு எருசலேமுக்குத் திரும்பினான்.

௮ அவன் தேசத்தையும் வீட்டையுஞ் சுத்திகரித்தபிறகு, அவன் தன் இராச்சியபாரத்தின் பதினெட்டாம் வருஷத்திலே அச்சலியாவின் குமாரனாகிய சாப்பானையும் பட்டணத்தலைவனாகிய மாசெயாவையும் யோவாகாசின் குமாரனாகிய யோவாவென்ற மந்திரியையுந் தன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டைப் பழுதுபார்க்கும்படிக்கு அனுப்பினான்.

௯ அவர்கள் பிரதான ஆசாரியனாகிய இல்க்கியாவண்டைக்கு வந்து, வாசற்படியைக் காக்கிற லேவியர் மனாசேயிலும் எப்பிராயீமிலும் இஸ்ரவேலில் மீதியானவர்களெல்லாரின் கையிலும், யூதா பென்யமீனெங்குஞ் சேர்த்து, எருசலேமுக்குத் திரும்பிப் பராபரனுடைய வீட்டிற்குக் கொண்டுவந்த திரவியத்தையொப்புவித்துக் கொண்டு,

௰ வேலையைச் செய்விக்கும்படிக்குக் கர்த்தருடைய வீட்டின் விசாரிப்புக்காரரானவர்களின் கையில் அதைக் கொடுத்தார்கள். இவர்கள் அதைக் கர்த்தருடைய வீட்டைச் சோதித்துப் பழுதுபார்க்கிற

தற்கு வீட்டில் வேலைசெய்கிறவர்களுடைய கையிலே கொடுத்தார்கள்.

௰௧ அப்படியே வெட்டின கல்லுகளையும் இணையுக்கலுக்கும் யூதாவின் இராசாக்கள் கெடுத்துப்போட்ட அறைகளிற் பல கைபாய்ச்சுகிறதற்குமான மரங்களையும் கொள்ளத் தச்சருக்குஞ் சிற்பாசாரிகளுக்குங் கொடுத்தார்கள்.

௰௨ இந்த மனுஷர் வேலையையுண்மையாய்ச் செய்தார்கள். வேலையை நடத்த மெராரியின் புத்திரரில் யாகாத் ஒபதியா வென்ற லேவியருங் கோகாத்தியரின் புத்திரரில் சகரியாவும் மெசுல்லாமும் அவர்களின் மேல்விசாரிப்புக்காரரா யிருந்தார்கள். இந்த லேவியரெல்லாருங் கீதவாத்தியங்களை வாசிக்க அறிந்தவர்கள்.

௰௩ அவர்கள் சுமைகாரர் பேரிலும் சகலவித வேலையின் கிரியையைச் செய்கிறவர்களெல்லாருடைய ஆளோட்டிகளின் பேரிலும் விசாரிப்பா யிருந்தார்கள். ஏனெனில் லேவியருக்குள் ளிருக்கிறவர்களில் தாமன் கணக்கரும் ஆதிக்கக்காரருமவாசற்காப்பாருமானவர்கள்.

௰௪ கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட திரவியத்தை யவர்கள் எடுக்கிறபோதோவெனில் ஆசாரியனாகிய இல்கியா மோசேயைக்கொண்டு கட்டளையிடப்பட்ட கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தைக் கண்டுபிடித்தான்.

௰௫ அப்போது இல்கியா சம்பிரதியாகிய சாப்பானுக்குப் பிரதியுத்தரமாகக் கர்த்தருடைய வீட்டிலே நியாயப்பிரமாண புஸ்தகத்தைக் கண்டுபிடித்தேனென்று சொல்லி அந்தப் புஸ்தகத்தைச் சாப்பான் கையிற் கொடுத்தான்.

௰௬ சாப்பான் அந்தப் புஸ்தகத்தை இராசாவண்டைக்குக் கொண்டுபோய் உமதுடைய ஊழியக்காரருக்குக் கட்டளையிடப்பட்டதையெல்லாம் அவர்கள் செய்கிறார்கள்.

௰௭ கர்த்தருடைய வீட்டிலே கண்டுபிடிக்கப்பட்ட திரவியத்தை யவர்கள் கூட்டி, அதை விசாரிப்புக்காரர் கையிலும் வேலைசெய்கிறவர்கள் கையிலுங் கொடுத்தார்களென்று இராசாவுக்கு மறுசெய்தி சொன்னதுமல்லாமல்,

௰௮ ஆசாரியனாகிய இல்கியா என்கையிலொருபுஸ்தகத்தைக் கொடுத்தானென்று சம்பிரதியாகிய சாப்பான் இராசாவுக்கறிவித்து, அதிலே இராசாவுக்கு முன்பாக வாசித்தான்.

௰௯ நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை இராசா கேட்டபோதோவெனில் அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு

௨௰ இல்கியாவுக்குஞ் சாப்பானின் குமாரனாகிய அகிக்காமுக்கும் மீகாவின் குமாரனாகிய அப்தோனுக்குஞ் சம்பிரதியாகிய சாப்பானுக்கும் இராசாவின் ஊழியக்காரனாகிய அசாயாவுக்குங் கற்பித்துச் சொன்னதாவது,

௨௰௧ கண்டுபிடிக்கப்பட்ட இந்தப் புஸ்தகத்தினுடைய வார்த்தைகளினிமித்தம் நீங்கள் போய் எனக்காகவும் இஸ்ரவேலிலும் யூதாவிலும் மீதியானவர்களுக்காகவுங் கர்த்தரை விசாரியுங்கள். ஏனெனில் இந்தப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதெல்லாவற்றின்படியேயுஞ் செய்யும்படிக்குக் கர்த்தருடைய வார்த்தையை நம்முடைய பிதாக்கள் கைக்கொள்ளாமற்போனபடியினாலே நம்முடையமேல் ஊற்றப்பட்டது கர்த்தருடைய உக்கிரம் பெரிதேயென்றான்.

௨௰௨ அப்போது இல்கியாவும் இராசாவனுப்பின மற்றவர்களும் அஸ்ரவின் குமாரனாகிய தோக்காத்தின் மகனான சல்லூமென்ற வஸ்திரங்களைக் காக்கிறவனுடைய பெண்சாதியாகிய உல்தாளென்ற தீர்க்கதரிசியானவளண்டைக்குப் போனார்கள். அவள் எருசலேமில் இரண்டாம் வகுப்பிலே குடியிருந்தாள். அவளோடே யத்தக்கோத்தப்பிரகாரமாகப் பேசினார்கள்.

௨௰௩ அவள் இவர்களோடே சொன்னதாவது, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறபடி என்னண்டைக்கு உங்களை யனுப்பினவருக்கு நீங்கள் சொல்லவேண்டியதாவது,

௨௰௪ கர்த்தருரைக்கிறதேதெனில், இதோ, யூதாவின் இராசாவுக்கு முன்பாக வாசிக்கப்பட்ட புஸ்தகத்தில் எழுதியிருக்கிற சகல சாபங்களுமாகிய பொல்லாப்பை நான் இந்த ஸ்தலத்தின்மேலும் அதின் குடிகளின்மேலும் வரப்பண்ணுவேன்.

௨௰௫ அவர்கள் நம்மை விட்டுத் தங்கள் கைகளின் கிரியைகளாலெல்லாம் நமக்குக் கோபமுண்டாக்க அந்நிய தேவர்களுக்குத் தூபங்காட்டின படியினாலே நம்முடைய உக்கிரம் அவிந்துபோகாதபடி தப்பிரகாரமாக இந்த ஸ்தலத்தின்மேல் வாருமென்கிறார்.

௨௰௬ ஆனாலும் கர்த்தரிடத்திலே கேட்கத்தக்கதாக உங்களையனுப்பின யூதாவின் இராசாவுடனே நீங்கள் சொல்லவேண்டியது. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர்

ர் நீ கேட்ட வார்த்தைகளின் செய்தியைக் குறித்துரைக்கிறதென்னவெனில்,

௨௭ இந்த ஸ்தலத்துக்கும் அதின் குடிகளுக்கும் விரோதமாகப் பராபரன் சொன்ன அவருடைய வார்த்தைகளை நீ கேட்கையில் உன்னிருதயம் இளகிப்போய் அவருக்கு முன்பாக நீ உன்னைத் தாழ்த்தி, நமக்கு முன்பாகப் பணிந்து, உன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு நமக்கு முன்பாக அழுதபடியினாலே நாமும் உன்னைக் கேட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௮ இதோ, நாம் இந்த ஸ்தலத்தின் மேலும் அதின் குடிகளின்மேலும் வரப்பண்ணும் எல்லாப் பொல்லாப்பையும் உன்னுடைய கண்கள் காணாதபடிக்கு நீ சமாதானத்தோடே உன் கல்லறையிற் சேர்த்துக்கொள்ளப்பட நாமுன்னை யுன் பிதாக்களண்டையிலே சேர்ப்பண்ணுவோமென்கிறாரென்று சொன்னாள். அவர்கள் இராசாவுக்கு மறுசெய்தி கொண்டுபோனார்கள்.

௨௯ அப்போது இராசா யூதா எருசலேமுடைய மூப்பரையெல்லாம் அழைத்தனுப்பிக் கூட்டிக்கொண்டு,

௩௰ இராசாவும் எல்லா யூதமனுஷரும் எருசலேமின் குடிகளும் ஆசாரியரும் லேவியரும் பெரியோர் துவக்கிச் சிறியோர்மட்டுமுள்ள சகலசனமுமாய்க் கர்த்தருடைய வீட்டிற்குப் போயேறினார்கள். கர்த்தருடைய வீட்டிலே கண்டுபிடிக்கப்பட்ட உடம்படிக்கைப் புஸ்தகத்தின் வார்த்தைகளையெல்லாம் அவர்கள் காதுகள் கேட்க வாசித்தார்கள்.

௩௧ இராசா தன் தானத்திலே நின்று அந்தப் புஸ்தகத்திலெழுதியிருக்கிற உடம்படிக்கையினுடைய வார்த்தைகளின்படி தான் செய்யத்தனாலே கர்த்தரைப் பின்பற்றி நடப்பேனென்றும் தன் முழு இருதயத்தாலுந் தன் முழு ஆத்துமத்தாலும் அவருடைய கற்பனைகளையும் அவருடைய சாட்சிகளையும் அவருடைய கட்டளைகளையும் கைக்கொள்ளுவேனென்றும், கர்த்தருக்கு முன்பாக உடன்படிக்கைப் பண்ணி,

௩௨ எருசலேமிலும் பென்யமீனிலுந் தென்பட்ட யாவரையும் அதற்குட்படப் பண்ணினான். அப்படியே எருசலேமின் குடிகள் தங்கள் பிதாக்களின் தேவனாகிய பராபரனுடைய உடம்படிக்கையின்படியே செய்தார்கள்.

௩௩ யோசியா இஸ்ராவேல் புத்திரரிலே தேசங்களெங்குமுண்டான அருவருப்புகளையெல்லாம் அகற்றி இஸ்ராவேலிலே தென்பட்டவர்களையெல்லாந் தங்கள் பராபரனாகிய கர்த்தரைச் சேவிக்கிறதற்குக் கீழ்ப்படுத்தினான். அவனுயிரோடிருந்த நாளெல்லாம் அவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரைவிட்டுப் பின்வாங்கினதில்லை.

## ௩௫. அதிகாரம்.

யோசியா பஸ்காவை யாசரித்தது.

௧ அதற்குப் பிற்பாடு யோசியா எருசலேமிலே கர்த்தருக்குப் பஸ்காவை யாசரித்தான். அவர்கள் முதலாம் மாதம் பதினாலாந் தேதியிலே பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் குரல்வளையறுத்தார்கள்.

௨ அவன் ஆசாரியர்களை யவர்கள் முறைவரிசைகளில் வைத்து, அவர்களைக் கர்த்தருடைய வீட்டினூழியத்தைச் செய்யத் திடப்படுத்தி,

௩ இஸ்ராவேலையெல்லாம் உபதேசிக்கிறவர்களுங் கர்த்தருக்குப் பரிசுத்தமாக்கப்பட்டவர்களுமாகிய லேவியருக்குச் சொன்னதாவது, பரிசுத்தப் பெட்டியைத் தாவீதின் குமாரனாகிய சாலொமோனென்ற இஸ்ராவேலின் இராசா கட்டின வீட்டிலே வையுங்கள் தோளின்மேல் அதைச் சுமக்கும் பாரம் உங்களுக்கில்லை இப்போது நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கும் அவருடைய சனமாகிய இஸ்ராவேலுக்கும் ஊழியஞ்செய்து,

௪ இஸ்ராவேலின் இராசாவாகிய தாவீது எழுதின கட்டளைக்கும் அவன் குமாரனாகிய சாலொமோனெழுதின கட்டளைக்கும் ஒத்தபடியே யுங்கள் பிதாக்களின் வீட்டாருக்காகப் பண்ணின வரிசையிலேயுங்களை யாயத்தப்படுத்தி,

௫ சனப்புத்திரராகிய உங்கள் சகோதரருக்காகப் பரிசுத்த ஸ்தலத்திலே பிதாக்களுடைய வீட்டுப் பிரிவுகளின்படியேயும் லேவியருடைய வம்சத்தார் வகுக்கப்பட்டபடியேயும் நின்று,

௬ பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் குரல்வளையறுத்து, உங்களைப் பரிசுத்தம்பண்ணி, மோசேயைக்கொண்டு கர்த்தர் சொன்னபடியே யுங்கள் சகோதரர் செய்யும்படிக்கு அவர்களுக்கு அவைகளை யாயத்தப்படுத்துங்களென்றான்.

௭ வந்திருந்த சனப்புத்திரரெல்லாருக்கும் அவர்கள் இலக்கத்தின்படியே பஸ்காவின் பலிகளுக்காக முப்பதினாயிரம் ஆட்டுக்குட்டிகளையும் வெள்ளாட்டுக்குட்டிகளையும் மூவாயிரம் எருதுகளையும் இராசாவா

கிய யோசியா தன்னுடைய ஆஸ்தியிலே கொடுத்தான்.

௮ அவனுடைய பிரபுக்களும் மனப்பூர்வமான காணிக்கையாகச் சனத்திற்கும் ஆசாரியருக்கும் லேவியருக்குங் கொடுத்தார்கள். யாபாருடைய வீட்டுத் தலைவராகிய இல்கியாவுஞ் சகரியாவும் எகியேலும் ஆசாரியர்களுக்குப் பஸ்காவின் பலிகளுக்கென்று இரண்டாயிரத்து அறுநூறு ஆட்டுக்குட்டிகளையும் முந்நூறு எருதுகளையுங் கொடுத்தார்கள்.

௯ ஆனாற் கொனனியா, செமாயா, நதனெயேலென்ற அவர்கள் சகோதரரும், அசபியா, ஏயேல், யோசபாத்தென்ற லேவியரின் பிரபுக்களும் லேவியருக்குப் பஸ்காவின் பலிகளுக்கென்று ஐயாயிரம் ஆட்டுக்குட்டிகளையும் ஐந்நூறு எருதுகளையுங் கொடுத்தார்கள்.

௰ இப்படி ஊழியந் திட்டம்பண்ணப்பட்டபோது இராசாவினுடைய கற்பனையின்படியே ஆசாரியர் தங்கள் தானத்திலும் லேவியர் தங்கள் வகுப்புகளின் வரிசையிலும் நின்று,

௰௧ இவர்கள் பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் கொல்லவளையறுத்தார்கள். ஆசாரியர் அவர்கள் கையில் இரத்தத்தை வாங்கித் தெளித்தார்கள். லேவியர் தோல்களையுரித்தார்கள்.

௰௨ மோசேயின் புஸ்தகத்தி லெழுதியிருக்கிறபடிச் சனப்புத்திரர் கர்த்தருக்குப் பலிசெலுத்தும்படிக்கு அவர்கள் தகன பலிமிருகங்களை யிவர்களுக்குப் பிதாக்கள் வீட்டுப் பிரிவுகளின்படியே யவைகளைக் கொடுக்கத்தக்கதாகப் பிரித்து வைத்தார்கள். எருதுகளை யப்படியேதான் செய்தார்கள்.

௰௩ அவர்கள் பஸ்காவை நியாயமுறைமையின்படியே அக்கினியாற் பொரித்துப் பரிசுத்தமாக்கப்பட்ட மற்றவைகளைப் பானைகளிலுங் கொப்பறைகளிலுஞ் சட்டிகளிலுஞ் சமைத்துச் சனப்புத்திரருக்கெல்லாந் தீவிரமாய்ப் பங்கிட்டு,

௰௪ பிற்பாடு தங்களுக்காகவும் ஆசாரியருக்காகவுஞ் சேகரம் பண்ணினார்கள். ஏனெனில் ஆரோனின் புத்திரராகிய ஆசாரியர்கள் சர்வாங்கத் தகனபலிகளையுங் கொழுப்புகளையுஞ் செலுத்துகிறதில் இராமட்டும் வேலையாயிருந்தபடியினாலே லேவியர் தங்களுக்காகவும் ஆரோனின் புத்திரராகிய ஆசாரியருக்காகவுஞ் சேகரம்பண்ணினார்கள்.

௰௫ தாவீதும், ஆசாபும், ஏமானும், இராசாவின் ஞானதிஷ்டிப் புருஷனாகிய எதுத்தூனுங் கற்பித்தபடியே ஆசாபின் புத்திரராகிய பாடகர் தங்கள் தானத்திலும் வாசற் காப்பார் வாசல் வாசலிலும் நின்றார்கள். அவர்கள் தங்கள் ஊழியத்தைவிட்டு விலகத் தேவையில்லாதிருந்தது. ஏனெனில் லேவியரான அவர்கள் சகோதரர் அவர்களுக்காகச் சேகரம்பண்ணினார்கள்.

௰௬ அப்படியே இராசாவாகிய யோசியாவினுடைய கற்பனையின்படி பஸ்காவை யாசரிக்கிறதற்குஞ் சர்வாங்கத் தகனங்களைக் கர்த்தருடைய பலிபீடத்தின்மேற் பலியிடுகிறதற்குமடுத்த கர்த்தருடைய ஊழியமெல்லாம் அன்றையத்தினந் திட்டமாயிற்று.

௰௭ இந்தப்பிரகாரமாக அங்கே வந்திருந்த இஸ்ரவேல்புத்திரர் அக்காலத்திலே பஸ்காவையும் புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையையும் ஏழுநாளாக ஆசரித்தார்கள்.

௰௮ தீர்க்கதரிசியாகிய சாமுவேலின் நாட்களதுவக்கி இஸ்ரவேலிலேயப்படிக்கொத்த பஸ்கா ஆசரிக்கப்பட்டதில்லை. யோசியாவும், ஆசாரியரும், லேவியரும், யூதாவனைத்தும், இஸ்ரவேலிலவந்திருந்தவர்களும் எருசலேமின் குடிகளும் ஆசரித்த பஸ்காவைப்போலே இஸ்ரவேல் இராசாக்களிலொருவரும் ஆசரித்ததில்லை.

௰௯ யோசியாவுடைய இராச்சியபாரத்தின் பதினெட்டாம் வருஷத்திலே யித்தப்பஸ்கா ஆசரிக்கப்பட்டது.

யோசியாவின் மரணம்.

௨௰ யோசியா தேவாலயத்திற்கேற்றதைத் திட்டப்படுத்தின இந்த எல்லாத்தப்படிகளுக்கும் பிற்பாடு எகிப்துவின் இராசாவாகிய நேகோ ஐப்பிராத்தின் நதியோரமான கர்கேமிஸ் பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ண ஏறிவந்தான். அப்போது யோசியா அவனுக்கெதிராகப் புறப்பட்டான்.

௨௧ அவன் இவனண்டைக்குத் தூதுபரை அனுப்பி யூதாவின் இராசாவே! எனக்கும் உமக்குமென்ன? நான் இப்போது உம்முடையம்மேலல்ல, என்னோடு யுத்தம்பண்ணுகிற ஒரு வீட்டானம்மேல் போகிறேன். நான் தீவிரிக்கவேண்டுமென்று பரா பரன் சொன்னார். என்னோடிருக்கிற பராபரன் உம்மைக் கெடுக்காதபடிக்கு அவரை விட்டு ஒழிந்திருமென்று சொல்லச் சொன்னான்.

உஉ ஆனால் யோசியா தன் முகத்தை அவனை விட்டுத் திருப்பாமல் வேஷம் மாறி, தேவனுடைய வாக்கினால் நேகோ சொன்ன பார்வோனுடைய வார்த்தைகளுக்குச் செவிகொடாமல், மெகிதோ பள்ளத்தாக்கிலே யுத்தம் பண்ணும்படி வந்தான்.

உ௩ வில்வீரர் யோசியா இராசாவின்பேரிலே எய்தார்கள். அப்போது இராசா தன் ஊழியக்காரரை நோக்கி: என்னை அப்புறப்படுத்துங்கள், ஏனென்றால் மிகவும் காயமட்டேனென்றான்.

உ௪ அப்போது அவனுடைய ஊழியக்காரர் இரதத்தின்மேலிருந்து அவனை இறக்கி அவனுக்கிருந்த பின் ஒரு இரதத்தின்மேலேற்றிவைத்து, அவனை எருசலேமுக்குக் கொண்டுவந்தார்கள். அவன் மரணமடைந்தான். அவன் பிதாக்களின் கல்லறைகளில் அடக்கம்பண்ணப்பட்டான். யூதா எருசலேமின் மனுஷரெல்லாரும் யோசியாவுக்காகத் துக்கங்கொண்டாடினார்கள்.

உ௫ எரேமியா யோசியாவின்பேரிலே புலம்பல் பாடினான். சகல பாடகரும் பாடகிகளும் இந்நாள்வரைக்கும் யோசியாவின்பேரிலே தங்கள் புலம்பல்களில் பாடிக்கொண்டிருந்து அவைகளை இஸ்ரவேலிலே ஒரு பழக்கமாக்கினார்கள். இதோ, அவைகள் புலம்பல் புஸ்தகத்திலெழுதியிருக்கின்றது.

உ௬ யோசியாவின் மற்ற வர்த்தமானங்களும் கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறதற்கொத்த அவனுடைய உபகாரங்களும்,

உ௭ அவனுடைய முன்பின் நடபடிகளும் மோவென்னில், இதோ, அவைகள் இஸ்ரவேல் யூதா இராசாக்களின் புஸ்தகத்திலெழுதியிருக்கின்றது.

## ௩௬. அதிகாரம்.

யோவாகாஸ், யோயாக்கீம், யோயாக்கீனென்றவர்களின் இராசரீயபாரம்.

அப்போது சனம் யோசியாவின் குமாரனாகிய யோவாகாசைச்சேர்த்துக்கொண்டு அவனை எருசலேமிலே அவன் தகப்பன் ஸ்தலத்திலே இராசாவாக்கினார்கள்.

உ யோவாகாஸ் இராசாவாகிறபோது இருபத்துமூன்று வயதாயிருந்து மூன்று மாதம் எருசலேமில் அரசாண்டான்.

௩ அப்பொழுது எகிப்தின் இராசா அவனை எருசலேமில் அரசாளாதபடிக்குத் தள்ளிப்போட்டு தேசத்தின்மேல் நூறு தாலந்து வெள்ளியும் ஒரு தாலந்து பொன்னுமான தண்டத்தை வைத்து,

௪ அவனுடைய அண்ணனாகிய எலியாக்கீமை யூதாவின்மேலும் எருசலேமின்மேலும் இராசாவாகிய யோயாக்கீமென்று அவன் பேரை மாற்றினான். ஆனால் அவன் தமையனாகிய யோவாகாசை எகிப்தின் இராசாவாகிய நேகோ எகிப்திற்கழைத்துக்கொண்டுபோனான்.

௫ யோயாக்கீம் இராசாவாகிறபோது இருபத்தைந்து வயதாயிருந்து பதினொருவருஷம் எருசலேமில் அரசாண்டு, தன் பரமபரனாகிய கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்தான்.

௬ அவனுக்குவிரோதமாகப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் எதிர்வந்து அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோக அவனை இரண்டு வெண்கலச் சங்கிலியால் கட்டினான்.

௭ கர்த்தருடைய வீட்டின் தட்டுமுட்டுகளிலும் சிலதை நேபுகாத்நேச்சார் பாபேலுக்குக் கொண்டுபோய் அவைகளைப் பாபேலிலுள்ள தன்னுடைய தேவாலயத்திலே வைத்தான்.

௮ யோயாக்கீமுடைய மற்ற வர்த்தமானங்களும் அவன் செய்த தும் அவனிடத்திலே கண்டுபிடிக்கப்பட்டதுமான அவனுடைய அருவருப்புகளும், இதோ, அவைகள் இஸ்ரவேல் யூதா இராசாக்களின் புஸ்தகத்திலெழுதியிருக்கின்றது. அவன் ஸ்தலத்தில் அவன் குமாரனாகிய யோயாக்கீன் இராசாவானான்.

௯ யோயாக்கீன் இராசாவாகிறபோது எட்டு வயதாயிருந்து மூன்று மாதமும் பத்துநாளும் எருசலேமில் அரசாண்டு கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்தான்.

௰ ஆனால் மறுவருஷம் பிறப்பிலே நேபுகாத்நேச்சாரென்ற இராசா அவனையும் கர்த்தருடைய வீட்டின் உசிதமான தட்டுமுட்டுகளையும் பாபேலுக்குக் கொண்டுபோய், அவன் சிறிய தகப்பனாகிய சிதேக்கியாவை யூதாவின்மேலும் எருசலேமின்மேலும் இராசாவாக்கினான்.

# எஸ்றாவின் புஸ்தகம்.

## க. அதிகாரம்.

### யூதர் சிறையிருப்பிலிருந்து திரும்பினது.

எரேமியாவின் வாயினாலே கர்த்தர் சொன்னவார்த்தை நிறைவேறும்படிக்குப் பெர்சியாவின் இராசாவாகியகோரேசுடைய முதலாம் வருஷத்திலே கர்த்தர்பெர்சியாவின் இராசாவாகியகோரேசின் ஆவியை யெழுப்பினதினாலே அவன் தன் இராச்சியமெங்குஞ்சத்தங்காட்டி, வாசகத்தினாலும் பறைதிவித்தது,

உ பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ்சொல்லுகிறதென்னவென்றால், பரமண்டலங்களின் பராபரனாகிய கர்த்தர் பூமியின் இராச்சியங்களையெல்லாமெனக்குக் கொடுத்து, யூதாவிலிருக்கிற எருசலேமிலே தமக்கு வீட்டைக்கட்டுவிக்க அவர் எனக்குக் கற்பித்தார்.

ங அவருடைய எல்லாச்சனத்திலும் உங்களில் எவனுண்டோ அவனோடே அவனுடைய பராபரன் இருப்பாராக. அவன் யூதாவிலிருக்கிற எருசலேமுக்குப் போய் ஏறி, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருடைய வீட்டைக்கட்டுவிக்கக்கடவன். அவர்தானே எருசலேமிலே வாசம்பண்ணுகிற பராபரனானவர்.

ச எவன் தான் புறத்தேசமாய்த் தங்குகிற எவ்விடங்களிலாகிலும் மீதியாயிருக்கிறானோ அவனுடைய தலத்து மனிதர் எருசலேமிலிருக்கிற பராபரனுடைய வீட்டுக்கென்று உச்சாகமாய்க் கொடுக்கிறதுமல்லாமல் அவனுக்கு வெள்ளியினாலும் பொன்னினாலும் உடைமைகளினாலும் மிருகசீவன்களினாலும் உதவிபண்ணக்கடவர்களென்று கூறுவித்தான்.

ரு அப்பொழுது யூதா பென்யமீனுடைய வமிசங்களின் தலைவரும் ஆசாரியரும் லேவியரும் எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டைக்கட்டுகிறதற்குப் போயேறி, எவர்கள் ஆவியைப் பராபரன் எழுப்பினாரோ அவர்களெல்லாரும் எழும்பினார்கள்.

சா அவர்களைச் சுற்றிலுங் குடியிருக்கிற யாவரும் மன்உச்சாகமாய்க் கொடுத்ததெல்லாவற்றையுந்தவிர அவர்களுடைய கைகளை வெள்ளித்தட்டுமுட்டுகளையும் பொன்னையும் உடைமைகளையும் மிருகசீவன்களையும் உச்சிதங்களையுங்கொடுக்கிறதினாலே திடப்படுத்தினார்கள்.

எ நேபுகாத்நேத்சார் எருசலேமிலிருந்து கொண்டுவந்து, தன் தேவனுடைய வீட்டிலே வைத்த கர்த்தருடைய வீட்டுத் தட்டுமுட்டுகளையுங் கோரேஸ் இராசா எடுத்துக் கொடுத்தான்.

அ அவைகளைப் பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் பொக்கிஷக்காரனாகிய மித்திரோதாதின் கையினாலெடுத்து யூதாவின் பிரபுவாகிய சேஸ்பாத்சாருக்கு எண்ணிக் கொடுப்பித்தான்.

கூ அவைகளின் இலக்கமாவது, முப்பது பொற்றட்டுகளும் ஆயிரம்வெள்ளித்தாலங்களும் இருபத்தொன்பது கத்திகளும்,

௰ முப்பது பொற்கிண்ணிகளும் நானூற்றுப்பத்து வெள்ளிக்கிண்ணிகளும் வேறே தட்டுமுட்டுகள் ஆயிரமும்,

௰க பொன் வெள்ளித்தட்டுமுட்டுகளெல்லாம் ஐயாயிரத்து நானூறாயிருந்தது. சிறையிருப்பானவர்கள் பாபேலிலிருந்து எருசலேமுக்கேறிப்போகையில் அவைகளையெல்லாஞ் சேஸ்பாத்சார் எடுத்துக்கொண்டு போனான்.

## உ. அதிகாரம்.

### எருசலேமுக்குத்திரும்பின் யூதர் ஆரென்பது.

பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார், பிடித்துப்பாபேலுக்குக்கொண்டுபோனவர்களின் சிறையிருப்பிலிருந்து எருசலேமுக்கும் யூதாவிலுள்ள தங்கள் தங்கள் பட்டணங்களுக்குந்திரும்பி,

உ செருபாபேல் எசுவா நெகேமியா செராயா ரெலாயா மர்தெகாய் பில்சான் மிஸ்பார் பிக்வாய் ரெகூம் பானா என்கிறவர்களோடேகூடவந்த தின்சிமையின் புத்திரராகிய இஸ்ரவேல் சனமான மனிதரின் இலக்கமாவது,

ங பாரோஷின் புத்திரர் இரண்டாயிரத்தொருநூற்றெழுபத்திரண்டு.

ச செபத்தியாவின் புத்திரர் முந்நூற்றெழுபத்திரண்டு.

ரு ஆராகின் புத்திரர் எழுநூற்றெழுபத்தைந்து.

சா ஏசுவா யோவாபின் புத்திரருக்குள்ளிருந்த பாகாத்மோவாபின் புத்திரர் இரண்டாயிரத்தெண்ணூற்றுப்பன்னிரண்டு.

எ ஏலாமின் புத்திரர் ஆயிரத்திருநூற்றைம்பத்துநான்கு.

அ சத்தூவின புத்திரர் தொளளாயிரத்து நாற்பத்தைந்து.

கூ சக்காயிம புத்திரர் எழுநூற்றறுபது.

ய பானியின புத்திரர் அறுநூற்றுநாற்பத்திரண்டு.

யக பெபாயின புத்திரர் அறுநூற்றிருபத்துமூனறு.

யஉ அஸ்காதின புத்திரர் ஆயிரத்திருநூற்றிருபத்திரணடு.

யங அதொனிக்காமின புத்திரர் அறுநூற்றறுபத்தாறு.

யச பிக்வாயின புத்திரர் இரணடாயிரத்தைமபத்தாறு.

யரு ஆதீனின புத்திரர் நானூற்றைமபத்துநான்கு.

யசூ எசக்கியாவின சந்ததியான அதேரின புத்திரர் தொணணூற்றெட்டு.

யஎ பெத்சாயின புத்திரர் முநநூற்றிருபத்துமூனறு.

யஅ யோராகின புத்திரர் நூற்றறுபபனனிரணடு.

யகூ ஆசூமின புத்திரர் இருநூற்றிருபத்துமூனறு.

உய கிபாரின புத்திரர் தொணணூற்றைந்து.

உக பெத்லெகேமின புத்திரர் நூற்றிருபத்துமூனறு.

உஉ நெத்தோபாவின மனிதர் ஐமபத்தாறு.

உங ஆனதோத்தின மனிதர் நூற்றிருபத்தெட்டு.

உச அஸ்மாவேத்தின புத்திரர் நாற்பத்திரணடு.

உரு கீரியாத்தாரிம, கெபீரா, பேரோத்தென்றவைகளின புத்திரர் எழுநூற்றுநாற்பத்துமூனறு.

உசூ ராமா, காபா என்றவைகளின புத்திரர் அறுநூற்றிருபத்தொனறு.

உஎ மிக்மாசின மனிதர் நூற்றிருபத்திரணடு.

உஅ பெதேல, ஆயி என்றவைகளின மனிதர் இருநூற்றிருபத்துமூனறு.

உகூ நேபோவின புத்திரர் ஐமபத்திரணடு.

ஙய மக்பீசின புத்திரர் நூற்றைமபத்தாறு.

ஙக மற்ற ஏலாமின புத்திரர் ஆயிரத்திருநூற்றைமபத்துநானகு.

ஙஉ ஆரீமின புத்திரர் முநநூற்றிருபது.

ஙங லோத், ஆதீத், ஓனோ என்றவைகளின புத்திரர் எழுநூற்றிருபத்தைந்து.

ஙச எரிகோவின புத்திரர் முநநூற்றுநாற்பத்தைந்து.

ஙரு சேனாகின புத்திரர் மூவாயிரத்தறுநூற்றுமுப்பது.

ஙசூ ஆசாரியராவது, யெசுவாவின வீட்டாரான யெதாயாவின புத்திரர் தொளளாயிரத்தெழுபத்துமூனறு.

ஙஎ இம்மேரின புத்திரர் ஆயிரத்தைமபத்திரணடு.

ஙஅ பஸ்கூரின புத்திரர் ஆயிரத்திருநூற்றுநாற்பத்தேழு.

ஙகூ ஆரீமின புத்திரர் ஆயிரத்துப்பதினேழு.

சய லேவியராவது, யெசுவாவின சந்ததியான கத்மியேல என்பவர்களின புத்திரர் எழுபத்துநானகு.

சக பாடகராவது, ஆசாபின் புத்திரர் நூற்றிருபத்தெட்டு.

சஉ வாசற்காபபாளரின புத்திரராவது, சலூமின புத்திரரும, அதேரின புத்திரரும, தல்மோனின புத்திரரும, அக்கூபின புத்திரரும, அதிதாவின புத்திரரும, சோபாயின புத்திரருமானவர்களெலலாம நூற்றுமுப்பத்தொனபது.

சங இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களாவது, சீகாவின புத்திரர், அசூபாவின புத்திரர், தபாகோத்தின புத்திரர்,

சச கேரோசின புத்திரர், சீயாகாவின புத்திரர், பாதோனின புத்திரர்.

சரு லெபானாகின புத்திரர், அகாபாவின புத்திரர், அக்கூபின புத்திரர்,

சசூ ஆகாபின புத்திரர், சம்லாயின புத்திரர், ஆனானின புத்திரர்,

சஎ கித்தேலின புத்திரர், காகாரின புத்திரர், ராயாகின புத்திரர்,

சஅ ரேத்சீனின புத்திரர், நெகோதாவின புத்திரர், காசாமின புத்திரர்,

சகூ ஊசாவின புத்திரர், பாசெயாகின புத்திரர், பேசாயின புத்திரர்,

ருய அஸ்னாவின புத்திரர், மெயூனியரின புத்திரர், நெபுசியரின புத்திரர்,

ருக பக்பூக்கின புத்திரர், அகூபாவின புத்திரர், அர்கூரின புத்திரர்,

ருஉ பஸ்லூத்தின புத்திரர், மெகிதாவின புத்திரர், அர்சாவின புத்திரர்,

ருங பர்கோசின புத்திரர், சிஸ்ராவின புத்திரர், தாமாகின புத்திரர்,

ருச நெத்சியாகின புத்திரர், அதிபாவின புத்திரருந்தானே.

ருரு சாலோமோனுடைய வேலையாட்களின புத்திரராவது, சோதாயின புத்திரர், சொப்பேரேத்தின புத்திரர், பெருதாவின புத்திரர்,

ருசூ யாலாகின புத்திரர், தர்கோனின புத்திரர், கித்தேலின புத்திரர்,

ருஎ செபத்தியாவின புத்திரர், அத்தீலின புத்திரர், பொகெரேத், அத்செபாயிமின புத்திரர், ஆமியின புத்திரருந்தானே.

ருஅ இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களும் சாலோமோனுடைய வேலையாட்களின புத்தி

ருமெல்லாம் முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டு.

௫௯ தெல்மெலாகிலுந் தெல்அர்சாவிலுங் கேருபிலும் அதோனிலும் இம்மேரிலுமிருந்து வந்து தாங்கள் இஸ்ரவேலரோவென்று தங்கள் பிதாக்களின் வீட்டைப் புத்திரங்களப் பூர்வோத்திரத்தையுஞ் சொல்லமாட்டாமலிருந்தவர்களாவது,

௬௰ தெலாயாவின் புத்திரருந் தொபியாவின் புத்திரரும் நெகொதாவின் புத்திரருமான அறுநூற்றைம்பத்திரண்டுபேர்.

௬௧ ஆசாரியரின் புத்திரரிலும் அபாயாவின் புத்திரர் கோசின் புத்திரர் கிலேயாதியனான பர்சிலாயின் குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணி அவர்கள் நாமந்தரிக்கப்பட்ட பர்சிலாயினுடைய புத்திரர்தானே.

௬௨ இவர்கள் தங்கள் வம்ச அட்டவணையைத் தேடி அதைக்காணாமற்போய் ஆசாரிய ஊழியத்திற்கு அசுத்தமானவர்களான படியினாலே விலக்கப்பட்டார்கள்.

௬௩ வெளிச்சங்களும் உத்தமங்களுமுள்ள ஆசாரியன் எழும்பமட்டும் பரிசுத்தத்தைப் பரிசுத்தமானதிலே பொசிக்கவேண்டாமென்று திர்ஷாதா அவர்களுக்குச் சொன்னான்.

௬௪ இந்தச் சபையெல்லாம் ஏகத்திற்கு நாற்பத்திரண்டாயிரத்து முந்நூற்றறுபதுபேராயிருந்தது.

௬௫ அவர்களைத்தவிர ஏழாயிரத்து முந்நூற்றுமுப்பத்தேழுபேரான அவர்களுடைய வேலைக்காரரும் வேலைக்காரிகளும் இருநூறு பாடகரும் பாட்டிகளும் அவர்களுக்கிருந்தார்கள்.

௬௬ அவர்களுடைய குதிரைகளெழுநூற்றுமுப்பத்தாறும் அவர்கள் கோவேறுகழுதைகள் இருநூற்றுநாற்பத்தைந்தும்,

௬௭ அவர்களுடைய ஒட்டகங்கள் நானூற்றுமுப்பத்தைந்துங் கழுதைகள் ஆறாயிரத்தெழுநூற்றிருபதுமாயிருந்தது.

தேவாலயத்தைக் கட்டுகிறதற்குப் பிரபுக்கள் கொடுத்த காணிக்கை.

௬௮ வம்சங்களின் தலைவரிற் சிலர் எருசலேமிலவாசம்பண்ணின கர்த்தருடைய வீட்டுக்கு வந்தபொழுது பராபரனுடைய வீட்டை அதின் தானத்திலே யெடுப்பிக்கும்படிக்கு அதற்காக மன உச்சாகமான காணிக்கைகளைக் கொடுத்தார்கள்.

௬௯ அவர்கள் தங்கள் சக்திக்குத்தக்கதாக வேலையின் பொக்கிஷத்திற்கு அறுபத்தோராயிரந் தங்கக்காசையும் ஐயாயிரம் றாத்தல் வெள்ளியையும் நூறு ஆசாரிய வஸ்திரங்களையுங் கொடுத்தார்கள்.

௭௰ ஆசாரியரும் லேவியருஞ் சனத்திற் சிலரும் பாடகரும் வாசற்காப்பாளரும் இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களுந் தங்கள் தங்கள் பட்டினங்களிலும் இஸ்ரவேலெல்லாந் தங்கள் பட்டினங்களிலுந்தானே குடியேறினார்கள்.

## ௩. அதிகாரம்.

தேவாலயத்தைக் கட்டத் துவக்கினது.

ஏழாம் மாதம் வந்து இஸ்ரவேல் புத்திரர் பட்டினங்களிலே குடியிருக்கிறபொழுது சனம் ஒருமனிதனைப்போலே எருசலேமிலே கூடிக்கொண்டது.

௨ அப்பொழுது யோத்சதாக்கின் குமாரனாகிய ஏசுவாவும் அவன் சகோதரராகிய ஆசாரியருஞ் செயல்தியேலின் குமாரனாகிய செருபாபேலும் அவன் சகோதரரும் எழும்பிப் பராபரனுடைய மனிதனாகிய மோசேயின் நியாயப்பிரமாணத்திலே எழுதியிருக்கிறபடி சர்வாங்கதகனங்களைப் பலியிடும்படிக்கு இஸ்ரவேலுடைய பராபரனின் பலிபீடத்தைக் கட்டி,

௩ பலிபீடத்தை மூலாதாரங்களின் மேலே யெடுப்பித்தார்கள். ஏனென்றால் தேசத்தின் சனங்களுக்குப் பயப்படுகிற பயங்கரம் அவர்கள் மேலிருந்தது. அதின்மேல் அவர்கள் அந்திசந்தி கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்தினார்கள்.

௪ எழுதியிருக்கிறபடியே அவர்கள் கூடாரப்பண்டிகையை ஆசரித்து ஒவ்வொருநாளுக்குத்தக்க நியாயமானபடி ஒவ்வொருநாளின் இலக்கமானதை ஒவ்வொருநாளிலும் பலியிட்டார்கள்.

௫ அதற்குப்பிறபாடு நித்தமும் மாதப்பிறப்புகளிலுங் கர்த்தருடைய பரிசுத்த எல்லாப் பண்டிகைகளிலுஞ் செலுத்துஞ் சர்வாங்கதகனத்தையுங் கர்த்தருக்கு அவரவர் செலுத்தும் உச்சாகபலிகளையுமிட்டார்கள்.

௬ ஏழாம் மாதம் முதல்தேதியிலே கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்தத்துவக்கினார்கள். ஆனாற் கர்த்தருடைய தேவாலயத்தின் அஸ்திபாரம் இன்னம் போடப்படவில்லை.

௭ அப்பொழுது அவர்கள் கற்றச்சருக்குஞ் சிற்பாசாரிகளுக்குந் திரவியத்தையும் பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் தங்களுக்குக் கொடுத்த உத்தரவின்படியே லீபனோனிலிருந்து கேதுருமரங்களைச் சமுத்திரத்தின்மேல் யாப்போமட்டுங் கொண்டுவரச் சீதோனியருக்குந் தீரியருக்குஞ் போசனத்தையும் பானத்தையும் எண்ணெய்யையுங் கொடுத்தார்கள்.

௮ அவர்கள் எருசலேமிலிருந்த பராபரனுடைய வீட்டிற்கு வந்த இரண்டாம் வருஷம் இரண்டாம் மாதத்திலேயொன்றாய்ச் செயல்தியேலின் குமாரனாகிய செருபா

பேலும் யோச்சதாக்கின் குமாரனாகிய எசுவாவும் மற்றுமுண்டான அவர்கள் சகோதரராகிய ஆசாரியரும் லேவியருஞ் சிறையிருப்பிலிருந்து எருசலேமுக்கு வந்த அனைவருந் துவக்கம் பண்ணி இருபது வயதும் அதற்கு மேலதரமுமான லேவியரைக் கர்த்தருடைய வீட்டின் வேலையைக் கண்காணிக்க வைத்தார்கள்.

௯ அப்படியே பராபரனுடைய வீட்டின் வேலையைச் செய்கிறவர்களைத் துரிதம் பண்ணி எசுவாவும் அவனுடைய குமாரருஞ் சகோதரரும் கத்மியேலும் அவன் குமாரரும் யூதாவின் குமாரரும் ஏனாதாதும் அவன் குமாரரும் சகோதரர்களுமாகிய லேவியர் ஒருவனைப்போல நின்றார்கள்.

௰ சிற்பாசாரிகள் கர்த்தருடைய தேவாலயத்திற்கு அஸ்திபாரம் போடுகிறபொழுது இஸ்ரவேல் இராசாவாகிய தாவீது டைய கட்டளையின்படியே கர்த்தரைத் துதிக்கும்படிக்கு வஸ்திரங்கள் தரிக்கப்பட்டுப் பூரிகைகளை ஊதுகிற ஆசாரியரையுந் தாளங்களைக் கொட்டுகிற ஆசாபின் குமாரராகிய லேவியரையும் நிறுத்தினார்கள்.

௰௧ கர்த்தர் நல்லவர். ஏனெனில் இஸ்ரவேலின் பேரிலே அவருடைய கிருபையென்றுமுள்ளதென்று அவரைப் புகழ்ந்து துதிக்கையில் மாறிமாறிப் பாடினார்கள். கர்த்தரைத் துதிக்கையிற் சனமெல்லாங் கர்த்தருடைய வீட்டின் அஸ்திபாரம் போடப்படுகிற நிமித்தம் மகாக்கெம்பீரமாய்க் கெம்பீரித்தது.

௰௨ முதிர்ந்த வயதான ஆசாரியரிலும் லேவியரிலும் பிதாக்களின் வம்சங்களின் தலைவரிலுந் தன் அஸ்திபாரத்தின்மேலிருந்த முந்தின வீட்டைக் கண்டிருந்து இந்த வீட்டையுந் தங்கள் கண்களினாலே நோக்கியிருக்கிற அநேகரோ மகா சத்தங்காட்டி அழுதார்கள். வேறே அநேகம்பேரோவென்றால் கெம்பீரமுஞ் சந்தோஷமுமாயச் சத்தங்காட்டினார்கள்.

௰௩ ஆனாற் சந்தோஷகெம்பீரத்தின் சத்தம் இன்னதென்றுஞ் சனத்தினுடைய அழுகையின் சத்தம் இன்னதென்றுஞ் சனம் அறியாதே போனார்கள். ஏனென்றால் சனம் மகா கெம்பீரமாய்க் கெம்பீரிக்கிறதினாலே அவர்கள் சத்தந் தூரத்திற்குக் கேட்கப்பட்டது.

## ௪. அதிகாரம்.

யூதரின் சத்துருக்களாலே தேவாலயத்தைக் கட்டும் வேலைக்குத் தடை வந்தது.

சிறையிருப்பின் புத்திரர் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்குத் தேவாலயத்தைக் கட்டுகிறார்களென்பதை யூதாவுக்கும் பென்யமீனுக்கும் இருந்த சத்துருக்கள் கேட்டபொழுதாவென்றால்,

௨ அவர்கள் செருபாபேலண்டைக்குந் தலைவரான பிதாக்களண்டைக்குஞ் சேர்ந்து வந்து உங்களோடேகூடக் கட்டுவோம். ஏனென்றால் உங்கள் பராபரனை உங்களைப்போலே தேடுவோம். எங்களை இங்கே ஏறிவரப்பண்ணின அசூரின் இராசாவாகிய ஆசார் அதோனின் நாட்கள் முதற்கொண்டு அவருக்கு நாங்களும் பலியிடுகிறோமென்று அவர்களோடே சொன்னார்கள்.

௩ அதற்குச் செருபாபேலும் எசுவாவும் இஸ்ரவேலில் மற்றுமுண்டான தலைவரான பிதாக்களும் அவர்களுடனே, எங்கள் பராபரனுடைய வீட்டை நீங்களும் நாங்களுங் கட்டவொண்ணாது. பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் இராசா எங்களுக்குக் கற்பித்தபடி நாங்களே இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு அதைக் கட்டுவோமென்றார்கள்.

௪ ஆகையினாலே அந்தத் தேசத்தின் சனம் யூதா சனத்தின் கைகளைத் தளர்ந்துபோகப்பண்ணிக் கட்டாதபடிக்கு அவர்களைக் கலங்க அடித்து,

௫ பெர்சியாவின் இராசாவாகிய கோரேசின் நாளெல்லாந் தரியு என்ற பெர்சியாவுடைய இராசாவின் இராசரியபாரம் மட்டும் அவர்கள் யோசனையை அவத்தமாக்கத் தக்கதான ஆலோசனைக்காரரை அவர்களுக்கு விரோதமாய்க் கைக்கூலி கொடுத்து நியமித்தார்கள் - [illegible]

௬ ஆகாஸ்வேரு அரசாளுகிறபொழுது அவனுடைய இராசரியபாரத்தின் துவக்கத்திலே யூதாவிலும் எருசலேமிலுங் குடியிருக்கிறவர்களுக்கு விரோதமாகப் பிரியையெழுதினார்கள்.

௭ அர்தசஷ்டாவின் நாட்களிலும் பிஸ்லாமும் மித்திரோதாத்துந் தபேயேலும் மற்றுமுண்டான அவர்கள் கூட்டத்தாரும் பெர்சியாவின் இராசாவான அர்தசஷ்டாவுக்கு ஒரு காகிதத்தை யெழுதினார்கள். அந்தக் காகிதத்தின் வசனஞ் சூரிய எழுத்துஞ் சூரிய பாஷையுமாய் எழுதியிருந்தது.

௮ ஆலோசனைத் தலைவனாகிய ரேகூமுங் கணக்கனாகிய சிம்சாயும் எருசலேமுக்கு விரோதமாக அர்தசஷ்டாவென்ற இராசாவுக்கெழுதின காகிதத்திலே போட்டப்பட்ட நாமங்களாவது,

௯ ஆலோசனைக்குத் தலைவனாகிய ரேகூமுங் கணக்கனாகிய சிம்சாயும் மற்றுமுண்டான அவர்கள் கூட்டத்தாராகிய தீனாயர், அபற்சாத்தியர், தர்பேலியர், அப்பாசயர், அற்கேவியர், பாபிலோனியர், சூஷங்கயர், தெகாவியர், ஏலாமியரானவர்களும்,

௰ பெரியவரும் பேர் போனவருமான அஸ்னப்பார் அவ்விடங்களிலிருந்து அழைத்துவந்து சமாரியாவின் பட்டணத்திலே குடியேறப்பண்ணின மற்றச் சனசதளங்களு

நதிக்கப்பாலேயிருக்கிற மற்றச் சனங்களுமுதலானநாமங்களதானே.

௰௧ அவர்கள் அர்த்தசஷ்டாவென்கிற இராசாவுக்கனுப்பின காகிதத்தின் விவரமாவது, நதிக்கப்பாலேயிருக்கிற உம்முடைய ஊழியக்காரரான மனிதர்மற்றது:

௰௨ உம்மிடத்திலிருந்து எங்களண்டையிலே எருசலேமுக்கு வந்தேறியிருக்கிற யூதர் அந்தக்கலகமும்பொல்லாப்புமான அந்தப்பட்டணத்தைக்கட்டி அதின் மதில்களையெழுப்பி, அஸ்திபாரங்களைப்போட்டிசைக்கிறார்களென்பது இராசாவுக்கறியலாகக்கடவது.

௰௩ இப்பொழுதும் அந்தப்பட்டணங்கட்டப்பட்டு அலங்கங்கள் எடுப்பிக்கப்பட்டுத்தீர்ந்தால் அவர்கள் பகுதியையும் இறையுந்தீர்வையையுங்கொடாதே போவார்கள். அப்படியே இராசாக்களின் வரத்திற்குநஷ்டம்வருமென்று இராசாவுக்கறியப்படக்கடவது.

௰௪ இப்போதும் நாங்கள் இராசாவினுடைய அரண்மனைச்சம்பளக்காரராயிருந்துகொண்டு இராசாவுக்குக்கனக்குறைவைப் பார்த்திருக்கிறது எங்களுக்கடாததானபடியால் நாங்களிதையனுப்பி உம்முடைய பிதாக்களின்நாளாகமத்தில் ஆராயப்படும்படிக்கு, இதை இராசாவுக்குத்தெரியப்பண்ணுவித்தோம்.

௰௫ அதுகலகமும் இராசாக்களுக்கும் சீமைகளுக்கும் நஷ்டமுண்டாக்குகிறதுமான பட்டணமாயிருந்ததென்றும், அதிலே அவர்கள் பூர்வகாலந்துவக்கிக்கலாதிபண்டாக்கினபடியினலேதானே அந்தப்பட்டணம் பாழ்க்கடிக்கப்பட்டதென்றும், அந்தநாளாகமத்திலேகண்டறிந்துகொள்ளுவீர்.

௰௬ ஆகையால் அந்தப்பட்டணங்கட்டப்பட்டு அதின் அலங்கங்கள் எடுப்பிக்கப்பட்டுத்தீர்ந்தால், நதிக்கப்பாலே உமக்கதில்ஒன்றுமிராதேபோமென்கிறதை இராசாவுக்கு அறியப்பண்ணுகிறோமென்றெழுதியனுப்பினார்கள்.

௰௭ அப்பொழுது இராசா ஆலோசனைத்தலைவனாகிய ரேகூமுக்கும் கணக்கனாகிய சிம்சாயிக்கும் சமாரியாவிற்குடியிருக்கிற மற்ற அவர்களுடைய கூட்டத்தாருக்கும் நதிக்கப்பாலிருக்கிற மற்றவர்களுக்கும் எழுதியனுப்பின பிரத்தியுத்தாரமாவது உங்களுக்குச்சமாதானமுண்டு:

௰௮ நீங்கள் எங்களுக்கனுப்பின காகிதம் எனக்குமுன்பாகத்தீர்க்கமாய்வாசிக்கப்பட்டது.

௰௯ என்கட்டளையினாலே ஆராய்ந்துபார்க்கப்பட்டபொழுது, அந்தப்பட்டணம்பூர்வகாலந்துவக்கி இராசாக்களுக்குவிரோதமாயெழும்பிற்றென்றும், அதிலேகலகமும் பந்துக்கட்டும்பிறந்ததென்றும்,

௨௰ எருசலேமில் வல்லமையுள்ள இராசாக்களிருந்தார்களென்றும், அவர்கள் நதிக்கப்பாலிருக்கிற எல்லா இடங்களின்பேரிலும் ஆண்டுகொண்டார்களென்றும், பகுதியும் இறையுந்தீர்வையும் அவர்களுக்குச் செலுத்தப்பட்டதென்றுங்கண்டுபிடிக்கப்பட்டது.

௨௧ இப்பொழுதும் என்னாலே வேறே கட்டளைகொடுக்கப்படுமட்டும் அந்தப்பட்டணங்கட்டாதபடிக்கு அந்தமனிதர் அதைநிறுத்திப்போடநீங்கள்கற்பியுங்கள்.

௨௨ இதிலேநீங்கள் தப்பிதஞ்செய்யாதபடிக்குஎச்சரிக்கையாயிருங்கள். இராசாக்களுக்குநஷ்டமாய்ச்சேதம் அதிகரிப்பதென்னவென்றுஎழுதியனுப்பினான்.

௨௩ இராசாவாகிய அர்த்தசஷ்டாவுடைய நிருபத்தின்விவரம். ரேகூமுக்கும் கணக்கனாகிய சிம்சாயிக்கும் அவர்கள்கூட்டத்தாருக்கும் முன்பாகவாசிக்கப்பட்டபொழுது அவர்கள்தீவிரத்துடனே எருசலேமிலிருக்கிற யூதரண்டைக்குப்போய்ப் பலாத்காரத்தோடும் பலவந்தத்தோடும் அவர்களைவேலைசெய்யாதபடிக்குத் தவிர்த்துப்போட்டார்கள்.

௨௪ அப்பொழுது எருசலேமிலுள்ள பராபரனுடைய வீட்டுவேலை நிறுத்தப்பட்டுப் பெர்சியாவின் இராசாவாகிய தரியு இராசரியபாரம்பண்ணின இரண்டாம்வருஷம்மட்டுந்தவிர்ந்திருந்தது.

## ௫. அதிகாரம்.

தேவாலயத்தைக்கட்டுகிறவேலை திரும்ப நடந்ததையானது.

ஆனால் தீர்க்கதரிசியாகிய ஆகாயும் இத்தோவின்குமாரனாகிய சகரியாவும் என்ற தீர்க்கதரிசிகள் யூதாவிலும் எருசலேமிலுமுள்ளயூதருக்குத்தீர்க்கதரிசனஞ்சொல்லி, இஸ்ரவேலுடைய பராபரனின் நாமத்திலே அவர்களோடேபேசினார்கள்.

௨ அப்பொழுது சேயல்தியேலின்குமாரனாகிய செருபாபேலும் யோத்சதாக்கின்குமாரனாகிய யெசுவாவுமெழும்பி, எருசலேமிலுள்ளபராபரனுடைய வீட்டைக்கட்டத்துவக்கினார்கள். அவர்களுக்குத் திடஞ்சொல்லுகிறபராபரனுடையதீர்க்கதரிசிகளும் அவர்களோடிருந்தார்கள்.

௩ அக்காலத்திலே நதிக்கப்பாலிருக்கிற தத்னாயென்கிறதுரையுஞ்சேத்தார் பொஸ்னாயும் அவர்கள்கூட்டத்தாரும் அவர்களண்டைக்குவந்து, இந்தவீட்டைக்கட்டவும் இந்தமதிலையெடுப்பிக்கவும் உங்களுக்குக்கட்டளையிட்டவனாரென்று அவர்களைக்கேட்டார்கள்.

௪ அப்பொழுது அதையும் இந்த மாளிகையைக் கட்டுகிற மனிதரின் நாமங்கள் ஏதென்கிறதையும் அவர்களுக்குச் சொன்னோம்.

௫ ஆனால் இந்தச் செய்தி தரீயுவண்டைக்குப் போய் எட்டுமட்டுக்கும் இவர்கள் யூதருடைய மூப்பரின் வேலையைத் தவிர்க்காதபடிக்கு அவர்களுடைய பராபரனின் கண் அவர்கள் மேல் வைக்கப்பட்டிருந்தது. அப்பொழுது இதைக் குறித்து அவர்கள் சொன்ன மறுமொழியைக் காகிதத்திலெழுதியனுப்பினார்கள்.

௬ நதிக்கிப்பாலிருக்கிற தத்னாய் என்ற துரையும் சேத்தார்பொஸ்னாயும் நதிக்கிப்பாலிருக்கிற அப்பற்சாகியரான அவன் கூட்டத்தாரும் இராசாவாகிய தரீயுவுக்கெழுதியனுப்பின காகிதத்தின் விவரமாக,

௭ அதில் எழுதியிருந்ததாவது, இராசாவாகிய தரீயுவுக்குச் சகலவிதமான சமாதானமுண்டாகக்கடவது.

௮ நாங்கள் யூதர் சீர்மையிலுள்ள மகாப் பராபரனுடைய வீட்டுக்குப் போனோம். அது பெருங்கல்லுகளாற் கட்டப்படுகிறது. மதில்களின் மேல் உத்திரங்கள் பாய்ச்சப்பட்டு அந்த வேலை துருசாய் நடந்து அவர்களுக்கைகூடி வருகிறதென்பது இராசாவுக்கறியப்படக்கடவது.

௯ அப்பொழுது இந்த வீட்டைக்கட்டவும் இந்த மதிலையெடுப்பிக்கவும் உங்களுக்குக் கட்டளையிட்டவனார் என்று அந்த மூப்பரைக் கேட்டோம்.

௰ இதுவுமல்லாமல் அவர்களுக்குள்ளே தலைவரான மனிதரின் நாமங்களை உமக்கு எழுதியறியப்பண்ணும்படிக்கு அவைகளையும் அவர்களைக் கேட்டோம்.

௰௧ அவர்கள் எங்களுக்குக் கொடுத்த பிரத்தியுத்தாரமாவது. நாங்கள் பரலோகத்துக்கும் பூலோகத்துக்கும் பராபரனாயிருக்கிறவருக்கு ஊழியக்காரராயிருந்து அநேக வருஷங்களுக்கு முன்னே கட்டப்பட்டிருந்த வீட்டைக்கட்டுகிறோம். அதை இஸ்ரவேலுடைய பெரிய இராசா ஒருவன் கட்டித்தீர்த்தான்.

௰௨ ஆனால் எங்கள் பிதாக்கள் பரமண்டலத்தின் பராபரனுக்குக் கோபம் வருத்துவித்தபிற்பாடு அவர் இவர்களைப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் என்ற கல்தேயன் கையில் ஒப்புக்கொடுத்தார். அவர் இந்த வீட்டை நிர்மூலமாக்கி சனத்தைப் பாபேலுக்குக் கொண்டுபோனார்.

௰௩ ஆனாற் பாபேலின் இராசாவாகிய கோரேசின் முதலாம் வருஷத்திலே கோரேஸ் இராசாவானவர் பராபரனுடைய இந்த வீட்டைக்கட்டக் கட்டளையிட்டார்.

௰௪ நேபுகாத்நேச்சார் எருசலேமிலிருந்த தேவாலயத்திலெடுத்துப் பாபேலின் தேவாலயத்திற் கொண்டுபோய் வைத்த பராபரனுடைய வீட்டின் பொன் வெள்ளித்தட்டுமுட்டுகளையும் இராசாவாகிய கோரேஸ் பாபேலின் தேவாலயத்திலெடுத்துக்கொடுத்தார். அவர் துரையாக வைத்த செஸ்பாத்சார் என்ற நாமமுள்ளவனுக்கு அவை ஒப்புவிக்கப்பட்டது.

௰௫ இவனோடே அவர், நீ இந்தத் தட்டுமுட்டுகளை வாங்கி எருசலேமிலிருக்கிற தேவாலயத்துக்குக் கொண்டுபோய்ப் பராபரனுடைய வீடு தன்னுடைய தானத்திலே கட்டப்படுவதை விசாரியென்றார்.

௰௬ அப்பொழுது அந்தச் செஸ்பாத்சார் வந்து எருசலேமிலுள்ள பராபரனுடைய வீட்டின் அஸ்திபாரத்தைப் போட்டான். அந்நாள் துவக்கி இதுவரைக்கும் அது கட்டப்படுகிறது. ஆனால் அது இன்னம் முடியவில்லையென்றார்கள்.

௰௭ இப்பொழுதும் இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் எருசலேமிலிருக்கிற பராபரனுடைய அந்த வீட்டைக்கட்ட இராசாவாகிய கோரேஸ் கட்டளையிட்டதுண்டோவென்று பாபேலிலிருக்கிற இராசாவின் பொக்கிஷவீட்டிலே ஆராய்ந்து பார்க்கப்படவும் இதற்காக இராசாவினுடைய சித்தமின்னதென்று எங்களுக்கு எழுதியனுப்பப்படக்கடவதென்றெழுதியிருந்தது.

## ௬. அதிகாரம்.

தேவாலயங்கட்டித்தீர்ந்து பிரதிஷ்டை பண்ணப்பட்டது.

அப்பொழுது இராசாவாகிய தரீயு இட்ட கட்டளையின்படியே பாபேலின் பொக்கிஷங்களின் சாலையிலே தேடினார்கள்.

௨ பிற்பாடு மேதியசீர்மையிலிருக்கிற அக்மெதாப்பட்டின அரண்மனையிலே ஒரு புஸ்தகச்சுருள் கண்டுபிடிக்கப்பட்டது. அதிலே நினைவு கூருதலுக்காக எழுதியிருந்ததாவது,

௩ இராசாவாகிய கோரேசின் முதலாம் வருஷத்திற் கோரேஸ் என்ற இராசா இட்ட கட்டளையேதென்றால், எருசலேமிலிருந்த பராபரனுடைய வீடு பெலிகள் செலுத்தப்படுந்தானத்திலே கட்டப்படக்கடவது. அதின் அஸ்திபாரங்கள் பெலப்பாயிருப்பதாக. அது அறுபது முழ உயரமும் அறுபது முழ அகலமுமாயிருக்கவேணும்.

௪ பெருங்கல்லுகளான மூன்று வரிசைகளும் புது உத்திரங்களான ஒரு மச்சுவரிசையும் அதற்குண்டாயிருக்கக்கடவது. செலவும் அதற்குண்டாயிருக்கக்கடவது. செலவு இராசாவின் அரண்மனையிலிருந்து கொடுக்கப்படுவது.

௫ இதுவுமல்லாமல் நேபுகாத்நேச்சார் எருசலேமிலிருந்த தேவாலயத்திலெடுத்துப் பாபேலுக்குக் கொண்டுவந்த பராபர

டயவீட்டுக்கடுத்த பொன் வெள்ளித்தட்டுகள் எருசலேமிலிருக்குந்தேவாலயமாகிய தங்கள் தானத்துக்குப் போய்ச்சேரும்படிக்குத் திரும்பக் கொடுக்கப்படக்கடவது. அவைகளைப் பராபரனுடைய வீட்டிலே கொண்டுபோகக் கடவர்களென்று அதில் எழுதியிருந்தது.

௬ அப்பொழுது தரீயுராசா எழுதிய உத்தரவாவது, இப்பொழுதும் நதிக்கப்பாலிருக்கிற தேசாதிபதியாகிய தத்னாயே சேத்தார்பொஸ்னாயே நீங்களும் நதிக்கப்பாலிருக்கிற அப்பர்சாக்காயரான உங்கள் கூட்டத்தாரும் அவ்விடத்தை விட்டு விலகியிருங்கள்.

௭ பராபரனுடைய அந்தவீட்டின் வேலை அவர்கள் செய்யட்டும். யூதருடைய தேசாதிபதியும் யூதரின் மூப்பரும் பராபரனுடைய அந்த வீட்டை அதின் தானத்திலே கட்டக்கடவார்கள்.

௮ பராபரனுடைய அந்த வீட்டை யூதரின் மூப்பர் கட்டும்படிக்கு நீங்கள் அவர்களுக்குச் செய்ய வேண்டியதென்னவென்றால் அந்த மனிதருக்குத் தடைபண்ணாதபடிக்கு நதிக்கப்பால் எடுக்கும் இராசாவின் ஆஸ்திகளிலே அவர்களுக்குத் தாமதமில்லாமற் செலவுக்குச் செலவு கொடுக்கப்படுவதாக.

௯ பரமண்டலங்களின் பராபரனுக்குச் சர்வாங்க தகனங்களைப் பலியிடத் தேவையான காளையெருதுகள் ஆட்டுக்கடாக்கள் ஆட்டுக்குட்டிகள் கோதுமை உப்பு திராட்சப்பழ இரசம் எண்ணெய் முதலானவை தினந்தினம் அவர்கள் சொற்படி தாட்சியில்லாமற் கொடுக்கப்படக்கடவது.

௰ எருசலேமிலிருக்கிற ஆசாரியர்கள் பரமண்டலங்களின் பராபரனுக்கு ஆற்றுகிற வாசனையான பலிகளைச் செலுத்தி இராசாவுக்கும் அவர் குமாரருக்குமிருக்கிற பிராணரட்சாக மன்றாடும்படிக்குத் தானே.

௰௧ பின்னையும் நம்மால் உண்டான கட்டளை என்னவெனில், எந்த மனிதனாகிலும் இந்தக் கட்டளையைப் புரட்டினால் அவன் வீட்டில் ஒரு உத்திரம் பிடுங்கி நாட்டப்பட்டு அவன் அதில் தூக்கிப்போடப்படவும் அவனுடைய வீடு அதின் நிமித்தமாகக் குப்பைமேடாக்கப்படவும் வேணுமென்பதுதானே.

௰௨ ஆகையால் இதைப் புரட்டவும் எருசலேமிலிருக்கிற பராபரனுடைய அந்த வீட்டைக் கெடுக்கவுந் தங்கள் கையை நீட்டப்போகிற எந்த இராசாவையுஞ் சனத்தையுந்தம்முடைய நாமத்தை அங்கே வாசமாயிருக்கப்பண்ணின பராபரன் நிர்மூலமாக்கக்கடவார். தரீயுவாகிய நாம் இந்தக் கட்டளையைக் கொடுத்தோம். அதின்படி சீக்கிரமாகச் செய்யப்படக்கடவதென்று எழுதியனுப்பினான்.

௰௩ அப்பொழுது நதிக்கப்பாலிருக்கிற தேசாதிபதியாகிய தத்னாயும் சேத்தார்பொஸ்னாயும் அவர்கள் கூட்டத்தாருந் தரீயு இராசா கட்டளையிட்டபிரகாரமாகச் சீக்கிரமாய்ச் செய்தார்கள்.

௰௪ அப்படியே யூதரின் மூப்பர் தீர்க்கதரிசியாகிய ஆகாயும் இத்தோவின் குமாரனாகிய சகரியாவுந் தீர்க்கதரிசனஞ் சொல்லக்கொள்ளக் கட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குக் கைகூடியும் வந்தது. அவர்கள் இஸ்ரவேலுடைய பராபரனின் கட்டளையின்படியேயுங் கோரேஸ், தரீயு, பெர்சியாவின் இராசாவாகிய அர்த்தசஷ்டா என்றவர்களுடைய கட்டளையின்படியேயும் அதைக் கட்டிமுடித்தார்கள்.

௰௫ இராசாவாகிய தரீயு அரசாளுகிற ஆறும் வருஷம் ஆதார் என்ற மாதம் மூன்றுந்தேதியிலே அந்த வீடு கட்டித் தீர்ந்தது.

௰௬ அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரும் ஆசாரியரும் லேவியருஞ் சிறையிருப்பிலிருந்து வந்த மற்றவர்களும் பராபரனுடைய அந்த வீட்டைச் சந்தோஷத்தோடே பிறதிஷ்டை பண்ணி,

௰௭ பராபரனுடைய அந்த வீட்டின் பிறதிஷ்டைக்காக நூறு காளைகளையும் இருநூறு ஆட்டுக்கடாக்களையும் நானூறு ஆட்டுக்குட்டிகளையும் இஸ்ரவேல் கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே இஸ்ரவேலினத்தின் பாவம் போக்குதலுக்காகப் பன்னிரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும் பலியிட்டு,

௰௮ மோசேயின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடியே அவர்கள் எருசலேமில் வாசமாயிருக்கிற பராபரனுடைய ஆராதனைக்கென்று ஆசாரியரை அவர்கள் வகுப்புகளிலும் லேவியரை அவர்கள் முறைவரிசைகளிலும் நிறுத்தினார்கள்.

௰௯ பஸ்காவையுஞ் சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் முதலாம் மாதம் பதினாலாந்தேதியிலே ஆசரித்தார்கள்.

௨௰ ஏனெனில் ஆசாரியரும் லேவியரும் ஒருவனைப்போலே தங்களைச் சுத்தம்பண்ணிக்கொண்டதினாலே யெல்லாருஞ் சுத்தமாயிருந்து சிறையிருப்பிலிருந்து வந்தவர்களெல்லாருக்காகவும் ஆசாரியரான் தங்கள் சகோதரருக்காகவுந் தங்களுக்காகவும் பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் குரல்வளையறுத்தார்கள்.

௨௧ அப்படியே சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த இஸ்ரவேல் புத்திரரும் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைத் தேடப் பூலோகசாதிகளின் அசுத்தத்தை விட்டு அவர்கள் நடுவிலே சேர்ந்த அனைவருமாய் அதைப் புசித்து,

௨௨ புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையை ஏழு நாளாகச் சந்தோஷத்துடனே

ஆசரித்தார்கள். ஏனென்றால் கர்த்தர் அவர்களைமகிழ்ச்சியாக்கி அவர்களைக்கொண்டு இஸ்ரவேலின பராபரனாகிய பராபரனுடைய வீட்டின்வேலையிலே பலப்படுத்தத்தக்கதாய் அசூருடைய இராசாவின இருதயத்தை யவர்களுக்குச்சார்ந்திருக்கப்பண்ணியிருந்தார்.

## எ. அதிகாரம்.

எஸ்றா பாபேலோனியசிறையிருப்பிலிருந்து எருசலேமுக்குவந்தது.

இந்த வர்த்தமானங்களுக்குப்பிற்பாடு செராயாவின குமாரனாகிய எஸ்றா பெர்சியாவின இராசாவாகிய அர்த்தசஷ்டா அரசாளுகிறகாலத்திலேபாபேலிலிருந்தேறிவந்தான. அந்தச்செராயா அசரியாவினகுமாரனும, இவன இலகியாவினகுமாரனும,

உ இவன சலூமினகுமாரனும, இவன சாதோகினகுமாரனும, இவன அகித்தூபினகுமாரனும,

ங இவன அமரியாவினகுமாரனும, இவன அசரியாவினகுமாரனும, இவன மெராயோதினகுமாரனும,

ச இவன செராகியாவின குமாரனும, இவன ஊசியினகுமாரனும, இவன புக்கியினகுமாரனும,

ரு இவன அபிசூவாவினகுமாரனும, இவன பினெகாசினகுமாரனும, இவன எலெயாசாரினகுமாரனும இவன பிரதானஆசாரியனான்ஆரோனினகுமாரனுமாயிருந்தான.

சு ஏறிவந்த இந்த எஸ்றா இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தர் கொடுத்த மோசேயின நியாயப்பிரமாணத்திலே சவரணையானவேதபாரகனாயிருந்தான. அவன்மேலிருந்த அவனுடைய பராபரனாகிய கர்த்தருடையகரத்தினபடியே இராசா அவனுக்கு அவனகேட்டதையெல்லாங்கொடுத்தான.

எ அவனோடேகூட இஸ்ரவேலபுத்திரரிலும ஆசாரியரிலும லேவியரிலும பாட்டகரிலுமவாசற்காப்பாரிலும இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களிலுஞ்சிலர் அர்த்தசஷ்டா இராசாவின ஏழாம்வருஷத்திலே எருசலேமுக்கேறிப்போனார்கள.

அ ஐந்தாம்மாதத்தில அவன எருசலேமுக்குவந்தான. அது அந்த இராசாவின ஏழாம்வருஷமானது.

கூ அதெதெனில முதலாம்மாதம முதல தேதியிலேஅவனபாபேலிலிருந்தேறிப்போகுதல திட்டப்பட்டு ஐந்தாம்மாதம முதல தேதியிலேஅவன தனமேலிருந்த தனபராபரனுடைய தயவுள்ளகரத்தினபடி எருசலேமுக்குவந்தான.

ய ஏனென்றால் கர்த்தருடையவேதத்தை ஆராயவும அதினபடி செய்யவும, இஸ்ரவேலிலே கட்டளைகளையும நீதிநியாயங்களையும உபதேசிக்கவும எஸ்றா தன இருதயத்தைப் பண்படுத்தியிருந்தான.

அர்த்தசஷ்டா இராசா எஸ்றாவினகையிலேகொடுத்த தயவுள்ள திருபம.

யக கர்த்தருடைய கற்பனைகளின வார்த்தைகளிலும அவர்இஸ்ரவேலுக்குக்கொடுத்த கட்டளைகளிலும படித்தெடுத்தவேதபாரகனாகிய எஸ்றாவென்ற ஆசாரியனுக்கு இராசாவாகிய அர்த்தசஷ்டாகொடுத்த திருபத்தினவிவரமாவது,

யஉ இராசாக்களுக்குஇராசாவாகியஅர்த்தசஷ்டா பரமண்டலங்களின பராபரனுடைய நியாயப்பிரமாணத்திற்கு உத்தம வேதபாரகனாகிய எஸ்றாவென்ற ஆசாரியனுக்குப்பூரணசமாதானம் மு :

யங நமமுடைய இராசகியத்திலிருக்கிற இஸ்ரவேல சனத்திலும அதின ஆசாரியரிலும லேவியரிலும உன்னோடேகூட எருசலேமுக்குப்போகமனப்பூர்வமாயிருக்கிறயாவரும போகலாமென்று தமமாலேகட்டளைபிறந்தது.

யச ஏனென்றால நீயுனகையிலிருக்கிறஉன பராபரனுடையநியாயப்பிரமாணத்தினபடி யூதாவிலும எருசலேமிலுமநடக்கிறதோவென்றுவிசாரிக்கவும,

யரு இராசாவும அவருடைய ஆலோசனைக்காரரும எருசலேமில வாசமபண்ணுகிற இஸ்ரவேலின பராபரனுக்கும மனப்பூர்வமாயக்கொடுத்த வெள்ளியையும பொன்னையும,

யசு பாபேலினசீர்மையெங்கும உனக்குக்கிடைக்குமஎல்லாவெள்ளியையுமபொன்னையும உனனுடையசனமும ஆசாரியருமாய் எருசலேமிலுள்ள தங்களபராபரனுடைய வீட்டுக்கென்று மன உச்சாகமாயக்கொடுக்குங்காணிக்கைகளையும நீகொண்டுபோகவும நீ இராசாவினாலும அவருடைய ஏழு ஆலோசனைக்காரராலும் அனுப்பப்படுகிறாய்.

யஎ ஆகையால அந்தத்திரவியத்தினாலே நீ சீக்கிரமாக எருதுகளையும ஆட்டுக்கடாக்களையும ஆட்டுக்குட்டிகளையும அவைகளுக்கடுத்த காணிக்கைகளையும ஊற்றுதலகளையுமவாங்கி அதுகளை எருசலேமிலிருக்கிற உங்களபராபரனுடைய வீட்டுப்பெலிபீடத்தினமேற்செலுத்துவாயாக.

யஅ மீதியான வெள்ளியினாலும பொனனினாலுஞ்செயய உனக்கும உனசகோதரருக்கும எப்படி எது நன்றாயக்காணுமோ அதை உங்கள பராபரனுடைய சித்தத்தினபடியேசெயயுங்கள.

யகூ உனபராபரனுடையவீட்டினஆராதனைக்காக உனக்குக்கொடுக்கப்பட்டதட்டுமுட்டுகளையும நீ எருசலேமின பராபரனுக்குமுனபாக ஒப்புவிக்கக்கடவாய.

௰௪ பிகேவாயின் புத்திரரில் ஊத்தாயும் சபூதும் அவர்களோடேகூட எழுபது ஆண்பிள்ளைகளுந்தானே.

௰௫ இவர்களை நான் அகாபாவுக்கு ஓடுகிற நதியண்டையிலே கூட்டிக்கொண்டுபோனேன். அங்கே மூன்று நாள் இறங்கியிருந்தோம். நான் சனத்தையும் ஆசாரியரையும் ஆராய்ந்து பார்க்கிறபோது லேவியின் புத்திரரில் ஒருவரையும் அங்கே கண்டதில்லை.

௰௬ ஆகையால் நான் எலியேசர், அரியேல், செமாயா, எல்நாத்தான், யாரிப், எல்நாத்தான், நாத்தான், சகரியா, மெசுல்லாமென்ற தலைவரையும், யோயரிப், எல்நாத்தானென்ற விவேகிகளையும் அழைத்தனுப்பி,

௰௭ கசிப்பியாவென்ற ஸ்தலத்திலிருக்கிற தலைவனாகிய இத்தோவண்டைக்குச் செய்தியைக்கொண்டுபோக அவர்களுக்குக் கற்பித்து, நம்முடைய பராபரனுடைய வீட்டுக்குப் பணிவிடைக்காரரை எங்களண்டைக்கழைத்துவரும்படிக்கு அவர்கள் கசிப்பியாவென்ற ஸ்தலத்திலிருக்கிற தங்கள் சகோதரனாகிய இத்தோவுக்கும் இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களுக்குஞ் சொல்லும் வார்த்தைகளை அவர்கள் வாயிலே போட்டேன்.

௰௮ அவர்கள் எங்கள் மேலிருந்த எங்கள் பராபரனுடைய தயவுள்ள கரத்தின்படியே, இஸ்ரவேலுக்குப் பிறந்த லேவியின் குமாரனாகிய மகிலியின் புத்திரர் புத்திரிலுள்ள மனுஷனாகிய செரேபியாவும் அவன் குமாரருஞ் சகோதரருமான பதினெட்டுப்பேரையும்,

௰௯ மெராரியரியன் புத்திரரில் அஷபியாவும் அவனோடே எசாயாவும் அவன் சகோதரரும் அவர்கள் குமாரருமான இருபதுபேரையும்,

௨௰ தாவீதும் பிரபுக்களும் லேவியருக்குப் பணிவிடைக்காரராக வைத்த இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களில் இருநூற்றிருபது பேரையும் எங்களுக்கு அழைத்துக்கொண்டுவந்தார்கள். அவர்களெல்லாருடைய பேர் நாமஞ்சொல்லப்பட்டது.

௨௧ அப்போது நாங்கள் எங்கள் பராபரனுக்கு முன்பாக எங்களைத் தாழ்த்துகிறதற்கும், எங்களுக்கும் எங்கள் பிள்ளைகளுக்கும் எங்கள் எல்லா ஆஸ்திக்கும் அவராலே செவ்வையான வழியைத் தேடுகிறதற்கும், நான் அங்கே அந்த அகாபாவு நதியண்டையிலே உபவாசத்தைக் கூறினேன்.

௨௨ ஏனென்றால் வழியிலே சத்துருவைவிலக்கி எங்களுக்குத் துணையாயிருக்க நான் இராசாவைச் சேவகரையுங் குதிரைக்காரரையுங் கேட்க வெட்கப்பட்டிருந்தேன். ஏனென்றால் எங்கள் பராபரனுடைய கரம் நலமுண்டாகத் தம்மைத் தேடுகிறவர்களெல்லாரின் மேலும் அவருடைய பெலனும் அவருடைய கோபமும் அவரைவிட்டு விலகுகிறவர்களெல்லாரின் மேலுமிருக்கிறதென்று நாங்கள் இராசாவுக்குச் சொல்லியிருந்தோம்.

௨௩ அப்படியே நாங்கள் உபவாசம்பண்ணி எங்கள் பராபரனிடத்திலே அதைத் தேடினோம். எங்கள் விண்ணப்பத்தைக் கேட்டுத்தந்தார்.

அவர்கள் பயணம் அனுகூலமாய் முடிந்தது.

௨௪ பிற்பாடு நான் ஆசாரியரின் தலைவரிலே பன்னிரண்டுபேராகிய செரெபியாவையும் அஷபியாவையும் அவர்கள் சகோதரரிலே பத்துப்பேரையுங் கூடப்பிரித்தெடுத்து,

௨௫ இராசாவும் அவருடைய ஆலோசனைக்காரரும் அவருடைய பிரபுக்களுந்தென்பட்ட எல்லா இஸ்ரவேலரும் எங்கள் பராபரனுடைய வீட்டுக்கென்று எடுத்துக்கொடுத்த காணிக்கையாகிய வெள்ளியையும் பொன்னையுந் தட்டுமுட்டுகளையும் அவர்களுக்கு நிறுத்துக்கொடுத்தேன்.

௨௬ அவர்கள் கையிலே நான் அறுநூற்றைம்பது தாலந்து வெள்ளியையும் நூறு தாலந்து நிறையான வெள்ளித் தட்டுமுட்டுகளையும் நூறு தாலந்து பொன்னையும்,

௨௭ ஆயிரந் தங்கக்காசின் விலையான இருபது பொற்கிண்ணிகளையும், பொன்னைப்போலெண்ணப்பட்ட பளபளப்பான நல்ல வெண்கலமான இரண்டு பாத்திரங்களையும் நிறுத்துக்கொடுத்து,

௨௮ அவர்களுடனே சொன்னது, நீங்கள் கர்த்தருக்குப் பரிசுத்தவான்கள். இந்தத் தட்டுமுட்டுகளும் உங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தருக்கு மனஉச்சாகமாய் செலுத்தப்பட்ட இந்த வெள்ளியும் இந்தப்பொன்னும் பரிசுத்தம்.

௨௯ நீங்கள் அதை எருசலேமிலிருக்கிற பராபரனுடைய வீட்டின் அறைகளிலே ஆசாரியர் லேவியருடைய பிரபுக்களுக்கும் இஸ்ரவேலுடைய பிதா வமிசங்களின் தலைவருக்கும் முன்பாக நிறுத்தொப்புவிக்குமட்டும் விழித்து அதைக் காத்துக்கொண்டிருங்களென்றேன்.

௩௰ அப்படியே அந்த ஆசாரியரும் லேவியரும் அந்த வெள்ளியையும் பொன்னையுந் தட்டுமுட்டுகளையும் எருசலேமிலிருக்கிற எங்கள் பராபரனுடைய வீட்டுக்குக் கொண்டுபோகும்படிக்கு நிறைப்பிரகாரமாய் வாங்கிக்கொண்டார்கள்.

௩௧ அப்படியே நாங்கள் எருசலேமுக்குப் போக முதலாம் மாதம் பன்னிரண்டாந் தேதியிலே அகாபா நதியைவிட்டுப் பயணமாய்ப் புறப்பட்டோம். எங்கள் பராபரனு

டையகரம எஙகளமேலிருநது வழியிலே சததுருவினகைககும பதிவிருககிறவர்களு டையகைககும எஙகளைததபபுவித்தது.

௩௨ நாஙகள எருசலேமுககுவநது அங கேமூனறுநாளிருநதபிற்பாடு,

௩௩ நாலாநதாளிலே அநத வெளளியும பொனனுநதட்டுமுட்டுகளும எஙகளபரா பரனுடையவீட்டில ஆசாரியனாகிய உறி யாவினகுமாரனமெரேமோதின கையிலும பினேகாசினகுமாரன எலெயாசாரின்கை யிலுங்கூட எல்லாவறறிற்குமிருநத இலக்க த்தினபடியேயும நிறுத்தொபபுவிக்கப்பட் டது. ஏசுவாவினகுமாரன யோசபாதும பினனுவியினகுமாரன நோட்தியாவுமென ற லேவியரும் அவர்களோடேகூட இருந தார்கள.

௩௪ அநதநிறைபெலலாம அக்காலத்தி ல் எழுதப்பட்டது.

௩௫ குடிவிலகிச்சிறையிருபபிலிருநது வநதவர்கள இஸரவேலின பராபரனுககு ச்சர்வாஙகதகனஙகளாக இஸரவேலனைத தினிமித்தம பன்னிரணடு எருதுகளையுந தொணணூறறாறு ஆட்டுக்கடாக்களையும எழுபததேழு ஆட்டுககுட்டிகளையும்பாவம போக்கப்பன்னிரணடுவெள்ளாட்டுக்கடாக் களையுமசெலுததி, அதையெலலாங கர்த் தருககுச்சர்வாஙகதகனமாகச்செலுததின ர்கள.

௩௬ பிற்பாடு இராசாவின கட்டளைகளை நதிக்கப்பாலிருக்கிற இராசாவின குடைய தார்களுக்கும அதிகாரிகளுக்கும ஒபபுவித் தார்கள. அபபோது இவர்களசனததுக்கு ம்பராபரனுடைய வீட்டுக்கும உதவியா யிருநதார்கள.

## ௯. அதிகாரம்.

இஸரவேலர் அக்கியான பெணசாதிகளை விவாகமபணணினதினிமித்தம எஸ்றா மனஸதாபப்பட்டுப்பணணினசெபம்.

இதுகளசெயதுமுடிநதபிற்பாடு பிர புக்கள என்னணடைக்குச்சேர்நதுசொன னது, இஸரவேலசனமும, ஆசாரியரு ம, லேவியருங, கானானியர், ஏததியர், பெரி சியர், எபூசியர், அமமோனியர், மோவாபி யர், எகிப்தியர், அமமோரியரென்றதங்க ள அருவருபபுகளினபடியிருக்கிற இநதத் தேசஙகளின சனசதளஙகளைவிட்டுப்பிரியா தேபோனார்கள.

௨ அதெதெனில அவர்களுடையகுமார த்திகளிலேதஙகளுக்குநதஙகளகுமாரருககு மபெணகளைககொணடார்கள. இபபடியே பரிசுத்தவித்து தேசஙகளின சனசதளஙக ளோடேகலநதுபோயிறறு. பிரபுக்களின கையும ஆளுகிறவர்களினகையும இநதப் பாதகத்தில முநதினதுமாயிருநததென்றார் கள.

௩ நான் இநதவர்த்தமானததைக்கேட் டபொழுது நான் என வஸதிரத்தையும எனசால்வையையுங்கிழிதது என்தலையிலும எனதாடியிலுமமயிரைபபிடுஙகிககொணடு திகைததவனாய உளுககார்நதிருநதேன.

௪ அபபோது சிறையிருபபிலிருநதுவந தவர்களுடைய பாதகத்தினிமித்தம இஸர வேலுடைய பராபரனின வார்த்தைகளால நடுஙகுகிறயாவரும என்னோடேகூடிககொ ணடார்கள. நானோவெனில அநதிப்பலி செலுததப்படும் மட்டும திகைததவனாய உளுககார்நதுகொணடிருநதேன.

௫ அநதிப்பலியினநேரததிலோவெனி ல நான என சிறுமையோடுங்கிழிததுககொ ணடிருக்கிற என்வஸதிரததோடும என்சா லவையோடும எழுநதிருநது என்முழஙகா லகளை முடக்கி, என்கைகளை என்பராபரனா கிய கர்ததருககு நேராகவிரிதது,

௬ என்பராபரனே, நான என்முகத தை யென்பராபரனாகிய தேவரீருககுமுன பாக ஏறெடுகக வெட்கிககூச்சப்பட்டிருக கிறேன. ஏனெனில எஙகள அக்கிரமஙகள எஙகள தலைககுமேலாகப்பெருகி எஙகளகு ற்றமவான்பரியநதமவளர்நதுபோயிறறு.

௭ எஙகளபிதாககளின நாட்கள துவக்கி இநநாளமட்டும நாஙகளபெரியகுறறத்து க்குளராயிருக்கிறோம. எஙகள அக்கிரமங்க ளினிமித்தம நாஙகளுமஎஙகள இராசாக களும எஙகள ஆசாரியர்களும, இநநாளிலி ருக்கிறதுபோல தேசஙகளுடைய இராசா க்களின்கையிலேபட்டையததுக்குஞ்சிறை யிருப்புக்குங கொளளைக்கும முகஞசெதது ப்போகுதலுக்கும ஒபபுககொடுக்கப்பட் டோம.

௮ இபபோதும எஙகள பராபரனாகிய கர்த்தர் எஙகளிலேதப்பினசிலரைமீதியாக வைககவுந தமமுடைய பரிசுததஸதலத்தி ல எஙகளுக்கொரு குச்சைககொடுககவும, இபபடியே எஙகள பராபரன எஙகளகண் களைபபிரகாசிபபிதது, எஙகள அடிமைத் தனததிலே எங்களுக்குககொஞசஞசீவனங கட்டளையிடவும அவராலே கொஞசநிமி ஷமபோலே கிருபைகிடைத்தது.

௯ ஏனெனில நாஙகளஅடிமைகளாமே. ஆனால எஙகள அடிமைததனததிலே எஙக ள பராபரன எஙகளைககைவிடாமல நாஙக ள எஙகள பராபரனுடைய வீட்டையெடு பபிததுப்பாழாய்ப்போன அதைஸதாபிக் கிறதற்காக எஙகளுக்குச்சீவனஙகொடுக்கு மட்டுக்கும எஙகளுக்கு யூதாவிலும எருச லேமிலும ஒருவேலியைககட்டளையிடும்படி க்கும, பெர்சியாவினஇராசாககளுக்குமுன பாக எஙகளமேற் கிருபையைச்சாய்ததார்.

௰ இப்பொழுதும் எங்கள் பராபரனே, நாங்கள் இதின்பிறகு என்ன சொல்லுவோம். ஏனென்றால் தேவரீர் உமது ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு கற்பித்த உமது கற்பனைகளை விட்டுவிட்டோமே.

௧௧ நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு உட்பிரவேசிக்கிற தேசம் தேசங்களுடைய சனங்களின் அழுக்கினாலும் அவர்கள் அதை ஒருமுனை துவக்கி மறுமுனைமட்டும் நிறையப்பண்ணின அவர்களுடைய அருவருப்புகளினாலும் அவர்களுடைய அசுத்தத்தினாலும் தீட்டுப்பட்ட தேசமாயிருக்கிறது.

௧௨ இப்பொழுதும் நீங்கள் பலங்கொண்டு தேசத்தின் நன்மையைப் புசித்து அதை நித்தியகாலமாக உங்கள் பிள்ளைகளுக்கு உம்பிளிகையாகப் பின்வைக்கும்படிக்கு, நீங்கள் உங்கள் குமாரத்திகளை அவர்களுடைய குமாரருக்குக் கொள்ளாமலும், அவர்களுடைய குமாரத்திகளை உங்கள் குமாரருக்குக் கொடாமலும், அவர்களுக்குச் சமாதானமும் நன்மையுமாயிருக்கிறதையென்றைக்கும் பராமரிக்காமலுமிருப்பீர்களாகவென்றீரே.

௧௩ இப்பொழுதும் எங்கள் பராபரனே! எங்கள் பொல்லாத செய்கைகளினாலும் எங்கள் பெரிய குற்றத்தினாலும் எங்கள்மேல் எல்லாம் வந்தபிற்பாடு தேவரீர் எங்கள் அக்கிரமத்துக்குத் தக்க ஆக்கினையையெங்களுக்குக் கொடாமல், எங்களை இப்படித் தப்பவிட்டிருக்கக்கொள்ள,

௧௪ நாங்கள் உமது கற்பனைகளை மீறுக்கவும் இந்த அருவருப்புகளுள்ள சனத்தங்களோடே சம்பந்தங் கலக்கவுந் திரும்புவோமோ, அப்படியானால் எங்களிலொருவரும் மீந்து தப்பாதபடிக்குத் தேவரீர் எங்களை நிர்மூலமாக்குமட்டும் எங்கள்மேலே கோபமாயிருப்பீரல்லவோ.

௧௫ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் நீதியுள்ளவர். ஏனென்றால் இன்னமிந்த இந்நாளிலிருக்கிறதுபோலே நாங்கள் தப்பி மீந்தியாமே. இதோ, நாங்கள் உமக்குமுன்பாக எங்கள் குற்றத்திலிருக்கிறோம். உமக்குமுன்பாக நிற்கத்தக்கவன் ஒருவனுமில்லையென்று சொன்னேன்.

## ௰. அதிகாரம்.

இஸ்ரவேலர் அந்நியானப் பெண்சாதிகளைத் தள்ளிவிட்டது.

எஸ்றா இப்படி விண்ணப்பம்பண்ணி அறிக்கையிட்டு அழுது பராபரனுடைய வீட்டுக்குமுன்பாகத் தாழ்விழுந்து கிடக்கையில் இஸ்ரவேலிற் புருஷரும் பெண்சாதிகளும் பிள்ளைகளுமான மகா பெரிய சபை அவனண்டையிலே கூடிக்கொண்டது. ஏனென்றால் சனம் மிகவும் அழுதுகொண்டிருந்தது.

௨ அப்பொழுது ஏலாமின் புத்திரரில் ஒருவனாகிய எகியேலின் குமாரன் செகனியா எஸ்றாவுக்குப் பிரத்தியுத்தரமாகச் சொன்னதாவது, நாங்கள் தேசத்தின் சனங்களில் உண்டான அந்நிய ஸ்திரிகளைச் சேர்த்துக்கொண்டதினால் எங்கள் பராபரனுக்கு விரோதமாகப் பாதகம்பண்ணினோம். ஆகிலும் இப்பொழுது இந்தக் காரியத்திலே இன்னம் இஸ்ரவேலுக்காக நம்பிக்கையிருக்கிறது.

௩ இப்பொழுதும் அந்த எல்லா ஸ்திரிகளையும் அவர்களிற் பிறந்தவர்களையும் ஆண்டவருடைய ஆலோசனைக்கும் எங்கள் பராபரனுடைய கற்பனைக்கு நடுங்குகிறவர்களின் ஆலோசனைக்கும் ஒத்தபிரகாரமாக அகற்றிப்போடுவோமென்று எங்கள் பராபரனோடே உடன்படிக்கை பண்ணக்கடவோம். நியாயப்பிரமாணத்தின்படியே செய்யப்படக்கடவது.

௪ எழுந்திரும். ஏனென்றால் இந்தக் காரியத்தை நடப்பிக்க உமக்குக் கடனிருக்கிறது. நாங்கள் உம்மோடே கூடவிருப்போம். நீர் திடன்கொண்டு இப்படி நடப்பியுமென்றான்.

௫ அப்பொழுது எஸ்றா எழுந்திருந்து ஆசாரியர் லேவியருடைய பிரபுக்களும் இஸ்ரவேலனைத்தும் இந்த வார்த்தையின்படி செய்யும்படிக்கு அவர்களை ஆணையிட்டுக்கொண்டான். அவர்கள் ஆணையிட்டார்கள்.

௬ அதின்பிறகு எஸ்றா பராபரனுடைய வீட்டுக்குமுன்பாக இருந்தெழுந்து எலியாசிபின் குமாரனாகிய யோகனானுடைய அறைக்குட் பிரவேசித்து அங்கே வந்தபோது அப்பம் புசிக்காமலும் தண்ணீர் குடிக்காமலுமிருந்தான். ஏனென்றால் சிறையிருப்பிலிருந்து வந்தவர்களுடைய பாதகத்தினிமித்தந் துக்கித்துக்கொண்டிருந்தான்.

௭ அப்பொழுது சிறையிருப்பிலிருந்து வந்தவர்களெல்லாரும் எருசலேமிலே வந்து கூடவேண்டுமென்றும்,

௮ மூன்று நாளைக்குள்ளே பிரபுக்களும் மூப்பர்களுடைய ஆலோசனையின்படியே வராதேபோனால் அவனுடைய ஆஸ்தியெல்லாஞ் சாபத்தீடாகி அவன் சிறையிருப்பிலிருந்து வந்த சபைக்குப் புறம்பாக்கப்படுவானென்றும் யூதாவிலும் எருசலேமிலும் கூறப்பண்ணினார்கள்.

௯ அப்படியே யூதா பெஞ்சமீன் கோத்திரத்தாரெல்லாரும் மூன்று நாளைக்குள்ளே எருசலேமிலே கூடினார்கள். அது ஒன்பதாம் மாதம் இருபதாந்தேதியாயிருந்தது. சனமெல்லாம் பராபரனுடைய வீட்டு வீதியிலே அந்தக் காரியத்தினாலும் மழை

கொத்திரத்தமாகவும் நடுங்கிக்கொண்டிருந்தார்கள்.

௰ அப்பொழுது ஆசாரியனாகிய எஸ்றா எழுந்திருந்து அவர்களுடனே சொன்னது: நீங்கள் இஸ்ரவேலின்மேலிருக்கிற குற்றத்தை அதிகரிக்கப்பண்ண மறுசாதியான ஸ்திரீகளைப் படைத்ததினாலே பாதகம் பண்ணினீர்கள்.

௰௧ இப்பொழுதும் நீங்கள் உங்கள் பிதாக்களினுடைய கர்த்தருக்கு அறிக்கைபண்ணி அவருடைய பிரியத்தின்படி செய்து தேசத்தின் ஜனங்களையும் மறுசாதியான ஸ்திரீகளையும் விட்டு விலகுங்கள் என்றான்.

௰௨ அப்பொழுது சபையெல்லாம் சத்தமிட்டுச் சொன்ன பிரத்தியுத்தரமாவது: ஆம், நீர் எங்களோடே சொன்ன உம்முடைய வார்த்தைகளின்படியே செய்யப்படக்கடவது.

௰௩ ஆனால் ஜனம் திரளானது. இது மாரிகாலமாயிருக்கிறதினால் இங்கே வெளியே நிற்கப் பெலனில்லை. இது ஒருநாள் வேலையும் இரண்டுநாள் வேலையுமல்ல ஏனென்றால் இந்தக் காரியத்திலே விஸ்தாரமானபடி பாதகம்பண்ணினோம்.

௰௪ ஆகையால் இந்தச் சபையெங்கும் எங்கள் பிரபுக்கள் விசாரிப்புக்காரராக வைக்கப்படட்டும். அப்படியே இந்தக் காரியத்தினிமித்தம் நம்முடைய பராபரனுக்கு இருக்கிற உக்கிரமான கோபத்தை நாங்கள் எங்களை விட்டுத் திரும்பப்பண்ணவும் மட்டும் எங்கள் பட்டணங்களில் மறுசாதியான ஸ்திரீகளைப் படைத்த அனைவரும் ஒவ்வொரு பட்டணத்தின் மூப்பரோடுந் தங்கள் நியாயாதிபதிகளோடுங்கூடக் குறித்த காலங்களில் வரக்கடவர்களென்றார்கள்.

௰௫ ஆனால் ஆசகேலின் குமாரன் யோனத்தானுந் திக்வாவின் குமாரன் யகசியாவும் மாத்திரம் இதை விசாரிக்க வைக்கப்பட்டார்கள். மெசுல்லாமுஞ் சப்பெத்தாயுமென்ற லேவியனும் அவர்களுக்கு ஒத்தாசைபண்ணினார்கள்.

௰௬ சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் இந்தப்பிரகாரமாகச் செய்தார்கள். ஆசாரியனாகிய எஸ்றாவுந் தங்கள் பிதாக்களுடைய வீட்டின்படியே பேர்பேராக அழைக்கப்பட்ட பிரதான வம்சங்களின் தலைவரனைவரும் இந்தக் காரியத்தை ஆராய்ந்துபார்க்கும்படிக்குப் பத்தாம் மாதம் முதல் தேதியிலே தனித்து உட்கார்ந்து,

௰௭ அந்நிய சாதியான ஸ்திரீகளைப் படைத்தவர்களெல்லாருடைய காரியத்தையும் முதலாம் மாதம் முதல் தேதியிலே முடித்துப்போட்டார்கள்.

௰௮ ஆசாரியரின் புத்திரரில் மறுசாதியான பெண்சாதிகளைப் படைத்தவர்களாகக் காணப்பட்டவர்கள் ஆரென்றால், யோசதாக்கின் குமாரனாகிய ஏசுவாவின் குமாரரிலும் அவன் சகோதரரிலும் மாசெயாவும் எலியேசரும் யாரீபுங் கெதலியாவும்,

௰௯ இவர்கள் தங்கள் ஸ்திரீகளைத் தள்ளிவிடுவோமென்று தங்கள் கைகளைக் கொடுத்தார்கள்; அவர்கள் குற்றவாளிகளானபடியினாலே குற்றம்போக்கும் பலியாக ஒரு ஆட்டுக்கடாவைச் செலுத்தினார்கள்.

௨௰ இம்மேரின் புத்திரரில் ஆனானியுஞ் செபதியாவும்,

௨௰௧ ஆரீமின் புத்திரரில் மாசெயா, எலியா, செமாயா, யகியேல், உசியா என்கிறவர்களும்,

௨௰௨ பஸ்கூரின் புத்திரரில் எலியோனாய், மாசெயா, இஸ்மவேல், நெதனெயேல், யோசபாத், எலாசா என்றவர்களும்,

௨௰௩ லேவியரில் யோசபாத், சிமேயி, கெலிதா என்றுபேருள்ள கெலாயா, பெத்தகியா, யூதா, எலியேசர் என்றவர்களும்,

௨௰௪ பாடகரில் எலியாசிபும், வாசற்காப்பாளரிற் சல்லூமுந் தேலேமும், ஊரி யென்றவர்களும்,

௨௰௫ மற்ற இஸ்ரவேலுக்குள்ளே பாரோஷின் புத்திரரில் ரமியா, எசியா, மல்கியா, மியாமின், எலெயாசார், மல்கியா, பெனாயா என்றவர்களும்,

௨௰௬ ஏலாமின் புத்திரரில் மத்தனியா, சகரியா, எகியேல், அப்தி, எரேமோத், எலியா என்றவர்களும்,

௨௰௭ சத்தூவின் புத்திரரில் எலியோனாய், எலியாசீப், மத்தனியா, எரேமோத், சாபாத், அசிசா என்றவர்களும்,

௨௰௮ பெபாயின் புத்திரரில் யோகனான், அனனியா, சாபாயி, அத்லாயி என்றவர்களும்,

௨௰௯ பானியின் புத்திரரில் மெசுல்லாம், மல்லூக், அதாயா, யாசுப், செயால், எரேமோத் என்றவர்களும்,

௩௰ பாகாத்மோவாபின் புத்திரரில் அத்னா, கேலால், பெனாயா, மாசெயா, மத்தனியா, பெத்சாலெயேல், பின்னூயி, மனாசே என்றவர்களும்,

௩௰௧ ஆரீமின் புத்திரரில் எலியேசர், இசியா, மல்கியா, செமாயா, சிமேயோன்,

௩௰௨ பென்யமீன், மல்லூக், செமரியா என்றவர்களும்,

௩௰௩ ஆசூமின் புத்திரரில் மத்னாயி, மத்தத்தா, சாபாத், எலிப்பேலேத், எரேமாயி, மனாசே, சிமேயி என்றவர்களும்,

௩௰௪ பானியின் புத்திரரில் மாதாயி, அம்ராம், ஊவேல்,

௩௰௫ பெனாயா, பெதியா, கெலூகி,

௩௬ வனியா, மெரெமோத், எலியாசீப்,
௩௭ மத்தனியா, மத்னாயி, யாசாய,
௩௮ பானீ, பின்னூயி, சிமெயி,
௩௯ செலெமியா, நாத்தான, அதாயா,
௪௰ மகநாத்பாயி, சாசாயி, சாராயி,
௪௧ அசரேயேல, செலெமியா, செமரியா,
௪௨ சலூம், அமரியா, யோசேபென்றவர்களும,

௪௩ நேபோவின்புத்திரரில ஏயேல, மத்தித்தியா, சாபாத், செபினா, யத்தாய, யோவேல, பெனாயா என்றவர்களுந்தானே.

௪௪ இவர்களெல்லாரும் மறுசாதியான ஸ்திரீகளைப்படைத்தவர்கள். இவர்களிற்சிலர் தங்களுக்குப்பிள்ளைகளைப்பெற்ற ஸ்திரீகளைப்படைத்தவர்களுமாயிருந்தார்கள்.

முற்றிற்றுமுற்றும்.

# நெகெமீயாவின்புஸ்தகம்.

## ௧. அதிகாரம்.

நெகெமீயா யூதேயாதேசத்தின் துயரமான செய்தியைக்கேட்டுப்பண்ணின ஜெபம.

அகலியாவின்குமாரனாகிய நெகெமீயாவின்வர்த்தமானங்கள். இருபதாம வருஷம கிஸ்லேயுமாதத்தில நான் சூசானென்னுங்கோட்டையிலிருக்கிறபோது சம்பவித்ததேதெனில,

௨ என்சகோதரரில ஒருவனாகிய அனானியும வேறேசில மனுஷரும யூதாவிலிருந்து வந்தார்கள். அவர்களை நான் சிறையிருப்பிலிருந்து தப்பின யூதரின்செய்தியையும எருசலேமின்செய்தியையுங்கேட்டேன.

௩ அவர்கள எனக்குச்சொன்னதாவது, சிறையிருப்பிலமீந்திருக்கிறவர்கள அந்தச சீர்மையிலேமகாத்துக்கத்தையும நிந்தையையும அனுபவிக்கிறார்கள. எருசலேமின அலங்கம இடிபட்டதும அதின வாசலகள அக்கினியாற் சுட்டுப்போடப்பட்டதுமாயக கிடக்கிறதென்றார்கள.

௪ நான இந்தவார்த்தைகளைக கேட்டபோதுசம்பவித்ததேதென்றால, நான உட்கார்ந்து அழுது சிலநாளாயத்துக்கித்துக கொண்டுபரமண்டலங்களின பராபரனுக்குமுன்பாக உபவாசிக்கிறவனும மன்றாடுகிறவனுமாயிருந்து,

௫ சொன்னதாவது ஆ பரமண்டலங்களின பராபரனாகியகர்த்தாவே, உம்மைச சிநேகிக்கிறவர்களுக்கும உம்முடையகற்பனைகளைக கைக்கொள்ளுகிறவர்களுக்கும உடம்படிக்கையையுங் கிருபையையுங்காக்கிற மகத்துவமும பயங்கரமுமுள்ள பராபரனே,

௬ உமதடியாராகிய இஸ்ரவேலபுத்திரருக்காக இன்று இரவும்பகலும உமக்கு முன்பாக மன்றாடி, இஸ்ரவேலபுத்திரராகிய நாங்கள உமக்கு விரோதமாகச்செய்த பாவங்களை அறிக்கையிடுகிற அடியேனுடைய ஜெபத்தைக்கேட்கிறதற்கு உமதுசெவி கவனித்தும உமதுகண்கள்திறந்துமிருப்பதாக. நானும என்தகப்பன்வீட்டாரும பாவஞ்செய்தோம.

௭ நாங்கள உமக்கு முன்பாகக்கெட்டுப்போகவே கெட்டுப்போய்த்தேவரீர் உம்முடைய தாசனாகிய மோசேயுக்குக்கற்பித்த கற்பனைகளையுங் கட்டளைகளையும நியாயங்களையுங்கைக்கொள்ளாதேபோனோம.

௮ நீங்கள துரோகம்பண்ணுவீர்கள. அப்போது நாமுங்களைச சனசதளங்களுக்குள்ளே சிதறடிப்போமென்றும,

௯ நீங்கள நம்மண்டைக்குத்திரும்பி நம்முடைய கற்பனைகளைக்கைக்கொண்டு அதுகளின்படி செய்யும்போதோவென்றால, உங்களிலே தள்ளுண்டவர்கள வானத்தின்கடையாந்தரத்திலிருந்தாலும நாம அங்கேயிருந்தவர்களைச்சேர்த்து, நம்முடைய நாமம் வாசமாயிருக்கப்பண்ண நாமதெரிந்துகொண்ட ஸ்தலத்துக்கு அவர்களைக்கொண்டுவருவோமென்று தேவரீர்உம்முடைய தாசனாகிய மோசேக்குக்கற்பித்த வார்த்தையை நினையுமேன.

௰ தேவரீர் உம்முடைய சத்துவத்தினாலும உம்முடைய பலத்த கரத்தினாலும மீட்டுக்கொண்ட உமதடியாரும உமதுசனமும அவர்கள்தானே.

௰௧ ஆ, ஆண்டவரே, உமதுசெவிகள உமதடியானின ஜெபத்தையும உம்முடைய நாமத்துக்குப்பயப்பட ஆசையுள்ள உமதடியாரின ஜெபத்தையுங் கவனித்திருக்கட்டுமேன. இன்றைக்கு உமதடியானுக்குக்காரி

பூட்டுகளையும அதின தாப்பாளகளையும போட்டான

௰௫ ஊற்றுவாசலைமிஸ்பாவினமாகாணத்துப்பிரபுவாகிய கொல்லோசேயின குமாரனசல்லூம் பழுதுபார்த்து அதைககட்டி மசசுபபாவி அதின கதவுகளையும பூட்டுகளையும தாப்பாள்களையுமபோட்டு, இராசாவின சிங்காரததோட்டத்தண்டையிலிருக்கிற சிலோவாவின குளததுமதிலையுந்தாவீதின பட்டணததிலிருந்திறங்குகிறபடிகளமட்டாகவிருக்கிறதைக்கட்டினான.

௰௬ அவனுக்குப பின்னுக பெத்சூர் மாகாணத்தின பாதிககுப பிரபுவாகிய அஸ்பூக்கின குமாரன நெகெமீயா தாவீதின பிரேதக்குழிகளுக்கெதிரான இடமமட்டாகவும வெட்டப்பட்ட குளமமட்டாகவும பராக்கிரம சாலிகளின வீடுமட்டாகவும இருக்கிறதைப்பழுதுபார்த்துக்கட்டினான.

௰௭ அவனுக்குப பின்னுக லேவியரில பானியின குமாரனரேகூமும, அவனருகே கேகிலா மாகாணததில தன்னுடைய பாதி பங்குக்குப்பிரபுவாகிய அசபீயாவுமபழுதுபார்த்துக்கட்டினார்கள.

௰௮ அவனுக்குப்பின்னுக அவனுடைய சகோதரராகிய கேகிலா மாகாணத்துமறுபாதிக்குப பிரபுவாகிய எனாதாதின குமாரனபாவாய்பழுதுபார்த்துக்கட்டினான.

௰௯ அவனருகே மிஸ்பாவினபிரபுவாகிய யெசுவாவின குமாரன ஏசர் என்றவன மூலையில ஆயுதசாலையின படிகளுக்கெதிரேயிருக்கிற வேறொருபங்கைப்பழுதுபார்த்துக்கட்டினான.

௨௰ அவனுக்குப பின்னுக சபாயின குமாரனாகிய பாரூக் அந்தமூலையைததுவககிப பிரதான ஆசாரியனாகிய எலியாசிபின வாசறபடியமட்டுமிருக்கிற பின்னொருபங்கைவெகுசாக்கிரதையோடேபழுதுபார்த்துக்கட்டினான.

௨௧ அவனுக்குப பின்னுகக்கோசின குமாரனாகிய உரியாவினமகன மெரேமோத் எலியாசிபினவீட்டு வாசற்படியைததுவககி அவனுடையவீட்டின கடைசிககோடிமட்டுமிருக்கிற பின்னொரு பங்கைப்பழுதுபார்த்துக்கட்டினான.

௨௨ அவனுக்குப பின்னுகச சமபூமியில வாசமாயிருக்கிற ஆசாரியாகள பழுதுபார்த்துக்கட்டினார்கள.

௨௩ அவர்களுக்குப பின்னுகபபெனயமீனும அசூபும தங்களவீடுகளுக்கெதிரேயிருக்கிறதைப பழுதுபார்த்துக கட்டினார்கள. அவர்களுக்குப பின்னுக அனனியாவின குமாரனாகிய மாசேயாவினமகன அசரீயா தனவீட்டினருகேயிருக்கிறதைப பழுதுபார்த்துக்கட்டினான.

௨௪ அவனுக்குப பின்னுக எனாதாதின குமாரனபின்னூவி அசரீயாவின வீட்டை தொடங்கி அலங்கத்தின திருப்புமட்டும கோடிமட்டுமிருக்கிற வேறொருபங்கைப பழுதுபார்த்துக்கட்டினான.

௨௫ ஊசாயின குமாரன பாலால் மூலைக்கெதிரேயும காவலவீட்டின முற்றத்துக்கடுத்த இராசாவின உயரமானவீட்டுக்கு வெளிப்புறமாயிருக்கிற கொம்மைக்கெதிரேயுமிருக்கிறதைக்கட்டினான. அவனுக்குப பின்னுகப்பாரோசின குமாரன பெதாயாவும,

௨௬ ஒபேலிலே குடியிருக்கிற இஸ்ரவேலைச்சேர்ந்த மற்றவர்களும கிழக்கேயிருக்கிற தண்ணீர்வாசலுக்கும வெளிப்புறமான கொம்மைக்கெதிரேயிருக்கிற இடமமட்டுங்கட்டினார்கள.

௨௭ அவர்களுக்குப பின்னுகத தெக்கோவா ஊரார் வெளிப்புறமான பெரியகொம்மைக்கெதிரே ஒபேலின மதிலமட்டுமிருக்கிற பின்னொரு பங்கைப்பழுதுபார்த்துக்கட்டினார்கள.

௨௮ குதிரைகளினவாசல முதற்கொண்டு ஆசாரியர்கள அவரவர்தங்கள வீடுகளுக்கெதிரேயிருக்கிறதைப் பழுதுபார்த்துக் கட்டினார்கள.

௨௯ அவர்களுக்குப்பின்னுக இம்மேரின்குமாரன சாதோக் தன்வீட்டுக்கெதிரேயிருக்கிறதைப்பழுதுபார்த்துக்கட்டினான. அவனுக்குப்பின்னுக் கிழக்குவாசலைக்காக்கிற செகனியாவினகுமாரன செமாயா பழுதுபார்த்துக்கட்டினான.

௩௰ அவனுக்குப பின்னுகசசெலமீயாவின குமாரன அனனியாவுஞ்சாலாபபின ஆறுவதுகுமாரனாகிய ஆனூனும்வேறொருபங்கைப்பழுதுபார்த்துக்கட்டினார்கள. அவர்களுக்குப பின்னுகப்பெரெகியாவின குமாரன மெசுல்லாம தன்னுடைய அறைவீட்டுக்கெதிரேயிருக்கிறதைப் பழுதுபார்த்துக்கட்டினான.

௩௧ அவனுக்குப்பின்னுகத் தட்டான்குமாரனமலகீயா இலக்கமபார்க்கிறவாசலுக்கெதிரே இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களும மளிகைக்காரருங்குடியிருக்கிற ஸ்தலமமட்டாகவுங்கோடியினமேலவீடுமட்டாகவும இருக்கிறதைப் பழுதுபார்த்துக்கட்டினான.

௩௨ கோடியினமேலவீட்டுக்கும ஆட்டுவாசலுக்கும நடுவேயிருக்கிறதைத்தட்டாருமமளிகைக்காரரும பழுதுபார்த்துக்கட்டினார்கள.

## ௪. அதிகாரம்.

நெகெமீயாசத்துருக்களின பரியாசத்தையும ஒப்பந்தத்தையும எண்ணுமல அலங்கத்தினவேலையைநடத்தினது.

ஆனாலநாங்கள அலங்கத்தைக்கட்டுகிறசெய்தியைச்சன்பல்லாத் கேட்டபோ

துசம்பவித்ததேதென்றால், அவன் எரிச்சலும் வெகுதாங்கலும் அடைந்து யூதரைச் சக்கந்தம்பண்ணி,

௨ அந்தப் பெலனற்ற யூதர் செய்கிறதென்ன. அவர்களுக்கு இடங்கொடுக்கப்படுமோ, பலியிடுவார்களோ, ஒருநாளிலே முடித்துப் போடுவார்களோ, சுட்டெரித்துப் போடப்பட்ட மண்மேடுகளுமான கல்லுகளை உயிர்ப்பிப்பார்களோ என்று தன்சகோதரருக்கும் சமாரியாவின் இராணுவத்திற்கும் முன்பாகச் சொன்னான்.

௩ அப்போது அம்மோனியனான தொபியா அவனண்டையிலிருந்து, அவர்கள் கட்டினாலும் நரி ஏறினால் அவர்களுடைய கல்மதிலை இடிக்குமென்றான்.

௪ எங்கள்பராபரனே, நாங்கள் அசட்டைபண்ணப்படுகிறவிதத்தைக் கேட்டு அவர்கள் நிந்திக்கிற நிந்தையை அவர்கள் தலையின்மேல் திருப்பி, அவர்களைச் சிறையிருப்பின் தேசத்திலே கொள்ளைக்குக் கொடும்.

௫ அவர்கள் அக்கிரமத்தை மூடிப்போடாதேயும். அவர்கள் பாவம் உமக்குமுன்பாகக் கொலைக்கப்படாதிருப்பதாக. ஏனென்றால் கட்டுகிறவர்களுக்கு மனமடிவுண்டாகப் பேசினார்கள்.

௬ நாங்களோவென்றால் அலங்கத்தைக் கட்டிவந்தோம். அலங்கமெல்லாம் பாதிமட்டும் ஒன்றாய் இணைந்துயர்ந்தது. ஏனென்றால் ஜனம் வேலைசெய்கிறதற்கு ஆசையாயிருந்தது.

௭ எருசலேமின் அலங்கத்தைக் கட்டுகிறவேலை வளர்ந்தேறுமென்றும் இடிக்கப்பட்ட இடங்கள் அடைபடத்துவக்குகிறதென்றும் சன்பல்லாத்தும் தொபியாவும் அரபியரும் அம்மோனியரும் அஸ்தோதியரும் கேட்டபோது சம்பவித்ததென்னவென்றால் அவர்கள் மிகவும் எரிச்சலாகி,

௮ எல்லாரும் ஏகமாய் எருசலேமின்மேல் யுத்தம்பண்ணவரவும் அதில் ஒருகலக்கமுண்டாக்கவும் பந்துக்கட்டு பண்ணினார்கள்.

௯ ஆனால் நாங்கள் எங்கள்பராபரனை நோக்கிச்செபம்பண்ணி அவர்கள் நிமித்தம் இரவும் பகலும் காவல்காக்கிறவர்களை அவர்களுக்குநேராக வைத்தோம்.

௰ அப்போது யூதா சுமைகாரரின் பெலன் குறைந்தும் மண்மேடோ மிச்சமானது. நாங்கள் அலங்கத்தைக் கட்டக்கூடாதென்றார்கள்.

௰௧ எங்கள் சத்துருக்களோவென்றால், நாங்கள் அவர்கள் நடுவிலேவந்து அவர்களைக் கொன்றுபோடுமட்டும் அவர்கள் அதை அறியாமலும் பாராமலுமிருக்கவேணும். அப்படியே அந்தவேலையை ஓயப்பண்ணுவோமென்றார்கள்.

௰௨ அதை அவர்களண்டையிலே குடியிருக்கிற யூதரும் வந்து நாங்கள் எல்லா இடங்களிலுமிருந்து எங்களண்டைக்குத் திரும்பவந்து பத்துவிசை எங்களுக்குச் சொன்னபோதோவென்றால்,

௰௩ நான் அலங்கத்துக்குப்பின்னாக இருக்கிறபள்ளமான ஸ்தலங்களிலும் மேடுகளிலுந் தங்கள் பட்டயங்களோடுந் தங்கள் ஈட்டிகளோடுந் தங்கள் வில்லுகளோடுந் தரித்திருக்கிற சனத்தை வம்சம் வம்சமாக நிறுத்தினேன்.

௰௪ அதை நான் பார்த்துக்கொண்டு எழும்பி, பெரியவர்களோடும் மூப்பரோடும் மற்றச்சனத்தோடும், அவர்களுக்குப் பயப்படாதேயுங்கள். நீங்கள் மகத்துவமும் பயங்கரமுமுள்ள ஆண்டவரை நினைத்து, உங்கள் சகோதரருக்காகவும் உங்கள் குமாரர்களுக்காகவும் உங்கள் குமாரத்திகளுக்காகவும் உங்கள் பெண்சாதிகளுக்காகவும் உங்கள் வீடுகளுக்காகவும் யுத்தம்பண்ணுங்களென்றேன்.

௰௫ எங்களுக்குச்செய்தி தெரியவந்ததென்று எங்கள் பகைஞர் கேட்டபோதோவென்றால் பராபரன் அவர்கள் ஆலோசனையை அபத்தமாக்கினார். அப்போது நாங்களெல்லாருமாக அவரவர் தங்கள் வேலையைச்செய்ய அலங்கத்துக்குத் திரும்பினோம்.

௰௬ அன்றுமுதற்கொண்டு சம்பவித்ததென்னவென்றால் என் வேலைக்காரரிற் பாதிப்பேர் வேலையிலே இறங்கப் பாதிப்பேர் ஈட்டிகளையும் பரிசைகளையும் வில்லுகளையுஞ் சீராக்களையுந் தரித்திருந்தார்கள். பிரபுக்கள் யூதா வீட்டாரெல்லாருக்கும் பின்னாக நின்றார்கள்.

௰௭ அலங்கத்திலே கட்டுகிறவர்களுஞ் சுமையைச் சுமக்கிறவர்களுஞ் சுமையைச் சுமத்துகிறவர்களும் அவரவர் ஒருகையினாலே வேலையைச்செய்து மறுகையினாலே ஆயுதம்பிடித்திருந்தார்கள்.

௰௮ கட்டுகிறவர்கள் அவரவர் தங்கள் பட்டயத்தைத் தங்கள் இடுப்பிலே கட்டிக்கொண்டவர்களாய்க் கட்டினார்கள். ஆனால் எக்காளம் ஊதுகிறவன் என்னண்டையிலேயிருந்தான்.

௰௯ நான் பெரியவர்களோடும் மூப்பரோடும் மற்றச்சனத்தோடுஞ் சொன்னது, வேலை பெரியதும் விஸ்தாரமுமானது. நாம் அலங்கத்தின்மேலே சிதறப்பட்டு ஒருவருக்கொருவர் தூரமாயிருக்கிறோம்.

௨௰ நீங்கள் எவ்விடத்திலே எக்காளத்தொனியைக் கேட்பீர்களோ அவ்விடத்திலே வந்து எங்களோடே கூடுங்கள். நமுடையபராபரன் நமக்காக யுத்தம்பண்ணுவாரென்றேன்.

௨௧ இப்படியே நாங்கள் வேலையிலிருந்தோம். அவர்களிலே பாதிப்பேர் கிழக்கு வெளுக்கும் நேரந்துவக்கி நட்சத்திரங்கள் புறப்படும் மட்டும் ஈட்டிகளைப் பிடித்திருந்தார்கள்.

௨௨ அக்காலத்திலே நான் சனத்தோடே, இராமாறு நமக்குக் காவலுக்கும் பகல் வேலைக்கும் உதவ அவரவர் தங்கள் வேலைக்காரரோடேகூட எருசலேமுக்குள்ளே இராத்தங்கக் கடவர்களென்று சொல்லி,

௨௩ நானும் என் சகோதரராகிலும் என் வேலைக்காரராகிலும் என்னைப் பின்சென்று காவற்காக்கிற மனிதரானாலும் எங்கள் வஸ்திரங்களைக் களைந்துபோடாதிருந்தோம். அவரவருக்கு அவர்கள் ஆயுதம் முத்தண்ணீருமிருந்தது.

## ரு. அதிகாரம்.

எளியவர்கள் அனுபவித்த சில அநியாயங்களை நெகெமீயா அகற்றினது.

௧ சனமும் அவர்கள் பெண்சாதிகளும் யூதராகிய தங்கள் சகோதரர் பேரிலே முறையிட்டுப் பெரிய கூக்குரலுண்டாயிற்று.

௨ அதேதெனில், எங்களோடுங்கூட எங்குமாரரும் எங்கள் குமாரத்திகளும் அநேகரானபடியினாலே நாங்கள் சாப்பிட்டுப் பிழைக்கும்படிக்குத் தானியத்தைக் கடன்வாங்குகிறோமென்று சொல்லுகிறவர்களிருந்தார்கள்.

௩ எங்கள் நிலங்களையும் எங்கள் திராட்சத்தோட்டங்களையும் எங்கள் வீடுகளையும் நாங்கள் அடகாகவைத்து இந்தப் பஞ்சத்திலே தானியம் வாங்குகிறோமென்று சொல்லுகிறவர்களுமிருந்தார்கள்.

௪ இராசாவுக்கு இறைகொடுக்க நாங்கள் எங்கள் நிலங்களின்மேலும் எங்கள் திராட்சத்தோட்டங்களின்மேலும் திரவியத்தைக் கடனுக்கு வாங்குகிறோமென்றும்,

௫ இப்போது எங்கள் சகோதரரின் மாமிசத்துக்கு எங்கள் மாமிசமும் அவர்கள் பிள்ளைகளுக்கு எங்கள் பிள்ளைகளும் சரியாயிருந்தாலும், இதோ, நாங்கள் எங்கள் குமாரரையும் எங்கள் குமாரத்திகளையும் அடிமைத்தனத்திற்கு உட்படப்பண்ணுகிறோம். எங்கள் குமாரத்திகளிலே சிலர் அப்பொழுதே அதற்கு உட்பட்டார்கள். அவர்களை மீட்க எங்கள் கையிலே சத்துவமில்லை. எங்கள் நிலங்களும் எங்கள் திராட்சத்தோட்டங்களும் வேறே மனிதரைச் சேர்ந்ததென்றுசொல்லுகிற வேறே சிலருமிருந்தார்கள்.

௬ அவர்கள் கூக்குரலையும் இப்படிக்கொத்த வார்த்தைகளையும் நான் கேட்டபோது நான் மிகவும் எரிச்சலாகி,

௭ என் மனதிலே ஆலோசனைபண்ணிக்கொண்டு, பிற்பாடு பெரியவர்களோடும் அதிபதிகளோடும் வழக்காடி அவர்களுடனே, நீங்கள் அவரவர் தங்கள் சகோதரர் மேலே கடனைச் சுமத்துகிறீர்களே என்றுசொல்லி அவர்களுக்கு விரோதமாகப் பெரிய சபையை வரப்பண்ணி,

௮ அவர்களுடனே, புறசாதியாருக்கு விற்கப்பட்ட யூதராகிய எங்கள் சகோதரரை நாங்கள் எங்கள் சத்திக்குத்தக்கதாய் மீட்டிருக்கச் சொல்ல நீங்கள் திரும்ப உங்கள் சகோதரரை விற்கிறீர்களோ. இவர்கள் நமக்கு விலைப்பட்டுப் போகலாமோ என்றேன். அப்போது அவர்கள் மவுனமாயிருந்து மறுஉத்தரவுசொல்ல இடமில்லாதிருந்தார்கள்.

௯ பின்னையும் நான் சொன்னதாவது, நீங்கள் செய்கிற காரியம் நல்லதல்ல. நம்முடைய சத்துருக்களாகிய புறச்சாதியார் நிந்திக்கிறதினிமித்தம் நீங்கள் நம்முடைய பராபரனுக்குப் பயந்து நடக்கவேண்டாமோ.

௰ நானும் என் சகோதரரும் என் வேலைக்காரரும் இப்படியாக அவர்களுக்குத் திரவியமும் தானியமும் கடன்கொடுத்தோமே. இந்த வட்டியை விட்டுவிடுவோமாக.

௰௧ நீங்கள் இன்றைக்கு அவர்கள் நிலங்களையும் அவர்கள் திராட்சத்தோட்டங்களையும் அவர்கள் ஒலீவத்தோட்டங்களையும் அவர்கள் வீடுகளையும் நீங்கள் திரவியத்திலும் தானியத்திலும் திராட்சரசத்திலும் எண்ணெயிலும் நூற்றுக்கொன்றுவிழுக்காடு அவர்களிடத்தில் தண்டிவருகிற வட்டியையும் அவர்களுக்குத் திரும்பக்கொடுத்துவிடுங்களேனென்றேன்.

௰௨ அப்போது அவர்கள் நாங்கள் அதைத் திருப்பக்கொடுத்து, இனி அப்படி அவர்களிடத்திற் கேளாதிருப்போம். நீர் சொல்லுகிறபடியே செய்வோமென்றார்கள். அப்போது நான் ஆசாரியர்களையழைப்பித்து அவர்கள் இந்த வார்த்தையின்படி செய்யும்படிக்கு அவர்களை ஆணையிடுவித்துக்கொண்டேன்.

௰௩ நான் என் மடியையும் உதறிப்போட்டு இப்படிப் பராபரன் இந்த வார்த்தையை நிலைநிற்கப்பண்ணாத எந்த மனிதனையும் அவன் வீட்டிலும் அவன் சம்பாத்தியத்திலுமிருந்து உதறிப்போடக்கடவர். இந்தப் பிரகாரமாக அவன் உதறப்பட்டு வெறுமையாய்ப்போவானாக என்றேன். அதற்கு அந்தச் சபையெல்லாம் ஆமென்றுசொல்லிக் கர்த்தரைத் துதித்தார்கள். பிறகு சனம் இந்த வார்த்தையின்படியே செய்தது.

௰௪ நான் யூத்தேசத்திலே துரையாயிருக்க இராசாவாகிய அர்த்தசஷ்டா எனக்குக் கற்பித்தநாளாகிய அவருடைய இருபதா

ம் வருஷந்துவக்கி அவருடைய முப்பத்திரண்டாம் வருஷம் மட்டுமிருந்த பன்னிரண்டு வருஷவரையிலே நானும் என் சகோதரருந் துரையின் அப்பத்தைச் சாப்பிட்டதுமில்லை.

௰௫ எனக்கு முன்னிருந்த முந்தின துரைகளோவென்றால் சனத்தின்மேலே பாரமாயிருந்து அவர்கள் கையிலே அப்பமுந் திராட்சப்பழ இரசமும் அதுவுமல்லாமல் நாற்பது சேக்கல் வெள்ளியும் வாங்கினார்கள். அவர்கள் வேலைக்காரருஞ் சனத்தை ஆண்டுகொண்டார்கள். ஆனால் நான் பராபரனுக்குப் பயந்ததினாலே அப்படிச் செய்ததில்லை.

௰௬ ஒரு வயலையும் நாங்கள் கொள்ளாமல் அந்த அலங்கத்தின் வேலையிலே இறங்கிக்கொண்டிருந்தேன். என் வேலைக்காரரெல்லாரும் அங்கே அந்த வேலைக்குக் கூடிக்கொண்டார்கள்.

௰௭ யூதருமொப்பருமான நூற்றைம்பது பேரும் எங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளிடத்திலிருந்து எங்களண்டைக்கு வந்தவர்களும் என் பந்தியிலே சாப்பிட்டார்கள்.

௰௮ ஒரு நாளைக்கொரு மாடும் பொறுக்கியெடுத்த ஆறு ஆடுஞ் சமைக்கப்பட்டது. குருவிகளும் எனக்குச் சமைக்கப்பட்டது. பத்து நாள்வரையிலே சகலவித திராட்சப்பழ இரசமும் நிரம்பச் செலவழிந்தது. ஆகிலுந் துரையின் அப்பத்தை நான் கேட்டதில்லை. ஏனென்றால் இந்தச் சனத்தின் மேலிருந்த பாடு கடினமாயிருந்தது.

௰௯ என் பராபரனே, நான் இந்தச் சனத்துக்காகச் செய்ததெல்லாவற்றையும் எனக்கு நன்மையாக நினைத்தருளும்.

## ௬. அதிகாரம்.

சத்துருக்கள் பண்ணின பலவித சற்பனைகளுக்குள்ளும் அலங்கத்தின் வேலை முடிந்து போனது.

௧ நான் அலங்கத்தைக் கட்டிப்போட்டேனென்றும் அதிலே வெடிப்பு ஒன்றுமில்லையென்றும் சன்பல்லாத்துக்குந் தொபியாவுக்கும் அராபியனான கேஷேமுக்கும் எங்களுக்குண்டான மற்றப் பகைஞருக்குங் கேள்விப்பட்டபோது சம்பவித்ததெனில்,

௨ நான் கதவுகளை வாசல்களில் அக்காலம் மட்டும் இன்னம் போடாதிருக்கச் சன்பல்லாத்துங் கேஷேமும் நாம் ஓனோ பள்ளத்தாக்கிலிருக்கிற கிராமங்களில் ஒருவரையொருவர் கண்டு பேசுவோம் வாருமென்று எனக்குச் சொல்லியனுப்பினார்கள். அவர்களோவென்றால் எனக்குப் பொல்லாப்புச் செய்ய நினைத்தார்கள்.

௩ அப்போது நான் அவர்களண்டைக்கு ஆட்களையனுப்பி பெரிய வேலையை நான் செய்கிறேன் நானிறங்கிவரக்கூடாது. நான் அந்த வேலையைவிட்டு உங்களண்டைக்கிறங்கி வருகிறதினாலே அது மினக்கெட்டுப்போவானேனென்று சொல்லச்சொன்னேன்.

௪ அவர்கள் இந்தப்பிரகாரமாக நாலுதரம் எனக்குச் சொல்லியனுப்பினார்கள். நானும் இந்தப்பிரகாரமாகவே அவர்களுக்கு மறுமொழி சொல்லியனுப்பினேன்.

௫ ஐந்தாந்தரஞ் சன்பல்லாத்து அந்தப் பிரகாரமாகத் தன் வேலைக்காரனையும் அவன் கையிலே திறந்திருக்கிற ஒரு காகிதத்தையும் எனக்கனுப்பினான்.

௬ அதிலே எழுதியிருந்தது, நீரும் யூதருங் கலகம்பண்ண நினைக்கிறீர்களென்றும், அதற்காக நீர் அலங்கத்தைக் கட்டுகிறீர். இந்தப்பிரகாரமாக நீர் அவர்களுக்கு இராசாவாயிருப்பீரென்றும்,

௭ இவர் யூதாவிலே இராசாவென்றும் உம்மைக்குறித்து எருசலேமிலே கூறப்போகிற தீர்க்கதரிசிகளையுஞ் சம்பாதித்தீரென்று புறசாதிகளுக்குள்ளே கேட்கப்படுகிறது. கஷ்மூவும் அப்படிச் சொல்லுகிறான். இப்போதும் இராசாவுக்கு இந்தப்பிரகாரமாகக் கேட்கப்படுமே. ஆகையால் நாம் ஒன்றாகக்கொண்டு ஆலோசனைபண்ணுகிறதற்காக நீர் வாருமென்றெழுதியிருந்தது.

௮ ஆனால் நான் அவனுக்கு, நீர் சொல்லுகிற அந்தக் காரியங்களிலொன்றும் நடந்ததில்லை. நீர் அதுகளை உம்முடைய இருதயத்திலே கட்டினீரென்று சொல்லியனுப்பினேன்.

௯ ஏனென்றால் அந்த வேலை நடந்தேறாதபடிக்கு அவர்களுடைய கை சலித்துப்போமென்று சொல்லி அவர்களெல்லாரும் எங்களுக்குப் பயமுண்டாக்கப்பார்த்தார்கள். இப்போதும் பராபரனே, என் கைகளைத் திடப்படுத்தும்.

௰ நான் மெகதாபெயேலின் குமாரனாகிய தெலாயாவின் மகன் செமாயாவின் வீட்டிலே வந்தேன். ஏனென்றால் அவன் அடைக்கப்பட்டிருந்தான். அப்போது அவன் நாம் இருவருமாய்ப் பராபரனுடைய வீடாகிய தேவாலயத்துக்குள்ளே போய்த் தேவாலயத்தின் கதவுகளைப் பூட்டுவோம் வாரும். ஏனென்றால் உம்மைக் கொன்றுபோட வருவார்கள். உம்மைக் கொன்றுபோட இராவிலே வருவார்களென்றான்.

௰௧ அதற்கு நான் என்னைப்போலொத்த மனிதன் ஓடிப்போவானோ என்னைப்போலொத்தவன் உயிரோடிருக்கும்படிக்குத் தேவாலயத்திலே போய்ப் பதுங்குவானோ நான் போவதில்லையென்றேன்.

௰௨ ஏனென்றால் இதோ, பராபரன் அவனையனுப்பினதில்லையென்றும், தொபியாவுஞ் சன்பல்லாத்தும் அவனுக்குக் கூலி கொடுத்ததினால் அவன் எனக்கு விரோதமாய

அந்தத் தீர்க்கதரிசனத்தைச சொன்னானென்றும அறிந்துகொண்டேன.

௰௩ நானபயந்து அப்படிச்செயதுபாவஞ்செயதுகொள்ளுகிறதற்கும என்னை நிநதிக்கததக்க ஒரு அவகீர்த்தியினமுகாநதிரந்தஙகளுக்குணடாகககிறதற்குமாக அவனுக்குக்கூலிகொடுத்திருந்தார்கள.

௰௪ என பராபரனே. தொபியாவுஞ சனபல்லாத்துஞசெயத இந்தச்செயகைக்குத்தக்கதாகத்தேவரீர் அவர்களையும நொவதியாவென்ற தீர்க்கதரிசியானவளையும எனக்குப பயமுணடாககப பார்த்த மற்றத்தீர்க்கதரிசிகளையுமநினையும.

௰௫ அப்படியேஅலஙகமானது ஐமபததிரண்டுநாளைக்குள்ளே கட்டப்பட்டு எலூலமாதம இருபத்தைந்தாநதேதியிலே தீர்ந்தது.

௰௬ எஙகளபகைஞரெலலாரும அதைககேட்டபோதோவெனில, எஙகள சுற்றுப புறத்தாராகிய புறசசாதியான அனைவரும பயந்துமெத்த முனையற்றுப்போய, இந்தக்கிரியை எஙகளபராபரனாற் கைகூடிவநததென்றறிந்தார்கள.

௰௭ அந்தநாட்களில யூதாவிலுள்ளபெரியமனிதரிடத்திலிருந்து தொபியாவுககுப போகிறதுந தொபியாவினிடத்திலிருந்து அவர்களுககு வருகிறதுமான காகிதஙகள அநேகமாயிருந்தது.

௰௮ ஏனென்றால யூதாவில அநேகர் அவனுககாணையிட்டுக கொடுத்திருந்தார்கள. அதேதென்றால அவன ஆரகனகுமாரனாகிய செககனியாவுககு மருமகனாயிருந்ததுமலலாமல அவனகுமாரனாகிய யோகனான பெரேகியாவினகுமாரனாகிய மெசுலலாமினகுமாரத்தியை விவாகம பணணியிருநதான.

௰௯ அவனுடைய நனமைகளையும அவர்கள எனககுமுனபாகவிவரித்து, என்னுடையவார்த்தைகளை அவனுககுககொணடுபோவார்கள ஆகையாலதொபியாஎனககுப பயமுணடாகக் காகிதஙகளை அனுப்புவான.

## ௭. அதிகாரம்.

எருசலேமினகாவலகளைத திட்டமபணணிச சிறையிருப்பிலிருநதுவநத வமிசஙகளின அட்டவணை ஆராயநதுபார்ககப பட்டது.

அலஙகஙகட்டித்தீர்நது, நானகதவுகளைப்போட்டபிற்பாடோவென்றால, வாசற் காப்பாருமபாட்டகருமலேவியருமவைககப பட்டார்கள.

௨ அப்போது நான எனசகோதரனாகிய அனானிககும அரணமனைத்தலைவனாகிய அனனியாவுககும எருசலேமின காவலைக கற்பித்தேன. ஏனென்றால இவன அநேகரைப பார்கக உணமையுள்ள மனிதனும பராபரனுககுப பயநதவனுமாயிருநதான.

௩ அவர்களுககு நானசொன்னது, சூரியனகாநதியாய எறிககும்மட்டும எருசலேமினவாசலகளதிறககபபடடவேணடாம. காவற்காப்பார் இன்னம நிற்கச்சொலலவுஙகதவுகளைபபூட்டவேணும. அப்போது நீஙகள அதகளையிழுத்துபபாருஙகள. எருசலேமின குடிகளிற் காவற்காப்பார் அவரவர் தஙகள காவலிலும அவரவர்தஙகள வீடுகளுககெதிராகவும நிறுததப்படககடவர்களென்றேன.

௪ அனறிப்பட்டணம விஸ்தாரமுமபெரியதும அதற்குளளே சனங கொஞசமுமாயிருநதது. வீடுகளகட்டப்படாமலுமிருநதது.

௫ அப்போது வமிசத்தட்டவணைககளப பார்ககிறதற்கு நானபெரியவர்களையும மூப்பரையுஞ சனத்தையுங கூட்டிககொளள என்னுடையபராபரனெனமனதிலே நினைவுகொடுத்தார். முந்தி வநதவமிசஙகளின அட்டவணைப்புஸ்தகம அப்போது எனககு அகப்பட்டது. அதிலேநானவழுதியிருக்கக்கணடதாவது,

௬ பாபேலின இராசாவாகிய நேபுகாதநேச்சார் சிறைபபிடித்துப போனவர்களுள, சிறையிருப்பிலிருநது செருபாபேலோடும, ஏசுவா, நெகெமியா, அசரியா, ராமியா, நகமானி, மற்தகாயி, பிலசான, மிஸ்பெரேத், பிக்வாயி, நெகூம், பானா என்கிறவர்களோடுங்கூட வறிவநது,

௭ எருசலேமுககும யூதாவுககுந்திரும்பித்தஙகளதஙகள பட்டணஙகளிலே குடியிறஙகினவர்களுமான இநதசசீமையின புத்திரராகிய இஸ்ரவேலசனமானமனிதரின இலககமாவது,

௮ பாரோசினபுத்திரர் இரணடாயிரத்தொருநூற்றெழுபத்திரணடு.

௯ செப்பத்தியாவினபுத்திரர் முந்நூற்றெழுபத்திரணடு.

௰ ஆரகினபுத்திரர் அறுநூற்றைமபத்திரணடு.

௰௧ ஏசுவாயோவாப் என்றவர்களினபுத்திரருககுளளே பாகாத்மோவாபினபுத்திரர் இரணடாயிரத்தெணணூற்றுப்பதினெட்டு.

௰௨ ஏலாமின்புத்திரர் ஆயிரத்திருநூற்றைமபத்துநாலு.

௰௩ சத்தூவினபுத்திரர் எணணூற்றுநாற்பத்தைநது.

௰௪ சக்காயினபுத்திரர்எழுநூற்றறுபது.

௰௫ பினனூவினபுத்திரர் அறுநூற்றுநாற்பத்தெட்டு.

௰௬ பெபாயிமபுத்திரர் அறுநூற்றிருபத்தெட்டு.

௰௭ அஸ்காதின்புத்திரர் இரண்டாயிரத்து முந்நூற்றிருபத்திரண்டு.

௰௮ அதோனிக்காமின் புத்திரர் அறுநூற்றறுபத்தேழு.

௰௯ பிக்வாயின்புத்திரர் இரண்டாயிரத்தறுபத்தேழு.

௨௰ ஆதினின்புத்திரர் அறுநூற்றைம்பத்தைந்து.

௨௰௧ எசேக்கியாவின்குமாரனாகிய ஆதேரின்புத்திரர்தொண்ணூற்றெட்டு.

௨௰௨ ஆசூமின்புத்திரர் முந்நூற்றிருபத்தெட்டு.

௨௰௩ பெத்சாயின்புத்திரர் முந்நூற்றிருபத்துநாலு.

௨௰௪ ஆரிப்பின்புத்திரர் நூற்றுப்பன்னிரண்டு.

௨௰௫ கிபெயோன்புத்திரர் தொண்ணூற்றைந்து.

௨௰௬ பெத்லெகேம் ஊராரும் நெத்தோப்பா ஊராரும் நூற்றெண்பத்தெட்டு.

௨௰௭ ஆனதோத்தூர்மனிதர் நூற்றிருபத்தெட்டு.

௨௰௮ பெத் அஸ்மாவேத் ஊரார் நாற்பத்திரண்டு.

௨௰௯ கீரியாத்யெயாரீம், கெபிரா, பேரோத் ஊர்களின்மனிதர் எழுநூற்றுநாற்பத்துமூன்று.

௩௰ ராமா காபா ஊர்களின்மனிதர் அறுநூற்றிருபத்தொன்று.

௩௰௧ மிக்மாஸ் ஊரார் நூற்றிருபத்திரண்டு.

௩௰௨ பெத்தேல் ஆயி ஊர்களின்மனிதர் நூற்றிருபத்துமூன்று.

௩௰௩ வேறொருநேபோ ஊரார் ஐம்பத்திரண்டு.

௩௰௪ மறு ஏலாம்புத்திரர் ஆயிரத்திருநூற்றைம்பத்துநாலு.

௩௰௫ ஆரிம்புத்திரர் முந்நூற்றிருபது.

௩௰௬ எரிகோபுத்திரர் முந்நூற்றுநாற்பத்தைந்து.

௩௰௭ லோத், ஆதித், ஓனோ ஊர்களின் புத்திரர் எழுநூற்றிருபத்தொன்று.

௩௰௮ செனாயா புத்திரர் மூவாயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பது.

௩௰௯ ஆசாரியர்களாவது, யெசுவாவீட்டாராகிய யெதாயாவின்புத்திரர் தொள்ளாயிரத்தெழுபத்துமூன்று.

௪௰ இம்மேரின்புத்திரர் ஆயிரத்தைம்பத்திரண்டு.

௪௰௧ பஸ்கூரின்புத்திரர் ஆயிரத்திருநூற்றுநாற்பத்தேழு.

௪௰௨ ஆரிமின்புத்திரர் ஆயிரத்துப்பதினேழு.

௪௰௩ லேவியராவது, ஒதியாவின்புத்திரருக்குள்ளே கத்மியேலின் குமாரனாகிய யெசுவாவின்புத்திரர் எழுபத்துநாலு.

௪௰௪ பாட்டகராவது, ஆசாபின்புத்திரர் நூற்றுநாற்பத்தெட்டு.

௪௰௫ வாசற்காப்பாளராவது, சல்லூமின் புத்திரர், அதேரின்புத்திரர், தல்மோனின் புத்திரர், அக்கூபின்புத்திரர், அதிதாவின் புத்திரர், சோபாயின்புத்திரர், நூற்றுமுப்பத்தெட்டு.

௪௰௬ இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களாவது, சீகாவின் புத்திரர், அசுபாவின் புத்திரர், தபாகோதின்புத்திரர்,

௪௰௭ கேரோசின்புத்திரர், சீயாவின்புத்திரர், பாதோனின்புத்திரர்,

௪௰௮ லெபானாவின்புத்திரர், அகாபாவின் புத்திரர், சல்மாயின்புத்திரர்,

௪௰௯ ஆனானின்புத்திரர், கித்தேலின்புத்திரர், காகாரின்புத்திரர்.

௫௰ ரெயாயாவின்புத்திரர், ரேத்சீனின் புத்திரர், நெகோதாவின்புத்திரர்,

௫௰௧ காசாமின்புத்திரர், ஊசாவின்புத்திரர், பாசேயாகின்புத்திரர்,

௫௰௨ பேசாயின் புத்திரர், மெயுனீமின் புத்திரர், நெபூசீமின்புத்திரர்,

௫௰௩ பக்பூக்கின் புத்திரர், அகூபாவின் புத்திரர், அர்கூரின்புத்திரர்,

௫௰௪ பஸ்லீதின் புத்திரர், மெகிதாவின் புத்திரர், அறஷாவின்புத்திரர்,

௫௰௫ பர்கோசின் புத்திரர், சிஸ்ராவின் புத்திரர், தாமாகின்புத்திரர்,

௫௰௬ நெத்சியாகின்புத்திரர், அதிபாவின்புத்திரர்,

௫௰௭ சாலோமோனுடைய வேலைக்காரரின்புத்திரராவது, சொதாயின் புத்திரர், சொபெரேதின்புத்திரர், பெரிதாவின்புத்திரர்,

௫௰௮ யாலாவின் புத்திரர், தற்கோனின் புத்திரர், கித்தேலின்புத்திரர்,

௫௰௯ செப்பத்தியாவின் புத்திரர், அத்தீலின் புத்திரர், பொகெரேத்செபாயிமின்புத்திரர், ஆமோனின்புத்திரர்,

௬௰ இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களும் சாலொமோனுடைய வேலைக்காரரின்புத்திரருமாகிய எல்லாருக்கும் முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டுபேராயிருந்தார்கள்.

௬௰௧ தெல்மெலாகிலும் தெல்அர்ஷாவிலுமிருந்து, கேருப், அத்தோன், இம்மேர் என்பவர்களும் வந்தார்கள்; ஆனாலும் தாங்கள் இஸ்ரவேலரென்று தங்கள் பிதாக்களின் வீட்டையும் தங்கள் பூருவோத்திரத்தையும் அறிவிக்கமாட்டாதிருந்தார்கள்.

௬௰௨ தெலாயாவின் புத்திரர், தொபியாவின் புத்திரர், நெக்கோதாவின் புத்திரர், அறுநூற்றுநாற்பத்திரண்டுபேர்.

௬௰௩ ஆசாரியர்களில் ஒபாயாவின் புத்திரர், கோத்சின்புத்திரர், கீலேயாத்தியனான பர்சிலாயின் குமாரத்திகளில் ஒருத்தியை

பிராகமபணணி. அவர்கள வமிசநாமநத ிககபபட்டபறகிலாபினபுததிரர்,

௬௪ இவர்கள தஙகளவங்கிஷத தட்டவ ணையில எழுதபபட்டவர்களில இவர்கள தஙகளபோைதெடிக்காறுதேபோய அசு ததமெனறு ஆசாரிய ஊழியததுககுபபுறம பாளுர்கள.

௬௫ வெளிசசங்களும உததமஙகளுமுள ளஒரு ஆசாரியன எழுமபுமமடடும அவர் களபரிசுத்தத்துககு பரிசுததமானதிலே போசிககவேணடாமெனறுதிற்ஷாதா அவ ர்களுககுசசொனனுன.

௬௬ இநதசசபையெலலாம ஏகததுக நாற்பததிராயிரதது முந்நூறறுபது பேராயிருநதது.

௬௭ அவர்களைததவிர ஏழாயிரததுமுந நூற்று முபபததேழுபேரானவர்களுடைய வேலககாரரும வேலககாரிகளும இரு நூறறுநாற்பததைநதுபாட்டகரும பாட டகிகளும அவர்களுககிருநதார்கள.

௬௮ அவர்களுடையகுதிரைகளஎழுநூற் றுமுபபததாறும, அவர்களகோவேறுகழு தைகள இருநூறறுநாற்பததைநதும,

௬௯ ஒடடகஙகளநானூற்றுமுபபதைதை நதும, கழுதைகள ஆறாயிரததுஎழுநூற்றி ருபதுமாயிருநதது.

௭௰ வமிசஙகளின தலைவரிலே சிலர்வே லைககெனறு கொடுத்ததாவது, திர்ஷாதா ஆயிரநதஙகக்காசையும ஐமபதுகலஙகளை யும ஐந்நூறறுமுபபது ஆசாரியவஸதிரங களையும பொககிஷததுககுக்கொடுததான.

௭௧ வமிசஙகளின தலைவரிற் சிலர்வே லையினபொககிஷததுககு இருபதினுயிரந தஙகக்காசையும இரணடாயிரததிருநூறு ராததலவெளளியையுஙகொடுததார்கள.

௭௨ மறறசசனஙகொடுத்தது இருபதி னுயிரந தஙகக்காசுமஇரணடாயிரம ராத தலவெளளியும, அறுபததேழு ஆசாரிய வஸதிரஙகளுமானது.

௭௩ ஆசாரியர்களும லேவியருமவாசற் காபபாளருமபாட்டகருஞ சனததிற்சிலரும நிதனிமியரும இஸரவேலரும தஙகளபட்டணஙகளிற் குடியிருந தார்கள. ஏழாமமாதமசேருகிறபோது இஸர வேலபுததிரர் தஙகளபட்டணஙகளிலிருந தார்கள.

## அ. அதிகாரம்.

நியாயபபிரமாணஞ சனததுககுமுனபாக வாசிககபபட்டது.

சனமெலலாம அபபோது தணணீர்வாச லுககுமுனனுன வீதியிலே ஒருவனைபபோ லேகூடிககொணடு, கர்ததர் இஸரவேலுக குக்கறபிதத மோசேயின நியாயபபிரமா ணபபுஸ்தகததைககொணடு வரவேணடுமெ னறுவேதபாரகனுகியஎஸறுவுககுசசொன னார்கள.

௨ அபபடியே ஏழாமமாதம முதல தேதியிலே ஆசாரியனுகிய எஸறுநியாயப பிரமாணததைப புருஷருமஸதிரிகளுமா கேட்கிறதற்கு உணர்வுளள அனைவருமா கியசசபைககு முனபாகக்கொணடுவநது,

௩ தணணீர்வாசலுககு முனனுனவீதிக கெதிரேயிருநது அதிகாலமமுதல மததியானமமட்டும புருஷருககும ஸதிரீக ளுககுமஉணர்வுளளவர்களுககுமமுனபாக வாசிததான. சகலசனததின செவிகளும நியாயபபிரமாணப புஸ்தகததினமேலே கவனிததிருநதது.

௪ வேதபாரகனுகிய எஸறு அதற்காக சசெயயபபட்ட ஒருமரமேடையினமே லேநினறுன. அவனணடையில அவனுககு வலதுபககமாக மததிததியாவுஞ செமாவு மஅனாயாவும உரியாவும இலக்கியாவுமமா செயாவும அவனுககு இடதுபககமாகப பெதாயாவும மீஷவேலும மல்கியாவும ஆசூமுமஅஸபதானாவுஞ சகரியாவுமமெசு லலாமும நினறுர்கள.

௫ எஸறு சகலசனததின கணகளுககு முனபாகபபுஸ்தகத்தைத்திறநதான. ஏனெ னில, அவனசகலசனததுககும உயரமாய நினறுன. அவனஅதைததிறககிறபோது சனமெலலாம எழுநதுநினறது.

௬ அபபோது எஸறு மகததுவமுளள பராபரனுகிய கர்ததரைத் தோததிரிததா ன சனமெலலாந தஙகள கைகளைககுவித து அதற்குமறுமொழியாக, ஆமென ஆமென் எனறுசொலலிககுனிநதுமுகங்குபபுறவிழு நது கர்த்தரைபபணிநதுகொணடார்கள.

௭ ஏசுவா, பானி, செரேபியா, யாமீன, ஆகூப், சபெதாயி, ஒதியா, மாசெயா, கே லிதா, அசரியா, யோசபாத், ஆனான, பெ லாயா எனறவர்களும லேவியரும நியா யபபிரமாணததைசசனம உணரபபணணி னார்கள. சனநதஙகளநிலையிலேநினறுர்கள.

௮ அவர்கள பராபரனுடைய நியாயப பிரமாணமெனறபுஸதகததிலே திட்டமா கவாசிததது அருததஞசொலலி வாசிககபப டடதை அவர்கள உணரபபணணினுர்கள.

௯ திர்ஷாததா எனனபபட்ட நெகெமி யாவும வேதபாரகனுகிய எஸறுவெனற ஆசாரியனுஞ சனததையுணரபபணணுகிற லேவியருமஎலலாசசனததுடனேயுமஇநத நாள உஙகள பராபரனுகிய கர்ததருககுப பரிசுததமானது. நீஙகள துககிததுககொ ணடு அழாதேயுஙகளெனறுர்கள. ஏனென றுல்சனமெலலாம நியாயபபிரமாணததின வார்ததைகளைககேட்கிறபோது அழுதார் கள.

௰ அவன் அவர்களுடனே: நீங்கள் போய்க் கொழுத்தவைகளைப் பொசித்துத் தித்திப்பானதுகளைக் குடித்துத் தங்களுக்காகச் சேகரம்பண்ணாதவர்களுக்குப் பங்குகளை அனுப்புங்கள். ஏனென்றால் இந்த நாள் நம்முடைய ஆண்டவருக்குப் பரிசுத்தமானது; மனம் நொந்துகொண்டிராதேயுங்கள். ஏனென்றால் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருக்குதலே உங்களுடைய பெலனென்றான்.

௰௧ லேவியருஞ் சனத்தையெல்லாம் அமர்த்தி: அழாதிருங்கள், ஏனென்றால் இந்த நாள் பரிசுத்தமானது, மனம் நொந்திராதேயுங்களென்றார்கள்.

௰௨ அப்போது சனமெல்லாம் பொசித்துக் குடிக்கவும் பங்குகளை அனுப்பவும் பெரிய சந்தோஷத்தை நடப்பிக்கவும் போனார்கள். ஏனென்றால் தங்களுக்கறியப்பண்ணின வார்த்தைகளையுணர்ந்திருந்தார்கள்.

கூடாரப்பண்டிகை ஆசரிக்கப்பட்டது.

௰௩ மறுநாளிலே சகல சனவமிசங்களின் தலைவரும் ஆசாரியர்களும் லேவியரும் நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை உணர்ந்துகொள்ள வேதபாரகனாகிய எஸ்றாவண்டையிலே கூடிவந்தார்கள்.

௰௪ அப்போது நியாயப்பிரமாணத்திலே, இஸ்ரவேல்புத்திரர் ஏழாம் மாதத்தின் பண்டிகையிலே கூடாரங்களிற் குடியிருக்கவேண்டுமென்று கர்த்தர் மோசேயைக்கொண்டு கற்பித்த செய்தியெழுதியிருக்கிறதென்று கண்டுபிடித்தார்கள்.

௰௫ ஆகையால் எழுதியிருக்கிறபடி கூடாரங்களைப் போடும்படிக்கு நீங்கள் மலைகளுக்குப் புறப்பட்டு ஒலிவக்கிளைகளையும் எண்ணெய்விருட்சங்களின் கிளைகளையும் மிர்துச்செடிகளின் கிளைகளையும் பேரீச்சமட்டைகளையும் அடர்த்தியான மரக்கிளைகளையுங் கொண்டுவாருங்களென்று தங்களுடைய எல்லாப் பட்டணங்களிலும் எருசலேமிலுங் கூறிச்சத்தமிடுவித்தார்கள்.

௰௬ அப்படியே சனம் வெளியே போய்க் கொண்டுவந்து, அவரவர் தங்கள் வீடுகளின் மேலும் தங்கள் முற்றங்களிலும் பராபரனுடைய வீட்டுப் பிராகாரங்களிலும் தண்ணீர் வாசல் வீதியிலும் எப்பிராயீம் வாசல் வீதியிலும் தங்களுக்குக் கூடாரங்களைப் போட்டார்கள்.

௰௭ இந்தப் பிரகாரமாகச் சிறைப்பிடிப்பிலிருந்து திரும்பி வந்தவர்களின் சபையெல்லாங் கூடாரங்களைப் போட்டுக் கூடாரங்களிற் குடியிருந்தார்கள். இப்படியே நூனின் குமாரனாகிய யோசுவாவின் நாட்கள் துவக்கி அந்த நாள் மட்டும் இஸ்ரவேல்புத்திரர் செய்யாதிருந்தபடியினாலே மகா பெரிய சந்தோஷமுண்டாயிருந்தது.

௰௮ முதலாம் நாள் துவக்கிக் கடைசி நாள் மட்டுந் தினந்தினம் பராபரனுடைய நியாயப்பிரமாணப்புஸ்தகத்திலே வாசிக்கப்பட்டது. ஏழு நாளாய்ப் பண்டிகையை ஆசரித்தார்கள். எட்டாம் நாளோவென்றால், முறைமையின்படியே சபைகூடுகிற நாளாயிருந்தது.

## ௯. அதிகாரம்.

உபவாசநாள் ஆசரிக்கப்பட்டது.

௧ அந்த மாதம் இருபத்துநாலாந் தேதியிலோவென்றால் இஸ்ரவேல்புத்திரர் உபவாசம்பண்ணி இரட்டுடுத்தித் தங்கள் மேல் புழுதியைப் போட்டுக்கொண்டவர்களாய்க் கூடினார்கள்.

௨ இஸ்ரவேல் வித்தார் மறுசாதியாரையெல்லாம் விட்டுப் பிரிந்துகொண்டு, வந்து நின்று தங்கள் பாவங்களையுந் தங்கள் பிதாக்களின் அக்கிரமங்களையும் அறிக்கையிட்டார்கள்.

௩ அவர்கள் எழுந்திருந்து தங்கள் நிலையில் நின்றார்கள். அப்போது ஒரு சாமம் மட்டும் அவர்களுடைய பராபரனாகிய கர்த்தரின் நியாயப்பிரமாணப்புஸ்தகத்திலே வாசிக்கப்பட்டது. பின்னொரு சாமம் மட்டும் அவர்கள் பாவ அறிக்கைபண்ணித் தங்கள் பராபரனாகிய கர்த்தரைப் பணிந்துகொண்டார்கள்.

௪ ஏசுவா, பானி, கத்மியேல், செபனியா, புன்னி, செரேபியா, பானி, கெனானியா என்றவர்கள் லேவியருடைய படிகளின்மேல் நின்று, தங்கள் பராபரனாகிய கர்த்தரை நோக்கி மகாசத்தமாய்க் கூப்பிட்டார்கள்.

௫ பிற்பாடு லேவியரான ஏசுவா, கத்மியேல், பானி, ஆசாட்னியா, செரேபியா, ஒதியா, செட்னியா, பெத்தகியா என்பவர்கள்: நீங்கள் எழுந்திருந்து, அநாதியாய் என்றென்றைக்குமிருக்கிற உங்கள் பராபரனாகிய கர்த்தரைத் தோத்திரியுங்களென்று சொன்னதாவது: எந்தத் தோத்திரிப்புக்கும் துதிப்புகழுக்கும் உயரமான உம்முடைய மகிமையுள்ள நாமந் தோத்திரிக்கப்படக்கடவது.

௬ தேவரீர் ஒருவரே கர்த்தரானவர், தேவரீர் பரமண்டலங்களையும் பரமண்டலங்களின் பரமண்டலங்களையும் அதுகளுடைய எல்லாச் சேனையையும் பூமியையும் அதிலுள்ளதெல்லாவற்றையும் சமுத்திரங்களையும் அதுகளிலுள்ளதெல்லாவற்றையும் உண்டாக்கினீர். அதுகளையெல்லாந் தேவரீர் உயிர்ப்பிக்கிறீர். பரமண்டலங்களின் சேனைகள் உம்மைப் பணிந்துகொள்ளுகின்றது.

௭ தேவரீர் ஆபிறாமைத் தெரிந்துகொண்டு அவனை ஊர் என்கிற கல்தேயரின் பட்டணத்திலிருந்து புறப்படப்பண்ணி அவனு-

ராகிய லேவியர்கள் எங்கள் வெள்ளாண்மையின் பட்டணங்களிலெல்லாம் பத்திலொன்றைச் சேர்க்கவும்,

௩௮ லேவியர் பத்திலொன்றைச் சேர்க்கும்போது ஆரோனின் குமாரனாகிய ஒரு ஆசாரியன் லேவியரோடேகூட இருக்கவும் பத்திலொன்றாகிய அதிலே லேவியர் பத்திலொருபங்கை எங்கள் பராபரனுடைய வீட்டிலுள்ள பொக்கிஷவீட்டறைகளிற் கொண்டுவரவும் திட்டம்பண்ணிக்கொண்டோம்.

௩௯ ஏனென்றால் பரிசுத்த ஸ்தலத்தின் தட்டுமுட்டுகளும் ஊழியஞ்செய்கிற ஆசாரியர்களும் வாசற்காப்பாளரும் பாடகருமிருக்கிற அந்த அறைகளிலே இஸ்ரவேல்புத்திரரும் லேவிபுத்திரரும் தானியந் திராட்சப்பழரசம் எண்ணெய் என்றவைகளின் படைப்புகளைக் கொண்டுவரவேண்டியது. இப்படியே நாங்கள் எங்கள் பராபரனுடைய வீட்டைப் பராமரியாமல் விடுவதில்லையென்று திட்டம்பண்ணிக்கொண்டோம்.

## ௰௧. அதிகாரம்.

எருசலேமிலும் தேசத்தின் மற்றப்பட்டணங்களிலும் குடியிருந்தவர்கள்.

சனத்தின் பிரபுக்கள் எருசலேமிலே குடியிருந்தார்கள். மற்றச்சனமோவென்றால் தங்களுக்குள்ளே பத்துப்பேரிலொருவனை எருசலேமென்ற பரிசுத்தபட்டணத்திலும் ஒன்பதுபேரை மற்றப்பட்டணங்களிலும் குடியிருக்கப்பண்ணிச் சீட்டுகளைப் போட்டுக்கொண்டார்கள்.

௨ ஆனால் எருசலேமிலே குடியிருக்க மனப்பூர்வமான மனுஷரெல்லாருக்கும் சனம் ஆசீர்வாதத்தைவாழ்த்தினது.

௩ யூதாவின் பட்டணங்களின் இஸ்ரவேலும் ஆசாரியர்களும் லேவியரும் இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களுஞ் சாலோமோனுடைய வேலைக்காரரின்புத்திரரும் அவரவர் தங்கள் காணிபூமியிலுந் தங்கள் பட்டணங்களிலுங் குடியிருந்தார்கள். ஆனால் எருசலேமிலேகுடியிருந்த சீமையின் தலைவராரென்றால்,

௪ எருசலேமிலே யூதபுத்திரரிற்சிலரும் பென்யமீன் புத்திரரிற்சிலருங் குடியிருந்தார்கள். யூதபுத்திரரிலே பேரேசின் புத்திரருக்குள்ளொருவனான மகலாலெயேலின் குமாரனாகிய செபத்தியாவின் குமாரன் அமரியாவுக்குப்பிறந்த சகரியாவுக்குக் குமாரனான உசியாவின் மகன் அத்தாயாவும்,

௫ சீலோனியின் குமாரன் சகரியாவுக்குக் குமாரனாகிய யோயாரீபுக்குக் குமாரனான அதாயாவுக்குப்பிறந்த அசாயாவின் குமாரனான கொல்லோசேயின் பாருக்கின் மகன் மாசெயாவுந்தானே.

௬ எருசலேமிலே குடியிருக்கிற பேரேசின்புத்திரரெல்லாம் நானூற்றறுபத்தெட்டுப் பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள்.

௭ பென்யமீன் புத்திரரில் ஆரென்றால், சல்லூ என்றவன். இவன் மெசுல்லாமுக்கும், இவன் யோவேதுக்கும், இவன் பெதாயாவுக்கும், இவன் கொலாயாவுக்கும், இவன் மாசெயாவுக்கும், இவன் இத்தியேலுக்கும், இவன் எசாயாவுக்குங் குமாரனானவன்.

௮ அவனுக்குப்பிறகு காபாயி, சல்லாயி முதலானவர்கள் தொள்ளாயிரத்திருபத்தெட்டுப்பேர்.

௯ அவர்கள் மேல்விசாரிப்புக்காரனான சிக்கிரியின் குமாரன் யோவேலும், பட்டணத்தின்மேல் இரண்டாவதுவிசாரிப்புக்காரனான செனுவாவின் குமாரன் யூதாவுந்தானே.

௰ ஆசாரியர்களில் யோயாரீபின்குமாரன் எதாயா, யாகின் என்பவர்களும்,

௰௧ அகித்தூபின்குமாரன் மெராயோத்துக்குப்பிறந்த சாதோக்கின்குமாரன் மெசுல்லாமுக்குப்பிறந்த இல்க்கியாவின் மகன் செராயா என்ற பராபரனுடைய வீட்டின் தலைவனும்,

௰௨ அவர் வீட்டிலே பணிவிடையைச்செய்கிற அவர்கள் சகோதரராகிய எண்ணூற்றிருபத்திரண்டுபேரும், மல்கியாவின்குமாரன் பஸ்கூருக்கு மகனான சகரியாவின்குமாரன் அம்சிக்குப்பிறந்த பெலலியாவின் குமாரன் எரோகாமுக்குப்பிறந்த அதாயாவும்,

௰௩ பிதா வம்சங்களின் தலைவராகிய அவனுடைய சகோதரர் இருநூற்றுநாற்பத்திரண்டுபேரும், இம்மேரின் குமாரன் மெசில்லேமோத்தின் மகனாகிய ஆக்சாய்க்குப்பிறந்த அசரெயேலின் மகன் அமாசாயும்,

௰௪ அவர்களுடைய சகோதரராகிய பராக்கிரமசாலிகள் இருநூற்றிருபத்தெட்டுபேருந்தானே. இவர்கள்மேல் அகேதோலிமின்குமாரன் சப்தியேல் விசாரிப்புக்காரனாயிருந்தான்.

௰௫ லேவியரில் பூனியின்குமாரன் அசபியாவின் மகனாகிய அஸ்ரிக்காமின் குமாரனான அசூபின் மகன் செமாயாவும்,

௰௬ பராபரனுடைய வீட்டின் வெளிவேலையை விசாரிக்கிற லேவியரின் தலைவரில் சபெதாயும் யோசபாத்தும்,

௰௭ ஆசாபின் குமாரன் சப்தியின் குமாரனாகிய மிக்காவின் மகன் மத்தனியா என்கிற ஜெபத்தில் துதிசெய்யுந் தலைவனும் இரண்டாவதான பக்பூக்கியா என்ற அவன் சகோதரரிலொருவனும், எதுத்தூனின்குமாரன் காலாலின் மகனாகிய சமுவாவின் குமாரன் அப்தாவுந்தானே.

௰௮ பரிசுத்தபட்டணத்திலிருந்த லேவியரெல்லாம் இருநூற்றெண்பத்துநாலு பேர்.

௰௯ வாசற்காப்பார் அக்கூபும், தல்மோனும், வாசல்களிற் காவற்பண்ணுகிற அவர்கள் சகோதரரும் நூற்றெழுபத்திரண்டு பேராயிருந்தார்கள்.

௨௰ மற்ற இஸ்ரவேலும் ஆசாரியரும் லேவியரும் யூதாவின் சகல பட்டணங்களிலும் அவரவர் தங்கள் சுதந்தரத்திலிருந்தார்கள்.

௨௧ இஸ்ரவேலைச்சேர்ந்தவர்கள் ஓபேலிலே குடியிருந்தார்கள். அவர்கள்மேல் சீகாவும் கிஸ்பாவும் விசாரிப்புக்காரராயிருந்தார்கள்.

௨௨ எருசலேமிலிருக்கிற லேவியரின் விசாரிப்புக்காரன் மீகாவின் குமாரன் மத்தனியாவின் மகனாகிய அசபியாவுக்குப் பிறந்த பானியின் குமாரன் ஊசி என்கிறவன்; பாடகராகிய ஆசாபின் குமாரரிலொருவன் தேவனுடைய வீட்டின் வேலைக்கெதிராகத் திற்ந்தான்.

௨௩ என்னத்தற் பாடகராகிய அவர்களுக்காக அனுட்டிக்கப்படியாகிய ஒருகட்டளை இராசாவினாலே கற்பிக்கப்பட்டிருந்தது.

௨௪ யூதாவின் குமாரனாகிய சேராகின் புத்திரரில் மெசேசாபேயேலின் குமாரன் பெத்தகியா சனத்தின் காரியத்துக்கெல்லாம் இராசாவினால் வைக்கப்பட்டிருந்தான்.

௨௫ தங்கள் நாட்டுப்புறங்களான கிராமங்களிலிருக்கிறவர்களுக்குள்ளே யூதாவின் புத்திரரிலே சிலர் கீரியத் அர்பாவிலும் அதின் கிராமங்களிலும் தீபோனிலும் அதின் கிராமங்களிலும் எகாப்செயேலிலும் அதின் கிராமங்களிலும்,

௨௬ யெசுவாவிலும் மோலாதாகிலும் பெத்பேலேத்திலும்,

௨௭ ஆசார் சூவாலிலும் பெர்சேபாவிலும் அதின் கிராமங்களிலும்,

௨௮ சிக்லாகிலும் மெகோனாகிலும் அதின் கிராமங்களிலும்,

௨௯ என்ரிம்மோனிலும் சாரோயாகிலும் யர்மூத்திலும்,

௩௰ சனோவாகிலும், அதுல்லாமிலும் அதின் கிராமங்களிலும், லாகீசிலும் அதின் நாட்டுப்புறங்களிலும், அசெக்காவிலும் அதின் கிராமங்களிலும், பெர்சேபா துவக்கி இன்னோமின் பள்ளத்தாக்குமட்டுங் குடியிறங்கினார்கள்.

௩௧ கேபாவின் ஊராராயிருந்த பென்யமீன் புத்திரர், மிக்மாஸ், ஆயா பேத்தேல் ஊர்களிலும் அதின் கிராமங்களிலும்,

௩௨ ஆனதோத், நோப், அனனியா,

௩௩ ஆத்சோர், ராமா, கித்தாயிம்,

௩௪ ஆதீத், செபோயிம், நெபல்லாத்,

௩௫ லோத், ஓனோ என்கிற ஊர்களிலும் சற்பாசாரிகளின் பள்ளத்தாக்கிலுங் குடியிருந்தார்கள்.

௩௬ லேவியரிலே சிலவகுப்புகள் யூதாவிலும் பென்யமீனிலுமிருந்தது.

## ௰௨. அதிகாரம்.

### ஆசாரியர் லேவியருடைய பேர்ப்பட்டி.

செயல்தியேலின் குமாரனாகிய செருபாபேலோடும் எசுவாவோடும் வந்த ஆசாரியரும் லேவியரும் ஆரென்றால், செராயா, எரேமியா, எஸ்றா,

௨ அமரியா, மல்லூக், அத்தூஸ்,

௩ செக்கனியா, ரேகூம், மெரேமோத்,

௪ இத்தோ, கின்னேதோயி, அபியா,

௫ மியாமின், மாதியா, பில்கா,

௬ செமாயா, யோயரீப், எதாயா,

௭ சல்லூ, ஆமோக், இல்கியா, எதாயா என்றவர்கள். இவர்கள் எசுவாவின் நாட்களில் ஆசாரியர்களுக்குள்ளும் தங்கள் சகோதரருக்குந் தலைவராயிருந்தார்கள்.

௮ லேவியராரென்றால், எசுவா, பின்னூயி, கத்மியேல், செரேபியா, யூதா, மத்தனியா என்றவர்கள். இவனும் இவன் சகோதரரும் துதிசெய்யத் தலைவிசாரித்தார்கள்.

௯ பக்புக்கியாவும் உன்னியும் என்ற அவர்கள் சகோதரர் அவர்களுக்கெதிரே காவற்காத்திருந்தார்கள்.

௰ எசுவா யோயக்கீமைப் பெற்றான், யோயக்கீம் எலியாசிபைப் பெற்றான், எலியாசிப் யோய்தாவைப் பெற்றான்.

௰௧ யோய்தா, யோனத்தானைப் பெற்றான்; யோனத்தான் யதுவாவைப் பெற்றான்.

௰௨ யோயக்கீமின் நாட்களிலே பிதாவமிசங்களின் தலையான ஆசாரியர்களாரென்றால், செராயாவின் சந்ததியில் மெராயா, எரேமியாவின் சந்ததியில் அனனியா,

௰௩ எஸ்றாவின் சந்ததியில் மெசுல்லாம், அமரியாவின் சந்ததியில் யோகனான்.

௰௪ மெலிக்குவின் சந்ததியில் யோனத்தான், செபனியாவின் சந்ததியில் யோசேப்,

௰௫ ஆரீமின் சந்ததியில் அத்னா, மெராயோதின் சந்ததியில் எல்காயி,

௰௬ இத்தோவின் சந்ததியிலே சகரியா, கின்னேதோனின் சந்ததியில் மெசுல்லாம்,

௰௭ அபியாவின் சந்ததியிலே சிக்ரி, மின்யாமீன் மொவதியா என்றவர்களின் சந்ததியிலே பில்தாயி,

௰௮ பில்காவின் சந்ததியிலே சம்முவா, செமாயாவின் சந்ததியிலே யோனத்தான்,

௰௯ யோயரீபின் சந்ததியிலே மத்தனாயி, எதாயாவின் சந்ததியில் ஊசி,

௨௰ சல்லாயின் சந்ததியிலே கல்லாயி, ஆமோக்கின் சந்ததியிலே ஏபேர்,

௪௪ அன்றையதினம் பொக்கிஷங்களுக்கும் படைப்புகளுக்கும் முதற்கனிகளுக்கும் பத்திலொன்றுகளுக்கும் வைக்கும் அறைகளின்மேலே சில மனுஷர் ஆசாரியர்களுக்கும் லேவியர்களுக்கும் நியாயப்பிரமாணத்தின்படியே வரவேண்டியபட்டணங்களுடைய நிலங்களின்பங்குகளை அதுகளில் சேர்க்கும்படிக்கு விசாரிப்புக்காரராக வைக்கப்பட்டார்கள். ஏனென்றால் ஊழியஞ்செய்கிற ஆசாரியர்கள்பேரிலும் லேவியர்பேரிலும் யூதமனிதர் சந்தோஷமாயிருந்தார்கள்.

௪௫ ஏனெனில் அவர்கள் தங்கள் பராபரனுடையகாவலையும் சுத்திகரணத்தின்காவலையுங் காத்தார்கள். பாடகரும் வாசற்காப்பாளரும் தாவீதும் அவன்குமாரன் சாலொமோனுங் கற்பித்தபடியே நின்றார்கள்.

௪௬ ஏனென்றால் தாவீதும் ஆசாப்பும் இருந்தபூர்வநாட்களிற் பாடகரின்தலைவரும் வைக்கப்பட்டுப் பராபரனுக்குத் துதிஸ்தோத்திரங்களுஞ் செலுத்துகிறதென்ற திட்டமபண்ணப்பட்டிருந்தது.

௪௭ ஆகையாற் செருபாபேலின் நாட்களிலும் நெகேமியாவின் நாட்களிலும் இஸ்ரவேலரெல்லாம் பாடகருக்கும் வாசற்காப்பாளருக்கும் அனுதினந்திட்டமாகிய பங்குகளைக்கொடுத்து லேவியருக்கென்று பரிசுத்தமபண்ணினார்கள். லேவியரோவென்றால் ஆரோனின்புத்திரருக்கென்று அவைகளைப்பரிசுத்தமபண்ணிக்கொடுத்தார்கள்.

## ௰௩. அதிகாரம்.

ஆகாத்தியகாரியங்கள் தள்ளப்பட்டது.

அந்நாளிற்சனங்கேட்க மோசேயின் புஸ்தகத்தில வாசிக்கப்படுகிறபோது அதிலே அம்மோனியரும் மோவாபியரும் இஸ்ரவேலபுத்திரருக்கு அப்பமுந் தண்ணீருங்கொடுக்க எதிர்கொண்டுவராமல் அவர்களைச்சபிக்க அவர்களுக்கு விரோதமாகப் பிலேயாமைக்கூலிபொருந்திக்கொண்டபடியினாலே,

௨ அவர்கள் என்றைக்கும் அந்தச்சாபத்தை ஆசீர்வாதமாகத்திருப்பின எங்கள் பராபரனுடையசபைக்குட்படவேண்டாமென்றெழுதியிருக்கிறது கண்டுபிடிக்கப்பட்டது.

௩ ஆகையால அவர்கள் அந்த நியாயப்பிரமாணத்தைக்கேட்டபிற்பாடு கலந்துகொண்டசனத்தையெல்லாம் இஸ்ரவேலைவிட்டுப்பிரித்துப்போட்டார்கள்.

௪ இதற்குமுன்னே எங்கள்பராபரனுடையவீட்டின் அறைகளை விசாரிக்கவைக்கப்பட்டஆசாரியனாகிய எலியாசிப்தொபியாவோடேசம்பந்தங்கலந்தவனாயிருந்து,

௫ முற்காணிக்கைகளுங் கெந்தவர்க்கமும் தட்டுமுட்டுகளும் லேவியருக்கும்பாடகருக்கும் வாசற்காப்பாருக்குங் கட்டளைபண்ணப்பட்ட தானியந் திராட்சப்பழரசம் எண்ணெயென்றதுகளிலே பத்திலொன்றும் ஆசாரியனைச்சேருகிற படைப்பான்காணிக்கைகளும் வைக்கப்பட்டிருந்த இடத்தில ஒருபெரிய அறையை அவனுக்கு உண்டுபண்ணியிருந்தான்.

௬ இதிலே இப்படியெல்லாம நடக்கும்போது நான் எருசலேமிலிருந்ததில்லை. ஏனென்றால் பாபேலின் இராசாவாகிய அர்தசஷ்டாவின் முப்பத்திரண்டாம்வருஷத்திலே நான் இராசாவண்டைக்குப்போய்ச் சிலநாளுக்குப்பிற்பாடு திரும்ப இராசாவிடத்தில உத்தாரம்வாங்கி,

௭ எருசலேமுக்குவந்தேன். அப்போது எலியாசிப் தொபியாவுக்குப் பராபரனுடையவீட்டுப்பிரகாரங்களில ஒரு அறையை உண்டுபண்ணினதினாலே செய்த பொல்லாப்பை அறிந்துகொண்டேன்.

௮ அதினாலே நான் மிகவுமமனமடிவாகித் தொபியாவின் வீட்டுத் தட்டுமுட்டுகளையெல்லாம அந்த அறையிலிருந்து வெளியே எறிந்துபோட்டேன்.

௯ பிறகு நான் அறைவீடுகளைச்சுத்திகரிக்கச்சொல்லிப் பராபரனுடைய வீட்டுத் தட்டுமுட்டுகளையுங் காணிக்கைகளையுங் கெந்தவர்க்கத்தையும் அங்கே திரும்பவைப்பித்தேன்.

௰ பின்னையும லேவியருக்கு அவர்களபங்குகள்கொடுக்கப்படவில்லையென்கிறதையும் பணிவிடைசெய்கிற லேவியரும பாடகரும அவரவர் தங்கள நாட்டுக்கோடிப்போனார்களென்கிறதையும் நான் அறிந்தேன்.

௰௧ அப்போது நான் தலைமையானபேர்களோடே வழக்காடிப் பராபரனுடையவீடு கைவிடப்பட்டுப் போவானேனென்றுசொல்லி, அவர்களைச்சேர்த்து அவர்களுடைய ஸ்தலத்திலே அவர்களைவைத்தேன்.

௰௨ அப்பொழுது யூதரெல்லாரும் தானியந் திராட்சப்பழரசம எண்ணெயென்றதுகளிற் பத்திலொருபங்கைப் பொக்கிஷ அறைகளிற்கொண்டுவந்தார்கள்.

௰௩ அப்போது நான் ஆசாரியனாகிய செலேமியாவையும் லேவியரிலவேதபாரகனாகிய சாதோக்கையும் பெதாயாவையும் இவர்களுக்குக்கைத்துணையாக மத்தனியாவின்குமாரனாகிய சக்கூரின்மகனாகிய ஆனானையும பொக்கிஷ அறைகளின்மேலவிசாரிப்புக்காரராகவைத்தேன். ஏனெனில அவர்கள உண்மையுள்ளவர்களென்றெண்ணப்பட்டார்கள். ஆகையாலதங்களசகோதரருக

ருப்பஙகிடுகிறதொழில அவர்களுககொபபுவிககபபட்டது.

௧௪ எனபராபரனே, இதறகாகததேவரீர் எனனை நினைதது நானஎனபராபரனுடையவீட்டுககும அதினகாவலகளுககுமாககசசெயத எனனுடைய உபகாரஙகளைக குலைககாதிரும.

௧௫ அநதநாட்களில நான யூதாவிலே ஒய்வுநாளில ஆலைகளைமிதிககிற சிலரையும கழுதைகளமேலேறறின தானியபபொதிகளைககொணடுவருகிறசிலரையும ஒயவுநாளிலே எருசலேமுககுக கொணடுவரபபடுகிற திராட்சபபழரசந திராட்சபபழஙகள அததிபபழஙகள முதலானதுகளின பலபலசுமைகளையுஙகணடு அவர்கள தின்பணடஙகளை விறகிறநாளிலே திடசசாட்சியாய அவர்களைககடிநதுகொணடேன.

௧௬ மீனகளையுஞசகலவிதசசரககையுங கொணடுவநது ஒய்வுநாளிலே யூதபுததிரருககும எருசலேமிலும விறகிற சிலதீரியரும உள்ளேகுடியிருநதார்கள.

௧௭ ஆகையால நான யூதாவின பெரியவர்களோடே வழககாடி நீஙகள ஒய்வுநாளைபபரிசுததககுலைசசலாககுகிற இநதபபொலலாத செயகையெனன.

௧௮ உஙகள பிதாககள இபபடிசசெய்ததினால எஙகள பராபரனஎஙகளமேலும இநதபபடடணததினமேலும இநதத்தீஙகையெலலாம வரபபணணினதிலலையோ. நீஙகளோவெனறால ஒய்வுநாளைபபரிசுததககுலைசசலாககுகிறதினாலஇஸராவேலினமேலிருககிறஉககிரததைவர்ததிககபபணணுகிறீர்களெனறுஅவர்களுககுசசொனனேன.

௧௯ ஆகையால ஒயவுநாளுககுமுனனே எருசலேமினபட்டணவாசலகளுககு நிழல படுகிறபோது நான கதவுகளைபபூட்டவும ஒய்வுநாள கழியுமமட்டும அதுகளைததிறவாதிருககவுமவேணுமெனறு சொலலி ஒய்வுநாளிலே ஒரு சுமையும உளளே வராதபடிககு வாசலகளணடையிலே என வேலைககாரரிலே சிலரை நிறுததினேன.

௨௰ அபபோதுவர்ததகருஞசகலவிதசரககுவிறகிறவர்களுமிரணடொருதரமஎருசலேமுககுபபுறமபே இராததஙகினார்கள.

௨௧ அபபோது நான அவர்களைததிடசசாட்சியாயக கடிநதுகொணடு நீஙகள அலஙகததணடையிலே இராததஙகுகிறதெனன. நீஙகளினனமொருதரம அபபடிசசெயதாலஉஙகளமேலே கைகளைபபோடுவேனெனறு அவர்களோடே சொனனேன. அநதககாலநதுவககி அவர்கள ஒய்வுநாளில வராதிருநதார்கள.

௨௨ ஒய்வுநாளைபபரிசுததமாககுமபடிககு உஙகளைசசுததமபணணிககொணடுவாசலகளைககாக்க வாருஙகளெனறு லேவியருககுஞசொனனேன. என பராபரனே, இதையுந தேவரீர் எனககு நனமையாக நினைதது உமமுடைய மிகுநத கிருபையினிமிததமாய எனககிரஙகும.

௨௩ அலதோத், அமமோன,மோவாப்சாதிகளான ஸதிரிகளைசசேர்ததுககொணட சிலயூதரையும அநதநாட்களிற கணடேன.

௨௪ அவர்களபிளளைகள, பாதி அஸதோத்பாஷையைபபேசினார்கள. இவர்கள அநதநதசசனசாதியினபாஷையைததவிர யூதபாஷையைபபேச அறியாதிருநதார்கள.

௨௫ அவர்களோடே நான வழககாடி அவர்களைசசபிதது அவர்களிலே சில மனுஷரை அடிதது மயிரைபபியததுநீஙகள உஙகளகுமாரததிகளை அவர்களகுமாரருககுககொடாமலும அவர்கள குமாரததிகளில ஒருவரையும உஙகள குமாரருககாகவும உஙகளுககெனறுங கொளளாமலும இருககவேணுமெனறு அவர்களைபபராபரனபேரிலே ஆணையிடபபணணின நான சொனனதாவது,

௨௬ இஸரவேலின இராசாவாகிய சாலோமோன இதினாலே பாவஞசெயதானலலவோ. அவனைபபோலொதத இராசா அநேகஞசாதிகளுககுளளே உணடாயிருநததிலலை. தன பராபரனாலே சிநேகிககபபடடவனுமாயிருநதான. பராபரன அவனை இஸரவேலனைததினமேலும இராசாவாக வைததார். அபபடிககொததவனையுமமறுசாதியான ஸதிரிகள பாவஞசெயயபபணணினார்களே.

௨௭ நீஙகள மறுசாதியான ஸதிரிகளைசசேர்ததுககொளளுகிறதினால நமமுடைய பராபரனுககுத துரோகிகளாய்ப்போய இநதபபெரிய பொலலாபபையெலலாஞ செயயுமபடிககு உஙகளுககுசசெவிகொடுபபோமோவெனறேன.

௨௮ யோய்தாவின புததிரரிலேபிரதானஆசாரியனாகிய எலியாசிபின குமாரனஒருவன சனபலலாதுககுமருமகனுமானான. ஆகையால அவனையெனனைவிட்டுத்துரததினேன.

௨௯ எனபராபரனே, அவர்கள ஆசாரிய ஊழியததையும ஆசாரியஊழியததுககுமலேவியருககுமிருககிற உடமபடிககையையுந தீட்டுபபடுததினார்களெனறு அவர்களை நினையும.

௩௰ இபபடியே நான மறுசாதியாரையெலலாம நீககி அவர்களைசசுததிகரிதது ஆசாரியர்களையும லேவியரையும அவரவரைஇவர்களவேலையினமுறைகளில நிறுததி,

௩௧ குறிககபபட்டகாலஙகளிலே செலுததபபடவேணடிய விறகுகளின காணிககையையுமமுதறபலனையுநதிட்டமபணணினேன. எனபராபரனே, எனனை நனமைககெனறு நினைததருளும.

முற்றிற்றுமுற்றும்.

# எஸ்தர் என்றவளுடைய சரித்திரம்.

## ௧. அதிகாரம்.

அகாஸ்வேரு இராசா தன் பெண்சாதியாகிய வஸ்தியைத் தள்ளிவிட்டது.

௧ இந்துதேசந்துவக்கி எத்தியோப்பியாதேசமட்டுமிருக்கிற நூற்றிருபத்தேழு சீமைகளை ஆண்ட அகாஸ்வேருவின் நாட்களிலே சம்பவித்ததாவது,

௨ இராசாவாகிய அகாஸ்வேரு சூசான் கோட்டையிலிருக்கிற தன்னுடைய இராசசிங்காசனத்தின் ஆசனத்தின்மேலிருக்கும் அந்த நாட்களுக்குப்பிறகு,

௩ அவன் தன் இராச்சியபாரத்தின் மூன்றாம் வருஷத்திலே தன்னுடைய எல்லாப் பிரபுக்களுக்கும் ஊழியக்காரருக்கும் விருந்து பண்ணினான். பெர்சியா மேதியா தேசங்களின் சேனாவீரர்களும் சீமைகளின் துரைகளும் பிரபுக்களும் அப்போது அவனுக்கு முன்பாக இருந்தார்கள்.

௪ அவன் தன் இராச்சியபாரமகிமையின் ஐசுவரியத்தையும் தன்னுடைய மகத்துவத்தின் சிங்காரமான முக்கியத்தையுங் காண்பிக்கும்படிக்கு அநேக நாளாக நூற்றெண்பது நாளாக விருந்துகொடுத்தான்.

௫ அந்த நாட்கள் முடிந்தபோது இராசா சூசான் கோட்டையில் அகப்பட்ட பெரியோர் துவக்கிச் சிறியோர் மட்டுமாகிய எல்லாச் சனத்துக்கும் இராசா அரண்மனையின் தோட்டத்தின் முற்றத்திலே ஏழுநாளாக விருந்துசெய்வித்தான்.

௬ அங்கே வெண்கலமான தூண்களின்பேரிலுண்டான வெள்ளி வளையங்களிலே மெல்லிய நூலும் சிவப்பு நூலுமான கயிறுகளாலே வெள்ளையும் பச்சையும் இளநீலமுமாகிற திரைகள் கட்டித்தொங்கியிருந்தது. சிவப்புந்தலமும் வெள்ளையுங் கறுப்புமான கல்லுகள் பதித்திருக்கிற தளவரிசையின்பேரிலே பொற்சரிகையும் வெள்ளிச்சரிகையுமான மெத்தைகள் வைக்கப்பட்டது.

௭ பொற்பாத்திரங்களாகிய வெவ்வேறே விதமான பாத்திரங்களிலே பானங்கொடுக்கப்பட்டது. மேன்தரமான திராட்சப்பழரசம் இராசாவுடைய ஆஸ்திக்குத்தக்கதாய்ப் பரிபூரணமாயிருந்தது.

௮ ஒருவனையும் பலாத்தம்பண்ணவேண்டாமென்ற கட்டளையின்படி குடிக்கப்பட்டது. ஏனெனில் அவரவருடைய மனதின்படியே செய்யவேணுமென்றதாக இராசா தன் அரண்மனையின் பெரிய மனுஷருக்கெல்லாங் கற்பித்திருந்தான்.

௯ இராசாத்தியாகிய வஸ்தியும் இராசாவாகிய அகாஸ்வேருவின் அரண்மனையிலே ஸ்திரீகளுக்கு ஒரு விருந்துசெய்வித்தாள்.

௰ ஏழாம் நாளிலே இராசா திராட்சப்பழரசத்தால் மனமகிழ்ச்சியாயிருக்கும்போது சனங்களுக்கும் பிரபுக்களுக்கும் இராசாத்தியாகிய வஸ்தியினுடைய சௌந்தரியத்தைக் காண்பிக்கும்படிக்கு அவளை இராசகிரீடந்தரிக்கப்பட்டவளாக இராசாவுக்கு முன்பாக அழைத்துவரவேண்டுமென்று,

௰௧ இராசாவாகிய அகாஸ்வேரு தனக்கு முன்பாகச் சேவிக்கிற மெகுமான், பிஸ்தா, அற்போனா, பிகதா, அபகதா, சேதார், கற்காசென்ற ஏழு பிரதானிகளுக்குக் கட்டளையிட்டான். ஏனென்றால் அவள் ரூபவதியாயிருந்தாள்.

௰௨ ஆனால் இராசா பிரதானிகளைக்கொண்டு சொல்லியனுப்பின வார்த்தைக்கு இராசாத்தியாகிய வஸ்தி வரமாட்டேனென்றாள். அப்போது இராசா கடுங்கோபமடைந்து தனக்குள்ளே மூர்க்கமுண்டவனாகி,

௰௩ இராசாத்தியாகிய வஸ்தி இராசாவாகிய அகாஸ்வேரு பிரதானிகளைக்கொண்டு சொல்லியனுப்பின வார்த்தையின்படியே செய்யாதே போனதினிமித்தம் அவளுக்கு நியாயப்பிரமாணத்தின்படி செய்யவேண்டியதென்னவென்று,

௰௪ காலாகாலங்களையறிந்த ஞானிகளை இராசா கேட்டான். ஏனெனில் இந்தப்பிரகாரமாக இராசாவின் காரியங்கள் நியாயப்பிரமாணத்தையும் நீதியையும் அறிந்த எல்லாருக்கும் முன்பாக வைக்கப்படும்.

௰௫ அப்போது கற்ஷேனா, சேதார், அத்மாதா, தர்ஷீஸ், மெரேஸ், மற்சேனா, மெமுகான் என்கிற இராசாவின் சமுகத்தைப்பார்க்கிறவர்களும் இராச்சியத்தின் முதல் ஆசனங்களிலே உட்காருகிறவர்களுமான பெர்சியர் மேதியருடைய ஏழு பிரபுக்கள் அவனைச் சேர்ந்தவர்களாயிருந்தார்கள்.

௰௬ அப்போது மெமுகான் இராசாவுக்கும் பிரபுக்களுக்கும் முன்பாகச் சொன்னதாவது, இராசாத்தியாகிய வஸ்தி இராசாவுக்குமாத்திரமல்ல, இராசாவாகிய அகாஸ்வேருவினுடைய சகல சீமைகளிலுமுள்ள எல்லாப்பிரபுக்களுக்கும் எல்லாச்சனத்தார்களுக்கும் ஏராத அநீதியைச்செய்தாள்.

௰௭ ஏனென்றால் இராசாவாகிய அகாஸ்வேரு இராசாத்தியாகிய வஸ்தியைத் தமக்கு முன்பாக அழைத்துவரச்சொன்னபோது அவள் வரமாட்டேனென்றாளென்கிற இராசாத்தியின் செய்தி எல்லா ஸ்திரீகளுக்கு

கும் பிரசித்தமாவதினால் இவர்கள் தங்கள் புருஷர்களைத் தங்கள் பார்வைக்குக் கொஞ்ச எண்ணிக்கையாய் எண்ணுவார்கள்.

௰௮ இன்றைக்குத்தானே பெர்சியா மேதியாவினுடைய பிரபுக்களின் ஸ்திரிகள் இராசாத்தியின் செய்தியைக் கேட்கும்போது இராசாவின் பிரபுக்களுக்கெல்லாம் அப்படித்தான் சொல்லுவார்கள். மிகுந்த அசட்டையுங் கோபமும் எழும்பும்.

௰௯ இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் வஸ்தி இனி இராசாவாகிய அகாஸ்வேருவுக்கு முன்பாக வர வேண்டாமென்றும் இராசா அவளுடைய இராசமேன்மையை அவளைப்பார்க்க நல்லவளான அவளுடைய கூட்டாளிக்குக் கொடுப்பாராகவென்றும் அவரால் ஒரு இராசகட்டளை பிறந்து அது மீறப்படாதபடிக்குப் பெர்சியர் நியாயப்பிரமாணத்திலும் மேதியர் நியாயப்பிரமாணத்திலும் எழுதப்படக்கடவது.

௨௰ இப்படி இராசா தீர்த்தகாரியம் விஸ்தாரமாயிருக்கிற அவருடைய இராச்சியமெங்குங் கேட்கப்படும்போது பெரியோர் துவக்கிச் சிறியோர் மட்டுமுள்ள எல்லா ஸ்திரிகளுந் தங்கள் புருஷர்களைக் கனம்பண்ணுவார்களென்றான்.

௨௧ இந்த வார்த்தை இராசாவுக்கும் பிரபுக்களுக்கும் நன்றாய்க் கண்டு இராசா மெமுகானுடைய வார்த்தையின்படியே செய்து,

௨௨ எந்த புருஷனுந் தன் வீட்டிலே அதிகாரஞ்செய்கிறவனுந் தன் சனசாதியின் பாஷையைப் பேசிக் கொண்டிருக்கவுந் தக்குமென்று, இராசாவின் சீமைகளுக்கெல்லாஞ் சீமை சீமைக்குண்டான எழுத்திலுஞ் சாதிசாதியின் பாஷையிலும் எழுதியிருக்கிற நிருபங்களை அனுப்பினான்.

## ௨. அதிகாரம்.

### எஸ்தர் இராசாத்தியானது.

இதுகள் சம்பவித்துத்தீர்ந்து, இராசாவாகிய அகாஸ்வேருவின் உக்கிரந் தணிந்தபிறபாடு அவன் வஸ்தியையும் அவள் செய்ததையும் அவள்பேரில் தீர்மானிக்கப்பட்டதையும் நினைத்தான்.

௨ அப்போது இராசாவைச் சேவிக்கிற அவனுடைய வேலைக்காரர் சொன்னதாவது, ரூபவதிகளாயிருக்கிற கன்னிப்பெண்கள் இராசாவுக்காகத் தேடப்படக்கடவார்கள்.

௩ அதற்காக இராசா தம்முடைய இராச்சியத்தின் சீமைகளிலெல்லாம் விசாரிப்புக்காரரை வைப்பாராக. இவர்கள் ரூபவதிகளாயிருக்கிற சகல கன்னிப்பெண்களையுங் கூட்டிச் சூசான் கோட்டையிலிருக்கிற ஸ்திரிகளின் மடத்துக்கழைத்துவந்து ஸ்திரிகளைக்காவற்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய ஏகேயின் வசத்திலே ஒப்புவிப்பார்களாக. இவர்களுக்கு இவர்கள் சோடிப்புக் கொடுக்கப்படக்கடவது.

௪ அப்போது இராசாவின் கண்களுக்குச் சம்மதமான குமரி வஸ்திக்குப் பதிலாக இராசாத்தியாவாளாகவென்றார்கள். இந்த வார்த்தை இராசாவுக்கு நன்றாய்க் கண்டு அப்படித்தான் செய்தான்.

௫ அப்போது சூசான் கோட்டையிலே ஏமினியனாகிய கீசின் குமாரன் சீமேயினுடைய மகனாகிய யாயீரின் குமாரன் மொர்தேகாயி என்றபேருள்ள ஒரு யூதமனுஷனிருந்தான்.

௬ இவன் பாபேலின் இராசாவாகிய நெபுகாத்நேச்சார் யூதாவின் இராசாவாகிய எகொனியாவைப் பிடித்துப் போகிறபோது அவனோடேகூட எருசலேமிலிருந்து பிடித்துக்கொண்டுபோகப்பட்டவர்களிலொருவனாயிருந்தான்.

௭ இவன் தன் சிறிய தகப்பன் குமாரத்தியாகிய எஸ்தரென்ற அத்சாளை வளர்த்தவனாயிருந்தான். ஏனெனில் தாய் தகப்பனில்லாதவளாயிருந்தாள். அவள் சவுந்தரியவதியும் ரூபவதியுமான பெண்பிள்ளையாயிருந்தாள். அவள் தகப்பனும் அவள் தாயும் மரணம் அடைந்தபோது மொர்தேகாயி அவளைத் தன் குமாரத்தியாக ஏற்றுக்கொண்டான்.

௮ சம்பவித்ததேதெனில் இராசாவின் கட்டளையும் அவனுடைய தீர்மானமும் பிரசித்தமாகி அநேகம் பெண்பிள்ளைகள் கூட்டப்பட்டுச் சூசான் கோட்டையிலுள்ள ஏகேயின் வசத்திலொப்புவிக்கப்படுகிறபோது எஸ்தரும் இராசாவின் வீட்டுக்கு அழைத்துப்போகப்பட்டு ஸ்திரிகளைக்காவற்பண்ணுகிற ஏகேயின் வசத்திலொப்புவிக்கப்பட்டாள்.

௯ அந்தப் பெண்பிள்ளை அவன் பார்வைக்கு நன்றாயிருந்ததினால் அவளுக்கு அவன் கண்களிலே தயவு கிடைத்தது. ஆகையால் அவளுடைய சோடிப்புகளையும் அவளுக்கடுத்த படிகளையும் அவளுக்குக் கொடுக்கவும் இராசாவின் வீட்டிலிருக்கிற ஏழுபெண்களையும் அவளுக்குக் கொடுக்கவுந் தீவிரித்து ஸ்திரிகளின் மடத்தில் நல்லதாகிய வேறே ஸ்தலத்திலே அவளையும் அவள் வேலைக்காரிகளையும் வைத்தான்.

௰ எஸ்தரோவென்றால் தன் சனத்தையுந் தன் பூருவோத்திரத்தையும் அறிவிக்காதிருந்தாள். ஏனெனில் அதை அறிவிக்கவேண்டாமென்று மொர்தேகாயி அவளுக்குக் கற்பித்திருந்தான்.

௰௧ ஆனால் எஸ்தருடைய சுகசெய்தியையும் அவளுக்கு என்ன நடக்குமென்பதையும் அறியமொர்தேகாயி ஒவ்வொருநாளி

ஸ்திரீகளுடைய மடத்து முற்றத்துக்கு முன்பாக உலாத்துவான்.

௰௨ ஒவ்வொரு பெண்பிள்ளை ஆறுமாதம் வெள்ளைப்போளத் தயிலத்தினாலும் ஆறுமாதம் வாசனைத் திரவியங்களினாலும் ஸ்திரீகளின் ஆபரணங்களினாலும் சோடிக்கப்படுகிற நாட்கள் நிறைவேறி இப்படியே பன்னிரண்டு மாதமாக ஸ்திரீகளுடைய திட்டத்தின்படியே செய்யப்பட்டுத் தீர்ந்தபிற்பாடு இராசாவாகிய அகாஸ்வேரு அண்டைக்குப் பிரவேசிக்க அவள் அவளுடைய முறை வருகிறபோது,

௰௩ இப்படிச் சோடிக்கப்பட்ட பெண்பிள்ளை இராசாவண்டைக்குப் பிரவேசிப்பாள். ஸ்திரீகளின் மடத்திலிருந்து தன்னோடே கூட இராசாவின் வீட்டுமட்டும் போகக் அவள் கேட்பதெல்லாம் அவளுக்குக் கொடுக்கப்படும்.

௰௪ சாயங்காலத்திலே அவள் உட்பிரவேசித்துக் காலமே வைப்பாட்டிகளைக் காவற்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய சாஸ்காசுடைய விசாரிப்பின்கீழிருக்கிற ஸ்திரீகளின் இரண்டாம் மடத்துக்குத் திரும்பி இராசா தன்னை விரும்பிப் பேர்சொல்லி அழைப்பித்தாலொழிய இனி இராசாவண்டைக்குப் பிரவேசிக்காதிருப்பாள்.

௰௫ மொர்தேகாயி தன் குமாரத்தியாய் ஏற்றுக்கொண்ட அவனுடைய சிறிய தகப்பனாகிய அபிகாயிலின் குமாரத்தியான எஸ்தரின் முறை இராசாவண்டைக்குப் பிரவேசிக்கிறதற்கு வந்தபோது அவள் ஸ்திரீகளைக் காவற்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய ஏகாயி சொன்ன காரியமேயல்லாமல் ஒன்றுங்கேட்டதில்லை. எஸ்தருக்கோவென்றால் தன்னைக் காண்கிற எல்லார் கண்களிலும் தயவு கிடைத்தது.

௰௬ அப்படியே எஸ்தர் இராசாவாகிய அகாஸ்வேரு அரசாளுகிற ஏழாம் வருஷம் தேபேத்மாதமாகிய பத்தாம் மாதத்திலே அவனண்டைக்கு அவனுடைய இராச அரண்மனையில் அழைத்துக்கொண்டு போகப்பட்டாள்.

௰௭ இராசா சகல ஸ்திரீகளைப் பார்க்க எஸ்தர்பேரிலே அன்புவைத்தான். சகல கன்னியாஸ்திரீகளைப் பார்க்க அவளுக்கு அவனுக்கு முன்பாகத் தயையுந் தயவுங் கிடைத்தது. ஆகையால் அவன் இராசகிரீடத்தை அவள் சிரசின்மேல் வைத்து, அவளை வஸ்தியின் ஸ்தலத்திலே இராசாத்தியாக்கினான்.

௰௮ அப்போது இராசா தன்னுடைய எல்லாப் பிரபுக்களுக்கும் ஊழியக்காரருக்கும் எஸ்தருக்காகச் செய்கிற ஒரு பெரிய விருந்து செய்வித்துச் சீமைகளுக்குச் சலக்கரணையுண்டாக்கி இராசா ஆஸ்திக்குத்தக்க வெகுமதிகளைக் கொடுத்தான்.

இராசாவைக் கொல்லத் தப்பந்தம்பண்ணினவர்களின் செய்தியை மொர்தேகாயி அறிவித்தது.

௰௯ இரண்டாம்விசை கன்னியாஸ்திரீகள் சேர்க்கப்படுகிறபோது மொர்தேகாயி இராசாவின் அரண்மனைவாசலிலுட்கார்ந்திருந்தான்.

௨௰ எஸ்தர் மொர்தேகாயி தனக்குக் கற்பித்திருந்தபடி தன்பூர்வோத்திரத்தையுந் தன் சனசாதியையும் அறிவிக்காதிருந்தாள். ஏனெனில் எஸ்தர் மொர்தேகாயினிடத்திலே வளர்ந்தகாலத்திலே செய்ததுபோலே இன்னம் அவன் சொற்படி செய்தாள்.

௨௧ அந்த நாட்களில் மொர்தேகாயி இராசாவின் அரண்மனைவாசலிலுட்கார்ந்திருக்கிறபோது வாசற்காக்கிற இராசாவின் இரண்டு பிரதானிகளாகிய பிக்தானும் தேரேசும் கடுங்கோபங்கொண்டு இராசாவாகிய அகாஸ்வேருவின்மேலே கைபோடவகை தேடினார்கள்.

௨௨ இந்தக் காரியம் மொர்தேகாயிக்கறியப்பட்டபடியினாலே அவன் அதை இராசாத்தியாகிய எஸ்தருக்கறிவித்தான். எஸ்தர் மொர்தேகாயின் நாமத்தில் இராசாவுக்குச் சொன்னாள்.

௨௩ இந்தக் காரியம் விசாரிக்கப்படுகிறபோது அது மெய்யென்று கண்டுபிடிக்கப்பட்டது. ஆகையால் அவர்கள் இருவரும் மரத்திலே தூக்கிப்போடப்பட்டார்கள். இது இராசாவுக்கு முன்பாக நாளாகமப் புஸ்தகத்திலெழுதப்பட்டது.

## ௩. அதிகாரம்.

ஆமான் மொர்தேகாயின்மேல் வைத்த குரோதத்தினாலே யூதரையெல்லாஞ் சங்கரிப்பிக்க எத்தனம்பண்ணினது.

இந்த நடபடிகளுக்குப்பிற்பாடு இராசாவாகிய அகாஸ்வேரு அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற ஆகாகியனைப் பெரியவனாக்கி அவனையுயர்த்தி அவனுடைய ஆசனத்தைத் தன்னிடத்திலிருக்கிற சகல பிரபுக்களுக்கும் உயரவைத்தான்.

௨ ஆகையால் இராசாவின் அரண்மனைவாசலிலிருக்கிற இராசாவின் ஊழியக்காரரெல்லாம் ஆமானுக்குக் குனிந்து பணிந்துகொண்டார்கள் ஏனெனில் இராசா இப்படிச் செய்ய அவனுக்காகக் கற்பித்தான். ஆனால் மொர்தேகாயி குனிந்ததுமில்லை பணிந்ததுமில்லை.

௩ அப்போது இராசாவின் அரண்மனைவாசலிலிருக்கிற இராசாவின் ஊழியக்காரர் மொர்தேகாயுடனே, நீர் இராசாவின் கற்பனையை மீறுவானேனென்றார்கள்.

௪ இப்படி அவர்கள் நாளுக்குநாள் அவனுடனே சொல்லியும் அவன் தங்களுக்குச் செவிகொடாதபோதோவென்றால் அவர்கள் மொர்தேகாயின் சொற்கள் நிலைநிற்குமோவென்று பார்க்கிறதற்கு அதை ஆமானுக்கு அறிவித்தார்கள். ஏனென்றால் தான் யூதனென்று அவன் அவர்களுக்கறிவித்திருந்தான்.

௫ மொர்தேகாய் தனக்குக் குனிந்து பணிந்துகொள்ளாததை ஆமான் கண்டபோது ஆமான் உக்கிரம் நிறைந்தவனானான்.

௬ ஆனால் மொர்தேகாயின்மேல் மாத்திரங் கைபோட அவனுக்குக் கொஞ்சக்காரியமாகக் கண்டது. ஏனென்றால் மொர்தேகாயின் சனம் இன்னதென்று அவனுக்கு அறிவித்திருந்தார்கள். ஆகையால் அகாஸ்வேருவின் இராச்சியமெங்குமிருக்கிற மொர்தேகாயின் சனமாகிய யூதரையெல்லாஞ் சங்கரிக்க ஆமான் வகைதேடினான்.

௭ இராசாவாகிய அகாஸ்வேருவின் பன்னிரண்டாம் வருஷம் நீசான் மாசமாகிய முதலாம் மாதத்திலே ஆமானுக்குமுன் பாகப்பூர் என்னப்பட்ட தாயம் நாளுக்கு நாளும் மாசத்துக்கு மாதமும் போடப்பட்டு ஆதார் மாதமான பன்னிரண்டாம் மாதத்தின்மேல் விழுந்தது.

௮ அப்போது ஆமான் அகாஸ்வேரு இராசாவுடனே சொன்னதாவது, உம்முடைய இராச்சியத்தின் சகல சீமைகளிலுமுள்ள சனசதளங்களுக்குள்ளே ஒரேயொரு சனசதளஞ் சிதறினதும் பரம்பினதுமாயிருக்கிறது. அவர்களுடைய நியாயப்பிரமாணங்கள் சகல சனங்களுடையதைப் பார்க்க வெவ்வேறாயிருக்கிறது. அவர்கள் இராசாவுடைய நியாயப்பிரமாணங்களின்படி செய்கிறதில்லை. அவர்களை அப்படிவிட இராசாவுக்கு நியாயமல்ல.

௯ இராசாவுக்குச் சம்மதியானால் அவர்களை அழிக்கவேண்டுமென்றெழுதியனுப்பப்படக்கடவது. அப்போது நான் அந்த வேலையைச் செய்கிறவர்களின் கைகளிலே பத்துத்தாலந்து வெள்ளியை இராசாவின் பொக்கிஷங்களிலே கொண்டுவந்து வைக்க நிறுத்துக்கொடுப்பேனென்றான்.

௰ அப்போது இராசா தன் கையிலிருக்கிற தன் மோதிரத்தைக் கழற்றி அதை அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற யூதரின் சத்துருவாகிய ஆகாகியனுக்குக் கொடுத்து,

௰௧ ஆமானுடனே, அந்த வெள்ளி உனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. உன் பார்வைக்குச் சம்மதியானபடி அந்தச் சனத்துக்குச் செய்கிறது அதுவும் உனக்கொப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறதென்றான்.

௰௨ அப்போது முதலாம் மாசம் பதின்மூன்றாந்தேதியிலே இராசாவின் சம்பிரதிகள் அழைக்கப்பட்டார்கள். ஆமான் கற்பித்தபடியெல்லாம் இராசாவின் சுபேதார்களுக்கும் ஒவ்வொரு சீமையின்மேல் வைக்கப்பட்டிருந்த துரைகளுக்கும் ஒவ்வொரு சனசதளத்தின் பிரபுக்களுக்கும், சீமை சீமையினுடைய எழுத்திலுஞ் சாதிசாதியினுடைய பாஷையிலும் எழுதப்பட்டது. இராசாவாகிய அகாஸ்வேருவின் நாமத்திலே எழுதப்பட்டு இராசாவின் மோதிரத்தினாலே முத்திரைபோடப்பட்டது.

௰௩ ஆதார் மாதமாகிய பன்னிரண்டாம் மாசம் பதின்மூன்றாந்தேதியாயிருக்கும் ஒரே நாளிலே எல்லா யூதரையுஞ் சிறியோர் முதற்பெரியோர் மட்டுமிருக்கிற எல்லா யூதரையுங் குழந்தைகளையும் ஸ்திரிகளையும் அழித்துக்கொன்று நிர்மூலமாக்கவும் அவர்களைக் கொள்ளையிடவும் நிருபங்கள் அஞ்சல்காரர் கையிலே இராசாவின் சீமைகளுக்கெல்லாம் அனுப்பப்பட்டது.

௰௪ அந்த நாளுக்கு ஆயத்தப்பட்டிருக்கவேண்டுமென்று சகல சனசதளங்களுக்குங் கூறுவிக்கிறதற்கான பிரமாணம் ஒவ்வொரு சீமையிலே அறிவிக்கப்படவேண்டுமென்பது அதுகளில் எழுதியிருந்தது.

௰௫ அந்த அஞ்சல்காரர் இராசாவின் கற்பனையினாலே தீவிரிக்கப்பட்டுப் புறப்பட்டுப்போனார்கள். அந்தப் பிரமாணஞ் சூசான் கோட்டையிலும் அறிவிக்கப்பட்டது. இராசாவும் ஆமானுங் குடித்துக்கொண்டிருக்க உட்கார்ந்தார்கள். சூசான் பட்டணமோவென்றாற் கலங்கலாயிற்று.

## ௪. அதிகாரம்.

யூதருக்குள் மகா துக்கமுண்டாகையிலே சனத்துக்காக எஸ்தர் இராசாவை வேண்டிக்கொள்ள மொர்தேகாய் அவளைச் சம்மதப்படுத்தினது.

செய்யப்பட்டதையெல்லாம் மொர்தேகாய் அறிந்தபோது மொர்தேகாய் தன் வஸ்திரங்களைக் கிழித்து இரட்டுடுத்திச் சாம்பல் போட்டுக்கொண்டு பட்டணத்தின் நடுவே புறப்பட்டுப்போய் துயரமுள்ள மகாசத்தத்தோடே அலறி,

௨ இராசாவின் அரண்மனைவாசல் முகப்புமட்டுக்கும் வந்தான். ஏனென்றால் இரட்டுடுத்தவனாய் இராசாவின் அரண்மனைவாசலுக்குட்பிரவேசிக்க ஒருவனுக்கும் உத்தாரமில்லை.

௩ இராசாவின் வார்த்தையும் அவனுடைய நியாயப்பிரமாணமும் போய்ச்சேர்ந்த ஒவ்வொரு சீமையிலும் ஸ்தலத்திலும் யூதருக்குள்ளே மகா துக்கமும் உபவாசமும் அழுகையும் புலம்பலுமுண்டாய் அநேகர் இரட்டிலுஞ் சாம்பலிலுங் கிடந்தார்கள்.

௪ அப்பொழுது எஸ்தரின் குமரிப்பெண்களும் அவளுடைய பிரதானிகளும் வந்து அதை அவளுக்கறிவித்தார்கள். அதி

௪ இராசாத்தி மிகவும் மனநோவடைந்து மொர்தெகாயி உடுத்திருந்த இரட்டை பெடுத்துப் போட்டு அவனை உடுத்துவிக்கிறதற்கு வஸ்திரங்களை அவனுக்கனுப்பினாள். அதை அவன் அங்கீகரியாமல் வெறுத்துக்கொண்டிருந்தான்.

௫ அப்பொழுது எஸ்தர் தனக்குப் பணிவிடை செய்யும்படி இராசாவினால் நியமிக்கப்பட்ட அவனுடைய பிரதானிகளில் ஒருவனாகிய அத்தாகை யழைப்பித்து, இதென்னமோ, வந்ததென்னமோ, தெரிந்து அறிய மொர்தெகாயினிடத்தில் விசாரிக்க அவனுக்குக் கட்டளையிட்டாள்.

௬ அப்படியே அத்தாக இராசாவின் அரண்மனை வாசலுக்கு முன்னான பட்டணத் தெருவிலிருக்கிற மொர்தெகாயினிடத்திற்குப் புறப்பட்டுப் போனான்.

௭ அப்பொழுது மொர்தெகாயி தனக்குச் சம்பவித்தவைகளெல்லாவற்றையும், யூதரை அழிக்கும்படிக்கு ஆமான் அவர்கள் நிமித்தம் இராசாவின் பொக்கிஷங்களுக்குத் நிறுத்துக் கொடுப்பேனென்று சொன்ன திரவியத்தையும் அவனுக்கறிவித்து,

௮ எஸ்தருக்குக் காண்பிக்கும்படிக்கும், அவளுக்கறிவிக்கும்படிக்கும், அவள் தன் சனத்துக்காக இராசாவை வேண்டிக்கொண்டு அவர் சமுகத்திலே விண்ணப்பம் பண்ணவும், அவரண்டைக்குப் போக அவளுக்குக் கற்பிக்கும்படிக்கும், அவன் இவர்களைச் சங்கரிக்கிறதற்குச் சூசானில் அறிவிக்கப்பட்ட கட்டளையின் நகலையும் கொடுத்தான்.

௯ அத்தாக் வந்து மொர்தெகாயின் வார்த்தைகளை எஸ்தருக்கறிவித்தான்.

௰ அப்பொழுது எஸ்தர் மொர்தெகாயிக்குச் சொல்லச்சொல்லி அத்தாகுக்குக் கற்பித்ததாவது,

௰௧ அழைப்பிக்கப்படாமல் இராசாவண்டைக்கு அவருடைய உள்முற்றத்திலே பிரவேசிக்கிற எந்த ஆணாகிலும் பெண்ணாகிலுஞ்சரி, அப்படிக்கொத்தவர்கள் பிழைக்கும்படிக்கு இராசா பொற்செங்கோலை அவர்களண்டைக்கு நீட்டினாலொழியக் கொல்லப்படவேணுமென்கிறதே அவருடைய நியாயப்பிரமாணமாயிருக்கிறதென்கிறதை இராசாவின் சகல ஊழியக்காரரும் இராசாவினுடைய சீமையின் சனமும் அறிந்திருக்கிறார்கள். நானோவென்றால் இந்த முப்பது நாளாய் இராசாவண்டைக்கு வரவழைப்பிக்கப்பட்டதில்லையென்று சொல்லக் கற்பித்தான்.

௰௨ எஸ்தரின் வார்த்தைகளை மொர்தெகாயிக்கு அறிவித்தார்கள்.

௰௩ அதற்கு மொர்தெகாயி எஸ்தருக்குத் திரும்பச் சொல்லச் சொன்னதாவது, நீ இராசாவின் அரண்மனையிலிருக்கிறதினால் எல்லா யூதர்களைப் பார்க்கிலும் தப்புவாயென்று உன் மனதிலே நினைவு கொள்ளாதே.

௰௪ ஏனென்றால் நீ இந்தக் காலத்திலே மவுனமாயிருக்கவேயிருந்தால், யூதருக்கு ரட்சிப்பும் விடுதலையும் வேறொரு ஸ்தலத்திலிருந்தெழும்பும்; நீயும் உன் தகப்பன் வீட்டாருமாய அழிவீர்கள். நீ இப்படிக்கொத்த காலத்துக்கு உதவியாக இராசமேன்மைக்கு வந்ததில்லையோவென்கிறது ஆருக்குத் தெரியுமென்று சொல்லச்சொன்னான்.

௰௫ அப்பொழுது எஸ்தர் மொர்தெகாயிக்கு மறுபடியும் சொல்லச்சொன்னதாவது,

௰௬ நீர் போய்ச் சூசானிலகப்படுகிற யூதரெல்லாரையும் கூட்டிக்கொண்டு எனக்காக உபவாசம்பண்ணி மூன்றுநாள் அல்லும்பகலும் போசியாமலும் குடியாமலுமிருங்கள். நானும் என்னுடைய மாதர்களும் கூட இப்படி உபவாசம்பண்ணுவோம். இந்தப் பிரகாரமாக நியாயப்பிரமாணத்தை மீறி இராசாவண்டைக்குட் பிரவேசிப்பேன். நான் மடிந்தாலும் மடிகிறேனென்று சொல்லச்சொன்னாள்.

௰௭ அப்பொழுது மொர்தெகாயி அப்புறப்பட்டு எஸ்தர் தனக்குக் கற்பித்தபடியெல்லாஞ்செய்தான்.

# ௫. அதிகாரம்.

எஸ்தர், இராசாவுக்கும் ஆமானுக்கும் விருந்து செய்வித்தது.

௧ சம்பவித்ததேதென்றால், மூன்றாம் நாளிலே எஸ்தர் இராசவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு இராச அரண்மனையின் உள்முற்றத்தில் இராசாவின் வீட்டுக்கெதிராகப் போய் நின்றாள். இராச அரண்மனையிலே அரண்மனை வாசலுக்கெதிரேயிருக்கிற தன்னுடைய இராசாசனத்தில் இராசா உட்கார்ந்திருந்தான்.

௨ சம்பவித்ததேதென்றால், இராசா இராசாத்தியாகிய எஸ்தர் முற்றத்தில் நிற்கிறதைக் காணுகையில் அவளுக்கு அவன் கண்களில் தயவு கிடைத்ததினாலே இராசா தன் கையிலிருக்கிற பொற்செங்கோலை எஸ்தரண்டைக்கு நீட்டினான். அப்பொழுது எஸ்தர் சேர்ந்து செங்கோலின் நுனியைத் தொட்டாள்.

௩ இராசா அவளுடனே, இராசாத்தியாகிய எஸ்தரே, உனக்கென்னவேணும், நீ கேட்கிற உன் மன்றாட்டென்ன, நீ இராச்சியத்தில் பாதிமட்டுக்கும் கேட்டாலும் உனக்குக் கொடுக்கப்படுமென்றான்.

௪ அப்பொழுது எஸ்தர், இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் நான் தமக்குச் செய்வித்த விருந்துக்கு இராசாவும் ஆமானும் இன்றைக்கு வரவேணுமென்றாள்.

௫ அப்பொழுது இராசா எஸ்தர் சொற்படிசெய்ய ஆமானைத்தீவிரியுங்களென்று சொல்லி எஸ்தர் செய்வித்த விருந்துக்கு இராசாவும் ஆமானும் வந்தார்கள்.

௬ திராட்சப்பழரசபானம் பண்ணுகிற விருந்திலே இராசா எஸ்தரை நோக்கி, நீ வேண்டிக்கொள்ளுகிறதென்ன உனக்குக் கொடுக்கப்படும். நீ கேட்கிறதென்ன நீ இராச்சியத்தின் பாதிமட்டுங்கேட்டாலும் நடக்குமென்றான்.

௭ எஸ்தர் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது,

௮ இராசாவின் கண்களில் எனக்குக் கிருபை கிடைத்து என் வேண்டுதலைக் கட்டளையிடவும் என் விண்ணப்பத்தின்படி செய்யவும் இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் இராசாவும் ஆமானும் நான் இனி அவர்களுக்குச் செய்விக்கப்போகிற விருந்துக்கு வரவேணுமென்கிறதே என் வேண்டுதலும் என் விண்ணப்பமுமாயிருக்கின்றது. நாளைக்கு இராசாவுடைய சொற்படி செய்வேனென்றாள்.

௯ அன்றையத்தினம் ஆமான் சந்தோஷமும் மனமகிழ்ச்சியுமாய்ப் புறப்பட்டான். ஆனால் இராச அரண்மனையின் வாசலிலிருக்கிற மொர்தெகாயி எழுந்திராமலும் தன்னிமித்தம் அசையாமலுமிருக்கிறதை ஆமான் கண்டபோது அவன் மொர்தெகாயின்மேல் உக்கிரம் நிறைந்தவனானான்.

௰ ஆகிலும் ஆமான் அதை அடக்கிக்கொண்டு தன் வீட்டுக்கு வந்து தன் சிநேகிதரையுந் தன் பெண்சாதியாகிய சேரேசையும் அழைத்தனுப்பி,

௰௧ தன்னுடைய ஐசுவரியத்தின் மகிமையையுந் தன் பிள்ளைகளின் திரட்சியையும் இராசா தன்னைப் பெரியவனாக்கித் தன்னைப் பிரபுக்களின்மேலும் இராசாவின் ஊழியக்காரர்மேலும் உயர்த்தின செல்லாவற்றையும் ஆமான் அவர்களுக்கு விவரித்தான்.

௰௨ பின்னையும் ஆமான் சொன்னதாவது, இராசாத்தியாகிய எஸ்தருந் தான் செய்வித்த விருந்துக்கு என்னைத்தவிர வேறொருவரையும் இராசாவுடனே கூடவரச்சொன்னதில்லை. நாளைக்கும் இராசாவுடனே கூட அவளால் விருந்துக்கு அழைக்கப்பட்டவனானேன்.

௰௩ ஆனால் எந்தமட்டும் யூதனாகிய மொர்தெகாயி இராச அரண்மனையின் வாசலிலுக்கார்ந்திருக்கிறதை நான் காண்கிறேனோ அந்தமட்டும் அதுவெல்லாம் எனக்குப் போதாதென்றான்.

௰௪ அப்பொழுது அவன் பெண்சாதியாகிய சேரேசும் அவனுடைய எல்லாச்சிநேகிதரும் அவனுடனே ஐம்பதுமுழ உயர்த்தியான ஒரு தூக்குமரஞ்செய்யப்படக்கடவது. அதிலே மொர்தெகாயி தூக்கிப்போடப்பட நாளைக்காலமே நீர் இராசாவுக்குச் சொல்லியபிறபாடு சந்தோஷமாய இராசாவுடனேகூட விருந்துக்குப்போமென்றார்கள். இந்தக்காரியம் ஆமானுக்கு நன்றாய்க்கண்டதினால் தூக்குமரத்தைச் செய்ப்பணிவித்தான்.

## ௬. அதிகாரம்.

### மொர்தெகாயி உயர்த்தப்பட்டது.

௧ அந்த இராத்திரியிலே இராசாவுக்கு நித்திரைவராதபடியினாலே, நினைப்பூட்டாக எழுதியிருக்கிற நாட்செய்திகளின் புஸ்தகத்தைக் கொண்டுவரச்சொன்னான். அது இராசாவுக்கு முன்பாக அதுகள வாசிக்கப்பட்டது.

௨ அப்பொழுது வாசற்படிக்காவலாளிகளில் இராசாவின் இரண்டு பிரதானிகளாகிய பிக்தானாவுந் தேரேசும் இராசாவாகிய அகாஸ்வேருவின்மேலே கைபோடப்பார்த்த செய்தியை மொர்தெகாயி அறிவித்தானென்றெழுதியிருக்கிறது கண்டுபிடிக்கப்பட்டபோது,

௩ இராசாவானவன் இதற்காக மொர்தெகாயிக்குச் செய்யப்பட்ட கனமும் வெகுமானமும் என்னவென்றுகேட்டான். ஒன்றும் அவனுக்குச் செய்யப்பட்டதில்லையென்று இராசாவைச் சேவிக்கிற அவனுடைய வேலைக்காரர் சொன்னார்கள்.

௪ அப்பொழுது இராசா முற்றத்திலிருக்கிறவனொன்றுகேட்டான். ஆனால் ஆமான் மொர்தெகாயிக்குத் தான் செய்ப்பணிவித்த மரத்திலே அவனைத் தூக்கிப்போடும்படிக்கு இராசாவுக்குச் சொல்லத்தக்கதாக இராச அரண்மனையின் புறமுற்றத்திலே வந்திருந்தான்.

௫ ஆகையால் இராசாவின் வேலைக்காரர் அவனுடனே, இதோ, ஆமான் முற்றத்திலே நிற்கிறானென்றார்கள். அப்பொழுது இராசா அவன் வரட்டுமென்றான்

௬ ஆமான் உள்ளேவந்தபோது இராசா அவனுடனே, இராசா, கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்குச் செய்யப்படவேண்டியதென்னவென்றான். அப்பொழுது ஆமான் என்னைப்பார்க்க இராசா ஆரைக்கனம்பண்ண விருப்பமாயிருப்பாரென்று தன்னிருதயத்திலே சொல்லிக்கொண்டு.

௭ இராசாவுடனே சொன்னதாவது, இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்குச் செய்யவேண்டியதேதென்றால்,

௮ இராசா உடுத்திக்கொள்ளுகிற இராசவஸ்திரமும் இராசா ஏறுகிற குதிரையுங் கொண்டுவரப்பட்டு இராசமுடி அவன் தலையிலே வைக்கப்பட்டு,

௯ அந்த வஸ்திரமுங் குதிரையும் இராசாவுடைய பிரதான பிரபுக்களில் ஒருவனுடைய கையிலே கொடுக்கப்படக்கடவது. இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்கு வஸ்திரந் தரிக்கப்பட்டபின் அவனைக் குதிரையின்மேலேற்றிப் பட்டண வீதியாய்க் கொண்டுபோய் இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்கு இப்படிச் செய்யப்படுமென்று அவனுக்கு முன்பாகக் கூறக்கடவார்களென்றான்.

௰ அப்போது இராசா ஆமானுடனே, சீக்கிரமாய் வஸ்திரத்தையுங் குதிரையையும் நீ சொன்னபடி வாங்கி இராச அரண்மனையின் வாசலில் உட்கார்ந்திருக்கிற யூதனாகிய மொர்தேகாயிக்கு அந்தப்பிரகாரமாகச் செய். நீ சொன்னதெல்லாவற்றிலும் ஒன்றுங் குறைவிடாதேயென்றான்.

௰௧ அப்படியே ஆமான் வஸ்திரத்தையுங் குதிரையையும் வாங்கி மொர்தேகாயிக்கு வஸ்திரந் தரித்து அவனைக் குதிரையின் மேலேற்றிப் பட்டண வீதியாய்க் கொண்டுபோய் இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனிதனுக்கு இப்படிச் செய்யப்படுமென்று அவனுக்கு முன்பாகக் கூறினான்.

௰௨ பிற்பாடு மொர்தேகாயி இராச அரண்மனையின் வாசலுக்குத் திரும்பி வந்தான். ஆமானோவென்றால் சஞ்சலப்பட்டவனும் முக்காடிட்டவனுமாய்த் தன் வீட்டுக்குத் தீவிரித்தான்.

௰௩ ஆமான் தனக்குச் சம்பவித்ததெல்லாவற்றையுந் தன் பெண்சாதியாகிய சேரேசுக்குந் தன்னுடைய எல்லாச் சிநேகிதருக்கும் விவரித்தபோது அவனுடைய ஞானிகளும் அவன் பெண்சாதியாகிய சேரேசும் அவனுடனே, மொர்தேகாயிக்கு முன்பாக நீர் விழத்துவக்கினீரே. அவன் யூதரின் வித்தாயிருந்தால் நீர் அவனை மேற்கொள்ளாமல் அவனுக்கு முன்பாக விழவே விழுவீரென்றார்கள்.

௰௪ அவர்கள் இன்னம் அவனோடே பேசிக்கொண்டிருக்கையில் இராசாவின் பிரதானிகள் வந்து எஸ்தர் செய்வித்த விருந்துக்கு வர ஆமானைத் துரிதம்பண்ணினார்கள்.

## ௭. அதிகாரம்.

எஸ்தர் தன் சனத்துக்காக விண்ணப்பம்பண்ணின பின் ஆமானுக்கு வந்த ஆக்கினை.

இராசாத்தியாகிய எஸ்தருடனே விருந்துண்க இராசாவும் ஆமானும் வந்தபோது.

௨ திராட்சப்பழ இரசம் நடந்த அந்த இரண்டாம் நாள் விருந்திலும் இராசா எஸ்தருடனே, இராசாத்தியாகிய எஸ்தரே, உன் மன்றாட்டென்ன உனக்குக் கொடுக்கப்படும், நீ கேட்கிற காரியமென்ன நீ இராச்சியத்தின் பாதிமட்டுங் கேட்டாலும் நடக்குமென்றான்.

௩ அப்போது இராசாத்தியாகிய எஸ்தர் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது, இராசாவே, உமதுடைய கண்களிலெனக்குக் கிருபை கிடைத்து இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் என் வேண்டுதலுக்கு என் சீவனும் என் விண்ணப்பத்துக்கு என் சனமும் எனக்குக் கட்டளையிடப்படுவதாக.

௪ ஏனென்றால் எங்களைச் சங்கரிக்கிறதற்குங் கொன்றுபோடுகிறதற்கும் அழிக்கிறதற்கும் நானும் என் சனமுமாய் விற்கப்பட்டோம். அடிமைகளாகவும் வெள்ளாட்டிகளாகவும் விற்கப்பட்டோமானால் அப்போது அந்தச் சத்துரு இராசாவின் நஷ்டத்துக்கு உத்தரவாதம்பண்ணக்கூடாதிருந்தாலும் நான் மவுனமாயிருப்பேனென்றாள்.

௫ அப்போது இராசாவாகிய அகாஸ்வேரு உத்தரவு கொடுத்து இராசாத்தியாகிய எஸ்தருடனே, அவனார் இப்படிச் செய்யும் நினைவுகளாலே தன் இருதயத்தை நிரப்பினவன் எங்கேயிருக்கிறானென்றான்.

௬ அதற்கு எஸ்தர், சத்துருவும் பகைஞனுமாகிய மனிதன் இந்தப் பொல்லாத ஆமானேதானென்றாள். அப்போது ஆமான் இராசாவுக்கும் இராசாத்திக்கும் முன்பாகத் திகிலடைந்தான்.

௭ இராசாவோவென்றால் தன் உக்கிரத்தோடே திராட்சப்பழ இரசம் நடந்த விருந்தை விட்டெழுந்து அரண்மனைத் தோட்டத்துக்குப் போனான். ஆனால் ஆமான் இராசாத்தியாகிய எஸ்தரைத் தன் பிராணனுக்காக விண்ணப்பம்பண்ண நின்றான். ஏனென்றால் இராசாவினால் தனக்குப் பொல்லாப்பு நிர்ணயிக்கப்பட்டதென்று கண்டான்.

௮ இராசா அரண்மனைத் தோட்டத்திலிருந்து திராட்சப்பழ இரசம் நடந்த விருந்தின் வீட்டுக்குத் திரும்பி வருகையில் எஸ்தர் உட்கார்ந்திருக்கிற மெத்தையின் மேல் ஆமான் விழுந்திருந்தான். அப்போது இராசா இவன் என்னோடே வீட்டிலுமிருந்து இராசாத்தியைப் பலவந்தஞ்செய்யவேணுமென்றிருக்கிறானோவென்றான். இந்த வார்த்தை இராசாவின் வாயிலிருந்து புறப்பட்டவுடனே ஆமானின் முகத்தை மூடினார்கள்.

௯ அப்போது இராசாவுக்கு முன்பாக இருக்கிற பிரதானிகளிலொருவனான அற்போனா என்றவன் இதோ, இராசாவின் நன்மைக்காகப் பேசின மொர்தேகாயிக்கு ஆமான் செய்ப்பண்ணுவித்த ஐம்பது முழ உயரமான தூக்குமரமும் ஆமானின் வீட்டண்டை நாட்டப்பட்டிருக்கிறதென்றான். அப்போது இராசா அதிலே அவனைத் தூக்கிப்போடுங்களென்றான்.

௰ அப்படியே ஆமான் மொர்தெகாயிக்கு ஆயத்தம்பண்ணின தூக்குமரத்திலே அவனைத்தானே தூக்கிப்போட்டார்கள். அப்போது இராசாவின் உக்கிரந்தணிந்துபோயிற்று.

## அ. அதிகாரம்.

யூதரைச் சங்கரிக்கும் பிரமாணத்துக்குப் பரிகாரமுண்டாக வேண்டிக் கட்டளைபிறப்பிக்கப்பட்டது.

௧ அன்றையத்தினம் அகாஸ்வேரு இராசா யூதரின் சத்துருவாயிருந்த ஆமானின் வீட்டை இராசாத்தியாகிய ஏஸ்தருக்குக் கொடுத்தான். மொர்தெகாயி இராசாவுக்கு முன்பாகவும் வந்தான். ஏனெனில் அவன் தனக்கென்னமாயிருக்கிறானென்று ஏஸ்தர் அறிவித்திருந்தாள்.

௨ இராசா ஆமானின் கையிலிருந்து வாங்கிப்போட்ட தம்முடைய மோதிரத்தையெடுத்து அதை மொர்தெகாயிக்குக் கொடுத்தான். ஏஸ்தரோவெனில் மொர்தெகாயை ஆமானின் வீட்டுக்கதிகாரியாக வைத்தாள்.

௩ பின்னையும் ஏஸ்தர் இராசாவுக்கு முன்பாகப்பேசி அவன் பாதங்களில் விழுந்தழுது ஆகாகியனான ஆமானின் தீவினையையும் அவன் யூதருக்கு விரோதமாக நினைத்த அவனுடைய யோசனையையும் பரிகரிக்க அவனை விண்ணப்பம்பண்ணினாள்.

௪ அப்போது இராசா பொற்செங்கோலை ஏஸ்தர் அண்டைக்கு நீட்டினான். ஏஸ்தர் எழுந்திருந்து இராசாவுக்கு முன்பாக நின்று.

௫ சொன்னதாவது, இராசாவுக்குச் சம்மதியாயிருந்து தமக்கு முன்பாக எனக்குக் கிருபைகிடைத்து இராசாவுக்குமுன்பாக நான் சொல்லும் வார்த்தை சரிப்பட்டு தம்முடைய கண்களுக்கு நான் பிரியப்பட்டிருந்தால் அப்போது இராசாவின் சீமைகளிலெல்லாம் இருக்கிற யூதரை அழிக்கவேணுமென்று அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்கிற ஆகாகியன் தீவினையாய் எழுதின நிருபங்களைச் செல்லாதேபோகப்பண்ணும்பிரகாரமாக எழுதி அனுப்பப்படக்கடவது,

௬ ஏனென்றால் என் சனத்தின்மேல் வரும் பொல்லாப்பைப் பார்க்க எனக்கெப்படிக் கூடும். என் வமிசத்தின் அழிவையும் பார்க்க எனக்கெப்படிக்கூடுமென்றாள்.

௭ அப்போது அகாஸ்வேரு இராசா இராசாத்தியாகிய ஏஸ்தருக்கும் யூதனாகிய மொர்தெகாயிக்கும் சொன்னதாவது, இதோ, ஆமானின் வீட்டை ஏஸ்தருக்குக் கொடுத்தேன் அவன் யூதரின்மேல் தன் கையைப் போட்டபோனபடியினாலே அவனையும் மரத்திலே தூக்கிப்போட்டார்கள்.

௮ இப்போதும் உங்கள் பார்வைக்குச் சம்மதியானபடி நீங்கள் இராசாவின் நாமத்திலே யூதருக்காக எழுதி இராசாவின் மோதிரத்தினாலே முத்திரைபோடுங்கள். ஏனென்றால் இராசாவின் நாமத்திலே எழுதப்பட்டு இராசாவின் மோதிரத்தாலே முத்திரைபோடப்படுகிறதைச் செல்லாதேபோகப் பண்ணக்கூடாதென்றான்.

௯ சீவானமாதமென்ற மூன்றாம் மாதம் இருபத்துமூன்றாந்தேதியாகிய அக்காலத்திலேதானே இராசாவின் சம்பிரதிகள் அழைக்கப்பட்டார்கள். மொர்தெகாயி கற்பித்தபடியெல்லாம் யூதருக்கும் இந்துதேசந்துவக்கி எத்தியோப்பியாமட்டுமுள்ள நூற்றிருபத்தேழுசீமைகளின் சுபையதாருக்கும் அதிகாரிகளுக்கும் பிரபுக்களுக்கும் சீமைசீமையின் எழுத்திலும் சாதிசாதியின் பாஷையிலும் யூதருக்கு அவர்கள் எழுத்திலும் அவர்கள் பாஷையிலும் எழுதப்பட்டது.

௰ அது அகாஸ்வேரு இராசாவின் நாமத்திலெழுதப்பட்டு இராசாவின் மோதிரத்தால் முத்திரைபோடப்பட்டபின் அந்த நிருபங்கள் அஞ்சற்குதிரைக்காரர் கையிலும் வேகமான ஒட்டகங்களின் மேலும் கோவேறுக்கழுதைகள் மேலும் ஏறிப்போகிற அஞ்சற்காரர் கையிலும் அனுப்பப்பட்டது.

௰௧ அகாஸ்வேரு இராசாவுடைய எல்லாச்சீமைகளிலும் ஆதார் மாதமென்பனிரண்டாம் மாதம் பதின்மூன்றாந்தேதியாகிய அந்த ஒரே நாளிலே,

௰௨ ஒவ்வொரு பட்டணங்களிலிருக்கிற யூதர் கூடிக்கொண்டு தங்கள் பிராணனைக் காப்பாற்றவுந் தங்கள்மேல் சத்துருக்களாயவிழுஞ்சனத்தாருந் தேசத்தாருமான எல்லா இராணுவங்களையும் அவர்கள் குழந்தைகளையும் ஸ்திரீகளையுஞ் சங்கரிக்கவுங் கொன்றுபோடவும் அழிக்கவும் அவர்கள் உடைமைகளைக்கொள்ளையிடவும் இராசா யூதருக்குக் கட்டளையிட்டாரென்று அதுகளிலே எழுதியிருந்தது.

௰௩ யூதர் தங்கள் பகைஞருக்குச் சரிக்குச்சரிக்கட்ட அன்றையத்தினத்துக்கு ஆயத்தமாயிருக்க வேணுமென்று ஒவ்வொரு சீமையிலுள்ள எல்லாச்சனசதளங்களுக்குக் கூறப்படுகிறதற்கான கட்டளை கொடுக்கப்பட்டதென்கிறதும் அதுகளிலே எழுதியிருந்தது.

௰௪ அப்படியே வேகமான ஒட்டகங்களின்மேலுங் கோவேறுக்கழுதைகள்மேலும் ஏறின அஞ்சற்காரர் இராசாவின் வார்த்தையினாலே ஏவப்பட்டுத் தீவிரத்தோடே புறப்பட்டுப்போனார்கள். அந்தப்பிரமாணஞ் சூசான்கோட்டையிலும் அடிக்கப்பட்டது.

௰௫ அப்போது மொர்தெகாயி இளநீலமும் வெள்ளையுமான இராசவஸ்திரமும

௰அ சூசானிலுள்ள யூதரோவெனில் அந்தமாதத்தின் பதின்மூன்றாந்தேதியிலும் பதினாலாந்தேதியிலுங் கூடிக்கொண்டிருந்து பதினைந்தாந்தேதியிலே இளைப்பாறி அதை விருந்துண்கிறசந்தோஷநாளாக்கினார்கள்.

௰௯ ஆனதுகொண்டு அலங்கமில்லாத ஊர்களிற்குடியிருக்கிற நாட்டுப்புறத்தாரான யூதர் ஆதார்மாதத்தின் பதினாலாந்தேதியைச்சந்தோஷமும் விருந்துண்கிறபூரிப்புமான நாளுமென்றுகொண்டு அதியாப்பங்குகளை அனுப்புகிறநாளுமாக்கினார்கள்.

௨௰ இந்த வர்த்தமானங்களை மொர்தேகாயி எழுதி அகாஸ்வேரு இராசாவின்சகல சீமைகளிலுங்கிட்டவுந் தூரமுமாயிருக்கிற எல்லாயூதருக்கும் நிருபங்களையனுப்பி,

௨௧ யூதர் தங்கள்பகைஞரைவிலக்கி இளைப்பாறுதல் அடைந்தநாட்களின்படியேயும் அவர்கள்சஞ்சலஞ்சந்தோஷமாகவும் அவர்கள் துக்கம் மகிழ்கிறநாளாகவும் மாறினமாதத்தின்படியேயும் வருஷந்தோறும் ஆதார்மாதத்தின் பதினாலாந்தேதியையும் பதினைந்தாந்தேதியையும் ஆசரிக்கவும்,

௨௨ அதுகளைவிருந்துண்கிறசந்தோஷநாட்களுமாகவும் ஒருவருக்கொருவர் காணிக்கைகளையும் எளியவர்களுக்கீவுகளையும் அனுப்புகிற நாட்களுமாகவும் அவர்களுக்குத்திட்டம்பண்ணினான்.

௨௩ அப்பொழுது யூதர் தாங்கள்செய்யத்துவக்கினபடியும் மொர்தேகாயி தங்களுக்கெழுதினபடியுஞ்செய்ய ஏற்றுக்கொண்டார்கள்.

௨௪ அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற ஆகாகியனும் யூதருக்கெல்லாஞ்சத்துருவுமானவன் யூதரைச்சங்கரிக்க நினைத்து அவர்களை அழிக்கவும் நிர்மூலமாக்கவும் பூறென்னப்பட்டசீட்டைப்போடுவித்தானென்றும்,

௨௫ ஆனால் அது எஸ்தர் இராசாவுக்கு முன்பாகவந்தபின் யூதருக்குவிரோதமான அவன் நினைத்த அவனுடைய பொல்லாத யோசனை அவனுடைய தலையின்மேல் திரும்புகிறதற்காக நிருபங்களினாலே கட்டளைபண்ணினதினாலே அவனையும் அவன்குமாரரையும் மரத்திலே தூக்கிப்போட்டார்களென்றும்,

௨௬ ஆகையினாலே அந்தநாட்கள் பூறென்றநாமத்தினாற்பூரிமென்னப்பட்டதென்று இவன்தந்தநிருபத்திலே எழுதியிருந்த எல்லா வார்த்தைகளினிமித்தமுந் தாங்கள்தாமே இதைத்தொட்டுக்கண்டதினிமித்தமுந்தங்கள்மேல் இப்படிவந்ததினிமித்தமும்,

௨௭ யூதர் அதைத்திட்டப்படுத்தி இந்த இரண்டு நாட்களைக்குறித்தெழுதியிருக்கிறபடியே அதுகளை வருஷந்தோறும் அதுகளின்திட்டமான காலத்திலே ஆசரியாதிருப்பதில்லையென்பதையும்,

௨அ இந்தநாட்கள் எல்லாத்தலைமுறைகளிலும் வம்சங்களிலுஞ் சீமைகளிலும் ஊர்களிலும் நினைக்கப்பட்டாசரிக்கப்படுகிறதென்பதையும் இந்தப்பூரிமென்றநாட்கள் யூதருக்குள்ளே அற்றுப்போகாமலும் அதுகளை நினைவுகூருதல் தங்கள்வித்தாருக்குள்ளே அழியாமலுமிருக்குமென்பதையுந் தங்கள்மேலுந் தங்கள்வித்தாரின்மேலுந் தங்கள் மார்க்கத்தமைப்போகிறயாவர்மேலும் ஏற்றுக்கொண்டார்கள்.

௨௯ பூரிமைக்குறித்தெழுதியிருக்கிற இந்த இரண்டாம் நிருபத்தைத்திட்டப்படுத்தும்படிக்கு அபிகாயேலின் குமாரத்தியாகிய எஸ்தரென்ற இராசாத்தியும் யூதனாகியமொர்தேகாயும் பின்னையும் மகாபெலனாய் எழுதினார்கள்.

௩௰ யூதனாகியமொர்தேகாயும் இராசாத்தியாகிய எஸ்தரும் யூதருக்கு உறுதிப்படுத்தினதும் அவர்கள்தாமே உபவாசத்தோடும் அலறுதலோடும் ஆசரிப்போமென்று தங்கள்மேலுந்தங்கள்வித்தாரின்மேலும் உறுதிப்பாடாக்கிக்கொண்டதுமான பூரிமென்னப்பட்ட இந்தநாட்கள் அதுகளின்திட்டமானகாலங்களிலே ஆசரிக்கப்படுங்காரியத்தை உறுதிபாக்க,

௩௧ அவன் அகாஸ்வேருவின் இராச்சியத்திலுள்ள நூற்றிருபத்தேழு சீமைகளிலிருக்கிற எல்லா யூதருக்குஞ் சமாதானமும் உண்மையுமான வார்த்தைகளாய் நிருபங்களையனுப்பினான்.

௩௨ இப்படியே எஸ்தரின்கட்டளை பூரிமநாட்களின்வர்த்தமானத்தைத் திட்டப்படுத்தி ஒருபுஸ்தகத்திலெழுதப்பட்டது.

## ௰. அதிகாரம்.

*அகாஸ்வேருவின் மகத்துவமும் மொர்தேகாயினுடையமுக்கியமும்.*

இராசாவாகிய அகாஸ்வேரு தேசத்தின்மேலுஞ் சமுத்திரத்தின்தீவுகள்மேலும் இறைவரிவைத்தான்.

௨ பெலனும் வல்லமையுமான அவனுடைய எல்லாச்செய்கைகளும் இராசாபெரியவனாக்கின மொர்தேகாயினுடையமுக்கியத்தின் விவரமும், மேதியா பெர்சியா இராசாக்களின் நாளாகமபுஸ்தகத்திலேயெழுதியிருக்கிறது.

௩ ஏனென்றால் யூதனாகியமொர்தேகாயி இராசாவாகிய அகாஸ்வேருவுக்கு இரண்டாவதும் யூதருக்குட்பெரியவனுந் தன்னுடையதிரள் சகோதரருக்குப் பிரியமானவனுமாயிருந்து தன் சனத்துக்கு நன்மையைப்பராமரித்துத் தன் வித்தாருக்கெல்லாஞ்சமாதானமுண்டாகப் பேசிக்கொண்டிருந்தான். முற்றிற்றுமுற்றும்.

# யோபுடைய சரித்திரம்.

## ௧. அதிகாரம்.

தேவபத்தியுள்ள யோப் உபத்திரவமடையாத்தற்கு முன் அவனுக்கிருந்த பாக்கியம்.

ஊத்ஸ்தேசத்திலே யோபபென்றுபேரான ஒருமனுஷனிருந்தான. அந்தமனுஷன உத்தமனுஞ் செம்மையார்க்கத்தனாயும் பராபரனுக்குப்பயந்து பொல்லாப்பை விலக்குகிறவனுமாயிருந்தான.

௨ அவனுக்கு ஏழு குமாரரும் மூன்று குமாத்திகளும் பிறந்தார்கள.

௩ அவனுக்கு மிருகஜீவன்கள ஏழாயிரம ஆடுகளும மூவாயிரம ஒட்டகங்களும ஐந்நூறு ஏர்மாடும ஐந்நூறு கழுதைகளும அவனுடைய பணிவிடைச்சனம மகாதிரளுமாயிருந்ததினாலே அந்த மனுஷன கிழக்கத்திப்புத்திரரையெல்லாம பார்க்கப்பெரியவனாயிருந்தான.

௪ அவன குமாரர் அவனவன தன்தன நாளிலே தன்தன வீட்டிலும விருந்துசெய்யப்போய்த்தங்கள மூன்று சகோதரிகளைத் தங்களோடேகூடப்போசித்துக்குடிக்கிறதற்கழைத்தனுப்புவார்கள.

௫ விருந்துசெய்கிற அவரவருடைய நாட்களின வரிசை முடிகிறபோதோவென்றால யோப் அவர்களை அழைத்தனுப்பி பரிசுத்தம்பண்ணி அதிகாலமே யெழுந்திருந்து அவர்களெல்லாருடைய இலக்கத்தின்படியே சர்வாங்கதகன பலிகளைச்செலுத்துவான. ஏனென்றால யோப் ஒருவேளை என குமாரர் பாவஞ்செய்து பராபரனைத்தங்களிருதயத்தில வெறுத்துவிட்டிருப்பார்களென்பான. இந்தப்பிரகாரமாக யோப் அப்படிக்கொத்த நாட்களிலெல்லாஞ்செய்வான.

அவன தன ஆஸ்திகளையும பிளளைகளையும இழந்ததும, அந்தவிக்கினத்தைத்தேவபத்தியாய்ச்சகித்ததும.

௬ ஒருபராபரனுடையகுமாரர்கள கர்த்தருக்குமுன்பாக நிற்கவந்த ஒருநாளிலே சாத்தானும அவர்கள நடுவிலேவந்தது.

௭ கர்த்தர் சாத்தானுடனே, நீயெங்கேயிருந்துவந்தாயென்றார். சாத்தான கர்த்தருக்குப்பிரதியுத்தாரமாக, தேசத்தைச்சுற்றி அதிலேநடந்துதிரிந்துவந்தேனென்றது.

௮ கர்த்தர் சாத்தானுடனே, நமமுடைய ஊழியக்காரனாகிய யோபினபேரில்கவனம்வைத்தாயோ, ஏனென்றால உத்தமனுஞ்செம்மையார்க்கத்தனுமபராபரனுக்குப்பயந்து பொல்லாப்பை விலக்குகிறவனுமாகிய அவனைப்போலத்தேசத்திலொருவனுமில்லையென்றார்.

௯ அப்போது சாத்தான கர்த்தருக்குப்பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது, யோப் விருதாவாய்ப்பராபரனுக்குப்பயந்துநடக்கிறானோ?

௰ தேவரீர் அவனையும அவனவீட்டையும அவனுக்குண்டான தெல்லாவற்றையுஞ்சுற்றிலும வேலியடைக்கவில்லையோ, அவன கைகளின் கிரியையை ஆசீர்வதித்தீர். அவனுடையமிருகஜீவன்கள தேசத்திலே ஏராளமாயிறது.

௰௧ ஆனால தேவரீர் உமதுடையகையை நீட்டி அவனுக்குண்டானதெல்லாந்தொடும். ஏன்? அப்போது அவன உமதுடையமுகத்துக்கெதிரே உம்மைவெறுக்காதோவென்றுபாருமென்றது.

௰௨ அப்போது கர்த்தர் சாத்தானுடனே, இதோ, அவனுக்குண்டானதெல்லாம உனகையிலிருப்பதாக அவனமேலமாத்திரம உன்கையைநீட்டாதேயென்றார். அப்போது சாத்தானகர்த்தருடையசமுகத்தை விட்டுப்புறப்பட்டுப்போயிறது.

௰௩ பிறகு அவனகுமாரரும அவனகுமாரத்திகளுந தங்கள மூத்தசகோதரனவீட்டிலேபோசித்துத்திராட்சப்பழ இரசங்குடிக்கிற ஒருநாளிலே சமபவித்ததேதென்றால,

௰௪ ஒருஆள் யோப்அண்டைக்குவந்து, எருதுகளஉழுதுகழுதைகள அதுகளினபக்கத்திலேமேய்ந்துகொண்டிருக்கையில,

௰௫ சபேயர் அதுகளமேல விழுந்து அதுகளைப்பிடித்துக்கொண்டு வேலையாட்களைப்பட்டையக்கருக்கினாலே வெட்டிப்போட்டார்கள. நானொருவனமாத்திரம அதை யுமக்கறிவிக்கும்படிக்குத்தப்பிவந்தேனென்றான்.

௰௬ இவன இன்னம்பேசுகையில வேறொருவனவந்து, பராபரனுடைய அக்கினி வானத்திலிருந்துவிழுந்து ஆடுகளையுமவேலையாட்களையுஞ்சுட்டெரித்துப்போட்டது. நான ஒருவனமாத்திரம அதை உமக்கறிவிக்கும்படிக்குத்தப்பிவந்தேனென்றான.

௰௭ இவன இன்னமபேசுகையிலேவேறொருவனவந்து, கல்தேயர் மூன்றுபவுஞ்சாய

ரு இப்போதோவென்றால் இது உம்முடையமேல் வந்தபடியினாலே அயாசப்பட்டீர்; இது உம்மைத்தொட்டதினாலே நீர்கலங்குகிறீர்.

சு உம்முடையதேவபக்தி உம்முடைய உறுதியும், உம்முடையவழிகளின் உத்தமம் உம்முடைய நம்பிக்கையுமாயிருக்கவேண்டியதல்லவோ?

எ குற்றமில்லாமல் அழிந்தவன் யார். செம்மைமார்க்கத்தார் அதம்பண்ணப்பட்டது எப்போவென்கிறதை நினைத்துக்கொள்ளும்.

அ நான்கண்டிருக்கிறபடி அநியாயத்தையுழுது வருத்தத்தை விதைத்தவர்கள் அதைத்தான் அறுக்கிறார்கள்.

கூ பராபரனுடைய சுவாசத்தினாலே அவர்கள் அழிந்து அவருடைய நாசியின் காற்றினாலே நிர்மூலமாகிறார்கள்.

ய சிங்கத்தின் கெர்ச்சிப்பும் துஷ்டசிங்கத்தின் சத்தமும் போய் சிங்கக்குட்டிகளின் பல்லுகளும் முறிந்துபோம்.

யக கிழச்சிங்கம் இரையில்லாததினாலே அழிந்து சிங்கக்குட்டிகள் சிதறுண்டுபோகிறது.

யஉ இப்போதும் ஒருவார்த்தை இரகசியமாய் என்னண்டைக்கு வந்தது. அதினுடைய சின்ன ஓசை என் செவியில் விழுந்தது.

யங மனுஷர்மேல் அசந்த நித்திரை விழுகிறபோது இராத்தரிசனைகளான பலவித்த் தோற்றல்கள் உண்டாயிருக்கையில்,

யச திகிலும் நடுக்கமும் என்னைப்பிடித்து என் எலும்புகளையெல்லாம் நடுங்கப்பண்ணிற்று.

யரு அப்போது ஒரு ஆவி என் முகத்துக்கு முன்பாகக் கடந்தது. என் உடலின் மயிர் சிலும்பிக்கொண்டது.

யசு அது நின்று ஒரு உருப்போலே என் கண்களுக்கெதிரே இருந்தது. ஆனால் நான் அதின் ரூபத்தை அறிந்ததில்லை. அமைச்சலுண்டானபின் நான் கேட்டசத்தமாவது,

யஎ மனுஷன் பராபரனைப்பார்க்க நீதிமானாயிருப்பானோ. ஒரு புருஷன் தன்னையுண்டாக்கினவரைப்பார்க்கச் சுத்தமாயிருப்பானோவென்றது.

யஅ இதோ, அவர் தம்முடைய வேலையாட்களை நம்புகிறதில்லை. தம்முடைய தூதரின்மேலேயும் புத்தியில்லாமையைச் சுமத்துவாரே.

யகூ களிமண்வீடுகளில் வாசம்பண்ணி, மண்ணில் அஸ்திபாரம் போடப்பட்டு பொட்டுப்பூச்சிகளால் அரிக்கப்படுகிறவர்கள்மேல் எத்தனையதிகம்.

உய அவர்கள் காலமே துவக்கிச் சாயங்காலமட்டும் நொறுங்குண்டு, ஒருவரும் கவனியாமல் நித்திய அழிவடைகிறார்கள்.

உக அவர்களிலிருக்கிற அவர்களுடைய மகிமை போயவிடுமல்லவோ ஞானமில்லாமற்சாகிறார்கள்.

# ரு. அதிகாரம்.

எலிப்பாஸ் பொல்லாதவர்களுடைய வாழ்வின் வாழ்வுநிலைக்காணாதிருக்கிறது, யோபுக்குத் தன்னைப் பராபரனுக்கு முன்பாகத் தாழ்த்துகிறதற்குப் புத்திசொன்னது.

இப்போதும் உமக்குக் காதுகொடுக்கிறவர் உண்டோவென்று கூப்பிடும்; பரிசுத்தவான்களில் எவன் திக்கை நோக்கிப்பார்ப்பீர்?

உ ஏனென்றால் நிந்தனையே மதிகேடனைக் கொல்லும். பொறாமையல்லாதவனை எரிச்சல் மடிவிக்கும்.

ங நிர்மூடன் ஒருவன் வேர்ப்பிடிக்கிறதை நான் கண்டு உடனே அவனுடைய வாசஸ்தலத்தைச் சபித்தேன்.

ச அவன் பிள்ளைகள் இரட்சிப்புக்குத் தூரமாய் தப்புவிப்பாரில்லாமல் வாசலில் நொறுக்கப்பட்டார்கள்.

ரு அவனுடைய அறுப்பைப் பசித்தவன் தின்று முள்ளுச்செடிகளுக்குள்ளுமிருந்து அதைப் பறித்தான். பறிகாரன் அவன் ஆஸ்தியை விழுங்குகிறான்.

சு ஏனெனில் அக்கிரமம் மண்ணிலிருந்து புறப்படாமலும் வருத்தம் பூமியிலிருந்து முளைக்காமலும்,

எ அக்கினியின்பொறிகள் உயரப்பறக்கிறதுபோல மனுஷன் கஸ்தியனுபவிக்கிறதற்குப் பிறந்தான்.

அ ஆனால் நான் பராபரனுடைய நியாயத்தை ஆராய்ந்து என் வழக்கைப் பராபரனுக்கு நேராகத் திருப்பினேனாகில்,

கூ அவர் ஆராய்ந்து முடியாத பெரியகாரியங்களையும் எண்ணிமுடியாத அதிசயங்களையுஞ் செய்கிறார்.

ய தாழ்ந்தவர்களை உயர்த்தி வைக்கவும் இருந்துவாயத்துக்கங்கொள்ளுகிறவர்கள் இரட்சிக்கப்பட்டு உயரவும்,

யக அவர் பூமியின்மேலே மழையைக் கட்டளையிட்டு வெளிகளின்மேலே தண்ணீர்களை வருவிக்கிறார்.

யஉ தந்திரக்காரருடைய கைகள் காரியத்தை முடியநடத்தக்கூடாதபடிக்கு அவர் அவர்கள் நினைவுகளை அவந்தமாக்குகிறார்.

யங அவர் ஞானிகளை அவர்கள் தந்திரத்திலே பிடிக்கிறார். அதினாலே திரியாவரக்காரரின் ஆலோசனை கவிழ்ந்துபோகிறது.

யச பகற்காலத்தில் அந்தகாரத்துக்கு நேராகி மத்தியானவேளையிலே இராவிலிருக்கிறதுபோலே தடவித்திரிகிறார்கள்.

யரு ஆனால் எளியவனை அவர்கள் வாயிலிருக்கிற பட்டயத்துக்கும் பலவான்கைக்கும் விலக்கி இரட்சிக்கிறார்.

யசு அப்படியே தரித்திரனுக்கு நம்பிக்கையுண்டு. ஆனால் அக்கிரமமானது தன்வாயை மூடும்.

௧௭ இதோ, பராபரன் தண்டிக்கிற மனுஷன் பாக்கியவான். ஆகையால் சர்வத்துக்கும் வல்லவருடைய கண்டனையை வெறுக்காதேயும்.

௧௮ ஏனென்றால் அவர் நோவுண்டாக்கித் திரும்பக் கட்டுகிறார். அவர் காயப்படுத்துகிறார் அவருடைய கை திரும்ப ஆற்றுகிறது.

௧௯ ஆறு இக்கட்டுகளுக்கு உம்மை நீங்கலாக்குவார். ஏழாவதிலும் பொல்லாப்பு உம்மைத் தொடாதிருக்கும்,

௨௦ பஞ்சகாலத்திலே அவர் உம்மை மரணத்துக்கும் யுத்தத்திலே பட்டயத்தின் வெட்டுக்கும் விலக்கிவிட்பார்.

௨௧ நாச்சவுக்குக்கும் மறைக்கப்படுவீர், பாழ்க்கடிப்பு வரும்போது பயப்படாமலுமிருப்பீர்.

௨௨ பாழ்க்கடிப்பையும் பஞ்சத்தையும் நகைப்பீர், பூமியின் மிருகங்களுக்குப் பயப்படாமலுமிருப்பீர்.

௨௩ ஏனென்றால் வெளியின் கல்லுகளோடே உடன்படிக்கையிருக்கும், வெளியின் மிருகஜீவன்களும் உம்மோடே சமாதானமாயிருக்கும்.

௨௪ உம்முடைய கூடாரம் சமாதானத்தோடிருக்குமென்பதை நீர் கண்டறிந்து உம்முடைய வாசஸ்தலத்தைப் பழுது வராதபடிக்குப் பராமரிப்பீர்.

௨௫ உம்முடைய வித்தார் பெருகி உம்முடைய சந்ததியார் பூமியின் பூண்டுகளைப்போலிருப்பார்களென்கிறதை யறிந்துகொள்வீர்.

௨௬ தானியம் ஏற்றகாலத்திலே அம்பாரமாய்க் கட்டப்படும்போல முதிர்வயதிலே கல்லறையில் வந்துசேருவீர்.

௨௭ இதோ, நாங்கள் ஆராய்ந்தறிந்தது இந்தப்படியிருக்கிறது. இதை நீர் கேட்டு உமக்கு நன்மையாக அறிந்துகொள்ளுமென்றான்.

## ௬. அதிகாரம்.

யோபு தன் நிர்ப்பந்தத்தைக் காண்பித்துத் தன் சிநேகிதர் தன்னை அநியாயமாய்க் கடிந்துகொள்ளுகிறதற்காக அங்கலாய்த்தது.

யோபோவென்றால் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது,

௨ என்னுடைய சஞ்சலம் நிறுக்கவே நிறுக்கப்பட்டு என்னுடைய நிர்ப்பந்தமெல்லாம் தராசிலே வைக்கப்பட்டால் தாவிளை.

௩ ஏனென்றால் அது இப்போது கடற்கரை மணலைப்பார்க்கப் பாரமாயிருக்கும் ஆகையால் என்னுடைய வார்த்தைகள் உள்ளடங்கிப்போம்.

௪ ஏனென்றால் சர்வத்துக்கும் வல்லவரின் அம்புகள் எனக்குள்ளிறங்கியிருக்கிறது. அதுகளின் எரிவை என்னுடைய ஆவி குடிக்கிறது. பராபரனுடைய பயங்கரங்கள் எனக்கு முன்பாக அணியணியாய் நிற்கிறது.

௫ புல்லிருக்கிற இடத்திலே காட்டுக்கழுதை கத்துமோ. தன்னுடைய தீனியிருக்கிற இடத்திலே எருது கூப்பிடுமோ.

௬ ருசியில்லாதது உப்பில்லாமற் சாப்பிடக்கூடுமோ, முட்டையின் வெள்ளைக்கருவில் ருசியுண்டோ.

௭ உங்கள் வார்த்தைகளை என் ஆத்துமம் தொடமாட்டேனென்கிறது. அதுகளும் பட்டவெடிக்கிற என்னுடைய போஜனத்துக்கொத்ததுகள்.

௮ என்னுடைய மன்றாட்டு எனக்கு வந்து நான் வரப்பார்த்திருக்கிறதைப் பராபரன் எனக்குக் கொடுத்து,

௯ பராபரன் என்னை நொறுக்கச் சித்தமாயிருந்து தம்முடைய கையை என்னைவிட்டெடுத்து என்னைத் தண்டித்தால் தாவிளை.

௧௦ அது இன்னம் எனக்கு ஆறுதலாயிருக்குமே, அப்பொழுது என்னைத் தப்பவிடாத நோவிலே மரத்திருப்பேன். ஏனென்றால் பரிசுத்தமுள்ளவருடைய வார்த்தைகளை நான் மறைத்ததில்லை.

௧௧ நான் காத்துக்கொண்டிருக்க என்னுடைய பெலன் எம்மாத்திரம் என் ஜீவனை நீடித்திருக்கப்பண்ண என் முடிவேது,

௧௨ என்னுடைய பெலன் கல்லுகளின் பெலனோ, என் மாம்சம் வெண்கலமோ,

௧௩ எனக்குத் தவியான உதவி எனக்குள்ளில்லையோ, மெய்ஞ்ஞானம் என்னைவிட்டு வாங்கிப்போயிற்றே.

௧௪ உபாதிக்கப்படுகிறவனுக்கு அவனுடைய சிநேகிதனால் தயவு காண்பிக்கப்படவேணும். ஆனால் இவன் சர்வத்துக்கும் வல்லவருக்குப் பயப்படாதே போகிறான்.

௧௫ என்னுடைய சகோதரர் ஆற்றைப்போல மோசம்பண்ணுகிறார்கள். ஆறுகளின் வெள்ளத்தைப்போலக் கடந்துபோகிறார்கள்.

௧௬ அதுகள் குளிர்காலப்பனியினாலும் உறைந்த மழை அதுகளிலுருகினதினாலும் அலைவிரிசலாய் வந்ததுகளாச்சுது,

௧௭ உஷ்ணமாகிற காலத்திலே வற்றி அனல்பட்டபோது தங்கள் ஸ்தலத்திலிருந்து வழிந்துபோகிறது.

௧௮ அதுகளுடைய வழிகளின் போக்குகள் இங்குமங்கும் திரியும். அதுகள் விருதாவிலே ஏற்றமானபின் ஒன்றுமில்லாமற்போம்.

௧௯ தேமாவின் பயணக்காரர் பார்த்துத் தேடி சேபாவின் பயணக்கூட்டங்கள் அதுகள்மேல் நம்பிக்கைவைத்து,

௨௦ தாங்களிப்படி நம்பினதினாலே வெட்கப்படுகிறார்கள். அவ்விடம் மட்டும் வந்து கலங்கிப்போகிறார்கள்.

உக அப்படியே நீங்களும் இப்போது ஒன்றுக்கும் உதவாமற் போனீர்கள். என் கலக்கத்தைக் கண்டு பயப்படுகிறீர்கள்.

உஉ எனக்குக் கொண்டுவாருங்களென்றும் உங்கள் ஆஸ்தியில் எனக்காக யாதொரு அன்பளிப்பைக் கொடுங்களென்றும்,

உங அல்லது சத்துருவின் கைக்கு என்னைத் தப்புவியுங்கள், வலுமைக்காரரின் கைக்கு என்னை நீங்கலாக்கி மீட்டுக்கொள்ளுங்களென்றும் நான் சொன்னேனோ,

உச என்னை உபதேசியுங்கள், நான் மௌனமாயிருப்பேன், நான் எதிலே தப்பிப்போனேனென்பதை எனக்கு அறியப்படுத்துங்கள்.

உரு செம்மையான வார்த்தைகளில் என்ன கடினமிருக்கிறது உங்களில் ஆரெங்கும் கடிந்துகொள்ளத் தக்க காரியமென்ன.

உசு கடிந்துகொள்ளுதல்களை வார்த்தைகளே யோசித்துத் திடனற்றவனுடைய வார்த்தைகளைக் காற்றிலே விட்டுவிடுகிறீர்களோ.

உஎ இப்படிச் செய்து திக்கற்றவன்மேலே நீங்கள் விழுந்து உங்கள் சிநேகிதனுக்குப் படுகுழியை வெட்டுகிறீர்கள்.

உஅ இப்போதும் உங்களுக்குச் சித்தமுண்டானால் என்னை நோக்குங்கள். அப்போது நான் பொய்சொல்லுகிறேனென்று உங்கள் முகத்துக்கு முன்பாகத் தெரிய வரும்.

உகூ நீங்கள் இப்படித் திரும்பினாலும் அக்கிரமக்காரராயிருக்கும், அப்படித் திரும்பினாலும் என்னுடைய நீதி அதிலே விளங்கும்.

௩௰ என்னுடைய நாக்கிலே அக்கிரமம் உண்டோ, என்னுடைய வாய் என் நிர்ப்பந்தங்களை அறியாதிருக்குமோ.

## எ. அதிகாரம்.

யோபு தன்னுடைய பெரிய உபத்திரவத்தை விவரித்து வருத்தமடைகிறது.

மனுஷனுக்குப் பூமியின்மேல் போராட்டமுண்டல்லவோ, அவன் நாட்கள் ஒரு கூலிக்காரன் நாட்களைப்போலிருக்கிறதல்லவோ.

உ ஒரு வேலையாள் நிழலை வாஞ்சித்து ஒரு கூலிக்காரன் தன் கூலியை வரப்பார்த்திருக்கிறதுபோல,

ங மாயையான மாதங்கள் என்னுடைய சுதந்தரமாகப் பிரயாசமான இராத்திரிகள் எனக்குக் குறிக்கப்பட்டது.

ச நான் படுத்துக்கொள்ளுகிறபோது நான் எழுந்திருப்பதெப்போது, இராத்திரிகாலஞ் சரியாவதெப்போதென்று சொல்லிக் கிழக்கு வெளுக்கிற நேரமட்டும் அரண்டு புரளுகிறதினால் எனக்கு அலுப்பாதுமென்று போகிறது.

ரு என்னுடைய மாம்சம் பூச்சிகளினாலும் அடைபட்ட மண்ணின் புழுதியினாலும் மூடப்பட்டிருக்கிறது. என்னுடைய தோல் வெடித்து அருவருப்பாயிற்று.

சு என்னுடைய நாட்கள் நெய்கிறவன் எறிகிற நாடாவிலும் தீவிரமாய் ஓடி நம்பிக்கையில்லாமல் முடிந்துபோகும்.

எ என்னுடைய பிராணன் காற்றைப்போலிருக்கிறதென்றும் என் கண் இனி நன்மையைக் காண்பதில்லையென்றும் நினைத்தருளும்.

அ இப்போது என்னைக் காண்கிறவர்களின் கண்கள் இனி என்னைப் பார்ப்பதில்லை. உம்முடைய கண்கள் என்மேலிருக்கிறது. ஆனால் நான் இல்லாதே போகிறேன்.

கூ ஒரு மேகம் பறந்துபோகிறதுபோல குழியிலே இறங்குகிறவன் இனி ஏறிவரான்.

௰ இனித் தன் வீட்டுக்குத் திரும்பான். அவன் ஸ்தலம் இனி அவனை அறியாது.

௰க ஆகையினாலே நானும் என் வாயை அடக்காமல் என் ஆவியின் இடுக்கத்திலே பேசி என் ஆத்துமத்தின் கசப்பிலே அங்கலாய்ப்பேன்.

௰உ தேவரீர் என்னைக் காவல் வைக்கிறதற்கு நான் ஒரு சமுத்திரமோ, நான் ஒரு திமிங்கலமோ?

௰ங என்னுடைய கட்டில் எனக்கு ஆறுதல் கொடுக்குமென்றும் என்னுடைய படுக்கை என்னுடைய தவிப்பைக் குறைக்குமென்றும் நான் சொன்னால்,

௰ச நீர் சொப்பனங்களினாலே என்னைக் கலங்கப்பண்ணித் தரிசனங்களினாலே எனக்குத் திகிலுண்டாக்குகிறீர்.

௰ரு ஆகையால் என் ஆத்துமம் நெருக்குண்டு சாகிறதையும் என் எலும்புகளோடே உயிரோடிருக்கிறதைப் பார்க்கிலும் மரணத்தையும் தெரிந்துகொள்ளும்.

௰சு இப்படியிருக்கிறதை அரோசிக்கிறேன், இப்படியென்றும் உயிரோடிருக்கமாட்டேன். என்னைப் போகவிடும். வீணிலே என் நாட்கள் மாயைதானே.

௰எ மனுஷனை நீர் ஒரு பொருட்டாய் எண்ணுகிறதற்கும் அவன்மேல் உம்முடைய இருதயத்தை வைக்கிறதற்கும்,

௰அ அவனைக் காலைதோறும் விசாரித்து அடிக்கடி அவனைச் சோதிக்கிறதற்கும் அவன் எம்மாத்திரம்.

௰கூ நான் என் உமிழ்நீரை விழுங்குமட்டும் எத்தனை காலம் என்னை நெகிழாமலும் என்னை விடாமலும் இருப்பீர்.

உ௰ மனுஷரைக் காப்பவரே! பாவஞ்செய்தேனானால் உமக்கு நான் செய்யவேண்டியதென்ன? நான் எனக்குத் தானே பாரமாயிருக்கத்தக்கதாக நீர் என்னை உமக்கு இலக்காக வைத்ததென்ன.

௨௧ என்மீறுதலை நீர் மன்னியாமலும் என்அக்கிரமத்தை நீக்காமலுமிருப்பானேன், இதோ இப்போது மண்ணிலே படுத்துக்கொள்ளுவேன்; விடியற்காலத்திலே என்னைத் தேடினீரானால் நானில்லாதிருப்பேனென்றான்.

## அ. அதிகாரம்.

பில்தாத்பேசத்தலைக்கிப்பராபரன் நீதியாய்நியாயந்தீர்க்கிறனென்று ரூபிக்கிறது.

௧ அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தாரமாகச்சொன்னதாவது,

௨ நீர் எந்தமட்டும் இப்படிக்கொத்தித்துப்பேசுவீர். எந்தமட்டும் உம்முடைய வாயின்வார்த்தைகள் வலுவான காற்றைப்போலிருக்கும்.

௩ பராபரன் நியாயத்தைப் புரட்டுவாரோ. சர்வத்துக்கும்வல்லவர் நீதியைப்புரட்டுவாரோ.

௪ உம்முடையபிள்ளைகள் அவருக்கு விரோதமாகப்பாவஞ்செய்திருந்தால் இவர் அவர்கள் பாதகத்தின் ஆக்கினைக்கு ஒப்புக்கொடுத்தார்.

௫ நீர் பராபரனைக்காலமே தேடிச் சர்வத்துக்கும் வல்லவரை நோக்கி விண்ணப்பஞ்செய்து,

௬ சுத்தமுஞ் செம்மையுமாயிருந்தீரோ பானால் அப்போது அவர் உமக்காக விழித்து நீதியுள்ள உம்முடையவாசஸ்தலத்தைச் சாங்கோபாங்கமாக்குவார்.

௭ உம்முடைய துவக்கங்கொஞ்சமாயிருந்தாலும் உமக்கிருக்கிறதுபிற்பாடுமிகவும் வர்த்திக்கும்.

௮ இதற்காக நீர் முந்தின தலைமுறையிலே விசாரித்து அவர்கள் பிதாக்களின்செய்தியை ஆராய்வதைப்பாருமேன்.

௯ ஏனெனில் நாமநேற்றுண்டாகி ஒன்றுமறியாதிருக்கிறோம். ஏனென்றால் பூமியின்மேல் நம்முடையநாட்கள் நிழலைப்போலிருக்கிறது.

௰ அவர்கள் உம்மை உபதேசித்து உமக்கு அதைச்சொல்லித் தங்கள் இருதயத்திலிருக்கும் நியாயங்களைவெளிப்படுத்துவார்களல்லவோ.

௰௧ சேறில்லாமல் நாணல் ஓங்கிவளருமோ, தண்ணீரில்லாமற் கோரைப்புல்லு முளைக்குமோ.

௰௨ இல்லாவிட்டால் அது இன்னந்தன் பச்சையோடிருந்தும் அறுக்கப்படாதிருந்தும் மற்றப்புல்லையெல்லாம் பார்க்க வாடிப்போமல்லவோ.

௰௩ பராபரனைமறக்கிற எல்லாருடைய வழிகளும்அப்படித்தானிருக்கிறது. மாயக்காரன் வரப்பார்த்துக்கொள்ளுதல் அழியும்.

௰௪ அவனுடையவிண்ணம்பிக்கை அறுந்துபோய் அவனுடைய நம்பிக்கைசிலந்திப்பூச்சிக்கூட்டைப்போலிருக்கும்.

௰௫ அவன் தன் வீட்டின்மேலே ஊன்றுகிறான், அது நிலைநிற்காது. அதைப்பிடித்துக்கொண்டிருக்கிறான், அது நில்லாது.

௰௬ வெய்யிலில் அவன் பச்சைச்செடி. அதின்கொடிகள் அவன் தோட்டத்தின்மேலே படருகிறது.

௰௭ அதின்வேர்கள் கற்குவியலைச் சுற்றிக்கொண்டு கற்பாறைகளைக் குத்திநிற்கும்.

௰௮ அது அவ்விடத்திலிராதபடிக்கு நிர்மூலமானபின்பு அது அந்தஇடம் உன்னைநான் கண்டதில்லையென்று அதை மறுதலிக்கும்.

௰௯ இதோ, அவன் மார்க்கத்தின் மகிழ்ச்சி இப்படிப்போகிறது, அதின் மண்ணிலே வேறே பேர் முளைப்பார்கள்.

௨௰ இதோ, பராபரன் உத்தமனைவெறுக்கிறதுமில்லை பொல்லாதவர்களுக்குக் கைலாகுகொடுக்கிறதுமில்லை.

௨௰௧ நீர் உத்தமனாயிருக்கும்போதுமட்டும் அவர் உம்முடைய வாயை நகைப்பினாலும் உம்முடைய உதடுகளைக் கெம்பீரத்தினாலும் நிரப்புவார்.

௨௰௨ உம்மைப் பகைக்கிறவர்கள் வெட்கத்தால் மூடப்படுவார்கள். துன்மார்க்கருடைய கூடாரம் இல்லாமற்போமென்றான்.

## கூ. அதிகாரம்.

நீதியும் ஞானமும் பெலனுமுள்ள பராபரனுடைய இரகசியமானவழிகளை அறியவும் அவரோடே வழக்காடவுங்கூடாதென்று யோபு காண்பிக்கிறது.

யோபு மறுவுத்தரவுகொடுத்துச்சொன்னதாவது,

௨ ஆம், இது இப்படியிருக்கிறதென்றறிவேன். பராபரனுக்கு முன்பாக மனுஷன் நீதிமானாயிருப்பதெப்படி.

௩ அவர் இவனோடே வழக்காடச்சித்தமாயிருந்தால் ஆயிரத்திலொன்றுக்காகிலும் அவருக்கு உத்தரவுசொல்லமாட்டான்.

௪ அவர் இருதயத்திலே ஞானமுள்ளவரும் பெலத்தில் பராக்கிரமருமாயிருக்கிறார். அவருக்கு விரோதமாகத் தன்னைக் கடினப்படுத்திச் சுகித்தவனார்.

௫ அவர் பர்வதங்களை அதுகளறியாமற் பேர்த்து, தம்கோபத்தில் அதுகளைப்புரட்டிப்போடுகிறார்.

௬ அவர் பூமியை அதின் தூண்கள் அதிரத்தக்கதாய் அதின் ஸ்தலத்தைவிட்டு அசைக்கிறார்.

௭ அவர் சூரியனுக்குச்சொல்ல அது உதிக்காதிருந்தது. அவர் நட்சத்திரங்களை முத்திரிக்கிறார்.

௮ அவர் ஒருவர் வானங்களை விரித்து சமுத்திர அலைகளின்மேல் நடக்கிறவர்.

௯ அவர் அயிவியத்தையும் மிருகசீரிஷத்தையும் கார்த்திகை நட்சத்திரத்தையும் தெற்கு திசைமண்டலங்களையும் உண்டாக்கினவர்.

௰ ஆராய்ந்து முடியாத பெரியகாரியங்களையும் எண்ணிமுடியாத அதிசயங்களையும் அவர்செய்கிறார்.

௰௧ இதோ, நான் காணாமல் அவர் என்னண்டை நடந்து நான் அவரையுணராமல் அவர் மாறுபட்டுப்போகிறார்.

௰௨ இதோ, அவர் பறித்துக்கொண்டு போகிறபோது அவரை மறிப்பவனார். நீர் என்னசெய்கிறீரென்று அவரைக் கேட்பவனார்.

௰௩ பராபரன் தமது கோபத்தைத் திருப்பார், பெருமையாய்ச்சகாயம்பண்ணுபவர்கள் அவர்கீழ்ப்பணியவேணும்.

௰௪ இப்படியிருக்கக்கொள்ள நான் அவருக்கு மறுமொழி கொடுத்து அவரோடே பேச எனக்கான வார்த்தைகளைத்தெரிந்து கொள்ளுகிறதெந்த நான் எம்மாத்திரம்.

௰௫ நான் நீதிவிளங்கப்பட்டாலும் அவருக்கு மறுமொழி சொல்லக்கூடாமல் என்னை நியாயந்தீர்க்கிறவரை நோக்கித்துக்குக் கெஞ்சுவேன்.

௰௬ எனக்கு மறுஉத்தரவு கொடுப்பாரென்று நான் கூப்பிட்டாலும் அவர் என் சத்தத்துக்குச்செவிகொடுப்பாரென்று நம்பேன்.

௰௭ ஏனென்றால் அவர் புசல்விலே என்னை நொறுக்கி, முகாந்தரமில்லாமல் அநேக காயங்களை எனக்குவருத்துவிக்கிறார்.

௰௮ நான் சுவாசம்வாங்கவிடாமற் கசப்புகளால் என்னைத் திருப்தியாக்குகிறார்.

௰௯ சத்துவத்தைப்பார்த்தால் இதோ, அவர் பலத்தவர், நியாயத்தைப்பார்த்தால் என்னை வழக்குக்கு விசாரிப்பவனார்?

௨௰ நான் என்னை நீதிமானாக்கினாலும் என்வாய் என்னைக் குற்றவாளியாக்கும், நான் உத்தமனென்றாலும் என்னை மாறுபாடானவனென்று தீர்ப்பார்.

௨௰௧ நான் உத்தமனென்றாலும் என்னை நானறியேன், என் ஜீவனை அரோசிக்கிறேன்.

௨௰௨ இந்த ஒருகாரியம் நமக்கு வழக்காயிருக்கிறது. ஆகையினால் அதைச்சொல்லுகிறேன். அதென்னவென்றால் உத்தமனையும் ஆகாதவனையும் அவர் அழிக்கிறார் என்பதுதானே.

௨௰௩ சவுக்கானது அகப்பட்டிலே வாதித்துக் கொல்லுகிறபோது குற்றமில்லாதவர்களின் சோதனைக்கு நகைக்கிறார்.

௨௰௪ தேசம் ஆகாதவனுடையகையிலே ஒப்புக்கொடுக்கப்படும். அதிலிருக்கிற நியாயாதிபதிகளின்முகத்தை மூடிப்போடுகிறார். அவர் இதைச்செய்கிறதில்லையென்றால் பின்னையார் இதைச்செய்கிறார்.

௨௰௫ என்னுடைய நாட்கள் அஞ்சல்காரனைப்பார்க்கத் தீவிரித்து நன்மைகாணமற் பறந்துபோம்.

௨௰௬ அதுகள் நன்றாய் ஓடுகிற கப்பல்களைப்போலும் இரையின்மேற் பாய்கிற கழுகைப்போலும் கடந்துபோம்.

௨௰௭ என்னுடைய அங்கலாய்ப்பை நான் மறந்து என் முகத்தின் துக்கத்தைவிட்டுத் திடன்கொள்ளுவேனென்று சொன்னாலும்,

௨௰௮ என் நோவுகளுக்கெல்லாம் பயமாயிருக்கிறேன், என்னைக் குற்றமில்லாதவனாக நடத்தீரென்றறிவேன்.

௨௰௯ நான் பொல்லாதவனாயிருந்தால் நான் இத்தனைவிருதாவாய்ப் போராடுவானேன்?

௩௰ நான் என்னை உறைந்த மழைத்தண்ணீரால் கழுவி என்கைகளைச் சவுக்காரத்தாலே சுத்தம்பண்ணினாலும்,

௩௰௧ அப்போதுந்தேவரீர் என்னை என்வஸ்திரங்கள் எனக்கு அருவருப்பாயிருக்கும்படிக்குச்சேற்றுப்பள்ளத்திலே தோய்ப்பீர்.

௩௰௨ ஏனென்றால் நான் அவருக்குப் பிரதியுத்தாரஞ்சொல்லுகிறதற்கும் நாங்கள் கூட நியாயத்திற்கு வருகிறதற்கும் அவர் என்னைப்போல மனுஷனல்ல,

௩௰௩ எங்களிருவரின் பேரிலே தன்கையை வைக்கத்தக்க மத்தியஸ்தன் எங்களுக்குள்ளேயில்லை.

௩௰௪ அவர் தமது மிலாறை என்னைவிட்டகற்றுவாராக. அவருடைய பயங்கரம் என்னைக்கலங்கப்பண்ணாதிருப்பதாக.

௩௰௫ அப்போது நான்பேசி அவருக்குப் பயப்படாதிருப்பேன். ஏனென்றால் நீங்கள் நினைக்கிறபடி எனக்காரியமிராது.

## ௰. அதிகாரம்.

யோபு இன்னம் பராபரனை நோக்கிப்பண்ணின அங்கலாய்ப்பானவிண்ணப்பம்.

௧ நான் உயிரோடிருக்கிறதை என்னுத்துமம் அரோசிக்கிறது, நான் என் துயரத்துக்கு எனக்குள்ளே இடங்கொடுத்து, என் மனக்கசப்பிலே பேசுவேன்.

௨ நான் பராபரனுடனே என்னைத் துன்மார்க்கனென்று தீர்க்காதேயும். தேவரீர் எதினிமித்தம் என்னோடே வழக்காடுகிறீரென்று எனக்குத்தெரியப்பண்ணுமென்பேன்.

௨௧ அவர் பிரபுக்களின்மேல் அசங்கத்தைப்பூறி வல்லமையுள்ளவர்களின் கச்சையைத்தளர்த்தப்போடப்பண்ணுகிறார்.

௨௨ அந்தகாரத்திலிருக்கிற ஆழங்களை அவர் வெளியரங்கமாக்கி மரணநிழலை வெளிச்சத்திலே புறப்படப்பண்ணுகிறார்.

௨௩ அவர் சாதிகளைப் பெருகவும் அழியவும்பண்ணுகிறார். அவர் சாதிகளைப் பரவவும் ஒடுவிலகவும்பண்ணுகிறார்.

௨௪ அவர் தேசத்தின் ஜனத்திலுடைய தலைவர்களின் நெஞ்சை வாங்கிப்போட்டு அவர்களை வழியில்லாத அந்தரத்திலே அலையப்பண்ணுகிறார்.

௨௫ அவர்கள் வெளிச்சமற்ற இருளிலே தடவித்திரிகிறார்கள். அவர்களை வெறித்தவர்களைப்போலத் தடுமாறித்திரியப்பண்ணுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

யோபு தன்னுடைய சிநேகிதர் அநியாயமாய்த் தன்னைக் குற்றப்படுத்துகிறதினிமித்தம் அவர்களைக் கடிந்துகொண்டு பராபரனைநோக்கிப் பண்ணின விண்ணப்பம்.

இதோ, இவைகளெல்லாவற்றையும் என் கண் கண்டு என்னுடைய காது கேட்டு உணர்ந்துகொண்டிருக்கிறது.

௨ நீங்கள் அறிந்திருக்கிறதை நானும் அறிந்திருக்கிறேன், நான் உங்களுக்குத் தாழ்ந்தவனல்ல.

௩ சர்வத்துக்கும் வல்லவரோடே நான் பேசுவேனாகில், பராபரனோடே என் நியாயத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்புவேன்.

௪ ஏனென்றால் நீங்கள் பொய்யைப் பிணைக்கிறவர்களாமே, நீங்களெல்லாரும் காரியமில்லாத வயித்தியர்.

௫ நீங்கள் மவுனமாயிருக்கவேயிருந்தால், அது உங்களுக்கு ஞானமாயிருக்கும்.

௬ நீங்கள் என் நியாயத்தைக்கேட்டு என் உதடுகள் சொல்லும் விசேஷங்களைக் கவனியுங்களேன்.

௭ நீங்கள் பராபரனுக்காக நியாயக்கேடாய்ப்பேசி அவருக்காகக் கவடவசனிக்கவேணுமோ.

௮ அவர் முகத்தைப் பார்ப்பீர்களோ, பராபரனுக்காக வழக்காடுவீர்களோ.

௯ அவர் உங்களை ஆராய்ந்தால் அது உங்களுக்கு நன்மையோ, மனுஷனைச் சக்கந்தம்பண்ணுகிறதுபோல அவரைச் சக்கந்தம்பண்ணுவீர்களோ.

௰ நீங்கள் அந்தரங்கமாய் முகதாட்சணியம்பண்ணினால் அவர் உங்களைக் கண்டிக்கவே கண்டிப்பார்.

௰௧ அவருடைய மகத்துவம் உங்களைத் திகைக்கப்பண்ணாதோ, அவருடைய பயங்கரம் உங்கள்மேல் விழாதோ.

௰௨ நீங்கள் உங்கள் பேரை நினைக்கப்பண்ணும் அடையாளங்கள் சாம்பலுக்கும் உங்கள் மேட்டிமைகள் சேற்றுக்குவியல்களுக்குச் சமானமானது.

௰௩ நான் பேசும்படிக்கு என்கிட்டே மவுனமாயிருங்கள், என்மேல் வருகிறது வரட்டும்.

௰௪ நான் என் பல்லுகளினாலே என் சதையைப் பிடுங்கி என் பிராணனை என் கையிலே போகத்தக்கதாய் வைப்பானேன்.

௰௫ இதோ, அவர் என்னைக் கொன்றுபோட்டாலும் அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன். ஆனாலும் என் வழிகளை அவருக்கு முன்பாக ரூபகாரம்பண்ணுவேன்.

௰௬ அவர் என் இரட்சிப்புமாயிருப்பார். ஏனென்றால் ஒரு மாயக்காரன் அவருக்கு முன்பாக வரமாட்டான்.

௰௭ நீங்கள் என் வசனத்தையும் நான் சொல்லிக்காண்பிக்கிறதையும் உங்கள் செவிகளாற் கேட்கக்கேளுங்கள்.

௰௮ இதோ, என்னுடைய நியாயத்தை அணிஅணியாய் வைத்தேன். நான் நீதிவிளங்கப்படுவேனென்று அறிவேன்.

௰௯ என்னோடே வழக்காடவேணுமென்றிருக்கிறவனார். இப்போது நான் மவுனமாயிருந்து சீவித்துப்போவேனே.

௨௰ இரண்டு காரியங்களைமாத்திரம் எனக்குச் செய்யாதிருப்பீராக. அப்போது உம்முடைய முகத்துக்கு முன்பாக ஒளித்துக்கொள்ளாதிருப்பேன்.

௨௧ உம்முடைய கையை என்னைவிட்டுத் தூரப்படுத்தும். உம்முடைய பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.

௨௨ அப்போது நீர் கூப்பிடும், நான் மறுஉத்தரவுகொடுப்பேன். அல்லது நான் பேசுவேன், நீர் எனக்கு மறுமொழியருளும்.

௨௩ என்மேலிருக்கிற அக்கிரமங்களும் பாவங்களும் எத்தனை; என் மீறுதலையும் என் பாவத்தையும் எனக்கு அறிவியும்.

௨௪ தேவரீர் உம்முடைய முகத்தை மறைத்து என்னை உமக்குப் பகைஞனாக எண்ணிக்கொள்ளுவானேன்.

௨௫ காற்றடித்த சருகை நொறுக்குவீரோ, காய்ந்துபோன துரும்பைப் பின்தொடருவீரோ.

௨௬ ஏனென்றால் தேவரீர் மகா கசப்பான தீர்ப்புகளை என்பேரிலெழுதி என் சிறுவயதின் அக்கிரமங்களை எனக்குப் பலிக்கப்பண்ணி,

௨௭ என் கால்களைத் தொழுவடித்துப்போட்டு என் வழிகளையெல்லாங் காவற்பண்ணுகிறீர். என் கால் அடிகளில் அடையாளத்தைப்போடுகிறீர்.

௨௮ இப்படிக் கெட்டவன் அழுகிப்போகிற வஸ்துவைப்போலும் பொட்டரித்த

வஸ்திரத்தைப்போலும் அழிந்துபோகக் கொள்ளத்தானே.

## ௧௪. அதிகாரம்.

நரசீவனுக்குண்டானவருத்தத்தை யோப் விவரித்து மரணத்தின்மேலவாஞ்சையானது.

ஸ்திரீயினிடத்திற்பிறந்த மனுஷன் நாள்குறைந்தவனும் சஞ்சலம் நிறையப்பட்டவனுமாயிருக்கிறான்.

௨ அவன் பூப்போலப்பூத்து அறுப்புண்டு நிலைநிற்காமல் நிழலைப்போல ஓடிப்போகிறான்.

௩ ஆகிலும் இப்படிக்கொத்தவன்மேலே தேவரீர் உம்முடைய கண்களைத்திறந்து வைத்து உம்மோடே தீர்த்துக்கொள்ளும் நியாயத்துக்கு என்னைக்கொண்டுவருகிறீர்.

௪ அசுத்தமானவர்களில் சுத்தமான ஒருவனையாகிலுங் கண்டெடுக்கத்தக்கவனார்.

௫ அவனுடைய நாட்கள் இம்மாத்திரமென்று குறிக்கப்பட்டிருக்கையால் அவனுடைய மாதங்களின் தொகை உம்மிடத்திலிருக்கிறது. அவன் கடந்துபோகக்கூடாத எல்லைகளை அவனுக்குக் கட்டளையிட்டீர்.

௬ அவன் ஒரு கூலிக்காரனைப்போலே தன் நாளின் வேலையாயிற்றென்று இரம்மியப்படுமட்டும் அவன் ஓய்ந்திருக்கும்படிக்கு உமது பார்வையை அவனை விட்டுவிலக்கும்.

௭ ஒரு மரம் வெட்டிப்போடப்பட்டாலும் இன்னம் பயிராகுமென்றும் அதின் துளிர் துளிர்க்காதிருப்பதில்லையென்றும் அதற்காக நம்பிக்கையுண்டு.

௮ அதின் வேர் தரையிலே பழசாகி அதின் அடிக்கட்டை மண்ணிலே செத்தாலும்,

௯ தண்ணீரின் வாசனையினால் அது துளிர்த்து ஒரு நாற்றைப்போலக் கிளைக்கும்.

௧௦ மனுஷனோவென்றால் செத்தபின் சாரமில்லை, நரசீவன் சீவித்துப்போனபின் அவனெங்கே.

௧௧ தண்ணீர்கள் ஏரியிலிருந்து வடிந்து ஆறு வறட்சுவறிப்போகிறாப்போலே,

௧௨ மனுஷர் படுத்துக்கிடந்து வானங்கள் இல்லாமற்போகுந்தனையும் எழுந்திருக்கிறதுமில்லை நித்திரைதெளிந்து விழிக்கிறதுமில்லை.

௧௩ தேவரீர் என்னைப் பிரேதக்குழியிலே மறைத்து உமது கோபந்திரும்புமட்டும் என்னையொளித்து என்னைத் திரும்ப நினைக்கும்படிக்கு எனக்கு ஒரு திட்டத்தைக் குறித்தால் நாவினே.

௧௪ மனுஷன் செத்தபின் பிழைப்பானோ? என்னுடைய போராட்டத்தின் நாளெல்லாம் என்னுடைய சீர்மாறுதல் எப்போது வருமென்று காத்திருக்கிறேன்.

௧௫ என்னைக் கூப்பிடும், அப்போது நான் உமக்கு மறு உத்தரவுசொல்லுவேன். உம்முடைய கைகளின் கிரியையின்பேரில் விருப்பம் வைப்பீராக.

௧௬ இப்போதோவென்றால் என் நடைகளையெண்ணுகிறீர். என் பாவத்தின்மேலல்லோ கவனமாயிருக்கிறீர்.

௧௭ என்னுடைய மீறுதல் ஒரு கட்டாகக் கட்டப்பட்டு முத்திரைபோட்டிருக்கிறது. என் அக்கிரமத்தை ஒருமிக்கச்சேர்த்தீர்.

௧௮ ஒரு பர்வதமுதலாய் விழுந்துகரையும், ஒரு கன்மலைதன் இடத்தைவிட்டுப்பெயர்ந்துபோம்.

௧௯ தண்ணீர்கள் கல்லுக்களைக்குடையும், பூமியின் தூள் அதிலே தானாய் முளைத்தவைகளைச் சூழும். அப்படி மனுஷன் வரப்பார்த்துக்கொண்டதையழிக்கிறீர்.

௨௦ தேவரீர் என்றைக்கும் அவனைப் பெலனாய் நெருக்குகிறதினால் அவன் போகிறான், அவன் முகரூபத்தை மாறப்பண்ணி அவனை அனுப்பிவிடுகிறீர்.

௨௧ அவன் பிள்ளைகள் கனப்பட்டாலும் அவன் அறியான், அவர்கள் சிறுமைப்பட்டாலும் அவர்களைக்கவனியான்.

௨௨ அவன் மாமிசம் அவனிலிருக்குந்தனையும் அதற்கு நோவிருக்கும், அவன் ஆத்துமம் அவனுக்குள்ளிருக்குமட்டும் துக்கிக்குமென்றான்.

## ௧௫. அதிகாரம்.

ஏலிப்பாஸ் யோபைக்குற்றப்படுத்தி ஒருவனுந் தன்னைத்தான் நீதிமானாக்கப்போகாதென்றும் ஆகாதவர்கள் வாழுகிறதில்லையென்றுஞ்சொன்னது.

அப்போது தேமானியனாகிய ஏலிப்பாஸ் பிரதியுத்தரமாகச்சொன்னதாவது,

௨ ஞானமுள்ளவன் காற்றைப்போலொத்த அறிவாய உத்தரவுசொல்லித் தன் வயிற்றைக் கொண்டற்காற்றினால் நிரப்பி,

௩ ஒரு பிரயோசனமுமில்லாத வார்த்தைகளாலும் ஒன்றுக்குமுதவாத வசனங்களாலுந் தர்க்கிக்கலாமோ?

௪ நீர் பயப்படுதலையும் வீணென்றுசொல்லி பராபரனுக்குமுன்பாகச் செபதியானத்தைக் குறையப்பண்ணுகிறீர்.

௫ ஏனெனில் உம்முடைய வாய் உம்முடைய அக்கிரமத்தைச்சொல்லிக்காட்டுகிறது, நீர் தந்திரமுள்ளவர்களின் நாக்கைத் தெரிந்துகொண்டீர்.

௬ நானல்ல உம்முடைய வாய் உம்மை ஆகாதவனென்று தீர்க்கிறது, உம்முடைய உதடுகள் உமக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகிறது.

௭ நீர் மனுஷரில் முந்திப்பிறந்தவரோ? மேடுகளுக்குமுன்னே உருவாக்கப்பட்டீரோ?

௮ நீர் பராபரனுடைய இரகசிய ஆலோசனையைக் கேட்டு ஞானத்தை உம்மண்டைச் சேரப்பண்ணினீரோ?

௯ நாங்கள் அறியாத எந்தக்காரியத்தை நீர் அறிந்திருக்கிறீர்? எங்களுக்குள்ளேயில்லாத எந்த உணர்வு உமக்கிருக்கிறது.

௰ எங்களுக்குள்ளே உம்முடைய தகப்பனைப்பார்க்கப் பெரியவயதுள்ள நரைத்தோரும் விருத்தாப்பியரும் இருக்கிறார்கள்.

௰௧ பராபரனுண்டாக்குந் தேற்றரவுகளும் உம்மோடே சொல்லப்படுகிற மெதுவான பேச்சும் உமக்கு அற்பகாரியமாயிருக்கிறதோ?

௰௨ உம்முடைய இருதயம் உம்மை எங்கே கொண்டுபோகிறது உம்முடைய கண்கள் நெறிப்பாயிருக்கிறதென்ன?

௰௩ அதேதெனிற் பராபரனுக்கு விரோதமாக உம்முடைய ஆவியைவைத்து உம்முடைய வாயிலிருந்து வசனங்களைப் புறப்படப்பண்ணுகிறீர்.

௰௪ மனுஷன் சுத்தமாயிருக்கிறதற்கும் ஸ்திரீயினிடத்திற்பிறந்தவன் நீதிமானாயிருக்கிறதற்கும் அவன் எம்மாத்திரம்?

௰௫ இதோ, தம்முடைய பரிசுத்தவான்களையும் அவர் நம்பார். பரமண்டலங்களும் அவர் பார்வைக்குச் சுத்தமல்ல.

௰௬ எத்தனை அதிகமாய் அநியாயத்தைத் தண்ணீரைப்போலக் குடிக்கிற மனுஷன் அருவருப்பும் துர்க்கந்தமுமுள்ளவனாயிருக்கிறான்.

௰௭ உமக்குக் காரியத்தைத் தெரியப்பண்ணுவேன் என்னைக் கேளும்: நான் கண்டதை உமக்கு விவரிப்பேன்.

௰௮ ஞானிகள் தங்கள் பிதாக்கள் சொல்லக்கேட்டு மறைக்காமல் அறிவித்ததைத் தீரச்சொல்லுவேன்.

௰௯ அப்படிக்கொத்தவர்களுக்கு மாத்திரந் தேசமானது அந்நியர் அவர்கள் நடுவாயக்கடந்துபோகாதபடிக்குக் கொடுக்கப்பட்டிருந்ததே;

௨௰ அவர்கள் அறிவித்ததேதெனில், துன்மார்க்கன் உயிரோடிருக்கிற நாளெல்லாம் அவன் தனக்கு வாதையுண்டாக்குகிறான், பலவந்தனுக்கு அவன் வருஷங்களின் தொகை இன்னதென்று மறைக்கப்பட்டிருக்கிறது.

௨௧ பயங்கரங்களின் சத்தம் அவன் காதுகளிலிருக்கிறது. சமாதான நாளிலும் பாழ்க்கடிக்கிறவன் அவன்மேல் வருவான்.

௨௨ இருளிலிருந்து திரும்ப வர அவனுக்கு நம்பிக்கையில்லாமற் பதிவிருக்கிறவர்களின் பட்டயத்துக்கு அவன் பயப்படுகிறான்.

௨௩ அப்பம் எங்கே கிடைக்குமென்று அவன் அலைந்து திரிகிறான். அந்தகார நாள் தன் கையின் சமீபத்திலே தனக்கு ஆயத்தப்பட்டிருக்கிறதை அறிவான்.

௨௪ இக்கட்டும் நெருக்கமும் அவனைக் கலங்கப்பண்ணி, யுத்தத்துக்கு ஆயத்தமான இராசாவைப்போலே அவன்மேல் பெலக்கும்.

௨௫ ஏனெனில் அவன் பராபரனுக்கு விரோதமாகத் தன் கையை நீட்டிச் சர்வத்துக்கும் வல்லவருக்கு விரோதமாகப் பராக்கிரமம் பாராட்டுகிறான்.

௨௬ கடினக்கழுத்தோடும் பருத்ததும் எம்பானதுமான தன்னுடைய கேடயங்களோடும் அவருக்கெதிராக ஓடுகிறான்.

௨௭ ஏனென்றால் அவன் தன் முகத்தைத் தன் கொழுப்பினாலே மூடித் தன்னுடைய அடிவயிறு கொழுத்துவிடப்பண்ணுகிறான்.

௨௮ அவன் பாழான பட்டணங்களிலும் குடியிருக்கக்கூடாமற் கற்குவியலாய்ப்போகவிருக்கிற வீடுகளிலும் வாசம்பண்ணுவான்.

௨௯ அவன் ஐசுவரியவானாவதுமில்லை, அவன் ஆஸ்தி நிற்பதுமில்லை. அப்படிக்கொத்தவர்களின் வளர்த்தி தேசத்திற் படருவதுமில்லை.

௩௰ இருளுக்கு அவன் தப்புவதில்லை. அக்கினிச்சுவாலை அவனுடைய கிளைகளைக் காயந்துபோகப்பண்ணும். அவருடைய வாயின் சுவாசத்தால் அற்றுப்போவான்.

௩௧ வழிதப்பினவன் மாயையை நம்பானாக, ஏனென்றால் மாயைதான் அவன் பலனாயிருக்கும்.

௩௨ அது அவன் நாள்வராததற்குமுன்னே அவனுக்கு நிறைந்தபடி பலிக்கும், அவனுடைய கொப்பு பச்சைகொள்வதில்லை.

௩௩ அவன் திராட்சச்செடியைப்போலத் தன் பிஞ்சுகளை உலுக்கி ஒலிவமரத்தைப்போலத் தன் பூக்களை உதிரப்பண்ணுவான்.

௩௪ ஏனென்றால் மாயக்காரரின் கூட்டம் அந்தரமாம். பரிதானம் வாங்கினவர்களின் கூடாரங்களை அக்கினி பட்சிக்கும்.

௩௫ அப்படிக்கொத்தவன் வருத்தத்தைக் கெர்ப்பந்தரித்து அநியாயத்தைப் பெறுகிறான், அவர்கள் கெர்ப்பம் கபடத்தைப் பிறப்பிக்குமென்றான்.

## ௰௬. அதிகாரம்.

யோபு தன் சிநேகிதரின் கடினகுணத்துக்காக முறையிட்டுத் தான் குற்றமில்லாமல் உபத்திரவம் அனுபவிக்கிறதற்குப் பராபரன் சாட்சியென்றது.

யோபு மறுமொழிகொடுத்துச் சொன்னதாவது,

௨ இப்படிக்கொத்த அநேகங்காரியங்களை நான் கேட்டேன், நீங்களெல்லாரும் அலட்டுண்டாக்குகிற தேற்றரவுகாரர்.

௩ காற்றான வார்த்தைகளுக்கு முடிவுண்டாகாதோ, அல்லது நீ இப்படி உத்தரவு கொடுக்க உனக்கு உரம் உண்டாக்குகிறதென்ன.

௪ உங்கள் ஆத்துமம் என்னுடைய ஸ்தலத்திலிருந்தால் உங்களைப் போலே நானும் பேசுவேனே, அப்போது நான் உங்களுக்கு விரோதமான வார்த்தைகளை மிகசமாக்கி உங்களுக்கெதிராக என் தலையைத் துலுக்குவேனே.

௫ நான் என் வாயினாலே உங்களுக்குத் திடன் சொல்லுவேனே, என் உதடுகளின் அசைவு துக்கமாற்றுமே.

௬ நான் பேசினாலும் என் நோவு ஆறாது, நான் பேசாவிட்டாலும் எந்த நோவு என்னை விட்டுப் பிரிந்துபோம்.

௭ இப்போது என்னை நன்றாய் இளைப்பாக்கினார். என் கூட்டத்தையெல்லாம் பாழாக்கினீர்.

௮ தேவரீர் என்னைச் சுருங்கிப்போகப் பண்ணினது அதற்குச் சாட்சி, என்னுடைய இளைச்சல் என்னில் அத்தாட்சியாக நின்று என் முகத்துக்கு முன்பாக உத்தரவு சொல்லும்.

௯ அவனுடைய கோபம் என்னைப் பீறுகின்றது, என்னைப் பகைக்கிறான்: தன் பல்லுகளை என் பேரிலே கடித்துக்கொள்ளுகிறான், என் சத்துரு எனக்கு விரோதமாகத் தன் கண்களைக் கூர்மையாக்குறான்.

௰ எனக்கு விரோதமாகத் தங்கள் வாயை விரிவாய்த் திறந்தார்கள், நிந்தையாக என்னை என் கன்னங்களில் அடித்தார்கள்; ஏகமாய் எனக்கு விரோதமாகக் கூட்டங்கூடினார்கள்.

௰௧ பராபரன் என்னை அநியாயக்காரன் வசமாக ஒப்புவித்து, ஆகாதவர்களின் கையில் என்னை அகப்படப்பண்ணினார்.

௰௨ சாங்கோபாங்கத்துடனே இருந்தேன், ஆனால் அவர் என்னை நசுக்கி என் பிடரியைப் பிடித்து என்னை நொறுக்கி, என்னைத் தமக்கு இலக்காக நிறுத்தினார்.

௰௩ அவருடைய வில்காரர் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள், என் ஈரல்களைத் தப்பவிடாமற் பிளந்தார்: என் பிச்சையைத் தரையிலே ஊற்றிப்போட்டார்.

௰௪ அவர் எனக்கு நொறுக்குதலின்மேல் நொறுக்குதலை வரப்பண்ணினார். பராக்கிரமசாலியைப்போல என்மேல் விழுந்தார்.

௰௫ நான் இரட்டுச் சேலையைத் தைத்து என் தோளின்மேலே போர்த்துக்கொண்டேன், என் மகிமையைத் தூளிலே போட்டுவிட்டேன்.

௰௬ என் முகம் அழுகிறதினாலே அழுக்குப்பட்டது. என் கண்ணிமைகளின்மேல் மரண நிழலுண்டாயிருக்கிறது.

௰௭ என்னைக் கைகளிலே கொடுமையில்லாதிருக்கச் செய்யவும் என் செபம் சுத்தமாயிருக்கச் செய்யவும் தானே.

௰௮ அ பூமியே, என் இரத்தத்தை மூடிப்போடாதே, என் அலறுதலுக்கு இளைப்பாறுதலுண்டாகாதிருப்பதாக.

௰௯ இப்பவும் இதோ, என் சாட்சி பரமண்டலத்திலும், என்னை அறிந்தவர் உன்னதங்களிலும் இருக்கிறார்.

௨௰ என் சிநேகிதர் என்னைப் பரியாசம் பண்ணுகிறவர்கள், என் கண் பராபரனை நோக்கிக் கண்ணீர் சொரிகிறது.

௨௰௧ ஒரு மனுஷபுத்திரன் தன் சிநேகிதனுக்காக வழக்குத் தீர்த்துக்கொள்ளுகிறதுபோல பராபரனோடே இந்த மனுஷனுக்காக வழக்குத் தீர்த்துக்கொள்ளவொருவருண்டு.

௨௰௨ ஏனென்றால் குறுகின வருஷங்கள் முடிவுவந்தது, நான் திரும்பிவராத வழியிலே போவேன்.

## ௰௭. அதிகாரம்.

யோபு மரணத்தின்மேல வாஞ்சையாய்ச் சொன்ன வார்த்தைகள்.

என் சுவாசம் அழியும், என் நாட்கள் அவிந்துபோகிறது: பிரேதக்குழி எனக்கு முண்டாயிருக்கிறது.

௨ பரியாசம்பண்ணுகிறவர்கள் என்னிடத்திலில்லையோ, அவர்கள் உண்டாக்குகிற கசப்பினிமித்தம் என் கண் இராத்திரிதோறும் விழித்திராதோ.

௩ தேவரீர் மேற்போட்டுக்கொண்டு என்னக்காகப் பிணைப்படுமே, வேறே ஆர் எனக்கு அஸ்தங்கொடுக்கத்தக்கவர்.

௪ ஏனென்றால் அவர்கள் இருதயத்துக்கு ஞானத்தை மறைத்தீர், ஆகையால் அவர்களை உயர்த்தாதிருப்பீர்.

௫ எவன் தன் சிநேகிதருக்குச் சேதமாகத் துரோகம்பேசுகிறானோ அவன் பிள்ளைகளின் கண்களும் பூத்துப்போகும்.

௬ அவர் என்னைச் சனக்கூட்டங்களில் பழமொழியாக வைத்ததினாலே அவரவர் முகத்துக்கு அருவருப்பானேன்.

௭ இதினிமித்தமாக என் கண்கள் சஞ்சலத்தினாலே இருள் அடைந்தது; என் அவயவங்களெல்லாம் ஒரு நிழலைப்போலிருக்கிறது.

௮ செம்மைமார்க்கத்தார் இதற்காகப் பிரமிப்பார்கள். குற்றமில்லாதவன் மாயக்காரனுக்குவிரோதமாக எழும்புவான்.

௩ இப்போது பத்துத்தரம் என்னை நிந்தித்தீர்கள். நீங்கள் எனக்குக் கடினமுகங்காண்பிக்கிறதினாலே உங்களுக்கு வெட்கமில்லை.

௪ நான் தப்பிநடந்தது மெய்யானாலும் என் தப்பிதம் என்னோடே தானிருக்கிறது.

௫ நீங்கள் எனக்குவிரோதமாக உயர்ந்து எனக்கு நிந்தையாக என்னைக் கடிந்துகொள்ளவேணுமென்றிருந்தீர்களேயாகில்,

௬ பராபரன் என்னைக் கவிழ்த்துத் தம்முடையவலையை என்மேல் வீசினாரென்று அறியுங்கள்.

௭ இதோ, கொடுமையென்று கூப்பிடுகிறேன் ஆனாலும் நான் கேட்கப்படுகிறதில்லை, கூக்குரலிடுகிறேன் ஆனாலும் நியாயஞ்செய்யப்படுகிறதில்லை.

௮ நான் கடந்துபோகக்கூடாதபடிக்கு அவர் என் பாதையை வேலியடைத்து என் வழிகளை இருளாக்கிப்போட்டார்.

௯ என்னிலிருந்த என் மகிமையை அவர் உரிந்துகொண்டு என் சிரசின் கிரீடத்தை எடுத்துப்போட்டார்.

௰ அவர் என்னைச் சுற்றிலும் இடித்துப்போட்டதினால் நான் போகிறேன், என் நம்பிக்கையை ஒரு செடியைப்போலப் பிடுங்கிப்போட்டார்.

௰௧ அவர் தமது கோபத்தை என்மேல் எரியப்பண்ணினார். என்னைத் தம்முடைய சத்துருக்களில் ஒருவனாக எண்ணிக்கொள்ளுகிறார்.

௰௨ அவருடைய தண்டுப்படைகள் ஏகமாய் வந்து எனக்குவிரோதமாகத் தங்கள் வழியையுயர்த்தி என் கூடாரத்தைச் சுற்றிலும் பாளயமிறங்கினார்கள்.

௰௩ என் சகோதரரை என்னைவிட்டுத் தூரப்படுத்தினார், எனக்கறிமுகமானவர்கள் எனக்கு அந்நியராய்ப்போனார்கள்.

௰௪ என் பந்துசனங்கள் விலகிப்போய் என் வங்கணக்காரர் என்னை மறந்தார்கள்.

௰௫ என் வீட்டாட்களும் என் வேலைக்காரிகளும் என்னை அந்நியனாகப் பார்க்கிறார்கள், அவர்கள் பார்வைக்கு நான் அசலானைப்போலிருக்கிறேன்.

௰௬ நான் என் வேலைக்காரனைக் கூப்பிடுகிறபோது எனக்கு மறுஉத்தரவு கொடான், என் வாயினாலே நான் அவனைக் கெஞ்சிக் கேட்கவேணும்.

௰௭ என் சுவாசம் என் பெண்சாதிக்கு வேறுபட்டிருக்கிறது, என் கெர்ப்பத்தின் பிள்ளைகளுக்காகப் பரிதபிக்கிறேன்.

௰௮ சிறுபிள்ளைகளும் என்னை அசட்டைபண்ணுகிறது, நான் எழுந்தால் அதுகள் எனக்குவிரோதமாகப் பேசுகிறது.

௰௯ என் பிராணசிநேகிதரெல்லாரும் என்னை அரோசிக்கிறார்கள், நான் சிநேகித்தவர்கள் எனக்குவிரோதமாய்த் திரும்பினார்கள்.

௨௰ என் எலும்புகள் என் தோலோடும் என் மாமிசத்தோடும் ஒட்டிக்கொண்டிருக்கிறது, என் பல்லுகளைமூடக்கொள்ளுஞ்சருமத்தோலத் தப்பிறது.

௨௧ என் சிநேகிதராகிய நீங்கள் எனக்கு இரங்குங்கள், இரங்குங்கள், ஏனென்றால் பராபரனுடைய கை என்னைத் தொட்டது.

௨௨ பராபரனைப்போலே நீங்கள் என்னைத் துன்பப்படுத்துவானேன், என் மாமிசத்தைப் பட்சித்தும் ஆறுமையாயிருக்கிறதென்ன.

௨௩ ஆ நான் இப்போது சொல்லும் வார்த்தைகள் எழுதப்பட்டால் தாவிளை, அதுகள் ஒரு புஸ்தகத்திலே வரையப்பட்டு,

௨௪ என்றைக்குமிருக்க அதுகள் கல்லிலே உளிவெட்டும் ஈய எழுத்துமாய் வெட்டப்பட்டிருந்தால் தாவிளை.

௨௫ ஏனென்றால் என் மீட்பர் உயிரோடிருக்கிறாரென்றும் அவர் ஏறக்கடைசியானவராய்த் தூளின்மேல் நிற்பாரென்கிறதையும் நான் அறிந்திருக்கிறேன்.

௨௬ இந்த என்னுடைய தோலுமுதலானது அழுகிப்போனபின்பு நான் என் மாமிசத்திலிருந்து பராபரனைப் பார்ப்பேன்.

௨௭ அவரை நான் எனக்கென்று பார்ப்பேன்: அந்நியகண்ணல்ல, என்னுடைய கண்களே அவரைக் காணும்; இதற்காக என்னுள்ளிந்திரியங்கள் எனக்குள் தொய்ந்துபோகிறது.

௨௮ அந்தவார்த்தையின்வேர் எனக்குள் கண்டுபிடிக்கப்படுகையில் நாம் ஏன் அவனைத் துன்பப்படுத்துகிறோமென்று நீங்கள் சொல்லவேண்டியதாமே.

௨௯ பட்டயத்துக்குப் பயப்படுங்கள், ஏனெனில் உக்கிரமானது பட்டய ஆக்கினைக்குநேரான நியாயம், நியாயத்தீர்ப்புண்டென்கிறதை நீங்கள் அறியவும் என்றான்.

## ௨௰. அதிகாரம்.

சோப்பார் ஞானமார்க்கரின் சந்தோஷங் குறுகினதும் அவர்கள் நிர்ப்பாக்கியம் பெருகினதும் என்று சொல்லக்காண்பித்தது.

அப்போது நகமாத்தியனான சோப்பார் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது.

௨ இதற்காக மறு உத்தரவு கொடுக்க என் சிந்தனைகள் என்னை ஏவுகையால் நான் தீவிரித்துக்கொள்ளுகிறேன்.

௩ நான் நிந்தித்தேனென்று கடிந்துசொல்லப்பட்டதைக் கேட்டேன். ஆனால் என்

௬ இதை நான் நினைக்கையிற் கலங்குகிறேன், என் மாமிசத்துக்கு நடுக்கம் பிடிக்கும்.

௭ துன்மார்க்கர் பிழைத்துக் கிழவராய்ப் போய் வல்லமையிலும் பெலப்பானேன்?

௮ அவர்களோடேகூட அவர்கள் வித்தார் அவர்களுக்கு முன்பாகவும் அவர்கள் சந்ததியார் அவர்கள் கண்களுக்கு முன்பாகவும் திடப்படுகிறார்கள்.

௯ அவர்கள் வீடுகள் பயமில்லாமல் சுகமாயிருக்கும். பராபரனுடைய மிலாறு அவர்கள்மேல் இறங்காது.

௰ அவர்களுடைய எருது பொலிந்தால் அவத்தமாயிராது. அவர்களுடைய பசு சினையழியாமல் ஈனுகிறது.

௰௧ அவர்கள் தங்கள் குழந்தைகளை ஒரு மந்தையைப்போல் வெளியே போகவிடுவார்கள். அவர்கள் பிள்ளைகள் குதித்துக் கொண்டு திரிகிறது.

௰௨ அவர்கள் மேளத்தையுஞ் சுரமண்டலத்தையும் பிடித்துச் சத்தமிட்டுக் கின்னரத்தின் ஓசைக்குச் சந்தோஷப்படுகிறார்கள்.

௰௩ அவர்கள் செல்வத்தோடே தங்கள் நாட்களைப் போக்கி ஒருக்ஷணப்பொழுதிலே குழியில் இறங்குகிறார்கள்.

௰௪ இப்படிக்கொத்தவர்கள் பராபரனுக்கு எங்களை விட்டுவிலகியிரும், உம்முடைய வழிகளை அறிய விரும்போமென்று சொல்லி,

௰௫ சர்வத்துக்கும் வல்லவரை நாங்கள் சேவிக்க அவர் ஆர்? அவரை நோக்கிச் செபம்பண்ணுவதினால் நமக்கு என்ன பிரயோசனமென்கிறார்கள்.

௰௬ ஆனால் இதோ, அவர்கள் வாழ்வு அவர்கள் கையிலிராது, ஆகாதவர்களின் ஆலோசனை எனக்குத் தூரமாயிருக்கக்கடவது.

௰௭ எத்தனைதரம் ஆகாதவர்களின் விளக்கு அணைந்து அவர் தமது கோபத்தினாலே வேதனைகளைப் பகிர்ந்துகொடுக்கையில் அவர்கள் ஆபத்து அவர்கள்மேல் வரும்.

௰௮ அவர்கள் காற்று முகத்திலிருக்கிற துரும்பைப்போலும் பெருங்காற்று பறக்கடிக்கிற பதரைப்போலுமிருக்கிறார்கள்.

௰௯ பராபரன் அவனுடைய அக்கிரமத்தை அவன் பிள்ளைகளுக்கு வைத்து வைக்கிறார், அவன் உணரத்தக்கதாய் அதை அவனுக்குப் பலிக்கப்பண்ணுகிறார்.

௨௰ தன்னுடைய சங்காரத்தை அவனுடைய கண்கள் காணும், சர்வத்துக்கும் வல்லவருடைய உக்கிரத்தைக் குடிப்பான்.

௨௧ ஏனெனில் அவன் மாதங்களின் தொகை குறுக்கப்படுகையில் அவனுக்குப் பிற்பாடு அவன் வீட்டினால் அவனுக்கு என்ன விருப்பமென்ன?

௨௨ உயர்ந்தவர்களை நியாயந்தீர்க்கிற பராபரனுக்கு அறிவு சொல்லப்படலாமோ.

௨௩ ஒருவன் தன் சர்வசாங்கோபாங்கத்தோடே சுகத்தோடிருந்து குறைவற்ற பெலனுள்ளவனாய்ச் சாகிறான்.

௨௪ அவனுடைய பாற்பானைகள் பால் நிரம்பினதும், அவன் எலும்புகளின் ஊன் புஷ்டியுமாயிருந்தது.

௨௫ பின்னொருவன் சந்தோஷத்தோடே சாப்பிடாதவனாயிருந்து மனக்கிலேசத்தோடே சாகிறான்.

௨௬ இருவரும் மண்ணிலே கிடக்கிறார்கள், பூச்சிகள் அவர்களை மூடிக்கொள்ளும்.

௨௭ இதோ, நான் உங்கள் நினைவுகளையும் நீங்கள் எனக்குக் கொடுமையாய்ச் செய்கிற வினைகளையும் அறிவேன்.

௨௮ ஏனென்றால் நீங்கள் பிரபுவினுடைய வீடெங்கேயென்றும், ஆகாதவர்கள் வாசம்பண்ணின கூடாரம் எங்கேயென்றும் சொல்லுகிறீர்கள்.

௨௯ வழியிலே கடந்துபோகிறவர்களை நீங்கள் கேட்டு அவர்கள் சொல்லும் அடையாளங்களை நீங்கள் அறியவில்லையோ?

௩௰ என்னென்றால் பொல்லாதவன் ஆபத்தின் நாளுக்கென்று வைக்கப்படுகிறான், அப்படிக்கொத்தவர்கள் கோபாக்கினைகளின் நாளுக்கென்று கொண்டுபோகப்படுகிறார்கள்.

௩௧ அப்படிக்கொத்தவனுடைய மார்க்கத்தை அவன் முகத்துக்கு முன்பாகத் தூண்டிக்காண்பிப்பவனார், அவன் செய்ததற்குத் தக்கதை அவனுக்குச் சரிக்கட்டுபவனார்?

௩௨ அவனோவென்றால் கல்லறைக்குக் கொண்டுவரப்படுகிறான், அவன் கோரிக்கை பராமரிக்கையுமாயிருந்தான்.

௩௩ பள்ளத்தாக்கின் கட்டிகள் அவனுக்கு இன்பமாயிருந்து தனக்குப்பின் எல்லா மனுஷரையெல்லாம் இழுத்துக்கொள்ளுகிறான், அவனுக்கு முன்னுக்குப் போனவர்களும் எண்ணிக்கைக்கடங்காதவர்கள்.

௩௪ இப்போதும் நீங்கள் மாயையான ஆறுதலை எனக்குச் சொல்லுகிறதென்ன. உங்கள் மறுமொழிகளில் உண்மைக்கேடு தானே பிடித்திருக்கிறதென்றான்.

## ௨௨. அதிகாரம்.

கோபமுண்ட பராபரனோடே பாப்புரவாக எலிப்பாஸ் யோபுக்குப் புத்தி சொன்னது.

அப்போது தேமானியனான எலிப்பாஸ் பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது.

௨ ஒரு மனுஷன் விவேகியாயிருந்து தனக்குத்தான் பிரயோசனமாயிருக்கிறதினால் பராபரனுக்குப் பிரயோசனமாயிருப்பானோ.

௰௪ இதோ, இதுகள் அவருடைய வழிகளின் கடைசிகள், நாங்கள் அவரைக்குறித்துக் கேட்ட வார்த்தை எத்தனை போதாததாயிருக்கிறது, அவருடைய வல்லமையின் இடிமுழக்கம் இன்னதென்றறிந்தவன் ஒன்றுன.

## ௨௭. அதிகாரம்.

யோபு மாயமற்ற தன்னுடைய தேவபக்தியை விடேனென்றது.

யோபு பின்னையுந் தன்வாக்கியங்களை யெடுத்துப்பேசிச் சொன்னதாவது,

௨ என்னுடைய சுவாசம் என்னிலும் பராபரனுடைய ஆவி என் மூக்கிலுமிருக்குமட்டும்,

௩ என் உதடுகள் அக்கிரமஞ்சொல்வதுமில்லை, என் நாக்குக் கபடம் உரைப்பதுமில்லையென்று,

௪ என்னுடைய நியாயத்தை விலக்குகிற பராபரனும் என் ஆத்துமத்தைக் கசப்பாக்குகிற சர்வவல்லவருமானவருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.

௫ நீங்கள் பேசுகிறது நீதியென்று நான் ஒத்துக்கொள்வது எனக்குத் தூரமாயிருப்பதாக, என் ஆவி பிரியுமட்டும் என் உத்தமத்தை என்னைவிட்டு விலக்கேன்.

௬ என் நீதியைக் கெட்டியாய்ப் பிடிக்கிறேன்; அதை நான் விட்டுவிடேன்; என் நாட்களைக்குறித்து என்னிருதயம் என்னை நிந்திக்காது.

௭ என் பகைஞன் ஆகாதவனைப்போலும் எனக்கு விரோதமாய் எழும்புகிறவன் அக்கிரமக்காரனைப்போலுமிருப்பானாக.

௮ ஏனெனில் மாயக்காரன் பொருளைத் தேடிவைத்திருந்தாலும் பராபரன் அவன் ஆத்துமத்தைப் பறிக்கும்போது அவனுடைய நம்பிக்கையென்ன.

௯ நிர்ப்பந்தம் அவன் மேல்வரும்போது பராபரன் அவன் கூப்பிடுதலைக் கேட்பாரோ.

௰ அவன் சர்வத்துக்கும் வல்லவர்மேலே மனமகிழ்ச்சியாயிருப்பானோ, அவன் சகல காலத்திலும் பராபரனைத் தொழுதுகொண்டிருப்பானோ.

௰௧ பராபரனுடைய கரத்தைக்குறித்து உங்களை உபதேசிப்பேன்; சர்வத்துக்கும் வல்லவரிடத்திலிருக்கிறதை நான் மறைப்பதில்லை.

௰௨ இதோ, நீங்களெல்லாரும் அதைக் கண்டிருந்து நீங்கள் இத்தனை வீண்நினைவாயிருக்கிறதென்ன.

௰௩ பொல்லாத மனுஷனுக்குப் பராபரனிடத்திலிருந்து வரும் பங்கும் கொடூரக்காரர் சர்வத்துக்கும் வல்லவரால் அடைகிற சுதந்தரமும் என்னவெனில்,

௰௪ அவனுடைய குமாரர் பெருகினால் பட்டயத்துக்கிரையாகத்தானே, அவன் கெர்ப்பத்தின் பிறப்புகள் அப்பத்தினால் திருப்தியாவதில்லை.

௰௫ அவனுக்கு மீதியானவர்கள் செத்துப் புதைக்கப்படுவார்கள், அவனுடைய விதவைகள் புலம்புவதுமில்லை.

௰௬ அவன் மண்ணைத்தூளைப்போல் வெள்ளியைக் குவித்துக்கொண்டாலும் களிமண்ணைப்போல் வஸ்திரங்களைச் சவதரித்தாலும்,

௰௭ அவன் அதைச் சவதரித்தான், ஆனால் நீதிமான் அதுகளை உடுத்துக்கொண்டு குற்றமில்லாதவன் வெள்ளியைப் பங்கிடுவான்.

௰௮ அவனுடைய வீடு செல்லுக்கட்டின கூடுபோலும் காவற்காக்கிறவன் போட்ட குடிசையைப்போலுமாகும்.

௰௯ அவன் ஐசுவரியவானாய்ப் படுத்துக்கிடந்து ஒன்றும் பறிகொடாமற்போனாலும் அவன் தன் கண்களைத் திறக்கும்போது ஒன்றுமில்லாதிருக்கும்.

௨௰ திகில்கள் வெள்ளத்தைப்போல அவனைப் பிடிக்கும், இராக்காலத்திலே பெருங்காற்று அவனை வாரிக்கொண்டுபோகும்.

௨௧ கொண்டற்காற்று அவனைத் தூக்கிக்கொள்ளுகையாற் போய்விடுவான், அது அவனை அவன் ஸ்தலத்திலிருந்து தள்ளிக்கொண்டுபோகும்.

௨௨ அவர் இதுகளை அவன்மேல் வரப்பண்ணி அவனைத் தப்பவிடாதிருப்பார், அவர் கைக்குத் தப்ப ஓடிப்போவான்.

௨௩ அவன்மேற் கைகொட்டி அவனை அவன் ஸ்தலத்தைவிட்டு உசுப்புவார்கள்.

## ௨௮. அதிகாரம்.

யோபு ஆராய்ந்து முடியாத பராபரனுடைய ஞானத்தைக்குறித்துச் சொன்னது.

வெள்ளிக்குப் பிறப்புண்டே, பொன்னுக்குப் புடமிடுந்தலமுமுண்டு.

௨ இரும்பு மண்ணிலிருந்தெடுக்கப்படும், வெண்கலங் கல்லுகளால் உருக்கியெடுக்கப்படும்.

௩ காரிருளிலும் மரணநிழலிலுமிருக்கிற கல்லுகளைச் சடையாதவர் இடங்களிலெல்லாம் ஆராய்ந்துதேட இருளுக்கு அங்கே முடிவுண்டாக்கப்படும்.

௪ பாட்டாளியண்டையில் அவன் தாண்டமாட்டாத நிலையாத ஆறு எழும்பினாலும் அது வற்றப்பண்ண மனுஷரால் எடுத்துவிடப்பட்டுப்போகும்.

௫ பூமியோவென்றால் அகாரமவிளையும், அதின் கீழிடங்களிலிருக்கிறது அக்கினியினாலாகுமாப்போலே மாறப்பட்டுப்போகிறது.

௪ ஆதலால் மெய்யாகவே என் வார்த்தைகள் பொய்யற்றிருக்கும், உம்மோடே பேசுகிறவன் அறிவில் உத்தமன்.

௫ இதோ, பராபரன் மகத்துவமுள்ளவராயிருந்தாலும் ஒருவனையும் புறக்கணியார், மன உருக்கத்திலும் அவர் மகத்துவமுள்ளவர்.

௬ அவர் துன்மார்க்கனைப் பிழைக்கவொட்டாதிருக்கிறார், அவர் சிறுமையானவர்களின் நியாயத்தை விசாரிக்கிறார்.

௭ அவர் நீதிமான்களைவிட்டுத் தம்முடைய கண்களை விலக்காமல் அவர்களை ராசாக்களோடேகூட ஆசனத்தில் ஏறவும் உயர்ந்த ஸ்தலத்தில் என்றைக்கும் உட்கார்ந்திருக்கவும் பண்ணுகிறார்.

௮ சிலர் விலங்குகளாலே போடப்பட்டு உபத்திரவத்தின் கயிறுகளாற் கட்டப்பட்டிருந்தால்,

௯ அவர் இவர்களுடைய செய்கையையும் மீறிப்போன இவர்களுடைய மீறுதல்களையும் இவர்களுக்குத் தெரியப்பண்ணி,

௰ இவர்கள் செவியைக் கடிந்துகொள்ளுதலுக்குத் திறந்து அக்கிரமத்தைவிட்டுத் திரும்பச் சொல்லுவார்.

௧௧ இவர்கள் கேட்டு அவருக்கு ஊழியஞ்செய்தால் தங்கள் நாட்களை நன்மையாகவுந் தங்கள் வருஷங்களைச் செல்வபாக்கியமாகவும் போக்குவார்கள்.

௧௨ கேளார்களேயாகிற் பட்டயத்துக்கு இரையாகி அறிவு அடையாததினாலே மாண்டுபோவார்கள்.

௧௩ மாயமான இருதயத்தார் மூக்கை நெறிக்கிறார்கள், அவர் இவர்களைக் கட்டிவைத்தாலுங் கெஞ்சிக் கூப்பிடார்கள்.

௧௪ இவர்கள் சீவன் சொற்பவயதிலே மாளும், புணர்ச்சிக்காரருக்குள்ளே அவர்கள் பிராணன் முடியும்.

௧௫ ஆனாற் சிறுமைப்பட்டவர்களை அவர் அவர்கள் சிறுமைக்கு நீங்கலாக்கி அவர்கள் ஒடுக்கப்பட்டிருக்கையில் அவர்கள் செவியைத் திறக்கிறார்.

௧௬ அப்படி அவர் உம்மையும் நெருக்கத்தின்வாய்க்கு விலக்கி ஒடுக்கமில்லாத விசாலத்திலே வைப்பார், உம்முடைய பந்தியிற் பரிமாறப்படுவது நிறைந்த கொழுப்புள்ளதாயிருக்கும்.

௧௭ ஆனால் ஆகாதவன்மேல்வரும் நியாயத்தீர்ப்பை நிறைந்தவனாகப் பார்ப்பீர், நியாயமும் நீதியும் உம்மை ஆதரிக்கும்.

௧௮ உக்கிரமுண்டாகிறதினால் அவர் உம்மை ஒரு அடியிலே எடுத்துப்போடாதபடிக்குப் பாரும், அப்போது மிகுதியான மீட்கும்பொருளானது உம்மை அதற்கு நீக்கலாக்கமாட்டாது.

௧௯ அப்போது உம் இக்கட்டிலே உம்முடைய அலறுதலாகிலும் பலத்தினுடைய எந்தச் சத்துவங்களாகிலும் எண்ணப்படுமோ.

௨௰ சனசதளங்கள் தங்கள் இடத்தைவிட்டு வாரிக்கொள்ளப்பட்டுப்போகிற இராவை வாஞ்சிக்காதிரும்.

௨௧ அக்கிரமத்துக்குத் திரும்பாதபடிக்கு எச்சரிக்கையாயிரும், சிறுமையிலுடைந்திருக்கிறதினாலே அதைத் தெரிந்துகொண்டீர்.

௨௨ இதோ, பராபரன் தம்முடைய வல்லமையில் உயர்ந்திருக்கிறார், அவரைப்போலொத்த சாஸ்திரியார்.

௨௩ அவருடைய வழியின் நியாயத்தை விசாரிக்கத்தக்கவன் யார், அவர் அநியாயஞ்செய்தீரென்று சொல்லத்தக்கவன் யார்.

௨௪ மனுஷர் நோக்கிப்பார்க்கிற அவருடைய கிரியையை நீர் மகிமைப்படுத்த நினைவுகூரும்.

௨௫ எல்லா மனுஷரும் அதைக் காண்கிறார்கள், தூரத்திலிருந்து அதும் மனுஷருக்குத் தென்படுகிறது.

### சிஷ்டியிலே விளங்குந் தேவ மகத்துவத்தைக் காண்பிக்குதல்.

௨௬ இதோ, பராபரன் நாம் அறியமுடியாத மகத்துவமுள்ளவர், அவருடைய வருஷங்களின் தொகையும் ஆராயமுடியாதது.

௨௭ அதேதென்றால் அவர் தண்ணீரின் துளிகளை ஆவியைப்போலே ஏறப்பண்ணுகிறதினால் அதுகள் அவருடைய மூடுபனி மேகத்திலிருந்து மழையாகச் சொரிகிறது.

௨௮ அதை மேகங்கள் பெய்யப்பண்ணி திரளான மனுஷர்மேல் தூறுகிறது.

௨௯ மேகங்களின் விரிவுகளையும் அவருடைய கூடாரத்தின் குமுறல்களையும் உணர்ந்துமுடியுமோ.

௩௰ இதோ, அதுகளின்மேல் தம்முடைய மின்னலின் வெளிச்சத்தை விரித்துச் சமுத்திரத்தின் ஆழங்களை மூடுகிறார்.

௩௧ அதேதென்றால் அதுகளாற் சனங்களை நியாயம்விசாரிக்கிறவருமாயிருக்கிறார், ஆகாரத்தைப் பரிபூரணமாய்க் கட்டளையிடுகிறவருமாயிருக்கிறார்.

௩௨ அவர் மின்னலின் வெளிச்சத்தைக் கைகளினால் மூடி நடுவேயானதொன்று அதைமறிக்கக் கற்பனைகொடுக்கிறார்.

ஞான

# சங்கீதங்களுடைய புஸ்தகம்.

## க. சங்கீதம்.

(தேவபத்தியுள்ளவர்களின் பாக்கியமும் ஆகாதவர்களின் நிர்ப்பாக்கியமும்.)

ஆகாதவர்களுடைய ஆலோசனையில் நடவாமலும் பாவிகளுடைய வழியில் நில்லாமலும் பரியாசக்காரர் உட்கார்ந்திருக்கிற இடத்தில் உட்காராமலும், உசு, சங்கீதம். ச. உ. கொரிந்தர். சு, ௰ச முதல் எபேசி. ரு, ௰க. க. கொரி ௰ரு, ௩௩.

உ கர்த்தருடைய வேதத்தின் மேற் பிரியமாயிருந்து அவருடைய வேதத்தில் இரவும் பகலும் தியானிப்பாயிருக்கிற மனுஷன் பாக்கியவான். ௱௰கூ, சங்கீதம் க முதல் ரு. மோ. சு, சு-கூ. சொலோ. ங, ௰சு.

ங அவன் நீர்வாய்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டுத் தன் காலத்திலே தன் கனியைத் தந்து இலையுதிராதிருக்கிற மரத்தைப் போலிருப்பான், அவன் செய்வதெல்லாம் வாய்க்கும். கூஉ, சங்கீதம். ௰௩ முதல் எரேமியா. ௰எ, அ. யோசுவா. க, அ.

ச ஆகாதவர்கள் அப்படியிராமற் காற்று பறக்கடிக்கும் பதரைப் போலிருக்கிறார்கள். மத்தேயு. ங, ௰உ.

ரு ஆகையால் ஆகாதவர்கள் நியாயத்தீர்ப்பிலும் பாவிகள் நீதிமான்களின் சபையிலும் நிற்பதில்லை.

சு ஏனென்றாற் கர்த்தர் நீதிமான்களின் வழியையறிந்திருக்கிறார், ஆகாதவர்களின் வழியோ அழியும்.

## உ. சங்கீதம்.

(மேசியாவின் இராச்சியத்தையும் அவருடைய சத்துருக்களையுங் காண்பிக்கும் தீர்க்கதரிசனம்.)

சாதிகள் கொந்தளித்து ஜனசதளங்கள் வீருதாக்காரியத்தைச் சிந்திப்பானேன். அப்போஸ்தலர். ச, உரு—உஅ.

உ கர்த்தருக்கு விரோதமாகவும் அவர் அபிஷேகம்பண்ணினவருக்கு விரோதமாகவும் பூமியின் இராசாக்கள் எழும்பிக்கொண்டு தலைவர் ஏகமாய் ஆலோசனைபண்ணி,

ங அவர்கள் கட்டுகளையறுத்து அவர்கள் கயிறுகளை நம்மைவிட்டெறிந்து போடுவோமென்கிறார்கள். எரேமியா. உ, உ௰.

ச பரமண்டலங்களில் வாசமாயிருக்கிறவர் நகைப்பார், ஆண்டவர் அவர்களைப் பரியாசம்பண்ணுவார். ருங, சங்கீதம். கூ. வாக்கியம். க, உசு. உஎ.

ரு அப்போது தம்முடைய கோபத்திலே யவர்களோடே பேசித் தம்முடைய உக்கிரத்திலே யவர்களைக் கலங்கப்பண்ணுவார்.

சு நாம் நம்முடைய பரிசுத்த பருவதமாகிய சீயோன்மீதில் நம்முடைய இராசாவை அபிஷேகம்பண்ணினோம்

எ தீர்மானத்தின் விவரஞ்சொல்லுவேன், கர்த்தர் என்னுடனே, நீர் நம்முடைய குமாரன், இன்று நாம் உம்மைச்ஜெனிப்பித்தோமென்றும், அப்போஸ்தலர். ௰௩, ௩௩. எபிரேயர். க, ரு. ரு, ரு.

அ நம்மைக் கேளும், அப்போது சாதிகளையுமக்குச் சுதந்திரமாகவும் பூமியின் எல்லைகளையுமக்குச் சொந்தமாகவுங் கொடுப்போம். உஉ, சங்கீதம். உஅ. உகூ. எஉ, சங்கீதம். அ. ௰க.

கூ இருப்புக்கோலால் அவர்களை நொறுக்கிக் குயக்கலத்தைப்போல அவர்களைச் சிதறடிப்பீரென்றுஞ் சொன்னார். அறிவிப்பு. உ, உசு. உஎ. ௰உ, ரு. ௰கூ, ௰ரு.

௰ இப்போதும் இராசாக்களே உணர்வடையுங்கள், பூமியின் நியாயாதிபதிகளே புத்திமான்களாய் நடந்துகொள்ளுங்கள்.

௰க பயத்துடனே கர்த்தருக்கூழியஞ்செய்யுங்கள், நடுக்கத்துடனே களிகூருங்கள். பிலிப்பியர். உ, ௰உ.

௰உ குமாரன் கோபமடையாமலும் நீங்கள் வழியில் அழியாமலுமிருக்கும்படிக்கவரை முத்திசெய்யுங்கள், ஏனென்றாற் கொஞ்சக்காலத்திலே அவருடைய கோபம் பற்றியெரியும், அவரையண்டிக்கொள்ளுகிறயாவரும் பாக்கியவான்கள். அறிவி. சு, ௰சு. ௰எ. ௩ச, சங்கீதம். கூ.

## ங. சங்கீதம்.

(சத்துருக்களாலே உபத்திரவப்படுகையிற் பராபரனை நம்புவதே மனத்தேறுதலென்பது.)

[தாவீது தன்குமாரன் அப்சலோமுக்குத் தப்பி ஓடிப்போகையிலே பாடின சங்கீதம்.]

கர்த்தாவே என் சத்துருக்கள் எத்தனையாய்ப் பெருகினார்கள், எனக்குவிரோத

மாயெழும்புகிறவர்கள் அநேகர். ௨௫, சங்கீதம். ௰௯.

௨ அவனுக்குப் பராபரனிடத்திலே இரட்சிப்பில்லையென்று என் ஆத்துமாவைக்குறித்துச் சொல்லுகிறவர்கள் அநேகராயிருக்கிறார்கள். சேலா. ௨. சாமு. ௰௬, ௭. ௮.

௩ ஆனாற் கர்த்தாவே, தேவரீரெனக்குக் கேடயமும் என் மகிமையும் என் தலையையுயர்த்துகிறவருமாயிருக்கிறீர். ௭, சங்கீதம். ௰௧. ௧. மோசே. ௰௫, ௧.

௪ என் சத்தத்தினாலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், அப்போது தமது பரிசுத்த பருவதத்திலிருந்து என் விண்ணப்பத்தைக் கேட்டார். சேலா.

௫ நான் படுத்துக்கொண்டு நித்திரைபண்ணினேன் விழித்துக்கொண்டேன், ஏனெனிற் கர்த்தர் என்னைத் தாங்குகிறார். ௪, சங்கீதம். ௯. வாக்கியம். ௩, ௨௪.

௬ சுற்றிலும் எனக்கு விரோதமாகப் பாளயமிறங்குகிற பதினாயிரம் பேருக்குப் பயப்படேன். ௨௭, சங்கீ. ௩.

௭ கர்த்தாவே எழுந்திரும், என் பராபரனே என்னை இரட்சியும், ஏனென்றால் நீரென் பகைஞரெல்லாரையுந் தாடையிலே அடித்து அகாதவர்களுடைய பல்லுகளைத் தகர்த்துப்போடுகிறீர்.

௮ இரட்சிப்பு கர்த்தருடையதே, தேவரீருடைய ஆசீர்வாதம் உம்முடைய சனத்தின்மேலிருப்பதாக. சேலா. எரேமி. ௩, ௨௩. அபி. ௭, ௰. ௰௯, அபி. ௧.

## ௪. சங்கீதம்.

(தாவீது தன் பகைஞருக்குப் புத்திசொல்லிப் பராபரன் சலிகையால் மனந்தேறினது.)

[கின்னோரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

என் நீதியின் பராபரனே நான் கூப்பிடுகையில் என்னைக் கேளும், நெருக்கத்திலிருக்கிற எனக்கு விசாலமுண்டாக்கினீர், என் பேரில் இரங்கி என் விண்ணப்பத்தைக் கேளும். ௫, சங்கீ. ௨. ௨௭, சங்கீ. ௭.

௨ மனுபுத்திரரே, எந்தமட்டும் என் கீர்த்தியை அவமானமாக்கி அவத்தத்தைச் சிநேகித்துப் பொய்யைத் தேடுவீர்கள். சேலா.

௩ கர்த்தர் தம்முடைய சன்மார்க்கனை அதிசயமாய் நடத்துகிறாரென்றறியுங்கள், நான் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில் அவர் கேட்பார்.

௪ நீங்கள் சினம் அடைந்தாற் பாவஞ்செய்யாதேயுங்கள், உங்கள் படுக்கையில் உங்களிருதயத்திலே பேசி அமர்ந்திருங்கள். சேலா. ஏபேசியர். ௪, ௨௬.

௫ நீதியின் பலிகளைச் செலுத்திக் கர்த்தரின்மேல் நம்பிக்கையாயிருங்கள். ௫௧, சங்கீதம். ௰௯ [illegible].

௬ நமக்கு நன்மை காண்பிப்பவன் யாரென்று சொல்லுகிறவர்கள் அநேகர், உம்முடைய முகத்தின் வெளிச்சத்தை எங்கள்மேல் ஏறெடுங்கர்த்தாவே. ௬௩, சங்கீதம். ௰௭. ௪. மோசே. ௬, ௨௬.

௭ அவர்களுக்குத் தானியமுந் திராட்சப்பழ இரசமும் பெருகியிருக்கிற காலத்தினுடைய சந்தோஷத்திலும் அதிக சந்தோஷத்தை என் இருதயத்திலே தந்தீர்.

௮ சமாதானத்திலே சயனித்துக்கொண்டு நித்திரைபண்ணியுமிருப்பேன், ஏனெனிற் கர்த்தாவே, தேவரீர் ஒருவரே என்னைச் சுகமாய்த் தங்கப்பண்ணுகிறீர். ௩, சங். ௬.

## ௫. சங்கீதம்.

(பராபரன் பொல்லாதவர்களை அருவருத்துத் தம்முடைய விசுவாசிகளைக் காப்பாற்றுகிறது.)

[நெகிலோத்தில் வாசிக்கத் தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே என் வார்த்தைகளுக்குச் செவிகொடும், என் தியானத்தையுணர்ந்துகொள்ளும். ௪, சங்கீ. ௨. ௰௭, சங்கீ. ௧.

௨ என் இராசாவே என் பராபரனே என் கூப்பிடுதலின் சத்தத்தைக் கவனியும், ஏனெனில் உம்மை நோக்கி விண்ணப்பஞ்செய்வேன்.

௩ கர்த்தாவே, காலமே என் சத்தத்தைக் கேட்பீராக, காலமே உமக்கு நேராகத் தாயத்தமாகிக் காத்திருப்பேன். ௮௮, சங்கீதம். ௰௪.

௪ ஏனென்றால் தேவரீர் ஆகாமியத்தை விரும்புகிற தேவனல்ல, பொல்லாதவன் உம்மிடத்திலே தரிகொள்ளமாட்டான். ௯௪, சங்கீதம். ௰௭.

௫ வீம்புக்காரர் உம்முடைய கண்களுக்கு முன்பாக நிலைநிற்பதில்லை, எல்லா அக்கிரமக்காரரையும் பகைக்கிறீர். மத். ௭, ௨௩.

௬ பொய்பேசுகிறவர்களை அழிப்பீர், இரத்தப்பிரியனையுஞ் சூதுள்ள மனுஷனையுங் கர்த்தர் அருவருக்கிறார்.

௭ நானோ உம்முடைய மிகுந்த கிருபையினாலே உமது வீட்டுக்குட் பிரவேசித்து உம்முடைய பரிசுத்த தேவாலய சந்நிதியில் உமக்குப் பயந்து பணிந்துகொள்ளுவேன்.

௮ கர்த்தாவே, என் சத்துருக்களினிமித்தம் என்னை உம்முடைய நீதியிலே நடத்தி எனக்கு முன்பாக உம்முடைய வழியைச் செம்மைப்படுத்தும். ௨௭, சங். ௰௧.

௯ ஏனெனில் அவர்கள் வாயிலே நிச்சயமில்லை அவர்கள் உள்ளங் கேடுபாடுகள், அவர்கள்

தொணடைதிறககபபடட பிரேதககுழியாயிருககிறது, தஙகள நாவிஞல இசசககம பேசுகிருர்கள. ருேமர். ௩. ௰௩.

௰ பராபரனே, அவர்களதஙகள ஆலோசனைகளைவிடடுவிழுமபடிககு அவர்களைககுறறவாளிகளாககும, அவர்கள துரோககுகளுடையதிரட்சியினிமிததம அவர்களைத தளளிவிடும, ஏனெனருல தேவரீருககுவிரோதமாயககலகமபணணிஞர்கள.

௰௧ ஆஞல உமமை அணடிககொளளுறவர்களெலலாருஞ சநதோஷிதது எனறைககுமகெமபீரிபபார்களாக ஏனெனில அவர்களைககாபபாறறுகிறீர், உமமுடையநாமததைசசிநேகிககிறவர்கள உமமிலேகளிகூருவார்கள. ௯௧, சஙகீதம. ௪.

௰௨ ஏனெனருற்கர்ததாவே, தேவரீர் நீதிமானையாசீர்வதிதது அவனைத தயவென்றகேடயததிஞலே சூழநதுகொளளுவீர்.

## ௬. சஙகீதம்.

(தாவீதுமகா பெலவீனததிஞந துயரததிஞுசெமபணணிப பராபரன தன விணணபபததைககேடடாரென்று நிசசயமடைநதது.)

[எணணரமபுககிணணரஙகளிலவாசிககற இராகததலைவனுககு கொபபுவிககபபடட தாவீதினசங்கீதம.]

௧ கர்த்தாவே, உமமுடைய கோபததிலே எனனைககடிநதுகொளளாதேயும, உமமுடைய உககிரததிலஎனனைததெணடியாதேயும. ௩௮, சஙகீ ௧, எரே. ௰, ௨௪.

௨ எனமேலிரஙகுஙகர்ததாவே, ஏனெனில நானபெலனறறிருககிறேன, எனனைககுணமாககுஙகர்ததாவே, ஏனெனில என எலுமபுகளகலஙகியிருககிறது.

௩ என் ஆததுமாமிகவுஙகலஙகியிருககிறது, கர்த்தாவே நீர் எததமடடும இரஙகாதிருபபீர். ௭௯, சஙகீதம. ௫.

௪ திருமபுஙகர்ததாவே, என ஆததுமாவைவிடுவியும, உமமுடையகிருபையினிமிததம எனனையிரட்சியும.

௫ ஏனெனருல மரணததில உமமை நினைவுகூருவதிலலை, பாதாளததில உமமைத துதிபபவனுர்.

௬ எனபெருமூசசுகளால இளைததேன, இராமுழுதும எனமெததையை மிகவும ஈரிககபபணணி எனகணணீரால எனகடடிலைநனைககிறேன.

௭ என கணகுழி சலிபபிஞல விழுநதுபோயிறறு, எனசததுருககள அனைவர்நிமிததந தளர்நதுபோயிறறு. ௩௧, சஙகீ. ௰.

௮ அககிரமககாரராகிய நீஙகளெலலாரும எனனைவிடடுஅகனறுபோஙகள, ஏனெனறாற் கர்ததர் என அழுகையினசத்தத்தைககேடடார்.

௯ கர்ததர்என விணணபபததைககேடடார், கர்ததர் எனசெபததையேறறுககொளளுகிருர். ௰. சஙகீ. ௰௭.

௰ என பகைஞரெலலாரும வெட்கிமிகவுங கலஙகிபபோவார்கள, அவர்கள பினனுககுததிருமபி அசுபபிலே வெட்கபபடுவார்கள. ௩௫, சஙகீ. ௪. ௪௰, ௰௫. ௰௯.

## எ. சஙகீதம்.

(தாவீது தனகுறறமிலலாமையைச சொலலி தனனை அவதிபபடுததுகிறவர்களின அழிவைமுனனறிவிததது.)

[எமினியின குமாரஞகிய கூஷியிஞுடையவார்ததைகள நிமிததந தாவீது கர்ததரைநோககிபபாடின துயரகீதம.]

௨. சாமுவே. ௰௬, ௭. ௮. ௰௧.

௧ என பராபரஞகிய கர்ததாவே உமமைநமபியிருககிறேன, எனனைபபினதொடருகிறவர்களெலலாருககுந தேவரீரெனனைவிலககியிரட்சிததது,

௨ சததுருசிஙகமபோல என ஆததுமாவைபபிடிததுபபோய விடுவிககிறவனிலலாமையாற் பீறதபடிககெனனைத தபபபணணும. ௰, சஙகீ. ௯.

௩ என பராபரஞகிய கர்ததாவே, நானிதைசசெயததும என கைகளில நியாயககேடிருககிறதும. யோபு. ௩௪, ௭ ழு

௪ எனககுமுகாநதிரமிலலாமல இடுககண்செயதவனைத தபபுவிபபணணின நான எனனுேடே சமாதானமாயிருநதவனுககுத தீமைசெயததுமுணடாஞல,

௫ பகைஞன என ஆததுமாவைத தொடர்நதுபிடிதது என பிராணனைத தரையிலேதளளிமிதிதது என கனனததைத தூளிலேதாழநதிபபோடககடவான. சேலா.

௬ கர்ததாவே, நீர் உமமுடையகோபததிலெழுநதிருநது எனககு இடுககணசெயகிறவர்களுடையமூர்ககஙகளினிமிததம உயர்நதுஎனககாகவிழிததுககொளளும, ஏனெனில நியாயததீர்பபைக கற்பிததீரே.

௭ அபபோது சனஙகளுடைய கூடடம உமமைசசூழும, அவர்களுககாக உயரததுககுததிருமபும. ௯௨, சஙகீ. ௮.

௮ கர்ததர் சனஙகளுககு நியாயஞசெயவார், கர்ததாவே என நீதியினபடியும எனனிலுளளஉணமையினபடியுமஎனககு நியாயஞசெயயும

௯ ஆகாதவர்களின பொலலாஙகையொழியபபணணுமேன, நீதிமானை நிலைநிறுததுவீராக, ஏனெனில நீதியுளளபராபரஞகிய தேவரீர் இருதயஙகளையும உளளிநதிரியஙகளையுஞசோதித்தறிகிறவர். எரேமி. ௰௧, ௨௰. ௰௭, அதி. ௰. அறி. ௨, ௨.

௰ எனகேடையரு செமமை இருசயத தாரைரட்சிககிற பராபரனிடததிலிருக கிறது.

௰௧ பராபரன நீதியுளள நியாயாதிபதியு மநாளதோறுஞ் சினததிருககிற தேவனுமா னவர் கூ, சஙகீ ரு.

௰௨ மனநதிருமபாதிருநதால தமமுடை யபட்டையததைக கருககாககுவார், அவர் தமமுடையவிலலைநாணேறறி அதைமுஸ்தி பபாகக்,

௰௩ அவனுககுச்சாவுககினமான ஆயுதங களை ஆயததமபணணுகிருா், தமமுடைய அமபுகளை அககினி அமபுகளாககுவார்.

௰௪ இதோ அககிரமததைபபெறக்கெர்பப வேதனையாயிருககிறன, தீவினையைக கெர்பபநதரிததான, ஆனால அவத்தத்தை பபெறுவான. யோபு. ௰ரு, ௩ரு.

௰ரு குழியைவெட்டி அதைப பளளமாககி ஞன, தானபறிததகுழியிலேவிழுவான.

கூ, சஙகீ. ௰௯. வாககி. உ௬, உஎ.

௰௬ அவனதீவினை அவனசிரசினமேலே திருமபி அவனகொடுமை அவன உசசநதலையினமேலிறஙகும. வாககியம. ரு, உஉ.

௰எ நான கர்ததரை அவருடைய நீதியி னபடி துதிதது உனனதமான கர்ததருடை யநாமததைககீர்ததனமபணணுவேன.

## அ. சஙகீதம்.

(மனுஷகுமாரனாகிய மேசியாமிகவுந தாழ ததபபட்டபிறகு எலலாததுககும மே லாக உயர்ததபபட்டதைக குறிததுச சொனனதீர்ககதரிசனம.)

[கீத்தியிலவாசிகக இராகததலைவனுக்கொ ப்புவிககபபட்டதாவீதினசஙகீதம.]

எஙகள ஆணடவராகிய கர்ததாவே, தேவரீருடையநாமம் பூமியெஙகும எதத னை பிரபலியமாயிருககிறது, உமமுடைய மகததுவததை வானஙகளுககு மேலவைதத மாககினீர்.

உ பகைஞனையும பழிகாரனையும ஒயப பணணததேவரீர் உமமுடைய சததுருகக ளினிமிததம குழநதைகள பாலகர் வாயி னாலேபெலனுணடுபணணினீர். மத. உக, ௰௬. உகூ, சஙகீதம. க.

௩ நான உமதவிரலகளின கிரியையாகி ய உமமுடையவானஙகளையும நீர் ஆயதத பபடுததின சநதிரனையும நட்சததிரங்க ளையுமபார்ககுமபோது, ௱உ, சஎ. உ௬.

௪ மனுஷனை, நீர் அவனை நினைககிறது ககும, மனுஷனுடையகுமாரனை நீர் அவ னைநோககிப பார்ககிறதுககும எமமாத திரமெனகிறேன. எபிரேயர். உ, ௬.

௱சச, சஙகீதம. ௩. யோபு. எ, ௰எ.

ரு நீர் அவனைககொஞசததியாலந தேவதூதரிலுஞ சிறியவராககினீர், ஆனாலம கிமையினாலுங கனததினாலும அவனைமுடிசூட்டினீர். எபிரேயர். உ, எ. கூ.

௬ நீர் அவருககு உமமுடைய கைகளுடையகிரியைகளினமேல ஆளுகைதநதீசரு வததையும, க. கொரிநதர். ௰ரு, உஎ.

எ ஆடு மாடு முதலானவைகளெலலாத தையும அததோடேகூடவெளியின மிருகஙகளையும, க. மோ. க, உஅ. கூ, உ.

அ ஆகாசததுபபட்சிகளையுஞசமுததிரத்துமச்சஙகளையுஙகடலகளினபாதைகளில நடமாடுகிறதையும அவர்பாதஙகளுககுக கீழ்ப்படுததினீர்.

௯ எஙகள ஆணடவராகிய கர்த்தாவே, தேவரீருடைய நாமம்பூமியெஙகும எத்தனைபிரபலியமாயிருககிறது.

## ௯. சஙகீதம்.

(சததுருககளை ஆககினையிட்ட பராபரனைத்துதித்தது.)

[முத்லாபேனியிலேவாசிகக இராகததலைவனுககொபபுவிககபபட்டதாவீதினசஙகீதம.]

என முழு இருதயததோடுங கர்ததரைத துதிபபேன, உமமுடைய அதிசயஙகளை யெலலாமவிவரிபபேன.

உ உமககுளமகிழநதுகளிகூருவேன, உனனதமானவரே, உமமுடையநாமததைக கீர்ததனமபணணுவேன. ௯௩, சஙகீதம.

அ. கூஉ, சங்கீதம். உ.

௩ ஏனெனறால என சததுருககள பினனாகததிருமபி உமமுடையமுகததுககு முனபாக நிலலாதபடிககு இடறுணடழிந்தார்கள. உ௰, சஙகீதம. கூ.

௪ அதேதெனில நீரென நியாயததையு மெனவழககையுநதீர்ததுநீதியுளளநியாயாதிபதியாய இராசாசனததினமேல உடகார்நதீர். எ, சஙகீதம. ௰உ.

ரு சாதிகளையுதமபி ஆகாதவனையழிதது அவர்களநாமததை எனறெனறைககுமுள ள சதாகாலஙகளுககுங குலைததுபபோட்டீர்.

௬ சததுருககளின பாழககடிபபுகள எனறெனறைககுமமுடிவடைநதது. ஏனெனறால அவர்களபட்டணஙகளை நிர்மூலமபணணினீர், அவர்களபேர் அவர்களோடுங கூட அழிநதது.

எ கர்ததரோவெனில எனறெனறைககு மிருபபார், தமமுடைய ஆசனததை நியாயததீர்பபுககாயததமபணணினார்.

௯௬, சஙகீதம. ௰௩. கூஅ, கூ.

அ அவர் பூச்சககரததை நீதியாயதீபபாயநதீர்ததுச்சனசதஙகளுககுச் செமமை

ப்ப நீதிசெய்வார், ௯௯, சங்கீதம். ௰. ௯௮, ௯.

௯ சிறுமைப்பட்டவனுக்குக் கர்த்தர் உயர்ந்த அடைக்கலமாயிருப்பார், நெருக்கப்படுகிற காலங்களில் அவர் உயர்ந்த அடைக்கலந்தானே. ௯௭, சங்கீதம். ௯௯.

௰ ஆகையால் உமது நாமத்தை அறிந்தவர்கள் உம்மை நம்பியிருப்பார்கள், ஏனெனில் கர்த்தாவே. உம்மைத் தேடுகிறவர்களை நீர் கைவிடுகிறதில்லை, ௯௪, ௬௩. ௫. ௯.

௰௧ சீயோனில் வாசமான கர்த்தரைக் கீர்த்தனம்பண்ணி அவர் செய்கைகளைச் சனங்களுக்குள்ளே அறிவியுங்கள்.

௰௨ ஏனென்றால் சிந்தப்பட்ட இரத்தப்பழியைப் பற்றிக் கேட்டு அவைகளை நினைக்கிறார், சிறுமையானவர்களுடைய கூப்பிடுதலை மறவார். ௫. மோசே. ௩௨, ௪௩.

௰௩ என்னை மரணவாசல்களிலிருந்து உயர்த்துகிற கர்த்தாவே, நான் உம்முடைய துதிகளையெல்லாம் சீயோன்குமாரத்தியின் வாசல்களில் விவரித்து உம்முடைய இரட்சிப்பினாலே களிகூரும்படிக்கு,

௰௪ தேவரீர் என்மேல் இரங்கி என்னைப் பகைக்கிறவர்களால் எனக்கு வருஞ் சிறுமையைப் பாரும்.

௰௫ சாதிகள் தாங்கள் வெட்டின பள்ளத்திலே விழுந்தார்கள், அவர்கள் மறைவாய் வைத்த வலையிலே அவர்கள் கால் அகப்பட்டுக்கொண்டது. ௭, சங்கீதம். ௰௬.

௰௬ கர்த்தர் தாம் செய்த நியாயத்தினாலே அறியப்பட்டார், ஆகாதவன் தன் கைகளுடைய செய்கையிலே சிக்கப்பட்டான். இகியோன். சேலா.

௰௭ ஆகாதவர்களும் பராபரனை மறக்கிற எல்லாச் சாதிகளும் நரகத்துக்குத் திரும்புவார்கள்.

௰௮ ஏனெனில் எளியவன் என்றைக்கும் மறக்கப்படுவதில்லை, சிறுமைப்பட்டவர்களுடைய காத்துக்கொள்ளுதல் நித்தியகாலமாய்க் கெட்டுப்போயிருப்பதுமில்லை.

௰௯ மனுஷன் பெலன்கொள்ளாதபடிக்கு எழுந்திரும், கர்த்தாவே சாதிகள் உம்முடைய முகத்துக்கு முன்பாக நியாயந்தீர்க்கப்படக்கடவார்கள்.

௨௰ சாதிகள் தாங்கள் மனுஷரென்றறியும்படிக்கு அவைகளுக்குப் பயமுண்டாக்கும் கர்த்தாவே,

## ௰. சங்கீதம்.

(பொல்லாதவர்கள் பண்ணுகிற துன்பத்தினிமித்தம் பராபரனுடைய சகாயத்தைச் செய்கிறவேண்டுதல்.)

கர்த்தாவே ஏன் தூரத்திலே நிற்கிறீர், நெருக்கப்படுகிற காலங்களில் ஏன் உம்மை மறைக்கிறீர்.

௨ ஆகாதவன் தன் பெருமையினாலே சிறுமையானவனைக் கொடூரமாய்த் துன்பப்படுத்துகிறான், ஆனால் அவர்கள் சதி நினைத்த தீவினைகளிலே பிடிக்கப்படக்கடவார்கள். ௫௭, சங்கீதம். ௭.

௩ ஏனெனில் ஆகாதவன் தன் ஆத்துமாவின் ஆசையைத் தொட்டுப் பெருமைபாராட்டுகிறான், பொருளாசைக்காரன் தன்னை ஆசீர்வதித்துக் கர்த்தரை அசட்டைபண்ணுகிறான். ௫. மோசே. ௨௯, ௰௯. ௨௰.

௪ ஆகாதவன் தன் முகநெறிப்பினாலே ஒன்றுக்கும் விசாரப்படாதே போகிறான், அவன் நினைவுகளெல்லாம் பராபரனில்லையென்பதே. ௰௪, சங்கீதம். ௧.

௫ அவன் வழிகள் எப்போதும் வாதையுண்டாக்குகிறதுகள், உம்முடைய நியாயத்தீர்ப்புகளோ அவன் பார்வைக்கு மகா உயர்ந்ததூரமாயிருக்கிறது, தன் எதிராளிகளையெல்லாம் ஊதுகிறான்.

௬ தன்னிருதயத்திலே நான் அசைக்கப்படாமல் அந்தத் தலைமுறைதலைமுறையாகத் தீங்கடையாமலுமிருப்பேனென்கிறான்.

அறிவிப்பு. ௰௮, ௭.

௭ அவன் வாய் சர்ப்பனையினாலும் கபடங்களினாலும் தந்திரத்தினாலும் நிறைந்திருக்கிறது, அவன் நாவின்கீழ் தீவினையும் அக்கிரமமுமிருக்கிறது. ரோமர். ௩, ௰௪.

௮ அக்கிரமங்களிலே பதிவிருந்து ஒளிப்பிடங்களிலே குற்றமில்லாதவனைக் கொல்லுகிறான், அவன் கண்கள் ஏழையைச் சூட்டாய்ப் பார்க்கிறது.

௯ தன் கெபியிலிருக்கிற சிங்கத்தைப்போலே மறைவிலே பதிவிருக்கிறான், சிறுமையானவனைப் பிடிக்கப் பதிவிருந்து சிறுமையானவனைத் தன் வலைக்குள் இழுத்துப் பிடிக்கிறான் ௫௭, சங்கீதம். ௫௨.

௰ ஏழைகளின் கூட்டம் அலைசடிப்பட்டு ஒடுங்குண்டு அவன் வல்லமையில் விழுகிறது.

௰௧ பராபரன் அதை மறந்தாரென்றும் அவர் தம்முடைய முகத்தை மறைத்து அதையென்றைக்கும் பாராதிருப்பாரென்றும் தன்னிருதயத்திலே சொல்லுகிறான். ௯௪, சங்கீதம். ௯. ௭.

௰௨ பராபரனாகிய கர்த்தாவே எழுந்திருந்து உம்முடைய கையையுயர்த்தும், சிறுமையானவர்களை மறவாதேயும்.

௰௩ அவரதைக் கேட்டு விசாரிப்பதில்லையென்று ஆகாதவன் தன்னிருதயத்திலே சொல்லிப் பராபரனை யசட்டைபண்ணுவானேன்.

௰௪ அதைப் பார்த்திருக்கிறீரே, ஏனெனில் தேவரீர் அவர்களுக்குப் பதில்செய்ய அவ

ர்களின் தீவினையையும் அலட்டுண்டாக்குதலையும் நோக்கியிருக்கிறீர், அது உம்முடைய கையிலிருக்கிறது, உமக்கு ஏழைதன்னை ஒப்புவிக்கிறான், திக்கற்றவனுக்குத் தேவரீர் சகாயராயிருக்கிறீர். ௬௮, சங்கீ. ௫.

௰௫ நீர் ஆகாதவனுடைய புயத்தை முறித்துப் பொல்லாதவனுடைய ஆகாமியங்காணுமட்டும் அதைத் தேடி விசாரியும்.

௰௬ கர்த்தர் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களுக்கும் இராசாவாயிருக்கிறார், புறசாதியார் அவருடைய தேசத்திலிருந்து அழிந்துபோவார்கள். ௨௯, சங்கீதம். ௰. ௱௪௬, சங்கீதம். ௰. அபிவி-பு. ௰௧, ௰௫. ௬, சங்கீதம். ௰௮.

௰௭ கர்த்தாவே, சிறுமைப்பட்டவர்களுடைய வேண்டுதலைக் கேட்டிருக்கிறீர், அவர்கள் இருதயத்தைத் திடப்படுத்துவீர்.

௰௮ மண்ணான மனுஷன் அப்புறம் பலவந்தஞ் செய்யத் தொடாதபடிக்குத் தேவரீர் திக்கற்றவனுக்கும் ஒடுக்கப்பட்டவனுக்கும் நீதிசெய்ய உம்முடைய செவிகளைச் சாய்த்துக் கவனிப்பீர். ௫, மோ. ௰, ௰௮.

## ௰௧. சங்கீதம்.

(தாவீது தன் சத்துருக்களின் சங்கந்தங்களைக் கேட்டுப் பராபரனை ஆதரவாகப் பிடித்தது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ கர்த்தரை நம்பியிருக்கிறேனே, பின்னை எப்படி நீங்கள் என் ஆத்துமாவுடனே பட்சியைப்போல உங்கள் மலையிலே பறந்தலையுங்களென்றீர்கள்.

௨ ஏனெனில் இதோ, ஆகாதவர்கள் வில்லை வளைத்துச் செம்மை இருதயத்தாரின்மேல் அந்தகாரத்தில் எய்யத்தங்கள் அம்புகளை நாணின்மேலே தொடுக்கிறார்கள். ௫௭, சங்கீதம். ௫.

௩ அஸ்திபாரங்கள் தானும் நிர்மூலமாகிறதே, நீதிமான் என்ன செய்வான்.

௪ கர்த்தர் தம்முடைய பரிசுத்த அரமனையிலிருக்கிறார், கர்த்தருடைய ஆசனம் பரமண்டலங்களிலிருக்கிறது, அவருடைய கண்கள் பார்க்கிறது, அவருடைய இமைகள் மனுப்புத்திரரைச் சோதித்தறிகிறது. ஏசாயா. ௯௯, ௧.

௫ கர்த்தர் நீதிமானைச் சோதித்தறிகிறார், ஆனால் ஆகாதவனையுங் கொடுமையைச் சிநேகிக்கிறவனையும் அவருடைய ஆத்துமா பகைக்கிறது. ௫, சங்கீதம். ௫.

௬ ஆகாதவர்கள்மேலே கண்ணிகளையும் அக்கினியையுங் கெந்தகத்தையும் வருஷிக்கப்பண்ணுவார், கடுங்கோடைக் கொந்தளிப்பு அவர்கள் குடிக்கும் பாத்திரத்தின் பங்கு. ௧. மோசே. ௰௯, ௨௪. எசே. ௩௮, ௨௨.

எ. ஏனெனிற் கர்த்தர் நீதிபரனும் நீதிகளைச் சிநேகிக்கிறவருமாயிருக்கிறார், அவருடைய முகஞ் செம்மையானவனை நோக்கியிருக்கிறது.

## ௰௨. சங்கீதம்.

(பராபரன் மெய்த்தவும் பெருகினதுன்மார்க்கருடைய திங்குக்குத் தம்முடைய சபையை விலக்கிக்காக்கத் தாவீது அவரை வேண்டிக்கொண்டது.)

[எண்ணரம்பு கின்னரங்களில் வாசிக்கிற ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

இரட்சியுங் கர்த்தாவே ஏனெனிற் சன்மார்க்கரற்றுப்போய் உண்மையுள்ளவர்கள் மனுப்புத்திரரிற் குறைந்திருக்கிறார்கள்.

௨ அவரவர் தங்களுக்கடுத்தவரோடே இச்சகக் உதடுகளால் அபத்தம் பேசி இருமனதாய்ப் பேசுகிறார்கள்.

௩ கர்த்தர் எல்லா இச்சகக் உதடுகளையும் பெருமைகளைப் பேசிக்கொண்டிருக்கிற நாவையும் அறுப்பாராக.

௪ அவர்கள் எங்கள் நாவுகளால் மேலவட்டமாயிருப்போம், எங்கள் உதடுகள் எங்களோடிருக்கிறதென்றும் ஆர் எங்களுக்காண்டவனென்றுஞ் சொல்லுகிறார்கள்.

௫ சிறுமைப்பட்டவர்களுடைய பாழாக்குதலினிமித்தமும் எளியவர்களுடைய பெருமூச்சினிமித்தமும், இப்போ, நாம் எழுந்திருந்து அவனூதிச் சீறுண்டவனைச் சுகப்பத்திரமாயிருக்கப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்,

௬ கர்த்தருடைய வார்த்தைகள் மண்குகையிலே ஏழுதரம் உருக்கிப் புடமிடப்பட்ட வெள்ளிக்கொப்பான சுத்தச்சொற்களாயிருக்கிறது. வாக்கியம், ௩௰, ௫.

எ கர்த்தாவே, தேவரீர் அவர்களைக் காப்பாற்றி அவனவனை என்றைக்கும் இந்தச் சந்ததிக்கு விலக்கிக்காப்பீராக.

௮ மனுப்புத்திரரிற் கண்டாளர் உயர்த்திருக்கும்போது ஆகாதவர்கள் எங்குஞ் சுற்றித்திரிகிறார்கள், வாக்கியம். ௨௮, ௰௨.

## ௰௩. சங்கீதம்.

(தேவ ஒத்தாசை தாமதப்படுகையில் தாவீது செய்த விண்ணப்பம்.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே எந்தமட்டும் என்னை மறந்து கொண்டேயிருப்பீர், எந்தமட்டும் உம்முடைய முகத்தை எனக்கு மறைப்பீர்,

௨ எந்தமட்டும் என் ஆத்துமாவிலே யோசனைகளையும் என் இருதயத்திலே சஞ்சலத்தையும் நித்தம் நித்தம் வைப்பேன், எந்தமட்டும் என் சத்துரு என்மேல் உயருவான்.

௩ என் பராபரனாகிய கர்த்தாவே, நீர் நோக்கிப்பார்த்து என் ஜெபத்தைக் கேட்டருளும்.

௪ அவனை மேற்கொண்டேனென்று என் பகைஞன் சொல்லாமலும் நான் தள்ளம்பாறிநிலே என் சத்துருக்கள் களிகூராமலிருப்பதற்காகத் தேவரீர் என் கண்களை நான் மரணநித்திரையடையாதபடிக்கு வெளிச்சமாக்கும். ௨௫. சங்கீதம். ௨

௫ நானோ உம்முடைய கிருபையின்பேரிலே நம்பியிருக்கிறேன், உம்முடைய இரட்சிப்பிலே என் இருதயங்களிகூரும், கர்த்தர் எனக்கு நன்மைசெய்தாரென்று அவரைப் பாடுவேன்.

## ௰௪. சங்கீதம்.

(மனுஷசாதிக்கெல்லாம் உண்டாயிருக்கிற பாவக்கேடும் இரட்சிப்பின்மேல் விசுவாசிகளுக்கிருக்கிற ஆசையும் இதிலே காண்பிக்கப்படுகிறது.

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ பராபரன் இல்லையென்று மடமதியகாரன் தன் இருதயத்திலே சொல்லுகிறான், தங்கள் கெடுத்துக் கிரியைகளில் தங்களை அருவருப்பாக்கினார்கள், நன்றுசெய்கிறவனில்லை. ௫௩, சங். ௨.

௨ பராபரனைத் தேடுகிற உணர்வுள்ளவனுண்டோவென்று பார்க்கக் கர்த்தர் பரமண்டலங்களிலிருந்து மனுப்புத்திரரைக் கண்ணோக்கினார்.

௩ எல்லாரும் வழிவிலகி ஏகமாய்க் கெட்டுப்போனார்கள், நன்றுசெய்கிறவனில்லை, அப்படிக்கொத்த ஒருவனாகிலுமில்லை. ரோமர். ௩, ௰—௰௨.

௪ அப்பத்தைப் பட்சிக்கிறதுபோலே நம்முடைய சனத்தைப் பட்சிக்கிற சகல அக்கிரமக்காரருக்கும் அறிவுதானுமில்லையோ கர்த்தரைத் தொழுதுகொள்ளார்கள். ஓசே. ௭, ௰௪.

௫ அங்கே மெத்தவும் அருக்களித்தார்கள், ஏனெனில் பராபரன் நீதிமானுடைய சந்ததியோடேயிருக்கிறார்.

௬ கர்த்தர் சிறுமையானவனுடைய நம்பிக்கையென்று, நீங்கள் அவனுடைய ஆலோசனையை வெட்கப்படுத்தினீர்கள்.

௭ ஆ, சீயோனிலிருந்து இஸ்ரவேலுடைய இரட்சிப்பு வந்தால் தாவிலை, கர்த்தர் தம்முடைய சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது யாக்கோபுக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சியுமுண்டாம். ௫௩, சங்கீதம். ௭.

## ௰௫. சங்கீதம்.

(கர்த்தருடைய சபையின் மெய் அவயவங்களுடைய நடக்கை.)

[தாவீதின் சங்கீதம்]

கர்த்தாவே ஆர் உம்முடைய கூடாரத்திலே தங்குவான், ஆர் உம்முடைய பரிசுத்த பருவதத்திலே வாசமாயிருப்பான்.

௫, சங்கீதம். ௫.

௨ உண்மையாய் நடந்து நீதியை நடப்பித்து மனதாரச் சத்தியத்தைப் பேசுகிறவன்தானே. ஏசாய. ௩௩, ௰௫.

௩ தன் நாவினாலே புறணிபேசாமலும் தனக்கடுத்தவனுக்குத் தீங்குசெய்யாமலும் தன்னைச்சேர்ந்தவன்மேல் நிந்தையான பேச்சையெடுக்காமலுமிருக்கிறான்.

௪ ஆகாதவன் அவன் பார்வைக்குத் தீட்டானவன், கர்த்தருக்குப் பயந்தவர்களையோ கனம்பண்ணுகிறான், தன் நஷ்டத்துக்கு ஆணையிட்டுந் தவறாதிருக்கிறான்.

௫ தன் பணத்தை வட்டிக்குக் கொடாமலும் குற்றமில்லாதவனுக்கு விரோதமாகப் பரிதானம் வாங்காமலுமிருக்கிறான், இப்படிச் செய்கிறவன் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை. ௨. மோசே. ௨௨, ௨௫. வாகமம். ௰௭, ௨௩.

## ௰௬. சங்கீதம்.

(மேசியா மரணபரியந்தந் தாழ்வதும், பிதாவின் வலதுபாரிசத்துக்குயர்வதும்.)

[தாவீதின் பொற்பண்திக்கீதம்.]

பராபரனே என்னைக் காப்பாற்றும், ஏனெனில் உம்மை நம்பியிருக்கிறேன்,

௨ கர்த்தருடனே, தேவரீர் ஆண்டவராயிருக்கிறீரென்றும்.

௩ பூமியிலுள்ள பரிசுத்தவான்களுக்காகவும் நான் என்னுடைய எல்லாப்பிரியத்தையும் வைத்திருக்கிற மகாத்துமாக்களுக்காகவும் என் நன்மை உம்மிடத்திலெனக்கில்லாதேபோமென்றுஞ்சொன்னேன்.

௪ வேறொருவரண்டைக்குத் தீவரிக்கிறவர்களின் வேதனைகள் பெருகும், அவர்கள் பட்சிக்கிற இரத்தமான ஊற்றுதல்களை நான் செலுத்தாமலும் அவர்கள் நாமங்களை என் உதடுகளில் ஏற்றுக்கொள்ளாமலுமிருப்பேன். ஏசாயா. ௧, ௰௧. ௰௫.

௫ கர்த்தர் என் பங்குவீதமும் என் பாத்திரத்தின் பங்குமானவர், தேவரீர் எனக்கு வரும் வீதத்தைக் காப்பாற்றுகிறீர்.

௬ நேர்த்தியான இடங்களிலே வீதம் எனக்குக் கிடைத்தது, ஆம் வடிவமான சுதந்தரம் எனக்குண்டானது.

௭ எனக்காலோசனையான கர்த்தரைத் துதிப்பேன், அதற்கு இராக்காலங்களிலும் என் உள்ளிந்திரியங்கள் என்னையேவும்.

௮ கர்த்தரை எப்போதும் எனக்குமுன்பாக வைத்துக்கொள்ளுகிறேன், அவர் என் வலதுபாரிசத்திலிருக்கிறபடியால் அசைக்கப்படாதிருப்பேன். அப். ௨, ௨௫. ௨௮.

௯ ஆகையினாலே என் இருதயம் பூரித்தது என் மகிமை களிகூர்ந்திருக்கிறது, என் மாம்சமும் சம்பத்திரமாய்த் தாபரித்திருக்கும்,

௰ ஏனென்றால் என் ஆத்துமாவைப் பாதாளத்திலே விடீர், உம்முடைய பரிசுத்தவானை அழிவைக் காணவொட்டீர். அப்போ. ௨, ௨௫. ௩௧. ௰௩, ௩௫ ௩௭.

௰௧ சீவனுடைய வழியையெனக்குத் தெரியப்படுத்துவீர், உம்முடைய சமுகத்திலே சந்தோஷங்களின் பரிபூரணமும் உம்முடைய வலதுபாரிசத்திலே செல்வபாக்கியங்களும் என்றைக்குமிருக்கும்.

## ௰௭. சங்கீதம்.

(தாவீது தான் குற்றமில்லாதவனென்று நிச்சயித்துப் பராபரன் தன்னைத் தன் சத்துருக்களின் துன்பத்துக்கு விலக்கிக்காக்க அவரை வேண்டிக்கொண்டது.)

[தாவீதின் விண்ணப்பம்.]

கர்த்தாவே நீர் நீதியைக் கேட்டருளி, என் கூப்பிடுதலைக் கவனித்துக் கபட உதடுகளால் வராத என் விண்ணப்பத்துக்குச் செவிகொடும். ௪, சங்கீதம். ௨. ௭, சங்கீதம். ௯.

௨ உம்முடைய சன்னிதியிலிருந்து என் நியாயம் வெளிப்படவும் உம்முடைய கண்கள் நிதானங்களைப் பார்க்கவுங்கடவது.

௩ நீர் என் இருதயத்தைச் சோதித்து அதை இராக்காலத்தில் விசாரித்து என்னைப் புடமிட்டுப் பார்த்து ஒன்றுங் கண்டுபிடியாதிருக்கிறீர், என் வாய் மீறத்தப்படிக்குத் தீர்மானம் பண்ணினேன்.

௪ மனுஷன் செய்காரியங்களுக்கோவென்றால் நான் என்னை யும்முடைய உதடுகளின் சொற்படி துஷ்டனுடைய பாதைகளுக்கு விலகலாயக்காக்கிறேன்.

௫ என் காலடிகள் பிசகாதபடிக்கு என் நடைகளையும்மது வழிகளுக்குள்ளே திடப்படுத்தும்.

௬ பராபரனே, நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன், ஏனென்றால் எனக்குச் செவிகொடுக்கிறீர், என்னண்டைக்கும் முடைய செவியைச் சாய்த்து என் வார்த்தையைக் கேட்டருளும்.

௭ உம்மை நம்புகிறவர்களை உம்முடைய வலதுகரத்துக்கு விரோதித்தெழும்புகிறவர்களின் கைக்குத் தப்புவித்து இரட்சிக்கிறவரே, உம்முடைய கிருபைகளை அதிசயமானதாக்கும்.

௮ என்னைக் கண்ணின் கருப்புவிழியைப் போலே காத்தருளும். சகரியா. ௨, ௮.

௯ என்னைப் பாழாக்கடிக்கிற துன்மார்க்கருக்கும் என்னைச் சூழ்ந்துகொள்ளுகிற என் பிராணப்பகைஞருக்கும் மறைவாக என்னை உம்முடைய செட்டைகளின் நிழலிலே காப்பாற்றும். ௩௬, சங்கீதம். ௮.

௰ நிணந்துன்னியிருக்கிறார்கள், தங்கள் வாயினாலே பெருமையாய்ப் பேசுகிறார்கள்.

௰௧ எங்கள் நடைகளில் இப்போது எங்களைவளைந்துகொண்டார்கள், அவர்கள் கண்கள் எங்களைத் தரையிலே விழப்பண்ணநோக்கிக்கொண்டிருக்கிறது.

௰௨ பீறுகிறதற்கு ஆசையான சிங்கத்துக்கும் மறைவுகளிலே பதிவிருக்கிற சிங்கக்குட்டிக்கும் ஒப்பாயிருக்கிறான். ௰, ௪௩. ௯.

௰௩ கர்த்தாவே நீர் எழுந்திருந்து அவனுக்கு முந்திக்கொண்டு அவனை மடங்கப்பண்ணும், கர்த்தாவே என்னாத்துமாவை உம்முடைய பட்டயத்தினாலே ஆகாதவன் கைக்கும் உம்முடைய கரத்தினாலே லோகமனுஷராகிய சனங்களின் கைக்குந் தப்புவியும்.

௰௪ அவர்கள் பங்கு இச்சீவனிலிருக்கிறது, அவர்கள் வயிற்றை உமது பொக்கிஷத்தினாலே நிரப்புகிறீர், அவர்கள் பிள்ளைகள் திருத்தியாகித் தங்கள் மீதியைத் தங்கள் குழந்தைகளுக்குப் பின்வைக்கிறார்கள். ஆக்கா. ௰௬, ௨௫.

௰௫ நானோவென்றால் நீதியில் உம்முடைய சமுகத்தைத் தரிசிப்பேன், நான் விழிக்கும்போது உமது சாயலால் திருத்தியாவேன். மத்தேயு. ௫, ௮.

## ௰௮. சங்கீதம்.

(கிறிஸ்துவின் இராச்சியத்துக்குக் கூட்டலேபிக்கும் அர்த்தமாய்த் தாவீது பாடின வீரகெம்பீர சங்கீதம்.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட கர்த்தருடைய தாசனாகிய தாவீதின் சங்கீதம்.]

அவன் இந்தப் பாட்டின் வார்த்தைகளைக் கர்த்தர் தன்னைத் தன்னுடைய எல்லாச் சத்துருக்களின் கைகளுக்கும் சவுலின் கைக்கும் நீங்கலாக்கி விடுவித்த நாளிலே கர்த்தரை நோக்கிச் சொல்லி, ௨. சாமு. ௨௨, ௨.

௨ உரைத்ததாவது, என் பெலனாகிய கர்த்தாவே உம்மையுட்கருத்தாய்ச் சிநேகிப்பேன்.

௩ கர்த்தர் என் கன்மலையும் என் கோட்டையும் என்னை விடுவிக்கிறவரும் என் பராபரனும் நான் நம்பியிருக்கிற என்னுடைய குன்றும் என் கேடயமும் என் இரட்சிப்பின் கொம்பும் என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார். ௬௧, சங்கீதம். ௪. எபிரேயர். ௨, ௰௩.

௪ ஸ்தோத்திரிக்கப்பட்ட கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், அப்போது என் சத்துருக்களுக்கு நீங்கலாகி இரட்சிக்கப்பட்டேன்.

௫ மரணத்தின் கட்டுகள் என்னைச் சுற்றிப் பிடித்தது, பேலியாளின் வாய்க்கால்கள் என்னை யருக்கப்பண்ணிற்று. ௫௫, ௪௩. ௫.

௬ நரகத்தின் கட்டுகள் என்னைச் சூழ்ந்துகொண்டு மரணத்தின் கண்ணிகள் எனக்கு நேரிட்டது.

௭ எனக்குண்டான நெருக்கத்திலே கர்த்தரைத் தொழுதுகொண்டு என் பராபரனை நோக்கிக் கூப்பிட்டேன், தமது அரமனையிலிருந்து என் சத்தத்தைக் கேட்டார், என் கூப்பிடுதல் அவருக்கு முன்பாக அவர் செவிகளிலேறிற்று. ஏசா. ௨௬, ௰௬.

௮ அப்பொழுது பூமியசைந்ததிர்ந்தது, பருவதங்களின் அஸ்திவாரங்கள் குலுங்கியசைந்தது, ஏனென்றால் எரிச்சலானார்.

௯ புகையவர் நாசியாலும் பட்சிக்கிற அக்கினியவர் வாயாலும் எழும்பி அவரால் நெருப்புநெருப்புத்தழலாயெரிந்தது. எபிரேயர். ௰௨, ௨௯.

௰ வானங்களைத் தாழ்த்தி இறங்கினார், அவர் பாதங்களின் கீழ் இருளிருந்தது.

௰௧ கேருபீனின்மேலேறிப் பறந்து காற்றின் செட்டைகளின் மீதிலே பறந்தார்.

௰௨ இருளைத் தம்முடைய ஒளிப்பிடமாக்கினார், அவரைச் சூழ்ந்த அவருடைய கூடாரந் தண்ணீர்களின் இருட்டும் ஆகாசத்து அடர்மேகங்களுமானது.

௰௩ அவர் முகத்தாவின் பிரகாசத்தினால் அவருடைய மேகங்கள் பறந்துவிலகிக் கல்மழையும் நெருப்புத்தழல்களும் விழுந்தது.

௰௪ கர்த்தர் வானங்களிலே குமுறி உன்னதமானவர் தமது சத்தத்தைக் காட்டினார், கல்மழையும் நெருப்புத்தழல்களும் விழுந்தது. ௨௯, சங்கீதம். ௩.

௰௫ தம்முடைய அம்புகளையனுப்பி அவர்களைச் சிதறடித்து மின்னல்களைத் திரளாக்கெய்து அவர்களைக் கலங்கப்பண்ணினார்.

௰௬ அப்பொழுது கர்த்தாவே, உம்முடைய பயமுறுத்தலினாலும் உம்முடைய நாசியின் சுவாசக்காற்றினாலும் தண்ணீர்களின் பள்ளங்கள் காணப்பட்டு பூதலத்தின் அஸ்திபாரங்கள் திறவுண்டது.

௰௭ உயரத்திலிருந்து கை நீட்டி என்னைப் பிடித்துத் திரள் தண்ணீர்களிலிருந்து என்னைத் தூக்கிவிட்டார்.

௰௮ என் வலுசத்துருவுக்கும் என்னைப் பகைக்கிறவர்களுக்கும் என்னை விலக்கி விடுவித்தார், ஏனென்றால் என்னிலும் பெலத்திருந்தார்கள்.

௰௯ என் ஆபத்தின் நாளில் எனக்கெதிரிட்டு நின்றார்கள், ஆனாற் கர்த்தரெனக்காதாரவாயிருந்து,

௨௰ என்னையெடுத்து விசாலத்திலேவைத்து என்னைத் தப்புவித்தார், ஏனென்றால் என்மேல் பிரியமாயிருந்தார்.

௨௧ கர்த்தரென் நீதிக்குத் தக்கதாக என்னைப் பதிலளித்தார், என் கைகளுடைய சுத்தத்துக்குத் தக்கதாக எனக்குச் சரிக்கட்டினார்.

௨௨ அதேதென்றாற் கர்த்தருடைய வழிகளைக் கைக்கொண்டுவந்தேன், நான் என் பராபரனைவிட்டு அகாமியஞ்செய்ததில்லை. அப்போஸ்தலர். ௨௩, ௧.

௨௩ ஏனென்றால் அவருடைய நியாயங்களையெல்லாம் எனக்கு முன்பாக நிறுத்தினேன், நான் அவருடைய பிரமாணங்களை என்னைவிட்டகற்றுமல்,

௨௪ அவர் முன்பாக மனவுண்மையாயிருந்து என் துற்குணத்துக்கென்னை விலக்கிக் காத்தேன்.

௨௫ ஆகையாற் கர்த்தர் என் நீதிக்குத் தக்கதாகவுந் தம்முடைய கண்களுக்கு முன்னிருக்கிற என் கைகளின் சுத்தத்துக்குத் தக்கதாகவும் எனக்குச் சரிக்கட்டினார்.

௨௬ சன்மார்க்கனுக்கு உம்மைச் சன்மார்க்கராகவும் மன உண்மையான மனுஷனுக்கு உம்மை மனவுண்மையாகவும்.

௨௭ சுத்தனுக்கு உம்மைச் சுத்தராகவும், மாறுபாடானவனுக்கு உம்மைக் கோணலாகவுங் காண்பிக்கிறீர்.

௨௮ ஏனென்றால் தேவரீர் சிறுமைப்பட்ட சனத்தை இரட்சித்து மேட்டிமையான கண்களைத் தாழ்த்துகிறீர்.

௨௯ அதேதெனில் தேவரீர் என் விளக்கை வெளிச்சமாக்குகிறீர், என் பராபரனாகிய கர்த்தர் என் இருளைப் பிரகாசிப்பிக்கிறார். ௯௭, சங்கீ. ௰௧. ௱௰௨, சங்கீதம். ௪.

௩௰ உம்மாலே ஒரு பரிவாரத்துக்குட் பாய்ந்துபோவேன், என் பராபரனாலே ஒரு மதிலைத் தாண்டுவேன்.

௩௧ பராபரனுடைய வழி உத்தமமானது, கர்த்தருடைய வசனம் புடமிடப்பட்டதாயிருக்கிறது, தம்மை நம்புகிற அனைவருக்கும் அவர் கேடயமாயிருக்கிறார்.

௩௨ ஏனென்றாற் கர்த்தரையல்லாமல் தேவனார், நம்முடைய பராபரனைத் தவிரக் கன்மலையும் ஆர்.

௩௩ என்னைப் பெலத்தால் அரைகட்டி என் வழியை உத்தமமாக்குகிறவர் பராபரன்.

௩௪ என் கால்களை மான்களுடைய கால்களைப் போலாக்கி என்னுடைய உயர்தலங்களில் என்னை நிறுத்துகிறார்.

௩௫ வெண்கலவில்லும் என் புயங்களால் வளைய என் கைகளை யுத்தத்துக்குப் பழக்குவிக்கிறார். ௱௪௪, சங்கீதம். ௧.

௩௬ உம்முடைய இரட்சிப்பின் கேடயத்தையும் எனக்குத் தந்தீர், உம்முடைய வலதுகரம் என்னைத் தாங்குகிறது, நானென்னைச் சிறுமைப்படுத்துகிறது என்னைப் பெரியவனாக்கும். ௭௧, சங்கீதம். ௨௰. ௨௧.

௩௭ என் கால்கள் தள்ளாடாதபடிக்கு நான் நடக்கிறவழியை அகலமாக்கினீர்.

௩௮ என் சத்துருக்களைப் பின்தொடர்ந்து அவர்களைப் பிடிப்பேன், அவர்களை நிர்மூலமாக்குந்தனையுந் திரும்பேன்.

௩௯ அவர்கள் எழுந்திருக்கமாட்டாமல் என் பாதங்களின் கீழ் விழுந்தவர்களாய அவர்களை வெட்டுவேன். ௨, சங்கீதம். ௯.

௪௰ ஏனெனில் யுத்தத்துக்கு நீர் என்னைப் பெலத்தால் இடைகட்டி என்மேல் எழும்பினவர்களை யென்கீழ் மடங்கப்பண்ணி,

௪௧ நான் என் பகைஞரைச் சங்கரிக்கும்படியாக என் சத்துருக்களின் பிடரியை யெனக்குக் கொப்புக்கொடுத்தீர்.

௪௨ கூப்பிடுகிறார்கள், ஆனால் இரட்சிக்கிறவரில்லை, கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகிறார்கள், ஆனால் அவர்களுக்கு அவர் உத்தரவு கொடுக்கவில்லை. ௰௯, சங்கீதம் ௭.

௪௩ அவர்களைக் காற்றுமுகத்திலே தூளாக நொறுக்கித் தெருக்களின் சேற்றைப்போலே யவர்களை யொழித்துப்போடுவேன்.

௪௪ நீர் சனத்தின் சண்டைகளுக்கு என்னைத் தப்பவிட்டு என்னைச் சாதிகளுக்குத் தலைவனாக்குகிறீர், நான் அறியாத சனம் என்னைச் சேவிக்கிறது.

௪௫ அவர்கள் என் சத்தத்தைக் கேட்டவுடனே எனக்குக் கீழ்ப்படிகிறார்கள், அன்னியரும் எனக்கிச்சகம்பேசி அடங்குகிறார்கள்.

௪௬ அன்னியர் முனைவிழுந்துபோய்த் தங்கள் அடைப்புகளிலிருந்து தத்தளிப்பாய்ப் புறப்படுகிறார்கள்.

௪௭ கர்த்தர் சீவனுள்ளவரும் என் கன்மலை தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார்.

௪௮ என் இரட்சிப்பின் பராபரனும் பழிக்குப் பழிவாங்குஞ் செய்கைகளை யெனக் களித்துச் சனங்களை யெனக்குக் கீழ்ப்படுத்தி என் சத்துருக்களுக் கென்னை விலக்கிவிடுவிக்கிற பராபரனுமானவர் உயர்ந்தவர்.

௨௪, சங்கீதம் ௫.

௪௯ என்னை யெனக்கு விரோதமாயெழும்புகிறவர்கள் மேலும் உயர்த்துகிறீர், கொடுமையான மனுஷனுக் கென்னைத் தப்புவிக்கிறீர். ௨௭, சங்கீதம். ௯.

௫௰ இதினிமித்தங் கர்த்தாவே சாதிகளுக்குள்ளே உம்மைப் பிரக்கியைபண்ணி உம்முடைய நாமத்துக்குச் சங்கீதம்பாடுவேன். றோமர். ௰௫, ௯.

௫௧ தாம் வைத்த இராசாவுடைய இரட்சிப்புகளை அவர் பெரியவைகளாக்கித் தாம் அபிஷேகம்பண்ணின தாவீதுக்கும் அவன் வித்துக்கும் என்றென்றைக்குங் கிருபைசெய்கிறார்.

## ௰௯. சங்கீதம்.

(பராபரனுடைய மகிமையான சுவிசேஷத்தின் பிரசித்தமாகுதலும் பெலனும்.)

[இராகத்தலைவனுக் கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

வானங்கள் பராபரனுடைய மகிமையைச் சொல்லுகிறது, ஆகாசவிரிவு அவருடைய கரங்களின் கிரியையை அறிவிக்கிறது.

௯௭, சங்கீதம். ௬.

௨ ஒருபகல் மறுபகலுக்கு வார்த்தையைப் பொழிகிறது, ஒரு இராமறு இராவுக்கு அறிவைத் தெரிவிக்கிறது.

௩ அவைகளின் சத்தங் கேள்விப்படாத பாஷையுமில்லை பேச்சுகளுமில்லை

௪ அவைகளின் நூல் பூமியெங்கும் அவைகளின் வசனங்கள் பூச்சக்கரத்துக்கடைசிமட்டும் புறப்பட்டுப்போகிறது, சூரியனுக்கு அவைகளில் ஒரு கூடாரத்தைப் போட்டார். றோமர். ௰, ௰௮.

௫ அது தன் மணவறையிலிருந்து புறப்படுகிற மணவாளனைப்போலிருந்து பராக்கிரமசாலியைப்போலத் தன் பாதையிலோட மகிழ்ச்சியாயிருக்கிறது.

௬ அது வானங்களின் இம முனையிலிருந்து புறப்பட்டு அவைகளின் அம்முனைகளுக்குச் சுற்றியோடுகிறது, அதின் காந்திக்கு மறைவானதொன்றுமில்லை.

௭ கர்த்தருடைய வேதங் குறையற்றதும் ஆத்துமாவை யுயிர்ப்பிக்கிறதுமாயிருக்கிறது, கர்த்தருடைய சாட்சி சத்தியமும் பேதையை ஞானியாக்குகிறதுமாயிருக்கிறது. ௱௰௯, சங்கீதம். ௱௫.

௮ கர்த்தருடைய கட்டளைகள் செம்மையும் இருதயத்தைச் சந்தோஷிப்பிக்கிறதுமாயிருக்கிறது, கர்த்தருடைய கற்பனை துப்புரவும் கண்களை வெளிச்சமாக்குகிறதுமாயிருக்கிறது. ௱௰௯, சங்கீதம். ௱௫.

௯ கர்த்தருக்குப் பயப்படுதல் சுத்தமும் என்றென்றைக்கும் நிற்கிறதுமாயிருக்கிறது, கர்த்தருடைய நியாயங்கள் உண்மையும் அவைகள் அனைத்தும் நீதியுமாயிருக்கிறது.

௰ அவைகள் பொன்னைப் பார்க்கிலும் மிச அநேகம் அபராஞ்சியைப்பார்க்கிலும் இச்சிக்கப்படத்தக்கது, தேனிலுந் தேன்கூண்டொழுகலிலும் மதுரமுமாயிருக்கிறது. ௱௰௯, சங்கீதம். ௭௨. ௱௨௭. வாக்கியம். ௮, ௰. ௰௧. ௱௰௯, சங். ௱௩.

௰௧ உம்முடைய ஊழியக்காரனும் அவைகளால் எச்சரிக்கப்படுகிறான், அவைகளைக் கைக்கொள்ளுகிறதினாலே மிகுந்த பலன் இருக்கிறது. ௱௯, சங்கீதம். ௩.

௰௨ பிழைகளை யுணருகிறவனார், மறைவானவைகளுக் கென்னை நீங்கலாக்கியருளும்.

௰௩ அகந்தைக்காரர் என்னை ஆண்டுகொள்ளாதபடிக்கு அடியேனை அவர்களுக்குவிலக்கிக்காரும், அப்போது மனவு

மையும் மகா துரோகத்துக்கு நீங்கலுமா யிருப்பேன்.

௰௪ என் கன்மலையும் என் மீட்பருமாகிய கர்த்தாவே, உமக்கு முன்பாக என் வாயின் வார்த்தைகளும் என் இருதயத்தின் தியானமும் பிரீதியாயிருக்கக்கடவது.

## ௨௰. சங்கீதம்.

(பாடப்படப்போகிற மேசியாவின் உபத்திரவம் இரட்சிப்பாகமுடிய ஆசையாய் வேண்டிக்கொண்டது.)

[இராகத் தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ நெருக்கப்படுகிற நாளிலே கர்த்தர் உம்முடைய ஜெபத்தைக் கேட்கக்கடவர், யாக்கோபுடைய பராபரனின் நாமம் உமக்கு உயர்ந்த அடைக்கலமாவதாக. வாக. ௰௮. ௰.

௨ அவர் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து உமக்கு ஒத்தாசையை அனுப்பி சீயோனிலிருந்து உம்மை ஆதரிக்கக்கடவர்.

௩ நீர் செலுத்துங் காணிக்கைகளையெல்லாம் அவர் நினைத்து உம்முடைய சர்வாங்க தகனபலியைப் பிரியமாக ஏற்றுக்கொள்ளக்கடவர். சேலா.

௪ அவர் உம்முடைய இருதயத்தினுடைய ஆசையின்படி உமக்குக் கொடுத்து உம்முடைய ஆலோசனையையெல்லாம் நிறைவேற்றக்கடவர். ௨௧, சங்கீதம். ௩.

௫ நாங்கள் உமது இரட்சிப்பினாலே கெம்பீரித்து எங்கள் பராபரனுடைய நாமத்திலே கொடியேற்றுவோம், உம்முடைய வேண்டுதல்களையெல்லாங் கர்த்தர் நிறைவேற்றக்கடவர். ௰௩, சங்கீதம். ௬.

௬ கர்த்தர் தாம் அபிஷேகம்பண்ணினவரை இரட்சிக்கிறார் என்கிறதை இப்போது அறிந்திருக்கிறேன், தம்முடைய வலது கரத்தினுடைய இரட்சிப்பின் வல்லமைகளைக்கொண்டு அவரைத் தமது பரிசுத்த வானங்களிலிருந்து அவருடைய ஜெபத்தைக் கேட்பார்.

௭ அவர்கள் இரதங்களின்மேலும் இவர்கள் குதிரைகளின்மேலும் நம்பிக்கையாயிருக்கிறார்கள், நாங்களோவென்றால் எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை நினைத்திருப்போம். ௪௪, சங்கீதம். ௭.

௮ அவர்கள் முறிந்து விழுந்தார்கள், நாங்களோவென்றால் எழுந்து நிற்கிறோம்.

௯ கர்த்தாவே இரட்சியும், நாங்கள் கூப்பிடுகிற நாளிலே இராசா எங்கள் ஜெபத்தைக் கேட்கக்கடவர். ௰௨, சங்கீதம். ௨.

## ௨௧. சங்கீதம்.

(மேசியா உயர்த்தப்படுவதைப் பாடினது.)

[இராகத் தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ கர்த்தாவே, உம்முடைய வல்லமையிலே இராசா மகிழ்ச்சியாயிருந்து உம்முடைய இரட்சிப்பினாலே எத்தனையாய்க் களிகூருகிறார்.

௨ அவருடைய இருதயத்தின் ஆசையின்படி நீர் அவருக்குக் கொடுத்து அவருடைய உதடுகளின் விண்ணப்பத்தைத் தள்ளாதிருக்கிறீர். சேலா. ௨௰, சங்கீதம். ௫.

௩ ஏனெனில் நன்மையின் ஆசீர்வாதங்களால் அவருக்கு நேரிட்டு அவர் சிரசில் அபரஞ்சிக் கிரீடந்தரிப்பிக்கிறீர். ௱௧௨, சங்கீதம். ௰௮.

௪ உம்மைச் சீவனைக் கேட்டார், அவருக்கு என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களான நாள்நீடிப்பையளித்தீர். ௰௬. சங். ௰.

௫ உமது இரட்சிப்பினால் அவருடைய கனம் பெரியதாயிருக்கிறது, மகிமையையும் மகத்துவத்தையும் அவர்மேல் வைக்கிறீர்.

௬ ஏனெனில் அவரை என்றென்றைக்கும் ஆசீர்வாதங்களாக வைக்கிறீர், அவரை உம்முடைய சமுகத்திலே மகிழ்ச்சியாலே பூரிப்பாக்குகிறீர். ௧. மோசே. ௰௨, ௩. ௰௬, அதிகாரம். ௰௧.

௭ அதேதென்றால் இராசா கர்த்தரின்மேல் நம்பிக்கையாயிருக்கிறார், ஆகையால் உன்னதமானவருடைய தயவினாலே அசைக்கப்படாதிருப்பார்.

௮ உம்முடைய கை உம்முடைய சத்துருக்களையெல்லாங் கண்டுபிடிக்கும், உம்முடைய வலதுகரம் உம்மைப் பகைக்கிறவர்களைக் கண்டுபிடிக்கும்.

௯ உமது கோபத்தின் காலத்திலே அவர்களை அக்கினிச் சூளையாக்கிப்போடுவீர், கர்த்தர் தமது கோபத்திலே அவர்களை விழுங்குவார், அக்கினி அவர்களைப் பட்சிக்கும்.

௰ அவர்கள் கனியைப் பூமியிலில்லாமலும் அவர்கள் வித்தை மனுபுத்திரரிலில்லாமலும் போகத்தக்கதாக அழிப்பீர். ௱௯, சங்கீதம். ௰௩.

௰௧ ஏனெனில் உமக்கு விரோதமாகப் பொல்லாப்பை நினைத்தார்கள், திவினையை யெத்தனம்பண்ணினார்கள், ஆனால் மேற்கொள்ளாமற்போனார்கள்.

௰௨ அவர்களை இலக்காக வைத்து அவர்கள் முகத்துக்கு நேரே உம்முடைய அம்புகளை நாணேற்றிவிடுவீர்.

௰௩ கர்த்தாவே, உம்முடைய பெலத்திலே உயரும், அப்போது உம்முடைய வல்லமையைப் பாடிக் கீர்த்தனம்பண்ணுவோம்.

## ௨௨. சங்கீதம்.

(மேசியாவின் வேதனையான பாடுகளையும் அவருடைய இராச்சியத்தின் பிரபலியத்தையும் முன்னறிவித்த தீர்க்கதரிசனம்.)

[அதிகாலமே வேட்டையாடப்பட்ட பெண்மானின்பேரிலே பாடி இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

என் பராபரனே என் பராபரனே நீரென்னைக்கைவிட்டதேது, என் இரட்சிப்புக்கும் என்கதறுதலின் வார்த்தைகளுக்கும் ஏன் தூரமாயிருக்கிறீர். மத்தேயு. ௨௭, ௪௬. மாற். ௧௫, ௩௪. எபிரே. ௫, ௭.

௨ என்பராபரனே, நான் பகலிலே கூப்பிடும் உத்தரவுகொடீர், இரவிலே கூப்பிடும் எனக்கமைவுதவில்லை.

௩ இஸ்ரவேலின் துதிகளுக்குள்ளே வாசமாகிய தேவரீரோவென்றால் பரிசுத்தர்.

௪ உம்முடையமேல் எங்கள் பிதாக்கள் நம்பிக்கையாயிருந்தார்கள், நம்பின அவர்களை விடுவித்தீர்.

௫ உம்மை நோக்கிக் கூப்பிட்டுத் தப்பினார்கள், உம்மை நம்பி வெட்கப்பட்டுப் போகாதிருந்தார்கள்.

௬ நானோ மனுஷனல்லாத பூச்சியும் மனுஷனுடைய நிந்தனையும் சனத்தால் அசங்கைப்பட்டவனுமாயிருக்கிறேன்.

௭ என்னைப் பார்க்கிறவர்களெல்லாரும் என்னைப் பரியாசம்பண்ணி உதட்டைப் பிதுக்கித் தலையைத் துலுக்கி, மத். ௨௭, ௩௪.

௮ கர்த்தர்மேல் நம்பிக்கையாயிருந்தானே அவர் அவனை விடுவிக்கட்டும், அவன்மேல் பிரியமாயிருக்கிறாரே, இப்போது அவனை மீட்டுவிடட்டுமென்கிறார்கள். மத்தேயு. ௨௭, ௪௩.

௯ தேவரீரோவென்றால் என்னைக் கெர்ப்பத்திலிருந்து இழுத்தவர், என் தாயின் முலைகளிலென்னை உம்முடையபேரில் நம்பிக்கையாயிருக்கப்பண்ணினீர். ௭௧, சங்கீ. ௫, ௬.

௧௰ கெர்ப்பத்திலிருந்து உம்முடைய சார்பிலே விழுந்தேன், நான் என் தாயின் வயிற்றிலே பிறந்தது முதல் தேவரீர் என் பராபரன்.

௧௧ என்னைவிட்டுத் தூரமாகாதேயும், ஏனென்றால் நெருக்கம் கிட்டியிருக்கிறது, சகாயருமில்லை.

௧௨ அநேகங் காளைகள் என்னைச் சூழ்ந்து பாசான் தேசத்து வலுவான எருதுகள் என்னை வளைந்து கொண்டது.

௧௩ பீறிக்கெர்ச்சிக்கிற சிங்கத்தைப்போல என்மேலே தங்கள் வாயைத் திறக்கிறார்கள்.

௧௪ தண்ணீரைப்போல ஊற்றுண்டேன், என்னெலும்புகளெல்லாங் கட்டுவிட்டது, என்னிருதயம் மெழுகுபோலாகி என் குடல்களின் நடுவே உருகிறது.

௧௫ என் பெலன் ஓட்டைப்போலக் காய்ந்துபோய் என் நாவு என்மேல்வாயோடே ஒட்டிக்கொண்டது, என்னை மரணத் தூளிலே போடுகிறீர்.

௧௬ ஏனென்றால் நாய்களென்னைச் சூழ்ந்து பொல்லாதவர்களின் கூட்டமென்னைச் சுற்றிக்கொண்டது, என் கைகளையும் என் கால்களையும் உருவக் குத்தினார்கள். லூக். ௨௩. ௩௩.

௧௭ என்னெலும்புகளெல்லாம் நான் எண்ணலாம், அவர்கள் என்னை நோக்கியிருந்து என்னிலே தங்கள் ஆசையைப் பார்க்கிறார்கள்.

௧௮ என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு என்னுடையின் பேரில் சீட்டுப்போடுகிறார்கள். மத். ௨௭, ௩௫. யோவா. ௧௯, ௨௩. ௨௪.

௧௯ ஆனாற் கர்த்தாவே தேவரீர் தூரமாகாதேயும், என்பெலனே எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும். ௭௧, சங்கீதம் ௧௮.

௨௰ என்னுயிரைப் பட்டயத்துக்கும் என் தனிமையை நாய்களின் துஷ்டத்துக்கும் தப்புவியும்.

௨௧ என்னைச் சிங்கத்தின் வாய்க்குச் சரண்டாயிருக்கிறவர்களின் கொம்புகளுக்குமேலே கிரட்சித்து என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

௨௨ உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கறிவித்து நடுச்சபையிலே உம்மைத் துதிப்பேன். எபிரே. ௨, ௧௧. ௧௨.

௨௩ கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே அவரைத் துதியுங்கள், யாக்கோபின் வித்தாகிய நீங்களெல்லாரும் அவரைக் கனம்பண்ணுங்கள், இஸ்ரவேலின் வித்தாகிய நீங்களெல்லாரும் அவருக்கச்சங்கையாயிருங்கள், ௩௨, சங்கீதம். ௧௧.

௨௪ ஏனென்றாற் சிறுமையானவனுடைய சிறுமையை அவர் அசங்கதியாமலும் அருவருக்காமலுந் தம்முடைய முகத்தை அவனை விட்டு மறைத்திராமலும் அவன் தம்மை நோக்கிக் கூப்பிடுகையில் அவனைக் கேட்டார்.

௨௫ உம்மைக் குறித்துத் திரளான சபையிலே நான் துதிசொல்லுவேன், அவருக்குப் பயப்படுகிறவர்களுக்கு முன்பாக என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்.

௨௬ சிறுமையானவர்கள் போசித்துத் திருத்தியடைவார்கள், கர்த்தரைத் தேடுகிறவர்கள் அவரைத் துதிப்பார்கள், உங்களிருதயம் என்றென்றைக்கும் வாழும். ஏசாயா. ௬௫, ௧௩. ௧௪.

௨௭ பூமியின் எல்லைகளெல்லாம் நினைத்துக் கர்த்தரண்டைக்குத் திரும்பிச் சாதிகளுடைய சந்ததிகளெல்லாம் உமக்கு முன்பாகப் பணியக்கடவது. ௨, சங்கீதம். ௭௨, ௧௧. ௮௬, ௯

௨௮ ஏனென்றால் இராச்சியங் கர்த்தருடையது, அவர் சாதிகளையாளுகிறவர்.

௨௯ பூமியிலே தாளித்தவர்கள் அனைவரும் போசித்துப் பணிந்துகொள்வார்களாக,

லே இறைஞ்சித் தங்கள் சீவனைப் பிழைப்பூட்ட மாட்டாதவர்கள் அனைவரும் அவருக்கு முன்பாகக் குனிவார்களாக.

ஙய அவருக்கு ஆராதனை செய்யும் வித்து சந்ததி முறையாக ஆண்டவருடையதென்றெண்ணப்படும். ஏசாயா. ருங. ய.

ஙக இவைகளைச் செய்தாரென்று பிறக்கப்போகிற சனத்துக்கு அவருடைய நீதியை வர்த்திப்பார்கள்.

## உங. சங்கீதம்.

(பிரதான மேய்ப்பராகிய கிறிஸ்துவினாசவிகையிலே விசுவாசிகள் அனுபவிக்கிற தேவபராமரிப்பின் பாக்கியம்.)

[தாவீதின் சங்கீதம்.]

கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார், நான் தாழ்ச்சியடையேன். யோவா. ய, யக. ஏசாயா. சய, யக. ருச, யக.

உ அவரென்னைப் புல்லுள்ள தலங்களில் மேய்த்து என்னை அமர்ந்த தண்ணீர்களண்டைக்குக் கொண்டுபோய்விடுகிறார்.

ங அவர் என் ஆத்துமாவைக் குளிரப்பண்ணி என்னைத் தம்முடைய நாமத்தினிமித்தமாக நீதியின் பாதைகளில் நடத்துகிறார். எரேமியா. ஙக, உரு. மத். யக, உஅ.

ச நான் மரண நிழலின் பள்ளத்தாக்கிலே நடந்தாலும் பொல்லாப்புக்குப் பயப்படேன், ஏனென்றால் தேவரீர் என்னோடேகூட இருக்கிறீர், உம்முடைய கோலும் உம்முடைய தடியும் என்னைத் தேற்றுகிறது. கூ, சங்கீ. கூ. எ. ௱யஅ, சங்கீதம். கூ.

ரு என் சத்துருக்களுக்கெதிரே நீர் எனக்கு முன்பாக ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி என் தலையை எண்ணெயால் அபிஷேகம் பண்ணுகிறீர், என் பாத்திரம் நிரம்பியிருக்கிறது.

சு என் சீவனுள்ள நாளெல்லாம் நன்மையும் கிருபையும் என்னைத் தொடரும், நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன். உஎ, சங்கீதம். ச.

## உச. சங்கீதம்.

(மகிமையின் இராசாவாகிய மேசியாவை ஏற்றுக்கொள்வதற்கான புத்தி.)

[தாவீதின் சங்கீதம்.]

பூமியும் அதின் நிறைவும் பூச்சக்கரமும் அதிலுள்ள குடிகளும் கர்த்தருடையது. ருய, சங்கீ. யஉ. க. கொரிந்தர். ய, உகூ. உஅ.

உ ஏனென்றால் அவரே அதைக் கடல்களின் மேல் உயரமாக அஸ்திபாரப்படுத்தி அதை நதிகளிலும் உயரமாகத் திடப்படுத்தினார்.

ங ஆர் கர்த்தருடைய பருவதத்திலேறி ஆர் அவருடைய பரிசுத்த தலத்திலே நிலைத்திருப்பான். ருய, சங்கீ. க மு. ஏசாயா. ஙங, யச. யன.

ச கைகளிலே குற்றமில்லாதவனும் இருதயத்திலே சுத்தனுமாயிருந்து தன் ஆத்துமாவை மாயைக்கொப்புக்கொடாமலும் கபடாய் ஆணையிடாமலுமிருக்கிறவனே.

ரு அவன் கர்த்தரால் ஆசீர்வாதத்தையும் தன் இரட்சிப்பினுடைய பராபரனால் நீதியையும் பெறுவான்.

சு இதுவே அவருக்காகக் கேட்டுவிசாரித்து அவருடைய சமுகத்தைத் தேடுகிற யாக்கோபென்கிற சந்ததி. சேலா.

எ வாசல்களே, மகிமையின் இராசா உட்பிரவேசிப்பதற்கு உங்கள் தலைகளையுயர்த்துங்கள், அநாதிவாசல்களே உயருங்கள். க. கொரி. உ, அ.

அ ஆர் இந்த மகிமையின் இராசா. அவர் வல்லமையும் பராக்கிரமுமான கர்த்தர், அவர் யுத்தத்திலே பராக்கிரமமான கர்த்தர்தானே.

கூ வாசல்களே, மகிமையின் இராசா உட்பிரவேசிப்பதற்கு உங்கள் தலைகளையுயர்த்துங்கள், அநாதிவாசல்களே உயருங்கள்.

ய ஆர் இந்த மகிமையின் இராசா? அவர் சேனைகளுடைய கர்த்தரானவர், அவரே மகிமையின் இராசா. சேலா.

## உரு. சங்கீதம்.

(தாவீது பராபரனிடத்திலே பாவமன்னிப்பையும் இக்கட்டின் நீக்கத்தையும் நம்பிக்கையாய்த் தேடினது.)

[தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே உம்மண்டைக்கு என் ஆத்துமாவையுயர்த்துகிறேன்.

உ என் பராபரனே உம்மை நம்பியிருக்கிறேன், என் சத்துருக்கள் என்பேரிலே களிகூராதபடிக்கு நான் வெட்கப்பட்டுப்போகாதிருப்பேனாக. ஙக, சங்கீ. உ. ஙச, சங்கீதம். கூ.

ங உமக்குக் காத்திருக்கிற ஒருவராகிலும் வெட்கப்பட்டுப்போகாமல் முகாந்திரமில்லாமல் துரோகம் பண்ணுகிறவர்களே வெட்கப்பட்டுப்போவார்கள். ஏசா. உஅ, யசு. சகூ, உங. உரோமர். ய, யக.

ச கர்த்தாவே உம்முடைய வழிகளையெனக்குத் தெரிவியும், உம்முடைய பாதைகளையெனக்குப் போதிப்பியும். உஎ, சங்கீ. யக. அகூ, யக. ௱கூ, சங்கீ. உச. ௱சங, சங்கீ. அ.

ரு என்னை உம்முடைய சத்தியத்திலே வழிநடத்தி என்னைப் போதிப்பியும், ஏனென்றால் தேவரீர் என் இரட்சிப்பின் பராபரன், தேவரீருக்கு நித்தம் காத்திருக்கிறேன். உச, சங்கீதம். ரு.

௬ கர்த்தாவே உம்முடைய இரக்கங்களையும் உம்முடைய கிருபைகளையும் நினைத்திரும், ஏனெனில் அவைகள் அனாதிகாலந்துவக்கியிருக்கிறது. ௱௩, சங்கீதம். ௰எ.

எ என் இளவயதின்பாவங்களையும் என் மீறுதல்களையும் நினையாதேயும், கர்த்தாவே தேவரீர் உம்முடைய தயவினிமித்தம் என்னை உமது கிருபையின்படியே நினைத்தருளும். யோபு. ௰௩, ௨௬.

அ கர்த்தர் நல்லவரும் உத்தமருமாயிருக்கிறார், ஆகையாற் பாவிகளைவழியிலேபோதிக்கிறார். ரு. மோசே. ௩௨, ௪.

௯ சிறுமையானவர்களை நியாயத்திலே நடத்திசசிறுமையானவர்களுக்குத் தமது வழியைப்போதிப்பிக்கிறார்.

௰ கர்த்தருடைய உடம்படிக்கையையும் அவருடைய சாட்சிகளையுங் கைக்கொள்ளுகிறவர்களுக்கு அவருடைய பாதைகளெல்லாங்கிருபையும் உண்மையுமானவைகள்.

௰௧ கர்த்தாவே, உம்முடைய நாமத்தினிமித்தம் என் அக்கிரமத்தை மன்னியும், ஏனெனில் இதுபெரியது. ௨௩, சங். ௩.

௰௨ கர்த்தருக்குப்பயப்படுகிற மனுஷனார், அவன் தெரிந்துகொள்ளவேண்டிய வழியை அவனுக்குப்போதிப்பிப்பார்.

௩௨, சங்கீதம். அ.

௰௩ அவன் ஆத்துமா நன்மையிலேதங்கி அவன்வித்துப் பூமியைச்சுதந்தரித்துக்கொள்ளும்.

௰௪ கர்த்தருடைய இரகசியம் அவருக்குப்பயந்தவர்களுக்குள்ளிருக்கிறது, அவர்களுக்குத் தம்முடைய உடம்படிக்கையைத்தெரியப்படுத்துவார். வாக்கியம். ௩, ௩௨.

௰௫ என்கண்கள் எப்போதுங் கர்த்தரின்மேல்வைக்கப்பட்டிருக்கிறது, ஏனெனில் அவரே என்கால்களை வலைக்கு நீங்கலாக்கிவிடுவார். ௱௨௧, சங்கீதம். ௧. ௨.

௰௬ என்மேலேநோக்கமாகி எனக்கிரங்கும், ஏனெனில் நான்தனித்தவனுஞ்சிறுமைப்பட்டவனுமாயிருக்கிறேன்.

௰எ என் இருதயத்தின் வியாகுலங்கள் பெருகியிருக்கிறது, என்னை என் இடுக்கண்களுக்கு நீங்கலாக்கிவிடும்.

௰அ என் சிறுமையையும் என்வருத்தத்தையும்பார்த்து என்பாவங்களையெல்லாம் நீக்கிப்போடும்.

௰௯ என்சத்துருக்களைப்பாரும் ஏனெனில் அவர்கள்பெருகியிருந்து அக்கிரமப்பகையாய் என்னைப்பகைக்கிறார்கள்.

௩. சங்கீதம். ௨.

௨௰ என் ஆத்துமாவைக்காப்பாற்றி நான்வெட்கப்பட்டுப்போகாதபடிக்கென்னை விடுவியும், ஏனெனில் உம்மைநம்பியிருக்கிறேன்.

௨௧ உத்தமமும் நிதானமுமென்னைக்காக்கக்கடவது, ஏனெனில் உமக்குக்காத்திருக்கிறேன்.

௨௨ பராபரனே, இஸ்ரவேலை அதின் எல்லா இக்கட்டுகளுக்கும் நீங்கலாக்கிவிட்டுவிடும். ௱௩௰, சங்கீதம். அ.

## ௨௬. சங்கீதம்.

(குற்றமில்லாமல் உண்மையாயிருக்கிறதன்னைத்தன்சத்துருக்களுக்குவிலக்கி நியாயம்விசாரிக்கத் தாவீது பராபரனைவேண்டிக்கொண்டது.)

[தாவீதின்சங்கீதம்.]

கர்த்தாவே என்னை நியாயம்விசாரியும், ஏனெனில் நான்என்உண்மையிலே நடக்கிறேன், நான் கர்த்தரை நம்பியிருக்கிறேன், ஆகையால் நான்தள்ளாடுவதில்லை.

எ, சங்கீதம். ௯.

௨ கர்த்தாவே என்னை ஆராய்ந்து என்னைச்சோதியும், என் உள்ளிந்திரியங்களையும், என் இருதயத்தையும் பிடமிட்டுப்பாரும்.

௩ ஏனெனில் உம்முடைய கிருபை என் கண்களுக்குமுன்பாகவிருக்கிறது, உம்முடைய சத்தியத்திலே நடந்துகொள்ளுகிறேன்.

௪ வீண்மனுஷரோடே உட்காரேன், பதிவிருக்கிறவர்களிடத்திலே சேரேன்.

௧, சங்கீதம். ௧. வாக்கியம். ௩, ௰.

௨. கொரிந்தர். ௬, ௰௪. ௰ரு.

ரு பொல்லாதவர்களின் கூட்டத்தைப்பகைக்கிறேன், ஆகாதவர்களோடே உட்காரேன்.

௬ நான் என்கைகளைக் குற்றமில்லாமையிலே கழுவி,

எ இப்படியே கர்த்தாவே நான் துதியின் சத்தத்தைத்தொனிக்கப்பண்ணி உம்முடைய அதிசயங்களையெல்லாம் விவரிப்பதற்காக உம்முடைய பீடத்தைச்சுற்றிவருகிறேன்.

அ கர்த்தாவே உமது வீட்டின்வாசஸ்தலத்தையும் உமது மகிமையின் கூடாரத்தலத்தையுஞ்சிநேகிக்கிறேன். ௨எ, சங். ௪.

௯ என்னுத்துமாவைப் பாவிகளோடும் என்சீவனை இரத்தப்பிரியரோடுங்கூட்டவாரிக்கொள்ளாதேயும். ௨அ, சங்கி. ௩.

௰ அவர்கள் கைகளிலே தீவினையிருக்கிறது, அவர்கள்வலதுகை பரிதானங்களால் நிறைந்திருக்கிறது.

௰௧ நானோ என் உண்மையிலே நடக்கிறேன், என்னைமீட்டுக்கொண்டு எனமேலிரங்கும்.

௰௨ என்கால் செம்மையான வழியிலே நிலைநிற்கும், சபைகளிலே கர்த்தரைத்துதிப்பேன்.

## ௨௭. சங்கீதம்.

(பராபரன் தனக்கடைக்கலமும் அவர் தேவாராதனை தனக்கு இன்பமான ஆறுதலுமென்று தாவீது அறிக்கையிடுகிறது.)

[தாவீதின் சங்கீதம்.]

கர்த்தர் என் வெளிச்சமும் என் இரட்சிப்புமானவர், ஆருக்குப் பயப்படுவேன், கர்த்தர் என் ஜீவனின் பெலனானவர், ஆருக்கு அஞ்சுவேன், மீகா. ௭, ௮. யோவ. ௮, ௰௨. ஏசா. ௰௮, சங். ௬.

௨ என் சத்துருக்களும் என் பகைஞருமாகிய பொல்லாதவர்கள் என் மாம்சத்தைப் பட்சிக்க என்னண்டை சேருகையில் அவர்களே இடறி விழுவார்கள். ரோமி. ௨௰, ௰௧.

௩ எனக்கு விரோதமாக ஒரு பாளயமிறங்கினாலும் என் இருதயம் பயப்படாது, என்மேல் யுத்தம் எழும்பினாலும் இதிலே நான் நம்பிக்கையாயிருக்கிறேன். ௩, சங். ௭.

௪ ஒன்றை நான் கர்த்தரிடத்திலே கேட்டேன் அதையே தேடுவேன், நான் கர்த்தருடைய இன்பத்தைப் பார்த்து அவருடைய தேவாலயத்தில் ஆராயும்படிக்கு நான் என் ஜீவனுள்ள நாளெல்லாம் கர்த்தருடைய வீட்டிலே தங்குவதைத் தானே. ௪௨, சங்கீதம். ௩. ௬௨, சங்கீ. ௰.

௫ ஏனென்றால் தீங்கு நாளில் என்னைத் தம்முடைய கூடாரத்தில் ஒளித்து என்னைத் தம்முடைய கூடாரமறைவிலே மறைத்து என்னைக் கன்மலையின்மேல் உயர்த்துகிறார். ௩௧, சங்கீ. ௨௧.

௬ இப்போதும் என்னைச் சுற்றிலுமிருக்கிற என் சத்துருக்களின்மேல் என் தலை உயர்த்தப்படும், ஆதினிமித்தம் அவருடைய கூடாரத்திலே நான் கெம்பீர பெலிகளைப் படைத்துக் கர்த்தரைப் பாடி அவரைக் கீர்த்தனம் பண்ணுவேன்.

௭ கர்த்தாவே, நான் கூப்பிடுகிற என் சத்தத்தைத் தீர்க்கேட்டு எனக்கிரங்கி எனக்கு உத்தரவருளிச்செய்யும்.

௮ தம்முடைய முகத்தைத் தேடுங்களென்று நீர் சொன்னபோது, என்னிருதயம் உமக்குச் சொல்லிற்று, உம்முடைய முகத்தைத் தேடுகின்றேன் கர்த்தாவே,

௯ எனக்கு உம்முடைய முகத்தை மறைக்காதேயும், உம்முடைய அடியானைக் கோபமாய் விலக்காதேயும், நீர் என் சகாயரானவர், என் இரட்சிப்பின் பராபரனே என்னை நெகிழாமலும் என்னைக் கைவிடாமலுமிரும். ௭௧, சங்கீ. ௨. எபிரே. ௰௩, ௫.

௰ ஏனென்றால் என் தகப்பனும் என் தாயும் என்னைக் கைவிட்டார்கள், ஆனாற் கர்த்தர் என்னைச் சேர்க்கிறார்.

௰௧ கர்த்தாவே, என் எதிராளிகளினிமித்தம் நீர் உம்முடைய வழியை எனக்குப் போதிப்பித்துச் செம்மையான பாதையிலே என்னை நடத்தும். ௨௫, சங்கீ. ௪.

௰௨ என் சத்துருக்களின் மனதுக்கு என்னை ஒப்புக்கொடாதேயும், ஏனென்றால் பொய்ச்சாட்சிகளும் அக்கிரமித்துச் சீறுகிறவர்களும் எனக்கு விரோதமாக எழும்பினார்கள்.

௰௩ நானோவென்றால் ஜீவனுள்ளோரின் தேசத்திலே கர்த்தருடைய நன்மைகளைப் பார்ப்பேனென்று விசுவாசிக்கிறேன்.

௰௪ கர்த்தருக்குக் காத்திரு, பெலத்துக்கொண்டு திடமனதாயிருந்து கர்த்தருக்குக் காத்திரு. ஆபகூக்கு. ௨. ௩. ௩௧, சங்கீதம். ௨௫.

## ௨௮. சங்கீதம்.

(தன் ஜெபங் கேட்கப்படவும் தான் பொல்லாதவர்களோடே கூடக் கெட்டுப்போகாதிருக்கவும் தாவீது வேண்டிக்கொண்டு தேவகிருபையின் நிச்சயம் பெற்றது.)

[தாவீதின் சங்கீதம்.]

என் கன்மலையாகிய கர்த்தாவே உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன், நீர் எனக்கு உத்தரவு கொடாதிருந்தால் நான் குழியிலிறங்குகிறவர்களுக்கு ஒப்பாகாதபடிக்கு எனக்கு மவுனமாயிராதேயும். ௱௪௩, சங்கீ. ௭.

௨ நான் உம்மை நோக்கிச் சத்தமிட்டு என் கைகளை உம்முடைய பரிசுத்த சந்நிதிக்கு நேராக எடுக்கையில் என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேளும்.

௩ தங்களுக்கடுத்தவர்களோடே சமாதானமென்று சொல்லியும் பொல்லாப்பைத் தங்கள் இருதயங்களில் வைத்திருக்கிற ஆகாதவர்களோடும் அக்கிரமக்காரரோடும் என்னை இழுக்காதேயும். எரேமி. ௯, ௮.

௪ அவர்கள் கிரியைகளுக்கும் அவர்கள் நடத்தைகளின் பொல்லாங்குக்கும் தக்கதாக அவர்களுக்குக் கொடும், அவர்கள் கைகளின் செய்கைக்குத் தக்கதாக அவர்களுக்களியும் அவர்களுக்குச் சரிக்குச் சரிகட்டும்.

௫ ஏனென்றாற் கர்த்தருடைய கிரியைகளையும் அவர் கரங்களின் செய்கையையுங் கவனியார்கள், அவர்களை நிர்மூலமாக்குவார், அவர்களைக் குடியேற்றார். ஏசாயா. ௫, ௰௨.

௬ கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர், ஏனென்றால் என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டார்.

௭ கர்த்தர் என் பெலனும் என் கேடயமுமாயிருக்கிறார், அவரை என்னிருதயம் நம்பியிருந்தது, அப்போது சகாயம் பெற்றேன், ஆகையால் என்னிருதயங் களிகூருகின்றது, என் பாட்டினால் அவரைத் துதிப்பேன்.

௮ கர்த்தர் அவர்களுடைய பெலன், அவரே தாம் அபிஷேகம்பண்ணுவித்தவனை இரட்சிக்கிற பெலன்.

௯ தேவரீர் உம்முடைய சனத்தை இரட்சித்து உம்முடைய சுதந்தரத்தை ஆசீர்வதித்து அவர்களை மேய்த்து அவர்களை என்றென்றைக்கும் உயர்த்தும்.

## ௨௯. சங்கீதம்.

(சிருஷ்டிப்பின் இராச்சியத்திலுங் கிருபையின் இராச்சியத்திலும் பராபரன் தம்முடைய மகிமையைக் குமுறல்கள் மின்னல்கள் சலப்பிரளயங்களாலே காண்பிக்கிறது.)

[தாவீதின் சங்கீதம்.]

பெலவான்களின் புத்திரரே கர்த்தருக்கு மகிமையையும் பெலனையுஞ் செலுத்துங்கள், கர்த்தருக்கே செலுத்துங்கள். ௯௬, சங்கீ. ௭. ௯,

௨ கர்த்தருக்கு அவர் நாமத்தின் மகிமையைச் செலுத்துங்கள், பரிசுத்த அலங்காரத்துடனே கர்த்தரைப் பணிந்துகொள்ளுங்கள். ௱௰, சங்கீ. ௩.

௩ கர்த்தருடைய சத்தந் தண்ணீர்களின் மேலே கேட்கப்படும், மகிமையின் பராபரனாகிய கர்த்தர் திரளான தண்ணீர்களின் மேலே குமுறுகிறார்.

௪ கர்த்தருடைய சத்தம் வல்லமையுங் கர்த்தருடைய சத்தம் மகத்துவமுமாய் முழங்குகிறது.

௫ கர்த்தருடைய சத்தங் கேதுருக்களை உடைக்கும், கர்த்தர் லீபனோனின் கேதுருக்களையுடைத்து, ஏசாயா. ௨, ௰௩.

௬ அவைகளைக் கன்றுக்குட்டிகளைப்போலவும் லீபனோனையுஞ் சிரியோனையுங் காண்டாமிருகக்குட்டிகளைப்போலவுங் குதிக்கப்பண்ணுகிறார். ௫. மோசே ௩, ௯.

௭ கர்த்தருடைய சத்தம் அக்கினிச்சுவாலைகளைப்போலே வெட்டுகிறது.

௮ கர்த்தருடைய சத்தம் வனாந்தரத்தை அதிரப்பண்ணுகிறது, கர்த்தர் காதேஸ் வனாந்தரத்தை அதிரப்பண்ணுகிறார்.

௯ கர்த்தருடைய சத்தம் பெண்மான்களை ஈனப்பண்ணிக் காடுகளைத் திறப்பாக்கும், ஆனால் அவருடைய தேவாலயத்தில் ஒவ்வொருவன் அவருக்கு மகிமைசெலுத்துகிறான்.

௰ கர்த்தர் சலப்பிரளயம் வரப்பண்ண உட்கார்ந்தார், கர்த்தர் என்றென்றைக்கும் இராசாவாய் உட்கார்ந்திருக்கிறார். ௧. தீமோ. ௧, ௰௭.

௰௧ கர்த்தர் தம் சனத்துக்குப் பெலன் கொடுப்பார், கர்த்தர் தம்முடைய சனத்தைச் சமாதானந்தந்து ஆசீர்வதிப்பார்.

## ௩௰. சங்கீதம்.

(தன்னை மகா இக்கட்டுக்கு விலக்கிவிட்டதற்குப் பராபரனைத் தாவீது தோத்திரிக்கது.)

[வீட்டுப் பிரதிஷ்டையின் பாட்டாகிய தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே, நீர் என் சத்துருக்களை என்பேரிற் சந்தோஷப்படவொட்டாமல் என்னைக் கைதூக்கியெடுத்தபடியினாலே உம்மையுயர்த்துவேன்.

௨ என் பராபரனாகிய கர்த்தாவே உம்மை நோக்கிக் கூப்பிட்டேன், அப்பொழுது என்னைக் குணமாக்கினீர்.

௩ கர்த்தாவே, நீர் என் ஆத்துமாவைப் பாதாளத்திலிருந்தேறப்பண்ணி நான் குழியிலிறங்காதபடிக்கு என்னை உயிரோடே காத்தீர். ௮௬, சங்கீ. ௰௩. ௱௰௬, சங்கீ. ௩. ௪.

௪ கர்த்தருடைய பரிசுத்தவான்களே அவரைக் கீர்த்தனம்பண்ணி அவருடைய பரிசுத்தத்தின் நினைவுகூருதலைக் கொண்டாடுங்கள். ௯௭, சங்கீ. ௰௨.

௫ ஏனென்றால் அவருடைய கோபம் ஒரு நிமிஷமும் அவருடைய தயவு நீடிய வாழ்வுமாம், சாயங்காலத்தில் அழுகை தங்கும், காலமே கெம்பீரமுண்டு. ஏசாயா. ௫௪, ௭.

௬ என்றைக்கும் அசைக்கப்படேனென்று நானென் சுகத்திலே சொன்னேன்.

௭ ஏனென்றால் கர்த்தாவே உம்முடைய தயவினாலே என் பருவதத்தைத் திடமாய் நிற்கப்பண்ணியிருந்தீர், ஆனால் உம்முகத்தை நீர் மறைத்துக்கொண்டபோது கலங்கினவனானேன்.

௮ நான் குழியிலிறங்கையில் என் இரத்தத்தால் என்ன ஆதாயமுண்டு. தூள் உம்மைத் துதித்து உமது சத்தியத்தையறிவிக்குமோவென்றும், ௬, சங்கீ. ௫.

௯ கர்த்தாவே நீர் கேட்டு என்மேலிரங்கும், கர்த்தாவே எனக்குச் சகாயராயிருமென்றுஞ் சொல்லி,

௰ கர்த்தாவே உம்மை நோக்கிக் கூப்பிட்டேன், கர்த்தரை நோக்கிக் கெஞ்சினேன்.

௰௧ என் புலம்பலை எனக்கானந்தக்களிப்பாக மாறப்பண்ணினீர், என் மகிமை அமர்ந்திராமல் உம்மைக் கீர்த்தனம்பண்ணும்பொருட்டாக என் இரட்டை வெட்டிப்போட்டு என்னை மகிழ்ச்சியால் இடைகட்டினீர். ௱௰௬, சங்கீ. ௭. ௮. ௰௬, சங்கீ. ௯.

௰௨ என் பராபரனாகிய கர்த்தாவே உம்மை என்றென்றைக்குந் துதிப்பேன்.

## ௩௧. சங்கீதம்.

(மகா அவதியிலே பண்ணின விண்ணப்பம்.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே உம்மை நம்பியிருக்கிறேன், நான் என்றைக்கும் வெட்கப்பட்டுப் போகாதிருக்கட்டும், உம்முடைய நீதியினிமித்தம் என்னை விடுவியும். ௭௧, சங்கீ. ௧. ௨.

௨ என்னண்டைக்கு உமது செவியைச் சாய்த்துச் சீக்கிரமாய் என்னைத் தப்புவியும், என்னைப் பிழைக்கும்படிக்கு எனக்குப் பெலத்த கன்மலையும் அரண்மனையுமாயிரும்.

௩ ஏனெனில் தேவரீர் என் கன்மலையும் என் கோட்டையுந்தானே, உமது நாமத்தினிமித்தம் என்னை வழிநடத்தும்.

௪ அவர்கள் எனக்கு மறைவாய் வைத்த வலைக்கு என்னை நீங்கலாக்கிவிடும், ஏனெனில் தேவரீர் என்னுடைய பெலன்.

௫ உமது கையில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன், சத்தியபரனாகிய கர்த்தாவே என்னை மீட்டுவிட்டீர். லூக்கா. ௨௩. ௪௬.

௬ வீண்மாயைகளைக் கைக்கொள்ளுகிறவர்களை நான் பகைத்துக் கர்த்தரை நம்பியிருக்கிறேன்.

௭ உமது கிருபையிலே களிகூர்ந்து மகிழுவேன், ஏனென்றால் நீர் என் சிறுமையைப் பார்த்து நெருக்கங்களில் என் ஆத்துமாவை அறிந்துகொண்டு,

௮ என்னைச் சத்துருவின் கையிலே ஒப்புக்கொடுத்துவிடாமல் என் பாதங்களை விசாலத்திலே நிறுத்தினீர். ௰௮, சங். ௧௯.

௯ எனக்கிரங்குங் கர்த்தாவே, ஏனெனில் நெருக்கப்படுகிறேன், சலிப்பினாலே என் கண்ணும் என் ஆத்துமாவும் என் வயிறுங்கூடக் கருகிப்போயிற்று.

௰ ஏனெனில் என் பிராணன் சஞ்சலத்தாலும் என் வருஷங்கள் தவிப்பினாலுங் கழிந்துபோனது, என் அக்கிரமத்தினாலே என் பெலன் விழுந்து என் எலும்புகள் உலர்ந்துபோயின.

௰௧ என்னுடைய எல்லாச் சத்துருக்களினிமித்தம் நான் என் அயலகத்தாருக்கு மகா நிந்தையும் எனக்கு அறிமுகமானவர்களுக்குத் திகிலுமானேன், வீதியிலே என்னைக் காண்கிறவர்கள் என்னைவிட்டோடிப்போகிறார்கள். ௩௮, சங்கீதம். ௰௧.

௰௨ செத்தவனைப்போல எல்லாராலும் மறக்கப்பட்டேன், கெட்ட பாத்திரத்தைப்போலானேன்.

௰௩ ஏனெனில் அநேகருடைய அவதூறைக் கேட்டேன், அவர்கள் ஏகமாய் எனக்கு விரோதமாக ஆலோசனை பண்ணுகிறதிலே திகில் என்னைச் சூழ்ந்துகொண்டது, என் பிராணனை வாங்க நினைக்கிறார்கள்.

௰௪ நானோவென்றால் கர்த்தாவே உம்மை நம்பியிருக்கிறேன், தேவரீர் என் பராபரன் என்கிறேன்.

௰௫ என் காலங்கள் உம்முடைய கரத்திலிருக்கிறது, என் சத்துருக்களின் கைக்கும் என்னைப் பின்தொடருகிறவர்களின் கைக்கும் என்னைத் தப்புவியும்.

௰௬ நீர் உம்முடைய முகத்தை உம்முடைய ஊழியக்காரன்மேலே பிரகாசிக்கப்பண்ணி உமது கிருபையினாலே என்னை இரட்சியும். ௬௨, சங்கீதம். ௭.

௰௭ கர்த்தாவே நான் வெட்கப்பட்டுப் போகாதிருக்கட்டும், ஏனெனில் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன், ஆகாதவர்கள் வெட்கப்பட்டுப் பாதாளத்தில் மௌனமாய்ப்போகட்டும்.

௰௮ நீதிமான்மேல் பெருமையோடும் அசங்கத்தோடும் கடினமாய்ப் பேசுகிற பொய் உதடுகள் கட்டப்படுவதாக.

௰௯ உமக்குப் பயந்தவர்களுக்கு நீர் வைத்துவைத்ததும் உம்மை நம்புகிறவர்களுக்கு நீர் மனுபுத்திரருக்கெதிரே உண்டுபண்ணினதுமான உம்முடைய நன்மை எத்தனை திரள். ஏசாயா. ௬௪. ௪.

௨௰ அவர்களை உமது முகத்தின் மறைவிலே மனுஷரின் இடும்புகளுக்கு விலக்கலாய்க் காப்பாற்றி, அவர்களை உமது கூடாரத்திலே நாவுகளின் சண்டைக்கு ஒளிக்கிறீர்.

௨௰௧ கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர், ஏனெனில் என்னை அரணிப்பான பட்டணத்திலே வைக்கிறதற்குச் சரியாக என்மேலே தம்முடைய கிருபையை அதிசயமானதாக்கினார். ௰௭, சங்கீதம். ௭.

௨௰௨. உம்முடைய கண்களுக்கு முன்பாக இராதபடிக்கு வெட்டுண்டேனென்று நான் என் மனக்கலக்கத்திலே சொன்னேன், ஆனாலும் நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில் என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டீர்.

௨௰௩ கர்த்தருடைய பரிசுத்தவான்களாகிய நீங்களெல்லாரும் அவரைச் சிநேகியுங்கள், உண்மையானவர்களைக் கர்த்தர் தற்காத்துப் பெருமைசெய்கிறவனுக்குப் பரிபூரணமாய்ப் பதிற்செலுத்துகிறார்.

௨௰௪ கர்த்தருக்குக் காத்திருக்கிற நீங்களனைவரும் பெலத்துக்கொண்டு திடமனதாயிருங்கள். ௨௭, சங்கீதம். ௰௪.

## ௩௨. சங்கீதம்.

(பாவமன்னிப்பின் பாக்கியம்.)

[தாவீதின் போதக சங்கீதம்.]

எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்டு எவனுடைய பாவம் மூடப்பட்டதோ அவன் பாக்கியவான். உரோமர். ௪, ௬—௮.

௨ எவன்மேல் கர்த்தர் அவன் அக்கிரமத்தைச் சுமத்தாதிருக்கிறாரோ எவனுடைய ஆவியில் கபடமில்லாதிருக்கிறதோ அந்த மனுஷன் பாக்கியவான்.

௩ நான் அடக்கிவைத்தமட்டும் நித்தம் என் கதறுதலினாலேயென் எலும்புகள் உலர்ந்துபோனது.

௪ ஏனென்றால் இரவும்பகலும் என்மேல் உம்முடைய கை பாரமாயிருந்ததினாலேயென் சாரம் உஷ்ணகால் வறட்சியைப் போலவறண்டுபோனது. சேலா.

௫ நான் என் அக்கிரமத்தை மறைக்காமல் என் பாவத்தையுமக்கறிவித்தேன். என் மீறுதல்களைக் கர்த்தருக்கு அறிக்கையிடுவேனென்றேன், அப்பொழுது தேவரீர் என் பாவத்தின் அக்கிரமத்தை மன்னித்தீர். சேலா. வாக்கி. உ௮, ௰௩. ௧. யோவா. ௧, ௯.

௬ இதற்காகச் சகாயங்கிடைக்குங் காலத்திலே சகலசன்மார்க்கனும் உம்மை நோக்கி விண்ணப்பஞ்செய்வான், அப்போது வெள்ளத்தண்ணீர்களுடைய வெள்ளம் வந்தும் அவனைச் சேராது. ஏசாயா. ௫௫, ௬.

௭ தேவரீர் எனக்கு மறைவிடமாயிருந்து இக்கட்டுக்கு என்னை விலக்கிக்காத்து விடுவித்தலின் கெம்பீரங்களால் என்னைச் சூழ்ந்துகொள்ளுகிறீர். சேலா. உ௭, சங்கீதம். ௫. ௩௧, சங்கீதம். உ௧.

௮ உனக்கு நான் புத்திபடிப்பித்து நீ நடக்கவேண்டிய வழியில் உன்னைப் போதிப்பித்து உன்மேல் வைத்த நம்முடைய கண்ணினாலே உனக்காலோசனைகொடுப்போம். உ௫, சங்கீதம். ௰௨.

௯ உன்கிட்டச் சேராவிட்டால் வாராலுங் கடிவாளத்தினாலும் வாய்கட்டப்படவேண்டிய குதிரையைப்போலவும் உணர்வற்ற கோவேறுகழுதையைப்போலவுமிராதேயுங்கள்.

௰ ஆகாதவனுக்கு நேகம் வேதனைகளுண்டாம், ஆனாற் கர்த்தரை நம்பியிருக்கிறவனைக் கிருபை சூழ்ந்துகொள்ளும். ௰௬, சங். ௪.

௰௧ நீதிமான்களே கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூருங்கள், செம்மையிருதயத்தாரே நீங்கள் அனைவரும் கெம்பீரியுங்கள். ௩௩, சங்கீதம். ௧.

## ௩௩. சங்கீதம்.

(கர்த்தருடைய தெய்வ இலட்சணங்கள் கிரியைகள் பராமரிப்பின் நிமித்தமும் அவரைத் துதித்து அவர்மேல் நம்பிக்கையும் வைக்க ஏவப்படுகிற சங்கீதம்.)

நீதிமான்களே கர்த்தருக்குள் கெம்பீரியுங்கள் துதிக்கிறது செம்மையானவர்களுக்குத் தகும். ௩௨, சங். ௰௧. ௱௪௭, சங். ௧.

௨ கர்த்தரைச் சுரமண்டலத்தினாலே துதித்து அவரைத் தம்புரினாலும் பத்துநரம்புவீணையினாலுங் கீர்த்தனம்பண்ணுங்கள்.

௩ அவரைப் புதுப்பாட்டாய்ப் பாடிக் கெம்பீரத்துடனே நேர்த்தியாய்க் கொட்டுங்கள். ௪௰, சங்கீதம். ௩.

௪ ஏனெனில் கர்த்தருடைய வார்த்தை செம்மையும் அவருடைய செய்கையெல்லாஞ் சத்தியமுமாயிருக்கின்றது. ௰௯, சங்கீதம். ௰.

௫ நீதியையும் நியாயத்தையும் அவர் நேசிக்கிறார் பூமி கர்த்தரின் கிருபையால் நிறைந்திருக்கின்றது. ௪௫, சங். ௮. ௱௰௯, சங். ௬௪.

௬ கர்த்தரின் வார்த்தையினாலே வானங்களும் அவருடைய வாயின் ஆவியினாலே அவைகளின் எல்லாச்சேனையும் உண்டாக்கப்பட்டது.

௭ அவர் சமுத்திரசலங்களைக் குவியலாக்கூட்டி ஆழங்களைப் பொக்கிஷவைப்பாக்கவைத்தார். யோபு. ௩௮, ௮.

௮ பூமியெல்லாங் கர்த்தருக்குப் பயப்பட்டுப் பூச்சக்கரக்குடிகளெல்லாம் அவருக்கஞ்சியிருப்பதாக.

௯ ஏனெனில் அவர் சொல்ல அது ஆகும் அவர் கட்டளையிட நிற்கும். ௧. மோ. ௧, ௩.

௰ கர்த்தர் சாதிகளின் ஆலோசனையை யவத்தமாக்கிச் சனங்களுடைய நினைவுகளை அவத்தமாக்கித் தவிர்க்கிறார். யோபு. ௫, ௰௨. வாக்கியம். உ௧, ௩௰.

௰௧ கர்த்தருடைய ஆலோசனை நித்தியகாலமாகவும் அவர் இருதயத்தின் நினைவுகள் தலைமுறைதலைமுறையாகவும் நிற்கும். வாக்கியம். ௰௯, உ௧.

௰௨ கர்த்தர் தெய்வமாயிருக்கப்பட்ட சாதியும் அவர் தமக்குச் சுதந்திரமாகத் தெரிந்துகொண்ட சனமும் பாக்கியமானது. ௬௫, சங்கீ. ௫. ௱௪௪, சங்கீ. ௰௫.

௰௩ வானங்களிலிருந்து கர்த்தர் நோக்கிப்பார்த்து எல்லா மனுஷபுத்திரரையுங் காண்கிறார்.

௰௪ தாம் வாசமாயிருக்கிறதானத்திலிருந்து பூமியின் குடிகளெல்லார்மேலுங் கண்ணோக்கமாயிருக்கிறார்.

௰௫ அவர் இவர்களனைவருடைய இருதயத்தையும் உருவேற்படுத்தி அவர்களின் செய்கைகளையெல்லாங் கவனித்திருக்கிறார்.

௰௬ இராசா இராணுவத்திரளால் இரட்சிக்கப்பட்டான், சவுரியவான் பெலத்தின் மிகுதியாலே தப்பான்.

௰௭ இரட்சிக்கப்படுவதற்குக் குதிரை விருதா, அது தன் பெரிய வீரியத்தாலே தப்புவியாது. ௱௪௭, சங்கீதம். ௰.

௰௮ இதோ தமக்குப் பயந்து தமது கிருபைக்குக் காத்திருக்கிறவர்களின் ஆத்துமாக்களை மரணத்துக்கு விலக்கி விடுவிக்கவும். ௩௪, சங்கீதம். ௰௫.

௰௯ அவர்களைப் பஞ்சத்தில் உயிரோடே காக்கவுங் கர்த்தருடைய கண் அவர்கள்மேல் வைக்கப்பட்டிருக்கின்றது.

௨௰ நம்முடைய ஆத்துமா கர்த்தருக்குக் காத்திருக்கிறது, அவர் நம்முடைய ஒத்-

ரசையும் நம்முடைய கேடையமுமானவர்.

௨௧ ஏனெனில் அவருடைய பரிசுத்த நாமத்தை நாம் நம்பியிருக்கிறபடியால் நம்முடைய இருதயம் அவருக்குட் சந்தோஷமாயிருக்கும்.

௨௨ கர்த்தரே நாங்கள் உம்மை நம்பினபடி உமது கிருபை எங்கள் மேலிருக்கக்கடவது.

## ௩௪. சங்கீதம்.

(நீதிமான்களெல்லா இக்கட்டுக்கும் நீங்கலாக்கிவிடுவிக்கிற பராபரனுடைய தயவைப் பிரஸ்தாபம்பண்ணுதல்.)

[தாவீது தன்முகநாடியை அபிமெலேக்குக்கு முன்பாக வேறுபடுத்தினதினாலே, அவனாலே துரத்திவிடப்பட்டுப் போகையிலே பாடின சங்கீதம். ௧ சாமு. ௨௧, ௰.]

கர்த்தரை எல்லாக்காலத்திலுந் தோத்திரிப்பேன், அவர் துதி எப்பொழுதும் என் வாயிலிருக்கும். ௱௪, சங்கீதம் ௩௩.

௨ கர்த்தருக்குள் என்னாத்துமா மேன்மைபாராட்டும், சிறுமையானவர்கள் அதைக் கேட்டு மகிழுவார்கள். எரேமி. ௯, ௨௪.

௩ என்னோடேகூடக் கர்த்தரை மகிமைப்படுத்துங்கள், நாம் ஒருமித்து அவர் நாமத்தையுயர்த்துவோம்.

௪ நான் கர்த்தரைத் தேடினபோது அவர் எனக்கு மறுவுத்தரவு கொடுத்து என்னை என்னுடைய எல்லாத் திகில்களுக்கும் நீங்கலாக்கிவிட்டார். ஏசாயா. ௬௫, ௨௪.

௫ அவரை நோக்கி அவரண்டையோடி வருகிறவர்களின் முகங்கள் வெட்கத்துக்குள்ளாகாது.

௬ இந்தச் சிறுமையானவன் கூப்பிட்டான், அப்போது கர்த்தர் கேட்டு அவனை அவனெருக்கங்களுக்கெல்லாம் நீங்கலாக்கி இரட்சித்தார்.

௭ கர்த்தருடைய தூதர் அவருக்குப் பயந்தவர்களைச் சுற்றிலும் பாளயமிறங்கி அவர்களை விடுவிக்கிறார். ௯௧, சங்கீ. ௰௧. ௨, இரா. ௬, ௰௬. ௰௭.

௮ கர்த்தர் நல்லவர் என்றதை ருசித்துப் பாருங்கள் அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற மனுஷன் பாக்கியவான். ௨, சங்கீதம். ௰௨. ௮௪, சங்கீதம். ௫.

௯ கர்த்தருடைய பரிசுத்தவான்களே அவருக்குப் பயந்திருங்கள், ஏனெனில் அவருக்குப் பயந்தவர்களுக்குக் குறைவில்லை. ௩௭, சங்கீதம். ௰௯.

௰ சிங்கக்குட்டிகள் தாழ்ச்சியடைந்து பட்டினியாயிருக்கும் கர்த்தரைத் தேடுகிறவர்களுக்கோவென்றால் ஒரு நன்மையுங் குறைபடாது.

௰௧ பிள்ளைகளே வந்து என்னைக் கேளுங்கள். கர்த்தருக்குப் பயப்படுதலையுங்களுக்குக் கற்றுக்கொடுப்பேன்.

௰௨ ஜீவனை விரும்பி நன்மைகாணும் நாள்களைச் சிநேகிக்கிற மனுஷனார். ௧. பேது. ௩, ௰—௰௨.

௰௩ உன் நாவைப் பொல்லாப்புக்கும் உன் உதடுகளைக் கபடவசனிப்புக்கும் விலக்கலாய்க்கார்.

௰௪ பொல்லாப்பை விட்டுவிலகி நன்மைசெய், சமாதானத்தைத் தேடி அதைப் பின்தொடர். ௩௭, சங்கீதம். ௨௭. ஏசாயா. ௧, ௰௬. ௰௭.

௰௫ கர்த்தருடைய கண்கள் நீதிமான்களின்மேல் வைக்கப்பட்டு அவருடைய செவிகள் அவர்கள் கூப்பிடுதலைக் கவனிக்கிறது. ௩௩, சங்கீதம். ௰௮ ௰௯.

௰௬ பொல்லாங்கு செய்கிறவர்களுடைய பேரைப் பூமியிலிராமல் அறுப்புண்டுபோகப்பண்ணக் கர்த்தருடைய முகம் அவர்களுக்கு விரோதமாயிருக்கின்றது.

௰௭ நீதிமான்கள் கூப்பிடும்போது கர்த்தர் அவர்களைக் கேட்டு அவர்களை அவர்களுடைய எல்லா நெருக்கங்களுக்கும் நீங்கலாக்கிவிடுகிறார்.

௰௮ இருதயம் நொறுங்குண்டவர்களுக்குக் கர்த்தர் சமீபமாயிருந்து ஆவி நொறுங்குண்டவர்களை இரட்சிக்கிறார். ௱௪௫, சங்கீதம். ௰௮. ௰௯.

௰௯ நீதிமானுக்கு வருகிற துன்பங்கள் அநேகமாயிருக்கின்றது, ஆனாலுங் கர்த்தர் அவைகளெல்லாவற்றுக்கும் அவனை நீங்கலாக்கிவிடுகிறார். ௨. தீமோத்தேயு. ௩. ௰௧.

௨௰ அவன் எலும்புகளையெல்லாங் காப்பாற்றுகிறார், அவைகளில் ஒன்றும் முறிக்கப்படுகிறதில்லை.

௨௧ தீங்கு அகாரவனைக் கொல்லும், நீதிமானைப் பகைக்கிறவர்கள் நாஸ்தராவார்கள்.

௨௨ கர்த்தர் தமது ஊழியக்காரரின் ஆத்துமாவை மீட்டுவிடுகிறார், அவரையண்டிக்கொள்ளுகிறவர்களெல்லாருங் குற்றஞ்சுமக்காதிருப்பார்கள். ௩௭, சங்கீதம். ௩௩.

## ௩௫. சங்கீதம்.

(தன் சத்துருக்களோடே பராபரன் தாமே யெதிர்த்து நிற்கப் பாடுபடுகிற கிறிஸ்துவின் முன்னடையாளமாயத் தாவீது வேண்டிக்கொண்டது.)

[தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே நீரென் வழக்காளிகளோடே வழக்காடி என்னோடு யுத்தம்பண்ணுகிறவர்களோடு யுத்தம்பண்ணும்.

௨ நீர் கேடயத்தையும் பரிசையையும் பிடித்து எனக்கொத்தாசையாக எழும்பி,

௩ என்னைப் பின்தொடருகிறவர்களோடே எதிர்த்து நிற்க ஈட்டியையோங்கி அவர்களை மறித்து, என்னாத்துமாவுடனே நாம் உன் இரட்சிப்பென்று சொல்லும்.

௪ என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள் வெட்கி விசனையடைந்து பின்னிட்டுத் திரும்பவும், எனக்குப் பொல்லாப்பை நினைக்கிறவர்கள் நாணமடையவும். ௪௰, சங்கீ.
௰௫. ௭௰. சங்கீ. ௩.

௫ அவர்கள் காற்றுமுகத்திலே பதரைப் போலாகவுங் கர்த்தருடைய தூதன் அவர்களைத் தள்ளுவானாக. ௧, சங்கீதம். ௪.
௮௩, சங்கீதம். ௰௩.

௬ அவர்கள் வழி இருளுஞ் சறுக்கலுமாகக் கடவது, கர்த்தருடைய தூதன் அவர்களைத் தொடருவானாக.

௭ ஏனென்றால் முகாந்தரமில்லாமற் குழிக்குட்படுத்தத் தங்கள் வலையை எனக்கு ஒளித்து வைத்தார்கள், முகாந்தரமில்லாமல் என் ஆத்துமாவுக்குக் குழிவெட்டினார்கள்.

௮ அவன் அறியாமற் பாழ்க்கடிப்பு அவனுக்கு வந்து அவன் மறைவாய் வைத்த அவன் வலை அவனையே பிடிக்க அவனே பாழ்க்கடிப்பாய் அதிலே தான் விழுவானாம். ௭, சங்கீதம். ௰௬. ௰௭.

௯ அப்படியே என்னாத்துமா கர்த்தருக்குட் களிகூர்ந்து அவருடைய இரட்சிப்பிலே மகிழ்ந்திருக்கும்.

௰ சிறுமையானவனை அவனிலும் பெலவானுடைய கைக்குஞ் சிறுமையானவனையும் எளியவனையும் அவனைக் கொள்ளையாடுகிறவனுடைய கைக்குந் தப்புவிக்கிற உம்மைப் போலேயார் கர்த்தாவே என்றென்னெலும்புகளெல்லாஞ் சொல்லும்.

௰௧ கொடுமையான சாட்சிகள் எழும்பி நான் அறியாததை என்னைக் கேட்கிறார்கள்.

௰௨ எனக்கு நன்மைக்குத் தீமை சரிக்கட்டி என்னாத்துமா முதலற்றுப் போகப் பார்க்கிறார்கள். ௩௮, சங்கீதம். ௨௧.

௰௩ அவர்கள் வியாதியாயிருந்த போதோவென்னில் இரட்டு என்னுடுப்பாயிருந்தது, நான் உபவாசத்தால் என் ஆத்துமாவை உபத்திரவப்படுத்தினேன், என் செபமும் என் மடியிலே இரட்டித்தது.

௰௪ எனக்குச் சிநேகிதனாகவும் எனக்குச் சகோதரனாகவும் பாவித்து நடந்துகொண்டேன், தாய்க்காகத் துக்கிக்கிறவனைப் போலத் துக்கவஸ்திரந்தரித்துத் தலைகவிழ்ந்து நடந்தேன்.

௰௫ ஆனால் நான் ஆபத்துப்படுகையில் சந்தோஷப்பட்டுக் கூட்டங்கூடுகிறார்கள், நொண்டிகளும் நான் அறியாதவர்களும் எனக்கு விரோதமாக் கூட்டங்கூடி என்னைப் பீறி அமராதிருக்கிறார்கள். யோபு. ௩௰
௧—௰௧.

௰௬ அப்பத்துக்காக மாயமும் பரியாசமும் பண்ணுகிறவர்களுக்குள்ளிருந்துகொண்டு என்பேரிலே பற்கடிக்கிறார்கள்.

௰௭ ஆண்டவரே எந்தமட்டும் இதைப் பாராதிருப்பீர், என் ஆத்துமாவை அவர்கள் பாழ்க்கடிப்புகளுக்கும் என் தனிமையைச் சிங்கக்குட்டிகளுக்குந் தப்புவித்தருளும்.

௰௮ உம்மைப் பெரிய சபையிலே துதிப்பேன், திரளான சனத்துக்குள்ளே உம்மைப் புகழுவேன். ௪௰, சங்கீதம். ௰.
௬௯. சங்கீதம். ௪.

௰௯ விருதாய் எனக்குச் சத்துருக்களானவர்கள் என்னிமித்தஞ் சந்தோஷியாமலும் முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் கண் சிமிட்டாமலுமிருப்பார்களாக.

௨௰ ஏனென்றால் அவர்கள் சமாதானமாய்ப் பேசாமல் தேசத்திலே அமர்ந்திருக்கிறவர்களுக்கு விரோதமாய்க் கபடமான காரியங்களைத் தியானித்து,

௨௧ எனக்கு விரோதமாகத் தங்கள் வாயை விரிவாய்த் திறந்து ஆகா ஆகா எங்கள் கண் கண்டதென்கிறார்கள். ௪௰, சங்கீதம்.
௰௫. ௭௰, சங்கீதம். ௪.

௨௨ கர்த்தாவே நீர் அதைக் கண்டீர், மவுனமாயிராதேயும். ஆண்டவரே என்னை விட்டுத் தூரமாகாதேயும்.

௨௩ என் பராபரனே என்னாண்டவரே என் நியாயத்துக்கும் என் வழக்குக்கும் விழித்தெழும்பும். ௪௪, சங்கீ. ௨௩.

௨௪ என் பராபரனாகிய கர்த்தாவே அவர்கள் என்னிமித்தஞ் சந்தோஷியாதபடிக்கு உம்முடைய நீதியின்படி என்னை நியாயம் விசாரியும். ௪௩, சங்கீ. ௧.

௨௫ அவர்கள் தங்கள் இருதயத்திலே எங்கள் ஆத்துமாவே ஆகா என்றும் அவனை விழுங்கினோமென்றுஞ் சொல்லாதிருப்பார்களாக.

௨௬ என் தீங்குக்காகச் சந்தோஷிக்கிறவர்கள் ஏகமாய் வெட்கி நாணி எனக்கு விரோதமாய்ப் பெருமைப்படுகிறவர்கள் வெட்கத்தாலும் இலச்சையாலும் உடுத்தப்படக்கடவார்கள். ௬, சங்கீதம். ௰௧.
௪௰, சங்கீ. ௰௫. ௰௬.

௨௭ என் நீதியை விரும்புகிறவர்கள் கெம்பீரித்து மகிழ்ந்து தமது ஊழியக்காரனுடைய சமாதானத்தை விரும்புகிற கர்த்தர் மகிமைப்படக்கடவாரென்று எப்போதுஞ் சொல்லுவார்களாக. ௪௰, சங்கீ. ௰௭.

௨௮ என் நாவு உமது நீதியையுஞ் சகல நாளிலும் உமது துதியையுஞ் சொல்லுகிறதாயிருக்கும்.

## ௩௬. சங்கீதம்.

(தாவீது பொல்லாதவர்களுடைய ஆகாமியத்தைச் சிந்தித்துக் கிருபையுள்ள பராபரனைத் தொழுதுகொண்டது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட கர்த்தருடைய தாசனாகிய தாவீதின் சங்கீதம்.]

ஆகாதவனுடைய துரோகப்பேச்சு என்னிருதயத்தின் உள்ளத்துக்குத் தெரியும், அவன் கண்களுக்கு முன்பாகத் தெய்வ பயப்படுதலில்லை.

௨ ஏனென்றால் தன் துற்குணத்தை நிறைவேற்றவும் வர்மம் வைக்கவுந் தனக்குத்தானே தன்பார்வைக்கேற்றபடி இச்சகம் பேசுகிறான்.

௩ அவன் வாயின் வார்த்தைகள் அக்கிரமமுங் கபடமுமாயிருக்கிறது, நன்மைசெய்வதற்கான புத்தியைக் காக்காமல் விட்டுவிட்டான். ௰௪, சங்கீ. ௩.

௪ அவன் தன்படுக்கையின்மேல் அக்கிரமத்தைச் சிந்தித்துக்கொண்டு நல்லதல்லாத வழியிலே நிலைத்துப் பொல்லாப்பை வெறுக்காதிருக்கிறான்.

௫ கர்த்தாவே உமது கிருபை வானங்களிலிருக்கிறது, உமது சத்தியம் ஆகாசமண்டலங்கள்பரியந்தமும் எட்டுகிறது. ௫௭, சங்கீ. ௰௧.

௬ உமது நீதி வலுபருவதங்களைப்போலவும் உமது நியாயங்கள் மகா ஆழமாகவுமிருக்கிறது, கர்த்தாவே மனுஷரையும் மிருகங்களையுங் காப்பாற்றுகிறீர். ரோமர். ௰௧, ௩௩, சங்கீதம். ௰௫. ௰௬.

௭ பராபரனே உம்முடைய கிருபை எத்தனை அருமையாயிருக்கிறது, அதினாலே மனுபுத்திரர் உமது செட்டைகளின் நிழலிலே திடன்கொண்டு தங்குகிறார்கள். ௰௭, சங். ௮. ௫௭, சங்கீதம். ௨.

௮ உமது வீட்டினுடைய சம்பூரணத்தால் [illegible]கிறார்கள், உமது செல்வங்களின் ஆற்றிலே அவர்களைத் தாகந்தீர்க்கிறீர்.

௯ ஏனெனில் உம்மிடத்திலே ஜீவனுடைய ஊற்றிருக்கின்றது, உம்முடைய வெளிச்சத்திலே வெளிச்சத்தைக் காண்கிறோம். யோவான். ௧, ௪.

௰ உம்மையறிந்தவர்கள்மேல் உமது கிருபையையுஞ் செம்மையிருதயத்தார்மேல் உமது நீதியையும் நீட்டும்.

௰௧ பெருமைக்காரரின் கால் என்மேல் வராமலும் ஆகாதவர்களுடைய கை என்னைப் பறக்கடியாமலுமிருப்பதாக.

௰௨ அங்கே அக்கிரமக்காரர் விழுந்து எழுந்திருக்கமாட்டாமலே தள்ளுண்டுபோகிறார்கள்.

## ௩௭. சங்கீதம்.

(பொல்லாதவர்களின் பாக்கியத்தைக் கண்டு இடறல் அடையாதபடிக்குப் பொல்லார் நல்லாருடைய பிற்காரியம் வெவ்வேறேயென்று காண்பிக்கப்பட்டது.)

[தாவீதின் சங்கீதம்.]

பொல்லாதவர்கள்மேல் எரிச்சலாகாதை, நியாயக்கேடு செய்கிறவர்கள்மேற் பொறுமையாகாதை. ௭௩, சங்கீ. ௩. வாக். ௨௪, ௰௯.

௨ ஏனென்றாற் புல்லைப்போலச் சீக்கிரமாய் அறுப்புண்டு பச்சையான முளையைப்போல உலருவார்கள்.

௩ கர்த்தரை நம்பியிருந்து நன்மைசெய், தேசத்திலே குடியிருந்து சத்தியத்தை மேய்ந்துகொள்.

௪ கர்த்தரிலே மனமகிழ்ச்சியாயிரு, அவர் உன் இருதயத்தின் வேண்டுதல்களை உனக்குக் கொடுப்பார். ௨௰. சங்கீ. ௫.

௫ உன் வழியைக் கர்த்தருக்குச் சாட்டிவிடு, அவர்மேல் நம்பிக்கையாயிரு, அவரே காரியத்தை நடப்பிப்பார். ௫௫, சங்கீ. ௨௨.

௬ உன் நீதியை வெளிச்சத்தைப்போலவும் உன் நியாயத்தைப் பட்டப்பகலைப்போலவும் வெளிப்படப்பண்ணுவார்.

௭ கர்த்தரை நோக்கி அமர்ந்து அவருக்குக் காத்துக்கொண்டிரு, தன்வழியாய்க் [illegible]றவன்மேலுந் தீவினைகளைச்செய்கிற மனுஷன்மேலும் எரிச்சலாகாதை.

௮ கோபத்தை நெகிழ்த்து உக்கிரத்தை விட்டுவிடு, பொல்லாப்புச்செய்யவே இன்மாகிற எரிச்சல் உனக்கு வேண்டாம். யாக்கோபு. ௧, ௨௰.

௯ ஏனெனிற் பொல்லாதவர்கள் வேரறுப்புண்டுபோவார்கள், ஆனாற் கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௰ இன்னங் கொஞ்சநேரந்தான், அப்போது ஆகாதவன் இரான், அவன் தானத்தையுற்றுவிசாரித்தாயானால் அவன் இல்லை.

௰௧ மெத்தனவுள்ளவர்களோவென்றால் பூமியைச் சுதந்தரித்துக்கொண்டு மகா சமாதானத்தினாலே மனமகிழ்ச்சியாயிருப்பார்கள். மத்தே. ௫, ௫.

௰௨ ஆகாதவன் நீதிமானுக்குத் தீங்கு நினைத்து அவன்பேரிலே பற்கடிக்கிறான்.

௰௩ ஆண்டவர் அவனை நகைக்கிறார், ஏனெனில் அவன் நாள் வருகிறதென்று காண்கிறார். ௨, சங்கீ. ௪.

௰௪ சிறுமையும் எளிமையுமானவனை மடிவிக்கவுஞ் செம்மைமார்க்கத்தாரை விழப்பண்ணவும் ஆகாதவர்கள் பட்டயத்தை உருவித் தங்கள் வில்லை நாணேற்றுகிறார்கள்.

௰௫ ஆனால் அவர்கள் பட்டயம் அவர்களுடைய இருதயத்துக்குட்போய் அவர்கள் வில்லுகள் முறியும். எ, சங்கீ. ௰௭.

௰௬ அநேகம் ஆகாதவர்களுக்குள்ள திரட்சியைப் பார்க்கிலும் நீதிமானுக்குள்ள கொஞ்சமானது நல்லது. வாக்கி. ௰௫, ௰௬.

௰௭ ஏனென்றால் ஆகாதவர்களுடைய புயங்கள் முறியும், ஆனால் நீதிமான்களைக் கர்த்தர் தாங்குகிறார்.

௰௮ மனவுண்மையானவர்களின் நாட்களைக் கர்த்தர் அறிந்திருக்கிறார், அவர்கள் சுதந்தரம் என்றென்றைக்குமிருக்கும்.

௰௯ துற்காலத்திலே வெட்கப்பட்டுப் போகாதிருந்து பஞ்சகாலத்திலே திருத்தியடைவார்கள். ௩௩, சங்கீ. ௰௮ ௰௯.

௨௰ ஆகாதவர்களோவென்றால் அழிவார்கள், கர்த்தருடைய சத்துருக்கள் புல்லுள்ள தலங்களின் வடிப்பத்தைப்போலொழிந்து போவார்கள், புகையிலொழிந்துபோவார்கள்.

௨௧ ஆகாதவன் கடன்வாங்கிச் செலுத்தாதே போகிறான், நீதிமானோவென்றால் இரங்கிக் கொடுக்கிறான்.

௨௨ ஏனென்றால் அவரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், அவரால் சபிக்கப்பட்டவர்களோவென்றால் வேர் அறுப்புண்டுபோவார்கள்.

௨௩ நல்மனுஷனுடைய நடைகள் கர்த்தரால் உறுதிப்படும், அவனுடைய வழியின் மேல் அவர் பிரியமாயிருக்கிறார்.

௨௪ அவன் விழுந்தால் தள்ளப்படுகிறதில்லை, ஏனென்றால் கர்த்தர் அவன் கையைத் தாங்குகிறார். ௱௪௫, சங்கீ ௰௪.

௨௫ நான் இளைஞனாயிருந்தேன் முதிர்வயதுமானேன், ஆனால் நீதிமான் கைவிடப்பட்டதையும் அல்லது அவன் வித்து அப்பந்தேடுகிறதையுங் கண்டேனில்லை.

௨௬ நித்தம் இரங்கிக் கடன்கொடுக்கிறான், அவன் வித்து ஆசீர்வாதமாயிருக்கும்.

௨௭ பொல்லாப்பை விட்டுவிலகி நன்மை செய்து என்றென்றைக்கும் நிலைத்திரு. ௩௪, சங்கீ ௰௫.

௨௮ ஏனென்றால் கர்த்தர் நியாயத்தைச் சிநேகிக்கிறவர், அவர் தம்முடைய சன்மார்க்கரைக் கைவிடுவதில்லை, அவர்கள் என்றைக்குங் காக்கப்படுவார்கள், ஆனால் ஆகாதவர்களுடைய வித்து வேரறுப்புண்டுபோம்.

௨௯ நீதிமான்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொண்டு என்றைக்கும் அதிலே வாசமாயிருப்பார்கள். வாக்கி. ௨, ௨௧. ௨௨.

௩௰ நீதிமானுடைய வாய் ஞானத்தை யோசித்து அவனுடைய நாவு நியாயத்தைப் பேசும்.

௩௧ அவனுடைய பராபரனின் வேதம் அவனிருதயத்திலிருக்கிறது, அவன் நடைகள் தள்ளாடுவதில்லை. ஏசா. ௫௧, ௭.

௩௨ நீதிமானை ஆகாதவன் வேவுபார்த்து அவனைக் கொலைசெய்ய வகைதேடுகிறான். ௰, சங்கீ ௯.

௩௩ கர்த்தரோவென்றால் அவனை இவன் கையிலே விடுவதுமில்லை, அவன் நியாயம் விசாரிக்கப்படுகையில் அவனை ஆகாதவனுக்குத் தீர்ப்பதுமில்லை.

௩௪ நீ கர்த்தருக்குக் காத்திருந்து அவருடைய வழியைக் கைக்கொள், அப்போது நீ பூமியைச் சுதந்தரித்துக்கொள்வதற்கு உன்னையுயர்த்துவார், ஆகாதவர்கள் வேர் அறுப்புண்டுபோவதைப் பார்ப்பாய்.

௩௫ பெலவந்தனுமாய் முளைத்த நிலத்தில் நிற்கிற பச்சைமரத்தைப்போலத் தழைத்தவனுமாயிருக்கிற ஒரு ஆகாதவனைக் கண்டேன்.

௩௬ ஆனால் ஒழிந்துபோனான், இதோ அவனில்லை, அவனைத் தேடினேன், ஆனால் அவன் காணப்படவில்லை.

௩௭ நீ உத்தமனை நோக்கிச் செம்மையானவனைப் பார்த்திரு, ஏனென்றால் அம்மனுஷனுடைய பிற்காரியஞ் சமாதானம்.

௩௮ துரோகிகளோ ஏகமாய் அழிக்கப்படுவார்கள், ஆகாதவர்களின் பிற்காரியம் வேர் அறுப்புண்டுதல். ௭௩, சங்கீ ௰௭.

௩௯ ஆனால் நீதிமான்களுடைய இரட்சிப்பு இக்கட்டுக்காலத்திலே அவர்கள் பெலனான கர்த்தராலேவரும்.

௪௰ கர்த்தர் அவர்களுக்கொத்தாசைபண்ணி அவர்களை விடுவிப்பார், அவர்களை ஆகாதவர்களுடைய கைக்குத் தப்புவித்து ரட்சிப்பார், ஏனென்றால் அவரை நம்பியிருக்கிறார்கள்.

## ௩௮. சங்கீதம்.

(பாவங்களின் பாரத்தாலும் சத்துருக்களின் துன்பத்தாலும் வியாகுலப்பட்டுப் பண்ணின ஜெபம்.)

[நினைப்பூட்டுதலாகப் பாடின தாவீதின் சங்கீதம்.]

௧ கர்த்தாவே உம்முடைய கடுமையிலே என்னைக் கடிந்துகொள்ளாமலும், உம்முடைய உக்கிரத்திலே என்னைத் தெண்டியாதேயும். ௬, சங்கீ. ௨. எரேமியா. ௰, ௨௪.

௨ ஏனென்றால் உம்முடைய அம்புகள் எனக்குள் பட்டது, உமது கை என்மேல் இறங்கிற்று. யோபு ௬, ௪.

௩ உமது சினத்தால் என் மாம்சத்திலே ஆரோக்கியமில்லை, என் பாவத்தினால் என் எலும்புகளிற் சமாதானமில்லை.

௪ ஏனெனில் என் அக்கிரமங்கள் என் தலையின்மேலேறிப் பாரச்சுமையைப்போல எனக்குமிஞ்சின பாரமாயிற்று. புலம்ப. ௩, ௰௪.

௫ என் பயித்தியத்தினாலே என் புண்கள் நாற்றமெடுத்துச் சீழ்பிடித்துப்போயிற்று.

௬ மிகுதியாகவும் மடங்கி ஒடுங்கினேன், நாள்தோறுந் துக்கித்துத் திரிகிறேன்.

௭ ஏனெனில் என் குடல்கள் வெட்டையால் நிறைந்திருக்கிறது, என் மாம்சத்திலே சுகமில்லை.

௮ மிகுதியாகவும் பலனற்றுப்போய் நொறுக்கப்பட்டேன், என் இருதயத்தின் கொந்தளிப்பினாற் கதறுகிறேன்.

௯ ஆண்டவரே உமக்கு முன்பாக என் ஏக்கமெல்லாமிருக்கிறது, என் தவிப்பு உமக்கு மறைக்கப்பட்டதல்ல.

௰ என் இருதயங் குழம்பி அலைகிறது, என் பெலன் என்னைவிட்டு என் கண்களுடைய வெளிச்சந்தானும் என்னிலே இல்லாதே போயிற்று.

௰௧ என் சிநேகிதரும் என் தோழமாரும் என் வாதைக்கெதிரே தனியிருந்து என்னைச் சேர்ந்தவர்கள் தூரமாய் நிற்கிறார்கள். யோபு. ௰௯, ௰௩.

௰௨ என் பிராணனை வாங்கப்பார்க்கிறவர்கள் எனக்குக் கண்ணிகளை வைக்கிறார்கள், எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் கேடுபாடுகளைப் பேசி நித்தங் கபடங்களைச் சிந்திக்கிறார்கள்.

௰௩ நானோ செவிடனைப்போலே கேளாதவனும், வாய் திறவாத ஊமையனைப்போலவும் இருக்கிறேன்.

௰௪ கேளாமலுந் தன் வாயில் எதிர் உத்தரவில்லாமலுமிருக்கிற மனுஷனைப் போலானேன்.

௰௫ ஏனென்றால் கர்த்தாவே உமக்குக் காத்திருக்கிறேன், என் பராபரனாகிய ஆண்டவரே தேவரீர் மறு உத்தரவு கொடுப்பீர்.

௰௬ ஏனெனில் என்னிமித்தஞ் சந்தோஷப்படாதிருப்பார்களாகவென்றேன், என் கால் தள்ளாடும்போது என்மேற் பெருமைபடுவார்களே.

௰௭ ஏனெனில் நான் தள்ளம்பாற இன்னமானவன், என் நோவு எப்போதும் எனக்கு முன்பாகவிருக்கிறது.

௰௮ ஏனென்றால் என் அக்கிரமத்தையறிக்கையிட்டு என் பாவத்தினிமித்தம் விசாரப்படுகிறேன். ௩௨, சங்கீ. ௫.

௰௯ ஆனாலென் சத்துருக்கள் வாழ்ந்து பெலத்திருக்கிறார்கள், முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் பெருகியிருக்கிறார்கள்.

௨௰ நன்மைக்குத் தீமை சரிக்கட்டுகிறவர்கள் நான் நன்மையைப் பின்பற்றுகிறபடியால் என்னை விரோதிக்கிறார்கள்.

௨௧ கர்த்தாவே என்னைக் கைவிடாதேயும், என் பராபரனே எனக்குத் தூரமாயிராதேயும்.

௨௨ என் இரட்சிப்பாகிய ஆண்டவரே எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும்.

## ௩௯. சங்கீதம்.

(தாவீது இச்சீவியின் மாயையைத் தியானித்துப் பராபரனை மன்றாடிக்கொண்டது.)

[எதித்தூனென்கிற இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ நான் என் நாவினாலே பாவஞ்செய்யாதபடிக்கு நான் என் வழிகளைக் காத்து, ஆகாதவன் எனக்கு முன்பாயிருக்குமட்டும் என் வாயைக் கடிவாளத்தாற் பத்திரப்படுத்துவேனென்றேன். ௰௭, சங்கீ. ௩. ௱௪௧, சங்கீதம் ௩.

௨ நான் மவுனப்பட்டு ஊமையனாயிருந்து நன்மையானதைப் பேசாமல் அமர்ந்தேன், ஆனாலென் நோவு அதிகத்ததாயிற்று.

௩௮. சங்கீதம். ௰௪.

௩ என் இருதயம் எனக்குள் எரிந்தது, என் தியானத்தினாலே நெருப்பு வெகுவாயிருந்தது, அப்போது என் நாவினாலே விண்ணப்பஞ்செய்தேன்.

௪ கர்த்தாவே நான் எத்தனையாய் நிலையற்றவனென்று நான் உணர என் முடிவையும் என் நாட்களின் அளவு எம்மாத்திரம் என்கிறதையும் எனக்குத் தெரிவியும்.

௯௦, சங்கீதம். ௰௨.

௫ இதோ நாலு விரற்கடைகளாய் என் நாட்களையளவிட்டீர், என் ஆயுசு உமக்கு முன்பாக ஒன்றுமில்லாததுபோலிருக்கிறது, ஆயுள் நிற்கும் மனுஷனும் மாயையேயென்கிறது நிச்சயம், சேலா. ௬௨, சங்கீ. ௰. ௱௪௪, சங்கீதம். ௪.

௬ வேஷமாகவே மனுஷன் திரிகிறான், மாயையாகவே அமளிபண்ணுகிறார்கள், ஆஸ்தியைச் சேர்க்கிறான், ஆனால் ஆர் அவைகளை வாரிக்கொள்ளுவாரென்றறியான்.

௭ இப்போதும் ஆண்டவரே எதுக்கெதிர்பார்ப்பேன், என் நம்பிக்கை உம்முடையமேலிருக்கிறது. ௨௫, சங்கீ. ௨.

௮ என்னை என் மீறுதல்களுக்கெல்லாம் நீங்கலாக்கும், என்னைப் பயித்தியகாரனுடைய நிந்தனையாக வைக்காதேயும்.

௭௯, சங்கீதம். ௪.

௯ என் வாயைத் திறவாமல் மவுனமாயிருக்கிறேன், ஏனெனில் தேவரீர் அதைச்செய்தீர்.

௰ உம்முடைய வாதையை என்னிலிருந்து எடுத்துப்போடும், உம்முடைய கரத்தின் அடிகளால் நான் தொய்ந்துபோனேன்.

௰௧ நீர் அக்கிரமத்தினிமித்தம் மனுஷனைக் கடிந்துகொண்டு தண்டிக்கிறபோது அவன் வனப்பைப் பொட்டரிப்பாய் அழியப் பண்ணுகிறீர், மெய்யாக எந்த மனுஷனும் மாயை, சேலா.

௰௨ கர்த்தாவே என் ஜெபத்தைக் கேட்டு என் கூப்பிடுதலுக்குச் செவிகொடும், என் கண்ணீருக்கு மவுனமாயிராதேயும், ஏனென்றால் உமக்கு முன்பாக நான் என்னுடைய எல்லாப் பிதாக்களைப்போலே அந்நியனும் பரதேசியுமாயிருக்கிறேன். ௯௰௪, சங்கீ. ௰௪. ௧. பேதுரு. ௨, ௰௧. ௩. லே. ௨௫, ௨௩. ௧. நாளாகமம். ௨௯, ௰௫. எபிரேயர். ௰௧, ௰௩.

௰௩ நான் இனி இராமற்போகுமுன்னே இலகுவடைவதற்காக என்னைவிட்டு விலகும். யோபு. ௰, ௨௰ முதல்.

## ௪௰. சங்கீதம்.

(குறையற்ற கீழ்ப்படிதலோடே தம்மைத் தாமே பலியிடும் மத்தியஸ்தனுடைய பாடுகளையுஞ் சுவிசேஷத்தின் பிரசங்கத்தையுஞ் சத்துருக்களுக்கு வரும் இலச்சையையும் விசுவாசிகளுக்கு வரும் மகிமையையுங் காண்பிக்கிற தீர்க்கதரிசனம்.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

கர்த்தருக்குக் காத்துக் காத்திருந்தேன், அப்போது அவர் என் அண்டைக்குச் சாய்ந்து என் கூப்பிடுதலைக் கேட்டு,

௨ என்னைப் பயங்கரமான குழியிலும் உளையான சேற்றிலுமிருந்தேறப்பண்ணி என் கால்களைக் கன்மலையின்மேல் நிறுத்தி என் அடிகளையுறுதிப்படுத்தி, ௩௩, சங்கீ. ௯.

௩ எங்கள் பராபரனைத் துதிக்கும் புதுப்பாட்டை என் வாயிலே கொடுத்தார், அநேகர் அதைக் கண்டு பயந்து கர்த்தரை நம்புவார்கள். ௩௩, சங்கீதம். ௧.

௪ அகந்தைக்காரரையும் பொய்க்குச் சாய்கிறவர்களையும் நோக்காமற் கர்த்தரைத் தன் நம்பிக்கையாக வைக்கிற மனுஷன் பாக்கியவான். ௬௪, சங்கீதம். ௩.

௫ என் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் எங்கள்மேல் உம்முடைய அதிசயங்களையும் உம்முடைய யோசனைகளையும் பெருகப்பண்ணினீர், தேவரீருக்கொப்பிடுதலில்லை, நான் அவைகளை அறிவித்துச் சொல்லியும் அவைகள் எண்ணிக்கைக்கு மேலானவைகள். ௭௩, சங்கீதம். ௭.

௬ பலியையுங் காணிக்கையையும் நீர் விரும்பாமற் செவிகளையெனக்குக் காயத்தம் பண்ணினீர், சருவாங்கதகன பலியையும் பாவம்போக்கும் பலியையும் நீர் கேட்டதில்லை. எபிரே. ௰, ரு. ௰. ஏசா. ௫௰, ௫௩.

௭ இதோ வருகிறேனென்று அப்போது சொன்னேன், புஸ்தகச்சுருளில் என்னைக்குறித்தெழுதியிருக்கிறது. யோவான். ௫, ௩௯. ௪௬.

௮ என் பராபரனே உமக்குப் பிரியமானதைச் செய்ய விரும்புகிறேன், உமது நியாயப்பிரமாணம் என் உள்ளத்துக்குள்ளிருக்கிறது. மத். ௨௬, ௩௯. யோவா. ௪, ௩௪.

௯ திரளான சபையிலே நீதியைப் பிரசங்கிக்கிறேன், இதோ கர்த்தாவே என் உதடுகளை மூடேனென்கிறதை நீர் அறிவீர். ௩௫, சங்கீதம். ௰௮.

௰ உம்முடைய நீதியை என் இருதயத்துக்குள் மறையேன், உமது சத்தியத்தையும் உமது இரட்சிப்பையுஞ் சொல்லுகிறேன், உமது கிருபையையும் உமது உண்மையையும் திரளான சபைக்கு மறியாதபடிக்கொளியேன்.

௰௧ கர்த்தாவே தேவரீர் உம்முடைய இரக்கங்களை எனக்குக் கிடையாமற்போகப்பண்ணாதேயும், உமது கிருபையும் உமது உண்மையும் எப்போதும் என்னைக் காப்பாற்றக்கடவது.

௰௨ ஏனென்றால் எண்ணிக்கைக்கடங்காத பொல்லாப்புகள் என்னைச் சூழ்ந்து என்பார் எண்ணிக்கைக்கடங்காத என்னுடைய அக்கிரமங்கள் என்னைத் தொடர்ந்து பிடித்தது, அவைகள் என் தலையின் மயிர்களிலும் அதிகமாயிருக்கிறதினால் என் இருதயம் என்னைவிட்டுப் போயிற்று. ௩௮, சங்கீதம். ௫. ௩.

௰௩ கர்த்தாவே என்னை விடுவித்தருளும், கர்த்தாவே எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும். ௨௨, சங்கீ. ௨௰.

௰௪ என் ஆத்துமாவை அழிக்கத் தேடுகிறவர்கள் ஏகமாய் வெட்கி நாணி என் தீமையை விரும்புகிறவர்கள் பின்னிட்டு இலச்சையடையக்கடவார்கள். ௭௰, சங்கீதம். ௩ முதல்.

௰௫ என் பேரிலே ஆகா ஆகா வென்கிறவர்கள் தாங்கள் அடையும் வெட்கமான பலனாலே திடுக்கிடக்கடவார்கள். ௩௫, சங்கீ. ௨௧ முதல்.

௰௬ உம்மைத் தேடுகிற அனைவரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களாக, உம்முடைய இரட்சிப்பைச் சிநேகிக்கிறவர்கள் எப்போதுங் கர்த்தர் மகிமைப்படக்கடவாரென்பார்களாக.

௰௭ நான் சிறுமையும் எளிமையுமானவன், கர்த்தரோவென்னில் எனக்காக நினைவாயிருப்பார், தேவரீரே என் துணையும் என்னை விடுவிக்கிறவருமாயிருக்கிறீர், என் பராபரனே தாமதியாதேயும். ௩௪, சங்கீ. ௬. ௭௰, சங்கீதம். ௨௨.

## ௪௧. சங்கீதம்.

(தாவீது தரித்திரனுக்கிரங்குகிறவனின் பாக்கியத்தையும் யூதாவாற் காட்டிக்கொடுக்கப்பட்ட கிறிஸ்துவினுடைய உபத்திரவங்களுக்கு முன்னடையாளமான தன் உபத்திரவங்களையுங்குறித்துப் பாடினது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ சிறுமைப்பட்டவன்மேலே கவனிப்பான் சிந்தையுள்ளவன் பாக்கியவான், கர்த்தர் அவனைத் தீங்கு நாளிலே விடுவிப்பார். வாக்கியம். ௰௪, ௨௧.

௨ கர்த்தர் அவனைத் தற்காத்து அவனை உயிரோடே வைப்பார், பூமியின்மேல் பாக்கியவானாயிருப்பான், அவனை அவன் சத்துருக்களின் மனதுக்கு ஒப்புக்கொடார்.

௩ கட்டிலின்மேல் பிணியாய்க் கிடக்கிற அவனைக் கர்த்தர் தாங்குவார், அவனுடைய வியாதியிலே அவன் படுக்கையையெல்லாம் மாறப்பண்ணுவீர்.

௪ கர்த்தாவே என்மேலிரங்கும், என் ஆத்துமாவைக் குணமாக்கும், ஏனென்றால் உமக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேனென்று நான் சொன்னேன். ௬, சங்கீ. ௨. ௫௧, ௬.

௫ அவன் எப்போது சாவான், எப்போது அவன் பேர் அழியுமென்று என் சத்துருக்கள் எனக்குப் பொல்லாப்பாய்ச் சொல்லுகிறார்கள்.

௬ என்னையொருவன் பார்க்கவந்தால் அவத்தம் பேசுகிறான், அவன் இருதயம் அக்கிரமத்தைப் பொறுக்கிக்கொண்டு வெளியே போய் அதைச் சொல்லுகிறான்.

௭ என்மேல் ஏகமாய் முணுமுணுக்கிறார்கள், என் பகைஞரெல்லாரும் எனக்கு விரோதமாயிருந்து எனக்குப் பொல்லாப்பை நினைத்து,

௮ பேலியாளின் கர்மம் அவனுக்குக் கொட்டிக்கொண்டிருக்கிறது, கிடக்கிற அவன் இனி எழுந்திருப்பதில்லையென்கிறார்கள்.

௯ என்னோடே சமாதானமாயிருந்தவனும் நான் நம்பினவனும் என்னுடைய அப்பத்தைப் போசித்தவனுமாகிய மனுஷனும் என்மேல் தன் குதிகாலை மிகுதியுமெடுத்தான். யோவான். ௰௩, ௰௮.

௰ ஆனால் கர்த்தாவே தேவரீரெனக்கிரங்கி நான் அவர்களுக்குச் சரிக்கட்ட என்னையெழுந்திருக்கப்பண்ணும்.

௰௧ என் சத்துரு என்மேல் கெம்பீரிக்காமற்போவதினாலே என்மேலே பிரியமாயிருக்கிறீரென்கிறதையறிவேன்.

௰௨ நானும் உண்மையாயிருக்கிறதினாலே நீரென்னைத் தாங்கி என்னை என்றென்றைக்கும் உம்முடைய முகத்துக்கு முன்பாக நிலைநிறுத்துவீர்.

௰௩ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அநாதியாய் என்றென்றைக்குமுள்ள சதா காலங்களிலுந் தோத்திரிக்கப்பட்டவர், ஆமென் ஆமென். ௭௨, சங்கீதம். ௰௮. ௰௯. ௮௯, சங்கீதம். ௫௨. ௱௬, சங்கீ. ௪௮.

## ௪௨. சங்கீதம்.

(தாவீது தெய்வ ஆராதனைக்குப் பங்கில்லாத பரதேசியானதினிமித்தங் கெஞ்சிப் பராபரனை நம்பின செபத்தியானம்.)

[கோராகின் புத்திரருக்குள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட போதகச் சங்கீதம்.]

௧ மான் தண்ணீர் நதிகளின்மேல் வாஞ்சையாய்க் கதறுமாட்டோலே என் ஆத்துமா உம்மேலே வாஞ்சையாய்க் கதறுகிறது பராபரனே.

௨ என் ஆத்துமா ஜீவனுள்ள தெய்வமாகிய பராபரன்மேலே தாகமாயிருக்கிறது, நான் எப்போ பிரவேசித்துப் பராபரனுடைய சந்நிதியிலே காணப்படலாம்.
௬௩, சங்கீ. ௨. ௱௪௩, சங்கீ. ௬.

௩ உன் பராபரன் எங்கேயென்று என்னோடே நாள்தோறுஞ் சொல்லப்படுகையால் இரவும் பகலும் என் கண்ணீர் எனக்கப்பமாயினது. ௭௯, சங்கீ. ௰.

௪ இவைகளை நான் நினைத்துக்கொண்டு எனக்குள்ளிருக்கும் என் ஆத்துமாவை ஊற்றிப்போடுகிறேன், ஏனென்றால் முந்தி நான் கும்புக்குள்ளே நடந்துவந்து பண்டிகையாசரிக்கிற கூட்டத்தினுடைய கெம்பீரமுந் துதியுமான சத்தத்துடனே பராபரனுடைய வீடுமட்டும் ஏகமாய் ஏகுவேனே.

௫ என் ஆத்துமாவே ஏன் முறிந்துபோய் என்னிலே கொந்தளிக்கிறாய்? பராபரனுக்குக் காத்துக்கொண்டிரு, ஏனென்றால் இன்னம் அவரை அவர் சமுகத்தினுடைய இரட்சிப்புகளினிமித்தந் துதிப்பேன். ௪௩, ௫.

௬ என் பராபரனே, என்னில் என் ஆத்துமா முறிந்துகொண்டிருக்கின்றது, ஆகையால் யோர்தான் தேசத்திலும் எர்மோன் மலைகளிலுஞ் சிறுமலையிலுமிருந்து உம்மை நினைக்கிறேன்.

௭ உம்முடைய மதகுகளின் இரைச்சலால் ஆழந்தையாழங் கூப்பிடுகிறது, உம்முடைய வெள்ளங்களும் உமது அலைகளுமெல்லாம் என்மேலே புரளுகிறது.

௮ ஆனாலும் பகற்காலத்திலே கர்த்தர் தம் கிருபையைக் கட்டளையிடுகிறார், இராக்காலத்தில் என் ஜீவனுடைய பராபரனை விண்ணப்பஞ்செய்யும் அவருடைய பாட்டு என்னோடிருக்கும்.

௯ நானென் கன்மலையாகிய பராபரனோடே ஏன் என்னை மறக்கிறீர்? சத்துரு என்னை

யொடுக்குகிறதினாலே நான் ஏனகிக்கிறதுது திரியவேணுமென்கிறேன. ௪௩, சங்கீ. ௨.

௰ உன் பராபரன எங்கேயென்று என சத்துருக்கள நான்தோறும் என்னோடே சொலலி என்னைநிந்திக்கிறது என்னெலும புகளையுருவுமவாளையாய் எனக்கிருக்கிறது.

௰௧ என ஆத்துமாவே, ஏன முறிந்துகொண்டிருக்கிறாய? ஏன எனனிற்கொந்தளிக்கிறாய? பராபரனுக்குக்காத்துக்கொண்டிரு, ஏனெனில இன்னம அவரையென முகத்தின குறையற்ற இரட்சிப்பென்றும என பராபரனென்று துதிப்பேன. ௯. வசனம.

௪௩, சங்கீதம. ௫.

## ௪௩. சங்கீதம்.

[முந்தின சங்கீதத்துக்கொத்த சங்கீதம.]

பராபரனே, நீரென்னை நியாயமவிசாரித்துச சன்மார்க்கமில்லாத சாதியென்னை விலக என்வழக்கை வழக்காடிச்சூதும அநியாயமுமான மனுஷனுக்கென்னைத தப்புவியும. ௨௯, சங்கீ. ௧.

௨ ஏனெனில்தேவரீர்என் பெலனாகியபராபரன, ஏனென்னைத் தள்ளிவிடுகிறீர்? சத்துருவென்னையொடுக்குகிறதினாலே நான ஏனகிக்கிறதுதுத்திரியவேணும? ௪௨, சங்கீ. ௰.

௩ உமமுடையவெளிச்சத்தையுமஉமது சத்தியத்தையும அனுப்பும, அவைகளென்னைநடத்தி என்னையும பரிசுத்தபபருவதத்துக்கும உமது வாசஸ்தலங்களுக்குங கொண்டுபோகவும. ௰௫, சங்கீ. ௧.

௪ நானபராபரனுடையபீடத்தண்டைக்கும என களிகூருதலான மகிழ்ச்சியின பராபரனண்டைக்கும பிரவேசித்து என தெயவமாகிய பராபரனே, உம்மைச்சுரமண்டலத்தாலே துதிக்கவுந்தாமே.

௫ என ஆத்துமாவே, ஏன முறிந்துகொண்டிருக்கிறாய? ஏன எனனிற்கொந்தளிக்கிறாய? பராபரனை நமபு, ஏனெனில இன்னம அவரையென முகத்தின குறையற்ற இரட்சிப்பென்றும என பராபரனென்று துதிப்பேன. ௪௨, சங்கீ. ௬. ௰௨.

## ௪௪. சங்கீதம.

(சவை பராபரன முன தனக்குச்செய்த அனுகூலங்களை நினைத்துக்கொண்டு இப்போது அனுபவிக்கிற நிர்ப்பந்தத்தினிமித்தங்கொஞ்சுகிறது.)

[கோராகின புத்திரரில இராகத்தலைவனுக்குக் கொப்புவிக்கப்பட்டபோதகசங்கீதம.]

பராபரனே பூருவ நாட்களாகிய தங்கள நாட்களில நீர் நடப்பித்த கிரியையை எங்கள பிதாக்கள எங்களுக்கு விவரித்தார்கள, அதை யெங்கள காதுகளாலே கேட்டோம.

௨ தேவரீர் உமமுடையகையினாலே சாதிகளைத்துரத்தி இவர்களைநாட்டி சனசந்திகளைத் துன்பப்படுத்தி அவைகளைத்தள்ளிவிட்டீர்.

௩ ஏனெனில அவர்கள தங்களபட்டயத்தாலே தேசத்தைக் கட்டிக்கொண்டதில்லை, அவர்கள புயமுமல்ல உமமுடைய வலதுகரமும உமமுடையபுயமும உமமுடைய முகத்தின வெளிச்சமும அவர்களையிரட்சித்தது, ஏனெனில அவர்கள்மேலேபிரியமாயிருந்தீர்.

௪ பராபரனே தேவரீரே யென இராசாவானவர் யாக்கோபின குறையற்ற இரட்சிப்பைக்கட்டளையிடும.

௫ உமமாலே எங்களசத்துருக்களை முட்டுவோம, எங்களமேல்வீழுகிறவர்களை உமமுடைய நாமத்தினாலே மிதிப்போம.

௬௰, சங்கீ. ௰௪. ௱௮, சங்கீ. ௰௪.

௬ ஏனெனில என வில்லைநம்பேன, என பட்டயம என்னையிரட்சிப்பதுமில்லை.

௭ நீரோவெனில எங்கள சத்துருக்களுக்கு எங்களை நீங்கலாக்கிரட்சித்துஎங்களைப் பகைக்கிறவர்களை வெட்கப்படுத்தினீர்.

௮ பராபரனுக்குள நித்தம மேன்மை பாராட்டுகிறோம, உமமுடைய நாமத்தை யென்றென்றைக்குந்துதிப்போம, சேலா.

௯ இப்போதோவெனில நீரெங்களைச் சேனைகளுடனே புறப்படாமலஎங்களைத்தள்ளிவிட்டுநாணப்பண்ணுகிறீர். ௱௮, சங. ௰௨.

௰ எங்களைச்சத்துருவுக்கிடைந்து பின்னிட்டுத்திரும்பப்பண்ணுகிறீர், எங்கள பகைஞர்தங்களுக்கென்று கொள்ளையாடுகிறார்கள.

௰௧ நீரெங்களை ஆடுகளைப்போல இரையாக ஒப்புக்கொடுத்துச்சாதிகளுக்குள்ளே எங்களைச்சிதறடிக்கிறீர்.

௰௨ உமமுடைய சனத்தை இலவசமாக விற்கிறீர், அவர்களைக் கிரயப்படுத்துகிறதினாலே வரப்பட்டாதே போகிறீர்.

௰௩ எங்களை யெங்கள அயலாருக்கு நிந்தையும எங்கள சுற்றுப்புறத்தாருக்குப் பரியாசமுஞ் சக்கந்தமுமாக வைக்கிறீர்.

௭௯, சங்கீ. ௪.

௰௪ எங்களைச்சாதிகளுக்குள்ளே பழமொழியாகவுஞ் சனசந்தங்களுக்குள்ளே தலை துலுக்குதலாகவு மவைக்கிறீர்.

௰௫ சத்துருவையும குரோதத்தீர்த்துக் கொள்ளுகிறவனையுந் தொட்டு நிந்தித்துத் தூஷணிக்கிறவனுடைய சத்தத்தினாலே,

௰௬ நித்தம என இலச்சை எனக்குமுனபாகவிருக்கிறது, என முகத்தின வெட்கம என்னைமூடுகிறது.

௰௭ இதெல்லாம எங்களுக்கு வந்திருந்தும உமமை நாங்கள மறந்ததுமில்லை உமமுடைய உடம்படிக்கைக்குத் துரோகம்பண்ணினதுமில்லை.

௰௮ நீரோங்கலை அசம்பங்களுள்ள தலத்திலே நசுக்கி மரண நிழலினாலே எங்களை மூடியிருந்தும்,

௰௯ எங்கள் இருதயம் பின்வாங்கினதுமில்லை; எங்கள் காலடி உம்முடைய பாதையைவிட்டு விலகினதுமில்லை.

௨௰ நாங்கள் எங்கள் பராபரனுடைய நாமத்தை மறந்து எங்களுடைய கைகளை அந்நிய தேவருக்கு விரித்திருந்தோமானால்,

௨௧ பராபரன் அதை ஆராய்ந்து விசாரியாதிருப்பாரோ? ஏனென்றால் அவர் இருதயத்தின் அந்தரங்கங்களை அறிந்திருக்கிறார்.

௨௨ ஆனால் உம்முடைய நிமித்தம் நாங்கள் நாடோறும் கொலைசெய்யப்பட்டு, அடிக்கப்படும் ஆடுகளைப்போலே எண்ணப்பட்டிருக்கிறோம். ரோமர். ௮. ௩௬.

௨௩ ஆண்டவரே விழித்துக்கொள்ளும், ஏன் நித்திரைபண்ணுகிறீர், எங்களை என்றைக்குந் தள்ளிவிடாமல் எழுப்பும். மத்தேயு, ௮, ௨௪, ௨௫.

௨௪ ஏன் உம்முடைய முகத்தை மறைத்து எங்கள் சிறுமையையும் எங்கள் ஒடுக்கத்தையும் மறப்பீர்.

௨௫ ஏனென்றால் எங்கள் ஆத்துமா புழுதிமட்டாகக் குனியப்பட்டு எங்கள் வயிறு தரையோடொட்டியிருக்கிறது.

௨௬ எங்களுக்கொத்தாசையாக எழுந்திருந்து உம்முடைய கிருபையினிமித்தம் எங்களை மீட்டுவிடும்.

## ௪௫. சங்கீதம்.

(ஞானமணவாளனாகிய கிறிஸ்துவையும் யூதசாதியாரும் புறச்சாதியாருமாகிய விசுவாசிகளின் சபையென்ற அவருடைய ஞானமணவாட்டியையுங் காண்பிக்கிற தீர்க்கதரிசனம்.)

[அறுநரம்பு கின்னரத்திலே வாசிக்கக் கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட நேசப்பாட்டாகிய போதகசங்கீதம், உன்னதப்பாட்டு.]

௧ என்னிருதயம் நல்லவிசேஷத்தையூற்றும், நான் கவிகட்டுகிறது இராசாவின்பேரிலேதானென்கிறேன், என் நாவுதேறின கணக்கனுடைய எழுத்தாணி, கொலோ. ௩, ௰௬.

௨ எல்லாமனுஷபுத்திரரிலும் மகா அழகாயிருக்கிறீர், கிருபை உம்முடைய உதடுகளில் ஊற்றியிருக்கிறது, ஆகையாற் பராபரன் உம்மை என்றென்றைக்கும் ஆசீர்வதிக்கிறார். உன்னதப்பா. ௫, ௰. ஆக். ௪. ௨௨.

௩ சவுரியவானே, உமது மகிமையும் உமது மகத்துவமுமாகிய உம்முடைய பட்டயத்தை நீர் உம்முடைய அரையிலே கட்டிக்கொண்டு,

௪ சத்தியத்தினிமித்தமாகவும் நீதியான சாந்தத்தினிமித்தமாகவும் உமது மகத்துவத்திலே செயமாய் ஏறிவாரும், உமது வலதுகரம் பயங்கரமானவைகளை உமக்குப் படிப்பிக்கும். அறிவிப்பு. ௰௯, ௰௪—௫.

௫ உம்முடைய அம்புகள் கூர்மையாயிருக்கிறது, சனசதளங்கள் உமக்குக் கீழ்விழுவார்கள், அவைகள் இராசாவுடைய சத்துருக்களின் இருதயத்துக்குட்படும்.
௱௰, சங்கீதம். ௬.

௬ பராபரனே, உம்முடைய இராசாசனம் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாக நிற்கும், உமது இராசரியத்தின் செங்கோல் செம்மையான செங்கோலாயிருக்கிறது. தானி. ௭, ௰௪. எபிரேயர், ௧, ௮. ௯.

௭ நீதியைச்சிநேகித்து அக்கிரமத்தைப் பகைத்திருக்கிறீர், ஆகையினாலே பராபரனே உம்முடைய பராபரன், உமது தோழரைப்பார்க்கிலும் உம்மை மகிழ்ச்சியின் எண்ணெயினாலே அபிஷேகம் பண்ணினார். யோவான், ௩, ௩௪. ௩௫. அப். ௰, ௩௮.

௮ நீர் மகிழ்ச்சிபொருந்திய தந்த அரண்மனைகளிலிருந்து புறப்படுகையில் உமது வஸ்திரங்களெல்லாம் வெள்ளைப்போளும் சந்தனங்காசியாவுமான வாசனையாயிருக்கிறது,

௯ உமது நாயகிகளுக்குள்ளே அரசரின் குமாரத்திகளுண்டு, இராசாத்தி உம்முடைய வலதுபாரிசத்திலே ஓப்பீரின் தங்கம் அணிந்தவளாய் நிற்கிறாள். உன். ௬, ௭. ௮.
அறிவிப்பு. ௰௯, ௭. ௯. ௨௧, அதி. ௨.

௰ குமாரத்தியே, நீ கேட்டுப்பார்த்து உன் செவியைச்சாய்த்து உன் சனத்தையும் உன் தகப்பன் வீட்டையும் மறந்துபோ.
ஆதி. ௰௨. ௧.

௰௧ அப்போது இராசா உன் அழகுக்கு விருப்பமாவார், ஏனென்றால் அவர் உன் ஆண்டவராயிருக்கிறார், ஆகையால் அவரைப் பணிந்துகொள். உன்னதப்பா. ௪, ௧-௫.

௰௨ அப்போது தீருகுமாரத்தியுஞ் சனத்தின் ஐசுவரியவான்களும் வெகுமானங்கொண்டுவந்து உன் முகத்துக்குமுன்பாக வருந்துவார்கள். ௭௨, சங். ௰. அறி. ௨௧, ௨௪.

௰௩ இராசாவின் குமாரத்தி உள்ளாகமுற்றிலும் மகிமையானவள், அவள் உடுப்பு பொற்சரிகை அலங்காரமானது. ௧, பேது. ௩, ௩. ௪.

௰௪ சித்திரத்தையலாடைகளுடனே இராசாவண்டைக்குக் கொண்டுவரப்படுவாள், அவள் தோழிகளாகிய கன்னியாஸ்திரிகள் அவள் புறகாலே வருவார்கள். அவர்கள் உன்னண்டைக்குக் கூட்டிக்கொள்ளப்படுவார்கள்.

௰௫ மகிழ்ச்சியோடும் களிகூருதலோடும் கொண்டுவரப்பட்டு இராசாவின் அரண்மனைக்குட் பிரவேசிப்பார்கள்.

௰௬ உமது பிதாக்களுக்குப் பதிலாக உன் பிள்ளைகளிருப்பார்கள். அவர்களைப் பூமியெங்கும் பிரபுக்களாக வைப்பாய்.

௰௭ உம்முடைய நாமத்தை எல்லாத் தலைமுறைகளிலும் பிரஸ்தாபப்படுத்துவேன். இவைகள் நிமித்தமாகச் சனசதளங்கள் உம்மை என்றென்றைக்குமுள்ள சதா காலங்களிலும் துதிப்பார்கள்.

## ௪௬. சங்கீதம்.

(பராபரனுடைய மறைவிலிருக்கிற சபை யெல்லாத் துன்பங்களிலும் நிலைநின்று தேவ இரட்சிப்பை யேற்றவேளையில் காணுமென்பது.)

[அல்மோத்தில் வாசிக்கக் கோராகின புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட பாட்டு.]

பராபரன் நமக்கடைக்கலமும் பெலனும் நெருக்கங்களிற் பரிபூரணமாய்க் கிடைக்கிற அனுகூலருமானவர். ௯௧, சங்கீ. ௧. ௨. வாக்கியம். ௰அ, ௰.

௨ ஆகையாற் பூமிநிலைமாறினாலும் மலைகள் நடுச்சமுத்திரங்களிலே சாய்ந்தாலும்,

௩ அவைகளின் சலங்கள் கொந்தளித்துப் பொங்கி, அவைகள் பெருக்கினாலே பருவதங்கள் அதிர்ந்தாலும் பயப்படோம். சேலா. ஆக்கா. ௨௧, ௨௫. ௨௬.

௯, சங்கீதம். ௭. ௨௭, சங்கீதம். ௯.

௪ ஆறும் அதின் நீர்க்கால்களும் பராபரனுடைய பட்டணத்தையும் உன்னதமானவருடைய கூடாரங்களின் பரிசுத்த தலத்தையுஞ் சந்தோஷிப்பிக்கும். சகரியா. ௰௪, ௮.

௫ பராபரன் அதின் நடுவிலிருக்கிறார் அது அசையாது. விடியற்காலமவந்தகையிற் பராபரன் அதற்குச் சகாயம்பண்ணுவார்.

௬ சாதிகள் கொந்தளித்து இராச்சியங்கள் அசைந்தது, அவர் தமது முழக்கத்தாற் சத்தமிடுகையிற் பூமியுருகும்.

௭ சேனைகளுடைய கர்த்தர் நம்மோடு கூடவிருக்கிறார். யாக்கோபுடைய பராபரன் நமக்குயர்ந்த அடைக்கலமானவர். சேலா. றோமர். ௮, ௩௬.

௮ பூமியிலே பாழ்க்கடிக்குதலை நடப்பிக்கிற கர்த்தருடைய செய்கைகளை வந்துபாருங்கள். ௬௬, சங்கீதம். ௫.

௯ அவர் பூமியின் கடைமுனைமட்டும் யுத்தங்களை ஓயப்பண்ணுகிறவர், வில்லையொடித்து ஈட்டியைமுறிக்கிறார், இரதங்களை நெருப்பினாலே சுட்டெரிக்கிறார். ௭௬, சங்கீ. ௪.

௰ நீங்கள் ஓய்ந்திருந்து நாம் பராபரனென்றறியுங்கள், சாதிகளுக்குளுயர்ந்திருப்போம் பூமியிலேயுயர்ந்திருப்போம்....

௰௧ சேனைகளுடைய கர்த்தர் நம்முடனே கூடவிருக்கிறார், யாக்கோபுடைய பராபரன் நமக்குயர்ந்த அடைக்கலமானவர். சேலா.

## ௪௭. சங்கீதம்.

(பரமண்டலங்களுக்கேறி பூமியின்மேலெங்கும் இராசரிக்கம்பண்ணுபவரான கிறிஸ்துவுக்கடுத்த தீர்க்கதெரிசனம்.)

[கோராகின புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட சங்கீதம்.]

சகல சனசதளங்களே, கைகொட்டிப் பராபரனுக்குக் கெம்பீர சத்தமாய் ஆர்ப்பரியுங்கள்.

௨ ஏனெனில் உன்னதமானவராகிய கர்த்தர் பயங்கரமானவரும், பூமியின் மேலெங்கும் பெரிய இராசாவுமாயிருக்கிறார். ௭௬, சங்கீதம் ௮.

௩ நமக்குச் சனசதளங்களையும் நம்முடைய கால்களுக்குச் சாதிகளையுங் கீழ்ப்படுத்துவார்.

௪ நமக்குத் தாருசிநேகித்த யாக்கோபின் முக்கியமாகிய நம்முடைய சுதந்தரத்தைத் தெரிந்துகொடுப்பார். சேலா.

௫ பராபரன் ஆர்ப்பரிப்போடும், கர்த்தர் எக்காளசத்தத்தோடுமேறுகிறார்.

௬ பராபரனைக் கீர்த்தனத்தினமேற் கீர்த்தனம்பண்ணுங்கள். நம்முடைய இராசாவைக் கீர்த்தனத்தின்மேற் கீர்த்தனம்பண்ணுங்கள். ஏசாயா. ௰௨, ௫. ௬.

௭ ஏனெனிற் பராபரன் பூமியனைத்துக்கும் இராசா, போதகசங்கீதத்தால் அவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்.

௮ பராபரன் சாதிகள்மேல் இராசரிகம்பண்ணுகிறார், பராபரன் தம்முடைய பரிசுத்த ஆசனத்தின்மீதிலுட்காருகிறார்.

௯ சனசதளங்களின் பிரபுக்கள் ஆபிரகாமுடைய பராபரனின் சனமாயச் சேர்க்கப்படுகிறார்கள், ஏனெனிற் பூமியின் கேடயங்கள் பராபரனுடையது, அவர் மிகுதியுமுயர்ந்தவர். ௮௨, சங்கீதம். ௮.

## ௪௮. சங்கீதம்.

(கிறிஸ்துவினுடைய சபையென்ற எருசலேம் பட்டணத்தினுடைய மகிமை.)

[கோராகின புத்திரருக்கொப்புவிக்கப்பட்ட சங்கீதப்பாட்டு.]

நம்முடைய பராபரனுடைய பட்டணத்திலுந் தம்முடைய பரிசுத்த பருவதத்திலுங் கர்த்தர் பெரியவரும் மிகுதியாயத் தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார்.

௱௪௫, சங்கீ. ௩.

௨ சீயோன்பருவதமும் வடபுறங்களிலுள்ள மகா இராசாவின் பட்டணமும் வடி

யமான சீயோன் பர்வதம் சருவபூமியின் மகிழ்ச்சியுமாயிருக்கிறது. மத். ௫. ௩௫.

௩ அதின் அரண்மனைகளில் பராபரன் உயர்ந்த அடைக்கலமாக அறியப்பட்டிருக்கிறார்.

௪ ஏனெனில் இதோ இராசாக்கள் கூடிக்கொண்டு ஏகமாய்க் கடந்துவந்தார்கள்.

௫ அவர்கள் அதைப் பார்க்கும்போது ஆச்சரியப்பட்டுக் கலங்கித் தீவிரமாய்த் தெறித்துப்போனார்கள்.

௬ நடுக்கமும் கெர்ப்பவதியின் வேதனைக்குச் சரியான வேதனையும் அங்கே அவர்களைப் பிடித்தது.

௭ கீழ்க்காற்றினால் தற்சீசின் கப்பல்களை உடைக்கிறீர். ஏசாயா. ௨. ௰௨—௰௭.

௮ நாம் கேட்டிருக்கிறதற்குச் சரியாய்ச் சேனைகளுடைய கர்த்தரின் பட்டணத்திலே கண்டோம், நம்முடைய பராபரனுடைய பட்டணத்திலேதானே பராபரன் அதை என்றென்றைக்கும் உறுதிப்படுத்துவார். சேலா.

௯ பராபரனே உம்முடைய தேவாலயத்தின் நடுவிலே உமது கிருபையைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறோம்.

௰ பராபரனே உமது நாமம் எப்படியிருக்கிறதோ அப்படி உமது புகழ்ச்சியும் பூமியினுடைய கடையாந்தரங்கள் பரியந்தமிருக்கின்றது, உமது வலதுகரம் நீதியால் நிறைந்திருக்கிறது.

௰௧ உம்முடைய நியாயத்தீர்ப்புகளினிமித்தம் சீயோன் பர்வதம் மகிழ்ந்து யூதாவின் குமாரத்திகள் களிகூருவதாக.

௰௨ சீயோனைச் சுற்றி அதை வளைந்து வாருங்கள், அதின் கோபுரங்களை யெண்ணுங்கள்.

௰௩ நீங்கள் பிற்சந்ததிக்கு விவரிப்பதற்காக அதின் அலங்கத்தின் மேல் உங்கள் மனதைவைத்து அதின் அரண்மனைகளை யொவ்வொன்றாய்க் கவனியுங்கள்.

௰௪ ஏனெனில் இந்தப் பராபரன் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் நம்முடைய பராபரனாயிருக்கிறார், அவர் நம்மை மரணத்தைக் கடக்க அழைத்துக்கொண்டுபோவார்.

## ௪௯. சங்கீதம்.

(நிலவரங்களை யொடுக்குகிற பிரவஞ்சத்தாருடைய வாழ்வும் மகிமையும் அனித்தியமென்பது.)

[கோராகின் புத்திரரில் உள்ள இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட சங்கீதம்.]

இதைக் கேளுங்கள் சனத்தலங்களாகிய நீங்களெல்லாரும் இதைக் கேளுங்கள்.

௨ சிறியோரும் பெரியோரும் ஐசுவரியவான்களும் எளியவர்களுமாகிய உலகக்குடிகளே எல்லாரும் ஏகமாய்ச் செவிகொடுங்கள்.

௩ என் வாய் ஞானங்களைப் பேசும் என் இருதயத்தின் தியானம் புத்தியுள்ளதாயிருக்கும்.

௪ என் செவியை உவமைமொழிக்குச் சாய்த்து என் புதைபொருளைச் சுரமண்டலத்தால் வெளிப்படுத்துவேன். ௭௮. சங்கீ. ௨.

௫ தங்கள் ஆஸ்தியை நம்பித் தங்கள் திரளான ஐசுவரியத்தினாலே பெருமைபாராட்டி,

௬ என்னை ஒடுக்குகிறவர்களுடைய அக்கிரமம் என்னைச் சூழ்ந்துகொள்ளுகிற தீங்குநாட்களில் நான் பயப்படுவேன்.

௭ இனி என்றைக்கும் அழிவைக்காணாமல் உயிரோடிருக்கும்படிக்கு,

௮ அவர்களில் ஒருவன் தன் சகோதரனை மீட்கவே மீட்கவும் அவனை மீட்கும்பொருளைப் பராபரனுக்குக் கொடுக்கவும் மாட்டான்.

௯ ஏனெனில் அவர்கள் ஆத்துமமீட்பு என்றென்றைக்கும் நடவாதபடிக்கு விலையுயர்ந்ததாயிருக்கின்றது. மத். ௰௬, ௨௬.

௰ ஏனென்றால் ஞானிகளும் மரித்து நிர்மூடனும் மிருகக்குணமுள்ளவனும் ஏகமாய் அழிந்து தங்கள் ஆஸ்தியை வேற்று மனுஷருக்குப்பின் வைத்துப்போகிறதைக் காண்பான்.

௰௧ தங்கள் வீடுகள் நித்தியகாலமாகவும் தங்கள் வாசஸ்தலங்கள் தலைமுறை தலைமுறையாகவும் இருக்கவேணுமென்பது அவர்கள் உள்ளத்தின் ஆசையாயிருக்கிறது. அவர்கள் தங்கள் நாமங்களைப் பூமிகளுக்குத் தரிக்கிறார்கள்.

௰௨ ஆகிலும் அந்த முக்கியத்தோடிருக்கிற மனுஷன் அதிலே தங்கித் தரியாமல் அழிந்துபோகிற மிருகங்களுக்குச் சமானமாயிருக்கிறான்.

௰௩ அவர்களுடைய இந்தவழி அவர்களுடைய பயித்தியமாயிருக்கிறது, அவர்கள் பின்னடியாரும் அவர்கள் வாயப்பிறப்புக்குப் பிரியப்படுகிறார்கள். சேலா.

௰௪ ஆடுகளைப்போலே நரகத்திலே கிடத்தப்படுகிறார்கள், மரணம் அவர்களை மேயும். ஆனால் செம்மையானவர்கள் விடியற்காலத்திலே அவர்களை ஆண்டுகொள்ளுவார்கள், அவர்கள் தங்கள் வாசஸ்தலத்திலிருந்து நிலைத்திருக்கக்கூடாத அவர்களுடைய உருவைப் பாதாளம் அழிக்கும். மாற். ௯. ௪௪. மல்கி. ௪, ௧. ௩.

௰௫ ஆனால் என்னாத்துமாவைப் பராபரன் நரகத்தின் வல்லமைக்குத் தப்புவித்து மீட்பார், ஏனெனில் என்னை அவர் சேர்த்துக்கொள்ளுவார். சேலா. ௭௩. சங்கீ. ௨௪.

௰௬ ஒருவன் ஐசுவரியவானாகி அவன் வீட்டின் மகிமை பெருகும்போது பயப்படாதே

௰௭ ஏனெனில் அவன் தன் மரணத்தில் ஒன்றுமெடுத்துப்போவதில்லை, அவன் மகிமை அவனைப் பின்சென்று இறங்குவதில்லை.

௰௮ அவன் உயிரோடிருக்கையிலே தன் ஆத்துமாவை ஆசீர்வதித்தாலும் உனக்கு நீ நன்மைசெய்கிறயென்று மனுஷர் அவனைப் புகழ்ந்தாலும், லூக். ௰௨, ௰௯

௰௯ அது தன்றன்னுடைய வெளிச்சத்தைக் காணாத் தன்பிதாக்களின் சந்ததியைச் சேரும்.

௨௰ முக்கியமுற்றும் புத்தியற்றுமிருக்கிற மனுஷன் அழிந்துபோகும் மிருகங்களுக்குச் சமானமாயிருக்கிறான்.

## ௫௰. சங்கீதம்.

(கர்த்தர் இஸ்ரவேல் சனத்திலுள்ள நல்லவர்களுக்கும் பொல்லாதவர்களுக்கும் நடத்தைய ஆராதனையைக்குறித்துச் சொல்லுகிற நியாயம்.)

[ஆசாப்பின் சங்கீதம்.]

வல்லமையுள்ள பராபரனாகிய கர்த்தர் வசனித்துச் சூரியனுதிக்குந்திசை துவக்கி அது அஸ்தமிக்குந்திசைமட்டுமுள்ள பூமியைக் கூப்பிடுகிறார்.

௨ பூரணவடிவுள்ள சீயோனிலிருந்து பராபரன் பிரகாசிக்கிறார்.

௩ நம்முடைய பராபரன் மவுனமாயிராமல் வந்தார், அவருக்குமுன்னே அக்கினி எரிக்கும், அவரைச் சுற்றிலும் மகாப்புசல் கொந்தளிப்பாயிருக்கும். ௯௬, ௪௮. ௰௩.

௪ அவர் தம்முடைய சனத்தை நியாயந்தீர்க்க உயரவிருக்கும் வானங்களையும் பூமியையுங் கூப்பிடுவார்.

௫ பலியின்மேற் பண்ணப்பட்ட நம்முடைய உடம்படிக்கைக்குள்ளாயிருக்கிற நம்முடைய பரிசுத்தவான்களை நமக்குக் கூட்டுங்கள் என்பார்.

௬ அப்போது வானங்கள் அவருடைய நீதியை அறிவிக்கும், ஏனெனிற் பராபரனே நியாயாதிபதி. சேலா.

௭ நம்முடைய சனமே கேள், நாம் பேசுவோம் இஸ்ரவேலே நாம் உனக்குள்ளே சாட்சிவிளங்கப்பண்ணுவோம், உன் தேவனாகிய பராபரன் நாமே.

௮௧, சங்கீதம். ௰. ௰௩.

௮ உன் பலிகளினிமித்தம் உன்னைக் கடிந்துகொள்ளோம், ஏனெனில் உன் துசருவாங்கத்தகனங்கள் எப்போதும் நமக்குமுன்பாகவிருக்கிறது.

௯ நாம் உன்வீட்டிலிருந்து காளைகளையும் உன் தொழுவங்களிலிருந்து ஆட்டுக்கடாய்களையும் வாங்கிக்கொள்வதில்லை.

௰ ஏனெனிற் சகலகாட்டுச்சீவன்களும் பருவதங்களில் ஆயிரங்களாயத் திரிகிறமிருகங்களும் நம்முடையதே.

௰௧ மலைகளிலுள்ள பறவைகளையெல்லாம் அறிவோம், வெளியில் நடையாடுகிறவைகள் நம்முடையவசமாமே.

௰௨ பசியாயிருந்தோமானால் உனக்குச் சொல்லோம் ஏனெனிற் பூச்சக்கரமும் அதினிறைவும் நம்முடையதே.

௨௩. சங்கீதம் ௧.

௰௩ எருதுகளின் மாமிசம் போசிந்து ஆட்டுக்கடாய்களின் இரத்தங் குடிப்போமோ.

௰௪ நீ பராபரனுக்குத் தோத்திரத்தைப் பலியிட்டு உன்னதமானவருக்கு உன் பொருத்தனைகளைச் செலுத்தி, ஏசாயா. ௧, ௰௧. ௰௬ ௰௭.

௰௫ நெருக்கப்படுகிறநாளிலே நம்மை நோக்கிக் கூப்பிடு அப்போது உன்னைவிடுவிப்போம் அதற்காக நீ நம்மை மகிமைப்படுத்தக்கடவாய்.

௰௬ ஆனால் ஆகாதவனுக்குப் பராபரன் சொல்லுகிறதாவது, நீ நமது பிரமாணங்களைச் சொல்லவும், நமதுடம்படிக்கையை உன்வாயில் வைக்கவும் உனக்கென்னதிப்பமிருக்கிறது.

௰௭ கடிந்துகொள்ளுதலை நீ பகைத்து நம்முடையவார்த்தைகளையுனக்குப் பின்னுக்கு எறிந்துபோடுகிறாயே.

௰௮ நீ திருடனைக்கண்டால் அவனோடொருமித்துப்போகிறாய் விபசாரரோடும் உனக்குப் பங்கிருக்கின்றது.

௰௯ உன்வாயைப் பொல்லாப்புக்குத் திறந்துவிடுகிறாய், உன் நாவுசற்பனையைப் பின்னுகிறது.

௨௰ நீ உட்கார்ந்து உன்சகோதரனுக்கு விரோதமாய்ப் பேசி உன்னுடையதாயின் மகனுக்கு அவதூறுண்டாக்குகிறாய்.

௨௧ இவைகளை நீ செய்யும்போது மவுனமாயிருந்தோம், உன்னைப்போல நாமுமிருப்போமென்று நினைவுகொண்டாய், ஆனால் நாம் உன்னைக் கடிந்து உன் கண்களுக்குமுன்பாக ஒவ்வொன்றுந்நிறுத்துவோம்.

௨௨ பராபரனை மறக்கிறவர்களே, விடுவிக்கிறவனில்லாமல் நாம் பீறிப்போடாதபடிக்கு இதையுணர்ந்துகொள்ளுங்களேன்.

௨௩ தோத்திரத்தைப் பலியிடுகிறவன் நம்மை மகிமைப்படுத்துகிறான், இப்படி வழியை ஆயத்தப்படுத்துகிறவனுக்குப் பராபரனுடைய இரட்சிப்பைக் காண்பிப்போம்.

## ௫௧. சங்கீதம்.

(தன்பாவத்தினிமித்தம் மனஸ்தாபப்பட்ட தாவீதின் விண்ணப்பம்.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

பத்சேபாளிடத்தில் பிரவேசித்திருந்த அவனண்டைக்கு நாத்தான் தீர்க்கதரிசி வந்தபோது அவன் பாடினது.

௨. சாமுவேல். ௰௨, ௧. ௰௪.

௨ பராபரனே, உம்முடைய கிருபையின்படி எனக்கிரங்கி உமது மிகுந்த இரக்கங்களின்படியே என் மீறுதல்களை நீக்க என்னைச் சுத்திகரியும்.

௩ என் அக்கிரமத்தினின்று என்னை மிகவும் கழுவி என் பாவமற என்னைச் சுத்திகரியும்.

௪ ஏனென்றால் என் மீறுதல்களை நான் அறிந்திருக்கிறேன், என் பாவம் எப்போதும் எனக்கு முன்பாக நிற்கிறது.

௫ தேவரீர் ஒருவருக்குத்தான் விரோதமாக நான் பாவத்தைச் செய்து உம்முடைய கண்களுக்கு முன்பாகப் பொல்லாப்பானதைச் செய்தேனென்கிறதை நீர் உம்முடைய வசனங்களில் நீதியுள்ளவராகவும் உமது நியாயத்தீர்ப்பில் சுத்தமுள்ளவராகவும் அறிக்கையிடுகிறேன். ரோமர். ௩, ௪.

௬ இதோ துற்குணத்தில் உருவானேன், என் தாய் என்னைப் பாவத்திலே கர்ப்பந்தரித்தாள். வாக்கியம். ௨௰, ௬. யோவா. ௩, ௪.

௭ இதோ உள்ளத்தில் உண்மையிருக்க நீர் விரும்புகிறீர், இரகசியத்திலே ஞானத்தை எனக்குத் தெரியப்படுத்துவீராக.

௮ நான் சுத்தமாவதற்கு நீர் ஈசோப்பால் என்னைப் பாவமறப் பண்ணி நான் உறைந்த மழையிலும் வெண்மையாவதற்கு என்னைக் கழுவுவீராக. ௩. மோசே. ௰௪, ௨. ௭.

௯ எனக்குச் சந்தோஷமும் மகிழ்ச்சியுங் கேட்கப்பண்ணும், அப்போது நீர் நொறுக்கின எலும்புகள் களிகூரும்.

௰ என் பாவங்களைப் பாராதபடிக்கு நீர் உமது முகத்தை மறைத்து என் மீறுதல்களையெல்லாம் நீக்கும்.

௰௧ சுத்த இருதயத்தை எனக்குச் சிருஷ்டியும், பராபரனே நிலவரமான ஆவியை என் உள்ளத்திலே புதிதாய் உண்டாக்கும்.

௰௨ உம்முடைய முகத்தைவிட்டு என்னைத் தள்ளாமலும் உமது பரிசுத்த ஆவியை என்னிடத்திலிருந்தெடுத்துக்கொள்ளாமலுமிரும்.

௰௩ உம்முடைய இரட்சிப்பின் சந்தோஷத்தை எனக்குத் திரும்பக் கட்டளையிடும், உற்சாகமான ஆவி என்னைத் தாங்கட்டும்.

௰௪ அப்போது பாதகருக்கு உமது வழிகளை உபதேசிப்பேன், பாவிகள் உம்மண்டைக்குத் திரும்புவார்கள்.

௰௫ என் இரட்சிப்பின் தேவனாகிய பராபரனே இரத்தப்பழிகளுக்கு என்னை நீங்கலாக விட்டுவிடும், அப்போது என் நாவு உம்முடைய நீதியைக் கெம்பீரித்துப் பாடும்.

௨. சாமுவேல். ௰௨, ௬.

௰௬ ஆண்டவரே என் உதடுகளைத் திறவும், அப்போது என் வாய் உம்முடைய துதியை அறிவிக்கும்.

௰௭ ஏனென்றால் பலியை விரும்பீர், மற்றபடி அதைச் செலுத்துவேன், சர்வாங்கத் தகனப்பலி உமக்குப் பிரியமானதல்ல.

௪௰, சங்கீதம். ௭.

௰௮ பராபரனுக்கேற்கும் பலிகள் நொறுங்குண்ட ஆவிதான், பராபரனே நொறுங்குண்டதும் நருங்குண்டதுமான இருதயத்தைப் புறக்கணியீர். ஏசா. ௫௭, ௰௫.

௰௯ சீயோனுக்கு உமது பிரியத்தின்படி நன்மைசெய்யும், எருசலேமின் மதில்களைக் கட்டுவீராக.

௨௰ அப்போது சர்வாங்கத் தகனமும் முழுத்தகனமுமான நீதியின் பலிகளுக்குப் பிரியப்படுவீர், அப்போது உம்முடைய பீடத்தின்மேலே காளையெருதுகளைப் பலியிடுவார்கள்.

## ௫௨. சங்கீதம்.

(அவதூறுக்காரரைக் கண்டிக்கும் சங்கீதம்.)

[இராகத்தலைவனுக்குக் கொடுக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம். தாவீது அகிமெலேக்கின் வீட்டுக்கு வந்தானென்றும் எதோமியனாகிய தோவேக் வந்து சவுலுக்கு அறிவித்தபோது பாடினது. ௧. சாமுவே. ௨௨, ௯. ழு]

பலவானே பொல்லாப்பைச் செய்து என் பெருமை பாராட்டுகிறாய்? பராபரனுடைய கிருபை நாள்தோறுமுள்ளது.

௧. சாமுவேல். ௨௧, ௭.

௨ கூர்மையாக்கப்பட்டுக் கபடுசெய்கிற சவரகனத்தியைப்போலே உன் நாக்குக் கேடுகளையெத்தினம் பண்ணுகிறது, ௫௭. சங்கீதம். ௫. வாக்கியம். ௰௮, ௮.

௩ நன்மையைப் பார்க்கத் தீமையையும் நிதானம் பேசுகிறதைப் பார்க்கப் பொய்யையும் நேசிக்கிறாய். சேலா.

௪ விழுங்குகிறதுக்கான சகல வார்த்தைகளையும் கபட்டு நாக்கையும் நேசிக்கிறாய்.

௫ பராபரன் உன்னையும் என்றைக்கும் நிர்மூலமாக்குவார், அவர் உன்னைப் பிடித்து உன்னைக் கூடாரத்திலிருந்து பிடுங்கி உன்னைச் சீவனுள்ளோருடைய பூமியிலிராதபடிக்கு வேரறுப்போகப்பண்ணுவார். சேலா.

௬ அதை நீதிமான்கள் கண்டு பயந்து அவனை நகைத்து,

௭ இதோ பராபரனைத் தன் பெலனாக வைக்காமல் தன் ஐசுவரியத்திரட்சியை நம

பித்தன் தீவினையிலே பெலத்துக்கொண்ட மனுஷன் என்பார்கள். எரேமி. ௰௭, ௫. ௬. ௪௯, சங்கீதம். ௬. ௭.

௮ நானோவென்றால் பராபரனுடைய வீட்டிலே பச்சையான ஒலிவமரத்தைப்போலிருப்பேன், பராபரனுடைய கிருபையை எப்போதும் என்றென்றைக்கும் நம்பியிருக்கிறேன். ௯௨, சங்கீதம் ௰௩. ௰௪.

௯ நீர் அதைச் செய்தீரென்று உம்மை நான் என்றென்றைக்குந் துதித்து உம்முடைய பரிசுத்தவான்களுக்கு முன்பாக உமது நாமத்துக்குக் காத்திருப்பேன், ஏனென்றால் அது நலமானது. ௩௭, சங்கீதம். ௫. ௯.

## ௫௩. சங்கீதம்.

(௰௪ சங்கீதத்துக்கொத்தது.)

[மெ'ல ஈனத்திலே பாடி இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம். ௮௮, சங்கீதம். ௧.]

பராபரன் இல்லையென்று பயித்தியக்காரன் தன் இருதயத்திற் சொல்லுகிறான், தங்களைக் கெடுத்து நியாயக்கேட்டினாலே அருவருப்பாகிறார்கள், நன்றுசெய்கிறவனில்லை.

௨ பராபரனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோவென்று பார்க்கப் பராபரன் பரமண்டலங்களிலிருந்து மனுப்புத்திரரைக் கண்ணோக்குகிறார்.

௩ அவர்களெல்லாரும் வழிவிலகி ஏகமாய்க் கெட்டுப்போனார்கள், நன்றுசெய்கிறவன் ஒருவனாகிலுமில்லை.

௪ அப்பத்தைப் பட்சிக்கிறப்போலே நம்முடைய சனத்தைப் பட்சிக்கிற அக்கிரமக்காரருக்கும் அறிவுதானுமில்லையோ? பராபரனை நோக்கிக் கூப்பிடார்கள்.

௫ திகிலில்லாத அவ்விடத்திலே மெத்த வுந்திகிலடைந்தார்கள், ஏனென்றால் உனக்கு விரோதமாய்ப் பாளயமிறங்கினவனுடைய எலும்புகளைப் பராபரன் சிதற அடித்தார், அவர்களை வெட்கப்படுத்தினாய், ஏனென்றாற் பராபரன் அவர்களை வெறுத்துப்போட்டார்.

௬ ஆ, சீயோனிலிருந்து இஸ்ரவேலுடைய இரட்சிப்புகள் வந்தால் தாவிலே, பராபரன் தம்முடைய சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது யாக்கோபுக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சியுமுண்டாம்.

## ௫௪. சங்கீதம்.

(சத்துருக்களின் பொல்லாப்பைக் குறித்துத் தாவீது பராபரனை நம்பிக்கையாய் வேண்டிக்கொண்டது.)

[கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம். தாவீது எங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருக்கிறானே யென்று சீப்பூரார் வந்து சவுலுக்குச் சொன்னபோது பாடினது. ௧. சாமுவேல். ௨௩, ௰௯, ௨௬.]

பராபரனே நீர் உம்முடைய நாமத்தினிமித்தமாக என்னை இரட்சித்து உம்முடைய வல்லமையினாலே எனக்கு நியாயஞ் செய்யும்.

௨ பராபரனே என் செபத்தைக் கேளும் என் வாயின் வார்த்தைகளுக்குச் செவிகொடும். ௫, சங்கீதம், ௨, ௩.

௩ ஏனென்றால் அந்நியர் எனக்கு விரோதமாயெழும்பி பெலவான்கள் என் பிராணனை வாங்கத் தேடுகிறார்கள், பராபரனைத் தங்களுக்கு முன்பாக நிறுத்தி நோக்கார்கள். சேலா. ௮௬, சங்கீ. ௰௪.

௪ இதோ பராபரன் எனக்குச் சகாயர், ஆண்டவர் என் ஆத்துமாவை ஆதரிக்கிறவர்களுக்குள்ளிருக்கிறார்.

௫ அவரென் சத்துருக்களுக்குத் தீமையைச் சரிக்கட்டுவார், உமது சத்தியத்தினிமித்தமாக அவர்களைச் சங்கரியும்.

௬ உற்சாயமாய் உமக்குப் பலிசெலுத்துவேன், கர்த்தாவே உமது நாமத்தைத் துதிப்பேன், ஏனென்றால் அது நலமானது.

௭ ஏனென்றால் எல்லா நெருக்கத்தையும் நீக்கி என்னை விடுவிப்பார், என் கண் என்னுடைய சத்துருக்களில் நீதிச்சரிக்கட்டுதலைக் காணும்.

## ௫௫. சங்கீதம்.

(சத்துருவினுடைய துன்பத்தினிமித்தமும் சிநேகிதனுடைய துரோகத்தினிமித்தமும் தாவீது அங்கலாய்க்கிற விண்ணப்பம்.)

[கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம்.]

பராபரனே நீர் என் விண்ணப்பத்துக்கு மறைந்திராமல் என் செபத்துக்குச் செவிகொடும்,

௨ என்னைக் கவனித்திருந்து எனக்கு உத்தரவருளிச்செய்யும், நான் சத்துருவினுடைய கூக்குரலினிமித்தமும் ஆகாதவன் செய்யும் இடுக்கத்தினிமித்தமும் என் செபத்தியானத்திலே புலம்பிக்கதறுகிறேன்.

௩ ஏனென்றால் என்மேலே அக்கிரமத்தைச் சாட்டிக் குரோதத்தினாலே என்னைப் பகைக்கிறார்கள்.

௪ என் இருதயம் எனக்குள் வேதனைப்பட்டிருக்கிறது மரணத்திகில்கள் என்மேல் விழுந்தது.

௫ பயமும் நடுக்கமும் எனக்குவந்து அருக்களிப்பு என்னை மூடிற்று.

௬ ஆ, எனக்குப் புறாவைப்போலே செட்டைகளிருந்தால் தாவிவென்றேன், அப்போது பறந்துபோய் எங்கேயாகிலும் தங்கியிருப்பேன்.

௭ இதோ, தூரமாய் அகன்றலைந்து வனாந்திரத்திலே தங்குவேன். சேலா.

௮ பெருங்காற்றுக்கும் புசலுக்குந் தப்பத் தீவிரித்துக்கொள்ளுவேன்.

௯ ஆண்டவரே அவர்களை விழுங்கும், அவர்கள் நாவைப் பிரிந்துபோகப்பண்ணும், ஏனெனில் கொடுமையுஞ் சண்டையும் நகரிலே காணுகிறேன்.

௰ அவைகள் இரவும்பகலும் அதின் மதில்களில் அலைந்துசுற்றுகிறது, அக்கிரமும் உபாத்திரவும் அதின் நடுவிலிருக்கிறது.

௰௧ கேடுபாடுகள் அதின் நடுவிலிருக்கிறது, தந்திரமுங் கபடமும் அதின் வீதியை விட்டுவிலகாது.

௰௨ ஏனெனில் என்னை நிந்தைப்படுத்தினவன் சத்துருவாயிருந்தவனல்ல, மற்றப்படி அதைச் சகிப்பேன், எனக்கு விரோதமாய்ப் பெருமையாகிறவன் என்னைப் பகைத்தவனல்ல, மற்றப்படி அவனுக்கு மறைந்திருப்பேன்.

௰௩ எனக்கிராசியான மனுஷனும் என் வழிகாட்டியும் எனக்கறிமுகமானவனுமாகிய நீயே அவன். ௪௧, சங்கீதம். ௯.

௰௪ நாம் ஒருமித்து இன்பமும் இரகசியமுமாய்யோசித்துப் பராபரனுடைய வீட்டுக்கு ஏகமாய்ப்போனோமே.

௰௫ மரணம் அவர்கள்மேல் தண்டற்காரனாய் விழுவதாக, உயிரோடே பாதாளத்துக்கிறங்கக்கடவார்கள், ஏனெனில் அவர்கள் சஞ்சரிப்பிலும் அவர்கள் உள்ளத்திலும் பொல்லாப்புகளிருக்கிறது.

௰௬ நானோ பராபரனை நோக்கிக் கூப்பிடுவேன், கர்த்தர் என்னை இரட்சிப்பார்.

௰௭ அந்திசந்தி மத்தியானத்திலுங் கெஞ்சிக் கதறுவேன், என் சத்தத்தைக் கேட்பார். தானியேல். ௬, ௰.

௰௮ எனக்கு வந்த போரை நீக்கி என் ஆத்துமாவைச் சமாதானமாக மீட்டுவிடுகிறார், ஏனெனில் திரளான கூட்டமாய் என்னோடெதிர்த்திருக்கிறார்கள். ௩, சங். ௨.

௰௯ பராபரன் கேட்டு அவர்களைத் தாழ்த்துவார், ஆதிமுதலாய் நியாயத்துக்குக் குருந்திருக்கிறார். சேலா. ஏனெனில் அவர்களிடத்திலே குணமாறுதலில்லை, பராபரனுக்குப் பயப்படார்கள்.

௨௰ தன்னோடே சமாதானமாயிருந்தவர்கள் மேல் தன் கைகளைப்போட்டுத் தன் உடம்படிக்கையைக் குலைத்துப்போடுகிறான்.

௨௰௧ அவன் வாயின் சொற்கள் வெண்ணெயைப்போல மெதுவானவைகள், அவன் இருதயமோ யுத்தம், அவன் வார்த்தைகள் எண்ணெயிலும் மிருதுவானவைகள், ஆனாலும் அவைகள் உருவின பட்டயங்கள். ௫௭, சங். ௫.

௨௰௨ கர்த்தர்மேல் உன் பாரத்தைப் போடு, அவர் உன்னைப் பராமரிப்பார், நீதிமானை என்றைக்குந் தள்ளாடவொட்டார். ௩௭, சங்கீதம். ௫.

௨௰௩ பராபரனே, தேவரீர் அவர்களை அழிவின் குழியிலிறங்கப்பண்ணுவீர், இரத்தப் பிரியருஞ் சூதான மனுஷருந் தங்கள் ஆயுசின் நாட்களுக்குப் பாதியும் வந்துசேருவதில்லை, நானோவென்றால் உம்மை நம்புவேன். ௫, சங. ௭.

## ௫௬. சங்கீதம்.

(தாவீது பராபரனுக்குத் தன்னுடைய நாசமோசங்களையும் அலையுதலையுங் கண்ணீரையுமொப்புக்கொடுக்கிற நம்பிக்கையுள்ள விண்ணப்பம்.)

[பெலிஸ்தர் தாவீதைக் காத்தூரிலே பிடிக்கையில், அவன் தூரமாயிருக்கிறவர்களுக்குள்ளே ஊமையாயிருக்கிற புறாவின்பேரிலே பாடினதும் இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கீதம். ௧. சாமுவேல். ௨௧, ௰. ௲]

பராபரனே எனக்கிரங்கும், ஏனெனில் மனுஷன் என்னை விழுங்கப்பார்க்கிறான், நாடோறும் போர்செய்து என்னை ஒடுக்குகிறான்.

௨ நாடோறும் என் சத்துருக்கள் என்னை விழுங்கப்பார்க்கிறார்கள், ஏனெனில் உயரத்திலிருந்து எனக்கு விரோதமாய்ப் போர்செய்கிறவர்கள் அநேகர்.

௩ நான் பயப்படுகிற நாளிலே உம்மை நம்புவேன்.

௪ பராபரனை அவருடைய வார்த்தையினிமித்தந் துதிப்பேன், பராபரனை நம்பியிருக்கிறேன், நான் பயப்படேன், மாம்சமெனக்கென்ன செய்யும்?

௫ நித்தம் என் வார்த்தைகளைப் புரட்டுகிறார்கள், அவர்கள் நினைவுகளெல்லாம் எனக்கு விரோதமாய் எனக்குப் பொல்லாப்புச் செய்வதற்கிருக்கிறது.

௬ கூடிச்சேர்ந்து பதிவிருக்கிறார்கள், அவர்கள் என் பிராணனை வாங்க ஆசையாய் என்னடியைப் பிடித்துவருகிறார்கள்.

௭ தங்கள் அக்கிரமத்திலே தப்புவார்களோ? பராபரனே, உம்முடைய கோபத்திலே சனசதளங்களைக் கீழேதள்ளும்.

௮ என் அலைபுதலைத் தேவரீர் எண்ணியிருக்கிறீர், என் கண்ணீரை உம்முடைய துருத்தியிலே வையும், அவைகள் உம்முடைய கணக்கிலல்லோவிருக்கிறது.

௯ நான் உம்மை நோக்கிக் கூப்பிடும் நாளிலென் சத்துருக்கள் பின்னிட்டுத் திரும்

புவார்கள், பராபரன எனககாகவிருககிறானெனறதையறிவேன.

௰ பராபரனை அவருடைய வார்த்தையினிமித்தந்துதிப்பேன, கர்த்தரை அவருடைய வார்த்தையினிமித்தந்துதிப்பேன.

௰௧ பராபரனைநமபியிருககிறேன, நானபயபபடேன, மனுஷன எனககெனனசெயவான. ௱௰அ, சங்கீ. ௬. எபி. ௰௩, ௬.

௰௨ பராபரனே, உமககுசசொனனபொருத்தினைகள எனமேலிருககிறது, தோத்திரங்களைநான உமககுசசெலுத்துவேன. ௬௬, சங்கீதம். ௰௩.

௰௩ ஏனெனிற் பராபரனுககுமுனபாக நானசீவனுளளோருடையவெளிசசத்திலே நடககுமபடிககு எனனுததுமாவைமரணத்துககும எனகால்களை இடறலுககுமலலோதபபுவித்தீர். ௧. மோசே. ௰எ, ௧. ௱௰௬, சங்கீதம். அ.

## ௫எ. சங்கீதம்.

(கோரே சததுருககளினிமித்தந் தாவீது பராபரனை ஆதரவாகபபிடித்தது.)

[தாவீதுசவுலுககுத்தபபியோடிக் கெபியிலொதுங்குகையில தானகெடடுபபோகாதபடிககுபபாடினதும, இராகததலைவனுககுஒபபுவிககபபடடதுமானபொற்பணதிககீதம். ௧. சாமு. ௨௨, ௧. ௨. ௨௪, சங்கீதம். ௪.]

எனககிரஙகும, பராபரனே எனககிரஙகும, ஏனெனில உமமை எனனுததுமா அணடிககொளளுகிறது விககினஙகளகடநதுபோகுமடடும உமமுடைய செடடைகளினநிழலிலேவநதடைவேன. ௰எ, சங். ௬.

௨ எனககாகயாவையுஞசெயது முடிககபபோகிறதேவனுகிய உனனதமானபராபரனைநோககிககூபபிடுவேன.

௩ எனனைவிழுஙகபபார்ககிறவன எனனைநிநதிககையில அவர்பரமணடலஙகளிலிருநதொததாசையனுபபி எனனை இரட்சிபபார், சேலா. பராபரனதமதுகிருபையையுந் தமதுசததியததையும அனுபபுவார்.

௪ எனனுததுமா சிஙகஙகளினநடுவிலிருககிறது, தீயையிறைககிறமனுபபுததிரருககுளளேகிடககிறேன, அவர்களபலலுககள ஈடடியும, அமபுகளும, அவர்கள நாககுக் கருககானபடடையமுமாயிருககிறது.

௫ பராபரனே, வானஙகளினமேலுயரும, உமமுடையமகிமை பூமியனைததினமேலும உயர்வதாக. ௱அ, சங்கீதம். ௬.

௬ எனகாலடிகளுககு வலையைமூளிதிபபுபபணணினூர்கள, எனனுததுமாவைமடககிடததான, எனககுமுனபாகக் குழியைவெடடி அதினநடுவிலேவிழுநதார்கள. சேலா. எ, சங்கீதம். ௰௬.

௭ எனனிருதயம ஆயததமாயிருககிறது பராபரனே என்னிருதயம ஆயததமாயிருககிறது. நான பாடிககீர்ததனமபணணுவேன.

அ எனமகிமையேவிழி, சமபுரோ சுரமணடலமேவிழி. அதிகாலமேவிழிபபேன.

௱அ. சங்கீதம். ௨—௪.

௯ ஆணடவரே உமமைசசனசதஙகளுககுளளே துதிபபேன, சாதிகளுககுளளே உமமைககீர்ததனமபணணுவேன.

௰ ஏனெனில உமதுகிருபை வானஙகளபரியநதமும உமதுசததியம ஆகாயமணடலஙகளபரியநதமுமபெரிதாயிருககிறது. ௩௬, சஙகீதம். ௬.

௰௧ பராபரனே வானஙகளினமேலுயரும, உமமுடையமகிமை பூமியனைததினமேலுயர்வதாக.

## ௫அ. சங்கீதம்.

(அநியாய மிகுசின சததுருககளுடைய கொடூரததினிமித்தமாகத்தாவீதுமுறையிடடுசசெயதவிணணபபம.)

[தானகெடடுபபோகாதபடிககுத் தாவீது பாடினதும இராகததலைவனுககொபபுவிககபபடடதுமான பொற்பணதிககீதம. ௫எ, சக்கீதம. ௧.]

மனுபபுததிரரே நீஙகள ஊமையாயிருக்கக்கொளளமெயயாய நீதியைசசொலலுவீர்களோ நிதானமாயநியாயநதீர்பபீர்களோ?

௨ மனதாரததானே நியாயககேடுகளைசசெயகிறீர்கள,பூமியிலேஉஙகளகைகளினகொடுமையை நிறுததுககொடுககிறீர்கள.

௩ ஆகாதவர்கள கெற்பமாயுற்பவித்ததுமுதற்கொணடுபேதலிககிறார்கள, பொயபேசுகிறவர்கள தாயினவயிற்றிற்பிறநததுமுதற்கொணடுவழிதபபுகிறார்கள.

௪ சர்ப்ப விஷததுககொபபான விஷம அவர்களிலிருககிறது. ௱௪௰, சங்கீ. ௩.

௫ முணுமுணுககிறவர்களும விதையுளளதமபனககாரனும இடுககிறசத்தத்தைககேளாதபடிககுத் தனகாதையடைககிறசெவிடான விரியனபாமபைபபோலிருககிறார்கள.

௬ பராபரனே அவர்களவாயிலிருககிற அவர்களபலலுககளைத் தகர்ததுபபோடும, கர்த்தாவே சிஙகக்குடடிகளினகடைவாயபபலலுககளைநொறுககிபபோடும.

௩, சங்கீ. அ.

௭ தாணுயககடநதோடுகிற தணணீரைபபோலே அவர்கள கழிநதுபோககடவும், தஙகள அமபுகளைபவர்கள நாணேறறுமபோது அவைகளதறிபுணடவைகளாககடவது.

அ கரைநதுபோகிற நததையைபபோலேபோககடவார்கள, செற்பமயிழுநத

போகிற ஸ்திரீயின் முதிராப் பிண்டத்தைப்போலே சூரியனைக் காணாதிருப்பார்களாக.

௯ உணருகிறதற்குமுன் உங்கள் முள்ளுகள் முள்ளுக்காடாய்ப் பெறு, அதைப் பச்சையோடே தாமே உக்கிரமான புசலினாலே அடித்துக்கொண்டுபோவார்.

௰ நீதியைச் சரிக்கட்டுதலை நீதிமான் காணும்போது மகிழுவான், தன் பாதங்களை ஜீசாதவனுடைய இரத்தத்திலே கழுவுவான்.

௰௧ அப்போது மனுஷன் மெய்யாய் நீதிமானுக்குப் பலனுண்டென்றும் மெய்யாய்ப் பூமியில் நியாயஞ்செய்கிற பராபரன் உண்டென்றுஞ் சொல்லுவான்.

## ௫௯. சங்கீதம்.

(கொடூரசத்துருக்களின் சதிசற்பனைகளைக் கண்டுபண்ணின செபம்.)

[தாவீதைக் கொல்லத்தக்கதாகச் சவுல் அவன் வீட்டைக் காவல்காப்பவர்களை யனுப்புகையில் அவன் தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும் இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கீதம். ௧. சாமுவேல். ௰௯, ௰௧. ௫௭, சங்கீ. ௧. ௫௮, சங்கீ. ௧.]

௧ என் பராபரனே என் சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும் என்மேலெழும்புகிறவர்களுக்கு என்னை விலக்கி உயர்ந்த அடைக்கலத்திலே வையும்.

௨ அக்கிரமக்காரருக்கு என்னைத் தப்புவித்து இரத்தப் பிரியரான மனுஷருக்கு என்னை விலக்கி இரட்சியும்.

௩ ஏனென்றால் இதோ, என் பிராணனுக்குப் பதிவிருக்கிறார்கள், கர்த்தாவே என்னிடத்தில் மீறுதலும் பாவமுமில்லாதிருந்தும் பெலவான்கள் எனக்கு விரோதமாய்க் கூட்டங்கூடுகிறார்கள்.

௪ என்னிடத்தில் அக்கிரமம் இல்லாதிருந்தும் ஓடித்திரிந்து ஆயத்தமாகிறார்கள், எனக்கு நேராக விழித்துப்பாரும். ௩௫, சங்கீதம், ௨௩.

௫ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே இஸ்ரவேலின் பராபரனே தேவரீர் சகல சாதிகளையும் விசாரிக்க எழும்பும், அகங்காரமாய்த் துரோகஞ்செய்கிற ஒருக்கும் இரங்காதேயும். சேலா.

௬ அவர்கள் சாயங்காலத்திலே திரும்பி வந்து நாய்களைப்போலக் குலைத்து ஊரைச் சுற்றியோடுகிறார்கள்.

௭ இதோ தங்கள் வாயினால் வாதாடுகிறார்கள், அவர்கள் உதடுகளிற் பட்டயங்களுண்டு, ஏனென்றால் அதைக் கேட்கிறவன் ஆர் என்கிறார்கள். ௫௭, சங்கீ. ௫. ௰, சங்கீ. ௰௧, ௬௪, சங்கீதம். ௧.

௮ ஆனாலுங் கர்த்தாவே தேவரீர் அவர்களை நகைப்பீர், சகல சாதிகளையும் பரியாசம்பண்ணுவீர். ௨, சங்கீதம். ௪.

௯ அவன் வல்லமையைக்கண்டு உமக்குக் காத்திருப்பேன் ஏனென்றாற் பராபரன் எனக்குயர்ந்த அடைக்கலம்.

௰ கிருபையுள்ள என் பராபரன் எனக்கு நேரிட்டுவருவார், பராபரன் என்னையென் சத்துருக்களில் நீதிசரிக்கட்டுதலைக் காணப்பண்ணுவார்.

௰௧ எங்கள் கேடயமாகிய ஆண்டவரே, என் சனம் அதை மறவாதபடிக்கு அவர்களை நீர் கொன்றுபோடாமல் அவர்களை உமது பெலத்தினாலே அலையப்பண்ணித் தாழ்த்தும்.

௰௨ அவர்கள் உதடுகளின் பேச்சொல்லாம் அவர்கள் வாயிற் பாவமாயிருக்கிறது, ஆகையால் தங்கள் பெருமையிலுந் தாங்கள் சொல்லுகிற சாபத்தினிமித்தமும் பொய்யினிமித்தமும் அவர்கள் பிடிபடட்டும்.

௰௩ பராபரன் யாக்கோபிலே பூமியின் எல்லைகள் பரியந்தமும் ஆளுகிறவரென்று அவர்கள் அறியத்தக்கதாக அவர்களை உமது உக்கிரத்திலே நிர்மூலமாக்கும், இனியில்லாதபடிக்கு அவர்களை நிர்மூலமாக்கும். சேலா.

௰௪ அவர்கள் சாயங்காலத்திலே திரும்பி வந்து நாய்களைப்போலக் குலைத்து ஊரைச் சுற்றியோட்டக்கடவார்கள்.

௰௫ அவர்கள் திருத்தியாகாதேபோனாற் சாப்பிடுகிறதற்கு அலைந்து திரிந்து மொறுமொறுக்கக்கடவார்கள்.

௰௬ நானோவென்றால் உமதுடைய வல்லமையைப்பாடிக் காலமே உமதுடைய கிருபையைக் கெம்பீரமாய்ப் புகழுவேன், ஏனென்றால் எனக்கு நெருக்கமுண்டான நாளிலே எனக்குயர்ந்த அடைக்கலமும் ஒதுக்குமானீர். ௬௨, சங்கீதம். ௪.

௰௭ என் பெலனே உமக்குக் கீர்த்தனம்பண்ணுவேன், ஏனென்றாற் பராபரன் எனக்குயர்ந்த அடைக்கலமும் என் கிருபையுள்ள பராபரனுமாயிருக்கிறார்.

## ௬௰. சங்கீதம்.

(சத்துருக்களால் நெருக்கப்பட்டபின் அடைந்த செயங்களினிமித்தம் பராபரனைத் தோத்திரித்தது.)

[தாவீது மெசொபொத்தாமியாதேசத்துச் சூரியரோடுஞ் சோபாதேசத்துச் சூரியரோடும் யுத்தம்பண்ணினபோதும் யோவாபு திரும்பி உப்புப் பள்ளத்தாக்கிலே ஏதோமியரிற் பன்னீராயிரம்பேரை வெட்டினபோதும், அவன் சாட்சியை விளங்குவிக்கும் ஆறு நரம்புக்கண்ணாரத்திலே போதிப்புக்காகப் பாடினதும் இராகத்

தலைவனுக்கொப்புவிக்கப்பட்டதுமான பொற்பணைக்கீதம்.]

பராபரனே எங்களை யொழித்துவிட்டு எங்களைத் தகர்த்துப்போட்டீர் கோபமாயிருந்தீர், திரும்ப எங்கள் புறமாய்த் திரும்பும். ௪௪, சங்கீதம். ௨௩.

௨ பூமியையதிரப்பண்ணி அதை வெடிப்பாக்கினீர், அதின் வெடிப்புகளைக் கட்டும், ஏனெனில் அசைகிறது.

௩ உம்முடைய ஜனத்துக்குக் கடினமான காரியத்தைக் காணப்பண்ணினீர், தத்தளிப்பின் மதுபானத்தை யெங்களுக்குக் குடிக்கக்கொடுத்தீர். ஏசாயா. ௫௧, ௰௭. ௨௨.

௪ ஆனால் உம்முடைய பிரியர் விடுவிக்கப்படும்படிக்கு ஏற்றுங்கொடியை உமக்குப் பயந்தவர்களுக்குச் சத்தியத்தினிமித்தமாய்த் தந்தீர். சேலா.

௫ உம்முடைய வலதுகரத்தினாலே யிரட்சித்து எங்கள் ஜெபத்தைக் கேளும். ௱௮, சங். ௭.

௬ பராபரன் தமது பரிசுத்தஸ்தலத்திலே விளம்பினதைப்பற்றிக் களிகூருவேன், சீகேமைப் பங்கிட்டுச் சுக்கோத்தின் பள்ளத்தாக்கை யளந்துகொள்ளுவேன்.

௭ கிலெயாத் என்னுடையது, மனாசேயும் என்னுடையது, எப்பிராயீம் என் தலையின் பெலன் யூதா என் நியாயநெறியாளன்.

௮ மோவாப் நான் கழுவுகிற பாத்திரமாயிருக்கும், ஏதோமின்மேலே என் பாதரட்சையை நீட்டுவேன், பெலிஸ்தேயாவே என்னைப் பார்த்துக் கெம்பீரி.

௯ என்னை அரணான பட்டணத்துக்குள் வழிவிடுபவரார்? என்னை ஏதோம் மட்டுங் கொண்டுபோகுபவரார்?

௰ பராபரனே எங்கள் சேனைகளோடே புறப்படாமல் எங்களை யொழித்துவிட்டிருந்த பராபரனானவர் தேவரீரல்லவோ?

௰௧ இக்கட்டுக்குத் தப்ப எங்களுக்குச் சகாயங்கட்டளையிடும், ஏனெனில் மனுஷ இரட்சிப்பு அவத்தம்.

௰௨ பராபரனாலே பெலன்செய்வோம், அவரே யெங்கள் சத்துருக்களை மிதித்துப்போடுவார். ௰௮, சங்கீ. ௰௩. ௪௪, சங். ௬.

## ௬௧. சங்கீதம்.

(மகா ஆபத்திலே தாவீது பராபரன் மறைவில் விசுவாசமாய் ஒதுங்கினது.)

[கிண்ணரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

பராபரனே என் கூப்பிடுதலைக் கேட்டு என் விண்ணப்பத்துக்குக் கவனியும்.

௨ என்னிருதயந்தொய்யும்போது பூமியின் கடையாந்திரத்திலிருந்து உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன், நான் நிற்கிறதிலும் உயரமான கன்மலையில் என்னைக் கொண்டுபோய்விடும்.

௩ ஏனெனில் சத்துருவுக்கெதிரே யெனக்கடைக்கலமும் பெலத்த துருக்கமுமானீர்.

௪ சதாகாலங்களாக உம்முடைய கூடாரத்திலே தங்குவேன் உம்முடைய செட்டைகளின் மறைவிலே வந்தடைவேன், சேலா. ௫௭, சங்கீதம். ௨.

௫ ஏனென்றால் பராபரனே தேவரீர் என் பொருத்தனைகளைக் கேட்டீர், உம்முடைய நாமத்துக்குப் பயந்தவர்களின் சுதந்தரத்தை யெனக்குத் தந்தீர்.

௬ இராசாவுடைய நாட்களோடே நாட்களைக் கூட்டுவீர், அவன் வருஷங்கள் தலைமுறை தலைமுறையாகவிருக்கும்.

௭ பராபரனுக்கு முன்பாக என்றென்றைக்கும் நிலைத்திருப்பான், அவனைத் தற்காக்கக் கிருபையையும் உண்மையையும் கட்டளையிடும்.

௮ இப்படியே தினமும் என் பொருத்தனைகளை நான் செலுத்துமட்டியாய் உமது நாமத்தை யென்றைக்குங் கீர்த்தனம் பண்ணுவேன்.

## ௬௨. சங்கீதம்.

(தாவீது சத்துருக்களின் தீவினைகளைக் கண்டு பராபரனுடைய அடைக்கலத்திலொதுங்கி மற்றவிசுவாசிகளையும் அதற்கெழுப்பினது.)

[எதுத்தூனென்ற இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்]

பராபரனையே நோக்கி என்னாத்துமா அமர்ந்திருக்கிறது, அவராலென்னிரட்சிப்புவரும்.

௨ அவரேயென் கன்மலையும் என் இரட்சிப்பும் என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார், நான் மெத்தவும் அசைக்கப்படுவதில்லை. ௰௮, சங்கீதம். ௩.

௩ எந்தமட்டும் ஒரே மனுஷனுக்குப் பொல்லாப்புண்டாக்கப் பார்ப்பீர்கள், நீங்கள் அனைவருங் கொலையுண்ணப்பட்டுச் சாய்ந்த மதிலுக்கும் இடிந்த சுவருக்குஞ் சரியாவீர்கள்.

௪ ஆகிலும் அவர்கள் அவனை யவன்மேன்மையிலிருந்து விழத்தள்ள ஆலோசனைபண்ணி அவத்தம் பேச விரும்புகிறார்கள், தங்கள் வாயினாலே ஆசீர்வதித்துத் தங்கள் உள்ளத்திலே சபிக்கிறார்கள். சேலா.

௫௫, சங்கீதம். ௨௨.

௫ ஆனாலும் என்னாத்துமாவே பராபரனை நோக்கியமர்ந்திரு, ஏனெனில் நான் நம்புகிறது அவராலேவரும். ஏசா. ௩௰, ௰௫.

௬ அவரேயென் கன்மலையும் என் இரட்சிப்பும் என்னுயர்ந்த வடைக்கலமுமாயிருக்கிறார், நான் அசைக்கப்படுவதில்லை.

எ பராபரனிடத்தில் என் இரட்சிப்பும் என் மகிமையுமிருக்கிறது, என் பெலனான கன்மலையும் என்னடைக்கலமும் பராபரனிடத்திலிருக்கிறது. ௬௨, சங்கீதம். ௭.

அ சனமே எந்தக்காலத்திலும் அவரை நம்பி அவருக்குமுன்பாக உங்கள் இருதயத்தை யூற்றிப்போடுங்கள், பராபரன் நமக்கடைக்கலமாயிருக்கிறார். சேலா.

௯ ஆனால் மனுப்புத்திரர் மாயையும் நரமக்கள் பொய்யுந்தானே, திராசிலே அவர்கள் ஏகமாய் மாயையிலும் லேசாய் நிறைந்திருக்கிறவர்கள். ௬௯, சங். ௬-௰௨.

௰ கொடுமையையும் கொள்ளையையும் நம்பாமலும் வீணாய் உப்பாமலுமிருங்கள், ஜீவிதம் வளர்ந்தால் இருதயத்தை யதின்மேல் வைக்காதேயுங்கள். மாற்கு. ௰, ௨௪. அப். ௰௨, ௰௬—௨௧. ௧. தீமோ. ௬, ௰௭—௰௯.

௰௧ பராபரன் ஒன்றுசொன்னார், அதை இரண்டுதரம் கேட்டேன், வல்லமை பராபரனுடையதென்பதைத்தானே.

௰௨ கிருபையும் உம்முடையது, ஆண்டவரே ஏனென்றால் தேவரீர் அவனவனுக்கும் அவன் செய்கைக்குத்தக்கதாகச் செலுத்துவீர்.

## ௬௩. சங்கீதம்.

(தாவீது தனப்பட்டலையிலே திரும்பத் தேவ ஆராதனைக்குப் பங்குள்ளவனாக வாஞ்சையாயத்தனச் சத்துருக்களின் அழிவையும் தனக்குவரும் மகிழ்ச்சியையும் முன்னறிவித்தது.)

[தாவீது யூதாவின் வனாந்தரத்திலிருக்கையிலே பாடின சங்கீதம்.]

பராபரனே தேவரீர் என்னுடைய பராபரன், அதிகாலையில் உம்மைத் தேடுகிறேன், வறண்டதும் விடாயத்ததும் தண்ணீரற்றதுமான பூமியிலென்னுத்துமா உம்முடையமேலே தாகமாயிருக்கிறது, என்மாமிசம் உம்மைவாஞ்சிக்கிறது. ௪௨, சங். ௨௧. ௱௪௩, சங்கீதம். ௬.

௨ உம்முடைய வல்லமையையும் உம்முடைய மகிமையையுங்காணும்படிக்கு நான் பரிசுத்தஸ்தலத்தில் உம்மைப்பார்க்க இத்தனையாசைப்பட்டு. ௨௭, சங்கீதம். ௪.

௩ ஏனென்றால் ஜீவனைப்பார்க்கிலும் உம்முடைய கிருபை நல்லது, என்னுதடுகள் உம்மைத் துதித்துக்கொண்டிருக்கும்.

௪ இப்படியே நான் ஜீவனுள்ள மட்டும் உம்மைத் தோத்திரித்து உமது நாமத்திலென்கைகளை யேறெடுப்பேன். ௱௪, சங். ௬௩.

௫ நிணத்தையுங் கொழுப்பையும் உண்டதுபோல என்னுத்துமா திருத்தியாகும், நானென்மெத்தையின்மேல் உம்மைத் தினைக்கும்போது, என்வாய் கெம்பீரிப்பான உதடுகளால் உம்மைப்போற்றும். ௬௩, சங். ௬. ௬௫, சங்கீதம். ௫.

௬ சாமங்களில் உம்மைத் தியானிக்கிறேன்.

௭ ஏனென்றால் நீர் எனக்குத் துணையாயிருந்ததினால் உம்முடைய செட்டைகளின் நிழலிலே கெம்பீரிப்பாயிருக்கிறேன்.

௮ என்னுத்துமா உம்மை யொட்டிக்கொண்டு தொடருகிறது. என்னை உம்முடைய வலதுகரந்தாங்குகிறது. ௧. கொரி. ௬, ௰௭.

௯ ஆனால் என்னுத்துமாவைப் பாழாக்கத் தேடுகிறவர்கள் பூமியின் பாதாளங்களிற் போவார்கள்.

௰ அவர்களைப் பட்டயத்தாற்போக்கிவிடுவார்கள், நரிகளின் பங்காவார்கள்.

௰௧ இராசாவோவென்றால் பராபரனுக்குள் மகிழுவான், அவர்பேரில் சத்தியம் பண்ணுகிறவனெல்லாம் மேன்மை பாராட்டுவான், ஏனென்றால் பொய்பேசுகிறவர்களின் வாய் அடைக்கப்படும்.

## ௬௪. சங்கீதம்.

(சந்திரமான கொடூர சத்துருக்களுக்குத் தன்னை விலக்கியிரட்சிக்கத் தாவீது பராபரனை வேண்டிக்கொண்டு அவர்கள் விழுகுதலை முன்னறிவித்தது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

பராபரனே என்கெஞ்சுதலிலே என் சத்தத்தைக் கேளும் சத்துருவால் வருந் திகிலை நீக்கி என் பிராணனைக் காப்பாற்றும்.

௨ என்னைப் பொல்லாதவர்களின் இரகசிய ஆலோசனைக்கும் அக்கிரமக்காரருடைய அமளிக்கும் இடைஞ்சலாக மறையும்.

௩ அவர்கள் தங்கள் நாவைப் பட்டயத்தைப்போலே கூர்மையாக்குகிறார்கள். ௫௭, சங்கீதம். ௫.

௪ மறைவுகளில் உத்தமனையெய்யக் கசப்பானவார்த்தைகளைத் தங்கள் அம்புகளாக்கி நாணேற்றுகிறார்கள், அவனை அசுப்பிலே யெய்து பயப்படாதிருக்கிறார்கள். ௰௧, சங்கீதம். ௨.

௫ அவர்கள் பொல்லாவிசேஷத்தை உறுதிப்பண்ணிக்கொண்டு கண்ணிகளை மறைவாய் வைப்பதைப்பேசி அவைகளை ஆர் காண்பானென்கிறார்கள்.

௬ நியாயக்கேடுகளைத் தேடி எத்தனம் பண்ணுகிறார்கள், கெட்டோம் ஆய்ந்துதேடியெத்தனம் பண்ணுகிறார்கள், அதுவே அவனவனுடைய உள்ளம் அவர்களிருதயம் ஆழமாயிருக்கிறது.

௭ ஆனால் பராபரன் அவர்களையெய்வார், தீவிரமாய் அம்புபட்டதுபோல அவர்கள் வாதைகளிருக்கும்.

௮ அவர்கள் நாவுகள் அவர்களைத் தானே விழப்பண்ணும், அவர்களில் நிதிமைச் சரிக்கட்டுதலைப் பார்க்கிற யாவரும் ஓடிப்போவார்கள்.

௯ எல்லா மனுஷரும் பயந்து பராபரனுடைய கிரியையை அறிவித்து அவர் செய்கையை உணருவார்கள்.

௰ நீதிமான் கர்த்தருக்குள் மகிழ்ந்து அவரை நம்புவான், செம்மை இருதயத்தாரனைவரும் மேன்மைபாராட்டுவார்கள்.

## ௬௫. சங்கீதம்.

(பரமசிருஷ்டியினிமித்தமும் பூமியினுடைய ஆசீர்வாதங்களினிமித்தமும் பராபரனைத் துதித்தது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.]

பராபரனே சீயோனில் உம்மை நோக்கி அமைந்திருந்து துதிக்கிறார்கள், உமக்குப் பொருத்தனை செலுத்தப்படும்.

௬௨, சங்கீதம். ௨.

௨ செபத்தைக் கேட்கிறவரே உம்மண்டைக்குச் சகல மாமிசமும் வருவதாக.

௩ அக்கிரமங்களின் விசேஷங்கள் என் மேல் மிஞ்சி வல்லமைகொண்டது, ஆனால் எங்கள் மீறுதல்களைத் தேவரீர் நிவிர்த்தியாக்குகிறீர்.

௪ உம்முடைய பிரகாரங்களில் வாசமாயிருக்க நீர் தெரிந்துகொண்டு சேர்க்கிறவன் பாக்கியவான், உம்முடைய பரிசுத்த தேவாலயமாகிய உமது வீட்டின் நன்மையால் திருப்தியாவோம். அ௪, சங். ௫.

௫ பூமியின் கடையாந்தரங்களுக்கும் தூரத்திலுள்ள கடற்கரைகளுக்கும் எல்லாம் நம்பும் நம்பிக்கையாகிய எங்கள் இரட்சிப்பின் பராபரனே நீர் பயங்கரமான காரியங்களைச் செய்கிறதினாலே எங்களுக்கு நீதியுள்ள மறுவுத்தரவையருளுகிறீர்.

௬ உம்முடைய பெலத்தினாலே பருவதங்களை யுறுதிப்படுத்தி வல்லமையை யிடைக்கட்டிக்கொண்டிருந்து,

௭ சமுத்திரங்களின் முழக்கத்தையும் அவைகளுடைய அலைகளின் முழக்கத்தையும் சனசதளங்களின் அமளியையும் அமர்த்துகிறவராயிருக்கிறீர்.

௮ கடையாந்தர விடங்களிற்குடியிருக்கிறவர்களும் உம்முடைய அடையாளங்களினிமித்தம் பயப்படுகிறார்கள், விடியற்காலத்திலும் சாயங்காலத்திலும் புறப்படுகிறவைகளைக் கெம்பீரிக்கப்பண்ணுகிறீர்.

௯ தேவரீர் பூமியை விசாரித்துப்பார்த்து அதற்குத் தவனமுண்டாகினபின் அதை மிகவுஞ் சம்பூரணப்படுத்துகிறீர், பராபரனுடைய வாய்க்கால் தண்ணீர் நிரம்பியிருக்கிறது, நீர் இப்படி அதைத் திருத்தினபின் அவர்களுக்குத் தானியத்தை விளைவிக்கிறீர்.

௰ அதின் வரப்புகள் தணியத்தக்கதாய் அதின் படைச்சால்களுக்குத் தண்ணீர் இறைத்து அதை மழைகளாற் கரையப்பண்ணி அதின் பயிரை ஆசீர்வதிக்கிறீர்.

௰௧ வருஷத்தை உம்முடைய நன்மையால் முடிசூட்டுகிறீர், உமது பாதைகள் நெய்யாய்ப் பொழிகிறது.

௰௨ வனாந்தரத் தாவரங்களின் மேல் பொழிகிறது, மேடுகள் சுற்றிலும் பூரிப்பாயிருக்கிறது.

௰௩ மேய்ச்சல் வெளிகள் ஆடுகளால் பூண்டிருக்கிறது, பள்ளத்தாக்குகள் தானியத்தால் மூடியிருக்கிறது, அதினிமித்தங் கெம்பீரித்துப் பாடுகிறார்கள்.

## ௬௬. சங்கீதம்.

(பராபரனை அவருடைய அதிசயமான கிரியைகளினிமித்தமாகத் துதிக்க அழைக்கிறது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதமாகிய பாட்டு.]

பூமியின் குடிகளே, எல்லாரும் பராபரனுக்கு முன்பாகக் கெம்பீரியுங்கள். ௱, சங். ௧.

௨ அவர் நாமத்தின் மகிமையைக் கீர்த்தனம்பண்ணி அவர் துதியைக் கனமானதாக்குங்கள்,

௩ பராபரனுடனே, உமது கிரியைகளில் எத்தனை பயங்கரமாயிருக்கிறீர் என்று சொல்லுங்கள், உமது வல்லமையினுடைய இரட்சிப்பினிமித்தமாக உம்முடைய சத்துருக்கள் உமக்கு வணக்கமாய்ப் பேசுவார்கள்.

௪ பூமியனைத்தும் உம்மைப் பணிந்துகொண்டு உம்மைக் கீர்த்தனம்பண்ணக்கடவது, அவர்கள் உம்முடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணக்கடவார்கள். சேலா.

௫ வந்து பராபரனுடைய செய்கைகளைப் பாருங்கள், அவர் மனுபுத்திரரிடத்தில் நடப்பிக்குங் கிரியையிற் பயங்கரமானவர்.

௬ கடலை வெட்டாந்தரையாக மாற்றினார், ஆற்றைக் கால்நடையாய்க் கடந்தார்கள், அங்கே அவரால் மகிழ்ச்சியடைந்தோம்.

௨. மோ. ௰௪, ௨௧. யோசு. ௩, ௰௪.

௭ அவர் தம்முடைய வல்லமையினாலே என்றைக்கும் ஆளுகிறவர், அவருடைய கண்கள் சாதிகள் மேல் நோக்கமாயிருக்கிறது, முரட்டாட்டக்காரர் தங்களை யுயர்த்தாதிருப்பார்களாக. சேலா.

௮ சனசதளங்களே, நம்முடைய பராபரனைத் தோத்திரித்து அவர் துதியின் சத்தத்தைக் கேட்கப்பண்ணுங்கள்.

௯ அவர் நம்முடைய கால்களைத் தவளவொட்டாமல் நம்முடைய ஆத்துமாவை உயிரோடே வைக்கிறார்,

௰ தேவனாகிய பராபரனே, எங்களைச் சோதித்தீர், வெள்ளியைப் புடமிடுகிறதுபோலே எங்களைப் புடமிட்டீர்.

௰௧ எங்களை வலைக்குட்படுத்தி, எங்கள் இடுப்புகளின்மேல் வருத்தமான பாரத்தைப் போட்டீர்.

௰௨ மனிதரை எங்கள் தலையின்மேலே ஏறிப்போகப்பண்ணினீர், நெருப்பிலும் தண்ணீரிலும் உள்ளானோம், ஆனாலும் சம்பூரணமுள்ள இடத்திற்கு நீங்கலாக்கிவிட்டுப் புறப்படப்பண்ணினீர். ஏசாயா. ௪௩, ௨.

௰௩ சர்வாங்கதகனங்களோடே உமது வீட்டுக்குட் பிரவேசிப்பேன்.

௰௪ என் இக்கட்டில் என் உதடுகள் திறவுண்டு என் வாய் சொன்ன என்னுடைய பொருத்தனைகளை உமக்குச் செலுத்துவேன்.

௰௫ உமக்குக் கொழுப்பான தகனபலிகளை இட்டு ஆட்டுக்கடாய்களின் தீவட்டப்புகையைப் பிடித்துக்கொட்டுவேன், மாடுகளையும் கடாய்களையும் படைப்பேன். சேலா.

௰௬ பராபரனுக்குப் பயந்தவர்களே, எல்லாரும் வந்து கேளுங்கள், அவர் என் ஆத்துமத்துக்குச் செய்ததைச் சொல்லுவேன்.

௰௭ அவரை நோக்கி என் வாயினாலே கூப்பிட்டேன், என் நாவினால் உயர்த்தப்பட்டார்.

௰௮ என் இருதயத்தில் அக்கிரமம் நோக்கியிருந்தேனேயானால் ஆண்டவர் என்னைக் கேளார். யோவா. ௯, ௩௧.

௰௯ மெய்யாய்ப் பராபரன் என்னைக் கேட்டு என் ஜெபத்தின் சத்தத்துக்குச் செவிகொடுத்தார்.

௨௰ என் ஜெபத்தைத் தள்ளிவிடாமலும் தமது கிருபையை என்னைவிட்டு விலக்காமலும் இருந்த பராபரன் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

## ௬௭. சங்கீதம்.

(பராபரன் தம்முடைய இராச்சியத்தைச் சாதிகளுக்குட் பரம்பப்பண்ணி அதை யாசீர்வதிக்கச்சவை அவரை வேண்டிக்கொள்ளுகிறது.)

[நிணுருகங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட பாட்டாகிய சங்கீதம்.]

௧ பூமியில் உம்முடைய வழியும் எல்லாச் சாதிகளிலும் உம்முடைய இரட்சிப்பும் அறியப்படும்படிக்கு,

௨ பராபரன் எங்களுக்கிரங்கி எங்களை யாசீர்வதித்துத் தம்முடைய முகத்தை எங்கள்மேல் பிரகாசிக்கப்பண்ணக்கடவார். சேலா. ௪. மோசே. ௬, ௨௪. ௨௫.

௩ பராபரனே சனசதளங்கள் உம்மைத் துதிப்பதாக, எல்லாச் சனசதளங்களும் உம்மைத் துதிப்பதாக.

௪ சாதிகள் மகிழ்ந்து கெம்பீரிப்பதாக, ஏனென்றால் சனசதளங்களை நீர் நியாயமாய் நியாயந்தீர்த்துப் பூமியிலுள்ள சாதிகளை நடத்துவீர். சேலா.

௫ பராபரனே சனசதளங்கள் உம்மைத் துதிப்பதாக, எல்லாச் சனசதளங்களும் உம்மைத் துதிப்பதாக.

௬ பூமி தன் பலனைத் தரக்கடவது, எங்கள் தேவனாகிய பராபரன் எங்களையாசீர்வதிக்கக்கடவார்.

௭ பராபரன் எங்களையாசீர்வதிக்கக்கடவார், பூமியின் எல்லைகளெல்லாம் அவருக்குப் பயந்திருப்பதாக.

## ௬௮. சங்கீதம்.

(கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலையும் போதகப்பிரபலியத்தையும், அவர் பரமண்டலங்களுக்கேறுங் கெவிப்பையும் அவருடைய வல்லமையையுங்காண்பிக்கிற தீர்க்கதரிசனம்.)

[இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட தாவீதின் பாட்டாகிய சங்கீதம்.]

௧ பராபரன் எழுந்திருப்பார், அவருடைய சத்துருக்கள் சிதறுண்டு அவரைப் பகைக்கிறவர்கள் அவருக்கு முன்பாக ஓடிப்போவார்கள். ௪. மோசே. ௰, ௩௫.

௨ புகை காற்றினாலே தள்ளப்படுமாப்போலே அவர்களைத் தள்ளுவீர், நெருப்பின் முன் மெழுகு உருகுமாப்போலே ஆகாதவர்கள் பராபரனுடைய சந்நிதியால் அழிவார்கள்.

௩ ஆனாலும் நீதிமான்கள் பராபரனுக்கு முன்பாக மகிழ்ந்து களிகூர்ந்து சந்தோஷமாய்க் களிப்பார்கள்.

௪ பராபரனைப் பாடி அவருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுங்கள், வனாந்தரங்களிலே ஏறிவருகிறவருக்கு வழியைச் செம்மையாக்குங்கள், அவருடைய நாமம் கர்த்தர், அவருக்கு முன்பாகக் களிகூருங்கள். ஏசா. ௪௰, ௩.

௫ அவர் திக்கற்றவர்களுக்குப் பிதாவும் விதவைகளுக்கு நியாயம் விசாரிக்கிறவருமாய்த் தம்முடைய பரிசுத்த வாசஸ்தலத்திலிருக்கிற பராபரன்.

௬ அவர் தனிமையானவர்களை வீட்டிலே வாசமாயிருக்கப்பண்ணிக் கட்டுண்டவர்களைச் செவ்வியான வேளைகளிலே நீக்கி விடுவிக்கிற பராபரன், முரட்டாட்டக்காரரோ வெளியில் வறண்ட நிலத்திலே தங்குவார்கள்.
மத். ௨௰௫. ௯. ஏசாயா. ௬௧, ௧. ௩.

௭ பராபரனே நீர் உம்முடைய சனத்தின் முன் புறப்பட்டு அவாந்தர வெளியிலே நடந்துவருகையில், சேலா.

௮ பூமி அதிர்ந்து வானங்களும் பராபரனுக்கு முன்பாகப் பொழிந்தது, இந்தச் சீனாய் மலை இஸ்ரவேலின் தேவனாகிய பராபரனு

களுமுன்பாக இப்படியானது. ௨. மோசே ௰௬, ௰௬. ௰௮.

௯ பராபரனே சம்பூரண மழையைப் பெய்யப்பண்ணுவீர், இளைத்ததாகிய உமது சுதந்தரத்தைத் தேவரீர் திடப்படுத்துவீர். எசேக்கி. ௩௪, ௨௬.

௰ அதிலே உம்முடைய மந்தை தங்கியிருக்கிறது, பராபரனே சிறுமையானவனுக்கு உம்முடைய தயவினாற் பக்குவமாக்குவீர்.

௰௧ ஆண்டவர் வசனந்தருவார், சுவிசேஷகரின் திரளான சேனையுண்டாயிருக்கும்.

௰௨ சேனைகளின் இராசாக்கள் சுற்றிச் சுற்றித்திரிவார்கள், வீட்டிலே வாசமாயிருக்கிறவளோ கொள்ளையைப் பங்கிடுவாள்.

௰௩ நீங்கள் இருபுறப் பட்டைவகுப்புகளுக்குள்ளிருக்கையில் வெள்ளியாலே மூடப்பட்ட புறச்செட்டைகளின் சாயலாகவுந் தங்கநிறமாகிய அதின் இறகுகளின் சாயலாகவுங் காணுகிறது.

௰௪ சர்வத்துக்கும் வல்லவர் அதின் இராசாக்களை இங்குமங்கும் வைத்தாற் காரிருளிலே வெளிச்சமாம்.

௰௫ பராபரனுடைய பருவதம் பாசான் பருவதத்தைப்போலிருக்கிறது, அது பாசான் பருவதத்தைப்போல் மேடுகளுள்ளது.

௰௬ பருவதங்களே, மேடுகளே, ஏன் விம்மியிருக்கிறீர்கள்? இந்தப்பருவதத்திலே வாசமாயிருக்கப் பராபரன் விரும்பினார், ஆம் கர்த்தர் அதிலே என்றென்றைக்கும் வாசமாயிருப்பார்.

௰௮ பராபரனுடைய இரதங்கள் பதினாயிரங்களும் ஆயிரத்தாயிரங்களுமானது, ஆண்டவர் பரிசுத்தஸ்தலமான சீனாயில் இருந்தவண்ணமாய் அவர்களுக்குள்ளிருக்கிறார். ௨. இராசா. ௬, ௰௭. தானி. ௭, ௰.

௰௯ தேவரீர் உன்னதத்துக்கேறிச் சிறையாக்குதலைச் சிறையாக்கிப்போட்டு, வரங்களை மனிதருக்குள்ளும் முருட்டாட்டஞ் செய்தவர்களுக்குள்ளுங் கூடப் பங்கிடுவதற்கும், இப்படியே பராபரனாகிய கர்த்தர் அவர்களுக்குள் வாசமாயிருப்பதற்குமாக வாங்கிக்கொண்டீர். எபேசி. ௪, ௮. யோவா. ௩, ௰௩. அப்போஸ். ௨, ௩௩.

௨௰ ஆண்டவர் எந்நாளுந் தோத்திரிக்கப்பட்டவர், நம்முடைய மேற் பாரஞ்சுமத்துகிறார். ஆனால் அவரோ நம்முடைய இரட்சிப்பான பராபரன். சேலா. ௨. கொரி. ௧, ௫.

௨௧ பராபரன் நமக்கு இரட்சிப்புகளையருளுகிற பராபரனாயிருக்கிறார், ஆண்டவராகிய கர்த்தரால் மரணத்துக்கு நீங்கும் போக்குகளுண்டு.

௨௨ மெய்யாகவே பராபரன் தம்முடைய சத்துருக்களின் சிரசையுந் தன் தோஷங்களில் நடந்துகொண்டிருக்கிறவனுடைய மயிருள்ள உச்சியையும் உடைப்பார். ௱௰, சங்கீதம். ௫. ௬.

௨௩ சத்துருக்களில் அவனவனுடைய இரத்தத்தில் உம்முடைய கால்பதியும்படியாகவும், உம்முடைய நாய்களின் நாக்கு அதை நக்கும்படியாகவும்,

௨௪ ஆண்டவர் பாசானிலிருந்து நம்முடைய சனத்தைத் திரும்ப அழைத்து வருவோமென்றும், அதைச் சமுத்திர ஆழங்களிலிருந்து திரும்ப அழைத்துவருவோமென்றுஞ் சொன்னார்.

௨௫ பராபரனே, உம்முடைய நடைகளைக் காண்பார்கள், என் பராபரனும் என் இராசாவும் பரிசுத்தஸ்தலத்திலே நடந்துவருகிற நடைகளைத்தானே.

௨௬ முன்னுக்குப் பாடுவாரும் பின்னுக்குச் சேவிக்கிற கன்னியாஸ்திரிகளுக்குள்ளே கின்னரங்களை வாசிப்பாரும் நடப்பார்கள். ௨. மோசே. ௰௫, ௨௰.

௨௭ ஆண்டவராகிய பராபரனை இஸ்ரவேலினுடைய ஊற்றினிமித்தமாகச் சபைகளில் தோத்திரியுங்கள் என்பார்கள். சகரியா. ௰௩, ௧. யோவா. ௭, ௩௮.

௨௮ அங்கே அவர்களையாளுகிற சின்ன பென்யமீனும் யூதாவின் பிரபுக்களும் அவர்கள் கூட்டமுஞ் செபுலோனின் பிரபுக்களும் நப்தலியின் பிரபுக்களுமுண்டு. பிலிப். ௩, ௫. ௧. கொரி. ௰௫, ௯. ௰. அப். ௧, ௰௩. ௰௪.

௨௯ உம்முடைய பராபரன் உமது பெலத்தைக் கட்டளையிட்டார், பராபரனே நீர் எங்களுக்குண்டுபண்ணினதைத் திடப்படுத்தும். மத்தேயு. ௨௧, ௪௨.

௩௰ எருசலேமிலுள்ள உம்முடைய தேவாலயத்திற்காக இராசாக்கள் உமக்குக் காணிக்கைகளைக் கொண்டுவருவார்கள். ௭௨, சங்கீதம். ௰.

௩௧ நாணலிலே தங்கும் மிருகத்தையும் வெள்ளித்துண்டுகளினிமித்தம் மிதித்துப் போட்டிச் சனத்தளங்களென்ற கன்றுக்குட்டிகளுக்குள்ளிருக்கிற வலுவான எருதுகளின் கூட்டத்தையும் உதையும், யுத்தங்களை விரும்புகிற சனத்தளங்களைச் சிதறடிப்பார்.

௩௨ பிரபுக்கள் எகிப்திலிருந்து வருவார்கள், எத்தியோப்பியா தன் கைகளைப் பராபரனண்டைக்கு கெடுக்கத் தீவிரிக்கும்.

௩௩ பூமியின் இராச்சியங்களே பராபரனைப் பாடி ஆண்டவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள். சேலா.

௩௪ ஆதி வானங்களுடைய வானங்களின் மேலேறியிருக்கிறவரைப் பாடுங்கள், இதோ தமது சத்தத்தால் வலுமுழக்கத்தைக் கேட்கப்பண்ணுகிறார். ௨௯, சங்கீ. ௪.

௩௪ பராபரனுக்கு வல்லமையைச் செலுத்துங்கள், அவருடைய மகிமை இஸ்ரவேலின்மேலும் அவருடைய வல்லமை ஆகாய மண்டலங்களிலுமுள்ளது. ௨௯, சங். ௧.

௩௫ பராபரனே உமது பரிசுத்த ஸ்தலங்களிலிருந்து பயங்கரமாய் விளங்குகிறீர், ஜனத்துக்குப் பெலனையும் சத்துவங்களையும் கொடுக்கிறவர் இஸ்ரவேலின் பராபரன்தானே, பராபரன் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

## ௬௯. சங்கீதம்.

(பாடுபடுகிற மேசியாவின் ஜெபம்.)

[சோதரமபுக் கின்னூரத்திலே வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

பராபரனே, என்னை இரட்சியும், ஏனெனில் தண்ணீர்கள் ஆத்துமமட்டும் வந்திருக்கிறது.

௨ நிலையாத ஆழத்தின் உளையில் அமிழ்ந்தி, தண்ணீர்களின் பாதாளங்களுக்குள்ளானேன், நீரோட்டங்கள் என்மேற்புரண்டு போகிறது. ௪௰, சங்கீதம். ௩.

௩ நான் கூப்பிடுகிறதினாலே இளைத்தேன், என் தொண்டை கம்மிப்போயிற்று. என் பராபரனுக்கு நான் காத்திருக்கையால் என் கண்கள் பூத்துப்போயிற்று. ௨௨, சங்கீதம். ௨. ௩.

௪ முகாந்திரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் என் தலையின் மயிர்களிலும் அதிகமாயிருக்கிறார்கள், எனக்கு வீண் சத்துருக்களாய் என்னைச் சங்கரிக்கிறவர்கள் பெலத்திருக்கிறார்கள், அது நான் கொள்ளையிடாததைத் திரும்பக் கொடுக்குங்காலம். யோவான். ௰௫, ௨௫.

௫ பராபரனே, நீர் என் பயித்தியத்தை அறிந்திருக்கிறீர், என் குற்றங்கள் உமக்கு ஒளித்திராது. ௪௰, சங்கீதம். ௰௫.
௨. கொரிந்தியர். ௫, ௨௧.

௬ சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவரே, உம்மை நம்புகிறவர்கள் என்னாலே வெட்கப்பட்டுப்போகாமலும் இஸ்ரவேலின் பராபரனே, உம்மைத் தேடுகிறவர்கள் என்னாலே நாணம் அடையாமலும் இருப்பார்களாக.

௭ ஏனெனில் உம்முடைய நிமித்தம் நிந்தையைச் சகிக்கிறேன், இலச்சை என் முகத்தை மூடுகிறது. ஏசாயா. ௫௰, ௬.

௮ என் சகோதரருக்கு வேறானும் என் தாயின் பிள்ளைகளுக்கு அன்னியனுமானேன்.

௯ ஏனென்றால் உம்முடைய வீட்டுக்காக இருக்கிற பக்திவைராக்கியம் என்னைப் பட்சித்தது, உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தனைகள் என்மேல் விழுந்தது. யோவா. ௨, ௰௭. றோமர். ௰௫, ௩.

௰ என் ஆத்துமாவின் உபவாசத்திலே அழுதேன், ஆனால் அதுவெனக்கு நிந்தனைகளாயிற்று. லூக்கா. ௰௯, ௪௧. ௬௯, சங்கி. ௨௪. ௨௫.

௰௧ இரட்டையென் உடுப்பாக்கினேன், ஆனால் அவர்களுக்குப் பழமொழியானேன்.

௰௨ வாசலில் உட்கார்ந்திருக்கிறவர்கள் என்னைக் குறித்துப் பேசுகிறார்கள், மதுபானங்குடிக்கிறவர்களின் பாடலானேன்.

௰௩ நானோவென்றால் கர்த்தாவே, பிரியமான காலத்திலே உம்மை நோக்கி என் விண்ணப்பத்தைச் செய்கிறேன், பராபரனே, உமது மிகுந்த கிருபையினாலும் உமது இரட்சிப்பின் சத்தியத்தினாலும் என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

௰௪ நான் அமிழ்ந்து போகாதபடிக்கு என்னைச் சேற்றுக்கு நீங்கலாக்கிவிடும், நான் என்னைப் பகைக்கிறவர்களையும் தண்ணீர்களின் ஆழங்களையும் விட்டு நீங்கட்டும்.

௰௫ நீரோட்டங்கள் என்மேற்புரளாமலும் ஆழம் என்னை விழுங்காமலும், துரவு என்மேல் தன் வாயை அடைக்காமலும் இருப்பதாக.

௰௬ கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கேட்டருளும், ஏனெனில் உம்முடைய கிருபை நலமாயிருக்கிறது, உம்முடைய மிகுந்த இரக்கங்களின்படியே என்னை நோக்கிப் பாரும்.

௰௭ உமது முகத்தை உம்முடைய ஊழியக்காரனுக்கு மறைக்காதேயும், ஏனெனில் எனக்கு நெருக்கமுண்டு, தீவிரமாய் என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

௰௮ நீர் என் ஆத்துமாவைக் கிட்டி அதை விடுவித்துக்கொள்ளும், என் சத்துருக்களினிமித்தம் என்னை மீட்டுவிடும்.

௰௯ தேவரீர் என் நிந்தையையும் என் வெட்கத்தையும் என் அவமானத்தையும் அறிந்திருக்கிறீர், என் சத்துருக்கள் அனைவரும் உமக்கெதிரேயிருக்கிறார்கள்.

௨௰ நிந்தையென் இருதயத்தை முறிக்கிறது, மிகவும் பெலக்கேடானேன், யாதொருவன் பரிதாபப்படுவானோவென்று காத்திருந்தேன் ஒருவனுமில்லை, தேற்றரவு பண்ணுகிறவர்களுக்குக் காத்திருந்தேன் ஆரையுங்காணேன்.

௨௧ எனக்குப் பிச்சுண்ணத் தந்து என் தாகத்திலெனக்குக் காடி குடிக்கக்கொடுக்கிறார்கள். மத்தேயு. ௨௭, ௩௪. ௪௮. மாற்கு. ௰௫, ௨௩. யோவான். ௰௯, ௨௮. ௨௯.

௨௨ அவர்களுடைய பந்தி அவர்களுக்கு முன்பாகச் சுருக்குக்கும் சரிக்கட்டுதலான கண்ணியுமாகக்கடவது. றோமர். ௰௧, ௯. ௰.

௨௩ அவர்களுடைய கண்கள் காணாதபடிக்கு அந்தகாரப்படக்கடவது, அவர்கள் இடுப்புகளையெப்போதும் தள்ளாடப்பண்ணும்.

உச உம்முடைய கினத்தரையவர்கள்மே லூற்றும், உம்முடையகோபத்தின உக்கிரம் அவர்களைத்தொடர்ந்துபிடிப்பதாக.

உரு அவர்கள் வீடுவாசல் பாழாகக்கடவது, அவர்களுடைய கூடாரங்களிற் குடியில்லாமற்போவதாக. அப்போ. க, உ௰.

உசு ஏனெனில் தேவரீர் அடித்தவனையவர்கள் துன்பப்படுத்தித் தேவரீராற்காயப்பட்டவர்களைநோக்கப்பேசுகிறார்கள்.

உஎ அவர்கள் உமது நீதிக்குவராமற்படிக்கு அவர்களுடையஅக்கிரமத்தின்மேல் அக்கிரமஞ்சேரட்டும்.

உஅ அவர்கள் நீதிமான்களோடே எழுதப்படாமற்ஜீவபுஸ்தகத்திற்கிறுக்கப்படக்கடவார்கள். பிலிப்பியர். ச, ௩.

உகூ நானோவெனிற் சிறுமையும் நோவுமுள்ளவன், பராபரனே உம்முடைய இரட்சிப்பு எனக்குயர்ந்த அடைக்கலமாவதாக.

௩௰ பராபரனுடைய நாமத்தைப்பாட்டினாலே துதித்து அவரைத்தோத்திரத்தினாலே மகிமைப்படுத்துவேன்.

௩க கொம்பும் விரிகுளம்புமுள்ள மாட்டையுங் காளையையும் எருதையும்பார்க்க அதுவே கர்த்தருக்குப்பிரியமாயிருக்கும்.

ச௰, சங்கீதம். எ.

௩உ சிறுமையானவர்கள் அதைக்கண்டு சந்தோஷப்படுவார்கள், பராபரனைத்தேடுகிறவர்களே உங்களிருதயம்வாழும்.

உஉ, சங்கீதம். உஎ.

௩௩ ஏனெனிற் கர்த்தர் எளியவர்களைக் கேட்கிறவர், கட்டுண்ட தம்முடையவர்களை அவர் புறக்கணியார்.

௩ச வானங்களும் பூமியுஞ் சமுத்திரங்களும் அவைகளில் அசைவாடுகிறயாவும் அவரைத்துதிக்கக்கடவது. ௱சஅ, சங்கீ. க ௱

௩ரு ஏனெனிற் பராபரன் சீயோனை யிரட்சித்து யூதாவின்பட்டணங்களைக்கட்டுவார், அப்போது அங்கேகுடியிருந்து அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௩எ அவருடையஊழியக்காரரின்வித்தார் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், அவருடையநாமத்தைச் சிநேகிக்கிறவர்கள் அதிலேவாசமாயிருப்பார்கள். ௱உ, சங்கீதம். உகூ.

# எ௰. சங்கீதம்.

(தன்னைவிடுவித்துச் சத்துருக்களுக்கிச்சையும் விசுவாசிகளுக்கு மகிழ்ச்சியும்வரப்பண்ணத் தாவீது பராபரனைவேண்டிக்கொண்டது.)

[நினைப்பூட்டுதலாகப்பாடி இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்டதாவீதின்சங்கீதம்.]

பராபரனே, என்னைத் தப்புவிக்கவும் கர்த்தாவே எனக்குச் சகாயஞ்செய்யவுந் தீவிரியும். எக, சங்கீதம். ௰உ. ௰௩.

உ என் பிராணனை வாங்கத்தேடுகிறவர்கள் வெட்கி நாணுவார்கள், என்கேட்டைவிரும்புகிறவர்கள்பின்னிட்டுத்திரும்பி இலச்சையடைவார்களாக. ௩ரு, சங்கீதம். ச.

ச௰, சங்கீதம் ௰ரு. ௱

௩ ஆகா ஆகா என்கிறவர்கள் தாங்கள் அடையும் வெட்கமான பலனாலே பின்னடைந்துபோகக்கடவார்கள்.

ச உம்மைத்தேடுகிற அனைவரும் உமக்குள்மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களாக, உம்முடைய இரட்சிப்பைச்சிநேகிக்கிறவர்கள் எப்போதும் பராபரன் மகிமைப்படக்கடவார் என்பார்களாக.

ரு நானோவெனிற் சிறுமையும் எளிமையுமாயிருக்கிறேன், பராபரனே எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரியும், என் துணையும் என்னை விடுவிக்கிறவருந் தேவரீர், கர்த்தாவே தாமதியாதேயும்.

# எக. சங்கீதம்.

(முதிர்ந்தவயதாகிற தாவீது தன் பெரிய துன்பங்களிற் பராபரன்மேல் வைத்த நம்பிக்கையைக்காண்பித்தது.)

கர்த்தாவே உம்மை நம்பியிருக்கிறேன், நான் என்றைக்கும் வெட்கப்பட்டுப்போகாதிருக்கட்டும்.

உ உம்முடைய நீதியினிமித்தமாக என்னைத் தப்புவித்துவிடுவிப்பீராக, என்னண்டைக்கு உம்முடைய செவியைச்சாய்த்து என்னை யிரட்சியும். தானியேல். சு, ௰சு.

௩ எனக்கு நான் எப்போதும் வந்தடையுங் கன்மலையாகவிரும், என்னை இரட்சிப்பதற்குக்கட்டளையிட்டீரோ, ஏனெனில் தேவரீர் என் கன்மலையும் என் கோட்டையுமானவர். ௰அ, சங்கீதம். உ. ௩.

ச என்பராபரனே, என்னை ஆகாதவனுடையகைக்கும் நியாயக்கேடுந் துஷ்டருமுள்ளவனுடையகைக்குந் தப்புவியும்.

ரு ஏனெனிற் கர்த்தராகிய ஆண்டவரே தேவரீர் என்னுடையநோக்கமும் என்சிறுவயதுதுவக்கி என் நம்பிக்கையுமாயிருந்தீர். சசு, சங்கீதம். உ.

சு நான்கெர்ப்பத்திலிருந்ததுமுதல் உம்மைப்பற்றிக்கொண்டேன், தேவரீர் என்னைஎன்தாயின்குடல்களிலிருந்தெடுத்தவர் உம்முடையபேரில் எப்போதுந் துதிசொல்லுவேன். உஉ, சங்கீ. ௰. ௰௧.

எ அநேகருக்கொரு அற்புதம்போலானேன், தேவரீரோவென்றால் எனக்குப்பெலத்தவடைக்கலம்.

அ என் வாய் உமது துதியினாலும், நாள்தோறும் உமது மகத்துவத்தினாலும் நிறைவதாக.

கூ முதிர்ந்த வயதிலே என்னைத் தள்ளிவிடாமலும் என் பெலன் ஒடுங்கும்போது என்னைக் கைவிடாமலும் இருப்பீராக.

ய ஏனெனில் என் சத்துருக்கள் எனக்கு விரோதமாய்ப் பேசி என் ஜீவாத்துமாவிற்குக் காவலிருக்கிறவர்கள் ஏகமாய் ஆலோசனைபண்ணி,

யக பராபரன் அவனைக் கைவிட்டார்; அவனைத் தொடர்ந்து பிடியுங்கள், ஏனெனில் விடுவிப்பாரில்லையென்கிறார்கள்.

யஉ பராபரனே எனக்குத் தூரமாகாதிரும், என் பராபரனே எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரியும். எய, சங். உ. க.

யங என் ஆத்துமாவை விரோதிக்கிறவர்கள் வெட்கி அழியவும், எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் நிந்தையாலும் இலச்சையாலும் மூடப்படக்கடவார்கள்.

யச நானோ எப்போதும் நம்பி உம்முடைய எல்லாத் துதியின்மேலும் துதியைக் கூட்டுவேன்.

யரு என் வாய் உமது நீதியையும் நாள்தோறும் உமது இரட்சிப்பையுஞ் சொல்லும், ஏனெனில் அவைகளின் தொகையை அறியேன்.

யசா கர்த்தராகிய ஆண்டவருடைய வல்லமைகளில் இட்பிரவேசிப்பேன், உம்முடைய நீதியைமாத்திரமே நினைப்பேன்.

யஎ பராபரனே என் சிறுவயது துவக்கி என்னைப் போதித்துவந்தீர், இந்நேரமட்டும் உம்முடைய அதிசயங்களை அறிவிக்கிறேன்.

யஅ இப்போதும் பராபரனே, நான் உமது புயத்தை இச்சந்ததிக்கும் உமது வல்லமையை வரப்போகிற யாவருக்கும் அறிவிக்குமளவும் முதிர்ந்த வயதும் நரையுமட்டாக என்னைக் கைவிடீராக.

யகூ பெரிதானவைகளைச் செய்த பராபரனே உம்முடைய நீதி உயரமட்டுஞ் சேருகிறது, பராபரனே உம்மைப்போலே ஆர்?

உய அநேக இக்கட்டுகளையுங் கொடிதானவைகளையும் என்னைப் பார்க்கப்பண்ணின நீர் திரும்ப என்னை உயிர்ப்பித்துத் திரும்ப என்னைப் பூமியின் பாதாளங்களிலிருந்து ஏறப்பண்ணுவீராக. க. சாமுவேல். உ, சா.

உக என் முக்கியத்தைப் பெருகப்பண்ணி என்னை மறுபடியுந் தேற்றுவீராக.

உஉ என் பராபரனே நானுந் தம்புரினாலே உம்மையும் உம்முடைய சத்தியத்தையுந் துதிப்பேன், இஸ்ரவேலினுடைய பரிசுத்தரே உம்மைச் சுரமண்டலத்தாற் கீர்த்தனம்பண்ணுவேன்.

உங என் உதடுகளும் நீர் மீட்டுவிட்ட என் ஆத்துமாவுங் கெம்பீரிக்கும், ஏனெனில் உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

உச என் நாவும் நாள்தோறும் உமது நீதியைக் கொண்டாடும், ஏனென்றால் எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் வெட்கி இலச்சைப்பட்டுப்போனார்கள்.

## எஉ. சங்கீதம்.

(பரமசாலமோனாகிய மேசியாவினுடைய இராச்சியத்தின் பாக்கியப்பெருக்கம்.)

[சாலமோனுடையது.]

பராபரனே இராசாவுக்கும் உம்முடைய நியாயத்தீர்ப்புகளையும் இராசாவின் குமாரனுக்கும் உம்முடைய நீதியையுங் கட்டளையிடும்.

உ அவர் உம்முடைய சனத்தை நீதியும் உம்முடைய சிறுமையானவர்களை நிதானமுமாய் நியாயம் விசாரிப்பார். ஏசா. யக, ங—ரு.

ங பருவதங்கள் சனத்துக்குச் சமாதானத்தைத் தரும், மேடுகள் நீதியின் விளைவோடிருக்கும்.

ச அவர் சனத்திற் சிறுமையானவர்களை நியாயம் விசாரித்து எளியவன் பிள்ளைகளை இரட்சித்து இடுக்கண்செய்கிறவனை நசுக்குவார்.

ரு சூரியனுஞ் சந்திரனுமுள்ளமட்டும் உமக்குத் தலைமுறை தலைமுறையாகப் பயந்திருப்பார்கள். அகூ, சங்கீ. ஙஎ. ஙஅ.

சா புல்லறுப்புண்ட வெளியின்மேல் இறங்குகிற மழையைப்போலவும் பூமியை நனைக்கிற தூறல்களைப்போலவும் இறங்குவார்.

எ அவருடைய நாட்களில் நீதிமான் செழிப்பான், சந்திரனில்லாமற் போகுமட்டும் மிகுதியான சமாதானமிருக்கும்.

அ ஒரு சமுத்திரந்துவக்கி மற்றச் சமுத்திரமட்டாகவும் ஆறு துவக்கிப் பூமியின் எல்லைகள்மட்டாகவும் ஆளுவார். அகூ, சங். உகூ. சகரியா. கூ, ய.

கூ அவருக்கு முன்பாக வனாந்தரத்தார் குனிவார்கள், அவருடைய சத்துருக்கள் மண்ணை நக்குவார்கள்.

ய தர்ஷீசின் இராசாக்களுந் தீவுகளின் இராசாக்களுங் காணிக்கைகளைச் செலுத்தி வருவார்கள், சேபா சாபவென்ற தேசங்களின் இராசாக்கள் வெகுமானங்களைக் கொண்டுவருவார்கள். சாஅ, சங்கீ. உகூ. ஏசாயா. சாய, சா.

யக சகல இராசாக்களும் அவரைப் பணிந்துகொள்ளுவார்கள், சகல சாதிகளும் அவரைச் சேவிப்பார்கள். அறிவி. யக, யரு.

யஉ ஏனெனிற் கூப்பிடுகிற எளியவனையுஞ் சிறுமையானவனையும் உதவியற்றவனையும் விடுவிப்பார்

௰௩ தரிததிரருமம எளிமையுமானவனைத தபபுவிதது எளியவர்களின ஆததுமாக்களை பிரட்சிபபார்.

௰௪ அவர்கள ஆததுமாக்களைத தநதிரததுககுங கொடுமைககுநதபப விடுவிததுக கொளளுவார், அவர்கள இரததம அவருடையபார்வைககருமையானது

௰௫ அவர் பிழைபபார், அவருககுச சேபேயாவின பொனனிற் கொடுககபபடும, எபபோதும அவரைவேணடிச செபமபணணப படும, எநநாளுந தோததிரிககபபடுவார்.

அறி. ௧, ௰௮ ஏசா. ௬௰, ௬.
மததேயு. ௨, ௰௧.

௰௬ பூமியிற் பருவதஙகளின கொடுமுடியிலேவிதைககபபடட ஒருபிடி தானியம போவிருககும, அதினவிளைசசல லீபனோனைபபோலே அசையும, நிலததினுடையபூணடுகளைபபோலே பட்டணததிலிருநதுபூபபார்கள.

௰௭ அவருடைய நாமம் எனறெனறைககுமிருககும, சூரியனுளளமடடும அவருடைய நாமஞசநதான பரமபரையாயிருககும, எலலாச சாதிகளும அவருககுள ஆசீர்வதிததுககொணடு அவரைப பாககியமுடையவரெனபார்கள. ௧. மோசே. ௰௨, ௩.

௰௮ ஒருவராய அதிசயஙகளைச செயகிற இஸரவேலின தமபிரானுமிருககிற பராபரனாகிய கர்த்தர் தோததிரிககபபடடவரும,

௰௯ அவருடைய மகிமையான நாமம எனறெனறைககுந தோததிரிககபபடடதுமாமே, அவருடைய மகிமையாற் பூமியனைததும நிறைபபபபடுவதாக, ஆமென ஆமென.
ஏசாயா. ௬, ௩.

௨௰ ஈசாயினகுமாரனாகிய தாவீதினசெபஙகள முடிநதது.

## ௭௩. சங்கீதம்.

(பொலலாதவருடையவாழவைபபொறாமையோடேபார்தது இடறல அடையாதபடிககு அவர்கள பிற்காரியததைததியானிததுப பராபரனையே கெதியாகபபறறியிருககவேணடியதெனபது.)

[ஆசாபபினசஙகீதம.]

இஸரவேலுககு அதாவது, இருதயததிலே சுததமானவர்களுககுப பராபரன நலலவர்தானே. மததே. ௫, ௮.

௨ என னுடையகாலகளோவெனறாற் சாயவும என அடிகள சருககவுஞசமயததபபிறறு.

௩ ஏனெனில ஆகாதவர்களினசாஙகோபாஙகததைத நானகாணகையில வீமபுககாரர் மேற்பொறாமையானேன. யோபு. ௨௧, ௭-௨௧. எரேமி. ௰௨, ௧—௩.

௪ அதேனெனறால தஙகளமரணமடடும அவர்களுககுக கடடுகள்களிலலாமல அவர்களுடையபெலன புஷ்டியாயிருககிறது.

௫ நரசீவவருததததில அகபபடடிரார்கள, வேறே மனுஷரோடே உபாதியடையார்கள.

௬ ஆகையாற்பெருமை அவர்களையொரு சரபபணியைபபோலே பூணும, அவர்கள கொடுமை அவர்களை ஆடையாபரணததைபபோலேமூடும.

௭ அவர்களசணகளநிணததிலிருநதுபார்ககிறது, அவர்கள மனமேவககஙகள நடநதேறுகிறது.

௮ பிறரைததொயயபபணணி அகஙகாரமாய நிடடூரஞசெயவதைப பேசுகிறார்கள, உயரததிலிருநது பேசுகிறார்கள.

௯ தஙகளவாயை வானததிலேவைககிறார்கள, அவர்களநாவினபடியேபூமியிலேநடககும.

௰ ஆனபடியாலஅவர்களுடையசனமிநதவழியாகவேதிருமபும, தணணீர்களஅவர்களுககுபபரிபூரணமாகசசுரநதுவரும.

௰௧ அவர்கள பராபரன அதை எபபடி அறிவார், உனனதமானவரில அதின அறிவுணடோவெனகிறார்கள. ௰, சஙகீ. ௰௧.
௯௪, சஙகீதம. ௭.

௰௨ இதோ இவர்கள ஆகாதவர்களாமே ஆகிலும எனறுஞசுகசீவிகளாயிருநதுஆஸதியைபபெருககபபணணுகிறார்கள.

௰௩ நானவிருதாவாகவே எனனிருதயததைச சுததமபணணி எனகைகளைககுறறமிலலாமையிலேகழுவினேன. மலகி. ௩,
௰௪. ழி

௰௪ நான நித்தம வாதிககபபடுகிறவனுமே, எனதணடனைகள காலமாறுதிருமபுமே.

௰௫ இ பபாதிரொலவேனெனறேனேடியேஇதோஉசமமுடையபிளளைகளினசநதிலககுததுரோகியாவேன.

௰௬ இதையறியுமபடிககுயோசிததேன,

௰௭ ஆனால நான பராபரனுடைய பரிசுததஸதலஙகளுககுட பிரவேசிதது அவர்கள கடைசிககாரியததைககவனிததணருமளவும அது என்பார்வைககுவிதனமாயிருநதது.

௰௮ சருககலகளிலே அவர்களை நிறுததி அவர்களைப பாழ்ககடிபபுகளில விழபபணணுகிறீர்.

௰௯ ஒருநிமிஷததிலேததனையாயபபாழாவார்கள, பயஙகரஙகளாலேஅழிநதுநிர்மூலமாவார்கள. ௩௭, சஙகீ. ௩௮.

௨௰ ஆணடவரே நீர் திழிததெழுநதவுடனே சொப்பனம ஒழியுமாபபோலே அவர்களவேஷததைபபடடணததில ஈனமாயபபோகபபணணுவீர்.

௨௧ என்னெஞ்சு கசந்து நான் என் உள்ளிந்திரியங்களிற் குத்தக்கருவப்படுகிறவனாயிருக்கக்கொள்ள,

௨௨ நான் காரியத்தை அறியாத மோடனும் உமக்குமுன்பாக மிருகக்குணமுமாயிருந்தேன்.

௨௩ ஆகையால் நான் எப்போதும் உம்மண்டையிலே தரிப்பேன், என் வலதுகையைப் பிடித்துத் தாங்குவீர்,

௨௪ உம்முடைய யோசனையின்படி என்னை நடத்திக் கடைசியிலே என்னை மகிமையிலே ஏற்றுக்கொள்வீராக.

௨௫ பின்னை யார் எனக்குப் பரமண்டலங்களிலிருக்கிறார், உம்மோடேதானிருக்கையிற் பூமியில் எனக்கு வேறே விருப்பமில்லை.

௨௬ என் மாம்சமும் என்னிருதயமும் மாளும்போது பராபரன் என்றென்றைக்கும் என்னிருதயத்தின் கன்மலையும் என் பங்குமாயிருக்கிறார்.

௨௭ ஏனெனில் இதோ உம்மைவிட்டுத் தூரமாகிறவர்கள் அழிவார்கள், உம்மைவிட்டுச் சோரம்போகிற அனைவரையுஞ் சங்கரிப்பீர்.

௨௮ எனக்கோ பராபரனை அண்டிக்கொண்டிருக்கிறதே நலம், நான் உம் கிரியைகளையெல்லாஞ் சொல்லிவரும்படிக்குக் கர்த்தராகிய ஆண்டவர்மேலென் நம்பிக்கையை வைத்திருப்பேன்.

## ௭௪. சங்கீதம்.

(பாழாக்கப்பட்ட சபைசெய்யும் விண்ணப்பம்.)

[ஆசாபின் போதகசங்கீதம்.]

பராபரனே ஏன் எங்களை என்றைக்குந் தள்ளிவிடுகிறீர், ஏன் உமது கோபம் உம்முடைய மேய்ச்சலின் ஆடுகள்மேற் புகைகிறது. ௪௪, சங்கீதம். ௨௪. ௨௫.

௨ நீர் பூர்வகாலந்துவக்கிச் சம்பாதித்துக்கொண்ட உமது சபையையும் நீர் மீட்டுக்கொண்ட உம்முடைய சுதந்தரமான கோத்திரத்தையும் நீர் வாசமாயிருந்த சீயோன்பருவதத்தையும் நினைவுகூரும்.

௩ நித்திய பாழ்க்கடிப்புகளுக்கு உம்முடைய பாதங்களையெழுந்தருளப்பண்ணும், சத்துரு பரிசுத்த ஸ்தலத்தில் அனைத்தையுங் கெடுத்துப்போட்டான்.

௪ உம்முடைய சத்துருக்கள் உம்முடைய ஆலயங்களின் உட்புறத்திலே கெர்ச்சித்துத் தங்கள் அடையாளங்களை அடையாளங்களாக வைத்தார்கள்.

௫ மரங்களுடைய அடர்த்தியிலே வெட்டுக்கோடாலிகளை ஓங்கியெடுக்கிறவனென்ன அவனவன் பேர்போனான்.

௬ இப்போதும் அதின் சித்திரவேலைகளையெல்லாம் ஏகமாய் வாச்சியாலுஞ் சுத்தியல்களாலுந் தகர்த்தார்கள்.

௭ உம்முடைய பரிசுத்தஸ்தலத்தை அக்கினிக்கிரையாக்கி உம்முடைய நாமத்தின் வாசஸ்தலத்தைத் தரையாகும்பரியந்தத் தீட்டுக்குலைத்துப்போட்டார்கள்.

௮ அவர்களை ஏகமாய் நிர்மூலமாக்குவோமென்று தங்களிருதயத்திற் சொல்லித் தேசத்திலுள்ள பராபரனுடைய ஆலயங்களையெல்லாஞ் சுட்டெரித்தார்கள்.

௯ எங்கள் அடையாளங்களைக் காணோம், தீர்க்கதரிசி அப்புறமில்லை, எந்தமட்டுமென்றறிகிறவன் எங்களிடத்திலுமில்லை.

௰ பராபரனே எந்தமட்டுஞ் சத்துரு நிந்திப்பான், பகைஞன் என்றைக்கும் உம்முடைய நாமத்தைத் தூஷணிப்பானோ.

௰௧ ஏன் உமது கையையும் உமது வலதுகரத்தையும் முடக்கிக்கொள்ளுகிறீர், அதை உமது மடியிலிருந்தெடுத்து நீட்டிக்கொண்டிரும்.

௰௨ ஏனெனிற் பூமியின் நடுவிலே இரட்சிப்புகளைச் செய்கிற பராபரன் ஆதிகாலமுதலாய் என்னுடைய இராசா. ௬௮, ௪௩. ௨௧.

௰௩ தேவரீர் உம்முடைய வல்லமையாற் சமுத்திரத்தை இரண்டாகப் பிளந்து தண்ணீர்களில் வலுசர்ப்பங்களின் தலைகளையுடைத்தீர்.

௰௪ தேவரீர் முதலைகளின் தலைகளை நருக்கிப்போட்டு அதை வனாந்தரத்தாராகிய சனத்துக்குப் போசனமாகக் கொடுத்தீர்.

௰௫ தேவரீர் ஊற்றையும் ஆற்றையும் பிளந்து பிறக்கப்பண்ணினீர், தேவரீர் வலுத்த நதிகளை வற்றிப்போகவும் பண்ணினீர்.

௰௬ பகலும் உம்முடையது, இரவும் உம்முடையது, தேவரீர் வெளிச்சத்தையுஞ் சூரியனையும் படைத்தீர்.

௰௭ தேவரீர் பூமியின் எல்லைகளையெல்லாந் திட்டம்பண்ணினீர், கோடைகாலத்தையும் மாரிகாலத்தையுந் தேவரீர் உண்டாக்கினீர்.

௰௮ சத்துரு கர்த்தராகிய தேவரீரை நிந்திக்கிறதையும், பயித்தியங்கொண்ட சனம் உம்முடைய நாமத்தைத் தூஷணிக்கிறதையும் நினைத்திரும். ஏசாயா. ௬௭, ௰௭.

௰௯ உம்முடைய காட்டுப்புறாவின் ஆத்துமாவை மிருகத்துக்குக் கொப்புக்கொடாதேயும், உம்முடைய சிறுமையானவர்களின் பிராணனை என்றைக்கும் மறந்திராதேயும்.

௨௰ உம்முடைய உடம்படிக்கையை நினைத்தருளும், ஏனெனிற் பூமியில் இருளான இடங்கள் கொடுமைக்குடியிருப்புகளால் நிறைந்திருக்கிறது.

௨௧ நொறுங்குண்டவன் நாணத்தோடே திரும்பாமற் சிறுமையானவனும் எளி

மையானவனும உமமுடைய நாமததைப துதிபபார்களாக.

௨௨ பராபரனே நீர் எழுமபி உமமுடைய வழககை வழககாடும, பயித்தியககாரனாலே நாளதோறும உமககுவரும நிநதையை நினையும.

௨௩ உமமுடைய சத்துருக்களின கூக்குரலை மறவாதேயும, உமககு விரோதமாய எழுமபுகிறவர்களின அமளியெபபோதும அதிகரிககிறது.

## ௭௫. சங்கீதம்.

(பெருமையானவர்கள தாழ்த்தபபடுவதையுந தாழமையானவர்கள உயர்த்தப்படுவதையும மேசியா முனனறிவித்தது.)

[நானகெடடுப்போகாதபடிக்குப பாடினதும இராகததலைவனுக்கு ஒபபுவிககப படடதுமான ஆசாபபினசஙகீதமாகியபாடடு.]

உமமைத துதிக்கிறோம பராபரனே, உம்மைத் துதிக்கிறோம, உமமுடைய நாமஞ சமீபமாயிருக்கிறது, உமமுடைய அதிசயஙகளைச சொலலிவருகிறார்கள.

௨ நியமிக்கபபடடதை நான அடையும போது நான உததம நிதானமாய நியாய நதீர்பபேன.

௩ பூமியும அதின எலலாக குடிகளும இளகிப்போகிறபோதிலும, நான அதின தூணகளை நிலைநிறுத்துவேன. சேலா.

௪ வீமபுக்காரருடனே வீமபுசொலலாதேயுஙகளெனறும ஆகாதவர்களுடனே கொமபுகளை ஏற்றாதேயுஙகளெனறுஞ்சொனனேன.

௫ உஙகள கொமபுகளை உயரமாயெடுக்காதேயுஙகள, பெருமைக்கழுத்தோடே கடினமாயபபேசாதேயுஙகள. ௯௪, சஙகீ. ௰௬.

௬ ஏனெனிற் கிழக்கிலாகிலும மேற்கிலாகிலும மலைகளின வனாந்தரத்திசையிலாகிலுமிருந்து உஙகளுக்குச செயமவராதென்றேன.

௭ ஏனெனறாற் பராபரனே நியாயாதிபதி, இவனைத்தாழ்த்தி அவனையுயர்த்துகிறார்.
க. சாமுவேல. ௨, ௭. ௮.

௮ ஏனெனில மிகுதியுஙகலஙகிப்பொஙகுகிற மதுபானத்தாலே நிறைந்தபாத்திரங் கர்த்தருடைய கையிலிருக்கிறது. அதிலிருநது வார்க்கிறார், ஆனாற் பூமியிலுளள ஆகாதவர்கள அனைவரும அதின வணடலகளை உறுஞ்சிக்குடிப்பார்கள. ௬௰, சஙகீதம. ௩.

௯ நானோவெனில என்றென்றைக்கும இதையறிவித்து யாக்கோபுடைய பராபரனைக்கீர்த்தனம பணணி,

௰ ஆகாதவர்களின கொமபுகளையெலலாம வெடடுவேன, நீதிமானுடைய கொமபுகளோவுயர்த்தபபடும.

## ௭௬. சங்கீதம்.

(சத்துருக்களைவென்ற விசேஷித்தசெயத்தைக்கட்டளையிட்டபராபரனைமகிமைப் படுத்தினது.)

[இணைஞாஙகளிலேவாசிக்க இராகத்தலைவனுக்கொபபுவிக்கபபடட ஆசாபபின சஙகீதமாகியபாடடு.]

யூதாவிலே பராபரன அறியபபடடவர் இஸரவேலில அவருடைய நாமம்பெரியது.

௨ சாலேமில அவருடைய கூடாரமுஞ் சீயோனில அவருடைய வாசஸதலமுமிருக்கிறது.

௩ அஙகேயிருநது விலலின அமபுகளையுங் கேடையம படடையம யுத்தத்தையுமுறிக்கிறார். சேலா.

௪ மகத்துவமானவரே. கொளளையிட்டிற மலைகளைப்பார்க்கிலுந் தேவரீரே பிரகாசமுளளவர்.

௫ வீரியநெஞ்சுளளவர்கள கொளளையாய்ப்போனார்கள, தஙகள நித்திரையையடைந்து அசைந்தார்கள, வலலமையுள்ள எல்லாமனிதருடைய கைகளும அவர்களுக்குக் கவைக்குவராதேபோயிறறு.

௬ யாக்கோபினபராபரனே, உமமுடைய உதமபுதலால இரதஙகளுங் குதிரைகளும உறஙகிவிழுந்தது.

௭ நீர், நீரே பயஙகரமானவர், உமது கோடம பறறியெரிகிறதுமுதல ஆர் உமக்குமுனபாக நிறபான.

௮ வானஙகளிலிருநது நியாயததீர்பபைக் கேட்கபபணணினீர்.

௯ பூமியிலுளள எலலாச சிறுமையானவர்களையும இரட்சிக்கப பராபரன நியாயம விசாரிப்பதற் கெழுமபுகையிற் பூமிபயந்தமர்ந்தது. சேலா.

௰ ஏனெனில மனிதனுடைய உககிரம் உமதுமகிமையைவிளஙகபபணணும, இன்னம அதிக உககிரஙகளால இடைகடடிக் கொளளுவீர்.

௰௧ உஙகள பராபரனாகிய கர்த்தருக்குப பொருத்தனைகளைச சொலலிச செலுத்துஙகள, அவரைச்சூழ்ந்திருக்கிற அனைவரும பயஙகரமானவருக்குக் காணிக்கைகளைக் கொணடுவரக்கடவார்கள.

௰௨ பிரபுக்களின ஆவியைத்தறிக்கிறார், பூமியின இராசாக்களுக்கவர் பயஙகரமானவர்.

## ௭௭. சங்கீதம்.

(பராபரனமுனசெயத அதிசயஙகளை நினைவு கூருகிறதினாலே மனிதன தன்மனதை உபத்திரவத்திலே திடபபடுத்தவேணடியதெனபது.)

[எதிதூனென்ற இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்ட ஆசாப்பின் சங்கீதம்.]

௧ நான் பராபரனுக்கு நேராக என் சத்தத்தையுயர்த்திக் கூப்பிடுகிறேன். என் சத்தத்தைப் பராபரனண்டைக்குயர்த்துகிறேன், அவர் எனக்குச் செவிகொடுக்கிறார்.

௨ என் நெருக்கத்தின் நாளிலே ஆண்டவரைத் தேடினேன், என் கை இராக்காலத்திலே ஒழிந்திராமல் விரிக்கப்பட்டிருந்தது. என் ஆத்துமா ஆறுதலடைந்து கொள்ளாதே போயிற்று. ௫௰, சங்கீதம். ௰௫.

௩ நான் பராபரனை நினைக்கும்போது, அலறினேன், நான் யோசிக்கும்போது, என் ஆவி தொய்ந்துபோயிற்று. சேலா.

௪ என் கண்களின் இமைகளைப் பிடித்திருந்தீர், நான் பேசமாட்டாதபடிக்கு மனமுறிச்சலாயிருந்தேன்.

௫ பூருவ நாட்களையும் ஆதிகாலத்து வருஷங்களையும் சிந்தித்தேன். ௱௪௩, சங். ௫.

௬ நான் இராக்காலத்திலென் கின்னரத்தை நினைத்து என் இருதயத்தோடே சம்பாஷித்துக்கொண்டேன், என் ஆவி ஆராய்ந்தது,

௭ ஆண்டவர் இனி அப்புறந் தயவுசெய்யாமல் நித்தியகாலங்களாகவொழிந்துவிடுவாரோ.

௮ அவருடைய கிருபை என்றென்றைக்குமற்று வாக்குத்தத்தமானது தலைமுறை தலைமுறைக்குமொழிந்துபோயிற்றோ.

௯ பராபரன் இரக்கமறந்தாரோ, தமது இரக்கங்களைக் கோபத்தினால் அடைத்துப்போட்டாரோவென்றேன். சேலா.

௰ ஆனால் இது பெலஈனப்படுமவகை, காலத்தின் மாறுதல் உன்னதமானவருடைய வலதுகரத்திலிருக்கிறதென்று சொல்லி,

௰௧ கர்த்தருடைய செயல்களை நினைவுகூர்ந்தேன், உம்முடைய பூருவகாலத்து அதிசயங்களைத்தானே நான் நினைவுகூர்ந்து.

௰௨ உம்முடைய எல்லாக் கிரியைகளையுந் தியானித்து உம்முடைய செயல்களை யோசித்தேன்.

௰௩ பராபரனே, உமது வழி பரிசுத்த ஸ்தலத்திலுள்ளது, பராபரனைப்போலப் பெரிய தேவனார்,

௰௪ அதிசயங்களைச் செய்கிற பராபரன் நீரே, சனசந்தானங்களுக்குள்ளே உம்முடைய வல்லமையைத் தெரியப்பண்ணினீர்.

௰௫ யாக்கோப் யோசேப் என்றவர்களின் புத்திரராகிய உம்முடைய சனத்தை உமது புயத்தினாலே மீட்டுக்கொண்டீர். சேலா.

௰௬ ஜலங்கள் உம்மைக் கண்டது, பராபரனே ஜலங்கள் உம்மைக் கண்டு தத்தளித்தது, ஆழங்களுங் கலங்கிற்று.

௰௭ மேகங்கள் ஜலங்களைப் பொழிந்துவிட்டது, ஆகாயமண்டலங்கள் முழக்கமிட்டது, உம்முடைய அம்புகளுந் தெறிப்புண்டு பறந்தது. ௰௮, சங்கீதம். ௰௨—௰௯.

௰௮ உம்முடைய குமுறலின் சத்தம் வட்டமிட்டு முழங்கிற்று, மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகாசித்தது, பூமி குலுங்கி அதிர்ந்தது.

௰௯ உம்முடைய வழி கடலிலும் உமது பாதைகள் வலுத்த தண்ணீர்களிலுமிருந்தது. உமது காலடிகள் தெரியப்படாதேபோயிற்று.

௨௰ மோசே ஆரோன் என்றவர்களின் கையால் உமது சனத்தை ஒரு ஆட்டுமந்தையைப்போலே வழிநடத்தினீர்.

## ௭௮. சங்கீதம்.

(பராபரன் தமது சனத்துக்குச் செய்துவந்த உபகாரங்களையுஞ் சனத்திலே மிகுதியாகவுங் கண்ட நன்றியறியாமையையுங் காண்பித்தது)

[ஆசாப்பின் போதக சங்கீதம்.]

௧ என் சனமே என் உபதேசத்துக்குச் செவிகொடுத்து என் வாயின் வசனங்களுக்கு உங்கள் செவிகளைச் சாயுங்கள்.

௨ என் வாயை உவமைகளால் திறப்பேன், பூருவகாலமுதற் புதைபொருளானவைகளை வெளிப்படுத்துவேன். ௪௪, சங்கீ. ௫. மத். ௰௩, ௩௫.

௩ நாங்கள் கேட்டதும் அறிந்ததும் எங்கள் பிதாக்கள் எங்களுக்குச் சொல்லிவந்ததுமான விசேஷங்களை,

௪ நாங்கள் அவர்களுடைய பிள்ளைகளுக்கு மறைக்காமற் கர்த்தரின் துதிகளையும் அவருடைய பெலத்தையும் அவர் செய்த அவருடைய அதிசயங்களையும் பின்சந்ததிக்கு விவரிப்போம்.

௫ ஏனெனில் அவர் யாக்கோபிலே சாட்சியை ஏற்படுத்தி இஸ்ரவேலிலே வேதத்தை ஸ்தாபித்து அதைத் தங்கள் பிள்ளைகளுக்கறிவிக்க நம்முடைய பிதாக்களுக்குக் கற்பித்தார்.

௬ பிறக்கப்போகிற பிள்ளைகளாகிய பின்சந்ததி அதை அறிந்துகொண்டு எழும்பித் தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்லவும்,

௭ பராபரன்மேலே தங்கள் நம்பிக்கையை வைத்துப் பராபரனுடைய செயல்களை மறவாமல் அவர் கற்பனைகளைக் கைக்கொள்ளவும்,

௮ முரட்டாட்டமுங் கலகமுமுள்ள சந்ததியாகிய தங்கள் பிதாக்களைப் போலாகாதிருக்கவுந்தானே, அவர்கள் தங்கள் இருதயத்தைச் செம்மைப்படுத்தாத சந்ததியாயிருந்தார்கள், அவர்களுடைய ஆவி பராபரனுடனே உண்மையாயிருந்ததில்லை.

௫ மோசே. ௩௨, ௫. ௯.

௯ ஆயுதமணிந்த வில்லாளரான எப்பிராயீமபுததிரர் யுததநாளிலே முதுகைக் காட்டினார்கள்.

௰ பராபரனுடைய உடமபடிக்கையைக் கைக்கொள்ளாமல அவர் நியாயப்பிரமாணத்திலே நடக்கமாட்டோமென்று,

௰௧ அவர்செயலகளையும அவர் தங்களுக்குக் காணபிதத அவருடைய அதிசயங்களையும மறந்தார்கள்.

௰௨ அவர்களுடைய பிதாக்களின முனபாக எகிப்துதேசதது சோவானபட்டண வெளியிலே அதிசயங்களைச்செயதார்.

௰௩ கடலைப்பிளந்து அவர்களைக் கடக்கப்பணணிச் சலங்களைக் குவியலாக நிறுததி,

௰௪ அவர்களைப் பகற்காலத்திலே மேகத்தாலும இராமுழுவதும அக்கினிவெளிச்சத்தாலும வழிகாட்டிநடததினார்.

௰௫ வனாந்தரத்திற் கன்மலைகளைப்பிளந்து அவர்களுக்குத் திரளான ஆழங்களுக்குச்சரியான தணணீர்களால தாகந்தீர்த்து,

௰௬ கனமலையிலிருந்து நதிகளைப் புறப்படப்பணணித் தணணீர்களை ஆறுகளாய் இறங்கிஓடவிட்டார்.

௰௭ ஆனால அவர்கள அப்புறம அவருக்கு விரோதமாயப்பாவஞ்செய்யவும உன்னதமானவருக்கு வறணடவெளியிலே கோபம மூட்டவுந்தொடர்ந்து,

௰௮ தங்கள மனதுக்கேற்கும போசனத்தைக் கேட்கிறதினாற் பராபரனைத் தங்களிருதயங்களிற் பரீட்சைபார்த்து, ௨. மோ. ௰௬, ௨. ௬.

௰௯ பராபரன வனாந்தரத்திலே பந்தியை ஆயத்தப்படுத்தமாட்டுவாரோ வென்றும,

௨௰ இதோ அவர் கன்மலையையடித்ததினால தணணீர்கள புறப்பட்டு நதிகளாய்ப் புரணடுவந்தது, அப்பத்தையுங் கொடுக்கமாட்டுவாரோ? தமமுடைய சனத்துக்கு மாமிசத்தையும ஆயத்தப்படுத்துவாரோ வென்றும பராபரனுக்கு விரோதமாயப் பேசினார்கள்.

௨௧ ஆகையாற் கர்த்தர்கேட்டு உக்கிரமானார். யாக்கோபுக்குவிரோதமாய அக்கினிபறறியெரிந்தது.

௨௨ அவர்கள பராபரனபேரில விசுவாசியாமலும அவர் இரட்சிப்பை நமபாமலும போனதினாலே இஸ்ரவேலுக்குவிரோதமாகக்கோபம எழும்பிறறு.

௨௩ அவர் உயரவிருக்கும ஆகாயமேகங்களுக்குக்கற்பிதது வானங்களினகதவுகளைத்திறந்து,

௨௪ அவர்களமேல மனனாவை ஆகாரமாகவருஷிக்கப்பணணி வானதானியத்தை அவர்களுக்குக்கொடுததார்.

௨௫ வலலவர்களின அப்பததை அவனவன சாப்பிட்டான, அவர்களுக்குப்பரிபூரண ஆகாரததையனுப்பினார்.

௨௬ ஆகாயததிலே கீழ்க்காறறைவரப்பணணித் தமமுடைய வலலமையினாலே தெனறலையுமெழுந்துவநதது.

௨௭ அவர்களமீதில மாமிசததைத் தூளையுஞ்செட்டையுள்ளபட்சிகளைக் கடற்கரைமணலத்தனையுமாயவருஷிக்கப்பணணி,

௨௮ அவைகளை அவர்கள நடுப்பாளயத்திலே அவர்கள கூடாரங்களைச்சுறறிலும இறங்கப்பணணினார்.

௨௯ அவர்கள பொசித்துமிகவுந்திருததியானார்கள, அவர்களுடைய இச்சையைஅவர்களுக்குநிறைவேறறினார்.

௩௰ அவர்கள தங்களிச்சையைவெறுக்காதிருந்தார்கள, அவர்களுடைய போசனம இன்னம அவர்களவாயிலிருக்கக்கொளள,

௩௧ பராபரனுடையகோபம அவர்கள்மேல எழுமபி அவர்களிற்கொழுததவர்களுக்குளளே அவர் சங்காரஞ்செயது இஸ்ரவேலில தெரிந்துகொளளப்பட்டவர்களை மடியப்பணணினார். ௪. மோசே. ௰௧, ௩௩.

௩௨ இப்படியெலலாமிருந்தும அவர்கள இன்னம அவருடைய அதிசயங்களைநம்பாமற்பாவஞ்செயதார்கள.

௩௩ ஆனதுகொணடு அவர்கள நாட்களை மாயையிலும அவர்கள வருஷங்களைப்பயங்கரததிலுங்கழியப்பணணினார்.

௩௪ தங்களை அவர்கொலலும்போது அவர்கள அவருக்காக விசாரிததுத் திருமபிக்கொணடு பராபரனைக்காலமேதேடி,

௩௫ பராபரன தங்களகன்மலையென்றும உன்னதமான பராபரன தங்களமீட்பரென்றும நினைவுகூர்ந்து,

௩௬ தங்களவாயினாலே அவருக்கிச்சகமபேசித் தங்களநாவுகளினாலே பொயசொனனார்கள.

௩௭ ஏனெனில அவர்கள இருதயம அவரோடே நிலைவரமாயிருந்ததிலலை, அவருடைய உடனபடிக்கையில அவர்களஉணமையாயிருக்கவிலலை.

௩௮ அவரோ இரக்கமாயிருந்து அவர்களை அழிக்காதபடிக்கு அவர்கள அக்கிரமததை மூடித் தமமுடைய எலலா உக்கிரததையும எழுப்பாமல அநேகந்தரந்தமதுகோபததை விலக்கி,

௩௯ இவர்கள மாமிசமுந் திருமபிவாராமல அகன்றுபோகிறகாறறுமாயிருக்கிறார்களென்று நினைவுகூர்ந்தார்.

௪௰ எததனைவிசை அவருக்கு வனாந்தரத்திலேகோபமமூட்டி அவாந்திர வெளியிலே அவருக்குநோகநடந்தார்கள.

௪௧ அடிககடி பராபரனைப பரிசைட்சபார்ததுஇஸரவேலின பரிசுததரைமட்டுததிட்டபபடுததிஞர்கள.

௪௨ அவருடைய கரததையும அவர் எகிப்திலே தமமுடைய அடையாளஙகளையுஞ் சோவானபட்டணவெளியிலே தமமுடைய அறபுதஙகளையுஞ்செயது,

௪௩ தஙகளைச சததுருவுக்கு விலககிமீட்ட நாளையும இவர்கள நினையாதேபோஞர்கள.

௪௪ அவர்களுடைய நதிகளையும அவர்களுடைய ஆறுகளையும அவர்கள அவைகளிற்குடிக்கக்கூடாதபடிககு இரததமாகமாறறிஞர்.

௪௫ அவர்களைததினறுமவணடுசசாதிகளையும அவர்களைககெடுககுந தவளைகளையும அவர்களுககுளள னுப்பி,

௪௬ அவர்களபலனைப பசசைபபுழுககளுககும அவர்களபிரயாசததை வெட்டுககிளிகளுககுஙகொடுததார்.

௪௭ அவர்களுடையகொடிமுநதிரிகைசசெடிகளைக கன்மழைகளிஞலும அவர்களமுககடடைமரஙகளை ஆலஙகடடியிஞலுமஅழிததது,

௪௮ அவர்களமிருகஜீவனகளைககன்மழைககும அவர்கள ஆடுமாடுகளை இடிகளுககுமஒபபுககொடுததார்.

௪௯ தமதுகோபததின உககிரததையுமசீர்ககததையுஞ சினததையும நெருககததையுந தீஙகுசெயயவிடபபடட தூதர்களையும அவர்களுககுளளனுபபிஞர்.

௫௰ தமமுடைய கோபததுககுவழியைசசரிபபிடிததார், அவர்கள ஆததுமாவை அவர்மரணததிற்குவிலககிககாககாமல அவர்களசீவனை அவர்பெருவாரிககாயசசலுககொபபுககொடுதது,

௫௧ காமின கூடாரஙகளாகிய எகிப்துவிலே தலைசசனகளாயிருநத முதறபேலுயாவையுமஅழிததது,

௫௨ தமமுடைய சனததை ஆடுகளைபபோலே புறபபடபபணணி அவர்களைவனாநதரததிலே மநதையைபபோலே கூட்டிககொணடுவநதது,

௫௩ அவர்களைபபததிரமாயபபயபபடாதபடிககுநடததிஞர், ஆஞல அவர்களசததுருககளைககடலமூடிபபோடடது.

௫௪ அவர்களைத தமமுடைய பரிசுததஎலலைமடடுககுந தமமுடைய வலதுகரஞசமபாதிதத இநதப பருவதமடடுககுமஅழைததுவநதது,

௫௫ அவர்களமுகததுககுமுனபாகசசாதிகளைததுரததிவிடடு இவர்கள தேசததைசசீடடுபபோடடுப பஙகிடுவிதது இஸரவேலகோததிரஙகளை இவர்களுடைய கூடாரஙகளிறகுடியேறறிஞர்.

௫௬ ஆகிலும அவர்கள உனனதமானபராபரனைப பரிட்சைபார்தது அவருககுககோபமூட்டி அவருடையசாட்சிகளைககைககொளளாமற்போய,

௫௭ தஙகளபிதாககளைபபோலே வழிவிலகிததுரோகமபணணி மோசமபோககுமவிலலைபபோலததுவணடு.

ஒசேயா. ௭, ௰௬.

௫௮ அவருககுத தஙகளமேடைகளாலேகோபததையுந தஙகளசுரூபஙகளால எரிசசலையுமஉணடாககிஞர்கள.

௫௯ பராபரன அதைககேடடு உககிரமாகி இஸரவேலைமிகவும வெறுதது,

௬௰ தாம மனுஷருககுளளேதாஙகளபோடட கூடாரமாகிய சீலோவிலுளளவாசஸதலததைநெகிழநது, ௧. சாமு. ௪, ௪—௰௧.

௬௧ அவர்களபெலததைச சிறையிருபபிலும அவர்களமகிமையைசசததுருவினகையிலும ஒபபுககொடுதது, ௧. சாமுவேல. ௫, ௧. ௨.

௬௨ தமமுடைய சனததைப படடையததிற்கிரையாககிவிடடுததமது சுதநதரததிற்கவிரோதமாய உககிரமாஞர்.

௬௩ அவர்கள இளைஞரை அககினிபட்சிததது, அவர்களகனனியாஸதிரிகள வாழககைபபடாதிருநதார்கள.

௬௪ அவர்கள ஆசாரியர்களபடடையததாலவிழுநதார்கள, அவர்கள விதவைகளஅழுததிலலை.

௬௫ அபபோது ஆணடவர் நிததிரைதெளிநதவனைபபோலவும மதுபானததாற்களிகககிற பராககிரமசாலியைபபோலவுமவிழிததது,

௬௬ தமமுடைய சததுருககளைபபினபுறமாகஅடிபபடுததி அவர்களுககு நிததியநிநதையைவரபபணணிஞர். ௧.சாமு. ௫. ௬.

௬௭ ஆஞல அவர் யோசேபபின கூடாரததைபபுறககணிதது எபபிராயீமகோததிரததைத தெரிநதுகொளளாமல,

௬௮ தாஞநேசிதத சீயோனபருவதமிருககிற யூதாகோததிரததைத தெரிநதுகொணடு,

௬௯ தமமுடைய பரிசுதத ஸதலததை உயர்நதமேடுகளாகவும எனறைககும நிறகததாம அஸதிவாரபபடுததின பூமியைபபோலாகவுஙகடடி,

௭௰ தமமுடைய தாசஞகிய தாவீதைததெரிநது அவனை ஆடடுததொழுவஙகளிலிருநதெடுததுககொணடார். ௧. சாமுவேல. ௰௬, ௰௧—௰௩.

௭௧ கறவலாடுகளின புறகாலே நடநத அவனைத தமமுடையசனமாகிய யாககோபையுந தமமுடைய சுதநதரமாகிய இஸரவேலையும மேயபபதற்காக அழைததுககொணடுவநதார்.

உ௮ இருளைபபணணி அநதகாரமுணடாககினார், அவருடைய வார்தைதகளுககு எதிர்பபாரிலலை.

உ௯ அவர்களுடைய தணணீர்களை இரததமாககமாறறி அவர்கள மசசஙகளைச சாகபபணணினார்.

௩௰ அவர்கள தேசந தவளைகளைத திரளாயப பிறபபிச்சது, அவர்களுடைய இராசாககளினறைவீடுகளிலும உணடாகததானே.

௩௧ அவர் விளமபினபோது அவர்கள எலலைகளிலெஙகும வணடுச்சாதிகளும பேனகளுமவநதது.

௩௨ அவர்கள மழைகளைக கனமழையாககி அவர்கள தேசததிலே சுவாலைவிடடெரியும அககினியைக கடடளையிடடு,

௩௩ அவர்களுடைய கொடிமுநதிரிகைச செடிகளையும அவர்கள அததிமரஙகளையும அழிதது அவர்கள எலலைகளிலுளள மரஙகளை முறிததார்.

௩௪ அவர் விளமபினபோது எணணிமுடியாத வெடடுக்கிளிகளும பசசைககிளிகளும வநது,

௩௫ அவர்கள தேசததிலுளள சகலபூணடையும அரிதது அவர்கள நிலததினகனியைத தினறுபோடடது.

௩௬ அவர்கள தேசததிலே அவர் முதறபேறனைததையும அவர்களுடைய பெலததிலெலலாந தலைமையானவைகளையுஞ சஙகரிததார்.

௩௭ அபபோது இவர்களை வெளளியோடும பொனனோடும புறபபடபபணணினார், இவர்கள கோததிரஙகளில இடறினவனுமிலலை.

௩௮ இவர்கள புறபபடுகையிலே எகிப்து மகிழநதது, ஏனெனில இவர்களபயம அவர்களமேலவிழுநதது.

௩௯ மறைவிடமாக ஒரு மேகததையும இரவை வெளிசசமாககுகிறதறகாக அககினியையுமவிரிததார்.

௪௰ கேடடார்கள, அபபோது காடைகளை வரபபணணினார், வான அபபததாலும அவர்களைத திருபதியாககினார்.

௪௧ கனமலையைத திறநதார், அபபோது தணணீர்கள புறபபடடுவறணடவெளிகளில ஆறுபோயாடிறறு.

௪௨ ஏனெனில அவர் தமமுடையபரிசுததவார்ததையையுந தமமுடைய தாசனாகிய ஆபிரகாமையுமநினைதது, ௧. மோசே. ௰௫, ௰௩. ௰௪.

௪௩ தமமுடைய சனததைககளிபபோடுநதாநதெரிநதுகொணடவர்களைக கெமபீரததோடும புறபபடபபணணி,

௪௪ அவர்கள தமது பிரமாணஙகளைக காததுநடபபதறகுந தமது நியாயநெறிகளைக கைககொளவதறகுமெனறு,

௪௫ அவர்களுககுச சாதிகளின தேசஙகளைக கொடுததார், சனசதளஙகளின பிரயாசததைச சுதநதரிததுககொணடார்கள.

அலலேலூயா.

## ௱௬. சங்கீதம்

(நயாபரருககு விரோதமாய இஸரவேலர் பணணின முருடடாடடஙகளை நினைவுகூருதல.)

அலலேலூயா கர்ததரைத துதியுஙகள ஏனெனில அவர் நலலவர், அவர் கிருபை என்றுமுளளது. ௱எ, சஙகீ. ௧. ௱௩௬, ௪௩. ௧.

௨ கர்ததருடைய வலலமைகளைச சொலலி அவருடைய துதியையெலலாமபிரஸ்தாபமாககததககவனார்?

௩ எலலாக்காலததிலும நியாயததைக கைக்கொணடு நீதியைச செயகிறவர்களபாக்கியவானகள.

௪ கர்த்தாவே, நானுமமாலேதெரிநதுகொளளபபடடவர்களின நனமையைக கணடு உமமுடைய சாதியின மகிழசசியால மகிழநது உமமுடையசுதநதரததோடே கூடமேனமைபாராடடுமபடிககு,

௫ நீர் உமமுடைய சனததினமேலுளள உமது கிருபையினபடியெனனை நினைதது உமது இரட்சிபபினாலே எனனைச சநதித்தருளும.

௬ எஙகளபிதாக்களோடுஙகூட நாஙகள பாவஞசெயது அககிரமம் நடபபிதது ஆகாமியமபணணினோம. தானி. ௯, ௫.

௭ எங்களபிதாக்கள எகிப்திலே உமமுடைய அதிசயஙகளை உணராமலும உமமுடையகிருபைகளின திரட்சியை நினையாமலுமபோய, நாணறகடலாகிய சமுததிரததோரததிறகலகமபணணினார்கள.

௨. மோசே. ௰௪, ௰௧. ௰௨.

௮ ஆனால அவர் தமது வலலமையைபதியபபணணுமபடிககு, அவர்களைத் தமமுடைய நாமததினிமிததமாக இரட்சிதது,

௯ நாணறகடலையுதமபினார், அதுவறணடுபோயிறறு, அப்போது அவர்வெடடாநதரையைபபோலான ஆழஙகளில அவர்களை நடக்கப்பணணி,

௰ அவர்களைப பகைஞனகைக்கு விலகசி அவர்களை சததுருவினகைக்கு விலகியிரட்சிததுசசததுருவினகைக்கு விலகி மீட்டார்.

௰௧ ஆனால அவர்கள சததுருக்களைத தணணீர்களமூடிறறு, அவர்களில ஒருவனுமமீநததிலலை.

௰௨ அபபோது அவருடைய வார்ததைகளினபேரிலே விசுவாசிதது அவருடைய துதியைபபாடினார்கள. ௨. மோ. ௰௫, ௧.௩.

௰௩ ஆனாற் சீககிரமாய அவருடைய கிரியைகளைமறநதார்கள, அவர்கள அவருடைய ஆலோசனைககுககாததிராமல,

௰௪ வனாந்தரத்தில் இச்சையுள்ளவர்களாகிப் பராபரனை அவாந்தரவெளியிலே பரீட்சைபார்த்தார்கள்.

௰௫ அப்போது அவர்கள் கேட்டதை அவர்களுக்குக் கொடுத்தார், ஆனாலும் அவர்கள் ஆத்துமாக்களில் இளைப்பையனுப்பினார்.

௰௬ அவர்கள் மோசேயின்மேலுங் கர்த்தருடைய பரிசுத்தனாகிய ஆரோனின்மேலும் பாளயத்திற் பொறாமையானார்கள்.

௰௭ பூமி திறவுண்டு தாத்தானை விழுங்கி அபிராமின் கூட்டத்தை மூடிப்போட்டது.

௰௮ அவர்கூட்டத்திலே அக்கினி பற்றியெரிந்தது, அக்கினிச்சுவாலை ஆகாதவர்களைச் சுட்டுப்போட்டது.

௰௯ அவர்கள் ஓரேபிலே ஒரு கன்றுக்குட்டியையுண்டாக்கி வார்க்கப்பட்ட விக்கிரகத்தைப் பணிந்துகொண்டு,

௨௰ தங்கள் மகிமையைப் புல்லைத்தின்னும் மாட்டின் சாயலாக மாற்றினார்கள்.

௨௧ காம் தேசமாகிய எகிப்திலே பெரியவைகளையும் அதிசயங்களையும், நாணற்கடலண்டையிலே பயங்கரங்களையுஞ் செய்தவராகிய,

௨௨ தங்களை இரட்சிப்பின பராபரனை மறந்தார்கள்.

௨௩ ஆனபடியினாலே அவரால் தெரிந்துகொள்ளப்பட்ட மோசே, அவருடைய உக்கிரத்தை அவர்களையழிக்காதபடிக்குத் திருப்ப அவருக்கு முன்பாக இடிதலிலே நில்லாதிருந்தானாகில் அவர்களை நாசம்பண்ணுவோமென்றார்.

௨௪ அவருடைய வார்த்தையை விசுவாசியாமல் இச்சிக்கப்படத்தக்க தேசத்தை அசட்டைபண்ணினார்கள்.

௨௫ கர்த்தருடைய சத்தத்திற்குச் செவிகொடாமல், தங்கள் கூடாரங்களில் முறுமுறுத்தார்கள்.

௨௬ ஆகையினாலே அவர்களை வனாந்தரத்திலே மடியவைக்கவும், அவர்கள் வித்தைச் சாதிகளுக்குள்ளே மடியவைக்கவும், அவர்களைத் தேசங்களிற் சிதறவடிக்கவும்,

௨௭ தம்முடைய கையை அவர்களுக்கு விரோதமாக எடுத்தார்.

௨௮ அவர்கள் பேயோர் மல்பாகனுக்குட்டதையாகிச் சீவனில்லாதவைகளுக்குக் கிட்டப் பலிகளைப் போசித்து,

௨௯ தங்கள் கிரியைகளால் அவருக்குக் கோபமுண்டாக்கினார்கள், ஆகையாற் சங்காரம் அவர்களுக்குட்புகுந்தது.

௩௰ அப்போது பீனேகாஸ் எழுந்து நின்று நியாயஞ்செய்தான், அத்தாற் சங்காரம் நிறுத்தப்பட்டது.

௩௧ அவை அவனுக்கென்றுமுள்ள தலைமுறை தலைமுறைக்கும் நீதியாக எண்ணப்பட்டது.

௩௨ மெரிபாவின் தண்ணீர்களிடத்திலும் அவருக்குக் கடுங்கோபமுண்டாக்கினார்கள், அவர்கள் நிமித்தமாக மோசேக்கும் பொல்லாப்பு வந்தது. ௪. மோ. ௨௰, ௰௨.

௩௩ ஏனென்றால் அவர்கள் அவன் ஆவிக்குக் கோபமூட்டினதினாலே தன் உதடுகளாற் பதறிப்பேசினான்.

௩௪ சாதிகளுக்குச் சொன்னபடி அவர்கள் சனசதனங்களையழிக்காமல்

௩௫ சாதிகளுடனே கலந்து இவர்கள் கிரியைகளைக் கற்று,

௩௬ இவர்களுடைய விக்கிரகங்களுக்கு ஆராதனைசெய்தார்கள், அப்படியே அவர்களுக்கிவர்கள் சுருக்கானார்கள்.

௩௭ அவர்கள் தங்கள் குமாரரையுந் தங்கள் குமாரத்திகளையும் பசாசுகளுக்குப் பலியிட்டு,

௩௮ குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தினார்கள், தாங்கள் கானானின் விக்கிரகங்களுக்குப் பலியிட்ட தங்கள் குமாரர் குமாரத்திகளுடைய இரத்தத்தைத் தானே சிந்தினார்கள், இரத்தங்களால் அவர்கள் தேசந் தீட்டுப்பட்டது.

௩௯ அவர்கள் தங்கள் கிரியைகளால் அழுக்காகித் தங்கள் செய்கைகளாற் சோரம்போனார்கள்.

௪௰ ஆகையாற் கர்த்தருடைய கோபம் அவருடைய சனத்தின்மேல் மூண்டது, அவர் தமது சுதந்தரத்தை அருவருத்து,

௪௧ அவர்களைச் சாதிகளுடைய கையில் ஒப்புக்கொடுத்தார், அப்போது அவர்கள் பகைஞர் அவர்களையாண்டு,

௪௨ அவர்கள் சத்துருக்கள் அவர்களை ஒடுக்கினார்கள், இவர்கள் கையின்கீழ்த் தாழ்த்தப்பட்டார்கள்.

௪௩ அநேகந்தரம் அவர்களை விடுவித்தார், அவர்களோ தங்கள் யோசனையால் அவருக்கு விரோதமாய்க் கலகம்பண்ணித் தங்களுடைய அக்கிரமத்தாற் சிறுமைப்படுத்தப்பட்டார்கள்.

௪௪ அவர்கள் கூப்பிடுதலை அவர் கேட்கும்போதோவெனில், அவர்களுக்குண்டான இடுக்கத்தையவர் கண்ணோக்கி,

௪௫ அவர்களுக்காகத் தம்முடைய உடன்படிக்கையை நினைத்துத் தம்முடைய மிகுந்த கிருபையின்படி மனஸ்தாபப்பட்டு,

௪௬ அவர்களைச் சிறைப்பிடித்த யாவருக்கும் முன்பாகவும் அவர்களுக்கிரக்கங்களைக் கிடைக்கப்பண்ணினார்.

௪௭ எங்கள் பராபரனாகிய கர்த்தாவே, நாங்கள் உம்முடைய பரிசுத்த நாமத்தைப் போற்றி உமது துதிக்காக மேன்மைபாராட்டும்படிக்கு எங்களை இரட்சித்து எங்களைச் சாதிகளிலிருந்து சேரும்.

௪௮ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அநாதியாய் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டவர், சனமெல்லாம் ஆமென் அல்லேலூயா என்பதாக.

## ௱எ. சங்கீதம்.

(இக்கட்டுகளை நீக்கி இரட்சித்த பராபரனைத் துதிக்கவும் அவருடைய அதிசயமான செயல்களைக் கவனித்துணரவும் எழுதினது.)

கர்த்தரைத் துதியுங்கள், ஏனென்றால் அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது. ௱௬, சங்கீதம். ௧. ௱௧௮, சங்கீதம் ௧.

௨ கர்த்தர் சத்துருவின் கைக்கு நீங்கலாக்கி மீட்டு,

௩ பலதேசங்களாகிய கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலுந் தெற்கிலுமிருந்துஞ் சேர்ந்தவர்கள் அப்படிச் சொல்லக்கடவார்கள்.

௪ குடியிருக்க ஊரைக் காணாமல் வனாந்தரத்தில் அவாந்தரவழியாய்,

௫ பசியாகவுந் தாகமாகவும் ஆத்துமா தொய்ந்ததாகவும் அலைந்து திரிந்து,

௬ தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில் இவர் தங்கள் இக்கட்டுகளுக்கு நீங்கலாக்கிவிடுவித்து,

௭ குடியிருக்கும் ஊருக்குப் போய்ச்சேரச் செவ்வையான வழியிலே நடத்தினாரே.

௮ அவர்கள் தவனமான ஆத்துமாவைக் கர்த்தர் திருப்தியாக்கிப் பசியான ஆத்துமாவை நன்மையால் நிரப்பினாரென்று,

௯ அவரை மனுஷருக்கு முன்பாக அவருடைய கிருபையினிமித்தமும் அவருடைய அதிசயங்களினிமித்தமுந் துதிக்கக்கடவார்கள். ௫௰, சங்கீதம். ௰௫.

௰ பராபரனுடைய வார்த்தைகளுக்கு விரோதமாய்க் கலகம்பண்ணி உன்னதமானவருடைய ஆலோசனையை அசட்டைபண்ணினபடியினாலே,

௰௧ இருளிலும் மரணநிழலிலும் வைக்கப்பட்டிருந்து ஒடுக்கத்திலும் இரும்பிலுங் கட்டுண்டுகிடந்து,

௰௨ இப்படியே அவர் தங்கள் இருதயத்தை வருத்தத்தாலே தாழ்த்தினதினாலே சகாயரில்லாமல் விழுந்திருந்து,

௰௩ தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில் இவர் தங்கள் இக்கட்டுகளுக்குத் தங்களை நீங்கலாக்கியிரட்சித்தது,
௨. நாளாகமம். ௩௩, ௰௨—௰௩.

௰௪ இருளிலும் மரணநிழலிலுமிருந்து தங்களை வெளிப்படப்பண்ணித் தங்கள் கட்டுகளை யறுத்தாரே.

௰௫ அவர்கள் கர்த்தர் வெண்கலக்கதவுகளை யுடைத்து இருப்புத்தாழ்ப்பாள்களை முறித்தாரென்று,

௰௬ அவரை மனுஷருக்கு முன்பாக அவருடைய கிருபையினிமித்தியமும் அவருடைய அதிசயங்களினிமித்தியமுந் துதிக்கக்கடவார்கள்.

௰௭ நிர்மோடராயிருந்து தங்கள் பாதகமார்க்கத்தாலுந் தங்கள் அக்கிரமங்களாலும் நோய்கொண்டொடுங்கி,

௰௮ சகலபோசனத்தையும் மனவெறுப்பாய்ப் போசித்து மரணவாசல்கள்பரியந்தஞ் சமீபித்தவர்களாகி,

௰௯ தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், இவர் தங்கள் இக்கட்டுகளுக்குத் தங்களை நீங்கலாக்கியிரட்சித்து,

௨௰ தம்முடைய வசனத்தை யனுப்பித் தங்களைக் குணமாக்கித் தங்கள் அழிவுகளுக்குத் தப்புவித்தாரே.

௨௰௧ அவர்கள் கர்த்தரை மனுஷருக்கு முன்பாக அவருடைய கிருபையினிமித்தமும் அவருடைய அதிசயங்களினிமித்தமுந் துதித்து,

௨௰௨ ஸ்தோத்திரப் பலிகளைச்செலுத்தி அவருடைய கிரியைகளைக் கெம்பீரத்தோடே விவரிக்கக்கடவார்கள்.

௨௰௩ சமுத்திரத்திற்கிறங்கப்போய்க் கப்பல்களிலேறிப் பெருந்தண்ணீர்களிலே தொழில்பண்ணுகிறார்களே.

௨௰௪ அவர்கள் கர்த்தருடைய கிரியைகளையும் ஆழத்திலே அவருடைய அதிசயங்களையுங் காணுகிறார்கள்.

௨௰௫ தாஞ்சொல்ல அதின் அலைகளை உயரப்பண்ணும் பெருங்காற்றையெழும்புவார்.

௨௰௬ ஆகாயத்திற்கேறித் தாழ்வுக்கிறங்குவார்கள், அவர்கள் ஆத்துமா விசனத்தினாலே கரைந்துபோம்.

௨௰௭ வெறித்தவனைப்போலே அலைந்து தள்ளம்புவார்கள், அவர்களுடைய ஞானமெல்லாம் முழுகிப்போம்.

௨௰௮ அவர்கள் தங்கள் ஆபத்திலே அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில் இவர் அவர்களைத் தங்கள் இக்கட்டுகளுக்கு நீங்கலாக்கி இரட்சித்து,

௨௰௯ கொந்தளிப்பையமர்ந்து நிற்கப்பண்ணுவார், அவைகளின் அலைகள் மவுனமடையும்.

௩௰ அப்போது அவைகள் தணிந்துபோயிற்றென்றுந் தாங்கள் நாடின குடாக்கடலுக் கவர்களைக் கொண்டு வருகிறாரென்றுஞ் சந்தோஷப்படுவார்கள்.

௩௰௧ ஆகையால் அவர்கள் கர்த்தரை மனுஷருக்கு முன்பாக அவருடைய கிருபையினிமித்தமும், அவருடைய அதிசயங்களினிமித்தமுந் துதித்து,

௩௰௨ சனத்தின் சபையிலே அவரையுயர்த்தி முதிர்ந்தவர்கள் உளுக்கார்ந்திருக்குமிடத்திலே அவரைப் போற்றக்கடவார்கள்.

௩௩ அவர் ஆறுகளை வெட்டாந்தரையாகவும், நீரூற்றுகளை வறண்ட நிலமாகவும்,

௩௪ செழிப்பான தேசத்தை அதின் குடிகளுடைய பொல்லாப்பினிமித்தம் உவர் நிலமாகவும் மாற்றுகிறார்.

௩௫ அவர் வெட்டாந்தரையைத் தண்ணீர்த் தடாகங்களாகவும், வறண்ட நிலத்தை நீரூற்றுகளாகவும் மாற்றி,

௩௬ பசித்தவர்களை அங்கே குடியேற்றுகிறார், அவர்கள் குடியிருக்கும் ஊரைக் கட்டி,

௩௭ வயல்களையுண்டாக்கி விதைத்துக் கொடிமுந்திரிகைத் தோட்டங்களை நாட்டுகிறார்கள், அவைகள் வரத்துள்ள பலனைத் தரும்.

௩௮ அவர்களையாசீர்வதிக்கிறார், மிகுதியும் பெருகுகிறார்கள், அவர்களுடைய மிருகஜீவன்களைக் குறையப்பண்ணாதிருக்கிறார்.

௩௯ திரும்பவுங் கொஞ்சமாகித் தீங்கினுடைய நெருக்கத்தினாலுஞ் சஞ்சலத்தினாலுந் தாழுகிறார்கள்.

௪௰ அவர் பிரபுக்களின்மேல் அசட்டையைச் சொரிந்து அவர்களை வழியில்லாத அவாந்தரத்திலே திரியப்பண்ணி,

௪௧ எளியவனையோ சிறுமையைவிட்டெடுத்து உயர்ந்த அடைக்கலத்திலே வைத்து அவன் வம்சங்களை மந்தையைப்போலாக்குகிறார்.

௪௨ செம்மையானவர்கள் அதைக் கண்டு மகிழுகிறார்கள், அநேக நியாயக்கேடெல்லாந் தன் வாயை மூடும்.

௪௩ எவன் ஞானமுள்ளவனோ அவன் இவைகளைக் கவனித்திருக்கக்கடவன், அப்படிக்கொத்தவர்கள் கர்த்தருடைய கிருபைகளை உணர்ந்துகொள்ளுவார்கள்.

## ௱அ. சங்கீதம்.

(பராபரன் சத்துருக்களின்மேற் செயம் அளிப்பாரென்று நம்பிப்பாடினது.)

[தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.]

பராபரனே, என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது, நான் பாடிக் கீர்த்தனம்பண்ணுவேன், என் மகிமையுங்கூடத்தானே. ௫௭, சங்கீதம். ௮. ழு

உ தம்புரே, சுரமண்டலமே விழி, அதிகாலமே விழிப்பேன்.

௩ கர்த்தாவே, உம்மை ஜனசதளங்களுக்குள்ளே துதிப்பேன், சாதிகளுக்குள்ளே உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௪ ஏனெனில் உம்முடைய கிருபை வானங்களுக்கு மேலாகவும், உம்முடைய சத்தியம் ஆகாயமண்டலங்கள் பரியந்தமும் பெருகியிருக்கிறது. ௩௬, சங்கீதம். ௫.

௫ பராபரனே, வானங்களின்மேலும் உம்முடைய மகிமை பூமியனைத்தின்மேலும் உயர்வதாக.

௬ உம்முடைய பிரியர் விடுவிக்கப்படும்படிக்கு நீர் உம்முடைய வலதுகரத்தினாலே இரட்சித்து எங்கள் ஜெபத்தைக் கேளும். ௬௰, சங்கீதம். ௭. ழு

௭ பராபரன் தம்முடைய பரிசுத்தத்தலத்தில் சொன்ன உத்தரவிலே களிகூருவேன், சீகேமைப் பங்கிட்டுச் சுக்கோத்தின் பள்ளத்தாக்கை அளந்துகொள்ளுவேன்.

௮ கீலேயாத் என்னுடையது, மனாசேயும் என்னுடையது, எப்பிராயீம் என் தலையின் பெலன், யூதா என் நியாயநெறியாளன்.

௯ மோவாப் நான் கழுவுகிற பாத்திரமாயிருக்கும், ஏதோமின்மேல் என் பாதரட்சையை நீட்டுவேன், பெலிஸ்தேயாவின்மேல் ஆர்ப்பரிப்பேன்.

௰ என்னை அரணான பட்டணத்திற்குள் வழிவிடுவாரார், என்னை ஏதோம்மட்டும் அழைத்துப்போவாரார்?

௰௧ பராபரனே, எங்கள் சேனைகளோடே புறப்படாமல் எங்களைத் தள்ளிவிட்டிருந்த பராபரனாகிய தேவரீரோ அல்லவோ?

௰௨ இக்கட்டுக்குத் தப்ப எங்களுக்குச் சகாயங்கட்டளையிடும், ஏனெனில் மனித இரட்சிப்பு அவத்தம்.

௰௩ பராபரனாலே பலஞ்செய்வோம், அவரே எங்கள் சத்துருக்களை மிதித்துப்போடுவார்.

## ௱௯. சங்கீதம்.

(சத்துருக்கள்மேலுந் துரோகியாகிய யூதாவின்மேலும் முறையிட்ட தீர்க்கதரிசன சங்கீதம்.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

என் துதியின் பராபரனே, மவுனமாயிராதையும்.

உ ஏனெனில் ஆகாதவனுடைய வாயுங் கபடவாயும் எனக்கு விரோதமாய்த் திறந்திருக்கிறது, கள்ளநாவினாலே என்னோடே பேசுகிறார்கள்.

௩ பகையான வார்த்தைகளால் என்னைச் சூழ்ந்துகொண்டு முகாந்திரமில்லாமல் என்மேற் போரிடுகிறார்கள்.

௪ என் சிநேகத்திற்குப் பதிலாக என்னை விரோதிக்கிறார்கள், நானோவென்றால் ஜெபம்பண்ணிக்கொண்டிருக்கிறேன்.

௫ நன்மைக்குப் பதிலாகத் தீமையையும் என் சிநேகத்திற்குப் பதிலாகப் பகையையும் எனக்குக் காண்பிக்கிறார்கள். ௩௫, சங். ௰௨.

௬ ஆகாதவனை அவன்மேல் நிறுத்தும், சாத்தான் அவன் வலதுபக்கத்தில் நிற்பதாக.

௭ அவன் நியாயந்தீர்க்கப்படுகையில் அவன் ஆகாதவனாய்ப் புறப்படவும், அவன் ஜெபம் பாவமாகவுங்கடவது. வாக்கியம். க, உ௮—௩௧.

௮ அவன் நாட்கள் கொஞ்சமாவதாக, அவனுத்தியோகத்தை வேறொருவன் பெறக்கடவான். அப்போஸ். க, உ௰.

௯ அவன் பிள்ளைகள் திக்கற்றவைகளும் அவன் பெண்சாதி வெதவையுமாவதாக.

௰ அவன் பிள்ளைகள் அலைந்து பிச்சையெடுத்துத் தங்கள் பாழ்க்கடிப்புகளினிமித்தம் இரக்கவேணும்.

௰௧ கடன்கொடுத்தவன் அவனுக்குண்டானதெல்லாவற்றையுஞ் சிக்கிக்கொள்ளுவானாக, அன்னியர் அவன் பிரயாசத்தைப் பறிப்பார்களாக.

௰௨ அவன்மேல் தயவை நீட்டுகிறவனுமில்லாமல் அவனுடைய திக்கற்ற பிள்ளைகளுக் கிரங்குகிறவனுமில்லாமற் போவதாக.

௰௩ அவனுக்குப் பின்னானவர்கள் வேரறுப்புண்ணக்கடவார்கள், இரண்டாந்தலைமுறையில் அவர்கள் நாமம் குலைந்துபோவதாக.

௰௪ அவன் பிதாக்களின் அக்கிரமங் கர்த்தருக்கு முன்பாக நினைக்கப்படவும், அவன் தாயின் பாவம் நீங்காமல்,

௰௫ நித்தங் கர்த்தருக்கெதிரே இருக்கவுங்கடவது, அவர்கள்பேர் பூமியிலிராமல், வேரறுப்புண்ணக்கடவது,

௰௬ ஏனென்றால் அவன் தயவுசெய்ய நினைவுகொள்ளாமற், சிறுமையும் எளிமையும் மனநோவுமுள்ளவனைக் கொலைப்படுத்தும்படிக்குத் தொடர்ந்து,

௰௭ சாபத்தைச் சிநேகித்தபடியினாலே, அது அவனுக்கு வரும், அவன் ஆசிர்வாதத்தை விரும்பாதே போனபடியினாலே, அது அவனுக்குத் தூரமாம்.

௰௮ அவன் சாபத்தைத் தன் அங்கியாக உடுத்துக்கொண்டபடியினாலே அது தண்ணீரைப்போலே அவன் உள்ளத்திலும், எண்ணெய்யைப்போலே அவன் எலும்புகளிலும் பாயும்.

௰௯ அவை அவனுக்குமூடுவஸ்திரமாகவும் நித்தங் கட்டுங் கச்சையாகவுமிருப்பதாக.

௨௰ இதென்னை விரோதிக்கிறவர்களுக்கும், என்னுயிருக்கு விரோதமாய்த் தீங்கு பேசுகிறவர்களுக்கும் கர்த்தராலே வருங் கூலி.

௨௰௧ ஆனால் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீருமது நாமத்தினிமித்தமாக என்னையாதரித்து, உம்முடைய கிருபை நலமானபடியினாலே என்னை விடுவியும்.

௨௰௨ ஏனெனில் நான் சிறுமையும் எளிமையுமானவன், என் இருதயம் எனக்குள்ளே குத்துண்டிருக்கிறது. ௫௰, சங்கீதம், ௰௮

௨௰௩ சாயும் நிழலைப்போலப் போகப்பட்டேன், ஒரு வெட்டுக்கிளியைப்போலப் பறக்கடிக்கப்படுகிறேன்.

௨௰௪ உபவாசத்தினாலென் முழங்கால்கள் தடுமாறுகிறது, என் மாமிசம் புஷ்டியற்றுலருகிறது.

௨௰௫ நான் அவர்களுக்கு நிந்தையானேன், அவர்கள் என்னைப் பார்க்கும்போது தங்கள் தலையைத் துலுக்குகிறார்கள். ௨௨, சங்கீதம். ௭. ௮. ௯, சங்கீ. ௰௧.

௨௰௬ என் பராபரனாகிய கர்த்தாவே, எனக்குச் சகாயம்பண்ணும், உமது கிருபையின்படி என்னை இரட்சியும்.

௨௰௭ இது உமது கரம் என்றுங் கர்த்தாவே தேவரீர் இதைச் செய்தீரென்றும், அவர்கள் அறிவார்களாக.

௨௰௮ அவர்கள் சபித்தாலும் நீர் ஆசீர்வதியும், அவர்கள் எழும்பினாலும் வெட்கப்பட்டுப்போவார்களாக, உமதடியானோவென்ல மகிழுவானாக.

௨௰௯ என்னை விரோதிக்கிறவர்கள் இலச்சையால் உடுத்தப்பட்டுச் சால்வையைப்போலத் தங்கள் வெட்கத்தால் மூடப்படக்கடவார்கள். ௩௫, சங்கீதம். ௨௬.

௩௰ கர்த்தரை நான் மிகுதியும் என் வாயினாலே துதித்து, அநேகர் நடுவிலே அவரைப் புகழுவேன். ௨௨, சங்கீதம். ௨௩.

௩௰௧ ஏனெனில் அவர் எளியவனுடைய வலதுபாரிசத்திலே அவன் ஆத்துமாவை ஆக்கினைக்குள்ளாக்கத் தீர்க்கிறவர்களினின்று இரட்சிப்பதற்காக நிற்கிறார். ௰௬, சங்கீதம். ௮.

## ௱௰. சங்கீதம்.

(மேசியா உன்னதத்திலுயர்ந்த இராசாவாகவும் நித்திய ஆசாரியராகவும், சத்துருக்களைச் செயிப்பவராகவுங் காண்பிக்கப்பட்டது.)

[தாவீதின் சங்கீதம்.]

கர்த்தர் என்னாண்டவருடனே, நாம் உம்முடைய சத்துருக்களை உம்முடைய பாதங்களுக்குப் படியாகப்போடுமட்டும் நம்முடைய வலதுபாரிசத்தில் உட்காருமென்றார். மத்தே. ௨௨, ௪௪.

௨ உமது வல்லமையின் செங்கோலைக் கர்த்தர் சீயோனிலிருந்தனுப்பி உம்முடைய சத்துருக்களின் நடுவே ஆளும் என்பார்.

௩ உமது பராக்கிரமத்தின் நாளிலே உம்முடைய சனம் மகா மனப்பூர்வமும் பரிசுத்த அலங்காரமுமாயிருக்கும், அதிகால இருட்டின் கெர்ப்பத்திற் பிறக்கும் பனிக்குச் சமானமாய் உம்முடைய இளந்தைச்சனம் உமக்குப் பிறக்கும்.

௪ நீர் என்றென்றைக்கும் மெல்கிசேதேக்கின் வண்ணமான ஆசாரியரென்று கர்த்தர் ஆணையிட்டார், மனஸ்தாபப்படாமலுமிருப்பார். எபி. ௫, ௬. ௬, அதி. ௨௰. ௭, அதிகாரம். ௰௭. ழு

௫ தேவரீருடைய வலதுபாரிசத்திலிருக்கிற ஆண்டவர் தமது கோபத்தின் நாளில் ராசாக்களை வெட்டுவார்.

௬ அவர் சாதிகளில் நியாயந்தீர்த்து எல்லாவற்றையும் பிரேதங்களால் நிரப்பி விஸ்தாரமான தேசத்தின் பேரிலே தலைவனாயிருக்கிறவனை நொறுக்கிப்போடுவார். அறிவிப்பு. ௰௬, ௰௧. ழு ௬௮, ௪௩. ௨௨.

௭ வழியிலே நதியிற் குடிப்பார், ஆகையால் தலையை எடுப்பார்

## ௱௰௧. சங்கீதம்.

(பராபரனுடைய கிரியைகளின் மகிமையைத் தியானித்தது.)

அல்லேலூயா. செம்மையானவர்களின் சங்கத்திலுஞ் சபையிலுங் கர்த்தரை முழு இருதயத்தோடுந் துதிப்பேன்.

௨ கர்த்தரின் செய்கைகள் பெரியவைகளும் அவர்களுடைய விருப்பங்களுக்கெல்லாஞ் சரியாய்த் தெரிந்துகொள்ளப்பட்டவைகளுமாயிருக்கிறது.

௩ அவர் செய்கிறது மகிமையுங் கனமுமானது, அவருடைய நீதி என்றென்றைக்கும் நிற்கும்.

௪ தம்முடைய அதிசயங்களின் நினைவுகூருதலையுண்டுபண்ணினார், கர்த்தர் இரக்கமும் மனவுருக்கமுமானவர்.

௫ தமக்குப் பயந்தவர்களுக்கு ஆகாரங் கொடுத்தார், தமது உடம்படிக்கையை என்றென்றைக்கும் நினைக்கிறார்.

௬ சாதிகளின் சுதந்திரத்தைத் தம்முடைய சனத்திற்குக் கொடுத்ததினாலே தமது செய்கைகளின் பெலத்தை அதற்குத் தெரியப்பண்ணினார்.

௭ அவருடைய கரங்களின் செய்கைகள் சத்தியமும் நியாயமும், அவருடைய கட்டளைகளெல்லாம் உண்மையுமாயிருக்கிறது.

௮ அவைகள் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களுக்கும் உறுதியானவைகளும் உண்மையுஞ் செம்மையுமாய்ச் செய்யப்பட்டவைகளுமாயிருக்கிறது.

௯ அவர் தம்முடைய சனத்திற்கு மீட்பை அனுப்பித் தமது உடம்படிக்கையை நித்திய உடம்படிக்கையாகக் கட்டளையிட்டார், அவருடைய நாமம் பரிசுத்தமும் பயங்கரமுமானது.

௰ கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் துவக்கம், அவைகளின்படி செய்கிற யாவருக்கும் நற்புத்தியுண்டு, அப்படிக் கொத்தவனுடைய புகழ்ச்சி என்றைக்கும் நிற்கும். வாக்கி. ௧, ௭. ௬, அதிகாரம். ௰.

## ௱௰௨. சங்கீதம்.

(தேவபயமுள்ளவனுடைய பாக்கியம்.)

அல்லேலூயா. கர்த்தருக்குப் பயந்து அவர் கற்பனைகளின்மேல் மிகவும் பிரியமாயிருக்கிற மனிதன் பாக்கியவான். ௧, சங். ௧. ௨. ௱௰௬, சங். ௧. ௱௨௮, சங். ௧.

௨ அவன் வித்து பூமியில் வல்லமையாயிருக்கும், செம்மையானவர்களின் சந்ததி ஆசீர்வதிக்கப்படும். வாக்கி. ௨௰, ௭.

௩ ஆஸ்தியும் ஐசுவரியமும் அவன் வீட்டிலிருக்கும், அவன் நீதி என்றென்றைக்கும் நிற்கும். ௩௪, சங். ௰.

௪ செம்மையானவர்களுக்கிருளிலே வெளிச்சமுதிக்கும், இரக்கமும் மனவுருக்கமும் நீதியுமுள்ளவராயிருக்கிறார். ௯௭, சங். ௰௧.

௫ இரங்கிக் கடன்கொடுத்துத் தன் காரியங்களை நியாயமானபடி நடப்பிக்கிற மனுஷன் பாக்கியமுள்ளவன்.

௬ ஏனெனில் என்றென்றைக்கும் அசைக்கப்படாதிருப்பான், நீதிமான் நித்திய கீர்த்தியுள்ளவன்.

௭ துற்செய்தியைக் கேட்கிறதினாலே பயப்படான், அவனிருதயங் கர்த்தரை நம்பித் திடனாயிருக்கும்.

௮ அவனிருதயம் உறுதியாயிருக்கும், அவன் தன் சத்துருக்களிற் சரிக்கட்டுதலைக் காணுமட்டும் பயப்படாதிருப்பான்.

௯ வாரியிறைத்து ஏழைகளுக்குக் கொடுக்கிறான், அவன் நீதி என்றென்றைக்கும் நிற்கும், அவன் கொம்பு மகிமையாகவுயரும். ௨. கொரி. ௯, ௯.

௰ ஆகாதவன் அதைக்கண்டு மனமடிவாகித் தன் பல்லுகளைக் கடித்துக் கரைந்துபோவான், ஆகாதவர்களுடைய ஆசையழியும்.

## ௱௰௩. சங்கீதம்.

(மனத்தாழ்மையானவர்களை உயர்த்துகிற பராபரனைத் துதிக்க ஏவினது.)

அல்லேலூயா, கர்த்தருடைய ஊழியக்காரரே துதியுங்கள், கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்கள். ௱௩௫, சங். ௧.

௨ கர்த்தருடைய நாமம் இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டிருக்கக்கடவது. தானியேல. ௨, ௨௰.

௩ சூரியனுதிக்குந் திசை துவக்கி அது அஸ்தமிக்குந் திசைமட்டுங் கர்த்தருடைய நாமந் துதிக்கப்படக்கடவது.

௪ கர்த்தர் எல்லாச் சாதிகள்மீதிலும் உயர்ந்தவர், அவருடைய மகிமை வானங்களிலும் மேல்பட்டதாயிருக்கிறது.

௫ உன்னதங்களில் வாசம்பண்ணி, ௱௩௮, சங். ௬. ஏசாயா. ௫௭. ௰௫.

௬ வானங்களிலும் பூமியிலுமுள்ளவைகளைக் கண்ணோக்கத் தாழ்ந்துகொண்டு,

௭ பிரபுக்களோடும் தம்முடைய சனத்தின் தலைவர்களோடும் உட்காரப்பண்ணும்படிக்கு, ௧. சாமு. ௨, ௮.

௮ சிறியவனை மண்ணிலிருந்தெடுக்கிறவரும் எளியவனைக் குப்பைக்காட்டிலிருந்து உயர்த்துகிறவரும்,

௯ மலடியை வீட்டிலே சந்தோஷமான பிள்ளைத் தாய்ச்சியாய்க் குடியிருக்கப்பண்ணுகிறவருமான நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குச் சமானமானவர் யார்? அல்லேலூயா. ௮௬, சங். ௮ உ. மோ. ௰௫, ௰௧.

## ௱௰௪. சங்கீதம்.

(எகிப்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேலுக்குப் பராபரன் அதிபதியானமேன்மை.)

இஸ்ரவேல் எகிப்திலும் யாக்கோபின் வீட்டார் அந்நியபாஷையுள்ள சனத்திலுமிருந்து புறப்படுகையில்,

௨ யூதா அவருடைய பரிசுத்தசாதியும் இஸ்ரவேல் அவருடைய ஆளுகையுமாயிற்று.

௩ கடற்கண்டு விலகியோடிற்று. யோர்தான் பின்னிட்டுத் திரும்பிற்று. ௨ மோசே. ௰௪, ௨௧. ௨௨. யோசுவா. ௩, ௰௬.

௪ பர்வதங்கள் ஆட்டுக்கடாய்களைப்போலவும் மேடுகள் ஆட்டுக்குட்டிகளைப்போலவும் துள்ளிற்று. ௨. மோசே. ௰௯, ௰௮.

௫ கடலே நீ விலகியோடுகிறதற்கும் யோர்தானே நீ பின்னிட்டுத் திரும்புகிறதற்கும்,

௬ பருவதங்களே, நீங்கள் ஆட்டுக்கடாய்களைப்போலவும் மேடுகளே. நீங்கள் ஆட்டுக்குட்டிகளைப்போலவும் துள்ளுகிறதற்கும் உங்களுக்கென்னவந்தது?

௭ பூமியே, நீ ஆண்டவருக்கு முன்பாகவும் யாக்கோபுடைய பராபரனுக்கு முன்பாகவும் அதிரு.

௮ அவர் கன்மலையைத் தண்ணீர்த்தடாகமாகவும் கற்பாறையை நீரூற்றுகளாகவும் மாற்றுகிறவர். ௨. மோசே. ௰௭, ௬.

## ௱௰௫. சங்கீதம்.

(விக்கிரகாராதனைக்காரரால் நிஸ்காரம் வராதபடிக்குப் பராபரன் தம்முடைய நாமத்துக்கு மகிமையாக இரட்சிப்பையளிக்கச் சவைவேண்டிக்கொண்டு தேவ நம்பிக்கையிலே தேறினது.)

எங்களுக்கல்ல, கர்த்தாவே எங்களுக்கல்ல, உம்முடைய நாமத்துக்கே தேவரீர் உமது கிருபையினிமித்தமும் உமது சத்தியத்தினிமித்தமும் மகிமைவரப்பண்ணும்.

௨ அவர்களுடைய பராபரன் இப்போது எங்கேயென்று புறச்சாதிகள் சொல்லுவானேன்? ௪௨, சங்கீதம். ௪.

௩ நம்முடைய பராபரனோ பரமண்டலங்களிலிருக்கிறார், அவர் தமக்குச் சித்தமாயிருக்கிற யாவற்றையுஞ் செய்கிறார். ௱௩௫, சங்கீதம். ௬.

௪ அவர்களுடைய விக்கிரகங்களோ மனுஷருடைய கைகளின் வேலையாகிய வெள்ளியும் பொன்னுந்தானே. ௱௩௫, சங். ௰௫. ௰௬.

௫ அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது, அவைகளுக்குக் கண்களிருந்துங் காணாது. ௫. மோசே. ௪, ௨௮.

௬ அவைகளுக்குக் காதுகளிருந்துங் கேளாது, அவைகளுக்கு மூக்கிருந்தும் மோராது.

௭ அவைகளுக்குக் கைகளிருந்தும் தடவாது, அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது, தங்கள் தொண்டையால் சத்தமும் காட்டாது.

௮ அவைகளைப் பண்ணுகிறவர்களும் அவைகளை நம்புகிற எவனும் அவைகளைப்போலிருக்கிறார்கள்.

௯ இஸ்ரவேலே கர்த்தரை நம்பு, அவரே அவர்களொத்தாசையும் அவர்கள் கேடயமுமாயிருக்கிறார்.

௰ ஆரோனின் வீட்டாரே கர்த்தரை நம்புங்கள், அவரே அவர்களொத்தாசையும் அவர்கள் கேடயமுமாயிருக்கிறார்.

௰௧ கர்த்தருக்குப் பயந்தவர்களே கர்த்தரை நம்புங்கள், அவரே அவர்களொத்தாசையும் அவர்கள் கேடயமுமாயிருக்கிறார்.

௰௨ கர்த்தர் நம்மை நினைத்திருக்கிறார், அவர் ஆசீர்வதிப்பார். இஸ்ரவேல் வீட்டாரை ஆசீர்வதிப்பார் அவர் ஆரோனின் வீட்டாரை ஆசீர்வதிப்பார்.

௰௩ கர்த்தருக்குப் பயந்தவர்களாகிய பெரியோரோடேகூடச் சிறியோரையும் ஆசீர்வதிப்பார்.

௰௪ கர்த்தர் உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் வர்த்திக்கப்பண்ணுவார்.

௰௫ பரமண்டலங்களையும் பூமியையும் படைத்த கர்த்தராலே நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.

௰௬ பரமண்டலங்களோ கர்த்தருடையது. பூமியையோ மனுப்புத்திரருக்குக் கொடுத்தார்.

௰௭ செத்தவர்களும் மவுனத்தில் இறங்குகிற அனைவருங் கர்த்தரைத் துதியார்கள்.

௰௮ நாமோ இதுமுதற்கொண்டு என்றென்றைக்குங் கர்த்தரைத் தோத்திரிப்போம். அல்லேலூயா.

## ௱௰௬. சங்கீதம்.

(ஜெபத்தைக்கேட்டு இரட்சித்த கர்த்தருக்குச்செலுத்தின தோத்திரம்.)

கர்த்தர் என் சத்தத்தையும் என் விண்ணப்பங்களையுங்கேட்டது எனக்குப் பிரியம்.

௨ ஏனென்றால் அவர் தமது செவியை என்னிடமாய்ச் சாய்த்தார். ஆகையால் என் நாட்களுள்ளமட்டும் அவரை நோக்கிக் கூப்பிடுவேன்.

௩ மரணத்தின் கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்டு நரகத்தின் இடுக்கண்கள் என்னைப் பிடித்தது, இக்கட்டையும் சஞ்சலத்தையும் அடைந்தேன். ௱௮. சங். ௫. ௬.

௪ ஆனால் ஆ கர்த்தாவே, என் ஆத்துமாவை விடுவியுமென்று கர்த்தருடைய நாமத்தைப் பற்றிக் கூப்பிட்டேன்.

௫ கர்த்தர் இரக்கமும் நீதியுமுள்ளவர், நம்முடைய பராபரன் மனவுருக்கமானவர்.

௬ கர்த்தர் பேதைகளைக் காக்கிறார். நான் மெலிந்துபோனேன், ஆனால் என்னை இரட்சித்தார்.

௭ என் ஆத்துமாவே, உன் இளைப்பாறுதலுக்குத் திரும்பு, ஏனென்றால் கர்த்தர் உனக்கு நன்மை செய்தார்.

௮ அதேதென்றால் என் ஆத்துமாவை மரணத்துக்கும் என் கண்ணைக் கண்ணீருக்கும் என் காலை இடறுதலுக்கும் தப்புவித்தீர். ௫௬, சங். ௰௩.

௯ கர்த்தருக்கு முன்பாகச் சீவனுள்ளோருடைய தேசத்திலே நடப்பேன்.

௰ விசுவாசித்தேன், ஆகையாலே பேசினேன், நான் மிகுதியும் ஒடுக்கப்பட்டிருந்தேன். ௨. கொரி. ௪, ௰௩.

௰௧ எந்த மனுஷனும் பொய்யனென்று நான் என் துன்பத்தின் துரிதத்திலே சொன்னேன். ரோமர். ௩, ௪.

௰௨ கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்களுக்காகவும் அவருக்கு என்ன ஈடு செலுத்துவேன்.

௰௩ இரட்சிப்புகளின் பாத்திரத்தை வாங்கிக் கர்த்தருடைய நாமத்தைப் பற்றிக் கூப்பிடுவேன்.

௰௪ கர்த்தருக்கு என் பொருத்தனைகளைச் செலுத்துவேன், ஆம் அவருடைய எல்லாச் சனத்துக்கு முன்பாகத்தானே. ௨௨, சங். ௰௩.

௰௫ கர்த்தருடைய பரிசுத்தவான்களின் மரணம் அவர் பார்வைக்கு அருமையானது.

௰௬ ஆ கர்த்தாவே, நான் உம்முடைய ஊழியக்காரன், நான் உமது அடியாளின் பிள்ளையாகிய உம்முடைய ஊழியக்காரன், என் கட்டுகளை அவிழ்த்தீர்.

௰௭ உமக்குத் துதியின் பலியைப் பலியிட்டுக் கர்த்தருடைய நாமத்தைப் பற்றிக் கூப்பிடுவேன்.

௰௮ கர்த்தருடைய வீட்டின் பிரகாரங்களிலும் எருசலேமே உன் நடுவிலும்,

௰௯ நான் கர்த்தருக்கு என் பொருத்தனைகளைச் செலுத்துவேன், ஆம் அவருடைய எல்லாச் சனத்துக்கு முன்பாகத்தானே. அல்லேலூயா. ௫௰, சங்கீதம். ௰௪.

## ௱௰௭. சங்கீதம்.

(பராபரனைத் துதிக்கிறதற்கு எல்லாச் சாதிகளையும் ஏவினது.)

எல்லாச் சாதிகளே கர்த்தரைத் துதியுங்கள், எல்லாச் சனத்தாரே அவரைப் புகழுங்கள். ரோமர். ௰௫, ௰௧.

௨ ஏனென்றால் அவருடைய கிருபை நம்முடையமேல் வல்லமையாயிருக்கிறது, கர்த்தரின் உண்மையும் என்றென்றைக்கும் நிற்கும். அல்லேலூயா.

## ௱௰௮. சங்கீதம்.

(பாடுபடுகிறதற்கு வருகிற மேசியாவைக் கண்டு பிடிக்கிற தீர்க்கதரிசனம்.)

கர்த்தரைத் துதியுங்கள், ஏனென்றால் அவர் நல்லவர், அவர் கிருபையென்றுமுள்ளது. ௱௭, சங்கீதம். ௧. ௱௩௬. சங். ௧.

௨ அவர் கிருபையென்றுமுள்ளதென்று இஸ்ரவேல் சொல்லுவதாக. ௱௰௫, சங். ௰௨. ௰௩.

௩ அவர் கிருபையென்றுமுள்ளதென்று ஆரோனின் வீட்டார் சொல்லுவார்களாக.

௪ அவர் கிருபையென்றுமுள்ளதென்று கர்த்தருக்குப் பயந்தவர்கள் சொல்லுவார்களாக.

௫ நெருக்கத்திலிருந்து கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், கர்த்தர் என்னைக் கேட்டருளி விசாலத்திலே வைத்தார்.

௬ கர்த்தர் என்கிருக்கிறார், பயப்படேன், மனுஷன் எனக்கென்ன செய்வான்? ரோமர். ௮, ௩௧. எபிரேயர். ௰௩, ௬.

௭ எனக்கனுகூலம் பண்ணுகிறவர்கள் நடுவிலே கர்த்தர் எனக்கிருக்கிறார், ஆகையால் என் பகைஞரிற் சரிக்கட்டுதலைக் காண்பேன்.

௮ மனுஷரை நம்புவதைப் பார்க்கக் கர்த்தர்மீதிற் பற்றுதலாயிருக்கிறதே நலம்.

௯ பிரபுக்களை நம்புவதைப் பார்க்கக் கர்த்தர்மீதிற் பற்றுதலாயிருக்கிறதே நலம்.

௰ எல்லாச் சாதியாரும் என்னை வளைந்து கொள்ளுகிறார்கள், கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்டுவேன்.

௰௧ என்னைச் சுற்றி வளைந்து கொள்ளுகிறார்கள், கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்டுவேன்.

௰௨ தேன் ஈக்களைப்போலென்னைவளைந்துகொள்ளுகிறார்கள், ஆனாலும் முட்செடிகளின் நெருப்பைப்போல அணைந்துபோட்டுப்போவார்கள், கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்டுவேன்.

௰௩ நான் விழ என்னைத் தள்ளவே தள்ளினாய், ஆனாலும் கர்த்தர் எனக்கொத்தாசை பண்ணுகிறார்.

௰௪ கர்த்தர் என்பெலனும் என்கீதமுமானவர், அவரெனக்கு இரட்சிப்பாக விருக்கிறார். ௨. மோசே ௰௫, ௨. ஏசா. ௰௨, ௨.

௰௫ நீதிமான்களின் கூடாரங்களில் இரட்சிப்பின் கெம்பீரசத்தமிருக்கும், கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமஞ்செய்யும்.

௰௬ கர்த்தரின் வலதுகரம் உயர்ந்தது, கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமஞ்செய்யும்.

௰௭ நான் சாவதில்லை, நான் பிழைத்திருந்து கர்த்தருடைய செய்கைகளை விவரிப்பேன்.

௰௮ கர்த்தரென்னைத் தெண்டிக்கவே தெண்டித்தும், என்னைச் சாவுக்கொப்புக்கொடார்.

௰௯ எனக்கு நீதியின் வாசல்களைத் திறவுங்கள், அவைகளுக்குட்பிரவேசித்துக் கர்த்தரைத் துதிப்பேன். ஏசாயா. ௨௬, ௨.

௨௰ அது கர்த்தரின் வாசல் நீதிமான்கள் அதற்குட்பிரவேசிப்பார்கள்.

௨௧ நீரென்னைக்கேட்டருளி, எனக்கு இரட்சிப்பாகவிருந்தபடியினாலே உம்மைத் துதிப்பேன்.

௨௨ வீடுகட்டுகிறவர்கள், ஆகாதென்று தள்ளின கல்லே கோடிக்குத் தலையானகல்லாயிற்று. மத்தேயு. ௨௧, ௪௨. மாற்கு. ௰௨, ௰. ௰௧. அப்போஸ்தலர். ௪, ௰௧.

௨௩ அவை கர்த்தராலாயிற்று, அவை நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கின்றது.

௨௪ இவை கர்த்தர் உண்டுபண்ணின நாள், இதிலே களிகூர்ந்து மகிழ்க்கடவோம்.

௨௫ ஆ கர்த்தாவே இரட்சியுமேன், ஆ கர்த்தாவே காரியத்தை வாய்க்கப்பண்ணுமேன். மத்தே. ௨௧, ௯. யோவா. ௰௨, ௰௩.

௨௬ கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்பட்டவர், கர்த்தரின் வீட்டாரே, உங்களை ஆசீர்வதிக்கிறோம்.

௨௭ கர்த்தர் நம்மைப்பிரகாசிப்பிக்கிற பராபரனாயிருக்கிறார், பண்டிகைப்பலியைப் பலிபீடத்தின்கொம்புகளமட்டுங் கொண்டுபோகக் கயிறுகளாற் கட்டுங்கள்.

௨௮ தேவரீர் என்பராபரன், உம்மைத் துதிப்பேன், என்பராபரனே உம்மையுயர்த்துவேன்.

௨௯ கர்த்தரைத் துதியுங்கள், ஏனெனில் அவர் நல்லவர், அவர் கிருபை யென்றுமுள்ளது.

## ௱௰௯. சங்கீதம்.

(தேவவசனத்தின்மேலுள்ள வாஞ்சையின் [..]ங்கிய சங்கீதம்.)

௧ கர்த்தருடைய வேதத்தின்படியே நடக்கிற உத்தமமார்க்கத்தார் பாக்கியவான்கள். ௧, சங்கீ. ௧. ௨ ௱௰௨, சங்கீ. ௧.

௨ அவருடைய சாட்சிகளைக் கைக்கொண்டு அவரை முழு இருதயத்தாலுந் தேடுகிறவர்கள் பாக்கியவான்கள்.

௩ அவர்கள் அநியாயஞ்செய்வதில்லை அவருடைய வழிகளிலே நடப்பார்கள்.

௪ உமது கட்டளைகளைக் கருத்தாய்க் காக்கத் தேவரீர் கற்பித்தீர்.

௫ ஆ உமது பிரமாணங்களைக் காக்க என் வழிகள் நிலைவரப்பட்டாலதாவிலை.

௬ நான் உம்முடைய கற்பனைகளையெல்லாங் கண்ணோக்கும்போது, வெட்கப்பட்டுப் போவதில்லை.

௭ உம்முடைய நீதியின் நியாயங்களை நான் கற்றுக்கொள்ளுகையால் உம்மைச் செம்மையிருதயத்தாலே துதிப்பேன்.

௮ உமது பிரமாணங்களைக் காப்பேன், என்னைக் கைவிடாமலேயிரும்.

௯ வாலிபன் தன் பாதையைச் சுத்தம்பண்ணுவான், உமது வசனத்தின்படி தன்னைக் காப்பதினாலே தானே.

௰ என் முழு இருதயத்தாலும் உம்மைத் தேடுகிறேன், என்னை யும்முடைய கற்பனைகளை விட்டு வழிதப்பவொட்டாதேயும்.

௰௧ நான் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்யாதபடிக்கு உமது வார்த்தையை என் இருதயத்திலே வைத்து வைத்தேன்.

௰௨ கர்த்தாவே, தேவரீர் தோத்திரிக்கப்பட்டவர், உம்முடைய பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.

௰௩ உம்முடைய வாக்கின் நியாயங்களையெல்லாம் என் உதடுகளால் விவரிப்பேன்.

௰௪ உம்முடைய சாட்சிகளின் வழியை நான் சகல ஆஸ்தியாகவும் பாவித்து, அதினால் களிப்பாயிருக்கிறேன்.

௰௫ உமது கட்டளைகளை யோசித்து, உம்முடைய பாதைகளைக் கண்ணோக்குகிறேன்.

௰௬ உமது பிரமாணங்களிலே மனமகிழ்ச்சியாயிருக்கிறேன், உம்முடைய வசனத்தை மறவேன்.

௰௭ நான் பிழைத்து, உம்முடைய வசனத்தைக் காக்க உமதடியானுக்குத் தயவுசெய்யும்.

௰௮ உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் பார்க்கிறதற்காக என்கண்களைத் திறவும்.

௰௯ பூமியிலே நான் பரதேசி, உமது கற்பனைகளை எனக்கு மறைக்காதேயும்.

௩௯, சங்கீ, ௰௯. ௧ பேது. ௨, ௰௧.

௨௰ எக்காலமும் என்னுடைய ஆத்துமா உமது நியாயங்களின் மேலிருக்கிற வாஞ்சையினாலே நொறுங்குண்டிருக்கிறது.

௨௧ உமது கற்பனைகளை விட்டு வழுவிவிலகிச் சபிக்கப்பட்ட அகந்தைக்காரரை யுதம்பு[illegible]தீர்.

௨௨ நிந்தையையும் அசட்டையையும் என்னைவிட்டகற்றும், ஏனென்றால் உம்முடைய சாட்சிகளைக் கைக்கொள்ளுகிறேன்.

௨௩ பிரபுக்களும் உட்கார்ந்திருந்து எனக்கு விரோதமாய்ப் பேசிக்கொள்ளுகிறார்கள், உமதடியானோ உமது பிரமாணங்களை யோசிக்கிறான்.

௨௪ உம்முடைய சாட்சிகள் என் செல்வங்களும் என் ஆலோசனைக்காரருமாயிருக்கிறது.

௨௫ என்னுடைய ஆத்துமா மண்ணோடொட்டியிருக்கிறது, உமது வார்த்தையின்படியென்னை யுயிர்ப்பியும்.

௨௬ என் வழிகளை நான் விவரித்துக் காட்டினதற்கு எனக்கு உத்தரவருளிச்செய்தீர், உமது பிரமாணங்களையெனக்குப் போதியும்.

௨௭ நான் உமது அதிசயங்களை யோசிக்கக்கொள்வதற்காக என்னை யும்முடைய சாட்சிகளின் வழியை யுணரப்பண்ணும்.

௨௮ சஞ்சலத்தால் ஆத்துமா கரைகிறது, உம்முடைய வசனத்தின்படி யென்னை யெழுந்து நிமிர்த்தும்.

௨௯ கள்ளமார்க்கத்தை யென்னைவிட்டு விலக்கி உம்முடைய வேதத்தை யெனக்குத் தயவுபண்ணும்.

௩௰ சத்தியத்தின்வழியை நான் தெரிந்துகொண்டு, உம்முடைய நியாயங்களை யென் கண்முன்பாக நிறுத்தினேன்.

௩௧ உம்முடைய சாட்சிகளோடொட்டிக்கொள்ளுகிறேன், கர்த்தாவே, என்னை வெட்கத்திற்குட்படப் பண்ணாதேயும்.

௩௨ உம்முடைய கற்பனைகளின் வழியிலே ஓடுவேன், ஏனென்றால் என்னிருதயத்தை விரிவாக்குகிறீர்.

௩௩ கர்த்தாவே, நான் உம்முடைய பிரமாணங்களின் வழியை முடியக் கைக்கொள்ளுவதற்காக அதையெனக்குப் போதியும்.

௩௪ எனக்குணர்வைக் கட்டளையிடும், அப்பொழுது நான் உமது வேதத்தைக் கைக்கொண்டு அதை முழு இருதயத்தாலுங் காப்பேன்.

௩௫ உம்முடைய கற்பனைகளின் பாதையிலென்னை நடத்தும், ஏனென்றால் அதின்மேல் பிரியமாயிருக்கிறேன்.

௩௬ பொருளாசைக்கல்ல உமது சாட்சிகளுக்கே என்னிருதயத்தைச் சார்ந்திருக்கப் பண்ணும். ௧. தீமோ. ௬, ௰. ௰௧.

௩௭ என் கண்களை மாயையைப் பாராதபடிக்கு விலக்கி உமது வழிகளிலென்னை யுயிர்ப்பியும்.

௩௮ உமக்குப் பயப்படுகிறதற்கான உமது வசனத்தை உமதடியானுக்கு நிலைப்படுத்தும்.

௩௯ நான் அஞ்சுகிற என்னிந்தையை விலக்கும், ஏனென்றால் உம்முடைய நியாயத்தீர்ப்புகள் நல்லவைகள்.

௪௰ இதோ, உம்முடைய கட்டளைகளின்மேல் வாஞ்சையாயிருக்கிறேன், உமது நீதியால் என்னை யுயிர்ப்பியும்.

௪௧ கர்த்தாவே, உம்முடைய வார்த்தையின்படி உமது தயவுகளும் உமது இரட்சிப்பும் எனக்கு வருவதாக.

௪௨ அப்பொழுது என்னை நிந்திக்கிறவனுக்கு மறுவுத்தரவு சொல்லுவேன், ஏனென்றால் உம்முடைய வசனத்தை நம்புகிறேன்.

௪௩ சத்தியத்தின் வசனத்தைமாத்திரம் என் வாயைவிட்டுப் பிரியவொட்டாதேயும், ஏனென்றால் உம்முடைய நியாயத்தீர்ப்புகளுக்குக் காத்திருக்கிறேன். எரெமி. ௰௫. ௰௬.

௪௪ அப்பொழுதும் என்றைக்குமுள்ள நித்தியகாலமும் உமது வேதத்தைக் காப்பேன்.

௪௫ விசாலத்திலே நடப்பேன், ஏனென்றால் உம்முடைய கட்டளைகளைத் தேடுகிறேன்.

௪௬ நான் உம்முடைய சாட்சிகளைக் குறித்து இராசாக்களுக்கு முன்பாகவும் வெட்கமற்ப் பேசி. ரோமர். ௧, ௰௬.

௪௭ நான் சிநேகித்திருக்கிற உம்முடைய கற்பனைகளின்பேரில் மனமகிழ்ச்சியாயிருந்து,

௪௮ நான் சிநேகித்திருக்கிற உம்முடைய கற்பனைகளுக்கு நேராக என் கைகளை யெடுத்து உமது பிரமாணங்களை யோசிப்பேன்.

௪௯ நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை உமதடியானுக்காக நினைத்தருளும்.

௫௰ அதுவே என் சிறுமையிலென்னுடைய ஆறுதல், ஏனென்றால் உம்முடைய வார்த்தை என்னை யுயிர்ப்பிக்கிறது ௰௬, சங்கீ. ௮.

௫௧ அகந்தைக்காரர் மிகவும் என்னைப் பரியாசம் பண்ணியும் உம்முடைய வேதத்தை விட்டு விலகேன்.

௫௨ கர்த்தாவே, ஆதிமுதலான உமது நியாயத்தீர்ப்புகளை நினைத்து என்னைத் தேற்றுகிறேன்.

௫௩ உம்முடைய வேதத்தை விட்டுவிடுகிற ஆகாதவர்கள் நிமித்தியமாய் எரிச்சலென்னைப் பிடித்தது.

௫௪ நான் பரதேசியாயத் தங்கும் வீட்டிலே உம்முடைய பிரமாணங்கள் எனக்குக் கீதங்களாயிருக்கிறது,

௫௫ கர்த்தாவே, இராக்காலத்தில் உம்முடைய நாமத்தை நினைத்து, உம்முடைய

வேதத்தைக் கைக்கொள்ளுகிறேன்.

௰௬, சங். ௭. ௪௨, சங். ௬.

௫௬ நானும் உமது கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறபடியினாலே இப்படி எனக்குண்டாயிற்று.

௫௭ கர்த்தர் என்பங்கு, உம்முடைய வசனங்களைக் காப்பேனென்றேன்.

௫௮ நான் முழு இருதயத்தாலும் உம்முடைய முகத்தை நோக்கிக் கெஞ்சுகிறேன், உமது வார்த்தையின்படி எனக்கிரங்கும்.

௫௯ என் வழிகளைச் சிந்தித்துக்கொண்டு என் கால்களை உம்முடைய சாட்சிகளுக்கு நேராகத் திருப்புகிறேன்.

௬௰ உமது கற்பனைகளைக் காத்து நடக்க நான் தாமதியாமல் தீவிரிக்கிறேன்.

௬௧ ஆகாதவர்களின் கும்புகள் என்னைக் கொள்ளையிட்டும் உம்முடைய வேதத்தை மறவேன்.

௬௨ உம்முடைய நீதியினுடைய நியாயத்தீர்ப்புகளினிமித்தம் உம்மைத் துதிக்கப் பாதி ராத்திரியிலெழுந்திருக்கிறேன்

௬௩ உமக்குப் பயந்து உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிற அனைவருக்கும் நான் தோழன்.

௬௪ கர்த்தாவே, பூமியும் உமது கிருபையினாலே நிறைந்திருக்கிறது. உமது பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும். ௩௩, சங். ௫.

௬௫ கர்த்தாவே, உமது வார்த்தையின்படியும் அடியானை நன்றாய் நடத்தினீர்.

௬௬ நல்நிதானிப்பையும் அறிவையும் எனக்குக் கற்பியும், ஏனெனில் உம்முடைய கற்பனைகளின் பேரில் விசுவாசமாயிருக்கிறேன்.

௬௭ நான் தாழ்த்தப்படாததற்குமுன் நான் வழிதப்பினவன், இப்போதோ வென்றால் உம்முடைய வார்த்தையைக் காத்து நடக்கிறேன்.

௬௮ தேவரீர் நல்லவரும் நன்மைசெய்கிறவருமாயிருக்கிறீர். உமது பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.

௬௯ அகந்தைக்காரர் என்மேற் பொய்களைப் பிணைக்கிறார்கள், நானோ முழு இருதயத்தாலும் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறேன்.

௭௰ அவர்களிருதயம் நிணத்தைப்போலக் கொழுத்திருக்கிறது, நானோ உம்முடைய வேதத்தின்பேரிலே மனமகிழ்ச்சியாயிருக்கிறேன்.

௭௧ நான் உமது பிரமாணங்களைக் கற்றுக்கொள்ளும்படிக்கு நான் சிறுமையாக்கப்பட்டது எனக்கு நல்லது.

௭௨ அநேகம் ஆயிரமான பொன் வெள்ளியைப்பார்க்கிலும் உமது வாக்கினுடைய வேதமே எனக்கு நலம். ௰௯, சங். ௰௧.

௭௩ உம்முடைய கரங்கள் என்னையுண்டாக்கி என்னையுருவாக்கின, உம்முடைய கற்பனைகளைக் காக்க என்னை உணர்வுள்ளவனாக்கும்.

௭௪ நான் உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கையால் உமக்குப் பயந்தவர்கள் என்னைக் கண்டு சந்தோஷப்படுகிறார்கள்.

௭௫ கர்த்தாவே உமது நியாயத்தீர்ப்புகள் நீதியென்றும், உண்மையால் என்னைச் சிறுமைப்படுத்தினீரென்றும் அறிவேன்.

௭௬ நீர் உமதடியானுக்குக் கொடுத்த உமது வார்த்தையின்படி உமது கிருபை எனக்கு நல்தேற்றரவாயிருப்பதாக.

௭௭ நான் பிழைக்கும்படிக்கு உமதிரக்கங்கள் என்மேல் வரக்கடவது, ஏனெனில் உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சி.

௭௮ அகந்தைக்காரர் என்னைப் பொய்களால் அழுத்தினதினிமித்தம் வெட்கப்படுவார்கள். நானோ உமது கட்டளைகளை யோசித்திருப்பேன்.

௭௯ உமக்குப் பயந்து உமது சாட்சிகளை யறிந்திருக்கிறவர்கள் என்னண்டைக்குத் திரும்புவார்களாக.

௮௰ நான் வெட்கத்திற்குள்ளாகாதபடிக்கு என்னிருதயம் உம்முடைய பிரமாணங்களில் உத்தமமாயிருக்கக்கடவது.

௮௧ உம்முடைய இரட்சிப்புக்கென்று என் ஆத்துமா தவனமாய்த் தொய்ந்திருக்கிறது. உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கிறேன். ௧. மோசே. ௪௯, ௰௮.

௮௨ எப்போது என்னைத் தேற்றரவுபண்ணுவீரென்று உம்முடைய வார்த்தையின்மேல் நோக்கமாய் என் கண்கள் பூத்துப்போகிறது.

௮௩ ஏனென்றால் புகையில் துருத்தியைப்போலானேன் உமது பிரமாணங்களையோ மறவேன்.

௮௪ உமதடியானுடைய நாட்களெம்மாத்திரம், என்னைத் துன்பப்படுத்துகிறவர்களையெப்போ விசாரித்து நியாயஞ்செய்வீர்.

௮௫ அகந்தைக்காரர் உம்முடைய நியாயப்பிரமாணத்திற்கேலாததாய் எனக்குக் குழிகளை வெட்டினார்கள்.

௮௬ உம்முடைய கற்பனைகளெல்லாம் உண்மை, பொய்களால் என்னைத் துன்பப்படுத்துகிறார்கள், எனக்குச் சகாயம்பண்ணும்.

௮௭ அவர்கள் என்னைப் பூமியில் நிர்மூலம்பண்ண மெத்தச் சமீபமாயிற்று, ஆனாலும் நான் உமது கட்டளைகளை விட்டதில்லை

௮௮ உமது கிருபையின்படியே என்னை உயிர்ப்பியும் அப்போது உம்முடைய வாக்கின் சாட்சியைக் காத்து நடப்பேன்.

௮௯ கர்த்தாவே என்றென்றைக்கும் உம்முடைய வசனம் மண்டலங்களில் நிலைநிற்கும். ஏசாயா. ௪௰, ௮.

௯௰ தலைமுறைதலைமுறையாக உம்முடைய சத்தியமிருக்கும், பூமியை யுறுதிப்படுத்தினீர், அதினால் அது நிற்கும்.

௯௧ இன்றைத்தினமட்டும் அவைகள் உம்முடைய நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்றும்படிக்கு நிற்கிறது, ஏனெனில் சர்வமும் உமக்குப் பணிசெய்யும்.

௯௨ உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சியாயிராதிருந்தால் அப்போது என் சிறுமையிலே அழிவேன். ௫௰ வசனம்.

௯௩ என்றென்றைக்கும் உம்முடைய கட்டளைகளை மறவாதிருப்பேன் ஏனெனில் அவைகளாலென்னையுயிர்ப்பித்தீர்.

௯௪ நான் உம்முடையவன், என்னையிரட்சியும், ஏனெனில் உம்முடைய கட்டளைகளைத் தேடுகிறேன்.

௯௫ ஆகாதவர்களென்னையழிக்க என்னைக் காத்திருக்கிறார்கள் நானோ உம்முடைய சாட்சிகளைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். ௧௭, சங்கீதம். ௧௨.

௯௬ சகலசம்பூரணத்திற்கும் எல்லையைக் கண்டேன். உம்முடைய கற்பனையோவெனில் மகாவிஸ்தாரம்.

௯௭ உம்முடைய வேதத்தை யெத்தனையாய்ச் சிநேகிக்கிறேன், அதை நாள்தோறும் என்னுடைய யோசிப்பு. ௧ சங்கீதம். ௨.

௯௮ உம்முடைய கற்பனைகளே என்னை என் சத்துருக்களிலும் அதிக ஞானமுள்ளவனாக்குகிறது, ஏனெனில் என்றைக்கும் அவைகளென்னுடனேயிருக்கிறது.

௯௯ என்னையுபதேசித்த எல்லாரையும் பார்க்கப் புத்தியுள்ளவனாயிருக்கிறேன் ஏனெனில் உம்முடைய சாட்சிகள் என்னுடைய யோசிப்பு.

௱ முதிர்ந்த வயதுள்ளவர்களைப் பார்க்கிலும் உணர்வுள்ளவனாயிருக்கிறேன், ஏனெனில் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொண்டிருக்கிறேன்.

௱௧ நான் உம்முடைய வசனத்தைக் காத்து நடக்கும்படிக்குச் சகல பொல்லாத பாதைக்கும் என் கால்களை விலக்குகிறேன்.

௱௨ உம்முடைய நியாயங்களை விட்டு விலகேன், ஏனெனில் தேவரீர் என்னைப் போதித்தீர்.

௱௩ உம்முடைய வார்த்தைகள் என் ருசிக்கு எத்தனை தித்திப்பானவைகள், என் வாய்க்கு அவைகள் தேனிலும் மதுரமாயிருக்கும். ௰௯, சங்கீதம். ௰.

௱௪ உம்முடைய கட்டளைகளால் உணர்வடைந்தேன். ஆனபடியால் எல்லாக் கள்ள வழியையும் பகைக்கிறேன்.

௱௫ உம்முடைய வசனம் என் கால்களுக்குத் தீபமும் என் பாதைக்கு வெளிச்சமுமானது. ௰௯, சங். ௯. ௨. பேதுரு. ௧—௰௯.

௱௬ உம்முடைய நீதிநியாயங்களைக் காத்து நடப்பேனென்று ஆணையிட்டேன், அதைத் திருவாக்கும்பண்ணுவேன்.

௱௭ மிகுதியும் ஒடுங்குண்டேன், கர்த்தரே, உம்முடைய வசனத்தின்படியே என்னை யுயிர்ப்பியும்.

௱௮ கர்த்தாவே, என் வாயின் உற்சாகப் பலிகளை நீர் அங்கீகரித்தருளி, உம்முடைய நியாயங்களை எனக்குப் போதித்துக்கொடும். ௰௯. சங். ௰௫. எபிரே. ௰௩, ௰௫.

௱௯ என் ஜீவன் எப்போதும் என் கையிலிருக்கிறது, ஆனாலும் உம்முடைய வேதத்தை மறவேன்.

௱௰ ஆகாதவர்கள் எனக்குக் கண்ணி வைக்கிறார்கள், ஆனாலும் உம்முடைய கட்டளைகளை நான் விட்டுவழிதப்பேன்.

௱௰௧ உம்முடைய சாட்சிகளை நித்திய சுதந்தரமாகக் கொண்டிருக்கிறேன் ஏனெனில் அவைகளென் இருதயத்தின் சந்தோஷம்.

௱௰௨ உம்முடைய பிரமாணங்களின்படி என்றென்றைக்கும் முடியவுஞ்செய்வதற்கு என் இருதயத்தைச் சாய்த்தேன்.

௱௰௩ வீணசிந்தனைகளை நான் பகைத்து உம்முடைய வேதத்தைச் சிநேகிக்கிறேன்.

௱௰௪ என் மறைவும் என் கேடகமும் தேவரீர், உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கிறேன்.

௱௰௫ பொல்லாதவர்களே என்னைவிட்டகன்று போங்கள், ஏனென்றால் என் பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுவேன்.

௱௰௬ நான் பிழைக்கும்படிக்கு, என்னை யும்முடைய வார்த்தையின்படியாதரியும், என் நம்பிக்கை விருதாவாகவென்னை வெட்கத்திற்குட்படுத்தாதேயும். ௨௫, சங். ௨. ௩,

௱௰௭ நான் இரட்சிக்கப்பட்டு எக்காலமும் உம்முடைய பிரமாணங்களின்பேரிலே மனமகிழ்ச்சியாயிருக்கும்படிக்கென்னையாதரியும்.

௱௰௮ உம்முடைய பிரமாணங்களைவிட்டு வழிவிலகிற யாவரையும் மிதித்துப்போடுகிறீர், ஏனெனில் அவர்களுடைய கபடம் வெறும் பொய்.

௱௰௯ பூமியிலுள்ள ஆகாதவர்களையெல்லாங் களிம்புகளைப்போல அகற்றிவிடுகிறீர், ஆகையால் உம்முடைய சாட்சிகளைச் சிநேகிக்கிறேன்.

௱௨௰ உம்மால் அடையுந்திகிலால் என் உடம்பு சிலிர்க்கிறது. உம்முடைய நியாயத்தீர்ப்புகளுக்குப் பயமாயிருக்கிறேன்.

௱௨௰௧ நியாயமும் நீதியுஞ்செய்கிறேன், என்னை ஒடுக்குகிறவர்களுக்கு ஒப்புக்கொடாதேயும்.

௱௨௰௨ உம்முடைய அடியானுக்கு நன்மையாக மேற்போட்டுக்கொள்ளும், அகந்தைக்காரர் என்னையொடுக்கவொட்டாதேயும்.

௱௨௩ உமது இரட்சிப்புக்கும் உமது நீதியின் வார்த்தைக்குங் காத்திருக்கிறதினாலே என் கண்கள் பூத்துப்போகிறது.

௱௨௪ உமது அடியானை உமது கிருபையின்படியே நடத்தி உமது பிரமாணங்களை யெனக்குக் கற்றுக்கொடும்.

௱௨௫ நான் உமதடிமை, உம்முடைய சாட்சிகளை நான் அறியும்படிக்கென்னை உணர்வுள்ளவனாக்கும்.

௱௨௬ நீதியைச்செய்யக் கர்த்தருக்கு வேளையாம், அவர்கள் உம்முடைய நியாயப்பிரமாணத்தை முறித்தார்கள்.

௱௨௭ அதற்காக நான் பொன்னையும் அபரஞ்சியையும் பார்க்க உம்முடைய கற்பனைகளை யதிகமாய் நேசிக்கிறேன். ௰௯, சங்கீதம். ௰.

௱௨௮ நான் உம்முடைய கட்டளைகளை யெல்லாம் முற்றிலுஞ் செம்மையென்றெண்ணிச் சகல கள்ளவழியையும் வெறுக்கிறேன்.

௱௨௯ உம்முடைய சாட்சிகள் அதிசயமானவைகள், ஆகையால் அவைகளை யென் ஆத்துமா கைக்கொள்ளும்.

௱௩௰ உம்முடைய வார்த்தைகளின் திறப்பு வெளிச்சந்தந்து பேதைகளை யுணர்வுள்ளவர்களாக்கும். ௰௯, சங்கீ. ௮. ௯. ௨. தீமோத். ௩. ௰௫.

௱௩௧ உம்முடைய கற்பனைகளை நான் வாஞ்சிக்கிறபடியினாலே என் வாயை ஆவென்று திறந்து அவைகளுக்கேங்குகிறேன்.

௱௩௨ உம்முடைய நாமத்தை நேசிக்கிறவர்களுக்குத் தகுவதாகும் நியாயத்தின்படியே என்னை நோக்கிப்பார்த்து எனக்கிரங்கும்.

௱௩௩ நீர் என் காலடிகளையும் உம்முடைய வார்த்தையிலே நிலைப்படுத்தி ஒரு அநியாயமும் என்னை யாளவொட்டாதேயும்.

௱௩௪ உம்முடைய கட்டளைகளை நான் காப்பதற்காக என்னை மனுஷரின் இடுக்கலடிக்கு விலக்கி விடுவித்துக்கொள்ளும்.

௱௩௫ உமதடியான்மேல் உமது முகத்தைப் பிரகாசிப்பிக்கப்பண்ணி உமது பிரமாணங்களை யெனக்குக் கற்றுக்கொடும்.

௱௩௬ உம்முடைய வேதத்தைக் காத்து நடவார்களென்றென் கண்களிலிருந்து நீர்க்கால்கள் இறங்குகிறது.

௱௩௭ கர்த்தாவே தேவரீர் நீதிபரன், உமது நியாயத்தீர்ப்புகள் செம்மையுமாயிருக்கிறது.

௱௩௮ உம்முடைய சாட்சிகளுடைய நீதியின்படியேயும் உண்மையின்படியேயும் நடக்க மிகவுங் கற்பித்தீர்.

௱௩௯ என் சத்துருக்கள் உம்முடைய வார்த்தைகளை மறந்தார்களென்று என் பத்தி வயிராக்கிய மென்னை யழிக்கிறது. ௬௯, சங்கீதம். ௯.

௱௪௰ உமது வசனம் மெத்தவும் புடமிடப்பட்டது, உமதடியான் அதை நேசிக்கிறேன். ௰௨, சங்கீதம். ௭.

௱௪௧ நான் சிறியவனும் அசட்டைபண்ணப்பட்டவனுமாயிருக்கிறேன், ஆனால் உமது கட்டளைகளை மறவேன்.

௱௪௨ உம்முடைய நீதி நித்திய நீதி, உமது வேதம் சத்தியம். யோவான். ௰௭. ௰௭.

௱௪௩ இடுக்கணும் நெருக்கமும் என்னைப் பிடித்தது, ஆனால் உம்முடைய கற்பனைகள் என் மனமகிழ்ச்சி.

௱௪௪ உம்முடைய சாட்சிகளின் நீதி என்றைக்கும் நிற்கும், நான் பிழைக்கும்படிக்கென்னை யுணர்வுள்ளவனாக்கும்.

௱௪௫ முழு இருதயத்தோடுங் கூப்பிடுகிறேன், கர்த்தாவே என் சத்தத்தைக் கேளும், உம்முடைய பிரமாணங்களைக் கைக்கொள்ளுவேன்.

௱௪௬ உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன், உம்முடைய சாட்சிகளை நான் காக்கும்படிக்கென்னை யிரட்சியும்.

௱௪௭ அதிகாலமே வந்து சத்தமிடுகிறேன், உம்முடைய வார்த்தைக்குக் காத்திருக்கிறேன்.

௱௪௮ உமது வசனத்தை யோசிப்பதற்கு என் கண்கள் சாமங்களுக்கு முன்னே விழிக்கும்.

௱௪௯ உம்முடைய கிருபையின்படி என் சத்தத்தைக் கேளும், கர்த்தாவே உம்முடைய நியாயத்தின்படி யென்னை யுயிர்ப்பியும்.

௱௫௰ தீவினையைப் பின்பற்றுகிறவர்கள் சமீபமாயிருக்கிறார்கள், உம்முடைய வேதத்துக்குத் தூரமானார்கள்.

௱௫௧ கர்த்தாவே தேவரீர் சமீபமாயிருக்கிறீர், உமது கற்பனைகளெல்லாம் உண்மை.

௱௫௨ தேவரீர் உம்முடைய சாட்சிகளை என்றைக்கும் நிற்க அஸ்திபாரப்படுத்தினீரென்கிறதை நான் பூர்வகாலமுதலாய் அவைகளால் அறிந்திருக்கிறேன்.

௱௫௩ என் சிறுமையைப் பார்த்து என்னை விடுவியும், ஏனெனில் உமது வேதத்தை மறவேன்.

௱௫௪ என் வழக்கை நீர் வழக்காடி என்னை மீட்டுக்கொள்ளும், உம்முடைய வார்த்தையின்படியே என்னை யுயிர்ப்பியும்.

௱௫௫ இரட்சிப்பு ஆகாதவர்களுக்குத் தூரமாயிருக்கிறது, ஏனெனில் உமது பிரமாணங்களைத் தேடார்கள்.

௱௫௬ கர்த்தாவே உம்முடைய இரக்கங்கள் மிகுதியாயிருக்கிறது, உம்முடைய நியாயங்களின்படியென்னை யுயிர்ப்பியும்.

௱௫௭ என்னைத் துன்பப்படுத்துகிறவர்களும் எனக்கு நெருக்கஞ்செய்கிறவர்களும

அநேகர், ஆனால் உம்முடைய சாட்சிகளை விட்டுவிலகேன். ௫. சங்கீ. ௨.

௱௫௮ உமது வசனத்தைக் காக்காத துரோகிகளை நான் காணும்போது அவர்களை அரோசிக்கிறேன்.

௱௫௯ இதோ உம்முடைய கட்டளைகளை நேசிக்கிறேன், கர்த்தாவே உமது கிருபையின்படி என்னை உயிர்ப்பியும்.

௱௬௰ உம்முடைய வசனம் சமூலமும் சத்தியம், உமது நீதியின் நியாயமெல்லாம் என்றைக்கும் நிற்கும். ௱௪௨, வசனம்.

௱௬௧ பிரபுக்கள் முகாந்திரமில்லாமல் என்னைத் துன்பப்படுத்துகிறார்கள், ஆனால் உமது வசனத்துக்கே என் இருதயம் பயப்படுகிறது.

௱௬௨ வெகு கொள்ளையுடைமையைக் கண்டுபிடிக்கிறவனைப்போலே நான் உமது வார்த்தையின்பேரிலே களிப்பாயிருக்கிறேன்.

௱௬௩ பொய்யைப் பகைத்தருவருத்து உம்முடைய வேதத்தை நேசிக்கிறேன்.

௱௬௪ உமது நீதியுள்ள நியாயங்களினிமித்தம் ஒருநாளில் ஏழுதரம் உம்மைத் துதிக்கிறேன்.

௱௬௫ உம்முடைய வேதத்தை நேசிக்கிறவர்களுக்கு மிகுந்த சமாதானமுண்டு, அவர்களுக்கு இடறலில்லை.

௱௬௬ கர்த்தாவே உம்முடைய இரட்சிப்புக்கு நான் காத்திருந்து உம்முடைய கற்பனைகளின்படி செய்கிறேன்.

௱௬௭ என் ஆத்துமா உமது சாட்சிகளைக் காக்கும், அவைகளை மிகவும் நேசிக்கிறேன்.

௱௬௮ உமது கட்டளைகளையும் உமது சாட்சிகளையும் காத்து நடக்கிறேன், ஏனெனில் என் வழிகளெல்லாம் உமக்கு முன்பாகவிருக்கிறது.

௱௬௯ கர்த்தாவே என் கூப்பிடுதல் உமக்கு முன்பாகச் சேரக்கடவது, உமது வசனத்தின்படியே என்னை உணர்வுள்ளவனாக்கும்.

௱௭௰ என் விண்ணப்பம் உமக்கு முன்பாக வரவொட்டும், உமது வார்த்தையின்படியே என்னை விடுவியும்.

௱௭௧ உம்முடைய பிரமாணங்களை நீர் எனக்குக் கற்றுக்கொடுக்கும்போது என் உதடுகள் உமது துதியை வெளிப்படுத்தும்.

௱௭௨ என் நாவு உம்முடைய வசனத்தைப் பகர்ந்துபேசும், ஏனெனில் உமது கற்பனைகளெல்லாம் நீதி.

௱௭௩ உமது கரம் எனக்குச் சகாயஞ்செய்யவிருக்கக்கடவது, ஏனெனில் உம்முடைய கட்டளைகளைத் தெரிந்துகொண்டேன்.

௱௭௪ கர்த்தாவே உம்முடைய இரட்சிப்பின்மேல் ஆசையாயிருக்கிறேன், உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சி.

௱௭௫ என் ஆத்துமா பிழைத்து உம்மைத் துதிக்கக்கடவது, உமது நியாயத்தீர்ப்புகள் எனக்கொத்தாசையாயிருப்பதாக.

௱௭௬ காணாமற்போன ஆட்டைப்போல வழிதப்பினேன், உமதடியானைத் தேடும், ஏனெனில் உமது கற்பனைகளை மறவேன். ஏசாயா. ௫௩, ௬.

## ௱௨௰. சங்கீதம்.

(பொல்லாத நாவுகளின்பேரிலே முறையிடுதல்.)

[படிகளின்மேல் நின்று பாடினது.]

௧ என் நெருக்கத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், என்னைக் கேட்டருளினார். ௫௰, சங்கீ. ௰௫.

௨ கர்த்தாவே கள்ள உதடுகளுக்கும் கபட்டு நாவுக்கும் என் ஆத்துமாவைத் தப்புவியும்.

௩ கபட்டு நாவு உனக்குச் செய்ததென்ன? உனக்கப்புறம் உண்டாகுவதென்ன?

௪ அது பலவானுடைய கூர்மையான அம்புகளைப்போலேயும் சூரைச்செடிகளையெரிக்குந் தழலைப்போலேயுமிருக்கிறது.
வாக்கியம். ௰௨, ௰௮.

௫ நான் மேசேக்கிலே குடியிருந்து, கேதாரின் கூடாரங்களண்டையிலே குடியிருக்கையால் எனக்கு ஐயோ.

௬ சமாதானத்தைப் பகைக்கிறவர்களிடத்தில் என் ஆத்துமா குடியிருந்தது போதும்.

௭ நான் சமாதானமாயிருக்கிறேன், நான் பேசும்போதோவெனில் அவர்கள் யுத்தத்திற்கெத்தனமாயிருக்கிறார்கள்.

## ௱௨௧. சங்கீதம்.

(தம்முடையவர்களைப் பராபரன் காப்பாற்றுகிறார் என்பது.)

[படிகளின்மேல் நின்று பாடினது.]

௧ எனக்கொத்தாசை வரும் பருவதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்கிறேன்.

௨ வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்திலிருந்து எனக்கொத்தாசை வரும்.

௩ உன் காலைத் தள்ளாடவொட்டார் உன்னைக் காக்கிறவர் உறங்கார்.

௪ இதோ இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குகிறதுமில்லை தூங்குகிறதுமில்லை.

௫ கர்த்தர் உன்னைக் காக்கிறவர், கர்த்தர் உன் வலதுபக்கத்தில் உனக்கு நிழலாயிருக்கிறார்.

௬ பகலில் வெய்யிலாகிலும், இரவில் நிலவாகிலும் உன்னைச் சேதப்படுத்துவதில்லை.

௭ கர்த்தர் உன்னை எல்லாத்தீங்குக்கும் விலக்கிக்காப்பார், அவர் உன்னாத்துமாவைக் காப்பார். ௬௪, சங்கீதம. ௬.

௮ கர்த்தர் உன்போக்கையும் உன்வரத்தையும் இதுமுதற்கொண்டு என்றைக்குங்காப்பார்.

## ௱௨௨. சங்கீதம்.

(கர்த்தருடைய சபையின் சுகசீருலேமகிழ்ந்தது.)

[படிகளின்மேல்நின்றுபாடப்பட்ட தாவீதின்பாட்டு.]

கர்த்தருடைய வீட்டிற்குப்போவோமென்றெனக்குச்சொல்லுகிறவர்களாலேமகிழ்ச்சியாயிருக்கிறேன்.

௨ எருசலேமே, உன்வாசல்களில் எங்கள்கால்கள் நிற்கலாயிற்று.

௩ எருசலேமே, இசைவிணைவான பட்டணமாகக்கட்டப்பட்டிருக்கிறது.

௪ அங்கே இஸ்ரவேலுக்குச்சாட்சியாகக்கர்த்தருடைய கோத்திரங்களாகிறகோத்திரங்கள் கர்த்தரின் நாமத்தைத்தோத்திரிப்பதற்குப்போயேறும்.

௫ ஏனெனில் அங்கே நியாயாசனங்கள் வைக்கப்பட்டிருக்கிறது, தாவீதுடையவீட்டாரின் ஆசனங்களேதானே.

௬ எருசலேமின்சமாதானத்திற்காகவேண்டுங்கள், உன்னைச்சிநேகிக்கிறவர்கள்சுகித்திருப்பார்களாக.

௭ உன்னலங்கத்திறகுள்ளேசமாதானமும் உன்அரண்மனைகளிற்சுகமுமிருப்பதாக.

௮ என்சகோதரருக்காகவும் என்சிநேகிதருக்காகவும் உனக்குள்சமாதானமிருப்பதாகவென்பேன்.

௯ எங்கள்பராபரனாகியகர்த்தரின் வீட்டுக்காக உனக்கு நலமாயிருக்கிறதைத்தேடுவேன்.

## ௱௨௩. சங்கீதம்.

(சக்கந்தக்காரரின்பேரிலேமுறையிடுதல.)

[படிகளின்மேல நின்றுபாடினபாட்டு.]

பரமண்டலங்களில் வாசமாயிருக்கிற தேவரீரண்டைக்கு என்கண்களையேறெடுக்கிறேன். ௱௨௧, சங்கீதம ௧. ௨.

௨ இதோ, வேலைக்காரரின்கண்கள் தங்கள் எசமானர்களின்கையையும் வேலைக்காரியின்கண்கள் தன் எசமானிச்சியின்கையையும் நோக்கியிருக்குமாப்போலே எங்கள்கண்கள் எங்கள்பராபரனாகியகர்த்தரை அவர் எங்களமேலிரக்கமாகுமட்டும் நோக்கியிருக்கிறது.

௩ எங்களுக்கிரங்கும் கர்த்தாவே, எங்களுக்கிரங்கும் ஏனெனில, அசங்கத்தாலேமிகவுமநிரப்பப்பட்டோம.

௪ எங்கள் ஆத்துமா நிர்விசாரரின்சக்கந்தத்தாலும அகந்தைக்காரரின் அசங்கத்தாலும மிகவும நிரப்பப்பட்டிருக்கிறது.

## ௱௨௪. சங்கீதம்.

(கொடூரசத்துருக்களின் விக்கினத்திற்குச்சவையைத்தப்பப்பண்ணின பராபரனைத்தோத்திரித்தது.)

[படிகளின்மேல் நின்றுபாடப்பட்டதாவீதின்பாட்டு.]

கர்த்தர்நமக்கிராதிருந்தாராகில்,

௨ மனிதர்நமக்குவிரோதமாய் எழும்பினபோது, கர்த்தரோ நமக்கிராதிருந்தாராகில்.

௩ அப்போதவர்கள் தங்கள்கோபம்நம்மேல் எரிகையில், நம்மையுயிரோடேவிழுங்கியிருப்பார்கள்.

௪ அப்போதுதண்ணீர்கள் நம்முடைய மேற்புரண்டு நீரோட்டம்நம்முடைய ஆத்துமாவின்மேற்கடந்து,

௫ உயர்ந்ததண்ணீர்களே நம்முடைய ஆத்துமாவின்மேற் கடக்குமென்று இஸ்ரவேல் இப்போதுசொல்வதாக,

௬ நம்மையவர்கள் பலனுக்கிரையாக ஒப்புக்கொடாதிருக்கிறகர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்,

௭ நம்முடைய ஆத்துமா ஒருகுருவியைப்போலே வேட்டைக்காரரின் கண்ணிக்குத்தப்பிப்போயிற்று, கண்ணி தெறித்து நாமதப்பினோம்.

௮ நம்முடையசகாயம வானத்தையும பூமியையும உண்டாக்கின கர்த்தருடைய நாமத்தில உள்ளது. ௱௨௧, சங்கீதம. ௨.

## ௱௨௫. சங்கீதம்.

(பராபரன்பேரிலவைக்குமநம்பிக்கை வெட்கப்படுத்தாதென்பது.)

[படிகளின்மேல்நின்றுபாடினது,]

கர்த்தரைநம்புகிறவர்கள அசையாதபடிக்கு என்றும நிலைத்திருக்குஞ் சீயோன் பர்வதத்தைப்போலிருப்பார்கள். ௨௬, சங்கீதம. ௧.

௨ எருசலேமைச்சுற்றிலும பர்வதங்களிருக்குமாப்போலே, கர்த்தர் இதுமுதலாய் என்றென்றைக்குந்தம்முடைய சனத்தைச்சுற்றிலுமிருக்கிறார்.

௩ ஏனெனில் நீதிமான்கள், தங்கள்கைகளை அநியாயத்திற்கு நீட்டாதபடிக்கு, ஆகா

மீபத்தின் செங்கோல் நீதிமான்களுடைய வீதத்தின்மேலே நிலைக்காதேபோம்.

௪ கர்த்தாவே, நல்லவர்களுக்குந் தங்களிருதயங்களிற் செம்மையானவர்களுக்கும் நன்மைசெய்யும்.

௫ தங்கள் கோணலான வழிகளுக்குச்சாய்கிறவர்களைக் கர்த்தர் அக்கிரமக்காரரோடே போகப்பண்ணுவார், இஸ்ரவேலின்மேற் சமாதானம். கலாத். ௬, ௰௬.

## ௱௨௰௬. சங்கீதம்.

(நம்முடைய சனத்தின் சிறையிருப்பைக் கர்த்தர் திருப்புவாரென்றதிர்க்கதரிசனம்.)

[படிகளின்மேல் நின்று பாடின பாட்டு.]

௧ சீயோனின் சிறையிருப்பைக் கர்த்தர் திருப்பும்போது, சொப்பனங்காண்கிறவர்களைப்போலிருப்போம். ௱௪, சங்கீ. ௭.

௨ அப்போது நம்முடையவாய் நகைப்பினாலும் நம்முடைய நாவு கெம்பீரத்தினாலும் நிறைந்திருக்கும், அப்போது கர்த்தர் இவர்களிடத்திலே பெரிதானவைகளைச்செய்தாரென்று புறசசாதிகளுக்குள்ளே சொல்லிக்கொள்ளுவார்கள்.

௩ கர்த்தர் நம்மிடத்திலே பெரிதானவைகளைச்செய்தார், இதினிமித்தம் மகிழ்ந்திருக்கிறோம்.

௪ கர்த்தாவே, தெற்குத்தி வெள்ளங்களைப்போலே எங்கள் சிறையிருப்பைத் திருப்பும்.

௫ கண்ணீரோடே விதைக்கிறவர்கள் கெம்பீரத்தோடே அறுப்பார்கள். மத். ௫, ௪.

௬ அள்ளித்தூவும் விதையைச்சுமக்கிறவன் அழுதுநடந்துகொண்டிருக்கிறான், ஆனால் தான் அறுத்த அரிக்களைச்சுமந்துகொண்டு கெம்பீரத்தோடே வரவே வருவான்.

## ௱௨௰௭. சங்கீதம்.

(கர்த்தருடைய அனுகூலமே எந்தக்காரியத்திற்குந்தேவையாயிருக்கிறதென்பது.)

[படிகளின்மேல் நின்று பாடப்பட்ட சாலொமோனின் பாட்டு.]

௧ கர்த்தர் வீட்டைக்கட்டாராகில் அதைக்கட்டுகிறவர்கள் விருதாவாய் அதிலே உழைக்கிறார்கள், கர்த்தர் பட்டணத்தைக்காக்காராகில், சாமக்காரன் விருதாவாய் விழித்திருக்கிறான்.

௨ நீங்கள் இருட்டோடெழுந்து, நேரப்பட்டவேளையிலே தரித்து வருத்தங்களுள்ள அப்பத்தைச்சாப்பிடுகிறது விருதா, தமக்குப்பிரியமானவனுக்கு நித்திரையை யளிக்கிறார். மத்தே. ௬, ௩௩.

௩ இதோ, பிள்ளைகள் கர்த்தர் அளிக்கிற சுதந்தரமுங் கர்ப்பத்தின்கனி அவரால் வரும் பலனுமாயிருக்கிறது.

௪ வாலவயதுகுமாரர் பெலவானுடைய கையிலுள்ள அம்புகளுக்குச்சரி.

௫ தன் அம்பறாத்தூணியை அவைகளால் நிரப்பினபுருஷன்பாக்கியவான், கூச்சமில்லாமற் சத்துருக்களோடே ஒலிமுகவாசலிலே பேசுவார்கள்.

## ௱௨௰௮. சங்கீதம்.

(தேவபயமுள்ளவர்களின் ஆசீர்வாதம்.)

[படிகளின்மேல் நின்று பாடின பாட்டு.]

௧ கர்த்தருக்குப்பயந்து அவர்வழிகளில் நடக்கிறவனெல்லாம் பாக்கியவான்.

௨ உன்கைகளின் பிரயாசத்தை நீசாப்பிடுகையால் உனக்குப்பாக்கியமும் நன்மையுமிருக்கும்.

௩ உன் பெண்சாதி உன்வீட்டோரங்களிற் கனிதருங் கொடிமுந்திரிகைபோலவும், உன் பிள்ளைகள் உன்பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போலவுமிருப்பார்கள்.

௪ இதோ, கர்த்தருக்குப்பயந்த மனுஷன் இப்படி ஆசீர்வதிக்கப்படுவான்.

௫ கர்த்தர் சீயோனிலிருந்துன்னையாசீர்வதிப்பார், நீ சீவனுள்ள நாளெல்லாம் எருசலேமின் நன்மையைக்காண்பாயாக.

௱௩௪, சங்கீதம். ௩.

௬ நீ உன் பிள்ளைகளின் பிள்ளைகளையும், இஸ்ரவேலின்மேற் சமாதானமிருக்கிறதையுங்காண்பாயாக.

## ௱௨௰௯. சங்கீதம்.

(சத்துருக்கள் சபையைமேற்கொள்ளமாட்டார்களென்பது.)

[படிகளின்மேல் நின்று பாடின பாட்டு.]

௧ என்சிறுவயதுதுவக்கி அநேகம்விசை என்னை நெருக்கப்படுத்தினார்கள்.

௨ என்சிறுவயதுதுவக்கி அநேகம்விசை என்னை நெருக்கப்படுத்தியும் என்னைமேற்கொள்ளாதேபோனார்கள்.

௩ உழுகிறவர்கள் என்முதுகின்மேலுழுது, தங்கள்படைச்சால்களை நீளமாக்கினார்கள்.

௪ கர்த்தரோ நீதிபரன், ஆகாதவர்களின் கயிறுகளையறுத்தாரென்று இஸ்ரவேல் இப்போது சொல்வதாக.

௫ சீயோனைப்பகைக்கிற அனைவரும் வெட்கப்பின்னிட்டுத்திரும்பக்கடவார்கள்.

௬ பிடுங்கப்படுமுன் உலருகிறமேன்கூரைகளின் புல்லைப்போலிருப்பார்களாக.

௭ அதினால் அறுக்கிறவன் தன் கையையும் அரிகளைக் கட்டுகிறவன் தன் மடியையும் நிரப்பான்.

௮ அதின் வழி நடக்கிறவர்கள் கர்த்தருடைய ஆசீர்வாதம் உங்கள்மேலிருப்பதாக, உங்களைக் கர்த்தரின் நாமத்திலே ஆசீர்வதிக்கிறோமென்று சொல்வதுமில்லை.

## ௱௩௰. சங்கீதம்.

(பாவமன்னிப்பைத் தேடும்வகை.)

[படிகளின்மேல் நின்று பாடினது.]

கர்த்தாவே தாழ்வுகளிலிருந்து உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்.

௨ ஆண்டவரே, என் சத்தத்தைக் கேளும், உம்முடைய செவிகள் என் விண்ணப்பங்களின் சத்தத்திற்குக் கவனித்திருக்கக்கடவது.

௩ கர்த்தாவே, அக்கிரமங்களை நோக்கிக் கொண்டிருந்தீரானால், ஆர் நிலைநிற்பான், ஆண்டவரே, ௱௪௩, சங்கீதம். ௨.

௪ ஆனால் உமக்குப் பயப்படும்படிக்கு மன்னிப்பு தேவரீரிடத்திலிருக்கிறது.

௫ கர்த்தருக்குக் காத்திருக்கிறேன், என் ஆத்துமா காத்திருக்கிறது, அவருடைய வார்த்தையை நம்பியிருக்கிறேன்.

௬ எப்போது விடியுமென்று விடியுங்காலத்திற்குக் காத்திருக்கிற சாமக்காரரைப் பார்க்கிலும் என் ஆத்துமா ஆண்டவருக்குக் காத்திருக்கிறது.

௭ இஸ்ரவேல் கர்த்தரை நம்பக்கடவது, ஏனென்றால் கர்த்தரிடத்திலே கிருபையும் அவரிடத்திலே திரளான மீட்புமிருக்கிறது.

௮ அவர் இஸ்ரவேலை அதின் அக்கிரமங்களுக்கெல்லாம் நீங்கலாக்கி மீட்பார்.

## ௱௩௰௧. சங்கீதம்.

(மனத்தாழ்மையேற்றதென்பது.)

[படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.]

கர்த்தாவே, என் இருதயம் உப்பினதாயிருக்கிறதில்லை, என் கண்கள் மேட்டிமையாயிருக்கிறதுமில்லை, நான் பெருங்காரியங்களிலும் எனக்கு மிஞ்சின கருமங்களிலும் நடக்கிறதுமில்லை.

௨ நான் என் ஆத்துமாவைப் பொசுங்கவும் அமரவும் பண்ணாதிருந்தேனாகில் என் ஆத்துமா தன் தாயினிடத்திலே முலைமறக்கப் பண்ணப்பட்டிருக்கிற குழந்தையைப்போல என்னிடத்திலிருக்கும்.

௩ இஸ்ரவேல் இதுமுதற்கொண்டு என்றென்றைக்குங் கர்த்தரை நம்பியிருக்கக்கடவது.

## ௱௩௰௨. சங்கீதம்.

(ஏற்பாட்டின் பெட்டியை வைக்கும் தேவ வாசஸ்தலத்திற்காகத் தாவீதுக்கிருந்த வாஞ்சையையும் அவனுக்கருளிச்செய்யப்பட்ட தப்பவுள்ளவாக்குத்தத்தத்தையுங் காண்பிக்குஞ்சங்கீதம்.)

[படிகளின்மேல் நின்று பாடினது.]

கர்த்தாவே, தாவீதையும் அவனுடைய சகல உபத்திரவங்களையும் நினையும்.

௨ அவன்தான் கர்த்தருக்கு ஆணையிட்டதையும் யாக்கோபுடைய வல்லவருக்கு வாக்குத்தத்தம் பண்ணினதையுங் காணும். ௨. சாமுவேல். ௭, ௨. அப்போஸ். ௭, ௪௬.

௩ தன் வீட்டின் கூடாரத்திலே பிரவேசியாமலும் தன் படுக்கையிலுள்ள கட்டிலின்மேலேறாமலும்,

௪ தன் கண்களுக்கு நித்திரையையுந் தன் இமைகளுக்கு உறக்கத்தையுங் கொடாமலுமிருப்பேனென்று,

௫ கர்த்தருக்கு ஆணையிட்டு, யாக்கோபுடைய வல்லவருக்குப் பொருத்தனைபண்ணினான்.

௬ இதோ, நாம் எப்பிறத்தாவிலே அதின் செய்தியைக் கேட்டு, வயாரின் வெளிகளில் அதைக் கண்டோம்.

௭ அவருடைய வாசஸ்தலங்களுக்குட் பிரவேசித்து அவர் பாதப்படியிலே பணிவோம். ௯௯, சங்கீதம். ௫.

௮ கர்த்தாவே, உம்முடைய தாபரவிடத்திற்குள்ளே தேவரீரும் உம்முடைய வல்லமையின் பெட்டியுமாய் எழுந்தருளும்.

௯ உம்முடைய ஆசாரியர்கள் நீதியையுடுத்திக்கொண்டு உம்முடைய பரிசுத்தவான்கள் கெம்பீரிப்பார்களாக.

௰ நீர் அபிஷேகம் பண்ணுவித்தவனின் முகத்தை உம்முடைய தாசனாகிய தாவீதின் நிமித்தமாகப் புறக்கணியாதிரும்.

௰௧ உன் கெர்ப்பத்தின் கனியை இராசாசனத்தின்மேல் வைப்பேனென்றும், ௨. சாமுவேல் ௭, ௰௨. ௰௬.

௰௨ உன் குமாரர் நம்முடைய உடம்படிக்கையையும் நாம் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்போகிற நம்முடைய சாட்சியையுங் காத்து நடந்தால் அவர்கள் குமாரரும் என்றென்றைக்கும் உன் இராசாசனத்தில் உட்காருவார்களென்றுங் கர்த்தர் தாவீதுக்கு உண்மையாய் ஆணையிட்டார், அதைவிட்டு அவர் பிசகுவதில்லை.

௰௩ ஏனென்றால் கர்த்தர் சீயோனைத் தெரிந்துகொண்டு தமக்கு வாசஸ்தலமாக விரும்பினார்.

௰௪ இது என்றென்றைக்கும் நாம் தங்குமிடம் அங்கே வாசம்பண்ணுவோம், ஏனெனில் அதை விரும்பினோம்.

௰௫ அதின் ஆகாரத்தை நாம் ஆசீர்வதித்து வருவோம். அதின் ஏழைகளை நாம் அப்பத்தாலே திருப்தியாக்கி,

௰௬ அதின் ஆசாரியர்களுக்கு இரட்சிப்பை உடுத்துவோம், அதின் பரிசுத்தவான்கள் மிகவுங் கெம்பீரிப்பார்கள்.

௰௭ அங்கே தாவீதுக்குக் கொம்பை முளைப்பிப்போம், நாம் அபிஷேகம் பண்ணுவித்த தாவீதுக்கு விளக்கை ஆயத்தம் பண்ணினோம். ௮௯ ௩. ௩௬. ௩௬. ௩௭.

௰௮ அவன் சத்துருக்களுக்கு வெட்கத்தை உடுத்துவோம், அவன் மேலேயோவென்றால் அவனுடைய கிரீடம் பூக்குமென்றார்.

## ௱௩௩. சங்கீதம்.

(சகோதரசிநேகத்துக்கேதுவுதல.)
[படிகளின்மேலநின்றுபாடப்பட்ட தாவீதின்பாட்டு.]

இதோ, சகோதரர் ஒருமித்து வாசம்பண்ணுகிறது எத்தனை நன்றும் எத்தனை இன்பமுமானது.

௨ அது ஆரோனுடைய சிரசின்மேலூற்றப்பட்டு அவனுடைய தாடியிலே வடிந்து அவனுடைய அங்கிகளின்மேலிறங்குகிறதுமான நல்லதயிலத்துக்கும்.

௩ எர்மோனின்பனிக்கும் சீயோனின் பருவதங்களின்மேலிறங்கும் பனிக்கும் ஒப்பாயிருக்கிறது, ஏனென்றால் அங்கே கர்த்தர் என்றென்றைக்கும் ஆசீர்வாதத்தையும் சீவனையுங் கட்டளையிடுகிறார்.

## ௱௩௪. சங்கீதம்.

(கர்த்தரின் ஊழியக்காரரைத் தேவதோத்திரிப்புக்கேவினது.)
[படிகளின்மேலநின்றுபாடினது.]

இதோ, இராக்காலங்களிற் கர்த்தருடைய வீட்டிலே நிற்கிற கர்த்தரின் ஊழியக்காரரே எல்லாரும் கர்த்தரைத் தோத்திரியுங்கள்.

௨ உங்கள் கைகளைப் பரிசுத்தஸ்தலத்திற்கு நேராக எடுத்துக் கர்த்தரைத் தோத்திரியுங்கள்.

௩ வானத்தையும் பூமியையுமுண்டாக்கின கர்த்தர் உன்னைச் சீயோனிலிருந்து ஆசீர்வதிக்கக்கடவார்.

## ௱௩௫. சங்கீதம்.

(சருவ்வல்லமையுள்ள கர்த்தரைத் தோத்திரிக்கிறதற்கேவி, விக்கிரகங்களின் இலச்சையைக் காண்பித்தது.)

அல்லேலூயா, கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்கள்.

௨ கர்த்தருடைய வீட்டிலும் நமது பராபரனுடைய வீட்டின் பிராகாரங்களிலும் நிற்கிற கர்த்தரின் ஊழியக்காரரே, துதியுங்கள்.

௩ கர்த்தரைத் துதியுங்கள், ஏனென்றாற் கர்த்தர் நல்லவர், அவருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுங்கள், ஏனென்றால் அது இன்பமானது.

௪ ஏனென்றாற் கர்த்தர் யாக்கோபைத் தமக்கென்றும் இஸ்ரவேலைத் தமக்குச் சொந்தமென்றுந் தெரிந்துகொண்டார்.

௫ ஏனென்றாற் கர்த்தர் பெரியவரென்றும் நம்முடைய ஆண்டவர் எல்லாத் தேவர்களுக்கும் மேலானவரென்றும் நான் அறிவேன்.

௮௬, சங்கீதம். ௮.

௬ வானத்திலும் பூமியிலுஞ் சமுத்திரங்களிலும் எல்லா ஆழங்களிலுங் கர்த்தர் தமக்குச் சித்தமானதையெல்லாஞ் செய்கிறார்.

௱௰௫, சங்கீதம். ௩.

௭ அவர் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி மழையுடன் மின்னல்களையுண்டாக்கிக் காற்றைத் தமது பண்டகசாலைகளிலிருந்து புறப்படப்பண்ணுகிறவர். எரேமியா. ௰, ௰௩.

௮ அவர் எகிப்தின் தலைச்சன்களை மனுஷனைத் துவக்கி மிருகமட்டும் அடித்தவர்.

௯ எகிப்துதேசமே உன் நடுவே அடையாளங்களையும் அற்புதங்களையும் பார்வோன் மேலும் அவனுடைய எல்லா ஊழியக்காரர் மேலும் அனுப்பினார்.

௰ அவர் அநேகஞ்சாதிகளையடித்துப் பெலத்த இராசாக்களைக் கொன்றுபோட்டு,

௰௧ எமோரியரின் இராசாவாகிய சீகோனையும், பாசானின் இராசாவாகிய ஓகையுங் கானானின் சகல இராச்சியங்களையும் அழித்து,

௰௨ அவர்கள் தேசத்தைச் சுதந்தரமாகக் கொடுத்தார், தம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகத் தானே.

௰௩ கர்த்தாவே உம்முடைய நாமம் என்றைக்குங் கர்த்தாவே உம்முடைய கீர்த்தி தலைமுறை தலைமுறைக்குமிருக்கும்.

௱௨, சங்கீதம். ௰௩.

௰௪ ஏனென்றாற் கர்த்தர் தம்முடைய சனத்தின் நியாயத்தை விசாரித்துத் தம்முடைய ஊழியக்காரர்மேற் பரிதாபமாவார்.

௰௫ அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்கள் மனுஷருடைய கைகளின் வேலையாகிய வெள்ளியும் பொன்னுந்தானே. ௱௰௫, சங்கீதம். ௪—௮.

௰௬ அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது அவைகளுக்குக் கண்களிருந்துங் காணாது.

௰௭ அவைகளுக்குக் காதுகளிருந்துங் கேளாது, அவைகள் வாயிலே சுவாசமுமில்லை,

௰௮ அவைகளைப பணணுகிறவர்களுமஅவைகளை நமபுகிற அனைவருமஅவைகளைப போலிருக்கிருர்கள.

௰௯ இஸ்ரவேலவீட்டாரே கர்த்தரைத் தோததிரியுஙகள, ஆரோனின வீட்டாரே கர்த்தரைத்தோததிரியுஙகள.

௨௰ லேவிவீட்டாரே கர்த்தரைத்தோத்திரியுஙகள, கர்த்தருக்குப பயநதவர்களே, கர்த்தரைத்தோததிரியுஙகள.

௨௧ எருசலேமிலவாசமபணணுகிற கர்த்தர்சீயோனிலிருநது தோத்திரிககபபடககடவார். அலலேலூயா.

## ௱௩௬. சங்கீதம்.

(கர்த்தரை அவர் கிருபையினிமித்தமும அதிசய உபகாரஙகளினிமித்தமுநதுதிககஏவுகிறது.)

கர்த்தரைததுதியுஙகள, ஏனெனில அவர் நலலவர், அவர் கிருபையென்றுமுளளது. ௱௬, ௪௰. ௧. ௱௭, ௪௰.௧. ௱௰௮, ௪௰.௧.

௨ தேவாதிதேவனைததுதியுஙகள, ஏனெனில அவர் கிருபையென்றுமுளளது.

௩ கர்த்தாதிக்கர்த்தரைததுதியுஙகள, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௪ ஒருவராயப்பெரிய அதிசயஙகளைசசெயகிறவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது. எ௨, சங்கீதம, ௰௮.

௫ வானஙகளைவிவேகமாய உணடாககினவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௬ பூமியைததணணீர்களுக்குமேலாகவிரிததவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௭ பெரிய வெளிச்சஙகளையுணடாககினவரையே, ஏனெனில் அவர்கிருபையென்றுமுளளது.

௮ பகலில ஆளச்சூரியனைப படைததவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௯ இரவில ஆளசசநதிரனையும நட்சத்திரஙகளையுமபடைததவரையே, ஏனெனில அவர் கிருபையென்றுமுளளது.

௰ எகிப்தியருடைய தலைசசனகளை யடிததவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௰௧ இஸ்ரவேலை அவர்கள நடுவிலிருநது புறப்படப் பணணினவரையே, ஏனெனில அவர் கிருபையென்றுமுளளது.

௰௨ பெலத்தகையினாலும நீட்டினபுயத்தினாலும, அதைசசெயதவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௰௩ நாணற்கடலையிரணடாகப்பகிர்நதவரையே, ஏனெனில அவர் கிருபையென்றுமுளளது.

௰௪ இஸ்ரவேலை அதை நடுவழியாகக்கடககபபணணினவரையே, ஏனெனிலஅவர் கிருபையென்றுமுளளது.

௰௫ பார்வோனையும, அவன இராணுவபபெலனையும நாணற்கடலில விழததளளினவரையே, ஏனெனில அவர் கிருபையென்றுமுளளது.

௰௬ தமமுடைய சனத்தை வனாநதரததில நடததினவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௰௭ பெரிய இராசாககளை யடிததவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௰௮ வலலமையுளள இராசாககளைககொன்றுபோட்டவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௰௯ எமோரியரின இராசாவான சீகோனைககொன்றவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௨௰ பாசானின இராசாவான ஓகையுஙகொன்றவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௨௧ அவர்கள தேசத்தைசசுதநதரமாகக்கொடுததவரையே, ஏனெனிலஅவர் கிருபையென்றுமுளளது.

௨௨ அதைத்தமமுடைய பணிவிடைக்காரனாகிய இஸ்ரவேலுக்குசசுதநதரமாகத்தநதவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௨௩ நமமுடைய தாழமையிலே நமமைநினைததவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௨௪ நமமை நமமுடைய சத்துருககளின கையிலிருநது பறிததுககொணடவரையே, ஏனெனில அவர் கிருபையென்றுமுளளது.

௨௫ எலலா மாமிசத்துக்கும ஆகாரங்கொடுக்கிறவரையே, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

௨௬ வானஙகளுடைய பராபரனையே துதியுஙகள, ஏனெனில அவர்கிருபையென்றுமுளளது.

## ௱௩௭. சங்கீதம்.

(பாபிலோனியர் சிறையிருப்பின துயரப்பாட்டு.)

பாபேலின ஆறுகளணடையிலே நாஙகள உட்கார்நதிருநது, அஙகே சீயோனை நினைததழுது கொணடோம.

௨ அதின நடுவிலிருக்கும அலரிசசெடிகளினமேல எஙகள சுரமணடலஙகளைத் தூககிபபோட்டோம.

௩ ஏனெனில எஙகளுக்கு சீயோனின பாட்டுகளிலே சிலவைப பாடுஙகளென்று

அங்கே எங்களைச் சிறைபிடித்தவர்கள் எங்களைப் பாட்டுவசனங்களையும், எங்களைப் பணைமேடுகளாக்கினவர்கள் சந்தோஷம் பாராட்டவுங் கேட்டார்கள்.

௪ கர்த்தரின் பாட்டை நாங்கள் அன்னியதேசத்திலே பாடுவதெப்படி?

௫ எருசலேமே, நான் உன்னை மறந்தால், என் வலதுகை என்னை மறப்பதாக. எரேமியா. ௫௧, ௫௦.

௬ நான் உன்னை நினையாமலும் நான் எருசலேமை என்னுடைய அதிக மகிழ்ச்சிக்கு மேன்மையாக உயர்த்தாமலும் போனால் என் நாவு என் மேல்வாயோடொட்டிக் கொள்வதாக.

௭ அதைத் திறப்பாக்கிப்போடுங்கள், அதையதின் அஸ்திவாரங்கள் மட்டுந் திறப்பாக்கிப்போடுங்களென்று சொல்லியிருக்கிற ஏதோமின் புத்திரரை எருசலேமின் நாளிலே நினையுங் கர்த்தாவே. ஒபதி. ௰, ௰௧.

௮ பாழாக்கும் பாபேல் குமாரத்தியே, நீ எங்களுக்குச் செய்ததின்படி உன் பதிலுக்குச் செய்பவன் பாக்கியவான். எரேமியா. ௫௰, ௰௫. ௨௯. ௫௧. ௨௪. அறிவிப்பு. ௰௮. ௬.

௯ உன் குழந்தைகளைப் பிடித்துக் கல்லோடே மோதியடிக்கிறவன் பாக்கியவான். ஏசாயா. ௰௩, ௰௬. அறிவி. ௨, ௨௩.

## ௱௩௮. சங்கீதம்.

(தேவதயவைத் தாவீது தோத்திரித்து அதற்குத் தன்னை முடிய வொப்புவித்தது.)

[தாவீதின் சங்கீதம்.]

உம்மை என் முழு இருதயத்தோடுந் துதிப்பேன், தேவர்களுக்கு முன்பாக உம்மைக் கீர்த்தனம் பண்ணுவேன்.

௨ நான் உமது பரிசுத்த தேவாலயத்துக்கு நேராய்ப் பணிந்து, உம்முடைய கிருபையினிமித்தமும், உம்முடைய உண்மையினிமித்தமும் உமது நாமத்தைத் துதிப்பேன், ஏனெனில் உம்முடைய சகல கீர்த்தியைப் பார்க்கிலும், உம்முடைய வார்த்தையை மகிமைப்படுத்தினீர்.

௩ நான் கூப்பிட்ட நாளிலே எனக்கு மறுவுத்தரவருளிச்செய்தீர், என் ஆத்துமாவிலே பெலன் தந்து என்னைத் தயிரியப்படுத்தினீர்.

௪ கர்த்தாவே பூமியின் இராசாக்களெல்லாம் உமது வாக்கின் வார்த்தைகளைக் கேட்கும்போது உம்மைத் துதிப்பார்கள். ௯௮, சங்கீதம். ௧௧. ௭௨, சங்கீ. ௰௧.

௫ கர்த்தாவின் வழிகளைப் பாடுவார்கள், ஏனெனிற் கர்த்தரின் மகிமை பெரியது.

௬ ஏனென்றாற் கர்த்தர் உயர்ந்தவராயிருந்துந் தாழ்மையானவனை நோக்கிப்பார்க்கிறார், மேட்டிமையானவனையோ தூரத்திலிருந்து அறிகிறார். ௱௰௩, சங்கீத. ௫. ௬.

௭ நான் நெருக்கத்தின் நடுவிலே நடந்தால், நீர் என்னை உயிர்ப்பிக்கிறீர், உம்முடைய கையை என் சத்துருக்களின் கோபத்திற்கு விரோதமாக நீட்டுகிறீர், உமது வலதுகரம் என்னை இரட்சிக்கிறது.

௮ கர்த்தர் எனக்காக யாவையுஞ் செய்துமுடிப்பார், கர்த்தாவே உமது கிருபை என்றென்றைக்குமுள்ளது, உம்முடைய கைகளின் கிரியையைக் கைநெகிழீராக.

## ௱௩௯. சங்கீதம்.

(எல்லாவற்றையும் அறிந்து எங்கும் நிறைந்திருக்கிறவருடைய ஆச்சரியமான விசாரிப்பைத் தாவீது தேவபத்தியாய்த் தியானித்தது.)

[இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

கர்த்தாவே, என்னை ஆராய்ந்தறிந்திருக்கிறீர்.

௨ என் உட்காருதலையும் என் எழுந்திருக்குதலையுந் தேவரீர் அறிந்திருக்கிறீர், என் நினைவுகளைத் தூரத்திலிருந்துணருகிறீர். எரேமியா. ௰௭, ௰.

௩ நான் நடந்தாலும் படுத்திருந்தாலும், என்னைச் சூழ்ந்திருக்கிறீர் என் வழிகளெல்லாம் உமக்குப் பழக்கமாயிருக்கிறது.

௪ ஏனென்றால் என் நாவிலே சொற்பிறவாததற்கு முன்னே இதோ கர்த்தாவே, அதையெல்லாம் அறிந்திருக்கிறீர்.

௫ பின்புறத்திலும் முன்புறத்திலும் நீர் என்னை நெருக்கி, என்மேலே உம்முடைய கரத்தை வைக்கிறீர்.

௬ இவ்வறிவு எனக்கு மிஞ்சின ஆச்சரியமும், எனக்கெட்டாத உயரமுமாயிருக்கிறது.

௭ உம்முடைய ஆவிக்கு மறைவாக எங்கே போவேன்? உம்முடைய முகத்திற்கு மறைவாக எங்கே ஓடுவேன்.

௮ நான் வானத்திற்கேறினாலும், அங்கே தேவரீரிருக்கிறீர், நான் பாதாளத்திலே படுக்கைபோட்டாலும், இதோ தேவரீரிருக்கிறீர். ஆமோஸ். ௯, ௨—௪.

௯ நான் விடியற்காலத்தின் செட்டைகளையெடுத்துக் கடலின் மறுகடைசியிலே போய்த் தங்கினாலும்,

௰ அங்கேயும் உம்முடைய கை என்னை நடத்தி, உம்முடைய வலதுகரம் என்னைப் பிடிக்கும்.

௰௧ இருளாகிலும் என்னை மூடிப்போடுமென்றாலும், இராவும் என்னைச் சுற்றி வெளிச்சந்தானே.

௰௨ உமக்கு மறைவாக இருளும் அந்தகாரப்படுத்தாமல் இராக்காலம் பகலைப்போல் வெளிச்சமாயிருக்கும், இருளும் வெளிச்சமுஞ் சரி.

௰௩ ஏனெனில், தேவரீர் என்னுள்ளிந்திரியங்களைக் கைக்கொண்டிருக்கிறீர், என் தாயின் கர்ப்பத்திலே என்னைக் காப்பாற்றினீர்.

௰௪ பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டானேனென்கிற நிமித்தம் உம்மைத் துதிக்கிறேன், உம்முடைய கிரியைகள் அதிசயமானவைகளென்பது என் ஆத்துமாவுக்கு நன்றாய்த் தெரியும். ௱௰௬, சங்கீ. ௭௯.
யோபு. ௰, ௮. ௰௨. பிரச. ௰௧, ௫.

௰௫ நான் ஒளிப்பிடத்திலே யுண்டாக்கப்பட்டுப் பூமியின் தாழ்விடங்களிற் சித்திரவேலையாய் உருப்பெடுத்தபோது, என்னெலும்புகள் உமக்கு மறைவாயிருந்ததில்லை.

௰௬ என் கருவை உம்முடைய கண்கள் கண்டது, இவைகளிலொன்றுமில்லாதபோதே இவைகளனைத்தும் இவைகள் உருவேறப்படும் நாட்களும் உம்முடைய புஸ்தகத்திலெழுதியிருந்தது.

௰௭ ஆ தேவனே, உம்முடைய நினைவுகளெனக்கெத்தனையருமையானவைகள்! அவைகளின் தொகைகள் எத்தனை பெரிது! ௪௰, சங்கீதம். ௫.

௰௮ அவைகளை நான் எண்ணப்போனால் மணலைப்பார்க்கிலும் அதனமாம், நான் விழிக்கையில் இன்னும் உம்மண்டையிலிருக்கிறேன்.

௰௯ பராபரனே, ஆகாதவனைக் கொன்றீரானால் நலமில்லை, இரத்தப்பிரியரான மனுஷரே, நீங்களென்னை விட்டு அகன்று போங்கள்.

௨௰ அவர்கள் துற்குணப்பேச்சாய் உம்மைக்குறித்துப் பேசுகிறார்கள், உம்முடைய சத்துருக்கள் வீணாக உயர்ந்திருக்கிறார்கள்.

௨௧ கர்த்தாவே, உம்மைப்பகைக்கிறவர்களை நான் பகையாமலும், உமக்கு விரோதமாயெழும்புகிறவர்களை யரோசியாமலுமிருப்பேனோ?

௨௨ முழுப்பகையாய் அவர்களைப் பகைக்கிறேன், எனக்குப் பகைஞராளுர்கள்.

௨௩ பராபரனே என்னை ஆராய்ந்து என்னிருதயத்தையறிந்துகொள்ளும், நீர் என்னைச் சோதித்து என் சிந்தனைகளையறிந்துகொண்டு, ௨௬, சங்கீதம். ௨.

௨௪ என்னில் வேதனையுண்டாக்கும் வழியுண்டோவென்றுபார்த்து, என்னை நித்திய வழியிலே நடத்தும்.

## ௱௪௰. சங்கீதம்.

(பொல்லாதவர்களுக்குத் தன்னைத் தப்புவிக்கத் தாவீது பராபரனை வேண்டிக்கொண்டது.)

[இராகத்தலைவனுக் கொப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.]

௧ கர்த்தாவே, பொல்லாத மனுஷனுக்கென்னைத் தப்புவியும் கொடுமைக்காரனுக்கென்னை விலக்கிக்காரும். ௪௨, சங்கீ. ௧.

௨ இருதயத்திலே அவர்கள் பொல்லாப்புகளைச் சிந்தித்து நாள்தோறும் யுத்தங்களுக்கென்று கூட்டங்கூடுகிறார்கள்.

௩ சர்ப்பத்தைப்போலே தங்கள் நாவைக் கூர்மையாக்குகிறார்கள், அவர்கள் உதடுகளின் கீழே விரியன்பாம்புகளின் விஷமிருக்கிறது. சேலா. ௫௫, சங். ௨௨. உரோ. ௩, ௰௩.

௪ கர்த்தாவே என்னை ஆகாதவனுக்கு நீங்கலாகவுங் கொடுமைக்காரனுக்கு விலக்கமாகவுங் காரும், அவர்களென் காலடிகளைத் தள்ளப்பண்ண நினைக்கிறார்கள்.

௫ அகந்தைக்காரர் எனக்குக் கண்ணியையுங் கயிறுகளையும் மறைவாய் வைக்கிறார்கள், வழியோரத்திலே வலையை விரித்து எனக்குச் சுருக்குகளை வைக்கிறார்கள். சேலா.

௬ நான் கர்த்தருடனே தேவரீர் என் பராபரனென்கிறேன், கர்த்தாவே என் விண்ணப்பங்களின் சத்தத்திற்குச் செவிகொடும்.

௭ ஆண்டவராகிய கர்த்தாவே, என் இரட்சிப்பின் பலனே யுத்தநாளிலே என்தலையை மூடிக்கொண்டிருக்கிறீர்.

௮ கர்த்தாவே ஆகாதவனுடைய ஆசைகளைக் கட்டளையிடாமலும், அவன் தன்னை உயர்த்துகிறதற்கேதுவான அவனுடைய வினையத்தை நடந்தேறப்பண்ணாமலுமிருப்பீராக. சேலா.

௯ என்னை வளைந்துகொள்ளுகிறவர்களுடைய தலையின் அவர்கள் உதடுகளின் தீவினை யவர்களை மூடுவதாக.

௰ நெருப்புத்தழல் அவர்கள் மேல் விழுவதாக, அக்கினியிலும் தாங்கள் எழுந்திருக்கமாட்டாத பள்ளங்களிலும் அவர்களை விழப்பண்ணுவாராக. ௰௪, சங்கீதம். ௬.

௰௧ பொல்லாத நாவுள்ளவன் பூமியிலே நிலைப்படுவதில்லை, கொடுமையான மனுஷனைப் பறக்கடிக்கப் பொல்லாப்பு அவனை வேட்டையாடும்.

௰௨ சிறுமையானவனின் வழக்கையும், எளியவர்களின் நியாயத்தையுங் கர்த்தர் விசாரிப்பாரென்றறிவேன்.

௰௩ ஆம் நீதிமான்கள் உம்முடைய நாமத்தைத் துதிப்பார்கள், செம்மையானவர்கள் உமக்குமுன்பாகத் தரித்திருப்பார்கள்.

## ௱௪௧. சங்கீதம்.

(பொல்லாதவர்களின் ஆகாத சாவகாசத்திற்கும் அவர்கள் கொடுமைக்குந் தன்னை விலக்கமாயக் காக்கத் தாவீது பராபரனை வேண்டிக்கொண்டது.)

[தாவீதினசஙகீதம.]

கர்த்தாவே உமமைநோககிககூபபிடு கிறேன. என்னணடைகதத்தீவிரியும, நான உமமைநோககிககூபபிடுகையில, என சத்தத்திற்குச்செவிகொடும.

௨ என விணணபபம உமககுமுனபாக தூபமாகவும, எனகையேற்பு அநதி பலியாகவும ஒபபிடபபடககடவது.

௩ கர்த்தாவே எனவாயக்குக் காவல்வையும, என உதடுகளினவாசலைக் காவற்பணணும. ௩௯, சஙகீதம. ௨.

௪ அககிரமஞசெயகிற மனுஷரோடே ஆகாமியக கிரியைகளைநடபபிககுந துற்கருமததிற்க எனனிருதயததை இணஙக வொடடாதையும, இவர்கள பதார்த்தஙகளிற்சாபபிடாமலிருபபேனாக.

௫ நீதிமான எனனைத்தயவாயக குடடி எனனைக்கடிநதுகொளளக்கடவான, அது தலைககு எணணெய்யைபபோலிருககும, என தலை அதைத்தடுதலபணணுவதிலலை, ஏனெனில இனனம என செபம அவர்களின் கேடுகளுககெதிரானதாமே. லூக். ௰௨, ௬.

௬ அவர்களுடைய நியாயாதிபதிகள கன்மலைச்சாரவுகளிலிருநது தளளுணணப்படுவார்கள, என வார்த்தைகளையோ இனபமானவைகளென றுகேட்பார்களாக.

௭ பூமியிலேயஙகளை ஒருவன வெட்டிப்பிளககுமாபபோல, எஙகள எலுமபுகளபாதாளவாயககுநேராகச் சிதறடிககப்படடது.

௮ ஆதலால ஆணடவராகிய கர்த்தாவே, உமமையென்கணகளநோககுகிறது, உமமைநமபியிருககிறேன, எனனுததுமாவை வெறுமையாகவிடாதையும,

௯ எனக்கவர்கள வைதத கணணியினகிககுககும அககிரமககாரரின சுருககுககுக்கும எனனைவிலககிககாரும. ௱௪௰, சங கீதம. ௬.

௰ நானகடநதுபோகுமதனிலுநதுஙகள தஙகளவலைகளில ஆகாதவர்களதானே ஏகமாயவிழுவதாக.

## ௱௪௨. சங்கீதம்.

(மகாவிக்கினததிலேசெயதவேணடுதல.)

[தாவீதுகெபியிலிருககுமபோதுபணணின விணணபபமாகிய போதககசஙகீதம. ௧. சாமுவேல. ௨௪, ௪.]

கர்த்தரைநோககி எனசத்தத்தினாலே கூபபிடுகிறேன, கர்த்தரைநோககி எனசத்தத்தினாலேகெஞசுகிறேன.

௨ அவருககுமுனபாக எனகெஞசுதலை யூறறி அவருககுமுனபாக எனனெருக்கததையறிககையிடுகிறேன..

௩ எனனாவி எனனில தியஙகுமபோது, தேவரீர் என பாதையை யறிநதிருககிறீர், நான நடககிறவழியிலே எனககுக்கணணி யைமறைவாயவைததார்கள. ௱௪௰, சஙகீதம. ௫.

௪ நீர்வலதுபுறமாகககணணோககி, எனனையறிகிறவன எனககிலலையென றுபாருமம, ஒதுககெனககிலலாதேபோயிறறு, எனனுததுமாவுக்காக விசாரிக்கிறவனிலலை

௫ கர்ததாவே உமமைநோக்கிககூபபிடுகிறேன; தேவரீர் என அடைக்கலமுஞ்சீவனுளளோருடையபூமியிலெனபஙகுமாயிருககிறீரெனகிறேன. ௬௪, சஙகீதம. ௧. ௨.

௬ எனகூககுரலுககுச்செவிகொடும, ஏனெனிலமெததவுநதாழநதேன, எனனைத்தொடருகிறவர்களுககெனனைத்தபபுவியும, ஏனெனிலஎனககுமிகசசபலமாயிருககிறார்கள. ௭, சஙகீதம. ௨.

௭ உமமுடைய நாமததை நானததிககுமபடிகக எனனுததுமாவைக் காவலுககு நீஙகலாககிவிடும, எனக்குத் தயவுபணணினீராலே, நீதிமானகளெனனைச் சூழுவார்கள. ௱௪௩, சஙகீதம. ௯.

## ௱௪௩. சங்கீதம்.

(உபததிரவபபடுகிறவேளையிலே செயத விணணபபம.)

[தாவீதினசஙகீதம.]

கர்ததாவே எனசெபததைக்கேளும, என விணணபபஙகளுககுச் செவிகொடும, நீர் உமமுடைய உணமையினபடியும உமமுடைய நீதியினபடியுமெனக்குமறுவுததரவருளிச்செயயும, ௫, சஙகீதம. ௨. ௨௭, சஙகீதம ௭.

௨ உமதடியானோடே நியாயததீர்ப்புககுட்பிரவேசியாதையும, ஏனெனில் சீவனுளளவொருவனும உமககுமுனபாக நீதிமானலல.

௩ ஏனெனறுறசததுரு எனனுததுமாவைத்தொடர்நது எனபிராணனைததரையோடே நசுககிபபோடடு எனனைச் சதாகாலமாய மரிததுக்கிடககிறவர்களிலிருககிறுபபோலே இருளிலிருககபபணணுகிறான.

௪ ஆகையால எனனாவிஎனனில தியஙகும, எனனிருதயம எனககுள்ளேதிகைககிடும.

௫ பூர்வநாட்களைநினைககிறேன, உமது செயலகளையெலலாந தியானிககிறேன, உமதுகரஙகளின கிரியைகளையோசிககிறேன. ௭௭, சஙகீ. ௬. ௱௨, சஙகீ. ௰௧.

௬ எனகைகளையுமககுநேராய விரிககிறேன, எனனுததுமா வறணடநிலததைபபோலஉமமுடையமேலேதாகமாயிருககிறது. சேலா. ௪௨, சஙகீ. ௩. ௬௩, சஙகீ.௨.

௭ கர்த்தாவே சீக்கிரமாய் என்செபத்தைக் கேளும், என் ஆவி தொய்ந்துபோம், நான் குழியில் இறங்குகிறவர்களுக்கொத்துப் போகாதபடிக்கு உம்முடைய முகத்தை எனக்கு மறைக்காதிரும்.

௮ காலமே உம்முடைய கிருபையை என்னைக் கேட்கப்பண்ணும், ஏனென்றால் உம்மை நம்பியிருக்கிறேன், நான் நடக்கவேண்டிய வழியை எனக்கு அறிவியும், ஏனென்றால் உம்மண்டைக்கு என் ஆத்துமாவை உயர்த்துகிறேன். ௨௫, சங். ௧.

௯ கர்த்தாவே என் சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும், உம்மிடத்தில் ஒதுங்குகிறேன்.

௰ உமக்குப் பிரியமானதைச் செய்ய எனக்குப் படிப்பியும், ஏனென்றால் தேவரீர் என் பராபரன், உம்முடைய நல்ல ஆவி என்னைச் செம்மையான வழியிலே நடத்துவாராக.

௰௧ கர்த்தாவே உம்முடைய நாமத்தினிமித்தம் என்னை உயிர்ப்பியும், நீர் உம்முடைய நீதியின்படி என் ஆத்துமாவை இக்கட்டுக்கு நீங்கலாக்கிவிடும்.

௰௨ உம்முடைய கிருபையின்படி என் சத்துருக்களைச் சங்கரித்து என் ஆத்துமாவை இக்கட்டுப்படுத்துகிற யாவரையும் அழியும், ஏனென்றால் நான் உம்மடியான்.

## ௱௪௪. சங்கீதம்.

(சத்துருக்களின் கைக்குத் தன்னை விலக்கி ஆதரிப்பவராகிய பராபரனைத் தாவீது துதித்துக் கொண்டது.)

[தாவீதின் சங்கீதம்.]

௧ என் கைகளைப் போருக்கும் என் விரல்களை யுத்தத்துக்கும் படிப்பிக்கிற என் கன்மலையாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். ௰௮. சங்கீ. ௩௪. ௩௫.

௨ அவர் என் தயவும் என் கோட்டையும் என் உயர்ந்த அடைக்கலமும் என்னை விடுவிக்கிறவரும் என் கேடகமும் நான் நம்பினவரும் என் சனத்தை எனக்குக் கீழ்ப்படுத்துகிறவருமாமே. ௰௮. சங்கீ. ௨. ௩.

௩ கர்த்தாவே மனுஷனை நீர் அவனை அறிகிறதற்கும் மனுஷபுத்திரனை நீர் அவனை எண்ணுகிறதற்கும் அவன் எம்மாத்திரம்? யோபு. ௭. ௰௭.

௪ மனுஷன் மாயைக்கும் அவனுடைய நாட்கள் கடந்துபோகிற நிழலுக்கும் சாயலாயிருக்கும். யோபு. ௰௪, ௨.

௫ கர்த்தாவே நீர் உம்முடைய வானங்களைத் தாழ்த்தி இறங்கி பர்வதங்களை யவைகள் புகையும்படிக்குத் தொடும்.

௬ மின்னல்களை விட்டு அவர்களைச் சிதறடித்து உம்முடைய அம்புகளை யனுப்பி அவர்களைக் கலங்கடியும்.

௭ உம்முடைய கரத்தை உயரத்திலிருந்து நீட்டி என்னை விடுதலைபண்ணி என்னைத் திரளான தண்ணீர்களுக்கும் அந்நிய புத்திரரின் கைக்குந் தப்புவியும்.

௮ அவர்கள் வாய் மாயையைப் பேசும், அவர்கள் வலதுகை கள்ளக்கையாயிருக்கிறது.

௯ பராபரனே, இராசாக்களுக்குச் செயத்தைத் தந்து உம்முடைய அடியானாகிய தாவீதைப் பொல்லாத பட்டயத்துக்குத் தப்புவிக்கிறவரே.

௰ உம்மை நான் புதுப்பாட்டாய்ப் பாடி உம்மைச் சம்புராலும் பத்து நரம்பு வீணையாலும் கீர்த்தனம்பண்ணுவேன். ௩௩, சங்கீதம். ௨. ௩.

௰௧ என்னை அந்நியபுத்திரரின் கைக்கு விலக்கி என்னைத் தப்பப்பண்ணும், அவர்கள் வாய் மாயையைப் பேசும், அவர்கள் வலதுகை கள்ளக்கையாயிருக்கிறது.

௰௨ எங்கள் குமாரர் தங்கள் இளமையில் பயிராக்கப்பட்ட விருட்சக்கன்றுகளைப்போலேயும் எங்கள் குமாரத்திகள் சித்திரந்தீர்ந்த அரண்மனைக் கோணங்களைப்போலேயுமிருக்கவும்,

௰௩ எங்கள் பண்டகசாலைகள் சகலவகை வஸ்துக்களைத் தரத்தக்கவைகளாய் நிறைந்தவைகளாயிருக்கவும் எங்கள் ஆடுகள் எங்கள் கிராமங்களில் ஆயிரங்களும் பதினாயிரங்களுமாயிருக்கவும்,

௰௪ எங்கள் எருதுகள் பெலத்திருக்கவும் பொல்லாங்கு உட்புகுதலில்லாமலும் வலசைவாங்குதலில்லாமலும் எங்கள் வீதிகளிற் கூக்குரலுண்டாகாமலுமிருக்கவுங் கடவதென்பார்கள்.

௰௫ இப்படிச் சம்பவிக்குஞ் சனம் பாக்கியமுள்ளது, கர்த்தாவைத் தெய்வமாய்க் கொண்டிருக்கிற சனம் பாக்கியமுள்ளதுதானே. ௩௩, சங்கீதம். ௰௨.

## ௱௪௫. சங்கீதம்.

(கர்த்தரின் மகத்துவத்தையுஞ் சர்வதயவு இரக்கம் நீதியையுந் தோத்திரிக்குதல்.)

[தாவீது பாடினது.]

௧ இராசாவாகிய என் பராபரனே உம்மை உயர்த்தி உம்முடைய நாமத்தை எப்போதும் என்றென்றைக்குந் தோத்திரிப்பேன்.

௨ சகல நாளிலும் உம்மைத் தோத்திரித்து எப்போதும் என்றென்றைக்கும் உம்முடைய நாமத்தைத் துதிப்பேன்.

௩ கர்த்தர் பெரியவரும் மிகவும் புகழப்படத்தக்கவருமாயிருக்கிறார், அவர் மகத்துவத்துக்கு ஆராயுதலில்லை.

௪ தலைமுறை தலைமுறையாய் உம்முடைய கிரியைகளின் புகழ்ச்சியைச் சொல்லி உம்முடைய வல்லமைகளை அறிவிப்பார்கள்.

௫ உம்முடைய கனமான மகிமையின் பிரதாபத்தையும், உம்முடைய அதிசயமான கிரியைகளையுங் குறித்துப் பேசுவேன்.

௬ உம்முடைய பயங்கரங்களின் வல்லமையைச் சொல்லுவார்கள், உம்முடைய மகத்துவத்தை விவரிப்பேன்.

௭ உமது தயவின் கீர்த்தியை நினைத்து வெளிப்படுத்தி உமது நீதியைக் கெம்பீரித்துச் சொல்லுவார்கள்.

௮ கர்த்தர் இரக்கமும் மனவுருக்கமும் நீடிய சாந்தமும் மிகுந்த கிருபையுமுள்ளவர். ௱௩, சங்கீதம். ௮.

௯ கர்த்தர் எல்லார்மேலுந் தயவுள்ளவர், அவர் இரக்கங்கள் அவருடைய எல்லாக் கிரியைகளின்மேலுமுள்ளது.

௰ கர்த்தாவே, உம்முடைய எல்லாக் கிரியைகளும் உம்மைத் துதிக்கும், உம்முடைய பரிசுத்தவான்கள் உம்மைத் தோத்திரித்து,

௰௧ தாங்கள் மனுஷபுத்திரருக்கு உம்முடைய வல்லமையையும் உம்முடைய இராச்சியத்தின் கனமான மகிமையையும் அறிவிக்கும்படிக்கு,

௰௨ உமது இராச்சியத்தின் மகிமையைச் சொல்லி உமது வல்லமையை விவரிப்பார்கள்.

௰௩ உம்முடைய இராச்சியம் எல்லாச் சதாகாலங்களின் இராச்சியமாகவும், உம்முடைய ஆளுகை எல்லாத் தலைமுறை தலைமுறையாகவுமிருக்கும். ௱௪௬, சங். ௰.

௰௪ கர்த்தர் விழுகிற யாவரையுந் தாங்கி மடக்கடிக்கப்பட்ட யாவரையுந் தூக்கியெடுக்கிறவர். ௱௪௬, சங்கீதம். ௮.

௰௫ எல்லா ஜீவன்களின் கண்களும் உம்மை நோக்கிக்கொண்டிருக்கிறது, தேவரீர் ஏற்றவேளையிலே அவைகளின் போசனத்தை அவைகளுக்குக் கொடுக்கிறீர். ௱௪, சங். ௨௭.

௰௬ உம்முடைய கையைத் திறந்து ஜீவனுள்ளவெல்லாவற்றையும் இரம்மியமாய்த் திருப்தியடையப்பண்ணுகிறீர், ௱௩௬, சங். ௨௫.

௰௭ கர்த்தர் தமது வழிகளிலெல்லாம் நீதியுள்ளவருந் தமது கிரியைகளிலெல்லாங் கிருபையுள்ளவருமாயிருக்கிறார்.

௰௮ தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும் உண்மையாய்த் தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்குங் கர்த்தர் சமீபமாயிருக்கிறார்.

௰௯ அவர் தமக்குப் பயந்தவர்களுடைய விருப்பத்தின்படி செய்து அவர்கள் கூப்பிடுதலைக் கேட்டு அவர்களை இரட்சிக்கிறார். ௧௪, சங்கீதம். ௪. வாக்கி. ௰, ௨௪.

௨௰ கர்த்தர் தம்மைச் சிநேகிக்கிற யாவரையுங் காப்பாற்றி, ஆகாதவர்களெல்லாரையும் அழிப்பார்.

௨௧ என் வாய் கர்த்தரின் துதியைச் சொல்வதாக, எல்லாமாமிசமும் அவர் பரிசுத்த நாமத்தை எப்போதும் என்றென்றைக்குந் தோத்திரிக்கக்கடவது.

## ௱௪௬. சங்கீதம்.

(மனுஷரையல்ல சருவத்துக்கும் வல்ல தயாபரனையே நம்பவேண்டியது.)

அல்லேலூயா, என் ஆத்துமாவே, கர்த்தரைத் துதி. ௱௩, சங்கீ. ௧. ௱௪, சங்கீ. ௧.

௨ நான் ஜீவனுள்ளமட்டுங் கர்த்தரைத் துதிப்பேன், நானிருக்குமளவும் என் பராபரனைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

௱௪, சங்கீதம். ௩௩.

௩ பிரபுக்களையும் இரட்சிப்பில்லாத மனுஷ புத்திரனையும் நம்பாதிருங்கள். ௱௧௮, சங்கீதம். ௮. ௯. எரே. ௰௭, ௫.

௪ அவனுடைய ஆவி புறப்படும், தன் மண்ணுக்குத் திரும்புகிறான், அந்நாளிலே அவன் யோசனைகள் அழியும்.

௫ யாக்கோபின் பராபரனைத் தன் துணையாகக்கொண்டிருந்து வானத்தையும் பூமியையுஞ் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள எல்லாவற்றையுமுண்டாக்கின தன் பராபரனாகிய கர்த்தரின்மேல் தன் நம்பிக்கையை வைக்கிறவன் பாக்கியவான்.

௪௰, சங்கீ. ௫. ௮௪, சங்கீ. ௰௨.

௬ அவர் என்றென்றைக்கும் உண்மையைக் காக்கிறார்.

௭ ஒடுக்கப்பட்டவர்களுக்கு நியாயஞ் செய்கிறார், பசியாயிருக்கிறவர்களுக்கு ஆகாரங் கொடுக்கிறார், கட்டுண்டவர்களைக் கர்த்தர் விடுதலையாக்குகிறார்.

௮ குருடரின் கண்களைக் கர்த்தர் திறக்கிறார். மடங்கடிக்கப்பட்டவர்களைக் கர்த்தர் தூக்கியெடுக்கிறார், நீதிமான்களைக் கர்த்தர் சிநேகிக்கிறார். ௱௪௫, சங்கீதம். ௰௪.

௯ கர்த்தர் பரதேசிகளைக் காப்பாற்றித் திக்கற்றவனையும் விதவையையும் ஆதரிக்கிறார், ஆனால் ஆகாதவர்களின் வழியைக் கவிழ்க்கிறார்.

௰ கர்த்தர் சதாகாலமாகவும், சீயோனே உன் பராபரன் தலைமுறை தலைமுறையாகவும் இராச்சரிக்கம் பண்ணுகிறார். அல்லேலூயா.

## ௱௪௭. சங்கீதம்.

(பராபரனுடைய உபகாரங்களினிமித்தம் அவரைத் தோத்திரிக்கவேண்டியது.)

துதியே இன்பமும் ஏற்றதுமாயிருக்கிறது. கர்த்தரைத் துதியுங்கள், ஏனெனில் நம்முடைய பராபரனைக் கீர்த்தனம்பண்ணுகிறது நல்லது. ௯௨, சங்கீ. ௧. ௪.

௨ கர்த்தர் எருசலேமைக் கட்டித் துரத்துண்ட இஸ்ரவேலரைக் கூட்டிச் சேர்க்கிறார்.

௩ இருதயம் நொறுங்குண்டவர்களைக் குணமாக்கி அவர்களுடைய நோவுள்ள காயங்களைக் கட்டுகிறார். எசாயா. ௬௧, ௧—௩

௪ நட்சத்திரங்களின் இலக்கத்தை யெண்ணி அவைகளையெல்லாம் பேர்பேராக அழைக்கிறார். ஏசாயா. ௪௰, ௨௬.

௫ நம்முடைய ஆண்டவர் பெரியவரும் மகா பெலமுள்ளவருமாயிருக்கிறார், அவருடைய உணர்வையெண்ணி முடியாது.

௱௩௫, சங்கீ. ௫. ௱௪௫, சங்கீ. ௩.

௬ கர்த்தர் சாந்தகுணமுள்ளவர்களையுயர்த்தி ஆகாதவர்களைத் தரைமட்டுந் தாழ்த்துகிறார். ௱௪௬, சங்கீ. ௮. ௯.

௭ கர்த்தரைத் துதியோடே பாடிக்கொண்டிருந்து நம்முடைய பராபரனைச் சுரமண்டலத்தால் கீர்த்தனம்பண்ணுங்கள்.

௮ அவர் வானத்தை மேகங்களால் மூடி பூமிக்கு மழையை ஆயத்தப்படுத்தி மலைகளிற் புல்லை முளைப்பித்து,

௯ மிருகஜீவனுக்கும் கூப்பிடுகிற காக்காய்க்குஞ்சுகளுக்கும் அவைகளின் ஆகாரத்தைக் கொடுக்கிறார்.

௰ குதிரைப்பெலத்தின்மேல் விருப்பமாயிரார், புருஷனுடைய தொடைகளின்மேற் பிரியமாயிரார்.

௰௧ தமக்குப் பயந்து தம்முடைய கிருபைக்குக் காத்திருக்கிறவர்களின்மேற் கர்த்தர் பிரியமாயிருக்கிறார்,

௰௨ எருசலேமே கர்த்தரைத் தோத்திரி. சீயோனே உன் பராபரனைத் துதி.

௱௪௬, சங்கீதம். ௰.

௰௩ ஏனெனில் உன் வாசல்களின் தாப்பாள்களைக் கெட்டியாக்கி, உன்னிலுள்ள உன் பிள்ளைகளை யாசீர்வதிக்கிறார்.

௰௪ அவர் உன் எல்லைகளைச் சமாதானமுள்ளவைகளாக்கிக் கோதுமையின் புஷ்டியால் உன்னைத் திருத்தியாக்குகிறார்.

௮௧, சங்கீதம். ௰௭.

௰௫ தம்முடைய வார்த்தையைப் பூமியின்மேல் அனுப்புகிறார், அவருடைய சொல் மகா தீவிரமாய் ஓடும். ௱௩, சங்கீதம். ௬.

௰௬ பஞ்சைப்போல உறைந்த மழையைத் தந்து சாம்பலைப்போல உறைந்த பனியைத் தூவுகிறார்.

௰௭ அவர் தம்முடைய கன்மழையைத் துணிக்கைகளாக அனுப்புகிறார், அவருடைய குளிருக்கு முன்பாக நிற்பவனார்.

௰௮ தம்முடைய வார்த்தையை யனுப்பி அவைகளை யுருக்குகிறார், தம்முடைய காற்றை வீசப்பண்ணுகிறார், அப்போது தண்ணீர்களாய் ஓடும்.

௰௯ யாக்கோபுக்குத் தம்முடைய வசனங்களையும் இஸ்ரவேலுக்குத் தம்முடைய பிரமாணங்களையுந் தம்முடைய நியாயங்களையும் அறிவிக்கிறார்.

௨௰ இப்படியவர் எந்தச் சாதிக்குஞ் செய்ததில்லை, அவருடைய நியாயங்களையறியாதே போகிறார்கள். அல்லேலூயா. ௫. மோ. ௪, ௭. ௮.

## ௱௪௮. சங்கீதம்.

(பராபரனைத் துதிக்கச் சருவசிஷ்டியையும் ஏவினது.)

அல்லேலூயா பரமண்டலங்களிலுள்ளவைகளே, கர்த்தரைத் துதியுங்கள், உயரங்களில் அவரைத் துதியுங்கள். ௯௬, ௪௩. ௩௫.

௨ அவருடைய எல்லாத் தூதர்களே அவரைத் துதியுங்கள், அவருடைய எல்லாச் சேனைகளே அவரைத் துதியுங்கள்.

லூக்கா. ௨, ௰௩. ௰௪.

௩ சூரியசந்திரனே அவரைத் துதியுங்கள் வெளிச்சமுள்ள எல்லா நட்சத்திரங்களே அவரைத் துதியுங்கள்,

௪ வானங்களுடைய வானங்களே, ஆகாயமண்டலத்தின்மீதுள்ள தண்ணீர்களே அவரைத் துதியுங்கள்.

௫ அவைகள் கர்த்தரின் நாமத்தைத் துதிக்கக்கடவது, ஏனெனில் அவர் கட்டளையிடச் சிஷ்டிக்கப்பட்டது.

௬ அவர் அவைகளையென்றைக்குமுள்ள சதாகாலங்களாய் உறுதிப்படுத்தி அவைகள் மாறாதபிரமாணத்தை யவைகளுக்குக் கட்டளையிட்டார்.

௭ பூமியிலுள்ளவைகளே கர்த்தரைத் துதியுங்கள், திமிங்கலங்களுஞ் சகல ஆழங்களும்,

௮ அக்கினியுங் கல்மாரியும் உறைந்த மழையும், மூடுபனியும், அவர் சொற்படி செய்யும் பெருங்காற்றும்,

௯ பருவதங்களுஞ், சகல மேடுகளுங், கனிமரங்களுஞ், சகல கேதுருகளும்,

௰ காட்டுச்ஜீவன்களுஞ், சகல மிருகங்களும், ஊர்வனங்களும், இறகுள்ள பறவைகளும்,

௰௧ பூமியின் இராசாக்களும், எல்லாச் சனத்தாங்களும் பிரபுக்களும் பூமியிலுள்ள சகல நியாயாதிபதிகளும்,

௰௨ வாலிபருங் கன்னிகைகளும் முதிர்ந்த வயதுள்ளவர்களும் இளவயதுள்ளவர்களும்,

௰௩ கர்த்தரின் நாமத்தைத் துதிக்கவும், ஏனெனில் அவருடைய நாமமாத்திரமே உயர்ந்தது அவருடைய மகிமை பூமிக்கும் வானத்துக்கும் மேலாயிருக்கிறது.

௰௪ அவர் தம்முடைய எல்லாப் பரிசுத்தருக்குந் தம்மைச் சேர்ந்த சனமாகிய இஸ்ரவேல் புத்திரருக்குமே கொண்டாட்டமாக

த்தமானுடைய சனத்திற்கொரு கொம்பையுயர்த்தினார். அல்லேலூயா. ஆக்கா. ௧, ௯. ௨, அதிகாரம். ௩௰. ௩௧.

## ௱௪௯. சங்கீதம்.

(பராபரன் தம்முடைய சபைக்குச் செய்யுந் தயவின் நிமித்தமுங் கொடுக்கும் மகிமையின் நிமித்தமும் அவரைத் துதிக்க எழுப்பினது.)

அல்லேலூயா, கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள், சன்மார்க்கரின் சபையில் அவருடைய துதி நடப்பதாக. ௯௬, சங்கீதம். ௧. ௯௮, சங்கீதம். ௧.

௨ இஸ்ரவேல் தன்னை யுண்டாக்கினவருக்குள் மகிழ்ந்து, சீயோனின் குமாரர் தங்கள் இராசாவுக்குள் களிகூர்ந்து,

௩ அவருடைய நாமத்தைக் கீதவாத்தியத்தால் துதித்து, அவரைமேளத்தாலுஞ் சுரமண்டலத்தாலுங் கீர்த்தனம் பண்ணக்கடவர்கள்.

௪ ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தின்மேற் பிரியமவைக்கிறார், சிறுமையானவர்களை இரட்சிப்பினாலே சிங்காரிப்பார். ஆக்கா. ௨, ௰௪.

௫ சன்மார்க்கர் மகிமையாய்க் களிகூர்ந்து தங்கள் படுக்கைகளின்மேலே கெம்பீரிப்பார்கள்.

௬ அவர்கள் வாயிற் கர்த்தரை உயர்த்துங் கீர்த்தனங்களும் அவர்கள் கையில் இருபுறமுங் கருக்குள்ள பட்டையமும் இருக்கும்.

௭ சாதிகளிற் பழிவாங்குதலுஞ் சனசதங்களில் தண்டனைகளுஞ் செய்வதற்கும்,
அறிவிப்பு. ௨, ௨௯. ௨௭.

௮ அவர்களுடைய இராசாக்களைச் சங்கிலிகளாலும் அவர்களுடைய மேன்மக்களை இருப்புவிலங்குகளாலுங் கட்டி,

௯ எழுதியிருக்கிற நியாயத்தை யவர்களிற் செய்வதற்குமாகத்தானே, இந்தக்கனம் அவருடைய சன்மார்க்கரானவர்களுக்குமுண்டாம். அல்லேலூயா.

## ௱௫௰. சங்கீதம்.

(மகிமையுள்ள பராபரனைச் சகலவித சங்கீதவாத்தியத்தாலுந் துதிக்க ஏவினது.)

அல்லேலூயா, தேவனை அவருடைய பரிசுத்தஸ்தலத்திலிருக்கிற பராபரனைத் துதியுங்கள், அவருடைய பலம் விளங்குகிற ஆகாயவிரிவைப் பார்த்து அவரைத் துதியுங்கள்.

௨ அவருடைய வல்லமைகளுக்காக அவரைத் துதியுங்கள், அவருடைய திரளான மகத்துவத்திற்காக அவரைத் துதியுங்கள்.

௩ அவரையெக்காளத் தொனியினாலே துதியுங்கள், அவரைத் தம்புராலுஞ் சுரமண்டலத்தாலுந் துதியுங்கள்.

௪ அவரைமேளத்தாலுங் கீதவாத்தியத்தாலுந் துதியுங்கள், அவரை வீணையாலுங் கின்னரத்தாலுந் துதியுங்கள்.

௫ அவரை ஓசையான கைத்தாளங்களாலுந் துதியுங்கள், அவரைக் கெம்பீரமான கைத்தாளங்களாலுந் துதியுங்கள்.

௬ சுவாசமுள்ளதெல்லாங் கர்த்தரைத் துதிப்பதாக. அல்லேலூயா. அறிவி. ௫, ௰௩.

---

ஞானசங்கீதங்கள் முடிந்தது முற்றும்.

# சாலொமோனின் வாக்கியங்கள்.

## ௧. அதிகாரம்.

[ஞானத்தைக் கற்கவும் பாவிகளின் கூட்டத்தை விட்டுவிலகவும் புத்தி சொன்னது.]

ஞானத்தையுங் கல்வியையும் அறிந்து புத்தியின் வார்த்தைகளையுணர்ந்து,

௨ விவேகம், நீதி, * நியாயம், நிதானம் என்றவைகளின் கல்வியையேற்றுக்கொள்வதற்கும், ௨௫, சங்கீதம். ௨௧.

௩ பேதைகளுக்கு விருவையும், வாலிபருக்கு அறிவையும், நினைவையும், உண்டாக்குவதற்கும்,

௪ தாவீதின் குமாரனும் இஸ்ரவேலின் இராசாவுமாகிய சாலொமோன் எழுதின வாக்கியங்கள்.

௫ ஞானமுள்ளவன் கேட்டு உபதேசத்தில் திகப்படுவான்.

௬ உணர்வுள்ளவன் வாக்கியத்தையும் அதின் அருத்தத்தையும் ஞானிகளின் சொற்களையும் அவைகளின் புதைபொருள்களையுமுணரத் திறமையையடைவான்.

௭ கர்த்தருக்குப் பயப்படுதல் அறிவின் துவக்கம், நின்மோடர் ஞானத்தையுங் கல்வியையும் அசட்டைபண்ணுகிறார்கள். ௯, ௰. ௱௰௧, சங்கீதம். ௰.

௮ * என்மகனே, உன்தகப்பனின் புத்தியைநீகேட்டு உன்தாயின் போதகத்தைத் தள்ளாதிரு * ௬, ௨௰.

௯ ஏனெனில் * அவைகள் உன்தலைக்கு நேர்த்தியானமுடியும், உன்கழுத்துக்குச் சரப்பணிகளுமாயிருக்கும். * ௪, ௯.

௰ என்மகனே, * பாவிகள் உனக்கு ஆசைபடுத்தினாலும் நீ சம்மதியாதே. * சங். ௧. ௧.

௰௧ எங்களோடே கூடவா, நாம் இரத்தத்திற்குப் பதிவிருந்து குற்றமற்றவர்களை முகாந்தரமில்லாமல் தாக்கப்போவோம்,

௰௨ அவர்களைப் பாதாளத்தைப்போல உயிரோடேயும் குழியிலிறங்குகிறவர்கள் விழுங்கப்படுகிறதுபோல முழுதாயும் விழுங்குவோமாக.

௰௩ விலையேறப்பெற்ற சகலவித ஆஸ்தியையுங் கண்டுபிடிப்போம், நம்முடையவீடுகளைக் கொள்ளையால் நிரப்புவோம்.

௰௪ எங்களோடே ஏகப்பங்காளியாயிருப்பாய், நமக்கெல்லாம் ஒரேபையிருக்குமென்று அவர்கள்சொன்னால்,

௰௫ என்மகனே, நீ அவர்களோடேவழிநடவாமல் உன்காலை அவர்கள்பாதைக்கு விலக்காயாக.

௰௬ ஏனெனில் * அவர்கள்கால்கள் பொல்லாப்புக்கோடி இரத்தஞ்சிந்துகிறதற்குத் தீவிரிக்கிறது * ஏசாயா. ௫௯, ௭. உரோமர். ௩, ௰௫.

௰௭ எந்தச்சாதியுமான பறவையினங்களுக்குமுன்பாக வோவலைவிருதாவாய் விரிக்கப்படும்.

௰௮ இவர்களோ தங்களுடைய இரத்தத்திற்குப் பதிவிருந்து தங்களுடைய ஆத்துமாவுக்கொளிவுமாயிருக்கிறார்கள்.

௰௯ பொருளாசைவைக்கிற எவனுடையவழிகளும் அப்படியிருக்கும், அது தன்னெசமானனின் ஆத்துமாவைச் சிக்கிக்கொள்ளும்.

உன்னதஞானம் நயமும்பயமுமாய்க்கூறும்வாக்கியங்கள்.

௨௰ * உன்னதஞானம்வெளியிலே கூப்பிட்டு வீதிகளிலே தன்சத்தத்தைக்காட்டி, * ௮, ௧—௯.

௨௧ சந்தடியுள்ள தெருக்களின் முகனையிலும் ஒலிமுகவாசல்களிலுங் கூப்பிட்டுப் பட்டணத்தில் தன் வசனங்களைச்சொல்லியுரைக்கிறதாவது,

௨௨ பேதைகளே நீங்கள் பேதைமையைச் சிநேகிப்பதும் சக்கந்தக்காரர் சக்கந்தத்தைவிரும்புவதும் மதிகேடர் அறிவைப்பகைப்பதும் எந்தமட்டுமிருக்கும்.

௨௩ நம்முடையகடிந்துகொள்ளுதலுக்குத் திரும்புங்கள், இதோநமது ஆவியையுங்களுக்குப்பொழிந்து நம்முடையவார்த்தைகளையுங்களுக்கறிவிப்போம்.

௨௪ ஆனால் நான் கூப்பிட்டும் நீங்கள் கேட்கமாட்டோமென்கிறபடியினாலும் நம் கையைநாம் நீட்டியுங்கவனிக்கிறவனில்லாமற்போய், ஏசாயா. ௬௫, ௧௨. ௬௬, ௪. எரேமியா. ௭, ௰௩.

௨௫ நீங்கள் நம்முடையஆலோசனையையெல்லாந்தள்ளி, நம்முடைய கடிந்துகொள்ளுதலைவிரும்பாமற்போகிறபடியினாலும்,

௨௬ * நாமும் உங்கள் ஆபத்திலே நகைத்து நீங்கள் பயப்படுங்காரியம் வரும்போது ஆடியம்பண்ணுவோம். * சங். ௨, ௪.

௨௭ நீங்கள் பயப்படுங்காரியஞ் சொந்தளிப்பைப்போலேவந்து உங்கள் ஆபத்துப் பெருங்காற்றைப்போலுமுங்களுமீதில் நெருக்கமும் இடுக்கணும் நேரிடும்போதுதானே.

௨௮ * அப்போது அவர்கள் நம்மை நோக்கிக்கூப்பிட்டும் மறுவுத்தரவுகொடாதிருப்போம், காலமே நம்மைத்தேடியும், நம்மைக்காணாதிருப்பார்கள். * ஏசாயா. ௫௯, ௨.

௨௯ அவர்கள் அறிவைப்பகைத்துக் கர்த்தருக்குப் பயப்படுதலைத் தெரிந்துகொள்ளாமற்போனதிற்குப் பதிலாகத்தானே.

௩௰ நம்முடைய ஆலோசனையை விரும்பாமல் நம்முடைய கடிந்துகொள்ளுதலையெல்லாம் அசட்டைபண்ணினார்கள்.

௩௧ ஆகையால் தங்களுடையமார்க்கத்தின்பலனைத்தின்று, தங்கள் ஆலோசனைகளினாலே திருத்தியாவார்கள்.

௩௨ ஏனெனிற் பேதைகளின் மாறுபாடு அவர்களைக்கொன்று, மின்மோட்டரின் நிர்விசாரம் அவர்களையழிக்கும்,

௩௩ நம்முடையசொற்கேட்கிறவனோ பயமறுத்தாபரித்துத் தீங்குடைய திகிலில்லாமற்சுகமாயிருப்பானென்கிறது.

* ஏசாயா. ௧, ௰௯.

## ௨. அதிகாரம்.

[கள்ளவழிகளுக்குத் தப்புவிக்கும் ஞானத்தைத்தேடஏவினது.]

என்மகனே, நீ உன்செவியை ஞானத்தைக்கவனிக்கப்பண்ணி, உன்னிருதயத்தையுணர்வுக்குச்சாய்க்கும்படியாய்,

௨ என்வார்த்தைகளையேற்றுக்கொண்டு, என்கற்பனைகளையுன்னிடத்திலே பத்திரப்படுத்தி,

௩ * புத்தியை வாவென்று கூப்பிட்டு, உணர்வையழைக்க * உன்சத்தத்தையுயர்த்தி, * யாக்கோபு. ௧, ௫.

௪ அதை வெள்ளியைப்போலே தேடி, * அதைப் புதையல்களைப்போலே யாராய்ந்தாயாகில், * மத்தேயு. ௰௩, ௪௪.

௫ அப்போது கர்த்தருக்குப் பயப்படுதலையுணர்ந்து, பராபரனையறியும் உணர்வைக் கண்டடைவாய்.

௬ ஏனெனில் கர்த்தர் ஞானத்தைத்தருகிறார், அவர் வாக்கினால் அறிவும் உணர்வும் வரும்.

௭ அவர் செம்மையானவர்களுக்கென்று மெய்ஞ்ஞானத்தை வைத்து வைத்து, உத்தமமாய் நடக்கிறவர்கள் நியாயத்தின் பாதைகளைக்காக்க, அவர்களுக்குக் கேடகமாயிருந்து,

௮ தம்முடைய பரிசுத்தவான்களுடைய வழியைக்காக்கிறார்.

௯ அப்போது நீதியையும், நியாயத்தையும், நேர்ந்தானங்களையும், சகல நல்வழியையும் உணர்வாய்.

௰ ஞானம் உன்னிருதயத்திலே வந்து, அறிவு உன் ஆத்துமாவுக்கு இன்பமாகும்போது,

௰௧ நல்யோசனையுன்னைப் பத்திரம்பண்ணிப் புத்தியுன்னைத் தற்காக்கும்.

௰௨ உன்னையாகாதவழிக்கும், மாறுபாடானவைகளைப் பேசுகிற மனுஷனுக்கும்,

௰௩ இருளான வழிகளில் நடக்கச்செம்மையான பாதைகளைவிட்டு,

௰௪ தீங்குசெய்ய மகிழ்ந்து, பொல்லா மாறுபாடுகளின்மேல் களிகூருகிறவர்களுக்கும்,

௰௫ கோணலானவழிகளில் நடந்து, தங்கள் பாதைகளில் நேர்வழியைவிலகுகிறவர்களுக்கும் உன்னைத்தப்புவிக்கவும்,

௰௬ தன்வார்த்தைகளால் இச்சகம்பேசுகிறவளும்,

௰௭ தன் இளவயதின் அதிபதியைவிட்டுத் தன் பராபரனுடைய உடன்படிக்கையை மறக்கிறவளுமான * வேறுப்பெண்சாதிக்கும், பிறஸ்திரீக்கும் உன்னைத்தப்புவிக்கவுந்தானே. * ௫, ௨௧. ௨௪.

௰௮ ஏனெனில் அவள் வீடு சாவுக்கும், அவள் பாதைகள் மரித்தவர்களுக்கும் நேராய்ச் சாய்கிறது. * ௭, அதிகாரம். ௯.

௰௯ அவளிடத்தில் பிரவேசிக்கிறயாவருந்திரும்பாமலும், ஜீவனுடைய பாதைகளில் வந்து சேருமலும் போகிறார்கள்.

௨௰ ஆகையாலே நீ நல்லவர்களின் வழியிலே நடந்து, நீதிமான்களின் பாதைகளைப் பிடித்திருப்பாயாக.

௨௧ ஏனென்றால் * செம்மையானவர்கள் பூமியிலே வாசம்பண்ணி, உத்தமர் அதிலே வைக்கப்படுவார்கள். * சங். ௩௭, ௯-௰௧. மத்தேயு. ௫, ௫.

௨௨ ஆகாதவர்களோ பூமியிலிராதபடி வேரறப்புண்டு துரோகிகள் அதிலிராதபடி கருப்பிடுங்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

[அப்புறம் மெய்ஞ்ஞானத்தின் உபதேசத்தையும் பிரயோசனத்தையுஞ்சொன்னது.]

என் மகனே, என் உபதேசத்தை மறவாயாக, என் கற்பனைகளை உன்னிருதயங்காக்கக்கடவது.

௨ ஏனெனில் அவைகள் உனக்கு நீடித்த நாட்களையும் ஜீவனுள்ள வருஷங்களையுஞ் சமாதானத்தையும் பெருகப்பண்ணும்.

௩ கிருபையும் உண்மையும் உன்னைவிடாதிருப்பதாக, நீ அவைகளை உன் கழுத்திலே கட்டி, அவைகளையுன்னிருதயத்தின் பலகையிலெழுதிக்கொள்.

௪ அப்படியே பராபரன் கண்களிலும் மனுஷர்கண்களிலும் இரக்கத்தையும் நற்புத்தியையுங்கண்டடைவாய்.

௫ உன் புத்தியின்மேல் நீ சாராமற் கர்த்தரையே உன்முழு இருதயத்தாலும் நம்பு.

௬ உன்வழிகளிலெல்லாம் அவரையறிந்துகொள், அப்போதவர் உன் பாதைகளைச் செம்மைப்படுத்துவார்.

௭ * உன்பார்வைக்கு நீ ஞானியாயிராதே, கர்த்தருக்குப்பயந்து பொல்லாப்பை விட்டுவிலகு. * ஏசாயா. ௫, ௨௧. ரோமர். ௰௨, ௰௬.

௮ அது உன்தொப்புளுக்கு ஆரோக்கியமும் உன்னெலும்புகளுக்கு ஊனுமாயிருக்கும்.

௯ * உன்ஆஸ்தியாலும் உன்னுடைய எல்லாவரத்தின் முதல்விளைவாலும் கர்த்தரைக் கனம்பண்ணு. * மல்கி. ௩, ௰.

௰ அப்போது உன்களஞ்சியங்கள் பரிபூரணத்தால் நிரப்பப்பட்டு, உன் ஆலைகள் இரசம்புரண்டிருக்கும்.

௰௧ * என் மகனே, நீ கர்த்தருடைய தண்டனையை யற்பமாயெண்ணாதே, அவர் அதட்டுதலைவெறுத்திராதே.
* எபிரேயர். ௰௨, ௫. ௬.

௰௨ ஏனெனில் * தானுசிநேகிக்கிறவனைக் கர்த்தர் கடிந்துகொண்டு, மகன்மேலே தகப்பனைப்போலே பிரியமாயிருக்கிறார்.
* அறிவி. ௩, ௰௯.

௰௩ ஞானத்தைக்கண்டுபிடிக்கிற மனுஷனும் உணர்வைப்பெறுகிற மனுஷனும் பாக்கியவான்.

௰௪ ஏனெனில் * வெள்ளியின் வியாபாரத்தைப்பார்க்க அதின் வியாபாரமும், அபராஞ்சியைப்பார்க்க அதின் வரத்தும் நல்லது.
* ௮, அதிகாரம். ௰. ௰௧.

௰௫ முத்துகளைப்பார்க்க அது விலையேறப்பெற்றது, நீ இச்சிக்கத்தக்கவைகளெல்லாம் அதற்குநிகரல்ல.

௰௬ அதின் வலதுகையில் நீடித்த ஆயுசும், அதின் இடதுகையில் ஐசுவரியமுங் கனமுமுண்டு.

௰௭ அதின் வழிகள் இனிதான வழிகளும், அதின் பாதைகளெல்லாஞ் சமாதானமுந்தானே.

௰௮ அதைப் பிடிக்கிறவர்களுக்கது ஜீவவிருட்சமாம், அதைப் பற்றியிருக்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௰௯ கர்த்தர் ஞானத்தினாலே பூமியை அஸ்திவாரப்படுத்திப் புத்தியினாலே வானங்களைப் படைத்தார்.

௨௰ அவருடைய அறிவினாலே ஆழங்கள் பிரிந்தது, அதனாலே ஆகாயம் பனியைத் தூற்றுகிறது.

௨௧ என் மகனே இவைகள் உன் கண்களை விட்டுப் பிரியவேண்டாம், மெய்ஞ்ஞானத்தையும் நல்நினைவையுங் கா.

௨௨ அப்போது அவைகள் உன்னுத்துமாவுக்குச் சீவனும் உன் கழுத்துக்கு அந்தமுமாம்.

௨௩ அப்போது * உன் கால் இடறுமற் சுகமாய் உன் வழியில் நடப்பாய். * சங். ௯௧, ௰௧. ௰௨.

௨௪ நீ படுத்துக்கொண்டால் அருக்களியாமலிருப்பாய், உன் நித்திரை இன்பமாயிருக்கும். * ௫. மோசே. ௨௮, ௬. சங். ௩, ௬. ௪, ௯.

௨௫ அசுப்பான திகிலும் ஆகாதவர்களின் பாழ்க்கடிப்பும் வரும்போது அதற்குப் பயப்படாயாக.

௨௬ ஏனென்றால் கர்த்தர் உன் நம்பிக்கையாயிருந்து உன் கால் பிடிபடாதபடிக்குக் காப்பார்.

௨௭ நன்மை செய்ய உன் கையில் அவகாசமிருக்கையில் அதற்குத் தக்கவர்களுக்கு அதை வழங்காதிராதே.

௨௮ உன்கிட்டுமும் உனக்குக் கொடுத்தவனுடனே நீ போய்த் திரும்பவா நாளைக்குத் தருகிறேனென்காதே.

௨௯ உனக்குக் கொடுத்தவன்மேற் பொல்லாப்பைப் பிணைக்காதே, உன்னோடே நம்பிக்கையாய்க் குடியிருக்கிறானே.

௩௰ ஒரு மனுஷனுக்குத் தீங்கு செய்யாதிருக்கக்கொள்ள அவனோடே வீணாய் வழக்காடாதே.

௩௧ கொடுமையான மனுஷன்மேற் பொறாமையாயிராதே, அவனுடைய வழிகளில் ஒன்றையுந் தெரிந்துகொள்ளாதே.

௩௨ ஏனென்றால் மார்க்கந் தப்பினவன் கர்த்தருக்கருவருப்பானவன், ஆனால் செம்மையானவர்களோடே * அவருடைய இரகசியமிருக்கிறது. * சங். ௨௫, ௰௪.

௩௩ ஆகாதவனுடைய வீட்டில் கர்த்தருடைய சாபமிருக்கும், ஆனால் நீதிமான்களின் வாசஸ்தலத்தை ஆசீர்வதிப்பார்.

௩௪ சக்கந்தக்காரரை அவர் சக்கந்தம் பண்ணிச் சிறுமையானவர்களுக்கோ கிருபையையளிப்பார்.

௩௫ ஞானமுள்ளவர்கள் கனத்தைச் சுதந்தரிப்பார்கள், மதிகேடரோ கனவீனத்தையடைவார்கள்.

## ௪. அதிகாரம்.

[ஞானத்தையே கற்று ஆகாதவர்களின் வழியைவிலகித் தன்னைத்தான் காக்கப்புத்தி சொன்னது.]

பிள்ளைகளே நீங்கள் உணர்வையறிவதற்குத் தகப்பனின் புத்தியைக் கேட்டுக்கவனியுங்கள்.

௨ ஏனென்றால் நற்போதகத்தையுங்களுக்குக் கொடுக்கிறேன், என்னுபதேசத்தை விடாதேயுங்கள்.

௩ ஏனென்றால் நான் என் தகப்பனுக்கு இளம்பிராயமும் என் தாய்க்கு முன்பாக ஒரே அருமையுமான பிள்ளையாயிருக்கக்கொள்ள,

௪ அவரிப்படி என்னையுபதேசித்து என்கதைச் சொன்னார், என் வார்த்தைகளையுன்னிருதயம் பிடித்திருப்பதாக, என் கற்பனைகளைக் கைக்கொள், அப்போது பிழைப்பாய்.

௫ ஞானத்தையே சம்பாதி, உணர்வையே சம்பாதி, என் வாயின் சொற்களை மறவாமலும் விட்டுவிலகாமலுமிரு.

௬ அதைவிடாயாக, அப்போதது உன்னைத் தற்காக்கும், அதைச் சிநேகிப்பாயாக, அப்போதது உன்னைக் காப்பாற்றும்.

௭ * நீ ஞானத்தைச் சம்பாதிப்பதும் உன்னுடைய எல்லா ஆஸ்தியாலும் உணர்வைச் சம்பாதித்துக்கொள்வதும் ஞானத்தின் துவக்கம். * ௨௩, ௨௩.

௮ அதையுயர்த்திவை, அப்போதது உன்னையுயர்த்தும், நீ அதையணைத்துக்கொண்டால் அது உன்னைக் கனமுள்ளவனாக்கும்.

௯ * அது உன் தலைக்கு நேர்த்தியான முடியைக் கொடுக்கும், அது அலங்காரக் கிரீடத்தையுனக்களிக்கும். * ௧, ௯.

௰ என் மகனே என் வார்த்தைகளைக் கேட்டேற்றுக்கொள், அப்போதுன் ஆயுசின் வருஷங்கள் அதிகமாம்.

௰௧ ஞானத்தின் வழியிலே உனக்குப் போதிக்கிறேன், செம்மையான பாதைகளிலே உன்னை நடத்துகிறேன்.

௰௨ நீ அவைகளில் நடக்கிறபோதுன் நடைகளுக்கு இடுக்கணுண்டாகுவதில்லை, நீ அவைகளில் ஓடினால் நீ இடறுவதுமில்லை.

௰௩ கல்வியைப பிடித்திரு, அதை விடாதே, அதைககா, ஏனெனில அதுவேஉனக குசீவன.

௰௪ நீ ஆகாதவர்களின பாதையிற் பிரவேசியாமலுமபொலலாதவர்களுடையவழியிலே நடவாமலுமிருபபாயாக.

௰௫ அதைவெறு, அதிலே போகாதை, அதைவிட்டுவிலக்கிக்கடந்துபோ.

௰௬ ஏனெனில அவர்கள பொலலாபபுசசெய்தாலொழிய அவர்களுககு நித்திரைவராது, அவர்களிடறலுணடாககாதிருந்தால அவர்களதூக்கங கலைந்துபோம்.

௰௭ ஏனெனில ஆகாமியத்தின அப்பததைபபொசித்துக கொடுமைகளின இரசத்தைக்குடிக்கிறார்கள.

௰௮ நீதிமானகளின பாதையோ வெளிறிப்பட்டப்பகல் மட்டும அதிகமதிகமாய ஒளிவாற்பிரகாசமுள்ள வெளிசசத்தைபபோலிருக்கிறது.

௰௯ ஆகாதவர்களின வழி இருளைபபோலேயிருக்கிறது, எதிலே இடறுவார்களென றறியார்கள.

௨௰ என மகனே என வார்த்தைகளைககவனி, என வசனஙகளுககுன செவியைச்சாய்.

௨௰௧ அவைகள உன கண்களைவிட்டுபபிரியாதிருபபதாக, அவைகளையுன இருதயத்துக்குளளேகாத்துககொள.

௨௰௨ ஏனெனில அவைகளைககணடுபிடிககிறவர்களுக்கு அவைகளசீவனும அவர்கள சரீரத்துக்கெலலாமஅவிழ்தமுமாயிருக்கிறது.

௨௰௩ எலலாககாவலைபபார்க்கிலும உன இருதயத்தைககா, ஏனெனில அதிலிருந்து சீவன்பரவும.

௨௰௪ வாயின்தாறுமாறுகளையுனனைவிட்டகற்றி உதடுகளினவழுவுதலையுனககுத் தூரப்படுத்து.

௨௰௫ உன கண்கள நேராய நோககி உன இமைகள உனககுமுனனே செமமையாயிருபபதாக.

௨௰௬ உனகால்களின நடையைச்சீர்தூககிப்பார், உன வழிகளெலலாம நிலவரமாயிருபபதாக.

௨௰௭ வலதுபுறமாகிலுமிடதுபுறமாகிலுஞ்சாயாயாக. உனகாலைபபொலலாபபுக்குவிலக்கு. * ௫. மோசே. ரு, ௩௨.

## ரு. அதிகாரம்.

[விபசாரிககுவிலககமுஞ சமுசாரிககுபபத்தியுமாயிருகக எச்சரித்தது.]

என மகனே நல் நினைவுகளை நீ வைத்திருககிறதற்கும உன உதடுகள அறிவைக காக்கிறதற்குமாக,

௨ என ஞானத்தைககவனித்து எனபுத்திககுஉன்செவியைச்சாய்.

௩ ஏனெனிற் பரஸ்திரீயின உதடுகளதேன்கூடொழுகலாகவும அவளவாய் எண்ணெயயைபபார்ககிலும் மிருதுவாகவுமிருககிறது.

௪ ஆனால அவளகடைசிககாரியமளட்டிமரத்தைப்போலே கசப்பும இருபுறமுங்கருக்குள்ள பட்டயமபோலக் கூர்மையுமாயிருக்கிறது.

௫ அவளகாலடிகள சாவுக்கிறங்கி அவளகாலடிகள நரகத்தைப் பற்றிப்போம். * உ, அதி. ௰௮.

௬ நீ சீவனின பாதையைச சிந்தியாதபடிககவள நடைகள மாறிமாறி உனககுத்தெரியாதவைகளாயிருக்கிறது.

௭ இப்போதும பிளளைகளே எனககுச்செவிகொடுத்து என வாயின வசனஙகளைவிட்டுப்பிரியாதிருஙகள.

௮ நீயுனமுகத்தைவேறுறுமையானவர்களுக்கும உன ஆயுவின வருஷஙகளைக்கொடூரருக்கும கொடாதபடிக்கும,

௯ அந்நியர் உனனுஸ்தியால திருத்தியாக உன பிரயாசஙகள பிறத்தியானுடைய வீட்டுக்குள்விழாதபடிக்கும,

௰ நீயுனபிற்காலத்தில உன் மாமிசமும உனசரீரமும் உருவழிந்திருக்கும்போது,

௰௧ நான என போதகரின சொற்கேளாமலும என்னை யுபதேசித்தவர்களுககென செவியைச்சாயக்காமலும,

௰௨ எத்தனையாய புத்தியைபபகைத்தேன, எத்தனையாய என் சிந்தையஙகடிந்துகொளளுதலைபசட்டைபண்ணினேனென்றும,

௰௩ சபைக்குளளேயுஞ் சஙகத்துககுளளேயும நான கொஞசங்குறைய எலலாப பொலலாப்புக்குமுளளானேனென்றும அலறுதபடிக்கும,

௰௪ உனவழியை யவளுககுத்தூரப்படுத்து, அவளவீட்டினவாசலைக்கிட்டாதிரு.

௰௫ உன்னுடையகிணற்றின தணணீரையும உனனுடைய துரவிலிருந்து சுரக்கிற சலங்களையுங்குடி.

௰௬ உனனுடைய ஊற்றுக்களவெளியிலும உனவாய்க்காலகள வீதிகளிலுமபாயவதாக.

௰௭ அவைகள உனனோடேகூட அனனியருடையதுமாயிராமல, உனனுடைய தாயமாத்திரமிருபபதாக.

௰௮ உனனுடைய ஊற்றுச்சண ஆசீர்வதிககபபட்டிருக்கக்கடவது, உனனுடைய இளவயதின பெணசாதியால மகிழ்ந்துகொள.

௰௯ அவளேநேசிக்கப்பட்டத்தக்கபெணமானும அழகானகாட்டாடுமானவள, அவளுடையநேசமஉனனைசசகலகாலமுமஆறுவதாக, அவளுடைய சிநேகத்தால எப்போதுமமயஙகியிருபபாயாக.

௨௰ என் மகனே, நீ பரஸ்திரியின்மேல் மயங்கித்திரிந்து வேறுபெண்ணின் மடியைத் தழுவியிருப்பானேன்.

௨௧ ஏனெனில் மனுஷனுடைய வழிகள் கர்த்தருடைய கண்களுக்கு முன்பாக இருக்கிறது, அவன் பாதைகளையெல்லாம் அவர் சீர்தூக்கிப் பார்க்கிறார்.

௨௨ * ஆகாதவனை அவனுடைய அக்கிரமங்களே பிடிக்கும், தன் பாவத்தின் கண்ணிகளில் சிக்கப்படுவான். * ௨, அதி. ௮.

௨௩ அவன் புத்திகேளாததினாலே மடிந்து தன் திரளான பயித்தியத்தினாலே வழிபிசகிப்போவான்.

## ௬. அதிகாரம்.

[பிணைப்பட்டவனுக்கும் சோம்பேறிக்கும் புத்திசொன்னதுந் தீயனுடைய அவலட்சணங்களையும் விபசாரனுடைய கேட்டையுங் காண்பித்தது.]

என் மகனே, * நீ உன் சிநேகிதனுக்காக பிணைபட்டு அன்னியனுக்கு உன் கையைக் கொடுத்து, * ௰௧, அதி. ௰௫. ௰௭. ௰௮.

௨ உன் வாயின் சொற்களாற் சிக்குண்டு, உன் வாயின் சொற்களாற் பிடிபட்டிருந்தால்

௩ இப்பொழுதொன்றுசெய் என் மகனே, உன்னைத் தப்புவித்துக்கொள், ஏனெனில் உன் சிநேகிதனுடைய கையிலே அகப்பட்டாய், போய் உன் சிநேகிதனை வருந்தித் துருசுபண்ணு.

௪ உன் கண்களுக்கு நித்திரையையும் உன் இமைகளுக்கு உறக்கத்தையுங் கொடாதே.

௫ வெளிமானுங் குருவியும் வேட்டைக்காரர் கைக்குத் தப்புவித்துக்கொள்ளும்போல உன்னைத் தப்புவித்துக்கொள்.

௬ சோம்பேறியே எறும்பண்டைக்குப்போய் அதின் வழிகளைப்பார்த்து ஞானமடை.

௭ அதற்குப் பிரபுந் தலைவனும் அதிகாரியுமில்லாதிருந்தாலும்,

௮ * உஷ்ணகாலத்திலே தன்னுடைய ஆகாரத்தைச் சம்பாதித்து அறுப்பிலே தனக்குப் போசனத்தைச் சேர்க்கும். * ௩௰, அதிகா. ௨௫.

௯ சோம்பேறியே, எந்தமட்டுஞ் சயனிப்பாய், எப்பொழுது நித்திரையைவிட்டெழுந்திருப்பாய்.

௰ * இன்னங் கொஞ்சந் தூக்கங்களும் இன்னங் கொஞ்சம் உறக்கங்களும் சயனிப்புக்கின்னங் கொஞ்சங் கைக்கட்டிக்கொள்ளுதலுமுண்டாகும், * ௨௰, அதிகாரம். ௰௩. ௨௪, அதிகாரம். ௩௩. ௩௪.

௰௧ அப்பொழுது உன் தரித்திரம் வழிப்போக்கனைப்போலவும் உன் குறைச்சல் ஆயுதமணிந்தவனைப்போலவும் வரும்.

௰௨ பேலியாளின் மனுஷனும் அக்கிரமக்காரனுமானவன் வாய்ப்புரட்டுள்ளவனாய் நடந்து,

௰௩ தன் கண்களாலே சைகைகாட்டி தன் கால்களாற் பேசித் தன் விரல்களாற் போதிக்கிறான்.

௰௪ அவனிருதயத்திலே திரியாவரங்களிருக்கிறது, எந்நேரத்திலும் பொல்லாப்பைப் பிணைத்து வழக்குகளை யுண்டுபண்ணுகிறான்.

௰௫ ஆகையால் அசுப்பாய் அவன் ஆபத்துவரும், சடுதியிலே குணமாகுதலுக்கிடமில்லாமல் நொறுக்கப்படுவான்.

௰௬ ஆறு காரியங்களைக் கர்த்தர் பகைக்கிறார், ஏழும் அவருடைய ஆத்துமாவுக்கருவருப்பானவைகள், அதாவது,

௰௭ * மேட்டிமையான கண்களும் பொய்நாக்கும் குற்றமில்லா இரத்தத்தைச் சிந்துங் கைகளும். * ௨௧, அதி. ௪.

௰௮ அக்கிரமயோசனைகளைப் பிணைக்கும் இருதயமும் பொல்லாப்பைச் செய்யத் தீவிரமாய் ஓடுங்கால்களும்,

௰௯ பொய்களையூதுகிற கள்ளச்சாட்சியும் சகோதரருக்குள்ளே வழக்குகளை யுண்டுபண்ணுகிறவனுந்தானே.

௨௰ * என் மகனே, நீ உன் தகப்பனின் கற்பனையைக் காத்துக்கொண்டு உன் தாயின் போதகத்தைத் தள்ளாதிரு. * ௧, அதி. ௮.

௨௧ அவைகளை யெப்பொழுதும் உன்னிருதயத்தின்மேற் கட்டு, அவைகளை உன் கழுத்திலே பூணு. ௩, அதி. ௩.

௨௨ * நீ நடந்துகொண்டிருக்கையில் அது உன்னை நடத்தும், நீ படுத்துக்கொண்டிருக்கையில் அது உன்னைக் காப்பாற்றும், நீ விழிக்கையில் அது உன்னோடே சம்பாஷிக்கும். ௩, அதி. ௨௩. ௨௪.

௨௩ ஏனெனில் * உன்னைப் பொல்லாத ஸ்திரிக்கும் வேற்றுநாவின் இச்சகங்களுக்கும் விலக்கிக்காப்பதற்கு, * ௨, அதி. ௰௬. ௰௭.

௨௪ கற்பனையே விளக்கும் போதகமே வெளிச்சமும் புத்திசொல்லுங் கடிந்துகொள்ளுதல்களே ஜீவவழியுமாம்.

௨௫ உன்னிருதயத்திலே அவள் அழகை இச்சியாதே, அவள் தன் கண்ணிமைகளால் உன்னைப் பிடிக்கவொட்டாதே.

௨௬ ஏனெனில் வேசி ஸ்திரியின் முகாந்திரத்தினாலே ஒரு அப்பத்துண்டைக்கையேந்துகிறதற்கேதுவரும் விபசாரி விலையேறப்பெற்ற ஆத்துமாவை வேட்டையாடுகிறாள்.

௨௭ யாதொருவன் தன் வஸ்திரங்கள் வேகாமல் தன் மடியிலே நெருப்பை வைத்துக் கொள்ளுவானோ?

௨௮ யாதொருவன் தன் கால்கள் சுடாமலே தழலின்மேல் நடப்பானோ?

௨௯ தனக்கடுத்தவனுடைய பெண்சாதியினிடத்தில் பிரவேசிக்கிறவன் அப்படியிருக்கிறான், அவளைத் தொடுகிற ஒருவனும் ஆக்கினைக்குத் தப்பான்.

௩௰ திருடன் தன்னுடைய ஆத்துமாவை நிரப்பப் பசியினாலே திருடினதினிமித்தம் அவனை நிந்திக்க மாட்டார்கள்.

௩௧ அவன் கண்டுபிடிக்கப்பட்டால் ஏழத்தனையாகத் திருப்பிக் கொடுக்கவேண்டும், தன் வீட்டின் ஆஸ்திகளையெல்லாம் கொடுப்பான்.

௩௨ ஒரு ஸ்திரீயோடே விபசாரம்பண்ணுகிறவன் மதிகெட்டவன், அப்படிச் செய்கிறவன் தன்னுடைய ஆத்துமாவைக் கெடுக்கிறவன்.

௩௩ வாதையையும் இலச்சையையும் அடைகிறான், அவன் நிந்தை ஒழிந்துபோகாது.

௩௪ ஏனென்றால் புருஷனுடைய மூர்க்கம் எரிச்சலாயிருக்கிறது, அவன் குரோதத்தைத் தீர்க்கும் நாளிலே தப்பவிடான்.

௩௫ எந்த மீட்பையும் பாரான், நீ காணிக்கையைப் பெருகப்பண்ணினாலும் சம்மதியான்.

## ௭. அதிகாரம்.

[விபசாரியின் தந்திரங்களில் அகப்படுகிற பைத்தியக்காரனின் அழிவைக் காண்பித்தது.]

என் மகனே, நீ என் வார்த்தைகளைக் காத்து என் கற்பனைகளை உன்னிடத்திலே பத்திரப்படுத்து.

௨ என் கற்பனைகளையும் என் போதகத்தையும் உன் கண்களின் கறுப்புவிழியைப்போலக் காத்து, அப்போது பிழைப்பாய்.

௩ * அவைகளை உன் விரல்களிற்கட்டு, அவைகளை உன் இருதயத்தின் பலகையிலே எழுது. * ௬, அதிகாரம். ௨௧.

௪ * உன்னை இச்சக்கவார்த்தைகளுள்ள அந்நியளாயிருக்கிற பிறஸ்திரீக்கு விலக்கிக் காப்பதற்காக, * ௨, அதிகா. ௰௬. ௰௬. ௬, அதிகாரம் ௨௪.

௫ ஞானத்துடனே நீ என் சகோதரியென்று சொல்லி உணர்வை இனத்தானென்றழை.

௬ ஏனென்றால் நான் என் வீட்டின் பலகணியிலே நின்று என் கிராதிகளின் வழியாய்,

௭ நான் பேதைகளைப் பார்த்துக்கொண்டு குமாரருக்குள்ளே ஒரு வாலிபனைக் கவனித்தேன்.

௮ அவன் மாலைமயங்குகிற அஸ்தமான நேரத்திலே இராவின் அந்தகாரத்திலும் இருட்டிலும்,

௯ அவளிருக்கும் சந்துக்கடுத்த வீதியே போய் அவள் வீட்டு வழியாய் உலாவினான்.

௰ அப்போது இதோ, வேசியின் ஆடையாபரணந்தரித்த மனத்தந்திரமான ஒரு ஸ்திரீ அவனைச் சந்தித்தாள்.

௰௧ அவள் அமளிக்காரியும் அடங்காதவளுமானவள், அவள் கால்கள் அவளுடைய வீட்டிலே தரிக்கிறதில்லை.

௰௨ இப்போது வெளியிலும் சற்றுநேரத்திலே வீதிகளிலுமிருந்து எல்லாச் சந்திலும் பதிவிருக்கிறாள்.

௰௩ அவளவனைப் பிடித்து இவனை முத்தமிட்டு, முகக்கட்டாய் இவனோடே சொன்னதாவது,

௰௪ தோத்திரபலிகள் என்மேலிருந்தது, இன்று என் பொருத்தனைகளைச் செலுத்தினேன்.

௰௫ ஆனபடியினாலே உன்னைச் சந்திக்கப் புறப்பட்டு உன் முகத்தைக் கருத்தாய்த் தேடினேன், உன்னைக் கண்டுபிடித்தேன்.

௰௬ என் கட்டிலைச் சமுக்காளங்களாலும் எகிப்துதேசத்துச் சித்திரத்தீர்ந்த புடவைகளாலும் சிங்காரித்தேன்.

௰௭ என் படுக்கையை வெள்ளைப்போளத்தாலும் சந்தனத்தாலும் கறுவாப்பட்டையாலும் வாசனைகட்டினேன்.

௰௮ விடியற்காலமட்டும் சம்போகமாயிருப்போம், சிநேகங்களாற் பூரிப்பாவோம்,

௰௯ ஏனென்றால் புருஷன் வீட்டிலேயில்லை, தூரப்பயணம்போனான்.

௨௰ பண்முடிப்பைத் தன் கையிலே கொண்டுபோனான், திட்டம்பண்ணின நாளிலே வீட்டுக்கு வருவானென்று சொல்லி,

௨௧ தன் திரளான போதனையாலே அவனை இணங்கக்கொண்டு தன் உதடுகளின் இச்சகத்தாலே அவனை ஏவினாள்.

௨௨ உடனே அவன் ஒருமாடு அடிக்கப்படுந்தலத்திற்கும் ஒரு பைத்தியக்காரன் விலங்கு பூணப்பட்டவனாய்த் தண்டனைக்குப் போகிறதுபோலவும்,

௨௩ ஒரு குருவி தன் சீவனுக்கு வருகிறதென்றறியாமற் கண்ணிக்குத் தீவிரிக்கிறதுபோலவும் அவள் புறகாலே அம்பு அவன் ஈரலைப் பிளக்குமட்டும் போனான்.

௨௪ இப்போதும் பிள்ளைகளே, என்னைக் கேட்டு என் வாயின் வார்த்தைகளைக் கவனியுங்கள்.

௨௫ உன் இருதயம் அவள் வழிகளுக்குச் சாயவேண்டாம், அவள் பாதைகளில் மோசம்போகாயாக.

௨௬ ஏனென்றால் அநேகரைக் காயப்படுத்தி விழப்பண்ணினாள், அவளாற் கொல்லப்பட்டயாவருந்திரளான கூட்டம்.

௨௭ * அவள் வீடு மரண அறைகளுக்கிறங்குகிற நரகவழிகளாயிருக்கிறது.

* அதிகாரம். ௰௮, ௰௬.

## ௮. அதிகாரம்.

[உன்னதஞானம் மனுப்புத்திரருக்குப் பண்ணுகிற பிரசங்கம்.]

ஞானங்கூப்பிடாதோ? உணர்வு தன் சத்தத்தைக் காட்டாதோ? * ௧, அதிகாரம். ௨௰, ௨௧.

௨ அது வழிகளருகான மேடைகளின் முகனையிலும் நாற்சந்திகளிலும் நிற்கிறது.

௩ அது ஊர்வாசல்களின் ஓரத்திலும் பட்டண ஒலிமுகத்திலும் உட்பிரவேசிக்கிற வாசல்நடைகளிலுஞ் சத்தமிட்டுச் சொல்லுகிறதாவது,

௪ மனுஷரே உங்களை நோக்கிக் கூப்பிடுகிறேன், என் சத்தம் மனுப்புத்திரருக்குத் தொனிக்கும்.

௫ பேதைகளே விஞவிலேயுணர்வாகுங்கள், மூடரே மனதிலேயுணர்வாகுங்கள்.

௬ கேளுங்கள் ஏனென்றால் மேன்பாடான காரியங்களைப் பேசுவேன் நிதானங்களைப் பகிர என்னுதடுகளைத் திறப்பேன்.

௭ ஏனென்றால் என்வாய் சத்தியத்தை விளம்பும், ஆகாமியம் என்னுதடுகளுக்கருவருப்பானது.

௮ என்வாக்கு வசனங்களெல்லாம் நீதியானவைகள், * அவைகளிற் புரட்டுந்திரியாவதுமில்லை. * ஏசாயா. ௫௯, அதிகா. ௯.

௯ அவைகளெல்லாம் உணருகிறவனுக்கு நேருங்கண்டடைகிறவனுக்குச் செம்மையுமானவைகள்.

௰ * வெள்ளியையல்ல, நான் சொல்லுகிற புத்தியையுந் தெரிந்துகொள்ளப்பட்ட பொன்னைப்பார்க்க அறிவையும் ஏற்றுக்கொள்ளுங்கள், * ௩, அதிகாரம். ௰௪. ௰௫.

௰௧ ஏனென்றால் முத்துக்களைப்பார்க்கிலும் ஞானமே நல்லது, இச்சிக்கப்பட்டதுக்கவைகளெல்லாம் அதற்கு நிகரல்ல.

௰௨ ஞானமாகிய நான் விஞவோடே வாசம்பண்ணி நற்சிந்தனைகளுள்ள அறிவைக் கண்டடைந்திருக்கிறேன்.

௰௩ பொல்லாப்பைப் பகைக்கிறது கர்த்தருக்குப் பயப்படுதலே பெருமையையும் அகந்தையையும் பொல்லாத வழியையும் புரட்டுக்குள்ள வாயையும் பகைக்கிறேன்.

௰௪ ஆலோசனையும் மெய்ஞ்ஞானமும் என்னுடையது, நானேயுணர்வு, வல்லமையென்னுடையது.

௰௫ என்னாலே இராசாக்கள் அரசாண்டு துரைகள் நீதியைத் திட்டப்படுத்துகிறார்கள்.

௰௬ என்னாலே அதிகாரிகளும் பிரபுக்களும் பூமியினுடைய எல்லா நியாயாதிபதிகளும் அதிகாரம்பண்ணுகிறார்கள்.

௰௭ * என்னை நேசிக்கிறவர்களை நான் நேசிக்கிறேன், காலமேயென்னைத் தேடுகிறவர்களென்னைக் கண்டுபிடிப்பார்கள். * யோவான். ௰௪, ௨௧.

௰௮ ஐசுவரியமுங் கனமும் நீடித்திருக்கிற ஆஸ்தியும் நீதியும் என்னிடத்திலிருக்கிறது.

௰௯ * பொன்னையும் அபரஞ்சியையும் பார்க்க என்னுடைய பலன் நல்லது, தெரிந்துகொள்ளப்பட்ட வெள்ளியைப்பார்க்க என்னுடைய வரத்தும் நல்லது. * ௩, அதிகா. ௰௪.

௨௰ என்னை நேசிக்கிறவர்களை மெய்ம்பொருளைச் சுதந்தரிக்கப்பண்ணுவதற்கும் அவர்கள் பொக்கிஷங்களை நிரப்புவதற்கும்,

௨௧ நீதியின் வழியிலும் நியாயப்பாதைகளுக்குள்ளும் நடத்துகிறேன்.

௨௨ கர்த்தர் அப்போதே தம்முடைய கிரியைகளுக்கு முன் என்னைத் தமது வழியின் * ஆதியாகக்கொண்டிருந்தார். * அறிவிப்பு. ௩, ௰௪.

௨௩ பூமிக்கு முன்னுள்ள ஆதி முதலும் அநாதியுமாய் அபிஷேகம்பண்ணப்பட்டேன்.

௨௪ ஆழங்களுந் தண்ணீர்கள் புரளுகிற ஊற்றுகளும் உண்டாகாததற்கு முன்னே செனிப்பிக்கப்பட்டேன்.

௨௫ பர்வதங்கள் நாட்டப்படாததற்கு முன்னுங் குன்றுகளுக்கு முன்னும்,

௨௬ அவர் பூமியையும், அதின் வெளிகளையும் பூசக்கரமணல்களின் முதலையும் உண்டாக்காததற்கு முன்னுஞ் செனிப்பிக்கப்பட்டேன்.

௨௭ அவர் வானங்களைப் படைக்கையில் அங்கே தானிருந்தேன், அவர் ஆழத்தின்மேற்புறத்தை வட்டணிக்கையிலும்,

௨௮ அவர் உயரமேகங்களையுறுதிப்படுத்துகையிலும் ஆழத்தின் ஊற்றுகளைப் பலப்படுத்துகையிலும்,

௨௯ * தண்ணீர்கள் தமது வாக்கை மீறாதபடிக்கு அவர் சமுத்திரத்திற்கு அதின் எல்லைப் பிரமாணத்தை வைக்கையிலும் அவர் பூமியின் அஸ்திபாரங்களைத் திட்டப்படுத்துகையிலும், * யோபு. ௩௮, ௰. ௰௧. ௱௪, சங்கீதம். ௯.

௩௰ நான் அவரண்டையிலே * செல்வனுமாய், நித்தம் அவருடைய மனமகிழ்ச்சியாயிருந்து எப்போதும் அவருக்கு முன்பாகச் சச்சமளித்து, * யோவான். ௧, ௰௮.

௩௧ அவருடைய பூசக்கரத்திலே சந்தோஷித்துக்கொண்டிருந்தேன், * என் மனமகிழ்ச்சி மனுப்புத்திரரோடிருக்கிறது. * ௫. மோசே. ௩௩, ௩.

௩௨ இப்போதும் பிள்ளைகளே என்னைக் கேளுங்கள், என் வழிகளைக் காத்து நடக்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௩௩ புத்தியைத் தள்ளிப்போடாமல் அதைக் கேட்டு ஞானமடையுங்கள்.

கூச என்வாசற்படிகளில் நித்தங்காத்து என்வாசல்நிலைகளருகே காவற்பண்ணிக்கொண்டிருந்து எனக்குச்செவிகொடுக்கிற மனுஷன் பாக்கியவான்.

கூரு ஏனெனில் * என்னைக்கண்டுபிடிக்கிறவன் ஜீவனைக்கண்டுபிடித்துக் கர்த்தரிடத்திலே தயவைப்பெறுவான். * க. யோவா ரு. யஉ.

கூசு இல்லாமல் எனக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்கிறவன் தன்னாத்துமாவைச் சேதப்படுத்துகிறான், என்னைப் பகைக்கிறயாவரும் மரணத்தைநேசிக்கிறார்களென்கிறது.

## கூ. அதிகாரம்.

[உன்னத ஞானத்தின் நற்போதகமும் லவுகீகப் பயித்தியத்தின் துற்போதகமும் காண்பிக்கப்பட்டது.]

உன்னத ஞானந் தன்வீட்டைக்கட்டித் தன் ஏழுதூண்களைச்சித்திரங்கொத்தி.

உ தன்கொழுத்த செந்துக்களையடித்துத் தன்திராட்சப்பழ இரசத்தைத் வார்த்து வைத்துத் தன் பந்தியையுமாயத்தம்பண்ணி,

௩ தன் பணிவிடைக்காரிகளை யனுப்பி. எவன்பேதையோ அவன் இவ்விடத்திற்குத் திரும்புவானாகவென்று சொல்லச்சொல்லி,

௪ பட்டணத்துப்பிரதான மேடைகளின்மேல் நின்றுகூப்பிட்டு, மதியில்லாதவர்களுடனே சொல்லுகிறதாவது,

ரு நீங்கள்வந்து என் அப்பத்திலேபொசித்து, நான்வார்த்தவைத்த திராட்சப்பழ இரசத்திலேகுடியுங்கள்.

௬ நீங்கள் பிழைக்கும்படிக்குப் பேதமையைவிட்டு உணர்வின்வழியிலே நடவுங்கள்.

எ சரசக்காரனை யதட்டுகிறவன் தனக்குக் கனவீனத்தைத் தேடிக்கொள்ளுகிறான், துஷ்டனைக்கடிந்துகொள்ளுகிறவன் தனக்குக் கறைப்படுத்துகிறான்.

அ சரசக்காரன் உன்னைப்பகையாதபடிக்கு அவனைக்கடிந்துகொள்ளாதிரு, ஞானமுள்ளவனைக்கடிந்துகொள். அவன் உன்னை சிநேகிப்பான்.

கூ ஞானமுள்ளவனுக்குப் புத்தியைவழங்கு, அவன் ஞானமடைவான், நீதிமானுக்குப் புத்திசொல்லு உபதேசத்தில் அதிகப்படுவான்.

ய * கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்தின் துவக்கம், பரிசுத்தரின் அறிவு உணர்வு. * க, அதி. எ. ஸயக, சங்கீ. ய.

யக ஏனெனில் என்னாலே உன்நாட்கள் நீடிக்கும், உனக்கு ஆயுசின்வருஷங்கள் வர்த்திக்கும்.

யஉ நீ ஞானியாயிருந்தால், உனக்காக ஞானியாயிருப்பாய், நீ சரசக்காரனேயானால், நீயே அதைச் சுமப்பாயென்கிறது.

யங பயித்திய ஸ்திரி * அமளிக்காரியும் ஒன்றுமறியாத நிர்மூடியுமாயிருக்கிறாள். * எ, அதிகாரம். யக.

யச தங்கள் பாதைகளிற் செம்மையாய் நடக்கிறவழிப்போக்கரை யழைக்க,

யரு அவள் பட்டணத்தின் மேடைகளிலுள்ள தன் வீட்டுவாசற்படியில் ஒரு ஆசனத்தின்மேலுட்கார்ந்து,

யசு எவன்பேதையோ, அவன் இவ்விடத்திற்குத் திரும்புவானாகவென்று சொல்லி மதியில்லாதவனுடனே,

யஎ * திருட்டுத்தண்ணீர்கள் தித்திப்பும் அந்தரங்கமான அப்பம் இன்பமுமாயிருக்கிறதென்கிறாள். * உ. ய. யஎ.

யஅ ஆனாலும் * அவ்விடத்திலேமரித்தவர்கள் உண்டென்றும் அவளால் அழைக்கப்பட்டுப்போனவர்கள் நரகபாதாளங்களிற்கிடக்கிறார்களென்றும் அறியான். * எ, உகூ. உஎ.

## ய. அதிகாரம்.

[இந்த அதிகாரந்துவக்கி, உகூ. அதிகாரமட்டும் நல்லோருக்கும் பொல்லாருக்கும் பாவங்களுக்கும் புண்ணியங்களுக்கும் வித்தியாசங்களைக்காண்பிக்கும் வாக்கியங்கள் சேர்க்கப்பட்டிருக்கிறது.]

சாலொமோனின்வாக்கியங்கள் * ஞானமுள்ளமகன் தகப்பனைச் சந்தோஷப்படுத்துகிறான். † பயித்தியமுள்ளமகனோ தன் தாய்க்குச் சஞ்சலமாயிருக்கிறான் * யரு, உய. † யஎ, உரு.

உ அக்கிரமப் பொக்கிஷங்கள் உதவாது, நீதியோ மரணத்தினின்றும் தப்புவிக்கும்.

௩ நீதிமானின் ஆத்துமாவைக் கர்த்தர் பட்டினியாயலையவிடார், ஆகாதவர்களின் தீவினையையோ அகற்றிப்போடுவார்.

௪ * வஞ்சனைக்கையால் வேலைசெய்கிறவன் ஏழையாகிறான் சுறுசுறுப்புள்ளவர்களின் கையோ ஐசுவரியமாக்குகிறது.

ரு வசந்தகாலத்திலே சேர்க்கிறவன் புத்தியுள்ளமகன், அறுப்பிலே தூங்குகிறவன் இலச்சையுண்டாக்குகிறமகன்.

௬ நீதிமானின் சிரசுக்கு ஆசீர்வாதங்களுண்டாம், ஆனால் ஆகாதவர்களின்வாயைக் கொடுமைமூடும்.

எ நீதிமானின்பேர் ஆசீர்வாதமாகவிருக்கும், ஆனால் ஆகாதவர்களின்பேர் அழிந்துபோம்.

அ மனதில் ஞானமுள்ளவன் கற்பனைகளை யேற்றுக்கொள்ளுகிறான், ஆனால் பயித்தியஉதடன் சிக்கிக்கொள்ளுகிறான்.

கூ உத்தமமாய் நடக்கிறவன் பத்திரமாய் நடக்கிறான், தன்வழிகளைக் கோணலாக்குகிறவனோ அறியப்படுவான்.

ய * கண்சாடைகாட்டுகிறவன் நோவுண்டாக்குகிறான், பயித்திய உதடன் சிக்கிக்கொள்ளுவான். கூ, அதிகாரம். யங.

யக * நீதிமானின்வாய் ஜீவஊற்றாயிருக்கிறது, ஆனால் ஆகாதவர்களின்வாயைக் கொடுமைமூடும். * ஸஎ, சங்கீதம். ஙய.

௰௨ பகை வழக்குகளை யெழுப்பும், * சிநேகமோ சகலமீறுதல்களையும்மூடும்.

* ௧. பேதுரு. ௪, அதிகாரம். ௮.

௰௩ உணர்வுள்ளவனுடைய உதடுகளிற் காணப்படுகிறது ஞானம், மதிகெட்டவனுடைய முதுகுக்கு ஏற்றது மிலாறு.

௰௪ ஞானிகள் அறிவையடக்குகிறார்கள், ஆனால் பயித்தியக்காரனுடைய வாய்க்குக் கலக்கல்சமீபித்திருக்கும்.

௰௫ ஐசுவரியவானின் ஆஸ்தி அவனுக்கு அரணான பட்டணம், ஏழைகளுடையகலக்கல் அவர்களத்தரித்திரம்.

௰௬ நீதிமானுடையசெய்கை சீவனுக்கும், ஆகாதவனுடைய வரத்து பாவத்திற்குமாம்.

௰௭ கல்வியைக்காத்துநடக்கிறவன் சீவனுக்குப்போம்வழியிலுள்ளவன், அதட்டுதலைவிட்டுவிடுகிறவனோ மோசம்போக்குகிறவன்.

௰௮ பகையைமறைக்கிறவன் பொய் உதடன், அவதூறுண்டாக்குகிறவன்மதிகேடன்

௰௯ வார்த்தைகளின்திரட்சியில் மீறுதலற்றிராது, தன் உதடுகளையடக்குகிறவனோ புத்திமான்.

௨௰ நீதிமானின்நாவு தெரிந்துகொள்ளப்பட்ட வெள்ளி, ஆகாதவர்களின் நெஞ்சு அற்பவிலையானது.

௨௰௧ நீதிமானின் உதடுகள் அநேகரை மேய்க்கும், பயித்தியக்காரரோ மதியில்லாமையினாலேமாளுவார்கள்.

௨௰௨ கர்த்தரின் ஆசீர்வாதமே ஐசுவரியம் அடையப்பண்ணும், அதினோடே வேதனையையுங்கூட்டார்.

௨௰௩ தீவினைசெய்கிறது பயித்தியக்காரனுக்கொருவிளையாட்டு, உணர்வுள்ள மனிதனுக்கோஞானமுண்டு.

௨௰௪ ஆகாதவனபயப்படுகிறதே அவனுக்குவரும், நீதிமான்கள்விரும்புகிறதே அவர்களுக்குக்கொடுக்கப்படும்.

௨௰௫ புசற்கடந்துபோகிறதுபோல ஆகாதவனில்லாதேபோகிறான், நீதிமானோநித்திய அஸ்திவாரமுள்ளவன்.

௨௰௬ காடிபல்லுகளுக்கும் புகைகண்களுக்கும்எப்படியிருக்கிறதோ அப்படியேசோம்பேறி தன்னையனுப்புகிறவர்களுக்கிருக்கிறான்.

௨௰௭ கர்த்தருக்குப்பயப்படுதல் ஆயிசுநாட்களைப்பெருகப்பண்ணும், ஆகாதவர்களின்வயதுகளோ குறுகப்படும்.

* ௯, அதிகாரம். ௨. ௬, அதி. ௰௧.

௨௰௮ நீதிமான்களின்நம்பிக்கைமகிழ்ச்சியாகும், ஆகாதவர்களின் பார்த்திருக்குதலோ அழியும்.

௨௰௯ கர்த்தரின்வழி உத்தமனுக்கு அரண், அக்கிரமக்காரருக்கோகலக்கம்.

௩௰ நீதிமான் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை. ஆகாதவர்களோ பூமியில் வாசமாயிருப்பதில்லை.

௩௰௧ நீதிமானின்வாய ஞானத்தைவெளிப்படுத்தும், மாறுபாடுகளுள்ளநாவோ அறுப்புண்டுபோம்.

௩௰௨ நீதிமானின்உதடுகள்பிரியமானவைகளைப்பேச அறியும், ஆகாதவர்களின் வாயோ மாறுபாடுகளுள்ளது.

# ௰௧. அதிகாரம்.

கள்ளத்தராசுகர்த்தருக்கருவருப்பாயிருக்கிறது. சுமுத்திரையானபடிக்கல்லோ அவருக்குப்பிரியம். * ௰௬. அதி. ௰௧. ௨௰, ௰. ௨௩.

௨ அகந்தைவந்தால் இலச்சையும்வரும். ஆனால் தாழ்மையானவர்களோடே ஞானமிருக்கும்.

௩ செம்மையானவர்களின்உத்தமம்அவர்களைநடத்தும் துரோகிகளின்மாறுபாடோ அவர்களைப்பாழ்க்கடிக்கும்.

௪ * கோபாக்கினையின்நாளிலே ஆஸ்தி யுதவாது. நீதியோ மரணத்திற்குத்தப்புவிக்கும். * ௰, அதிகாரம். ௨.

௫ உத்தமனின் நீதி அவன்வழியைச்செம்மையாக்கும். ஆகாதவனோ தன் ஆகாமியத்தாலே விழுவான்.

௬ செம்மையானவர்களின் நீதி அவர்களைத்தப்புவிக்கும், துரோகிகளோ தங்கள் தீவினையிலே பிடிபடுவார்கள்.

௭ ஆகாதமனிதன் சாகையில் அவன்பார்த்துக்கொள்ளுதல் அழியும் * அக்கிரமக்காரரின்நம்பிக்கைகெட்டுப்போம்.

* ௰, அதிகாரம். ௨௮.

௮ நீதிமான் இக்கட்டுக்கு நீங்கலாக்கப்படுகிறான், * அவன் ஸ்தலத்திலே ஆகாதவன் வருகிறான். * ௨௧, அதி. ௰௮.

௯ மாயக்காரன் தனக்கடுத்தவனைவாயினாலேகெடுக்கிறான் நீதிமானோ அறிவினால் தப்புகிறான்.

௰ நீதிமான்கள் நன்றாயிருந்தால்பட்டணங்களிகூரும், ஆகாதவர்கள் அழிந்தால்கெம்பீரமுண்டு.

௰௧ செம்மையானவர்களின் ஆசீர்வாதத்தினால்பட்டணம் உயரும், ஆகாதவர்களின் வாயினால் அது இடியும்.

௰௨ மதிகெட்டவன் தனக்கடுத்தவனை இலச்சைப்படுத்துகிறான், உணர்வுள்ள மனிதனோபேசாதிருக்கிறான்.

௰௩ * அவதூறுபண்ணித்திரிகிறவன் இரகசியத்தை வெளியாக்குகிறான், ஆவியில் உண்மையுள்ளவனோகாரியத்தையடக்குகிறான். * ௨௰, அதி. ௰௯.

௰௪ நல்யோசனைகளில்லாததினாற்சனந் தாழ்ந்துவிழும், அநேகம் ஆலோசனைக

ராயிருக்கிறதினாலோ சுகமுண்டு.
* ௰௫, அதிகாரம். ௨௨.

௰௫ அன்னியனுக்காகப் பிணைப்படுகிறவன் நன்றாய் நொறுங்குண்டான், கைபோட்டுக்கொள்ளுதலைப் பகைக்கிறவனோ சுகமாயிருப்பான்.

௰௬ பலவந்தர் ஐசுவரியத்தைப் பத்திரமாய்க் காப்பதுபோல, இலக்கணமுள்ள பெண்சாதி மானியத்தைக் காக்கிறாள்.

௰௭ தயவுள்ள மனிதன் தன் ஆத்துமாவுக்கு நன்மை செய்கிறான், கடூரனோ தன் மாமிசத்தை அலைக்கழிக்கிறான்.

௰௮ ஆகாதவன் விருதாவேலையைச் செய்கிறான், நீதியை விதைக்கிறவனோ உத்தம பலனையடைவான்.

௰௯ நீதி ஜீவனுக்குட்படுத்துகிறதுபோலப் பொல்லாப்பைப் பின்தொடருகிறவன் தன் மரணத்திற்கேகிறான்.

௨௰ திரியாவரமான இருதயத்தார் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள், உத்தம மார்க்கத்தாரோ அவருக்குப் பிரியமானவர்கள்.

௨௧ பொல்லாதவன் கையோடே கைகோத்தாலும் ஆக்கினைக்குத் தப்பான், நீதிமான்களின் வித்தோ விடுவிக்கப்படும்.

௨௨ மதிகெட்டு நடக்கிற ஸ்திரீயின் அழகு பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்குச் சமானம்.

௨௩ நீதிமான்களின் ஆசை நன்மையே, ஆகாதவர்களின் காத்திருக்குதல் கோபத்தோடிருக்கும்.

௨௪ வாரியிறைத்தும் அதிகமுண்டாயிருக்கிறவர்களுமுண்டு, நிதானந்தப்பிப் பிசினத்தனம்பண்ணியுந் தாழ்ச்சியையே அடைகிறவர்களுமுண்டு.

௨௫ ஆசீர்வதிக்கிற ஆத்துமா கொழுத்துப்போம், எவன் தண்ணீர் பாய்ச்சுகிறானோ அவனுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படும்.

௨௬ தானியத்தைக் கட்டிவைக்கிறவனை ஜனஞ் சபிக்கும், விற்கிறவனுடைய தலைக்கு ஆசீர்வாதமுண்டாம்.

௨௭ நன்மையைக் கருத்தாய்த் தேடுகிறவன் பிரியத்தைத் தேடிக்கொள்ளுகிறான், * தீமையைத் தேடுகிறவனுக்கோ அதுவே வரும்.
* எ, சங்கீதம். ௰௭.

௨௮ தன் ஐசுவரியத்தை நம்புகிறவன் விழுவான், * நீதிமான்களோ துளிரைப்போலச் செழிப்பார்கள். * ௫௨, சங். ௰.

௨௯ தன் வீட்டைக் கலைக்கிறவன் காற்றைச் சுதந்தரிப்பான், பயித்தியகாரன் ஞானமுள்ளவனுக்கு அடிமையாயிருப்பான்.

௩௰ நீதிமானின் பலன் ஜீவவிருட்சம், ஆத்துமாவை ஆதாயப்படுத்திக்கொள்ளுகிறவன் ஞானமுள்ளவன்.

௩௧ இதோ * நீதிமானுக்கும் பூமியிற் சரிக்கட்டப்படுமே, ஆகாதவனுக்கும் பாவிக்கும் எத்தனையதிகம். * க. பேது. ச, ௰௭. ௰௮.

## ௰௨. அதிகாரம்.

௧ தண்டனையைச் சிநேகிக்கிறவன் அறிவைச் சிநேகிக்கிறவன், கடிந்துகொள்ளுதலைப் பகைக்கிறவனோ மிருகத்தைப்போலிருப்பான். * ௰௫. அதி. ௰௮.

௨ நல்லவன் கர்த்தரிடத்திலே பிரியம் பெறுவான், ஆனால் தீவினைகளுள்ள மனிதனையவர் ஆகாதவனாகத் தீர்ப்பார்.

௩ ஆகாமியத்தாலே மனுஷன் நிலைவரப்படான், நீதிமான்களின் வேரோ அசையாதிருக்கும்.

௪ * திறமையுள்ள ஸ்திரீ தன் புருஷனுக்குக் கிரீடமாயிருக்கிறாள், இலச்சைக்காரியோ அவனுக்கு எலும்புருக்கியைப்போலிருக்கிறாள். * ௩௧, ௰.

௫ நீதிமான்களின் நினைவுகள் நியாயம், ஆகாதவர்களின் யோசனைகள் சூது.

௬ ஆகாதவர்களின் வார்த்தைகள் * இரத்தஞ்சிந்தப் பதிவிருப்பதற்கிருக்கும், ஆனால் செம்மையானவர்களை அவர்கள் வாய் தப்புவிக்கும். * க, ௰௧.

௭ ஆகாதவர்கள் கவிழ்ந்து இல்லாதே போவார்கள், ஆனால் நீதிமான்களின் வீடு நிற்கும்.

௮ தன் புத்திக்குத்தக்கதாய் மனுஷன் புகழப்படுவான், ஆனால் அக்கிரமநெஞ்சன் இகழ்ச்சிக்குள்ளாவான்.

௯ தன்னைத்தான் கனம்பண்ணி அப்பத்தாழ்ச்சியாயிருக்கிறவனைப் பார்க்கிலும் பணிவிடைக்காரருள்ளவனாகிய கனமற்றவன் வாசி.

௰ நீதிமான் தன் மிருகஜீவனை விசாரிக்கிறான், ஆனால் ஆகாதவர்களின் இருதயம் கொடூரமானது.

௰௧ * தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் அப்பத்தால் திருத்தியாவான், வீணரைப் பின்பற்றுகிறவனோ மதியற்றவன். * ௨௮, ௰௯.

௰௨ ஆகாதவன் தீங்குக்குட்படுத்தும் வலையை நாடுகிறான், ஆனால் நீதிமான்களின் வேர் கனிகொடுக்கும்.

௰௩ உதடுகளின் துரோகத்திற் பொல்லாக்கண்ணியிருக்கும், நீதிமானோ நெருக்கத்திற்கு வெளியாவான்.

௰௪ * தன் தன் வாயின் நற்கனியினால் அவனவன் நன்மையாய்த் திருத்தியாவான், அவனவன் கைகளின் உபகாரமும் அவனவனுக்குத் திரும்பும். * ௰௩, ௨.

௰௫ பயித்தியகாரனின் வழி அவனுடைய பார்வைக்குச் செம்மை, ஆனால் ஆலோசனையைக் கேட்கிறவன் ஞானமுள்ளவன்.

௰௬ பயித்தியக்காரனுடைய தாங்கல் அந்நாளிலே தானே அறியப்படும், இகழ்ச்சியை மூடுகிறவனோ விவேகி.

௰௭ சத்தியவாசகன் நீதியாய் அறிவிப்பான், பொய்ச்சாட்சிக்காரனோ சதியாய் அறிவிப்பான்.

௰௮ பட்டயக் குத்துகளைப்போலப் பேசுகிறவர்களுமுண்டு, ஞானமுள்ளவர்களின் நாவோ அவிழ்தம்.

௰௯ சத்திய உதடு என்றென்றைக்கும், பொய்நாவோ ஒரு நிமிஷமாத்திரமும் நிற்கும்.

௨௰ தீமையைப் பிணைக்கிறவர்களின் இருதயத்திலிருக்கிறது கபடம், சமாதானத்துக்கு உசாவுகிறவர்களுக்குண்டாகிறதோ மகிழ்ச்சி.

௨௧ நீதிமானுக்கொரு அவகேடும் வராது, ஆகாதவர்களோ பொல்லாப்பால் நிறையப்படுவார்கள். ௯௧, சங்கீதம். ௰.

௨௨ * கள்ளவுதடுகள் கர்த்தருக்கருவருப்பானவைகள், உண்மையை நடப்பிக்கிறவர்களோ அவருக்குப் பிரியம். * ௬, ௰௬. ௰௭.

௨௩ விவேகமுள்ள மனுஷன் அறிவை அடக்குகிறான், * நிர்மூடரின் நெஞ்சோ பயித்தியத்தைப் பிரசங்கிக்கும். * ௰௩, ௰௬.

௨௪ * சாக்கிரதையுள்ளவர்களின் கையாளும், வஞ்சனைக்கையோ அடிமைப்படும். * ௰, ௪.

௨௫ மனுஷனின் இருதயத்திலிருக்குங் கவலை அதைப் பொடிக்கும், நல்வார்த்தையோ அதை மகிழ்ச்சியாக்கும்.

௨௬ நீதிமான் தனக்கடுத்தவனிலும் மேன்மையாயிருக்கிறான், ஆனால் ஆகாதவர்களை அவர்களுடைய வழி மோசம்போக்கும்.

௨௭ அசட்டன் தான் வேட்டையாடினதைப் பொரிப்பதில்லை, சாக்கிரதையுள்ளவனுக்கோ விலையேறப்பெற்ற ஆஸ்தியகப்படும்.

௨௮ நீதியின் பாதையிற் சீவனுண்டு, மார்க்கமான வழியிற் சாவில்லை.

## ௰௩. அதிகாரம்.

ஞானமுள்ள மகன் தகப்பனின் புத்தியைக் கேட்கிறான், சரசக்காரனோ அதட்டுதலைக் கேளான்.

௨ * தன் தன் வாயின் நற்கனியினாலே அவனவன் நன்மையைப் பொசிப்பான், துரோகிகளின் ஆத்துமாவோ கொடுமையைப் பொசிக்கும். * ௰௮, ௨௰.

௩ தன் வாயைப் பத்திரம்பண்ணுகிறவன் தன்னாத்துமாவைக் காக்கிறான், * தன் உதடுகளை அகலத்திறக்கிறவனுக்கோ கலக்கம் வரும். * ௰௮, ௭.

௪ சோம்பேறியின் ஆத்துமா இச்சித்தாலும் ஒன்றும் வராது, சாக்கிரதையுள்ளவர்களின் ஆத்துமாவோ புஷ்டியாகும். ௨௰, ௪.

௫ * நீதிமான் பொய்ப்பேச்சைப் பகைக்கிறான், ஆகாதவனோ வெட்கமும் இலச்சையுமுண்டாக்குகிறான். * ௱௰௯, சங்கீதம். ௱௬௩.

௬ நீதி உத்தமமார்க்கத்தானைத் தற்காக்கும், ஆகாமியமோ பாவியைக் கவிழ்த்துப்போடும்.

௭ ஒன்றுமில்லாமல் தங்களை ஐசுவரியவான்களாய்ப் பாராட்டுகிறவர்களுமுண்டு, திரளான ஆஸ்தியிருந்துந் தங்களைத் தரித்திரராய்ப் பாராட்டுகிறவர்களுமுண்டு.

௮ மனுஷனின் ஐசுவரியம் அவன் பிராணனை மீட்கிறதுண்டு, ஆகிலுந் தரித்திரன் சீறுமாறைக் கேளாதிருக்கிறான்.

௯ நீதிமான்களின் வெளிச்சம் சந்தோஷிப்பிக்கும், * ஆகாதவர்களின் தீபமோ அணைந்துபோகும். * ௨௪, ௨௰.

௰ அகந்தையாலேமாத்திரம் வாதுபிறக்கும், யோசனை கேட்கிறவர்களிடத்திலோ ஞானமுண்டு.

௰௧ மாயையாலே தேடின ஆஸ்தி குறைந்துபோம், கைப்பாடாய்ச் சேர்க்கிறவனோ அதைப் பெருகப்பண்ணுவான்.

௰௨ நெடுங்காலமாய்க் காத்திருக்குதல் இருதயத்தைத் தாங்கலாக்கும், விரும்பினது வந்தபோதோ சீவவிருட்சம்போலிருக்கும்.

௰௩ வசனத்தை அசட்டைபண்ணுகிறவன் தன்னாலே கெட்டுப்போகிறான், கற்பனைக்குப் பயப்படுகிறவனோ பலனடைவான்.

௰௪ ஞானியின் போதகம் * மரணக்கண்ணிகளை விலக்குவதற்கான சீவ ஊற்றாயிருக்கிறது. * ௰௪, ௨௭.

௰௫ நற்புத்தி தயவுண்டாக்கும், துரோகிகளின் வழியோ கரடுமுரடானது.

௰௬ விவேகியானவனெவனும் அறிவோடே செய்கிறான், நிர்மூடனோ தன் பயித்தியத்தை விரித்துக்காண்பிக்கிறான்.

௰௭ ஆகாத் தூதன் தீமையில் விழுவான், உண்மையுள்ள தானாபதியோ அவிழ்தம்.

௰௮ புத்தியைத் தள்ளிப்போடுகிறவனுக்குத் தரித்திரமுங் கனவீனமும் வரும், கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ கனமடைவான்.

௰௯ வாஞ்சை நிறைவேறுதல் ஆத்துமாவுக்கு இனிதாயிருக்கும், பொல்லாப்பை விலகுதல் மூடருக்கருவருப்பாயிருக்கும்.

௨௰ ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞானமடைவான், மூடருக்குத் தோழனாயிருக்கிறவனோ நொறுங்குண்பான்.

௨௧ பாவிகளைத் தீமை தொடரும், நீதிமான்களுக்கோ நன்மை பலனாய்வரும்.

௨௨ நல்லவன் தன் பிள்ளைகளின் பிள்ளைகளைச் சுதந்தரம் அடையப் பண்ணுகிறான், பாவியின் ஆஸ்தியோ * நீதிமானுக்கு வைக்கப்படும். * யோபு ௨௭, ௰௬. ௰௭.

௨௩ ஏழைகளின் வயல் மிகுந்த ஆகாரத்தை விளைவிக்கும், ஆனாலும் நியாயமில்லாமையால் அழிகிறவர்களுமுண்டு.

௨௪ தண்டிலாறைக் கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறான், அவனைச் சிநேகிக்கிறவனோ அவனை யேற்கனவே தண்டிப்பான்.

௨௫ நீதிமான் தன் ஆத்துமா திருத்தியாகச் சாப்பிடுவான், ஆகாதவர்களின் வயிறோ தாழ்ச்சியடையும்.

## ௰௪. அதிகாரம்.

ஞானமுள்ள எந்தப் பெண்சாதியுந் தன் வீட்டைக் கட்டுகிறாள், பயித்தியமுள்ளவளோ அதைத் தன் கைகளால் இடிக்கிறாள்.

௨ தன் நிதானத்திலே நடக்கிறவன் கர்த்தருக்குப் பயப்படுகிறான், தன் வழிகளில் தாறுமாறானவனோ அவரை அசட்டைபண்ணுகிறான்.

௩ அகந்தைக்கான மிலாறு மூடனின் வாயிலே தானிருக்கிறது, ஞானமுள்ளவர்களையோ அவர்களுடைய உதடுகள் காப்பாற்றும்.

௪ எருதுகளில்லாமையால் களஞ்சியம் வெறுமையாயிருக்கும், காளைகளின் பெலத்தினாலோ மிகுந்த வரத்துண்டு.

௫ உண்மையுள்ள சாட்சி பொய்சொல்லான், கள்ளச்சாட்சியோ பொய்களையூதுவான்.

௬ பரியாசக்காரன் ஞானத்தைத் தேடியுங் கண்டுபிடியான், உணர்வுள்ளவனுக்கோ அறிவு லேசாய்வரும்.

௭ பயித்தியகாரனுடைய முகதாவுக்கு விலகிப்போ, ஏனெனில் அறிவுள்ள உதடுகளை அங்கே காணாய்.

௮ தன் வழியைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறது விவேகியினுடைய ஞானம், தரியாசம் மூடருடைய பயித்தியம்.

௯ குற்றத்துக்குப் பயித்தியகாரர் ஆகடியம் பண்ணுகிறார்கள், செம்மையானவர்களுக்குள்ளேயோ தயவிருக்கிறது.

௰ அவனவனுடைய ஆத்துமாவின் சஞ்சலத்தை அவனவனுடைய இருதயமே அறியும், அவனவன் மகிழ்ச்சிக்கும் அந்நியன் உடந்தையல்ல.

௰௧ ஆகாதவர்களின் வீடு அழியும், செம்மையானவர்களின் கூடாரமோ செழிக்கும்.

௰௨ * சில மனுஷருடைய பார்வைக்கு அவர்களுடைய வழி செம்மையாய்க் கண்டும் அதின் முடிவு மரணத்துக்குப்போகிற வழிகளாயிருக்கும். * ௰௬, ௨௫.

௰௩ நகைப்பிலும் மனதுக்கு நோவுண்டாகும், அதின் பிறகு சந்தோஷத்தின் சருக்கலுமாகும்.

௰௪ பின்வாங்கும் இருதயமுள்ளவன் தன்னுடைய வழிகளாலும், நல்ல மனுஷன் தன் மார்க்கத்தாலும் திருப்தியாவான்.

௰௫ பேதை சகலவார்த்தையையும் நம்புகிறான், விவேகியோ தன் நடையின்மேல் கவனமாயிருக்கிறான்.

௰௬ ஞானமுள்ளவன் பயந்து தீங்குக்கு விலகுகிறான், மூடனோ சினந்துகொண்டு திடாரிக்கமாயிருக்கிறான்.

௰௭ * முற்கோபி மதிகேடாய்ச் செய்வான், துர்வினைகளுள்ள மனுஷன் பகைக்கப்படுவான். * ௰௨, ௰௬.

௰௮ பேதைகள் பயித்தியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறார்கள், விவேகிகளோ அறிவின் கிரீடத்தைத் தரித்துக்கொள்ளுகிறார்கள்.

௰௯ பொல்லாதவர்கள் நல்லவர்களுக்கு முன்பாகவும், ஆகாதவர்கள் நீதிமானுடைய வாசற்படியிலும் குனிவதுண்டு.

௨௰ * தரித்திரன் தன் கூட்டாளியாலும் பகைக்கப்படுகிறான், ஐசுவரியமுள்ளவர்களின் சிநேகிதரோ அநேகர். * ௰௯, ௪. ௭.

௨௧ தனக்கடுத்தவனை அசட்டைபண்ணுகிறவன் பாவஞ்செய்கிறான், * சிறுமையானவர்களுக்கிரங்குகிறவனோ பாக்கியமடைவான். * ௪௪, சங்கீ. ௨.

௨௨ தீமைக்கெத்தனம் பண்ணுகிறவர்கள் தப்பிதஞ்செய்கிறார்களல்லவோ? நன்மைக்கெத்தனம் பண்ணுகிறவர்களுக்கோ கிருபையும் உண்மையுமுண்டு.

௨௩ சகல * பிரயாசத்திலும் பிரயோசனமுண்டு, உதடுகளின் வசனிப்பாற் குறைச்சல் வருகிறது. * ௰, ௪. ௰௨. ௨௪.

௨௪ ஞானமுள்ளவர்களின் ஐசுவரியம் அவர்களுக்குக் கிரீடம், மூடரின் பயித்தியம் பயித்தியமே.

௨௫ உண்மையுள்ள சாட்சி ஆத்துமாக்களை விடுவிக்கிறான், கபடசாட்சியோ பொய்களையூதிவிடுகிறான்.

௨௬ கர்த்தருக்குப் பயப்படுகிறதிலே * பெலத்த திடனுண்டு, அவன் பிள்ளைகளுக்கும் அடைக்கலமிருக்கும். * ௰௮, ௰.

௨௭ கர்த்தருக்குப் பயப்படுதல் மரணக்கண்ணிகளை விட்டு விலகுவதற்காக ஜீவஊற்றாயிருக்கிறது.

௨௮ ஜனத்திரட்சி இராசாவின் மகத்துவம், ஜனக்குறைவு தலைவரின் முறிவு.

௨௯ * நீடிய சாந்தமுள்ளவன் மகா புத்திமான், முற்கோபியோ பயித்தியத்தைத் தெரியக்காண்பிக்கிறான். * ௰௬, ௰௧.

௩௰ சொஸ்தமனம் உடலின் ஜீவன், பொறாமையோ எலும்புருக்கி,

௩௰௧ * தரித்திரனை ஒடுக்குகிறவன் அவனை உண்டாக்கினவரை நிந்தைசெய்கிறான், எளியவனுக்கிரங்குகிறவனோ அவரைக் கனம்பண்ணுகிறான். * ௰௭, ௫.

௩௰௨ ஆகாதவன் தன் பொல்லாப்பினாலே தள்ளுண்டுபோவான், நீதிமானோ தன் மரணத்திலே திடனாயிருக்கிறான்.

௩௰௩ உணர்வுள்ளவனின் இருதயத்தில் ஞானந் தங்கியிருந்து மூடரின் நடுவே விளங்கும்

௩௰௪ நீதி சாதியையுயர்த்தும், பாவமோ சனங்களின் இகழ்ச்சி.

௩௰௫ விவேகமுள்ள ஊழியக்காரன்மேல் இராசாவின் பிரியமும் இலச்சையுண்டாக்குகிறவன்மேல் அவன் மூர்க்கமுமிருக்கும்.

## ௰௫. அதிகாரம்.

மெதுவான பிரதியுத்தரம் உக்கிரத்தைத் திருப்பும், நோகப்பண்ணும் வார்த்தையோ கோபத்தைக் கிளப்பும்.

௨ ஞானிகள் நாவு அறிவை நன்றாய்க் காண்பிக்கும், மூடரின் வாயோ * பயித்தியத்தைத் தூற்றும். * ௰௩, ௰௬.

௩ எவ்விடத்திலுங் கர்த்தருடைய கண்களிருந்து பொல்லாதவர்களையும் நல்லவர்களையும் நோக்கிப்பார்க்கிறது.

௪ * நாவின் ஆரோக்கியம் ஜீவவிருட்சம், அதிலுள்ள தாறுமாறோ ஆவிக்கு நொறுங்குதல். * ௰௨, ௰௮.

௫ பயித்தியக்காரன் தன் தகப்பனின் புத்தியை அசட்டைபண்ணுகிறான், கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ விவேகியானவன்.

௬ * நீதிமானின் வீட்டிலே வெகு சத்துவமிருக்கும், ஆகாதவர்களின் வரத்திலோ கலக்கமுண்டு. ௩. ௩௩.

௭ ஞானமுள்ளவர்களின் உதடுகள் அறிவையிறைக்கும், மூடரின் இருதயம் அப்படியல்ல,

௮ * ஆகாதவர்களின் பலி கர்த்தருக்கு அருவருப்பு, செம்மையானவர்களின் செபமோ அவருக்குப் பிரியம். * ௨௧, ௨௭.

௯ ஆகாதவனின் வழி கர்த்தருக்கு அருவருப்பு, நீதியைப் பின்தொடருகிறவனையோ அவர் சிநேகிக்கிறார்.

௰ பாதையை விட்டுப்போகிறவனுக்குப் புத்திமதி விதனமாயிருக்கும், கடிந்துகொள்ளுதலைப் பகைக்கிறவன் சாவான்.

௰௧ * பாதாளமும் நரகமுங் கர்த்தரின் முன்பாகவிருக்கிறதே, மனுப்புத்திரரின் இருதயங்கள் எத்தனை அதிகம். * யோபு. ௨௬. ௬.

௰௨ சரசக்காரன் தன்னைக் கடிந்துகொள்ளுகிறவனைச் சிநேகியான், ஞானிகளண்டைக்கும் போகான்.

௰௩ * மகிழ்ச்சியுள்ள இருதயம் முகத்தைச் செழிப்பாக்கும், இருதயத்தின் நோவினாலே ஆவி முறிந்துபோகும். * ௰௭, ௨௨.

௰௪ உணர்வுள்ளவனின் இருதயம் அறிவைத் தேடும், மோடரின் வாயோ பயித்தியத்தை மேயும்.

௰௫ சிறுமைப்பட்டவனின் நாட்களெல்லாந் தீங்குள்ளவைகள், * மனோமகிழ்ச்சியோ நித்தவிருந்து. * ௧ தீமோ. ௬, ௬.

௰௬ அமளியோடிருக்கும் பெரும்பொக்கிஷத்தைப் பார்க்கிலுங் கர்த்தருக்குப் பயப்படுதலோடிருக்குங் கொஞ்சமானது வாசி.

௰௭ * பகையோடிருக்குங் கொழுத்த எருதின் கறியைப் பார்க்கிலுஞ் சிநேகத்தோடிருக்கும் இலைக்கறி வாசி. * ௰௭, ௧.

௰௮ உக்கிரமுள்ள மனுஷன் சண்டைகொளுவுகிறான், நீண்டசாந்தமுள்ளவனோ சண்டையை அமர்த்துகிறான்.

௰௯ * சோம்பேறியின் வழி முள்வேலியாயிருக்கிறது, செம்மையானவர்களின் பாதையோ நிரவப்பட்டதாயிருக்கிறது. * ௨௪, ௩௰, ௩௧.

௨௰ * ஞானமுள்ள மகன் தகப்பனைப் பூரிப்பாக்குகிறான், பயித்திய மனுஷனோ தன் தாயை அசட்டைபண்ணுகிறான். * ௰, ௧. ௰௭, ௨௫.

௨௰௧ பயித்தியம் மதியற்றவனுக்குச் சந்தோஷம், உணர்வுள்ள மனுஷனோ தன் நடக்கையைச் செம்மைப்படுத்துகிறான்.

௨௰௨ யோசனையில்லாமையால் நினைவுகள் இசைகேடாம், ஆனால் அநேகம் ஆலோசனைக்காரரால் உறுதியுண்டாம். * ௰௧, ௰௪.

௨௰௩ மனுஷனுக்குத் தன் வாய் மொழியினாலே மகிழ்ச்சியுண்டாம், * ஏற்றகாலத்திலே சொன்ன வார்த்தை எத்தனை நலமாயிருக்கும். * ௨௫, ௰௧.

௨௰௪ தாழவிருக்கும் நரகத்தைவிட்டு விலகும்படிக்கு விவேகிக்கு ஜீவவழி உயரப்போகும்.

௨௰௫ * அகந்தைக்காரரின் வீட்டைக் கர்த்தர் பிடுங்கி விதவையின் எல்லையை நிலைப்படுத்துவார். * சங்கீ. ௱௪௬, ௯.

௨௰௬ பொல்லாதவனின் நினைவுகள் கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கிறது, சுத்தவான்களின் வார்த்தைகளோ இன்பமானவைகள்.

௨௰௭ பொருளாசைக்காரன் தன் வீட்டைக் கலைக்கிறான், பரிதானங்களைப் பகைக்கிறவனோ பிழைத்திருக்கிறான்.

௨௰௮ நீதிமானின் இருதயம் பிரதியுத்தரஞ்சொல்ல யோசிக்கும், ஆகாதவர்களின் வாயோ பொல்லாவிசேஷங்களைப் பொழியும்.

௨௰௯ ஆகாதவர்களுக்குக் கர்த்தர் தூரமாயிருக்கிறார், நீதிமான்களின் செபத்தையோ கேட்கிறார்.

௩௰ கண்களின் வெளிச்சம் இருதயத்தை பூரிப்பாக்கும், நல்ல செய்தி எலும்புகளை புஷ்டியாக்கும்.

௩௧ ஜீவனின் கடிந்துகொள்ளுதலைக் கேட்கும் காது ஞானமுள்ளவர்களுக்குள் தாபரிக்கும்,

௩௨ புத்திமதியைத் தள்ளிப்போடுகிறவன் தன் ஆத்துமாவை வெறுக்கிறான், கடிந்துகொள்ளுதலைக் கேட்கிறவனோ ஞானமடைவான்.

௩௩ கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்தைப் போதிக்கும் * மகிமைக்கு முன்தாழ்மையுண்டு. ௰௮, ௰௨.

## ௰௬. அதிகாரம்.

மனதின் யோசனைகள் மனுஷனுடையது, * நாவின் பிரதியுத்தரம் கர்த்தரால் வருகிறது. * எரேமியா. ௰, ௨௩.

௨ மனுஷனுடைய வழிகளெல்லாம் அவன் பார்வைக்குச் சுத்தமாயிருக்கிறது, ஆனால் கர்த்தர் ஆவிகளை நிறுக்கிறார். ௨௧, ௨.

௩ உன் செய்கைகளைக் கர்த்தருக்கு ஒப்புவித்துவிடு அப்போது உன் யோசனைகள் ஸ்திரப்படும்.

௪ கர்த்தர் ஆகிலத்தின் இலக்குக்குச் சகலத்தையும் தீங்குநாளுக்குப் பொல்லாதவனையுங்கூட உண்டாக்கினார்.

௫ * மனமேட்டிமையானவனெல்லாம் கர்த்தருக்கு அருவருப்பானவனாயிருக்கிறான், அவனைகையோடே கைகோர்த்தாலும் தண்டனைக்குத் தப்பான். ௰௧. ௰௭, ௨௧.

௬ கிருபையினாலும் உண்மையினாலும் அக்கிரமம் மூடப்படும், ஆனால் கர்த்தருக்குப் பயப்படுகிறதினால் பொல்லாப்பைவிட்டு விலகவேண்டும்.

௭ ஒரு மனுஷனுடைய வழிகளின்மேல் கர்த்தர் பிரியமாயிருந்தால் அவர் அவன் சத்துருக்களையும் அவனோடே சமாதானமாக்குவார்.

௮ * நியாயமில்லாத்திரளான வரத்தைப்பார்க்கிலும் நீதியோடிருக்குங் கொஞ்சவரத்துவாசி. * ௰௫, சங்கீதம். ௩௭, ௰௬.

௯ மனுஷனின் இருதயந் தன்வழியை யோசிக்கும், ஆனால் கர்த்தரோ அவன் நடையை உறுதியாக்குகிறவர்.

௰ இராசாவுடைய உதடுகளிலே ஞானதிஷ்டியுண்டு, அவன்வாய் நியாயத்திலே தப்பிப்பேசலாகாது.

௰௧ * சுமுத்திரையானதும் அளக்கிற தராசும் கர்த்தருடையது, பையிலுள்ள படிக்கல்லுகளெல்லாம் அவருடைய செய்கை. * ௰௧, ௧.

௰௨ அக்கிரமஞ்செய்கிறது இராசாக்களுக்கு அருவருப்பாயிருக்கும், ஏனெனில் நீதியால் சிங்காசனம் உறுதிப்படுத்தப்படும்.

௰௩ நீதியுள்ள உதடுகள் இராசாக்களுக்குப் பிரியம், நிதானமாய்ப் பேசுகிறவனை இராசா சிநேகிப்பான்.

௰௪ இராசாவின் உக்கிரம் மரணத்தின் தூதர்களைப்போலிருக்கும், ஆனால் ஞானமுள்ள மனுஷன் அதை ஆற்றுவான்.

௰௫ இராசாவினுடைய முகக்களையில் ஜீவனுண்டு, அவன் தயவு பின்மாரி பெய்கிற மேகத்தைப்போலிருக்கும்.

௰௬ * அபரஞ்சியைப்பார்க்கிலும் ஞானத்தைச் சம்பாதிக்கிறது எத்தனை நலமும் வெள்ளியைப்பார்க்கிலும் உணர்வைச் சம்பாதிக்கிறது எத்தனை மேன்மையுமாயிருக்கிறது. ௩, ௰௪. ௮. ௰, ௰௯. ௰௯, சங்கீ. ௰௧.

௰௭ பொல்லாப்பைவிட்டு விலகுதலே செம்மையானவர்களின் சமனான பாதை, தன்வழியைக் கவனித்திருக்கிறவன் தன் ஆத்துமாவைக் காக்கிறான்.

௰௮ நொறுங்குதலுக்கு முன்னானது அகந்தை. விழுதலுக்கு முன்னானது மனமேட்டிமை. * ௰௮, ௰௨.

௰௯ அகந்தைக்காரரோடே கொள்ளையைப் பங்கிட்டுக்கொள்வதைப் பார்க்கச் சிறுமையானவர்களோடே மனத்தாழ்மையாயிருக்கிறது நலம்.

௨௰ வசனத்தின்மேல் சிந்தனையை வைக்கிறவன் நன்மையைக் கண்டடைவான், கர்த்தரை நம்புகிறவன் பாக்கியவான்.

௨௧ இருதயத்தில் ஞானமுள்ளவன் புத்திமானென்னப்படுவான், உதடுகளின் இன்பம் உபதேசத்தைப் பெருகப்பண்ணும்.

௨௨ புத்தி தன்னையுடையவர்களுக்குச் சீவஊற்றாயிருக்கிறது, பயித்தியக்காரரின் கல்வி பயித்தியம்.

௨௩ ஞானியின் இருதயம் அவன்வாயைப் புத்தியுள்ளதாக்கி அவன் உதடுகளில் உபதேசத்தைப் பெருகப்பண்ணும்.

௨௪ இன்பமான வார்த்தைகள் தேன்கூடும் ஆத்துமாவுக்கு மதுரமும் எலும்புகளுக்கு ஆரோக்கியமுமாயிருக்கிறது.

௨௫ * மனுஷனின் பார்வைக்குச் செம்மையாய்க் கண்டும் முடிவிலே மரணத்திற்குக் கொண்டுபோகிறதாகிய வழியுண்டு.

* ௰௪, ௰௨.

௨௬ உழைக்கிற ஆத்துமா தனக்கு உழைக்கிறான், ஏனெனில் அவன்வாய் அவனைத் தூண்டிவிடும்.

௨௭ பேலியாளின் மனுஷன் தீமையைத் தோண்டுகிறான், அவன் உதடுகளிலிருக்கிறது எரிக்கும் அக்கினியைப்போலிருக்கும். ௬, ௰௨, ௰௪.

௨௮ மாறுபாடுள்ள மனுஷன் வழக்கையுண்டுபண்ணுகிறான், கோட்சொல்லுகிறவன் பிரதான சிநேகிதரையும் பிரியப்பண்ணுவான்.

உகூ கொடுமையானமனுஷன் தனக்கடுத்தவனுக்கு ஆசைபதங்காட்டி அவனை நலமல்லாதவழியில் நடக்கப்பண்ணுகிறான்.

௩ய திரியாவரங்களையோசிக்கத்தன்கண்களைமூடுகிறான், தன் உதடுகளை அவன் கடிக்கும்போது பொல்லாப்பைச்செய்யத்தீர்ந்தது.

௩க * நரைமயிர் அலங்காரமான கிரீடம், நீதியின்வழியில் அதுகிடைக்கும். * உய, உகூ.

௩உ பெலவானைப்பார்க்க நீடியசாந்தமுள்ளவனும், ஒருபட்டணத்தைப் பிடிக்கிறவனைப்பார்க்கத்தன்மனதை ஆண்டுகொள்ளுகிறவனேவாசி.

௩௩ சீவி மடியிற் போடப்படும், ஆனால் அதின்நியாயமெல்லாங்கர்த்தராலவரும்.

## யஎ. அதிகாரம்.

சண்டையோடேகூடிய கொழுத்தஆகாரங்கள் வீடுநிறையவிருந்தாலும் அவைகளைப்பார்க்க அமரிக்கையோடே சாப்பிடுங்கறியில்லாததுணுக்கைத்தாவிலே. யரு, யஎ.

உ புத்தியுள்ள வேலைக்காரன் இலச்சையுண்டாக்குகிற குமாரனை ஆண்டு சகோதரர்நடுவிற்சுதந்தரப்பங்கடைவான்.

௩ வெள்ளிக்குப்பிடமும் பொன்னுக்குக்குகையும் இருதயங்களைச் சோதிக்கிறவரோ கர்த்தர்.

ச பொல்லாதவன் அக்கிரம உதட்டைக்கவனிக்கிறான், கள்ளன் கேடுபாடுள்ள நாவுக்குச்செவிகொடுக்கிறான்.

ரு * ஏழையைப்பரியாசம்பண்ணுகிறவன் அவனை உண்டாக்கினவரைநிந்தைப்படுத்துகிறான், ஆபத்துக்குக்களிக்கிறவன் ஆக்கினைக்குத்தப்பான். * யச, ௩க.

சா பிள்ளைகளின்பிள்ளைகள் முதிர்ந்தவயதுள்ளவர்களின்கிரீடம், பிள்ளைகளின்சிங்காரமோ அவர்களின்பிதாக்கள்.

எ மேன்மையானவைகளைப்பேசும் உதடுபயித்தியக்காரனுக்கடுத்ததல்ல, பிரபுக்கோ பொய்யுதடு எப்படி அடுக்கும்.

அ பரிதானம் அதைவாங்குகிறவர்களின் பார்வைக்கு நேர்த்தியான இரத்தினமாயிருக்கிறது, * அது நோக்குந்திசையெல்லாங் காரியமவாய்க்கும். * யஅ, யகூ.

கூ மீறுதலைமூடிப்போடுகிறவன் சிநேகத்தைநாடுகிறான், காரியத்தைக்கிண்டிக்கிளப்புகிறவனோ பிரதான சிநேகிதனையும் பிரியப்பண்ணுவான்.

ய மூடனை நூற்றடியடிப்பதைப்பார்க்கிலும் உணர்வுள்ளவனுக்கு அதட்டுதலே அதிகமாய் உறைக்கும்.

யக பொல்லாதவன் கலகத்தையேதேடுகிறான், ஆனாற் கொரூரதூதன் அவனுக்கு விரோதமாய் அனுப்பப்படுவான்.

யஉ தன் பயித்தியத்தோடிருக்கிற மூடனுக்கல்ல, குட்டிகளைப்பறிகொடுத்த கரடிக்கே மனுஷன் எதிர்ப்பட்டும்.

ய௩ நன்மைக்குத்தீமையைச்சரிக்கட்டுகிறவனின்வீட்டைத்தீமைவிட்டுப்பிரியாது.

யச சண்டைக்குக் காரணமாயிருக்கிறவன் தண்ணீர் மதகைத்திறக்கிறவனுக்குச்சரி, ஆகையாலே போர்கலவாத்தற்குமுன்வாதாட்டத்தைநெகிழ்.

யரு * ஆகாதவனை நீதிமானாகவும் நீதிமானை ஆகாதவனாகவுந்தீர்க்கிற இருவருங்கர்த்தருக்கருவருப்பானவர்கள். * ஏசா. ரு, உ௩.

யசா மூடன் மதியிலாதவனாயிருக்கச்சே ஞானத்தைக்கொள்ள அவன் கையிலேபொருக்கம் என்னத்திற்கு?

யஎ சிநேகிதன் எல்லாக்காலத்திலுஞ்சிநேகிப்பான், இடுக்கணுக்குதவும்படிக்கேசகோதரன் இன்னம்பிறக்கவேணும்.

யஅ தனக்கடுத்தவன்முன்பாகப் * பிணைப்படுக்கைபோடுகிறவன் புத்திதாழ்ச்சியான மனுஷன், * யக, யரு.

யகூ வாதுப்பிரியன் பாதகப்பிரியன், தன் வாசலையுயர்த்துகிறவன் இடிதலைத்தேடுகிறான்.

உய திரியாவர இருதயத்தான் நன்மையைக்கண்டடைவதில்லை, புரட்டு நாவுள்ளவன் தீமையிலேவிழுவான்.

உக மூடனைப்பெறுகிறவன் தனக்குச்சஞ்சலமாக அவனைப்பெறுகிறான், பயித்தியக்காரனின்தகப்பன் மகிழான்.

உஉ * மகிழ்ச்சியுள்ள இருதயம் அவிழ்தம்போலாகும், முறிந்த ஆவியோ எலும்புகளையுலரப்பண்ணும். * யரு, ய௩. யரு.

உ௩ ஆகாதவன் நியாயவழியைப்புரட்டமடியிலுள்ளபரிதானத்தைவாங்குகிறான்.

உச ஞானம் உணர்வுள்ளவனுடையமுகத்தின்முன்னிருக்கிறது, மூடனுடையகண்களோ பூமியின் கடையாந்தரங்களில் திரிகிறது.

உரு * மூடனான குமாரன் தன்தகப்பனுக்குச்சலிப்பும் தன்னைப்பெற்றவளுக்குக்கசப்புமானவன். * யரு, உய.

உசா நீதிமானைக்கூட்டத்தண்டம்பிடிக்கிறதும் பிரபுக்கள் நிதானத்தைச்செய்கிறவனையடிக்கிறதும் நல்லதல்ல.

உஎ * அறிவாளி தன்வார்த்தைகளையடக்குகிறான், உணர்வுள்ள மனுஷன்குளிர்ந்த குணமுள்ளவன். * யாக்கோ. க, யகூ.

உஅ பயித்தியக்காரனும் மவுனமாயிருந்தால் ஞானமுள்ளவனென்றுந்தன் உதடுகளைமூடுகிறவன் புத்திமானென்றும் எண்ணப்படுவான்.

## ௰௮. அதிகாரம்.

பிரிந்துபோகிறவன் தன்னிச்சையின்படிசெய்யப்பார்க்கிறான், எல்லா மெய்ஞ்ஞானத்தோடும்கைகலக்கிறான்.

௨ மூடன் உணர்வையல்ல தன்னிருதயத்திலிருந்துவருகிறதையே விரும்புகிறான்.

௩ துஷ்டன்வருகையில் அசங்கத்தமும் வினைத்தோடேகூடிய நிந்தையும்வரும்.

௪ மனுஷனுடைய வாயின்வசனங்கள் * ஆழமான தண்ணீர்களாயிருக்கும், ஞானத்தின் ஊற்றோபாய்கிற ஆறும். * ௨௰. ௫.

௫ நீதிமானை நியாயத்திலேதோற்கடிக்க துஷ்டனின் முகமாட்டத்தைப்பார்க்கிறது நல்லதல்ல. * ௫. மோசே. ௧, ௰௭.

௬ மூடனின் உதடுகள் சண்டைக்குட்படும், அவன்வாய் அடிகளை வரவழைக்கும்.

௭ மூடனின்வாய் அவனுக்குக்கேடு, அவனுதடுகள் அவன் ஆத்துமாவுக்குக்கண்ணி.

௮ * முறுமுறுப்புக்காரரின்வார்த்தைகள் பரியாசவார்த்தைகளைப்போலிருக்கும், அவைகள் வயிற்றுக்குள்ளிறங்கும். * ௨௬, ௨௨.

௯ தன்வேலையில் அசதியானவன், அழிம்பனின்சகோதரன்.

௰ * கர்த்தரின் நாமம் அரணான துருகம், அதிலே நீதிமான் ஓடிப் பத்திரமாயிருக்கிறான். * ௰௪, ௨௬. ௯௧, சங்கீதம். ௨.

௰௧ * ஐசுவரியவானின் ஆஸ்தி அவனுக்கு அவன் தோற்றத்தின்படி அரணானபட்டணமும் உயர்ந்தமதிலுமாயிருக்கும். * ௰, ௰௫.

௰௨ * நொறுங்குதலுக்கு முன் மனுஷனின் இருதயம் மேட்டிமையாகும், மகிமைக்குமுன்னாகத் தாழ்மை. * ௰௬, ௰௮. மத்தேயு. ௨௩, ௰௨.

௰௩ ஒருவன் கேளாததற்குமுன் பிரத்தியுத்தரஞ்சொன்னால் அவனுக்கது பயித்தியமும்வெட்கமுமாயிருக்கும்.

௰௪ * மனுஷனின் ஆவி அவன் வியாதியைத் தாங்கும், முறிந்த ஆவியையோ ஆர் தாங்குவான்? * ௰௫, ௰௩.

௰௫ உணர்வுள்ளவனின் இருதயம் அறிவைச் சம்பாதிக்கும் ஞானமுள்ளவர்களின் செவி அறிவைத்தேடும்.

௰௬ மனுஷனின் காணிக்கை யவனுக்கு வழியுண்டாக்கி அவனைப்பெரியோர்களுக்கு முன்பாக வரப்பண்ணும்.

௰௭ நீதிமான்முதல் தன்னோடே வழக்காடுகிறான், பிறகு அவனுக்கடுத்தவன் வந்தால் அவனையும் விசாரித்தறியாயிருக்கிறான்.

௰௮ சீட்டுபோடுதல் வழக்குகளை ஒழியப்பண்ணிப் பலவான்களின் நடுவே விலக்கிவிடும்.

௰௯ அரணானபட்டணத்தைப்பார்க்கிலும் அநியாயம் அனுபவித்தசகோதரனோடே வாதாடுவது கடினமாயிருக்கிறான், அப்படிப்பட்ட வழக்குகள் கோட்டையின் தாழ்ப்பாள்களுக்குச்சரி.

௨௰ தன்தன்வாயின்கனியால் அவனவனின்வயிறு நிரப்பப்படும் தன்தன் உதடுகளின்வரத்தினாலே அவனவன் திருத்தியாவான்.

௨௧ மரணமும் ஜீவனும் நாவின் அதிகாரத்திலிருக்கும், அதைச் சிநேகிக்கிறவன் அதின்கனியைப்புசிப்பான். * ௰௨, ௩.

௨௨ * பெண்சாதியைக் கண்டடைகிறவன் நற்காரியத்தைக் கண்டடைந்தான், கர்த்தரால் ஒருதயவைவரப்பற்றிக்கொண்டான். * ௰௯, ௰௪. ௩௧, ௰.

௨௩ தரித்திரன் கெஞ்சிப்பேசுகிறான், ஐசுவரியவான் கடுமையாய் உத்தரவுகொடுக்கிறான்.

௨௪ சிநேகிதருக்குள்ளமையான மனுஷன் உறவுகட்டப்படத்தக்கவன் * சகோதரனிலும் அதிகத்தொந்தமாய்ச்சிநேகிப்பவருண்டு. * ௨௭, ௰.

## ௰௯. அதிகாரம்.

மூடனாகிய திரியாவர உதடனைப்பார்க்கத்தன் உத்தமத்தில் நடக்கிற தரித்திரனே வாசி. * ௨௮, ௬.

௨ அறிவில்லாத ஆத்துமா நல்லதல்ல, கால்த்துரிதக்காரன்தப்பிநடக்கிறான்.

௩ மனுஷனின்பயித்தியம் அவன்வழியைத்தாறுமாறாக்கும், பிறகு கர்த்தருக்குவிரோதமாய் அவனிருதயந்தாங்கலாயிருக்கும்.

௪ * ஆஸ்தி அநேகருசிநேகிதரைச்சேர்க்கும், தரித்திரனோ தன் சிநேகிதனாலே நெகிழப்படுவான். * ௰௪, ௨௰.

௫ கள்ளச்சாட்சி ஆக்கினையில்லாதிருப்பதில்லை, பொய்களையூதுகிறவன் தப்பான்.
* ௫. மோசே. ௰௯, ௰௮—௨௰.

௬ உதாரனின் முகத்திற்குமுன்பாக அநேகர்வருந்துகிறார்கள், கொடைகொடுக்கிறவனுக்கு எவனும் சிநேகிதன்.

௭ தரித்திரனுடைய சகோதரரெல்லாரும் அவனைப்பகைக்கிறார்களே, எத்தனையதிகமாய் அவன் சிநேகிதர் அவனுக்குத் தூரமாவார்கள், அவர்கள் கொடுத்தவார்த்தைகளைத் தொடருகிறான், ஆனால் அவைகள் வெறுமை.

௮ ஞானத்தைத்தேடிக்கொள்ளுகிறவன் ஆத்துமாவைச்சிநேகிக்கிறான், உணர்வைக் காக்கிறவனுக்கு நன்மைகிடைக்கும்.

௯ * கள்ளச்சாட்சி ஆக்கினைக்குத்தப்பான், பொய்களையூதுகிறவன் அழிவான்.
* ௨௧, ௨௮.

௰ மூடனுக்குச்செல்வம் அடாது, பின்னையடிமைபிரபுக்களை ஆளுவதெப்படியிருக்கும்.

௰௧ * மனுஷனின் புத்தி அவனைச் சாந்தனாக்கும், மீறுதலைப் பாராமற்போகிறது அவனுக்கு மகிமை.

௰௨ * இராசாவின் சினம் சிங்கத்தின் கெர்ச்சிப்புக்கும், அவன் தயவு புண்டுகளின்மேற் பெய்யும் பனிக்கும் சமானம். * ௨௰, ௨.

௰௩ மூடனாகிய மகன் தன் தகப்பனுக்குச் சாலத் துக்கமாயிருக்கிறான், * பெண்சாதியின் சண்டைகள் ஓயாத ஒழுக்கு. * ௨௭, ௰௫.

௰௪ வீடும் ஆஸ்தியும் பிதாக்களால் வைக்கும் சுதந்தரம், * புத்தியுள்ள பெண்சாதியோ கர்த்தரால் கொடுக்கப்படுகிறாள்.
* ௰௮, ௨௨.

௰௫ சோம்பல் தூங்கிவிழப்பண்ணும், * அசதியான ஆத்துமா பட்டினியாயிருக்கும்.
* ௰, ௪.

௰௬ கற்பனையைக் காக்கிறவன் தன் ஆத்துமாவைக் காக்கிறான், அதின் வழிகளுக்கு அசட்டையாயிருக்கிறவனோ சாவான்.

௰௭ * ஏழைக்கிரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன் கொடுக்கிறான், அவனுடைய உபகாரத்தை யிவர் அவனுக்குப் பதில்கொடுப்பார். * மத்தே. ௰, ௪௨. ௨௫, ௪௰. லூக்க. ௬, ௩௮,

௰௮ நம்பிக்கையிருக்குமட்டும் * உன் மகனைத் தெண்டி, ஆனால் அவனைக் கொல்ல உன் ஆத்துமாவை யெழும்ப வொட்டாதே.
* எபேசியர். ௬, ௪.

௰௯ மகா உக்கிரமான ஆக்கினையடைவான், நீ யவனைத் தப்பவிட்டாலோ இனி அப்புறம் அவனைத் தெண்டிக்கலாம்.

௨௰ உன் கடைசி நாட்களில் நீ ஞானமுள்ளவனாயிருப்பதற்கு, ஆலோசனையைக் கேட்டுப் போதகத்தை யேற்றுக்கொள்.

௨௧ வெகு நினைவுகள் மனுஷனின் இருதயத்திலிருக்கும், ஆனாற் * கர்த்தரின் யோசனையே நிற்கும். * ௨௧, ௩௰.

௨௨ தன்மைசெய்ய மனுஷனுக்கிருக்கும் ஆசையே தயவு, பொய்யுள்ள மனுஷனைப் பார்க்கத் தரித்திரனவாசி.

௨௩ கர்த்தருக்குப் பயப்படுதல் மனுஷனைச் சீவனுக்குள்ளாக்கும், அவன் திருத்தியடைந்தவனாய் இராத்தங்குவான், பொல்லாப்பு அவனை யணுகாது.

௨௪ * சோம்பேறி தன் கையைக் கலத்திலே போட்டுவிட்டு அதைத் தன் வாயண்டைக்குத் திரும்ப வெடுக்காதிருக்கிறான்.
* ௨௬, ௰௫,

௨௫ * சக்கந்தக்காரனையடி, அப்போது பேதை விவேகமுள்ளவனாவான், உணர்வுள்ளவனைக் கடிந்துகொள் அறிவை உணர்வான். * ௨௧, ௰௧.

௨௬ வெட்கமும் இலச்சையும் உண்டாக்குகிற மகன் தகப்பனைப் பாழ்க்கடிக்கிறவனுந் தாயைப் பறக்கடிக்கிறவனுமாயிருக்கிறான்.

௨௭ என் மகனே, புத்தியைக் கேளாமல் விட்டுவிட்டாயாகில் அறிவின் வசனங்களை விட்டு வழிதப்பத்தான் அப்படிச் செய்வாய்.

௨௮ பேலியாளின் மனுஷனாகிய சாட்சிக்காரன் நியாயத்தை நிஸ்காரம்பண்ணுகிறான், ஆகாதவர்களின் வாய் அக்கிரமத்தை விழுங்கும்.

௨௯ சக்கந்தக்காரருக்கு நியாயத்தீர்ப்புகளும், மூடரின் முதுகுக்கு அடிகளும் ஆயத்தமாயிருக்கிறது.

## ௨௰. அதிகாரம்.

மதுபானஞ் சக்கந்தமுள்ளதும், லோட்டி அமளியுள்ளதுமாயிருக்கிறது, அதினால் மயங்குகிற ஒருவனும் ஞானியாவதில்லை.

௨ இராசாவின் உறுக்குதல் சிங்கத்தின் கெர்ச்சிப்புக்குச் சரி, அவனுக்குக் கோபமூட்டுகிறவன் தன் சீவனுக்குத் துரோகஞ்செய்கிறான்.

௩ வழக்கை விலகியிருக்கிறது மனுஷனுக்குக் கனம், ஆனாற் பிரதியக்காரனெவனும் அதிலே கலந்துபோகிறான்.

௪ சோம்பேறி குளிருகிறதென்று உழாதிருக்கிறான், அறுப்பிலே வேணுமென்பான், அப்போது ஒன்றுமில்லை.

௫ மனுஷனின் இருதயத்திலிருக்கும் யோசனை ஆழமான தண்ணீர்கள், உணர்வுள்ள மனுஷனோ அதை மொண்டெடுப்பான்.

௬ மனுஷரில் ஏராளத்தில் அவனவன் தன் தயவைக் கூறுகிறான், ஆனால் நல்உண்மையான மனுஷனைக் கண்டுபிடிப்பவனார்?

௭ நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கிறான், அவனுக்குப்பிறகு அவன் பிள்ளைகள் பாக்கியவான்கள். * ௱௰௨, சங்கீதம். ௨.

௮ நியாயாசனத்திலுக்கார்ந்திருக்கிற இராசா தன் கண்களினாற் சகல பொல்லாப்பையுஞ் சிதறப்பண்ணுகிறான்.

௯ * என் இருதயத்தை நான் சுத்தமாக்கித்தீர்ந்தது, என் பாவமறத் துப்பரவானேனென்று சொல்லுபவனார். * ரோமர். ௭, ௨௰.

௰ விதவிதமான படிக்கல்லும் விதவிதமான மரக்காலும், இரண்டுங் கர்த்தருக்கருவருப்பாயிருக்கும். * ௫, மோ. ௨௫, ௰௩. ௰௪.

௰௧ ஒரு பிள்ளையின் செய்கை சுத்தமுஞ் செம்மையுமாயிருக்குமோவென்று அதின் கிரியைகளாலும் அறியப்படும்,

௰௨ கேட்கிற காதுங் காண்கிற கண்ணுமான இவ்விரண்டையுங் கர்த்தர் உண்டாக்கினார்.

௰௩ நீ ஏழையாகாதபடிக்குத் * தூக்கத்தைச் சிநேகியாதிரு, உன் கண்களைத் திற, அப்போது அப்பத்தால் திருத்தியாவாய்.
* ௬, ௰.

௰௪ கொள்ளுகிறவன் ஆகாதது ஆகாதென்கிறான், கொண்டுபோனபின்பு மெய்ச்சுக்கொள்ளுகிறான்.

௰௫ பொன்னும் திரளான முத்துக்களுமுண்டு, அறிவுள்ள உதடுகளோ விலையேறப்பெற்ற ஆபரணம்.

௰௬ * அன்னியனுக்காகப் பிணைப்பட்டவனின் வஸ்திரத்தைப் பெடுத்துக்கொள், பிறத்தியானுக்காக அவனைக்கையில் அடகுவாங்கு. * உஎ, ௰௩.

௰௭ வஞ்சனையப்பம் மனுஷனுக்கின்பம், பிற்பாடோ வெனில் அவன்வாய்ப் பருக்கைக்கல்லுகளால் நிறையப்படும்.

௰௮ நினைவுகள் யோசனைகளால் திடப்பட்டுப்போகும், * நல்விவேகமாய் யுத்தம்பண்ணு. * உ௪, ௬.

௰௯ * தூறிக்கொண்டுதிரிகிறவன் இரகசியத்தை வெளிப்படுத்துவான், புத்தியில்லாத உதட்டோடே கலவாதே. * ௰௧, ௰௩.

உ௰ * தன் தகப்பனையுந் தாயையுந் தூஷிக்கிறவனின் தீபம் காரிருட்டிலே அவிந்துபோகும். * உ. மோசே. உக, ௰௭.

உக துவக்கத்திலே தீவிரமாய்ப் பிடித்த சுதந்தரம் பிற்காலத்திலே ஆசீர்வாதமற்றிருக்கும்.

உஉ * தீமைக்குச் சரிக்கட்டுவேனென்னாதே, கர்த்தருக்குக் காத்திரு, அவர் உனக்கு இரட்சிப்புண்டாக்குவார். * உ௪, உ௯. ரோமர். ௰உ, ௰௯.

உ௩ * விதவிதமான படிக்கல்லு கர்த்தருக்கருவருப்பாயிருக்கும், கள்ளத்தராசு நல்லதல்ல. ௰. வசனம்.

உ௪ கர்த்தராலே மனுஷனுடைய நடைகள் வாய்க்கும், மனுஷன் தானே தன்வழியையுணர்வதெப்படி?

உ௫ பரிசுத்தமானதை விழுங்கி நியமங்களைப் பண்ணினபின் சிந்தித்துப்பார்க்கிறது மனுஷனுக்குக் கண்ணியாயிருக்கும்.

உ௬ ஞானமுள்ள இராசா ஆகாதவர்களைச் சிதறடித்து அவர்கள் மேலுருளையை உருளப்பண்ணுவான்.

உ௭ மனுஷனின் ஆத்துமா கர்த்தர் தந்த தீபமாயிருந்து, வயிற்றின் உள்ளுக்குள்ளானவைகளையெல்லாம் ஆராயும்.

உ௮ தயவும் உண்மையும் இராசாவைக் காக்கும், * தயவினாலே தன் சிங்காசனத்தை நிற்கப்பண்ணுவான். * ௰௬, ௰உ.

உ௯ வாலிபரின் அலங்காரம் அவர்கள் வீரியம், முதிர்ந்தவயதானவர்களின் கனம் அவர்கள் நரை. * ௰௬, ௩௧.

௩௰ காயமான தழும்புகளும், உள்வயிறுமட்டும் உறைக்கும் அடிகளும் பொல்லாத வயனைமுக்கறத்துடைக்கும்.

# உக. அதிகாரம்.

இராசாவின் இருதயங் கர்த்தரின் கையிலே நீர்க்கால்களைப்போலிருக்கிறது, (சமஸ்தமானதெல்லாவற்றிற்கும் நேராக அதை வளைப்பார்.)

உ * மனுஷனின் வழியெல்லாம் அவன் பார்வைக்குச் செம்மையானது, ஆனாற் கர்த்தர் இருதயங்களை நிறுக்கிறார். * ௰௬. உ.

௩ பலியைப்பார்க்கிலும் நீதிநியாயஞ் செய்யுதலே கர்த்தருக்குப் பிரியம்.

௪ கண்களின் மேட்டிமையும் இருதய உப்புதலுமென்ற பொல்லாருடைய விளக்கு பாவமே.

௫ சாக்கிரதையுள்ளவனின் நினைவுகள் பிரயோசனந்துக்கே, பதறுகிறவனெல்லாங் குறைச்சலுக்கே.

௬ கள்ளநாவினாலே பொக்கிஷங்களைச் சம்பாதிக்குதல் சாவைத் தேடுகிறவர்களுடைய பறக்கடிக்கப்படுகிற மாயை.

௭ ஆகாதவர்களின் பாழ்க்கடிப்பு அவர்களைத் திகைக்கிடப்பண்ணப்போமென்னில் நியாயஞ்செய்ய மனதில்லாதிருக்கிறார்கள்.

௮ அப்படிக்கொத்த மனுஷனின் வழி மகா மாறுபாடும் வேறுமையுமாயிருக்கிறது. சுத்தவானுடைய கிரியையோ செம்மையாயிருக்கிறது.

௯ சண்டைக்காரியாகிய பெண்சாதியோடே ஒருவீட்டிலே கூடிக்கலந்திருப்பதைப்பார்க்க வீட்டின்மீதிலொருமூலையிலே தங்கியிருக்கிறதே தாவிலை.

௰ ஆகாதவனின் ஆத்துமா பொல்லாப்பை யிச்சிக்கும், அவன் கண்களில் அவனுக்கடுத்தவனுக்கிரக்கங்கிடையாது.

௰௧ * சக்கந்தக்காரனைத் தெண்டிக்கும் போது பேதை ஞானமடைவான், ஞானமுள்ளவனைப் போதித்தால் அறிவைக் கற்றடைவான். * ௰௯, உ௫.

௰உ ஆகாதவர்களைப் பராபரன் நிர்மூலப்பண்ணுகையில் நீதிமான் ஆகாதவனுடைய வீட்டைச் சிந்தனையோடே பார்க்கிறான்.

௰௩ தன்செவியை ஏழையின் கூக்குரலுக்கு விலக்கி அடைத்துக்கொள்ளுகிறவன் தானுங் கேட்கப்படாமற் கூப்பிடுவான்.

௰௪ அந்தரங்கமான காணிக்கை கோபத்தையும் மடியிலுள்ள பரிதானம் வலுவுக்கிரத்தையும் அமர்த்தும்.

௰௫ நியாயஞ்செய்வது நீதிமானுக்குச் சந்தோஷமும் அக்கிரமக்காரருக்குக் கலக்கமுமாயிருக்கிறது.

௰௬ புத்தியின் வழியைத் தப்பி நடக்கிற மனுஷன் செத்தவர்களின் கூட்டத்திலே தாபரிப்பான்.

௰௭ * சந்தோஷத்தைச் சிநேகிக்கிறவன் தாழ்ச்சியடையப்போகிற மனுஷன், மதுபானத்தையும் தயிலத்தையும் சிநேகிக்கிறவன் ஐசுவரியவானாவதில்லை. * லூக். ௰௫. ௰௩. ௰௪.

௰௮ * நீதிமானுக்கு மீட்பாக ஆகாதவனும் செம்மையானவனுக்குப் பதிலாகத் துரோகியுமிருப்பான். * ௰௧, ௮.

௰௯ * சண்டைக்காரியும் கோபக்காரியுமான பெண்சாதியோடே குடியிருப்பதைப்பார்க்கிலும் வனாந்தரத்திலே குடியிருப்பது நலம். * ௨௫, ௨௪.

௨௰ வேணுமென்கிற பொக்கிஷமும் கொழுப்பும் ஞானமுள்ளவனுடைய வாசஸ்தலத்திலுண்டு, பயித்தியக்காரனோ அதை விழுங்கிப்போடுகிறான்.

௨௧ நீதியையும் தயவையும் பின்தொடருகிறவன் ஜீவனையும் நீதியையும் மகிமையையுங் கண்டடைவான்.

௨௨ வீரியவான்களின் பட்டணத்தை ஞானமுள்ளவன் ஏறிப்பிடித்து அது நம்பியிருந்த அரணைப் பிடிக்கிறான்.

௨௩ தன் வாயையும் தன் நாவையுங் காக்கிறவன் தன் ஆத்துமாவை இக்கட்டுகளுக்கு விலக்கிக் காக்கிறான்.

௨௪ அகந்தையான சினத்தோடே எல்லாஞ்செய்கிற இடும்புள்ள அகந்தைக்காரனின் பேர் ஆகாமியன்.

௨௫ சோம்பேறியின் இச்சை அவனைச் சாகப்பண்ணும், ஏனென்றால் அவன் கைகள் வேலைசெய்யமாட்டோமென்கிறது.

௨௬ அவன் நாள்தோறும் இச்சித்துக்கொண்டேயிருக்கிறான், நீதிமானோ பிசினித்தனம்பண்ணாமற்கொடுப்பான்.

௨௭ * ஆகாதவர்களின் பலி அருவருப்பானது, அவனைத் தீவினையோடே செலுத்தினாலோ எத்தனை அதிகம்! * ஏசாயா. ௧, ௰௧.

௨௮ பொய்ச்சாட்சிக்காரன் கெட்டுப்போவான், செவிகொடுக்கிற மனுஷனோ என்றைக்கும் பேசத்தக்கவன்.

௨௯ ஆகாத மனுஷன் தன் முகத்தை அழுத்தமாக்குகிறான், செம்மையானவனோ தன் வழியை உறுதிப்பண்ணுகிறான்.

௩௰ கர்த்தருக்கெதிரையாக ஞானமுமில்லை உணர்வுமில்லை ஆலோசனையுமில்லை.

௩௧ குதிரை யுத்தநாளுக்காயத்தம்பண்ணப்படும், ஆனால் இரட்சித்தல் கர்த்தருடையது.

## ௨௨. அதிகாரம்.

திரளான ஐசுவரியத்தைப்பார்க்கிலும் * நற்கீர்த்தியே தெரிந்துகொள்ளப்படத்தக்கது, வெள்ளியையும் பொன்னையும்பார்க்கிலும் தயவே நலம். * பிரசங்கி. ௭, ௧.

௨ * ஐசுவரியவானுந் தரித்திரவானும் ஒன்றுக்கொன்று எதிர்ப்படுகிறார்கள், அவர்களனைவரையும் உண்டாக்கினவர் கர்த்தர். * ௨௯, ௰௩.

௩ விவேகமுள்ளவன் தீமைக்கண்டு மறைகிறான், பேதைகளோ நெடுகப்போய்ச் சேதமடைகிறார்கள். * ௨௭, ௰௨.

௪ தாழ்மைக்குங் கர்த்தருக்குப் பயப்படுதலுக்கும் வரும்பலன் ஐசுவரியமும் மகிமையுஞ் சீவனுந்தானே.

௫ திரியாவரனுடைய வழியில் முள்ளுகளுங் கண்ணிகளுமிருக்கும், தன் ஆத்துமாவைக் காக்கிறவன் அவைகளுக்குத் தூரமாய் விலகிப்போவான்.

௬ வாலிபன் நடக்கவேண்டிய வழியிலே அவனையுட்படுத்து, அப்போது அவன் கிழவனாகியும் அதைவிடாதிருப்பான்.

௭ ஐசுவரியவான் தரித்திரனையாளுகிறான், கடன்வாங்கினவன் கடன்கொடுத்த மனுஷனுக்கடிமை.

௮ அநியாயத்தை விதைக்கிறவன் வருத்தத்தையறுப்பான், அவனுடைய உக்கிரத்தின் மிலாறு ஒழியும்.

௯ நற்கண்ணனே ஆசீர்வதிக்கப்படுவான், ஏனென்றால் தன் அப்பத்தில் ஏழைக்குக் கொடுக்கிறான்.

௰ சக்கந்தக்காரனைத் துரத்திவிடு, அப்போ வாக்குவழக்குங் கனஈனமுமொய்ந்துபோம்.

௰௧ * சுத்த இருதயத்தைச் சிநேகிக்கிறவனின் உதடுகள் இன்பமானவைகள், இராசா அவன் சிநேகிதன். ௱௧, சங்கீதம். ௬.

௰௨ கர்த்தருடைய கண்கள் அறிவைத் தற்காக்கும், துரோகிகளின் வார்த்தைகளையோ அவர் தடுமாற்றமாக்குகிறார்.

௰௩ * வெளியிலே சிங்கமிருக்குமென்றும் வீதிகளிற் கொலையுண்பேனென்றுஞ் சோம்பன் சொல்லுகிறான். * ௨௬, ௰௩.

௰௪ பரஸ்திரிகளின் வாய் ஆழமான படுகுழி, கர்த்தருடைய சினத்துக்கேதுவானவன் அதிலே விழுகிறான். * ௨௩, ௨௭.

௰௫ பயித்தியம் வாலிபன் நெஞ்சுடனே ஒட்டியிருக்கும், அதைத் தண்டிப்பின் மிலாறு அவனைவிட்டகற்றும்.

௰௬ தனக்கதிகமுண்டாகத் தரித்திரனை ஒடுக்குகிறவன் குறைச்சலுண்டாகவே ஐசுவரியவானுக்குக் கொடுப்பான்.

௰௭ உன் செவியைச் சாய்த்து ஞானிகளின் வார்த்தைகளைக் கேட்டு உன் இருதயத்தை என்னறிவின்மேல் வை.

௰௮ ஏனென்றால் நீ அவைகளை உன்னுள்ளத்திலே காத்தால் இன்பமாயிருக்கும், அவைகள் உன் உதடுகளின்மேல் ஏகமாய் நிலைத்திருக்கும்.

௰௯ உன் நம்பிக்கை கர்த்தரின்மேல் இருப்பதற்காக உனக்கு ஆம் உனக்குத்தானே இன்றைத்தினம் அவைகளைத் தெரியப்படுத்துகிறேன்.

௨௰ உனக்குச் சத்தியவார்த்தைகளின் நிதானத்தைத் தெரியக்காட்டவும், நீ உன்னை அனுப்பினவர்களுக்குச் சத்தியவார்த்தைகளைக் கொண்டுபோய் மறுமொழிசொல்லவுமாக,

௨௧ உனக்கு நான் ஆலோசனைகளிலும் அறிவிலும் மகா பிரதானமானவைகளை யெழுதினதில்லையோ?

௨௨ ஏழையை அவன் ஏழையானபடியினாலே கொள்ளையிடாதே, சிறுமையானவனை வாசலில் நொறுக்காதே.

௨௩ * ஏனெனிற் கர்த்தர் அவர்கள் வழக்கை வழக்காடி அவர்களைக் கொள்ளையிடுகிறவர்களின் ஆத்துமாவைக் கொள்ளையிடுவார்.

* ௨. மோசே. ௨௨, ௨௨. ௨௩.

௨௪ கோபக்காரனுக்குத் தோழனாகாதே; உக்கிரமுள்ள மனுஷனோடே நடவாதே.

௨௫ நீ அவன் வழிகளைப் படிக்காமலும் உன் ஆத்துமாவுக்குக் கண்ணியை வருவிக்காமலுமிருக்கத்தானே.

௨௬ * கைபோட்டுக் கடன்களுக்காகப் பிணைப்படுகிறவர்களில் ஒருவனாயிராதே.

* ௰௧, ௰௫. ௰௭. ௰௮.

௨௭ செலுத்த உனக்கு இல்லாதிருந்தால் உன் கீழிருக்கும் உன் மெத்தையை யவர்கள் எடுத்துக்கொள்ளவேணும்?

௨௮ * உன் பிதாக்கள் உண்டுபண்ணின பூருவ எல்லையையொற்றிக்கட்டாதே.

* ௨௧, ௰. ௫ மோசே. ௨௭, ௰௭.

௨௯ தன் வேலையிற் சுறுசுறுப்புள்ளவனைக் கண்டாயோ? அவன் நீசருக்குமுன் பாநில்லாமல் இராசாக்களுக்குமுன்பாக நிற்பான்.

## ௨௩. அதிகாரம்.

௧ நீ ஒரு துரையோடே அசனம்பண்ண உட்கார்ந்தால் உனக்குமுன்பாக இருக்கிறவன் ஆரென்று நற்சிந்தனையாயிரு.

௨ நீ போசனப்பிரியனாயிருந்தால் உன் தொண்டையிற் கத்தியை வைத்திரு.

௩ அவனுடைய ருசிவர்க்கங்களை யிச்சியாதே, ஏனெனில் அது கள்ளப்போசனம்.

௪ * ஐசுவரியவானாகவேணுமென்று உழைக்காதே, அதற்கான உன்னுடைய விறுவைவிட்டுவிடு. * ௧. திமோ. ௬, ௯.

௫ உன் கண்களை அதின்மேற் பறக்கவிடுவாயோ அது இல்லாதேபோகிறதே, ஏனெனில் அது தனக்குக் கழுகைப்போற் செட்டைகளையுண்டுபண்ணி ஆகாயமாய்ப் பறந்துபோம்.

௬ வன்கண்ணனுடைய அப்பத்தைப் பொசியாமலும் அவன் ருசிவர்க்கங்களை யிச்சியாமலுமிரு.

௭ ஏனெனில் தன் மனதில் எப்படிச் சொத்திநதையாயிருக்கிறானோ அப்படிக் கொத்தவனாய் அவன் உன்னுடனே போசித்துக் குடியென்பான், அவன் இருதயமோ உன்னோடிராது.

௮ நீ சாப்பிட்ட உன் துணுக்கையை வாந்திபண்ணி உன் இன்பவார்த்தைகளை இழந்துபோவாய்.

௯ மூடனின் செவிகள் கேட்கப் பேசாதே, ஏனெனில் உன் வசனங்களின் புத்தியை அசட்டைபண்ணுவான்.

௰ * பூருவ எல்லையை ஏறிக்கடவாமல் அநதிக்கற்றவர்களின் நிலங்களில் உட்படாமலுமிரு. * ௨௨, ௨௮.

௰௧ ஏனெனில் அவர்களை மீட்பவர் வல்லவர், இவர் அவர்கள் வழக்கை உன்னோடே வழக்காடுவார்.

௰௨ உன் இருதயத்தைக் கடிந்துகொள்ளுதலுக்கும் உன் செவிகளை அறிவின் வார்த்தைகளுக்கும் உள்ளாக்கு.

௰௩ வாலிபனைத் * தண்டியாமல் விடாதே, ஏனெனில் நீ மிலாறினால் அவனை அடிக்கிறதினாலே சாகான். * ௨௪, ௰௫.

௰௪ நீ மிலாறினாலே அவனையடிக்கையால் அவன் ஆத்துமாவை நரகத்திற்குத் தப்புவிப்பாய்.

௰௫ * என் மகனே உன் இருதயம் ஞானமடைந்தால் என்னிலே என் இருதயமும் மகிழும். * ௨௭, ௰௧.

௰௬ உன் உதடுகள் நிதானங்களைப் பேசினால் என் உள்ளிந்திரியங்கள் களிகூரும்.

௰௭ உன் இருதயம் பாவிகள்மேற் பொறாமையடையாதிருப்பதாக, அந்தவிட்டு நாள்தோறுங் கர்த்தருக்குப் பயப்படுதலிலேயிரு.

௰௮ ஏனெனிற் பிற்காலம் வரும் உன் பார்த்துக்கொள்ளுதல் அவத்தமாவதில்லை.

௰௯ என் மகனே நீ கேட்டு ஞானமடைந்து, உன் இருதயத்தை வழிக்குள்ளாக்கிவிடு.

௨௰ * மதுபானக்குடியரிலும் மாமிசப் பெருந்தீனிக்காரரிலும் ஒருவனாயிராதே.

* லூக்கா. ௨௧, ௩௪. ரோமர். ௰௩, ௰௩.

௨௧ ஏனெனிற் குடியனும் பெருந்தீனிக்காரனுமானவன் தரித்திரனாவான், தூங்கல் கந்தைகளைத் தரிப்பிக்கும்.

௨௨ நீ உன்னைப்பெற்ற உன் தகப்பனின்சொற்கேட்டு முதுமையாகிற உன் தாயை அசட்டைபண்ணாதிரு.

௨௩ சத்தியத்தையும் ஞானம் புத்தி உணர்வையுங்கொள்ளு, அதை விற்காதே.

௨௪ நீதிமானுடைய தகப்பன் மிகவுங் களிகூருவான், ஞானியைப் பெற்றவன் அவனாலே மகிழுவான்.

௨௫ உன் தகப்பனும் உன் தாயும் மகிழ்க்கடவார்கள், உன்னைப் பெற்றவள் களிகூருவாளாக.

௨௬ என் மகனே உன்னிருதயத்தை எனக்குத்தா, உன் கண்கள் என் வழிகளின்மேற் பிரியமாவதாக.

௨௭ ஏனென்னில் வேசி * ஆழமான படுகுழியும், அன்னிய ஸ்திரீ இடுக்குத் துரவுமாயிருக்கிறாள். * ௨௨, ௰௪.

௨௮ அவளும் கொள்ளைக்காரனைப் போலப் பதிவிருந்து மனுஷரிற் பாதகரை அதிகமாக்குகிறாள்.

௨௯ ஆருக்கையோ ஆருக்கையோ, ஆருக்குச் சண்டைகள் ஆருக்கு விசாரம் ஆருக்கு முகாந்திரமில்லாத காயங்கள் ஆருக்கு இரத்தங் கலந்த கண்களுமுண்டாயிருக்கும்.

௩௰ மதுபானம் இருக்குமிடத்திலே தங்கித் தரிக்கிறவர்களுக்கும் மொட்டடியைத் தேடப் போகிறவர்களுக்குந்தானே.

௩௧ நீ மதுபானத்தை நல் வர்ணமென்றும், பாத்திரத்திலே தன்னொளியைக் காண்பிக்குமென்றும் மெதுவாய் இறங்குமென்றும் பாராதே.

௩௨ அதின் பிறகு அது பாம்பைப் போலக் கடித்துக் கட்டுவிரியனைப் போலத் தீண்டும்.

௩௩ உன் கண்கள் பரஸ்திரிகளை நோக்கி, உன்னிருதயம் மாறுபாடுகளைப் பேசும்.

௩௪ நீ நடுக்கடலிலே சயனித்திருக்கிறவனைப் போலேயும் பாய்மரத் தட்டியிலே படுத்திருக்கிறவனைப் போலேயுமிருப்பாய்.

௩௫ என்னையடித்தார்கள், எனக்கு நோகவில்லை, என்னைக் குட்டினார்கள், எனக்குச் சொரணையில்லை, * நான் அதை அப்புறந் தொடர்ந்து தேட எப்போ விழிப்பேனென்பாய். ஏசாயா. ௫௬, ௰௨.

## ௨௪. அதிகாரம்.

பொல்லாத மனுஷர்மேற் பொறாமையாகாதே, அவர்களோடிருக்க ஆசையுமாயிராதே. ௨௩, ௰௭.

௨ ஏனென்னில் அவர்களிருதயம் பாழ்க்கடிப்பையோசித்து, * அவர்கள் உதடுகள் தீவினையைப் பேசும். * சங்கீ. ௰, ௭.

௩ வீடு ஞானத்தாற் கட்டப்பட்டு விவேகத்தால் நிலைநிறுத்தப்படும்.

௪ அறிவினாலே அறைகள் சகலவித அருமையும் விருப்பமுமான ஆஸ்தியால் நிரப்பப்படும்.

௫ ஞானமுள்ள மனுஷன் பெலனுள்ளவன், அறிவுள்ள மனுஷன் தன் திராணியை உரமாக்கிக்கொள்ளுகிறான்.

௬ ஏனென்னில் நல்விவேகத்தாலே நீ உன் கருவாயக்க யுத்தம்பண்ணுவாயாக, அநேகம் ஆலோசனைக்காரராற் செயமாகும். * ௰௧, ௰௪. ௨௰, ௰௮.

௭ மூடனுக்கு ஞானமெல்லாம் எட்டா உயர்த்தியாயிருக்கிறது, வாசலில் தன் வாயைத் திறவான்.

௮ தீங்குசெய்ய நினைக்கிறவனைத் தீவினைக்காரனென்பார்கள்.

௯ பயித்தியச்செயல் பாவந்தான், சரசக்காரனே மனுஷருக்கருவருப்பானவன்.

௰ நெருக்கத்தின் நாளில் நீ வாக்கரித்துப் போனாயானால் உன் திராணி கொஞ்சமாயிருக்கும்.

௰௧ * மரணத்திற் கிழுப்புண்கிறவர்களையுங் கொலைக்குக் கொண்டுபோகப்படுகிறவர்களையும் அதற்கு விலக்க உன்னாலேகூடுமானால் அவர்களை விடுவி. * ௮௨, சங்கீ, ௪.

௰௨ இதோ அவனையறியோமென்றாயாகில், * இருதயங்களை நிறுக்கிறவர் அதை உணராரோ? உன்னுத்துமாவைக் காக்கிறவர் அதையறியாரோ? அவர் மனுஷனுக்கு அவன் செய்கைக்குத்தக்கதாயச் சரிக்கட்டாரோ? ௭ரோ. ௰௭, ௰.

௰௩ என் மகனே தேனைச் சாப்பிடு, ஏனென்னில் அது நல்லது. தேன்கூண்டொழுகல் உன் வாய்க்கு இன்பருசியாயிருக்கும்.

௰௪ அப்படியே * ஞானத்தை உன்னுத்துமாவுக்கானதென்றறிந்துகொள், அதைக் கண்டுபிடித்தால் அது பிற்காலத்திலுதவும், உன் பார்த்துக்கொள்ளுதல் அவத்தமாவதுமில்லை. * ௰௯, சங்கீ. ௰௪.

௰௫ நீ ஆகாதவனாய் நீதிமானின் வாசஸ்தலத்திற்குப் பதிவிராதே, அவன் படுக்கையைப் பாழ்க்கடிக்காதே.

௰௬ ஏனென்னில் * நீதிமான் ஏழுதரம் விழுந்தும் எழுந்திருப்பான், ஆகாதவர்களோ தீங்கிலே இடறுண்டுவிடப்பார்கள்.

* யோபு. ௫, ௰௯. சங்கீ. ௩௪, ௨௰.

௰௭ * உன் சத்துரு விழுகிறபோது சந்தோஷியாதே அவனிடறுண்டுபோகிறபோது உன்னிருதயங் களிகூராதிருப்பதாக.

* யோபு ௩௧, ௨௯.

௰௮ கர்த்தர் கண்டு அது அவர் பார்வைக்குப் பொல்லாப்பாயிருக்கையால் அவர் தம்முடைய கோபத்தை அவனை விட்டுத் திருப்பிப் போடாதபடிக்குத்தானே.

௰௯ * பொல்லாதவர்கள்மேல் எரிச்சலாகாதே, ஆகாதவர்கள்மேற் பொறாமையாகாதே. * சங்கீ. ௩௭, ௧.

௨௰ ஏனென்னிற் பொல்லாதவனுக்கு நல்முடிவில்லை, * ஆகாதவர்களின் விளக்கவியும். * ௰௩, ௯.

உக எனமகனே, * கர்த்தருககும இராசாவுககுமபயநதுநட, பினனபேதகரோடேகலவாதை. * க. பேதுரு. உ, யஎ.

உஉ ஏனெனில அசுபபிலேஇவர்களுடைய ஆபதெழுமபும,இவர்களிருவரினசஙகாரததை அறிநதவனுர்?

உங பினனையும ஞானமுளளவர்களுககு பபுததிமதிகளென்னவெனில நியாயததிலே முகதாட்சணை நலலதலல.

உச ஆகாதவனுககுநீதிமானென்றுசொலலுகிறவனைசசனஙகள சபிப்பார்கள சனஙகள அவனைவெறுபபார்கள.

உரு அவனைக் கடிநதுகொளளுகிறவர்களமேற் பிரியமுணடாம. இவர்களமேல நனமையின ஆசீர்வாதமவரும.

உசு செமமையான மறுவுத்தரவுசொலலுகிறவன உதடுகளைமுத்தஞ செயகிறவனுககுசசரி.

உஎ நீ வெளியிலுளள உன வேலையைச சேகரமாககி வயலிலுளள அதையுனககுப பணிக்காயவை, பிறகு உனவீடடைககடடு.

உஅ வீணுய நீ உனக்கடுத்தவனுககு விரோதமாகச்சாட்சியாகாதை, உனனுதடுகளால நீ பயிறுவிக்காமலுமிரு.

உகூ * எனக்கெப்படிசசெயதானுேஅபபடி அவனுககுஞசெயவேன, அவன்வனுக்கவனகிரியைககுத்தக்கதாயசசரிக்கட்டுவேனென்காதை. * உய, உஉ.

கய நான சோமபற்காரனின வயலையும மதியிலலா மனுஷனின திராட்சத்தோட்டத்தையுங்கடநதுவநதேன.

கக இதோ அவையெலலாமமுட்காடுமாய அதினதரைகாஞ்சோறிகளால மூடபபடடு அதின கற்சுவர் இடிநதுவுமாயககிடநதது.

கஉ நான அதைக்கணடு என சிநதனையையதினமேலவைதது அதைபபார்ததுப புததியைககறறுககொணடேன.

கங * இன்னஙகொஞசந தூக்கஙகளும இன்னஙகொஞசம உறக்கஙகளுஞ சயனிபபுக்கின்னஙகொஞசங் கைகடடிககொளளுதலுமோ? * சூ, ய. யக.

கச அபபடியானுல உன தரித்திரமவழிப்போக்கனைபபோலவும உனகுறைசசலை ஆயுதமணிநதவனைபபோலவுமவரும.

## உரு. அதிகாரம்.

இவைகளுஞசாலோமோனினவாககியஙகள, இவைகளை யூதாவின இராசாவாகிய எசேக்கியாவினமனுஷர் பேர்நதெழுதிச சேர்த்தார்கள.

உ காரியததைப புதைபொருளாககுதல் பராபரனுடைய மேனமைகாரியததையாராயுதல இராசாக்களுடையமேனமை.

ங வானததின உயரததிற்கும பூமியின ஆழததிற்கும இராசாக்களின இருதயஙகளுக்கும ஆராயுதவிலலை.

ச வெளளியிலிருககிறமஸ்டுகளை நீககிபபோடு அபபோதுதடடானுலே நலலஉடைமைபிறககும.

ரு இராசாவுககுமுனபாகவிருககிறஆகாதவனை நீககிபபோடு, அபபோது அவன ஆசனம * நீதியாலேநிலைககும. * யசு, யஉ.

சு இராசாவுககுமுனபாகச சிலாககியமபணணுதை, பெரியோர்களின இடததிலுமநிலலாதை.

எ ஏனெனில * உனகணகள பார்ததுககொணடிருநதபிரபுககுமுனபாக அவர்களுனனைத்தாழததுவதைபபார்கக இஙகேயேறிவாவெனறு உனனேடே சொலலுவதேநலலது. * லூக்கா. யச, அ—யக.

அ கடைசியில உனக்கடுத்தவன உனனை வெட்கப்படுததுமபோது நீ என்னசெயயலாமெனறுதிகைகயாதபடிக்கு வழக்காடததீவிரமாயபபுறபபடாதிரு.

கூ நீ உனக்கடுத்தவனோடே உனவழககை நடத்திக்கொள்; மறறவனுடைய இரகசியததைவெளியாக்காதை.

ய கேட்கிறவன உனனை உன அவதூறு திருமபாதபடியாய நிநதிக்காமலிருக்கத்தானே.

யக தனதனசமயததிலே * சொலலபபட்டவார்ததை வெளளிததடடுகளில வைக்கபபடட பொனனிறக்கொளளுசிப்பழஙகளுககொபபானது. * யரு, உங.

யஉ கேட்கிறசெவிககு ஞானமாயக்கடிநதுகொணடுசொலலுகிறவன பொற்கடுக்கனுககும அபரஞசிபபூஷணததிற்குஞ சரி.

யங கோடைநாளிலே உறைநத மழையினகுளிர்சசியெப்படியிருககிறதோ அபபடி உணமையுளளதூதன தனனையனுபபினவர்களுககிருநது தன எசமானகளின ஆததுமாவைககுளிரபபணணுகிறுன.

யச களள வாககுத்தத்தஙகளைபபணணிப்பெருமைபாராட்டுகிறமனுஷன மழையிலலாதமேகஙகளுககுமகாறறுககுஞசரி.

யரு நீணடசாநதத்தினுலேபிரபுசமமதமாக்கப்படுவான, * மெதுவான நாவு எலுமபைநொறுககும. * யரு, க.

யசு தேனைக்கணடுபிடித்தாயானுல நீயதிகமாயிருநதியானால அதைவாநதிபணணுதபடிககு உனககுப போதுமடடாயச் சாபபிடு.

யஎ உனக்கடுத்தவன உனமேலவெறுபபாகி உனனைபபகையாதபடிககு உனகாலை அவனவீடடிலே மிசசமாயபபோகவொட்டாதிரு.

யஅ தனக்கடுத்தவனமேற் பொய்ச்சாட்சிசொலலுகிற மனுஷன சுததியலுக்கும

ட்டையத்துக்குங்கூர்மையான அம்புக்குஞ் சரி.

௧௯ இடுக்கணின் நாளிலே துரோகியை நம்புதல் உடைந்த பல்லுக்கும் தள்ளாடுகிற காலுக்குஞ்சரி.

௨௰ திகைத்துப்போகிற இருதயத்திற்குப் பாட்டுகளைப்பாடுகிறவன் குளிர்நாளிலே வஸ்திரத்தைக்களைகிறவனைப்போலேயும் வெடியுப்பின்மேல் வார்த்தகாடியைப்போலேயுமிருக்கிறான்.

௨௧ உன்பகைஞனுக்குப் பசியிருந்தால் அவனுக்கு அப்பஞ்சாப்பிடக்கொடு, அவனுக்குத்தாகமிருந்தால் அவனுக்குத்தண்ணீர்குடிக்கக்கொடு. மத்தேயு. ௫, ௪௪. ரோமர். ௧௨, ௨௰. ௨௧.

௨௨ ஏனெனில் அப்படி அவன் தலையின் மீதில் நீ எரிகிற தரிகளைக்குவிப்பாய், கர்த்தரும் உனக்கீடளிப்பார்.

௨௩ வாடைக்காற்று மழையையும் பின் பொறணிநாவு கோபமுகத்தையும் பிறப்பிக்கும்.

௨௪ * சண்டைக்காரியோடே கூட ஓர் வீட்டிலேகுடியிருப்பதைப்பார்க்க வீட்டின்மீதில் ஒருமூலையிலே தங்குகிறதே நலம். * ௨௧, ௯.

௨௫ தூரதேசத்திலிருந்துவருகிற நற்செய்திவிடாய்த்த ஆத்துமாவிற்குக்கிடைக்குங்குளிர்ந்ததண்ணீருக்குச்சரி.

௨௬ ஆகாதவனுக்குமுன்பாகத் தள்ளாடுகிற நீதிமான் கலங்கின ஊற்றுக்குங்கெட்டுப்போன சுனைக்குஞ்சரி.

௨௭ மிச்சமாய்த் தேனைச்சாப்பிடுகிறது நல்லதல்ல,ஞானக்காரியங்களின் மகிமையாராய்கிறதோமகிமை.

௨௮ தன்ஆவியையடக்காத மனுஷன் மதிலில்லாத இடிசற்பட்டணத்துக்குச்சரி.

## ௨௬. அதிகாரம்.

வசந்தகாலத்திலே யுறைந்தமழையும் அறுப்பிலேமாரியும் ஒவ்வாததுபோல மூடனுக்குமகிமையும் ஒவ்வாதிருக்கும்.

௨ குருவிபலைந்து காட்டுப்புறா பறந்து போகிறதுபோலே முகாந்திரமில்லாமலிட்டசாபமவராதேபோகிறது.

௩ குதிரைக்குச் சவுக்கும் கழுதைக்குக் கடிவாளமும், * மூடரின்முதுகுக்குமிலாறுமானது. * ௰, ௰௩.

௪ நீயும் மூடனுக்கொப்பாகாதபடிக்கு அவன் பயித்தியத்தின்படி அவனுக்குமறுவுத்தரவுசொல்லாதிரு.

௫ மூடன்தன்பார்வைக்கு ஞானியாயிராதபடிக்கு அவன்பயித்தியத்தின்படிஅவனுக்கு மறுவுத்தரவுசொல்லாதிரு.

௬ மூடன்கையிலே செய்தியனுப்புகிறவன் தன்காலகளைத்தறித்து நஷ்டத்தைக்குடிக்கிறான்.

௭ நொண்டியின்காலகள் ஒருந்திக்குந்தி நடக்கும்மாப்போலே மூடரின் வாயிலுள்ள உவமைச்சொல்லுமிருக்கும்.

௮ மூடனுக்குக்கனங்கொடுக்கிறவன் கவண்டிலே கல்லை வைக்கிறவனைப்போலிருக்கிறான்.

௯ மூடர்வாயிலுள்ளபழமொழிவெறியன் கையிலேயகப்பட்டமுள்ளு.

௰ பெலத்தவன் அனைவரையுமநோகப்பண்ணி மூடனையும்வேலைகொள்ளுகிறான், மீறிநடக்கிறவர்களையும்வேலைகொள்ளுகிறான்.

௰௧ * தன் பயித்தியத்திலே மறுபடியம் உள்ளாகிற மூடன் தான்கக்கினதற்குத்திரும்புகிற நாயைப்போலிருக்கிறவன். * ௨. பேதுரு. ௨, ௨௨.

௰௨ * தன்பார்வைக்குஞானியாகியமனுஷனைக்கண்டாயானால அவனைப்பார்க்கிலும் மூடன்பேரிலே அதிக நம்பிக்கையுண்டு. * ரோமர். ௰௨, ௰௭.

௰௩ வழியிலே துஷ்டசிங்கமிருக்குமென்றும் நடுவீதிகளிலே சிங்கமிருக்குமென்றும் சோம்பேறிசொல்லுவான். * ௨௨, ௰௩.

௰௪ கதவு தன்முளையிலே ஆடுமாப்போலே சோம்பேறி தன் படுக்கையிலிருக்கிறான்.

௰௫ * சோம்பேறி தன் கையைக்கலத்திலேப்போட்டுவிட்டு அதைத்தன்வாய்க்குத் திரும்பஎடுக்கவிடாய்க்கிறான். * ௰௯, ௨௪.

௰௬ புத்தியுள்ளமறுவுத்தரவுசொல்லுற ஏழுபேரைப் பார்க்கிலும் சோம்பேறி தன்பார்வைக்கு ஞானமுள்ளவன்.

௰௭ வழிநடந்து தனக்கடாதவழக்குக் குட்பட்டுஉக்கிரமாகிறவன் ஒருநாயின்காதுகளைப்பிடிக்கிறவனைப்போலிருக்கிறான்.

௰௮ விளையாடுகிறவனைப்போலே கானபிந்து நெருப்புகளையும் அம்புகளையுஞ்சாவுக்கினமானவைகளையும் எறிகிறவன் எப்படியிருக்கிறானோ,

௰௯ அப்படியே தனக்கடுத்தவனை வஞ்சித்து நானபரியாசமல்லோ பண்ணினேனென்று சொல்லுகிற மனுஷனுமிருக்கிறான்.

௨௰ விறகில்லாமல் நெருப்பு அவியும், பின்பொறணிக்காரனில்லாமற் சண்டை அடங்கும்.

௨௧ கரிகள் தழலுக்கும் விறகுநெருப்புக்குமின்மானதுபோல வழக்குக்காரன் சண்டையை மூட்டுகிறதற்கினமானவன்.

௨௨ * பின்பொறணிக்காரனின் வார்த்தைகள் பரியாசச்சொற்களைப்போலிருக்கும், அவை அவைகள் வயிற்றுக்குள்ளிறங்கும். * ௰௮, ௮.

உக இருதயமபொலலாததாகியும நேசனைககாணபிககிற உதடுகளகலபபிடமான வெளளிபபூசசுமூடிய ஓடடுககுசசரி.

உச பகைஞன தன உதடுகளாலே வேஷமபோடடுத தன உளளததிலே கபடம வைககிறான.

உரு அவன தன சத்தத்தைத தயவாககினாலும அவனை நமபாதே, ஏனெனில ஏழு அருவருபபுகள அவனிருதயததிலிருககும.

உசா அவனபகை கபடமாய மறைககபபடடிருககிறது, ஆனாலும சபையிலே அவனபொலலாஙகு வெளிபபடும.

உஎ * படுகுழிவெடடுகிறவன அதிலே விழுவான, கலலைபபுரடடுகிறவனமேலேதானே அது திருமபும. * சங்கீ. எ, யரு. பிர. ய, அ.

உஅ களளநாவுதனனாலே உபததிரவபபடுகிறவர்களைபபகைககும இசசககவாயுடனடயுணடுபணணும.

# உஎ. அதிகாரம்.

நாளையததினததைததொடடுப பெருமைபாராடடாதே, ஏனெனில ஒருநாள பிறபபிபபதை அறியாய. யாககோபு. ச, யங. யச.

உ உனவாயலலபிறததியானும, உனனுதடலல அநநியனுமே உனனைபபுகழடும.

ந கலலு கனமும மணல பாரமுமாமே, பயிததியகாரனின கோபமோ அவவிரணடிலும பாரமாயிருககிறது.

ச உககிரஙகுரோதமுங கோபம பிரளயமுமாயிருககிறது, ஆனாலும எரிசசலினமுனநிறபவனார்?

ரு மாயமானசிநேகததைபபார்ககவெளியரஙகமான அதடடுதலதாவிலலை.

சா சிநேகிதனின அடிகள உணமையுளளவைகள, சததுருவின முததங்களோ வெடகமெனனபபடததககவைகள. * சங்கீதம. ாசக. ரு.

எ திருததியான ஆததுமா தேனகூடடையும மிதிககும, பசியுளள ஆததுமாவுககோ கசபபெலலாந திததிபபாயிருககும.

அ தனகூடடைவிடடலையுங குருவி எபபடியிருககிறதோ, அபபடித தனதானததைவிடடலைகிறமனுஷனிருககிறான.

கூ பரிமளதயிலமும சுகநதபபுகையும இருதயததைச சநதோஷிபபிககிறதுபோல ஒருவனுடைய சிநேகிதனின இனபமுடடக்குததான யோசனையினால அவனைச சநதோஷிபபிககும.

ய உனசிநேகிதனையும உனதகபபனின சிநேகிதனையுமவிடாதே, * உன ஆபததுநாளில உனசகோதரனவீடடிலே போகாமலுமிரு, தூரமானசகோதரனைபபார்ககசசமீபமான அயலானவாசி. * யஎ, யஎ. யஅ. உச.

யக என மகனே, என்னை நிநதிககிறவனுககுசசொலலததகக மறுவுததரவு எனககுணடாகநீஞானம அடைநது * எனனிருதயததைசசநதோஷபபடுததது * உங, யரு.

யஉ * விவேகமுளளவன தீஙகைககணடு மறைகிறான, பேதைகளோ நெடுகபபோயச சேதமடைகிறார்கள. உஉ, ந.

யங * அநநியனுககாகபபிணைபபடடவனினவஸதிரததையெடுததுககொள, பிரததியாருககாக அவனகையில அடகுவாஙகு. * உய, யசா.

யச காலமே எழுநது மகா சத்தத்தோடே தனககடுததவனையாசீர்வதிககிறவனுககு அது சபிககுதலாக எணணபபடும.

யரு * அடைமழைநாளில ஓயாத ஒழுககும சணடைககாரியான ஸதிரியும ஒனறுககொனறுசரி. * யசா, யங.

யசா அவளையொளிககிறவன காறறையடககித தனவலதுகையில எணணெயைபபிடிபபான.

யஎ இருமபை இருமபு கருககிடும, அபபடியே மனுஷன தனககடுததவனின முகததைக கருககிடுகிறான.

யஅ அததிமரததைககாககிறவன அதின கனியைபபுசிபபான, தனஎசமானைககாககிறவன கனம அடைவான.

யகூ தணணீரில முகஙகளுககு முகஙகள ஒததிருககுமாபபோலே மனுஷனுககு மனுஷனிருதயம ஒததிருககும.

உய பாதாளமும அழிவுந திருபதியாகிறதிலலை, * மனுஷனினகணகள திருபதியாகிறதுமிலலை. * பிரசங். க, அ.

உக வெளளிககுபபுடமும பொனனுககுககுகையும மனுஷனுககு அவனுககுணடாம புகழ்சசியுஞசோதனை.

உஉ நீ உலககையாலே பயிததியகாரனை உரலில நொயகளுளளே நொயயாகக் குததினாலும அவனபயிததியம அவனைவிடடுபபிரியாது.

உங உனஆடுகளின இருபபை நனறாய அறிநதுகொள, மநதைகளினமேல உனகவனததைவை.

உச ஏனெனில ஆஸதியெனறைககும நிற்காது, கிரீடந தலைமுறைதலைமுறையாகவிருககுமோ?

உரு புலலுமுளைததுப பசசைகளகாணபபடுமபோது மலைகளின பூணடுகளசேர்ககபபடலாமே.

உசா ஆடடுககுடடிகள உனககுடுபபையுஙகடாயகள வயலைசசமபாதிககும விலையையுங கொடுககும.

உள வெளளாடுகளுடையபாலஉன ஆகாரததுககும உனவீடடாரின ஆகாரததுககும உனவேலைககாரிகளின பிழைபபுககும போதும.

## உஅ. அதிகாரம.

ஆகாதவர்கள தொடருவாரொருவருமிலலாமல ஓடிபபோகிருர்கள, நீதிமானகளோ சிஙகததைபபோலே திடனாயிருககிருர்கள. ௯. மோசே. உகூ, ௯கூ.

உ தேசததினமீறுதலினுலே அதின அதிகாரிகள அநேகராயிருககிருர்கள, உணர்வும அறிவுமுளள மனுஷனுலோ நற்சீர் நீடிககும.

௩ ஏழைகளையொடுககுகிறதரிததிரன ஆகாரமவிளையாதபடிககு வெளளம அடிககபபணணுகிற மழைககுசசமானம.

௪ நியாயபபிரமாணததை விடுகிறவர்கள ஆகாதவனைபபுகழுகிருர்கள, நியாயபபிரமாணததைக காககிறவர்களோ அவர்களோடேபோராடுகிருர்கள.

௫ பொலலாதமனுஷர் நியாயததையுணரார்கள, கர்ததரைததேடுகிறவர்களோ சகலததையுமுணருகிருர்கள.

௬ * இருவழித்திரியாவரககாரனுகிய ஐசுவரியவானைப பார்ககத தன உததமததிலே நடககிற தரிததிரனேவாசி. * ௰௬, ௧.

௭ நியாயபபிரமாணததைக கைககொளளுகிறவன உணர்வுளளமகன, பெருந்தினிககாரருககுததோழனுனவனே தனதகபபனை அவமானபபடுததுகிருன.

௮ அநியாயவடடியினுலும ஆதாயததினுலுந்தனஞஸ்திியைப பெருககபபணணுகிறவன தரிததிரருககிரஙகுகிறவனுககு அதைசசேர்ககிருன.

௯ வேதத்தைக கேளாதபடிககுத தன செவியை விலககுகிறவனின்ஜெபமும அருவருப்பு.

௰ செமமையானவர்களைப பொலலாதவழிககுளளாககி மோசம போககுகிறவன தனபடுகுழியிலேதானேவிழுவான, உததமரோ நனமையைசசுதநதரிபபார்கள.

௰௧ ஐசுவரியமுளள மனுஷன தனபார்வைககு ஞானமுளளவன, உணர்வுளள தரிததிரனே அவனையாராயநதுகொளளுவான.

௰௨ * நீதிமானகளகளிகூருமபோதும காசிதகாரமாயிருககும, ஆகாதவர்களஎழுமபுமபோதோ மனுஷன தேனபடுகிறதரிது, * உகூ, உ.

௰௩ * தனமீறுதலகளை மறைககிறவனசீர்படுகிறதிலலை, அவைகளையறிககையிடடுவிட்டுவிடுகிறவனே இரககமபெறுவான.

* ௧. யோவா. ௧, அ. ௯.

௰௪ எபபோதுமபயநதிருககிறவனபாககியவான, தன நெஞசைக கடினபபடுததுகிறவனே தீஙகிலேவிழுவான.

௰௫ ஏழைசசனததை யாளுகிற ஆகாததுரை கெர்சிககிறசிஙகததுககும சுறறித்திரிகிற கரடிககுஞசமானம.

௰௬ தலைவன உணர்வுதாழ்ச்சியாயிருநதால இடுக்கண்களைசசெயவதுமிகுதி, பொருளாசையைபபகைக்கிறவன நீடிததநாளிருபபான.

௰௭ ஒரு ஆததுமாவின இரத்தபபழிக்காகவொடுக்கபபடுகிறமனுஷனகுழியிலோடுகைகவோடிவநதால அவனையாதரிகக வேணடாம.

௰௮ உத்தமமாய்நடககிறவன இரட்சிக்கபபடுவான, இருவழித்திரியாவரனோதனதிலேவிழுவான.

௰௯ * தனனிலததைப பயிரிடுகிறவன அப்பத்தாலே திருததியாவான, வீணரைபபினபறறுகிறவனே தரிததிரததைத்திருததியாயடைவான. * ௰௨, ௰௧.

உ௰ நல் உண்மையுளள மனுஷனபரிபூரண ஆசிர்வாதஙகளோடே யிருபபான, * ஐசுவரியவானுகிறதற்குத் தீவிரிககிறவனோ ஆககினைககுத்தபபான. * உ௰, உ௧.

உ௧ முகதாட்சணியமநலலதலல, ஒரு அபபததுணுககைககினிமித்தமும அபபடிககொத்தமனுஷன அநியாயஞசெயவான.

உஉ வன்கணணன ஐசுவரியததைப் பெறவிரைநது தனககுக்குறைசசல வருமெனறறியாதிருககிருன.

உ௩ நாவினுல் இசசகமபேசுகிறவனைப் பார்கக ஒருமனுஷனைககடிநதுகொளளுகிறவனுககே பிறகுதயவுகிடைககும.

உ௪ தனதகபபனையுந தன தாயையுங கொளளையிடடு அது துரோகமலலவெனபவன பாழ்க்கடிககிற மனுஷனுககுத தோழன.

உ௫ பெருநெஞசனவழக்கைக் கொளுவுகிருன, கர்ததரை நமபுகிறவனே புஷ்டியடைவான.

உ௬ தனனிருதயததைநமபுகிறவனமூடன, ஞானததிலே நடககிறவனே தபபுவான.

உ௭ * தரிததிரனுககுக கொடுககிறவனே தாழ்ச்சியடையான, தனகண்களைவிலககுகிறவனுககோ வெகுசாபஙகளவரும.

* ௫. மோசே. ௰௫, ௰.

உ௮ ஆகாதவர்களஎழுமபுமபோதுமனுஷன ஒளிககிருன, அவர்கள அழியுமபோது நீதிமானகள பெருகுகிருர்கள.

## உ௯. அதிகாரம்.

வெகுவாயஅதடடபபடடுநதனபிடரியைக்கடினபபடுததுகிறமனுஷன சடுதியி

சவ குணமாகக்குதவில்லாமலும் நொறுங்குண்பான்.

௨ * நீதிமான்கள்பெருகினுற் சனம்மகிழும், ஆகாதவன் ஆளும்போதோசனந்தவிக்கும். * ௰௧, ௰.

௩ ஞானத்தைச் சிநேகிக்கிற மனுஷன் தன்தகப்பனைமகிழ்ப்பண்ணுகிறன், வேசிகளோடேதொந்திப்பானவனே ஆஸ்தியையழிக்கிறன்.

௪ நியாயத்தாலே இராசா தேசத்தை நிலைநிறுத்துகிறன், பரிதானப் பிரியனே அதைக்கவிழ்க்கிறன்.

௫ தனக்கடுத்தவனுக்கிச்சகம் பேசுகிற மனுஷன், அவன்காலடிகளுக்குவலையைவிரிக்கிறவன்.

௬ பொல்லாதமனுஷனின் துரோகத்திலே கண்ணியிருக்கிறது, நீதிமானேகெம்பீரித்துமகிழுகிறன்,

௭ நீதிமான் ஏழைகளின்நியாயத்தையறிந்துகொள்ளுகிறன், ஆகாதவன் அறிவையுணரான்.

௮ சரசக்காரராகிய மனுஷர் ஊரைப்பூதியெடுத்து விடுகிறார்கள், ஞானிகளோ கோபத்தைவிலக்குகிறார்கள்.

௯ பயித்தியகாரனோடே வழக்காடுகிற ஞானமுள்ளமனுஷன் சினந்தாலும் சிரித்தாலும் இளைப்பாறுதலில்லை.

௰ இரத்தப்பிரியர் உத்தமனைப்பகைக்கிறார்கள், செம்மையானவர்களோ அவனுத்தமாவை விசாரிக்கிறார்கள்.

௰௧ மூடன் தன்னுவியையெல்லாம் வெளிப்படுத்துகிறன், ஞானியோ அதைப்பின்னுக்கடக்கிறன்,

௰௨ துரை பொய்விசேஷத்தைக்கவனிக்கிறவனுனுல் அவன் ஊழியக்காரரெல்லாரும் ஆகாதவர்கள்.

௰௩ தரித்திரனுந்தந்திரக்காரனுமொன்றுகொன்று எதிர்ப்படுகிறார்கள், இவர்களிருவர்கண்களுக்கும் கர்த்தர் வெளிச்சங்கொடுக்கிறார். ௨௨, ௨.

௰௪ ஏழைகளை உண்மையாய் நியாயம் விசாரிக்கிற இராசாவின் ஆசனம் என்றுநிடலுபிருக்கும்.

௰௫ மிலாறும் கடிந்துகொள்ளுதலும் ஞானமடைவிக்கும், தன்னிச்சையாய் விடப்பட்டவாலிபனே தாயைவெட்கப்படுத்துகிறன்.

௰௬ ஆகாதவர்கள் பெருகினுல் மீறுதல் பெருகும், ஆனுல் நீதிமான்கள் அவர்கள் விழுதவிற்சரிக்குச் சரிகட்டுதலைக்காண்பார்கள்.

௰௭ * உன்மகனைத்தண்டி, அப்போது அவன் உன்னைமுசிப்பாறப்பண்ணி உன்னுத்துமாவுக்குப் பரிபூரணச் செல்வத்தையுண்டாக்குவான். * ௰௩, ௨௪.

௰௮ தீர்க்கதரிசனமில்லாமையாற்சனஞ் சீர்கெட்டுப்போம், வேதத்தைக் காக்கிறவனே பாக்கியவான்.

௰௯ வார்த்தைகளினுலே அடிமையடங்கான், ஏனெனில் அவைகளையுணர்ந்தும் மறுவுத்தரவுசொல்லான்.

௨௰ * தன் வார்த்தைகளிற் பதறுகிற மனுஷனைக்கண்டாயானுல் அவனைப்பார்க்கிலும் மூடன்பேரிலே அதிக நம்பிக்கையுண்டு. * யாக்கோ. ௧, ௰௯. ௨௰.

௨௰௧ தன் அடிமைக்கு ஒருவன் சிறுவயதுமுதல் இளக்காரங்கொடுத்தால் அவன் கடைசியிலேதன்னைக்குமாரனுகப்பாராட்டுவான்.

௨௰௨ கோபக்காரன்வழக்கைக்கொளுவுகிறன், மூர்க்கன்பெரும்பாதகன்.

௨௰௩ * மனுஷனின் அகந்தை யவனைத்தாழ்த்தும், மனத்தாழ்மையானவனே கனமடைவான். * மத்தே. ௨௩, ௰௨.

௨௰௪ திருடனேடேபங்கிட்டுக்கொள்ளுகிறவன் தன்னுத்துமாவைப்பகைக்கிறன், அவன் சபிக்குதலைக்கேள்விப்பட்டாலும் அறிவிக்காதிருப்பான்.

௨௰௫ மனுஷனுக்குப் பயப்படுந் திகில் கண்ணியையுண்டாக்கும், கர்த்தரை நம்புகிறவனே உயர்ந்தவடைக்கலத்திலே வைக்கப்படுவான்.

௨௰௬ அநேகர் ஆளுகிறவனுடைய முகதரிசனையைத்தேடுகிறார்கள், ஆனுல் அவன்வனுடைய நியாயங்கர்த்தராலேதீரும்.

௨௰௭ நீதிமான்களுக்கு அநியாயக்காரன் அருவருப்பானவன், ஆகாதவனுக்குச் செம்மைமார்க்கத்தானும் அருவருப்பானவன்.
* கலாத். ௬, ௰௪.

## ௩௰. அதிகாரம்.

[ஆகூரின்வாக்கியங்கள்.]

யாக்கேயின்குமாரனுகிய ஆகூர் என்றபுருஷன் ஈத்தியேலுக்குவசனித்து ஈத்தியேலுக்கும் உக்காலுக்கும் உரைத்த உபதேசவார்த்தைகள்.

௨ நானே எவனையும்பார்க்க அவிவேகி, எனக்குமனுஷரின்புத்தியில்லை.

௩ நான் ஞானத்தைக்கற்றதுமில்லை, பரிசுத்தவான்களின் அறிவையோஅறியேன்.

௪ * பரமண்டலங்களுக்கேறி யிறங்குகிறவராா்? காற்றைத்தமதுகைப்பிடிகளில் அடக்குகிறவராா்? தண்ணீர்களைவஸ்திரத்திலேகட்டினவராா்? பூமியின்எல்லைகளையெல்லாம் ஸ்தாபித்தவராா்? அவருடையநாமமென்ன? அவருடையகுமாரனின் நாமமென்ன? அதையறிவாயோ? * யோவ. ௩, ௰௩.

௫ * பராபரனுடைய வசனமெல்லாம் புடமிடப்பட்டது, தம்மையண்டிக்கொள்

ளுகிறவர்களுக்கு அவர் கேடயமானவர்.

* சங்கீதம். ௰௨, ௭.

௬ அவருடைய வுத்தம்பாதபடிக்கும் நீ பொய்யனென்று கண்டுபிடிபடாதபடிக்கும். * அவருடைய வசனங்களோடொன்றுங் கூட்டாதிரு. * ௫. மோசே. ௪, ௨,

அறிவி. பு. ௨௨, ௰௮. ௰௯.

௭ இரண்டுமனு வும்மிடத்திலே கேட்கிறேன், நான் சாகும்பரியந்தமும் அவைகளையெனக்கு மறுத்திடவேண்டாம்.

௮ மாயையையும் பொய்வசனிப்பையும் எனக்குத் தூரமாக்கும், தரித்திரத்தையும் ஐசுவரியத்தையும் எனக்குக் கொடாதிரும்.

௯ நான்பரிபூரணம் அடைகிறதினாலே மறுதலித்துக் கர்த்தரானவர் யாரென்று சொல்லாதபடிக்கும் தரித்திரப்படுகிறதினாலே திருடி யென் பராபரனுடைய நாமத்தை அவமானமாக்காதபடிக்கும் என் படியையெனக்களந்து என்னைப் போஷியும்.

௰ வேலைக்காரன் உன்னை சபிக்காதபடிக்கும் நீ நேரஸ்தனாகாதபடிக்கும் அவனை அவன் எசமானிடத்திலே அவதூறு பண்ணாயாக.

௰௧ தன் தகப்பனைச் சபித்துத் தன் தாயை யாசீர்வதிக்காமற் போகிற சந்ததியுண்டு.

௰௨ தன்னுள்ளத்தை யறக்கழுவப்படாதிருந்து தன்பார்வைக்குச் சுத்தமான சந்ததியுண்டு.

௰௩ ஒருசந்ததியுண்டு, அதின் கண்கள் எத்தனை மேட்டிமையும் அதின் இமைகள் எத்தனை நெறிப்புமாயிருக்கிறது.

௰௪ தேசத்திற்சிறுமையானவர்களையும் மனுஷரில் எளியவர்களையும் பட்சிப்பதற்குப் பல்லுகள் பட்டையங்களுங் கடைவாய்ப்பல்லுகள் கத்திகளுமாயிருக்கிற சந்ததியுண்டு.

௰௫ அட்டைக்கு, தா, தா, என்ற இரண்டுகுமாரத்திகளுண்டு, திருத்தியாகாத மூன்றுண்டு, போதுமென்காத நாலுமுண்டு.

௰௬ அதாவது, பாதாளமும் மலடுக்கர்ப்பமுந் தண்ணீர்போதுமென்றிராத பூமியுந்தானே, அக்கினி போதுமென்கிறதுமில்லை.

௰௭ தகப்பனைப் பரியாசம்பண்ணித் தாய்க்குக் கீழ்ப்படிய அசட்டையாயிருக்கிற கண்ணை நதியின் காக்காய்கள் பிடுங்கிக் கழுகுக்குஞ்சுகள் தின்னும்.

௰௮ எனக்கு மிகுந்த ஆச்சரியமானவைகள் மூன்றுண்டு, நான் அறியாதிருக்கிறது நாலுமுண்டு.

௰௯ அதாவது, ஆகாயத்திலே கழுகினுடைய வழியுங் கன்மலையின்மேலே பாம்பினுடைய வழியும் நடுக்கடலிலே கப்பலினுடைய வழியும் ஒருகன்னிகையை நாடிய மனுஷனுடைய வழியுந்தானே.

௨௰ அப்படியே விபசாரஸ்திரியின் வழியுமிருக்கிறது, அவள் தின்று தன்வாயைத் துடைத்து நான் அக்கிரமஞ்செய்யவில்லையென்பாள்.

௨௰௧ மூன்றினிமித்தந் தேசங் கலக்கமாகிறது, நாலினிமித்தமும் அது தாழமாட்டாது.

௨௰௨ அரசாளுகிற அடிமையினிமித்தமும் அப்பத்தாலே திருத்தியான மயித்திகாரனிமித்தமும்,

௨௰௩ பகைக்கப்பட்டிருந்து புருஷனுக்கு வாழ்க்கைப்பட்ட ஸ்திரீயினிமித்தமுந் தன் ஆண்டச்சிக்குச் சுதந்தரியுமான அடிமைப்பெண்ணினிமித்தமுந்தானே.

௨௰௪ பூமியிற் சின்னவைகளாயிருந்தும் மகா ஞானமுள்ளவைகளாயிருக்கிறவைகள் நாலுண்டு.

௨௰௫ அதாவது, * பலனற்ற சாதியாயிருந்தும் வசந்தகாலத்திலே தங்கள் ஆகாரத்தைச் சம்பாதிக்கிற எறும்புகளும்,

* ௬, ௬. ௭, ௮.

௨௰௬ சத்துவமற்ற சாதியாயிருந்துந் தங்கள் வீட்டைக் கன்மலையிலே தோண்டிவைக்குங் குழிமுசல்களும்,

௨௰௭ இராசாவற்றிருந்தும் ஏகமாய் வரிசையாகப் புறப்படுகிற வெட்டுக்கிளிகளும்,

௨௰௮ தன்கைகளினாலே பின்னியும் அரசர் அரண்மனைகளிலிருக்கிற சிலந்திப்பூச்சியுந்தானே.

௨௰௯ விநோதமாய் அடிவைத்து நடக்கிறவை மூன்றுண்டு, விநோத நடையுள்ளவைகள் நாலுண்டு.

௩௰ அதாவது, மிருகங்களிற் சவுரியமானதும் ஒன்றுக்கும் பின்னிடையாததுமாகிய சிங்கமும்,

௩௰௧ வேகமுஸ்திரான குதிரையும் வெள்ளாட்டுக்கடாயும் ஆரும் எதிர்க்கமாட்டாத இராசாவுந்தானே.

௩௰௨ நீ மேட்டிமையானதினாற் பயித்தியஞ்செய்தும் அதின்மேல் நினைவாயிருக்கிறதுமுண்டானாற் * கையினாலே வாயைமூடியிரு. * யோபு. ௩௯, ௩௩. ௩௫.

௩௰௩ ஏனென்றாற் பாலைக்கடையுதல் வெண்ணெயைப் பிறப்பிக்கும், மூக்கைப் பிசைதல் இரத்தத்தைப் பிறப்பிக்கும், கோபத்தைக் கண்டுதல் சண்டையைப் பிறப்பிக்கும்.

## ௩௰௧. அதிகாரம்.

[சாலோமோனை அவனுடைய தாய் உபதேசித்த வாக்கியங்கள்]

இராசாவாகிய லேமுவேலுக்கடுத்த வசனங்கள், அவன் தாய் அவனுக்குப் போதித்த உபதேசம்.

௨ ஆ எனகுமாரனே, ஆ எனகர்பபத்தினகுமாரனே, ஆ எனபொருததனைகளின குமாரனே,

௩ * பெணசாதிகளுககு உனபலனையும இராசாககளைககெடுககுங காரியஙகளுககு உனவழிகளையுஙகொடாயாக. * ௫. மோசே. ௰௭, ௰௭.

௪ இராசாககளுககு மதுபான ககுடி வேணடாம,லெமுவேலே,இராசாககளுககு வேணடாம, தலைவருககு லொட்டிபபிரியமவேணடாம.

௫ குடிததுபபிரமாணததைமறநது சிறுமையானயாவருடைய நியாயததைபபுரட்டாதபடிககுததானே.

௬ மடிநது போகிறவனுககு லொட்டியையும மனஙகசநதவர்களுககு மதுபானததையுஙகொடுஙகள.

௭ அபபடிககொததவனகுடிதது,ததன எளிமையைமறநது தனவருத்தத்தை யபபுறம நினையாதிருககடடும.

௮ ஊமையனுககாகவும மடியபபோற அனைவரின நியாயததுககாகவும உன வாயைததிற.

௯ உனவாயைததிறநது நீதியாய நியாயநதீர்ததுச சிறுமையும எளிமையுமானவனுககு நியாயஞசெய.

௰ * குணசாலியான பெண சாதியைக கணடுபிடிபபவனுர்? அவளுடைய விலைமுததுகளைபபார்ககிலும உயர்நதது.
* ௰௨, ௪. ௰௮, ௨௨.

௰௧ அவள புருஷனிருதயம அவளைநமபும, உடைமை யுற்பததி அவனுககு ககுறைபடாது.

௰௨ அவளுயிரோ டிருககிற எலலாநாட்களிலும அவனுககு தீமையையலல நனமையையே செயகிறுள.

௰௩ ஆடடுமயிரையுஞ சணலையுந தேடி விருபபமானகைகளால வேலைசெயகிறுள.

௰௪ அவள வியாபார ககபபலகளை பபோலிருககிறுள, தூரததிலிருநது தனபிழைபபை வரபபணணுகிறுள.

௰௫ இருடடோடேயெழுநது தனவீட்டுககு ஆகாரமுந தனவேலைககாரிகளுககு பபடியுஙகொடுககிறுள.

௰௬ ஒருவயலைவிசாரிதது அதைவாஙகுகிறுள, தனகைகளினபலனால திராட்சததோடடததை நாடடுகிறுள.

௰௭ தனனைபபலததால இடைககட்டிககொணடு தனபுயஙகளை யுரமாககுகிறுள.

௰௮ தனவியாபாரமநலலதெனறுஉணருகிறுள, அவளவிளககு இராவில அணையாது.

௰௯ தனகைகளை இராடடினததுககு நீடடுவாள, அவளவிரலகள கதிரைபபிடிககும.

௨௰ தனகையைசசிறுமையானவனுககு விரிதது தரனகரஙகளை எளியவனணடைககு நீடடுகிறுள.

௨௧ தனவீட்டாரினிமிததஞ குளிருககுப பயயபபடாள, ஏனெனில அவளவீட்டாரனைவருககும இரடடைபபுரையுடுபபிருககிறது.

௨௨ சமுககாளஙகளை ததனககுணடுபணணுகிறுள, நற்பிடவையும இரததாமபரமும அவளுடுபபு.

௨௩ அவளபுருஷனவாசலகளில தேசததுமூபபர்சளோடே உடகார்நதிருககையிற் பேர்பெறறவனுயிருககிறுன.

௨௪ மெலலியபிடவையையுணடுபணணி விறறுபபோடடுககச்சைகளை வர்ததகருககுககொடுததுவிடுகிறுள.

௨௫ அவள உடைபலனும அலஙகாரமுமாயிருககிறது, வரும நாளுககெனறுநகைததுககொணடிருககிறுள.

௨௬ தனவாயை ஞானததோடே திறககிறுள, தயவுளளபோதகம அவளநாவினமேலிருககிறது.

௨௭ அவள சோமபலின அப்பததைப பொசியாமல தனவீடடுககாரியம எபபடிநடககுமெனறு கணணோககமாயிருககிறுள.

௨௮ அவளபிளளைகளெழுமபி அவளைப பாககியவதி யெனகிறுர்கள, அவளபுருஷனும அவளைபபுகழுகிறுன.

௨௯ அநேகம பெணகள சாக்கிரதையைககாணபிககிறுர்கள, நீயோ அவர்களெலலாருககும மேற்படடவ ளெனறுவளைப் புகழுகிறுன.

௩௰ இசசகஙகளளததனமும அழகுமாயையுமாயிருககிறது, கர்ததருககு பயயபபடுகிறபெணசாதியே புகழபபடுவாள.

௩௧ அவளு ககவள கைகளின பலனைககொடுஙகள, வாசலகளில அவளசெயகைகளினிமிததம அவளைபபுகழககடவார்கள.

சாலோமோனின வாககியபுஸ்தகம
முடிநதது முறறும.

# பிரசங்கியின் புஸ்தகம்.

## க. அதிகாரம்.

[சிஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களினாலும் பூமிக்கடுத்த கிரியைகளினாலுந் திரளான விவேகத்தின் அறிவினாலும் ஆத்துமாவுக்காறுதலில்லையென்பது.]

தாவீதின் குமாரனும் எருசலேமின் இராசாவுமாகிய பிரசங்கியின் வார்த்தைகள்.

உ ஆ, எத்தனையான மாயையென்று பிரசங்கி சொல்லுகிறான், ஆ, எத்தனையான மாயை எல்லாம் மாயையே.

௩ * சூரியனின் கீழே வருத்தப்படுகிறதனுடைய எல்லா வருத்தத்தினாலும் மனுஷனுக்கு லாபமென்ன? * உ, உஉ.

௪ ஒரு சந்ததி போகிறது, வேறொரு சந்ததி வருகிறது, பூமியோ என்றைக்கும் நிற்கிறது.

௫ சூரியன் உதிக்கிறது சூரியன் அஸ்தமிக்கிறது தான் உதித்த தன்னிடத்துக்கே திரும்பத் தீவிரிக்கிறதுமாயிருக்கிறது.

௬ காற்று தெற்கே போய் வடக்கையுஞ் சுற்றிச் சூழ்ந்து சூழ்ந்து போகிறது, தான் சுற்றின இடங்களுக்கே காற்றுத் திரும்பவும் வரும்.

௭ எல்லா ஆறுகளுஞ் சமுத்திரத்திலோடியுஞ் சமுத்திரம் நிரம்பாது, முன் தாங்களோடின இடத்துக்கே ஆறுகள் அங்கே மறுபடியும் ஓடத் திரும்பும்.

௮ எல்லாக் காரியங்களும் ஆருஞ் சொல்லி முடியாத இளைப்புள்ளவைகள், காணுகிறதினாலே கண் திருத்தியாகிறதில்லை, கேட்கிறதினாலே செவி நிரப்பப்படுகிறதுமில்லை.

௯ முன்னிருந்ததே இனியிருப்பது, முன் செய்யப்பட்டதே இனிச் செய்யப்படுவது, சூரியனின் கீழே நூதனமானதொன்றுமில்லை.

௰ இதைப்பார், இது புதுமையென்று சொல்லப்படத்தக்க காரியம் ஒன்றுண்டோ? நமக்கு முந்தின பூருவகாலங்களில் தானுமிருந்ததே.

௰௧ முந்தினவைகளின் ஞாபகமாத்திரமில்லை, அப்படியே பிந்தினவைகளின் ஞாபகமும் இனிமேலிருப்பவர்களுக்கில்லாதிருக்கும்.

௰௨ பிரசங்கியாகிய நான் எருசலேமிலே இஸ்ரவேலின் மேல் இராசாவாயிருந்து,

௰௩ வானத்தின் கீழே செய்யப்படுகிறதையெல்லாம் ஞானமாய் விசாரிக்கிறதற்கும் ஆராய்கிறதற்கும் என்னிருதயத்தைப் பிரயோகம்பண்ணினேன், இந்த ஆகாத்தொல்லையைப் பராபரன் மனுப்புத்திரருக்கு அதிலே அடிப்படும்படிக்குக் கட்டளையிட்டார்.

௰௪ சூரியனின் கீழே செய்யப்படுகிற எல்லாக் கிரியைகளையும் பார்த்தேன், இதோ யாவும் மாயையும் ஆவியையரித்துப்போடுகிறதுமாயிருக்கிறது.

௰௫ * கோணலானது செம்மையாகமாட்டாது, குறைவானது எண்ணிமுடியாததுமாயிருக்கிறது. * எ, ௰௩.

௰௬ இதோ, எருசலேமில் எனக்குமுன்னிருந்த எல்லாரையும்பார்க்க நான் பெருகி ஞானத்தில் அதிகப்பட்டவனானேன், என்னிருதயம் மிகுந்த ஞானத்தையும் அறிவையுங் கண்டதென்று நானென் னெஞ்சுடனே சொல்லி,

௰௭ என்னிருதயத்தை ஞானத்தையறிகிறதற்கும் பயித்தியத்தையும் மதியீனத்தையும் அறிகிறதற்கும் பிரயோகம்பண்ணினேன், ஆனால் இதுவும் ஆவியையரிக்கிறதென்றறிந்தேன்.

௰௮ ஏனெனில் திரளான ஞானத்திலே திரளான சலிப்புண்டு, அறிவுபெருத்தவன் நோவுபெருத்தவன்.

## உ. அதிகாரம்.

[லவுகீக சந்தோஷமுஞ் செல்வமும் ஆஸ்தியும் விவேகமும் நிற்கிற மகிழ்ச்சியைத் தரமாட்டாமல் விதனங்களைப் பிறப்பிக்குமென்பது.]

நானென்னிருதயத்திலே, * இப்போதும் வா, உன்னைச் சந்தோஷத்தினாலே சோதித்துப்பார்ப்பேன், நன்மையநுபவியென்றேன், ஆனால் இதோ, அதுவும் மாயையாயிருந்தது. * லூக்கா. ௰௨. ௰௯.

உ நான் நகைப்பைப் பார்த்து, நீ பயித்தியமாயிருக்கிறாயென்றும், சந்தோஷத்தைப்பார்த்து, அது என்ன செய்யுமென்றுஞ் சொன்னேன்.

௩ வானத்தின் கீழே உயிரோடிருக்கிற நாளெல்லாம் மனுப்புத்திரருடைய எந்தச் செய்கையவர்களுக்கு வாசியாயிருக்குமெ

௩ நான் பார்க்கும்வரைக்கும் மனுஷ புத்திரர் தங்கள் ஆயுசுநாளெல்லாம் வானத்தின் கீழ் செய்யத்தக்க நன்மை என்னவென்று அறியும்படிக்கு, (நான் பார்க்குமளவும் நானென்னை மாமிசத்தைத் திராட்சரசத்தால் ஆற்றிக்கொண்டிருக்கவும் என்னிருதயத்தை ஞானத்திலே தானே நடத்திவருகிறவனாக அவமதியையும் பிடிக்கவும் என்னெஞ்சிலே வகைபார்த்தேன்.)

௪ என் கிரியைகளைப் பெரியவைகளாக்கினேன், எனக்கு வீடுகளைக் கட்டினேன், எனக்குத் திராட்சத்தோட்டங்களை நாட்டினேன்.

௫ எனக்குத் தோட்டங்களையும் சிங்காரவனங்களையும் உண்டாக்கி அவைகளிற் சகலவகைக் கனிவிருட்சங்களையும் நாட்டினேன்.

௬ மரங்கள் பயிராகுந் தோப்பை நீர்ப்பாய்ச்சலாக்க எனக்குத் தண்ணீர்க்குளங்களை உண்டுபண்ணினேன்.

௭ வேலைக்காரரையும் வேலைக்காரிகளையுஞ் சம்பாதித்தேன், வீட்டுப்பிள்ளைகளெனக்கிருந்தது, எருசலேமில் எனக்கு முன்னிருந்த அனைவரைப்பார்க்கிலும் எனக்கு மாடுகளுடைய திரளான ஆஸ்தியிருந்தது.

௮ எனக்கு வெள்ளியையும் பொன்னையும் இராச்சியபதத்தையும் மாகாணங்களின் சம்பத்தையுஞ் சேர்த்தேன், எனக்குச் சங்கீதக்காரரையுஞ் சங்கீதக்காரிகளையும் மனுப்புத்திரரின் செல்வங்களையும், வாத்தியத்தையும் வாத்தியக்கட்டுகளையுஞ் சம்பாதித்தேன்.

௯ * எனக்குமுன் எருசலேமிலிருந்த அனைவரைப்பார்க்கிலும் நான் பெருகி அதிகப்பட்டேன், என் ஞானமும் என்னோடே தரித்திருந்தது. * ௧ இராசா. ௰, ௨௩.

௰ என்கண்கள் என்னத்தையாசைப்பட்டாலும் அதை நான் அவைகளுக்குத் தடைபண்ணினதில்லை, என்னிருதயத்திற்கொரு சந்தோஷத்தையும் நான் வேண்டாமென்று விலக்கினதில்லை, ஏனெனில் என்னிருதயம் என்னுடைய எல்லாப்பிரயாசத்தினாலுஞ் சந்தோஷமாயிருந்தது, இதுவே என்னுடைய எல்லாப்பிரயாசத்தினாலுமெனக்கு வந்தபங்காயிருந்தது.

௰௧ என்கைகள் செய்த என்னுடைய எல்லாக்கிரியைகளையுஞ் செய்கிறதற்காக நான் பட்ட எல்லாப்பிரயாசத்தையும் நான் கண்ணோக்கினேன், இதோ, எல்லாம் மாயையும் ஆவியை அரிக்கிறதுமாயிருந்தது, சூரியனின் கீழ் ஒரு லாபமில்லை.

௰௨ நான் ஞானமென்னவென்றும் பயித்தியமும் அவத்தியுமென்னவென்றும் பார்க்கிறதற்குத் திரும்பினேன், ஏனெனில் இராசாவுக்குப் பிற்பாடு வரப்போகிற மனுஷன் என்ன செய்வானோ, வாடிக்கையாய்ச் செய்யப்பட்டுவந்ததைத்தானே.

௰௩ இருளைப்பார்க்க வெளிச்சம் வாசியாயிருக்கிறதுபோல அவமதியைப்பார்க்க ஞானம் வாசியாயிருக்கிறதென்கிறதைத் தான் நான் கண்டேன்.

௰௪ ஞானியின் கண்கள் அவன் சிரசிலிருக்கிறது, மூடனோ இருளிலே நடக்கிறான், ஆகிலும் அவர்களெல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்குமென்கிறதையும் நான் அறிந்தேன்.

௰௫ ஆகையால் நானென்னிருதயத்திலே மூடனுக்குச் சம்பவிக்கிறபிரகாரமாக எனக்குஞ் சம்பவிக்குமே, பின்னை ஏன் நான் அப்போது அதிக ஞானமடைந்தேனென்று சொல்லி என்னிருதயத்திலே இதுவும் மாயையென்றேன்.

௰௬ ஏனெனில் மூடனைப்பார்க்க ஞானியை அதிகமாய் நினைக்கும் நினைப்பு என்றைக்குமில்லை, இப்பாதிருக்கிறதெல்லாம் வரும் நாட்களில் மறக்கப்பட்டதாயிருக்கும், ஏனெனில் ஞானியெப்படிச் சாகிறான்? மூடனைப்போலேதானே.

௰௭ ஆகையால் இப்படிப்பட்ட ஜீவனைப் பகைத்தேன், ஏனெனில் சூரியனின் கீழே செய்யப்படுங் கிரியை எனக்கு விதனமாயிற்று, அதேதென்றால் எல்லாம் மாயையும் ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது.

௰௮ சூரியனின் கீழ் நான் பட்ட என் பிரயாசத்தையெல்லாம் நான் பகைத்தேன், ஏனெனில், * எனக்குப் பிறகிருக்கும் மனுஷனுக்கு அதை நான் பின்வைத்துப்போகவேணும். * சங்கீதம். ௪௯, ௭.

௰௯ அவன் ஞானமுள்ளவனாயிருப்பானோ அவமதியாயிருப்பானோ என்கிறதை யார் அறிவான்? ஆகிலும் நான் சூரியனின் கீழே பிரயாசப்பட்டதும் நான் ஞானமாய்ச் செய்துவந்ததுமான என் வேலைக்கெல்லாம் அதிகாரியாயிருப்பான், இதுவும் மாயை.

௨௰ ஆகையால் என்னிருதயஞ் சூரியனின் கீழே நான்பட்ட எல்லாப்பிரயாசத்தின் மேலுள்ள ஆசையைவிட்டுவிடவகைபார்த்தேன்.

௨௰௧ ஏனெனில் ஒரு மனுஷனுமுண்டு, அவனுடைய வேலை ஞானமும் அறிவுமுள்ளதுஞ் செம்மையுமாயிருக்கிறது, ஆகிலும் அதிற் பிரயாசப்படாதிருந்த வேறொருவனுக்கு அவன் அதைச் சொந்தமாகக் கொடுத்துவிடவேண்டியது, இதுவும் மாயையும் மகாதீதுமாயிருக்கிறது.

௨௰௨ ஏனெனில் அப்படியே மனுஷன் சூரியனின் கீழேபடுகிற தன்னுடைய எல்லாப்பிரயாசத்தினாலுந் தன்னுடைய இருதயத்தின் அரிப்பினாலும் அவனுக்கென்னவிருக்கும்.

௨௰௩ அவன் நாட்களெல்லாம் நோவுகளோடும் அவன் தொல்லை சஞ்சலத்தோடுமிருக்கிறதே, இராத்திரியிலும் அவன் மனது இளைப்பாறுகிறதில்லையே, இதுவும் மாயைதானே.

விதனமுண்டாகவும் ஆஸ்திகளையாசையாய்ச்சேர்க்குந்தொல்லையும் லோகவிசாரங்களின்வேதனையுமற்ற மனரம்மியம் நல்லதென்றும் அது தேவ ஈவென்றுங் காண்பித்தது.

௨௪ ஆகையால் மனுஷன் பொசித்துக் குடித்துத் தன் பிரயாசத்திலே தன்னெஞ்சுக்கு நன்மைகாட்டுவதல்லவோ அவனுக்கு வாசி. இதுவும் பராபரனுடைய கரத்திலிருந்து வரவேண்டியதென்று நான் கண்டேன்.

௨௫ ஏனெனில் என்னைப்பார்க்கிலும் நன்றாய்ச் சாப்பிடுபவனார்? என்னைப்பார்க்கிலும் அந்தருசாய்ச் சம்பாதிப்பவனுமார்?

௨௬ ஏனெனில் தமக்கு முன்பாக நல்லவனாயிருக்கிற மனுஷனுக்கவர் ஞானத்தையும் அறிவையும் மகிழ்ச்சியையுங் கட்டளையிடுகிறார், பாவஞ்செய்கிறவனுக்கோவென்றால் பராபரனுக்கு முன்பாக * நல்லவனாயிருக்கிறவனுக்குச் சமமாய் வைத்துவிட்டுப்போகக் கூட்டிச்சேர்க்கும் தொல்லையைக் கட்டளையிடுகிறார், இதுவும் மாயையும் ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது. * வாக. ௨௮, ௮. யோபு. ௨௭, ௰௬. ௰௭.

## ௩. அதிகாரம்.

[இந்தலோகத்திலே நிலைவரமானதொன்றுமில்லை, நாமல்ல, பராபரனே ஆளுகிறவர், அநியாயம் நிறைந்த இந்தப்பூமியிலே சீர்காணாது, நாம் மிருகங்களுக்குச் சரியான நசுத்தனமாய் மண்ணாய்ப் போகவேண்டியதென்றறிந்து பொறுமையையும் சோகத்தைக் கவலைகளுமில்லாத மனரம்மியமும் தேவபயமுமாய்ச் சீவனம்பண்ணுகிறது பாக்கியமென்பது.]

௧ சகலத்துக்கும் ஒருசொந்தவேளையும் வானத்தின்கீழிருக்கிற சகலவிருப்பத்துக்கும் ஒருகாலமுமிருக்கும்.

௨ பிறக்கிறகாலமுமுண்டு இறக்கிறகாலமுமுண்டு, நாட்டுகிறகாலமுமுண்டு நாட்டப்பட்டதைப்பிடுங்குகிறகாலமுமுண்டு.

௩ கொல்லுகிறகாலமுமுண்டு குணமாக்குகிறகாலமுமுண்டு, இடிக்கிறகாலமுமுண்டு கட்டுகிறகாலமுமுண்டு.

௪ அழுகிறகாலமுமுண்டு நகைக்கிறகாலமுமுண்டு, புலம்புகிறகாலமுமுண்டு துள்ளுகிறகாலமுமுண்டு.

௫ கல்லுகளைச்சிதறடிக்கிற காலமுமுண்டு கல்லுகளைச்சேர்க்கிறகாலமுமுண்டு, அரவணைக்கிறகாலமுமுண்டு அரவணைக்காமல் தூரமாகுகிறகாலமுமுண்டு.

௬ தேடுகிறகாலமுமுண்டு இழக்கிறகாலமுமுண்டு, காக்கிறகாலமுமுண்டு எறிந்துவிடுகிறகாலமுமுண்டு.

௭ கிழிக்கிறகாலமுமுண்டு தைக்கிறகாலமுமுண்டு, மவுனமாயிருக்கிறகாலமுமுண்டு பேசுகிறகாலமுமுண்டு.

௮ சிநேகிக்கிறகாலமுமுண்டு பகைக்கிறகாலமுமுண்டு, யுத்தகாலமுமுண்டு சமாதானகாலமுமுண்டு.

௯ * வருத்தப்பட்டுச்செய்கிறதிலே செய்கிறவனுக்கு லாபமென்ன? * ௧, ௩.

௰ பராபரன் மனுபுத்திரருக்கு அடிபடக்கட்டளையிட்ட தொல்லையைக் கண்டேன்.

௰௧ எல்லாவற்றையும் அதினதின்காலத்திலே நேர்த்தியாகச்செய்துவருகிறார், நித்தியத்தின் உணர்வையும் அவர்களிருதயத்திலே கொடுத்தார், அதுவில்லாவிட்டால் மனுஷன் பராபரன் ஆதிமுதற்கொண்டு முடிவுமட்டாகச்செய்யுங்கிரியையைக் கண்டுபிடியான்.

௰௨ மகிழ்ச்சியாயிருப்பதும் தானுயிரோடிருக்கையில் நன்றுசெய்வதுமேயல்லாமல் வேறொருநன்மையும் அவைகளால் இல்லையென்றறிந்தேன்.

௰௩ ஆனால் மனுஷன் எவனாகிலுஞ்சரி, பொசித்துக்குடித்துத் தனனுடைய எல்லா வருத்தத்திலும் நன்மையையனுபவிப்பதும் பராபரனுடைய ஈவு.

௰௪ பராபரன் என்னென்ன செய்கிறாரோ அதுவேயென்றும் நிற்குமென்றறிவேன், மனுஷர் அதனோடே கூட்டவுங்கூடாது, அதிலே குறைக்கவுங்கூடாது, அவர்கள் தமக்கு முன்பாகப் பயந்திருக்கும்படிக்குப் பராபரன் இப்படிச்செய்கிறார்.

௰௫ இப்போது நடக்கிறது முன்னும் நடந்தது, நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது, ஆனால் துன்பப்பட்டவனின் நியாயத்தைப் பராபரன் விசாரிப்பார்.

௰௬ பின்னையுஞ் சூரியனுக்குக்கீழே நான் அசாமியமுள்ள நியாயஸ்தலத்தையும் அகாமியமுள்ள நீதிஸ்தலத்தையுங் கண்டேன்.

௰௭ ஆனால் நானென்னிருதயத்திலே நீதிமானையும் அகாதனையும் பராபரன் நியாயந்தீர்ப்பார், ஏனென்றால் சகலவிருப்பத்தையும் சகலசெய்கையையும் நியாயந்தீர்க்குங்காலம் அங்கேயென்றேன்.

௰௮ பராபரன் மனுபுத்திரரை விமபரத்துலக்குகிறதும் தங்கள் நிலைமைக்குத் தாங்கள் மிருகங்களைப்போலேயிருக்கிறதையவர்கள் காண்கிறதும் அவர்கள் காரியத்திலே கொசதென்று நானென்னிருதயத்திலே சொன்னேன்.

௰௯ ஏனெனில் மனுபுத்திரருக்குச் சம்பவிக்கிறதும் மிருகங்களுக்குச் சம்பவிக்கிறதும் அவர்களுக்கும் இவைகளுக்கும் ஒரேமாயச் சம்பவிக்கிறது, இது சாகிறதுபோல

அவனுஞ் சாகிறான், இவனுக்கெல்லாம் ஏகசுவாசமிருக்கிறது, மிருகத்தைப் பார்க்கிலும் மனுஷனுக்கு மேன்மையில்லையே, ஏனென்றாற் சகலமும் மாயை.

௨௰ சகலமும் ஒரேயிடத்துக்குப் போகிறது, சகலமும் மண்ணினுண்டாகிச் சகலமும் மண்ணுக்குத் திரும்பும்.

௨௧ உயர ஏறுகிறதாகிய மனுபுத்திரரின் ஆவியையுந் தாழத் தரையிலிறங்குகிறதாகிய மிருகங்களின் ஆவியையும் அறிந்துகொண்டிருக்கிறவனார்?

௨௨ இப்படியும் மனுஷன் தன் செய்கைகளில் மகிழ்ச்சியாயிருக்கும் நன்மையையல்லாமல் வேறே நன்மை அவைகளால் இல்லையென்று கண்டேன், இதுவே அவன் பங்கு, ஏனென்றால் தனக்குப் பின்னிருப்பதைக் காண்பதற்கு அவனைத் திரும்பவரப்பண்ணுபவனார்?

## ௪. அதிகாரம்.

[அநியாயக்காரரால் உலகத்திலிருக்கிற ஆபத்தைக் காண்பித்தது.]

நான் திரும்பிக்கொண்டு சூரியனின் கீழ்ச் செய்யப்படுகிற ஒடுக்குதல்களையெல்லாம் நோக்கினேன், இதோ, ஒடுக்கப்பட்டவர்களின் கண்ணீரைக் கண்டேன், அவர்களைத் தேற்றுவாருமில்லை, அவர்களையொடுக்குகிறவர்களின் கை பலபந்தஞ் செய்துகொண்டேயிருந்தும் அவர்களைத் தேற்றுவாரில்லை.

௨ ஆனதுகொண்டு இன்னம் உயிரோடிருந்து பிழைக்கிறவர்களைப் பார்க்கிலும் முன்னாலே காலம்பண்ணி மரித்தவர்களையே நான் பாக்கியவான்களென்கிறேன்.

௩ இவ்விருதரத்தாரையும் பார்க்க இன்னம் உண்டாகாதவனும் வாசி, அவன் சூரியனின் கீழ்ச் செய்யப்படுகிற துற்செய்கையைக் கண்டதில்லை.

### நல்லவேலையெல்லாம் பொறாமைக்கேதுவானதென்பது.

௪ எல்லாப் பிரயாசமுஞ் சட்டமான தொழிற்கிரியையையும் மனுஷன்மேல் அவனயலானுடைய பொறாமையை வரப்பண்ணுமென்கிறதையும் நான் கண்டேன், இதுவும் மாயையும் ஆவியையரிக்கிறதுமாயிருக்கிறது.

௫ மூடன் தன் கைகளைக் கட்டிக்கொண்டு தன் சதையைத் தின்கிறான்.

௬ * வருத்தத்தோடும் ஆவியின் அரிப்போடும் இரண்டு கைப்பிடியும் நிறையக்கொண்டிருக்குதலைப் பார்க்கிலும் அமைதலோடே ஒரு கைப்பிடி நிறையக்கொண்டிருக்குதலே வாசி. * வாக்கியம். ௰௫, ௰௬.

### பொருளாசை முதலான முகாந்திரங்களால் ஒண்டியாயிருக்கிறது நல்லதல்லவென்பது

௭ நான் திரும்பிக்கொண்டு சூரியனின் கீழே வேறொரு மாயையைக் கண்டேன்.

௮ ஒண்டிக்காரனிருக்கிறான், உடனாளியில்லை, அவனுக்குப் பிள்ளையுஞ் சகோதரனுமில்லை, என்றாலும் அவன் பிரயாசத்திற்கு முடிவில்லை, அவன் கண்கள் ஐசுவரியத்தால் திருத்தியாகிறதுமில்லை, நான் யாருக்குப் பிரயாசப்பட்டு என் ஆத்துமாவை நன்மையில்லாமற் குறைவோட்ட வைக்கிறேனென்று அவன் சிந்திக்கிறதுமில்லை, இதுவும் மாயை, இதுவும் பொல்லாத் தொல்லை.

௯ ஒண்டிக்காரனைப் பார்க்கிலும் ஒரு சோடே வாசி, அவர்களுக்கவர்கள் வருத்தத்திலே நல்லபலனுண்டாம்.

௰ ஏனெனில் ஒருவன் விழுந்தால் அவனை யவன் உடனாளியெடுத்துவிடுவான், ஆனால் விழுகிற ஒண்டிக்காரனுக்கையோ, ஏனெனில் அவனையெடுப்பதற்குத் துணையில்லை.

௰௧ இரண்டுபேராய்ப் படுத்துக்கொண்டிருந்தால் அவர்களுக்கனலுண்டாம், ஒருவனுக்கனலுண்டாவதெப்படி?

௰௨ ஒருவன்மேல் யாதொருவன் மேற்பலவந்தால் இரண்டுபேரானவர்கள் அவனுக்கெதிரே நிற்கலாம், முப்புரிநூற் சீக்கிரமாயறாது.

### இராசாக்களுடைய மேன்மை நிலைவரமல்லவென்பது.

௰௩ இனிப்புத்தி கேட்கவறியாத கிழவனும் மூடனுமாகிய இராசாவைப் பார்க்கிலும் ஏழையும் ஞானியுமாகிய இளைஞனே வாசி.

௰௪ ஏனெனில் அரசாளச் சிறைச்சாலையிலிருந்து புறப்படுவாருமுண்டு, இராசாங்கத்திற் பிறந்து ஏழையாவாருமுண்டு.

௰௫ சூரியனின் கீழ்ச் சீவனுள்ள அனைவரும் இராசாவின் பட்டத்தில் வந்து நிலைக்கப்போகிற பிள்ளையோடே மனசிணையாயிருக்கிறதைக் கண்டேன்.

௰௬ அவர்களுக்குமுன் அப்படிச் செய்த சகல சனங்களின் இலக்கத்துக்கு முடிவில்லை, இனியிருப்பவர்கள் இவன் பேரிலும் பிரியம் வைக்காதே போவார்கள்.

௰௭ ஆகையால் இதுவும் மாயையும் ஆவியையரிப்பதுமாயிருக்கிறது.

## ௫. அதிகாரம்.

[தேவ ஆராதனைக்காகச் சொன்ன புத்திமதிகள்.]

நீ பராபரனுடைய வீட்டுக்குப் போகிறபோது உன் காலைக் காத்து மூடரைப்போலப் பலியையிடுவதைப் பார்க்கிலுங் கேட்கிறதற்குச் சேரு, ஏனெனில் அவர்கள் பொ

ல்லாப்பைச் செய்வதற்காக அறியாதவர்களாயிருக்கிறார்கள்.

௨ நீ பராபரனுக்கு முன்பாக வசனத்தையுரைக்க வாய்பதறுகிறவனாயிராதே, உன்னிருதயந் திவிரித்திருக்கவும் வேண்டாம், ஏனென்றாற் பராபரன் பரமண்டலங்களிலிருக்கிறவர், நீயோ பூமியிலிருக்கிறவன், ஆகையால் உன் வார்த்தைகள் மட்டாயிருப்பதாக, ஏனெனில் தொல்லையின் திரட்சியினாலே சொப்பனம் பிறக்கிறதுபோலே வார்த்தைகளின் திரட்சியினாலே மூடனின் சத்தம் பிறக்கும்.

௩ * நீ பராபரனுக்குப் பொருத்தனை சொல்லிக்கொண்டால் அதைச் செலுத்தத் தாமதியாதே, ஏனெனில் மூடரின்மேல் அவருக்கு விருப்பமில்லை, நீ நேர்ந்துகொண்டதைச் செலுத்து. * ௪. மோ. ௩0, ௩. ௫. மோசே. ௨௩, ௨௧—௨௩.

௪ நீ நேர்ந்துகொண்டுஞ் செலுத்தாதே போகிறதைப் பார்க்க நேர்ந்துகொள்ளாதிருக்கிறது சாலலே.

௫ உன் மாம்சத்தைப் பாவத்திற்குள்ளாக்க உன் வாயைக் கொடாதே, அது புத்திபிசகாயிருக்கிறதென்று தூதனுக்கு முன்பாகச் சொல்லாமலுமிரு, பராபரன் உன் சத்தத்தினாலே கோபமாகி உன் கைகளின் கிரியையை அழிப்பானேன்.

௬ ஏனென்றால் அநேக சொப்பனங்களில் மாயைகளுண்டாயிருக்கும், அநேகவார்த்தைகளிலும் அப்படித்தான், ஆகையாற் பராபரனுக்குப் பயந்திரு.
* வாக்கியம். ௰, ௬.

அநியாயங்களைக் காண்கிறதினால் இடறல் படவேண்டாமென்பது.

௭ ஒரு சீர்மையில் ஏழைகள் ஒடுக்கப்படுகிறதையும் நியாயமும் நீதியுங் கொள்ளையாய்ப் போகிறதையுங் கண்டாயானால் அப்படிக்கொத்த செயலினாலே பிரமிக்காதே, ஏனெனில் உயர்ந்தவன்மேலே உயர்ந்தவன் காவலாளியாயிருக்கிறான், இவர்கள்மேல் உயர்ந்தவருமுண்டு.

௮ எல்லாவற்றிலும் இவ்வோ பூமியினுடைய இலாபமானவர், இவர் பயிர்நிலத்துக்கும் இராசா.

பொருளாசையாயிருக்கிறதும் லோகப்பொருளுக்கு அடிமைப்பட்டிருக்கிறதும் நிற்பாக்கியமென்பது.

௯ பணப்பிரியன் பணத்திருத்தியடையான், எவன் ஏராளத்தைச் சிநேகிக்கிறானோ அவன் வரத்தினால் திருத்தியாவதில்லை, இதுவுமாயை.

௰ பொருள் பெருகினால் அதைத் தின்னுகிறவர்களும் பெருகுகிறார்கள், அதின் எசமானர்கள் அதைத் தங்கள் கண்களினாலே பார்க்கிறதேயல்லாமல் அவர்களுக்கதினாலிருக்கும் பிரயோசனமென்ன?

௰௧ வேலைசெய்கிறவன் கொஞ்சஞ் சாப்பிட்டாலுஞ் மிகுதியாய்ச் சாப்பிட்டாலும் அவன் நித்திரை இன்பமானது, ஐசுவரியவானின் திருத்தியோ அவனைத் தூங்கவொட்டாது.

௰௨ சூரியனின் கீழே நான் கண்ட நோசலுள்ள வேறொரு தீங்குமுண்டு, ஐசுவரியந் தன் எசமானர்களாலே அவர்களுக்குத் தீமையாகக் காக்கப்படுதல் தானே.

௰௩ ஏனெனில் அந்த ஐசுவரியம் விக்கினமான தொல்லைகளினாலே அழிகிறதுண்டு, அப்படியே அவன் புத்திரனைப் பெற்றிருந்தும் அவன் கையிலே ஒன்றுமில்லாதிருக்கும்.

௰௪ அவன் எப்படித் தன் தாயின் கர்ப்பத்திலிருந்து புறப்பட்டானோ அப்படியே வந்தபடி திரும்ப * நிருவாணமாய்ப் போவான், அவன் தன் பிரயாசத்திலொன்றையுந் தன் கையிலே எடுத்துப் போவதில்லை.
* யோபு. ௧, ௨௧. சங்கீதம். ௪௯, ௰௭. ௧. தீமோ. ௬, ௭.

௰௫ அவன் வந்த பிரகாரமாகத்தானே போகிறானென்கிறதும் நோசலுள்ள தீங்கு, பின்னையவன் காற்றுக்குப் பிரயாசப்பட்டதினாலே அவனுக்கென்ன லாபம்.

௰௬ தன் நாட்களிலெல்லாம் இருளிலே சாப்பிட்டு மெத்தவுஞ் சலித்துக்கொண்டு நோயுங் கடுமையும் அடைந்திருக்கிறான்.

௰௭ இதோ * உயிரோடிருக்கத் தனக்குப் பராபரன் கட்டளையிட்ட தன் நாள்வரையிலே மனுஷன் போசிக்கிறதுங் குடிக்கிறதுந்தான் சூரியனின் கீழ்ப் பிரயாசப்படுகிற தன் பிரயாசம் அனைத்திலும் நன்மையனுபவிக்கிறதுமே நேர்த்தியான நல்லகாரியம் என்கிறதை நான் கண்டேன், ஏனெனில் இது அவன் பங்கு. * ௩, ௨௨.

௰௮ எந்த மனுஷனுக்காகிலும் பராபரன் ஐசுவரியத்தையுஞ் சத்தியையுங் கொடுத்து அதிலே சாப்பிடவுந் தன் பங்கையெடுக்கவுந் தன் பிரயாசத்திலே மகிழ்ச்சியாயிருக்கவும் அவனுக்கதிகாரமுமளித்தால் அது பராபரனுடைய ஈவு.

௰௯ ஏனெனிற் பராபரன் அவனிருதயத்தின் மகிழ்ச்சியால் அவனுக்கு மறுவுத்தரவு அருளிச்செய்கிறபடியினாலே அவன் தன் சீவனின் நாட்களை அத்தனையாய் நினையான்.

## ௬. அதிகாரம்.

[பிசினித்தனமான பொருளாசைக்காரரின் நிற்பாக்கியமான நிலைமை.]

சூரியனின் கீழ் நான் கண்ட ஒரு தீங்கிருக்கிறது, அது மனுஷரிடத்தில் வெகுவாய்க் காணப்படுகிறது.

௨ அதாவது, மனுஷனிருக்கிறான், அவனுக்குப் பராபரன் ஐசுவரியமும் ஆஸ்தியும் கனமுங்கொடுத்தார், அவனென்ன இச்சித்தாலும் அவையெல்லாம் அவனாத்துமாவுக்குத் தாழ்ச்சியில்லாமலிருக்கிறது, என்றாலும் அதிலே சாப்பிடுகிறதற்குப் பராபரன் அவனுக்கு அதிகாரத்தைக் கட்டளையிட்டதில்லை, அன்னிய மனுஷனே யதைச் சாப்பிடுகிறான், இதுவும் மாயையும் பொல்லாத நோயுமாமே.

௩ ஒரு மனுஷன் நூறு பிள்ளைகளைப் பெற்றாலும் அநேக வருஷம் உயிரோடிருந்தாலும் அவன் ஆயிசின் நாட்கள் பெருகிப் போனாலும் அவனுக்கு டா நன்மையால் திருத்தியடையாமலும் அவனுக்குப் பிரேதக் கல்லறை முதலாயில்லாமற் போயிற்றேயாகில் அவனைப் பார்க்கிலுங் கர்ப்பமழிந்து போகிற பிண்டம் வாசியென்பேன்.

௪ ஏனெனில் இது பாழிலே வந்து இருளிலே போகிறது, இதின் பேர் இருளால் மூடப்படும்.

௫ இது சூரியனைக் கண்டதுமில்லை யறிந்ததுமில்லை. அவனைப் பார்க்கிலும் இதற்கு ஓய்விருக்கிறது.

௬ அவன் இரண்டாயிரம் வருஷம் பிழைத்திருந்தும் எல்லாரும் ஒரே இடத்திற்றுப் போகிறதில்லையோ?

௭ மனுஷனுடைய பிரயாசமெல்லாம் அவன் வாய்க்குத்தானே, ஆனால் அவன் மனந் திரம்பாது.

௮ மற்றப்படி மூடனைப் பார்க்க ஞானிக்கு என்ன? உயிரோடிருக்கிறவர்களுக்கு முன்பாக நடக்க அறிந்த ஏழைக்கும் உண்டான மேன்மையென்ன?

௯ ஆசையலைந்து தேடுகிறதைப் பார்க்கிலுங் கண்களைப் பார்த்திருக்கிறதே வாசி, அதுவும் மாயையும் ஆவியைச் சலிக்கிறதுமாயிருக்கிறது.

௰ ஒருவன் எப்படிக்கொத்தவனானாலும் முதலிலதானே அவன் பேரின்னதென்று சொல்லப்பட்டது, அவன் மனுஷனென்று தெரிந்திருக்கும், அவன் தன்னிலும் பலத்தவரோடே வழக்காடமாட்டான்.

௰௧ மாயையைப் பெருகப்பண்ணுகிற திரளானவர்த்தைகளுண்டாயிருக்கையால் மனுஷனுக்கென்ன லாபம்.

௰௨ ஏனெனில் மனுஷன் உயிரோடிருந்து * நிழலைப்போலேபோகிற தன் மாயையினுடைய நாளவளையாகிய இச்சீவனிலே அவனுக்கேது நலமாயிருக்கிறதென்றறிந்தவனார்? ஏனென்றால் தனக்குப் பின்பு சூரியனின் கீழ்ச்சம்பவிப்பதேதென்று மனுஷனுக்கறிவிப்பவனார்? * தங், சஙீ. ௭.

## ௭. அதிகாரம்.

[நல்லமுடிவைப்பார்க்கவுஞ்சாந்தமும் ஞானமும் பொறுமையுமாயிருக்கவும்புத்திசொன்னது.]

நல்ல சயிலத்தைப்பார்க்க * நற்கீர்த்தியும் ஒருவனின் சென்னநாளைப்பார்க்க மரணநாளும் வாசி. * உ௨. வாக்கியம். ௧.

௨ விருந்துவீட்டுக்குப்போகிறதைப் பார்க்கத் துக்கவீட்டுக்குப்போவதே வாசி, ஏனென்றால் இதிலே எல்லா மனுஷரின் முடிவு காணப்படுகிறபடியினாலே இதை உயிரோடிருக்கிறவன் தன் மனதிலே வைக்கலாம்.

௩ நகைப்பைப்பார்க்கச் * சலிப்பு நல்லது, ஏனெனில் முகத்தின் துக்கத்திலே இருதயங் குணப்படும். * மத்தே. ௫, ௪.

௪ ஞானிகளின் இருதயந் துக்கவீட்டிலும் மூடரின் இருதயஞ் சந்தோஷவீட்டிலும் இருக்கிறது.

௫ ஒருவன் மூடரின் பாட்டைக் கேட்பதைப்பார்க்க ஞானியின் அதட்டுதலைக் கேட்பதே நலம்.

௬ ஏனெனிற் பானையின் கீழ் எரிகிற முள்ளுகளின் படபடப்பு எப்படிக்கொத்ததோ அப்படியே மூடனின் நகைப்பிருக்கிறது, இதுவும் மாயை.

௭ இடுக்கண்செய்யுதல் ஞானியைப் பயித்தியமாக்குதலும், பரிதானம் இருதயத்தைக் கெடுக்கும்.

௮ ஒரு காரியத்தின் துவக்கத்தைப் பார்க்கிலும் அதின் முடிவு வாசி, மனமேட்டிமையானவனைப் பார்க்கிலும் மனஞ்சாந்தமானவன் வாசி.

௯ உன்மனதிலே உன்னுள்ளே [illegible] வாசிக்காதே, ஏனெனிற் சினம் மூடரின் மார்பிலே தங்கும். * யாக்கோபு ௧, ௰௯.

௰ இந்நாட்களைப்பார்க்க முன்னாட்கள் வாசியாயிருந்ததென்னவென்று சொல்லாதே, ஏனெனில் நீ யிப்படிக்கேட்பது ஞானத்தோடே கூடியதல்ல.

௰௧ சுதந்தரத்தோடே ஞானமே நல்லது, சூரியனைக் காண்கிறவர்களுக்கு இதினாலே பிரயோசனமுண்டு.

௰௨ ஏனெனில் ஞானத்தின் நிழலிலிருக்கிறது, திரவியத்தின் நிழலிலிருக்கிறதற்குச் சரி, ஞானந்தன்னுடையவர்களை யுயிர்ப்பிக்கிறது அறிவினுடைய மேன்மையாயிருக்கிறது.

௰௩ பராபரனுடைய செயலையே நோக்கு, ஏனெனில் அவர் கோணலாக்குகிறதை யார்செம்மையாக்கலாம்?

௰௪ நீ நல்லநாளிலே நன்மையனுபவித்திரு, ஆனால் தீங்குநாளையும் நோக்கிப்பார், தனக்குப்பிற்பாடு இருப்பதொன்றையும்

னுஷனைக்கண்டுபிடியாதபடிக்கு அதோடே இதையும் பராபரன் உண்டாக்கிறூர்.

௰௫ இவையெல்லாவற்றையும் என் மாயையின் நாட்களிலே கண்டேன், * தன் நீதியிலே கெட்டுப்போகிற நீதிமானுமுண்டு, தன் பொல்லாப்பிலே நீடித்திருக்கிற ஆகாதவனுமுண்டு. * ௮, ௰௪.

௰௬ மிகுதியின் நீதிமானுயிராதே, உன்னை அதிகமான ஞானியுமாக்காதே, உன்னை நீ கெடுத்துக்கொள்ளவேண்டுமோ.

௰௭ மெத்த ஆகாதவனும் பயித்தியக்காரனுமாயிராதே, உன்காலத்திற்குமுன்னே நீயேன்சாகவேணும்.

௰௮ நீ இதைப்பிடித்திருப்பதும் நீ அதைக் கைவிடாதிருப்பதும் நலம், ஏனென்றால் பராபரனுக்குப் பயப்படுகிறவன் அவைகளுக்கெல்லாம் நீங்கிப்போவான்.

௰௯ ஞானம் ஞானியைப் பட்டணத்திலிருக்கிற பத்து அதிபதிகளிலும் பலவானாக்கும்.

௨௰ * ஏனென்றால் ஒருபாவமுஞ்செய்யாமல் நன்மையையேசெய்யத்தக்க நீதிமான் பூமியிலில்லை. * ௧. இராசா. ௮, ௪௬. வாக்கியம். ௨௰, ௯.

௨௧ சொல்லப்படுகிற எல்லா வார்த்தைகளின்மேலும் உன் இருதயத்தை வைக்காதே, உன் வேலைக்காரன் உன்னைச் சபிக்கிறதாலும் அதை நீ கேளாதிருக்கும்படிக்குத்தானே.

௨௨ ஏனென்றால் அநேகந்தரம் நீயும் பிறரைச் சபித்தாயென்று உன்மனதுபோந்த பிரகாரமாக அறிந்திருக்கும்.

௨௩ இவையெல்லாம் ஞாயமாய்ச் சோதித்துப்பார்த்தேன், ஞானமடைவேனென்று நான் சொல்லியும் அது எனக்குத் தூரமாயிருந்தது.

௨௪ தூரமும் மகா ஆழமுமாயிருக்கிறதைக் கண்டுபிடிப்பவனார்?

பொல்லாத ஸ்திரியின் விசுதனத்தையும் அஞ்ஞாதி விழுந்துகிடக்கிற கேட்டையும் எடுத்துப்பேசினது.

௨௫ ஞானத்தையுந் திட்டமான நிதானத்தை அறியவும் ஆராயவுந் தேடவும், * புத்திகேட்டின் ஆகாமியத்தையும் புத்திமயக்கங்களின் பயித்தியத்தையும் அறியவும் நானென்னிருதயத்தாலே சுற்றித்திரிந்தேன். * ௧. ௰௭.

௨௬ நெருக்கண்ணிகளும் வலைகளுமான கைகள் கட்டுகளுமாயிருக்கிற ஸ்திரி * சாவிலுங் கசப்பென்று கண்டேன், பராபரனுக்கு முன்பாகச் சற்குணனாயிருக்கிறவன் அவளுக்குத் தப்புவான் † பாவியோ அவளாற் பிடிபடுவான். * வாக்கி. ரு, ௯. ௪. † வாக்கி. ௨௨, ௰௪.

௨௭ இதோ இதைக்கண்டுபிடித்தேனென்று பிரசங்கிசொல்லுகிறான், திட்டமான நிதானத்தைக் கண்டுபிடிப்பதற்கு ஒவ்வொன்றாய்ப்பார்த்தேன்.

௨௮ அதையென்னாத்துமா இன்னந்தேடுகிறது, அதை நான் இன்னங்கண்டுபிடித்ததில்லை, ஆயிரம் பேரிலொரு மனுஷனைக்கண்டேன், ஆனால் இவர்களெல்லாரிலும் ஒரு ஸ்திரியை நான் கண்டதில்லை.

௨௯ இதோ பராபரன் மனுஷனைச் செம்மையானவனாக உண்டாக்கினானென்கிறதைமாத்திரங் கண்டுபிடித்தேன், இவர்களோ அநேகம் உபாயதந்திரங்களைத் தேடினார்கள்.

## ௮. அதிகாரம்.

[துரைத்தனத்துக்கு நன்றாய்க்கீழ்ப்படியவும் லோகத்தில் நடக்கிறதானுமாதிரிகளில் இடறல்லடையாமல் விண்சுவலையற்று மகிழ்ச்சியாயிருக்கவும் புத்திசொன்னது.]

ஞானிக்கொத்தவனார்? காரியத்தின் வியார்த்தையை அறிந்தவனுக்கொத்தவனார்? மனுஷனுடைய ஞானம் அவன் முகத்தை வெளிச்சமாக்கும், அதினால் அவன் முகத்தின் துஷ்டமாறும்.

௨ * இராசாவின் கட்டளையைக் கவனித்து நடவென்று நானுன்னை எச்சரிக்கிறேன், இதை நீ பராபரனுக்கிட்ட ஆணையின்படியே செய். * வாக்கி. ௨௪, ௨௧.

௩ நீ அவன் முகப்பார்வையாற் கலக்கத்தபடிக்கு நட, பொல்லாத காரியத்திலே நில்லாதே, ஏனென்றால் தனக்கிச்சித்தமாயிருக்கிறவெல்லாவற்றையுஞ் செய்வான்.

௪ இராசாவின் வார்த்தையெல்லாம் அதிகாரமுள்ளது, என்ன செய்கிறாயென்றவனோடே யார் சொல்லுவான்?

௫ * கற்பனையைக் கைக்கொள்ளுகிறவன் துற்காரியத்தைக் கண்டடைவதில்லை, ஞானியின் இருதயங் காலத்தையும் நியாயத்தையும் அறியும். * ரோமர். ௰௩, ௩.

௬ * ஏனென்றால் எல்லாவிருப்பத்துக்குங் காலமும் நியாயமுமுண்டு, ஏனென்றால் மனுஷன்மேலிருக்கிற அவனுடைய நிர்க்குதி பாரமானது. * ௩, ௧.

௭ என்ன சம்பவிக்குமென்றறியானே, சம்பவிக்குங்காலத்தைப்போ அவனுக்கறிவிப்பவனார்?

௮ ஆவியை விடாதிருக்கத்தன்னாவியின்மேலே மனுஷன் அதிபதியல்ல, மரணநாளின்மேல் அவனுக்கதிகாரமுமில்லை, அந்தப்போருக்கு நீங்குதலுமில்லை, ஆகாமியந்தன்னுடையவர்களை விடுவிப்பதுமில்லை.

௯ சூரியனின்கீழ்ச் செய்யப்படும் எல்லாக்கிரியையின்மேலும் நான் என்னிருதயத்தை வைத்து இதையெல்லாங்கண்டேனம்,

ஒருவன் மனுஷன் தனக்குச் சேதமாக ஆளுகிறகாலமுமுண்டு.

௰ அந்தப்படி ஆகாதவர்கள் அடக்கம்பண்ணப்படுகிறதையுங் கண்டேன், அதற்குச் சனங்கள் வந்தார்கள், அதற்குப் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து நடந்துபோகிறவர்களும் உண்டாயிருந்தார்கள், நீதஞ்செய்கிறவர்களோ ஊரிலே மறக்கப்பட்டார்கள், இதுவும் மாயை.

௰௧ துர்க்கிரியைக்குத் தக்க நியாயத்தீர்ப்பு சீக்கிரம் நடவாதபடியால் மனுப்புத்திரரின் இருதயம் அவர்களுக்குள்ளே பொல்லாப்பைச் செய்ய நிறையப்படும்.

௰௨ பாவி நூறுதரம் பொல்லாப்பைச் செய்து நீடித்திருந்தாலும் * பராபரனுக்குப் பயந்து அவருடைய முகத்துக்கு முன்பாக அச்சிக்கையாயிருக்கிறவர்களே நன்றாயிருப்பார்களென்று நான் அறிவேன்.

* சங்கீதம். ௩௭, ௯. ௫ுஹ

௰௩ ஆனால் ஆகாதவன் நன்றாயிருப்பதில்லை. அவன் நாள் நீடித்திருப்பதுமில்லை, ஒரு நிழலைப்போலிருப்பான், ஏனெனில் அவன் பராபரனுக்கு முன்பாக அச்சிக்கையில்லாதிருக்கிறான்.

௰௪ பூமியின்மேல் நடக்கிற வேறொரு மாயையுமுண்டு, அதாவது நீதிமான்களுண்டு, ஆகாதவர்களின் செய்கைக்கு வருவதுபோல அவர்களுக்கு வரும் ஆகாதவர்களுமுண்டு, நீதிமான்களின் செய்கைக்கு வருவதுபோல அவர்களுக்கு வரும் மாயையென்கிறேன்.

௰௫ ஆகையால் நான் மகிழ்ச்சியைப் புகழ்ந்திருக்கிறேன். ஏனெனில் * போசிப்பதும் குடிப்பதும் மகிழ்வதுமேயல்லாமல் வேறொரு நன்மையுஞ் சூரியனின்கீழ் இருக்கிறவைகளால் மனுஷனுக்கில்லை. பராபரன் அவனுக்குச் சூரியனின்கீழ்க் கட்டளையிட்ட அவன் சீவனின் நாட்களில் அவனுக்கு அவன் பிரயாசத்தோடுஞ் சேருகிறது அதுவே. * ௨, ௨௪. ௩, ௰௨. ௨௨.

௰௬ நான் ஞானத்தையறிகிறதினிமேலும் மனுஷன் இரவும் பகலும் தன் கண்களில் நித்திரையுங் காணாதிருக்கத்தக்கதாய்ப் பூமியிலுண்டாயிருக்கிற தொல்லையைப் பார்க்கிறதின்மேலும் என் இருதயத்தை வைத்தபோது,

௰௭ சூரியனின்கீழ்ச் செய்யப்படுஞ் செய்கையை மனுஷன் கண்டுபிடிக்கமாட்டானென்கிறதைப் பராபரனுடைய செயலையெல்லாம் நோக்குகையிற் கண்டேன், அதைத் தேட மனுஷன் எத்தனை பிரயாசப்பட்டாலுங் கண்டுபிடியான், தனக்கறியப்படுமென்று ஞானி சொல்லியும் அவனும் அதைக் கண்டுபிடிக்கமாட்டான்.

## ௯. அதிகாரம்.

[ஆராய்ந்து முடியாத தேவசெயலின் இரகசியத்தைத் தொட்டு இடறற் படாமல் அதற்கு அமரிக்கையும் மகிழ்ச்சியுமாய் அடங்கவும் ஞானத்தையெண்ணவும் புத்தி சொன்னது.]

அதேனென்றால் இவையெல்லாம் நான் என் மனதிலே வைத்து இவையெல்லாம் வகையறுக்கப்பார்த்தேனே, என்னவெனில் நீதிமான்களும் ஞானிகளும் அவர்கள் கிரியைகளும் பராபரனுடைய கையிலிருந்தாலும் அவர்களுக்கு முன்பாகவிருக்கிற தெல்லாவற்றினாலுஞ் சிநேகமாகிலும் பகையெனிலும் மனுஷனுக்குத் தெரியாதென்பதைத்தானே.

௨ சம்பவிக்கிறபாவும் எல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கும், நீதிமானுக்கும் ஆகாதவனுக்கும் நற்குணமுஞ் சுத்தமுமாயிருக்கிறவனுக்கும் அசுத்தமாயிருக்கிறவனுக்கும் பலியிடுகிறவனுக்கும் பலியிடாதவனுக்கும் நல்லவனுக்கும் பாவிக்கும் ஆணையிடுகிறவனுக்கும் ஆணைக்குப் பயப்படுகிறவனுக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கிறது.

௩ எல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கிறது. மனுப்புத்திரரின் இருதயம் பொல்லாப்பினாலும் நிறைந்திருக்கிறதும் அவர்கள் உயிரோடிருக்கிற நாட்களில் அவர்களிருதயத்திற் பயித்தியங்களிருக்கிறதும் பிற்பாடு அவர்கள் செத்தவர்களண்டைக்குப் போகிறதுஞ் சூரியனின்கீழ் நடக்கிறவெல்லாவற்றிலும் விசேஷித்த தீங்குதானே.

௪ ஏனெனில் இதற்கு நீங்கலாய்ப் பிரிக்கப்படுகிறவனார்? உயிரோடிருக்கிற அனைவரிடத்திலும் இன்னம் நம்பிக்கையுண்டு, ஏனென்றாற் செத்த சிங்கத்தைப் பார்க்கிலும் உயிரோடிருக்கிற நாய்வாசி.

௫ உயிரோடிருக்கிறவர்கள் தாங்கள் மரிப்பதையறிவார்களே, மரித்தவர்கள் ஒன்றுமறியார்கள், அப்புறம் அவர்களுக்குப் பலாபமுமில்லை, ஏனென்றால் அவர்கள் பேர் மறக்கப்பட்டிருக்கிறது.

௬ அவர்கள் சிநேகமும் அவர்கள் பகையும் அவர்கள் வயிராக்கியமும் அழிந்துதீர்ந்தது, சூரியனின்கீழே செய்யப்படுகிற தொன்றிலும் அவர்களுக்கினியென்றைக்கும் பங்கில்லை.

௭ நீ போய் * உன் அப்பத்தை மகிழ்ச்சியுடனே போசித்து உன் திராட்சப்பழ இரசத்தை நற்குண இருதயத்துடனே குடி, ஏனெனிற் பராபரன் உன் கிரியைகளுக்குப் பிரியப்பட்டிருக்கிறார். * ௨, ௨௪.

௮ எல்லாக்காலத்திலும் உன் வஸ்திரங்கள் வெளுத்தவைகளும் உன் தலையின்மேல்

௰௮ பின்னையொரு சமயம் சம்பவிப்பதாவது, கர்த்தர் எகிப்திலுடைய நதிகளின் கடையாந்தரத்திலே ஈக்களையும் அசூரியா தேசத்திலிருக்குந் தேனீபூச்சிகளையும் பயில்போட்டழைப்பார்.

௰௯ அவைகள் வந்து ஏகமாய் வனாந்தரங்களின் பள்ளத்தாக்குகளிலுங் கன்மலைகளின் வெடிப்புகளிலும் எல்லா முள்ளுக்காடுகளிலும் எல்லாச் சோலைகளிலுந் தங்கும்.

௨௰ அக்காலத்திலே ஆண்டவர் * கூலிக்கு வாங்கின சவரகன் கத்தியாகிய நதிக்கப்பாலான அசூரியாவின் இராசாவினாலே சிரசையுங் கால்களின் மயிரையுஞ் சிரைப்பித்துத் தாடியையும் வாங்கிப்போடுவிப்பார்.
* ௰, ௫.

௨௧ அக்காலத்திலொருவன் ஒரு கிடாரியையும் இரண்டாடுகளையும் வளர்த்தால்,

௨௨ அவன் அவைகள் பரிபூரணமாய்ப் பால் கறக்கிறபடியினாலே வெண்ணெயைச் சாப்பிடுவான்; தேசத்தின் நடுவில் மீதியாயிருப்பவனெல்லாம் வெண்ணெயையுந் தேனையுஞ் சாப்பிடுவான்.

௨௩ பின்னையொரு சமயம் சம்பவிப்பதேதெனில் ஆயிரம் வெள்ளிக்காசு பெறும் ஆயிரந் திராட்சச்செடியிருந்த நிலமெல்லாம் முள்ளுஞ் செடியும் நெரிஞ்சிலுமாம்.

௨௪ அம்புகளையும் வில்லையும் பிடித்து அங்கே போகவேண்டியதாயிருக்கும், ஏனெனில் தேசம் அனைத்தும் முள்ளுஞ் செடியும் நெரிஞ்சிலுமாயிருக்கும்.

௨௫ குந்தாளியாலே கொத்தப்படுகிற எல்லாமலைகளிலுமுண்டே, அங்கே முள்ளுச் செடிகளுக்கும் நெரிஞ்சில்களுக்கும் பயப்படுகிறவர் போகக்கூடாத படியினாலே அது மாடுகளை ஓட்டிவிடுகிறதற்கும் ஆடுகள் மிதிப்பதற்குமான இடமாயிருக்குமென்றான்.

## ௮. அதிகாரம்.

[தமஸ்குவுஞ் சமாரியாவுஞ் சீக்கிரத்திலே அசூரியராற் கொள்ளையாய்ப் போகுமென்பது.]

பின்னையுங் கர்த்தர் என்னுடனே ஒரு பெரிய கடுதாசிச் சுருளை எடுத்துக்கொண்டு மனுஷன் எழுதுகிற பிரகாரமாய் அதிலே கொள்ளைக்குக் கடுகிச் சூறைக்குத் தீவிரிப்பானென்றெழுதென்றார்.

௨ அப்போது நான் உண்மையுள்ள சாட்சிகளாயிருக்கிற ஆசாரியனாகிய உரியாவையும் எபெரேகியாவின் குமாரனாகிய சகரியாவையும் அதற்குச் சாட்சியாக வைத்துக்கொண்டேன்.

௩ நான் தீர்க்கதரிசியானவளண்டைக்குச் சேர்ந்தபோது அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்றாள்; அப்போது கர்த்தர் என்னுடனே கொள்ளைக்குக் கடுகிச் சூறைக்குத் தீவிரிப்பானென்று பேரையவனுக்கிடு.

௪ ஏனெனில் இந்தப்பாலகன் என்னப்பா, என்னம்மாவென்று கூப்பிட அறிகிறதற்கு முன்னே தமஸ்குவின் ஆஸ்தியுஞ் சமாரியாவின் கொள்ளையும் அசூரியாவின் இராசாவுக்கு முன்பாகக் கொண்டுபோகப்படுமென்றார்.

### யூதரிலதுன்மார்க்கர் அழிவதுஞ் சன்மார்க்கர் காக்கப்படுவதும்.

௫ கர்த்தர் அப்புறம் என்னோடே பேசத் தொடர்ந்து சொன்னதாவது,

௬ இந்தச் சனம் மெதுவாய் ஓடுகிற சீலோவாவின் தண்ணீர்களைச் சட்டைபண்ணி ரேத்சீனையும் ரெமலியாவின் குமாரனையுங் குறித்துச் சந்தோஷிக்கிறபடியினாலே,

௭ இதோ, ஆண்டவர் அசூரியாவின் இராசாவும் அவனுடைய சகல ஆடம்பரமுமாகிய ஆற்றினுடைய வலுவுந் திரளுமான தண்ணீர்களை அவர்கள்மேலே புரளப்பண்ணுவார், அது அவர்களுடைய ஓடைகளெல்லாவற்றின்மேலும் புரண்டு அவர்களுடைய எல்லாக் கரைகளின்மேலும் போய்,

௮ யூதாவுக்குள் புகுந்து புரண்டு கடந்து கழுத்துமட்டும் வருமென்றார். * இம்மானுவேலே, அவன் செட்டைகளின் விரிவு உமது தேசத்தின் அகலத்தை நிரப்பும். * ௭, ௰௪.

௯ சனசதளங்களே, ஏகக்கூட்டமாகி * முறியுங்கள், சகல தூரதேசத்தாரே, செவிகொடுங்கள், இடைக்கட்டிக்கொண்டு முறியுங்கள், இடைக்கட்டிக்கொண்டு முறியுங்கள். * ௨. இராசா. ௰௯, ௨௧.

௰ யோசனையை யோசியுங்கள் அது அவத்தமாகும், வார்த்தையை வசனியுங்கள், அது நிற்காது, ஏனெனில் எங்களுடனே பராபரனிருக்கிறார்.

௰௧ ஏனெனிற் கர்த்தரென்னுடனே பேசி என் கையைத் திடப்படுத்தி நானிந்தச் சனத்தின் வழியிலே நடவாதபடிக்கு எனக்குப் புத்திசொல்லி விளம்பினதாவது,

௰௨ இந்தச் சனம் ஒப்பந்தமென்று சொல்லுகிறதையெல்லாம் நீங்கள் ஒப்பந்தமென்று சொல்லாமலும், அது பயப்படுகிற பயமாய் நீங்கள் பயப்படாமலுந் திகிலியாமலும்,

௰௩ சேனைகளின் கர்த்தரையே பரிசுத்தம்பண்ணுங்கள், அவரே உங்கள் பயமும் அவரே உங்கள் திகிலுமாயிருப்பாராக.

௰௪ அவர் உங்களுக்குப் பரிசுத்தஸ்தலமும் இஸ்ரவேலின் இரண்டு வீடுகளுக்கோ * தடுக்கலின் கல்லும் இடறுதலின் கன்மலையும் எருசலேமின் குடிகளுக்குச் சுருக்குங் கண்ணியுமாகவிருப்பார். * ௨௮, ௰௬. ரோ. ௯, ௩௩.

௰௫ அவர்களில அநேகர் இடறிவிழுந்து நொறுங்கிச்சிக்கிக்கொண்டு பிடிபடுவார்கள்.

௰௬ சாட்சியைக் கட்டிப்போடு, நம்முடைய சீஷருக்குள்ளிருக்கிறவேதத்தைமுத்திரியென்றார்.

௰௭ யாக்கோபின்வீட்டுக்குத்தமது முகத்தைமறைக்கிறகர்த்தருக்கு நான் காத்து அவருக்கெதிர்பார்த்திருப்பேன்.

௰௮ * இதோ நானும் கர்த்தரெனக்குக்கொடுத்த பிள்ளைகளும் சீயோன் பருவதத்தில் வாசமான சேனைகளுடைய கர்த்தராலே இஸ்ரவேலில் அடையாளங்களாகவும் அற்புதங்களாகவுமிருக்கிறோம். * எபிரேயர். ௨, ௰௩

௰௯ அல்லாமல் அவர்கள் உங்களுடனே அஞ்சனம்பார்க்கிறவர்களையும் முணுமுணென்று சத்தமிடுகிற குறிகாரரையுங்கேளுங்களென்பார்கள், சனந்தன் பராபரனைக்கேட்கவேண்டாமோ? உயிருள்ளவர்களுக்காகச்செத்தவர்களைக்கேட்கலாமோ?

௨௰ வேதத்தையுஞ் சாட்சியையுங் கவனிக்கவேணும், இந்தவார்த்தையின்படியே அவர்கள் சொல்லாவிட்டால் அவர்களுக்கு விடியற்காலவெளுப்பில்லை.

௨௰௧ இடுக்கண் அடைந்தவர்களும்பட்டினியுமாயத்தேசத்தைத்தாண்டுவார்கள், அவர்கள்பட்டினியாயிருக்கும்போது மூர்க்கவெறிகொண்டு தங்கள் இராசாவையுந்தங்கள் பராபரனையுந்தூஷணிக்கிறவர்களாய் அண்ணாருவார்கள்.

௨௰௨ தேசத்தைநோக்கிப்பார்ப்பார்களல்லோ, இதோ இக்கட்டுமிருட்டுமாம், இடுக்கத்தாலிருளடைந்து அந்தகாரத்திலே தள்ளுண்டலைவார்கள்.

## ௯. அதிகாரம்.

[கிறிஸ்துவினுடைய பிறப்பின விசேஷமானதீர்க்கதரிசனம்.

௧ ஆகிலும் அவர்செபுலோனதேசத்தையும் நப்தலிதேசத்தையும் ஈனப்படுத்தின முந்தின காலத்து இடுக்கமாய் அது இருண்டிருப்பதில்லை, ஏனென்றால் அவர் * கடற்கரைவழியும் யோர்தான் நதியோரமுமான புறசாதியாருடைய கலிலேயாவாகிய அந்தேசத்தைப் பிற்காலத்திலேமகிமைப்படுத்துவார். * மத்தே. ௪, ௰௪—௰௬.

௨ * இருளில நடக்கிறசனம்பெரியவெளிச்சத்தைக்காணும், மரண நிழலின்தேசத்திற் குடியிருக்கிறவர்களின்மேலவெளிச்சமபிரகாசிக்கும். * லூக். ௧, ௭௮. ௭௯.

௩ அந்தச்சாதியைத்திரளாக்கி அதுக்கு மகிழ்ச்சியைப்பெருகப்பண்ணுவீர், அறுப்பில மகிழுகிறதுபோலவும், * கொள்ளையைப்பங்கிட்டுக்கொள்ளுகையிற் களிகூருகிறதுபோலவும் உமக்குமுன்பாக மகிழுவார்கள். * சங்கீதம். ௱௰௯, ௱௬௨.

௪ ஏனெனில் அவர்கள் சுமையான நுகத்தடியையும் அவர்கள் தோளின்மிலாறையும் அவர்கள ஆளோட்டியின்கோலையும் * மீதியானியரின் நாள் நடப்பிக்குச் சரியாய முறித்துப்போட்டீர். * நியாயாதிபதி. ௭, ௨௨.

௫ அதேனென்றால அமளியாய் யுத்தம்பண்ணுகிற எல்லாப்படைமுஸ்தீதும் இரத்தங்களிலேபுரண்ட உடுப்புஞ் சுட்டெரிக்கப்பட்டு அக்கினிக்கிரையாகும்.

௬ ஏனெனில் * நமக்கொரு பாலகன் பிறந்தார், நமக்கொரு குமாரனகொடுக்கப்பட்டார், கர்த்தத்துவம் அவர் தோளின்மேலிருக்கும், அவர் நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்காரர், வல்லமையுள்ளபராபரன், நித்தியபிதா, சமாதானப்பிரபுவென்னப்படும். * லூக்கா. ௨, ௭—௰௧. யோவா. ௩, ௰௬.

௭ * தாவீதின் ஆசனத்தையும் அவனுடைய இராச்சியத்தையும் அவர்திடப்படுத்தி அதையிதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் நியாயத்திலும் நீதியிலும் நிலைப்படுத்தும்படிக்கு அதையவர் ஆளுங் கர்த்தத்துவத்தின் பெருக்கத்துக்கும் அதின்மேலுள்ள சமாதானத்துக்குமுடிவில்லை, † சேனைகளுடைய கர்த்தரின்வயிராக்கியம் அதைச்செய்யும். * லூக்கா. ௧, ௩௨. ௩௩. † ௩௭, ௩௨. ௨. இராசா. ௰௯, ௩௧.

### இஸ்ரவேலிராச்சியத்தின்மேலேசங்காரம் வருவது.

௮ ஆண்டவர் யாக்கோபிலே ஒருவார்த்தையை யனுப்பினார், அது இஸ்ரவேலின்மேலிறங்குகிறதாயிருக்கிறது.

௯ செங்கல்கள் இடிந்துபோனது, வெட்டினகல்லுகளாலே நாம்கட்டுவோம், காட்டத்திமரங்களவெட்டிப்போடப்பட்டது, கேதுருமரங்களை அவைகளுக்குமாறயிவைப்போமென்று,

௰ அகந்தையும் மனப்பெருமையுமாய்ச் சொல்லுகிற எப்பிராயீமருஞ் சமாரியாவின் குடிகளுமாகிய எல்லாச் சனத்துக்கும் அது தெரியவரும்.

௰௧ என்னவெனில், கர்த்தர் ரேத்சீனுடைய சத்துருக்களையவர்கள்மேல் உயர்த்தி அவர்களுடையமற்றச்சத்துருக்களையவர்களோடே கூட்டிக்கலப்பார்.

௰௨ சீரியர் முற்புறத்திலும் பெலிஸ்தர் பிற்புறத்திலுமிருந்துவந்து இஸ்ரவேலை முழுவாயாலுமபட்சிப்பார்கள், * இதிலெ

லாம் அவருடைய கோபம் ஆறாமல், அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது. * ௫, ௨௫. ௰௨, ௪.

௰௩ ஏனெனில் இந்த ஜனந் தன்னை அடிக்கிறவரண்டைக்குத் திரும்பாமல், சேனைகளுடைய கர்த்தரைத் தேடாமற் போகிறார்கள்.

௰௪ ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலிலே தலையையும் வாலையும், கிளையையும் நாணலையும் ஒரே நாளிலே அறுப்பார். * ௨. இராசா. ௰௭, ௬, ௨௪.

௰௫ மூப்பனும் கனமுகமானவனுந் தலை, பொய்ப்போதகம்பண்ணுகிற தீர்க்கதரிசியே வால்,

௰௬ ஏனென்றால் * இந்தச்சனத்தை நடத்துகிறவர்கள் எத்தரும், அவர்களால் நடத்தப்படுகிறவர்கள் விழுங்கப்படுகிறவர்களுமாயிருக்கிறார்கள். * ௩, ௰௨. லூக். ௬, ௩௯.

௰௭ ஆனபடியால் ஆண்டவர் அதின் இளைஞர்மேல் பிரியமாயிருப்பதுமில்லை அதிலிருக்கிற தாய்தகப்பனில்லாதவர்கள்மேலும் விதவைகள்மேலும் இரங்குவதுமில்லை, ஏனெனில் அவர்கள் அனைவரும் மாயக்காரரும் பொல்லாதவர்களுமாயிருக்கிறார்கள். எல்லாவாயும் பயித்தியம் பேசும்,* இதெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது. * ௰௨. வச.

௰௮ ஆகாமியமானது அக்கினியைப்போல எரிகிறபடியினாலே அது முள்ளுச்செடியையும் நெரிஞ்சிலையும் பட்சிக்கும், சனம் பின்னலான காட்டைப் புகைத்திரளெழும்பத்தக்கதாய்க் கொளுத்தும்.

௰௯ சேனைகளுடைய கர்த்தரின் சினத்தாலே தேசம் மந்தாரப்பட்டுச் சனம் அக்கினிக்கிரையாய்ப்போம், ஒருவனுந் தன் சகோதரனைத் தப்பவிடான்.

௨௰ வலதுபுறத்தில் அறுத்தாலும் பசித்திருப்பார்கள், இடதுபுறத்திலே தின்றாலுந் திருத்தியாவதில்லை, தன் தன் புயத்தின் மாமிசத்தை அவனவன் தின்பான்.

௨௧ எப்பிராயீமை மனாசேயும், மனாசேயை எப்பிராயீமுந் தானே, இவர்களேகமாய் யூதாவுக்கும் விரோதமாயிருப்பார்கள்,* இதெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கும். * ௰௨, ௰௭. வசனங்கள்.

## ௰. அதிகாரம்.

[இஸ்ரவேலிலே தலைமையானவர்களுக்கு ஐயோவென்றுகூறினது.]

ஏழைகளை வழக்கிலே தோற்கப்பண்ணவும் நம்முடைய சனத்திற் சிறுமையானவர்களின் நியாயத்தைப் பறிக்கவும் விதவைகளைச் சூறையிடவுந் திக்கற்றவர்களைத் தாங்கள் கொள்ளையிடவுமாக,

௨ அக்கிரமப் பிரமாணங்களைத் தீர்மானிக்கிறவர்களுக்கும் பாரமானவைகளை எழுதுகிற வேதபாரகருக்கும் ஐயோ,

௩ விசாரிப்பின் நாளிலுந் தூரத்திலிருந்து வருகிற பாழ்க்கடிப்பின் நாளிலும் நீங்கள் என்னசெய்வீர்கள்? ஆரண்டையிலே ஒத்தாசைதேட ஓடுவீர்கள்? உங்கள் மகிமை கட்டுண்டவர்களின் கீழ் முடங்கிப்போகாதபடிக்கு எங்கே வைத்துப்போவீர்கள்?

௪ கொலைசெய்யப்பட்டவர்களுக்குள்ளும் விழுவார்கள், இதெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கையின்னம் நீட்டினதாயிருக்கும்.

எருசலேமையும் பிடிக்க நினைவுகொள்ளும் பெருமையான அசூரியனைக் கர்த்தர் அழிப்பது.

௫ நம்முடைய கோபத்தின் கோலாகிய* அசூரியருக்கு ஐயோ, அவர்கையிலிருக்கிறது நம்முடைய சினத்தின் மிலாறு * ௩௬, அதிகார. ௧. ௨. இராசா. ௰௮. ௰௩.

௬ நாம் அவமார்க்கமான சாதிக்கு விரோதமாய் அவனை அனுப்பி, நம்முடைய கோபமூண்டிருக்கிற சனத்தின்மேல் அவனைக் கொள்ளையிடவுஞ் சூறையாடவும் அவர்களைத் தெருக்களின் சேற்றைப்போல மிதித்துப்போடவும் அவனுக்குக் கட்டளைகொடுப்போம்.

௭ அவனோவென்றால் அப்படிக்கொத்த எண்ணமும் அவனிருதயம் அப்படிக்கொத்த நினைவுமாயிராமற் கொஞ்சமாயிராத சாதிகளைப் பாழ்க்கவுஞ் சங்கரிக்கவுந் தன் மனதிலே நினைவாயிருக்கிறான்.

௮ ஏனென்றால் * என் பிரபுக்கள் அனைவரும் இராசாக்களல்லவோ? * ௩௬, அதிகாரம். ௪—௨௰.

௯ கல்னோபட்டணம், கர்கேமிசைப்போலானதில்லையோ? ஆமாத்து அர்பாத்தைப்போலுமானதில்லையோ? சமாரியா தமஸ்குவைப்போலானதில்லையோவென்றும்,

௰ எருசலேமையுஞ் சமாரியாவையும் பார்க்கிலும் விசேஷித்த சொரூபங்களுள்ள விக்கிரக இராச்சியங்களை என்கை கண்டுபிடித்ததுபோலேயும்,

௰௧ நான் சமாரியாவுக்கும் அதின் விக்கிரகங்களுக்குஞ் செய்ததுபோலேயும், எருசலேமுக்கும் அதின் விக்கிரகங்களுக்குஞ் செய்யேனோவென்றுஞ் சொல்லுகிறான்.

௰௨ ஆனாற் சம்பவிப்பதேதென்றால் ஆண்டவர் சீயோன்பருவதத்திலும் எருசலேமிலுந் தமது செய்கையெல்லாம் முடித்திருக்கும்போது * அசூரிய இராசாவினுடைய பெருமையான நெஞ்சின் கனியையும் அவ

மேட்டிமையான கண்களின் சிறப்பையு
ந்தாம் விசாரிப்போமென்கிறார். * ஙஎ, அதி
காரம். ஙசு. உ. இராசா. யசு, ஙரு.

யங ஏனென்றால் அவன் சொல்லுகிறது
என்னவென்றால் என் கைப்பெலத்தினாலும் என் ஞானத்தினா
லும் இதைச்செய்தேன், ஏனென்றால் உணர்
வுள்ளவனாயிருக்கிறேன், அதினாலே நான்
சனசதளங்களின் எல்லைகளை வாங்கிப்போ
ட்டு அவர்கள் உக்கிராணங்களைக் கொள்ளை
யிட்டு வல்லவனைப்போலக் குடியானவர்களை
த்தாழ்த்தினேன்.

யச என்னை சனசதளங்களின் ஆஸ்தி
யை ஒரு குருவிக்கூட்டைப்போலக் கண்டு
பிடித்துத் தனித்துவிடப்பட்ட முட்டைக
ளைவாரிக்கொள்ளப்படுமாப்போலே பூமியை
யெல்லாம் நான் வாரிக்கொண்டேன் செட்
டையசைத்தவர்களும் வாயைத்திறந்த
வர்களுக்குக்கூச்சென்று சீறினவர்களுமில்லை
யென்கிறான்.

யரு கோடாலி தன்னாலே வெட்டுகிறவனு
க்கு விரோதமாய் மேன்மை பாராட்டலா
மோ? அல்லது வாள் தன்னை யிழுக்கிறவனு
க்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டலா
மோ? தடி தன்னையெடுக்கிறவர்களை யசை
க்குமாப்போலேயும் மிலாறு நான் மரமல்ல
வென்று எழும்புமாப்போலேயுந்தானே.

யசு ஆகையால் சேனைகளுடைய ஆண்ட
வராகிய கர்த்தர் அவனுடைய கொழுத்தவ
ர்களில் இளைப்பை அனுப்புவேகிற அக்கினி
க்கொத்த நெருப்பை அவன் மகிமையின்
கீழ்க்கொளுத்துவார்.

யஎ இஸ்ரவேலின் வெளிச்சமானவர் அக்
கினியும் அதின் பரிசுத்தர் அக்கினிச்சுவா
லையுமாகியெரிந்து ஒரே நாளிலே அவனு
டைய முள்ளுச்செடிகளையும் நெரிஞ்சில்களை
யும் பட்சிக்கும்,

யஅ அவனுடைய காட்டின் மகிமையை
யும் அவனுடைய பயிர் நிலத்தின் மகிமை
யையும் ஆத்துமாத்துவக்கிச் சதைபரியந்த
மும் அழிப்பண்ணுவார், கொடிபிடிக்கி
றவன் களைத்துவிழுந்தவண்ணமாய் அது
விருக்கும்.

யகூ அவனுடைய காட்டின் மீதியான மர
ங்கள் மட்டாயிருக்கும், ஒரு பயல் அவைக
ளையெண்ணியெழுதலாம்.

உய அக்காலத்திலே சம்பவிப்பதேதெ
ன்ன இஸ்ரவேலில் மீதியானவர்களும் யாக்
கோபுடைய வீட்டிலே தப்பினவர்களுந்தங்
களை யடித்தவனை யினிச்சார்ந்துகொள்ளா
மல் இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்த
ரை உண்மையாகச்சார்ந்துகொள்ளுவார்
கள்.

உக மீதியாயிருப்பவர்கள், யாக்கோபி
லே மீதியாயிருப்பவர்களே, வல்லமையுள்ள
பராபரனண்டைக்குத் திரும்புவார்கள்.

உஉ ஏனெனில் * இஸ்ரவேலே, உன்னு
டைய சனங்கள் சமுத்திரத்தின் மணலத்தனை
யாயிருந்தாலும் அதில் மீதியாயிருப்பவர்
களே திரும்புவார்கள், அழிக்குதல் அநீதி
யாயத்தீர்ந்திருக்கும்போது நீதி புரண்டு
வரும். * றோமர். கூ, உஎ. உஅ.

உங ஏனென்றால் சேனைகளுடைய கர்த்
தராகிய ஆண்டவர் தேசத்துக்குள்ளெங்கு
ம் அழிவியான அழிக்குதலைச் செய்வார்.

உச ஆகையாற் சீயோனிலே வாசமாகிய
நமது சனமே உன்னைக் கோலால் அடித்துத்
தன் தடியை எகிப்தியனைப்போல உன்மே
ல் ஓங்குகிற அசூரியனுக்குப் பயப்படாதே.

உரு ஏனெனில் இன்னம் கொஞ்
சப்போதிலே கோபந் தீர்ந்திருக்கும், அப்
போது நம்முடைய கோபம் அவர்களைச் சங்
கரிக்கப்போகிறதென்று சேனைகளுடைய
கர்த்தராகிய ஆண்டவர் விளம்புகிறார்.

உசு * ஓரேப்கன்மலையண்டையிலே மீ
தியானியர் வெட்டுண்டவண்ணமாய்ச் சே
னைகளுடைய கர்த்தர் அவன்மேலொரு சவு
க்கையெழுப்பித் தமது கோலை எகிப்திலே
கடலின் மேல் ஓங்கினதுபோலே ஓங்குவார்.
* நியாயாதி. எ, யகூ. ழ

உஎ அந்நாளிலே அவன் சுமை உன் தோ
ளிலும் அவன் நுகத்தடி உன் கழுத்திலுமிரு
ந்து நீங்கும் தயிலத்தால் நுகத்தடி கெட்டுப்
போம்.

உஅ அவன் ஆயாத்துக்கு வந்து, மிக்
ரோனைக்கடந்து மிக்மாசிலே தன் படைமு
ஸ்திதுகளை வைப்பான்.

உகூ கணவாயைத் தாண்டி கேபாவிலே
பாளயமிறங்குகிறார்கள், ராமா அதிருகிறது
சவுலின் ஊராகிய கிபேயா ஓடிப்போ
கிறது.

ஙய கலீம் குமாரத்தியே, உரத்துக்கூ
ப்பிடு. சிறுமையான ஆனத்தோத்தே, லாயி
சூர்ப்புறமாக உன் சத்தத்தை நீட்டிக்கூப்
பிடு.

ஙக மத்மேனா வலசைவாங்கும் கேபிமின்
குடிகள் கூட்டங்கூடுகிறார்கள்.

ஙஉ இன்னமொருநாள் நோவிலே நிறுத்தி
றதறிருந்து தன் கையைச் சீயோன் குமா
ரத்தியின் பருவதத்துக்கும் எருசலேமின்
மேட்டுக்கும் விரோதமாய் அசைப்பான்.

ஙங ஆனால் இதோ, சேனைகளின் கர்த்த
ராகிய ஆண்டவர் * கொப்புகளை வலுமை
யாய்த் தறிப்பார், ஓங்கி வளர்ந்தவைகள் வெ
ட்டுண்டு மேட்டிமையானவைகள் தாழ்த்த
ப்படும். * ஙஎ, ஙசு.

ஙச அவர் காட்டின் அடர்த்தியைக் கோ
டாலியினாலே வெட்டுவார், மகத்துவமான
வராலே லீபனோன் விழும்.

## ௰௧. அதிகாரம்.

[மேசியாவினுடைய இராச்சியத்தின் பாக்கியம்.]

வெட்டப்பட்ட ஈசாயின் * அடிமரத்திலிருந்து ஒரு துளிர் புறப்பட்டு அவன் வேர்களிலிருந்து ஒரு கிளையெழும்பிக் கனிதரும். * ௪, அதி. ௨. எரே. ௨௩, ௫. ஸகா. ௨, ௧—௰௪.

௨ இவர்மேலே கர்த்தருடைய ஆவியாகிய ஞானம் உணர்வென்றவைகளின் ஆவியும் ஆலோசனை பெலனென்றவைகளின் ஆவியும் அறிவுங் கர்த்தருக்குப் பயப்படுதலுமென்றவைகளின் ஆவியுந் தங்கியிருப்பார்.

௩ அவர் மகத்துணருதல் கர்த்தருக்குப் பயப்படுதலோடேயிருக்கும் * அவர் தமது கண்களுடைய பார்வையின்படி நியாயந் தீர்க்காமலுந் தமது காதுகளுடைய கேள்வியின்படி கடிந்துகொள்ளாமலும்,

* யோபு. ௭, ௨௪.

௪ ஏழைகளை நீதியாய் நியாயம் விசாரித்துப் பூமியிற் சிறுமையானவர்களைச் செம்மையாய்க் கடிந்துகொண்டு பூமியை * தமது வாக்கின் கோலால் அடித்துத் தமது உதடுகளின் ஆவியால் ஆகாதவனைக் கொல்லுவார். * ௪௯, ௨. ௨. தெச. ௨, ௮. அறிவி. ௰௯, ௰௫.

௫ நீதியவர் அரையின் கட்டுஞ் சத்தியம் அவர் இடுப்பின் கச்சையுமாயிருக்கும்.

௬ அப்போது ஓநாய் ஆட்டுக்குட்டியோடே தங்குஞ் சிவிங்கி வெள்ளாட்டுக்குட்டியோடே படுத்துக்கொள்ளுங் கன்றுக்குட்டியும் வாலசிங்கமுங் காளையும் ஒரு சின்னப்பயல் அவைகளை ஓட்டத்தக்கதாய் ஒருமித்திருக்கும். * ௬௫, ௨௫. ஓசெ. ௨, ௰௮.

௭ பசுமாடுங் கரடியுங் கூடமேய்ந்து அவைகளின் குட்டிகள் ஒருமித்துப் படுத்திருக்குஞ் சிங்கம் மாட்டைப்போல வைக்கோலைத் தின்னும்.

௮ முலைகுடிக்கிற குழந்தை விரியன்பாம்பு வளையின்மேல் விளையாடிப் பாலகன் கட்டுவிரியனின் புற்றிலே தன் கையைப் பாய்ச்சும்.

௯ தமது பரிசுத்த பருவதமெங்குந் தீமைபண்ணுவாருமில்லை கேடு செய்வாருமில்லை, ஏனெனில் தண்ணீர்கள் கடல் ஆழத்தை மூடும்போல பூமி கர்த்தரையறிகிற அறிவினால் நிறைந்திருக்கும்.

௰ அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில் * சனசதளங்களுக்குக் கொடியாக நிற்கிற ஈசாயின் வேருக்காகச் சாதிகள் விசாரித்துக் கேட்பார்கள், அவருடைய தாபரஸ்தலம் மகிமையாயிருக்கும். * ரோம. ௰௫, ௰௨.

௰௧ அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில் ஆண்டவர் அசூரியாவிலும் எகிப்திலும் பத்ரோசிலும் எத்தியோப்பியாவிலும் பெர்சியாவிலுஞ் சினேயாரிலும் ஆமாத்திலுஞ் சமுத்திரத்தின் தீவுகளிலுந் தம்முடைய சனத்தில் மீதியானவர்களை வசப்படுத்திக்கொள்ளத் திரும்ப இரண்டாம் விசை தமது கரத்தை நீட்டி,

௰௨ சாதிகளுக்குக் கொடியேற்றி இஸ்ரவேலிலே துரத்துண்டவர்களைச் சேர்த்து யூதாவிற் சிதறடிக்கப்பட்டவர்களைப் பூமியின் நாலு திசைகளிலுமிருந்துக் கூட்டுவார்.

௰௩ எப்பிராயீமின் பொறாமையும் நீங்கும் யூதாவின் சத்துருக்கள் வேரறுத்துச் சங்கரிக்கப்படுவார்கள். எப்பிராயீம் யூதாவின்மேற் பொறாமையாயிராமலும் யூதா எப்பிராயீமை இறுக்கப்பிடியாமலும்,

௰௪ அவர்கள் மேற்கேயிருக்கிற பெலிஸ்தருடைய தோளின்மேலே பாய்ந்து இருவரும் ஏகமாய்க் கிழக்குத்திசையாருங் கொள்ளையிட்டுத் தங்கள் கைகளை ஏதோமின்மேலும் மோவாபின்மேலும் போடுவார்கள், அம்மோனபுத்திரரும் அவர்களுக்குக் கீழ்ப்படுவார்கள்.

௰௫ எகிப்தின் சமுத்திரமுனையையுங் கர்த்தர் சாபமிட்டு நதியின்மேல் தமது கையைத் தம்முடைய காற்றின் சத்துவத்தோடே அசைத்து அதைப் பாதரட்சைகள் நனையாமல் கடக்கப்பண்ணத்தக்கதாய் ஏழாறுகளாக அடிப்பார்.

௰௬ அப்படியே இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து வந்தேறுகிற நாளில் அவர்களுக்குச் சம்பவித்ததுபோல அவருடைய சனத்தின் அசூரியாவிலே மீதியானவர்களுக்கு நடக்கத்தக்க வழியுண்டாயிருக்கும்.

## ௰௨. அதிகாரம்.

[மேசியாவின் உபகாரங்களைத் துதித்துப் பாடினது.]

அக்காலத்திலே நீ சொல்வதாவது கர்த்தாவே என்மேலே கோபமாயிருந்தீர் உம்முடைய கோபந் திரும்பிற்று, என்னைத் தேற்றவும் பண்ணுகிறீர் என்கிறதினிமித்தந் தேவரீரைத் துதிக்கிறேன்.

௨ இதோ * என் இரட்சிப்பின் பராபரன், நான் அவரை நம்பிப் பயப்படாதிருப்பேன், ஏனெனில் என் பெலனும் என் கீதமுமாகிய கர்த்தராகிய பராபரன், அவரெனக்கு இரட்சிப்பானவரானார். * ௨. மோசே. ௰௫, ௨.

௩ நீங்கள் மகிழ்ச்சியோடே இரட்சிப்பின் ஊற்றுகளில் * தண்ணீர்களை மொண்டு,

யோவான். ௭, ௩௭. ௩௮.

௪ அக்காலத்திலே சொல்வதாவது, கர்த்தரைத் துதியுங்கள், அவர் நாமத்தைத் தொழுதுகொள்ளுங்கள், சனசதனங்களுக்குள்ளே அவர் செய்கைகளையறிவியுங்கள், அவருடைய நாமம் உயர்ந்ததென்று பிரஸ்தாபம்பண்ணுங்கள்.

௫ * கர்த்தரைக் கீர்த்தனம்பண்ணுங்கள், ஏனெனில் மகத்துவமானதைச் செய்தார், இது பூமியெங்கும் அறியப்படக்கடவதென்பீர்கள். சங்கீதம். ௬௮, ௪.

௬ சீயோனில் வாசமாயிருக்கிறவளே, நீ சத்தமிட்டுக்கெம்பீரி, ஏனெனில் இஸ்ரவேலின் பரிசுத்தர் உன்னடுவிலே பெரியவராயிருக்கிறார்.

## ௰௩. அதிகாரம்.

[பாபேலுக்குவரும் அழிவு.]

ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா * பாபேலின்மேலிறங்கக்கண்டபாரம்.

* ௰௪, அதி. ௪. மிகா. ௨௧, ௧—௰ எரே. ௫௰, ௧. ௵ ௫௧, ௧. ௵

௨ ஓங்கியிருக்கிறபருவதத்தின்மேற்கொடியேற்றுங்கள், சனங்களவர உரத்தசத்தமிடுங்கள், அவர்கள்பிரபுக்களின்வாசல்களுக்குட்பிரவேசிப்பதற்குச் சாடைகாட்டுங்கள்.

௩ நாம்பரிசுத்தமாக்கினவர்களுக்கு நாங்கட்டளைகொடுத்தோம், நமது கோபத்தைத்திறைவேற்ற நம்முடைய பராக்கிரமசாலிகளையழைத்துமிருக்கிறோம், அவர்கள்நமது மகத்துவத்தினாலே களிகூருகிறவர்களென்கிறார்.

௪ வெகுசனத்தின் சத்தத்துக்கொத்ததிரளானவர்களின் இரைச்சலுங் கூட்டப்பட்ட சாதிகளுடைய இராச்சியங்களின் அமளியான இரைச்சலும் மலைகளிற்கேட்கப்படுகிறது, சேனைகளின் கர்த்தர் யுத்தசேனுவத்தை இலக்கம்பார்க்கிறார்.

௫ தேசத்தையெல்லாம் அழிக்கவானத்தின் கடையிலுள்ள தூரதேசத்திலிருந்து வருகிறார்கள், கர்த்தரும் அவருடைய சினத்தின்பணிமுட்டுக்களுந்தானே.

௬ அலறுங்கள், ஏனெனிற் கர்த்தரின் நாள்சமீபமாயிருக்கிறது, சர்வவல்லமையுள்ளவராலே அதுபாழ்க்கடிப்பாயவரும்.

௭ ஆனதினால எல்லாக்கைகளும் நெகிழ்ந்து எல்லாமனுஷரின் இருதயமுங் கரைந்துபோம்.

௮ திகிலாயிருப்பார்கள், வேதனைகளும் வாதைகளும் அவர்களைப்பிடிக்கும், * பெறுகிறவளைப்போல வேதனைப்படுவார்கள், ஒருவரையொருவர் பிரமித்துப்பார்ப்பார்கள், அவர்கள் முகங்கள் நெருப்பான முகங்களாயிருக்கும். * ௨௧, அதிகா. ௩.

௯ இதோ, தேசத்தைப் பாழ்க்கடித்துப்போட்டு அதின் பாவிகளை அதிலிருந்து அழிப்பதற்காகக்கர்த்தருடைய நாள் குரூரமும் மூர்க்கமுங்கோப உக்கிரமுமாய் வருகிறது.

௰ ஏனெனில் வானங்களின் நட்சத்திரங்களும் அவைகளின்ராசிகளுந்தங்கள் ஒளியைவிளங்கப்பண்ணுவதிருக்கும், * சூரியன் தன்னுதயத்தில் இருண்டுபோம், சந்திரன் தன்னொளியைக்காட்டாதுமாயிருக்கும்.

* எசேக். ௩௨, ௭. அப். யோவே. ௩, ௧௫. மத்தே. ௨௪, ௨௯. மாற். ௰௩, ௨௪. ௨௫. லூக்கா. ௨௧, ௨௫. அப்பி. ௬, ௰௨. ௰௩.

௰௧ நாம் பூச்சக்கரத்திலே அதின்பொல்லாப்பையும் ஆகாதவர்களிடத்திலே அவர்கள் அக்கிரமத்தையும்விசாரித்து அகந்தைக்காரரின்பெருமையை ஓயப்பண்ணிப் பலவந்தரின் இடும்பைத்தாழ்த்தி,

௰௨ புருஷனை அபரஞ்சியிலும் மனுஷனை ஓப்பீரின்தங்கத்திலும் அருமையாக்குவோம்.

௰௩ அதையாற சேனைகளுடைய கர்த்தரின்மூர்க்கத்தினால் அவருடைய கோபஉக்கிரத்தின்நாளிலே பூமிதன்னிடத்தைவிட்டசையும்படிக்கு வானத்தையதிரப்பண்ணுவோம்.

௰௪ துரத்தப்பட்ட வெளிமானைப்போலேயும் ஆருஞ்சேர்க்காத ஆட்டைப்போலேயுமிருப்பார்கள், அவரவர்தங்கள்சனத்தண்டைக்குப்போக முகத்தைத் திருப்பி அவரவர் தங்கள் தேசத்துக்கோடிப்போவார்கள்.

௰௫ அகப்பட்டவனெல்லாங்குத்துண்டு சேர்ந்திருந்தவனெல்லாம் பட்டயத்தால்விழுவான்.

௰௬ அவர்கள் குழந்தைகள் அவர்கள் கண்களுக்கு முன்பாகச் சிதைக்கப்படும், அவர்கள் வீடுகள் கொள்ளையாய்ப்போம், அவர்கள்பெண்சாதிகள் அவமானப்படுவார்கள்.

௰௭ இதோ, நாமவர்கள்மேல்மேதியரையெழுப்புவோம், அவர்கள் வெள்ளியையெண்ணுவதும் பொன்னின்மேற்பிரியமவைக்காமலும்,

௰௮ வில்லுகளால்இளைஞரைச்சதைத்துப்போடுவார்கள், அவர்கள் கர்ப்பக்கனியின்மேலிரங்குவதுமில்லை, அவர்கள் கண் பிள்ளைகளைத்தப்பவிடுவதுமில்லை.

௰௯ அப்படியே இராச்சியங்களின் அலங்காரமுங் கல்தேயருடைய பெருமையின் முக்கியமுமாகிய பாபேல் பராபரன் * சோதோமையுங் கொமோராவையுங் கவிழ்த்ததுபோலே கவிழ்ந்துகிடக்கும். எரே. ௫௰, ௰௯. ௫௧, ௫௰.

௨௰ என்றென்றைக்கும் அதிலே தங்கித் தரிப்பாருமில்லை, அங்கே அராபியன் கூடாரம போடுவதுமில்லை, அங்கே மேய்ப்பர் மந்தையைமறிப்பதுமில்லை.

௨௧ * வனாந்தரசசீவன்கள் அங்கே தங்கி அவர்களவீடுகளைப் பூனைபிடிதல்களாலே நிரப்புங், கோட்டான்கள் அங்கே தாபரிக்கும, பேய்கள் அங்கே துளளும. * வெளி. ௰௮, ௨.

௨௨ அவர்கள பாழான மாளிகைகளில ஓரிசஸொனாய்கள் ஊளையிட்டு மறுவுத்தரவு கொடுக்குமவலுசர்ப்பங்கள அவர்களசெல்வவிருக்கைகயான அரண்மனைகளிற் கூடும, அதினகாலஞ்சமீபித்துவருமு, அதின நாட்கள நீடித்திராதென்கிறார்.

## ௰௪. அதிகாரம்.

[அப்பாலும பாபேலுக்குவரும அழிவின பிரஸ்தாபம முன்னறிவிக்கப்பட்டது.]

ஏனெனில் கர்த்தர் யாக்கோபுக்கிரங்கி இஸ்ரவேலை இன்னம் தெரிந்துகொண்டு அவர்களையவர்களதேசத்திலே தாபரிக்கப்பண்ணுவார், மறுதேசத்தாரும அவர்களுக்குசசோதிக்கையாகி, யாக்கோபின வீட்டோடே கூடிக்கொளளுவார்கள.

௨ சனசதனங்கள அவர்களைசசேர்த்துக்கொண்டு அவர்களை அவர்கள ஸ்தானத்துக்கழைத்துவருவார்கள. இஸ்ரவேலவீட்டார் அவர்களைக்கர்த்தருடையதேசத்திலே வேலைக்காரரும வேலைக்காரிகளுமாகச்சுதந்தரித்துக்கொண்டு தங்களைசசிறையாக்கினவர்களைசசிறையாக்கித் தங்களையொடுக்கினவர்களையாளுவார்கள.

௩ கர்த்தர் உனவாதையையும உனதத்தளிப்பையும நீ அடிமையாக்கப்பட்டிருந்தக்கடின அடிமைத்தனத்தையும நீக்கி உனனை இளைப்பாறப்பணணும அக்காலத்திலே சமபவிப்பதேதெனறால,

௪ நீ பாபேலுடைய இராசாவினபேரிலே ஏறிசசொலலுமவாக்கியமொழியாவது, ஒடுக்கினவன எனனமாய ஓய்நதான, பொற்கோல் எனனமாயொழிநதுபோனது.

௫ கர்த்தர் ஆகாதவர்களின மிலாறையும ஆண்டிருநதவர்களின செஙகோலையும முறித்துப்போட்டார்.

௬ ஓயாத அடியாய்ச் சனசதனங்களை உக்கிரமாயடித்துசசாதிகளைக்கோபமாய் ஆண்டிருநதவன தடுப்பாரிலலாமலதுன்பப்படுத்தப்படுகிறான.

௭ பூமியனைத்தும இளைப்பாறி அமர்நதிருக்கிறது, கெமபீரமாயமுழஙகுகிறார்கள.

௮ பாய்மரவிருட்சஙகளதாமும லீபனோனின கேதுருக்களும உனனிமித்தஞ் சநதோஷமாயிருநது நீ விழுநதுகிடக்கிறது முதற்கொணடெஙகளைவெட்ட ஏறிவருவாரொருவருமிலலையெனகிறது.

௯ தாழவிருக்கிற நரகம உனனிமித்தம அசைநது நீவரக்கொளள எதிர்கொண்டு இராட்சதரையும பூமியிலிருநத எலலாக்கடாய்களையும உனனிமித்தம எழுப்பிச்சாதிகளுடைய எலலா இராசாக்களையுந் தஙகள ஆசனஙகளிலிருந்தெழுநதிருக்கப்பணணும.

௰ இவர்களெல்லாரும பிரதியுத்தாரமாக நீயுமெஙகளைப்போலப்பலட்சயமாகி எஙகளைப்போலானாயோவெனறு உனனுடனேசொலலுவார்கள.

௰௧ உனனுகதியுமும உனதமபுருக்களின முழக்கமும நரகத்திலேதளளுணடுபோன து, புழுக்கள உன கீழ்ப்போடப்பட்டுப் புழுக்கள உனமூடலுமாயிருக்கையும பூசசிகள உனமூடலுமாயிருக்கிறது.

௰௨ அதிகாலத்தினமகனாகிய விடிவெளளியே, நீ யெப்படிவானத்திலிருநது விழுநதாய்? சாதிகளைப்பலவீனப்படுத்தினவனே, எப்படித்தரையிலே விழவெட்டப்பட்டாய்.

௰௩ * நானவானத்துக்கேறி என்னுடைய ஆசனத்தைப் பராபரனுடைய நட்சத்திரஙகளினமேலாகவுயர்த்தி † வடபுறங்களிலுளள ஆராதனைக் கூட்டத்தின பருவதத்திலே உட்காருவேனெனறும, * ௨. தெச. ௨, ௪. † சங். ௪௮, ௩.

௰௪ மேகஙகளுடைய உயர்நத தலஙகளினமேலேறி உனனதமானவருக்கொப்பாவேனெனறும நீ யுனனிருதயத்திற்சொனனாய்

௰௫ ஆனாற் பாதாளப்புறஙகளாகிய நரகத்திலேதளளுணடாய்.

௰௬ உனனைக்காண்கிறவர்கள உன்னைக் கவனிததுக்கி உன்மேல நிநதனைவைத்துப் பூமியைத் தததளிக்கவும இராசசியஙகளை யதிரவுமபணணினவனும,

௰௭ பூச்சக்கரத்தைவனாநதரமாக்கி அதின பட்டணஙகளையழித்துபபோட்டுத்தான கட்டிவைத்தவர்களை வீட்டுக்குப்போகவிடாதவனுமாகிய புருஷன இவனோவெனபார்கள.

௰௮ சாதிகளுடைய சகல இராசாக்களும அவரவர் தஙகளவீட்டிலே கனத்தோடே கிடக்கிறார்கள.

௰௯ நீயோ அருவருப்பான கிளையைப்போலவும பட்டயங்குத்தாய்ச்செத்தவர்களின உடுப்பைப்போலவும குழியின கல்லுக் குவியலோடே கிடக்கப்போட்டவர்களைப்போலவும மிதித்துப்போடப்பட்ட பிணத்தைப்போலவும உன கல்லறைக்குப்புறமபாய் எறிநதுவிடப்பட்டாய்.

௨௰ நீ அவர்களோடொத்து அடக்கம் பண்ணப்படமாட்டாய், ஏனெனில் உன் தேசத்தைக் கெடுத்து உன் சனத்தைக் கொன்றுபோட்டாய், பொல்லாதவருடைய வித்து என்றென்றைக்கும் பேர்கொள்ளுவதில்லை.

௨௧ அவன் பிள்ளைகளெழும்பித் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு பூச்சக்கரத்தைப் பட்டணங்களால் நிரப்பாதபடிக்கு அவர்களுக்கவர்கள் பிதாக்களுடைய அக்கிரமத்தினிமித்தம் வதையை ஆயத்தம்பண்ணுங்கள்.

௨௨ ஏனெனிற் சேனைகளுடைய கர்த்தர் விளம்புகிறதாவது, நாம் அவர்களுக்கு மேலெழும்பிப் பாபேலுடைய பேரையும் மீந்தவையும் குமாரனையும் பேரனையுஞ் சங்கரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௩ நாம் அதை முள்ளம்பன்றிகளுடைய சுதந்திரமுந் தண்ணீர்த்தடாகங்களுமாக்கி அதைச் சங்காரத்தின் துடைப்பத்தினாலே பெருக்கிப்போடுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் விளம்புகிறார்.

௨௪ நாம் நினைத்திருக்கிறபடியே நடக்கும், நாம் நிர்ணயித்துக்கொண்டதே நிறைவேறி நிற்குமென்று சேனைகளுடைய கர்த்தர் ஆணைசத்தியம்பண்ணினார்.

௨௫ என்னவெனில் நாம் அசூரியனை நம் தேசத்திலே முறித்து நம் பருவதங்களின்மேல் அவனை மிதித்துப்போடுவோம் அப்போதவனுடைய நுகத்தடி அவர்கள்மேலிருந்து விலகி அவன் சுமை அவர்கள் தோளிலிருந்து நீங்கும்.

௨௬ இது தேசமனைத்தின்மேலும் நிர்ணயிக்கப்பட்ட யோசனையும் இது சகல சாதிகள்மேலும் நீட்டப்பட்டிருக்கிற கையுமாயிருக்கிறதென்றார்.

௨௭ ஏனெனிற் சேனைகளுடைய கர்த்தர் இப்படி நிர்ணயித்துக்கொண்டார், அதை யவந்தமாக்குபவனார், அவருடைய கை நீட்டப்பட்டிருக்கிறது அதைத் திருப்புபவனார்.

## பெலிஸ்தருக்கு விரோதமான தீர்க்கதரிசனம்.

௨௮ * ஆகாஸ் இராசா மரணமடைந்த வருஷத்திலேயுண்டான பாரமான காட்சியாவது, * ௨. இராசா. ௰௬, ௨௰.

௨௯ முழுப் பெலிஸ்தேயாவே, உன்னையடித்த கோலுடைந்ததென்று களிப்பாயிராதே, ஏனெனிற் பாம்பின் வேரிலிருந்து கட்டுவிரியன் புறப்படும், அதின் கனி பறக்கிற நெருப்புப்பாம்பாயிருக்கும்.

௩௰ ஆனதுகொண்டு தரித்திரரின் தலைச்சனர்கள் மேய்ந்து எளியவர்கள் சுகமாய்ப் படுத்திருப்பார்கள், ஏனெனிற் பஞ்சத்தினாலே உன் வேரைச் சாகப்பண்ணுவோம், உன்னில் மீதியானவர்களையோ அவன் கொன்றுபோடுவான்.

௩௧ வாசலே அலறு, பட்டணமே கதறு, பெலிஸ்தேயாவே நீ முழுதுங் கரைந்துபோகிறாய், ஏனெனில் வடக்கேயிருந்து புகைக்காடாய் வருகிறான், அவன் கூட்டங்களில் தனித்தவனில்லை.

௩௨ இப்போதும் அந்தச் சாதியின் தானாபதிகளுக்கென்ன மறுவுத்தரவு சொல்லப்படும். * கர்த்தர் சீயோனை அஸ்திபாரப்படுத்தினார், அவருடைய சனத்திற் சிறுமையானவர்கள் அதிலே திடன்கொண்டு தங்குவார்களென்பதுதானே. * சங்கீ. அ௭, ௧.

# ௰௫. அதிகாரம்.

[மோவாபின்மேல் வருகிற தண்டனையின் தீர்க்கதரிசனம்.]

மோவாபின்மேலிறங்கும் பாரம். இராவிலே மோவாபின் ஆர்பட்டணம் பாழாக்கப்பட்டது, அது சங்காரமானது, இராவிலே மோவாபின் கீர்பட்டணம் பாழாக்கப்பட்டது, அது சங்காரமானது. * எரே. ௪௮, ௧. ௱ ஏசேக். ௨௫, ௮—௰௧. செப்ப. ௨, ௮. ௯.

௨ ஆனபடியால் அழும்படிக்குப் பாயித்துக்கும் தீபோனுக்கும் பாமோத்துக்கும் போயேறுகிறார்கள், நேபோவினிமித்தமும் மேதேபாவினிமித்தமும் மோவாப் புலம்புகிறது, * அவர்களுடைய எல்லாத் தலைகளும் மொட்டையிட்டிருக்கும், எல்லாத் தாடிகளுங் கத்திரித்திருக்கும். * எரே. ௪௮, ௩௭.

௩ அதின் வீதிகளில் இரட்டைகட்டிக்கொண்டு அதின் வீடுகளின்மேலும் அதின் தெருக்களிலும் எல்லாரும் அலறியழுகையில் இறங்கி இருக்கிறார்கள்.

௪ எஸ்போன் ஊராரும் எலெயாலே ஊராருங் கூக்குரலிடுகிறார்கள், அவர்கள் சத்தம் யாகாசமட்டுங் கேட்கப்படுகிறது, ஆனபடியால் மோவாபின் ஆயுதப்பாடானவர்கள் கதறுகிறார்கள், அவனவனுடைய ஆத்துமா அவனவனில் தியங்குப்படுகிறதாயிருக்கிறது.

௫ * என்னிருதயம் மோவாபினிமித்தங் கூவுகிறது, அதிலிருந்தோடிவருகிறவர்கள் மூன்றுவயதுக் கடாரியைப்போலே அலைகிறார்கள், லூகித்துக்கு ஏறுகிறவழியிலே அழுகையோடே ஏறுகிறார்களே, ஒரோனாயீமின் வழியிலுங் குளறுட்டமான கூக்குரலிடுகிறார்களே. * எரே. ௪௮, ௩௪—௩௬.

௬ ஏனெனில் நிம்ரீமின் நீர்ப்பாய்ச்சல்கள் பாழாய்க்கிடக்கிறது, அதினாற் புல் உலர்ந்து முளையழிந்து பசுமையில்லாமற் போகிறது.

௭ ஆனபடியால் மீதியாகச் சேர்ந்ததையும் அவர்கள் வைத்துவைத்ததையும், * அலரிகளின் ஆற்றுக்கப்பாலே எடுத்துப்போவார்கள். * சங்கீ. ௱௩௭, ௨.

௮ ஏனென்றால் கூக்குரல் மோவாபின் எல்லையைச் சுற்றும், எக்லாயிம்மட்டும் அதின் அலறுதலும், பெயேரேலிம்மட்டும் அதின் அலறுதலும் எட்டும்.

௯ ஆகையால் திமோனின் தண்ணீர்கள் இரத்தத்தால் நிறைந்திருக்கும், ஏனென்றால் நாம் திமோனின்மேல் அதிகக் கேடுகளைக் கட்டளையிட்டு மோவாபிலே தப்பினவர்களின்மேலும் தேசத்தில் மீதியானவர்களின்மேலும் சிங்கத்தை வரப்பண்ணுவோம்.

## ௰௬. அதிகாரம்.

[நல்ல ஆலோசனையை மோவாப் புதனக்குக் கேடாக அசட்டைபண்ணுமென்பது.]

தேசாதிபதிக்குச் செலுத்தும் ஆட்டுக்குட்டிகளை நீங்கள் சேலா பட்டணந்துவக்கி வனாந்தரமட்டுஞ் சேர்ந்த சீயோன் குமாரத்தியின் பருவதத்துக்கு அனுப்புங்கள்.

௨ இல்லாவிட்டால் மோவாபின் குமாரத்திகள் கூண்டைவிட்டுத் துரத்தப்பட்டலைகிற குருவியைப்போலே அர்னோன் நதியின் துறைகளண்டையிலிருப்பார்கள்.

௩ நீ ஆலோசனைபண்ணி நியாயஞ்செய்து மத்தியான உருமத்திலே உன் நிழலை இரவைப்போலாக்கித் துரத்துண்டவர்களை மறைத்து ஓடிவருகிறவர்களைக் காட்டிக்கொடாதிரு.

௪ மோவாபே, துரத்துண்ட நம்முடையவர்கள் உன்னிலே தங்கட்டும், சங்கரிக்கிறவனுக்குத் தப்ப அவர்களுக்கு அடைக்கலமாயிரு. ஏனென்றால் இறுகப்பிடிக்கிறவன் இல்லாதேபோவான், சங்கரிப்பு ஒழிந்துபோம், மிதிக்கிறவர்கள் தேசத்தில் இராதபடிக்கு அழிந்துபோவார்கள்.

௫ ஏனென்றால் இராசாசனங் கிருபையோடே உறுதிபண்ணப்படும், தாவீதின் கூடாரத்திலே நியாயாதிபதியாயிருந்து நியாயம் விசாரித்து நீதிக்குத் தீவிரிக்கிற * ஒருவர் அதின்மேல் உண்மையோடே உட்காருவார். * கூ, ௬. ௭. லூக்கா. ௧, ௩௩.

௬ மிகவும் ஒய்யாரமான மோவாபின் பெருமையையும் அதின் மேட்டிமையையும் அதின் அகந்தையையும் அதின் உக்கிரத்தையுங் கேட்டிருக்கிறோம், அதின் வீம்பு அதப்படியல்லவென்கிறது. * எரே. ௪௮, ௨௯. செப்ப. ௨, ௮.

௭ ஆகையால் மோவாபியர் ஒருவரையொருவர் பார்த்து அலறி எல்லாரும் ஏகமாய் அலறுவார்கள், கிராரேசேத்தூரின் அஸ்திபாரங்கள் தகர்க்கப்பட்டதேயென்று அவைகளுக்காகப் பெருமூச்சு விடுவீர்கள்.

௮ ஏனென்றால் எஸ்போன் ஊர் வயல்கள் சத்தியற்றுப்போனது, சிப்மா ஊர் திராட்சப்பயிருங்கூடவென்றுற் சாதிகளின் அதிபதிகள் அதின் நற்சாதிச் செடிகளை நறுக்கிப்போட்டு யாசேர்மட்டுஞ் சேர்ந்து வந்து வனாந்தரத்திற் சுற்றித்திரிகிறார்கள், அதின் நாற்றுகள் சிதறப்பட்டுக் கடலுக்கப்பாலே எறியுண்டுபோம்.

௯ ஆகையால் யாசேருக்காகவுஞ் சிப்மா ஊர் திராட்சப்பயிருக்காகவும் மிக அழுகிறேன், எஸ்போனே எலெயாலேயே உனக்குள்ள கண்ணீரைப்பாய்ச்சுகிறேன், நீ உன் வசந்தகாலத்துக்காகவும் உன் அறுப்புக்காகவுங் கொக்கரிக்கிற சந்தோஷசத்தம் விழுந்துபோனது.

௰ * சந்தோஷமுங் களிப்பும் பயிர்வெளியிலிருந்துவாங்கிப்போனது, திராட்சத்தோட்டங்களிற் கெம்பீரிப்புமில்லை ஆர்ப்பரிப்புமில்லை, மிதிக்கிறவன் ஆலைகளில் இரசத்தை மிதிப்பதில்லை, கொக்கரிப்பை ஓயப்பண்ணினேன். * எரேமி. ௪௮, ௩௩.

௰௧ * ஆகையால் என் குடல்கள் மோவாபினிமித்தமும் என் உள்ளங் கிராரேசினிமித்தமுஞ் சுரமண்டலத்தைப்போல முழங்குகிறது. * ௰௫, ௫ எரேமி. ௪௮, ௩௬.

௰௨ சமபவிப்பதென்னவென்றால் மோவாபியர் மேடைகளின் மேல் இளைப்படைந்தார்களென்று காணப்படும்போது தங்கள் பரிசுத்தஸ்தலத்திலே பணியப்பிரவேசிப்பார்கள், ஆனால் ஒன்றும் அடையமாட்டார்கள்.

௰௩ இதுவே கர்த்தர் அக்காலமுதல் மோவாபின் மேற்சொன்ன வார்த்தை.

௰௪ இப்போதுங் கர்த்தர் உரைக்கிறதாவது, ஒரு கூலிக்காரனின் வருஷங்களைப் போலொத்த மூன்று வருஷங்களிலே மோவாபின் மகிமையந்த வெல்லாப் பெரிய திரளோடுங் கூடச் சிறுத்துப்போம், அதில் மீதியாயிருப்பதோ பெலத்திராமற் கொஞ்சமும் மட்டுமாயிருக்குமென்கிறார்.

## ௰௭. அதிகாரம்.

[சூரியர்மேலும் இஸ்ரவேலர்மேலும் பாழ்க்கடிப்புவருமென்பது.]

* தமஸ்குவினுடைய பாரம் இதோ தமஸ்கு பட்டணமாயிராதபடிக்குத் தள்ளப்பட்டு இடிந்த மண்மேடாயிருக்கும். * எரேமி. ௪௯, ௨௩—௨௭. ஆமோ. ௧, ௩—௫.

௨ ஆரோவேரின் பட்டணங்கள் பாழாய் விடப்பட்டு மந்தைகளின் வெளியாயிருக்கும், அவைகள் அங்கே மருட்டுவாரில்லாமல் படுக்கும்.

௩ அரண் எப்பிராயீமையும் இராசாங்கம் தமஸ்குவையும் விட்டொழியும், சீரியாவில் மீதியாயிருப்பவர்கள் இஸ்ரவேல் புத்திரருடைய மகிமையின் சாயலாயிருப்பார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௪ அக்காலத்திலே யாக்கோபின் மகிமை குறுகி அவன் மாம்சத்தின் கொழுப்பு கரைந்துபோம்.

௫ ஒருவன் ஓங்கின பயிரை அரிந்துகொண்டு தன் புயத்தினால் கதிர்களை அறுக்கும்போதும், ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே கதிர்களைச் சேர்க்கும்போதும் போலிருக்கும்.

௬ ஆனால் ஒலிவமரத்தை உலுக்கும்போது நுனிக்கொம்பிலே இரண்டு மூன்று காய்களும், அல்லது காய்க்கிற அதின் கிளைகளில் நாலைந்து காய்களும் மீதியாயிருக்குமாப்போலே அதிலே பின் அறுப்புக்கொழுந்து மீதியாயிருக்குமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

௭ அக்காலத்திலே மனுஷன் தன்னை உண்டாக்கினவரை நோக்குவான், அவன் கண்கள் இஸ்ரவேலின் பரிசுத்தரை நோக்கிக்கொண்டிருக்கும்.

௮ தன் கைகளின் கிரியையாகிய பீடங்களை நோக்காமலும், தன் விரல்கள் உண்டுபண்ணினவைகளையும் தோப்புகளையும் சிலைகளையும் நோக்காமலும்,

௯ அக்காலத்திலே அவர்களுடைய பெலனான பட்டணங்கள் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக விட்டுவிடப்பட்டுப்போன தழையின் மீதியைப்போலவும் நுனிக்கொம்பின் மீதியைப்போலவுமிருந்து பாழாய்க்கிடக்கும்.

௰ ஏனெனில் உன் பலனின் கன்மலையை நினையாமல் உன் இரட்சிப்பின் பராபரனை மறந்தாய், ஆனபடியால் நீ நேர்த்தியான நாற்றுகளை நட்டும் அன்னியதேசத்துக் கன்றுகளை வைத்தும்,

௰௧ பகற்காலத்திலே உன் நாற்றை வளரவும் காலமே உன் விதையை முளைக்கவும் பண்ணியும் பலனை கைவசமாக்கிக்கொள்ளும் நாளிலே அறுப்பு ஒருபோரும் நோயான வேதனையுமாயிருக்கும்.

அசூரியர்மேல் ஆக்கினை பிறங்குவது.

௰௨ ஐயோ கடல்கள் கொந்தளிக்குமாப்போலே கொந்தளிக்கிற அநேகஞ்சனத்தங்களின் இரைச்சலும் பலத்த தண்ணீர்கள் இரையும்போலே இரைகிற சனக்கூட்டங்களின் அமளியுமுண்டு.

௰௩ சனக்கூட்டங்கள் திரளான தண்ணீர்கள் இரையுமாப்போலே இரையும், ஆனால் அவரை அதட்டுவார், அப்போது பருவதங்களிலே காற்றுக்கொண்டுபோம் பதரைப்போலேயும் பெருங்காற்றில் அகப்பட்ட துரும்பைப்போலேயும் தூரத்திலே ஓடித் துரத்தப்படுவான். * ௩௭, ௩௬. ௵

௰௪ சாயங்காலத்திலே இதோ கலக்கமுண்டு, அருணோதயமாகாததுக்கு முன்னே அவனில்லை, இது நம்மைக் கொள்ளையாடுகிறவர்களின் பங்கும் நம்மைச் சூறையாடுகிறவர்களின் வீதமுமாயிருக்கும்.

## ௰௮. அதிகாரம்.

[எத்தியோப்பியருக்கு வரும் பாழ்க்கடிப்பும் அவர்களுடைய குணப்படுதலும் முன்னறிவிக்கப்பட்டது.]

௧ எத்தியோப்பியாவின் ஆறுகளுக்க்கரையிலே நிழல் இருபுறமாகத் திரும்புகிறது.

௨ கடலிலே தாதுபதிகளையனுப்பித் தண்ணீர்களின்மேல் நாணல் தோணிகளிலே போகிறதுமாகிய தேசத்தின் சனத்துக்கு ஐயோ வேகமான தூதர்களே நீண்ட ஓரமாய்க் குடியிருக்கிறதும் மயிர் சிரைக்கப்பட்டதுமாகிய சாதியண்டைக்கும் உண்டானது முதற்கொண்டு இதுவரைக்கும் கொடியாயிருந்ததும் அளவிடப்படுவதும் மிதிக்கப்படுவதும் ஆறுகள் புரண்டு தேசத்தைப் பாழ்க்கடிப்பதுமான சாதியாகிய சனத்தண்டைக்கும் போங்கள்

௩ பூச்சக்கரத்தில் வாசமாயிருக்கிறவர்களும் தேசத்துக்குடிகளுமாகிய நீங்களெல்லாரும் பருவதங்களில் கொடியேற்றப்படும்போது பார்த்து எக்காளம் ஊதப்படும்போது கேட்பீர்கள்.

௪ ஏனெனில் நாம் அமர்ந்திருந்து வெளிச்சத்தின்மேலே காணுங் காந்தியுள்ள காங்கையைப்போலவும் அறுப்புக்காலத்தின் வெயிலிலே பனிமேகத்தைப்போலவும் நம் துவாசஸ்தலத்திலிருந்து கண்ணோக்குவோமென்கிறதாய்க் கர்த்தர் என்னுடனே சொன்னார்.

௫ ஏனெனில் அறுப்புக்கு முன்னே பூப்பூத்துத்தீர்ந்து காய்க்கிற திராட்சக்காய்கள் பிஞ்சாயிருக்கும்போதே அவர் அரிவாள்களினாலே கப்புக் கயிறுகளை அறுத்துக் கொடிகளையரிந்து வாங்கிப்போடுவார்.

௬ அவைகள் ஏகமாய்ப் பருவதங்களின் பட்சிகளுக்கும் பூமியின் மிருகங்களுக்கும் விடப்படும் பட்சிகள் அதின்மேல் கோடைகாலத்துக்கும் பூமியின் மிருகங்களெல்லாம் அதின்மேல் மாரிக்காலத்துக்குந் தங்கும்.

௭ அக்காலத்திலே நீண்ட கரையோரமாய்க் குடியிருக்கிறதும் உண்டானது முதற்கொண்டு கொடியாயிருந்ததுமான சனமும் அளவிடப்பட்டதும் மிதிக்கப்பட்டதும் ஆறுகள் புரண்டு தேசத்தைப் பாழ்க்கடித்ததுமான சாதியுஞ் சேனைகளுடைய கர்த்தரின் நாமந் தங்குந்தலமாகிய சீயோன் பருவ

தத்தண்டையில் * சேனைகளுடையகர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவரப்படும். * சங்கீதம். ௬௮, ௩௨.

## ௰௯. அதிகாரம்.

[எகிப்தியருக்குவரும்பாழ்க்கடிப்பும் அவர்களுடைய குணப்படுத்தலும்முன்னறிவிக்கப்பட்டது.]

எகிப்துவினுடைய பாரம். * இதோ கர்த்தர் வேகமான மேகத்தின்மேல் ஏறி எகிப்துக்கு வருவார், அப்போது எகிப்துவின் † விக்கிரகங்கள் அவருக்கு முன்பாக அசைந்து எகிப்தியரின் இருதயம் அவர்களுள்ளத்திலே கரைந்துபோம். * எரேமி. ௪௬, ௨ மு. எசே. ௨௯, ௧ மு. ௩௰, ௧ மு. † ௨. மோசே. ௰௨, ௰௨.

௨ சகோதரனோடே சகோதரனும் சிநேகிதனோடே சிநேகிதனும் பட்டணத்தோடே பட்டணமும் இராச்சியத்தோடே இராச்சியமும் யுத்தம்பண்ணும்படியாய் எகிப்தியரைஎகிப்தியரோடே போர்கலக்கப்பண்ணுவோம்.

௩ அதினால் எகிப்தியருடைய ஆவி அவர்களுக்குள்ளே வெறுமையாகும், அவர்கள் ஆலோசனையை முழுங்கிப்போகப்பண்ணுவோம், அப்போது விக்கிரகங்களையும் மந்திரவாதிகளையுஞ் சன்னதக்காரர்களையுங் குறிசொல்லுகிறவர்களையுந் தேடுவார்கள்.

௪ ஆனால் எகிப்தியரைக் கடினமான அதிபதிகளின் கைக்குள் அடைப்போம், கடூர இராசா அவர்களை யாளுவானென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௫ அப்போது கடலின் தண்ணீர்கள் குறைந்து நதிவற்றிவறண்டுபோம்.

௬ ஆறுகளைவிட்டுவிடுவார்கள், அரணிப்பான அகழ்கள் குறுகிவற்றிப்போம், கொறுக்கையும் நாணலும் வதங்கும்.

௭ நதியண்டையிலும் நதியோரத்திலுமிருக்கிற மடலுள்ளசெடிகளும் நதியருகே விதைக்கப்பட்ட யாவும் உலர்ந்துபோம், அது பறக்கடிக்கப்பட்டில்லாதேபோம்.

௮ மீன்பிடிக்கிறவர்கள் பெருமூச்சுவிட்டு நதியிலே தூண்டில்போடுகிறயாவருந் துக்கித்துத் தண்ணீர்களின்மேல் வலைகளைவீசுகிறவர்கள் சலித்துப்போவார்கள்.

௯ மெல்லிய சணல்வேலைகளைச்செய்து சல்லாக்களைநெய்கிறவர்கள் நாணுவார்கள்.

௰ மீன்வளர்க்கிற குளங்களைக்கூலிக்குக் கட்டுகிற அனைவருடைய அணைக்கட்டுகளும் நசுங்குண்டுபோம்.

௰௧ சோவான்பட்டணத்தின் பிரபுக்கள் பயித்தியக்காரர்தானே, பார்வோனுடைய ஞானமுள்ள ஆலோசனைக்காரரின் ஆலோசனை மதியற்றுப்போனது, நான் ஞானிகளின் பிள்ளை, நான் பூர்வ இராசாக்களின் புத்திரனென்று பார்வோனுடனே எப்படிச்சொல்லுகிறீர்கள்.

௰௨ இப்போதும் உன்னுடைய ஞானிகளெங்கே, சேனைகளின் கர்த்தர் எகிப்தின்மேலே பண்ணின யோசனையை அவர்களுனக்கறிவிக்கட்டுமே, அல்லது தாங்களே அறிந்துகொள்ளட்டும்.

௰௩ சோவானூர்ப்பிரபுக்கள் பயித்தியக்காரரானார்கள், நோப்பூர்ப்பிரபுக்கள் மோசம்போய், எகிப்தையும் அதின் கோத்திரங்களுடைய தலைவனையும் வழிதப்பப்பண்ணுகிறார்கள்.

௰௪ * கர்த்தர் அதின் நடுவிலே தாறுமாறுகளின் ஆவியையூற்றினார், ஆனதுகொண்டு வெறித்தவன் வாந்திபண்ணுகையில் தள்ளாடித்திரிகிறதுபோலே அவர்கள் எகிப்தை அதின் எல்லாச்செய்கையிலுந் தள்ளாடித்திரியப்பண்ணுகிறார்கள். * ௧. இராசாக்கள். ௨௨, ௨௩.

௰௫ * தலையும் வாலுங் கிளையும் நாணலுமென்றவர்கள் செய்யும்வேலை எகிப்துக்கு உதவாதவேலையாயிருக்கும். * ௯, ௰௪. ௰௫.

௰௬ அக்காலத்திலே எகிப்தியர் பெண்சாதிகளைப்போலிருந்து சேனைகளின் கர்த்தர் தங்கள்மேல் அசைக்குங் கையசைவிலே தத்தளித்துருக்களிப்பார்கள்.

௰௭ யூதாவின்தேசம் எகிப்தியருக்குத் தத்தளிப்புண்டாக்குகிறதாயிருக்கும், தனக்குள் அதை நினைக்கிறவனெல்லாஞ் சேனைகளின் கர்த்தர் தங்களுக்குவிரோதமாக நிர்ணயித்துக்கொண்ட ஆலோசனையினிமித்தம் நடுக்கிடுவான்.

௰௮ அக்காலத்திலே கானான் பாஷையைப் பேசிச் சேனைகளின் கர்த்தருக்கு ஆணையிடுகிற ஐந்துபட்டணங்கள் எகிப்துதேசத்திலிருக்கும் ஒன்று நிர்மூலமான பட்டணமென்னப்படும்.

௰௯ அக்காலத்திலே எகிப்துதேசத்தின் நடுவிலே கர்த்தருக்கொரு பீடமும் அதின் எல்லையருகே கர்த்தருக்கொரு தூணும் உண்டாயிருக்கும்.

௨௰ அது எகிப்துதேசத்திலே சேனைகளின் கர்த்தருக்கு அடையாளமுஞ்சாட்சியுமாயிருக்கும், ஏனெனில் ஒடுக்குகிறவர்களினிமித்தம் அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவார்கள், அப்போதவர்களுக்கொரு இரட்சகனையும் ஒரு பெலவானையும் அனுப்பி அவர்களைவிடுவிப்பார்.

௨௰௧ அப்போது கர்த்தர் எகிப்தியருக்கு அறியப்படுவார், எகிப்தியர் கர்த்தரை அக்காலத்திலேயறிந்து * அவருக்குப் பலிகளோடுங்காணிக்கைகளோடும் ஆராதனை செய்து கர்த்தருக்குப் பொருத்தனைகளைய

பண்ணி அவைகளைச்செலுத்துவார்கள்.
* மலகி. ௧, ௰௪.

௨௨ கர்த்தர் எகிப்தியரை வாதையினாலேயடித்துக்குணமாக்குவார், அவர்களகர்த்தரண்டைக்குமனந்திரும்புவார்கள். அப்போதவர்கள விண்ணப்பத்தைக்கேட்டவர்களைக்குணமாக்குவார்.

௨௩ அக்காலத்திலே எகிட்திலிருந்து அசூரியாவுக்குப்போகிற பாதை யுண்டாயிருக்கும். அசூரியர் எகிப்திலும எகிப்தியர் அசூரியாவிலும்வந்து எகிட்தியர் அசூரியரோடேகூடத்தேவாராதனைசெய்வார்கள்.

௨௪ அக்காலத்திலே பூமியின நடுவிலிருக்கும ஆசீர்வாதத்தினாலே இஸ்ரவேல எகிப்துவோடும அசூரியாவோடும மூன்றுவதாயிருக்கும,

௨௫ அவர்களைச சேனைகளுடைய கர்த்தர் ஆசீர்வதித்து எகிப்தியராகிய நமதுசனமும அசூரியராகிய நமதுகரங்களின்கிரியையும இஸரவேலராகிய நமதுசுதந்தரமும ஆசீர்வதிக்கப்பட்டதென்பார்.

## ௨௰. அதிகாரம்.

[அசல்தேசங்களின குடிகள நம்பியிருந்த எத்தியோப்பியருக்கும எகிட்தியருக்கும வரும ஆக்கினையின தீர்க்கதரிசனம.]

தர்த்தான அசூரியாவின இராசாவாகிய சர்கோனாலே யனுப்பப்பட்டு அஸ்தோத்துக்குவந்து அஸ்தோத்தினமேல்யுத்தம்பண்ணி யதைப்பிடித்தவருஷமாகிற அக்காலத்திலே, * ௨. இராசா. ௰௮, ௰௭.

௨ கர்த்தர் ஆமோத்சின குமாரனாகிய ஏசாயாவைக்கொண்டுபேசி நீபோய உன அரையின்மேலிருக்கிற இரட்டையவிழ்த்து உனகால்களிலிருக்கிற பாதரட்சைகளைக் கழற்றென்றார், அப்படியேயவன்செய்து அம்மணமும வெறுங்காலுமாய நடந்தான.

௩ அப்போது கர்த்தர் உரைத்ததாவது எகிப்தின மேலும எத்தியோப்பியாவின மேலும்வரும மூன்றுவருஷத்துக்காரியங்களுக்கடையாளமும அற்புதமுமாக நமமுடைய ஊழியக்காரனாகிய ஏசாயா அம்மணமும வெறுங்காலுமாய நடக்கிறது போலே,

௪ அசூரியாவின இராசா தானசிறைப்பிடிக்கப்போகிற எகிப்தியரையுந தானகுடிவிலக்கப்போகிற எத்தியோப்பியரையும இளைஞரையுங கிழவரையும அம்மணமாகவும வெறுங்காலாகவும எகிப்தியரின வெட்கத்துக்குத திறந்த இருப்பிடமாகவுங கொண்டுபோவான.

௫ அப்போது இந்தக்கரைத்துறைக்குடிகள தாங்கள நம்பியிருந்த எத்தியோப்பியாவைத்தொட்டுந தாங்கள பெருமை பாராட்டின எகிப்துவைத் தொட்டுங கலங்கிவெட்கி,

௬ இதோ அசூரிய இராசாவின முகத்துக்குத் தப்பும்படிக்கு நாங்கள நமபிச்சகாயத்துக்கென்று ஓடிவந்து அண்டின வன்பட்டியாலேனா நாங்களெப்படி விடுவிக்கப்படுவோமென்று அக்காலத்திலேசொல்லுவார்களென்றார்.

## ௨௧. அதிகாரம்.

[பாபேலினவிழுகுதலமுன்னறிவிக்கப்பட்டது.]

கடற்புறமான வனாந்தரத்தினுடைய பாரஞ்சுபுலகாற்றுகள் தெற்குத்தேசத்திலெழும்பிக் கடந்துவருமாப்போலே பயங்கரமான தேசமாகிய வனாந்தரத்திலிருந்துவருகிறுன.

௨ கடின தரிசனமெனக்கு அறிவிக்கப்பட்டது, துரோகிதுரோகம்பண்ணிப்பாழ்க்கடிக்கிறவன பாழ்க்கடித்துக்கொண்டேயிருக்கிறுன, பெர்சியனே எழும்பு, மேதியனே முற்றிக்கைபோடு அதினாலுண்டான தவிப்பையெல்லாம ஓயப்பண்ணுகிறேம.

௩ ஆகையால என்னிடுப்பு மகாவேதனையால் நிறைந்திருக்கிறது பிள்ளைபெறுகிறவளின வாதைகளுக்கொத்தவாதைகள என்னைப்பிடித்தது கேட்கிறதினாலே மடங்கிக்காணகிறதினாலே கலங்கிறேன.

௪ என்னிருதயந்திகைக்கிறது, திகிலென்னைத்திடுக்கிடப்பண்ணுகிறது * அதெனக்குவிருப்பமான இராவிருளையெனக்கு நடுக்கமுள்ளதாக்கிறது. * தானி. ௫, ௧—௬.

௫ பந்தியை யாயித்தம பண்ணுதலுஞ் சாமங்காக்குதலும பொசித்துக் குடிக்குதலுமுண்டு, பிரபுக்களேயெழுந்து பரிசைகளைப்பூசுங்கள.

௬ ஏனெனில ஆண்டவர் என்னுடனே நீபோயக்காணபதையறிவிக்குஞ் சாமக்காரனைவையென்றார்.

௭ அவனசோடு சோடாகக்குதிரைகளின்மேலும ஒட்டகங்களின்மேலும ஏறிவருகிறவர்களைக்கண்டு மிகுந்த கவனமாயக் கவனித்துக்கொண்டேயிருந்து,

௮ ஆண்டவரே, நானெனகாவலிலேபகல்மாறிப்போகும நின்றுநான இராக்காலங்கள் முழுதும என்சாமத்திலேதரித்திருக்கிறேனென்று சிங்கச்சத்தமாயக் கூப்பிடுகிறுன.

௯ இப்போதும இதோ ஒருசோடு குதிரைபூண்ட இரதத்தின்மேலேறியிருக்கிற ஒருமனுஷனவந்து * பாபேல விழுந்தது விழுந்தது. அதினவிக்கிரகத்தேவர்களையெல்லாந தரையோடேமோதி யுடைத்தாரெ

று பிரத்தியுத்தாரமாகச் சொல்லுகிறான். * எரே. ௫௧, ௮. அறிவிப். ௰௪, ௮. ௰௮, ௨.

௰ என் போரடித்தானியமே என் களத்தின் கோதுமையே, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தராலே நான் கேள்வியானதை யுங்களுக்கறிவித்தேன்.

ஏதோம் தேசத்துக்கும் அராபிய தேசத்துக்கும் கேடுவருவதென்பது.

௰௧ தூமாவினுடைய பாரம் சேயீரிலிருந்து என்னை நோக்கிச் சாமங்காக்கிறவனே இராத்திரியிலே நடந்த செய்தியென்ன, சாமங்காக்கிறவனே இரவிலே போகிற செய்தியென்னவென்று கூப்பிடுகிறார்கள்.

௰௨ விடியற்காலம் வந்திருந்தும் இராவாயிருக்கிறது, நீங்கள் கேட்கமனதானால் திரும்பிவந்து கேளுங்களென்று சாமங்காக்கிறவன் சொல்லுகிறான்.

௰௩ அராபியாவின்மேற் சுமரும் பாரம் தெதானியராகிய பயணக் கூட்டங்களே, அராபியாவில் இராத்தங்குவீர்கள்.

௰௪ தேமத்தேசத்தின் குடிகளே, நீங்கள் தாகமாயிருக்கிறவர்களுக்குத் தண்ணீரை யெதிராகக்கொண்டுபோய் வலசைவருகிறவர்களுக்கு அவர்களுடைய அப்பத்தைக் கொடுக்கநேரிட்டுப்போங்கள்.

௰௫ ஏனென்றால் பட்டயங்களுக்கும் உருவின பட்டயத்துக்கும் நாணேற்றின வில்லுகளுக்கும் உயுத்தத்துக்குந் தப்பவலசைவருகிறார்கள்.

௰௬ ஏனெனில் * ஆண்டவர் என்னுடனே சொன்னதாவது, ஒரு கூலிக்காரனின் வருஷங்களைப்போலொத்த ஒரேவருஷத்திலே கேதாருடைய மகிமையெல்லாம் அற்றுப்போம், * ௰௬, ௰௪.

௰௭ கேதார் புத்திரருடைய பலத்த வில்லுக்காரரின் தொகையில் மீதியாமவர்கள் கொஞ்சப்பேராயிருப்பார்களென்றார் இதை இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைத்தார்.

## ௨௨. அதிகாரம்.

[எருசலேமுடைய அழிவின் தீர்க்கதரிசனம்.]

தரிசனப்பள்ளத்தாக்கின் பாரம் உன்னிலுள்ளவர்களெல்லாரும் வீடுகளின் மேலேறுவதற்கு உனக்கு இப்போவந்ததென்ன.

௨ களிகூர்ந்திருந்த பட்டணமே நீ அமளிகளால் நிறைந்து கலங்கின ஊராயிருந்தாய் உன்னிற்கொலையுண்டவர்கள் பட்டயத்தாற்கொலையுண்டதில்லை உயுத்தத்திற்செத்ததுமில்லை.

௩ உன் அதிபதிகளெல்லாரும் ஏகமாயோடியலைந்து வில்லுக்காரராற் கட்டுண்கிறார்கள், உன்னில் அகப்பட்டயாவருந் தூரத்துக்கோடியும் ஏகமாய்க் கட்டுண்கிறார்கள்.

௪ ஆகையால் என்னைவிட்டுக் கண்ணைத் திருப்புங்கள், * மனங்கசந்தழுவேன், என் சனமாகிய குமாரத்தியினுடைய பாழாகுதலினிமித்தம் எனக்காறுதல் சொல்லநெருங்காதேயுங்களென்கிறேன். * எரேமியா. ௯, ௧.

௫ ஏனென்றாற் சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவராலே தரிசனப்பள்ளத்தாக்கிலே அமளியும் மிதியுண்குதலும் கலக்கமுமான நாளாயிருக்கிறது, அலங்கத்தைத் தகர்த்துப் பருவதத்துக்கு நேரேயார்ப்பரிக்கும் நாள் தானே.

௬ ஏலாமியன் அம்பறாத்தூணியையெடுத்து இரதங்களோடும் மனுஷரோடும் இராவுத்தரோடும் வருகிறான், அலங்கங்கேடையங்கள் திறப்போம்.

௭ மகாவடிவான உன் பள்ளத்தாக்குகள் இரதங்களால் நிறையப்படுவதுமன்றி, குதிரைக்காரரை வாசல்கள் மட்டும் நிறுத்துவார்கள்.

௮ அவன் யூதாவின் மறைவை வாங்கிப்போடுவான், அந்நாளிலே காட்டுமரவீட்டின் ஆயுதசாலையை நோக்குவாய்.

௯ நீங்கள் தாவீதுடைய பட்டணத்தின் இடிதல்களை மிகுதியானவைகளென்று கண்டு கீழ்க்குளத்துத் தண்ணீர்களைச் சேர்த்து,

௰ எருசலேமின் வீடுகளையெண்ணி அலங்கத்தைப் பரணிப்பாக்குமபடிக்கு வீடுகளையிடித்து,

௰௧ இரண்டு மதில்களுக்கு நடுவே பழைய குளத்துத் தண்ணீர்களுக்கொரு அகழையுண்டுபண்ணுவீர்கள், ஆனால் அதைச்செய்கிறவரை நீங்கள் நோக்காமலும் அதையேற்படுத்தித் தூரத்திலிருந்து வரப்பண்ணுகிறவரைக் கவனிக்காமலும் போகிறீர்கள்.

௰௨ சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் அக்காலத்திலே அழுகையையும் புலம்பலையும் மொட்டையிடுதலையும் இரட்டுக் குத்தலையும் வரவழைப்பார்.

௰௩ இப்போதோவெனில் இதோ சந்தோஷமுங் களிப்பும் மாடுகளைக்கொல்லுகிறதும் ஆடுகளையடிக்கிறதும் இறைச்சியைச் சாப்பிடுகிறதும் மதுபானத்தைக்குடிக்கிறதும் பொசித்துக்குடிப்போம் ஏனெனில் நாளைச்சாகிறோமென்று சொல்லுகிறதுமுண்டு. * ௧. கொரிந்தர். ௰௫, ௩௨.

௰௪ அது சேனைகளின் கர்த்தராகிய நம்முடைய செவிகளுக்கு வெளியரங்கமாயிருக்கிறது, மெய்யாகவே நீங்கள் சாகுமட்டும் இந்த அக்கிரமம் உங்களுக்கு நிவர்த்தியாவதில்லையென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

சேட்ருவென்ற பொல்லாதமந்திரியின்விழுகுதல் அவனுக்கு முன்னறிவிக்கப்பட்டது.

௰௫ சேனைகளுடையகர்த்தராகிய ஆண்டவர் உரைத்ததாவது, நீ வீட்டுவிசாரிப்புள்ள இந்தப் பொக்கிஷக்காரனாகிய சேட்ருவண்டைக்குப்போய்ச் சொல்லவேண்டியதேதெனில்,

௰௬ தன் கல்லறையையுயர்ந்தஸ்தலத்திலே வெட்டிக் கன்மலையிலே தனக்கு வாசஸ்தலத்தைத்தோண்டுகிறவனைப்போலே நீ உனக்கிங்கே கல்லறையைவெட்டும்படிக்கு உனக்கிங்கேயிருப்பதென்ன? அல்லது உனக்கிங்கேயிருப்பவர்களார்.

௰௭ இதோ பலவான் ஒருவனைத்துரத்துகிறவண்ணமாகக் கர்த்தர் உன்னைத்துரத்திவிட்டு உன்னைமூடவேமூடுவார்.

௰௮ ஒருவன் ஒரு உண்டையையுருட்டுமாப்போலே உன்னையகலமும்விசாலமுமான தேசத்திலே உருட்டவே உருட்டுவார், அங்கேசாவாய், அங்கே உன்மகிமையின் இரதங்கள் உன்னாண்டவனின் வீட்டுக்கு இகழ்ச்சியாகவிருக்கும்.

௰௯ உன்னையுன்நிலையைவிட்டுப் பறக்கடிப்போம், உன்தானத்திலிருந்துன்னைப்பிடுங்கிப்போடுவான்.

௨௰ அந்நாளிலே சம்பவிப்பதாவது, * இல்க்கியாவின்குமாரனாகிய எலியாக்கீமென்ற நமது ஊழியக்காரனை நாம் அழைத்து, * ௩௬, ௩.

௨௧ உன்வஸ்திரத்தைய வனுக்குடுத்தி உன்கச்சையால் அவனைத்திடனாக்கக்கட்டி உன்னதிகாரத்தை யவன்கையிலேகொடுப்போம், அவன் எருசலேமின்குடிகளுக்கும் யூதாவின்வீட்டுக்குந்தகப்பனாயிருப்பான்.

௨௨ தாவீதுடையவீட்டின்திறவுகோலையவன்தோளின்மேல்வைப்போம் அவன் * திறந்தால் ஒருவரும் பூட்டக்கூடாதபடிக்குத்திறந்து ஒருவருந்திறக்கக்கூடாதபடிக்குப்பூட்டுவான்.

* அறிவி. ௩, ௭.

௨௩ அவனையுறுதியானஇடத்திலேஆணியாக்கடாவுவோம், அவன் தன் தகப்பன் வீட்டுக்கு கனமான ஆசனமாக விருப்பான்.

௨௪ அதின்மேல்அவன்தகப்பனின்வீட்டாராகிய பிள்ளைகள் பேரமார்களுடைய மகிமையனைத்தையுங்குடிக்கிறபாத்திரங்கள்முதற்கொண்டு சகல தம்புருமுட்டுகள் மட்டுமிருக்கிறசகலசிறுபாத்திரங்களையுந் தூக்கிப்போடுவார்கள்.

௨௫ உறுதியான இடத்திற்கடாவப்பட்டிருந்த ஆணி அந்நாளிலே பிடுங்கப்பட்டு வெட்டுண்டுவிழும், அப்போது அதின்மேலிருந்தச்சுமை அறுந்துபோகுமென்று சேனைகளின்கர்த்தர்உரைக்கிறார், இதைக்கர்த்தரே உரைக்கிறாரென்றுசொல்லென்றார்.

## ௨௩. அதிகாரம்.

[தீருபட்டணம்பாழாகி எழுபதுவருஷத்துக்குப்பிறபாடுதிரும்பக்கட்டப்பட்டுச் சுவிசேஷத்தின் ஆசீர்வாதத்துக்குப்பங்குள்ளதாகுமென்பது.]

தீருவினுடையபாரம தர்சீஸ் கப்பல்களின்மனுஷரே அலறுங்கள், அது வீடில்லாமலும் வருவாரில்லாமலும்படிக்குப்பாழாக்கப்பட்டது, கித்திம்தேசத்திலிருந்து இந்தச்செய்திவந்து அவர்களுக்குவெளிப்பட்டிறது. * எரே. ௪௭, ௨. யூ ௪௮, ௨. யூ ௨௭, ௩. யூ ௨௮, ௩. யூ ௪௧ரி. ௬, ௨—௪.

௨ தீவுக்குடிகளே மவுனமாகுங்கள் சீதோனின்வர்த்தகர் சமுத்திரத்திலேயாத்திரைபண்ணியுன்னை நிரப்பினார்கள்.

௩ சீகோர்நதியின்மிகுந்த நீர்ப்பாய்ச்சல்களால் விளையும்பயிர்வகைகளும் ஆற்றங்கரையின் அறுப்பும் உன்வரத்தாயிருந்தது. நீ சாதிகளின்சந்தையாயிருந்தாய்.

௪ சீதோனே வெட்கப்படு, ஏனெனில் நான் இனிக்கர்ப்பவேதனைப்படுகிறதுமில்லை பெறுகிறதுமில்லை, இளைஞரை ஆளாக்குகிறதுமில்லை, கன்னியாஸ்திரிகளைவளர்க்கிறதுமில்லையென்று சமுத்திரக்கோட்டையான கடல்துறைசொல்லுகிறது.

௫ எகிப்தின்செய்திகேட்கப்பட்டநிலை நோயுண்டானதுபோலே தீருவின் செய்திகேட்கப்படுவதாலும் உண்டாம்.

௬ கரைத்துறைக்குடிகளே நீங்கள் தர்சீஸ் மட்டும்புறப்பட்டுப்போய்அலறுங்கள்.

௭ பூருவநாள்கள்முதல்துவக்கங்கொண்டு களிகூர்ந்திருந்த உங்கள்பட்டணம் இதுவோ பரதேசம்போக இதின்குடிகளுடைய கால்கள் இவர்களைத் தூரமாய்க்கொண்டுபோம்.

௮ கிரீடந்தரித்துக்கொண்டிருக்கிற தீருவுக்கு விரோதமாக இதையோசித்துத்தீர்த்தவராரார், * அதின்வர்த்தகர்பிரபுக்களும் அதின்வியாபாரிகள்தேசத்திற்கனமுள்ளவர்களுமாமே.

௯ எல்லாச்சிறப்பின் அகந்தையைக்குலைத்துத்தேசத்திலே கனமுள்ள யாவரையுங் கனவீனமாக்குவதற்காகச் சேனைகளின்கர்த்தரே இதையோசித்துத்தீர்த்தார்.

௰ தர்சீசின் குமாரத்தியே ஒரு ஆற்றைக்கடக்குமாப்போலே உன்தேசத்தைக்கடந்துபோ, கட்டுங்கச்சை இனியில்லை.

௰௧ தமதுகையைச் சமுத்திரத்தின்மேல்நீட்டி இராச்சியங்களைக் குலுங்கப்பண்ணுகிறார், கானானின் அரண்களையழிக்கக்கர்

த்தர் அதற்கு விரோதமாகக் கட்டளைகொடுத்தது,

௰௨ ஒடுக்கப்பட்ட கன்னியாகிய சீதோன் குமாரத்தியே இனிக் களிகூர்ந்துகொண்டிராய், எழுந்திருந்து கித்தீமுக்குப் புறப்பட்டுப்போ, அங்கேயும் உனக்கு இளைப்பாறுதலில்லையென்றார்.

௰௩ இதோ கல்தேயருடைய தேசம், அந்தச் சனம் முன்னிருந்ததில்லை, அசூர் என்றவனே அந்தரத்தாருக்காக அதின் அஸ்திபாரத்தையிட்டிருந்தானே, இப்படித் தங்கள் துருக்கங்களையெழுப்பித் தங்கள் அரண்மனைகளைக் கட்டினார்கள், அழிவுசெய்ய அதையேகுறித்தார்.

௰௪ தர்ஷீஸ் கப்பல்களின் மனுஷரே, அலறுங்கள், ஏனெனில் உங்கள் அரண் பாழாக்கப்பட்டது.

௰௫ அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால் தீரு ஒரு இராசாவுடைய நாள்களின்படி எழுபதுவருஷம் மறக்கப்பட்டிருக்கும், ஆனால் எழுபதுவருஷங்களின் முடிவிலே தீருவின் சம்மதி ஒருவேசியின் பாட்டுக்குச் சமானமாயிருக்கும்.

௰௬ மறக்கப்பட்ட வேசியே, சுரமண்டலத்தையெடுத்து ஊரிலே சுற்றித்திரி, நீ நினைக்கப்படும்படிக்கு அதை நன்றாய் வாசித்து மெத்தவும் பாடு.

௰௭ ஏனென்றால் சம்பவிப்பதேதென்றால் எழுபதுவருஷங்களின் முடிவிலே கர்த்தர் தீருவைச் சந்திப்பார், அப்போது தன் பணையத்துக்குத் திரும்பிவந்து பூச்சக்கரத்தின்மேலுள்ள பூமியின் இராச்சியங்களோடெல்லாம் வேசித்தனம்பண்ணும்.

௰௮ அதின் வியாபாரமும் அதின் பணையமும் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும், அது பொக்கிஷமாய்ச் சேர்க்கப்படுவதுமில்லை அடைத்துவைக்கப்படுவதுமில்லை, கர்த்தருக்கு முன்பாக வாசமாயிருக்கிறவர்கள் திருப்தியாகச் சாப்பிடத்தக்கதாகவும் அவர்களுக்கு உரப்பானவஸ்திரத்தரிப்புண்டாகவும் அதின்வியாபாரம் அவர்களைச் சேரும்.

## ௨௪. அதிகாரம்.

[துரோகிகளான யூதருடைய தேசம் பாழாவதும் யூதசாதியிலும் புறசாதிகளிலுமிருக்கும் விசுவாசிகள் கர்த்தரைத் தோத்திரிப்பதும்.]

இதோ கர்த்தர் தேசத்தை வெறுமையும் பாழுமாக்கி அதினுடைய மாறுபாடாகக் கவிழ்ப்போட்டு அதின் குடிகளைச் சிதறவடிப்பார்.

௨ அப்போது * சனத்துக்கும் ஆசாரியனுக்கும் வேலைக்காரனுக்கும் அவனெசமானுக்கும் வேலைக்காரிக்கும் அவள் நாச்சியாருக்கும் † கொண்டவனுக்கும் விற்றவனுக்கும் கடன்கொடுத்தவனுக்கும் கடன்வாங்கினவனுக்கும் வட்டிவாங்கினவனுக்கும் வட்டிகொடுத்தவனுக்கும் சரியாக நடக்கும். * ஓசே. ௪, ௯. † எசேக். ௭, ௰௨. ௰௩.

௩ தேசம் முழுதும் வெறுமையாகி முழுதுங்கொள்ளையாகும், ஏனெனில் கர்த்தர் இந்த வார்த்தையைச் சொன்னார்.

௪ தேசம் புலம்பிவதங்கும், பூமிச்சக்கரம் மறுகிவதங்கிப்போகும், தேசத்துச் சனத்தில் உயர்ந்தவர்கள் பெலவீனராவார்கள்.

௫ பூமி தன் குடிகளின்கீழ்த் தீட்டுப்பட்டிருக்கிறது, ஏனெனில் நியாயப்பிரமாணங்களை மீறிக் கட்டளையை மாறுபாடாக்கி நித்திய உடம்படிக்கையை முறித்தார்கள்.

௬ இனிமித்தமே தேசத்தின் குடிகள் பாழ்க்கடிக்கப்பட்டதுகளையாய்ச் சாபந் தேசத்தைப் பட்சிக்கும், இனிமித்தமே கொஞ்சம்பேர் மீதியாகத் தக்கதாய்த் * தேசத்தின் குடிகள் வெந்துபோவார்கள். * ௬, ௰௮. ௰, ௰௬.

௭ திராட்சப்பழரசம் துக்கங்கொண்டாடும், திராட்சச்செடி வதங்கும், மனக்களிப்பாயிருந்தவர்களெல்லாரும் பெருமூச்சுவிடுவார்கள்.

௮ * மேளங்களின் சந்தோஷம் ஓய்ந்து, களிகூருகிறவர்களின் சந்தடி தீர்ந்து, சுரமண்டலக்களிப்பு நின்றுபோம். * எரே. ௭, ௩௪. ௰௬, ௯. ௨௫, ௰.

௯ பாட்டோடே திராட்சரசம் குடியார்கள், மதுபானந் தன்னைக் குடிக்கிறவர்களுக்குக் கசக்கும்.

௰ வெறுமையாய்ப்போன பட்டணந் தகர்ந்து உள்ளே பிரவேசிக்கக்கூடாதபடிக்கு எல்லா வீடுகளும் அடைப்பட்டுக்கிடக்கும்.

௰௧ கொடிமுந்திரிகை இரசத்துக்கென்று வீதிகளிலே கூக்குரலுண்டு, எல்லாச் சந்தோஷமும் இருண்டு தேசத்தின் மகிழ்ச்சி போய்விடும்.

௰௨ பட்டணத்தில் மீதியாயிருப்பது அழிவு, வாசல்களும் பாழாய்க்கிடக்க இடிக்கப்படும்.

௰௩ ஆனால் ஒலிவமரத்தை உலுக்கிக் கொடிமுந்திரிகைப்பழங்களை அறுத்துத்தீர்ந்த போதுபின்னுமப்புக் கொஞ்சமிருக்கும்போலே தேசத்துக்குள்ளும் இந்தச் சனசனங்களின் நடுவிலுமிருக்கும்.

௰௪ இவர்கள் தங்கள் சத்தத்தையுயர்த்திக் கெம்பீரிப்பார்கள், சமுத்திரத்திலிருந்து கர்த்தருடைய முக்கியத்தனிமித்தம் ஆர்ப்பரிப்பார்கள்.

௰௫ ஆகையால் கர்த்தரைச் கெபிகளிலும் இஸ்ரவேலுடைய பராபரனாகிய கர்த்தரி

ன் நாமத்தைச் சமுத்திரத் தீவுகளிலும் மகிமைப்படுத்துங்கள்.

௰௬ நீதிபரனுக்கு மகிமையென்று பூமியின் கடையாந்தரத்திலிருந்து பாடுகிற சங்கீதங்களைக் கேட்கிறோம், நானோவென்றால் இளைத்திருக்கிறேன் இளைத்திருக்கிறேன், எனக்கையோ, துரோகிகள் துரோகம்பண்ணுகிறார்கள், துரோகிகள் மிகுதியாய்த் துரோகம்பண்ணுகிறார்களென்கிறேன்.

௰௭ தேசக்குடிகளே, * திகிலும் படுகுழியும் கண்ணியும் உங்களுக்கு வரும். * எரே. ௪௮, ௪௩. ௪௪.

௰௮ சம்பவிப்பதேதென்றால், திகிலின் சத்தத்துக்கு விலக ஓடுகிறவன் * படுகுழியிலே விழுவான், படுகுழியிலிருந்தேறுகிறவன் கண்ணியிலே பிடிபடுவான், ஏனென்றால் உயரவிருக்கும் மதகுகள் திறவுண்டு பூமியின் அஸ்திபாரங்கள் குலுங்கும். * ஆமோ. ௫, ௰௯.

௰௯ தேசம் நொறுங்கவே நொறுங்கும், தேசம் கிழியவே கிழியும், தேசம் அசையவே அசையும்.

௨௰ வெறித்தவனைப்போலத் தேசந்தளம்பல்வேளம் ஒருகுடிசையைப்போலே பேர்த்துப்போடப்படும், அதின் பாதகம் அதின்மேலே பாரமாயிருக்கையால் அது அப்புறம் எழுந்திருக்காமல் விழுந்துபோம்.

சபையின் சத்துருக்கள்மேலிறங்கும் ஆக்கினையும் சபைக்குண்டாகும் மகிமையும்.

௨௰௧ அக்காலத்திற் சம்பவிப்பதேதெனில் கர்த்தர் உயரவிருக்கிற உயரமான சேனையையும் பூமியின்மேலிருக்கிற பூமியின் இராசாக்களையும் விசாரிப்பார்.

௨௰௨ அவர்கள் கெவியிலே கூட்டமாய்க் கட்டுண்டவர்களாகச் சேர்ந்து காவலில் அடைக்கப்பட்டு அநேக நாட்சென்றபிற்பாடு விசாரிக்கப்படுவார்கள்.

௨௰௩ அப்போது சேனைகளின் கர்த்தர் சீயோன் பருவதத்திலும் எருசலேமிலும் அரசாளுகையால் * சந்திரன் நாணிச் சூரியன் கூச்சமடையும், அவருடைய மூப்பர்களுக்கு முன்பாக மகிமையுண்டாயிருக்கும்.
* ௰௩, ௰. யோவே. ௩, ௪. ௫. லூக்கா. ௨௧, ௨௫.

## ௨௫. அதிகாரம்.

[கர்த்தர் விடுவித்து இரட்சித்ததினிமித்தம் அவருக்குச் செலுத்துந் தோத்திரம்.]

கர்த்தாவே தேவரீரென் பராபரனாயிருக்கிறீர், உம்மையுயர்த்தி உமது நாமத்தைத் துதிப்பேன், ஏனென்றால் அதிசயங்களைச் செய்தீர், உம்முடைய தூரத்து யோசனைகள் சத்தியமும் உறுதியுமானவைகள்.

௨ ஏனென்றால் * பட்டணத்தை மண்மேடும் அரணான புரியைப் பாழ்க்கிடங்கும் அந்நியரின் அரண்மனையை ஊரல்லாததும் என்றைக்குங் கட்டப்படாததுமான ஸ்தானமாக்கிப்போட்டீர். * ௨௪, ௯. ௨௧. ௰௯. அபி. ௰௪, ௮. ௰௮, ௨.

௩ ஆகையாற் பலத்த சனம் உம்மை மகிமைப்படுத்தி பலவந்தரான சாதிகளின் பட்டணங்கள் உமக்குப் பயப்படும்.

௪ ஏனென்றாற் பலவந்தரின் சீறல் மதிலை மோதியடிக்கிற பெருவெள்ளத்தைப்போலிருக்கையில் நீர் நீசனுக்குப் பலனும் நெருக்கப்படுகிற எளியவனுக்குத் திடனும் * பெருவெள்ளத்துக்குத் தப்பும் அடைக்கலமும் வெய்யிலுக்கொதுங்கும் நிழலுமானீர். * ௩, ௯.

௫ அந்நியரின் ஆரவாரம் வறட்சியான இடத்தின் காங்கையைப்போலிருக்கையில் அதைத் தணியப்பண்ணுகிறீர், மேகத்தின் நிழலால் வெயில் தாழுமாப்போலே பலவந்தரின் கூவுதல் தாழ்த்தப்படும்.

௬ எல்லாச் சனத்திரள்களுக்குஞ் சேனைகளையுடைய கர்த்தர் இந்தப் பருவதத்திலே ஊன்களுடைய கொழுப்புகளாகிய * கொழுப்புகளின் விருந்தையுந் தெளிவாக்கப்பட்ட திவ்விய திராட்சப்பழ இரசங்களின் விருந்தையும் பண்ணி, * மத். ௨௨, ௪. லூக்கா. ௰௪, ௰௬. ௰௭.

௭ எல்லாச் சனத்திரள்கள்மேலுள்ள முக்காட்டையும் எல்லாச் சாதிகளையும் மூடியிருக்கிற மூடலையும் இந்தப் பருவதத்திலே விழுங்குவார்.

௮ * அவர் மரணத்தைச் செயமாக விழுங்குவார், கர்த்தராகிய பராபரன் † எல்லா முகங்களிலுமுள்ள கண்ணீரை அறத்துடைத்துத் தமது சனத்தின் நிந்தையைப் பூமியெங்குமிராதபடிக்கு நீக்கிப்போடுவார், ஏனென்றால் கர்த்தர் இதைச் சொன்னார்.
* ௧. கொரி. ௰௫, ௫௪. ௫௫. ௨. தீமோ. ௧, ௰. † அபி. ௭, ௰௭.

௯ இதோ நம்முடைய பராபரன் இவர்தானே, இவர் நம்மை இரட்சிக்கிறார், இவரோ நாம் காத்திருந்த கர்த்தர், அவருடைய இரட்சிப்பினாலே களிகூர்ந்து மகிழுவோமாகவென்று அக்காலத்திலே சொல்லப்படும்.

௰ ஏனென்றாற் கர்த்தருடைய கரம் இந்தப் பருவதத்திலே தங்கிக்கொண்டிருக்கும், மோவாபோவென்றால் வைக்கோல்கூளம் எரு நிலத்திலே மிதிக்கப்படுமாப்போலே அவர் கீழே மிதிக்கப்படும்.

௰௧ நீந்துகிறவன் நீந்துவதற்காகக் கைகளை விரிக்குமாப்போலே அவர் தமது கைகளை அவர்கள் நடுவிலே விரித்து அவர்கள் பெருமையையும் அவர்கள் கைகளின் சதிசற்பனைகளையுங் கூடத் தாழ்த்திப்போட்டு,

௰௨ உன்மதில்களுடைய உயர்ந்த அரணைப்பணிவாக்கித்தாழ்த்தித் தரையிலே தூளாக அழிப்பார்.

## ௨௬. அதிகாரம்.

[சவை தோத்திரப்பும் நம்பிக்கையுமாயச் செய்கிறவிண்ணப்பம.]

அக்காலத்திலே யூத்தேசத்திற்பாடப்படும்பாட்டாவது, * பலனன பட்டணம நமக்கிருக்கிறது, இரட்சிப்பையே மதில்களும அரணுமாக்கினார். * சங்கீ. ௪௬, ௫. ௬. ௮௭, ௧. ௱௨௫, ௨. வாக்கி. ௰௮, ௰. மத்தே. ௰௬, ௰௮.

௨ உண்மையைக் கைக்கொண்டுவருகிற நீதியுள்ளசாதி உள்ளேபிரவேசிப்பதற்காக * வாசல்களைத்திறவுங்கள். * சங்கீ. ௱௰௮, ௰௯. ௨௰.

௩ சமாதானத்தைச்சமாதானத்தையே காப்பீரெனகிறது ஊன்றப்பட்ட நினைவாயிருக்கிறது, ஏனெனிலஉமமைநமபிக்கொண்டிருக்கிறார்கள.

௪ என்றென்றைக்குங் கர்த்தரைநமபுங்கள, ஏனெனிற் கர்த்தராகிய பராபரனுக்குளளே நித்திய கன்மலையின உறுதியிருக்கும.

௫ ஏனென்றால அவர் * உயரத்திலேவாசமாயிருக்கிறவர்களையும உயர்ந்தபட்டணத்தையும பணிவாக்கி அதைத்தாழ்ததுவார், அவர் அதைத் தரைமட்டாகத்தாழ்த்தி அது மண்ணுக்குமமட்டும இடியபபண்ணுவார். * ௨௫. ௨.

௬ கால்கள அதை மிதிக்கும, சிறுமையானவர்களினகால்களும நீசரின அடிகளுந்தானே.

௭ நீதிமானுடைய பாதை மகா செமமையாயிருக்கிறது, நீதிமானுடைய நடையைசசெமமையாகநிறுததுகிறீர்.

௮ கர்த்தாவே உமமுடைய நியாயத்தீர்ப்புகளினபாதையிலே உமக்குக் காத்திருக்கிறோம, உமதுநாமமும உமதுநினைப்பும ஆத்துமாவினவாஞ்சையாயிருக்கிறது.

௯ என்னுததுமா இராவிலேஉமமைவாஞ்சிக்கிறது, எனக்குளளிருக்கிற என்னுவியால அதிகாலததிலுமஉமமைததேடுகிறேன, ஏனெனில உமமுடைய நியாயததீர்ப்புகள்தேசததில்நடக்குமபோதுபூசசக்கரககுடிகள நீதியைபபடிக்கிறார்கள.

௰ ஆகாதவனுக்குக்கிருபைசெய்யப்பட்டாலும நீதியைபபடியான, நலல நிதானமானதேசததிலமுதலாய அநியாயஞ்செய்து கர்த்தருடைய மகத்துவததைக் கவனியாதேபோகிறான.

௰௧ கர்த்தாவே உமதுகரம உயர்ந்திருந்தாலும அதைககாணுதிருக்கிறார்கள, ஆனாற் சனததுக்காக உமக்கிருக்கும பட்சவைராக்கியததைககண்டு வெட்குவார்கள, அக்கினி உமமுடைய சததுருக்களைப்பட்சிக்கும.

௰௨ கர்த்தாவே எங்களுக்குச சமாதானததைககட்டளையிடுவீர், ஏனெனில் எங்கள எலலாவேலைகளையும எங்களுக்காக நடததிவருகிறீரே.

௰௩ எங்கள பராபரனாகிய கர்த்தாவே, உமமையலலாத ஆண்டவமார் எங்களைப்பாணடார்கள, ஆனால உமமைமாததிரஞ்சார்ந்து உமமுடைய நாமததை நினைததுக்கொண்டிருக்கிறோம.

௰௪ செததவர்கள உயிருக்குத திருமபார்கள, மாணட இராட்சதர்திருமப எழுந்திரார்கள, அப்படி நீர் அவர்களைவிசாரிததுச்சங்கரிதது அவர்கள பேரையெலலாம அழியப்பணணினீர்.

௰௫ இந்தச்சாதியோடேகூட்டினீர், கர்த்தாவே இந்தச்சாதியோடே கூட்டிமகிமைப்பட்டீர், பூமியின் எலலாககடையாந்தரங்களமட்டுமவநதெட்டினீரோ.

௰௬ கர்த்தாவே, * நெருக்கத்தில உமமைததேடுகிறார்கள, உமமுடைய தண்டனை யவர்களமேலிருக்கையில அந்தரங்கவேண்டுதலைபூறறுகிறார்கள. * சங்கீ. ௰௮, ௭. ௭௭, ௪.

௰௭ கர்த்தாவே, பேறுகாலஞ்சமீபிததிருக்கையில வேதனைப்பட்டுததனவாதைசனிலே கூப்பிடுகிற கர்ப்பவதியைப் போலே உமக்குமுனபாகவிருக்கிறோம.

* யோவான. ௰௬, ௨௧.

௰௮ * நாங்கள கர்ப்பமாயிருந்து வாதைப்பட்டுக் காறறைப்பெறறவர்களைப் போலிருக்கிறோம, தேசததுக்கு இரட்சிப்புசசெய்யமாட்டாதிருக்கிறோம, பூசசக்கரக்குடிகள விழுகிறதுமிலலை. மிகா. ௫. ௨. ௧. அறிவி. ௰௨, ௧. ௨.

௰௯ மரிதத உமமுடையவர்கள எனசவததோடேகூடப்பிழைதது எழுந்திருப்பார்கள, மணணிலே தங்கியிருக்கிறவர்களே, விழிததுக்கெமபீரியுங்கள, ஏனெனில உமமுடையபனி பூணடுகளின பனியைப்போலிருக்கும ஆனால இராட்சதரைப் பூமிதளளிப்போடும. * அறிவி. ௨௰, ௪—௬.

௨௰ என சனமே நீபோயஉனனறைக்குளளே பிரவேசிதது, * உனக்குப்பின்னாக உனகதவுகளைப்பூட்டிச் சினங்கடந்துபோகுமட்டுங்கொஞ்ச நிமிஷம ஒளிததுக்கொள. * ௧. மோசே. ௭, ௰௬. ௨. மோசே ௰௨, ௨௨. ௨௩.

௨௧ ஏனெனில இதோ பூமியினுடைய குடிகளின அக்கிரமத்தினிமிததம அவர்களை விசாரிக்குமபடிக்குக் * கர்த்தர் தமமுடைய தானததிலிருந்து புறப்படுவார்,

அப்போது பூமி தன் இரத்தப்பழிகளைத் திறந்து காண்பிக்கும், தன்னிலே கொலைசெய்யப்பட்டவர்களையினி மூடாதிருக்கும்.

* மிகா. ௧, ௩—௫.

## ௨௭. அதிகாரம்.

[சத்துருக்களின் கைக்கு நீங்கிவிடுதலையான பின் செவ்வையடையும் நற்சீர்.]

அக்காலத்திலே கர்த்தர் * நீண்டபாம்பாகிய துஷ்டமிருகத்தையுங் கோணலான பாம்பாகிய துஷ்டமிருகத்தையுங் கடினமும் பெரிதும் பலத்ததுமான தமது பட்டயத்தால் விசாரித்துச் சமுத்திரத்திலிருக்கிற வலுசர்ப்பத்தைக் கொன்றுபோடுவார்.

* அறிவிப்பு. ௰௨, ௯ ௰௯. ௨௰. ௨௧.

௨ அக்காலத்திலே நல்ல திராட்சப்பழரசத்தைத் தரும் திராட்சத்தோட்டமுண்டாயிருக்கும், அதின் பேரிலேயொன்றுகொன்று பாடுங்கள்.

௩ கர்த்தராகிய நாம் அதைக் காத்து அற்றடிக்கடி தண்ணீர்பாய்ச்சி ஆரும் அதைச் சேதப்படுத்தாதபடிக்கு அதை இரவும் பகலுங் காப்பாற்றுவோம்.

௪ உக்கிரம் நமக்கில்லை. ஆனாலும் முள்ளுச்செடியும் நெரிஞ்சிலுமாய் நம்மோடே யுத்தத்துக்குட்பட்டானேயானால் நாம் அதின்மேல் வந்து அதை யேகமாய்க்கொளுத்திப் போடுவோம்.

௫ அல்லவென்றால் அவன் நம்முடைய பெலனைப் பற்றிக்கொண்டு நம்மோடே ஒப்புரவாகவேணும், நம்மோடே ஒப்புரவாகவேணும்.

௬ யாக்கோபுவேர்பற்றி இஸ்ரவேல் * பூத்துக்காய்த்துப் பூச்சக்கரத்தைப் பலனால் நிரப்பும் நாட்கள்வரும். * சங்கீ. ௭௨. ௰௬.

௭ அவர் அவனையடிக்கும் அடியாய் இவனையடிக்கிறாரோ அவர்கள் கொல்லப்படுங் கொலையாய் இவன் கொல்லப்படுகிறானோ.

௮ தேவரீர் சனத்தைத் தூரத்தில் தள்ளுகையில் * மட்டாய் அதனோடே வழக்காடினீர், கொண்டற்காற்றடிக்கிற நாளிலே தம்முடைய பலத்த கரத்தினால் அதை விலக்கிப்போடுகிறார். * எரே. ௰, ௰௪.

௯ ஆகையால் அதனோடே யாக்கோபின் அக்கிரமம் நிர்க்கிரகம்பண்ணப்படும், தோப்புகளும் சிலைகளும் இனி நிற்காதபடிக்கு அவர்கள் பலிபீடங்களின் கல்லுகளையெல்லாம் சிதறவடிக்கப்பட்ட சுண்ணாம்புக்கல்லுகளாக்கிப்போடும்போது அவர்களுடைய பாவத்தை யவர் அகற்றுவாரென்பதே அதினாலெல்லாமுண்டாகும் பலன்.

௰ அதெனில் * அரணான பட்டணம் அவந்தலாயாம், அந்த வாசஸ்தலந் தள்ளுண்டு வனாந்தரத்தைப்போல விட்டுவிடப்பட்டதாயிருக்கும், கன்றுக்குட்டிகள் அங்கே மேய்ந்து அங்கே படுத்துக்கொண்டு அதின் தழைகளைப் பட்சிக்கும்.

* எரே. ௫௧, ௨௭.

௰௧ அதின் கொப்புகள் உலர்ந்திருக்கும்போது ஒடிந்துபோம், ஸ்திரீகள் வந்து அவைகளைக் கொளுத்திவிடுவார்கள், ஏனெனில் அது உணர்வுள்ள சனமல்ல, ஆனபடியால் அதையுண்டாக்கினவர் அதற்கிரங்காமலும் அதையுருவாக்கினவர் அதற்குக் கிருபை செய்யாமலுமிருப்பார்.

௰௨ அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால் கர்த்தர் ஆற்றங்கரையின் விளைவுதொடங்கி எகிப்துவின் நதிமட்டும் போரடிப்பார், ஆனால் இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள் ஒருவரொருவராய்ச் சேர்த்துக்கொள்ளப்படுவீர்கள்.

௰௩ அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால் பெரிய எக்காளத்தொனியுண்டாம், அப்போது அசூரியதேசத்திலே சிதறடிக்கப்பட்டவர்களும் எகிப்துதேசத்திலே துரத்திவிடப்பட்டவர்களும் வந்து எருசலேமிலுள்ள பரிசுத்தபருவதத்திலே கர்த்தரைப் பணிந்துகொள்ளுவார்கள்.

## ௨௮. அதிகாரம்.

[துன்மார்க்கமான இஸ்ரவேலுக்கு ஆக்கினையும் பராபரனுடைய சனத்திலே மீத பத்தியாயிருக்கிறவர்களுக்கு நற்சீரும் வருவது.]

எப்பிராயீமுடைய வெறியரின் பெருமையான கிரீடத்துக்கும் மதுபானலாகிரியாயிருக்கிறவர்களுடைய செழிப்பான பள்ளத்தாக்குடைய கொடுமுடியின்மேலுள்ள அலங்காரச்சோடிப்பான வாடிய பூவுக்கும் ஐயோ.

௨ இதோ பெலனும் வல்லமையுமான ஒருவன் ஆண்டவருக்கிருக்கிறான், அவன் கல்மழைவெள்ளமாகவுஞ் சங்காரப்பிசலாகவும் புரண்டுவருகிற கனத்தண்ணீர்களின் வெள்ளமாகவும் வந்து கையினாலே யதைத் தரையிலே தள்ளிப்போடுவான்.

௩ எப்பிராயீமுடைய வெறியரின் முக்கிய கிரீடம் கால்களால் மிதித்துப்போடப்படும்.

௪ செழிப்பான பள்ளத்தாக்குடைய கொடுமுடியின்மேலுள்ள அலங்காரச்சோடிப்பின் வாடிய பூ பருவகாலத்துக்கு முன் பழுத்ததும் காண்கிறவன் பார்த்து அது இன்னந் தன் கையிலிருக்கையில் விழுங்குகிறதுமான முதற்கனியைப்போலிருக்கும்.

௫ அக்காலத்திலே சேனைகளின் கர்த்தர் தமது சனத்தில் மீதியானவர்களுக்கு மகிமையான கிரீடமாகவும் அலங்கார முடியாகவும்,

௬ நியாயம் விசாரிக்கிறதற்கு உட்காருகிறவனுக்கு நியாயத்தின் ஆவியாகவும் யுத்தத்தைத் திருப்பி வாசல்மட்டுந் திருப்புகிறவர்களின் பராக்கிரமமாகவுமிருப்பார்.

பூதாவிலும் ஆகாமியம் மிகுதியினாலே அதுக்குவரும் ஆக்கினைகளின் சுருக்கம் அவர்களுடைய குணப்படுதலை நோக்கியிருக்கிற பராபரன் அவைகளுக்குக் குறிக்கப்போகிற மட்டுத்திட்டமும்.

௭ ஆனால் இவர்கள் மதுபானத்தால் நிலைகெட்டு வெறியினால் வழிதப்பிப் போகிறார்கள், ஆசாரியனும் தீர்க்கதரிசியும் வெறியினால் நிலைகெட்டு மதுபானத்தால் அமிழ்ந்து வெறியினால் வழிதப்பித் தீர்க்கதரிசனத்திலே மோசம்போய் நியாயந்தீர்க்கிறதிலே இடறுகிறார்கள்.

௮ ஏனெனில் எல்லாப் பந்திகளுஞ் சுத்த இடமில்லாதபடிக்கு வாந்தியினாலும் அழுக்கினாலும் நிறைந்திருக்கிறது.

௯ இனி யாருக்கு அறிவைப் போதிவிப்பார்? கேட்டதை யாருக்குத் தெளிவிப்பார்? * பால் மறந்தவர்களுக்கும் முலைமறக்கப் பண்ணப்பட்டவர்களுக்குமே. * மத். ௰௧, ௨௫.

௰ ஏனெனிற் கற்பனையின்மேலே கற்பனையுங் கற்பனையின்மேலே கற்பனையும் பிரமாணத்தின்மேலே பிரமாணமும் பிரமாணத்தின்மேலே பிரமாணமும் இங்கே கொஞ்சமும் அங்கே கொஞ்சமுமென்கிறார்கள்.

௰௧ ஆகையாற் பரியாசவுதடுகளினாலும் * வேற்றுப்பாஷையினாலும் இந்தச் சனத்தோடே பேசுவார். * ௧. கொரி. ௰௪, ௨௧.

௰௨ * இதுவே நீங்கள் இளைத்தவனை இளைப்பாறப்பண்ணத்தக்க இளைப்பாறுதல். இதுவே சாங்கோபாங்கமடையுதலென்றவர்களோடே அவர் சொன்னாலுங் கேட்சமாட்டோமென்கிறார்கள். * மத். ௰௧, ௨௮. ௨௯.

௰௩ ஆனதுகொண்டு அவர்கள் போய், * பின்னிட்டு விழுந்து நொறுங்கும்படிக்கும் சிக்குண்டு பிடிபடும்படிக்குங் கர்த்தருடைய வார்த்தை அவர்களுக்குக் கற்பனையின்மேலே கற்பனையுங் கற்பனையின்மேலே கற்பனையும் பிரமாணத்தின்மேலே பிரமாணமும் பிரமாணத்தின்மேலே பிரமாணமும் இங்கே கொஞ்சமும் அங்கே கொஞ்சமுமென்கிறதாயிருக்கும். * அ, ௰௫.

௰௪ ஆகையால் எருசலேமிலிருக்கிற இந்தச் சனத்தையாளுகிற சக்கந்தக்காரரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௰௫ நாங்கள் மரணத்தோடே உடன்படிக்கையும் நரகத்தோடே ஒப்பந்தத்தையும் பண்ணினோம், வாதைப்பெருவெள்ளமாய்ப் புரண்டுவந்தாலும் எங்களையணுகாது, ஏனெனில் நாங்கள் பொய்யை எங்களுக்கடைக்கலமாக்கி மாயையின் மறைவிலே ஒதுங்கினோமென்கிறீர்களே.

௰௬ ஆகையினாலே கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது, * இதோ உத்தமமும் விலையேறப்பெற்றதுமான நிலைவரப்பட்டதுமான மூலைக்கல்லாகிய சல்லைநான் சீயோனிலேவைக்கிறேன், விசுவாசிக்கிறவன் பதறான். * ௧. பேது. ௨, ௬—௮.

௰௭ நான் நியாயத்தை நூலும் நீதியைத் தூக்குமாகவும் வைப்பேன், ஆனால் பொய்யென்ற அடைக்கலத்தைக் கல்மழை பறக்கடித்து அந்த மறைவைத் தண்ணீர்வெள்ளம் அடித்துக்கொண்டுபோகும்.

௰௮ அப்படியே உங்களுக்கு மரணத்தோடிருக்கிற உடன்படிக்கை விருதாவாகி உங்களுக்கு நரகத்தோடிருக்கிற ஒப்பந்தம் நிற்காதேபோம். வாதைப்பெருவெள்ளமாய்ப் புரண்டுவரும்போது அதினாலே அகப்பட்டுக்கசங்குவீர்கள்.

௰௯ அது புரண்டுவந்ததுமுதல் உங்களை யடித்துக்கொண்டுபோம், ஏனெனில் அது காலமாறும் இரவும்பகலும் புரண்டுவரும், கேட்டதின் உணர்வையுண்டாக்கும்படிக்கு அலைச்சலேயுண்டாயிருக்கும்.

௨௰ ஏனெனிற் படுக்கை நீட்டிக்கொள்ளக்கூடாத குறுகலும் மூட்டிலே மூடிக்கொள்ளக்கூடாத அகலக்கட்டையுமாயிருக்கும்.

௨௧ ஏனெனில் தமது அன்னியக்கிரியையாகிய தமது கிரியையைச் செய்யவுந் தமது வேற்றுவேலையாகிய தமது வேலையை நடப்பிக்கவுங் கர்த்தர் * பெராத்சீமமலையிலே செய்ததுபோலெழும்பிக் † கிபெயோனின் பள்ளத்தாக்கிலிருந்ததுபோலே சினந்திருப்பார். * ௨. சாமு. ௫, ௨௰.

† யோசு. ௰, ௰. ௰௨.

௨௨ இப்போதும் உங்கள் கட்டுகள் பலத்துப்போகாதபடிக்குப் பரியாசம்பண்ணாதிருங்கள். ஏனெனில் தேசமனைத்தின்மேலும் நிர்ணயம்பண்ணப்பட்டிருக்கிற சங்காரத்தின் செய்தியைச் சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவராலே கேள்விப்பட்டிருக்கிறேன்.

௨௩ செவிகொடுத்து என் சத்தத்தைக் கேளுங்கள், நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள்.

௨௪ உழுகிறவன் நாடோறும் உழுது விதைக்கிறதுக்காகத் தன் நிலத்தைக் கொத்திப்பரம்படிக்கிறதுண்டோ.

௨௫ அவன் அதை மேலே நிரவினபிற்பாடு அதினதின் எல்லையிலுழுந்தைத் தெளித்துச் சீரகத்தைத் தூவி மேன்மையான கோதுமையையும் நியமிக்கப்பட்டவாற்கோதுமையையுங் கம்பையும் விதைத்துப்போடுகிறானல்லவோ.

௨௬ அப்படியவர்களுடைய பராபரன் அவர்களை நியாயம் மட்டாய்த்தண்டித்து

அவர்களையுபதேசிப்பார்.

௨௭ ஏனென்றால் உழுந்து துலக்கதாலே போரடிக்கப்படுகிறதில்லை, சீரகத்தின்மேல் வண்டியின் உருளை சுற்றவிடப்படுகிறதுமில்லை உழுந்து கோலினாலும் சீரகம் மிலாறினாலும் அடிக்கப்படும்.

௨௮ போசனமாகும்படியாக அது மசிக்கப்படும், ஆகையால் எப்போதும் அவன் அதைப் போரடிக்கிறதுமில்லை, அவன் தன் வண்டியின் உருளையால் அதை நசுக்குகிறதும் அல்லது தன் குதிரைகளால் அதை நொறுக்குகிறதுமில்லை.

௨௯ இதுவும் சேனைகளுடைய கர்த்தராலே புறப்பட்ட விசேஷம், அவர் * ஆச்சரியமான ஆலோசனையும் பெருத்த ஞானத்தையுஞ் செய்துமுள்ளவர். * எரே. ௩௨, ௰௯.

## ௨௯. அதிகாரம்.

[எருசலேமின் அழிவையும் அதின் சத்துருக்களுடைய ஆக்கினையும் யூதர்களின் மேற்பகுப ஞான ஆக்கினையையும் முன்னறிவித்தது.]

௧ தாவீது பாளயமிறங்கின பட்டணமாகிய வனசிங்கமே வனசிங்கமே உனக்கு ஐயோ வருஷத்துக்கு வருஷம் பண்டிகைகளின் பலிகள் பலியிடப்பட்டாலும்,

௨ வனசிங்கத்துக்கு இடுக்கமுண்டாக்குவோம் அப்போது துக்கிப்புஞ் சலிப்புமுண்டாகும் இந்தப் பட்டணம் நமக்குச் சிங்கத்தைப் போலத்தானிருக்கும்.

௩ ஏனெனில் * உன்னைச் சூழப் பாளயமிறங்கி உன்னைத் தெத்துகளால் முற்றிக்கை போட்டு உனக்கு விரோதமாகக் கொத்தளங்களை எழுப்புவோம். * லூக்கா. ௰௯, ௪௩. ௪௪. ௨௧, அதி. ௨௰.

௪ அப்போது நீ தாழ்ந்துபோய்த் தரையிலிருந்து பேசுவாய் உன் பேச்சுப் பணிந்ததாய் மண்ணிலிருந்து புறப்பட்டு உன் சத்தம் அஞ்சனம் பார்க்கிறவனின் சத்தத்தைப் போலத் தரையிலிருந்து முணுமுணுத்து உன் பேச்சு மண்ணிலிருந்து கசுகுசென்றதாகவிருக்கும்.

௫ உன்மேல் வருகிற அன்னியரின் திரள் பொடித்தூளத்தனையாகவும் பலவந்தரின் திரள் பறந்துவரும் பதருகளத்தனையாகவுமிருக்கும், அது * அகப்புத் தீவிரமுமாய்ச் சம்பவிக்கும்.

* மத்தே. ௨௪, ௨௭.

௬ இடிகளினாலும் பூமியதிர்தலினாலும் மகா இரைச்சலினாலும் பெருங்காற்றினாலும் பெருங்காற்றினாலும் பட்சிக்கிற அக்கினிச்சுவாலையினாலுஞ் சேனைகளின் கர்த்தராலே விசாரிக்கப்படுவாய்.

௭ ஆனாலும் வனசிங்கத்தின்மேல் யுத்தம்பண்ணுகிற சகலசாதிகளுடைய திரளும் அதின்மேலும் அதின் அரண்மேலும் யுத்தம்பண்ணி அதை இடுக்கண் செய்கிறவர்களும் இராத்தரிசனையாகிய சொப்பனத்தைக் காண்கிறவர்களைப் போலாயிருப்பார்கள்.

௮ பசியாயிருக்கிறவன் இதோ புசிக்கிறேனென்று சொப்பனங்காண்கிறதற்கு ஒத்ததாயிருக்கும் அவன் விழிக்கையில் அவன் ஆத்துமா வெறுமையாயிருக்கும், அல்லது தாகமாயிருக்கிறவன் இதோ குடிக்கிறேனென்று சொப்பனங்காண்கிறதுக்கொத்ததுமாயிருக்கும், அவன் விழிக்கையில் இதோ அவன் விடாய்த்தேயிருக்கிறான், அவன் ஆத்துமா தவனத்தோடேதானேயிருக்கும், அப்படியே சீயோன் பருவதத்துக்கு விரோதமாக யுத்தம்பண்ணுகிற சகலசாதிகளுடைய திரளுக்குமிருக்கும்.

௯ தரித்துநின்று திகையுங்கள், பிரமித்துக் கூப்பிடுங்கள், வெறித்திருக்கிறார்கள், ஆனால் மதுபானத்தாலல்ல, தள்ளம்பாறுகிறார்கள் ஆனால் லாகிரியினாலல்ல.

௰ ஏனெனில் * கர்த்தருங்கள்மேலே கனநித்திரையின் ஆவியையூற்றி உங்கள் கண்களை அடைத்துத் தீர்க்கதரிசிகளையும் உங்கள் தலைவரையும் ஞானதிஷ்டிக்காரரையும் மூடிப்போட்டார். * ரோமர். ௰௧, ௮.

௰௧ ஆனதுகொண்டு தரிசனமெல்லாம் உங்களுக்கு முத்திரிக்கப்பட்ட புஸ்தகத்தின் வசனங்களைப்போலிருக்கும், அதைவாசிக்க அறிந்திருக்கிற ஒருவனுக்கு அதைக் கொடுத்து நீ இதைவாசி என்றால் அவன் இது என்னாலே கூடாது, ஏனென்றால் அது முத்திரித்திருக்கிறதென்பான்.

௰௨ அல்லது வாசிக்க அறியாதவனுக்குப் புஸ்தகத்தைக் கொடுத்து, நீ இதைவாசி என்கிறதைப்போலுமிருக்கும், அவன் எனக்கு வாசிக்கத்தெரியாதென்பான்.

பூதச்சனத்தினுடைய கள்ள ஆராதனையின் அமார்க்கமும் மாறுபாடான சிந்தையுங் கண்டிக்கப்பட்டது.

௰௩ * இந்தச் சனங்கள் வாயினால் நம் மண்டைக்குச் சேர்ந்து தங்கள் உதடுகளினாலே நம்மைக் கனம்பண்ணியும் அவர்களிருதயம் நமக்குத் தூரமாய் விலகியிருக்கிறபடியினாலும் அவர்கள் நமக்குப் பயந்திருக்குதல் மனுஷருடைய கற்பனையின் உபதேசிக்குதலாயிருக்கிறபடியினாலும், * மத்தே. ௰௫, ௭—௯. மாற்கு. ௭, ௬. ௭.

௰௪ இதோ * அவர்கள் ஞானிகளின் ஞானங்கெட்டு அவர்கள் விவேகிகளின் உணர்வு மறைந்துபோகத்தக்க மகா அதிசயமும் ஆச்சரியமுமான பிரகாரமாக நாம் இந்த

சனத்தைத் நடப்பித்துக்கொண்டேயிருப்போமென்று ஆண்டவர் சொல்லுகிறார்.
* ௧. கொரி. ௧, ௰௯. ௨௰.

௰௫ நீங்கள் ஆலோசனையைக் கர்த்தருக்கு மறைவாக்கும்படிக்கு ஆழமாயொளித்துத் தங்கள் கிரியைகளை அந்தகாரத்தில் நடப்பித்து * எங்களைக் காண்கிறவர் ஆர், எங்களை அறிகிறவர் ஆர் என்கிறவர்களுக்கு ஐயோ.
* சங்கீ. ௯௪, ௭.

௰௬ எத்தனை மாறுபாடாயிருக்கிறீர்கள், குயவன் களிமண்ணுக்குச் சரியாக எண்ணப்படுவானோ, உண்டாக்கப்பட்டது தன்னையுண்டாக்கினவனைக் குறித்து அவர் என்னையுண்டாக்கினதில்லையென்றும், உருவாக்கப்பட்டது தன்னையுருவாக்கினவனைக் குறித்து அவர் உணரானென்றுஞ் சொல்லத்தகுமோ.

யூதர் தள்ளப்பட்டுப் புறச்சாதிகள் சேர்ந்து கொள்ளப்படுவதும், யூதருங் கடைசியிலே குணப்படுவதும்.

௰௭ இன்னங்கொஞ்சப்பொழுதிலே லீபனோன் * வயல்வெளியாக மாறுவதும் வயல்வெளி காடாக எண்ணப்படுவதுமில்லையோ. * ௩௨, ௰௫.

௰௮ அக்காலத்திலே * செவிடர் புஸ்தகத்தின் வசனங்களைக் கேட்பார்கள், குருடரின் கண்கள் இருளுக்கும் அந்தகாரத்துக்கும் நீங்கலாகப் பார்வையடையும். * மத். ௰௧, ௫.

௰௯ சிறுமையானவர்கள் கர்த்தருக்குள் மகிழ்ந்துகொண்டேயிருந்து மனுஷரில் ஏழைகள் இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள்ளே களிகூருவார்கள்.

௨௰ ஏனெனில் பலவந்தன் அற்றுச் சக்கந்தக்காரன் இல்லாதேபோவான்.

௨௧ வசனத்திலே மனுஷனைப் பாவியாக்கி * வாசலிலே தங்களைக் கடிந்துகொள்ளுகிறவனுக்குக் கண்ணியை வைத்து நீதிமானை அந்தரத்திலே துரத்துகிற அக்கிரமஞ்செய்கையின் சுறுசுறுப்புக்காரர் அனைவருஞ் சங்கரிக்கப்படுவார்கள். * ஆமோ. ௫, ௰.

௨௨ ஆகையால் ஆபிரகாமை மீட்டுக்கொண்ட கர்த்தர் யாக்கோபின் வீட்டாருக்குச் சொல்லுகிறதாவது, இனி யாக்கோபு வெட்கப்படுவதில்லை, இனி அவன் முகஞ் செத்துப்போவதுமில்லை.

௨௩ ஏனெனில் நமது கரங்களின் செயலாகிய தன் பிள்ளைகளை அவன் தன் நடுவிலே காணும்போது நம்முடைய நாமத்தைப் பரிசுத்தமாக்குவார்கள், யாக்கோபின் பரிசுத்தரை அவர்கள் பரிசுத்தமாக்கி இஸ்ரவேலின் பராபரனுக்குப் பயப்படுவார்கள்.

௨௪ மோசமான ஆவியாயிருந்தவர்கள் உணர்வுள்ள அறிவையடைந்து முறுமுறுப்புக்காரர் உபதேசங் கற்றுக்கொள்ளுவார்கள்.

## ௩௰. அதிகாரம்.

[எகிப்தியரின் சலுகையைத் தேடின இஸ்ரவேலரைக் கடிந்துகொண்டது.]

௧ பாவத்தின்மேலே பாவத்தைக் கூட்டும்படிக்கு நம்மையல்லாமல் ஆலோசனை பண்ணி நமது ஆவியையல்லாமலே தங்களை மூடிக்கொள்ளப்பார்க்கிறவர்களும்,

௨ பார்வோனின் பலத்தினாலே பலக்கவும் எகிப்துவினுடைய நிழலில் ஒதுங்கவும் வேணுமென்று நம்முடைய வாக்கைக் கேளாமல் எகிப்திலிறங்கிப் போகிறவர்களுமாகிய * முரட்டாட்டமான பிள்ளைகளுக்கு ஐயோ என்று கர்த்தர் சொல்லுகிறார்.
* ௧, ௨.

௩ ஏனெனில் உங்களுக்குப் பார்வோனுடைய பெலன் வெட்கமாகவும் எகிப்துவினுடைய நிழலொதுக்கு இலச்சையாகவுமிருக்கும்.

௪ அவர்கள் பிரபுக்கள் சோவானிலே போய் அவர்கள் தானாபதிகள் ஆனேஸ்மட்டுஞ் சேருகிறார்கள்.

௫ ஆனால் தங்களுக்குச் சகாயத்துக்கும் பிரயோசனத்துக்குமல்ல, வெட்கத்துக்கும் நிந்தைக்குமே யுதவுஞ் * சனத்தினாலே அனைவரும் வெட்கப்படுவார்கள்.

௬ தெற்கே போகிற மிருகசீவன்களின் மீதேறுஞ் சுமரும் பாரமாவது, துஷ்டசிங்கமுங் கிழச்சிங்கமும் பறக்கிற காலகோடிவிஷமுமிருந்து வருகிறதும், நெருக்கமும் இடுக்கமும் அடைவிக்கிறதுமான தேசத்துக்கு அவர்கள் கழுதை மறிகளுடைய முதுகின்மேல் தங்கள் ஆஸ்திகளையும், ஒட்டகங்களுடைய முதுகின்மேலே தங்கள் பொக்கிஷங்களையுந் தங்களுக்கு உதவாத சனத்தண்டைக்கும் ஏற்றிக்கொண்டுபோகிறார்கள்.

௭ ஏனெனில் எகிப்தியர் சகாயம்பண்ணுவது மாயையும் வீணுமாயிருக்கும், ஆகையால் * இராகாப்புடைய மனுஷர் சும்மாவிருப்பார்களென்று அதற்காகக் கூறுகிறோம். * சங்கீ. ௮௭, ௪. ௮௯. ௰௧.

௮ இப்போதும் இது பிற்காலத்துக்கும் என்றென்றைக்குமிருக்கும்படிக்கு நீ போய் இதை அவர்களுக்கு முன்பாக ஒரு பலகையிலெழுதி ஒரு புஸ்தகத்திலே வரை.

௯ ஏனெனில் இவர்கள் கலகமுள்ள சனமும் புளுகிற பிள்ளைகளுங் கர்த்தருடைய வேதத்தைக் கேட்க மனதில்லாத புத்திரருமாயிருக்கிறார்கள்.

௰ அவர்கள் பார்க்கிறவர்களுடனே நீங்கள் பார்க்கவேண்டாமென்றும் ஞானதிஷ்டியுள்ளவர்களுடனே நீங்கள் எங்களுக்கு நிதானமான தரிசனமாயத் தரிசனஞ்சொ

லாமல் எங்களுக்கு இதமான சொற்களையுரைத்து எத்துவாதத்தையாய்த் திஷ்டியுங்களென்றும்,

௰௧ நீங்கள் வழியைவிட்டுப் பாதையை விலகி இஸ்ரவேலின் பரிசுத்தரை எங்கள் முன்பாக இராமல் ஓயப்பண்ணுங்களென்றுஞ் சொல்லுகிறார்கள்.

௰௨ ஆனதுகொண்டு நீங்கள் இந்த வார்த்தையை வெறுத்து இடுக்கமுந் தீச்சாயுமாறுஞ்செய்கிறதை நம்பி அதைச்சார்ந்து கொள்ளுகிறபடியினாலே,

௰௩ இந்த அக்கிரமம் உங்களுக்குயர்ந்த சுவரில் விழப் பிதுங்குகிறதும் அசுப்பாய் ஒரு நிமிஷத்தில் இடியப்போகிறதுமான வெடிப்பைப்போலிருக்குமென்று இஸ்ரவேலின் பரிசுத்தர் சொல்லுகிறார்.

௰௪ அவர்களைத் தப்பவிடாமல் நொறுக்கப்பட்ட குயவர் பாண்டத்தினுடைய உடைவுக்குச் சரியாய் அவர்களையுடைப்பார், நொறுங்கின துண்டுகளில் அடுப்பிலே நெருப்பெடுக்கிறதற்கும் அல்லது ஒரு பள்ளத்திலே தண்ணீர் மொள்ளுகிறதற்கும் ஒரு ஓடாகிலும் அகப்படாமற்போம்.

௰௫ ஏனெனில் மனந்திரும்பி அமர்ந்திருந்தீர்களானால் இரட்சிக்கப்படுவீர்கள், அமரிக்கையிலும் நம்பிக்கையிலும் * உங்கள் பெலனிருக்குமென்று இஸ்ரவேலின் பரிசுத்தராயிருக்கிற கர்த்தரான பராபரன் சொன்னார், ஆனால் † நீங்கள் அப்படிச்செய்ய மனதாயிராமல், * சங். ௩௭, ௫. ௨. கொரி. ௰௨, ௯. ௰. † மத்தே. ௨௩, ௩௭.

௰௬ அப்படியல்ல, குதிரைகளின்மேலே ஏறி ஓடிப்போவோமென்கிறீர்கள், ஆனது கொண்டு ஓடிப்போவீர்கள், வேகமான வாகனங்களின்மேல் ஏறிப்போவோமென்கிறீர்கள், ஆனதுகொண்டு உங்களைத் துரத்துகிறவர்கள் வேகமாயிருப்பார்கள்.

௰௭ * நீங்கள் உச்சிமலையின்மேல் ஒரு பாய்மரத்தைப்போலவும் மேட்டின்மேல் ஒரு கொடியைப்போலவும் மீந்திருக்குமட்டாக † ஒருவனுடைய உதம்புதலினாலே ஆயிரம்பேரும் ஐந்துபேருடைய உறுமுதலினாலே அனைவரும் ஓடிப்போவீர்கள். * சங். ௰௭, ௯. † ௫. மோசே. ௩௨, ௩௰.

பராபரன் பாக்கியமான நற்சீரைக்கட்டளையிட்டுச் சத்துருக்களுக்கு நீதியைச்சரிக்கட்டுவாரென்று விசுவாசிகளுக்கு ஆறுதல் சொன்னது.

௰௮ ஆனால் உங்களுக்கிரங்குவதற்காகத்தானே கர்த்தர் காத்திருந்து உங்கள்மேல் மனதுருகுவதற்காகத்தானே உயருவார், ஏனெனில் கர்த்தர் நியாயத்தின் பராபரனாயிருக்கிறார், * அவருக்குக் காத்திருக்கிற அனைவரும் பாக்கியவான்கள். * எரே. ௰௭, ௭.

௰௯ ஏனெனில் சீயோனிலும் எருசலேமிலும் சனம் வாசமாயிருப்பதுண்டு, அழுதுகொண்டேயிராய், உன் கூப்பிடுதலின் சத்தத்துக்கு அவருன்மேலிரங்கவே இரங்கி அதைக்கேட்டவுடனே உனக்கு மறுவுத்தரவு கொடுப்பார்.

௨௰ ஏனெனில் ஆண்டவர் உங்களுக்கு நெருக்கத்தின் அப்பத்தையும் ஒடுக்கத்தின் தண்ணீரையுங்கொடுத்திருக்கிறார், ஆனால் இனியுன் போதகர்கள் மறைந்துபோவதில்லை, உன் கண்கள் உன் போதகர்களைக் காண்கிறவைகளாயிருக்கும்.

௨௰௧ நீங்கள் வலதுபுறமாக அல்லது இடதுபுறத்துக்கு விலகும்போது வழியிதுவே இதிலே நடவுங்களென்று உனக்குப்புறகாலே சொல்லும் வார்த்தையை உன் காதுகள் கேட்கும்.

௨௰௨ உன் வெள்ளிச்சுரூபங்களின் பூச்சையும் உன் பொன்வார்ப்பான உன் ஆலயபாரணத்தையுந் தீட்டாகவெண்ணி அவைகளைத் தீட்டமானதைப்போலச் சிதற எறிந்து அதைச் சீப்போவென்பாய்.

௨௰௩ அப்போது நீ நிலத்தில் விதைக்கும் உன் விதைக்கு அவர் மழையையும் நிலத்தின் பலனாகிய ஆகாரத்தையுங் கொடுப்பார், அது கொழுப்பும் புஷ்டியுமாயிருக்கும், அக்காலத்திலே உன் ஆடுமாடுகள் விஸ்தாரமான மேய்ச்சலுள்ள தலத்திலே மேய்ந்து,

௨௰௪ நிலத்தையுழுகிற எருதுகளுங் கழுதைமறிகளும் முறத்தாலுந் தூற்றுக்கூடையாலும் புடைக்கப்பட்ட ருசியுள்ள கப்பிகளைத் தின்னும்.

௨௰௫ கோபுரங்கள் விழும் பெரிய கொலையின் நாளிலே உயரமான சகல மலையின்மேலும் உயர்த்தியான சகல மேட்டின்மேலும் ஆறுகளும் வாய்க்கால்களுமுண்டாய்,

௨௰௬ கர்த்தர் தம்முசனத்தின் நொரிசலைக் கட்டி அதின் அடிக்காயத்தைக் குணமாக்கும் நாளிலே சந்திரனுடைய வெளிச்சஞ் சூரியனின் வெளிச்சத்தைப்போலவுஞ் சூரியனுடைய வெளிச்சம் ஏழத்தனையாய் ஏழு பகல்களின் வெளிச்சத்தைப்போலவுமிருக்கும்

௨௰௭ இதோ கர்த்தருடைய நாமந் தூரத்திலிருந்து வரும், அவருடைய கோபமெரிகிறதும் பாரங்கனக்கிறதுமாயிருக்கும், அவருடைய உதடுகள் சினத்தால் நிறைந்தவைகள், அவருடைய நாவு பட்சிக்கிற அக்கினியைப்போலிருக்கும்.

௨௰௮ மாயைக்கான சல்லடையிலே சாதிகளையரிக்குமட்டுக்கு அவர் ஊதுஞ்சுவாசங் கழுத்துமட்டுமெட்டுகிற ஆற்றின் வெள்ளத்தைப்போலவுஞ் சனசனங்களுடைய தாடைகளிலே போட்டு அவைகளை யலைக்கழிக்கிற கடிவாளத்தைப்போலவுமிருக்கும்.

௨௰௯ பண்டிகையாசரிக்கப்படுகிற இரா

த்திரியிலே பாடுகிறதற்குச் சரியான பாட்டும் கர்த்தருடைய பருவதத்துக்கு இஸ்ரவேலின் கன்மலையண்டைக்குப் போக நாகசுரத்தோடே நடந்துவருகிறதற்குச் சரியான மனமகிழ்ச்சியும் உங்களுக்கிருக்கும்.

௩௰ கர்த்தர் * தமது சத்தத்தின் பிரஸ்தாபத்தைக் கேட்கப்பண்ணிக் கோபத்தின் சினத்தினாலும் பட்சிக்கிற அக்கினிச் சுவாலையினாலும் இடி பெருவெள்ளங் கல்மழையினாலும் தமது புயத்தின் இறங்குதலைத் தெரிவிப்பார். * சங். ௨௯, ௧. ௭௯, ௯—௰௧.

௩௧ ஏனெனில் மிலாறினாலே அடித்த அசூர் கர்த்தருடைய சத்தத்தினாலே நொறுங்குண்பான்.

௩௨ சம்பவிப்பதேதென்றால் உறுதியுள்ள பெலனுள்ள கோலுக்கு விரோதமாக அவன் உயர்த்த கைகளால் உயர்த்தப்பண்ணப்பட்டிருப்பதால் அது கடந்துவந்த இடங்களிலெல்லாம் கர்த்தர் அவைகளுக்கிளைப்பாறுதல் கொடுத்தபடியினாலே மேளங்களாலுஞ் சுரமண்டலங்களாலுங் கொண்டாடப்படும்.

௩௩ ஏனெனில் அக்கினிப்பள்ளம் நேற்றே ஆயத்தமாயிருக்கிறது, இராசாவுக்கும் அது சேதமாயிருக்கிறது, அதை யாழமும் அகலமுமாக்கினார், அதின் விறகுக்கு அக்கினியும் விறகுகளும் மிகுதியாயிருக்கிறது, கர்த்தரின் சுவாசம் கந்தகத்தின் ஆறுபோல அதைக் கொளுத்தும்.

## ௩௧. அதிகாரம்.

[எகிப்தியரின் சகாயத்தை நம்பின இஸ்ரவேலரைப் பார்த்து அந்த அசூரியரைத் தேவசெயலாயழிப்போமென்று யூதருக்கு வாக்குத்தத்தம்பண்ணினது.]

சகாயத்துக்கென்று இஸ்ரவேலுடைய பரிசுத்தரைச் சார்ந்துகொள்ளாமலும் கர்த்தரைத் தேடாமலும் எகிப்துக்குப் போய்க் குதிரைகளைச் சார்ந்து இரதங்களை அவைகள் திரளானதென்றும் குதிரைவீரர்களை அவர்கள் மகா பலசாலிகளென்றும் நம்பியிருக்கிறவர்களுக்கு ஐயோ.

௨ அவரோவென்றால் ஞானமுள்ளவர், அவர் தம்முடைய வார்த்தைகளை மறுக்காமல் * தீங்கை வரப்பண்ணித் தீமைசெய்கிறவர்களின் வீட்டுக்கும் அக்கிரமக்காரரின் சகாயத்துக்கும் விரோதமாக எழும்புவார்.

௩ ஏனெனில் எகிப்தியர் தெய்வமல்ல, மனுஷர்தானே அவர்களுடைய குதிரைகள் ஆவியல்ல மாமிசந்தானே கர்த்தர் தமது கரத்தை நீட்டுவார், அப்போது சகாயஞ்செய்கிறவனும் இடறிச் சகாயஞ்செய்விக்கப்பட்டுக்கொள்ளுகிறவனும் விழுந்து அனைவரும் ஏகமாய் அழிந்துபோவார்கள்.

௪ ஏனென்றால் கர்த்தர் என்னுடனே சொன்னதாவது, சிங்கமுஞ் சிங்கக்குட்டியும் தன் இரையினிமித்தம் கெர்ச்சித்துத் தன்னைக் குவிரோதமாயக் கூப்பிடுகிற திரளான மேய்ப்பரின் சத்தத்தினாலே கலங்காமலும் அவர்கள் அமளியினாலே தாழாமலும் இருக்கிறதுபோல * சேனைகளின் கர்த்தர் சீயோனின் பருவதத்துக்காகவும் அதின் மேட்டுக்காகவும் யுத்தம்பண்ண இறங்குவார். * ௨. இராசாக்கள். ௰௯, ௩௫.

௫ பறந்துகாக்கிற பட்சிகளைப்போலே சேனைகளின் கர்த்தர் எருசலேமின்மேல் ஆதரவாயிருப்பார், அவர் அதைக் காப்பாற்றித் தப்பப்பண்ணுவார், அவர் கடந்து வந்து அதை விடுவிப்பார். * ௫. மோசே. ௩௨, ௰௧.

௬ இஸ்ரவேல் புத்திரர் திரட்டாய் விட்டுவிட்டவரண்டைக்கு நீங்கள் திரும்புங்கள்.

௭ ஏனெனில் பாவமாக உங்கள் கைகள் உங்களுக்குச் செய்திருந்த தன் தன் வெள்ளி விக்கிரகங்களையுந் தன் தன் பொன் விக்கிரகங்களையும் அவரவர் அக்காலத்திலே * வெறுப்பார்கள். * ௨, ௨௰. ௩௰, ௨௨.

௮ அப்பொழுது மனுஷனுடைய பட்டயமல்லாத பட்டயத்தாலே அசூர் விழுவான், மனுஷனுடைய பட்டயமல்லாத பட்டயமே அவனைப் பட்சிக்கும், அவன் பட்டயத்துக்குத் தப்ப ஓடுவான், அவன் வாலிபர்கள் கரைந்துபோவார்கள்.

௯ அவர்களுடைய கன்மலை பயத்தினாலே ஒழிந்துபோம், அவர்களுடைய பிரபுக்கள் கொடியைக் கண்டு கலங்குவார்களென்று சீயோனில் நெருப்பையும் எருசலேமில் அடுப்பையுமுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩௨. அதிகாரம்.

[மேசியாவினுடைய இராசரியத்தின் பாக்கியமும் அதுக்கு முன் நடக்குந் தண்டனை விசாரிப்பும்.]

இதோ * நீதியாக ஒரு இராசா அரசாளுவார், பிரபுக்களும் நியாயமாகத் தலைத்தனம்பண்ணுவார்கள். * சங். ௪௫, ௭. ௮. எரேமி. ௨௰, ௫. ௬. ௩௩, ௰௫. ௰௬. சகரியா. ௯, ௯.

௨ அவர் * காற்றுக்கொதுக்காகவும் பெருவெள்ளத்துக்கு மறைவிடமாகவும் வறண்ட நிலத்துக்கு வாய்க்கால்களாகவும் விடாய்த்த பூமிக்குப் பெருங்கன்மலையின் நிழலாகவுமிருப்பார். * ௨௬, ௪.

௩ அப்போது காண்கிறவர்களின் கண்கள் மந்தப்பிப்பதில்லை, கேட்கிறவர்களின் செவிகள் கவனித்தேயிருக்கும்.

௪ பதறுகிறவர்களின் இருதயம் அறிவுண்டாக உணர்ந்து திக்குவாயருடைய நாவு மகா தெளிவாய்ப் பேசத் தீவிரித்திருக்கும்.

௫ இனி மூடன் சற்குணனென்னப்படுவதுமில்லை. பிசினித்தனக்காரன் உதாரனென்று சொல்லப்படுவதுமில்லை.

௬ ஏனென்றால் மூடன் மாயம்பண்ணவும், கர்த்தருக்கு விரோதமாய்த் தப்பிதம் பேசவும், பசியுள்ள ஆத்துமாவை வெறுமையாக வைத்துத் தாகமுள்ளவனுக்குத் தாகம் தீர்க்காமல் போகப்பண்ணவுந்தக்கதாக * பயித்தியத்தைப் பேசுகிறான், அவனிருதயம் அநியாயத்தை நடப்பிக்கும். * வாக்கியம். ௰௫, ௨.

௭ பிசினித்தனக்காரனுடைய எத்தனங்களும் பொல்லாதவைகள்; சிறுமையானவன் நியாயமாய்ப் பேசும்போது அவன் கள்ளவார்த்தைகளாலே சிறுமையானவர்களைக் கெடுப்பதற்காகத் தீவினைகளை யோசிக்கிறான்.

௮ சற்குணனோ சற்குணமானவைகளை யோசிக்கிறான், சற்குணமானவைகளிலே நிலைத்துமிருக்கிறான்.

௯ சுகசீவியாயிருக்கிற ஸ்திரீகளே, எழுந்திருந்து என் சத்தத்தைக் கேளுங்கள், நிர்விசாரமான குமாரத்திகளே என் வசனத்துக்குச் செவிகொடுங்கள்.

௰ நிர்விசாரிகளே, வருஷத்துக்கு மேலான நாட்களாய்த் தத்தளிப்பீர்கள், ஏனென்றால் திராட்சப்பலன் அற்றுப்போய் அறுப்பு வராதேபோம்.

௰௧ சுகசீவிகளே நடுங்குங்கள், நிர்விசாரிகளே தத்தளியுங்கள், உடைகளைந்து உரிந்துபோட்டு அரையில் இரட்டைக் கட்டிக்கொள்ளுங்கள்.

௰௨ விருப்பமான வயல்களின் நிமித்தமும் கனிதந்திருந்த திராட்சச்செடிகளின் நிமித்தமும் மாரடித்துப் புலம்புவார்கள்.

௰௩ என் சனத்தினுடைய பூமியின்மேலும் களிகூர்ந்திருந்த பட்டணத்தினுடைய எல்லாச் சந்தோஷ வீடுகளின்மேலுங்கூட முள்ளுச்செடியும் முள்ளுக்காடும் முளைக்கும்.

௰௪ ஏனென்றால் அரமனை பாழாய்விடப்பட்டு ஊரின் சந்தடி விட்டுப்போய் மேடுகளும் அரண்களும் என்றைக்குங் காட்டுக்கழுதைகளின் சந்தோஷமும் மந்தைகளின் மேய்ச்சலுமான குகைகளாயிருக்கும்.

௰௫ * நம்முடையமேல் உன்னதத்திலிருந்து ஆவி ஊற்றப்படுமட்டும் அப்படியிருக்கும்; அப்பொழுது † வனாந்தரம் பயிர்நிலமாகும், பயிர்நிலங் காடாக எண்ணப்படும். * எசேக்கியேல். ௩௯, ௨௯. † யோவா. ௬, ௧.

௰௬ வனாந்தரத்திலே நியாயம் வாசமாயிருந்து பயிர்நிலத்திலே நீதி தங்கித்தரிக்கும்.

௰௭ நீதியின் செய்கை சமாதானமும் நீதியின் பலன் நித்திய காலமாய் அமரிக்கையும் சுகமுமாயிருக்கும்.

௰௮ என் சனங்கள் சமாதான தாபரத்திலும் பத்திரமான வாசஸ்தலங்களிலும் சாங்கோபாங்கமாய்த் தங்குமிடங்களிலும் குடியிருக்கும்.

௰௯ ஆனால் காட்டிடங்களின்மேல் கன்மழை பெய்யும், அந்தப் பட்டணம் மகா தாழ்வாய்த் தாழ்ந்துபோம்.

௨௰ சமுத்திரங்களுடைய ஓரங்களில் எங்கும் மாடுகளையுங் கழுதைகளையும் போகவிட்டு விதைவிதைக்கிற நீங்கள் பாக்கியவான்கள்.

## ௩௩. அதிகாரம்.

[அசூரியரின் அழிவும் சீயோன் குடிகளின் இரட்சிப்பும் பாக்கியமும் முன்னறிவிக்கப்பட்டது.]

பாழ்க்கடிக்கப்படாதிருந்தும் பாழ்க்கடிக்கிறவனும், உனக்குத் துரோகம்பண்ணாதிருக்கிறவர்களுக்குத் துரோகம்பண்ணுகிறவனுமாகிய உனக்கு ஐயோ, நீ பாழ்க்கடித்துமுடிந்தபின்பு * பாழ்க்கடிக்கப்படுவாய்; நீ துரோகம்பண்ணித் தீர்ந்தபின்பு † உனக்குத் துரோகம்பண்ணுவார்கள்.
* ௰எ, ௰௪. † ௰௪, ௰அ.

௨ கர்த்தாவே, எங்களுக்கு இரங்கும், உமக்குக் காத்திருக்கிறோம்; தேவரீர் காலைதோறும் அவர்கள் புயமும் இக்கட்டுக்காலத்திலெங்கள் இரட்சிப்புமாயிரும்.

௩ அமளியின் சத்தத்தினாலே சனத்தாங்கள் அலைந்தோடி * நீர் உயருகிறதினாலே சாதிகள் சிதறடிக்கப்படுகிறார்கள். * சங்கீதம். ௬௮, ௨.

௪ பச்சைக்கிளிகள் சேர்க்குமாப்போலே உங்கள் கொள்ளை சேர்க்கப்படும், வெட்டுக்கிளிகள் குதித்துத் திரிகிறாப்போலே அதின்மேலே குதித்துத் திரிவார்கள்.

௫ கர்த்தர் உயர்ந்தவர், ஏனென்றால் உன்னதத்தில் வாசமாயிருக்கிறார், சீயோனை நியாயத்தினாலும் நீதியினாலும் நிரப்புகிறார்.

௬ உன் காலங்களுடைய உறுதியாயிருக்கும் இரட்சிப்புகளும் ஞானமும் அறிவும் உன்காலங்களுடைய உறுதியாயிருக்கும், கர்த்தருக்குப் பயப்படுதலே அதின் பொக்கிஷம்.

௭ இதோ * அவர்கள் தாளுதிகள் வெளியிலே அலறுகிறார்கள், சமாதானத்துக்கனுப்பப்பட்டவர்கள் மனங்கசந்து அழுகிறார்கள்.

௮ பாதைகள் பாழானது, வழிகளில் நடப்போய்ந்தது, உடன்படிக்கையை அவத்தமாக்குகிறான், ஊர்களை அசட்டைபண்ணுகிறான், மனுஷனை எண்ணாதேபோகிறான்.

௯ பூமி துக்கித்து விடாயத்திருக்கிறது, லீபனோன் வெட்கி வதங்குகிறது, சாரோன் வனாந்தரத்துக்கொப்பாகிறது, பாசானும் கர்மேலும் பாழ்க்கடிக்கப்படுகிறது.

௰ இப்போது எழுந்திருப்போம். இப்போது உயர்வோம், இப்போது உயர எழும்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ * செத்தையைக் கர்ப்பந்தரித்துத் தாளடியைப் பெறுவீர்கள், உங்கள் ஆவி அக்கினியைப்போல உங்களைப் பட்சிக்கும்.

* சங்கீதம். ௭, ௰௫.

௰௨ உன் சனசதளங்கள் சுண்ணாம்புச் சுடப்படுகிறதுக்கொப்பாகி வெட்டுண்ட முள்ளுச் செடிகளைப்போலே தீயிலெரிக்கப்படுவார்கள்.

௰௩ தூரத்தாரே நான் செய்கிறதைக் கேளுங்கள், சமீபத்தாரே நமது பராக்கிரமத்தை அறியுங்களென்கிறார்.

௰௪ சீயோனிலிருக்கிற பாவிகள் திகைக்கிறார்கள், மாயக்காரரை நடுக்கம் பிடிக்கிறது, நம்மிற் பட்சிக்கும் அக்கினிக்குடன் பாகத்தரித்திருப்பவனார், நம்மில் நித்தியசுழலுக்குடன் பாகத்தரிப்பவனாரென்கிறார்.

௰௫ * நீதியாய் நடந்து செம்மையானவைகளைப் பேசி இடுக்கண்செய்யுதலின் ஆதாயத்தை வெறுத்துப் பரிதானங்களைப் பிடிக்காதபடிக்குத் தன் கைகளை உதறி இரத்தத்தியோசனைகளைக் கேளாதபடிக்குத் தன் செவியையடைத்துப் பொல்லாப்பைக் காணாதபடிக்குத் தன் கண்களை மூடுகிறவனே.

* சங்கீத. ௰௫, ௨. ௸ ௨௪, ௪. ௫. ௸ மத்தே. ௫, ௫—௮.

௰௬ அவன் உயரங்களில் வாசம்பண்ணுவான், கன்மலைகளின் அரண்கள் அவனுடைய உயர்ந்த அடைக்கலம், அவன் அப்பம் அவனுக்குக் கொடுக்கப்படும், அவன் தண்ணீர் அவனுக்கு நிச்சயமாயிருக்கும்.

௰௭ உன் கண்கள் இராசாவை * அவருடைய சவுந்தரியத்தோடே கண்டு தேசத்தைத் தூர எல்லைகளுள்ளதென்று பார்க்கும்.

* சங்கீதம். ௪௫, ௩, ௪.

௰௮ * வேதபாரகனெங்கே, நிறுத்துப் பார்த்தவனெங்கே, கோபுரங்களையெண்ணினவனெங்கேயென்று உன்னிருதயம் நடுக்கைப்புடன் தியானிக்கும். * ௧. கொரி. ௧, ௨௰.

௰௯ கேட்கக்கூடாதபடிக்கு அழுத்தமான உதடும் உணரக்கூடாதபடிக்கு ஒருவிதமான நாவுமுள்ள ஒட்டாரமான சனத்தை இனிக் காணாய்.

௨௰ * நம்முடைய ஆசரிப்பின் பட்டணமாகிய சீயோனை நோக்கிப்பார், உன் கண்கள் எருசலேமை அமரிக்கையான தாபரமாகவும் பேர்க்கப்படாத கூடாரமாகவுங் காணும், இனி அதின் கூச்சுகள் என்றைக்கும் பிடுங்கப்படுவதுமில்லை அதின் கயிறுகளிலொன்றும் அறுந்துபோவதுமில்லை.

* சங். ௱௨௨, ௩—௭. அறிவி. ௨௧, ௩.

௨௧ ஏனென்றால் அங்கே கர்த்தர் நமக்கு மகிமையுள்ளவராயிருப்பார், அது மகா அகலமான நதிகளும் ஆறுகளுமுள்ள தலமாயிருக்கும், வலிக்கிறபடவு அங்கேயோடுவதுமில்லை. பெரிய கப்பல் அங்கே கடந்து வருவதுமில்லை.

௨௨ ஏனெனிற் * கர்த்தர் நம்முடைய நியாயாதிபதியுங் கர்த்தர் நம்முடைய நியாயநெறியாளனுங் கர்த்தர் நம்முடைய இராசாவுமானவர் அவர் நம்மை இரட்சிப்பார்.

* ரோமர். ௮, ௩௩. ௩௪.

௨௩ உன் கயிறுகள் தளர்ந்துபோம் அப்படியே அவைகள் தங்கள் பாய்மரத்தைக் கெட்டிப்படுத்தவும் பாயை விரிக்கவும் மாட்டாது, அப்போது திரளான கொள்ளையுடைமை பங்கிடப்படும், சப்பாணிகளுமுதலாய்க் கொள்ளையாடுவார்கள்.

௨௪ வியாதிப்பட்டிருக்கிறேனென்று அதின் குடியானவனொருவனுஞ் சொல்லுவதில்லை, அதில் வாசமாயிருக்கிற சனத்தின் அக்கிரமம் மன்னிக்கப்பட்டிருக்கும்.

## ௩௪. அதிகாரம்.

[தமது சபையின் சத்துருக்களுக்குப் பராபரன் நீதியைச் சரிக்கட்டுவது.]

௧ சாதிகளே, கேட்கிறதற்குக் கிட்டிவாருங்கள், சனசதளங்களே கவனியுங்கள், பூமியும் அதின் நிறைவும் பூச்சக்கரமும் அதினுடைய எல்லாப் பிறப்புங் கேட்கக்கடவது.

௨ ஏனென்றால் கர்த்தருக்கு எல்லாச்சாதிகளின்மேலுங் * கடுங்கோபமும் அவைகளுடைய † எல்லாச்சேனையின்மேலும் உக்கிரமுமிருக்கிறது, அவைகளைச் சங்காரத்துக்கு நேமித்துக் கொலைக்கொப்புக்கொடுக்கிறார். * அறி. ௬, ௰௭. † அறி. ௰௯, ௰௯.

௩ அவர்களிலே கொலைசெய்யப்பட்டவர்கள் எறியுண்டு கிடப்பார்கள், அவர்களின் பிரேதங்களுடைய நாற்றங் கிளம்பிப்போம், * அவர்கள் இரத்தத்தினாலே மலைகள் கரையும். * அறிவி. ௰௪, ௨௰.

௪ * வானத்தின் சேனையெல்லாம் வாடிப்போம், வானங்கள் புஸ்தகச்சுருளைப்போலச் சுருட்டப்பட்டு அவைகளின் சேனையெல்லாம் இலைகள் திராட்சச்செடியிலிருந்து உதிருமாப்போலேயும் அத்திமரத்தின் காய்கள் உதிருமாப்போலேயும் உதிர்ந்துவிழும்.

* அறிவி. ௬, ௰௩. ௸

௫ ஏனெனில் வானங்களில் நம்முடைய பட்டயம் வெறித்தது, இதோ * ஏதோமின்மேலும் நான் சங்காரத்துக்கு நியமித்த சனத்தின்மேலும் அது நியாயஞ்செய்ய இறங்கும். ௬௩, ௧. ௸

௬ கர்த்தருடைய பட்டயம் இரத்தத்தால் நிறைந்தது ஆட்டுக்குட்டிகள் கடாய்களுடைய இரத்தத்தின் கொழுப்பினும் ஆட்டுக்கிடாய்களுடைய குண்டிக்காய

களின கொழுபபினாலும திணைத்ததுமாம ஏனெனில போத்ஸறவிலே கர்த்தருககுப பலியிடுதலும ஏதோமதேசத்திலே பெரி யகொலைசெயதலுமுணடு,

எ அபபோது அவைகளோடே கூடக காணடாமிருகங்களும வலுவான எருதுக ளோடேகூடககாளைகளுமிறஙகி மடியும அவர்களதேசம இரததபபாசசலாகி அவ ர்கள மண்நிணததினாலேகொழுககும,

அ ஏனெனில சீயோனுடைய வழககின நிமித்தியமஅது கர்த்தர் ✱ நீதியைசசரிக கடடுகிற நாளும பதிலுககுககொடுககிற வருஷமுமாயிருககும, ✱ ௬௩, ௪. சஙகீ. ௱௩௭, எ. ௫ எரே. ௫௧, ௬.

கூ ✱ அதின ஆறுகளபிசினாகவும அதின மண்கெநதகமாகவும மாறி அதின நிலம எரிகிற கீலாயபபோம, ✱ ௰௩, ௰௬.

ய இரவும பகலும அது அவியாது ✱ அதினபுகை யெனறெனறைககுமெழுமபும தலைமுறைதலைமுறையாக அது பாழாயிருககும சதாகாலஞசதாகாலமாக அதையா ருகடநதுபோவதிலலை. ✱ அறிவி. ௰௪, ௰௧. ௰௬, ௩.

௰௧ ✱ நாரையும முளளமபனறியும அதைசசுதநதரிககும ஆந்தையுங காக்கையு ம அதிலேகுடியிருககும அதினமேலவெட டவெளியின நூலையும வெறுமையின தூக கையும பிடிபபார். ௰௩, ௨௧. ௨௨. செப. ௨, ௰௪. ௰௫. அறிவி. ௰௮, ௨.

௰௨ அதினமேற்குலததாரை இராசசிய பாரததுககழைததால அஙகே அவர்களில ஒருமிலலை அதினபிரபுககளெலலாரும ஒன றுமிலலை.

௰௩ அதின அரண்மனைகளிலமுளளுசசெ டிகளும அதின கோடடைகளிலே காஞ சொறிகளும முளளுபபூணடுகளுமமுளைககு ம அது வலுசசறபஙகளின தாபரமுங கோ ட்டானகளின கொல்லையுமாயிருககும.

௰௪ அஙகேவனாநதர சிவனகளும ஓரிக ளும ஒன்றுககொனறு சநதிததுப பேயை பபேய கூபபிடும அஙகே இராககுருவிக ளுநதஙகித்தஙகள தாபரததைககணடடையும,

௰௫ அஙகே வலலூறு கூடுகடடி முட டையிடடுககுஞசுபொரிததுத தனனிழலி லே கூடடிககொளளும அஙகேகூளிகளுங கூடடோடேசேரும.

௰௬ கர்த்தருடைய புஸதகததிலேதேடி வாசியுஙகள இவைகளிலொன்றுங்குறையா திருபபதிலலை இதுவும அதுவுங காணாதிரு பபதிலலை ஏனெனில அவர்தமதுவாயினாலே அதைககற்பிததார் அவருடைய ஆவியே யவைகளைசசேர்ககும.

௰௭ அவரே யவைகளுககுபசீலிபோடடு அவருடையகையே அதையவைகளுககு அளவு நூலாயபபகிர்நது கொடுககும அவைகளெனறைககும அதைசசுதநதரித துத தலைமுறை தலைமுறையாக அதிலேசஞ சரிததிருககும.

௩௫. அதிகாரம்.

[புதுவேற்பாடடுசசவை யாசீர்வாதமுளள நற்சீராயசசெழிபபது.]

வனாநதரமும வறணடபூமியும மகிழ் நது கடடுவெளி களிததுப புஷ்பததைபபோ லேசெழிககும.

௨ அது செழிககவேசெழிபபதுமலலாம ல பூரிபபுஙகெமபீரமுமாயககளிககும லீப னோனினமகிமையுங கர்மேலசாரோனெனு நவைகளின அலஙகாரமும அதுககுககொ டுபடும அவர்களகர்த்தருடையமகிமையை யும நமமுடைய பராபரனுடைய முககிய ததையுஙகாணபார்கள. ✱ ௬௰, ௰௩. யோவா. ௧, ௰௪.

௩ ✱ நெகிழ்நத கைகளைததிடபபடுத தித்தளளாடுகிற முழஙகாலகளைப பலபபடு ததுஙகள. ✱ எபிரே. ௰௨, ௰௨.

௪ மனங கலஙகினவர்களுடனே நீஙகள பயபபடாதிருஙகள திடனகொளளுஙகள இதோ உஙகள பராபரன நீதியைசசரிக கடடவும பராபரன பதிலுககுககொடுகக வுமவருவார் அவர்வநது உஙகளை இரட்சி பபாரெனறுசொலலுஙகள.

௫ அபபோது குருடரின கணகள திறக கபபடடுசசெவிடரின செவிகள திறவுணடு போகும. ✱ ௨௫, எ. ௨௬, ௱௮. ௩௨, ௩. ௪௨, ௬. எ. மததே. ௰௧, ௫.

௬ அபபோது சபபாணிமானைபபோல குதிபபான ஊமையன நாவுங கெமபீரிக கும ஏனெனில வனாநதரததிலே ✱ தண ணீர்களுஙகடடுவெளியிலே ஆறுகளும பிரித் தோடும. ✱ யோவா. எ, ௩௮. ௩௯.

எ வெடடாநதரை தணணீர்ததடாக மும வறணடதலம நீரூறறுகளுமாகும வலுசசற்பஙகள தாபரிததுககிடந்த விடங களிலே புலலுங கொறுககைகளும நாண லுமுணடாயிருககும.

அ அஙகே ✱ உயர்நத பாதையும வழி யுமிருககும அது பரிசுததவழி யெனனபப டும தீடடுளளவன அதிலே நடநதுவருவ திலலை ஆர் அநதவழிகளிலே நடககிறார்க ளோ அவர்கள புததியீனராயிருநதாலுந திசைகெடடுபபோவதிலலை. ✱ யோ. ௰௪, ௬.

கூ அஙகேசிஙகமிலலை துஷ்ட மிருகம அதிலேறுவதுமிலலை அங்கேதெனபடுவது மிலலை மீட்கபபடடவர்களே அஙகேநட பபார்கள.

ய ✱ கர்த்தரால மீட்கபபடடவர்களதி ருமபிககெமபீரததோடே சீயோனுககு வருவார்கள நிததியமகிழ்சசி அவர்களதலை

றுறின தனணிகளாககுடியுஙகள.

௰௮ கர்த்தர் நமமைததபபுவிபபாரெனறு எசேககியா உஙகளை மோசமபோகக வேணடாம * சாதிகளுடையதேவர்களில அவரவர் தஙகளதேசததை அசூரியாஇராசாவின கைககுததபபுவித்ததுணடோ.

* ௨, இரா. ௰௮. ௩௩, ௩௪. ௩௫.

௰௯ அமாத் அர்பாத் படடணஙகளின தேவர்களெஙகே செபபறவாயிமின் தேவர்களெஙகே சமாரியாவை நமதுகைககுததபபுவிபபாருணடாயிருநதார்களோ,

௨௰ கர்த்தர் எருசலேமை நமமுடைய கைககுத் தபபுவிபபாரெனனததககதாக இந்தத்தேசஙகளுடைய எலலாத தேவர்களிலும் தஙகளதேசததை நமமுடைய கைககுததபபுவிததவாரெனறுசொனனார்.

௨௰௧ ஆனால அவர்கள அவனுககொரு வார்ததையையும பிரததியுததாரமாகச சொலலாமல மவுனமாயிருநதார்கள ஏனெனில மறுவுததரவுசொலலாதேயுஙகளென்பது இராசாவினகடடளையாயிருநதது.

௨௰௨ அபபோது இலககியாவின குமாரனாகிய எலியாககிமெனற அரணமனைவிசாரிபபுககாரனும சேபனாவெனற சமபிரதியும ஆசாபபினகுமாரனாகிய யோவாகெனறவனும வஸ்திரஙகளைக கிழிததுக கொணடவர்களாய எசேககியாவணடைககுவநது அவனுககு மறுவுததரவு இரபசாககேயினவார்ததைகளையறிவிததார்கள.

## ௩௭. அதிகாரம்.

[எசேககியா அசூரியா இராசாவின கைககு அதிசயமான தேவ வலலமையினாலே நீஙகலாககிவிடுவிககபபடடது.]

இராசாவாகிய எசேககியா இதைக கேடடபோது சமபவிததததெனனால அவனதன வஸ்திரஙகளைககிழிதது இரட்டுடுததுகெகாணடு கர்த்தருடைய வீடடுககுளளேபிரவேசிதது, * ௨. இரா. ௰௯, ௧. முதல்.

௨ அரணமனை விசாரிபபுககாரனாகிய எலியாககிமையும சமபிரதியாகிய சேபனாவையும ஆசாரியர்களுடைய மூபபர்களையும ஆமோததினகுமாரனாகிய ஏசாயாவெனற தீர்ககதரிசியணடைககு இரடடுடுத்தவர்களாக அனுபபினான.

௩ அவர்கள அவனுடனே இநதநாள நெருககமுஞசிறுமையு நிநதாஷணமுமுளள நாளாமே ஏனெனில பிளளைகளபேறுநோககசசமீபிததது ஆனால பெறபபெலனிலலை.

௪ ஜீவனுளள பராபரனை நிநதிககவும உனபராபரனாகிய கர்த்தர்கேடடிருககிற வார்ததைகளாலே நிநதைபணணவும அசூரியாவின இராசாவாகிய தனனுடைய எஜமானால அனுபபபபடட இரபசாககேசொனனவார்ததைகளை உனபராபரனாகிய கர்த்தர் கேட்பாராககும, ஆகையால இனனமமீதியாய வைககபபடடவர்களுககாக விணணபபஞசெயவாயாகவெனறு எசேககியா சொலலசசொனனானெனறு,

௫ எசேககியா இராசாவின ஊழியககாரர் ஏசாயாவணடையிலேவநது சொனனார்கள.

௬ அபபோது ஏசாயா அவர்களுடனே அசூரியாவுடைய இராசாவின ஊழியககாரர் நமமைததூஷணித்ததும நீ கேடடதுமான வார்ததைகளினாலே பயபபடாதே.

௭ இதோ அவன் ஒருசெயதியைககேடடுததனதேசததுககுததிருமபுவதறகான ஆவியை நாம அவனுககுளளே கொடுதது அவனையவனுடையதேசததிலே படடையததால விழநதுபோகபபணணுவோமெனறு கர்த்தருரைககிறாரெனறிறதை உஙகள ஆணடவனோடேசொலலுஙகளெனறான.

௮ இரபசாக்கேதிருமபிபபோய அசூரியாவின இராசா இலாகீசைவிடடுப்புறபபடடானென்றுகேட்டு அவன்லிப்னாவுக்கு விரோதமாகயுத்தமபணணக்கணடான.

௯ ஆனால எத்தியோபபியாவின் இராசாவாகிய திராக்கா உமமோடு யுத்தமபணணபபுறபபடடானென்று செயதியைக்கேட்டான அதைககேட்டபோது அவன் எசேக்கியாவணடைக்குத்தானுபதிகளையனுபபிசசொன்னதாவது,

௰ நீஙகள யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவுக்குச சொலலவேணடியதேதெனில எருசலேம அசூரியாவுடைய இராசாவின்கையில ஒபபுககொடுககபபடுவதிலலையென்று நீநமபியிருககிற உனதேவன் உன்னையெததவொடடாதே.

௰௧ இதோ அசூரியாவின் இராசாககள எலலாதேசஙகளுககும அவைகளைசசஙகரிககுமபடிககுசசெயததை நீ கேடடாயே நீதபபுவாயோ,

௰௨ என்பிதாககள அழிததுபபோடட கோசானும ஆரானும ரேத்சேபபும தெலாசாரியிலிருநத ஏதேனினபுததிரருமெனற சாதிகளையவர்களுடைய தேவர்கள தபபுவித்ததுணடோ,

௰௩ ஆமாததின் இராசாவும அர்பாததின இராசாவும செபபர்வாயீம ஏனா ஈவா படடணஙகளின இராசாவும எஙகேயென்றுசொலலுஙகளென்றான.

௰௪ எசேககியா தானாபதிகளின் கையிலே நிருபஙகளைவாஙகி அவைகளை வாசிததான பிறபாடு எசேககியா கர்த்தருடைய வீடடுககுபபோயேறி அவைகளைககர்த்தருககுமுன்பாகவிரிதது,

௰௫ கர்த்தரை நோக்கிப்பண்ணின விண்ணப்பமாவது,

௰௬ சேனைகளின கர்த்தாவே கேருபீன்களின்மேல்வாசம்பண்ணுகிற இஸ்ரவேலின் பராபரனே தேவரீரொருவரே பூமியின இராச்சியங்களுக்கெல்லாந் தெய்வமானவர், தேவரீர் வானத்தையும் பூமியையுமுண்டாக்கினீர்.

௰௭ கர்த்தாவே உமது செவியைச்சாய்த்துக்கேளும் கர்த்தாவே நீர் உமதுகண்களைத்திறந்துபார்த்துச்சனகேரிப்பு சீவனுள்ள பராபரனை நிந்திக்கும்படிக்கு அனுப்பின எல்லா வார்த்தைகளையுங் கேளும.

௰௮ மெய்தான கர்த்தாவே அசூரியாவின இராசாக்கள எல்லாத்தேசங்களையும அவைகளின நாட்டையும பாழ்க்கடித்தது,

௰௯ அவைகளின தேவர்களை நெருப்பிலேபோட்டார்கள ஏனெனில அவைகள தேவர்களாயிராமல மனுஷர்கைகளினவேலையாகிய மரமுங் கல்லுமாயிருந்தது ஆகையால அவைகளை நிர்த்தூளியாக்கினார்கள.

௨௰ இப்போதும எங்கள்பராபரனாகிய கர்த்தாவே தேவரீரொருவரே கர்த்தரென்று பூமியின் இராச்சியங்களெல்லாமறியும்படிக்குத்தேவரீர் எங்களையவன்கைக்குநீங்கலாக்கிஇரட்சியுமென்றுஎசேக்கியாவிண்ணப்பம்பண்ணினான்.

௨௧ அப்போது ஆமோத்தின்குமாரனாகிய ஏசாயா எசேக்கியாவுக்குச்சொல்லியனுப்பினதாவது இஸ்ரவேலின் பராபரனாகியகர்த்தர்உரைக்கிறதேதெனில நீஅசூரியாவின் இராசாவாகிய சனகேரிபின்நிமித்தியம நம்மைநோக்கிவிண்ணப்பம்பண்ணினாயே.

௨௨ அவனைக்குறித்துக்கர்த்தர் உரைக்கிறவசனமாவது சீயோன்குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி உன்னையிகழ்ந்து உன்னைப்பரிகாசம்பண்ணுகிறாள் எருசலேம்குமாரத்தி உன்பின்னாலே தலையைத்துலுக்குகிறாள்.

௨௩ ஆரை நிந்தித்துத்தூஷணித்தாய் ஆருக்குவிரோதமாய்ச்சத்தத்தையுயர்த்தினாய் நீஇஸ்ரவேலின் பரிசுத்தருக்குவிரோதமாகவல்லோ உன் கண்களை மேட்டிமையாய்நெரித்தாய்.

௨௪ உன் ஊழியக்காரரைக்கொண்டு நீ ஆண்டவரை நிந்தித்து என இரதங்களின் திரளினாலே நான லீபனோனின்பக்கங்களாகிய மலைகளின் உயரத்திலேறினேன அதினுடைய உயர்ந்த கேதுருக்களையுந் தெரிந்துகொள்ளப்பட்டபாயமாவிருட்சங்களையும நானவெட்டி அதின்கடைசி உயரமாகிய அதின்செழுமையான காடுமட்டும்வருவேனென்றும,

௨௫ நான ஊற்றுகளைவெட்டித்தண்ணீர்களைக் குடித்தேன் என் உள்ளங்கால்களின் அடியினாலே எகிப்துவின் ஆறுகளையெல்லாமவறளவும்பண்ணுவேனென்றுஞ்சொன்னாய்.

௨௬ நாம்வெகுகாலத்துக்குமுன் அதைச்செய்பபண்ணிட்டுப்பூருவ நாள்களமுதற்கொண்டதைச்செய்ய யோசித்திருக்கிறோமென்று நீகேட்டதில்லையோ இப்போது நீ அரணானபட்டணங்களைப்பாழானமண்மேடுகளாக்குகிறவனாயிருக்க அதைவரப்பண்ணினோம.

௨௭ அதினாலேயவைகளின்குடிகள கையிளைத்தவர்களாகிக் கலங்கி வெட்கப்பட்டு வெளியின்பூண்டுக்கும பச்சையான புல்லுக்கும வீடுகளின்மேல முளைத்த புல்லுக்கும ஓங்கிவளராததுக்குமுன் தீய்ந்துபோன பயிருக்குஞ்சமானமானார்கள.

௨௮ ஆனால உன்னிருப்பையும உன்புறப்படுதலையும உன்வருகையையும நீ நமக்குவிரோதமாய்க் கொந்தளிக்கிறதையும அறிவோம.

௨௯ ஆனதுகொண்டு நீ நமக்குவிரோதமாய்க்கொந்தளித்து உன்னுங்காரம நமதுசெவிகளிலேறினபடியினாலே நாம்நமது துறட்டையுன்மூக்கிலும நமதுடைய கடிவாளத்தையுன் உதடுகளிலும்போட்டு நீவந்தவழியேயுன்னைத்திருப்பிக்கொண்டுபோவோமென்பதுதானே.

௩௰ உனக்கோவெனில அடையாளமாயிருப்பதாவது இந்தவருஷத்திலே தப்பிப்பயிராகிறதையும இரண்டாம வருஷத்திலே அதிலேவிளைகிறதையுஞ்சாப்பிடு மூன்றாம் வருஷத்திலோ விதைத்து அறுத்துத் திராட்சத்தோட்டங்களை நாட்டி அவைகளின்கனிகளைச்சாப்பிடுங்கள.

௩௧ யூதாவினவீட்டாரிலேதப்பி மீதியானவர்கள அப்புறந் தாழவேர்ப்பற்றி உயரக்கனிகொடுப்பார்கள.

௩௨ ஏனெனில மீதியானவர்கள எருசலேமிலுந்தப்பினவர்கள சீயோனபருவதத்திலுமிருந்து புறப்படுவார்கள, * சேனைகளின்கர்த்தரின் சுறுசுறுப்பு அதைச்செய்யும. * ௯, ௭.

௩௩ ஆகையாலே கர்த்தர் அசூரியாவின இராசாவைக்குறித்து உரைக்கிறதாவது அவனிந்தப்பட்டணமட்டும வருவதுமில்லை அங்கே அம்பையெய்வதுமில்லை அதற்கு முன் கேடையத்தோடே வருவதுமில்லை அதுக்குவிரோதமாய்க் கொத்தளம்போடுவதுமில்லை.

௩௪ அவனிந்தப்பட்டணத்துக்குட்பிரவேசியாமலே தானவந்தவழியே திரும்பிப்போவான.

௩௫ ஏனெனில் நம்முடைய நிமித்தியமாகவும் நம்முடைய தாசனாகிய தாவீதின் நிமித்தியமாகவும் நாம் இந்தப் பட்டணத்தைக் காப்பாற்றி இரட்சிக்கும்படிக்கு அதுக்கு ஆதரவாயிருப்போமென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லியனுப்பினான்.

௩௬ அப்போது * கர்த்தருடைய தூதன் புறப்பட்டு அசூரியன் பாளையத்தில் நூற்றெண்பத்தையாயிரம் பேரைச் சங்கரித்தான். அவர்கள் அதிகாலமே எழுந்திருக்கும்போது இதோ எல்லாரும் செத்த சவங்களாய்க் கிடந்தார்கள். * ௪, ௧௯. ௨. இராசா. ௰௯, ௩௫.

௩௭ அப்போது அசூரியாவின் இராசாவாகிய சனகெரீப் புறப்பட்டுத் திரும்பிக்கொண்டுபோய் நினிவேயிலிருந்துவிட்டான்.

௩௮ பிறகு சம்பவித்ததேதெனில் அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின் வீட்டில் பணிந்துகொள்ளுகிறபோது அவன் குமாரராகிய அதிரமேலேக்கும் சரேத்சேருமவனைப் பட்டயத்தாலே வெட்டிப்போட்டு ஆரராத் தேசத்துக்குத் தப்பியோடிப்போனார்கள். அவன் குமாரனாகிய ஏசர்காதோன் அவன் பட்டத்துக்கு வந்தரசாண்டான்.

## ௩௮. அதிகாரம்.

[சாகக்கிடந்த எசேக்கியாவின் ஆயிசோடே கர்த்தர் பதினைந்து வருஷங்களைக் கூட்டினது.]

அந்நாட்களில் எசேக்கியா சாகத்தக்க வியாதிப்பட்டிருந்தான். அப்போது ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா வென்கிற தீர்க்கதரிசி அவனண்டைக்கு வந்து அவனுடனே உன் வீட்டுக்குப் பண்ணவேண்டிய திட்டங்களைக் கட்டளைபண்ணு, ஏனெனில் நீ பிழைக்காமல் மரிப்பாயென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான். * ௨. இராசா. ௨௰, ௧. ௬.

௨ அப்போது எசேக்கியா தன் முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பிக் கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணி,

௩ ஆ கர்த்தாவே நான் உமக்கு முன்பாக உண்மையும் மன உத்தமமுமாய் நடந்துகொண்டு உமது பார்வைக்கு நலமானதைச் செய்தேனென்கிறதை நினையுமே என்று எசேக்கியா மகா அழுகையாய் அழுதான்.

௪ அப்போது ஏசாயாவுக்கு உண்டான கர்த்தருடைய வார்த்தையாவது,

௫ நீ போய் எசேக்கியாவுடனே சொல்லவேண்டியது உன் தகப்பனாகிய தாவீதின் பராபரனாயிருக்கிற கர்த்தர் சொல்லுகிறதேதெனில் உன் விண்ணப்பத்தைக் கேட்டோம் உன் கண்ணீரைக் கண்டோம் இதோ நாம் உன் நாட்களோடே பதினைந்து வருஷங்களைக் கூட்டி,

௬ அசூரியா இராசாவின் கைக்கு உன்னையும் இந்தப் பட்டணத்தையும் தப்புவித்து இந்தப் பட்டணத்துக்கு ஆதரவாகவிருப்போம்.

௭ இதோ நாம் ஆகாசுடைய சூரியக்கடியாரத்தில் வரிக்குவரி இறங்கின நிழலைப் பத்துவரி பின்னிட்டுத் திருப்புவோமென்றார்.

௮ தானுசொன்ன இந்த வார்த்தையின்படி கர்த்தர் செய்வாரென்கிறதுக்கு இது கர்த்தரால் உனக்கடையாளமாயிருக்குமென்று சொல்லென்றார் அப்படியே கடியாரத்தில் இறங்கியிருந்த சூரிய நிழல் பத்துவரி திரும்பிற்று.

௯ யூதாவின் இராசாவாகிய எசேக்கியா வியாதியாகித் தன் வியாதியும் நீங்கிச் சொஸ்தமானபோது எழுதிவைத்ததாவது,

௰ என் குறையாயிசின் வருஷங்களுக்குச் சேராமல் பாதாளவாசல்களுக்குட்படுவேனென்று நானென் நாட்கள் அறுப்புண்கிறபோது சொன்னேன்.

௰௧ கர்த்தரைக் கர்த்தரையே நான் இனி உயிரோடிருக்கிறவர்களின் தேசத்திலே தரிசிப்பதில்லை நான் இனிப் பூலோகக்குடிகளோடிருந்து மனுஷரைக் காண்பதில்லை.

௰௨ என் ஆயிசு மேய்ப்பனுடைய கூடாரத்தைப்போலெனனை விட்டுப் பேர்ந்து போகிறது நெய்கிறவன் பாவை அறுக்கிறாப்போல என் சீவனை அறுக்கக்கொடுக்கிறேன் என்னை நார்ப்பாவிலிருந்து அறுத்துப்போடுகிறார் இன்று இராவைக்குள்ளே என்னை முடிவடையப் பண்ணுவீர்.

௰௩ விடியற்காலத்தோடே என் எண்ணம் சரியானது சிங்கத்தைப்போலென்னெலும்புகளையெல்லாம் நொறுக்குவார் இன்று இராவைக்குள்ளே என்னை முடிவடையப் பண்ணுவீர் என்று சொல்லி,

௰௪ நமட்டைப்போலும் நாரைவிலான் குருவியைப்போலும் கீச்சென்று கூவினேன் * புறாவைப்போல் புலம்பினேன் என் கண்கள் உயரப் பார்க்கிறதினாலே பூத்துப்போனது கர்த்தாவே நெருக்கப்படுகிறேன் எனக்காக மேற்பாட்டுக்கொள்ளுமென்றேன். * ௫௯, ௰௧. ௰௫.

௰௫ நானென்னசொல்லுவேன் அவரெனக்குத் தரவுகொடுத்தார் அந்தப்பிரகாரமுஞ்செய்தார் என்னாத்துமாவின் கசப்பை என்னுயிர் வருஷங்களிலெல்லாம் நினைத்து நடந்துகொள்ளுவேன்.

௰௬ ஆண்டவரே அதினாற் பிழைக்கிறார்கள் அதில் முழுதுமென்னுயிரின் சீவனிருக்கி

றது என்னைச சொஸ்தபபடவும பிழைக்க வுமபணணினீர்.

௰௭ இதோ சமாதானததுக்குபபதிலாக எனககுமகாகசபபுவநதிருநதது தேவரீரோ என்னுததுமாவை அழிவின குழிககு விலககி அரவணைததீர் ஏனெனில எனபாவஙகளையெலலாம உமது முதுககுககுபபினனுக எறிநதுவிடடீர்.

௰௮ ஏனென்றால பாதாளம உமமைத துதிபபதுமமரணம உமமைபபோறறுவதுமிலலை குழியிலிறஙகிறவர்கள உமமுடையசததியததைத்தியானிககிறதிலலை.

௰௯ உயிரோடேஉயிரோடிருககிறவனே யுமமை நான இன்று செயகிறதுபோலே துதிபபான தகபபன பிளளைகளுககு உமதுசததியததையறிவிபபான்.

௨௰ கர்த்தர் எனனையிரட்சிக்கவநதார் ஆகையால எஙகள சீவனுடைய எலலாநாள்களிலுஙகர்த்தருடைய வீடடிலே எனகீதவாததியஙகளை வாசிபபோமென்றெழுதிவைததான.

௨௰௧ அததிப்பழககுழமபை யெடுததுவநது எரிபநதபபருவினமேலேபறறுபபோடுஙகள அபபோது பிழைபபானென்றுஏசாயாசொலலியிருநதான.

௨௰௨ அபபோது எசேககியா நான்கர்த்தருடைய வீடடுககுபபோயேறுவதற்குஅடையாளமென்னவென்றுகேடடிருநதான.

## ௩௰௯. அதிகாரம்.

[பாபேலுடைய இராசாவின்றானுபதிகளுககு எசேககியா தன்பொககிஷஙகளைக் காண்பித்தபோது ஏசாயாவின் வாயினாலேகேட்டதீர்க்கதரிசனம.]

அக்காலத்திலே * பாலாதானுடைய குமாரனுகியமெரோதாக் பாலாதான்என்றபாபேலின் இராசா எசேககியாவியாதிபபடடு ஆரோககியமானதைககேடடு அவன்ணடைககுக்காகிதஙகளையும வெகுமானததையும அனுபபினுன. * ௨. இராசா. ௨௰, ௧௨. ஙு

௨ அவர்களபேரிலே எசேககியா சநதோஷபபடடு அவர்களுககுத்தன்பொககிஷசாலையையும வெளளியையும பொன்னையுஙகநதவர்க்கஙகளையும நலலபரிமளதயிலததையுநதனனுபுதச்சாலையனைததையுநதன்பொககிஷஙகளிலுளளதெலலாததையுஙகாணபித்தானதன்வீடடிலுநதனனுடைய எலலா இராசசியததிலும எசேககியா அவர்களுக்குக்காண்பியாதபொருளிலலை.

௩ அபபோது ஏசாயாதீர்க்கதரிசி எசேககியா இராசாவணடைககுவநது அவனுடனே அநதமனுஷர் எனனசொன்னார்கள எஙகேயிருநது உம்மணடைககுவநதார்களென்றுன அதற்கு எசேககியா பாபேலென்கிற தூரதேசததிலிருநது என்னண்டைககுவநதார்களெனறுன.

௪ அபபோது அவன் உமமுடையவீடடிலே என்னததைக்கணடார்களென்றுன அதற்கு எசேககியா என்வீடடிலுளளதெலலாததையுஙகணடார்கள என்பொக்கிஷஙகளில நான் அவர்களுககுக்காணபியாதபொருளிலலையென்றுன்.

௫ அபபோது ஏசாயா எசேககியாவுடனேசொன்னதாவது சேனைகளுடையகர்த்தரினவார்த்தையைககேளும.

௬ இதோ நாள்களவரும அபபோது உன்வீடடிலுளளதிலும உனபிதாககளஇநநாளவரைககுஞசேர்த்ததிலும ஒன்றுமீதியாய்வைக்கப்படாமல எலலாம பாபேலுககுககொணடுபோகப்படும.

௭ நீ பெறபபோகிற உன்சநதானமாகிய உன்குமாரரிலுஞசிலரைபபாபேலுடைய இராசாவின அரமனையிலே பிரதானிகளாயிருக்க எடுபபார்களெனறுகர்த்தர்சொலலுகிறுரென்றுன.

௮ அபபோது எசேககியா ஏசாயாவுடனே நீ சொனன கர்த்தருடையவார்த்தை நலலதேயெனறுசொலலி என நாளகளில ஆகிலுஞசமாதானமும உணமையுமிருககுமேயெனறுன.

## ௪௰. அதிகாரம

[மேசியாவினகிருபையுளள வருகையையும அபபோஸ்தலரினவருகையையும யோவான இஸநானனுலும அபபோஸதலராலுஙகூறபபடடுஞ சுவிசேஷததின பிரசஙகிபபையுமமுனனறிவித்தது.]

நீங்கள நமதுசனததை ஆறறுஙகள தேறறுஙகள.

௨ நீஙகள எருசலேமுடனே * பட்சமாயபபேசி அதின போர்முடிநததெனறும அதின அக்கிரமம நிவர்ததியாக்கபபடடதெனறும அதுதனனுடைய எலலாபபாவஙகளின நிமிததியஙகர்த்தரின கையிலிரடடிப்பாயடைநது தீர்நததெனறும அதுககுக்கூறுஙகளெனறும உஙகள பராபரன சொலலுகிறுர்.

௩ * வனாநதரததிலேகர்த்தருடையவழியை ஆயத்தப்படுததுஙகள நமமுடைய பராபரனுககு அநதரவெளியிலே பாதையைசசெவ்வைபபணணுஙகளெனறும,

* மத்தேயு. ௩, ௩. மாற்கு. ௧, ௩. லூக். ௩, ௪—௬. யோவா. ௧, ௨௩.

௪ பளளமெலலாமஉயர்த்தபபடடுச்சகலமலையுஙகுனறுநதாழ்த்தபபடடுக்கோணலானது செவ்வையாகிக்கரடுமுரடானவைகளசமனுகக்கடவதெனறும,

௫ கர்த்தரினமகிமை வெளியரஙகமாகும அதையெலலாமாம்சமும ஏகமாயக்கா

ம் ஏனென்றால் கர்த்தரின் வாக்கு அதையுரைத்ததென்றுங் கூப்பிடுகிற சத்தமுண்டாம்.

௬ கூப்பிடு என்றொரு சத்தமுண்டாம் என்னத்தைக் கூப்பிட்டுச் சொல்லுவேனென்கிறான் * எல்லா மாம்சமும் புல்லைப்போலும் அதின் மேன்மையெல்லாம் வெளியின் பூவைப்போலுமிருக்கிறது. * யோபு. ௰௪, ௨. சங்கீ. ௯௰, ௫. ௱௩, ௰௫. யாக். ௧. ௰. ௧ பேது. ௧, ௨௪. ௨௫.

௭ கர்த்தரின் ஆவியதின்மேல் ஊதும்போது புல்லுலர்ந்து பூவுதிருஞ்சனம் புல்லே.

௮ புல்லுலர்ந்து பூவுதிரும் * நமது பராபரனுடைய வசனமோவென்றென்றைக்கும் நிற்குமென்பதைத்தேயென்று உரைக்கும். * லூக்கா. ௨௧, ௩௩.

௯ சீயோனென்ற சுவிசேஷகியே நீ உயர்ந்த பருவதத்திலேறு எருசலேமென்ற சுவிசேஷகியே உன் சத்தத்தைப் பலத்தோடேயுயர்த்து பயப்படாமல் அதையுயர்த்தி யூதாவின் பட்டணங்களுடனே இதோ உங்கள் பராபரன் என்று சொல்லு.

௰ இதோ கர்த்தராகிய ஆண்டவர் பெலவானுக்கு விரோதமாய் வருகிறார் அவர் கைப்புயம் அவனையாண்டுகொள்ளும் இதோ * அவருடைய பலன் அவரோடுங்கூட வருகிறது அவருடைய பலபாகம் அவர் முகத்துக்கு முன்பாகப் போகிறது. * ௬௨, ௰௧.

௰௧ * மேய்ப்பனைப்போலே தமது மந்தையை மேய்ப்பார் ஆட்டுக்குட்டிகளைத் தமது புயத்திலே சேர்த்துத் தமது மடியிலே சுமந்து கறவலாடுகளை † மெதுவாய் நடத்துவார். * சங்கீ. ௨௩, ௧. எசே. ௩௪, ௨௩. யோவா. ௰, ௰௧. † ௪௯, ௰.

விக்கிரக ஆராதனைக்காரராகிய லோகஞானிகளின் பெருமையீனத்தையும் தேவக்கிரியைகளால் விளங்கிய பராபரனுடைய மகிமையையுங் காண்பித்தது.

௰௨ தண்ணீர்களைத் தன் கைப்பிடியால் அளந்து வானங்களைச் சாணளவாகத் திட்டமார்த்துப் பூமியின் மண்ணை மரக்காலால் அளந்து பருவதங்களைக் கயிற்றுக்கோலாலும் மேடுகளைத் திராசாலும் நிறுத்தவனார்.

௰௩ * கர்த்தருடைய ஆவியைத் திட்டப்படுத்தி அவருக்கு ஆலோசனைக்காரனாய் அவருக்கு அறிவுண்டாக்கினவனார். * ரோமர். ௰௧, ௩௪. ௧. கொரி. ௨, ௰௬.

௰௪ தமக்குணர்வுண்டாக்கவுந் தம்மை நியாயவழியிலே யுபதேசிக்கவும் தமக்கறிவைக் கற்றுக்கொடுக்கவுந் தமக்கு விவேகங்களின் வழியையறிவிக்கவும் அவர் ஆரோடே ஆலோசனைபண்ணிக்கொண்டார்.

௰௫ இதோ சாதிகள் ஏற்றச்சாலிலே தொங்குந்துளியாகவுந் திராசிலே படிந்த தூசியாகவும் எண்ணப்பட்டிருக்கிறது இதோ தீவுகளையொரு அணுவைப்போலே தூக்குகிறார்.

௰௬ லீபனோன் நெருப்புக்கும் போதாது அதின் மிருகஜீவன்கள் தகனபலிக்கும் போதாது.

௰௭ சகல சாதிகளும் அவருக்கு முன்பாக * ஒன்றுமில்லாததுபோலிருந்து ஏதுமற்றதிலுங் கடையாகவும் வெறுமையாகவும் அவரால் எண்ணப்படுகிறது. * ௩௯, ௯.

௰௮ இப்படியிருக்கக்கொள்ளப் பராபரனையாருக்குச் சாயலாக்குவீர்கள் அல்லது எந்தச் சாயலை யவருக்கொப்பிடுவீர்கள். * ௪௬, ௫.

௰௯ * கன்னான் ஒரு சுரூபத்தை வார்க்கிறான் தட்டான் பொன்தகட்டால் அதை மூடி அதுக்கு வெள்ளிச்சங்கிலிகளைப் பொருத்தவைக்கிறான். * ௪௪, ௰௨. ௰௩.

௨௰ அதுக்குக் கொடுக்க வகையில்லாதவன் உளுத்துப்போகாத மரத்தைத் தெரிந்துகொண்டு அசையாதவொரு சுரூபத்தைச் செப்பனிட விவேகமுள்ள ஒரு தச்சனைத் தனக்குத் தேடுகிறான்.

௨௧ நீங்கள் அறிந்ததில்லையோ நீங்கள் கேட்டதில்லையோ உங்களுக்காதிமுதலாய் அறிவிக்கப்பட்டதில்லையோ பூமி அஸ்திபாரப்பட்டதையுணராதிருக்கிறீர்களோ.

௨௨ அவர் பூமியினுடைய உண்டையின்மீதில் உளுக்கார்ந்திருக்கிறவர் அதின் குடிகள் வெட்டுக்கிளிகளைப்போலிருக்கிறார்கள் அவர் * வானங்களை மெல்லிய பாவாடையைப்போலப் பரப்பிக் குடியிருக்கிறவர்களுக்கவைகளைக் கூடாரத்தைப்போல விரிக்கிறவர். * ௪௨, ௫. சங்கீ. ௱௪, ௨.

௨௩ அவர் தலைவர்களை மாய்கையாக்கிப் போட்டுப் பூமியின் நியாயாதிபதிகளை யவந்தரையாக்குகிறவர்.

௨௪ அவர்கள் திரும்ப நாட்டப்படுவதுமில்லை விதைக்கப்படுவதுமில்லை வெட்டப்பட்ட அவர்களுடைய அடிமரந் திரும்பத் தரையிலே வேர்விடுவதுமில்லை அவர்கள் மேல் அவர் ஊதவே பட்டுப்போவார்கள் பெருங்காற்று அவர்களையொரு துரும்பைப்போலடித்துக்கொண்டுபோம்.

௨௫ பின்னை நம்மையாருக்கொப்பான சாயலாக்குவீர்களென்று பரிசுத்தர் சொல்லுகிறார்.

௨௬ உங்கள் கண்களையுயர எடுத்துப் பாருங்கள் இவைகளைச் சிருஷ்டித்தவரார் அவர் இவைகளின் சேனையை இலக்கத்திட்டமாகப் புறப்படப்பண்ணி அவைகளையெல்லாம் பேர் பேராக அழைக்கிறவராமே * அவருடைய வல்லசத்துவங்களாலும் அவர் வல்லமையிலே பெலத்தவராயிருக்கிறதினாலு

னும் அவைகளிலொன்றுங் குறையாதே போம். * சங்கீ. ௱௪௭, ௪௫.

கர்த்தருக்குக் காத்திருக்கும்படிக்கு விசுவாசிகளுக்குச் சொன்னதிடன்.

௨௭ யாக்கோபே இஸ்ரவேலே என் வழி கர்த்தருக்கு மறைவானதென்றும் என் நியாயம் என் பராபரனைச் சேராமற்போகிறதென்றும் நீ சொல்லுவானேன்.

௨௮ *பூமியின் கடையாந்தரங்களைச் சிருஷ்டித்த கர்த்தராகிய நித்தியபராபரன் இளைக்காமலும் விடாய்க்காமலுமிருக்கிறாரென்று நீ யறியாயோ நீ கேட்டதுமில்லையோ அவருடைய உணர்வுக்கு ஆராய்தலில்லை. * ௪௨, ௫. ௪௫, ௰௨.

௨௯ இளைத்தவனுக்கு அவர் பெலன் கொடுத்துச் சத்துவமற்றவனுக்குப் பெலனைப் பெருகப்பண்ணுகிறார்.

௩௰ இளைஞர் இளைத்து விடாய்க்கிறார்கள் வாலிபரும் இடறி விழுவார்கள்.

௩௧ கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ புதுப்பெலன் அடைந்து கழுகுகளைப் போலச் செட்டைகளையடித்தெழும்புவார்கள் அவர்கள் ஓடியும் விடாய்க்கார்கள் நடந்தும் இளைக்கார்கள்.

## ௪௧. அதிகாரம்.

[விக்கிரகாராதனைக்காரரைப் பராபரன் கண்டித்தது.]

தீவுகளே நமக்கு முன்பாக மவுனமாகுங்கள் சனசந்தானங்கள் தங்கள் பெலனைப் புதிதாக்கிக்கொண்டு சமீபித்து வந்து பிறபாடு பேசக்கடவார்கள் ஒருமிக்க நியாயத்திலே சேருவோம்.

௨ நீதியாய்த் தமது காலடியிலே வரக் கிழக்கிலிருந்து ஒருவனை எழுப்பி அழைத்தவரார் * அவனுக்கு முன்பாகச் சாதிகளை யொப்புக்கொடுத்து அவனை இராசாக்களுக்கு ஆண்டவனாக்கி இவர்களையவன் பட்டயத்துக்குத் தூசியும் அவன் வில்லுக்குச் சிதறடிக்கப்பட்ட தாளடியுமாக்கி, * ௪௫, ௧, ௨.

௩ அவனிவர்களைத் துரத்தவுந் தன் கால்கள் வராதிருந்த பாதையிலே சமாதானத்தோடே கடக்கவும் பண்ணுகிறவரார்.

௪ அதை நடப்பித்துச் செய்து ஆதிமுதற்கொண்டு தலைமுறைகளை வரவழைத்துக் கொண்டிருக்கிறவரார் * முந்தினவராயிருக்கிற கர்த்தராகிய நாந்தாமே பிந்தினவர்களோடுமிருப்பவராகிய நாந்தாமே. *

* ௪௪, ௬. ௪௮, ௰௨. அறிவி. ௧, ௰௭. ௨௨, ௰௩.

௫ தீவுகள் அதைக்கண்டு பயப்படும் பூமியின் கடையாந்தரங்கள் நடுங்கும் அவர்கள் சேர்ந்து வந்து,

௬ ஒருவனுக்கொருவன் ஒத்தாசை செய்து தன் சகோதரனோடே சகோதரனே பெலப்படுவென்று சொல்லுகிறான்.

௭ சூஸ்திரக்காரன் தட்டானையுந் சுத்தியலாலே மெல்லிசாய்த் தட்டுகிறவன் அடைகல்லின்மேல் அடிக்கிறவனையுந் தயிரியப்படுத்தி இசைவு நல்லதென்று சொல்லி அதை அசையாதபடி ஆணிகளாலே கெட்டியாக்குகிறான்.

விசுவாசிகளின் சவையையவர் ஆற்றித்தேற்றுகிறது.

௮ ஆனால் * நம்முடைய தாசனாகிய இஸ்ரவேலே நான் தெரிந்துகொண்ட யாக்கோபே நம்முடைய † சிநேகிதனான ஆபிரகாமின் வித்தே. * ஆக. ௧, ௫௫.

† நாளாக. ௨௰, ௭. யாக். ௨, ௨௩.

௯ நாம் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து உன்னை எடுத்து அதின் எல்லைகளிலிருந்தழைத்துவந்து நீ நம்முடைய தாசன் உன்னை நாம் வெறுக்காமல் உன்னைத் தெரிந்து கொண்டோமென்று நானுசொன்னேம்.

௰ * நீ பயப்படாதே ஏனெனில் நாமுன்னுடனேயிருக்கிறோம் திகையாதே ஏனெனில் நாம் உன் பராபரன் நாம் உன்னைப் பலப்படுத்தி உனக்குச் சகாயம்பண்ணுகிறவரும் உன்னை நமது நீதியின் வலதுகரத்தினாலே தாங்குகிறவருமாயிருக்கிறோம். * ௪௩, ௧.

௰௧ இதோ உன்மேலெரிச்சலாயிருக்கிற யாவரும் வெட்கி இலச்சையடைவார்கள் உன்னோடே வழக்காடுகிற மனுஷர் மாயமாய் அழிவார்கள்.

௰௨ உன்னோடே போராடினவர்களைத் தேடி * க்காணாதிருப்பாய் உன்னோடே யுத்தம்பண்ணின மனுஷர் ஒன்றுமில்லாததும் மாய்கையுமாவார்கள். * சங்கீ. ௩௭, ௩௬.

௰௩ ஏனெனில் உன் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய நாம் உன் வலதுகையைப் பிடித்து உன்னுடனே பயப்படாதே நாம் உனக்கொத்தாசைசெய்கிறோமென்கிறோம்.

௰௪ யாக்கோபென்ற பூச்சியே இஸ்ரவேலின் சின்னக்கூட்டமே பயப்படாதே நாம் உனக்கொத்தாசைசெய்கிறோமென்று கர்த்தரும் இஸ்ரவேலின் பரிசுத்தருமாகிய † உன் மீட்பருமானவர் உரைக்கிறார். * ஆக. ௩௨, ௰௨, † ௪௩, ௩.

௰௫ இதோ போரடிக்கிறதற்கு நாமுன்னைப் புதிதும் கூர்மையுமான பல்லுகளுள்ள தாளவாட்டங்களாக்குகிறோம் நீ பருவதங்களை மிதித்து நொறுக்கிமேடுகளைப் பதருக்கொப்பாக்கப்போடுவாய்.

௰௬ அவைகளைத் தூற்றுவாய் அப்போது காற்று அவைகளைக்கொண்டுபோய்ச் சுழல் அவைகளைப் பறக்கடிக்கும் நீயோவெ

னில் கர்த்தருக்குள்ளே களிகூர்ந்து இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள் மேன்மைபாராட்டிக்கொண்டிருப்பாய்.

௰௭ சிறுமையானவர்களும் ஏழைகளும் தண்ணீரைத் தேடுகிறார்கள் அதுவும் இல்லாதிருக்கும், அவர்கள் நாக்கு தாகத்தால் வறளும் கர்த்தராகிய நாம் அவர்களுக்குக் கேள்விகொடுத்து இஸ்ரவேலின் பராபரனாகிய நாம் அவர்களைக் கைவிடாதிருப்போம்.

௰௮ * நாம் உயர்ந்த நிலங்களில் ஆறுகளையும் பள்ளத்தாக்குகளின் நடுவே ஊறுகளையுந் திறந்து வனாந்தரத்தைத் தண்ணீர்த்தடாகமும் வறண்ட பூமியைத் தண்ணீர்க்கேணிகளுமாக்கி. * சங். ௱௭. ௩௫, ௩.

௰௯ வனாந்தரத்திலே கேதுருமரங்களையுஞ் சீத்திம்மரங்களையும் மிருதுச்செடிகளையும் ஒலிவமரங்களையுங் கட்டளையிட்டு அவாந்தரவெளியிலே தேவதாரிவிருட்சங்களையும் பிசினமரங்களையும் புன்னைமரங்களையுங் கூடவுண்டுபண்ணுவோம்.

௨௦ * கர்த்தருடைய கரம் அதைச்செய்ததென்றும் இஸ்ரவேலின் பரிசுத்தர் அதைப்படைத்தாரென்றும் யாவருங்கண்டு சிந்தித்தறியுந்தன்மையாக நடத்தினானே.

வருங்காரியங்களை யறிவிக்கமாட்டாத விக்கிரகங்களின் மாய்கையை யவர்காண்பித்தது.

௨௧ உங்கள் வழக்கைக்கொண்டுவாருங்களென்று கர்த்தர்சொல்லுகிறார் உங்கள் பெலப்படியான நியாயங்களைச்சேர்ப்பண்ணுங்களென்று யாக்கோபின் இராசாசொல்லுகிறார்.

௨௨ அவர்கள் அவைகளைச்சேர்ப்பண்ணிச்சம்பவிக்கப்போகிறவைகளை நமக்கறிவிக்கட்டும் அவைகள் முதற்சம்பவிப்பவைகளேதென்றுசொல்லி நாம் நம்முடைய மனதையவைகளின்மேலவைத்து அவைகளின்முடிவையும் அறியும்படிக்கு நமக்கறிவிக்கட்டும் அல்லது வருங்காரியங்களை நமக்குக்கேட்கப்பண்ணட்டும்.

௨௩ பின்வருங்காரியங்களை நமக்கறிவியுங்கள் அப்போது நீங்கள் தேவர்களென்றறிவோம் அல்லவென்று நன்மை தின்மையேதாகிலுஞ் செய்யுங்கள் அப்போது நாந்திகைத்து ஏகமாய்க்கூடி அதைப்பார்ப்போம்.

௨௪ இதோ நீங்கள் ஒன்றுமில்லாததிலுங் கடையாயிருக்கிறீர்கள் உங்கள் செயல் ஒன்றுமற்றதுக்குந்தாழ்ச்சியானது உங்களைத்தெரிந்துகொள்ளுகிறவன் அருவருப்பானவன்.

௨௫ ஒருவனை வடக்கேயிருந்தெழும்பப்பண்ணுகிறோம் அவன் சூரியோதயத்திலிருந்துவருவான் அவன் நமது நாமத்தைப்பிரஸ்தாபமாக்குவான் அவன்வந்து அதிகாரிகளைச்சேற்றைப்போலேயுங் குயவன் களிமண்ணை மிதிப்பிடுகிறதுபோலேயும் மிதிப்பான்.

௨௬ ஆதிமுதற்கொண்டு அல்லது முற்காலமுதற்கொண்டு அதை நாம் அறியும்படியாகவும் நாம் அவனை நீதிமானென்றுசொல்லத்தக்கனையாகவும் அறிவித்தவனார் அறிவிக்கிறவனொருவனுமில்லையே கேட்கப்பண்ணுகிறவனுமில்லை உங்களவார்த்தைகளைக் கேள்விப்படுகிறவனுமில்லையே.

௨௭ நாமே முதல்முதல் இதோ இதோ என்று சீயோனுக்குச்சொல்லி எருசலேமுக்குச்சுவிசேஷகனைக்கொடுக்கிறோம்.

௨௮ நாம்பார்த்தோம் ஆனால் அவர்களில் அறிவிக்கிறவனொருவனுமில்லை அவர்களில் நாங்கேட்குங்காரியத்துக்குப் பிரத்தியுத்தாரங்கொடுக்கத்தக்கவொரு ஆலோசனைக்காரனுமில்லை.

௨௯ இதோ அவர்களெல்லாருமமாயமே அவர்கள் கிரியைகளொன்றுமில்லை வார்க்கப்பட்ட அவர்களுடைய சுரூபங்கள் * காற்றும்வெறுமையுந்தானே. * சங். ௬௬, ௯. எரேமி. ௰, ௩. ௰௪.

## ௪௨. அதிகாரம்.

[லோகத்தின் இரட்சகராகியமேசியாசெய்யுங்கிருபையை முன்னறிவித்ததும் அவரைப்பாடி மகிமைப்படுத்தச்சாதிகளையெழுப்பினதும்.]

இதோ நாந்தெரிந்துகொண்டவரும் * நமதாத்துமாபிரியமாயிருக்கிறவரும் நாம் ஆதரிக்கிறவருமாகிய † நம்முடையபணிவிடைக்காரன் ‡ நம்முடைய ஆவியையவர்மேலவைக்கிறோம் அவர்சாதிகளுக்கு நியாயத்தைவெளிப்படுத்துவார். * மத்தே. ௩, ௰௭. ௰௭, ௫. எபே. ௧, ௬. † மத். ௰௨, ௰௮—௨௧. ‡ ௰௧, ௨.

௨ அவர் கூப்பிடாமலும் சத்தத்தையுயர்த்தாமலுந்தம்முடைய சத்தத்தை வீதியிலே கேட்கப்பண்ணாமலுமிருப்பார்.

௩ அவர்நெரிந்த நாணலை முறிக்காமலும் மங்கியெரிகிறதிரியை யவிக்காமலும் நியாயத்தை யுண்மையாகவெளிப்படுத்துவார்.

௪ அவர் நியாயத்தைப்பூமியிலே நிலைப்படுத்துமட்டும் இளைக்கிறதில்லை பதறுவதுமில்லை அவருடைய உபதேசத்துக்குத் தீவுகள்காத்திருக்கும்.

௫ வானங்களைச்சிஷ்டித்து அவைகளைவிரித்து பூமியையும் அதிலே பிறக்கிறவைகளையும் பரப்பினவரும் அதிலிருக்கிற சனத்துக்குச்சுவாசத்தையும் அதிலே நடமாடுகிறவர்களுக்காவியையுங்கொடுக்கிறவருமான கர்த்தராகியபராபரன் சொல்லுகிறதாவது,

௯ நீர் குருட்டுக்கண்களைத் திறக்கவுங்கட்டுண்டவர்களைக் காவலிலும் இருளிலுருக்கார்ந்திருக்கிறவர்களைச் சிறைச்சாலையிலுமிருந்து புறப்படப்பண்ணவும்,

௭ கர்த்தராகிய நாம் உம்மை நீதியாய் அழைத்து உம்முடையகையைப்பிடித்துக்கொண்டு உம்மைத்தற்காத்து உம்மைச்சனத்தின் உடம்படிக்கையாகவும், * சாதிகளின்வெளிச்சமாகவும்வைக்கிறோம்.

* ௪௯, ௯. லூக்கா. ௨, ௩௨. ௩௩.

௮ நாமேகர்த்தர், இதுநமது நாமம், * நாம் நமது மகிமையை வேறொருவனுக்கும்நமது துதியை விக்கிரகங்களுக்குங் கொடோம். * ௪௮, ௰௧.

௯ முந்தினகாரியங்கள் இதோவந்ததே புதியவைகளையும் நாமே அறிவிக்கிறவர், அவைகள்தோன்றுகிறதற்குமுன்னே அவைகளையுங்களுக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

௰ * கர்த்தரைப்புதுப்பாட்டாயப்பாடுங்கள், சமுத்திரத்துக்கிறங்கிப்போகிறவர்களும் அதிலுள்ளதனைத்துந் தீவுகளும் அவைகளின்குடிகளும் பூமியின்கடையாந்தரத்திலிருந்து அவருடைய துதியைப்பாடுவதாக. * சங்கீதம். ௩௩, ௩.

௰௧ வனாந்தரமும் அதின ஊர்களுங் கேதாரியர் குடியிருக்கிற கிராமங்களுஞ் சத்தத்தையுயர்த்துவதாக, கன்மலைகளிலே குடியிருக்கிறவர்கள் கெம்பீரித்துப்பருவதங்களின்கொடுமுடியிலிருந்து ஆர்ப்பரிப்பார்களாக.

௰௨ கர்த்தருக்கு மகிமையைச்செலுத்தி அவர் துதியைத்தீவுகளில் அறிவிப்பார்களாக.

௰௩ * கர்த்தர்பராக்கிரமசாலியைப்போலப்புறப்பட்டு யுத்தசேவகனைப்போல எரிச்சலை எழும்பப்பண்ணித்தொனித்துக் கெர்ச்சித்துத் தம்முடைய சத்துருக்களை மேற்கொள்ளுவார். * சங்கீ. ௨௪, ௮. ௪௫, ௪.

௰௪ வெகுகாலமாய் மவுனமாயிருந்தோம், சும்மாயிருந்து நமக்குள்ளே அடக்கிக்கொண்டோம் இப்போநாம் பிள்ளைபெறுகிறவளைப்போலக்கூப்பிட்டு அவர்களைப்பாழாக்கவும்விழுங்கவும்போகிறோம்.

௰௫ நாம் பருவதங்களையும்மேடுகளையும் பாழாக்கி அவைகளின் பயிர்வகையையெல்லாம்வதங்கப்பண்ணி ஆறுகளைத்திட்டுகளாக்கி ஏரிகளைவறறிப்போகப்பண்ணி,

௰௬ குருடரை அவர்கள் அறியாதவழியிலே நடத்தி அவர்களுக்குத்தெரியாதபாதைகளிலே அவர்களை யழைத்துக்கொண்டுவந்து அவர்களுக்குமுன்பாக இருளைவெளிச்சமுங் கோணலகளைச்செம்மையுமாக்குவோம், இந்தக்காரியங்களை நாம் அவர்களுக்குச்செய்து அவர்களைக்கைவிடாதிருப்போம்.

௰௭ ஆனால் விக்கிரகங்களை நம்பிவார்க்கப்பட்ட சுரூபங்களுடனே நீங்கள் எங்கள் தேவர்களென்று சொல்லுகிறவர்கள் * பின்னிட்டு மிகவும்வெட்கப்படுவார்கள்.

* சங்கீதம். ௯௭, ௭௧.

௰௮ செவிடரே கேளுங்கள் * குருடரே நீங்கள் காணும்படிக்கு நோக்கிப்பாருங்கள். * யோவான். ௮, ௪௩. * யோவா. ௯, ௪௰. ௨. கொரி. ௪, ௪.

௰௯ * நமதுடைய தாசனேயல்லாமல் ஆர் குருடன் நாம் அனுப்பின தூதனேயல்லாமல் ஆர் செவிடனுமாயிருக்கிறான், உத்தமனைப்போல ஆர் குருடனானவன் கர்த்தருடைய ஊழியக்காரனைப்போல அந்தகனானவன். * மத்தேயு. ௰௫, ௰௪. ௨௩, ௰௬. ௰௭, ௨௬.

௨௰ நீ அநேகங்களைக்கண்டுங் கைக்கொள்ளாய், அவனுக்குச் செவிகளைத்திறந்தாலுங் கேளாதேபோகிறான்.

௨௧ கர்த்தர் தமது நீதியினிமித்தம் பிரியமாயிருந்தார், அவர் வேதத்தைப் பெரியதாக்கி மகிமைப்படுத்துவார்.

௨௨ அவனோவெனில் கொள்ளையிடப்பட்டுச் சூறையுமாயப்போகிற சனம் அவர்கள் அனைவருங் கெவிகளிலே சிக்குண்டு, காவல் அறைகளில் அடைக்கப்பட்டார்கள் தப்புவிப்பாரில்லாமல் சூறையாவார்கள்,

௨௩ * உங்களில் இதுக்குச்செவிகொடுத்துப்பின்வருங்காலத்துக்குக் கேட்கிறவனார். ஆகா. ௰௯, ௪௨.

௨௪ யாக்கோபைச்சூறையிட்டு இஸ்ரவேலைக்கொள்ளைக்காரருக்கொப்புக்கொடுக்கிறவரார், நாம்பாவஞ்செய்து விரோதித்த கர்த்தரல்லவோ, ஏனெனில் அவருடைய வழிகளில் நடக்கச்சம்மதியாமலும் அவருடைய வேதத்துக்குச்செவிகொடாமலும் போனார்கள்.

௨௫ அவர் இவர்கள்மேலே தமது கோபத்தின உக்கிரத்தையும் யுத்தத்தின் வலிமையையும் ஊற்றி அவர்களைச்சூழ அக்கினிச்சுவாலைகளைக் கொளுத்தியிருந்தாலும் அறிவில்லாமற்போனார்கள் அவர்களை வேகப்பண்ணியிருந்தாலும் அதை மனதிலே வைக்காதேபோனார்கள்.

## ௪௩. அதிகாரம்.

[இஸ்ரவேலரிற சற்குணமான தமது சனத்துக்குப்பராபரன் சொன்ன ஆறுதல்.

இப்போதும் யாக்கோபே உன்னைச் சிஷ்டித்தவரும் இஸ்ரவேலே உன்னை உருவாக்கினவருமாகிய கர்த்தர்சொல்லுகிறத

வது. * பயபபடாதை ஏனெனில உனனை மீடடுககொணடோம, உனனைப பேர்சொலலி அழைததோம நீ நமமுடையவன.
* ௪௨, அதி. ய. ௪௪, அதி. உ.

உ * நீ தணணீர்களைக கடககுமபோது நாம உனனோடேயிருககிறோம நீ ஆறுகளைக கடககுமபோது அவைகள உனமேற புரளுவதிலலை நீ அககினியைக கடககுமபோது வேகாதிருபபாய அககினிச சுவாலை யுனனைக கொளுததுவதிலலை. * ௪௩. ௬௬, ௰௨.

௩ ஏனெனில நாம இஸராவேலின பரிசுததரும உன இரட்சகருமாயிருககிற உன பராபரனாகிய கர்ததர் உனனை மீட்குமபொருளாக எகிப்தையும உனககுப பதிலாக எததியோபபியாவையுஞ சேபாவையும ஒபபுககொடுததோம.

௪ நீ நமமுடைய பார்வைகது அருமையானபடியினாலே கனமபெறறுய நாமுனனைச சிநேகிததபடியினாலே உனககுப பதிலாக மனுஷர்களையும உனனுயிருககுப பதிலாகச சனசதனங்களையும ஒபபுககொடுபோம.

௫ பயபபடாதை, ஏனெனறால நாம உனனோடேயிருககிறோம நாம உனவிததைக கிழககிலிருநது வரபபணணி உனனை மேறகிலிருநதுககூடடிச சேர்பபோம.

௬ நாம வடககுடனே தாவெனறும தெறகுடனே வைததிராதேயெனறுஞ சொலலி தூரததிலிருநது நமமுடைய குமாரரையும பூமியின கடையாநதரததிலிருநது நமமுடைய குமாரததிகளையும,

௭ நமது நாமம தரிககபபடடு நாம நமமுடைய மகிமைககெனறு சிஷ்டிதது உருவாககிப படைததயாவையுங கொணடுவாவெனபோம.

விககிரகத தேவர்கள முனனறிவிககமாடடாத இரட்சிபபுகளைப பராபரன விசுவாசிகளுககுச சுததததயவினாலவாககுத்தததம பணணினதுங குணபபடாதவர்களுககோ சஙகாரததை முனனறிவித்ததும.

௮ கணகளிருநதுங காணாதிருககிற சனததையுங காதுகளிருநதுஞ செவிடரானவர்களையும புறபபடடு வரபபணணுஙகள.

௯ சகல சாதிகளும ஏகமாயச சேர்நது கொணடு சகல சனசதனஙகளுங கூடிவரடடும, * இதை யறிவிதது முதறசமபவிககுங காரியஙகளை நமககுக கேட்கபபணணததககவனுர், கேடடு மெயயெனறு சொலலபபடக கூடுமபடிககு அவர்கள தஙகளசாட்சிகளைககொணடுவநது நிதானககாரராயவிளஙகடடும. * ௪௧, உ௬.

௰ நாமேயவொனறு நீஙகளறிநது நமமைவிசுவாசிதது உணர்நதுகொளளுமபடிககு நீஙகளும * நாந தெரிநதுகொணட நமமுடைய தாசருமாயிருககிறீர்களெனறு கர்ததர் சொலலுகிறர் † நமககுமுனன ஏற்படடதேவனிலலை, நமககுப்பினனிருபபதுமிலலை. * ௪௪, அ. † ௪௫, அ.

௰௧ நாம நாமே கர்ததர் நமமையலலாமல இரட்சகரிலலை. * ஏசேக. ௰௯, ௪.

௰௨ நாமேயறிவிதது இரட்சிதது அதைக கேட்கபபணணுகிறோம, உஙகளில அபபடிச்செயயததககஅனனிய தேவனிலலை, நாமே பராபரனெனகிறதறகு நீஙகள நமமுடைய சாட்சிகளெனறு கர்ததர் சொலலுகிறர்.

௰௩ * நாளுணடாகாததறகு முனனும நாமேயிருககிறோம, நமமுடைய கைககுத தபபுவிககததககவனிலலை. † நாம நடப்பிப்பதைத திருப்புகிறவனுர். * ௪௩. ௬௰, உ. † ௰௪, உ௭.

௰௪ உஙகளுககாக நாந தாபபாரன அரணகளையெலலாம இடிநதுவிழப பணணவுங கல்தேயரைப் படவுகளிலேபபடடலறப பணணவுந தககவர்களைப பாபேலுக கனுபபினோமெனறு உஙகள மீட்பரும இஸராவேலின பரிசுததருமாகிய கர்ததர் சொலலுகிறர்,

௰௫ நாமேயுஙகள பரிசுததராகிய கர்ததரும இஸரவேலின சிருட்டிகரும உஙகளிராசாவுமானவர்.

௰௬ சமுததிரததிலே வழியையும வலலமையான தணணீர்களிலே பாதையையுங கடடளையிடடு, * உ. திமோ. ௰௪, உ௧. ஞ

௰௭ இரதஙகளையுங குதிரைகளையும இராணுவததையுமபெலனையும வரவிடடு அவைகள எழுநதிராதபடிககு ஒருமிதது விழுநது கிடககவும ஒரு திரியவியுமபோல அணைநதுபோகவும பணணின கர்ததர் சொலலுகிறதாவது,

௰௮ முநதினவைகளை நினையாதையுஙகள, பூருவமானவைகளைச சிநதியாதையுஙகள.

௰௯ இதோ * நாமபுதுககாரியததைச செயவோம, இனியதுதோனறும, நீஙகளதை யறியபபோவதிலலையோ, நாம வனாநதரததிலே வழியையும அவாநதர வெளியிலே ஆறுகளையுமுணடாககுவோம.
* எபே. ௫௧, ௫௬.

உ௰ நாநதெரிநதுகொணட நமது சனததின தாகததுககு * வனாநதரததிலே தணணீர்களையும அவாநதர வெளியிலே ஆறுகளையுமுணடாககுவதினால வெளியின மிருகஙகளும வலலமையுளள பாமபுகளுங கோட்டான குஞசுகளும நமமைக்கனம பணணும. * ௪௧, ௰௮.

உ௧ இநதச்சனததை நமககெனறு ஏற படுததினோம, இவர்கள நமது துதியைச

சொல்லிவருவார்கள்.

௨௨ ஆனால் யாக்கோபே நீ நம்மை நோக்கிக் கூப்பிட்டதில்லை, இஸ்ரவேலே அதை விட நீ நம்மை விதனப்படுத்தினாய்.

௨௩ நீ நமக்கு உன் ஆடுகளின் தகனப் பலிகளைச் செலுத்தினதில்லை, நீ நம்மையுன் பலிகளாலே கனம்பண்ணினதுமில்லை காணிக்கைகளைச் செலுத்த நாமுன்னைப் பிரயாசப்படுத்தாமலும் தூபங்காட்ட உன்னை வருத்தப்படுத்தாமலுமிருந்தோம்.

௨௪ நீ நமக்குப் பணங்களால் சுகந்தப் பட்டையைக் கொள்ளாமலும் உன் பலிகளின் கொழுப்பினாலே நம்மை நிரப்பாமலும் உன் பாவங்களினாலே நம்மைப் பிரயாசப்படுத்தி உன் அக்கிரமங்களினாலே நம்மை வருத்தப்படுத்தினாய்.

௨௫ * நாம் நாமேயுன் மீறுதல்களை நம்முடைய நிமித்தியமாகக் குலைக்கிறோம், உன் பாவங்களை நினையாமலுமிருப்போம்.
* ௪௪, ௨௨. எசேக்கி. ௩௬, ௨௨.

௨௬ நாம் ஒன்றாய்க்கொண்டு வழக்காடும்படியாக நமக்கு நினைப்பூட்டு, நீ நீதிவிளங்கும்படியாக விவரித்துச் சொல்லு.

௨௭ உன் ஆதித்தகப்பன் பாவஞ்செய்தான், உனக்கு முன்னின்று பேசுகிறவர்களும் நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினார்கள்.

௨௮ ஆகையால் நாம் பரிசுத்தஸ்தலத்தலைவர்களைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி யாக்கோபைச் சங்காரத்துக்கும் இஸ்ரவேலைத் தூஷணங்களுக்கும் ஒப்புக்கொடுப்போம்.

## ௪௪. அதிகாரம்.

[புது ஏற்பாட்டினுடைய பாக்கியத்தை முன்னறிவித்தது.]

இப்போதும் * நம்முடைய தாசனாகிய யாக்கோபே நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலே கேள். * ௪௧ அதி. ௮, ௯. ௰.

௨ * உன்னையுண்டாக்கினவரும் உன்னைத் தாயின் கர்ப்பந்துவக்கி உருவாக்கினவரும் உனக்கொத்தாசை செய்கிறவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது, நம்முடைய தாசனாகிய யாக்கோபே நாந்தெரிந்துகொண்ட உத்தமனே † பயப்படாதை.
* ௫. மோசே. ௩௨, ௬. † ௪௧. அதி. ௰. ௰௪. ௪௩, அதி. ௧. ௫.

௩ ஏனெனில் * தாகமுள்ளவன் மேலே தண்ணீரையும் வறண்ட நிலத்தின் மேலே ஆறுகளையும் ஊற்றுவோம், நம்முடைய ஆவியையுன் வித்தின்மேலும் நம்முடைய ஆசீர்வாதத்தையுன் சந்தானத்தின்மேலும் ஊற்றுவோம். * யோவ. ௩, ௧. யோவ. ௩௮.

௪ அதினாலே புல்லின் நடுவே * நீர்க்கால்களின் ஓரத்திலுள்ள அலரிச்செடிகளைப் போலே வளருவார்கள், * சங்கீ. ௧, ௩.

௫ இவனும் நான் கர்த்தருடையவனென்பான், அவனும் யாக்கோபின் பேரால் அழைக்கப்படுவான், அவனும் நான் கர்த்தருடையவனென்று தன் கையெழுத்துப் போட்டு இஸ்ரவேலின் நாமத்தைத் தரித்துக்கொள்ளுவான்.

சத்தியவாசகராகிய பராபரன் தம்முடைய மகிமையையும் உண்மையையும் விக்கிரகங்களின் வெறுமையான மாட்சையையுங் காண்பித்தது.

௬ * நாம் முந்தினவரும் நாம் பிந்தினவருந்தானே நம்மைத்தவிர தேவனில்லையென்று இஸ்ரவேலின் இராசாவாகிய கர்த்தரும் சேனைகளின் கர்த்தராகிய அவனுடைய மீட்பருமாய்ச் சொல்லுகிறார். * ௪௧, ௪. ௪௮, ௰௨. அறிவி. ௧. ௮. ௨௨, ௰௩.

௭ நித்தியசனத்தை நாம் ஸ்தாபித்தது முதற்கொண்டு நம்மைப்போல எவரையாகிலும் வரவழைத்து இன்னின்னதை முன்னறிவித்து நமக்குமுன்பாக வரிசையாக நிறுத்தத்தக்கவனார்? * பின்னடிச்செய்திகளையும் வருங்காரியங்களையுந் தங்களுக்கவர்கள் அறிவிக்கட்டும் * ௪௧, அதி. ௨௨. ௨௩.

௮ நீங்கள் கலங்காமலும் ஐயப்படாமலுமிருங்கள், நாம் அதுமுதற்கொண்டு அதையுனக்குக் கேட்கப்பண்ணினதும், முன்னறிவித்ததுமில்லையோ என்பதற்கு நீங்கள் நம்முடைய சாட்சிகள், * நம்மைத்தவிர ஒருதேவனுண்டோ? வேறொரு கன்மலையுமில்லையே, ஒருவனையும் அறியோம்.
* ௫. மோசே. ௪, ௩௫.

௯ சுரூபங்களை யுருவாக்குகிற யாவரும் மாய்கைதானே, அவர்களால் இச்சிக்கப்பட்ட காரியங்கள் ஒன்றுக்குமுதவாது, தங்களுக்கு வெட்கமாக அவர்கள்தானே அவைகளொன்றுங்காணாமலும், ஒன்றுமறியாமலுமிருக்குமென்று அவைகளுக்குச் சாட்சிகளாயிருக்கிறார்கள்.

௰ ஒன்றுக்குமுதவாத் தேவனையுருவாக்கிச் சுரூபத்தைவார்க்கிறவன் எப்படிக்கொத்தவன்?

௰௧ இதோ, அவனுடைய கூட்டாளிகளெல்லாம் வெட்குவார்கள், ஏனெனில் தொழிலாளிகள் நரசீவன்கள்தானே, அவர்களெல்லாருங் கூடிக்கொண்டு நிற்கட்டும், அவர்களேகமாய்த் திகைத்து வெட்கப்படுவார்கள்.

௰௨ * கொல்லன் இரும்பைக் குறட்டால் விடுக்கித் தழலிலே வேகவைத்துச் சுத்தியல்களால் அதையுருவேற்படுத்தித் தன் புயத்தின் பலத்தினாலேயதைச் செப்பனிடுகிறான், பெலனற்றுப்போகுமட்டும் பட்டினியுமா

பிருக்கிறான், இளைத்துப்போகுமட்டுந் தண்ணீர் குடியாமலுமிருக்கிறான். * ௪௰, அதி. ௰௮—௨௰. ௪௧, ௭. எரே. ௰, ௩—௫.

௰௩ தச்சன் நூல்பிடித்து மட்டப்பலகையால் மரத்துக்குக் குறிபோட்டு அதைக் கோணக்கோணமாகப் பிடித்துக் கவராசத்தால் அதைச் சூழ்ந்து அது வீட்டிலே வாசமாயிருப்பதற்காக அதை ஒரு புருஷனின் சாயலும் ஒரு மனுஷனின் ரூபமுமாக்குகிறான்.

௰௪ அவன் தனக்குக் கேதுருக்களை வெட்டப்போகிறபோது, ஒரு புங்கமரத்தை அல்லது ஒரு கர்வாலிய மரத்தைத் தெரிந்துகொண்டு, காட்டுமரங்களிலே பலக்க அதைத் தனக்கு வளர்க்கிறான், அல்லது அசோக மரத்தை, மழையதைப் பயிராக்கும்படிக்கு நாட்டுகிறான்.

௰௫ மனுஷனுக்கு அவைகள் அடுப்புக்காகும்போது அவன் அவைகளிலெடுத்துக் குளிர்காய்ந்துகொள்ளுகிறான், நெருப்பை மூட்டி அப்பமுஞ்சுடுகிறான், என்றாலும் ஒரு தேவனையும் உண்டுபண்ணி, அதைப்பண்ணி ஒரு சுரூபத்தை அதினாலே செப்பனிட்டு, அதை வணங்குகிறான்.

௰௬ அதிலொரு பங்கை அடுப்பிலெரிக்கிறான் ஒரு பங்கினால் இறைச்சியைச் சமைத்துப் பொசித்துப் பொரியலைப் பொரித்துத் திருத்தியாகித் தளிருங் காய்ந்துகொண்டு ஆகா அனலானேன் நெருப்பைக் கண்டேனென்று சொல்லி,

௰௭ அதின் மீதியான பங்கைத் தேவனாகவுந் தனக்குச் சுரூபமாகவுஞ் செப்பனிட்டு, அதுக்கு முன் விழுந்து, அதை வணங்கி என்னை விடுவி, ஏனென்றால் நீயென் தேவனென்று அதை நோக்கி விண்ணப்பஞ்செய்கிறான்.

௰௮ அறியாமலும் உணராமலுமிருக்கிறார்கள். ஏனென்றால் காணாதபடிக்கு அவர்கள் கண்களும் உணராதபடிக்கு அவர்கள் இருதயமும் பூசப்பூசப்பட்டிருக்கிறது.

௰௯ அதிலே பாதியை அடுப்பிலெரித்தேன், அதினுடைய தழலின்மேல் அப்பத்தையுஞ் சுட்டு இறைச்சியையும் பொரித்துப் பொசித்தேன், அதின் மீதியான பங்கை நான் அருவருப்பாக்குவேனோ? ஒரு மரத்தினடை வணங்குவேனோவென்று சொல்ல அவன் தன் மனதுக்குள்ளே தோன்றவில்லை, அம்மாத்திரம் அறிவுஞ் சொரணையுமில்லை.

௨௰ அவன் சாம்பலிலே மேய்கிறான், அவனுடைய இருதயம் அவனைப் புரட்டிப்போட்டது. அவன் தன்னாத்துமாவைத் தப்புவிக்காமலும் என் வலதுகையிலே மோசமல்லோ இருக்கிறதென்றுஞ் சொல்லாமலுமிருக்கிறான்.

௨௧ யாக்கோபே இஸ்ரவேலே இவைகளை நினை, ஏனென்றால் * நீ நம்முடைய தாசன், உன்னை உருவாக்கினோம் நீ நம்முடைய தாசன் இஸ்ரவேலே, நீ நம்மால் மறக்கப்படுவதில்லை. * ௨. வசனம்.

௨௨ உன் மீறுதல்களை மந்தாரத்தைப்போலவும் உன் பாவங்களை மேகத்தைப்போலவும், நிர்க்கிரகம்பண்ணுகிறோம், நம்மண்டைக்குத் திரும்பு. ஏனென்றால் உன்னை மீட்டுக்கொண்டோம் * ௧, ௰௮. ௪௩, ௨௫.

பாபிலோனிய சிறையிருப்பின் நீங்குதலை அவர் முன்னறிவித்தது.

௨௩ வானங்களே, கெம்பீரியுங்கள், ஏனென்றால் கர்த்தர் அதைச் செய்தார், பூதலமான தாழ்விடங்களே ஆர்ப்பரியுங்கள், பருவதங்களே, காடுகளே, காட்டிலுள்ள சகலமரங்களே, கெம்பீரமாய் முழங்குங்கள், ஏனென்றால் கர்த்தர் யாக்கோபை மீட்டு, இஸ்ரவேலில் மகிமைப்படுகிறார். * ௪௯, ௰௩. சங்கீ. ௯௯, ௧. ௨.

௨௪ உன் மீட்பரும் உன்னைத் தாயின் கர்ப்பந்துவக்கி உருவாக்கினவருமான கர்த்தர் சொல்லுகிறதாவது நாமே எல்லாத்தையுஞ் செய்கிற கர்த்தர், நாம் ஒருவராய் வானங்களை விரித்து, நாமாய்ப் பூமியைப் பரப்பினவர்.

௨௫ நாம் கட்டுக்கைக்காரரின் குறிகளை யவத்தமாக்கிக் குறிசொல்லுகிறவர்களை நிர்மூடராக்கி ஞானிகளைப் பின்னிட்டுத் திருப்பி, அவர்கள் அறிவைப் பயித்தியமாகப் பண்ணுகிறவர்.

௨௬ நாம் நம்முடைய ஊழியக்காரரின் வார்த்தையை நிலைப்படுத்தி, நம்முடைய தானாபதிகளின் ஆலோசனையை நிறைவேற்றி, குடியேறுவாயென்று எருசலேமுக்குங் கட்டப்படுவீர்களென்று யூதாவின் பட்டணங்களுக்குஞ் சொல்லி அவைகளின் பாழான தலங்களை எடுப்பிப்பவர்.

௨௭ நாம் ஆழத்துடனே வற்றிப்போ, உன் நதிகளை வெட்டாந்தரையாக்குவோமென்று சொல்லுகிறவர்.

௨௮ கோரேசைக் குறித்து அவன் நம்முடைய மேய்ப்பன், அவன் எருசலேமுக்குக் கட்டப்படுவென்றுந் தேவாலயத்துக்கு அஸ்திபாரப்படுவென்றுஞ் சொல்லி நமக்குப் பிரியமானதையெல்லாம் நிறைவேற்றுவானென்று நான் சொல்லுகிறவர்.

## ௪௫. அதிகாரம்.

[பராபரன் யூதரைப் பாபிலோனிய சிறையிருப்புக்கு நீங்கலாக்கி இரட்சிப்போமென்ற தீர்க்கதரிசனம்.]

கர்த்தராகிய நாம் அபிஷேகம்பண்ணுவித்த * கோரேசுக்கு முன்பாகச் சாதிகளைக் கீழ்ப்படுத்தி இராசாக்களின் இடைகளைக் கட்டவிழ்க்கும்படிக்கும் அவனுக்கு

முன்பாக வாசல்கள் பூட்டப்படாதிருக்கக் கதவுகளைத் திறந்துவைக்கும்படிக்கும் அவனையவன் வலத்தைப் பிடித்துக்கொண்டு அவனுக்குச் சொல்லுகிறதாவது,

* ௪௪, ௨௮.

௨ நாம் உனக்கு முன்பாக நடந்து கோணலானவைகளைச் செவ்வைப்பாக்குவோம்.

௩ உன்னைப் பேர்சொல்லியழைக்கிற இஸ்ரவேலின் பராபரனாகிய நாமே கர்த்தரென்று நீயறியும்படிக்கு நாம் நம்முடைய தாசனாகிய யாக்கோபின் நிமித்தியமும் நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலின் நிமித்தியமும் வெண்கலக் கதவுகளையுடைத்து இருப்புத்தாழ்ப்பாள்களை முறிந்து, அந்தகாரத்திலிருக்கிற பொக்கிஷங்களையும் ஒளிக்கப்பட்டிருக்கிற புதையல்களையும் உனக்குக் கொடுப்போம்.

௪ அதுக்காக நாமுன்னைப் பேர்சொல்லியழைத்து நீ நம்மைவறியாதிருக்கக்கொள்ள உனக்கு நாமந் தரித்தோம்.

௫ நாமே கர்த்தர் வேறொருவரில்லை. நம்மைத்தவிர தேவனில்லை. * ௫. மோசே. ௩௨, ௩௯.

௬ நம்மைத்தவிர ஒருவருமில்லையென்பது சூரியனுதிக்கிற திசையும் அது அஸ்தமிக்கிற திசையுந்துவக்கி யறியப்படும்படிக்கு நாமுன்னை நீ நம்மை யறியாதிருக்கக் கொள்ள இடைக்கட்டினோம், நாமே கர்த்தர் வேறொருவரில்லை.

௭ வெளிச்சத்தையும் உருவேற்படுத்தி இருளையுஞ் சிருஷ்டித்துச் சுகவாழ்வையும் உண்டுபண்ணித் * துன்பத்தையும் படைப்பிக்கிறவர் நாமே கர்த்தராகிய நாமே யிவைகளையெல்லாஞ்செய்கிறவர்.

* ஆமோ. ௩, ௬.

௮ வானங்களே உயர இருந்து சொரியுங்கள், ஆகாயமண்டலங்கள் * நீதியைப் பொழியக்கடவது, பூமி திறவுண்டு இரட்சிப்பின் கனியைத்தந்து நீதியுங்கூட விளைவதாகக் கர்த்தராகிய நாம் இவைகளைச் சிருஷ்டிக்கிறோம். * ஏசே. ௰, ௰௨.

௯ மண் ஓடுகளோடொத்த ஓடாயிருந்து, தன்னை யுருவாக்கினவரோடே வழக்காடுகிறவனுக்கையோ, * களிமண் தன்னை யுருவாக்கினவனுடனே என்ன செய்கிறாயென்றும், அல்லது உன் கிரியைக்குக் காணைகைகளில்லையென்றுஞ் சொல்லுமோ.

* ரோமர். ௯, ௨௰.

௰ தகப்பனோடே ஏன் ஜெனிப்பித்தாயென்றுந் தாயோடே ஏன் பெற்றாயென்றுஞ் சொல்லுகிறவனுக்கையோ.

௰௧ இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்தரும் அதை யுருவாக்கினவருஞ் சொல்லுகிறதாவது, வருங்காரியங்களைக் குறித்து நம்மைக் கேட்கிறீர்கள் நம்முடைய பிள்ளைகளுக்காகவும் நம்முடைய கரங்களின் கிரியைக்காகவும் நமக்குத் திட்டங்கற்பிப்பீர்களோ.

௰௨ * நாம் பூமியையுண்டுபண்ணி நாமே யதின்மேலிருக்கிற மனுஷனைச் சிருஷ்டித்தோம் நம்முடைய கரங்களே வானங்களை விரித்தது அவைகளின் சேனைக்கெல்லாம் நாம் கற்பித்தோம். * ௪௰, ௨௮.

௰௩ நாம் நீதியாக அவனை யெழுப்புகிறோம். அவன் வழிகளையெல்லாஞ் செவ்வையாக்குவோம் * அவன் நம்முடைய பட்டணத்தைக் கட்டிச் சிறைப்பட்டுப்போன நம்முடையவர்களைக் கிரயமில்லாமலும் பரிதானமில்லாமலும் விடுதலையாக்குவானென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

* ௧. வசனம். ௨. நாளாக. ௩௬, ௨௨. எஸ்ரா. ௧, ௧. மு

௰௪ எகிப்துவின் பிரயாசமும் எத்தியோப்பியரின் வர்த்தகமும் நெடிய ஆள்களாகிய சபேயரின் வர்த்தக இலாபமும் உன்னண்டைக்குத் தாண்டிவந்து உன்னுடையதாகும் அவர்கள் உன்பிறகே சென்று விலங்குகளில் நடந்துவந்து உனக்குள்ளே தானே பராபரனிருக்கிறார், அவரையல்லாமல் வேறே தேவனில்லையென்று உன்னைப் பணிந்துகொண்டு, உன்னை நோக்கி விண்ணப்பம்பண்ணுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௫ இஸ்ரவேலின் பராபரனும் இரட்சகருமாகிய தேவரீர் மெய்யாகவே * மறைவான பராபரனாயிருக்கிறீர். * சங்கீதம்.

௬. ரோம. ௰௧, ௩௩. ௩௪.

௰௬ சருபங்களையுண்டுபண்ணுகிற அனைவரும் நாணி, இலச்சையுமடைந்து ஏகமாய் வெட்கப்பட்டுப்போவார்கள்.

௰௭ இஸ்ரவேலோவெனில் கர்த்தராலே நித்திய இரட்சிப்பாக இரட்சிக்கப்படும் நீங்களென்றென்றைக்குமுள்ள சதாகாலங்களில் நாணாமலும் வெட்கப்படாமலுமிருப்பீர்கள்.

௰௮ ஏனெனில் வானங்களைச் சிருஷ்டித்துப் பூமியையும் வெறுமையாயிருக்கச் சிருஷ்டியாமல் அதைக் குடியிருப்பாகச் செப்பனிட்டுப்படைத்து அதையுருவேற்படுத்தின பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது, * நாமே கர்த்தர் வேறொருவரில்லை.

* ௫. வசனம்.

௰௯ நாம் அந்தரங்கத்திலும், பூமியின் அந்தகாரமான விடத்திலும் பேசினதில்லை, நாம் யாக்கோபின் வித்துக்கு விருதாவாக நம்மைத் தேடுங்களென்று சொன்னதுமில்லை நாம் நீதியைப் பேசி நிதானங்களையறிவிக்கிற கர்த்தர்.

௨௰ சாதிகளிலே தப்பினவர்களே, * கூடிக்கொண்டு வாருங்கள் ஏகமாய்ச்சேருங

ளாதஙகளசுரூபங்களினமரததைசசுமநது, இரட்சிககமாட்டாததேவனைத் தொழுது கொளளுகிறவர்கள அறிவிலலாதிருககிறார்க ள. * சங. அதி. கூ.

உக நீஙகள அறிவிககுமபடிககுசசேர்நது, ஏகமா யோசனையும பணணுஙகள இதைபபூர்வகாலமுதறகொணடு கேட்கப பணணி அபபோதுதுவககி அதையறிவித தவரார்? கர்த்தராகிய நாமலலவோ? நீதி பரனும இரட்சகருமாகிய நமமையலலா மலவேறேதேவனேயிலலை, நமமைத்தவிர வேறொருவருமிலலை.

உஉ * பூமியின எலலாஎலலைகளே நம மைநோககிடடுநோககுஙகள அபபோதிரட் சிககபபடுவீர்கள ஏனெனறால நாமேபரா பரனவேறொருவருமிலலை. * க. தீமோ. உ, ங. சு.

உங * நமககுமுழஙகால்யாவும முடஙகி ககர்த்தருககுளமாத்திரம எனககுநீதிகளு மபெலனுமுணடெனறு நாவுயாவுஞ சத்தி யமபணணவேணடுமெனறு, நமமைக்கொ ணடுநாம ஆணையிடடோம இநதநீதியான வார்த்தைநமதுவாயிலிருநது புறபபட டது, அதுமாறுவதுமிலலையெனகிறார். * பிலி. உ, கூ—யக.

உச அபபடிககொததவர்கள அவரண டைக்குவநது சேருவார்கள ஆனால அவரு ககுவிரோதமா யெரிகிறயாவரும வெட்க பபடுவார்கள.

உரு இஸரவேலின வித்தாகிய யாவருங கர்த்தருககுள நீதிமானகளாகி மேனமை பாராட்டுவார்கள.

## சசு. அதிகாரம்.

அபபாலுமபராபரன அநத இரட்சிபபி ன நிசசயத்தைத் திடபபடுத்தித் தமது சனத்தைவிககிரகஆராதனைககுசசாயா தபடிககு எச்சரித்தது.

பேல்குனிநது நேபோமடஙகிபபோ ம, அவர்களுடைய விககிரகஙகள ஜீவனக ளுககுமமிருகஙகளுககுஞசுமையாகும, மூ டைகளாகிய உஙகளசுமைகள இளைபபா னசீவனகளுககுப்பாரமாம்.

உ ஏகமாயமடஙகிககுனியும, மூடடை யாகாதபடிககு அவைகளதபபமாடடாது அவைகள தாஙகள தான சிறைபபடடுப போம.

ங தாயினவயிறறிலே துவககி நமமாலே ஏநதபபடடுத்தாயினகர்பபததிலேதுவககி சுமககபபடடவர்களாகிய யாககோபின வீடடாரே இஸரவேலின வீடடிலமீதியாகி யசகலசனஙகளே நமமைககேளுஙகள.

ச * உஙகளமுதிர்நதவயது மடடுககும நாம அவரே, நரைமடடுககும நாஞசுமப போம, நாம அபபடிசசெயதுவநதோம, இனிமேலும நாமெடுபபோம. நாஞசுமப போம் தபபவிடுவிபபோம. * சஙகீதம. எக, யஅ.

ரு * ஆருககு நமமைசசாயலுஞ சமா னமுமாககி, ஆருககு நாஞசாயலாகுமபடி ககு நமமை யொபபிடுவீர்கள? * சஙகீத ம. சய, ய.

சு * பையிலிருககிற பொனனைச செல வழித்து, வெளளியைததிராசில நிறுத்துத தடடானுடனே கூலிபொருநதிககொளளு கிறார்கள, அவன அதைததேவனாககுகிறா ன, அதைவணஙகிபபணிநதுகொளளுகிறா ர்கள. * சக, எ. சச, கூ. உய.

எ அதைததோளினமேலெடுத்து அதை சசுமநது அதையதினதானத்திலேவைககி றார்கள, அஙகேநிறகும தனனிடத்தை வி டடசையாது, ஒருவன அதைநோககிக கூ பபிடடால. அதுமறுவுத்தரவு கொடுககிற துமிலலை அவனிககடடைநீககிஅவனை இர டசிககிறதுமிலலை.

அ இதைநினைத்துஉஙகளைததிடபபடுத திககொளளுஙகளபாதகரே இதைமனதிலே வையுஙகள.

கூ முநதிப் பூர்வகாலநதுவககி நடநத வைகளைநினையுஙகள, ஏனெனில * நாமே பராபரன, வேறொருதேவனிலலை, நமக கொதததொனறுமிலலை. * சரு, ரு.

ய நாம பிரகாரியத்தை ஆதிமுதறகொ ணடும இனனுஞ செயயபபடாதவைகளைப பூர்வகாலமுதறகொணடும அறிவித்து * நமமுடைய ஆலோசனைநிறைவேறும, யாவும நமககுசசித்தமானதையெலலாஞ செயவோ மெனறுஞசொலலி * சஙகீ ஙங, யக. வாககி. யசு, உக. உக, ஙய.

யக உதயதிசையிலிருநது ஒருபடசியைககூபபிடடு மும நமமுடைய ஆலோசனையின மனுஷ னைததூரதேசத்திலுமிருநதுவரவழைககி றவராயிருககிறோம, அதைசசொனனோம, அதைவருவிபபோம, அதைததிட டமபணணினோம, அதைசசெயதுமிருப போம.

யஉ முரட்டிருதயத்தாரே, நீதிககுத்தூ ரமானவர்களே, நமமைககேளுஙகள.

யங நமமுடைய நீதியைசசமீபிககபப ணணுகிறோம, அது தூரமாயிருபபதிலலை, நமது இரட்சிபபுத்தாமதிபபதுமிலலை, நா ஞசீயோனிலே இரட்சிபபையும, இஸரவே லுககு நமது மகிமையையுங கடடளையிடு வோம.

## சஎ. அதிகாரம்.

[பாபேலுடைய அழிவினதீர்க்கதரிசனம.]

பாபேலகுமாரத்தியாகிய கனனியாஸ திரியே நீ இறஙகி * மணணிலேயுட்கார்ரு, கல்தேயரினகுமாரத்தியே, தரையிலேயுஞ

க்காரு, இனி இராசாசனமில்லை ஏனெனில் நீயப்புறஞ்செருக்குக்காரியுஞ் சுகசெல்வியு மென்றழைக்கப்படுவதில்லை. * ௨௬, ௫.

௨ எந்திரத்தைவாங்கிமாவரை, உன்கூந்தலைவிரித்துவிட்டு வெறுங்காலும் அம்மணத்தொடையுமாயாறுகளைக்கடந்துபோ.

௩ * உன்நிர்வாணந்திறக்கப்படும், உன் இலச்சை காணப்படும்போம், ஒருவனையும் பாராமல் நீதியைச்சரிக்கட்டுவோம். * நாகூ. ௩, ௫.

௪ எங்கள் மீட்பருடைய நாமம் இஸ்ரவேலின்பரிசுத்தராகியசேனைகளுடைய கர்த்தரென்பது.

௫ கல்தேயரின் குமாரத்தியே, நீ மவுனமாயுட்கார்ந்து இருளுக்குட்பிரவேசி, ஏனெனில் இனி இராச்சியங்களுடைய நாச்சியாரென்றழைக்கப்படாய்,

௬ நாம் நமது சனத்தின்மேல் கடுங்கோபமடைந்து நமது சுதந்தரத்தைப்பரிசுத்தக்குலைச்சலாக்கி அவர்களையுன்கையிலொப்புக்கொடுத்தோம், நீயோவென்னில் அவர்களுக்காக இரக்கம்வைக்காமல் முதிர்ந்தவயதுள்ளவர்களின்மேல் உன்நுகத்தடியை மகாபாரமாக்கி,

௭ * என்றென்றைக்கும் நாச்சியாராயிருப்பேனென்றுசொல்லி இந்தக்காரியங்களைப்பிற்காலத்துக்கு உன்மனதிலேவைக்காமலும் அதின்முடிவை நினையாமலும்போனாய். * அபி. ௰௮, ௭.

௮ இப்போது சுகமாயிருந்து நானேதானே என்னைத்தவிர ஒருமில்லை நான் விதவையாயிருக்கமாட்டேன் சந்தானசேதத்தையறியாமலுமிருப்பேனென்று உன்னிருதயத்திலேசொல்லுகிறசெல்வியே நான்சொல்லுவதைக்கேள்.

௯ சந்தானசேதமும் விதவையிருப்பும் இவ்விரண்டும் உனக்குச்சுப்பிலே * ஒரேநாளிலேவரும் உன்திரளான சூனியங்களின் நிமித்தியமும் உன்சம்பனங்களின் மகாபெருக்கத்தின் நிமித்தியமும் அவைகள் நிறைவாகமாய் உன்மேல்வரும். * அபி. ௰௮, ௮.

௰ ஏனெனில் உன்பொல்லாப்பிலே நீதிடநம்பிக்கையாயிருந்து என்னைப்பார்க்கிறவரில்லையென்றாய் உன்ஞானமும் உன்னறிவுமே உன்னைப்புரட்டிற்று ஆகையால் உன்னிருதயத்திலே நான்தானே என்னைத்தவிர ஒருமில்லையென்றாய்.

௰௧ ஆனபடியால் எங்கேயிருந்து உதித்ததென்று நீயறியாத ஒருபொல்லாப்பு உன்மேல்வந்து, நிவிர்த்தியாகமாட்டாத ஒருவிக்கினம் உன்மேல்விழுந்து, நீயறியாதபடிக்கு அசுப்பிலேயுண்டாகும் பாழ்க்கடிப்புன்மேல்வரும்.

௰௨ இப்போதும் இவாடம் அடையமாடேவாயோவென்றும், உன்னைப்பலப்படுத்துவாயோவென்றும், நீயுன்சிறுவயதுதுவக்கிப்பிரயாசப்பட்டு உன் சம்பனங்களிலும் உன்திரளான சூனியங்களிலும் நில்லேல்.

௰௩ உன்திரளானயோசனைகளிலேசோர்ந்தாயே, இப்போதும் * வானத்தைக்கவனித்து நட்சத்திரங்களைநோக்கி அமாவாசைகளைப்பார்த்துக்கணிக்கிறவர்கள் எழும்பி உன்மேல்வருகிறவைகளுக்குன்னைவிலக்கியிரட்சிக்கட்டும். * தானியே. ௨, ௨.

௰௪ இதோ, தாளடிகளைப்போலிருப்பார்கள், நெருப்பு அவர்களைச்சுட்டெரிக்கும், தங்கள்பிராணனையேயவர்கள் அக்கினிச்சுவாலையினின்று தப்புவிப்பதில்லை, அது குளிர்காயுந் தழலல்ல, அது எதிரேயுட்காரத்தக்க அடுப்புமல்ல,

௰௫ அப்படியுன் சிறுவயதுதுவக்கி நீ பிரயாசப்பட்ட உன்னையாபாரிகள் உனக்கிருப்பார்கள். அவரவர் தங்கள்போக்கிலே போய் அலைவார்கள், உன்னை இரட்சிப்பாரில்லை.

## ௪௮. அதிகாரம்.

[பாபிலோனிய சிறையிருப்பைத் தொலைக்குஞ் சரீர இரட்சிப்புக்கும் புதுவேற்பாட்டினுடைய ஞான இரட்சிப்புக்கும் பாத்திரமல்லாதபடி நடக்கும் யூதர்களின்மேல் மெய்யாமுறையிடுகிறது.]

இஸ்ரவேலென்றபேராய் அழைக்கப்பட்டு யூதாவின் நீரூற்றிலிருந்து சுரந்தவர்களுங் கர்த்தருடைய நாமத்தின்மேலாணையிட்டு, இஸ்ரவேலுடைய பராபரனைத்தியானித்தும் அதையுண்மையும் நீதியுமாய்ச்செய்யாதவர்களும்,

௨ பரிசுத்த பட்டணத்தாரின்பேரைத் தரித்துக்கொண்டு சேனைகளின் கர்த்தரென்ற நாமமுள்ள இஸ்ரவேலுடைய பராபரன்மேல் ஊன்றிக்கொள்ளுகிறவர்களுமாகிய யாக்கோபின்வீட்டாரே, கேளுங்கள்.

௩ முன்னடந்தவைகளையதுக்குமுன்னறிவித்தோம் நமது வாயிலிருந்துபிறந்தச், அவைகளைக்கேட்கவும்பண்ணினோம், அப்படியே அசுப்பிலேசெய்தோம், அப்படி வந்ததே.

௪ * நீ கடினமுள்ளவனென்றும், உன் பிடரியிருப்பு நரம்பும், உன்நெற்றி வெண்கலமென்றும் அறிந்திருக்கிறோம். எரே. ௫, ௩. எசே. ௨, ௪.

௫ ஆகையால் என்விக்கிரகம் அவைகளைச்செய்ததென்றும் என்கருப்பமும் என்வார்ப்பித்ததும் அவைகளைக்கட்டளையிட்டதென்றும் நீ சொல்லாதபடிக்கு நாம் அதுக்குமுன் அவைகளை உனக்கு முன்னறிவித்து அவைகள்வராததுக்குமுன்னேயுனக்குக்கேட்கப்பண்ணினோம்.

௬ அவைகளைக் கேட்டாயே அவைகளையெல்லாம் பார் இப்போது நீங்களுமல்லோ அவைகளையறிவிக்கத்தக்கும் இதுமுதற் புதிதானவைகளையும் நீயறிந்திராமல் வைத்து வைக்கப்பட்டவைகளையும் உனக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

௭ அவைகள் ஆதிமுதற்கொண்டல்ல இப்போது சிருஷ்டிக்கப்பட்டது இதோ அவைகளை அறிவேனென்று நீ சொல்லாதபடிக்கு இந்நாள்களுக்குமுன்னே நீயவைகளைக் கேட்டிருந்ததில்லை.

௮ நீ கேட்டதுமில்லை அறிந்ததுமில்லை அதுமுதல் உன் செவி திறந்துபோனதுமில்லை ஏனெனில் நீ துரோகம்பண்ணுவாயென்றும் நீ தாயின் கர்ப்பந்துவக்கி மீறுகிறவனென்றழைக்கப்பட்டதையும் அறிந்திருந்தோம்.

௯ நமது நாமத்தின் நிமித்தியம் நம்முடைய கோபத்தைத் தாமதிக்கப்பண்ணினோம் உன்னைச் சங்கரிக்காதபடிக்கு நாம் நமது புகழ்ச்சியினிமித்தியம் உனக்காகப் பொறுத்துமிருப்போம்.

௰ இதோ உன்னைப் புடமிடுகிறோம் ஆனால் வெள்ளியைப்போலல்ல சிறுமையின் குகையிலேயுன்னைத் தெரிந்துகொள்ளப்பட்டவனாக்குகிறோம்

௰௧ நம்முடைய நிமித்தியம் நம்முடைய நிமித்தியமே அதைச் செய்வோம் ஏனெனில் எப்படி நமது நாமத்தின் பரிசுத்தங் குலைக்கப்படலாம் * நமது மகிமையை வேறொருத்தனுக்குக் கொடோம். * ௪௨. ௮.

௰௨ யாக்கோபே நாம் அழைத்திருக்கிற இஸ்ரவேலே நமக்குச் செவிகொடு நாம் அவரே * நாம் முந்தினவரும் நாம் பிந்தினவருந்தானே. * ௪௧, ௪. ௪௪, ௬.

௰௩ நம்முடைய கரமே பூமியையஸ்திபாரப்படுத்தி நம்முடைய வலதுகை வானங்களையளவிட்டது நாம் அவைகளைக் கூப்பிட அவைகளும் நிற்கும்.

௰௪ நீங்களெல்லாருங்கூடிவந்து கேளுங்கள் * கர்த்தர் சிநேகித்திருக்கிறவன் அவருக்குச் சித்தமானதைப் பாபேலிலே செய்வான் அவன் புயம் கல்தேயரின்மேலிருக்குமென்பவைகளையிவர்களில் அறிவித்தவனார். * ௪௪, ௨௮.

௰௫ நாம் நாமே அதைச் சொன்னோம் நாம் அவனையழைக்கிறவருமாயிருக்கிறோம் அவனை வரப்பண்ணுவோம் அவன் வழி வாய்க்கிறதுமாயிருக்கும்.

௰௬ நம்மண்டை சேர்ந்து நானுஞ்சொல்வதைக் கேளுங்கள் நாம் ஆதிமுதற்கொண்டு அந்தரங்கத்திலே பேசினதில்லை அதுவுண்டாகுங்காலந்துவக்கி அங்கே நாமிருந்தோம் இப்போதோவெனில் கர்த்தராகிய ஆண்டவரும் அவருடைய ஆவியும் நம்மை அனுப்புகிறார்.

௰௭ இஸ்ரவேலின் பரிசுத்தராயிருக்கிற உன் மீட்பரான கர்த்தர் சொல்லுகிறதாவது நாம் பிரயோசனமாயிருக்கிறதை யுனக்குப் போதிவித்து * நீ நடக்கவேண்டியவழியிலுன்னை நடத்துகிற உன் பராபரனுகிய கர்த்தர். சங்கீதம். ௩௨, ௮.

௰௮ ஆ நம்முடைய கற்பனைகளைக் கவனித்தாயானால் நாவிலே அப்போது உன் சமாதானம் நதியத்தனையும் உன் நீதி சமுத்திரத்தின் அலைகளத்தனையுமாயிருக்கும்.

* சங்கீதம். ௮௧, ௰௪. ௱

௰௯ அப்போது உன் வித்துமணலத்தனையும் உன் கர்ப்பப்பிறப்புகள் அதின் பொடிக்கலுங்களத்தனையுமாயிருக்கும் * அப்போது அதின் பேர் நம்மைவிட்டு அறுப்புண்காமலும் அழிக்கப்படாமலுமிருக்கும்.

௨௰ பாபேலிலிருந்து புறப்படுங்கள், கல்தேயரைவிட்டுக் கெம்பீரசத்தமாய் ஓடிவாருங்கள், இதையறிவித்துக் கேட்கப்பண்ணுங்கள் இதைப் பூமியின் கடையாந்தரமட்டும் வெளிப்படுத்துங்கள் கர்த்தர் தமதடியானுகிய யாக்கோபை மீட்டுக்கொண்டாரென்று சொல்லுங்களென்கிறார் * யெரே. ௫௰, ௮. அறிவி. ௰௮, ௪.

௨௧ அவரிவர்களை வனாந்தரங்களில் நடத்தும்போது இவர்களுக்குத் தாகந்தவனமாயிராது தண்ணீர்களைக் கன்மலையிலிருந்து இவர்களுக்குச் சுரக்கப்பண்ணித் தண்ணீர்கள் ஓடிவரக் கன்மலையைப் பிளப்பார்.

* ௨. மோசே. ௰௭, ௬.

௨௨ ஆகாதவர்களுக்கோ சமாதானமில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

* ௫௭, ௨௧.

## ௪௯. அதிகாரம்.

[மேசியா உலகத்தின் இரட்சகராக வருவாரென்பதும், தெனுசுகிறசபைக்குச் சொன்ன ஆறுதலும்.]

தீவுகளே? நமக்குக் கேள்விகொடுங்கள் தூரத்திலிருக்கிற ஜனசதளங்களே கவனியுங்கள் கர்த்தர் நம்மைத் தாயின் கர்ப்பத்திலே துவக்கியழைத்து நான் என் தாயின் குடல்களிலிருக்கக்கொள்ள என் நாமத்தைப் பிரஸ்தாபப்படுத்தினார்.

௨ அவர் என் வாயைக் கூர்மையான பட்டையமாக்கித் தம்முடைய கரத்தின் நிழலில் என்னை மறைத்து என்னைத் துலக்கமான அம்பாக்கி, என்னைத் தம்முடைய அம்பறாத்தூணியிலே மூடிவைத்தார்.

* அறிவி. ௧, ௰௬.

௩ நம்முடனே நீரே * நம்முடைய ஊழியக்காரன் இஸ்ரவேல் நாம் மகிமைப்படுஞ்சாதியென்றார். * ௪௨, அதி. ௧.

௪ நானோவென்றால் சொன்னதாவது வீணாய் உழைக்கிறேம் வீணும் அவத்தமுமாய் நம்முடைய பெலனைச் செலவழிக்கிறோம் ஆகிலும் நம்முடைய நியாயம் கர்த்தரிடத்திலும் நம்முடைய பெலன் நம்முடைய பராபரனிடத்திலுமிருக்கிறதென்றேம்.

௫ இப்போதும் நம்மைத் தாயின் கர்ப்பத்திலே துவக்கித் தமக்கு ஊழியகாரனாக உருவேற்படுத்தின கர்த்தர் யாகோபைத் தம்மண்டைக்குத் திருப்பச் சொல்லுகிறார் அநேகம் இஸ்ரவேல் சேராதேபோகிறது ஆகிலும் கர்த்தருடைய பார்வையிற் கனமடைவோம், நமது பராபரன் நம்முடைய பெலனாயிருப்பார்.

௬ யாகோபின் கோத்திரங்களை நிமிர்த்தவும் இஸ்ரவேலில் மீந்து வைக்கப்பட்டவர்களைத் திருப்பவும் நீர் நமக்கு ஊழியகாரனாயிருக்கிறது கொஞ்சக்காரியமாயிருக்கிறது, நீர் பூமியின் கடைசிபரியந்தம் நம்மது இரட்சிப்பாயிருக்கவும் மை * சாதிகளின் வெளிச்சமாகவும் வைத்தோமென்கிறார். * ௪௨, ௬. எ. ஆக. ௨, ௩௰-௩௨ அப்போ. ௰௩, ௪எ.

எ சத்தியமுள்ள கர்த்தரின் நிமித்தியமும் உம்மைத் தெரிந்துகொண்ட இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் நிமித்தியமும் இராசாக்கள் கண்டெழுந்திருந்து பிரபுக்கள் பணிந்துகொள்ளுவார்களென்று, இஸ்ரவேலின் மீட்பரும் அதின் பரிசுத்தருமாகிய கர்த்தர் சாதியால் அருவருக்கப்பட்டவரும் அதிகாரிகளின் பணிவிடைக்காரனுமான அசட்டைபண்ணப்பட்ட ஆத்துமாவுக்குச் சொல்லுகிறார்.

அ கர்த்தர் சொல்லுகிறதாவது * பிரியமான காலத்திலும்முடைய வேண்டுதலைக் கேட்டு இரட்சிப்பின் நாளிலே உமக்கொத்தாசைபண்ணுகிறேம் நீர் பூமியை நிமிர்த்துப் பாழாய்க் கிடக்கிற சுதந்தரங்களைச் சுதந்தரிக்கப்பண்ணவும், * ௨. கொரி. ௬, ௨.

௯ கட்டுண்டவர்களுடனே புறப்படுங்களென்றும் இருளிலிருக்கிறவர்களுடனே வெளிப்படுங்களென்றுஞ் சொல்லவும் நாம் உம்மைக் காப்பாற்றி உம்மைச் சனத்தினுடன்படிக்கையாகக் கட்டளையிடுவோம் அவர்கள் வழிகளோரமாய் மேய்வார்கள் சகல மேடுகளிலும் அவர்களுக்கு மேய்ச்சலுண்டாயிருக்கும்.

௰ * அவர்கள் பசியாயிருப்பதுமில்லை தாகமாயிருப்பதுமில்லை உஷ்டணமாகிலும் வெயிலாகிலும் அவர்கள் மேற்படுவதுமில்லை ஏனென்னில் அவர்களுக்கிரங்குகிறவர் அவர்களை நடத்தி அவர்களை நீரூற்றுகளண்டைக்குக் கொண்டுபோய் விடுவார்.

* சங்கீ. ௨௩, ௧. மூ ௩௬, அதி ௯.
அபிவி. எ, ௰௬. ௰௬—௰எ.

௰௧ * நமது பருவதங்களையெல்லாம் வழிகளாக்குவோம் நம்முடைய பாதைகள் உயர்த்தப்பட்டவைகளுமாயிருக்கும்.

* ௪௰, ௪.

௰௨ இதோ இவர்கள் தூரத்திலும் அதோ அவர்கள் வடக்கிலும் மேற்கிலும் அவர்கள் சீனீம் தேசத்திலுமிருந்து வருவார்களென்கிறார்.

௰௩ வானங்களே கெம்பீரியுங்கள் பூமியே களிகூரு பருவதங்களே கெம்பீரமாய் முழங்குங்கள் ஏனென்னில் கர்த்தர் தம்முடைய சனத்தைத் தேற்றரவுபண்ணுகிறார் சிறுமைப்பட்டிருக்கிற தம்முடையவர்கள்மேல் இரக்கமாயிருப்பார். * ௪௪, அதி. ௨௩.

௰௪ சீயோனோவென்றால் கர்த்தர் என்னைக் கைவிட்டார், ஆண்டவர் * என்னை மறந்தாரென்கிறது * ௫௪, அதி. ௬—அ.

௰௫ ஒரு ஸ்திரி தன் கர்ப்பத்தின் பிள்ளைக்கிரங்காதபடிக்குத் தன் பாலகனை மறப்பாளோ அப்படிக்கொத்தவள் அவைகளை மறந்தாலும் நாமுன்னை மறப்பதில்லை.

௰௬ இதோ, உள்ளங்கைகளில் உன்னைப் பதித்தோம் * உன் மதில்கள் நித்தம் நமக்குமுன்பாகவிருக்கிறது.

* சங்கீ. ௫௧, ௨௰.

௰எ உன் குமாரர் தீவிரித்துவருவார்கள், உன்னை நிர்மூலமாக்கினவர்களும் உன்னைப் பாழாக்கடித்தவர்களும் உன்னைவிட்டுப் புறப்பட்டுப்போவார்கள்.

௰அ * உன் கண்களை யேறெடுத்துச் சுற்றிலும்பார், இவர்களெல்லாரும் கூட்டப்பட்டு உன்னண்டைக்கு வருவார்கள். நீ இவர்களையெல்லாம் ஆபரணமாகத் தரித்து ஒரு மணவியைப்போலே இவர்களை உடையாகக் கட்டிக்கொள்ளுவாயென்கிறதை நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தருரைக்கிறார். * ௬௰, ௪.

௰௯ ஏனென்னில் உன்னுடைய வனாந்தரங்களும் பாழான உன்னுடைய தானங்களும் நிர்மூலமான உன்னுடைய தேசமுமே இனிக் குடிகளின் திரளினாலே உனக்கு நெருக்கமாயிருக்கும், உன்னை விழுங்கினவர்களோவெனில் தூரமாவார்கள்.

௨௰ இடம் எனக்கு நெருக்கமாயிருக்கிறது, நான் குடியிருக்கும்படிக்கு ஒதுங்கியிருவென்று, உனக்கு உண்டாயிருக்கப்போகிற பிள்ளைகள் அற்றிருந்த உன் காதுகள் கேட்கச் சொல்வதுண்டு.

௨௧ நீயுன் இருதயத்திலே இவர்களையெனக்குப் பிறப்பித்தவர் ஆர் நான் பிள்ளைகளற்று தனித்தவளும் சிறைப்பட்டும் நிலையற்றுமிருந்தேனே இவர்களையெனக்கு வளர்த்தவர் ஆர் இதோ நான் ஒண்டியாய் விடப்பட்டிருந்தேனே இவர்களெங்கேயிருந்தவர்களென்பாய்.

௨௨ இதோ சாதிகளுக்கு நேராக நமது கரத்தை உயர்த்தி சனசதளங்களுக்கு நேராக நமது கொடியை ஏற்றுவோம் அப்போது உன் குமாரரைக் கொடுங்கைகளிலே தூக்கிக்கொண்டு வருவார்கள் உன் குமாரத்திகள் தோள்களின்மேலே தூக்கப்படுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௩ * இராசாக்கள் உன்னை வளர்க்கிறவர்களும் அவர்கள் நாயகிகள் உன் தாதிகளுமாயிருப்பார்கள் † தரையிலே முகங்குப்புற விழுந்து உன்னைப் பணிந்து உன் கால்களின் தூளை நக்குவார்கள் நானே கர்த்தர் ‡ நமக்குக் காத்திருக்கிறவர்கள் வெட்கப்பட்டுப் போவதில்லையென்கிறதை அப்போது அறிந்துகொள்ளுவாய் * கூ௰, ௰௭. † சங்கீ. ௭௨. ௯.

௨௪ பராக்கிரமனையிலே கொள்ளையுடைமை பறிக்கப்படக்கூடுமோ அல்லது நீதியாய்ச் சிறைப்பட்டுப்போனவர்கள் விடுவிக்கப்படக்கூடுமோ.

௨௫ இப்போதும் இதோ * பராக்கிரமனைப் பிடித்தவர்களும் பறிக்கப்படுவார்கள் பலவந்தன் கொள்ளையிட்டதும் விடுவிக்கப்படும் உன்னோடே வழக்காடுகிறவர்களோடே † நாம் வழக்காடி உன் பிள்ளைகளை நாம் இரட்சித்துக்கொண்டு, * அாக்கா. ௰௧, ௨௨. † சங்கீ. ௩௫. ௧.

௨௬ உன்னை ஒடுக்கினவர்களுடைய மாமிசத்தை அவர்களுக்கே தின்னக்கொடுப்போம் மதுபானத்தால் வெறியாகுமாப்போலே தங்களுடைய இரத்தத்தினாலே வெறியாவார்கள் கர்த்தருமாகிய யாக்கோபின் வல்லவருமாகிய நாமுன் இரட்சகரும் உன் மீட்பருமாயிருக்கிறதை மாமிசமெல்லாம் அறியப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * அப்பி. ௰௯, ௬.

## ௫௰. அதிகாரம்.

[அவிசுவாசிகளான யூதர் தள்ளப்படும் முகாந்திரத்தையும், அவர்கள்மேல் தாம் அனுபவிக்கும் நிந்தையையும் மேசியா முன்னறிவித்தது.]

௧ கர்த்தர் சொல்லுகிறதாவது நாம் உங்கள் தாயைத் தள்ளிவிட்டோமென்று அவளுக்குக் கொடுத்த தள்ளுதலின் சீட்டெங்கே அல்லது நான் கடன்பட்டவனுக்கு உங்களை விற்றுப்போட்டோம் இதோ உங்கள் அக்கிரமங்களின் நிமித்தியம் விற்றுப்போடப்பட்டீர்கள். உங்கள் பாதகங்களின் நிமித்தியம் உங்கள் தாய் அனுப்பிவிடப்பட்டாள். மத்தே. ௰௯, ௭.

௨ நாம் வந்தபோது ஒருவனுமில்லாமலும், நாம் கூப்பிட்டபோது மறுவுத்தரவு கொடுக்கிற ஒருவனுமில்லாமலும் போனதேது மீட்கக்கூடாதபடிக்கு நம்முடைய கை குறுகிப்போயிற்றோ விடுவிக்கிறதற்கு நம்மிலே பெலனில்லாமலே போனதோ, இதோ நமது உதம்புதலினாலே நாங்கள் கடலை வற்றப்பண்ணி நதிகளை வெட்டாந்தரையாக்கிப் போடுகிறோம், அவைகளின் மீன் தண்ணீரில்லாமல் தாகத்தால் செத்து நாற்றமெடுக்கும்படியாகத்தானே. * ருசு, க. ௪. மோசே. ௰௧, ௨௧.

௩ நாம் வானங்களுக்குக் காரிருளை உடுத்தி இரட்டையவைகளின் மூடுசீலையாக்குகிறோம்.

௪ இளைப்பானவனோடே நான் சமயத்திலே வார்த்தை சொல்ல அறியும்படிக்குக் கர்த்தராகிய ஆண்டவர் நமக்குக் கல்விமான்களின் நாவைத் தந்தார் காலைதோறும் நம்மை எழுப்புகிறார் கற்றுக்கொள்ளுகிறவர்களைப்போலே கேட்கும்படிக்கு நமக்குச் செவியை எழுப்புகிறார். * மத். ௰௧, ௨௮. ௨௯.

௫ கர்த்தராகிய ஆண்டவர் நமக்குச் செவியைத் திறந்தார், நாம் முரண்டுத்தனம் பண்ணுகிறவருமல்ல நாம் பின்வாங்கவில்லோம்.

௬ * நம்முடைய முதுகின்மேலடிக்கிறவர்களுக்கும் நம்முடைய தாடைமயிரைப் பிடுங்குகிறவர்களுக்கும், ஒப்புக்கொடுக்கிறோம், நம்முடைய முகத்தை அவமானங்களுக்கும் உமிழ்நீருக்கும் மறையோம். * மத். ௨௬, ௬௭. ௬௮. யோவா. ௰௯, ௧.

௭ ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் நமக்குத் துணைசெய்கிறார், ஆகையால் நாம் வெட்கப்படோம். ஆனதுகொண்டு நம்முடைய முகத்தைக் கற்பாறையாக வைத்தோம், ஏனெனில் நாம் வெட்கப்போவதில்லையென்றறிவோம்.

௮ நம்மை நீதிவிளங்கப்பண்ணுகிறவர் சமீபமாயிருக்கிறார் ஆர் நம்மோடே வழக்காடுவான் கூடிக்கொண்டு நிற்போம், ஆர் நம்முடைய எதிராளி, அவன் நம்மண்டை சேரட்டும்.

௯ இதோ கர்த்தராகிய ஆண்டவர் நமக்குத் துணைசெய்கிறார் நம்முடையமேலே குற்றஞ்சுமத்துபவன் ஆர், இதோ அவர்களெல்லாரும் ஒரு வஸ்திரத்தைப்போலப் பழசாவார்கள் பொட்டு அவர்களையரிக்கும்.

௰ உங்களிலெவன் கர்த்தருக்குப் பயந்து அவருடைய ஊழியக்காரனின் சொல்லைக் கேட்டுத் தனக்கு வெளிச்சமில்லாததினாலே இருட்டிலே நடக்கிறானோ அவன் கர்த்தருடைய நாமத்தை நம்பித் தன் பராபரனைச் சார்ந்துகொள்ளக்கடவான்.

௰௧ இதோ, நெருப்பைக் கொளுத்தி அக்கினிப்பொறிகளால் அரைகட்டிக்கொண்டிருக்கிற நீங்களனைவரும் உங்கள் நெருப்பினொளியிலும் நீங்கள் மூட்டின அக்கினிச் சுவாலைகளிலும் நடவுங்கள், நம்முடைய கை

தத்திலே இது உங்களுக்கு உண்டாகும், வேதனையிலே கிடப்பீர்கள்.

## ருக. அதிகாரம்.

[வாக்குத்தத்தமாய்ப் பார்த்துக்கொண்டிருக்கப்பட்ட இரட்சிப்பை வாக்குத்தத்தம் பண்ணி விசுவாசிகளைத் தேற்றினது.]

நீதியைத் தொடர்ந்து கர்த்தரைத் தேடுகிற நீங்கள் நம்முடைய சொல்லைக் கேளுங்கள், நீங்கள் வெட்டியெடுக்கப்பட்ட * கன்மலையையும் † நீங்கள் தோண்டியெடுக்கப்பட்ட துரவின் குழியையும் நோக்கிப்பாருங்கள். * ரோமர். ௪, ௰௬—௨௧. † எபிரே. ௰௧, ௰௧.

௨ உங்கள் தகப்பனாகிய ஆபிரகாமையும் உங்களைப் பெற்ற சாராளையும் நோக்கிப்பாருங்கள். ஏனென்றால் அவன் ஒருத்தனாயிருக்கையில் * நாம் அவனை அழைத்து அவனை ஆசீர்வதித்து அவனைப் பெருகப்பண்ணினோம். * ௧. மோசே. ௰௨, ௧. ௩.

௩ அப்படியே கர்த்தர் சீயோனைத் தேற்றரவு பண்ணுவார், அவர் அதின் பாழான தலங்களையெல்லாந் தேற்றரவுபண்ணி, அதின் வனாந்தரத்தை ஏதேனைப்போலவும், அதின் அந்தரவெளியைக் கர்த்தரின் தோட்டத்தைப்போலவும் ஆக்குவார், சந்தோஷமும் மகிழ்ச்சியுந் துதியுங் கீதசத்தமும் அதிலுண்டாயிருக்கும்.

௪ நம்முடைய சனமே நம்மைக் கவனியுங்கள், நம்முடைய சனசதளமே, நமக்குச் செவிகொடுங்கள் ஏனெனில் வேதம் நம்மிலிருந்து வெளிப்படும், நம்முடைய நியாயத்தைச் சனசதளங்களின் வெளிச்சமாக வீசப்பண்ணுவோம்.

௫ நமது நீதி சமீபித்திருக்கிறது நமது இரட்சிப்பு வெளிப்படும், நமது புயங்கள் சனசதளங்களை நியாயந்தீர்க்கும். தீவுகள் நமக்குக் காத்திருந்து நம்முடைய புயத்தின்மேல் நம்பிக்கையாயிருக்கும்.

௬ உங்கள் கண்களை வானத்துக்கு ஏறெடுத்துத் தாழவிருக்கிற பூமியையும் நோக்கிப்பாருங்கள் ஏனெனில் * வானம் புகையைப்போல உருவழிந்து பூமி வஸ்திரத்தைப்போலப் பழசாய்ப்போம் அதின் குடிகளும் அப்படியே சாவார்கள் நம்முடைய இரட்சிப்போவென்றால் என்றென்றைக்குமிருக்கும் நம்முடைய நீதி முறிந்துபோவதில்லை.

* சங்கீ. ௱௨, ௨௭. அப்போஸ். ௨௧, ௧௩.

௭ நீதியையறிந்தவர்களே, * நமது சொல்லைக் கேளுங்கள் நம்முடைய வேதத்தை இருதயத்திலே தரித்திருக்கிற சனமே, † மனுஷரின் நிந்தனைக்குப் பயப்படாமலும் அவர்கள் தூஷணங்களாலே கலங்காமலுமிருங்கள். * சங்கீ. ௩௭, ௩௧. † மத். ௫, ௰௧.

௮ ஏனென்றால் பொட்டு அவர்களை வஸ்திரங்களைப்போலே யரித்துப்பூச்சியவர்களை ஆட்டுமயிரைப்போலே சசைத்துப்போடும் நம்முடைய நீதியோவென்றால் என்றென்றைக்கும் நம்முடைய இரட்சிப்பு தலைமுறை தலைமுறைகளாகவுமிருக்கும்.

௯ எழும்பு எழும்பு பெலன்கொள் கர்த்தரின் புயமே. முந்தின நாள்களுக்கும் பூருவ தலைமுறைகளுக்கும் ஒத்தபடியெழும்பு, * இராகாபைத் துண்டித்ததும் † முதலையை வதைத்ததும் நீதானல்லவோ.

* ௨. மோசே. ௰௪, ௨௫ † எசேக்கியேல். ௨௯, ௩.

௰ மகா ஆழத்தின் தண்ணீர்களாகிய சமுத்திரத்தை வறண்டுபோகப்பண்ணினதும் மீட்கப்பட்டவர்கள் கடந்துபோகக் கடலின் பள்ளங்களை வழியாக்கினதும் நீதானல்லவோ.

௰௧ அப்படியே * கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பிக் கெம்பீரத்தோடே சீயோனுக்கு வருவார்கள் நித்திய மகிழ்ச்சி யவர்கள் தலையின்மேலிருக்கும் சந்தோஷமும் மகிழ்ச்சியும் அவர்களைப் பிடிக்கும் சஞ்சலமுந் தவிப்பும் ஓடிப்போம். * ௩௫, ௰.

௰௨ நாம் நாமே உங்களைத் தேற்றரவுபண்ணுகிறவர், * சாகப்போகிற மனுஷனுக்கும் புல்லுக்கொப்பாகிற மனுபுத்திரனுக்கும் பயப்படுகிறதுக்கும், * சங்கீ. ௱௩, ௧௫. மத்தேயு. ௰, ௨௮.

௰௩ வானங்களை விரித்துப் பூமியையஸ்திபாரப்படுத்தி யுன்னையுண்டாக்கின கர்த்தரை மறக்கிறதுக்கும் நீ யார்? இடுக்கண் செய்கிறவன் அழிக்க ஆயத்தமாகிறபோது நீ யவனுடைய உக்கிரத்துக்கு நித்தமெந்நாளிலும் அருக்களிப்பாயென்ன, இடுக்கண் செய்பவனுடைய உக்கிரமெங்கே?

௰௪ பரதேசியாய்ப் போகிறவன் தீவிரமாய் விடுதலையாவான், அவன் கெவியிலே சாவதுமில்லை, அவனுடைய அப்பம் அவனுக்குக் குறைபடுவதுமில்லை.

௰௫ ஏனெனில் நாமே சமுத்திரத்தை யதின் அலைகள் கொந்தளிக்கத்தக்கதாய்க் குலுக்குகிற சேனைகளுடைய கர்த்தரென்னும் நாமமுள்ள உன்பராபரனாகிய கர்த்தர்.

௰௬ நாம் வானத்தை நாட்டிப் பூமியையஸ்திபாரப்படுத்திச் சீயோனுடனே நீ நம்முடைய சனமென்று சொல்லுவதற்காக நாம் நம்முடைய வார்த்தையை யுன் வாயிலே கொடுத்து நம்முடைய கரத்தின் நிழலிலுன்னை மறைக்கிறோம்.

௰௭ எழும்பிக்கொள் எழும்பிக்கொள், கர்த்தருடைய உக்கிரத்தின் பாத்திரத்தை யவர் கையிலே வாங்கிக்குடித்திருக்கிற எருசலேமே எழும்பு * தத்தளிப்பினுடைய பா

திரத்தினவண்டலகளைககுடித்துஉறிஞ்சினாய். * சங்கீதம். ௭௫, ௮.

௰௮ அவளபெற்றஎலலாககுமாரரிலும, அவளைமெதுவாய நடத்துவாருமிலலை, அவளவளர்தத எலலாககுமாரரிலும, அவளைக கைககொடுதது அழைபபாருமிலலை.

௰௯ இவவிரணடும உனககுச்சமபவித்தது, உனககுபபரதபிககத்தககவனூர்? பாழ்ககடிபபும நொறுககுதலும பஞசமும படடையமும வநதது, ஆரைககொணடு உனனைததேற்றரவுபணணுவோம?

௨௰ உனகுமாரர் மூர்ச்சிததுவிழுநதார்கள, அவர்களவலையிலேசிககுணட கலைமானைபபோலேஎலலாவீதிகளினமுகனையிலுங கர்த்தருடைய உககிரததினாலும உனபராபரனுடைய உதமபுதலினாலும் நிறைநதவர்களாய்ககிடககிறுர்கள.

௨௧ ஆனதுகொணடு சிறுமைபபடடவளே, மதுபானமலலாமல வெறிகொணடவளே, நீகேளே.

௨௨ கர்ததராகியஉனனுணடவருநதமசனததுககாக வழககாடபபோகிறஉனபராபரனுமானவர்சொலலுகிறதாவது, இதோ, தததளிபபினபாததிரததையுனகையிலேவாஙகிபபோடுகிறேம, இனி நமமுடைய உககிரததினுடைய பாததிரததினவணடலகளை நீ குடிபபதிலலை.

௨௩ *கடநதுபோகிறவர்களுககு நீயுனமுதுகைத்தரையுநதெருவுமாககுமபடியாக உனனுடனேநாஙகள கடநதுபோகுமபடிககுக்குனியென்று சொலலி உனனைசசஞசலபபடுததினவர்களின கையிலே அதைககொடுபபோமெனகிறுர். *சங்கீதம. ௬௬, ௧௧.

## ௫௨. அதிகாரம்.

[சபையின இரட்சிபபையுஞ சுவிசேஷததின இனபமான பிரசஙகிபபையுமமுனனறிவித்தது.]

எழுமபு எழுமபு சீயோனே உன பெலனைததரித்துககொள், பரிசுததபபடடணமாகிய எருசலேமே, உன அலஙகார வஸதிரஙகளைத்தரிததுககொள், ஏனெனில்சுனனததிலலாதவனும அசுததனுமஇனியுனககுள்வருவதிலலை.

௨ தூளையுதறிபபோடடெழுநதிரு, எருசலேமே உடகாரு, சிறைபபடடுபபோன சீயோனகுமாரததியே, உன கழுததின கடடுகளையவிழ்ததுவிடு.

௩ ஏனெனில கர்ததர்சொலலுகிறதாவது, இலவசமாயவிற்கபபடடீர்கள, பணஙகொடாமலும மீட்கபபடடுபபோவீர்கள.

௪ ஏனெனறுல முநதி நமமுடையசனம பரதேசியாயத் தஙகி எகிப்துககிறஙகிபபோயிருநதது, அசூரியனும முகாநதிரமிலலாமல அதை யொடுககிபபோடடானென்று கர்ததராகியஆணடவர்சொலலுகிறுர்.

௫ இபபோதும நமககிஙகே என்ன இருககிறதென்று சொலலுகிறுர், ஏனெனில நமமுடையசனஞ சுமமாயக்கொணடுபோகபபடடது, அதையாளுகிறவர்கள அதை யலறபபணணுகிறுர்கள, நிததமமெந்நாளும * நமமுடைய நாமந தூஷணிககபபடுகிறது. * எசே. ௩௬, ௨௰. றோமர். ௨, ௨௪.

௬ இதுநிமித்தியம இதுநிமித்தியமே, நமதுசனம அககாலததிலே நமமுடைய நாமததையறியும, ஏனெனில இதைசசொலலுகிறவர் நாமே, இதோ இஙகேயிருககிறேமென்று கர்ததர்விளமபுகிறுர்.

௭ சமாதானததைககூறி நறகாரியததைசசுவிசேஷமாயறிவிதது இரட்சிபபைககூறிச சீயோனுடனே, உன பராபரன இராசரிககமபணணுகிறுரென்றுசொலலுகிற சுவிசேஷகனுடையகால்கள மலைகளினமேல எததனையநதமானவைகள. நாகூம். ௨, ௧. றோமர். ௰, ௰௫.

௮ உனசாமககாரருடையசததஙகேட்கபபடும, அவர்களசத்தத்தையுயர்ததிஏகமாயக்கெமபீரிககிறுர்கள, ஏனெனறுல் கர்ததர் சீயோனைத திருமபிவரபபணணும போது அதைககணணூரக காணபார்கள.

௯ எருசலேமினபாழானதலஙகளே, முழஙகியேகமாயக்கெமபீரியுஙகள ஏனெனில் கர்ததர் தமமுடையசனத்தைத்தேறறரவுபணணி எருசலேமைமீடடார்.

௰ எலலாசசாதிகளின் கணகளுககுமுனபாகவுங கர்ததர்தமமுடையபரிசுததபபுயததைவெளிபபடுததுவார், * பூமியின எலலைகளெலலாம நமமுடையபராபரனுடையஇரட்சிபபைககாணும. * சங். ௯௮, ௩.

௰௧ அகனறு அகனறு *அவவிடமவிடடுபபுறபபடுஙகள, அசுததமானதைத்தொடாதையுஙகள, கர்ததருடைய பாணடஙகளைசசுமககிறவர்களே, அதின் நடுவிலிருநது புறபபடடு உஙகளைசசுததிகரியுஙகள.

* ௨. கொரி, ௬, ௰௭. அறி. ௰௮, ௪.

௰௨ ஏனெனில் நீஙகள திவிரிததுபபுறபபடுவதிலலை, நீஙகள ஓடிபபோகிறவர்களாய நடபபதுமிலலை, ஏனென்றுற கர்ததர் உஙகளமுனனடபபார், இஸரவேலினபராபரன உஙகளபிற்புறததையுஙகாபபார்.

மேசியாவின தாழ்நத நிலைமையையுமஉயர்நத நிலைமையையும முனனறிவித்தது.

௰௩ இதோ நமமுடைய ஊழியககாரன ஞானமாய நடநதுகொணடு * உயர்ததபபடடு மேன்மையும மகா உனனதமுமாயிருபபார். * பிலிப்பி. ௨, ௬—௰௧.

௰௪ மனுஷனைப்பார்க்கிலும் அவருடைய முகப்பார்வையும் மனுபுத்திரரைப்பார்க்கிலும் அவருடைய ரூபமும் * இத்தனை அந்தக்கேடு அடைந்தபடியினாலே அநேகர் உம்மிடையே பேரில் எப்படிப் பிரமிப்பார்களோ. * ௫௩, ௩.

௰௫ அப்படியே அநேக சாதிகளின்மேலும் * அவர் தெளிப்பார், அவருக்காக இராசாக்கள் தங்கள் வாயை மூடுவார்கள், ஏனெனில் † எவர்களுக்கு விவரிக்கப்படாதிருந்ததோ அவர்கள் காண்பார்கள், எவர்களுக்குக் கேள்விப்படாதிருந்ததோ அவர்கள் உணர்வார்கள். * எபிரே. ௯. ௰௩. ௰௪. ௰௨, ௨௪. ௧. பேதுரு. ௧, ௧. ௨. † ஏசா. ௬௫, ௧. ரோமர். ௰௫, ௨௧.

## ௫௩. அதிகாரம்.

[கிறிஸ்து பாவிகளுக்குப் பதிலாக அனுபவித்த பாடுகளையும் அவைகளின் பிரயோசனத்தையுங் காண்பிக்கிற மேன்மையான தீர்க்கதரிசனம்.]

௧ எங்களாலே கேள்விப்பட்டதை விசுவாசித்தவனார்? கர்த்தருடைய புயம் ஆருக்கு வெளிப்பட்டது? யோவா. ௰௨, ௩௮. ரோமர். ௰, ௰௬.

௨ இளங்கிளையைப்போலேயும் வறண்ட பூமியிலிருந்து துளிர்க்கிற வேரைப்போலேயும் அவனுக்கு முன்பாக எழும்புகிறார், அவருக்கு ரூபமுமில்லை மகத்துவமுமில்லை, நாம் அவரைப் பார்த்தபோது நாம் அவரை இச்சிக்கத்தக்க ரூபம் அவருக்கில்லாதிருந்தது.

௩ * அவர் அசட்டைபண்ணப்பட்டவரும் மனுஷரில் ஈனமானவரும் வேதனைகளுள்ளவரும் பலஈனத்தையறிந்தவருமாயிருந்தார், அவரைவிட்டு முகங்களை மறைத்துக்கொள்ளலாயிற்று, அவர் அசட்டைபண்ணப்பட்டிருந்தார், அவரை எண்ணாதே போனோம். * ௪௯, ௭. ௫௨, ௰௪. சங்கீதம். ௨௨, ௭. ௮. யோவா. ௭, ௪௮.

௪ மெய்யாகவே * நம்முடைய பலஈனங்களையவரெடுத்துக்கொண்டு நம்முடைய நோவுகளைச் சுமந்தார், நாமோவெனில் அவர் பராபரனால் அடிபட்டு ஒடுங்குண்டவராய் வாதிக்கப்பட்டாரென்றெண்ணினோம். மத்தே. ௮, ௰௭.

௫ ஆனால் அவர் * நம்முடைய மீறுதல்களின் நிமித்தியங் காயப்பட்டு நம்முடைய அக்கிரமங்களின் நிமித்தியம் நொறுக்கப்பட்டார், நமக்குச் சமாதானத்தையுண்டுபண்ணும் ஆக்கினையவர்மேலிறங்கிற்று, † அவருடைய தழும்புகளாலே குணமாகிறோம். * ரோமர். ௪, ௨௫. † ௧. பேது. ௨, ௨௪.

௬ நாமெல்லாரும் * ஆடுகளைப்போல வழிதப்பித் திரிந்து அவரவர் பாட்டிலே தன்தன் வழியை நோக்கிப் போனோம், கர்த்தரோவென்றால் † நம்மெல்லாருடைய அக்கிரமத்தையவர்மேல் விழப்பண்ணினார். * ௧. பேது. ௨, ௨௫. † யோவா. ௧, ௨௯. ௨. கொரிந்தர். ௫, ௨௧.

௭ கட்டணங்கேட்கப்பட்டபோது அவரே ஒடுக்கப்பட்டார், ஆனால் * தம்முடைய வாயையவர் திறந்ததில்லை, † அவரொரு ஆட்டுக்குட்டியைப்போல அடிக்கப்படக் கொண்டுபோகப்பட்டு, தன்னை மயிர்கத்தரிக்கிறவனுக்கு முன்பாகச் சத்தமற்றிருக்கிற ஆட்டைப்போலே தம்முடைய வாயைத்திறவாதிருந்தார். * மத். ௨௬, ௬௨. ௬௩. ௨௭, ௰௨. ௰௪. † அப்போ. ௮, ௩௨ ௩௩.

௮ அவர் இடுக்கத்திலும் நியாயத்தீர்ப்பிலுமிருந்தெடுக்கப்பட்டார், அவருடைய ஆயிசையெண்ணுபவனார், ஏனெனில் சீவனுள்ளோருடைய தேசத்திலிருந்து வெட்டிப்போடப்பட்டார், என் சனத்தினுடைய மீறுதலினாலே அவருக்கந்த வாதையுண்டானது. * மத்தே. ௮,

௯ ஆகாதவர்களோடே அவருடைய பிரேதக்குழியை நியமித்தார்கள், ஆனால் ஐசுவரியவானோடே தம்முடைய மரணத்திலிருந்தார், ஏனென்றால் அவர் கொடுமைசெய்ததில்லை * அவர் வாயிலே வஞ்சனையிருந்ததுமில்லை. மத்தேயு. ௨௭, ௫௭—௬௦ ௧. பேதுரு. ௨, ௨௨.

௰ கர்த்தரோவென்றால் அவரை நொறுக்கவிருப்பமாயிருந்து அவரைப் பலட்சயமாக்கினார், அவருடைய ஆத்துமாத்தனைக் குற்றம்போக்கும் பலியாக ஒப்புக்கொடுத்தபின் அவர் * வித்தைக்கண்டு நீடிய நாளாயிருப்பார், கர்த்தருக்கு விருப்பமானது அவர் கையாலவாய்க்கும். * சங்கீ. ௨௨, ௩௧. ௩௨.

௰௧ தமதாத்துமம் வருத்தத்தின் பலனையவர் கண்டு திருத்தியாவார், நம்முடைய ஊழியக்காரனாகிய நீதிபரர் அநேகரைத் தம்மதறிவினாலே நீதிமான்களாக்குவார், ஏனெனில் அவர்களுடைய அக்கிரமங்களையவர் சுமந்துகொள்ளுகிறார்.

௰௨ ஆனபடியினாலே யவர் தம்முடைய ஆத்துமாவை மரணத்திலூற்றிப் * பாதகரிலொருவராக எண்ணப்பட்டு அநேகரானவர்களின் பாவத்தைத் தாமேசுமந்து † பாதகருக்காக வேண்டிக்கொண்டதிக்கிடாக அநேகரையவருக்குப் பங்காகக் கொடுப்போம், பலவான்களையவர் தமக்குக் கொள்ளையாகப் பங்கிட்டுக்கொள்ளுவார். * மாற்கு. ௰௫, ௨௮. லூக். ௨௩, ௩௭. † லூக்கா. ௨௩, ௩௪.

## ௫௪. அதிகாரம்.

[புதுவேற்பாட்டுச்சபையின் விஸ்தாரமான பெருகுதல்.]

பிள்ளைப்பெறாத மலடியே கெம்பீரித்துப்பாடு, கர்ப்பவேதனைப்படாதவளே கெம்பீரமாய் முழங்கிச்சந்தோஷித்திரு, * ஏனெனில் வாழ்க்கைப்பட்டவளுடைய பிள்ளைகளைப்பார்க்கிலும் † அவாந்தரமானவளுடைய பிள்ளைகள் அதிகமென்று கர்த்தர்சொல்லுகிறார். * கலாத். ௪, ௨௭. † யோவா. ௧, ௰௧—௰௩.

௨ உன் கூடாரத்தினிடத்தை விசாலமாக்கு உன்வாசஸ்தலங்களின் திரைகள் விரிவாகட்டும், தடைசெய்யாதே, உன் கயிறுகளை நீளமாக்கி, உன் கூச்சுகளையுறதிப்படுத்து.

௩ ஏனெனில் வலதிடத்துப்புறமாகவும் இடங்கொண்டுபெருகுவாய், உன் வித்தானவர்கள் சாதிகளைச்சுதந்தரித்துக்கொண்டு பாழாய்க்கிடந்தபட்டணங்களைக் குடியேற்றுவிப்பார்கள்.

௪ பயப்படாதே ஏனெனில் நீ வெட்கிப்போவதில்லை, நாணாதே, ஏனெனில் நீ இலச்சையடைவதில்லை, உன் வாலிபத்தின்வெட்கத்தை நீ மறந்து உன் விதவையிருப்பின் நிந்தையை இனி நினையாதிருப்பாய்.

௫ ஏனெனில் உன்னையுண்டாக்கின சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ளவர் * உன்பத்தாவும் சர்வபூமியினுடைய பராபரனென்னப்படப்போகிற இஸ்ரவேலின் பரிசுத்தர் உன்மீட்பருமாயிருக்கிறார். * ஓசே. ௨, ௰௯.

௬ அதெதெனில் தள்ளிவிடப்பட்டவளும் மனம்நொந்தவளுமான இஸ்திரியைப்போலிருக்கிற உன்னைக் கர்த்தர் அழைத்தார், நீ இறக்கணிக்கப்பட்டிருந்தும் இளவயதிஸ்திரியாயிருக்கிறாயென்று உன் பராபரன்சொல்லுகிறார்.

௭ கொஞ்ச நிமிஷம் உன்னைக் கைவிட்டோம், ஆனால் மகா உருக்கவிரக்கங்களால் உன்னைச்சேர்ப்போம். * சங்கீ. ௩௰, ௫.

௮ கொஞ்சப்போதான கோபத்தினாலே நம்முடைய முகத்தையொருநிமிஷம் உனக்குமறைத்தோம், ஆனால் நித்திய கிருபையாய் உனக்கிரங்குவோமென்று கர்த்தராகிய உன்மீட்பர்சொல்லுகிறார்.

௯ ஏனென்றால் இது நமக்கு நோவாவின் சலங்களைப்போலிருக்கும் நோவாவின்சலங்கள் இனிப்பூமியின்மேலேபுரளுவதில்லையென்று நாம் * ஆணையிட்டதுபோலே உன்மேல் நாங்கோபமாவதில்லையென்றும் உன்னை நாம் உதம்புவதில்லையென்றும் ஆணையிட்டோம். * ௧. மோசே. ௯, ௰௧. எபிரேயர். ௬, ௰௭.

௰ ஏனெனில் பருவதங்கள் விலகிப்போனாலும் மலைகள் சாய்ந்தாலும் * நம்முடைய கிருபை உன்னை விட்டு விலகாமலும் நம்முடைய சமாதானத்தின் உடம்படிக்கை சாயாமலுமிருக்குமென்று உன்மேல் மனதுருகிற கர்த்தர்சொல்லுகிறார். * சங்கீ. ௮௯, ௰௭. ௰௮.

௰௧ சிறுமையானவளே பிசல்களில் அடிபட்டவளே தேற்றரவற்றவளே இதோ * நான் உன்கல்லுகளை மினுக்காக வைத்து நீலக்கல்லுகளை உன் அஸ்திபாரமாக்கி,
* அறிவி. ௨௧, ௰௯.

௰௨ உன் பலகணிகளைப் பளிங்கும் உன் வாசல்களை மாணிக்கக்கல்லுகளும் உன்னெல்லைகளையெல்லாம் உச்சிதமான கல்லுகளுமாக்குவோம்.

௰௩ * உன்பிள்ளைகளெல்லாங் கர்த்தராலே போதிக்கப்பட்டிருப்பார்கள், உன்பிள்ளைகளுடைய † சமாதானம் பெருத்திருக்கும் * யோவா. ௬, ௪௫ † ரோமர். ௫, ௧.

௰௪ நீதியினாலே திடப்படுவாய், இடுக்கத்துக்கு நீங்கலாகு, ஏனெனில் பயப்படாதிருப்பாய், கலங்கலுக்குத் தூரமாகு, ஏனெனில் அது உன்னையணுகுவதில்லை.

௰௫ இதோ உன்மேலேகூட்டங்கூடினால் அது நம்மாலே கூடுகிற கூட்டமல்ல, எவர்கள் உனக்குவிரோதமாய்க்கூடுகிறார்களோ அவர்கள் உன்னிமித்தமாக விழுவார்கள்.

௰௬ இதோ கரிநெருப்பையூதித்தன் கிரியைக்கான ஆயுதத்தையுண்டுபண்ணுகிற கொல்லனையும் நாமே சிருஷ்டித்தோம், அதைக்கெடுத்து நிர்க்கிரகமாக்குகிறவனையும் நாமே சிருஷ்டித்தோம்.

௰௭ உனக்குவிரோதமாயுருவாக்கப்படும் ஆயுதமெல்லாம் வாய்க்காதேபோம், உனக்கு விரோதமாய் நியாயத்தில் எழும்பும் எந்தநாவையும் நீ குற்றப்படுத்துவாய், இது கர்த்தருடைய ஊழியக்காரரின் சுதந்தரமும் நம்மாலுண்டான அவர்களுடைய நீதியுமாயிருக்கிறதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௫௫. அதிகாரம்.

[எல்லாச்சாதிகளையும் மேசியாவின் இராச்சியத்துக்குவரவழைக்குதல்.]

ஓய், * தாகமாயிருக்கிற நீங்களெல்லாருந் தண்ணீர்களண்டைக்கு வாருங்கள், பணமில்லாதவர்களே, நீங்கள்வந்து கொண்டுசாப்பிடுங்கள், நீங்கள்வந்து பணமின்றி விலையுமின்றித் திராட்சப்பழ இரசமும் பாலுங்கொள்ளுங்கள் * யோவா. ௭, ௩௭. அறிவி. ௨௨, ௰௭.

௨ நீங்கள் அப்பமில்லாததிலே பணத்தையுந்திருத்தியாகாததிலே உங்கள் பிரயாசத்தையுஞ் செலவழிப்பானேன், நீங்கள்

நமககுசசெவிகொடுககவேகொடுதது நல மானதைசசாபபிடுஙகள, அபபோது* உஙகள ஆததுமாக்கொழுபபானதிருபதியிலமகி ழ்சசியாயிருககும. * மலகி. ௪, ௨.

௩ உஙகள செவியைசசாயததுநமமண்டைககுவாருஙகள, கேளுஙகள, அபபோது உஙகள ஆததுமாப்பிழைககும, ஏனெனில் * தாவீதின நிசசயமான கிருபைகளையுஙகளுககுநிததிய உடனபடிசசையாய உடனபடிக்கைபணணுவோம. * ௨. சாமு. ௭, ௰௨. சஙகீ. ௮௯, ௪—௫ அப. ௰௩, ௩௪

௪ இதோ அவரைசசனககூட்டஙகளுககுசசாட்சியாகவுஞ சனசதளஙகளுககுத தலைவராகவும் அதிகாரியாகவும கொடுததோம.

௫ இதோ நீயறியாதிருநத சாதியைவரவழைபபாய, உன்னையறியாதிருநத சாதி உன பராபரனுமாகிய கர்ததரின் நிமிததியமும இஸரவேலுடைய பரிசுததரின நிமிததியமும உனனணடைககு ஓடிவரும, ஏனெனில, உன்னைமேனமைபபடுததினூர்.

௬ கர்ததர் கணடுபிடிககையில அவரைததேடுஙகள, அவர் சமீபமாயிருககையில அவரைநோககிக கூபபிடுஙகள.

௭ * ஆகாதவன தனவழியையும அககிரமககாரன தனனினைவுகளையுமவிட்டுககர்ததரணடைககு மனநதிருமபககடவான, அபபோது அவனமேல மனதுருகுவார், நமமுடைய பராபரனணடைககே மனநதிருமபககடவான, ஏனெனில † அவர்மனனிககிறதறகுத தயவுபெருததிருககிறூர்.

* ஏசாயா. ௰அ, ௩௰. ௩௩, ௩௩, ௰௧.
† சஙகீ. ௱௩௰, ௪.

௮ ஏனெனில் நமமுடைய நினைவுகள உஙகள நினைவுகளலல உஙகள வழிகள நமமுடையவழிகளுமலல வெனறு கர்ததர்சொலலுகிறூர்.

௯ ஏனெனறூல் பூமியைபபார்கக வானஙகளெபபடியுயர்நதிருககிறதோ, அபபடியுஙகளவழிகளைபபார்கக நமமுடையவழிகளும் உஙகள நினைவுகளைபபார்கக நமமுடைய நினைவுகளும உயர்நதிருககும்.

௰ அதேதெனறூல் மாரியும உறைநதமழையும வானததிலிருநதிறஙகி, அவவிடததுககுததிருமபாமல், பூமியையேநனைதது, அதைமுளைகிளமபவும் விளையவும பணணி, விதைககிறவனுககு விதையையுஞ சாபபிடுகிறவனுககு ஆகாரததையுமெபபடிககொடுககிறதோ,

௧௧ அபபடி நமமுடைய வாயிலிருநதுபுறபபடுமவசனமுமிருககும, அதுவெறுமையாய நமமணடைககுததிருமபாமல, அது நாமவிருமபுகிறதைசசெயது, நாம அதைய னுபபினகாரியமாகுமபடியாகவாயககும.

௧௨ அதேதெனில் நீஙகள மகிழ்சசியாய்பபுறபபடடுசசமாதானமாயக கொணடுபோகபபடுவீர்கள பருவதஙகளும மேடுகளும உஙகளுககு முனபாகக கெமபீரமாய முழஙகிவெளியின மரஙகளெலலாஙகைகொடடும.

௧௩ முளளுசசெடிககுபபதிலாகத தேவதாரிவிருட்சமமுளைககும, காஞசொறிககுபபதிலாக மிறுதுசசெடியெழுமபும, அதுக ர்ததருககுக கீர்ததியாகவும நிததியமாகா ததநிததிய அடையாளமாகவுமிருககும.

## ௫௬. அதிகாரம்.

[மெயயானதேவபததிககேவுகிறபுததி.]

கர்த்தர்சொலலுகிறதாவது, நீஙகள நியாயததைககைககொணடு, நீதியைசசெயயுஙகள, ஏனெனில் நமமுடைய இரட்சிபபுவரவும நமமுடைய நீதிவெளிபபடவுஞ சமீபிததிருககிறது.

௨ இபபடிசசெயகிறமனுஷனும இதைபபறறிககொணடிருநது ஓயவுநாளைபபரிசுததககுலைசசலாககாதபடிக்குக்காததுஒருபொலலாபபையுஞசெய்யாதபடிககுததனகையைககாததுககொணடிருககிற மனுபுததிரனும பாககியவான.

௩ கர்ததரைசசேர்நத அனனியபுததிரனு கர்ததரெனனைத தமமுடையசனததைவிடடுபபிரிககவேபிரிததுபபோடுவாரெனறுசொலலாருக, அணணகனுமதோநானபட்டமரமெனறுசொலலாருக.

௪ ஏனெனில் நமமுடைய ஓய்வுநாள்களைககாதது நமககிரமியமாயிருககிறதைத் தெரிநதுகொணடு நமமுடைய உடனபடிககையைபபிடிததிருககிற அணணகர்களைக குறிததுக கர்ததர்சொலலுகிறதாவது,

௫ நாஙகுமாரரைபபார்ககிலும குமாரததிகளைபபார்ககிலும அவர்களுககு நமமுடையவீட்டிலும நமமுடையமதிலகளுக்குளளும நலல இடததையுஙகீர்ததியையுங் கட்டளையிடுவோம, அழிநதுபோகாதிருககும நிததியகீர்ததியை அபபடிககொததவனுக்குக்கட்டளையிடுவோம.

௬ கர்ததரைசசேவிககவுஙகர்ததருடைய நாமததைச சிநேகிக்கவும அவருககூழியககாரராயிருககவும அவரைச சேர்நது ஓய்வுநாளைப பரிசுததககுலைசசலாககாதபடிக்குக்காதது நமமுடைய உடனபடிக்கையைபபிடிததிருககிற அனனியபுததிரரெனவரையும,

௭ நாம் * நமமுடைய பரிசுததபருவதத்துக்குக்கொணடுவநது அவர்களை நமமுடைய செபவீட்டிலே மகிழபபணணுவோம, அவர்களுடைய சர்வாஙகதகனஙகளும அவர்களுடையபலிகளும் நமமுடையபலிபீடததினமேல அஙகீகரிககபபடு

ருக்கும், ஏனெனில் † நம்முடைய வீடு சகல சனங்களுக்குமான செபத்தின் வீடென்னப்படும். * எபி. யஉ, உஉ—உச.

† க. இரா. அ. சக—சங. மத்தே. உக, யங. மாற்கு. யக, யஎ. லூக்கா. யகூ, சகூ.

அ இஸ்ரவேல்சனத்தில் தள்ளுண்டவர்களைச்சேர்க்கிற கர்த்தராகிய ஆண்டவர் அதிலே சேர்க்கப்பட்டவர்களையல்லாமல் இன்னம் நாம் அதனோடே சேர்ப்போமென்கிறார்.

பூமிக்கடுத்த சிந்தையான போதகரைக் கண்டித்தது.

கூ காட்டிலேயிருக்கிற சகல மிருகங்களே சகல காட்டுமிருகங்களே, பட்சிப்பதற்கு வாருங்கள்.

ய அதின் சாமக்காரரெல்லாரும் ஒன்றும் அறியாத குருடர், அவர்களெல்லாரும் குலைக்கமாட்டாத ஊமையான நாய்கள், அவர்கள் தூக்கக்கலக்கமாகிப் பேச்சயர்ந்திருந்து உறக்கத்தைச் சிநேகிக்கிறவர்கள்.

யக அவர்கள் திருப்தியடைய அறியாத வலு ஆசையுள்ள நாய்களும் அவர்கள் உணரவறியாத மேய்ப்பருந்தானே, அவர்களெல்லாருந் தங்கள் தங்கள் வழியையும் அவரவர் தன் தன் மூலையிலிருந்து * தன் தன் பொழிவையுந் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

* எரேமியா. சூ, யங. யச.

யஉ வாருங்கள் மதுபானத்தைக் கொண்டு வருவேன் வெறிக்குடிப்போம் * நாளை தினம் இன்றைத்தினம் போலவும் இன்னம் மகா அதிகமாகவுமிருக்குமென்பார்கள்.

* வாக்கியம். உங, ஙரு.

# ருஎ. அதிகாரம்.

[கன் கண்டிப்பும் மகா ஆறுதலுமான பிரசங்கம்.]

நீதிமான் மடிந்துபோகிறான், ஆனால் ஒருவரும் அதை மனதிலே வைக்கிறதில்லை, சன்மார்க்கர் எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள், ஆனால் தீங்கு வராததுக்கு முன்னே நீதிமான் எடுத்துக்கொள்ளப்படுகிறானென்பதைச் சிந்திப்பாரில்லை. * மீகா. உ, உ.

உ நேராய் நடந்தவர்கள் சமாதானத்துக்குட்பிரவேசித்துத் தங்கள் படுக்கைகளில் இளைப்பாறுகிறார்கள்.

ங ஆனால் நாள் பார்க்கிறவளின் பிள்ளைகளே விபசாரனுக்கும் வேசிக்கும் வித்தானவர்களே, நீங்களிங்கே கிட்டிவாருங்கள்.

ச ஆர்மேலே சிமாளிக்கிறீர்கள், ஆர்மேல் வாயை விஸ்தாரமாய்த் திறந்து நாக்கை நீளவிடுகிறீர்கள், நீங்கள் துரோகப்பிள்ளைகளும் கள்ளத்தனவித்தாருமல்லவோ.

ரு நீங்கள் * பச்சையான சகல மரத்தின் கீழும் விக்கிரகதேவர்களோடே மோகாக்கினியால் வெந்து பள்ளத்தாக்குகளிலே பிள்ளைகளைக் கன்மலைவெடிப்புகளின் கீழ்க் கொன்றுபோடுகிறவர்கள். * எரே. உ, உச. ங, யங.

சா பள்ளத்தாக்குகளிலுள்ள மெருகான சிலைகளிடத்தில் உன் பங்கிருக்கிறது, அவைகள் அவைகளே உன்னுடைய வீதம், அவைகளுக்கு நீ பானபலியையும் ஊற்றிக் காணிக்கையையுஞ் செலுத்துகிறாய், இவைகளின் மேல் பிரியப்படுவோமோ.

எ நீ மேட்டிமையும் உயரமுமான பருவதங்களின் மேல் உன் மஞ்சத்தை வைக்கிறாய், அங்கேயும் பலியிட ஏறுகிறாய்.

அ கதவுகளுக்கும் நிலைகளுக்கும் பின்னுக்கு உன் ஞாபகக்குறிகளை வைக்கிறாய், ஏனெனில் நீ நம்மைவிட்டு வேறே பேர்களுக்குத் திறப்பாக்கியேற உன் மஞ்சத்தையகலமாக்கி அவர்களோடே உடன்படிக்கையாகிறாய், அவர்களுடைய மஞ்சத்தைக் காண்கிற எல்லாவிடத்திலும் அதைச் சிநேகிக்கிறாய்.

கூ நீ இராசாவுக்குக் காணிக்கையாக எண்ணெய்யைக் கொண்டுபோகிறாய், உன் பரிமளதயிலங்களைச் சிறப்பாக்கி உன் தானாபதிகளைத் தூரத்துக்கு அனுப்பி உன்னைப் பாதாளமட்டுந் தாழ்த்துகிறாய்.

ய உன் மார்க்கத்தின் விஸ்தாரத்திலுழன்று திரிகிறாய், அது விருதாவென்று நீ சொல்லுகிறதில்லை, உன் கைக்கான பிழைப்பைக் கண்டுபிடித்தாய் ஆகையால் நீ வேசாறப்படுகிறதில்லை.

யக நீ யாருக்கு ஐயமும் பயமுமாயிருக்கிறாய், நீ பொய் சொல்லுகிறாய், நீ நம்மை நினையாமலும் உன் மனதிலே வைக்காமலும் போகிறாய். நாம் வெகுகாலமவுனமாய் மவுனமாயிருந்தோமல்லவோ, ஆகையால் நமக்குப் பயப்படாதே போகிறாய்.

யஉ உனக்குச் சவாதிருக்கும் உன் நீதியையும் உன் கிரியைகளையும் நாம் வெளிப்படுத்துவோம்.

யங நீ கூப்பிடும்பொழுது உன் கூட்டங்கள் உன்னைத் தப்புவிக்கட்டும், ஆனால் காற்று அவைகளையெல்லாம் பறக்கடித்து மாயை அவைகளைக் கொண்டுபோம். * நம்மை நம்பியிருக்கிறவனோ தேசத்தைச் சுதந்தரித்து நம்முடைய பரிசுத்த பருவதத்திலே காணியாட்சிக்காரனாயிருப்பான்.

யச வழியையுயர்த்தி உயர்த்தி அதைச் செவ்வைப்படுத்தி இடறல்களை நம்முடைய சனத்தின் வழியிலிருந்தெடுத்துப்போடுங்களென்னப்படும். * சூஉ, யக.

யரு ஏனெனில் * நித்தியவாசகரும் பரிசுத்தரென்று நாமமுள்ளவருமாகிய † உய

ரமும உனனதமுமானவர் சொலலுகிறதாவது, பணிநதவர்களின் ஆவியையுயிர்பபிக்கவும, நருங்குணடவர்களின இருதயததை யுயிர்பபிககவும நாமேயுன்னதத்திலும பரிசுத்தஸ்தலததிலும, நருஙகுணட பணிநத ஆவியுள்ளவர்களிடததிலும வாசமபணணுகிறேம். * கூகூ, க. உ. † சஙகீ. ாரு,
ரு. ம்

யகூ ஏனெனறால் * நாளுசதாகாலமாய் வழககாடுவதிலலே, நாமெனறெனறைககுங கோபமாயிருபபதுமிலலே, அதேதெனில் ஆவியும நாம உணடுபணணின ஆததுமாக்களும் நமமுடைய முகததுககு முனபாகத் தொய்நதுபோவதாயிருககும.
* சஙகீதம். ாக, கூ.

யஎ நாம அவர்கள பொருளாசையினுடைய அககிரமததின நிமிததியஙகடுஙகோபமாகி அவர்களையடிததோம, நாம் மறைநது கடுஙகோபமாயிருநதோம, ஆனால் தஙகளமனமபோகிறபோககிலே மாறுபாடாய் நடநதார்கள். * ருகூ, அஙி. உ.

யஅ அவர்களவழிகளை நாம்பார்தது அவர்களைககுணமாககுவோம, அவர்களை நடததியவர்களுககுததிரும்ப ஆறுதல்களையளிப்போம, அவர்களிலே துககபபடுகிறவர்களுக்குத்தானே.

யகூ * சமாதானஞ சமாதானமெனறு தூரமாயிருககிறவர்களுககுஞ சமீபமாயிருககிறவர்களுககுங கூறும உதடுகளின்பலனைச்சிருஷ்டிககிறேம, அவர்களைக்குணமாககுவோமெனறு கர்ததர்சொலலுகிறர்.
ருஉ, எ.

உய ஆகாதவர்களோ கொநதளிபபான கடலைபபோலிருககிறர்கள, ஏனெனறால் அது அமர்நதிருக்கககூடாமல் அதினசலஙகளசேறறையும அழுக்கையுங கரையிலொதுககுகிறது.

உக ஆகாதவர்களுககுச்சமாதானமிலலையெனறு எனபராபரனசொலலுகிறர்.
* சஅ, உஉ.

## ருஅ. அதிகாரம்.

[பராபரனுககுபபிரியமான உபவாசததுககும ஓய்வுநாளின ஆசரிபபுககுமான புததி.]

அடக்கிக்கொள்ளாமலே சத்தமாய்க் கூபபிடு, நீயுன்சத்தத்தை எககாளததைப் போலுயர்ததி, நமமுடைய சனததுககு அவர்களமீறுதலையுமயாககோபினவீட்டாருககு அவர்களபாவஙகளையும அறிவி.

உ அவர்களோவெனறால் நீதியைசசெய்து வருகிறதுந தஙகள பராபரனுடைய நியாயததைவிடாததுமானசாதியைபபோல நமமைததனநதினநதிதேடி நமமுடைய வழிகளையறியவிருமபி நாஙகள உபவாசமபணணககொளள நீர் அதைபபாராமலும நாஙகளெஙகளாததுமாககளையொடுக்கச்கொளள நீர் அதையறியாமலுமபோகிறதேதெனறு நமமிடததிலே நீதி நியாயததைக கேடடுப்பராபரனிடடிசசேரவேணுமெனறு விருமபுகிறர்கள.

ஙு இதோ நீஙகளுபவாசிககுமநாளிலே இசசைக்கானதைக்கணடுபிடிதது உஙகள கடன்களையெல்லாநதணடுகிறீர்கள.

ச இதோ வழக்குக்குமவாதுககுமஆகாமியமானகுடடுதலுககுமாக உபவாசிக்கிறீர்கள, நீஙகள உஙகள கூக்குரலையுயரததிலேகேட்கபபணணுமபடியாய் இநநாளில் உபவாசிககுமாபபோலே உபவாசியாதிருபபீர்களாக.

ரு மனுஷன ஒருநாள்தனனாததுமாவையொடுககுகிறதுந * தன்தலையை நாணலைப்போல மடககி இரட்டையுஞசாமபலையுங கீழேபோடடுககொளளுகிறதும † நாந தெரிநதுகொளளும உபவாசமாயிருக்குமோ அதைத்தான் உபவாசமுங கர்ததருககுபபொருநதிய நாளுமெனபாயோ.
* மதமேத. கூ, யகூ. † சகரி. எ, ரு.

கூ நீ ஆகாமியததின கடடுகளையவிழ்தது நுகததடியின பிணையல்களை நிகழ்ததிநெரிசலாயிருககிறவர்க விடுதலையாக அனுபபிச் சகலநுகததடியையும உடைததுப போடடு,

எ * பசியுளளவனுக்குன்னபபததைப் பிடடுககொடுததுத துரததுணட சிறுமையானவர்களை வீடடிலேசேர்ததுககொணடு அம்மணமானவனைக்கணடாயானால் அவனுககு வஸ்திரஙகொடுதது உன்மாமிசமானவனுககுஉனனையொளிககாமலிருததால் அதுவலலோ நாநதெரிநதுகொளளுகிற உபவாசம. * ஏசேக். யஅ, எ. மதமே.
உரு, ஙரு.

அ அபபோது உன்வெளிசசம விடியற்காலவெளுப்பைப்போலெழுமபி உனசுணமாகுதல சீககிரமாய்த்துளிர்தது உன நீதி உனமுன்னடககும, கர்ததருடையமகிமை உன்பிற்புறததைக்காக்கும.

கூ அபபோது கூபபிடுவாய் கர்ததர்மறுவுததரவுகொடுபபார் சததமிடுவாய் இதோ நாமிருககிறேமெனறுஞ சொலலுவார். நீ நுகததடியையும விரல நீடடுதலையும தீயசசொலலையும உன்நடுவிலிருநதகற்றி,

ய பசியுளளவனண்டைககு உன ஆததுமாவைச்சாய்ததுசசிறுமைப்பட்ட ஆததுமாவைததிருததியாககினல அபபோது * உன்வெளிசசம இருளிலுதிததது உன அநதகாரம மததியானததைபபோலாகும.
* சஙகீ. ாயஉ, ச.

௰௧ அப்போது கர்த்தர் உன்னை நித்தம் நடத்தி மகா வறட்சியான காலங்களில் உன் ஆத்துமாவைத் திருப்தியாக்கி உன் எலும்புகளைப் புஷ்டியாக்குவார், நீ நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப்போலேயும் ஜலங்கள் வற்றாத நீரூற்றைப்போலேயும் இருப்பாய்.

௰௨ * சதாகாலம் பாழாய்க்கிடந்த ஸ்தலங்களை உன்னைத் தொடர்ந்தவர்கள் கட்டுவார்கள், தலைமுறை தலைமுறையாக இருக்கும் அஸ்திபாரங்களைப் போட்டெழுப்புவாய், திறப்பானதை அடைக்கிறவனென்றும் குடியிருக்கும்படியாகப் பாதைகளைத் திருத்துகிறவனென்றும் நீ அழைக்கப்படுவாய். * ௬௧, ௪.

௰௩ நீ நம்முடைய பரிசுத்த நாளிலே உன் இச்சையானதைச் செய்யாதபடிக்கு உன் காலை ஓய்வுநாளுக்கு விலக்கி, ஓய்வுநாளை மனமகிழ்ச்சியென்றும் கர்த்தருடைய பரிசுத்த நாளை மகிமையுள்ள நாளென்றும் சொல்லி உன் வழிகளின்படி செய்யாமலும் உன் இச்சையானதைக் கண்டுபிடிக்காமலும் உன் பேச்சைப் பேசாமலும் அதை மகிமையாக எண்ணினாயானால்,

௰௪ அப்போது கர்த்தரின்பேரிலே மனமகிழ்ச்சியாயிருப்பாய், நாம் பூமியினுடைய உயரங்களின்மேல் உன்னையேறிப்போகவும் பண்ணி உன் தகப்பனாகிய யாக்கோபுடைய சுதந்தரத்தால் உன்னைப் போஷிப்போம், ஏனெனில் கர்த்தருடைய வாய் அதைச் சொல்லிற்று.

## ௫௯. அதிகாரம்.

[பூதரைச் சுறுக்காய்க் கடிந்துகொண்டபிரசங்கமும் தங்கள் பாவங்களையுணர்ந்து அறிக்கையிடுகிறவர்களுக்குப் பராபரனுண்டான கிருபையுள்ள வாக்குத்தத்தமும்.]

இதோ இரட்சிக்கக்கூடாதபடிக்குக் கர்த்தருடைய கை குறுகிப்போனதில்லை, கேட்கக்கூடாதபடிக்கு அவருடைய செவி மந்தமானதுமில்லை. * ௪௰, ௨. ௪. மோசே. ௰௧, ௨௩.

௨ உங்கள் அக்கிரமங்களே உங்களுக்கும் உங்கள் பராபரனுக்கும் நடுவாகப் பிரிவினையுண்டாக்குகிறது உங்களைக் கேளாதபடிக்கு உங்கள் பாவங்களே * அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கிறது. * மிகா. ௩, ௪.

௩ ஏனென்றால் * உங்கள் கைகள் இரத்தத்தாலும், உங்கள் விரல்கள் அக்கிரமத்தாலுங் கறைப்பட்டிருக்கிறது, உங்கள் உதடுகள் பொய்யைப்பேசி உங்கள் நாவு நியாயக்கேட்டை வசனிக்கிறது. * ௧, ௰௫.

௪ நீதிக்காகக் கூப்பிடுகிறவனுமில்லை சத்தியத்துக்காக நியாயஞ்சொல்லுகிறவனுமில்லை, மாய்கையை நம்பி அவத்தமானதைப் பேசுகிறார்கள், * தீவினையைக் கர்ப்பந்தரித்து அக்கிரமத்தைப் பெறுகிறார்கள். * சங்கீ. ௭, ௰௫.

௫ கட்டுவிரியனின் முட்டைகளை அடைகாத்துச் சிலந்தியின் நெசவுகளை நெய்கிறார்கள், அவர்களுடைய முட்டைகளைச் சாப்பிடுகிறவன் சாவான், அவைகள் நெரிக்கப்பட்டதேயானால் விரியன் புறப்படும்.

௬ அவர்கள் நெசவுகள் உடுப்புகளான தில்லத்தங்கள் கிரியைகளாலே தங்களை மூடமாட்டார்கள், அவர்கள் கிரியைகள் அக்கிரமக்கிரியைகளானவை, கொடுமையின் செய்கை அவர்கள் கைகளிலிருக்கிறது.

௭ * அவர்கள் கால்கள் பொல்லாப்புக்கோடி குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தத் தீவிரிக்கிறது, அவர்கள் நினைவுகள் அக்கிரம நினைவுகளானவை, பாழ்க்கடிப்பும் அழிவும் அவர்கள் வழிகளிலிருக்கிறது. * ரோமர். ௩, ௰௫.

௮ சமாதானத்தின் வழியை அறியார்கள், அவர்கள் நடைகளில் நியாயமில்லை, தங்கள் பாதைகளைத் தங்களுக்குக் கோணலாக்கினார்கள், அவைகளில் நடக்கிற ஒருவனும் சமாதானத்தை அறியான்.

௯ ஆனபடியால் நியாயம் எங்களுக்குத் தூரமாயிருக்கிறது, நீதி எங்களைத் தொடர்ந்துபிடிக்காது, வெளிச்சத்துக்குக் காத்திருந்தோம் ஆனால் இதோ இருள். பிரகாசத்துக்குக் காத்திருந்தோம் ஆனால் அந்தகாரத்திலே நடக்கிறோம்.

௰ * நாங்கள் குருடரைப்போலே சுவரைப்பிடித்துக் கண்ணில்லாதவர்களைப்போலே தடவுகிறோம், இராவிருளில் இடறுகிறதுபோலே மத்தியானத்திலே இடறுகிறோம், செத்தவர்களைப்போலே பாழ்த்தலங்களிலிருக்கிறோம். * ௫. மோசே. ௨௮, ௨௯.

௰௧ நாங்களனைவரும் கரடிகளைப்போலே உறுமி, * புறாக்களைப்போலே கூவிக்கொண்டேயிருக்கிறோம், நியாயத்துக்குக் காத்திருந்தோம் அதைக் காணோம், இரட்சிப்புக்குக் காத்திருந்தோம் அது எங்களுக்குத் தூரமானது. * ௩௮, ௰௪. எசேக். ௭, ௰௬.

௰௨ ஏனெனில் எங்கள் மீறுதல்கள் உமக்குமுன்பாகமித்தியாயிருந்து எங்கள் பாவங்கள் எங்களுக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகிறது, ஏனெனில் எங்கள் மீறுதல்கள் எங்களுடனேயிருக்கிறது, எங்கள் அக்கிரமங்களை அறிந்திருக்கிறோம்.

௰௩ கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணுகிறதும் பொய் சொல்லுகிறதும் எங்கள் பராபரனை விட்டுப் பின்வாங்குகிறதும் ஒடுக்குதலாகவும் கலகமாகவும் பேசுகிறதும் கள்ள வார்த்தைகளைக் கர்ப்பந்தரித்து இரு

தயத்திலிருந்து புறப்பட்டப்பண்ணுகிறது முண்டே.

௰௪ நியாயம் பின்னிட்டு அகன்றது, நீதி தூரமாக நிற்கிறது. ஏனெனில் சத்தியம் வீதியிலே இடறி நிதானம் வந்து சேரமாட்டாதே போகிறது.

௰௫ சத்தியம் தள்ளுபடியானது, பொல்லாப்பை விட்டு விலகுகிறவன் கொள்ளையாகிறான். இதைக் கர்த்தர் பார்த்து நியாயமில்லையென்று விசனப்பார்வையாகி,

௰௬ ஒருவருமில்லையென்று கண்டு, விண்ணப்பம் பண்ணுகிறவனில்லையென்று ஆச்சரியப்படுகிறார், ஆனதுகொண்டு * அவருடைய புயமே அவருக்கு இரட்சிப்பாகி அவருடைய நீதியே அவரைத் தாங்கும்.

* ௬௩, அதி. ௫.

௰௭ * அவர் நீதியை மார்க்கவசமாக அணிந்து இரட்சிப்பின் தலைச்சோட்டைத் தம் சிரசில் வைத்து நீதிசரிக்கட்டுதலின் வஸ்திரங்களை உடுப்பாக உடுத்து, எரிச்சலைச் சால்வையாகப் போர்த்துக் கொள்ளுகிறார்.

௰௮ கிரியைகளுக்கேற்படித் தக்கமோ, அப்படியே அவர் தம்முடைய சத்துருக்களுக்கு உக்கிரத்தைச் சரிக்கட்டித் தம்முடைய பகைஞருக்குத் தக்கதையும் தீவுகளுக்குத் தக்கதையுஞ் சரிக்கட்டுவார்.

௰௯ அப்போது அஸ்தமிக்குந் திசை துவக்கிக் கர்த்தரின் நாமத்துக்கும் சூரியனுதிக்குந் திசை துவக்கி அவருடைய மகிமைக்கும் பயப்படுவார்கள், வெள்ளப்பிரளயமாய்ச் சத்துரு வரும்போது கர்த்தருடைய ஆவி அவனுக்கு விரோதமாகக் கொடியையேற்றுவார்.

௨௰ சீயோனுக்கும் யாக்கோபிலே தங்கள் மீறுதலை விட்டுத் திரும்புகிறவர்களுக்கும் மீட்கிறவர் வருவாரென்று கர்த்தர் சொல்லுகிறார். * ரோமர். ௰௧, ௨௬.

௨௧ உம்முடையமேலிருக்கிற நம்முடைய ஆவியும் நாம் உம்முடைய வாயிலே வைத்த நம்முடைய வார்த்தைகளும் இதுமுதலாய் என்றென்றைக்கும் உம்முடைய வாயையும் உம்முடைய சந்ததியின் வாயையும் உம்முடைய சந்ததியினுடைய சந்ததியின் வாயையும் விட்டுப்பிரிவதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார் இது நமக்கு அவர்களோடிருக்கும் நம்முடைய உடன்படிக்கையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௬௰. அதிகாரம்.

[யூதர்களிலும் புறச்சாதிகளிலும் விசுவாசிகளாகப் போகிறவர்களின் மகிமையுள்ள சீர்.]

௧ நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம் வருகிறது, கர்த்தருடைய மகிமையுன்மேலே உதிக்கிறது. * ௫௨, ௧.

௨ ஏனெனில் இதோ இருள் பூமியையும் அந்தகாரஞ் சனசதளங்களையும் மூடும், ஆனால் உன்மேலே கர்த்தர் உதிக்கிறார், உன்மேலே அவருடைய மகிமை காணப்படும்.

௩ உன் வெளிச்சத்தண்டைக்குச் சாதிசனங்களும் உனக்கு உதிக்கிற ஒளியண்டைக்கு இராசாக்களும் நடந்துவருவார்கள்.

* ௪௯, ௬. அதி. ௨௧, ௨௪.

௪ சுற்றிலும் உன் கண்களையேறெடுத்துப் பார், இவர்களெல்லாருங் கூட்டப்பட்டு வருகிறார்கள், உன் குமாரர் தூரத்திலிருந்து வந்து உன் குமாரத்திகள் உன் பக்கத்திலே வளர்க்கப்படுவார்கள். * ௪௯, ௰௮.

௫ அப்போது நீ அதைக் கண்டு ஓடிவருவாய். உன் இருதயம் அதிசயப்பட்டு விரிவாகும். ஏனெனில் கடற்கரையின் திரளானதும் உன் வசமாகத் திரும்பி சாதிகளின் பலத்த சேனையுன்னண்டைக்கு வரும்.

௬ ஒட்டகங்களின் ஏராளமும் மீதியான் ஏப்பாத்தேசங்களின் வேகமான ஒட்டைகளும் உன்னை மூடும், * சேபாவிலிருந்து இவை வரும் வந்து பொன்னையுந் தூபவர்க்கத்தையுங் கொண்டுவந்து கர்த்தரின் துதிகளைச் சுவிசேஷமாய்ச் சொல்லுவார்கள்.

* சங்கீ. ௭௨, ௰.

௭ * கேதாரின் ஆடுகளெல்லாம் உன்னைச் சேர்ந்துகொண்டு நெபாயோத்தின் கடாய்கள் உன்னைச் சேவித்து விருப்பமாக நம்முடைய பலிபீடத்தின் மேலேறும், நம்முடைய மகிமையின் வீட்டை மகிமையாக்குவோம்.

* ௪௨, ௰௧.

௮ மேகங்களைப் போலவுந் தங்கள் பலகணித்துவாரங்களுக்குத் திரிகிற புறாக்களைப் போலவும் பறந்துவருகிற இவர்களார்.

௯ ஏனெனில் தீவுகள் நமக்குக் காத்திருக்கும், அவர் உன்னை மகிமைப்படுத்தினபடியினாலே உன் பிள்ளைகளையும் அவர்களோடேகூட அவர்கள் பொன்னையும் அவர்கள் வெள்ளியையும் உன் பராபரனாகிய கர்த்தரின் நாமத்துக்கென்றும் இஸ்ரவேலுடைய பரிசுத்தருக்கென்றுந் தூரத்திலிருந்துகொண்டுவர முதலே தர்ஷீசின் கப்பல்களும் நமக்குக் காத்திருக்கும்.

௰ அந்நியரின் புத்திரர் உன் மதில்களைக் கட்டி அவர்களுடைய இராசாக்கள் * உன்னைச் சேவிப்பார்கள், ஏனெனில் † நம்முடைய கடுங்கோபத்தினால் உன்னையடித்தோம், ஆனால் நம்முடைய கிருபையினால் உனக்கிரங்குகிறேன். * ௪௯, ௨௩. † ௫௪, ௭. ௮

௰௧ உன்னண்டைக்குச் சாதிகளின் பலத்த சேனையைக் கொண்டுவரும்படிக்கும் அவர்களுடைய இராசாக்கள் அழைத்துவரப்படும்படிக்கும் * உன் வாசல்கள் இரவும் பகலும் பூட்டப்படாமல் திறந்திருக்கும். * அதி. ௨௧, ௨௫.

௰௨ ஏனெனில் உன்னைச் சேவிக்காத சாதியும் இராச்சியமும் அழியும், அப்படிக்கொத்த சாதிகள் பாழாகவே பாழாகும்.

௰௩ நம்முடைய பரிசுத்தஸ்தலத்தின் தானத்தைச் சிங்காரிக்கும்படிக்கு, * லீபனோனின் மகிமையுந் தேவதாரு விருட்சங்களும் பின்னை மரங்களும் புன்னை மரங்களுங் கூட உன்னண்டைக்கு வரும், அப்படி நம்முடைய பாதங்களின் தானத்தை மகிமைப்படுத்துவோம். ௬௫, ௨.

௰௪ உன்னை ஒடுக்கினவர்களின் பிள்ளைகளும் உன்னண்டைக்குக் குனிந்து வந்து உன்னைச் சட்டை பண்ணின யாவரும் உன் உள்ளங்கால்களருகே பணிந்து உன்னைக் கர்த்தருடைய பட்டணமென்றும் இஸ்ரேலுடைய பரிசுத்தரின் சீயோனென்றும் அழைப்பார்கள்.

௰௫ * நீ நெகிழப்பட்டதும் பகைக்கப்பட்டதும், ஒருவரும் கடந்து நடவாத்துமாயிருந்ததற்குப் பதிலாக உன்னை நித்திய முக்கியமாகவுந் தலைமுறை தலைமுறையாகவிருக்கும் மகிழ்ச்சியாகவும் வைப்போம். * ௬௨, அதி. ௰௪.

௰௬ நீ சாதிகளின் பாலையும் உண்டு * இராசாக்களின் முலைப்பாலையும் உண்டு கர்த்தருமியாகோபிலே வல்லவருமாகிய நாமுன் இரட்சகரும் உன் மீட்பருமாயிருக்கிறதை அறிந்துகொள்ளுவாய். * ௪௯, ௨௩.

௰௭ நாம் வெண்கலத்துக்குப் பதிலாகப் பொன்னை வரப்பண்ணி, இரும்புக்குப் பதிலாக வெள்ளியையும் மரங்களுக்குப் பதிலாக வெண்கலத்தையுங் கல்லுகளுக்குப் பதிலாக இரும்பையும் வரப்பண்ணி உன் கண்காணிகளைச் சமாதானமும் உன் தண்டற்காரரை நீதியுமுள்ளவர்களாக்குவோம்.

௰௮ இனிக் கொடுமையுன் தேசத்திலும் அழிம்பும் நொறுக்குதலும் உன்னெல்லைகளிலே கேட்கப்படாது, * உன் மதில்களை இரட்சிப்பும் உன் வாசல்களைத் துதியுமென்றழைப்பாய். * ௨௬, அதி. ௧.

௰௯ * இனிச் சூரியன் உனக்குப் பகலிலே வெளிச்சமாயிராமலும் சந்திரன் தன் வெளிச்சத்தால் உனக்குப் பிரகாசியாமலும் * கர்த்தரே உனக்கு நித்திய வெளிச்சமும் உன் பராபரனே உன்னுடைய அலங்காரமுமாயிருப்பார். * அறிவி. ௨௧, ௨௩.

௨௰ உன் சூரியன் இனியஸ்தமிப்பதுமில்லை உன் சந்திரன் மறைவதுமில்லை, ஏனெனில் கர்த்தரே உனக்கு நித்திய வெளிச்சமாயிருப்பார், உன் துக்க நாள்கள் முடிந்திருக்கும்.

௨௧ உன் சனமெல்லாம் நீதிமான்களும் என்றைக்கும் * பூமியின் சுதந்தரக்குடிகளும் † நாம் நட்ட கிளைகளும் நாம் மகிமைப்படும்படிக்கு நம்முடைய கரங்களின் கிரி-

யையுமாயிருப்பார்கள். * மத்தே. ௫, ௫. † மத்தே. ௰௫, ௰௩.

௨௨ சின்னவன் ஆயிரமும் சிறியவன் பலத்த சாதியுமாவான், கர்த்தராகிய நாம் அதையதின் காலத்திலே தீவிரமாக நடப்பிப்போம்.

## ௬௧. அதிகாரம்.

[மேசியாவினாலே சபைக்குண்டாகும் பாக்கியமான சீரும் மகிழ்ச்சியும்.]

கர்த்தராகிய பராபரனுடைய ஆவி என்மேலிருக்கிறார், * ஏனெனில் † சிறுமையானவர்களுக்குச் சுவிசேஷத்தையறிவிக்கக் கர்த்தர் என்னை அபிஷேகம் பண்ணினார், இருதயம் நருங்குண்டவர்களைக் காயங் கட்டவுஞ் சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையுங் கட்டுண்டவர்களுக்குக் காவல் நீங்குதலையுங் கூறவும், * லூக். ௪, ௰௮—௨௰. † மத்தே. ௫, ௩.

௨ கர்த்தருடைய பிரியத்தின் வருஷத்தையும் நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டும் நாளையுங் கூறவுந் துயரப்பட்ட அனைவரையுந் தேற்றரவு பண்ணவுஞ் சீயோனிலே துயரப்பட்டவர்களைச் சீர்ப்படுத்தவும் அவரென்னை அனுப்பினார்.

௩ அவர்களுக்குச் சாம்பலுக்குப் பதிலாகச் சிங்காரத்தையுந் துயரத்துக்குப் பதிலாகச் சந்தோஷத்தின் எண்ணெய்யையும் ஒடுங்கின ஆவிக்குப் பதிலாகத் துதியினுடையையுங் கொடுப்பதற்கும் அவர்கள் கர்த்தர் தம்முடைய மகிமைக்கென்று நாட்டின நீதியின் விருட்சங்களென்னப்படுவதற்குமாகத்தானே.

௪ * அவர்கள் சதாகாலமாய்ப் பாழாய்க் கிடந்தவைகளைக் கட்டி முந்தி நிர்மூலமானவைகளை எடுப்பித்துத் தலைமுறை தலைமுறையாய் இடிந்து கிடந்த பாழான பட்டணங்களைப் புதிதாய்க் கட்டுவார்கள். * ௫௮, ௰௨.

௫ மறுசாதியார் நின்றுகொண்டு உங்கள் மந்தைகளை மேய்த்து அன்னிய புத்திரர் உங்கள் பண்ணையாள்களும் உங்கள் திராட்சத்தோட்டக்காரருமாயிருப்பார்கள்.

௬ நீங்களோ * கர்த்தரின் ஆசாரியரென்றழைக்கப்படுவீர்கள், உங்களை நமது பராபரனுடைய ஊழியக்காரரென்பார்கள், நீங்கள் சாதிகளின் ஆஸ்தியைப் போசித்து அவர்கள் மகிமையாலே மேன்மை பாராட்டுவீர்கள். * ௧. பேது. ௨, ௯. அறி. ௧, ௬. ௫, ௰.

௭ உங்கள் வெட்கத்துக்குப் பதிலாக இரண்டத்தனையாயவரும், இலச்சைக்குப் பதிலாகத் தங்கள் வீதத்திலே கெம்பீரிப்பார்கள். அதின் நிமித்தியந் தங்கள் தேசத்திலிரட்டிப்பாகச் சுதந்தரிப்பார்கள், நித்திய மகிழ்ச்சி அவர்களுக்குண்டாம்.

அ ஏனெனில கர்த்தராகிய நாமநியாய த்தைச்சிநேகித்துத் தகனபலியிலே கொள்ளையைப்பகைக்கிறவர், நாம அவர்களகிரியையையுண்மையாக்கி அவர்களோடேநித்திய உடனபடிக்கையைப்பண்ணுவோம.

* ருசு, ம. ருரு, ங.

கூ அவர்கள விததுசாதிகளிலும அவர்கள சநதானஙகள சனசதளஙகளின நடுவிலும அறியபபட்டிருக்கும, அவர்களைப்பார்க்கிறயாவரும அவர்களைக கர்த்தர் ஆசிர்வதித்தவிததென்றறிநதுகொளளுவார்கள.

ய கர்த்தருக்குள்பூரிப்பாயமகிழுகிறேன, என பராபரனுக்குளளென ஆத்துமாகக்களிகூர்நதிருக்கிறது, ஏனெனில மணவாளன ஆசாரியனடவாயச்சிஙகாரித்துககொளளுகிறதற்கும மணவாட்டித்தனனாபரணஙகளால் அலங்கரிததுக்கொளளுகிறதற்கும ஒபபாக அவர் * இரட்சிப்பின வஸ்திரஙகளையெனககுஉடுத்தி நீதியினசால்வையையெனககுத்தரிததார். * சங. சரு, ய.

யக ஏனெனில பூமி தனமுளைகளைபபுறபபடப்பணணுமாபபோலேயுந தோட்டந தனனில்விதைககப்பட்டவைகளை முளைப்பிக்குமாபபோலேயுங கர்த்தராகிய ஆணடவர் எலலாசசாதிகளுககு முனபாக நீதியையுந துதியையும முளைகக்பபணணுவார்.

## சுஉ. அதிகாரம்.

[கிறிஸ்துவினுடையசபையினபாககியமும பிரபலியமும.]

சீயோனின்நிமித்தியமும எருசலேமினநிமித்தியமும நாமமவுனபபடாமலுமாகவுஅதினநீதி பிரகாசததைப்போலும அதின இரட்சிப்புஎரிகிற திவட்டியைப்போலுமவெளிப்படுமட்டாக அமராமலுமிருபபோம.

உ சாதிகள உனனீதியையுஞசகல இராசாககள உனமகிமையையுஙகாணபார்கள, கர்த்தரிடும * புது நாமமாயழைக்கபபடுவாய. * சுரு, யரு.

ங நீகர்த்தருடையகையில்லஙகாரமான கிரீடமும உன பராபரனுடைய கரததில இராசமுடியுமாயிருபபாய.

ச * நீயினி நெகிழபபட்டவளெனனபபடாமலும உனதேசம இனிபபாழானதெனனபபடாமலும இனி நாம பிரியமவைததவளென்றும உன தேசம வாழககைபபட்டதென்றும அழைககபபடுவதுணடு, ஏனெனில கர்த்தர் உனமேலேபிரியமவைககிறார், உனதேசமவாழககைபபடும. * சுய, யரு.

ரு ஏனெனிலவாலிபனகனனியாஸ்திரியைவிவாகமபணணுகிறதுபோல உனகுமாரர் உனனைவிவாகமபணணுவார்கள, மணவாளனமணவாட்டியினபேரில மகிழசசியாயிருககிறதுபோல * உன பராபரன உனபேரிலமகிழ்ச்சியாயிருபபார். * செபா. ங, யஎ.

சு எருசலேமே உனமதிலகளினமேலே பகலமுழுதும இராமுழுதும ஒருககாலும * மவுனமாயிராததசாமககாரரைககட்டளையிடுகிறேம, கர்த்தரைபபிரஸ்தாபமபணணுகிறவர்களே, உஙகளில அமரிககையிலலாதிருபபதாக. * ருஉ, அ.

எ அவர் எருசலேமைததிடபபடுததிபூமியிலே * புகழ்ச்சியாகவைககுமட்டாக அவரையமர்நதிருககவொட்டாதிருஙகள. * சுக, யக.

அ இனி நாமுன சததுருக்களுக்கு உன தானியததையாகாரமாகக்கொடோம, நீ பிரயாசபபட்ட உனகொடிமுநதிரிகைபபழ இரசததை அனனியபுததிரர் குடிபபதிலலையென்று கர்த்தர் தமதுவலதுகரததினபேரிலுந தமதுவலலமையினுடைய புயததினபேரிலும ஆணையிட்டார்.

* சுரு, உக. உஉ.

கூ அதைசசேர்ததவர்களதானேயதைபபொசிததுககர்த்தரைத துதிபபார்கள, அதைககூட்டிவைததவர்களதானேயதைநமதுபரிசுத்தத்தலததினபிரகாரங்களிலே குடிபபார்கள.

ய * வாசலகளாற பிரவேசியுஙகள, பிரவேசியுஙகள, சனததுககு வழியைசசெவவைபபடுததுஙகள, பாதையையுயரமாயுயர்ததுஙகள, அதைககலலுபபொறுககிசசனசதளஙகளுககுககொடியேறறுஙகள.

* ருஎ, யச. மததே. உஅ, யகூ.

யக * இதோ உன இரட்சிபபுவருகிறது, இதோ அவருடைய பலன அவரோடும அவருடைய கூலி அவர்முனபாகவுமவருகிறதென்று நீஙகள சீயோன குமாரததிககுசசொலலுஙகளெனபதை இதோ கர்த்தர் பூமியின கடையாநதரமட்டாகக்கூறுகிறார். * சய, ய. அறிவி. உஉ, யஉ.

யஉ * அவர்களைபபரிசுதத சனமெனறுஙகர்த்தரால மீட்கபபட்டவர்களெனறும அழைபபார்கள, நீயோவெனில தேடிககொளளபபட்டதென்றும * நெகிழபபடாத பட்டணமென்றும அழைககபபடுவாய.

* க. பேதுரு. உ, கூ.

## சுங. அதிகாரம்.

[கிறிஸ்துதமதுசபையினசததுருககளை ஆககினையிடுமிதுபபது.]

ஏதோமிலும * அதிலுளள போஸ்ரா பட்டணத்திலுமிருநது † சாயநதிரபபட்ட வஸ்திரஙகளுடையவராகவும மகததுவமாய உடுததியிருககிறவராகவும தமது மகா சததுவததிலே நடநதேறுகிறவராகவும வருகிற இவரார், நீதியாயபபேசி இரட்

சிக்கவல்லவராகிய நானதானே. * அறி. ௰௬, ௰௩ † ௬௪, ௫. ௬.

௨ உம்முடைய உடுப்புச்சிவப்பாகவும் உம்முடையவஸ்திரங்கள் ஆலையைமிதிக்கிறவன் வஸ்திரங்களைப்போலவும் இருக்கிறதேது.

௩ நானொருவராய் ஆலையை மிதித்தேன், சனசதளங்களில் ஒருவரும் நம்மோடிருந்ததில்லை, நாம் நம்முடைய கோபத்திலே அவர்களைமிதித்து நம்முடைய உக்கிரத்திலே அவர்களை நசுக்கிப்போட்டோம், ஆனதுகொண்டு அவர்கள் இரத்தம் நமதுவஸ்திரங்களின்மேலே தெறித்தது, நமது உடுப்பையெல்லாங் கறைப்படுத்திக்கொண்டோம். அறி. ௰௪, ௰௬. ௨௰.

௪ * ஏனெனில் நீதியைச்சரிக்கட்டும் நாள் நம்முடையமனதிலிருந்தது, நம்முடையவர்களைமீட்கும்வருஷம்வந்திருந்தது.
* ௬௪, ௮.

௫ * நாம் பார்த்தோம், ஆனால் ஒத்தாசைசெய்கிறவனில்லை தாங்குகிறவனில்லையென்றுசரியப்பட்டோம். ஆனதுகொண்டு நமது புயமே நமக்கிரட்சிப்பாகி நம்முடைய உக்கிரமே நம்மைத்தாங்கிற்று.
* ௫௯, ௰௬. ௰௭.

௬ நாம் நமதுகோபத்திலே சனசதளங்களைமிதித்துப்போட்டு நம்முடைய உக்கிரத்தில் அவர்களை வெறியாக்கி அவர்களசாரத்தைத்தரையிலிறங்கப்பண்ணினோம்.

தேவனுண்டே இஸ்ரவேல் சாதியார் பண்ணப்போகிறவிண்ணப்பம்.

௭ கர்த்தர்எங்களுக்குச்செய்தருளினவெல்லாவற்றுக்குந்தக்கதாகவும் அவர் தம்முடைய இரக்கங்களின்படியேயுந் தம்முடையதிரளானதயவுகளின்படியேயும் இஸ்ரவேல் வீட்டாருக்குச்செய்த மகா நன்மைக்குத்தக்கதாகவுங் கர்த்தருடைய கிரியைகளையுங் கர்த்தருடைய துதிகளையும்பிரஸ்தாபம்பண்ணுவேன்.

௮ ஏனெனில் அவர்கள் நம்முடையசனந்தானென்றும் அவர்கள் கபடஞ்செய்யாதிருக்கப்போகிற பிள்ளைகளென்றுஞ்சொல்லி அவர்களுக்கிரட்சகரானார்.

௯ அவர்களுடைய எல்லா நெருக்கத்திலும் அவர்நெருக்கப்பட்டார், ஆனதுகொண்டு அவருடைய முகத்தின் தூதனவர் அவர்களை இரட்சித்தார், அவர் * தமது அன்பினிமித்தியமுந் தமது பரிதாபத்தின் நிமித்தியமும் அவர்களை மீட்டுப்பூருவநாட்களிலெல்லாம் அவர்களைத்தூக்கிச் சுமந்துவந்தார். * மோசே. ௭, ௬—௯.

௰ அவர்களோ கலகம்பண்ணியவருடையபரிசுத்த ஆவிக்குநோகநடந்தார்கள், ஆகையால் அவர்களுக்குச்சத்துருவாய்மாறி அவரேயவர்களுக்குவிரோதமாயுத்தம்பண்ணினார்.

௰௧ ஆகிலும் பூருவநாட்களையும்மோசேயையுந் தம்முடைய சனத்தையும் நினைவுகூர்ந்தார், ஆனால் அவர்களையுந்தமது மந்தையின் மேய்ப்பனையுஞ்சமுத்திரத்திலிருந்தேறப்பண்ணினவரிப்போதெங்கே.

௰௨ அவர்கள் நடுவிலேதம்முடைய பரிசுத்த ஆவியையிருக்கக்கட்டளையிட்டு அவர்களை மோசேயின் வலது பக்கத்திலுள்ள தமது மகிமையின் புயத்தினாலே நடத்தித் தமக்கு நித்திய கீர்த்தியுண்டாக்க அவர்களுக்குமுன்பாகத்தண்ணீர்களைப்பிளந்து,

௰௩ ஒருகுதிரைவனாந்தரவெளியிலே நடக்குமாப்போல் அவர்களையாழங்களில் இடறுதப்படிக்கு நடக்கப்பண்ணினவரெங்கே.

௰௪ கர்த்தருடைய ஆவியவர்களைப்பள்ளத்தாக்கிலே போயிறங்குகிறமிருகஜீவன்களைப்போல இளைப்பாறப்பண்ணினார், அப்படியேதேவரீர்உமக்குமகிமையுள்ளகீர்த்தியையுண்டாக்க உம்முடைய சனத்தைநடத்தினீரே.

௰௫ * தேவரீர் பரமண்டலங்களிலிருந்து கண்ணோக்கி உம்முடைய பரிசுத்தமும் உமது மகிமையுமான வாசஸ்தலத்திலிருந்துபாரும், உம்முடையவயிராக்கியமும்உம்முடைய வல்லமைகளுமெங்கே, உம்முடையகுடல்களின் இரைச்சலும் உம்முடைய மனவுருக்கமும் எனக்கு முன்பாகத்தன்னையடக்கிக்கொள்ளுகிறது. * ௫. மோசே. ௨௬, ௰௫.

௰௬ தேவரீர் எங்கள் பிதாவாமே, ஏனெனில் ஆபிரகாம் எங்களையறியான், இஸ்ரவேலுக்கும் நாங்கள் அறியப்பட்டவர்களுமல்ல, கர்த்தாவே தேவரீரெங்கள்பிதாவும் எங்களமீட்பருந்தாமே, இது பூருவகாலமுதல் உம்முடைய நாமம்.

௰௭ கர்த்தாவே தேவரீரெங்களை உமது வழிகளைத்தப்பிப்போகவிட்டு எங்களிருதயத்தையுமக்குப் பயப்படாதபடிக்குக்கடினப்படுத்துவானேன், உம்முடைய ஊழியக்காரரின் நிமித்தியமும் உம்முடைய சுதந்தரமான கோத்திரங்களின் நிமித்தியமுந்திரும்பும்.

௰௮ உம்முடைய பரிசுத்த சனத்தைக்கொஞ்சங்குறையச்சுதந்தரமாக வசப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள், எங்கள்சத்துருக்கள் உம்முடையபரிசுத்தஸ்தலத்தை*மிதித்துப்போட்டார்கள். * ௬௪, ௰. ௰௧ சங். ௭௯, ௧.

௰௯ ஒருக்காலுந்தேவரீர் ஆண்டுகொள்ளாதவர்களைப்போலும் உமது நாமம்விளங்காதவர்களைப்போலுமானோம்.

## ௬௪. அதிகாரம்.

[அப்பாலும் அவர்களுடைய விண்ணப்பம்.]

௧ உமது நாமத்தைச் சத்துருக்களுக்குத் தெரியப்பண்ணுவதற்கு சாதிகள் உமது டைய சன்னிதிக்கு முன் தத்தளிப்பதற்கு மாக,

௨ தேவரீர் வானங்களைக் கிழித்திறங்கி உருகுகிற அக்கினி எரியுமாப்போலேயும் அக்கினி தண்ணீரைப் பொங்கப்பண்ணுமாப்போலேயும் பருவதங்கள் உமக்கு முன்பாகக் கரைந்தால் தாவிலே.

௩ நாங்கள் வரப்பார்த்திராத பயங்கரமான காரியங்களைத் தேவரீர் செய்து இறங்குகிறபோது உமக்கு முன்பாகப் பருவதங்கள் கரைந்ததும் போலேதானே.

௪ பராபரனே * உமக்குக் காத்திருக்கிறவர்களுக்கு நீர் செய்பவைகளைத் தேவரீரையல்லாமல் உலகத்தோற்றமுதற்கொண்டு ஒருவருங் கேட்டதுமில்லை செவியால் உணர்ந்ததுமில்லை அவைகளைக் கண்டதுமில்லை.
* ௧. கொரி. ௨, ௯.

௫ மகிழ்ச்சியாய் நீதியைச் செய்கிறவர்களையும் உம்முடைய வழிகளில் உம்மை நினைக்கிறவர்களையுஞ் சந்திக்கிறீர், நாங்களோவென்றால் இதோ அவைகளுக்கு விரோதமாகச் சதாகாலமும் பாவஞ்செய்தபடியினாலே தேவரீர் கடுங்கோபமடைந்தீர் இன்னந்தப்பியிருக்கிறோம்.

௬ ஆனால் நாங்களனைவருந் தீட்டானவனைப்போலிருக்கிறோம், எங்களுடைய நீதிகளெல்லாந் தீட்டான வஸ்திரத்தைப்போலுமிருக்கிறது, நாங்களனைவரும் * இலைகளைப்போல உதிருகிறோம், எங்கள் அக்கிரமங்கள் காற்றைப்போல எங்களைப் பிடித்துக்கொண்டுபோம். * சங். ௯௦, ௫. ௬.

௭ உமது நாமத்தைத் தொழுகிறவனுமில்லை * உம்மைப்பற்றிக்கொள்ளும்படிக்கு விழித்துக்கொள்ளுகிறவனுமில்லை, ஏனென்றால் தேவரீர் உம்முடைய முகத்தை எங்களைவிட்டு மறைத்து எங்களை எங்கள் அக்கிரமங்களின் நிமித்தியங் கரையப்பண்ணுகிறீர். * சங். ௱௯, ௨௧.

௮ இப்போதும் கர்த்தாவே தேவரீர் எங்களுடைய பிதா, நாங்கள் களிமண், தேவரீரோ எங்களையுருவாக்குகிறவர், நாங்களனைவரும் உமது கரத்தின் கிரியைதானே.

௯ கர்த்தாவே இத்தனையாய்க் கடுங்கோபம் வைத்துக்கொண்டிராமலும், * என்றைக்கும் அக்கிரமத்தை நினைத்துக்கொள்ளாமலும் இருப்பீராக, இதோ நாங்களனைவரும் உம்முடைய சனமென்று பாரும். * சங். ௭௯, ௮.

௰ உமது பரிசுத்த பட்டணங்கள் வனாந்தரமானது சீயோன் வனாந்தரமானது எருசலேம் பாழாய்க் கிடக்கிறது.

௰௧ எங்கள் பிதாக்கள் உம்மைத் துதித்த எங்களுடைய பரிசுத்தமும் எங்கள் மகிமையுமான வீடு அக்கினிக்கிரையாகி இச்சிக்கப்பட்டதக்க எங்களுடைய தானங்களெல்லாம் பாழாயினது.

௰௨ கர்த்தாவே இவைகளினிமித்தம் அடக்கிக்கொண்டிருப்பீரோ, மவுனமாயிருந்து இத்தனையாய் எங்களைச் சிறுமைப்படுத்துவீரோ.

## ௬௫. அதிகாரம்.

[குணப்படாதவர்களின் தீர்ப்பாகிய பதத்தையுங் குணப்பட்டவர்களின் பாக்கியத்தையுங் காட்டினது.]

௧ நமக்காக விசாரித்துக் கேளாதிருந்தவர்களாலே தேடப்பட்டோம், நம்மைத் தேடாதிருந்தவர்களாலே கண்டுபிடிக்கப்பட்டோம், * நம்முடைய நாமம் விளங்காதிருந்த சாதியுடனே † இதோ இங்கேயிருக்கிறோமென்கிறோம். * ௫௫, ௫. ரோமர். ௰, ௨௰. † ௫௮, ௯.

௨ * நலமல்லாத வழியிலே தங்கள் நினைவுகளைப் பின்பற்றி நடக்கிற முரட்டாட்டமான சனத்தண்டைக்கு நாள்முழுதும் † நம்முடைய கைகளை நீட்டினோம்.
* எரே. ௭, ௨௪. † ரோமர். ௰, ௨௧.

௩ நம்முடைய சன்னிதியிலே நித்தம் நமக்குக் கோபமுண்டாக்கித் தோப்புகளிலே பலியிட்டுச் செங்கல்களின் மேலே தூபங்காட்டி,

௪ பிரேதக்குழிகளண்டையிலுட்கார்ந்து பாழ்த்தலங்களிலிராத்தங்கிப் * பன்றியிறைச்சியைத் தின்று தங்கள் பாத்திரங்களில் அருவருப்பான சிவனசளின் ஆணத்தை வைத்திருந்து, * ௬௬, ௰௭.

௫ நீயுனமட்டிலிரு என்னண்டைக்குச் சேராதே, உன்னைப்பார்க்கிலும் பரிசுத்தனாயிருக்கிறேனென்கிற சனந்தண்டைக்குத் தானே, இவர்கள் நம்முடைய கோபத்தின் புகையும் நாளெல்லாம் எரிகிற அக்கினியுமாயிருப்பார்கள்.

௬ இதோ அது நமக்கு முன்பாக எழுதியிருக்கிறது, நாம் மவுனமாயிராமற் சரிக்குச்சரிக்கட்டுவோம், அவர்கள் மடியிலே சரிக்கட்டுவோம்.

௭ உங்கள் அக்கிரமங்களுக்கும் மலைகளிலே தூபங்காட்டி மேடைகளிலே நம்மை நிந்தித்த உங்கள் பிதாக்களுடைய அக்கிரமங்களுக்குங் கூடத்தானே, நாம் அவர்கள் முந்தின செய்கையின் பலனை * அவர்கள் மடியிலே அளப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * கலாத். ௬, ௭.

அ கர்த்தர் சொல்லுகிறதாவது, ஒரு திராட்சக்குலையில் இரசங் காணப்படும்போது அதை அழிக்காதே, ஏனெனில் அதிலே ஆசீர்வாதமுண்டென்று சொல்லப்படுகிறபடி நாம் நமது ஊழியக்காரரின் நிமித்தியமாக அனைத்தையும் அழிக்காதபடிக்குச் செய்து,

கூ யாக்கோபிலிருந்து ஒரு வித்தையும் யூதாவிலிருந்து நம்முடைய பருவதங்களைச் சுதந்தரிப்பவனையும் எழும்பப்பண்ணுவோம், நாந் தெரிந்துகொண்டவர்கள் அதைச் சுதந்தரித்துக்கொண்டு நம்முடைய ஊழியக்காரர் அங்கே வாசம்பண்ணுவார்கள்.

ய நம்மைத்தேடுகிற நமது சனத்துக்குச் சாரோன் ஆட்டுத்தொழுவமாகவும், * ஆகோரின் பள்ளத்தாக்கும் ஆடுகக்கிடையாகவுமிருக்கும். * யோவா. எ, உச.

யக ஆனால் கர்த்தரைவிட்டு நமது பரிசுத்தப் பருவதத்தை மறந்து காதென்றதற்குப் பந்தியையாயித்தம்பண்ணி மேனியென்றதற்குப் பானத்தை நிறையவார்க்கிறவர்களே.

யஉ உங்களை நாம் பட்டயத்துக்கெண்ணிக்கொடுப்போம், நீங்களனைவருங்கொலைப்படக்குனிவீர்கள், ஏனென்றால் * நாங் கூப்பிட்டும் நீங்கள் மறுவுத்தரவு சொல்லாமலும் நாம் பேசியும் நீங்கள் கேளாமலுமிருந்து நம்முடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்து நமக்குப் பிரியமாயிராததைத்தெரிந்துகொண்டீர்கள். * கூகூ, ச. வாக்கியம். க, உச. ழு

யங ஆனபடியினாலே கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, இதோ * நம்முடைய ஊழியக்காரர் போசிப்பார்கள், நீங்களோ பசியாயிருப்பீர்கள், இதோ நம்முடைய ஊழியக்காரர் குடிப்பார்கள், நீங்களோ தாகமாயிருப்பீர்கள், இதோ நம்முடைய ஊழியக்காரர் சந்தோஷப்படுவார்கள், நீங்களோ வெட்கப்படுவீர்கள். * சங்கீ. உஉ, உஎ. மத்தேயு. ரு, கூ.

யச இதோ நம்முடைய ஊழியக்காரர் மனத்திடனாலே கெம்பீரிப்பார்கள், நீங்களோ மன்நோவினாலே கூப்பிட்டு ஆவியின் முறிவினாலேயலறுவீர்கள்.

யரு நாந் தெரிந்துகொண்டவர்களுக்கு நீங்கள் உங்கள் நாமத்தைச் சாபப்பிரமாணமாகப் பின்வைத்துப்போவீர்கள், ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் உன்னைக்கொன்றுபோட்டுத் தம்முடைய ஊழியக்காரருக்கு * வேறே நாமத்தைத்தரிப்பார்.

* கூஉ, உ. அறிவி. உ, யஎ.

யசா ஆனதுகொண்டு பூமியிலே தன்னை ஆசீர்வதிக்கிறவன் சத்தியபராபரனுக்குள்ளே தன்னையாசீர்வதிப்பான், பூமியிலே ஆணையிடுகிறவன் * சத்தியபராபரனபேரிலேயாணையிடுவான், ஏனெனில் முந்தின இடுக்கண்கள் மறக்கப்பட்டு அவைகள் நமது கண்களுக்கு மறைந்துபோய்விட்டது.

* எரே. ச, உ. யஉ, யசா.

யஎ ஏனெனில் இதோ * நாம் புதுவானத்தையும் புதுப்பூமியையுஞ் சிருஷ்டிக்கிறோம், முந்தினவைகள் இனி நினைக்கப்படுவதுமில்லை மனதிலே எழும்புவதுமில்லை.

* கூகூ, உஉ. உ. பேதுரு. ங, யங. அறிவிப்பு. உக, க.

யஅ நாஞ் சிருஷ்டிக்கிறதினாலே நீங்கள் என்றென்றைக்கும் மகிழ்ந்து களிகூர்ந்திருங்கள், ஏனெனில் இதோ எருசலேமைக் களிகூருதலுண்டாகவும் அதின் சனத்தை மகிழ்ச்சியுண்டாகவுஞ் சிருஷ்டிக்கிறோம்.

யகூ நாம் எருசலேமின்மேற் களிகூர்ந்து நமது சனத்தின்மேல் மகிழ்ச்சியாயிருப்போம், அழுகையின் சத்தமுங் கூக்குரலின் சத்தமும் அதில் இனிக்கேட்கப்படுவதில்லை.

உய அங்கேயினிக்கொஞ்சநாள்மட்டிருக்கும்பாலகனும் தன்னாள்களை நிறைவேற்றாதகிழவனுமுண்டாயிராமல் சாகிற வாலிபன் நூறுவயதுள்ளவனாயிருப்பான், நூறுவயதுள்ளவனாகிய பாவியோ சபிக்கப்படுவான்.

உக வீடுகளைக்கட்டி அவைகளிற் குடியிருப்பார்கள், * திராட்சத்தோட்டங்களை நாட்டி அவைகளின் கனியையும் போசிப்பார்கள். * கூஉ, அ. கூ.

உஉ * அவர்கள் கட்டுகிறதும் வேறொருவர் குடியிருக்கிறதும் அவர்கள் நாட்டுகிறதும் வேறொருவர் கனி போசிக்கிறதுமாயிருப்பதில்லை, ஏனெனில் விருட்சத்தின் நாள்களைப்போலே நமது சனத்தின் நாள்களிருக்கும். நாந்தெரிந்துகொண்டவர்கள் தங்கள் கைகளின் கிரியைகளை அவைகள் பழசாய்ப்போகுமட்டும் அநுபவிப்பார்கள்.

* ரு. மோசே. உஅ, கய.

உங அவர்கள் விருதாவாக உழைப்பதில்லை, அவர்கள் கலங்கலாகப் பிள்ளைகளைப் பெறுவதுமில்லை, ஏனெனில் அவர்களும் அவர்களோடே கூட அவர்கள் சந்தானமுங் கர்த்தராலே தெரிந்துகொள்ளப்பட்ட வித்தாயிருப்பார்கள்.

உச சம்பவிப்பதேதெனில், * அவர்கள் கூப்பிடுகிறதுக்குமுன்னே நாம் மறுவுத்தரவுகொடுப்போம், அவர்களின்னம் பேசக்கொள்ள நாங்கேட்போம். * ஙய. யசா. ருஅ, கூ. சங்கீ. ஈசரு, யஅ. யகூ. தானி. கூ, உய—உங. மத். சா, அ.

உரு * ஓநாயும் ஆட்டுக்குட்டியும் ஒருமித்து மேயும், சிங்கம் மாட்டைப்போலே வைக்கோலைத்தின்னும், † தூள் சர்ப்பத்தினுடைய போசனமாயிருக்கும், நம்முடைய பரிசுத்த பருவதமெங்கும் தீங்குசெய்வதுமில்லை கேடுண்டாக்குவதுமில்லையென்று கர்

த்தர் சொல்லுகிறார். * ௰௧, ௬—௯. † ௧. மோசே. ௩, ௰௪.

## ௬௰௬. அதிகாரம்.

[யூதருடைய புறம்பான தேவ ஆராதனை தள்ளப்படுவது.]

௧ கர்த்தர் சொல்லுகிறதாவது, * பரமண்டலங்கள் நம்முடைய ஆசனமும் பூமி நம்முடைய பாதப்படியுமாயிருக்கக்கொள்ள நீங்கள் நமக்குக் கட்டும் வீடு எப்படிக்கொத்ததும் நாம் தாபரிக்கும் இடம் எப்படிக்கொத்ததுமாயிருக்கும். * ௧. இரா. ௮, ௨௭. ௨. நாளா. ௬, ௰௮. மத்தே. ௫, ௩௪. ௩௫. அப்போஸ். ௭, ௪௮. ௪௯. ௰௭, ௨௪.

௨ நம்முடைய கரம் இவைகளையெல்லாம் படைத்ததினால் இவைகளெல்லாம் உண்டானதேயென்று கர்த்தர் சொல்லுகிறார், ஆனால் * சிறுமைப்பட்டு ஆவியில் நொறுங்குண்டு நம்முடைய வசனத்துக்கு நடுங்குகிறவனையே நோக்கிப்பார்ப்போம். * ௫௭, ௰௫. சங்கீ. ௩௪, ௰௮. ௫௧, ௰௭.

௩ * மாட்டைக் குரல்வளையறுக்கிறவன் மனுஷனை வெட்டுகிறவனுக்கும் ஆட்டைப் பலியிடுகிறவன் நாயைக் கழுத்தறுக்கிறவனுக்கும் காணிக்கையைப் படைக்கிறவன் பன்றி இரத்தத்தைப் படைக்கிறவனுக்கும் மதீனப்புண்டாகத் தூபங்காட்டுகிறவன் விக்கிரகத்தைத் தோத்திரிக்கிறவனுக்கும் ஒப்பாயிருக்கிறான், இவர்கள் தங்களுடைய வழிகளைத் தெரிந்துகொள்ளுகிறார்கள், இவர்களுடைய ஆத்துமாத் தங்கள் அருவருப்புகளின் பேரில் விருப்பமுமாயிருக்கிறது. * எரே. ௬, ௨௰.

௪ நாமும் அவர்கள் பரியாசங்களுக்குத் தக்கதைத் தெரிந்துகொண்டு அவர்களுக்குத் திகில்களை அவர்கள் மேல் வரப்பண்ணுவோம், * நாம் கூப்பிட்டாலும் மறுவுத்தரவு கொடுக்கிறவனில்லாமலும் நாம் பேசினாலும் அவர்கள் கேளாமலும் அவர்கள் நமது பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து நாம் விரும்பாததைத் தெரிந்துகொண்டதின் நிமித்தியமாகத்தானே. * ௬௫, ௰௨. வாக்கி. ௧, ௨௪ முதல் எரே. ௭, ௰௩. ௰௪.

௫ கர்த்தருடைய வசனத்துக்கு நடுங்குகிறவர்களே, அவருடைய வார்த்தையைக் கேளுங்கள், * உங்களைப் பகைத்து நம்முடைய நாமத்தின் நிமித்தியம் உங்களைத் தூரப்படுத்துகிற உங்கள் சகோதரர் கர்த்தர் மகிமைப்படுவாராகவென்கிறார்களே, ஆனால் அவர் உங்கள் சந்தோஷத்துக்காகக் காணப்படுவார், அவர்களோ வெட்கப்படுவார்கள். * லூக்கா. ௬, ௨௨.

௬ பட்டணத்திலிருந்து அமளியின் சத்தமும் தேவாலயத்திலிருந்து சத்தமும் கேட்கப்படுது நம்முடைய சத்துருக்களுக்குச் சரிக்கட்டுகிற கர்த்தருடைய சத்தந்தானே.

மெய்ச்சபை பிரபலியமாவதும், அதைத் தடுத்த சத்துருக்கள் ஆக்கினைசெய்யப்படுவதும்.

௭ அம்பாயப்படாததுக்கு முன் பெற்றாள் அவளுக்கு வேதனைவராததுக்கு முன் அவள் ஆண்பிள்ளையைப் பெற்றாள்.

௮ இப்படிக்கொத்ததைக் கேட்டதார்? இப்படிக்கொத்ததைக் கண்டதார்? ஒரே நாளிலே ஒரு தேசத்துக்குப் பிள்ளைப்பேறு வருமோ? ஒருமிக்க ஒரு சாதி பிறக்குமோ? சீயோனோவெனில் ஒருமிக்க வேதனைப்பட்டுத் தன் குமாரரைப் பெற்றுமிருக்கிறது,

௯ பெறப்பண்ணுகிறவராகிய நாம் பெறவியாதிருப்போமோவென்று கர்த்தர் சொல்லுகிறார், பிறக்கப்பண்ணுகிறவராகிய நாம் அடைபட்டிருப்போமோவென்று உன் பராபரன் சொல்லுகிறார்.

௰ எருசலேமைச் சிநேகிக்கிற நீங்களெல்லாரும் அதோடேகூடச் சந்தோஷப்பட்டு அதினாலே களிகூருங்கள், அதினுடைய நிமித்தியந் துக்கித்திருந்த நீங்களெல்லாரும் அதோடேகூட மிகவும் மகிழுங்கள்.

௰௧ நீங்கள் அதினுடைய ஆறுதல்களின் முலைப்பாலையுண்டு திருத்தியாகவும், நீங்கள் குப்பிக்குடித்து அதினுடைய மகிமையின் மினுக்கினால் மனமகிழ்ச்சியாகவுந்தானே.

௰௨ ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ, நானு சமாதானத்தை பொருநதியைப்போலவும், சாதிகளின் மகிமையைப் புரண்டோடுகிற ஆற்றைப்போலவும் அதினிடமாகப் பாய்ச்சுகிறோம், * அப்பொழுது முலையுண்பீர்கள், நீங்கள் பக்கத்திலே சுமக்கப்படுவீர்கள், முழங்கால்களில் வைக்கப்பட்டு மனமகிழ்ச்சியாகப்படுவீர்கள்.
* ௪௯, அதி. ௧. ௪. ௪௯, அதி. ௨௨. ௬௰, அதி. ௪. ௫. ௰௬.

௰௩ ஒருவனை அவன் தாய் தேற்றரவுபண்ணுமாப்போலே நாமுங்களைத் தேற்றரவுபண்ணுவோம், நீங்கள் எருசலேமைத் தொட்டுத் தேற்றப்படுவீர்கள்.

௰௪ நீங்கள் அதைக் காண்பீர்கள், * உங்கள் இருதயம் மகிழ்ந்து, உங்கள் எலும்புகள் பசுமையான முளையைப்போலச் செழிக்கும், அப்பொழுது கர்த்தருடைய ஊழியக்காரரிடத்தில் அவருடைய கரமும் அவருடைய சத்துருக்களிடத்தில் அவருடைய சினமும் அறியப்படும். * ௩௰. ௰.

௰௫ ஏனெனில் இதோ, நம்முடைய கோபத்தை உக்கிரமாகவும் நம்முடைய உக்கிர

புதலை * அக்கினிச்சுவாலைகளாகவும்மாறப் பண்ணக்கர்த்தர் அக்கினியோடேவருவார், அவருடைய இரதங்கள பெருங்காற்றைப் போலவரும. * ௯௰, அதி. ௯௰. சங்கீ. ௫௰, ௩. ௨. தெச. ௧, ௯—௮. அதி. ௰௮, ௮.

௰௬ ஏனெனில்கர்த்தர் அக்கினியாலுந * தமதுபட்டயத்தாலும எல்லா மாம்சத் தோடும நியாயத்துக்குட்பிரவேசிப்பார், கர்த்தராற்கொலையுண்டவர்கள அநேகரா யிருப்பார்கள. * அதிவி. ௰௧, ௨௧.

௰௭ தங்களைத்தானேபரிசுத்தமாக்குகிற வர்களுந *தோப்புகளின் நடுவிலேதங்களை த்தானே ஒருவரின பிறகாலே ஒருவராய்ச் சுத்திகரிக்கிறவர்களும பன்றியிறைச்சியை யும அருவருப்பானதையும எலிகளையுஞ்சா ப்பிடுகிறவர்களும ஏகமாய்ச்சங்கரிக்கப்படு வார்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

* ௬௫, ௩. ௪.

௰௮ நாம் அவர்கள கிரியைகளையும அவ ர்கள நினைவுகளையும அறிவோம, நானுசக லசாதியாரையும்பாஷைக்காரரையுங் கூட் டிச்சேர்க்குங்காலம்வரும, இவர்கள வந்து நம்முடையமகிமையைக்காண்பார்கள.

௰௯ நாம அவர்களில் ஒரு அடையாளத் தைக்கட்டளையிட்டு அவர்களிலே தப்பின வர்களை நம்முடைய கீர்த்தியைக்கேளாமலு ம நம்முடைய மகிமையைக்காணாமலுமிரு க்கிறசாதிகளின் தேசங்களாகிய தர்சீசுக்கு ம வில்லுக்காரரிருக்கிறபூலுக்கும் லூதுக் குந் துபாலுக்கும் யாவானுக்குந் தூரத் திலுள்ள தீவுகளுக்கும அனுப்புவோம, அவ ர்கள் நம்முடைய மகிமையைச்சாதிகளுக்குள்ளே பறிவித்து,

௨௰ உங்களுடைய எல்லாச்சகோதரரை யுஞ் சகலசாதிகளிடத்திலுமிருந்து குதிரை களின்மேலும இரதங்களின்மேலுங்குலாரி வண்டில்களின்மேலுங் கோவேறுகழுதைக ளின்மேலும வேகமான ஒட்டகங்களின்மே லும எருசலேமிலுள்ள நம்முடையபரிசுத் த பருவதத்துக்குக் * கர்த்தருக்குக்காணிக் கையாகக்கொண்டுவருவார்கள, இஸ்ரவேல் புத்திரர் காணிக்கையைச்சுத்தமானபாத்தி ரங்களிற்கர்த்தருடைய வீட்டுக்குக்கொண் டுவருகிறதற்குச்சமானமாகத்தானே யென் றுகர்த்தர்சொல்லுகிறார். * ரோமர். ௰௫.௰௬,

௨௰௧ அவர்களிலுஞ் சிலரை * ஆசாரியர்க ளாகவும்லேவியராகவும எடுப்போமென்று கர்த்தர்சொல்லுகிறார். * ௬௧, ௬. ௧. பேது. ௨, ௫.

௨௰௨ ஏனெனில் நாம படைக்கப்போகி ற * புதுவானமும புதுப்பூமியும நமக்கு முன்பாக எப்படி நிற்கிறவைகளாயிருக்கு மோ அப்படியுங்களவித்தும உங்கள நாம மும நிற்குமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

* ௬௫, ௰௭.

௨௰௩ சமப்விப்பதேதெனில்மாசத்துக்கு மாசமும ஓய்வுநாளுக்கோய்வுநாளும எல் லாமாம்சமும நமக்குமுன்பாகப்பணியவரு மென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௨௰௪ அவர்கள வெளியேபோய் நமக்கு விரோதமாய்ப்பாதகஞ்செய்த மனுஷரு டைய பிரேதங்களைப்பார்ப்பார்கள, ஏனெ னில் * அவர்களுடைய பூச்சி சாகாமலும அவர்களுடைய அக்கினி அவியாமலுமிருக் கும, அவர்கள எல்லாமாம்சத்துக்கும அ ரோசிகமாயிருப்பார்கள. மாற்கு. ௯, ௪௪. ௪௪, ௮.

ஏசாயாவின் தீர்க்கதரிசனம்

முடிந்தது முற்றும்.

# எரேமியாவின தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[பராபரன எரேமியாவைத்தீர்க்கதரிசியாக் அழைத்துவைத்ததும, அந்த அழைப்பைத்திடப்படுத்தினதும.]

பென்யமீன்தேசத்து ஆனத்தோத் தூரிலுள்ள ஆசாரியர்களிலொருவனுன இல கியாவினகுமாரனுகிய எரேமியாவினுடை யவசனங்கள.

௨ ஆமோனுடையகுமாரனுகிய * யோ சியாவென்றயூதாவுடைய இராசாவினநாள் களிலும அவன அரசாண்ட பதின்மூன்றும வருஷத்திலும இவனுக்குக்கர்த்தருடைய வார்த்தையுண்டாயிற்று. * ௨. இராசா. ௨௨, ௧. மு ௨. நாளாக. ௩௪, ௧. மு

௩ அப்புறம்யோசியாவினகுமாரனுகிய * யோயாக்கிம் என்றயூதாவுடைய இராசாவி ன்நாள்களிலும யோசியாவின குமாரனுகி ய † சிதேக்கியாவென்ற யூதாவுடையஇரா சாவின பதினோராமவருஷத்து முடிவுமட் டாகவும ‡ எருசலேம ஜனங்கள் ஐந்தாம் மாதத்திற்சிறைப்பட்டுப்போகுமட்டாகவு ம அப்படியவனுக்குண்டானது. * ௨. இரா ௨௩, ௩௪. ௨. நாளா. ௩௬, ௪. † ௨.

இராஜ. ௨௪, ௰௭. ௨. நாளாகமம். ௩௬, ௰ ‡ ௨. இரா. ௨௫, ௮

௪ கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாய் அவர் சொன்னதாவது,

௫ * நாமுன்னைத் தாயின் வயிற்றில் உருவாக்காததற்கு முன்னே யுன்னையறிந்தோம், நீ கர்ப்பத்திலிருந்து வெளியாகாததற்கு முன்னே நாமுன்னைப் பரிசுத்தம்பண்ணி உன்னைச் சாதிகளுக்குத் தீர்க்கதரிசியாகக் கட்டளையிட்டோமென்றார். * கலாத். ௧, ௰௫.

௬ அப்போது நான் ஆ கர்த்தராகிய ஆண்டவரே, * இதோ பேச அறியேன், ஏனெனில் நான் இளந்தையென்றேன்.

* ௨. மோசே. ௪, ௰. ௰௨. ௬, ௩௰.

௭ ஆனால் கர்த்தரென்னுடனே சொன்னதாவது, நான் இளந்தையென்று நீ சொல்லாமல் நாம் உன்னையனுப்பப்போகிற எல்லாரிடத்திலும் நீ போய் நாம் உனக்குக் கற்பிப்பதையெல்லாம் நீ பேசுவாயாக.

* எசேக்கி. ௩, ௰௭.

௮ * நீயவர்களுக்குப் பயப்படாயாக, ஏனெனில் உன்னை விடுவிக்கும்படிக்கு நாமுன்னுடனேயிருக்கிறோமென்று கர்த்தர் சொல்லு, * ௰௫, ௨௰. ஏசாயா. ௪௧, ௰.

௯ கர்த்தர் தமது கரத்தை நீட்டி * என் வாயைத் தொட்டு இதோ † நம்முடைய வார்த்தைகளை யுன் வாயிலே வைக்கிறோமென்றும். * ஏசா. ௬, ௬. ௭. † ஏசா. ௫௧, ௬. ௰. ௫௯, ௨௧.

௰ பார், பிடுங்கவும் நிர்மூலமாக்கவும் அழிக்கவும் இடிக்கவுங் கட்டவும் நாட்டவுமாக உன்னை நாம் இன்றைத்தினஞ் சாதிகளின் மேலும் இராச்சியங்களின் மேலும் நிறுத்துகிறோமென்றுங் கர்த்தரென்னுடனே சொன்னார்.

௰௧ பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்கு உண்டாகி, அவர், எரேமியாவே, நீயென்ன காண்கிறாயென்றார், நிவிரித்துக் காய்க்கிற மரத்தின் கிளையைக் காண்கிறேனென்றேன்.

௰௨ அப்போது கர்த்தரென்னுடனே, நன்றாய்க் கண்டாய், ஏனெனில் நாம் நம்முடைய வார்த்தையின்படியே யதை நிறைவேற்றும்படிக்குத் துரிதித்திருப்போமென்றார்.

௰௩ கர்த்தருடைய வார்த்தை யிரண்டாம் விசை யெனக்கு உண்டாகி, அவர், நீயென்ன காண்கிறாயென்றார், பொங்குகிற பானையை நான் காண்கிறேன், அதின் வாய் வடக்கேயிருந்து நோக்குகிறதென்றேன்.

௰௪ அப்போது கர்த்தரென்னுடனே சொன்னதாவது, * வடக்கேயிருந்து இந்தத் தேசத்திலுடைய குடிகளெல்லாரின் மேலும் பொல்லாப்பு திறந்துவிடப்படும். * ௪, ௬.

௰௫ ஏனெனில் இதோ, நாம் * வடதிசை யிராச்சியங்களின் வம்சங்களையெல்லாங் கூப்பிடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், இவர்கள் வந்து அவனவன் தன்னுடைய ஆசனத்தை † எருசலேமின் ஒலிமுக வாசல்களுக்கும் அதினுடைய சுற்றுமதில்களெல்லாவற்றுக்கும் விரோதமாகவும், யூதாவினுடைய எல்லாப் பட்டணங்களுக்கும் விரோதமாகவும் வைப்பார்கள். * ௫, ௰௫. ௬, ௨௨. ௰, ௨௨. † ௫௨, ௪. ௫.

௰௬ அவர்கள் நம்மை விட்டு வேறுந் தேவர்களுக்குத் தூபங் காட்டித் தங்கள் கைகளின் கிரியையைப் பணிந்துகொண்ட அவர்களுடைய எல்லாப் பொல்லாப்பினிமித்தியம் நாம் நம்முடைய நியாயத்தீர்ப்புகளையவர்களுக்கு விரோதமாகக் கூறுவோம்.

௰௭ ஆகையால் * நீயுன் அரையைக் கட்டிக்கொண்டு நின்று, நாம் உனக்குக் கற்பிப்பதையெல்லாம் அவர்களுடனே சொல்லு, நாமுன்னையவர்களுக்கு முன்பாகக் கலங்கப்பண்ணாதபடிக்கு நீயவர்களுடைய முகப்பார்வையாலே கலங்காதிரு. லூக்கா. ௰௨, ௩௫. ௧. பேது. ௧, ௰௩.

௰௮ ஏனெனில் இதோ தேசமனைத்துக்கும் யூதாவின் இராசாக்களுக்கும் அதின் பிரபுக்களுக்கும் அதின் ஆசாரியர்களுக்கும் இத் தேசத்தின் சனத்துக்கும் எதிராக நாமுன்னை இன்றைத்தினம் * அரணிப்பான பட்டணமும் இருப்புத்தூணும் வெண்கல அலங்கமுமாக்குகிறோம். * ௬, ௨௭. ௰௫, ௨௰. எசேக்கி. ௩, ௮. ௯.

௰௯ அவர்கள் உனக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுவார்கள், ஆனால் உன்னை மேற்கொள்ளாதிருப்பார்கள், ஏனெனில் உன்னை விடுவிக்கும்படிக்கு நாமுன்னுடனேயிருக்கிறோமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

## ௨. அதிகாரம்.

[பராபரன் செய்த பெரிய உபகாரங்களை யறியாமற்போன யூதர் குற்றக்காய்க்கடிந்துகொள்ளப்பட்டது.]

கர்த்தருடைய வார்த்தை யெனக்கு உண்டாகி அவர் சொன்னதாவது,

௨ நீ போய் எருசலேமின் செவிகளிற்படக் கூப்பிட்டுச் சொல்லவேண்டியது, விதைக்கப்படாத் தேசமாகிய வனாந்தரத்திலே நீ நம்முடைய பிற்காலே நடந்துவந்த உன் இளவயதின் பத்தியையும் உன் மணவிவாகத்தின் நேசத்தையும் நினைத்திருக்கிறோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ இஸ்ரவேல் கர்த்தருக்குப் பரிசுத்தமும் அவருடைய வரத்தின் முதற்கனியுமாயிருந்தது, அதைப் பட்சித்தயாவரும் தோஷிகளானார்கள், பொல்லாப்பு இவர்கள் மேல் வந்ததென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪ யாக்கோபின் வீட்டாரே இஸ்ரவேல்

வீட்டினுடைய எல்லாவம்சங்களே, கர்த்தருடையவார்த்தையைக்கேளுங்கள்.

௫ கர்த்தர்சொல்லுகிறதாவது, எங்களை எகிப்துத்தேசத்திலிருந்தேறப்பண்ணினவரும், அந்தரவெளியும்பள்ளங்களுமானதேசமும் வறட்சியும் மரணநிழலுமானதேசமும் ஒருவனுங்கடவாமலும் ஒருமனுஷனுங்குடியிராமலுமிருக்கிறதேசமுமான வனாந்தரத்திலெங்களை நடத்தினவருமாகிய கர்த்தர் எங்கேயென்று உங்கள்பிதாக்கள்கேளாமல்,

௬ நம்மைவிட்டுத் தூரப்பட்டு மாய்கையின் பிறகாலேநடந்து வீணராய்ப்போகிறதற்கு * நம்மில் என்ன அநியாயத்தைக் கண்டுபிடித்தார்கள். * மிகா. ௬, ௩.

௭ நாமுங்களைப்பயிர் நிலமாகிய தேசத்துக்கு அதின்கனியையும் நன்மையையுஞ்சாப்பிடும்படிக்கு அழைத்துக்கொண்டுவந்தோம், ஆனால் நீங்கள் அதற்குட்பிரவேசித்து நம்முடைய தேசத்தைத்தீட்டுப்படுத்தி நம்முடைய சுதந்தரத்தையருவருப்பாக்கிப்போட்டீர்கள்.

௮ ஆசாரியர்கள் கர்த்தர் எங்கேயென்று சொல்லாமலும் * வேதத்தைப் படித்தவர்கள் நம்மையறியாமலும்போய் மேய்ப்பர் நமக்கு விரோதமாய்த்துரோகம்பண்ணினார்கள், தீர்க்கதரிசிகள் பாகாலைக்கொண்டுதீர்க்கதரிசனஞ்சொல்லி உதவாதவைகளின்பிறகாலேநடந்தார்கள்.

* ரோமர். ௨, ௨௰. ௨௧.

௯ ஆனதுகொண்டு இன்னம் உங்களோடேவழக்காடுவோம், உங்கள் பிள்ளைகளின் பிள்ளைகளோடும் வழக்காடுவோமென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௰ ஏனெனில் நீங்கள் கித்திமின் தீவுகளைக்கடந்துபோய்ப்பார்த்துக்கேதாருக்குமனுப்பி நன்றாய்க்கவனித்துக்கொண்டு இப்படிக்கொத்த காரியமுண்டோவென்றும்,

௰௧ ஒருசாதியானது தேவர்களல்லாதவைகளுமாகிய தங்கள்தேவர்களை மாற்றினதுண்டோவென்றும்பாருங்கள், நம்முடையசனமோ தன்மகிமையையுதவாத்தாகமாற்றிப்போட்டது.

௰௨ * வானங்களே இதினாலேபிரமித்துக்கொந்தளித்துமிகவுந் திடுக்கிடுங்களென்றுகர்த்தர்சொல்லுகிறார். * ஏசாயா. ௧, ௨.

௰௩ ஏனெனில் நம்முடையசனம் இரண்டுபொல்லாப்புகளைச்செய்தது, * ஜீவனுள்ளதண்ணீரின் ஊற்றாகிய நம்மைவிட்டார்கள், தண்ணீர்நிற்கமாட்டாதவெடிப்புள்ள சலத்தொட்டிகளாகிய பள்ளங்களைத்தங்களுக்குவெட்டினார்கள். * சங்கீ. ௩௬, ௰.

௰௪ இஸ்ரவேல் அடிமையோ அவன்வீட்டிற்பிள்ளையோ ஏன்கொள்ளையானான்.

௰௫ சிங்கக்குட்டிகள் அவன்மேற்கர்ச்சித்துச்சங்களைசத்தத்தைக்காட்டி அவன்தேசத்தைப்பாழாக்கிப்போட்டது, அவனுடைய பட்டணங்கள் குடியிராமலே சுட்டெரிக்கப்பட்டது.

௰௬ நோப், தக்பானேஸ்என்றபட்டணங்களின் புத்திரரும் உன் உச்சந்தலையை மேய்ந்துகொண்டார்கள்.

௰௭ உன் பராபரனாகிய கர்த்தருன்னை வழியிலே நடக்கப்பண்ணும் நேரத்திலே நீயவரை விட்டுப்போகிறதனாலேயல்லவோ இதையுனக்குண்டுபண்ணுகிறாய்.

௰௮ இப்போது சீகோரின் தண்ணீரைக் குடிக்க எகிப்துக்குப்பயணம்போகிறது உனக்கென்ன பிரயோசனம், ஐப்பிராத்து நதியின் தண்ணீரைக்குடிக்க அசீரியாவுக்குப்பயணம்போகிறதும் உனக்கென்ன பிரயோசனம்.

௰௯ * உன்பொல்லாப்புஉன்னைத்தண்டித்து உன் மாறுபாடுகள் உன்னைக்குற்றம்பிடிக்கிறது, நீ உன்பராபரனாகியகர்த்தரைவிடுகிறதும் நமக்குப்பயப்படுதல் உன்னிடத்திலில்லாமலிருக்கிறதும் எத்தனைபொல்லாப்புங் கசப்புமானதென்றறிந்துபாரென்று சேனைகளின்கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார். * ௪, ௰௮. ஏசாயா. ௩, ௯.

௨௰ ஏனெனில் பூர்வகாலந்துவக்கி நானுன் நுகத்தடியையுடைத்து உன்கட்டுகளையறுத்தேனே, நான் அடிமைப்படுவதில்லையென்றுநீயுஞ்சொன்னாயே, ஆனாலும் மேடுமையான எல்லாமேட்டின்மேலும் பச்சையான எல்லாமரத்தின்கீழும் நீ வேசியாய்த்திரிகிறாய்.

௨௰௧ நானுன்னை * நற்குலதிராட்சச்செடியாகவும் முழு உண்மையானவிதையாகவும் நாட்டினேனே, நீ நமக்குவேறுதிராட்சச்செடியின் ஆகாதகொடிகளாய்மாறிப்போனதெப்படி! * சங்கீ. ௮௦, ௯. அ௰, ௬. ஏசா. ௫, ௧. ௨.

௨௰௨ நீயுன்னை வெள்ளுப்பினாலே கழுவி உனக்காகச்சவுக்காரத்தைநிரம்பக்கூட்டினாலும் உன் அக்கிரமத்தின்கறைகள் நமக்குமுன்பாகவிருக்குமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

௨௰௩ நான் அழுக்கானதில்லை நான்பாகால்களைப்பின்தொடர்ந்ததில்லையென்றெப்படிச்சொல்லுகிறாய், பள்ளத்தாக்கிலே நடக்கிறமார்க்கத்தைப்பார் நீ செய்ததையறிந்துகொள், தன் வழிகளைத்தாறுமாறுக்குகிற வேகமான பெண்ணொட்டகம் நீ.

௨௰௪ வனாந்தரத்துக்குப்பழகினதுந்தனிச்சையின் ஆவலிலே காற்றையுள்ளேகொள்ளுகிறதுமான காட்டுக்கழுதை நீ, அதின் ஓட்டத்தை நிறுத்தித்திருப்புபவனார், அதைத்தேடுகிறவைகளெல்லாந்தேடி விடாய்

த்துப்போவதில்லை, அதின் மாசத்தில் அவைகள் அதைக் கண்டுபிடிக்கும்.

௨௫ உன் காலை வெறுங்காலாகாதபடிக்கும் உன் தொண்டையைத் தவனமடையாதபடிக்கும் அடக்கிக்கொள்ளென்றால் நீ அது விருதா நான் அப்படிச் செய்வதில்லை, ஏனெனில் அந்நியரைச் சிநேகிக்கிறேன், அவர்களைப் பின்தொடருவேனென்கிறாய்.

௨௬ திருடன் கண்டுபிடிக்கப்படுகிறபோது எப்படி வெட்கப்படுகிறானோ அப்படியே இஸ்ரவேல் வீட்டார் வெட்கப்படுவார்கள், மரத்துக்கு நீ என் தகப்பனென்றும் கல்லுக்கு நீ என்னைப் பெற்றவளென்றுஞ் சொல்லுகிற அவர்களும் அவர்கள் இராசாக்களும் அவர்கள் பிரபுக்களும் அவர்கள் ஆசாரியர்களும் அவர்கள் தீர்க்கதரிசிகளுந்தானே.

௨௭ ஏனெனில் முகத்தையல்ல * பிடரியை அவர்கள் நமக்குக் காட்டித் தங்கள் இக்கட்டுக்காலத்திலோ எழும்பி எங்களை இரட்சியுமென்கிறார்கள். * ஏசேக்கி. ௨௩, ௩௫.

௨௮ * நீ உனக்கு உண்டுபண்ணின தேவர்கள் எங்கே? உன் இக்கட்டுக்காலத்திலே உன்னை இரட்சிக்குமோவென்று அவைகள் எழும்பட்டும், ஏனெனில் * † யூதாவே உன் பட்டணங்களின் இலக்கமும் உன் தேவர்களின் இலக்கமுஞ் சரி. * நீதிக. ௰, ௰௪.
† ௰௧, ௰௩

௨௯ நம்மோடே நீங்கள் வழக்காடுவானேன், நீங்கள் அனைவரும் நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௰ நாம் உங்கள் பிள்ளைகளை * அடித்தது விருதா, தண்டனையை ஏற்றுக்கொள்ளாதே போனார்கள், அழிக்கிற சிங்கத்தைப்போலே உங்கள் பட்டயம் உங்கள் தீர்க்கதரிசிகளைப் பட்சிக்கிறது. * ௫, ௩. ஏசா. ௧, ௰௫.

௩௰௧ சந்ததியே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தையைச் சிந்தித்துப்பாருங்கள், நாம் இஸ்ரவேலுக்கு வனாந்தரமுங் காரிருளான பூமியுமாக இருந்தோமோ, பின்னை ஏன் நம்முடைய சனம் நாங்கள் ஆளுகிறோமென்றும் இனி உம்மண்டைக்கு நாங்கள் வருவதில்லையென்றுஞ் சொல்லுகிறார்கள்.

௩௰௨ ஒரு கன்னியாஸ்திரி தன் ஆபரணத்தையும் ஒரு மணவாட்டி தன் சிங்காரங்களையும் மறப்பாளோ? நமது சனமோவென்றால் எண்ணிமுடியாத நாட்களாய் நம்மை மறந்திருக்கிறார்கள்.

௩௰௩ சிநேகத்தைத் தேடும்படிக்கு * நீ உன் மார்க்கத்தை நயமாக்குகிறதென்ன? இப்படியாய் நீ பொல்லாத ஸ்திரிகளுக்கும் உன் வழிகளைக் கற்றுக்கொடுத்தாய். * ௨. இரா. ௰௭, ௯.

௩௰௪ உன் வஸ்திரத்தோரங்களிலுங் குற்றமில்லாத ஏழை ஆத்துமாக்களின் இரத்தங் கண்டுபிடிக்கப்பட்டது, அதைத் தோண்டித் தேடினதினாலல்ல, அது எல்லாவற்றின் மேலும் வெளியாயிருக்கிறதினாலே அதைக் கண்டுபிடித்தோம்.

௩௰௫ ஆகிலுங் குற்றமில்லாதிருக்கிறேனென்றும் அவருடைய கோபமென்னைவிட்டுத் திரும்பிற்றென்றுஞ் சொல்லுகிறாய், இதோ நான் பாவஞ்செய்யவில்லையென்று நீ சொல்லுகிறதினிமித்தியம் நாம் உன்னோடே நியாயத்துக்குட்பிரவேசிப்போம்.

௩௰௬ நீ உன் வழியை மாற்றிக்கொள்ளும்படிக்கு இத்தனையாய் அலைந்துபோகிறதென்ன? நீ அசூரியாவினால் வெட்கிப்போனதுபோலே * எகிப்தினாலும் வெட்கப்படுவாய்.
* ஏசா. ௩௰௧, ௧.

௩௰௭ இதிலுமிருந்து நீ உன் கைகளை உன் தலையின்மேல் வைக்கப்பட்டவைகளாய்ப் புறப்படுவாய், ஏனெனில் உன் நம்பிக்கைகளைக் கர்த்தர் வெறுத்திருக்கிறார், அவைகளால் உனக்கு வாய்க்கப்போகிறதில்லை.

## ௩. அதிகாரம்.

[விக்கிரக ஆராதனையென்ற சோரமார்க்கமாய்ப்போன யூதசனத்துக்குச் சொன்ன புத்தி.]

அவர் சொல்லுகிறதாவது, இதோ * ஒரு புருஷன் தன் பெண்சாதியைத் தள்ளிவிட்டு அவள் அவனிடத்திலிருந்து புறப்பட்டு அன்னிய புருஷனுக்குப் பெண்சாதியானால் அவன் அவளிடத்திலே இனித் திரும்பப்போவானோ? அந்தத் தேசம் மிகவுந் தீட்டுப்படுமல்லவோ? நீயோவென்றால் அநேக சிநேகிதரோடே வேசித்தனம்பண்ணினாய், ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பவாவென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௫. மோசே. ௨௪, ௨—௪.

௨ நீ மேடுகளின்மேல் உன் கண்களை ஏறெடுத்து நீ எவ்விடத்திலே புணர்ச்சியாகாதே போனாயென்று பார், வனாந்தரத்திலே அராபியன் செய்கிறதுபோல நீ வழிகளில் அவர்களுக்காக உட்கார்ந்து உன் வேசித்தனங்களாலும் உன் பொல்லாப்பினாலுந் தேசத்தைத் தீட்டுப்படுத்தினாய்.

௩ ஆனதுகொண்டு மழைகள் வருஷிக்காமலும் பின்மாரியில்லாமலும் போனது, உனக்கோ வேசிஸ்திரீயின் நெற்றியிருக்கிறது நாணமாட்டேனென்கிறாய்.

௪ நீ இப்போதுமுதலாய் நம்மை நோக்கி என் பிதாவே, தேவரீர் என் இளவயதின் அதிபதியென்று கூப்பிடு.

௫ சதாகாலமாகக் கோபத்தை வைப்பாரோ அதை என்றென்றைக்குங் காப்பாரோ என்கிறாயல்லவோ, இதோ இப்படி நீ சொல்லியும் பொல்லாப்புகளைச் செய்து, மிஞ்சிப்போகிறாயென்கிறார்.

இஸ்ரவேல் தள்ளிவிடப்பட்டதைக்கண்டும் யூதர்களுணர்ப்படாதேபோனார்களென்பது.

௬ யோசியா இராசாவின் நாள்களிலே கர்த்தர் என்னுடனேசொன்னதாவது, மாறுபாடான இஸ்ரவேல் என்பவள் செய்ததைக்கண்டாயோ, அவள் * உயரமானசகல பருவதத்தின்மேலும் பச்சையான சகல மரத்தின்கீழ்ப்போய் அங்கே வேசித்தனம் பண்ணினாள். * ௨, ௨௰.

௭ அவள் இப்படியெல்லாஞ்செய்த்துக்குப்பின்பு நம்மண்டைக்குத்திரும்பென்று நான்சொன்னேனும், ஆனால் திரும்பாதேபோனாள். இதை யூதாவென்ற அவளுடையசகோதரியாகிய துரோகிபார்த்தாள்.

௮ ஆனால் * மாறுபாடான இஸ்ரவேலென்பவள் விபசாரம்பண்ணின எல்லாவகைகளின் நிமித்தியமும் நாம் அவளையனுப்பிவிட்டு அவளுடைய தள்ளுதலின்சீட்டை யவளுக்குக்கொடுத்தபோதும் அவளுடைய சகோதரியாகிய யூதா என்ற துரோகி பயப்படாமல் இவளும்போய் வேசித்தனம்பண்ணினாளென்று கண்டோம். ௨. இராசா. ௰௭, ௰௮. ௰௬.

௯ சம்பவிப்பதேதெனில் அவளுடைய வேசித்தனத்தின்பிரசித்தத்தினாலே தேசந் தீட்டுப்பட்டுப்போனது. ஏனெனில் கல்லோடும் மரத்தோடும் விபசாரம்பண்ணிக்கொண்டிருந்தாள்.

௰ ஆனால் இதையெல்லாங்கண்டும் யூதா வென்ற அவளுடைய சகோதரியாகிய துரோகிபொய்யாயல்லாமல் முழு இருதயத்தாலே நம்மண்டைக்குத் திரும்பினதில்லையென்று கர்த்தர்சொன்னார்.

இஸ்ரவேலைத்திரும்பத்தயவாய்க்கூப்பிடுதலுக்கழைத்துக்கூப்பிடும் யூதருக்கும் இஸ்ரவேலருக்கும் மகிமையானவாக்குத்தத்தங்களைப்பண்ணினது.

௰௧ பின்னையுங்கர்த்தர்என்னுடனேசொன்னதாவது, யூதா என்றதுரோகியைப்பார்க்கிலும் மாறுபாடான இஸ்ரவேலென்பவள் தன்னுத்தமாலே நீதியாகினாள்.

௰௨ நீபோய்வடதிசையைநோக்கிக்கூற வேண்டியவார்த்தைகளாவது, மாறுபாடான இஸ்ரவேலே, * திரும்பு என்றுகர்த்தர் சொல்லுகிறார், அப்போது நாம் உங்கள் மேல்நம்முடையகோபத்தைவிறங்கப்பண்ணுவதில்லை, ஏனெனில் † நாம்கிருபையுள்ளவரென்று கர்த்தர்சொல்லுகிறார், என்றைக்குங்கோபம்வையோம். * ஏசே. ௩, ௰௮. ௩௰—௩௨ † சங்கீ. ௱௩; ௯.

௰௩ நீயோவெனில் உன்பராபரனாகியகர்த்தருக்கு விரோதமாய்த்துரோகம்பண்ணி பச்சையானசகலமரத்தின்கீழும் உன்வழிகளை அன்னியர்பிறகாலே சிதறப்பண்ணி யென்றஉன்னுடையஅக்கிரமத்தையும்நம்முடைய சத்தத்தைக்கேளாதேபோனீர்களென்கிறதையும் அறிந்துகொள்ளென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௰௪ மாறுபாடானபிள்ளைகளே, திரும்புங்களென்றுகர்த்தர்சொல்லுகிறார், ஏனெனில் நாம் உங்கள்பத்தாவாயிருக்கிறோம், நாம் உங்களை ஊரிலொருவனையும் வமிசத்தில் இரண்டுபேரையுமெடுத்து உங்களைச்சீயோனுக்கழைத்துக்கொண்டுவந்து, * ஏசே.௨, ௰௯. ௨௰.

௰௫ உங்களுக்கு நம்முடைய இருதயத்துக்கேற்ற * மேய்ப்பரைக்கொடுப்போம், அவர்கள் உங்களையறிவும் புத்தியுமாய் மேய்ப்பார்கள். * ௨௩, ௪. எசேகி. ௩௪, ௰௩.

௰௬ நீங்கள்தேசத்திலே பெருகிப்பலுகுகிற அந்நாள்களிலே சம்பவிப்பதேதென்றால், அவர்கள் இனிக்கர்த்தருடைய உடன்படிக்கையின்பெட்டியென்று சொல்வதில்லை, அது அவர்கள்மனதில் ஏறுவதுமில்லை, அவர்கள் அதைத் தினைப்பதுமில்லை சிந்திப்பதுமில்லை அது இனிச்செப்பனிடப்படுவதுமில்லையென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௰௭ அக்காலத்திலே * எருசலேமைக் கர்த்தருடைய இராசாசனமென்பார்கள், சகலசாதியாரும் எருசலேமில் விளங்கியகர்த்தருடைய நாமத்தின்நிமித்தியம் அதினிடமாகச்சேர்வார்கள், அவர்கள் இனித்தங்கள் பொல்லாதவிருதயத்தின்கடினத்தைப் பின்பற்றிநடப்பதில்லை. * ஏசாயா. ௨, ௨. ௩. மிகா. ௪, ௧. ௨.

௰௮ அந்நாட்களிலேயூதாவீட்டார் இஸ்ரவேலவீட்டாரிடத்திலேபோய் அவர்கள் ஏகமாய்வடதேசத்திலிருந்துபுறப்பட்டுநாந் தங்கள் பிதாக்களுக்குச்சுதந்தரமாகக் கொடுத்ததேசத்துக்குவருவார்கள்.

௰௯ நாமுன்னைப்பிள்ளைகளுக்குள்ளேவைத்து இச்சிக்கப்பட்டதக்க தேசத்தையுஞ் சாதிகளுடைய சேனைகளின் அலங்காரமான சுதந்தரத்தையும் உனக்குக்கொடுப்பதெப்படியென்றுசொன்னேனும், ஆனால் நீ நம்மைமென்பிதாவேயென்றழைப்பாய். நீ நம்மைவிட்டுவிலகுவதில்லையென்று திரும்பவுஞ்சொன்னேனும்.

௨௰ ஒருபெண்சாதி தன்புருஷனுக்குத் துரோகியாகிறதுபோலே, இஸ்ரவேலவீட்டார்களாகிய நீங்கள்நமக்குத்துரோகிகளானதுமெய்யாமேயென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௨௰௧ ஆனால் தங்கள் வழியைத்தாங்களேமாறுபாடாக்கித்தங்கள் பராபரனாகிய கர்த்தரைமறந்ததின்நிமித்தியம் இஸ்ரவேலபுத்திரர் அழுதுகொண்டுவிண்ணப்பஞ்செய்யுஞ்சத்தம் உயர்நிலங்களிலேகேட்கப்படும்.

௨௨ மாறுபாடான பிள்ளைகளே, திரும்புங்கள், உங்கள் மாறுபாடுகளைக் குணமாக்குவோமென்று சொல்லென்றார். இதோ, உம்மண்டைக்கு வருகிறோம், ஏனெனில் தேவரீரே எங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௨௩ மேடுகளையும் திரளான பருவதங்களையும் நம்புகிறது விருதாவாயிருக்கிறது மெய்யாமே, இஸ்ரவேலின் இரட்சிப்பு எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குள்ளிருக்கிறது மெய்யாமே.

௨௪ ஏனெனில் இலச்சையானது எங்கள் சிறுவயது துவக்கி எங்கள் பிதாக்களுடைய பிரயாசத்தையும் அவர்கள் ஆடுகளையும் மாடுகளையும் அவர்கள் குமாரரையுங் குமாரத்திகளையும் பட்சித்துப் போட்டது.

௨௫ எங்கள் இலச்சையிலே கிடக்கிறோம். எங்கள் இகழ்ச்சி எங்களை மூடியிருக்கிறது, ஏனெனில் நாங்களும் எங்கள் பிதாக்களும் எங்கள் சிறுவயது துவக்கி இந்நாள்வரைக்கும் எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம், எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சொல்லைக் கேளாமலும் போனோம்.

## ௪. அதிகாரம்.

[இஸ்ரவேலருக்கு நயமாகவும் யூதருக்குப் பயமாகவுஞ் சொன்ன புத்தி.]

இஸ்ரவேலே நீ திரும்ப மனதானால் நம்மண்டைக்குத் திரும்பென்று கர்த்தர் சொல்லுகிறார். நீ உன் அருவருப்புகளை நமது முகத்தை விட்டகற்றினால் நீ இனி அலைந்து திரிவதில்லை.

௨ கர்த்தருடைய ஜீவன்பேரிலே உண்மையும் நியாயமும் நீதியுமாய்ச் சத்தியம் பண்ணுவாய், புறச்சாதிகளும் அவருக்குள் † தங்களை யாசீர்வதித்துக்கொண்டு அவருக்குள் மேன்மைபாராட்டுவார்கள். * ஏசா. ௪௫, ௨௩. ௨௪. † ௧. மோசே. ௨௨, ௰௮.

௩ ஆனால் யூதா மனுஷரோடும் எருசலேமியரோடுங் கர்த்தர் சொல்லுகிறதாவது, * நீங்கள் முள்ளுகளுக்குள்ளே விதையாமல் பயிர் நிலத்தையுங்களுக்குப் புதிதாய்ப் பண்படுத்துங்கள். * ஓசெ. ௰, ௰௨. ௰௩. மத்தே. ௰௩, ௭. எபிரே. ௬, ௮.

௪ யூதா மனுஷரே, எருசலேமின் குடிகளே, உங்கள் கிரியைகளுடைய பொல்லாப்பின் நிமித்தியம் நம்முடைய உக்கிரம் அக்கினியைப்போலே புறப்பட்டு அவிக்கிறவனில்லாமல் எரியாதபடிக்கு * நீங்கள் கர்த்தருக்கு உங்களைச் சுன்னத்துப் பண்ணி உங்கள் இருதயத்தின் நுனித்தோல்களை நீக்கிப்போடுங்கள். * ௫. மோசே. ௰, ௰௬.

௫ நீங்கள் தேசத்திலே எக்காளமூதுங்களென்று சொல்லி யூதாவில் அறிவித்து எருசலேமிலே கேட்கப்பண்ணுங்கள், நாம் அரணான பட்டணங்களுக்குட்படும்படிக்குச் சேருங்களென்று சொல்லி நீண்ட சத்தமாய்க் கூப்பிடுங்கள்.

௬ சீயோன் திசையாய்க் கொடியேற்றுங்கள், கூடுங்கள் நிற்காதேயுங்கள், ஏனெனில் நாம் * வடக்கேயிருந்து பொல்லாப்பையும் மகா நொறுக்குதலையும் வரப்பண்ணுகிறோம். * ௧, ௰௪.

௭ உன் தேசத்தைப் பாழாக்கிப்போடும்படிக்குச் சிங்கம் தன் புதரிலிருந்தெழும்பி சாதிகளின் சங்காரன் தன் தானத்திலிருந்து பயணப்பட்டு வருகிறான், உன் பட்டணங்கள் குடியிராதபடியாய் அழிக்கப்படுமென்கிறார்.

௮ இதினிமித்தியம் இரட்டுகளைக் கட்டிக்கொள்ளுங்கள், புலம்பி அலறுங்கள், ஏனெனில் கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் நம்மைவிட்டுத் திரும்பாது.

௯ அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால் இராசாவின் இருதயமும் பிரபுக்களின் இருதயமும் மடிந்து ஆசாரியர்கள் திகைக்கிட்டுத் தீர்க்கதரிசிகள் திகைப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰ ஆ கர்த்தராகிய ஆண்டவரே, உங்களுக்குச் சமாதானமிருக்குமென்று சொல்லப்பட்டதினால் மெய்யாகவே இந்தச் சனத்துக்கும் எருசலேமுக்கும் மிகுதியான மோசத்தை வரப்பண்ணினீர், பட்டயம் ஆத்துமாமட்டும் எட்டுமேயென்றேன்.

௰௧ வனாந்தரத்திலுள்ள உயர் நிலங்களிலிருந்து ஒரு உஷ்ணக்காற்று நமது சனமாகிய குமாரத்திக்கு நேராகும் வழியில் அடிக்குமென்று அக்காலத்திலே இந்தச் சனத்தோடும் எருசலேமோடுஞ் சொல்லப்படும், அது தூற்றவல்ல சுத்திகரிக்கவுமல்ல,

௰௨ இவைகளைப் பார்க்கிலும் உரமான காற்று நம்முடைய காரியமாய் வரும், இப்போது நாமும் அவர்களோடே நியாயங்களைப் பேசுவோம்.

௰௩ இதோ மேகங்களைப்போலெழும்பி வருகிறான், அவனுடைய இரதங்கள் பெருங்காற்றைப்போலிருக்கிறது, அவன் குதிரைகள் கழுகுகளிலும் வேகமானவைகள், நமக்கு ஐயோ ஏனெனில் பாழ்க்கடிக்கப்படுகிறோம்.

௰௪ எருசலேமே, நீ இரட்சிக்கப்படும்படிக்கு * உன் இருதயத்தைப் பொல்லாப்பறக் கழுவு, எந்தமட்டும் அக்கிரம நினைவுகள் உன்னுள்ளத்திலே தங்கும், * ஏசா. ௧, ௰௬.

௰௫ ஏனெனில் ஒரு சத்தந் தாணிலிருந்து வந்து செய்தியை யறிவிக்கிறதும் எப்பிராயீமின் பருவதத்திலிருந்து வந்து தீங்கைக் கேட்கப்பண்ணுகிறதுமாயிருக்கிறது.

௰௬ சாதிகளுக்கதைப் பிரஸ்தாபம்பண்ணுங்கள். இதோ காவற்காரர் தூரதேசத்திலிருந்து யூதாவுடைய பட்டணங்களுக்

குவிரோதமாய்த் தங்கள் சத்தத்தைக் காட்டுவார்களென்று எருசலேமுக்குக் கூறுங்கள்.

௰௭ அதுக்குவிரோதமாய் அவர்கள் வயல்வெளிகளின் காவற்காரரைப்போலே சுற்றியிருப்பார்கள், ஏனென்றால் அது நமக்கு விரோதமாய்ப் பெலமாயிற்றென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ * உன் மார்க்கமும் உன் கிரியைகளும் இவைகளை உனக்குண்டுபண்ணிற்று, இது இத்தனை கசப்பாயிருந்து உன் இருதயமட்டும் எட்டுகிறது, உன்னுடைய பொல்லாப்புத்தானே. * உ, ௰௯.

௰௯ என் குடல்கள் என் குடல்களே எனக்கு நோகிறது, என் இருதயத்தின் ஆண்டவம் அறாது, என் இருதயம் என்னில் கதறுகிறது, அமர்ந்திருக்கமாட்டேன் ஏனெனில் என் ஆத்துமா எக்காளத்தின் சத்தத்தையும் யுத்தத்தின் ஆர்ப்பரிப்பையுங் கேட்டது.

௨௰ நொறுக்குதலின்மேல் நொறுக்குதல் கூறப்படுகிறது, ஏனெனில் தேசமெல்லாம் பாழாகும், அசுப்பிலே என் கூடாரங்களும் ஒருநிமிஷத்தில் என் திரைகளும் பாழாக்கப்படும்.

௨௧ எந்தமட்டும் நான் கொடியைக் கண்டு எக்காளத்தின் சத்தத்தைக் கேட்பேன்.

௨௨ என் சனமோவென்றால் * மதியற்றிருக்கிறது, என்னையவர்கள் அறியார்கள், அவர்கள் புத்தியில்லாத பிள்ளைகள், அவர்கள் உணர்வுள்ளவர்களல்ல, † பொல்லாப்புக்கு அவர்கள் ஞானமுள்ளவர்கள், நன்மை செய்கிறதுக்கோ அறிவற்றிருக்கிறார்கள். * ௫. மோ. ௩௨, ௨௮. † ரோம. ௰௬, ௰௯.

௨௩ தேசத்தைப் பார்த்தேன் இதோ அது உருவற்றதும் வெறுமையுமானது, வானங்களைப் பார்த்தேன் அவைகளின் வெளிச்சம் அவைகளுக்கில்லை.

௨௪ பருவதங்களைப் பார்த்தேன் இதோ அவைகள் அதிர்ந்து எல்லாமேடுகளும் அசைந்தது.

௨௫ அப்புறம் நான் பார்க்கும்போது இதோ மனுஷனில்லை, * ஆகாசத்துப் பறவைகளும் எல்லாம் பறந்துபோனது. * ௯, அதி. ௰.

௨௬ அப்புறம் நான் பார்க்கும்போது இதோ கர்த்தராலும் அவருடைய கோபத்தின் உக்கிரத்தாலும் பயிர்நிலம் வனாந்திரமும் அதின் பட்டணங்களெல்லாம் இடிபட்டதுமாயிருந்தது.

௨௭ ஏனெனில் தேசமெல்லாம் பாழாம், ஆகிலும் * சர்வசங்காரஞ் செய்யோமென்று கர்த்தர் சொல்லுகிறார். ௫, அதி. ௰. ௰௮. ௩௰, ௰௧. ௪௬, ௨௮.

௨௮ இதினிமித்தியந் தேசம் புலம்பி உயரவிருக்கிறவானங்கள் கறுத்துப்போம், ஏனென்றால் அதைச் சொன்னேன், அதைத் தீர்மானம்பண்ணினேன், நாம் மனஸ்தாபப்படுவதுமில்லை நாம் அதைவிட்டுத் திரும்பிக்கொள்வதுமில்லை.

௨௯ இராவுத்தரும் அம்பெய்கிறவர்களுங் கொட்டுஞ் சத்தத்தினாலே சகல ஊராரும் ஓடி அடர்த்தியான வனங்களுக்குட்பட்டுக் கன்மலைகளிலும் ஏறுவார்கள், எல்லாவூர்களும் ஒருமனுஷனும் அவைகளிலே குடியிராதபடியாய்விடப்பட்டிருக்கும்.

௩௰ இப்போதும் பாழான நீ யென்னசெய்வாய், நீ இரத்தாம்பரம் உடுத்தாலும் பொன்னாபரணங்களால் உன்னைச் சிங்காரித்தாலும் உன் கண்களில் மையிட்டுக்கொண்டிருந்தாலும் வீணாய் உன்னையழகாக்குவாய், சோரர்க்காரர் உன்னையசட்டைபண்ணி உன்பிராணனை வாங்கத்தேடுவார்கள்.

௩௧ ஏனெனில் * கர்ப்பவேதனைப்படுகிறவளின் சத்தமாகவும் முதல்விசைபெறுகிறவளின் வியாகுலமாகவுஞ் சீயோன்குமாரத்தியின் சத்தத்தைக் கேட்கிறேன், அவள் பெருமூச்சுவிட்டுத் தன் கைகளை விரித்து ஆ எனக்கையோ ஏனெனில் கொன்றுபோடுகிறவர்களினாலே என் ஆத்துமா விடாயத்திருக்கிறதென்கிறாள். * ௬, ௨௪. ௰௩, ௨௧.

## ௫. அதிகாரம்.

[யூதசனத்தினுடைய பாவங்களின் நிமித்தியம் அதின்மேல்வரும் ஆக்கினைகள் அறிவிக்கப்பட்டது.]

நியாயஞ்செய்கிற மனுஷனைக் கண்டுபிடிப்பீர்களோவென்றும் விசுவாசத்தைத் தேடுகிறவனுண்டோவென்றும் எருசலேமின் தெருக்களிலே திரிந்து பார்த்து விசாரித்துக்கொண்டு அதின் வீதிகளிலே தேடுங்கள், அப்போது அதுக்கு மன்னிப்போம்.

௨ அவர்கள் கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்றாலும் பொய்யாணையிடுகிறார்களே.

௩ கர்த்தாவே உம்முடைய கண்கள் விசுவாசத்தையல்லோ நோக்குகிறது, அவர்களையடிக்கிறீர், ஆனால் அவர்களுக்கு நோகாது, அவர்களை நிர்மூலமாக்குகிறீர், ஆனால் புத்தியை யேற்றுக்கொள்ளமாட்டோமென்கிறார்கள், * தங்கள் முகங்களைக் கன்மலையிலுங் கெட்டியாக்கித் திரும்பமாட்டோமென்கிறார்கள். * எசாயா. ௪௮, ௪. எசாயா. ௨, ௪.

௪ நானோவெனில், இவர்கள் நீசராமே இவர்கள் புத்தியீனர் ஏனெனில் கர்த்தருடைய வழியையுந் தங்கள் பராபரனுடைய நியாயத்தையும் அறியாதிருக்கிறார்களென்றும்,

௫ நான் பெரியவர்களண்டையிலே போய் அவர்களோடே பேசுவேன், ஏனெனில் அவர்கள் கர்த்தருடைய வழியையுந் தங்கள்

பராபரனுடைய நியாயத்தையும் அறிவார்களென்று சொன்னேன், ஆனால் அவர்களேகமாய் * நுகத்தடியையொடித்துக்கட்டுகளை அறுத்துப்போட்டார்கள். * உ, உய.

சா ஆனபடியால் * காட்டிலிருந்து வருஞ் சிங்கம் அவர்களைக் கொன்று வனாந்தரங்களுடைய ஓனாய்கள் அவர்களைப் பாழாக்கிச் சிவிங்கி அவர்கள் பட்டணங்களின்மேலே காவல்பண்ணிக்கொண்டிருக்கும், அவைகளிலிருந்து புறப்படுகிறவனெல்லாம் பீறப்படுவான், ஏனெனில் அவர்கள் மீறுதல்கள் பெருகி அவர்கள் மாறுபாடுகள் பலத்துப்போனது. * ச. எ.

எ இவைகளை நாம் உனக்கு மன்னிப்பதெப்படி. உன் பிள்ளைகள் நம்மைவிட்டார்கள், அவர்கள் தெய்வமல்லாதவைகள் பேரில் ஆணையிடுகிறார்கள், நாந்திருத்தியாக்கின அவர்கள் விபசாரம் பண்ணி வேசிவீட்டிலே கூட்டங்கூடுகிறார்கள்.

அ அவர்கள் கொழுத்த குதிரைகளைப்போலக் காலமே யெழும்பி அவனவன் தனக்கடுத்தவனுடைய பெண்சாதியின் பின்னாலே கனைக்கிறான்.

கூ * இவைகளை விசாரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடைய ஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதிருக்குமோவென்று கர்த்தர் சொல்லுகிறார். * உகூ. வசன. கூ, அதி. கூ.

ய அதின் மதில்களின்மேலேறி அழித்துப்போடுங்கள், * ஆனால் சர்வசங்காரஞ்செய்யாதேயுங்கள், அதின் கொத்தளங்களை வாங்கிப்போடுங்கள், ஏனெனில் அவர்கள் கர்த்தருடையவர்களல்லர். * ச, உஎ.

யக ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாரும் யூதா வீட்டாரும் நமக்கு விரோதமாய் மிகுதியுந் துரோகம்பண்ணினார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

யஉ அவர் அப்படிக்கொத்தவரல்லவென்றும் பொல்லாப்பு நம்முடையமேல் வாராது, நாம் பட்டயத்தையாகிலும் பஞ்சத்தையாகிலுங்காண்பதில்லையென்றும்,

யங தீர்க்கதரிசிகள் காற்றாய்ப்போவார்கள், வசனமானது அவர்களில் இல்லை, அவர்களுக்கேயப்படியாகக்கடவதென்றும் அவர்கள் சொல்லிக் கர்த்தரை மறுதலிக்கிறார்கள்.

யச ஆகையாலே சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது, நீங்கள் இந்த வார்த்தையைச் சொன்னபடியினாலே இதோ நாம் * உன் வாயிலுள்ள நம்முடைய வார்த்தைகளை அக்கினியும் இந்த சனத்தை விறகுமாக்குவோம், அது இவர்களைப் பட்சிக்கும். * க, கூ.

யரு இஸ்ரவேல் வீட்டாரே, இதோ தூரத்திலிருந்து நாமுங்கள் மேல் ஒரு சாதியைக் கொண்டுவருவோமென்று கர்த்தர் சொல்லுகிறார் அது வலுவான சாதி, அது பூர்வத்துச் சாதி அது நீயறியாத பாஷையுள்ள சாதி அது பேசுகிறதின்னதென்று கேட்டுணராதிருப்பாய். * க, யரு. கூ, உஉ.

யசா அதின் அம்பறாத்தூணிகள் திறந்த பிரேதக்குழிகளைப்போலேயிருக்கும், அவர்களனைவரும் பராக்கிரமசாலிகள்.

யஎ அவர்கள் உன் குமாரரும் உன் குமாரத்திகளுஞ் சாப்பிடவேண்டிய உன் விளைச்சலையும் உன் அப்பத்தையுஞ் சாப்பிட்டு உன் திராட்சப்பழங்களையும் உன் அத்திமரப்பழங்களையுஞ் சாப்பிட்டு நீ நம்பின உன்னுடைய அரணான பட்டணங்களைப் பட்டயத்தாலே வெறுமையாக்குவார்கள். * ரு, மோசே. உஅ. ஙக. ஙஉ.

யஅ ஆகிலும் நாம் அந்நாட்களிலும் * உங்களைச் சர்வசங்காரஞ்செய்யாதிருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ச. உஎ.

யகூ * எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்கு இவைகளையெல்லாம் எதுக்குப்பதிலாகச் செய்தாரென்று நீங்கள் கேட்பீர்களானால் அப்போது நீங்கள் நம்மைவிட்டு உங்களுடைய தேசத்திலே வேறுத்தேவர்களைச் சேவித்ததுபோலே உங்களுடையதல்லாத் தேசத்திலே அன்னியர்களைச் சேவிப்பீர்களென்று நீ யவர்களோடே சொல்வாயாக. * யகூ, ய.

உய நீங்கள் யாக்கோபின் வீட்டிலே அறிவித்து யூதாவிலே சொல்லிக்கூறவேண்டியதேதெனில்,

உக * கண்களிருந்தாலுங் காணாத்தவர்களும் காதுகளிருந்தாலுங் கேளாத்தவர்களுமாகிய இருதயமற்ற பயித்தியசனமே, கேளுங்களேன். * ஏசாயா. சா, கூ. ய.

உஉ * நமக்குப் பயப்படாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் சொல்லுகிறார், † சமுத்திரத்துக்குக் கடவாத நித்திய பிரமாணமாக மணலை எல்லையாய் வைத்திருக்கிறவராகிய நமக்கு முன்பாக அதிராதிருப்பீர்களோ. அதின் அலைகள் மோதியடித்தாலும் மேற்கொள்ளாது, அவைகளிரைந்தாலும் அதைக் கடவாது. * ய, எ. † யோபு. ஙஅ, ய. யக, சங்கீ. கங, எ. ாச, கூ.

உங இந்தச்சனமோவென்றால் முரட்டாட்டமுங் கலகமுமான இருதயமுள்ளது, முரட்டாட்டம்பண்ணிப்போய்விடுகிறார்கள்.

உச அதின் தினகாலத்திலே * எங்களுக்கு மழையையும் முன் மாரியையும் பின்மாரியையுங்கொடுத்து அறுப்புக்குத்திட்டமான வாரங்களையெங்களுக்குக் காக்கிற எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பயந்திருப்போமென்றவர்கள் தங்களிருதயத்திலே சொல்லுகிறதில்லை. * ரு. மோசே. யக, யச. அப்போஸ். யச, யஎ.

௨௫ * உங்கள் அக்கிரமங்கள் இவைகளை விலக்கி உங்கள் பாவங்களே உங்களுக்கு நன்மையை வரவொட்டாதிருக்கிறது.

* ஏசாயா. ௫௯, ௨.

௨௬ ஏனெனில் குருவி பிடிக்கிறவர்கள் பதுங்கிருப்பதுபோலே பதுங்கி மனுஷரைப் பிடிக்கக் கேடுள்ள கண்ணிகளை வைக்கிற துன்மார்க்கர் நம்முடைய சனத்தில் அகப்படுகிறார்கள்.

௨௭ கூண்டு குருவிகளால் நிறைந்திருக்கிறவண்ணமாக அவர்கள் வீடுகள் கபடங்களால் நிறைந்திருக்கிறது, ஆனபடியினாலே பெருத்து ஐசுவரியவான்களாகிறார்கள்.

௨௮ * கொழுத்துச் சளுக்குப்பண்ணுகிறார்கள், பொல்லாத வினைச்செயல்களைக் கண்டிக்காதே போகிறார்கள், † நீதியையும் திக்கற்றவனுடைய நீதியையுமே விசாரியாமல் தாங்கள் மாத்திரம் வாழுகிறார்கள், எளியவர்களின் நியாயத்தைத் தீரார்கள்.

* ௫. மோசே ௩௨, ௰௫. † ஏசா. ௧, ௨௩. சகரி. ௭, ௰.

௨௯ இவைகளை விசாரியாதிருப்போமோ இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடைய ஆத்துமா நீதிசரிக்கட்டாதிருக்குமோ வென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௬. வச. ௯, ௯.

௩௰ திகைத்துத் திடுக்கிடப்படத்தக்க காரியம் தேசத்திலே நடப்படியாயிருக்கிறது.

௩௧ தீர்க்கதரிசிகள் * பொய்த்தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறார்கள், ஆசாரியர்கள் இவர்கள் கைகளால் ஆளுகிறார்கள், இப்படியிருக்கிறது நம்முடைய சனத்துக்குப் பிரியமுமாயிருக்கிறது, ஆனால் அதுக்குப் பிறபாடு கடைசியிலே என்னசெய்வீர்கள். * ௨௩, ௨௫. ௨௬. எசே. ௰௩,

## ௬. அதிகாரம்.

[பாபிலோனியர்சிறையிருப்பைமுன் அறிவித்தது.]

பென்யமீன் புத்திரரே, நீங்கள் எருசலேமின் நடுவிலிருந்து கூடிப்போடி, தெக்கோவாவில் எக்காளமூதி, பெத்கேரேமின் மேல் உயர்ந்த அடையாளத்தை நிறுத்துங்கள், ஏனெனில் ஒரு தீங்கும் பெரிய நொறுக்குதலும் * வடக்கேயிருந்து தோன்றுகிறதாயிருக்கிறது. * ௧, ௰௩. ௰௪.

௨ உருபமுஞ் செல்வமுமான சீயோன் குமாரத்தியைப் பாழாக்கிப்போடுவோம்.

௩ அவளிடத்துக்கு மேய்ப்பர் தங்கள் மந்தைகளோடே வருவார்கள், அவர்கள் அவளுக்கு விரோதமாக * சுற்றிலுங் கூடாரங்களைப் போட்டுத் தன் தன் தலத்தில் அவன்வன் மேய்த்து, * ௪, ௰௭. ௭.

௪ அவளுக்கு விரோதமாய் யுத்தத்தை ஆயித்தம்பண்ணுங்களென்றும் மத்தியானத்திலே தானே நாம் போயேறும்படிக்கு எழுந்திருங்கள், நமக்கையோ ஏனென்றால் பொழுது சாய்ந்து அந்திநிழல்கள் நீண்டு போகிறதே.

௫ எழுந்திருங்கள், நாம் இராக்காலத்திலாகிலும் போயேறி அவளுடைய அரண்மனைகளை அழிப்போமாக வென்றுஞ் சொல்லுவார்கள்.

௬ ஏனெனில் சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, மரங்களை வெட்டி எருசலேமுக்கு விரோதமாய்க் கொத்தளம் போடுங்கள், இதும் விசாரிக்கப்படவேண்டிய பட்டணம், * அதின் உட்புறமெல்லாங் கொடுமை. * ௫, ௧.

௭ ஊற்று தண்ணீரைச் சுரக்கப்பண்ணுமாப்போலே அது தன் பொல்லாப்பைச் சுரக்கப்பண்ணுகிறது, நம்முடைய முகத்துக்கு முன்பாக நித்தம் அதிலே கொடுமையும் அழிம்பும் நோயும் அடியுங் கேட்கப்படுகிறது.

௮ எருசலேமே, நம்முடைய ஆத்துமா உன்னை விட்டுப் பிரியாதபடிக்கும் நான் உன்னைப் பாழுங் குடியற்ற தேசமுமாக்காதபடிக்கும் புத்திகேள்.

௯ திராட்சக்குலைகளைப் பறிக்கிறவனைப்போலேயுன் கையைத் திரும்பக் கூடைகளின்மேலே போடென்று சொல்லி அவர்கள் இஸ்ரவேலில் மீதியாயிருந்தவர்களைத் திராட்சச்செடியின் கனியைப்போலே நன்றாய்ப் பொறுக்கிக்கொண்டு போவார்களென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰ கேட்பாருண்டாக ஆருக்கு நான் பேசிச் சாட்சிபகருவேன்? இதோ * அவர்களுடைய செவி சுன்னத்தில்லாதது. அவர்கள் கவனிக்கமாட்டார்கள், இதோ கர்த்தருடைய வசனம் அவர்களுக்கு நிந்தையாயிருக்கிறது, அதின்மேல் அவர்களுக்கு விருப்பமில்லை. ௫, ௮௬. ௨௧.

௰௧ ஆகையாலே கர்த்தருடைய உக்கிரத்தால் நிறைந்திருக்கிறேன், அதையடக்கிக்கொண்டு இளைத்தேன், வீதிகளிலுள்ள பிள்ளைகள்மேலும் வாலிப மனுஷருடைய கூட்டத்தின்மேலும் ஏகமாய் ஊற்றிவிடப்படும், ஏனெனில் புருஷரும் பெண்சாதிகளுங் கிழவரும் முதிர்ந்த வயதுள்ளவர்களுங் கூடப் பிடிபடுவார்கள்.

௰௨ * அவர்களுடைய வீடுகளும் அவர்களுடைய காணிபூமிகளும் பெண்சாதிகளும் ஏகமாய் வேறே மனுஷருடையதாம், ஏனெனில் நம்முடைய கையை இந்தத் தேசத்தின் குடிகளுக்கு விரோதமாக நீட்டுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௫. மோசே. ௨௮, ௩௰.

௰௩ ஏனெனில் அவர்களிலே சிறியோர்துவக்கிப் பெரியோர்மட்டும் அவரவர் * பெர

ருளாசைக்காரராயிருக்கிறார்கள், இதுவுமல்லாமலே தீர்க்கதரிசிகள்துவக்கி ஆசாரியர்கள்மட்டும் அவரவர் பொய்க்காரராயிருந்து, * ௮, ௰. ௰௧. ௰௨. ஏசாய. ௫௬, ௰௧.

௰௪ சமாதானமில்லாதிருந்தும் சமாதானஞ்சமாதானமென்றுசொல்லி நம்முடைய சனத்தின்நொறுங்குதலைத்தேவிக்கையாய்க்குணமாக்குகிறார்கள். * ஏசேக். ௰௩. ௰.

௰௫ தாங்கள் அருவருப்பானதைச்செய்த்தின்நிமித்தியம்வெட்குகிறார்களோ பரிசேதம்வெட்கார்கள், நாணவும் அறியார்கள், ஆனபடியால் விழுகிறவர்களுக்குள்ளே விழுவார்கள், நாம் அவர்களைவிசாரிக்குங்காலத்திலே பட்டுப்போவார்களென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௰௬ வழிகளிலே நின்றுபூர்வபாதைகளைக்கேட்டுவிசாரித்து நல்லவழியெதென்றுபார்த்து அதிலே நடவுங்கள், * அப்போதுங்களாத்துமாவுக்குச்சாங்கோபாங்கங்கிடைக்குமென்றுகர்த்தர்சொல்லுகிறார், ஆனால் † தாங்கள் அதிலே நடப்பதில்லையென்கிறார்கள். * மத்தே. ௰௧, ௨௯. † ௪௪, அதி. ௰௬. மத்தே. ௨௩, ௩௭.

௰௭ நாம் உங்கள்மேலே காவற்காரரையும்வைத்து எக்காளச்சத்தத்தைக்கவனியுங்களென்றோம், ஆனால் தாங்கள் கவனிப்பதில்லையென்கிறார்கள்.

௰௮ ஆகையாலே சாதிகளேகேளுங்கள், சபையே, அவர்களுக்குள் நடக்கிறதையறிந்துகொள்.

௰௯ * பூமியேகேள், இந்தச்சனத்தின்மேலே நாம் அவர்கள் நினைவுகளின் கனியாகிய தீங்கைவரப்பண்ணுவோம், ஏனெனில் அவர்கள் நம்முடையவார்த்தைகளையும் நம்முடைய நியாயப்பிரமாணத்தையுங்கவனியாமல் அதைவெறுத்துப்போடுகிறார்கள்.
* ௫. மோசே. ௩௨, ௧. ஏசா. ௧, ௨.

௨௰ சேபாவிலிருந்துவருகிற தூபவர்க்கமும் தூரதேசத்திலுடைய சுகந்தப்பட்டையும் நமக்கென்னத்துக்கு? உங்கள்சர்வாங்கதகனங்கள் நமக்குவிருப்பமல்ல, உங்கள்பலிகள் நமக்கினிமையாயிராது. * ஏசாயா. ௧, ௰௧. ஆமோஸ். ௫, ௨௨, மீகா. ௬, ௬.

௨௧ ஆகையால் இதோ நாம் இந்தச்சனத்துக்கிடறுகல்லைவைப்போம், அவைகளில் பிதாக்களும் பிள்ளைகளுங்குடியானவனும் அவனுக்கடுத்தவனும் ஏகமாய்இடறுண்டழிவார்களென்கிறதாய்க்கர்த்தர்சொல்லுகிறார்.

௨௨ * இதோ வடதேசத்திலிருந்துஒரு சனத்திரள்வந்து பூமியின்பக்கங்களிலிருந்தொருபெரியசாதியெழும்பும். * ௧, அதி. ௰௫. ௫௰, ௪௧—௪௩.

௨௩ அவர்கள் வில்லுகளையும் ஈட்டிகளையும்பிடித்துவருவார்கள், அவர்கள் இரக்கமற்றகடூரராயிருக்கிறார்கள், அவர்கள்சத்தஞ் சமுத்திர இரைச்சலுக்குச்சமானமாயிருக்கும், சீயோன்குமாரத்தியே அவர்கள் உனக்குவிரோதமாக யுத்தத்துக்காயத்தப்பட்ட ஆட்களாய்க்குதிரைகளின்மேலேறி வருவார்களென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௨௪ அவர்கள்வருகிறசெய்தியைக்கேட்கிறோம், நம்முடையகைகள் தளரும், ஒடுக்கமும் * பிள்ளைபெறுகிறவளைப்போலவாதையும் நம்மைப்பிடிக்கும். * ௪, ௩௧, ௨௨, ௨௩.

௨௫ வயல்வெளியிலேபுறப்படாதேயுங்கள், வழியிலும்நடவாதேயுங்கள், ஏனெனில்சுற்றிலுஞ்சத்துருவின்பட்டயமும்பயங்கரமுமுண்டு.

௨௬ என்சனமாகியகுமாரத்தியே, * நீ இரட்டைக்கட்டிக்கொண்டு சாம்பலிலே புரண்டு ஒரேகுமாரனுக்காகத்துக்கப்படுகிறதுபோலே மகா கசப்பாய்ப்புலம்பு, ஏனெனில்பாழாக்கடிக்கிறவன் அசுப்பிலேநம்முடையமேலேவருவான். * ௪, அதி. ௮.

௨௭ நீ நம்முடையசனத்தின் வழியையறிந்துகொள்ளவுஞ்சோதித்துப்பார்க்கவுமநாம் உன்னையவர்களுக்குள்ளேயேபார்க்கத்துருக்கமாகவும் அரணாகவும்வைத்தோம்.

௨௮ அவர்களெல்லாரும் முரட்டாட்டமான அகங்காரிகளுந் தூற்றித்திரிகிறவர்களும் வெண்கலமும்இரும்புமாயிருக்கிறார்கள் அவர்களெல்லாருங்கெட்டவர்கள்.

௨௯ துருத்திவெந்தது, ஈயம் நெருப்பினால் அழிந்துபோனது, புடமிடுகிறபிரயாசம்விருதா, பொல்லாப்புகள்நீங்கிப்போனதில்லை.

௩௰ அவர்கள் தள்ளுபடியான வெள்ளியென்னப்படுவார்களாக, ஏனெனில் * கர்த்தர் அவர்களைத்தள்ளிப்போட்டார். * ௭, அதி. ௰௯.

## ௭. அதிகாரம்.

[யூதருடைய துன்மார்க்கமான ஆராதனைக்குவரும் ஆக்கினைகளமுன்னறிவிக்கப்பட்டது.]

௧ கர்த்தரால் எரேமியாவுக்கு உண்டான வசனமாவது,

௨ நீ கர்த்தருடைய வீட்டின்வாசலிலே நின்று அங்கேகூறிச்சொல்லவேண்டியவசனமாவது, கர்த்தரைப்பணிந்துகொள்ள இந்தவாசல்களுக்குள்ளேபிரவேசிக்கிற யூதசனமாகிய நீங்களெல்லாருங்கர்த்தருடைய வார்த்தையைக்கேளுங்கள்.

௩ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறதாவது, * உங்கள்வழிகளையும் உங்கள்கிரியைகளையுஞ் சீர்ப்படுத்துங்கள், அப்போது உங்களைப்

த்தலத்திலேகுடியிருக்கப்பண்ணுவோம.
* உசா, யங. ஏசாயா. க, யசா.

ச இது கர்த்தரின்தேவாலயம, இது கர்த்தரின்தேவாலயம, இது கர்த்தரின்தேவாலயமென்றுசொல்லிப்பொய்வார்த்தைகளை நம்பிக்கொள்ளாதேயுங்கள.

ரு நீங்களஉங்கள்வழிகளையுமஉங்களகிரியைகளையுஞ்சீர்படுத்தச்சீர்படுத்திநீங்கள மனுஷனுக்கும அவனுடையத்தவனுக்கும நியாயந்தீர்க்கவேதீர்த்து,

சா * பரதேசியையுந் திக்கற்றவனையும விதவையையும ஒடுக்காமலும இங்கேகுற்றமில்லாத இரத்தத்தைச்சிந்தாமலும இந்தஸ்தலத்தில சிந்தியபோடாமலுமஉங்களுக்குக்கேடுண்டாக † அந்நியதேவர்களைப்பின்றொடராமலுமிருந்தீர்களேயாகில், * உ. மோசே. உஉ, உஉ. உக. க, ங. ங. மோசே. யசா, ஙங. † உரு. சா. ரு. மோசே. அ, யகூ. உய. யச, உஅ.

எ அப்போது நாம் உங்களபிதாக்களுக்குக்கொடுத்த தேசமாகிய இந்தஸ்தலத்திலே உங்களை எப்போதும என்றைக்குங்குடியிருக்கப்பண்ணுவோம.

அ இதோ ஒன்றுக்கும உதவாதபொய்வார்த்தைகளை நீங்கள நம்புகிறவர்கள.

கூ நீங்கள்திருடிக்கொலைசெய்து விபசாரம்பண்ணிப்பொய்யாணையிட்டுப்பாகாலுக்குத்தூபங்காட்டி அறியாதவேறுதேவர்களைப்பின்றொடர்ந்து,

ய பிற்பாடுவந்து நம்முடைய நாமந்தரிக்கப்பட்டஇந்தவீட்டிலேநமக்குமுன்பாக நின்று இந்த எல்லா அருவருப்புகளையுஞ்செய்வதற்காக விடுதலையானோமென்றுசொல்லுவீர்களோ.

யக * நம்முடையநாமந்தரிக்கப்பட்டஇந்தவீடுஉங்களபார்வைக்குக †கள்ளர்குகையாயிற்றோ இதோநாமும அப்படியேகண்டோமென்றுகர்த்தர்சொல்லுகிறார்.
* ஏசாயா. ருசா, எ. † மத்தே. உக, யங. மாற். யக, எ. லூக்கா. யகூ, சசா.

யஉ ஆகில் * நாமமுந்திநம்முடையநாமத்தைவாசமாயிருக்கப்பண்ணினசீலோவில்லுள்ள நமது ஸ்தலத்துக்கு நீங்கள்போய † நாம அதுக்குஇஸ்ரவேல்ஜனத்தினுடைய பொல்லாப்பின நிமித்தியமாகச்செய்ததைப்பாருங்களேன. யோசு. யஅ, க. † க. சாமு. ச, ங. யகூ. சங. எஅ. ருகூ—சாச.

யங இப்போதும நீங்கள இந்தக்கிரியைகளையெல்லாஞ்செய்து, நாமுங்களுடனேஏற்கனவேசொல்லிவந்திருந்தும்நீங்களகேளாமலும நாமுங்களைக்கூப்பிட்டும நீங்கள உத்தரவுகொடாமலும்போனபடியினாலே * வாக்கி. க, உச. ஞ

யச நாம நம்முடைய நாமந்தரிக்கப்பட்டதும நீங்கள நம்பிக்கைகொண்டிருக்கிறதுமானவீட்டுக்கும, உங்களுக்கும, உங்களபிதாக்களுக்கும நாங்கொடுத்தஸ்தலத்துக்குஞ் * சீலோவுக்குச்செய்ததுபோலே செய்து, உசா, சா.

யரு நாம உங்களுடையஎல்லாச்சகோதரராகியஎப்பிராயீமவித்தனைத்தையுந்தள்ளிப்போட்டதுபோலே உங்களைநமது முகத்தைவிட்டுத்தள்ளிப்போடுவோமென்றுகர்த்தர் உரைக்கிறாரென்றுசொல்லு.

யசா நீயோவென்றால * இந்தச்சனத்துக்காக விண்ணப்பஞ்செய்யாமலும அவர்களுக்காகக்கூப்பிடுதலையுஞ்செபத்தையும எடுக்காமலும நம்மைவேண்டிக்கொள்ளாமலுமிருப்பாயாக, ஏனெனில் நாமுன்னைக்கேளோம. * யக, யச. யசா, யக.

யஎ யூதாவின்பட்டணங்களிலும எருசலேமின்வீதிகளிலும அவர்கள்செய்கிறதை நீ காணுகிறாயா.

யஅ நம்மைமனமடிவாக்கும்படியாக அவர்கள * வான இராசாத்திக்குப்பணியாரங்களைச்சுடவும அன்னியதேவர்களுக்குப்பானபலியுூற்றவும பிள்ளைகளவிறகுகளைப்பொறுக்கிப்பிதாக்கள் நெருப்பைக்கொளுத்தி ஸ்திரிகள மாவைப்பிசைகிறார்கள.
* சச, யகூ.

யகூ அவர்கள நம்மைமனமடிவாக்குகிறார்களோ தங்களமுகங்களின வெட்கத்துக்கவர்கள தங்களையேயல்லோ மனமடிவாக்குகிறவர்கள என்றுகர்த்தர்சொல்லுகிறார்.

உய ஆனதுகொண்டு இதோ * நம்முடைய கோபமும நம்முடைய உக்கிரமும இந்தஸ்தலத்தின்மேலூற்றப்படும, மனுஷர்மேலுமமிருகங்களமேலும வெளியின்மரங்களின்மேலும பூமியின கனிகளின்மேலுந்தானே, அது அவிக்கப்படாதபடியாயெரியுமென்றுகர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார். * ச, ச. உக, யஉ.

உக இஸ்ரவேலின்பராபரனாகியசேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறதாவது, உங்கள தகனபலிகளை உங்கள மற்றப்பலிகளோடேகூட்டி இறைச்சியைச்சாப்பிடுங்கள.

உஉ ஏனெனில் நாமுங்களபிதாக்களையிப்புத்தேசத்திலிருந்தழைக்கும நாளிலே தாந்தகனத்தையும பலியையுங்குறித்து அவர்களோடேசொன்னதும அவர்களுக்குக்கற்பித்ததுமில்லை.

உங நம்முடைய சத்தத்தைக்கேளுங்கள், அப்போதுநாம உங்களுக்குப்பராபரனாயிருப்போம, நீங்கள நமக்குச்சனமாயிருப்பீர்கள், நாம உங்களுக்குக்கற்பிக்கும எல்லாவழியிலுமநீங்கள உங்களுக்குநன்றாயிருக்கும்படிக்கு நடவுங்களென்கிறவிசேஷத்தையே அவர்களுக்குச்சொல்லிக்கற்பித்தோம. * யக, ங. ச.

௨௪ ஆனால் அவர்கள் கேளாமலும் தங்கள் செவியைச் சாய்க்காமலும் போய்த் தங்கள் பொல்லாத இருதயத்தினுடைய யோசனைகளிலும் கடினத்திலும் நடந்து முன்னிட்டல்ல பின்னிட்டே போனார்கள். * ௰௧, அதி

௨௫ உங்கள் பிதாக்கள் எகிப்துத் தேசத்திலிருந்து புறப்பட்ட நாள் துவக்கி இந்நாள் மட்டும் நாந் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரையெல்லாந் தினம் உங்களண்டைக்கு ஏற்கெனவே அனுப்பிக்கொண்டேயிருந்தோம்.

௨௬ ஆனால் நம்முடைய சொற்கேளாமலுந் தங்கள் செவியைச் சாய்க்காமலும் போய்த் தங்கள் பிடரியைக் கெட்டியாயாக்கி * தங்கள் பிதாக்களைப் பார்க்கிலும் பொல்லாப்புச் செய்தார்கள். * ௰௬, ௰௨.

௨௭ நீ இந்த வார்த்தைகளையெல்லாம் அவர்களுக்குச் சொன்னாலும் அவர்கள் உனக்குக் கேட்பதில்லை, நீ யவர்களை நோக்கிக் கூப்பிட்டாலும், அவர்கள் உனக்கு மறுவுத்தரவு கொடுப்பதில்லை.

௨௮ ஆகையாலே தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக் கேளாமலும் புத்தியை யேற்றுக்கொள்ளாமலுமிருக்கிற சாதி இதுதானேயென்றும், விசுவாசமழிந்து அவர்கள் வாயில் வேறற்றுப்போனதென்றும் அவர்களுக்குச் சொல்லுவாயாக.

௨௯ நீயுன் தலைமயிரைச் சிரைத்து எறிந்துபோட்டு உயர்தலங்களின்மேல் புலம்பிக்கொண்டிரு, ஏனெனில் கர்த்தர் தமது சினத்துக்கேதுவான சந்ததியை * வெறுத்து நெகிழ்ந்தார்.

௩௰ ஏனென்றால் யூதாபுத்திரர் நமது பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தார்களென்று கர்த்தர் சொல்லுகிறார், நம்முடைய நாமந் தரிக்கிற வீட்டைத் தீட்டுப்படுத்தத் தங்கள் அருவருப்புகளை யதிலே வைத்தார்கள்.

௩௰௧ * தங்கள் குமாரரையுந் தங்கள் குமாரத்திகளையும் அக்கினியாலே சுட்டெரிப்பதற்காக, அவர்கள் இன்னோமினுடைய குமாரரின் பள்ளத்தாக்கிலுள்ள தோப்பேத்தின் மேடைகளைக் கட்டினார்கள், அதை நாங் கற்பித்ததுமில்லை அது நம்முடைய மனதிலே தோன்றினதுமில்லை. * ௫. மோ. ௰௮. ௨௧.

௩௰௨ ஆனதுகொண்டு இதோ, நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார் அப்போது அது அப்புறந் தோப்பேத்தென்றும் இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்கென்றுஞ் சொல்லப்படாமல் கொலையின் பள்ளத்தாக்கென்று சொல்லப்படும், இடமில்லாமையால் தோப்பேத்திலே சவங்களை யடக்கம்பண்ணுவார்கள்.

௩௰௩ * இந்தச் சனத்தின் பிணங்கள் ஆகாயத்தின் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் ஆகாரமாயிருக்கும், அவைகளை வெருட்டுவாருமில்லாதிருப்பார்கள்.

* ௬, ௨௨. ௰௬, ௭.

௩௰௪ நாம் யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் * களிப்பின் சத்தத்தையும் மகிழ்ச்சியின் சத்தத்தையும் மணவாளனின் சத்தத்தையும் மணவாட்டியின் சத்தத்தையும் ஓயப்பண்ணுவோம், ஏனெனில் தேசம் பாழாம்.

## ௮. அதிகாரம்.

[குணப்படாத யூதரின்மேல் வருந்தேவாக்கினைகளின் தீர்க்கதரிசனம்.]

அக்காலத்திலே யூதாவினுடைய இராசாக்களின் எலும்புகளையும், அவர்களுடைய பிரபுக்களின் எலும்புகளையும் ஆசாரியர்களின் எலும்புகளையும், தீர்க்கதரிசிகளின் எலும்புகளையும், எருசலேமுடைய குடிகளின் எலும்புகளையும் அவர்களுடைய பிரேதக்குழிகளைவிட்டெடுத்து,

௨ அவர்கள் சினேகித்ததுஞ் சேவித்ததும் பின்தொடர்ந்ததும் நாடினதும் பணிந்துகொண்டதுமாயிருந்த சூரியனுக்குஞ் சந்திரனுக்கும் வானத்தினுடைய எல்லாச் சேனைகளுக்கும் முன்பாக அவைகளைப் பரப்பி வைப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். அவைகள் வாரியடக்கம்பண்ணப்படாமல் பூமியின்மேல் எருவாகும்.

௩ இந்தப் பொல்லாத வமிசத்தில் மீதியாய் வைக்கப்பட்ட குறைப்பேர் அனைவருக்கும் மீந்திருந்த தங்களை நான் துரத்திவிட்ட எல்லாவிடங்களிலுஞ் சீவனைப் பார்க்கிலுஞ் சாவே விருப்பமாயிருக்குமென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௪ நீயவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது, கர்த்தருரைக்கிறதேதெனில், விழுந்தவர்கள் எழுந்திருக்கிறதில்லையோ?

௫ ஆனால் எருசலேமியராகிய இந்தச் சனமென்றைக்கும் வழிதப்பிப்போகிறதேது, கபடத்தைப் பிடித்திருக்கிறார்கள்.

௬ நிசமானதைப் பேசார்களென்கிறதைக் கவனித்துக் கேட்டோம், என்ன செய்தேனென்று தன் பொல்லாப்பின் நிமித்தம் மனஸ்தாபப்படுகிறவனொருவனுமில்லை, யுத்தத்துக்குப் பாய்கிற குதிரையைப்போலேயவரவர் தங்கள் ஓட்டமாய்த் திரும்புகிறார்கள்.

௭ ஆகாசத்திலுள்ள செங்கால் நாரை முதலாய்த் தன் வேளையையறியும், காட்டுப்புறாவும் நமுடுந் தகைவிலான் குருவியுந் தாங்கள் வரத்தக்க காலத்தைக் கவனிக்கும், நமது சனமோ கர்த்தரின் நியாயத்தையறியார்கள்.

௮ நாங்கள் ஞானிகளென்றும் கர்த்தருடையவேதம்எங்களோடிருக்கிறதென்றும் நீங்கள்சொல்லுகிறதெப்படி? மெய்யாகவே இதோ, வேதபாரகரின் கள்ளஎழுத்தாணி அதைஅபத்தமாக்குகிறது.

௯ ஞானிகள் வெட்கிக்கலங்கிப்பிடிபடுவார்கள், இதோ கர்த்தருடையசொல்லைவெறுத்துப்போட்டார்கள், அவர்களுக்கு ஞானமேது.

௰ ஆகையினாலேயவர்களுடையபெண்சாதிகளையன்னியருக்கும் அவர்களுடையவயல்களை அவைகளைக்கட்டிக்கொள்ளுகிறவர்களுக்குங்கொடுப்போம், ஏனெனில் * அவர்களிலே சிறியோர்துவக்கிப்பெரியோர்மட்டும் அவரவர்பொருளாசைக்காரராயிருக்கிறார்கள், தீர்க்கதரிசிகள்துவக்கி ஆசாரியர்கள் மட்டும்அவரவர்பொய்க்காரராயிருந்து,
* ௬, அதி. ௰௩. ௰௫.

௰௧ சமாதானமில்லாதிருந்துஞ்சமாதானஞ்சமாதானமென்றுசொல்லி நமதுசனமாகியகுமாரத்தியினொறுங்குதலைத்தேவிகலையாய்க்குணமாக்குகிறார்கள்.

௰௨ தாங்கள் அருவருப்பானதைச்செய்ததினிமித்தியம்வெட்குகிறார்களோ, பரிச்சேதம்வெட்கார்கள், நாணவும் அறியார்கள், ஆனபடியால் விழுகிறவர்களுக்குள்ளே விழுவார்கள், நாம் அவர்களைவிசாரிக்குங்காலத்திலே இடறுண்டுபோவார்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௩ அவர்களைவாரவேவாருவோமென்று கர்த்தர்சொல்லுகிறார், திராட்சச்செடியிலேகுலைகளிராது, அத்திமரத்திலேபழங்களிராது, இலையும் உதிரும், நாம்அவர்களுக்குக்கொடுத்தது அவர்களைவிட்டுத்தாண்டிப்போமென்றுசொல்லு.

௰௪ என்னத்தைப்பற்றி நாந்தரித்திருப்போம், கூடிக்கொள்ளுங்கள் * நாம் அரண் பட்டணங்களுக்குட்பிரவேசித்து, அங்கேசங்காரமாவோம், ஏனெனில் நாங் கர்த்தருக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்தபடியினாலே, நமதுபராபரனாகிய கர்த்தர் நம்மைச் சங்காரம்பண்ணி, * நமக்குப் பிச்சுத்தண்ணீரைக்குடிக்கக்கொடுக்கிறார்.
* ௪, அதி. ௫. † ௯, ௰௫. ௨௩, ௰௫.

௰௫ சமாதானத்துக்குக் காத்திருந்தோம், ஆனால் நலமில்லை, ஆரோக்கியகாலத்துக்குக் காத்திருந்தோம், ஆனால்இதோகெடி.

௰௬ * தாணிலிருந்தவர்களுடைய குதிரைகளின்சீறுதல் கேட்கப்படுகிறது, அவர்களுடைய வலுபுரவிகளகனைக்கிறசத்தத்தினாலே தேசமெல்லாம் அதிருகிறது, அவர்கள்வந்து தேசத்தையும் அதின்நிறைவையும் பட்டணத்தையும் அதின்குடிகளையும் பட்சிப்பார்கள். * ௪, ௰௫.

௰௭ மெய்யாய்இதோ, சடைகட்டப்படாத சர்ப்பங்களையும் கட்டுவிரியன்களையும் உங்களுக்குள்ளனுப்புகிறோம், அவைகள் உங்களைக்கடிக்குமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௮ நான்சஞ்சலத்தில்முசிப்பாறப்பார்த்தும், என்னிலேயென்னிருதயம்பலட்சயமாயிருக்கிறது.

௰௯ இதோ சீயோனிலே கர்த்தரிருப்பதில்லையோ, அதின்ராசாவுண்டாயிருப்பதில்லையோவென்று நமதுசனமாகியகுமாரத்தி தூரதேசத்திலிருந்துகூப்பிடுஞ் சத்தமுண்டாம், ஆனால்அவர்கள்தங்கள்சுரூபங்களினாலும் நமக்குக்கோபமுண்டாக்கினதென்னவென்கிறார்.

௨௰ அறுப்புக்காலஞ்சென்றது, கோடைக்காலமும்முடிந்தது, நாமிரட்சிக்கப்பட்டதுமில்லை.

௨௧ என்சனமாகியகுமாரத்தியின்நொறுங்குதலினால் நொறுங்குண்டேன், கறுத்திருக்கிறேன், திகைப்பென்னைப்பிடித்தது.

௨௨ * கீலேயாத்திலே பிசின்தயிலமில்லையோ, இரணவைத்தியனும் அங்கேயில்லையோ, பின்னையேன் என்சனமாகிய குமாரத்தியின் குணமாகுதல் நடந்தேறாமலே போயிற்று. * ௪௬, ௰௧. ௧. மோ. ௩௭, ௨௫

௨௩ ஆ, குமாரத்தியாகிய என்னுடைய சனத்திலேகொலையுண்டவர்கள்நிமித்தியம் நாமிரவும்பகலும் அழும்படியாக * என்தலைதண்ணீரும் என்கண்கள்கண்ணீரூற்றுமானால்தாவிலை. * ௰௩, ௰௭. ௰௪, ௰௭.
ஏசா. ௨௨, ௪.

## ௯. அதிகாரம்.

[பூரச்சனஞ்செய்கிறபாவங்களையும் அடையும் ஆக்கினைகளையும் புலம்பலோடே தூண்டிக்காட்டினது.]

ஆ, வனாந்தரத்திலெனக்கு வழிப்பயணக்காரரின் தாபரமிருந்தால் தாவிலை, அப்போதுநான் என்சனத்தைவிட்டுஅவர்களிடத்திலிராதபடிக்குப்போய்விடுவேன், ஏனெனில் அவர்களெல்லாரும்விபசாரரும் துரோகிகளின் கூட்டமுமாயிருக்கிறார்கள்.

௨ * தங்களுக்குவில்லாயிருக்கிறதங்கள் நாக்கைப்பொய்களையெய்ய நாணேற்றுகிறார்கள், அவர்கள் இந்தத்தேசத்திலேபெலத்துக்கொள்வது சத்தியத்துக்காகவல்ல, ஏனெனில் † பொல்லாப்பிலிருந்து பொல்லாப்புக்கு நடந்தேறுகிறார்கள், நம்மையோவென்றால் அறியார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். சங். ௬௨, ௪. †௬, அதி. ௭.

௩ * நீங்கள் அவனவன் தன்தன்சிநேகிதனுக்கெச்சரிக்கையாயிருங்கள், ஏனெனில் எந்தச்சகோதரனுங்கவிழ்க்கவேகவி

ழ்க்கிறான், எந்தச்சிநேகிதனுந் தூற்றித்திரிகிறான். * மீகா. ௭, ௫, ௬.

௪ அவர்கள் மெய்யைப்பேசாமல் ஒவ்வொருவர் தனக்கடுத்தவனையேய்க்கிறார்கள் அக்கிரமஞ்செய்யவுழைகிறார்கள்.

௫ கபடத்தின் நடுவிலே குடியிருக்கிறாய், கபடத்தினிமித்தியம் நம்மையறியமாட்டோமென்கிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬ ஆகையால் சேனைகளையுடையகர்த்தர்சொல்லுகிறதாவது, இதோ, நாம் அவர்களையுருக்கி அவர்களைப் புடமிடுவோம், ஏனெனில் நமதுசனமாகிய குமாரத்தியை வேறெந்தப்பிரகாரமாக நடத்துவோம்.

௭ அவர்களநாவு கூர்மையாக்கப்பட்ட அம்பாயிருந்து கபடம்பேசுகிறது. * தனக்கடுத்தவனோடே அவனவன் தன்வாயினாலே சமாதானமாய்ப்பேசுகிறான், ஆனால் தன்னுள்ளத்திலே அவனுக்குப்பதிவிடை வைக்கிறான். * சங்கீ. ௨௮, ௩. ௫௫, ௨௨. ௬௨, ௫.

௮ இவைகளினிமித்தியம் அவர்களை விசாரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடைய ஆத்துமா நீதியைச்சரிக்கட்டாதிருக்குமோவென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௫, ௯. ௨௯.

௯ மலைகளின்மேல் அழுகையையுந்துக்கங்கொண்டாடுதலையும் வனாந்தரத்தாபரங்களின்மேல் புலம்பலையுமெடுப்பேன், ஏனெனில் ஒருவனும் அவைகளைக்கடந்துபோகாத அத்தனைமையாயவைகள் பாழ்க்கடிக்கப்பட்டுக்கிடக்கிறது, * ஆடுமாடுகளின்சத்தங்கேட்கப்படுகிறதுமில்லை, ஆகாசத்தின் பறவைமுதற்கொண்டு மிருகங்கள் மட்டுமாயவுந்தெறித்துப்போனது.
* ௰௨, ௪.

௰ * நாம் எருசலேமை மண்மேடுகளும் வலுசர்ப்பங்களின் தாபரமுமாக்கி யூதாவின்பட்டணங்களைக் குடியில்லாதபடியாய்ப்பாழ்சதுப்போகப்பண்ணுவோம்.
* மீகா. ௩. ௰௨. சங்கீ. ௭௯, ௧.

௰௧ இதையுணரத்தக்கஞானமுள்ளமனுஷனார்? தேசம் அழிந்து ஒருவனுங்கடவாதபடியாய்ப்பாழ்க்கடிக்கப்படுகிற முகாந்திரமென்னவென்று கர்த்தருடையவாய்தன்னுடனேசொல்லுகிறதைக்கேட்டு அறிவிக்கத்தக்கவனார்? * ௫. மோசே. [illegible]௨, ௨௯.

௰௨ கர்த்தர் சொல்லுகிறதாவது, நாம் அவர்களுக்குமுன்பாகக்கட்டளையிட்டநம்முடைய நியாயப்பிரமாணத்தை யவர்கள் விட்டு நம்முடைய சொல்லைக்கேளாமலும் அதின்படியே நடவாமலும்,

௰௩ * தங்களுடைய இருதயத்தின் கடினத்தையுந் தங்கள் பிதாக்கள் தங்களுக்குக் கற்றுக்கொடுத்தபடி பாகால்களையும்பின்றொடர்ந்தபடியினாலே. * ௭, ௨௪—௨௭.

௰௪ இதோ * நாமிந்தச்சனத்துக்கு எட்டியைப்போசிக்கவும், பிச்சுத்தண்ணீரைக்குடிக்கவுங்கொடுத்து, ௨௩, ௰௫.

௰௫ அவர்களும் அவர்களபிதாக்களுமறியாத புறச்சாதிகளுக்குள்ளே அவர்களைச்சிதறவடித்து பட்டயத்தை யவர்களுக்குப்பின்னாக அவர்களை நிர்மூலமாக்குமட்டும் அனுப்புவோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடையகர்த்தர்சொல்லுகிறார்.

௰௬ நீங்கள் சிந்தனையாகிப் புலம்பற்காரிகளைவரவழைத்து அதுக்கான ஞானமுள்ள ஸ்திரிகளை யழைத்தனுப்புங்களென்று சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

௰௭ அவர்கள் சீக்கிரமாய்வந்து நமது கண்கள் கண்ணீராய்ச்சொரியத்தக்கதாகவும் நமது இமைகள் தண்ணீராய் ஓடத்தக்கதாகவும் நம்முடைய மேற்புலம்பம்படிக்குத்தரானே.

௰௮ ஏனென்றால் எத்தனையாய்ப்பாழ்க்கடிக்கப்பட்டோமென்றும் நாங்கள் தேசத்தைவிட்டுப்போகிறதினாலும் எங்கள் வாசஸ்தலங்களைக்கவிழ்த்தார்களென்கிறதினாலும் மிகவும்வெட்கப்பட்டோமென்றுஞ்சீயோனிலிருந்துண்டாகிற புலம்பலின்சத்தங்கேட்கப்படும்.

௰௯ ஆனதுகொண்டு ஸ்திரிகளே கர்த்தருடைய வார்த்தையைக்கேளுங்கள், உங்கள்செவி அவருடையவாயின் வசனத்தையேற்றுக்கொள்ளட்டும், நீங்கள் உங்கள்குமாரத்திகளுக்குத்துக்கங்கொண்டாடுதலையும் அவளவள் தன் தோழிக்குப்புலம்பலையுங் கற்றுக்கொடுங்கள்.

௨௰ ஏனெனில் வீதியிலிருக்கிறகுழந்தைகளையும் தெருக்களிலிருக்கிற இளைஞரையுஞ் சங்காரம்பண்ண சாவுநம்முடைய அரமனைகளிலேபிரவேசிக்கும்.

௨௧ * மனுஷரின் சவங்கள் வயல்வெளியின்மேல் எருவைப்போலேயும் அறுக்கிறவனுக்குப்பின்னாலே ஒருவனும்வாரிக்கொள்ளாதிருக்கிற அரியைப்போலேயுங்கிடக்குமென்று கர்த்தருரைத்தாரென்றுசொல்லு. * ௭, ௩௩.

௨௨ கர்த்தர்சொல்லுகிறதாவது ஞானி தன் ஞானத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவேண்டாம், பராக்கிரமமனிதன் பராக்கிரமத்தைத்தொட்டு மேன்மை பாராட்டவும்வேண்டாம், ஐசுவரியவான்தன் ஐசுவரியத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவும் வேண்டாம்.

௨௩ மேன்மைபாராட்டுகிறவன் நாம்பூமியிலே கிருபையையும் நியாயத்தையும் நீதியையுஞ்செய்கிறகர்த்தரென்று நம்மையுண

ம லீபனோனின் கொடுமுடியைப்போலவுமிருக்கிறாய், ஆனால் மெய்யாகவே உன்னைவனாந்தரத்தைப்போலுங் குடியில்லாப் பட்டணங்களைப்போலுமாக்கிப்போடுவோம்.

௭ அழிக்கிறவர்களையவரவர் ஆயுதங்களோடுங்கூட நானுனக்குவிரோதமாகக்குறிப்போம், அவர்கள் தெரிந்துகொள்ளப்பட்ட உன்னுடைய கேதுருக்களைவெட்டி அக்கினியிலேபோடுவார்கள்.

௮ அநேகஞ்சாதிகளிந்தப்பட்டணத்தைக்கடந்துவந்து அவனவன் தனக்கடுத்தவனுடனே * இந்தப்பெரிய பட்டணத்துக்குக்கர்த்தர் இப்படிச்செய்ததேதென்பார்கள். * க. இராசாக்கள். ௯, ௮.

௯ அதற்குப்பிரதியுத்தரமாக அவர்கள் தங்கள்பராபரனாகியகர்த்தரின் உடன்படிக்கையைவிட்டுவேறேதேவர்களைப்பணிந்துகொண்டு அவைகளுக்காராதனைசெய்தபடியினாலேதானேயென்பார்கள்.

சல்லூமென்னப்பட்ட யோவகாசும் யோயாக்கீமும் எகனியாவுமென்ற இராசாக்களைக்கண்டித்துச்சொன்ன தீர்க்கதரிசனங்கள்.

௰ மரணமடைந்தவனுக்காக நீங்களழாமலும் அவனுக்காகப்பரிதவிக்காமலும்போகிறவனுக்காக அழவே அழுங்கள், ஏனென்றால் அவனினித்திரும்பிவருவதுந் தன்சென்ம்பூமியைக்காண்பதுமில்லை.

௧௧ அதேதெனில்தன்தகப்பனாகியயோசியாவின்பட்டணத்துக்குவந்து அரசாண்டு இவ்விடத்திலிருந்து புறப்பட்டுப்போன யூதாவின்இராசாவாயிருந்த யோசியாவின் குமாரனாகியசல்லூமைக்குறித்துக்கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அவனினியிங்கே திரும்பவராமல்,

௧௨ தான்கொண்டுபோகப்பட்ட தலத்திலேமரிப்பான், இந்தத்தேசத்தை அவனினிக்காண்பதில்லையென்கிறார்.

௧௩ எனக்கு விஸ்தாரமான வீட்டையுங் காற்றுவர விலாசமான மேல்அறைகளையுங் கட்டுவேனென்றுசொல்லிப் பலகணிகளைத் தனக்குத்திறந்து கேதுருமரக்கூடுகளைவைத்துச்சாதிலிங்கவருணம்பூசி,

௧௪ தன்வீட்டைநீதியின்றியுந்தன்மேல் அறைகளை நியாயமின்றியுங்கட்டித் * தனக்கடுத்தவனுக்கு அவனுடைய கூலியைக் கொடாமல் அவனை வீண்வேலைகொள்ளுகிறவனுக்கையோ. * ௩. மோசே. ௰௯, ௰௩.

௧௫ நீகேதுருமரமானவைகளில உலாவுகிறபடியினாலே இராசாவாயிருப்பாயோ, உன்தகப்பன் போசித்துக்குடித்து நியாயமும் நீதியுஞ்செய்து அப்போது சுகவாழ்வுமாயிருந்ததில்லையோ.

௧௬ சிறுமையுமெளிமையுமானவனுடைய நியாயத்தைவிசாரிப்பானே, அப்போது சுகவாழ்வுமாயிருந்தான், அதுவல்லோ தம்மையறிகிற அறிவாயிருந்ததென்றுகர்த்தர் சொல்லுகிறார்.

௧௭ உன்னுடையகண்களும் உன்னுடையமனசுமோவென்றால் உன்பொழிவின்மேலுங்குற்றமில்லாத இரத்தத்தைச்சிந்துவதின்மேலும் இடுக்கமும் தொறுக்குதலுஞ்செய்வதின்மேலுமேயல்லாமல் வேறொன்றின்மேலும்வைக்கப்பட்டதில்லை.

௧௮ ஆகையினாலே கர்த்தர் யோசியாவின்குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவின் இராசாவைக்குறித்துச்சொல்லுகிறதாவது, அவனுக்காக ஐயோ என்சகோதரனே, ஐயோ சகோதரியேயென்று புலம்புவதில்லை, அவனுக்காக ஐயோ ஆண்டவனே, ஐயோ அவருடையமகத்துவமேயென்று புலம்புவதில்லை.

௧௯ ஒரு கழுதை புதைக்கப்படுகிறவண்ணமாயவன் * எருசலேமின்வாசல்களுக்குத்தூரமாயிழுத்தெறிந்து புதைக்கப்படுவான், * ௩௬, ௩௰.

௨௰ லீபனோனின்மேலேறிக்கூப்பிடு, பாசானில் உன்சத்தத்தைக்காட்டி அபாரீமிலிருந்துங்கூப்பிட்டுக்கொண்டிரு, ஏனென்றால் உன்சிநேகிதரனைவரும் முறிந்தார்கள்.

௨௧ நீ சுகவாழ்வாயிருக்கக்கொள்ள உன்னுடனேசொன்னேனும், * கேளேனென்றாய், நீ நமதுசத்தத்தைக்கேளாதேபோகிறதுவே உன்சிறுவயதிலேதுவக்கி உன்னுடையமார்க்கமாயிருக்கிறது. * ௰௮, ௰௨.

௨௨ உன்மேய்ப்பரெல்லாரையுங்காற்றுமேய்க்கும், உன்சிநேகிதர் சிறையிருப்பிலேபோவார்கள், அப்போதல்லோ உன்னுடைய எல்லாப்பொல்லாப்பினிமித்தமும் வெட்கி யிலச்சைப்படுவாய்.

௨௩ லீபனோனில்வாசமாயிருந்துகேதுருக்களிற் கூடுகட்டிக்கொண்டிருக்கிறவளே! * வேதனைகளும் பிள்ளைப்பெறுகிறவளுக்கொத்தவாதையும் உனக்குவருகையில் நீ யெப்படிக்கிருபைபெறுகிறவளாயிருப்பாய். * ௪, அதி. ௩௧.

௨௪ யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமின்குமாரன் * கோனியா நம்முடைய வலதுகரத்தில் முத்திரைமோதிரமாயிருந்தாலும் அங்கேயிருந்துன்னைப்பிடுங்குவேனென்று நமது சீவனைக்கொண்டுசொல்லுகிறேனென்று கர்த்தர் உரைக்கிறார். * ௨. நாளாகமம். ௩௬, ௯.

௨௫ உன்பிராணனைவாங்கத்தேடுகிறவர்களின்கையிலும் நீ பயப்படுகிறவர்களின்கையிலுமுன்னையொப்புக்கொடுப்போம், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையிலுங் கல்தேயரின்கையிலுந்தானே,

௨௬ * உன்னையும் உன்னைப்பெற்ற தாயையும் உங்கள் ஜென்மபூமியல்லாத அன்னியதேசத்திலே துரத்திவிடுவோம், அங்கே சாவீர்கள். * ௨. இராசா. ௨௪, அ. ௱

௨௭ திரும்புவதற்குத் தங்கள் ஆசதுமா வாஞ்சித்திருக்குந் தேசத்துக்கு அவர்கள் திரும்பிவருவதில்லை.

௨௮ இந்தக் கோனியாவென்கிற புருஷன் சிதறவடிக்கப்பட்ட இகழ்ச்சியான கலசந்தானோ? அவன் விரும்பப்படாத பாத்திரந்தானோ? அவனும் அவன் வித்துந் தள்ளுண்டுத் தாங்கள் அறியாத் தேசத்திலே துரத்திவிடப்பட்டதுமேது?

௨௯ தேசமே தேசமே தேசமே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள்.

௩௰ இந்தப் புருஷனைச் சந்தானமற்றவனாகவுந் தன்னாட்களிற் சீர்படாத மனுஷனாகவும் எழுதுங்கள், ஏனெனில் தாவீதின் ஆசனத்தில் உட்காரவும் இனி யூதாவில் ஆளவும் அவன் வித்திலொருவனுக்கும் வாய்ப்பதில்லையென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௨௩. அதிகாரம்.

[பொல்லாத மேய்ப்பரைக் கண்டித்ததும் இரட்சகராகிய மேசியாவின் வருகையைத் தீர்க்கதரிசனமாக முன்னறிவித்ததும்.]

நம்முடைய மேய்ப்பாடுகளைக் கெடுத்துச் சிதறவடிக்கிற மேய்ப்பருக்கு ஐயோவென்று கர்த்தர் சொல்லுகிறார். * எசேக். ௰௩, ௨. ௱ ௩௪, ௨ ௱

௨ ஆனதுகொண்டு இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் தமது சனத்தை மேய்க்கிற மேய்ப்பருக்கு விரோதமாகச் சொல்லுகிறதேதெனில், நீங்கள் நம்முடைய ஆடுகளைப் பராமரியாமல் அவைகளைச் சிதறவடித்து அவைகளைத் துரத்தினீர்கள், இதோ நான் உங்கள்பேரிலே உங்கள் செய்கைகளின் பொல்லாப்பைப் பிடித்து விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ நாம் நம்முடைய ஆடுகளில் மீதியாயிருப்பவைகளைத் துரத்தியிருந்த எல்லாத் தேசங்களிலுமிருந்து சேர்த்து அவைகளைத் திரும்ப அவைகளின் தொழுவங்களுக்குக் கொண்டுவருவோம், அப்போது அவைகள் பலுகிப்பெருகும்.

௪ அவைகள்பேரிலே மேய்ப்பராயிருப்பவர்களையும் எழுப்புவோம் அவர்கள் அவைகளை மேய்ப்பார்கள், இனியவைகள் பயப்படுவதுமில்லை கலங்குவதுமில்லை காணாதே போவதுமில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௫ இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்போ தாவீதுக்கு நீதியுள்ள முளையையெழுப்புவோம், அவர் இராசாவாயிருந்து ஞானமாயிராசரிக்கம்பண்ணி பூமியிலே நியாயத்தையும் நீதியையும் நடப்பிப்பார். * ௩௩, அதி. ௰௩, ௰௬. ஏசாயா. ௪, ௨. லூக்கா. ௧, ௩௨. ௩௩.

௬ * அவர் நாட்களில் யூதா இரட்சிக்கப்பட்டு இஸ்ரவேல் சுகமாய்த் தங்கும், அவர் அழைக்கப்படும் நாமம் † எங்கள் நீதியாயிருக்கிற கர்த்தரென்பதுதானே. * ஏசா. ௪௫, ௰௭. † ௩௩, அதி. ௰௬.

௭ ஆனதுகொண்டு இதோ நாட்கள் வரும், அப்போது * இஸ்ரவேல் புத்திரரை எகிப்துத் தேசத்திலிருந்தேறப்பண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்டு சத்தியம்பண்ணுமல், * ௰௬, அதி. ௰௪. ௰௫.

௮ இஸ்ரவேல் வீட்டின் வித்தாரைத் தங்கள் தேசத்திற் குடியிருக்கும்படிக்கு வட தேசத்திலும் நாம் அவர்களைத் துரத்தியிருந்த எல்லாத் தேசங்களிலுமிருந்தேறப்பண்ணி வரும் அழைத்து வந்தவருமான கர்த்தருடைய சீவனைக்கொண்டு சத்தியம்பண்ணுவார்களென்கிறதைக் கர்த்தருரைக்கிறார்.

பொய்த்தீர்க்கதரிசனங்களைச் சொல்லுகிற துன்மார்க்கத்தீர்க்கதரிசிகளையும் ஆசாரியர்களையுங் கண்டித்தது.

௯ தீர்க்கதரிசிகளைத் தொட்டு என்னிருதயம் என்னுள்ளத்திலே நொறுங்கியிருக்கிறது, என்னெலும்புகளெல்லாம் அதிருகிறது, பராபரன் நிமித்தமும் அவர் பரிசுத்தத்தினுடைய வார்த்தைகளினிமித்தமும் நான் வெறித்திருக்கிற மனுஷனைப்போலவும் மதுபானலாகிரி மேற்கொண்ட புருஷனைப்போலவுமிருக்கிறேன்.

௰ ஏனெனில் * தேசம் விபசாரரால் நிறைந்திருந்து சாபத்தினாலே தேசந் துக்கித்து வனாந்தரத்தின் மேய்ச்சல்கள் வறங்குகிறது, ஏனென்றால் அவர்கள் ஓட்டம் பொல்லாதது, அவர்கள் பெலன் செவ்வையானதல்ல. * ௯, அதி. ௨.

௰௧ ஏனெனில் தீர்க்கதரிசியும் ஆசாரியனும் * மாயக்கள்ளராயிருக்கிறார்கள், நமது வீட்டிலும் அவர்களுடைய பொல்லாப்பைக் கண்டுபிடித்தோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௬, அதி. ௰௩.

௰௨ ஆனபடியால் * அவர்கள் வழியவர்களுக்கிருட்டிலே சறுக்கலான வழிகளைப்போலிருக்கும், துரத்துண்டு அதிலே விழுவார்கள், ஏனென்றால் அவர்கள் விசாரிக்கப்படும் வருஷத்திலே அவர்கள்மேற் பொல்லாப்பை வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * சங்கி. ௩௫, ௬. ௭௩, அதி. ௰௮.

௰௩ சமாரியாவின் தீர்க்கதரிசிகளிலே மதியில்லாமையைக் கண்டோம், பாகாலைக் கொண்டு தீர்க்கதரிசனஞ்சொல்லி இஸ்ரவே

லென்று நம்முடைய சனத்தை மோசம்போக்கினார்கள்.

௰௪ எருசலேமின் தீர்க்கதரிசிகளோவென்றால் திடுக்கிடப்பட்டத்தக்க காரியத்தைக் காண்கிறோம், விபசாரம்பண்ணிக் கபடத்திலே நடந்துகொண்டு ஒருவனுந் தன் பொல்லாப்பை விட்டுத் திரும்பாதபடிக்குப் * பொல்லாதவர்களின் கைகளைத் திடப்படுத்துகிறார்கள், அவர்களெல்லாரும் நமக்குச் சோதோமைப்போலும் அதின் குடிகள் கொமோறாவைப்போலுமிருக்கிறார்கள்.
* எசேக். ௰௩, ௨௨. ஏசா. ௧, ௯.

௰௫ ஆனதுகொண்டு சேனைகளையுடைய கர்த்தர் தீர்க்கதரிசிகளைக்குறித்துச் சொல்லுகிறதாவது, இதோ * நாம் அவர்களுக்கு எட்டியைப் போசிக்கவும் பிச்சுத்தண்ணீரைக் குடிக்கவுங் கொடுப்போம், ஏனென்றால் எருசலேமின் தீர்க்கதரிசிகளிலிருந்து மாயந் தேசமெங்கும் பரம்பினதென்கிறார்.
* ௯, அதி. ௰௫.

௰௬ சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, உங்களுக்குத் தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதேயுங்கள், அவர்கள் உங்களை வீணாய் உப்பப்பண்ணுகிறார்கள், கர்த்தருடைய வாக்கையல்ல, * தங்களிருதயத்தின் தரிசனத்தைச் சொல்லுகிறார்கள். * ௰௪, அதி. ௰௪.

௰௭ அவர்கள் நம்மை அசட்டைபண்ணுகிறவர்களுடனே * உங்களுக்குச் சமாதானமிருக்குமென்பதைக் கர்த்தர் சொன்னாரென்று சொல்லிக்கொண்டேயிருந்து † தங்களிருதயத்தின் கடினத்திலே யாவருடனேயும் உங்கள்மேற் பொல்லாப்புவராது.
* ௯, அதி. ௰௪. ௮, அதி. ௰௧. ஏசா. ௰௩, ௰. † ௭, அதி. ௨௪.

௰௮ ஏனெனில் கர்த்தருடைய ஆலோசனையிற்கூட நின்று அவருடைய வார்த்தையைக் கண்டு கேட்டவனார்? அவருடைய வார்த்தையைக் கவனித்துக் கேட்டவனாரென்கிறார்கள்.

௰௯ * இதோ கர்த்தருடைய பெருங்காற்றுங் கொடியபிசனும் புறப்பட்டது, அது ஆகாதவர்களுடைய தலையின்மேற் பாயும்.
* ௩௰, அதி. ௨௩. ௨௪.

௨௰ தம்மிருதயத்தின் நினைவுகளைக் கர்த்தர் திருவாக்குப்பண்ணுமட்டாகவும் நிறைவேற்றுமட்டாகவும் அவருடைய கோபந் திரும்பாது, கடைசிநாட்களில் அதையுணர்ச்சியாயுணருவீர்கள்.

௨௧ தீர்க்கதரிசிகளை * நாம் அனுப்பாதிருந்தும் அவர்கள் ஓடினார்கள், அவர்களோடே நாம் பேசாதிருந்தும் அவர்கள் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள். * ௰௪, அதி. ௰௪.

௨௨ அவர்கள் நம்முடைய ஆலோசனையிலே நிலைத்திருந்தார்களேயாகில் அப்போதவர்கள் * நம்முடைய வார்த்தைகளைச் சனத்துக்குக் கேட்கப்பண்ணி இவர்களைத் தங்கள் பொல்லாத வழிகளையுந் தங்கள் செய்கைகளின் பொல்லாப்பையும் விட்டுத் திருப்புவார்கள். * ௧. பேதுரு. ௪, ௰௧.

௨௩ நாம் தூரத்திலிருந்து பார்க்கிற பராபரனாயிராமற் சமீபத்திலிருந்து பார்க்கிற பராபரன்தானென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௪ தன்னை நாங்காணாதிருக்கத்தக்க * ஒளிப்பிடங்களில் யாதொருவன் ஒளித்துக்கொள்ளக்கூடுமோவென்று கர்த்தர் சொல்லுகிறார், பரமண்டலங்களையும் பூலோகத்தையுமல்லோ நாம் நிரப்புகிறவரென்று கர்த்தர் சொல்லுகிறார். * சங். ௱௩௯, ௭—௰௧.

௨௫ சொப்பனங்கண்டேன் சொப்பனங்கண்டேனென்று நம்முடைய நாமத்தைச் சொல்லிப் பொய்யாய்த் தீர்க்கதரிசனமுரைக்கிற தீர்க்கதரிசிகள் சொல்லுகிறதைக் கேட்டோம்.

௨௬ எந்தமட்டும் இப்படியிருக்கும், பொய்த்தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் இருதயத்திலேதாகிலுமுண்டோ? இவர்கள் தங்களிருதயத்தின் கபடத்தைத் தீர்க்கதரிசனமாகச் சொல்லுகிறவர்கள்.

௨௭ நமது சனத்தின் பிதாக்கள் பாகாலைத்தொட்டு நம்முடைய நாமத்தை மறந்ததுபோலே இவர்கள் அவரவர் தன்னடுத்தவனுக்கு விவரிக்கிற தங்களுடைய சொப்பனங்களைத்தொட்டு அவர்களை நம்முடைய நாமத்தை மறக்கப்பண்ண நினைக்கிறார்கள்.

௨௮ சொப்பனமுள்ள தீர்க்கதரிசி சொப்பனத்தை விவரிப்பானாக, நம்முடைய வார்த்தையுள்ளவனோ நம்முடைய வார்த்தையையுண்மையாகச் சொல்வானாக, வைக்கோற்கூளத்தோடே கோதுமைக்கு ஒவ்வுதலேதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௯ * நம்முடைய வார்த்தை அக்கினியைப்போலுங் கன்மலையை நொறுக்கும் சம்மட்டியைப்போலுமிருக்கவில்லையோவென்று கர்த்தர் சொல்லுகிறார். * எபிரேயர். ௪, ௰௨.

௩௰ ஆகையால் இதோ ஒவ்வொருவராய்த் தங்களுக்கடுத்தவரிடத்தில் நம்முடைய வார்த்தையைத் திருட்டுத்தனமாயெடுக்கிற தீர்க்கதரிசிகளுக்கு நாம் விரோதமானவரென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௧ இதோ தங்கள் நாவின் சொல்லையே வழங்கி, அவர் அதையுரைத்தாரென்று சொல்லுகிற தீர்க்கதரிசிகளுக்கு நாம் விரோதமானவரென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௨ இதோ பொய்ச்சொப்பனங்களைத் தீர்க்கதரிசனமாகச் சொல்லி அவைகளை

வீணாதம்புதசனத்தைத் தங்களை பொய்களினாலும் * தங்களின் கெளிக்கைகளினாலும் மோசம்போக்குகிறவர்களுக்கு நாம் விரோதமானவனென்று கர்த்தர் சொல்லுகிறார், நான் அவர்களை அனுப்பினதுமில்லை, அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை, அவர்கள் இந்தச்சனத்துக்கு ஒருபிரயோசனமாயிருக்கிறதுமில்லையென்று கர்த்தர்சொல்லுகிறார். * செப். ங, ச.

*கர்த்தரின்வார்த்தையைக்கர்த்தராற்சுமத்துகிறபாரமென்றுசொன்னவார்த்தைக் கண்டித்தது.*

ங ஆனதுகொண்டு கர்த்தராலேசுமத்தும்பாரம் என்னவென்று இந்தச்சனமாகிலும் ஒருதீர்க்கதரிசியாகிலும் ஒரு ஆசாரியனாகிலும் உன்னைக்கேட்டால் நீயவர்களுடனே சொல்லவேண்டியதாவது, பாரமென்னவென்றால் உங்களைத்தள்ளிவிடுவோமென்றும்,

ஙச கர்த்தராற்சுமத்தும் பாரமென்று தானியச்சொல்லுகிற தீர்க்கதரிசியாகிலும் ஆசாரியனாகிலும் சனமாகிலுஞ்சரி, அப்படிச்சொல்லுகிற மனுஷனுக்கும் அவன்வீட்டுக்கும் விரோதமான விசாரிப்பாயிருப்போமென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

ஙரு கர்த்தனென்னமறுவுத்தரவுகொடுத்தார்? அல்லது கர்த்தர் என்னசொன்னாரென்கிறதாய நீங்கள் அவரவர் தங்களுக்கடுத்தவனையும் அவரவர் தங்களசகோதரனையுங்கேட்பீர்களாக.

ஙசா ஆனால் கர்த்தரால்சுமத்தும் பாரமென்றுசொல்லல இனியெடுக்காதிருப்பீர்களாக, ஏனெனில் அவனவன்வார்த்தையவனுக்குப்பாரமாயிருப்பது, அதேனென்றால் நம்முடையபராபரனாகிய சேனைகளையுடையகர்த்தனென்றசீவனுள்ளபராபர னுடைய வார்த்தைகளைப்புரட்டுகிறார்கள்.

ஙஎ கர்த்தனெக்கென்ன மறுவுத்தரவு கொடுத்தார், அல்லது கர்த்தனென்னசொன்னாரென்கிறதாய நீ தீர்க்கதரிசியைக்கேட்பாயாக.

ஙஅ நீங்களோவெனில் கர்த்தரால்சுமத்தும்பாரமென்று சொல்லுகிறபடியினாலே கர்த்தர் உரைக்கிறதாவது, கர்த்தரின்பாரமென்கிறதையுங்களென்று நாமுங்களுக்குச்சொல்லி அனுப்பியும் நீங்களிந்தவார்த்தையைக்கர்த்தரின்பாரமென்று சொல்லுகிறீர்களே.

ஙகூ ஆனதுகொண்டு இதோ நாமுங்களை மறக்கவேமறந்து உங்களையும் நாமுங்களுக்கும் உங்களபிதாக்களுக்குங்கொடுத்தபட்டணத்தையும் நமக்குமுன்பாகஇராதபடிக்குக்கைவிட்டு,

சய * மறக்கப்படாத நித்தியநிந்தையையும் நித்திய இலச்சையையும் உங்கள்மேல வரப்பண்ணுவோமென்பதுதானென்றுசொல்லென்றார். * உஎ, அதி. யக.

## உச. அதிகாரம்.

[அத்திப்பழங்களுள்ள இரண்டு கூடைகளின்தரிசனையும் அதின்வியார்த்தியும்.]

பாபேலின இராசாவாகிய நேபுகாத்நேத்சார் யோயாக்கீமின்குமாரனாகிய எகோனியாவென்ற யூதாவின இராசாவையும் யூதாவின்பிரபுக்களையும் எருசலேமிலுள்ள தச்சரையுங்கொல்லரையுஞ் சிறைபிடித்துப்பாபேலுக்குக்கொண்டுபோனபிற்பாடு கர்த்தனென்னைக்காணப்பண்ணினதாவது, இதோ அத்திப்பழங்களுள்ள இரண்டுகூடைகள் கர்த்தருடைய தேவாலயத்தின்முன்வைக்கப்பட்டிருந்தது. * உ. இராசா, உச, யரு.

உ ஒருகூடையிலே முதற்கந்தாயத்து அத்திப்பழங்களுக்குச்சமானமான மெத்தநல்ல அத்திப்பழங்களும் மற்றக்கூடையிலோவென்றால் ஆகாதவைகையானதினாலே பொசிக்கப்படக்கூடாதமெத்த ஆகாதஅத்திப்பழங்களுமிருந்தது.

ங கர்த்தனென்னுடனே எரேமியாவே, நீயென்னத்தைக்காணகிறாயென்றார், அதற்குநான அத்திப்பழங்களைக்காணகிறேன், நல்லதான அத்திப்பழங்கள் மெத்தநல்லவைகளும் ஆகாதவைகளோ ஆகாதவைகையானதினாலே பொசிக்கப்படக்கூடாதபடிக்குமெத்த ஆகாதவைகளுமாயிருக்கிறதென்றேன.

ச அப்போது கர்த்தருடையவார்த்தையெனக்குண்டாகி அவர்சொன்னதாவது,

ரு இஸ்ரவேலின்பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நாமிவ்விடத்திலிருந்து கல்தேயர்தேசத்துக்குச்சிறைபோகவிட்ட யூதரைநாமிந்தநல்ல அத்திப்பழங்களுக்கொப்பிட்டு அவர்களை நன்மையாக அறிந்துகொண்டு,

சா * நமமுடையகண்களையவர்களபேரிலே நன்மையாகவைத்து, அவர்களையிந்தத் தேசத்துக்குத் திரும்பிவரப்பண்ணி அவர்களையிடிக்காமல் அவர்களைக்கட்டி, அவர்களைப்பிடுங்காமல அவர்களை நாட்டி,

* க. இராசா அ, சகூ—ருஎ.

எ * நாங் கர்த்தனென்றறியுமிருதயத்தையவர்களுக்குக்கொடுப்போம, † அவர்கள் நமக்குச்சனமாயிருப்பார்கள, நாம அவர்களுக்குப்பராபரனாகவுமிருப்போம, ஏனென்றால் தாங்கள் முழு இருதயத்தோடும்நம்மண்டைக்குத்திரும்புவார்கள். * ரு. மோசே. கய, கூ. எசேக். யக, யகூ.

௩௯, அதி. உ௬. உஎ. † ௩௰, உஉ. ௩௧, ௩௩. ௩௨, ௩௮.

௮ ஆனால * ஆகாத வகையானதினால பொசிக்கப்படக்கூடாத ஆகாத அத்திப்பழங்களுக்கொப்பாக நான சிதேக்கியாவென்ற யூதாவின இராசாவையும அவனுடைய பிரபுக்களையும இந்தத்தேசத்திலே மீதியான எருசலேமினகுடிகளையும எகிப்துத்தேசத்திற்குடியிருக்கிறவர்களையுந்தள்ளிவிட்டு, * உ௯, அதி. ௰எ. ௰௮.

௯ தீமைக்கென்று அவர்களைப்பூமியிலுள்ள எலலா இராசசியங்களிலும அலைதலாகவும் நாம் அவர்களைத்துரத்திவிட்ட எலலாவிடங்களிலும் நிந்தையாகவும் பழமொழியாகவும மெலலுதலாகவுஞ் சாபமாகவும்வைத்து,

௰ அவர்களுக்கும் அவர்களபிதாக்களுக்குமநானகொடுத்ததேசத்தில் அவர்களிராதபடிக்கு நிர்மூலமாகுமட்டும * அவர்களுக்குள்ளே பட்டயத்தையும பஞ்சத்தையும பெருவாரிக்காய்ச்சலையுமனுப்புவோமென்று கர்த்தர்சொலலுகிறொனருர்.

* எசேக. ௬, ௰௧.

## உ௫. அதிகாரம்.

[எழுபதுவருஷச்சிறையிருப்பு கர்த்தருடையவார்த்தைக்குக்கீழ்ப்படியாமற்போன யூதருக்கு முன்னறிவிக்கப்பட்டது.]

யோசியாவின்குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவுடைய இராசாவின் நாலாம்வருஷத்திலே யூதாவின்சனமனைத்தையுங்குறித்து எரேமியாவுக்குண்டானவார்த்தை, அது நேபுகாத்நேத்சாரென்றபாபேலுடைய இராசாவின முதலாமவருஷமானது.

உ அதைத்தீர்க்கதரிசியாகிய எரேமியா யூதாவினசனமனைத்துக்கும எருசலேமின குடிகளெலலாருக்குஞ் சொலலியுரைத்ததாவது.

௩ ஆமோனினகுமாரனாகிய யோசியாவின பதின்மூன்றாமவருஷந்துவக்கி யிந்நாள்மட்டுஞ்சென்ற இந்த இருபத்துமூன்றுவருஷங்களிலே கர்த்தருடையவார்த்தையெனக்குண்டானது, அதை நான உங்களுக்கு ஏற்கனவேசொலலிக்கொண்டேயிருந்தும நீங்களகேளாதேபோனீர்கள்.

௪ கர்த்தர் உங்களண்டைக்குத்தீர்க்கதரிசிகளாகிய தமமுடைய சகல ஊழியக்காரரையும ஏற்கனவே யனுப்பிக்கொண்டேயிருந்தும நீங்களகேளாமலும உங்களசெவிகளைக்கேட்கும்படிக்குச் சாய்க்காமலுமபோனீர்கள்.

௫ அவர்களைக்கொண்டு அவர்சொலலியனுப்பினதாவது, * நீங்கள அவனவனதன பொலலாதவழியையும உங்களகிரியைகளின பொலலாப்பையுமவிட்டுத்திரும்பி அப்படியேகர்த்தர் உங்களுக்கும உங்களபிதாக்களுக்குங்கொடுத்ததேசத்திற் சதாகாலஞ் சதாகாலமாகக்குடியிருந்து, * ௰௮, ௰௧. ௩௫, ௰௫.

௬ * வேற்றுத்தேவர்களை அவைகளுக்காராதனைசெய்யவும அவைகளைப்பணியவும பின்பற்றாமலும நாமுங்களுக்குத்தீங்குசெய்யாதபடிக்கு உங்களகைகளினசெய்கைகளால நமக்குக்கோபமுண்டாக்காமலுமிருங்களென்பதுதானே. * எ. ௬, எ.

எ நீங்களோவென்றால, உங்களுக்குத்தீங்காக உங்கள கைகளினசெய்கைகளாலே நமக்குக் கோபமுண்டாக்கும்படிக்கு நம்முடைய சொலலைக்கேளாதே போனீர்களென்று கர்த்தர்சொலலுகிறார்.

௮ ஆனதுகொண்டுசேனைகளினகர்த்தர் உரைக்கிறதாவது, நீங்கள நமமுடையவார்த்தைகளைக்கேளாதேபோனபடியினாலே,

௯ இதோ நாம வடக்கேயிருக்கிற சகலவம்சங்களையும நமமுடைய வேலைக்காரனாகியநேபுகாத்நேத்சாரென்றபாபேலின இராசாவையும அழைத்தனுப்பி, இவர்களையிந்தத்தேசத்துக்கு விரோதமாகவும அதினகுடிகளுக்கு விரோதமாகவுஞ் சுற்றிலுமிருக்கிற இந்த எலலாச்சாதிகளுக்கும்விரோதமாகவும வரப்பண்ணி அவைகளைச் சங்காரத்துக்கொப்புக்கொடுத்து * அவைகளைப்பாழாகவும பயில போடுதலாகவும நித்திய வனாந்தரங்களாகவும வைத்துப்போட்டு, ௰௮, ௰௬. ௰௯, ௮.

௰ * மகிழ்ச்சியின சத்தத்தையுஞ் சந்தோஷத்தினசத்தத்தையுமமணவாளனின சத்தத்தையும மணவாட்டியினசத்தத்தையும எந்திரத்தின சத்தத்தையும விளக்கினவெளிச்சத்தையும அவர்களிலிருந்தழியப்பண்ணுவோமென்று கர்த்தர்சொலலுகிறார். * எ, ௩௪. ௰௬, ௯.

௰௧ இந்தத்தேசமெலலாம வனாந்தரமும் பாழுமாம், இந்தச்சாதிகளோவென்றால * எழுபதுவருஷமாகப்பாபேலின இராசாவைச்சேவிக்கும. * உ௯, ௰.

எழுபதுவருஷங்களினமுடிவிலே பாபிலோனியருக்கு வரும ஆக்கினை முன்னறிவிக்கப்பட்டது.

௰உ எழுபதுவருஷம நிறைவேறும்போதோவென்றால சமபவிப்பதேதென்றால நாம் பாபேலுடைய இராசாவினிடத்திலும அந்தச்சாதியினிடத்திலும கலதேயருடைய தேசத்தினிடத்திலும அவர்களுடைய அக்கிரமத்தைவிசாரித்து, அதை நித்தியபாழ்க்கடிப்புகளாக்கி,

௰௩ நாம்நதத்தேசததுககு விரோதமாயுரைத்த நமமுடைய எலலா வார்த்தைகளையும எரேமியா எலலாசசாதிகளுககும விரோதமாகததீர்ககதரிசனமாயச சொனனதும இநதபபுஸ்தகததிலெழுதியிருககிறமானயாவையுமெயதினமேல வரபபணணுவோமெனறு கர்ததர்சொலலுகிறார்.

௰௪ ஏனெனில அவர்களையும அநேகஞசாதிகளுமபெரிய இராசாககளும அடிமைகொளளுவார்கள, அபபடி நாம அவர்களுககு அவர்கள கிரியைகளுககுததககதாகவும அவர்களகைகளின செயலகளுககுததககதாகவும வதில அளிபபோமெனறார்.

௰௫ ேருககும மறற அநேகஞசாதிகளுககுங கர்ததருடைய உககிரமெனற மதுபானததின பாததிரஙகுடிக்கக்கொடுககபபடுவது.

௰௫ ஏனெனில இஸரவேலின பராபரனுகிய கர்ததர் எனனோடேசொனனதாவது, நாமுனனையனுபபுகறசாதிகள குடிததுநாநதஙகளுக்குளளனுபபும படடையததால அவர்கள தளளம பாறிபபுததிகெடடுபபோகுமபடிககு,

௰௬ இநதஉககிரமாகியமதுபானத்தின பாத்திரத்தை நீநமதுகரத்திலவாஙகி, அவ ரெலலாரும அதிலேகுடிக்கக்கொடுவெனறார்.

௰௭ அபபோது நான்நதபபாத்திரத்தைககர்ததருடைய கரததிலவாஙகிக்கர்ததரெனனையனுபபின எலலாசசாதிகளுககுஙகுடிக்கக்கொடுததேன.

௰௮ எருசலேமுககுமயூதாவினபடடணஙகளுககும அதினிராசாககளுககும அதினபிரபுககளுககும அவர்களை யிநநாளிலிருககிறபடிவஞநததமுமபாழும பயிலபோடுதலுஞசாபமுமாககிபபோடககுடிக்கக்கொடுததேன.

௰௯ எகிப்தின இராசாவாகிய பார்வோனுககும அவனூழியககாரருககும அவனபிரபுககளுககும அவனுடைய எலலாசசனததுககும.

௨௰ கலநதுகுடியிருககிறஅனைவருககும ஊத்ஸதேசததினுடைய எலலா இராசாககளுககும பெலிஸதருடையதேசததிலிருககிற எலலா இராசாககளுககும அஸ்கலோனுககுங காசாவுககும எககிரோனுககும அஸ்தோததில மீதியானவர்களுககும,

௨௧ ஏதோமுககுமமோவாவுககும அம்மோனபுததிரருககும,

௨௨ தீருவினுடைய எலலா இராசாககளுககும சீதோனுடைய எலலா இராசாககளுககுஞ சமுததிரததுக்ககரையானதீவுகளின இராசாககளுககும,

௨௩ தேதானுககும தேமாவுககுமபூசுககும கடைசிமூலைகளிலுளள அனைவருககும,

௨௪ அரபியிலுளள எலலா இராசாககளுககுமவனாநதரததிற கலநதுகுடியிருககிறவர்களுடையஎலலாஇராசாககளுககும,

௨௫ சிமரியினுடையஎலலா இராசாககளுககும ஏலாமினுடையவெலலா இராசாககளுககுமமேதியாவினுடையவெலலாஇராசாககளுககும.

௨௬ வடககேயிருககிறவெலலா இராசாககளுககும சமீபமானவர்களுந தூரமானவர்களுமாகிய அவர்களுககும பூமியினமீதிலுளள சகல தேசததிராசசியஙகளுககுந தானே, சேசாககெனற இராசாவும அவர்களுககுபபிறபாடு குடிபபானெனறார்.

௨௭ * நீஙகள குடிதது வெறிததுவாநதிபணணி நாமுஙகளுககுளளனுபபும படடையததாலே யெழுநதிராதபடிககுவிழுஙகளெனகிறதாய இஸரவேலின பராபரனுகியசேனைகளையுடைய கர்ததர் உரைககிறுரெனறவர்களுடனேசொலலுவாயாக.

* சஙகீ. ௭௫, ௮.

௨௮ அவர்கள குடிககிறதுககு அநதபபாததிரததையுனகையில வாஙகமாடடோமெனறுசொலலுகிறதுணடேயாகில நீயவர்களோடேசொலலவேணடியதாவது, குடிககவேகுடிபபீர்களெனறு சேனைகளையுடையகர்ததர்சொலலுகிறார்.

௨௯ ஏனெனில இதோ நீஙகைக்கடடளைபிட * நாமநமமுடையநாமநதரிபபிககபபடடபபடடணததிலேதுவக்ககக்கொளள நீஙகள குறறமறறு நீஙகலாயிருபபீர்களோ நீஙகள நீஙகலாயிருபபதிலலை, ஏனெனறால நாம பூமியினுடைய வெலலாககுடிகளினமேலும படடையததை வரவழைககிறோமெனறு சேனைகளையுடைய கர்ததர்சொலலுகிறானெனபதுதானே. * க பேது ச, ௰௭.

௩௰ ஆனதுகொணடு நீயவர்களுககுவிரோதமாக இநத வார்ததைகளையெலலாந தீர்ககதரிசனமாயுரைதது அவர்களோடே சொலலவேணடியதாவது * கர்ததர் உயரததிலிருநது கெர்சசிதது தமது பரிசுதத வாசஸதலததிலிருநது தமமுடைய சததத்தைககாடடி தமமுடைய தாபரததுககுவிரோதமாகக்கெர்சசிக்கவே கெர்சசிதது ஆலையை மிதிககிறவர்களைபபோலே பூமியினுடைய வெலலாககுடிகளுககும விரோதமாக ஆர்பபரிபபார். * யோவ. ௩, ௰௬. ஆமோ. க, உ.

௩௧ அமளிபூமியின கடையாநதரமடடுஞசேரும, ஏனெனிற சாதிகளோடே கர்ததருககுவழககிருககிறது சகலமாமசததோடும அவர் நியாயததுககுடபிரவேசிபபார், ஆகாதவர்களைப படடையதுககொபபுக

கோப்புக்கொம்பப்பாரென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௨ சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறதாவது இதோ சாதிசாதிக்குத் தீங்கு பரம்பிப்போய் பூமியின் பக்கங்களிலிருந்து மகா புசலெழும்பும்.

௩௩ அக்காலத்திலே பூமியின் ஒருமுனை துவக்கிப் பூமியின் மறுமுனைமட்டும் கர்த்தரால் கொலையுண்டவர்கள் கிடப்பார்கள், புலம்பப்படாமலுஞ் சேர்க்கப்படாமலும் அடக்கம்பண்ணப்படாமலும் பூமியின்மேல் எருவாவார்கள்.

௩௪ மேய்ப்பரே அலறுங்கள் மந்தையிற் பிரஸ்தாபமானவர்களே கூப்பிட்டுச் சாம்பலிற் புரளுங்கள், ஏனெனில் நீங்கள் வெட்டப்படவுஞ் சிதறடிக்கப்படவும் உங்கள் நாட்கள் நிறைவேறிற்று, உசிதமான பாத்திரத்தைப்போலே விழுவீர்கள்.

௩௫ மேய்ப்பர் ஓடிப்போகிறதுக்கும் மந்தையிற் பிரஸ்தாபமானவர்கள் தப்பி வித்துக்கொள்ளுகிறதுக்கும் இடமில்லை.

௩௬ தங்கள் மேய்ப்பைக் கர்த்தர் பாழ்க்கடித்ததினிமித்தம் மேய்ப்பர் கூப்பிடுகிறதும் மந்தையிற் பிரஸ்தாபமானவர்கள் அலறுகிறதுமான சத்தமுண்டாம்.

௩௭ ஏனெனில் அவர்கள் சுகித்திருந்த தாபரங்கள் கர்த்தருடைய கோபத்தின் எரிச்சலாலே சங்காரமாம்.

௩௮ அவர் இளஞ்சிங்கத்தைப்போலத் தமது கூடாரத்தை விட்டுவிட்டார், ஏனெனில் ஒடுக்குகிறவனுடைய எரிச்சலினாலும் அவனுடைய கோபத்தின் எரிச்சலினாலும் அவர்கள் தேசம் பாழாயிற்றென்று சொல்லென்றார்.

## ௨௬. அதிகாரம்.

[எரேமியாவின் தீர்க்கதரிசனத்தினிமித்தம் ஆசாரியர்கள் அவனைப்பிடித்து மரணாக்கினைக்குள்ளாக்கப் பார்த்தபோது வேறேசிலர் அவனுக்குப் பரிந்து அவனை விடுதலைபண்ணினது.]

யோசியாவின் குமாரனும் யூதாவின் இராசாவுமாகிய யோயாக்கீமுடைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே கர்த்தரால் உண்டானவார்த்தை.

௨ கர்த்தர் சொன்னதாவது, நீ கர்த்தருடைய வீட்டின் பிராகாரத்திலே நின்றுகொண்டு கர்த்தருடைய வீட்டிலே பணியவருகிற யூதாவுடைய பட்டணங்களின் குடிகள் அனைவரோடும் நீ சொல்லத்தக்கதாக நாமுனக்குக் கற்பித்த எல்லா வார்த்தைகளையும் அவர்களுக்குச் சொல்லு, ஒருவார்த்தையையுங் குறைக்காதே.

௩ * அவர்கள் செய்கைகளுடைய பொல்லாப்பினிமித்தம் நாம் அவர்களுக்குச் செய்ய நினைக்கிற தீங்குக்கு நாம் மனஸ்தாபப்படத்தக்கதாக, ஒருவேளை அவர்கள் கேட்டு அவரவர் தங்கள் பொல்லாத வழியைவிட்டுத் திரும்புவார்கள். * ௩௬, அதி. ௩.

௪ அவர்களுடனே நீ சொல்லவேண்டியதாவது, கர்த்தருரைக்கிறதேதெனில், நாமுங்களண்டைக்கு ஏற்கெனவே அனுப்பிக்கொண்டிருந்தும் நீங்கள் கேளாமற்போன நம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளை நீங்கள் கேட்கும்படிக்கும்,

௫ நாமுங்கள் முன்னே வைத்த நமது நியாயப்பிரமாணத்திலே நீங்கள் நடக்கும்படிக்கும், நீங்கள் நம்முடைய சொல்லைக் கேளாதே போனால்,

௬ நாமிந்த வீட்டைச் * சீலோவுக்குச் சரியாக்கி இந்தப்பட்டணத்தைப் பூமியிலுள்ள எல்லாச்சாதிகளுக்கு முன்பாகவுஞ் சாபமாக்கிப்போடுவோமென்றுரைத்தாரென்று சொல்லென்றார். * ௭, அதி. ௰௪.

௭ ஆசாரியர்களுந் தீர்க்கதரிசிகளுஞ் சனம் அனைத்தும் எரேமியா இந்தவார்த்தைகளையெல்லாங் கர்த்தருடைய வீட்டிலே சொல்லக்கேட்டார்கள்.

௮ அப்போது சம்பவித்ததேதென்றால், எல்லாச் சனத்துக்குஞ் சொல்லக் கர்த்தர் தனக்குக் கற்பித்ததையெல்லாம் எரேமியா சொல்லி முடித்தபோது ஆசாரியர்களுந் தீர்க்கதரிசிகளுஞ் சனமனைத்தும் அவனைப் பிடித்து நீ சாகவே சாகவேணும்.

௯ இந்தவீடு சீலோவைப்போலாகி இந்தப்பட்டணங் குடியில்லாமற்போகப் பாழ்க்கடிக்கப்படுமென்று நீ கர்த்தருடைய நாமத்திலே தீர்க்கதரிசனஞ் சொல்லுவானேனென்று சொல்லிச் சனமெல்லாங் கர்த்தருடைய வீட்டிலே எரேமியாவுக்கு விரோதமாய்க் கூடிற்று.

௰ இந்தவர்த்தமானங்களை யூதாவின் பிரபுக்கள் கேட்டு இராசாவின் வீட்டிலிருந்து கர்த்தருடைய வீட்டுக்குப் போயேறிக் கர்த்தருடைய புதியவாசலின் ஒலிமுகத்தில் உட்கார்ந்தார்கள்.

௰௧ அப்போது ஆசாரியர்களுந் தீர்க்கதரிசிகளும் பிரபுக்களோடும் எல்லாச்சனத்தோடும் * இந்தமனுஷனுக்கு மரணாக்கினைதகும், ஏனெனில் உங்கள் செவிகளாலே நீங்கள் கேட்டபடி இந்தப்பட்டணத்துக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனஞ் சொன்னானென்றார்கள் * அப்போ. ௬, ௰௩.

௰௨ அப்போது எரேமியா எல்லாப்பிரபுக்களோடும் எல்லாச்சனத்தோடுஞ் சொன்னதாவது, நீங்கள் கேட்ட எல்லாவார்த்தைகளையும் இந்தவீட்டுக்கும் இந்தப்பட்டணத்துக்கும் விரோதமாகத் தீர்க்கதரிசனமாய்ச் சொல்லக் கர்த்தரென்னை அனுப்பினார்.

௰௩ இப்போதும் * நீங்கள் உங்கள் வழிகளையும் உங்கள் கிரியைகளையுஞ் சீர்ப்படுத்தி, உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக் கேளுங்கள், அப்போது கர்த்தர் † உங்களுக்கு விரோதமாய்ச் சொன்ன தீங்குக்கு மனஸ்தாபப்படுவார். * எ, அதி. ௩ † ௰௯, அதி. ௮.

௰௪ நானோவெனில் இதோ உங்கள் கைகளிலிருக்கிறேன், உங்கள் பார்வைக்கு நன்மையும் நீதியுமாயிருக்கிறதை எனக்குச் செய்யுங்கள்.

௰௫ ஆகிலும் நீங்கள் என்னைக் கொன்றுபோட்டால் நீங்கள் குற்றமில்லாத இரத்தத்தை உங்கள் மேலும் இந்தப் பட்டணத்தின் மேலும் அதின் குடிகளின் மேலுஞ் சுமத்திக்கொள்வீர்களென்கிறதை அறியவே அறியுங்கள், ஏனெனில் இந்த எல்லா வார்த்தைகளையும் உங்கள் செவிகளிலே சொல்லக் கர்த்தர் மெய்யாகவே என்னை உங்களண்டைக்கனுப்பினாரென்று சொன்னான்.

௰௬ அப்போது பிரபுக்களும் சனங்களுந் தும ஆசாரியர்களோடுந் தீர்க்கதரிசிகளோடும் இந்த மனுஷனுக்கு மரண ஆக்கினை தகாது, ஏனெனில் நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் நாமத்திலே நம்முடனே பேசினானென்றார்கள்.

௰௭ தேசத்திலே மூப்பானவர்களிலுஞ் சிலர் எழும்பிச் சனத்தினுடைய சபையினைத் தோடுஞ் சொன்னதாவது,

௰௮ யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவின் நாட்களில் மொரேசாவூரானாகிய மிகா தீர்க்கதரிசனஞ் சொல்லி யூதாவின் சனமனைத்தோடும் † சீயோன் வயல்வெளியாய் உழப்பட்டு எருசலேம் மண்மேடுகளும் இந்த வீட்டின் பருவதங்காட்டுமேடுகளுமாமென்ப சேனைகளின் கர்த்தருரைத்தாரென்று சொன்னான். * மிகா. ௧, ௧. † மிகா. ௩, ௰௨.

௰௯ அவனை யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவும் யூதாவனைத்துங் கொல்லவே கொன்றார்களோ? இவர் கர்த்தருக்குப் பயந்து கர்த்தரின் முகத்தை நோக்கிக் கெஞ்சினானல்லவோ? அப்போது கர்த்தர் அவர்களுக்கு விரோதமாகச் சொல்லியிருந்த தீங்குக்கு மனஸ்தாபப்பட்டார், இப்போதும் நாம் நம்முடைய ஆத்துமாவுக்கு விரோதமாக மகா பொல்லாப்பைச் செய்கிறவர்கள்.

உ௰ அதேதெனில் கிரியாத்யெயாரீம் ஊரானாகிய சேமாயாவின் குமாரன் உரியா என்னப்பட்ட ஒரு மனுஷனுங் கர்த்தருடைய நாமத்திலே தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவனாயிருந்தான், அவன் எரேமியாவின் வார்த்தைகளுக்குச் சரியாக இந்தப் பட்டணத்துக்கும் இந்தத் தேசத்துக்கும் விரோதமாகத் தீர்க்கதரிசனஞ் சொல்லுவான்.

உ௧ யோயாக்கீம் இராசாவும் அவனுடைய எல்லாப் பெலவான்களும் எல்லாப் பிரபுக்களும் அவன் வார்த்தைகளைக் கேட்டபோது இராசா அவனைக் கொன்றுபோட வகைபார்த்தான், அதை உரியா கேட்டுப் பயந்து ஓடிப்போய் எகிப்திலே சேர்ந்தான்.

உ௨ அப்போது யோயாக்கீம் இராசா அக்போரின் குமாரனாகிய எல்நாத்தானையும் அவனோடேகூட வேறே சிலரையும் எகிப்துக்கு முதலாயனுப்பினார்.

உ௩ இவர்கள் உரியாவை எகிப்திலிருந்தழைத்துக்கொண்டுவந்து அவனை யோயாக்கீம் இராசாவண்டைவிட்டார்கள், அப்போதவர் அவனைப் பட்டையத்தாலே வெட்டியவனுடலை நீசச்சனங்களின் பிரேதக்குழிகளிடத்திலே போடுவித்தாரென்றார்கள்.

உ௪ ஆகில் எரேமியாவைக் கொல்லச் சனத்தின் கையிலொப்புக்கொடுக்காதபடிக்குச் சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் கை யவனோடிருந்தது.

## உஎ. அதிகாரம்.

[நேபுகாத்நேத்சாருடைய நுகத்தடிக்குக் கீழ்ப்படியவேண்டியதென்று அநேகஞ் சாதிகளுக்கும் யூதருக்குமே யறிவிக்கப்பட்ட விவரம்.]

யோசியாவின் குமாரனும் யூதாவின் இராசாவுமாகிய யோயாக்கீமுடைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே கர்த்தரால் எரேமியாவுக்குண்டான வார்த்தை.

௨ கர்த்தரென்னுடனே சொன்னதாவது, நீ யுனக்கு வடக்கயிறுகளையும் நுகத்தடிகளையும் உண்டுபண்ணி அவைகளை யுன் கழுத்திலே பூட்டிக்கொண்டு,

௩ அவைகளை யெருசலேமுக்குச் சிதேக்கியா இராசாவண்டைவருந் தூதுவர்களின் கையிலே ஏதோமின் இராசாவுக்கும் மோவாவின் இராசாவுக்கும் அம்மோன் புத்திரரின் இராசாவுக்கும் தீரின் இராசாவுக்கும் சீதோனின் இராசாவுக்கும் அனுப்பி,

௪ அவர்கள் தங்கள் ஆண்டவமாருக்குச் சொல்ல அவர்களுக்குக் கற்பிக்கவேண்டியதாவது, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில்,

௫ நாம் பூமியையும் மனுஷனையும் பூமியின் மேலுள்ள மிருகஜீவன்களையும் நமது பெரிய பலத்தினாலும் நீட்டப்பட்ட நமது புயத்தினாலும் உண்டாக்கினோம், * நமது பார்வைக்குச் சரியாயிருக்கிறவனுக்கு அதைக் கொடுக்கிறோம். * தானி. ௪, ௰௪.

௬ இப்போதும் நாம் * இந்தத் தேசங்களையெல்லாம் நம்முடைய வேலைக்காரனாகிய நேபுகாத்நேத்சாரென்ற பாபேலுடைய இராசாவின் கையிலே கொடுத்தோம், அவனுக்கூழியஞ் செய்ய வெளியின் மிருகஜீவன

களையும் அவனுக்குக் கொடுத்தோம். * உரு, அதி. கூ. உஅ. யச.

எ சகலசாதிகளும் அவனையும் அவனுடைய குமாரனையும் அவன் குமாரனின் குமாரனையுஞ்சேவிப்பார்கள், * அவனுடைய தேசத்துக்குக் காலம் வருமட்டாகத்தானே, அப்போது நெகஞ்சாதிகளும் பெரிய இராசாக்களும் அவனையடிமைகொள்ளுவார்கள். * உரு, அதி. யஉ.

அ சம்பவிப்பதேதென்றால் எந்தச்சாதி எந்த இராச்சியம் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரென்பவனைச்சேவிக்காமலும் தன் கழுத்தைப்பாபேலுடைய இராசாவின் நுகத்தடிக்குக்கீழ்ப்படுத்தாமலும்போகிறதோ அந்தச்சாதியை நாம் அவன் கையாலே நிர்மூலமாகுமளவும் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலும் விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

கூ பாபேலின் இராசாவை நீங்கள் சேவிப்பதில்லையென்று உங்களுடனே சொல்லுகிற உங்கள் தீர்க்கதரிசிகளுக்கும் உங்கள் குறிகாரருக்கும் உங்கள் சொப்பனக்காரருக்கும் உங்கள் நாட்பார்வைக்காரருக்கும் உங்கள் சூனியக்காரருக்கும் நீங்கள் கேள்விகொடாதிருப்பீர்களாக.

ய ஏனென்றால நாமுங்களையுங்கள் தேசத்துக்குத் தூரப்படுத்துகிறதுக்கும் உங்களைத் துரத்திவிடுகிறதுக்கும் நீங்கள் அழிந்துபோகிறதுக்குமாக அவர்கள் உங்களுக்குப் பொய்யான தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறார்கள்.

யக ஆனால எந்தச்சாதி தன்கழுத்தைப் பாபேலுடைய இராசாவின் நுகத்தடிக்குக்கீழ்ப்படுத்தி அவனைச்சேவிக்குமோ அதைநாம் தன் தேசத்தைப்பயிரிட்டு அதிலேகுடியிருக்கும்படிக்கு அதிலே தாபரிக்கப்பண்ணுவோமென்று கர்த்தர்சொல்லுகிறாரென்பதுதானேயென்றார்.

யஉ இந்தவெல்லா வார்த்தைகளின்படியே நான் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவோடேயும் பேசிச்சொன்னதாவது, உங்கள்கழுத்துகளைப்பாபேலுடைய இராசாவின் நுகத்தடிக்குக்கீழ்ப்படுத்தி அவனையும் அவன் சனத்தையுஞ்சேவியுங்கள் அப்போது பிழைப்பீர்கள்.

யங பாபேலுடைய இராசாவைச்சேவிக்காதேபோகிறசாதிக்கு விரோதமாகக்கர்த்தர் சொன்னதின்படியே நீரும் உம்முடைய சனமும் * பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலுஞ்சாவானேன்.
* அ. வசனம்.

யச நீங்கள் பாபேலுடைய இராசாவைச்சேவிப்பதில்லையென்றுங்களுடனே சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருப்பீர்களாக, ஏனெனில * அவர்கள் உங்களுக்குப் பொய்த்தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறார்கள். * யச, அதி. யங. யச. உங, யசூ. யஎ. உகூ, அதி. அ. க, யோவா. ச, கூ.

யரு ஏனென்றால நாம் அவர்களையனுப்பினதில்லை, நாம் உங்களைத் துரத்திவிடுகிறதுக்கும் நீங்களும் உங்களுக்குத்தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற தீர்க்கதரிசிகளும் அழிந்துபோகிறதுக்குமாக இவர்கள் நம்முடைய நாமத்தைச்சொல்லிப்பொய்த் தீர்க்கதரிசனமுரைக்கிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றேன்.

யசூ தீர்க்கதரிசிகளோடும் இந்தவெல்லாச்சனத்தோடும் நான் பேசிச்சொன்னதாவது, கர்த்தருரைக்கிறதேதென்றால், இதோ * கர்த்தருடைய வீட்டின் பண்டம்பாடிகள் இப்போது சீக்கிரத்திலே பாபேலிலிருந்து திரும்பிக்கொண்டுவரப்படுமென்று உங்களுக்குத் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற உங்களுடைய தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளைக்கேளாதிருப்பீர்களாக, ஏனெனில அவர்களுங்களுக்குப் பொய்த்தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறார்கள். * உஅ, அதி. ங.

யஎ அவர்களுக்குக் கேள்விகொடாதிருப்பீர்களாக, பாபேலுடைய இராசாவைச்சேவியுங்கள் அப்போது பிழைப்பீர்கள், இந்தப்பட்டணம் பாழாவானேன்.

யஅ அல்லவென்று இவர்கள் தீர்க்கதரிசிகளாயிருந்து இவர்களிடத்திலே கர்த்தருடைய வார்த்தையிருந்தால கர்த்தருடைய வீட்டிலும் யூதாவுடைய இராசாவின் வீட்டிலும் எருசலேமிலும் மீதியான பண்டம்பாடிகள் பாபேலுக்குப்போகாதபடிக்கு இவர்கள் சேனைகளையுடைய கர்த்தரை நோக்கி மன்றாட்டுமென.

யகூ ஏனென்றால பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் * யோயாக்கீமின் குமாரனாகிய எகொனியாவென்ற யூதாவின் இராசாவையும் யூதாவிலும் எருசலேமிலிருந்த மேன்குலத்தாரனைவரையும் எருசலேமிலிருந்து பாபேலுக்குச் சிறைபிடித்துக்கொண்டுபோகையில, * உ. இராசா. உச. யஉ—யரு.

உய எடுக்காமற்போன * தூண்களையும் கடல்தொட்டியையும் ஆதாரங்களையும் இந்தப்பட்டணத்தில் மீதியான குறைப்பண்டம்பாடிகளையுங்குறித்துச் சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறதாவது, * ருஉ, அதி. யஎ. உ, இரா. உரு, யங—யஎ.

உக கர்த்தருடைய வீட்டிலும் யூதாவினுடைய இராசாவின் வீட்டிலும் எருசலேமிலும் மீதியான அந்தப்பண்டம்பாடிகள் பாபேலுக்குக்கொண்டுபோகப்படுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௨௨ நாம் அவைகளை விசாரிக்கப்போகிற நாள்மட்டுக்கும் அவைகள் அங்கேயிருக்கும், * பிற்பாடு அவைகளைத் திரும்ப இந்தஸ்தலத்துக்கு வரச்செய்ப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றேன். * எஸ். ௧, ௭. ழு

## ௨௮. அதிகாரம்.

[நேபுகாத்நேத்சாருடைய நுகத்தடியைப் பராபரன் இரண்டுவருஷகாலத்திலே யுடைப்பாரென்று பொய்த்தீர்க்கதரிசனஞ்சொன்ன கான்னியாவுக்கு வந்த ஆக்கினை.]

௧ அல்லாமல் யூதாவுடைய இராசாவாகிய சிதேக்கியா அரசாளத்துவக்கின நாலாம் வருஷமான அந்தவருஷத்திலேதானே ஐந்தாம் மாதத்திலே சம்பவித்ததென்னவென்றால் அசூரின் குமாரனாகிய கான்னியாவென்னப்பட்ட கிபேயோன் ஊரானாகிய தீர்க்கதரிசி கர்த்தருடைய வீட்டிலே ஆசாரியர்களுக்கும் சகலசனமும் பார்த்திருக்க என்னுடனே சொன்னதாவது,

௨ இஸ்ரவேலுடைய பராபரனாகிய சேனைகளின் கர்த்தர் உரைக்கிறதேதென்னில் பாபேலுடைய இராசாவின் நுகத்தடியையுடைத்தோம்.

௩ பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேத்சார் இவ்விடத்திலிருந்தெடுத்துப் பாபேலுக்குக்கொண்டுபோன கர்த்தருடைய வீட்டின் பண்டம்பாடிகளையெல்லாம் நாமிரண்டுவருஷகாலத்திலே யிவ்விடத்துக்குத் திரும்பவரப்பண்ணுவோம். * ௨௭, அதி. ௰௬.

௪ யோயாக்கீமின் குமாரனாகிய யெகோனியாவென்கிற யூதாவுடைய இராசாவையும் பாபேலுக்குச் சிறைப்போன யூதரனைவரையும் நாமிவ்விடத்துக்குத் திரும்ப வரப்பண்ணுவோம், ஏனெனில் பாபேலுடைய இராசாவின் நுகத்தடியையுடைப்போமென்றாரென்று சொன்னான்.

௫ அப்போது எரேமியாத்தீர்க்கதரிசி ஆசாரியர்கள் பார்த்திருக்கவுங் கர்த்தருடைய வீட்டில் நின்றிருந்த சனமெல்லாம் பார்த்திருக்கவுங் கான்னியாத்தீர்க்கதரிசியுடனே சொன்னதாவது,

௬ ஆமென் கர்த்தர் அப்படிச்செய்வாராக, கர்த்தருடைய வீட்டின் பண்டம்பாடிகளையுஞ் சிறைப்பட்டுப்போன அனைவரையும் பாபேலிலிருந்து திரும்பவரப்பண்ணுவாரென்று நீ தீர்க்கதரிசனமாய்ச்சொன்ன உன்னுடைய வார்த்தைகளைக் கர்த்தர் திடப்படுத்துவாராக.

௭ இப்போதோவென்னில் உன்னுடைய செவிகளுக்குஞ் சகலசனத்தினுடைய செவிகளுக்குங் கேட்க நான்சொல்லும் வார்த்தையைக் கேள்.

௮ பூருவகாலந்துவக்கி எனக்குமுன்னும் உனக்குமுன்னுமிருந்த தீர்க்கதரிசிகள் அநேகந்தேசங்களுக்கு விரோதமாகவும் பெரிய இராச்சியங்களுக்கு விரோதமாகவும் யுத்தத்தையும் பஞ்சத்தையும் பெருவாரிக்காய்ச்சலையுங்குறித்துத் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்.

௯ சமாதானம் வருமென்று தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற தீர்க்கதரிசியிருக்கிறானே அந்தத் தீர்க்கதரிசியினுடைய வார்த்தையின்படி வந்தால் அப்போது அவன் கர்த்தர் மெய்யாய் அனுப்பின தீர்க்கதரிசியாக அறியப்படுவானென்று எரேமியாத்தீர்க்கதரிசி சொன்னான்.

௰ அப்போது கான்னியாவென்கிறத் தீர்க்கதரிசி * யெரேமியாதீர்க்கதரிசியின் கழுத்திலிருந்த நுகத்தடியைவாங்கியதையுடைத்துப்போட்டான். * ௨௭, அதி. ௨.

௰௧ பிறகு கான்னியா சகலசனமும் பார்த்திருக்கச்சொன்னதாவது, இந்தப்பிரகாரமாக இரண்டுவருஷக்காலத்திலே பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேத்சாருடைய நுகத்தடியைச் சகலசாதிகளின் கழுத்தையும் விலக உடைத்துப்போடுவோமென்று கர்த்தர் சொன்னாரென்றான், அப்போது எரேமியாத்தீர்க்கதரிசி தன்வழியே போய்விட்டான்.

௰௨ கான்னியாவென்கிற தீர்க்கதரிசி யெரேமியாத் தீர்க்கதரிசியின் கழுத்திலிருந்த நுகத்தடியை யுடைத்துப்போட்ட பின்பாடோவெனில் கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது,

௰௩ நீபோய் கான்னியாவுடனே சொல்லவேண்டியதேதெனில், நீ மரநுகத்தடியையுடைத்தாய், ஆனால் அதுக்குவதிலாக இருப்புநுகத்தடியையுண்டுபண்ணென்று கர்த்தர் சொன்னார்.

௰௪ ஏனெனில் பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேத்சாரைச் சேவிக்கும்படிக்கு இருப்புநுகத்தடியை யிந்தவெல்லாச் சாதிகளுடைய கழுத்தின்மேலும் போட்டோம், அவர்கள் அவனைச்சேவிக்கவேணும், * வெளியின்மிருகசீவன்களையும் அவனுக்கொப்புக்கொடுத்தோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௫ பிற்பாடு எரேமியாத்தீர்க்கதரிசி கான்னியாவென்ற தீர்க்கதரிசியுடனே சொன்னதாவது, இப்போதுங் கான்னியாவே கேள், கர்த்தருன்னையனுப்பினதில்லை, நீயோ இந்தச் சனத்தைப் பொய்யை நம்பப்பண்ணினாய்.

௰௬ ஆகையால் இதோ உன்னைப் பூமியின்மேலிராதபடிக்குத் தள்ளிவிடுவோம், இந்

துவருஷத்திலே நீ சாவாயென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனில் * கர்த்தருக்கு விரோதமாய்க் கலகமாகப் பேசினாயென்றான். * ரு. மோசே. யங, ரு.

யஎ அப்படியே கானனியா என்ற தீர்க்கதரிசி அவ்வருஷத்திலேதானே ஏழாம் மாதத்திலே செத்துப்போனான்.

## உகூ. அதிகாரம்.

[பாபேலில் சிறைப்பட்டிருந்த யூதருக்கு எரேமியா ஒரு நிருபத்தையெழுதி அனுப்பினதும், அவ்விடத்திலிருந்த சில பொய்த்தீர்க்கதரிசிகளுக்கு வரும் ஆக்கினையை முன்னறிவித்ததும்.]

எகோனியாவென்ற இராசாவும் இராசாத்தியும் பிரதானிகளும் யூதாவிலும் எருசலேமிலுமிருந்த பிரபுக்களும் தச்சரும் கொல்லருமெருசலேமைவிட்டுப் புறப்பட்டுப் போனபிற்பாடு, * உச, அதி. க. உ. இராசா. உச, யஉ. ௱

உ எரேமியாத் தீர்க்கதரிசி சிறைப்பட்டுப் போன மூப்பர்களில் மீதியானவர்களுக்கும் ஆசாரியர்களுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் நேபுகாத்நேச்சார் சிறைப்படுத்தி எருசலேமிலிருந்து பாபேலுக்குக் கொண்டுபோன வெல்லாசனத்துக்கும் எழுதி,

ங யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா பாபேலுக்குப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரண்டையிலே அனுப்பின சாப்பானின் குமாரனாகிய எலெயாசாவின் கையிலும் இல்க்கியாவின் குமாரனாகிய கெமரியாவின் கையிலுமெருசலேமிலிருந்தனுப்பின நிருபத்தின் வார்த்தைகளாவது,

ச இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் தாம் எருசலேமிலிருந்து பாபேலுக்குச் சிறைப்பட்டுப் போகப் பண்ணின அனைவருக்கும் சொல்லுகிறதேதெனில்,

ரு நீங்கள் வீடுகளைக் கட்டிக் குடியிருந்து தோட்டங்களை நாட்டி அவைகளின் கனியைச் சாப்பிடுங்கள்.

சா நீங்கள் பெண்சாதிகளை விவாகம் பண்ணிக் குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்று உங்கள் குமாரருக்குப் பெண்சாதிகளைக் கொண்டு உங்கள் குமாரத்திகளைப் புருஷருக்குக் கொடுத்து இவர்களுங் குமாரரையுங் குமாரத்திகளையும் பெறட்டும், நீங்கள் அங்கே குறுகிப்போகாமற் பெருகிப்போய்,

எ நாமுங்களைச் சிறைப்பட்டுப் போகப்பண்ணின பட்டணத்தின் சமாதானத்தைத் தேடி அதற்காகக் கர்த்தரை விண்ணப்பம் பண்ணுங்கள், ஏனெனில் அதுக்குச் சமாதானமிருக்கையில் உங்களுக்குஞ் சமாதானமிருக்கும்.

அ ஏனெனில் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, உங்கள் நடுவிலிருக்கிற உங்கள் தீர்க்கதரிசிகளும் உங்கள் குறிகாரரும் உங்களை மோசம்போக்கவொட்டாதேயுங்கள், நீங்கள் சொப்பனங்காணப்பண்ணுகிற உங்கள் சொப்பனக்காரருக்குச் செவிகொடாமலுமிருங்கள்.

கூ ஏனெனில் அவர்கள் நமது நாமத்தைச் சொல்லி உங்களுக்குப் பொய்த்தீர்க்கதரிசனமுரைக்கிறார்கள், நாம் அவர்களை அனுப்பவில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

ய ஏனென்றால் கர்த்தருரைக்கிறதாவது, பாபேலிலே எழுபது வருஷம் நிறைவேறுகையில் நாமுங்களைச் சந்தித்து உங்களை யிவ்விடத்துக்குத் திரும்ப வரப்பண்ணும்படிக்கு உங்கள்மேல் நம்முடைய நல்வார்த்தையை நிருவாகம் பண்ணுவோம்.

* உரு, அதி. யக.

யக ஏனெனில் நீங்கள் காத்திருக்கும் முடிவை உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு நாமுங்கள் பேரிலே நினைத்திருக்கிற நினைவுகளை நாம் அறிவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், அவைகள் தீமைக்கல்ல சமாதானத்துக்கடுத்த நினைவுகள்தானே.

யஉ அப்போது நீங்கள் நம்மைத் தொழுதுகொண்டு * நம்மை நோக்கி விண்ணப்பம் பண்ணக்கொள்ள உங்களைக் கேட்டருளுவோம். * சங்கீ. ருய, யரு.

யங * நம்மை முழு இருதயத்தோடு தேடினீர்களானால் நம்மைத் தேடக்கொள்ளக் கண்டுபிடிப்பீர்கள். * ஏசா. ருரு, சா. மத்தேயு. எ, எ. அ.

யச நாமுங்களுக்குத் தென்படுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், நாமுங்கள் சிறையிருப்பைத் திருப்பி நாமுங்களைத் துரத்திவிட்ட எல்லாச் சாதிகளிலும் எல்லாவிடங்களிலுமிருந்து உங்களைச் சேர்த்து நாமுங்களை விலக்கியிருந்த ஸ்தலத்துக்கே யுங்களைத் திரும்ப வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

யரு ஏனென்றால் கர்த்தர் எங்களுக்குப் பாபேலிலே தீர்க்கதரிசிகளை யெழுப்பினாரென்கிறீர்கள்.

யசா ஆனால் தாவீதின் ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிற இராசாவைக் குறித்தும் உங்களோடே கூடச் சிறையிருப்பிலே புறப்பட்டுப் போகாமல் இந்தப் பட்டணத்திலேயிருக்கிற உங்கள் சகோதரராகிய எல்லாச் சனத்தைக் குறித்தும் கர்த்தர் சொல்லுகிறதாவது,

யஎ இதோ நாம் பட்டயத்தையும் பஞ்சத்தையும் பெருவாரிக்காய்ச்சலையும் அவர்களுக்குள் அனுப்பி ஆகாதவைகளான

திலே பொசிக்கப்படாத ஆகாத அத்திப்பழங்களுக்கு அவர்களை யொப்பாக்குவோமென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார். * ௨௪, அதி. ௮—௰.

௰௮ அவர்கள் நம்முடைய வார்த்தைகளைக் கேளாதேபோனபடியினாலே நாம் அவர்களைப் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் கொள்ளைநோய்க் காய்ச்சலாலும் பின்தொடர்ந்து * அவர்களைப் பூமியிலுள்ள எல்லா இராச்சியங்களிலும் அலைச்சலாகவும் நாம் அவர்களைத் துரத்துகிற எல்லாச் சாதிகளிடத்திலும் சாபமாகவும் பாழாகவும் பயில்போடுதலாகவும் நிந்தையாகவும் வைப்போமென்று கர்த்தர்சொல்லுகிறார். * ௰௫, அதி. ௪. ௨௪, அதி. ௯. ௰௫. மோசே. ௨௮, ௩௭. ஏசேக்கி. ௫, ௰௫.

௰௯ நாம் ஏற்கனவே உதயத்தில் எழுந்து தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரை உங்களிடத்துக்கு அனுப்பிக்கொண்டேயிருந்தும் நீங்கள் கேளாமற்போனீர்களே யென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௨௰ இப்போது சிறையிருக்கத்தக்கதாக நாம் எருசலேமிலிருந்து பாபேலுக்கு அனுப்பிவிட்ட நீங்களெல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௨௧ நமது நாமத்தைச்சொல்லி உங்களுக்குப் பொய்த் தீர்க்கதரிசனமுரைக்கிற கோலாயாவின் குமாரனாகிய ஆகாபையும் மாசேயாவின் குமாரனாகிய சிதேக்கியாவையுங்குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறதாவது, இதோ நாம் அவர்களைப் பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையில் ஒப்புக்கொடுக்கிறோம். இவன் அவர்களையுங்கள் கண்களுக்கு முன்பாக வெட்டுவான்.

௨௨ பாபேலின் இராசா அக்கினியிலே சுட்டுப்போட்ட சிதேக்கியாவுக்கும் ஆகாபுக்குங் கர்த்தர் உன்னைச் சமானமாக்கக்கடவரென்று அவர்களைத் தொட்டுப் பாபேலிலே சிறையிருக்கிற யூதரனைவருக்குள்ளும் ஒரு சாபவார்த்தையுண்டாகும்.

௨௩ அதேதென்றால் அவர்கள் இஸ்ரவேலிலே பயித்தியக்கேட்டைச்செய்து தங்களுக்கடுத்தவர்களுடைய பெண்சாதிகளோடே விபசாரம்பண்ணி நாம் அவர்களுக்குக் கற்பிக்காத பொய்வார்த்தையை நமது நாமத்தைச்சொல்லியுரைத்தார்கள், நாம் அதை அறிந்தவர், நாம் அதற்குச் சாட்சியுமானவரென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றெழுதினேன்.

௨௪ பின்னையுங் கர்த்தர்சொன்னதேதெனில் நெகெலாமியனாகிய சேமாயாவுக்கும் நீ சொல்லியனுப்பவேண்டியதாவது,

௨௫ நீ யெருசலேமிலிருக்கிற எல்லாச் சனத்துக்கும் மாசேயாவின் குமாரனாகிய செப்பனியாவென்ற ஆசாரியனுக்கும் எல்லா ஆசாரியர்களுக்கும் உன் நாமத்திலே நிருபத்தையெழுதி அனுப்பினதென்ன இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறானதைத் தானென்றார்.

௨௬ இவனுக்கவன் எழுதியிருந்த நிருபமாவது, நீங்கள் கர்த்தருடைய வீட்டின் விசாரிப்புக்காரராயிருக்கும்படிக்கும் பிரமைகொண்டவனும் தீர்க்கதரிசியுமாகிய எந்த மனுஷனையும் நீர் காவல் அறையிலும் தொழுவிலும் போடும்படிக்குக் கர்த்தர் உம்மை யாசாரியனாயிருந்த யோய்தாவின் ஸ்தலத்திலே ஆசாரியனாக வைத்தாரே.

௨௭ இப்போதும் உங்களுக்குத் தீர்க்கதரிசனங் கூறிவருகிற ஆனதோத்தூரானாகிய எரேமியாவை நீர் அதட்டாமற்போனதென்ன.

௨௮ ஏனெனில் நெடுங்காலமாக அப்படியிருக்கும், நீங்கள் வீடுகளைக்கட்டி அவைகளிற் குடியிருந்து, தோட்டங்களை நாட்டி அவைகளின் கனிகளைச் சாப்பிடுங்களென்று அதினாலேயவன் பாபேலிலிருக்கிற எங்களுக்கு வார்த்தையை யனுப்பினானென்றெழுதியிருந்தான்.

௨௯ இந்த நிருபத்தைச் செப்பனியாவென்ற ஆசாரியன் எரேமியா தீர்க்கதரிசியின் காதுகள் கேட்க வாசித்திருந்தான்.

௩௰ ஆனதுகொண்டு கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னது,

௩௧ நீ சிறையிருக்கிற அனைவருக்கும் அனுப்பவேண்டிய வார்த்தையாவது, நெகெலாமியனாகிய சேமாயாவைக்குறித்துக் கர்த்தர்சொல்லுகிறதேதெனில் சேமாயாவை நாம் அனுப்பாதிருந்தும் அவனுங்களுக்குத் தீர்க்கதரிசனஞ்சொல்லி * உங்களைப் பொய்யை நம்பப்பண்ணுகிறபடியினாலே,

* ௨௮, ௰௫. ௰௬.

௩௨ கர்த்தர்சொல்லுகிறதாவது, இதோ, நெகெலாமியனாகிய சேமாயாவையும் அவன் வித்தையும் விசாரிப்போம், இந்தச் சனத்தின் நடுவிலே குடியிருப்பவனொருவனும் அவனுக்கில்லாதிருப்பான், நாம் நமது சனத்துக்குச் செய்யும் நன்மையையவன் காண்பதுமில்லை, ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாகக் கலகமாய்ப் பேசினானென்று கர்த்தர் சொல்லுகிறானதைத் தானென்றார்.

## ௩௰. அதிகாரம்.

[தம்முடைய சனத்தின் சிறையிருப்பையும் இக்கட்டையும் நீக்கி அதைவிடுவிப்பேர

மென்று கர்த்தர் பண்ணின வாக்குத்தத்தம்.]

கர்த்தராலே எரேமியாவுக்கு உண்டான வார்த்தையாவது,

௨ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நான் உன்னோடே பேசின எல்லா வார்த்தைகளையும் ஒரு புஸ்தகத்திலெழுதிக்கொள்.

௩ ஏனெனில் இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், * அப்போது நான் இஸ்ரவேலும் யூதாவுமாகிய நம்முடைய ஜனத்தினுடைய சிறையிருப்பைத் திருப்பி நாம் அவர்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தேசத்துக்கு அவர்களைத் திரும்பி வரப்பண்ணுவோம், அதையவர்கள் சுதந்தரித்துக்கொள்ளுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

* உ௯, அதி. ௰௪.

௪ இவைகள் கர்த்தர் இஸ்ரவேலையும் யூதாவையுங் குறித்துச் சொன்ன வார்த்தைகள்.

௫ ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதாவது நடுக்கத்தின் சத்தத்தைக் கேட்கிறோம், திகிலுண்டு சமாதானமில்லை.

௬ ஆணாய்ப் பிறந்தவன் பெறுகிறதுண்டோவென்று கேட்டுப் பாருங்கள், எல்லாப் புருஷரும் * பிள்ளை பெறுகிறவளைப் போலத் தங்கள் கைகளைத் தங்கள் இடுப்புகளின் மேற்போட்டிருக்கிறதையும், எல்லா முகங்களும் வெளுத்து மாறினதையும் நான் காணுகிறதென்னபடி?

* ௪, அதி. ௩௧. ௬௧, அதி. ௯.

௭ ஐயோ அந்த நாட் பெரியது, அதைப் போலொத்த நாளில்லை. அது யாக்கோபுக்கு இக்கட்டுக்காலம், ஆனாலதுக்கு நீங்கலாகி இரட்சிக்கப்படுவான்.

௮ அந்த நாளிலே சம்பவிப்பதேதென்றால் நாம் அவனுக்கத்தடியையுன் கழுத்தினின்று விராதபடிக்கு உடைத்து உன் கட்டுகளை யறுப்போமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், அன்னியரினியவனையடிமைகொள்வதில்லை.

௯ தங்கள் பராபரனாகிய கர்த்தரையும் நான் தங்களுக்கெழுப்பப்போகிற தங்கள் இராசாவாகிய தாவீதையுமே சேவிப்பார்கள். * ஏசேக். ௩௪, உ௩. உ௪.

௩௭, அதி. உ௪. ஓசே. ௩, ௫.

௰ ஆகையால் நம்முடைய தாசனாகிய யாக்கோபே * நீ பயப்படாயாக, இஸ்ரவேலே கலங்காயாகவென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனில் இதோ நாம் உன்னைத் தூரத்திலும் உன் வித்தைத் தங்கள் சிறையிருப்பின் தேசத்திலும் வைக்காதபடிக்கு இரட்சிப்போம், யாக்கோபு திரும்பி வந்து அமர்ந்து சுகத்துமிருப்பான், அவனைத் தத்தளிக்கப்பண்ணுபவனில்லை. * ௪௬, அதி. உ௭. உ௮. ஏசா. ௪௧, உ௭.

௰௧ ஏனென்றால் உன்னையிரட்சிப்பதற்காக நாம் உன்னுடனே கூடவிருக்கிறோமென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனில் நாம் உன்னைச் சிதறடித்த எல்லாச் சாதிகளையும் நிர்மூலம்பண்ணுவோம், * உன்னையோ நாம் நிர்மூலம்பண்ணாமல் உன்னை நியாயமட்டாய்த் தண்டிப்போம், உன்னைக் குற்றமற்று நீங்கலாயிருக்கவொட்டோம்.

* ௰, அதி. உ௪. உ௫. ஏசா. ௫௪, ௰௪.

௰௨ ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதாவது, * உன்னொறுங்குதல் கேவலமுள்ளது, உன் காயம் நோக்காடுள்ளதுமாயிருக்கிறது.

* ௰௫, அதி. ௰௮.

௰௩ ஆற்றுவிக்கும்பொருட்டாக உன்காரியத்தை மேற்போட்டுக்கொள்ளுகிறவனில்லை, மேலுக்குப் போடும் அவிழ்தங்கள் உனக்கில்லை.

௰௪ உன்னைச் சிநேகித்த யாவரும் உன்னை மறந்தார்கள், அவர்கள் உன்னைத் தேடார்கள், ஏனெனில் உன் அக்கிரமத்தினுடைய திரளினிமித்தமும் உன் பாவங்கள் பலத்துப்போனதினிமித்தமும் * நான் சத்துருவெட்டும் வண்ணமாகவுங் குரூரன் தண்டிக்கிற வண்ணமாகவும் உன்னையடித்தோம். * உ, அதி. ௰௯.

௰௫ உன்னொறுங்குதலினாலும் நீ கூப்பிடுவானேன், உன் நோ கேவலமாயிருக்கிறதினாலும் உன் அக்கிரமத்தினுடைய திரளினிமித்தமும் உன் பாவங்கள் பலத்துப்போனதினிமித்தமும் இப்படியுனக்குச் செய்தோம்.

௰௬ ஆனதுகொண்டு உன்னைப் பட்சிக்கிறவர்கள் * பட்சிக்கப்படுவார்கள், உன் சத்துருக்களெல்லாருஞ் சிறையிருப்புக்குப் போவார்கள், உன்னைச் சூறையாடுகிறவர்கள் சூறையாவார்கள், உன்னைக் கொள்ளையிடுகிற அனைவரையுங் கொள்ளையாகவொப்புக்கொடுப்போம். * உ. மோசே. உ௩, உ௨.

௰௭ ஏனெனில் அவர்கள் உன்னைத் தள்ளுண்டவளென்றழைத்து இது ஒருவனும் விசாரிக்காத சீயோனென்று சொல்லுகிறபடியினாலே நாமுனக்கு ஆரோக்கியம் வரப்பண்ணி உன் காயங்களையாற்றுவிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ கர்த்தருரைக்கிறதாவது, * இதோ நாம் யாக்கோபுடைய கூடாரங்களின் சிறையிருப்பைத் திருப்பி அதின் வாசஸ்தலங்களுக்கிரங்குவோம், பட்டணந் தன் மண்மேட்டின் மேற் கட்டப்பட்டு அரமனை தன் நியாயத்தின்படி நிறுத்தப்படும். * ௩௧, அதி. ௭. ௰௧. உ௩. ௩௨, அதி ௪௪. ௩௩, அதி. ௭. ௰௧.

௰௯ அவைகளிலிருந்து தோத்திரமுந் சந்தோஷசத்தமும் புறப்படும், நாம் அவர்களைப் பெருகப்பண்ணுவோம், அவர்கள் குறுகிப்போவதில்லை, அவர்களை சிறந்தவர்களாக்கப் பண்ணுவோம்,

ப்போவதில்லை அவர்களை மகிமைப்படுத்துவோம்.

உ௰ அதின் பிள்ளைகள் முந்தியதுபோலிருப்பார்கள், அதின் சபையை நமக்குமுன்பாகத் திடப்படுத்துவோம், ஆனால் அதை ஒடுக்கினயாவரையும் விசாரிப்போம்.

உக * அதின் மகத்துவசாலி அதிலிருந்துண்டாகி அதையாளுகிறவர், அதின் நடுவிலிருந்து புறப்படுவார், அவரைச் சேர்ந்துவரப்பண்ணுவோம், அவர் நம்மைக் கிட்டுவார், ஏனெனில் அவரைத்தவிர நம்மண்டை சேரும்படிக்குத் தன்னிருதயத்தைப் பிணைப்படுத்துபவனாரென்று கர்த்தர் சொல்லுகிறார். * உ௯, அதி. ௫. ௯. மீகா. ௫, க. லூக். க, ௩௩.

உஉ * நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள், நாமுங்களுக்குப் பராபரனாயிருப்போம். * உ௪, அதி. எ. ௩க, க. ௩௩. ௩உ. ௩அ,

உ௩ இதோ * கோராவாரிக்காற்றாகிய கர்த்தருடைய பெருங்காற்று உக்கிரமாயெழும்பியடித்து ஆகாதவர்களுடைய தலையின்மேற்பாயும். * உ௩, அதி. ௰௯.

உ௪ கர்த்தர் அதைச்செய்யுமளவுந் தம்முடைய இருதயத்தின் நினைவுகளை நிறைவாக்கப்பண்ணுமளவும் அவருடைய கோபத்தின் உக்கிரந் திரும்பாது, கடைசிநாட்களில் இதையுணர்ந்துகொள்வீர்கள்.

## ௩க. அதிகாரம்.

[அப்பாலும் இஸ்ரவேலருக்கும் யூதருக்குஞ் சிறையிருப்பின் திருப்புதலுக்காகப் பண்ணப்பட்ட கிருபையுள்ள வாக்குத்தத்தங்கள்.]

அக்காலத்திலே இஸ்ரவேலின் வம்சங்களுக்கெல்லாம் * பராபரனாயிருப்போம், அவர்கள் நமக்குச் சனமுமாயிருப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௩௰, அதி. உஉ.

உ கர்த்தர் சொல்லுகிறதாவது, பட்டயத்திற்குத் தப்பிமீந்த சனம் வனாந்தரத்தில் இரக்கம்பெற்றது, இஸ்ரவேலுக்குச் சாங்கோபாங்கத்தைக் கட்டளையிடப்போகிறோம்.

௩ வெகுகாலம்முதற்கொண்டு கர்த்தர் எனக்குத் தெரிசனையானாரென்பாய், ஆம் அநாதிசிநேகத்தால் உன்னைச் சிநேகித்தோம், ஆனபடியாற் கிருபையாயுன்னையிழுத்துக்கொள்ளுகிறோம். * உன்னத. க, ௪.

௪ இஸ்ரவேலென்ற கன்னியாஸ்திரியே, இன்னம் உன்னைக் கட்டுவிப்போம், நீ கட்டப்பட்டிருப்பாய், நீயின்னம் உன் மேளங்களால் அலங்காரமாய்க் கீதவாத்தியக்காரரின் களிப்புள்ள கூட்டத்தோடே புறப்படுவாய்.

௫ இன்னுஞ் சமாரியாவின் மலைகளிலே திராட்சத்தோட்டங்களை நாட்டுவாய், நாட்டுகிறவர்கள் அவைகளை நாட்டியனுபவமும்பண்ணுவார்கள்.

௬ ஏனெனில் எழுந்திருங்கள், * சீயோனுக்கு நம்முடைய பராபரனாகிய கர்த்தனண்டையிலே போயேறுவோமாகவென்று சமாரியாவின் கன்மலைகளிற் காவற்காரர் கூப்பிடப்போகிற நாள்வரும். * ஏசாயா. உ, ௩. மீகா. ௪, எ.

எ ஏனென்றாற் கர்த்தர் சொல்லுகிறதாவது, யாக்கோபின்பேரிலே மகிழ்ச்சியாய்க் கெம்பீரித்துச் சாதிகளுடைய தலைவரினிமித்தமாக ஆர்ப்பரியுங்கள், சத்தத்தைக் கேட்கப்பண்ணித் துதித்துக் கர்த்தாவே, இஸ்ரவேலில் மீதியான உமது சத்தத்தையிரட்சியுமென்றுசொல்லுங்கள்.

அ இதோ நாம் அவர்களை * வடதேசத்திலிருந்துவரப்பண்ணி அவர்களைப் பூமியின் பக்கங்களிலிருந்து கூட்டிவருவோம், குருடருஞ் சப்பாணிகளுங் கர்ப்பவதிகளும் பிள்ளைத்தாய்ச்சிகளுங்கூட அவர்களிலிருப்பார்கள், மகா கூட்டமாக இவ்விடத்துக்குத் திரும்புவார்கள். * ௩, அதி. ௰அ.

௯ * அழுகையோடும் விண்ணப்பங்களோடும் வருவார்கள், அவர்களை வழிநடத்துவோம், அவர்களைத் தண்ணீர் நதிகளண்டைக்குத் தாங்களிடறாத செம்மையான வழியிலும் நடக்கப்பண்ணுவோம், ஏனெனில் இஸ்ரவேலுக்குத் தகப்பனாயிருக்கிறோம், எப்பிராயீம் † நம்முடைய தலைச்சன்பிள்ளையுமாயிருக்கிறான். * ௫௰, அதி. ௪. † உ. மோசே. ௪, உஉ.

௰ சாதிகளே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தையைக் கேட்டுத் தூரத்திலுள்ள தீவுகளில் அறிவித்து இஸ்ரவேலைச் சிதறடித்தவர் அதைச் சேர்த்துக்கொண்டு ஒரு மேய்ப்பன் தன் மந்தையைக் காக்கும் வண்ணமாக அதைக் காப்பாரென்று சொல்லுங்கள்.

௰க ஏனென்றாற் கர்த்தர் யாக்கோபை மீட்டு இவனையவனிலும் பலத்தவனுடைய கைக்கு நீங்கலாக்கிவிடுவிக்கிறார்.

* சங்கீதம். ௱௩௰, அ.

௰உ அவர்கள் வந்து சீயோனின் உயரத்திலே கெம்பீரித்துக் கோதுமையை திவிதிராட்சப்பழரசம் எண்ணெய் ஆட்டுக்குட்டிகள் கன்றுக்குட்டிகளென்றவைகளாகிய கர்த்தருடைய நன்மைக்கோடி வருவார்கள், அவர்களுடைய ஆத்துமா நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப்போலாகும், அவர்களினித் தொய்ந்துபோவதில்லை.

௰௩ * அப்போது கன்னியாஸ்திரிகளும் இளைஞரும் முதிர்ந்தவயதுள்ளவர்களுங்கூட ஆனந்தக்களிப்பாய் மகிழுவார்கள், ஏனெனில் நாம் அவர்கள் துக்கத்தைச் சந்தோஷமாக மாற்றி யவர்களைத் தேற்றரவுபண்ணி அவர்கள் சஞ்சலம் நீங்க அவர்களைச் சந்

தோஷிப்பிக்கப்படுவோம். * சங்கீதம். ௱௨௰,
அ. ௱௨, ௱௩.

௰௪ ஆசாரியர்களின் ஆத்துமாவைக் *
கொழுப்பினால் பூரிப்பாக்குவோம், நமது
சனம் நம்முடைய நன்மையினாலே திருத்தி
யாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
* சங்கீ. ௩௬, ௯.

௰௫ கர்த்தர் சொல்லுகிறதாவது இரா
மாவிற் * புலம்பலும் கசப்பான அழுகையு
மாகிய சத்தங்கேட்கப்படுகிறது இராகேல்
தன்பிள்ளைகளுக்காக அழுது தன்பிள்ளைக
ளில்லாதபடியால் அவைகளின் நிமித்தம் ஆறு
தல் அடைந்துகொள்ளாதிருக்கிறாளென்கி
றார். * மத்தே. ௨, ௰௮.

௰௬ கர்த்தர் சொல்லுகிறதாவது, நீயுன்
சத்தத்தை யழாதபடிக்கும் உன் கண்களைக்
கண்ணீர் விடாதபடிக்கும் அடக்கிக்கொள்,
ஏனெனில் உன் கிரியைக்குப் பலனுண்டெ
ன்று கர்த்தர் சொல்லுகிறார், அவர்கள் சத்து
ருவின் தேசத்திலிருந்து திரும்பி வருவார்கள்

௰௭ உன் பிற்காரியத்துக்காக நம்பிக்கை
யுண்டு, ஏனெனில் உன் பிள்ளைகள் தங்கள்
எல்லைக்குத் திரும்பி வருவார்களென்று கர்த்
தர் சொல்லுகிறார்.

௰௮ என்னைத் தண்டித்தீர், நான் பழக்கி
வைக்கப்படாத கன்றுக்குட்டியைப்போ
லே தண்டிக்கப்பட்டேன், * என்னைத் திரு
ப்பும் அப்போது திருப்பப்படுவேன். ஏனெ
னில் தேவரீரே என் பராபரனாகிய கர்த்தர்.
* புலம். ௫, ௨௧

௰௯ நான் திரும்பின பிற்பாடு தானே மன
ஸ்தாபப்பட்டிருக்கிறேன், நானென்னை
யறிந்துகொண்டதுக்குப் பிற்பாடு பக்கத்தி
ல் அடித்துக்கொண்டிருக்கிறேன், வெட்கி
நாணிக்கொண்டுமிருக்கிறேன் ஏனெனில் என்
இளவயதின் நிந்தையைச் சுமந்து வருகிறே
னென்று எப்பிராயீம் புலம்பிக்கொண்டிரு
க்கிறதைக் கேட்கவே கேட்டோம்.

௨௰ எப்பிராயீம் நமக்கருமையான குமா
ரனும் நாம் மனமகிழ்ச்சியுமாயிருக்கிற பிள்
ளையுமல்லவோ? ஏனெனில் நாம் அவனுக்கு
விரோதமாய்ப் பேசின பிற்பாடு * இன்னம்
அவனை நினைக்கவே நினைக்கிறோம், ஆகை
யால் நம்முடைய குடல்கள் அவனுக்காக
இரைகிறது அவனுக்கிரங்கவே யிரங்கு
வோமென்று கர்த்தர் சொல்லுகிறார்,
* சங்கீ. ௨௫. ௭, ௱௩, ௪.

௨௧ உனக்குக் குறிப்படையாளங்களை
நிறுத்து, உனக்குத் தூண்களை நாட்டு, நீ
நடந்த வழியாகிய பாதையின்பேரிலே உன்
மனதை வை, இஸ்ரவேலாகிய குமாரத்தி
யே! திரும்பு, இந்த உன்னுடைய பட்டண
ங்களுக்கே திரும்பு

௨௨ மாறுபாடாய்ப் போன குமாரத்
தியே எந்தமட்டும் விலகித்திரிவாய்! ஏனெ
னில் கர்த்தர் பூமியிலொரு புதுமையைச் சிரு
ஷ்டிப்பார், * ஸ்திரீ புருஷனைச் சூழ்ந்துகொ
ள்ளுவாள். * அதிவி. ௰௨, ௧. ௨.

௨௩ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனை
களையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, *
நாம் அவர்கள் சிறையிருப்பைத் திருப்பும்
போது அவர்கள் இன்னம் யூதாவின் தேசத்தி
லும் அதின் பட்டணங்களிலும் நீதியின் வா
சஸ்தலமே பரிசுத்த பருவதமே! கர்த்தர்
உன்னை ஆசீர்வதிக்கக்கடவாரென்ற வார்த்
தையைச் சொல்லுவார்கள்.
* உசு, அதி. ௰௪. ௬௰, அ. ௩௨, ௪௪.

௨௪ அதிலே யூதாவும் அதினுடைய எல்
லாப் பட்டணங்களின் மனுஷரும் பயிர்க்
குடிகளும் மந்தைகளோடே திரிகிறவ
ர்களும், ஏகமாய்க் குடியிருப்பார்கள்.

௨௫ ஏனெனில் * நாம் விடாய்த்த ஆத்
துமாவைச் சம்பூரணமடையப்பண்ணித்
தொய்ந்த எல்லா ஆத்துமாவையும் திருப்
புவோம். * மத்தே. ௰௧, ௨௮.

௨௬ இதற்காக விழித்துப்பார்த்துக்கொ
ண்டிருக்கிறோம், நம்முடைய நித்திரை நம
க்கின்பமாயிருந்தது.

௨௭ இதோ நாட்கள் வருமென்று கர்த்த
ர் சொல்லுகிறார், அப்போது இஸ்ரவேலின்
வீட்டையும் யூதாவின் வீட்டையும் மனுஷ
வித்தினாலும் மிருகவித்தினாலும் விதைப்பா
டாக்குவோம்.

௨௮ அப்போது சம்பவிப்பதேதென
றால் நாம் பிடுங்கவும் இடிக்கவும் நிர்மூலமா
க்கவும் அழிக்கவும் தீங்குசெய்யவும் அவர்
களைப் பேரிலே எப்படிச் சாக்கிரதைப்பட்
டிருந்தோமோ அப்படிக் கட்டவும் நாட்
டவும் அவர்கள் பேரிலே சாக்கிரதைப்பட்
டிருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௯ பிதாக்கள் திராட்சக்காய்களை
த்தின்றார்கள், பிள்ளைகளின் பல்லுக்கள் கூசி
ப்போயிற்றென்று அந்நாட்களில் அப்புற
ம் சொல்லார்கள். * புலம் ௫, ௭.
ஏசேக். ௰௮, ௨.

௩௰ அவனவன் தன்னுடைய அக்கிரமத்
தினிமித்தமே சாவான், எந்த மனுஷன் திரா
ட்சக் காய்களைத் தின்பானோ அவனு
டைய பல்லுகளே கூசிப்போகும்.

௩௧ * இதோ, நாட்கள் வருமென்று கர்
த்தர் சொல்லுகிறார், அப்போது இஸ்ரவே
லின் வீட்டோடும் யூதாவின் வீட்டோடும்
புது உடன்படிக்கையைப் பண்ணுவோம்.
* எபி. ௮, ௮

௩௨ நாம் அவர்கள் பிதாக்களை எகிப்து
தேசத்திலிருந்து அழைத்துவரக் கைப்
பிடித்த நாளிலே அவர்களோடே பண்ணின
உடன்படிக்கையின்படியோ அல்ல ஏனெனி
ல் அந்த நம்முடைய உடன்படிக்கையை
யவர்கள் முறித்துப்போட்டார்கள். நாமும்

அவர்களில் நம்முடைய அதிகாரத்தைக் காண்பித்தோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௩௩ இந்நாட்களுக்குப் பிற்பாடோவெனில், நாம இஸ்ரவேல்வீட்டோடே பண்ணப்போகிற உடன்படிக்கையாவது, நாம் நம்முடைய நியாயப்பிரமாணத்தை * யவர்கள உள்ளத்திலேகொடுத்து அதை யவர்களிருதயத்திலெழுதி† அவர்களுக்குப் பராபரனாயிருப்போம, அவர்கள நமக்குச்சனமாயிருப்பார்களென்றுகர்த்தர்சொல்லுகிறார். * எசா. ௫௪, ௰௩ † ௨௪, அதி. எ. ௩௰, அதி. ௨௨.

௩௪ இனிபொருவனுந்தனக்கடுத்தவனையும ஒருவனுந்தன்சகோதரனையும, கர்த்தரையறியென்றுபோதிப்பதில்லை ஏனென்றால் அவர்களிற் சிறியவனதுவக்கிப் பெரியவனமட்டும எல்லாரும நம்மையறிவார்களென்றுகர்த்தர்சொல்லுகிறார். ஏனென்றால் * நாம அவர்கள அக்கிரமத்தைமன்னித்து † அவர்களபாவங்களைப்பபுறம இனி நினையாதிருப்போம. * ௩௩, அதி. அமிகா எ, ௰௮. அப்போ. ௰, ௪௩. † எசா. ௪௩, ௨௫. எபே. ௩௩, ௰௬.

௩௫ * சூரியனைப் பகல்வெளிச்சமாகவுஞ் சந்திரனும நட்சத்திரங்களுமென்ற திட்டங்களையிராவெளிச்சமாகவுங்கட்டளையிட்டவருஞ் சமுத்திரத்தையதின அலைகள் கொந்தளிக்கத்தக்கதாய்க் குலுக்குகிறவருஞ்சேனைகளையுடையகர்த்தரென்றநாம்முள்ளவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது. * க. மோசே. ௧, ௰௬. ௰எ. சங்கீ. ௱௩௬, அ. ௯.

௩௬ * இந்தத்திட்டங்கள நமக்குமுன்பாக இல்லாதபடிக்கு விலகிப்போயிறருந்தால், அப்போது இஸ்ரவேலின வித்தும நமக்குமுன்பாக எல்லாநாட்களிலும ஒருசாதியாயிராதபடிக்குஒழிந்துபோமென்றுகர்த்தர்சொல்லுகிறார். * ௩௩, அதிகாரம. ௨௫.

௩௭ கர்த்தர்சொல்லுகிறதாவது, உயரவிருக்கிறவானங்கள அளக்கப்படவுந் தாழவிருக்கிறபூமியின அஸ்திபாரங்கள் ஆராயப்படவுங் கூடுமானால் நாமும இஸ்ரவேலின வித்தான அனைவரையும அவர்களசெய்ததெல்லாவற்றினிமித்தமும வெறுத்துப்போடுவோமென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௩௮ இதோ நாட்களவருமென்று கர்த்தர்சொல்லுகிறார், அப்போ இந்தப்பட்டணம அனமெயேலின கோபுரத்தைத்துவக்கிக் கோடிவாசல்மட்டுங் கர்த்தருக்குக்கட்டப்படும.

௩௯ அப்புறமும அளவுநூல் அதுக்கெதிராய்க் காரேபென்ற மேட்டினமேலே புறப்படுக் கோவாத் புறமாகச் சுற்றிப்போம்.

௪௰ பிரேதங்களைப்புதைக்கிறதுஞ் சாம்பலைக்கொட்டுகிறதுமான பள்ளத்தாக்கனைத்துங்கிதரோனவாய்க்காலுக்கிப்பாலேகிழக்கேயிருக்கிற குதிரைகளுடைய வாசலின கோடிமட்டுக்கும உண்டான சகலநிலங்களுங் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும. அப்புறம அது என்றென்றைக்கும பிடுங்கப்படுவதுமில்லை இடிக்கப்படுவதுமில்லையென்கிறார்.

## ௩௨. அதிகாரம்.

[யூதருடைய சிறையிருப்பைத் தொலையப்பண்ணுவோமென்றவாசகத்தைத்தைப் பராபரனதிடப்படுத்தினது.]

யூதாவின இராசாவாகிய சிதேக்கியா அரசாண்ட பத்தாமவருஷத்தில கர்த்தராலே எரேமியாவுக்குண்டானவார்த்தை, இது நேபுகாத்நேச்சார் அரசாண்ட பதினெட்டாமவருஷம. * ௨௫, அதி. க.

௨ அப்போது பாபேலுடைய இராசாவின சேனை யெருசலேமை முற்றிக்கைபோட்டிருந்தது, எரேமியாத்தீர்க்கதரிசியோவென்றால யூதாவுடைய இராசாவின வீட்டிலுள்ள காவற்சாலையின முற்றத்திலே யடைக்கப்பட்டிருந்தான.

௩ ஏனென்றால இதோ இந்தப்பட்டணத்தைப்பாபேலுடைய இராசாவினகையிலொப்புக்கொடுக்கிறேம, இவன அதைப்பிடிப்பானென்கிறதைக்கர்த்தர்சொல்லுகிறாரென்றும,

௪ யூதாவின இராசாவாகிய சிதேக்கியா கல்தேயருடையகைக்குத் தப்பிப்போகாமல் * பாபேலுடைய இராசாவினகையிலொப்புக்கொடுக்கவே ஒப்புக்கொடுக்கப்படுவான, அவனவாய இவனவாயோடே பேசி அவனகண்கள இவனகண்களைப்பார்க்கும. * ௩௪, அதி. ௩.

௫ இவன சிதேக்கியாவைப்பாபேலுக்குக்கொண்டுபோவான, நாம அவனைச்சந்திக்குமட்டும அங்கேயவனிருப்பான, நீங்கள கல்தேயரோடே யுத்தமபண்ணினாலும உங்களுக்கு வாய்ப்பதில்லையென்கிறதைக்கர்த்தர்சொல்லுகிறாரென்றும * நீ தீர்க்கதரிசனஞ்சொல்லுவானேனென்றுசொல்லி யூதாவின இராசாவாகியசிதேக்கியாவங்கே யடைத்துப்போடுவித்தான.

௬ அங்கேயிருக்கக்கொள்ள எரேமியா சொன்னதாவது கர்த்தருடையவார்த்தையெனக்குண்டாகி அவருரைத்ததேதெனில,

எ இதோ உனதகப்பனோடே கூடப்பிறந்த சல்லூமினகுமாரனாகிய அனமெயேல உன்னண்டைக்குவந்து ஆனதோத்திலிருக்கிற என்னுடைய நிலத்தை நீ வாங்கிக்கொள, ஏனென்றால அதைக்கொள்ள உன

கே மீட்குமநியாயம அடுததிருககிறதெனபானெனறுரைததார்.

௮ அபபடியெஎனதகபபனுடைய கூடப்பிறநதவனுடையகுமாரனாகிய அனாமேயேல கர்ததருடையவார்ததைககுச சரியாய்க் காவற்சாலையின முற்றததிலெனனணடைககுவநது பெனயமீனதேசதது ஆனதோததூரிலுளள எனனுடைய நிலததைநீ வாஙகிககொளளேன, சுதநதரநியாயம உனககுணடு, மீட்பு உனககடுததது அதைககொளளெனறான, இபபோதிது கர்த்தருடையவார்ததையெனறறிநதுகொணடேன.

௯ ஆகையாலெனதகபபனுடைய கூடப்பிறநதவனுடையகுமாரனாகியஅனாமேயேலினகையிலநான ஆனதோததிலிருககிற அவனுடைய நிலததைககொணடுவிலைககிரையமாகியபதினேழுசேககலிடைவெளளியையவனுககுநிறுததுககொடுததேன.

௰ நானகடிதாசியிலே கையெழுததையும் முததிரையையுமபோட்டுச சாட்சிகளைவைததுவெளளியைததிராசிலே நிறுததுககொடுததபிறபாடு,

௰௧ நானகட்டளைககுநதிட்டமுறைமைகளுககுமொததபடி முததிரைபோடடபபடடகிரையககடிதாசியையுந திறநதிருககிறபிரதியையுமஎடுதது,

௰௨ எனனினததாரானகனாமேயேலுடைய கணகளுககுமுனபாகவுங் கிரையககடிதாசியிறகையெழுததுபபோடட சாட்சிகளுடையகணகளுககுமுனபாகவுங் காவற்சாலையினமுறறததிலுளககார்நதிருநதஎலலா யூதருடைய கணகளுககுமுனபாகவும அதைமக்சேயாவினகுமாரனாகிய நேரியாவினுடையகுமாரனான பாருககுககுககொடுதது,

௰௩ அவர்களுடைய கணகளுககுமுனபாகப்பாருககுககுக் கற்பிததுசசொனனதாவது,

௰௪ இஸரவேலினபராபரனாகிய சேனைகளையுடையகர்ததருரைககிறதேதெனில நீ முததிரைபோடடபபடட இநதககிரையககடிதாசியுநதிறநதிருககிற இநதபபிரதியுமெனறகடிதாசிகளைவாஙகி அவைகளை அநேகமநாளிருககுமபடிககுஅவைகளையொருமண்பாணடததிலவை.

௰௫ ஏனெனில இனனம இநததேசததிலேவீடுகளும நிலஙகளுந திராட்சத்தோட்டஙகளுங கொளளபபடுமெனறு இஸரவேலினபராபரனாகியசேனைகளையுடைகர்ததருரைககிறாரென்றான.

௰௬ நானகிரையககடிதாசியை நேரியாவினகுமாரனாகிய பாருககுககுக்கொடுததபிற்பாடு நான கர்ததரைநோககிப்பணணினவிணணபபமாவது,

௰௭ ஆ கர்ததராகிய ஆணடவரே! இதோதேவரீர் உமமுடையபெரியபலததினாலும நீட்டபபடடவுமமுடைய புயததினாலுமவானஙகளையுமபூமியையும உணடாககினீர் * உமமாலேகூடாத அதிசயமானகாரியமொனறுமிலலை.

* ஆதகா. ௧, ௰௪.

௰௮ * ஆயிரஙகளானவைகளுககுகிருபைசெயகிறவரும பிதாககளுடைய அககிரமததையவர்களுககுபபினனிருககுமபினளைகளினமடியிலே சரிககட்டுகிறவருமாகியசேனைகளையுடையகர்ததரெனற நாமமுளளமகததுவானவரு சவுரியமுமான பராபரனே. * உ. மோசே. ௩௪, ௬. ௭.

௰௯ யோசனையிலேபெரியவருஙகிரியையிலே வலலமையுளளவருமாயிருககிறீர், * ஏனெனில † அவனவனுககுஅவனவனுடையவழிககுததககதாகவும அவனுடையகிரியைகளினகனிககுததககதாகவும அளிககுமபடிககு ‡ உமமுடையகணகள மனுஷபுததிரருடைய எலலாவழிகளினமேலுநதிறநதவைகளாயிருககிறது. * ஏசாயா. ௨௮, ௨௯. † ௰௭, ௰ ‡ ௰௬, ௰௭.

௨௰ இஸரவேலிலும மற்றமனுஷருககுளளும இநநாளவரைககும விளஙகுகிற அடையாளஙகளையும அற்புதஙகளையுநதேவரீர் எகிப்துத்தேசததிலேசெயது இநநாளில நீர்கீர்ததியையுமககுணடுபணணி,

௨௧ இஸரவேலாகிய உமது சனததை அடையாளஙகளினாலும அற்புதஙகளினாலும பலததகையினாலும நீட்டப்பபடடபுயததினாலும மகாபயஙகரததினாலும எகிப்துதேசததிலிருநதுபுறப்படப்பணணி,

௨௨ அவர்களுடையபிதாககளுககு நீர் கொடுபபோமெனறு ஆணையிட்டபாலுந்தேனும ஓடியதேசமாயிருககிற இநதத்தேசததையவர்களுக்குக்கொடுததீர்.

௨௩ அவர்கள அதுககுட்பிரவேசிதது அதைசசுதநதரிததுககொணடார்கள, ஆனால அவர்கள உமது சத்தத்துக்குச்செவிகொடாமலும உமது நியாயபபிரமாணததில நடவாமலுஞசெயய நீர் தஙகளுக்குக் கறபிததவைகளெலலாவறறையுஞ செயயாமலும போனார்கள, ஆனதுகொணடு இந்தத்தீமையெலலாம அவர்களுககு நேரிடபபணணினீர்.

௨௪ இதோ மண்கொததளஙகள போடடபபட்டிருககிறது, பட்டணததைபபிடிக்கவருகிறார்கள, பட்டயததினிமித்தமும பஞசததினிமித்தமும பெருவாரிககாய்ச்சலினிமித்தமும இநதப்பட்டணம அதுககு விரோதமாயுததமபணணுகிறகல்தேயரின கையிலேகொடுககபபடுகிறது, நீர்சொனனபடியுணடாகிறது, இதோ நீர் அதைப்பார்ககிறீர்.

௨௫ கர்த்தராகிய ஆண்டவரே, பட்டணம் கல்தேயரின் கையிலே கொடுக்கப்படுகிறதாயிருந்தும் தேவரீர் என்னுடனே நீ உனக்கு ஒரு நிலத்தை விலைக்கிரயமாய்க் கொண்டு அதற்குச் சாட்சிகளை வையென்று சொன்னீரென்றேன்.

௨௬ அப்போது கர்த்தருடைய வார்த்தை எரேமியாவுக்கு உண்டாகி அவருரைத்ததாவது,

௨௭ இதோ நாம் எல்லா மாம்சத்தினுடைய பராபரனாகிய கர்த்தர், நம்மாலே கூடாத அதிசயமான காரியமொன்றுண்டோ?

௨௮ ஆனதுகொண்டு கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ நாம் இந்தப் பட்டணத்தைக் கல்தேயரின் கையிலும் பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையிலும் ஒப்புக்கொடுக்கிறோம், இவன் அதைப் பிடிப்பான்.

௨௯ இந்தப் பட்டணத்துக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிற கல்தேயர் உள்ளே பிரவேசித்து இந்தப் பட்டணத்தை * அக்கினியாற் கொளுத்தி அதைச் சுட்டெரிப்பார்கள், அவர்கள் நமக்குக் கோபமுண்டாகத்தக்கதாக எந்த வீடுகளின் மேற் பாகாலுக்குத் தூபங்காட்டி அன்னிய தேவர்களுக்குப் பானபலிகளை வார்த்தார்களோ அந்த வீடுகளோடுங்கூட்டத்தானே. * ௰௯, அதி. ௰௩. ௨௧, அதி. ௰.

௩௰ ஏனெனில் இஸ்ரவேல் புத்திரரும் யூதா புத்திரரும் தங்கள் சிறுவயது துவக்கி நமது பார்வைக்குப் பொல்லாப்பானதையே செய்துவந்தார்கள், அதேதெனில் இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கைகளின் செய்கையினாலே நமக்குக் கோபத்தையே யுண்டாக்கிவந்தார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௧ ஏனென்றால் அவர்கள் இந்தப் பட்டணத்தைக் கட்டின நாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் அது நமக்குக் கோபமுண்டாகவும் நமக்கு உக்கிரமுண்டாகவும் நாம் அதை நமது முகத்தைவிட்டகற்றுகிறதற்கேதுவாகவுமிருந்தது.

௩௨ நமக்குக் கோபமுண்டாகும்படிக்கு இஸ்ரவேல் புத்திரரும் யூதா புத்திரரும் அவர்கள் இராசாக்களும் அவர்கள் பிரபுக்களும், அவர்கள் ஆசாரியர்களும் அவர்கள் தீர்க்கதரிசிகளும் யூதாவின் மனுஷரும் எருசலேமின் குடிகளுஞ் செய்த எல்லாப் பொல்லாப்பினிமித்தமுந்தானே.

௩௩ முகத்தையல்ல பிடரியை நமக்குக் காட்டினார்கள், நாம் ஏற்கெனவே அவர்களை யுபதேசிக்கவே யுபதேசித்தும் அவர்கள் புத்தியை யேற்றுக்கொள்ளாதே போனார்கள். * ௨, அதி. ௨௭. எசேக். ௨௩, ௩௫.

௩௪ அவர்கள் நம்முடைய நாமந் தரிப்பிக்கப்பட்ட வீட்டைத் தீட்டுப்படுத்தும்படிக்குத் தங்கள் அருவருப்புகளை அதிலே வைத்தார்கள். * ௭, அதி. ௩௰. ௨. இராசா. ௨௧, ௪. ௫.

௩௫ அவர்கள் * மோளோகுக்கென்று தங்கள் குமாரரையுந் தங்கள் குமாரத்திகளையுந் தீயைக் கடக்கப்பண்ணும்படிக்கு † இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்கிலிருக்கிற பாகாலின் மேடைகளைக் கட்டினார்கள், யூதாவைப் பாவஞ்செய்யப்பண்ணுவதற்கு அவர்களிந்த அருவருப்பான காரியத்தைச் செய்யவேணுமென்று நாம் அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை அது நம்முடைய மனதிலே தோன்றினதுமில்லை.

* ௩. மோசே. ௰௮, அதி. ௨௧.

† ௭, அதி. ௩௧. ௰௯, அதி. ௫.

௩௬ இப்போதுமிப்படியிருக்கக் கொள்ளைநோயினாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக் காய்ச்சலாலும் பாபேலுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்பட்டுப்போமென்று நீங்கள் சொல்லுகிற இந்தப் பட்டணத்தைக்குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதாவது,

௩௭ இதோ, நமது கோபத்திலும் நமது உக்கிரத்திலும் நமது மகாகடுமையிலும் நாம் அவர்களைத் துரத்தின எல்லாத் தேசங்களிலுமிருந்து * நாம் அவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களை இந்த ஸ்தலத்துக்குத் திரும்பிவரவும் அங்கே சுகமாய்த் தங்கவும்பண்ணுவோம். * ௨௩, அதி. ௩.

௨௯, அதி. ௰௪. ௩௧, அதி. ௰.

௩௮ * அவர்கள் நமக்குச் சனமாக இருப்பார்கள், நாம் அவர்களுக்குப் பராபரனுமாக இருப்போம். * ௨௪, அதி. ௭.

௩௰, அதி. ௨௨. ௩௧, அதி. ௧.

எசேக்கி. ௩௬, ௨௮.

௩௯ அவர்கள் தங்களுக்குந் தங்களுக்குப் பின்னாகவிருக்குந் தங்கள் பிள்ளைகளுக்கும் நன்மையாக நமக்குச் சகல நாட்களிலும் பயப்படும்படிக்கு நாம் அவர்களுக்கு ஒரே இருதயத்தையும் ஒரே வழியையுங் கட்டளையிட்டு,

௪௰ நாம் அவர்களுக்கு நன்மைசெய்யும்படிக்கு அவர்களை விட்டுப் பின்வாங்காத * நித்திய உடன்படிக்கையை அவர்களோடே பண்ணி அவர்கள் நம்மைவிட்டகன்று போகாதபடிக்கு நம்முடைய பயத்தை அவர்களிருதயத்திலே கொடுத்து,

எசாயா ௫௫, அதி. ௩.

௪௧ அவர்களுக்கு நன்மைசெய்ய அவர்கள் பேரிலே சந்தோஷமாயிருந்து அவர்களை இந்தத் தேசத்திலே உண்மையாய் நம்முடைய இருதயத்தாலும் நம்முடைய முழு ஆத்துமாவாலும் நாட்டுவோம்.

௪௨ ஏனெனிற்கர்த்தர்சொல்லுகிறதாவது, நாமிந்தச்சனத்தின்மேலே இந்தப்பெரிய தீங்கை எல்லாம்வரப்பண்ணினதுபோலே அவர்களைக்குறித்துச்சொன்ன நன்மையையெல்லாம் நாம அவர்கள்மேல் வரப்பண்ணுவோம.

௪௩ மனுஷனும்மிருகமுமில்லாதபடிக்குப்பாழாய்ப்போயிற்றென்றுங்கல்தேயரின்கையிலே ஒப்புக்கொடுக்கப்பட்டுப்போயிற்றென்றும நீங்கள்சொல்லுகிற இந்தத்தேசத்திலே நிலங்கள்கொள்ளப்படும.

௪௪ பென்யமீன்தேசத்திலும எருசலேமின்சுற்றுப்புறங்களிலும யூதாவின்பட்டணங்களிலும மலைசசீமையின பட்டணங்களிலும பள்ளத்தாக்குசசீமையின்பட்டணங்களிலுந தெற்குத்திப் பட்டணங்களிலும நிலங்கள விலைக்கிரயமாகக் கொள்ளப்படுவதுங கடிதாசிகளிற் கையெழுத்தும முத்திரையும போடப்படுவதும அதற்குச் சாட்சிகள வைக்கப்படுவதுமுண்டு, ஏனெனில் * அவர்களசிறையிருப்பைத திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறொனறுர். * ௩௰, அதி. ௩. ௩௩, அதி. ௭.

## ௩௩. அதிகாரம்.

[அப்பாலும யூதருடைய சிறையிருப்பின திருப்புதலையுங கிறிஸ்துவையுங்குறித்துப்பராபரனபண்ணின் வாக்குத்தத்தங்கள.]

எரேமியா இன்னங் காவற்சாலையின முற்றத்திலேயடைக்கப்பட்டிருக்கக்கொள்ளக் கர்த்தருடைய வார்த்தை யிரண்டாந்தரம அவனுக்குண்டாகி அவர் சொன்னதாவது, * ௩௨. அதி. ௨.

௨ அதைசசெய்கிற கர்த்தருமாய் அதைத்திடப்படுத்தும்படிக்கு அதையுருவேற்படுத்துகிற கர்த்தருமாய்க்கர்த்தரென்ற நாம முள்ளவருமானவர் சொல்லுகிறதேதெனில்,

௩ நம்மைநோக்கிக்கூப்பிடு, அப்போது நாமுனக்கு மறுவுத்தரவுகொடுத்து நீயறியாத பெரியவைகளும உனக்கெட்டாதவைகளுமாகிய காரியங்களை யுனக்கறிவிப்போம.

௪ அதேதெனில எதிர்க்கொத்தளங்களாகிறதுக்கும பட்டையத்துக்கெதிராகிறதுக்கும * இடிக்கப்பட்டவைகளாகியஇந்தப்பட்டணத்தின்வீடுகளையும யூதாவுடைய ராசாக்களின்வீடுகளையுங்குறித்து இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தர்சொல்லுகிறதாவது, * ஏசா. ௨௨, ௰.

௫ இந்தப்பட்டணத்தினுடைய எல்லாப்பொல்லாப்பினிமித்தமும நாம நம்முடையமுகத்தை மறைத்தபடியினாலே, அவர்கள அவைகளை நாம நம்முடைய கோபத்திலும உக்கிரத்திலும வெட்டுவிக்கிற மனுஷப்பிரேதங்களினாலே நிரப்பும்படியாகக்கல்தேயரோடே யுத்தம்பண்ணப்போகிறார்கள.

௬ இதோ, * நாம அவர்களுக்காரோக்கியமுங குணமும்வரப்பண்ணி அவர்களைக் குணமாக்கி அவர்களுக்குப் பரிபூரணமான சமாதானத்தையும உண்மையையும்வெளிப்படுத்துவோம. * ௩௰, அதி. ௭.

௭ * நாம யூதாவின்சிறையிருப்பையும இஸ்ரவேலின்சிறையிருப்பையுந திருப்பிமுந்தியதைப்போலே யவர்களைக்கட்டுவித்து, * ௨௪, ௰௪.

௮ * அவர்கள நமக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்த அவர்களுடைய எல்லாஅக்கிரமங்களுக்கும அவர்களை நீங்கலாக்கச் சுத்திகரித்து அவர்கள நமக்குவிரோதமாய்க் குற்றஞ்செய்துநமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணின அவர்களுடைய எல்லா அக்கிரமங்களையும மன்னிப்போம.
* ௩௧, அதி. ௩௪.

௯ நாம் அவர்களுக்குச செய்யும நன்மையை எல்லாங்கேட்கப்போகிற பூமியின எல்லாச்சாதிகளுக்குமுன்பாக அது நமக்கு மகிழ்ச்சியுள்ளகீர்த்தியாகவும்புகழ்ச்சியாகவும மகிமையாகவுமிருக்கும, நாம அவர்களுக்கருளிசசெய்யும எல்லாநன்மையினிமித்தமும்எல்லாச்சமாதானத்தினிமித்தமும இவர்கள திகைத்துத்திரிவார்கள.

௰ கர்த்தர் சொல்லுகிறதாவது, மனுஷனில்லாமலும மிருகமில்லாமலும அவாந்தரவெளியாய்க் கிடக்கிறதென்று நீங்கள சொல்லுகிற இவ்விடத்திலும்யூதாவின்பட்டணங்களிலும ஒருமனுஷனும்ஒருகுடியும ஒருமிருகமுமில்லாதபடியாகப் பாழான எருசலேமின்வீதிகளிலும,

௰௧ * இன்னங்களிப்பின்சத்தமும மகிழ்ச்சியின சத்தமும மணவாளனின்சத்தமும மணவாட்டியின சத்தமுஞ் சேனைகளையுடையகர்த்தரைத்துதியுங்கள, ஏனெனிற் கர்த்தர் நல்லவர், அவருடையகிருபையென்றுமுள்ளதென்றுசொல்பவர்களின சத்தமுங கர்த்தருடையவீட்டுக்குத்தோத்திரப்பலிகளைக்கொண்டு வருபவர்களின சத்தமுங் கேட்கப்படும. ஏனெனில அவர்கள முந்தியதைப்போலிருக்கும்படிக்குத்தேசத்தின சிறையிருப்பைத திருப்புவோமென்றுகர்த்தர்சொல்லுகிறார். * ௭, அதி. ௩௪.

௰௨ சேனைகளையுடையகர்த்தர்சொல்லுகிறதாவது, ஒருமனுஷனும ஒருமிருகமுமில்லாமல அவாந்தரவெளியாய்க் கிடக்கிற இவ்விடத்திலும இதற்கடுத்தபட்டணங்களிலும இன்னம ஆட்டுமந்தையைமேய்த்

துமடககுசிறமேய்ப்பரின தாபரஙகளுணடாயிருககும.

௰௩ மலைசீமையானபட்டணஙகளிலும பள்ளததாசசீமையான படடணஙகளிலுந தெறகுததிப்படடணஙகளிலும பென்யமீனசேததிலும எருசலேமினசுறறுப்புறஙகளிலுமயூதாவினபடடணஙகளிலுமஇனனம ஆடுமநதைகளையெணணிககொளளுகிறவனுடையகைகளைக் கடநதுவருமெனறு கர்த்தர்சொலலுகிறார்.

௰௪ இதோ நாட்களவருமெனறு கர்த்தர்சொலலுகிறார், அபபோது நாம இஸ்ரவேலினவீட்டுககும யூதாவினவீட்டுககுஞசொனன நலலவார்த்தையைநிருவாகமபணணுவோம.

௰௫ அநநாட்களிலும அககாலததிலுந * தாவீதுககு நீதியின முளையைமுளைககப்பணணுவோம, அவர்பூமியிலேநியாயததையும நீதியையுமநடபபிப்பார்.

* ௨௩, அதி. ௫. ௬. ஏசாயா. ௪, ௨. ௩௨, அதி. ௧. ௨.

௰௬ அநநாட்களில யூதா இரட்சிககப்படடு எருசலேஞசுககமாய்த்தஙகும, அவர் எஙகள நீதியாயிருககிறகர்த்தரெனறழைக்கப்படுவார்.

௰௭ ஏனெனறால * இஸ்ரவேலவீட்டினுடைய இராசாசனததினமேலுளககாரத்தககபுருஷன தாவீதுககிலலாமற்போவதிலலை * ௨. சாமு. ௭, ௰௬.

௰௮ தகனபெலியைசசெலுததிக்காணிக்கையின புகையைக்காட்டி நாளதோறும பெலியிடுமபுருஷன நமககுமுனபாக ஆசாரியர்களுக்குமலேவியருக்குமிலலாமற்போவதிலலையெனறு கர்த்தர்சொலலுகிறாரெனறார்.

௰௯ பினனையும எரேமியாவுககுக்கர்த்தருடையவார்த்தையுணடாகி அவருரைத்ததாவது,

௨௰ கர்த்தர்சொலலுகிறதேதெனிறகுறிததநேரஙகளிற்பகறகாலமும இராககாலமும உணடாகாதபடிககு நீஙகள பகற்காலததைககுறிதது நாம் பணணின திட்டததையும இராககாலததைககுறிதது நாம பணணின திடடததையும அவததமாககினால்,

௨௧ அபபோதுநமமுடையதாசனாகிய தாவீதோடே நாமபணணின வுடனபடிககையும அவன ஆசனததில அரசாளுங்குமாரன அவனுககிலலாதே போகுமபடியாக அவததமாம, நமமுடைய ஊழியககாரராகிய லேவியரோடும ஆசாரியர்களோடுமநாமபணணினவுடனபடிககையும அபபோது அவததமாம.

௨௨ வானஙகளின சேனையெணணப்படாததுமகடற்கரைமணல் அளககபபடாததுமாயிருககிறதுபோலே நாமநமமுடையதாசனாகிய தாவீதின விததையும நமககூழியஞசெயகிற லேவியரையுமவர்ததிக்கப்பணணுவோமெனறார்.

௨௩ பினனையும எரேமியாவுக்குக்கர்த்தருடைய வார்த்தையுணடாகி அவர்சொன்னதாவது,

௨௪ கர்த்தர்தெரிநதுகொணட இரணடு வம்சஙகளையுமவெறுததுபபோட்டாரெனறு இநதச்சனஞசொலலித்தங்களுககுமுனபாக நமதுசனம இனியொருசாதியல்லவெனகிறதாய் அதைத்தூஷணிககிறார்களெனகிறதை நீ கணடதிலலையோ?

௨௫ வானஙகளுககும பூமிககுமிருககிற திட்டஙகளைநாமவைககாதபடிககுப் பகற்காலததையும இராக்காலததையுங குறிதது நாமபணணினவுடனபடிககை யறறுபபோனால்,

௨௬ அபபோதுநாம் யாககோபினவிததையும நமமுடையதாசனாகிய தாவீதின விததையும ஆபிரகாம ஈசாக்கு யாககோபெனறவர்களின விததை யாளத்தககவர்களையதிலெடுக்காதபடிககு வெறுததுபபோடுவோம, ஏனெனறால * அவர்களுடைய சிறையிருப்பைபநாநதிருபபி அவர்களுககிரஙகுவோமெனறுகர்த்தர்சொலலுகிறாரெனறார். * ௩௨, அதி. ௪௪. எசேக். ௩௬, ௨௫. ஓசே. ௬, ௰௧. யோவா. ௩, ௬.

## ௩௪. அதிகாரம்.

[யூதசசாதியாகிய தஙகளவேலைக்காரருககு நியாயபபிரமாணததினபடியே விடுதலையைககூறுவோமெனறு உடன்படிககை பணணியுநதிருமபி யதைமீறின யூதருக்கு எருசலேமின அழிவு அறிவிககபபட்டது.]

பாபேலின இராசாவாகிய நேபுகாத்நேத்சாரும அவனுடைய எலலாசசேனையும அவனுடைய கையின ஆளுகைக்குக்கீழான பூமியினுடைய சகல இராசசியஙகளுஞ சகல சனசதளஙகளும எருசலேமுககுஞ சகலபடடணஙகளுககும விரோதமாக யுததமபணணககொளள எரேமியாவுக்குக்கர்த்தரால் உணடானவசனம்.

* ௨. இராசா. ௨௫, ௧. ௨.

௨ இஸ்ரவேலினபராபரனாகிய கர்த்தர் உரைககிறதாவது, நீபோய்யூதாவினஇராசாவாகியசிதேககியாவுடனேபேசி அவனுககுசசொலலவேணடியதேதெனிற் கர்த்தர் உரைககிறதாவது, இதோநாமிநதப்பட்டணததைப் பாபேலுடைய இராசாவின கையிலொபபுககொடுககிறோம, அவனதை யககினியாற்சுட்டெரிபபான.

௩ நீ அவனுடைய கைக்குத் தப்பிப் போகாமல் பிடிக்கவே பிடிக்கப்பட்டு அவனுடைய கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவாய் * உன் கண்கள் பாபேலுடைய இராசாவின் கண்களைப் பார்க்கும், அவன் வாய் உன் வாயோடே பேசும், நீ பாபேலுக்கும் போவாய். * ௩௨, ௪.

௪ ஆகிலும் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளும், உம்மைக் குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது, நீ பட்டயத்தாலே சாவதில்லை.

௫ சமாதானத்திலே சாவாய், உனக்கு முன்னிருந்த முந்தின இராசாக்களாகிய உன் பிதாக்களினிமித்தமாகக் * கந்தவர்க்கங்களைக் கொளுத்தினது போலே உன்னிமித்தமுங் கொளுத்தி ஐயோ ஆண்டவனே யென்று உனக்காகப் புலம்புவார்கள், ஏனென்றால் இதை நானே சொன்ன வார்த்தை யென்று கர்த்தர் உரைத்தாரென்று சொல்லென்றார்.
* ௨. நாளாக. ௰௬, ௰௪.

௬ இந்த வார்த்தைகளையெல்லாந் தீர்க்கதரிசியாகிய எரேமியா எருசலேமிலே யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவோடே சொன்னான்.

௭ அப்போது பாபேலுடைய இராசாவின் சேனை எருசலேமுக்கு விரோதமாகவும், யூதாவினுடைய எல்லாப் பட்டணங்களிலும் மீந்த பட்டணங்களாகிய லாகீசுக்கு விரோதமாகவும் அசேக்காவுக்கு விரோதமாகவும் யுத்தம் பண்ணிக்கொண்டிருந்தார்கள், ஏனென்றால் அரணிப்பான பட்டணங்களாகிய இவைகளே யூதாவின் பட்டணங்களில் மீந்திருந்தது.

௮ ஒருவனும் யூதச்சாதியாகிய தன் சகோதரர்களையடிமை கொள்ளாதபடிக்கு * அவனவன் எபிரேயனாகிய தன் வேலைக்காரனையும் எபிரேயசாதியாகிய தன் வேலைக்காரியையுந் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்று அவர்களுக்கு விடுதலையைக் கூற, * ௨. மோசே. ௨௧. ௨. ௩. மோசே. ௨௫, ௩௯—௪௬.
௫ மோ. ௰௫, ௰௨.

௯ இராசாவாகிய சிதேக்கியா எருசலேமிலிருக்கிற எல்லாச் சனத்தோடும் உடன்படிக்கை பண்ணின பிற்பாடு எரேமியாவுக்குக் கர்த்தராலே வார்த்தையுண்டானது.

௰ ஏனென்றால் அவனவன் தன் வேலைக்காரனையுந் தன் வேலைக்காரியையும் இனி அடிமை கொள்ளாதபடிக்குத் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்ற உடன்படிக்கைக்குட்பட்ட எல்லாப் பிரபுக்களும் எல்லாச் சனமுஞ் செவிகொடுத்தார்கள், செவிகொடுத்து அவர்களை அனுப்பிவிட்டார்கள்.

௰௧ ஆனால் அதற்குப் பிறகு அவர்கள் மாறுதட்டம் பண்ணித் தாங்கள் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிட்ட வேலைக்காரரையும் வேலைக்காரிகளையுந் திரும்ப அழைத்துவந்து அவர்களை வேலைக்காரரும் வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டார்கள்.

௰௨ ஆனதுகொண்டு கர்த்தராலே எரேமியாவுக்கு வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது.

௰௩ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதெனில், * ஏழு வருஷங்களின் முடிவிலே நீங்கள் அவனவன் தனக்கு விற்கப்பட்ட எபிரேயசாதியாகிய தன் சகோதரனை அனுப்பிவிடுவார்களாகவென்றும், அவன் உனக்கு ஆறு வருஷம் அடிமையான பிற்பாடு அவனையுன்னிடத்தில் வைக்காமல் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடென்றும்,
* ௨. மோசே. ௨௧, ௨. ௫. மோசே. ௰௫, ௰௨.

௰௪ நாமுங்கள் பிதாக்களைச் சிறைச்சாலையாகிய எகிப்துத்தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாளிலே யவர்களோடே உடன்படிக்கை பண்ணினோம், ஆனால் உங்கள் பிதாக்கள் நம்முடைய சொல்லைக் கேளாமலுந் தங்கள் செவியைச் சாய்க்காமலும் போனார்கள்.

௰௫ நீங்களோவெனில் இந்நாளிலே மனந்திரும்பி அவனவன் தனக்கடுத்தவனுக்கு விடுதலையைக் கூறி எதிலே நம்முடைய பார்வைக்குச் செம்மையாயிருக்கிறதைச் செய்து நமது நாமந் தரிப்பிக்கப்பட்ட வீட்டிலே யிதற்காக நம்முடைய முகத்துக்கு முன்பாக உடன்படிக்கையைப் பண்ணியிருந்தீர்கள்.

௰௬ ஆனால் நீங்கள் மாறுதட்டம் பண்ணி நமது நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி நீங்கள் அவனவன் விடுதலையாகவுந் தன்னிச்சைக்காரராகவும் அனுப்பிவிட்ட தன் வேலைக்காரனையுந் தன் வேலைக்காரியையுந் திரும்ப அழைத்துவந்து அவர்களை உங்களுக்கு வேலைக்காரரும் வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டீர்கள்.

௰௭ ஆகையாலே கர்த்தர் சொல்லுகிறதாவது, நீங்கள் அவனவன் தன் சகோதரனுக்கும் அவனவன் தனக்கடுத்தவனுக்கும் விடுதலையைக் கூற நம்முடைய சொல்லைக் கேளாமற்போனீர்களே, இதோ நாமுங்களைப் பட்டயத்துக்கும் பெருவாரிக்காய்ச்சலுக்கும் பஞ்சத்துக்கும் விடுகிற விடுதலையை யுங்களுக்குக் கூறுகிறோம், பூமியின் இராச்சியங்களிலெல்லாம் அலைகிறதுக்கும் உங்களை யொப்புக்கொடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮ நமக்கு முன்பாகப் பண்ணின உடன்படிக்கையின் வார்த்தைகளை நிறைவேற்றாமல்

பண்ணமல் நம்முடைய உடன்படிக்கையைமீறின மனுஷரை நாம் சாவுகளிரண்டாகஅறுத்துத் * துண்டுகளின் நடுவாகக்கடந்துபோன கன்றுக்குட்டியைப்போலாக்குவோம். * க. மோசே. ௰, ௰. ௰௭.

௰௯ கன்றுக்குட்டியினுடைய துண்டுகளின் நடுவேகடந்துபோன யூதாவின் பிரபுக்களையும் எருசலேமின் பிரபுக்களையும் பிரதானிகளையும் ஆசாரியர்களையும் தேசத்தின் சகலசனங்களையும் நான்.

௨௰ நாம் அவர்களை யவர்கள் சத்துருக்களின்கையிலும் அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின்கையிலும் ஒப்புக்கொடுப்போம்.* அவர்களுடைய பிரேதம் ஆகாசத்தின்பறவைகளுக்கும் பூமியின் மிருகங்களுக்கும் இரையாம். * ௭. ௩௩. ௬, அதி ௨௨.

௨௧ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவையும் அவனுடைய பிரபுக்களையும் அவர்கள் சத்துருக்கள் கையிலும் அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின் கையிலும்* உங்களைவிட்டுப் போகும்போன பாபேலுடைய இராசாவினுடைய சேனையின் கையிலும் ஒப்புக்கொடுப்போம். * ௩௭, அதி. ௫.

௨௨ இதோ நாங்கட்டளைகொடுத்து அவர்களை * இந்தப்பட்டணத்துக்குத் திருமப்பண்ணுவோம், அவர்கள் அதுக்குவிரோதமாகயுத்தம்பண்ணி அதைப்பிடித்து அதை யக்கினியாற் சுட்டெரிப்பார்கள், யூதாவின் பட்டணங்களையோ ஒருவரும் அவைகளிற்குடியிராதபடியாகப் பாழாக்கிப்போகப்பண்ணுவோமென்று கர்த்தருரைக்கிறாரென்றுசொல்லென்றார். * ௩௭, அதி. ௮.

## ௩௫. அதிகாரம்.

[தங்கள் தகப்பனுடைய கற்பனையின்படி செய்த இரேகாபியருடைய கீழ்ப்படிதலைப் பராபரனுக்குக் கீழ்ப்படியாத யூதருக்குக்காண்பித்தது.]

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவினுடைய இராசாவின் நாட்களில் எரேமியாவுக்குக் கர்த்தரால் உண்டானவார்த்தையாவது,

௨ நீ இரேகாபியருடைய வீட்டுக்குப்போய் அவர்களோடே பேசி அவர்களைக் கர்த்தருடைய வீட்டின் அறைகளிலொன்றிலே யழைத்துப்போய் அவர்களுக்குத் திவிதிராட்சப்பழரசங்குடிக்கக்கொடுவென்றார்.

௩ அப்போது நான் கபத்சினியாவின் குமாரனாகிய எரேமியாவுக்கு மகனான யாசனியாவையும் அவனுடைய சகோதரரையும் அவனுடைய எல்லாக் குமாரரையும் இரேகாபியருடைய வீட்டாரனைவரையும் அழைத்து,

௪ கர்த்தருடைய வீட்டிலே பிரபுக்களுடைய அறையின் அருகேயும் வாசலைக்காக்கிற சல்லூமின் குமாரனாகிய மாசேயாவினுடைய அறையின்மேலுள்ள இக்தலியாவின் குமாரனாகிய ஆனானென்ற பராபரனுடைய மனுஷனுடைய புத்திரரின் அறையிலேயவர்களைக் கூட்டிக்கொண்டுபோய்,

௫ திவிதிராட்சப்பழரசத்தினால் நிறையப்பட்ட கரகங்களையும் பாத்திரங்களையும் இரேகாபியருடைய வீட்டுப்புத்திரரின் முன்னேவைத்து அவர்களுடனே திவிதிராட்சப்பழரசங்குடியுங்களென்றேன்.

௬ ஆனால் அவர்கள் சொன்னதாவது, நாங்கள் திவிதிராட்சப்பழரசங் குடிக்கிறதில்லை, ஏனென்றால் நீங்கள் பரதேசிகளாய்த் தங்குகிறசீமையில் நீடிப்பாயிருக்கும்படிக்கு,

௭ நீங்களும் உங்கள் பிள்ளைகளுமென்றென்றைக்குந் திவிதிராட்சப்பழரசங் குடியாமலும் வீட்டைக்கட்டாமலும் விதையை விதைக்காமலுந் திவிதிராட்சத்தோட்டத்தை நாட்டாமலும் கையாளாமலும் உங்களுடைய எல்லா நாட்களிலுங் கூடாரங்களில் குடியிருப்பீர்களாகவென்று இரேகாபின் குமாரனாகிய எங்களுடைய தகப்பனாகிய யோனதாப் எங்களுக்குக் கற்பித்தார்.

௮ அப்படியே எங்களுடைய எல்லா நாட்களிலும் நாங்களும் எங்கள் பெண்சாதிகளும் எங்கள் குமாரரும் எங்கள் குமாரத்திகளுந் திவிதிராட்சப்பழரசங்குடியாமலும்,

௯ நாங்கள் குடியிருக்கிற வீடுகளைக்கட்டாதபடிக்கு இரேகாபின் குமாரனாகிய எங்களுடைய தகப்பனாகிய யோனதாபின் சத்தத்துக்குக் கீழ்ப்படிந்திருக்கிறோம், எங்களுக்குத் திவிதிராட்சத்தோட்டமும் வயலும் விதைப்பாடுமில்லை.

௰ நாங்கள் கூடாரங்களிற் குடியிருந்து எங்கள் தகப்பனாகிய யோனதாப் எங்களுக்குக் கற்பித்தபடியெல்லாங் கீழ்ப்படிந்து செய்துவந்தோம்.

௧௧ ஆனால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தேசத்திலே வந்தேறினபோது நாம் கல்தேயருடைய இராணுவத்துக்கும் சீரியருடைய இராணுவத்துக்கும் தப்ப எருசலேமுக்குப்போவோம், வாருங்களென்றுசொன்னோம், அப்படியே எருசலேமிலே தரித்திருக்கிறோமென்றார்கள்.

௧௨ அப்போது கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது.

௧௩ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தருரைக்கிறதேதென்றால், நீ போய் யூதாவின் மனுஷருக்கும் எருசலேமின் குடிகளுக்குஞ் சொல்லவேண்டியதாவது, நீங்கள் நமது வார்த்தைகளைக்கே

ட்குமபடிககுப புததியை யேற்றுககொள்ள வதில்லையோவென்று கர்த்தர்கேட்கிறுர்.

௰௪ ரிவிகிராட்சப்பழரசங குடியாததப டிககு இரேகாபினகுமாரனுகிய யோனதா ப்புதன் பிளளைகளுககுககற்பிததவார்த்தை கள் நிருவாகமபண்ணப்படடுவருகிறது, அவர்கள இந்நாளமட்டுககும அதைககு டியாமல் தங்கள்தகப்பனுடைய கறபனை ககுககீழ்ப்படிகிறுர்கள், ஆனால்* நாமுஙக ளுககு ஏற்கெனவே சொலலிககொணடே யிருந்தும், நமககுக கீழபபடியாதேபோ னீர்கள். * உ௫, அதி. ௩. ௩௨, அதி. ௩௩.

௰௫ * நீஙகள அவனவனதனபொலலாத வழியைவிடடுததிருமபி உஙகளகிரியைகளை சசீர்படுததி அனனியதேவர்களைசசேவிகக மபடிககுபபின்றெடராதிருஙகள, அபபோ து நாமுஙகளுககும உஙகளபிதாககளுககு ங்கொடுததததேசததிலேகுடியிருபபீர்களெ னறுசொலலித் திர்ககதரிசிகளாகிய நமமு டைய ஊழியககாரரையெலலாம நாமுஙக ளணடைககு ஏற்கனவே அனுபபிககொ ணடிருநதும, † நீஙகள உஙகளசெவியை ச்சாய்ககாமலும நமககுக் கீழபபடியாம லும்போனீர்கள. * ௰௮, அதி. ௰௧. † எ, அதி. உ௬.

௰௬ இபபோதும இரேகாபின குமாரனு கியயோனதாபின பிளளைகள தஙகள தகபப ன தஙகளுககுககறபிததகற்பனையை நிரு வாகம பணணிவநதபடியினுலும இநதச சனம நமககுக கீழபபடியாமற்போனபடி யினுலும,

௰௭ இஸ்ரவேலினபராபரனுஞ்சேனைக ளையுடைய பராபரனுமாகிய கர்ததர்சொ லலுகிறதாவது, இதோ * நாம அவர்களுட னேசொலலியும அவர்களகேளாமலும நா ம அவர்களைநோககிககூபபிடடும அவர்கள மறுவுததரவு கொடாமலும போனபடியி னுலே யூதாவினமேலும எருசலேமினகுடி களெலலாரினமேலும நாம அவர்களுககு விரோதமாகசசொனன எல்லாததிஙகையு ம வரபபணணுவோமெனறு சொலலென ருர். * எ, அதி. ௰௩. ௰௪. ஏசாயா. ௬௫, ௰௨. ௬௬, ௪.

௰௮ இரேகாபியருடைய வீட்டாருக கோவெனறுல எரேமியாசொனனதாவது, இஸ்ரவேலின பராபரனுகிய சேனைகளையு டையகர்ததர்சொலலுகிறதேதெனில நீங களஉஙகளதகபபனுகிய யோனதாபினகற் பனைககுககீழபபடிநது அவனுடையகற்ப னைகளையெலலாங கைககொணடு அவனுங களுககுக் கற்பிததபடியெலலாஞ் செய்து வநதபடியினுலே,

௰௯ சகலநாட்களிலும * நமககு முன பாகதிற்கததகக புருஷன இரேகாபினகு மாரனுகிய யோனதாபுககிலலாமற்போவ திலலையென்று இஸ்ரவேலின பராபரனு கியசேனைகளையுடைய கர்த்தர் சொலலுகி ருரென்றுன. * ௩௩, ௰௭.

## ௩௬. அதிகாரம்.

[எரேமியாவினபிரசஙகஙகள எழுதியிருந த புஸ்தகச்சுருள சுடடெரிக்கபபடட தும, அவைகளதிருமபவேறெருபுஸ்தக ததில எழுதபபடடதும.]

யோசியாவினகுமாரனுகிய யோயா கீம என்ற யூதாவுடைய இராசாவின * நாலாமவருஷததிற்சமபவித்ததேதெனறு ல், கர்த்தராலே எரேமியாவுககுணடான வார்த்தையாவது, * உ௫, அதி. ௧.

௨ நீயுனககொரு புஸ்தகச்சுருளைவாங கி நாம யோசியாவின நாட்களிலே உன னுடனே பேசினநாளமுதற்கொணடு இந நாளமட்டும இஸ்ரவேலைககுறிததும யூதா வைககுறிததுஞ் சகலசாதிகளைககுறிததும உனனேடேசொனன எலலா வார்த்தைக ளையும அதிலேயெழுது.

௩ * ஒருவேளை யூதாவினவீட்டார் அவ ரவர் தஙகள பொலலாதவழியை விடடுததி ருமபுமபடியாகவும நானதஙகள அககிர மததையும மனனிககுமபடியாகவுந தஙக ளுககுநானுசெயய நினைததிருககிற தீஙகை யெலலாங கேட்பார்களெனறுர். * உ௬, அதி. ௩.

௪ அபபோது எரேமியா நேரியாவின குமாரனுகிய * பாருக்கை அழைததான, இநதபபாருக்குஎனகிறவன கர்த்தர் எரே மியாவுடனே சொலலிவநத எலலாவார்த் தைகளையும அவனவாயசொலல ஒருபுஸ்த கச்சுருளில்எழுதினுன. * ௩௨, அதி. ௰௨.

௫ பிறபாடுஎரேமியாபாருக்குககுக கற பிததுசசொனனதாவது, நானஅடைக்கப படடவன நானகர்ததருடையவீடடுககுட் பிரவேசிக்கக்கூடாது.

௬ நீயுள்ளேபிரவேசிததுஎனவாயசொல லநீயெழுதினசுருளிலே கர்ததருடைய வீட் டில உபவாசநாளிலே கர்ததருடைய வார் த்தைகளைசசனஙகள கேட்கவாசி, தஙகள பட்டணஙகளிலிருநதுவருகிறவெலலாயூதா ககோததிரததாருஙகேட்க அவைகளைவா சிபபாயாக.

௭ ஒருவேளைகர்ததருடைய முகததுககு முனபாக அவர்கள பணிநது விணணபபம பணணி அவரவர்தஙகளபொலலா வழியை விடடுததிருமபுவார்கள, ஏனெனில கர்ததர் இநதசசனததுககுவிரோதமாகசசொனன கோபமும உககிரமும பெரியதெனறுன.

௮ அபபடியே நேரியாவின குமாரனு கிய பாருககு அநதபபுஸ்தகததிற் கர்தத ருடைய வீடடிலேகர்ததருடையவார்த்தை

களை வாசிககுமபடிககு, எரேமியாத்தீர்ககதரிசி தனககுக கறபிததபடியெலலாஞசெயதான.

௯ யோசியாவின குமாரனாகிய யோயாககீமெனற யூதாவினுடைய இராசாவின ஐநதாம வருஷத்து ஒனபதாம மாத்ததிலே சமபவித்ததேதெனில எருசலேமிலிருககிற எலலாச்சனததுககும யூதாவுடைய பட்டணஙகளிலிருநதுஎருசலேமுககுவருகிற எலலாச்சனததுககுங கர்த்தருககுமுனபாக ஒரு உபவாசததைககூறினார்கள.

௰ அபபொழுது பாரூக்குகர்த்தருடைய வீட்டினமேல முற்றததிற கர்த்தருடையவீட்டுபபுதுவாசலின நடைககருகான் சாப்பானுடைய குமாரனாகிய கேமவியாவெனனசமபிரதியின அறையிலேஅநதபபுஸ்தகத்தில எரேமியாவினவார்த்தைகளையெலலாச சனமுஙகேட்கவாசித்தான.

௰௧ சாபபானுடையகுமாரனாகிய கேமவியாவின மகனமிகாயா கர்த்தருடையவார்த்தைகளையெலலாம அநதபபுஸ்தகததில வாசிக்கக்கேட்குமபோது,

௰௨ அவனஇராசாவினவீட்டுககுசசமபிரதியின அறையிலிறஙகிபபோனான, இதோ அஙகேயெலலாப்பிரபுககளும உடகார்ந்திருநதார்கள, சமபிரதியாகிய எலிசாமாவுஞ சேமாயாவின குமாரனாகிய தெலாயாவும அக்போரின குமாரனாகியஎல்நாத்தானுஞ சாபபானின குமாரனாகிய கேமவியாவும அனனியாவின குமாரனாகிய சிதேககியாவும மறறஎலலாபபிரபுககளுநதானே.

௰௩ பாரூக்கு சனத்தின செவிகளிற்பபுஸ்தகத்திலே வாசிக்கக்கொளளத் தான கேட்ட எல்லா வார்த்தைகளையும மிகாயா அவர்களுககறிவித்தான்.

௰௪ அபபோது எலலாபபிரபுககளுஙகூசியினகுமாரனாகிய செலேமியாவினமகனானநெததானியாவினுடையகுமாரனாயிருககிற ஏகூதியைப் பாரூககு அணடைககனுபபிச சனஙகேட்க நீ வாசிததுககொணடிருநத சுருளையுனகையிலெடுததுககொணடுவாவெனறுசொலலச்சொனனார்கள. ஆகையால நேரியாவின குமாரனாகிய பாரூககு சுருளைத் தனகையிலெடுததுககொணடுஅவர்களணடைககுவநதான.

௰௫ அவர்கள அவனுடனே, நீயுடகார்நதுகொணடு நாங்கள கேட்க வாசியெனறார்கள, அவர்களகேட்கவாசித்தான.

௰௬ அபபோது சமபவித்ததேதெனறால, அவர்கள எலலா வார்த்தைகளையுஙகேட்கையிலஒருவரையொருவர் பயமுற்றவர்களாய்ப்பார்த்துப் பாரூககுடனே இநதஎலலாவார்த்தைகளையும இராசாவுககறிவிககவேயறிவிபபோமெனறார்கள.

௰௭ நீயவர் வாயசொல்ல இநத வார்த்தைகளையெலலாம எநதபபிரகாரமாய் எழுதினாயெனகிறதை யெஙகளுககறிவியெனறு பாரூககைக்கேட்டார்கள.

௰௮ பாரூககு அவர்களுடனே தமதுவாயினாலே யிநத எலலா வார்த்தைகளையும உரைததுஎனனுடனேசொனனார் நானமையினாலே புஸ்தகததிலெழுதினேனெனறான.

௰௯ பிரபுககளபாரூககுடனே, நீபோய ஒளிததுககொளநீயுமஎரேமியாவுநதானே நீஙகளெஙகேயிருககிறீர்களெனறு ஒருவருமஅறியாதிருபபதாகவெனறுசொலலி,

௨௰ சுருளைசசமபிரதியாகியஎலிசாமாவின அறையிலேவைதது இராசாவணடைககு அரணமனையிலேபோய இராசாவினசெவிகளுககிநதவார்த்தைகளையெலலாம அறிவிததார்கள.

௨௧ அபபோது இராசாஅநதச்சுருளை யெடுததுககொணடுவர ஏகூதியையனுபபினான, ஏகூதியதைச சமபிரதியாகிய எலிசாமாவின அறையிலிருநது எடுததுககொணடுவநது இராசாகேட்கவும இராசாவணடையில நினற எல்லாபபிரபுககளுஙகேட்கவுமவாசித்தான.

௨௨ ஒனபதாமாதமாகிய அபபோது இராசாகுளிர்காலததுககிருககும வீட்டில உடகார்நதிருநதான, அவனுககு முனபாகக்கணபபெரிகிறதாயிருநதது.

௨௩ சமபவித்ததேதெனறால, ஏகூதி மூனறு நாலுபததிகளைவாசிததபிறபாடு அவனொருகணககன கததியினால அதையறுததுசசுருள்ளைததுஙகணபபிலுளள அககினியினாலே வெநதுதீருமளவுங கணபயிலிருநத அககினியில எறிநதுபோட்டான.

௨௪ இராசாவாகிலும அநதவார்த்தைகளையெலலாஙகேட்ட அவனுடைய சகல ஊழியககாரராகிலும பயபபட்டதுமிலலை தஙகளவஸ்திரஙகளைககிழித்ததுமிலலை.

௨௫ எல்நாததானுந தெலாயாவுங கேமவியாவுமோவெனில அநதச்சுருளைசசுட்டெரிககாதபடிககு இராசாவுககு விணணபபமபணணினார்கள, ஆகிலும அவர்களுககுககேள்விகொடாமல,

௨௬ பாரூககுஎனறகணககனையுமஎரேமியாத்தீர்ககதரிசியையும பிடிககுமபடிககுஇராசாவும மேலேகினகுமாரனாகிய யெராமெயேலுககும அஸ்ரியேலினகுமாரனாகியசெராயாவுககும அட்தேயேலினகுமாரனாகிய சேலேமியாவுககுங கட்டளைகொடுததான, ஆனாற்கர்த்தரவர்களைமறைததார்.

௨௭ இராசாஅநதசசுருளையும அதிலே பாரூககு எரேமியாவின வாய்சொல்ல எழுதியிருநத வார்த்தைகளையுஞ சுட்டெரிதத பிற்பாடு எரேமியாவுககுக கர்த்தருடைய வார்த்தையுணடாய்அவர்சொனனதாவது,

௨௮ நீ திரும்ப வேறொரு சுருளை உனக்கு வாங்கி யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் சுட்டெரித்த முதலாஞ் சுருளிலிருந்த முந்தின வார்த்தைகளையெல்லாம் அதிலே யெழுது.

௨௯ யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமுக்கோ நீ சொல்லவேண்டியதாவது, கர்த்தருரைக்கிறதேதென்றால் பாபேலின் இராசா வந்தே வருவானென்கிறதையும் அவன் இந்தத் தேசத்தையழித்து அதிலிருந்து மனுஷரையும் மிருகங்களையும் ஒழியப்பண்ணுவானென்கிறதையும் நீ அதில் எழுதினதேதென்று சொல்லி அந்தச் சுருளை நீ சுட்டெரித்தாய்.

௩௰ ஆகையால் யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிறதாவது தாவீதுடைய இராசாசனத்தின் மேல் உட்கார்ந்திருப்பவன் அவனுக்கில்லை, * அவனுடைய பிரேதமோ வென்றால் பகலின் உஷ்ணத்துக்கும் இராவின் குளிருக்கும் ஏதுவாக எறிந்துவிடப்பட்டுக் கிடக்கும்.

* ௨௨, அதி. ௰௯.

௩௰௧ நாம் அவனிடத்திலும் அவனுடைய வித்தினிடத்திலும் அவனுடைய பிரபுக்களிடத்திலும் அவர்கள் அக்கிரமத்தை விசாரித்து அவன் மேலும் எருசலேமுடைய குடிகளின் மேலும் யூதாவுடைய மனுஷர் மேலும் நாம் அவர்களுக்குச் சொன்னதும் அவர்கள் கேளாதே போனதுமான * தீங்கனைத்தையும் வரப்பண்ணுவோம் என்று உரைத்தாரென்று சொல்லென்றார்.

* ௩௫, அதி. ௰௭,

௩௰௨ அப்போது எரேமியா வேறொரு சுருளை வாங்கி அதை நேரியாவின் குமாரனாகிய பாருக்கு என்கிற கணக்கனுக்குக் கொடுத்தான், இவன் யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் அக்கினியாற் சுட்டெரித்த புஸ்தகத்தின் வார்த்தைகளையெல்லாம் அதிலே எரேமியாவின் வாய்சொல்ல எழுதினான், இன்னம் அவைகளுக்கொத்த அநேக வார்த்தைகளும் அவைகளோடே சேர்க்கப்பட்டது.

## ௩௭. அதிகாரம்.

[எரேமியா காவலில் அடைக்கப்பட்டது.]

பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் யோயாக்கீமுடைய குமாரனாகிய கோனியாவின் பட்டணத்தில் யூதாதேசத்தில் இராசாவாக வைத்த யோசியாவின் குமாரனாகிய சிதேக்கியா அரசாண்டான்.

௨ ஆனாற் கர்த்தர் எரேமியாத் தீர்க்கதரிசியைக்கொண்டு சொன்ன வார்த்தைகளை அவனாகிலும் அவனுடைய ஊழியக்காரராகிலும் தேசத்தின் சனமாகிலுங் கேட்டதில்லை.

௩ * சிதேக்கியா இராசாவோவென்றால் செலேமியாவின் குமாரனாகிய யூகாலையும் மாசேயாவின் குமாரனாகிய செப்பனியாவென்ற ஆசாரியனையும் எரேமியாத் தீர்க்கதரிசியண்டைக்கனுப்பி, நீ நம்முடைய பராபரனாகிய கர்த்தரை நோக்கி யெங்களுக்காக விண்ணப்பம் பண்ணென்று சொல்லச்சொன்னான். * ௫௨, அதி. ௨௰. ௩.

௪ அப்போது எரேமியா சனத்தின் நடுவே வரத்துப் போக்குமாயிருந்தான், அவனை யவர்கள் காவல்வீட்டிலின்னம் போட்டதில்லை.

௫ பார்வோனின் சேனையோவென்றால் எகிப்திலிருந்து புறப்பட்டது, எருசலேமை முற்றிக்கைப்போட்ட கல்தேயர் அவர்களுடைய செய்தியைக்கேட்டு எருசலேமைவிட்டு எழும்பிப்போனார்கள்.

௬ அப்போது எரேமியாத் தீர்க்கதரிசிக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது,

௭ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதென்றால், நம்மைக்கேட்கும்படிக்கு உங்களை நம்மண்டைக்கனுப்பின யூதாவின் இராசாவுக்கு நீங்கள் சொல்லவேண்டியதாவது, இதோ உங்களுக்குச் சகாயமாகப் புறப்பட்ட பார்வோனின் சேனை தன் தேசமாகிய எகிப்துவுக்குத் திரும்பிப்போம்.

௮ கல்தேயரோவென்றால் திரும்பிவந்து இந்தப் பட்டணத்துக்கு விரோதமாய் யுத்தம்பண்ணி அதைப்பிடித்து அதையக்கினியாற் சுட்டெரிப்பார்கள்.

௯ கல்தேயர் நம்மைவிட்டுப் போகவே போவார்களென்று சொல்லி, உங்களாத்துமாக்களை மோசம்போக்காதேயுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனென்றால் அவர்கள் போவதில்லை.

௰ உங்களோடே யுத்தம்பண்ணுகிற கல்தேயருடைய சேனையையெல்லாம் நீங்கள் வெட்டிக்குத்துச் சாயம்பட்ட மனுஷர் மாத்திரம் அவர்களில் மீதியாயிருந்தாலும் இவர்களில் அவரவர் தங்கள் கூடாரங்களில் எழும்பி இந்தப் பட்டணத்தையக்கினியாற் சுட்டெரிப்பார்களென்று சொல்லுங்களென்றார்.

௰௧ பார்வோனின் சேனை வருகிறதென்று கல்தேயருடைய சேனை எருசலேமைவிட்டு எழும்பிப்போனபோது,

௰௨ எரேமியா அவ்விடத்தைவிட்டுச் சனத்தின் நடுவிலே சாலையாய் விலகிப் பென்யமீன் தேசத்துக்குப் போகமனதாய் எருசலேமிலிருந்து புறப்பட்டுப்போனான்.

௰௩ அவன் பென்யமீன் வாசலில் வந்தபோதோவென்றால் காவற்சேனையின் அதிபதியாகிய எரியாவென்று நாமமுள்ள ஒருவன்

அங்கேயிருந்தான், அவன் அனனியாவின் குமாரனாகிய செலேமியாவின் மகன், அவன் நீ கல்தேயர்வசமாகப் போகிறவனென்று சொல்லி எரேமியா தீர்க்கதரிசியைப் பிடித்தான்.

௰௪ அப்போது எரேமியா இது பொய், நான் கல்தேயர்வசமாகப் போகிறவனல்லவென்றான். ஆனாலெரியா இவனுடைய சொல்லைக் கேளாமல் எரேமியாவைப் பிடித்து அவனைப் பிரபுக்களண்டைக்குக் கொண்டுபோனான்.

௰௫ அப்போது பிரபுக்கள் எரேமியாவின் பேரில் கடுங்கோபம் அடைந்து * அவனையடித்து அவனைச் சம்பிரதியாகிய யோனத்தானுடைய வீட்டிற் காவல்வைத்தார்கள். ஏனெனில் அதையவர்கள் காவல்வீடாக்கினார்கள். * ௨௰.

௰௬ அப்படியே எரேமியா கெபியாயிருக்கிற வீட்டிலும் நிலவறைகளிலும் பிரவேசித்தான், அங்கே எரேமியா அநேகம் நாளிருந்தான்.

௰௭ பிறகு சிதேக்கியா இராசா அவனையழைத்தனுப்பி கர்த்தராலே ஒருவார்த்தையுண்டோவென்று இராசா அவனைத் தன் வீட்டிலே இரகசியமாய்க் கேட்டான், அதற்கு எரேமியா உண்டு பாபேலுடைய இராசாவின் கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவீரென்று சொன்னான்.

௰௮ பின்னையும் எரேமியா சிதேக்கியா இராசாவுடனே சொன்னதாவது, நீங்களென்னைக் காவல்வீட்டிலே அடைத்ததற்கு நான் உமக்கும் உம்முடைய ஊழியக்காரருக்கும் இந்தச் சனத்துக்கும் விரோதமாக என்ன பாவஞ்செய்தேன்.

௰௯ பாபேலின் இராசா உங்களுக்கும் இந்தத் தேசத்துக்கும் விரோதமாக வருவதில்லையென்று உங்களுக்குத் தீர்க்கதரிசனஞ்சொன்ன உங்களுடைய தீர்க்கதரிசிகளெங்கே.

௨௰ இப்போதும் இராசாவாகிய என்னாண்டவனே கேளும், நான் சம்பிரதியாகிய யோனத்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு அங்கே என்னைத் திரும்ப அனுப்பாதேயும் என்கிற என்னுடைய விண்ணப்பத்துக்கு உமக்கு முன்பாக இடமுண்டாகக்கடவதென்றான்.

௨௧ அப்போது எரேமியாவைச் * காவற்சாலையின் முற்றத்திலே காக்கவும் பட்டணத்தில் அப்பமெல்லாஞ் செலவழிந்துபோகிறநாள் மட்டும் தினம் அப்பஞ் சுடுகிறவர்களின் வீதியில் ஒரு அப்பத்தையவனுக்கு வாங்கிக்கொடுக்கவுங் கட்டளையிட்டான், அப்படியே எரேமியா காவற்சாலையின் முற்றத்திலிருந்தான். * ௩௨, ௨.

## ௩௮. அதிகாரம்.

[துரவிற்போடப்பட்ட எரேமியா விடுவிக்கப்பட்டது.]

ஆனால் * இந்தப்பட்டணத்திலே தரித்திருக்கிறவன் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலுஞ் சாவான், கல்தேயர் அண்டைக்குப் புறப்பட்டுப் போகிறவனோ உயிரோடிருப்பான், அவனுடைய பிராணன் அவனுக்குக் கிடைத்த கொள்ளையுடைமையைப்போலிருக்கும், அவன் பிழைப்பானென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்றும், * ௨௧, ௯.

௨ இந்தப்பட்டணம் பாபேலுடைய இராசாவினுடைய இராணுவத்தின் கையிற் கொடுக்கவே கொடுக்கப்படும், அவன் அதைப் பிடிப்பானென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்றும்,

௩ எரேமியா எல்லாச்சனத்தோடுஞ் சொல்லிக்கொண்டிருக்கும் வார்த்தைகளை மாத்தானின் குமாரனாகிய செப்பத்தியாவும் பஸ்கூரின் குமாரனாகிய கேதலியாவுஞ் செலேமியாவின் குமாரனாகிய யூகாலும் மல்கியாவின் குமாரனாகிய பஸ்கூருங் கேட்டார்கள்.

௪ அப்போது பிரபுக்கள் இராசாவோடே சொன்னதாவது, இந்த மனுஷன் கொல்லப்படட்டுமே, அதெப்படியென்றால் இந்தப்பட்டணத்தில் மீதியாயிருக்கிற யுத்த மனுஷரின் கைகளையும் இவன் இப்படிக்கொத்த வார்த்தைகளையவர்களுடனே சொல்லுகிறதினாலே தளர்ந்துபோகப் பண்ணுகிறான், ஏனெனில் இந்த மனுஷன் இந்தச் சனத்தின் சுகவாழ்வுக்கானதையல்ல, அதின் பொல்லாப்புக்கானதையே தேடுகிறானென்றார்கள்.

௫ அப்போது சிதேக்கியா இராசா, இதோ அவன் உங்கள் கைகளிலிருக்கிறான், ஏனெனில் உங்களுக்கு விரோதமாய் இராசா ஒன்றுஞ்செய்யமாட்டானென்றான்.

௬ அப்போதவர்கள் எரேமியாவைப் பிடித்து அவனைக் காவற்சாலையின் முற்றத்திலிருந்த அம்மெலேகின் குமாரனாகிய மல்கியாவினுடைய துரவிலே போட்டார்கள், அங்கே எரேமியாவைக் கயிறுகளின் வழியாய் இறக்கிவிட்டார்கள் ஆனால் துரவிலே தண்ணீரிராமல் உளையாயிருந்தது, அந்த உளையிலே எரேமியா அமிழ்ந்தான்.

* ௩௭, ௰௬. ௧. மோசே. ௩௭, ௨௪.

௭ ஆனால் அவர்கள் எரேமியாவைத் துரவிலே போட்டதை இராசாவின் வீட்டிலிருந்த * எத்தியோப்பியனாகிய எபெத்மெலேக்கென்கிற ஒரு பிரதானி கேட்டான், இராசாவோவென்றால் பென்யமீன் வாசலிலே உட்கார்ந்திருந்தான். * ௩௯, ௰௬.

௮ அப்பொழுது எபேத்மெலேக்கு இராசாவின்வீட்டிலிருந்து புறப்பட்டு இராசாவுடனே பேசிச்சொன்னதாவது,

௯ இராசாவாகிய என்னாண்டவனே, இந்தப்புருஷர் எரேமியாத் தீர்க்கதரிசியைத் துரவிலேபோட்டு நடப்பித்ததெல்லாம் பொல்லாதசெயலாயிருக்கிறது. அவன் இருந்தவிடத்திலேதானே பஞ்சத்தினாற்சாவானே, ஏனெனில் இனிப் பட்டணத்திலே அப்பமில்லையென்றான்.

௰ அப்பொழுது இராசா எபேத்மெலேக்கென்ற எத்தியோப்பியனுக்கு நீ இவ்விடத்திலே முப்பதுமனுஷரை யுன்னுடனே கூட்டிக்கொண்டுபோய் எரேமியாத்தீர்க்கதரிசி சாகாததுக்குமுன்னே அவனைத்துரவிலிருந்து தூக்கிவிடென்று கற்பித்தான்.

௰௧ அப்பொழுது எபேத் மெலேக்கு அந்த மனுஷரைத்தன்னுடனே கூட்டிக்கொண்டு இராசாவின்வீட்டிற் பொக்கிஷச்சாலையின் கீழிருந்தஸ்தலத்திலேபோய்ப் பிந்த பழம்புடவைகளையுந் தேய்ந்தபழம்புடவைகளையும் அங்கே யெடுத்துக்கொண்டுபோய் அவைகளைக்கயிறுகளில் எரேமியாவண்டைக்குத்துரவில் இறக்கிவிட்டு,

௰௨ எபேத்மெலேக்கென்ற எத்தியோப்பியன் எரேமியாவுடனே, பிந்துந்தேய்ந்ததுமான இந்தப் பழம்புடவைகளை உம்முடைய அக்கிள்களிற்கயிறுகளுக்குட்புறமாகப்போட்டுக்கொள்ளுமென்றான். எரேமியா அந்தப்பிரகாரமாகச்செய்தான்.

௰௩ அப்பொழுது எரேமியாவைக் கயிறுகளாலேதூக்கி அவனைத் துரவிலிருந்தெடுத்துவிட்டார்கள் அப்படியேஎரேமியாகாவற்சாலையின்முற்றத்திலிருந்தான்.

## சிதேக்கியா இராசா எரேமியாவோடே பண்ணின சம்பாஷணை.

௰௪ பிறகு சிதேக்கியா இராசா எரேமியாத்தீர்க்கதரிசியைக்கர்த்தருடையவீட்டிலிருக்கும் மூன்றாம்நடையிலே தன்னண்டைக்குவரவழைப்பித்தான். அங்கே இராசா எரேமியாவுடனே, நானுன்னை யொரு காரியத்தைக்கேட்கிறேன், நீ யெனக்கொன்றும் மறைக்கவேண்டாமென்றான்.

௰௫ அப்பொழுது எரேமியா சிதேக்கியாவுடனே, நான் அதை யுமக்கறிவித்தால் என்னைக்கொல்லவேகொல்லுவீரல்லவோ? நானுமக்கொரு ஆலோசனையைச் சொன்னாலும் என்சொல்லைக் கேளாதிருப்பீரென்றான்.

௰௬ அப்பொழுது சிதேக்கியா இராசா, நானுன்னைக்கொல்லாமலும் நானுன்பிராணனை வாங்கத்தேடுகிற * இந்தமனுஷர் கையிலுன்னை யொப்புக்கொடாமலுமிருப்பேனென்கிறதை நமக்கிந்த ஆத்துமாவை யுண்டுபண்ணின கர்த்தருடைய ஜீவனைக்கொண்டுசொல்லுகிறேனென்று எரேமியாவுக்கு இரகசியமாய் ஆணையிட்டான்.
* ௪, ௯.

௰௭ அப்பொழுது எரேமியா சிதேக்கியாவுடனேசொன்னதாவது, நீர் பாபேலுடைய இராசாவின்பிரபுக்களண்டைக்குப்புறப்பட்டேபுறப்பட்டால் உம்முடைய ஆத்துமா உயிரோடிருக்கும் இந்தப்பட்டணம் அக்கினியாற்சுட்டெரிக்கப்படுவதுமில்லை, நீரும் உம்முடையவீட்டாரும் உயிரோடிருப்பீர்கள்.

௰௮ நீர் பாபேலுடைய இராசாவின்பிரபுக்களண்டைக்குப்புறப்படாதிருந்தீரேயாகில் அப்பொழுது * இந்தப்பட்டணங் கல்தேயர்கையிற்கொடுக்கப்படும் அவர்களதை யக்கினியாலேசுட்டெரிப்பார்கள் நீர் அவர்களுக்குத் தப்பிப்போவதுமில்லையென்கிறதை இஸ்ரவேலின்பராபரனுஞ் சேனைகளையுடைய பராபரனுமாகியகர்த்தர்சொல்லுகிறாரென்றான். * ௧௪, ௨௧.

௰௯ அப்பொழுது சிதேக்கியா இராசா எரேமியாவுடனேகல்தேயர் என்னைத்தங்களவசமாய் வந்துவிட்ட யூதரின்கையிலே என்னைப்பரியாசம்பண்ண ஒப்புக்கொடுப்பார்களோவென்று நான் ஐயப்பட்டிருக்கிறேனென்றான்.

௨௰ எரேமியாசொன்னதாவது, உம்மை யொப்புக்கொடார்கள், நானும்மோடே பேசுகிற * கர்த்தருடைய சத்தத்துக்குச்செவிகொடுமே, அப்பொழுதுமக்கு நன்றாயிருக்கும், அப்பொழுதும்முடையஆத்துமாஉயிரோடிருக்கும். * நாளாக. ௧௫, ௰௨.

௨௰௧ நான் புறப்படுகிறதில்லையென்றீரேயாகில் கர்த்தரெனக்குத் தெரியப்படுத்தின வார்த்தையாவது,

௨௰௨ இதோ யூதாவுடைய இராசாவின் வீட்டிலேமீதியான எல்லா ஸ்திரீகளும்வெளியே பாபேலுடைய இராசாவின் பிரபுக்களண்டையிற்கொண்டு போகப்படுவார்கள், இதோ அவர்கள்தானே உமக்குஇராசியான மனுஷர் உம்மைப் பயிற்றுவித்து உம்மைமேற்கொண்டார்களென்றும் உம்முடையகால்கள் உளையிலே அமிழ்ந்தினபிற்பாடு அவர்கள் பின்வாங்கி போனார்களென்றுஞ் சொல்லுவார்கள்.

௨௰௩ உம்முடைய எல்லா ஸ்திரீகளையும் உம்முடைய பிள்ளைகளையும் வெளியே கல்தேயரண்டையிற்கொண்டுபோவார்கள், நீரும் அவர்கள் கைக்குத்தப்பிப்போகாமல் * பாபேலுடைய இராசாவின்கையினாற்பிடிக்கப்பட்டு இந்தப் பட்டணம் அக்கினியாற்சுட்டெரிக்கப்படக் காரணராயிருப்பீரென்பது தானென்றான். * ௧௨, ௪.

௨௪ அப்போது சிதேக்கியா எரேமியாவுடனே சொன்னதாவது: இந்த வார்த்தைகளை ஒருவரும் அறியாதிருக்கக்கடவது, அப்போது நீ சாகப்போகிறதில்லை.

௨௫ நான் உன்னோடே பேசினேனென்று பிரபுக்கள் கேட்டு உன்னண்டை வந்து நீ இராசாவோடே பேசிக்கொண்டதை எங்களுக்கறிவியேன், எங்களுக்கொன்றும் மறைக்காதே, அப்போது உன்னைக் கொல்லாதிருப்போம், இராசா உன்னோடே என்ன பேசினானென்று உன்னைக் கேட்டார்களேயாகில்,

௨௬ * நான் யோனத்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு இராசா என்னை அங்கே திரும்ப அனுப்பவேண்டாமென்று அவர் முகத்துக்கு முன்பாக விண்ணப்பம்பண்ணினேனென்று சொல்வாயாகவென்றான்.
* ௩௭, ௨௰.

௨௭ பிறகு எல்லாப் பிரபுக்களும் எரேமியாவண்டைக்கு வந்து அவனைக் கேட்டார்கள் அப்போதவன் இராசா கற்பித்த இந்த எல்லா வார்த்தைகளுக்குத் தக்கதாயவர்களுக்கு அறிவித்தான், ஆனதுகொண்டு காரியங்கேள்விப்படாதே போனபடியினாலே அவனை விட்டுச் சும்மாயிருந்தார்கள்.

௨௮ அப்படியே எரேமியா எருசலேம் பிடிபடுகிற நாள்மட்டாக * காவற்சாலையின் முற்றத்திலிருந்தான், எருசலேம் பிடிபட்டுப்போனபோதும் அங்கேதானிருந்தான்.
* ௩௭, ௨௧.

## ௩௯. அதிகாரம்.

[எருசலேம் பிடிபட்டதும் எரேமியாவும் எபேத்மெலேக்கும் காப்பாற்றப்பட்டதும்.]

யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா அரசாண்ட * ஒன்பதாம் வருஷம் பத்தாம் மாதத்திலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சாரும் அவனுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து அதை முற்றிக்கைபோட்டார்கள் * ௫௨,
அதி. ௪. ௨. இராசா. ௨௫, ௨. நாளா. ௩௬, ௰௭.

௨ சிதேக்கியா அரசாண்ட பதினோராம் வருஷம் நாலாம் மாதம் ஒன்பதாந்தேதியிலே பட்டணமதில் திறப்பானது.

௩ அப்போது பாபேலுடைய இராசாவின் எல்லாப் பிரபுக்களாகிய நேர்கல்சரேத்சேர், சம்கார்நேபு, சர்சேகீம், ரப்சாரீஸ், நேர்கல்சரேத்சேர், ரப்மாக் என்றவர்களும் பாபேலின் இராசாவினுடைய மற்ற எல்லாப் பிரபுக்களும் உட்பிரவேசித்து நடுவாசலிலே தரிகொண்டார்கள்.

௪ அப்போது சம்பவித்ததேதெனில், யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவுஞ் சகல யுத்த மனுஷரும் அவர்களைக் கண்டபோது, * ஓடி, இராத்திரிகாலத்தில் இராசாவுடைய தோட்டத்துவழியே இரண்டு மதில்களுக்கு நடுவான வாசலாற் பட்டணத்திலிருந்து புறப்பட்டுப்போனார்கள், அவன் வயல்வெளியின் வழியே போய்விட்டான்.
* எசேக். ௰௨, ௰௨.

௫ ஆனாற் கல்தேயருடைய இராணுவம் அவர்களைப் பின்றொடர்ந்து எரிகோவின் வயல்வெளிகளிற் சிதேக்கியாவைக் கிட்டி அவனைப் பிடித்து அவனைக் காமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்குப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சாரண்டையிலே கொண்டுபோனார்கள் இவன் அவன்பேரிற் தீர்மானங்களைச் சொன்னான்.

௬ பிறகு பாபேலின் இராசா ரிப்லாவிலே சிதேக்கியாவின் பிள்ளைகளையவன் கண்களுக்கு முன்பாக வெட்டுவித்தான், யூதாவிலுள்ள மேன்குலத்தாரனைவரையும் பாபேலின் இராசா வெட்டி,

௭ சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோக அவனுக்கிரண்டு வெண்கல விலங்குகளைப் போடுவித்தான். * எசேக. ௰௨, ௰௩.

௮ இராசாவின் வீட்டையுஞ் சனத்தின் வீடுகளையுங் கல்தேயர் அக்கினியாற் சுட்டெரித்து எருசலேமின் மதில்களை இடித்துப்போட்டார்கள்.

௯ பட்டணத்தில் மீதியான குறைச்சனத்தையுந் தன்வசமாக ஓடிவந்து விட்டவர்களையும் மீதியான மற்றச் சனத்தையுந் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோனான்.

௰ ஒன்றுமில்லாத நீசமான சனத்திலோவென்றால் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் சிலரை யூதேயாதேசத்திலே வைத்து அவர்களுக்கு அந்நாளிலே திவிதிராட்சத் தோட்டங்களையும் வயல்களையுங் கொடுத்தான்.

௰௧ ஆனால் எரேமியாவைக் குறித்துப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசாரதானுக்கு,

௰௨ நீ அவனை அழைத்து உன் கண்களையவன்பேரில் வைத்து, * அவனுக்கொரு பொல்லாப்பையுஞ் செய்யாமல் அவன் உன்னோடே சொல்லும்படியெல்லாம் அவனை நடத்தென்று கற்பித்திருந்தான். * ௪௰. ௩௫, ௰௫.

௰௩ அப்படியே தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதானும், நேபூசஸ்பான், ரப்சாரீஸ், நேர்கல்சரேத்சேர், ரப்மாக் என்றவர்களும், பாபேலுடைய இராசாவின் எல்லாப் பிரபுக்களும்,

௰௪ எரேமியாவைக் காவற்சாலையின் முற்றத்திலிருந்து வரவழைப்பித்து அவனை வெளி

யே வீட்டுக்கழைத்துக்கொண்டு போகும்படிக்கு அவனைச் சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவுக்கு ஒப்புவித்தார்கள், அப்படியே அவன் சனத்துக்குள்ளே தங்கியிருந்தான்.

௰௫ இதுவுமல்லாமல் எரேமியா இன்னுங் காவற்சாலையின் முற்றத்திலே அடைக்கப்பட்டிருக்கையில் அவனுக்கு உண்டான கர்த்தருடைய வசனமாவது,

௰௬ நீ போய் * எத்தியோப்பியனாகிய எபேதமெலேக்குக்குச் சொல்லவேண்டியதேதெனில், இதோ, நம்முடைய வார்த்தைகளை இந்தப் பட்டணத்தின் பேரில் நன்மையாகவல்ல தீமையாகவே வரப்பண்ணுவோம், அவைகள் அந்நாளிலே உன் கண்களுக்கு முன்பாக நிறைவேறுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

* ௩௮. அதி. ௭.

௰௭ ஆனால் அந்நாளிலே உன்னைத் தப்புவிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார், நீ பயப்படுகிற மனுஷரின் கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை.

௰௮ உன்னை விடுவிக்கவே விடுவிப்போம், நீ பட்டயத்துக்கு இரையாவதில்லை, நீ நம்மை நம்பினபடியினாலே உன் பிராணன் உனக்குக் கிடைத்த கொள்ளையுடைமையைப் போலிருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்பதுதானே.

## ௪௰. அதிகாரம்.

[விடுதலையான எரேமியாவும் சிதறுண்ட சகல யூதரும் கெதலியாவண்டையிலே சேர்ந்தது.]

தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் எரேமியாவையழைப்பித்து அவனை ராமாவிலிருந்து விடுதலையாய் அனுப்பின பிற்பாடு இவனுக்குக் கர்த்தராலுண்டான வசனம் ஏனென்றால் பாபேலுக்குக் கொண்டு போகப்பட்ட எருசலேமிலும் யூதாவிலும் சிறைகளாயப் பிடித்து வைக்கப்பட்ட அனைவரின் நடுவிலே இவனும் சங்கிலிகளாற் கட்டுண்டிருந்தான்.

௨ ஆனால் தலையாரிகளின் அதிபதி எரேமியாவையழைப்பித்து அவனுடனே சொன்னதாவது, உன் பராபரனாகிய கர்த்தர் இந்த ஸ்தலத்துக்கு இந்தத் தீங்கு வருமென்று சொல்லியிருந்தார்.

௩ தாம் சொன்னபடியுங் கர்த்தர் வரப்பண்ணினார், ஏனென்றால் * நீங்கள் கர்த்தருக்கு விரோதமாயப் பாவஞ்செய்து அவருடைய சத்தத்துக்குச் செவிகொடாமற் போனீர்கள், ஆகையால் உங்களுக்கு இந்தக் காரியம் வந்தது. * ௫௰, ௭.

௪ இப்போதும் இதோ உன் கைகளிற் கட்டியிருந்த சங்கிலிகளையின்று வாங்கிப்போட்டேன், என்னோடேகூடப் பாபேலுக்கு வர உனக்கு நன்றாய்க் கண்டால் வா, என் கண்களையுன் பேரில் வைப்பேன், என்னோடேகூடப் பாபேலுக்கு வர உனக்கு விதனமாய்க் கண்டதேயானால் இருக்கட்டும், இதோ தேசமெல்லாம் உனக்கு முன்பாக இருக்கிறது, எவ்விடத்துக்குப் போக உனக்கு நன்றாய்ச் செவ்வையுமாய்க் காணுமோ அவ்விடத்துக்குப் போ.

௫ அவ்விடம் இன்னுந் திரும்பாதிருந்தாயேயாகில் நீ பாபேலின் இராசா யூதாவுடைய பட்டணங்களின் பேரில் அதிகாரியாக வைத்த * சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவண்டைக்குத் திரும்பிக்கொண்டு அவனோடே சனத்தின் நடுவிலே தங்கியிரு, அல்லவென்றால் எவ்விடத்துக்குப் போக உனக்குச் செம்மையாய்க் காணுமோ அவ்விடத்துக்குப் போவென்று சொல்லித் தலையாரிகளின் அதிபதியவனுக்கு வழிச்செலவையும் காணிக்கையையுங் கொடுத்து அவனையனுப்பிவிட்டான். * ௩௯, ௰௪.

௬ அப்படியே எரேமியா மிஸ்பாவுக்கு அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவண்டையிலே வந்து அவனோடே தேசத்திலே மீதியான சனத்தின் நடுவிலே தங்கியிருந்தான்.

௭ பாபேலின் இராசா அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவைத் தேசத்தின் மேல் அதிகாரியாக்கினானென்றும் புருஷரையும் ஸ்திரிகளையுங் குழந்தைகளையும் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகப்படாத தீசமானசேசத்தாரையும் அவனுடைய விசாரிப்புக்கு ஒப்புவித்தானென்றும் வெளியிலிருக்கிற இராணுவச் சேர்வைக்காரரனைவரும் அவர்களுடைய மனுஷரும் கேட்டபோதோவெனில்,

௮ அவர்கள் மிஸ்பாவுக்குக் கெதலியாவண்டையிலே வந்தார்கள், ஆரெனில் நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலுங் கரேயாவின் குமாரராகிய யோகனானும் யோனத்தானும் தன்கூமேத்தின் குமாரனாகிய செராயாவும் நெத்தோபாத்தியனாகிய எப்பாயின் குமாரரும் மாகாத்தியனான ஒருவன் குமாரனாகிய இசனியாவும் அவர்களும் அவர்கள் மனுஷருந்தானே.

௯ * அப்போது சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகன் கெதலியா அவர்களுக்கும் அவர்கள் மனுஷருக்கும் ஆணையிட்டுச் சொன்னதாவது, நீங்கள் கல்தேயரைச் சேவிக்கப் பயப்படவேண்டாம், நீங்கள் தேசத்திலிருந்து பாபேலின் இராசாவைச் சேவியுங்கள், அப்போது உங்களுக்கு நன்றாயிருக்கும். * ௨. இராசா. ௨௫, ௨௪.

௰ நானோவென்றால் இதோ நம்மண்டையில் வருகிற கல்தேயருக்கு முன்பாக முன்னின்று மிஸ்பாவிலே குடியிருக்கிறேன், நீங்களோவென்றால் போய் திராட்சப்பழரசத்தையும் அறுப்பையும் எண்ணெயையுஞ்சேர்த்து உங்கள் பாண்டங்களில் வைத்து உங்கள் வசமாக்கிக்கொண்டிருக்கிற ஊர்களிலே குடியிருங்களென்றான்.

௰௧ மோவாபிலும் அம்மோன் புத்திரரிடத்திலும் ஏதோமிலும் சகல தேசங்களிலுமிருக்கிற யூதரும் பாபேலின் இராசா யூதேயாவிலே சிலர் மீதியாயிருக்கக் கட்டளையிட்டானென்றும் சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவை அவர்கள் பேரிலே அதிகாரியாக்கினானென்றுங் கேட்டபோது,

௰௨ எல்லா யூதரும் தாங்கள் துரத்துண்ட எல்லாவிடங்களிலுமிருந்து யூதேயா தேசத்திற்கு கெதலியாவண்டையிலே மிஸ்பாவுக்கு வந்து திராட்சப்பழ ரசத்தையும் அறுப்பையும் வெகுதிரளாய்ச் சேர்த்து வைத்தார்கள்.

௰௩ அப்போது கரேயாவின் குமாரனாகிய யோகனானும் வெளியிலேயிருந்த சகல இராணுவச் சேர்வைகாரரும் மிஸ்பாவுக்கு கெதலியாவண்டையிலே வந்து,

௰௪ அவனுடனே உம்முடைய சீவனைக் கொன்றுபோடும்படிக்கு அம்மோன் புத்திரரின் இராசாவாகிய பாலிஸ் நேதானியாவின் குமாரனாகிய இஸ்மவேலை அனுப்பினானென்கிறதை நீர் அறியவே அறியவில்லையோவென்றார்கள், ஆனால் அகிக்காமின் குமாரனாகிய கெதலியா அவர்கள் வார்த்தையை நம்பினதில்லை.

௰௫ பின்னையும் கரேயாவின் குமாரனாகிய யோகனான் மிஸ்பாவிலே கெதலியாவோடே இரகசியமாய்ச் சொன்னதாவது, நான் போய் ஒருவருமறியாமல் நேதானியாவின் குமாரனாகிய இஸ்மவேலை வெட்டிப்போட்டுவிடட்டுமே, உம்மண்டை சேர்ந்த யூதரெல்லாருஞ் சிதறுண்டுபோகவும் யூதாவில் மீந்தவர்கள் அழியவும் அவன் உம்முடைய சீவனைக் கொன்றுபோடுவானேனென்றான்.

௰௬ ஆனால் அகிக்காமின் குமாரனாகிய கெதலியா கரேயாவின் குமாரனாகிய யோகனானுடனே நீ இந்தக் காரியத்தைச் செய்யாதே, ஏனெனில் இஸ்மவேலின் பேரிலே நீ பொய் சொல்லுகிறாயென்றான்.

## ௪௧. அதிகாரம்.

[இஸ்மவேல் கெதலியாவைக் கொன்றுபோட்டதும் மீதியான யூதர் இஸ்மவேலைத் துரத்தின யோகனானண்டையிலே சேர்ந்ததும்.]

ஆனாலும் ஏழாம் மாதத்திலே சம்பவித்ததென்னவென்றால், இராசவமிசத்திலே பிறந்தவனும் எலிசாமாவின் குமாரனாகிய நேதானியாவின் மகனுமான * இஸ்மவேலும் அவனுடனேகூட இராசாவின் பிரபுக்களான பத்து மனுஷரும் மிஸ்பாவுக்கு அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவண்டையிலே வந்து அங்கே மிஸ்பாவிலேயே சமாய் அப்பஞ்சாப்பிட்டார்கள். * ௨இரா, அதி. ௮.

௨ அப்போது நேதானியாவின் குமாரனாகிய இஸ்மவேலும் அவனோடிருந்த பத்து மனுஷரும் எழும்பிப் பாபேலின் இராசா தேசத்தின்மேல் அதிகாரியாக வைத்த சாப்பானின் குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவைப் பட்டயத்தாலே வெட்டினார்கள்.

௩ மிஸ்பாவிலே கெதலியாவினிடத்திலேயிருந்த எல்லா யூதரையும் அங்கே காணப்பட்ட யுத்த மனுஷராகிய கல்தேயரையும் இஸ்மவேல் வெட்டிப்போட்டான்.

௪ அவன் கெதலியாவைக் கொன்றபிறபாடு இரண்டாம் நாளிலே அதை ஒருவரும் இன்னம் அறியாதிருக்கையில் சம்பவித்ததாவது,

௫ தாடியைச் சிரைத்து வஸ்திரங்களைக் கிழித்துத் தங்களைக் கீறிக்கொண்டிருந்த எண்பது மனுஷர் சீகேமிலும் சீலோவிலும் சமாரியாவிலுமிருந்து தங்கள் கைகளில் காணிக்கைகளையும் தூபவர்க்கத்தையுங் கர்த்தருடைய வீட்டுக்குக் கொண்டுபோகும்படிக்குச் சுமந்து வந்தார்கள்.

௬ அப்போது நேதானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து புறப்பட்டு அவர்களுக்கெதிராக அழுதுகொண்டே நடந்து அவர்களைச் சந்திக்கிறபோது அவர்களுடனே அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவண்டைக்கு வாருங்களென்றான்.

௭ ஆனால் அவர்கள் பட்டணத்தின் நடுமையமட்டும் வந்தபோது சம்பவித்ததென்னவென்றால் நேதானியாவின் குமாரனாகிய இஸ்மவேலும் அவனோடிருந்த மனுஷரும் அவர்களை வெட்டி ஒரு பள்ளத்துக்குள்ளே தள்ளிப்போட்டார்கள்.

௮ ஆனால் அவர்களில் பத்துப்பேரிருந்தார்கள், அவர்கள் இஸ்மவேலுடனே எங்களைக் கொலைசெய்யாதேயும், ஏனெனில் கோதுமையையும் வாற்கோதுமையையும் எண்ணெயையும் தேனையும் புதைப்பல்சல் எங்களுக்கு வயலத்தினிலிருக்கிறதென்றார்கள், அப்போது அவர்களையவர்கள் சகோதரரோடுங்கூடக் கொலைசெய்யாமல் விட்டுவைத்தான்.

௯ இஸ்மவேல் கெதலியாவினிமித்தமாக வெட்டின மனுஷனுடைய பிரேதங்களையெல்லாந் தள்ளிப்போட்ட பள்ளமோவெ

னில் ஆசாவென்ற இராசா இஸ்ரவேலின் இராசாவாகிய பாசாவுக்கெதிராக வுண்டுபண்ணின பள்ளந்தானே, அதை நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டுண்டவர்களாலே நிரப்பினான்.

௰ பிறகு இஸ்மவேல் மிஸ்பாவிலிருக்கிற மீதியான சனத்தையெல்லாஞ் சிறைப்படுத்திக்கொண்டுபோனான், இராசாவின் குமாரத்திகளையுந் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவின் விசாரிப்புக்கொப்புவித்துப்போன மிஸ்பாவிலுள்ள மீதியான சனங்களனைத்தையும் நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் சிறைப்படுத்திக்கொண்டுபோய் அம்மோன் புத்திரரண்டைக்குத் தாண்டிப்போகப் புறப்பட்டான்.

௰௧ நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் செய்த பொல்லாப்பையெல்லாங் கரேயாவின் குமாரனாகிய யோகனானும் அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காரருங் கேட்டபோதோவெனில்,

௰௨ அவர்களெல்லாப் புருஷரையுங் கூட்டிக்கொண்டு நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலோடே யுத்தம்பண்ணப் போய் அவனைக் கிபியோனிலிருக்கும் பெருங்குளத்துத் தண்ணீரண்டையிலே கண்டார்கள்.

௰௩ அப்போது சம்பவித்ததென்றால், இஸ்மவேலண்டையிலிருந்த சனமெல்லாங் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும் அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காரரையுங் காண்கையிற் சந்தோஷப்பட்டு,

௰௪ இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து சிறைபிடித்துக்கொண்டுபோன சனமெல்லாம் பின்னிட்டுத் திரும்பிக் கரேயாவின் குமாரனாகிய யோகனானண்டையிலே வந்துவிட்டார்கள்.

௰௫ நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலோவென்றால் எட்டுப்பேரோடுங் கூட யோகனானின் கைக்குத் தப்பி அம்மோன் புத்திரரண்டைக்குப் புறப்பட்டுப்போனான்.

௰௬ ஆனாற் கரேயாவின் குமாரனாகிய யோகனானும் அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காரரும் அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவை வெட்டிப்போட்ட நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் கொண்டுபோனதுந் தாங்கள் கிபியோனிலே விடுதலையாக்கித் திரும்பப்பண்ணினதுமான மீதியான சகலசனமுமாகிய சேவகரான மனுஷரையும் ஸ்திரீகளையுங் குழந்தைகளையும், அரண்மனைப் பிரதானிகளையுஞ் சேர்த்துக்கொண்டு,

௰௭ பாபேலின் இராசா தேசத்தின்மேல் அதிகாரியாக்கின அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவை நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டிப்போட்டதினிமித்தமாகக் கல்தேயருக்குப் பயப்படுகிறபடியினாலே,

௰௮ போய்த் தாங்கள் எகிப்துக்குப் புறப்பட்டுப்போகும்படிக்குப் பெத்லெகேமூருக்கருகான கிம்காமின் பேட்டையில் இறங்கித் தங்கினார்கள். * ௨. இராசா. ௨௫, ௨௬.

## ௪௨. அதிகாரம்.

[எகிப்துவுக்குப் போகவேண்டாமென்று எரேமியா யூதரில் மீதியானவர்களை எச்சரித்தது.]

அப்போது எல்லா இராணுவச்சேர்வைக்காரருங் கரேயாவின் குமாரனாகிய யோகனானும் ஒசாயாவின் குமாரனாகிய இசனியாவுஞ் சிறியோர்முதற்கொண்டு பெரியோர்மட்டும் உண்டான எல்லாச்சனமுஞ் சேர்ந்து வந்து,

௨ தீர்க்கதரிசியாகிய எரேமியாவுடனே சொன்னதாவது, உம்முடைய பராபரனாகிய கர்த்தர் நாங்கள் நடக்கவேண்டிய வழியையுஞ் செய்யவேண்டிய காரியத்தையும் எங்களுக்குத் தெரியப்பண்ணும்படிக்கு நீர் எங்கள் விண்ணப்பத்துக்கிடங்கொடுத்து மீதியாயிருக்கிற இந்தச் சகலசனமாகிய எங்களுக்காக உம்முடைய பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணும்.

௩ ஏனெனில் உம்முடைய கண்கள் எங்களைக் காண்கிறபடியே திரளான சனங்களில் கொஞ்சம்பேராய் மீந்திருக்கிறோமென்றார்கள்.

௪ அப்போது எரேமியாத் தீர்க்கதரிசி அவர்களுடனே நீங்கள் சொன்னதைக் கேட்டேன், இதோ உங்கள் வார்த்தையின்படியே உங்கள் பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணுவேன், கர்த்தர் உங்களுக்கு மறுவுத்தாரமாகச் சொல்லும் எல்லா வார்த்தையையும் நான் உங்களுக்கு ஒன்றையும் மறைக்காமல் அறிவிப்பேனென்றான்.

௫ அப்போது அவர்கள் எரேமியாவுடனே சொன்னதாவது, உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உம்மைக்கொண்டு எங்களுக்குச் சொல்லியனுப்பும் எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள் செய்யாவிட்டால் கர்த்தர் நமக்குச் சத்தியமும் உண்மையுமான சாட்சியாயிருக்கக்கடவார்.

௬ அது நன்மையானாலுந் தின்மையானாலுஞ் சரி, எங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கு நாங்கள் கீழ்ப்படிவதினாலே எங்களுக்கு நன்றாயிருக்கும்படிக்கு நாங்கள் உம்மை அனுப்புகிற எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குக் கீழ்ப்படிந்து நடப்போமென்றார்கள்.

௭ பத்துநாள் சென்றபோது கர்த்தருடைய வார்த்தை எரேமியாவுக்குண்டானது.

௮ அப்போது அவன் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும் அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காரரையுஞ் சிறியோர்முதற்கொண்டு பெரியோர்மட்டுமுண்டான சனமனைத்தையும் அழைத்து,

௯ அவர்களுடனே சொன்னதாவது, உங்களுக்காக விண்ணப்பஞ்செய்யும்படிக்கு நீங்களென்னை அனுப்பின இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதென்றால்,

௰ நீங்களித்தேசத்திலே தரிக்கவே தரித்திருந்தால் * நாம் உங்களை நிர்மூலமாக்காமற் கட்டுவித்து உங்களைப் பிடுங்காமல் நாட்டுவோம், ஏனெனில் நாமுங்களுக்குச் செய்திருக்கிறதிற்கு மனஸ்தாபப்பட்டோம்.
* ௨௪, ௯.

௰௧ * நீங்கள் பயப்படுகிற பாபேலின் இராசாவுக்குப் பயப்படவேண்டாம், அவனுக்குப் பயப்படாதிருப்பீர்களாகவென்று கர்த்தர்சொல்லுகிறார், ஏனெனில் உங்களை இரட்சிக்கும்படிக்கும் உங்களையவன் கைக்குத் தப்புவிக்கும்படிக்கும் நாமுங்களுடனேயிருந்து, * ௪௨, ௰௮.

௰௨ அவனுங்களுக்கிரங்குகிறதற்கும் உங்களையுங்கள்தேசத்துக்குத் திரும்பிவரப்பண்ணுகிறதற்குமாக உங்களுக்கிரக்கஞ்செய்வோம்.

௰௩ நீங்கள் உங்கள்பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குச்செவிகொடாமல் இந்தத்தேசத்திலே நாங்களிருக்கிறதில்லையென்றும்,

௰௪ நாங்கள் யுத்தத்தைக்காணாததும் எக்காளத்தின் சத்தத்தைக் கேளாததும் அப்பத்தாழ்ச்சியினாற் பட்டினியாயிராததுமான எகிப்துதேசத்துக்கேபோய் அங்கே தரித்திருப்போமென்றுஞ்சொன்னீர்களேயாகில்,

௰௫ இப்போதும் யூதாவில் மீதியானவர்களே அதைத்தொட்டு உண்டான் கர்த்தருடைய வார்த்தையைக்கேளுங்கள், இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறதாவது, நீங்கள் எகிப்துக்குப்போக வுங்கள் முகங்களைத் திருப்பவே திருப்பி அங்கே தங்கப்போனீர்களானால்,

௰௬ சம்பவிப்பதேதெனில், நீங்கள் பயப்படுகிற பட்டயம் அங்கே எகிப்துதேசத்திலே உங்களைப்பிடிக்கும், நீங்கள் ஐயப்படுகிற பஞ்சம் அங்கே எகிப்திலே உங்களைப் பின்பற்றிக்கொண்டிருக்கும், அங்கே சாவீர்கள்.

௰௭ எகிப்திலே தங்கவேண்டுமென்று அவ்விடத்துக்குத் தங்கள்முகங்களைத் திருப்பின எல்லா மனுஷருக்கும் என்ன சம்பவிக்குமென்றாற் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலுஞ் சாவார்கள், நாம் அவர்கள்மேல் வரப்பண்ணுந் தீங்கினாலே அவர்களில் மீதியாவாருந் தப்புவாருமில்லை.

௰௮ ஏனெனில் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, நம்முடைய கோபமும் நம்முடைய உக்கிரமும் எருசலேமுடைய குடிகளின்மேல் எப்படி ஊற்றப்பட்டதோ அப்படி நம்முடைய உக்கிரம் நீங்கள் எகிப்துக்குப்போகும்போது உங்கள்மேல் ஊற்றப்படும், * நீங்கள் சாபமாகவும் பாழாகவும் பழிப்பாகவும் நிந்தையாகவுமிருந்து இவ்விடத்தையினிக்காணாதிருப்பீர்களென்கிறார்.
* ௨௪. அதி. ௯. ௨௯, அதி. ௰௮. ௰௯.

௰௯ யூதாவில் மீதியானவர்களே எகிப்துக்குப்போகாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் உங்களைக்குறித்துச் சொன்னாரென்பதை இந்நாளில் உங்களுக்குச் சாட்சியாக அறிவித்தேனென்பதை யறியவேயறிவீர்களாக.

௨௰ ஏனெனில் உங்களாத்துமாக்களுக்கு விரோதமாய் உங்களை மோசம்போக்கினீர்கள், அதேதென்றால், நீர் எங்கள்பராபரனாகிய கர்த்தரை எங்களுக்காக விண்ணப்பம்பண்ணி எங்கள் பராபரனாகிய கர்த்தர் சொல்லும்படியெல்லாம் எங்களுக்கறிவியும் அதின்படியே செய்வோமென்று நீங்கள் சொல்லி என்னையுங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்கு அனுப்பினீர்கள்.

௨௧ நானிந்நாளில் அதையுங்களுக்கு அறிவித்தேனே, ஆனால் உங்கள்பராபரனாகிய கர்த்தரின்சத்தத்துக்கும் அவர் என்னைக்கொண்டு உங்களுக்குச் சொல்லியனுப்பின எல்லாவற்றுக்குஞ் செவிகொடாதே போனீர்கள்.

௨௨ இப்போதுந் தங்கியிருப்பதற்கு நீங்கள்போகவிரும்புகிற தலத்திலே தானே பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலுஞ் சாவீர்களென்று அறியவே அறிவீர்களாகவென்றான்.

## ௪௩. அதிகாரம்.

[தெய்வச்சொல்லைக்கேளாமல் எகிப்துக்குப்போன யூதருக்குப்பராபரன்சொல்லச்சொன்னவிசேஷம்.]

எரேமியா எல்லாச்சனத்துக்கும் அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் தன்னைக்கொண்டு அவர்களுக்குச்சொல்லியனுப்பின எல்லாவார்த்தைகளையுஞ் சொன்னபின், அவர்களுடைய பராபரனாகிய கர்த்தருடைய இந்த எல்லாவார்த்தைகளையும் அவன் அவர்களுக்குச்சொல்லிமுடிந்தபோது சம்பவித்ததேதென்றால்,

உ ஒசாயாவின் குமாரனாகிய அசரியாவும் கரேயாவின் குமாரனாகிய யோகனானும் அகந்தையான எல்லா மனுஷரும் எரேமியாவுடனே சொன்னதாவது, நீ பொய் சொல்லுகிறாய், எகிப்துக்கு அங்கே தங்கும்படிக்குப் போகாதேயுங்களென்று சொல்ல, எங்கள் பராபரனாகிய கர்த்தர் உன்னை எங்களண்டைக்கு அனுப்பினதில்லை.

ங கல்தேயர் எங்களைக் கொன்றுபோடவும் எங்களைப் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகவும் எங்களை அவர்கள் கையிலே ஒப்புக்கொடுக்கும்படிக்கு நேரியாவின் குமாரனாகிய பாருக்குத்தானே உன்னை எங்களுக்கு விரோதமாகப் பயிற்றிவைக்கிறானென்றார்கள்.

ச அப்படியே யூதாவின் தேசத்திலே தரிக்கவேண்டுமென்ற கர்த்தருடைய சத்தத்துக்குக் கரேயாவின் குமாரனான யோகனானும் சகல இராணுவச் சேர்வைக்காரரும் செவிகொடாதே போனார்கள்.

ரு யூதேயாத் தேசத்திலே தங்கியிருப்பதற்குத் தாங்கள் துரத்துண்டிருந்த சகல சாதிகளிடத்திலுமிருந்து திரும்பிவந்த மீதியான யூதரொல்லாரையும் புருஷரையும் ஸ்திரீகளையும் குழந்தைகளையும் இராசாவின் குமாரத்திகளையும் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதானசான் சாப்பானின் குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவண்டையிலே வைத்துப்போன சகல ஆத்துமாக்களையும் தீர்க்கதரிசியாகிய எரேமியாவையும், நேரியாவின் குமாரனாகிய பாருக்கையும்,

சா கரேயாவின் குமாரனான யோகனானும் சகல இராணுவச் சேர்வைக்காரரும் கூட்டிக்கொண்டு,

எ கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாதபடியினாலே எகிப்துத் தேசத்துக்குப் போய்த் தக்பானேஸ்மட்டும் வந்து சேர்ந்தார்கள்.

அ தக்பானேசிலே கர்த்தருடைய வார்த்தை எரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது,

கூ நீ உன் கையிலே பெரிய கல்லுகளை எடுத்துக்கொண்டு யூத மனுஷர் பார்க்கக்கொள்ள அவைகளைத் தக்பானேசிலிருக்கிற பார்வோனுடைய வீட்டின் ஒலிமுக வாசலிலுண்டான சூளையின் களிமண்ணிலே புதைத்து வைத்து,

ய அவர்களுடனே சொல்லவேண்டியதாவது இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதென்னவென்றால், இதோ * நம்முடைய வேலைக்காரனாகிய நேபுகாத்நேச்சார் என்ற பாபேலின் இராசாவை நாம் அழைத்தனுப்பி நாம் புதைப்பித்த இந்தக் கல்லுகளின்மேல் அவனுடைய ஆசனத்தை வைப்போம், அவன் தன் இராசகூடாரத்தை அவைகளின்மேலே விரிப்பான். * உரு, கூ. உஎ, அதி. கூ.

யக அவன் வந்து எகிப்துத் தேசத்தை அழிப்பான், * சாவுக்கேதுவானவன் சாவுக்கும், சிறையிருப்புக்கேதுவானவன் சிறையிருப்புக்கும் பட்டயத்துக்கேதுவானவன் பட்டயத்துக்குமுள்ளாவான்.

* பரு, அதி. உ.

யஉ எகிப்துவினுடைய தேவர்களின் வீடுகளில் அக்கினியைக் கொளுத்துவோம், அவன் அவைகளைச் சுட்டெரித்து அவைகளைச் சிறைபிடித்துப்போய், ஒரு மேய்ப்பன் தன் கம்பளியைப் போர்த்துக்கொள்ளும்படி போலே எகிப்துத் தேசத்தைப் போர்த்துக்கொண்டு அவ்விடத்திலிருந்து சுகமாய்ப் புறப்பட்டுப்போவான். * சசு, அதி. உரு. உசு.

யங அவன் எகிப்துத் தேசத்திலிருக்கிற பெத்சேமேசின் சிலைகளையுடைத்து, எகிப்துவினுடைய தேவர்களின் வீடுகளையக்கினியாற் சுட்டுப்போடுவானென்கிறாரென்று சொல்லென்றார்.

## சச. அதிகாரம்.

[எகிப்திலே வந்த யூதருக்கு எரேமியா பண்ணின கண்டிதமான பிரசங்கம்.]

எகிப்துத் தேசத்திற் குடியேறி மிக்தோலிலும், தக்பானேசிலும், நோபிலும் பத்ரோஸ் சீமையிலும் வாசமான எல்லா யூதரையுங்குறித்து எரேமியாவுக்குண்டான வசனம்.

உ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது நாம் எருசலேமின்மேலும் யூதாவுடைய எல்லாப் பட்டணங்களின்மேலும் வரப்பண்ணின தீங்கையெல்லாம் நீங்கள் கண்டீர்கள்.

ங இதோ, அவர்களும் நீங்களும் உங்கள் பிதாக்களும் அறியாத தேவர்களுக்கு அவர்கள் தூபங்காட்டவும் ஆராதனை செய்யவும் போய் நமக்குக் கோபமுண்டாகும்படிக்குச் செய்த அவர்களுடைய பொல்லாப்பினிமித்தம் அவைகள் இந்நாளிற் பாழாய்க் கிடக்கிறது அவைகளிற் குடியில்லை.

ச நாம் பகைக்கிற இந்த அருவருப்பான காரியத்தைச் செய்யாதேயுங்களென்று நாம் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு உங்களுக்கு ஏற்கனவே சொல்லி அனுப்பிக்கொண்டேயிருந்தோம்.

ரு ஆனால் அவர்கள் அன்னிய தேவர்களுக்குத் தூபங்காட்டாதபடிக்குத் தங்கள் பொல்லாப்பைவிட்டுத் திரும்புவதற்குக் * கேளாமலும் தங்கள் செவிகளைச் சாய்க்காமலும் போனார்கள். * எ, உரு. உசு.

௬ ஆகையால் நம்முடைய உக்கிரமும் நம்முடைய கோபமும் ஊற்றப்பட்டு யூதேயாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் * பற்றியெரிந்தது, அவைகள் இந்நாளிலிருக்கிறபடி வனாந்தரமும் பாழுமாய்ப் போனது. * எ,

௭ இப்போதும் இஸ்ரவேலின் பராபரனும் சேனைகளுடைய பராபரனுமான கர்த்தர் சொல்லுகிறதாவது, நீங்கள் யூதாவிலொருவரையும் உங்களுக்கு மீதியாகக் காக்காமல் உங்களிற் புருஷனையும் ஸ்திரீயையும் பிள்ளையையும் பாலகனையும் முதலற்றுப் போகப்பண்ணும்படிக்கு உங்கள் கைகளின் கிரியைகளாலே நமக்குக் கோபமுண்டாக்குகிற பெரிய பொல்லாப்பை உங்களாத்துமாக்களுக்கு விரோதமாகச் செய்து,

௮ உங்களைத்தானே வேரற்றுப் போகப் பண்ணுவதற்காகவும் பூமியினுடைய சகல சாதிகளுக்குள்ளுஞ் சாபமும் நிந்தையுமாவதற்காகவும் நீங்கள் தங்கியிருக்க வந்த எகிப்துதேசத்திலே அன்னிய தேவர்களுக்குத் தூபங்காட்டுவானேன்.

௯ யூதாதேசத்திலும் எருசலேமின் வீதிகளிலும் உங்கள் பிதாக்கள் செய்த பொல்லாப்புகளையும் யூதாவின் இராசாக்கள் செய்த பொல்லாப்புகளையும் அவர்களுடைய பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும் நீங்கள் செய்த பொல்லாப்புகளையும் உங்கள் பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும் மறந்துபோனீர்களோ?

௰ அவர்கள் இந்நாள்மட்டுக்கும் மனம் நொறுங்குண்டதுமில்லை பயப்படுகிறதுமில்லை, நாமுங்கள் முன்னேயும் உங்கள் பிதாக்களின் முன்னேயும் வைத்த நமது வேதத்தின்படியேயும் நமது கட்டளைகளின்படியேயும் நடக்கிறதுமில்லை.

௰௧ ஆகையால் இஸ்ரவேலின் பராபரனுமான சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ, நாம் * உங்களுக்குத் தீங்காகவும் யூதாவனைத்தையுஞ் சங்கரிக்கத்தக்கனையாகவும் நமது முகத்தை உங்களுக்கு விரோதமாகத் திருப்பி, * ஆமோ. ௯, ௪.

௰௨ எகிப்துதேசத்திலே தங்கும்படிக்குவரத் தங்கள் முகங்களைத் திருப்பின மீதியான யூதரைவாரிக்கொள்ளுவோம், அவர்களனைவரும் எகிப்துதேசத்தில் நிர்மூலமாவார்கள், அவர்கள் சிறியவன் துவக்கிப் பெரியவன்மட்டும் * பட்டையத்துக்கிரையாகிப் பஞ்சத்தாலும் நிர்மூலமாவார்கள். அவர்கள் பட்டையத்தாலும் பஞ்சத்தாலுஞ் செத்துச் சாபமும் பாழும் பழிப்பும் நிந்தையுமாவார்கள். * ௪௨, அதி. ௰௭. ௰௮.

௰௩ நாம் எருசலேமை விசாரித்தபடி, எகிப்துதேசத்திற் குடியிருக்கிறவர்களையும் பட்டையத்தாலும் பஞ்சத்தாலும் கொவாரிக்காய்ச்சலாலும் விசாரிப்போம்.

௰௪ எகிப்துதேசத்திலே தங்கவும் மறுபடியுந் தங்களாத்துமா வாஞ்சித்திருக்கிற யூதாதேசத்திலேதானே குடியேறுவதற்கு அங்கே திரும்பிப் போகவும் வேண்டுமென்று இங்கே வந்த மீதியான யூதரிலே தப்புவாரும் மீதியாயிருப்பாருமில்லை தப்பிப்போபவர்களாகிய மற்றவர்களையேயொழிய அவர்களிலொருவரும் அங்கே திரும்புவதில்லையென்று சொன்னான்.

௰௫ அப்போது தங்கள் பெண்சாதிகள் வேற்றுதேவர்களுக்குத் தூபங்காட்டுகிறதை யறிந்திருந்த எல்லாப் புருஷரும் பெரிய கூட்டமாய் நின்றிருந்த எல்லா ஸ்திரீகளும் எகிப்துதேசத்தில் பத்ரோசிலே குடியிருந்த சகல சனமும் எரேமியாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது,

௰௬ நீ கர்த்தருடைய நாமத்திலே எங்களுக்குச் சொன்ன வார்த்தையின்படியே * நாங்கள் உனக்குச் செவிகொடாமல்,
* ௰௮, அதி. ௰௨.

௰௭ எங்கள் வாயிலிருந்து புறப்பட்ட எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள் செய்யவே செய்து * வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டி அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றுவோம், நாங்களும் எங்கள் பிதாக்களும் எங்கள் இராசாக்களும் எங்கள் பிரபுக்களும் யூதாப் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலுஞ் செய்ததுபோலேதானே, அப்போது நாங்கள் அப்பத்தாலே திருப்தியாய் வாழ்ந்து ஒரு பொல்லாப்பையுங் காணாதிருந்தோம். எ, அதி. ௰௮.

௰௮ நாங்கள் வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டாமலும் அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றாமலும் போனதுமுதற்கொண்டோவெல்லாம் எங்களுக்குக் குறைபட்டது, பட்டையத்தாலும் பஞ்சத்தாலும் நிர்மூலமானோம்.

௰௯ அல்லவென்று நாங்கள் வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டி அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றுகிறபோது நாங்கள் அவளை நமஸ்கரிக்கவும் அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றவும் எங்கள் புருஷரையல்லாமல் * அவளுக்கு அச்சுப்பணியாரங்களைச் சுடுகிறோமோவென்றார்கள். * எ, அதி. ௰௮.

௨௰ அப்போது எரேமியா எல்லாச் சனத்துக்கும் புருஷருக்கும் ஸ்திரீகளுக்குந் தனக்கிப்படிக்கொத்த மறுமொழியைக் கொடுத்த சகல சனத்துக்குஞ் சொன்னதாவது,

௨௰௧ யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் நீங்கள் உங்கள் பிதாக்களும் உங்கள் இராசாக்களும் உங்கள் பிரபுக்களுந் தேசத்தின் சனமுந் தூபங்காட்டின தூபங்களையல்லவோ கர்த்தர் நினைத்து

த்தமுடைய மனதிலே வைத்துக் கொண்டார்.

௨௨ உங்கள் கிரியைகளின் பொல்லாப்பையும் நீங்கள் செய்த அருவருப்புகளையும் கர்த்தர் அப்புறம் பொறுத்திருக்கக் கூடாததினாலேயல்லவோ உங்கள் தேசம் இந்நாளிலிருக்கிறபடி குடியற்ற அந்தரவெளியும் பாழும் சாபமுமாயிற்று.

௨௩ நீங்கள் தூபங்காட்டிக் கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்து கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமலும் அவருடைய வேதத்துக்கும் அவருடைய கட்டளைக்கும் அவருடைய சாட்சிகளுக்கும் இணங்கி நடவாமலும் போனபடியினாலே தானே யிந்தத் தீங்கு இந்நாளிலிருக்கிறபடி உங்களுக்கு நேரிட்டதென்றான்.

௨௪ பின்னையும் எரேமியா எல்லா சனத்துக்கும் எல்லா ஸ்திரீகளுக்குஞ் சொன்னதாவது எகிப்து தேசத்திலிருக்கிற யூதராகிய நீங்களெல்லாருங் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௨௫ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டவும் அவளுக்கு ஊற்றுதல்களை யூற்றவும் நாங்கள் நேர்ந்துகொண்ட பொருத்தனைகளைச் செலுத்தவே செலுத்துவோமென்று நீங்களும் உங்கள் பெண்சாதிகளும் உங்கள் வாயினாலுஞ் சொல்லி உங்கள் கைகளினாலும் நிறைவேற்றினீர்கள் நீங்கள் உங்கள் பொருத்தனைகளைத் திடப்படுத்தவே திடப்படுத்திச் செலுத்தவே செலுத்தினீர்கள்.

௨௬ ஆகையால் எகிப்துதேசத்திற்குடியிருக்கிற யூதராகிய நீங்களெல்லாருங் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள், இதோ கர்த்தராகிய ஆண்டவருடைய சீவனைக் கொண்டு எகிப்து தேசமெங்கும் ஒரு யூத மனுஷன் வாயினாலும் இனி நம்முடைய நாமம் அழைக்கப்படுவதில்லையென்று நாம் நமது பெரிய நாமத்தைக்கொண்டு ஆணையிடுகிறோமென்கிறதைக் கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭ இதோ * நாம் அவர்கள் பேரிலே நன்மைக்கல்ல தீமைக்கே சாக்கிரதையாயிருப்போம், எகிப்து தேசத்திலிருக்கிற யூத மனுஷரெல்லாரும் ஒழிந்து தீருமளவும் பட்டயத்தாலும் பஞ்சத்தாலுஞ் சங்காரமாவார்கள். * ௧௧, அதி. ௨௮.

௨௮ ஆனாற் பட்டயத்துக்குத் தப்புபவர்கள் எகிப்து தேசத்திலிருந்து யூத தேசத்துக்குக் கொஞ்சம் பேராய்த் திரும்புவார்கள், அப்படியே எகிப்து தேசத்திலே தங்கியிருக்கவந்த மீதியான யூதரனைவரும் ஆருடைய வார்த்தை மெய்ப்படுமோ, தங்களுடையதோ நம்முடையதோவென்று அறிவார்கள்.

௨௯ கர்த்தர் சொல்லுகிறதேதெனில் நாம் இவ்விடத்திலுங்களுக்கு விரோதமாய் விசாரிக்கிறவராயிருப்பதற்கும் நம்முடைய வார்த்தைகளையுங்கள் பேரிலே தீமையாக மெய்ப்படுமென்று நீங்களறிவதற்கும் உங்களுக்கடையாளமாவது,

௩௰ இதோ நாம் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவை அவனுடைய சத்துருவும் அவன் பிராணனை வாங்கத்தேடினவனுமாகிய நேபுகாத்நேச்சாரென்ற பாபேலுடைய இராசாவின் கையிலே ஒப்புக்கொடுத்தது போலே நாம் பார்வோனொப்பிரு வென்ற எகிப்துவின் இராசாவையும் அவனுடைய சத்துருக்களின் கையிலும் அவன் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும் ஒப்புக்கொடுப்போமென்பது தானேயென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

## ௪௫. அதிகாரம்.

[பாருக்குச் சொல்லப்பட்ட ஆறுதல்.]

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவுடைய இராசாவின் நாலாம் வருஷத்திலே நேரியாவின் குமாரனாகிய பாருக்கு இந்த வசனங்களை * எரேமியாவின் வாய்ச்சொல்ல ஒரு புஸ்தகத்தில் எழுதுகையில் எரேமியாத் தீர்க்கதரிசி அவனுடனே சொன்ன வார்த்தை. * ௩௬, அதி. ௪.

௨ பாருக்கே! உன்னைக்குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது,

௩ நீ, ஆ, எனக்கையோ! ஏனெனிற் கர்த்தரென்னுடைய நோவைச் சஞ்சலத்தால் வர்த்திக்கப்பண்ணினாரென்றும் என் தவிப்பினால் இளைத்தேன் இளைப்பாறுதலைக்காணேனென்றுஞ் சொல்லுகிறாய்.

* சங்கீதம். ௯, ௭.

௪ கர்த்தருரைக்கிறதேதெனில் இதோ நாம் கட்டினதை நாம் இடிக்கிறோம் நாம் நாட்டினதை நாம் பிடுங்குகிறோம் இந்த முழுத்தேசத்தையுங் கூடத்தானே.

௫ நீயோவெனில் உனக்குப் பெரிய காரியங்களைத் தேடுகிறாயோ? தேடாயாக. ஏனெனில் இதோ எல்லா மாமிசத்தின் மேலுந் தீங்கை வரப்பண்ணுகிறோமென்று கர்த்தர் சொல்லுகிறார். ஆனால் நீ போகுஞ் சகல தலங்களிலும் * உன்னுடைய ஆத்துமாவையுனக்குக் கிடைக்குங்கொள்ளையுடைமையைப்போலே தருகிறோமென்கிறதை அவனுடனே சொல்லென்றொன்று சொன்னான்.

* ௧௯, ௰௮.

## ௪௬. அதிகாரம்.

[எகிப்தியருக்கு விரோதமான தீர்க்கதரிசனம்.]

புறசாதிகளுக்கு விரோதமாய எரேமியா தீர்க்கதரிசிக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௨ *எகிப்துக்குச் சொல்லுகிறது: ஐப்பிராத்து நதியண்டையிலே கற்கேமிசிலேயிருந்ததும் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்னும் யூதாவுடைய இராசாவின் நாலாம் வருஷத்திலே முறியவடித்ததுமான பார்வோன்நேகோவென்னப்பட்ட எகிப்துவினுடைய இராசாவின் இராணுவத்தின்பேரிலே அவர் சொன்னதாவது. * ௪ இரா. ௨௩, ௨௯. ௨ நாளா. ௩௫, ௨௦.

௩ கேடகங்களையும் பரிசைகளையும் ஆயத்தம்பண்ணி யுத்தத்துக்குச் சேருங்கள்.

௪ குதிரைக்காரரே குதிரைகளின்மேற் சேணங்களைவைத்தேறி தலைச்சீராக்களைப் போட்டுக்கொண்டவர்களாய் உங்களை நிறுத்துங்கள், ஈட்டிகளைத் துலக்கிக் கவசங்களைத் தரித்துக்கொள்ளுங்கள்.

௫ அவர்கள் கலங்கிப் பின்வாங்குகிறார்களென்று நாம் காண்கிறதெப்படி? அவர்களுடைய பராக்கிரமசாலிகள் நொறுக்குண்டு திரும்பிப் பாராமல் ஓட்டமாய் ஓடுகிறார்கள், சுற்றிலும் பயங்கரமுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬ வேகமானவன் ஓடிப்போகாதிருக்க, பராக்கிரமசாலி தப்பிப்போகாதிருக்க, வடக்கே ஐப்பிராத்து நதியண்டையிலே இடறிவிழுவார்கள்.

௭ நீரோட்டத்தைப்போலேயும் தண்ணீர்கள் மோதியடிக்கிற ஆறுகளைப்போலேயும் எழும்பிவருகிறவனார்?

௮ எகிப்தியன் நீரோட்டத்தைப்போலேயும் தண்ணீர்கள் மோதியடிக்கிற ஆறுகளைப்போலேயும் எழும்பிவந்து நான் போய் தேசத்தை மூடிப் பட்டணத்தையும் அதிற்குடியிருக்கிறவர்களையும் அழிப்பேனென்றான்.

௯ குதிரைகளே போய் ஏறுங்கள், இரதங்களே கடகடென்று ஓடுங்கள் பராக்கிரமசாலிகளும் கேடயம் பிடிக்கிற எத்தியோப்பியரும் பூத்தியரும் வில்லைப்பிடித்து நாணேற்றுகிற லீதியரும் புறப்படக்கடவர்கள்.

௰ ஆனால் இது சேனைகளையுடைய கர்த்தராகிய ஆண்டவரின் நாளும் அவர் தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிற நாளுமாயிருக்கிறது ஆகையால் பட்டயம் பட்சித்து அவர்களுடைய இரத்தத்தாலே திருத்தியாகி வெறித்திருக்கும், ஏனெனில் வடதேசத்தில் ஐப்பிராத்து நதியண்டையிலே சேனைகளையுடைய கர்த்தராகிய ஆண்டவருக்குப் பெலியிடுதலுண்டு.

௰௧ எகிப்து குமாரத்தியாகிய கன்னியாஸ்திரியே *நீ கிலேயாத்துக்குப்போய் பிசின் தயிலம் வாங்கு, விருதாவாகத் திரளான ஔஷதங்களைக் கூட்டுகிறாய் உனக்கு ஆரோக்கியமுண்டாகாது. * ௮, அதி. ௨௨.

௰௨ சாதிகள் உன் இலச்சையைக் கேட்கிறார்கள், உன் கூக்குரலாலே தேசம் நிறைந்தது, ஏனெனிற் பராக்கிரமசாலி பராக்கிரமசாலியிடறி இருவரும் ஏகமாய் விழுந்தார்களென்றார்.

௰௩ எகிப்துதேசத்தை சங்கரிக்கப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் வருவானென்பதைக்குறித்து எரேமியாத் தீர்க்கதரிசியுடனே கர்த்தர் சொன்ன வசனமாவது,

௰௪ உன்னை நிறுத்தி ஆயத்தப்படு, ஏனெனிற் பட்டயம் உன்னைச்சுற்றிலும் உண்டானதைப் பட்சித்துப்போட்டதென்று சொல்லி எகிப்திலே அறிவித்து மிக்தோலிற் கேட்கப்பண்ணி நோப்பிலும் தக்பானேசிலுங் கேட்கப்பண்ணுங்கள்.

௰௫ உன்னில் வல்லவர்கள் அடித்துக்கொண்டுபோகப்படுகிறதெப்படி? நிலைநிற்கமாட்டார்கள், ஏனெனிற் கர்த்தர் அவர்களைத் தள்ளினார்.

௰௬ அநேகரை இடறப்பண்ணுகிறார், அவன் வழுந்தனக்கடுத்தவன் மேல்விழுந்து எழுந்திரு கெடுக்கிற பட்டயத்துக்குத் தப்ப நம்முசனத்தண்டைக்கும் நாம்பிறந்த தேசத்துக்குந் திரும்பிப்போவோமென்கிறார்கள்.

௰௭ எகிப்துவின் இராசாவாகிய பார்வோன் பாழ்க்கடிக்கப்பட்டான், அவனிட்டமானகாலத்தைத் தப்பவிட்டானென்று அங்கே கூப்பிடுகிறார்கள்.

௰௮ பருவதங்களில் தாபோரும் சமுத்திரத்திற் கற்மேலுமிருக்கிற உயரமாய் வருவானென்று *சேனைகளின் கர்த்தரென்ற நாமமுள்ள இராசாதமதுடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறார். * சங்கீத. ௨, ௪௰.

௰௯ எகிப்து தேசத்துக் குடியாகிய குமாரத்தியே சிறையிருப்புக்குப்போகும் பயணமுட்டுகளையுனக்குண்டாக்கு, ஏனெனில் நோப்பு பாழாகும் அது குடியில்லாமற் சுட்டுப்போடப்பட்டுக்கிடக்கும்.

௨௰ எகிப்து மகா நேர்த்தியான கன்றுக்குட்டியாயிருக்கிறது அடிக்கிறவன் வடக்கேயிருந்து வருகிறான்.

௨௰௧ அதின் நடுவிலிருக்கிற அதினுடைய கூலிப்படைகள் கொழுத்த கன்றுக்குட்டிகள் போலிருக்கிறார்கள், ஆகையால் இவர்களும் நிற்காமலே திரும்பிக்கொண்டு ஏகமாயோடிப்போவார்கள், ஏனெனில் * அவர்கள் விசாரிக்கப்படுகிற அவர்களுடைய ஆபத்து நாள் அவர்கள்மேல் வந்தது.

* ௫௰, அதி. ௨௭.

௨௨ அதினுடையசத்தம்பாம்பின்சத்தம்போலப் புறப்படும், ஏனெனில் இராணுவபலத்தோடே நடந்துமரங்களை வெட்டுகிறவர்களைப்போலக் கோடாலிகளோடே அதின்மேல்வருவார்கள்.

௨௩ எண்ணப்படாத மரங்களாயிருந்தாலும் அதின் காட்டைவெட்டுவார்களென்று கர்த்தர்சொல்லுகிறார், ஏனெனில்வெட்டுக்கிளிகளைப்பார்க்க அதிகமாயிருக்கிறார்கள், அவர்களுக்கிலக்கமில்லை.

௨௪ எகிப்துக்குமாரத்திவெட்கப்பட்டிருக்கிறாள், வடக்குத்திக்சனத்தின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுகிறாள்.

௨௫ இஸ்ரவேலின்பராபரனாகியசேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோநாம்நோப்பட்டணத்திலுள்ளதிரளானசனத்தைத்தையும், பார்வோனையும், எகிப்தையும்* அதின்தேவர்களையும், அதின் இராசாக்களையும், பார்வோனையும், அவனை நம்பியிருக்கிறவர்களையும்விசாரித்து,

* ௩௪, ௰௨. ஏசாயா. ௰௯, ௧.

௨௬ அவர்களைப்பவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின்கையிலும், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின்கையிலும் அவனுடைய வேலைக்காரரின் கையிலும் ஒப்புக்கொடுப்போம், அதற்குப்பிறபாடோவெனில் அது பூர்வநாட்களிலிருந்ததுபோற குடியேற்றப் படும்போமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

சிறையிருப்பானயூதருடைய இரட்சிப்பின் தீர்க்கதரிசனம்.

௨௭ ஆனால் * நம்முடையதாசனாகிய யாக்கோபே நீபயப்படாயாக, இஸ்ரவேலே நீகலங்காயாக, ஏனெனில் இதோநாமுன்னைத்தூரத்திலும், உன்வித்தையவர்கள் சிறையிருப்பின் தேசத்திலுமிருந்து விடுவித்து இரட்சிப்போம், அப்போது யாக்கோபுதிரும்பிவந்து அமைதலோடுஞ்சாங்கோபாங்கத்தோடுமிருப்பான், அவனைத் தத்தளிக்கப்பண்ணுவாரில்லை.

* ௩௰, அதி. ௰.

௨௮ நம்முடையதாசனாகிய யாக்கோபே, நீபயப்படாயாகவென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனில்நாமுன்னுடனேயிருக்கிறோம், நாமுன்னைத்துரத்திவிட்ட எல்லாச்சாதிகளையும்நிர்மூலமாக்குவோம், உன்னையோ நாம் நிர்மூலமாக்காமல் உன்னை * நியாயமட்டாய்த் தண்டிப்போம், ஆனால் உன்னை நாங்குற்றமில்லாமல் நீங்கலாக்கவேவிடுவதில்லையென்றார். *௰, அதி. ௨௪.

## ௪௭. அதிகாரம்.

[பெலிஸ்தருக்குவிரோதமான தீர்க்கதரிசனம்.]

பார்வோனகாத்சாலை அழிக்காத்துக்குமுன்னே * பெலிஸ்தருக்குவிரோதமாகத்தீர்க்கதரிசியாகிய எரேமியாவுக்குண்டானகர்த்தருடையவசனம். * ஏசா. ௰௪,

௨௯ ம் ஏசேக். ௨௫. ௰௫. ம் செப்ப. ௨, ௪. ௫. சகரி. ௯, ௫௯.

௨ கர்த்தர்சொல்லுகிறதாவது, இதோ வடக்கேயிருந்துதண்ணீர்களெழும்பி, வெள்ளநதியாகித் தேசத்தின்மேலும் அதினுடையநிறைவின்மேலும் பட்டணத்தின்மேலும் அதிலேகுடியிருக்கிறவர்களின்மேலும் புரண்டோடும், அப்போதுமனுஷர் கூப்பிட்டுத்தேசத்தின் குடிகளெல்லாரும் அலறுவார்கள்.

௩ அவர்களுடையவலுவான குதிரைகளின் குளம்புகள் இரைகிறசத்தத்தையும், அவர்களுடைய இரதங்களின் கடகடப்பையும், அவைகளுடைய உருளைகளின் இரைச்சலையுந்தொட்டுத்தகப்பமார் தங்கள்கைகளின் அயர்வினாலே பிள்ளைகளைத்திரும்பிப்பாராதிருப்பார்கள்.

௪ பெலிஸ்தரையெல்லாம் பாழாக்கவும், தீருவுக்குஞ் சீதோனுக்கும் மீதியான சகாயரையெல்லாஞ் சங்காரம்பண்ணவும்வருகிறநாளினிமித்தமே. ஏனென்றால் * கப்தோரென்னுங்கடற்கரையான தேசத்தாரில் மீதியாகிய பெலிஸ்தரையுங் கர்த்தர்பாழாக்குவார். * ஆமோ ௯, ௭.

௫ காசாவுக்கு மொட்டையிடுதல்வருகிறது, அவர்களுடைய பள்ளத்தாக்கிலே மீதியாகிய அஸ்கலோன் சங்காரமாகிறது, எந்தமட்டும் உன்னைக்கீறிக்கொள்ளுவாயென்றார்.

௬ ஆ. கர்த்தரின்பட்டயமே, எந்தமட்டும் அமராதிருப்பாய்? உன் உறையிலே திரும்பு. ஓய்ந்தமர்ந்திரு.

௭ எப்படியமர்ந்திருப்பாய்? அஸ்கலோனுக்கு விரோதமாகவுங் கடற்கரைக்கு விரோதமாகவுங் கர்த்தர் அதுக்குக்கட்டளைகொடுத்து அவ்விடத்துக்கென்று அதைக்குறித்தாரே.

## ௪௮. அதிகாரம்.

[மோவாபியருக்குவிரோதமான தீர்க்கதரிசனம்.]

மோவாபுக்குச்சொல்வது, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, நேபோவுக்கு ஐயோ, ஏனெனில் அது பாழாக்கடிக்கப்பட்டது, கிரியாத்தாயீம் வெட்கப்பட்டுப் பிடிக்கப்பட்டுப்போயிற்று, மிஸ்காப்புவெட்கப்பட்டுக்கலங்கிப்போயிற்று.

* ஏசாயா ௰௫, ௧ ம்

௨ எஸ்போனைத்தொட்டுமோவாபுக்கிருந்தமெத்தரிக்கம் இனியில்லை அதுசாதியா

யிராதபடிக்கு அதைத் தீர்மூலமாக்குவோம் வாருங்களென்று அதுக்கு விரோதமாகப் பொல்லாப்பை நினைத்திருக்கிறார்கள், மத்மேனே, நீயுஞ் சங்காரமாவாய், பட்டயம் உன்னைத் தொடரும்.

௩ பாழ்க்கடிப்பிலும் பெரிய நொறுக்குதலிலும் உண்டாகிற கூப்பிடுதலின் சத்தம் ஒரொனாயிமிலிருந்து கேட்கப்படும்.

௪ மோவாபு நொறுங்குண்டது, அதின் சிறியவர்கள் கூப்பிடுதலைக் கேட்கப்பண்ணுகிறார்கள்.

௫ ஏனெனில் லூகித்துக்கு ஏறுகிற வழியிலே அழுகையின்மேல் அழுகை எழும்பும், ஒரொனாயிமுக்கு இறங்குகிற வழியிலே சத்துருக்கள் நொறுக்குதல் செய்கிறதினால் உண்டாகிய கூப்பிடுதலைக் கேட்கிறார்கள்.

௬ உங்கள் பிராணனைத் தப்புவிக்க ஓடிப்போங்கள், நீங்கள் * வனாந்தரத்தில் இழப்பமான செடியைப்போலிருப்பீர்கள்.
* ௰௭, அதி. ௬.

௭ ஏனெனில் நீ உன் கிரியைகளையும் உன் பொக்கிஷங்களையும் நம்புறபடியினாலே, நீயும் பிடிக்கப்படுவாய், அப்போது * காமோஸ் சிறையாக்கப்பட்டுப்போகும், அதின் ஆசாரியரும் பிரபுக்களுங் கூடப்போவார்கள். * ௧. இராசா. ௰௧. ௭.

௮ பாழ்க்கடிக்கிறவன் எல்லாப் பட்டணங்களின்மேலும் வருவான். ஒரு பட்டணமுந் தப்பிப்போவதில்லை, பள்ளத்தாக்குகளுங் கெட்டுப்போகும், சமனான பூமியும் அழிக்கப்படுமென்று கர்த்தர் சொன்னார்.

௯ மோவாபுக்குச் செட்டைகளைக் கொடுங்கள், ஏனெனில் அது பறந்துபோகும், அதின் பட்டணங்களோ குடிகளில்லாதபடியாய்ப் பாழாகும்.

௰ கர்த்தருடைய கிரியையை வஞ்சனையாய்ச் செய்கிறவன் சபிக்கப்பட்டவன், இரத்தத்தைச் சிந்தாதபடிக்குத் தன் பட்டயத்தையடக்கிக்கொள்ளுகிறவன் சபிக்கப்பட்டவன்.

௰௧ மோவாபு தன் சிறுவயதுதுவக்கிச் சாங்கோபாங்கத்தோடேயிருந்து தன் வண்டல்களின்மேல் அசையாமல் நின்று ஒரு பாத்திரத்திலிருந்து வேறொரு பாத்திரத்தில் இறக்கிக்கொள்ளப்படாமலுஞ் சிறையிருப்பிற போகாமலுமிருந்தது, ஆனதுகொண்டு அதின் ருசி அதில் நிலைத்தது, அதின் வாசனை வேறுபட்டுப்போனதில்லை.

௰௨ ஆகையால் இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்போது இறக்குகிறவர்களை யதுக்கனுப்புவோம், அவர்கள் அதையிறக்கி அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி அதின் சாடிகளையுமுடைப்பார்கள்.

௰௩ அப்போது இஸ்ரவேல் வீட்டார் தங்கள் நம்பிக்கையான * பெத்தேலாலே வெட்கப்பட்டதுபோலே மோவாபு காமோசாலே வெட்கப்படும்.
* ௧. இராசா. ௰௨, ௨௯.

௰௪ நாங்கள் பராக்கிரமசாலிகளென்றும் நாங்கள் யுத்தத்துக்கான பலத்த மனுஷரென்றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி?

௰௫ மோவாபு தன் பட்டணங்களுக்கேறிப்போகக்கொள்ளப் பாழ்க்கடிக்கப்படுந் தெரிந்துகொள்ளப்பட்ட அதினுடைய வாலிபர் கொலைக்களத்துக்கு இறங்குகிறார்களென்கிறதைச் சேனைகளையுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார்.

௰௬ மோவாபின் ஆபத்து வரச் சமீபமாயிருக்கிறது, அதின் தீங்கு மிகவுந் தீவிரித்துக்கொள்ளுகிறது.

௰௭ அதின் சுற்றுப்புறத்தாரும் அதின் பேரையறிந்தவர்களுமாகிய நீங்களெல்லாரும் அதுக்காக அங்கலாய்த்துக்கொள்ளுங்கள், பலனுள்ள மிலாறும் அலங்காரமான தடியும் எப்படியுடைந்ததென்று சொல்லுங்கள்.

௰௮ தீபோனின் குடியாகிய குமாரத்தியே! நீ மகிமையை விட்டிறங்கித் தவனத்தோடே உட்காரு, ஏனெனில் மோவாபைப் பாழ்க்கடிக்கிறவன் உனக்கு விரோதமாய் வந்தேறி உன் அரண்களையழித்துப் போடுவான்.

௰௯ அரோவேரிற் குடியிருக்கிறவளே! நீ வழியிலே நின்று கண்டுச்சிக்கொண்டிரு, நடந்ததென்னவென்று ஓடிவருகிறவனையுந் தப்பிவந்தவளையுங் கேள்.

௨௰ மோவாபு முறியடிக்கப்பட்டபடியினாலே வெட்கப்பட்டது, அலறிக் கூப்பிடுங்கள், மோவாபு பாழ்க்கடிக்கப்பட்டதென்று * அர்னோனில் அறிவியுங்கள்.
* ௪. மோசே. ௨௧, ௰௩.

௨௧ சமனான பூமியாகிய ஓலோனின்மேலும், யாத்சாவின்மேலும் மேப்காத்தின்மேலும்,

௨௨ தீபோனின்மேலும், நேபோவின்மேலும், பெத்திப்லாத்தாயீமின்மேலும்,

௨௩ கீரியாத்தாயீமின்மேலும், பெத்கமூலின்மேலும், பெத்மெயோனின்மேலும்,

௨௪ கேரியோத்தின்மேலும், பாத்ஸராவின்மேலும், மோவாபு தேசத்திலே தூரத்திலுஞ் சமீபத்திலுமிருக்கிற எல்லாப் பட்டணங்களின்மேலும் நியாயத்தீர்ப்பு வரும்.

௨௫ மோவாபின் கொம்பு வெட்டுண்டது, அவன் புயம் உடைக்கப்பட்டதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬ அவனை வெறியாக்குங்கள், ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப் பெருமையா

றன, அப்படியே மோவாபு தான வாந்திபண்ணுகையில் தன்னையடித்துக்கொண்டு தானும் பரியாசமாவான.

உஎ ஏனெனில இஸ்ரவேல உனக்குப் பரியாசமாயிருந்ததில்லையோ? அவன் திருடருக்குட் கண்டுபிடிக்கப்பட்டானோ நீ யவனைக்குறித்துப் பேசுகிறபோதெல்லாந் தலையைத்துலுக்குகிறயே.

உஅ மோவாபுடைய தேசத்தின்குடிகளே! நீங்கள பட்டணங்களை விட்டுப்போய்க் கன்மலையிலே தங்கிக் குகையுடையவாயின் ஓரங்களிற் கூடுகட்டுகிற புறவுக்கொப்பாகுங்கள்.

உகூ மெத்தப் பெருமையாயிருக்கிற மோவாபின பெருமையையும அதின்மேட்டிமையையும அதின அகந்தையையும அதின பெத்தரிக்கத்தையும அதினுடைய இருதயத்தின உயர்த்தியையுங்கேட்டோம.

ஙய அதின மூர்க்கத்தை நாம அறிவோமென்று கர்த்தர்சொல்லுகிறார், ஆனால அப்படியாகாது, அதின வீம்பு அதையப்படி நடப்பிப்பதில்லையென்கிறார்.

ஙக ஆகையால மோவாபினிமித்தம நான அலறி, மோவாபுடைய தேசமனைத்தினிமித்தமுங் கூக்குரலிடுவேன, கீராரேசுடைய மனுஷரினிமித்தம பெருமூச்சுவிடப்படும.

ஙஉ சிப்மாவூரின திராட்சச்செடியே, யாசேரினமேல அழப்பட்டதுபோல உன மேல அழுவேன, உனகொடிகள கடலைக் கடந்துபோனது, அவைகளயாசேருடைய கடலமட்டும வந்துசேர்ந்தது, பாழாக்குகிறவன உன வசந்தகாலக் கனிகளின்மேலும உன திராட்சப்பழ அறுப்பினமேலும விழுந்தான

ஙங * சந்தோஷமும களிப்பும பயிர் வெளியிலும மோவாபு தேசத்திலும இருந்து அவாங்கிப்போனது, ஆலைகளிலே திராட்சரசத்தை ஒழியப்பண்ணினேன, ஆலையை மிதிக்கிற கொக்கரிப்பில்லை, கொக்கரிப்பு இன்கொக்கரிப்பல்ல.

* ஏசாயா. யசு, ய.

ஙச எஸ்போனே துவக்கி எலெயாலேமட்டாகவும யாகாஸ்மட்டாகவும உண்டாகுங் கூப்பிடுதலைத்தொட்டு அவர்கள மூன்று வயதுக்கிடாரியைப்போலே சோவாரைத் துவக்கி ஒரோனாயீமமட்டாகவுந் தங்கள சத்தத்தைக்காட்டுவார்கள, ஏனெனில நிம்ரீமின தீர்ப்பாய்ச்சல்களும பாழ்த்துப்போயக்கிடக்கும.

ஙரு மோவாபுதேசத்திலே மேடைகளிற் பலியிடுகிறவனையுந் தனதேவர்களுக்குத் தூபங்காட்டுகிறவனையும ஓயப்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

ஙசு ஆகையால மோவாபினிமித்தம * என இருதயம நாகசுரங்களைப்போலத்துயரமாய்த் தொனிக்குது, கீராரேசின மனுஷரினிமித்தமும என இருதயம நாகசுரங்களைப்போலே துயரமாயத்தொனிக்கும, அவர்களமீதியாகவைத்தது வைத்தது அழிந்துபோகிறபடியினாலேதானே.

* ஏசாயா. யசு, யக.

ஙஎ ஏனெனில தலைகளெல்லாம மொட்டையிட்டுந் தாடிகளெல்லாங் கத்தரித்துமிருக்கும, கைகளிலெல்லாங் கீறுதல்களும அரைகளில இரட்டுடுப்பும உண்டு.

ஙஅ மோவாபுடைய சகல வீடுகளின மேலும அதினுடைய தெருக்களிலேயும ஏகப்புலம்பலுண்டாம, ஏனெனில விருப்பமில்லாத பாண்டத்தைப்போலே மோவாபையுடைத்துப்போட்டோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

ஙகூ எத்தனையாய முறிந்துபோனதென்றலறுகிறார்கள, மோவாபு எத்தனையாய முதுகைக்காட்டி வெட்கப்படும. இப்படி மோவாபு தன சுற்றுப்புறத்தார் அனைவருக்கும பரியாசமுந் திகைப்புமாயிருக்கும.

சய ஏனெனில இதோ * கழுகைப்போலேபறந்துவந்து மோவாபினமேலே தன் செட்டைகளை விரிப்பான. * சக, உஉ

சக பட்டணங்களவாங்கப்படும, கோட்டைகள பிடிக்கப்படும அந்நாளிலேமோவாபுடைய பராக்கிரமசாலிகளின இருதயம வாதைப்படுகிறஸ்திரியின இருதயத்தைப்போலிருக்கும.

சஉ மோவாபு சனமாயிராதபடிக்கு அழிக்கப்படும, ஏனெனிற கர்த்தருக்கு விரோதமாகப் பெருமையாயப் போயிற்று.

சங மோவாபபுடையதேசத்தின்குடியே * திகிலும படுகுழியுங் கண்ணியும உனமேலவருமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

* ஏசாயா. உச யள. யஅ.

சச திகிலிலிலக்க ஓடுகிறவனபடுகுழியிலேவிழுவான, படுகுழியிலிருந்தேறுகிறவனேகண்ணியிலேபிடிபடுவான, ஏனெனில அவர்கள விசாரிக்கப்படும வருஷத்தை யதின்மேலே அதாவதுமோவாபினமேலே தானே வரப்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

சரு வல்லமைக்குத்தப்ப ஓடிப்போகிறவர்கள எஸ்போனின நிழலிலே தரித்துக்கொள்ளுகிறார்கள, ஆனால * நெருப்பு எஸ்போனிலும அக்கினிச்சுவாலை சீகோனுடைய ஊரின நடுவிலுமிருந்து புறப்பட்டுமோவாபுதேசத்தின மூலைகளையும அமளிக்காரரின உயர்ந்த தலையையும்பட்சிக்கும.

* ச மோசே. உக, உஅ. உகூ.

சசு மோவாபே உனக்கையோ, கேமோஸ்விக்கிரகத்தின சனம அழியும, ஏனெனில உனகுமாரருஞ் சிறைப்பிடிக்கப்பட்டு உனகுமாரத்திகளுஞ் சிறைப்பிடிக்கப்பட்டுப்போகிறார்கள.

௪௭ ஆனாலும் * கடைசிநாட்களில் மோவாபின் சிறையிருப்பைத் திருப்புவேனென்று கர்த்தர் சொல்லுகிறார், மோவாபின் மேல்வரும் நியாயத்தீர்ப்பின் செய்தி இதுமட்டுமே. * ௪௯, அதி. ௩௯.

## ௪௯. அதிகாரம்.

[அம்மோன்புத்திரருக்கும் ஏதோமியருக்கும் சூரியருக்கும் அரபருக்கும் ஏலாமியருக்கும் விரோதமான தீர்க்கதரிசனங்கள்.]

அம்மோன்புத்திரருக்குச் சொல்லுது, கர்த்தர் சொல்லுகிறதாவது இஸ்ரவேலுக்குப் பிள்ளைகளில்லையோ? அவனுக்குச் சுதந்தரவாளியில்லையோ? மல்காம் காத்தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு அதின் சனம் இவன் பட்டணங்களிற் குடியிருப்பானேன். * எசேக். ௨௫, ௧—௭.

௨ ஆகையால் இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்போது அம்மோன்புத்திரரின் பட்டணமாகிய ரபாவிலே யுத்தத்தின் ஆர்ப்பரிப்பைக் கேட்கப்பண்ணுவேன் அது பாழான மண்மேடாகும், அதற்கடுத்த ஊர்களும் அக்கினியாற் சுட்டெரிக்கப்படும் அப்பொழுது இஸ்ரவேல் தன் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டவர்களின் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ எஸ்போனே அலறு, ஏனென்றால் ஆயி பாழாக்கடிக்கப்பட்டது, ரபாவின் குமாரத்திகளே கூப்பிடுங்கள், இரட்டை உடுத்திக்கொண்டு புலம்பி வேலிகளிற் சுற்றித்திரியுங்கள், ஏனெனில் மல்காம் * சிறையிருப்பிலே போகிறது அதின் ஆசாரியர்களும் அதின் பிரபுக்களுங் கூடத்தானே. ௪௮, ௭.

௪ எனக்கு விரோதமாய் வருபவனார் என்று சொல்லி உன் பொக்கிஷங்களை நம்பின மாறுபாடான குமாரத்தியே, நீ பள்ளத்தாக்குகளைப் பற்றிப் பெருமை பாராட்டுவானேன்? உன்னுடைய பள்ளத்தாக்குகளை நதிபோகிறது.

௫ இதோ உன் சுற்றுப்புறத்தாரால் எல்லாம் உன்மேலே திகிலை வரப்பண்ணுவேனென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார் நீங்கள் அவரவர் தன் தன் முன்னிருக்கும் வழியே ஓடத் துரத்தப்படுவீர்கள், வலசை வருகிறவர்களைச் சேர்ப்பாருமில்லை.

௬ * அதற்குப் பிற்பாடோவென்றால் அம்மோன்புத்திரருடைய சிறையிருப்பைத் திருப்புவேனென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௪௮, ௪௭.

௭ * ஏதோமுக்குச் சொல்லுது சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, தேமானிலே இன்ஞானமில்லையோ ஆலோசனை உணர்வுள்ளவர்களை விட்டழிந்ததோ அவர்களுடைய ஞானங் கெட்டுப்போயிற்றோ. * எசேக். ௨௫, ௰௨. ௰௪ ௩௫. ௧ முதல் ஒபதி ௧. வசனமுதல்.

௮ * தேதானின் குடிகளே ஓடுங்கள், முதுகைக்காட்டுங்கள், தங்குகிறதற்காக ஆழங்களிற் பதுங்குங்கள், ஏனென்றால் ஏசாவின் ஆபத்தையும் அவனை விசாரிக்குங் காலத்தையும் அவன்மேல் வரப்பண்ணுவேன்.

௯ திராட்சப்பழங்களை அறுக்கிறவர்கள் உன்னிடத்திலே வந்தார்களானால் பின்னறுவடைகொள்ளச் சமையார்களோ, இராத்திரியில் திருடர் வந்தார்களானால் தங்களுக்குப் போதுமென்றமட்டாகவல்லோ கேடு செய்வார்கள்.

௰ நானோவென்றால் ஏசாவைத் திறப்பாக்கி அவன் ஒளித்துக்கொள்ளக் கூடாதபடிக்கு அவனுடைய மறைவுகளை வெளியாக்கிப்போடுவேன், அவனுடைய வித்தாயிருக்கிறவர்களும் அவனுடைய சகோதரரும் அவனுடைய அயலாரும் பாழாக்கடிக்கப்படுவார்கள். அவனுமில்லை.

௰௧ திக்கற்றிருக்கப்போகிற உன் பிள்ளைகளைத் தள்ளிவிடு, நான் அவைகளை உயிரோடே காப்பாற்றுவேன், உன் விதவைகள் நம்மையே நம்புவார்களாக.

௰௨ ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ * பாத்திரத்திற் குடிக்கவேண்டுமென்ற நியாயத்தீர்ப்புக்குள்ளாயிராதவர்கள் அதிற் குடிக்கவே குடித்தார்கள், நீ முற்றுமற்று நீங்கலாயிருப்பவனோ? நீங்கலாயிராமல் அதிற் குடிக்கவே குடிப்பாய்.

* ௨௫, அதி. ௨௯. ௧ பேது. ௪, ௰௭.

௰௩ ஏனெனில் * போத்ஸ்றாவும் திகைப்பும் நிந்தையும் அவாந்தரையும் பழிப்புமாயிருக்குமென்றும் அதின் பட்டணங்களெல்லாம் நித்திய வனாந்தரங்களாயிருக்குமென்றும் நம்மைக்கொண்டு ஆணையிட்டேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

* ஏசாயா. ௩௪, ௬. ௬௩, அதி. ௧. எசேக்கி. ௩௫, ௬.

௰௪ * நீங்கள் கூடிக்கொண்டு அதுக்கு விரோதமாக வந்து யுத்தம்பண்ணும்படிக்கு எழும்புங்களென்று சொல்லச் சாதிகளிடைக்குத் தூதனொருவன் அனுப்பப்படுகிற செய்தியைக் கர்த்தரிடத்திலே கேள்விப்பட்டேன். * ஒபதி ௧. வசனம்.

௰௫ ஏனெனில் இதோ உன்னைச் சாதிகளுக்குள்ளே சிறியதும் மனுஷருக்குள்ளே அசட்டைபண்ணப்பட்டதுமாக்குவேனென்கிறார்.

௰௬ கன்மலை வெடிப்புகளில் வாசம்பண்ணி மேடுகளின் உயரத்தைப் பிடித்திருக்கிற உன்னை உன்னுடைய பயங்கரநிலையும் உன் இருதயத்தின் அகந்தையும் மோசம்போக

கிறது. * நீ கழுகைப்போல உயரத்திலே உன் கூண்டைக் கட்டினாலும் அங்கேயிருந்து உன்னை விழப்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார். ஒப. ௪. வசனம்.

௰௭ அப்படியே ஏதோம் கெடியாகவிருக்கும், *அதைக் கடந்துபோகிறவனெல்லாம் அதினுடைய எல்லா வாதைகளினிமித்தம் பிரமித்துச் சற்போடுவான்.

* ௫௰, அதி. ௰௩.

௰௮ * சோதோமும் கொமோறாவும் அவைகளின் அயலூர்களும் கவிழ்க்கப்பட்டதுக்குச் சமானமாயிருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார் அங்கே யொருவனுங் குடியிருப்பதில்லை, அதிலொரு மனுஷன் தங்குவதுமில்லை. * ௫௰, ௪௰. ௧ மோ. ௰௯. ௨௫.

௰௯ * இதோ புரண்டோடுகிற யோர்தானிடத்திலிருந்து சிங்கத்தைப்போலே பலவானுடைய தாபரத்துக்கு விரோதமாக வருகிறான், ஏனென்றால் அவனை அங்கேயிருந்து அகப்பிலே ஓடிவரப்பண்ணுவேன், நான் அதுக்கு விரோதமாகக் கட்டளையிட்டனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்டவனார்? என்னைப்போல நமக்குச் சமானமானவனார்? நமக்குத் திட்டஞ்சொல்பவனார்? நமக்கு முன்பாக நிலைநிற்கப்போகிற மேய்ப்பனார்?

* ௫௰, அதி. ௪௪—௪௬.

௨௰ ஆகையாலே கர்த்தர் ஏதோமுக்கு விரோதமாக யோசித்த ஆலோசனையையும் அவர் தேமானின் குடிகளுக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையுங் கேளுங்கள், மெய்யாகவே மந்தையிற்சிறியவர்கள் அவர்களை யிழுத்துப்போடுவார்கள், மெய்யாகவே அவர்களிருக்கிற அவர்களுடைய தாபரங்களைப் பாழாக்குவார்.

௨௰௧ அவைகளுடைய விழுகிறதினுடைய சத்தத்தினாலே பூமியதிரும், கூப்பிடுதலின் சத்தம் நாணற்கடல்மட்டுங் கேட்கப்படும்.

௨௰௨ இதோ ஒரு கழுகைப்போலெழும்பிப் பறந்துவந்து தன் செட்டைகளைப் போஸ்றாவின் மேல் விரிப்பான் அந்நாளிலே ஏதோமுடைய பராக்கிரமசாலிகளின் இருதயம் * வாதைப்படுகிற ஸ்திரியின் இருதயத்தைப்போலிருக்குமென்கிறார்.

* ௫௰, அதி. ௪௩.

௨௰௩ * தமஸ்குவுக்குச் சொல்லுவதுகாமாத்தும் அர்ப்பாத்தும் வெட்கப்படுகிறது, பொல்லாத செய்தியை யவர்கள் கேட்டபடியினாலே கரைந்துபோகிறார்கள், சமுத்திரத்தோரமாய் விசாரமுண்டு அது அமர்ந்திருக்கக்கூடாது * ஏசா. ௰௭, ௧. ஆமோ. ௧. ௩.

௨௰௪ தமஸ்குதளர்ந்து, ஓடிப்போகும்படி கமுகத்தைக்காட்டும் நடுக்கம் அதைப்பிடித்தது பிள்ளைப்பெறுகிறவளைப்போலிருக்கமும் மவேதனைகளும் அதைப்பிடித்தது.

௨௰௫ என்னுடைய சந்தோஷமான ஊராகிய அந்தப்புகழ்ச்சியுள்ள பட்டணந்தப்பவிடப்படாமற்போனதெப்படி.

௨௰௬ ஆனதுகொண்டு அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுந்து யுத்தமனுஷரெல்லாம் அந்நாளிலே சங்காரமாவார்களென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௨௰௭ தமஸ்குவின் மதில்களில் அக்கினியை கொளுத்துவேன் அது பெனாதாதின் அரணமனைகளைப் பட்சிக்குமென்கிறார்.

௨௰௮ பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் முறியடித்த கேதாருக்குங்காத்சோருடைய இராச்சியத்துக்கும் சொல்லுவது, கர்த்தர் சொல்லுகிறதாவது, எழும்பி கேதாருக்கு விரோதமாகப்போயேறக்கிழக்குத்திப்புத்திரரைப் பாழாக்கடியுங்கள்.

௨௰௯ அவர்களுடைய கூடாரங்களையும் அவர்கள் மந்தைகளையும் வாங்கி அவர்கள் திரைகளையும் அவர்களுடைய எல்லாத்தட்டுமுட்டுகளையும் அவர்களுடைய ஒட்டகங்களையுந் தங்களுக்கென்று கொண்டுபோய்ப் பயஞ்சூழ்ந்திருக்குமென்று சொல்லி அவர்கள் பேரிலே ஆர்ப்பரிப்பார்கள்.

௩௰ காத்சோரின் குடிகளே, ஓடி மிகவும் அலையுங்கள், தங்கும்படிக்கு ஆழங்களிற் பதுங்குங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனென்றால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் உங்களுக்கு விரோதமாக ஆலோசனையை யோசித்து உங்களுக்கு விரோதமாக நினைவுகளை நினைத்திருக்கிறான்.

௩௰௧ அசுசாமுற சாங்கோபாங்கத்தோடே குடியிருக்கிற சாதிக்கு விரோதமாக எழும்பிப்போய் ஏறுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், அதுக்கு வாசல்களுமில்லை தாழ்ப்பாள்களுமில்லை, அவர் தனியாயத் தங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

௩௰௨ அவர்களுடைய ஒட்டகங்கள் கொள்ளையும் அவர்களுடைய ஆடுமாடுகளின் ஏராளங் கொள்ளையுமாய்ப்போகும், நான் அவர்களைச் சகலகாற்றுத்திசைகளுமான கடையாந்தர மூலைகளிலிருக்கிறவர்களண்டைக்குச் சிதறவடித்துவிட்டு அதினுடைய சகலபுறங்களிலுமிருந்து அவர்களுடைய ஆபத்தை வரப்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௰௩ காத்சோர் வலுவான சர்ப்பங்களின் தாபரமாகி என்றென்றைக்கும் பாழாய்க் கிடக்கும், ஒருவனும் அங்கே குடியிருப்பதில்லை, ஒரு மனுஷபுத்திரனும் அதிலே தங்குவதுமில்லையென்கிறார்.

௩௰௪ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவினுடைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே ஏலாமுக்கு விரோதமாக எரேமியாவென்ற தீர்க்கதரிசிக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௩௫ சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ நாம் ஏலாமுடைய வில்லென்கிற அவர்களுடைய பிரதான வல்லமையை முறித்துப்போட்டு,

௩௬ வானத்தின் நாலு திசைகளிலிருந்து நாலு காற்றுகளை ஏலாமின்மேல் வரப்பண்ணி அவர்களை இந்த எல்லாக் காற்றுத்திசைகளிலும் சிதறடிப்போம், ஏலாமுடைய தேசத்திலிருந்து துரத்துண்டவர்கள் வராத ஜாதியில்லை.

௩௭ நாம் ஏலாமியரை அவர்கள் சத்துருக்களுக்கு முன்பாகவும் அவர்கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களுக்கு முன்பாகவும் கலங்கப்பண்ணி நமது கோபத்தின் உக்கிரமாகிய தீங்கை அவர்கள்மேல் வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், நாம் அவர்களை நிர்மூலமாக்குமட்டும் பட்டயத்தை அவர்களுக்குப் பின்னாக அனுப்பி,

௩௮ நம்முடைய ஆசனத்தை ஏலாமிலே வைத்து அங்கேயிருந்து இராசாவையும் பிரபுக்களையும் அழித்துப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௯ ஆனாலும் * கடைசிநாட்களிலே நாம் ஏலாமின் சிறையிருப்பைத் திருப்புவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

* ௪௮, அதி. ௪௭.

## ௫௰. அதிகாரம்.

[பாபேலின் அழிவும் இஸ்ரவேலின் மீட்பும் முன்னறிவிக்கப்பட்ட தீர்க்கதரிசனம்.]

கர்த்தர் தீர்க்கதரிசியாகிய எரேமியாவைக்கொண்டு * பாபேலுக்குங் கல்தேயர்தேசத்துக்கும் விரோதமாக உரைத்த வசனமாவது. * ௫௧, ௧. ழு ஏசா. ௰௩ ௧. ழு ௰௪, ௧. ழு

௨ பாபேல் பிடிபட்டது, பேல் வெட்கப்பட்டது, மெரோதாக் கலங்கிப்போயிற்று, அவர்களுடைய விக்கிரகங்கள் வெட்கப்பட்டது, அவர்களுடைய நரகலான தேவர்கள் கலங்கிப்போயிற்றென்று ஜாதிகளுக்குள்ளே அறிவித்துக் கேட்கப்பண்ணுங்கள், அதை மறைக்காமல் கொடியேற்றிக் கேட்கப்பண்ணுங்கள்.

௩ ஏனென்றால் அதுக்கு விரோதமாய் வடக்கேயிருந்து ஒரு ஜாதி போயேறுகிறது, இது அதின் தேசத்தைப் பாழாக்கிப்போடும், அதிலே குடியிருப்பாரில்லை, மனுஷரோடே மிருகங்களும் ஓடிப்போய்விடும்.

௪ அந்நாட்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேல் புத்திரர் வருவார்கள், அவர்களும் யூதாபுத்திரரும் ஏகமாய் * அழுது நடந்துவந்து தங்கள் பராபரனாகிய கர்த்தரைத் தேடுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௩௧, அதி. ௯.

௫ மறக்கப்படாத நித்திய உடன்படிக்கையாய்க் கர்த்தரைச் சேர்ந்துகொள்வோம் வாருங்களென்று இவ்விடத்துக்கு முகங்களைத் திருப்பினவர்களாயிருந்து சீயோனுக்குப் போகிற வழியேதென்று விசாரித்துக் கேட்பார்கள்.

௬ நமது ஜனங்கள் காணாமற்போன ஆடுகளானவர்கள், அவர்களுடைய மேய்ப்பர் அவர்களைச் சிதறப்பண்ணிப் பருவதங்களில் அலையத்திருப்பிவிட்டார்கள். ஒரு பருவதத்திலிருந்து மறுமேட்டின்மேற் போனார்கள். தங்கள் தொழுவத்தை மறந்துவிட்டார்கள்.

௭ அவர்களைக் கண்டுபிடித்தவர்களெல்லாம் அவர்களைப் பட்சித்தது அவர்களுடைய சத்துருக்கள் எங்கள்மேற் குற்றமில்லை, ஏனென்றால் அவர்கள் நீதியின் வாசஸ்தலத்திலே கர்த்தருக்கு விரோதமாய்த் தங்கள் பிதாக்கள் நம்பின கர்த்தருக்கு விரோதமாய்த்தானே பாவஞ்செய்தார்களென்றார்கள்.

௮ * பாபேலின் நடுவிலிருந்தோடிக் கல்தேயர் தேசத்தைவிட்டுப் புறப்பட்டு மந்தையின் முன் நடக்குங் கடாய்களைப்போலிருங்கள். * ௫௧. அதி. ௬. ௪௫.

௯ ஏனென்றால் இதோ நாம் பாபேலுக்கு விரோதமாக வடதேசத்திலிருந்து பெரிய ஜாதிகளின் கூட்டத்தை எழுப்பி அதைப் போயேறப்பண்ணுவோம், அவர்கள் அதுக்கு விரோதமாய் ஆயத்தம்பண்ணுவார்கள், அங்கேயிருந்து வருகிறவர்களால் அது பிடிக்கப்படும், அவர்களுடைய அம்புகள் உணர்வுள்ள பராக்கிரமசாலியின் அம்புகளைப்போலிருக்கிறது, அவைகள் பழுதாய்த் திரும்புவதில்லை.

௰ கல்தேயர் கொள்ளையாம், அதைக் கொள்ளையிடுகிறவர்களெல்லாரும் பரிபூரணமடைவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ அதேனென்றால் நமது சுதந்தரத்தைக் கொள்ளையிட்ட நீங்கள் சந்தோஷித்தீர்களே, களிகூர்ந்தீர்களே, கொழுத்திருக்குங் கன்றுக்குட்டியைப்போலப் பூரித்து வலுவான பாவிகளைப்போலக் கனைப்பீர்களே.

௰௨ உங்கள் தாயும் மிகவும் வெட்கி உங்களைப் பெற்றவள் நாணமடைகிறாள், இதோ அவள் ஜாதிகளுக்குள்ளே கடைசியானவளும் வனாந்தரமும் வறட்சியும் அந்தரவெளியுமாம்.

௰௩ கர்த்தரின் கடுமையினாலே அது * குடியற்றதும் முழுதும் பாழுமாயிருக்கும், பாபேலைக் கடந்துபோகிறவனெல்லாம் அதினுடைய எல்லா வாதைகளினிமித்தமும் பிரமித்து ஈசற்போடுவான்.

* ௪௯, அதி. ௰௭.

௰௪ வில்லை நாணேற்றுகிற நீங்களெல்லாரும் பாபேலுக்கு விரோதமாகச் சுற்றிலும் பவுஞ்கட்டு அதிலேயுங்கள் அம்புச்செல்லைக் குறைக்காதேயுங்கள் ஏனென்றால் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தது,

௰௫ அதுக்கு விரோதமாகச் சுற்றிலும் ஆர்ப்பரியுங்கள், அது தன்னைக் கையளித்தது, அதின் அஸ்திவாரங்கள் விழுந்தது, அதின் மதில்கள் இடிக்கப்பட்டது, ஏனெனில் இது கர்த்தர் நீதியைச் சரிக்கட்டுதலாயிருக்கிறது, அதுக்கு நீதியைச் சரிக்கட்டுங்கள், * அது செய்ததுபோலே நீங்கள் அதுக்குச் செய்யுங்கள். * அறி. ௰௮, ௬.

௰௬ விதைவிதைக்கிறவனையும் அறுப்புக்காலத்தில் அரிவாளைப் பிடிக்கிறவனையும் பாபேலிலிராதபடிக்குச் சங்காரம் பண்ணுங்கள் அழிக்கிறபட்டையத்துக்குத் தப்ப * அவரவர் தங்கள் சனத்தண்டைக்குத் திரும்பிக்கொண்டு அவரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள் * ௪௬, அதி. ௰௬.

௰௭ இஸ்ரவேல் சிங்கங்கள் துரத்திச் சிதறுண்ட ஆடு முதல் அசூரியாவின் இராசா அதைப்பட்சித்தான், பிற்பாடு கடைசியிலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் அதின் எலும்புகளை முறித்தான்.

௰௮ ஆகையால் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ நாம் அசூரியாவின் இராசாவை விசாரித்ததுபோலே பாபேலின் இராசாவையும் அவன் தேசத்தையும் விசாரித்து,

௰௯ இஸ்ரவேலையதின் வாசஸ்தலத்துக்குத் திரும்பிவரப்பண்ணுவோம், அப்போது அது கர்மேலிலும் பாசானிலும் மேயும், எப்பிராயீமின் மலைகளிலுங் கிலேயாத்திலும் அதின் ஆத்துமா திருத்தியடையும்.

௨௰ அந்நாட்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேலின் அக்கிரமந் தேடப்பட்டால் அதில்லாதிருக்கும், யூதாவின் பாவங்கள் தேடப்பட்டால் அவைகள் கிடையாதிருக்கும், ஏனென்றால் நாம் மீதியாக வைக்கிறவர்களுக்கு மன்னிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௧ கலகங்களுள்ள தேசத்துக்கு விரோதமாகவும் விசாரிக்கப்படுங் குடிகளுக்கு விரோதமாகவும் போயேறு, நீ அவர்களைத் துரத்துகையில் யாவையும் பாழ்க்கடித்துச் சங்காரம்பண்ணி நாம் உனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்யென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௨ தேசத்திலே யுத்தத்தின் சத்தமும் மகா நொறுக்குதலுமுண்டு.

௨௩ பூமியனைத்தின் சம்மட்டியெத்தனையாய் முறிந்துடைக்கப்பட்டது, பாபேலின் சாதிகளுக்குள்ளே எத்தனையாய்ப் பாழானது? * ௫௧, அதி. ௨௰.

௨௪ பாபேலே உனக்குக் கண்ணியை வைத்தோம், நீயதையறியாமல் அதிலே சிக்குண்டும் போனாய், நீ கண்டுபிடிபட்டும் போனாய், ஏனென்றால் கர்த்தரோடே யுத்தங்கலந்தாய்.

௨௫ கர்த்தர் தம்முடைய ஆயுதசாலையைத் திறந்து தம்முடைய சினத்தின் பணிமுட்டுகளையெடுத்து வந்தார், ஏனெனில் இது கல்தேயர் தேசத்திலே சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் செய்கிற கிரியை.

௨௬ கடையாந்தரத்திலிருந்து அதுக்கு விரோதமாக வந்து அதின் களஞ்சியங்களைத் திறந்து அதைப் போர்களைப்போலே பரப்பி அடித்து அதிலொன்றும் மீதியாகாதபடிக்கு அதைச் சங்காரம்பண்ணுங்கள்

௨௭ அதின் காளைகளையெல்லாம் பட்டையத்தால் வெட்டுங்கள், அவைகள் அடிக்கப்பட இறங்கிப்போகக்கடவது, அவர்களுக்கு ஐயோ ஏனெனில் அவர்கள் விசாரிக்கப்படும் அவர்களுடைய நாள் வந்தது.

௨௮ நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டினதையும், அவர் தமது தேவாலயத்துக்காக நீதியைச் சரிக்கட்டினதையுஞ் சீயோனிலே அறிவிக்கும்படிக்குப் பாபேல் தேசத்திலிருந்து ஓடித்தப்பி வந்தவர்களின் சத்தங் கேட்கப்படும்.

௨௯ எய்கிற எல்லா விற்காரருமாகிய நீங்கள் பாபேலுக்கு விரோதமாகச் சத்தங் கேட்கப்பண்ணுங்கள், ஒருவருந் தப்பிப் போகாதபடிக்கு அதற்கு விரோதமாகச் சுற்றிலும் பாளயமிறங்குங்கள், அதின் கிரியைக்குத்தக்க பலனை அதற்குச் சரிக்கட்டுங்கள், * அது செய்ததின்படியெல்லாம் அதற்குச் செய்யுங்கள், ஏனென்றால் கர்த்தருக்கு விரோதமாக இடும்பு செய்தது, இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோதமாகத்தானே. * சங்கீ. ௱௩௭, ௮.

௩௰ ஆகையால் அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுவார்கள், அதின் யுத்த மனுஷரெல்லாரும் அந்நாளிலே சங்காரமாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௧ இதோ, இடும்புள்ளவனே, நாமுனக்கு விரோதமாக வருகிறோமென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், ஏனெனில் உன்னை விசாரிக்குங் காலமாகிய உன்னுடைய நாள் வந்தது.

௩௨ இடும்புள்ளவன் இடறிவிழுவான், அவனையெடுத்து நிறுத்துவாரில்லை, நாம் அவன் பட்டணங்களில் அக்கினியைக் கொளுத்துவோம், அது அவன் சுற்றுப்புறத்தாரையெல்லாம் பட்சிக்கும்.

௩௩ சேனைகளையுடைய கர்த்தர்சொலலுகிறதாவது, இஸரவேலபுத்திரரும யூதாபுத்திரரும ஏகமாய ஒடுங்குணடார்கள, அவர்களைச்சிறையாக்கினயாவரும அவர்களைவிடமாட்டோமெனறு கெட்டியாயப்பிடித்தார்கள.

௩௪ அவர்களுடைய மீட்பரோவெனில வலலமையுளளவர், சேனைகளையுடையகர்த்தரெனபது அவருடைய நாமம,தேசத்தை யிளைபபாறபபணணுவதறகும பாபேலின குடிகளைத்தத்தளிககபபணணுவதற்குமாக அவர்களுடையவழக்கை அவர் வழக்காடவேவழக்காடுவார்.

௩௫ படடயமகல்தேயரினமேலுமபாபேலுடையகுடிகளினமேலும அதனுடையபிரபுக்களினமேலும அதினுடையஞானிகளினமேலும வருமெனறு கர்த்தர்சொலலுகிறார்.

௩௬ படடயமகடடுக்கதைக்காரர்மேலும்வரும, அவர்கள பயித்தியக்காரராவார்கள, படடயம அதினுடையபராக்கிரமசாலிகளமேலவரும, அவர்களகலங்குவார்கள.

௩௭ படடயம அதினுடையகுதிரைகளினமேலும அதினுடையஇரதங்களினமேலும அதின் நடுவிலிருக்கிறபலவிதசனக்கலப்பினதினமேலும்வரும, அவர்களபெணசாதிகளாவார்கள படடயம அதினுடையபொக்கிஷங்களினமேலுமவரும, அவைகளகொளளையாம.

௩௮ வறட்சி அதினுடையதணணீர்களினமேலவரும, அவைகளவறணடுபோம, ஏனெனில அதுசுருபங்களினதேசம, அருக்களிப்பானவைகளினபேரிலே பெருமைபாராடடுகிறார்கள.

௩௯ ஆகையால * வனாந்தரசீவனகளும நரிகளும அதிலேகுடியிருக்குங்கோட்டான்களும அதிலேதங்கும, இனியென்றென்றைக்கும அதுகுடியேறறபபடுவதிலலை, தலைமுறைதலைமுறையாக ஒருவரும அதிலேதாபரிபபதுமிலலை, * ஏசாயா. ௰௩, ௨௧. ௨௨. அறிவிபபு. ௰௮, ௨.

௪௰ * பராபரன சோதோமையுங்கொமோராவையும அதின அசலூர்களையுங் கீழதமேலதாககபபோடடதுபோலே யிருக்குமெனறு கர்த்தர்சொலலுகிறார். ஒருவரும அதிலேகுடியிருபபதிலலை, ஒரு மனுபுத்திரனும அதிலேதங்குவதுமிலலை. * ௪௯, ௰௮.

௪௧ இதோ, * வடக்கேயிருந்துசனசதனமும பெரியசாதியும வரும, பூமியின பக்கங்களிலிருந்துபலத்த இராசாக்கள எழுமபுவார்கள. * ௬. வசனம.

௪௨ அவர்களவிலலுகளையும ஈடடிகளையும பிடித்துவருவார்கள, அவர்கள இரக்கமறறகொடூரராயிருபபார்கள, அவர்களசத்தம சமுத்திரத்தைப்போலிரையும பாபேலகுமாரத்தியே, அவர்கள உனக்குவிரோதமாக யுத்தத்துக்காயத்தபபடட ஆட்களாயக் குதிரைகளினமேலேறிவருவார்கள,

௪௩ அவர்களவருகிறசெயதியைபபாபேலின இராசாகேட்கையில அவனகைகளதளரும, இக்கடடும பிளளைபபெறுகிறவளைப்போல வாதையும அவனைபபிடிக்கும.

௪௪ * இதோ, புரணடோடுகிற யோர்தானிலிருந்து சிங்கத்தைப்போலே பலவானுடைய தாபரத்துக்குவிரோதமாகவருகிறான. ஏனென்றால அவனையங்கேயிருந்து அசுபபிலே ஒடிவரபபணணுவேோம, நாம அதறகுவிரோதமாகக் கட்டளையிடடனுப்பத்தெரிந்துகொளளபபடடவனார், ஏனெனில நமககுச்சமானமானவனார், நமககுத்திட்டஞ்சொலபவனார் நமககுமுனபாகநிறகபபோகிறமேயப்பனார்! * ௪௯, ௰௯—௨௧.

௪௫ ஆகையாற கர்த்தர் பாபேலுக்குவிரோதமாகயோசித்த ஆலோசனையும அவர் கலதேயர்தேசத்துக்குவிரோதமாக நினைத்திருக்கிறநினைவுகளையுங்கேளுங்கள, மெய்யாகவே மந்தையிறசிறியவர்கள அவர்களையிழுத்தெழுபபார்கள, மெய்யாகவே அவர்களமேலிருக்கிற தாபரங்களைப்பாழாக்குவார்.

௪௬ பாபேல பிடிபடடதினசத்தத்தினாறபூமியதிரும, அதின கூபபிடுதலசாதிகளுக்குளளே கேட்கபபடும.

## ௫௧. அதிகாரம்.

[அபபாலும பாபேலுடைய அழிவினதீர்க்கதரிசனமும அதினதிடடபபடுத்தலும.]

கர்த்தர்சொலலுகிறதாவது, இதோ நாமபாபேலுக்கு விரோதமாகவும, நமக்குவிரோதமாய எழுமபுகிறவர்களின நடுமையத்திறகுடியிருக்கிறவர்களுக்கு விரோதமாகவுங் கேடுளளகாறறையெழுமபப்பணணி,

௨ தூறறுவாரைப பாபேலுககனுபபுவோம, அவர்கள அதைத்தூறறி வெறுமையாக்கிபபோடுவார்கள, ஏனெனிலதீங்கின் நாளிலே அதறகுவிரோதமாயச் சூழந்துகொணடிருபபார்கள.

௩ நாணேறறுகிறவனுக்கு விரோதமாகவுந்தனசீரவில மனமேடடிமையானவனுக்கு விரோதமாகவும விறகாரனதனவிலலை நாணேறறக்கடவான, அதினவாலிபரைத்தபபவிடாமல அதினசேனையையெலலாஞ் சங்காரமபணணுங்கள.

௪ கலதேயரின தேசத்திறகொலைசெயயபபடடவர்களுமாய அதின வீதிகளிறகுத்திபபோடபபடடவர்களுமாய விழுவார்கள.

௫ ஏனெனில் இஸ்ரவேலும் யூதாவுந் தங்கள்தேசம் இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு முன்பாகச் குற்றங்களால் நிறைந்தபடியினால் உட்பட்ட * விதவையிருப்பிலே சேனைகளின் கர்த்தராகிய தங்கள் பராபரனாலே கைவிடப்படுவதில்லை. * ஏசா. ௫௪, ௬.

௬ * நீங்கள் பாபேலின் அக்கிரமத்திலே சங்காரமாகாதபடிக்கு அதின் நடுவிலிருந்தோடி அவரவர் தங்கள் ஆத்துமாவைத் தப்புவியுங்கள், ஏனெனில் இது † கர்த்தர் அதற்கு நீதியைச் சரிக்கட்டுகிற காலமாயிருக்கிறது, அவர் அதற்குப் பதில் செலுத்துவார். * ௫௰, அ. அறிவி. ௰அ, ௪. † ஏசா ௩௪. அ.

௭ கர்த்தருடைய கையிலே பாபேல் பூமியனைத்தையும் வெறிக்கப்பண்ணின பொற்பாத்திரமாயிருந்தது, அதின் மதுபானத்திலே சாதிகள் குடித்தார்கள், ஆகையாலே சாதிகள் மதிகெட்டுப்போனார்கள்.

௮ * அசுப்பிலே பாபேல் விழுந்து தகர்ந்தது, அதற்காக அலறுங்கள், அதின் நோவையாற்றப் பிசின் தயிலத்தை வாங்குங்கள், ஒருவேளை குணமாம். * அறிவி ௰அ, உ.

௯ பாபேலைக் குணமாகும்படிக்குப் பார்த்தோம் அது குணமானதில்லை, அதைவிட்டுவிடுங்கள், நாம் அவரவர் நம்முடைய தேசங்களுக்குப் போகக்கடவோம், ஏனெனில் * அதின் ஆக்கினை வானமட்டும் எட்டி ஆகாயமண்டலங்கள் பரியந்தம் எறிப்போயிற்று. * அறிவி. ௰அ, ௫.

௰ கர்த்தர் * நம்முடைய நீதியை வெளிப்படுத்தினார், நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் செய்கையைச் சீயோனிலே விவரிப்போம் வாருங்கள். * சங். ௩௭, ௬.

௰௧ அம்புகளைத் துலக்குங்கள், கேடயங்களை நன்றாய்ச் செப்பனிடுங்கள், கர்த்தர் மேதியாவுடைய இராசாக்களின் ஆவியை எழுப்பினார், ஏனெனில் அவருடைய நினைவு பாபேலுக்கு விரோதமாய் அதையழிப்பதற்கிருக்கிறது, அதேதென்றால் இது கர்த்தர் சரிக்கட்டுகிற நீதி, இது தமதும் தேவாலயத்துக்காக அவர் சரிக்கட்டுகிற நீதிதானே. * ௫௰, உஅ.

௰௨ பாபேலுடைய மதில்களின்மேல் கொடியேற்றுங்கள், காவலைப் பலப்படுத்துங்கள், சாமங்காக்கிறவர்களை நிறுத்துங்கள், பதிவிருப்பாளையுங்கள், ஆனால் கர்த்தர் எப்படி நினைத்தாரோ அப்படியே தாம் பாபேலின் குடிகளுக்கு விரோதமாகச் சொன்னதைச் செய்வார்.

௰௩ * திரளான தண்ணீர்களின்மேல் வாசம்பண்ணுகிறவளே, பொக்கிஷங்கள் பெருத்தவளே, உன் முடிவும் உன் பொருளாசைக்கு ஒழிவும் வந்தது. * அறிவி. ௰௭, ௧.

௰௪ மெய்யாகவே பச்சைக்கிளிகளைத்தனை மனுஷரால் உன்னை நிரம்பப்பண்ணுவோம், அவர்கள் உன்பேரிலே ஆர்ப்பரிப்பாகப் பாடுவார்களென்று சேனைகளின் கர்த்தர் தம்முடைய சீவனைக்கொண்டாணையிட்டார்.

௰௫ * பூமியைத் தமது பலத்தினால் உண்டாக்கிப் பூச்சக்கரத்தைத் தமது ஞானத்தாற் படைத்துவானத்தைத் தமது உணர்வினால் விரித்தவர் அவர்தானே. * ௰, அத. ௰உ.

௰௬ * அவர் சத்தமிடுகையில் திரளான தண்ணீர் வானத்திலுண்டாகிறது, அவர் பூமியின் தலைவுகளிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி மழையுடனே மின்னல்களையுண்டாக்கிக் காற்றைத் தமது பண்டகசாலையிலிருந்தே விடுகிறார். * ௰, அதி. ௰௩.

௰௭ * மனுஷரனைவர் அறிவில்லாமல் மிருகக்குணமானார்கள், தட்டாரனைவர் சுரூபங்களாலே வெட்கிப்போகிறார்கள், ஏனெனில் அவர்கள் வார்ப்பித்தது பொய், அவைகளில் ஆவியில்லை. * ௰, ௰௪. ௰௫.

௰௮ அவைகள் மாடையும் மகா சேஷ்டையுமான கிரியையுமாயிருக்கிறது, அவைகள் விசாரிக்கப்படும் நாளிலே அழியும்.

௰௯ * யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்போல அல்ல, ஏனெனில் அவர் சர்வத்தையும் உண்டாக்கினவர், அவன் அவருடைய சுதந்தரமான கோத்திரம், சேனைகளையுடைய கர்த்தரென்பது அவருடைய நாமம். * ௰, அதி. ௰௬.

உ௰ நீ நமக்குச் * சம்மட்டியும் யுத்த ஆயுதமுமானவன், நானுன்னைக்கொண்டு சாதிகளை நொறுக்கி உன்னைக்கொண்டு இராச்சியங்களை யழித்துப்போட்டு, * ஏசா அதி. உ௬.

உ௧ உன்னைக்கொண்டு குதிரையையும் அதின்மேலேறியிருக்கிறவனையும் நொறுக்கி உன்னைக்கொண்டு இரதத்தையும் அதின்மேலேறியிருக்கிறவனையும் நொறுக்கி,

உ௨ உன்னைக்கொண்டு புருஷனையும் ஸ்திரியையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு கிழவனையும் இளைஞனையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு வாலிபனையுங் கன்னியாஸ்திரியையும் நொறுக்கி,

உ௩ உன்னைக்கொண்டு மேய்ப்பனையும் அவனுடைய மந்தையையும் நொறுக்கி உன்னைக்கொண்டு உழுகிறவனையும் அவனுடைய ஏர்க்குண்டையையும் நொறுக்கி உன்னைக்கொண்டு தலைவனையும் அதிகாரியையும் நொறுக்கிப்போடுகிறேன்.

உ௪ ஆனாற் பாபேலுக்குங் கல்தேயர்தேசத்திலுடைய சகல குடிகளுக்கும் நாம் அவர்கள் உங்கள் கண்களுக்கு முன்பாக * சீயோனிலே பண்ணின அவர்களுடைய எல்லாப் பொல்லாப்பையுஞ் சரிக்குச் சரிக்கட்டுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௫௰, அதி. உ௯.

௨௫ இதோ பூமியெல்லாவற்றையும் கெடுக்கிற கேடான பருவதமே, நான் உனக்கு விரோதமாக வந்து என் கையை யுனக்கு விரோதமாக நீட்டி உன்னைக் கன்மலைகளிலிருந்து உருட்டி உன்னை வெந்த பருவதமாக்கிப்போடுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬ மூலைக்கல்லையாகிலும் அஸ்திபாரங்களைப்போடுகிறகல்லையாகிலும் உன்னிலெடுக்கமாட்டார்கள், நீ என்னைக்கும் பாழாய்க்கிடக்கிற ஸ்தலமாவாயென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭ தேசத்திலே கொடியேற்றுங்கள், சாதிகளுக்குள் எக்காளமூதுங்கள், சாதிகளை யதற்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கள், ஆராராத், மின்னி, அஸ்கேனாஸ், என்ற இராச்சியங்களை யதற்கு விரோதமாக வரக்கூப்பிடுங்கள், தளகர்த்தனை யதற்கு விரோதமாகப் பட்டங்கட்டுங்கள், சிறகடிக்கும் வண்டுகளுக்குச்சாயலாகக் குதிரைகளைப் போய் ஏறப்பண்ணுங்கள்.

௨௮ மேதியாதேசத்தின் இராசாக்களும் அதின் தலைவரும் அதினுடையசகல அதிகாரிகளும் அவரவருடைய இராச்சியபாரத்துக்குக்கீழான சகலதேசத்தாருமாகிய சாதிகளை யதற்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கள்.

௨௯ அப்போது தேசம் அதிர்ந்து வாதைப்படும், ஏனென்றால் பாபேலின் தேசத்தைக் குடியில்லாதபடியாகப் பாழாக்கும்படிக்குப் பாபேலுக்கு விரோதமாய்க் கர்த்தர் நினைத்தவைகள் நிலைக்கும்.

௩௰ பாபேலின் பராக்கிரமசாலிகள் யுத்தம்பண்ணாமல் ஒதுங்கி கோட்டைகளிலே தரித்திருக்கிறார்கள், அவர்கள் பராக்கிரமம் அழிந்தது, பெண்டுகளானார்கள், அதின் வாசஸ்தலங்களைக் கொளுத்திப் போட்டார்கள், அதின் தாழ்ப்பாள்கள் உடைக்கப்பட்டது.

௩௧ கடையாந்தரமுதல் அவருடைய பட்டணம் பிடிபட்டதென்றும் துறைவழிகள் அகப்பட்டுப்போயினவென்றும் அக்கினியால் சுட்டெரிக்கப்பட்டதென்றும் யுத்தமனுஷர் கலங்கியிருக்கிறார்களென்றும் பாபேலின் இராசாவுக்கு அறிவிக்க,

௩௨ ஓட்டக்காரனுக்கு எதிராக ஓட்டக்காரனும் அறிவிக்கிறவனுக்கெதிராக அறிவிக்கிறவனும் ஓடுகிறான்.

௩௩ ஏனென்றால் பாபேலென்னும் குமாரத்தி மிதிக்கப்படுங்களத்துக்கொப்பானது, அதைப் போரடிக்குங்காலமாயிருக்கிறது இன்னுங் கொஞ்சநேரத்திலே அறுப்புக்காலம் அதற்கு வருமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௩௪ பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் என்னைப்பட்சித்தான், என்னைக் கலங்கடித்தான், என்னை வெறும்பாத்திரமாக வைத்துவிட்டான், முதலையைப்போல என்னை விழுங்கினான் செல்விதங்களாலே தன் வயிற்றை நிரப்பினான், என்னைத் துரத்தினான்.

௩௫ எனக்கும் என் மாம்சத்துக்குஞ் செய்த கொடுமைக்குப் பழி பாபேலின்மேல் வரவென்று சீயோனில் வாசமாயிருக்கும் என் இரத்தப்பழி கல்தேயர் தேசத்துக் குடிகளின்மேல் வரவென்று எருசலேமுஞ் சொல்லுகிறது.

௩௬ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ நாம் உன்வழக்கை வழக்காடி உன்பழிக்குப்பழிவாங்கி * அதின் கடலை வறளவும் அதின் ஊற்றைச் சுவறவும்பண்ணுவோம். * ரு௰, ௩௰.

௩௭ அப்போது பாபேல் * குடியில்லாமல் மண்மேடுகளும் வலுசர்ப்பங்களின் தாபரமும் பாழும் ஈசற்போட்டப்படுதலுமாய்ப்போகும். * ரு௰, அதி. ௩௯.

௩௮ ஏகமாய்ச் சிங்கங்களைப்போற் கெர்ச்சித்துச் சிங்கக்குட்டிகளைப்போறச் சத்தமிடுவார்கள்.

௩௯ அவர்களுடைய கொதிப்பிலே நாம் அவர்கள் குடிக்கும்பானத்தை யவர்களுக்குக் குடிக்கக்கொடுத்து அவர்கள் துள்ளத்தக்கதாக அவர்களை வெறியாக்குவோம், அதினாலே அவர்கள் என்றைக்கும் விழிக்காத நித்திரையை அடைவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪௰ அவர்களை யாட்டுக்குட்டிகளைப்போலவும் ஆட்டுக்கடாக்களையும் வெள்ளாட்டுக்கடாக்களையும்போலவும் அடிக்கப்பட இறங்கிப்போகப்பண்ணுவோம்.

௪௧ * சேசாக்கு பிடிபட்டு பூமியனைத்தின் புகழ்ச்சி வாங்கப்பட்டதெப்படி, பாபேல் சாதிகளுக்குள்ளே திகைப்பானதெப்படி. * ௨௫, அதி. ௨௬.

௪௨ சமுத்திரம் பாபேலின்மேற் புரண்டுவந்தது, அதினுடைய அலைகளின் திரட்சியால் அது மூடப்பட்டது.

௪௩ அதின் பட்டணங்கள் பாழுமாய், வறட்சியும் வனாந்தரமுமான பூமியுமாய் ஒரு மனுஷனுங் குடியிராததும் ஒரு மனுபுத்திரனும் கடவாததுமான பூமியுமாயப்போயிற்று.

௪௪ நாம் பாபேலிலிருக்கிற பேலின்மேல் விசாரிப்பாகி அது விழுங்கினதை அதின் வாயிலிருந்து வெளியாக்கப்பண்ணுவோம், சாதிகள் இனி அதனண்டைக்கு ஓடிவாரார்கள், பாபேலின் மதிலும் விழும்.

௪௫ நம்முடைய சனமே, * அதின் நடுவிலிருந்து புறப்படுங்கள், கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்துக்குத் தப்ப அவனவன் தன்

னத்துமாவைப் பிரட்சித்துக்கொள்ளக்கட வான். * ௫௰, அதி. ௮. அறிவி. ௰௮, ௪.

௪௬ உங்களிருதயந் துவளாமலும் தேசத்திலே கேட்கப்படுஞ்செய்தியினாலே நீங்கள் பயப்படாமலுமிருக்கவுந்தானே, ஏனென்றால் ஒருவருஷத்திலே செய்தி கேட்கப்பட்டு, அதற்குப்பிறகு ஒருவருஷத்திலே செய்தி கேட்கப்படும், தேசத்திலே கொடுமையுண்டாகும், ஆளுகிறவன்மேல் ஆளுகிறவன் வருவான்.

௪௭ ஆகையால் இதோ நாம் பாபேலுடைய சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள் வரும், அப்போது அதின் தேசமெல்லாம் வெட்கப்படும், அதிற் கொலையுண்கிறயாவரும் அதின் நடுவில் விழுந்துகிடப்பார்கள்.

௪௮ * வானங்களும் பூமியும் அவைகளிலுள்ளயாவும் பாபேலின்பேரிற் கெம்பீரிக்கும், ஏனென்றால் பாழக்கடிக்கிறவர்கள் அதற்கு வடக்கேயிருந்து வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * அறிவி ௰௮, ௨௰.

௪௯ பாபேல் இஸ்ரவேலிற் கொலையுண்டவர்களை விழப்பண்ணினதுபோலே பாபேலிலேயுந் தேசமெங்குங் கொலையுண்கிறவர்கள் விழுவார்கள்,

௫௰ பட்டயத்துக்குத் தப்பினவர்களே! தங்கித்திரியாமல் நடந்துவாருங்கள், தூரத்திலே கர்த்தனை நினையுங்கள், எருசலேம் உங்கள் நினைவில் ஏறக்கடவது.

௫௧ நிந்தையைக் கேட்டதினாலே வெட்கப்பட்டோம், கர்த்தருடைய வீட்டுப்பரிசுத்த ஸ்தலங்களின்மேலே அன்னியர் வந்ததினாலே நாணம் நம்முடைய முகங்களை மூடிற்று.

௫௨ ஆகையாற் கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ நாம் அதின் சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள் வரும், அப்போது அதின் தேசமெங்குங்கொலையுண்கிறவர்கள் கத்துவார்கள்.

௫௩ பாபேல் * வானபரியந்தம் ஏறினாலும் அது தன் பலத்தின் உயர்ச்சியை அரணிப்பாக்கினாலும் நம்மாலே அதற்குப் பாழ்க்கடிக்கிறவர்கள் வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௪௯, அதி. ௰௬.

௫௪ பாபேலிலிருந்து கூப்பிடுதலின் சத்தமுங் கல்தேயர் தேசத்திலிருந்து மகா நொறுக்குதலுங் கேட்கப்படும்

௫௫ ஏனென்றால் கர்த்தர் பாபேலைப் பாழ்க்கடித்து அதிலுள்ள பெரிய சத்தத்தை யொழியப்பண்ணுவார், அதேனென்றால் அவர்களுடைய அலைகள் திரளான தண்ணீர்களைப்போல் இரையும், அவர்களுடைய சத்தம் அமளியாயிருக்கும்.

௫௬ ஏனென்றால் அதின்மேலே பாபேலின்மேலேதானே பாழ்க்கடிக்கிறவன் வருகிறான், அதின் பராக்கிரமசாலிகள் பிடிப்படுவார்கள், அவர்களுடைய வில்லுகள் முறிந்துபோம், அதேனென்றாற் சரிக்கட்டுதலுக்கின் பராபரனாகிய கர்த்தர் பதில் அளிக்கவே அளிப்பார்.

௫௭ அதின் பிரபுக்களையும் அதின் ஞானிகளையும் அதின் தலைவரையும் அதின் அதிகாரிகளையும் அதின் பராக்கிரமசாலிகளையும் வெறியாக்குவோம், அப்போது அவர்கள் என்றென்றைக்கும் விழிக்காத தூக்கமாய்த் தூங்கி விழுவார்களென்று * சேனைகளையுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார். * ௪௬. ௨௪, ௰.

௫௮ பாபேலின் விஸ்தாரமான மதிலானது தரையாகவே தரையாக்கப்பட்டு அதினுடைய உயரமான வாசல்கள் அக்கினியாற் சுட்டெரிக்கப்படும், அப்படியே சனங்கள் பிரயாசப்பட்டது, விருதாவும் சனசமூகங்கள் உழன்றுழன்றது. அக்கினிக்கிரையுமாம் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௫௯ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா இராசசியபாரம்பண்ணும் நாலாம் வருஷத்திலே பாபேலுக்குப்போகையில் அவனோடேகூடப்போகிற மக்சேயாவின் மகனாகிய நேரியாவின் குமாரனான சேராயாவுக்கு எரேமியாத்தீர்க்கதரிசி கற்பித்தவார்த்தை, சேராயாவோவென்றால் அமர்ந்தகுணமான பிரபுவாயிருந்தான்.

௬௰ பாபேலின்மேல் வரும் எல்லாத்தீங்கையும் பாபேலுக்கு விரோதமாக எழுதப்பட்ட இந்த எல்லா வசனங்களையும் எரேமியா ஒருபுஸ்தகத்தில் எழுதினான்.

௬௧ பிறகு எரேமியா சேராயாவுடனே சொன்னதாவது, நீ பாபேலுக்கு வந்து பிறபாடு நீயிதைப்பார்த்து இந்த எல்லா வசனங்களையும் வாசித்துச்சொல்லவேண்டியதாவது,

௬௨ கர்த்தாவே இந்தஸ்தலத்திலே மனுஷனும் மிருகமும் முதலாய்த் தங்கித் தரிக்காதபடிக்கும் அது என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கும்படிக்கும் அதையழித்துப் போடுவோமென்று தேவரீர் அதைக்குறித்து உரைத்திருக்கிறதை நீ சொல்லி,

௬௩ நீயிந்தப்புஸ்தகத்தைவாசித்துத் தீர்ந்தபோது அதிலே ஒருகல்லைக்கட்டி அதைஐப்பிராத்தின் நடுவில் எறிந்துவிட்டு,

௬௪ இப்படியேபாபேல் அழிந்துபோகும், நாம் அதின்மேல் வரப்பண்ணுந் தீங்கினாலெழுந்திருக்கமாட்டாமல் இளைத்து விழுவார்களென்றுசொல்லென்று சொல்லாயாக வேணுமென்றான், எரேமியாவின் வசனங்கள் இத்தமட்டுந்தானே. * அறிவிப்பு. ௰௮, ௨௧.

## ௫௨. அதிகாரம்.

[யூதர் பாபிலோனிய சிறையிருப்புக்குக் கொண்டு போகப்பட்டதுக்கடுத்த சரித்திரம்.]

சிதேக்கியா இராசாவாகிறபோது இருபத்தொருவயதாயிருந்தான், அவன் பதினொருவருஷம் எருசலேமில் இராச்சியபாரம்பண்ணினான், அவனுடைய தாயின்பேர் அமீத்தாள், இவள் லீப்னா ஊரானாகிய எரேமியாவின் குமாரத்தி. * ௩௭, அதி. ௧. ௨, இராசாக். ௨௪, ௰௮. ௨. நாளாக. ௩௬, ௰. ௰௧.

௨ யோயாக்கீம் செய்ததெல்லாவற்றுக்குஞ் சரியாய் அவன் கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௩ ஏனென்றால் எருசலேமையும் யூதாவையுங் கர்த்தர் தம்முடைய சமுகத்தைவிட்டுத் தள்ளித்தீருமளவும் அவைகளில் அவருடைய கோபத்தினாலே சம்பவித்ததென்னவென்றால், சிதேக்கியா பாபேலின் இராசாவைவிட்டு* மருளவிழுந்தான், * ௨. இராசா. ௨௪, ௨௰.

௪ ஆகையால்* அவன் இராச்சியபாரம்பண்ணும் ஒன்பதாம்வருஷத்துப் பத்தாம் மாதம் பத்தாந்தேதியிலே சம்பவித்ததென்னவென்றால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் அவனும் அவனுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து அதற்கெதிராகப் பாளயமிறங்கி சுற்றிலும் அதற்கெதிராகக் கொத்தளங்களைக் கட்டினார்கள். * ௩௯, ௧. ௨. இராசாக. ௨௫, ௧. மு

௫ அப்படியே பட்டணஞ் சிதேக்கியா இராசாவின் பதினோராம்வருஷமட்டும் முற்றிக்கைபோடப்பட்டலாயிற்று.

௬ நாலாம் மாதம் ஒன்பதாந்தேதியிலே பஞ்சம் பட்டணத்திலே மிகுந்து தேசத்தின் சனத்துக்கு ஆகாரமில்லாதேபோனபோது,

௭ பட்டணத்தின் மதில் திறப்பாயிற்று, அப்போது யுத்தமனுஷரெல்லாம் ஓடிக் கல்தேயர் பட்டணத்தைச் சூழ்ந்திருக்கக் கொள்ள இராத்திரிகாலத்திலே இராசாவுடைய தோட்டத்தின்வழியே இரண்டு மதிலுக்கு நடுவான வாசலாற் பட்டணத்திலிருந்து புறப்பட்டு வயல்வழியேபோய்விட்டார்கள்.

௮ ஆனாற் கல்தேயருடைய இராணுவம் இராசாவைப் பின்தொடர்ந்து எரிகோவின் சமவெளிகளிற் சிதேக்கியாவைக் கிட்டினார்கள், அப்போது அவன் இராணுவமெல்லாம் அவனைவிட்டுச் சிதறிப்போனார்கள்.

௯ அவர்கள் இராசாவைப் பிடித்து அவனை ஆமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்கு* பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரண்டையிலே போயேறப்பண்ணினார்கள், இவன் அவன்பேரிலே சுமரும ஆக்கினைகளைச் சொன்னான். * ௫. மோசே. ௨௮, ௩௬.

௰ பிறகு பாபேலின் இராசா சிதேக்கியாவின் பிள்ளைகளை அவன் கண்களுக்கு முன்பாக வெட்டி, யூதாவின் பிரபுக்களையுமெல்லாம் ரிப்லாவிலே வெட்டி.

௰௧ சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி, அவனுக்கிரண்டு வெண்கல விலங்குகளைப் போடுவித்தான், பிற்பாடு பாபேலின் இராசா அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோய், அவன் மரணமடையுமநாளமட்டும் அவனைக் காவல்வீட்டிலிருக்கப்பண்ணினான்.

௰௨ ஐந்தாம் மாதம் பத்தாந்தேதியிலே, பாபேலின் இராசாவுக்கு முன்பாக நிற்கிறவனாகிய தலையாரிகளின் அதிபதியான நேபூசார் தான் எருசலேமுக்கு வந்தான், அது நேபுகாத்நேச்சாரென்ற இராசா பாபேலை அரசாளுகிற பத்தொன்பதாம் வருஷமாயிருந்தது.

௰௩ அவன் கர்த்தருடைய வீட்டையும் இராசாவின் வீட்டையும், எருசலேமிலுள்ள எல்லா வீடுகளையும் ஒவ்வொரு பெரியவனுடைய வீட்டையும் அக்கினியாற் சுட்டெரித்துப்போட்டான்.

௰௪ தலையாரிகளின் அதிபதியோடிருந்த கல்தேயரின் இராணுவமெல்லாம் எருசலேமைச் சுற்றிலுமிருந்த மதில்களனைத்தையும் இடித்துப்போட்டார்கள்.

௰௫ சனத்திலே நீசமானவர்களிற் சிலரையும் பட்டணத்தில் மீதியான குறைச்சனத்தையும், பாபேலுடைய இராசாவின் வசமாக ஓடிவந்துவிட்டவர்களையுங், குறைச்சனத்தையுந் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்தான் சிறைகளாகக் கொண்டுபோனான்.

௰௬ ஆனால் நீசமான தேசத்தாரிற் சிலரைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்தான் திராட்சத்தோட்டக்காரராகவும் பயிர்க்குடிகளாகவும் விட்டுவைத்தான்.

௰௭ * கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலத் தூண்களையுங் கர்த்தருடைய வீட்டிலிருந்த ஆதாரங்களையும், வெண்கலக் கடல்தொட்டியையுங் கல்தேயர் உடைத்துப்போட்டு அவைகளின் வெண்கலத்தையெல்லாம் பாபேலுக்கெடுத்துக்கொண்டுபோனார்கள். * ௨௭, ௰௯. மு

௰௮ செப்புச்சட்டிகளையுஞ் சாம்பலெடுக்குங் கரண்டிகளையும் வெட்டுக்கத்திகளையுங் கலங்களையுங் கலயங்களையும் ஆராதனை செய்யப்பட்ட சகல வெண்கலமுட்டுகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௰௯ சுத்தப்பொன்னும் சுத்தவெள்ளியுமான கிண்ணிகளையுந் தூபக்கலசங்களையுங்

கலசங்களையுஞ் சட்டிகளையும் விளக்குத்தண்டுகளையுங் கலயங்களையுங் கரகங்களையுந் தலையாரிகளின் அதிபதி யெடுத்துக்கொண்டான்.

௨௰ * சாலோமோன் இராசா கர்த்தருடைய வீட்டுக்காகச் செய்வித்தவைகளாகிய இரண்டு தூண்களும் ஒரு கடல்தொட்டியும் ஆதாரங்களின்கீழ் நின்ற பன்னிரண்டு வெண்கலமாடுகளுமிருந்ததே. இந்தச் சகல முட்டுகளுடைய வெண்கலத்துக்கும் நிறையில்லை. * க. இரா. எ. ௰௫. ௨. நாளாக. ௩. ௰௫. மு

௨௧ அந்தத் தூண்களோவென்றால் ஒவ்வொரு தூண் பதினெட்டுமுழவுயர்ச்சியாயிருந்தது; பன்னிரண்டுமுழநூல் அதைச் சுற்றும், நாலுவிரற்கடையத்தனை கனம் உள்ளே குழாயாயிருந்தது.

௨௨ அதின்மேல் வெண்கலக்குமிழ் உண்டாயிருந்தது, ஒரு குமிழ் உயர்ச்சி ஐந்துமுழமானது, குமிழ்களைச் சுற்றிலும் பின்னலும் மாதளம்பழங்களுமாயிருந்தது, எல்லாம் வெண்கலந்தான், அதற்குச் சரியாய் மற்றத் தூணுக்கும் அதுவும் மாதளம்பழங்களுமுண்டாயிருந்தது.

௨௩ தொண்ணூற்றாறுமாதளம்பழங்கள் காற்றுத்திசைகளுக்கெதிராக இருந்தது, குமிழிற் சுற்றிலுமிருந்த மாதளம்பழங்கள் நூறு.

௨௪ தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனாகிய செராயாவையும் இரண்டாம் ஆசாரியனாகிய செப்பனியாவையும் வாசற்படியின் மூன்று காவற்காரரையும் பிடித்தான்.

௨௫ பட்டணத்திலோவென்றால் அவன் யுத்தமனுஷரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானியொருவனையும் இராசாவின் மந்திரிகளிற் பட்டணத்தில் அகப்பட்ட ஏழுபேரையுந் தேசத்தின் சனத்தைச் சேவகம் எழுதுகிற தலையான சம்பிரதியையுந், தேசத்துச் சனத்திலே பட்டணத்தின் நடுவில் அகப்பட்ட அறுபதுபேரையும் பிடித்தான்.

௨௬ அவர்களைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசாரதான் பிடித்து அவர்களை ரிப்லாவுக்குப் பாபேலுடைய இராசாவண்டையிலே கொண்டுபோய்விட்டான்.

௨௭ அப்போது பாபேலின் இராசா காமாத்தென்ற தேசத்தின் பட்டணமாகிய ரிப்லாவிலே அவர்களை வெட்டிக்கொன்றுபோட்டான், யூதர்கள் தங்கள் தேசத்திலிருந்து சிறைகளாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.

௨௮ நேபுகாத்நேச்சார் சிறைபிடித்துப்போன சனமெத்தனையென்றால், ஏழாம் வருஷத்திலே மூவாயிரத்திருபத்துமூன்று யூதரும்,

௨௯ நேபுகாத்நேச்சாருடைய பதினெட்டாம் வருஷத்தில் எருசலேமிலிருந்து எண்ணூற்றுமுப்பத்திரண்டு ஆத்துமாக்களுங் கொண்டுபோகப்பட்டார்கள்.

௩௰ நேபுகாத்நேச்சாருடைய இருபத்துமூன்றாம் வருஷத்திலே தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசாரதான் யூதரில் எழுநூற்றுநாற்பத்தைந்து ஆத்துமாக்களைச் சிறைபிடித்துப்போனான். ஆக நாலாயிரத்து அறுநூறு ஆத்துமாக்கள்.

யோயாக்கீனென்ற இராசாவுக்குப் பாபேலிலே செய்யப்பட்ட தயவு.

௩௧ * யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனுடைய சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷத்துப் பன்னிரண்டாம் மாதம் இருபத்தைந்தாந்தேதியிலே சம்பவித்ததேதென்றால், ஏவில்மெரோதாக்கு என்ற பாபேலின் இராசா, தான் இராசாவான வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனைத் தலையுயர்த்தி அவனைக் காவல்வீட்டிலிருந்து புறப்படப்பண்ணி, * ௨. இரா. ௨௫. ௨௭.

௩௨ அவனோடே யன்பாய்ப்பேசி அவனுடைய ஆசனத்தைத் தன்னோடே பாபேலிலிருந்த இராசாக்களுடைய ஆசனங்களுக்கு மேலாக வைத்து,

௩௩ அவனுக்குக் காவல்வீட்டிலிருந்த வஸ்திரங்களை மாற்றினான், அவன் உயிரோடிருந்த சகலநாளும் அவனுக்கு முன்பாக நித்தம் அப்பஞ் சாப்பிட்டான்.

௩௪ அவனுடைய செலவுக்கோவென்றால் அவன் அவனுயிரோடிருந்த நாளெல்லாம் அவனுடைய மரணநாள்பரியந்தமும் அவனுக்குப் பாபேலினுடைய இராசாவினாலே [illegible]ளக் கட்டளையான திட்டம் எப்போதும் அனுதினமுங் கொடுக்கப்பட்டது.

எரேமியாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது.

# எரேமியாவின் புலம்பல்.

## ௧. அதிகாரம்.

[யூதசனத்தின் துயரமான நிலைமையின் கசப்பினாலே அங்கலாய்க்கிறபுலம்பல்.]

௧ ஜனம் பெருத்திருந்த பட்டணமானவள் எத்தனை தனிமையாக உட்கார்ந்திருக்கிறாள், விதவைக்கொப்பானாள், ஜாதிகளிற் பெரியவளும் சீமைகளில் நாயகியுமாயிருந்தவள் கப்பங்கட்டுகிறவளானாள்.

௨ இராக்காலத்திலே அழவே அழுகிறாள், அவளுடைய கண்ணீர் அவள் கன்னங்களிலிருக்கும், அவளுடைய எல்லாச் சிநேகிதரிலும் அவளைத் தேற்றரவு பண்ணுவாரொருவரும் அவளுக்கில்லை, அவளுடைய சிநேகிதரெல்லாரும் அவளுக்குத் துரோகிகளாகி அவளுக்குச் சத்துருக்களாய்ப்போனார்கள்.

௩ உபத்திரவப்படவும் அடிமை வேலையை வெகுதூரஞ்செய்யவும் யூதச்சனம் எடுபட்டுப்போயிற்று, அவள் புறச்சாதிகளுக்குள்ளே தங்குகிறாள், இளைப்பாறுதலையடையாள், அவளைத் துன்பப்படுத்துகிறயாவரும் அவளை நெருக்க ஸ்தலங்களின் இடுக்கிலே தொடர்ந்துபிடித்தார்கள்.

௪ பண்டிகைக்கு வருவாரில்லாததினாற் சீயோனின் வழிகள் புலம்புகிறவைகளாயிருக்கிறது, அதின் வாசல்களெல்லாம் பாழாய்க்கிடக்கிறது, அதின் ஆசாரியர் தவிக்கிறார்கள், அதின் கன்னியாஸ்திரீகள் சஞ்சலப்படுகிறார்கள், அதற்குக் கசப்பே யுண்டாயிருக்கிறது,

௫ அதின் சத்துருக்கள் தலையானார்கள், அதின் பகைஞர் சுகித்திருக்கிறார்கள், ஏனெனில் அதினுடைய திரளான பாதகங்களினிமித்தங் கர்த்தர் அதைச் சஞ்சலப்படுத்தினார், அதின் பிள்ளைகள் சத்துருவுக்கு முன்பாகச் சிறையிருப்புக்குப்போனார்கள்.

௬ சீயோன் குமாரத்தியின் மகத்துவமெல்லாம் அதைவிட்டுப்போயிற்று, அதின் பிரபுக்கள் மேய்ச்சலைக்காணாத மான்களுக்கொப்பாகித் தொடருகிறவனுக்கு முன்பாகச் சத்துவமில்லாமல் நடந்துபோனார்கள்.

௭ எருசலேம் தனக்குச் சிறுமையுந் தவிப்புமுண்டாகிய நாட்களிலே எருசலேம் பூருவநாட்கள் முதற்கொண்டு தனக்குண்டாயிருந்த இச்சிக்கப்படத்தக்க நன்மைகளையெல்லாம் நினைக்கிறது, அதற்கொத்தாசை செய்வாரில்லாமல் அதினுடைய சனஞ்சத்துருவின் கையிலே விழுகையிற் சத்துருக்கள் அதைப் பார்த்து அதினுடைய ஓய்வுநாட்களின் பேரிலே நகைத்தார்கள்.

௮ எருசலேமென்பவள் பாவஞ்செய்யவே செய்தாள், ஆனபடியினாலே தூரஸ்திரீயைப்போலானாள், அவளைக் கனம்பண்ணினவர்களெல்லாரும் அவளையசட்டைபண்ணுகிறார்கள், ஏனென்றால் அவளுடைய அவமானத்தைக் கண்டார்கள், அவளும் பெருமூச்சுவிட்டுப் பின்னிட்டுத் திரும்பினாள்.

௯ அவளுடைய அசுத்தம் அவள் வஸ்திரங்களிலிருந்தது, * தனக்கு வரப்போகிற முடிவை நினையாதிருந்தாள், ஆகையால் அதிசயமாய்த் தாழ்ந்துபோனாள், தேற்றரவு பண்ணுவார் அவளுக்கில்லை, கர்த்தாவே என் சிறுமையைப் பாரும், ஏனெனிற் பகைஞன் பெருமையடைந்தான்.

* ௫. மோசே. ௩௨, ௨௯.

௰ அவளுடைய இச்சிக்கப்படத்தக்க நன்மைகளின்மேற் சத்துரு தன் கையை நீட்டினான், அதெனனில் உம்முடைய சபையிலே வரவொண்ணாதென்று தேவரீர் கற்பித்த புறச்சாதியார் உமது பரிசுத்த ஸ்தலத்துக்குட் பிரவேசித்ததைக் கண்டாள்.

௰௧ அவளுடைய சனமெல்லாம் அப்பந்தேடித் தவிக்கிறார்கள், தங்கள் பசியையாற்றும்படிக்குத் தாங்கள் இச்சிக்கப்படத்தக்க நன்மைகளை ஆகாரத்துக்கென்று கொடுத்துவிட்டார்கள், கர்த்தாவே நோக்கிப் பாரும், ஏனெனில் ஈனமற்றவளானேன்.

௰௨ வழியிற் கடந்துபோகிற எல்லாச் சனங்களே, இது உங்களைச் சேராதோ? கர்த்தர் தமது கோபத்தினுடைய உக்கிரத்தின் நாளிலே என்னைச் சஞ்சலப்படுத்தினதினாலே எனக்கு நடப்பிக்கப்பட்ட என்னுடைய நோவுக்குச் சரியான நோவுண்டோவென்று நோக்கிப்பாருங்கள்.

௰௩ உயரத்திலிருந்து என் எலும்புகளில் அக்கினியையனுப்பிவிட்டார், அது அவைகளைப் பிடித்தது, என் கால்களுக்கு வலையை வீசினார், என்னைப் பின்னிட்டு விழப்பண்ணினார், என்னைப் பாழாக்கடித்தார், நித்தம் நான் பலட்சயமானவள்.

௰௪ என் பாதகங்களின் நுகத்தடி யவருடைய கையாற் கட்டியிருக்கிறது, அவைகள் பிணைக்கப்பட்டு என் கழுத்தின்மேலேறிற்று, என் பலனை விழப்பண்ணினார், ஆண்ட

வொன்னை நான் எழுந்திருக்கக்கூடாதபடிக்கு ஒடுக்குகிறவர்களின் கையிலொப்புக்கொடுத்தார்.

௰௫ என்னிலுள்ள பலசாலிகளாகிய என்னுடையவர்களையெல்லாம் ஆண்டவர் மிதித்துப்போட்டார், என் வாலிபரை நொறுக்கும்படிக்கு என்மேல் ஒருகூட்டத்தை வரவழைத்தார், யூதாகுமாரத்தியாகிய கன்னியாஸ்திரியை ஆண்டவர் ஆலையாக மிதித்தார்.

௰௬ * இவைகளினிமித்தமாக நான் அழுகிறேன், என் கண் என் கண்ணே நீராகச்சொரிகிறது, ஏனெனில் என் ஆத்துமாவை முசிப்பாற்றுந்தேற்றரவாளர் என்னைவிட்டுத் தூரமானார், பகைஞன் மேற்கொண்டதினால் என் பிள்ளைகள் பாழக்கடிக்கப்பட்டார்கள். * எரே. ௰௩, ௰௭. ௰௪, ௰௭.

௰௭ சீயோனென்பவள் தன் கைகளை விரிக்கிறாள், தேற்றரவுபண்ணுவார் அவளுக்கில்லை, கர்த்தர் யாக்கோபின் சுற்றுப்புறத்தாரை அவனுக்குச் சத்துருக்களாகக் கட்டளையிட்டார், எருசலேமென்பவள் அவர்களுக்குள்ளே தூரஸ்திரிக்கொப்பானாள்.

௰௮ கர்த்தர் நீதிபரர், அவருடைய வாக்குக்கு விரோதமாய் நான் எழும்பினேன் ஆனபடியினாலே சனங்களே, நீங்களெல்லாரும் இதைக்கேட்டு என் வேதனையைப்பாருங்கள், என் கன்னியாஸ்திரிகளும் என் வாலிபரும் சிறையிருப்பிலே போனார்கள்.

௰௯ என்னைச் சிநேகிக்கிறவர்களைக் கூப்பிட்டேன், * அவர்களோ என்னை மோசம்போக்கினார்கள், என் ஆசாரியர்களும் என் மூப்பரும் தங்கள் பசியையாற்றத் தங்களுக்கு அப்பந்தேடுகையில் மூர்ச்சொடுங்கி மாண்டார்கள். * எரேமி. ௩௰, ௰௪.

௨௰ கர்த்தாவே பாரும், ஏனெனில் நெருக்கப்படுகிறேன், * என் குடல்கள் பொங்குகிறது, நான் மிகவும் மருள்விழுந்தபடியினாலே என் இருதயம் எனக்குள்ளே துவண்டது † வெளியிலே பட்டயம் என்னைப் பிள்ளையற்றவளாக்குகிறது, வீட்டுக்குள்ளே மரணசாயலாயிருக்கிறது. சங். ௨௫, ௰௭.

† ௫ மோசே. ௩௨, ௨௫.

௨௧ நான் தவிக்கிறதை அவர்கள் கேட்டார்கள், என்னைத் தேற்றரவுபண்ணுபவன் எனக்கில்லை, என் பகைஞரெல்லாரும் என் தீங்கைக்கேட்டு, தேவரீர் அதைச் செய்தபடியினாலே சந்தோஷமாயிருக்கிறார்கள், நீர் கூறின நாளை வரப்பண்ணுவீர், அப்போது என்னைப்போலிருப்பார்கள்.

௨௨ அவர்களுடைய பொல்லாப்பெல்லாம் உமது முகத்துக்கு முன்பாக வரக்கடவது, என்னுடைய எல்லாப் பாதகங்களினிமித்தமும் நீர் எனக்குச் செய்ததுபோலே அவர்களுக்குச் செய்யும், ஏனென்றால் என் பெருமூச்சுகள் திரளானவைகள், என் இருதயம் பலட்சயமாயிருக்கிறது.

## ௨. அதிகாரம்.

[இறங்கின ஆக்கினைகளின் துயரமான விவரிக்குதல்.]

௧ சீயோன்குமாரத்தியை ஆண்டவர் தம்முடைய கோபத்தில் எத்தனை மந்தாரத்தாலே மூடினார்? தம்முடைய கோபத்தின் நாளிலே அவர் * தமது பாதப்படியை நினைக்காமல் இஸ்ரவேலின் மகிமையை வானத்திலிருந்து தரையிலே விழத்தள்ளினார். * சங். ௱௩௨, ௭.

௨ ஆண்டவர் தப்பவிடாமல் யாக்கோபின் வாசஸ்தலங்களையெல்லாம் விழுங்கினார், அவர் யூதாகுமாரத்தியின் அரண்களையெல்லாந் தம்முடைய சினத்திலே இடித்துத் தரையோடே தரையாக்கிப்போட்டார், இராச்சியத்தையும் அதின் பிரபுக்களையும் பரிசுத்தமற்றப்பண்ணினார்.

௩ தம்முடைய கோபத்தின் உக்கிரத்திலே இஸ்ரவேலின் கொம்பையெல்லாம் வெட்டிப்போட்டார், அவர் பகைஞனுக்கு முன்பாகத் தம்முடைய வலதுகையைப் பின்னிட்டுத் திருப்பிச் சுற்றிலுமிருக்கிறதைப் பட்சிக்கிற அக்கினிச்சுவாலையைப்போலே யாக்கோபுக்கு விரோதமாகப் பற்றியெரிந்தார்.

௪ பகைஞனைப்போல * தம்முடைய வில்லை நாணேற்றினார், சத்துருவைப்போலத் தம்முடைய வலதுகையை நீட்டிநின்று பார்வைக்கு விருப்பமானதையெல்லாங் கொன்றுபோட்டார், சீயோன்குமாரத்தியின் கூடாரத்திலே தம்முடைய உக்கிரத்தை அக்கினியைப்போலே ஊற்றிவிட்டார். * சங். ௭, ௰௩.

௫ ஆண்டவர் பகைஞனுக்கொப்பானார், இஸ்ரவேலை விழுங்கினார் அதின் அரமனைகளையெல்லாம் விழுங்கினார், அதின் அரண்களையழித்துச் சீயோன்குமாரத்திக்குத் திரளான துக்கிப்பையுஞ் சலிப்பையும் உண்டாக்கினார்.

௬ தோட்டத்தின் வேலியைப்போல் தம்முடைய வேலியைப் பலவந்தமாய்ப் பிடுங்கிப்போட்டார், சபைகூடுகிற தம்முடைய ஸ்தலத்தையழித்தார், கர்த்தர் சீயோனிலே பண்டிகையையும் ஓய்வுநாளையும் மறக்கப்பண்ணித் தமது கோபத்தின் உக்கிரத்திலே இராசாவையும் ஆசாரியனையும் புறக்கணித்துப்போட்டார்.

௭ ஆண்டவர் தமது பலிபீடத்தை வெறுத்துவிட்டார், தமது பரிசுத்தஸ்தலத்தை அருவருத்தார், அதினுடைய அரமனைகளின் மதில்களைப் பகைஞனின் கையிற் பத்திரப்படுத்திவிட்டார் பண்டிகைநாளுக்கே

பாகக் கர்த்தரின் வீட்டிலே சத்தமிட்டார்கள்.

௮ கர்த்தர் சீயோன் குமாரத்தியின் அலங்காரத்தை நிர்மூலமாக்க நினைத்தார், நூலைப்போட்டார், அழிக்கிறபடிக்குத் தம் கையையவர் முடக்கிக்கொண்டதில்லை, அரணிப்பையும் அலங்கத்தையும் புலம்பலாக்கினார், அவைகள் ஏகமாய்ப் பலனற்றுக் கிடக்கிறது.

௯ அதின் வாசல்கள் தரையில் அமிழ்ந்து கிடக்கிறது, அதின் தாழ்ப்பாள்களைச் சேதித்து உடைத்துப்போட்டார், அதின் இராசாவும் அதின் பிரபுக்களும் புறச்சாதியாருக்குள்ளிருக்கிறார்கள், வேதமில்லை, அதின் தீர்க்கதரிசிகளுக்குக் கர்த்தராலே தரிசனங் கிடைக்கிறதில்லை.

௰ சீயோன் குமாரத்தியின் மூப்பர் தரையிலுட்கார்ந்து மவுனமாயிருக்கிறார்கள், தங்கள் தலைகளின்மேற் புழுதியைப்போட்டுக்கொள்ளுகிறார்கள், இரட்டுடுத்தியிருக்கிறார்கள், எருசலேமின் கன்னியாஸ்திரீகள் தங்கள் தலைகளைத் தரையை நோக்கியிறங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

௰௧ என் சனமாகிய குமாரத்தியினுடைய நொறுங்குதலினிமித்தம் என் கண்கள் கண்ணீர் சொரிகிறதினாலே பூத்துப்போயிற்று, என் குடல்கள் பொங்குகிறது, என் ஈரல் தரையிற் சரிகிறது, ஏனெனில் குழந்தைகளும் பாலகரும் பட்டணத்தின் வீதிகளிலே தொய்ந்துகிடக்கிறார்கள்.

௰௨ அவர்கள் குத்துண்டவர்களைப்போற் பட்டணத்தின் வீதிகளில் தொய்யக்கொள்ளுந் தங்களாத்துமாவைத் தங்கள் தாய்களின் மடியில் ஊற்றிக் கொள்ளுந் தங்கள் தாய்களுடனே கோதுமையுந் திராட்சப்பழரசமுமெங்கேயென்கிறார்கள்.

௰௩ எருசலேம் குமாரத்தியே, என்னத்தை யுனக்குச் சாட்சியாகச் சொல்லுவேன், என்னத்துக்குன்னையொப்பிடுவேன்? சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரீயே, நான் உன்னைத் தேற்றும்படிக்கு என்னத்துக்கு ஒப்பிடுவேன், உன் நொறுக்குதல் சமுத்திரத்தைப்போல விஸ்தாரமாயிருக்கிறதே, உன்னைக் குணமாக்குபவனார்.

௰௪ உன் தீர்க்கதரிசிகள் அபத்தமும் மதியில்லாமையுமான தரிசனத்தையுனக்குத் தரிசிப்பித்தார்கள், அவர்கள் உன் சிறையிருப்பை விலக்கும்படிக்கு உன் அக்கிரமத்தைத் திறந்துவைக்காமல் அபத்தக்காரியங்களையும் தூரத்தப்படுகிறதற்கானவைகளையும் உனக்குத் தரிசிப்பித்தார்கள்.

௰௫ வழிப்போகிற யாவரும் உன்பேரிற் கைகொட்டிக்கொள்ளுகிறார்கள், எருசலேம் குமாரத்தியின்பேரில் ஈசற்போட்டுத் தங்கள் தலைகளைத் துலுக்கி பூரணவடிவுமெல்லாப் பூமியின் மகிழ்ச்சியுமான தென்னப்பட்ட பட்டணமிதுவோவென்கிறார்கள்.

௰௬ உன் பகைஞர் உன்பேரிலே தங்கள் வாயைத் திறக்கிறார்கள், ஈசற்போட்டுப் பற்கடிக்கிறார்கள், அதை விழுங்கினோம், நாங் காத்திருந்த நாள் இதுவே, இப்போ நமக்குக் கிடைத்தது, அதைக் கண்டோமென்கிறார்கள்.

௰௭ * கர்த்தர் தாம் நினைத்ததைச் செய்தார், தாம் பூர்வநாட்கள் முதற்கொண்டு கட்டளைபண்ணின தமது வார்த்தையை நிறைவேற்றிப்போட்டார், அவர் தப்பவிடாமல் நிர்மூலமாக்கி உன்னுடைய பகைஞனுக்குச் சந்தோஷமுண்டுபண்ணினார், உன் சத்துருக்களின் கொம்பை உயர்த்தினார்.

* ௩ மோசே. ௨௬, ௰௪. மு

௰௮ அவர்கள் இருதயம் ஆண்டவரை நோக்கிக் கூப்பிடுகிறது, சீயோன் குமாரத்தியின் மதிலே, இரவும் பகலும் * நதியத்தனை கண்ணீரைவிடு, உனக்கு ஓய்வைக்கொடாயாக, உன் கண்களின் கறுப்புவிழி சும்மாயிராதாக. * எரேமி. ௰௪, ௰௭.

௰௯ எழுந்திருந்து சாமத்திலே கூப்பிடு, ஆண்டவரின் முகத்துக்கு முன்பாக உன் இருதயத்தைத் தண்ணீரைப்போல ஊற்று, எல்லாத் தெருக்களின் முனையிலும் பசியினாலே தொய்கிற உன் குழந்தைகளின் பிராணனுக்காக உன் கைகளையவரண்டைக் கேறெடு.

௨௰ கர்த்தாவே, ஆருக்கிந்தப்பிரகாரமாகச் செய்தீரென்று * நோக்கிப்பாரும், ஸ்திரீகள் † கைக்குழந்தைகளாகிய தங்களுடைய கர்ப்பத்தின் கனியைத் தின்னவேண்டுமோ? ஆண்டவருடைய பரிசுத்தஸ்தலத்தில் ஆசாரியருந் தீர்க்கதரிசியுங் கொலைசெய்யப்படவேண்டுமோ. * ௧. அதி. ௨௰.

† ௪, அதி. ௰. ௫. மோசே. ௨௮, ௫௩.

௨௧ தெருக்களில் இளைஞரும் முதிர்ந்த வயதுள்ளவர்களுந் தரையிலே கிடக்கிறார்கள், என் கன்னியாஸ்திரீகளும் என் வாலிபரும் பட்டயத்தால் விழுந்தார்கள், உமது கோபத்தின் நாளிலே கொன்று தப்பவிடாமலே கொன்றுபோட்டீர்.

௨௨ பண்டிகைநாளுக்குக் கொப்பாகச் சுற்றிலுமிருந்து என் திகில்களை வரவழைத்தீர், கர்த்தருடைய கோபத்தின் நாளிலே தப்பினவனும் மீதியானவனுமில்லை, நான் கைகளில் ஏந்திக்கொண்டு வளர்த்தவர்களை என் பகைஞன் நாசம்பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

[தனக்குஞ் சனத்துக்குமுண்டான நிர்ப்பந்தத்தை எரேமியா விவரிக்கிறது.]

ஆண்டவருடைய சினத்தின் மிலாறி

னுண்டான சிறுமையைக்கண்ட புருஷன் நான்.

௨ அவர் என்னை வெளிச்சத்துக்குள் அல்ல, இருளுக்குள்ளே அழைத்து நடத்திவந்தார்.

௩ அவர் எனக்கு விரோதமாகவே நித்தம் நித்தம் தமது கையை நேரிடத்திருப்பினார்.

௪ என் சதையையும் என் தோலையும் முத்தலாக்கினார், என் எலும்புகளை யுடைத்தார்.

௫ அவர் எனக்கு விரோதமாகக் கொத்தளங்கட்டிப் பிச்சினாலும் வருத்தத்தினாலும் என்னை வளைந்துகொண்டார்.

௬ * நித்தியகாலமாய்ச் செத்துக்கிடக்கிறவர்களைப்போல என்னை இருளான இடங்களில் இருக்கப்பண்ணினார். * சங். ௱௪௩, ௩.

௭ நான் புறப்படக்கூடாதபடியாய் என்னைச் சூழ வேலியடைத்தார், என் விலங்குகளைப் பாரமாக்கினார்.

௮ நான் சத்தமிட்டுக் கூப்பிட்டாலும், என் ஜெபத்துக்கு வழியை யடைத்துப்போட்டார்.

௯ வெட்டின கற்களாலே என் வழியை யடைத்துப்போட்டார் என் பாதைகளை மாறுபாடாக்கினார்.

௰ எனக்கவர் பதிவிருக்கிற கரடியும், மறைவிடங்களிலே தங்குகிற சிங்கமுமாயிருக்கிறார்.

௰௧ என் வழிகளை விலக்கி என்னைத் துண்டித்துப்போட்டார், என்னைப் பாழாக்கிவிட்டார்.

௰௨ தமது வில்லை நாணேற்றி என்னை அம்புக்கு இலக்காக வைத்தார்.

௰௩ தமது அம்பறாத்தூணியின் அம்புகளை என் உள்ளிந்திரியங்களில் படப்பண்ணினார்.

௰௪ நான் என் சனம் அனைத்தின் பரியாசமும், நித்தம் அவர்கள் கின்னரப்பாட்டுமாயிருந்தேன்.

௰௫ கசப்புகளால் என்னைத் திர்ப்தியாக்கி, எட்டியினால் என்னை நிரப்பினார்.

௰௬ அவர் பருக்கைக்கற்களால் என் பல்லுகளை நொறுக்கி என்னைச் சாம்பலில் புரளப்பண்ணினார்.

௰௭ என் ஆத்துமாவைச் சமாதானத்துக்குத் தூரமாக்கினார், நன்மையை மறந்தேன்.

௰௮ ஆகையால், என் பலனும் நான் கர்த்தருக்குக் காத்திருந்த நம்பிக்கையும் அழிந்ததென்றேன்.

நம்பிக்கைக்கும் பொறுமைக்கும் தெய்வீக மனஸ்தாபத்துக்கும் செபத்துக்கும் எழுப்பின் புத்தி.

௰௯ என் சிறுமையையும் என் தவிப்பையும் எட்டியையும் பிச்சையும் நினைத்துக்கொள்ளும்.

௨௰ என் ஆத்துமா என்னுக்குள் முறிந்துபோகிறதென்கிறதை நினைக்கவே நினைப்பீர்.

௨௧ இதை என் மனதிலே வைப்பேன் இதினிமித்தமாகக் காத்திருப்பேன்.

௨௨ * நாங்கள் நிர்மூலமாய் அழியாதிருக்கிறது கர்த்தருடைய கிருபைகள், ஏனென்றால் அவருடைய இரக்கங்கள் முடிவடைந்ததில்லை. * நேகே. ௯, ௩௧. ஏசா. ௧, ௯.

௨௩ * அவைகள் காலமார் புதியவைகள் அவருடைய உண்மை பெருத்திருக்கிறது. * சங்கீதம். ௩௰, ௫.

௨௪ * கர்த்தரே என் பங்காயிருக்கிறாரென்று என் ஆத்துமா சொல்லும் ஆகையால் அவருக்குக் காத்திருப்பேன். * சங்கீ. ௭௩, ௨௬.

௨௫ * தமக்குக் காத்திருக்கிறவர்களுக்கும் தம்மைத் தேடுகிற ஆத்துமாவுக்கும் கர்த்தர் நல்லவர். * சங். ௩௰, ௨.

௨௬ கர்த்தருடைய இரட்சிப்புக்குக் காத்தும் அமர்ந்துமிருக்கிறது நல்லது.

௨௭ தன் சிறுவயதிலே நுகத்தடியைச் சுமக்கிறது புருஷனுக்கு நல்லது.

௨௮ அவர் அதைத் தன்மேல் வைத்தாரென்று அவன் தனித்து உட்கார்ந்து மவுனமாயிருப்பானாக.

௨௯ நம்பிக்கையுண்டாயிருக்கிறதாகுமென்று தன் வாயைத் தூளில் தாழ்த்துவானாக.

௩௰ தன்னையடிக்கிறவனுக்குத் தன் கன்னத்தை ஒப்புக்கொடுத்து நிந்தையாலே திர்ப்தியாவானாக.

௩௧ ஏனென்றால் ஆண்டவர் என்றென்றைக்கும் ஒழித்துவிடாமல்,

௩௨ * தாம் சஞ்சலப்படுத்தினாலும் பிறபாடு தம்முடைய மிகுந்த கிருபையின்படி இரங்குகிறார். * ஏசாயா. ௫௪, ௮.

௩௩ ஏனென்றால் அவர் மனப்பூர்வமாய் மனுபுத்திரரைச் சிறுமையாக்கிச் சஞ்சலப்படுத்துகிறதில்லை.

௩௪ ஒருவன் பூமியிலுள்ள கட்டுண்டவர்களையெல்லாம் தன் காலின்கீழ் நசுக்குகிறதையும்,

௩௫ உன்னதமானவரின் முகத்துக்கு முன்பாக மனுஷருடைய நியாயத்தைப் புரட்டுகிறதையும்,

௩௬ மனுஷனை யவனுடைய வழக்கிலே மாறுபாடாக்குகிறதையும் ஆண்டவர் காணாதிருப்பாரோ?

௩௭ * ஆண்டவர் கட்டளையிடாதகாரியம் சம்பவிக்குமென்று சொல்லுபவனார்? * ௨. சாமுவேல். ௰௬, ௰.

௩௮ * தீமையும் நன்மையும் உன்னதமா

வருடையவராயிருந்து புறப்படாதோ?
* ஏசாயா. ௪௫, ௭. ஆமோ. ௩, ௬.

௩௯ நரஜீவனுள்ள மனுஷன் முறையிடுவானேன்? அவனவன் தன்பாவத்தின் பேரில் முறையிடுவானாக.

௪௰ நாம் நம்முடைய வழிகளைச்சோதித்து ஆராய்ந்து கர்த்தரிடமட்டுஞ்சேரத் திரும்பக்கடவோம்.

௪௧ நாம் நம்முடைய இருதயத்தைக் கைகளோடேகூடப் பரமண்டலங்களிலிருக்கிற பராபரனண்டைக்கு ஏறெடுத்து,

௪௨ நாங்கள் துரோகஞ்செய்து கலகம் பண்ணினோம், ஆகையாலே தேவரீர் மன்னிக்காதிருந்தீர்.

௪௩ தேவரீர் கோபத்தால் மூடிக்கொண்டு எங்களைத் தப்பவிடாமற் பின்றொடர்ந்து கொன்றீர்.

௪௪ ஜெபம் உட்பிரவேசிக்கக் கூடாதபடிக்கு உம்மை மேகத்தால் மூடிக்கொண்டீர்.

௪௫ ஜனசதளங்களின் நடுவிலே எங்களைக் குப்பையுந் தள்ளுபடியுமாக்கினீர்.

௪௬ எங்கள் பகைஞரெல்லாரும் எங்கள் மேலே தங்கள் வாயைத்திறந்தார்கள்.

௪௭ திகிலும் படுகுழியும் பாழ்க்கடிப்பும் நொறுக்குதலும் எங்களுக்குண்டாயிற்றென்று விண்ணப்பஞ்செய்யக்கடவோம்.

௪௮ என் ஜனமாகிய குமாரத்தியினிமித்தம் * நீர்க்கால்கள் என் கண்களிலிருந்து பாய்கிறது. * ௧, ௰௬. ௨, ௰௮.

௪௯ கர்த்தர் பரமண்டலங்களிலிருந்து நோக்கிப்பார்க்குமட்டுக்கும்,

௫௰ என் கண்கள் அமரிக்கையற ஓய்வில்லாமற் சொரிகிறது.

எரேமியாவின் விண்ணப்பம்.

௫௧ என்பட்டணத்தினுடைய எல்லாக் குமாரத்திகளினிமித்தமும் என்னுடைய கண் என்னுத்துமாவுக்கு நோவுண்டாக்குகிறது.

௫௨ முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் என்னை யொரு பட்சியைப்போல வேட்டையாடவே வேட்டையாடினார்கள்.

௫௩ என்பிராணனைப் பள்ளத்திலே சங்கரித்து என்மீதில் கல்லுக்களைப் போட்டார்கள்.

௫௪ தண்ணீர் என் தலையின்மேற் புரண்டது; நாசமானேனென்றேன்.

௫௫ மகா ஆழமான பள்ளத்திலிருந்து கர்த்தாவே, உம்முடைய நாமத்தைப் பற்றிக் கூப்பிட்டேன்.

௫௬ என் சத்தத்தைக் கேட்டீர், என் பெருமூச்சுக்கும் என் கூப்பிடுதலுக்கும் உமது செவியைமறைக்காதேயும்.

௫௭ நான் உம்மைநோக்கிக்கூப்பிட்ட நாளிலே தேவரீர் சேர்ந்து பயப்படாதே என்றீர்.

௫௮ ஆண்டவரே, என்னுத்துமாவின் வழக்கை வழக்காடினீர் என்பிராணனை மீட்டீர்.

௫௯ கர்த்தாவே, நான்பட்ட அநியாயத்தைக் கண்டீர், என் நியாயத்தைத் தீரும்.

௬௰ அவர்களுடைய குரோதத்தீர்த்துக்கொள்ளுதலெல்லாவற்றையும், அவர்கள் எனக்கு விரோதமாக நினைத்த [illegible] நினைவுகளையுங் கண்டீர்.

௬௧ கர்த்தாவே, அவர்கள் [illegible] நிந்தையும் அவர்கள் எ[illegible] நினைத்த எல்லாவற்றை[illegible]

௬௨ எனக்கு விரோ[illegible]வர்களின் பேச்சுகளையும் அவ[illegible] விரோதமாய் யோசிக்கும் வி[illegible]யுங் கேட்டீர்.

௬௩ அவர்களுடைய உட்காருதலையும் அவர்களுடைய எழுந்திருத்தலையும் நோக்கிப்பாரும், நான் அவர்களுடைய பாட்டாயிருக்கிறேன்.

௬௪ கர்த்தாவே, அவர்கள் கைகளின் செய்கைக்குத்தக்க பதிற்பலனை யவர்களுக்கு அளிப்பீர்.

௬௫ அவர்களுக்கு இருதயத்தின் மூனைக் கேட்டைக்கொடுப்பீர், உம்முடைய சாபம் அவர்கள்மேலிருக்கும்.

௬௬ கோபமாயவர்களைப் பின்றொடர்ந்து அவர்களைக் கர்த்தருடைய வானங்களின் கீழிராதபடிக்கு அழித்துவிடுவீர்.

## ௪. அதிகாரம்.

[யூதசனத்துக்குவந்த சிறுமையின்புலம்பல்.]

எத்தனையாய்ப் பொன்மங்கி நல்லதங்கம் மாறிப்பரிசுத்தஸ்தலத்தின் கல்லுகள் சகல வீதிகளின்முனையிலுங் கொட்டுண்டுபோயிற்று.

௨ எத்தனையாய் அபரஞ்சிக்கொப்பிடப்பட்டவிலையேறப்பெற்ற சீயோன்குமாரர் குயவனுடையகைகளின் வேலையான மண்பாண்டங்களுக்குச்சரியாக எண்ணப்படுகிறார்கள்.

௩ திமிங்கலங்களுமுதலாய்க் கொங்கைகளை நீட்டித்தங்கள் குட்டிகளுக்கு முலைகொடுக்கிறது, என்ஜனமாகிய குமாரத்தியோ வனாந்தரத்திலுள்ள தீக்குருவியைப்போற் கொடூரமாயிருக்கவேணும்.

௪ பாலகனுடைய நாவு தாகத்தால் அதின் மேல்வாயோடே ஒட்டிக்கொண்டிருக்கிறது, குழந்தைகள் அப்பங்கேட்கிறது, அவைகளுக்குக் கொடுப்பாரில்லை.

௫ ருசிவர்க்கங்களைச் சாப்பிட்டவர்கள் வீதிகளில் பாழ்த்துக்கிடக்கிறார்கள். இரத்தாம்பர உடுப்பில் வளர்க்கப்பட்டவர்கள் குப்பைமேடுகளை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.

௬ * கைகளின் பிரயாசமில்லாமல் ஒரு க்ஷணப்பொழுதிலே கவிழ்க்கப்பட்ட சோதோமின் பாவத்தைப் பார்க்கிலும் என் சனமாகிய குமாரத்தியின் அக்கிரமம் பெரிதானது. * ௧. மோசே. ௰௯, ௨௪, ௨௫.

௭ அவர்களுடைய நசரேயர் உறைந்த மழையைப் பார்க்கச் சுத்தமும் மகா துப்புரவும் முத்துக்களைப் பார்க்கச் சுந்தராங்கமும் நீலக்கல் இழைத்த மேனியுமாயிருந்தார்கள்.

௮ அவர்களுடைய ரூபம் கறுப்பிலும் இருண்டுபோயிற்று, வீதிகளில் அறியப்படமாட்டார்கள். அவர்கள் தோல் அவர்கள் எலும்புகளோடு ஒட்டிக்கொண்டு, காய்ந்த மரத்துக்கொப்பாயிற்று.

௯ பட்டயத்தாற் கொலையுண்டவர்கள் பசியினாற் கொலையுண்டவர்களைப் பார்க்கப் பாக்கியவான்களாயிருக்கிறார்கள், ஏனெனில் இவர்கள் வயல்களுடைய வருத்தமில்லாமையாற் குத்துண்டு வாடிப்போகிறார்கள்.

௰ * இரக்கமுள்ள ஸ்திரீகளின் கைகள் தங்கள் பிள்ளைகளைச் சமைத்தது, என் சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலில் அவைகள் அவர்களுக்கு ஆகாரமாயிற்று. * ௨. ௨௰,

௰௧ கர்த்தர் தம்முடைய சினத்தை நிறைவேற்றித் தம்முடைய கோபத்தின் உக்கிரத்தை ஊற்றிப்போட்டுச் சீயோனில் அக்கினியைக் கொளுத்தினார், அது அதின் அஸ்திபாரங்களைப் பட்சித்துப்போட்டது.

௰௨ சத்துருவும் பகைஞனும் எருசலேமின் வாசல்களுக்குட் பிரவேசிப்பானென்று பூமியின் இராசாக்களும் பூச்சக்கரத்திலுள்ள சகல குடிகளும் நம்பாதே போனார்கள்.

௰௩ அதின் நடுவில் நீதிமான்களின் இரத்தத்தைச் சிந்தப்பண்ணின அதினுடைய தீர்க்கதரிசிகளின் பாவங்களினாலும் அதினுடைய ஆசாரியர்களின் அக்கிரமங்களினாலும் அப்படி வந்தது.

௰௪ குருடர் வீதிகளில் அலைந்து அந்த இரத்தத்தாற் கறைப்பட்டு, ஒருவரும் போகக்கூடாததினால் அவர்கள் வஸ்திரங்களைத் தொட்டார்கள்.

௰௫ விலகுங்கள் தீட்டுண்டாயிருக்கிறது, தொடாமல் விலகுங்கள் விலகுங்களென்று அவர்களை நோக்கிக் கூப்பிட்டார்கள், மெய்யாய்ப் பறந்தும் அலைந்தும் போனார்கள், இனித் தங்கித் தரிக்கமாட்டார்களென்று புறச்சாதிகளுக்குள்ளே தானே சொல்லப்பட்டது.

௰௬ கர்த்தருடைய முகம் அவர்களைப் பிரித்துப்போட்டது, அவர்களை இனி நோக்கார், ஆசாரியர்களுடைய முகத்தைப் பாராமலும் முதிர்ந்த வயதுள்ளவர்களுக்கு இரங்காமலும் போனார்கள்.

௰௭ இன்னம் நாங்களெங்கள் அபத்தமான சகாயத்துக்குக் காத்திருந்ததினாலே எங்கள் கண்கள் பூத்துப்போயிற்று, இரட்சிக்கமாட்டாத சாதிக்குக் காத்து எதிர்ப்பார்க்கவே எதிர்ப்பார்த்தோம்.

௰௮ நாங்கள் எங்கள் வீதிகளில் நடக்கக்கூடாதபடிக்கு எங்கள் நடைகளை வேட்டையாடினார்கள், எங்கள் முடிவு சேர்ந்தது, எங்கள் நாட்கள் நிறைவேறிப்போயிற்று, ஏனெனில் எங்கள் முடிவு வந்தது.

௰௯ எங்களைப் பின்தொடர்ந்தவர்கள் ஆகாசத்துக் கழுகுகளைப் பார்க்கிலும் வேகமாயிருந்தார்கள், பருவதங்களின்மேல் எங்களைக் கடிசாயத் தொடர்ந்தார்கள், வனாந்தரத்தில் எங்களுக்குப் பதிவிருந்தார்கள்.

௨௰ எங்கள் நாசியின் சுவாசமாகிய கர்த்தர் அபிஷேகம் பண்ணிவைத்தவனுடைய நிழலிலே சாதிகளுக்குள்ளே பிழைப்போமென்றோம், * அவனிவர்கள் படுகுழிகளில் பிடிபட்டான். * எரேமி. ௫௨, ௯.

அறிவிக்கப்பட்ட ஆறுதல்.

௨௧ ஊத்ஸ் தேசத்திற் குடியிருக்கிற * ஏதோம் குமாரத்தியே! சந்தோஷித்து மகிழ், பாத்திரம் உன்னண்டைக்குந் தாண்டி வரும், அப்போது வெறித்துத் திறந்துபோடப்படுவாய். * எரே. ௪௯, ௰௨. சங். ௱௩௭, ௭.

௨௨ சீயோன் குமாரத்தியே * உன் அக்கிரமம் தீர்ந்தது, உன்னை அப்புறஞ் சிறைபோகப்பண்ணார். ஏதோம் குமாரத்தியே உன் அக்கிரமத்தை விசாரிப்பார் உன் பாவங்களைத் திறந்துவைப்பார். * ஏசாயா. ௪௰, ௨.

## ௫. அதிகாரம்.

[எரேமியா தன் சனத்துக்காகப் பண்ணின விண்ணப்பம்.]

கர்த்தாவே, எங்களுக்கென்ன வந்ததென்று நினைத்துக்கொள்ளும், எங்கள் நிந்தையை நோக்கிப்பாரும்.

௨ எங்கள் சுதந்தரம் அந்நியர்வசமாகவும் எங்கள் வீடுகள் புறத்தேசத்தார்வசமாகவும் புரண்டுபோயிற்று.

௩ திக்கற்றவர்களானோம், தகப்பனில்லை, எங்கள் தாய்கள் விதவைகளைப்போலிருக்கிறார்கள்.

௪ எங்கள் தண்ணீரைப் பணத்துக்கு வாங்கிக் குடிக்கிறோம், எங்கள் விறகு விலைக்கிரயமாய் வருகிறது.

௫ எங்கள் கழுத்துக்கு உபாரமாக ஒடுக்கப்படுகிறோம், நாங்கள் உழைச்சினைத்தாலும் எங்களுக்கு இளைப்பாறுதலில்லை.

௬ அப்பத்தாலே திருப்தியாகும்படிக்கு எஜிப்தியருக்கும் அசூரியருக்கும் எங்களைக் கையைக் கொடுத்தோம்.

௭ எங்கள் பிதாக்கள் பாவஞ்செய்தார்கள். அவர்களில்லை, * நாங்கள் அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம், * எரேமியா. ௭, ௨௯.

௮ அடிமைகள் எங்களையாளுகிறார்கள், எங்களையவர்கள் கையிலிருந்து பறிப்பாரில்லை.

௯ வனாந்தரத்திலிருக்கிற பட்டயத்தைத்தொட்டு எங்கள் அப்பத்தைப் பிராணமோசத்தோடே கொண்டுவருகிறோம்.

௰ பசியின் கடினத்தினால் எங்கள் தோல் அடுப்பங்கடையைப்போற் கறுத்துப்போயிற்று.

௰௧ சீயோனிலிருந்த ஸ்திரீகளையும் யூதா பட்டணங்களிலிருந்த கன்னியாஸ்திரீகளையும் அவமானப்படுத்தினார்கள்.

௰௨ பிரபுக்கள் அவர்கள் கையினாலே தூக்கிப்போடப்பட்டார்கள் * முதிர்ந்தவயதுள்ளவர்களின் முகங்கள் எண்ணப்பட்டதில்லை. * ௫. மோசே. ௨௮, ௪௯. ௫௰.

௰௩ வாலிபரை எந்திரம் அரைக்கக்கொண்டுபோகிறார்கள், இளைஞர் விறகு சுமந்து இடறுகிறார்கள்.

௰௪ முதிர்ந்த வயதுள்ளவர்கள் வாசல்களிலிருக்கிறதும், வாலிபர் கின்னரங்களை வாசிக்கிறதும் ஓய்ந்துபோயிற்று.

௰௫ எங்களிருதயத்தின் சந்தோஷம் ஒழிந்துபோயிற்று, எங்கள் களிகூருதல் துக்கமாகமாறிற்று.

௰௬ * எங்கள் தலையின் கிரீடம் விழுந்தது. ஆ, நாங்கள் பாவஞ்செய்ததினாலே எங்களுக்கையோ, * எரேமி. ௰௩, ௰௮.

௰௭ அதினாலே எங்களிருதயம் பலட்சயமாயிற்று, அதினாலே எங்கள் கண்கள் இருண்டுபோயிற்று.

௰௮ பாழாய்க்கிடக்கிற சீயோன் பருவதத்தின்மேல் நரிகள் ஓடித்திரிகிறது.

௰௯ கர்த்தாவே, தேவரீர் என்றென்றைக்குமிருக்கிறீர்,* உம்முடைய ஆசனம் தலைமுறை தலைமுறையாக நிலைநிற்கும். * சங். ௱௨, ௰௨.

௨௰ * தேவரீர் என்றைக்கும் எங்களை மறந்து நெடுங்காலமாக எங்களைக் கைவிட்டிருப்பானேன். * சங்கீ. ௰௩, ௨.

௨௰௧ கர்த்தாவே, * எங்களையும்மண்டைக்குத் திருப்பிக்கொள்ளும், அப்போது திரும்புகிறோம், பூர்வகாலத்துக்குச் சமானமாக எங்கள் நாட்களைப் புதிதாக்கும். * எரேமியா. ௩௧, ௰௮.

௨௰௨ ஒன்றிலெங்களை வெறுக்கவே வெறுப்பீரோ? மிகுதியாகவும் எங்கள்பேரில் கடுமையாயிருப்பீரோ.

---

எரேமியாவின் புலம்பல் முடிந்தது.

# எசேக்கியேலின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[கர்த்தர் கேருபீன்களாகிய மகிமையான வாகனத்தின்மீதிலிருக்கிறவராய் எசேக்கியேலுக்குத் தரிசனையானது.]

முப்பதாம் வருஷத்து நாலாமாதம் ஐந்தாந்தேதியிலே நான் * கேபார் நதியண்டையிலே சிறையிருப்பானவர்களின் நடுவிலிருக்கும்போது சம்பவித்ததேதென்றால், வானங்கள் திறவுண்டு நான் பராபரனுடைய தரிசனைகளைக் கண்டேன் * சங்கீதம். ௱௩௭, ௧.

௨ அப்போது * யோயாக்கீமென்ற ராசாவுடைய சிறையிருப்பின் ஐந்தாம் வருஷம், * ௨. இராசா. ௨௪, ௰௫.

௩ அந்த ஐந்தாந்தேதியிலே கல்தேயர் தேசத்திலுள்ள கேபார் நதியண்டையிலிருந்த பூசியென்ற ஆசாரியனின் குமாரனாகிய எசேக்கியேலுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகவேயுண்டாகி அங்கே கர்த்தருடைய கை அவன்மேல் வந்தது.

௪ இதோ வடக்கேயிருந்து பெருங்காற்றும் பெரிய மேகமும் அதோடே கலந்த அக்கினியும் வரக்கண்டேன். அதைச் சுற்றிலும் பிரகாசமும் அதின் நடுவில் அக்கினிக்குள்ளிருந்து விளங்கிய சொகுசாவின் ரூபமுண்டாயிருந்தது.

௫ அதின் நடுவிலிருந்து புறப்படுகிற நாலு சீவன்களின் உருக்காணப்பட்டது, அவைகளின் ரூபம் எப்படியென்றால் அவைகள் மனுஷசாயலாயிருந்தது,

௬ * அவைகளில் ஒவ்வொன்றுக்கு நந்நான்கு முகங்களும் ஒவ்வொன்றுக்கு நந்நான்கு செட்டைகளுமிருந்தது. * ௰, அதி. ௰௪.

எ அவைகளுடைய கால்கள் செம்மையான கால்களானது, அவைகளுடைய உள்ளங்கால்கள் கன்றுக்குட்டியின் உள்ளங்கால்களுக்கொப்பாயிருந்தது, துலக்கப்பட்ட வெண்கலத்தின் வருணமாய் மின்னிக்கொண்டிருந்தது.

அ அவைகளுடைய செட்டைகளின்கீழ் அவைகளின் நாலுபக்கங்களிலும் * மனுஷகைகளிருந்தது, நாலுக்கும் அதின்தின் முகங்களும் அதின்தின் செட்டைகளுமுண்டாயிருந்தது. * ய, அதி. யஅ.

கூ அவைகள் ஒவ்வொன்று தன்தன் செட்டைகளை மற்றதின் செட்டைகளோடே சேர்த்தது, அவைகள் நடக்கையில் திரும்பிக்கொள்ளாமல் ஒவ்வொன்று தன்தன்முகத்திறகெதிரான திக்குக்கு நேர்ந்நடந்தது.

ய * அவைகளுடைய முகங்களின் சாயலேதெனில், அவைகளுக்கு மனுஷமுகங்களும் அவைகள் நாலுக்கும் வலதுபுறத்திலே † சிங்கமுகங்களும் அவைகள் நாலுக்கும் இடதுபுறத்திலே எருது முகங்களும், அவைகள் நாலுக்கும் கழுகுமுகங்களுமிருந்தது. * ய, அதி. யச. அறிவி. ச, எ.

† க. இராசாக்கள். எ, உகூ.

யக அவைகளுடைய முகங்களும் அவைகளுடைய செட்டைகளும் உயரப்பிரிந்திருந்தது. ஒன்றோடொன்றுசேர்ந்த இரண்டிரண்டு செட்டைகள் ஒவ்வொன்றிற்கிருந்தது, இரண்டிரண்டு செட்டைகளோ அவைகளுடைய சரீரங்களை மூடிற்று.

யஉ ஒவ்வொன்று தன்தன்முகத்திறகெதிரான திக்குக்கு நேர்ந்நடந்தது, ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத்திறகும் அவைகள் போயிற்று, போகையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.

யங சீவன்களுடைய சாயல் என்னமாயிருந்ததெனில், அவைகள் எரிகிற அக்கினியினுடைய தழலின்ரூபந் தீவெட்டிகளின் ரூபமானவைகள் இந்த அக்கினி சீவன்களுக்குள்ளே நடமாடிக்கொண்டு பிரகாசமாயிருந்தது அக்கினியிலிருந்து மின்னல் புறப்பட்டது.

யச சீவன்கள் மின்னலின் ரூபாக ஓடித்திரிந்தது.

யரு நான் இந்தச்சீவன்களைப்பார்த்துக்கொண்டிருக்கையில், இதோ, பூமியிலே சீவன்கள்ண்டையிலே ஒரு உருளை தன்கிருக்கும் நாலுமுகங்களின்படி நின்றது.

யசா * உருளைகளின் ரூபமும் அவைகளின் வேலையுந் தர்சீஸ்இரத்தினத்தின் வருணமானது, அவைகள் நாலுக்கும் ஒரேவிதச்சாயலுண்டாயிருந்தது, அவைகளின் ரூபமும் அவைகளின் வேலையும் உருளையின் நடுவில் உருளையிருக்குமாப்போலே காணப்பட்டது. * ய, அதி. கூ. ய. க. இராசா. எ, கங.

யஎ அவைகள் ஓடுகையில் தங்கள் நாலுபக்கங்களிலும் ஓடும், ஓடுகையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.

யஅ அவைகளின் சக்கரங்களோவென்று பயங்கரமான உயர்ச்சியாயிருந்தது, நாலினுடைய சக்கரங்களுஞ் சுற்றிலுங் கண்களால் நிறைந்திருந்தது. * ய, அதி. யஉ.

யகூ சீவன்கள் நடக்கையில் உருளைகள் அவைகளருகேயோடிற்று, சீவன்கள் பூமியிலிருந்தெழும்புகையில் உருளைகளும் எழும்பிற்று.

உய ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத்திறகும் அவைகள் போயிற்று, அவ்விடத்திறகு அவைகளின் ஆவியும் போகவேண்டுமென்றிருந்தது, உருளைகளும் அவைகளருகேயெழும்பிற்று, ஏனென்றால் சீவனுடைய ஆவி உருளைகளிலிருந்தது.

உக அவைகள் போகையில் இவைகள் போயிற்று, அவைகள் நிற்கையில் இவைகள் நின்றது, அவைகள் பூமியிலிருந்தெழும்புகையில், உருளைகள் அவைகளருகே எழும்பிற்று, ஏனெனில் சீவனுடைய ஆவி உருளைகளிலிருந்தது.

உஉ சீவனுடைய தலைகளின் மேலேயென்றால் பயங்கரமான பளிங்கின் துலக்கமாய் ஒரு மண்டலமிருந்தது, அவைகளுடைய அவைகளுடைய தலைகளின்மேல் விரிந்திருந்தது.

உங மண்டலத்தின்கீழ் அவைகளுடைய செட்டைகள் ஒன்றுக்கொன்று நேராகச் செம்மையாய் விரிந்திருந்தது, தங்கள் தங்கள் சரீரங்களை மூடிக்கொள்ளுகிற இரண்டிரண்டு செட்டைகள் இந்தண்டையும் அந்தண்டையுமிருக்கிற ஒவ்வொன்றிற்குமிருந்தது.

உச அவைகள் நடக்கையில் நான் அவைகளுடைய செட்டைகளின் இரைச்சலைத் திரளான தண்ணீர்களின் இரைச்சலாகவுஞ் சர்வத்திறகும் வல்லவருடைய சத்தமாகவுங் கேட்டேன், ஒரு இராணுவத்தின் இரைச்சலுக்கொத்த அரவத்தின் சத்தமாயிருந்தது, அவைகள் நிற்கையில் தங்கள் செட்டைகளைத் தளரவிட்டது.

உரு அவைகள் நின்று தங்கள் செட்டைகளைத் தளரவிட்டிருக்கையில் அவைகளுடைய தலைகளுக்கு மேலான மண்டலத்தின் மீதிலிருந்து சத்தம்பிறந்தது.

உசா அவைகளுடைய தலைகளுக்குமேலான மண்டலத்தின்மீதில் நீலக்கல்லின் ரூபுக்கொத்த இராசாசனத்தினுடைய சாயலும், உயர இராசாசனத்தினுடைய சாயலின்மேலே மனுஷனுக்கொத்த சுரூபமுமிருந்தது.

உஎ அவருடைய இடுப்பின் ரூபைத்தலைக்குமேலெல்லாம் உட்புறஞ்சுற்றிலும் அக்

யிக்காந்தியான சொருசாவின் நிறமாகக் கண்டேன், அவருடைய இடுப்பினுடைய தலைக்கீழெல்லாம் அக்கினிரூபமாகவும், அதைச்சுற்றிலும் பிரகாசமாகவுங் கண்டேன்.

௨௮ மழைநாளில் மேகத்தில் வானவில்லெப்படிக் காணப்படுகிறதோ, அப்படிச் சுற்றிலுமுண்டான அந்தப்பிரகாசங்காணப்பட்டது, இதுவே கர்த்தருடைய மகிமையினுடைய சாயலின் தரிசனையாயிருந்தது, * அதை நான் பார்த்தபோது நான் முகங்குப்புற விழுந்து, பேசுகிற ஒருவருடைய சத்தத்தைக் கேட்டேன். * தானியேல். ௰, ௯.

## ௨. அதிகாரம்.

[எசேக்கியேல் இஸ்ரவேல் வீட்டாருக்குத் தீர்க்கதரிசியாயிருக்கக் கர்த்தரால் அழைக்கப்பட்டது.]

அவர் என்னுடனே, மனுப்புத்திரனே, * உன் பாதங்களின்மேல் நில்லு, உன்னுடனே பேசுவோமென்றார். * தானியேல். ௰, ௰௧.

௨ இப்படியவர் என்னுடனே சொல்லுகிறபோது, * ஆவி எனக்குள் வந்து, என்னை என் பாதங்களின்மேல் நிறுத்திற்று, அப்போது என்னுடனே பேசுகிறவரின் வசனத்தைக் கேட்டேன். * ௩. அதி. ௨௪.

௩ அவர் என்னுடனே சொன்னதாவது, மனுப்புத்திரனே நமக்கு விரோதமாயெழும்பின கலகக்காரச் சாதியாகிய இஸ்ரவேல் புத்திரரண்டைக்கு நாம் உன்னை யனுப்புகிறோம், அவர்களும் அவர்கள் பிதாக்களும் இந்நாள்வரைக்குமே நமக்கு விரோதமாய்த் துரோகஞ்செய்தார்கள்.

௪ * அவர்கள் கடினமுகமும் முரட்டாட்ட இருதயமுமுள்ள புத்திரர், அவர்களண்டைக்கு நாமுன்னை யனுப்புகிறோம், கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை யுரைக்கிறாரென்று அவர்களோடே சொல்வாயாக. * ஏசாயா ௪௮, ௪. எரேமியா ௫. ௩.

௫ கலகவீட்டாராகிய அவர்கள் கேட்டாலுங் கேளாவிட்டாலுந் * தங்களுக்குள்ளே ஒரு தீர்க்கதரிசியிருக்கிறதை யவர்களறியவேணும். * ௩. அதி. ௰௭.

௬ மனுப்புத்திரனே, * நீயவர்களுக்குப் பயப்படாயாக, அவர்கள் வார்த்தைகளுக்கும் பயப்படாயாக, முரட்டாட்டக்காரரும் முள்ளுகளும் உன்னிடத்திலிருந்தாலும் * நீ தேள்களிடத்திலே தங்கியிருந்தாலும் நீயவர்கள் வார்த்தைகளுக்குப் பயப்படாமலும் † அவர்கள் முகத்திற்குக் கலங்காமலுமிருப்பாயாக, ஏனெனில் அவர்கள் கலகவீட்டார். * எரே. ௧, ௮. † ௧.பேதுரு. ௩, ௰௪.

௭ கலகக்காரராகிய அவர்கள் கேட்டாலுங் கேளாவிட்டாலும் நீ நம்முடைய வார்த்தைகளையவர்களோடே சொல்வாயாக.

௮ மனுப்புத்திரனே, நீயோவென்றால் கலகவீட்டாரைப்போலக் கலகக்குணமாயிராமல், நாம் உன்னோடே சொல்லுகிறதைக் கேள், உன் வாயைத் திறந்து * நாம் உனக்குக் கொடுக்கிறதைப் புசியென்றார். * அறிவிப்பு ௰, ௯.

௯ அப்போது இதோ, என்னண்டைக்கு நீட்டப்பட்ட கையைக் கண்டேன், இதோ அதிலே ஒரு புஸ்தகச்சுருள்,

௰ அவர் அதை எனக்கு முன்பாக விரித்தார், அது முற்புறமும் பிற்புறமும் எழுதப்பட்டதாயிருந்தது, அதிலே புலம்பல்களுந் தவிப்பும் ஐயோ என்பதும் எழுதியிருந்தது.

## ௩. அதிகாரம்.

[கர்த்தர் தீர்க்கதரிசியாக வைத்த எசேக்கியேலுக்கிட்ட கட்டளைகள்.]

பிறபாடு அவரென்னுடனே மனுப்புத்திரனே * நீ காண்கிறதைப் புசி, இந்தச் சுருளை நீ புசித்துப் போய் இஸ்ரவேல் வீட்டாரோடே பேசென்றார்.

௨ அப்படியே என் வாயைத் திறந்தேன் அப்போது அவர் அந்தச் சுருளை யெனக்குப் புசிக்கக்கொடுத்து,

௩ என்னுடனே மனுப்புத்திரனே நாமுனக்குக் கொடுக்கிற இந்தச் சுருளை நீயுன் வயிற்றிலேயுட்கொண்டு அதினாலுன் குடல்களை நிரப்புவாயாகவென்றார், அப்போது அதைப் புசித்தேன் * அது என் வாயிலே தேனைப்போலத் தித்திப்பாயிருந்தது. * அறிவிப்பு. ௰, ௰.

௪ பிறகு அவர் என்னுடனே சொன்னதாவது, மனுப்புத்திரனே நீ போய் இஸ்ரவேல் வீட்டாரிடத்திலே சேர்ந்து நம்முடைய வார்த்தைகளைக் கொண்டு அவர்களோடே பேசு.

௫ ஏனென்றால் அடக்கமான உதடும் அறியவரிதான பாஷையுமுள்ள சனத்தண்டைக்கல்ல இஸ்ரவேல் வீட்டாரண்டைக்கே நீ யனுப்பப்படுகிறாய்.

௬ அடக்கமான உதடுந் தாங்கள் சொல்லும் வார்த்தைகளை நீயுணரமாட்டாத அரிதான பாஷையுமுள்ள அநேக சனத்தாங்களண்டைக்கு நீயனுப்பப் படுகிறதுமில்லையே நாம் அவர்களண்டைக்குன்னை யனுப்பினாலும் அவர்களுனக்குக் கேள்விகொடாதிருப்பார்களோ?

௭ இஸ்ரவேல் வீட்டாரோவென்றால் உனக்குக் கேள்விகொடுக்கமாட்டோமென்பார்கள், ஏனென்றால் நமக்குந்தானே கேள்விகொடுக்கமாட்டோமென்கிறார்கள், அதேனென்றால் இஸ்ரவேல் வீட்டார் அனைவரும் * முர

ளிலிருந்து நீங்கித்தப்பினாலும், வேறெய
க்கினியவர்களைப்பட்சிக்கும், அப்படியே நா
மநமதுமுகத்தை யவர்களுக்கு விரோதமா
க்ததிருப்புகையில, நாங் கர்த்தரென்றறிந
துகொளவீர்கள்.

௮ அவர்கள துரோகம்பண்ணிக்கொண
டேயிருந்தபடியினால, நாநதேசத்தைப்பா
ழாயப்போகப்பண்ணுவோமென்று கர்த்த
ர்சொலலுகிறுரென்றார்.

## ௰௬. அதிகாரம்.

[தெயவ உபகாரங்களை நன்றியறியாதே
போனயூதசசனத்தைசசுருக்ககாயக்கண
டித்தது.]

கர்த்தருடையவார்த்தையெனக்குண
டாகி, அவர்சொன்னதாவது,

௨ மனுபுத்திரனே, நீ யெருசலேமுக
கு அதின அருவருப்புகளையறிவித்து,

௩ சொலலவேண்டியதாவது, கர்த்தரா
கிய ஆண்டவர் எருசலேமுக்குச்சொலலுவ
ண்டியதேதெனில, உன்பூர்வோத்திரமும
உனபிறப்புகளுங் கானானியர் தேசத்தின
டையது,உன் தகப்பன எமோரியனும,உன
தாயகெத்தித்தியுந்தானே.

௪ நீ பிறக்கிறநாளிலேயுனபிறப்பினசமா
சாரங்களெனனமாயிருநததென்றால, உன
தொப்புள அறுக்கப்பட்டதுமிலலை, நீநம
துபார்வைக்குப்பிரியப்படத் தண்ணீரினுற
கழுவப்பட்டதுமிலலை, உப்பாறசுத்திகரிக
கப்பட்டதுமிலலை,புடவைகளிறசுற்றப்பட
டதுமிலலை.

௫ உனக்குப்பரிதபித்து இவைகளிலொ
ன்றையாகிலும உனக்குச்செயய ஒருக்கண
ணும உன்பேரில இரக்கமாயிருந்ததிலலை,
நீபிறந்தநாளில உன்னுத்துமா அரோசிக
கப்பட்டதினால,வெளியி லெறிநதுவிடப்ப
ட்டாய.

௬ நாமோவெனில உனக்கருகாயக்கட
நதுவந்து, நீயுன்னுடைய இரத்தத்திலே
மிதிபடுவதைக்கண்டு உன இரத்தத்திறகிட
க்கிற உன்னுடனே பிழையென்றுசொலவி
யுன இரத்தத்திறகிடக்கிற வுன்னுடனேபி
ழையென்றுதானசொனனோம.

௭ உன்னைவயலினபயிரைபபோல,அநே
கமாயிரமாகுமபடிக்குவைத்தோம, நீவள
ர்நது, பெரியவளாகி மகாசவுந்தரியத்தை
யடைந்தாய ஸ்தனங்களெழும்பிறறு, உன
மயிர்வளர்நதது, ஆனாலநீ திருவாணமும அ
மமணமுமாயிருந்தாய.

௮ நாமோவெனில உனக்கருகாகக்கட
நது, உன்னைப்பார்த்தோம, இதோ, உன
னுடையகாலம பருவகாலமாயிருந்தது,அ
பபோது * நமமுடையவஸதிரத்தை யுன
பேரிலேவிரித்து உனதிருவாணத்தைமூடி,
உனக்காணையிட்டுக்கொடுத்து, உன்னோடே
உடனபடிக்கைக்குள்ளானோமென்று, கர்த்த
ராகிய ஆண்டவர்சொலலுகிறார், அப்படி
யே நமமுடையவளானுய. * ரூத். ௩. ௯.

௯ நாமுன்னைத்தண்ணீரினுறகழுவி,உன
னை இரத்தமறஸநானம்பண்ணுவித்துஉன
க்கெணணெயபூசி.

௰ சித்திரத்தையலாடையை யுனக்குடுத
திச்சாயந்தீர்ந்த பாதரட்சைகளை யுனக்கு
த்தரிப்பித்து, மெலலியபுடவையைக்கட்ட
வும, பட்டுச்சாலவையைமூடிக்கொளளவும
உனக்குக்கொடுத்து.

௰௧ உன்னை யாபரணங்களாலலங்கரித
து, உனகைகளிறசரிகைகளையும,உனகழுத
திறசங்கிலியையுமபோட்டு.

௰௨ உன நெறறியில நெறறிப்பட்டத
தையும, உனகாதுகளிறகடுக்கனையும,உன
தலையினமேறசிங்காரமான கிரீடத்தையும
போட்டோம.

௰௩ அப்படியேபொன்னினாலுமவெளளி
யினாலும அலங்கரிக்கப்பட்டாய, உனது
டுப்புமெலலியபுடவையும, பட்டுஞ்சித்திர
த்தையலாடையுமாயிருந்தது,நலலமாவை
யுந்தேனையும எணணெயையுஞ்சாப்பிட்
டாய, நீமிகுதியும அழகாகி இராசசியமடை
டையும அனுகூலத்தைப்பெறறுய.

௰௪ உனனழகினாலேயுன்னுடையகீர்த்தி
புறசசாதிகளுக்குள்ளே பிரசித்தமாயிறறு,
ஏனெனில நாம உனமேலவைத்தநமமுடை
யமகிமையினாலே அதுகுறையறறதாயிருந
ததென்றுகர்த்தராகிய ஆண்டவர்சொலலு
கிறார்.

௰௫ நீயோவென்றால உனனழகைநம்பி,
உனகீர்த்தியினாலவேசித்தனம்பண்ணிக்கட
நதுபோகிறவனுக்கெலலாம நேரயபட்ட
உனவேசித்தனங்களைப்புரளப்பண்ணி,

௰௬ உனவஸதிரங்களிறசிலவறறையெடு
த்துப்பலவருணச் சோடிப்பான மேடைக
ளையுனக்குண்டாக்கியவைகளினமேலவேசி
த்தனம்பண்ணினுய, அப்படிக்கொத்தகா
ரியங்கள ஒருக்காலுஞ்சம்பவித்ததுமிலலை
நடக்கப்போவதுமிலலை.

௰௭ நாம உனக்குக்கொடுத்தநமமுடை
யபொன்னும நமமுடைய வெளளியுமான
உனசிங்கார ஆபரணங்களை நீயெடுத்து, உ
னக்கு ஆணசுரூபங்களையுண்டாக்கி, அவை
களோடேவேசித்தனம்பண்ணி.

௰௮ உன்னுடையசித்திரத்தையலாடை
களையெடுத்து, அவைகளைமூடி, நமமுடைய
எணணெயையும நமமுடைய தூபவர்க்க
த்தையும அவைகளினமுனபடைத்து.

௰௯ நாமஉனக்குக்கொடுத்தநமமுடை
ய அப்பத்தையும,உனக்குச்சாப்பிடக்கொ
டுத்த நலல மாவையும, எணணெயையுந
தேனையுமநீயவைகளினமுன்னறுறுமவாச

ளையாகப்பண்ணினாய், அப்படியாயிற்றென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௰ நீ நமக்குப் பெற்ற உன் குமாரரையும் உன் குமாரத்திகளையும் எடுத்து, * அவர்களை அவைகளுக்கிரையாகப் பலியிட்டாய், உன் வேசித்தனங்கள் செயல் அற்பகாரியமோ? * எரேமியா. எ, ௩௧.

௨௧ நீ நம்முடைய பிள்ளைகளையடித்து, அவர்களை அவைகளுக்குத் தீயில் நடக்கப்பண்ணியொப்புக்கொடுத்தாய்.

௨௨ உன்னுடைய எல்லா அருவருப்புகளிலும் வேசித்தனங்களிலும் மோவென்றால், நீ நிருவாணமும் அம்மணமுமாயிருந்ததும் உன் இரத்தத்திலே மிதிபட்டுக்கிடந்ததுமான உன் சிறுவயதின் நாட்களை நினையாதே போனாய்.

௨௩ உனக்கு ஐயோ ஐயோ, என்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனில் நீ செய்த எல்லாப் பொல்லாப்புக்கும் பின்பு சம்பவித்ததேதென்றால்,

௨௪ நீ உனக்குக் கோவில்களைக் கட்டி, உனக்குச் சகல வீதியிலும் உயர்ந்த மேடைகளைச் செப்பனிட்டாய்.

௨௫ நீ சகல வழி முகனையிலும் உன்னுடைய உயர்ந்த மேடைகளைக் கட்டி, உன் அழகை அருவருப்பாக்கிக் கடந்து வருகிறவனுக்கெல்லாம் உன் கால்களை அகற்றி உன் வேசித்தனங்களைத் திரளாய்ப் பெருகப்பண்ணி,

௨௬ சதைபெருத்த உன் அசலதேசத்தாராகிய எகிப்தியின் புத்திரரோடே வேசித்தனம்பண்ணி நமக்குக் கோபமுண்டாகும்படிக்கு உன் வேசித்தனங்களைத் திரளாக்கினாய்.

௨௭ ஆனதுகொண்டு இதோ, நாம் நம்முடைய கையை உனக்கு விரோதமாக நீட்டி, உனக்குக் குறித்த கட்டளையைக் குறைத்து உன் பகையாளிகளாகிய * பெலிஸ்தருடைய குமாரத்திகளின் இச்சைக்கு உன்னை ஒப்புக்கொடுத்தோம், இவர்களும் தோஷமான மார்க்கத்திற்கு நாணப்பட்டார்கள். * நீதி. ௧௬, ௬. ௨. நாளாகமம். ௨௮, ௰௮.

௨௮ நீ திருத்தியடையமாட்டாததினாலே அசூர் குமாரரோடும் வேசித்தனம்பண்ணினாய், அவர்களோடே வேசித்தனம்பண்ணியும் நீ திருத்தியடையாதே போனாய்.

௨௯ கானான் தேசத்திலே கல்தேயர் மட்டுக்கும் உன் வேசித்தனங்களைத் திரளாக்கியிந்நும் திருத்தியடையாதே போனாய்.

௩௰ வலுவேசியான ஸ்திரியின் கிரியையாகியே இவைகளையெல்லாம் நீ செய்து,

௩௧ சகல வழிமுனையிலும் உன்னுடைய கோவில்களைக் கட்டிச் சகல வீதியிலும் உன் மேடைகளைச் செப்பனிட்டதினாலே உன்னிருதயம் எத்தனையாய்க் களைப்பட்டிருக்கிறதென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், நீ பணையச்சத்தை நிஸ்காரம்பண்ணுகிறதினாலே, நீ வேசியைப்போலிராமல்,

௩௨ தன் புருஷனுக்குப் பதிலாக அன்னியரைச் சேர்க்கிற விபசாரஸ்திரியைப்போலிருக்கிறாய்.

௩௩ எல்லா வேசிகளுக்கும் பணையங்கொடுக்கிறார்கள், ஆனாலுன் நேசிதர் சுற்றுப்புறங்களிலிருந்து உன் வேசித்தனங்களுக்காக உன்னண்டைக்கு வரும்படிக்கு அவர்களுக்கெல்லாம் நீயே பணையங்கொடுத்து, அவர்களுக்குக் காணிக்கைகளைத் தருகிறாய்.

௩௪ அப்படியே உன்னுடைய வேசித்தனங்களில் வேறேஸ்திரிகளைப்பார்க்கிலும் உன்னில் விதியாசமுண்டு, ஏனென்றால் வேசித்தனம்பண்ண உன்னைப் பின்செல்லார்கள், பணையம் உனக்குக் கொடுக்கப்படாமல், நீயே பணையங்கொடுக்கிறபடியினாலே, நீ வேறே.

௩௫ ஆகையினாலே, வேசியே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள்.

௩௬ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, உன் வேசித்தனம் அழுக்குப்பாய்ந்தபடியினாலேயும் நீ உன் காமவிகாரிகளோடும் அருவருப்பாகிய உன்னுடைய நரகலான தேவர்களோடும் வேசித்தனம்பண்ணி, இவைகளுக்கு உன் பிள்ளைகளின் இரத்தத்தைப் படைத்ததினாலே உன்னுடைய நிருவாணம் திறக்கப்பட்டபடியினாலேயும்,

௩௭ இதோ, நீ சம்போகம்பண்ணின உன்னுடைய எல்லாக் காமவிகாரிகளையும், நீ சிநேகித்தயாவரையும், நீ பகைத்திருக்கிற அனைவரோடும் நாங்கூட்டி அவர்களைச் சுற்றிலுமிருந்து உனக்கு விரோதமாகச் சேர்த்து, அவர்கள் உன்னுடைய நிருவாணத்தையெல்லாங்காணும்படிக்கு, * உன்னுடைய நிருவாணத்தையவர்களுக்கு முன்பாகத் திறந்துவைத்து, * ௨௩, ௨௯.

௩௮ * விபசாரிகளையும் இரத்தஞ்சிந்தினவர்களையும் நியாயந்தீர்க்கிறபடியே உன்னை நியாயந்தீர்த்து, உன் பேரில் உக்கிரமும் வயிராக்கியமுமாய் இரத்தப்பழியைச் சுமத்தி, * ௨௩, அதி. ௨௪. ௨௫.

௩௯ உன்னையவர்கள் கைக்கு ஒப்புக்கொடுப்போம், அவர்கள் உன் கோவில்களையிடித்து, உன் மேடைகளைத் தரையாக்கிப்போட்டு, உன் வஸ்திரங்களையுரிந்து, உன் சிங்கார ஆபரணங்களையெடுத்துக்கொண்டு, உன்னையம்மணமும் நிருவாணமுமாகவைத்துப்போய்,

௪௰ உனக்கு விரோதமாக ஒரு கூட்டத்தை வரநேரப்பண்ணி, உன்னைக் கல்லெறிந்து, உன்னைத் தங்கள் பட்டயங்களால் குத்திப்போட்டு,

௪௧ * உன் வீடுகளையக்கினியால் சுட்டுப்போட்டு, அநேகஸ்திரிகளின் கண்களுக்கு

முன்பாக உன்னிலே நியாயத்தீர்ப்புகளைச் செய்வார்கள், நீ வேசியாயிருக்குதலையோயப்பண்ணுவோம், நீயினிப்பணையங்கொடுப்பதுமில்லை. * ௨. இராசா. ௨௫, ௯.

௪௨ அப்படியே நமது வயிராக்கியம் உன்னைவிட்டு நீங்கும்படிக்கு நாம் நம்முடைய உக்கிரத்தையுன்னிலே ஆற்றப்பண்ணி, இனி நாங்கோபமாயிராமல் அமருவோம்.

௪௩ நீயுன் இளவயதின் நாட்களை நினையாமல் இவைகளினாலெல்லாம் நம்மைக் கசினமுண்டாக்கினபடியினாலே, இதோ, நாமும் உன்மார்க்கத்தை * யுன் தலையின்மேற்சும்த்தப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். அப்படியே உன்னுடைய எல்லா அருவருப்புகளின்மேலும் அப்படிக்கொத்த தோஷத்தையினிச் செய்யாதே போவாய். * ௯. ௰. ௧௪, ௨௨.

௪௪ இதோ, பழமொழிசொல்லுகிறவர்களெல்லாரும், தாயைப்போல மகளென்று உன்னைக்குறித்துப் பழமொழி சொல்லுவார்கள்.

௪௫ நீ தன் புருஷனையுந்தன் பிள்ளைகளையும் அரோசித்த உன்னுடைய தாயின் மகள், நீ தங்கள் புருஷரையுந்தங்கள் பிள்ளைகளையும் அரோசித்த உன்னுடைய சகோதரிகளின் சகோதரி, உங்கள் தாய் கேத்தித்தி, உங்கள் தகப்பன் எமோரியன்.

௪௬ உன்னிடதுபுறத்திலே தானுந்தன் குமாரத்திகளுமாயக்குடியிருந்த சமாரியா * உன்னுடைய தமக்கை, உன் வலதுபுறத்திலே தானுந்தன் குமாரத்திகளுமாயக்குடியிருந்த சோதோம் உன்னுடைய தங்கை.
* ௨௩, ௪.

௪௭ ஆகிலும் நீயவர்களுடைய மார்க்கங்களிலே நடவாமலும், அவர்களுடைய அருவருப்புகளின்படியே செய்யாமலும், அது மகா அற்பகாரியமென்கிறாப்போலே, நீ * யுன்னுடைய எல்லா மார்க்கங்களிலேயும் அவர்களைப்பார்க்கக் கேடாய்ச்செய்தாய்.
* ௨௩, ௧௧.

௪௮ நீயும் உன்னுடைய குமாரத்திகளுஞ்செய்ததுபோலே, உன் சகோதரியாகிய * சோதோமும் அவர்களுடைய குமாரத்திகளுஞ்செய்ததில்லையென்கிறதை நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.
* ௧. மோசே. ௧௩, ௧௩.

௪௯ இதோ, உன் சகோதரியாகிய சோதோமுக்கிருந்த அக்கிரமம் பெருமையென்பது அப்பத்தின் பரிபூரணமும் பிரயாசமில்லாத சாங்கோபாங்கமும் அவளுக்கும் அவள் குமாரத்திகளுக்குமிருந்தது, ஆனால் சிறுமையும் எளிமையுமானவனகையை அவள் பலப்படுத்தாதேபோனாள்.

௫௰ அவர்கள் தங்களையுயர்த்தி, நம்முடைய முகத்திற்கு முன்பாக அருவருப்பானதைச் செய்தார்கள், அதை நாங்கண்டபோது, அவர்களையொழித்துவிட்டோம்.

௫௧ சமாரியாவும் உன் பாவங்களிலே சரிபாதி செய்ததில்லை, நீயவர்களைப்பார்க்கிலும் அநேகமடங்காய்ப் பாவங்களைப் பெருகப்பண்ணி நீசெய்த உன்னுடைய எல்லா அருவருப்புகளினாலும் உன் சகோதரிகளை நீதியுள்ளவர்களாக்கிவிட்டாய்.

௫௨ இப்போதும் உன் சகோதரிகளைக் குற்றவாளிகளென்று தீர்த்த நீயவர்களைப்பார்க்கிலும் அருவருப்பாகச் செய்த உன்னுடைய பாவங்களினிமித்தம் உன் இலச்சையைச் சுமந்திரு, உன்னைப்பார்க்கிலும் அவர்கள் நீதியுள்ளவர்களாகிறார்கள் இப்போதும் உன் சகோதரிகளை நீ நீதியுள்ளவர்களாக்கப்பண்ணின நீ வெட்கமடைந்து உன் இலச்சையைச் சுமந்திரு.

பூதச்சனத்தின் குணப்படுதலையுந்தேவவுடன்படிக்கையின் புதிதாகுதலையும் வாக்குத்தத்தம்பண்ணினது.

௫௩ ஆனால் நீயவர்களுக்கு ஆறுதலாகவிருந்து, உன் இலச்சையைச் சுமந்து நீசெய்ததெல்லாவற்றினாலும் நாணும்படிக்கு,

௫௪ நாம் சோதோமும் அவளுடைய குமாரத்திகளுஞ்சிறையிருக்கிற அவர்களுடைய சிறையிருப்பையும், அவர்கள் நடுவிலே நீ சிறையிருக்கிற உன்னுடைய சிறையிருப்பையுந்திருப்புவோம்.

௫௫ உன் சகோதரிகளாகிய சோதோமும் அவளுடைய குமாரத்திகளுந்தங்கள் முந்தின நிலைக்குத்திரும்புவார்கள், சமாரியாவும் அவளுடைய குமாரத்திகளுந்தங்கள் முந்தின நிலைக்குத்திரும்புவார்கள், நீயும் உன் குமாரத்திகளும் உங்கள் முந்தின நிலைக்குத்திரும்புவீர்கள்.

௫௬ சீரியாவின் குமாரத்திகளும் அவளுடைய சகல சுற்றுப்புறத்தாராகிய பெலிஸ்தரின் குமாரத்திகளும் உன்னைச் சுற்றிலும் நின்று உன்னை நிந்தித்த காலம் முதலான காலங்களிலே உன் பொல்லாப்பு வெளியாகிறதற்கு முன்,

௫௭ அதற்குமுன் உன்னுடைய பெருமையின் நாளிலே உன் சகோதரியாகிய சோதோமின் பேருமுன் வாயிலே கேட்கப்படவில்லை.

௫௮ உன் தோஷத்தையும் உன் அருவருப்புகளையும் நீ சுமப்பாயென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௫௯ ஏனென்றால் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது, உடன்படிக்கையை முறித்துப்போடுகிறதினாலே ஆணையை அசட்டைபண்ணி நீ செய்ததுபோலே, உனக்குஞ்செய்வோம்.

௬௰ ஆகிலும் உன் இளவயதில் உன்னோ

டேபண்ணின * நம்முடைய உடன்படிக்கையை நாம் நினைத்து நித்திய உடன்படிக்கையை உனக்கு ஏற்படுத்துவோம்.

* ௧. யோசே. ௨௯, ௪௨.

௬௧ அப்போது உன் தமக்கைகளையும் உன் தங்கைகளையும் நீ சேர்த்துக்கொள்ளுகையில், * உன் மார்க்கங்களை நினைத்து நாணுவாய், அவர்களை நாம் உனக்குக் குமாரத்திகளாகக் கொடுப்போம், உன்னுடைய உடன்படிக்கையைப் பார்த்தல்ல,

* ௨௰, அதி. ௪௩.

௬௨ உன்னோடே நம்முடைய உடன்படிக்கையைப் பண்ணியேற்படுத்துவோம், அப்போது நாம் கர்த்தரென்றறிவாய்.

௬௩ நீ செய்த்தெல்லாவற்றின் நிவர்த்தியையும் நாம் உனக்குண்டாக்கும்போது, * நீ நினைத்துவெட்கி உன் நாணத்தினாலே பின் வாயைத் திறக்கக்கூடாதபடிக்குத்தானே யென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதைச் சொல்லென்றார்.

* ௩௬, அதி. ௩௧. ௩௨.

## ௰௭. அதிகாரம்.

[இரண்டு கழுகுகளின் உவமையிலே சிதேக்கியா என்ற இராசாவின் துரோகத்தைக் காண்பித்து, அவனுடைய இராச்சியத்தின் அழிவை முன்னறிவித்தது.]

கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாயவர் சொன்னதாவது,

௨ மனுபுத்திரனே, நீ இஸ்ரவேல் வீட்டாருக்கு ஒரு விடுகதையையும் உவமையையுங் காண்பித்து,

௩ சொல்லவேண்டியதாவது, கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதேதென்றால், பெரிய செட்டைகளையும் நீளமான இறகுகளையுமுடைத்தும் பலவருணமாகிய இறகுகளால் நிறைந்ததுமாகிய பெரிய கழுகு லீபனோனிலவந்து தேவதாருவின் நுனிக்கிளையைப் பிடித்து,

௪ அதினுடைய கொழுந்துகளின் தலைக் கொப்பைப் பிடுங்கி, அதை வர்த்தகத்தேசத்திற்குக்கொண்டுபோய், அதை வர்த்தகருடையப்பட்டணத்திலே வைத்து,

௫ தேசத்தின் விதையிலே யொன்றையெடுத்து, அதைப் பயிர்நிலத்திலே போட்டது, அதையெடுத்து அநேக தண்ணீர்களின் ஓரத்திலே மகா எச்சரிக்கையோடே நட்டது.

௬ இது துளிர்த்து, நன்றாயத் தழைக்கிற தாழ்ந்த அடிமரமுள்ள திராட்சச்செடியாயிற்று, இதின் கொடிகள் அந்தக் கழுகை நோக்கி இதின் வேர்கள் அதின் கீழாக இருந்தது, இப்படியே அது திராட்சச்செடியாகிக் கிளைகளைப் பிறப்பித்துக் கொப்புகளைவிட்டது.

௭ ஆனாலும் பெரிய செட்டைகளையுந் திரளான இறகுகளையுமுடைய வேறொரு பெரிய கழுகிருந்தது இதோ, அது தன்னுடைய நட்டுவாகிய பாத்திகளுக்குத் தண்ணீர்ப் பாய்ச்சும்படிக்கு இந்தத் திராட்சச்செடி யதற்கெதிராகத் தன் வேர்களைச் சேர்ப்பண்ணித் தன் கொடிகளை அதற்கு நேராகவிட்டது.

௮ அந்தக் கொப்புகளைவிடுகிறதற்கும் கனிகளைத் தருகிறதற்கும் மகிமையான திராட்சச்செடியாகிறதற்கும் இது அநேக தண்ணீர்களின் ஓரமாகிய நல்ல நிலத்தில் நட்டப்பட்டிருந்தது.

௯ இப்படிக்கொத்ததற்கு வாய்க்குமோ? அது பட்டுப்போகும்படிக்கு அவன் அதின் வேர்களை வெட்டாமலும், அதின் கனிகளைப் பிடுங்காமலுமிருப்பானோ? துளிர்த்த எல்லா இலைகளோடும் அது பட்டுப்போம், அதை வேர்களோடே பிடுங்கிப்போட மிகுந்த பலத்தைப்பற்றத் தோட்டத்திரளான சனத்தோடும் வரக்கவையில்லை.

௰ இதோ, நட்டப்பட்ட அது செழிப்பாயிருக்குமோ? கொண்டற்காற்று அதின் பேரிற்படுகையில் அது உலர்ந்து உலராதோ? அது நட்டப்பட்ட பாத்திகளிலேயே அது உலர்ந்துபோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதென்று சொல்லென்றார்.

௰௧ பின்பு கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி, அவர் உரைத்ததாவது,

௰௨ இப்போது மனுவைகளின் அர்த்தத்தையறியீர்களோவென்று, நீ கலகவீட்டாரைக் கேட்டுச் சொல்லவேண்டியதாவது, இதோ, * பாபேலின் இராசா எருசலேமுக்கு வந்து, அதின் இராசாவையும் அதின் பிரபுக்களையும் பிடித்து அவர்களைத் தன்னிடமாகப் பாபேலுக்குக் கொண்டுபோகிறபோது

* ௨. இரா. ௨௪, ௰. ௱

௰௩ அவன் இராசவித்திலே ஒருவனையெடுத்து இவனோடே உடம்படிக்கைபண்ணி,

௰௪ இராச்சியந் தன்னையுயர்த்தாமலே தாழ்ந்ததாயிருக்கும்படிக்கும், தன் உடன்படிக்கையை யிவன் கைக்கொள்ளுகிறதினாலே அது நிலைநிற்கும்படிக்கும் இவனை ஆணைப்பிரமாணத்திற்குட்படப்பண்ணித் தேசத்தின் பலசாலிகளைப் பிடித்துக்கொண்டுபோனான்.

௰௫ ஆனாலும் இவன் தனக்குக் குதிரைகளையும் அநேக சனத்தையுந் தந்தனுப்பவேண்டுமென்று, தன் தாதர்களை எகிப்திற்கனுப்பினான், அவனைவிட்டு மருளவிழுந்து இப்படிக்கொத்தவனுக்கு வாய்க்குமா? இப்படிச் செய்கிறவன் தப்புவித்துக்கொள்ளுவானோ? உடன்படிக்கையை முறித்துப்

போடடிருநதுந தபபுவிததுக கொளளுவானோ?

௰௬ எவனுடைய ஆணையை யசடடைபணணி, எவனுடைய உடனபடிககையை முறிததுபபோடடானோ? அவனை இராசாவாக வைதத அநத இராசாவினுடைய தானமாகிய பாபிலோனின நடுவிலேயிவன அவனணடையிலிருநது மரணமடைவானெனகிறதை நமமுடைய சீவனைககொணடு சொலலுகிறோமெனறு கர்ததராகிய ஆணடவர் சொலலுகிறார்.

௰௭ அவன அநேக ஆததுமாககளை நாசமபணணுமபடிககு அணைபோடடுககொததளஙகளைக கடடுகையிலே,* பார்வோன பெரியசேனையோடேயுந திரளான கூடடததோடேயும இவனுககாக யுதததிலொனறுஞசெயவதிலலை. * எரே. ௩௭, ௭. ௮.

௰௮ இவனோ, இவன தனகையைககொடுததிருநதும, உடனபடிககையை முறிததுபபோடடு ஆணையையசடடைபணணினான, இபபடியெலலாஞசெயதவன தபபுவிததுக கொளளுவதிலலை.

௰௯ ஆதலினிமிததங கர்ததராகிய ஆணடவர்சொலலுகிறதாவது, அவன நமமுடைய ஆணையை யசடடைபணணினதையும, நமது உடனபடிககையை முறிததுபபோடடதையும * நாம அவனுடைய தலையினமேலவரபபணணுவோமெனறு நமமுடைய சீவனைககொணடு சொலலுகிறோம. * ௬, ௰. ௰௧, ௨௧.

௨௰ * அவனை நமமுடைய வேடடைககுடபிடிபடுமபடிககு, நாம நமது வலையை யவனமேலவீசி, அவனைப பாபேலுககுககொணடுபோய, அவன நமககு விரோதமாயப பணணின துரோகததினிமிததம அஙகே யவனோடே நியாயததிறகுடபிரவேசிபபோம. * ௰௨, ௰௩. ௰௪.

௨௧ அவனோடேகூட ஓடிபபோகிறயாவரும அவனுடைய எலலா இராணுவஙகளுமபடடையததால விழுவார்கள, மீதியானவர்களோவெனறால சகலகாறறுததிசைகளிலுஞ சிதறிபபோடபபடுவார்கள, அபபோது கர்ததராகிய நாமிதைசசொனனோமெனறு அறிநதுகொளளுவீர்கள.

௨௨ கர்ததராகிய ஆணடவர் சொலலுகிறதாவது, நாம உயர்நத கேதுருவின நுனிககிளையிலொனறையெடுதது, அதை நடுவோம, அதினகொழுநதுகளின தலைககொபபிலே * இளசாயிருக்கிற ஒனறைப பிடுஙகி, அதை நாம † உயரமும ஓஙகலுமான ஒருபருவதததினமேல நாடடுவோம.

* ஏசாயா. ௰௧, ௧. † ஏசாயா. ௨, ௨. ௩.

௨௩ இஸரவேலின உயரமான பருவதததிலே யதை நாடடுவோம, அது கொபபுகளை விடடுககனிதந்து, மகிமையான கேதுருவாகும, அதினகீழே சகலவிதசசெடடைகளுள்ள எலலாபபடசிசாதிகளுநதஙகி அதினுடைய கிளைகளின நிழலிலே தாபரிககும.

௨௪ அபபடியே, கர்ததராகிய நாம * உயர்நத விருடசததைத தாழ்ததித தாழ்நத விருடசததை யுயரபபணணினோமெனறும, நாம பசசையான விருடசததை யுலரபபணணி உலர்நத விருடசததைப பயிராககினோமெனறும, வெளியின விருடசஙகளுககெலலாநதெரியவரும, கர்ததராகிய நாம இதைசசொனனோம இதை நிர்வாகமும பணணுவோமெனறு உரைததாரெனறு சொலலெனறார். * ௨௧, ௨௬. மததேயு ௨௩, ௰௨.

## ௰௮. அதிகாரம்.

[சனமார்ககததகபபனுடைய நீதி சனமார்ககக்குமாரனுககு இலாபமாயிருககிறதுமிலலை, சனமார்ககததகபபனுடைய பாவஙகள சனமார்ககக் குமாரனுககு நஷடமாயிருககிறதுமிலலை யெனறும, ஆகாதவன மனநதிருமபினாற பிழைபபானெ, நீதிமான ஆகாதவனானால சாவானெனறும தேவநியாயங காடடிப பாதகர்களைக கணடிததலுககு எழுபபினது.]

கர்ததருடைய வார்ததை யெனககுணடாகி, அவர் சொனனதாவது,

௨ * பிதாககள திராடசககாயகளைத தினறார்கள, பிளளைகளின பலலுகள கூசிப போயிறறெனகிற பழமொழியை நீஙகள இஸரவேல தேசததிறசொலலல உஙகளுககெனனவிருககிறது? * எரேமி. ௩௧, ௨௯. ௩௰.

௩ இனி இஸரவேலிலே யிநதப பழமொழியைச சொலலுகிறதறகு உஙகளுககிலலையெனகிறதை நமது சீவனைககொணடு சொலலுகிறோமெனறு கர்ததராகிய ஆணடவருரைககிறார்.

௪ இதோ, எலலா ஆததுமாககளும நமமுடையவைகளதானே, தகபபனின ஆததுமா எபபடியோ, அப்படியே மகனின ஆததுமாவும நமமுடையதாயிருககிறது, பாவஞசெயகிற ஆததுமாவே சாகும.

௫ ஒருவன நீதிமானாயிருநது, நியாயததையும நீதியையுஞசெயது,

௬ * மலைகளினமேற சாபபிடாமலும, இஸரவேல வீடடாரின நரகலானதேவர்களுககு நேராகத தனகணகளையேறெடுககாமலும தனககடுததவனுடைய பெணசாதியைத தீடடுபபடுததாமலும, † தூரஸதிரீயோடே சேராமலும, * ஏசா ௫௭, ௭. † ௩. மோசே. ௰௮, ௰௯.

௭ * ஒருவனையும ஒடுககாமலும † கடனவாஙகினவனுககு அடைமானததைத திருமபக்கொடுததுக்கொளளையிடாமல ‡ தன

அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கிட்டு, அம்மணமாயிருக்கிறவனுக்கு வஸ்திரந்தரிப்பித்து, *சங். ௰ஞ, க. ௱ †ரு. மோசே. உச, ௰ ௱ ‡ மத்தேயு. உரு, ௩ரு. ௱

அ வட்டிக்குக்கொடாமலும், சொச்சம் வாங்காமலும், அநியாயத்துக்குத் தன்கையை விலக்கி, ஒருவனோடொருவனுக்குண்டான வழக்கையுண்மையாய்த் தீர்த்து,
*உ. மோசே. உஉ, உக. ௩ மோசே. உரு, ௩ரு, ௩௬.

௯ உண்மையாய்ச்சஞ்சரிக்கும்படிக்கு, நம்முடைய கட்டளைகளில் நடந்து நம்முடைய நியாயங்களைக்கைக்கொண்டால், அப்படிக்கொத்த நீதிமான் பிழைக்கவே பிழைப்பானென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். *௩௬, உஎ.

௰ ஆனால் அவனுக்கு ஒருகுமாரன் பிறந்து, இவன் கள்ளனும், இரத்தஞ்சிந்துகிறவனும், அந்தக்காரியங்களில் ஒன்றிற்கொத்ததைச்செய்கிறவனும்,

௰க இவைகளையோ செய்யாதவனுமாயிருந்து மலைகளின்மேற் சாப்பிட்டுத் தனக்கடுத்தவனுடைய பெண்சாதியைத் தீட்டுப்படுத்தி,

௰உ சிறுமையும் எளிமையுமானவனை ஒடுக்கிக் கொள்ளைக்காரனாயிருந்து, அடைமானத்தைத் திரும்பக்கொடாமல் நரகலான தேவர்களுக்கு நேராகத்தன் கண்களையேறெடுத்து, அருவருப்பானதைச் செய்து,

௰௩ வட்டிக்குக்கொடுத்துச் சொச்சம் வாங்கினால், அவன் பிழைப்பானோ? அவன் பிழைப்பதில்லை, இந்த எல்லா அருவருப்புகளையுஞ்செய்தானே, அவன் சாவவே சாவான், அவன் இரத்தப்பழி அவன்மேலிருக்கும்.
* உஉ, அதி. ௰உ. தெகேமி. ரு, எ. ௱

௰ச பின்னையும் இதோ, அவனுக்கொரு குமாரன் பிறந்து, இவன் தன் தகப்பன் செய்த எல்லாப்பாவங்களையுங்கண்டு, தான் அவைகளின்படி செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து,

௰ரு மலைகளின்மேற் சாப்பிடாமலும், இஸ்ரவேல் வீட்டாரின் நரகலான தேவர்களுக்கு நேராகத் தன் கண்களையேறெடுக்காமலும், தனக்கடுத்தவனுடைய பெண்சாதியைத் தீட்டுப்படுத்தாமலும்,

௰௬ ஒருவனையும் ஒடுக்காமலும், அடைமானத்தை வைத்துக்கொண்டிராமலும் கொள்ளையிடாமலும், தன் அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கிட்டு, அம்மணமாயிருந்தவனுக்கு வஸ்திரந்தரிப்பித்து.

௰எ சிறுமையானவனுக்குத் தோஷமுண்டாகாதபடிக்குத் தன்கையை விலக்கி, வட்டியுஞ்சொச்சமும் வாங்காமல், நம்முடைய நியாயங்களைச்செய்து நம்முடைய கட்டளைகளில் நடந்தால், அவன் தகப்பனுடைய அக்கிரமத்தினிமித்தஞ் சாகாமல், பிழைக்கவே பிழைப்பான்.

௰அ அவன் தகப்பனோவென்றால், ஒடுக்குதலைச்செய்து, சகோதரனைக் கொள்ளையிட்டு, நல்லதல்லாததைத் தன் சனக்கூட்டங்களின் நடுவிலே செய்தபடியினாலே, இதோ அவன் தன் அக்கிரமத்தினாலே சாவான்.

௰௯ குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமக்காதிருப்பானேனென்று நீங்கள் கேட்டால், குமாரன் நியாயத்தையும் நீதியையுஞ்செய்து, நமது கட்டளைகளைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்தானே, ஆகையால் அவன் பிழைக்கவே பிழைப்பான்.

உ௰ * பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும் குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதில்லை, தகப்பன் குமாரனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதில்லை, நீதிமானுடைய நீதி அவன்மேலேதானேயிருக்கும், ஆகாதவனுடைய ஆகாமியமும் அவன்மேலேதானேயிருக்கும். * ரு, மோசே. உச, ௰௬.

உக ஆகாதவன் தான்செய்த எல்லாப்பாவங்களையும் விட்டுத்திரும்பி, நமது கட்டளைகளையெல்லாங்கைக்கொண்டு நியாயத்தையும் நீதியையுஞ்செய்தானேயாகில், அவன் பிழைக்கவே பிழைப்பான், அவன் சாவதில்லை.

உஉ * அவன் செய்த எல்லா மீறுதல்களும் அவனுக்கு நினைக்கப்படுவதில்லை, அவன் செய்த தன்னுடைய நீதியிலே பிழைப்பான். * எசாயா. சங, உரு. எரே. ௩க, ௩ச.

உ௩ * ஆகாதவனுடைய மரணத்தை விரும்பவே விரும்புகிறோமோவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார் அவன் தன் வழிகளைவிட்டுத் திரும்பிப்பிழைப்பதையே யல்லோ விரும்புகிறோம். * ௩உ. ௰ச. ௩௩, ௰க. உ. பேது. ௩, ௯.

உச * நீதிமான் தன்னுடைய நீதியைவிட்டுத்திரும்பி, நீதிகேடு நடப்பித்து ஆகாதவன்செய்கிற சகல அருவருப்புகளின்படி செய்தானேயாகில், அவன் பிழைப்பானோ? அவன்செய்த அவனுடைய எல்லா நீதிகளும் நினைக்கப்படுவதில்லை, அவன்செய்த தன்னுடைய துரோகத்தினாலேயும் அவன்செய்த தன்னுடைய பாவத்தினாலேயுஞ்சாவான்.
* ௩, உ௰. ௩௩, ௰உ.

உரு நீங்களோ,* ஆண்டவருடைய வழி செம்மையாயிருக்கவில்லையென்கிறீர்கள், இஸ்ரவேல் வீட்டாரே, கேளுங்களேன், நம்முடைய வழி செம்மையாயிராதோ? உங்கள் வழிகளல்லோ செம்மையல்லாதிருக்கிறது. * ௩௩, ௰எ—உ௰.

உ௬ நீதிமான் தன்நீதியைவிட்டுத்திரும்பி, நீதிகேடு செய்தால், அதினாலே சாவான்,

அவன் செய்த தன்னுடைய நீதிக்கேட்டினாலே அவன் சாவான்.

௨௭ துன்மார்க்கன் தான் செய்த தன்னுடைய அக்கிரமத்தைவிட்டுத் திரும்பி, நியாயத்தையும் நீதியையுஞ் செய்தானேயாகில், அவன் தன் ஆத்துமாவைப் பிழைப்பிக்கப்பண்ணுவான்.

௨௮ அவன் எச்சரிக்கையாகித் தான் செய்த எல்லாமீறுதல்களையும் விட்டுத் திரும்புகிறபடியினாலே அவன் பிழைக்கவே பிழைப்பான், அவன் சாவதில்லை.

௨௯ இஸ்ரவேல் வீட்டாரோ, ஆண்டவருடைய வழி செம்மையாயிருக்கவில்லையென்கிறார்கள், இஸ்ரவேல் வீட்டாரே, நம்முடைய வழிகள் செம்மையாயிராதோ? உங்கள் வழிகளல்லோ செம்மையல்லாதிருக்கிறது.

௩௰ ஆகையால், இஸ்ரவேல் வீட்டாரே, நாம் உங்களில் அவனவனை அவனவன் வழிகளுக்குத்தக்கதாக நியாயந்தீர்ப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்,* நீங்கள் திரும்பி, உங்களுடைய எல்லாமீறுதல்களையும் விட்டு மனந்திரும்புங்கள், அப்போது அக்கிரமம் உங்கள் விழுதலுக்குக் காரணமாயிருப்பதில்லை. * மத்தே. ௩, ௨.

௩௧ நீங்கள் துரோகம்பண்ணின உங்களுடைய எல்லாப்பாதகங்களையும் உங்களைவிட்டுத் தூரமாய் எறிந்துவிட்டு,* உங்களுக்குப் புது இருதயத்தையும் புது ஆவியையும் உண்டுபண்ணிக்கொள்ளுங்கள், இஸ்ரவேல் வீட்டாரே, நீங்கள் ஏன் சாகவேண்டும்.

* ௰௧, ௰௯. சங்கீ. ௫௧, ௰௨.

௩௨ * சாகிறவனுடைய சாவை விரும்பேனென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், ஆகையால் மனந்திரும்புங்கள் அப்போது பிழைப்பீர்கள். *௨௩. வசனம்.

## ௰௯ அதிகாரம்.

[யூதாவின் இராசசியத்திற்கும் அதையாளுகிறவர்களுக்கும் வரும் அழிவு இரண்டு உவமைகளிற் காண்பிக்கப்பட்டது.]

௧ நீயோவென்றால் இஸ்ரவேலுடைய பிரபுக்களின் பேரிலே ஒரு புலம்பலையெடுத்து,

௨ சொல்லவேண்டியதாவது, உன் தாய் எப்படிக்கொத்தவள்? அவள் சிங்கங்களுக்குள்ளே படுத்துக்கொண்டிருந்த ஒரு பெண் சிங்கந்தானே, அது தன் குட்டிகளை இளஞ்சிங்கங்களின் நடுவிலே வளர்த்தது,

௩ தன் குட்டிகளில் ஒன்றைப் பெரியதாக்கிற்று, அது இளஞ்சிங்கமாகி, இரையெடுக்கப்பழகி, மனுஷரைப் பாயந்து பட்சித்தது.

௪ புறச்சாதிகள் இதின் செய்தியைக் கேட்டபோது இது அவர்களுடைய படுகுழிகளிற் பிடிபட்டது. இதைத் துறட்டுகளைப் போட்டு * எஜிப்து தேசத்திற் கொண்டு போனார்கள். * ௨. இராசா. ௨௩, ௩௩.

எரேமி. ௨௨, ௰௧.

௫ தான் காத்திருந்து தன்னுடைய நம்பிக்கை வியர்த்தமாய்ப் போயிற்றென்று கண்டு, அது தன் குட்டிகளில் வேறொன்றையெடுத்துக்கொண்டு, அதை இளஞ்சிங்கமாக வைத்தது.

௬ இது சிங்கங்களுக்குள்ளே நடமாடி, இளஞ்சிங்கமாகி இரையெடுக்கப் பழகி மனுஷரைப் பாய்ந்து பட்சித்தது,

௭ அவர்களுடைய விதவைகளைப் பிடித்து, அவர்களுடைய பட்டணங்களைப் பாழாக்கிற்று, இதினுடைய கெர்ச்சிப்பின் சத்தத்தினாலே தேசமும் அதின் நிறைவும் திகைத்தது.

௮ ஆனால், * சுற்றுச்சீமைகளின் சாதிகள் இதற்கு விரோதமாக எழும்பிவந்து, தங்கள் வலையை இதின்மேல் வீசினார்கள், அப்போது அது அவர்களுடைய படுகுழியிலே பிடிபட்டது. * ௨. இராசா. ௨௪. ௨.

௯ அவர்கள் அதைத் துறட்டுகளைப் போட்டு ஒரு கூண்டுக்குட்படுத்தி, * அதைப் பாபேலின் இராசாவண்டைக்குக் கொண்டுபோனார்கள், இனி இதின் சத்தம் இஸ்ரவேலுடைய பருவதங்களின்மேற் கேட்கப்படாதபடிக்கு அதை அரணான இடங்களுக்குட் கொண்டுபோனார்கள். * ௨. நாளாகம. ௩௬, ௬.

௰ நீ அமரிக்கையோடிருக்கையில் உன் தாய் தண்ணீர்களின் ஓரமாய் நாட்டப்பட்டதும், வெகு நீர்ப்பாய்ச்சலால் கனிதருகிறதும் தழைத்ததுமான * திராட்சச்செடியாயிருந்தாள். * சங்கீ. அ௦, ௯. ௳

௰௧ ஆளுகிறவர்களின் செங்கோல்களுக்கான பலத்த கிளைகள் அதற்கிருந்தது, அதின் வளர்த்தி அடர்த்தியான கொப்புகளுக்குள்ளே உயர ஓங்கி, தன் உயர்விலும் தன்னுடைய திரளான கொடிகளோடுங்கூடத் தெரியலாயிற்று.

௰௨ ஆனால் அது உக்கிரமாய்ப் பிடுங்குண்டு தரையில் எறியப்படுக்கப்பட்டது, கொண்டற்காற்று அதின் கனியை உலர்த்திற்று, அதின் பலத்த கிளைகள் முறிந்து * பட்டுப்போயிற்று, அக்கினி அவைகளைப் பட்சித்தது. * ரு, ௰௪.

௰௩ இப்போது அது வறண்டதும் தண்ணீரில்லாததுமான வனாந்தர பூமியிலே நாட்டப்பட்டது.

௰௪ அதின் கொடிகளிலுள்ள ஒரு மிலாறிலிருந்து அக்கினி புறப்பட்டு அதின் கனியைப் பட்சித்தது, ஆளுகிற செங்கோலுக்கான பலத்த மிலாறு இனி அதிலில்லையென்று சொல்லு, புலம்பலிது தான் இது புலம்பலாகவிருக்குமென்றார்.

## ௨௰. அதிகாரம்.

[மூதச்சனத்தின் பாவங்களைக் காண்பித்தது]

ஏழாம் வருஷத்து ஐந்தாம் மாதம் பத்தாந் தேதியிலே சம்பவித்ததென்னவென்றால், * இஸ்ரவேலின் மூப்பரிற் சிலர் கர்த்தரைக் கேட்கவந்து, எனக்கு முன்பாக உட்கார்ந்தார்கள். * ௰௪, ௧.

௨ அப்போது கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது,

௩ மனுஷபுத்திரனே, நீ இஸ்ரவேலின் மூப்பரோடே பேசி அவர்களுடனே சொல்லவேண்டியதாவது, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்னில், நீங்கள் நம்மைக் கேட்கவருகிறீர்களோ? உங்களால் நாம் கேட்கப்படோம் என்கிறதை நமது சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லு.

௪ மனுஷபுத்திரனே, நீயவர்கள் நியாயத்தை விசாரிப்பாயோ? விசாரிக்க மனதானால், நீயவர்கள் பிதாக்களின் அருவருப்புகளை யவர்களுக்குத் தெரியக்காட்டி.

௫ அவர்களோடே சொல்லவேண்டியதாவது, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்னில், நாம் இஸ்ரவேலைத் தெரிந்துகொள்ளுகிற நாளிலே நாம் யாக்கோபு வீட்டாரின் வித்துக்காக நம்முடைய கரத்தை யேறெடுத்து, எகிப்துதேசத்தில் நம்மை யவர்களுக்கறியப்பண்ணி, நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று நம்முடைய கரத்தை யவர்களுக்காக ஏறெடுத்தோம்.

௬ நாம் அவர்களை எகிப்துதேசத்திலிருந்தழைத்துப் போவோமென்றும், அவர்களுக்காக நாம் பார்த்துவைத்ததாகிய பாலுந்தேனும் ஓடுகிறதும் எல்லாத்தேசங்களிலும் சிங்காரமாயிருக்கிறதுமான தேசத்திலேயவர்களைக் கொண்டுவந்துவிடுவோமென்றும், அந்நாளிலே நமது கரத்தை யவர்களுக்காக ஏறெடுத்து, * ௨. மோசே. ௩, ௰௬. ௰௭.

௭ அவர்களுடனே சொன்னதாவது, உங்களில் அவரவர் தங்கள் கண்களால் நோக்கின அருவருப்புகளைத் தள்ளிப்போட்டு, எகிப்தின் நரகலான தேவர்களால் உங்களைத் தீட்டுப்படுத்தாதிருப்பீர்களாக, உங்கள் பராபரனாகிய கர்த்தர் நாமேயென்றோம்.

௮ அவர்களோவென்றால், நம்முடைய சொற்கேட்க மனதில்லாமல் நமக்கு விரோதமாய் இரண்டகம்பண்ணினார்கள், அவரவர் தங்கள் கண்களால் நோக்கின அருவருப்புகளைத் தள்ளிப்போடாமலும் எகிப்தின் நரகலான தேவர்களை விடாமலுமிருந்தார்கள். ஆனதுகொண்டு எகிப்துதேசத்தின் நடுவிலே நமது கோபத்தை அவர்களிலே தீர்த்துக்கொள்ளும்படிக்கு நம்முடைய உக்கிரத்தை யவர்களின்மேல் ஊற்றுவோமென்றோம்.

௯ ஆகிலும் புறச்சாதியாருடைய கண்களுக்கு முன்பாக * நம்முடைய நாமம் பரிசுத்தக்குலைச்சலாகாதபடிக்கு, நாம் அதினிமித்தங் கிருபைசெய்தோம், ஏனெனில் இவர்களுடைய நடுவிலிருந்தார்கள். நாம் அவர்களையிவர்கள் கண்களுக்கு முன்பாக எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினதினால் இவர்களுக்கு அறியப்பட்டோம். * ௩௬, ௨௧. ௨௨.

௰ ஆகையால் நாம் அவர்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணி, அவர்களை வனாந்தரத்தில் அழைத்துவந்து,

௰௧ நமது கட்டளைகளை நாம் அவர்களுக்குக் கொடுத்து நமது நியாயங்களை யவர்களுக்குத் தெரியப்பண்ணினோம். * அவைகளின்படியே மனுஷன் செய்தால் அவைகளாற் பிழைப்பான். * ௩. மோசே. ௰௮, ௫.

௰௨ நாம் தங்களைப் பரிசுத்தம்பண்ணுகிற கர்த்தரென்றவர்கள் அறியும்படிக்கு, நமக்கும் அவர்களுக்கும் அடையாளமாயிருப்பதற்காக * நம்முடைய ஓய்வுநாட்களையும் அவர்களுக்குக் கட்டளையிட்டோம். * ௨. மோசே. ௨௰, ௮—௰௧. ௩௧, ௰௩—௰௭.

௰௩ ஆனால் இஸ்ரவேல் வீட்டார் வனாந்தரத்திலே நமக்கு விரோதமாய் இரண்டகம்பண்ணினார்கள், நம்முடைய கட்டளைகளின்படியே மனுஷன் செய்தால் அவைகளாற் பிழைப்பானே அவர்களோ அவைகளில் நடவாமல் நம்முடைய நியாயங்களை வெறுத்து, நம்முடைய ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தை மிகவுங் குலைத்துப்போட்டார்கள் ஆனதுகொண்டு அவர்களை நிர்மூலமாக்கும்படிக்கு வனாந்தரத்திலே நம்முடைய உக்கிரத்தையவர்கள்மேல் ஊற்றுவோமென்றோம்.

௰௪ ஆகிலும் புறச்சாதிகளுடைய கண்களுக்கு முன்பாக நம்முடைய நாமம் பரிசுத்தக்குலைச்சலாகாதபடிக்கு, நாம் அதினிமித்தங் கிருபைசெய்தோம், ஏனெனில் இவர்களுடைய கண்களுக்கு முன்பாக அவர்களைப் புறப்படப்பண்ணினோம்.

௰௫ நாம் வாக்குத்தத்தம் பண்ணினதாகிய பாலுந்தேனும் ஓடுகிறதும் எல்லாத்தேசங்களிலும் சிங்காரமாயிருக்கிறதுமான தேசத்திலேயவர்களைக் கொண்டுவந்துவிடுவதில்லையென்று * வனாந்தரத்திலே நமது கரத்தையவர்களுக்கு விரோதமாக ஏறெடுத்தோம். * ௪. மோசே. ௰௪, ௰௧. ௰௨.

௰௬ ஏனென்றால் தங்கள் இருதயந் தங்களுடைய நரகலான தேவர்களைப் பின்பற்றினபடியினாலேயவர்கள் நமது நியாயங்களை வெறுத்து நமது கட்டளைகளில் நடவாதேபோய், நமது ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தைக் குலைத்துப்போட்டார்கள்.

௰௭ ஆகிலும் அவர்களை யழிக்காதபடிக்

கு நம்முடைய கண் அவர்களைத் தப்பவிட்டது, நாம் அவர்களை வனாந்தரத்திலே நிர்மூலமாக்காமல்,

௰அ அவர்களுடைய பிள்ளைகளோடே வனாந்தரத்திலே சொன்னதாவது, நீங்கள் உங்கள் பிதாக்களின் முறைமைகளில் நடவாமலும், அவர்களுடைய நியாயங்களைக் கைக்கொள்ளாமலும், அவர்களுடைய நரகலான தேவர்களால் உங்களைத் தீட்டுப்படுத்தாமலுமிருங்கள்.

௰௯ உங்கள் பராபரனாகிய கர்த்தர் நாமே, நீங்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து, நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு அவைகளின்படியே செய்து,

௨௰ நம்முடைய ஓய்வுநாட்களைப் பரிசுத்தமாக்குங்கள், நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று நீங்கள் அறியும்படிக்கு, அவைகள் நமக்கும் உங்களுக்கும் அடையாளமாயிருக்குமென்றோம்.

௨௧ ஆனாலும் பிள்ளைகளும் நமக்கு விரோதமாய் எழும்பினார்கள். நம்முடைய கட்டளைகளின்படியே மனுஷன் செய்தால், அவைகளால் பிழைப்பானே, அவர்களோ அவைகளில் நடவாமலும் நம்முடைய நியாயங்களை யவைகளின்படி செய்யும்படிக்குக் கைக்கொள்ளாமலும், நம்முடைய ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தைக் குலைத்துப்போட்டார்கள், ஆகையால் வனாந்தரத்திலே நமது கோபத்தை யவர்களின்மேல் தீர்த்துக்கொள்ளும்படிக்கு நம்முடைய உக்கிரத்தை யவர்கள்மேல் ஊற்றுவோமென்றோம்.

௨௨ ஆகிலும் நாம் நமது கையைத் திருப்பிக்கொண்டு, நமது நாமம் புறசாதிகளின் கண்களுக்கு முன்பாக பரிசுத்தக் குலைச்சலாகாதபடிக்கு அதினிமித்தமாகக் கிருபைசெய்தோம், ஏனென்றால் இவைகளுடைய கண்களுக்கு முன்பாக அவர்களைப் புறப்படப்பண்ணினோம்.

௨௩ நாம் அவர்களைப் புறசாதிகளுக்குள்ளே சிதறடித்து அவர்களைத் தேசங்களிலே தூற்றிப்போடுகிறதற்கு நமது கரத்தை வனாந்தரத்திலே யவர்களுக்கு விரோதமாக ஏறெடுத்தோம்

௨௪ ஏனென்றால் அவர்கள் நம்முடைய நியாயங்களின்படி செய்யாமல், நம்முடைய கட்டளைகளை வெறுத்து நம்முடைய ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தைக் குலைத்துப்போட்டார்கள், அவர்களுடைய கண்கள் அவர்கள் பிதாக்களின் நரகலான தேவர்களைப் பின்பற்றுகிறவர்களாயிருந்தது.

௨௫ ஆகையால் * நல்லதல்லாத கட்டளைகளையும், அவர்கள் பிழைக்கக்கூடாத நியாயங்களையும் நாம் அவர்களுக்கு உண்டாகவும் பண்ணினோம். * ௨. தெசலோ. ௨, ௰. ௧௰.

௨௬ கர்ப்பந்திறந்து பிறக்கிறதையெல்லாம் * அவர்கள் தீயைக்கடக்கப்பண்ணினதைக்கொண்டு, அவர்களையவர்களுடைய காணிக்கைகளாலே தீட்டுப்படப் பண்ணினோம், நாம் அவர்களைப் பாழாக்கடிக்கும்படியாகவும், நாம் கர்த்தரென்று அவர்களறியும்படியாகவுந்தானே. * ௰௬, அதி. ௨௰. ௨௧

௨௭ ஆகையால் மனுபுத்திரனே, நீ இஸ்ரவேல் வீட்டாரோடே பேசி யவர்களோடே சொல்லவேண்டியதாவது, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், உங்கள் பிதாக்கள் அப்புறம் நமக்கு விரோதமான துரோகம்பண்ணி நம்மைத் தூஷணித்த விதமாவது,

௨௮ அவர்களுக்குக் கொடுக்கத்தக்கதாக நாம் நமது கரத்தை யேறெடுத்த தேசத்திலே நாம் அவர்களைப் பிரவேசிக்கப்பண்ணின பிறபாடு, அவர்கள் உயர்ந்த ஒருமேட்டையும் தாழ்ந்த விருட்சத்தையும் எங்கெங்கே கண்டார்களோ அங்கேயெல்லாந் தங்கள் பலிகளைப் பலியிட்டு, அங்கே கோபமுண்டாக்குதலான தங்கள் காணிக்கைகளைப் படைத்து, அங்கேயாறுதிறவாசனையாகத் தங்கள் தூபங்களைக் காட்டி, அங்கே தங்கள் ஊற்றுதல்களையூற்றினார்கள்.

௨௯ அப்போது நாம் அவர்களுடனே, நீங்கள் போகிற அந்தமேடு என்னத்துக்கென்று சொன்னோம், ஆனால் இந்நாள்வரைக்கும் அதின்பேர் மேடென்னப்படும்.

௩௰ ஆகையால் இஸ்ரவேல் வீட்டாரோடே நீ சொல்லவேண்டியதாவது, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில் உங்கள் பிதாக்களுடைய மார்க்கத்தின்படியேயல்லோ நீங்கள் தீட்டுப்பட்டவர்கள், அவர்களுடைய அருவருப்புகளையல்லோ நீங்கள் பின்பற்றிச் சோரம்போகிறவர்கள்.

௩௧ நீங்கள் உங்கள் பிள்ளைகளைத் * தீயைக்கடக்கப்பண்ணுகையிலே உங்கள் காணிக்கைகளைப் படைக்கிறபோது இந்நாள்வரைக்கும் அவர்களுடைய எல்லா நரகலான தேவர்களாலும் நீங்கள் தீட்டுப்படுகிறீர்களே, நாம் உங்களாலே கேட்கப்படுவோமோ? இஸ்ரவேல் வீட்டாரே, நாம் உங்களால் கேட்கப்படோமென்கிறதை நமது சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார். * ௨. இராசா. ௰௬. ௩. ௰௭, ௰௭.

௩௨ மரத்திற்குங் கல்லிற்கும் ஆராதனைசெய்து புறசாதிகளைப்போலேயுந் தேசங்களின் வம்சங்களைப்போலேயு மிருப்போமென்று சொல்லுகிறீர்களே, இந்த உங்கள் ஆவியிலெழும்புகிற நினைவின்படியே யாவதேயில்லை.

௩௩ பலத்தகையினாலும், நீட்டப்பட்ட புயத்தினாலும், ஊற்றப்பட்ட உக்கிரத்தி

ளும் உங்களை யாருவோமென்கிறதை நம்முடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.

௩௨ நீங்கள் சனசதளங்களுக்குள்ளிராதபடிக்கு நாம் உங்களைப்புறப்படப்பண்ணி, நீங்கள் சிதறித்திருக்கிற தேசங்களிலிராதபடிக்கு நாமுங்களைப்பலத்தகையிலுலும், நீட்டப்பட்டபுயத்திலுலும், ஊற்றப்பட்டஉக்கிரத்திலுலுங்கூட்டி,

௩௩ உங்களைச்சனசதளங்களின் வனாந்தரத்திலே கொண்டுபோய், அங்கே யுங்களோடேமுகமுகமாக நியாயத்திறகுட்பிரவேசிப்போம்.

௩௪ * நாமெகிப்துதேசத்தின் வனாந்தரத்தில் உங்கள் பிதாக்களோடே நியாயத்திறகுட்பிரவேசித்ததுபோலே, உங்களோடே நியாயத்திறகுட்பிரவேசிப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார் * ௪. மோசே. ௰௪, ௨௨. ௨௩.

௩௫ நாமஉங்களை கோலின்கீழ்க்கடந்துபோகப்பண்ணி, உங்களை யுடன்படிக்கையின் கட்டுக்குட்படுத்தி,

௩௬ கலகக்காரரையுந்துரோகிகளையும் உங்களைவிட்டுப்பிரித்துப்போடுவோம், அவர்களைத்தாங்கள் தங்குந்தேசத்திலிருந்து புறப்படப்பண்ணுவோம் ஆனால் அவர்கள் இஸ்ரவேல்சீமைக்குட் பிரவேசிப்பதில்லை, அப்படியே நாங்கர்த்தரென்றறிந்துகொள்ளுவீர்கள்.

௩௭ இப்போதும் இஸ்ரவேல் வீட்டாரே நீங்கள் நம்முடையசொல்லைக்கேட்கமனதில்லாதிருந்தால், நீங்கள்போய் அவனவன் தன்தன் நரகலான தேவர்களை யினிமேலுக்குஞ்சேவியுங்களேன், ஆனால் நம்முடைய பரிசுத்தநாமத்தையுங்கள் காணிக்கைகளாலும் உங்கள்நரகலானதேவர்களாலும் இனிப் பரிசுத்தக்குலைச்சலாக்காதிருப்பீர்களாக வென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

**பூதச்சனத்தின் குணப்படுதலைக்குறித்துப் பண்ணினவாக்குத்தத்தம்.**

௩௮ ஏனெனில் இஸ்ரவேலின் * உயரமான பருவதமாகிய நம்முடைய பரிசுத்தப்பருவதத்திலே இஸ்ரவேலுடைய எல்லாவீட்டாருமாகிய தேசத்திலுள்ள அனைவரும் நம்மைச் சேவிப்பார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார். அங்கே அவர்கள் மேற்பிரியமவைப்போம், அங்கே நீங்கள் பரிசுத்தம்பண்ணுகிற தெல்லாவற்றிலும் உங்கள்செலுத்துதல்களையும் உங்கள் ஈவுகளின் முதற்பலன்களையுங் கேட்போம்.

* ௰௭, ௨௰. ஏசாயா. ௨, ௨.

௩௯ நாம் உங்கள் சனசதளங்களிலிருந்துபுறப்படப்பண்ணி, உங்களை நீங்கள் சிதறுண்டிருக்கிற தேசங்களிலிருந்துகூட்டிக்கொள்ளும்போது, ஆற்றுகிற வாசனையினிமித்தம் நாம் உங்கள்மேற் பிரியமாயிருப்போம், அப்போது புறசாதிகளின் கண்களுக்குமுன்பாக உங்களாற்பரிசுத்தம்பண்ணப்படுவோம்.

௪௰ உங்கள் பிதாக்களுக்குக்கொடுப்போமென்று நம்முடையகரத்தையேறெடுத்த தேசமாகிய இஸ்ரவேல் சீமையிலே நாம் உங்களைத்திரும்பிவரப்பண்ணின அப்போது, நாங்கர்த்தரென்று நீங்கள் அறிந்துகொண்டு,

௪௧ அங்கே யுங்களுடைய எல்லாவழிகளையும், நீங்கள் தீட்டுப்பட்ட உங்களுடைய எல்லாக்கிரியைகளையும் * நினைத்து நீங்கள்செய்திருந்த உங்களுடைய எல்லாப்பொல்லாப்புகளினிமித்தமும் உங்களைத்தானே யரோசிப்பீர்கள். * ௩௬, ௩௧. ௩௨.

௪௨ இஸ்ரவேல்வீட்டாரே, நாம் நம்முடைய நாமத்தினிமித்தம் உங்கள்பொல்லாதவழிகளுக்குத்தக்கதாகவும், உங்கள்கெட்டகிரியைகளுக்குத்தக்கதாகவும் உங்களுக்குச்செய்யாமற்போன அப்போது, நாங்கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்களென்கிறதைக்கர்த்தராகிய ஆண்டவர்உரைக்கிறொன்றுசொல்லென்றார்.

**பூதரின்மேலும் எருசலேமின்மேலும் வருமாக்கினையுவமை வார்த்தைகளால் முன்னறிவிக்கப்பட்டது.**

௪௩ கர்த்தருடையவார்த்தையெனக்குண்டாகி, அவர்சொன்னதாவது,

௪௪ மனுஷபுத்திரனே, நீயுன் முகத்தைத்தென்றிசையாகத் திருப்பிச்தெற்குக்குவிரோதமாக உன்வசனத்தைச்சொரிந்து, தென்புறமானவயல்வெளியின்காட்டுக்குவிரோதமாகத்தீர்க்கதரிசனம் உரைத்து,

௪௫ தெற்கத்திக்காட்டைநோக்கிச்சொல்லவேண்டியதாவது, கர்த்தருடைய வார்த்தையைக்கேள், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதென்னில், இதோ நாம் உன்னில் அக்கினியைக்கொளுத்துவோம், அது உன்னிற பச்சையான சகலமரத்தையும் பட்டிருக்கிறமரத்தையும் பட்சிக்கும், சுவாலிக்கிற சுவாலை யவிக்கப்படமாட்டாது, தெற்குதுவக்கிவடக்குமட்டுமுள்ள தேசமுகங்களெல்லாம் அதினால் வெந்துபோம்.

௪௬ கர்த்தராகிய நாம் அதைக்கொளுத்தினோமென்பதைச்சகல மாம்சமுங்காணும், அது அவிக்கப்படுவதில்லையென்று சொல்லென்றார்.

௪௭ அப்போது நான், ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, இவன் உவமைகளையல்ல

வோ சொலலுகிறவனென்று அவர்களென்னைக்குறித்துச்சொலலுகிறார்களென்றேன.

## உக. அதிகாரம்.

[யூதரின மேலும எருசலேமின மேலும இராசாவின மேலும வருமாகினைவெளிப்பொருளாய அறிவிககபபட்ட திர்க்கதரிசனம.]

அபபோது கர்த்தருடைய வார்த்தை யெனக்குணடாகி, அவர்சொனனதாவது,

உ மனுஷபுத்திரனே, * நீயுன முகத்தை எருசலேமுக்கு நேராகததிருபபிப் பரிசுத்தஸ்தலஙகளுக்குவிரோதமாக உனவசனத்தைச்சொரிநது இஸ்ரவேல சீமைக்கு விரோதமாகத்திர்க்கதரிசனமுரைததது, * உய. அதி. சுஅ.

ங இஸ்ரவேல சீமையைநோக்கிசசொலலவேணடியதாவது, கர்த்தராகிய ஆணடவருரைக்கிறதேதெனில, இதோ, நாம உனக்கு விரோதமாகவநது நமமுடையபட்டையத்தை அதின உறையிலிருநதுருவி, உனனில நீதிமானையும ஆகாதவனையுஞ சஙகாரமபணணுவோம.

ச நாம உன்னில நீதிமானையும ஆகாதவனையுஞ சஙகாரமபணணபபோகிறபடியினாலே. நமமுடையபட்டையநதெறகுததுவககி, வடக்குமட்டுமுள்ள எல்லாமாம்சத்திறகும விரோதமாக அதின உறையிலிருநதுபுறபபடும.

ரு அபபோதுகர்த்தராகிய நாமநமமுடைய பட்டையத்தை அதின உறையிலிருநதுருவினோமெனபதை யெலலாமாமசமும அறியும, அது இனியதிலேதிருமபுவதிலலை,

சு நீயோவெனறால, மனுஷபுத்திரனே, பெருமூசசுவிடு, உன இடுபபுகள நொறுஙகுமவணணமாகவுஙகஸ்தியாகவும அவர்களகணகளுக்குமுனபாகப பெருமூச்சுவிடு.

எ நீயெதினிமித்தம பெருமூசசுவிடுகிறுயென்று அவர்கள உனனைக்கேட்கிறதுணடானால, நீ சொலலவேணடியதாவது, துறசெயதிவருகிறதினிமித்தந்தானே, அதினாலஇருதயஙகளெலலாம உருகிக்கைகளெலலாநதளர்நது ஆவிகளெலலாந்தியஙகி, முழஙகாலகளெலலாந்தணணீராயப போம, இதோ, அதுவநது சமபவிக்குமெனறுகர்த்தராகிய ஆணடவருரைக்கிறுரெனறுசொலலென்றார்.

அ கர்த்தருடையவார்த்தை யெனக்குணடாகி, அவர்சொனனதாவது.

கூ மனுஷபுத்திரனே நீ திர்க்கதரிசனமுரைததுசசொலலவேணடியதாவது, கர்த்தருரைக்கிறதேதெனறால, பட்டையம, பட்டையமேகூர்மையாககபபட்டிருக்கிறது, துலக்கபபட்டதுமாயிருக்கிறது.

ய வெட்டவெவெட்ட அதுகூர்மையாக்கபபட்டிருக்கிறது, மினனததக்கதாயாக்கபபட்டிருக்கிறது, சநதோஷபபடுவோமோ, இது சகலமரஙகளையும அசட்டைபணணுகிறதாகிய நமமுடைய குமாரனுடையகோல.

யக அதைக்கையிற பிடிக்கிறதறகாக அதைத்துலக்கக்கொடுத்தார், கொலலுகிறவனகையிலேகொடுக்குமபடிக்கு அநதபபட்டையங்கூர்மையாக்கபபட்டிருக்கிறது, அது துலக்கபபட்டதுமாயிருக்கிறதெனறுசொலலு.

யஉ மனுஷபுத்திரனே, நீகூபபிட்டலறு, ஏனெனில அது நமமுடைய சனத்தினமேலவரும, அது இஸ்ரவேலுடையபிரபுக்களெலலாரினமேலும வரும, பட்டையத்தினிமித்தம நமமுடைய சனத்திறகுளேதிகிலகள உணடாயிருக்கும, ஆகையால * உன இடுபபிலேயடித்துக்கொள.

* சுஅ, அதிகாரம. யக.

யக ஏனெனிலயாவையுஙகணடிக்கிறகோலவநதாலொழிய * இனிசசோதனையிலேதீருகிறதெனனவெனறுகர்த்தராகியவுணடவர்சொலலுகிறார். * ஏசாயா. கூ, யங. யச. எரேமி. ரு, அதி. ங.

யச ஆகையாலமனுஷபுத்திரனே, நீதிர்க்கதரிசனஞசொலலிக்கையோடே கைகொட்டு, ஏனெனிற பட்டையம மூனறுவிசைபிரட்டித்துவரும, அதுகொலையுணடவர்களினபட்டையம, அதுகொலையுணணபபோகிறபெரியவர்களினஉள்ளறைகளிறபுகுதுகிறபட்டையம.

யரு அவர்களுடைய இருதயஙகளாதது, அவர்களுடைய இடறுதல்கள திரளாகுமபடிக்குபபட்டையத்தினகூர்மையை யவர்களுடைய எலலாவாசலகளுக்கும நேரிட்டக்கட்டளையிடுவோம ஆ, இது மினனுமபடியாகபபதபபட்டது, வெட்டுமபடியாக்ததீட்டிவைக்கபபட்டது.

யசு ஏகபலனுயவலதுபுறமாகவும வெட்டு, திருமபிஇடதுபுறமாகவுமவெட்டு, உனமுகததிருப்பப்படுநதிக்குக்கெலலாமவெட்டு.

யஎ நாமுங கையோடேகைக்கொட்டி நமமுடைய உக்கிரத்தை யாறபபணணுவோமெனறுகர்த்தராகியநாஞ்சொனனோமென்றார்.

யஅ பினனையுஙகர்த்தருடைய வார்த்தை எனக்குணடாகி, அவர்சொனனதாவது,

யகூ மனுஷபுத்திரனே, பாபேலுடைய இராசாவினபட்டையமவாரத்தக்க இரணடுவழிகளைக்குறித்துக்கொள, ஒரேதேசத்திலிருநது இரணடு புறபபடுவோராகட்டவது, ஒரு இடத்தைத்தெரிநதுகொள. பட்

லத்திறகுபபோகிற வழியின முகனையிலே யிது இருககிறதாகததெரிநதுகொள,

உய படடையம அமமோனபுததிரரின படடணமாகியரபாவுககுவிரோதமாகவர ததகக ஒருவழியையும, யூதாவிலிருககிற அரணன எருசலேமுககு விரோதமாகவர ததகக ஒருவழியையுககுறிததுககொளவா யாக.

உக ஏனெனறால இரணடுவழிகளின முக னையாகிய வழிபபிரிவிலேபாபேலின இரா சா நிமிததமபார்ககிறததறகாக நினறுகொ ளவான, அமபுகளைததிடடிச்சுருபஙகளை யாலோசனைகேடடு ஈரலைபபார்பபான்.

உஉ தலைவாக கட்டளையிடுகிறததறகு ம, கொலைசெயகிறதிலே வாயைததிறககிற ததறகும, ஆர்பபரிபபாயச்சததததையுயர் ததுகிறததறகும, வாசலகளைமுடடும எந்தி ரஙகளைவைககிறததறகும, அணைபோடுகிற ததறகும, கொததளஙகளைககடடுகிறததறகு மாக, அவனுடையவலதுபுறததிலே எருச லேமைககுறிககும நிமிததமுணடாயிருக கும.

உங இது அவர்களுககுததபபான நிமி ததமாகத்தோறறுமபோது, ஆணைசததிய ஙகள அவர்களுககுபபணணபபடும, செய் யபபடட அககிரமததையும அவனநினைத துககொணடு, அது பிடிககபபடடலாமென பான.

உச ஆகையாறகர்ததராகிய ஆணடவ ர்சொலலுகிறதாவது உஙகளதுரோகஙகள வெளியரஙகமாகிறதினாலும உஙகளசெய கைகளிலெலலாம உஙகளபாவஙகளதெரி யவருகிறதினாலும, நீஙகள உஙகள அககி ரமததைநினைககபபணணுகிறீர்களே, நீங கள இபபடிககொததவர்களெனறு நினைக கபபடுகிறீர்களே, ஆனதுகொணடு கைப பிடியாயபபிடிககபபடுவீர்கள.

உரு இபபோதும இஸரவேலையாளுகிற பரிசுததமறற ஆகாத அதிபதியே, அககிர மம நிறைவேறுஙகாலததில வருகிற உன னுடையநாளுககேதுவானவனே,

உசு கர்ததராகிய ஆணடவர்சொலலு கிறதாவது, சிரிகைபபடடததைவாஙகி,கி ரீடததையெடுததுபபோடு, அது இனியப படிககொத்ததலல, * தாழமையானவனை யுயர்ததி, உயர்நதவனைததாழததுவோம.

* லூககா. யச, யக.

உஎ அதைக்கவிழ்ததுக்கவிழ்த துக்கவி ழ்ததுபபோடுவோம, நியாயததிறகுடைய வர்வருமடடும அது இலலாதிருககும,* இ வருககேயதைககொடுபபோம.

* லூககா. க, கஉ. கக.

அமமோனபுததிரரினமேலவரும ஆககினை யினறீர்க்கதரிசனம.

உஅ பினனையுமமனுஷபுததிரனே, நீறீ ர்ககதரிசனமுரைததுச்சொல்லவேணடிய தாவது, அமமோனபுததிரரையும அவர்க ள நிநதிககுதலையுககுறிததுககர்ததராகிய ஆணடவர் உரைககிறதெனனவென்றால்.

உகூ அககிரமம நிறைவேறுஙகாலததி லவநத தஙகளுடைய நாளுககேதுவாகிக கொலையுணடு போனவர்களுடைய பிடரி களோடேகூட உனனைததுனமார்க்கரின கையிலேவிழபபணணுமபடிககு, உனககு, அபததமானது தரிசிககபபடுகிறதறுவாயி லும, உனககுபபொயநிமிததமபார்க்கப்ப டுகிறதறுவாயிலும, படடையம, படடை யமேயுருவபபடடது, வெடடுமபடிககுஞ் சஙகரிககுமபடிககும அது மினனததக்க தாயாயததுலககபபடடிருககிறது.

ஙய உனபடடையததை நீதிருமப அதி ன உறையிலேபோடு, நீ சிருஷ்டிககபபட டதானமாகிய உனதொழிலகளினதேசத திலே நாமுனனை நியாயநதீர்ததது,

ஙக நமமுடையசினததை யுனமேலூற றுவோம, நாம நமமுடையமூர்ககததின அககினியையுனமேலூதி, எரிககிறவர்களுங் கேடுசெயயபபணணுகிறவர்களுமாகிய மனுஷரி னகையிலுனனையொபபுககொடுபபோம.

ஙஉ அககினிககிரையாவாய, உன இரத தம உனதேசததின நடுவிறசிநதிககிடககு ம, நீ யினிநினைககபபடுவதிலலை, ஏனெனறா ல் கர்ததராகிய நாமிதைச்சொனனோமென றார்.

## உஉ. அதிகாரம்

[யூதச்சனததினுடையபலவிதமானபாவங களையும, அவைகளநிமிததமவருமஆககி னைகளையுநதெரியககாடடின தேவவசு னஙகள.]

கர்ததருடையவார்ததை யெனககுண டாகி, அவர்சொனனதாவது,

உ இபபோதுமமனுஷபுததிரனே, இர ததஞ்சிநதினபடடணததை நீநியாயமவி சாரிபபாயோ? விசாரிககமனதானால, *நீ யதின அருவருபபுகளையெலலாம அதுககு ததெரியககாடடி, * உய, ச.

ங சொலலவேணடியதாவது, கர்ததரா கிய ஆணடவர்உரைககிறதெனனவென்றால், உன காலமவரததககதாக * உனநடுவிலேஇர ததஞ்சிநதுகிறதும, உனனைததீடடுபபடு த்தத்தக்கதாக உனககேவிரோதமாய நர கலானதேவர்களை யுணடுபணணுகிறதுமா ன படடணமே, * மததே உங, கஎ.

ச நீ சிநதின உன இரத்தத்தினாலே நீ குற்றஞ்சுமததாய், நீ யுணடுபணணின உன நரகலான தேவர்களாலே நீ தீடடுப் படடு, உன நாட்களைச்சமீபிககபபணணி, உனவருஷஙகளின எலலைககுவநதாய,

ஆகையால் நாமுன்னைப்புறச்சாதிகளுக்கு நிந்தையாகவுந்தேசங்களுக்கெல்லாருக்கும் சக்கந்தமாகவும்வைப்போம்.

௫ உனக்குச்சமீபமும் உனக்குத்தூரமுமான தேசங்களின் மனுஷர் உன்னைத் தீழ்ப்பான கீர்த்தியுள்ளதென்றும் அமளிபொருந்தினதென்றுஞ்சக்கந்தம்பண்ணுவார்கள்.

௬ இதோ, இஸ்ரவேலின் அதிபதிகள். அவனவன் தன்தன் புயபலத்திற்குத்தக்கதாக, உன்னில் இரத்தத்தைச்சிந்துகிறதற்கிருந்தார்கள்.

௭ உன்னிலே தாய்தகப்பனை யற்பமாயெண்ணினார்கள், உன்னடுவிலே * பரதேசியையிடுக்கண்செய்தார்கள், உன்னிலேதிக்கற்றவனையும் விதவையையும் ஒடுக்கினார்கள். * சங்கீ. ௯௪, ௬.

௮ நம்முடைய பரிசுத்தக்கட்டளைகளையசட்டைபண்ணி நம்முடைய ஓய்வுநாட்களின்பரிசுத்தத்தைக்குலைத்தாய்.

௯ இரத்தஞ்சிந்தும்படிக்கு அபாண்டம்போடுகிறவர்கள் உன்னிலிருந்தார்கள், * பருவதங்களின்மேற் சாப்பிடுகிறவர்களுமுன்னிலிருந்தார்கள், உன்னடுவிலேதோஷஞ்செய்தார்கள். * ௰௮, அதி. ௬.

௰ உன்னிலேதகப்பனுடைய அபிமானத்தைத்திறந்தார்கள், * உன்னிலேதூரஸ்திரியைப்பலவந்தப்படுத்தினார்கள்.
* ௩. மோசே. ௰௮, ௰௯.

௰௧ உன்னிலொருவன் தனக்கடுத்தவனுடைய பெண்சாதியோடே அருவருப்பானதைச்செய்தான், வேறொருவன்தோஷமாய்த்தன் மருமகளைத்தீட்டுப்படுத்தினான், வேறொருவன் தன்தகப்பனுக்குப்பிறந்த தன்சகோதரியைக்கைப்பிடித்தான். * ௩௩, அதி. ௨௯. எரேமி. ௫. அதி. ௮.

௰௨ இரத்தஞ்சிந்தும்படிக்கு உன்னிற்பரிதானம்வாங்கினார்கள், * நீ வட்டியையுஞ் சொச்சத்தையும் வாங்கிப்பொருளாசையாய் உனக்கடுத்தவனையிடுக்கண்செய்து, நம்மைமறந்துபோனாயென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.
* ௰௮. அதி. ௰௩.

௰௩ இதோ,உன்னில் நடந்தவையானஉன் பொருளாசையினிமித்தமும் உன்னடுவில் நீ சிந்தின இரத்தத்தினிமித்தமும் நம்முடையகையில் அடித்துக்கொள்ளுகிறோம்.

௰௪ நாம் உன்னில்நியாயஞ்செய்யுமநாட்களில்உன்னிருதயம் நிலைநிற்குமோ? அப்போது உன்கைகள் திடப்பட்டிருக்குமோ? * கர்த்தராகிய நாமிதைச்சொன்னோம் இதைநிர்வாகமும்பண்ணுவோம்.
* ௰௭. அதி. ௨௪.

௰௫ நாம் உன்னைப் புறச்சாதிகளுக்குள் சிதறவடித்து உன்னைத்தேசங்களிலே தூற்றி, உன் அசுத்தத்தையுன்னில் முடியப்பண்ணுவோம்.

௰௬ அப்படியே நீ புறச்சாதிகளின் கண்களுக்குமுன்பாக உன்னிற்பரிசுத்தக்குலைச்சலாயிருந்து, நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவாயென்றுசொல்லென்றார்.

௰௭ கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது.

௰௮ மனுஷபுத்திரனே, இஸ்ரவேல்வீட்டார் நமக்கு * மஷ்டாய்ப்போனார்கள், அவர்களெல்லாருங்குகைக்குட்பித்தளையும் வெள்ளீயமும் இரும்புங்காரீயமுந்தானே, வெள்ளியின் மஷ்டாய்ப்போனார்கள்.
* ஏசாயா. ௧, ௨௨.

௰௯ ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது, நீங்களெல்லாரும் மஷ்டாய்ப்போனபடியினாலே இதோ, நாம் உங்களை எருசலேமுக்குள்ளே கூட்டுவோம்.

௨௰ வெள்ளியையும்பித்தளையையும் இரும்பையுங்காரீயத்தையும்வெள்ளீயத்தையும் அக்கினியில் ஊதி யுருக்குவதற்காகக்குகைக்குள்ளே கூட்டுகிறதுபோலே, நாம் நம்முடையகோபத்தினாலும் நம்முடைய உக்கிரத்தினாலும் உங்களைக்கூட்டிப்போட்டுருக்குவோம்.

௨௧ நாம் உங்களைக்கூட்டி நம்முடைய சினத்தின் அக்கினியையுங்கள்மேல் ஊதுவோம், அப்போது அதுக்குள்ளுருக்கப்படுவீர்கள்.

௨௨ வெள்ளி குகைக்குள்ளுருக்கப்படுமாப்போலே, நீங்கள் அதற்குள்ளுருக்கப்பட்டுக்கர்த்தராகிய நாம் நம்முடைய உக்கிரத்தை யுங்கள்மேல் ஊற்றிப்போட்டோமென்றறிந்துகொள்ளுவீர்களென்றார்.

௨௩ கர்த்தருடையவார்த்தை யெனக்குண்டாகி, அவர்சொன்னதாவது,

௨௪ மனுஷபுத்திரனே, நீ சுத்தம்பண்ணப்படாத தேசம் என்று அதற்குச்சொல்லு, சினத்தின்காலத்திலே அதற்கு மழை பெய்யாதிருக்கும்.

௨௫ அதினுடைய தீர்க்கதரிசிகள் பண்ணின ஒப்பந்தம் அதின்நடுவிலிருக்கிறது. கர்ச்சிக்கிறசிங்கம் இரை பீறுகிறதைப்போல, அவர்கள் * ஆத்துமாக்களைப்பட்சிக்கிறார்கள். பொக்கிஷத்தையும் விலையேறப்பெற்றதையும் வாங்கிக்கொள்ளுகிறார்கள், அதின்விதவைகளின் இலக்கத்தையதின்நடுவிற்பெருகப்பண்ணுகிறார்கள்.
* ௰௩. அதி. ௮, ௰.

௨௬ அதின் ஆசாரியர்கள் * நம்முடையவேதத்திற்கநியாயஞ்செய்து, நம்முடையபரிசுத்த கட்டளைகளைப்பரிசுத்தக்குலைச்சலாக்குகிறார்கள். பரிசுத்தமானதற்கும்பரிசுத்தமல்லாததற்கும் வித்தியாசம்பண்ணு

மும், அசுத்தமானதற்குஞ்சுத்தமானதற்கும் உண்டான வேற்றுமையைக்காண்பியாமலுமிருந்து, நம்முடைய ஓய்வுநாட்களை விட்டுத்தங்கள்கண்களை விலக்குகிறார்கள், அப்படியே அவர்கள் நடுவில் நான் கனவீனப்படுகிறேன். * செப்பனி. ௩. அதி ௪.

௨௭ அதின் நடுவிலிருக்கிற* அதினுடைய பிரபுக்கள் இரத்தஞ் சிந்துகிறதற்கும், நாடுமொழிவின் நிமித்தம் ஆத்துமாக்களைக் கெடுக்கிறதற்கும், இரையெடுக்கிற ஓநாய்களைப்போலிருக்கிறார்கள். * மீகா. ௩, ௰௧. செப்பனி. ௩, ௩.

௨௮ * அதின் தீர்க்கதரிசிகள் அவத்தமானதைத் தரிசித்துப் பொய்ச்சாஸ்திரத்தை அவர்களுக்குச்சொல்லிக் கர்த்தர் உரைக்காதிருந்துங் கர்த்தராகிய ஆண்டவர் உரைத்தாரென்றுசொல்லி, அவர்களுக்குச் †சாரமற்றசுண்ணும்பைப்பூசுகிறார்கள்.

* எரேமி. ௨௩, ௩௧. ௩௨, † ௰௩, ௰.

௨௯ தேசத்தின்சனம் ஒடுக்கவே ஒடுக்கிப்பறிக்கவேபறித்துச், சிறுமையும் எளிமையுமானவனை யிம்சைசெய்து, பரதேசியை நியாயமில்லாமல் ஒடுக்குகிறார்கள்.

௩௰ * சுவரை அடைப்பாருவனும், நான் தேசத்தை யழிக்காதபடிக்கு அதற்காக நம்முகத்திற்குமுன்பாகத் † திறப்பிலே நிற்பவனுமாகிய மனுஷனைத் தேடினோம், ஆனாலுங் காணுதேபோனோம். * ௰௩. ௫.
† சங். ௱௬, ௨௩.

௩௧ ஆகையால் நாம் அவர்கள்பேரிலே * நம்முடைய சினத்தைப்பூற்றி, நம்முடைய உக்கிரத்தின் அக்கினியால் அவர்களைநிர்மூலமாக்கி, அவர்களுடையமார்க்கத்தை † அவர்கள்தலையின்மேற்சுமரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார். * எ, அ. † ௰௬. அதி. ௪௩.

## ௨௩. அதிகாரம்.

[இஸ்ரவேலும் யூதாவுஞ்செய்த விக்கிரக ஆராதனைகளும் அவைகளின் ஆக்கினைகளும் இரண்டுவேசிகளின் உவமையிலே காண்பிக்கப்பட்டது.]

கர்த்தருடையவார்த்தையெனக்குண்டாகி, அவர்சொன்னதாவது,

௨ மனுஷபுத்திரனே, ஒரேதாயின்குமாரத்திகளாகிய இரண்டு ஸ்திரீகளிருந்தார்கள்.

௩ அவர்கள் * எகிப்திலே வேசித்தனம்பண்ணினார்கள். தங்கள் வாலிபத்திலேதானே வேசித்தனம்பண்ணினார்கள், அங்கே அவர்களுடைய தனங்கள் அமுக்கப்பட்டு, அவர்களுடைய கன்னிமையின்கொங்கைகள் தொடப்பட்டது. * ௨௰. அதி. ௫. ௮.

௪ அவர்களில் மூத்தவளுக்கு ஒகோலாள் என்றுபேரும், அவளுடைய தங்கைக்கு ஒகோலிபாளென்றுபேருமிருந்தது, அவர்கள் நம்முடையவர்களாகிக் குமாரரையுங் குமாரத்திகளையும்பெற்றார்கள். அவர்களுடையபேர்களென்னவென்றால், சமாரியா ஒகோலாளென்பவள், எருசலேம் ஒகோலிபாளென்பவள்.

௫ ஒகோலாள் நம்முடைய கீழிருந்து சோரம்போனாள்.

௬ அவள் நீலமான உடுப்புள்ள தலைவரும் அதிகாரிகளுமாய், இச்சிக்கப்படத்தக்க வாலிபருமாய்க் குதிரைகளின்மேலேறுகிற ராவுத்தருமாயிருந்த சமீபதேசத்தாராகிய * அசூரியரென்றதன்னுடைய சிநேகிதரையவள்மோகித்து, * ௰௬, ௨௮.

௭ அசூரின்புத்திரரிலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களான அனைவரோடும், தான் மோகித்த அனைவரோடும் தன்வேசித்தனங்களை நடப்பித்து அவர்களுடைய நரகலான எல்லாத்தேவர்களாலுந் தீட்டுப்பட்டுப் போனாள்.

௮ தான் எகிப்திலேபண்ணின வேசித்தனங்களை யவள்விட்டதுமில்லை, ஏனென்றால் இவர்கள் அவளுடைய வாலிபத்திலே அவளோடே சயனித்து, அவளுடைய கன்னிமையின் கொங்கைகளைத்தொட்டு, அவள்பேரிலே தங்கள் வேசித்தனத்தைப் பூற்றியிருந்தார்கள்.

௯ ஆகையால் அவளை அவளுடையசிநேகிதரின்கையிலொப்புக்கொடுத்தோம், அவள்மோகித்திருந்த * அசூர்புத்திரரின்கையிலேதானே, * ௨. இராசா. ௰௫, ௰௬. ௨௬. ௰௭, ௩.

௰ இவர்கள் அவளுடைய அவமானத்தைத்திறந்தார்கள், அவளுடையகுமாரரையும் அவளுடையகுமாரத்திகளையும் பிடித்துக்கொண்டு, அவளைப்பட்டயத்தினாலே கொன்றுபோட்டார்கள். அப்படியே அவளில் ஆக்கினைகளைத்தீர்த்துப்போட்டபடியினாலே ஸ்திரீகளுக்குள் அவகீர்த்திப்பட்டவளானாள்,

௰௧ அவளுடைய தங்கையாகிய ஒகோலிபாள் இதைக்கண்டும், * அவளைப்பார்க்கத் தன்மோகவிகாரத்திலுந் தன்சகோதரியைப்பார்க்கத்தன்வேசித்தனங்களிலும்கெட்டவளானாள். * ௰௬, ௫௧.

௰௨ மகா அலங்கார உடுப்புள்ள தலைவரும் அதிகாரிகளும், குதிரைகளின்மேலேறுகிற ராவுத்தரும், அனைவருமாக இச்சிக்கப்படத்தக்க வாலிபருமான சமீபதேசத்தாராகிய * அசூர்புத்திரரை மோகித்தாள். * ௨. இராசா. ௰௬, ௭. மு

௰௩ அவள் அசுத்தமானாளென்றும், * அவர்களிருவருக்குமொரே மார்க்கமுண்டெ

னறுக்கண்டோம்.

௰௪ அவள் தன்வேசித்தனங்களில் அதிகப்பட்டுப்போனாள் அதெப்படியென்றால் சாதிலிங்கத்தால் சுவரில் படமாய்த் தீர்க்கப்பட்ட கல்தேயரின் சுரூபங்களாகிய புருஷரைக் கண்டாள்.

௰௫ அவர்கள் தாங்கள் பிறந்த தேசமாகிய கல்தேயாவிலுள்ள பாபேலுடைய புத்திரரின் சாயலாகத் தங்கள் அரைகளில் கச்சைகட்டினவர்களும், தங்கள் தலைகளில் சாயந்தீர்ந்த பெரிய பாகைகளைப் போட்டுக்கொண்டவர்களும், பார்வைக்கு எல்லாரும் அதிக்கக்காரருமாயிருந்தார்கள்.

௰௬ அவளுடைய கண்கள் அதைப்பார்த்தவுடனே, அவள் அவர்களை மோகித்துக் கல்தேயாவுக்கு அவர்களண்டையிலே தாதிகளை அனுப்பினாள்.

௰௭ அப்போது பாபேலின் புத்திரர் அவளண்டையிலே சிநேக சம்போகத்திற்கு வந்து, தங்கள் வேசித்தனங்களால் அவளைத் தீட்டுப்படுத்தினார்கள், அவளிவர்களாலே தீட்டுப்பட்டுப்போனபின்பு, * அவள் மனது அவர்களைவிட்டுப் பிரிந்தது.

* ௨. இராசா. ௨௪, ௧, ௨.

௰௮ அவள் தன் வேசித்தனங்களை வெளியாக்கித் தன் அபிமானத்தைத் திறந்துபோட்டபடியினாலே, நம்முடைய ஆத்துமா அவளுடைய சகோதரியைவிட்டுப் பிரிந்ததுபோலே அவளையும்விட்டுப் பிரிந்தது.

௰௯ அவள் எகிப்துதேசத்திலே வேசித்தனம்பண்ணின தன் வாலிபத்தின் நாட்களை நினைத்துத் தன்வேசித்தனங்களில் அதிகப்பட்டுப்போனாள்.

௨௰ அதெப்படியென்றால் அவர்களுடைய வைப்பாட்டிகளைப் பார்க்கிலும் அவள் அவர்களை மோகித்தாள், கழுதைகளின் மாம்சமான மாம்சமுள்ள குதிரைகளின் காமியமான காமியமுமுள்ள அவர்களைத்தானே.

௨௧ இப்படியே எகிப்திலே உன் வாலிபத்தின் தனங்கள் நிமித்தம் உன் கொங்கைகள் தொடப்பட்டதாகிய உன் சிறுவயதின் தோஷத்தைத் திரும்பத்தேடினாய்.

௨௨ ஆகையால் ஒகோலிபாளே, கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, இதோ, உன் மனதுவிட்டுப்பிரிந்த * உன்னுடைய சிநேகிதரை நாம் உனக்கு விரோதமாக எழுப்பி, அவர்களைச் சுற்றிலும் உனக்கு விரோதமாக வரப்பண்ணுவோம்.

* ௰௬, ௩௭.

௨௩ இச்சிக்கப்பட்டதக்க வாலிபரும், எல்லாத் தலைவரும் அதிகாரிகளும் குதிரைகளையேறுகிற அதிக்கக்காரருமாகிய பேர்பெற்ற மனுஷருமாயிருக்கிற பாபேலின் புத்திரரையுங் கல்தேயரெல்லாரையும், பேக்கோத், சோவா, கோவாவென்ற சீமைகளின் மனுஷரையும் அவர்களோடேகூட அசூர் புத்திரரெல்லாரையுந்தானே.

௨௪ அவர்கள் உனக்கு விரோதமாக வண்டிகளோடும் இரதங்களோடும் உருளைகளோடும் சனசதளங்களின் கூட்டத்தோடும் வந்து, கேடயங்களும் பரிசைகளும் தலைச்சோடுமுள்ளவர்களாய் உன்னைச் சுற்றிலும் பாளயமிறங்குவார்கள், அவர்களின் முன்னே நாம் நியாயத்தை வைப்போம், அவர்கள் தங்கள் நியாயங்களின்படி உன்னை நியாயந்தீர்ப்பார்கள்.

௨௫ உனக்கு விரோதமாக நம்முடைய வயிராக்கியத்தைப் போகவிடுவோம், அவர்கள் உன்னை உக்கிரமாய் நடப்பித்து உன் மூக்கையும் உன் காதுகளையும் வாங்கிப்போடுவார்கள், உன்னில் மீதியாயிருப்பதோ பட்டயத்தால் வெட்டுண்டுபோகும், அவர்கள் உன் குமாரரையும் உன் குமாரத்திகளையும் பிடித்துக்கொள்ளுவார்கள், உன்னில் மீதியாயிருப்பதோ அக்கினிக்கிரையாகும்.

௨௬ * அவர்கள் உன் வஸ்திரங்களையுரிந்து, உன்னுடைய சிங்காரமான ஆபரணங்களை வாங்கிக்கொள்ளுவார்கள்.

* ௰௬. அதி ௨௧.

௨௭ அப்படியே உன் சந்தோஷத்தையும் நீ எகிப்துதேசத்திலே துவக்கின உன் வேசித்தனத்தையும் ஒய்யப்பண்ணுவோம், நீயினி அவர்களை நோக்க உன் கண்களையேறெடுக்காமலும், எகிப்துவை நினைக்காமலுமிருப்பாய்.

௨௮ ஏனென்றால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, இதோ, நீ பகைக்கிறவர்களின் கையிலும் உன் மனதுவிட்டுப்பிரிந்தவர்களின் கையிலும் நாமுன்னை ஒப்புக்கொடுப்போம்.

௨௯ அவர்கள் பகையாய் உன்னை நடப்பித்து, உன் பிரயாசத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு உன்னை அம்மணமும் நிர்வாணமுமாக்கிவிடுவார்கள், அப்படியே உன் வேசித்தனத்தின் அபிமானமும் உன்னுடைய தோஷமும் உன் வேசித்தனங்களும் திறந்துகிடக்கும்.

௩௰ நீ புறசாதிகளைப் பின்தொடர்ந்து, அவர்களுடைய நரகலான தேவர்களால் உன்னைத் தீட்டுப்படுத்திக்கொண்ட உன்னுடைய வேசித்தனத்தினிமித்தம் இவைகளை யுனக்குச்செய்வார்கள்.

௩௧ உன் சகோதரியின் வழியிலே நடந்தாய், ஆகையால் அவளுடைய பாத்திரத்தை யுன்கையிலே கொடுப்போம்,

௩௨ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, நீ உன் சகோதரியினுடைய ஆழமும் விஸ்தாரமுமான பாத்திரத்தை வாங்கிக் குடித்து, அது நிரம்பப்பிடிக்கிறபடியினாலே, நகைப்பும் பரியாசமுமாவாய்.

கோலாலேஐந்நூறுகோல்களாயளந்தார்.

௰௯. மேல்காற்றுப் பக்கத்திலே திரும்பிக்கொண்டு அளவுகோலாலே ஐந்நூறு கோல்களாயளந்தார்.

௨௰. நாலு காற்றுப் பக்கங்களிலும் அதையளந்தார், பரிசுத்தமானதற்கும் பரிசுத்தமல்லாததற்கும் வித்தியாசம் பண்ணும்படிக்கு, அதைச் சுற்றிலும் ஐந்நூறுகோல் நீளமும் ஐந்நூறுகோல் அகலமுமான மதில் சுற்றிலுமிருந்தது.

## ௪௩. அதிகாரம்.

[தேவாலயங் கர்த்தருடைய மகிமையினாலே நிரப்பப்பட்ட தரிசனை.]

அப்போது அவரென்னைக் கீழ்த்திசைக்கெதிர்வாசலாகிய வாசலுக்கழைத்துப் போனார்.

௨. இதோ, இஸ்ரவேலருடைய பராபரனின் மகிமை கீழ்த்திசையிலிருந்து வந்தது* அவருடைய சத்தம் திரளான தண்ணீர்களின் இரைச்சலைப்போலிருந்தது, அவருடைய மகிமையினாலே பூமி வெளிச்சமாயிற்று.
* ௧. அதி. ௨௪. அறிவி. ௧. அதி. ௰௫.

௩. நான் கண்ட இந்தத் தரிசனை * நான் பட்டணம் அழிவுக்கு வந்தபோது கண்ட தரிசனையின் சாயலாயிருந்தது, இந்தத் தரிசனைகள் † கேபார் நதியண்டையிலே நான் கண்டிருந்த தரிசனையைப்போலிருந்தது, நான் முகங்குப்புற விழுந்தேன். * ௮. அதி. ௪ † ௧. அதி. ௪. முழு

௪. கர்த்தருடைய மகிமை கீழ்த்திசைக்கெதிரான வாசல்வழியாய் வீட்டுக்குட்பிரவேசித்தது.

௫. அப்போது ஆவி என்னையெடுத்து, என்னையுள் முற்றத்திலே கொண்டுபோய்விட்டது. இதோ, * கர்த்தருடைய மகிமை வீட்டை நிரப்பிற்று. * ௨. மோசே. ௪௰. ௩௪. ௧. இராசா. ௮. அ. ௰. ௰௧.

௬. அவர் வீட்டிலிருந்து என்னுடனே பேசுகிறதைக் கேட்டேன், புருஷன் என்னண்டையிலே நின்றிருந்தார்.

௭. அவர் என்னோடே சொன்னதாவது. மனுஷபுத்திரனே, இது நாம் என்றென்றைக்கும் இஸ்ரவேலின் புத்திரரின் நடுவே வாசம்பண்ணப்போகிற நம்முடைய ஆசனத்தின் தானமும் நம்முடைய உள்ளங்கால்களின் தானமுமாயிருக்கிறது, இனி இஸ்ரவேல் வீட்டாரும் அவர்களுடைய இராசாக்களும் நமது பரிசுத்த நாமத்தைத் தங்கள் மேட்டிமைகளிலேதங்கள் வேசித்தனத்தினாலும் தங்கள் இராசாக்களின் * பிரேதங்களினாலும் தீட்டுப்படுத்துவதில்லை. * எரேமி. ௰௬, ௰௮

௮. அவர்கள் நமக்கும் தங்களுக்கும் நடுவே ஒருசுவரேயிருக்கும்படியாகத் தங்கள் வாசற்படியை நம்முடைய வாசற்படியண்டையிலும் தங்கள் வாசல்நிலைகளை நம்முடைய வாசல்நிலைகளண்டையிலும் சேர்த்து நம்முடைய பரிசுத்த நாமத்தைத் தாங்கள் செய்த அருவருப்புகளினாலே தீட்டுப்படுத்தினார்கள், ஆகையால் நம்முடைய கோபத்தினாலே அவர்களை நாசமாக்கினோம்.

௯. இப்போது அவர்கள் தங்கள் வேசித்தனத்தையும் தங்கள் இராசாக்களின் பிரேதங்களையும் நமக்குத் தூரப்படுத்தக்கடவார்கள் அப்போது என்றென்றைக்கும் அவர்கள் நடுவே வாசமாயிருப்போம்.

௰. மனுஷபுத்திரனே, இஸ்ரவேல் வீட்டார் * தங்கள் அக்கிரமங்களினிமித்தம் நாணும்படிக்கு, நீ அவர்களுக்கிந்த வீட்டைக்காண்பி. அதின் மாதிரியை அளக்கக்கடவார்கள். * ௰௬, ௬௩. ௩௬. ௩௧, ௩௨.

௰௧. அவர்கள் செய்த எல்லாவற்றினிமித்தமும் நாணிக்கொண்டிருந்தால், அப்போது இந்த வீட்டின் ரூபத்தையும் அதின் நிலையையும் அதின் வாசற்படிகளையும் அதின் உள்நடைகளையும் அதினுடைய எல்லா ரூபங்களையும் அதினுடைய எல்லாக்கட்டளைகளையும் அதினுடைய எல்லா விதங்களையும் அதினுடைய எல்லா நியாயங்களையும் அவர்களுக்குத் தெரியப்படுத்தி, அவர்கள் அதினுடைய எல்லா விதங்களையும் அதினுடைய எல்லாக்கட்டளைகளையுங் கைக்கொண்டு அவைகளின்படி செய்யும்படிக்கு அதையவர்கள் கண்களுக்கு முன்பாக எழுதிவை. * ௪௪. அதி. ௫.

௰௨. வீட்டினுடைய நியாயப்பிரமாணம், பருவதத்தின் சிகரத்திலே அதின் எல்லையெல்லாம் சுற்றிலும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்கும், இதோ, இது வீட்டினுடைய நியாயம்.

### தகனபலிபீடத்தினுடைய அளவுகளுங் கட்டளைகளும்.

௰௩. முழங்களின்படி அளக்கும் பலிபீடத்தின் அளவுகளாவது, ஒவ்வொரு முழத்தை முழத்திலும் நாலுவிரற்கடை நீளமாயிருக்கிறதாகப் பார்த்தால், சுற்றாதாரம் ஒருமுழ உயரமும் ஒருமுழ அகலமும் அதினுடைய ஓரத்திற்சுற்றும், அதின் எல்லையொரு சாணுமாயிருக்கும். இது பலிபீடத்தைச் சுமக்கும்.

௰௪. தரையிலிருக்கிற ஆதாரத்தைத் துவக்கிக் கீழ்நிலைமட்டும் இரண்டு முழமும், அகலம் ஒருமுழமும், சின்ன நிலைதுவக்கிப் பெரிய நிலைமட்டும் நாலுமுழமும், அகலம் ஒருமுழமுமாயிருக்கும்.

௰௫. தேவபீடத்தின் சிகரம் நாலுமுழ உயரமாயிருப்பது, தேவபீடத்தின் சிகரத்திற்கு உயர நாலு கொம்புமிருக்கும்.

௰௬. தேவபீடத்தின் சிகரம் பன்னிரண்டு முழ நீளமும், பன்னிரண்டுமுழ அகலமுமா

யத்தினுடைய நாலுபக்கங்களிலும் நாற்சதுரமாயிருக்கும்.

௧௭. அதின் நாலுபக்கங்களிலுள்ள சட்டம் நீளம் பதினாலு முழமும், அகலம் பதினாலு முழமும் அதைச் சுற்றிலுமிருக்கிற விளிம்பு அரை முழமும், அதற்கு ஆதாரமானது சுற்றிலும் ஒரு முழமுமாயிருக்கும், அதின் படிகள் கிழக்குக்கு எதிராயிருப்பதென்றார்.

௧௮. அவர் என்னோடே சொன்னதாவது, மனுஷபுத்திரனே, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், பலிபீடத்தைப் பண்ணின நாளிலே அதின்மேலே தகனபலியிடுகிறதற்கும் அதின்மேல் இரத்தந் தெளிக்கிறதற்குமான அதினுடைய கட்டளைகளாவது.

௧௯. நமக்கு ஆராதனை செய்கிறதற்கு நம்மண்டை சேருகிற * சாதோக்கின் வித்தான இலேவிக்கோத்திரத்தாராகிய ஆசாரியர்களுக்கு நீ பாவம்போக்கும் பலியாக ஒரு காளைக்கன்றைக் கொடுப்பாயாகவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௪௰. அதி. ௪௬.

௨௰. இதின் இரத்தத்தில் அள்ளி, அதினுடைய நாலுகொம்புகளிலும், சட்டத்தின் நாலுகோடிகளிலும், சுற்றியிருக்கிற விளிம்பிலும் பூசி, அதைப் பாவமறத் தாக்கி,

௨௧. பிற்பாடு * பாவம்போக்குதலின் காளைக்கன்றையெடுத்து, அதை வீட்டிலேயே தற்காக்குறிக்கப்பட்ட பரிசுத்தஸ்தலத்திற்குப் புறம்பான விடத்திலே சுட்டெரிக்கடவும். * ௩. மோசே. ௧௬, ௨௭.

௨௨. இரண்டாம்நாளிலே ஊனமில்லாத ஒரு வெள்ளாட்டுக் கடாவைப் பாவம்போக்குதலுக்காகப் பலியிடுவாயாக, அதினாலே பலிபீடத்தைக் காளைக்கன்றினாலே செய்ததுபோலே, பாவமறச் சாக்கக்கடவார்கள்.

௨௩. நீ பாவம்போக்குதலை முடித்துத் தீர்ந்தபிற்பாடு, ஊனமில்லாத ஒரு காளைக்கன்றையும் ஊனமில்லாத ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிடுவாயாக.

௨௪. அவைகளைக் கர்த்தருக்கு முன்பாகப் பலியிடுவாயாக, ஆசாரியர்கள் அவைகளுக்கு உப்புப்போட்டு அவைகளைக் கர்த்தருக்குத் தகனபலியிடக்கடவார்கள்.

௨௫. ஏழுநாளாய்த்தினம் பாவம்போக்குதலுக்காக ஒரு வெள்ளாட்டுக் கடாவைப் படைப்பாயாக ஊனமில்லாதவைகளான காளைக் கன்றையும் ஆட்டுக்கடாவையும் படைப்பார்களாக.

௨௬. ஏழுநாட்பலிபீடத்தைப் பாவமறத்தாக்கி, அதைச் சுத்திகரித்து, அதினைக் கைநிரப்பிவரக்கடவார்கள்.

௨௭. அந்நாட்களை முடித்தபிற்பாடு, எட்டாம் நாளாயிருக்கும், அதுமுதற்கொண்டு ஆசாரியர்கள் பலிபீடத்தின்மேல் உங்கள் தகனபலிகளையும் உங்கள் ஸ்தோத்திரப் பலிகளையும் படைப்பார்களாக, அப்போது உங்களைப் பிரியமாயிருப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

## ௪௪. அதிகாரம்.

[பூட்டப்பட்டிருக்கும் வாசலின் கட்டளை.]

பிற்பாடவர் என்னைக் கிழக்குக்கெதிரோடே பரிசுத்தஸ்தலத்திற்கிருக்கிற புறவாசலின் வழியே திரும்பப்பண்ணினார், அது பூட்டப்பட்டிருந்தது.

௨. அப்பொழுது கர்த்தர் என்னோடே சொன்னதாவது, இந்தவாசல் திறக்கப்படாமற் பூட்டப்பட்டிருக்கும், ஒருவரும் அதற்குள் பிரவேசிப்பதில்லை, ஏனெனில் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அதற்குள் பிரவேசித்தார், ஆகையால் அது பூட்டப்பட்டிருக்கும்.

௩. அதிபதி ஒருவனே, கர்த்தருக்கு முன்பாக அப்பம் போசிக்கிறதற்காக அதிலே உட்காரலாம், அவன் வாசலின் சாலை வழியாய்ப் பிரவேசித்துத் திரும்ப அதுவழியாய்ப் புறப்படுவானாக என்றார்.

பரிசுத்தஸ்தலத்திற்குட்பிரவேசித்து ஆராதனை செய்யத்தகாதவர்களைக் குறித்துச் சொல்லப்பட்டது.

௪. பிற்பாடவர் என்னை வடக்குவாசல் வழியாய் வீட்டின் முகப்பிலே அழைத்துவந்தார், இதோ * கர்த்தருடைய மகிமை கர்த்தருடைய வீட்டை நிரப்பிற்றென்று நான் கண்டு, முகங்குப்புற விழுந்தேன். * ௨. மோசே. ௪௰, ௩௪.

௫. அப்போது கர்த்தர் என்னோடே சொன்னதாவது மனுஷபுத்திரனே, கர்த்தருடைய வீட்டின் கட்டளைகளெல்லாவற்றையும் அதினுடைய நியாயங்களெல்லாவற்றையுங் குறித்து நாம் உன்னோடே சொல்லுகிறவைகளெல்லாம் * நீ உன் மனதில் வைத்து, உன் கண்களினாலே நோக்கி, உன் காதுகளாலே கேட்டு, பரிசுத்தஸ்தலத்தினுடைய எல்லா வாசற்படிகளாலும் வீட்டுக்குட்பிரவேசிக்கிற வழியின்பேரில் உன் மனதை வை, * ௪௩, ௪.

௬. இஸ்ரவேல் வீட்டாராகிய கலகக்காரரோடே சொல்லவேண்டியதாவது, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், இஸ்ரவேல் வீட்டாரே உங்கள் அருவருப்புகளெல்லாம் போதும்.

௭. நீங்கள் நம்முடைய போசனமாகிய கொழுப்பையும் இரத்தத்தையுஞ் செலுத்துகையில், நம்முடைய வீட்டைப் பரிசுத்தக்குலைச்சலாக்கும்படிக்கு இருதயத்திலே விருத்தசேதனமில்லாதவர்களும் மாம்சத்திலே விருத்தசேதனமில்லாதவர்களுமான அந்நியபுத்திரரை நம்முடைய பரிசுத்தஸ்

வைத்தீர்கள், அதிலிருக்கிறதற்காய் அவைகள் தவிர நீங்கள் செய்த எல்லா அருவருப்புகளையுந் தொட்டு அவர்கள் நம்முடைய உடன்படிக்கையை மீறுகிறார்கள்.

௮. நீங்கள் நமது பரிசுத்த காரியங்களின் காவலைக் காக்காமல், உங்களுக்குச் சரிப்போனவர்களை நமது பரிசுத்த ஸ்தலத்திலே நம்முடைய காவலைக் காக்கிறதற்காக வைத்தீர்கள்.

௯. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, இஸ்ரவேல் புத்திரரின் நடுவிலிருக்கிற சகல அன்னியபுத்திரரிலுஞ் சுன்னத்தில்லாத இருதயமும் சுன்னத்தில்லாத மாம்சமுமுள்ள அன்னியபுத்திரனொருவனும் நம்முடைய பரிசுத்த ஸ்தலத்திற்குட் பிரவேசிப்பதில்லை.

௰. இஸ்ரவேல் வழிதப்பிப் போகையில் நம்மைவிட்டுத் தூரமானவர்களும், நம்மை விட்டு வழிதப்பித் தங்கள் நரகலான தேவர்களின் பிறகாலே போனவர்களுமாகிய லேவியர் முதலாய்த் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.

௰௧. அவர்கள் நமது பரிசுத்த ஸ்தலத்திலே வீட்டின் வாசல்களை விசாரிக்கிற வேலைக்காரராயிருந்து, வீட்டுக்கூழியஞ்செய்வார்கள், அவர்கள் தகனபலிகளையும் மற்றப் பலிகளையும் சனத்திற்காக அடித்து, இவர்களுக்கூழியஞ்செய்கிறதற்காக இவர்களுக்கு முன்பாக நிற்பார்கள்.

௰௨. அவர்கள் இவர்களுடைய நரகலான தேவர்களுக்கு முன்பாக இவர்களுக்கூழியஞ்செய்து, இஸ்ரவேல் வீட்டாருக்கு அக்கிரமத்திற்கான இடறலாக இருந்தபடியினாலே, அவர்கள் தங்கள் அக்கிரமத்தைச் சுமக்கும்படிக்கு, நம்முடைய கையை அவர்களுக்கு விரோதமாக எடுத்தோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௩. அவர்கள் நமக்கு ஆசாரியராய் ஆராதனைசெய்கிறதற்கும், நமது பரிசுத்த காரியங்களிலொன்றுக்காகிலும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்தைக் கிட்டுகிறதற்கும், நம்மண்டை சேராமல் தங்கள் இலச்சையையுந் தாங்கள் செய்த அருவருப்புகளையுஞ் சுமக்கக்கடவார்கள்.

௰௪. ஆகையால் வீட்டினுடைய எல்லா வேலைக்கும், அதிற்செய்யப்படவேண்டியதெல்லாவற்றிற்கும் நாம் அவர்களை அதிலே காவற்காரராயிருக்கக் கட்டளையிடுவோம்.

பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனை செய்யத்தக்க ஆசாரியரையும், அவர்கள் நடந்துகொள்ளும் விதத்தையும், அவர்களுடைய பிழைப்பையுங் குறித்துச் சொன்னது.

௰௫. ஆனால் இஸ்ரவேல் புத்திரர் நம்மை விட்டு வழிதப்பிப் போகையில், நமது பரிசுத்த ஸ்தலத்தின் காவலைக் காத்துக்கொண்ட * சாதோக்கின் புத்திரராகிய லேவியரென்ற ஆசாரியர்களே நமக்கு ஆராதனைசெய்ய நம்மண்டை சேர்ந்து, கொழுப்பையும் இரத்தத்தையும் நமக்குச் செலுத்த நமக்கு முன்பாக நிற்பார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௪௰, ௪௬. ௪௩. ௰௯.

௰௬. இவர்கள் நமது பரிசுத்த ஸ்தலத்திற்குட் பிரவேசிப்பார்கள், இவர்களே நமக்கு ஆராதனைசெய்யப் பீடத்தைக் கிட்டி நமது காவலைக் காப்பார்கள்.

௰௭. உள்முற்றத்தின் வாசல்களுக்குட் பிரவேசிக்கிறபோது, சணநூல் வஸ்திரங்களையுடுத்துக்கொள்வார்களாக, அவர்கள் உள்முற்றத்தின் வாசல்களிலும் உள்ளேயும் ஆராதனைசெய்கையில், ஆட்டுமயிர் உடுப்பு அவர்கள் மேலேறாதிருப்பதாக.

௰௮. * அவர்களுடைய தலைகளிற் சணநூற் குல்லாக்களும், அவர்களுடைய இடைகளிற் சணநூற் காற்சட்டைகளுமிருக்கக்கடவது, வேர்வையிலே அரைகட்டார்களாக.
* ௨. மோசே. ௩௯. ௨௮. ௨௮, அதி. ௪௨.

௰௯. அவர்கள் வெளிப்பிராகாரமாகிய புறமுற்றத்திலே சனத்தண்டைக்குப் புறப்பட்டுப்போகிறபோது, அவர்கள், * தாங்கள் ஆராதனைசெய்து உடுத்திருந்த தங்கள் வஸ்திரங்களைக் கழற்றி அவைகளைப் பரிசுத்த அறைவீடுகளில் வைத்து, வேறே வஸ்திரங்களை உடுத்துக்கொள்ளக்கடவார்கள், தங்கள் வஸ்திரங்களாலே சனத்தைப் பரிசுத்தம் பண்ணார்களாக. * ௪௨. அதி. ௰௪.

௨௰. அவர்கள் தலைகளைச் சிரைக்காமலும், தங்கள் மயிரை நீளமாய் வளர்க்காமலும், தங்கள் தலைகளின் மயிரைக் கத்திரிக்கக்கடவார்கள். * ௩. மோசே. ௨௧, அதி ௫.

௨௧. * ஆசாரியர்களிலொருவனும் உள்முற்றத்திற்குட் பிரவேசிக்கும்போது, திராட்சப்பழரசங் குடியாதிருக்க. * ௩. மோசே. ௰, ௯.

௨௨. * விதவையையுந் தள்ளிவிடப்பட்டவளையும் அவர்கள் விவாகம்பண்ணாமல், இஸ்ரவேல் வீட்டாரின் வித்தாகிய கன்னியாஸ்திரீயையாகிலும் ஒரு ஆசாரியனின் பெண்சாதியாயிருந்த விதவையையாகிலும் விவாகம்பண்ணக்கடவார்கள். * ௩. மோசே. ௭, ௰௩. ௰௪.

௨௩. * அவர்கள் பரிசுத்தமானதற்கும் பரிசுத்தமல்லாததற்குந் தீட்டானதற்குஞ் சுத்தமானதற்குமிருக்கும் வித்தியாசத்தை நமது சனத்திற்குப் போதித்து அவர்களுக்குத் தெரியப்பண்ணக்கடவார்கள்.
* ௩. மோசே. ௰, ௰.

௨௪. வழக்கிருந்தால், இவர்கள் நியாயந

தீர்க்க ஆயத்தமாயிருந்து, நம்முடைய நியாயங்களின்படியதைத் தீர்த்து, நம்முடைய பண்டிகைகளிலெல்லாம் நமது நியாயப்பிரமாணத்தையும் நமது கட்டளைகளையுங் கைக்கொண்டு, நம்முடைய ஓய்வுநாட்களைப் பரிசுத்தமாக்கக்கடவார்கள்.

உரு. தகப்பன், தாய், குமாரன், குமாரத்தி, சகோதரன், புருஷனுக்குவாழ்க்கைப்படாத சகோதரி என்றவர்களுடைய சவத்தினால் அவர்கள் தீட்டுப்படுவதேயல்லாமல், அவர்களிலொருவனுஞ்செத்த ஒரு மனுஷனாலே தீட்டுப்படவானாக.

உகா. அவன் சுத்திகரமான பின்பு, அவனுக்கு ஏழுநாள் எண்ணப்படவேண்டும்.

உஎ. அவன் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனை செய்யும்படிக்குப் பரிசுத்தஸ்தலமிருக்கிற உள்முற்றத்திற்குட்பிரவேசிக்கிறநாளிலேயென்றால், அவன் தனக்காகப் பாவம் போக்கும் பலியைச் செலுத்தக்கடவானென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

உஅ. அவர்களுக்குச் சுதந்தரமாவதென்னவென்றால், * நாமே அவர்களுடைய சுதந்தரமாயிருப்போம், ஆகையால் இஸ்ரவேலிலே அவர்களுக்குக் காணியாட்சியைக் கொடுக்கவேண்டாம், நாமே அவர்களுடைய காணியாட்சி. * ச. மோசே. யஅ, உம. ரு. மோசே. யஅ, க.

உகூ. காணிக்கையையும் பாவம்போக்கும் பலியையும், குற்றம்போக்கும் பலியையும் அவர்கள் போசிப்பார்கள், இஸ்ரவேலிலே பொருத்தனைபண்ணப்பட்டதும் எல்லாம் அவர்களுடையதாயிருப்பதாக.

ஙம. சகலவித முதற்கனிகளிலெல்லாம் முந்தின இலாபமும், நீங்கள் செலுத்துகிற எந்தவிதமுமான செலுத்துதல்களைத்தும் ஆசாரியர்களுடையதாயிருப்பதாக உன் வீட்டிலே ஆசீர்வாதத்தைத் தங்கப்பண்ணும்படிக்கு. உங்கள் மாப்பிசைதல்களில் முதல் இலாபத்தையும் ஆசாரியனுக்குக் கொடுக்கக்கடவார்கள்.

ஙக. * பறவைகளிலும் மிருகங்களிலும் தானாய்ச்செத்ததும் பீறுண்டதுமான தொன்றையும் ஆசாரியர்கள் போசியார்களாக.
* ௨. மோசே. உஉ, அ.

## சரு. அதிகாரம்.

[தேசத்திலே பரிசுத்தஸ்தலத்திற்கும் ஆசாரியருக்கும் இலேவியருக்கும், பட்டணத்திற்கும் அதிபதிக்கும் விடப்படவேண்டிய பங்குகளுடைய எல்லைகள்.]

நீங்கள் தேசத்தைச் சீட்டுப்போட்டுப் பங்கிடும்போதோவென்றால், தேசத்தில் இருபத்தையாயிரங்கோல் நீளமும் பதினாயிரங்கோல் அகலமுமான பரிசுத்தப் பங்கைக்கர்த்தருக்குப் படைக்கக்கடவீர்கள், இதன் எல்லையிலெல்லாஞ் சுற்றிலும் பரிசுத்தமாயிருப்பது.

உ. இதிலே பரிசுத்தஸ்தலத்திற்கென்று ஐந்நூறுகோல் நீளமும் ஐந்நூறுகோல் அகலமுமான நாற்சதுரம் அளக்கப்படக்கடவது, அதற்கு ஐம்பதுமுழமான வெளியுஞ் சுற்றிலுமிருக்கவேண்டும்.

ங. இந்த அளவுப்பட இருபத்தையாயிரங்கோல் நீளத்தையும் பதினாயிரங்கோல் அகலத்தையும் அளப்பாயாக அதற்குட் பரிசுத்தஸ்தலமும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலமுமிருப்பது.

ச. தேசத்திற் பரிசுத்தமான பங்கானது கர்த்தருக்கு ஆராதனை செய்யச் சேருகிறவர்களும் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்கிறவர்களுமான ஆசாரியருடையது, அது அவர்களுக்கு வீடுகளுக்கான இடமும் பரிசுத்தஸ்தலத்திற்கான இடமுமாயிருப்பது.

ரு. பின்னையும் இருபத்தையாயிரங்கோல் நீளமும் பதினாயிரங்கோல் அகலமுமான அளவுள்ள பங்கில் வீட்டின் ஊழியக்காரராகிய இலேவியருடையதாயிருக்கும், அது அவர்களுடைய காணியாட்சி, அதிலிருப்பது இருபது அறைவீடுகளிருப்பதாக.

சா. பரிசுத்தப்பங்காகப் படைக்கப்பட்டதற்கெதிரே பட்டணத்தின் காணியாட்சியாக ஐயாயிரங்கோல் அகலத்தையும் இருபத்தையாயிரங்கோல் நீளத்தையும் அளந்து கொடுப்பீர்களாக, அது இஸ்ரவேல் வீட்டார் அனைவருடையதாயிருக்கும்.

எ. பரிசுத்தப்பங்காகப் படைக்கப்பட்டதற்கும் பட்டணத்தின் காணியாட்சிக்கும் இந்தண்டையும் அந்தண்டையும், பரிசுத்தப்படைப்புக்கு முன்பாகவும் பட்டணத்தின் காணிக்கு முன்பாகவும், அதிபதியினுடைய பங்கு மேற்கிலே மேற்புறமாகவும் கிழக்கிலே கிழக்குப்புறமாகவுமிருப்பதாக, மேல் எல்லை துவக்கிக் கீழ் எல்லைமட்டும் நீளமான பங்குகளிலொவ்வொன்றுக்கெதிராயிருப்பது.

அ. இது அவனுக்கு இஸ்ரவேலிலே காணிபூமியாகவிருக்கக்கடவது, நம்முடைய அதிபதிகள் இனி நமது சனத்தை ஒடுக்காமல் தேசத்தை இஸ்ரவேல் வீட்டாருக்கு அவர்களுடைய கோத்திரங்களுக்குத் தக்கபடியே விட்டுவிடுவார்களாக.

அதிபதிகள் இனி அநியாயஞ்செய்யவேண்டாமென்பது.

கூ. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, இஸ்ரவேலின் அதிபதிகளே, * நீங்கள் செய்ததுபோதும், நீங்கள் கொடுமையையுங் கொள்ளையிடுதலையுந் தவிர்த்து, நியாயத்தையும் நீதியையுஞ் செய்யுங்கள், உ

களை உத்தண்டமானவை நம்முடைய சனத்தை விட்டகற்றுங்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௪௪, அதி. ௬.

௰. * சுமுத்திரையான திராசும், சுமுத்திரையான மரக்காலும், சுமுத்திரையான பானையும் உங்களுக்கிருக்கக்கடவது. * ௩. மோசே. ௰௯, ௩௫. ௩௬.

௰௧. மரக்காலும் பானையும் ஒரே அளவாயிருந்து, மரக்கால் கலத்திலே பத்திலொரு பங்கும், பானை கலத்திலே பத்திலொரு பங்கும் பிடிக்கக்கடவது; கலத்தின்படியே அதின் அளவு நிர்ணயிக்கப்படுவதாக.

௰௨. * சேக்கலானது இருபது கேரா, இருபது சேக்கலும் இருபத்தைந்து சேக்கலும் பதினைந்து சேக்கலும் உங்களுக்கொரு இராத்தலாயிருப்பது. * ௨. மோசே. ௩௦, ௰௩.

சனமும் அதிபதியும் செலுத்தும் காணிக்கைகளையும் பலிகளையுங் குறித்து இட்ட கட்டளைகள்.

௰௩. நீங்கள் செலுத்தவேண்டிய காணிக்கையாவது, ஒரு கலக் கோதுமையிலே ஒரு மரக்காலில் ஆறத்தொரு பங்கையும், ஒரு கலம் வாற்கோதுமையிலே ஒரு மரக்காலில் ஆறத்தொரு பங்கையும் படைக்கக்கடவீர்கள்.

௰௪. பானையால் அளக்கிற எண்ணெயின் கட்டளையாவது, பத்துப்பானை பிடிக்கிற கலத்திற்குச் சரியான ஒரு சாடி எண்ணெயிலே பத்திலொரு பங்கைப் படைப்பீர்களாக, ஏனென்றால் பத்துப்பானை ஒரு கலமாகிறது.

௰௫. இஸ்ரவேல் தேசத்திலே புஷ்டியான மேய்ச்சலில் மேய்கிற மந்தையிலே இருநூறு ஆடுகளில் ஒரு ஆடும் அவர்களுடைய பாவநிவர்த்திக்கான காணிக்கையாகவும் தகனபலியாகவும் ஸ்தோத்திரப்பலியாகவுஞ் செலுத்தப்படக்கடவதென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௬. இஸ்ரவேலுடைய அதிபதியின் முன்பாகத் தேசத்தின் சனமெல்லாம் இந்தக் காணிக்கையைச் செலுத்தக்கடவர்களாயிருக்கிறார்கள்.

௰௭. ஆனால் இஸ்ரவேல் வீட்டார் கூடிவரக் குறிக்கப்பட்ட சகல பண்டிகைகளிலும் மாதப்பிறப்புகளிலும் ஓய்வுநாட்களிலும், தகனபலிகளையும் காணிக்கையையும் ஊற்றுதலையுஞ் செலுத்துவது அதிபதியின்மேற் சுமத்தப்பட்டிருக்கும், அவன் இஸ்ரவேல் வீட்டாருக்காகப் பாவநிவாரணம் பண்ணும்படிக்குப், பாவம்போக்கும் பலியையும் காணிக்கையையும் தகனபலியையும் ஸ்தோத்திரப்பலிகளையும் படைப்பானாக.

௰௮. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, முதலாம் மாசம் முதலாந்தேதியிலே நீ பழுதில்லாத ஒரு காளைக்கன்றைக் கொண்டுவந்து, பரிசுத்தஸ்தலத்தைப் பாவமற்றதாக்குவாயாக.

௰௯. பாவம்போக்குகிற அந்தப்பலியின் இரத்தத்திலே ஆசாரியன் அள்ளி, வீட்டின் வாசல் நிலைகளிலும், பலிபீடத்தினுடைய சட்டத்தின் நான்கு கோடிகளிலும், உட்பிராகாரத்தின் வாசல் நிலைகளிலும் பூசக்கடவான்.

௨௰. அந்தப்பிரகாரமாக ஏழாந்தேதியிலும் பிழைசெய்தவனுக்காகவும், பேதைக்காகவுஞ் செய்வாயாக, இப்படி வீட்டைப் பாவமற்றதாக்கக்கடவீர்கள்.

௨௧. * முதலாம் மாதம் பதினாலாந்தேதியிலே புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்படுகிற ஏழுநாட்பண்டிகையாகிய பஸ்கா உங்களுக்குத் துவக்கமாகும். * ௩. மோசே. ௨௩, ௫.

௨௨. அந்நாளிலே அதிபதி தனிமித்தமும் தேசத்தினுடைய எல்லாச் சனத்தினிமித்தமும் பாவம்போக்குதலுக்காக ஒரு காளையெருதைப் படைப்பானாக.

௨௩. பண்டிகையின் ஏழுநாட்களிலே அவன் அந்த ஏழுநாளும் கர்த்தருக்குத் தகனபலியாக ஊனமில்லாத ஏழு காளையெருதுகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும், தினம் பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் படைப்பானாக.

௨௪. ஒவ்வொரு காளையெருதோடே ஒரு மரக்காலும் ஒவ்வொரு ஆட்டுக்கடாவோடே ஒரு மரக்காலுமான காணிக்கையையும் ஒவ்வொரு மரக்காலோடே ஒருபடி எண்ணெயையும் படைப்பானாக.

௨௫. ஏழாம் மாதம் பதினைந்தாந்தேதியிலே துவக்கமாகிற பண்டிகையிலே அவன் அப்படியே ஏழுநாளும் அதற்குச் சரியான பிரகாரமாகப் பாவம்போக்கும் பலிகளையும் தகனபலிகளையும் காணிக்கைகளையும் எண்ணெயையும் படைக்கக்கடவான்.

## ௪௬. அதிகாரம்.

[அதிபதியுந் தேசத்தின் சனமுஞ் செய்யுந் தேவாராதனைக் கடுத்த பிரமாணங்களும் அன்றாடகப்பலியின் கட்டளையும்.]

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, கிழக்குக்கெதிரான உட்பிராகாரத்தினுடைய வாசல் வேலைசெய்கிற ஆறுநாளிலும் பூட்டப்பட்டிருந்து, ஓய்வுநாளிலே திறக்கப்படவும் மாதப்பிறப்பிலுந் திறக்கப்படவுங்கடவது.

௨. அப்போது அதிபதி வெளியே வாசற்சாலையின் வழியாய்ப் பிரவேசித்து, வாசல் நிலையண்டையிலே நிற்கக்கடவான், ஆசா-

தியர்களோவென்றால் அவனுடைய தகனபலியையும் அவனுடைய ஸ்தோத்திரப்பலிகளையும் படைக்கக்கடவர்கள், அவன் வாசற்படியிலே பணிந்து பிறகு புறப்படுவானாக, அந்த வாசலோவென்றால் சாயங்காலமட்டும் பூட்டப்படாதிருப்பதாக.

௩. தேசத்தின் சனமும் ஓய்வு நாட்களிலும் மாதப்பிறப்புகளிலும் அந்த வாசலின் நடையிலே கர்த்தருக்கு முன்பாகப் பணியக்கடவர்கள்.

௪. அதிபதி ஓய்வு நாளிலே கர்த்தருக்குப் பலியிடுகிற தகனபலி பழுதில்லாத ஆறு ஆட்டுக்குட்டிகளும், பழுதில்லாத ஒரு ஆட்டுக்கடாவுந்தானே.

௫. ஆட்டுக்கடாவோடேகூடக் காணிக்கையாக ஒரு மரக்காலையும், ஆட்டுக்குட்டிகளோடேகூடக் காணிக்கையாகத் தன்னுடைய சுயமாயத் தருகிற ஈவையும், ஒவ்வொரு மரக்காலோடேகூட ஒருபடி எண்ணெயையும் படைக்கக்கடவான்.

௬. மாதப்பிறப்பான நாளிலோவென்றால் அவன் பழுதில்லாத இளங்காளைகளில் ஒரு காளைக்கன்றையும் பழுதில்லாதிருக்கிற ஆறு ஆட்டுக்குட்டிகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டு,

௭. காணிக்கையாகக் காளைக்கன்றோடேகூட ஒரு மரக்காலையும், ஆட்டுக்கடாவோடேகூட ஒரு மரக்காலையும் ஆட்டுக்குட்டிகளோடேகூடத் தன்னுடையகைக்குத் தகுந்ததையும் ஒவ்வொரு மரக்காலோடேகூட ஒருபடி எண்ணெயையும் படைக்கக்கடவான். * ௪௪. ௩.

௮. அதிபதி வருகிறபோது வாசலுடைய சாலை வழியாய்ப் பிரவேசித்து, அதுவழியாய்த் திரும்பப் புறப்படக்கடவான்.

௯. தேசத்தின் சனங் குறிக்கப்பட்ட நாட்களிலே கர்த்தருக்கு முன்பாக வரும்போதோவென்றால் பணிகிறதற்காக வடக்கு வாசல் வழியாய் உட்பிரவேசித்தவன் தெற்கு வாசல் வழியாய்ப் புறப்படவும், தெற்கு வாசல் வழியாய் உட்பிரவேசித்தவன் வடக்கு வாசல் வழியாய்ப் புறப்படவுங்கடவன், தான் வந்த வாசல் வழியாய்த் திரும்பிப்போகாமலே தனக்கெதிரான வழியாய்ப் புறப்படுவானாக.

௰. அவர்கள் உட்பிரவேசிக்கும்போது, அதிபதி அவர்கள் நடுவிலேகூட உட்பிரவேசித்து, அவர்கள் புறப்படும்போது, அவன்கூடப் புறப்படுவானாக.

௰௧. பண்டிகைகளிலும் குறிக்கப்பட்ட காலங்களிலும் அவன் படைக்குங் காணிக்கையாவது, காளையொன்றோடே ஒரு மரக்காலும், ஆட்டுக்கடாவோடே ஒரு மரக்காலும், ஆட்டுக்குட்டிகளோடே அவன் கைக்குச் சுயமாய்த் தருகிற ஒரு ஈவும், ஒவ்வொரு மரக்காலோடே ஒருபடி எண்ணெயுந்தானே.

௰௨. அதிபதி உச்சாகமான தகனபலியையாகிலும் ஸ்தோத்திரப்பலிகளையாகிலும் கர்த்தருக்கு உச்சாகமாகச் செலுத்தவேண்டுமென்றால், அவனுக்குக் கிழக்குக்கெதிரான வாசல் திறக்கப்படுவதாக, அப்போது அவன் ஓய்வு நாளிற் செய்கிறதுபோலே தன் தகனபலியையுந் தன் ஸ்தோத்திரப்பலியையுஞ் செலுத்தித், திரும்பப் புறப்படக்கடவான், அவன் புறப்பட்டபின்போவென்றால் வாசல் பூட்டப்படவேண்டும்.

௰௩. * தினம் ஒருவயதான பழுதில்லாத ஒரு ஆட்டுக்குட்டியைக் கர்த்தருக்குத் தகனப்பலியாகப் படைக்கக்கடவாய்; காலைதோறும் அதைப்படைக்கக்கடவாய்.

* ௨. மோசே. ௨௯, ௩௮.

௰௪. அதனோடேகூடக் காலைதோறுமக் காலமே ஆறத்தொன்பங்கையும் மெல்லிய மாவைப் பிசையும்படிக்கு ஒருபடி எண்ணெயிலே மூன்றத்தொருபங்கையுங் காணிக்கையாகப் படைக்கக்கடவாய், இதுவே நித்தியகட்டளையான காணிக்கை.

௰௫. இப்படிக் காலைதோறும் அனுதினமான தகனபலியாக ஆட்டுக்குட்டியையும், காணிக்கையையும், எண்ணெயையுஞ் செலுத்துவார்களாக.

அதிபதியானசுதந்தரத்திற்குத்தக்கதியாயப் பிரமாணம்.

௰௬. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, அதிபதி தன் குமாரரிலொருவனுக்குத் தன் சுதந்தரத்திலே ஒரு ஈவைக் கொடுத்தால், அது அவன் குமாரருடையதாயிருக்கும், அது சுதந்தரமாய் அவர்களுடைய சொந்தமாம்.

௰௭. அவன் தன் ஊழியக்காரரிலொருவனுக்குத் தன் சுதந்தரத்திலே ஒரு ஈவைக் கொடுத்தானேயாகில், அது விடுதலை வருஷமட்டும் அவனுடையதாயிருந்து, பிற்பாடு திரும்ப அதிபதியின் வசமாய்ச் சேரும், அதின் சுதந்தரம் அவன் குமாரருக்கே உண்டு, அது அவர்களுடையதாயிருக்கும்.

௰௮. சனத்தை இடுக்கண்செய்து, அவர்களுடைய சொந்தத்திற்கு அவர்களைப் புறம்பாக்க, அதிபதி அவர்களுடைய சுதந்தரத்திலொன்றும் எடுக்கானாக, நம்முடைய சனத்தில் ஒருவருந் தங்கள் சொந்தத்திற்குப் புறம்பாக்கச் சிதறடிக்கப்படாதபடிக்கு, அவன் தன்னுடைய சொந்தத்திலே தன் குமாரருக்குச் சுதந்தரங் கொடுக்கக்கடவானென்றார்.

பலிகளைச் சமைக்குந் தலங்கள் காண்பிக்கப்பட்டது.

௰௯. பிற்பாடு அவர் வாசலின் பக்கத்திலிருந்த நடைவழியாய் என்னை வடக்குக்கெதிரான ஆசாரியர்களுடைய பரிசுத்த அறைவீடுகளுக்கழைத்துப்போனார், இதோ, அங்கே மேற்கேயிருபுறத்திலேயும் ஒரு இடமிருந்தது.

௨௰. அவர் என்னோடே சொன்னதாவது, குற்றநிவாரணபலியையும் பாவம்போக்கும் பலியையும் காணிக்கைகளையும் ஆசாரியர்கள் வெளியே புறமுற்றத்திலே, சனத்தைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டு போகாதபடிக்கு, அவர்கள் அவைகளைச் சமைக்கிறதும் இறைச்சுடுகிறதுமான தலம் இதுவேயென்றார்.

௨௧. பிறகு அவர் என்னைப் புறமுற்றத்தில் அழைத்துக்கொண்டுபோய், என்னை முற்றத்தின் நான்கு மூலைகளையும் கடக்கப்பண்ணினார், இதோ, முற்றத்தினுடைய ஒவ்வொரு மூலையிலும் தனித்த ஒரு முற்றமிருந்தது.

௨௨. முற்றத்தினுடைய நான்கு மூலைகளிலும் புகை எழும்புகிற அறைகளான இந்த முற்றங்கள் நாற்பது முழ நீளமும் முப்பது முழ அகலமுமானவைகள், இந்த நான்கு மூலை முற்றங்களுக்கும் ஒரே அளவிருந்தது.

௨௩. இந்த நான்கிறகுச் சுற்றிலும் உள்ளாக ஒரு சுற்றுக்கட்டு உண்டாயிருந்தது, இந்தச் சுற்றுக்கட்டுகளின் சுற்றிலும் அடுப்புகள் போடப்பட்டிருந்தது.

௨௪. அவர் என்னுடனே, இவைகள் வீட்டின் பணிவிடைக்காரர் சனத்தின் பலிபணிவிடைகளைச் சமைக்கிற வீடுகளென்றார்.

## ௪௭. அதிகாரம்.

[தேவாலயத்திலிருந்து பாயுந் தண்ணீர் நதியின் தரிசனை.]

பிற்பாடு அவர் என்னை வீட்டின் வாசலுக்குத் திரும்பிவரப்பண்ணினார், இதோ, தண்ணீர்கள் வாசற்படியின் கீழிருந்து புறப்பட்டுக் கிழக்கேயோடுகிறதாயிருந்தது. ஏனெனில் வீட்டின் முகப்பு கிழக்குக்கெதிரானது அந்தத் தண்ணீர்கள் வீட்டின் வலதுபுறமாய்ப் பலிபீடத்திற்குத் தெற்காகத் தாழ வோடிற்று.

௨. அவர் என்னை வடக்குவாசல் வழியாய்ப் புறப்படப்பண்ணி என்னை வெளியிலே கிழ்த்திசைக்கெதிரான புறவாசல்மட்டுஞ் சுற்றிக்கொண்டுபோனார், இதோ, தண்ணீர்கள் வலதுபுறத்திலிருந்து பாய்கிறதாயிருந்தது.

௩. அந்தப் புருஷன் தமது கையில் நூலைப் பிடித்துக்கொண்டு, கிழக்கே புறப்பட்டுக்கொள்ள ஆயிரமுழமும் அளந்து என்னைத் தண்ணீரைக் கடக்கப்பண்ணினார், தண்ணீர் கணுக்கால் அளவாயிருந்தது.

௪. பின்னையும் ஆயிரமுழம் அளந்து என்னைத் தண்ணீரைக் கடக்கப்பண்ணினார், அங்கே தண்ணீர் முழங்கால் அளவாயிருந்தது, பின்னையும் ஆயிரமுழம் அளந்து என்னைக் கடக்கப்பண்ணினார், அங்கே தண்ணீர் அரையளவாயிருந்தது.

௫. பின்னையும் ஆயிரமுழம் அளந்தார், அங்கே அது நான் கடக்கக்கூடாதிருந்த நதியாயிருந்தது, ஏனெனில் தண்ணீர்கள் நீச்சுமாழமுங் கடக்கக்கூடாத நதியுமாயிருந்தது.

௬. அவர் என்னுடனே மனுப்புத்திரனே, இதைக் கண்டாயோவென்றுசொல்லி, என்னை நதியோரமாய்த் திரும்பி நடந்துவரப்பண்ணினார்.

௭. நான் திரும்பிவருகையில், இதோ,* நதியோரத்தில் இக்கரையிலும் அக்கரையிலும் வெகுதிரளான விருட்சங்கள் உண்டாயிருந்தது. * அறிவி. ௨௨, ௨.

௮. அவர் என்னோடே சொன்னதாவது, இந்தத் தண்ணீர்கள் கீழ் எல்லைக்குப் புறப்பட்டுப்போய் வயல்வெளியில் இறங்கிக் கடலில் விழும், இவைகள் கடலிற் பாய்ந்து விழுந்தபிற்பாடு, அதின் தண்ணீர்கள் ஆரோக்கியமாம்.

௯. சம்பவிப்பதென்னவென்றால், இந்த நதிகள் எங்கே வந்து சேருமோ, அங்கேயெல்லாம் அசைவாடுகிற சீவப்பிராணிகள் யாவும் பிழைக்கும், வெகு ஏராளமான மச்சங்களும் இந்தத் தண்ணீர் அங்கே வந்தபடியினாலே உண்டாயிருக்கும், இந்த நதி எங்கே வந்து சேருமோ, அங்கே யாவும் ஆரோக்கியப்பட்டுப் பிழைக்கும்.

௰. அப்போது சம்பவிப்பதென்னவெனில், ஏன்கேதிவகி யேனேகலாயிம்மட்டும் மீன் பிடிக்கிறவர்கள் அதின் கரையிலே நிற்பார்கள் அதெல்லாம் வலைகளைப் பரப்புகிற தலங்களாயிருக்கும், அவைகளின் மச்சங்கள் பெரிய சமுத்திரத்தின் மச்சங்களைப்போலே பலவிதசாதியும் மகா ஏராளமாயிருக்கும்.

௰௧. ஆனால் அதினுடைய உளையான பள்ளங்களும் அதினுடைய மடுவுகளும் ஆரோக்கியமாகாமல், உப்புக்கொய்யக் கொடுக்கப்படும்.

௰௨. * நதியோரமாய் அதின் இக்கரையிலும் அக்கரையிலும் போசிப்புக்கான சகலவித விருட்சங்களும் பயிராகும், அவைகளின் இலைகள் உதிர்வதுமில்லை, அவைகளின் கனிகள் மாறுவதுமில்லை, தங்கள் தங்கள் மாதங்களிற் புதுக்கனிகளைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும், ஏனெனில் அவைகளுடைய தண்ணீர்கள் பரிசுத்தஸ்தலத்திலிருந்து பாயும், அவைகளின் கனிகள் போசனத்திற்கும், அவைகளின் இலைகள் அவிஷ்தத்திற்குமானவைகள். * அறிவி. ௨௨, ௨.

தேசத்தின் எல்லைகள்.

௰௩. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, நீங்கள் தேசத்தை இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே சுதந்தரித்துக்கொள்ளவேண்டிய எல்லையாவது, * யோசேப்புக்கு இரண்டு பங்குண்டு. * ௧. மோசே. ௪௮, ௫. யோசு. ௰௭, ௭.

௰௪. சகோதரனோடே சகோதரனுக்குச் சரிபங்குண்டாக அதைச் சுதந்தரித்துக்கொள்ளக்கடவீர்கள், * அதை உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்பேனென்று நம்மத்தைக் கையேறெடுத்தோமே, ஆகையால் உங்களுக்கு இந்தத் தேசஞ் சுதந்தரமாகக் கிடைக்கும். * ௧. மோ. ௰௨, ௰௮.

௰௫. தேசத்தின் எல்லையாவது, வடபுறம் பெரிய சமுத்திரத்தைத் துவக்கிச் செயதாதுக்குப்போகிற கெத்லோம் வழியாயிருக்கிற,

௰௬. காமாத்தும், பேரோத்தாவும், தமஸ்குவின் எல்லைக்கும் காமாத்தின் எல்லைக்கும் நடுவான சிப்ராயிமும், காப்பிரானின் எல்லையோடே சேர்ந்த காத்சேர் அத்திக்கோனுமானது,

௰௭. அப்படியே சமுத்திரத்திலிருந்து போகிற எல்லை காத்சேர் ஏனோன், தமஸ்குவின் எல்லையும், வடமூலையான வடக்கிலுள்ள எல்லையும் காமாத்தின் எல்லையுமானது இது வடபுறம்.

௰௮. கீழ்ப்புறத்தைக் காப்பிரானுக்கும் தமஸ்குவுக்கும் நடுவாகவும் கீலேயாத்திற்கும் யோர்தானென்னும் இஸ்ரவேல் தேசத்திற்கும் நடுவாகவும், கீழ்க்கடல்மட்டுமிருக்கும் எல்லையாயளப்பீர்களாக இது கீழ்ப்புறம்.

௰௯. தென்மூலையான தென்புறந்தாமாரைத் துவக்கிக் காதேசிலுள்ள சண்டைமூட்டின தண்ணீர்கள் மட்டாகவும், ஆறுமட்டாகவும் பெரிய சமுத்திரமட்டாகவுமிருப்பது, இது தென்மூலையான தென்புறம்.

௨௰. மேற்புறம் அந்த எல்லையைத் துவக்கிக் காமாத்திற்கெதிராக வந்து சேருமட்டுமிருக்கிற பெரிய சமுத்திரந்தானே, இது மேற்புறம்.

இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே தங்குகிற பரதேசிகளும் தேசத்தில் பங்காளிகளென்பது,

௨௧. இந்தத் தேசத்தை நீங்கள் இஸ்ரவேலுடைய கோத்திரங்களின்படியே உங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொள்ளுவீர்களாக.

௨௨. உங்களுக்கும் * உங்களுக்குள்ளே பிள்ளைகளைப் பெறுகிறவர்களாய் உங்களுக்குள்ளே தங்குகிற பரதேசிகளுக்கும் நீங்கள் அதைச் சீட்டுகளைப் போட்டுச் சுதந்தரமாகக்கொள்ளுவீர்களாக, இவர்கள் உங்களுக்கு இஸ்ரவேல் புத்திரரில் பிறந்தவர்களைப்போலிருந்து, உங்களோடேகூட இஸ்ரவேல் கோத்திரங்களின் நடுவே சுதந்தரத்திற்குட்படுவார்களா க. * ஏசாயா. ௫௬, ௬. ௬, ௭.

௨௩. பரதேசி எந்தக் கோத்திரத்தோடே தங்கியிருக்கிறானோ, அதிலே அவனுடைய சுதந்தரத்தை அவனுக்குக் கொடுக்கக்கடவீர்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

## ௪௮. அதிகாரம்.

[தேசத்தினுடைய பங்குகள்.]

கோத்திரங்களின் நாமங்களாவது, வடமூலையைத் துவக்கிக் காமாத்திற்குப்போகிற கெத்லோன் வழியின் ஓரத்திற்கும், காத்சார் ஏனோனுக்கும், காமாத்தண்டையிலே வடக்கேயிருக்கிற தமஸ்குவின் எல்லைக்குமுள்ளாகக் கீழ்த்திசை துவக்கி மேற்குமட்டும் தாணுக்கொருபங்கும்.

௨. தாணின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் ஆசேருக்கொருபங்கும்.

௩. ஆசேரின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் நவ்தலிக்கொருபங்கும்.

௪. நவ்தலியின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் மனாசேயிக்கொருபங்கும்.

௫. மனாசேயின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் எப்பிராயீமுக்கொருபங்கும்.

௬. எப்பிராயீமின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் ரூபேனுக்கொருபங்கும்.

௭. ரூபேனின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் யூதாவுக்கொருபங்குமுண்டாவதாக.

௮. யூதாவின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் நீங்கள் படைக்கவேண்டிய பங்கிருக்கும், அவ்வளவு, * இருபத்தையாயிரங்கோல் அகலமும், கீழ்த்திசை துவக்கி, மேற்றிசைமட்டுமிருக்கிற பங்குகளில் ஒவ்வொன்றிற்குச் சரியான நீளமுமுண்டாம், பரிசுத்தஸ்தலம் அதின் நடுவிலேயிருப்பதாக. * ௪௫, ௧.

௯. இதிலே கர்த்தருக்கு நீங்கள் படைக்கவேண்டிய பங்கு இருபத்தையாயிரங்கோல் நீளமும் பதினாயிரங்கோல் அகலமுமாயிருப்பதாக.

௰. வடக்கே இருபத்தையாயிரங்கோல் நீளமும் மேற்கே பதினாயிரங்கோல் அகலமும், கிழக்கே பதினாயிரங்கோல் அகலமும், தெற்கே இருபத்தையாயிரங்கோல் நீளமுமாகிய இந்தப் பரிசுத்தப் படைப்பு ஆசாரியருடையதாயிருக்கும், கர்த்தருடைய பரிசுத்தஸ்தலம் அதின் நடுவிலேயிருப்பதாக.

௰௧. இஸ்ரவேல்புத்திரர் வழிதப்பிப்போனபோது, லேவியர் வழிதப்பிப்போனது போலே வழிதப்பிப்போகாமல், நம்முடைய காவலைக் காத்துக்கொண்ட * சாதோக்கின் புத்திரராகிய பரிசுத்தமாக்கப்பட்ட ஆசாரியர்களுக்கு அது அடுத்திருப்பதாக.

* ௪௪, ௰௫.

௰௨. அப்படியே தேசத்தில் படைக்கப்படுகிறதிலே பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான பங்கு அவர்களுக்கு லேவியருடைய எல்லையண்டையிலே இருப்பதாக.

௰௩. ஆசாரியர்களின் எல்லைக்கெதிராக லேவியர் அடையும் பங்கு இருபத்தையாயிரங்கோல் நீளமும் பதினாயிரங்கோல் அகலமுமாயிருப்பது; நீளமெல்லாம் இருபத்தையாயிரங்கோலும், அகலம் பதினாயிரங்கோலுமாயிருப்பதாக.

௰௪. அவர்கள் அதில் ஒன்றையும் விற்கவும், தேசத்தின் முதல் விளைவை மாற்றவும் அப்பாலே கொடுக்கவும் வேண்டாம்; அது கர்த்தருக்குப் பரிசுத்தம்.

௰௫. இருபத்தையாயிரங்கோலுக்கெதிராக அகலத்தில் மீதியாயிருக்கும் ஐயாயிரங்கோலோவென்றால், பரிசுத்தமாயிராமல், குடியேறும் பட்டணத்திற்கும் வெளிப்பாளயங்களுக்கும் விடப்படுவது; பட்டணம் அதின் நடுவிலிருப்பதாக.

௰௬. அதின் அளவுகளாவது, வடபுறம் நாலாயிரத்தைந்நூறுகோலும், தென்புறம் நாலாயிரத்தைந்நூறுகோலும், கிழக்குப்புறம் நாலாயிரத்தைந்நூறுகோலும், மேற்குப்புறம் நாலாயிரத்தைந்நூறுகோலுந்தானே.

௰௭. பட்டணத்தின் வெளிப்பாளயங்கள் வடக்கே இருநூற்றைம்பதுகோலும், தெற்கே இருநூற்றைம்பதுகோலும், கிழக்கே இருநூற்றைம்பதுகோலும், மேற்கே இருநூற்றைம்பதுகோலுமாயிருப்பதாக.

௰௮. பரிசுத்தப்படைப்புக்கெதிராக நீளத்தில் மீதியானது கிழக்கே பதினாயிரங்கோலும், மேற்கே பதினாயிரங்கோலுமாம்; அது பரிசுத்தப்படைப்புக்கெதிராயிருக்கும்; அதின் வருமானம் பட்டணத்தில் கூலிவேலைசெய்கிறவர்களுக்கு ஆகாரமாயிருப்பதாக.

௰௯. இஸ்ரவேலின் சகல கோத்திரங்களிலும் எவர்கள் பட்டணத்தில் கூலிவேலைசெய்கிறார்களோ அவர்கள் அதைப் பயிரிடுவார்களாக.

௨௰. படைப்பனைத்தும் இருபத்தையாயிரங்கோல் நீளமும், இருபத்தையாயிரங்கோல் அகலமுமாயிருக்கக்கடவது; பட்டணத்தின் காணியுட்பட இந்தப் பரிசுத்தப்படைப்பைச் சதுரமாகப் படைப்பீர்களாக.

௨௧. ஆனால் பரிசுத்தப்படைப்புக்கும் பட்டணத்தின் காணிக்கும் இந்தண்டையும் அந்தண்டையும் படைப்பினுடைய இருபத்தையாயிரங்கோலின் முன்பாகக் கிழக்கெல்லைமட்டுக்கும், மேற்கிலே இருபத்தையாயிரங்கோலின் முன்பாக மேற்கெல்லைமட்டுக்கும் மீதியாயிருப்பது அதிபதியினுடையது; பங்குகளுக்கெதிரான அது அதிபதியினுடையதாயிருப்பதாக; அதற்கு நடுவாகப் பரிசுத்தப்படைப்பும், வீட்டின் பரிசுத்தஸ்தலமுமிருக்கும்.

௨௨. அதிபதியினுடையதற்கு நடுவேயிருக்கும் லேவியரின் காணியைத் துவக்கியும் பட்டணத்தின் காணியைத் துவக்கியும், யூதாவின் எல்லைக்கும் பென்யமீன் எல்லைக்கும் நடுவேயிருக்கிறது அதிபதியினுடையது.

௨௩. மற்றக் கோத்திரங்களுக்குண்டாகும் பங்குகளாவது, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் பென்யமீனுக்கொரு பங்கு.

௨௪. பென்யமீன் எல்லையண்டையிலே, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் சிமியோனுக்கொரு பங்கு.

௨௫. சிமியோனின் எல்லையண்டையிலே, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் இசக்காருக்கொரு பங்கு.

௨௬. இசக்காரின் எல்லையண்டையிலே, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் செபுலோனுக்கொரு பங்கு.

௨௭. செபுலோனின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும், காத்துக்கொரு பங்குண்டாயிருப்பதாக.

௨௮. காத்தின் எல்லையண்டையிலே தென்முலையாகிய தென்றிசையிலே எல்லை, தாமாரைத் துவக்கிக் காதேசிலுள்ள சண்டைமூட்டுதலின் தண்ணீர்கள் மட்டாகவும், பெரிய சமுத்திர மட்டாகவும் போகும்.

௨௯. நீங்கள் இஸ்ரவேல் கோத்திரங்களுக்குச் சீட்டுப்போட்டுப் பங்கிடுந் தேசமும் இவைகளே; அவைகளின் பங்குகளும் இவைகளே என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

சதுரமான பரிசுத்த பட்டணத்தின் வாசல்களும் நாமமும்.

௩௰. பட்டணத்தின் புறமுகங்களாவது, வடபுறத்திலே நாலாயிரத்தைந்நூறுகோலாகிய அளவுண்டாயிருக்கும்.

௩௧. பட்டணத்தின் வாசல்களோவென்றால் இஸ்ரவேல் கோத்திரங்களுடைய நாமங்களின்படியே அழைக்கப்படக்கடவது; வடக்கே மூன்று வாசலிருப்பதாக; ரூபனின் வாசலொன்று, யூதாவின் வாசலொன்று, லேவியின் வாசலொன்று.

௩௨. கீழ்ப்புறத்திலும் நாலாயிரத்தைந்நூறுகோலும் மூன்று வாசலுமிருப்பதாக; எவையென்றால், யோசேப்பின் வாசலொன்று, பென்யமீனின் வாசலொன்று, தாணின் வாசலொன்று.

௩௩. தென்புறத்திலும் நாலாயிரத்தைந்

நூறுகோலாகிய அளவும, மூன்றுவாசலுமிருப்பதாக, சிமேயோனின் வாசலொன்று, ஈசஷாரின்வாசலொன்று சேபுலோன்வாசலொன்று.

கச. மேறபுறத்திலே நாலாயிரத்தைந்நூறுகோலும அதினமூன்றுவாசலுமிருப்பதாக, காத்தின்வாசலொன்று ஆசேரின்வாசலொன்று, நப்தலியின்வாசலொன்று.

கரு. சுற்றிலும பதினெணணாயிரங்கோலாகிறது, அந்நாளதுவக்கிப்பட்டணத்தின் நாமம் * கர்த்தர் அங்கேயென்பதேயென்றுர். * சக, எ. சங். கஅ, ௰எ. எரேமி. க, ௰எ. அறிவி. உக, க. உஉ, ந. ச.

ஏசேக்கியேலின்றீர்க்கதரிசனம
முடிந்தது முற்றும.

---

# தானியேலின் றீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

[தானியேலும அவனுடையமூன்றுதோழருமபாபேலிலே, இராசாவின அரணமனை வேலைக்குச்சமர்த்தராகும்படிக்கு வளர்க்கப்பட்ட விவரமும்பராபரனஅவர்களுக்குக்கொடுத்த ஞானமும்.]

யூதாவின இராசாவாகிய யோயாக்கீம அரசாணடமூன்றாம்வருஷத்திலே, * பாபேலின இராசாவாகியநேபுகாதநேச்சார் எருசலேமுக்குவந்து, அதைமுற்றிக்கைப்போட்டான. * உ. இராசா. உச, க.

உ. அப்போது ஆணடவர்யூதாவின இராசாவாகியயோயாக்கீமையும பராபரனுடைய வீட்டினபணடம பாடிகளிற்சிலவற்றையும அவனகையிலொப்புக்கொடுத்தார், அவைகளையவன * சினேயார்த்தேசத்திற்குத்தனனுடையதேவர்களின வீட்டிலேகொணடுபோய, அந்தப்பணடமபாடிகளைத்தன தேவர்களினபொக்கிஷ வீட்டுக்குவவைத்தான. * மோசே. ய, ய.

ங. அப்போது இஸ்ரவேல புத்திரருக்குளளே * இராசவித்தாயிருக்கிறவர்களிலுந் துரைமக்களிலும ஒருமாசுமில்லாதவர்களும, அழகானருபமுளளவர்களும, சகலஞானத்திலவிவேகிகளும அறிவுளளவர்களுங்கலவிக்குணர்வுளளவர்களும, இராசாவின அரணமனையிலே நிறகத்திறமையுளளவர்களுமாகிய சில இளைஞரைக்கொணடுவரவும,
* உ. இராசா. உ௰, ௰அ.

ச. அவர்களுக்குக் கல்தேயரின எழுத்தையும்பாஷையையுங் கற்றுக்கொடுக்கவும, இராசாதனனுடையபிரதானிகளின தலைவனாகிய அஸ்பேனாசுக்குச்சொன்னான.

ரு. அவர்களுக்குஇராசா, இராசாவாகியதனனுடையபோசனத்திலேயுந்தான்குடிக்குந்திராட்சப்பழரசத்திலேயும அனறாடகமானதிட்டத்தைக்குறித்து, அவர்களைமூன்றுவருஷம்வளர்க்கும்படிக்கும, இவைகளசென்றபிறபாடு அவர்களஇராசாவுக்குமுனபாகநிறகும்படிக்குங் கட்டளையிட்டான்.

சா. அவர்களுக்குள யூதாபுத்திரரிலேதானியேல, அனனியா, மீஷாவேல, அசரியாவென்பவர்களிருந்தார்கள.

எ. அவர்களுக்குப்பிரதானிகளின தலைவன நாமங்களைத்தரிப்பித்துத் தானியேலைப்பெலதேஷாத்சாரென்றும, அனனியாவைச்சாத்திராகென்றுமமீஷாவேலைமேஷாகென்றுமஅசரியாவை ஆபேத்நேகோவென்றும அழைத்தான.

அ. ஆனாலதானியேல இராசாவினபோசனத்திலும அவர்குடிக்குந்திராட்சப்பழரசத்திலுந்தனனைத்தீட்டாக்கப்படாதென்று, தனனிருதயத்தில திர்ணயம்பணணிக்கொணடு, தனனைத்தீட்டாக்காதபடிக்குப பிரதானிகளின தலைவனைமனறாடகேட்டான.

சு. பராபரனதானியேலுக்குப்பிரதானிகளின தலைவனுக்குமுனபாகத * தயவும இரக்கமுங் கிடைக்கப்பணணினார்.
* க. மோசே. ௩சா, உக.

௰. பிரதானிகளின்தலைவன தானியேலுக்குச்சொன்னதாவது, உங்களபோசனத்தையும்பானத்தையுங் குறித்திருக்கிற இராசாவாகிய என ஆணடவனுக்கு நானபயப்படுகிறேன, இராசாவினிடத்திலே நீங்களென தலைக்கு ஆக்கினைவரப்பணணை, அவர் உங்களமுகங்களையுங்களோடொத்த இளைஞரின முகங்களைப் பார்க்கச்சுணடிப் போனவைகளாகக்காணபானேனென்றுன.

௰க. அப்போதுபிரதானிகளதலைவன, தானியேல, அனனியா, மீஷாவேல, அசரியா என்றவர்களினபேரிலே விசாரிப்புக்காரனாக வைத்தமேலத்சாரோட்டே தானியேலசொன்னதாவது,

௰உ. பத்துநாள உமதடியாரைச்சோதித்துப்பாரும்மேன, எங்களுக்குப்பருப்புமுதலானவைகளைப்பொசிக்கவுந் தணணீரைக்குடிக்கவுங்கொடுத்து,

௰௩. உமக்கு முனபாக எங்களுடையும

இராசாவினபோசனததிறபொசிககிற இளை பருடையருபையும ஒததுபபார்ககடடும, பிறகுநீர்காணகிறதறகுததககதாக உமதடி யாருககுசசெயயுமெனருன.

௰௩. அவன இநதககாரியததிலே அவர்க ளுககுககேளவிகொடுததுபபததுநாள அவ ர்களைசசோதிததுபபார்ததான.

௰௪. பதது நாட்சென்றபோதோவெனி ல, இராசாவினபோசனததிறபொசிததஎல லா இளைஞரைபபார்ககிலும அவர்களநலல ரூபமுஞசரீரபபுஷ்டியு முளளவர்களெனறு காணபபடடது.

௰௫. ஆகையால மேலத்சார் அவர்கள பொசிக்ககடடளையானபோசனததையும அவர்களகுடிக்ககடடளையான திவிதிராட் சபபழரசததையும நீககிவைதது அவர்க ளுககுபபருபபு முதலானவைகளைககொடுத தான.

௰௬. இநதநானகு இளைஞருககோவென றாலபாரபரனசகல எழுததிலுமஞானததி லும அறிவையுமபுததியையுஙகொடுததுத தானியேலசசகலதரிசனததிலுஞசொபபன ததிலும உணர்வுளளவனுககினுர்.

௰௭. இராசா அவர்களைககொணடுவரச சொனனநாட்கள நிறைவேறினபோது,பிர தானிகளின தலைவன அவர்களைநேபுகாது நேத்சாருககு முனபாககொணடுவநதுவி டடான.

௰௮. இராசா அவர்களோடேபேசிககொ ணடான, ஆனால அவர்களெலலாருககுளளு நதானியேல, அனனியா, மீஷாவேல, அசரி யா எனறவர்களோடொததவனகாணபபட டதிலலை, ஆகையால இராசாவுககுமுனபா கநினருர்கள.

௰௯. ஞானததிறகும உணர்வுககும அடு தத எநதககாரியததில இராசா அவர்களை ககேடடுவிசாரிததாலும, அவர்களைததன னுடைய இராசசியமெஙகுமுளளசகலசா ஸ்திரிகளையுஞசோதிரிஷககாரரையும பார்க கபபத்தத்தனைசமததராகக்கணடான.

௨௰. * கோரேஸ் இராசசியபாரமபண ணுமமுதலாமவருஷமடடுநதானியேல அங கேயிருநதான. * ௬. அதி. ௨௮.

## ௨. அதிகாரம்.

[நேபுகாதநேத்சார்கணட சொபபனத தையும அதின அர்த்தத்தையுநதானியே ல அவனுககுசசொனனது.]

நேபுகாதநேத்சார் இராசசியபாரம பணணும இரணடாமவருஷததிலே நேபு காதநேதசார்சொபபனஙகளைக கணடா ன, * அதினால அவனுடைய ஆவிகலஙகி, அவனுடைய நிததிரையவனிலிருநதுகலைந தது. * க, மோசே. ௪௧. அதிகாரம. ௮.

௨. அபபோதுதனனுடையசொபபனங களைததனககறிவிகக,இராசாசாஸ்திரிகளையு ஞசோதரிஷககாரரையுஞ சூனியககாரரை யுஙகலதேயரையும அழைககசசொனனான, அவர்களவநது இராசாவுககுமுனபாகநின ருர்கள.

௩. இராசா அவர்களுடனே, ஒருசொப பனததைககணடேன, அநதசசொபபனத தையறியவேணடுமெனறு என ஆவிகலஙகி யிருககிறதெனருன.

௪. கலதேயர் இராசாவுககுச சூரியபா ஷையிலே, இராசாவேயெனறைககுமவாழ் க, சொபபனததையுமதடியாருககுசசொல லும, அபபோது அதன அர்ததததைவிடு விபபோமெனருர்கள.

௫. இராசா கலதேயருககுபபிரததியுத தரமாகசசொனனதாவது, எனனிலிருநது பிறககிறவிசேஷமேதெனில, நீஙகளசொப பனததையும அதின அர்த்தத்தையுமெனக கறிவிககாமறபோனால, துணடிததுபபோ டபபடுவீர்கள, உஙகளவீடுகள எருக்களங களுமாக்கபபோடபபடும்.

௬. சொபபனததையும அதின அர்த்தத் தையுஙகாணபிததீர்களேயாகிலஎனனிடததி றகாணிககைகளையும நலலபலனையுமபெரிய வெகுமானததையும்பெறுவீர்கள, ஆகையா றசொபபனததையும அதின அர்த்தத்தையு ம எனககுககாணபியுஙகளெனருன.

௭. அவர்கள மறுபடியுமபிரததியுததார மாக, இராசாசொபபனததைத்தமதடியா ருககுசசொலவாராக, அபபோது அதின அர்த்தத்தைவிடுவிபபோமெனருர்கள.

௮. இராசாபிரததியுததரமாகசசொன னதாவது, எனனிலிருநதுவிசேஷம பிறநத படியினாலேதானே நீஙகள காலமபோக்கப பார்க்கிறீர்களெனறு நானநிசசயமாக அறி நதுகொளளுகிறேன.

௯. நீஙகள சொபபனததையெனககறிவி ககாதேபோனால, நீஙகள எனககுமுனபாக பபொயயும நிசககேடுமானவிசேஷததை நேரமாறுமமடடுஞசொலலஎததனமபண ணியிருககிறீர்களெனறு உஙகளைககுறிதது நிதானிககும ஒரேநிதானிபபாயிருககிறது, ஆகையாறசொபபனததை யெனககுசசொ லலுஙகள, அபபோது அதின அர்த்தத்தை நீஙகளஎனக்குக்காணபிக்கலாமெனறறிவே னெனருன.

௰. கலதேயர் இராசாவுககுமுனபாகபபி ரததியுததரமாகசசொனனதாவது, இரா சாகேட்குஙகாரியததை யறிவிக்கத்தக்கம னுஷனபூமியிலிலலை, ஆகையாலமகததுவமு மவலலமையுமான எநத இராசாவுமஇபப டிககொத்தகாரியத்தையொருசாஸ்திரியினி டத்திலுஞசோதிரிஷககாரனிடததிலுஙகல தேயனிடததிலுஙகேடடதுமிலலை.

௰௧. ஏனெனில் இராசா கேட்கிற காரியம் அரிதாயிருக்கிறது, மாம்சமாயிருக்கிறவர்களோடே வாசம்பண்ணாத தேவர்களேயொழிய அதை இராசாவுக்கு முன்பாக அறிவிக்கத்தக்க வேறொருவருமில்லையென்றார்கள்.

௰௨. இதினிமித்தமாக இராசா மகா கோபமுங்கடுமையுமடைந்து, பாபேலிலிருக்கிற எல்லா ஞானிகளையும் அழிக்கச்சொன்னான்.

௰௩. அந்த உத்தரம் வெளிப்பட்டது, ஞானிகள் கொன்றுபோடப்பட்டார்கள், தானியேலும் அவன் தோழரும் கொன்றுபோடப்படத் தேடப்பட்டார்கள்.

௰௪. அப்போது தானியேல் பாபேலின் ஞானிகளைக் கொன்றுபோடப் புறப்பட்ட இராசாவுடைய தலையாரிகளின் அதிபதியாகிய ஆரியோகோடே யோசனையும் புத்தியுமாய்ப் பேசி,

௰௫. இந்தக்கட்டளை இராசாவினாலே இத்தனை துரிதமாயிருக்கிறதென்னவென்று இராசாவின் சேர்வைகாரனாகிய ஆரியோகைக் கேட்டான், அப்போது ஆரியோகு தானியேலுக்குச் செய்தியைச் சொன்னான்.

௰௬. தானியேலோவென்றால், உட்பிரவேசித்து, அர்த்தத்தை இராசாவுக்குக் காண்பிக்கும்படிக்குத் தனக்குத் தவணைகொடுக்க இராசாவினிடத்திலே விண்ணப்பம்பண்ணினான்.

௰௭. பிற்பாடு தானியேல் தன் வீட்டுக்குப் போய்த் தானுந் தன்னுடைய தோழரும் பாபேலின் மீதியான ஞானிகளோடேகூட அழியாதபடிக்குப் பரமண்டலத்தினுடைய பராபரனையந்த இரகசியத்தினிமித்தம் இரக்கங்கேட்கிறதற்காக,

௰௮. இந்தக்காரியத்தை அனனியா, மீஷாயேல், அசரியாவென்ற தன்னுடைய தோழருக்கறிவித்தான்.

௰௯. பிற்பாடு இராத்திரியில் தரிசனையிலே தானியேலுக்கு இரகசியம் வெளியாக்கப்பட்டது, அப்போது தானியேல் பரமண்டலத்துப் பராபரனை ஸ்தோத்திரித்தான்.

௨௰. தானியேல் வசனித்துச் சொன்னதாவது, பராபரனுடைய நாமஞ் சதாகாலமுஞ் சதாகாலமாக ஸ்தோத்திரிக்கப்பட்டிருக்கக்கடவது, ஏனெனில் ஞானமும் பெலனும் அவருடையதாயிருக்கிறது.

௨௧. அவர் காலங்களையும் வேளைகளையும் மாற்றி, * இராசாக்களைத் தள்ளி இராசாக்களை வைத்து, ஞானிகளுக்கு ஞானத்தையும் அறிவாளிகளுக்கு அறிவையுங்கொடுக்கிறவர்.

* ௪, ௰௪. ௨௨, ௫. ௨௧.

௨௨. அவரே ஆழமும் ஒளிப்பிடமுமானதை வெளிப்படுத்துகிறார், இருளிலிருக்கிறதையவரறிவார், வெளிச்சம் அவருடனே தங்கும்.

௨௩. என் பிதாக்களுடைய பராபரனே, தேவரீர் எனக்கு ஞானமும் பெலனுங்கொடுத்து, நாங்களும்மைக் கேட்டதை இப்போது எனக்கறிவித்தபடியினாலே உம்மைத் துதித்துப் புகழுகிறேன், ஏனெனில் இராசாவின் காரியத்தையெங்களுக்கறிவித்தீரென்றான்.

௨௪. ஆனதுகொண்டு தானியேல் பாபேலின் ஞானிகளையழிக்க இராசா கட்டளையிட்ட ஆரியோகண்டைக்கு உட்பிரவேசித்துப் போய்ப் பாபேலின் ஞானிகளையழிக்காதேயும், என்னை இராசாவின் முன்பாக அழைத்துப்போய்விடும், இராசாவுக்கு அர்த்தத்தையறிவிப்பேனென்று அவனோடே சொன்னான்.

௨௫. அப்போது ஆரியோகு தானியேலைத் தீவிரத்தோடே இராசாவின் முன்பாக அழைத்துப்போய்விட்டு இவனுடனே சிறைப்பட்டுவந்த யூதேயாதேசத்தாரில் இராசாவுக்கு அர்த்தத்தையறிவிக்கப்போகிற ஒரு புருஷனைக் கண்டுபிடித்தேனென்றான்.

௨௬. இராசா பிரத்தியுத்தரங்கொடுத்து பெல்தெஷாத்சாரென்னு நாமமுள்ள தானியேலுடனே நான் கண்ட சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும் நீ எனக்கறிவிக்கக்கூடுமோவென்றான்.

௨௭. தானியேல் இராசாவுக்கு முன்பாகப் பிரத்தியுத்தரங்கொடுத்துச் சொன்னதாவது, இராசா கேட்ட இரகசியத்தை ஞானிகளுஞ் சோதிரிஷக்காரருஞ் சாஸ்திரிகளுங் குறிசொல்லுகிறவர்களும் இராசாவுக்குத் தெரியப்பண்ணக்கூடாது.

௨௮. பரமண்டலங்களிலிருக்கிற பராபரனோவென்றால் இரகசியங்களை வெளிப்படுத்துகிறவர், அவர் பின்னாட்களிற் சம்பவிப்பதை இராசாவாகிய நேபுகாத்நேச்சாருக்கறிவித்தார், உம்முடைய சொப்பனமும் உம்முடைய படுக்கையின்மேல் உம்முடைய தலையிலுண்டான தரிசனங்களுமாவது,

௨௯. இராசாவே, உம்முடைய படுக்கையின்மேல் நீர் படுத்திருக்கையில், இனிமேற் சம்பவிக்கப்போகிறதென்னவென்கிற நினைவுகள் உமக்குள் எழும்பிற்று, அப்போது இரகசியங்களை வெளிப்படுத்துகிறவர் சம்பவிக்கப்போகிறதை உமக்கறிவித்தார்.

௩௰. இப்போதும் * உயிரோடிருக்கிற யாவரையும்பார்க்க என்னிலே ஞானமுண்டென்கிறதினாலேயல்ல, அர்த்தம் இராசாவுக்குத் தெரியவரவும், உம்முடைய இருதயத்தின் நினைவுகளை நீர் அறியவும் இந்த இரகசியம் எனக்கு வெளியாக்கப்பட்டது.

* ௧. மோசே. ௪௧, ௰௬.

௩௧. இராசாவே, இதோ, ஒரு பெரிய சிலையை நீர் காணுகிறவராயிருந்தீர், அந்தச்சிலை பெரியதும் அதின் மினுக்கு விசேஷித்ததுமாயிருந்தது, அது உமக்கெதிரே நின்றது,

அதின் ரூபம் பயங்கரமாயிருந்தது.

௩௨. அந்தச் சிலையின் தலை நல்லபொன்னும், அதின் மார்பும் அதின் புயங்களும் வெள்ளியும், அதின் வயிறும் அதின் இடுப்பும் வெண்கலமும்,

௩௩. அதின் தொடைகள் இரும்பும், அதின் கால்கள் பாதி இரும்பும் பாதி களிமண்ணுமாயிருந்தது.

௩௪. நீர் பார்த்துக்கொண்டேயிருக்கையில், கைகளாலல்லாமல் ஒருகல்லுப் பெயர்ந்துருண்டுவந்தது, அது அந்தச் சிலையை இரும்புங் களிமண்ணுமாகிய அதின் கால்களிலே மோதி, அவைகளை நொறுக்கிப்போட்டது.

௩௫. அப்போது இரும்பும் களிமண்ணும் வெண்கலமும் வெள்ளியும் பொன்னும் ஏகமாய் நொறுங்குண்டு, கோடைகாலத்தில் போரடிக்கிறகளத்திலிருந்து பறந்துபோகிற பதரைப்போலாயிற்று, அவைகளுக்கொரு இடமுங்கிடையாதபடியாய்க் காற்றவைகளையடித்துக்கொண்டுபோயிற்று, சிலையை மோதின கல்லோவென்றால் பூமியையெல்லாம் நிரப்புகிற பெரிய பருவதமாயிற்று.

௩௬. சொப்பனமிதுதான்; அதின் அர்த்தத்தையும் இராசாவுக்கு முன்பாகச் சொல்லுவோம்.

௩௭. இராசாவாகிய நீர் * இராசாக்களுக்கு இராசாவாயிருக்கிறீர், ஏனென்றால் பரமண்டலத்தினுடைய பராபரன் உமக்கு இராசரிகத்தையும் வல்லமையையும் பலத்தையும் மகிமையையுங் கொடுத்தார்.

* எசேக்கி. ௨௬, ௭.

௩௮. மனுஷபுத்திரரும் வெளியின் மிருகங்களும் ஆகாயத்துப் பட்சிகளுந் தங்குகிற சகல இடத்திலுமுள்ளதை அவர் உமது கையிலே ஒப்புக்கொடுத்து, உம்மை அவைகளையெல்லாம் ஆண்டுகொள்ளப்பண்ணினார், பொன்னான அந்தத் தலை நீரே. * எரேமி. ௨௭, ௬. ௨௮, ௰௪.

௩௯. உமக்குப்பிறகு உமக்குக் கீழ்த்தரமான வேறொரு இராச்சியமும், பூமியையெல்லாம் ஆண்டுகொள்ளும் வெண்கலமான மூன்றாம் இராச்சியமும் எழும்பும்.

௪௰. நாலாவது இராச்சியம் இரும்பைப்போல உரமாயிருக்கும், இரும்பு எல்லாவற்றையும் எப்படி நொறுக்கித் தகடமாற்றுப்போகப்பண்ணுகிறதோ அப்படியிது அவைகளையெல்லாம் நொறுக்கிப்போடுகிற இரும்பைப்போலே நொறுக்கிச் சூறித்துப்போடும்.

௪௧. நீர் கால்களையுங் கால்விரல்களையும் பாதி குயவனின் களிமண்ணும் பாதி இரும்புமாயிருக்கக்கண்டதென்றால், அது பிரிந்த இராச்சியமாயிருக்கும், ஆகிலுங் களிமண்ணோடே இரும்புகலந்திருந்ததென்று நீர் கண்டபடியே, இரும்பினுடைய உறுதியிற் சிலது அதிலேயிருக்கும்.

௪௨. கால்களின் விரல்கள் பாதி இரும்பும் பாதி களிமண்ணுமாயிருந்ததேதென்னில், இராச்சியம் ஒருபங்குக்கு உரமும் ஒருபங்குக்கு முறியதுமாயிருக்கும்.

௪௩. நீர் இரும்பைக் களிமண்ணோடே கலந்ததாகக் கண்டதேதென்னில், அவர்கள் மனுஷவித்தாயக் கலப்பார்கள், ஆகிலும் இதோ, களிமண்ணோடே இரும்பு கலவாததுபோலே அவர்களொன்றுக்கொன்று ஒட்டிக்கொள்ளாதிருப்பார்கள்.

௪௪. இந்த இராசாக்களின் நாட்களிலோவென்றால் பரமண்டலத்தின் பராபரன் * என்றென்றைக்கும் அழியாத ஒரு இராச்சியத்தை எழும்பப்பண்ணுவார், இந்த இராச்சியம் வேறே சனத்திற்கு விட்டுவிடப்படுவதில்லை, ஒருகல்லுக் கைகளினாலல்லாமல் மலையிலிருந்து பேர்ந்துருண்டுவந்து, இரும்பையும் வெண்கலத்தையுங் களிமண்ணையும் வெள்ளியையும் பொன்னையும் நொறுக்கினதை நீர் எப்படிக் கண்டீரோ, அப்படி இது அந்த இராச்சியங்களையெல்லாம் நொறுக்கியில்லாதேபோகப்பண்ணித்தானே என்றென்றைக்கும் நிற்கும். * ௭, ௰௪ ௨௭. மீகா. ௪, ௭. லூக்கா. ௧, ௩௩.

௪௫. இனிமேல் சம்பவிக்கப்போகிறதை மகத்துவமான பராபரன் இராசாவுக்கறிவித்தார், சொப்பனமானது நிச்சயமும் அதின் அர்த்தஞ்சத்தியமுமாயிருக்கிறதென்றான்.

௪௬. அப்போது இராசாவாகிய நேபுகாத்நேச்சார் முகங்குப்புறவிழுந்து, தானியேலைப்பணிந்துகொண்டு, அவனுக்குக் காணிக்கையைப்படைக்கவுந் தூபங்காட்டவுஞ் சொன்னான்.

௪௭. இராசா பிரத்தியுத்தரங்கொடுத்துத் தானியேலுடனே, நீ இந்த இரகசியத்தை வெளிப்படுத்தத் தக்கவனானபடியினாலே உங்கள் பராபரனே தேவாதிதேவனும் இராசாதி ஆண்டவரும், இரகசியங்களை வெளிப்படுத்துகிறவருமென்கிறது மெய்யாயிருக்கிறதென்றான்.

௪௮. பிறகு இராசா தானியேலைப் பெரியவனாக்கி, அவனுக்கு வெகுவான பெரிய காணிக்கைகளைக் கொடுத்து, அவனைப் பாபேலுடைய சீமையின்மேலெல்லாந் துரையும் பாபேலுடைய எல்லா ஞானிகளின்மேல் தலையான அதிகாரியுமாக்கினான்.

௪௯. தானியேல் இராசாவை வேண்டிக்கொண்டதற்கு அவன் சாத்ராக்கையும், மேஷாக்கையும் ஆபேத்நேகோவையும் பாபேல் சீமையினுடைய வேலையின் விசாரிப்புக்காரராக வைத்தான், தானியேலோவென்றால் இராசாவின் வாசலிலேயிருந்தான்.

## ௩. அதிகாரம்.

[சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்ற தானியேலின் தோழர் அக்கினிச்சூளையிலிருந்து விடுவிக்கப்பட்டது.]

நேபுகாத்நேச்சார் அறுபது முழ உயரமும் ஆறு முழ அகலமுமான பொற்சிலையைப் பண்ணுவித்து, பாபேல் சீமையிலிருக்கிற தூரா என்ற பள்ளத்தாக்கிலே நிறுத்தி வைத்தான்.

௨. பிற்பாடு நேபுகாத்நேச்சார் என்ற இராசா சபையத்தார்களையும், அதிகாரிகளையும், தலைவரையும், நியாயாதிபதிகளையும் பொக்கிஷக்காரரையும் நீதிசாஸ்திரிகளையும், மணியகாரரையுஞ்சீமைகளை யாளுகிற அனைவரையும் நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின சிலையின் பிரதிஷ்டைக்கு வந்துகூட அழைத்தனுப்பினான்.

௩. அப்போது சபையத்தார்களும் அதிகாரிகளும் தலைவரும், நியாயாதிபதிகளும் பொக்கிஷக்காரரும் நீதிசாஸ்திரிகளும் மணியகாரருஞ்சீமைகளையாளுகிற அனைவரும் நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின பொற்சிலையின் பிரதிஷ்டைக்குக்கூடிவந்து நேபுகாத்நேச்சார் நிறுத்தின சிலைக்கெதிராக நின்றார்கள்.

௪. பறைமுறையிடுகிறவன் உரத்த சத்தமாய்க்கூறினதாவது, எத்தச்சனசதளத்தாருஞ்சாதியாரும் பாஷைக்காரருமாயிருக்கிறவர்களே, உங்களுக்குச் சொல்லப்படுகிறதென்னவென்றால்,

௫. காளம், நாகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்பூர், முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தை நீங்கள் கேட்கும்போது, நீங்கள் தாழவிழுந்து, இராசாவாகிய நேபுகாத்நேச்சார் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளக்கடவீர்கள்.

௬. எவனாகிலும் தாழவிழுந்து அதைப் பணிந்துகொள்ளாதேபோனால் அவன் அந்நேரமே எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்படுவானென்றான்.

௭. ஆகையினாலே சகலசனசதளங்களுங் காளம் நாகசுரங்கின்னரம் வீணை சுரமண்டலம் முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தைக்கேட்டபோதே, சகலசனசதளத்தாருஞ் சாதியாரும் பாஷைக்காரருந் தாழவிழுந்து நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொண்டார்கள்.

௮. ஆனதுகொண்டு அந்நேரமே கல்தேயா புருஷர்சிலர் சேர்ந்துவந்து, யூதர்பேரிலே குற்றஞ்சாட்டிப்பேசி,

௯. இராசாவாகிய நேபுகாத்நேச்சாருக்குச் சொன்னதாவது, இராசாவே யென்றென்றைக்கும் வாழ்க.

௰. காளம் நாகசுரங் கின்னரம் வீணை சுரமண்டலந் தம்பூர் முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தைக் கேட்கிற எந்த மனுஷனுந் தாழவிழுந்து பொற்சிலையைப் பணிந்துகொள்ளவேண்டுமென்றும்,

௰௧. எவனாகிலும் * தாழவிழுந்து பணிந்துகொள்ளாதேபோனால், அவன் எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிற் போடப்படுவானென்றும், இராசாவாகிய நீர் தீர்மானம் பண்ணினீரே.

௰௨. * நீர் பாபேல் சீமையின் வேலைக்கு விசாரிப்புக்காரராக வைத்த சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்ற யூதரான புருஷரிருக்கிறார்கள், இந்தப்புருஷர் இராசாவாகிய உம்மைச் சட்டைபண்ணினதில்லை, இவர்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்யாமலும், நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளாமலுமிருக்கிறார்களென்றார்கள். * ௨, ௪௯.

௰௩. அப்போது நேபுகாத்நேச்சார் சினமும் உக்கிரமுமாய்ச் சாத்திராகையும், மேஷாகையும், ஆபேத்நேகோவையும் அழைத்துவரச்சொன்னான், அந்தப்புருஷரையவர்கள் இராசாவின்முன்பாக அழைத்துவந்துவிட்டபோது,

௰௪. நேபுகாத்நேச்சார் அவர்களோடே சொன்ன உத்தரவாவது, சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்றவர்களே என்னுடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்யாமலும் நான் நிறுத்தின பொற்சிலையைப்பணிந்துகொள்ளாமலும்போகத் நீங்கள் மனதானவர்களோ?

௰௫. இப்போதுங் காளம், நாகசுரம், கின்னரம் வீணை சுரமண்டலந், தம்பூர் முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தை நீங்கள் கேட்கும்போது, நீங்கள் தாழவிழுந்து, நான் பண்ணுவித்த சிலையைப் பணிந்துகொள்ள ஆயத்தமாயிருந்தால் நல்லது, பணிந்துகொள்ளாதிருந்தீர்களேயாகில், நீங்கள் அந்நேரமே எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிற் போடப்படுவீர்கள், உங்களை என்னுடைய கைக்குத் தப்புவிக்கப்போகிற தேவனாரென்றான்.

௰௬. சாத்திராகு மேஷாகு, ஆபேத்நேகோ என்றவர்கள் இராசாவுக்குப் பிரத்தியுத்தாரமாகச்சொன்னதாவது, நேபுகாத்நேச்சாரே, இந்தவர்த்தமானத்தைக்குறித்து உமக்கு உத்தரவுசொல்ல எங்களுக்குத் தேவையில்லை.

௰௭. இதோ, நாங்கள் ஆராதனைசெய்கிற எங்கள் பராபரன் எங்களைத் தப்புவிக்க வல்லவராயிருக்கிறார், * எரிகிற அக்கினிச்சூளைக்கும் இராசாவாகிய உம்முடைய கைக்கும் நீங்கலாக்கிவிடுவிப்பார். * ஏசாயா. ௪௩, ௨.

௧௮. விடுவிக்காதேபோனாலும் நாங்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்வதுமில்லை, நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்வதுமில்லையென்கிறது இராசாவாகிய உமக்கறியப்பட்டிருக்கக்கடவதென்றார்கள்.

௧௯. அப்போது நேபுகாத்நேச்சாருடைய முகரூபம் சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களுக்கு விரோதமாய் வேறுபட்டதினாலே, அவன் உக்கிரத்தினாலே நிறையப்பட்டான, சூளையைக் காக்கிறவர்களும் வாடிக்கையாய்ப்பார்க்கிலும், அதை யேழத்தனை காயவைக்க அவன், உத்தரவுகொடுத்து,

௨௰. சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களை எரிகிற அக்கினிச்சூளையிலே போடுவதற்காக, அவர்களைக்கட்டத்தன் இராணுவத்திற் பலத்த ஆட்களாகிய புருஷருக்குச்சொன்னான்.

௨௧. அப்போது அந்தப்புருஷர் தங்கள் சால்வைகளோடும் நிசாருகளோடும் பாகைகளோடும் வஸ்திரங்களோடுங்கட்டப்பட்டு எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்பட்டார்கள்.

௨௨. ஆனால் இராசாவினுடைய வார்த்தை கடினமானபடியினாலும் சூளைமிகுதியுங் காங்கையாக்கப்பட்டபடியினாலும் அக்கினியின் சுவாலை சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களை யெடுத்துக்கொண்டுபோன புருஷரைக் கொன்றுபோட்டது.

௨௩. சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்ற அந்த மூன்று புருஷரோவெனில் கட்டுண்டவர்களாய் எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே விழுந்தார்கள்.

௨௪. அப்போது நேபுகாத்நேச்சாரென்ற இராசா பிரமித்துத்தீவிரமாயெழுந்திருந்து, தன் சேர்வைக்காரருடனே, நாம் மூன்று புருஷரையல்லோ கட்டுண்டவர்களாக அக்கினியிலே போடுவித்தோமென்று சொன்னான், இராசாவுக்குப் பிரதியுத்தரமாக, ஆமாம் இராசாவே என்றார்கள்.

௨௫. அவன் மறுமொழியாக, இதோ, விடுதலையாய் அக்கினியின் நடுவிலே உலாத்துகிற நாலுபேரைக்காண்கிறேனே, அவர்களிற் சேதமுமில்லை, நாலாம்பேரின் சாயல் தேவர்களின் புத்திரருக்கொப்பானதென்றான்.

௨௬. அப்போது நேபுகாத்நேச்சார் எரிகிற சூளையினுடைய வாசலண்டைக்கு வந்து, உன்னதமான பராபரனுடைய தாசராகிய சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களே, புறப்பட்டு வாருங்களென்று சொன்னான், அப்போது சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்கள் அக்கினியிலிருந்து வெளியே வந்தார்கள்.

௨௭. சுபையத்தார்களும், அதிகாரிகளும் தலைவரும், இராசாவின் சேர்வைக்காரரும் கூடிவந்து, * அக்கினியந்தப்புருஷருடைய சரீரங்களின்மேற்பலஞ்செய்யாமலும், அவர்களுடைய தலைமயிர்கருகாமலும், அவர்களுடைய சால்வைகள் வேறுபடாமலும் அக்கினியின் மணம் அவர்களுக்குட்பிரவேசியாமலும், போயிற்றென்று அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

* எபிரே. ௰௧, ௩௪.

௨௮. நேபுகாத்நேச்சார் வசனித்துச் சொன்னதாவது, தங்களுடைய பராபரனைத்தவிர வேறொரு தேவனையுஞ்சேவித்துப்பணியாதபடிக்கு அவரை நம்பினவர்களும் இராசாவினுடைய வார்த்தையைத் தள்ளித் தங்கள் சரீரங்களை யொப்புக்கொடுத்தவர்களுமாகிய சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்ற தம்முடைய தாசரைத் தம்முடைய தூதனையனுப்பிவிடுவித்த அவர்களுடைய பராபரன் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்,

௨௯. சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களுடைய பராபரனுக்கு விரோதமாகத் தூஷணவார்த்தையைச் சொல்லுகிற எந்தச்சனமும் சாதியாரும் பாஷைக்காரரும் துண்டித்துப்போடப்படுவான், அவன்வீடு எருக்களமுமாக்கிப்போடப்படுமென்று என்னாலே தீர்மானிக்கப்படுகிறது, ஏனெனில் இந்த அடைவாகத் தப்புவித்துவிடத்தக்க வேறே தேவனேயில்லையென்றான்.

௩௰. பிறகு இராசா சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களைப் பாபேல் தேசத்திலே யுயர்த்தினான். *௨, ௪௮, ௪௯.

நேபுகாத்நேச்சார் அகந்தைக்காரனானதினிற் செய்யப்பட்டதேவ அற்புதங்களையெல்லாச்சாதிகளுக்கும் அறிவிக்கும்.

திருப்பத்தினமுகவுரை.

௧. இராசாவாகிய நேபுகாத்நேச்சார் பூமியெங்குங்குடியிருக்கிற சகலசனத்தாருக்கும், சாதியாருக்கும், பாஷைக்காரருக்கும் எழுதுகிறதாவது, உங்களுடைய சமாதானம் பெருகக்கடவது.

௨. உன்னதமான பராபரன் என்னிற் செய்த அடையாளங்களையும் அற்புதங்களையும் பிரசித்தம்பண்ணுவது எனக்கு நன்றாய்க்கண்டது.

௩. அவருடைய அடையாளங்கள் எத்தனை மகத்துவமும், அவருடைய அற்புதங்கள் எத்தனை வல்லமையுமாயிருக்கிறது, * அவருடைய இராசியமும், அவருடைய ஆளுகையும் தலைமுறை தலைமுறையாக நிற்கும். ௩, ௨௬.

௰௮. இலைகள் நேர்த்தியும் கனிகள் வெகுவுமாய் எல்லா சீவனுக்கும் ஆகாரமுமுள்ளதும், கீழே வெளியின் மிருகங்கள் தங்கினதும், கொப்புகளில் ஆகாயத்துப் பட்சிகள் தாபரித்ததுமான விருட்சத்தைக் கண்டீரே,

௰௯. அது * பெரியவரும் பலத்தவருமாயிருக்கிற ராசாவாகிய நீர்தானே, ஏனென்றால் உமது மகத்துவம் பெருகி, ஆகாயபரியந்தமும் உமது கர்த்தத்துவம் பூமியினெல்லை பரியந்தமும் எட்டிப்போயிற்று. * ௨, ௩௭. ௫, ௰௮.

௨௰. அந்த விருட்சத்தை வெட்டி அதைக் கெடுத்துப்போடுங்கள், ஆனால் அதின் வேர்களாகிய அடிமரத்தையிருக்கட்டுமென்றும், இரும்பும் வெண்கலமுமான விலங்கோடே வெளியின் புல்லிலே தங்கி, ஆகாயத்துப் பனியிலே நனைவானாக, ஏழு காலங்கள் அவன்மேலே கடந்துபோகுமட்டுக்கு மிருகங்களோடேயவனுடைய பங்கிருக்கக்கடவதென்றும், வானத்திலிருந்திறங்கிச் சொன்ன பரிசுத்த காவலாளியை ராசா கண்டாரே.

௨௧. ராசாவே, அதின் அர்த்தமென்னவெனில் மனுஷரைவிட்டுத் தள்ளுண்டீர், வெளியின் மிருகங்களோடே யும்முடைய தாபரிப்பிருக்கும், மாடுகளைப்போலப் புல்லை மேய்ந்து, ஆகாயத்துப் பனியிலே நனைவீர்.

௨௨. இப்படியே உன்னதமானவர் மனுஷரின் ராச்சியத்தை, ஆண்டுகொண்டு தாம் சித்தமாயிருக்கிறவனுக்கு அதைக் கொடுக்கிறாரென்பதை நீர் அறிந்துகொள்ளுமட்டும் ஏழு காலங்கள் உம்முடைய மேற்கடந்துபோகவேண்டுமென்கிறதே ராசாவாகிய என்னாண்டவன்பேரிலே வந்த உன்னதமானவருடைய தீர்மானம்.

௨௩. ஆனால் விருட்சத்தின் வேர்களாகிய அடிமரத்தையிருக்கட்டுமென்று சொல்லப்பட்டதென்னவென்றால், நீர் பரம அதிகாரத்தையறிந்தபின் ராச்சியம் உமக்கு நிலைநிற்கும்.

௨௪. ஆகையால் ராசாவே, நீதியைப் பற்றி உமது பாவங்களை [illegible] சிறுமையானவர்க்கிரங்கி உமது அக்கிரமங்களையும் அறுத்துவிடும், அப்போது [illegible]யுமுடைய சாங்கோபாங்கத்திற்கு நீடிப்புண்டாயிருக்குமென்றான்.

௨௫. இதெல்லாம் ராசாவாகிய நேபுகாத்நேச்சாரின்மேல் வந்தது.

௨௬. பன்னிரண்டு மாதஞ் சென்றபின் அவன் பாபேலிலிருக்கிற ராச அரண்மனையின்மீதில் உலாத்திக்கொண்டிருந்து,

௨௭. * இது என் வல்லமையின் பலத்தினாலும் என் மகத்துவத்தின் பிரஸ்தாபத்திற்குமாக நான் ராச அரண்மனையாகக் கட்டின மகா பாபிலோனல்லவோவென்று ராசா சொன்னான். * லூக்கா. ௧, ௫௧.

௨௮. இன்னம் இந்த வார்த்தை ராசாவின் வாயிலிருக்கையில், வானத்திலிருந்து ஒரு சத்தமிறங்கிச் சொன்னதாவது, நேபுகாத்நேச்சாரென்ற ராசாவே, ராச்சியபாரம் உன்னைவிட்டுப்போயிற்றென்றும்,

௨௯. மனுஷரைவிட்டுத் தள்ளுண்டுபோய் வெளியின் மிருகங்களோடேயுன் தாபரிப்பிருக்கும், மாடுகளைப்போலப் புல்லை மேய்வாய், இப்படியே உன்னதமானவர் மனுஷரின் ராச்சியத்தையாண்டுகொண்டு தாம் சித்தமாயிருக்கிறவனுக்கு அதைக் கொடுக்கிறாரென்பதை நீயறிந்துகொள்ளுமட்டும், ஏழு காலங்கள் உன்மேற் கடந்துபோகுமென்றும் உனக்குச் சொல்லப்படுகிறதென்றது.

௩௰. அந்நேரமே யிந்த வார்த்தை நேபுகாத்நேச்சாரில் நிறைவேறிற்று, * அவன் மனுஷரைவிட்டுத் தள்ளுண்டு மாடுகளைப்போலப் புல்லை மேய்ந்தான், அவனுடைய மயிர் கழுகுகளுடைய மயிர்க்கும் அவனுடைய நகங்கள் பட்சிகளுடைய நகங்களுக்கும் சமானமாய் வளருமட்டும் அவன் சரீரம் ஆகாயத்துப் பனியிலே நனைந்தது. * ௫, ௰௮. ௨௧.

௩௧. அந்நாட்கள் சென்றுபோனபோதோவெனில், நேபுகாத்நேச்சாராகிய நான் என் கண்களை வானத்திற்கேறெடுத்தேன், என் புத்தியெனக்குத் திரும்பிவந்தது, அப்போது நான் உன்னதமானவரை ஸ்தோத்திரித்து, என்றென்றைக்கும் பிழைக்கிறவரைப் புகழ்ந்து மகிமைப்படுத்தினேன், அவருடைய கர்த்தத்துவம் நித்தியகர்த்தத்துவமானது, அவருடைய ராச்சியமே தலைமுறை தலைமுறையாக நிற்கும்.

௩௨. பூமியின் குடிகளெல்லாம் ஒன்றுமில்லையென்றெண்ணப்படவேண்டும், அவர் தமது சித்தத்தின்படியே வானத்தின் சேனையையும், பூமியின் குடிகளையும் நடப்பிக்கிறார், அவருடைய கையைத் தட்டி, அவருக்கு நீர் என்ன செய்கிறீரென்று சொல்லத்தக்கவனில்லையென்றேன்.

௩௩. அவ்வேளையிலே யென் புத்தி எனக்குத் திரும்பிவந்தது, என் ராச்சியபாரத்தின் மேன்மைக்காக என்னுடைய மகிமையும் என்னுடைய முகக்களையும் எனக்குத் திரும்பிவந்தது, என்னை யென் சேனைக்காரரும் என் பெரிய மனுஷரும் தேடினார்கள், என் ராச்சியத்தில் நான் திடப்படுத்தப்பட்டேன், அதிக மகத்துவமும் எனக்குக் கூட்டப்பட்டது.

௩௪. ஆகையால் நேபுகாத்நேச்சாராகிய

யஎ. ஒரு கல்லு கெவியினுடைய வாசலின் மேற்கொண்டுவந்து வைக்கப்பட்டது, அது தானியேலின் மேல் தீர்ந்த நியாயம் மாறுப்பண்ணப்படாதபடிக்கு அதை இராசா தன் மோதிரத்தினாலுந் தன் பெரியமனுஷரின் மோதிரத்தினாலும் * முத்திரை போட்டான். * மத்தே. உஎ, சுசு.

யஅ. பிறகு இராசா தன் அரண்மனைக்குப்போய் இராப்போசனம் பண்ணாமலும் சங்கீதவாத்திய முதலானவைகளைத் தனக்கு முன்பாக வரவொட்டாமலு மிருந்தான், அவனுக்கு நித்திரைவராமலும் போயிற்று.

யகூ. காலமே விடியற்காலத்தில் இராசா எழுந்திருந்து, தீவிரத்தோடே சிங்கங்களின் கெவிக்குப்போனான்.

உய. அவன் கெவியின் கிட்ட வந்தபோது தானியேலைத் துயரமான சத்தமாய்க் கூப்பிட்டான், இராசா தானியேலுடனே, தானியேலே, சீவனுள்ள பராபரனுடைய தாசனே, நீ இடைவிடாமல் ஆராதனை செய்கிற உன்னுடைய பராபரன் உன்னைச் சிங்கங்களுக்குத் தப்புவிக்கவல்லவராயிருந்தாரோவென்று கேட்டான்.

உக. அப்போது தானியேல் இராசாவுடனே சொன்னதாவது, இராசாவே என்றைக்கும் வாழ்க.

உஉ. * சிங்கங்கள் எனக்குச் சேதம் பண்ணாதபடிக்குப் பராபரன் தம்முடைய தூதனை அனுப்பி, அவைகளின் வாயை அடைத்துப்போட்டார், அதேதென்றால் அவருக்கு முன்பாக என்னிடத்தில் குற்றமில்லாமை காணப்பட்டது, இராசாவாகிய உமக்கு முன்பாக நான் நீதிகேடு செய்ததுமில்லை என்றான். * எபிரே. யக, ஙங.

உங. அப்போது இராசா தன்னில் மிகவும் சந்தோஷமாகித் தானியேலைக் கெவியிலிருந்தெடுத்துவிடச் சொன்னான் அப்படியே தானியேல் கெவியிலிருந்தெடுத்துவிடப்பட்டான், அவனில் ஒரு சேதமுங் காணப்படவில்லை, ஏனென்றால் தன் பராபரன்பேரில் விசுவாசித்திருந்தான்.

உச. தானியேலின் மேற் குற்றஞ்சாட்டின அந்தப் புருஷரையோவென்றால் இராசா கொண்டுவரச்சொன்னான், அவர்களையும் அவர்கள் குமாரரையும் அவர்கள் பெண்சாதிகளையுஞ் சிங்கங்களின் கெவியிலே போட்டார்கள், அவர்கள் கெவியின் தரையிலே வராததற்கு முன்னே சிங்கங்கள் அவர்கள் மேற்பாய்ந்து அவர்கள் எலும்புகளையெல்லாம் நொறுக்கிப்போட்டது.

உரு. பிற்பாடு இராசாவாகிய தரியுதேசமெங்குங் குடியிருக்கிற எல்லாச் சனசதனங்களுக்குஞ் சாதியாருக்கும் பாஷைக்காரருக்கும் எழுதினதாவது, உங்களுடைய சமாதானம் பெருகக்கடவது.

உசு. என் இராசசியத்தினுடைய ஆளுகையின் கீழ் எங்குமிருக்கிறயாவருந் தானியேலுடைய பராபரனுக்கு முன்பாக நடுங்கிப் பயப்பட்டிருக்கவேண்டுமென்று என்னாலே தீர்மானம் பண்ணப்படுகிறது, ஏனென்றால் அவர் சீவனுள்ளவரும் என்றென்றைக்கும் நிலைநிற்கிறவருமான பராபரனாயிருக்கிறார். அவருடைய இராசசியம் அழியாதது, அவருடைய கர்த்தத்துவம் முடிவுபரியந்தமிருப்பது.

உஎ. தானியேலைச் சிங்கங்களின் கைக்குத் தப்புவித்த அவரே தப்புவிக்கிறவரும் இரட்சிக்கிறவரும், வானத்திலும் பூமியிலும் அடையாளங்களையும் அற்புதங்களையுஞ் செய்கிறவருமாயிருக்கிறாரென்றெழுதினான்.

உஅ. இந்தத் தானியேலோவென்றால் தரியுவின் இராசசியபாரகாலத்திலும், * பெர்சியனாகிய கோரேசுடைய இராசசியபாரகாலத்திலுஞ் செயமாயிருந்தான்.

* க, உக.

## எ. அதிகாரம்.

[லோகத்தில் பிரதான வல்லமையோடிருந்த பாபிலோனியர் பெர்சியர் கிரேக்கர் றோமருடைய நான்கு இராசசியங்களின் வர்த்தமானமும், நான்காம் இராசசியம் ஆளப்படுங்கடைசி நாட்களில் பரிசுத்தவான்களுக்குவரும் விசேஷித்த அவதியும், அதற்குப்பிறகு எல்லா இராசசியங்களின் இராசரிக்கமுங் கிறிஸ்துவின் வசமாகுங் கெவிப்புந் தானியேலுக்குத் தரிசனையிலே காண்பிக்கப்பட்டது.]

பாபேலுடைய இராசாவாகிய * பெல்ஷாத்சாரின் முதலாம் வருஷத்திலே தானியேல் ஒரு சொப்பனத்தையுந் தன்படுக்கையின் மேல் தன் தலைக்குண்டான தரிசனங்களையுங் கண்டான், பிற்பாடு அந்தச் சொப்பனத்தை எழுதிக் காரியங்களின் தொகையை விவரித்தான். * ரு, க.

உ. தானியேல் வசனித்துச் சொன்னதாவது, இராத்திரிகாலத்தில் என் தெரிசனத்திலே நான் கண்டதேதென்றால், இதோ, வானத்தின் நான்குகாற்றுகளும் பெரியசமுத்திரத்தில் அடித்தது.

ங. அப்போது வெவ்வேறே ரூபமுள்ள நான்கு பெரிய மிருகங்கள் சமுத்திரத்திலிருந்தெழும்பிற்று.

ச. முந்தினது சிங்கத்தைப்போலிருந்தது, அதற்குக் கழுகின் செட்டைகளும் உண்டாயிருந்தது, நான் பார்த்துக்கொண்டிருக்கக்கொள்ள, அதின் இறகுகள் பிடுங்கப்பட்டது அது தரையிலிருந்தெடுக்கப்பட்டு, மனுஷனைப்போல இரண்டு காலின் மேல் நிமிர்ந்து நிற்கப்பண்ணப்பட்டது, மனு

டு இருதயமும் அதற்குக்கொடுக்கப்பட்டது.

ரு. இதோ, கரடிக்கொப்பாகிய வேறே இரண்டாம் மிருகத்தைக்கண்டேன், அது ஒருபுறத்திலே தின்றுகொண்டு, தன்வாயின் பல்லுகளுக்குள்ளே மூன்று விலாவெலும்புகளைப்பிடித்திருந்தது, அதற்கு, எழும்பி, வெகுமாம்சந்தின்றென்று சொல்லப்பட்டது.

சு. இதற்குப்பிறபாடு, இதோ, சிவிங்கியைப்போலிருக்கிற வேறொன்றைக்கண்டேன், அதற்கின் முதுகின் மேற்பட்சியின் செட்டைகள் நான்கிருந்தது, * நான்கு தலைகளும் அந்த மிருகத்திற்குண்டாயிருந்தது, அதற்கு ஆளுகையளிக்கப்பட்டது.

* அ, உஉ. ௰௧, ௯ ௪.

எ. இதற்குப்பிறபாடு, இதோ, கெடியும் பயங்கரமும் மகாபலத்ததுமான * நாலாமிருகத்தை இராத்திரி சனங்களிற்கண்டேன் அது பெரிய இருப்புப்பல்லுகளுள்ளதாயிருந்தது, பட்சித்து, நொறுக்கி, மீதியானதைத் தன்கால்களால் மிதித்துப்போட்டது, தனக்குமுன்னிருந்த எல்லாமிருகங்களையும்பார்க்க வேறு ரூபமாயிருந்தது, பத்துக்கொம்புள்ளதாயிருந்தது.

அறி. ௰௯, உ. ௰எ. ௯.

அ. அந்தக்கொம்புகளை நான் கவனித்திருக்கக்கொள்ள, இதோ, அவைகளுக்குள்ளே வேறொரு சின்னக்கொம்பு எழும்பிற்று இதற்கு முன்பாக முந்தின கொம்புகளில் மூன்று பிடுங்கப்பட்டது, இதோ, இந்தக் கொம்பிலே மனுஷக்கண்களை அடைவான கண்களும் * பெருமைகளைப்பேசும் வாயுமுண்டாயிருந்தது. * அறி. ௰௩, ரு. மு

கூ, நான் பார்த்துக்கொண்டிருக்கக்கொள்ள, ஆசனங்கள் வைக்கப்பட்டது, * நீண்ட ஆயுசாயிருக்கிறவர் உளுக்கார்ந்தார் அவருடைய வஸ்திரம் வெண்மையாகிய உறைந்த மழையைப்போலேயும் அவருடைய சிரசின்மயிர் துப்புரவான பஞ்சைப்போலேயுமிருந்தது, அவருடைய ஆசனம் அக்கினியின் சுவாலைகளும் அதின் உருளைகள் எரிகிற நெருப்புமாயிருந்தது.

* சங். ௱உ. உ௫—உஅ.

௰. அக்கினியான நதி அவர் சன்னிதியிலிருந்து புறப்பட்டோடிற்று, * ஆயிரமாயிரம்பேர் அவரைச்சேவித்தார்கள், கோடாகோடிபேர் அவருக்கு முன்பாக நின்றார்கள், நியாயசங்கம் உளுக்கார்ந்தது, † புஸ்தகங்கள் திறக்கப்பட்டது.

* சங். ௬அ, ௰அ, அறிவி. ரு, ௰௧.
† அறிவி. உ௰, ௰உ.

௰௧. அப்போது நான் அந்தக்கொம்பு பேசின பெருமையான பேச்சுகளுடைய சத்தத்தினிமித்தம் பார்த்துக்கொண்டிருந்தேன் நான் பார்த்துக்கொண்டிருக்கக்கொள்ள, மிருகங்கொல்லப்பட்டது, அதின் உடல் அழிக்கப்பட்டபின், எரிகிற அக்கினிக்கொப்புக்கொடுக்கப்பட்டது.

௰உ. மற்றமிருகங்களுடைய ஆளுகையோவென்றால், அவைகளைவிட்டுப்போயிருந்தும் அவைகளுக்குச்சமயமும் முந்திட்டமுமான காலமட்டும் உயிரோடே நீடித்திருக்கக் கட்டளையிடப்பட்டிருந்தது.

௰௩. என்னுடைய இராத்தரிசனத்திலே நான் பார்த்துக்கொண்டிருக்கக்கொள்ள, இதோ, வானத்தின் மேகங்களுடனே மனுஷனுடைய குமாரன் சாயலாகிய ஒருத்தர் வருகிறவராயிருந்தார், அவர் நீண்ட ஆயுசாயிருக்கிறவரிடமட்டும் வந்து, அவருக்கு முன்பாகச் சேர்ந்துவரப் பண்ணப்பட்டார்.

௰௪. * அவரையெல்லாச்சனத்தாருஞ்சாதியாரும் பாஷைக்காரரும் சேவிக்கும்படிக்கு அவருக்குக்கேர்த்துருத்துவமும் கனமும் இராச்சியமுங் கொடுக்கப்பட்டது, † அவருடைய கர்த்துருத்துவம் ஒழியாத நித்திய கர்த்துருத்துவமும், அவருடைய இராச்சியம் அழியாததுமாயிருக்கும். * அறிவி ௰௧, ௰௫. † உ, சச, லூக். க, கக.

௰௫. தானியேலாகிய என்னுடைய ஆவி என்னுள்ளத்திலே நொந்துபோயிற்று, என் தலையின் தரிசனங்கள் என்னைக்கலங்கப்பண்ணிற்று.

௰௬. நிற்கிறவர்களிலொருத்தனண்டையிலே நான் சேர்ந்து, இதெல்லாவற்றின் பொருளைச்சொல்ல அவனை வேண்டிக்கொண்டேன், அவன் வர்த்தமானங்களின் அர்த்தத்தையெனக்கு அறிவித்துச்சொன்னதாவது,

௰௭. நாலாயிருக்கிற இந்தப்பெரிய மிருகங்கள் பூமியிலிருந்தெழும்புகிற நாலுவிதமான இராசாக்கள்தானே.

௰அ. ஆனால் உன்னதமானவருடைய பரிசுத்தவான்கள் இராச்சியத்தைப்பெற்றுச் சதாகாலமுஞ் சதாகாலங்களாகிய என்றென்றைக்கும் இராச்சியத்தைச்சுதந்தரித்துக்கொண்டிருப்பார்களென்றான்.

௰௯. அப்போது மற்றவைகளெல்லாம்பார்க்க வேறுரூபமுங்கெடியுமாயிருந்து அதின் பல்லுகள் இரும்பும் நகங்கள் வெண்கலமுமாயிருந்ததும், பட்சித்து, நொறுக்கி, மீதியானதைத் தன்கால்களால் மிதித்துப்போட்டதுமான நாலாமிருகத்தைக் குறித்தும்,

உ௰. அதினுடைய தலையின்மேலுள்ள பத்துக்கொம்பைக்குறித்தும், தனக்குமுன்பாக மூன்றுவிழ எழும்பிக்கண்களையும் பெருமைகளைப்பேசுகிறவாயையுமுடையதாயிருந்து, மற்றவைகளைப்பார்க்கப்பெருமையாய்

ருந்த அந்தவேறேகொம்பைக்குறித்தும் நிச்சயத்தையறியமனதாயிருந்தேன்.

உக. நீனிவ நீண்ட ஆயிசாயிருக்கிறவர் வருமட்டாகவும், * நியாயத்தீர்ப்பு உன்னதமானவருடைய பரிசுத்தவான்களுக்குக் கொடுக்கப்பட்டுப்பரிசுத்தவான்கள் இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்காலம் வருமட்டாகவும். * க. கொரி. சு, உ. அறிவி. உ௰, ச.

உஉ. இந்தக்கொம்பு பரிசுத்தவான்களோடே யுத்தம்பண்ணி, அவர்களை மேற்கொண்டதென்று கண்டிருந்தேன்.

உங. அவன் சொன்னதாவது, நாலாமிருகம் பூமியிலேயுண்டாகும் நாலாம் இராச்சியமாயிருக்கும் அது எல்லா இராச்சியங்களையும் பார்க்கவேறாயிருந்து, பூமியையெல்லாம்பட்சித்து அதைமிதித்து அதைநொறுக்கிப்போடும்.

உச. * பத்துக்கொம்புகளேதென்றால், அந்த இராச்சியத்திலேதான்பத்து இராசாக்கள் எழும்புவார்கள், அவர்களுக்குப்பிறபாடுவேறொருத்தன் எழும்புவான், அவன் முந்தினவர்களைப்பார்க்க வேறாயிருந்து, மூன்று இராசாக்களைத்தாழ்த்திப்போடுவான்.
* அறிவி. ௰௩, க. ௰எ, ௩. ௰உ.

உரு. * உன்னதமானவருக்கெதிராகவார்த்தைகளைப்பேசி, உன்னதமானவருடைய பரிசுத்தவான்களைப் பாழாக்கிக் காலங்களையும்நியாயப்பிரமாணத்தையும் மாற்றநினைப்பான், அவர்கள் † ஒருகாலமுங்காலங்களும் அரைக்காலமுமட்டும் அவன்கையிலொப்புக்கொடுக்கப்படுவார்கள் * அறிவி. ௰௩, சு. எ. † அறிவி. ௰௨, உ௰. உ, சு. ௰ச.

உசு. ஆனால் நியாய சங்கமுளுக்காரும் அப்போது அவனைமுடிவுபரியந்தஞ் சங்காரமாக்கும்படியாகவும் அழிக்கும்படியாகவும் அவனுடைய ஆளுகையையெடுத்துப்போடுவார்கள்.

உஎ. எல்லாவானங்களின் கீழுமிருக்கிற இராச்சியங்களின் இராசரிக்கமும் ஆளுகையும் மகத்துவமும் உன்னதமானவருடையபரிசுத்தவான்களாகிய சனத்திற்குக் கொடுக்கப்படும், அவருடைய இராச்சியம் நித்திய இராச்சியமானது, எல்லாக்கர்த்தத்துவங்களும் அவரைச்சேவித்து அவருக்குக்கீழ்ப்படிந்திருக்குமென்றான்.

உஅ. அவன்சொன்னது, இந்தமட்டுஞ்சரி ஆனால் தானியேலாகிய என்னுடைய முக்கியமெனனிலவேறுபட்டத்தக்கதாக என நினைவுகள்மிகவும் என்னைக்கலங்கப்பண்ணின இந்த வார்த்தமானத்தையென் மனதிலேவைத்துக்கொண்டேன்.

## அ. அதிகாரம்.

[பெர்சிய இராச்சியத்திற்குப்பதிலாக வரப்போகிறகிரேக்க இராச்சியத்தின்சமாசாரமும், இதினுடைய ஒருபங்கிலெழும்பிப் பராபரனுடைய சனத்தையும் வேதத்தையுஞ் சிலநாள்மட்டும்பாழாக்கப்போகிற ஒரு இராசாவின் சமாசாரமுந் தானியேலுக்கு ஒருதரிசனையிற் காண்பிக்கப்பட்டது.]

இராசாவாகிய பெல்ஷாத்சாருடைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே * தானியேலாகிய எனக்குக்காண்பிக்கப்பட்ட தரிசனைக்குப்பிறபாடு அதினுடைய மூன்றும்வருஷத்திலேவேறொன்று எனக்குக்காண்பிக்கப்பட்டது. * எ, அதிகாரம். க.

உ. தரிசனையிலே நான்கண்டதாவது, நான்பார்க்கையில், நான் எலாமென்னுஞ்சீமையில அரண்மனையிருக்குஞ் சூசான்பட்டணத்திலேயிருக்குமாப்போலேயிருந்தது, அங்கே நான்ஊலாய என்ற ஆற்றண்டையி லிருக்கிறதாகத் தரிசனையிலேகண்டேன்.

௩. நான் என்கண்களையேறெடுத்துப்பார்த்தேன், இதோ, இரண்டுகொம்புள்ள ஒரு ஆட்டுக்கடாய் ஆற்றின்முன்பாக நின்றது, அதின் இரண்டுகொம்புகளும் உயரமானவைகளாயிருந்தது, ஆனாலும் ஒன்று மற்றதைப்பார்க்க உயர்ந்திருந்தது, உயர்ந்ததாகிய இதுகடைசியில் ஓங்கிவளர்ந்தது.

ச. அந்த ஆட்டுக்கடாய் மேற்கேயும் வடக்கேயுந்தெற்கேயும் பாய்ந்துகொண்டிருக்கிறதைக்கண்டேன், ஒருமிருகமும் அதின்முன்னே நிற்கக்கூடாதிருந்தது அதின் கைக்குத்தப்பிவிப்பாருமில்லை. அது தன் மனதின்படியேசெய்து, வல்லமையாயிற்று.

ரு. நான் அதைக்கவனித்துக்கொண்டிருக்கையில், இதோ, மேற்கேயிருந்து ஒரு வெள்ளாட்டுக்கடாய் நிலத்திலே காலபடாமல், தேசத்தின்மீதெங்கும்வந்தது, அந்தவெள்ளாட்டுக்கடாய்க்கு அதின்கண்களுக்கு நடுவே வேடிக்கையான ஒருகொம்பிருந்தது.

சு. நான் ஆற்றின்முன்பாக நிற்கக்கண்ட இரண்டுகொம்புள்ள ஆட்டுக்கடாயினிடமட்டும் இது வந்துதன்பலத்தின் உக்கிரத்தோடே அதற்கெதிராகப்பாய்ந்தது.

எ. இது ஆட்டுக்கடாயின் கிட்டச்சேரக்கண்டேன், இது அதின்மேற்கடுமையாகி ஆட்டுக்கடாயை முட்டி, அதின் இரண்டுகொம்புகளையும் உடைத்துப்போட்டது, இதின் முன்னே நிற்க ஆட்டுக்கடாய்க்குப் பலனில்லாமையால் இது அதைத்தரையிலே தள்ளிமிதித்துப்போட்டது, இதின் கைக்கு ஆட்டுக்கடாயைத்தப்பிவிப்பாரில்லை,

அ. வெள்ளாட்டுக்கடாய் மிகுதியும் வல்லமையுள்ளதாயிற்று, அது பலத்துப்போனபிற்பாடோவெனில், அந்தப்பெரியகொ

மபு உடைந்துபோய், அதற்குப்பதிலாய் ஆகாயத்தின் நான்குகாற்றுத்திசைகளுக்கு எதிராகவேடிக்கையான நான்குகொம்புகள் எழும்பிற்று.

௯. அவைகளிலொன்றிலிருந்து சின்னதான ஒருகொம்புபுறப்பட்டுத் தெற்குக்கெதிராகவும் கிழக்குக்கெதிராகவும், * சிங்காரமானதேசத்திற்கெதிராகவும் மிகவும் பெரியதாயிற்று. * ௰௧, ௰௬. ௪, ௧.

௰. அது வானத்தின்சேனைபரியந்தம் வளர்ந்து, அதின்சேனையாகிய நட்சத்திரங்களிற் சிலவற்றைப் பூமியிலேவிழப்பண்ணி அவைகளை மிதித்தது.

௰௧. அது சேனையினுடைய அதிபதிபரியந்தமும் வல்லமையுள்ளதாயிற்று, அதினாலே * அனுதினப்பலி எடுபட்டுப்போய், அவருடைய பரிசுத்த ஸ்தலத்தின்தானந் தள்ளுண்டது. * ௰௧, ௩௧.

௰௨. சேனையானது அனுதினப் பலியோடேகூடப் பாதகத்தினிமித்தம் ஒப்புக்கொடுக்கப்படும், அது சத்தியத்தைத் தரையிலேதள்ளும், அது அப்படிச்செய்யும் அதற்குக் கைகூடியும்வருமென்று,

௰௩. பரிசுத்தவானாகிய ஒருத்தன்சொல்லக்கேட்டேன், அப்போது பரிசுத்தவானாகிய வேறொருத்தன், அனுதினப் பலியையும் பாழ்க்கடிப்பையுண்டாக்கும் பாதகத்தையும் பரிசுத்தஸ்தலமுஞ்சேனையும்மிதிபட ஒப்புக்கொடுக்கப்படுவதையுங்குறித்துத் தரிசனம்பிரகாணிக்கப்பட்டது, எந்தமட்டுமிருக்குமென்று அதைச்சொன்னவனைக்கேட்டேன்.

௰௪. அவன் என்னுடனே, இரண்டாயிரத்து முந்நூறு இராப்பகல்கள் செல்லுமட்டுமிருக்கும், பிற்பாடு பரிசுத்தஸ்தலம் சுத்தியாக்கப்படுமென்றான்.

௰௫. சம்பவித்ததேதென்றால் தானியேலாகிய நான் இந்தத்தரிசனையைக் கண்டிருந்து அதை உணரவகைதேடுகையில் இதோ புருஷனுருவாகிய ஒருத்தன் எனக்கெதிரே நின்றான்.

௰௬. * ஊலாயின் நடுவாந்தரத்திலே † காபிரியேலே இவனுக்குத் தரிசனையை உணரப்பண்ணென்றுகூப்பிடுகிற ஒரு மனுஷசத்தத்தைக் கேட்டேன். * ௨. விசை † லூக். ௧, ௨௬.

௰௭. அப்போது நான் நின்றதலத்திற்குச் சேரவந்தான் அவன் வருகையில் நான் திடுக்கிட்டு * முகங்குப்புறவிழுந்தேன் அவன் என்னுடனே மனுபுத்திரனே கவனி, ஏனெனில் இந்தத்தரிசனை முடிவுகாலத்திற்கடுத்ததென்றான். * ௰, அதி. ௯.

௰௮. அவன் என்னோடே பேசுகையில், நான் தரையிலே முகங்குப்புறக்கிடந்து, அசந்துபோனேன் அவனோவெனில் என்னைத் தொட்டு, நான் நின்றிருந்தநிலையிலே என்னை நிற்கப்பண்ணி,

௰௯. சொன்னதாவது, இதோ, சினத்தினுடைய கடைசியானகாலத்திலே சம்பவிப்பதை உனக்கறிவிப்பேன், ஏனெனில் இது முடிவினுடைய குறித்தகாலத்திற்கடுத்தது.

௨௰. நீ கண்ட இரண்டுகொம்புள்ள ஆட்டுக்கடாய் மேதியர், பெர்சியர்தேசங்களின் இராசாக்களும்,

௨௧. மயிருள்ள அந்த வெள்ளாட்டுக்கடாய் கிரேக்கதேசத்தின் இராசாவுந்தானே, இதன்கண்களுக்கு நடுவேயிருந்த பெரியகொம்போவெனில் முதலாம் இராசாவானவன்.

௨௨. அது உடைந்துபோய், அதற்குப் பதிலாக நான்கு எழும்பினதேதென்றால், அந்தச்சாதியிலே நான்கு இராசியங்கள் எழும்பும், ஆனால் அவைகள் அவனுக்கிருந்த வல்லமையோடிராது.

௨௩. அவர்களுடைய இராசியபாரத்தின் கடைசியானகாலத்திலோவென்றால் பாதகர் அளவை நிறைவேற்றினபோது * உலக்காரமுகமுந் தந்திரப்பேச்சுகளில் வல்லமுமான ஒரு இராசா எழும்புவான். * ௰௧, ௩௬. ௩௭.

௨௪. அவனுடைய வல்லமை பலக்கும், ஆனால் * அவனுடைய பலத்தினாலேயல்ல, அவன் அதிசயமானபிரகாரமாக அழிம்புண்டாக்கித்தனக்குக் கைகூடிவருகிறசெல்லப்பாய் இப்படிச்செய்துவந்து பலத்தவர்களையும் பரிசுத்தசனத்தையும் அழிப்பான். * அறிவி. ௰௧, ௨.

௨௫. அவன் தன் விவேகத்தினாலே கபடத்தைத் தன் கைக்குவாய்க்கப்பண்ணித் தன் இருதயத்தில் பெருமையாகி, நிர்விசாரத்தோடிருக்கிற அநேகரையழித்து அதிபதிகளுக்கதிபதியாயிருக்கிறவருக்கு விரோதமாயெழும்புவான், ஆனால் கையாலல்லாமல் முறித்துப்போடப்படுவான்.

௨௬. சொல்லப்பட்ட இராப்பகல்களின் தரிசனை மெய்யாயிருக்கிறது, நீயோவென்றால் * இந்தத்தரிசனத்தைப் புதைபொருளாகவைத்துவை, ஏனெனில் இன்னம் அநேகநாள்செல்லுமென்றான். * ௰௨, ௪.

௨௭. தானியேலாகிய நான் பலட்சயமாய்ச் சிலநாள் வியாதியாயிருந்து, பிறகு எழுந்திருந்து, இராசாவின் வேலையைச் செய்து, அந்தத்தரிசனையினாலே திகைத்துக்கொண்டிருந்தேன், ஆனால் ஒருத்தரும் அதை அறிந்ததில்லை.

## ௯. அதிகாரம்.

[கிறிஸ்துவந்து கொலைசெய்யப்படுமட்டுக்கும் எருசலேமும் யூதசாதியுமசேமமாறப்பாழ்க்கடிக்கப்படுமட்டுக்குஞ்செல்லுந்தீர்க்கதரிசனம்.]

கல்தேயருடைய இராச்சியத்தின்மேல் அதிகாரியாக்கப்பட்டமேதியனாகிய அகாஸ்வேருவினுடையகுமாரனான * தரியு இராச்சியபாரம்பண்ணுகிற முதலாம் வருஷத்திலே, * ரு, ௩௧.

௨. தானியேலாகிய நான் எருசலேமின் பாழ்க்கடிப்புகள் நிறைவேறித்தீர * எழுபது வருஷமாய்ச் செல்லுமென்று கர்த்தர் எரேமியா தீர்க்கதரிசியோடே சொன்ன வருஷங்களின் தொகையைப் புஸ்தகங்களிலே கவனித்து, * எரே. ௨௫, ௧௧. ௨௯. ௧௦. அதி. ௰.

௩. உபவாசம்பண்ணி ரட்டுடுத்துச் சாம்பலிலிருந்து, பராபரனாகிய ஆண்டவரைச் செபத்தினாலும் விண்ணப்பங்களினாலும் தேட, என்முகத்தை அவருக்குநேராக்கி,

௪. என்பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணி, அறிக்கையிட்டுச் சொன்னதாவது, ஆ ஆண்டவரே! உம்மைச் சிநேகித்து உம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்குடன்படிக்கையையும் கிருபையையுங்காக்கிற மகத்துவமும் பயங்கரமுமான பராபரனே.

௫. நாங்கள் பாவஞ்செய்து, அக்கிரமக்காரராயிருந்து, துன்மார்க்கமாய் நடந்து கலகம்பண்ணி, உம்முடைய கற்பனைகளையும் உம்முடைய நியாயங்களையும் விட்டகன்றுபோய்,

௬. உம்முடைய நாமத்தினாலே எங்கள் இராசாக்களோடும் எங்கள் பிரபுக்களோடும் எங்கள் பிதாக்களோடுந் தேசத்தினுடைய சகலசனத்தோடும் பேசின தீர்க்கதரிசிகளாகிய உம்முடைய ஊழியக்காரருக்குச் செவிகொடாதேபோனோம்.

௭. ஆண்டவரே, தேவரீர் நீதியுள்ளவராயிருக்கிறீர், ஆனால் உமக்குவிரோதமாகப் பண்ணின துரோகத்தினிமித்தம் உம்மால் சமீபமுந் தூரமுமான எல்லாத்தேசங்களிலுந் துரத்தப்பட்டிருக்கிற யூதமனுஷரும் எருசலேமின் குடிகளுஞ் சகல இஸ்ரவேலருமாகிய நாங்கள் இந்நாளிலிருக்கிறபடியே, * வெட்கமுள்ளவர்கள். * எஸ். ௯, ௬. நெகே. ௰அ, ௰௩.

௮. ஆண்டவரே, நாங்களும், * எங்கள் இராசாக்களும் எங்கள் பிரபுக்களும் எங்கள் பிதாக்களும், வெட்கமுள்ளவர்கள், ஏனெனில் உமக்குவிரோதமாகப் பாவஞ்செய்தோம். * தேக். ௯, ௩௪. ஏசா. ௬௩, ௨௭. ௨௮.

௯. எங்கள்பராபரனாகிய ஆண்டவரிடத்தில் இரக்கங்களும் மன்னிப்புகளும் உண்டு, ஏனென்றால் அவருக்குவிரோதமாகக் கலகம்பண்ணினோம்.

௰. அவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு எங்களுக்குமுன்பாக வைத்த அவருடைய நியாயப்பிரமாணங்களில் நடக்க, நாங்கள் எங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குச் செவிகொடாதேபோனோம்.

௰௧. இஸ்ரவேலெல்லாரும் உம்முடைய நியாயப்பிரமாணத்தை மீறி உம்முடைய சத்தத்திற்குச் செவிகொடாதபடிக்கு விலகிப்போனார்கள். ஆகையால் பராபரனுடைய தாசனாகிய * மோசேயின் நியாயப்பிரமாணபுஸ்தகத்திலெழுதியிருக்கிற சாபமும் ஆணையும் எங்கள்மேல் ஊற்றப்பட்டது, ஏனென்றால் அவருக்குவிரோதமாகப் பாவஞ்செய்தோம். * ௩. மோ. ௨௬, ௧௪. ௫. மோ. ௮, ௨௭. ௨௮.

௰௨. எருசலேமிற் சம்பவித்ததுபோலவானதொன்றும் வானத்தின்கீழ் எங்கும் சம்பவியாதிருக்கிற பெரிய தீங்கை எங்கள்மேல் வரப்பண்ணினதினாலே, அவர் எங்களுக்கும் எங்களை நியாயந்தீர்த்த நியாயாதிபதிகளுக்கும் விரோதமாகச் சொல்லியிருந்த தம்முடைய வார்த்தைகளை நிறைவேற்றினார்.

௰௩. மோசேயின் நியாயப்பிரமாணபுஸ்தகத்திலெழுதியிருக்கிறதற்குச் சரியாக இந்தத் தீங்கெல்லாம் எங்கள்மேல் வந்தது, ஆனால் நாங்கள் எங்கள் அக்கிரமங்களை விட்டுத்திரும்புகிறதற்கும், உம்முடைய சத்தியத்தைக் கவனிக்கிறதற்கும், எங்கள் பராபரனாகிய கர்த்தரின் முகத்தை நோக்கிக் கெஞ்சினதில்லை.

௰௪. ஆனதுகொண்டு கர்த்தர் அந்தத் தீங்குக்குக் காச்சாக்கிரதையாயிருந்து, அதை எங்கள்மேல் வரப்பண்ணினார், ஏனென்றால் எங்கள் பராபரனாகிய கர்த்தர் தாஞ்செய்துவருகிற தம்முடைய கிரியைகளிலெல்லாம் நீதியுள்ளவர், ஏனெனில் அவருடைய சத்தத்திற்குச் செவிகொடாதேபோனோம்.

௰௫. இப்போதும் உம்முடைய சனத்தைப் பலமுள்ள கையினாலே எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணி இந்நாளவரைக்கும் நிற்கிறபடி உமக்குக் கீர்த்தியையுண்டாக்கின எங்கள் பராபரனாகிய ஆண்டவரே, நாங்கள் பாவஞ்செய்து துன்மார்க்கராய் நடந்தோம்.

௰௬. ஆண்டவரே * உம்முடைய எல்லா நீதிகளின்படியே உம்முடைய கோபமும் உம்முடைய உக்கிரமும் உம்முடைய பரிசுத்தபர்வதமாகிய எருசலேமென்கிற உம்முடைய பட்டணத்தை விட்டுத்திரும்பட்டுமே, அதேனென்றால், எங்கள் பாவங்களினாலும் எங்கள் பிதாக்களின் அக்கிரமங்களினாலும் எருசலேமும் உம்முடைய சனமும் எங்களைச் சுற்றிலும் இருக்கிற யாவருக்கும் நிந்தையாயிற்று. * ௧. யோவான் ௧, ௯.

௰௭. இப்போதும் எங்கள் பராபரனே, தேவரீர் உம்முடைய அடியேனுடைய விண்ணப்பத்தையும் அவனுடைய கெஞ்சுதல்களையுங் கேட்டு, * ஆண்டவரினிமித்தம் உம்முடைய முகத்தைப் பாழாக்கப்பட்ட உம்முடைய

பரிசுத்தஸ்தலத்தின்மேல் பிரகாசிக்கப்பண்ணும். * சங்கீ. அ௰, ௰௫. ௰௬.

௧௮. என்பராபரனே, உம்முடைய செவியைச் சாய்த்துக் கேட்டருளும், உம்முடைய கண்களைத் திறந்து, எங்கள் பாழ்க்கடிப்புகளையும், உமது நாமந் தரிப்பிக்கப்பட்ட பட்டணத்தையும் பார்த்தருளும், ஏனெனில் எங்கள் நீதிகளையல்ல, உம்முடைய மிகுந்த இரக்கங்களையே நம்பி நாங்கள் எங்கள் விண்ணப்பங்களை உமக்கு முன்பாகப் போட்டு வைக்கிறோம்.

௧௯. ஆண்டவரே கேளும், ஆண்டவரே மன்னியும், ஆண்டவரே கவனியும், என்பராபரனே, உம்முடைய நிமித்தமாக அதைத் தாமதியாமற் செய்யும், ஏனென்றால் உம்முடைய பட்டணத்திற்கும் உம்முடைய சனத்திற்கும் நாமந் தரிப்பிக்கப்பட்டதேயென்றேன்.

௨௰. * இப்படி நான் பேசிச் * செபம்பண்ணி, என் பாவத்தையும் என் சனமாகிய இஸ்ரவேலின் பாவத்தையும் அறிக்கையிட்டு, என்பராபரனுடைய பரிசுத்த பர்வதத்திற்காக என் விண்ணப்பத்தை என்பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாகப் போட்டு வைத்துக்கொண்டிருந்தேன்.

௨௧. அப்போது * என் செபத்திலே நான் இன்னம் பேசிக்கொண்டிருக்கக்கொள்ள, முதல் தரிசனையிலே நான் கண்ட புருஷனாகிய † காபிரியேல், பறந்து வரவிடப்பட்டவேகமாய், அந்திக்காணிக்கையின் நேரமாகிய வேளையிலே என்னண்டை வந்து சேர்ந்து, * ஏசாயா. சு௫, உச. † அ, ௰௬.

௨௨. எனக்குத் தெளிவுண்டாக்கி, என்னோடே பேசிச்சொன்னதாவது, தானியேலே, உனக்கு உணர்வுடையப்பண்ண இப்போது புறப்பட்டுவந்தேன்.

௨௩. உன் கெஞ்சுதலகளின் துவக்கத்திலே கட்டளை புறப்பட்டது, நீ மகா பிரியமானவனென்று உனக்கறிவிக்க நான் வந்தேன், இப்போது நான் சொல்லும் வார்த்தையை நீ கவனித்துக் கேட்டுத் தரிசனையையுணர்ந்துகொள்.

௨௪. மீறுதலைத் தவிர்க்கிறதற்கும், பாவங்களைத் தொலைக்கிறதற்கும் அக்கிரமத்தை நிவிர்த்திபண்ணுகிறதற்கும், * நித்திய நீதியை வருவிக்கிறதற்கும் † தரிசனையையும் தீர்க்கதரிசனத்தையும், முத்திரிக்கிறதற்கும் ‡ பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானவரை அபிஷேகம்பண்ணுகிறதற்கும், உன் சனத்தின்மேலும் உன்னுடைய பரிசுத்த பட்டணத்தின்மேலும் எழுபது வாரங்கள் செல்லக் குறிக்கப்பட்டிருக்கிறது. * எபி. கூ, ௰௨. † மத். ௰௧, ௰௩. † சங்கீ. சரு, அ. அப. ௩, உஎ. உஅ. ௰, ௩அ. சரு.

௨௫. இப்போதும் நீ அறிந்துணர்ந்து கொள்ளவேண்டியதேதென்றால், எருசலேமைத் * திரும்பக் கட்டியெழுப்புகிறதற்குக் கட்டளை புறப்பட்டது முதல் தலைவராகிய மேசியா வருமட்டும் ஏழு வாரமும் அறுபத்திரண்டு வாரமுமுண்டு, அவைகளிலே வீதிகளும் அலங்கங்களுந் திரும்பக் கட்டப்பட்டிருக்கும், ஆனாலுஞ் சிக்கலான காலங்களிலேதானே. * ஏசாயா. ௫௫, ௩. அப்போ. உ, ௩௩.

௨௬. இந்த அறுபத்திரண்டு வாரங்களுக்குப் பிறபாடு * மேசியா சங்கரிக்கப்பட்டு, இராதே போவார், அல்லவாட்டுகிறோசாரவனுடைய சனம் பட்டணத்தையும் பரிசுத்த ஸ்தலத்தையும் அழித்துப்போடும், அதின் முடிவு பிரளயமாயிருக்கும் † யுத்தத்தின் முடிவுமட்டுக்கும், பாழ்க்கடிப்புகளுக்குத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. * ஏசா. ௫௩, அ. † லூக்கா. ௨௧, ௨௪.

௨௭. ஆனால் அவர் ஒரு வாரமட்டும் அநேகருக்கு உடன்படிக்கையைத் திடப்படுத்தி, அந்த வாரம் பாதிசென்றபோது, பலியையுங் காணிக்கையையும் ஓயப்பண்ணுவார், * அருவருப்பான செட்டைகளோடே பாழ்க்கடிக்கிறவன் வந்திறங்குவான், நிர்ணயிக்கிற தீர்மூலம் வருமட்டுக்கும் பாழ்க்கடிக்கிற சனத்தின்மேற் சொரியுமென்றான். * மத்தே. உச, ௰௫. மாற்கு. ௰௩, ௰௪.

## ௰. அதிகாரம்.

[தானியேலுக்குத் தேவகுமாரன் தரிசனையானது.]

பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் அரசாண்ட மூன்றாம் வருஷத்திலே பெல்தெஷாத்சாரென்னும் பேரிடப்பட்ட தானியேலுக்கொரு காரியம் வெளியாக்கப்பட்டது, அந்தக் காரியஞ் சத்தியமும் மகா யுத்தத்திற்கடுத்ததுமாயிருக்கிறது, அந்தக் காரியத்தை யவன் கவனித்துத் தரிசனையின் பொருளை விளங்கிக்கொண்டான்.

௨. அந்நாட்களில் தானியேலாகிய நான் மூன்று வாரமாகிய நாட்களளவும் துக்கித்துக்கொண்டிருந்தேன்.

௩. அந்த மூன்று வாரங்களாகிய நாட்கள் நிறைவேறுமட்டும் ருசியான அப்பத்தை நான் புசித்ததுமில்லை. இறைச்சியுந் திராட்சப்பழ இரசமும் என் வாய்க்குட் போனதுமில்லை, நான் பரிமளதயிலம் பூசிக்கொண்டதுமில்லை.

௪. முதலாம் மாதம் இருபத்து நாலாந் தேதியிலே நான், * இதெக்கேலென்ற பெரிய ஆற்றங்கரையிலிருந்து, * க.மோ. ௨, ௰௪.

௫. என் கண்களை யேறெடுக்கையில், இதோ * வெண்புடவையுடை தரித்துத் தமது அரையிலே ஊப்பாஸின் தங்கமான கச்சையைக் கட்டிக்கொண்டிருக்கிற ஒரு புருஷனைக் கண்டேன். * அறிவி. ௧, ௰௩—௰௫.

## ௰௧. அதிகாரம்.

[பெர்சிய இராசசியத்தின தேசங்களைத்த னக்குக கீழப்படுத்திக்கொள்ளப்போகி றகிரேக்கசாதியாகியபெரிய அலெக்ச ந்தரின்செயதியும அவனுக்குபபிறபாடு அவன இராசசியஙகளைககட்டிககொள ளபபோகிறநானகுபஙகுககாரரில இர ணடுதரந்தாராகிய எகிபத்துவின இரா சாக்களுக குரிய இராசாக்களும ஒருவ ருககொருவர்பணணபபோராயசெயயும யுத்தஙகளும நடிவேயகபபட்டபூதேயா தேசத்தார் அதிலேசிக்கபபட்டதையு ஞ்சிலமோசஙகளுமமுனனறிவிக்கபபட டது.]

இபபோது * மெயயான செயதியை உனக்கறிவிபபேன * ௰, ௨௧.

௨. இதோ, இன்னம மூன்று இராசாக களபெர்சியாவில எழும்புவார்கள, அதின பிறகு நானகாம இராசாவாயிருபபவன எல லாரிலுமமகா ஐசுவரியசமபனனனுவான, அவனதன ஐசுவரியத்திற பலபபட்டபிற பாடு கிரேக்க இராசசியத்திறகுவிரோதமா க எலலாவறறையும எழுபபுவான.

௩. ஆனாற பராக்கிரமமானஒரு இராசா எழும்பிப்பலனுள்ள ஆளுகையாயாணடுத னக்குச்சரிப்போனபடிசெயவான.

௪. அவன எழும்பின பிறபாடேவெ ன்றால, அவனுடைய இராசசியம உடை நதுபோய, * வானத்தின நானகு காறறுத் திசைகளிறபகிரபபடும,ஆனால அவனுடை யசந்ததியாருக்கலல, அவன் ஆணடிருந்த ஆளுகைபபடியுமிராது ஏனெனில அவனு டையஇராசசியமபிடுஙகுணடு, அவர்கள லலாதவேறேபேர்க ளிடமாயததாணடிப போம. * ௭, ௬. ௮, ௮.

௫. அவனுடையபிரபுக்களில ஒருத்தனு மதெறகத்து இராசாபலத்துககொளளு வான,ஆனால அவனைபபார்ககிலுமவேறொ ருத்தனபலத்துககொணடு ஆளுவான், இவ னுடைய ஆளுகைபலனுளள ஆளுகையாயி ருக்கும

௬. அவர்கள சிலவருஷஙகளுககுபபிற பாடு ஒருவருக்கொருவர் உறவுகட்டுவார்க ள. சரிசமானமாககுமபடிக்குத்தெறகத்து இராசாவினகுமாரத்தி வடக்கத்து இரா சாவணடைக்கவருவாள, ஆனாற்புயபலன அவளுக்கிராதேபோம, அவனும அவனு டையபுயமுமநிலைநிறபதுமிலலை, அவளும அவளை அழைத்துவந்தவர்களும, அவளைப பெறறவனும அவளை அக்காலஙகளிறபலப படுத்தினவனும ஒபபுககொடுக்கபபடுவார் கள.

௭. ஆனாலஅவளுடையதேவர்களினகிளை யாகிய ஒருத்தன தனதானத்திலெழும்பி இராணுவத்தோடே வந்து வடக்கத்து இராசாவின அரணிப்புகளுக்குட்பிரவேசி த்துத்தானவேணடியதை அவைகளிறசெ பதுபணணிககொணடு,

௮. அவர்களுடைய தேவர்களையுமமுத லாய அவர்களுடைய அதிபதிகளையும அவ ர்களுடையவிலையேறபபெறற வெளளியும பொனனுமான பணடமபாடிகளையுங்கூட பபிடித்து எகிப்த்திறகுககொணடுபோயச் சிலவருஷஙகளமட்டும வடக்கத்து இரா சாவைபபார்ககிலும நிலைமையாய நிற பான.

௯. இவனதெறகத்து இராசாவின இரா சசியத்திறகுவிரோதமாகவந்தது, தனசீ மைக்குத்திருமபிபபோவான.

௰. ஆனால இவனுடையகுமாரர்யுத்தஞ கலந்து, பெரிய இராணுவஙகளின சேனை யைசகூட்டுவார்கள, இவர்களிலொருவன வரவேவந்து, பிரளயமாயககடந்து, திரு ம்பிவந்து, அவனுடைய அரணிப்பு மட்டும யுத்தங்கலந்துசேருவான.

௰௧. அபபோதுதெறகத்து இராசாகசீ மையாகிபபுறபபட்டு, வடக்கத்து இராசா வாகிய இவனோடே யுத்தமபணணுவான. இவன பெரியசேனையைபபடைககுநிறுத் தினாலும, இந்தசசேனை அவனகையிலொ ப்புககொடுக்கபபடும.

௰௨. இந்தசசேனைநீக்கபபட்டபடியி னாலே அவனுடைய இருதயம உயர்ந்துபோ ம, ஆனால அவன அநேகமாயிரமானபே ரை மடியவைத்திருந்தாலும, பலத்துக் கொளளாதேபோவான.

௰௩. ஏனெனிலவடக்கத்து இராசா திரு மபமுந்தியதிலும பெரியசேனையையெழு ந்துச சிலவருஷஙகளசெனறபோதுமகா இ ராணுவத்தோடும வெகுசமபத்தோடேயு ம வரவேவருவான.

௰௪. அக்காலஙகளில அநேகர் தெறக த்து இராசாவுககுவிரோதமாக எழும்பு வார்கள அபபோது உனசனத்திலுள்ள துணடரிக்ககாரரின புத்திரர் தரிசனத் தை நிறைவேறறத்தஙகளையுயர்த்தி விழு வார்கள.

௰௫. வடக்கத்து இராசாவந்து, அணை போட்டு, அரணிபபான் பட்டணஙகளைப பிடிபபான, தெறகத்து இராசாவின புய டலன்களும அவனதெரிந்துகொணடசன னம் நிலலாதேபோம நிறகிறதறகுபபல னுமிலலை.

௰௬. ஆகையால அவனுககுவிரோதமா கவருகிறவன தனககுசசரிப்போனபடியே லேசெயவான, இவனுககுமுனபாக நிற் நிறபவனிலலை இவன * சிங்காரமானதே சத்திலிறங்கியிருபபான, எலலாம இவன கைககுளஅகபபட்டிருக்கும. * ௮, ௯. ௧.

௰௭. தன் இராச்சியத்தின் வல்லமையோடே வரத் தானுந் தன்னோடேகூடச் செம்மைமார்க்கத்தாரும் வர, இவன் தன் முகத்தைத் திருப்பி, இப்படியே செய்து, பெண்பிள்ளையாகிய ஒரு குமாரத்தியை யிவன் அவளையழிக்கும்படிக்கு அவனுக்குக் கொடுப்பான், ஆனால் அவள் இதில் நிற்பது மில்லை இவனுக்காக அப்படிச் செய்வது மில்லை.

௰௮. பிற்பாடு இவன் தன் முகத்தைத் தீவுகளுக்கு நேராகத் திருப்பி, அநேகங்களைப் பிடித்துக்கொள்ளுவான். ஆனால் ஒரு சேனாபதி இவன் செய்கிற நிந்தையை யிவனிடத்தில் ஒப்பப்பண்ணுவதுமல்லாமல், இவன் செய்த நிந்தையினிமித்தம் இவனுக்குச் சரிக்குச்சரியுங் கட்டுவான்.

௰௯. ஆகையால் தன் முகத்தைத் தன் தேசத்தின் அரண்களுக்கு நேராகத் திருப்புவான், அவ்வேளையிடறி விழுந்து, காணப்படாமற் போவான்.

௨௰. இவன் பட்டத்திற் கோவென்றால், தண்டற்காரனைச் செழிப்பான இராச்சியத்தில் திரியப்பண்ணுகிற ஒருத்தன் எழும்புவான், கொஞ்சநாளுக்குள்ளுங் கோபமில்லாமலும் யுத்தமில்லாமலும் முறிக்கப்படுவான்.

விசேஷமாகச் சூரிய இராசாவான அந்தியோகு எப்பிவானே செய்யுங் காரியங்களும், அவன் எருசலேமிலுள்ள பரிசுத்த ஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலும் பாழுமாக்கிப் பராபரனுடைய சனத்தைச் சிலகாலமட்டும் மிகவுந் துன்பப்படுத்துஞ் செய்தியும் முன்னறிவிக்கப்பட்டது.

௨௧. இவன் பட்டத்திலோ வென்றால் கொஞ்ச எண்ணிக்கையாயிருக்கிற ஒருத்தன் எழும்புவான், இவனுக்கு இராச்சியபாரத்தின் மேன்மையைக் கொடாதிருப்பார்கள், ஆனாற் சாங்கோபாங்கமாய் வந்து, இச்சகம்பேசி, இராச்சியத்தைக் கட்டிக்கொள்ளுவான்.

௨௨. பிரளயமாய் வருகிற புயபலன்கள் இவனாலே பிரளயமாய் முறிக்கப்படும், உடன்படிக்கைப் பண்ணப்பட்ட தலைவனுங்கூடத்தானே.

௨௩. ஏனென்றால் அவனோடே உறவுகட்டிக்கொண்ட நாட்கள் முதல் இவன் கபடம் பண்ணிப்போயேறிக் கொஞ்சச் சனங்களோடே பலத்துப் போவான்.

௨௪. சீமை சுகவாழ்வோடு சம்பூரணத்தோடிருக்கையில், இவன் உட்பிரவேசித்துத் தன் பிதாக்களுந் தன் பிதாக்களின் பிதாக்களுஞ் செய்யாததைச் செய்வான். கொள்ளையிட்டுச் சூறையாடித் திரம்ப அவர்களுக்கிறைத்துப்பண்ணிட்டு அரண்களுக்கு விரோதமாகத் தனக்குள் நினைவுகளை நினைப்பான், அப்படிச் சிலகாலமட்டுமிருக்கும்.

௨௫. பின்னையுந் தெற்கத்தி இராசவுக்கு விரோதமாகப் பெரிய இராணுவத்தோடே போர்செய்யத் தன் வல்லமையையுந் தன் நெஞ்சையும் எழுப்புவான் அப்போது தெற்கத்தி இராசாவும் பலத்த பெரிய இராணுவத்தோடே யுத்தங்கலப்பான், ஆனால் அவன் நிற்கமாட்டான், ஏனென்றால் அவனுக்கு விரோதமாகச் சற்பனைகளை நினைப்பார்கள்.

௨௬. அவனுடைய போசனங்களைச் சாப்பிடுகிறவர்கள் அவனை முறியப்பண்ணுவார்கள், ஆகையால் இவனுடைய இராணுவம் பிரளயமாய் வரும் அநேகர் கொலையுண்டு விழுவார்கள்.

௨௭. இந்த இரண்டு இராசாக்களின் இருதயமும் பொல்லாப்புச் செய்வதற்கிருக்கும், ஒரே பந்தியிலிருந்து பொய்யைப் பேசிக்கொள்ளுவார்கள், ஆனால் அது வாய்ப்பதில்லை, ஏனென்றால் குறித்தகாலத்திற்கு முடிவு இன்னம் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும்.

௨௮. இவன் மகாசம்பத்தோடே தன் தேசத்திற்குத் திரும்பித் தன்னிருதயத்தைப் பரிசுத்த உடன்படிக்கைக்கு விரோதமாக வைத்து அதற்கானதைச் செய்து, தன் தேசத்திற்குத் திரும்பிப் போவான்.

௨௯. குறித்தகாலத்திலே திரும்பித் தெற்கிலே வருவான், ஆனால் இவனுடைய பின்நடப்படி இவனுடைய முன்நடப்படியைப் போலிருப்பதில்லை.

௩௰. இவனுக்கு விரோதமாகக் கித்தீந்தேசத்தின் கப்பல்கள் வரும், அதினால் இவன் மனநோவடைந்து, திரும்பிப்போய்ப் பரிசுத்த உடன்படிக்கைக்கு விரோதமாக மனமடிவாகி, அதற்கானதைச் செய்து, பரிசுத்த உடன்படிக்கையை விட்டவர்களைத் திரும்பக் கவனித்துக்கொண்டிருப்பான்.

௩௧. அவனாலே வைக்கப்படும் புயபலன்கள் இறங்கியிருந்து, அரணான பரிசுத்த ஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி, * அனுதினப்பலியைத் தள்ளிப் பாழ்க்கடிக்கும் அருவருப்பையங்கே வைப்பார்கள். * அ, ௰௧.

௩௨. உடன்படிக்கைக்குத் துரோகிகளாயிருக்கிறவர்களை இச்சகப் பேச்சுகளினாலே கள்ளமார்க்கத்தாராக்குவான், தங்கள் பராபரனையறிந்திருக்கிற சனமோவென்றால் திடன்கொண்டு அதற்கானபடி செய்வார்கள்.

௩௩. சனத்தின் புத்தியைக் கற்றுக்கொடுக்கிறவர்கள் அநேகரை யுணர்வுடையப்பண்ணுவார்கள், அநேகநாள்மட்டும் பட்டயத்தாலும் அக்கினியாலுஞ் சிறையிருப்பாலுங் கொள்ளையாலும் விழுவார்கள்.

௩௪. இப்படியவர்கள் விழுகையிற் கொஞ்

ச ஒத்தாசையாற் சகாயம் அடைவார்கள்; அப்போது அநேகர் இச்சகவார்த்தைகளோடே அவர்களை யொட்டிக்கொள்ளுவார்கள்.

௩௫. புத்திமான்களைப் * புடமிடுகிறதற்குஞ் சுத்திகரிக்கிறதற்கும் வெண்மையாக்குகிறதற்கும், அவர்களிற் சிலர், அந்த முடிவுகாலமட்டும் விழுவார்கள், ஏனென்றால் அதற்குக் குறித்தகாலம் வர இன்னுஞ்செல்லும். * ௧. பேது. ௧, ௬. ௭.

கிறிஸ்துவுக்குச் சத்துராளியின் கடைசிக்காலத்தைக்கூற நோக்குந் தீர்க்கதரிசனம்.

௩௬. இராசா தனக்குச் சரிப்போனபடி செய்து, * தன்னை யுயர்த்திக்கொண்டு தேவனென்னப்பட்டவெல்லாவற்றிலுந் தன்னைப் பெரியவனாக்கி, † தேவாதி தேவனுக்கு விரோதமாக ஆச்சரியமான காரியங்களைப் பேசுவான், சினந்தீருமட்டும் அவனுக்குக் கைகூடியும் வரும். ஏனென்றால் தீர்மானிக்கப்பட்டது நடந்தேறும். * ௨. தெசலோ. ௨, ௪. † ௭, ௮, ௨௫. அறிவி ௰௩, ௫. ௶

௩௭. அவன் தன் பிதாக்களின் தேவர்களைக் கவனிக்காமலும் ஸ்திரீகளின் சிநேகத்தையாகிலும் எந்தத் தேவனையாகிலுங் கவனிக்காமலும், எல்லாத்திற்குந் தன்னைப் பெரியவனாக்கி,

௩௮. அரணிப்புகளின் தேவனைத் தன்னுடைய தானத்திலே கனம்பண்ணித் தன் பிதாக்களறியாத ஒரு தேவனைப் பொன்னினாலும் வெள்ளியினாலும் இரத்தினங்களினாலும் உச்சிதமானவஸ்துக்களினாலுங் கனம்பண்ணுவான்.

௩௯. அவன் அரணிப்பான கோட்டைகளுக்காகவும், அந்நிய தேவனுக்காகவுங் கூடச் செய்வதேதெனில், அவைகளையெண்ணிக்கொள்ளுகிறவர்களுக்கு மகாகனமுண்டாக்கி, அவர்களை அநேகரை யாளப்பண்ணி அவர்களுக்குச் சீமையைக் கிரயமாகப் பங்கிடுவான்.

௪௰. முடிவின்காலத்திலேயென்றால், தெற்கத்து இராசா அவனோடேகூட முட்டுக்குநிற்பான், ஆனால் வடக்கத்து இராசா இரதங்களோடுங் குதிரைக்காரரோடும் அநேகக் கப்பல்களோடும் அவன்மேற் கொந்தளிப்பாய் விழுந்து, தேசங்களுக்குட் பிரவேசித்து, அவைகளைப் பிரளயமாய் மூடிக்கடந்து,

௪௧. * சிங்காரமான தேசத்திலும் வருவான், அப்போது அநேகர் விழுவார்கள், ஆனால் ஏதோமும் மோவாபும் அம்மோன் புத்திரரிற் பிரதானமானவர்கள் அவன் கைக்குத் தப்பிப்போவார்கள். ௰௬, ௪ ௮, அதி ௯.

௪௨. அவன் தன் கைகளைத் தேசங்களின்மேல் பிடிக்க நீட்டுவான், எகிப்துதேசந் தப்புவதில்லை.

௪௩. எகிப்தினுடைய பொன்னும் வெள்ளியுமான ஐசுவரியங்களையும் உச்சிதமான எல்லாவஸ்துக்களையும் ஆண்டுகொள்ளுவான், லீபியரும் எத்தியோப்பியரும் அவனைப் பின்செல்லுவார்கள்.

௪௪. ஆனாற் கிழக்கிலும் வடக்கிலுமிருந்து வருஞ்செய்திகள் அவனைக் கலங்கப்பண்ணும், அப்போது அவன் அநேகரைப் பாழாக்கவுஞ் சங்காரம்பண்ணவும் மகா உக்கிரத்தோடே புறப்பட்டுப்போய்,

௪௫. தன் அரண்மனையின் கூடாரங்களைச் சமுத்திரங்களுக்கு நடுவே சிங்காரமான பரிசுத்த பருவதத்தண்டையிலே போடுவான், ஆனால் அவன் தன் முடிவுக்கு வந்திருப்பான், அவனுக்கொத்தாசை பண்ணுவாருமில்லை.

## ௰௨. அதிகாரம்.

[அப்பாலுங் கடைசிக்காலத்தை நோக்குந் தீர்க்கதரிசனம்.]

உன் சனத்தின் புத்திரருக்காக நிற்கிற பெரிய பிரபுவாகிய * மிகாவேல் அக்காலத்திலே எழும்புவான், ஏனெனில் ஒரு சாதி தோன்றினது முதற்கொண்டு அக்காலமட்டும் உண்டாயிராத இக்கட்டுக்காலமாயிருக்கும், அக்காலத்திலே உன் சனம் † விடுவிக்கப்படும், புஸ்தகத்திலெழுதியிருக்கிறவர்களாகக் காணப்பிடிக்கப்படுகிற அனைவருந்தானே. * ௰, ௰௩. அறிவி. ௰௨, ௭. † எரேமி. ௩௰, ௭.

௨. பூமியின் தூளிலே நித்திரைபண்ணுகிறவர்களில் * அநேகர், † சிலர் நித்திய சீவனுக்குஞ் சிலர் நித்திய நிந்தைக்கும் இகழ்ச்சிக்கும், விழித்தெழுந்திருப்பார்கள். * அறிவி. ௨௰, ௪. † யோவா. ௫, ௨௯.

௩. * புத்தியைக் கற்றுக்கொடுத்தவர்கள் ஆகாயமண்டலத்தின் ஒளியைப்போலேயும், அநேகரை நீதிக்குள்ளாக்கினவர்கள் நட்சத்திரங்களைப்போலேயும் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாய்ப் பிரகாசித்திருப்பார்கள். மத்தே ௰௩, ௪௩.

௪. தானியேலாகிய நீயோவென்றால் முடிவின்காலமட்டும் இந்த வார்த்தைகளை * புதையொருளாக வைத்து வைத்திந்தப் புஸ்தகத்தை முத்திரைபோடு, அப்போது அநேகர் ஓடிவந்தாராய்வார்கள் அறிவும் பெருகிப்போமென்றான். * ௮, ௨௬. அறிவி. ௨௨, ௰.

௫. அப்போது இதோ, தானியேலாகிய நானே வேறே இரண்டுபேரை, ஒருத்தனை ஆற்றங்கரைக்கு இக்கரையிலும் ஒருத்தனை ஆற்றங்கரைக்கு அக்கரையிலும் நிற்கக்கண்டேன். * ௰, ...

௬. இவர், * வெள்ளைப்புடவை யுடுப்புகளைத்தரித்தவரும், † ஆற்றினுடைய தண்ணீர்களின் மேலே நிற்கிறவருமாகிய புருஷனை நோக்கி, இந்தப் புதுமைகளின் முடிவுவர எத்தனைநாள் செல்லுமென்று கேட்டான். * ௰, அதி. ௫. † ௮, அதி. ௰௬.

௭. அப்பொழுது வெள்ளைப்புடவையுடுப்புகளைத்தரித்தவரும் ஆற்றினுடைய தண்ணீர்களின் மேலே நிற்கிறவருமாகிய புருஷனுடைய உத்தரவைக் கேட்டேன், அவர் * தம்முடைய வலதுகரத்தையுந் தம்முடைய இடதுகரத்தையும் வானத்திற்கேறெடுத்து, † ஒருகாலமுங் காலங்களும் அரைக்காலமும் போகுமட்டுஞ் செல்லும், பரிசுத்தசனத்தினுடைய வல்லமைச் சிதறடிக்குதல் முடிந்திருக்கும் அப்போதே, இவைகளெல்லாம் நிறைவேறித் தீருமென்று, என்றென்றைக்கும் பிழைத்திருக்கிறவர்பேரிலே ஆணையிட்டார். * அறிவிப்பு. ௰, ௫. ௬. ௭, ௨௫. † அறிவிப்பு. ௰௧, ௯ ௰௨. ௬, ௰௪.

௮. நான் அதைக் கேட்டேன், உணராமலிருந்தேன், ஆகையால் என்னாண்டவனே, இவைகளின் முடிவு என்னமாயிருக்குமென்று கேட்டேன்.

௯. அவர் சொன்னதாவது, தானியேலே போய்விடு, ஏனென்றால் இந்த வார்த்தைகள் முடிவின்காலமட்டும் * புதைபொருளாக வைக்கப்பட்டும் முத்திரித்துமிருக்கும். * ௪. வச.

௰. அநேகர் * சுத்தமும் வெண்மையுமாக்கப்பட்டுப் புடமிடப்படுவார்கள். ஆகாதவர்களோவென்றால் துர்மார்க்கமாய் நடப்பார்கள், † ஆகாதவர்களெல்லாரும் அதையுணராதே போவார்கள், புத்திமான்களோ அதையுணருவார்கள். * ௰௧, ௩௫. † அறிவி. ௨௨, ௰௧.

௰௧. * பாழக்கடிக்கும் அருவருப்பை வைக்கிறதற்காக அன்றாடப்பலி தள்ளப்பட்டகாலமுதற்கொண்டு ஆயிரத்திருநூற்றுத்தொண்ணூறு நாளுண்டு. * ௰௧, ௩௧. மத்தே. ௨௪, ௰௫.

௰௨. ஆயிரத்து முந்நூற்று முப்பத்தைந்து நாள்மட்டுங் காத்திருந்து சேர்பவன் பாக்கியவான்.

௰௩. நீயோவென்றால் முடிவுவருமட்டும் போயிரு, ஏனெனில் நீயிளைப்பாறிக்கொண்டிருந்து நாட்களின் முடிவிலே உன் சுதந்தரவீதத்திற்கு எழுந்திருப்பாயென்றான்.

தானியேலின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# ஓசெயாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

விக்கிரக ஆராதனையால் கர்த்தரைவிட்டுச் சோரம்போன இஸ்ரவேலருக்கு அடையாளமாக ஓசெயா தேவகற்பனையின்படியே ஒருசோரஸ்திரீயை விவாகம்பண்ணினதும், பிறந்த பிள்ளைகளுக்குக் கர்த்தர் இஸ்ரவேலைத் தாம் வெறுத்துத்தள்ளுவோமென்றதற்கடையாளமான பேர்களையிடச்சொன்னதும்.]

உசியா, யோத்தாம், ஆகாஸ், இஸ்கியாவென்ற யூதாவுடைய இராசாக்களின் நாட்களிலும் யோவாசின் குமாரனாகிய * எரோபெயாம் என்ற இஸ்ரவேலுடைய இராசாவின் நாட்களிலும், பெயேரியின் குமாரனாகிய ஓசெயாவுக்குண்டான கர்த்தருடைய வசனம். * ௨. இராசா. ௰௪, ௨௩.

௨. கர்த்தர் ஓசெயாவைக்கொண்டு உரைக்கத் துவக்கும்போது, கர்த்தர் ஓசெயாவுடனே, நீ போய், ஒருசோரஸ்திரீயைப் புருஷசோரமார்க்கத்திற்பிறந்த பிள்ளைகளையுமுன்னிடமாகச் சேர்த்துக்கொள், ஏனெனில் தேசங் கர்த்தரைப் பின்பற்றுகிறதைவிட்டுச் சோரம் போகவே போகிறதென்றார்.

௩. அவன் போய்த் திப்லாயிமின் குமாரத்தியாகிய கோமேரைச் சேர்த்துக்கொண்டான், அவள் கர்ப்பந்தரித்து அவனுக்கொரு குமாரனைப் பெற்றாள்.

௪. அப்பொழுது கர்த்தர் அவனோடே சொன்னதாவது, இவனுக்கு எஸ்ரேயேல் என்று பேரிடு, ஏனெனில் இன்னங்கொஞ்சக்காலத்திலே நாம் ஏகூவின் வீட்டாரிடத்திலே எஸ்ரேயேலின் இரத்தப்பழியை விசாரித்து, இஸ்ரவேல் வீட்டாரின் இராச்சியபாரத்தை ஓய்ப்பண்ணுவோம். * ௨. இராசா. ௰, ௰—௰௨.

௫. அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், எஸ்ரேயேலின் பள்ளத்தாக்கிலே இஸ்ரவேலின் வில்லையுடைப்போமென்றார்.

௬. அவள் திரும்பக் கர்ப்பந்தரித்து ஒரு குமாரத்தியைப் பெற்றாள், அப்போது

டைய ஓய்வுநாட்களையுஞ் சகல கூடிவருகிற திருநாட்களையும், அவளுடைய எல்லா ஆசரிப்புகளையும் ஒழியப்பண்ணுவோம்.

௰௨. என் சிநேகிதர் எனக்குக் கொடுத்த பணையமாயிருக்கிறதென்று, அவள் சொன்ன அவளுடைய திராட்சச்செடிகளையும் அவளுடைய அத்திமரங்களையும் நாம் பாழாக்கி, அவைகளைக் காடாயப்போகப் பண்ணுவோம், வெளியின் ஜீவன்கள் அவைகளைத் தின்னும்.

௰௩. அவள் பாகாலர்களுக்குத் தூபங்காட்டி, தன் நெற்றிப்பட்டங்களாலும் தன் ஆபரணங்களாலுந் தன்னைச் சிங்காரித்துக் கொண்டு, தன் சிநேகிதரைப் பின்தொடர்ந்து, நம்மை மறந்துபோன நாட்களினிமித்தம் அவளை விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

இஸ்ரவேல் மனந்திரும்பினபோது, அடையப்போகிற மகிமையான பாக்கியத்தின் இன்பமான பிரசங்கம்.

௰௪. ஆனதுகொண்டு, இதோ, நாம் அவளை நயம்பண்ணி, அவளை வனாந்தரத்தின் வெளிக்கு நடத்திப்போய், அவளோடே * பட்சமாய்ப் பேசி; * ஏசாயா ௪௰,௨. செப்பனி. ௩, ௧௪.

௰௫. அங்கேயிருந்து அவளுக்கு அவளுடைய திராட்சத்தோட்டங்களையும், நம்பிக்கையின் வாசலாக ஆகோரின் பள்ளத்தாக்கையுங் கொடுப்போம், அப்பொழுது அவள் அங்கே தன் இளவயதின் நாட்களிலும் * தான் எகிப்து தேசத்திலிருந்து வந்த நாளிலும் செய்ததுபோலே பாடுவாள். * ௨. மோ. ௰௫, ௧. உ௧.

௰௬. அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால், நீ நம்மையினி என் பாகாலே என்று சொல்லாமல் என் புருஷனே என்று சொல்லுவாயென்று கர்த்தர் உரைக்கிறார்.

௰௭. பாகாலர்களுடைய நாமங்களை அவள் வாயில் அற்றுப்போகப் பண்ணுவோம், இனி அவைகளின் பேரைச் சொல்லி அவைகளை நினைக்கிறதில்லாதே போகும்.

௰௮. அக்காலத்திலே நாம் அவர்களுக்காக * வெளியின் மிருகங்களோடும் ஆகாயத்துப் பறவைகளோடும் பூமியின் ஊர்வனங்களோடும், ஒரு உடன்படிக்கையைப் பண்ணி, † வில்லையும் பட்டயத்தையும் யுத்தத்தையுந் தேசத்தில் இராதபடிக்கு முறித்து, அவர்களைச் சுகமாயப் படுத்துக்கொண்டிருக்கப் பண்ணுவோம். * ஏசா. ௰௧, ௬. † சங். ௪௬, ௰.

௰௯. * நித்திய விவாகத்திறகென்றுன்னை நமக்கு நியமித்துக் கொள்ளுவோம், நீதியும் நியாயமுங் கிருபையும் உருக்க இரக்கமுமாய் உன்னை நமக்கு நியமித்துக்கொள்ளுவோம். * சங். ௪௫, ௰. ஸ்ரீ ஏபே. ௫, உ௫. உ௬.

௨௰. விசுவாசத்தாலே உன்னை நமக்கு நியமித்துக்கொள்ளுவோம், * நீ கர்த்தரை யறிந்துகொள்ளுவாய். * எரேமி. ௩௧, ௩௩. ௩௪.

௨௰௧. அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால், நாம் மறுமொழி கொடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார், நாம் வானங்களுக்கு மறுமொழி கொடுப்போம், அப்போது அவைகள் பூமிக்கு மறுமொழி கொடுக்கும்.

௨௰௨. அப்போது பூமி தானியத்திற்கும் திராட்சரசத்திற்கும் எண்ணெயிற்கும் மறுமொழி கொடுக்கும், அப்போது இவைகள் யெஸ்ரயேலுக்கும் மறுமொழி கொடுக்கும்.

௨௰௩. நாம் அவளை நமக்குப் பூமியிலே விதைப்பாடாக்கி, இரக்கம் பெறாதிருந்தவளுக்கிரங்கி, * நம்முடைய சனமல்லாதிருந்தவர்களை நோக்கி, நீ நம்முடைய சனமென்று சொல்லுவோம், அது என் பராபரனே யென்று சொல்லுமென்றார். * ரோமர். ௯, உ௫.

## ௩. அதிகாரம்.

[இஸ்ரவேல் புத்திரர் கடைசி நாட்களிற் கிறிஸ்துவண்டைக்கு மனந்திரும்புவது காண்பிக்கப்பட்டது.]

அந்நிய தேவர்களை நோக்கித் திவிட்சப்பழ ரசமுள்ள பாத்திரங்களைச் சிநேகிக்கிறவர்களான இஸ்ரவேல் புத்திரர் பேரிலே கர்த்தர் வைத்திருக்கிற சிநேகத்தின்படி, நீ இன்னம் போய், வேறொருத்தனாலே சிநேகிக்கப்பட்டவளும் விபசாரியுமாய்ப் போன பெண்சாதியைச் சிநேகித்துக் கொண்டிருவென்று கர்த்தர் என்னோடே சொன்னார்.

௨. அப்போது நான் அவளை யெனக்குப் பதினைந்து வெள்ளிக்காசுக்கும் ஒன்றரைக் கலம் வாற்கோதுமைக்குங் கொண்டு,

௩. அவளுடனே நீ வேசித்தனம் பண்ணாமலும், ஒருத்தனைச் சேராமலும் அநேக நாள் எனக்கிருப்பாயாக, உனக்கு நானுமிருப்பேனென்றேன்.

௪. ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரர் அநேக நாள் இராசாவில்லாமலும் பிரபுவில்லாமலும் பலியில்லாமலுஞ் சிலையில்லாமலும் ஆசாரியசால்வையுஞ் சுருபங்களில்லாமலுமிருப்பார்கள்.

௫. * பிறபாடு இஸ்ரவேல் புத்திரர் திரும்பித் தங்கள் பராபரனாகிய கர்த்தரையுந் † தங்களிராசாவாகிய தாவீதையுந் தேடிக் கர்த்தரண்டைக்கும் அவருடைய நன்மையண்டைக்குங் கடைசிநாட்களில் அஞ்சி வருவார்கள். * ரோம. ௰௧, உ௫—௩௨. † எசேக். ௩௪, உ௩. உ௪.

செல்லும், அதேதென்றால் மிஸ்பாவுக்குக் கண்ணியும், தாபோரின்மேல் விரிக்கும் வலையுமானீர்கள்.

௨. நீ பாவப்பலிகளையடிக்கிறதிலே ஆழமாயிறங்கியிருக்கிறார்கள். அவர்களெல்லாரையும் நாம் தண்டிக்கிறவராயிருப்போம்.

௩. எப்பிராயீமை நாம் அறிவோம். இஸ்ரவேல் நமக்கு மறைவானதல்ல, எப்பிராயீமே, இப்போது சோரம்போனாயே, இஸ்ரவேல் தீட்டுப்பட்டதே.

௪. தங்கள் கிரியைகளைத் தங்கள் பராபரனண்டைக்குத் திருப்பவத்தக்கதாக நோக்காதிருக்கிறார்கள், ஏனென்றால் * வேசித்தன ஆவி அவர்கள் உள்ளத்திலிருக்கிறது, கர்த்தரை யறியார்கள். * ௪. ௰௨.

௫. இஸ்ரவேலின் அகந்தை யவர்கள் முகத்திற்கு முன்பாகச் சாட்சியிடுகிறது, ஆகையால் இஸ்ரவேலும் எப்பிராயீமுந் தங்கள் அக்கிரமத்தினால் இடறுண்டுவிழுவார்கள், அவர்களோடேகூட யூதாவும் இடறுண்டு விழும்.

௬. அப்போது அவர்கள் கர்த்தரைத் தேடும்படிக்குத் தங்கள் ஆடுகளோடுந் தங்கள் மாடுகளோடும் வந்தும் * கண்டுபிடியார்கள், அவர்களைவிட்டு விலகினார். * வாக்கி. ௧, ௨௮.

௭. கர்த்தருக்கு விரோதமாகத் துரோகம்பண்ணினார்கள், அதேதென்றால் அந்நிய பிள்ளைகளைப் பெற்றார்கள், இப்போது மாதப்பிறப்பு அவர்களையும் அவர்கள் பங்குபத்திகளையுங் கூடப் பட்சிக்கும்.

௮. கிபெயாவிலே எக்காளத்தையும் இராமாவிலே பூரிகையையும் ஊதுங்கள், பெஞ்சமீன் கோத்திரத்தாரே உங்களுக்குப் பின்புறமாகிய பெத்தவேனிலே கதறுங்கள்.

௯. தண்டிப்பின் நாளிலே எப்பிராயீம் பாழாம். நிச்சயமாய் வரப்போகிறதை இஸ்ரவேல் கோத்திரங்களுக்குள்ளே அறிவிக்கிறோம்.

௰. யூதாவின் பிரபுக்கள் * எல்லைகளைப் பெயர்க்கிறவர்களுக்கொப்பானார்கள், அவர்கள்மேல் நம்முடைய சினத்தைத் தண்ணீரைப்போல ஊற்றிப்போடுவோம்.

* ௫. மோசே. ௰௯, ௰௪. ௨௭, ௰௭.

௰௧. எப்பிராயீம் ஒடுக்குண்டு நியாயமாய் நொறுக்கப்பட்டுப்போகிறான், ஏனென்றால் ஆகாத கற்பனையை மனதாரப் பின்பற்றிப்போனான்.

௰௨. நாம் எப்பிராயீமுக்குப் பொட்டரிப்பாகவும், யூதாவின் வீட்டுக்குச் சொத்தைப் பிடிப்பாகவுமிருப்போம்.

௰௩. எப்பிராயீம் தன் வியாதியையும் யூதா தன் காயத்தையுங் கண்டபோது, எப்பிராயீம் அசூரண்டைக்குப் போய் யாரேப் இராசாவண்டைக்கு ஆளனுப்பினான், அவனோவென்றால் உங்களைச் சொஸ்தமாக்கவும் உங்களிலிருக்கிற காயத்தை ஆரோக்கியம் பண்ணவுங்கூடாது.

௰௪. ஏனென்றால் நாம் எப்பிராயீமுக்குச் சிங்கமாகவும், யூதாவின் வீட்டாருக்கு இளஞ்சிங்கமாகவுமிருப்போம், நாம் நாமே பீறிப்போட்டுப் போய்விடுவோம், தப்புவிப்பாரில்லாமல் எடுத்துக்கொண்டு போவோம்.

௰௫. அவர்கள் தங்கள் குற்றங்களையறிந்து நமது முகத்தைத் தேடுமட்டும் நாம் போய் நம்முடைய தானத்திற்குத் திரும்புவோம் * தங்களுக்கு இக்கட்டான காலத்திலே நம்மைக் கருத்தாய்த் தேடுவார்கள்.

* ஏசாயா. ௨௬, ௰௬.

## ௬. அதிகாரம்.

[வருங்காலத்தில் யூதர் கிருபையுள்ள பராபரனண்டைக்குத் திரும்புஞ் செய்தியையும், நிகழ்காலத்திலே யவர்களிடத்திலிருக்கிற குணப்படாமையையுந் துர்மார்க்கத்தையுங் காண்பிக்கிறது.]

கர்த்தரண்டைக்குத் திரும்புவோம் வாருங்கள், ஏனென்றால் * அவர் நம்மைப் பீறிப்போட்டார், அவர் நம்மைக் குணமாக்குவார், அடித்தார், நம்முடைய காயங்களைக் கட்டுகிறவருமாயிருப்பார். * ௫, அதி. ௰௪.

௨. இரண்டுநாளுக்குப் பிறபாடு * நம்மை உயிர்ப்பிப்பார், மூன்றாம் நாளிலே நம்மை எழுப்புவார், அப்போது அவருக்கு முன்பாகப் பிழைப்போம். * ௫ மோசே. ௩௨, ௩௯. எசெக்கி. ௩௭, அதி. ௩.

௩. அப்போது நாம் அறிவடைந்து கர்த்தரை அறியத் தொடர்ந்துபோவோம், விடியற்கால வெளுப்பைப்போலே அவர் வெளிப்பிரவேசிக்குதல் ஆயத்தப்பட்டிருக்கும், மழையைப்போலே நிலத்தின்மேல் இறங்கின பின்மாரியைப்போலேதானே நம்மண்டைக்கு வருவார்.

௪. எப்பிராயீமே உனக்கென்ன செய்வோம்? யூதாவே உனக்கென்ன செய்வோம்? உங்கள் சன்மார்க்கம் விடியற்காலத்தின் மேகத்தைப்போலேயுங் காலமே யகன்றுபோய்விடுகிற பனியைப்போலேயுமிருக்கிறது.

௫. ஆகையால் தீர்க்கதரிசிகளைக்கொண்டு வெட்டுகிறோம், நமது வாயின் வார்த்தைகளைக்கொண்டு அவர்களைக் கொன்றுபோடுகிறோம், அதின்பிறகு உன் நியாயங்கள் வெளிச்சத்தைப்போலிருக்கும்.

௬. ஏனென்றால் * பலியையல்ல இரக்கத்தையுந் தகனபலிகளைப் பார்க்கப் பராபரனின் அறிவையும் விரும்புகிறோம். * ௧. சாமு. ௰௫, ௨௨. மத்தே. ௯, ௰௩. ௰௨, ௭.

௭. அவர்களோவென்றால் ஆதாமைப்போல உடன்படிக்கையை மீறி, அங்கே நமக்கு விரோதமாகத் துரோகம்பண்ணினார்கள்.

௮. கிலெயாத் அக்கிரமஞ்செய்பவர்களின் பட்டணம், அது இரத்தக்காலடிகளால் மிதிக்கப்பட்டிருக்கிறது.

௯. பறிகாரரின் கூட்டங்கள் ஒருத்தனுக்குக் காத்திருப்பதுபோலே, சீகேமுக்குப் போகிறவழியிலே கொலைபாதகஞ்செய்கிற ஆசாரியரின் கூட்டமிருக்கிறது, தோஷமான காரியங்களையே செய்கிறார்கள்.

௰. திடுக்கிடப்பட்டத்தக்க காரியத்தை இஸ்ரவேல் வீட்டாரிலே கண்டோம், அங்கே எப்பிராயீமின் வேசித்தனமுண்டு, இஸ்ரவேல் தீட்டுப்பட்டுப்போச்சுது.

௰௧. ஆகிலும் நாம் நமது சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யூதாவுனக்கு அறுப்புக்காலத்திற்குக் காரணமாயிருக்கும்.

## ௭. அதிகாரம்.

[இஸ்ரவேலின்பாவங்களுக்கு வருந்தண்டனையறிவிக்கப்படும்.]

நாம் இஸ்ரவேலைக் குணமாக்க இருக்கையில், எப்பிராயீமின் அக்கிரமமுஞ் சமாரியாவின் பொல்லாப்புகளும் வெளிப்படுகிறது, ஏனென்றால் வஞ்சனைசெய்கிறார்கள், உள்ளே திருடன் வருகிறான், வெளியே பறிகாரரின் கூட்டங்கொள்ளையிடுகிறது.

௨. தங்கள் பொல்லாப்பையெல்லாம் நினைத்திருக்கிறோமென்று அவர்கள் தங்கள் நெஞ்சத்திற் சிந்திக்கிறதில்லை, இப்போதும் அவர்களுடைய கிரியைகள் அவர்களைச் சூழ்ந்துகொண்டு நமது முகத்திற்கெதிரேயிருக்கிறது.

௩. இராசாவைத் தங்கள் பொல்லாப்பினாலும், பிரபுக்களைத் தங்கள் பொய்களினாலுஞ் சந்தோஷப்படுத்துகிறார்கள்.

௪. அவர்களெல்லாரும் விபசாரக்காரர், அப்பஞ்சுடுகிறவனால் எரியிடப்படுகிற அடுப்பைப்போலிருக்கிறார்கள், மாவைப் பிசைந்து முத்தறக்கொண்டு அது உப்பிப்போகுமட்டும் அனலையெழுப்பாமல் ஓய்ந்திருக்கிறான்.

௫. நம்முடைய இராசாவின் நாளென்று சொல்லிப் பிரபுக்களவனைத் திராட்சப்பழ இரசத்துருத்திகளால் நோஞ்சலாக்குகிறார்கள், சரசக்காரரோடேகூட அவன் தன் கையை நீட்டுகிறான்.

௬. அவர்கள் பதிவிருக்குந்தறுவாயிலோவென்றால் தங்களிருதயத்தை அடுப்பைப்போலவைக்கிறார்கள், அவர்களில் அடுப்பெழுட்டுகிறவன் இராமுழுதுந்தூங்குகிறான், காலமேயோவென்றால் அது சுவாலைவிட்டு அக்கினியாயெரிகிறது.

௭. அவர்களெல்லாரும் அடுப்பைப்போல அனலாகித் தங்கள் நியாயாதிபதிகளைப் பட்சிக்கிறார்கள், அவர்களுடைய இராசாக்களெல்லாரும் விழுகிறார்கள், அவர்களில் நம்மை நோக்கிக் கூப்பிடுகிறவனில்லை.

௮. எப்பிராயீம் சனசனங்களோடே கலந்தான், எப்பிராயீம் திருப்பப்படாதபோன அப்பம்.

௯. அந்நியர் அவனுடைய பலத்தைத் தின்னுகிறார்கள், அவனோ அதையறியான், நரையும் அவனில் தெளித்திருக்கிறது, அவனோ அதையறியான்.

௰. இஸ்ரவேலின் அகந்தை அவர்களுக்கெதிரே முன்பாகச் சாட்சியிட்டாலும், அவர்கள் தங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பாமலும், இதிலெல்லாம் அவரைத் தேடாமலும் போகிறார்கள்.

௰௧. எப்பிராயீம் பேதையான புறாவைப்போலிருக்கிறான், புத்தியில்லை, எகிப்தனைக் கூப்பிடுகிறார்கள், அசூரியனண்டைக்குப் போகிறார்கள்.

௰௨. அவர்கள் போனால், * நமது வலையை அவர்கள்மேல் வீசுவோம், அவர்களை ஆகாயத்துப் பறவைகளைப்போலே கீழ்விழப்பண்ணுவோம், அவர்களுடைய சபைக்குக் கேட்கப்பட்டதின்படியே யவர்களைத் தண்டிப்போம். * ௨. இராசா. ௰௭, ௪. ௬.

௰௩. அவர்கள் நம்மைவிட்டு அலைந்து திரிகிறபடியினாலே அவர்களுக்கையோ, அவர்களுக்குக் கேடுவரும், ஏனென்றால் நமக்கு விரோதமாகத் துரோகம்பண்ணினார்கள், நாம் அவர்களை மீட்டிருந்தும் அவர்கள் நமக்கு விரோதமாகப் பொய்களைப் பேசுகிறார்கள்.

௰௪. அவர்கள் தங்கள் படுக்கைகளிலலறுகிறபோது, தங்களிருதயத்திலே நம்மை நோக்கிக் கூப்பிடுகிறதில்லை, அவர்கள் தானியத்திற்காகவுந் திராட்சப்பழ இரசத்திற்காகவுங்கூடி நம்மை வெறுத்து விலகிப்போகிறார்கள்.

௰௫. நாந்தண்டித்தோம், அவர்களுடைய புயங்களைத் திரும்பப் பலக்கவும்பண்ணினோம், ஆகிலும் நமக்கு விரோதமாகப் பொல்லாப்பு நினைக்கிறார்கள்.

௰௬. திரும்புகிறார்கள், ஆனால் உன்னதமானவரண்டைக்கல்ல, * கள்ளவில்லுக்கொப்பாயிருக்கிறார்கள். அவர்களுடைய பிரபுக்கள் தங்கள் நாவினுடைய சினத்தினிமித்தம் பட்டையத்தால் விழுவார்கள், இது எகிப்துத்தேசத்தைத்தொட்டு அவர்களுக்கு வரும் நிந்தை. * சங். ௭௮, ௫௭.

## ௮. அதிகாரம்.

[பாவஞ்செய்துகொண்டிருக்கிற இஸ்ரவேலின்மேற்கன ஆக்கினைவருவது.]

உன் வாயிலே எக்காளத்தை வைத்துக்கொள், பூராவிட்டார் நம்முடைய உடன்படிக்கையை மீறி நம்முடைய நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாகத் துரோகம்பண்ணினபடியினாலே, அவர்கள்மேல் கழுகைப்போலே பாய்ந்துவருகிறான். * எசாயா. ௫௮, ௧.

௨. எங்கள் பராபரனே, உம்மை அறிந்திருக்கிறோமென்று இஸ்ரவேலர் கூப்பிடுவார்கள்.

௩. ஆனால் இஸ்ரவேலர் நன்மையை வெறுத்துவிட்டார்கள், சத்துரு அவர்களைத் தொடருவான்.

௪. அவர்கள் இராசாக்களை வைத்துக்கொண்டார்கள் ஆனால் நம்மாலேயல்ல, பிரபுக்களை வைத்துக்கொண்டார்கள் ஆனால் நாமறியோம், அவர்கள் வேரறுப்புண்டுபோகும்படிக்குத் தங்கள் வெள்ளியினாலும் தங்கள் பொன்னினாலும் தங்களுக்கு விக்கிரகங்களைச் செய்வித்தார்கள்.

௫. சமாரியாவே, உன் கன்றுக்குட்டி உன்னை ஒழித்துவிடுகிறது நம்முடைய கோபம் அவர்கள்மேல் மூண்டது. எத்தனை நாள் சுத்தாங்கமடையமாட்டாதிருப்பார்கள்?

௬. ஏனெனில் அதுதானும் இஸ்ரவேலருடைய செய்கை, தட்டான் அதைச் செய்தான், அது தேவனல்லவே, ஏனென்றால் சமாரியாவின் கன்றுக்குட்டி துண்டுகளாகப்போம்.

௭. ஏனென்றால் காற்றை விதைத்துப் பெருங்காற்றை அறுக்கிறார்கள், விளைச்சல் அவர்களுக்கில்லை, முளையானது மாவைக்கொடுக்கிறதாவாகில், அல்லவென்று வந்தாலும் அந்நியர் அதை முழுங்குவார்கள்.

௮. இஸ்ரவேல் முழுங்கப்படுகிறது, இனிப் புறச்சாதிகளுள்ளே * விரும்பப்படாத பாத்திரத்தைப்போலிருப்பார்கள்.
 * சங்கீ. ௩௧, ௰௩.

௯. ஏனெனில் அவர்கள் தனித்துத் திரிகிற காட்டுக்கழுதையைப்போல * அசூரியனண்டைக்குப் போயேறினார்கள், எப்பிராயீமர் சிநேகிதரைக் கூலிபொருந்திக்கொண்டார்கள். ௫, அதி. ௰௩.

௰. ஆனால் அவர்கள் புறச்சாதியாரைக் கூலிபொருந்திக்கொண்டாலும் இப்போது நாம் அவர்களைக் கூட்டுவோம், பிரபுக்களின் இராசாசுமத்தினு சுமையினாலே அவர்கள் குறுகிப்போகத்துவக்குவார்கள்.

௰௧. ஏனெனில் எப்பிராயீமர் பாவஞ்செய்வதற்கான பலிபீடங்களைப் பெருகப்பண்ணினார்கள், பலிபீடங்கள் அவர்களுக்குப் பாவஞ்செய்வதற்காயிற்று.

௰௨. நம்முடைய வேதத்தின் மகத்துவங்களை அவர்களுக்கு எழுதிக்கொடுத்தோம், அவைகள் அந்நியகாரியமாக எண்ணப்பட்டது.

௰௩. நமக்குச் செலுத்தும் பலிகளின் மாமிசத்தை அவர்கள் பலியிட்டுப் புசிக்கிறார்கள், கர்த்தர் அவர்கள்மேல் பிரியமாயிரார், இவர் அவர்களுடைய அக்கிரமத்தை நினைத்து அவர்கள் பாவத்தை விசாரிக்கும்போதோவென்றால், அவர்கள் எகிப்துவுக்குத் திரும்பிக்கொள்ளுகிறார்கள்.

௰௪. ஏனெனில் இஸ்ரவேல் தன்னையுண்டாக்கினவரை மறந்து அரண்மனைகளைக் கட்டுகிறது. யூதா அரணான பட்டணங்களைப் பெருகப்பண்ணுகின்றது ஆனால் அதின் பட்டணங்களில் * அக்கினியை அனுப்புவோம், அது அவைகளின் அரண்மனைகளைப் பட்சிக்கும். * எரே. ௰௭, ௨௭. ஆமோஸ். ௨, ௫.

## ௯. அதிகாரம்.

[அப்பாலும் இஸ்ரவேலின்மேல் வருங்கன ஆக்கினைகளின் அறிவிப்பு.]

இஸ்ரவேலே மகிழ்ச்சியாயிராதே, சனசதளங்களைப்போலக் களிகூராதே. ஏனென்றால் * உன் பராபரனைவிட்டுச் சோரம்போனாய், தானியம்போரடிக்கிற சகலகளங்களிலும் பணையத்தைச் சிநேகிக்கிறாய்.
 * சங்கீ. ௭௩, ௨௭.

௨. போர்க்களமும் ஆலையும் அவர்களைப் பிழைப்பூட்டுவதில்லை, திவிதிராட்சப்பழ இரசம் அவர்களுக்குப் பிசகிப்போம்.

௩. அவர்கள் கர்த்தருடைய தேசத்திற் குடியிருப்பதில்லை, எப்பிராயீமர் திரும்ப எகிப்திற்குப் போவார்கள், அசூரியாவிலுந் தீட்டுள்ளதைப் புசிப்பார்கள்.

௪. அவர்கள் கர்த்தருக்குத் திவிதிராட்சப்பழ இரசத்தை ஊற்றுவதுமில்லை, அவருக்கு அங்கிகரிப்பாயிருப்பதுமில்லை, அவர்களுடைய பலிகள் அவர்களுக்குத் துயபுலம்புகிறவர்களின் அப்பத்தைப்போலிருக்கும், அதைப் புசிக்கிற யாவருந் தீட்டுப்படுவார்கள், ஏனெனில் அவர்களுடைய அப்பம் அவர்கள் ஆத்துமத்திற்காகக் கர்த்தருடைய வீட்டில் வருவதில்லை.

௫. ஆசரிப்பின் நாளிலும் கர்த்தருடைய பண்டிகையின் நாளிலும் என்னசெய்வீர்கள்.

௬. ஏனெனில் இதோ பாழுக்கடிப்பினால் போய்விடுவார்கள், எகிப்து அவர்களைச் சேர்த்துக்கொள்ளும், மோப் பட்டணம் அவர்களை அடக்கம்பண்ணும், அவர்களுடைய வெள்ளியிருந்த இச்சிக்கப்பட்டதக்கவிடங்களைக் காஞ்சொறிகள் சுதந்தரித்துக்கொள்ளும், அவர்களுடைய தாவரங்களில் முட்செடிகள் முளைக்கும்.

௭. விசாரிப்பின் நாட்கள் வரும், நீதிசரி

௯. இஸ்ரவேலே * கிபேயாவின் நாட்களிலிருந்து பாவஞ்செய்து வந்தாய், கிபேயாவிலே அக்கிரமக்காரர் மேல் வந்த யுத்தம் அவர்களைத் தொடவில்லையென்று அந்த நிலையிலே நிற்கிறார்கள். * நியாயாதிபதிகள். ௨௰, ௰௨. ௰௩.

௰. சனசதளங்கள் அவர்களுக்கு விரோதமாகக் கூடித்தங்கள் இரண்டுபாடுகளுக்காக அவர்களைப் பிணைக்கும்போது, நம்முடைய இச்சித்தமாகும் வேளையிலே அவர்களைத் தண்டிப்போம்.

௰௧. எப்பிராயீம் போரடிக்கப்பழகின தும் விரும்புகிறதுமான கன்றுக்குட்டி, ஆனால் நாம் அதின் அழகான கழுத்தின்மேல் நுகத்தடியை வைப்போம், எப்பிராயீமை ஏர்ப்பூட்டி ஓட்டுவோம், யூதா உழுவான், யாக்கோப் அதற்குப் பரம்படிப்பான்.

௰௨. உங்களுக்கு * நீதிகொண்டு விதை விதையுங்கள், தயவுகொத்தாய் அறுப்பீர்கள், பயிர்நிலத்தையுங்களுக்குப் புதிதாய்ப் பண்படுத்துங்கள், ஏனென்றால் கர்த்தர் வந்து உங்களுக்கு † நீதியை வருஷிக்கப்பண்ணுமட்டும் ‡ அவரைத் தேடக்காலமாயிருக்கிறது. * கலாத்தியர். ௬, ௭. ௮. † ஏசா. ௪௫, ௮. ‡ ஏசா. ௫௫, ௬.

௰௩. ஆகாத்தியத்தை உழுதீர்கள், அநியாயத்தை அறுத்தீர்கள், பொய்யின் கனிகளைப் புசித்தீர்கள், ஏனென்றால் உன் வழியையும் உன் பராக்கிரமசாலிகளின் திரளையும் நம்பினாய்.

௰௪. ஆகையால் உன் சனசதளங்களில் அமளியெழும்பும், பிள்ளைகளின்மேல் தாய் சிதைத்துப்போடப்பட்ட யுத்தநாளிலே சால்மான் பேத்தார்பேலை அழித்ததுபோலே உன்னுடைய எல்லா அரணுகளும் அழித்துப்போடப்படும்.

௰௫. பேத்தேலுங்களைப்போலாப்புடைய தோஷத்தினாலே இப்படிக்கொத்ததையுங்களுக்குச் செய்யும், அதிகாலமே இஸ்ரவேலின் இராசா சங்கரிக்கப்பட்டே சங்கரிக்கப்படுவான்.

## ௰௧. அதிகாரம்.

[நன்றியறியாத இஸ்ரவேலின் பேரிலே பிராபரன் முறையிட்டது.]

இஸ்ரவேல் இளைஞனாயிருக்கிறபோது அவனை நாம் சிநேகித்தோம், * எகிப்திலிருந்து நம்முடைய குமாரனை வரவழைத்தோம். * மத்தேயு. ௨, ௰௫.

௨. அவர்கள் தங்களையழைக்கிறவர்களின் முகத்தைவிலகிப்போய்விட்டார்கள், பாகாலகளுக்குப் பலியிட்டுச் சுரூபங்களுக்குத் தூபங்காட்டினார்கள்.

௩. நாம் எப்பிராயீமரை அவர்கள் கைகளைப்பிடித்து மெதுவாக நடத்தினோம், ஆனால் நாந்தங்களைக் குணமாக்குகிறவரென்று அறியாதேபோனார்கள்.

௪. மனுஷரைக் கட்டியிழுக்கிற அன்பின் கயிறுகளாலே நாம் அவர்களையிழுத்து அவர்கள் கன்னங்களின்மேலிருந்த நுகத்தடியை எடுத்துப்போடுகிறவரைப்போலே யவர்களுக்கிருந்து அவர்களண்டைக்குச் சாய்ந்து ஆகாரங்கொடுத்தோம்.

௫. அவன் எகிப்துத்தேசத்திற்குத் திரும்பிப்போவதில்லை, அசூர்தான் அவனுடைய இராசா, ஏனென்றால் மனந்திரும்பமாட்டோமென்கிறார்கள்.

௬. ஆகையால் அவர்களுடைய ஆலோசனைகளினிமித்தமாகப் பட்டயம் அவர்கள் பட்டணங்களுக்குட்பாய்ந்து அவர்கள் தாழ்ப்பாள்களை நிர்மூலம்பண்ணி அவர்களைப் பட்சிக்கும்.

௭. நம்முடைய சனம் நம்மைவிட்டுவிலகுகிற மாறுபாட்டைப் பற்றிக்கொண்டேயிருக்கிறது, அதையுன்னதமானவரண்டைக்கு வரவழைத்தாலும் ஒருத்தனும் எழும்பான்.

இஸ்ரவேலுக்கு இரக்கமுள்ளவாக்குத்தத்தத்தையும் பண்ணினது.

௮. எப்பிராயீமே நாம் உன்னையென்ன செய்யவேண்டும், இஸ்ரவேலே உன்னை நாம் ஒப்புக்கொடுக்கவேண்டுமோ? நாம் உன்னை * அத்மாவைப்போலாக்கி, உன்னைச் செபோயீமைப்போலவைப்பதெப்படி! † நம்முடைய இருதயம் நமக்குள் திரும்பிக்கொண்டிருக்கிறது, நம்முடைய பரிதாபங்களெல்லாம் பொங்குகின்றது. * ௫. மோசே. ௨௯, ௨௩. † எரேமியா. ௩௧, ௨௰.

௯. நம்முடைய கோபத்தினுடைய உக்கிரத்தின்படியே செய்யாதிருப்போம், எப்பிராயீமை யழிக்கத் திரும்பிக்கொள்ளாதிருப்போம், ஏனென்றால் நாம் மனுஷனல்ல தேவனாயிருக்கிறோம், நாம் உன் நடுவில் பரிசுத்தமுள்ளவர், ஆகையால் பட்டணத்திற்கு விரோதமாக வரோம்.

௰. கர்த்தரைப்பின்செல்லுவார்கள், அவர் சிங்கத்தைப்போலே கெர்ச்சிப்பார், அவர் கெர்ச்சிக்கும்போது மேற்கத்தியார் நடுங்கி வருவார்கள்.

௰௧. எகிப்திலிருந்து குருவிகளைப்போலவும் அசூரின் தேசத்திலிருந்து புறாக்களைப்போலவும் நடுங்கிவருவார்கள், அப்போது அவர்களையவர்கள் வீடுகளிற் குடியிருக்கப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௨. அதிகாரம்.

[இஸ்ரவேலையும் யூதாவையும் ஒத்துப்பார்த்தது.]

சையான பாய்மரவிருட்சத்தைப்போலிருப்பேன், என்னில் உம்முடைய கனி கண்டுபிடிக்கப்படுமென்று எப்பிராயீம் சொல்லும்.

௯. இவைகளையுணர ஞானமுள்ளவனும் இவைகளைக் கிரகிக்கப் புத்தியுள்ளவனும் ஆர்? ஏனென்றால் * கர்த்தருடைய வழிகள் செம்மையானவைகள், நீதிமான்கள் அவைகளில் நடக்கிறார்கள், † பாதகரோவென்றால் அவைகளில் விழுகிறார்கள். * சங். ௨௫,௰. † க. பேதுரு. ௨, ௭. ௮.

ஓசேயாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# யோவேலின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

[யோவேல் வெட்டுக்கிளிகளாலும் வறட்சிகாலத்தாலுமுண்டாகும் இக்கட்டையும் அறிவித்துக் கர்த்தரண்டைக்குத் திரும்பப் புத்திசொன்னது.]

பெத்துவேலின் குமாரனாகிய யோவேலுக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௨ பச்சைப்புழு விட்டுவைத்ததை வெட்டுக்கிளி தின்னுகின்றது, வெட்டுக்கிளி விட்டுவைத்ததைப் பச்சைக்கிளி தின்னுகின்றது, பச்சைக்கிளி விட்டுவைத்ததை முசுக்கட்டைப்பூச்சி தின்னுகின்றது.

௩ முதிர்வயதுள்ளவர்களே, இதைக்கேளுங்கள், தேசத்தின் சகல குடிகளே செவிகொடுங்கள், உங்கள் நாட்களிலாவது உங்கள் பிதாக்களின் நாட்களிலாவது இப்படிக்கொத்தது சம்பவித்ததுண்டோ?

௪ இந்தச்செய்தியை யுங்கள் பிள்ளைகளுக்கு விவரியுங்கள், இதையுங்கள் பிள்ளைகள் தங்கள் பிள்ளைகளுக்கும் அவர்களுடைய பிள்ளைகள் வேறே தலைமுறைக்கும் விவரிக்கக்கடவார்கள்.

௫ வெறியரே விழித்து அழுங்கள், திராட்சப்பழரசங்குடிக்கிற சகலசனங்களே, திராட்சக்கத்தாயத்தினிமித்தம் அலறுங்கள், ஏனென்றால் அது உங்கள் வாயை விலக அறுப்புண்டுபோம்.

௬ அநேகமுள்ளதும் எண்ணிமுடியாததுமான ஒரு சாதி என் தேசத்தில் வந்தேறுகின்றது, அதின் பல்லுகள் சிங்கத்தின் பல்லுகள், துஷ்டசிங்கத்தின் கடைவாய்ப்பல்லுகள் அதற்கிருக்கின்றது.

௭ அது என் திராட்சச்செடியைப் பாழுமான அசங்கத்தைச் சோதையுமாகப் போட்டு உரிக்கவே உரித்துவிடுகின்றது, இவைகளின் கொம்புகள் வெண்மையாகின்றது.

௮ தன் வாலவயதின் புருஷனுக்காக இரட்டுடுத்தியிருக்கிற பெண்ணைப்போல அலறு.

௯ காணிக்கையும் பானபலியும் கர்த்தருடைய வீட்டைவிட்டு அற்றுப்போம், கர்த்தரின் ஊழியக்காரராகிய ஆசாரியர்கள் துக்கிப்பார்கள்.

௰ வயல்வெளி பாழாகின்றது பூமி துக்கங்கொண்டாடும், ஏனென்றால் விளைச்சல் அழிக்கப்படுகின்றது, திராட்சக்கத்தாயம் வெட்கமடைகிறது, எண்ணெய் மாண்டுபோம்.

௰௧ பயிர்க்குடிகளே, கோதுமையும் வாற்கோதுமையுமில்லாததினாலே வெட்கிநில்லுங்கள், திராட்சத்தோட்டக்காரரே அலறுங்கள், ஏனென்றால் வயல்வெளியின் அறுப்பு அழிகின்றது.

௰௨ திராட்சச்செடி வதங்கி அத்திமரஞ்சாரமற்றுப்போகும், மாதளஞ்செடியும் பேரிச்சங்கொளுஞ்சியுமுதலான வெளியின் விருட்சங்களெல்லாம் வாடிப்போயிற்று சந்தோஷம் மனுபுத்திரரை விட்டு வாடிப்போகும்.

௰௩ ஆசாரியர்களே, இரட்டுடுத்திப் புலம்புங்கள், பலிபீடத்தின் பணிவிடைக்காரரே அலறுங்கள், என் பராபரனுடைய பணிவிடைக்காரரே, நீங்கள் உட்பிரவேசித்து இரட்டுடுத்தவர்களாய் இராத்தங்குங்கள், ஏனென்றால் கர்த்தருடைய வீட்டிற் காணிக்கையும் பானபலியும் செலுத்துதல் தவிர்க்கப்பட்டது.

௰௪ * உபவாசமென்னும் பரிசுத்த நாளைக் குறித்து அதின் ஆசரிப்பைக் கூறுங்கள், மூப்பரையுந் தேசத்தின் எல்லாக்குடிகளையும் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிலே கூட்டிக் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுங்கள். * ௨, ௰௫.

௰௫ அந்த நாளினிமித்தம் ஐயோ, ஏனென்றால் * கர்த்தருடைய நாள் சமீபமாயிருக்கிறது சர்வவல்லவராலே பாழ்க்கடிப்பாய் வரும். * ௨, ௧. ௨. எசா. ௰௩. ௬.

௰௬ ஆகாரம் நம்முடைய கண்களுக்கு

சநதோஷமுங் களிகூருதலும நமமுடைய பராபரனைவீட்டைபுமவிட்டுஅறறுபபுண போகவிலலையோ?

யஎ விதைகள தங்கள மண்கட்டிகளின கீழசெததுபபோகும, விளைசசல கருகிப போகிறதனாலே பணடசசாலைகளபாழாகி க்களஞசியங்கள இடிநதுபோகும.

யஅ மிருகங்கள எததனையாயத்தவிக்கு ம? மாட்டுமநதைகள தங்களுக்குமேயசச லலாததினாற்கலஙகும, ஆட்டுமநதைகளு மபாழாம. * எரே. யச, ரு. கூ.

யகூ கர்ததாவே உமமைநோக்கிக்கூப பிடுகிறேன, ஏனெனில அககினிவனாநதரத தின மேயசசலகளைப பட்சிததுச சுவாலை வெளியினவிருட்சங்களையெலலாம எரிதது பபோடும.

உய * வெளியினமிருகங்களும உமமை நோக்கிக்கதறும, ஏனெனில தணணீர்நதி களெலலாம வறறிபபோம, அககினிவனாந தரததினமேயசசலகளைப பட்சிததுபபோ டும. * சங்கீ. சஉ, உ. ருச, உஎ.

## உ. அதிகாரம.

[அபபாலும அநத ஆககினையையறிவிக்கி றதினாலே சனததையுததமருணபபடுத ஆக்கினையும மெயயாய மனஸதாப ப்பட்டுசசெயயும விணணபபததைககர் ததர்கேட்பாரெனறதும.]

க சீயோனிலே எககாளம ஊதி நமமு டைய பரிசுததபருவதத்திலே சததமாயக் கூப்பிடுங்கள, தேசததினகுடிகளெலலாந தத்தளிக்கக்கடவார்கள, ஏனெனில * கர்த தருடையநாள்வருகிறது, அது சமீபமா யிருக்கிறது. * க, யரு.

உ அது இருளும அநதகாரமுமான நா ள, அது மப்பும மநதாரமுமான நாள, விடியறகாலவெளுப்பு பருவதங்களினமேற் பரவுகிற தீவிரமாக ஏராளமான பலதத சாதிவநது பரவும, அபபடிககொத்தது லோகததோறறமுதற்கொணடுணடானது மிலலை, அதினபிறகு இனித தலைமுறைதலை முறையாகவருமவருஷங்களமட்டும உண டாவதுமிலலை.

ங அக்கினி யதினமுனனேபட்சிககும், சுவாலையதினபினனேஎரிககும, அதுவரு முனதேசம ஏதேனெனறதோட்டததைப போலிருநதது, அதுபோனபின அதுபா ழானவனாநதரததைபபோலிருக்கும, ஏதா கிலும அதற்குததபபிபபோவதிலலை.

ச அவைகளினருப குதிரைகளினருபக கொத்தது, அவைகள இராவுததரைபபோ லேயோடுகிறது.

ரு அவைகளோடுகிற இரதங்களின இரை சசலாகவும சேததைகளையெரிக்கிற அக்கி னிசசுவாலையின இரைசசலாகவும, யுத்தத் திற்கு ஆயததபபட்டபலததசனததின இ ரைசசலாகவும, பருவதஙகளுடைய சிகர ஙகளினமேற்குதிக்கிறது.

சா அவைகளுக்குமுனபாகச சனசதஙக ளநடுஙகும, எலலாமுகஙகளினருபமுங கருகும.

எ அவைகளபலசாலிகளைபபோலேயோ டும, அவைகளயுததமனுஷரைபபோலமதி லேறும, அவைகளவரிசைகள பிசகாமல ஒவவொனறு தனதனவழியிலேபோகும.

அ ஒனறையொனறு நெருககாது, ஒவ வொனறு தனதனபாதையிலே போகும, அவைகள ஆயுதஙகளுக்குட்புகுநதும காய மபடாதேபோகும.

கூ அவைகள பட்டணததிற்சுறறியோடு ம மதிலிலேறும, வீடுகளிலேறும, திருடனை பபோலபபலகணிகளால உட்பிரவேசிககு ம.

ய அவைகளுக்குமுனபாகப பூமிநடுஙகு ம, வானஙகளஅசையும, சூரியனுஞசநதிர னும இருணடுபோகும, நட்சததிரஙகளத ஙகள ஒளியைமறைததுககொளளும.

யக கர்ததர் தமது இராணுவததினமுன பாகத தமமுடைய சத்தததைககாட்டுவா ர், ஏனெனில அவருடையசேனை மகாதிர ளும அவருடையவார்ததையினபடி செய கிறதறகுப பலபயுமானது, அதேதெனறால கர்ததருடைய நாளபெரியதும மகாபயங கரமுமாயிருக்கும, அதைத்தாஙகுபவனார்?

யஉ இபபோதும உஙகளமுழுமனதினா லே யுபவாசததோடும அழுகையோடும புல மபலோடும * நமமணடைககே திருமபுங களெனறு கர்ததர்சொலலுகிறார். * எசே. கஅ, யக.

யங நீஙகள உஙகள வஸதிரஙகளையலல உஙகள இருதயஙகளைககிழிதது உஙகளப ராபரனாகிய கர்ததரணடைககுததிருமபு ஙகள, ஏனெனில அவர் இரககமுமமன உரு ககமும நீடியசாநதமும மிகுநதகிருபை யுமுளளவருந தீஙகுககு மனஸதாபபபடுகி றவருமாயிருககிறார். * உ. மோசே. கச, சா.

யச ஒருவேளையவர் திருமபிககொணடு மனஸதாபப்பட்டு அநத உஙகள பராபர னாகிய கர்ததருக்குக் * காணிக்கையையும ஊறறுதலையுஞசெலுததுகிறதற்கான ஆசீர் வாதத்தை பீறியாகபபினவைததுபபோவா ராககும. * க, அதி. கூ.

யரு சீயோனிலே எககாளம ஊதுஙகள, உபவாசமபணணும பரிசுதத நாளைககுறி தது அதின ஆசரிப்பைககூறுஙகள.

யசா சனததைககூட்டுஙகள, சபையைப பரிசுதததமபணணுஙகள, முதிர்நதவயதுள ளவர்களைசசேருஙகள, பிளளைகளையும முலை யுணகிறவர்களையும கூட்டுஙகள, மணவா

ளைத் தன் அறையையும் மணவாட்டி தன் மறைவையும் விட்டுப் புறப்படுவார்களாக.

௰௭ கர்த்தரின் பணிவிடைக்காரராகிய ஆசாரியர்கள் மண்டபத்திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே அழுதுகொண்டு: கர்த்தாவே, தேவரீர் உமது சனத்தைத் தப்பவிடும், புறச்சாதிகள் அவர்களைப் பழமொழியாக்கும் நிந்தைக்கு உம்முடைய சுதந்தரத்தை ஒப்புக்கொடாதிரும், உங்கள் பராபரன் எங்கேயென்று புறச்சாதிகளுக்குள்ளே சொல்லப்படுவானேன் என்பார்களாக.

௰௮ அப்பொழுது கர்த்தர் தமது தேசத்திற்காக வயிராக்கியமாயிருந்து தம்முடைய சனத்தைத் தப்பவிடுவார்.

௰௯ கர்த்தர் மறுமொழிகொடுத்துத் தமது சனத்திற்குச் சொல்வதாவது, இதோ நாம் உங்களை இனிப் புறச்சாதிகளுக்குள்ளே நிந்தையாக வைக்காமல் உங்களுக்குத் தானியத்தையுந் திவிராட்சக்கந்தாயத்தையும் எண்ணெயையும் நீங்கள் அதினால் திருத்தியாகும்படிக்குக் கொடுத்து,

௨௰ வடக்கத்திச் சேனையை உங்களுக்குத் தூரமாக விலக்கி அதின் முன்தண்டு கீழ்க்கடலுக்கும் அதின் பின்தண்டு கடைசிக்கடலுக்கும் நேராகும்படிக்கு அதை வறட்சியும் பாழுமான தேசத்திற்குத் துரத்திவிடுவோம், அங்கேயதின் நாற்றம் எழும்பி அதின் துர்க்கந்தம் வீசும், ஏனெனிப் பெரிய காரியங்களைச் செய்தது.

௨௰௧ தேசமே பயப்படாதே, களிகூர்ந்து சந்தோஷப்படு, ஏனெனிக் கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்வார்.

௨௰௨ வெளியின் மிருகங்களே பயப்படாதேயுங்கள், ஏனெனில் வனாந்தரத்தின் மேய்ச்சல்கள் முளைக்கும், விருட்சங்கள் தங்கள் காய்களைக் காய்க்கும், அத்திமரமுந் திவிராட்சச்செடியுந் தங்கள் சாரத்தைக் கொடுக்கும்.

௨௰௩ சீயோனின் குமாரரே, * உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குள் களிகூர்ந்து சந்தோஷப்படுங்கள், ஏனெனில் அவர் உங்களுக்கு நீதிக்கான போதகரைக் கொடுத்து உங்களுக்கு † முன்மாரியையும் பின்மாரியையும் ஏற்கவே வருஷிக்கப்பண்ணுவார்.

* பிலிப். ௪, ௪. † ௫.மோ. ௰௧, ௰௪.

௨௰௪ களங்கள் தானியத்தினால் நிரம்பும், ஆலைகளில் திவிராட்சப்பழ இரசமும் எண்ணெயும் வழிந்தோடும்.

௨௰௫ நாம் உங்களுக்குள் அனுப்பின நம்முடைய பெரிய இராணுவமாகிய வெட்டுக்கிளிகளும் பச்சைக்கிளிகளும், முசுக்கட்டைப்பூச்சிகளும் பச்சைப்புழுக்களும் பலவனத்தின்ற வருஷங்களுக்காக உங்களுக்குப் பதிலளிப்போம்.

௨௰௬ நீங்கள் சம்பூரணமாகச் சாப்பிட்டுத் திருத்தியடைந்து உங்களை அதிசயமாய் நடத்திவந்த * உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தைத் துதிப்பீர்கள், நமது சனம் என்றென்றைக்கும் வெட்கப்பட்டுப் போவதில்லை. * ௫. மோசே. ௮, ௰.

௨௰௭ நாம் இஸ்ரவேலின் நடுவிலிருக்கிறவரென்றும், நாமே உங்கள் பராபரனாகிய கர்த்தர் வேறொருத்தரில்லையென்றும் அறிந்துகொள்ளுவீர்கள், நமது சனம் என்றென்றைக்கும் வெட்கப்பட்டுப்போவதில்லை.

## ௩. அதிகாரம்.

[புதிய ஏற்பாட்டின் காலத்தில் அருட்படப் போகிற தேவகிருபையின் மேன்மை.]

இதற்குப் பிற்பாடு சம்பவிப்பதேதெனில், * நாம் சகல மாம்சத்தின்மேலும் நம்முடைய ஆவியை ஊற்றுவோம், அப்பொழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனஞ்சொல்லுவார்கள், உங்கள் மூப்பரானவர்கள் சொப்பனங்களையும் உங்கள் இளைஞர் தரிசனங்களையுங் காண்பார்கள். * ஏசாயா. ௪௪, ௩. சகரி. ௰௨, ௰. அப்போ. ௨, ௧. ௨௧, ௮. ௰௪—௰௮. ௰, ௪௪. தீத்து. ௩, ௫—௭.

௨ வேலைக்காரரின்மேலும் வேலைக்காரிகளின்மேலும் அந்நாட்களில் நம்முடைய ஆவியை ஊற்றுவோம்.

௩ வானத்திலும் பூமியிலும் அதிசயங்களைக் காட்டுவிப்போம், இரத்தமும் அக்கினியும் புகையெழும்புதல்களும் உண்டாம்.

௪ கர்த்தருடைய பெரியதும் பயங்கரமுமான நாள் வருமுன்னே சூரியன் இருளுஞ் சந்திரன் இரத்தமுமாய் மாறிப்போம்.

௫ சம்பவிப்பதேதெனில், * கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்பவனெல்லாம் விடுவிக்கப்படுவான், ஏனென்றுற் கர்த்தர் சொன்னபடி, சீயோன் பர்வதத்திலும் எருசலேமிலும் கர்த்தர் வரவழைக்கப்போகிற மற்றவர்களிடத்திலும் விடுவிக்குதலுண்டாயிருக்கும். * அப்போ. ௨, ௨௧. ரோமர். ௰, ௰௩.

கர்த்தருடைய சபைகளுக்குச் சத்துருக்களான எல்லாச்சாதிகள்மேலும் வரப்போகிற ஆக்கினைகள்.

௧ ஏனெனில் இதோ யூதாவும் எருசலேமும் இருக்கிற சிறையிருப்பை நாந்திருப்பும் அந்நாட்களிலும் அக்காலத்திலும்,

௨ நாம் எல்லாப் புறச்சாதியாரையுங் கூட்டி அவர்களை யோசபாத்தென்ற பள்ளத்தாக்கில் இறங்கிப் போகப்பண்ணி அவர்கள் நமது சனத்தையும் இஸ்ரவேலென்ற நம்முடைய சுதந்தரத்தையும் புறச்சாதிகளுக்குள்ளே சிதறவடித்து நம்முடைய தேச

# ஆமோசின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்

[இஸ்ரவேல் தேசத்தின்மேலுஞ் சூரியர்மேலும் பெலிஸ்தர்மேலுந் தீருவின்மேலும் ஏதோமியர்மேலும் அம்மோன்புத்திரர்மேலும் வருந் தெய்வாக்கினைகளின் தீர்க்கதரிசனம்.]

தெக்கோவா ஊர் மேய்ப்பருக்குள் இருந்த ஆமோஸ் யூதாவின் இராசாவாகிய உசியாவின் நாட்களிலும் இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசுடைய குமாரனான எரோபெயாமின் நாட்களிலும், * பூமியதிர்ச்சியுண்டாக இரண்டு வருஷமிருக்கக் கொண்ட இஸ்ரவேலின்மேற்கண்டு சொன்ன வர்த்தமானங்கள். * சகரி. ௰௪, ௫.

௨ * கர்த்தர் சீயோனிலிருந்து கெர்ச்சித்து எருசலேமிலிருந்து தமதுடைய சத்தத்தைக் காட்டுவார், அதினால் மேய்ப்பரின் தாபரங்கள் துக்கமடையும், கர்மேலின் கொடுமுடியுங் காய்ந்துபோகும்.
* யோவேல. ௩, ௨௧.

௩ கர்த்தர் சொல்லுகிறதாவது, தமஸ்குவினுடைய மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும் அவர்கள் கீலேயாத்தை † இருப்புவண்டில்களால் போரடித்ததினிமித்தமும் நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,
ஏசாயா. ௭, ௧. † ௨. இராசா. ௰௩, ௭.

௪ ஆசவேலின் வீட்டிலே அக்கினியைப் போடுவோம், அது பெனாதாதின் அரண்மனைகளைப் பட்சிக்கும்.

௫ நாம் தமஸ்குவின் தாழ்ப்பாளையுடைத்து ஆக் குடிகளை ஆவெனென்ற பள்ளத்தாக்கிலுஞ் செங்கோல் ஆளுகிறவனைப் பெத்தேதேனிலுடையைக்காமற் சங்காரம்பண்ணுவோம், அப்போது சூரியாவின் சனங் கீருக்குச் சிறைப்பிடிப்பாய்ப் போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬ கர்த்தர் சொல்லுகிறதாவது, காத்சாவினுடைய மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும் அவர்கள் சிறைப்பிடிப்பானவர்களை ஏதோமியர்கையிற் பத்திரப்படுத்திவிடும்படிக்கு முழுதுஞ் சிறையாக்கினதினிமித்தமும் நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,

௭ காத்சாவின் மதிலுக்குள் அக்கினியைப் போடுவோம், அது அதினுடைய அரண்மனைகளைப் பட்சிக்கும்.

௮ நாம் குடிகளை அஸ்தோத்திலுஞ் செங்கோலாளுகிறவனை அஸ்கலோனிலுமில்லைக்காமற் சங்காரம்பண்ணிப் பெலிஸ்தரில் மீதியானவர்கள் அழியும்படிக்கு நமது கையை எக்கிரோனுக்கு விரோதமாகத் திருப்புவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௯ கர்த்தர் சொல்லுகிறதாவது, * தீருவினுடைய மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும் அவர்கள் சகோதரரின் உடன்படிக்கையை நினையாமற் சிறைப்பிடிப்பானவர்களை முழுதும் ஏதோமியர்கையிற் பத்திரப்படுத்திவிட்டதினிமித்தமும் நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,

௰ தீருவின் மதிலுக்குள் அக்கினியைப் போடுவோம், அது அதின் அரண்மனைகளைப் பட்சிக்குமென்கிறார்.

௰௧ கர்த்தர் சொல்லுகிறதாவது, ஏதோமினுடைய மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும் அவன் தன் சகோதரனைப் பட்டயத்தோடே தொடர்ந்து தன் மனதிரக்கமற்றதாக்கித் தன் கோபத்தினாலே என்றைக்கும் அவனைப் பீறிப்போட்டுத் தன் மூர்க்கத்தை நித்தியகாலமாக வைத்திருந்ததினிமித்தமும், நாம் அவன் ஆக்கினையைத் திருப்பாமல்,

௰௨ * தேமானிலே அக்கினியைப் போடுவோம், அது பொத்ஸ்ராவின் அரண்மனைகளைப் பட்சிக்குமென்கிறார். * ஏசே. ௨௫, ௰௨. ௰௩.

௰௩ கர்த்தர் சொல்லுகிறதாவது, அம்மோன் புத்திரரின் மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும் அவர்கள் தங்கள் எல்லைகளை விஸ்தாரமாக்கும்படிக்குக் கீலேயாத்திலே கெர்ப்பஸ்திரிகளைப் பீறிப்போட்டதினிமித்தமும், நாம் அவர்கள் ஆக்கினையைத் திருப்பாமல்,

௰௪ ரப்பாவின் மதிலுக்குள் அக்கினியைக் கொளுத்துவோம், அது யுத்தநாளின் முழக்கமாகவும் பெருங்காற்றின் பெசலாகவும் அதின் அரண்மனைகளைப் பட்சிக்கும்.

௰௫ அவர்களுடைய இராசா சிறைப்பிடிப்பிலே போவான், அவனும் அவனுடைய பிரபுக்களுங்கூடத்தானென்று கர்த்தர் சொல்லுகிறார்.

யர் ஒரேபட்டணத்திற்குத் தண்ணீர்குடிக்கப்போய் அலைந்து தாகந்தீராதேபோனார்கள், ஆகிலும் நம்மண்டைக்குத்திரும்பாதே போனீர்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௯ கருக்காயினாலும் விஷப்பனியினாலும் உங்களைத்தண்டித்தோம், உங்கள்சோலைகளிலுந் திராட்சத்தோட்டங்களிலும் அத்திமரங்களிலும் ஒலிவமரங்களிலும் மிச்சமானவைகளைப் பச்சைப்புழுவரித்துப்போட்டது, ஆகிலும் நம்மண்டைக்குத்திரும்பாதே போனீர்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰ எகிப்திலேயுண்டானதற்கொத்த பெருவாரிக்காய்ச்சலையுங்களுக்குள் அனுப்பினோம், உங்கள் குதிரைகள் பிடிபடத்தக்கதாய் உங்கள்வாலிபரைப்பட்டயத்தாலேகொன்றோம், உங்கள்பாளயங்களின் நாற்றத்தையுங்கள் நாசிகளிலும் ஏறப்பண்ணினோம், ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௧ சோதோமையுங்கோமோராவையும் பராபரன்கவிழ்த்துமேலுதாகப்போட்டதுபோல உங்களிற் சிலதைக்கவிழ்த்துமேலுதாகப்போட்டோம், நீங்கள் நெருப்புக்குத் தப்புவிக்கப்பட்ட கொள்ளியைப்போலிருந்தீர்கள், ஆகிலும் நம்மண்டைக்குத்திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௨ ஆகையால் இஸ்ரவேலே இந்தப்பிரகாரமாக உனக்குச்செய்வோம், இஸ்ரவேலே நாமிப்படியுனக்குச்செய்யப்போகிறபடியினாலே உன் பராபரனுக்கெதிர்கொண்டுபோக ஆயத்தப்படு.

௰௩ ஏனெனில் இதோ, அவர் பர்வதங்களை உருவாக்கினவரும் காற்றைச் சிஷ்டிக்கிறவரும் மனுஷருடைய நினைவு இன்னதென்று அவனுக்குவெளிப்படுத்துகிறவருமாயிருக்கிறார், அவர்விடியற்காலத்தைஅந்தகாரமாக்கிப்பூமியினுடையஉயரங்களின்மேல்மிதிக்கிறவர், சேனைகளின்பராபரனாகியகர்த்தரென்பது அவருடையநாமம்.

## ௫. அதிகாரம்.

[இஸ்ரவேலுடையவீழ்தலின்பேரிலே புலம்பினதும், புத்திசொல்லிக் கடிந்துகொண்டதும் ஆக்கினைகளைஅறிவித்ததும்.]

௧ இஸ்ரவேல்வீட்டாரே நான் உங்கள்பேரிற் புலம்பலாக எடுக்கும் இந்தவசனத்தைக்கேளுங்கள்.

௨ இஸ்ரவேலென்கிற கன்னியாஸ்திரி திரும்ப எழுந்திருக்கமாட்டாமல் விழுந்தாள், எடுப்பாரில்லாமல் தன்தேசத்திலே கைவிடப்பட்டுக்கிடக்கிறாள்.

௩ ஏனெனில் இஸ்ரவேல்வீட்டாருக்குச் சொல்லுகிறதாவது, நம்மைத்தேடுங்கள், அப்போது பிழைப்பீர்கள்.

௪ பெத்தேலைத்தேடாதேயுங்கள், கில்காலிலுஞ்சேராதேயுங்கள், பெயெர்செபாவுக்கும் நடந்துபோகாதேயுங்கள், ஏனென்றாற் கில்கால்சிறையிருப்பாகவும் பெத்தேல் பாழ்நிலமாகவும்போகும்.

௫ கர்த்தர் பெத்தேலிலிருக்கிற ஒருத்தரும் அவிக்கமாட்டாத அக்கினியாய் யோசேப்பின் வீட்டைக் கொளுத்திப்போட்டு அதைப்பட்சிக்காதபடிக்கு * நீங்கள் அவரைத்தேடுங்கள் அப்போது பிழைப்பீர்கள்.

* ஏசா. ௫௫, ௬.

௬ * நியாயத்தை எட்டியாகமாற்றி நீதியைத்தரையிலே விழப்பண்ணுகிறவர்களே அவரைத்தேடுங்கள் * ஏசாயா. ௫, ௨௰.

௭ * அவர் சத்தநட்சத்திர இராசியையுங் கிரகங்களையுமுண்டாக்கினவர், அவர் மரணத்திழலை விடியற்காலமாகமாற்றிப்பகலை இராத்திரியாக அந்தகாரப்படுத்துகிறவர், அவர்சமுத்திரத்தின் தண்ணீர்களை வரச்சொல்லி அவைகளைப்பூமியினுடையவிசாலத்தின்மேல் ஊற்றுகிறவர், கர்த்தர் என்பது அவருடையநாமம். * யோபு. ௯, ௯. ௰. ௩௮, ௩௧.

௮ அரணானஸ்தலத்தின்மேற்பாழ்க்கடிப்பு வரத்தக்கதாக அவர்கொள்ளைகொடுத்தவனைப்பலத்தவனுக்குவிரோதமாக இலகுவடையப்பண்ணுகிறவர்.

௯ * ஒலிமுகவாசலிலே கடிந்துகொள்ளுகிறவனை அவர்கள்பகைத்து உத்தமமாய்ப்பேசுகிறவனை அருவருக்கிறார்கள்.

* ஏசாயா. ௨௯, ௨௧.

௰ ஆனதுகொண்டு நீங்கள் தரித்திரனை மிதித்துப்போட்டு அவன்கையிலே தானியச்சுமைகளைவாங்குகிறபடியினாலே, * நீங்கள்வெட்டின கல்லான வீடுகளைக்கட்டினீர்கள், ஆனால் அவைகளிலே நீங்கள்குடியிருப்பதில்லை, விருப்பமான திராட்சத்தோட்டங்களைநாட்டினீர்கள், ஆனால் அவைகளின்பழ இரசத்தை நீங்கள்குடிப்பதில்லை.

* ௫. மோசே. ௨௮, ௩௰. செப்பனி. ௧, ௰௩.

௰௧ ஏனெனில் உங்கள்மீறுதல்கள் மிகுதியும் உங்கள்பாவங்கள் பலமுமாயிருக்கிறதென்றறிவேன், நீதிமானையிறுகப்பிடித்துப்பரிதானம்வாங்கி ஒலிமுக வாசலில் ஏழைகளின் நியாயத்தைப்புரட்டுகிறீர்கள்.

௰௨ ஆகையாற்புத்திமான் இக்காலத்திலே மவுனமாயிருக்கவேண்டும், ஏனெனில் இது துற்காலம்.

௰௩ நீங்கள் பிழைக்கும்படிக்குத் தீமையையல்ல நன்மையைத்தேடுங்கள், அப்போது நீங்கள்சொல்லுகிறதின்படியே சேனைக

லே பத்து மனுஷர் மீதியாயிருந்தாலும் அவர்கள் சாவார்கள்.

௰ அவர்களுடைய உறவின்முறையானாவது இழவாளியாவது எலும்புகளை வீட்டிலிருந்து வெளியே கொண்டுபோகும்படிக்கு அவைகளை எடுத்து வீட்டின் பக்கங்களுக்குள் நிற்கிறவனை உன்கிட்ட இன்னும் உண்டோவென்று கேட்பான், அவன் இல்லையென்பான், அப்போது இவன், நீ மவுனமாயிரு, ஏனெனில் கர்த்தருடைய நாமத்தைப் பிரஸ்தாபம்பண்ண இடமில்லையென்று சொல்லுவான்.

௰௧ அதேதெனில், இதோ, கர்த்தர் நிர்மாணிக்கிற கட்டளையென்னவென்றால், பெரிய வீட்டைத் திறப்புகள் உண்டாகவுஞ் சிறிய வீட்டை வெடிப்புகளுண்டாகவும் அடிப்பார்.

௰௨ கன்மலையிலே குதிரைகள் ஓடுமோ? அங்கே ஒருத்தன் மாடுகளால் உழுவானோ? * நியாயத்தைப் பிச்சாகவும் நீதியின் கனியை எட்டியாகவும் மாற்றினீர்கள்.
* ஓ, ௭.

௰௩ நாங்கள் எங்கள் பலத்தினாலே பெலங்களுக்குக் கொம்புகளைச் சவதரித்ததில்லையோவென்று சொல்லிக் காரியமில்லாமல் மகிழ்கிறார்கள்.

௰௪ ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாரே, இதோ ஆமாத்திற்குட்பிரவேசிக்கிற வழி துவக்கிச் சமனான நாட்டின் ஆறுமட்டாகவுங்களை ஒடுக்கப்பிடிக்கும் ஜாதியை நாம் உங்களுக்கு விரோதமாக எழுப்புவோமென்று சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௭. அதிகாரம்.

[வரும் ஆக்கினைகள் மூன்று தரிசனைகளால் முன் அறிவிக்கப்பட்டது.]

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததாவது, இதோ, இரண்டாங்கத்தாயத்துப் புல்லு ஓங்கத் துவக்கையில் அவர் கிளிகளையுருவாக்கினார், இது அது இராசாவினுடைய புல்லறுப்புக்குப்பிற்பாடு இரண்டாங்கத்தாயத்துப் புல்லாயிருந்தது.

௨ அப்போது சம்பவித்ததேதெனில், அவைகள் தேசத்தின் புல்லைத் தின்று தீர்ந்தபோது, நான் கர்த்தராகிய ஆண்டவரே மன்னியுமேன், யாக்கோபு திரும்ப எழுந்திருப்பதெப்படி? ஏனெனில் அவன் சிறுகிப்போனவனென்றேன்.

௩ கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்பட்டு * அப்படியாவதில்லையென்றார். * ௧. மோசே. ௰௮, ௨௬. மு

௪ கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததாவது, இதோ அக்கினியாலே நியாயம் விசாரிப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் கூப்பிட்டார், அது பெரிய ஆழத்தைப் பட்சிக்கவந்து அதில் ஒரு பங்கைப் பட்சித்துத் தீர்த்தது.

௫ அப்போது நான் கர்த்தராகிய ஆண்டவரே நிறுத்தும்மேன், யாக்கோபு திரும்ப எழுந்திருப்பதெப்படி? ஏனெனில் அவன் சிறுகிப்போனவனென்றேன். * ௪. மோசே. ௰௧, ௨.

௬ கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்பட்டு அப்படியும் ஆவதில்லையென்றார்.

௭ அவர் எனக்குக் காண்பித்ததாவது, இதோ தூக்குநூல் பிரமாணமாய்க் கட்டப்பட்ட ஒரு மதிலின்மேல் நின்றார், அவர் கையில் தூக்குநூலிருந்தது.

௮ அப்போது கர்த்தரென்னுடனே ஆமோசே! நீ யென்ன காண்கிறாயென்றார், தூக்குநூலையென்றேன், அப்போது ஆண்டவர் சொன்னதாவது. இதோ இஸ்ரவேலென்ற நம் ஜனத்தின் நடுவாகத் தூக்குநூலை விடுவோம், இனி அவர்களை மன்னியோம்.

௯ ஈசாக்கின் மேடைகள் பாழும் இஸ்ரவேலின் சுத்தஸ்தலங்கள் அவாந்தரையுமாக்கப்படும், நாம் எரோபெயாம் வீட்டாருக்கு விரோதமாகப் பட்டயத்தோடே யெழும்பிவருவோமென்றார்.

விக்கிரக ஆராதனையின் ஆசாரியனாகிய அமத்சியாப்பண்ணின் விரோதமும், அவனுக்கு முன்னறிவிக்கப்பட்ட ஆக்கினைகளும்.

௰ அனுத் பெத்தேலிலே ஆசாரியனான அமத்சியா இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபெயாமுக்குச் சொல்லியனுப்பினதாவது, ஆமோஸ் இஸ்ரவேல் வீட்டாரின் நடுவிலே உமக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணுகிறான், தேசம் அவன் வார்த்தைகளையெல்லாந் தாங்கமாட்டாது.

௰௧ ஏனெனில் எரோபெயாம் பட்டயத்தினாலே சாவானென்றும் இஸ்ரவேல் தன் சீமையிலிருந்து சிறைப்பிடிப்பாகக் கொண்டுபோகப்படுமென்றும் ஆமோஸ் சொல்லுகிறானென்று சொல்லியனுப்பி,

௰௨ பிற்பாடு ஆமோசோடே அமத்சியா சொன்னதாவது, தரிசனம் பார்க்கிறவனே! போ, நீ யூதாத் தேசத்திற்கோடி அங்கே அப்பந்தின்று அங்கே தீர்க்கதரிசனஞ் சொல்லு.

௰௩ பெத்தேலிலே இனித் தீர்க்கதரிசனஞ் சொல்லலாகாது, ஏனெனில் இது இராசாவின் பரிசுத்தஸ்தலமும் இராச்சியத்தின் அரண்மனையுமானதென்றான்.

௰௪ ஆமோஸ் அமத்சியாவுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது, நான் தீர்க்கதரிசியுமல்ல நான் தீர்க்கதரிசியின் மகனுமல்ல, நான் மந்தைமேய்க்கிறவனுங் காட்

டத்திப்பழங்களைப் பொறுக்கிறவனுமாயி ருந்தேன்.

௰௫ ஆடுகளை மந்தையின் பிறகே போகிற என்னைக் கர்த்தர் அழைத்துக் கர்த்தர் என்னுடனே, நீ போய் நம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனஞ் சொல்லென்றார்.

௰௬ இப்போதும் கர்த்தருடைய வார்த்தையைக் கேள், இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனஞ்சொல்லாமலும் ஈசாக்கின் வீட்டாருக்கு விரோதமாகச் * சொரியாமலுமிருப்பாயாகவென்று சொல்லுகிறாயே. * மிகா. ௨, ௬.

௰௭ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது, உன்பெண்சாதி ஊரிலே வேசியாவாள், உன்குமாரரும் உன்குமாரத்திகளும் பட்டயத்தால் விழுவார்கள், உன் வயல் அளவுநூலாற் பங்கிடப்படும், நீயோவெனில் அசுத்தசீமையிலே செத்துப்போவாய், இஸ்ரவேலுந் தன் சீமையிலிருந்து சிறைப்பிடிப்பிலே கொண்டுபோகப் படுமென்று சொல்லுகிறானென்றார்.

## ௮. அதிகாரம்.

[இஸ்ரவேல் இராசியத்திற்கு வரும் அழிவு முன்னறிவிக்கப்பட்டது.]

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததாவது, இதோ, அறுத்த கனிகளுள்ள ஒரு கூடையிருந்தது.

௨ அவர், ஆமோசே, நீ என்ன காண்கிறாயென்றார். அறுத்த கனிகளுள்ள ஒரு கூடையென்றேன், அப்போது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது, நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின் மேல் முடிவு வருகின்றது, * இனி அவர்களை மன்னியோம்.
* ௭, ௮.

௩ அந்நாளிலே தேவாலயப் பாட்டுகள் அலறுதலாகும், எல்லா இடத்திலுந் திரளான பிரேதங்கள் மவுனமாயெறிந்து விடப்படுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௪ * தேசத்திற் சிறுமைப்பட்டவர்களை யொழிப்பண்ண, எளியவர்களை விழுங்கி,
* ௨, ௭.

௫ நாங்கள் மரக்காலைக் குறைத்துச் சேக்கலின் நிறையை அதிகமாக்கிக் கபடத்தராசினாலே வஞ்சனைபண்ணித் தானியத்தை விற்கும்படிக்கு அமாவாசி எப்போது கழியும், நாங்கள் தானியத்தின் பண்டசாலைகளைத் திறக்கத்தக்கதாக ஓய்வுநாள் எப்போது கழியும், * எளியவர்களை ஒருபாத இரட்சைக்குச் சாட்டுக்குக் கொள்ளும்படிக்கும் தானியத்தின் பதரை விற்கும்படிக்கும், * ௨, ௬.

௬ மாதப்பிறப்பு நாள்கள் தவசம் விற்கத்தக்கதாகவும் ஓய்வுநாளானது நாங்கள் தானியத்தின் பண்டசாலைகளைத் திறக்கத்தக்கதாகவும் எப்போது கழிந்துபோமென்று சொல்லுகிறவர்களே இதைக் கேளுங்கள்.

௭ அவர்கள் செய்கைகளையெல்லாம் நாம் என்றைக்கும் மறப்பதில்லையென்று கர்த்தர் யாக்கோபுடைய மகிமையின் பேரிலே ஆணையிட்டார்.

௮ இதினிமித்தந் தேசம் அதிரவும் அதின் குடிகளெல்லாந் துக்கிக்கவும், * ஏகமாய் நதிகளாய்ப் புரண்டோடவும், எகிப்தின் நதியுடைய ஆற்றுவெள்ளத்தைப்போல அடித்து வெள்ளக்காடாகவும் வேண்டாமோ?
* ௯, ௫.

௯ அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், * நாம் மத்தியானத்திலே சூரியனை அஸ்தமிக்கப்பண்ணிப் பட்டப்பகலிலே தேசத்தை அந்தகாரப்படுத்தி, * எரேமி. ௰௫, ௯.

௰ உங்கள் பண்டிகைகளைத் துக்கிப்பாகவும் உங்கள் பாட்டுகளையெல்லாம் புலம்பலாகவும் மாறப்பண்ணிச் சகல அரைகளிலும் இரட்டையுஞ் சகல தலைகளிலும் மொட்டையையும் வருவித்து அவர்களுடைய தங்கப்பை * ஒரே பிள்ளைக்காகத் துக்கிக்கிறதற்குச் சமானமாக்கி அவர்களுடைய முடிவைக் கசப்பான நாளாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
* எரேமி. ௬, ௨௬.

௰௧ இதோ அப்பத்தின் பேரிலுள்ள பசியல்ல தண்ணீரின் பேரிலுள்ள தாகத்தையுமல்ல * கர்த்தருடைய வசனங்களைக் கேட்கப் பசியுண்டாயிருக்கிற பஞ்சத்தை நாம் தேசத்திலே அனுப்பும் நாட்கள் வருமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
* ௧. சாமுவே. ௩, ௧.

௰௨ அப்போது அவர்கள் கர்த்தருடைய வசனத்தைத் தேட ஒரு சமுத்திரந் துவக்கி மறுசமுத்திரமட்டுக்கும் வடக்குத் துவக்கிக் கிழக்குமட்டுக்கும் அலைந்து திரிந்தும் அதைக் கண்டுபிடியாதே போவார்கள்.

௰௩ தாணிலிருக்கிற உன் தேவனின் சீவனைக்கொண்டென்றும் பெர்சேபா மார்க்கத்துத் தேவனின் சீவனைக்கொண்டென்றுஞ் சொல்லி,

௰௪ சமாரியாவினுடைய தோஷத்தின் பேரிலே ஆணையிடுகிற சவுந்தரியமுள்ள கன்னியாஸ்திரிகளும் வாலிபரும் அக்காலத்திலே தாகத்தால் சோர்ந்துபோய் இனியெழுந்திருக்காதபடியாக விழுவார்களென்றார்.

## ௯. அதிகாரம்.

[இகோரத்தையடிக்கு நரிசனைபாவே தேவ வருகிறவைகள் முன்னறிவிக்கப்பட்டது.]

ஆண்டவரைப் பலிபீடத்தின் மேல் நிற்கக் கண்டேன், அவர் சொன்னதாவது, நீ வாசல்களின் நிலைகள் அசையும்படிக்குச் சிகரத்தையடித்து அவைகளை அவர்களெல்லாருடைய

டைய தலையின்மேலும் விழ உடைத்துப போடு, அவர்களுக்குப்பின்னுக மீந்தவர்க ளையோவென்ருல் நாம பட்டயத்தாலே கொன்றுபோடுவோம அவர்களில ஓடுகிறவ ன ஓடிப்போவதுமில்லை அவர்களில தப்பு கிறவன தப்பிப்போவதுமில்லை.

௨ * அவர்கள பாதாளத்திலே தோண்டி ப்பதுங்கிக்கொண்டாலும நமமுடையகை யவிடத்திலிருந்து அவர்களைப பிடித்துக கொண்டுவரும. அவர்கள ஆகாயபரியந்தம ஏறினும அவ்விடத்திலிருந்து அவர்களைபி டித்திறக்குவோம. * சங்கீ. ௱௩௯, ௮.

௩ அவர்கள கர்மேலின கொடுமுடியிலே ஒளித்துககொண்டாலும அங்கேயவர்களை தேடிப்பிடிப்போம, அவர்கள நமமுடைய கண்களுக்குச் சமுத்திரத்தின ஆழத்திலே மறைந்துக்கொண்டாலும அங்கேயவர்க ளைக்கடிக்கப பாமபுக்களுக்குக்கற்பிப்போ ம.

௪ அவர்கள தங்களைசத்துருவுக்குமுன்பா கச்சிறையிருப்பிலேபோனாலும அங்கேயவ ர்களைக்கொன்றுபோட நாமபட்டயத்து க்குக்கற்பித்து * நமதுகண்களையவர்கள மேலதன்மைக்கல்ல தின்மைக்கென்றேவை ப்போம். * எரேமியா. ௪௪, ௰௧.

௫ சேனைகளின கர்த்தராகிய ஆண்டவர் தேசத்தைத்தொடவேயுருகிப போகும, அ ப்போது அதின்குடிகளெல்லாருந்துக்கிப பார்கள, * எங்தும ததியாயப்புரண்டோடி எகிப்தின்னுடைய ஆற்றின வெள்ளத்தை ப்போலவெள்ளங்காட்டாகும. * ௮, அதி. ௮.

௬ அவர்பரமண்டலத்தில தமதாசனப படிகளைக்கட்டிப்பூமியின்மேலிருக்கிற தம கூட்டத்தையஸ்திபாரப்படுத்தினவர், * அவர் சமுத்திரத்தின தண்ணீர்களையழைத் து அவைகளைப்பூமியினுடையவிசாலத்தின மேல ஊற்றுகிறவர், கர்த்தரென்பது அவ ருடையநாமம. * ௫, அதிகாரம். ௮.

௭ இஸ்ரவேலபுத்திரரே, நீங்கள நமக்கு எத்தியோப்பியர்ன புத்திரருக்குச்சரியான வர்களல்லவோவென்று கர்த்தர்சொல்லுகி ருர், நாம இஸ்ரவேலை எகிப்துதேசத் திலும பெலிஸ்தரைக் * கப்தோரிலுங் கு ரியரைக்கீரிலுமிருந்து வரவரப்பண்ணின திலலையோ? * எரேமி. ௪௭, ௪.

புதாவீட்டாருக்கருளப்பட்டவாக்குத்த த்தம்.

௮ இதோ, கர்த்தராகிய ஆண்டவரின கண்களபாவ இராச்சியத்திற்குவிரோதமா கவைக்கப்பட்டிருக்கின்றது, அதைப்பூமியி ன்மேலிராதபடிக்கு அழித்துப்போடுவோ ம, ஆகிலும யாக்கோபின வீட்டைநாம்முழு தும் அழித்துப்போடுவதில்லையென்று கர்த் தர்சொல்லுகிருர்.

௯ அதெதெனில இதோ சல்லடையிலு லேசலித்தரிக்கிறதுபோலே இஸ்ரவேலவீ ட்டாரையெல்லாச்சாதிகளுக்குள்ளுஞ் சலி த்தரிக்கும்படிக்குநாங்கட்டளையிடுவோம, ஆனால ஒரு கோதுமைமணியுந்தரையிலே விழுவதில்லை. * லூக்கா. ௨௨, ௩௧.

௰ தீங்கு எங்களைப்பிடிப்பதுமில்லை எ ங்களுக்கு நேரிடுவதுமில்லையென்று நமது சனத்திற்சொல்லுகிற பாவிகளெல்லாரும பட்டயத்தினுலேசாவார்கள.

௰௧ அந்நேரமில * மீதியானவர்களையும நமமுடையநாமம்விளங்கிய சகலசாதிகளை யும வசமாக்கிக்கொள்ளுமபடிக்கு, * அப போஸ்தலர். ௰௫, ௰௬. ௰௭.

௰௨ அந்நாளிலே நாம விழுந்ததாகிய தாவீதின கூடாரத்தைத்திருமப எடுத்து அவர்களுடையதிறப்புக்களையடைத்து அதி ல இடிந்துபோனதையெடுப்பித்துப்பூருவ நாட்களில இருந்ததுபோல அதைக்கட்டு வோமென்று இதைச்செய்கிறகர்த்தர்சொ லலுகிருர்.

௰௩ இதோ, உழுகிறவன அறுக்கிறவனை யுந் திராட்சப்பழங்களை ஆலையாடுகிற வன விதைக்கிறவனையுநெருங்குகிறது, * தி ராட்சப்பழ இரசமாய்ப்பர்வதங்கள வடிகிறதுமமேடுகளெல்லாங்கரைகிறதுமா ன நாட்களவருமென்று கர்த்தர்சொல்லுகி ருர். * யோவே. ௩, ௨௧.

௰௪ அந்நேரத்தில * நமது சனமாகிய இஸ்ரவேலின சிறையிருப்பைத்திருப்புவோ ம, அவர்கள பாழானபட்டணங்களைக்கட்டி யவைகளிற்குடியிருந்து † திராட்சத் தோட்டங்களைநாட்டி அவைகளுடைய ப்பழங்களின இரசத்தைக்குடித்துத் தோட் டங்களையுண்டாக்கி அவைகளின்கனிகளை ப்புசிப்பார்கள. * ௫. மோ. ௩௦, ௩. எரே. ௨௩, ௰௪. † ஏசாயா. ௬௫, ௨௧. எசேக். ௨௮, ௨௬. சகரி. ௮, ௰௨.

௰௫ அவர்களையவர்கள சீமையிலேநாட்டு வோம, அவர்கள நாந்தங்களுக்குக்கொ டுத்த தங்கள சீமையிலிருந்து இனிப்பிடுங்க ப்படுவதில்லையென்று உன்பராபரனுகிய கர்த்தர்சொல்லுகிருரென்ருர்.

ஆமோசின தீர்க்கதரிசனமமுடிந்தது முற்றும.

டையசுத்தந்தரங்களைச் சுதந்தரித்துக்கொளளுவார்கள.

௰அ யாக்கோபினவீட்டார் அக்கினியும யோசேப்பினவீட்டார் அக்கினிச்சுவாலையுமஏசாவினவீட்டாரோவைக்கோலதுரும்புமாயிருப்பார்கள, அவர்கள இவர்களைக்கொளுத்தி ஏசாவினவீட்டிலமீதியாயிராதபடிக்கு இவர்களைப்பட்சிப்பார்கள, ஏனெனில கர்த்தரிதைச்சொனனார்.

௰௯ தெறகுச்சீமையார் ஏசாவினபருவதத்தையும பள்ளத்தரைச்சீமையார் பெலிஸ்தரின தேசத்தையுஞசுதந்தரித்துக்கொளளுவார்கள, அவர்கள எப்பிராயீமின நாட்டையுஞசமாரியாவின நாட்டையும பென்யமீனமனுஷரோ கீலேயாத்தையுஞசுதந்தரித்துக்கொளளுவார்கள.

௨௰ சர்ப்பாத்மட்டும கானானியருக்குள்ளே சிறைப்பட்டுப்போன இஸ்ரவேலபுத்திராகிய இந்தச்சேனையுஞ்சேப்பாராத்திற சிறைப்பட்டுப்போன எருசலேமபட்டணத்தாரும தெறகுத்திப்பட்டணஙகளைச்சுதந்தரித்துக்கொளளுவார்கள.

௨௧ ஏசாவினபருவதத்தை நியாயந்தீர்ப்பதறகாக இரட்சகர்கள சீயோனபருவதத்தில வந்தேறுவார்கள, * அப்போது ராசரியங்கர்த்தருடையதாயிருக்கும.

* சங்கீ. ௨௨, ௨௮. மீகா. ௪, ௭

ஒபதியாவின்தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# யோனாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[கர்த்தரின அழைப்புக்கு யோனாகீழ்ப்படியாதேபோய அடைந்ததண்டனை.]

௧ அமித்தாயின குமாரனாகிய யோனாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவர்சொனனதாவது, * ௨. இராசா. ௰௪, ௨௫.

௨ நீயெழுந்திருந்து பெரியபட்டணமாகிய நினிவேக்குப்போய அதறகுவிரோதமாகப்பிரசங்கி, ஏனெனறால அவர்களுடையபொலலாப்பு நமக்குமுனபாக ஏறிவந்ததெனறார்.

௩ அப்போதுயோனா கர்த்தருடைய முகத்திறகுவிலகித் தர்சீசுக்கோடிப்போகும்படிக்கு எழுந்திருந்து * யோப்பேக்கு இறஙகிப்போய்த்தர்சீசுக்குப்போகிறகப்பலைக்கண்டுபிடித்துத் தலைக்கூலிகொடுத்துத்தானகர்த்தருடையமுகத்திறகுவிலக அவர்களோடே கூடத்தர்சீசுக்குப்போகும்படிக்கு அதிலேறினான. * அப்போ. ௯, ௩௬.

௪ * ஆனால கர்த்தர் சமுத்திரத்தினமேற பெருஙகாறறைவரவிட்டார், அத்தாறகப்பலஉடையுமெனறு நினைக்கத்தக்கதான கொந்தளிப்புண்டாயிறறு.

* மத்தே. ௮, ௨௪. அப்போ. ௨௭, ௰௪.

௫ அப்போதுகப்பலாட்களபயந்து அவரவர் தனதனதேவனை நோக்கிக்கூப்பிட்டுக்கப்பலிலிருந்த தட்டுமுட்டுகளின பாரமறறுப்போகிறதினாலேயதை இலேசாக்கும்படிக்கு அவைகளைச்சமுத்திரத்திலெறிந்துவிட்டார்கள, யோனாவோவெனறால கப்பலின கீழ்த்தட்டிலிறஙகிப் படுத்துக்கொணடு அசந்துநித்திரைபணணியிருந்தான.

௬ அப்போதுபெரியமாலிமையவனண்டைக்குச்சேர்ந்துவந்து, அவனுடனே, நீ நித்திரைபணணிக்கிடக்கிறதென்ன? எழுந்திருந்து உனதேவனைநோக்கிக் கூப்பிடு, நாஙகெட்டுப்போகாதபடிக்குச் சுவாமி ஒருவேளைநம்மைத்தயவாய நினைப்பாராக்குமெனறான.

௭ அவர்கள ஒருத்தரோடொருத்தர், ஆர்நிமித்தம இந்தப்பொலலாப்பு நமக்குவருகிறதெனறுநாம அறியும்படிக்குச் சீட்டுகளைப்போடுவோம வாருஙகளெனறுசொலலிக்கொணடு சீட்டுகளைப்போட்டார்கள, அப்போது யோனாவினபெயருக்குச் சீட்டுவிழுந்தது.

௮ அப்போது அவர்கள இவனோடே, ஆர்நிமித்தம இந்தப்பொலலாப்பு நமக்குவந்ததெனறு நீ யெஙகளுக்கறிவியேன, உனதொழிலெனன? நீ யெஙகேயிருந்துவருகிறாய? உனனுடைய தேசமேது? நீ யெந்தச்சனத்தானெனறு சொலலிக்கேட்டார்கள.

௯ அவர்களோடேயிவன, நான எபிரேயன, சமுத்திரத்தையும பூமியையும உண்டாக்கின பரமணடலஙகளுடையபராபரனாகியகர்த்தருக்கு நான பயபத்தியானவனெனறான.

௰ அப்போது அந்தமனுஷர் மிகவும்பயந்து அவனுடனே, நீ யேனிதைச்செய்தாயெனறார்கள, ஏனெனிலதான கர்த்தருடையமுகத்திறகு விலகி ஓடிப்போகிறவனெ

கிறதையவன் தங்களுக்கறிவித்ததினாலே அந்த மனுஷர் அதையறிந்தார்கள்.

௰௧ பின்னையும் சமுத்திரம் நமக்கு அமர்ந்துபோகும்படிக்கு உனக்கு நாங்கள் செய்யவேண்டியதென்னவென்று அவனைக் கேட்டார்கள், ஏனென்றால் சமுத்திரங் கொந்தளித்துக் கொண்டேயிருந்தது.

௰௨ அப்போது அவன் அவர்களோடே சொன்னதாவது, நீங்கள் என்னையெடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிடுங்கள், அப்போது சமுத்திரம் உங்களுக்கு அமர்ந்துபோகும், ஏனென்றால் என்னிமித்தம் இந்தப் பெரிய கொந்தளிப்பு உங்கள்மேல் வந்ததென்கிறதை நான் அறிவேனென்றான்.

௰௩ அந்த மனுஷர் கரைக்குத் திரும்பும்படிக்குத் தண்டுவலித்தார்கள், ஆனால் அவர்களுக்குக் கூடாதேபோயிற்று, ஏனென்றால் சமுத்திரம் அவர்களுக்கு விரோதமாகக் கொந்தளித்துக்கொண்டேயிருந்தது.

௰௪ அப்போது அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டுச் சொன்னதாவது, ஆ கர்த்தாவே, தேவரீர் எங்களையிந்த மனுஷனுடைய ஜீவனிமித்தங் கெட்டுப்போகவொட்டாமலும் குற்றமில்லாத இரத்தப்பழியை யெங்கள்மேற் சுமத்தாமலுமிரும், ஏனென்றால் தேவரீர் கர்த்தர், உமக்குச் சித்தமாயிருக்கிறபடியே தேவரீர் செய்கிறீரென்று சொல்லி,

௰௫ யோனாவையெடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிட்டார்கள், அப்போது சமுத்திரந் தன் மும்முரத்தைவிட்டு அமர்ந்தது.

௰௬ அப்போது அந்த மனுஷர் கர்த்தருக்கு மிகவும் பயப்பட்டுக் கர்த்தருக்குப் பலியிட்டுப் பொருத்தனைகளைப் பண்ணினார்கள்.

## ௨. அதிகாரம்.

[ஜெபம்பண்ணின யோனா திரும்ப இரட்சிக்கப்பட்டது.]

ஆனால் யோனாவை விழுங்கப் பெரிய மீனைக் கர்த்தர் கட்டளையிட்டார், * அந்த மீனினுடைய வயிற்றிலே யோனா மூன்று பகலும் மூன்று இராத்திரியுமிருந்தான். * மத்தே. ௰௨, ௪௰. ௰௬, ௪. லூக்கா. ௰௧, ௨௯.

௨ ஆனால் மீனுடைய வயிற்றிலிருந்து யோனா தன் பராபரனாகிய கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணிச் சொன்னதாவது,

௩ * நான் நெருக்கப்படுகையிற் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், அப்போது எனக்கு உத்தரவருளிச் செய்தார், பாதாளத்தின் வயிற்றிலிருந்து கூக்குரலிட்டேன், அப்போது என் சத்தத்தைக் கேட்டீர். * சங்கீ. ௱௨௰, ௧. ௱௩௰, ௧.

௪ ஏனென்றால் சமுத்திரங்களின் நடுமையமாகிய ஆழத்திலே என்னைத் தள்ளிவிட்டீர், நீரோட்டம் என்னைச் சூழ்ந்துகொண்டது, உம்முடைய எல்லா வெள்ளங்களும் அலைகளும் என்மேற் புரண்டது.

௫ நான் உம்முடைய கண்களுக்கெதிரே யிராதபடிக்குத் தள்ளுண்டேன், ஆகிலும் இன்னம் உம்முடைய பரிசுத்த தேவாலயத்தை நோக்குவேனென்றேன்.

௬ தண்ணீர்கள் என்னைப் பிராணபரியந்தஞ் சுற்றிப்பிடித்தது, ஆழம் என்னைச் சூழ்ந்தது, நாணல் என் தலையைச் சுற்றிக்கொண்டது.

௭ பருவதங்களின் அடிவாரங்கள்பரியந்தம் இறங்கினேன், பூமியின் தாழ்ப்பாள்கள் என்றென்றைக்கும் என்னை அடைக்கிறதாயிருந்தது, ஆனால் என் பராபரனாகிய கர்த்தாவே என் பிராணனை அழிவுக்குத் தப்புவித்து ஏறிவரப்பண்ணினீர்.

௮ என் ஆத்துமம் என்னில் தொய்ந்துபோகையிற் கர்த்தரை நினைத்தேன், அப்போது என் விண்ணப்பம் உம்முடைய பரிசுத்த தேவாலயத்திலே உம்மண்டைக்கு வந்து சேர்ந்தது.

௯ பொய்யான மாயையைக் கைக்கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு வருங் கிருபையைப் போக்கடிக்கிறார்கள்.

௰ * நானோவென்னில் துதியின் சத்தத்தோடே உமக்குப் பலியிடுவேன், நான் பண்ணின பொருத்தனையைச் செலுத்துவேன், இரட்சிப்பு கர்த்தருடையதென்றான். * சங்கீ. ௫௰, ௰௪. ௱௰௬, ௰௭.

௰௧ ஆனால் கர்த்தர் மீனுக்குச் சொன்னார், அப்போது அது யோனாவைக் கரையிலே கக்கிப்போட்டது.

## ௩. அதிகாரம்.

[யோனா பண்ணின பிரசங்கத்தினாலே நினிவேயர் பயந்து குணப்பட்டது.]

இரண்டாம் விசை கர்த்தருடைய வார்த்தை யோனாவுக்கு உண்டாகி அவர் சொன்னதாவது,

௨ * நீ எழுந்திருந்து பெரிய பட்டணமாகிய நினிவேக்குப் போய் நாம் உனக்குச் சொல்லும் பிரசங்கத்தை யதற்கு விரோதமாகப் பிரசங்கியென்றார். * ௧, அதி. ௨.

௩ அப்போது யோனா எழுந்திருந்து கர்த்தருடைய வார்த்தையின்படியே நினிவேக்குப் போனான், நினிவேயோவென்றால் மூன்று நாளையிற் பயண விஸ்தாரமான மிகவும் பெரிய பட்டணமாயிருந்தது.

௪ யோனா ஒருநாளையிற் பயணம் பட்டணத்திற் கட்போகத் துவக்கி, இன்னம் நாற்பது நாளிருக்கிறது, அப்போது நினிவே புரட்டப்பட்டுப்போமென்று பிரசங்கித்தான்.

௫ * அபபோது நினிவேமனுஷர் பராபரனபேரிலே விசுவாசிதது உபவாசததைக்கூறினார்கள, பெரியோர்துவககிச சிறியோர்மடடும இரடடுகளையுடுத்திககொணடார்கள. * மத்தே. ௰௨, ௪௧.

௬ இந்தவர்த்தமானம நினிவேயினஇராசாவுககுபபோயெடடினபோது இவனதனஇராசாசனததைவிடடெழுந்திருந்து தான உடுத்திருந்த உடுபபைவிலககிபபோடடு இரடடினாலே மூடிககொணடு சாமபலிலே உளுககார்ந்தான.

௭ இதுவுமலலாமல இராசாதானுந்தனனுடைய பிரதானிகளும நிர்ணயமபணணினகடடளையாக நினிவேயிலே கூறசசொனனதாவது, மனுஷரும மிருகஜீவனகளும மாடுகளும ஆடுகளும ஒன்றுமருசிபாராதிருக்கவுமமேயாமலுந்தணணீர்குடியாமலுமிருக்கவும,

௮ மனுஷரும மிருகஜீவனகளும இரடடினாலமூடிககொளளபபடடு பராபரனைநோககிவலுவாயககூபபிடவும அவரவர்தஙகள பொலலாதவழியையுந் தஙகளகைகளிலுளளகொடுமையையும விடடுத்திருமபவுங்கடவது.

௯ நாம் அழிந்துபோகாதபடிக்கு* ஒருவேளை பராபரனமனஸதாபப்படடுத தமமுடைய கோபத்தின உக்கிரததைவிடடுத திருமபிக்கொளளுவாராககும, ஆர்அறிவானென்பதைக் கூறசசொனனான. * யோவே. ௨, ௰௪. தானியேல. ௪, ௨௪.

௰ அவர்கள தஙகளபொலலாத வழியைவிடடுத் திருமபினார்களெனறு பராபரன அவர்களுடைய கிரியைகளைபபார்த்துத் * தாமஅவர்களுககுச்செயவோமெனறுசொலலியிருந்த தீஙகுககு மனஸதாபப்படடு அதைச்செயயாதிருந்தார். * எரேமி. ௰௮, ௭. ௮.

## ௪. அதிகாரம்.

[நினிவேககு அழிவுவராதபடியினாலே மனமடிவான யோனாவுககுக் கர்த்தர்சொனன வுபுத்தி.]

ஆனால யோனாவுககு இதுமிகுதியும ஆசாததியமாககணடது, அவனுககு எரிசசலுணடாயிறறு.

௨ அவனகர்த்தரைநோககி விணணபபமபணணிசசொனனதாவது, ஆ கர்த்தாவே, நான என்தேசத்திலிருக்ககெயில நானசொனனது, இதுதானலலவோ? ஆகையாலேதானே தர்ஷீசுககோடிபபோகிறதினால இதறகுமுந்திககொளளபபார்த்தேன, ஏனெனில தேவரீர் * இரக்கமும, மனவுருக்கமும நீடியசாந்தமும மிகுந்த கிருபையுமுளளவருந் தீஙகுக்கு மனஸ்தாபப்படுகிறவருமான தேவனெனறறிவேன.

௨. மோசே. ௩௪, ௬.

௩ இபபோதுங கர்த்தாவே, என ஆததுமததை என்னைவிடடெடுத்துககொளளும, ஏனெனில நான உயிரோடிருககிறதைபபார்ககிலும நான சாகிறது நலமென்றான. * யோபு. ௬, ௯. ௰, ௪. எலி. ௨௰, ௰௪.

௪ அதறகுக்கர்த்தர் நீ எரிசசலாயிருககிறது நலலதோவெனறார்.

௫ யோனாவோவெனறால் படடணததிலிருந்துபுறபபடடுப்படடணத்திற்குக் கிழககேயுளுககார்ந்து அஙகேதனககொருகுடிசையைபபோடடுப் படடணத்திற்குச சமபவிக்கபபோகிறதைந் தானபார்ககுமடடும அதின கீழ்நிழலிலே உளுககார்ந்திருந்தான.

௬ ஆனால யோனாவுடைய தலையினமேலநிழலுணடாயிருக்கவும அவனை அவனுடைய மனமடிவுககு நீஙகலாக்கவும பராபரனாகிய கர்த்தர் ஒரு ஆமணககுச்செடியைமுளைக்ககடடளையிடடு அதையவனமேலஓஙகிவளரபபணணினார், அந்த ஆமணககினபேரிலே யோனாமிகுதியுஞ சநதோஷபபடடான.

௭ ஆனால மறுநாள கிழககுவெளுககுமநேரத்திலே பராபரன ஒருபூசசியைக்கடடளையிடடார், அது ஆமணககுசசெடியைக்கடித்துபபோடடது, அதினாலே காயந்துபோயிறறு.

௮ சூரியனுதித்தபோது சமபவித்ததேதெனறால பராபரன அமைசசலுளள கீழ்க்காறறைக்கடடளையிடடார், அபபோது வெயயில யோனாவுடைய தலையிறபடுகிறதினால அவனசோர்ந்துபோயத் * தனஜீவனுககுச்சாவைககேடடு நான உயிரோடிருக்கிறதைபபார்ககிலும நான்சாகிறதுதாவிலையென்றான. * ௩, வசனம.

௯ அபபோது பராபரன யோனாவுடனே, நீ ஆமணககினிமித்தம * எரிசசலாயிருககிறதுநலலதோவெனறார், அதறகவனநானமரணபரியந்தமும எரிசசலாயிருககிறது நலலதெனறான. * ௪, வசனம.

௰ அபபோது கர்த்தர்சொனனதாவது, நீ பிரயாசபபடாததுமபயிராக்காததுமஒரு இராததிரியிலேமுளைத்ததும ஒருஇராததிரியிலே அழிந்ததுமான ஆமணக்குககுப்பரதவிககிறாயே.

௰௧ தஙகளவலதுகைககுந் தஙகள இடதுகைககுமவித்தியாசமறியாத நாற்பிருபதினாயிரமபேருககு அதிகமான மனுஷரும அநேகமிருகஜீவனகளுமிருககிற * பெரியபடடணமுமாகிய நினிவேககுநானபரதவிககாதிருபபேனோவெனறார். * ௧, அதி. ௬.

யோனாவின தீர்க்கதரிசனம முடிந்தது முறறும்.

# மிகாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

[யூதாவின்மேலும இஸரவேலின மேலும வரும ஆக்கினைகளின தீர்க்கதரிசனம.]

யோததாம, ஆகாஸ், எசேக்கியாவெனற யூதாவுடைய இராசாக்களுடைய நாட்களில * மொரேசா ஊராளாகிய மிகாவுககுணடானதும, அவனசமாரியாவுககும எருசலேமுககுமவிரோதமாயத் தரிசனமாக்கணடதுமானகர்ததருடையவார்ததை.
* எரேமியா. உ௬, ௰அ.

உ * சகலசனசததனங்களே கேளுஙகள, பூமியே, அதின நிறைவே,கவனி, கர்ததராகிய ஆணடவர் உஙகளுககுவிரோதமாகச சாட்சிவிளஙகுவார், ஆணடவர் தமமுடைய பரிசுத்ததேவாலயததிலிருநதுதானே.
* ரு. மோசே. ௩உ, க. எசாயா. க,உ.

௩ ஏனெனில இதோ, கர்ததர் தமதுதானததிலிருநதுபுறபபடடு இறஙகிபபூமியின உயரஙகளைமிதிபபார். * எசாயா. உ௬, உக.

ச அககினிககுமுனபாகமெழுகுஉருகிறுபபோலேயுமமலைகளிலிருநதுபாயுநதணணீர் தரையைக கிழிககிறுபபோலேயும, * அவர்கீழே பர்வதஙகள உருகிபபளளததாககுகளகிழிநதுபோகும. சங்கீ. ௬எ, ரு.

ரு இதுவெலலாம யாககோபுடையமீறுதலநிமித்தமும, இஸரவேலவீட்டாருடையபாவஙகளநிமிததமுஞசமபவிககும,யாககோபினமீறுதலுககுக்காரணமேது? சமாரியாவலலவோ? யூதாவினமேடைகளுககுக்காரணமேது? எருசலேமலலவோ?

௬ ஆகையால நானு சமாரியாவைவெளியானமண்மேடுந திராட்ச நடவுககான நிலமுமாககி அதினகலலுகளைப பளளததாககிலே புரணடுவிழபபணணி அதின அஸதிபாரஙகளைததிறநதுவைபபேன.

எ அதின சுருபஙகளெலலாம நருக்கபபடும, அதினபணையஙகளெலலாம அககினியால எரிததுபபோடபபடும, அதினவிககிரகஙகளையெலலாமபாழாககுவேன,ஏனெனில வேசிபபணையததினுற் சேர்க்கபபடடதுதிருமபவேசிபபணையமுமாயப்போகும.

அ இதினிமித்தம நானபுலமபி அலறுவேன, பறிகொடுத்தவனாயும அம்மணமாயும நடபபேன, நானவலுவானசர்பபஙகளைபபோலப் புலமபலையுந தீவுகருவிகளைபபோலத்துக்கிப்பையுங கேட்கபபணணுவேன.

௯ ஏனெனில அதினகாயம ஆறுததாபிருககினறது, அதேதெனில யூதாமடடும வநதது, எனசனததினவாசலமடடும எருசலேம்மடடுமேகிட்டினறது.

௰ * அதைக்காத்படடணததிலே அறிவியாதேயுஙகள,அழவே அழாதேயுஙகள, உளளேபுழுதியுளள தலததிலேபோயபபுழுதியிலேபுரளு. * உ. சாமுவேல. க, உ0.

௰க சாப்பீரிற்குடியிருககிறவளே, வெட்கமான அம்மணமாய அபபாலேபோ, சாயனானிற் குடியிருககிறவள வெளியேவருவதிலலை, அசஊரினபுலமபல அதில உஙகளுககிருநத அடைக்கலநிலைமையெடுததுபபோடடது.

௰உ மாரோததிற்குடியிருககிறவள இழநத நனமையினிமித்தம நோவுசலாயிருபபாள, ஏனெனில எருசலேமின வாசலுககு நேராகததீஙகு * கர்ததரிடததிலிருநதிறஙகுகினறது. * எசாயா. ச௯, எ. ஆமோ. ௩, ௬.

௰௩ லாகீசிற் குடியிருககிறவளே, வேகமானவாகனஙகளை இரதத்திலே பூடடு, நீதான சீயோனகுமாரத்தியின பாவத்திற்குக்காரணி, ஏனெனில உனனில இஸரவேலினபாதகஙகள கணடுபிடிக்கப்படடது.

௰ச ஆகையாற் காத்படடணததினிமிததம உனககிருககிறதைககொடுததுவிடுவாய். அக்சீபினவீடுகள இஸரவேலின இராசாககளுககு அபததமாயபபோகும.

௰ரு மரேசாவிற்குடியிருககிறவளே,உனககினனமொருசுதநதரவாளியைவரபபணணுவேன, அவன அதுலலாமமட்டுககும இஸரவேலுடையமகிமையினதானமடடுககுமவருவான.

௰௬ உனக்குக்கனிகரமான உனபிளளைகளினிமிததம * நீ மொட்டையாகச சிரைததுககொள, கழுகைபபோல முழுமொடடையாகததானே, ஏனெனில உனனைவிடடுச சிறையிருபபிலேபோகிறூர்கள.
* எசாயா. உஉ, ௰உ.

## உ. அதிகாரம்.

[அநியாயககாரருககும, கடிநதுகொளளுகிறபுத்தியைககேட்க மனதிலலாதவர்களுககும வரும ஆககினைகள முனனறிவிககபபடடது.]

அககிரமததை யோசிததுத தஙகள படுககைகளினமேற் பொலலாயபுசசெய

ஆயப்பண்ணிக் காலமே வெளிச்சமாகிறபோது அதைத் தங்கள் கையில் வல்லமையிருக்கிறபடியினாலே நடப்பித்து,

௨ * வயல்களை இச்சித்துப் பறித்துக்கொண்டு, வீடுகளை இச்சித்து எடுத்துக்கொண்டு, புருஷனையும் அவன் வீட்டையும் மனுஷனையும் அவன் சுதந்தரத்தையும் ஒடுக்குகிறவர்களுக்கு ஐயோ. * ஏசாயா. ரு, அ.

௩ ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது, இதோ நீங்கள் உங்கள் கழுத்துகளை நீங்கலாக்கிவிடக்கூடாத் தீங்கை நாம் இந்த வம்சத்தின்மேல் வரப்பண்ண நினைக்கிறோம், அப்போது நீங்கள் மேட்டிமையாய் நடப்பதில்லை, ஏனென்றால் அது தீக்காலம்.
* ௫. மோசே. ரு, ௰௯.

௪ அந்நாளிலே உங்கள் பேரிலே ஒரு சொல்லுண்டாகித் துக்கமான புலம்பலாய்ப் பாழாகவே பாழானோமென்றும், என் சனத்தின் வீதத்தை மாற்றிப்போட்டாரென்றும் எப்படி அதை என்னைவிட்டெடுத்துப் போட்டார்? எங்கள் வயல்களைப் பிடுங்கிப் பகுத்துக்கொடுத்தாரென்றும் புலம்பப்படும்.

௫ மெய்யாகவே, கர்த்தரின் சபையிற் சுதந்தர வீதங்களை அளந்துகொடுக்கிறவர்கள் உனக்கில்லாதிருப்பார்கள்.

௬ * தீர்க்கதரிசனஞ் சொரியாதிருப்பீர்களாக, சொரிந்தால் நிந்தை நீங்கிப்போகாதிருக்கிற இந்தப் பிரகாரமாகச் சொரியவேண்டாமென்கிறார்கள். * ஆமோ. எ, ௰௬.

௭ யாக்கோப் வீட்டாரென்னப்பட்டவர்களே, கர்த்தரின் ஆவியானவர் குறுகியிருக்கிறாரோ? அவருடைய கிரியைகள் இவைகள்தானோ? செம்மையாய் நடக்கிறவனோடே நம்முடைய வார்த்தைகள் நயவாயிராதோ?

௮ நம் சனமோவென்றால் முதலே சத்துருவாக எழும்பிற்று, யுத்தத்திலிருந்து திரும்பிவந்து அஞ்சாமற்கடந்துபோகிறவர்களுடைய வஸ்திரத்தின்மேல உடுப்பை யுரிந்துகொண்டீர்கள்.

௯ நம் சனத்தின் ஸ்திரீகளையவர்களுடைய சவுக்கியமான வீடுகளிலிருந்து துரத்திவிட்டீர்கள், அவர்களுடைய குழந்தைகளுக்கிருந்த நம்முடைய அலங்காரத்தை என்றைக்குமில்லாதபடிக்குப் பறித்துக்கொண்டீர்கள்.

௰ எழுந்திருந்து போங்கள், ஏனெனில் இது நீங்கள் இளைப்பாறிக்கொண்டிருக்கத்தக்க தேசமல்ல, அதேனென்றால் தீட்டுப்பட்டுக் கெட்டுப்போயிற்று, கேடு அகோரமாயிற்று.

௰௧ மனம்போகிற போக்காயப் போய அபத்தமானதைப் புழுகுகிற ஒருவன் மதுபானத்தையும் லொட்டியையுங் குடித்துத் தான் உனக்குப் பிரசங்கிப்பேனென்றால் அவனே இந்தச் சனத்திற்கேற்ற பிரசங்கியாயிருப்பான்.

கிருபையுள்ளவாக்குத்தத்தம.

௰௨ யாக்கோபின் சனமே, * உங்களை யெல்லாங் கூட்டிக்கூட்டுவோம், இஸ்ரவேலில் மீதியானவர்களைச் சேர்க்கச் சேர்ப்போம், போத்ஸ்ராவின் ஆடுகளைப்போலே அவர்களை † ஏகக்கூட்டமாக்குவோம், தன் தொழுவத்திறகுள்ளே சேர்ந்த மந்தைக்குச் சமானமாய் மனுஷத்திரளினாலே இரைச்சலுண்டாகும். * ற்றுமர். ௰௧, ௨௬.
† யோவா. ௰, ௰௬.

௰௩ தடைகளை நீக்கிப்போடுகிறவர் அவர்களுக்குமுன்பாக நடந்தேறுவார், அவர்கள் தடைகளை நீக்கி வாசலால உள்ளும்புறம்புமாகப் பிரவேசிப்பார்கள், * அவர்கள் இராசா அவர்களுக்குமுன்பாகவுங் கர்த்தர் அவர்கள் முன்னணியிலும் நடந்துபோவார். * ச, எ.

## ௩. அதிகாரம்.

[ஆகாத் துரைத்தனக்காரரையுங் கள்ளத் தீர்க்கதரிசிகளையுங் கண்டிக்கிற பிரசங்கம்.]

நான் சொன்னதாவது, * யாக்கோபின் தலைவர்களே, இஸ்ரவேல் வீட்டாரின் அதிபதிகளே, நியாயமே தென்னறிய உங்களுக்கல்லோ அடுக்கும்? * ஏசா. ௧, ௰. ஓசே. ரு, ௧.

௨ ஆனால் நன்மையைப் பகைத்துப் பொல்லாப்பை இச்சித்து அவர்கள் மேலிருக்கிற அவர்களுடைய தோலையும் அவர்கள் எலும்புகளின்மேலிருக்கிற அவர்களுடைய சதையையும் பிடுங்கி,

௩ என் சனத்தின் சதையைத் தின்று அவர்கள்மேலிருக்கிற அவர்களுடைய தோலையுரித்துக்கொண்டு அவர்கள் எலும்புகளை முறித்துப் பானையிலே போடும் வண்ணமாகவும் இறைச்சியைக் கொப்பரைக்குள்ளே போடும் வண்ணமாகவும் அவைகளைத் துண்டிக்கிறார்கள்.

௪ அப்போது கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவார்கள், ஆனால் * அவர்கள் தங்கள் கிரியைகளிற் பொல்லாதவர்களானபடியினாலே இவர் அவர்களுக்கு மறுஉத்தரவு கொடாமல் தமது முகத்தை அக்காலத்திலே அவர்களுக்கு மறைப்பார். * ஏசா. ௧௬, ௨.

௫ நம் சனத்தை மோசம்போக்குகிற தீர்க்கதரிசிகளுக்கு விரோதமாகக் கர்த்தர் சொல்லுகிறதாவது, அவர்கள் தங்கள் பல்லுகளினாற் கடிக்கிறவர்களாயிருந்து * சமாதானமென்றுகூப்பிடுகிறார்கள், வாய்க்குக் கொடாதவனுக்கு விரோதமாக யுத்தத்தை ஆயத்தம்பண்ணுகிறார்கள். * ஏசா.

௰௩, ௰.

௬ ஆகையால நீங்கள தரிசனம்பார்க்கக்கூடாத இராத்திரியுங் குறிசொல்லக்கூடாத அந்தகாரமும் உங்களுக்கு வரும், தீர்க்கதரிசிகளின்மேற் சூரியன அஸ்தமித்து அவர்கள்மேலே பகல் காரிருளாய்ப் போகும்.

௭ தரிசனம்பார்க்கிறவர்கள வெட்கி குறிசொல்லுகிறவர்கள நாணிப்போய உத்தரவுகொடுப்பிக்கிற தேவனில்லாததினாலே அவர்களெல்லாருந் தங்கள தாடியைமூடுவார்கள.

௮ நானோவென்றால, * யாக்கோபுக்கு அவன மீறுதலையும இஸ்ரவேலுக்கு அவன பாவத்தையும அறிவிக்கத்தக்கதாகக் கர்த்தருடைய ஆவியால்கூடிய பலத்தினாலும நியாயத்தினாலும பராக்கிரமத்தினாலும நிரப்பப்பட்டிருக்கிறேன. * ஏசா. ௫௮, ௧.

௯ நியாயத்தை யருவருத்துச் செம்மையானவைகளையெல்லாங் கோணலாக்கி,

௰ சீயோனை இரத்தப்பழிகளாலும எருசலேமை அநியாயத்தினாலுங் கட்டுவிக்கிற யாக்கோப்வீட்டாரின தலைவர்களே, இஸ்ரவேல்வீட்டாரின அதிபதிகளே, இதைக்கேளுங்களேன.

௰௧ * அதின தலைவர்கள பரிதானத்திற்கு நியாயந்தீர்க்கிறார்கள, அதின ஆசாரியர்கள கூலிக்கு உபதேசிக்கிறார்கள, அதின தீர்க்கதரிசிகள பணத்திற்குக் குறிசொல்லுகிறார்கள, ஆகிலும அவர்கள கர்த்தரைச்சார்ந்துகொண்டு, கர்த்தர் எங்கள நடுவிலில்லையோ தீங்கு எங்கள்மேல்வராதென்கிறார்கள. * செப்ப. ௩, ௩.

௰௨ ஆகையால * உங்கள நிமித்தஞ் சீயோன வயலாக உழப்பட்டு, எருசலேம மண்மேடுகளும வீட்டின்பருவதங் காட்டுமேடுகளுமாய்ப்போகும். * எரே. ௯, ௰௧. ௨௬, ௰௮.

## ௪. அதிகாரம்.

[வருங்காலங்களிற் பராபரனுடையசபை கூண்டாகும நற்சீரினவாகுத்தத்தம உபத்திரவம அனுபவிக்கப்போகிற யூதசனத்திற்கு அருளிச்செய்யப்பட்டது.]

௧ ஆனால * கடைசிநாட்களிற்சம்பவிப்பதேதென்றால கர்த்தருடைய வீட்டின பருவதம பருவதங்களின கொடுமுடியாயத்திடப்பட்டு மேடுகளிலும அதுவேயுயருஞ் சனசதளங்கள அதற்கோடி, * ஏசா. ௨, ௨.

௨ * திரளானசாதியார் நடந்துவந்து கர்த்தரின்பருவதத்திற்கும யாக்கோபுடையபராபரனின வீட்டுக்கும, அவர்தம்முவழிகளை நமக்குப்போதிக்கவும, நாம அவர் பாதைகளில நடக்கவும நாம போவோம வாருங்களென்பார்கள, ஏனெனில வேதஞ் சீயோனிலும கர்த்தரின்வசனம † எருசலேமிலுமிருந்து பாவிப்போகும். * ஏசா. ௬௦, ௩. ௫. † லூக். ௨௪, ௪௭.

௩ * அவர் இரளானசனசதளங்களுக்கு நியாயந்தீர்த்துத் தூரப்பரியந்தம பலத்த சாதிகளைக்கடிந்துகொள்ளுவார், அப்பொழுது தங்கள பட்டயங்களை மண்வெட்டிகளாகவுந் தங்கள ஈட்டிகளை அரிவாள்களாகவும அடிப்பார்கள, சாதிக்குவிரோதமாய்ச் சாதி பட்டயமெடுப்பதில்லை, இனி யுத்தம் பழகுவதுமில்லை. * ஏசாயா. ௨, ௪.

௪ * அவனவன தன் திராட்சச்செடியின்கீழுந் தன அத்திமரத்தின்கீழுந் தங்கியிருப்பான, பயப்படுத்துவாரில்லாமல உட்கார்ந்திருப்பான, ஏனென்றால † சேனைகளுடைய கர்த்தரின்வாய் இதைச்சொல்லிற்று. * சக. ௩, ௰. † ஏசாயா. ௫௮, ௰௪.

௫ அந்தபடியென்றால சகலசனசதளங்களுந் தங்கள தங்கள பராபரனுடைய நாமத்திலே நடப்பார்கள, நாங்களும எங்கள பராபரனாகிய கர்த்தருடைய நாமத்திலே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாக நடப்போம.

௬ கர்த்தர்சொல்லுகிறதேதென்னில, அந்நாளிலே நாம நொண்டியானவளைச்சேர்த்துத் தள்ளுண்டவளையும நாந்தீங்குக்குள்ளாக்கப்பண்ணினவளையுங்கூட்டிக்கொண்டு,

௭ * நொண்டியானவளை மீதியான சனமாகவுந் தூரமாய்த் தள்ளுண்டுபோனவளைப் பலத்தசாதியாகவும வைப்போம, அவர்கள்மேலிலே கர்த்தர் சீயோனபருவதத்திலே † இதுமுதலாய் என்றென்றைக்கும் இராசாவாயிருப்பார். * செப்பனி. ௩, ௰௯. † லூக்கா. ௧, ௩௩.

௮ மந்தையின துருக்கமே, சீயோன குமாரத்தியின்மேடே, உன்னிடத்திற்கு வரும, * முந்தின ஆளுகையும எருசலேம குமாரத்தியின இராசரிக்கமுமே வரும. * ஏசா- யா. ௧, ௨௬.

௯ இப்போதும நீ கதறுகிறதென்ன? இராசாவானவர் உனக்குள் இல்லையோ? உன ஆலோசனைக்காரர் செத்தாரோ? ஏனென்றால பிள்ளைபெறுகிறவளுக்கொத்த அம்பாயம உன்னைப்பிடித்திருக்கின்றதே.

௰ சீயோனகுமாரத்தியே, பிள்ளைபெறுகிறவளைப்போல அம்பாயப்பட்டுப் பிரசவப்படு, ஏனெனில இப்போது பட்டணத்திலிருந்து புறப்பட்டு வெளிகளில தங்கி பேலமட்டும வந்துசேருவாய, அங்கே விடுவிக்கப்படுவாய, அங்கே கர்த்தர் உன்னை உன சத்துருக்களின கைக்கு நீங்கலாக்கி மீட்பார்.

௰௧ இப்போதும், அவள் தீட்டுப்பட்டவளாகக்கடவளென்றும், சீயோனிலே எங்கள் கண் நோக்காசையாயிருக்கிறதைக் காணுமென்றும் அநேகஞ்சாதியார் உனக்கு விரோதமாக்கூடிக்கொள்ளுவார்கள்.

௰௨ ஆனால் அவர்கள் கர்த்தருடைய நினைவுகளையறியாமலும் அவருடைய யோசனையை உணராமலுமிருக்கிறார்கள், அதேதெலில அரிக்கட்டுகளைப்போல அவர்களைக் களத்திலே கூட்டுவார். * எரே. ௨௧. ௰௧.

௰௩ சீயோன் குமாரத்தியே, நீ எழுந்திருந்து போரடி, ஏனென்றால் நாம் உன் கொம்புகளை இரும்பும் உன் குளம்புகளை வெண்கலமுமாக்குவோம், நீ அநேக சனங்களை நொறுக்கிப்போடுவாய், அவர்கள் தேடிச் சேர்த்ததைக் கர்த்தருக்கும் அவர்களுடைய ஆஸ்தியைப் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்கும் நியமிப்போம்.

௰௪ திரண்டு சேனையுடைய பட்டணமே, இப்போது தண்டு தண்டாகக் கூடிக்கொள், * நமக்கு விரோதமாக முற்றிக்கைபோடப்படும், இஸ்ரவேலுடைய நியாயாதிபதியை மிலாறினாலே தாடையிலே அடிப்பார்கள்.

## ௫. அதிகாரம்.

[மேசியாவினுடைய பிறப்பையும் இராச்சியத்தையும் அறிவிக்கிற தீர்க்கதரிசனம்.]

ஆனால் * எப்பிராத்தா என்னப்பட்ட † பெத்லெகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தாலும், இஸ்ரவேலையாளப்போகிறவர் உன்னிலேயிருந்து புறப்படுவார், அவருடைய புறப்படுதல்கள் ‡ அநாதிநாட்களாகிய பூர்வத்தினுடையவைகள். * க. ௩௫, ௰௬. † மத்தே. ௨, ௬. லூக். ௨, ௧—௭. ‡ யோவா. ௧, ௰௪.

௨ ஆகையால் பெறப்போகிறவள் பெறுங்காலமட்டும் அவர்களை ஒப்புக்கொடுப்பார், அப்போது அவருடைய சகோதரரில் மீதியானவர்கள் இஸ்ரவேல் புத்திரரோடே கூடத்திரும்புவார்கள்.

௩ அவர் நின்று கர்த்தருடைய பலத்தோடும் தம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தின் முக்கியத்தோடும் மேய்ப்பார், ஆகையால் அவர்கள் தங்கித்தரிப்பார்கள், ஏனென்றால் இனிப் பூமியின் எல்லைகள்பரியந்தம் முக்கிமைப்படுவார்.

௪ * இவரே சமாதானம், அசூர் நம்முடைய தேசத்தில் வரும்போதும் நம்முடைய அரமனைகளை மிதிக்கும்போதும் ஏழு மேய்ப்பரையும் மனுஷரில் எட்டு அதிபதிகளையும் அவனுக்கு விரோதமாக நிறுத்துவோம். * எபே. ௨, ௰௪.

௫ இவர்கள் அசூரின் தேசத்தையும் நிம்ரோதின் தேசத்தையும் அதினுடைய வாசல்களுக்குப் புறம்பாகப் பட்டயத்தினாலே மேய்ந்துபோடுவார்கள், அப்படியே அசூர் நம்முடைய தேசத்தில் வரும்போதும் நம்முடைய எல்லைகளை மிதிக்கும்போதும் அவனுக்கு நம்மைத் தப்புவிப்பார்.

௬ யாக்கோபிலே மீதியானவர்கள் அநேக சனசதளங்களின் நடுவிலே * கர்த்தரால் வந்த பனியைப்போலேயும் மனுஷனுக்குக் காத்திராமலும் மனுபுத்திரரை நம்பியிராமலும் பூண்டுகள்மேல் வருந்த மழைகளைப்போலேயுமிருப்பார்கள்.

* சங்கீதம். ௱௰, ௩.

௭ சாதிகளுக்குள்ளே யாக்கோபிலே மீதியானவர்கள் அநேக சனசதளங்களின் நடுவிலே சிங்கங் காட்டுமிருகங்களுக்குள்ளே யிருக்கிறதற்குச் சமானமாகவும் கடந்துபோய் மிதித்துத் தப்புவிப்பாரில்லாமல் பீறிப்போடுகிற இளஞ்சிங்கம் ஆட்டுமந்தைகளுக்குள்ளே யிருக்கிறதற்குச் சமானமாகவுமிருப்பார்கள்.

௮ உன்னுடைய கை உன் விரோதக்காரரின்மேலுயரும், உன் சத்துருக்களெல்லாருஞ் சங்கரிக்கப்படுவார்கள்.

௯ கர்த்தர் சொல்லுகிறதாவது, அந்நாளிலே சம்பவிப்பதேதென்னில், நாம் உன் குதிரைகளை உன் நடுவிலிராதபடிக்குச் சங்கரித்து உன் இரதங்களையழித்து,

௰ உன் தேசங்களின் பட்டணங்களைச் சங்கரித்து உன் அரண்களையெல்லாம் நிர்மூலமாக்கி,

௰௧ சூனியங்களை உன் கையிலிராதபடிக்குச் சங்கரிப்போம், நாள்பார்வைக்காரர் உனக்கில்லாதே போவார்கள்.

௰௨ * உன் சுரூபங்களையும் உன் சிலைகளையும் உன் நடுவிலிராதபடிக்குச் சங்கரிப்போம், உன் கைகளின் கிரியையை இனிப் பணிந்துகொள்ளாய். * சகரி. ௰௩, ௨.

௰௩ நாம் உன் தோப்புகளை உன் நடுவிலிராதபடிக்குப் பிடுங்கி உன் பட்டணங்களையழித்து,

௰௪ கேள்விகொடாத புறச்சாதிகளிடத்திலே கோபத்தோடும் உக்கிரத்தோடும் நீதியைச் சரிக்கட்டுதலைச் செய்வோமென்றார்.

## ௬. அதிகாரம்.

[யூதரைக் கடிந்துகொள்ளுகிற பிரசங்கம்.]

கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள், நீ எழுந்திருந்து பருவதங்களோடே வழக்காடு, மேடுகள் உன் சத்தத்தைக் கேட்கக்கடவது.

௨ பருவதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபாரங்களே, கர்த்தருடைய வழக்கை

கேளுங்கள், ஏனென்றால் * கர்த்தருக்கு அவர் சனத்தோடே வழக்கிருக்கின்றது, இஸ்ரவேலோடே அவர் நியாயம்பேசுவார்.

* ஏசா. ௫. ௩. ௪.

௩ நம்முடைய சனமே, உனக்கென்ன செய்தோம்? அல்லது எதினாலுன்னை விசனப்படுத்தினோம்? நமக்கெதிரா யுத்தரவு சொல்லு.

௪ நாம் உன்னை எகிப்துத்தேசத்திலிருந்தேறிவரப்பண்ணி அடிமைத்தனவீட்டிலிருந்த உன்னைமீட்டுக்கொண்டு மோசே ஆரோன் மீரியாமென்றவர்களை யுனக்குமுன்பாக அனுப்பினோம்.

௫ நம்முடைய சனமே, * மோவாபின் இராசாவாகிய பாலாக்பண்ணின யோசனையேதென்றும் பேயோரின் குமாரனாகிய பீலேயாம் அவனுக்குப் பிரத்தியுத்தரமாகச் சொன்னதேதென்றும் சித்திமுதல் கில்காலமட்டும் நடந்ததேதென்றும் நீ கர்த்தருடைய நீதிகளையறிந்துகொள்ளும்படிக்கு நினைத்துக்கொள்ளேன். * ௪. மோசே. ௨௨. ௫. ௬.

௬ எதினாலே நான் கர்த்தருக்குமுந்திக்கொண்டு உன்னதமான பராபரனுக்குமுன்பாகக் குனிவேன், தகனபலிகளினாலும் ஒருவயதுகன்றுக்குட்டிகளாலும் அவருக்கு முந்திக்கொள்வேனோ.

௭ ஆயிரங்களான ஆட்டுக்கடாய்களின்பேரிலும் எண்ணெயை ஓடுகிற பதினாயிரங்களான ஆறுகளின்பேரிலுங் கர்த்தர் பிரியமாயிருப்பாரோ. என் துரோகத்தைத்தீர்க்க என் முதற்பேறையும் என் ஆத்துமத்தின் பாவத்தைத்தீர்க்க என் கெர்ப்பக்கனியையுங்கொடுப்பேனோ.

௮ மனுஷனே, நன்மையேதென்றுனக்கறிவித்தார், நியாயஞ்செய்து இரக்கத்தைச் சிநேகித்து, உன் பராபரனுக்குமனத்தாழ்மையாய் நடப்பதையல்லாமல் வேறேயென்னத்தைக் கர்த்தர் உன்னிலே தேடுகிறார்.

௯ கர்த்தருடைய சத்தம் பட்டணத்திற்கெதிராகக் கூப்பிடுகின்றது. ஏனென்றால் உம்முடைய நாமம் உத்தமத்தை நோக்குகின்றது, மிலாறினையும் அதை நிர்ணயம்பண்ணினவராரென்கிறதையுங் கேளுங்கள்.

௰ ஆகாதவன் வீட்டிலே ஆகாமியப்பொக்கிஷங்களும் அருவருக்கப்படத்தக்க குறைந்த மரக்காலும் இன்னமிருக்கின்றதல்லவோ.

௰௧ ஆகாத்தராசுகளைப்பிடிக்கிறவர்களும் (களுமுள்ளவையுமிருக்கக்கொள்ளச் சுத்த)முண்டோ.

௰௨ அதேதெனில் அவர்களில் ஐசுவரியமுள்ளவர்கள் கொடுமையால் நிறைந்திருக்கிறார்கள், அவர்களுடைய குடியானவர்கள் பொய்பேசுகிறார்கள், அவர்கள் வாயிலிருக்கிற அவர்களுடைய நாக்கு கபடநாக்கு.

௰௩ ஆகையால் நாமும் உன்னையடிக்கிறதினாலும் உன்பாவங்களினிமித்தம் பாழாக்குகிறதினாலும் உன்னைப் பலட்சயமாக்குவோம்.

௰௪ நீ போசித்தும் திருத்தியடையாதிருப்பாய், அது உன்னுள்ளத்திலே புண்ணைப்போடுக்கும், நீ பத்திரம்பண்ணியுந் தப்புவிப்பதில்லை, நீ தப்புவிப்பதையோ பட்டயத்திற்கொப்புக்கொடுப்போம்.

௰௫ * நீ விதைத்தும் அறுக்காதேபோவாய், நீ ஒலிவப்பழங்களையுந் திவிதிராட்சப்பழங்களையும் ஆலையாடியும் எண்ணெய் பூசிக்கொள்வதுமில்லை இரசங்குடிப்பதுமில்லை. * ௫. மோ. ௨௮. ௩௮. ஆகா. ௧. ௬.

௰௬ ஏனென்றால் நாம் உன்னைப்பாழாக்கவும் உன்குடிகளை யீசற்போடப்படுத்தவும் வைக்கத்தக்கதாக, * அம்றியினுடைய கட்டளைகளும் † ஆகாப் வீட்டாருடைய எல்லாச்செய்கைகளுங் கைக்கொள்ளப்பட்டுவருகின்றது, அவர்களுடைய ஆலோசனைகளிலே நடக்கிறீர்கள், ஆகையால் நம்முடைய சனத்தின் நிந்தையைச் சுமப்பீர்கள்.

* ௧. இராசா. ௰௬, ௨௫—௩௩.

# ௭. அதிகாரம்.

[சனத்தினுடைய கேட்டினிமித்தம் புலம்பினது.]

எனக்கு ஐயோ, ஏனென்றால் வசந்தகாலத்துக்கனிகள் சேர்க்கப்பட்டதற்குப் பின் திராட்சப்பழங்கள் அறுக்கப்பட்டதற்குப் பின் மிஞ்சியாடு வருகிறவனைப்போலிருக்கிறேன், போசிக்கிறதற்கு ஒரு திவிதிராட்சக்குலையும் என் ஆத்துமம் இச்சித்த முதல் அறுப்பின் கனியுமில்லை.

௨ * தேசத்திற சனமார்க்கர் அற்றுப் போனார்கள், மனுஷரிற் செம்மையானவர்களில்லை, அவர்களெல்லாரும் இரத்தஞ்சிந்தப் பதிவிருக்கிறார்கள், அவனவன் தன் சகோதரனை வலையிலே பிடிக்கவேட்டையாடுகிறான்.

* சங்கீதம். ௰௨, ௨.

௩ நன்றாயப் பொல்லாப்புச்செய்ய இரண்டுகைகளுங் கூடும் பிரபு தாவென்று கேட்கிறான், நியாயாதிபதி கைக்கூலிக்கு நியாயந்தீர்க்கிறான், பெரியவன் தன் ஆத்தும தன் விளையைச்சொல்லுகிறான், பிறகு அதைப் பிரித்துப்போடுகிறார்கள்.

௪ அவர்களில் நல்லவன் முட்செடிக்கொத்தவனும் செம்மையானவன் நெருஞ்சிப்பார்க்கக் கேடுள்ளவனுமாயிருக்கிறான் உன்காவற்காரர் அறிவித்த உன்னுடைய விசாரிப்பின் நாள் வருகின்றது, இனியவர்களுடைய கலக்கம் வரும்.

௫ சிநேகிதனை விசுவாசியாதேயுங்கள், வழிகாட்டியை நம்பாதேயுங்கள், உன் மடியிலே படுத்துக்கொண்டிருக்கிறவளுக்கும் முன்பாக உன் வாயைத் திறக்க எச்சரிக்கையாயிரு.

௬ ஏனெனில் * மகன் தகப்பனை அவமானப்படுத்துகிறான், மகள் தன் தாய்க்கு விரோதமாகவும் மருமகள் தன் மாமிக்கு விரோதமாகவும் எழும்புகிறார்கள், மனுஷனுடைய சத்துருக்கள் அவன் வீட்டு மனுஷர்தானே. * மத். ௰, ௨௧. ௩௫, ௩௬. லூக்கா. ௰௨, ௫௩.

உபத்திரவப்படுகிற சபையின் விசுவாசமும் பொறுமையும் நம்பிக்கையும்.

௭ * நானோவென்றால் கர்த்தரை நோக்கிக்கொண்டு என் இரட்சிப்பின் பராபரனுக்குக் காத்திருப்பேன், என் பராபரன் என்னைக் கேட்பார். * சங்கீ. ௨௨, ௬.

௮ என் பகைஞியே! என்னிமித்தஞ் சந்தோஷப்படாயாக, * நான் விழுந்திருந்தாலும் எழுந்திருப்பேன், நான் இருளிலே உட்கார்ந்தால் † கர்த்தர் எனக்கு வெளிச்சமாயிருப்பார். * வாக்கி. ௨௪, ௰௬. † சங்கீ. ௨௭, ௧.

௯ கர்த்தர் என் வழக்கை வழக்காடி என் நியாயத்தை விசாரிக்கட்டும், அவருடைய சினத்தைச் சுமப்பேன், ஏனெனில் அவருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேன், என்னை வெளிச்சத்திலே புறப்படப்பண்ணுவார், அவருடைய நீதியை மகிழ்ச்சியாய்ப் பார்ப்பேன்.

௰ உன் பராபரனாகிய கர்த்தரெங்கே யென்றென்னோடே சொல்லுகிற என் பகைஞி அதைப் பார்க்கும்போது வெட்கம் அவளை மூடும், என் கண்கள் அவளிலே நீதியைச் சரிக்கட்டுதலைக் காணும், இனி வீதிகளின் சேற்றைப்போல மிதியுண்டுபோவாள்.

சபைக்கு அருளப்பட்ட வாக்குத்தத்தம்.

௰௧ உன் மதில்களை யெடுப்பிக்கும் நாள் வருகிறது, அந்நாளிலே பிரமாணந் தூரத்திற்குப் பரவிப்போகும்.

௰௨ அந்நாளிலே அசூரியா துவக்கி எகிப்தின் பட்டணங்கள் மட்டுக்கும் எகிப்துவக்கி நதிமட்டுக்கும் ஒரு சமுத்திரந்துவக்கி மற்றச் சமுத்திரமட்டுக்கும் ஒரு பர்வதந்துவக்கி மற்றப் பர்வதமட்டுக்குமிருக்கிற புறங்களிலிருந்து சனங்கள் உன்னண்டைக்கு வருவார்கள்.

௰௩ ஏனென்றால் தேசங் குடிகளினிமித்தம் அவர்கள் கிரியைகளுடைய கனிகளினிமித்தம் பாழாயிருந்தது.

௰௪ சர்மேலின் நடுவிலே தனித்துவனவாசமாயிருக்கிற உம்முடைய சுதந்தரமான மந்தையாகிய உம்முடைய ஜனத்தை உம்முடைய கோலினாலே மேயும், பூர்வநாட்களைப்போலே அவர்கள் பாசானிலுங் கீலேயாத்திலும் மேய்வார்களாக.

௰௫ நீ எகிப்துத்தேசத்திலிருந்து புறப்பட்ட நாட்களைப்போலே அவனை அதிசயங்களைக் காணப்பண்ணுவேன்.

௰௬ புறசாதிகள் கண்டு தங்களுடைய எல்லாப் பராக்கிரமத்தையுந் தொட்டு வெட்கப்படுவார்கள், கையை வாயின்மேலே போட்டுக்கொள்ளுவார்கள், அவர்கள் காதுகள் செவிடாய்ப்போகும்.

௰௭ பாம்பைப்போல * மண்ணை நக்குவார்கள், பூமியின் ஊர்வனங்களைப்போலே தங்கள் கூடுகளிலிருந்து தத்தளித்துப் புறப்படுவார்கள், திகிலோடே யெங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குச் சேர்ந்து உனக்குப் பயப்படுவார்கள். * சங்கீ. ௭௨, ௯.

பராபரனை மகிமைப்படுத்துகிறதுதி.

௰௮ * அக்கிரமத்தை நீக்கிப்போட்டுத் தம்முடைய சுதந்தரத்தில் மீதியானவர்களுக்கு மீறுதலை மன்னித்துவிடுகிற தேவரீரைப்போலொத்த தேவனார், என்றென்றைக்குங் கோபத்தை வைக்கார், ஏனென்றால் அவர் கிருபை செய்யவிரும்புகிறார். * ௨. மோசே. ௩௪, ௬. ௭. சங்கீதம். ௱௩, ௮—௰௩.

௰௯ திரும்ப எங்கள்பேரில் இரங்குவார், எங்கள் அக்கிரமங்களை யடக்கி யெங்கள் பாவங்களையெல்லாஞ் சமுத்திரத்தின் ஆழங்களிலே போட்டுவிடுவார்.

௨௰ தேவரீர் பூர்வநாட்கள் முதற்கொண்டு * எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட சத்தியத்தை யாக்கோபுக்குங் கிருபையை ஆபிரகாமுக்குங் கட்டளையிடுவீர். * லூக். ௧, ௫௪. ௫௫.

மீகாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# நாகூமின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[அசீரியதேசத்தின் இராசதானியாகிய நினிவேக்கு விரோதமான தீர்க்கதரிசனம்.]

நினிவேயின் சுமை எல்கோசானாகிய நாகூமின் தரிசனபுஸ்தகம்.

௨ கர்த்தர் * எரிச்சலுள்ளவரும் நீதியைச்சரிக்கட்டுகிறவருமான தேவன், கர்த்தர் நீதியைச்சரிக்கட்டுகிறவரும் உக்கிரசாலியுமானவர், கர்த்தர் தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச்சரிக்கட்டுகிறவர், அவர் தம்முடைய பகைஞர்மேல் கோபம்வைக்கிறவர். * ௨. மோசே. ௨௰, ௫.

௩ கர்த்தர் நீடியசாந்தமுள்ளவரும் பலமிகுந்தவருமாயிருக்கிறார். அவர் குற்றவாளியை ஆக்கினையில்லாமல் நீங்கலாக்கவிடார், கர்த்தருடைய வழி பெருங்காற்றிலும் கொந்தளிப்பிலுமுள்ளது, மேகங்கள் அவருடைய பாதத்தூளாயிருக்கின்றது.

௪ அவர் சமுத்திரத்தை அதட்டி அதை வற்றிப்போகப்பண்ணிச் சகல ஆறுகளையும் வறட்சியாக்குகிறவர், பாசானுங்கர்மேலும் வதங்கி லீபனோனின் செழிப்பு வாடிப்போகும்.

௫ அவராலே பருவதங்கள் அதிர்ந்து மேடுகள் கரைந்துபோகும், அவர் சந்நிதியால் பூமியெடுபடும், பூச்சக்கரமும் அதிலே குடியிருக்கிற அனைவருந்தானே.

௬ * அவருடைய உக்கிரத்துக்கு முன்பாக நிற்பவனார்? அவருடைய கோபத்தின் உக்கிரத்திலே நிலைநிற்பவனார்? அவருடைய எரிச்சல் அக்கினியைப்போலே பாய்கின்றது, கன்மலைகள் அவராலே இடிபடும். * அபிவி. ௬, ௰௭.

௭ கர்த்தர் நல்லவரும் இக்கட்டுநாளிலே அரணான கோட்டையுமாயிருந்து தம்மை நம்புகிறவர்களை * அறிந்திருக்கிறார்.
* சங்கீ. ௧, ௬. ௨. தீமோ. ௨, ௰௯.

௮ அதின் ஸ்தானத்தைப் புரண்டுபோகப்பண்ணுகிற பிரளயத்தினாலே சர்வசங்காரம்பண்ணுவார், இருள் அவர் சத்துருக்களைப் பின்தொடரும்.

௯ நீங்கள் கர்த்தருக்கு விரோதமாகச் செய்ய நினைக்கிறதென்ன? அவர் சர்வசங்காரம்பண்ணுவார், இடுக்கண் மறுபடியும் நிலைகொள்ளாது.

௰ ஏனெனில் அவர்கள் பின்னலாயிருக்கிற முட்செடிகளுக்குத்தானே ஒப்பாயிருக்கையிலும் தங்கள் லொட்டடிக்குடியின்படியே வெறித்திருக்கையிலும் முழுதுங்காய்ந்துபோன செத்தையைப்போலே நசிந்துபோவார்கள்.

௰௧ கர்த்தருக்கு விரோதமாகப் பொல்லாத நினைவாயிருக்கிற பேலியாளின் ஆலோசனைக்காரன் உன்னிலிருந்து புறப்பட்டான்.

௰௨ கர்த்தர் சொல்லுகிறதாவது, அவர்கள் நிறைவாகவும் அநேகருமாயிருந்தாலும் ஒழிந்துபோகத்தக்கதாய் அறுப்புண்டுபோவார்கள், உன்னை நான் சிறுமைப்படுத்தினேன், இனியுன்னைச் சிறுமைப்படுத்தாதிருப்பேன்.

௰௩ இப்போதும் நாமுன்மேலிருக்கிற அவனுக நுகத்தடியை முறித்துப்போட்டு உன்கட்டுகளையறுப்போம்.

௰௪ ஆனால் உனக்கு விரோதமாகக் கர்த்தரிட்ட கட்டளையாவது, இனியுன்பேருக்கு வித்துவைக்கப்படுவதில்லை, உன்தேவர்களின் வீட்டிலிருக்கிற சுரூபத்தையும் வார்க்கப்பட்ட விக்கிரகத்தையும் நாம் நிர்மூலம்பண்ணுவோம், நீ கனவீனனானபோதினால் உனக்குக் கல்லறையாக்குவோம்.

## ௨. அதிகாரம்.

[யூதருக்கருளப்பட்ட ஆறுதலானவார்த்தையும் நினிவேயாருக்குக் கற்பிக்கப்பட்ட ஆக்கினைகளும்.]

இதோ * சமாதானத்தைக் கூறிச் சுவிசேஷகனுடைய கால்கள் மலைகளின்மேல் வருகிறது, யூதாவே, உன் பண்டிகைகளை ஆசரி, † உன் பொருத்தனைகளைச் செலுத்து, ஏனென்றால் பேலியாள் இனிப்படி உன்மேல் கடந்துவருவதில்லை. அவன் முழுதுஞ் சங்கரிக்கப்பட்டான். * ஏசா. ௫௨, ௭. † சங்கீ. ௫௰, ௰௪.

௨ சிதறடிக்கிறவன் உன்முகத்துக்கு முன்பாக ஏறிவருகிறான், கொத்தளங்[illegible]கசா, வழியைநோக்கிக்கொண்டிரு, அரைகளைக் கெட்டியாய்க்கட்டிக்கொள், உன் பெலனை மிகவும் திடப்படுத்து.

௩ ஏனென்றால் கர்த்தர் யாக்கோபின் மேன்மையைத் திரும்பவரப்பண்ணுவார், இஸ்ரவேலின் மகிமையையும் அப்படித்[illegible] அதேனென்றால் வெறுமையாக்குகிற[illegible] அவர்களை வெறுமையாக்கி அவர்களுடைய திராட்சக்கொடிகளைக் கெடுத்த[illegible]

டார்கள்.

௩ அவனுடைய பராக்கிரமசாலிகளின் கேடகங்கள் சிவப்பாயிருக்கும், அவன் இராணுவமனுஷர் இரத்தாம்பரந்தரித்துக்கொண்டிருக்கிறார்கள். அவன் தன்னை ஆயத்தம்பண்ணும் நாளிலே இரதங்கள் மின்னிக்கொண்டிருக்கிற அரிவாள்களின் முஸ்தீதாயிருக்கும், ஈட்டிகள் துலுங்கும்.

௪ இரதங்கள் வீதிகளிற் கடகடென்றோடித் தெருக்களில் திரியும். அவைகள் தீவட்டிகளாயிருந்து மின்னல்களைப்போல ஓடும்.

௫ தன்னுடைய பிரஸ்தாபமனுஷரை நினைக்கூருவான். இவர்கள் தங்கள் நடைகளில் இடறி அலங்கத்துக்குத் தீவிரித்தோடுவார்கள், மறைவிடம் செப்பனிடப்படும்.

௬ ஆறுகளின் வாசல்கள் திறக்கப்படும், அரண்மனை வெந்துகரையும்.

௭ அவள் சிறையிருப்பாய்க் கொண்டுபோகப்படத்தீர்மானமாயிற்று, அவளுடைய வேலைக்காரிகள் புறாக்களைப்போல் சத்தமிட்டுத் தங்கள் மார்பிலேயடித்துக்கொண்டுபோவார்கள்.

௮ நினிவே உண்டான நாள் துவக்கித் தண்ணீர்க் குளம்போலேயிருந்தது, இப்பொழுதோ அவர்கள் ஓடிப்போகிறார்கள், நில்லுங்கள் நில்லுங்களென்றாலுந் திரும்பிப் பார்க்கிறவனில்லை.

௯ வெள்ளியைக்கொள்ளையிடுங்கள், பொன்னைக்கொள்ளையிடுங்கள், ஏனென்றால் சம்பத்துக்கு முடிவில்லை, இச்சிக்கப்படத்தக்க சகல உடைமைகளின் வெகுத்துவமிருக்கின்றது.

௰ வெறுமையும் வெளியும் ஆகாயமயமுமானாள், இருதயம் உருகும், முழங்கால்கள் தத்தளிக்கும், எல்லா இடுப்புகளிலும் மகா வேதனையுண்டாயிருக்கும், எல்லாருடைய முகங்களின் ரூபுஞ்சுருங்கும்.

௰௧ கிழச்சிங்கமாகிய சிங்கமும் சிங்கக்குட்டிகளும் பயப்படுத்துவாரில்லாமல் நடமாடித்திரிந்த சிங்கத்தாபரமும் இளஞ்சிங்கங்களுக்கிருந்த மேய்விடமும் எங்கே!

௰௨ சிங்கம் தன் குட்டிகளுக்குத் தேவையானதைப் பீறித் தன் பெண்சிங்கங்களுக்கு வேண்டியதைத் தொண்டையைப்பிடித்துக் கொன்றுபோட்டு இரைகளினாலே தன் கெபிகளையும் பீறிப்போட்டவைகளினாலே தன் தாபரங்களையும் நிரப்பிற்று.

௰௩ இதோ நாம் உனக்கு விரோதமாக வந்து இரதங்களைப் புகையெழும்ப எரித்துப்போடுவோம், பட்டயம் உன்னுடைய இளஞ்சிங்கங்களைப் பட்சிக்கும், நீ இரைக்குப்பாயிற வேலையைத் தேசத்திலே அற்றுப்போகப்பண்ணுவோம், உன் தூதுபதிகளின் சத்தம் இனிக் கேட்கப்படுவதில்லையென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩. அதிகாரம்.

[நினிவேயின் பாவங்களுக்கு வரும் கொடிய ஆக்கினைகள்.]

இரத்தப்பழிகளின் பட்டணத்துக்கு ஐயோ, அது முழுதும் பொய்யினாலும் பறிக்குதலினாலும் நிறைந்திருக்கிறது.

௨ சவுக்குகளின் இரைச்சலும் உருளைகள் அதிருகிறதும் குதிரைகள் தாவித் தடடுகிறதும் இரதங்கள் கடகடென்றோடுகிறதுமான இரைச்சலும்,

௩ இராவுத்தர் ஏறிவருகிற குதிரைகளும் துலங்குகிற பட்டயங்களும் மின்னுகிற ஈட்டிகளும் வெட்டுண்டவர்களின் திரளும் பிரேதங்களின் ஏராளமுமுண்டாகும், பிணங்களுக்குத் தொகையில்லை, அவர்களுடைய பிணங்களில் இடறுவார்கள்.

௪ * தன் வேசித்தனங்களினாலே சாதிகளையும் தன் சூனியங்களினாலே வம்சங்களையும் விற்கிற மகா சூனியக்காரியாயிருக்கிற ரூபவதியான வேசியினுடைய திரளான வேசித்தனங்களின் மிகுதியினிமித்தமே. * அறிவி. ௰௭, ௧. ௨.

௫ இதோ நாம் உனக்கு விரோதமாக வந்து உன் வஸ்திரத்தொங்கல்களை உன் முகமட்டும் தூக்கியெடுத்துச் சாதிகளுக்கு உன் நிர்வாணத்தையும் இராச்சியங்களுக்கு உன் அவமானத்தையும் தெரியப்பண்ணி,

௬ உன்மேல் சீயென்னப்பட்டதுகளை எறிந்து உன்னை ஈனப்படுத்தி உன்னை வேடிக்கையாக்கிப்போடுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௭ அப்பொழுது சம்பவிப்பதென்னவென்றால் உன்னைக் காண்கிறவனெல்லாம் உன்னைவிட்டோடிப்போய் நினிவே பாழாக்கடிக்கப்பட்டதென்றும் அதற்காகத் துக்கங்கொண்டாடுபவனார், ஆறுதல்சொல்லுகிறவர்களை உனக்கு எங்கே தேடுவேனென்றும் சொல்லுவான்.

௮ நதிகளுக்குள்ளே குடியேறியிருந்த நோ அம்மோனைப்பார்க்கிலும் நீ நல்லவளோ, அதைச் சுற்றிலும் தண்ணீரிருந்தது, சமுத்திரம் அதின் அரணிப்பும் சமுத்திரக்கால் அதின் மதிலுமாயிருந்தது.

௯ எத்தியோப்பியாவும் எகிப்தும் தொகையில்லாத சனங்களால் அதற்குப் பலனாகவிருந்தது, பூத்தும் லீபியாவும் அதற்குச் சகாயமாயிருந்தது.

௰ அப்படியிருந்தும் அது குடிவிலக்கப்பட்டுச் சிறையிருப்பிலே போயிற்று, அதின் குழந்தைகள் எல்லா வீதிகளின் முகனைகளிலும் நசுக்கிப்போடப்பட்டது, அதின் கனமுள்ளவர்களின்பேரில் சீட்டுப்போட்டார்க

ள், அதின் பெரியவர்கள் சங்கிலிகளாற் கட்டப்பட்டார்கள்.

௧௧ நீயும் மயக்கமாகி யொளித்துக்கொள்ளுவாய், நீயும் உன் சத்துருவுக்குத் தப்ப அரணான கோட்டையைத் தேடுவாய்.

௧௨ உன் அரண்களெல்லாம் முதற்பழுத்த கனிகளுள்ள அத்திமரங்களைப் போலிருக்கும், அவைகள் குலுக்கப்பட்டால் தின்னுகிறவன் வாயிலே விழும்.

௧௩ இதோ உன் நடுவிலிருக்கிற சனம் பெண்சாதிகள், உன் தேசத்தின் வாசல்கள் உன் சத்துருவுக்குத் திறக்கவே திறவுண்டுபோகும், அக்கினியுன் தாழ்ப்பாள்களைப் பட்சிக்கும்.

௧௪ உனக்கு முற்றிக்கைக்குத் தண்ணீர் மொண்டுவை, உன் அரண்களைப் பலப்படுத்து, சேற்றிலே போய்க் களிமண்ணை மிதி, சூளையைக் கெட்டிப்படுத்து.

௧௫ அங்கே அக்கினியுன்னைப் பட்சிக்கும், பட்டயம் உன்னைச் சங்கரிக்கும், அது பச்சைக்கிளியைப் போல உன்னைப் பட்சித்துப் போடும், உன்னைப் பச்சைக்கிளிகளத்தனையாக்கிக்கொள், உன்னை வெட்டுக்கிளிகளத்தனையாக்கிக்கொள்.

௧௬ உன் வர்த்தகரை வானத்து நட்சத்திரங்களிலும் அதிகமாக்கினாய், இந்தப் பச்சைக்கிளிகள் பரவிப் பறந்துபோகும்.

௧௭ உன் மகுடவர்த்தனர் வெட்டுக்கிளிகளுக்கும், உன் தளகர்த்தர் குளிர்நாளில் வேலிகளிற் பாளயமிறங்குகிற பெருங்கிளிகளுக்குஞ் சமானமாயிருக்கிறார்கள். சூரியனுதித்தபிற்பாடு அவைகள் போகின்றது, பிறகு அவைகளிருந்த அவைகளுடைய இடமின்னதென்று தெரியாது.

௧௮ அசூரியாவின் இராசாவே, உன்னுடைய மேய்ப்பர் உறங்குவார்கள், உன்னுடைய பிரபலியம் ஆஷர்ப்படுத்திருப்பார்கள், உன் சனம் பருவதங்களின் மேற் சிதறிப்போகும், அதைக் கூட்டிக்கொள்பவனில்லை.

௧௯ உன் நொறுங்குதலுக்கு ஆறுதலில்லை, உன் காயங் கேடாயிருக்கின்றது, உன் செய்தியைக் கேட்கப்போகிற யாவரும் உன்பேரிற் கைகொட்டுவார்கள், ஏனென்றால் ஆர்பேரில் உன் பொல்லாப்பு எந்நேரமும் பாய்ந்துபோயிற்று.

நாகூமின தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# ஆபகூக்கின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[கல்தேயர் யூதேயாதேசத்திற்குட்புகுந்துவருவார்களென்று தீர்க்கதரிசனமுமன்றி விதப்ப பராபரனை நோக்கி அங்கலாய்த்தது.]

ஆபகூக்கென்ற தீர்க்கதரிசி தரிசனமாய்க் கண்ட சுமை.

௨ கர்த்தாவே, * எந்தமட்டும் நீர் கேளாமலிருக்க நான் கூப்பிடுவேன், நீர் இரட்சிக்காமலிருக்க நான் கொடுமையினிமித்தம் உம்மை நோக்கிச் சத்தமிடுவேன்? * சல. ௰௩, ௨. ௯.

௩ நீர் என்னை அக்கிரமத்தைக் காணப்பண்ணித் தீவினையைப் பார்த்துக்கொண்டிருப்பானேன்? பாழ்க்கடிப்புங் கொடுமையும் எனக்கெதிரே நிற்கின்றது, வழக்கையும் வாதையையும் எழுப்புகிறவர்களுண்டு.

௪ ஆகையால் நியாயப்பிரமாணம் பலனற்றதாகி நியாயம் என்றென்றைக்கும் நடந்தேறாமற்போகின்றது, ஏனென்றால் ஆகாதவன் நீதிமானை வளைந்துகொள்ளுகிறான், ஆனதுகொண்டு நியாயந் தாறுமாறாய்ப் புறப்படும்.

௫ நீங்கள் புறச்சாதிகளை நோக்கிப்பார்த்து ஆச்சரியப்பட்டுப் பிரமித்துக்கொள்ளுங்கள், ஏனென்றால் விவரிக்கப்பட்டால் நீங்கள் விசுவாசியாதிருக்கும் ஒரு கிரியையை உங்கள் நாட்களில் நடப்பிப்போம்.

௬ அதேதென்றால் இதோ, நாங்கள் கொடிதும் தீவிரமுமான சாதியை எழுப்புவோம், அது தன்னுடையதல்லாத வாசஸ்தலங்களைக் கட்டிக்கொள்ளத் தேசத்தின் விசாலங்களில் நடந்துவரும்.

௭ அது கெடியும் பயங்கரமுமானது, அதின் நியாயமும் அதின் மேன்மையும் அதிலே தானே புறப்படும்.

௮ அதின் குதிரைகள் சிவிங்கிகளைப் பார்க்க வேகமும், அஸ்தமான வேளையில் திரிகிற ஓநாய்களைப் பார்க்கக் கூர்மையுமாயிருக்கின்றன, அதின் குதிரைக்காரர் பரவுவார்கள், அதின் குதிரைக்காரர் தூரத்திலிருந்து வருவார்கள், * இரைக்குத் தீவிரிக்கிற கழுகைப்போலப் பறந்துவருவார்கள்.

* மத்தேயு. ௨௪, ௨௮.

௯ அவர்களெல்லாருங் கொடுமைசெய்ய வருவார்கள், கவ்வுகிற அவர்களுடைய முகங்கள் கிழக்கே நோக்குகின்றது, அவர்கள் மணலத்தனை ஜனங்களைச் சிறைபிடிக்

சேர்ப்பார்கள்.

௰ அவன் இராசாக்களை ஆகடியம்பண்ணுவான், தலைவர்கள் அவனுக்கு நகைப்பாயிருப்பார்கள், அவன் அரண்களையெல்லாம் நகைத்து மண்மேடுகளைப்போட்டு அவைகளைப் பிடிப்பான்.

௰௧ அப்போது அவனுடைய ஆவி மாறுகிறதினாலேயவன் மிஞ்சிப்போய் இந்தத் தன்னுடைய பலன் தன் தேவனாலேயுண்டானதென்று சொல்லிக் குற்றவாளியாவான்.

௰௨ தேவரீர் பூர்வகாலந்துவக்கி என் பராபரனாகிய கர்த்தருமாயிருக்கிறதில்லையோ? * எங்களைச் சாகவொட்டாதேயும், கர்த்தாவே, நியாயத்தீர்ப்புக்காக அவனை வைத்தீர், கன்மலையே தண்டிப்புக்காக அவனை நிறுத்தினீர். * எரே. ௰, ௨௪.

௰௩ பொல்லாப்பைப் பார்க்கமாட்டாத சுத்தக்கண்ணனே! தீவினையை நோக்கிக்கொண்டிருக்கமாட்டீரே, * தேவரீர் துரோகிகளை நோக்கிக்கொண்டிருக்கிறதேது? தன்னைப்பார்க்கிலும் நீதியுள்ளவனை ஆகாதவன் விழுங்குகையிலே தேவரீர் மவுனமாயிருந்தது, * யோபு. ௨௧, ௭. எரே. ௰௨, ௧.

௰௪ மனுஷரைச் சமுத்திரத்து மச்சங்களுக்கும் ஆளுகிறவனில்லாத ஊர்வனங்களுக்கும் சமானமாக்குகிறதேது?

௰௫ அவர்களையெல்லாந் தூண்டிலால் இழுத்துக்கொள்ளுகிறான், அவர்களைத் தன் வலையிலே பிடித்துத் தன் பறியிலே சேர்த்துக்கொள்ளுகிறான், அதினாலே சந்தோஷப்பட்டுக் களிகூருகிறான்.

௰௬ ஆகையால் அவைகளாலே தன் பங்கு கொழுத்தும் தன் போசனம் திண்ணத்தகுமாய்ப் போயிற்றென்று அவன் தன் வலைக்குப் பலியிட்டுத் தன் பறிக்குத் தூபங்காட்டுகிறான்.

௰௭ இதற்காக அவன் தன் வலையை இழுத்துக்கொட்டிக்கொண்டிருந்து சாதிகளை எப்போதுங்கொன்றுபோட இரங்காதவனாயிருக்கவேண்டுமோ.

## ௨. அதிகாரம்.

மேசியாவின் வருகையைக் குறித்துப் பராபரன் பண்ணின வாக்குத்தத்தம்.

நான் என் காவலிலே தரித்து அரணிப்பிலே நிலைகொண்டிருந்து அவர் எனக்கு என்ன சொல்லுவாரென்றும், என் அங்கலாய்ப்புக்கு நான் என்ன உத்தரவைக் கொண்டுபோவேனென்றும் பார்க்கிறதற்காகக் * கவனிப்பேனென்றேன். * சங்கீதம். ௭௨௧, ௧. ௨.

௨ அப்போது கர்த்தர் எனக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது, நீ தரிசனத்தை எழுதி அதைக் கடந்தோடுகிறவன் வாசிக்கும்படிக்குப் பலகைகளிலே தீர்க்கமாக வரை.

௩ அதேதெனில் குறிக்க காலத்திற்குத் தரிசனம் இன்னம் வைத்திருக்கிறது, முடிவிலேயுத்தரவு விளங்கப்பண்ணுவார், அவர் பொய்சொல்லார். அவர் தாமதித்தால் * அவருக்குக் காத்திரு, ஏனெனில் † வரவே வருவார், அவர் பிந்தியிருப்பதில்லை. * சங். ௨௭, ௰௪. ௪௨, ௯. † எபி. ௰, ௩௭.

௪ இதோ அசட்டையாயிருக்கிறானே, அவனுடைய ஆத்துமம் அவனுக்குள் செம்மையானதல்ல, ஏனெனில் தன் விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான். * ரோமர். ௧, ௰௭. கலாத்தியர். ௩, ௰௧. எபிரேயர். ௰, ௩௮.

### பாபேலின்மேல்வரும் ஆக்கினைகளின் தீர்க்கதரிசனம்.

௫ அந்த மதுபானனும் அமர்ந்திருக்கமாட்டாத அகந்தையுள்ள புருஷனுமானவனென்றால் எத்தனை துரோகியாயிருந்தாலும் அவன் தன் ஆத்துமாவைப் பாதாளத்தைப்போல விரிவாக்கித் திருப்தியாகாமல் மரணத்திற்குச் சமானமாய்ச் சகல சாதிகளையும் தன்வசமாகச் சேர்த்துச் சகல சனசதளங்களையுந் தன்னிடமாகக் கூட்டிக்கொண்டாலும்,

௬ இவர்களெல்லாரும் அவன்பேரிலே ஒரு பழமொழியையும் அவனுக்கு விரோதமான புதைபொருளான சொல்லையுமுண்டாக்கித் தன்னுடையதல்லாததைப் பெருக்கிக்கொள்ளுகிறவனுக்கையோவென்றும், அது எந்தமட்டும் நிற்குமென்றும், அவன் தன்மேல் கெட்டியான சேற்றின் பாரத்தைச் சுமத்திக்கொள்ளுகிறானென்றுஞ் சொல்லார்களோ?

௭ உன்னைக் கடிப்பவர்கள் அகப்பிலே எழும்புவதும் உன்னை அலைக்கழிப்பவர்கள் விழிப்பதுமில்லையோ? நீ அவர்களுக்குச் சூறையாகாயோ?

௮ நீ அநேகஞ் சாதிகளைக் கொள்ளையிட்டபடியினாலே சனசதளங்களில் மீதியான யாவரும் நீ சிந்தின மனுஷ இரத்தத்தினிமித்தமுங் கொடுமையினிமித்தமும் உன்னைக் கொள்ளையிடுவார்கள்.

௯ தீமையின் வல்லமைக்குத் தப்பிவிடுகிறதற்குத் தன் கூட்டை உயரத்திலே வைக்கும்படிக்குத் தன் வீட்டுக்குப் பொல்லாத ஆதாயத்தைத் தேடுகிறவனுக்கையோ.

௰ உன் வீட்டுக்கு வெட்கமுண்டாக ஆலோசனைபண்ணினாய், அநேகசனசதளங்களை வெட்டிப்போட்டதினாலே உன் ஆத்துமத்திற்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தாய்.

௰௧ ஏனெனில் கல்லு சுவரிலிருந்து கூப்பிடும், உத்திரம் மரத்திலிருந்து கூவும்.

௰௨ * இரத்தப்பழிகளோடே பட்டணத்தைக் கட்டி அநியாயத்தோடே நகரியைப் பலப்படுத்துகிறவனுக்கையோ.
* எரேமியா. ௨௨, ௰௩.

௰௩ இதோ சனங்கள் அக்கினிக்கிரையாக உழைத்துச் சனக்கூட்டங்கள் விருதாவாக இளைக்கிறது கர்த்தருடைய செயல் அல்லவோ?

௰௪ ஏனென்றால் * தண்ணீர்கள் சமுத்திரத்தை மூடுமாப்போலே பூமி கர்த்தருடைய மகிமையின் அறிவினாலே நிரம்பப்பட்டுப் போகும். * ஏசாயா. ௰௧, ௯.

௰௫ தன் தோழருக்குக் குடிக்கக் கொடுத்துத் தன் துருத்தியை அவர்களண்டையிலே வைத்து அவர்களுடைய நிர்வாணங்களைப் பார்க்கும்படிக்கு அவர்களை வெறியுண்டாக்குகிறவனுக்கையோ.

௰௬ கனத்திற்குப் பதிலாகக் கனவீனத்தால் நிரப்பியாவாய், * நீயுங் குடித்துச் சுன்னத்தில்லாதவனென்று விளங்கு. கர்த்தருடைய வலதுகையிலிருக்கிற பாத்திரம் உன்னண்டைக்குத் திரும்பும், இலச்சையான வாந்திபண்ணுதல் உன் மகிமையின்மேலே விழும். * சங். ௭௫, ௯. எரே. ௨௫, ௰௫. ௰௬.

௰௭ ஏனென்றால் லீபனோனுக்குச் செய்த கொடுமையுனை மூடும், சங்காரம் மனுஷ இரத்தத்தினிமித்தமுந் தேசத்திற் பட்டணத்திற்றும் அதின் குடிகளெல்லாருக்குஞ் செய்த கொடுமையினிமித்தமும் அந்த மிருகங்களை யவைகளைச்செய்த பாழ்க்கடிப்புத்தானே கலங்கப்பண்ணும்.

௰௮ சித்திரகாரனுக்கு அவன் செப்பனிட்ட சுரூபமும், ஊமையான தேவர்களை யுண்டுபண்ணித்தான் உருவாக்கின சுரூபத்தை நம்பினவனுக்கு அந்த வார்க்கப்பட்டதும் பொய்ப்போதகம் பண்ணுகிறதுமான விக்கிரகமும் என்னத்திற்கு உதவும்.

௰௯ மரத்தைப் பார்த்து விழியென்றும் ஊமையான கல்லைப் பார்த்து எழும்பென்று சொல்லுகிறவனுக்கையோ அது போதிக்குமோ? * இதோ அது பொன்னும் வெள்ளியுமான தகடு அடித்திருக்கின்றது, அதின் உள்ளத்திலே ஒரு ஆவியுமில்லையே.
* சங். ௱௰௫, ௫—௮.

௨௰ கர்த்தரோவென்றால் * தமது பரிசுத்த தேவாலயத்திலிருக்கிறார், பூமியெல்லாம் அவருக்கு முன்பாக † மவுனமாயிருக்கக்கடவது. * சங். ௰௧, ௪. † சங்கீ. ௪௬, ௰௧.

## ௩. அதிகாரம்.

[ஆபகூக்குதீர்க்கதரிசி பண்ணின செபம்.]

ஆபகூக்குதீர்க்கதரிசியினுடைய துயரக்கீதமாகிய செபம்.

௨ கர்த்தாவே, நீர் வெளிப்படுத்தினதை நான் கேட்டேன், எனக்குப் பயமாயிற்று, கர்த்தாவே, வருஷங்களின் நடுவிலே உம்முடைய கிரியையை உயிர்ப்பியும், வருஷங்களின் நடுவிலே அதைத் தெரியப்பண்ணும், கோபத்திலே இரக்கத்தை நினைத்துக்கொள்வீராக.

௩ பராபரன் தேமானிலும் பரிசுத்தமுள்ளவர், * பாரான் பருவதத்திலுமிருந்து வருவார், சேலா. அவருடைய மகிமை வானங்களை மூடிக்கொண்டது, † அவர் புகழ்ச்சியினாலே பூமி நிறைந்தது. * ௫. மோசே. ௩௩, ௨. † ௨. மோசே. ௰௫, ௰௧.

௪ பிரகாசம் வெளிச்சமாயிருந்தது, அவர் கையிலிருந்து இருபுறமும் எழும்புகிற சோதிகள் அவருக்குண்டாகி அங்கே யவருடைய பலம் ஒளித்திருந்தது.

௫ அவர் முகத்திற்கு முன்பாகப் பெருவாரிக்காய்ச்சல் நடந்தது, அவர் அடிகளுக்கு முன்பாக எரிபந்தமான நோக்காடு புறப்பட்டது.

௬ அவர் நின்று தேசத்தை யளந்தார், அவர் பார்த்துப் புறசாதிகளைக் கரையப்பண்ணினார், பூர்வ பருவதங்கள் சிதற அடிக்கப்பட்டது, ஆதியிலிருந்த மேடுகள் தாழ்ந்தது, அவருடைய நடைகள் நித்திய நடைகளானது.

௭ கூஷானின் கூடாரங்களை யக்கிரமத்தினிமித்தம் அகப்பட்டிருக்கக்கண்டேன், மீதியான் தேசத்தின் திரைகள் அசைந்தது.

௮ கர்த்தர் நதிகளின்மேலே எரிச்சலாயிருந்தாரோ? தேவரீர் உம்முடைய குதிரைகளின்மேலும் இரட்சிப்புண்டாக்குகிற உம்முடைய இரதங்களின்மேலும் ஏறிவருகிறபோது உம்முடைய கோபம் * நதிகளுக்கு உம் குசனமும் † சமுத்திரத்திற்கு விரோதமாயிருந்ததோ. * ௨. மோசே. ௭, ௨௰. † ௨. மோசே. ௰௪, ௨௧.

௯ கோத்திரங்களுக்குக் கொடுக்கப்பட்ட ஆணைகளுடைய வார்த்தையின்படியே உம்முடைய வில் நாணேற்றப்பட்டதாக விழித்தது, சேலா. * ஆறுகளுண்டாகப் பூமியைப் பிளந்தீர். * ௨. மோசே. ௰௭, ௬.

௰ பருவதங்கள் உம்மைக்கண்டு திகில் அடைந்தது, * தண்ணீர்களின் வெள்ளம் கடந்துபோயிற்று, ஆழமானது ஓசைகேட்கப்பண்ணி உயரத் தன் கைகளையெடுத்தது, * யோசுவா. ௩, ௰௬.

௰௧ சந்திரசூரியன் தன் மண்டலத்தில் நின்றது, உம்முடைய அம்புகளின் வெளிச்சத்தோடும் உமது ஈட்டியினுடைய மின்னலின் பிரகாசத்தோடும் நடந்துவந்தார்கள். * யோசுவா. ௰, ௰௩.

௰௨ சினத்தோடே தேசத்தில் நடந்தேறினீர், கோபத்தோடே புறசாதிகளைப் போரடித்தீர்.

௰௩ உம்முடைய சனத்தின் இரட்சிப்புக்காகவும் நீர் அபிஷேகம்பண்ணினவனோடே

இரட்சிப்புக்காகவுமே புறப்பட்டீர், கழுத்தளவாக அஸ்திபாரத்தைத் திறப்பாக்கி ஆகாதவனுடைய வீட்டிலிருந்த தலைவனை வெட்டினீர், சேலா.

௰௪ அவனுடைய செங்கோல்களாலே இவனுடைய கிராமத்தாரின் தலையையுருவக் குத்தினீர், என்னைச் சிதற அடிப்பதற்குக் கொந்தளிப்பாய் வந்தார்கள், சிறுமையானவனை ஒளிப்பிடத்திற் பட்சிப்பது அவர்களுக்குக் களிகூருதலாயிருக்கும்.

௰௫ திரளான தண்ணீர்களின் குவியலாகிய சமுத்திரத்தில் உம்முடைய குதிரைகளோடே பேய்ப்போனீர்.

௰௬ நான் கேட்கிற செய்தியினாலேயே என் வயிறு அதிர்ந்தது, அந்தச் சத்தத்தினால் என்னுதடுகள் நடுங்குகிறது, மக்கல் என் எலும்புகளிலுண்டாயிற்று, என் நிலையிலே பதறினேன், எங்களைப் பாழாக்குஞ் சனத்தண்டைக்குப் போயேறும் இக்கட்டுநாளிலே யெப்படியிளைப்பாறுவேன்.

௰௭ ஏனெனில் அத்திமரந் துளிர்விடுவதில்லை, திராட்சச்செடிகளிற் பலனுண்டாவதில்லை, ஒலிவமரத்திற் செய்தவேலை பிசகிப்போகும், வயல்கள் ஆகாரங்கொடாதிருக்கும், தொழுவத்தில் ஆடுகள் முதலற்றுப்போகும், மாட்டுக்கொட்டிலிலே மாடுமில்லாதேபோகும்.

௰௮ * நானோவென்றால் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருப்பேன், என் இரட்சிப்பின் பராபரனுக்குள் களிகூருவேன்.

* ஏசாயா. ௬௧, ௰. பிலிப்பி. ௪, ௪.

௰௯ ஆண்டவராகிய கர்த்தர் என்னுடைய பலன், அவர் என் கால்களை மான்கால்களைப்போலாக்கி என் உயரமான தலங்களில் என்னை நடக்கப்பண்ணுவார், என் கின்னரங்களிலே வாசிக்க இராகத் தலைவனுக்கொப்புவிக்கப்பட்டது.

ஆபகூக்கின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# செப்பனியாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[யூதசனத்தின்மேல் வருந் தேவ ஆக்கினைகளின் தீர்க்கதரிசனம்.]

அமோனின் குமாரனாகிய யோசியாவென்ற யூதாவினுடைய இராசாவின் நாட்களிலே எசேக்கியாவினுடைய குமாரனாயிருக்கிற அமரியாவுக்குங் குமாரனான கெதலியாவென்றவனுடைய மகனாகிய கூசியின் குமாரனான செப்பனியாவுக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௨ தேசத்திலுண்டானதையெல்லாம் வாரியே வாரிக்கொள்ளுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩ மனுஷரையும் மிருகஜீவன்களையும் வாரிக்கொள்ளுவேன், நான் ஆகாயத்துப் பறவைகளையும் சமுத்திரத்து மச்சங்களையும் ஆகாதவர்களோடேகூட * இடறல்களையும் வாரிக்கொண்டு தேசத்திலுண்டான மனுஷரைச் சங்காரம்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார். * மத்தே. ௰௩, ௪௧.

௪ நான் யூதாவின்மேலும் எருசலேமுடைய எல்லாக்குடிகளின்மேலும் என் கையை நீட்டி, பாகாலில் மீதியாயிருக்கிறதையும் பூசாரிகளின் பெயரையும் அவர்களோடேகூட ஆசாரியர்களையும்,

௫ வீடுகளின்மேல் வானத்துச் சேனையைப் பணிகிறவர்களையும், கர்த்தர்பேரிலும் ஆணையிட்டுத் தங்கள் மோளோக்பேரிலும் ஆணையிட்டுப் பணிகிறவர்களையும்,

௬ கர்த்தரை விட்டுப் பின்வாங்குகிறவர்களையும் கர்த்தரைத் தேடாமலும் அவருக்காகக் கேட்டு விசாரியாமலும் போகிறவர்களையும் இவ்விடத்திலிராதபடிக்குச் சங்காரம்பண்ணுவேன்.

௭ கர்த்தராகிய ஆண்டவருக்குமுன்பாக மவுனமாயிருங்கள், ஏனென்றால் கர்த்தருடைய நாள் கிட்டியிருக்கின்றது, அதேதென்றால் கர்த்தர் ஒரு பலியடிக்குதலை ஆயத்தம்பண்ணித் தாம் அழைத்தவர்களைப் பரிசுத்தம்பண்ணினார்.

௮ கர்த்தருடைய பலியின் நாளிற் சம்பவிப்பதேதென்றால், நாம் பிரபுக்களையும் இராசகுமாரரையும் மறுதேசத்து உடை தரிக்கிற யாவரையும் விசாரிப்போம்.

௯ வாசற்படியைத் தாண்டிக் கொடுமையினாலுங் கபடினாலுந் தங்கள் எசமான்களின் வீட்டை நிரம்பப்பண்ணுகிற யாவரையும் அந்நாளில் விசாரிப்போம்.

௰ அந்நாளிலே மீன்வாசலிலிருந்து கூக்குரலின் சத்தமும் பட்டணத்தின் இரண்டாம் வகுப்பிலிருந்து அலறுதலும் மேடுகளிலிருந்து மகா நொறுங்குதலின் இரைச்சலுமுண்டாகுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧ பிடங்குவீதியின் குடிகளே அலறுங்

கள, ஏனெனிலவர்ததக சனமெலலாஞசங்காரமாயிறறு, காசுக்காரரெலலாரும வெடடுணடுபோனார்கள.

௰௨ அககாலததிலே சமபவிபபதேதெனனில, நாம எருசலேமை விளககுகளாற சோதிததுததஙகள வணடிகளினமேறகுழமபியிருககிறவர்களுஙகர்ததர் நனமைசெயவதுமிலலை தீமைசெயவதுமிலலையெனறுதஙகள இருதயததிறசொலலுகிறவர்களுமான மனுஷரைவிசாரிபபோம.

௰௩ அவர்களுடைய ஆஸ்திகளையும அவர்களுடைய வீடுகளகொளளையுமாகும, அவர்கள * வீடுகளைக கடடியும அவைகளிற குடியிருபபதிலலை, அவர்கள திராடசத்தோடடஙகளை நாடடியும அவைகளினடைய இரசததைக குடிபபதிலலை. * ஆமோ. ரு, ௰௧.

௰௪ * கர்ததருடைய பெரியநாள கிடடியிருககினறது, அது கிடடிச்சேர்நது மிகவுந தீவிரிககினறது, கர்ததருடைய நாளெனற சத்தந்திறகுப் பராககிரமசாலிமுதலாய அங்கேகசசபபாயககதறுவான. * யோவே ௧, ௰ரு.

௰ரு * அநதநாள கினததினுடைய நாள, அது இககடடும இடுககணுமுளளநாள, அது கொநதளிபபும பாழ்க்கடிபபுமுளள நாள, அது இருளும அநதகாரமுமான நாள, அது மபபுமமநதாரமுமான நாள. * யோவே. ௨, ௰௧. ஆமோ. ரு, ௰௮.

௰௬ அது அரணிபபான படடணஙகளுககு விரோதமாகவும, உயரமான கொததளஙகளுககுவிரோதமாகவும எககாளமூதுகிறதும ஆர்பபரிககிறதுமான நாள.

௰௭ நாம மனுஷரைக குருடரைபபோல நடககததககவையாக இடுககபபடுததுவோம, ஏனெனிற கர்ததருக்கு விரோதமாயப பாவஞசெயதார்கள, அவர்கள இரததமபுழுதியைபபோலவும அவர்கள மாமசம எருவைபபோலவும இறைநதுகிடககும.

௰௮ கர்ததருடைய கினததின நாளிலே * அவர்கள வெளளியும அவர்கள பொனனும அவர்களைத தபபுவிககமாடடாது, அவருடைய எரிசசலின அககினியினாலே தேசமெலலாமழியும, அதேனெனில தேசததின குடிகளையெலலாம அசுபபாயததானே நிர்மூலமபணணுவார். * ஏசா. எ, ௰௬.

## ௨. அதிகாரம்.

[குணபபடுசெலுக்காசயூதருக்குசசொனனபுததி.]

வாஞசையிலலாதசாதியே, கடடளையினபடியே முடிநதிர, நாள் தருமமைபபோலப பறநதுபோகிறதறகுமுனனும கர்ததருடைய கோபததின உககிரம உஙகள மேலஇறஙகாததறகுமுனனுங கர்ததருடையகோபநாள் உஙகளமேல வாராததறகுமுனனும,

௨ * நீஙகள உஙகளையசசாராயநது சோதியுங்கள. * ௨. கொரி. ௰௩, ரு.

௩ கர்ததருடைய நியாயததை நடபபிககிற தேசததிலுளள எலலாசசிறுமையானவர்களே, அவரைததேடுஙகள, நீதியைத தேடுஙகள மனததாழமையையுந தேடுஙகள, அபபோது ஒருவேளை கர்ததருடையகோபததின நாளிலே மறைககபபடுவீர்கள.

௪ ஏனெனிற காசசாவும விடபபடடுப போகும, அஸ்கலோனபாழாம, அஸ்தோததாரைப படடபபகலிலே பறககடிபபார்கள, எக்ரோனும வேரோடேபிடுஙகபபடும.

### சில புறசசாதிகளுககுவரும அழிவு முனனறிவிககபபடடது.

ரு சமுததிரக்கரைக்குடிகளாகிய கிரேத்தியரின சாதிககு ஐயோ, * பெலிஸ்தரின தேசத்தாராகிய கானானேயா, கர்ததருடையவார்ததையுஙகளுககு விரோதமாயிருககினறது, உனனிற குடியிலலாதபடிககு உனனையழிபபோம.

* எரேமியாவின. ௪எ, ௪. ழி

௬ சமுததிரககரைத தேசம மேயபபர் வெடடின கெபிதாபரஙகளும ஆடடுததொழுவஙகளுமாகிபபோகும.

எ அநதத்தேசம யூதாவீடடாரில மீதியானவர்களினவசமாகும, அவர்கள அவவிடஙகளில மநதைமேயபபார்கள, அஸ்கலோனின வீடுகளிலே சாயஙகாலததிறபடுததுககொளவார்கள, ஏனெனில அவர்களுடைய பராபரனாகிய கர்ததர் அவர்களை விசாரிதது, * அவர்கள சிறையிருபபைததிருபபுவார். * எரேமி. ௨௯. ௰௪. ௩௰. ௩. ௰௮.

அ மோவாபின நிநதனையையும அமமோனபுததிரர் நமதுசனததைநிநதிதது தஙகளெலலைககுமிஞசிப பெருமைபணணின தூஷணஙகளையுங்கேடடோம.

௯ ஆகையால மோவாப் சோதோமைபபோலும அமமோனபுததிரின தேசங் கோமோராவைபபோலுமாகிக காஞசொறிகளுககுவிடபபடடநிலமும உபபளமுமாகச் சதாகாலமும பாழுமாயிருககும, என சனததில மீநதவர்கள அவர்களைக கொளளையிடு நமதுசாதியில மீதியானவர்கள அவர்களைசசுதநதரிபபார்களெனறு நமமுடைய சீவனைககொணடுசொலலுகிறேனெனறு இஸரவேலின பராபரனும சேனைகளுடையகர்ததர் உரைககிறார்.

௰ இது அவர்கள மேடடிமைககீடாக அவர்களுககு வரும, ஏனெனறால அவர்கள நிநதிதது சேனைகளுடைய கர்ததரின சனததிறகு விரோதமாகப பெருமைபணணினார்கள.

௰௧ கர்த்தர் அவர்களமேல் கெடியுள்ளவராயிருப்பார், ஏனென்றால் பூமியின் தேவர்களையெல்லாம் இளைத்துப்போகப்பண்ணுவார், அப்போது சாதிசனங்களுடைய சகல தீவுகளின் மனுஷரும் அவரவர் தங்கள் தங்கள் தானத்திலிருந்து அவரைப் பணிந்துகொள்ளுவார்கள்.

௰௨ எத்தியோப்பியராகிய நீங்களும் நம்முடைய பட்டயத்தால் கொலையுண்பீர்கள்.

௰௩ நம்முடைய கையை வடக்குக்கு விரோதமாக நீட்டி, அசூரை அழித்து, நினிவேயைப் பாழும் வறட்சியான திறக்கொத்த வறட்சியான தலமுமாகப் போடுவார்.

௰௪ அதின் நடுவிலே மந்தைகளும் * சாதி சாதியான சகல ஜீவன்களும் படுத்துக்கொள்ளும், அதினுடைய சிகரங்களின்மேலே நாரைகளும் கோட்டான்களும் இராத்தங்கும், பலகணிகளில் குருவி சத்தமிடும், வாசற்படிகளில் பாழ்க்கடிப்பிருக்கும், ஏனென்றால் கேதுருமரங்களின் மச்சைத் திறப்பாக்கிப் போடுவார். * ஏசாயா. ௰௩, ௨௧, ௨௨. ௩௪, ௰௧—௰௫.

௰௫ சுகமாய்க் குடியிருந்து நானே, என்னைத்தவிர வேறொருத்தியுமில்லையென்று தன் இருதயத்தில் சொன்ன களிகூருதலான பட்டணமிதுதானே. எப்படியது பாழும் மிருகஜீவன்களின் தாபரமுமாய்ப் போயிற்று; அதைக் கடந்துபோகிறவனெல்லாம் ஈசற்பட்டுத் தன் கையை ஆட்டுவான்.

## ௩. அதிகாரம்.

[எருசலேமின்மேல் வரும் தேவாக்கினைகளின் தீர்க்கதரிசனம்.]

இறுக்கஞ்செய்கிற ஊத்தையும் அழுக்குமான பட்டணத்துக்கு ஐயோ?

௨ அது சத்தத்துக்குக் கேள்விகொடுக்கவில்லை, அது கடிந்துகொள்ளுதலையேற்றுக்கொள்ளவில்லை, அது கர்த்தரை நம்பவில்லை, அது தன் பராபரனண்டைக்குச் சேரவில்லை.

௩ அதற்குள்ளேயிருக்கிற * அதின் பிரபுக்கள் கெர்ச்சிக்கிற சிங்கங்கள், அதின் நியாயாதிபதிகள் சாயங்காலத்திற் புறப்படுகிற ஓநாய்கள், விடியற்காலமட்டும் ஒரு எலும்பை மிச்சமாய் வைக்காதவைகளுமான ஓநாய்கள். * எசேக்கி. ௨௨, ௨௭. மீகா. ௩, ௰௧.

௪ அதின் தீர்க்கதரிசிகள் மேலெழுச்சியும் துரோகமுமுள்ள மனுஷர், அதின் ஆசாரியர்கள் பரிசுத்த ஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி வேதத்துக்கு அநியாயஞ்செய்தார்கள்.

௫ அதற்குள்ளேயிருக்கிற கர்த்தர் நீதியுள்ளவர், அவர் அநியாயஞ்செய்கிறதில்லை, அவர் குறைவில்லாமல் காலைதோறும் தம்முடைய நியாயத்தை வெளிச்சத்திலே வைக்கிறார், ஆகிலும் அநியாயக்காரன் வெட்கமறியான்.

௬ சாதிகளைச் சங்கரித்தோம், அவர்கள் துரோகங்கள் பாழாயிற்று. அவர்களுடைய வீதிகளை ஒருத்தரும் கடந்துபோகாதபடிக்குப் பாழ்க்கடித்தோம், அவர்களுடைய பட்டணங்கள் மனுஷனில்லாதபடிக்கும் குடியில்லாதபடிக்கும் அவாந்தரையாயிற்று.

௭ உன் வாசஸ்தலம் நிர்மூலமாகாதபடிக்கு நீ நமக்குப் பயந்து, கடிந்துகொள்ளுதலையேற்றுக்கொள்ளுவாயே யென்றோம், ஆனால் நாம் அதைச் செப்படி விசாரித்தாலும் அவர்கள் * தங்கள் கிரியைகளைக் கெடுத்துக் கெடாக்கினையிரித்தார்கள். * எரேமியா. ௪, ௨௨.

௮ ஆகையால் நாங்கொள்ளையாட எழும்பும் நாள்மட்டும் நமக்குக் காத்திருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனென்றால் நம்முடைய கோபத்தினுடைய முழு உக்கிரமான நம்முடைய சினத்தை அவர்கள்மேல் ஊற்றும்படிக்குச் சாதிகளைச் சேர்க்கவும் இராச்சியங்களைக் கூட்டவும் நம்மில் தீர்ந்த நியாயமாயிருக்கிறது, அதேதென்றால் தேசமெல்லாம் நம்முடைய எரிச்சலின் அக்கினியினால் அழியும்.

ஆக்கினைக்குப்பிற்பாடு பராபரனுடைய சபைக்குண்டாகும் பாக்கியமான நற்சீரின் தீர்க்கதரிசனம்.

௯ அப்போது சனசனங்களெல்லாங் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு ஏகருத்தாய் அவருக்கு ஆராதனைசெய்யும்படிக்கு நாம் அவர்கள் உதடுகளைச் சுத்தமுள்ளவைகளாகமாறப்பண்ணுவோம்.

௰ * எத்தியோப்பியாவின் நதிகளுக்கப்பாலிருந்து நம்மை விண்ணப்பம்பண்ணப்போகிற நம்முடைய சிதறுண்டுபோன சபையார் நம்முடைய காணிக்கையை நமக்குக் கொண்டுவருவார்கள். * மல்கி. ௧, ௰௧.

௰௧ நீ நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணிச்செய்திருந்த உன்னுடைய எல்லாக் கிரியைகளினிமித்தமும் அந்நாளிலே வெட்கப்படாதிருப்பாய், ஏனெனில் நீ நமது பரிசுத்த பருவதத்தினிமித்தம் இனிமேல் அகங்காரியாயிராதபடிக்கு, நாம் உன் பெருமையைத் தொட்டுக் களிகூர்ந்தவர்களை அப்போது உன் நடுவிலிருந்து விலக்கி,

௰௨ உன் நடுவில் * சிறுமையும் எளிமையுமான சனத்தை மீதியாய் வைப்போம், அவர்கள் கர்த்தருடைய நாமத்தின்பேரில் நம்பிக்கையாயிருப்பார்கள். * லூக்கா. ௰௨, ௩௨.

௰௩ இஸ்ரவேலில் மீதியானவர்கள் அநியாயஞ்செய்வதில்லை, அவர்கள் பொய்பேசுவதுமில்லை, * கபடநாக்கு அவர்கள் வாயிற்கண்டுபிடிக்கப்படுவதுமில்லை, அவர்கள்

௰ ஆனதுகொண்டு * உங்கள்மேலிருக்கிற வானம் பனியைக்கொடாமலும் பூமி பலனைக்கொடாமலும்போயிற்று.

* ௫ மோசே. ௨௮. ௨௩.

௰௧ ஏனெனில் நாம் நாட்டின்மேலும் பருவதங்களின்மேலும் தானியத்தின்மேலும் திராட்சரசத்தின்மேலும் எண்ணெயின்மேலும் பூமி முளைப்பிக்கிற எல்லாவற்றின்மேலும் மனுஷரின்மேலும் மிருகங்களின்மேலும், கைகளின்பாடனைத்தின்மேலும் வறட்சியை வரவழைத்தோமென்றார். * ஆமோஸ். ௪. ௬.

௰௨ அப்போது செயல்த்தியேலின் குமாரனாகிய செருபாபேலும் யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனுஞ் சனத்தில் மீதியான அனைவருந் தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்திற்குந் தங்கள் பராபரனாகிய கர்த்தர் அனுப்பின ஆகாய் தீர்க்கதரிசியினுடைய வார்த்தைகளுக்குங் கேள்வி கொடுத்தார்கள், சனங்கள் கர்த்தருக்கு முன்பாகப் பயந்தது.

௰௩ அப்போது கர்த்தருடைய தூதனாகிய ஆகாய் கர்த்தர் தூதினால் வார்த்தையாகச் சனத்திற்கு நாம் உங்களோடேயிருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான். * மலகி. ௨, ௭.

௰௪ கர்த்தர் செயல்த்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற யூதாவினுடைய தலைவனின் ஆவியையும் யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனின் ஆவியையுஞ் சனத்தில்மீதியானவெல்லாருடைய ஆவியையுமெழுப்பினார், அவர்கள் வந்து தங்கள் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தரின் வீட்டிலே வேலைசெய்தார்கள்.

௰௫ தரியு இராசாவின் இரண்டாம் வருஷம் ஆறாமாதம் இருபத்துநான்காந்தேதியிலேதானே.

## ௨. அதிகாரம்.

[இரண்டாந்தேவாலயம் மேசியாவின் வருகையினாலே மகிமைப்படுமென்று கர்த்தர் அதைக்கட்டுவிக்கிற யூதருக்குத் திடஞ்சொல்லுவித்தது.]

ஏழாமாதம் இருபத்தோராந்தேதியிலே ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தருடைய வார்த்தையுண்டாயிற்று, அவர் சொன்னதாவது,

௨ நீ செயல்த்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற யூதாவின் தலைவனோடும், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனோடுஞ் சனத்தில் மீதியானவர்களோடுஞ் சொல்லவேண்டியதேதெனில்,

௩ தன் முந்தின மகிமையோடிருந்த இந்த வீட்டைக் கண்டவர்களில் உங்களுக்குள்ளே மீதியாயிருக்கிறவனார்? இப்போது இது எப்படியிருக்கிறதென்று காணுகிறீர்கள். * அதற்கிது ஒன்றுமில்லையென்று உங்கள் கண்களுக்குக் காணுதல்லவோ? * எஸ்றா. ௩. ௰௨.

௪ இப்போதுஞ் செருபாபேலே திடனாயிரு என்று கர்த்தர் சொல்லுகிறார், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனே, திடனாயிரு, தேசத்தின் எல்லாச்சனமே, திடனாயிருந்து வேலையை நடத்துங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். ஏனெனில் நாம் உங்களோடேயிருக்கிறோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௫ நீங்கள் எகிப்திலிருந்து புறப்படுகிறபோது நாம் உங்களோடே உடன்படிக்கைபண்ணின * வார்த்தையோடுங் கூடத்தானே. நம்முடைய ஆவியும் உங்கள் நடுவில் நிலைகொண்டிருப்பார், பயப்படாதேயுங்கள். * ௨. மோசே. ௩௪, ௰. யோவா. ௧, ௧.

௬ ஏனென்றால் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, * இன்னமொருதரங் கொஞ்சப்பொழுதிலேதானே, நாம் வானத்தையும் பூமியையுஞ் சமுத்திரத்தையும் வெட்டாந்தரையையும் அசையப்பண்ணி,

* எபிரே. ௰௨, ௨௬. ௨௭.

௭ சகல சாதிகளாலும் இச்சிக்கப்பட்டவரண்டைக்கு வரச்சகலசாதிகளையும் அசையப்பண்ணி, இந்த வீட்டை மகிமையாலே நிறையப்பண்ணுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

* ஏசாயா. ௨, ௨. ௬௦. ௪௯, ௬. எரே. ௩, ௰௭. மலகி. ௩, ௧. லூக்கா. ௨, ௰.

௮ வெள்ளியும் நம்முடையது பொன்னும் நம்முடையது என்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௯ இந்தப்பிந்தின வீட்டின் மகிமை முந்தினத்துடையதைப்பார்க்கப் * பெரியதாயிருக்குமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார். இவ்விடத்திலே † சமாதானங் கட்டளையிடுவோமென்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறோமென்று சொல்லவென்றார் * மலகி. ௩, ௧. சகரி. ௬, ௰ † யோவான. ௰௪, ௨௭.

௰ தரியுவின் இரண்டாம் வருஷம் ஒன்பதாமாதம் இருபத்துநான்காந்தேதியிலே ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தருடைய வார்த்தையுண்டாயிற்று, அவர் சொன்னதாவது,

௰௧ ஒருத்தன் தன் வஸ்திரத்தின் தொங்கலிலே பரிசுத்தமாம்சத்தைச் சுமந்து தன் தொங்கலோடே அப்பத்தையாகிலும் ஒரு பதார்த்தத்தையாகிலுந் திராட்சப்பழ

இரசத்தையாகிலும் எண்ணெயையாகிலும் எந்தவகைப் போசனத்தையாகிலுந் தொட்டால் இது பரிசுத்தமாகுமோவென்று நீ ஆசாரியர்களை வேதநியாயத்தைக் கேளென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௨ ஆசாரியர்கள் பிரத்தியுத்தரமாக, பரிசுத்தமாகாதென்றார்கள்.

௰௩ பிணத்தால் தீட்டுப்பட்டவன் இவைகளில் ஏதையாகிலுந் தொட்டால் இது தீட்டுப்படுமோவென்று ஆகாய் பின்னையுங் கேட்டான். ஆசாரியர்கள் பிரத்தியுத்தரமாக, * தீட்டுப்படுமென்றார்கள். * ௩. மோசே. ரு, உ. ௰௧, உ௪. ௪. மோசே. ௰௯, ௰௬. உஉ.

௰௪ அப்போது ஆகாய் உத்தரவுகொடுத்துச் சொன்னதாவது, இப்படியே இந்தச் சனமும் இப்படியே இந்தச் சாதியும் நமக்கு முன்பாக விருக்கின்றதென்று கர்த்தர் சொல்லுகிறார். இப்படியே யவர்களுடைய கைகளின் கிரியையெல்லாமிருக்கின்றது, அவர்கள் அங்கே கொண்டுவந்து படைக்கிறது * தீட்டுப்பட்டிருக்கின்றது * தீத்து. ௧, ௰ரு.

௰ரு இப்போதுங் கர்த்தருடைய தேவாலயத்திற் கல்லின்மேற் கல்லு வைக்காதிருந்த இந்நாளுக்கு முந்தின காலத்திலே நடந்ததை உங்கள் மனதிலே சிந்தித்துக் கொள்ளுங்கள்.

௰௬ இவைகள் ஆகாததற்குமுன்னே * ஒருத்தன் இருபதுமரக்காலாகப் பார்த்த அம்பாரத்தண்டையிலே வந்தபோது பத்து இருந்தது, ஒருத்தன் ஆலையின் தொட்டியிலே ஐம்பதுகுடமென்ன ஆலையண்டையிலே வந்தபோது இருபதிருந்தது. * ௧, அதி ௬.

௰௭ * கருக்காயினாலும் விஷப்பனியினாலுங் கன்மழையினாலும் உங்களையுங் கைகளின் வேலையெல்லாம் அடித்தோம், ஆனாலுமனதை நம்மண்டைக்குத் திருப்பாதேபோனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௧, ௰௧. ஆமோஸ். ௪, ௯.

௰௮ இப்போதும் இந்நாளுக்கு முந்தின காலத்தில் நடந்ததையுங்களமனதிலே சிந்தியுங்கள். ஒன்பதாமாதம் இருபத்துநாலியுங்கள். ஒன்பதாமாதம் இருபத்துநாலாந்தேதியாகிய இந்நாளுக்குங் கர்த்தருடைய தேவாலயத்தின் அஸ்திபாரம்போடப்பட்ட அந்நாளுக்கும் சென்றகாலத்திலே நடந்ததையேயுங்களமனதிலே சிந்தியுங்கள்.

௰௯ களஞ்சியத்தில் இன்னம் விதைத்தானியமுண்டோ? திராட்சச்செடியும் அத்திமரமும் மாதுளஞ்செடியும் ஒலிவமரமும் இதுவரைக்குங் கனிகொடுக்கவில்லையே. இந்நாள்முதற்கொண்டோ உங்களை ஆசீர்வதிப்பேனென்று சொல்லுகிறானென்.

௨௰ இருபத்துநாலாந்தேதியாகிய அந்நாளிலே கர்த்தருடைய வார்த்தை பின்னுமிரண்டாம் விசை ஆகாய்க்குண்டாகி அவர் சொன்னதாவது,

௨௧ நீ யூதாவின் தலைவனாகிய செருபாபேலோடே சொல்லவேண்டியதேதென்றால், * நான் வானத்தையும் பூமியையும் அசைப்பண்ணி, * ௬. வசனம்.

௨௨ இராச்சியங்களின் இராசாசனத்தைக் கவிழ்த்துச் சாதிகளுடைய இராச்சியங்களின் பலத்தையழித்து இரதத்தையும் அதிலேறியிருக்கிறவர்களையுங் கவிழ்த்துப் போடுவோம், குதிரைகளோடேகூட அவைகளிலேறியிருக்கிறவர்களும் அவனவன் தன் சகோதரன் பட்டயத்தாலே விழுவார்கள்.

௨௩ சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, செயல்தியேலின் குமாரனாகிய நம்முடைய அடியானாகிய செருபாபேலென்ற நம்முடைய அடியான் அந்நாளிலே சேர்த்துக்கொண்டு உன்னை முத்திரையாக வைப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனென்றால் உன்னைத் தெரிந்துகொண்டோமென்று சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதைச் சொல்லென்றார்.

ஆகாயின்றிர்க்கதரிசனம் முடிந்ததுமுற்றும்.

# சகரியாவின் றிர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[குணப்படுதலுக்கெழுப்புகிறபுத்தி.]

தரியு அரசாண்ட இரண்டாம்வருஷம் எட்டாமாதத்திலே இத்தோவின் மகனான பெரேகியாவினுடைய குமாரனாகிய * சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி யவர் சொன்னதாவது,

௨ கர்த்தர் உங்கள் பிதாக்களின்மேற் கடுங்கோபமாயிருந்தார்.

௩ ஆகையால் நீ யவர்களோடே சொல்லவேண்டியதாவது, சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதென்றால், * நம்மண்டைக்குத் திரும்புங்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், அப்போது

உங்களண்டைக்குத் திரும்புவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

* யாக்கோபு. ௪, ௮.

௪ உங்கள் பொல்லாத வழிகளையும் உங்கள் பொல்லாத கிரியைகளையும் விட்டுத் திரும்புங்களென்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று முந்தின திர்க்கதரிசிகள் உங்கள் பிதாக்களைப் பார்த்துக் கூப்பிட்டாலுங் கேளாமலும் நம்மைக் கவனியாமலும் போன அவர்களைப்போல நீர் களாகவென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௫ உங்கள் பிதாக்களெங்கே? திர்க்கதரிசிகளோவென்றால் என்றென்றைக்கும் உயிரோடிருப்பார்களோ?

௬ இராவிட்டாலுந் திர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரருக்கு நாங் கட்டளையிட்ட நமது வார்த்தைகளும் நமது நிர்மாணங்களும் உங்கள் பிதாக்களைப் பிடித்ததில்லையோ? எங்கள் வழிகளின்படியேயும் எங்கள் கிரியைகளின்படியேயுஞ் சேனைகளுடைய கர்த்தர் எங்களுக்குச் செய்ய நிர்ணயித்திருந்தாரோ அப்படியே எங்களுக்குச் செய்தாரென்று அவர்கள் திரும்ப வந்து சொன்னதில்லையோவென்று சொல்லென்றார்.

குதிரையின்மேலிருந்து மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்து நின்ற புருஷனின் தரிசனை.

௭ தரியு அரசாண்ட இரண்டாம் வருஷம் சேபாத்மாதமாகிய பதினோராம் மாதம் இருபத்துநாலாந் தேதியிலே கர்த்தருடைய வார்த்தை இத்தோவின் மகனான பெரகியாவினுடைய குமாரன் சகரியாவென்ற திர்க்கதரிசிக்கு உண்டாயிற்று. அவன் சொன்னதாவது,

௮ இதோ, இன்று இராத்திரி சிவப்புக் குதிரையின்மேல் ஏறியிருக்கிற ஒரு புருஷனைக் கண்டேன், அவர் பள்ளத்தாக்கிலிருக்கிற மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்து நின்றார், அவர் பிறகாலே சிவப்பும் மங்கின நிறமும் வெண்மையுமான குதிரைகளிருந்தது.

௯ என் ஆண்டவரே, இவர்களாரென்று கேட்டேன் அப்போது என்னோடே பேசுகிற தூதனானவர், இவர்களாரென்று நாமுனக்குக் காண்பிப்போமென்று சொன்னார்.

௰ அப்போது மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்து நிற்கிற அந்தப் புருஷன் பிரதியுத்தரமாக, இவர்கள் தேசத்தைச் சுற்றித்திரியக் கர்த்தர் அனுப்பினவர்களென்றார்.

௰௧ பிற்பாடு இவர்கள் மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்து நின்ற கர்த்தருடைய தூதனாயிருக்கிறவருக்கு மறுமொழியாக நாங்கள் தேசத்தைச் சுற்றித்திரிந்தோம், இதோ தேசமெல்லாந் தணிவும் அமரிக்கையுமாயிருக்கின்றதென்றார்கள்.

௰௨ அப்போது கர்த்தருடைய தூதனானவர் மறுமொழியுரைத்துச் சொன்னதாவது, சேனைகளுடைய கர்த்தாவே, நீர் இந்த எழுபது வருஷமாயச் சினமவைத்த எருசலேமின்பேரிலும் யூதாவினுடைய பட்டணங்களின்பேரிலும் எந்தமட்டும் இரங்காதிருப்பீர்?

௰௩ அப்போது கர்த்தர் என்னோடே பேசின தூதருக்கு நல்வார்த்தைகளையும் ஆறுதலான வார்த்தைகளையும் பிரதியுத்தரமாகச் சொன்னார்.

௰௪ அப்போது என்னோடே பேசின தூதர் என்னோடே சொன்னது, நீ கூறவேண்டியதாவது, சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதென்னவென்றால், * நாம் எருசலேமுக்காகவுஞ் சீயோனுக்காகவும் மகா வைராக்கியமடைந்தோம். * அ, உ.

௰௫ சுகித்திருக்கிற சாதிகளுக்கு விரோதமாக நாம் மகா கடுமையுள்ள கோபமாயிருக்கிறோம், ஏனென்றால் நாங் கொஞ்சக் கடுமையடைந்தபோது இவர்கள் கேட்டுக்கு உதவியாயிருந்தார்கள்.

௰௬ ஆகையால் * மன உருக்கத்தோடே எருசலேமண்டைக்குத் திரும்பினோமென்று கர்த்தர் சொல்லுகிறார், நம்முடைய வீடு அதிலே கட்டப்படும், எருசலேமின் அளவுநூல் பிடிக்கப்படுமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று கூறென்றார்.

* அ, ௬.

௰௭ இன்னம் நம்முடைய பட்டணங்கள் நன்மையினாலே பரம்பிப்போகும், இன்னங் கர்த்தர் சீயோனைத் தேற்றரவு பண்ணுவார் இன்னம் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவாரென்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று பின்னையுங் கூறென்றார்.

நான்கு கொம்புகளையும் நான்கு கருமான்களையுங் கண்ட தரிசனை.

௰௮ நான் என் கண்களை ஏறெடுக்கும்போது இதோ நான்கு கொம்புகளைக் கண்டேன்.

௰௯ இவைகளென்னவென்று என்னோடே பேசின தூதனைக் கேட்டேன் அப்போது அவர் எனனுடனே இவைகள் யூதாவையும் இஸ்ரவேலையும் எருசலேமையுஞ் சிதற அடித்த கொம்புகளென்றார்.

௨௰ பிற்பாடு கர்த்தர் எனக்கு நாலு கருமான்களைக் காண்பித்தார்.

௨௰௧ இவர்கள் என்ன செய்கிறதற்கு வருகிறார்களென்று கேட்டேன், அப்போது அவர் சொன்னதாவது, ஒருத்தனுந் தன் தலையை ஏறெடுக்கக்கூடாதபடியாய் அந்தக் கொம்புகள் யூதாவைச் சிதற அடித்ததே, அவைகளுக்குப் பயமுறுத்துகிறதற்கும், யூதாவின்

தேசத்தைப்பாழ்க்கடிக்கச்செம்பெடுத்த சாதிகளுடைய கொம்புகளை விழத்தள்ளுகிறதற்கும் இவர்கள் வந்தார்களென்றார்.

## உ. அதிகாரம்.

[அளவுநூலைப்பிடித்திருந்த புருஷனின் தரிசனையும், இஸ்ரவேலசனத்திற்குச்சொல்லப்பட்ட ஆறுதலானவார்த்தைகளும்.]

௧ நான் என்கண்களையேறெடுத்தபோது இதோ, ஒருபுருஷனைக்கண்டேன், அவர் கையிலே அளவுநூலிருந்தது.

௨ நீர் எவ்விடத்திற்குப்போகிறீரென்று கேட்டேன், அவர் என்னுடனே எருசலேமின் அகலம் எத்தனையென்றும் அதின் நீளம் எத்தனையென்றுந்தெரிய அதையளக்கிறதற்குப்போகிறேனென்றார்.

௩ அப்போது இதோ என்னோடேபேசின தூதனானவர் புறப்பட்டுப்போனார், வேறொருதூதன் அவருக்கெதிராகப் புறப்பட்டுவந்தான்.

௪ இவரோடேயவர்சொன்னதாவது, நீ போடி இந்தவாலிபனோடே சொல்லவேண்டியதேதெனில் எருசலேந் தன்நடுவிற்கூடும் மனுஷரின்திரளினாலும்மிருகஜீவன்களின் திரளினாலும் வெளிப்பாளயங்களாயக் குடியேறும்.

௫ * நாம் அதற்குச்சுற்றிலும் அக்கினிமதிலாயிருந்து அதின்நடுவில் மகிமையுண்டாகவிருப்போமென்று கர்த்தர்சொல்லுகிறார். * ௬, ௮.

௬ ஓய, நீங்கள் எழும்பி வடதேசத்திலிருந்தோடிவாருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனிற்கொஞ்சங்குறைய ஆகாயத்து நான்குகாற்றுத்திசைகளிலும் உங்களை நாஞ்சிதறப்பண்ணினோமே.

௭ * ஓய, பாபேலகுமாரத்தியண்டையிலே குடியிருக்கிற சீயோனே, தப்பித்துக்கொள். * எசாயா. ௪௮, ௨௰.

௮ ஏனெனிற் பிரபாவமகிமையுண்டாகுமென்றுசேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார், உங்களைக்கொள்ளையிட்டசாதிகளண்டைக்கு நம்மையனுப்பினார், ஏனென்றால் * உங்களைத் தொடுகிறவன் அவருடைய கண்விழியைத்தொடுகிறான். * சங்கீ. ௰௭, ௮.

௯ அதேதெனில் இதோநாம் நமதுகையை யவர்களுக்கு விரோதமாக ஆட்டுகிறோம், அதனால் அவர்கள் தங்களைச்சேவித்தவர்களுக்குக் கொள்ளையாவார்கள், அப்போது, சேனைகளின்கர்த்தர் நம்மையனுப்பினாரென்றறிவீர்கள்.

௰ சீயோன்குமாரத்தியே, கெம்பீரித்துச் சந்தோஷமாயிரு, ஏனெனில் இதோ, நாம் வந்து உன்நடுவில் வாசம்பண்ணுவோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௧ அந்நாளிலே * அநேகஞ்சாதிகள் கர்த்தரைச்சேர்ந்து நமக்குச்சனமாவார்கள், நாம் உன்நடுவிலேவாசமாயிருப்போம், சேனைகளின்கர்த்தர் நம்மையுன்னண்டைக்கனுப்பினாரென்று அப்போது அறிவாய். * ௧. மோசே. ௪௬, ௰.

௰௨ கர்த்தர்பரிசுத்ததேசத்திலே யூதாவைத் தமதுபங்காகச்சுதந்தரித்து * இன்னம் எருசலேமைத்தெரிந்துகொள்ளுவார். * ௧, ௰௭.

௰௩ எல்லாமாமிசமே, கர்த்தருக்குமுன்பாக மவுனமாயிரு, ஏனெனில் தமதுபரிசுத்தவாசஸ்தலத்திலிருந்து விழிக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩. அதிகாரம்.

[பிரதான ஆசாரியனாகிய யோசுவாவுக்குச் சுத்தவஸ்திரங்களைத் தரிப்பித்ததுமின்றி யென்னப்பட்டவரும் கோடிக்கலென்னப்பட்டவருமாகிய மேசியாவைக்குறித்து அவனுக்கு வாக்குத்தத்தமருளிச்செய்யப்பட்டதுமான தரிசனை.]

௧ அவர் பிரதான ஆசாரியனாகிய யோசுவாவையெனக்குக்காண்பித்தார், அவன் கர்த்தருடைய தூதனுக்குமுன்பாக நின்றான், சாத்தான் அவனுக்குவிரோதிக்கும்படி அவன் வலதுபக்கத்திலே நின்றது.

௨ அப்போது கர்த்தர் சாத்தானோடே சொன்னதாவது, * கர்த்தர் உன்னை உதம்புவாராக, சாத்தானே, எருசலேமைத் தெரிந்துகொண்டகர்த்தர் உன்னை உதம்புவாராக, இவன் அக்கினிக்குத்தப்புவிக்கப்பட்டகொள்ளியல்லவோவென்றார். * யூதா. ௯.

௩ யோசுவாவோவெனில் அழுக்கு வஸ்திரங்களைத்தரித்தவனாய்த்தூதனுக்குமுன்பாக நின்றிருந்தான்.

௪ அவர்மறுமொழிகொடுத்து இவனில் இருக்கிற அழுக்குவஸ்திரங்களைக்களைந்துபோடுங்களென்று தமக்குமுன்பாக நிற்கிறவர்களோடேசொல்லி இவனோடே சொன்னதாவது, பார், நாம் உன்அக்கிரமத்தையுன்னிலிருந்து நீங்கிப்போகப்பண்ணி, * உனக்குப்புதுவஸ்திரங்களைத் தரிப்பித்தோமென்றார். * எசாயா. ௬௧, ௰.

௫ அவன்சிரசின்மேற்சுத்தமானகுல்லாவை வைப்பார்களாகவென்றான், அப்போது சுத்தமானகுல்லாவை யவன் சிரசின்மேல் வைத்து அவனுக்குவஸ்திரங்களைத் தரிப்பித்தார்கள், கர்த்தருடைய தூதனானவர் அங்கே நின்றார்.

௬ கர்த்தருடையதூதனானவர் யோசுவாவுக்குச்சாட்சியாக அறிவித்துச் சொன்னதாவது,

௭ சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதென்னவென்றால், நீ நம்முடைய வழிகளில் நடந்து நம்முடைய காவலைக் காத்தால் நீ நம்முடைய வீட்டின் நியாயங்களையும் விசாரிப்பாய், நம்முடைய முற்றங்களையுங் காப்பாய், * இங்கே நிற்கிறவர்களுக்குள்ளே நடமாடுதலை நாம் உனக்குக் கட்டளையிடுவோம். * சங். ௯௧, ௰௧.

௮ ஆதலால் பிரதான ஆசாரியனாகிய யோசுவாவே, நீ கேள். உனக்கு முன்பாக உட்கார்ந்திருக்கிற உன் தோழருங்கூடக் கேட்கக்கடவார்கள், ஏனெனில் இவர்கள் அற்புதமனுஷர், என்னவென்றால் இதோ * கிளையென்னப்பட்டவராகிய நம்முடைய ஊழியக்காரனை நாம் வரப்பண்ணுகிறோம். * ஏசாயா. ௪, ௨. ௰, ௧.

௯ அதேதென்றால் இதோ, நாம் யோசுவாவுக்கு முன்பாக வைத்த * கல்லு அந்த ஒரே கல்லின்மேல் † ஏழு கண்களும் வைக்கப்பட்டிருக்கின்றது, இதோ, நாம் அதின் சித்திர வேலையைத் தீர்த்து இந்தத் தேசத்தின் அக்கிரமத்தை ‡ ஒரே நாளிலே நீக்கிப்போடுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். * ஏசா. ௨௮, ௰௬. மத். ௨௧, ௪௨. † ௪, ௰. ‡ எபி. ௯, ௰௨.

௰ அந்நாளிலே நீங்கள் ஒருத்தரையொருத்தர் * திராட்சச்செடியின் கீழும் அத்திமரத்தின் கீழும் வரவழைப்பீர்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்றார். * மீகாவின். ௪, ௪.

## ௪. அதிகாரம்.

[பொன்னின் குத்துவிளக்கையும் அதற்கெண்ணெய் இறங்கப்பண்ணுகிற இரண்டு ஒலிவமரங்களையுங் கண்ட தரிசனை.]

என்னோடே பேசின தூதர் திரும்பிவந்து நித்திரைபண்ணுகிற ஒருத்தனை எழுப்புகிறதுபோலென்னை யெழுப்பி,

௨ என்னுடனே நீ காண்கிறதென்னவென்றார், நான் சொன்னதாவது, இதோ முழுதும் பொன்னினாற் குத்துவிளக்கைக் காண்கிறேன், அதின் சிகரத்தின்மேல் அதின் கிண்ணமும் அதின்மேல் அதின் ஏழு தீபங்களும் அதினுடைய சிகரத்தின்மேலிருக்கிற தீபங்களுக்குப்போகிற ஏழேழு குழாய்களுமிருக்கின்றது.

௩ அதற்குமேலாக இரண்டு ஒலிவமரங்கள் ஒன்று கிண்ணிக்கு வலதுபுறமாகவும் ஒன்று அதற்கிடதுபுறமாகவுமிருக்கின்றதென்றேன்.

௪ நான் என்னோடே பேசின தூதரோடே பேசிக்கொண்டு ஆண்டவரே, இதேதென்று கேட்டேன்.

௫ அப்பொழுது என்னோடே பேசின தூதர் மறுமொழியாக என்னோடே இதேதென்றுனக்குத் தெரியாதோவென்றார், ஆண்டவரே எனக்குத் தெரியாதென்றேன்.

௬ அப்பொழுது அவர் எனக்குப் பிரத்தியுத்தரமாகச் சொன்னதாவது, செருபாபேலுக்குச் சொல்லப்படுகிற கர்த்தருடைய வார்த்தையேதென்றால் பலத்தினாலுமல்ல வல்லமையினாலுமல்ல, நம்முடைய ஆவியினாலே ஆகுமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௭ செருபாபேலுக்கு முன்பாக நிற்கிற பெரிய பருவதமே! நீ எம்மாத்திரம்? நீ யொத்த தரையாவாய், பிரதான மூலைக்கல்லை அவன் பிறப்பிப்பான், அதற்குக் கிருபையுண்டாகக் கிருபையுண்டாகவென்று ஆர்ப்பரிப்பார்களென்றார்.

௮ பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது,

௯ செருபாபேலின் கைகள் இந்த வீட்டுக்கஸ்திபாரம் போட்டது, அவன் கைகள் அதை முடித்துத் தீர்க்கிறதுமாயிருக்கும். அப்படியே சேனைகளுடைய கர்த்தர் நம்மை உங்களண்டைக்கனுப்பினாரென்றறிவாய்.

௰ ஏனெனில் கொஞ்சமான துவக்கங்களின் நாளை ஆர் அசட்டைபண்ணலாம்? பூமியெங்குஞ் சுற்றிப்பார்க்கிறவைகளாகிய கர்த்தருடைய இந்த * ஏழு கண்களுஞ் செருபாபேலின் கையிலிருக்கிற வெள்ளியத்தூக்கைச் சந்தோஷமாய்ப் பார்க்கின்றதென்றார். * ௩, ௯. அறி. ௫, ௬.

௰௧ நான் அப்புறம் பேசிக்கொண்டு குத்துவிளக்குக்கு வலதுபுறமாகவும் அதற்கிடதுபுறமாகவுமிருக்கிற இந்த இரண்டு ஒலிவமரங்கள் ஏதென்று அவரைக் கேட்டேன்.

௰௨ மறுபடியும் நான் அவரைக் கேட்டுச் சொன்னதாவது, பொன்னின் இரண்டு குழாய்களண்டையிலே தொங்கப் பொன்னிறமாய்க் களண்ணெய்யைத் தங்களிலிருந்து இறங்கப்பண்ணுகிறவைகளாகிய ஒலிவமரங்களின் இரண்டு குலைகள் ஏதென்றுங் கேட்டேன்.

௰௩ அவரென்னோடே, இவைகளேதென்றுனக்குத் தெரியாதோவென்றார். ஆண்டவரே! எனக்குத் தெரியாதென்றேன்.

௰௪ அப்பொழுது அவர் சொன்னதாவது, இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவரண்டையிலே நிற்கிற * இரண்டு எண்ணெய்யாட்களென்றார். * அறி. ௰௧, ௪.

## ௫. அதிகாரம்.

[பறக்கிற புஸ்தகச்சுருளின் தரிசனை.]

நான் திரும்பியென் கண்களையேறெடுக்கையில் இதோ பறக்கிற ஒரு புஸ்தகச் சுருளைக்

லோக்கண்டேன.

உ என்னுடனே, நீகாண்கிறதென்னவென்றார். பறக்கிற ஒருபுஸ்தகச்சுருளை நான் காண்கிறேன, அதினநீளம இருபதுமுழமும அதின அகலம பத்துமுழமுமானதென்றேன.

௩ அப்பொது அவர் என்னோடேசொன்னதாவது, இதுதேசத்தின்மீதெங்குமபுறப்படுப்போகிற சாபம், ஏனெனில எந்தத்திருடனும அதிலொருபுறத்திலிருக்கிறதின்படியே குற்றஞ்சுமத்தாமதே போகிறான, ஆணையிடுகிற எவனும அதில மறுபுறத்திலிருக்கிறதின்படியே குற்றஞ்சுமக்காமதேபோகிறான.

௪ அது திருடனவீட்டிலும தமது நாமத்தைக்கொண்டுபொய்யாணையிடுகிறவனவீட்டிலுமவந்து, அவனவீட்டின நடுவிலேதங்கி அதையதின மரங்களோடும அதினகலலுகளோடுங்கூட நிர்மூலமாக்குகிறதற்காக அதைப புறப்படப்பண்ணுவேனென்று சேனைகளின கர்த்தர் சொலலுகிறாரென்றார்.

மரக்காலிலேயுளுக்கார்ந்திருந்த பாபிலோனிய வேசியென்ற ஸ்திரீயினதரிசனை.

௫ பிறகு என்னோடேபேசினதூதர்புறப்பட்டு என்னோடேசொன்னதாவது. நீ யுன் கண்களையேறெடுத்துப் புறப்படுகிறதாகிய அது என்னவென்றுபாரென்றார்.

௬ அது என்னவென்றுகேட்டேன. அப்போது அவர் அதுபுறப்படுகிறதாகியவொருமரக்காலென்றார். அப்புறம அவர்சொன்னதாவது, பூமியெங்கும அதுதான அவர்களுடையகண்ணோக்கமென்றார்.

௭ இதோ, ஒருதாலந்துநிறையான ஈயமூடியூக்கிவரப்பட்டது மரக்காலின நடுவிலேயொவென்றால உளுக்கார்ந்த ஒரு ஸ்திரீயிருந்தாள.

௮ அப்போது அவர், இவள * அக்கிரமமானவளென்றுசொலலியவளை மரக்காலுக்குளளேதளளி, ஈயக்கட்டியை யதினவாயிலேபோட்டார். * உ. தெச. உ, எ. அறி. ௰எ, ௫.

௯ நான என்கண்களையேறெடுக்கிறபோது இதோ புறப்படுகிற இரண்டு ஸ்திரீகளைக்கண்டேன, அவர்கள செட்டைகளிற்காற்றிருந்தது, அதேதெனில அவர்களுக்குச செங்காலநாரையின செட்டைகளுக்கொத்த செட்டைகளிருந்தது, இவர்கள மரக்காலைபபூமிக்கும வானத்திற்கும நடுவாய்த்தூக்கிப்போனார்கள.

௰ நான என்னோடேபேசினதூதரையிவர்கள மரக்காலையெங்கேகொண்டுபோகிறார்களென்றுகேட்டேன.

௰௧ அப்போது அவர் என்னோடேசொன்னதாவது, * சினேயார்தேசத்திலேயதற்கொரு வீட்டைக்கட்டும்படிக்கு அதைக்கொண்டுபோகிறார்கள. அங்கேயது நிலைநிறுத்தப்பட்டுத்தன் நிலையிலேவைக்கப்படுமென்றார். * க. மோசே. ௰௧, உ௧.

## ௬. அதிகாரம்.

[நான்கு இரதங்களின தரிசனை.]

நான திருமபி என்கண்களையேறெடுக்கையில இதோ, இரண்டுபருவதங்களின நடுவாகப்புறப்படுகிற நான்குஇரதங்களைக்கண்டேன, அந்தப்பருவதங்கள வெண்கலப் பருவதங்களாயிருந்தது.

உ முதலாம் இரதத்திற சிவப்புக்குதிரைகளும இரண்டாமஇரதத்திறகறுப்புக்குதிரைகளும,

௩ மூன்றும இரதத்தில வெளளைக்குதிரைகளும, நான்காம இரதத்திற்புளளி புளளியானசெங்குதிரைகளுமபூட்டியிருந்தது.

௪ நான என்னோடேபேசின தூதனை, என ஆண்டவரே, இவைகளென்னவென்று கேட்டேன.

௫ அப்போது அந்தத்தூதர் எனக்குப் பிரத்தியுத்தரமாக * இவைகள பூமிக்கெல்லாம ஆண்டவராயிருக்கிறவருக்குமுன்பாக நின்றுபுறப்படுகிற வானத்தினுடைய நான்குகாற்றுகளென்றார். * சங். ௱௪, ௪.

௬ ஒன்றிலே பூட்டப்பட்டிருந்தகறுப்புக்குதிரைகள வடதேசத்திற்குப்புறப்பட்டுப்போயிற்று, வெண்மையானவைகள அவைகளின பிறகாலேபுறப்பட்டுப்போயிற்று. புளளிபுளளியானவைகள தென்தேசத்திற்குப் புறப்பட்டுப்போயிற்று.

௭ சிவப்புக்குதிரைகளோவென்றால் பூமியிற்சுற்றித்திரியப் பார்க்கும்படிக்குப் புறப்பட்டது. போய்ப பூமியிற்சுற்றித்திரியுங்களென்றார், அப்படியே பூமியிற்சுற்றித்திரிந்தது.

௮ அவரென்னைக்கூப்பிட்டு, பார்.வடதேசத்திற்குப் புறப்பட்டுப்போனவைகள நம்முடையகோபத்தைவடதேசத்திலே யிறக்கப்பண்ணினதென்று என்னோடே சொன்னார்.

ஞான தேவாலயத்தைக் கட்டப்போகிற இராசாவும ஆசாரியருமாகிய மேசியாவைக்குறித்துச சொலலப்பட்ட தீர்க்கதரிசனம்.

௯ கர்த்தருடையவார்த்தையெனக்குண்டாகி அவர்சொன்னதாவது,

௰ சிறையிருப்பின மனுஷராகிய எல்தாயுந தொபியாவும எதாயாவும பாபேலிருந்துவந்திருக்கும அந்நாளிலே நீபோய்ச்செப்பனியாவினகுமாரனாகிய யோசியாவினவீட்டிற்குட்பிரவேசித்து,

## அ. அதிகாரம்.

[யூதருக்குச்செய்யப்படுந்தேவ உபகாரங்களின்வாக்குத்தத்தம்.]

சேனைகளுடைய கர்த்தரின்வார்த்தையுண்டாகி அவர்சொன்னதாவது,

உ நான் சீயோனுக்காக மகா எரிச்சலான வயிராக்கியம் அடைந்தோம், அதற்காக மகா உக்கிரமான வயிராக்கியம் நமக்குண்டாயிற்றென்று சேனைகளின் கர்த்தர் உரைக்கிறார்.

ங * நான் சீயோனண்டைக்குத்திரும்பி எருசலேமின் நடுவிலே வாசம்பண்ணுவோம், எருசலேம் உண்மையின்பட்டணமென்றும் சேனைகளுடைய கர்த்தரின் பருவதம் பரிசுத்தபருவதமென்றும் அழைக்கப்படுமென்று கர்த்தர்சொல்லுகிறார். * க, யசு. உ. யஉ,

ச இன்னம் எருசலேமின் வீதிகளில் முதிர்ந்த வயதினாலே தன் தன் தடியைத் தங்கள் கைகளிற்பிடித்திருக்கிற கிழவருங் கிழவிகளுங் குடியிருப்பார்கள்.

ரு இன்னம் பட்டணத்தின் தெருக்களிலே விளையாடுகிற ஆண்பிள்ளைகளாலும் பெண்பிள்ளைகளாலும் அதின் வீதிகள் நிறைந்திருக்குமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

சு சேனைகளுடையகர்த்தர் சொல்லுகிறதேதெனில், அது இந்தச்சனத்தில் மீதியானவர்களின் பார்வைக்கு இந்நாட்களில் ஆச்சரியமாயிருந்தால் * நமது பார்வைக்கும் ஆச்சரியமாயிருக்குமோவென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார். * எரோமி. கக, உ. லூக்கா. க, கஎ.

எ இதோ, சூரியனுதிக்கிற திசையான தேசத்திலும் அது அஸ்தமிக்கிறதிசையான தேசத்திலுமிருக்கிற நமதுசனத்தை நாம் இரட்சித்து,

அ அவர்கள் எருசலேமின் நடுவிலே குடியிருக்க அவர்களை அழைத்துவருவோம், உண்மையும் நீதியுமாய் அவர்கள் நமக்குச் சனமுமாயிருப்பார்கள், நாம் அவர்களுக்குப்பராபரனுமாயிருப்போமென்று சேனைகளுடையகர்த்தர்சொல்லுகிறார். *எரோமியா. உச, எ. கக, கக.

தேவாலயத்தை முடியக்கட்டத்திடன்சொல்லி, நீதிநியாயஞ்செய்ய எழுப்பினது.

கூ சேனைகளுடைய கர்த்தரின்வீடாகிய தேவாலயங்கட்டப்படும்படிக்கு அதின் அஸ்திபாரங்கள் போடப்பட்ட நாள் முதற்கொண்டிருக்கிற தீர்க்கதரிசிகளின் வாயினாலேயிந்தவார்த்தைகளை இந்நாட்களிற் கேட்டுவருகிறவர்களே, உங்கள்கைகள் திடப்படக்கடவதென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

ய ஏனெனில் * இந்நாட்களுக்கு முன்னே மனுஷனுடைய வேலையாற்பலனுமில்லையிருக்க ஜீவனுடைய வேலையாற்பலனுமில்லை, போகிறவனுக்கும் வருகிறவனுக்கும் நெருக்கிடையினாலே சமாதானமுமில்லை, எல்லா மனுஷரையும் ஒன்றுக்கொன்றுவிரோதமாய்ப்போகவிட்டோம். * ஆகா. க, கூ. ய. உ, யகூ. யஎ.

யக இப்போதோவெனில் இந்தச்சனத்தில் மீதியானவர்களுக்கு நாம் முந்தின நாட்களில் இருந்ததுபோலிரோமென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

யஉ அதேதென்றால் விதைப்புச்சமாதானமுள்ளதாயிருக்கும், திராட்சச்செடி தன் கனியைத்தரும், பூமிதன் பலனைத்தரும், வானந்தன் பனியைத்தரும், இந்தச்சனத்தில் மீதியானவர்கள் இவையெல்லாவற்றையும் சுதந்தரிக்கக்கட்டளையிடுவோம்.

யங சபிப்பதேதெனில் யூதாவீட்டாரும் இஸ்ரவேல்வீட்டாருமாகிய நீங்கள் புறச்சாதிகளுக்குள்ளே சாபமாயிருந்ததினாலே, நாம் உங்களை நீங்கள் ஆசீர்வாதமாயிருக்கும்படிக்கு இரட்சிப்போம், பயப்படாதேயுங்கள், உங்கள்கைகள் திடப்படக்கடவது. * ஏசாயா. கஙு, க.

யச ஏனென்றால் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது, உங்கள் பிதாக்கள் நமக்குக்கோபமுண்டாக்கையில் நாம் உங்களுக்குப்பொல்லாப்புச்செய்ய நினைத்து, மனஸ்தாபப்படாமலும்போனதுபோலே,

யரு எருசலேமுக்கும் யூதாவுக்கும் நன்மைசெய்ய இந்தநாட்களில்திரும்ப நினைத்தோம், பயப்படாதேயுங்கள்.

யசு நீங்கள் செய்யவேண்டியகாரியங்களேதென்றால், அவனவன் தன் அயலானோடே * உண்மையைப்பேசுங்கள், உங்கள் வாசல்களில் † உண்மையுமாய்ச் சமாதானமுமாய் நியாயந்தீருங்கள். * எபேசி. ச, உரு. † எ, கூ.

யஎ * ஒருத்தனும் தன் அயலானுக்கு விரோதமாய் உங்கள் இருதயத்தில் பொல்லாப்பை நினையாமலும், பொய்யாணையை நேசியாமலுமிருங்கள், ஏனெனில் இவையெல்லாம் நாம் பகைக்கிறகாரியங்களென்று கர்த்தர்சொல்லுகிறார். * எ, ய.

புறச்சாதிகளுடையகுணப்படுதலின் வாக்குத்தத்தம்.

யஅ சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது,

யகூ நான்காமாதத்தின் உபவாசமும், ஐந்தாமாதத்தின் உபவாசமும், ஏழாமாத்

தின உபவாசமும், பத்தாமாதத்தின உபவாசமும், யூதாவீட்டாருக்கு மகிழ்ச்சியாகவுஞ் சந்தோஷமாகவும் நல்ல பண்டிகைகளாகவும் மாறிப்போகும்; ஆகையால், உண்மையையுஞ் சமாதானத்தையுஞ் சிநேகியுங்களென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். * எ, ரு.

௨௰ இன்னுஞ் சனசதனங்களும் அநேகம் பட்டணங்களின் குடிகளும் வருவதுண்டென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௨௰௧ நாங் கர்த்தருடைய சமுகத்தில் விண்ணப்பம்பண்ணவுஞ் சேனைகளின் கர்த்தரைத் தேடவும்போவோம் வாருங்கள், நாங்களும் போவோமென்று, ஒரு பட்டணத்தின் குடிகள் மறுபட்டணத்தின் குடிகளோடே போய்ச்சொல்லுவார்கள். * ஏசாயா. ௨, ௩.

௨௰௨ அநேக சனசதனங்களும் பலத்த சாதிகளும் எருசலேமிலே சேனைகளுடைய கர்த்தரைத் தேடவும், கர்த்தருடைய சமுகத்தில் விண்ணப்பம்பண்ணவும் வருவார்கள்.

௨௰௩ அந்நாட்களிற் புறச்சாதிகளான சகலபாஷைக்காரரிற் பத்து மனுஷர் ஒரு யூதமனுஷனுடைய வஸ்திரத்தொங்கலைப் பிடித்து உங்களோடே கூடப்போவோமென்று பராபரன் உங்களோடே இருக்கிறாரென்கிறதைக் கேட்டோமென்று சொல்லி, அவனைப் பிடிப்பார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

## ௯. அதிகாரம்.

[புறச்சாதியாரின் ஆக்கினையையும் அவர்களுண்பதித்தலையும் முன் அறிவித்த தீர்க்கதரிசனம்.]

௧ ஆதிறாக்தேசத்திற்கு விரோதமானதும் தமஸ்க்கின்மேல் வந்து தங்குவதுமான கர்த்தருடைய வார்த்தையின் சுமையுண்டு, ஏனென்றால் மனுஷரின்மேலும் இஸ்ரவேலுடைய சகலகோத்திரங்களின்மேலுங் கர்த்தருடைய கண்ணோக்கமுண்டாயிருந்தது.

௨ ஆமாத்தும் மிகவும் ஞானமுள்ள தீருவும் சீதோனுங்கூட, அதின் எல்லைகளுள்ளாயிருக்கும்.

௩ தீருவு தனக்கு அரணைக்கட்டி மண்ணைத்தனை வெள்ளியையும் வீதிகளின் சேறத்தனை பொன்னையுஞ் சேர்த்துவைத்தது.

௪ இதோ, ஆண்டவர் அதைத்தேய்ழையாக்கிச் சமுத்திரத்தில் அதின் பலத்தை முறித்துப்போடுவார், அதுவோவென்றால் அக்கினிக்கிரையாகும்.

௫ அஸ்கலோனுங் காத்சாவும் எக்கிரோனுங்கூட அதைக்கண்டு பயப்பட்டு மிகுந்த திகிலடையும், ஏனென்றால் அவைகளின் நம்பிக்கை வெட்கப்பட்டுப்போகும், காத்சாவில் இராசா அழிந்துபோவான், அஸ்கலோன் குடியற்றிருக்கும்.

௬ அஸ்தோத்திலே வேசிப்பிள்ளைகள் குடியிருப்பார்கள், நான் பெலிஸ்தரின் முக்கியத்தைச் சங்காரம்பண்ணி,

௭ அவனுடைய இரத்தப்பழிகளை அவன் வாயிலும் அவனுடைய அருவருப்புகளை அவன் பல்லுகளின் நடுவிலும் இராதபடிக்கு நீக்கிப்போடுவோம். அவனுந் தம்முடைய பராபரனுக்கென்று மீதியாக வைக்கப்பட்டு யூதாவிலே பிரபுவைப்போலிருப்பான், எக்கிரோனும் எபூசியனைப்போலுமிருப்பான்.

யூதரையாதரிப்பதையும் அவர்களை மேசியாவைக்கொண்டு மீட்பதையுங் குறித்துப்பண்ணின வாக்குத்தத்தம்.

௮ இராணுவத்திற்கும், போகிறவர்களுக்கும் வருகிறவர்களுக்கும் விலக்கமாய்க் காக்க * நமது வீட்டைச் சுற்றிலும் பாளயம்போடுவோம், இனி ஒடுக்கப்பிடிக்கிறவன் அவர்கள்மேற் கடந்துவருவதில்லை, ஏனென்றால் இப்போது அதை நம்முடைய கண்களினாலே நோக்கியிருக்கிறோம்.
* உ. அதி, ரு.

௯ சீயோன்குமாரத்தியே, மிகவுங்களிகூரு, எருசலேங்குமாரத்தியே, கெம்பீரி, இதோ, உன் இராசா உனக்கு வருவார், அவர் நீதியுள்ளவரும் இரட்சிக்கிறவருந் தாழ்மையானவருங் கழுதையின்மேலும் கழுதைக்குட்டியாகிய மறியின்மேலும் ஏறிவருகிறவருமாயிருக்கிறார். * ஏசாயா. ௬௨, ௰௧. செப்பனியா. ௩, ௰௪. மத்தேயு. ௨௧, ௫. யோவான். ௰௨, ௰௪. ௰௫.

௰ ஏனென்றால் எப்பிராயீமில் இரதங்களையும் எருசலேமிற் குதிரைகளையும் அறப்போகப்பண்ணுவோம். யுத்தவில்லுமில்லாதேபோகும், * அவர் சாதிகளுக்குச் சமாதானமென்பார், அவருடைய இராச்சியம் ஒருசமுத்திரந்துவக்கி மறுசமுத்திரம்பரியந்தமும், நதிதுவக்கிப் பூமியின் எல்லைபரியந்தமும்போகும். * சங்கீ. ௭௨, ௮.

௰௧ உனக்கு நானோ செய்வதேதென்றால் * தண்ணீரில்லாதகுழியிலே அடைப்பட்டிருக்கிற உன்னுடையவர்களை நாம் உன்னுடன்படிக்கையின் இரத்தத்தினாலே விடுதலைபண்ணுவோம். * கலாத்தியர். ௩, ௨. ரு.

௰௨ நம்பிக்கையோடே அடைப்பட்டவர்களே, அரணுக்குத் திரும்புங்கள், இரட்டிப்பான நன்மையையும் அறிவிப்பானாயின்றைக்கு உனக்குக் கொடுக்கப்போகிறோம்.

யூதரைக்கொண்டு புறச்சாதிகளைத் திருப்புவதைக் குறித்துப்பண்ணின வாக்குத்தத்தம்.

௩ அந்நாளிலே சம்பவிப்பதென்னவென்றால், நான் எருசலேமைச் சகலசனசாதிகளுக்கும் பாரமான கல்லாக்குவேன், அதைக் கிளப்பவேண்டுமென்று யாவருஞ் சதைக்கச் சேதிக்கப்படுவார்கள், ஏனென்றால் பூமியின் சாதிகளெல்லாம் * அதற்கு விரோதமாகக் கூடிக்கொள்ளும். * ௰௪, ௨.

௪ அந்நாளிலே நான் குதிரைகளுக்கெல்லாந் திகைப்பையும் அவைகளின்மேலேறியிருக்கிறவர்களுக்கெல்லாம் புத்திமயக்கத்தையும் வரப்பண்ணி, யூதாவீட்டாரின்மேல் நம்முடைய கண்களைத் திறந்து வைத்துச் சனசாதிகளுடைய எல்லாக்குதிரைகளுக்குங் குருட்டாட்டத்தையுண்டுபண்ணுவோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௫ எருசலேமின்குடிகள் சேனைகளின் கர்த்தராகிய தங்கள் பராபரனுடைய துணையினாலே பெலங்களுக்குப் பலமானவர்களென்று அப்போது யூதாவின் தலைவர் தங்களிருதயத்திலே சொல்லுவார்கள்.

௬ அந்நாளிலே யூதாவின் தலைவரை விறகுகளுக்குள்ளெரிகிற அக்கினி படுப்புக்கும், வைக்கோற்கட்டுகளுக்குள்ளெரிகிற தீப்பட்டிக்கும் ஒப்பாக்குவோம், அவர்கள் வலதுபுறமும் இடதுபுறமுமாகப் புறப்பட்டுச் சுற்றிலுமிருக்கிற எல்லாச் சனசாதிகளையும் பட்சிப்பார்கள், எருசலேமுமின் எருசலேமாகிய தன்தானத்திலே தானே குடியேறினதாயிருக்கும்.

௭ தாவீதுவீட்டாரின் மகிமையும் எருசலேமுடைய குடிகளின் மகிமையும் யூதாவின் மேலே தன்னை உயர்த்தாதபடிக்குக், கர்த்தர் யூதாவின் கூடாரங்களை முதல் முதல் இரட்சிப்பார்.

௮ அந்நாளிலே எருசலேமின் குடிகளைக் காப்பாற்றுவார், அவர்களில் தள்ளாடினவன் அந்நாளிலே தாவீதைப்போலிருப்பான், தாவீதுவீட்டார் அவர்களுக்குமுன்பாகப் பராபரனைப்போலுங் கர்த்தருடைய தூதனைப்போலுமிருப்பார்கள்.

௯ அந்நாளிலே சம்பவிப்பதேதென்னில் எருசலேமுக்கு விரோதமாய் வருகிற எல்லாச் சாதிகளையும் அழிக்கப்பார்ப்போம்.

யூதர் தாங்கள் குத்தின மேசியாவை நோக்கிக்கொண்டு தேவவேதத்தின்மானமனஸ்தாபமடைவதின் தீர்க்கதரிசனம்.

௰ ஆனால் தாவீதுவீட்டாரின்மேலும் எருசலேமுடைய குடிகளின்மேலுங் கிருபையின் ஆவியையும் விண்ணப்பங்களின் ஆவியையும் * ஊற்றுவோம், அப்போது அவர்கள் † தாங்கள் குத்தின நம்மை நோக்கிக்கொண்டு, ஒரே பேறானவனுக்காகப் புலம்புகிறதுபோலே நமக்காகப் புலம்பித் தலைச்சன்பிள்ளைக்காகத் துக்கிக்கிறதுபோலே நமக்காகக் கசப்பாய்த் துக்கிப்பார்கள்.

* யோவே. ௨, ௨௮. † யோ. ௰௯, ௩௭.

௰௧ * மெகிதோனபட்டணத்தின் பள்ளத்தாக்கிலுள்ள ராகியஆத்ரிம்மோனின் புலம்பலைப்போலே அந்நாளிலே எருசலேமிற் புலம்பல் பெரிதாயிருக்கும். * ௨. நாளா. ௩௫, ௨௨. ௨௫.

௰௨ தேசம் புலம்பிக்கொண்டிருக்கும், ஒவ்வொருவம்சங்கள் தனித்தனியாகத் தானே தாவீதுவீட்டுவம்சத்தார் தனியேயும் அவர்கள் ஸ்திரீகள் தனியேயும், நாத்தான்வீட்டுவம்சத்தார்தனியேயும் அவர்கள் ஸ்திரீகள் தனியேயும்.

௰௩ லேவிவீட்டுவம்சத்தார் தனியேயும் அவர்கள் ஸ்திரீகள் தனியேயுஞ் சிமேயிவீட்டுவம்சத்தார் தனியேயும் அவர்கள் ஸ்திரீகள் தனியேயும்.

௰௪ மற்றுண்டான எல்லாவம்சங்களிலும் ஒவ்வொருவம்சங்களின் மனுஷர் தனித்தனியேயும் அவர்கள் ஸ்திரீகள் தனித்தனியேயும் புலம்புவார்கள்.

## ௰௩. அதிகாரம்.

[பாவத்தை நீக்கத் திறக்கப்பட்ட ஊற்றுண்டாயிருக்குமென்பதுங், கள்ள ஆராதனை நிர்மூலமாய் அற்றுப்போமென்பதும்.]

பாவத்தையும் * அழுக்கையும் நீக்க அந்நாளிலே தாவீதுவீட்டாருக்கும் எருசலேமின் குடிகளுக்குந் திறக்கப்பட்ட ஊற்றுண்டாயிருக்கும். * யோவே. ௩, ௰௮.

௨ அந்நாளிலே சம்பவிப்பதேதென்று இராலவிக்கிரகங்களின் பேரைத் தேசத்தில் இராதபடிக்கு அழிப்போம், அவைகள் இனி நினைக்கப்படுவதில்லை, தரிசனஞ்சொல்லுகிறவர்களையும் அசுத்தத்தின் ஆவியையுந் தேசத்திலிருந்து போய்விடவும் பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௩ இனி ஒருத்தன் தரிசனஞ்சொன்னால், சம்பவிப்பதேதென்னில், அவனைப்பெற்ற அவனுடைய தகப்பனும் அவன் தாயும் அவனுடனே, * நீ உயிரோடிருக்கப்படாது, ஏனென்றால் நீ கர்த்தருடைய நாமத்தைச் சொல்லிப் பொய்யைப் பகருகிறாயென்று அவனைப்பெற்ற அவன் தகப்பனும் அவன் தாயும் அவன் தரிசனஞ்சொல்லும்போது அவனைக் குத்திப்போடுவார்கள். * ௫. மோ. ௰௩, ௫-௯.

௪ சம்பவிப்பதேதென்றால் தரிசனஞ்சொல்லுகிற அவனவன் தான் சொன்ன தரிசனத்தினால் அந்நாளிலே வெட்கப்படுவான், பொய்சொல்லும்படிக்கு இனி மயிருள்ள போர்வையைப் போர்த்துக்கொள்ளாமல்,

௫ நான் தரிசனஞ்சொல்லுகிறவனல்ல, நான் நிலத்தைப் பயிரிடுகிறவன், ஏனென்று

வீட்டிலேதானே ஒரு மனுஷன் என்னை வேலைகொண்டான் என்பான்.

௬ ஆனால் உன் கைகளிலிருக்கிற இந்தக் காயங்கள் என்னவென்று அவனைக் கேட்டால், என் சிநேகிதரின் வீட்டிலே இப்படியடிக்கப்பட்டேனென்பான்.

இரட்சகர் பாடுபட்டபின் யூதருக்குச் சம்பவிக்குங் காரியம் இன்னதென்பது.

௭ பட்டயமே, நம்முடைய மேய்ப்பனின் மேலும் நமக்கடுத்த புருஷனின் மேலும் எழும்பென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் * மேய்ப்பனை வெட்டு, அப்போது ஆடுகள் சிதறிப்போகும், ஆனால் நம்முடைய கரத்தைச் சிறியோர்பேரிலே திருப்பி நீட்டுவோம். * மத். ௨௬, ௩௧. மாற். ௰௪, ௨௭.

௮ தேசமெங்குஞ் சம்பவிக்குங் காரியமேதென்றால் அதிலிருக்கிற இரண்டு பங்கு மனுஷர் சங்கரிக்கப்பட்டு மாண்டுபோவார்கள், மூன்றாம் பங்கோவென்னில் அதில் மீதியாயிருக்கும்.

௯ அந்த மூன்றாம் பங்கை நாம் அக்கினிக்குட்படப் பண்ணி, அவர்களை வெள்ளியை உருக்குகிறதுபோல உருக்கி, அவர்களைப் பொன்னைப் புடமிடுகிறதுபோலப் புடமிடுவோம், அவர்கள் நம்முடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுவார்கள், அப்போது நாம் அவர்களைக் கேட்டருளுவோம், இது நம்முடைய சனமென்று நாமுஞ் சொல்லுவோம், கர்த்தர் என் பராபரனாயிருக்கிறாரென்று அதுவுஞ் சொல்லும்.

# ௰௪. அதிகாரம்

[யூதருக்குத் தேவசகாயத்தினாலே வரும் மேன்மையான நற்சீரின் தீர்க்கதரிசனம்.]

இதோ, உன்னுடைய கொள்ளையுன் நடுவிலே பங்கிடப்படுகிற கர்த்தருடைய நாள் வரும்.

௨ அதெதெனில் எருசலேமுக்கு விரோதமாக யுத்தம் பண்ணச் சகல சாதிகளையுங் கூட்டுவோம் பட்டணம் பிடிக்கப்படும், வீடுகள் கொள்ளையாகும், ஸ்திரிகள் அவமானப்படுவார்கள், பட்டணத்தாரிற்பாதி மனுஷர் சிறைப்பட்டுப்போவார்கள் குறைசனமோ வென்றால் பட்டணத்தைவிட்டு அறுப்புண்டுபோவதில்லை. * ௰௨, ௩.

௩ பின்னுங் கர்த்தர் புறப்பட்டு தாம் படையின் நாளிலே யுத்தம் பண்ணியிருக்கிறதற்கொத்த பிரகாரமாக அந்தச் சாதிகளோடே யுத்தம் பண்ணுவார்.

௪ அந்நாளிலே அவருடைய பாதங்கள் எருசலேமுக்கெதிரே கிழக்காகவிருக்கிற ஒலிவமலையின் மேல் நிற்கும், அப்போது மகா பெரிய பள்ளத்தாக்குண்டாக ஒலிவமலை தன் நடுமையத்திலே கிழக்கிறக்கும் மேற்கிற்கு மெதிராகப் பிளந்துபோனபடியினாலே, ஒருபாதி வடபக்கத்திலும் ஒருபாதி தென்பக்கத்திலும் விலகும்.

௫ அப்போது நம்முடைய மலைகளின் பள்ளத்தாக்கு வழியாய் ஓடிப்போவீர்கள், ஏனெனில் மலைகளின் பள்ளத்தாக்கு ஆத்சால் மட்டும் போகும், நீங்கள் யூதாவின் இராசாவாகிய உசியாவின் நாட்களில் * பூமியதிர்ச்சிக்குத் தப்பி ஓடிப்போனதுபோல ஓடிப்போவீர்கள், அப்போது என் பராபரனாகிய கர்த்தர் வருவார், † தேவரீரோடே எல்லாப் பரிசுத்தவான்களுங் கூடத்தானே.

* ஆமோ. ௧, ௧. † யூதா. ௰௪.

௬ அந்நாளிற் சம்பவிப்பதேதென்றால், வெளிச்சமில்லாமல் ஒருவேளை பிரகாசமும் ஒருவேளை மப்புமாயிருக்கும்.

௭ ஒரு நாளுண்டு, அது கர்த்தருக்குத் தெரிந்தது. அது பகலுமல்ல, இரவுமல்ல, ஆனால் சம்பவிப்பதேதென்றால் சாயங்காலத்திலே வெளிச்சமாம்.

௮ அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால் * சீவனுள்ள தண்ணீர்கள் எருசலேமிலிருந்து புறப்பட்டுப் பாதி கிழக்குச் சமுத்திரத்திற்கும் பாதி மேற்குச் சமுத்திரத்திற்கும் போய், மாரிகாலத்திலுங் கோடைகாலத்திலுமிருக்கும். * எசேக்கி. ௪௭, ௧. அறிவி. ௨௨, ௧.

௯ * அப்போது கர்த்தர் பூமியின் மீதெல்லாம் இராசாவாயிருப்பார், அந்நாளிற் கர்த்தர் ஒருத்தராயிருப்பார், அவருடைய நாமமும் ஒன்றாயிருக்கும். * சங்கீ. ௯௩, ௧.

௰ தேசமெல்லாங் கேபாவைத் துவக்கி எருசலேமுக்குத் தெற்கேயிருக்கிற ரிம்மோன் மட்டும் ஒத்த தரையாகத் திருத்தப்படும் எருசலேமோவென்றால் உயர்ந்ததாகித் தன் தானத்திலே பென்யமீன் வாசலைத் துவக்கி முதல் வாசலென்றதல் மட்டுக்குங் கோடிவாசல் மட்டுக்கும், அனானியேல் கோபுரந் துவக்கி இராசாவின் ஆலைகள் மட்டுக்குங் குடியேற்றப்பட்டிருக்கும்.

௰௧ அதிலே குடியிருப்பார்கள், * இனிச் சங்கரிப்பில்லாமல் எருசலேஞ் சுகமாயத் தங்கியிருக்கும். * அறிவி. ௨௨, ௩.

அவர்களுடைய சத்துருக்களாகிய சாதிகளின் ஆக்கினையும், மீதியாயிருக்கும் புறச்சாதியாரின் குணப்படுதலுங் காணபிக்கப்பட்ட தீர்க்கதரிசனம்.

௰௨ எருசலேமுக்கு விரோதமாய் யுத்தம் பண்ணின எல்லாச் சனசதளங்களையுங் கர்த்தர் வாதிக்கும் வாதையாவது, அவனவன் சதையை வாடப்பண்ணுவார் தங்கள் கால்கள் மேல் அவர்கள் நிற்கக்கொள்ள அவர்கள் கண்கள் தங்கள் கண்மண்டைகளிலே வாடி,

அவர்கள் நாக்கு அவர்கள் வாயிலே அழுகிப்போகும்.

௰௩ அந்நாளிற் சம்பவிப்பதென்னவென்றால், கர்த்தராற் பெரிய கலக்கம் அவர்களுக்குள்ளிருக்கும். அவனவன் தனக்கடுத்தவனின் கையைப்பிடிப்பான், அவனவனுடைய கை அவனுக்கடுத்தவனுடைய கைக்கு விரோதமாக எழும்பும்.

௰௪ யூதாவும் எருசலேமுக்கெதிராய் யுத்தம்பண்ணும், அப்பொழுது சுற்றிலுமிருக்கிற சகலசாதிகளுடைய ஆஸ்தியாகிய பொன்னும் வெள்ளியும் வஸ்திரங்களும் மகா திரளாகக் கூட்டப்படும்.

௰௫ அந்தப் பாளையங்களிலிருக்குங் குதிரைகள் கோவேறு கழுதைகள் ஒட்டகங்கள் கழுதைகள் முதலான எல்லா மிருகஜீவன்களின் வாதையும் அந்த வாதையைப்போலிருக்கும்.

௰௬ சம்பவிப்பதென்னவென்றால், எருசலேமுக்கு விரோதமாக வந்திருந்த எல்லாச்சாதிகளிலும் மீதியானயாவரும், * சேனைகளின் கர்த்தராகிய இராசாவைப் பணிந்துகொள்ளும்படிக்கும், கூடாரங்களின் பண்டிகையையாசரிக்கும்படிக்கும், வருஷத்துக்கு வருஷம் வந்தேறுவார்கள்.

* ஏசா. ௬௬, ௨௩.

௰௭ அப்பொழுது சம்பவிப்பதென்னவென்றால், பூமியின் வம்சங்களில் எது சேனைகளின் கர்த்தராகிய இராசாவைப் பணிந்துகொள்ள எருசலேமுக்கு வராதிருக்குமோ அதின்மேல் மழை வருஷிப்பதில்லை.

௰௮ எகிப்தின் வம்சம் வந்தேறாமலும் வாராமலும்போனால், அவர்கள்மேலும் வருஷிக்காமற்போம், கூடாரங்களின் பண்டிகையையாசரிக்க வராதசாதிகளைக் கர்த்தர் வாதிக்கும் அந்த வாதையாயிருக்கும்.

௰௯ இது எகிப்தியருடைய பாவத்திற்கும் கூடாரங்களின் பண்டிகையையாசரிக்க வராதசகலசாதிகளுடைய பாவத்திற்கும் வரும் ஆக்கினை.

௨௰ அந்நாளிலே குதிரைகளின் சதங்கைகளிலே கர்த்தருக்குப் பரிசுத்தமென்ற விலாசமிருக்கும், கர்த்தருடைய வீட்டிலுள்ள பானைகள் பலிபீடத்திற்கு முன்பாக இருக்கிற கலங்களுக்கு அப்பொழுது சரியாயிருக்கும்.

௨௧ அப்பொழுது எருசலேமிலும் யூதாவிலுமுள்ள எல்லாப்பானைகளும் சேனைகளின் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும், பலியிடுகிற யாவரும் வந்து அவைகளில் எவைகளையாகிலும் வாங்கி அவைகளிற் சமைப்பார்கள், அந்நாள்முதற்கொண்டு சேனைகளுடைய கர்த்தரின் வீட்டிலொரு கானானியனுமிருப்பதில்லை.

சகரியாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

# மலகியாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

[பராபரன் இஸ்ரவேலைச் சிநேகித்துவந்த வொன்பது.]

மல்கியாவைக்கொண்டு கர்த்தர் இஸ்ரவேலுடனே சொன்ன வார்த்தையின் சுமை.

௨ உங்களைச் சிநேகித்தேனென்று கர்த்தர் சொல்லுகிறார், ஆனால் நீங்கள், எங்களை எதிலே சிநேகித்தீர் என்கிறீர்கள். கர்த்தர் சொல்லுகிறதாவது, ஏசா யாக்கோபுக்குச் சகோதரனல்லவோ? ஆகிலும் யாக்கோபை நான் சிநேகித்தேன்.

௩ ஏசாவையோ நான் பகைத்து, * அவனுடைய பருவதங்களைப் பாழும் அவனுடைய சுதந்தரத்தை வனாந்தரத்திலுள்ள வலுசர்ப்பங்களின் தாவுமாக்கினேன்.

* ஏசா. ௩௪, ௫. ஙூ எசேக். ௨௫, ௰௨—௰௪.

௪ எளிமைப்பட்டோம், ஆனாற் பாழாய்ப்போனவைகளைத் திரும்பக் கட்டுவோமென்று ஏசாவு சொன்னால், கர்த்தர் சொல்லுகிறதென்னவென்றால், அவர்கள் கட்டுவார்கள் நாமோ இடிப்போம், அவர்களைத் துன்மார்க்கத்தின் எல்லையென்றும் கர்த்தர் என்றைக்குஞ் சினம்வைக்கிற சனமென்றும் அழைப்பார்களென்கிறார்.

௫ * இதை உங்கள் கண்கள் காணும், அப்பொழுது நீங்கள், கர்த்தர் இஸ்ரவேலுடைய எல்லைக்கப்பாலே மகிமைப்படுவாரென்பீர்கள்.

* சஙெ. ௫௨, ௮.

### ஆசாரியர்களைக் கடிந்துகொண்டது.

௬ குமாரன் பிதாவையும், ஊழியக்காரன் தன் ஆண்டவனையுங் கனம்பண்ணவேண்டுமே, இப்போது நாம் பிதாவானால் நமது கனமெங்கே? நாம் ஆண்டவரானால் நமக்குப் பயப்படும் பயமெங்கேயென்று சேனைகளுடைய கர்த்தர் தமது நாமத்தை அசட்டைபண்ணுகிற ஆசாரியர்களாகிய உங்களை

கேட்கிறீர், அதற்கு நீங்கள், எதிலே உம்முடைய நாமத்தை யசட்டைப்பண்ணினோமென்கிறீர்கள்.

எ நம்முடைய பீடத்தின்மேல் அசுத்தமான அப்பத்தைப் படைக்கிறதிலேதானே அதுவுமல்லாமல் யெதிலே யசுத்தப்படுத்தினோமென்கிறீர்கள், கர்த்தருடைய பந்தி யெண்ணப்படாமற்போயிற்றென்று நீங்கள் சொல்லுகிறதிலேதானே.

அ நீங்கள் * கண் ஊனமானதைப்பலியிடக்கொண்டுவந்தாலும் பொல்லாப்பல்ல, நீங்கள் கால் ஊனமானதையும் நசற்பிடித்ததையுங் கொண்டுவந்தாலும் பொல்லாப்பல்ல, அதை நீயுன் அதிபதிக்குச் செலுத்தேன், அவன் உன்மேலே பிரியமாயிருப்பானோ? அல்லவென்று உன்முகமாட்டத்தைப் பார்ப்பானோவென்று சேனைகளின் கர்த்தர் கேட்கிறார். * ௫. மோசே. ௨௨, ௰௭-௨௫.

கூ இப்போதும் பராபரனுடைய சமுகத்தை நோக்கிக் கெஞ்சுங்களேன், அப்போது நம்முடையமேல் இரங்குவார். இது உங்களாலேயுண்டான காரியம் உங்கள் முகமாட்டத்தைப் பார்ப்பாரோவென்று சேனைகளின் கர்த்தர் கேட்கிறார்.

௰ உங்களில் ஆராகிலுங் கதவுகளைப் பூட்டுவதாரிலே! இப்படி விருதாவாய நம்முடைய பலிபீடத்தில் அக்கினியைக் கொளுத்தீர்களாக, உங்கள் பேரிலே நமக்குப் பிரியமில்லையென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், உங்கள் கைகளிலுள்ள காணிக்கை நமக்குப் பொருந்தினதல்ல.

௰௧ ஏனென்றால் சூரியனுதிக்கிறதிசை துவக்கி, அது அஸ்தமிக்கிறதிசைமட்டும், நமது நாமம் சாதிகளுக்குள்ளே பெரிதாயிருக்கும், எல்லாஸ்தலத்திலும் நமது நாமத்திற்குத் தூபமும் சுத்தமான காணிக்கையுஞ் செலுத்தப்படும், ஏனென்றால் நமது நாமஞ் சாதிகளுக்குள்ளே பெரிதாயிருக்குமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௰௨ நீங்களோவென்றால் கர்த்தருடைய பந்தி அசுத்தமானதென்றும், அதின் ஆகாரமாகிய அதின் வரத்து எண்ணம் அற்றுப்போனதென்றுஞ் சொல்லுகிறதினாலேயதைப் பரிசுத்தக்குலைச்சலாக்குகிறீர்கள்.

௰௩ இதோ, எத்தனை வருத்தமென்றும் நீங்கள் சொல்லி, அதைத் திரணமாயப்பேசிப் பரிக்கப்பட்டதையுங் கால் ஊனமாயிருக்கிறதையும் நசற்கொண்டதையுங் கொண்டுவந்து காணிக்கையாகச் செலுத்தினீர்களென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார், அதையுங்களுடைய கைகளில் அங்கிகரித்துக் கொள்ளுவோமோவென்று கர்த்தர் கேட்கிறார்.

௰௪ ஆணுலதனம் மந்தையிலதனக்கு ஆணிருக்கக்கொள்ள, கெட்டுப்போனதையாண்டவருக்கு நேர்ந்துகொண்டு பலியிடுகிற கபடஸ்தன் சபிக்கப்பட்டவன், ஏனென்றால் நாம் பெரிய இராசாவென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், நமது நாமஞ் சாதிகளுக்குள்ளே பயங்கரமாயிருக்கும்.

# உ. அதிகாரம்.

[ஆசாரியர்களின் பாவங்களையுஞ் சனத்தின் பாவங்களையுங் கடிந்துகொண்டது.]

இப்போதும் ஆசாரியர்களே, இந்தக் கற்பனையுங்களுக்குச் செல்லும்.

உ நீங்கள் கேளாமலும் நமது நாமத்திற்கு மகிமையைச் செலுத்தும்படிக்கு இதை மனதிலேவைக்காமலும் போனால், நாம் உங்களுக்குள்ளே சாபத்தையனுப்பி, உங்கள் ஆசீர்வாதங்களைச் சபிப்போமென்று, சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், ஆம், நீங்களிதை மனதிலேவைக்காமற்போனால், அவைகளைச் சபிப்போம்.

௩ இதோ, நாம் உங்களுக்கிருக்கும் பயிரைக் கெடுத்துச் சாணியையுங்கள் முகங்களிலிறைப்போம் * உங்கள் பண்டிகைகளின் சாணியைத்தானே, அது உங்களைத் தன்னோடே கூடத்தள்ளுண்டியாக்கும்.

* ஆமோ. ௫, ௨௧.

௪ லேவியோடே பண்ணின நம்முடைய உடன்படிக்கையிருக்கும்படிக்கு இந்தக் கற்பனையையுங்களண்டைக்கு அனுப்பினோமென்றதை அப்போது அறிந்துகொள்ளுவீர்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௫ அவனோடிருந்த நம்முடைய உடன்படிக்கை சீவனும் சமாதானமுமாகவிருந்தது, அவன் நமக்குப் பயப்படும் பயத்தோடேயிருக்கவேண்டுமென்று இவைகளையவனுக்குக் கட்டளையிட்டோம், அப்படியே யவன் நமது நாமத்திற்குத் திகிலடைந்திருந்தான்.

௬ சத்தியவேதம் அவன் வாயிலிருந்தது அவனுடைய உதடுகளில் நியாயக்கேடு காணப்பட்டதில்லை, அவன் நம்மோடே சமாதானமுஞ் செம்மைமார்க்கமுமாய்ச் சஞ்சரித்து, அநேகரை யக்கிரமத்தைவிட்டுத் திருமபப்பண்ணினான்.

எ ஏனென்றால் ஆசாரியனின் உதடுகள் * அறிவைக்காக்கவேண்டும், வேதத்தையவன் வாயிலே தேடுவார்களே, ஏனென்றால் அவன் சேனைகளுடைய கர்த்தரின் தூதன்.

* நித்து. ௧, ௬. ஆகா. ௧, ௰௩. கலா. ௪, ௰௪.

அ நீங்களோவென்றால் வழியைவிட்டு விலகி, அநேகரை வேதத்தில் இடறப்பண்ணினீர்கள், லேவியின் உடன்படிக்கையைக் கெடுத்துப்போட்டீர்களென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௯ ஆனதுகொண்டு நீஙகளநமமுடைய வழிகளைக்கைக்கொள்ளாமலவேதத்திலேமுகமபார்க்கிறபடியினாலே நாமுமஉஙகளையெல்லாச்சனத்திறகும எண்ணமற்றவர்களுநதாழநதவர்களுமாககினேம.

௰ * நமக்கெல்லாம ஒரே பிதாவிலலையோ? ஒரேபராபரன நமமைசசிருஷடிததிலலையோ நாமநமமுடையபிதாக்களின உடனபடிக்கையைபபரிசுததககுலைசசலாக்க அவனவன தனசகோதரனைத துரோகமபணணுவானேன்? * யாக. உ, ௧.

௰௧ யூதசனநதுரோகமபணணிறறு, இஸரவேலிலும எருசலேமிலும அருவருபபானகாரியஞ் செயயபபடடது, அதனென்ற கர்ததர்சிநேகிக்கிற பரிசுததததை யூதசனங்குலைநதது, அநநியதேவனின குமாரததிகளை விவாகமபணணினார்கள.

௰௨ இபபடிசசெயகிறவனையுங காவறகாககிறவனையும உததரவுகொடுக்கிறவனையும சேனைகளுடையகர்ததருககுக காணிககைசெலுததுகிறவனையும யாககோபின கூடாரஙகளிலஇராதபடிககுக கர்ததர்சஙகரிபபார்.

௰௩ அகதோடேநீஙகள இரணடாவது செயகிறதேதெனில, நீஙகள கர்ததருடையபீடததைககணணீரினாலும அழுகையினாலுமபெருமூசசினாலும மூடபபணணுகிறீர்கள. ஆகையால அவர் இனிககாணிககையைபபார்ககவுமஅதையுஙகளகைகளிறபிரியமாயஏறறுககொளளவுஙகூடாது.

௰௪ ஏனென்றுகேட்கிறீர்கள, கர்ததர் உனககும உன இளவயதினபெணசாதிககுஞ சாட்சியாயிருககிறபடியினாலும உனதோழியும உன உடனபடிககையின பெணசாதியுமாகிய இவளை நீ துரோகமபணணினபடியினாலுநதானே,

௰௫ * ஒருததனாயிருநதவன அபபடிச செயததிலலை, ஆவி அவனுககுபபரிபூரணமாயிருநதது, ஒருததனாயிருநத அவன என்னசெயதான? பராபரனசொனன விததைததேடினான, ஆகையால ஒருததனுந தன இளவயதுபெணசாதியைத் துரோகமபணணாதபடிககு, உஙகள ஆவிககு எசசரிககையாயிருஙகள. * ஏசாயா ௫௧, உ.

௰௬ ஏனென்றால தளளிவிடுதலைததாம பகைககிறவனென்று இஸரவேலினபராபரனாகியகர்ததர்சொலலுகிறார், அபபடிககொததவன தனவஸதிரததினமேறகொடுமையையுடுததிககொளளுகிறானென்று சேனைகளுடையகர்ததர்சொலலுகிறார், ஆகையால நீஙகள துரோகமபணணாமல, உஙகள ஆவிககு எசசரிககையாயிருஙகள.

௰௭ உஙகளபேசசுகளினாலே கர்ததருககுவருததமாயிருககிறீர்கள எதினாலேயவருககு வருததமாயிருககிறோமென்கிறீர்கள, பொலலாபபுசசெயகிறவனெலலாஙகர்ததரினபார்வைககுநலலவன இபபடிககொததவர்களபேரிலேயவர் பிரியமவைககிறாரென்றுமநியாயநதீர்ககிறபராபரன எஙகேயென்றும நீஙகளசொலலுகிறதினாலேதானே. * ௩, ௰௩—௰௫.

## ௩. அதிகாரம்.

[யோவானஸநாநகனையுஙகிறிஸதுவையுங குறிததுசசொனனதீர்ககதரிசனம.]

இதோ, நாமநமமுடையதூதனையனுபபுகிறோம அவன நமககுமுனபாகவழியை யாயததமபணணுவான, அபபோது நீஙகள தேடுகிறஆணடவரும நீஙகளஇசசிககிற உடனபடிககையின தூதருமானவர் திவிரமாயததமமுடைய தேவாலயததிறகு வருவார், இதோ, வருகிறாரென்று சேனைகளுடையகர்ததர்சொலலுகிறார். * மததே. ௰௧, ௰. மாற. ௧, உ. லூக. ௭, உ௭.

உ ஆனால அவர்வருகையின நாளைததாஙகுபவனார்? அவர்காணபபடுகையில நிறபவனார்? ஏனெனில அவர்புடமிடுகிறவனுடைய அககினியைபபோலேயும வணணானுடைய சவுககாரததைபபோலேயுமிருபபார்.

௩ * அவர்உருககார்நது வெளளியைபபுடமிட்டுசசுததிகரிததுககொணடிருபபார், அவர்லேவியினபுததிரரைச சுததிகரிதது, அவர்கள கர்ததருடையவர்களாயிருநது, அவர்கள கர்ததருககு நீதியாயக காணிககையைச செலுததுமபடிககும, அவர்களைப பொனனைபபோலேயும வெளளியைபபோலேயும உருககுவார். * மததே. உ௬, ௫.

௪ அபபோதுபூர்வநாட்களைபபோலேயும, பூர்வ வருஷஙகளைபபோலேயும, யூதாவின காணிககையும எருசலேமின காணிககையும கர்ததருககினபமாயிருககும.

௫ நாம உஙகளணடைககு நியாயததீர்பபுககென்றுசேர்நதுவநது, சூனியககாரருககுமவிபசாரருககும, பொயயாணையிடுகிறவர்களுககும, விதவைகளுநதிககறறவர்களுமானகூலிககாரரின கூலியைததிருபபபபணணுகிறவர்களுககும, நமககுபபயபபடாமல பரதேசிககு அநியாயஞசெயகிறவர்களுககும விரோதமாகத திவிரமானசாட்சியாயிருபபோமென்றுசேனைகளுடையகர்ததர் சொலலுகிறார்.

௬ கர்ததராகியநாம மாறாதிருககிறபடியினாலே யாககோபினபுததிரராகியநீஙகள நிர்மூலமானதிலலை,

யூதருடையசிலபாவஙகள கணடிககபபடடது.

௭ நீஙகளஉஙகளபிதாககளின நாட்கள்முதலாகத்துவககிநமதுகட்டளைகளைககைககொ

வெளிபபடுததினதற்காகபபிதாவைபபுகழநதது. (௨௮) தஙகள பாவஙகளினாலவருநதுகிறவர்களைததமமிடததிலே வரவழைத்தது.]

இயேசுவானவர் தமது பனனிரணடுசீஷருககுங கடடளைகொடுதது முடிததபினபு அவர்களுடைய படடினஙகளில உபதேசமபணணிபபிரசஙகிககுமபடிககு அவவிடமவிடடுப புறபபடடார்.

௨ அத்தருணததிலே காவலிலிருநதயோவான கிறிஸ்துவின கிரியைகளைக் கேள்விபபடடுததன சீஷரில இரணடுபேரை அழைததது,

௩ நீஙகள போய அவரைநோககி, வருகிறவர் நீர்தாமோ அலலது வேறொருவர் வரககாததிருககவேணடுமோவென்று கேளுஙகளென்றுசொனனான.

௪ அவர்கள அபபடியேவநது கேடடபொழுது இயேசுவானவர் அவர்களுககு மாறுததரமாகசசொனனதாவது, நீங்கள கேடடுங்கணடுமிருககிறவைகளை யோவானுககுபபோய அறிவியுஙகள.

௫ எனனவெனில, எனனாலே குருடர்பார்வை அடைகிறார்கள. சபபாணிகள நடககிறார்கள, குஷ்டரோகிகள சுததம அடைகிறார்கள, செவிடர்கேட்கிறார்கள, மரிததோர் எழுந்திருககிறார்கள, எளியவர்களுககுச சுவிசேஷம பிரசஙகிக்கபபடுகிறது.

௬ அலலாமலும எனனைககுறிதது இலசசை அடையாதிருககிறவன பாககியவானென்றுசொலலி அவர்களை அனுபபினார்.

௭ அவர்கள்போனபினபு இயேசுவானவர் சனஙகளைநோககி, யோவானைககுறிதது சசொனனதாவது? நீங்களவனாநதரததிலே எதைபபார்ககபபுறபபடடீர்கள, காறறிலே அடிததசைககபபடுகிற நாணலையோ

அலலது எதைபபார்ககபபுறபபடடீர்கள.

௮ மெலலிய வஸதிரஙகளைததரிததிருககிற மனிதனையோ மெலலிய வஸதிரஙகளையுடுததிருககிறவர்கள அரசர் மாளிகைகளிலிருககிறார்கள.

௯ அலலது எதைபபார்ககபபுறபபடடீர்கள. தீர்ககதரிசியையோ ஆம தீர்ககதரிசியிலும அதிகமேனமையுளளவனையே எனறு உஙகளுககுசசொலலுகிறேன.

௰ அதெபபடியெனில இதோநான எனனுடைய தூதனை உமககுமுனபாக அனுபபுகிறேன, அவன உமககுமுனனே உமமுடைய மார்ககததைசசெமமைபபணணுவானென்று எருவனைககுறிததெழுதியிருககினறதே அவனவனதான.

௰௧ அலலாமலும ஸதிரிகளிடததிற்பிறநதவர்களில யோவானஸநானனிலுமபெரியவனொருவனும எழுமபவிலலையென்று மெயயாய உஙகளுககுசசொலலுகிறேன. ஆகிலும பரலோக இராசசியததிலே சிறியவனானவன அவனிலுமபெரியவனாயிருககிறான.

௰௨ அலலாமலும யோவானஸநானன் தோனறினகாலமமுதற்கொணடு இதுவரைககும பரலோக இராசசியம பலாதகாரபபடுகினறது. பலபநதமபணணுகிறவர்கள அதைபபிடிததுககொளளுகிறார்கள.

௰௩ நியாயபபிரமாணமுநதீர்ககதரிசிகள யாவரும அதையோவானவரைககுநதீர்ககதரிசனமாய அறிவிததார்கள.

௰௪ நீஙகள ஏறறுககொளளமனதிருநதால, வருகிறவனாகிய எலியா இவனதான.

௰௫ கேட்கிறதற்குககாதுளளவன கேட்ககடவன.

௰௬ இநதசசநததியை ஆருககுநிகர் சொலலுவேன. சநதைகளில உடகார்நது தஙகள தோழரைநோககி, உஙகளுககாக ஊதினோம,

௰௭ நீஙகள கூததாடவிலலை. உஙகளுககாகபபுலமபினோம, நீஙகள மார்பிலடிககவிலலையெனறு சொலலிககூபபிடுகிற பிளளைகளுககு ஒபபாயிருககிறார்கள.

௰௮ எபபடியெனறால, யோவான வநது போசனபானமபணணாமலிருநதான. பசாசைககொணடிருககிறானெனகிறார்கள.

௰௯ மனிதனுடையகுமாரனவநதுபோசனபானமபணணுகிறான. இதோ பெருநதீனிககாரனெனறும குடிககிறவனெனறும ஆயககாரருககும பாவிகளுககுஞசிநேகிதனெனறுஞசொலலுகிறார்கள. ஆனாலுமஞானமானதுதனபிளளைகளாலேநீதியாய எணணபபடுமெனறார்.

௨௰ அபபொழுது அவர் தமது பலததசெயலகைகளில அநேகஙகளைககணட படடினததார்மனநதிருமபாமலிருநதபடியினாலே அவர்களைககடிநதுகொளளததொடஙகிச்சொனனதாவது,

௨௧ ஐயோ, கோராசின படடினததாரே உஙகளுககுவேதனைவரும. ஐயோ, பெதசாயிதாபபடடினததாரே உஙகளுககும வேதனைவரும. உஙகளுககுளளே நடநத பலததசெய்கைகள தீருசீதோன படடினததாருககுளளே நடநதிருநதால அவர்கள சீககிரமாய் இரடடையுடுததிசசாமபலில் உடகார்நது மனநதிருமபியிருபபார்கள.

௨௨ ஆதலால நியாயத்தீர்பபுநாளிலே அவர்களைபபார்ககிலுமநீஙகளே அதிகதண்டிபபை அடைவீர்களெனறு உஙகளுககுச சொலலுகிறேன.

௨௩ வானபரியநதமுயர்நதகப்பர்நாகூமபடடினத்தாரே ஐயோ பாதாளபரியந்தநதாழ்த்தப்படுவீர்கள. உஙகளுககுளளே நடநதபலததசெயகைகளசோதோமபட்டினத்தாருககுளளே நடநதிருநதாலஅவர்களுடையபடடினம இந்நாளவரைககுமிருககுமே.

உச ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே அவர்களுக்கு நடக்குந்தண்டிப்பு எளிதாயிருக்கும். நீங்களோ அத்தண்டிப்பை அடைவீர்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

உரு அக்காலத்திலே இயேசுவானவர் சொன்னதாவது, பிதாவே, வானத்தையும் பூமியையும் ஆளுகிறவரே, நீர் இவைகளை (மேலாக)ஞானிகளுக்குங் கல்விமான்களுக்கும் மறைத்துக்குழந்தைகளுக்குவெளிப்படுத்தினபடியினாலே உம்மைத்துதிக்கிறேன்.

உசா ஆம், பிதாவே, அப்படியே உமக்குப் பிரியமாயிருந்ததென்றார்.

உஎ அல்லாமலுஞ் சகலமும் என்பிதாவினாலே எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றது. பிதாதவிர மற்றொருவனுங் குமாரனையறியான். குமாரன்தவிர மற்றொருவனும் பிதாவையறியான். மேலும் எவனுக்குக் குமாரன் அவரைவெளிப்படுத்தச்சித்தமாயிருக்கிறாரோ அவனும் பிதாவையறிவான்.

உஅ வருத்தப்பட்டுப் பாரஞ்சுமந்துகொள்ளுகிறவர்களாகிய நீங்களெல்லாரும் என்னிடத்தில்வாருங்கள். நான் உங்களுக்கு ஆறுதல்செய்வேன்.

உகூ நானொருத்தாயம் மனத்தாழ்மையாயிருக்கிறபடியினாலும் நானவைக்கிற நுகத்தடி மெதுவாயும் நான் ஏற்றுக்கிற சுமை இலேசாயுமிருக்கிறபடியினாலும்,

ஙo) நீங்கள் என்னுடைய நுகத்தடியை யேற்றுக்கொண்டு என்னிடத்திற் கற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் ஆத்துமாக்களுக்கு ஆறுதல் கிடைக்குமென்றார்.

## யஉ. அதிகாரம்.

[(க) ஓய்வு நாளைக்குறித்துப் பரிசேயருக்குப்புத்திசொன்னது. (யங) அற்புதஞ்செய்தது. (உஉ) பசாசுபிடித்த குருடும் ஊமையுமுள்ளவனைக் குணமாக்கினது. (ஙஉ) தேவ ஆவிக்கு விரோதமான தூஷணம் மன்னிக்கப்படாதென்பது. (ஙசா) வீணானவார்த்தைகளுக்குக்கணக்குக்கொடுக்கவேண்டியது (ஙஅ) அடையாளத்தைத் தேடினவர்களைக் கடிந்துகொண்டது. (சகூ) அவருடைய தாய் சகோதரன் முதலானவர்கள் இன்னாரென்றுகாண்பித்தது.]

அக்காலத்திலே ஓய்வுநாளிலே இயேசுவானவர் பயிர்வழியேபோனார். அப்பொழுது அவருடைய சீஷர் பசியாயிருந்தபடியினாலே கதிர்களைக்கொய்துசாப்பிடத்தொடங்கினார்கள்.

உ அதைக்கண்ட பரிசேயர் அவரை நோக்கி, இதோ ஓய்வுநாளிற்செய்யத்தகாததைச உமது சீஷர்கள் செய்கிறார்களே என்றார்கள்.

ங அவர்களுக்கு அவர்சொன்னதாவது, தாவீதும் அவனோடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது,

ச அவன் தேவாலயத்திற்பிரவேசித்து, ஆசாரியரேயன்றி, தானுந் தன்னோடிருந்தவர்களுஞ் சாப்பிடத்தகாத தேவசமுகத்தப்பங்களைச்சாப்பிட்டானென்று நீங்கள் வாசிக்கவில்லையா.

ரு அல்லது ஆசாரியரானவர்கள் தேவாலயத்திலே ஓய்வுநாட்களிலே ஓய்வுநியாயம் வேலைசெய்துங் குற்றமில்லாதிருக்கிறார்களென்று நீங்கள் வேதத்திலே வாசிக்கவில்லையா.

சா தேவாலயத்திலும்பெரியவர் இங்கேயிருக்கிறாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

எ மேலும்பலியிலும் இரக்கத்தையே விரும்புகிறேனென்கிற (வாக்கியத்தின் கருத்தை) நீங்கள் அறிந்திருந்தீர்களானால் குற்றமில்லாதவர்களை நீங்கள் குற்றப்படுத்தமாட்டீர்கள்.

அ அல்லாமலும் மனுஷனுடைய குமாரனானவர் ஓய்வுநாளைக்குமுந்தக்கர்த்தராயிருக்கிறாரென்றார்.

கூ பின்பு அவர் அவ்விடம்விட்டுப்போய் அவர்களுடைய செப ஆலயத்திற்பிரவேசித்தார்.

ய அங்கே சூம்பினகையையுடைய மனுஷனொருவன் இருந்தான். அப்பொழுது அவர்கள் அவர்மேற் குற்றஞ்சாற்றும்படிக்கு அவரைநோக்கி, ஓய்வுநாளிற்சொஸ்தமாக்குகிறது நியாயமாவென்று கேட்டார்கள்.

யக அவர்சொன்னது, உங்களில் எவனுக்காவது ஒரு ஆடு ஓய்வுநாளிலே குழியிலே விழுந்தால் அதைப் பிடித்துத்தூக்கிவிடானல்லவா.

யஉ ஆட்டிலும் மனுஷனானவன் மிகவும் மேன்மையாயிருக்கிறான். ஆதலால் ஓய்வுநாளிலே நன்மைசெய்கிறது நியாயந்தானென்றுசொல்லிப்பின்பு அந்த மனுஷனை நோக்கி,

யங உன்கையை நீட்டென்றார், அவன் அதை நீட்டினான். உடனே அது மற்றக்கையைப்போலச்சுகமாயிற்று.

யச அப்பொழுது பரிசேயர் புறப்பட்டுப்போய் அவரைச்சங்கரிக்கும்படிக்கு யோசனைபண்ணிக்கொண்டார்கள்.

யரு அதை இயேசுவானவர் அறிந்து அவ்விடம்விட்டுப்போனார். அப்பொழுது திரட்கூட்டங்கள் அவர்பின்னேசென்றார்கள்.

யசா எல்லாரையும் அவர் குணமாக்கிப் பின்புதம்மைப்பிரசித்தம்பண்ணாதபடிக்கு அவர்களுக்குக்கட்டளையிட்டார்.

௰௭ அதினாலே இதோ, நான்தெரிந்துகொண்ட ஊழியக்காரன். எனக்கு அன்பானவர். என் ஆத்துமாவுக்குப்பிரியமானவர். இவரிடத்திலே என்னுடைய ஆவியிருக்கச்செய்வேன். இவர் நியாயமானதை உலகத்தாருக்கு அறிவிப்பார்.

௰௮ சண்டைபண்ணாமலுங் கூக்குரல்பண்ணாமலுமிருப்பார். இவருடைய சத்தம் வீதிகளில் ஒருவராலுங்கேட்கப்படுவதில்லை.

௰௯ நியாயமானது ஜெயமாயிருக்கும்படிசெய்கிறவரைக்கும் இவர் நெரிந்திருக்கிற நாணலை முறியாமலும் மங்கியெரிகிற திரியை அணையாமலுமிருப்பார்.

௨௰ இவருடைய நாமத்தின்மேலே புறதேசத்தார் நம்பிக்கையாயிருப்பார்களென்று,

௨௧ ஏசாயாதீர்க்கதரிசி உரைத்தவசனம் நிறைவேறிற்று.

௨௨ அப்பொழுது பசாசுபிடித்த குருடும் ஊமையுமான ஒருவன் அவரிடத்திற் கொண்டுவரப்பட்டான். குருடும் ஊமையுமானவன் பேசவுங்காணவுந்தக்கதாக அவனைக்குணமாக்கினார்.

௨௩ சனங்களெல்லாரும்பிரமித்து, இவர் தாவீதின்குமாரனல்லவாவென்றார்கள்.

௨௪ பரிசேயர் அதைக்கேட்டு, இவன் பசாசுகளுடைய தலைவனாகிய பெயேல்செபூலினாலே பசாசுகளைத்துரத்துகிறானேயன்றி மற்றப்படியல்லவென்றார்கள்.

௨௫ இயேசுவானவர் அவர்களுடைய சிந்தனைகளை அறிந்து அவர்களைநோக்கி, ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளேதானே பிரிவினைபண்ணினால் அழிந்துபோவார்கள். அல்லாமலும் ஒருபட்டினத்தாராகிலுங் குடும்பத்தாராகிலுந் தங்களுக்குள்ளே பிரிவினைபண்ணினால்,

௨௬ நிலைநிற்கமாட்டார்கள். அப்படியே சாத்தான் மற்றொருசாத்தானைத் துரத்தினால் அவர்களுக்குள்ளேதானே பிரிவினையுண்டாகுமே. அப்படியானால் அவனுடைய இராச்சியம் எப்படிநிலைநிற்குமே!

௨௭ அல்லாமலும் நான் பெயேல்செபூலினாலே பசாசுகளைத்துரத்துகிறவனென்றால் உங்கள்பிள்ளைகள் அவைகளை ஆராலே துரத்துகிறார்கள். ஆகையால் அவர்களே உங்களுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுப்பார்கள்.

௨௮ நான்பராபரனுடைய ஆவியாலே பசாசுகளைத் துரத்துகிறபடியாற் பராபரனுடைய ஆளுகையே உங்களிடத்தில் வந்திருக்கின்றது.

௨௯ அல்லது முன்பு பலவானைக்கட்டாவிட்டால் அவனுடைய வாசஸ்தலத்திலே ஒருவன் எப்படிப்பிரவேசித்து அவனுடைய உடைமைகளைக்கொள்ளையிடுவான். (பலவானைக்கட்டினபின்பல்லவா) அவனுடைய வாசஸ்தலத்தைக்கொள்ளையிடுவான்.

௩௰ என்பங்கிலிராதவன் எனக்குவிரோதமாயிருக்கிறான். என்னுடனேகூடச்சேர்த்துக்கொள்ளாதவன் சிதற அடிக்கிறான்.

௩௧ ஆதலால் நான் உங்களுக்குச்சொல்லுகிறதாவது, எந்தப்பாவமுந்தூஷணமும் மனிதர்களுக்கு மன்னிக்கப்படும். தேவ ஆவியை (நிந்திக்குந்) தூஷணமாத்திரம் மனிதருக்கு மன்னிக்கப்படுவதில்லை.

௩௨ எவனாகிலும் மனிதனுடையகுமாரனுக்குவிரோதமாய்ப்பேசினால் அது அவனுக்கு மன்னிக்கப்படும். எவனாகிலும் பரிசுத்த தேவ ஆவிக்கு விரோதமாய்ப்பேசினால் அது அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் மன்னிக்கப்படுவதில்லை.

௩௩ மேலும் ஒரு மரத்தின்தன்மையை அதின்கனிகளாலே அறியலாம். ஆகையால் நீங்கள் ஒருமரத்தை நல்லமரமென்றெண்ணினால் அதின்கனியையும் நல்லதென்றெண்ணுங்கள். அல்லது நீங்கள் ஒருமரத்தைக் கெட்டமரமென்றெண்ணினால், அதின் கனியையுங்கெட்டதென்றெண்ணுங்கள்.

௩௪ இருதயத்தின் நிறைவினாலே வாய் பேசும். ஆதலால்விரியன்குட்டிகளே, நீங்கள் பொல்லாதவர்களாயிருக்க நன்மையானவைகளை எப்படிப்பேசுவீர்கள்.

௩௫ நல்லமனிதனானவன் தன் இருதயத்திலுள்ள நல்லபொக்கிஷத்தில் நல்லவைகளையெடுத்துக்காண்பிக்கிறான். பொல்லாத மனிதன் தன் பொல்லாத பொக்கிஷத்திற் பொல்லாதவைகளையெடுத்துக் காண்பிக்கிறான்.

௩௬ மனிதர்கள்பேசும் வீணான வார்த்தைகள் யாவையுங்குறித்து நியாயத்தீர்ப்புநாளிலே உத்தரவு கொடுப்பார்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

௩௭ எப்படியும் உன் வார்த்தைகளினாலே நீதிமானென்றும் உன்வார்த்தைகளினாலே குற்றவாளியென்றுந்தீர்க்கப்படுவாய்.

௩௮ அப்பொழுதுவேதபாரகரிலும்பரிசேயரிலுஞ்சிலர் அவரைநோக்கி, போதகரே, உம்மாலே ஒரு அடையாளத்தைக் காணவிரும்புகிறோமென்றார்கள்.

௩௯ அதற்கு அவர்சொன்னது, சோரமார்க்கமாய்ப்போகிறபொல்லாத சந்ததி(யாகிய இவர்கள்) ஒரு அடையாளத்தைக் கேட்கிறார்கள். யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றிவேறு அடையாளம் இவர்களுக்குக்கொடுக்கப்படுவதில்லை.

௪௰ என்னவென்றால், யோனாவென்பவன் இரவும்பகலும் மூன்றுநாள் ஒரு பெரிய மீனுடைய வயிற்றிலிருந்ததுபோல மனிதனுடைய குமாரனும் இரவும் பகலும் மூன்றுநாட்பூமியின் இருதயத்திலே யிருப்பானென்பதே.

௧௩ அவர்கள் கண்டுங் காணாமலும் கேட்டுங் கேளாமலும் சிந்தித்துக் கொள்ளாமலுமிருக்கிறபடியினாலே நான் உவமைகளால் அவர்களுடனே பேசுகிறேன்.

௧௪ இந்தச் சனங்கள் கண்களினாலே காணாமலும் காதுகளினாலே கேளாமலும் இருதயத்தினாலே சிந்தித்துக் கொள்ளாமலும் திரும்பாமலும் என்னாலே ஆரோக்கியமடையாமலுமிருக்கும்படிக்கு அவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயமுடையவர்களாய் வருத்தத்தோடே கேட்கிற காதுள்ளவர்களுமாய் மூடிக்கொண்டிருக்கிற கண்களையுடையவர்களுமாயிருக்கிறபடியினாலே,

௧௫ நீங்கள் உற்றுக்கேட்டாலும் சிந்தித்துக் கொள்ளாமலிருப்பீர்கள். உற்றுப்பார்த்தாலும் அறியாமலிருப்பீர்களென்று ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம் அவர்களிடத்தில் நிறைவேறிவருகின்றது.

௧௬ உங்கள் கண்கள் காணுகிறபடியினாலும் உங்கள் காதுகள் கேட்கிறபடியினாலும் பாக்கியமுள்ளவைகள்.

௧௭ அநேக தீர்க்கதரிசிகளும் நீதிமான்களும் நீங்கள் காணுகிறவைகளைக் காணவும் நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரும்பியுங் காணாமலுங் கேளாமலும் போனார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௧௮ ஆகையால் விதைக்கிறவனுடைய உவமையைக் கேளுங்கள்.

௧௯ ஒருவன் பரலோக இராச்சியத்தைக் குறித்த வசனத்தைக் கேட்டும் அதைச் சிந்தித்துக் கொள்ளாமலிருக்கிறபொழுது பொல்லாங்கன் வந்து, அவனுடைய இருதயத்தின்மேல் விதைக்கப்பட்டதைப் பறிக்கிறான். அவனே விதை விழுந்த வழிக்கொப்பானவன்.

௨௦ விதை விழுந்த கற்பாறைக்கொப்பானவன் அந்த வசனத்தைக் கேட்டு உடனே அதைச் சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டு,

௨௧ பின்பு அது தனக்குள்ளே வேர்ப்பற்றிராமற் கொஞ்சக்காலம் மாத்திரம் அதைப் பற்றிக்கொள்ளுவான். அந்த வசனத்தினிமித்தம் உபத்திரவமுந் துன்பப்படுத்தலுமுண்டாகிறபொழுது உடனே அவன் தவறுவானென்பதே.

௨௨ விதை விழுந்த முள்ளுள்ள இடத்துக்கொப்பானவன் அந்த வசனத்தைக் கேட்கிறபொழுது லவுகீகக்கவலைகளும் ஐசுவரியத்தின் வஞ்சனையும் அவ்வசனத்தை நெருக்கிப்போடுவதால் கனியற்றவனாவானென்பதே.

௨௩ விதை விழுந்த நல்ல நிலத்துக்கொப்பானவன் அந்த வசனத்தைக் கேட்டுச் சிந்தித்தும் அதின்படி செய்தும் நூறும் அறுபதும் முப்பதுமாகப் பலனைக்கொடுத்தும் வருவானென்பதேயென்றார்.

௨௪ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார். அதாவது பரலோக இராச்சியம் ஒருவயல் நிலத்துக்கொப்பாயிருக்கின்றது. அந்த நிலத்திலே எசமானானவன் நல்லவிதையை விதைத்தான்.

௨௫ பின்பு மனிதர் நித்திரைபண்ணுகையில் அவனுடைய பகைஞன் வந்து கோதுமைக்குள்ளே களைகளை விதைத்துப்போனான்.

௨௬ பயிரானது வளர்ந்து தானியத்தை உண்டாக்கினபொழுது அந்தக் களைகளுங் காணப்பட்டன.

௨௭ வேலைக்காரர் எசமானிடத்தில் வந்து ஆண்டவனே, நீர் உமது வயல்நிலத்திலே நல்லவிதையை விதைக்கவில்லையா களைகள் அதிலே எப்படி யுண்டாயினவென்றார்கள்.

௨௮ அதற்கவன் பகைஞன் அப்படிச் செய்தானென்றான். அப்பொழுது வேலைக்காரர் நாங்கள் போய் அவைகளைப் பிடுங்கிப்போடச் சித்தமாயிருக்கிறீரா என்று கேட்டார்கள்.

௨௯ அதற்கவன் சொன்னது, வேண்டாம். களைகளைப் பிடுங்குகிறபொழுது நீங்கள் கோதுமையையுங்கூட வேரோடே பிடுங்காதபடிக்கு.

௩௦ அவ்விரண்டையும் அறுப்புக்காலம் வரைக்கும் வளரவிடுங்கள். அறுப்புக்காலத்திலே அறுக்கிறவர்களை முதலாவது களைகளைப் பிடுங்கி அவைகளைச் சுட்டெரிக்கிறதற்குக் கட்டுக்களாகக் கட்டவும் கோதுமையை என் களஞ்சியத்திற் சேர்க்கவுங் கட்டளையிடுவேனென்று சொன்னானென்றார்.

௩௧ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார். அதாவது, பரலோக இராச்சியமொரு கடுகுவிதைக்கொப்பாயிருக்கின்றது. அதை ஒருமனிதன் எடுத்துத் தன் நிலத்திலே விதைத்தான்.

௩௨ அது எல்லாவிதைகளிலுஞ் சிறிதாயிருந்தும் வளரும்பொழுது பூண்டுகளிலும் பெரிதாகி ஆகாசத்துப் பறவைகள் அதின் கிளைகளில் வந்து தங்கத்தக்கதான செடியாமென்றார்.

௩௩ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொன்னார். அதாவது மூன்று மரக்கால் மாமுழுவதும் புளிப்பாகுமளவாக ஒரு ஸ்திரீ புளிப்புமாவையெடுத்து அதிலே படக்கவைத்தாள். பரலோக இராச்சியம் அந்தப் புளிப்புமாவுக்கொப்பாயிருக்கின்றதென்றார்.

௩௪ என்வாயைத் திறந்து உவமைகளாலே பேசுவேன் உலகத்தோற்றமுதற்கொண்டு மறைபொருளானவைகளை வெளிப்படுத்

துவேனென்று தீர்க்கதரிசியாலுரைக்கப்பட்டது நிறைவேறத்தக்கதாக.

௩௫ இயேசுவானவர் இவைகளையெல்லாம் உவமையாய்ச் சனங்களோடே பேசினார். உவமைகளில்லாமலே யொன்றுமாய் அவர் அவர்களுடனே பேசவில்லை.

௩௬ அப்பொழுது இயேசுவானவர் சனங்களை அனுப்பி வீட்டுக்குப் போனார். அங்கே அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து நீர் வயல்நிலத்தின் களைகளைக் குறித்துச் சொன்ன உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்று கேட்டார்கள்.

௩௭ அவர்களுடனே அவர் மறுமொழியாகச் சொன்னதாவது, நல்ல விதையை விதைக்கிறவன் மனிதனுடைய குமாரனே.

௩௮ வயல்நிலம் உலகமே. நல்லவிதை இராச்சியத்தின் புத்திரரே. களைகள் பொல்லாங்கனுடைய புத்திரரே.

௩௯ அவைகளை விதைக்கிறபகைஞன் பசாசே. அறுப்பு உலகத்தின் முடிவே. அறுக்கிறவர்கள் தேவதூதர்களே.

௪௰ ஆகையால் களைகள் சேர்க்கப்பட்டு அக்கினியிலே சுட்டெரிக்கப்படுகிறதுபோல இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்.

௪௧ மனிதனுடைய குமாரன் தன்னுடைய தூதரை அனுப்புவான். அவர்கள் அவனுடைய இராச்சியத்திலிருக்கிற சகல இடறல்களையும் அக்கிரமஞ்செய்கிறவர்களையுஞ் சேர்த்து,

௪௨ அழுகையும் பற்கடிப்புமுண்டாயிருக்கிற அக்கினிச் சூளையிலே போடுவார்கள்.

௪௩ அப்பொழுது நீதிமான்கள் தங்கள் பிதாவின் இராச்சியத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப்பார்கள். கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன்.

௪௪ அல்லாமலும் பரலோக இராச்சியம் வயல்நிலத்தில் ஒளிக்கப்பட்டிருக்கிற பொக்கிஷத்துக்கு ஒப்பாயிருக்கின்றது. அதை ஒரு மனிதன் கண்டு அதை மறைத்து அதைக் குறித்து அடைந்த சந்தோஷத்தினாலே போய்த் தனக்குள்ளயாவையும் விற்று அந்த வயல்நிலத்தைக் கொள்ளுகிறான்.

௪௫ அல்லாமலும் பரலோக இராச்சியம் நல்ல முத்துக்களைத் தேடி,

௪௬ ஒரு ஆணிமுத்தைக் கண்டுபோய்த் தனக்குள்ள யாவையும் விற்று அதைக் கொள்ளுகிற வியாபாரி ஒருவனுக்கு ஒப்பாயிருக்கின்றது.

௪௭ அல்லாமலும் பரலோக இராச்சியம் ஒரு வலைக்கு ஒப்பாயிருக்கின்றது. வலையானது கடலிலே போடப்பட்டு எல்லாச் சாதியான மீன்களையும் வாரி நிறைந்தபொழுது,

௪௮ சனங்கள் அதைக் கரையில் இழுத்து உட்கார்ந்து நல்லவைகளைப் பாத்திரங்களிற் சேர்த்துக்கொண்டு ஆகாதவைகளைத் தள்ளிப்போடுகிறார்கள்.

௪௯ இவ்விதமாக உலகத்தின் முடிவிலே நடக்கும். தேவதூதர் புறப்பட்டு நீதிமான்களிலிருந்து துன்மார்க்கரைப் பிரித்து,

௫௰ அழுகையும் பற்கடிப்புமுண்டாயிருக்கிற அக்கினிச் சூளையிலே போடுவார்களென்று சொல்லி,

௫௧ பின்பு நீங்கள் இவைகளையெல்லாம் அறிந்துகொண்டீர்களாவென்று இயேசுவானவர் சீஷர்களிடத்தில் கேட்டதற்கு ஆண்டவரே, அறிந்துகொண்டோமென்றார்கள்.

௫௨ அவர் பின்னும் அவர்களை நோக்கி, அப்படியிருக்கையால் பரலோக இராச்சியத்தைக் குறித்துப் போதனையடைந்த எந்த வேதபாரகனும் தன் பொக்கிஷத்திலிருந்து புதியவைகளையும் பழையவைகளையும் எடுத்துக் கொடுக்கிற வீட்டெசமானனுக்கு ஒப்பாயிருக்கிறானென்றார்.

௫௩ இப்படி இயேசுவானவர் இந்த உவமைகளைச் சொல்லி முடித்தபின்பு,

௫௪ அவர் அவ்விடம்விட்டுத் தாமிருந்த ஊரிலே வந்து செப ஆலயத்திலே சனங்களுக்கு உபதேசம்பண்ணினார். அவர்கள் அதைக் கேட்டுப் பிரமித்து இப்படிப்பட்ட ஞானமும் வல்லமைகளும் இவனுக்கு எங்கேயிருந்து வந்தது.

௫௫ இவன் தச்சனுடைய குமாரனல்லவா. இவனுடைய தாய் மரியாளென்னப்பட்டிருக்கிறாளல்லவா. யாக்கோபு, யோசே, சீமோன், யூதா என்பவர்கள் இவனுடைய சகோதரரல்லவா.

௫௬ இவனுடைய சகோதரிகளெல்லாம் நம்மிடத்திலிருக்கிறார்களல்லவா. இப்படியிருக்க, இவைகளெல்லாம் இவனுக்கு எங்கேயிருந்து வந்ததென்று சொல்லி,

௫௭ அவரைக் குறித்து இடறலடைந்தார்கள். அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, தீர்க்கதரிசியொருவன் தன்னூரிலேயுந் தன் குடும்பத்திலேயுமேயல்லாமல் மற்ற இடங்களிலே கனமில்லாதவனல்ல.

௫௮ மேலும் அந்தச் சனங்களுடைய அவிசுவாசத்தினிமித்தம் அவர் அவ்விடத்திலே அநேக அற்புதங்களைச் செய்யவில்லை.

## ௰௪. அதிகாரம்.

[(௧) ஏரோது கிறிஸ்துவைக் குறித்துச் சிந்தித்தது. (௩) யோவான் சிரச்சேதம்பண்ணப்பட்டதற்குக் காரணம். (௰௩) வனாந்தரத்திலே இயேசுவானவர் ஐயாயிரம் பேருக்குச் சாப்பாடுகொடுத்தது. (௨௨) அவர் கடலின்மேல் நடந்து சீஷரிடத்தில் வந்தது. (௩௪) கெனேசரேத்திலிடத்திலே

இரத்தமுடையவளிரத்தினோட்டத்தைத் தொட்டவர்களைச்சுகமாக்கினது.]

௧ அக்காலத்திலே காற்பங்குத்தேசாதிபதியாகிய எரோதே இராசா இயேசுவின்கீர்த்தியைக்கேள்விப்பட்டு,

௨ தன் ஊழியக்காரரைநோக்கி, இவன் யோவானிஸ்நானன். அவன் மரித்தோரிலிருந்தெழுந்திருந்தவன். ஆதலால் அவன் அற்புதங்களைச்செய்துவருகிறானென்றான்.

௩ அதெப்படியென்றால், எரோதே இராசா தன்சகோதரனாகிய பிலிப்புவினுடைய மனைவியாகிய எரோதியாளைக்குறித்து, நீர் அவளைச்சேர்த்துக்கொள்ளக்கூடாதென்று,

௪ யோவான் அவனுடனேசொன்னபடியினாலே எரோதே இராசா அவனைப்பிடித்துக்கட்டிக்காவலில்வைத்தான்.

௫ அவனைக்கொலைசெய்யவும்மனதாயிருந்தான். அப்படியிருந்தும் சனங்கள் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணினபடியினாலே அவன் அவர்களுக்குப்பயந்து, (அப்படிசெய்யவில்லை.)

௬ பின்பு எரோதேயினுடைய சென்மநாள் கொண்டாடப்படுகிற காலத்திலே எரோதியாளின்குமாரத்தி எரோதே இராசாவுக்குமுன்பாக நடனம்பண்ணி சந்தோஷமுண்டாக்கத்தக்கதாய் நடனம்பண்ணினபொழுது,

௭ அவன் அவளைநோக்கி, நீ எதைக்கேட்டாலுந்தருவேனென்று அவளுக்கு ஆணையிட்டுவார்த்தைகொடுத்தான்.

௮ உடனே அவள் தன்தாயானவள் தனக்குப்போதித்திருந்தபடியே நீர் யோவானிஸ்நானனுடையசிரசை ஒருதாலத்திலே இங்கே எனக்குக்கொடுக்கவேண்டுமென்று கேட்டாள்.

௯ இராசாதுக்கம் அடைந்தான். அப்படியிருந்தும்தான்கொடுத்த ஆணையினிமித்தமும் பந்தியிற் கூடவிருந்தவர்களினிமித்தமும் அவன் அதைக்கொடுக்கக்கட்டளையிட்டான்.

௰ அந்தப்படி இராசாவினாலே அனுப்பப்பட்டவர்கள் காவற்கூடத்துக்குப்போய் யோவானைச்சிரச்சேதம்பண்ணி,

௰௧ வந்து அவனுடைய சிரசை ஒருதாலத்திலேவைத்து அந்தப்பெண்ணுக்குக் கொடுத்தார்கள். அவள் அதைத்தன்தாய்க்குக்கொண்டுபோய்க்கொடுத்தாள்.

௰௨ பின்பு அவனுடைய சீஷர்கள்வந்து அவனுடைய உடலையெடுத்து அடக்கம்பண்ணிவந்து இயேசுவுக்கு அந்தச்சங்கதியையறிவித்தார்கள்.

௰௩ இயேசுவானவர் அதைக்கேட்டு அவ்விடம்விட்டு வனாந்தரமான இடத்திலே தனியேயிருக்க ஒருபடவிலேறிப்போனார். சனங்கள் அதைக்கேள்விப்பட்டுப்பட்டினங்களிலிருந்து கால்நடையாய் அவர் பின்சென்றார்கள்.

௰௪ இயேசுவானவர்புறப்பட்டுத்திரளான சனங்களைக்கண்டு அவர்களுக்கு இரக்கமாயமனதுருகி அவர்களில் வியாதிப்பட்டவர்களைச்சுகமாக்கினார்.

௰௫ சாயங்காலத்திலே அவருடையசீஷர் அவரிடத்தில்வந்து இது வனாந்தரமான இடம். வேளையும் பகலும்போயிற்று. ஆதலால் இந்தச்சனங்கள்கிராமங்களுக்குப்போய்த்தங்களுக்காகப்போசனம் வாங்கிக்கொள்ளும்படிக்கு இவர்களை அனுப்பிவிடுமென்றார்கள்.

௰௬ அதற்கு இயேசுவானவர், இவர்கள் போகவேண்டுவதில்லை நீங்களே இவர்களுக்குச்சாப்பாடுகொடுங்களென்றார்.

௰௭ அவர்கள்சொல்லுகிறது, ஐந்தப்பமும் இரண்டுமீன்களுமேயல்லாமல் வேறொன்றும் எங்களிடத்திலில்லையென்றார்கள்.

௰௮ அவைகளை எனக்கு இங்கேகொண்டுவாருங்களென்றார்.

௰௯ பின்பு சனங்கள் புல்லின்மேற் பந்தியிருக்கும்படிக்கு அவர்கட்டளையிட்டு அவ்வைந்தப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து வானத்தை யண்ணாந்துபார்த்து அவைகளையாசீர்வதித்து, அப்பங்களைப்பிட்டுச்சீஷர்களுக்குக்கொடுத்தார். சீஷர்கள் அவைகளைச்சனங்களுக்குக்கொடுத்தார்கள்.

௨௰ அவர்களெல்லாருஞ்சாப்பிட்டுத்திருத்தியடைந்தார்கள். அதுவுமல்லாமற்சேஷமானவைகளைப்பன்னிரண்டுகூடை நிறைய எடுத்தார்கள்.

௨௧ அப்படிச்சாப்பிட்டவர்கள் பெண்களும்பிள்ளைகளுந்தவிர ஏறக்குறைய ஐயாயிரம்பேரிருந்தார்கள்.

௨௨ உடனே இயேசுவானவர்சனங்களையனுப்பிவிடுகையில் தமது சீஷர்கள்படவிலேறித்தமக்குமுன்னே அக்கரைக்குப்போகும்படிக்கு அவர்களைத்துரிதப்படுத்தினார்.

௨௩ சனங்களையனுப்பிவிட்டபின்பு அவர்தனியே செபத்தியானம்பண்ணும்படிக்கு ஒருமலையின்மேலேறினார். சாயந்தரமானபொழுது அவர்மாத்திரம் அங்கேயிருந்தார்.

௨௪ அவ்வேளையிலே படவுகடலின் நடுவே சேர்ந்து, எதிர்க்காற்றிருந்ததினாலே அலைகளால் அலைவுபட்டது.

௨௫ அப்படியிருக்கிறபொழுது இரவின் நாலாஞ்சாமத்திலே இயேசுவானவர்கடலி

னமேலே நடந்து அவர்களிடத்துக்குப் போனார்.

௨௬ அவர் கடலின்மேலே நடக்கிறதைச் சீஷர்கள் கண்டு திகைத்து ஏதோ வேஷமுண்டா யிருக்கிறதென்று பயத்தினாலே கூப்பிட்டார்கள்.

௨௭ உடனே இயேசுவானவர் திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்று அவர்களுடனே சொன்னார்.

௨௮ பேதுரு அவருக்கு ஆண்டவரே, நீரேயானால் தண்ணீரின்மேலே உம்மிடத்தில் வரும்படி எனக்குக் கட்டளையிடுமென்றான்.

௨௯ அதற்கவர் வாவென்றார். அப்பொழுது பேதுரு படவைவிட்டிறங்கி இயேசுவினிடத்துக்கு வரும்படிக்குத் தண்ணீரின்மேலே நடந்து,

௩௰ காற்று பலத்திருக்கிறதைக் கண்டு, பயமடைந்து அமிழ்ந்துபோகத் தொடங்கி ஆண்டவரே, என்னை இரட்சிக்கவேண்டுமென்று கூப்பிட்டான்.

௩௧ உடனே இயேசுவானவர் கையை நீட்டி அவனைப் பிடித்துக்கொண்டு அற்ப விசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டாயென்றார்.

௩௨ அவர்கள் படவிலேறினவுடனே காற்று அமைதலாயிற்று.

௩௩ அப்பொழுது படவிலுள்ளவர்கள் வந்து மெய்யாகவே நீர் பராபரனுடைய குமாரனாயிருக்கிறீரென்று சொல்லி அவரை வணங்கினார்கள்.

௩௪ பின்பு அவர்கள் அக்கரைக்கோடிக் கெனேசரேத்து நாட்டிலே வந்தார்கள்.

௩௫ அவ்விடத்து மனிதர் அவரையறிந்து அந்தத்திசைகளிலெங்கும் ஆட்களையனுப்பிப் பிணியாளிகளெல்லாரையும் அவரிடத்தில் அழைத்துக்கொண்டுவந்து,

௩௬ அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தை மாத்திரந்தொடும்படிக்கு உத்தரவு கேட்க அதைத் தொட்ட யாவருஞ் சொஸ்தமடைந்தார்கள்.

## ௧௫. அதிகாரம்.

[(௧) பரிசேயர் முதலானவர்கள் தேவகற்பனைகளை மீறினதற்காக அவர்களைக் கடிந்துகொண்டது. (௰௧) வாய்க்குள்ளே போகிற பதார்த்தத்தினாலே அசுசிவாராதென்பது. (௨௧) கானானேதேசத்தாளுடைய மகளைக் குணமாக்கினது. (௩௨) நாலாயிரம்பேருக்கு அற்புதமாய்ச் சாப்பாடு கொடுத்தது.]

அக்காலத்திலே எருசலேமிலிருந்து வந்த வேதபாரகரும் பரிசேயரும் இயேசுவினிடத்தில் வந்து,

௨ உம்முடைய சீஷர் தங்கள் கைகளைக் கழுவாமற் போசனம்பண்ணுகிறார்கள். அப்படி அவர்கள் பெரியோர்களுடைய பாரம்பரை நியாயத்தை ஏன் மீறி நடக்கிறார்களென்றார்கள்.

௩ அதற்கு அவர் சொன்னது, உங்கள் பாரம்பரை நியாயத்தினாலே நீங்களும் பராபரனுடைய கற்பனையை ஏன் மீறி நடக்கிறீர்கள்.

௪ எப்படியென்றால் உன் தகப்பனையுந் தாயையுங் கனம்பண்ணவேண்டுமென்றும் தகப்பனையாவது தாயையாவது நிந்திப்பவன் மரண ஆக்கினைக்குட்படுத்தப்படவேண்டுமென்றும் பராபரன் கட்டளையிட்டார்.

௫ அப்படியிருந்தும் நீங்கள் எவனும் தன் தகப்பனுடனே அல்லது தாயுடனே உமக்கென்னாலே உதவுகிற தேதுண்டோ அதைக் காணிக்கையாகக் கொடுக்கிறேனென்று சொன்னாலே,

௬ அவன் தன் தகப்பனை அல்லது தாயைக் கனம்பண்ணவேண்டுவதில்லையென்று [illegible] பராபரனுடைய கற்பனையை உங்கள் பாரம்பரை நியாயத்தினாலே அவமாக்கிவருகிறீர்கள்.

௭ ஆ வஞ்சகரே, இந்தச் சனங்கள் தங்கள் வாயினாலே என்னைச் சேர்ந்து தங்கள் உதடுகளினாலே என்னைக் கனம்பண்ணியுந் தங்கள் இருதயமோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கிறது.

௮ அப்படியே அவர்கள் மனிதர்களுடைய கற்பனைகளாகிய போதகங்களைப் போதிக்கிறவர்களாயிருந்து எனக்கு வீணாய் ஆராதனை செய்கிறார்களென்று,

௯ ஏசாயா என்பவன் உங்களைக் குறித்து நன்றாய்த் தீர்க்கதரிசனமுரைத்தானென்று சொன்னார்.

௰ பின்பு சனங்களைத் தம்மிடத்தில் அழைத்து நீங்கள் கேட்டுச் சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௰௧ வாய்க்குள்ளே போகிற பொருள் மனிதனையும் அசுசிப்படுத்தமாட்டாது. வாயிலிருந்து புறப்படுகிற பொருளே ஒருவனை அசுசிப்படுத்துகிறதென்று அவர்களுடனே சொன்னார்.

௰௨ அப்பொழுது அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து பரிசேயர் இந்த வசனத்தைக் கேட்டு விசனப்பட்டார்களென்று அறிந்திருக்கிறீராவென்றார்கள்.

௰௩ அதற்கவர், என் பரமபிதா நடாத நாற்றுகளெல்லாம் பிடுங்கப்படும்.

௰௪ அவர்களைவிட்டுவிடுங்கள். குருடருக்கு வழிகாட்டுகிற குருடராயிருக்கிறார்கள். குருடனுக்குக் குருடன் வழிகாட்டினால் இருவருங் குழியிலே விழுவார்களே என்றார்.

௰௫ அப்பொழுது பேதுரு அவரைநோக்கி, இந்த உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்று கேட்டான்.

௰௬ அதற்கு இயேசுவானவர், நீங்களும் இன்னும் புத்தியில்லாதவர்களா.

௰௭ வாய்க்குள்ளே போகிறவைகளையாவும் வயிற்றிற் சேர்ந்தபின்பு ஆசனவழியாய்க் கழிந்துபோகின்றதென்பதை நீங்களின்னுஞ் சிந்தித்துக்கொள்ளவில்லையா.

௰௮ வாயிலிருந்து புறப்படுகிறவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டுவருகின்றன. இவைகளே மனிதனை அசுசிப்படுத்துகின்றன.

௰௯ எவையெனிற் பொல்லாத சிந்தனைகள், கொலைகள், விபசாரங்கள், வேசித்தனங்கள், களவுகள், பொய்ச்சாட்சிகள், தூஷணங்களாகிய இவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டுவருகின்றன.

௨௰ இவைகளே மனிதனை அசுசிப்படுத்துகிறவைகள். கைகழுவாமற் சாப்பிடுகிறது மனிதனை அசுசிப்படுத்தாதென்றார்.

௨௧ பின்பு இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுத் தீருசீதோனப்பட்டினங்களின் திசைகளுக்குப் போனார்.

௨௨ அப்பொழுது அவ்விடங்களின் எல்லைகளிலிருந்துவந்த கானான் தேசத்தாளாகிய ஒருத்தி அவரைநோக்கி, ஆண்டவரே, தாவீதின் குமாரனே, என் மகள் பசாசினாலே கொடுமையாய் வாதிக்கப்படுகிறாள். எனக்கு இரங்கவேண்டுமென்று சொல்லிக் கூப்பிட்டாள்.

௨௩ அவரோ அவளுக்கு மாறுத்தரமாக ஒரு வார்த்தையுஞ் சொல்லவில்லை. அப்பொழுது அவருடைய சீஷர் வந்து, அவரைநோக்கி, இவள் நம்மைப் பின்றொடர்ந்து கூப்பிடுகிறாள். ஆதலால் இவளை அனுப்பிவிடுமென்று வேண்டிக்கொண்டார்கள்.

௨௪ அதற்கு அவர், காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்துக்கேயன்றி, (மற்றவர்களிடத்தில்) நான் அனுப்பப்படவில்லையென்றார்.

௨௫ அவளோ வந்து ஆண்டவரே, எனக்குச் சகாயஞ்செய்யவேண்டுமென்று அவரை நமஸ்காரம்பண்ணினாள்.

௨௬ அவர் சொன்னது, பிள்ளைகளுடைய அப்பத்தையெடுத்து, நாய்களுக்குப் போடுகிறது நல்லதல்லவேயென்றார்

௨௭ அதற்கவள் ஆண்டவரே, மெய்தான். ஆகிலும் நாய்கள் தங்கள் எசமானர்கள் போசனப்பந்தியிலிருந்து விழுகிற உச்சிட்டங்களைத் தின்னுமேயென்றாள்.

௨௮ அப்பொழுது இயேசுவானவர் அவளைநோக்கி, ஓ. ஸ்திரீயே, உன் விசுவாசம் பெரிதாயிருக்கிறது. நீ விரும்பினபடியே உனக்கு ஆகக்கடவதென்றார். அந்நேரமே அவளுடைய மகள் சுகமடைந்தாள்.

௨௯ பின்பு இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுக் கலிலேயாக் கடலருகே வந்து, ஒரு மலையின்மேலேறி அங்கே உட்கார்ந்தார்.

௩௰ அப்பொழுது சப்பாணிகள், குருடர், ஊமையர், முடவர்களுந்தவிர அநேகம் பேரைக் கூட்டிக்கொண்டு திரளான சனங்கள் இயேசுவினிடத்தில் வந்து அவர்களை அவருடைய பாதத்தண்டையில் வைத்தார்கள். அவர்களை அவர் குணமாக்கினார்.

௩௧ ஊமையர் பேசுகிறதையும் முடவர்கள் சொஸ்தமடைகிறதையுஞ் சப்பாணிகள் நடக்கிறதையுங் குருடர் காணுகிறதையுஞ் சனங்கள் கண்டு ஆச்சரியப்பட்டு இஸ்ரவேலின் தேவனைத் துதித்தார்கள்.

௩௨ பின்பு இயேசுவானவர் தமது சீஷரைத் தம்மிடத்தில் அழைத்து, சனங்களைக் குறித்து மனதுருக்கமாயிருக்கிறேன். என்னத்தினாலென்றால், இவர்கள் மூன்றுநாளாய் என்னிடத்திலே தங்கிப் போசனமில்லாதிருக்கிறார்கள். இவர்கள் வழியிலே சோர்ந்துபோகும்படிக்குப் பட்டினியாய் இவர்களை அனுப்பிவிடமாட்டேனென்றார்.

௩௩ அதற்கு அவருடைய சீஷர்கள் இவ்வளவு சனங்களுக்குத் திருப்தியுண்டாகும்படிக்கு வேண்டிய அப்பங்கள் இந்த வனாந்தரத்திலே நமக்கு எப்படியகப்படுமென்றார்கள்.

௩௪ இயேசுவானவர் உங்களிடத்தில் எவ்வளவு அப்பங்களுண்டென்றார். ஏழு அப்பங்களுஞ் சில சிறுமீன்களுமுண்டென்று சீஷர் சொல்ல,

௩௫ அவர் சனங்களைத் தரையிலே பந்தியிருக்கச்சொல்லி,

௩௬ பின்பு அந்த ஏழு அப்பங்களையும் மீன்களையுமெடுத்துத் தோத்திரஞ்செய்து அவைகளைப் பிட்டுத் தமமுடைய சீஷர்களுக்குக் கொடுத்தார். சீஷர் அவைகளைச் சனங்களுக்குக் கொடுக்க,

௩௭ எல்லாருஞ் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள். பின்பு சேஷமானவைகளை ஏழுகூடைநிறையச் சேகரித்துக்கொள்ளப்பட்டன.

௩௮ பெண்களும் பிள்ளைகளுந்தவிர போசனம்பண்ணின புருஷர் நாலாயிரம்பேர்.

௨௧ அதுமுதல் இயேசுவானவர் தாம் எருசலேமுக்குப் போய்ப் பெரியோர்களாலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் மிகுந்தபாடுபடவும் கொலைசெய்யப்படவும் மூன்றுநாளிலே எழுந்திருக்கவும் வேண்டுமென்று தம்முடைய சீஷருக்குக் காண்பிக்கத் தொடங்கினார்.

௨௨ அப்பொழுது பேதுரு அவரைத் தனியே அழைத்து, ஆண்டவரே, உமக்கிது நேரிடக்கூடாது; அப்படி உமக்கு நேரிடாதிருப்பதாகவென்று அவருடனே கண்டிப்பாய்ச் சொன்னான்.

௨௩ இயேசுவானவர் திரும்பிப் பேதுருவைப் பார்த்து, அ. சாத்தானே, நீ என் முன்னின்று போ. நீ பராபரனுக்குப் பிரியமானவைகளைச் சிந்தியாமல் மனிதருக்குப் பிரியமானவைகளைச் சிந்திக்கிறபடியினாலே எனக்கு இடறலாயிருக்கிறாயென்று சொல்லி,

௨௪ பின்பு தம்முடைய சீஷர்களை நோக்கி, ஒருவன் என்னைப் பின்பற்றி நடக்க விரும்பினால் தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலுவையையெடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன்.

௨௫ என்னத்தினாலென்றால், தன் ஜீவனை இரட்சிக்க விரும்புகிறவன் அதை இழந்துபோவான். என்னிமித்தந் தன் ஜீவனை இழந்துபோகிறவன் அதைக் கண்டடைவான்.

௨௬ அல்லாமலும் மனிதனானவன் உலகமுழுமையுஞ் சம்பாதித்துக்கொண்டாலுந் தன் ஜீவனை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு என்ன லாபமுண்டாயிருக்கும். அன்றியும் ஒரு மனிதன் தன் ஜீவனை மீட்கிறதற்கு என்னத்தைக் கொடுப்பான்.

௨௭ அல்லாமலும் மனிதனுடைய குமாரன் தம்முடைய பிதாவின் மகிமையைப் பொருந்தித் தம்முடைய தூதரோடுங்கூட வருவார். அப்பொழுது அவனவனுடைய செய்கையின்படியே அவனவனுக்குப் பலனளிப்பார்.

௨௮ இங்கே நிற்கிறவர்களிற் சிலர் மனிதனுடைய குமாரன் தம்முடைய இராச்சியத்தில் வருவதைக் காண்கிறதற்கு முன்னே மரணத்தை அடைவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் மறுரூபங்கொண்டது. (௰௪) சந்திரரோகியைக் குணமாக்கினது. (௨௨) தம்முடைய பாடுகளை முன்னறிவித்தது. (௨௪) தீர்வையைச் செலுத்தினது.]

ஆறுநாளுக்குப்பின்பு இயேசுவானவர் தனித்திருக்கும்படி பேதுருவையும் யாக்கோபையும் அவனுடைய சகோதரனாகிய யோவானையுங் கூட்டிக்கொண்டு உயர்ந்த மலையின்மேற்போய்,

௨ அங்கே அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார். அவருடைய முகஞ் சூரியனைப்போலப் பிரகாசித்தது. அவருடைய வஸ்திரங்கள் ஒளியைப்போல வெண்மையாயின.

௩ அப்பொழுது மோசே எலியா என்பவர்கள் அவரோடே பேசிக்கொள்ளுகிறவர்களாய் அவர்களுக்குக் காணப்பட்டார்கள்.

௪ அப்பொழுது பேதுரு இயேசுவை நோக்கி, ஆண்டவரே, நாம் இங்கேயிருக்கிறது நல்லது. உமக்குச் சித்தமானால் இங்கே உமக்கும் மோசேக்கும் எலியாவுக்கும் ஒவ்வொரு குடிலாக மூன்று குடில்களையுண்டாக்குவோமென்றான்.

௫ அப்படி அவன் பேசுகையில் நடந்ததென்னவெனில் ஒளியுள்ள மேகம் அவர்கள்மேல் நிழலிட்டதுமல்லாமல், இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன். இவரிற் பிரியமாயிருக்கிறேன். இவருக்குச் செவிகொடுங்களென்று அந்த மேகத்திலிருந்து சத்தமுண்டாயிற்று.

௬ சீஷர் அதைக்கேட்டு, முகங்குப்புற விழுந்து மிகவும் பயந்தார்கள்.

௭ அப்பொழுது இயேசுவானவர் வந்து அவர்களைத் தொட்டு, எழுந்திருங்கள் பயப்படாதிருங்களென்று சொன்னார்.

௮ அவர்கள் தங்கள் கண்களை உயர்த்துகிறபொழுது, இயேசுவையேயன்றி, மற்றொருவரையுங் காணவில்லை.

௯ பின்பு அவர்கள் மலையிலிருந்திறங்குகிறபொழுது. இயேசுவானவர் அவர்களை நோக்கி, மனிதனுடைய குமாரன் மரித்தோரிலிருந்தெழுந்திருக்கிற வரைக்கும் நீங்கள் இந்தத் தரிசனத்தை ஒருவருக்குஞ் சொல்லவேண்டாமென்று கட்டளையிட்டார்.

௰ அப்பொழுது, அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி, அப்படியானால் முதலாவது எலியா வரவேண்டுமென்று வேதபாரகர் எப்படிச் சொல்லுகிறார்களென்றார்கள்.

௰௧ அதற்கு இயேசுவானவர் சொன்னது, முன்பு எலியா வந்து எல்லாவற்றையுஞ் சீர்ப்படுத்தவேண்டுமென்பது மெய்தான்.

௰௨ அல்லாமலும் எலியா வந்தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். அவனை அவர்கள் அங்கிகரித்துக்கொள்ளாமல், அவனுக்குத் தங்கள் இஷ்டப்படி செய்தார்கள். அப்படி மனிதனுடைய குமாரனும் அவர்களாற் பாடுபடுவாரென்றார்.

௰௩ அப்பொழுது அவர் யோவான்ஸ்நானனைக் குறித்துத் தங்களுடனே பேசினாரென்று சீஷர் அறிந்தார்கள்

௰௪ பின்பு அவர்கள் ஜனக்கூட்டத்தினிடத்திற் சேர்ந்தபொழுது, ஒரு மனிதன்

அவரிடத்திலவந்து, அவர்முன்பாக முழங்காற்படியிட்டு,

௰௫ ஆண்டவரே, என்மகனுக்கிரங்கும். அவன் சந்திரரோகியாயக் கொடியவேதனைப்படுகிறான். எப்படியென்றால், அடிக்கடி தீயிலேயும் அடிக்கடி சலத்திலேயும் விழுகிறான்.

௰௬ அவனை உம்முடைய சிஷரிடத்திற் கொண்டுவந்தேன். அவர்களுக்கு அவனைக் குணமாக்கத் திராணியில்லையென்றான்.

௰௭ அதற்கு இயேசுவானவர் சொன்னது, ஆ, விசுவாசமில்லாதமாறுபாடுள்ள சந்ததியாரே, எதுவரைக்கும் உங்களோடிருப்பேன். எதுவரைக்கும் உங்களிற்பொறுமையாயிருப்பேன். அவனை என்னிடத்திற்கொண்டுவாருங்களென்றார்.

௰௮ அவனைக் கொண்டுவந்தபொழுது இயேசுவானவர் அவனிலுள்ளப்சாசை அதட்டினார். உடனே அது அவனைவிட்டுப் போயிற்று. அந்தப் பிள்ளை அந்நேரமே சுகமடைந்தான்.

௰௯ பின்பு சிஷர்கள்மாத்திரம் இயேசுவினிடத்திலவந்து நாங்கள் அதைத்துரத்திவிடும்படிக்கு ஏன் எங்களுக்குத்திராணியில்லையென்றார்கள்.

௨௰ அதற்கு இயேசுவானவர், உங்கள் அவிசுவாசத்தினாலே (திராணியில்லை.) மேலும் ஒரு கடுகுவிதை அவ்வளவுவிசுவாசமாத்திரம் உங்களுக்குண்டானால் நீங்கள் இந்தமலையை நோக்கி இவ்விடம்விட்டு அப்புறம் போவென்றுசொல்ல, அதுபோம். அல்லாமலும் உங்களாற் கூடாதகாரியமொன்றுமிருப்பதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௨௧ ஆகிலும் செபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி (வேறுவிதமாய்) இந்தச்சாதியைத்துரத்தப்படாதென்றார்.

௨௨ அல்லாமலும் அவர்கள்கலிலேயா நாட்டிலே சஞ்சரித்திருந்த காலத்திலே இயேசுவானவர் அவர்களைநோக்கி, மனிதனுடையகுமாரன் மனிதர்களுடையகையில் ஒப்புக்கொடுக்கப்படுவான்.

௨௩ அவர்கள் அவனைக்கொலைசெய்வார்கள். பின்பு மூன்றாம்நாளிலே எழுந்திருப்பானென்றார். அவர்கள் மிகுந்த துக்கம் அடைந்தார்கள்.

௨௪ அவர்கள் கப்பர்நாகூமூரில வந்தபொழுது வரிப்பணத்தைச்சேர்க்கிறவர்கள் பேதுருவினிடத்திலவந்து உங்கள்போதகர் வரிப்பணத்தைக் கொடுக்கிறதில்லையாவென்றார்கள். கொடுக்கிறாரென்றான்.

௨௫ பின்பு அவன்வீட்டிலேவந்தபொழுது அவன் (பேசுகிறதற்கு) முன்னே இயேசுவானவர் அவனைநோக்கி, சீமோனே, பூமியின் இராசாக்கள் யார்கையிலே தீர்வை அல்லது வரிவாங்குகிறார்கள். தங்கள்பிள்ளைகள் கையிலோ அந்நியர்கையிலோ இது உனக்கெப்படித்தோன்றுகின்றதென்றார்.

௨௬ அந்நியர்கையிலவாங்குகிறார்களென்று பேதுருசொன்னான் அதற்கு இயேசுவானவர் அப்படியானாற்பிள்ளைகள்செலுத்தவேண்டுவதில்லையே.

௨௭ ஆனாலும் நாம் அவர்களுக்கு விக்கினமவராதபடிக்கு நீ கடலிடத்திற்குப்போய்த் தூண்டிலைப்போட்டு முதலாவது எழும்புகிறமீனை எடுத்து அதின்வாயைத் திறந்தால், அதிலே ஒருவெள்ளிக்காசைக் காண்பாய். அதையெடுத்துவந்து எனக்காகவும் உனக்காகவும் அவர்களுக்குக் கொடு என்றார்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) சிஷர்கள் மனத்தாழ்மையுள்ளவர்களாயிருந்து ஒருவருக்கும் கெடுதிசெய்யாதவர்களாயிருக்கும்படிக்குச் சொன்னது. (௭) சிறியவர்களை அசட்டைபண்ணாமலிருக்கவேண்டுமென்பது. (௰௫) தப்பிதஞ்செய்தவர்களுக்குச்செய்யவேண்டியது. (௨௧) ஒருவருக்கு ஒருவர் மன்னிக்கவேண்டியதைக் குறித்து உவமைசொன்னது.]

அக்காலத்திலே சிஷர்கள் இயேசுவினிடத்திற்குவந்து பரலோக இராச்சியத்திலே எவன்பெரியவனாயிருப்பானென்றார்கள்.

௨ அப்பொழுது இயேசுவானவர் ஒரு பிள்ளையைத்தமமிடத்தில் அழைத்து அதை அவர்களுக்குள்ளே நிறுத்திச்சொன்னதாவது,

௩ நீங்கள் மனந்திரும்பிப் பிள்ளைகளைப்போலாகாவிட்டாற் பரலோக இராச்சியத்திற் பிரவேசிக்கமாட்டீர்களென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௪ ஆகையால் இந்தப்பிள்ளையைப்போலத் தன்னைத்தாழ்த்துகிறவனே பரலோக இராச்சியத்திற்பெரியவனாயிருப்பான்.

௫ அல்லாமலும் இப்படிப்பட்ட ஒரு பிள்ளையை என் நாமத்தினாலே ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்.

௬ என்மேல்விசுவாசமாயிருக்கிற இந்தச்சிறியரிலொருவன் குற்றஞ்செய்வதற்குக் காரணமானவனெவனோ அவனுடைய கழுத்திலே ஏந்திரக்கல்லைக்கட்டி அவனைச் சமுத்திரத்துக்குள்ளே அமிழ்த்தினால் அவனுக்கு நலமாயிருக்கும்.

௭ ஐயோ கெடுதலினிமித்தம் உலகத்துக்கு வேதனைவரும். கெடுதல் அவசியமாய் வரவேண்டும். ஆனாலும் ஐயோ கெடுதலைச்செய்கிறவனுக்கு வேதனைவரும்.

௮ ஆதலால் உன்கையாவது உன்காலாவது உன்னைக்கெடுக்கிறதற்கு ஏதுவானால் அவைகளைத்தறித்தெறிந்துபோடு. நீ முடவனாய்

கைகளை அல்லது இரண்டு காலையுடையவனாய் நித்திய அக்கினியிலே தள்ளப்படுவதிலும் சப்பாணியாய் அல்லது ஊனனாய் (நித்திய) சீவனுள்ளே பிரவேசிக்கிறதே உனக்கு நன்மையாயிருக்கும்.

௯ மேலும் உன்னுடைய கண் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால் அதைப் பிடுங்கி எறிந்துபோடு. நீ இரண்டு கண்ணையுடையவனாய் எரிநரகத்திலே தள்ளப்படுவதிலும் ஒற்றைக்கண்ணனாய் (நித்திய) சீவனுள்ளே பிரவேசிக்கிறதே உனக்கு நன்மையாயிருக்கும்.

௰ இந்தச்சிறியரில் ஒருவனையும் அசட்டைபண்ணாதபடிக்குப் பாருங்கள். என்னத்தினாலென்றால், அவர்களுக்கேற்ற தேவதூதர்கள் பரமண்டலங்களிலே என் பரமபிதாவினுடைய சமுகத்தை எப்பொழுதும் தரிசிக்கிறார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௧ அல்லாமலும் மனிதனுடைய குமாரன் கெட்டுப்போனதை இரட்சிக்க வந்தான்.

௰௨ உங்களுக்கெப்படித் தோன்றுகின்றது. ஒரு மனிதனுக்குண்டாயிருக்கிற நூறு ஆடுகளில் ஒன்று சிதறிப்போனால், அவன் தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் மலைகளில் விட்டுப்போய்ச் சிதறிப்போனதைத் தேடுவானல்லவோ.

௰௩ இது உங்களுக்கெப்படித் தோன்றுகின்றது. அவன் அதைக் கண்டுபிடித்தால் சிதறிப்போகாத் தொண்ணூற்றொன்பதிலும் அதைக்குறித்து அதிகமாய்ச் சந்தோஷப்படுவானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௪ அந்தப்படி இந்தச்சிறியரில் ஒருவனாகிலுங் கெட்டுப்போகும்படிக்குப் பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவுக்குச் சித்தமில்லை.

௰௫ உன் சகோதரன் உனக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்தால், நீ போய் அவனோடே மாத்திரமிருந்து அவனைக் கடிந்துகொள். அவன் உனக்குச் செவிகொடுத்தால் ஆதாயமாக அவனைப் பெற்றுக்கொள்வாய்.

௰௬ அவன் செவிகொடாமலிருந்தால், சங்கதிகளெல்லாம் இரண்டுமூன்று சாட்சிகளுடைய வாக்கினால் நிலவரப்படும்படிக்கு நீ இரண்டொருவரைக் கூட்டிப்போ.

௰௭ அவன் அவர்களுக்குங் கீழ்ப்படியாதிருந்தால், நீ அதைச் சபைக்கு அறிவிக்கவேண்டும். அவன் சபையையும் அசட்டைபண்ணினால், நீ அவனை அஞ்ஞானியைப்போலவும் ஆயக்காரனைப்போலவுமெண்ணுவாயாக.

௰௮ பூமியிலே நீங்கள் எவைகளைக் கட்டுவீர்களோ அவைகள் பரலோகத்திலே கட்டப்பட்டிருக்கும். பூமியிலே எவைகளை அவிழ்ப்பீர்களோ அவைகள் பரலோகத்திலே அவிழ்க்கப்பட்டிருக்குமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௯ அல்லாமலும் பூமியிலே எந்தக்காரியத்தைக்குறித்தும் உங்களில் இரண்டுபேர் வேண்டிக்கொள்ள ஒருமைப்பட்டால் அது பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவினால் அவர்களுக்குண்டாகுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௰ என்னத்தினாலென்றால் இரண்டுபேராவது மூன்றுபேராவது என்னுடைய நாமத்திலே எங்கே கூடிவந்திருக்கிறார்களோ அங்கே அவர்களுக்குள்ளேயிருக்கிறேனென்றார்.

௨௧ அப்பொழுது பேதுரு அவரிடத்தில் வந்து ஆண்டவரே, என் சகோதரன் எனக்கு விரோதஞ்செய்தால் அவனுக்கு நான் எத்தனைதரம் மன்னிக்கவேண்டும். ஏழுதரமட்டுமோவென்றான்.

௨௨ இயேசுவானவர் அவனுக்குச் சொன்னது, ஏழுதரம்மட்டுமல்ல, ஏழெழுபதுதரமென்று உனக்குச் சொல்லுகிறேன்.

௨௩ எப்படியெனிற் பரலோகஇராச்சியந் தன் ஊழியக்காரருடனே கணக்குப்பார்க்கச் சித்தமான இராசனுக்கொப்பாயிருக்கின்றது.

௨௪ அவன் கணக்குப்பார்க்கத் தொடங்கினபொழுது பதினாயிரந் தாலந்து கடன்பட்டவனை அவனுக்குமுன்பாகக் கொண்டுவந்தார்கள்.

௨௫ அவன் கடனைத் தீர்க்கத் திராணியில்லாதபடியால் ஆண்டவன் அவனையும் அவனுடைய மனைவியையும் பிள்ளைகளையும் அவனுக்குண்டானயாவையும் விற்றுக் கடனைத் தீர்க்கக்கட்டளையிட்டான்.

௨௬ அப்பொழுது அந்த ஊழியக்காரன் விழுந்து வணங்கி, ஆண்டவனே, எல்லாவற்றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன். நீர் எனக்கு இரங்கிப் பொறுக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

௨௭ அந்தப்படி ஆண்டவன் அந்த ஊழியக்காரனுக்கு இரங்கி, அவனை விடுதலைபண்ணிக் கடனையும் அவனுக்கு மன்னித்தான்.

௨௮ பின்பு அந்த ஊழியக்காரன் புறப்பட்டுப்போகையில் தன்னோடேகூடவேலைசெய்து தனக்கு நூறுதெனாரியபணங்கடன்பட்டிருந்த ஒருவனைக்கண்டு அவனைப் பிடித்துத்தொண்டையைநெரித்து, நீபட்டகடனை எனக்குக்கொடுத்துத்தீரென்றான்.

௨௯ உடனே அந்த ஊழியக்காரன் அவனுடைய கால்களின்கீழே விழுந்து எல்லாவற்றையும் உனக்குக்கொடுத்துத்தீர்க்கிறேன். எனக்கிரங்கிப்பொறுக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

௩௰ ஆனாலும் அவன் மனதில்லாமற்போய் அவன் பட்டகடனைத்தீர்க்குமளவும் அவனைக்காவலிற்போடுவித்தான்.

௩௧ அந்த நடக்கைகளை மற்ற ஊழியக்காரர் கண்டு மிகுந்த துக்கம் அடைந்து, ஆண்டவனிடத்துக்குப் போய் நடந்த எல்லாவற்றையும் அவனுக்கறிவித்தார்கள்.

௩௨ அப்பொழுது ஆண்டவன் அவனை அழைப்பித்து, அவனை நோக்கி, பொல்லாத ஊழியக்காரனே, நீ என்னை வேண்டிக்கொண்டபடியினாலே நான் அந்தக் கடனையாவையும் உனக்கு மன்னித்தேனே.

௩௩ நான் உனக்கிரங்கினதுபோல நீயும் உன்னோடேகூட ஊழியஞ்செய்கிறவனுக்கு இரங்கவேண்டுமல்லவோ என்று சொல்லி,

௩௪ கோபம் அடைந்து அவன்பட்ட கடனையாவையுந் தனக்குக் கொடுத்துத் தீர்க்குமளவும் அவனை உபாதிக்கிறவர்களுக்கு ஒப்புக்கொடுத்தான்.

௩௫ அவன்வன் தன் சகோதரன் செய்த தப்பிதங்களை நீங்கள் மனப்பூருவமாய் மன்னியாமற்போனால் இப்படிப்போல உங்கள் பரம்பிதா உங்களுக்குஞ் செய்வாரென்றார்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) இஸ்திரீயாதிகளைக் குணமாக்கினது. (௩) விவாகத்தைக்குறித்துப் பரிசேயருக்கும் சீஷருக்கும் உத்தரவு சொன்னது. (௰௩) சிறுபிள்ளைகளை ஆசீர்வதித்தது. (௰௬) நித்தியசீவனைக்குறித்து ஒருவாலிபனுக்கு உத்தரவு சொன்னது. (௨௩) ஐசுவரியவான்கள் பராபரனுடைய இராச்சியத்தையடைகிறது அரிதென்பது. (௨௭) தம்மைப் பின்பற்றுகிறவர்களுக்கு வரும் பலன்.]

௧ மேற்சொல்லிய உபதேசங்களை இயேசுவானவர் சொல்லிமுடித்தபின்பு அவர் கலிலேயா நாட்டைவிட்டு யோர்தானுக்கருகேயிருக்கிற யூதேயா நாட்டின் எல்லைகளுக்குப் போனார்.

௨ அநேகசனங்கள் அவர்பின்சென்றார்கள். அவ்விடத்திலே அவர்களிலுள்ள (பிணியாளிகளை) அவர் குணமாக்கினார்.

௩ அப்பொழுது சில பரிசேயர் அவரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து புருஷனானவன் தன் மனைவியை எந்தநிமித்தமானாலுந் தள்ளிவிடலாமாவென்று கேட்டார்கள்.

௪ அதற்கவர் சொன்னது, ஆதியிலே சிருஷ்டிகர் மனிதரை உண்டாக்கினபொழுது ஒரு ஆணையும் ஒரு பெண்ணையும் உண்டாக்கினாரென்றதையும்,

௫ இதினிமித்தம் ஒருவன் தகப்பனையுந் தாயையும் விட்டுத் தன் மனைவியுடனே இசைந்திருப்பான். அவ்விருவரும் ஒரே சரீரத்தைப்போலிருப்பார்களென்று அவர் சொன்னதையும் நீங்கள் வாசிக்கவில்லையோ;

௬ அப்படியிருக்கிறபடியினாலே அவர்கள் இருவராயிராமல் ஒரே சரீரத்தைப்போலிருக்கிறார்கள். ஆதலாற் பராபரன் இணைத்ததை மனிதர் பிரிக்கக்கூடாதென்றார்.

௭ அவர்கள் சொன்னது, அப்படியானால் அவளைத் தள்ளுதலின் சீட்டைக்கொடுத்து அவளைத் தள்ளிவிடும்படிக்கு மோசேயென்பவர் என் கட்டளையிட்டாரென்றார்கள்.

௮ அதற்கு அவர் சொன்னது, உங்களிருதயங் கடினமானபடியால் நீங்கள் உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடும்படிக்கு மோசே யுங்களுக்கிடங்கொடுத்தார். ஆதிமுதலோ அப்படியிருந்ததில்லை.

௯ ஆகையால் எவனாகிலும் வேசிமார்க்கமாய் நடவாமலிருக்கிற மனைவியைத் தள்ளிவிட்டு வேறொருத்தியை விவாகம்பண்ணினால் அவன் விபசாரம்பண்ணுகிறான். தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணுகிறவனும் விபசாரம்பண்ணுகிறானென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰ அவருடைய சீஷர்கள் அவருடனே சொன்னது, விவாகம்பண்ணின புருஷனுடைய காரியம் இப்படியானால் விவாகம்பண்ணுகிறது நன்மையல்லவென்றார்கள்.

௰௧ அதற்கு அவர் சொன்னதாவது, திராணிபெற்றவர்களேயன்றி மற்றவர்கள் (நீங்கள் சொன்ன) வசனத்தின்படி செய்யமாட்டார்கள்.

௰௨ அண்ணகர்களுண்டு, சிலர் அப்படிப் பிறந்தார்கள். சிலர் மற்ற மனிதர்களாலே அண்ணகர்களாக்கப்பட்டார்கள். சிலர் பரலோக இராச்சியத்துக்காகத் தங்களை அண்ணகர்களாக்கினார்கள். அப்படிப் பற்றிக்கொள்ளத் திராணியுள்ளவனெவனோ அவன் அப்படிப் பற்றிக்கொள்ளக்கடவனென்றார்.

௰௩ அப்பொழுது அவர் பிள்ளைகளின்மேற் கைகளைவைத்து அவர்களுக்காகச் செபம்பண்ணும்படிக்கு அவரிடத்திற் கொண்டுவந்தார்கள். அவர்களைச் சீஷர் அதட்டினார்கள்.

௰௪ இயேசுவானவர் (அதைக்கண்டு) சொன்னதாவது, பிள்ளைகள் என்னிடத்திலே வருகிறதற்குத் தடைபண்ணாமல் இடங்கொடுங்கள். பரலோக இராச்சியம் அப்படிப்பட்டவர்களுடையதாயிருக்கிறதேயென்று சொல்லி,

௰௫ அவைகள்மேற் கைகளை வைத்துப் பின்பு அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப்போனார்.

௰௬ அப்பொழுது ஒருவன் வந்து அவரை நோக்கி, நல்லபோதகரே, நித்தியசீவனை அடையும்படிக்கு நான் என்ன நன்மையைச் செய்யவேண்டுமென்றான்.

௧௭ அவனுடனே அவர் சொன்னது. நீ என்னை நல்லவனென்று ஏன் சொல்லுகிறாய். பராபரனாகிய ஒருவரேயல்லாமல் நல்லவன் ஒருவனுமில்லையே நீ ஜீவனிற் பிரவேசிக்க விரும்பினால் கற்பனைகளைக் கைக்கொள்ளென்றார்

௧௮ அவை எவைகளென்று அவன் கேட்டான். அதற்கு இயேசுவானவர் சொன்னது, கொலைசெய்யாதிருப்பாயாக, விபசாரம்பண்ணாதிருப்பாயாக, களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக,

௧௯ உன் தகப்பனையுந் தாயையுங் கனம்பண்ணுவாயாக, உன்னைப்போலப் பிறனில் அன்புகூர்வாயாக, என்பவைகளேயென்றார்.

௨௰ அந்த வாலிபன் சொன்னது, இவைகளையெல்லாம் நான் சிறுவயதுமுதற் கைக்கொண்டிருக்கிறேன். நான் இன்னுஞ் செய்யவேண்டுவதென்னவென்றான்.

௨௧ இயேசுவானவர் சொன்னது. நீ பூரண சற்குணனாயிருக்க விரும்பினால் நீ போய் உனக்குண்டாயிருக்கிறவைகளை விற்றுப் பரலோகத்திலே உனக்குப் பொக்கிஷமுண்டாயிருக்கும்படிக்குத் தரித்திரருக்குக் கொடுத்துப் பின்பு வந்து என் பின்னே செல்லு என்றார்.

௨௨ வாலிபன் இந்த வசனத்தைக் கேட்டு மிகுந்த ஆஸ்திகளையுடையவனானபடியினாலே துக்கத்தோடே போய்விட்டான்.

௨௩ அப்பொழுது இயேசுவானவர் தம் சீஷரை நோக்கி, ஐசுவரியமுள்ளவன் பரலோக இராச்சியத்திற் பிரவேசிக்கிறது அரிதாயிருக்கின்றதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௪ அல்லாமலும் ஐசுவரியவான் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கிறதைப் பார்க்கிலும் ஒட்டகம் ஊசியின் காதிலே நுழைகிறதே எளிதாயிருக்கின்றதென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௫ அவருடைய சீஷர்கள் அதைக்கேட்டு மிகவும் பிரமித்து அப்படியானால் இரட்சிக்கப்படுகிறவர்கள் யாரென்றார்கள்.

௨௬ இயேசுவானவர் அவர்களைப் பார்த்துச் சொன்னதாவது, மனிதரால் இது கூடாத காரியந்தான். பராபரனோ எந்தக் காரியத்தையுஞ் செய்ய வல்லவரென்றார்.

௨௭ அப்பொழுது பேதுரு அவருடனே சொன்னதாவது, இதோ நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உம்மைப் பின்பற்றி வந்தோம். அதற்காக எங்களுக்கென்ன பலன் வருமென்றான்.

௨௮ இயேசுவானவர் சொன்னது, (சகலமும்) புதிதாக்கப்படுங் காலத்திலே மனிதனுடைய குமாரன் தனது மகிமையுள்ள பத்திராசனத்தில் வீற்றிருக்கும்பொழுது என்னைப் பின்பற்றி வந்த நீங்களும் இஸ்ரவேலாகிய பன்னிரண்டு கோத்திரங்களுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறவர்களாகப் பன்னிரண்டு பத்திராசனங்களிலிருப்பீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௯ அல்லாமலும் என் நாமத்தினிமித்தம் வீட்டையாவது சகோதரனையாவது சகோதரிகளையாவது தகப்பனையாவது தாயையாவது மனைவியையாவது பிள்ளைகளையாவது நிலங்களையாவது விட்டவனெவனோ அவன் நூறத்தனையாய்ப் பலனடைந்து நித்திய ஜீவனையுஞ் சுதந்தரித்துக்கொள்வான்.

௩௰ ஆகிலும் முந்தினோராகிய அநேகர் பிந்தினோராயிருப்பார்கள். பிந்தினோராகிய (அநேகர்) முந்தினோராயிருப்பார்கள்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) திராட்சத்தோட்டத்தில் வேலைசெய்கிறவர்களை உவமையாகக் காட்டியது. (௰௭) தமமுடைய பாடுகளை முன்னறிவித்தது. (௨௰) செபெதேயுவின் குமாரருக்குச் சொன்ன உத்தரவினாலே மனத்தாழ்மையைப் போதித்தது. (௩௰) குருடர் இரண்டுபேருக்குப் பார்வையைக் கொடுத்தது.]

௧ அதெப்படியெனிற் பரலோக இராச்சியத்தின் (ஆளுகை) ஒரு வீட்டெசமானுடைய (நடக்கைக்) கொப்பாயிருக்கின்றது. அவன் தனது திராட்சத்தோட்டத்திலே வேலைசெய்யக் கூலிக்காரரை அழைத்துக்கொண்டு வரும்படிக்கு,

௨ அதிகாலையிலே புறப்பட்டுச் சில கூலிக்காரரைக் கண்டு நாளொன்றுக்கொரு பணங் கூலி தீர்மானம்பண்ணி அவர்களைத் தனது திராட்சத்தோட்டத்திற்கனுப்பிவந்தான்.

௩ மூன்றாம் மணிவேளையிலேயும் அவன் புறப்பட்டுக் கடைத்தெருவிலே வீணராய் நிற்கிறவேறு சிலரைக்கண்டு,

௪ நீங்களுந் திராட்சத்தோட்டத்திற்போங்கள். நியாயமானபடி உங்களுக்குக் கூலி தருவேனென்று அவர்களுக்குச் சொன்னான் அவர்கள் போனார்கள்.

௫ ஆறாம் ஒன்பதாம் மணிவேளைகளிலே அவன் திரும்பப் புறப்பட்டு அப்படியே செய்தான்.

௬ பின்பு பதினோராம் மணிவேளையிலே அவன் புறப்பட்டு வீணராய் நிற்கிற வேறே சிலரைக்கண்டு பகல் முழுவதும் நீங்கள் இங்கே ஏன் வீணராய் நிற்கிறீர்களென்று கேட்டான்.

௭ அவர்கள் ஒருவரும் எங்களை வேலை கொள்ளவில்லையென்றார்கள். அவன் சொன்

ன்று, நீங்களும் திராட்சத்தோட்டத்திற்குப் போங்கள். நியாயமானபடி கூலியை வாங்கிக்கொள்வீர்களென்றான்.

௮ அஸ்தமனமானபொழுது திராட்சத்தோட்டத்துக்கெசமான் தன் காரியக்காரனுடனே சொன்னது, நீ கூலிக்காரரையழைத்துப் பின்பு வந்தவர்களைத் தொடங்கி முன்பு வந்தவர்கள்வரைக்குங் கூலியைக்கொடு என்றான்.

௯ அந்தப்படி பதினோராம் மணிவேளையில் வேலைகொள்ளப்பட்டவர்கள் வந்து ஆளுக்கு ஒவ்வொரு பணமாகப் பணத்தை வாங்கிக்கொண்டார்கள்.

௰ காலையில் வேலைக்கு வந்தவர்களுஞ் சேர்ந்து தங்களுக்கு அதிகக் கூலி வருமென்றெண்ணினார்கள். அவர்களும் ஆளுக்கு ஒவ்வொரு பணமாகப் பணத்தை வாங்கினார்கள்.

௰௧ அதை வாங்குகிறபொழுது அவர்கள் வீட்டெசமானை நோக்கி,

௰௨ பின்னே வந்த இவர்கள் ஒரு மணிநேரமாத்திரம் வேலைசெய்தார்கள். இவர்களைப் பகலின் பாரத்தையும் வெயிலையுஞ் சுமந்த எங்களுக்குச் சமனாக்கினீரென்று முறுமுறுத்தார்கள்.

௰௩ அவர்களில் ஒருவனுக்கு மாறுத்தரமாக அவன் சொன்னதாவது, சிநேகிதனே, நான் உனக்கு அநியாயஞ்செய்யவில்லை. நீ ஒரு பணங்கூலிக்காக என்னோடே சம்மதிக்கவில்லையோ.

௰௪ உன்னுடையதை நீ வாங்கிக்கொண்டு போ. நான் உனக்குக் கொடுத்ததுபோலப் பின்னே வந்த இவனுக்குங் கொடுக்கமனதாயிருக்கிறேன்.

௰௫ என்னுடையதை நான் என் இஷ்டப்படியே செய்யக்கூடாதா. நான் தயவாயிருக்கிறபடியினாலேயோ நீ வன்கண்ணனாயிருக்கிறாயென்றான்.

௰௬ இவ்விதமாகப் பிந்தினோர் முந்தினோராயிருப்பார்கள். முந்தினோர் பிந்தினோராயிருப்பார்கள். மேலும் அழைக்கப்பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சிலர் மாத்திரமிருக்கிறார்களென்றார்.

௰௭ இயேசுவானவர் எருசலேம் பட்டணத்திற்குப் பிரயாணமாய்ப் போகிறபொழுது வழியிலே அவர் பன்னிரண்டு சீஷரை மாத்திரம் அழைத்து அவர்களுடனே சொன்னது,

௰௮ இதோ, எருசலேமுக்குப் போகிறோம் அங்கே மனிதனுடைய குமாரன் பிரதான ஆசாரியருக்கும் வேதபாரகருக்கும் ஒப்புக்கொடுக்கப்படுவான். அவர்கள் அவனை மரணத்திற்குள்ளாக்கும்படி தீர்ப்புக்கொடுத்து,

௰௯ அவனைப் பரியாசம்பண்ணவும் வாரினால் அடிக்கவுஞ் சிலுவைமரத்திலறையவும் புறதேசத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள். பின்பு மூன்றாநாளிலே அவன் உயிரோடெழுந்திருப்பானென்றார்.

௨௰ அக்காலத்திலே செபெதேயுவின் குமாரருடைய தாய் தன் குமாரரோடுகூட அவரிடத்தில் வந்து சாஷ்டாங்கமாய் வணங்கி ஒரு விண்ணப்பம்பண்ணவிரும்பினாள்.

௨௰௧ அவர் உனக்கென்னவேண்டுமென்றார். அவள் அவருடனே சொன்னதாவது, நீர் இராசரிய பரிபாலனஞ்செய்யும்பொழுது என் குமாரராகிய இவ்விரண்டுபேரில் ஒருவன் உமது வலதுபாரிசமாகவும் ஒருவன் உம்முடைய இடதுபாரிசமாகவும் இருக்கும்படி செய்யவேண்டுமென்றாள்.

௨௰௨ அதற்கு இயேசுவானவர் சொன்னது, நீங்கள் கேட்டது உங்களுக்குத் தானே தெரியவில்லை. நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்களா? நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தை நீங்கள் பெற்றுக்கொள்வீர்களாவென்றார். அவர்கள் அப்படியே செய்வோமென்றார்கள்.

௨௰௩ அப்பொழுது அவர் சொன்னது, என் பாத்திரத்தில் குடிப்பீர்கள். நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தையும் பெற்றுக்கொள்வீர்கள். அது மெய்தான். ஆனாலும் என் பிதாவினாலே எவர்கள் குறிக்கப்பட்டிருக்கிறார்களோ அவர்களுக்கேயன்றி (மற்றொருவருக்கும்) என் வலதுபாரிசத்திலேயும் என் இடதுபாரிசத்திலேயும் உட்கார்ந்திருக்கிற(ஸ்தானத்தை) நான் கொடுக்கக்கூடாதென்றார்.

௨௰௪ மற்றப்பத்துப்பேரும் (அந்தச் சங்கதியைக்) கேட்டு அந்தச் சகோதரிருவரைக்குறித்து விசனப்பட்டார்கள்.

௨௰௫ அப்பொழுது இயேசுவானவர் அவர்களையழைத்துச் சொன்னதாவது, உலகத்தாருக்குள்ளே பிரபுக்கள் குடிகளை (இறுமாப்பாய்) ஆளுகிறார்கள். அல்லாமலும் பெரியோர்கள் அவர்கள்மேல் (கண்டிப்பான) அதிகாரத்தைச் செலுத்துகிறார்களென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

௨௰௬ உங்களுக்குள்ளே அப்படியிருக்கக்கூடாது. உங்களில் எவனாகிலும் பெரியவனாயிருக்கவேண்டுமென்றிருந்தால் அவன் உங்கள் ஊழியக்காரனாயிருக்கக்கடவன்.

௨௰௭ உங்களில் எவனாகிலும் முதலாளியாயிருக்கவேண்டுமென்றிருந்தால் அவன் உங்கள் பணிவிடைக்காரனாயிருக்கக்கடவன்.

௨௰௮ மனிதனுடைய குமாரனும் ஊழியங்கொள்ளும்படிக்கு வராமல் ஊழியஞ்செய்யும்படிக்கும் அநேகரை மீட்கும்பொருளாகத் தன் ஜீவனைத் தரும்படிக்குமே வந்தானென்றார்.

௨௰௯ அவர்கள் இயெரிகோபட்டணத்திலிருந்து புறப்பட்டுப் போகையில் அநேக சனங்கள் அவர் பின்சென்றார்கள்.

௩௰ அப்பொழுது குருடரான இரண்டு பேர் வழியருகே உட்கார்ந்திருந்து இயேசுவானவர் வழியே வருகிறாரென்று கேள்விப்பட்டு ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கிரங்குமென்று கூப்பிட்டார்கள்.

௩௰௧ சனங்கள் (அதைக் கேட்டு) அவர்கள் பேசாமலிருக்கும்படிக்கு அவர்களை அதட்டினார்கள். அவர்களோ ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கிரங்குமென்று அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

௩௰௨ அப்பொழுது இயேசுவானவர் நின்று அவர்களை அழைத்து நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டுமென்றிருக்கிறீர்கள் என்றார்.

௩௰௩ அவர்கள் சொன்னது, ஆண்டவரே, எங்கள் கண்களைத் திறக்கவேண்டுமென்றிருக்கிறோமென்றார்கள்.

௩௰௪ இயேசுவானவர் உருக்கமாயிரங்கி அவர்களுடைய கண்களைத் தொட்டார். உடனே அவர்கள் பார்வையடைந்து அவர் பின்னே சென்றார்கள்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் ஒரு கழுதையின்மேலேறி எருசலேமிற் பிரவேசித்தது. (௰௨) தேவாலயத்திலிருந்த வியாபாரிகளைத் துரத்தினது. (௰௭) அத்திமரத்தைச் சபித்தது. (௨௰) தமது அதிகாரத்தைக் குறித்து ஆசாரியர் முதலானவர்களுக்கு உத்தரவு சொன்னது. (௨௮) இரண்டு குமாரரை உவமையாகக் காட்டியது. (௩௩) எசமானுடைய ஊழியக்காரரைக் கொலைசெய்த தோட்டக்காரரை உவமையாகக் காட்டியது.]

அவர்கள் எருசலேம் பட்டினத்திற்குச் சமீபமாய் ஒலிவமலையினருகேயிருக்கிற பெத்துபாசேயூருக்கு வந்தபொழுது இயேசுவானவர் இரண்டு சீஷரை நோக்கி,

௨ உங்களுக்கெதிராயிருக்கிற அந்தக் கிராமத்திலே போங்கள். அங்கே நீங்கள் (போன) உடனே கட்டப்பட்டிருக்கிற ஒரு கழுதையையும் அதினோடே கூட ஒரு குட்டியையுங் காண்பீர்கள்.

௩ அவைகளை அவிழ்த்து எனக்காகக் கொண்டுவாருங்கள். ஒருவன் உங்களுக்கு ஏதாகிலுஞ் சொன்னால் ஆண்டவருக்கு இவைகள் வேண்டுமென்று சொல்லுங்கள். உடனே அவன் அவைகளை அனுப்பிவிடுவானென்று சொல்லி அனுப்பினார்.

௪ (சீயோன் குமாரத்தியெனும் எருசலேம் பட்டினமே) இதோ, உன் இராசா மனத்தாழ்மையுள்ளவருமாய் நுகத்தடிக்குக் கீழ்ப்பட்ட கழுதையின் குட்டியாகிய கழுதையின்மேலேறியிருக்கிறவருமாய் உன்னிடத்திற்கு வருகிறாரென்று சீயோன் குமாரத்தியுடனே சொல்லுங்களென்று,

௫ தீர்க்கதரிசியினாலே சொல்லப்பட்டது நிறைவேறும்படிக்கு அவையெல்லாம் நடந்தன.

௬ இயேசுவானவர் கட்டளையிட்டபடியே செய்ய சீஷர்கள் போய்,

௭ கழுதையையும் அதின் குட்டியையுங் கொண்டுவந்து பின்பு தங்கள் வஸ்திரங்களை அவைகளின்மேற் போட்டு அவரை அவைகளின்மேலே ஏறிப்போனார்கள்.

௮ திரளான சனங்களோ தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள். வேறு சிலர் மரங்களின் கிளைகளைத் தறித்து வழியிலே தெளித்தார்கள்.

௯ மேலும் முன்நடப்பாரும் பின்நடப்பாருமாகிய சனங்கள் தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா* பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்படத்தக்கவர். உன்னதமான வானங்களில் ஓசன்னா என்று ஆர்ப்பரித்தார்கள்.

௰ அப்படி அவர் எருசலேம் பட்டினத்திற் பிரவேசிக்கையிற் பட்டினத்தாரெல்லாருங் கலக்கமடைந்து இவர் ஆரென்று விசாரித்தார்கள்.

௰௧ சனங்கள் சொன்னது, இவர் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்த தீர்க்கதரிசியாகிய இயேசு என்றார்கள்.

௰௨ இயேசுவானவர் தேவாலயத்திற் பிரவேசித்து அதிலே விற்கிறவர்களுங் கொள்ளுகிறவர்களுமாகிய யாவரையும் வெளியே துரத்திக் காசுக்காரருடைய பலகைகளையும் புறாக்களை விற்கிறவர்களுடைய ஆசனங்களையுங் கவிழ்த்துப்போட்டு,

௰௩ என்னுடைய ஆலயஞ் செபத்துக்கான ஆலயமென்னப்படுமென்றெழுதியிருக்கின்றது. நீங்களோ அதைக் கள்ளர் குகையாக்கினீர்களென்று அவர்களுடனே சொன்னார்.

௰௪ அல்லாமலுங் குருடருஞ் சப்பாணிகளுந் தேவாலயத்தில அவரிடத்திற்கு வந்தபொழுது அவர்களைக் குணமாக்கினார்.

௰௫ அவர் செய்த அதிசயங்களையுந் தாவீதின் குமாரனுக்கு ஓசன்னாவென்று தேவாலயத்திற் கூப்பிடுகிற பிள்ளைகளையும் பிரதான ஆசாரியரும் வேதபாரகருங் கண்டபொழுது நதவிசனம் அடைந்து,

௰௬ அவரை நோக்கி, இவர்கள் சொல்லுகிறதைக் கேட்கிறீரா என்றார்கள். அதற்கு இயேசுவானவர் சொன்னது, கேட்கிறேன். குழந்தைகள் பாலகருடைய வாயினால் துதியையுண்டுபண்ணினீரென்கிறதை நீங்கள்

---

* ஓசன்னாவென்பதற்கு இப்பொழுது இரட்சணியத்தைச் செய்வீராக என்பது அர்த்தமாம்.

ஒருக்காலும் வாசிக்கவில்லையோ என்று சொல்லி,

௧௭ அவர்களை விட்டுப் பட்டணத்திலிருந்து புறப்பட்டுப் பெத்தானியூருக்குப் போய், அங்கே இராத்திரி தங்கினார்.

௧௮ காலையிலே அவர் மறுபடியும் பட்டணத்திற்குப் போகையில் அவருக்குப் பசியுண்டானபொழுது,

௧௯ வழியருகே ஒரு அத்திமரத்தைக் அவர் கண்டு அதினிடத்திற்போய் அதிலே இலைகளையேயன்றிக் கனிகளைக் காணாமலிருக்கிறபொழுது அவர் அதைநோக்கி, இனிமேலொருக்காலும் உன்னிற்கனியுண்டாகாதிருக்கக்கடவதென்று சொன்னார். உடனே அத்திமரம் பட்டுப்போயிற்று.

௨௰ சீஷர்கள் அதைக்கண்டு ஐயோ, இந்த அத்திமரம் எப்படிச் சீக்கிரமாய்ப் பட்டுப் போயிற்றென்று ஆச்சரியத்தோடே சொன்னார்கள்.

௨௧ இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது, நீங்கள் சந்தேகப்படாமல் விசுவாசித்தால் இந்த அத்திமரத்திற் சம்பவித்ததை நீங்கள் செய்வதுமல்லாமல் நீங்கள் இந்த மலையை நோக்கி, எழும்பிச் சமுத்திரத்திலே தள்ளப்பட்டுவாயாகவென்று சொன்னால் உடனே அப்படியாகுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௨ அல்லாமலும் ஜெபத்திலே நீங்கள் எதைக்கேட்டாலும் விசுவாசித்தீர்களானால் அதைப்பெறுவீர்களென்றார்.

௨௩ அவர் தேவாலயத்தில் வந்து உபதேசம் பண்ணுகிறபொழுது பிரதான ஆசாரியருஞ் சனங்களின் மூப்பருமவரிடத்தில் வந்து எந்த அதிகாரத்தினாலே நீர் இவைகளைச் செய்கிறீர். இப்படிப்பட்ட அதிகாரத்தையுமக்குக் கொடுத்தவர் யாரென்றார்கள்.

௨௪ அதற்கு இயேசுவானவர் சொன்னது, நானும் உங்களிடத்தில் ஒரு காரியத்தைக் கேட்பேன். அதை நீங்களெனக்குச் சொன்னீர்களானால் நான் இவைகளைச் செய்கிற அதிகாரமின்னதென்று நானும் உங்களுக்குச் சொல்லுவேன்.

௨௫ யோவான் கொடுத்த ஞானஸ்நானம் ஆராலுண்டாயிருந்தது. பராபரனாலோ மனிதராலோ அதைச் சொல்லுங்களென்றார். அவர்களோ அது பராபரனாலுண்டாயிற்றென்றோமானால் இவர் ஏன் அவனை விசுவாசிக்கவில்லையென்பார்.

௨௬ அது மனிதராலுண்டாயிற்றென்றோமாகிற் சனங்களெல்லாரும் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணுகிறபடியினாலே அவர்களுக்குப் பயப்படுகிறோமென்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணி,

௨௭ பின்பு இயேசுவானவரை நோக்கி, எங்களுக்குத் தெரியாதென்றார்கள். அப்பொழுது அவரும் அவர்களுடனே சொன்னது, நான் இவைகளைச் செய்கிற அதிகாரம் இன்னதென்று நானும் உங்களுக்குச் சொல்லமாட்டேன்.

௨௮ ஆகிலும் உங்களுக்கெப்படித் தோன்றுகின்றது. ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரருண்டு. அவர்களில் மூத்தவனிடத்தில் அவன் வந்து மகனே, நீ இன்றைக்கென் திராட்சத்தோட்டத்திற்போய் வேலைசெய் என்றான்.

௨௯ அதற்கவன் போகமாட்டேனென்றான். பின்பு அவன் மனஸ்தாபப்பட்டுப் போனான்.

௩௰ தகப்பன் இளையவனிடத்திலும் வந்து அப்படித்தானே சொன்னான். அதற்கவன் ஐயா, உடனே போகிறேனென்று சொல்லியும் போகவில்லை.

௩௧ இவ்விருவரிலெவன் தகப்பனுடைய சித்தத்தின்படி செய்தானென்று அவர் கேட்டபொழுது மூத்தவனே செய்தானென்றார்கள். அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னதாவது, ஆயக்காரரும் வேசிகளும் உங்களுக்கு முன்னே பராபரனுடைய இராச்சியத்திலே பிரவேசிக்கிறார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௨ எப்படியென்றால், யோவான் நீதிமார்க்கமாய் உங்களிடத்தில் வந்தும், நீங்கள் அவனை விசுவாசிக்கவில்லை. ஆயக்காரரும் வேசிகளுமோ அவனை விசுவாசித்தார்கள். அதை நீங்கள் கண்டும் பின்பு அவனை விசுவாசிக்கும்படிக்கு மனஸ்தாபப்படாமலிருக்கிறீர்கள்.

௩௩ வேறு உவமையைக் கேளுங்கள். ஒரு வீட்டெசமானுண்டு. அவன் ஒரு திராட்சத்தோட்டத்தையுண்டாக்கி அதைச் சுற்றி வேலியடைத்து அதில் ஆலையை நாட்டிக் கோபுரத்தையுங் கட்டிப் பின்பு அதைத் தோட்டக்காரர் வசமாய் விட்டுப் புறத்தேசத்திற்குப் போனான்.

௩௪ கனிகாலஞ் சமீபமானபொழுது கனிகளை வாங்கிக்கொண்டுவரும்படிக்குத் தன் ஊழியக்காரரைத் தோட்டக்காரரிடத்தில் அனுப்பினான்.

௩௫ தோட்டக்காரரோ அவன் ஊழியக்காரரைப் பிடித்து ஒருவனை அடித்து ஒருவனை வெட்டி மற்றொருவன்மேற் கல்லெறிந்து கொன்றார்கள்.

௩௬ மறுபடியும் எசமான் முந்தினவர்களிலும் அதிகமான வேறு ஊழியக்காரரை அனுப்பினான். அவர்களையும் அப்படியே செய்தார்கள்.

௩௭ கடைசியிலே அவன் என்னுடைய குமாரனுக்கு அஞ்சுவார்களென்றெண்ணித் தன் குமாரனை அவர்களிடத்தில் அனுப்பினான்.

௩௮ தோட்டக்காரரோ குமாரனைக் கண்டபொழுது இவன் சுதந்தரவாளி, இவனைக் கொன்று இவனுடைய சுதந்தரத்தைக் கட்டிக்கொள்ளுவோம் வாருங்களென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டு,

௩௯ அவனைப் பிடித்துத் திராட்சத் தோட்டத்திற்குப் புறம்பே தள்ளிக் கொலை செய்தார்கள்.

௪௦ ஆகையால் திராட்சத் தோட்டத்தின் எசமான் வரும்பொழுது அந்தத் தோட்டக்காரரை என்ன செய்வானென்று கேட்டார்.

௪௧ அதற்கு அவர்கள் சொன்னது, அவன் அந்தப் பொல்லாதவர்களைக் கடினமாய் அழித்துத் தகுதியான காலங்களில் தனக்குக் கனிகளைக் கொடுக்கும் வேறே தோட்டக்காரர் வசமாய்த் திராட்சத் தோட்டத்தை விடுவானென்றார்கள்.

௪௨ இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னதாவது, வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலையான கல்லாயிற்று. அது பராபரனாலே ஆயிற்று. அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறதென்று வேதத்திலே நீங்கள் ஒருக்காலும் வாசித்ததில்லையா.

௪௩ அப்படியிருக்க, பராபரனுடைய இராச்சியம் உங்களிலிருந்து நீக்கப்பட்டு அதின் கனிகளைத் தருகிற சனங்களுக்குக் கொடுக்கப்படுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௪ அன்றியும் இந்தக் கல்லின்மேல் விழுகிறவன் நொறுக்கப்படுவான். இதுவோ எவன்மேல் விழுமோ அவனை நருங்கடிக்குமென்றார்.

௪௫ பிரதான ஆசாரியரும் பரிசேயரும் அவருடைய உவமைகளைக் கேட்டுத் தங்களைக் குறித்துப் பேசுகிறாரென்று அறிந்து,

௪௬ அவரைப் பிடிக்க மனதாயிருந்தார்கள். ஆகிலும் சனங்கள் அவரைத் தீர்க்கதரிசியென்றெண்ணினபடியினாலே அவர்கள் சனங்களுக்குப் பயந்து (அப்படிச் செய்யாமலிருந்தார்கள்.)

## உஉ. அதிகாரம்.

[(௧) தன்குமாரனுக்குக் கலியாணம்பண்ணின இராசாவைக் காட்டிய உவமை. (௰௫) இராசாவுக்குத் தீர்வை கொடுக்க வேண்டுமென்பது. (௨௩) உயிரோடெழும்புதலைக் குறித்துச் சதுசேயருக்குப் புத்தி சொன்னது. (௩௪) பிரதான கற்பனையைக் குறித்து வேதசாஸ்திரிக்கு உத்தரவு சொன்னது. (௪௧) மேசியாவைக் குறித்துப் பரிசேயரிடத்திலே விசாரித்தது.]

இயேசுவானவர் மறுபடியும் உவமைகளாய் அவர்களுடனே சொன்னதாவது.

௨ பரலோக இராச்சியத்தினை (அனுகை) தன் குமாரனுக்குக் கலியாணஞ்செய்த இராசனுடைய (நடக்கைக்)கொப்பாயிருக்கிறது.

௩ அழைக்கப்பட்டவர்களைக் கலியாணத்திற்கு வரச்சொல்லும்படிக்கு அவன் தன் ஊழியக்காரரை அனுப்பினான். அவர்களோ வரமாட்டோமென்றார்கள்.

௪ மறுபடியும் அவன் வேறே ஊழியக்காரரை நோக்கி, அழைக்கப்பட்டவர்களிடத்திற்கு நீங்கள் போய் என் விருந்தை எத்தனம்பண்ணினேன். என் எருதுகளுங் கொழுத்த செந்துக்களும் அடிக்கப்பட்டன. எல்லாம் எத்தனமாயிருக்கிறது. கலியாணத்திற்கு வாருங்களென்று சொல்லுங்களென்று அனுப்பினான்.

௫ அவர்களோ அதையெண்ணாமல் ஒருவன் தன் வயலுக்கும் ஒருவன் தன் வியாபாரத்திற்கும் போய்விட்டார்கள்.

௬ மற்றவர்களோ அவனுடைய ஊழியக்காரரைப் பிடித்து நிந்தித்துக் கொலைசெய்தார்கள்.

௭ இராசா அதைக் கேட்டுக் கோபமடைந்து தன் சேனைகளை அனுப்பி, (அவர்களால்) அந்தக் கொலைபாதகரையழித்து அவர்களுடைய பட்டணத்தையுஞ் சுட்டெரித்தான்.

௮ அப்பொழுது அவன் தன் ஊழியக்காரரை நோக்கி, கலியாணவிருந்து எத்தனமாயிருக்கிறது. அழைக்கப்பட்டவர்களோ அதற்குப் பாத்திரரல்லாதிருந்தார்கள்.

௯ ஆகையால் நீங்கள் வழிச்சந்திகளிற் போய் அகப்படுகிற யாவரையுங் கலியாணவிருந்துக்கு அழைத்து வாருங்களென்றான்.

௰ அந்த ஊழியக்காரர் வழிகளிற் புறப்பட்டுப் போய் அகப்பட்ட பொல்லாதவர்களையும் நல்லவர்களையுங் கூட்டிவந்தார்கள். விருந்துசாலை பந்தியிருக்கிறவர்களால் நிறைந்தது.

௰௧ பின்பு பந்தியிருக்கிறவர்களைப் பார்க்கும்படிக்கு இராசா பிரவேசித்தபொழுது கலியாணவஸ்திரத்தைத் தரித்திராத ஒருவனை அங்கே கண்டு,

௰௨ சிநேகிதனே, நீ கலியாண வஸ்திரமில்லாதவனாய் இங்கே எப்படிப் பிரவேசித்தாயென்று சொன்னபொழுது அவன் பேசாமலிருந்தான்.

௰௩ அப்பொழுது இராசா ஊழியக்காரரை நோக்கி, இவனுடைய கால்களையுங் கைகளையுங் கட்டி இவனை எடுத்துப்போய் அழுகையும் பற்கடிப்புமுண்டாயிருக்கிற மிகுந்த இருளிலே போடுங்களென்று கட்டளையிட்டான்.

௰௪ அந்தப்படியே அநேகர் அழைக்கப்பட்டிருக்கிறார்கள். சிலர்மாத்திரந் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார்களென்றார்.

௰௫ அப்பொழுது பரிசேயர் போய் வசனங்களில் அவரை அகப்படுத்தும்படிக்கு யோசனைபண்ணி,

௰௬ தங்கள் சீஷர்களையும் ஏரோதேயின் மனிதர்களையும் அவரிடத்திற்கு அனுப்பினார்கள். (அவர்கள் வந்து) போதகரே, நீர் சத்தியமுள்ளவருமாய்ப் பராபரனுடைய மார்க்கத்தைச் சத்தியமாய்ப் போதிக்கிறவருமாய் மனிதருடைய முகத்தைப் பாராமலிருக்கிறபடியால் ஒருவனையுங்குறித்துக் கவலையில்லாதவருமாயிருக்கிறீரென்று அறிந்திருக்கிறோம்.

௰௭ ஆதலால் உமக்கெப்படித் தோன்றுகின்றது. இராயனுக்கு வரிகொடுக்கிறது நியாயமாயிருக்கின்றதோ இல்லையோ அதை யெங்களுக்குச் சொல்லவேணுமென்றார்கள்.

௰௮ இயேசுவானவர் அவர்களுடைய துற்குணத்தையறிந்து வஞ்சகரே, நீங்களென்னை யேன் சோதிக்கிறீர்கள்.

௰௯ வரிக்காசை எனக்குக் காண்பியுங்களென்றார். அவர்கள் ஒரு தெனாரியப்பணத்தை அவருக்குக் கொடுத்தார்கள்.

௨௰ அப்பொழுது அவர் சொன்னது, இந்தச் சொரூபமும் மேலெழுத்தும் ஆருடையதென்றார். அது இராயனுடையதென்றார்கள்.

௨௧ அவர் சொன்னது, அப்படியானால் இராயனுடையதை இராயனுக்கும் பராபரனுடையதைப் பராபரனுக்குஞ் செலுத்துங்களென்றார்.

௨௨ அவர்கள் அதைக்கேட்டு ஆச்சரியப்பட்டு அவரைவிட்டுப்போனார்கள்.

௨௩ உயிரோடெழுந்திருக்கும் மறுமையில்லையென்று சொல்லுகிற சதுசேயர் அந்நாளிலே அவரிடத்தில் வந்து,

௨௪ போதகரே, புருஷனொருவன் பிள்ளைகளில்லாமல் இறந்துபோனால் அவனுடைய சகோதரன் அவனுக்குச் சந்ததியுண்டாகும்படிக்கு அவனுடைய மனைவியை விவாகம்பண்ணவேணுமென்று மோசே சொன்னாரே.

௨௫ அப்படியானால் எங்களிடத்திற் சகோதரர் ஏழுபேரிருந்தார்கள். அவர்களில் மூத்தவன் விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமல் மரித்துத் தன் மனைவியைத் தன் சகோதரனுக்கு விட்டான்.

௨௬ அப்படி இரண்டாஞ் சகோதரன் முதல் ஏழாஞ்சகோதரன்வரைக்கும் (அவளை விவாகம்பண்ணிப் பிள்ளையில்லாமல் மரித்தார்கள்.)

௨௭ எல்லாருக்கும்பின்பு அந்தப்பெண்ணும் இறந்துபோனாள்.

௨௮ அப்படி அவ்வேழுபேரும் அவளை விவாகம்பண்ணினபடியால், உயிரோடெழுந்திருக்குங்காலத்திலே அவள் அவர்களில் எவனுக்கு மனைவியாயிருப்பாளென்று கேட்டார்கள்.

௨௯ இயேசுவானவர் அவர்களுக்குமாறுத்தரமாகச் சொன்னதாவது, வேத எழுத்துக்களையும் பராபரனுடைய பலத்தையும் நீங்கள் அறியாதிருக்கிறபடியால் தப்பாய் நினைத்திருக்கிறீர்கள்.

௩௰ மறுமையிலே பெண் கொள்வதுங் கொடுப்பதுமில்லாது. அவர்கள் பரலோகத்திலே பராபரனுடைய தூதரைப்போலிருக்கிறார்கள்.

௩௧ மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக்குறித்தோவென்றால் நான் ஆபிரகாமினுடைய தேவனுமாய் ஈசாக்கினுடைய தேவனுமாய் யாக்கோபினுடைய தேவனுமாயிருக்கிறேனென்று,

௩௨ பராபரனாலே உங்களுக்குரைக்கப்பட்டதை நீங்கள் வாசிக்கவில்லையோ. அவர் மரித்தோருடைய தேவனல்லாமற் சீவனுள்ளோருடைய தேவனாயிருக்கிறாரென்றார்.

௩௩ சனங்கள் அவருடைய உபதேசத்தைக்கேட்டு அதைக்குறித்துப் பிரமித்துக்கொண்டார்கள்.

௩௪ அவர் சதுசேயர் பேசாமலிருக்கும்படி செய்ததைப் பரிசேயர்கேட்டு அவரிடத்திற் கூடிவந்தார்கள்.

௩௫ அவர்களில் நியாயசாஸ்திரியொருவன் அவரைச் சோதிக்கும்படிக்கு,

௩௬ போதகரே, வேதத்திலே எது பிரதானமான கற்பனையாயிருக்கின்றதென்று கேட்டான்.

௩௭ இயேசுவானவர் சொன்னது, உன் தேவனாகிய பராபரனில் உன் முழுஇருதயத்தோடும் உன் முழு ஆத்துமாவோடும் உன் முழுமனதோடும் அன்புகூர்வாயாக,

௩௮ என்பது, முதலாவது பிரதானமான கற்பனையாயிருக்கின்றது.

௩௯ அதற்கொப்பாயிருக்கிற இரண்டாங் கற்பனையென்னவென்றால் பிறனிடத்தில் உன்னைப்போல அன்புகூர்வாயாக என்பதே.

௪௰ இவ்விரண்டு கற்பனைகளில் நியாயப்பிரமாணம் முழுமையுந் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கின்றனவென்றார்.

௪௧ மேலும் பரிசேயர் கூடியிருக்கையில் இயேசுவானவர் அவர்களை நோக்கி,

௪௨ கிறிஸ்துவைக்குறித்து உங்களுக்கெப்படித் தோன்றுகின்றது. அவர் யாருடைய குமாரனென்று கேட்டார். அவர் தாவீதினுடைய குமாரனென்றார்கள்.

௪௩ இயேசுவானவர் சொன்னது, அப்படியானால் தான் உம்முடைய சத்துருக்களை

உமது பாதப்படியாக்கிப்போடுமளவாக்கு
மட்டும் நீர் என்னுடைய வலது பாரிசத்திலே
யுட்காருமென்று பராபரன் என்கர்த்த
ருடனேசொன்னாரென்று,

௪௪ தாவீது (பரிசுத்த) ஆவியினாலே
சொல்லி, (இவ்விதமாய்) அவரைக்கர்த்த
ரென்றுசொல்லியிருக்கிறதெப்படி.

௪௫ தாவீது அவரைக்கர்த்தரென்று
சொல்லியிருக்க, அவர் எப்படி அவனு
டையகுமாரனாயிருப்பாரென்றார்.

௪௬ அதற்குமாறுத்தரமாக ஒருவனும்
ஒருவார்த்தையையுஞ்சொல்லத்திராணியி
ருந்ததில்லை. அந்நாள்முதற்கொண்டு ஒரு
வனும் அவரிடத்தில் வினாக்களைக்கேட்கத்
துணிந்ததுமில்லை.

## ௨௩. அதிகாரம்.

[(௧) பரிசேயரைக்குறித்த துச்சனங்களுக்கு
டபுத்திசொன்னது. (௰௩) பரிசேயருக்கு
எட்டுவகை வேதனைகளை அறிவித்தது.
(௩௭) எருசலேம்நகரம் அழிக்கப்படு
மென்றுமுன்னறிவித்தது.]

அப்பொழுது இயேசுவானவர் சனங்க
ளுக்குந் தம்முடைய சீஷருக்குஞ்சொன்ன
தாவது.

௨ வேதபாரகரும் பரிசேயரும் மோ
சேயினுடைய ஆசனத்திலிருக்கிறவர்கள்.

௩ ஆகையால் நீங்கள் கைக்கொள்ளும்
படிக்கு அவர்கள் உங்களுக்குச்சொல்லுகிற
யாவையுங் கைக்கொண்டு நடக்கக்கடவீர்
கள். அவர்களுடைய கிரியைகளின்படியோ
செய்யாமலிருங்கள். என்னத்தினாலென்னில்,
அவர்கள் சொல்லியுஞ்செய்யாமலிருக்கிறா
ர்கள்.

௪ அல்லாமலும் அவர்கள் பாரமாயுஞ்
சுமப்பதற்கரிதாயுமிருக்கிற சுமைகளைக்
கட்டிமனிதருடைய தோள்களின்மேல்வை
க்கிறார்கள். தாங்களோ அவைகளை
ஒருவிரலினாலும் அசைக்கமனமில்லாமலி
ருக்கிறார்கள்.

௫ தங்கள் கிரியைகளையாவையும் அவர்
கள் மனிதர் காணப்படும்படிக்குச்செய்
கிறார்கள். கற்பனைகள் எழுதியிருக்கிற நா
டாக்களை அகலமாக்கித் தங்கள் வஸ்திர
ங்களின்தொங்கல்களை விஸ்தாரமப்பண்ணி,

௬ விருந்துகளில் முதலிடத்திலிருக்க
வும் ஜெப ஆலயங்களில் முதல் ஆசனங்க
ளிலிருக்கவும்,

௭ சந்தைகளில் (மற்றவர்களால்) வாழ்
த்துதல் அடையவும் ரபீ ரபீயென்ற
ழைக்கப்படவும் விரும்புகிறார்கள்.

௮ நீங்களோ ரபீயென்றழைக்கப்பட
க்கூடாது. என்னத்தினாலென்றால், கிறிஸ்து
என்பவரொருவரே உங்களுக்குக் குருவா
யிருக்கிறார். நீங்கள் எல்லாருஞ்சகோதர
ராயிருக்கிறீர்கள்.

௯ மேலும் பரமண்டலத்திலிருக்கிறவ
ரொருவரே உங்களுக்குப் பிதாவாயிருக்கிறா
ர், ஆகையால் நீங்கள் பூமியிலே ஒருவனையும்
உங்கள் பிதாவென்றழைக்கக்கூடாது.

௰ அல்லாமலுங் கிறிஸ்து என்பவரொரு
வரே உங்கள் குருவாயிருக்கிறார். ஆகையா
ல் நீங்கள் உங்களைக் குருக்களென்றழை
க்கப்படக்கூடாது.

௰௧ தன்னைத்தான் உயர்த்துகிறவன் தா
ழ்த்தப்படுவான். தன்னைத்தான் தாழ்த்து
கிறவன் உயர்த்தப்படுவான்.

௰௨ ஆதலால் உங்களிற்பெரியவன் உங்
கள் ஊழியக்காரனாயிருக்கக்கடவன்.

௰௩ வஞ்சகராகிய வேதபாரகரே, பரி
சேயரே, ஐயோ உங்களுக்கு வேதனைவரும்.
என்னத்தினாலென்னில், மனிதர்முன்பாக நீங்
கள் பரலோக இராச்சியத்தைப் பூட்டிப்
போடுகிறீர்கள். நீங்களோ அதிற்பிரவேசிக்
கிறதில்லை. பிரவேசிக்க மனதாயிருக்கிறவர்
கள் பிரவேசியாதபடிக்குஞ்செய்கிறீர்கள்.

௰௪ வஞ்சகராகிய வேதபாரகரே, பரி
சேயரே, ஐயோ உங்களுக்கு வேதனைவரும்.
என்னத்தினாலென்றால், நீங்கள் விஸ்தாரமா
ய்ச்செப மந்திரங்களைச்சொல்லுகிறோமெ
ன்றுசொல்லிக் கைம்பெண்களுடைய பொ
ருள்களைப் பட்சிக்கிறீர்கள். அதினிமித்தம்
அதிக ஆக்கினை உங்களுக்குக் கிடைக்கும்.

௰௫ வஞ்சகராகிய வேதபாரகரே, பரி
சேயரே, ஐயோ உங்களுக்கு வேதனைவரும்.
என்னத்தினாலென்னில், ஒருவனை (யூத) மார்க்
கத்தானாக்கும்படிக்கு நீங்கள் சமுத்திரத்
தையும் பூமியையுங்கடந்து திரிகிறீர்கள்.
அவன் அப்படிப்பட்டவனானபொழுது நீங்
கள் உங்களைப்பார்க்கிலும் அவனையிரட்டி
ப்பாய் நரகத்துக்குரியவனாக்குகிறீர்கள்.

௰௬ குருடராய் வழிகாட்டுகிறவர்களே,
ஐயோ உங்களுக்கு வேதனைவரும். ஒருவன்
தேவாலயத்தின்மேற் சத்தியம்பண்ணினால்
அது செல்லாது. ஒருவன் தேவாலயத்திலுள்ள
பொன்மேற் சத்தியம்பண்ணினானேயாகில்
அவன் அந்தப்படியே செய்யவேண்டுமென்
கிறீர்கள்.

௰௭ மதிகேடரே, குருடரே, எது பெரிது.
பொன்னோ பொன்னைப்பரிசுத்தமாக்குகிற
தேவாலயமோ.

௰௮ அன்றியும் ஒருவன் பீடத்தின்மேற்
சத்தியம்பண்ணினால் அது செல்லாது. ஒரு
வன் அதிலுள்ள காணிக்கையின்மேற் சத்தி
யம்பண்ணினானேயாகில் அவன் அதின்படியே
செய்யவேண்டுமென்கிறீர்கள்.

௰௯ மதிகேடரே, குருடரே, எது பெரிது.
காணிக்கையோ காணிக்கையைப் பரிசுத்த
மாக்குகிற பீடமோ.

௨௰ ஆகையாற் பீடத்தின்மேற் சத்தியம் பண்ணுகிறவன் அதின்மேலும் அதிலிருக்கிற எல்லாப் பொருள்களின்மேலுஞ் சத்தியம் பண்ணுகிறான்.

௨௧ தேவாலயத்தின்மேற் சத்தியம்பண்ணுகிறவன் அதின்மேலும் அதில்வாசமாயிருக்கிறவர்மேலுஞ் சத்தியம்பண்ணுகிறான்.

௨௨ அல்லாமலும் வானத்தின்மேற் சத்தியம்பண்ணுகிறவன் பராபரனுடைய பத்திராசனத்தின்மேலும் அதில் வீற்றிருக்கிறவர்மேலுஞ் சத்தியம்பண்ணுகிறான்.

௨௩ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ உங்களுக்குவேதனைவரும். என்னத்தினாலென்றால், நீங்கள் தள்சியிலும் வெந்தயத்திலுஞ் சீரகத்திலும் பத்திலொருபாகத்தைக்கொடுத்துவேதத்திற் (சொல்லியிருக்கிற) அதிக்கனமான காரியங்களாகிய நீதியையும் இரக்கத்தையும் உண்மையையும் விட்டுவிட்டீர்கள். இவைகளையே நீங்கள் நடப்பித்து அவைகளையும்விட்டுவிடாமலிருக்கவேண்டும்.

௨௪ ஆ, குருட்டாயவழிகாட்டுகிறவர்களே, கொசுகில்லாதபடிக்குத் (தண்ணீரை) வடிக்கட்டி ஒட்டகத்தையோ விழுங்குகிறவர்களாயிருக்கிறீர்கள்.

௨௫ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ, உங்களுக்குவேதனைவரும். என்னத்தினாலெனிற் போசனபானபாத்திரங்களின்வெளிப்புறத்தை நீங்கள்சுத்தஞ்செய்கிறீர்கள். அவைகளினுள்ளேயோ கொள்ளையும் அநீதியும்நிறைந்திருக்கின்றது.

௨௬ குருடனான பரிசேயனே, முதலாவது போசனபானபாத்திரங்களினுள்ளத்தைச் சுத்தம்பண்ணுவாயாக அப்பொழுது அவைகளின்வெளிப்புறமுஞ் சுத்தமாயிருக்கும்.

௨௭ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ உங்களுக்குவேதனைவரும். என்னத்தினாலென்றால், நீங்கள்சாந்துபூசப்பட்ட கல்லறைகளுக்கொப்பாயிருக்கிறீர்கள். அவைகள் புறம்பே அலங்காரமாயிருக்கின்றன. உள்ளேயோ மரித்தோருடைய எலும்புகளுஞ் சகலவிதமான அசுத்தமும் நிறைந்திருக்கின்றன.

௨௮ அப்படிப்போல நீங்களும்புறம்பே மனிதருக்கு நீதிமான்களென்று காணப்படுகிறீர்கள். உங்கள் உள்ளத்திலோ வஞ்சகமும் அக்கிரமமும்நிறைந்திருக்கின்றது.

௨௯ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ உங்களுக்குவேதனைவரும். என்னத்தினாலெனில், நீங்கள் தீர்க்கதரிசிகளுடையசமாதிகளைக்கட்டி நீதிமான்களின்கல்லறைகளைச்சிங்காரித்து,

௩௰ எங்கள் பிதாக்களுடைய நாட்களிலிருந்தோமானால் அவர்களோடேகூட நாங்கள் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தைச் சிந்தமாட்டோமென்கிறீர்கள்.

௩௧ ஆகையால் நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்தவர்களின்புத்திரரென்று உங்களைக்குறித்து நீங்களேதாமே சாட்சிகொடுக்கிறீர்கள்.

௩௨ அப்படியிருக்க, நீங்கள் உங்கள் பிதாக்களின் அக்கிரம அளவை நிரப்புங்கள்.

௩௩ சர்ப்பங்களே, விரியன்பாம்புகளின் (குட்டிகளே,) நீங்கள் நரகாக்கினைக்குத் தப்பிப்போவீர்கள்.

௩௪ ஆதலாற் கேளுங்கள். நான் தீர்க்கதரிசிகளையும் ஞானிகளையும் வேதபாரகரையும் உங்களிடத்திற்கு அனுப்புகிறேன். அவர்களிற் சிலரை நீங்கள்கொன்று சிலுவைகளிலும் அறைந்து சிலரை உங்கள் ஆலயங்களில் வாரினால் அடித்து ஊருக்கு ஊர் துன்பப்படுத்துவீர்கள்.

௩௫ நீதிமானாகிய ஆபேலின் இரத்தம் முதல் நீங்கள் தேவாலயத்துக்கும் பீடத்துக்கும் நடுவே கொலைசெய்த பரகியாவின் குமாரனான சகரியாவின் இரத்தம்வரைக்கும் பூமியின்மேற் சிந்தப்பட்ட நீதியான இரத்தமெல்லாம் உங்கள்மேல்வரும்படிக்கு (அப்படிச்செய்வீர்கள்.)

௩௬ அவையெல்லாம் இந்தச்சந்ததியின்மேலேவருமென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௩௭ ஆ, எருசலேம்பட்டினத்தாரே, எருசலேம் பட்டினத்தாரே, உங்களிடத்தில் அனுப்பப்பட்டவர்கள்மேற் கல்லெறிந்து தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்கிறவர்களே, கோழி தன் குஞ்சுகளைச் சிறகுகளின்கீழே கூட்டிச்சேர்த்துக்கொள்ளும் விதமாய் அநேகந்தரம் உங்களைக்கூட்டிச்சேர்த்துக்கொள்ளவிரும்பினேன். நீங்களோ வரமாட்டோமென்கிறீர்கள்.

௩௮ (ஆகையால்) உங்கள் வாசஸ்தலம் பாழாக்கப்படும்.

௩௯ அல்லாமலும் பராபரனுடைய நாமத்தினாலேவருகிறவர் தோத்திரிக்கப்படக்கடவரென்று நீங்கள்சொல்லும்வரைக்கும் இதுமுதல் என்னைக்காணாதிருப்பீர்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேனென்று திருவுளம்பற்றினார்.

## ௨௪. அதிகாரம்.

[(௧) தேவாலயம் அழிக்கப்படுமென்று அறிவித்தது (௩) அதற்குமுன் வரும் உபத்திரவங்கள். (௨௯) அவர் வருகைக்கு அடையாளங்கள். (௩௬) அவர் வருங்காலம் நமக்குத்தெரியாதபடியால் எப்பொழுதும் எச்சரிக்கையாயிருக்கவேண்டுமென்பது.]

இயேசுவானவர் தேவாலயத்தைவிட்டுப் புறப்பட்டு வருகிறபொழுது அவருடைய

சீஷர்கள் சேர்ந்து தேவாலயக்கட்டிடமிருக்கிறவகைகளை அவருக்குக் காண்பித்தார்கள்.

௨ இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது, இவைகளெல்லாவற்றையும் பார்க்கிறீர்களல்லவோ. (இவைகளில்) ஒரு கல் மற்றொருகல்லின்மேல் இங்கேவைக்கப்படுவதில்லை. எல்லாம் இடிக்கப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩ பின்பு அவர் ஒலிவமலையின்மேலுட்கார்ந்திருக்கையிற் சீஷர் மாத்திரம் அவரிடத்தில் வந்து இவை எப்பொழுது சம்பவிக்கும். மேலும் நீர் வருவதற்கும் உலகத்தின் முடிவுக்கும் அடையாளமென்ன. இவைகளை நீர் எங்களுக்குச் சொல்லவேண்டுமென்றார்கள்.

௪ அவர்களுக்குமாறுத்தரமாக இயேசுவானவர்சொன்னதாவது, அநேகர் வந்து என் நாமத்தையெடுத்து நாங்களே கிறிஸ்தென்றுசொல்லி அநேகம்பேரை வஞ்சிப்பார்கள்.

௫ ஆதலால் ஒருவனும் உங்களை வஞ்சியாதபடிக்குப்பாருங்கள்.

௬ அல்லாமலும் யுத்தங்களையும் யுத்தங்களின் நடக்கைகளையுங் கேள்விப்படுவீர்கள். அப்பொழுது நீங்கள் கலங்காதபடிக்குப்பாருங்கள். இவையெல்லாஞ் சம்பவிக்கவேண்டும். ஆனாலும் முடிவு உடனே வாராது.

௭ ஆகையால் ஒருசனக்கூட்டம் மற்றொருசனக்கூட்டத்திற்கும் ஒரு இராச்சியம் மற்றொருஇராச்சியத்திற்கும்விரோதமாய் எழும்பும். பஞ்சங்களும் பெருவாரிக்காய்ச்சல்களும் பூமியதிர்தல்களும் அங்கங்கே உண்டாகும்.

௮ ஆனாலும் அவையெல்லாம் உபாதிகளுக்கு ஆரம்பமாயிருக்கும்.

௯ அப்பொழுது உபத்திரவப்படும்படிக்கு உங்களை ஒப்புக்கொடுத்து உங்களைக் கொலைசெய்வார்கள். என்னுடைய நாமத்தினிமித்தம் நீங்கள் எல்லா உலகத்தாராலும் பகைக்கப்படுவீர்கள்.

௰ அக்காலத்திலே அநேகர் இலச்சையடைந்து ஒருவரையொருவர்காட்டிக்கொடுத்து ஒருவரையொருவர்பகைப்பார்கள்.

௰௧ அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி அநேகம்பேரைவஞ்சிப்பார்கள்.

௰௨ மேலும் அக்கிரமம் மிகுதியாவதினாலே அநேகருடைய அன்புமாறிப்போம்.

௰௩ ஆனாலும் முடிவுபரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

௰௪ அல்லாமலும் உலகத்தாரெல்லாருக்குஞ்சாட்சியாக இராச்சியத்தின் சுவிசேஷம் பூமியிலெங்கும் பிரசங்கிக்கப்படும். அப்பொழுதுமுடிவுவரும்.

௰௫ அப்படியிருக்க, இதைவாசிக்கிறவன் சிந்தித்துக்கொள்ளக்கடவன். பாழாக்குகிற அருவருப்பைக்குறித்துத் தானியேல்தீர்க்கதரிசிசொன்னாரே; அதை நீங்கள் பரிசுத்தஸ்தலத்திலே நிற்கக்காணும்பொழுது,

௰௬ யூதேயாவிலுள்ளவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள்.

௰௭ வீட்டின்மேலிருப்பவன் தன் வீட்டிலுள்ளவைகளை யெடுத்துக்கொண்டுபோகும்படிக்கு இறங்காமற்(போக)க்கடவன்.

௰௮ அல்லாமலும் வயலிலிருப்பவன்தன் வஸ்திரங்களை யெடுத்துக்கொண்டுபோகும்படிக்குப்பின்னிட்டுத்திரும்பாமற் (போக)க்கடவன்.

௰௯ ஐயோ அந்தநாட்களிற் கர்ப்பவதிகளுக்கும் முலைகொடுக்கிறவர்களுக்கும் உபத்திரவமிருக்கும்.

௨௰ மேலும் உலக முண்டானதுமுதற்கொண்டு இதுவரைக்குஞ் சம்பவியாததுமாய இனிமேலுஞ்சம்பவியாததுமாயிருக்கிற மிகுந்த உபத்திரவம் அக்காலத்திலேயுண்டாயிருக்கும்.

௨௰௧ ஆதலால் நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்திலாகிலும் ஓய்வுநாளிலாகிலுஞ் சம்பவியாதபடிக்கு வேண்டுதல் பண்ணக்கடவீர்கள்.

௨௰௨ அந்தநாட்கள்குறைக்கப்படாதிருந்தால் ஒருவனுந் தப்பிப்போவதில்லை. தெரிந்துகொள்ளப்பட்டவர்களினிமித்தமோ அந்தநாட்கள்குறைக்கப்படும்.

௨௰௩ அக்காலத்திலே கள்ளக் கிறிஸ்துகளுங் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பித் தெரிந்துகொள்ளப்பட்டவர்களை (வஞ்சிக்கக்) கூடுமானால் அவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக மகத்த அதிசயங்களையும் அற்புதங்களையுஞ்செய்வார்கள்.

௨௰௪ ஆதலால் அக்காலத்திலே ஒருவன் உங்களை நோக்கி, இதோ, கிறிஸ்து இங்கே யிருக்கிறார். அதோ, அங்கேயிருக்கிறாரென்று சொன்னால் நீங்கள் அவனை நம்பாமலிருப்பீர்களாக.

௨௰௫ அதை நான் உங்களுக்கு இப்பொழுது முன்னறிவித்தேன்.

௨௰௬ ஆகையால் அதோ, வனாந்தரத்திலிருக்கிறாரென்றுசொன்னால் வெளியேபுறப்படாதிருங்கள்.

௨௰௭ இதோ, வீட்டின் அறைகளுக்குள்ளிருக்கிறாரென்றால் அதை நம்பாதிருங்கள். மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்குவரைக்கும் (சீக்கிரமாய்) பிரகாசிக்கிறவிதமாய் மனுஷனுடையகுமாரன்வருவான்.

௨௰௮ அல்லாமலும் பிணமெங்கேயோ அங்கே கழுகுகள் கூடிவரும்.

௨௰௯ அந்தநாட்களிலுள்ள உபத்திரவத்திற்குப்பின்பு உடனே சூரியனிருளடையும். சந்திரன் பிரகாசங்கொடாமலிருக்கும்.

ளும். நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும். வானத்திலுள்ள (மற்ற) வல்லமைகளும் அசைக்கப்படும்.

௩௰ அப்பொழுது மனிதகுமாரனுடைய அடையாளம் வானத்திலே காணப்படும். அப்பொழுது மனிதனுடைய குமாரன் வானத்தின் மேகங்களின்மேலே மிகுந்த வல்லமையோடும் மகிமையோடும் வருகிறதைப் பூமியிலுள்ள கோத்திரத்தார் எல்லாருங் கண்டு புலம்புவார்கள்.

௩௧ அல்லாமலும் அவர் தூதரை வலுவாயத்தொனிக்கும் எக்காளசத்தத்துடனே அனுப்புவார். அவர்கள் வானத்தின் எல்லைகளுக்குள்ளே நாலுதிசைகளிலுமிருந்து அவராலெரிந்துகொள்ளப்பட்டவர்களைச்சேர்த்துக்கொள்வார்கள்.

௩௨ அத்திமரத்தினாலே ஒரு உவமையைக் கற்றுக்கொள்ளுங்கள். அதின் கிளைதளிராகி இலைகளைக்கொடுக்கிறபொழுது வசந்தகாலஞ்சமீபமாயிருக்கின்றதென்றறிந்திருக்கிறீர்கள்.

௩௩ அப்படிப்போல நான்சொன்னவைகளெல்லாஞ்சம்பவிக்கிறதை நீங்கள்காணும்பொழுது சமீபமாகவே யிருக்கிறதென்றறியக்கடவீர்கள்.

௩௪ இந்தச்சந்ததி யொழிந்துபோகுமுன்னமே அவையெல்லாஞ்சம்பவிக்குமென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௩௫ வானமும் பூமியும் ஒழிந்துபோம். என் வசனங்களோ ஒழியாமலிருக்கும்.

௩௬ அவை சம்பவிக்குந்நாளையும் நாழிகையையும் என்பிதாஒருவரேதவிர மற்றொருவனும் அறியமாட்டான். பரமண்டலங்களிலுள்ள தேவதூதர்களுமதையறியார்கள்.

௩௭ நோவாவினகாலத்திலே நடந்தது போலமனிதனுடையகுமாரன்வருங்காலத்திலேயும் நடக்கும்.

௩௮ எப்படியென்றாற் ஜலப்பிரளயத்திற்கு முன்னான நாட்களிலே நோவா பேழைக்குட்பிரவேசித்த நாள்வரைக்கும் ஜனங்கள் போசனபானம்பண்ணி,

௩௯ பெண்கொண்டு பெண்கொடுத்து (தங்களுக்குமோசம்வருமென்று) நினையாமலிருந்தார்கள். அப்பொழுதே ஜலப்பிரளயம்வந்து எல்லாரையுங்கொண்டுபோயிற்று. அதுபோல மனிதனுடைய குமாரன் வரும்பொழுதும் நடக்கும்.

௪௰ அக்காலத்திலே இரண்டு புருஷர் வயலிலிருப்பார்கள். அவர்களில் ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான். ஒருவன் தப்பிப்போவான்.

௪௧ இரண்டு பெண்கள் திரிகைதிரித்துக்கொண்டிருப்பார்கள். அவர்களில் ஒருத்தி பிடித்துக்கொள்ளப்படுவாள் ஒருத்தி தப்பிப்போவாள்.

௪௨ அப்படியிருக்க, உங்கள் எசமான் வருந்நாழிகையை நீங்கள் அறியாதபடியினாலே விழித்திருக்கக்கடவீர்கள்.

௪௩ திருடன்வருகிறசாமத்தை வீட்டெசமான் அறிந்தானானால் அவன் விழித்துக்கொண்டு தன் வீட்டைக் கன்னமிடப்படாதபடிக்குச்செய்திருப்பானென்றறிந்திருக்கிறீர்கள்.

௪௪ அப்படியிருக்க, நீங்கள் நினையாத நாழிகையிலே மனிதனுடையகுமாரன்வருவதால் நீங்களும் எத்தனமாயிருக்கக்கடவீர்கள்.

௪௫ எசமான் தன் வேலைக்காரருக்குத் திட்டமாய்ப்போசனங் கொடுக்கும்படிக்கு அவர்கள்மேல் விசாரணைக்காரனாய்வைத்த உண்மையும் புத்தியுமுள்ள ஊழிக்காரனியாவன்.

௪௬ எசமான்வந்து எந்த ஊழியக்காரனை அப்படிச்செய்யக்காண்பானோ அவனே பாக்கியவானாயிருப்பான்.

௪௭ தன் ஆஸ்திகளெல்லாவற்றின்மேலும் அவனைவைப்பானென்று மெய்யாயுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௪௮ அந்த ஊழியக்காரனோ பொல்லாதவனாய் என் எசமான் திரும்பிவரத்தாமதமாயிருப்பானென்று எண்ணி,

௪௯ தன்னோடேகூட ஊழியஞ்செய்கிறவர்களை அடிக்கத்தொடங்கி வெறியரோடே போசித்துக்குடிக்கிறவனானால்,

௫௰ அந்த ஊழியக்காரன் நினையாதிருக்கிறநாளிலேயும் அவனுக்குத்தெரியாத நேரத்திலேயும் அவனுடைய எசமான் வந்து,

௫௧ அவனைக்கடினமாய் அடித்து அழுகையும்பற்கடிப்புமுள்ள இடத்திலே வஞ்சகரோடே அவனுடையபங்கையேற்படுத்துவான்.

## ௨௫. அதிகாரம்.

[(௧) பத்துக்கன்னிகளை உவமையாகச்சொட்டியது. (௰௪) தாலந்துகளை உவமையாகக்காட்டியது. (௩௧) கடைசிநியாயத்தீர்ப்பைக்குறித்துச்சொல்லியது.]

அப்பொழுது பரலோக இராச்சியத்தார் தங்கள் தீவெட்டிகளைப்பிடித்து மணவாளனுக்கெதிர்கொண்டுபோகப் புறப்பட்ட பத்துக்கன்னிகளுக்கொப்பாயிருப்பார்கள்.

௨ அவர்களில் ஐந்துபேர்புத்தியுள்ளவர்களாயும் ஐந்துபேர் புத்தியீனராயுமிருந்தார்கள்.

௩ புத்தியீனமுள்ளவர்கள் தங்கள் தீவெட்டிகளையெடுத்தபொழுது எண்ணெயைக் கூடக்கொண்டுபோகவில்லை.

௪ புத்தியுள்ளவர்களோ தீவெட்டிகளோடேகூடத் தங்கள் பாத்திரங்களிலே எண்ணெயையுங் கொண்டுபோனார்கள்.

௫ மணவாளன் தாமதித்தபொழுது எல்லாரும் நித்திரை மயக்கமடைந்து தூங்கினார்கள்.

௬ அப்படியிருக்குங்காலத்திலே பாதிராத்திரியிலே இதோ, மணவாளன் வருகிறார், அவருக்கெதிர்கொண்டுபோகப் புறப்படுங்களென்று கூக்குரலுண்டாயிற்று.

௭ உடனே அந்தக் கன்னிகைகளெல்லாரும் எழுந்திருந்து தங்கள் தீவெட்டிகளை விளக்கினார்கள்.

௮ அப்பொழுது புத்தியீனமுள்ளவர்கள் புத்தியுள்ளவர்களை நோக்கி, எங்கள் தீவெட்டிகள் அணைந்துபோகிறது. ஆகையால் உங்கள் எண்ணெயிலே கொஞ்சம் எங்களுக்குத் தாருங்களென்றார்கள்.

௯ அதற்குப் புத்தியுள்ளவர்கள் சொன்னது, நாங்கள் கொடுத்தால் எங்களுக்கும் உங்களுக்குங் குறைச்சலுண்டாகும். அப்படியாகாதபடிக்கு நீங்கள் கடைக்காரரிடத்திற்போய் உங்களுக்காக (எண்ணெயை) கொள்ளுங்களென்றார்கள்.

௰ அந்தப்படி அவர்கள் கொள்ளப்போகிறபொழுது மணவாளன் வந்தார். எத்தனமாயிருந்தவர்கள் அவரோடேகூடக் கலியாணத்திற்குப்போய் (வீட்டிற்) பிரவேசித்தார்கள்.

௰௧ உடனே கதவு பூட்டப்பட்டது. பின்பு மற்றக் கன்னிகைகளும் வந்து, ஆண்டவரே, ஆண்டவரே, எங்களுக்குத் திறக்கவேண்டுமென்றார்கள்.

௰௨ அதற்கு அவர் சொன்னது, உங்களை அறியமாட்டேனென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰௩ அப்படியிருக்க, மனிதனுடைய குமாரன் வரும் நாளையாகிலும் நாழிகையையாகிலும் நீங்கள் அறியாமலிருக்கிறபடியினாலே விழித்துக்கொண்டிருக்கக்கடவீர்கள்.

௰௪ அன்றியும் (பரலோக இராச்சியம்) புறத்தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போகவெண்ணமுள்ள மனிதன் தன் ஊழியக்காரரை அழைத்துத் தன் ஆஸ்திகளை அவர்களுக்கொப்புக்கொடுத்ததுபோலிருக்கும்.

௰௫ அவனுடைய திராணிகளுக்குத் தக்கதாக ஒருவனுக்கு ஐந்து தாலந்து * நிறைபொன்னும் ஒருவனுக்கு இரண்டு தாலந்து நிறைபொன்னும் பின்னொருவனுக்கு ஒரு தாலந்து (நிறைபொன்னுமா)க் கொடுத்துப் பின்பு உடனே புறத்தேசத்திற்குப் போனான்.

௰௬ ஐந்து தாலந்தைப் பெற்றவன் போய் அவைகளால் வியாபாரம்பண்ணி, வேறைந்து தாலந்தைச் சம்பாதித்தான்.

௰௭ அப்படியே இரண்டு தாலந்தைப் பெற்றவனும் வேறிரண்டு தாலந்தைச் சம்பாதித்தான்.

௰௮ ஒரு தாலந்தைப் பெற்றவனோ போய் நிலத்திலே ஒரு குழியைத் தோண்டித் தன் எசமானுடைய திரவியத்தை அதிலே புதைத்துவைத்தான்.

௰௯ அநேககாலமான பின்பு, அந்த ஊழியக்காரருடைய எசமானும் வந்து அவர்களோடே கணக்குப்பார்த்தான்.

௨௰ அப்பொழுது ஐந்து தாலந்தைப் பெற்றவன் சேர்ந்து, வேறைந்து தாலந்தைக் கொண்டுவந்து, ஆண்டவனே, ஐந்து தாலந்தையெனக்கொப்புவித்தீரே. இதோ, அவைகளால் வேறைந்து தாலந்தைச் சம்பாதித்தேனென்றான்.

௨௰௧ அப்பொழுது எசமானானவன் அவனை நோக்கி, நல்லது உத்தமும் உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்திலே உண்மையாயிருந்தாய். அநேகத்தின்மேலே உன்னை அதிகாரியாக வைப்பேன். உன் எசமானுடைய சந்தோஷத்திற்குட் பிரவேசித்துவாவென்றான்.

௨௰௨ இரண்டு தாலந்தைப் பெற்றவனுஞ் சேர்ந்து ஆண்டவனே, நீர் இரண்டு தாலந்தையெனக்கொப்புவித்தீரே. இதோ, அவைகளால் வேறிரண்டு தாலந்தைச் சம்பாதித்தேனென்றான்.

௨௰௩ அவனுடனே எசமான் சொன்னது, நல்லது உத்தமும் உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்திலுண்மையாயிருந்தாய்; அநேகத்தின்மேலே உன்னையதிகாரியாக வைப்பேன். உன் எசமானுடைய சந்தோஷத்திற்குட் பிரவேசித்துவாவென்றான்.

௨௰௪ பின்பு ஒரு தாலந்தைப் பெற்றவனும் வந்து ஆண்டவனே, நீர் விதையாத இடத்திலே அறுக்கிறவருமாய்த் தெளியாத இடத்திற் சேர்க்கிறவருமாயிருக்கிற கடினமான மனிதனாயிருக்கிறீரென்று அறிந்தேன்.

௨௰௫ ஆகையால் நான் பயந்துபோய் உமது தாலந்தை நிலத்திற் புதைத்துவைத்தேன். இதோ, உம்முடையதைத் திரும்ப எடுத்துக்கொள்ளுமென்றான்.

௨௰௬ அவனுக்கு மாறுத்தரமாக எசமான் சொன்னதாவது, பொல்லாதவனுஞ் சோம்பனுமான ஊழியக்காரனே, நான் விதையாத இடத்திலே அறுக்கிறவனென்றுந் தெளியாத இடத்திற் சேர்க்கிறவனென்றும் அறிந்தாயா.

* யூதர்களுக்குள்ளே வழங்கின தாலந்து நிறைபொன் ஒன்றுக்கு ஏறக்குறைய பதினெண்ணாயிரத்து நூற்றெண்பது வராகனொப்பாயிருக்கும்.

௨௭ அபபடியானல நீ யென திரவியததை வியாபாரிகளிடததிலவைககவேணடியதாயிருநதது. அபபொழுது நானவநது என னுடையதை வடடியோடேகூடடஎடுததுககொளளுவேனேயெனறுசொலலி,

௨௮ பினபுஉளளவனெவனோஅவனுக்குக்கொடுககபபடும. சம்பூரணமும அவனுககுணடாகும. உளளவனலலாதவனிடததிலிருககிறதையுமஎடுததுககொளளபபடும.

௨௯ ஆகையால இவனுடையகையிலிருககிறதாலநதை நீஙகளவாஙகிப்பததுத்தாலநதையுடையவனுக்குக்கொடுஙகள.

௩0 அலலாமலும அபபிரயோசனமான இநத ஊழியககாரனை அழுகையும பற்கடிபபுமுளள மிகவுந அநதகாரமான இருளிலேதளளிபபோடுஙகளெனறான.

௩௧ அனறியும மனுஷனுடையகுமாரன தமது மகிமையோடே தமமுடைய சகல பரிசுததத்தூதருடனேயுங் கூடவருமபொழுது, அவர் தமது மகிமையுளள பததிராசனததினமேல வீறறிருபபார்.

௩௨ அபபொழுது உலகததாரெலலாரும அவருககு முனபாகக்கூடடபபடுவார்கள. மேயபபனானவன ஆடுகளையுங கடாயகளையும பிரிககிறதுபோல அவரவர்களைவெவவேறாகபபிரிதது,

௩௩ ஆடுகளுககொபபானவர்களைத்தமது வலதுபக்கததிலேயுங கடாயகளுககொபபானவர்களைத் தமது இடதுபக்கததிலேயும நிறுததுவார்.

௩௪ அபபொழுது இராசாவானவர் தமமுடையவலதுபக்கததில நிறபவர்களைநோககி, நான பசியாயிருநதபொழுது நீஙகள எனககுச்சாபபாடுகொடுததீர்கள. நான தாகமாயிருநதபொழுது என தாகததைத் தீர்ததீர்கள. நான அநநியனாயிருநதபொழுது எனனைசசேர்ததுககொணடீர்கள.

௩௫ எனககு வஸதிரமிலலாதபொழுது எனககுவஸதிரஙகொடுததீர்கள. நானவியாதியாயிருநதபொழுது எனககு உதவிசெயதீர்கள. நான காவலிலிருநதபொழுது எனனைபபார்ககவநதீர்கள.

௩௬ ஆகையால என பிதாவினால் ஆசீர்வதிககபபடடவர்களே, உலகமுணடானதுமுதல உஙகளுககாக எததனமபணணபபடடிருககிற இராசசியததைச்சுதநதரிததுககொளளவாருஙகளெனபார்.

௩௭ அபபொழுது நீதிமானகள அவருககு மாறுததரமாகச்சொலவது, ஆணடவரே, நாஙகள உமமைப்பசியுளளவரொனறு எபபொழுதுகணடு உமககுப் போசனபானஙகொடுததோம.

௩௮ நாஙகள உமமை அநநியனெனறும வஸதிரமிலலாதவரொனறும எபபொழுதுகணடு உமமைச்சேர்ததுககொணடு உமககுவஸதிரஙகொடுததோம.

௩௯ நாஙகள உமமை வியாதியுளளவரொனறுங காவலிலிருககிறவரொனறும எபபொழுது கணடு உமமிடததில வநதோமெனபார்கள.

௪0 அதறகு இராசா சொலவது, மிகவுஞ் சிறியரான என சகோதரராகிய இவர்களில ஒருவனுககு நீஙகள எதைச்செயதீர்களோ அதையெனககே செயதீர்களெனறு மெய்யாய உஙகளுககுச சொலலுகிறேனெனபார்.

௪௧ பினபுஅவர்தமது இடதுபககததில நிறபவர்களைநோககி, நான பசியாயிருநதபொழுது நீஙகள எனககுச்சாபபாடுகொடுககவிலலை. நான தாகமாயிருநதபொழுது நீஙகள என தாகததைத்தீர்ககவிலலை.

௪௨ நான அநநியனாயிருநதபொழுது நீஙகள எனனைச்சேர்ததுககொளளவிலலை. எனககு வஸதிரமிலலாதபொழுது நீஙகள எனககு வஸதிரஙகொடுககவிலலை. நான வியாதியுளளவனுமாயக் காவலிலவைககபபடடவனுமாயிருநதபொழுது நீஙகளெனககு உதவிசெயயவிலலை.

௪௩ ஆகையாற் சபிககபபடடவர்களே, நீஙகளெனனைவிடடுச்சாததானுககாகவும அவனுடைய தூதர்களுககாகவுமெததனமபணணபபடடிருககிற நிததிய அககினிககுப்போஙகளெனபார்.

௪௪ அபபொழுது அவர்களும அவருககு மாறுததரமாகச்சொலவது, ஆணடவரே, உமமைப் பசிததாகமுளளவரொனறும அநநியனெனறும வஸதிரமிலலாதவரொனறும வியாதியுளளவரொனறுங காவலிலிருககிறவரொனறும நாஙகளெபபொழுதுகணடு உமககு ஊழியஞ்செயயாதிருநதோமெனபார்கள.

௪௫ அதறகு அவர்சொலவது, மிகவுஞ் சிறியரான இவர்களில ஒருவனுககு நீஙகள அதைச்செயயாதிருநதீர்களோ அதை எனககுச்செயயாதிருநதீர்களெனபார்.

௪௬ அபபடியே அவர்கள நிததியவேதனையையடையவும நீதிமானகளோ நிததியசீவனையடையவும போவார்களெனறார்.

## ௨௬. அதிகாரம்.

[(௧) பிரதான ஆசாரியர் முதலானவர்கள யேசுவைககொலைசெயயுமபடி யோசனைபணணினது. (௭) ஒரு ஸதிரி அவருடைய சிரசினமேல அபிஷேகமபணணினது. (௧௪) யூதா அவரைககாடடிக்கொடுககுமபடி பணததைவாஙகினது. (௧௭) கிறிஸது பஸகாவைசசாபபிடடது. (௨௬) இராபபோசனததையேற்படுததினது. (௩௬) அவர் கெதசெமனே தோடடததிறகுபபோய வேதனைபபடடது. (௪௭) யூதாவினாலே அவர் காடடிக்

கொடுக்கப்பட்டது. (௩௭) அவர் காயிபாவினிடத்திற்குக் கொண்டுபோகப்பட்டது. (சாசா) பேதுருவினாலே மறுதலிக்கப்பட்டது.]

இந்தவசனங்களையாவையும் இயேசுவானவர் சொல்லிமுடித்தபின்பு, அவர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவது,

உ இரண்டுநாளைக்குப்பின்பு பஸ்காப்பண்டிகைவருமென்றறிந்திருக்கிறீர்கள். அப்பொழுது மனிதனுடையகுமாரன் சிலுவைமரத்திலேயறையப்படுவதற்கு ஒப்புக்கொடுக்கப்படுவானென்றார்.

௩ அக்காலத்திலே பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் சனங்களிலுள்ள மூப்பரும் காயிபா என்னப்பட்டபிரதான ஆசாரியனுடைய அரண்மனையிற்கூடிவந்து,

ச தந்திரமாய் இயேசுவானவரைப்பிடித்துக் கொலை செய்யும்படிக்கு யோசனைபண்ணியிருக்கிறபொழுது,

ரு பண்டிகை நாட்களில் அப்படிச்செய்யக்கூடாது. செய்தாற் சனங்களுக்குள்ளே கலகமுண்டாகுமென்று (நிறுத்தினார்கள்.)

சா அன்றியும இயேசுவானவர் பெத்தானியூரிற் குஷ்டரோகியாயிருந்த சீமோனுடையவீட்டிலிருக்கையில்,

எ ஒரு ஸ்திரீ விலையேறப்பெற்ற தயிலமுள்ளபரணியையெடுத்துக்கொண்டுவந்து அவர் பந்தியிருக்கிறபொழுது அதை அவருடையசிரசின்மேலூற்றினாள்.

அ அவருடைய சீஷர் அதைக்கண்டு விசனமடைந்து இந்தக்கேடு என்னத்திற்கு,

௯ இந்தத்தயிலத்தை உயர்ந்தகிரயத்திற்குவிற்று தரித்திரருக்குக்கொடுத்தால (இலாபமிருக்குமே) என்றார்கள்.

௰ இயேசுவானவர் அதையறிந்து அவர்களுக்குச்சொன்னது, நீங்கள் இந்த ஸ்திரீயை ஏன்வருத்தப்படுத்துகிறீர்கள். என்னிடத்தில நற்கிரியையைச்செய்தாளே.

௰க தரித்திரர் எக்காலத்திலும உங்களுடனேயிருக்கிறார்கள். நானோ எக்காலத்திலேயும உங்களோடேயிருப்பதில்லை.

௰உ இவள இந்தத்தயிலத்தை யென்சரீரத்தின்மேலூற்றினது என்னை அடக்கம்பண்ணுவதற்கு எத்தனமானசெய்கையாயிருக்கின்றது.

௰௩ உலகத்தில எவ்விடத்திலேயிந்தசுவிசேஷம பிரசங்கிக்கப்படுமோ அவ்விடத்திலே இவளை நினைப்பதற்காக இவள செய்ததுஞ்சொல்லப்படுமென்று மெய்யாகவேஉங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

௰ச அப்பொழுது பன்னிரண்டு சீஷரில ஒருவனாகிய யூதா இஸ்காரியோத்தென்னப்பட்டவன பிரதான ஆசாரியரிடத்திற்குப்போய்,

௰ரு நான அவரை உங்களுக்குக்காட்டிக்கொடுப்பேன. நீங்கள எனக்கு என்னகொடுக்கிறீர்களென்றான. அவர்கள அவனுக்கு முப்பது வெள்ளிக்காசை ஏற்படுத்திக (கொடுத்தார்கள)*

௰சா அதுமுதல் அவன அவரைக்காட்டிக்கொடுக்கும்படிக்குத்தகுதியான காலத்தைத்தேடிக்கொண்டான.

௰எ பின்பு அவர்கள புளியாத அப்பஞ்சாப்பிடுகிற நாட்களில்முதலநாளிலே சீஷர்களிஇயேசுவினிடத்திற்கு வந்து நீர் பஸ்காப்பண்டிகையின இராப்போசனம்பண்ணும்படிக்குநாங்கள எங்கே யெத்தனம்பண்ணச்சித்தமாயிருக்கிறீரென்று கேட்டார்கள.

௰அ அதற்கு அவர்சொன்னது, நீங்கள பட்டினத்திலே யொருவனிடத்திற்போய் என காலஞ்சமீபமாயிருக்கின்றது. உன்னிடத்திலே என சீஷரோடுங் கூடப்பஸ்காப்பண்டிகை கொண்டாடுவேனென்று போதகர் சொல்லுகிறாரென்று அவனுடனேசொல்லுங்களென்றார்.

௰௯ இயேசுவானவர் கட்டளையிட்டபடியே சீஷர்களபோய்ப் பஸ்காப்போசனத்தையெத்தனம்பண்ணினார்கள.

உ௰ அஸ்தமனமானபொழுது அவர்பன்னிருவரோடுங்கூடப்பந்தியிருந்தார்.

உக அவர்கள போசனம்பண்ணுகையில அவர் உங்களிலொருவன என்னைக்காட்டிக்கொடுப்பானென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

உஉ அப்பொழுது அவர்கள மிகவுந்துக்கப்பட்டு அவரைநோக்கி, ஆண்டவரே, நானோ அப்படிச்செய்வேனென்றொவ்வொருவர்சொல்லத்தொடங்கினார்கள.

உ௩ அதற்கு அவர்சொன்னது, என்னோடேகூடத்தாலத்திலே கைதோய்க்கிறவனே என்னைக்காட்டிக்கொடுப்பான.

உச மனிதனுடையகுமாரன தன்னைக்குறித்து எழுதியிருக்கிறவிதமாய்ப் போகிறான. அப்படியிருந்தும ஐயோ, மனிதனுடையகுமாரன எந்தமனிதனாலேகாட்டிக்கொடுக்கப்படுவாரோ அம்மனிதனுக்குவேதனைவரும. அம்மனிதன பிறவாதிருந்தானால் அவனுக்குநலமாயிருக்குமென்றார்.

---

* யூதர்களுடைய வெள்ளிக்காசு ஒன்றிற்கு ஏறக்குறையஒரு ரூபாய ஒப்பாயிருக்கும.

௨௫ (பின்னும்) அவரைக் காட்டிக் கொடுத்த யூதாவும் அவரை நோக்கி, ரபீ, நானோ அப்படிச் செய்வேனென்றான். நீ சொன்னபடியே யிருக்குமென்றார்.

௨௬ அன்றியும் அவர்கள் போசனம்பண்ணுகையில் இயேசுவானவர் அப்பத்தை யெடுத்துக்கொண்டு ஆசீர்வதித்து அதைப் பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்து இது என்னுடைய சரீரமாயிருக்கின்றது. நீங்கள் எடுத்துப் புசியுங்களென்றார்.

௨௭ பின்பு அவர் பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு தோத்திரம்பண்ணி அதை அவர்களுக்குக் கொடுத்து நீங்களெல்லாரும் இதிற் பானம்பண்ணுங்கள்.

௨௮ இது அநேகருக்குப் பாவமன்னிப்பு உண்டாகும்படிக்குப் புதிய உடன்படிக்கைக்கேற்றதாய்ச் சிந்தப்படுகிற என் இரத்தமாயிருக்கின்றது.

௨௯ இதுமுதற்கொண்டு நான் உங்களோடேகூட என் பிதாவின் இராச்சியத்திலே நவமாய்ப் பானம்பண்ணும் நாள்வரைக்கும் இந்தத் திராட்சரசத்தை நான் பானம்பண்ணுவதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩௦ அவர்கள் தோத்திரப்பாட்டைப் பாடினபின்பு ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

௩௧ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான் மேய்ப்பனை உபத்திரவப்படுத்தும்பொழுது ஆடுகள் சிதறிப்போமென்று எழுதியிருக்கின்றது. ஆகையால் இந்த இராத்திரியிலே நீங்களெல்லாரும் என்னைக் குறித்துக் கலக்கம் அடைந்து போவீர்கள்.

௩௨ நான் எழுந்திருந்த பின்பு உங்களுக்கு முன்னே கலிலேயா நாட்டுக்குப் போவேனென்றார்.

௩௩ அதற்குப் பேதுரு சொன்னது, எல்லாரும் உம்மைக் குறித்துக் கலக்கம் அடைந்து போனாலும் நான் ஒருக்காலுங் கலக்கம் அடைந்து போகமாட்டேனென்றான்.

௩௪ அவனுடனே இயேசுவானவர் சொன்னது, இந்த இராத்திரியிலே சேவல் கூவுகிறதற்கு முன்னமே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩௫ அதற்குப் பேதுரு சொன்னது, நான் உம்மோடே மரணம் அடையவேண்டியதாயிருந்தாலும் உம்மை மறுதலிக்கமாட்டேனென்றான். மற்றச் சீஷரெல்லாரும் அப்படியே சொன்னார்கள்.

௩௬ அப்பொழுது இயேசுவானவர் அவர்களோடேகூடக் கெத்சேமனேயென்னும் இடத்திற்கு வந்து சீஷரை நோக்கி, நான் அங்கே போய் செபம்பண்ணுமளவும் நீங்கள் இவ்விடத்தில் உட்கார்ந்திருங்களென்று சொல்லி,

௩௭ பேதுருவையுஞ் செபெதேயுவின் குமாரரிருவரையுங் கூட்டிக்கொண்டுபோய் துக்கம் அடையவும் மிகவும் வியாகுலப்படவுந் தொடங்கி,

௩௮ பின்பு அவர்களை நோக்கி, என் ஆத்துமா மரணபரியந்தம் மிகுந்த துக்கப்பட்டிருக்கின்றது. நீங்களிங்கே தரித்திருந்து என்னோடேகூட விழித்திருங்களென்று சொல்லி,

௩௯ சற்றப்புறம்போய்ச் சாஷ்டாங்கமாய் விழுந்து என் பிதாவே. இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக்கூடுமானால் அப்படிச் செய்யும். இல்லாவிட்டால் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியேயாகக் கடவதென்று செபம்பண்ணினார்.

௪௦ பின்பு அவர் சீஷரிடத்தில் வந்து அவர்களை நித்திரைபண்ணக்கண்டு பேதுருவை நோக்கி, இப்படி நீங்கள் ஒருமணிநேரமாகிலும் என்னோடேகூட விழித்திருக்கத் திராணியில்லையா.

௪௧ நீங்கள் குற்றஞ்செய்வதற்கான காரணத்திற் பிரவேசியாதபடிக்கு விழித்திருந்து செபம்பண்ணுங்கள். ஆவியானது மனதுள்ளதுதான். சரீரமோ பலவீனமுள்ளதென்று சொல்லி,

௪௨ இரண்டாந்தரம்போய் என் பிதாவே, இந்தப் பாத்திரத்தில் உள்ளதை நான் பானம்பண்ணாவிட்டால் இது என்னைவிட்டு நீங்காதா. நீங்கக்கூடாதிருந்தால் உம்முடைய சித்தத்தின்படியேயாகக்கடவதென்று செபம்பண்ணினார்.

௪௩ சீஷர்களோ மிகுந்த நித்திரைமயக்கமுள்ளவர்களானபடியால் அவர் திரும்பி வந்தபொழுது அவர்களை மறுபடியும் நித்திரைபண்ணக்கண்டார்.

௪௪ அவர் மறுபடியும் அவர்களைவிட்டுப் போய் மூன்றாந்தரம் அந்த விண்ணப்ப வார்த்தைகளைத்தானே செபம்பண்ணி பின்பு தமது சீஷரிடத்தில் வந்து,

௪௫ நீங்கள் பின்னும் நித்திரைபண்ணி யிளைப்பாறுவீர்களா இதோ, மனிதனுடைய குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிற நேரஞ் சமீபித்தது.

௪௬ இதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் சமீபமாய் வருகிறான். எழுந்திருங்கள் போவோமென்றார்.

௪௭ அவர் பேசுகையிற் பன்னிருவரில் ஒருவனாகிய யூதாவந்தான். அவனோடுங் கூடப்பிரதான ஆசாரியருஞ்சனத்தின் மூப்பருமனுப்பின திரளான சனங்களுங்கத்திகளையுந்தடிகளையும் பிடித்துவந்தார்கள்.

௪௮ அவர்களுக்கு அந்தத் துரோகியானவன் எவனை நான் முத்தஞ்செய்வேனோ அவன்தானே இயேசு. அவனைப் பிடித்துக் கொள்ளுங்களென்று அடையாளமாகச் சொல்லியிருந்தான்.

௪௯ அந்தப்படி அவன் உடனே இயேசுவினிடத்திலவந்து இரபீ, நீர்வாழ்க என்று அவரை முத்தஞ்செய்தான்.

௫௦ இயேசுவானவரோ அவனை நோக்கி சிநேகிதனே, எனத்திற்காக வந்திருக்கிறாயென்றார். உடனே (மற்றவர்களுஞ்சேர்ந்து இயேசுவானவர்மேற்கைகளைவைத்து அவரைப்பிடித்தார்கள்.

௫௧ அப்பொழுது இயேசுவுடனேயிருக்கிறவர்களிலொருவன் தன் கத்தியைப்பிடித்து உருவிப்பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனைக்காதற்வெட்டினான்.

௫௨ இயேசுவானவரோ அவனுடனே சொன்னது, கத்தியை (இப்படி) எடுக்கிறவர்களெல்லாருங் கத்தியினாலே அழிந்து போவார்களாகையால உன்கத்தியைத்திரும்ப அதினிடத்திலேபோடு.

௫௩ (என்னைக்காப்பாற்றும்படிக்கு)என் பிதா அனேலட்சத்திற்க அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்பவேண்டுமென்று நான் இப்பொழுதே அவரைவேண்டிக் கொள்ளக்கூடாதென்று நினைக்கிறாயா.

௫௪ (நானே அப்படிச்செய்தால) வேத எழுத்துக்கள் எப்படிநிறைவேறும்.

௫௫ இப்படியே சம்பவிக்கவேண்டுமென்றுசொல்லிப்பின்புசனக்கூட்டத்தை நோக்கி, நீங்கள் ஒரு கள்ளனைப்பிடிக்கும்படிக்குப்புறப்படுகிறதுபோலக்கத்திகளோடுந்தடிகளோடும் என்னைப்பிடிக்கவந்தீர்கள். தினந்தோறும் நான் தேவாலயத்திலே உங்களுக்குள்ளேயிருந்து உபதேசம் பண்ணினேனே. அப்பொழுது நீங்கள் என்னைப்பிடிக்கவில்லையே.

௫௬ தீர்க்கதரிசிகளின் எழுத்துக்கள் நிறைவேறும்படிக்கு இவையெல்லாம் நடந்து வருகின்றனவென்றார். அப்பொழுது சீஷரெல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போனார்கள்.

௫௭ இயேசுவைப்பிடித்தவர்களோ அவரைப்பிரதான ஆசாரியனாகிய காயிபாவினிடத்திற்குக் கொண்டுபோனார்கள். அங்கே வேதபாரகருமமூப்பருங்கூடிவந்திருந்தார்கள்.

௫௮ அப்படியிருக்க, பேதுரு தூரத்திலே பிரதான ஆசாரியனுடைய அரண்மனைவரைக்கும் அவர் பின்சென்றுபின்பு அதிற் பிரவேசித்துச் சங்கதியின் முடிவைப்பார்க்கிறதற்குச் சேவகரிடத்தில உட்கார்ந்திருந்தான்.

௫௯ அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மூப்பரும் மற்றப்பெரியசங்கத்தார் யாவரும் இயேசுவைக்கொலைசெய்யும்படி யாக அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சியைத்தேடினார்கள் அகப்படவில்லை.

௬௦ அநேகம்பேர்வந்து பொய்ச்சாட்சிகளைச்சொல்லியும் ஒவ்வ இல்லை.

௬௧ பின்பு இரண்டுபேர்வந்து இவன் தேவாலயத்தையிடித்துப்போடவும் மூன்றுநாளைக்குள்ளேயதைக்கட்டவும் வல்லமையுள்ளவனாயிருக்கிறேனென்றுசொன்னானென்றுபொய்ச்சாட்சிசொன்னார்கள்.

௬௨ அப்பொழுதுபிரதான ஆசாரியன் எழுந்திருந்து அவரைநோக்கி, இவர்கள் உனக்குவிரோதமாய்ச்சாட்சிசொன்னதைக் கேட்டாயா. இதற்கு மாறுத்தரமாக ஏதையாகிலுஞ்சொல்லுகிறதில்லையாவென்றான்.

௬௩ இயேசுவானவரோ பேசாமலிருந்தார். அப்பொழுது பிரதான ஆசாரியன் அவருடனேசொன்னது, பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து நீதானோ, அதை நீ எங்களுக்குச்சொல்லவேண்டுமென்று நீவனுடைய தேவன்மேலுன்னை ஆணையிட்டுக்கேட்கிறேனென்றான்.

௬௪ இயேசுவானவர் சொன்னது, நீர் சொன்னபடியேயிருக்கின்றது. அல்லாமல் இதுமுதற்கொண்டு நீங்கள் மனிதனும் குமாரனைச்சர்வவல்லமையுள்ளவருடைய வலதுபாரிசத்திலேவீற்றிருக்கவும் வானத்தின் மேகங்களின்மேல வருவதைக்காண்பீர்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

௬௫ பிரதான ஆசாரியன் அதைக்கேட்டவுடனே தன் வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு, இவன் தேவதூஷணஞ்சொன்னான். இனிச்சாட்சிகள் நமக்கு வேண்டுவதென்ன. இப்பொழுதே இவன் தூஷணத்தைக்கேட்டீர்களே.

௬௬ உங்களுக்கெப்படித்தோன்றுகின்றதென்றான். அதற்கு மற்றவர்கள்சொன்னது, இவன் மரணத்திற்குப்பாத்திரனாயிருக்கிறானென்றார்கள்.

௬௭ அப்பொழுது சிலர் அவருடைய முகத்திலேதுப்பிச்சிலர் அவரைக்கைகுத்திச் சிலர் அவருடைய கன்னத்திலறைகுட்டிச்சிலர் அவருடைய கன்னத்திலறைந்து,

௬௮ கிறிஸ்துவே, உம்மையடித்தவன் யாவன். அதை ஞானதிருஷ்டியாய் எங்களுக்குச் சொல்லுமென்று (பரியாசம்) சொன்னார்கள்.

௬௯ அத்தருணத்திலே பேதுரு அரண்மனையின் பிராகாரத்திலே உள்ளே உட்கார்ந்திருந்தான். அப்பொழுது வேலைக்காரியொருத்தி அவனிடத்தில் வந்து நீயும் கலிலேயனாகிய இயேசுவுடனேயிருந்தாயென்றாள்.

௭௰ அதற்கு அவன் சொன்னது, நீ பேசுகிறது எனக்குத் தெரியாதென்று எல்லாருக்கும் முன்பாக மறுதலித்துப்பின்பு மண்டபத்திற்குப் போனான்.

௭௧ அங்கே வேறொருபெண் அவனைக் கண்டு இவனும் நாசரேத்தூரானாகிய இயேசுவுடனேயிருந்தானென்று அங்கேயிருந்தவர்களுக்குச் சொன்னாள்.

௭௨ அவனோ சொன்னது, அம்மனிதனை யறியமாட்டேனென்று மறுபடியும் ஆணையோடே மறுதலித்தான்.

௭௩ சற்றுநேரத்திற்குப்பின்பு அங்கே நின்றவர்கள் பேதுருவினிடத்தில் வந்து மெய்யாய் நீயும் அவர்களில் ஒருவன். உன் பேச்சு அதை வெளிப்படுத்துகிறதென்றார்கள்.

௭௪ அப்பொழுது பேதுரு சொன்னது, நான் அந்தமனிதனையறியேனென்று சபித்துக்கொண்டு சத்தியம்பண்ணினான்.

௭௫ உடனே சேவல்கூவிற்று. பேதுரு (அதைக்கேட்டு) சேவல்கூவுமுன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று இயேசுவானவர் சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு வெளியேபோய் மிகவும் அழுதான்.

## உ௭. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் பிலாத்துவுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டது. (௫) யூதா நான்றுகொண்டுசெத்தது. (௰௧) அவர் பிலாத்துவினாலே பரிசோதிக்கப்பட்டது. (௰௯) பிலாத்துதன் மனைவியினாலே எச்சரிக்கப்பட்டது. (உ௰) அவன் பரபாசை விடுதலையாக்கி, இயேசுவை அடிப்பித்தது. (உ௯) இயேசுவானவர் முள்முடியையும் தரிக்கப்பட்டது. (௩௫) சிலுவையில் அறையப்பட்டது. (௪௰) நிந்திக்கப்பட்டது. (௫௰) மரித்து அடக்கம்பண்ணப்பட்டது. (௬௬) அவருடைய கல்லறை முத்திரிக்கப்பட்டது.]

விடியற்காலமானபொழுது சகலபிரதான ஆசாரியருஞ் சனங்களின் மூப்பரும் இயேசுவைக் கொலைசெய்யும்படிக்கு ஆலோசனைபண்ணி,

உ அவரைக் கட்டிக்கொண்டு போய்ப் பொந்தியுபிலாத்தென்னுந் தேசாதிபதிக்கு ஒப்புக்கொடுத்தார்கள்.

௩ அப்பொழுது அவரைக்காட்டிக்கொடுத்தயூதாவென்பவன் அவர் மரணாக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டதைக்கண்டு மனஸ்தாபமடைந்து அந்த முப்பது வெள்ளிக்காசைப் பிரதான ஆசாரியரிடத்திற்கும் மூப்பரிடத்திற்குந் திரும்பக்கொண்டுவந்து

௪ குற்றமில்லாதவரை நான் காட்டிக்கொடுத்ததினாலே எனக்குப் பாவம்வந்ததென்றான். அதற்கவர்கள் சொன்னது, அது எங்களுக்கென்ன. நீயேபாரென்றார்கள்.

௫ அப்பொழுது அவன் அந்த வெள்ளிக்காசை தேவாலயத்தில் எறிந்துபுறப்பட்டுப்போய் நான்றுகொண்டுசெத்தான்.

௬ பிரதான ஆசாரியர் அந்தப் பணத்தையெடுத்து இது இரத்தக்கிரயமானபடியால் இதைக் காணிக்கைப்பெட்டியிலே போடக்கூடாதென்றுசொல்லி,

௭ ஆலோசனைபண்ணினபின்பு அதிலே அந்நியரை அடக்கம்பண்ணும்படிக்கு ஒரு குயவனுடைய நிலத்தைக்கொண்டார்கள்.

௮ ஆதலால் இந்நாள்வரைக்கும் அந்த நிலம் இரத்தநிலமென்னப்படுகிறது.

௯ அப்பொழுது இஸ்ரவேலசனங்களால் கிரயமதிக்கப்பட்ட அவருடைய கிரயமாகிய முப்பது வெள்ளிக்காசை அவர்கள் எடுத்து,

௰ பராபரன் எனக்குக் கட்டளையிட்டபடியே அதையொரு குயவனுடைய நிலத்துக்காகக்கொடுத்தார்களென்று எரேமியா தீர்க்கதரிசி சொன்னவசனம் நிறைவேறிற்று.

௰௧ இயேசுவானவர் தேசாதிபதிக்கு முன்பாக நின்றபொழுது அந்தத் தேசாதிபதி அவரை நோக்கி, நீ யூதருடைய இராசாவாவென்றுகேட்டான். அதற்கு இயேசு சொன்னது, நீர் சொல்லுகிறபடியே யிருக்கிறதென்றார்.

௰௨ பின்பு பிரதான ஆசாரியரும் மூப்பரும் அவர்மேற் குற்றஞ்சாற்றி வருகிறபொழுது அவர் மாறுத்தரம் ஒன்றுஞ் சொன்னதில்லை.

௰௩ அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி, இவர்கள் உன்னைக்குறித்துச் சொல்லுகிற குற்றங்களை நீ கேட்கிறதில்லையோ என்றான்.

௰௪ அவரோ தேசாதிபதி மிகுந்த ஆச்சரியமுண்டாகத்தக்கதாக ஒன்றுக்கும் மாறுத்தரமாக ஒருவார்த்தையையுஞ் சொல்லாமலிருந்தார்.

௰௫ காவற்பண்ணப்பட்டவர்களில் எவனைச் சனங்கள் கேட்கிறார்களோ அவனை தேசாதிபதி விடுதலையாக்குகிறது பண்டிகைதோறும் வழக்கமாயிருந்தது.

௰௬ அல்லாமலும் அக்காலத்திலே கீர்த்தியடைந்த பாதகனாகிய பரபாசென்னப்பட்ட ஒருவன் காவலில் வைக்கப்பட்டிருந்தான்.

௰௭ ஆகையாற் சனங்கள் கூடியிருக்கையிற் பிலாத்து அவர்களை நோக்கி, பரபாசென்பவனோ கிறிஸ்து என்னப்பட்ட இயேசு என்பவனுமிருக்கிறார்களே, இவர்களில் எவனை நான் உங்களுக்காக விடுதலையாக்க விருப்புகிறீர்கள் என்று கேட்டான்.

௰௮ அவர்கள் அவரைப் பொறாமையினாலே ஒப்புக்கொடுத்தார்களென்று பிலாத்து அறிந்தபடியினாலே (அவன் அப்படியே கேட்டான்.)

௰௯ அல்லாமலும் அவன் நியாயாசனத்தில் உட்கார்ந்திருக்கையில், அவனுடைய மனைவியினால் அனுப்பப்பட்ட ஒருவன் வந்து நான் இன்றைக்குச் சொப்பனத்திலே இந்த நீதிமானைக்குறித்து மிகவும் பாடுபட்டேன். ஆகையால் நீர் அவரைக்குறித்து ஒன்றுஞ் செய்யாதிருப்பீராகவென்று அம்மாள் அறிவிக்கச்சொன்னாளென்றான்.

௨௰ அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மூப்பரும் பரபாசைக் கேட்கும்படிக்கும் இயேசுவைக் கொலைசெய்யப்பண்ணும்படிக்கும் சனங்களை (வசனங்களினாலே) ஏவினார்கள்.

௨௧ அதலால் இவ்விரண்டுபேரில் எவனை நான் உங்களுக்கு விடுதலைபண்ணவேண்டுமென்று தேசாதிபதி சனங்களை நோக்கிக் கேட்டபொழுது அவர்கள் பரபாசை விடுதலையாக்கவேண்டுமென்று கூப்பிட்டார்கள்.

௨௨ அதற்குப் பிலாத்து சொன்னது, அப்படியானால் கிறிஸ்து என்னப்படுகிற இயேசுவை நான் என்னசெய்யலாமென்றான். அவனைச் சிலுவைமரத்தில் அறையப்பண்ணவேண்டுமென்று எல்லாருங் கூப்பிட்டார்கள்.

௨௩ அதற்குத் தேசாதிபதி சொன்னது, ஏன் என்னத்தப்பொல்லாங்கைச் செய்தானென்றான். அப்பொழுது அவர்கள் அவனைச் சிலுவைமரத்தில் அறையப்பண்ணவேண்டுமென்று அதிகம் அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

௨௪ பிலாத்து (தன்னுடைய பிரயாசம்) வீணாயிருக்கிறதென்றும் கலகம் அதிகமாகிறதென்றுங் கண்டு சனங்களுக்கு முன்பாகத் தண்ணீர் அள்ளிக் கைகளைக் கழுவி இந்த நீதிமானுடைய இரத்தத்தைச் சிந்துகிறதற்கு நான் குற்றமில்லாதவன், நீங்களே பாருங்களென்றான்.

௨௫ அதற்குச் சனங்களெல்லாருஞ் சொன்னது, இவனுடைய இரத்தம் எங்கள்மேலும் எங்கள் பிள்ளைகள்மேலுமிருப்பதாகவென்றார்கள்.

௨௬ அப்பொழுது அவன் பரபாசை அவர்களுக்காக விடுதலையாக்கி இயேசுவையோ வாரினால் அடிப்பித்துப் பின்பு சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப்புக்கொடுத்தான்.

௨௭ பின்பு தேசாதிபதியினுடைய போர்ச்சேவகர் இயேசுவை அதிகாரச்சாலையிலே கொண்டுபோய்ப் போர்ச்சேவகராகிய கூட்டமெல்லாம் அவர்மேற் கூடிவரப்பண்ணி,

௨௮ அவருடைய வஸ்திரங்களைக் களைந்து சிவப்பானமேல் அங்கியை அவருக்கு உடுத்தி,

௨௯ முள்ளுகளால் ஒருமுடியைப்பின்னி அவருடைய சிரசின்மேல் வைத்து அவருடைய வலதுகையில் ஒருகோலைக்கொடுத்து பின்பு அவர்முன்பாக முழங்காற்படியிட்டு யூதரின் இராசாவே, வாழ்க என்று அவரைப் பரியாசம்பண்ணி,

௩௰ அவர்மேலே துப்பி அந்தக்கோலையெடுத்து அவருடைய சிரசில் அடித்தார்கள்.

௩௧ அவரைப் பரியாசம்பண்ணினபின்பு அவர்கள் அவருக்கு உடுத்தினமேல் அங்கியைக் கழற்றி அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி அவரைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்குக் கொண்டுபோனார்கள்.

௩௨ போகையில் அவர்கள் சிரேனேயூரானாகிய சீமோனென்டவனைக் கண்டு, அவன் அவருடைய சிலுவைமரத்தைச் சுமக்கும்படிக்குப் பலபந்தம்பண்ணினார்கள்.

௩௩ பின்பு அவர்கள் தலையோட்டிடமென்று அருத்தங்கொள்ளுங்கொல்கதாவென்னும் இடத்துக்கு வந்தபொழுது,

௩௪ கசப்பானதோடேகலந்த காடியை அவருக்குக் குடிக்கக்கொடுத்தார்கள். அவர் அதை ருசிபார்த்துக் குடிக்கமனதில்லாதிருந்தார்.

௩௫ அவரைச் சிலுவைமரத்தில் அறைந்தபின்பு அவர்கள் அவருடைய வஸ்திரங்களைக் குறித்துச் சீட்டுப்போட்டு அவைகளைப் பங்கிட்டார்கள். அதினாலே என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு என் உடையின்மேற் சீட்டுப்போட்டார்களென்று தீர்க்கதரிசியாலுரைக்கப்பட்டது நிறைவேறிற்று.

௩௬ பின்பு அவர்கள் அங்கேயுட்கார்ந்து அவரைக்காத்துக்கொண்டிருந்தார்கள்.

௩௭ அல்லாமலும் அவருடைய மரண ஆக்கினையின் காரணத்தைக் குறிக்கும்படிக்கு இவர் யூதருடைய இராசாவாகிய இயேசுவென்றெழுதி அவருடைய சிரசுக்கு மேலிடத்திலே வைத்தார்கள்.

௩௮ அன்றியும் அவருடைய வலதுபுறத்தில் ஒரு கள்ளனும் அவருடைய இடதுபுறத்தில் ஒரு கள்ளனுமாக இரண்டு கள்ளரும் அவருடனேகூடச் சிலுவைமரங்களில் அறையப்பட்டார்கள்.

௩௯ அப்படியிருக்க, அவ்வழிநடந்து போகிறவர்கள் தங்கள் தலைகளை அசைத்து,

௪௰ ஆ, தேவாலயத்தை இடித்து மூன்று நாட்களுக்குள்ளே கட்டுகிறவனே, நீ தானே உன்னையிரட்சித்துக்கொள். நீ பராபரனுடைய குமாரனானால் சிலுவைமரத்திலிருந்து இறங்கிவாவென்று அவரைத் தூஷணித்தார்கள்.

௪௧ அப்படிப் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பருஞ் சொன்னது,

௪௨ இவன் மற்றவர்களையிரட்சித்தான், தன்னைத்தானே இரட்சிக்கத் திராணியில்லை. இவன் இஸ்ரவேலின் இராசாவானால் இப்பொழுதே சிலுவையிலிருந்திறங்கிவரட்டும், அப்பொழுது இவனை விசுவாசிப்போம்.

௪௩ இவன் தன்னைப் பராபரனுடைய குமாரனென்று சொல்லிப் பராபரன்மேல் நம்பிக்கையாயிருந்தானே. அவர் இவன் மேற்பிரியமாயிருந்தால் இப்பொழுது இவனை மீட்டுவிடட்டுமென்று அவரைப் பரியாசம் பண்ணினார்கள்.

௪௪ இவ்விதமாய் அவரோடேகூடச் சிலுவைமரங்களில் அறையப்பட்ட கள்ளரும் அவரை நிந்தித்தார்கள்.

௪௫ அன்றியும் ஆறும் மணிநேரந்தொடங்கி, ஒன்பதாம் மணிநேரமவரைக்கும் அத்தேசமெங்கும் அந்தகாரமுண்டாயிற்று.

௪௬ பின்பு ஒன்பதாம் மணிநேரத்திலே இயேசுவானவர் ஏலி ஏலி லாமா சபக்தானியென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார். அதற்கு என்தேவனே, என்தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீரென்று அருத்தமாம்.

௪௭ அவ்விடத்தில் நின்றவர்களிற் சிலர் அதைக் கேட்டு, இவன் எலியாவையழைக்கிறானென்றார்கள்.

௪௮ அவர்களிலொருவனே ஓடிக் கடற்காளானையெடுத்துக் காடியால் நிரப்பி அதையொரு கம்பின்மேற்பூட்டி அவருக்குக் குடிக்கக்கொடுத்தான்.

௪௯ மற்றவர்களோ சொன்னது, பொறுத்துக்கொள். எலியா இவனையிரட்சிக்க வருவாரோ அதைப் பார்ப்போமென்றார்கள்.

௫௰ பின்பு இயேசுவானவர் மறுபடியும் மிகுந்த சத்தமிட்டு ஆவியை விட்டுவிட்டார்.

௫௧ அப்பொழுது சம்பவித்ததென்னவென்றால் தேவாலயத்திலுள்ள திரைச்சீலை மேலே தொடங்கிக் கீழேமட்டும் இரண்டாகக் கிழிந்தது. பூமியுமதிர்ந்தது கன்மலைகளும் பிளந்தன. கல்லறைகளுந் திறந்தன.

௫௨ நித்திரையடைந்திருந்த பரிசுத்தவான்களுடைய அநேகஞ்சரீரங்கள் அவர் எழுந்திருந்தபின்பு எழுப்பப்பட்டு,

௫௩ கல்லறைகளைவிட்டுப் புறப்பட்டுப் பரிசுத்தபட்டினத்திற் பிரவேசித்து அநேகருக்குத் தரிசனையானார்கள்.

௫௪ போர்ச்சேவகரின் தலைவனும் அவனோடேகூட இயேசுவைக் காத்திருந்தவர்களும் பூமியதிர்ச்சியையும் மற்றநடந்தவைகளையுங் கண்டபொழுது மிகுந்த பயமடைந்து, மெய்யாய் இவர் தேவகுமாரனாயிருந்தாரென்று சொல்லிக்கொண்டார்கள்.

௫௫ அல்லாமலும் இயேசுவுக்கூழியஞ் செய்து, கலிலேயாவிலிருந்து அவர் பின்சென்றுவந்த ஸ்திரிகளாகிய மகதலேனா மரியாளும்,

௫௬ யாக்கோபுக்கும் யோசேயுக்குந் தாயாகிய மரியாளுஞ் செபெதேயுவின் குமாரருடைய தாயும் மற்ற அப்படிப்பட்ட அநேகஸ்திரிகளும் அங்கே தூரத்திலே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

௫௭ அஸ்தமனமானபொழுது அரிமத்தியாவூராளாகிய ஐசுவரியமுள்ளவனுமாய் இயேசுவுக்குச் சீஷனுமாயிருந்த யோசேப்பென்பவன் பிலாத்துவினிடத்திற்போய் இயேசுவின் சரீரத்தைக் கேட்டான்.

௫௮ அதை அவனுக்குக் கொடுக்கும்படி பிலாத்து கட்டளையிட்டான்.

௫௯ அந்தப்படி யோசேப்பு அவருடைய சரீரத்தையெடுத்துத் துய்யதான மெல்லிய புடவையிலே சுற்றி,

௬௰ தான் கன்மலையிலே வெட்டுவித்திருந்த தன்னுடைய புதிய கல்லறையிலே அவரை வைத்து அக்கல்லறையின் வாசலிலே ஒரு பெரிய கல்லைப் புரட்டிவைத்துப் போனான்.

௬௧ அத்தருணத்திலே மகதலா ஊராளாகிய மரியாளும் மற்ற மரியாளுங் கல்லறைக்கெதிராக உட்கார்ந்திருந்தார்கள்.

௬௨ எத்தன் நாளுக்குப்பின்னான மறுநாளிலே பிரதான ஆசாரியரும் பரிசேயரு

பிலாத்துவினிடத்திற் கூடிவந்து சொன்னதாவது,

௬௩ துரையே, அந்த எத்தன் உயிரோடிருந்தபோது தான் மூன்று நாளைக்குள்ளே எழுந்திருப்பேனென்று அவன் சொன்னதை நினைத்திருக்கிறோம்.

௬௪ ஆகையால் அவனுடைய சீஷர் இராத்திரியிலே வந்து அவனைக் களவாய்க் கொண்டுபோய்ப் பின்பு மரித்தோரிலிருந்தெழுந்தானென்று ஜனங்களுக்குச் சொல்லாதபடிக்கும் முந்தின வஞ்சனையைப் பார்க்கிலும் பிந்தின வஞ்சனை கொடிதாகாதபடிக்கும் நீர் மூன்றும் நாள்வரைக்குங் கல்லறையைப் பத்திரம்பண்ணக் கட்டளையிடவேண்டுமென்றார்கள்.

௬௫ அதற்குப் பிலாத்து சொன்னது, காவற்பண்ணுகிற போர்ச்சேவகர் உங்களிடத்திலுண்டே, அவர்களாலே நீங்கள் உங்கள் இஷ்டப்படி போய்க் கல்லறையைப் பத்திரம்பண்ணுங்களென்றான்.

௬௬ அந்தப்படி அவர்கள் போய்க் கல்லில் முத்திரைபோட்டுக் காவலுக்காகப் போர்ச்சேவகரை வைத்துக் கல்லறையைப் பத்திரப்படுத்தினார்கள்.

## உஅ. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் உயிரோடெழுந்ததை ஒன்று ஒரு தூதன் அறிவித்தது. (௯) இயேசுவானவர் சில ஸ்திரிகளுக்குக் காணப்பட்டது. (௰௧) பிரதான ஆசாரியர் வஞ்சனைசெய்தது. (௰௬) இயேசுவானவர் சீஷர்களுக்குக் காணப்பட்டது. (௰௯) அவர்களை உலகத்தாரிடத்திற்கு அனுப்பினது.]

ஓய்வுநாள் முடிந்து கிழமையின் முதலாம் நாள் பிறக்கையில் மகதலாஊர் மரியாளும் மற்றமரியாளும் கல்லறையைப் பார்க்கப் புறப்பட்டார்கள்.

௨ அப்பொழுது பூமி மிகவும் அதிரத்தக்கதாகப் பராபரனுடைய தூதன் வானத்திலிருந்திறங்கி வந்து வாசலிலிருந்த கல்லைப் புரட்டித்தள்ளி அதின்மேல் உட்கார்ந்தான்.

௩ அவனுடைய முகம் மின்னற்போலவும் அவனுடைய உடை உறைந்த மழையைப்போல வெண்மையாகவுமிருந்தது.

௪ காவற்பண்ணுகிற போர்ச்சேவகர் அவனைக் கண்டு பயத்தினாலே அதிர்ந்து செத்தவர்களைப்போலானார்கள்.

௫ தூதனோ அந்த ஸ்திரிகளை நோக்கி, நீங்கள் பயப்படாதிருங்கள். சிலுவைமரத்தில் அறையப்பட்ட இயேசுவைத் தேடிவந்தீர்களென்று அறிந்திருக்கிறேன்.

௬ அவர் சொன்னபடியே எழுந்திருக்கிறபடியால் அவர் இங்கேயில்லை. நீங்கள் வந்து கர்த்தரை வைக்கப்பட்ட இடத்தைப் பார்த்து,

௭ பின்பு சீக்கிரமாய்ப் போய் அவர் மரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறார். உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவார். அங்கே அவரைக் காண்பீர்களென்று அவருடைய சீஷருக்கு அறிவியுங்கள். நான் உங்களுக்குச் சொன்னதை நினைத்துக்கொள்ளுங்களென்றான்.

௮ உடனே அவர்கள் பயத்தோடும் மிகுந்த சந்தோஷத்தோடுங் கல்லறையைவிட்டு அவருடைய சீஷருக்கு அறிவிக்கும்படிக்கு ஓடிப்போனார்கள்.

௯ அப்படி அவர்கள் அவருடைய சீஷருக்கு அறிவிக்கப்போகையில் நடந்ததென்னவென்றால் இயேசுவானவர் தாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு நீங்கள் வாழ்கவென்றார். உடனே அவர்கள் சேர்ந்து சாஷ்டாங்கமாய் அவரை வணங்கி அவருடைய பாதங்களைக் கட்டிக்கொண்டார்கள்.

௰ அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னதாவது, பயப்படாதிருங்கள். என் சகோதரர் கலிலேயா நாட்டிலே என்னைக் காண்பார்கள். ஆகையால் அவர்கள் அவ்விடத்திற்குப் போகும்படிக்கு நீங்கள் போய்ச் சொல்லுங்களென்றார்.

௰௧ அவர்கள் போகையிற் காவற்பண்ணின சேவகரிற் சிலர் பட்டணத்திலே வந்து எல்லா நடக்கைகளையும் பிரதான ஆசாரியருக்கு அறிவித்தார்கள்.

௰௨ அப்பொழுது அவர்களும் மூப்பர்களுங் கூடிவந்து யோசனைபண்ணின பின்பு, அவர்கள் அந்தப் போர்ச்சேவகருக்கு மிகுந்த பணத்தைக் கொடுத்து,

௰௩ நீங்கள் எப்படிச் சொல்லவேண்டுமென்றால் நாங்கள் நித்திரைபண்ணுகையில் அவனுடைய சீஷர்கள் அவனைக் களவாய்க் கொண்டுபோனார்களென்று சொல்லுங்கள்.

௰௪ துரையிதைக் கேள்விப்பட்டால் நாங்கள் அவரைச் சமாதானப்படுத்தி உங்களுக்குக் கஸ்திவாராதபடிக்குச் செய்வோமென்றார்கள்.

௰௫ போர்ச்சேவகர் அந்தப் பணத்தை யெடுத்துக்கொண்டு தாங்கள் அடைந்த போதிப்பின்படியே செய்தார்கள். அப்படி யிந்தச்சங்கதி யூதருக்குள்ளே இந்நாள் வரைக்கும் பிரசித்தமாயிருக்கின்றது.

௰௬ பதினொருசீஷர்கள கலிலேயாநாட
டில இயேசுவானவர் தஙகளுககுக குறித
திருநத மலையினமேறபோனார்கள.

௰௭ அஙகே அவர்கள அவரைக்கணடு
சாஷடாஙகமாயவணஙகினார்கள. சிலரோ
சநதேகப்பட்டார்கள.

௰௮ அப்பொழுது இயேசுவானவர்சேர்
நது அவர்களுடனே திருவுளமபறறினதா
வது. பரமணடலத்திறகும பூமண்டலத
துக்குஞசகல அதிகாரமும எனக்குககொ
டுக்கப்பட்டிருக்கிறது.

௰௯ ஆகையால நீஙகளபுறப்பட்டுஉலக
த்தாரெல்லாரையுஞசீஷராக்கிப்பிதாகுமா
ரன பரிசுத்த ஆவியின நாமத்தினாலே அவ
ர்களுக்குஞானஸ்நானங்கொடுத்து,

௨௰ நான உஙகளுக்குக்கட்டளையிட்ட
யாவையும அவர்கள கைக்கொள்ளும்படி
அவர்களுக்குஉபதேசம்பணணுஙகள. தே
ஞுஙகளுக்குமமையினமுடிவுவரைக்கும நான
எப்பொழுதும உங்களுடனேகூடவிருக்கி
றேனென்றார். ஆமென.

# மாற்குஎன்பவர்எழுதினசுவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

[(௧) யோவானிஸ்நானனைககுறிததுசசொல்லியது. (௯)இயேசுவானவர்ஞானஸநானமபெறறது. (௰௨) அவர்தூணடபபட்டது. (௰௪) அவர்பிரசஙகமபணணினது. (௰௬) பேதுருமுதலானவர்களையவர்அழைததது. (௨௩) பேய்கொணட ஒருமனிதனையும, (௨௯) பேதுருவினுடையமாமியையும, (௩௨) மறற அநேகபிணியாளிகளையும, (௪௰) ஒரு குஷடரோகியையுஙகுணமாககினது.]

பராபரனுடையகுமாரனாகிய இயேசுககிறிஸதுவைககுறிததசுவிசேஷததின ஆரமபம்.

௨ இதோ, நானஎனனுடைய தூதனையுமககுமுனபாக அனுபபுகிறேன. அவனஉமககுமுனனே (போய) உமமுடையமார்ககததைசெவவைபணணுவானென்றும, பராபரனுடையமார்க்கததை ஆயததப்படுததி,

௩ அவருடையபாதைகளைசசெவவைபணணுஙகளெனறுவனாநதரததிலே ஒருவனகூப்பிடுவானென்றுந தீர்ககதரிசிகளஎழுதினபடியே,

௪ யோவானென்பவனவனாநதரததிலேஞானஸநானஙகொடுததுபபாவமனனிபபையடையுமபடிககு மனநதிருமபுகிறதற்கேறறஞானஸநானததைப பிரசஙகமபணணிககொணடுவநதான.

௫ அபபொழுது யூதேயாததேசததாரனைவருமஎருசலேமபடடினததாரெலலாருமபுறபபடடு அவனிடததிற்போய்த்தஙகளபாவஙகளைபறிககைபிடடு அவனாலே யோர்தானநதியிலேஞானஸநானமபெறறார்கள

௬ அநதயோவானஒடடசமயிருடைமைத்தரிததுததனனுடைய அரையில வார்ககசசைக்கடடிககொணடவனுமாயவெடடுககிளிகளையுங காடடுததேனையும புசிககிறவனுமாயிருநதான.

௭ அக்காலததிலேயவனபிரசஙகமபணணினதாவது, எனனிலும அதிகவலலமையுடையவர்எனககுபபினவருகிறார். அவருடையபாதஇரட்சைகளினவாரைககுனிநது அவிழ்ககிறதற்குநானபாததிரவானலல.

௮ நானசலததினாலஉஙகளுககுஞானஸநானஙகொடுததேன. அவர்பரிசுததஆவியினாலேயுஙகளுககுஞானஸநானஙகொடுபபாரெனபதே.

௯ அநதநாட்களில இயேசுவானவர்கலிலேயாநாடடிலுளளநாசரேததூரிலிருநது வநது யோர்தானநதியிலே யோவானாலேஞானஸநானமபெறறு,

௰ சலததினினறேறினவுடனே, வானமபிரிநததையுமஆவியானவர்புறாவைபபோலததமதுமேலிறஙகினதையுஙகணடார்.

௰௧ அபபொழுதுநீர் எனனுடையநேசகுமாரன. உமமிற்பிரியமாயிருககிறேனெனறுபரமணடலஙகளிலிருநதுசத்தமுணடாயிறறு.

௰௨ அதினபினபு ஆவியானவர் அவரைவனாநதரததிற்குபபோகபபணணினார்.

௰௩ அநதவனாநதரததிலேயவர்நாற்பதுநாளிருநது சாத்தானாலேசோதிக்கபபடடுக்காடடுமிருகஙகளுககுளளேயிருநதார். பினபுதேவதூதர்களஅவருககூழியஞசெயதார்கள.

௰௪ யோவானகாவலிலவைககபபடடபின்பு இயேசுவானவர் கலிலேயாநாடடிலேவநது,

௰௫ காலமநிறைவேறியிருககினறது. பராபரனுடைய இராசசியததினஆளுகை சமீபமாயவநதது. நீஙகளமனநதிருமபிசசுவிசேஷததைவிசுவாசிததுககொளளுஙகளெனறுபராபரனுடைய இராசசியததைககுறிததுச சுவிசேஷததைப பிரசஙகமபணணினார்.

௰௬ அலலாமலும இயேசுவானவர் கலிலேயாநாடடினகடலருகே நடககையில மீனபிடிககிறவர்களாகிய சீமோனும அவனுடையசகோதரன அநதிரேயாவுஙகடலில வலைவீசியிருககிறபொழுது,

௰௭ அவர்களைககணடு எனககுபபினசெனறுவாருஙகள, உஙகளைநான மனிதரைபபிடிககிறவர்களாககுவேனென்றார்.

௰௮ உடனேயவர்களதஙகளவலைகளைவிட்டுஅவரைபபினபறறினார்கள.

௰௯ அவர் அவவிடமவிடடுசசறறேதூரமபோனபினபு செபெதேயுவின குமாரனயாககோபுமஅவனுடையசகோதரனயோவானும படகிலேவலைகளைமுடிநதுகொணடிருககையில அவர்களைககணடு உடனேயவர்களையும அழைததார்.

௨௰ அபபொழுது கூலியாட்களுடனேகூடபபடகிலிருககிற தஙகள தகபபனாகிய செபெதேயுவைவிடடுஅவருககுபபினசென்றார்கள.

௨௧ பினபு கபபர்நாகூமூரிற்பிரவேசிததார்கள ஓயவுநாளிலேயவர்தாமதியாமற்செப ஆலயததிற்குபபோய்ப போதகமபணணினார்.

௨௨ அவர் வேதபாரகரைபபோலல்ல, அதிகாரமுடையவரைபபோலப போதகமபணணினபடியினாலேசனஙகளஅவருடையஉபதேசததைககுறிததுபபிரமித்தார்கள.

௪ சனங்களமிகுதியானபடியினாலே, அவர்கள் அவருக்குச்சமீபமாய்ச்சேர இடம்பெறாமல், அவரிருந்த வீட்டின் மேற்கூரையைப்பிரித்துவழியுண்டாக்கித் திமிர்வாதக்காரன் கிடக்கிறபடுக்கையையிறக்கினார்கள்.

௫ இயேசுவானவர் அவர்களுடைய விசுவாசத்தைக்கண்டு திமிர்வாதக்காரனைநோக்கி, மகனே, உன்பாவங்களமன்னிக்கப்பட்டனவென்றார்.

௬ அங்கே உக்கார்ந்திருந்த வேதபாரகரிற்சிலர் (அதைக்கேட்டு,)

௭ இப்படித்தேவதூஷணங்களாக இவன்சொல்லுகிறதென்ன. பராபரனொருவரேயன்றி மற்றொருவனுக்கும் பாவங்களை மன்னிக்கவல்லமையுண்டோவென்றுதங்களிருதயங்களிலே சிந்தித்துக்கொண்டார்கள்.

௮ அவர்கள் அப்படித்தங்களுக்குள்ளே சிந்தித்திருக்கிறார்களென்று இயேசுவானவர் தம்முடைய ஆவியினாலேயறிந்து உடனேயவர்களைநோக்கி, நீங்கள்உங்களிருதயங்களிலே இப்படி என்சிந்திக்கிறீர்கள்.

௯ இந்தத்திமிர்வாதக்காரனுடனே உன் பாவங்கள்மன்னிக்கப்பட்டனவென்றுசொல்லுகிறதோ எழுந்திருந்து உன்படுக்கையையெடுத்துக்கொண்டு நட என்றுசொல்லுகிறதோ எது எளிது.

௰ மனிதனுடையகுமாரன்பூமியிலேபாவங்களைமன்னிக்கிறதற்கு அதிகாரமுடையவனாயிருக்கிறதை,

௰௧ நீங்கள் அறியும்படிக்கு (பாருங்களென்றுசொல்லி) திமிர்வாதக்காரனை நோக்கி, நீயெழுந்திருந்து, உன்படுக்கையையெடுத்துக்கொண்டு உன்வீட்டிற்குப்போவென்று உனக்குக்கட்டளையிடுகிறேனென்றார்.

௰௨ உடனேயவன் எல்லாருக்கும் முன்பாக எழுந்திருந்து, தன்படுக்கையையெடுத்துக்கொண்டுபோனான். அப்பொழுதுயாவரும்பிரமித்து, நாமொருக்காலும் இப்படிக்கண்டதில்லையேயென்றுசொல்லிப் பராபரனைப்புகழ்ந்தார்கள்.

௰௩ பின்பு அவர்புறப்பட்டுமறுபடியுங்கடலின் அருகேபோனபொழுது சனங்களெல்லாரும் அவரிடத்தில்வந்தார்கள். அவர்களுக்கு உபதேசம்பண்ணினார்.

௰௪ அவர்நடந்துபோகையில் ஆயத்துறையிலுக்கார்ந்திருக்கிற அல்பேயுவின் குமாரனாகியலேவியென்பவனைக்கண்டு நீ எனக்குப்பின்சென்றுவாவென்றார் அவனெழுந்து அவருக்குப்பின்சென்றான்.

௰௫ அல்லாமலும் அவனுடைய வீட்டிலேஅவர்போசனபந்தியிருக்கையில் அநேகம்ஆயக்காரரும்பாவிகளும்அவருக்குப்பின்சென்றுவந்தபடியால அவர்களும் இயேசுவானவருடனேயும் அவருடைய சீஷருடனேயுங்கூடப்பந்தியிலிருந்தார்கள்.

௰௬ அப்படியவர் ஆயக்காரரோடும்பாவிகளோடும்போசனம்பண்ணுகிறதைவேதபாரகரும்பரிசேயருங்கண்டு, அவருடைய சீஷரைநோக்கி, அவர் ஆயக்காரரோடும் பாவிகளோடும்போசனம்பண்ணலாமா என்றார்கள்.

௰௭ இயேசுவானவர் அதைக்கேட்டு அவர்களைநோக்கிச்சொஸ்தமுள்ளவர்களுக்குவயித்தியன்வேண்டுவதில்லை. வியாதியுள்ளவர்களுக்கேயவன்வேண்டும். நான்நீதிமான்களையல்லப்பாவிகளையே மனந்திரும்புதலுக்கழைக்கவந்தேனென்றார்.

௰௮ அன்றியும்யோவானுடையசீஷரும் பரிசேயருடையசீஷரும் உபவாசம்பண்ணிவந்தார்கள். அப்பொழுதுசிலர் அவரிடத்திலவந்து, யோவானுடைய சீஷரும் பரிசேயருடையசீஷரும் உபவாசம்பண்ணுகிறார்கள். உம்முடைய சீஷர்மாத்திரமென் உபவாசம்பண்ணவில்லையேயென்றார்கள்.

௰௯ அதற்கு இயேசுவானவர்சொன்னது, கலியாணத்திற்குவந்தமனிதர்தங்களுடனே மணவாளனிருக்கையில் உபவாசம்பண்ணுவார்களா? தங்களுடனேமணவாளனிருக்கிறகாலத்திலே உபவாசம்பண்ணமாட்டார்களே.

௨௰ மணவாளன் அவர்களைவிட்டுநீக்கப்படுங்காலம்வருகின்றது, அக்காலத்திலேயவர்கள் உபவாசம்பண்ணுவார்கள்.

௨௧ ஒருவனுங்கோடித்துணியைப்பழையவஸ்திரத்திலிணைக்கமாட்டான். இணைத்தால் அதிலிணைத்தபுதியதுணிப்பழையவஸ்திரத்திலேபட்டுப்போய் அதிகப்பொத்தலுண்டாகுமே.

௨௨ அல்லாமலும் ஒருவனுந்திராட்சங்கனிப்புதியஇரசத்தைப்பழையதுருத்திகளிலேவார்த்துவைக்கமாட்டான்வைத்தாலந்தப்புதிய இரசந் துருத்திகளைக்கிழித்துப்போம் இரசமுஞ்சிந்திப்போம். துருத்திகளுங்கெட்டுப்போம். புதிய இரசத்தைப் புதியதுருத்திகளிலேவார்த்துவைக்கவேண்டுமேயென்றார்.

௨௩ பின்புஓய்வுநாளிலேஅவர்பயிர்வழியே போனபொழுதுஅவருடையசீஷர்நடக்கையிற்கதிர்களைக்கொய்யத்தொடங்கினார்கள்.

௨௪ அப்பொழுதுபரிசேயர் அவரைநோக்கி இதோ, இவர்கள் ஓய்வுநாளிற்செய்யத்தகா
என்றார்கள்.
தை ஏன்செய்கிறார்கள்

௨௫ அவர்களுக்குஅவர்சொன்னது, அபியத்தாரென்னும்பிரதான ஆசாரியனுடைய நாட்களிலே தாவீதுதாழ்வுபட்டதோ தானுந்தன்னோடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது,

௨௬ தேவாலயத்திற்குட்பிரவேசித்து, ஆசாரியரேயன்றி மற்றொருவரும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களைப் புசித்து

தையுந் தனோடிருந்தவர்களுக்குக் கொடுத்ததையும் நீங்கள் ஒருக்காலும் அறியவில்லையோ என்று சொல்லி,

௨௭ பின்பு மனிதர் ஓய்வுநாளுக்காக உண்டாக்கப்படவில்லை ஓய்வுநாள் மனிதருக்காக உண்டாக்கப்பட்டது.

௨௮ ஆகையால் மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளின் கர்த்தருமாயிருக்கிறானென்றார்.

## ௩. அதிகாரம்.

[(௧) சூம்பின கையைக் குணமாக்கினது. (௯) மற்றப் பிணியாளிகளைக் குணமாக்கினது (௰௧) அசுத்த ஆவியை அடக்கினது (௰௩) அப்போஸ்தலர் பன்னிரண்டு பேரைத் தெரிந்துகொண்டது. (௨௨) பரிசேயர் சொன்ன தூஷணத்தைக் குறித்துப் புத்தி சொன்னது. (௩௧) தம்முடைய ஜனத்தாரின்னாரென்று காட்டியது.]

௧ மறுபடியும் அவர் ஜெபஆலயத்திற் பிரவேசித்தார். அங்கே சூம்பின கையுடையவொரு மனிதனிருந்தான்.

௨ அவர் ஓய்வுநாளில் அவனைச் சொஸ்தமாக்கினால் அவர்மேற் குற்றஞ்சாற்றலாமென்று அவர்களெண்ணி, அவரையுற்றுப்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

௩ ஆதலால் அவர் சூம்பின கையுள்ளவனை நோக்கி, நீயெழுந்து நடுவிலே வந்திரு என்று சொல்லி,

௪ பின்பு அவர்களை நோக்கி, ஓய்வுநாட்களில் நன்மைசெய்கிறதோ தீமைசெய்கிறதோ ஜீவனை இரட்சிக்கிறதோ ஜீவனை வாங்குகிறதோ எது நியாயமாயிருக்கிறதென்று கேட்டார் அவர்கள் பேசாமலிருந்தார்கள்.

௫ அப்பொழுது அவர் அவர்களுடைய இருதயத்தின் கடினத்தினாலே விசனப்பட்டுக் கோபத்தோடேயவர்களைச் சுற்றிப்பார்த்து பின்பு அந்த மனிதனை நோக்கி, உன் கையை நீட்டென்றார். அவன் நீட்டினான் உடனே அது மற்றக் கையைப்போலச் சொஸ்தமாயிற்று.

௬ பின்பு பரிசேயர் புறப்பட்டுப்போய் அவரையழிக்கும்படிக்கு ஏரோதேயின மனிதரோடுங்கூட அவருக்கு விரோதமாய் உடனே ஆலோசனைபண்ணினார்கள்.

௭ இயேசுவானவர் தமது சீஷருடனேகூட அவ்விடம்விட்டுக் கடலோரத்திற்குப் போனார்.

௮ கலிலேயா நாட்டிலும் யூதேயா நாட்டிலும் எருசலேம் நகரத்திலும் இதுமேயா நாட்டிலும் யோர்தானதியின் அப்புறங்களிலுமிருந்து மிகவும் திரளாக வந்த சனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள். அல்லாமலுந் தீரு சீதோனென்னும் பட்டினங்களின் திசைகளிலிருந்து மிகவும் திரளாக வந்த சனங்கள் அவர்செய்த அற்புதங்களைக் கேள்விப்பட்டு அவரிடத்தில் வந்தார்கள்.

௯ அப்பொழுது அநேகராயவர் சொஸ்தமாக்கினபடியினாலே உபத்திரவப்பட்டவர்களெவர்களோ அவர்களவரைத் தொடும்படிக்கு அவர்மேலே விழுந்தார்கள்.

௰ ஆதலால் தாம் சனங்களால் நெருக்கப்படாதபடிக்கு, அவர் தமது சீஷரை நோக்கித் தமக்காக ஒரு படகை எத்தனம்பண்ணச் சொன்னார்.

௰௧ அசுத்தமான ஆவிகளும் அவரைக் கண்டவுடனே அவருக்கு முன்பாக விழுந்து நீர் பராபரனுடைய குமாரனென்று கூப்பிட்டார்கள்.

௰௨ தம்மையவர்கள் பிரசித்தம்பண்ணாதபடிக்கு அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார்.

௰௩ பின்பு அவர் ஒரு மலையின்மேலேறித் தமக்குச் சித்தமானவர்களை வரவழைத்தார். அவர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

௰௪ அப்பொழுது அவர் தம்முடனேகூடவிருக்கவும் (சுவிசேஷத்தை) பிரசங்கம்பண்ணும்பொருட்டாயனுப்பவும்,

௰௫ வியாதிகளைத் தீர்க்கிப் பசாசுகளைத் துரத்தத்தக்கதாக அதிகாரமுள்ளவர்களாகவும் பன்னிரண்டு பேரையேற்படுத்தினார்.

௰௬ அவர்களாரென்றால், சீமோன், செபேதேயுவின் குமாரனாகிய யாக்கோபு,

௰௭ யாக்கோபின் சகோதரனாகிய யோவான், அந்திரேயா, பிலிப்பு, பர்த்தொலோமேயு, மத்தேயு, தோமா, அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோபு, ததேயு, கானானாகிய சீமோன்,

௰௮ அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ்காரியோத்து என்பவர்களே.

௰௯ இவர்களில் முந்தின சீமோனுக்குப் பேதுருவென்றுஞ் செபேதேயுவின் குமாரராகிய யாக்கோபுக்கும் யோவானுக்கும் போவனெர்கெஸ் என்றும் நாமங்களைக் கொடுத்தார். போவனெர்கெஸ் என்பதற்கு இடிமுழக்கமிடுகிறவர்களென்று அர்த்தமாம்.

௨௰ பின்பு வீட்டிற்குப் போனார்கள்.

௨௧ அங்கேயவர்கள் போசனம்பண்ணுகிறதற்குக் காலமில்லாதபடிக்கு அநேகசனங்கள் மறுபடியுங் கூடிவந்தார்கள். அவருடைய இனத்தார் அதைக்கேட்டு, அவருக்கு மயக்கமுண்டாயிற்றென்று சொல்லி, அவரைப் பிடித்துக்கொள்ளும்படிக்கு வந்தார்கள்.

௨௨ எருசலேம் நகரத்திலிருந்து வந்த வேதபாரகர், அவன் பெயெல்செபூலைக் கொண்டிருக்கிறான், பசாசுகளுடைய தலைவனாலே பசாசுகளைத் துரத்துகிறானென்றார்கள்.

௨௩ அவர்களையவர் அழைத்து, உவமைகளால் அவர்களுடனே சொன்னதாவது, சாத்தான் சாத்தானைத் துரத்துவதெப்படி.

௨௪ ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளே பிரிவினையுண்டுபண்ணினால் அந்த இராச்சியம் நிலைநிற்கமாட்டாதே.

௨௫ ஒரு குடும்பத்தார் தங்களுக்குள்ளே பிரிவினையுண்டுபண்ணினால், அந்தக் குடும்பம் நிலைநிற்கமாட்டாதே.

௨௬ (அப்படிப்போல) சாத்தான் தனக்குத்தானே விரோதமாக எழும்பிப் பிரிந்தால், அவன் நிலைநிற்கமாட்டாமல் முடிவு அடைவான்.

௨௭ ஒருவன் முன்பு பலவானைக் கட்டாவிட்டால் அவனுடைய வீட்டிலே பிரவேசிக்கவும் அவனுடைய ஆஸ்திகளைக் கொள்ளையிடவுமாட்டான் (கட்டினால்) அவனுடைய வீட்டைக் கொள்ளையிடுவான்.

௨௮ மனிதர் செய்கிற பாவங்களியாவும் அவர்கள் செய்கிற எந்தத் தூஷணங்களும் மன்னிக்கப்படும்.

௨௯ பரிசுத்த ஆவியைத் தூஷணிக்கிறவன் மாத்திரம் என்றென்றைக்கும் மன்னிப்படையாமல் நித்திய ஆக்கினைக்குப் பாத்திரனாயிருக்கிறானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩௰ அசுத்தமான ஆவியைக் கொண்டிருக்கிறானென்று, அவர்கள் சொன்னபடியினாலே (அவர் இப்படிச் சொன்னார்.)

௩௧ அத்தருணத்திலே அவருடைய தாயாரும் சகோதரரும் வந்து வெளியே நின்று அவரையழைக்கும்படி ஆளனுப்பினார்கள்.

௩௨ அப்பொழுது அவரைச் சுற்றியுட்கார்ந்த சனங்கள் அவரை நோக்கி, இதோ, உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதரரும் வெளியே நின்று உம்மைத் தேடுகிறார்களென்றார்கள்.

௩௩ அதற்கவர், என்னுடைய தாயும் என்னுடைய சகோதரரும் யாரென்று சொல்லி,

௩௪ தம்மைச் சூழ உட்கார்ந்தவர்களைச் சுற்றிப்பார்த்து என்னுடைய தாயும் என் சகோதரரும் இவர்களே

௩௫ எப்படியென்றால், பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவனெவனோ அவனே என் சகோதரன் என் சகோதரி என் தாயாயிருக்கிறானென்றார்.

## ௪. அதிகாரம்.

[(௧) விதைக்கிறவனை உவமையாகக் காட்டியது. (௰௪) அந்த உவமையின் பயன். (௨௧) நமக்குண்டான அறிவை மற்றவர்களுக்குக் காட்டவேண்டுமென்பது. (௨௬) மறைவாய் வளர்ந்த விதையை உவமையாகக் காட்டியது. (௩௰) கடுகுவிதையை உவமையாகக் காட்டியது. (௩௫) அலைந்த சமுத்திரத்தை யமைதலாக்கினது.]

பின்பு அவர் மறுபடியுங் கடலோரத்திலே போதகம்பண்ணத் தொடங்கினார் மிகுந்த சனங்கள் கூடி அவரிடத்தில் வந்தபடியினாலே, அவர் படகிலேறிக் கடலிலுட்கார்ந்தார். சனங்களெல்லாருங் கடற்கரையிலிருந்தார்கள்.

௨ அப்பொழுது அவர் உவமைகளாய் அநேககாரியங்களை யவர்களுக்குப் போதித்தார். போதிக்கிறபொழுது, அவர்களுக்குச் சொன்னதாவது, கேளுங்கள்.

௩ பயிரிடுகிறவன் விதைக்கப் புறப்பட்டான்.

௪ அவன் விதைக்கையில் சில விதை வழியருகே விழுந்தது அப்பொழுது ஆகாயத்தின் பறவைகள் வந்து அதைப் பட்சித்தன.

௫ சில விதை மிகுந்த மண்ணில்லாத கற்பாறைநிலத்திலே விழுந்தது, அது மிகுந்த மண்ணில்லாததினாலே உடனே முளைத்தது,

௬ சூரியன் உதித்தபொழுது தீய்ந்து அதற்கு வேரில்லாமையினாலே உலர்ந்துபோயிற்று.

௭ சில விதை முள்ளுகளுள்ள நிலத்திலே விழுந்தது, முள்ளுகள் எழும்பி அது பலன் கொடாதபடிக்கு அதை நெருக்கிப்போட்டன.

௮ சில விதை நல்ல நிலத்திலே விழுந்தது ஓங்கி வளர்ந்து ஒன்று முப்பதும் ஒன்று அறுபதும் ஒன்று நூறுமாகப் பலன் கொடுத்தது.

௯ கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்று சொல்லுகிறார்.

௰ பின்பு அவர் தனித்திருக்கையில் பன்னிருவரோடுங்கூட அவரைச் சூழ இருந்தவர்கள் அந்த உவமையைக் குறித்து அவரிடத்தில் விசாரித்தார்கள்.

௧௧ அவர்களுக்கு அவர் சொன்னது பராபரனுடைய இராச்சியத்தின் இரகசியத்தை யறியும்படி உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது.

௧௨ புறம்பேயிருக்கிறவர்கள் மனந்திரும்பாமலும் தங்கள் பாவமன்னிப்பை யடையாமலுமிருக்கத்தக்கதாக உற்றுப்பார்த்தும் அறியாமலும் உற்றுக்கேட்டுணர்ந்தும் உணராமலுமிருக்கும்படிக்கு அவையெல்லாம் உவமைகளாக அவர்களுக்குச் சொல்லப்படுகின்றனவென்று சொல்லி,

௧௩ பின்பு அவர்களை நோக்கி, நீங்கள் இந்த உவமையை அறியவில்லையா? அப்படியானால் மற்ற எல்லா உவமைகளையும் எப்படியறிவீர்கள்.

௧௪ விதைக்கிறவன் வசனத்தை விதைக்கிறவனே.

௧௫ விதை விழுந்த வழிக்கொப்பானவர்கள் விதைக்கப்படுகிற வசனத்தைக் கேட்டவுடனே சாத்தான் வந்து, அவர்களிருதயங்களின்மேல் விதைக்கப்பட்ட வசனத்தையெடுத்துப்போடுகிறான்.

௧௬ விதை விழுந்த கற்பாறைநிலத்திற்கொப்பானவர்கள் அந்த வசனத்தைக் கே

ட்கிறபொழுது, உடனேயதைச் சந்தோஷ
த்தோடேயேற்றுக்கொண்டும்
௰௭ தங்களிலே வேரூன்றியிராமற்கொஞ்
சக்காலமாத்திரம் அதைப்பற்றிக்கொள்ளு
கிறார்கள். அவ்வசனத்தினிமித்தம் உபத்தி
ரவமுந் துன்பப்படுத்துமுண்டானவுடனே
வழுவுகிறார்கள்.
௰௮ விதைவிழுந்த முள்ளுள்ளநிலத்
திற்கொப்பானவர்கள் அவ்வசனத்தைக்கே
ட்டும்,
௰௯ அது பலனற்றதாயிருக்கும்படிக்கு
இவ்வுலகக்கவலைகளும் ஐசுவரியத்தின் வஞ்ச
னையும் மற்றக்காரியங்களின்மேலுண்டாகி
ற இச்சைகளும் நுழைந்து, அந்தவசனத்தை
நெருக்கிப்போடுகிறதற்கு இடங்கொடுக்கி
றார்கள்.)
௨௰ விதைவிழுந்த நல்லநிலத்திற்கொப்
பானவர்கள் அவ்வசனத்தைக்கேட்டுப்பற்
றிக்கொண்டு, ஒன்று முப்பதும் ஒன்றறு
பதும் ஒன்று நூறுமாகப்பலன்கொடுக்கி
றார்களென்றார்.
௨௧ அன்றியும் அவர் அவர்களுடனே
சொன்னது, விளக்கை ஒருத்தண்டின்மேல
வைக்கிறதற்கேயன்றி, மரக்காலின்கீழாகி
லும் கட்டிலின்கீழாகிலும் வைக்கிறதற்குக்
கொண்டுவருவார்களா,
௨௨ ஆதலால் வெளியரங்கமாகாத அந்
தரங்கமான பொருளுமில்லை. வெளிக்குவா
ராதமறைபொருளுமில்லை.
௨௩ கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவ
னாயிருந்தாற்கேட்கக்கடவனென்றார்.
௨௪ அன்றியும் அவர்களுடனேயவர் சொ
ன்னது, நீங்கள் கேள்விப்படுகிறதின்னதென
று சிந்தித்துக்கொள்ளுங்கள். எந்த அளவி
னால் நீங்கள் அளப்பீர்களோ அதினாலேயுங்
களுக்கும் அளக்கப்படும்.
௨௫ அல்லாமலும் எவன் உள்ளவனாயி
ருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்படும்
எவன் இல்லாதவனாயிருக்கிறானோ அவனிட
த்திலே உள்ளதும் எடுத்துப்போடப்படும்.
ஆகையாற் கேள்விப்படுகிறவுங்களுக்கு அதி
கமுங்கொடுக்கப்படுமென்றார்.
௨௬ அன்றியும் அவர் சொன்னதாவது,
பராபரனுடைய இராச்சியம் ஒருமனிதன்
தன்னிலத்திலே விதைவிதைக்கிறதற்கொப்
பாயிருக்கின்றது.
௨௭ பின்பு இராத்திரிதோறும் நித்திரை
பண்ணிப்பகலிலேதோறும் எழுந்திருப்பான்.
௨௮ அவனுக்குத் தெரியாமற் பூமியான
து முன்பு முளையையும் பின்பு கதிரையும் பின்பு
கதிரிலே நிறைந்த தானியத்தையும் பலனாக
த்தானே கொடுக்கின்றதன்மையுள்ளதாயி
ருக்கிறபடியால் அந்தவிதை முளைத்துப்ப
யிராம்.
௨௯ அப்படிப்பயிர்பருவமானபொழுது

அறுப்புக்காலமானபடியினாலே, அவனதை
யறுக்கிறதற்கு ஆட்களையனுப்புவானென
றார்.
௩௰ அன்றியும் அவர் சொன்னது, நாம
பராபரனுடைய இராச்சியத்தை யெதற்
கொப்பாக்கலாம் அதையெந்த உவமையி
னாலே காண்பிக்கலாம்.
௩௧ அது ஒருகடுகுவிதைக்கொப்பாயிரு
க்கின்றது. அது நிலத்திலே விதைக்கப்படுகி
றபொழுது பூமியிலுள்ள சகலவிதைகளிலும்
அதுசிறிதாயிருந்தும்,
௩௨ விதைக்கப்பட்டபின்பு வளர்ந்து சக
லக்கிளைகளிலும் பெரிதாகி ஆகாயத்துப்ப
றவைகளதின் நிழலில்வந்தடையத்தக்கதாக,
விஸ்தாரமான கிளைகளைவிடுகின்றதென்றார்.
௩௩ கேட்டறியும்படிக்குச் சனங்களுக்கு
ண்டான திராணிக்குத்தக்கதாக அவர் இப்
படிப்பட்ட அநேக உவமைகளினாலேயவ
ர்களுக்கு வசனத்தைச் சொன்னார்.
௩௪ உவமைகளினாலேயன்றி அவர் அவ
களுக்கொன்றுஞ் சொல்லவில்லை. தமதுசீ
ஷருடனே அவர் தனித்திருக்கிறபொழு
துமாத்திரம் அவர்களுக்கு எல்லாவற்றையு
மவிவரித்துச்சொன்னார்.
௩௫ அந்நாளிலே சாயங்காலமானபொ
ழுது, அவர் அவர்களை நோக்கி, அக்கரைக்
குப்போவோம் வாருங்களென்றார்.
௩௬ ஆதலால் அவர்கள் சனங்களைவிட்
டு அவர் படவிலிருந்தபடியேயவரைக்கொண்
டுபோனார்கள் வேறுபடவுகளும் அவரோ
டேகூடப்போயின.
௩௭ அப்பொழுது அவர் பின்பக்கத்திலே
ஒருதலையணையை வைத்து நித்திரைபண்ணிக்
கொண்டிருக்கையிற் பலத்த சுழல்காற்றுண்
டானதினாலே படவை மூடிக்கொள்ளத்தக்
தாக அலைகள் அதிலே மோதின.
௩௮ உடனேயவர்கள் அவரையெழுப்பி
போதகரே, நாங்கள் மடிந்துபோனாலும் உம
க்குக்கவலையில்லையா என்றார்கள்.
௩௯ அவர் எழுந்து காற்றுக்குக்கட்டளை
யிட்டுக் கடலையும் நோக்கிக் கோஷமாயிரா
தே அமைதலாயிரு என்றார். உடனேகாற்
று நின்றுபோக மிகுந்த அமைதலுண்டா
யிற்று.
௪௰ பின்பு அவர் அவர்களை நோக்கி, இப்
படியேன் பயப்படுகிறீர்கள். என்னத்தினாலே
யுங்களுக்கு விசுவாசமில்லையென்றார்.
௪௧ அவர்கள் மிகவும் பயந்து, காற்றுங்
கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே,
இவர் யாரோ என்று ஒருவரோடொருவர்
சொல்லிக்கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) இலேகியோனென்னும் பேய்கள் பன்
றிகளுக்குட்போகும்படி கிறிஸ்து அத

சந்துரத்தினது. (௨௧) யாவீருவென்பவன் அவரிடத்தில்வந்து விண்ணப்பம்பண்ணினது. (௨௫) பெரும்பாடுள்ளஸ்திரியவரைத் தொட்டுக் குணமடைந்தது. (௩௫) யாவீருவினுடைய மகளை உயிரோடெழுப்பினது ]

பின்புஅவர்கள் கடலுக்கக்கரையிலுள்ள கதரேனருடையதேசத்திற்குவந்தார்கள.

௨ அவர்படகிலிருந்திறங்கினவுடனே அசுத்தஆவியுள்ள ஒருமனிசன் பிரேதக்கல்லறைகளிலிருந்து அவருக்கெதிராகவந்தான.

௩ அவனுடையகுடியிருப்பு பிரேதக்கல்லறைகளிலேயிருந்தது. ஒருவனும் அவனைச்சங்கிலிகளினாலுங் கட்டக்கூடாததாயிருந்தது.

௪ அநேகதரம் அவன் விலங்குகளினாலுஞ் சங்கிலிகளினாலுங் கட்டப்பட்டிருந்தும் அவன் அந்தச்சங்கிலிகளைமுறித்து விலங்குகளைத்தறித்துப்போட்டான ஒருவனும் அவனைக்கீழ்ப்படுத்தக்கூடாததாயிருந்தது.

௫ அல்லாமலும் அவன் எப்பொழுதும் இரவும்பகலும்மலைகளிலுங்கல்லறைகளிலுங் கூக்குரலிட்டுத் தன்னைத்தானேகல்லுகளாற்கீறிக்கொண்டிருந்தான.

௬ அவன்தூரத்திலே இயேசுவானவரைக்கண்டு ஓடிவந்தபொழுது அவனே நோக்கி,

௭ அசுத்தஆவியே நீயிந்தமனிதனைவிட்டுப்போவென்று அவர்கட்டளையிட்டபடியினாலே,

௮ அவன் அவருக்குத்தாழ்ந்துவணங்கி, இயேசுவே உன்னதமானபராபரனுடைய குமாரனே எனக்கும் உமக்குமென்ன, என்னைவேதனைப்படுத்தாதபடிக்கு உமக்குப் பராபரன்மேல்ஆணையிடுகிறேனென்று மிகுந்தசத்தமாய்க்கூப்பிட்டான.

௯ அவர்அவனைநோக்கி, உன்பேரென்னவென்றுகேட்டார். அதற்கு அவன் அநேகராயிருக்கிறோமாகையால என்பேர்லேகியோனென்றுசொல்லி,

௰ பின்புஅத்திசையிலிருந்துதங்களையோட்டிவிடாதபடிக்கு அவரை மிகவும்வேண்டிக்கொண்டான.

௰௧ அவ்விடத்திலே மலையினருகேமிகுந்தகூட்டமானபன்றிகள்மேய்ந்துகொண்டிருந்தன.

௰௨ அப்பொழுதுபசாசுக்களெல்லாம் அவருடனேசொன்னது, நாங்கள்பன்றிகளிற்பிரவேசிக்கும்படிக்கு எங்களையனுப்புமென்றுஅவரைவேண்டிக்கொண்டார்கள.

௰௩ உடனேஇயேசுவானவர் அவர்களுக்குஉத்தரவுகொடுத்தார். அப்பொழுதுஅசுத்தஆவிகள்புறப்பட்டுப் பன்றிகளுக்குள்ளேபிரவேசித்தன. உடனே ஏறக்குறைய இரண்டாயிரம்பன்றிகளாகிய அந்தக்கூட்டம் உயர்ந்தமேட்டிலிருந்து கடலிலேபாய்ந்து அதில் அமிழ்ந்துமாண்டது.

௰௪ அப்பொழுதுபன்றிகளைமேய்த்தவர்கள் ஓடி, அதைப்பட்டினத்திலும்வெளிப்புறங்களிலும் அறிவித்தார்கள. பின்புசம்பவித்ததைப்பார்க்கும்படிக்குச்சனங்கள்புறப்பட்டு,

௰௫ இயேசுவினிடத்தில்வந்து லேகியோனென்கிற பசாசுக்கள்பிடித்திருந்தவனை வஸ்திரமுடுத்திக்கொண்டு உட்கார்ந்து புத்தியுடைத்திருக்கிறதைக்கண்டு பயந்தார்கள.

௰௬ பசாசுக்கள்பிடித்தவனுக்கும்பன்றிகளுக்குஞ் சம்பவித்ததைக்கண்டவர்களும் அவர்களுக்குவிவரமாய்ச்சொன்னார்கள.

௰௭ அப்பொழுதுதங்கள எல்லைகளைவிட்டு அப்புறம்போகும்படிக்கு அவரைவேண்டிக்கொண்டார்கள.

௰௮ அந்தப்படியவர் படகிற்பிரவேசிக்கிறபொழுது, பசாசுபிடித்திருந்தவன் அவருடனேகூடப்போகும்படிக்கு அவரைவேண்டிக்கொண்டான.

௰௯ இயேசுவானவர் அவனுக்கு உத்தரவுகொடாமல, நீயுன்வீட்டிலே உன் இனத்தாரிடத்திற்குப்போய்க் கர்த்தருன்கிரங்கி உனக்குச்செய்தமிகுந்தவிசேஷங்களையவர்களுக்குத்தெரிவிப்பாயாகவென்றார்.

௨௰ அந்தப்படியவன்போய்த் தனக்கு இயேசுவானவர்செய்த விசேஷங்களைத்தெக்கப்போலியென்னுந்தேசத்திலே பிரசித்தம்பண்ணினான. யாவரும் ஆச்சரியப்பட்டார்கள.

௨௧ பின்பு இயேசுவானவர் மறுபடியும் படகிலேறி இக்கரைக்குவந்துகடலோரத்திலேயிருந்தபொழுது மிகுந்தசனங்கள்கூடி அவரிடத்தில்வந்தார்கள.

௨௨ அப்பொழுதுசெப ஆலயத்தலைவரிலொருவனாகியயாவீரு என்பவனும்வந்து அவரைக்கண்டவுடனே அவருடையபாதத்தினருகேவிழுந்து,

௨௩ என்குமாரத்திமரண அவஸ்தைப்படுகிறாள. அவள் ஆரோக்கியமடையும்படிக்கு நீர்வந்து அவள்மேற்கைகளைவைத்தருளும். அப்பொழுதுபிழைப்பாளென்றுஅவரை மிகவும்வேண்டிக்கொண்டான.

௨௪ அவர் அவனோடேகூடப்போனார். அவரைநெருக்கத்தக்கதாக அநேகசனங்கள அவருக்குப்பின்சென்றார்கள.

௨௫ அப்பொழுது பன்னிரண்டுவருஷமாய்ப்பெரும்பாடுள்ள ஒருஸ்திரியானவள்,

௨௬ அநேகபரிகாரிகளால மிகுந்தவருத்தப்பட்டுத் தனக்குண்டான யாவையுஞ்செலவழித்தும் சற்றுங்குணமடையாமல அதிகவருத்தப்படுகிறபொழுது,

௨௭ இயேசுவைக்குறித்துக்கேள்விப்பட்டு அவருடையவஸ்திரங்களைமாத்திரந்தொட்டாற்சுகம அடையலாமென்றெண்ணி,

௮ அவர்கள் பையையாகிலும் ஆகாரத்தையாகிலும் கச்சையிலே பணத்தையாகிலும் வழிக்காகக் கூடக்கொண்டுபோகாமல் ஒரு தடியைமாத்திரம் எடுத்துப்போகவும்,

௯ பாதரட்சைகளைப் போட்டுக்கொண்டுபோகவும் இரண்டங்கிகளைத் தரியாதிருக்கவும் அவர்களுக்குக் கட்டளையிட்டு,

௰ பின்பு அவர்களுக்குச் சொன்னதாவது, எங்கேயாகிலும் நீங்கள் ஒரு வீட்டிற் பிரவேசித்ததுமுதல் அவ்விடத்தைவிட்டுப் புறப்படுகிறவரைக்கும் அங்கேதானே தங்கியிருங்கள்.

௰௧ எவர்களாகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும் உங்களுக்குச் செவிகொடாமலுமிருக்கிறார்களோ அவர்களுடைய இடத்தை நீங்கள் விட்டுப் புறப்பட்டு அவர்களுக்கு விரோதமான சாட்சியாக உங்கள் உள்ளங்கால்களிற்படிந்திருக்கிற தூசியை உதறிப்போடுங்கள். நியாயத்தீர்ப்புநாளிலே சோதோம் கொமோரா பட்டினத்தாரிலும் அந்தப் பட்டினத்தார் அதிகத்தண்டிப்பையடைவார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லி இரண்டிரண்டுபேராக அவர்களையனுப்பினார்.

௰௨ அவர்கள் புறப்பட்டு மனந்திரும்புங்களென்று பிரசங்கித்து,

௰௩ அநேகம் பசாசுகளைத் துரத்தி அநேகம் நோவாளிகளை எண்ணெயபூசிச் சுகமாக்கினார்கள்.

௰௪ அவருடையபேர் பிரசித்தமானபடியினாலே இராசனாகிய ஏரோது (அவரைக் குறித்துக்) கேள்விப்பட்டு யோவான்ஸ்நானன் மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டிருக்கிறான்.

௰௫ ஆதலாற்பலத்த அற்புதங்கள் அவனாலே செய்யப்படுகின்றனவென்றான். சிலர் அவனை எலியாவென்றுஞ்சிலர் அவனை ஒருதீர்க்கதரிசி அல்லது தீர்க்கதரிசிகளிலொருவனைப் போலிருக்கிறானென்றுஞ்சொன்னார்கள்.

௰௬ ஏரோது அதைக்கேட்டபொழுது அவன் நான் சிரச்சேதம்பண்ணின யோவான்தான், அவன் மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்டிருக்கிறானென்றான்.

௰௭ அதெப்படியென்றால் ஏரோது தன் சகோதரனாகிய பிலிப்புவினுடைய மனைவி ஏரோதியாளை விவாகம்பண்ணினபொழுது,

௰௮ யோவான் ஏரோதைநோக்கி, நீர் உமது சகோதரனுடைய மனைவியைக்கொள்ளுகிறது நியாயமல்லவென்று சொன்னபடியினாலே ஏரோது (ஆட்களையனுப்பி) அவனைப்பிடித்துக் காவலிற்கட்டிவைத்தான்.

௰௯ அல்லாமலும் ஏரோதியாள் அவனுக்குக் கெடுதி நினைத்து அவனைக்கொலைசெய்யவிரும்பினாள்.

௨௰ ஏரோது யோவானை நீதிமானும் பரிசுத்தமுமுள்ளவனென்று அறிந்து அவனுக்குப் பயந்து அவனை நன்றாய்க்காத்து அவனுடைய ஆலோசனையின்படி அநேககாரியங்களைச் செய்து விருப்பத்தோடே அவனுடைய சொற்கேட்டுவந்தான். ஆகையால் அவள் அப்படிச்செய்யக்கூடாமலிருந்தது.

௨௧ பின்பு அதற்கேற்றநாள் வந்தது. எப்படியென்றால் ஏரோது தன் ஜென்மநாளிலே தன்னுடைய மந்திரிகளுக்கும் சேனாபதிகளுக்கும் கலிலேயாநாட்டின் பிரபுக்களுக்கும் விருந்துபண்ணினகாலத்திலே,

௨௨ ஏரோதியாளுடைய குமாரத்தி உள்ளேசென்று ஏரோதுவுக்கும் பந்தியிருந்தவர்களுக்கும் பிரியமுண்டாகத்தக்கதாக நடனம்பண்ணினபொழுது இராசா அந்தச்சிறுபெண்ணைநோக்கி, உனக்குவேண்டியதையென்னிடத்திற்கேள் நான் உனக்குத் தருவேனென்று சொன்னதுமல்லாமல்,

௨௩ நீ என் இராச்சியத்தில் பாதிவரைக்கும் எதைக்கேட்டாலும் அதையுனக்குத் தருவேனென்று அவளுக்கு ஆணையுமிட்டான்.

௨௪ அப்பொழுது அவள் வெளியேபோய்த் தன் தாயைநோக்கி, நான் என்னகேட்கவேண்டுமென்று சொன்னதற்கு யோவான்ஸ்நானனுடைய தலையைக் கேளென்றாள்.

௨௫ உடனேயவள் சீக்கிரமாக இராசாவினிடத்திற்குத் திரும்பிப்போய், நீர் இப்பொழுதுதானே ஒரு தாலத்திலே யோவான்ஸ்நானனுடைய தலையை எனக்குத் தரவேண்டுமென்று கேட்டாள்.

௨௬ அப்பொழுது இராசா மிகுந்த துக்கமடைந்தான். அப்படியிருந்தும் ஆணைகளினிமித்தமும் பந்தியிருந்தவர்களினிமித்தமும் அவளுக்கு அதை மறுக்கமனதில்லாமல்,

௨௭ உடனே அவனுடைய தலையைக் கொண்டுவரும்படிக்குப் போர்ச்சேவகனாகிய காவற்காரனுக்குக் கட்டளையிட்டனுப்பினான். அந்தப்படியே அவன் போய்க் காவற்கூடத்திலே யோவானைச் சிரச்சேதம்பண்ணி,

௨௮ ஒருதாலத்திலே அவனுடைய தலையைக் கொண்டுவந்து அதைச் சிறுபெண்ணுக்குக் கொடுத்தான். சிறுபெண் அதைத் தன் தாய்க்குக் கொடுத்தாள்.

௨௯ அவனுடைய சீஷர் அதைக்கேட்டு வந்து அவனுடலையெடுத்து ஒரு கல்லறையிலே வைத்தார்கள்.

௩௰ அதற்குணத்திலே அப்போஸ்தலர்கள் இயேசுவினிடத்திற்கூடிவந்து தாங்கள் செய்த யாவையும் போதகம்பண்ணின யாவையும் அவருக்கறிவித்தார்கள்.

௩௧ பின்பு அவர்கள் போசனம்பண்ணும்படிக்குஞ் சமயமில்லாதிருக்கத்தக்கதா

க வருகிறவர்களும் போகிறவர்களும் மிகுதியானபடியினாலே அவர் அவர்களை நோக்கி, நீங்கள் வனாந்தரமான இடத்திலே தனித்திருந்து சற்றே இளைப்பாறவாருங்களென்று சொன்னார்.

௩௨ அந்தப்படி அவர்கள் தனித்திருக்கும்படிக்குப் படகிற் பிரவேசித்து வனாந்தரமான இடத்திற்குப் போனார்கள்.

௩௩ அவர்கள் புறப்பட்டுப் போகிறதைச் சனங்கள் கண்டு (அவர்கள் போகிற) இடத்தையறிந்து சகல பட்டினங்களிலுமிருந்து கால்நடையாய் அவ்விடத்திற்கோடி அவர்களுக்கு முன்னே அங்கே சேர்ந்து அவரிடத்திற்குக் கூடிவந்தார்கள்.

௩௪ இயேசுவானவர் கரையில் வந்து, மிகுந்த சனங்களைக் கண்டபொழுது அவர்கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போலிருந்தபடியினாலே அவர்கள்மேல் உருக்கமாய் இரங்கி அநேககாரியங்களை அவர்களுக்கு உபதேசித்தார்.

௩௫ பின்பு பொழுது மிகவுங் கழிந்துபோனபடியால் அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து இது வனாந்தரமான இடம். அல்லாமலும் மிகவும் பொழுதுபோயிற்று.

௩௬ போசனம்பண்ணுகிறதற்கு இவர்களிடத்திலொன்றுமில்லை, ஆகையால் இவர்கள் சுற்றியிருக்கிற ஊர்களுக்குங் கிராமங்களுக்கும் போய்த் தங்களுக்காக அப்பங்களை வாங்கிக்கொள்ளும்படிக்கு இவர்களையனுப்பிவிடவேண்டுமென்றார்கள்.

௩௭ அதற்கவர் நீங்களே இவர்களுக்குப் போசனங்கொடுங்களென்றார். அவர்கள் சொன்னது, இவர்களுக்குப் போசனங்கொடுக்கும்படிக்கு நாங்கள் போய் இருநூறு தெநாரியப்பணத்திற்கு அப்பங்களை வாங்கிக்கொண்டுவரலாமாவென்றார்கள்.

௩௮ அதற்கவர் எவ்வளவு அப்பங்கள் உங்களிடத்திலுண்டு போய்ப்பாருங்களென்றார். அவர்கள் விசாரித்து (வந்து) ஐந்து அப்பமும் இரண்டு மீனுமிருக்கின்றனவென்று சொன்னார்கள்.

௩௯ அப்பொழுது அவர்கள் கூட்டங்கூட்டமாக எல்லாச்சனங்களையும் பசுமையான புல்லின்மேல் உட்காரப்பண்ணும்படிக்குக் கட்டளையிட்டார்.

௪௰ அப்படி நூறுபேர் ஒரு கூட்டமும் ஐம்பதுபேர் ஒரு கூட்டமுமாகச் சதுக்கஞ் சதுக்கமாய் உட்கார்ந்தார்கள்.

௪௧ பின்பு அவர் அவ்வைந்து அப்பங்களையும் அவ்விரண்டு மீனையும் எடுத்து வானத்தை அண்ணாந்து பார்த்து அவைகளை ஆசீர்வதித்துப் பின்பு அப்பங்களைப் பிட்டுச் சனங்களுக்குக் கொடுக்கும்படிக்கு அவைகளைச் சீஷர்களுக்குக் கொடுத்துப் பின்பு அவ்விரண்டு மீனையும் அவர்களெல்லாருக்கும் பகிட்டார்.

௪௨ எல்லாருஞ் சாப்பிட்டுத் திருத்தியடைந்தார்கள்.

௪௩ அல்லாமலும் (அப்பங்களிலும்) மீன்களிலுஞ் சேஷமானவைகளைப் பன்னிரண்டு கூடை நிறைய எடுத்தார்கள்.

௪௪ ஏறக்குறைய ஐயாயிரம் புருடர் போசனம்பண்ணினார்கள்.

௪௫ பின்பு தாஞ் சனங்களையனுப்புகையிலே தமக்கு முன்னுஞ் சீஷர்கள் படகிலேறி அக்கரையிற் பெத்சாயிதாவென்னும் ஊருக்குப் போகும்படிக்கு அவர்களைத் துரிதப்படுத்தினார்.

௪௬ பின்பு அவர் சனங்களையனுப்பி செபத்தியானம்பண்ணும்படிக்கு மலையிலேறினார்.

௪௭ சாயந்திரமானபொழுது படகு கடலின் நடுவிலே சேர்ந்தது, அவர் மாத்திரங் கரையிலேயிருந்தார்.

௪௮ அப்பொழுது காற்று அவர்களுக்கு எதிரானபடியினாலே அவர்கள் வருத்தத்தோடே (படகை) தள்ளினதை அவர் கண்டு, பின்பு இராத்திரியில் நாலாஞ் சாமத்திலே புறப்பட்டுக் கடலின்மேல் நடந்து அவர்களிடத்திற்குச் சமீபித்து அவர்களைக் கடந்துபோகமனதாயிருந்தார்.

௪௯ கடலிலே நடந்துபோகிற அவரை அவர்கள் கண்டபொழுது அது ஆவேசமென்றெண்ணிச் சத்தமிட்டார்கள்.

௫௰ அல்லாமலும் எல்லாரும் அவரைக் கண்டு கலக்கமடைந்தார்கள். உடனே அவர் அவர்களை நோக்கித் திடமாயிருங்கள், நான்தான் பயப்படாதிருங்களென்று அவர்களுடனே சொன்னார்.

௫௧ பின்பு அவர் அவர்களிருக்கிற படகிற் பிரவேசித்தவுடனே காற்று நின்றுபோயிற்று.

௫௨ அவர்கள் கடினமான இருதயமுடையவர்களாகையால் அந்த அப்பங்களைக்குறித்துச் சிந்தனைபண்ணாமலிருந்தபடியினாலே மிகவும் மிகுதியாய்த் தங்களுக்குள்ளே பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௫௩ பின்பு அவர்கள் புறப்பட்டுக் கெநேசரேத்து நாட்டில் வந்து கரைப்பிடித்தார்கள்.

௫௪ அவர்கள் படகைவிட்டிறங்கினவுடனே சனங்கள் அவரையறிந்து,

௫௫ அந்தத் திசையெங்கும் ஓடித்திரிந்து படுக்கைகளிற் கிடக்கிற பிணியாளிகளை மேலெடுத்து அவர் வந்திருக்கிறாரென்று கேள்விப்பட்ட இடங்களிற் கொண்டுவரத்தொடங்கினார்கள்.

௫௬ அல்லாமலும் அவர் பிரவேசித்த கிராமம் பட்டினம் ஊர்களைவைகளோ, அவைகளின் சந்தைகளிற் பிணியாளிகளைவைத்து

அவர்கள் அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தை மாத்திரந் தொடும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள். எவர்கள் அதைத் தொட்டார்களோ அவர்கள் சொஸ்தமடைந்தார்கள்.

## எ. அதிகாரம்.

[(௧) சீஷர் கைகழுவாமற் போசனம்பண்ணினதைக்குறித்துப் பரிசேயர் விசனப்பட்டது. (௰௪) போசனம் ஒருவனையும் அசுசிப்படுத்தாதென்று அவர் போதித்தது. (௨௪) அவர் தீருசீதோனின் திசையிலவந்து ஒரு ஸ்திரீயினுடைய மகளைக் குணமாக்கினது. (௩௧) கலிலேயாக்கடலின் அருகே கொன்னைவாயையுடைய ஊமையனைக் குணமாக்கினது.]

பரிசேயரும் மற்ற யூதர்களெல்லாரும் பெரியோர்களுடைய பாரம்பரை நியாயங்களைக் கைக்கொள்ளும்படிக்கு மணிக்கட்டுவரைக்குங் கைகழுவாமற் போசனம்பண்ணமாட்டார்கள்.

௨ அல்லாமலுஞ் சந்தைகளிலிருந்து (வந்தால்) ஸ்நானம்பண்ணாமற் போசனம்பண்ணமாட்டார்கள். மேலுஞ் செம்புபாத்திரங்களையுங் குடங்களையுஞ் செம்புபானைகளையுங் கட்டில்களையும் ஸ்நானம்பண்ணுவித்தல் மற்றும் அப்படிப்பட்ட அநேகஞ்சடங்குகளைப் பற்றிக்கொள்ளுவார்கள்.

௩ ஆனால் பரிசேயரும் வேதபாரகரில் சிலருங்கூடி எருசலேமபட்டினத்திலிருந்து அவரிடத்தில் வந்து,

௪ அவருடைய சீஷரிற் சிலர் கைகழுவாமல் அசுத்தமான கைகளோடே போசனம்பண்ணுகிறதைக் கண்டபொழுது அவர்கள் அவரை நோக்கி,

௫ உம்முடைய சீஷர் பெரியோருடைய பாரம்பரை நியாயத்தை மீறிநடந்து கைகழுவாமற் போசனம்பண்ணுகிறதென்னவென்று கேட்டார்கள்.

௬ அதற்கு மாறுத்தரமாக அவர் சொன்னது, நீங்கள் பாரம்பரனுடைய கட்டளையை விட்டுக் குடங்களையுஞ் செம்புபாத்திரங்களையும் ஸ்நானம்பண்ணுவித்தல் மற்றும் அப்படிப்பட்ட அநேக சடங்குகளைச்செய்து மனிதர்களுடைய பாரம்பரை நியாயங்களைக் கைக்கொள்ளுகிறீர்கள்.

௭ ஆகையால் இந்த ஜனங்கள் உதடுகளினாலே என்னைக் கனம்பண்ணியும் இவர்களுடைய இருதயம் எனக்குத் தூரமாய் விலகியிருக்கின்றதென்றும்,

௮ மனிதர்களுடைய கற்பனைகளாகிய உபதேசங்களை இவர்கள் கற்றுக்கொண்டு வீணாய் எனக்கு ஆராதனைசெய்கிறார்களென்றும் ஏசாயாவென்பவன் மாயக்காரரா

கிய உங்களைக் குறித்து நன்றாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லியிருக்கிறானென்று சொல்லி,

௯ பின்பு உங்கள் பாரம்பரை நியாயங்களைக் காத்துக்கொள்ளும்படிக்கு நீங்கள் பராபரனுடைய கட்டளையைத் தள்ளிக்கொண்டிருக்கிறது நன்றாயிருக்கிறது.

௰ என்னவென்றால், உன் தகப்பனையும் உன் தாயையுங் கனம்பண்ணுவாயாகவென்றும் தகப்பனையாவது தாயையாவது நிந்திக்கிறவனுக்கு மரணஆக்கினையைக் கொடுக்கவேண்டுமென்றும் மோசே சொன்னாரே.

௰௧ நீங்கள் ஒருவன் தன் தகப்பனையாவது தாயையாவது நோக்கி, உங்களுக்கு என்னாலே உதவுகிறதேதோ அது (தேவாலயத்திற்குக் காணிக்கையாகிய) கொர்பானாவதாக வென்று சொன்னால்,

௰௨ பின்பு அவன் தன் தகப்பனுக்குந் தன் தாய்க்கும் உதவிசெய்யவேண்டுவதில்லையென்று உத்தரவுகொடுத்து,

௰௩ இவ்விதமாய் உங்களால் உண்டாக்கப்பட்ட பாரம்பரை நியாயத்தினாலே பராபரனுடைய வசனத்தை அவமாக்குகிறீர்கள். அதுபோல் நீங்கள் மற்றும் அநேகங் காரியங்களையுஞ் செய்கிறீர்களென்று சொல்லி,

௰௪ பின்பு எல்லா ஜனங்களையும் அழைத்து அவர்களுடனே சொன்னது, நீங்களெல்லாரும் எனக்குச் செவிகொடுத்துச் சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௰௫ ஒரு மனிதனுக்குப் புறம்பேயிருக்கிற எந்தப்பொருளும் அவனுக்குட்பிரவேசிக்கிறபொழுது அவனையசுசிப்படுத்தமாட்டாது. அவனுள்ளத்திலிருந்து புறப்படுகிறபொருள்களே அவனையசுசிப்படுத்துகின்றன.

௰௬ கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவனானாற் கேட்கக்கடவனென்றார்.

௰௭ பின்பு அவர் ஜனங்களைவிட்டு வீட்டிற் பிரவேசித்தபொழுது அவருடைய சீஷர்கள் அந்த உவமையைக்குறித்து அவரிடத்தில் வினாவினார்கள்.

௰௮ அவர்களுடனே அவர் சொன்னது, நீங்களும் புத்தியில்லாதவர்களா? புறம்பேயிருக்கிற எந்தப்பொருளும் மனிதனுக்குட்பிரவேசிக்கிறபொழுது அவனை அசுசிப்படுத்தமாட்டாதென்று நீங்களும் அறிந்திருக்கவில்லையா?

௰௯ அது அவனுடைய இருதயத்திலே பிரவேசியாமல் வயிற்றிற் பிரவேசிக்கிறபடியினால் அதிலிருந்து எல்லாப்போசனங்களையுஞ் சுத்திகரிக்கிற ஆசனவழியாய்ப் புறப்படுகின்றன.

௨௰ மனிதனுடைய உள்ளத்திலிருந்து புறப்படுகிறதே அவனையசுசிப்படுத்துகின்றது.

௨௧ அதெப்படியெனில் மனிதருடைய இருதயத்திலிருந்து,

உஉ விபசாரம, வேசைததனம, கொலை, திருடடு, (தகாத) பொருளாசை, மூர்ககம, கபடம, காமவிகாரம, பொறாமை, தூஷணம, அகநதை, மதிகேடு எனடவைகளுககேதுவான பொலலாதயோசனைகள புறபபடுகினறன.

உங தீமையான இவைகளெலலாம உளளததிலிருநதுபுறபபடடு, மனிதனையசுசிபபடுததுகினறனவெனறு திருவுளமபறறினூர்.

உச பினபு அவர் எழுநது அவவிடமவிடடுத்திருசிதோனபடடினஙகளின எலலைககுககுபபோனூர். அஙகே அவர் ஒருவீடடிலேபிரவேசிததபினபு தமமையொருவரும அறியாமலிருககுமபடிககு மனதாயிருநதும அவர்மறைநதிருககிறததாகு ஏதுவிலலை.

உரு எபபடியெனறால் சூர்பெநீசியாதேசததிற்பிறநத அஞஞானியாகிய ஒருஸதிரீயானவளுககு அசுதத ஆவியையுடையமகளிருநதாள.

உசா அநத ஸதிரீ அவரைககுறிததுககேள்விபபடடபொழுது அவளவநதுவணககமாய அவருடையபாதஙகளின்கேவிழுநது தனனுடைய மகளிலிருநது பசாசைததுரததவேணடுமெனறு அவரைவேணடிககொணடாள.

உஎ இயேசுவானவர் அவளை நோக்கிப் பிளளைகளுடைய ஆகாரததையெடுததுநாய்களுககுககொடுககிறது நியாயமலல, ஆகையால முதலாவது பிளளைகளேதிருததியடையடடுமெனறூர்.

உஅ அவளசொனனது, ஆணடவரே! அதுசரிதான. ஆனாலும போசனபபலகைகளின கீழிருககிறநாய்கள பிளளைகளுடைய உசசிடடஙகளைததினனுமேயெனறுள.

உகூ அபபொழுது அவர்சொனனது, நீ இநத வசனததைசசொன்னபடியினூலே (சநதோஷமாயப்)போ. பசாசு உனமகளிலிருநது புறபபட்டுபபோயிறறெனறூர்.

ஙப அவள தன்வீடடிலேபோயசசேர்நதபொழுது, பசாசு புறபபடடுபபோனதையும தனமகள் கடடிலினமேற் படுததிருககிறதையுஙகணடாள்.

ஙக பினபு அவர்திருசிதோனபடடினஙகளின திசைகளைவிடடுபபுறபபடடுத தெக்கபோலிபெனனும தேசததின திசைகளினவழியாயமறுபடியும கலிலேயாநாடடினகடலருகேவநதார்.

ஙஉ அஙகே கொனனை வாயையுடைய செவிடனையவரிடததிற்கொணடுவநது, அவர் தமதுகையை அவனமேலவைககுமபடிககு அவரைவேணடிககொணடார்கள.

ஙங அபபொழுது அவர் கூடடததிலிருநது அவனையொருபக்கததிலே கொணடுபோய்த் தமதுவிரலகளை அவனுடையகாதுகளிலவைதது உமிழநது அவனுடையநாவைசதொடடு,

ஙச பினபு வானததையணணாநதுபார்தது மூசசைவிடடு எப்பத்தாவெனறூர். எபபத்தாவெனபதற்குத திறக்கப்படுவாயாகவெனறு அருத்தமாம்.

ஙரு உடனே அவனுடையகாதுகளதிறக்கபபடடன். அவன் நனருய்ப்பேசத்தக்கதாக அவனுடைய நாவினகடடும நீக்கப்படடது.

ஙசா பினபு அவர்கள அதையொருவருககுஞசொலலாதபடிககு அவர்களுககுக்கடடளையிடடார். அபபடியிருநதுந்தஙகளுககு அவர் அபபடிககடடளையிடடதெவவளவோ அவவளவாய அதைட்பிரசித்தம்பணணினூர்கள.

ஙஎ அலலாமலும, அவர்சகலததையும நனறாயசசெயதருளினூர். செவிடர்கேட்கவும ஊமைமையடர்பேசவும பணணுகிறூரெனறு மிகவும மிகுதியான ஆசசரியததோடேசொலலிககொணடார்கள.

# அ. அதிகாரம்.

[(க) கிறிஸது நாலாயிரமபேருககுசசாபபாடுகொடுத்தது. (ய) பரிசேயருககு அடையாளமுங கொடுக்கபபடுவதிலலையெனறது. (ஙச) பரிசேயருடைய புளிபபு மாவுககுவிலகவேணடுமெனபது (உஉ) ஒருகுருடனுககுப பார்வையைககொடுத்தது. (உஎ) கிறிஸதுவைககுறிததுப பேதுரு உத்தரவுசொன்னது. (ஙக) கிறிஸது தமமுடையபாடுகளை முனனறிவித்தது. (ஙஉ) அவர் பேதுருவைக் கடிநதது. (ஙச) தமமைபபினபறறுகிறவர்களைககுறிததுசசொனனது.]

அநதநாட்களிலே சனஙகளமிகுநதகூடடமாயபபோசனம்பணணுகிறதற்கு ஒனறுமிலலாதிருநதபொழுது, இயேசுவானவர் தமமுடைய சீஷர்களையழைதது,

உ இநதசசனஙகள எனனிடததிலவநது மூனறுநாளாயிறறு இப்பொழுதுபோசனமபணணுகிறதற்கு இவர்களுககு ஒனறுமிலலையே. ஆகையால இவர்களமேல உருக்கமாய் இரஙகுகிறேன.

ங அலலாமலும இவர்களிற்சிலர் தூரததிலிருநது வநதவர்களாகையால்நான அவர்களைபபடடினியாய் வீட்டிற்கு அனுபபினூல் வழியிலேசோர்நது போவார்களெனறுசொனனபொழுது,

ச சீஷர்கள அவருககுமாறுததரமாக, இநதவனாநதரததிலே ஒருவன இவர்களுககு அபபஙகளினூலே திருததியாக்குவதெபபடியெனறூர்கள.

௫ அதற்கு அவர், எத்தனை அப்பங்கள் உங்களிடத்திலுண்டென்று கேட்டார். ஏழு அப்பங்களுண்டென்றார்கள்.

௬ அப்பொழுது சனங்கள் தரையிலேயிருக்கும்படி கட்டளையிட்டுப் பின்பு அந்த ஏழு அப்பங்களையும் எடுத்துத் தோத்திரம் பண்ணி அவைகளைப் பிட்டு அவர்களுக்குப் பரிமாறும்படிக்கு அவைகளைச் சீஷர்களிடத்திற் கொடுத்தார், அந்தப்படியவர்கள் சனங்களுக்குப் பரிமாறினார்கள்.

௭ அல்லாமலுஞ் சில சின்ன மீன்கள் அவர்களிடத்திலிருந்தன. அவர் தோத்திரஞ் சொன்ன பின்பு அவைகளையும் பரிமாறும்படிக்குக் கட்டளையிட்டார்.

௮ அப்படிச் சனங்கள் சாப்பிட்டுத் திருத்தியடைந்தார்கள். ஏழு கூடை நிறையச் சேஷமானவைகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௯ சாப்பிட்டவர்கள் ஏறக்குறைய நாலாயிரம் பேருண்டு.

௰ பின்பு அவர்களையனுப்பிவிட்டு, உடனே தம்முடைய சீஷருடனே கூடப் படகிலேறித் தல்மனூத்தாவூரின் திசைகளில் வந்தார்.

௰௧ அங்கேயிருந்து பரிசேயர் அவரைப் பரிட்சை பார்க்கும்படிக்குப் புறப்பட்டு வந்து அவருடனே தருக்கம்பண்ண ஆரம்பித்து அவர் வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைக் காட்டும்படி கேட்டார்கள்.

௰௨ அப்பொழுது அவர் தமது உள்ளத்திலிருந்து பெருமூச்சைவிட்டு இந்தத் தலைமுறையார் என்னத்தினாலே ஓரடையாளத்தைக் கேட்கிறார்கள். இந்தச் சந்ததியாருக்கு ஓரடையாளங் கொடுக்கப்படுவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லி,

௰௩ அவர்களைவிட்டு மறுபடியும் படகிலேறி அக்கரைக்குப் போனார்.

௰௪ சீஷர்கள் அப்பங்களைக் கூடக் கொண்டுபோக மறந்தார்கள். படகிற் (பிரவேசிக்கையில்) ஒரே அப்பம் மாத்திரம் அவர்களிடத்திலிருந்தது.

௰௫ அப்பொழுதவர் அவர்களை நோக்கி, நீங்கள் பரிசேயருடைய புளிப்புள்ள மாவுக்கும் ஏரோதினுடைய புளிப்புள்ள மாவுக்கும் விலகி மிகவும் எச்சரிக்கையாயிருக்கக்கடவீர்களென்று அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

௰௬ அவர்கள் (அதைக்கேட்டு) தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு நம்மிடத்தில் அப்பங்களில்லாதபடியால் இப்படிச் சொன்னாரென்றார்கள்.

௰௭ இயேசுவானவர் அதையறிந்து, அவர்களை நோக்கி, உங்களிடத்தில் அப்பங்களில்லாததைக் குறித்து ஏன் யோசனைபண்ணுகிறீர்கள்? இதுவரைக்கும் நீங்கள் அறிந்துகொள்ளாமலும் சிந்தித்துக்கொள்ளாமலுமா இருக்கிறீர்கள்? இதுவரைக்கும் உங்களிருதயங் கடினமாயிருக்கிறதா?

௰௮ கண்களிருந்தும் நீங்கள் காணாமலா இருக்கிறீர்கள்? காது இருந்தும் நீங்கள் கேளாமலா இருக்கிறீர்கள்? நீங்கள் நினைவுகூரவில்லையா?

௰௯ அந்த ஐயாயிரம் பேருக்குள்ளே நான் ஐந்து அப்பங்களையும் பிட்டுக் கொடுத்தபொழுது எவ்வளவு கூடை நிறையச் சேஷமானவைகளை யெடுத்தீர்களென்று கேட்டதற்குப் பன்னிரண்டு கூடை நிறைய எடுத்தோமென்றார்கள்.

௨௰ அல்லாமலும் அந்த நாலாயிரம் பேருக்குள்ளே (நான்) அந்த ஏழு அப்பங்களையுங் (கொடுத்த) பொழுது எவ்வளவு கூடை நிறையச் சேஷமானவைகளை யெடுத்துக்கொண்டீர்களென்று கேட்டதற்கு ஏழு கூடை நிறைய என்றார்கள்.

௨௧ அவர் சொன்னது, அப்படியிருக்க நீங்கள் சிந்தித்துக்கொள்ளாமலிருப்பது எப்படியென்று திருவுளம்பற்றினார்.

௨௨ பின்பு அவர் பெத்சாயிதாவூருக்கு வந்தார். அங்கே ஒரு குருடனை அவரிடத்திற் கூட்டிக்கொண்டுவந்து அவனைத் தொடும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௨௩ அப்பொழுது அவர் குருடனுடைய கையைப் பிடித்து அவனைக் கிராமத்திற்குப் புறம்பே கொண்டுபோய் அவனுடைய கண்களில் உமிழ்நீரைத் தடவித் தமது கைகளையவன்மேல் வைத்து உனக்கு ஏதாகிலுந் தோன்றுகிறதாவென்று கேட்டார்.

௨௪ அவன் அண்ணாந்து, நடந்துபோகிற மனிதரை மரங்களைப்போலக் காண்கிறேனென்றான்.

௨௫ பின்பு அவர் மறுபடியுந் தமது கைகளை அவனுடைய கண்களின்மேல் வைத்து, அவன் திரும்ப அண்ணாந்து பார்க்கும்படி செய்தார். அப்பொழுது அவன் நன்றாய்க் குணமாக்கப்பட்டுச் சகலத்தையுந் தெளிவாய்ப் பார்த்தான்.

௨௬ பின்பு அவர் அவனை நோக்கி, நீ கிராமத்திற் பிரவேசியாமலும் அதிலொருவனுக்கும் இதைச் சொல்லாமலுமிருவென்று சொல்லி, அவனை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

௨௭ பின்பு இயேசுவானவர் தமது சீஷர்களோடுகூட அவ்விடம்விட்டுப் பிலிப்புவின் கேசரியா பட்டினத்தருகேயிருக்கிற கிராமங்களுக்குப் போனார். வழியிலே அவர் தமது சீஷர்களை நோக்கி என்னைக் குறித்து மனிதர் என்ன சொல்லுகிறார்களென்று கேட்டார்.

௨௮ அவர்கள் சொன்னது, சிலர் உம்மை ஸ்நானங்கொடுக்கிற யோவானென்றும் சிலர் எலி

யாவென்றும் சிலர் உம்மைத் தீர்க்கதரிசிகளிலொருவனென்றுஞ் சொல்லுகிறார்களென்றார்கள்.

௨௯ அப்பொழுது அவர் நீங்கள் என்னைக்குறித்து என்ன சொல்லுகிறீர்களென்றார். அதற்குப் பேதுரு நீர் கிறிஸ்துவேயென்றான்.

௩௰ அப்பொழுது தம்மைக்குறித்து அப்படி யொருவருக்குஞ் சொல்லாதபடிக்குக் கெட்டியாய் அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

௩௧ அல்லாமலும் மனிதனுடைய குமாரன் மிகவும் பாடுபடவும் பெரியோர்களும் பிரதான ஆசாரியர் வேதபாரகரென்பவர்களாலே தள்ளப்படவும் மரணம் அடையவும் பின்பு மூன்று நாளுக்குள்ளே உயிரோடெழுந்திருக்கவும் வேண்டுமென்று அவர்களுக்கறிவிக்கத்தொடங்கினார்.

௩௨ அப்படியவர் வெளியரங்கமாய்ப் பேசிக்கொண்டபொழுது பேதுரு அவரைப் பக்கத்திலேயழைத்து அவரைக்கடிந்துகொள்ளத்தொடங்கினான்.

௩௩ உடனே அவர் திரும்பித் தம்முடைய சீஷர்களை நோக்கிப்பார்த்தபின்பு பேதுருவை நோக்கி, நீ பராபரனுக்குப் பிரியமானவைகளைச் சிந்தியாமல் மனிதருக்குப் பிரியமானவைகளைச் சிந்திக்கிறபடியினாலே சாத்தானே! நீ என் முன்னின்று அப்பாலேபோவென்று அவனைக் கடிந்துகொண்டு,

௩௪ பின்பு தமது சீஷருடனே சனங்களையழைத்து எனக்குப் பின்செல்லவிரும்புகிறவனெவனோ அவன் தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலுவையையெடுத்துக்கொண்டு எனக்குப் பின்செல்லக்கடவன்.

௩௫ என்னத்தினாலென்றால், எவனொருவன் தன் சீவனையிரட்சிக்கவிரும்பினால் அதையிழந்துபோவான். என்னிமித்தமும் சுவிசேஷத்தினிமித்தமும் தன் சீவனையிழந்துபோகிறவனெவனோ அவனே அதையிரட்சிப்பான்.

௩௬ அல்லாமலும் ஒருவன் உலகம் யாவையுஞ் சம்பாதித்துக்கொண்டாலுந் தன் சீவனையிழந்துபோனால் அவனுக்கு என்ன லாபமுண்டாகும்?

௩௭ அல்லது ஒரு மனிதன் தன் சீவனை மீட்கும்படிக்கு என்னத்தைக்கொடுப்பான்?

௩௮ அன்றியும் விபசாரமும் பாவமுமுள்ள இந்தச் சந்ததியாருக்குள்ளே எவனென்னையும் என் வசனங்களையுங்குறித்து வெட்கமடைவானோ அவனைக்குறித்தும் மனிதனுடைய குமாரன் தமது பிதாவின் மகிமையோடு பரிசுத்த தூதருடனேகூட வரும்பொழுது வெட்கமடைவான்.

## ௯. அதிகாரம்.

[(௨) இயேசுவானவர் மறுரூபமடைந்தது. (௰௧) அவர் எலியாவைக்குறித்துச் சொன்னது. (௰௪) ஒருவனுடைய மகனினின்று பசாசு புறப்படப்பண்ணினது. (௩௰) அவர் தம்முடைய மரணத்தை முன்னறிவித்தது. (௩௩) பெரியவனின்னானென்று காட்டியது. (௩௮) சீஷர்களைப்பின்பற்றாதவனைக் குறித்துச் சொல்லியது. (௪௨) உலகத்திலுள்ள கெடுதிகளையும் நரகத்தின் தீர்த்தப்படும் வகையையுங்குறித்துப் போதித்தது.]

அல்லாமலும் இங்கே நிற்கிறவர்களிற் சிலர் பராபரனுடைய ஆளுகை பலத்தோடே வருகிறதைக்காணுமளவும் மரணமடைவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨ ஆறுநாளுக்குப்பின்பு இயேசுவானவர் பேதுருவையும் யாக்கோபையும் யோவானையுங் கூட்டித் தனித்திருக்கும்படிக்கு அவர்களை உயரமான மலையிற்கொண்டுபோய் அவர்களுக்குமுன்பாக மறுரூபப்பட்டார்.

௩ அவருடைய வஸ்திரங்கள் பூமியிலே வண்ணான் செய்யக்கூடாத வண்ணமாயும் உறைந்த மழையைப்போலவும் மிகவும் வெண்மையாய்ப் பிரகாசித்தன.

௪ அல்லாமலும் மோசேயுமெலியாவும் அவர்களுக்குக் காணப்பட்டு இயேசுவுடனே பேசிக்கொண்டார்கள்.

௫ அப்பொழுது பேதுரு இயேசுவை நோக்கி, இரபீ! நாம் இங்கேயிருக்கிறது நலந்து. ஆகையால் உமக்காகவும் மோசேயுக்காகவும் எலியாவுக்காகவும் ஒவ்வொரு குடிலாக மூன்று குடில்களைப் பண்ணுவோமென்றான்.

௬ மிகுந்த பயம் அவர்களைப் பிடித்தபடியால் அவன்தான் பேசுகிறவசனங்களைத் தானேயறியாமல் அப்படிச் சொன்னான்.

௭ அப்பொழுது ஒரு மேகம் அவர்களை மூடிக்கொண்டது. அல்லாமலும் இவரென்னன்பாயிருக்கிற என்னுடைய குமாரன், இவருக்குச் செவிகொடுங்களென்று அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தமுண்டாயிற்று.

௮ உடனேயவர்கள் சுற்றிப்பார்த்தபொழுது தங்கள் சேகரத்தில் இயேசுவையேயன்றி மற்றொருவனையுங்காணவில்லை.

௯ பின்பு அவர்கள் மலையிலிருந்திறங்கின பொழுது அவர் அவர்களை நோக்கி, நீங்கள் (மலையிலே) கண்டவைகளை மனிதனுடைய குமாரன் மரித்தோரிலிருந்து எழுந்திருப்பதற்குமுன்னே ஒருவருக்கும் அறிவியாமலிருங்களென்று கட்டளையிட்டார்.

௰ அவர்கள் அந்த வசனத்தை ஞாபகப்படுத்தி மரித்தோரிலிருந்து எப்படி உயிரோடெழுந்திருக்கலாமென்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,

௰௧ பின்பு அவரை நோக்கி, முன்பு எலியா வரவேண்டுமென்று வேதபாரகர் சொல்லுகிறார்களேயென்று வினாவினார்கள்.

௰௨ அதற்கவர் சொன்னது, முன்பு எலியா வந்து சகலத்தையுஞ் சீர்ப்படுத்தவேண்டியதுதான், அல்லாமலும் மனிதனுடைய குமாரன் மிகவும் பாடுபடவும் அசட்டைபண்ணப்படவும் வேண்டுமென்று எழுதியிருக்கிறதுபோல அவனும் பாடுபடவேண்டும்.

௰௩ எலியா வந்தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன், அவனைக் குறித்து எழுதியிருக்கிறபடி அவனையவர்கள் தங்களிஷ்டப்படிக்குச் செய்தார்களென்றார்.

௰௪ பின்பு அவர் (மற்ற) சிஷர்களிடத்தில் வந்தபொழுது அவர்களைச் சூழ மிகுந்த சனங்களையும் அவர்களுடனே தருக்கம்பண்ணின வேதபாரகரையுங் கண்டார்.

௰௫ சனங்களெல்லாரும் அவரைக் கண்டவுடனே அவர்கள் மிகவும் பிரமித்து ஓடிவந்து அவரை வந்தனஞ்செய்தார்கள்.

௰௬ அப்பொழுது அவர் வேதபாரகரை நோக்கி, நீங்கள் எதைக்குறித்து இவர்களுடனே தருக்கம்பண்ணுகிறீர்களென்று கேட்டார்.

௰௭ அதற்குச் சனங்களிலொருவன் சொன்னது, போதகரே! ஊமையுள்ள ஆவியையடைந்திருக்கிற என் மகனை உம்மிடத்திற் கொண்டுவந்தேன்.

௰௮ அந்த ஆவி எவ்விடத்திலாகிலும் அவனைப் பிடித்துக்கொள்ளுகிறபொழுது அவனை (தரையிலே) மோதுகின்றது. பின்பு அவன் (வாயினாலே) நுரைதள்ளித் தன் பற்களைக் கடித்துக்கொண்டு சோர்ந்துபோகிறான், அதைத் துரத்தும்படிக்கு உம்முடைய சிஷரை வேண்டிக்கொண்டேன், அப்படிச் செய்யும்படிக்கு அவர்களாற் கூடாமற்போயிற்றென்றான்.

௰௯ அப்பொழுது அவர் பிரதியுத்தரமாக: ஆ, விசுவாசமில்லாத சந்ததியாரே! எதுவரைக்கும் நான் உங்களோடிருப்பேன்? எதுவரைக்கும் உங்களிற் பொறுமையாயிருப்பேன்? அவனை யென்னிடத்திற் கொண்டுவாருங்களென்றார். அவனையவரிடத்திற் கொண்டுவந்தார்கள்.

௨௰ அவரைக் கண்டவுடனே அந்த ஆவி அவனை அலைக்கழித்தது. மேலும் அவன் தரையிலே விழுந்து (வாயினாலே) நுரைதள்ளிப் புரண்டான்.

௨௧ அப்பொழுது இயேசுவானவர் அவனுடைய தகப்பனை நோக்கி, இப்படியிவனுக்குண்டாகி எத்தனைநாளாயிற்றென்று கேட்டதற்கு அவன் சொன்னது, சிறுவயது முதற்கொண்டு இருக்கிறது.

௨௨ அல்லாமலும் இவனையழிக்கும்படிக்கு அது அநேகந்தரம் நெருப்பிலேயும் சலத்திலேயுந் தள்ளிற்று. அப்படியிருந்தும் நீர் ஏதாகிலுஞ்செய்யக் கூடுமானால் எங்களுக்கு உருக்கமாய் இரங்கி உதவிசெய்தருளுமென்றான்.

௨௩ இயேசுவானவர் சொன்னது, நீ விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், விசுவாசிக்கிறவனுக்கு எதுவும் நடக்குமென்று சொன்னவுடனே,

௨௪ அந்தப் பிள்ளையின் தகப்பன் அழுதுகொண்டு ஆண்டவரே! விசுவாசிக்கிறேன், என் அவிசுவாசம் நீங்கும்படி உதவிசெய்யுமென்று கூப்பிட்டான்.

௨௫ அந்தக்ஷணத்திலே சனங்கள் ஓடிவந்து கூட்டமாகிறதை இயேசுவானவர் கண்டபொழுது அவர் அந்த அசுத்த ஆவியுடனே சொன்னது, ஊமையுஞ்செவிடுமான ஆவியே! நீ இவனைவிட்டுப் புறப்பட்டு இனி இவனிடத்திற் பிரவேசியாமற்போவென்று உனக்குக் கட்டளையிடுகிறேனென்று சொல்லி அதையதட்டினார்.

௨௬ அப்பொழுது அது சத்தமிட்டு அவனை மிகவும் அலைக்கழித்துப் புறப்பட்டுப் போயிற்று. அவன் இறந்துபோனானென்று அநேகர் சொல்லத்தக்கதாகச் செத்தவனைப்போலக் கிடந்தான்.

௨௭ இயேசுவானவர் அவனுடைய கையைப்பிடித்து அவனையெடுத்தார். உடனே அவன் எழுந்திருந்தான்.

௨௮ பின்பு அவர் வீட்டிற்கு வந்தபொழுது அவருடைய சிஷர் இரகசியமாய் அவரை நோக்கி, நாங்கள் அதைத் துரத்தும்படிக்கு எங்களுக்கு ஏன் திராணியில்லையென்று கேட்டார்கள்.

௨௯ அவர் சொன்னது, செபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றொருவிதமாய் அந்தச் சாதியைத் துரத்தக்கூடாதென்றார்.

௩௰ பின்பு அவர்கள் அவ்விடம்விட்டுப் பிரயாணப்பட்டுக் கலிலேயா நாட்டின் வழியாய்ப் போகிறபொழுது அவர் தம்முடைய சிஷர்களுக்கு உபதேசம்பண்ணவேண்டுமென்றிருந்தபடியினாலே (தாம் போகிறதை) ஒருவரும் அறியாமலிருக்கவேண்டுமென்று விரும்பினார்.

௩௧ பின்பு அவர் அவர்களை நோக்கி, மனிதனுடைய குமாரன் மனிதர்களுடைய கையில் ஒப்புக்கொடுக்கப்படுவான். அவர்கள் அவனைக் கொலைசெய்வார்கள். மரித்தபின்பு அவன் மூன்றாம்நாளிலே உயிரோடெழுந்திருப்பானென்றார்.

௩௨ அவர்கள் அந்தச் சங்கதியை அறிந்துகொள்ளவில்லை. மேலும் அவரிடத்தில் விசாரிக்கிறதற்கும் பயந்தார்கள்.

௩௩ பின்பு அவர் கப்பர்நகூமுக்கு வந்தார்; வீட்டிலே இருந்தபொழுது, அவர் அவர்களை நோக்கி, வழியிலே நீங்கள் எதைக்குறித்து உங்களுக்குள்ளே தர்க்கம்பண்ணிக்கொண்டீர்களென்று கேட்டார்.

௩௪ அவர்கள் தங்களில் எவன் பெரியவனென்று ஒருவரோடொருவர் வழியிலே தர்க்கம்பண்ணிக்கொண்டபடியினாலே பேசாமலிருந்தார்கள்.

௩௫ அப்பொழுது அவர் உட்கார்ந்து பன்னிருவரையும் அழைத்துச்சொன்னது, ஒருவன் முதல்வனாயிருக்க விரும்பினால் அவன் எல்லாருக்கும் பிந்தினவனும் எல்லாருக்கும் ஊழியக்காரனுமாயிருக்கக் கடவனென்றுசொல்லி,

௩௬ ஒரு பிள்ளையை எடுத்து அதை அவர்களுக்குள்ளே நிறுத்தி பின்பு அதை அணைத்துக்கொண்டு,

௩௭ இப்படிப்பட்ட பிள்ளைகளிலொன்றை என்னுடைய நாமத்தினாலே சேர்த்துக்கொள்ளுகிறவனெவனோ அவன் என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறான். அல்லாமலும் என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறவனெவனோ அவன் என்னை (மாத்திரம்) அல்ல, என்னை அனுப்பினவரையுஞ்சேர்த்துக்கொள்ளுகிறானென்றார்.

௩௮ அப்பொழுது யோவான் அவரை நோக்கி, போதகரே! நமக்குப் பின்செல்லாமலிருக்கிற ஒருவன் உம்முடைய நாமத்தினாலே பசாசுகளைத் துரத்தக் கண்டோம். அவன் நமக்குப் பின்செல்லாதபடியால் அவன் அப்படிச் செய்யாதபடிக்குச் சொன்னோமென்றான்.

௩௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது, நீங்கள் அவனுக்குத் தடைபண்ணவேண்டாம். என்னத்தினாலென்றால் என்னுடைய நாமத்தினாலே அற்புதஞ்செய்கிறவன் என்னைக்குறித்துச் சீக்கிரமாய்த் தீமை சொல்லமாட்டான்.

௪௦ அல்லாமலும் உங்களுக்கு விரோதியல்லாதவன் உங்கள் பக்கலிருக்கிறான்.

௪௧ அன்றியும் நீங்கள் கிறிஸ்துவினுடையவர்களாயிருக்கிறபடியினாலே ஒருவன் என் நாமத்தினிமித்தம் ஒரு கலயந் தண்ணீர் உங்களுக்குக் கொடுத்தால் அவன் தன் பலனை இழந்துபோவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௨ அன்றியும் என்னை விசுவாசிக்கிறவர்களாகிய இந்தச் சிறியவர்களிலொருவனுக்கு இடறலுண்டாக்குகிறவன் எவனோ அவன் தன் கழுத்திலே ஏந்திரக்கல்லைக் கட்டப்பட்டுச் சமுத்திரத்திலே தள்ளப்பட்டால் அவனுக்கு நன்மையாயிருக்கும்.

௪௩ உன் கை உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால் அதைத் தறித்துப்போடு நீ இரண்டு கையையுடையவனாய்,

௪௪ நித்திய நரக அக்கினியிலே போவதிலும் ஊனனாய்ச் சீவனில் பிரவேசிக்கிறதே உனக்கு நலமாயிருக்கும். அந்த நரகத்திற்குரியவர்களுடைய புழுச்சாவாமலும் அக்கினியவியாமலுமிருக்கின்றன.

௪௫ அல்லாமலும் உன் கால் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால் அதைத் தறித்துப்போடு. நீ இரண்டு காலையுடையவனாய்,

௪௬ நித்திய நரக அக்கினியிலே தள்ளப்படுகிறதிலும் சப்பாணியாய்ச் சீவனில் பிரவேசிக்கிறதே உனக்கு நலமாயிருக்கும். அந்த நரகத்திற்குரியவர்களுடைய புழுச்சாவாமலும் அக்கினியவியாமலுமிருக்கின்றன.

௪௭ அல்லாமலும் உன் கண் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால், அதைப் பிடுங்கிப்போடு.

௪௮ நீ இரண்டு கண்ணையுடையவனாய் நரக அக்கினியிலே தள்ளப்படுகிறதிலும் ஒற்றைக் கண்ணனாய்ப் பராபரனுடைய இராச்சியத்திலே பிரவேசிக்கிறதே உனக்கு நலமாயிருக்கும். அந்த நரகத்திற்குரியவர்களுடைய புழுச்சாவாமலும் அக்கினியவியாமலுமிருக்கின்றன.

௪௯ எல்லாப் பலிகளும் உப்பினாலே சாரமாக்கப்படுகிறதுபோல, யாவனும் அக்கினியிலே சாரமாக்கப்படுவான்.

௫௦ உப்பானது நல்லது. உப்பானது சாரமற்றதேயானால் எதினாலே அதற்குச் சாரமுண்டாக்குவீர்கள்? உங்களுக்குள்ளே உப்புண்டாயிருக்கும்படி செய்யுங்கள். அல்லாமலும் ஒருவரோடொருவர் சமாதானமாயிருக்கக்கடவீர்களென்றார்.

## ௰. அதிகாரம்.

[(௨) மனைவியைத் தள்ளுகிறதைக்குறித்துச் சொல்லியது. (௰௩) குழந்தைகளை ஆசீர்வதித்தது. (௰௭) நித்தியசீவனைக்குறித்து உத்தரவுசொன்னது. (௨௩) ஐசுவரியவான்களைக் குறித்துப் போதித்தது. (௨௮) அவரைப் பின்பற்றுகிறவர்களுக்கு வரும்பலனைக்காட்டியது. (௩௨) எருசலேமிலே அவருக்குச் சம்பவிக்கப்போகிறதை முன்னறிவித்தது, (௩௫) செபெதேயுவினுடைய குமாரர் விண்ணப்பம்பண்ணினது. (௪௨) சீஷர்கள் மனத்தாழ்மையாயிருக்கவேண்டுமென்பது. (௪௬) பர்திமேயு என்பவனுக்குப் பார்வையைக் கொடுத்தது.]

பின்பு அவர் எழுந்து யோர்தான் நதிக்கு அக்கரையான யூதேயா நாட்டின் திசைகளுக்குப் போனார். அங்கே மறுபடியும் ஜனங்கள் அவரிடத்தில் கூடிவந்தார்கள். அவரும் வழக்கத்தின்படி அவர்களுக்கு மறுபடியும் உபதேசம் பண்ணினார்.

௨ அல்லாமலும் பரிசேயர் அவரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து புருஷனானவன் தன் மனைவியைத் தள்ளிவிடலாமோ வென்று கேட்டார்கள்.

௩ அவர்களை அவர் நோக்கி, மோசேயென்பவர் உங்களுக்கு எப்படிக் கட்டளையிட்டாரென்றார்.

௪ அவர்கள் சொன்னது, தள்ளுதற் சீட்டை யெழுதி அவளைத் தள்ளிவிடும்படிக்கு மோசே உத்தரவு கொடுத்தாரென்றார்கள்.

௫ அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது, உங்களுடைய இருதய கடினமானபடியினாலே மோசே உங்களுக்கு இந்தக் கட்டளையை யெழுதினார்.

௬ உலகமுண்டான ஆதி முதற்கொண்டு பராபரன் அவர்களை ஆணும் பெண்ணுமாகச் செய்தார்.

௭ அதினிமித்தம் ஒருவன் தன் தகப்பனையுந் தாயையும் விட்டுத் தன் மனைவியுடனே யிசைந்திருப்பானென்றும்,

௮ அவர்களிருவரும் ஒரே சரீரமாயிருப்பார்களென்றுஞ் சொல்லியிருக்கிறபடியினாலே அவர்கள் இருபேராயிராமல் ஒரே சரீரமாயிருக்கிறார்கள்.

௯ ஆகையாற் பராபரன் இணைத்ததை மனிதன் பிரியாமலிருக்கக்கடவனென்றார்.

௰ பின்பு வீட்டிலே அவருடைய சீஷர்கள் இதைக்குறித்து மறுபடியும் அவரிடத்தில் விசாரித்தபொழுது,

௰௧ அவர் சொன்னது, தன் மனைவியைத் தள்ளி வேறொருத்தியை விவாகம் பண்ணுகிறவனெவனோ அவன் அவளுக்கு விரோதமாய் விபசாரஞ் செய்கிறவன்.

௰௨ அல்லாமலும் மனைவியானவள் தன் புருஷனைத் தள்ளி வேறொருவனை விவாகம் பண்ணினால் அவள் விபசாரஞ்செய்கிறவளென்றார்.

௰௩ அப்பொழுது அவராலே தொடப்படும்படிக்குப் பிள்ளைகளை அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள். சீஷர்கள் அவைகளைக் கொண்டுவந்தவர்களையதட்டினார்கள்.

௰௪ இயேசுவானவர் அதைக்கண்டு விசனமடைந்து பிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்குத் தடைபண்ணாமலிடங்கொடுங்கள். பராபரனுடைய இராச்சியம் அப்படிப்பட்டவைகளுக்குடையதானதே.

௰௫ எவனாகிலும் ஒரு பிள்ளையைப்போலப் பராபரனுடைய இராச்சியத்தையேற்றுக்கொள்ளாமலிருந்தால் அவன் அதிற் பிரவேசிப்பதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லி,

௰௬ பின்பு அவைகளையணைத்துக்கொண்டு தமது கைகளை அவைகள் மேல் வைத்து அவைகளை யாசீர்வதித்தார்.

௰௭ பின்பு அவர் புறப்பட்டு வழியிலே நடக்கையில் ஒருவன் அவரிடத்திற்கு ஓடிவந்து முழங்காற்படியிட்டு, நல்ல போதகரே! நித்திய சீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான் செய்யவேண்டியதென்னவென்று கேட்டான்.

௰௮ அவனுடனே அவர் சொன்னது, நீ என்னை நல்லவனென்று ஏன் சொல்லுகிறாய்? பராபரன் ஒருவரேயன்றி மற்றொருவனும் நல்லவனல்லவே.

௰௯ விபசாரம்பண்ணாமலிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, வஞ்சனைசெய்யாதிருப்பாயாக, உன் தகப்பனையுந் தாயையுங் கனம்பண்ணுவாயாக வென்றிருக்கிற கற்பனைகளை யறிந்திருக்கிறாயேயென்றார்.

௨௰ அதற்கவன் சொன்னது, போதகரே! அவைகளையெல்லாம் நான் என் சிறுவயது முதற்கொண்டு கைக்கொண்டுவருகிறேனென்றான்.

௨௰௧ அப்பொழுது இயேசுவானவர் அவனைப் பார்த்து அவனிடத்தில் அன்புகூர்ந்து சொன்னது, உன்னிடத்தில் இன்னும் ஒன்று குறைவாயிருக்கிறது, நீ போய் உனக்குண்டானவைகளை விற்றுப் பரமண்டலத்திலே பொக்கிஷத்தை யடைந்துகொள்ளத்தக்கதாக அவைகளை ஏழைகளுக்குக் கொடுத்துப் பின்பு வந்து சிலுவையை யெடுத்துக்கொண்டு எனக்குப் பின்செல்லுவாயாகவென்றார்.

௨௰௨ அவன் மிகுந்த ஆஸ்திகளையுடையவனானபடியினாலே அந்தவசனத்தைக் கேட்டு மனமடிந்து துக்கத்தோடே அவரைவிட்டுப் போனான்.

௨௰௩ அப்பொழுது இயேசுவானவர் சுற்றிப்பார்த்துத் தம்முடைய சீஷர்களுடனே சொன்னது, பொருள்களைப் பெற்றவர்கள் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கிறது மிகவும் அரிது என்றார்.

௨௰௪ அல்லாமலுஞ் சீஷர்கள் அந்த வசனங்களைக் குறித்துத் திகைத்தபொழுது, இயேசுவானவர் அவர்களுக்குப் பின்னுஞ் சொன்னது, பிள்ளைகளே! பொருள்களின்மேல் நம்பிக்கையாயிருக்கிறவர்கள் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கிறது மிகவும் அரிதாயிருக்கிறது.

௨௰௫ ஐசுவரியமுள்ளவன் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கிறதிலும் ஒட்டகமானது ஒரு ஊசியின் காதில் நுழைகிறது எளிதாயிருக்கின்றதென்றார்.

௨௬ அவர்கள் அதிகமாய்ப் பிரமித்து, அப்படியானால் இரட்சிக்கப்படுபவர்கள் யாரென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.

௨௭ அப்பொழுது இயேசுவானவர் அவர்களைப் பார்த்து மனிதர்களுக்கு அது கூடாத காரியந்தான். பராபரனை எல்லாஞ் செய்யத்திராணியுள்ளவராகையாற் பராபரனுக்கு அது கூடாத காரியமல்லவென்றார்.

௨௮ பின்பு பேதுரு அவரை நோக்கி, இதோ நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உமக்குப் பின்சென்றோமேயென்றான்.

௨௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது, என்னிமித்தமும் சுவிசேஷத்தினிமித்தமும் வீட்டையாவது சகோதரர்களையாவது சகோதரிகளையாவது தகப்பனையாவது தாயையாவது மனைவியையாவது பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்டு,

௩௰ பின்பு இம்மையிலே துன்பங்களுடனே கூட நூறுமடங்காய் வீடுகளையுஞ் சகோதரர்களையுஞ் சகோதரிகளையுந் தாய்களையும் பிள்ளைகளையும் நிலங்களையும் மறுமையிலே நித்தியசீவனையும் பெற்றுக்கொள்ளாமலிருக்கிறவன் ஒருவனுமில்லையென்றும்,

௩௧ முந்தினோராகிய அநேகர் பிந்தினோராம் பிந்தினோர் முந்தினோராயுமிருப்பார்களென்றும் மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩௨ அன்றியும் அவர்கள் எருசலேம் நகரத்திற்குப் பிரயாணமாய்ப் போனபொழுது இயேசுவானவர் அவர்களுக்கு முன்னே நடந்தார். அவர்கள் பிரமித்துப் பயத்தோடே அவருக்குப் பின்சென்றார்கள். அப்பொழுது அவர் பன்னிருவரையும் மறுபடியும் அழைத்துத் தமக்குச் சம்பவிக்குங் காரியங்களையவர்களுக்கு அறிவித்துச் சொன்னது,

௩௩ இதோ எருசலேமுக்குப் போகிறோம். அங்கே மனிதனுடைய குமாரன் பிரதான ஆசாரியருக்கும் வேதபாரகருக்குமொப்புக்கொடுக்கப்படுவான். அவர்கள் அவனை மரண ஆக்கினைக்குட்படுத்தும்படிக்குத் தீர்ப்புச்செய்து அவனைப் புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள்.

௩௪ அவர்கள் அவனை இழிவுசெய்து அவனை வாரினால் அடித்து அவன்மேலே துப்பி அவனைக் கொலைசெய்வார்கள். ஆனாலும் மூன்றும் நாளிலே அவன் உயிரோடெழுந்திருப்பானென்றார்.

௩௫ பின்பு செபெதேயுவின் குமாரர்களாகிய யாக்கோபுமயோவானும் அவரிடத்தில் வந்து போதகரே, நாங்கள் வேண்டிக்கொள்ளுகிறபடி நீர் எங்களுக்குச் செய்யவேண்டுமென்று விரும்புகிறோமென்றார்கள்.

௩௬ அதற்கவர் நானுங்களுக்குச் செய்ய நீங்கள் விரும்புகிறதென்னவென்றார்.

௩௭ அவர்கள் சொன்னது, நீர் மகிமையையடைந்திருக்கும்பொழுது எங்களிலொருவன் உம்முடைய வலது பக்கத்திலும் ஒருவன் உம்முடைய இடதுபக்கத்திலுமிருக்க அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்றுசொன்னார்கள்.

௩௮ இயேசுவானவர்சொன்னது, நீங்கள் கேட்டது உங்களுக்கே தெரியவில்லை. நான்பானம்பண்ணும்பாத்திரத்திற் பானம்பண்ணவும் நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தைப் பெற்றுக்கொள்ளவும் உங்களாற்கூடுமாவென்றுசொன்னதற்கு,

௩௯ அவர்கள் கூடுமென்றார்கள். அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான்பானம்பண்ணும்பாத்திரத்திலே நீங்களும்பானம்பண்ணுவீர்கள். அல்லாமலும் நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தை நீங்களும் பெற்றுக்கொள்வீர்கள், அதுமெய்தான்.

௪௰ ஆனாலுங் குறிக்கப்பட்டவர்களுக்கேயன்றி (மற்றொருவருக்கும்) என்வலது பக்கத்திலும் என் இடதுபக்கத்திலுமிருப்பதற்கான (கனத்தை) நான்கொடுக்கக்கூடாதென்றார்.

௪௧ மற்றப்பத்துப்பேரும் அதைக்கேள்விப்பட்டு, யாக்கோபின்மேலும் யோவான்மேலுங் கோபமாயிருக்கத் தொடங்கினார்கள்.

௪௨ அப்பொழுது இயேசுவானவர் அவர்களையழைத்துச்சொன்னது, நீங்களறிந்திருக்கிறபடி உலகத்தாருக்குள்ளே பிரபுக்களென்னப்பட்டிருக்கிறவர்கள் இறுமாப்பாய் ஆளுகிறார்கள். அல்லாமலும் அவர்களுடைய பெரியோர்கள் இஷ்டப்படிக்கு அவர்கள்மேல அதிகாரஞ்செலுத்துகிறார்கள்.

௪௩ அப்படி உங்களுக்குள்ளேயிருக்கக்கூடாது. உங்களுக்குள்ளே பெரியவனாயிருக்கவிரும்புகிறவன் உங்கள் ஊழியக்காரனாயிருக்கக்கடவன்.

௪௪ உங்களில் முதலாளியாயிருக்க விரும்புகிறவன் எல்லாருக்கும் அடிமையாயிருக்கக்கடவன்.

௪௫ மனிதனுடையகுமாரனும் ஊழியம் அடையும்படிக்கு வாராமல் ஊழியஞ்செய்யும்படிக்கும் அநேகரை மீட்கும்பொருளாகத் தன்னுடைய சீவனைக்கொடுக்கும்படிக்கும் வந்தாரேயென்றார்.

௪௬ பின்பு அவர்கள் எரிகோப்பட்டினத்திற்கு வந்தார்கள். அவரும் அவருடைய சீஷர்களும் மிகுந்த சனங்களும் அதைவிட்டுப் போனபொழுது, திமேயு என்பவனுடைய மகனாகிய குருடனான பர்த்திமேயு என்பவன் வழியிலே பிச்சைகேட்டுக்கொண்டிருக்கையில்,

௪௭ நாசரேத்தூராராகிய இயேசுவானவர் வருகிறாரென்று கேள்விப்பட்டு, இயேசுவே! தாவீதின் குமாரனே! என்மேலிரக்கமாயிருமென்று கூப்பிடத்தொடங்கினான்.

௪௮ அவன் பேசாமலிருக்கும்படிக்கு அநேகர் அவனைக் கடிந்துகொண்டார்கள். அப்படியிருந்தும் அவன் தாவீதின் குமாரனே, என்மேல் இரக்கமாயிருமென்று அதிகமாய்க் கூப்பிட்டான்.

௪௯ அப்பொழுது இயேசுவானவர் நின்று அவனை அழைத்துவரச்சொன்னார். அந்தப்படி சிலர் அவனை அழைத்து திடமாயிரு எழுந்திரு அவருன்னை அழைக்கிறாரென்றார்கள்.

௫௦ உடனே அவன் தன் வஸ்திரத்தைத் தள்ளி எழுந்து இயேசுவானவரிடத்தில் வந்தான்.

௫௧ அவர் அவனை நோக்கி, நான் உனக்கென்னசெய்யவேண்டுமென்றிருக்கிறாயென்றார். குருடனானவன் சொன்னது, இரபூனி, நீர் எனக்குப் பார்வைகொடுக்கவேண்டுமென்றான்.

௫௨ இயேசுவானவர் சொன்னது, உன் விசுவாசமுன்னைக் குணமாக்கிறது. நீ போகலாமென்றார், உடனே அவன் பார்வையடைந்து வழியிலே இயேசுவுக்குப் பின் சென்றான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து சிறப்பாய் எருசலேமிலே பிரவேசித்தது. (௰௨) ஓர் அத்திமரத்தைச் சபித்தது. (௰௫) தேவாலயத்திலிருந்த வஞ்சகரைத் துரத்தினது. (௨௨) விசுவாசத்தைக் குறித்துப் போதித்தது. (௨௪) செபம்பண்ணுகிறதையும் மன்னிப்புக் கொடுக்கிறதையுங் குறித்துப் போதித்தது. (௨௭) தமது அதிகாரத்தைக் குறித்துப் பரிசேயருக்கு உத்தரவுசொன்னது.]

பின்பு அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய்ப்போய் ஒலிவமலையருகேயிருக்கிற பெத்பாகே பெத்தானியா ஊர்களுக்குச் சேர்ந்தபொழுது அவர் தம்முடைய சீஷரில் இரண்டுபேரை நோக்கி,

௨ உங்களுக்கு முன்பாகவிருக்கிற அந்தக் கிராமத்திற்குப் போங்கள். நீங்கள் அதிற்பிரவேசித்தவுடனே ஒருவரும் ஏறமற் கட்டப்பட்டிருக்கிற (கழுதையின்) குட்டியைக் காண்பீர்கள், அதின் கட்டவிழ்த்து அதைக்கொண்டுவாருங்கள்.

௩ ஒருவன் ஏன் இப்படிச்செய்கிறீர்களென்று உங்களுடனே சொன்னால் ஆண்டவருக்கு இது வேண்டுமென்று சொல்லுங்கள். உடனேயவன் அதை இவ்விடத்திற்கு அனுப்பிவிடுவானென்று அனுப்பினார்.

௪ அந்தப்படி அவர்கள் போய் வெளியே தெருவிற் கதவின்றுகே கட்டப்பட்டிருக்கிற (கழுதையின்) குட்டியைக் கண்டு அதின் கட்டவிழ்க்கிறபொழுது,

௫ அங்கே நின்றசிலர் அவர்களை நோக்கி, நீங்கள் ஏன் இதின் கட்டவிழ்க்கிறீர்களென்றார்கள்.

௬ இயேசுவானவர் தங்களுக்குக் கட்டளையிட்டபடி சீஷர் அவர்களுக்கு உத்தரவு சொன்னார்கள், அப்பொழுது அவர்களைவிட்டுவிட்டார்கள்.

௭ ஆகையாற் சீஷர் அந்தக்குட்டியை இயேசுவினிடத்திற் கொண்டுவந்து தங்கள் வஸ்திரங்களை அதின்மேற் போட்டார்கள் அவர் அதின்மேலேறினார்.

௮ அப்பொழுது அநேகர் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள். சிலர் மரங்களின் கிளைகளை முறித்து வழியிலே பரப்பினார்கள்.

௯ அல்லாமலும் முன்னடப்பாரும் பின்னடப்பாரும் ஓசன்னா, பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரஞ்செய்யப்படக்கடவர்.

௰ பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் நம்முடைய பிதாவாகிய தாவீதின் ஆளுகை வாழ்த்தப்படக்கடவது, உன்னதமான இடங்களிலே ஓசன்னாவென்று கூப்பிட்டார்கள்.

௰௧ அப்பொழுது இயேசுவானவர் எருசலேமிலேயுந் தேவாலயத்திலேயும் பிரவேசித்தார், அங்கேயவர் எல்லாவற்றையுஞ் சுற்றிப்பார்த்துப் பின்பு சாயந்திரமானபொழுது பன்னிருவருடனே புறப்பட்டுப் பெத்தானியூருக்குப் போனார்.

௰௨ மறுநாளிலே அவர்கள் பெத்தானியூரைவிட்டுப் புறப்பட்டபொழுது அவருக்குப் பசியுண்டாயிற்று.

௰௩ உடனே அவர் தூரத்திலேயுள்ள இலையையுடைய அத்திமரத்தைக்கண்டு அதிலே ஒருகனியையாகிலுங் கண்டுபறித்துக் கொள்ளலாமென்று அவ்விடத்திற்குப் புறப்பட்டு அதின்றுகே சேர்ந்தபொழுது அது அத்திமரங்கள் கனிகொடுக்கிற காலமில்லாதபடியால் இலைகளையேயல்லாமல் மற்றொன்றையும் அவர் காணவில்லை.

௰௪ அப்பொழுது இயேசுவானவர் அதை நோக்கி, இனி ஒருக்காலும் ஒருவனுமுன்னிடத்திலே கனியைப் புசியாதிருப்பானாகவென்று சொன்னார், அதை அவருடைய சீஷர்கள் கேட்டார்கள்.

௰௫ பின்பு அவர்கள் எருசலேமுக்கு வந்தார்கள், அங்கே இயேசுவானவர் தேவாலயத்திற் பிரவேசித்து அதிலே விற்பாரையுங் கொள்வாரையுந் துரத்திக் காசுக்காரருடைய பலகைகளையும் புறக்களை விற்கிறவர்களு

டைய ஆசனங்களையுங் கவிழ்த்து,

௰௬ ஒருவரும் ஒருபாத்திரத்தைத் தேவாலயத்தின் வழியாய்க் கொண்டுபோகிறதற்கு இடங்கொடாமலிருந்தார்.

௰௭ அல்லாமலும் என்னுடைய ஆலயம் எல்லாத் தேசத்தாருக்கும் ஜெபம்பண்ணும் படிக்கான ஆலயமென்னப்படுமென்று எழுதியிருக்கிறதல்லவா? நீங்கள் இதைக் கள்ளர் குகையாக்கினீர்களென்று அவர்களுக்கு உபதேசித்தார்.

௰௮ வேதபாரகரும் பிரதான ஆசாரியரும் அதைக் கேட்டபொழுது சனங்களெல்லாரும் அவருடைய உபதேசத்தைக் குறித்து ஆச்சரியப்பட்டபடியினாலே அவருக்குப் பயந்து அவரை மாய்க்கும்படிக்கு வகை தேடினார்கள்.

௰௯ சாயந்திரமானபொழுது அவர் நகரத்திற்குப் புறம்பே போனார்.

௨௰ மறுநாளிலே அவர்கள் திரும்பிப் புறப்பட்டபொழுது அந்த அத்திமரம் வேரோடே பட்டுப்போனதைக் கண்டார்கள்.

௨௧ உடனே பேதுரு நினைவுகொண்டு அவரை நோக்கி, இரபீ இதோ, நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்றென்றான்.

௨௨ அதற்கு மாறுத்தரமாக அவர் அவர்களுடனே சொன்னது, பராபரனில் விசுவாசமாயிருங்கள்.

௨௩ ஒருவன் எவனானாலும் இந்த மலையை நோக்கி, நீ எழும்பிச் சமுத்திரத்திலே விழுவாயாக வென்று சொல்லித் தன் இருதயத்திலே ஒன்றுஞ் சந்தேகப்படாமல் தான் சொன்னபடியே நடக்குமென்று விசுவாசித்தால் அந்தச் சொற்படியே அவனுக்கு நடக்குமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௪ ஆதலால் நான் (பின்னும்) உங்களுக்குச் சொல்லுகிறதாவது, ஜெபம்பண்ணும்பொழுது நீங்கள் வேண்டிக்கொள்ளும் யாவையும் பெறுவீர்களென்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்குண்டாகும்.

௨௫ அல்லாமலும் பரமண்டலத்திலிருக்கிற உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களை மன்னிக்கும்படிக்கு நீங்கள் ஜெபம்பண்ண எழுந்து நிற்கும்பொழுது ஒருவன்மேல் உங்களுக்கு விசனமுண்டானால் மன்னித்துக் கொள்ளுங்கள்.

௨௬ நீங்கள் மன்னியாதிருப்பீர்களானால் பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவும் உங்கள் தப்பிதங்களை மன்னியாதிருப்பாரென்றார்.

௨௭ அவர்கள் மறுபடியும் எருசலேமுக்கு வந்தபின்பு அவர் தேவாலயத்திலே உலாவுகையில் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அவரிடத்தில் வந்து,

௨௮ எந்த அதிகாரத்தினாலே நீர் இவைகளைச் செய்கிறீர்? இவைகளைச் செய்கிறதற்கு உமக்கு அதிகாரத்தைக் கொடுத்தவர் யாரென்றார்கள்.

௨௯ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது, நானும் உங்களிடத்தில் ஒரு காரியத்தைக் கேட்கிறேன், அதற்கு நீங்கள் மாறுத்தரஞ் சொல்லுங்கள், அப்பொழுது நான் இவைகளைச் செய்கிற அதிகாரத்தையும் உங்களுக்கு அறிவிப்பேன்.

௩௰ யோவான் கொடுத்த ஸ்நானம் பராபரனாலேயுண்டானதோ மனிதர்களாலேயுண்டானதோ அதைச் சொல்லுங்களென்றார்.

௩௧ அப்பொழுது அவர்கள் அது பராபரனாலுண்டானதென்றால் இவர் ஏன் நீங்கள் அவனை விசுவாசிக்கவில்லையென்பார்.

௩௨ அது மனிதராலுண்டானதென்றால் எல்லாரும் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணுகிறபடியால் அவர்களாலே நமக்கு மோசம் வருமென்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,

௩௩ பின்பு இயேசுவானவரை நோக்கி, எங்களுக்குத் தெரியாதென்றார்கள், அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது, (அப்படியானால்) நானும் இவைகளைச் செய்கிற அதிகாரத்தின் தன்மையின்னதென்று உங்களுக்குச் சொல்லமாட்டேனென்றார்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) திராட்சத்தோட்டத்தை உவமையாகக் காட்டியது (௰௩) தீர்வையைக் குறித்துச் சொல்லியது. (௰௮) மறுலோகத்தைக் குறித்துச் சதுசேயருக்கு உத்தரவு சொன்னது. (௨௮) பிரதான கற்பனையைக் குறித்துச் சொல்லியது. (௩௫) கிறிஸ்துநாதர் தாவீதினுடைய கர்த்தாவென்பதைக் குறித்துச் சொல்லியது. (௩௮) வேதபாரகருக்கு விலகவேண்டுமென்பது. (௪௧) தருமப்பெட்டியிலே ஒரு கைம்பெண் பணத்தைப் போட்டதைக் குறித்துச் சொல்லியது.]

அல்லாமலும் அவர் உவமைகளாய் அவர்களுடனே சொன்னது, ஒரு மனிதன் ஒரு திராட்சத்தோட்டத்தையுண்டுபண்ணி அதைச் சுற்றிலும் வேலியடைத்து அதில் ஆலையை நாட்டி ஒரு கோபுரத்தையுங் கட்டி பின்பு அதைத் தோட்டக்காரர் வசமாய் விட்டுப் புறதேசத்திற்குப் போனான்.

௨ தகுதியான காலத்திலே அந்தத் திராட்சத்தோட்டத்தின் கனிகளில் ஒரு பங்கைத் தோட்டக்காரரிடத்தில் வாங்கிக்கொள்ளும்படிக்கு அவன் ஒரு ஊழியக்காரனை அவர்களிடத்திற்கு அனுப்பினான்.

௩ அவர்கள் அவனைப்பிடித்து அடித்து வெறுமையாய் அனுப்பினார்கள்.

௪ மறுபடியும் அவன் வேறொரு ஊழியக்காரனை அவர்களிடத்தில் அனுப்பினான், அவன்மேல் அவர்கள் கல்லெறிந்து தலையிற் காயப்படுத்திக் கனயீனந்தோடே அவனை அனுப்பினார்கள்.

௫ பின்பு அவன் வேறொருவனையனுப்பினான் அவனையவர்கள் கொலைசெய்தார்கள் (அப்படியவனாலே அனுப்பப்பட்ட) அநேகரிற் சிலரையடித்துச் சிலரைக்கொலைசெய்தார்கள்.

௬ அவனுக்குப் பிரியமான ஒரே குமாரன் இருந்தான், ஆதலால் அவன் தன் குமாரனுக்கு அஞ்சுவார்களென்றெண்ணிக் கடைசியிலே அவனையும் அவர்களிடத்தில் அனுப்பினான்.

௭ அந்தத் தோட்டக்காரர் (அவனைக்கண்டு) இவன் சுதந்தரவாளி, இவனுடைய சுதந்தரம் நமதுவசமாகும்படிக்கு நாம் இவனைக் கொலைசெய்யக்கடவோம் வாருங்களென்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டு,

௮ பின்பு அவனைப்பிடித்துக் கொலைசெய்து திராட்சத்தோட்டத்திற்குப் புறம்பே தள்ளினார்கள்.

௯ ஆனபடியினாலே அந்தத் தோட்டத்தின் எசமான் என்னசெய்வான்? அவன் வந்து அந்தத் தோட்டக்காரரை யழித்துத் தோட்டத்தை மற்றவர்களுக்கு ஒப்புக்கொடுப்பானல்லவா?

௰ வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலையான கல்லாயிற்று.

௰௧ அது பராபரனாலேயாயிற்று. அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கின்றதென்கிற வேதவாக்கியத்தை நீங்கள் வாசிக்கவில்லையாவென்றார்.

௰௨ அப்பொழுது அவர்கள் தங்களைக் குறித்து இந்த உவமையைச் சொன்னாரென்றறிந்தபடியால் அவரைப்பிடிக்க மனதாயிருந்தார்கள், ஆனாலும் சனங்களுக்குப் பயந்து அவரைவிட்டுப்போனார்கள்.

௰௩ பின்பு அவர்கள் வசனங்களினாலே அவரையகப்படுத்தும்படிக்குச் சில பரிசேயரையும் ஏரோதேயின மனிதரையும் அவரிடத்தில் அனுப்பினார்கள்.

௰௪ அவர்கள் வந்து அவரை நோக்கி, போதகரே, நீர் மனிதருடைய முகத்தைப் பாராமற் பராபரனுடைய மார்க்கத்தைச் சத்தியமாய் உபதேசிக்கிறவராயிருக்கிறீர், ஆகையால் நீர் சத்தியமுடையவருமாய் ஒருவரையுங்குறித்துக் கவலையில்லாதவருமாயிருக்கிறீரென்று அறிந்திருக்கிறோம், இராயனுக்கு வரிப்பணத்தைக்கொடுக்கிறது நியாயமோ இல்லையோ.

௰௫ நாம் கொடுக்கவேண்டுமோ கொடாமலிருக்கவேண்டுமோவென்றார்கள். அவர் அவர்களுடைய மாயத்தையறிந்து நீங்கள் என்னை ஏன் சோதிக்கிறீர்கள்? நான் பார்க்கும்படிக்கு ஒரு தெநாரியு எனக்குக்கொண்டு வாருங்களென்றார்.

௰௬ அவர்கள் கொண்டுவந்தார்கள், அப்பொழுது அவர் சொன்னது, இந்தச் சொரூபமும் மேலெழுத்தும் யாருடையவைகளென்றார், அதற்கு அவர்கள் இராயனுடையவைகளென்றார்கள்.

௰௭ இயேசுவானவர் சொன்னது, இராயனுடையவைகளை இராயனுக்கும் பராபரனுடையவைகளைப் பராபரனுக்குஞ் செலுத்துங்களென்றுசொன்னார், அப்பொழுது அவரைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௰௮ பின்பு உயிரோடெழுந்திருக்கும் மறுமையில்லையென்றுசொல்லுகிற சதுசேயரென்பவர்கள் அவரிடத்தில் வந்து,

௰௯ போதகரே! ஒருவன் பிள்ளைகளில்லாமல் தன் மனைவியைவிட்டிறந்தால் அவனுடைய சகோதரன் அவன் மனைவியை விவாகம்பண்ணி அவனுக்குச் சந்ததியுண்டாக்கவேண்டுமென்று நமக்கு மோசே கட்டளையிட்டிருக்கிறாரே.

௨௰ ஓரிடத்தில் ஏழுபேர் சகோதரரிருந்தார்கள், அவர்களில் மூத்தவன் ஒரு பெண்ணை விவாகம்பண்ணிப் பின்பு சந்ததியில்லாமல் இறந்துபோனான்.

௨௰௧ அப்பொழுது இரண்டாஞ் சகோதரன் அவளை விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமல் இறந்துபோனான், மூன்றாஞ்சகோதரனும் அப்படியேபோனான்.

௨௰௨ ஏழுபேரும் அவளை விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமற்போனார்கள், எல்லாருக்கும் பின்பு அந்தப்பெண்ணும் இறந்துபோனாள்.

௨௰௩ ஆகையால் அவர்கள் உயிரோடெழுந்திருக்குங்காலத்திலே ஏழுபேருக்கும் மனைவியாயிருந்த அவள் அவர்களிலெவனுக்கு மனைவியாயிருப்பாளென்று கேட்டார்கள்.

௨௰௪ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னதாவது, நீங்கள் வேதவாக்கியங்களையும் பராபரனுடைய வல்லமையையும் அறியாமலிருக்கிறபடியால் அல்லவா வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்கள்.

௨௰௫ மரித்தவர்கள் உயிரோடெழுந்திருக்கும்பொழுது பெண்கொள்வதுமில்லை கொடுப்பதுமில்லை, அவர்கள் பரலோகத்திலுள்ள தூதரைப்போல இருப்பார்களே.

௨௰௬ மரித்தோர் எழுப்பப்படுவதைக்குறித்து நான் ஆபிரகாமினுடைய தேவனுமாய் ஈசாக்கினுடைய தேவனுமாய் யாக்கோபினுடைய தேவனுமாயிருக்கிறவனென்று

று செடியிலிருந்து பராபரன் மோசேயுடனே சொல்லியவாக்கியம் மோசேயின் ஆகமத்திலே எழுதியிருக்கின்றதே, அதை நீங்கள் வாசிக்கவில்லையா?

௨௭ அவர் மரித்தவர்களுடைய தேவனல்ல, பிராமத்திலுள்ளவர்களுடைய தேவனாயிருக்கிறார், ஆகையால் நீங்கள் மிகவும் வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்களென்றார்.

௨௮ அவர்கள் அப்படிப்பேசிக்கொண்டதைவேதபாரகரிலொருவன் கேட்டு அவர் அவர்களுக்கு நன்றாய் மாறுத்தாரஞ்சொன்னதையறிந்து அவரைநோக்கி, கற்பனைகளில் எதுபிரதானமானதென்று கேட்டான்.

௨௯ அதற்கவர்சொன்னது, கற்பனைகளிற் பிரதானமான கற்பனையென்னவென்றால், இஸ்ரவேலே கேள், உன்தேவனாகிய பராபரன் ஒருவரே பராபரன்.

௩௰ உன்தேவனாகிய பராபரனிடத்திலே நீ உன்முழுஇருதயத்தோடும் உன்முழுஆத்துமாவோடும் உன்முழுமனதோடும் உன்முழுபெலனோடுமல்லாமற்றும் அன்புகூர்வாயாகவென்பதே பிரதானமானகற்பனை.

௩௧ இரண்டாங்கற்பனை அதற்கொப்பாயிருக்கின்றது, என்னவெனில், உன்னிடத்தில் அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வாயாகவென்பதே. இவைகளிலும் வேறொருபெரிதானகற்பனையில்லையென்றார்.

௩௨ வேதபாரகனசொன்னது, நல்லது போதகரே, நீர் சத்தியத்தின்படிசொன்னீர், ஒரேதேவனுண்டு, அவரைத்தவிர வேறொருதேவனில்லை.

௩௩ அல்லாமலுந் தகன்பலிமுதலானபலிகளிலும் முழு இருதயத்தோடும் முழு மனதோடும் முழு ஆத்துமாவோடும் முழுப்பலத்தோடும் அவரிடத்தில் அன்புகூர்வதுந் தன்மேல அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வதுமே மேன்மையாயிருக்கின்றதென்றான்.

௩௪ அவன்புத்தியோடேபேசினதை இயேசுவானவர்கண்டு நீ பராபரனுடைய இராச்சியத்திற்குத் தூரமானவனல்லவென்றுஅவனுடனேசொன்னார், பின்பு ஒருவனும் அவரிடத்தில் வினவத்துணியவில்லை.

௩௫ இயேசுவானவர் தேவாலயத்திலே உபதேசம்பண்ணுகையில் அவர் அவர்களைநோக்கி, தாவீதுதாமே பரிசுத்த ஆவியினாலேசொன்னது, பராபரன் என்கர்த்தாவைநோக்கி, உம்முடையசத்துருக்களைநான் உமதுபாதப்படியாக்குமளவும் நீர்என்னுடைய வலதுபாரிசத்திலேயுட்காருமென்றானபடியே.

௩௬ ஆகையாற்கிறிஸ்து தாவீதினுகுமாரனென்று வேதபாரகர் எப்படிச்சொல்லுகிறார்கள்?

௩௭ தாவீதுதானே அவரைக்கர்த்தாவென்றுசொல்லியிருக்க, அவர் எப்படி அவனுடைய குமாரனாயிருக்கிறாரென்றுசொன்னார், அநேகசனங்கள் அவருடைய உபதேசத்தையின்பமாய்க்கேட்டார்கள்.

௩௮ அன்றியும் அவர் உபதேசம்பண்ணுகையில் அவர்களுடனேசொன்னது, நீளமான அங்கிகளைத்தரித்திருந்து நடக்கவுஞ் சந்தைகளிலே வாழ்த்துதல் அடையவும்,

௩௯ செப ஆலயங்களில் முதல் ஆசனங்களிலிருக்கவும் போசனபந்திகளில் முதல் இடங்களிலிருக்கவும் விரும்பி விஸ்தாரமாய்ச் செபமந்திரங்களைச்சொல்லுகிறோமென்றுசொல்லிக் கைம்பெண்களுடைய ஆஸ்திகளைப்பட்சித்துவருகிறவேதபாரகருக்கு இடங்கொடாமலெச்சரிக்கையாயிருங்கள்.

௪௰ அவர்கள் அதிக தண்டிப்படைவார்களென்றார்.

௪௧ அல்லாமலும் இயேசுவானவர்பொக்கிஷப்பெட்டிக்கெதிரேயுட்கார்ந்தபொழுது அதிலே சனங்கள் பணத்தைப்போடுகிறதைப்பார்த்தார், அநேக ஐசுவரியவான்கள் மிகவும்போட்டார்கள்.

௪௨ எளியவளான ஒருகைம்பெண்ணும் வந்து கோதிராந்தசெனனும் இரண்டு காசைப்போட்டாள்.

௪௩ அப்பொழுது அவர் தமது சீஷர்களையழைத்து இந்தப்பொக்கிஷப்பெட்டியிலேபோட்டவர்களெல்லாரிலும் இவ்வேழைக்கைம்பெண் அதிகமாய்ப்போட்டாளென்று மெய்யாய்உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௪௪ என்னத்தினாலென்றால், அவர்களெல்லாருந் தங்களுக்குண்டான சம்பூரணத்திற்சிலபோட்டார்கள், இவளோ தன் வறுமையில் தன் சீவனத்துக்குண்டானயாவையும் போட்டாளென்றார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) தேவாலயம் அழிக்கப்படுமென்பதைக்குறித்துச்சொல்லியது. (௫) கிறிஸ்துவருவதைக்குறித்துச் சீஷர்களுக்கு அறிவைக்கொடுத்தது. (௯) உபத்திரவத்தின் மித்தந்துன்பம்வருமென்பது. (௰௪) யூதர்களுக்கு மிகுந்த உபத்திரவங்கள் வருமென்பது. (௨௪) கிறிஸ்து நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படி வருவாரென்பது. (௩௨) அவர் வருமநேரம் நிச்சயமாய்த் தெரியாதென்பது.]

பின்பு அவர் தேவாலயத்தைவிட்டுப் புறப்படுகிறபொழுது, அவருடைய சீஷரிலொருவன் அவரைநோக்கி போதகரே, இதோ இவைகள் எப்படிப்பட்டக்கல்லுகள் எப்படிக் கட்டப்பட்டிருக்கின்றதென்றான்.

௨ அவனுடனே இயேசுவானவர் சொன்னது, இந்தப் பெரிய மாளிகையைப் பார்க்கிறாயா? இதில் ஒரு கல்லின்மேலே மற்றொரு கல் வைக்கப்படுவதில்லை, எல்லாம் இடிக்கப்படுமென்றார்.

௩ பின்பு அவர் தேவாலயத்துக்கெதிராக ஒலிவமலையின்மேலே உட்கார்ந்திருக்கையில் பேதுருவும் யாக்கோபும் யோவானும் அந்திரேயாவும் மாத்திரம் அவரை நோக்கி,

௪ இவைகள் எப்பொழுது நடக்கும், இவைகளெல்லாம் நிறைவேறுங் காலத்திலே என்ன அடையாளந் தோன்றும்? அதை எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டார்கள்.

௫ அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது, அநேகர் தோன்றி என்னுடைய நாமத்தை எடுத்து, நானே அவனென்று சொல்லி அநேகரை வஞ்சனை செய்வார்கள்.

௬ ஆகையால் ஒருவனும் உங்களை வஞ்சனை செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

௭ அல்லாமலும் நீங்கள் யுத்தங்களையும் யுத்தங்களுக்கேற்ற பேச்சுகளையுங் கேள்விப்படும்பொழுது கலக்கமடையாதிருங்கள்.

௮ அப்படி நடக்கவேண்டுமே, அப்பொழுதும் முடிவு உடனே வாராது. ஆகையால் ஒரு சனக்கூட்டம் மற்றொரு சனக்கூட்டத்துக்கும் ஒரு இராச்சியத்தார் மற்றொரு இராச்சியத்தாருக்கும் விரோதமாக எழும்புவார்கள். பல இடங்களிலே பூமியதிர்ச்சிகளும் பஞ்சங்களுங் கலகங்களுஞ் சம்பவிக்கும். இவைகள் வேதனைகளின் ஆரம்பமாயிருக்கும்.

௯ அப்பொழுது நீங்கள் எச்சரிக்கையாயிருக்கக்கடவீர்கள். என்னத்தினாலெனில் என்னிமித்தம் உங்களைப் பெரிய சங்கத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள். செப ஆலயங்களிலே நீங்கள் அடிக்கப்பட்டுத் துரைகளுக்கும் இராசாக்களுக்குஞ் சாட்சியாக அவர்களுக்கு முன்பாக நிறுத்தப்படுவீர்கள்.

௰ அல்லாமலும் முன்பு சுவிசேஷமானது உலகத்தாரெல்லாருக்கும் பிரசங்கம் பண்ணப்படவேண்டும்.

௰௧ அப்படி ஒப்புக்கொடுக்கும்படிக்கு உங்களைக் கொண்டுபோகும்பொழுது, நீங்கள் என்னபேசுவோமென்று முன்கவலைப்படாமலுஞ் சிந்தித்துக்கொள்ளாமலுமிருங்கள் நீங்களல்ல, பரிசுத்த ஆவியே பேசுகிறவராகையால் அந்நேரத்திலே உங்களுக்கு அளிக்கப்படுவதையே பேசக்கடவீர்கள்.

௰௨ அன்றியும் ஒருவன் தன் சகோதரனையுந் தகப்பன் தன் பிள்ளையையும் மரணத்திற்கு ஒப்புக்கொடுப்பார்கள். பிள்ளைகளுந் தங்களைப் பெற்றவர்களுக்கு விரோதமாய் எழும்பி அவர்களை மரணம் அடையும்படி செய்விப்பார்கள்.

௰௩ நீங்களும் என் நாமத்தினிமித்தம் யாவராலும் பகைக்கப்படுவீர்கள். எப்படியும் முடிவளவுக்கும் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

௰௪ மேலும் பாழாக்குகிற அருவருப்பைக் குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொன்னதை. (அதை) வாசிக்கிறவன் சிந்தித்துக்கொள்ளக்கடவன். அது நிற்கப்படாத இடத்திலே நீங்கள் அது நிற்கக்காணும்பொழுது யூதேயாவிலுள்ளவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவார்கள்.

௰௫ வீட்டின்மேலிருப்பவன் தன் வீட்டிற்குள்ளே இறங்காமலும் அதிலிருந்து ஏதையாகிலும் எடுத்துக்கொண்டு போகும்படி பிரவேசியாமலும் போகக்கடவன்.

௰௬ அல்லாமலும் வயலிலிருப்பவன் தன் வஸ்திரத்தை எடுத்துப்போகும்படிக்குப் பின்னிட்டுத் திரும்பாமற் போகக்கடவன்.

௰௭ ஐயோ, அந்நாட்களிற் கருப்பவதிகளுக்கும் முலைகொடுக்கிறவர்களுக்கும் உபத்திரவமிருக்கும்.

௰௮ மேலும் பராபரன் உலகத்தையுண்டாக்கினதுமுதற்கொண்டு இதுவரைக்குஞ் சம்பவியாததுமாய் இனிமேலுஞ் சம்பவியாததுமாயிருக்கிற உபத்திரவமே அந்நாட்களிலிருக்கும்.

௰௯ ஆதலால் நீங்கள் ஓடுகிறது மாரிக்காலத்திலே சம்பவியாதபடிக்கு வேண்டுதல் பண்ணக்கடவீர்கள்.

௨௰ அல்லாமலும் பராபரன் அந்நாட்களைக் குறைப்பண்ணாமலிருந்தால் ஒருவனுந் தப்பிப்போவதில்லை, அவர் தெரிந்துகொண்டவர்களினிமித்தமே அந்நாட்களைக் குறைத்தார்.

௨௰௧ அன்றியுங் கள்ளக்கிறிஸ்துக்களுங் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பித் தெரிந்துகொள்ளப்பட்டவர்களை (ஒருசிக்கல்) கூடுமானால் அவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக அதிசயங்களையும் அற்புதங்களையுஞ் செய்வார்கள்.

௨௰௨ ஆகையால் அக்காலத்திலேயொருவன் இதோ இங்கே கிறிஸ்தென்றும் அதோ அங்கே கிறிஸ்தென்றும் உங்களுடனே சொன்னால் அவனை நீங்கள் நம்பவேண்டாம்.

௨௰௩ எச்சரிக்கையாகவேயிருங்கள், இதோ இவைகளெல்லாவற்றையும் உங்களுக்கு முன்னறிவித்தேன்.

௨௰௪ அன்றியும் அக்காலத்திலே அந்த உபத்திரவத்திற்குப் பின்பு சூரியன் இருள் அடையுஞ், சந்திரன் பிரகாசங்கொடாமலிருக்கும்.

௨௰௫ நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், அல்லாமலும் வானத்திற்பலமுள்ள

வைகளெல்லாம் அசைக்கப்படும்.

௨௬ அப்பொழுது மனிதனுடைய குமாரன் மிகுந்த வல்லமையோடும் மகிமையோடும் மேகங்களின்மேல் வருவார், அவரை அவர்கள் காண்பார்கள்.

௨௭ அல்லாமலும் அவர் அப்பொழுது தமது தூதரை அனுப்பி வானத்தின் எல்லை களாகிய நாலு திசைகளிலுமிருந்து தாம் தெரிந்துகொண்டவர்களைச் சேர்த்துக்கொள்வார்.

௨௮ அத்திமரத்தினாலே உவமையாக ஒரு விசேஷத்தைக் கற்றுக்கொள்ளுங்கள், அதினுடைய கிளைகள் தளிராகி இலைகளைக் கொடுக்கிறபொழுது வசந்தகாலம் சமீபமாயிருக்கிறதென்று அறிகிறீர்கள்.

௨௯ அப்படிப்போல இவைகள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது மிகவும் சமீபமாயிருக்கிறாரென்றறியக்கடவீர்கள்.

௩௰ இவைகளெல்லாஞ் சம்பவிக்குமளவும் இந்தச் சந்ததி ஒழிந்துபோவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௧ வானமும் பூமியும் ஒழிந்துபோம், என் வசனங்களோ ஒழியாமலிருக்கும்.

௩௨ (அவை சம்பவிக்கும்) நாளையும் நாழிகையையும் பிதாவானவரேயன்றி மற்றொருவனும் அறியமாட்டான், பரமண்டலங்களிலுள்ள தூதரும் குமாரனும் அதை அறியார்கள்.

௩௩ அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால் எச்சரிக்கையாய் விழித்துக்கொண்டு செபம்பண்ணக்கடவீர்கள்.

௩௪ ஒரு மனிதன் தன் வீட்டைவிட்டுப் புறத்தேசத்திற்குப் போகமனதாய்த் தன் ஊழியக்காரருக்கு அதிகாரங்கொடுத்து ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வேலையை நியமித்துக் காவற்காரன் விழித்துக்கொண்டிருக்கும்படிக்குக் கட்டளையிடுகிறதுபோல விருக்கிறது.

௩௫ ஆகையால் வீட்டெசமான் சாயந்திரம் பாதியிராத்திரி சேவல்கூவும் நேரம் காலை இவைகளில் இன்னவேளையில் வருவா

ரென்று நீங்கள் அறியாதிருக்கிறபடியால்,

௩௬ அவர் சடுதியாய் வந்து உங்களைத் தூங்குகிறவர்களென்று கண்டுபிடியாதபடி

க்கு விழித்துக்கொண்டிருங்கள்.

௩௭ விழித்துக்கொண்டிருங்களென்று நான் உங்களுக்குச் சொன்னதுபோல மற்ற யாவருக்கும் அப்படியே சொல்லுகிறேனென்றார்.

## ௧௪. அதிகாரம்.

[(௧) ஆசாரியர்கள் கிறிஸ்துவுக்கு விரோதமாய் யோசனைபண்ணினது. (௩) ஒரு ஸ்திரீ அவருக்கு அபிஷேகம்பண்ணினது. (௰) யூதாஸ் அவரைக்காட்டிக்கொடுக்கும்படி பேசினது. (௪௩) அவன் அவரைக்காட்டிக்கொடுத்தது. (௬௬) பேதுரு அவரை மறுதலித்தது.]

இரண்டு நாளுக்குப்பின்பு புளியாத அப்பஞ்சாப்பிடுகிற பஸ்காப்பண்டிகை வந்தது, பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் தந்திரமாய் அவரைப்பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு வகைதேடிக்கொண்டிருக்கையில்,

௨ அவர்கள் சொன்னது, பண்டிகையிலே அப்படிச்செய்யக்கூடாது, செய்தாலே சனங்களுக்குள்ளே கலகமுண்டாகுமென்றார்கள்.

௩ அவர் பெத்தானியூரிலே குஷ்டரோகியாயிருந்த சீமோனுடைய வீட்டிற் போசனபந்தியிருக்கையில் ஒரு ஸ்திரீயானவள் மிகவும் விலையேறப்பெற்ற களங்கமில்லாத சுகந்தவருக்கத்தாற்செய்த நருதுவென்னும் பரிமளதயிலமுள்ள வெண்கற்பரணியை யெடுத்துவந்து அதைத்திறந்து அதிலுள்ள தயிலத்தை அவருடைய தலைமேல் வார்த்தாள்.

௪ அப்பொழுது சிலர் தங்களுக்குள்ளே விசனமடைந்து இந்தப் பரிமளதயிலத்தையேன் கெடுத்துப்போடுகிறாள்?

௫ இதை முந்நூறு தெநாரியுவுக்கு மேலான கிரயத்திற்கு விற்று ஏழைகளுக்குக் கொடுக்கலாமேயென்று சொல்லி அவளுக்கு விரோதமாய் முறுமுறுத்தார்கள்.

௬ அப்பொழுது இயேசுவானவர் சொன்னது, இவளைவிட்டுவிடுங்கள், ஏன் இவளை வருத்தப்படுத்துகிறீர்கள், இப்படியிவள் எனக்கு நற்கிரியையென்னிடத்திற்செய்தாள்.

௭ ஏழைகள் எப்பொழுதும் உங்களுடனேயிருப்பார்கள், மனதிருந்தால் நீங்கள் அவர்களுக்கு நன்மைசெய்யலாம், நானோ எப்பொழுதும் உங்களிடத்திலிரேன்.

௮ இவள் தன்னாலானமட்டுஞ் செய்தாள், என்சரீரத்தை அடக்கம்பண்ணுகிறதற்கு வருகும்படிக்கு இவள் முந்தியதிற் சுகந்தவருக்கமிட்டாள்.

௯ உலகமுழுவதிலும் இந்தச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுமிடமெங்கேயோ அங்கே இவளை நினைத்துக்கொள்வதற்கு இவள் இப்பொழுது செய்ததுஞ் சொல்லப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰ பின்பு பன்னிருவரிலொருவனாகிய யூதாஸ் இஸ்காரியோத்தென்பவன் பிரதான ஆசாரியருக்கு அவரைக்காட்டிக்கொடுக்கும்படிக்கு அவர்களிடத்திற்போனான்.

௰௧ அவனுடைய வார்த்தைகளை அவர்கள் கேட்டு மிகச்சந்தோஷப்பட்டு அவனுக்குப்

பணங்கொடுக்கும்படிக்கு வாக்குத்தத்தம பண்ணினார்கள், பினபு அவன அவரைககாட்டிக்கொடுப்பதற்குத் தகுதியான காலத்தைப்பார்த்துக்கொண்டிருந்தான.

௧௨ புளியாத அப்பங்களைச் சாப்பிடும நாட்களிற்பஸ்கா ஆட்டுக்குட்டிபலியிடப்படுமமுதல நாளிலே அவருடையசிஷர்கள அவரைநோக்கி, நீர்பஸ்காவைப்பொசிக்கும்படிக்கு நாஙகள எங்கேபோய எத்தனமபண்ணச்சித்தமாயிருக்கிறீரென்று கேட்டார்கள.

௧௩ அப்பொழுது அவர்தமது சிஷரில இரண்டுபேரை அழைத்து, நீஙகளபட்டினத்திற்குப்போஙகள, அஙகே ஒரு மனிதன தண்ணீர்க்குடத்தைச்சுமந்துகொண்டு உஙகளுக்கெதிராகவருவான அவனுக்குப்பின்செலலுஙகள.

௧௪ அலலாமலும அவனபிரவேசிக்கும வீட்டிலே நீஙகளும (பிரவேசித்து) அந்த எசமானைநோக்கி, நான என்சிஷர்களுடனே பஸ்காவைப்போசனமபண்ணத்தக்கதான இடமெஙகேயென்று போதகர்கேட்கிறாரென்றுசொலலுஙகள.

௧௫ அப்பொழுது அவன கம்பளமுதலானவைகளவிரித்து எத்தனமாக்கப்பட்டிருக்கிறவிஸ்தாரமானமேலவீட்டிற்பெரிய அறையை உஙகளுக்குக்காண்பிப்பான, அஙகேநமக்காக எத்தனமபண்ணுஙகளென்றுசொலலியனுப்பினார்.

௧௬ அந்தபடி அவருடைய சிஷர்கள புறப்பட்டுப்பட்டினத்திலவந்து தஙகளுக்கு அவர்சொனனபடியேகண்டு பஸ்காப்போசனத்தை எத்தனமபண்ணினார்கள.

௧௭ சாயந்திரமானபொழுது அவர்பனனிருவருடனேகூட அவவிடத்திற்குப்போனார்.

௧௮ அவர்களபந்தியிலிருந்து சாப்பிடுகையில இயேசுவானவர் அவர்களைநோக்கி எனனோடேகூடச்சாப்பிடுகிற உஙகளிலொருவனே எனனைக் காட்டிக்கொடுப்பானென்றுமெய்யாயஉஙகளுக்குச்சொலலுகிறேனென்றார்.

௧௯ அவர்கள அதைக்கேட்டுமிகுந்ததுக்கம அடைந்துநானோநானோவென்றுஒவவொருவராய அவரிடத்திற்கேட்கத்தொடஙகினார்கள.

௨௰ அவர்களுக்குமாறுத்தரமாக அவர் சொன்னது, பனனிருவரிலொருவனேயெனனோடே கூடத்தாலத்திலே தோயக்கிறவனே (அப்படிச்செயவான.)

௨௧ மனிதனுடையகுமாரன தனனைக்குறித்தெழுதியிருக்கிறபடிபோகிறான ஆனாலும ஐயோ, மனிதனுடையகுமாரனைக்காட்டிக்கொடுப்பவனெவனோ அவனுக்குவேதனைவரும அம்மனிதன பிறவாமலிருந்தானாலவனுக்குநலமாயிருக்குமெனறார்.

௨௨ அலலாமலும அவர்களசாப்பிடுகிறபொழுது இயேசுவானவர் அப்பத்தைப்பெடுத்து ஆசீர்வாதஞசெயது அதைப்பிட்டு அவர்களுக்குக்கொடுத்து இதையெடுத்துப்பொசியுஙகள, இது என்னுடைய சரீரமாயிருக்கிறதென்றுசொலலி,

௨௩ பினபு பாத்திரத்தையுமெடுத்துத்தோத்திரமபண்ணி அதை யவர்களுக்குக்கொடுத்து அவர்களெலலாரும அதிற்பானமபண்ணினபினபுசொன்னதாவது,

௨௪ இதுபுதிய ஏற்பாட்டுக்கேறறதாய அநேகருக்காகச்சிந்தப்படும என்னுடைய இரத்தமாயிருக்கிறது.

௨௫ பராபரனுடையஇராச்சியத்திலே நான்திராட்ச இரசத்தைநவமாய உஙகளுடனேபானமபண்ணும நாளவரைக்கும அதைநான மறுபடியும்பானமபண்ணுவதிலலையென்றுமெய்யாய் உஙகளுக்குச்சொலலுகிறேனென்றார்.

௨௬ அவர்கள தோத்திரமபாடினபினபு ஒலிவமலைக்குப்போனார்கள.

௨௭ அப்பொழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, மேயப்பனைவெட்டுவேன. அப்பொழுது ஆடுகளசிதறடிக்கப்படுமென்று எழுதியிருக்கிறபடியால நீஙகளெலலாரும இந்த இராத்திரியிலே என்னைக்குறித்து இடறலடைவீர்கள.

௨௮ ஆனாலும நான் உயிரோடிருக்கும்படி எழுப்பப்பட்டபினபு உஙகளுக்குமுனனே கலீலேயாநாட்டுக்குப் போவேனென்றார்.

௨௯ அதற்குப பேதுரு எலலாரும உமமைக்குறித்து இடறினாலும நான அப்படிச்செயயமாட்டேனென்றான.

௩௰ அவனுடனே இயேசுவானவர் இந்த இராத்திரியிலேசேவல இரண்டாந்தரம கூவுமுனனமே நீ மூன்றுதரம எனனைமறுதலிப்பாயென்று மெய்யாய உனக்குச்சொலலுகிறேனென்றார்.

௩௧ அதறகவன நான் உமமோடேசாகவேண்டுவதாயிருந்தாலும உமமை மறுதலிக்கமாட்டேனென்று அதிக உறுதியாதச்சொன்னான. மற்றவர்களெலலாரும அப்படியேசொன்னார்கள.

௩௨ பினபு அவர்கள கெத்சேமனேயென்னுமிடத்திற்சேர்ந்தார்கள. அஙகே அவர் தமது சிஷர்களைநோக்கி, நானபோய்ச்செபமபண்ணுகையில நீஙகள இஙகேயிருஙகளென்றுசொலலி,

௩௩ பேதுருவையும யாக்கோபையும யோவானையுங்கூட்டிக்கொண்டுபோய்மிகுந்த திகிலையும வியாகுலத்தையும அடையத்தொடஙகி,

௩௪ என ஆத்துமா மரணவேதனைப்படு

கின்றது. நீங்கள் இங்கேதங்கி விழித்திருங்களென்றுசொல்லி,

௩௫ சற்றே தூரம்போய்த் தரையிலே விழுந்து அந்நேரந் தம்மைவிட்டுநீங்கக்கூடுமானால் அதுநீங்கும்படிக்கு,

௩௬ அப்பா! பிதாவே! உம்மாலே எல்லாமாகும். இந்தப்பாத்திரம் என்னைவிட்டுநீங்கும்படி செய்யும்; இல்லாவிட்டாலென்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று செபம்பண்ணினார்.

௩௭ பின்பு அவர்வந்து அவர்கள் தூங்குகிறதைக்கண்டு பேதுருவுடனே சொன்னது, சீமோனே! தூங்குகிறாயா? ஒருமணிநேரம் நீவிழித்துக்கொள்ளக்கூடாதா.

௩௮ சோதனைசெய்வதற்கான காரணத்தில் நீங்கள் பிரவேசியாதபடிக்கு விழித்துக்கொண்டுசெபம்பண்ணுங்கள். ஆவியானது மனதுள்ளதுதான், மாமிசதேகம் பெலவீனமுள்ளதென்றுசொல்லி,

௩௯ மறுபடியும் அப்புறம்போய் மேற்சொல்லியவிதமாய்ச்செபம்பண்ணினார்.

௪௰ பின்பு அவர் திரும்பி அவர்களுடைய கண்கள்கனமான தூக்கத்தை அடைந்தபடியினாலே மறுபடியும் அவர்கள் தூங்குகிறதைக்கண்டார். அல்லாமலும் அவர்கள் அவருக்குச்சொன்ன மாறுத்தரத்தையும் அவர்கள்தாமே அறியவில்லை.

௪௧ பின்பு அவர் மூன்றாந்தரம் அவர்களிடத்தில்வந்து நீங்கள் பின்னுந் தூங்கி இளைப்பாறுகிறீர்களா? இதுபோதும்நேரமேவந்தது. இதோ, மனிதனுடையகுமாரன்பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிறான்.

௪௨ இதோ, என்னைக்காட்டிக்கொடுக்கிறவன் சமீபிக்கிறான் எழுந்திருங்கள். நாம்போவோமென்றார்.

௪௩ உடனே அவர்பேசுகையிற் பன்னிருவரிலொருவனாகிய யூதாவும் அவனோடேகூடப்பெரிய ஆசாரியராலும் வேதபாரகராலும் மூப்பராலும் அனுப்பப்பட்டுக் கத்திகளையுந் தடிகளையும் பிடித்துக்கொண்டுவருகிற மிகுந்தசனங்களுந் தோன்றினார்கள்.

௪௪ அவரைக்காட்டிக்கொடுக்க வந்தவன் எவனைமுத்தஞ்செய்வேனோ அவனே அவன். அவனை நீங்கள்பிடித்துப்பத்திரமாய்க்கொண்டுவரவேண்டுமென்று அடையாளமாகமற்றவர்களுக்குச்சொல்லியிருந்தான்.

௪௫ ஆகையால் அவன்வந்தவுடனே அவரிடத்திற்சேர்ந்து ரபீ! ரபீயென்று சொல்லி அவரை முத்தஞ்செய்தான்.

௪௬ அப்பொழுது அவர்கள் அவரைக் கைப்பிடியாகப்பிடித்தார்கள்.

௪௭ உடனே சமீபமாய் நின்றவர்களில் ஒருவன் கத்தியை எடுத்துப்பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனைக்காதற வெட்டினான்.

௪௮ அப்பொழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, ஒருகள்ளனை(ப்பிடிக்கிறதற்குப்புறப்படுகிறது)போல நீங்கள் என்னைப்பிடிக்கும்படிக்குக் கத்திகளோடுந் தடிகளோடும் புறப்பட்டுவந்தீர்கள்.

௪௯ நாடோறும் நான் உங்களுக்குள்ளே தேவாலயத்திலே உபதேசம்பண்ணினேன். அப்பொழுது நீங்கள் என்னைப்பிடிக்கவில்லை, ஆனாலும் வேதவாக்கியங்கள் நிறைவேறவேண்டுமென்றுசொன்னார்.

௫௰ உடனே (சீஷர்)எல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போனார்கள்.

௫௧ ஒருவாலிபனொருவஸ்திரத்தைமாத்திரந் தன்மேற்போர்த்துக்கொண்டு அவருக்குப்பின்சென்றான், அவனைச் சேவகர்பிடித்தார்கள்.

௫௨ அப்பொழுது அவன் தன்வஸ்திரத்தைவிட்டு நிருவாணமாய் அவர்களைவிட்டு ஓடிப்போனான்.

௫௩ இயேசுவானவரைஅவர்கள் பிரதான ஆசாரியனிடத்திற்குக்கொண்டுபோனார்கள், அங்கே ஆசாரியரெல்லாரும்மூப்பரும் வேதபாரகருங்கூடிவந்தார்கள்.

௫௪ பேதுரு தூரமாக அவருக்குப்பின்சென்று பிரதான ஆசாரியனுடைய மாளிகையின்பிராகாரத்தில்வந்து அங்கே ஊழியக்காரருடனே நெருப்பினருகே உட்கார்ந்து அனல்காய்ந்துகொண்டிருந்தான்.

௫௫ அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும்மற்றப்பெரியசங்கத்தாரெல்லாரும் இயேசுவானவரைக்கொலைசெய்யும்பொருட்டாய் அவருக்கு விரோதமாயச் சாட்சிகளைத்தேடினார்கள்.

௫௬ அகப்படவில்லை, அநேகர் அவருக்குவிரோதமாயப் பொய்ச்சாட்சிசொல்லியும் அந்தச்சாட்சிகள் ஒவ்வவில்லை.

௫௭ அப்பொழுது சிலர் எழுந்து இவன் கையினாற்செய்யப்பட்ட இந்தத்தேவாலயத்தை நான் இடித்துப்பின்பு மூன்றுநாளுக்குள்ளே கையிலாமல்வேறொன்றைக்கட்டுவேனென்று சொல்லக்கேட்டோமென்று,

௫௮ அவருக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சிசொன்னார்கள்.

௫௯ அப்படியும் அவர்களுடையசாட்சி ஒவ்வாமலிருந்தது.

௬௰ பின்பு பிரதான ஆசாரியன் நடுவிலேயெழுந்து இயேசுவானவரை நோக்கி, நீ மாறுத்தரஞ்சொல்லுகிறதில்லையா? இவர்கள் உனக்குவிரோதமாய் என்னசாட்சிசொல்லுகிறார்களென்றுகேட்டான்.

௬௧ அவர் மாறுத்தரமாக ஒன்றும்பேசாமலிருந்தார், பிரதான ஆசாரியன் மறு

படியும் அவரை நோக்கி, தோத்திரஞ்செய்யப்படத்தக்கவருடைய குமாரனாகிய கிறிஸ்து நீதானோவென்று கேட்டான்.

௬௨ இயேசுவானவர் சொன்னது, அவர் நான்தான், அல்லாமலும் மனிதனுடைய குமாரன் சர்வவல்லமையுள்ளவருடைய வலதுபாரிசத்திலே உட்காரவும் வானத்தின் மேகங்களின்மேல் வரவுங்காண்பீர்களென்றார்.

௬௩ அப்பொழுது பிரதான ஆசாரியன் தன் வஸ்திரத்தைக் கிழித்து,

௬௪ வேறு சாட்சி நமக்கு வேண்டுமோ? இத்தூஷணத்தைக் கேட்டீர்களே, உங்களுக்கெப்படித் தோன்றுகின்றதென்றான், அவர்களெல்லாரும் அவன் மரண ஆக்கினைக்குப் பாத்திரனென்று தீர்மானம்பண்ணினார்கள்.

௬௫ அப்பொழுது சிலர் அவர்மேலே துப்பி அவருடைய முகத்தை மூடிக் கையினால் அடித்து நீ தீர்க்கதரிசனஞ்சொல்லென்று அவருடனே சொல்லத்தொடங்கினார்கள் அல்லாமலும் ஊழியக்காரர் அவரைக் கன்னத்தில் அடித்தார்கள்.

௬௬ அத்தருணத்திலே பேதுரு மாளிகையின் பிரகாரத்திற் கீழிருக்கிறபொழுது பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரிகளிலொருத்தி வந்து,

௬௭ அனல் காய்ந்துகொண்டிருக்கிற பேதுருவைக் கண்டு அவனையுற்றுப்பார்த்து நீயும் நாசரேத்தூரானாகிய இயேசுவுடனே இருந்தாயேயென்றாள்.

௬௮ அதற்கவன் சொன்னது, (அவனை) அறியமாட்டேன், நீ சொல்லுகிறதையும் நான் அறியேனென்று மறுதலித்துப் பின்பு வெளியிலேயுள்ள மண்டபத்திற்குப் போனான், அப்பொழுது சேவல் கூவிற்று.

௬௯ பின்பு வேலைக்காரி அவனை மறுபடியும் பார்த்துச் சமீபமாய் நின்றவர்களை நோக்கி, இவன் அவர்களிலொருவனென்றாள்,

௭௰ அவன் மறுபடியும் மறுதலித்தான். சற்றுநேரத்திற்குப் பின்பு அங்கே நின்றவர்கள் மறுபடியும் பேதுருவை நோக்கி, நீ மெய்யாய் அவர்களிலொருவனாயிருக்கிறாய், நீ கலிலேயாநாட்டானுந்தான், உன் பேச்சு அதைக் காண்பிக்கின்றதென்றார்கள்.

௭௧ அதற்கவன் நீங்கள் சொல்லுகிற மனிதனை நான் அறியமாட்டேனென்று சொல்லிச் சபிக்கவும் ஆணையிடவுந்தொடங்கினான்.

௭௨ உடனே சேவல் இரண்டாந்தரங் கூவிற்று, அப்பொழுது சேவல் இரண்டாந்தரங் கூவுமுன்னமே நீயென்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று தன்னுடனே இயேசுவானவர் சொன்ன வசனத்தைப் பேதுரு நினைத்து விலகிப்போய் அழுதுகொண்டான்.

# ௰௫. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் பிலாத்துவுக்கு முன்பாகக் கொண்டுபோகப்பட்டது. (௰) அவர் மரண ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டது. (௨௭) சிலுவைமரத்திலே அறையப்பட்டு மரித்தது. (௪௨) மேன்மையாய் அடக்கம்பண்ணப்பட்டது.]

அதிகாலையிலே பிரதான ஆசாரியரும் மூப்பரும் வேதபாரகரும் மற்றப்பெரிய சங்கத்தாரியாவரும் ஆலோசனைபண்ணிக்கொண்டபின்பு அவர்கள் அவரைக் கட்டிக்கொண்டுபோய்ப் பிலாத்துவினிடத்துக்கு ஒப்புக்கொடுத்தார்கள்.

௨ பிலாத்து அவரை நோக்கி, நீ யூதர்களுடைய இராசாவாவென்று கேட்டான், அதற்கவர் நீர் (சரியாய்ச்) சொன்னீரென்றார்.

௩ அல்லாமலும் பிரதான ஆசாரியர் அவர்மேல் அநேக குற்றங்களைச் சாற்றிவருகிற பொழுது,

௪ பிலாத்து மறுபடியும் அவரை நோக்கி இதோ இவர்கள் உனக்கு விரோதமாக மிகுந்த சாட்சிகளைச் சொல்லுகிறார்களே அதற்கு நீ ஒன்றையுஞ் சொல்லுகிறதில்லையாவென்று கேட்டான்.

௫ இயேசுவானவர் பிலாத்துதானே ஆச்சரியப்படத்தக்கதாக ஒன்றையுஞ்சொல்லவில்லை.

௬ பண்டிகைதோறும் அவர்கள் கேட்டுக்கொள்ளும் பாதகனெவனோ அவனை அவர்களுக்காக விடுதலையாக்குகிறது வழக்கமாயிருந்தது.

௭ கலகம்பண்ணிக் கலகத்திலே கொலைசெய்து, பின்பு கட்டப்பட்டவர்களில் ஒருவனாகிய பறபாசென்பவனிருந்தான்.

௮ ஆதலால் வழக்கத்தின்படி தங்களுக்குப் பிலாத்து செய்யவேண்டுமென்று சனங்கள் கூப்பிட்டுக் கேட்டுக்கொள்ளத் தொடங்கினார்கள்.

௯ அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி, நான் யூதர்களுடைய இராசனை உங்களுக்காக விடுதலையாக்க விருப்பமுண்டாவென்றான்.

௰ பிரதான ஆசாரியர் பொறாமையினாலே அவரையொப்புக்கொடுத்ததை அவன் அறிந்திருந்தபடியால் அப்படிக் கேட்டான்.

௰௧ அப்பொழுது பிரதான ஆசாரியர் பறபாசைத் தங்களுக்காக விடுதலையாக்கும்படிக்குக் கேட்டுக்கொள்ளவேண்டுமென்று சனங்களை ஏவினார்கள்.

௰௨ மறுபடியும் பிலாத்து அவர்களை நோக்கி, யூதர்களுடைய இராசாவென்று நீங்கள் சொல்லுகிறவனை நான் என்னசெ

ய்யவிருமபுகிறீர்களெனருன.

௰௩ அவனைசசிலுவைமரததிலே அறையவேணடுமெனறுமறுபடியுங்கூபபிட்டார்கள.

௰௪ அதற்குபபிலாததுசொன்னது, ஏன் இவனஎன்னதீமைசெயதானென்ருன, அதற்கவர்கள இவனைசசிலுவைமரததிலே அறையவேணடுமெனறு அதிகமாயககூபபிட்டார்கள.

௰௫ அபபொழுது பிலாதது சனஙகளைச்சமாதானபபடுத்தமனதாயப் பறபாசைவிடுதலைபாககி, இயேசுவைவாரினுல அடிபபிதது சசிலுவைமரததிலே அறையுமபடிககு அவரையொபபுககொடுத்தான.

௰௬ உடனேபோர்சசேவகர் அவரைநியாயத்தலமாகியமணடபததிற்குளளேகொணடுபோயப் போர்சசேவகராகிய கூடடமெலலாஙகூடிவரவழைதது,

௰௭ பினபு சிவபபான அஙகியை அவருககுககு உடுததி முளளுக்களால ஒருமுடியைபபினனி அவர்மேலவைதது,

௰௮ யூதருடைய இராசாவே, நீர்வாழ்கவெனறு அவரைவாழததுதலசெயது,

௰௯ பினபு ஒருகோலினுலே அவருடைய தலையில அடிதது அவர்மேலே துபபி முழஙகாற்படியிடடு அவரை வணஙகினுர்கள.

௨௰ அபபடி அவர்கள அவரையிழிவுசெயதபினபு, அநதசசிவபபான அஙகியைய வரிலிருநதுகளைநது அவருடைய வஸதிரஙகளை அவருககு உடுததி அவரைசசிலுவைமரததில அறையுமபடிககுக்கொணடுபோனுர்கள.

௨௧ வழியிலே அலேககுசசநதர். உருபபு எனபவர்களுடையதகபபனுகியசிரோனேயூரானுன சீமோன வயலநிலததிலிருநதுவருகிறபொழுது அவனைபபலபநதத்தினுலே (பிழுதது) அவருடைய சிலுவைமரததைபெயடுததுககொணடுபோகுமபடிசெயது,

௨௨ பினபுஅவரைத்தலையோட்டிடமெனறு அருத்தஙகொளளுங கொலுகத்தாவெனனுமஇடததிறகுக்கொணடுபோய,

௨௩ கசபபுக்கலநததிராட்சஇரசததைககுடிககுமபடி அவருககுககொடுததார்கள. அவர் அதையனுபவிககவிலலை.

௨௪ அலலாமலும அவரைசசிலுவைமரததிலே அறைநதபினபு, அவர்கள அவருடைய வஸதிரஙகளைபபஙகாகவைதது ஒவவொருவனஒவவொருபஙகை எடுததுககொளளுமபடிககு அவைகளைககுறிததுச சீடடுபபோடடார்கள.

௨௫ அவரைசசிலுவைமரததிலே அறைநதபொழுது மூனறும்மணிநேரமாயிறறு.

௨௬ அவருடைய மரணததினகாரணததை அறிவிககுமபடிககு இவன் யூதர்களுடைய இராசாவெனறு எழுதி அதை (சிலுவையினமேற்) கடடினுர்கள.

௨௭ அலலாமலும அவருடைய வலதுபககததிலொருகளளனும அவருடையஇடதுபககததிலொருகளளனுமாக இரணடுகளளரை அவருடனேகூடச சிலுவைமரஙகளில அறைநதார்கள.

௨௮ அதினுலே அவர் அககிரமககாரரோடே எணணபபடுவாரெனறுசொலலிய வேதவாககியமநிறைவேறிறறு.

௨௯ அலலாமலும அவவழியாய நடநதுவருகிறபேர்கள தஙகள தலைகளையசைதது தேவாலயததையிடிதது மூனறுநாளுககுளளே அதைககடடுகிறவனே,

௩௰ உனனை இரட்சிததுககொணடு, சிலுவையிலிருநதிறஙகிவாவெனறுசொலலி, அவரைததூஷணிததார்கள.

௩௧ அபபடியேபிரதான ஆசாரியரும வேதபாரகரும ஒருவரையொருவர் நோககி, மறறவர்களையிவன இரடசிததான. தனனைததானே இரட்சிக்கததிராணியிலலை.

௩௨ நாமகணடு விசுவாசிககுமபடிககுக்கிறிஸதுவுமாய இஸரவேலருடைய இராசாவுமாயிருககிறவன இபபொழுது சிலுவையிலிருநதிறஙகிவரக்கடவனெனறு பரியாசமாககசசொனனுர்கள. அவருடனேகூடசசிலுவைமரஙகளில அறையபபடடபேர்களும அவரை நிநதிததார்கள.

௩௩ ஆறும் மணிநேரமுதல ஒன்பதாம் மணிநேரமவரைககுந தேசமெஙகும அநதகாரமுணடாயிறறு.

௩௪ ஒனபதாம மணிநேரததிலே இயேசுவானவர் எலோயி எலோயி லம்மாசபக்ததானியெனறு மிகுநத சத்தத்தோடுகூபபிடடார். அதறகு, எனதேவனே எனதேவனே ஏன நீர் எனனைககைவிடடீரெனறு அருததமாம.

௩௫ சமீபமாய நினறவர்களிற்சிலர் அதைககேடடு இதோ, இவன எலியாவை அழைககிருனெனருர்கள.

௩௬ ஒருவன பொறுததுககொளளுஙகள. இவனை இறககுமபடிககு எலியாவருவதைபபார்பபோமெனறுசொலலி ஒருகடற்காளானைககாடியிலேதோயதது அதைஒருகமபினமேற்மாடடிசசுவைககுமபடி அவருககுககொடுததான.

௩௭ பினபு இயேசுவானவர் மிகுநத சத்தமிடடுசசீவனைவிடடார்.

௩௮ உடனே தேவாலயததிலுளளதிரைசசேலைமேல்தொடஙகிக்கீழ்வரைககுமஇரணடாகக்கிழிநதது.

௩௯ அலலாமலும அவருககெதிரே நினறசேனைததலைவன அவர் அபபடிப்படடசத்தத்தோடே சீவனை விடடதைககணடு மெயயாய இநதமனிதன தேவகுமாரனு

யிருந்தாரென்றான்.

௪௰ ஸ்திரீகளுந் தூரத்திலிருந்து பார்த்தார்கள். அவர்களிற் கலிலேயா நாட்டிலே அவருக்குப் பின்சென்று ஊழியஞ்செய்து வந்த மகதலேனாளாகிய மரியாளுஞ் சின்னயாக்கோபுக்கும் யோசேப்புக்குந் தாயாகிய மரியாளுஞ் சாலோமே யென்பவளும்,

௪௧ அவருடனே கூட எருசலேமுக்கு வந்த மற்றும் அநேக ஸ்திரீகளுமிருந்தார்கள்.

௪௨ ஓய்வுநாளுக்கு முந்தின நாள் எத்தன நாளானபடியினாலே சாயந்திரமான பொழுது,

௪௩ அரிமத்தியா ஊரானும் மாயக்கனம் பொருந்திய ஆலோசனைக்காரனுமாய்ப் பராபரனுடைய இராச்சியத்தின் அனுகைவரக் காத்துக்கொள்ளுகிறவனுமாயிருந்த யோசேப்பென்பவன் தயிரியங்கொண்டு, பிலாத்துவினிடத்திற்குப் போய் இயேசுவினுடைய சரீரத்தைக் கேட்டுக்கொண்டான்.

௪௪ அவர் அப்படிச் சீக்கிரமாய் மரணம் அடைந்ததைக் குறித்துப் பிலாத்து ஆச்சரியப்பட்டுச் சேனைத்தலைவனை அழைப்பித்து, அவர் இறந்துபோய் எவ்வளவு காலமாயிற்றென்று விசாரித்து,

௪௫ சேனைத்தலைவனாலே அறிந்துகொண்டபின்பு அந்தச் சரீரத்தை யோசேப்புக்குக் கொடுத்தான்.

௪௬ அவன் போய்ப் புடவை வாங்கிக்கொண்டு வந்து சரீரத்தை இறக்கிப் புடவையிலே சுற்றிக் கல்மலையிலே வெட்டப்பட்ட கல்லறையிலே அதை வைத்து அந்தக் கல்லறையின் திறப்பிலே ஒரு கல்லைப் புரட்டி வைத்தான்.

௪௭ அவரை வைக்கப்பட்ட இடத்தை மகதலேனாளாகிய மரியாளும் யோசேப்பின் தாயாகிய மரியாளும் பார்த்தார்கள்.

## ௧௬. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து உயிரோடெழுந்திருந்தது. (௯) மரியாள் முதலானவர்களுக்குக் காணப்பட்டது. (௰௫) தமது சீஷர்களுக்குக் கட்டளைக்கொடுத்தது. (௰௯) பரலோகத்திற்கெழுந்துபோனது.]

ஓய்வுநாளானபின்பு மகதலேனாளாகிய மரியாளும் யாக்கோபின் தாயாகிய மரியாளுஞ் சாலோமே யென்பவளும் அவருக்கு அபிஷேகம் பண்ணும்படிக்குச் சுகந்தவர்க்கங்களை வாங்கிக்கொண்டு,

௨ ஓய்வுநாளுக்குப்பின், முதல் நாளின் அதிகாலையிலே சூரியன் உதயமாகிறபொழுது கல்லறைக்குப் போனார்கள்.

௩ (போகையில்) அவர்கள் அந்தக் கல்லறையின் திறப்பிலேயிருக்கிற கல்லை நமக்காக யாவன் தள்ளிப்போடுவானென்று சொல்லி,

௪ பின்பு அண்ணாந்து பார்க்கிறபொழுது அந்தக்கல் மிகவும் பெரிதாயிருந்தும், அது தள்ளப்பட்டதென்று கண்டார்கள்.

௫ கல்லறையிலே அவர்கள் பிரவேசித்தபொழுது, வலதுபக்கத்திலே வெண்மையான அங்கியைத் தரித்து உட்கார்ந்திருக்கிற ஒரு வாலிபனைக் கண்டு மிகவும் பயந்தார்கள்.

௬ அவன் அவர்களுடனே சொன்னது, பயப்படாதிருங்கள், சிலுவையில் அறையப்பட்ட நாசரேனாகிய இயேசுவை நீங்கள் தேடுகிறீர்கள், அவர் எழுந்தார், அவர் இங்கேயில்லை, இதோ அவரை வைக்கப்பட்ட இடம்.

௭ ஆகையால் நீங்கள் அவருடைய சீஷர்களிடத்திற்கும் பேதுருவினிடத்திற்கும் போய் உங்களுடனே அவர் சொன்னபடி, உங்களுக்கு முன்பாகக் கலிலேயா நாட்டுக்குப் போவார், அங்கே அவரைக் காண்பீர்களென்று அவர்களுக்குச் சொல்லுங்களென்றான்.

௮ உடனே அவர்கள் புறப்பட்டுத் திகிலோடும் பிரமிப்போடுங் கல்லறையைவிட்டோடிப்போனார்கள், அவர்கள் பயப்பட்டபடியினாலே, ஒருவருக்கும் ஒன்றையுஞ் சொல்லவில்லை.

௯ ஓய்வுநாளுக்குப்பின்பு முதல் நாளின் அதிகாலையில் அவர் எழுந்திருந்தபின்பு முதலாவது மகதலேனாளாகிய மரியாளுக்குக் காணப்பட்டார்.

௰ அவராலே ஏழு பேய்களினின்று நீக்கப்பட்டவள் அவளே. அவள் புறப்பட்டுப் போய் அவருடனேயிருந்தவர்களுமாய்ப் புலம்பியழுதுகொள்ளுகிறவர்களுமாயிருந்த (சீஷர்களுக்கு) அறிவித்தாள்.

௰௧ அவர் உயிரடைந்து அவளாலே காணப்பட்டாரென்று அவர்கள் கேள்விப்பட்டும் அதை நம்பவில்லை.

௰௨ அதின்பின்பு அவர்களில் இரண்டு பேர் ஒரு ஊருக்குப் புறப்பட்டுப் போகையில் அவர்களுக்கும் அவர் மறுரூபத்தோடே காணப்பட்டார்.

௰௩ அவர்களுந் திரும்பி அதை மற்றவர்களுக்கறிவித்தார்கள், அவர்களையு மவர்கள் நம்பவில்லை.

௰௪ பின்பு அவர் போசனபந்தியிலிருந்த பதினொருவருக்குங் காணப்பட்டுத் தாம் உயிரோடெழுந்தவந்ததைக் கண்டவர்களுடைய (வார்த்தையை) அவர்கள் நம்பாமலிருந்தபடியால் அவர்களுடைய அவிசுவாசத்துக்காகவும் இருதயத்துக் கடினத்திற்காகவும் அவர்களைக் கடிந்துகொண்டார்.

௰௫ அல்லாமலும் அவர் அவர்களை நோக்கி, நீங்கள் உலகத்திலெங்கும் போய்ச் சரு

ட்டிககபபடடிருககிற யாவருககுஞ சுவிசேஷத்தைபபிரசஙகமபணணுஙகள.

௰௬ விசுவாசமுளளவனுஞ ஞானஸநானமபெறறவனுமஇரட்சிககபபடுவான, விசுவாசியாதவன ஆககினைககுளளாககபபடுவான்

௰௭ அனறியுமவிசுவாசமுளளவர்களால எபபடிபபடட அதிசயஙகள நடககுமெனறால என்நாமத்தினாலேஅவர்கள பேய்களைத்துரத்தி புதியபாஷைகளைபபேசிககொணடு,'

௰௮ பாமபுகளையும பிடித்துககொள்வார்கள, அலலாமலும மரணத்திற்கேதுவானதையவர்களகுடித்தால அது அவர்களைச சேதபபடுத்தாமலிருககும, அலலாமலும பிணியாளிகளினமேல அவர்களகைகளைவைககுமபொழுது அவர்கள சொஸதமஅடைவார்களெனறார்.

௰௯ கர்த்தர் அவர்களுடனேபேசிககொணடபினபு அவர் பரமணடலத்துககேறறபபடடு பராபரனுடையவலதுபாரிசத்திலேவீறறிருககிறார்.

௨௰ அவர்களபுறபபடடு எஙகுமபிரசங்கமபணணிககொணடுவநதார்கள அப்பொழுது கர்த்தர் அவர்களுடனேகூடக்கிரியைசெயது அதிசயஙகளை நடககபபணணினதினாலே (அவர்களுடைய) உபதேசத்தைஉறுதியாககினார்,—ஆமென.

ஓய்வுநாளான பின்பு, மகதலேனூராளாகிய மரியாளும் இயாகோபினதாயாகிய மரியாளும் சாலோமேயென்பவளும் அவருக்கு அபிஷேகம்பண்ணும்படிக்குச் சுகந்தவருக்கங்களை வாங்கிக்கொண்டு,

௨ ஓய்வுநாளுக்குப்பின், முதல் நாளின் அதிகாலையிலே சூரியன் உதயமாகிறபொழுது, கல்லறைக்குப் போனார்கள்.

௩ (போகையில்) அவர்கள் அந்தக் கல்லறையின் திறப்பிலேயிருக்கிற கல்லை நமக்காக யாரெடுத்தெறிந்துபோடுவானென்று சொல்லி,

௪ பின்பு ஏறெடுத்துப் பார்க்கிறபொழுது அந்தக் கல் மிகவும் பெரிதாயிருந்தும், அது தள்ளப்பட்டதென்று கண்டார்கள்.

௫ கல்லறையிலே யவர்கள் பிரவேசித்த பொழுது, வலதுபக்கத்திலே வெண்மையான அங்கியைத் தரித்து உருக்காரனாயிருக்கிற ஒருவாலிபனைக் கண்டு மிகவும் பயந்தார்கள்.

௬ அவன் அவர்களுடனே சொன்னது, பயப்படாதிருங்கள். சிலுவையில் அறையப்பட்ட நசரேனூராகிய இயேசுவை நீங்கள் தேடுகிறீர்கள். அவர் எழுந்தார். அவர் இங்கே யில்லை. இதோ, அவரை வைக்கப்பட்ட இடம்.

௭ ஆகையால் நீங்கள் அவருடைய சீஷர்களிடத்திற்கும் பேதுருவினிடத்திற்கும் போய், உங்களுடனேயவர் சொன்னபடி, உங்களுக்குமுன்பாகக் கலிலேயா நாட்டுக்குப்போவார். அங்கேயவரைக் காண்பீர்களென்று அவர்களுக்குச் சொல்லுங்களென்றான்.

௮ உடனேயவர்கள் புறப்பட்டு நடுக்கமும் பிரமிப்புங்கொண்டு கல்லறையை விட்டோடிப் போனார்கள். அவர்கள் பயப்பட்டபடியினாலே, ஒருவருக்குமொன்றையுஞ் சொல்லவில்லை.

௯ ஓய்வுநாளுக்குப்பின்பு, முதல் நாளின் அதிகாலையில் அவர் எழுந்திருந்த பின்பு, முதலாவது மகதலேனூராளாகிய மரியாளுக்குக் காணப்பட்டார்.

௰ அவராலே ஏழுபேய்களினின்று நீக்கப்பட்டவள் அவளே. அவள் புறப்பட்டுப்போய் அவருடனேயிருந்தவர்களுமாய்ப் புலம்பி அழுதுகொள்ளுகிறவர்களுமாயிருந்த (சீஷர்களுக்கு) அறிவித்தாள்.

௰௧ அவர் உயிரடைந்து, அவளாலே காணப்பட்டாரென்று அவர்கள் கேள்விப்பட்டும், அதை நம்பவில்லை.

௰௨ அதின்பின்பு அவர்களில் இரண்டுபேர் ஒரு ஊருக்குப் புறப்பட்டுப்போகையில் அவர்களுக்கும் அவர் மறுரூபத்தோடே காணப்பட்டார்.

௰௩ அவர்களுந் திரும்பி அதைமற்றவர்களுக்கறிவித்தார்கள். அவர்களையும் இவர்கள் நம்பவில்லை.

௰௪ பின்பு அவர் போசனபந்தியிலிருந்த பதினொருவருக்குங் காணப்பட்டு, தாம் உயிரோடெழுந்து வந்ததைக் கண்டபேர்களுடைய (வார்த்தையை) யவர்கள் நம்பாமலிருந்தபடியால், அவர்களுடைய அவிசுவாசத்துக்காகவும் இருதயத்திலுள்ள கடினத்திற்காகவும் அவர்களைக் கடிந்துகொண்டார்.

௰௫ அல்லாமலும் அவர் அவர்களை நோக்கி, நீங்கள் உலகத்திலெங்கும் போய், சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற யாவருக்குஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணுங்கள்.

௰௬ விசுவாசமுள்ளவனாகி, ஞானஸ்நானம்பெற்றவன் இரட்சிக்கப்படுவான். விசுவாசியாதவன் ஆக்கினைக்குள்ளாக்கப்படுவான்.

௰௭ அன்றியும் விசுவாசமுள்ளவர்களால் எப்படிப்பட்ட அதிசயங்கள் நடக்குமென்றால், என்நாமத்தினாலேயவர்கள் பேய்களைத் துரத்தி, புதிய பாஷைகளைப் பேசிக்கொண்டு.

௰௮ பாம்புகளையும் பிடித்துக்கொள்வார்கள். அல்லாமலும் மரணத்திற்கேதுவானதையவர்கள் குடித்தால், அது அவர்களைச் சேதப்படுத்தாமலிருக்கும். அல்லாமலும் பிணியாளிகளின்மேல் அவர்கள் கைகளை வைக்கும்பொழுது, அவர்கள் சொஸ்தமடைவார்களென்றார்.

௰௯ கர்த்தர் அவர்களுடனே பேசிக்கொண்டபின்பு அவர் பரமண்டலத்துக்கேற்றப்பட்டுப் பராபரனுடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார்.

௨௰ அவர்கள் புறப்பட்டு எங்கும் பிரசங்கம்பண்ணிக்கொண்டுவந்தார்கள் அப்பொழுது கர்த்தர் அவர்களுடனே கூடக்கிரியை செய்து, அதிசயங்களை நடக்கப்பண்ணினதினாலே, (அவர்களுடைய) உபதேசத்தை உறுதியாக்கினார்.

ஆமன்.

# லூக்காவென்பவர் எழுதின

# சுவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

[(௧) லூக்காவின் முகவுரை. (௫) யோவான ஸ்நானன் உற்பத்தியானது. (௨௬) கிறிஸ்துமனித அவதாரம்பண்ணினது. (௩௯) எலிசபேத்தும் மரியாளும் தீர்க்கதரிசனஞ்சொன்னது. (௫௭) யோவான்பிறந்தது. (௬௭) சகரியாசு தீர்க்கதரிசனஞ்சொல்லி ஸ்தோத்திரஞ்செய்தது.]

மிகுந்த கனம்பொருந்திய தேயோப்பிலுவே! எங்களுக்குள்ளே நிறைவேறின சங்கதிகளை ஆதிமுதற்கண்ணினாலே, (கண்டு சுவிசேஷ) வசனத்தைப் போதித்திருக்கிறவர்கள் எங்களுக்கு ஒப்புக்கொடுத்ததின்படியே,

௨ அவைகளைக்குறித்துச் சரித்திரத்தையெழுதும்படிக்கு அநேகர் துணிந்தார்கள்.

௩ ஆகையால் ஆதிமுதல் எல்லாவற்றையும் நன்றாய் ஆராய்ந்துபார்த்த நானும் உமக்குப் போதிக்கப்பட்ட பொருள்களின் நிச்சயத்தை நீர் அறியும்படிக்கு,

௪ அவைகளையொழுங்காய் உமக்கெழுதவேண்டுமென்று, எனக்கு நன்றாய்த்தோன்றிற்று. (அவையாவன,)

௫ இயூதேயாதேசத்தின் இராசாவாகிய ஏரோதேயின் நாட்களிலே அபீயா என்னும் ஆசாரியவகுப்பிற் சகரியாவென்னப்பட்ட ஆசாரியன் இருந்தான். ஆரோனின் குடும்பத்திற்பிறந்த எலிசபேத்தென்னப்பட்டவள் அவனுக்கு மனைவியாயிருந்தாள்.

௬ அவ்விருவரும் பராபரனுக்கு முன்பாக நீதியுள்ளவர்களாய்க் கர்த்தர் இட்டசகல கற்பனைகளின்படியேயும் நியாயங்களின்படியேயுங் குற்றமில்லாமல் நடந்துவந்தார்கள்.

௭ எலிசபேத்து மலடியாயிருந்ததுமல்லாமல், அவ்விருவரும் வயதுசென்றவர்களானபடியினாலே அவர்களுக்குப் பிள்ளையில்லை.

௮ அப்படியிருக்குங்காலத்தில், அவன் தன் ஆசாரியவகுப்பின் முறைமைக்குத்தக்கதாகப் பராபரனுக்கு முன்பாக ஆசாரிய ஊழியஞ்செய்துவருகிறபொழுது,

௯ ஆசாரியருடைய வழக்கத்தின்படியவன் தூபங்கொடுக்கிறதற்குச் சீட்டைப்பெற்று, தேவாலயத்திற்பிரவேசித்தான.

௰ தூபங்கொடுக்கிறவேளையிலே கூட்டமான சனங்களெல்லாரும் புறம்பே செபம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

௰௧ அப்பொழுது பராபரனுடைய தூதனொருவன் தூபபீடத்தின் வலதுபக்கத்திலே நின்று, அவனுக்குக் காணப்பட்டான்.

௰௨ சகரியா அவனைக்கண்டு கலங்கிப் பயமடைந்தான்.

௰௩ தூதன் அவனைநோக்கி, சகரியாவே, நீ பயப்படவேண்டாம். உன் விண்ணப்பங் கேட்கப்பட்டது. உன்மனைவியாகிய எலிசபேத்து ஒருகுமாரனைப்பெறுவாள். அவனுக்கு யோவானென்று பேரிடுவாயாக.

௰௪ அவனாலுனக்குச் சந்தோஷமுங்களிப்புமுண்டாகும். அவனுடைய பிறப்பைக்குறித்து அநேகர் சந்தோஷப்படுவார்கள்.

௰௫ என்னத்தினாலெனில், அவன் பராபரனுக்கு முன்பாகப் பெரியவனாயிருந்து, திராட்சரசத்தையும் மதுபானத்தையுங் குடியாமல் தன்தாயின் வயிற்றிலே பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டிருப்பான்.

௰௬ அல்லாமலும் அவன் இஸ்ரேவேலசந்ததியாரில் அநேகரையவர்களுடைய தேவனாகிய பராபரனிடத்திற்குத் திருப்புவான்.

௰௭ பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்குங் கீழ்ப்படியாதவர்களை நீதிமான்களுடைய புத்திக்குந்திருப்பி, சமைமையான சனங்களைப் பராபரனுக்காக ஆயத்தம்பண்ணும்படிக்கு, அவன் எலியாவினுடைய ஆவியையும் பலத்தையுமுடையவனாய் அவருக்குமுன்னே நடப்பானென்றான்.

௰௮ அப்பொழுது சகரியா தேவதூதனை நோக்கி, நான் அதையேதினாலேயறிவேன். நான் கிழவனாயிருக்கிறேன் என்மனைவியும் வயதுசென்றவளாயிருக்கிறாளேயென்றான்.

௰௯ அவனுக்குத் தூதன் மாறுத்தரமாகச்சொன்னது நான் தேவனுடைய சந்நிதானத்திலே நிற்கின்ற காபிரியேலென்பவன். உன்னுடனே பேசி, இவைகளையுனக்

குச்சவிசேஷமாக அறிவிக்கும்படிக்கு அனுப்பப்பட்டுவந்தேன்.

௨௰ என் வார்த்தைகள் தகுதியான காலத்திலே நிறைவேறும், அவைகளை நீ விசுவாசியாதபடியினாலே, இந்தக் காரியங்கள் சம்பவிக்கும் நாளவரைக்கும் நீ பேசத்திராணியில்லாமல், ஊமையனாயிருப்பாயென்றான்.

௨௧ சகரியாவை (க்காண) க்காத்திருந்த சனங்கள், அவன் தேவாலயத்திலே தாமதித்ததினாலே ஆச்சரியப்பட்டார்கள்.

௨௨ அவன் வெளியே வந்தபொழுது, அவர்களோடே பேசத்திராணியில்லாமலிருந்தான். அதினாலே தேவாலயத்தில் ஒரு தரிசனையைக் கண்டிருப்பானென்றறிந்தார்கள். அவனும் அவர்களுக்குச் சயிக்கினைகாட்டி, ஊமையனாகவிருந்தான்.

௨௩ பின்பு அவன் தன் ஊழியத்தின் நாட்கள் நிறைவேறினபொழுது தன் வீட்டுக்குப் போனான்.

௨௪ அந்த நாட்களுக்குப்பின்பு அவனுடைய மனைவியாகிய எலிசபேத்து கர்ப்பந்தரித்து,

௨௫ சனங்களுக்குள்ளே எனக்குண்டாயிருந்த நிந்தையை நீக்கும்படிக்குப் பராபரன் இந்த நாட்களில் என்னை நோக்கி, இப்படியெனக்குச் செய்தாரென்று சொல்லி, ஐந்து மாதமளவாயும் ஒளித்துக் கொண்டாள்.

௨௬ ஆறும் மாதத்திலே காபிரியேலென்னுந் தூதன் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தென்னும் பட்டினத்திலே,

௨௭ தாவீதின் குடும்பத்தாராகிய இயோசேப்பென்னும் நாமமுள்ள புருஷனுக்கு நியமிக்கப்பட்டிருந்த கன்னியாகிய மரியாளென்பவளிடத்திற்குப் பராபரனாலே அனுப்பப்பட்டு,

௨௮ அவளிருக்கிற வீட்டுக்குட் பிரவேசித்து, கிருபைபெற்றவளே, நீ வாழ்க. பராபரன் உன்னுடனேயிருக்கிறார், பெண்களுக்குள்ளே. நீ ஆசீர்வதிக்கப் பட்டவளென்றான்.

௨௯ அவள் அவனைக்கண்டு, அவனுடைய வார்த்தையைக்கேட்டு, கலங்கி, இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்டதோ என்று சிந்தித்தாள்.

௩௰ தூதன் அவளுடனே சொன்னது, மரியாளே, நீ தேவனிடத்திற் கிருபைபெற்றபடியினாலே நீ பயப்படவேண்டாம்.

௩௧ நீ கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெறுவாய். அவருக்கு இயேசு என்னும் பேரிடுவாயாக.

௩௨ அவர் பெரியவராய் உன்னதமானவருடைய குமாரனென்னப்படுவார். அல்லாமல் அந்தத் தேவனாகிய பராபரன் அவருக்கு அவருடைய பிதாவாகிய தாவீதின் சிங்காசனத்தைக் கொடுப்பார்.

௩௩ அவர் இயாக்கோபினுடைய குடும்பத்திற்கு என்றென்றைக்கும் இராசனாயிருப்பார். அவருடைய ஆளுகைக்கு முடிவுவாராதென்றான்.

௩௪ அதற்குமரியாள் தூதனை நோக்கி, இதெப்படியாகும். ஒருபுருஷனையும் அறியேனேயென்றாள்.

௩௫ தூதன் அவளுக்குமாறுத்தாரமாகச் சொன்னது, பரிசுத்த தேவ ஆவி உன்மேல் வரும். உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும். ஆகையால் உன்னிடத்திற் பிறக்கும்பரிசுத்தமானது தேவனுடைய குமாரனென்னப்படும்.

௩௬ அல்லாமலும் பராபரனாற் கூடாத காரியமொன்றுமில்லாதபடியினாலே,

௩௭ உனக்கு இனமாயிருக்கிற எலிசபேத்தும் தன்முதுமையான வயதிலே ஒரு புத்திரனைக் கர்ப்பந்தரித்தாள். மலடியென்னப்பட்ட அவளுக்கிது ஆறும்மாதமேயென்றான்.

௩௮ அதற்குமரியாள், இதோ நான் ஆண்டவருக்கு அடிமையாயிருக்கிறேன். உம்முடைய வார்த்தையின்படி எனக்காகக்கடவதென்றாள். அப்பொழுது தேவதூதன் அவளைவிட்டுப்போனான்.

௩௯ அந்த நாட்களில் மரியாள் எழுந்து மலைத்தேசத்திலே யூதாவிலுள்ள பட்டினத்திற்குத் தீவிரமாய்ப்போய்,

௪௰ சகரியாவின் வீட்டிற்பிரவேசித்து, எலிசபேத்தை வாழ்த்துதல்செய்தாள்.

௪௧ எலிசம்பேத்து மரியாளுடைய வாழ்த்துதலைக்கேட்டபொழுது, அவளுடைய வயிற்றிலிருந்தபிள்ளை துள்ளிற்று. அல்லாமலும் எலிசம்பேத்து பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு,

௪௨ மிகுந்த சத்தத்துடனே சொன்னதாவது, பெண்களுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள். உன்கர்ப்பத்தின்கனியும் ஆசீர்வதிக்கப்பட்டது.

௪௩ என் ஆண்டவருடைய தாயார் என்னிடத்திற்குவருகிறது எனக்கெதினாலே கிடைத்தது.

௪௪ நீ வாழ்த்துதல் சொல்லியசத்தம் என் காதுகளில் விழுந்தவுடனே, என்வயிற்றின் பிள்ளை களிப்பாய்த் துள்ளிற்று.

௪௫ விசுவாசித்தவளுக்குப் பராபரனாலே சொல்லப்பட்டவைகள் நிறைவேறுவதால் அவள்பாக்கியமுள்ளவளேயென்றாள்.

௪௬ அப்பொழுது மரியாள்சொன்னதாவது.

௪௭ என் ஆத்துமா பராபரனைப் புகழுகின்றது. என் ஆவி என் இரட்சகராகிய தேவனிற் களிகூருகின்றது.

௪௮ என்னத்தினாலெனில், அவர் தமதடிமையின் தாழ்மையை நோக்கிப் பார்த்தார்.

வல்லமையுடையவர் எனக்குப் பெரியகாரியங்களைச் செய்தபடியினாலே,

௪௯ இதுமுதல் வமிசத்தாரெல்லாரும் என்னைப் பாக்கியவதியென்பார்கள். அவருடைய நாமம் பரிசுத்தமுள்ளது.

௫௰ அவருடைய இரக்கந் தலைமுறை தலைமுறையாக அவருக்குப் பயப்படுகிறவர்களிடத்திலுண்டாயிருக்கும்.

௫௧ அவர் தமது கையினாலே பலத்த காரியங்களைச் செய்தார். தங்களிருதயத்தின் சிந்தனையில் இறுமாப்பாயிருக்கிறவர்களை யவர் சிதறப்பண்ணி,

௫௨ பலவான்களைப் பத்திராசனங்களிலிருந்து தள்ளி, தாழ்மையுள்ளவர்களை யுயர்த்தி;

௫௩ பசியுள்ளவர்களை நன்மைகளினாலே நிரப்பி, சம்பூர்ணமுள்ளவர்களை வெறுமையாய் அனுப்பினார்.

௫௪ அவர் நம்முடைய பிதாக்களோடே சொன்னபடியே ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும் என்றென்றைக்கும் மிரக்கஞ்செய்ய நினைத்து,

௫௫ தம்முடைய தாசராகிய இஸ்ரவேலை ஆதரித்தாரென்றாள்.

௫௬ பின்பு மரியாள் ஏறக்குறைய மூன்றுமாதம் அவளுடனேயிருந்து, தன் வீட்டுக்குத் திரும்பினாள்.

௫௭ எலிசபேத்துக்குப் பேறுகாலம் உண்டானபொழுது, அவள் ஒரு குமாரனைப் பெற்றாள்.

௫௮ பராபரன் தமதிரக்கத்தை யவளிடத்திற் பெரிதாக்கினாரென்று, அவளுடைய அயலகத்தாரும் பந்துசனங்களுங் கேள்விப்பட்டு, அவளுடனேகூடச் சந்தோஷப்பட்டார்கள்.

௫௯ பின்பு எட்டாம்நாளிலே யவர்கள் பிள்ளைக்கு விருத்தசேதனம்பண்ணும்படிக்கு வந்து அதின் தகப்பனுடைய நாமத்தின்படியே அதற்குச் சகரியாவென்று பேரிட்டார்கள்.

௬௰ அப்பொழுது அதின் தாய் சொன்னது. அப்படியல்ல. அதற்கு இயோவானென்று பேரிடவேண்டுமென்றாள்.

௬௧ அவர்கள் அவளை நோக்கி, உன் உறவில் இந்தப்பேராக அழைக்கப்பட்டவர்கள் ஒருவருமில்லையேயென்று சொல்லி,

௬௨ அதினுடைய தகப்பனை நோக்கி, இதற்கென்ன பேரிடமனதாயிருக்கிறீரென்று சமிக்கையினாலே கேட்டார்கள்.

௬௩ அவன் எழுதுகிறதற்குப் பலகையைக் கேட்டுவாங்கி, இதின்பேர் இயோவானென்றெழுதினான். எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

௬௪ அல்லாமலும், அந்நிமிஷத்திலே அவனுடைய வாயும் நாவுந் திறக்கப்பட, அவன் பராபரனைத் தோத்திரஞ்செய்து பேசினான்.

௬௫ (அதினாலே) அவர்களைச் சுற்றிவாசமாயிருந்த எல்லாருக்கும் பயம்வந்தது. அன்றியும் இயூதேயாவின் மலைநாட்டுதேசமெங்கும் அந்தச் சங்கதிகளெல்லாஞ் சொல்லிக்கொள்ளப்பட்டன.

௬௬ (அவைகளைக்) கேள்விப்பட்டவர்களெல்லாரும் (அவைகளைத்) தங்கள் மனதிலே வைத்துக்கொண்டு அந்தப்பிள்ளை யெப்படிப்பட்டதாயிருக்குமோவென்றார்கள். கர்த்தருடைய கை அந்தப்பிள்ளையினிடத்திலிருந்தது.

௬௭ அன்றியும் அவனுடைய தகப்பனாகிய சகரியா பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, தீர்க்கதரிசனமாய்ப் பகர்ந்ததாவது.

௬௮ நாம் நம்முடைய சத்துருக்களின் கைகளுக்குத் தப்புவிக்கப்பட்டவர்களாக.

௬௯ நம்முடைய வாழ்நாளெல்லாம் பயமில்லாமல் (தேவ) பத்தியாயும் நீதியாய்த் தமக்கு முன்பாக ஊழியஞ்செய்வதற்கு அநுக்கிரகஞ்செய்யும்பொருட்டாய்,

௭௰ தாம் நம்முடைய பிதாவாகிய ஆபிரகாமுக்கு இட்ட ஆணையாகிய தமது பரிசுத்த உடம்படிக்கையை நினைத்து,

௭௧ நம்முடைய பிதாக்களின்மேல் இரக்கமாகி,

௭௨ தாம் உலகத்தின் தோற்றமுதற்கொண்டிருந்த தமது பரிசுத்த தீர்க்கதரிசிகளால் அருளிச்செய்தபடியே,

௭௩ நம்முடைய சத்துருக்களினின்றும், நம்மைப் பகைக்கிறயாவருடைய கைகளினின்றும்,

௭௪ நம்மை இரட்சிக்கிறபலத்த இரட்சணையைத் தமது தாசனாகிய தாவீதின் குடும்பத்திலே தோன்றப்பண்ணி,

௭௫ (இவ்விதமாய்த்) தம்முடைய சனங்களைச் சந்தித்து மீட்டுக்கொண்ட இஸ்ரவேலருடைய தேவனாகிய பராபரனுக்குத் தோத்திரமுண்டாவதாக.

௭௬ பாலகனே, மரணநிழலாகிய இருளிலேயகப்பட்டிருக்கிறவர்களுக்கு ஒளியுண்டாக்கும்படியாயும் நம்முடைய கால்களைச் சமாதானமுள்ள மார்க்கத்திலே நடத்தும்படியாயும்,

௭௭ உன்னதத்திலே இருந்து சூரிய உதயம் நமக்குத் தோன்றப்பண்ணின நம்முடைய தேவனுடைய மிகுந்த இரக்கங்களினாலே,

௭௮ அவருடைய சனங்களுக்குப் பாவமன்னிப்பாகிய இரட்சணியத்தைத் தெரியப்படுத்தி,

௭௯ இவ்விதமாய் அவருக்காக மார்க்கத்தைச் செம்மையாக்கும்பொருட்டாக அவருக்கு முன்னே நடப்பாய். ஆகையால் நீ எல்லாரிலும் மேலானவருடைய தீர்க்கதரிசியென்னப்படுவாயென்றான்.

௮௰ பின்பு அந்தப்பிள்ளை வளர்ந்து, ஆவியிலே பலங்கொண்டு, இஸ்ரவேலருக்குத் தன்

னிலைக்காண்பிக்கும் நாள்வரைக்கும்வனாந்திரங்களிலிருந்தான்.

## ௨. அதிகாரம்.

[(௧) அகுஸ்து இராசாகுடிமதிப்புச்செய்தது. (௬) கிறிஸ்துபிறந்தது. (௮) தூதர்களதோன்றிப்புகழ்ந்தது. (௨௧) கிறிஸ்து விருத்தசேதனம் அடைந்தது. (௨௨) மரியாள் அவரைத்தேவாலயத்திற்குக்கொண்டுபோனது. (௨௫) சிமெயோன் அவரைக்குறித்துச்சங்கீதம்பாடினது. (௩௬) அன்னாள் அவரைக்குறித்துப்பேசினது. (௪௰) இயேசுவானவர் ௰௨ம் வயதிலேதேவாலயத்திலேபோதித்தது.]

அந்நாட்களிற் குடிகளெல்லாருக்குமுண்டாகியபேர்முதலானவைகளையும் எழுதவேண்டுமென்று அகுஸ்து இராயனுடைய கட்டளைவந்தது.

௨ சீரியாநாட்டிலே கிரேனியென்பவன் துரையானபொழுது, முதலாவது இந்தக் குடிமதிப்புண்டாயிற்று.

௩ அந்தப்படியெல்லாரும் எழுதப்படும்படிக்குத்தங்கள்தங்கள் ஊர்களுக்குப் போனார்கள்.

௪ அப்பொழுது இயோசேப்புதாவீதினுடைய குடும்பத்தானுமாய் வமிசத்தானுமாயிருந்தபடியினாலே, தனக்கு நியமிக்கப்பட்டகருப்பவதியாகிய மனைவி மரியாளுடனேகூட எழுதப்படும்படிக்குக்கலிலேயாநாட்டிலுள்ளநாசரேத்தூரைவிட்டு,

௫ யூதேயாநாட்டிலுள்ளபெத்லெகேமென்னப்பட்ட தாவீதின் ஊருக்குப்போனான்.

௬ அவ்விடத்திலேயவர்களிருக்குங்காலத்தில், அவள்பிள்ளைபெறுகிறதற்குக்காலஞ்சம்பவித்தது.

௭ அப்பொழுது அவள்தன்முதற்பேறான குமாரனைப்பெற்று, அவனைப்புடவைகளினாலேசுற்றிச் சத்திரத்திலே (வேறு) இடமில்லாதபடியினாலே அவனைப்பசுத்தொட்டியிலேவைத்தாள்.

௮ அன்றியும் அந்தத்திசையிலேமேய்ப்பர்வெளியிலேதங்கி, இராத்திரியிலேதங்கள் ஆட்டுக்கூட்டத்தைக்காத்துக்கொண்டிருந்தார்கள்.

௯ அப்பொழுதுபராபரனுடைய தூதன் அவர்களிடத்திலவந்துநிற்க, பராபரனுடையமகிமையவர்களைச்சுற்றிப் பிரகாசித்தது. அவர்கள்மிகவும்பயந்தார்கள்.

௰ உடனேதேவதூதன் அவர்களைநோக்கி: பயப்படாதிருங்கள். எல்லாச்சனங்களுக்குமுண்டாகும்மிகுந்தசந்தோஷத்தையுங்களுக்குச்சுவிசேஷமாக அறிவிக்கிறேன்.

௰௧ என்னவென்றால். இன்றுகர்த்தராகிய கிறிஸ்துவென்னும் இரட்சகர்தாவீதினூரிலேயுங்களுக்காகப்பிறந்தார்.

௰௨ பிள்ளையைப்புடவைகளினாலேசுற்றிப்பசுத்தொட்டியிலே வைத்திருக்கக்காண்பீர்கள் அது உங்களுக்கடையாளமென்றான்.

௰௩ அப்பொழுது சடுதியாயப்பரமண்டலத்திலுள்ளசேனைகள அந்தத்தூதனுடனேகூடவிருந்து,

௰௪ உன்னதங்களிலிருக்கிறபராபரனுக்குப்புகழ்ச்சியும்பூமியிலே சமாதானமும் மனிதர்மேற்பிரியமுமுண்டாவதாகவென்று பராபரனைத்துதித்தார்கள்.

௰௫ பின்புதேவதூதர்கள் அவர்களைவிட்டுப் பரமண்டலத்திற்குப்போனபொழுது, மேய்ப்பர் ஒருவரையொருவர்நோக்கி, நாம்பெத்லெகேமூருக்குப்போய், கர்த்தர் நமக்கறிவிக்கப்பட்டுநடந்த இந்தச்சங்கதியைப் பார்ப்போம் வாருங்களென்று சொல்லிக்கொண்டு,

௰௬ தீவிரமாய்ப்போய்மரியாளையும் இயோசேப்பையும்பசுத்தொட்டியிலே கிடக்கிறபிள்ளையையுங்கண்டார்கள்.

௰௭ பின்பு அவர்கள் அந்தப்பிள்ளையைக்குறித்துத்தங்களுக்குச்சொல்லப்பட்டவார்த்தையைப்பிரசித்தமாக்கினார்கள்.

௰௮ மேய்ப்பராற்சொல்லப்பட்டவைகளைக்கேட்டயாவரும் அவைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௰௯ மரியாள் அவ்வார்த்தைகளையெல்லாந்தன் இருதயத்திலேகாத்துச்சிந்தித்துக்கொண்டாள்.

௨௰ மேய்ப்பருந்தங்களுக்குச்சொல்லப்பட்டதின்படியே, கேட்டுக்கண்டயாவுக்காகவும்பராபரனைப்புகழ்ந்து, துதித்துக்கொண்டுதிரும்பினார்கள்.

௨௧ பிள்ளைக்கு விருத்தசேதனஞ்செய்கிறதற்குரிய எட்டாம்நாளிலே அது கருப்பமாகிறதற்குமுன்னே தேவதூதனாலேசொல்லப்பட்ட இயேசு என்னும்நாமம் அதற்குக்கொடுக்கப்பட்டது.

௨௨ அல்லாமலும்மோசேயின்நியாயப்பிரமாணத்தின்படியே அவர்களைச்சுத்திகரிப்பதற்கானநாட்கள் நிறைவேறினபொழுது,

௨௩ முதற்பேறான எந்த ஆண்பிள்ளையும் பராபரனுக்குப் பிரதிஷ்டையாக்கப்படவேண்டுமென்றுபராபரன் அருளிச்செய்த நியாயப்பிரமாணத்திலெழுதியிருக்கிறபடி

௨௪ அவர்கள் அதைப்பராபரனுக்கு ஒப்புக்கொடுக்கும்படிக்கும், பராபரனுடையநியாயப்பிரமாணத்திற்சொல்லியிருக்கிறபடி ஒருசோடுகாட்டுப்புறாவை அல்லது இரண்டுபுறாக்குஞ்சுகளைப்பலியிடும்படிக்கும், பிள்ளையை எருசலேமபட்டணத்துக்குக்கொண்டுபோனார்கள்.

௨௫ அப்பொழுது சிமியோனென்னும் பேர்கொண்ட மனிதனெருசலேமிலிருந்தான். அவன் நீதியும் தேவபத்தியுமுள்ளவனுமாய் இஸ்ரவேலருக்கு ஆறுதல்செய்கிறவர் வர்க்காத்திருக்கிறவனுமாயிருந்தான். அவனிற் பரிசுத்த ஆவியிருந்தார்.

௨௬ அல்லாமலும் பராபரனுடைய கிறிஸ்துவைக் காணுமுன்னே நீ மரணம் அடைவதில்லையென்று பரிசுத்த ஆவியினாலே அவனுக்கு உத்தாரவுண்டாயிருந்தது.

௨௭ அவன் அந்த ஆவியினாலேயேவப்பட்டுத் தேவாலயத்திலே வந்திருந்தான். அப்பொழுது இயேசுவென்னும் பிள்ளையை நியாயப்பிரமாண முறைமையின்படி செய்யத் தாய்தகப்பனமார் அவரை உள்ளே கொண்டுவருகையில்,

௨௮ அவன் அவரைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு பராபரனைத் தோத்தரித்துச் சொன்னது,

௨௯ ஆண்டவரே, புறத்தேசத்தார்களுக்கு அறிவைக்கொடுப்பதற்கும் உம்முடைய சனங்களாகிய இஸ்ரவேலருக்கு மகிமையுண்டாக்குவதற்குமான ஒளியாய்,

௩௰ உம்மாலே எல்லாச் சனங்களுக்கும் முன்பாகவும்,

௩௧ எத்தனமாக்கப்பட்ட இரட்சகரை நான் என் கண்களாலே கண்டபடியினாலே,

௩௨ தேவரீர் உம்முடைய வார்த்தையின்படி இப்பொழுது அடியேனைச் சமாதானத்தோடே யனுப்பிவிடுகிறீரென்றான்.

௩௩ அப்படி அவரைக் குறித்துச் சொல்லப்பட்டவைகளை அவருடைய தாயும் இயோசேப்புங் கேட்டு, ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪ பின்னுஞ் சிமியோன் அவர்களை ஆசீர்வதித்து, அவருடைய தாயாகிய மரியாளுடனே சொன்னது இதோ, அநேகருடைய இருதயசிந்தனைகள் வெளியரங்கமாகும்படிக்கு,

௩௫ இஸ்ரவேலரில் அநேகர் விழுகிறதற்கும் எழுந்திருக்கிறதற்கும் விரோதமாய்ப் பேசப்படும் அடையாளமாயிருப்பதற்கும் இவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். உன் ஆத்துமாவையே ஒரு கத்தியுருவிப்போமென்றான்.

௩௬ அல்லாமலும் ஆசேருடைய கோத்திரத்திலே பானுவேலின் குமாரத்தியும் தீர்க்கதரிசியுமாகிய அன்னாளென்பவளிருந்தாள். அவள் கன்னியாயப்பின்பு ஏழுவருஷம் புருஷனுடனே வாழ்ந்து மிகுந்த வயதுசென்றவளாயிருந்தாள்.

௩௭ ஏறக்குறைய எண்பத்திநாலு வயதுள்ள அந்தக் கைம்பெண் தேவாலயத்தை விட்டு நீங்காமல், இரவும் பகலுஞ் செபம் பண்ணி உபவாசித்து, ஆராதனை செய்துகொண்டுவந்தாள்.

௩௮ அவளும் அவ்வேளையிலே போய் நின்று, பராபரனைத் துதித்து, எருசலேமிலே மீட்புண்டாகக் காத்திருந்த யாவருடனேயும் அவரைக் குறித்துப் பேசினாள்.

௩௯ பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படி சகலத்தையும் அவர்கள் செய்து முடித்தபின்பு கலிலேயா தேசத்திலுள்ள தங்களூராகிய நாசரேத்தூருக்குத் திரும்பினார்கள்.

௪௰ பிள்ளையானது வளர்ந்து, ஆவியிலே பலங்கொண்டு, ஞானத்தால் நிறையப்பட்டுத் தேவகிருபையுள்ளவராஞர்.

௪௧ அவருடைய தாய்தகப்பனமார் பஸ்காவின் பண்டிகைக்கு வருடந்தோறும் எருசலேம் பட்டினத்திற்குப் போவார்கள்.

௪௨ அந்தப்படிக்கு அவர் பன்னிரண்டு வயதுள்ளவரானபொழுது, அவர்கள் பண்டிகை முறைமையின்படி எருசலேமுக்குப் போய்,

௪௩ வேண்டிய நாள் அங்கேயிருந்து, பின்பு திரும்பிவருகிறபொழுது, பிள்ளையாகிய இயேசு தம்முடைய தாயக்கும் இயோசேப்புக்குந் தெரியாமல் எருசலேமிலே தானேயிருந்தார்.

௪௪ அவர்கள் அவர் பிரயாணக்காருடைய கூட்டத்திலிருப்பாரென்றெண்ணி, ஒருநாட்பிரயாணமாய் நடந்துபோய் இனத்தாருக்குள்ளும் அறிமுகமானவர்களுக்குள்ளும் அவரைத் தேடி,

௪௫ அவரைக் காணாமலிருக்கிற பொழுது, எருசலேமுக்குத் திரும்பி அவரைத் தேடி,

௪௬ மூன்று நாளைக்குப்பின்பு தேவாலயத்திலே அவர் போதகருக்குள்ளேயுட்கார்ந்திருக்கவும் அவர்களுக்குச் செவிகொடுக்கவும் அவர்களை வினாவவுங்கண்டார்கள்.

௪௭ அவருடைய வசனங்களைக் கேட்ட யாவரும் அவருடைய புத்தியையும் மாறுத்தரங்களையுங் குறித்துப் பிரமித்தார்கள்.

௪௮ (தாய்தகப்பனமார்) அவரைக் கண்டு, அதிசயப்பட்டார்கள். அல்லாமலும் அவருடைய தாய் அவரை நோக்கி, மகனே என்னத்தினாலே நீ யெங்களுக்கு இப்படிச் செய்தாய்? இதோ, உன் தகப்பனும் நானும் விசாரத்தோடே உன்னைத் தேடினோமே யென்றாளஅதற்கவர்.

௪௯ நீங்களென்னை ஏன் தேடினீர்கள். நானென் தகப்பனுக்கேற்றவைகளிலேயிருக்கவேண்டியதென்றறியீர்களாவென்றார்.

௫௰ அவர்கள் தங்களுக்கு அவர் சொன்னவார்த்தையின் (கருத்தை) உணர்ந்துகொள்ளவில்லை.

௫௧ பின்பு அவர் அவர்களுடனே கூடப்போய் நாசரேத்தூரிற்சேர்ந்து அவர்களுக்குக் கீழ்ப்படிகிறார் நடந்தசங்கதிகளையெல்லா

ம அவருடையதாயதனனிருதயததிறகாத துககொணடாள.

௫௨ இயேசுவானவர்ஞானததையமவய தையும்பர்ாபர்னிடததிலும் மனிதரிடததி லுநதயையையும அதிகமதிகமாய அடை நதகொணடார்.

## ௩. அதிகாரம்.

[(௧) இயோவானபிரசஙகமபணணிஞானஸ நானததைககொடுததுக் காவலிலவைக் கபபட்டது. (௨௧) கிறிஸ்துஞானஸநா னததைபபெறறது, (௨௩) கிறிஸ்துவினு டையவமிச அட்டவணை.]

௧ தீபேரியு இர்ாயன இர்ாசசியபரிபால னமபணணினபதினைநதாம வருடததிலே, பொநதியுபிலாததெனபவன இயூதேயாநா டடுககுததிசாயாடமளரோதெனபவனகா றபஙகாகியகலிலேயாநாட்டுககு அதிபதி யாயும அவனுடையசகோதரனாகியபிலிப பெனபவனகாற்பஙகாகிய இததுரேயாநா டடுககுந்திராகோனிததிநாட்டுககும் அதி பதியாயும இலிசானியெனபவன காற்பங காகிய அபிலேனேநாட்டுககு அதிபதியா யும,

௨ அனனா, காயிப்பா, எனபவர்கள பிரதான ஆசாரியராயிருநதகாலததிலே வனாநதிரததிற்சகரியாவினகுமாரனாகிய இ யோவானுககுததேவவசனமுணடாயிறறு.

௩ அனபடியால அவன இயோர்தான நதிககருகானதேசமெஙகுமநடநதுபாவம னனிபபுக்காக மனநதிருமபுமபடிக கேறற ஞானஸநானததைககுறிததுப பிர்சஙகித தான.

௪ பர்ாபர்னுககாகமார்ககததை நனறு ககசெயது, அவருக்காகபபாதைகளைசசெ மமைபணணுஙகளெனறும,

௫ பளளஙகளெலலாமநிர்ப்பபபடுஞசக லமலைகளுங குனறுகளுந தாழத்தபபடும. கோணலானபாதைகளசெமமையாகுமமு ருடடுவழிகளசமனாகுமெனறும் மனிதரெல லாருமபர்ாபர்னுடைய இர்ட்சிபபைககா ணபார்களெனறும,

௬ வனாநதிரததிலேகூபபிடுகிறவனுடை யசத்தமுணடெனறு ஏசாயாதீர்ககதரிசி யினுடையபுததகததில எழுதியிருககிறபிர காரமாகபபிரசஙகிததான.

௭ ஆதலால அவனதனனாலேஞானஸநா னமபெறுமபடிக்குபபுறபபடடுவநதசனங களைநோககி, விரியனபாமபுகளினகுட்டிக ளே இனிவருஙகோபததிறகு நீஙகளதபபிக கொளளுமபடியாய, உஙகளுககுவகைகா டடினவனெவன.

௮ (தப்பவிருமபினால) மனநதிருமபுகிற தறகேறறகனிகளைககொடுஙகள. ஆபிரகா ம எஙகளுக்குததகபபனெனறு உஙகளுள ளததிறசொலலததொடஙகாதிருஙகள. ஆ பிரகாமுககுபபர்ாபர்ன இநதக்கற்களால பிளளைகளையுணடுபணணவலலவராயிருக கிறாரெனறு உஙகளுககுச்சொலலுகிறேன.

௯ அலலாமலும இபபொழுதேகோடரி யானதுமாஙகளினவேர்ருகிலே வைததிருககி றது. ஆகையால நலலகனிகொடாதமர ஙகளெலலாமவெட்டபபட்டு அககினியிலே போடபபடுமெனறான.

௰ அபபொழுதுசனஙகள அவனைநோக கி அபபடியானால நாஙகள எனனசெயய வேணடுமெனறுகேட்டார்கள.

௰௧ அவர்களுககுமாறுததாரமாக அவ னசொனனது, இரணடுசட்டைகளையுடை யவன சட்டையிலலாதவனுககுககொடுக் கக்கடவன ஆகாரமுடையவனுமஅபபடியே செயயக்கடவனெனறான.

௰௨ பினபு ஆயக்காரருமஞானஸநானம பெறுமபடிககு, அவனிடததிறசேர்நது, போதகரே, நாஙகள எனனசெயயவேண டுமெனறார்கள.

௰௩ அவர்களுடனே யவனசொனனது, உஙகளுக்குககட்டளையிடபபட்டதறகுமே லாக ஒனறையும பலபநதமாயககேடடுக கொளளாதிருஙகளெனறான.

௰௪ போர்சசேவகரும அவனைநோககி, நாஙகள எனனசெயயவேணடுமெனறுகே ட்டார்கள. அவர்களுடனேயவனசொனன து, நீஙகள ஒருவனுககும இடுக்கணசெய யாமலும ஒருவனைககுறிததுமபொயசசா ட்சிசொலலாமலும உஙகளசமபளமேபோ துமெனறெணணிககொணடிருக்கக்கடவீர் களெனறான.

௰௫ அபபொழுதுசனஙகளகாததிருநது இயோவான கிறிஸ்துவாயிருககிறாரோவெ னறு எலலாருநதஙகளிருதயஙகளில அவனை ககுறிததுச்சிநதிததுககொணடிருககிறபொ ழுது.

௰௬ இயோவான எலலாருடனேயுஞ சொனனது, நானசலததினாலேயுஙகளுககு ஞானஸநானஙகொடுககிறேன. எனனிலும அதிகபலநதவர்வருகிறார். அவருடையபா த இர்ட்சைகளினவாரையவிழககிறதறகு நானபாததிரனலல அவர்பரிசுதத ஆவியி னாலும அககினியினாலும உஙகளுககுஞான ஸநானஙகொடுபபார்.

௰௭ தூறறுஙகூடை அவருடையகையி லிருககினறது. அவர்தமதுகளததைநனறு யவிளககிக்கோதுமையைததமது களஞசி யததிலேசேர்ததுபபதரை அவியாத அக கினியினாலேசுட்டெரிபபாரெனறு சொனன துமனறி,

௰௮ மறறும்நேகமபுததிகளைசசொலலி சசனஙகளுககுச சுவிசேஷததை யறிவித தான.

௩ அவைகள் முடிந்த பின்பு, அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது பசாசானவன் அவரை நோக்கி நீ தேவனுடைய குமாரனானால் இந்தக் கல்லை அப்பமாகும்படி சொல்லென்றான்.

௪ அதற்கு இயேசுவானவர் மனிதன் அப்பத்தினாலே மாத்திரமல்ல பராபரனுடைய வார்த்தையெல்லாவற்றினாலும் பிழைப்பானென்றெழுதியிருக்கின்றதென்றார்.

௫ பின்பு பசாசானவன் அவரையுயர்ந்த மலையின்மேற் கொண்டுபோய் ஒரு நிமிஷத்திலே உலகத்தின் இராச்சியங்களையெல்லாம் அவருக்குக் காண்பித்து,

௬ இவையெல்லாவற்றின்மேலும் அதிகாரமும் இவைகளின் மகிமையும் எனக்கொப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறபடியால் நான் இவைகளை உனக்குத் தருவேன். என் இஷ்டப்படிக்கே நான் இவைகளை எவனுக்குங் கொடுக்கிறேன்.

௭ ஆகையால் நீ என்னைத் தொழுதுகொண்டால் எல்லாம் உன்னுடையதாயிருக்குமென்று அவருடனே சொன்னான்.

௮ இயேசுவானவர் அவனுக்குச் சொன்னது. சாத்தானே, நீ என்னைவிட்டப்பாலே போ. உன் தேவனாகிய பராபரனைத் தொழுதுகொண்டு, அவரொருவருக்கே ஆராதனை செய்வாயாகவென்றெழுதியிருக்கின்றதே யென்றார்.

௯ அன்றியும் அவன் அவரை எருசலேமட்டினத்திற்குக் கொண்டுபோய் அவரைத் தேவாலயத்தின் உப்பரிகையின்மேல் நிறுத்தி உன்னைக் காப்பாற்றும்படிக்கு உன்னைக்குறித்துத் தம்முடைய தூதர்களுக்குக் கட்டளையிடுவாரென்றும்,

௰ உன்கால் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் தங்கள் கைகளில் உன்னையேந்திக்கொண்டுபோவார்களென்றும் எழுதியிருக்கின்றது.

௰௧ ஆகையால் நீ தேவனுடைய குமாரனானால் இங்கேயிருந்து தாழக் குதியென்று அவருடனே சொன்னான்.

௰௨ அதற்குமாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது உன் தேவனாகிய பராபரனைப் பரீட்சைபாராதிருப்பாயாகவென்று சொல்லியிருக்கின்றதே யென்றார்.

௰௩ பசாசானவன் (அலகை) தன்னுடைய விகற்பங்களையெல்லாம் முடித்தபொழுது சிலகாலம் அவரைவிட்டுப்போனான்.

௰௪ பின்பு இயேசுவானவர் ஆவியினுடைய பலத்தினாலே கலிலேயா நாட்டுக்குத் திரும்பினார். அதைச்சூழ்ந்திருக்கிற தேசமெங்கும் அவருடைய கீர்த்தி பரவிற்று.

௰௫ அல்லாமலும் அவர்களுடைய செப ஆலயங்களில் அவர் உபதேசம்பண்ணி எல்லாராலும் புகழ்ச்சியடைந்தார்.

௰௬ அவர் தாம் வளர்ந்த நாசரேத்தூருக்குப் போய்த் தம்முடைய வழக்கமானபடி ஓய்வுநாளிலே செப ஆலயத்திற்குப் போய் வாசிக்க எழுந்து நிற்கிறபொழுது,

௰௭ எசாயா தீர்க்கதரிசியின் புஸ்தகத்தை அவருக்குக் கொடுத்தார்கள். அந்தப் புஸ்தகத்தை அவர் விரித்தபொழுது,

௰௮ பராபரனுடைய ஆவி என்னிலிருக்கின்றது. தரித்திரருக்கு நான் சுவிசேஷத்தை யறிவிக்கும்படி எனக்கு அபிஷேகம்பண்ணினார். நருங்குண்டவர்களைக் குணமாக்கும்படிக்கும் சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும் குருடருக்குப் பார்வையையும் பிரசங்கிக்கும்படிக்கும் நொறுங்குண்டவர்களை விடுதலையாக்க,

௰௯ பராபரனாலே அங்கீகரிக்கப்படுவதற்கான வருஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கும் என்னை யனுப்பினாரென்று எழுதியிருந்த இடத்தைக் கண்டு,

௨௰ அப்புஸ்தகத்தைச் சுருட்டி, ஊழியக்காரனிடத்தில் கொடுத்து உட்கார்ந்தார். செப ஆலயத்திலுள்ள எல்லாருடைய கண்களும் அவர்மேல் நோக்கமாயிருந்தன.

௨௧ அப்பொழுதவர் அவர்களுடனே பேசத்தொடங்கி, நீங்கள் கேட்ட வேதவாக்கியம் இன்றைத்தினம் நிறைவேறிற்றென்றார்.

௨௨ எல்லாரும் அவருக்கு நல்லசாட்சி கொடுத்து, அவர் திருவாய்மலர்ந்தருளிச்செய்த கிருபையுள்ள வசனங்களைக்குறித்து ஆச்சரியப்பட்டு இவன் யோசேப்பினுடைய குமாரனல்லவோவென்றார்கள்.

௨௩ அவர்களுடனே யவர் சொன்னது வைத்தியனே, உன்னைத்தானே குணமாக்கு என்கிற வழக்கச்சொல்லையும், நாங்கள் கேள்விப்பட்டபடி, கப்பர்நாகூமூரில் (உன்னாலே) செய்யப்பட்டதெல்லாவற்றையும் உன் ஊராகிய இவ்விடத்திலேயுஞ் செய் என்பதையும் நீங்கள் என்னுடனே சொல்லுவீர்களென்பதற்குச் சந்தேகமில்லை.

௨௪ அப்படியிருக்கத் தீர்க்கதரிசியானவன் தன் ஊரிலே அங்கீகரிக்கப்பட்டவனல்லவென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௫ அன்றியும் எலியாவின் காலத்திலே மூன்றுவருடமும் ஆறுமாதமும் வானம் அடைக்கப்பட்டு தேசமெங்கும் மிகுந்த பஞ்சமுண்டாயிருந்தபொழுது இஸ்ரவேலருக்குள்ளே யநேக கைம்பெண்களிருந்தும்,

௨௬ சீதோன் நாட்டிலுள்ள சரெப்தா ஊரிலிருந்த ஒரு கைம்பெண்ணிடத்திற்கேயன்றி மற்றொருத்தியினிடத்துக்கும் எலியாவென்பவர் அனுப்பப்படவில்லை.

௨௭ அல்லாமலும் எலிசா என்னுந் தீர்க்கதரிசியின் காலத்திலே இஸ்ரவேலருக்குள்ளே யநேகங் குஷ்டரோகங்களிருந்தும், சீரியதேசத்தானாகிய நகமானையன்றி அவ.

ர்களில் வேறொருவனும் சுத்தமாக்கப்படவில்லையென்று சத்தியத்தின்படியே யுங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௮ செப ஆலயத்திலிருந்த எல்லாரும் இவைகளைக் கேட்டபொழுது,

௨௯ கோபத்தால் நிரப்பப்பட்டு எழுந்து அவரை ஊருக்குப் புறம்பே தள்ளித் தங்களூருக்கட்டியிருந்த செங்குத்தான மலையினுச்சியிலிருந்து அவரைத் தாழத்தள்ளும்படிக்கு அவரிடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

௩௰ அவர் அவர்களுடைய மத்தியினின்று கடந்துபோனார்.

௩௧ பின்பு அவர் கலிலேயாதேசத்திலுள்ள கப்பர்நாகூமபட்டணத்திற்குப் போய் ஓய்வுநாட்களிற் சனங்களுக்கு உபதேசம் பண்ணினார்.

௩௨ அவருடைய வசனம் அதிகாரமுள்ளதாயிருந்தபடியினாலே அவர்கள் அவருடைய உபதேசத்தைக் குறித்துப் பிரமித்தார்கள்.

௩௩ அல்லாமலுஞ் செப ஆலயத்திலே அசுத்தமான ஆவியுள்ள ஒருமனிதனிருந்தான்.

௩௪ அவன் (அவரைக்கண்டு) ஐயோ நசரேத்தூராகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்குமென்ன. எங்களைக் கெடுக்கவா வந்தீர். உம்மையறிந்திருக்கிறேன். நீர் பராபரனுடைய பரிசுத்தரேயென்று மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டான்.

௩௫ அதற்கு இயேசுவானவர் நீ பேசாமல் இவனைவிட்டுப்போவென்று அதையதட்டினார். அப்பொழுது பசாசு அவனைச் சனங்களுக்குள்ளே தள்ளி அவனுக்கு ஒரு சேதமுஞ்செய்யாமல் அவனைவிட்டுப்போயிற்று.

௩௬ எல்லாரும் பிரமிப்படைந்து இவர் அதிகாரத்தோடும் வல்லமையோடும் அசுத்த ஆவிகளுக்குக் கட்டளையிட அவைகளும் புறப்படுகின்றனவே. இதென்ன வசனமென்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

௩௭ அவருடைய கீர்த்தியத்தேசத்திலுள்ள இடங்களெல்லாவிலும் பிரசித்தமாயிற்று.

௩௮ பின்பு அவர் செப ஆலயத்தைவிட்டுச் சீமோனென்பவனுடைய வீட்டுக்குப்போனார். சீமோனுடைய மாமி மிகுந்த சுரமாயக்கிடந்தாள். அவளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௩௯ அப்பொழுது அவர் அவளிடத்திற் குனிந்து நின்று சுரத்தையதட்டினார் அது அவளைவிட்டு நீங்கிற்று. உடனேயவள் எழுந்திருந்து அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

௪௰ பின்பு சூரியன் அஸ்தமித்தபொழுது அநேகசனங்கள் தங்களிடத்திலிருந்த பலவியாதிகளுள்ளவர்களை அவரிடத்திற்குக்கொண்டுபோனார்கள். அவர் எல்லார்மேலும் அவர் தம் கைகளை வைத்து அவர்களைக் குணமாக்கினார்.

௪௧ அநேகரிடத்திலிருந்து பசாசுகளும் புறப்பட்டன. அவைகள் நீர் பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்துதென்று கூப்பிட்டன். அவர் தம்மைக் கிறிஸ்துதென்று அவைகளறிந்தபடியினாலே அவைகள் பேசுகிறதற்கு இடங்கொடாமல் அதட்டினார்.

௪௨ உதயமானபொழுது அவர் புறப்பட்டு வனாந்தரமான இடத்துக்குப்போனார். சனங்கள் அவரைத்தேடி அவரிடத்திற்போய் தங்களைவிட்டுப் போகாதபடிக்கு அவரை நிறுத்திக்கொண்டார்கள்.

௪௩ அதற்கவர் அவர்களை நோக்கி நான் மற்ற ஊர்களுக்கும் பராபரனுடைய இராச்சியத்தின் சுவிசேஷமாய் அறிவிக்கவேண்டும். அதற்காகவே யனுப்பப்பட்டேனென்றார்.

௪௪ அந்தப்படியவர் கலிலேயாதேசத்திலுள்ள செப ஆலயங்களிற் பிரசங்கம்பண்ணிக்கொண்டுவந்தார்.

## ௫. அதிகாரம்

[(௧) கிறிஸ்து கடலினிடத்திற் சனங்களுக்குப் போதித்து மிகுந்த மீன்பிடிக்கப் பண்ணினது. (௰௨) குஷ்டரோகியைச் சுத்தமாக்கினது. (௰௮) திமிர்வாதக்காரனைக் குணமாக்கினது. (௨௭) மத்தேயுவை யழைத்து அவனுடைய வீட்டிலே சாப்பிட்டது. (௩௩) உபவாசத்தைக் குறித்து உபதேசித்தது.]

௧ ஒருகாலத்திலே சனங்கள் பராபரனுடைய வசனத்தைக் கேட்கும்படிக்கு அவரை நெருக்கியிருக்கிறபொழுது அவர் கெனேசரேத்தென்னப்பட்ட கின்னரக்கடலினருகே நின்று,

௨ கடற்கரையில் இரண்டு படகுகளிருந்ததைக் கண்டார். மீன்பிடிக்கிறவர்கள் இறங்கி வலைகளை அலசிக்கொண்டிருக்க அவ்விரண்டு படகுகளையுங்கண்டு,

௩ அவைகளில் ஒன்றாகிய சீமோனுடைய படகிலேறி அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்படிக்கு அவனை வேண்டிக்கொண்டு அதிலே யுட்கார்ந்து அங்கேயிருந்து சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்.

௪ அவர் உபதேசித்து முடித்தபின்பு சீமோனை நோக்கி நீ ஆழத்திலே தள்ளிக்கொண்டுபோய் மீன்பிடிக்கும்படிக்கு உங்கள் வலைகளைத் தாழவிடுங்களென்றார்.

௫ சீமோன் அவருக்கு மாறுத்தரமாகச் சொன்னது. ஐயரே, இராமுழுவதும் நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்படவில்லை. அப்படியிருந்தும் உம்முடைய சொல்லின்படி வலையைத் தாழவிடுகிறேனென்றான்.

றப்பேர்களும் அவர்களுடனே பந்தியிருந்தார்கள்.

௩௰ உடனே அவ்விடத்து வேதபாரகரும் பரிசேயரும் அவருடைய சீஷருக்கு விரோதமாக முறுமுறுத்து என்னத்தினாலே நீங்கள் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போசனபானம் பண்ணுகிறீர்களென்றார்கள்.

௩௧ இயேசுவானவர் அவர்களுக்கு மாறுத்தாரமாகச் சொன்னது. சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை. வியாதியுள்ளவர்களுக்கே வைத்தியன் வேண்டும்.

௩௨ மேலும் நீதிமான்களையல்ல பாவிகளையே மனந்திரும்பும்படிக்கு அழைக்கவந்தேனென்றார்.

௩௩ பின்பு அவர்கள் அவரை நோக்கி யோவானுடைய சீஷரும் பரிசேயருடைய சீஷரும் அநேகந்தரம் உபவாசம்பண்ணிச் செபமந்திரங்களைச் சொல்லிக்கொண்டுவருகிறார்களே. உம்முடைய சீஷர் போசனபானம் பண்ணலாமாவென்றார்கள்.

௩௪ அதற்கவர் சொன்னது. மணவாளன் கலியாணத்திற்கு வந்த மனிதரோடிருக்குங் காலத்திலே நீங்கள் அவர்களை உபவாசம் பண்ணும்படி செய்யக்கூடுமா.

௩௫ மணவாளன் அவர்களைவிட்டு நீங்கப்படும் நாட்கள் வரும். அப்பொழுது அவர்கள் உபவாசிப்பார்களென்று சொல்லி,

௩௬ பின்னும் உவமையாய்ச் சொன்னது. ஒருவனும் புதிய வஸ்திரத்துண்டைப் பழய வஸ்திரத்தோடே இணைக்கமாட்டான். இணைத்தாற் புதியதானது (பழயதைக்) கிழிக்கும். அல்லாமலும் புதிய வஸ்திரத்துண்டு பழயதற்கு ஒவ்வமாட்டாது.

௩௭ அன்றியும் ஒருவனும் புதிய திராட்ச இரசத்தைப் பழய துருத்திகளில்வார்த்து வைக்கமாட்டான். வைத்தாற் புதிய இரசந் துருத்திகளைக் கிழித்துப்போடும் அப்பொழுது அதுசிந்திப்போம். துருத்திகளுங் கெட்டுப்போம்.

௩௮ புதிய இரசத்தைப் புதிய துருத்திகளிலே வார்த்துவைத்தால் இரண்டுங் காக்கப்படும்.

௩௯ அல்லாமலும் பழய இரசத்தைப் பானம்பண்ணுகிறவன் உடனே புதிய இரசத்தை விரும்பமாட்டான். பழய இரசம் அதிக நல்லதென்று சொல்வானேயென்றார்.

## ௬. அதிகாரம்.

[(௧) ஓய்வுநாளைக்குறித்துப் பரிசேயருக்குப் புத்திகளைச் சொன்னது. (௰௩) அப்போஸ்தலரைத் தெரிந்தேற்படுத்தினது. (௰௭) அநேகரைக் குணமாக்கினது. (௨௰) ஆசீர்வாதங்களை வாழ்த்தினது. (௨௪) வேதனைகளையறிவித்தது (௨௭) அன்புமுதலான வைகளைக்குறித்து உபதேசம்பண்ணினது. (௪௬) தேவவசனத்தைக் கேட்கிறதைக்குறித்துச் சொல்லியது.]

புளியாத அப்பங்களைச் சாப்பிடுகிற நாட்களில் இரண்டாம் நாளுக்குப் பின்வருந் முதலாம் ஓய்வுநாளிலே அவர் பயிர்வழியே நடந்துபோகிறபொழுது, அவருடைய சீஷர் கதிர்களைக் கொய்து கைகளினாலே கசக்கித்தின்றார்கள்.

௨ அவர்களுடனே பரிசேயரிற் சிலர் ஓய்வுநாட்களிற் செய்யத்தகாததை நீங்கள் செய்யவேண்டியதென்னவென்றார்கள்.

௩ அவர்களுக்கு மாறுத்தாரமாக இயேசுவானவர் சொன்னது. தாவீதும் அவனோடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது அவன் தேவாலயத்திற் பிரவேசித்து,

௪ ஆசாரியர்மாத்திரமேயன்றி மற்றொருவரும் போசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களை எடுத்துப் போசித்துப் பின்புதன்னோடிருந்தவர்களுக்குங் கொடுத்தானென்று நீங்கள் வாசிக்கவில்லையாவென்று சொல்லி,

௫ பின்பு மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளுக்குந்தாம் ஆண்டவராயிருக்கிறாரென்று அவர்களுடனே சொன்னார்.

௬ மற்றொரு ஓய்வுநாளிலே அவர் செப ஆலயத்திற் பிரவேசித்துப் போதித்தார். அங்கே சூம்பின வலதுகையையுடைய ஒரு மனிதனிருந்தான்.

௭ அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்திற் குற்றங்காணும்படிக்கு ஓய்வுநாளிலுங் குணமாக்குவாரோவென்று எண்ணி அவரை நோக்கிக் காத்திருந்தார்கள்.

௮ அவர்களுடைய யோசனைகளையவர் அறிந்து சூம்பின கையையுடையவனை நோக்கி நீ யெழுந்து நடுவே நில்லென்றார். அந்தப்படியவன் எழுந்து நின்றான்.

௯ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி நான் உங்களிடத்தில் ஒன்று கேட்கிறேன். ஓய்வுநாட்களில் நன்மைசெய்கிறதோ தின்மைசெய்கிறதோ ஜீவனைக்காக்கிறதோ அழிக்கிறதோ எது நியாயமென்று சொல்லி,

௰ அவர்களெல்லாரையுஞ் சுற்றிப்பார்த்து அந்த மனிதனை நோக்கி உன்கையை நீட்டென்றார். அவன் அப்படிச் செய்தான். உடனே அவனுடைய கை மற்றக்கையைப்போலச் சொஸ்தமாயிற்று.

௰௧ பின்பு அவர்கள் மதியில்லாமையால் நிறையப்பட்டு இந்த இயேசுவை யென்ன செய்யலாமென்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

௰௨ அன்றியும் அந்நாட்களில் அவர் செபம்பண்ணும்படிக்கு மலைக்குப்போய் இராத்திரிமுழுவதும் பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்கொண்டு,

குறித்துச்சொல்லியது. (௫௮) எதிராளியுடனே ஒப்புரவாகக்கப்படுவதைக்குறித்தது.]

அந்நேரத்திலே அநேக ஆயிரஞ்சனங்கள் ஒருவரையொருவர் மிதித்துக்கொள்ளத்தக்கதாகக்கூடிவந்திருக்கிறபொழுது அவர் தமது சீஷருடனே சொன்னதாவது, பிரதானமாய்நீங்கள்வஞ்சகமாகிய பரிசேயருடைய புளிப்புள்ளமாவுக்கு இடங்கொடாமலெச்சரிக்கையாயிருங்கள்.

௨ வெளியாகாதமறைபொருளும அறியப்படாத அந்தரங்கமும் ஒன்றுமில்லை.

௩ அப்படியிருக்க நீங்கள் இருளிற்பேசினதெதுவோ அது வெளிச்சத்திலே கேட்கப்படும். நீங்கள் அறைகளிற்காதுக்குட்சொன்னதெதுவோ அது வீடுகள்மேலேபிரசங்கிக்கப்படும்.

௪ அல்லாமலும் என் சிநேகிதரான உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது, சரீரத்தைக்கொலைசெய்தாலும் அதின்பின்பு அதிகமொன்றும்உங்களுக்குச்செய்யத்திராணியில்லாதவர்களுக்குப்பயப்படாதிருங்கள்.

௫ நீங்கள்பயப்படத்தக்கவர் இன்னாரென்றுங்களுக்குக் காண்பிக்கிறேன். கொலைசெய்தபின்பு நரகத்திலே தள்ளுகிறதற்கு அதிகாரமுடையவராகிய(பராபரனுக்கு) பயப்படுங்கள். அவருக்கே பயப்படக்கடவீர்களென்றுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௬ இரண்டுகாசுக்கு ஐந்தடைக்கலான்குருவிகளை விற்கிறார்களல்லவோ. ஆனாலும் அவைகளிலொன்றும்பராபரனாலே மறக்கப்படுகிறதில்லை.

௭ உங்கள்தலையிலுள்ள எல்லாமயிர்களும் எண்ணப்பட்டிருக்கின்றது. ஆகையாற்பயப்படாதிருங்கள். அநேகம் அடைக்கலான்குருவிகளிலும் நீங்கள் மேன்மையாயிருக்கிறீர்கள்.

௮ அன்றியும நான் உங்களுக்குச்சொல்லுகிறதாவது, எவனாகிலும் மனிதர் முன்பாக என்னையறிக்கைபண்ணினால் மனிதனுடையகுமாரனும்பராபரனுடைய தூதர்கள் முன்பாக அவனையறிக்கைபண்ணுவான்.

௯ மனிதர்முன்பாக என்னை மறுதலிக்கிறவன் பராபரனுடைய தூதர்கள்முன்பாக மறுதலிக்கப்படுவான்.

௰ எவனாகிலும மனிதனுடைய குமாரனுக்கு விரோதமாயப்பேசினால் அது அவனுக்கு மன்னிக்கப்படும். பரிசுத்த ஆவியை தூஷணிக்கிறவனுக்கு அது மன்னிக்கப்படாது.

௰௧ அன்றியும் ஜெப ஆலயங்களுக்கும் நியாயாதிபதிகளுக்கும அதிகாரங்களுக்கும முன்பாக உங்களைக்கொண்டுபோய்விடும்பொழுது எப்படி என்னத்தை எதிருத்தரவாகச்சொல்லுவோமென்றும எதைப்பேசுவோமென்றுங்கவலைப்படாதிருங்கள்.

௰௨ நீங்கள்பேசவேண்டியவைகளைப்பரிசுத்த ஆவியானவர் அந்நேரத்திலேயுங்களுக்குப்போதிப்பாரேயென்றார்.

௰௩ அப்பொழுது கூட்டத்திலொருவன் அவரைநோக்கிப்போதகரே, என் சகோதரன் எனக்குந்தனக்குமுண்டான சுதந்தர ஆஸ்தியைப்பங்கிட்டுக்கொள்ளும்படிக்குக்கட்டளையிடுமென்றான்.

௰௪ அதற்கு அவர் சொன்னது, மனிதனே, என்னையுங்களுக்கு நியாயாதிபதியாகவும் பங்கிடுகிறவனாகவும் ஏற்படுத்தினவன் யாவனென்றுசொல்லி,

௰௫ பின்பு எல்லாரையுமநோக்கி, ஒருவனுக்கு எவ்வளவு ஆஸ்தியுண்டாயிருந்தாலும அவைகளினாலே அவனுடைய சீவன் உண்டாயிராது. ஆகையால் நீங்கள் பொருளாசைக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையாயிருக்கக்கடவீர்களென்றார்.

௰௬ அல்லாமலும ஒரு உவமையையவர்களுக்குச்சொன்னார் அதாவது, ஐசுவரியமுள்ள ஒருமனிதனுடைய காணிபூமி நன்றாயவிளைந்தது.

௰௭ அப்பொழுது அவன் தனக்குள்ளே சிந்தித்துச்சொண்டு சொன்னது, என் தானியத்தைச் சேர்த்துவைக்கிறதற்கு வேண்டிய இடமில்லையே.

௰௮ நான் என்ன செய்யலாம. என் களஞ்சியங்களை நான் இடித்து அதிக பெரிதானவைகளைக்கட்டி எனக்குண்டான தானியமயாவையும என்பொருளையும அங்கே சேர்த்துவைக்கவேண்டும.

௰௯ பின்பு நான், என் ஆத்துமாவே, அநேகவருஷங்களுக்கு உனக்காக மிகுந்த பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால இளைப்பாறிப்போசித்துக்குடித்து மகிழ்ச்சியாயிருவென்று என் ஆத்துமாவுடனே சொல்லவேண்டுமென்றான்.

௨௰ அப்பொழுது பராபரன அவனுடனேசொன்னது, புத்தியீனனே, இந்த இராத்திரியிலே உன் ஆத்துமாவை உன்னிடத்திற் கேட்டெடுத்துக்கொள்வார்கள். அப்பொழுது நீ சேகரித்தவைகள் யாருக்காக இருக்குமென்றார்.

௨௰௧ பராபரனிலஐசுவரியவானாயிராமல தனக்காகப் பொக்கிஷங்களைச் சேர்க்கிறவனுக்கு அப்படியேசம்பவிக்குமென்றுசொல்லி,

௨௰௨ பின்பு தமமுடையசீஷரைநோக்கி, அதினாலே நீங்கள் உங்கள்சீவனைக்குறித்து என்ன உண்போமென்றும உங்கள் சரீரத்தைக்குறித்து என்ன உடுப்போமென்றுங்கவலைப்படாதிருங்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௰௩ ஆகாரத்திற்குச் சீவனும உடைக்கு சரீரமும அதிகமாயிருக்கின்றதே.

௨௪ காகங்களைநோக்கிப்பாருங்கள். அவைகள் விதைக்கிறதுமில்லை அறுக்கிறதுமில்லை. அவைகளுக்குப் பண்டசாலையுங் களஞ்சியமுமில்லை. அவைகளுக்கும் பராபரன் உணவுகொடுக்கிறார். பறவைகளிலும் நீங்கள் மிகவும் அதிக மேன்மையாயிருக்கிறீர்களல்லவா?

௨௫ அன்றியும் உங்களிலொருவன் கவலைப்படுகிறதினாலே தன்வயசோடே ஒருநாழிகையையாகிலுங் கூட்டுவானா?

௨௬ மிகவுஞ் சிறிதான்து உங்களாலாகாதிருக்க மற்றவைகளுக்காக நீங்கள் என்னத்திற்குக் கவலைப்படுகிறீர்கள்.

௨௭ லீலியென்னும் புஷ்பங்கள் வளருகிற வகையைச்சிந்தித்துக்கொள்ளுங்கள். அவைகள் வருந்துகிறதுமில்லை நூற்கிறதுமில்லை. (அவை மிகவும் அழகாயிருக்கின்றன்) சாலோமோனரசனே மிகுந்த மகிமையுடையவனாயிருந்தும் அவைகளிலொன்றைப்போல (அழகாய்) உடுத்தியிருக்கவில்லையென்றுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௨௮ அப்படியிருக்க அற்ப விசுவாசிகளே, இன்றைக்குவெளியிலிருந்து நாளைக்கு அடுப்பிற்போடப்படுகிறபுல்லுக்குப்பராபரன் இவ்விதமாக உடுத்தினால மிகவும் அதிகமாய் உங்களுக்கு அப்படிச்செய்வாரல்லவா?

௨௯ ஆகையால் என்னத்தையுண்போம் என்னத்தைப் பானம்பண்ணுவோமென்று நீங்கள் கேளாமலுங் கலக்கமடையாமலுமிருங்கள்.

௩௰ உலகத்தார் இப்படிப்பட்டவைகள் யாவையுந் தேடுகிறார்கள். இவைகள் உங்களுக்கு வேண்டுமென்று உங்கள் பிதாவானவர் அறிந்திருக்கிறார்.

௩௧ விசேஷமாய்ப் பராபரனுடைய இராசசியத்தைத் தேடுங்கள். அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக்கொடுக்கப்படும்.

௩௨ சின்ன ஆட்டுக்கூட்டமே, உங்கள் பிதா இராசசியத்தையுங்களுக்குக்கொடுக்கப்பிரியமாயிருக்கிறார்.

௩௩ ஆகையாற்பயப்படாதிருங்கள். உங்களுக்கு உண்டானவைகளைவிற்றுப்பிச்சைகொடுங்கள். உங்கள் பொக்கிஷம் எங்கேயோ அங்கே உங்கள் இருதயமுமிருக்கும்.

௩௪ ஆகையாற் பழமையாய்ப்போகாத பண்பைகளையுங் குறைந்துபோகாதபொக்கிஷத்தையும் பரமண்டலங்களில்உங்களுக்காகஉண்டுபண்ணுங்கள். அங்கேதிருடன்சேருகிறதுமில்லை பூச்சி கெடுக்கிறதுமில்லை.

௩௫ உங்கள் அரைகள் கட்டப்பட்டவைகளாகவும் உங்களவிளக்குகள் எரிகிறவைகளாகவுந் தங்கள் எசமான் கலியாணத்திலிருந்துதிரும்பிவந்து தட்டும்பொழுது உடனேயவருக்குத்திறக்கும்படிக்கு அவன்வரக்காத்திருக்கிற மனிதருக்கொப்பாகவுமிருங்கள்.

௩௬ எசமானவந்துவிழித்திருக்கக்காணும் ஊழியக்காரரேபாக்கியர்.

௩௭ அவன் அரையிற் கச்சைகட்டிக்கொண்டு அவர்களைப்பந்தியிருக்கச்செய்து பின்புவந்து அவர்களுக்குஊழியஞ்செய்வானென்று மெய்யாகவேயுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௩௮ அவன் இரண்டாஞ்சாமத்திலாவது மூன்றாஞ்சாமத்திலாவதுவந்து அப்படியே கண்டால் அவ்வூழியக்காரர் பாக்கியவான்களாயிருப்பார்கள்.

௩௯ திருடன் இன்னவின்ன நேரத்தில் வருவானென்றுவீட்டெசமான அறிந்தால் அவனவிழித்திருந்து தன்வீட்டைக் கன்னமிடும்படிக்கு இடங்கொடுக்க மாட்டான். அது உங்களுக்குத்தெரியும்.

௪௰ அந்தப்படியே நீங்களும் நினையாத நேரத்திலேமனிதனுடையகுமாரனவருந்தால எத்தனமாயிருக்கக் கடவீர்களென்றார்.

௪௧ அப்பொழுதுபேதுருஅவரைநோக்கி, ஆண்டவரே, இந்த உவமையைநீர் எங்களுக்கு (மாத்திரம்) சொல்லுகிறீரோ, எல்லாருக்குஞ் சொல்லுகிறீரோவென்றான்.

௪௨ அதற்குக்கர்த்தர்சொன்னது, தகுதியானகாலத்திலே படிகொடுக்கும்படிக்கு எசமான் தன்னுடைய பணிவிடைசனங்களமேல்வைக்கத்தக்க உண்மையும புத்தியுமுள்ள விசாரணைக்காரன்யாவன்.

௪௩ எசமானவரும்பொழுது அப்படிச்செய்யக்காணப்படுகிறஊழியக்காரன்பாக்கியவான்.

௪௪ எசமான் தனக்குண்டான எல்லாவற்றின்மேலும அவனைவைப்பானென்றுமெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௪௫ அந்த ஊழியக்காரன் என்னெசமானவரத்தாமதிக்கிறானென்றுதன்னிருதயத்திலெண்ணி வேலைக்காரரையும வேலைக்காரிகளையும அடிக்கவும பொசித்துக்குடித்துவெறிகொள்ளவுந்தொடங்கினால்,

௪௬ அந்த ஊழியக்காரன நினையாத நாளிலும அறியாதநேரத்திலும அவனுடைய எசமானவந்து அவனைத் துண்டித்துப்போட்டு உண்மையில்லாதவர்களுடனேயவனுக்குப்பங்கை யேற்படுத்துவான்.

௪௭ மிகுதியைப்பெற்றவனெவனோ அவனிடத்தில் மிகவும்விசாரிக்கப்படும். மிகுதியைப்பற்றிக்கொண்டவனிடத்தில் அதிகங் கேட்கப்படும்.

௪௮ ஆதலால்தன் எசமானுடைய சித்தத்தை யறிந்தும எத்தனமாயிராமலும அவனுடைய சித்தத்தின்படி செய்யாமலுமிருக்கிற ஊழியக்காரன அநேகஅடிகளை

பபெறறுககொளவான். (சித்தத்தை) யறி யாதவனுபிருநது அடிகளுககேறறவைகளை சசெய்கிறவன கொஞச அடிகளைப்பெற்று ககொளவான்.

௭௪ அககினியைபபூமியினமேற்போட வநதேன். அது இபபொழுதேபறறியெரியு மபடிககுவிருமபுகிறேன்.

௪௯ அதற்குமுனனே நான் அடையவே ணடிய ஞருஸ்நானமுணடு. அதுமுடியுமள வும நான்மிகவும நெருககபபடுகிறேன்.

௫௰ நானபூமிககுச சமாதானததைத்த ருமபடிககுவநதேனெனறுநினைககிறீர்களா? அதையலல பிரிவினையைத் தருமபடிககு வநதேனெனறு உஙகளுககுசசொலலுகி றேன.

௫௧ எபபடியெனில, இதுமுதல ஒரே வீடடிலே ஐநதுபேர்பிரிநதிருபபார்கள. மூனறுபேர் இரணடுபேருககும இரணடு பேர் மூனறுபேருககும விரோதமாயிருப பார்கள.

௫௨ தகபபனமகனுககும மகனதகபப னுககும தாயமகளுககுமமகளதாயககும மாமியானமருமகளுககும மருமகளதனமா மிககும விரோதமாகபபிரிநது போவார்க ளெனறார்.

௫௩ பினபு அவர்சனஙகளுடனே சொன னது, நீஙகள ஒருமேகமமேறகிலே யெழு மபுகிறதைககாணகிறவுடனே, பெருமழை வருமெனறுசொலலுகிறீர்கள. அநதபபடி யேயுமாகும.

௫௪ அலலாமலும தென்றல அடிககிற தை நீஙகளகாணகிறபொழுது, காஙகையு ணடாகுமெனகிறீர்கள. அநதபபடியேயு மாகும. ஆ வஞசகரே, பூமியினுருவததை யுமவானததினுருவததையும வகையறுகக அறிநதிருககிறீர்கள. இககாலததைமாததி ரம நீஙகளவகையறுமவிதமெபபடி?

௫௫ அலலாமலும நியாயமினனதென று நீஙகள உஙகளாலேயெணணிககொளள ாமலிருககிறதெனன?

௫௬ நீ உன எதிராளியுடனேகூடததுரை யினிடததுககுபபோகிறபொழுது, அவ னைவிட்டு நீஙகுமபடிககு, வழியிலேபிரயா சபபடுவாயாக. இலலாவிடடால, அவனஉ னனைநியாயாதிபதிககுமுனபாககொணடு போவதுமலலாமல, நியாயாதிபதியுனனைச சேவகனுககு ஒபபுககொடுபபான. சேவக ன உனனைககாவலிறபோடுவான.

௫௭ நீ ஒருகாசாகிலுமகுறையாமறசெ லுததுகிறவரைககும அவவிடததிலிருநது விடுதலையாககபபடமாடடாயெனறுஉனக குசசொலலுகிறேனெனறார்.

## ௰௯. அதிகாரம்.

[(க) கலிலேயர் முதலானவர்கள கெடடுப போனதுபோலககெடடுப போகாதபடி கரு, மறறபபாவிகளை மனநதிருபபவே ணடுமெனபதைக குறிததுச சொலலிய து. (௬) கனிகொடாத அததிமரததை உவமையாகக்காடடியது. (௰) பெரும பாடுளளஸதிரியை யவர்குணமாககினது. (௰௪) ஒயவுநாளைககுறிததுச சொலலிய து. (௰௮) மோட்ச இராசசியததைககு றிதது உவமைகளைசசொலலியது. (௨௧) மோட்ச இராசசியததிலே பிரவேசிககி றதறகுபபுததிகளைசசொலலியது. (௩௧) ஏரோதைககுறிததுப பரிசேயருககு உத தரவுசொலலியது. (௩௪) எருசலேமுக குசசாபததையறிவிததது.]

பிலாததெனபவன சிலகலிலேயருடைய இரத்தத்தையவர்களுடைய பலிகளுடனே கலநதிருநதான். அநதககலிலேயரைககுறி தது அவவேளையிலே அஙகேயிருககிறசிலர் அவருடனேபேசிககொணடார்கள.

௨ அவர்களுககுபபிரததியுததரமாக இ யேசுவானவர்சொனனதாவது, அநதககலி லேயர் அபபடிபபடடவைகளையனுபவித ததினாலே மறறெலலாககலிலேயரிலும (அ திக) பாவிகளாயிருநதார்களெனறுநினைக கிறீர்களா?

௩ அபபடியிலலையெனறுஙகளுககுசசொ லலுகிறேன. நீஙகளமனநதிருபபாவிடடா ல எலலாரும அபபடிக கெடடுபபோவீர் கள.

௪ அலலாமலுஞ சீலோவாமிலே கோபு ரமவிழுநது பதினெடடுபபேரைககொனற தே. எருசலேமிறகுடியிருககிறமனிதரெல லாரிலும அநதபபதினெடடுபபேரும அதி கக்குற்றவாளிகளா யிருநதார்களெனறு நி னைககிறீர்கள்?

௫ அபபடியிலலையெனறு உஙகளுககுச சொலலுகிறேன. நீஙகளமனநதிருபபாவி டடால எலலாரும அபபடிபபோலககெடு வீர்களெனறார்.

௬ அலலாமலும அவர்சொனனஉவமை யாவது, ஒருவன திராட்சததோடடததில ஒரு அததிமரததைநாடடியிருநதான்.

௭ பினபு அவனவநது அதிலேகனியைத தேடினபொழுது ஒனறுஙகாணவிலலை. உ டனே அவன தோடடககாரனைநோககி, இதோ மூனறுவருஷமாய இநத அததிமர ததிலே கனியைததேடிவருகிறேன். ஒனறு ஙகாணவிலலை. இதைவெடடிபபோடு. நில ததையும இது எனனததிறகுக கெடுககிற தெனறான.

௮ அதறகவனசொனனது, ஐயா நான இதைசசுறறிககுததிஎருபபோடுவேன. ஒரு வேளை இதுகனிகொடுககும. ஆகையால இது இநதவருஷவளாககுமிருககடடும.

௯ கனிகொடாதிருநதால நீர் இனிமேல இதைவெடடிபபோடலாமெனறு சொன னானெனறார்.

௰ ஓய்வுநாளில் அவர் ஒருசெப ஆலயத்திற் போதகம்பண்ணிக்கொண்டிருந்தபொழுது,

௰௧ பதினெட்டுவருஷமாய்ப் பெலவீனமாக்கச்செய்கிற ஆவியையுடைய ஒருஸ்திரீ அங்கேயிருந்தாள். அவள் எவ்வளவும் நிமிரக்கூடாதகூனியாயிருந்தாள்.

௰௨ இயேசுவானவர் அவளைக்கண்டு தம்மிடத்தில் அழைத்து ஸ்திரீயே, உன்பெலவீனத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டாயென்றுசொல்லி அவள்மேலே தமதுகைகளை வைத்தார்.

௰௩ உடனேயவள் நிமிர்ந்து பராபரனைத் துதிசெய்தாள்.

௰௪ இயேசுவானவர் ஓய்வுநாளிலே சுகமாக்கினதைச்செப ஆலயத்தலைவன்கண்டு விசனம் அடைந்து சனங்களைநோக்கி, வேலைசெய்யும்படிக்கான ஆறுநாளுண்டு அவைகளிலே நீங்கள்வந்து சுகமாக்கிக்கொள்ளுங்கள். ஓய்வுநாளிலே அப்படிச்செய்யக்கூடாதென்றான்.

௰௫ அவனுக்கு மாறுத்தரமாகக்கர்த்தர்சொன்னது வஞ்சகனே உங்களிலெவனும் தன் எருதை அல்லது தன்கழுதையை ஓய்வுநாளிலேதொழுவிலிருந்து அவிழ்த்துக்கொண்டுபோய் அதற்குத்தண்ணீர் காட்டுகிறதில்லையா?

௰௬ (அதுபோல) ஆபிரகாமின்சந்ததியிற் பதினெட்டுவருஷஞ் சாத்தானாலே கட்டப்பட்டிருக்கிற இவளை ஓய்வுநாளிலே அந்தச்சங்கிலியிலிருந்து அவிழ்த்துவிடவேண்டியதில்லையாவென்றார்.

௰௭ அப்படியவர் சொன்னபொழுது அவரைவிரோதித்திருந்த அனைவரும்வெட்கப்பட்டார்கள். அல்லாமலுஞ் சனங்களெல்லாரும் அவர்செய்த மகிமையானசெய்கைகளைக்குறித்துச்சந்தோஷப்பட்டார்கள்.

௰௮ பின்பு அவர்சொன்னது பராபரனுடைய இராச்சியம் எதற்கொப்பாயிருக்கின்றது. அதை எதற்கு நிகர்சொல்வேன்.

௰௯ அது ஒருகடுகுவிதைக்கொப்பாயிருக்கின்றது.(எப்படியென்னில்) ஒருகடுகை ஒரு மனிதன் எடுத்துத்தன் தோட்டத்திற்போட்டான். அதுவளர்ந்து பெரியசெடியாயிற்று. அப்பொழுது ஆகாசத்துப்பறவைகள் அதின்கிளைகளிற் கூடுகட்டினவென்றார்.

௨௰ அன்றியும் அவர்சொன்னது, பராபரனுடைய இராச்சியத்தை எதற்கு நிகர்சொல்வேன்.

௨௧ அது புளிப்புள்ளமாவுக்கொப்பாயிருக்கின்றது. எப்படியென்னில் அதையொரு ஸ்திரீ எடுத்து மூன்றுமரக்கால் மா முழுவதும்புளிப்படையத்தக்கதாக அதிலே அடைக்கிவைத்தாளென்றார்.

௨௨ அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப்போகிறபொழுது பட்டணங்களதோறுங் கிராமங்களதோறும்போய் உபதேசம்பண்ணினார்.

௨௩ அப்பொழுது ஒருவன் அவரைநோக்கி ஆண்டவரே சிலபேர்மாத்திரந்தான் இரட்சிக்கப்படுவார்களோவென்றான்.

௨௪ அதற்கு அவர்சொன்னது, இடுக்கமானவாசல்வழியாய் (நீங்கள்) பிரவேசிக்க மிகவும்பிரயாசப்படுங்கள். என்னத்தினாலென்னில் அநேகர் உட்பிரவேசிக்கத்தேடியும் பிரவேசிக்கமாட்டார்களென்றுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௨௫ வீட்டெசமான் எழுந்திருந்து கதவைப்பூட்டினபின்பு நீங்கள்வெளியேநின்றுகதவிலேதட்டி ஆண்டவரே ஆண்டவரே எங்களுக்குத்திறக்கவேண்டுமென்று கூப்பிடத்தொடங்குங்காலத்திலே அவர் நான் உங்களைப்பறியேனென்றும் நீங்கள்விட்டுவந்த இடத்தையறியமாட்டேனென்றும் உங்களுடனேசொல்லும்பொழுது,

௨௬ நீங்கள் உமக்குமுன்பாகப்போசனபானம்பண்ணினோமே. நீர் எங்கள்வீதிகளிலேபோதகம்பண்ணினீரோயென்றுசொல்லுவீர்கள்.

௨௭ ஆனாலும் அவர்சொல்வது உங்களையறியேன். நீங்கள்விட்டுவந்த இடத்தையறியேன். அக்கிரமக்காரராகிய நீங்களெல்லாரும் என்னைவிட்டுப்போங்களென்றுசொல்வாரென்றுஉங்களுக்குச்சொல்லுகிறேன்.

௨௮ நீங்கள் ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோப்பென்பவர்களையுஞ் சகலதீர்க்கதரிசிகளையும்பராபரனுடைய இராச்சியத்திலுள்ளவர்களென்றும் உங்களைப்புறம்பேதள்ளப்பட்டவர்களென்றுங் காணும்பொழுது உங்களுக்கு அழுகையும்பற்கடிப்புமுண்டாயிருக்கும்.

௨௯ அன்றியுங்கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலுந்தெற்கிலுமிருந்துசனங்கள்வந்து பராபரனுடைய இராச்சியத்திற்பந்தியிருப்பார்கள்.

௩௰ அப்பொழுது பிந்தினோர்முந்தினோராயிருப்பார்கள். முந்தினோர் பிந்தினோராவார்களென்றார்.

௩௧ அந்தநாளிலேசிலபரிசேயர்அவரிடத்திற்போய் ஏரோதேஉம்மைக்கொலைசெய்யமனதாயிருக்கிறான். ஆகையால் நீர் இவ்விடத்தைவிட்டுப்போகவேண்டுமென்றார்கள்.

௩௨ அவர்களுடனேயவர்சொன்னது நீங்கள்போய் இன்றைக்குமநாளைக்குமநான் பசாசுகளைத்துரத்தி ஆரோக்கியங்களைச் செய்துமுடித்து மூன்றாநாளில் நிறைவடைவேன்.

௩௩ முக்கியமாக எருசலேமுக்குப்புறம்பே ஒருதீர்க்கதரிசிமடிந்துபோகிறது வழக்கமல்லாதபடியால் நான் இன்றைக்கும் நாளைக்குமபின்வருகிறநாளிலேயும் இவ்வி

டங்கலில நடககவேணடியதாயிருககிறதென்று அந்தநரிககுச்சொலலுஙகள.

௩௪ எருசலேமபட்டினததாரே எருசலேமபட்டினததாரே, உங்களிடததில அனுப்பப்பட்டவர்களைமேறகலலெறிநதுதீர்ககதரிசிகளைககொலைசெயகிறவர்களே ஒருகோழி தனகுஞசுகளைததன சிறகுகளினகீழேசேர்ததுககொளளுகிறவிதமாய நான அநேகதரம உஙகளைச்சேர்ததுககொளளவேணடுமெனறிருநதேன. நீஙகளவேணடாமெனறீர்கள.

௩௫ (ஆதலால) உஙகளவாசஸ்தலமபாழாககிவிடப்படும. அலலாமலும நீஙகள பராபரனுடைய நாமததினாலவருகிறவர் தோததிரஞ செயயப்படததககவரென்று சொலலுஙகாலமவருமளவும எனனைககாணாமலிருப்பீர்களென்றார்.

## ௧௪. அதிகாரம்.

[(௧) ஓயவுநாளிலேஒருதிமிர்வாததககாரனைச்சுகமாககினது.(௭) விருநதுக்களையும மனத்தாழமையையுங குறிததுச்சொலலியது.(௰௬) பெரியவிருநதைப்பணணினவனை உவமையாகச்சொலலியது.(௨௫) தமமைப பினபறறுகிறதைக குறிததுச்சொலலியது,)

௧ ஒரு ஓயவுநாளில அவர்பரிசேயருககுளளேதலைவரானவர்களில ஒருவனுடைய வீட்டிலேபோசனமபணணும்படிககுப்போனபொழுது.

௨ பாணடுவியாதியுளள ஒருமனிதன அவருககுமுனபாகநிறகையில, அவர்கள அவரைநோககிப்பார்ததுககொணடிருநதார்கள.

௩ அப்பொழுது இயேசுவானவர்நியாயசாஸ்திரிகளையும பரிசேயரையும நோககி, ஓயவுநாளிலேசுகமாககுகிறது நியாயமாவெனறார்.

௪ அதறகு அவர்களபேசாமலிருநதார்கள. அப்பொழுது அவர் அவனைப்பிடிதது சுகமாககி.

௫ அனுப்பிப்பினபு அவர்களுடனே சொனனது,உஙகளிலெவனுடைய ஆவுதானகழுதையாவது எருதாவது ஓயவுநாளிலொருகிணறறிலேவிழுநதால உடனேயதைததூககிவிடானோவெனறார்.

௬ அதற்குமாறுததரஞசொலல அவர்களதிராணியிலலாதிருநதார்கள்.

௭ விருநதுக்கழைககப்பட்டவர்கள் பநதியில் முதலிடஙகளைத தெரிநதுகொணடதை அவர்பார்தது அவர்களுக்கு உவமையாய்ச்சொனனது,

௮ நீ ஒருவனாற் கலியாணததுக்கழைக்கப்பட்டபொழுது பநதியில் முதலிடததிலுட்காராதிரு. எனனததினாலெனறால் உன்னிலும அதிக்கனமுளளவன் அவனால்அழைககப்பட்டிருக்க,

௯ உனனையும அவனையும அழைததவன் உனனிடததிலவநது இவருக்கிடங்கொடுவெனறுசொலல, நீ வெட்கததோடேதாழநத இடததிற்போயிருக்கவேணடியதாயிருககும.

௰ ஆகையால் நீ அழைககப்பட்டபொழுது நீ போய்த்தாழநத இடததிலுட்காருவாயாக. அப்பொழுது உனனையழைததவன் உனனிடததிலவநது சிநேகிதனே, மேலான இடததிற்போயிருமெனறுசொலலப்பநதியிலிருககிறவர்களுககு முனபாக உனக்குக்கனமுணடாகும்.

௰௧ அப்படிககு எவன் தனனை உயர்ததுகிறானோ அவன தாழ்ததப்படுவான். எவன தனனைததாழ்ததுகிறானோ அவனுயர்ததப்படுவானெனறார்.

௰௨ அலலாமலும அவர்தமமை விருநதுக்கழைததவனுடனே சொனனது, நீர்பகல்விருநதை அலலது இராவிருநதைப்பண்ணுகிறபொழுது உமது சிநேகிதரையுஞ் சகோதரரையுமமறற இனததாரையும்ஐசுவரியமுளள பிறரையும அழைக்கக்கூடாது. அழைததால் அவர்களும உமமையழைப்பார்கள். அதினாலேயுமக்குப்பதிற்பலனுண்டாகும்.

௰௩ நீர்விருநதுபணணுமபொழுதுஏழைகள் ஊனர் சப்பாணிகள் குருடர் இப்படிப்பட்டவர்களையழைப்பீராக.

௰௪ அப்பொழுது அவர்கள் உமககுப் பதிற்கொடுக்கத் திராணியிலலாதபடியால் நீர்பாககியராயிருப்பீர். நீதிமான்கள் உயிரோடெழுநதிருக்குங்காலததிலே உமக்குப் பதில் அளிககப்படுமெனறார்.

௰௫ அவரோடேகூடப்பநதியிருநதவர்களிலொருவன இநத வசனஙகளைக்கேட்டபொழுது அவன அவரைநோககிப் பராபரனுடைய இராசசியததிற் போசனம் பணணுகிறவனபாக்கியவானென்றான்.

௰௬ அதற்கவர்சொனனது,ஒருமனிதன் பெரியவிருநதுபணணி,

௰௭ அநேகரையழைதது விருநதுவேளையிலேதன ஊழியககாரனைநோககி, நீ அழைக்கப்பட்டவர்களிடததுக்குப்போய்ச்சகலமும எததனமாயிற்று. ஆகையால் வாருஙகளென்றுசொலலுவெனறு அனுப்பினான.

௰௮ அப்பொழுது அவர்களெல்லாரும் போககுச்சொலலத தொடஙகினார்கள். ஒருவன சொனனது, ஒரு வயல்நிலததைககொணடேன். நானபோய் அதைப்பார்க்க அவசியமாயிருககினறது. ஆகையால் எனககுமனனிககவேணடுமெனறு உனனை வேணடிககொளளுகிறேனென்றான.

௰௯ வேறொருவனசொனனது, ஐநதேர் மாடுகொணடேன். அவைகளை நானபோய்

ச்சோதிக்கவேண்டும். ஆகையால் எனக்கு மன்னிக்கும்படிக்கு உன்னைவேண்டிக்கொள்ளுகிறேனென்றான்.

௨௰ வேறொருவன்சொன்னது, பெண்ணை விவாகம்பண்ணினேன். அதினாலே நான்வரக்கூடாதென்றான்.

௨௧ பின்பு அந்த ஊழியக்காரன்வந்து அவைகளைத்தன் எசமானுக்கு அறிவித்தான். அப்பொழுதுவீட்டெசமான் கோபம் அடைந்து தன் ஊழியக்காரனைநோக்கி, நீ சீக்கிரமாய்ப்பட்டினத்தின் தெருக்களிலும் வீதிகளிலும் போய்த்தரித்திரரையும் ஊனரையுஞ் சப்பாணிகளையுங் குருடரையும் இங்கே அழைத்துக்கொண்டு வாவென்றான்.

௨௨ அந்தப்படி ஊழியக்காரன் அழைத்துவந்து ஆண்டவரே, நீர்கட்டளையிட்டபடிசெய்தாயிற்று.

௨௩ பின்னும் இடமுண்டென்றான். அப்பொழுது எசமான் ஊழியக்காரனுடனே சொன்னது, நீ வழிகளிலும் வேலிகளருகேயும்புறப்பட்டுப்போய் என் வீடு நிறையும்படிக்குச்சனங்களைவருந்திக்கூட்டிக்கொண்டுவா.

௨௪ அழைக்கப்பட்டிருந்த அந்தமனிதரிலொருவராகிலும் என்னுடைய விருந்தை ருசிபார்ப்பதில்லையென்றுங்களுக்குச் சொல்லுகிறேனென்றுசொன்னார்.

௨௫ பின்பு அநேகசனங்கள் அவரோடேகூடப்பிரயாணமாய்ப்போகையில் அவர் திரும்பிப்பார்த்து அவர்களுடனேசொன்னதாவது

௨௬ ஒருவன் என்னிடத்தில்வந்துந்தன் தகப்பனையுந் தாயையும்மனைவியையும் பிள்ளைகளையுஞ் சகோதரரையுஞ் சகோதரிகளையுந் தன்சுயசீவனையும்பகையாவிட்டால் என் சீஷனாயிருக்கமாட்டான்.

௨௭ அல்லாமலுந் தன்சிலுவையைத்தைச் சுமந்துகொண்டு எனக்குப்பின்செல்லாதவன் என்சீஷனாயிருக்கமாட்டான்.

௨௮ உங்களிலெவனாகிலும் ஒருகோபுரத்தைக்கட்ட மனதாயிருந்தால் தான் அஸ்திபாரம்போட்டபின்பு அதைமுடியக்கட்டுகிறதற்குத் திராணியில்லாமலிருக்கும் பொழுது,

௨௯ அதைப்பார்க்கிறவர்களெல்லாரும் இந்தமனிதன்கட்டத்தொடங்கி முடிக்கிறதற்குத்திராணியில்லையென்று தன்னைப்பரியாசம்பண்ணாதபடிக்கு,

௩௰ அவன்முன்பு உளுக்கார்ந்து அதைக்கட்டித்தீர்க்கிறதற்குத்திராணியுண்டா இல்லையாவென்று அறியும்படி செலவுஞ்செலவைக்கணக்குப்பாராமலிருப்பானா?

௩௧ அல்லது எந்த இராசாவானாலும் மற்றொரு இராசனுடனே யுத்தஞ்செய்யப்போகிறதற்குமுன்பு உளுக்கார்ந்து தனக்குவிரோதமாய்இருபதினாயிரஞ்சேவகரைக்கொண்டுவருகிறவனோடேபதினாயிரஞ்சேவகரைக்கொண்டு எதிர்க்கக்கூடுமா கூடாதாவென்று ஆலோசனைபண்ணாமலிருப்பானா?

௩௨ கூடாதென்று அறிந்தால் அவன் தூரத்திலிருக்கையில் தானுபதிகளை யனுப்பிச்சமாதானத்துக்காகக் கேட்டுக்கொள்ளும்படிக்கு(அப்படிச்செய்வானல்லவா)

௩௩ அதுபோல உங்களிலெவனானாலுந் தனக்குண்டான எல்லாவற்றையும் வெறுத்துவிடாவிட்டால் என் சீஷனாயிருக்கமாட்டான்.

௩௪ உப்பானது நல்லதுதான். உப்பானது சாரமற்றுப்போனால் எதினாலே அது சாரமாக்கப்படும்.

௩௫ அது நல்லநிலத்திலாகிலும் எருவிலாகிலும் போடப்படத்தக்கதல்ல. அதை வெளியேகொட்டிப்போடுவார்கள். கேட்கிறதற்குக்காதுள்ளவன் கேட்கக்கடவனென்றார்.

## ௰௫. அதிகாரம்.

[(௧) அவர்ஆயக்காரரோடேசாப்பிட்டது. (௩) காணாமற்போன ஆட்டையும், (௮) காணாமற்போனபணத்தையும், (௰௧) கெட்டுப்போன குமாரனையும் உவமைகளாகச்சொன்னது.]

அன்றியுஞ் சகல ஆயக்காரரும் பாவிகளும் அவருடைய வசனங்களைக்கேட்கும்படிக்கு அவரிடத்திற்சேர்ந்தார்கள்.

௨ அப்பொழுது பரிசேயரும்வேதபாரகரும் முறுமுறுத்து இவர் பாவிகளையேற்றுக்கொண்டு அவர்களோடே சாப்பிடுகிறாரென்றார்கள்.

௩ அவர்களுடனே அவர்சொன்ன உவமையாவது,

௪ உங்களில் யாவனானாலுந் தனக்குடைமையான நூறு ஆடுகளிலொன்றையிழந்தால் தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் வனாந்தரத்தில்விட்டுப்போய் இழந்ததைக்கண்டுபிடிக்கும்பரியந்தந் தேடாமலிருப்பானா?

௫ கண்டுபிடித்தபின்பு அவன் அதைச்சந்தோஷமாய்த்தன் தோள்களின்மேலேற்றிக்கொண்டு வீட்டுக்குவந்தபொழுது,

௬ சிநேகிதரையும் அயலாரையுங் கூடவரவழைத்துக்காணாமற்போன என் ஆட்டைக்கண்டுபிடித்தேன். ஆகையால் என்னோடேகூடச்சந்தோஷப்படுங்களென்பானல்லவா?

௭ அதுபோல மனந்திரும்ப அகத்தியப்படாத தொண்ணூற்றொன்பது நீதிமான்களிலும் மனந்திரும்புகிற ஒரே பாவியைக்குறித்துப் பரமண்டலத்திலுள்ளவர்களுக்குச்சந்தோஷமுண்டாகுமென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௮ அலலதுபத்துத்திராகுமாபணத்தையுடையபெண் எவளாகிலும ஒரு திராகுமாவை* யிழநதால விளக்கைக்கொளுத்தி வீட்டைபபெருக்கி அதைக்கண்டுபிடிக்குமபரியநதம நன்றாயத்தேடாமலிருபபாளா?

௯ கண்டுபிடித்தபின்பு அவள சிநேகிதிகளையும அயல்வீட்டுககாரிகளையுங கூடவரவழைத்து நானிழநத திராகுமாவைககணடுபிடித்தேன. ஆகையால என்னோடேகூடச சந்தோஷபபடுஙகளெனபாளலலவா?

௰ அதுபோல மனநதிருமபுகிற ஒரேபாவியைககுறிததுப்பராபர னுடைய தூதருககு முனபாகச்சநதோஷமுணடாயிருககிறதென்று உஙகளுககுச சொலலுகிறேனென்றார்.

௰௧ பினனும அவர் சொனனதாவது, ஒருமனிதனுககு இரணடு குமாரரிருநதார்கள.

௰௨ அவர்களில இளையவன தகப்பனை நோககித்தகப்பனே, ஆஸ்தியில எனககு வருமபஙகைத்தரவேணடுமெனறான. அநதப்படி அவன அவர்களுககுபபொருளைப பஙகிட்டான.

௰௩ சிலநாளுககுபபின்பு இளையமகன எலலாவறறையுஞ் சேர்த்துககொணடு தூரதேசத்திற்குப்பிரயாணமாயப்போய அஙகே கெட்டமார்ககமாயச்சீவனம்பணணித்தன் ஆஸ்தியையழித்துப்போட்டான.

௰௪ எலலாவறறையும அவனசெல்வழித்தபின்பு அததேசத்திலேமிகுநதபஞசகாலமுணடாயிறறு.

௰௫ அபபொழுது அவனுககுககுறைவுவரததொடஙகினபடியினாலேஅவன்போய் அநதத்தேசத்துககுடிகளில ஒருவனைச்சேர்நதுகொணடான. அநதககுடியானவன அவனைத்தனவயலகளிலே பனறிகளைமேயககுமபடிககு அனுபபினான.

௰௬ அபபொழுது பனறிகள தினனுகிற தவிடுகளினாலே தனவயிறறைநிரபப ஆசைபபட்டான. அவறறையும ஒருவனும அவனுககுககொடுககவிலலை.

௰௭ அபபடியிருக்குங்காலத்தில் அவன் புததியடைநதுசொனனதாவது, ஆ என் தகப்பனிடத்திலே எத்தனை கூலிக்காரர் மிகுநத உணவையுடையவர்களாயிருககிறார்கள். நான் இஙகே பசியினாலே கெட்டுப போகிறேன்.

௰௮ நான் எழுநது என தகப்பனிடத்துககுப்போய்த்தகப்பனேதேவனுக்குமஉமககும விரோதமாய்ப்பாவஞ்செய்தேன்.

௰௯ இதுமுதல்நான்உமமுடையகுமாரனென்றழைககபபடுவதற்கு அபாத்திரனாயிருக்கிறேன். உமமுடைய கூலிககாரரிலொருவனைபபோல என்னை வைத்துக்கொளளுமென்றுசொலலவேண்டுமென்று எண்ணி,

௨௰ எழுநதுபுறப்பட்டுத்தன் தகப்பனிடத்துககுப்போனான். அபபொழுது அவன் தூரமாயிருககையில்தகப்பன் அவனைககணடுஉருககமாயிரஙகிஓடிவநதுஅவனுடையகழுத்தைககட்டிககொணடு அவனை முத்தஞ்செய்தான்.

௨௰௧ குமாரன அவனைநோககி, தகப்பனே தேவனுககும உமககுமவிரோதமாய்ப்பாவஞ்செய்தேன். இதுமுதல் உமமுடைய குமாரனென்று அழைககபபடுவதற்கு நானபாத்திரனலலவென்று சொனனபொழுது,

௨௰௨ தகப்பன் தன்வேலைககாரரைநோககி, நீஙகள (போய்) முககியமானவஸ்திரத்தைககொணடுவநது இவனுககு உடுத்தி, இவனுடையகைக்குமோதிரத்தையுங் கால்களுககுப்பாதரட்சைகளையுஙகொடுத்து,

௨௰௩ பின்புகொழுத்தகனறைககொணடுவநதடித்துச்சமையுஙகள்.

௨௰௪ என் குமாரனாகிய இவன்மரித்தான். மறுபடியும உயிரோடிருககிறான். இவன் காணாமற்போனான். இபபொழுதுகாணப்பட்டான். ஆகையால்நாம்பொசித்துமகிழ்ச்சியாயிருக்கக்கடவோமெனறான். அநதபபடியவர்களசநதோஷப்படததொடஙகினார்கள.

௨௰௫ அவனுடையமூத்தகுமாரன வயலிலிருநதான். அவனதிருமபி வீட்டுககுச்சமீபமாய்வநதபொழுது கீத்வாத்தியத்தையும் நடனக்களிப்பையுஙகேட்டு,

௨௰௬ வேலைககாரரிலொருவனையழைத்து இதெனனவென்றுவிசாரித்தான.

௨௰௭ வேலைககாரன அவனை நோககி, உன் சகோதரன வநதான். உன்தகப்பன் அவனைச்சுகத்தோடே திரும்பப்பெறறுக் கொணடபடியினாலே கொழுத்த கனறையடிபபித்தானெனறான்.

௨௰௮ அபபொழுதுஅவனகோபமடைநது உளளேபோக மனதிலலாதிருநதான். ஆதலால் தகப்பன்வெளியேவநது அவனை மிகவுமவேணடிககொணடழைத்தான்.

௨௰௯ அவன்தகப்பனுககுபபிரத்தியுத்தரமாகச்சொனனது, இவ்வளவுவருஷம நான் உமககூழியஞ்செய்து உமது கற்பனையை ஒருககாலும் மீறிநடககவிலலை. அபபடியிருநதும நான் என்சிநேகிதரோடேமகிழ்ச்சியாயிருககுமபடிககு ஒருககாலும் நீர் ஒரு ஆட்டுககுட்டியை எனககுக்கொடுக்கவிலலையே.

௩௰ உமமுடைய பொருள்களை வேசிகளோடேபட்சித்த உமதுகுமாரனாகிய இவன்வநதபொழுதுகொழுத்தகன்றை இவனுக்காக அடிபபித்தீரென்றான்.

* திராகுமா ஒனறிற்கு ஏறககுறைய இரணடுசினனபணம ஒபபாயிருககும.

௩௧ அதற்குத் தகப்பன் சொன்னது, மகனே நீ எப்பொழுதும் என்னோடிருக்கிறாய். அல்லாமலும் என்னுக்குண்டானயாவும உன்னுடையவைகளாயிருக்கின்றன.

௩௨ உன் சகோதரனாகிய இவன் மரித்தான். மறுபடியும் உயிரோடிருக்கிறான். காணாமற்போனான். (இப்பொழுது) காணப்பட்டான். ஆனபடியினாலே நாம் மகிழ்ச்சியாகிக் களிப்படையவேண்டுமேயென்று சொன்னானென்றார்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) அநீதியுள்ள உக்கிராணக்காரனை உவமையாகச்சொன்னது. (௰௪) பரிசேயருடையபொருளாசையையும் வஞ்சனையையுங்கடிந்தது. (௰௯) ஐசுவரியவானையும எளியவனையும உவமையாகச்சொன்னது.]

அன்றியும அவர் தமமுடைய சீஷரோடு சொன்னதாவது, ஐசுவரியமுள்ளமனிதனுக்கு ஒரு உக்கிராணக்காரனிருந்தான். அவன் எசமானுடைய ஆஸ்திகளை அழிக்கிறதாக அவனுக்கறிவித்தார்கள்.

௨ அப்பொழுது எசமான் அவனையழைத்து உன்னைக்குறித்து நான இப்படிக்கேள்விப்பட்டிருக்கிறேன். நீயினிமேல் உக்கிராணக்காரனாயிருக்கக்கூடாது. ஆகையால் உன் உக்கிராணக்கணக்கைக்கொடு என்றான்.

௩ அப்பொழுது உக்கிராணக்காரன் தனக்குள்ளேயெண்ணிக்கொண்டதாவது, என் எசமான் உக்கிராணவிசாரிப்பை யென்னிலிருந்து எடுத்துக்கொள்ளுகிறபடியினாலே என்னசெய்யலாம். (நிலங்) கொத்துகிறதற்குப்பெலனில்லை. இரக்க வெட்கமாயிருக்கிறது.

௪ உக்கிராணவிசாரிப்பைவிட்டுத்தள்ளப்பட்டபொழுது என்னைத்தங்கள்வீடுகளிற் சேர்த்துக்கொள்ளுகிறதற்கான (சிநேகிதர்க) ளுண்டாகும்படிக்குச்செய்யவேண்டிய வகைதெரியவந்ததென்றெண்ணி,

௫ தன் எசமானிடத்திற்கடன்பட்டவர்களை ஒருவரொருவராக அழைத்து முதலாவது வந்தவனைநோக்கி, நீ யென் எசமானிடத்திற்பட்டகடன் எவ்வளவு என்றான். அதற்கவன் நூறுகுடம எண்ணெய் என்றான்.

௬ அப்பொழுது உக்கிராணக்காரன் அவனைநோக்கி, நீ உன் சீட்டையெடுத்துச் சீக்கிரமாய உட்கார்ந்து ஐம்பதென்று எழுதென்றான்.

௭ பின்பு அவன்வேறொருவனைநோக்கி, நீ பட்டகடன் எவ்வளவு என்றான். அதற்கவன் நூறுகலம் கோதுமையென்றான். அப்பொழுது உக்கிராணக்காரன் அவனை நோக்கி, நீ உன் சீட்டையெடுத்து எண்பதென்றெழுதென்றான்.

௮ அநீதியுள்ள உக்கிராணக்காரன் விவேகமாய்ச் செய்தபடியினாலே எசமான் அவனைப்புகழ்ந்தான். இவ்விதமாய் ஒளியின் பிள்ளைகளிலும இப்பிரபஞ்சத்தின் பிள்ளைகள் தங்கள் சந்ததியில அதிகவிவேகமாயிருக்கிறார்கள்.

௯ நானும உங்களுக்குச்சொல்லுகிறதாவது, நீங்கள்மாளும்பொழுது உங்களை நித்தியமானவீடுகளிற் சேர்த்துக்கொள்ளும்படிக்குக்கபடமுள்ள லவுகீகப்பொருளால் உங்களுக்காகச்சிநேகிதரைச்சம்பாதியுங்கள்.

௰ கொஞ்சத்திலே உண்மையுள்ளவன் அநேகத்திலேயும உண்மையாயிருப்பான். கொஞ்சமாய் அநீதிசெய்கிறவன் அநேகமாயும அநீதிசெய்வான்.

௰௧ அப்படியிருக்க நீங்கள் கபடமுள்ள லவுகீகப்பொருளிலேயுண்மையில்லாமலிருந்தால் மெய்யானபொருள்களையுங்களுக்கு யார் நம்பிக்கையோடேயொப்புவிப்பார்கள்.

௰௨ அல்லாமலும நீங்கள் மற்றொருவனுடையதையுண்மையில்லாமையாய நடத்தினால் உங்களுக்குச்சொந்தமாக எதையாகிலும யார் உங்களுக்குக்கொடுப்பார்கள்.

௰௩ எந்தவேலைக்காரனானாலும இரண்டெசமான்களுக்கு அடிமை செய்யமாட்டான். ஒருவனைப்பகைத்து மற்றவனைச்சிநேகிப்பான். அல்லது ஒருவனைப்பற்றிக்கொண்டு மற்றவனையசட்டைபண்ணுவான். நீங்கள் பராபரனுக்கும லவுகீகப்பொருளுக்கும அடிமையாயிருக்கமாட்டீர்களென்றார்.

௰௪ பணத்தின்மேல்ஆசையுள்ளவர்களாகிய பரிசேயரும இந்தவசனங்களையெல்லாங்கேட்டுஅவரைக்குறித்துப்பரியாசம்பண்ணினார்கள்.

௰௫ அப்பொழுது அவர் அவர்களைநோக்கி, நீங்கள்மனுஷர்முன்பாக உங்களைநீதிமான்களென்றுகாண்பிக்கிறீர்கள். ஆனாலும் பராபரன் உங்களிருதயங்களையறிந்திருக்கிறார். மனிதருக்குள்ளேமேன்மையாயெண்ணப்பட்டிருக்கிறது பராபரனுக்கு முன்பாக அருவருப்பாயிருக்கிறது.

௰௬ நியாயப்பிரமாணமும தீர்க்கதரிசிகளுடைய பிரமாணங்களும யோவான் வரைக்குஞ்சென்றன. அதுமுதற் பராபரனுடைய ஆளுகை சுவிசேஷமாயறிவிக்கப்பட்டுவருகின்றது. யாவரும வலுமையாய் அதற்குட்படுகிறார்கள்.

௰௭ வானமும்பூமியும் ஒழிந்துபோகிறது எளிதாயிருந்தாலும வேதப்பிரமாணத்தில் ஒரெழுத்தின்உறுப்புகெட்டுப்போகாது.

௰௮ தன் மனைவியைத்தள்ளி வேறொருத்தியை விவாகம்பண்ணுகிறவன் விபசாரஞ் செய்கிறான். புருஷனாலேதள்ளப்பட்டவளை

விவாகம்பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறான்.

௰௯ அன்றியும் ஐசுவரியமுள்ள ஒரு மனிதனிருந்தான். அவன் இரத்தாம்பரமும் மெல்லிசான உடையுந்தரித்து அனுதினமுஞ் சம்பிரம்மாய் வாழ்ந்துகொண்டிருந்தான்.

௨௰ அல்லாமலும் லாசரு என்னப்பட்ட ஒரு தரித்திரனிருந்தான். அவன் பருக்கள் நிறைந்த தேகமுள்ளவனாய் அந்த ஐசுவரியவானுடைய வாசலின் அருகே கிடந்து

௨௰௧ அவனுடைய போசன பாத்திரத்திலிருந்து விழும் உச்சிட்டங்களாலே தன் பசியை யாற்ற ஆசையாயிருந்தான்.

௨௰௨ அதுவுமல்லாமல் நாய்கள் வந்து அவனுடைய பருக்களை நக்கும்.

௨௰௩ பின்பு அந்தத் தரித்திரனானவன் மரித்துத் தேவதூதராலே ஆபிரகாமினுடைய மடியிலே கொண்டுபோய் விடப்பட்டான். ஐசுவரியவானும் மரித்து அடக்கம்பண்ணப்பட்டான்.

௨௰௪ பின்பு அவன் நரகத்திலே வேதனைப்படுகிறபொழுது தன் கண்களையுயர்த்தித் தூரத்திலே ஆபிரகாமையும் அவனுடைய மடியிலே லாசருவையுங் கண்டு,

௨௰௫ தகப்பனாகிய ஆபிரகாமே, இந்தச் சுவாலையிலே மிகுந்த வேதனைப்படுகிறேன். ஆகையால் நீர் என்மேலிரங்கி லாசரு தன்விரலின் நுனியைத் தண்ணீரிலே தோய்த்து என்னுடைய நாவைக் குளிரப்பண்ணும்படிக்கு அவனையனுப்பவேண்டுமென்று கூப்பிட்டான்.

௨௰௬ அதற்கு ஆபிரகாம் சொன்னது, மகனே நீ பூமியிலே உயிரோடிருந்த காலத்திலே உனக்கு (இஷ்டமான) நன்மைகளைப் பெற்றுக்கொண்டாயே. லாசருவும் அப்படியே தீமைகளைப் பெற்றுக்கொண்டான். அதை நினைத்துக்கொள். இப்பொழுது இவன் தேற்றப்படுகிறான். நீ வேதனைப்படுகிறாய்.

௨௰௭ அதுவுமல்லாமல் இவ்விடத்தைக் கடந்து உங்களிடத்துக்கு வரவும் அல்லது அவ்விடத்தைக் கடந்து எங்களிடத்துக்கு வரவும் மனதுள்ளவர்களுக்குக் கூடாதபடிக்கு எங்களுக்கும் உங்களுக்கும் நடுவே பெரும்பிளப்பு உண்டாக்கப்பட்டிருக்கின்றதேயென்றான்.

௨௰௮ அதற்கவன் சொன்னது, தகப்பனே அப்படியானால் (பூமியிலே) எனக்கு ஐந்து பேர் சகோதரருண்டு அவர்களும் வேதனையுள்ள இவ்விடத்துக்கு வாராதபடிக்கு இவன் போய் அவர்களுக்கு (இதைக்குறித்து) சாட்சிகொடுக்கும்பொருட்டாய்,

௨௰௯ இவனை என் தகப்பனுடைய வீட்டுக்கு அனுப்புமென்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேனென்றான்.

௩௰ அதற்கு ஆபிரகாம் சொன்னது அவர்களுக்கு மோசேயுந் தீர்க்கதரிசிகளுமுண்டே. அவர்களுக்குச் செவிகொடுக்கலாமேயென்றான்.

௩௰௧ அவன் சொன்னது, அப்படியல்லத் தகப்பனாகிய ஆபிரகாமே மரித்தோரிலிருந்து ஒருவன் அவர்களிடத்துக்குப் போனாலல்லவோ மனந்திரும்புவார்களென்றான்.

௩௰௨ அதற்கு அவன் சொன்னது, அவர்கள் மோசேயுக்குந் தீர்க்கதரிசிகளுக்குஞ் செவிகொடாமலிருந்தால் மரித்தோரிலிருந்து ஒருவன் எழுந்துபோனாலுஞ் சம்மதிக்கமாட்டார்களென்று சொன்னானென்றார்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) மற்றவர்களைக் கெடுக்கிறவனைக்குறித்தும், (௩) ஒருவருக்கொருவர் மன்னிப்பதைக்குறித்தும், (௫) விசுவாசத்தைக்குறித்துஞ் சொல்லியது. (௰௧) குஷ்டரோகிகள் பத்துப்பேரையுங் குணமாக்கினது (௨௰) பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் போதித்தது. (௨௰௨) மனிதகுமாரனுடைய வருகையைக்குறித்துச் சொல்லியது.]

அன்றியும் அவர் தமது சீஷருடனே சொன்னதாவது, குற்றஞ்செய்வதற்கான காரணங்கள் நடவாமலிருக்கிறது கூடாதகாரியந்தான். ஆனாலும் ஐயோ அவைகளைச் செய்கிறவனுக்கு வேதனைவரும்.

௨ அவன் இந்தச் சிறியரிலொருவன் குற்றஞ்செய்கிறதற்குக் காரணமாயிராதபடிக்கு அவனுடைய கழுத்திலே ஏந்திரக்கல்லைக் கட்டிச் சமுத்திரத்திலேயமிழ்த்தினால் அவனுக்கு நலமாயிருக்கும்.

௩ நீங்கள் சாவதானமாயிருக்கக்கடவீர்கள். பிறகொருவன் உனக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தானானால் அவனைக் கடிந்துகொள். அவன் மனஸ்தாபப்பட்டால் அவனுக்கு மன்னிப்பாயாக.

௪ அவன் ஒருநாளிலே ஏழுதரம் உனக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து ஒருநாளிலே ஏழுதரம் உன்னிடத்தில் வந்து மனஸ்தாபப்படுகிறேனென்று சொன்னாலும் அவனுக்கு மன்னிப்பாயாகவென்றார்.

௫ அப்பொழுது அப்போஸ்தலர் கர்த்தரை நோக்கி, விசுவாசம் எங்களுக்குள்ளே பெருகும்படி செய்யுமென்றார்கள்.

௬ அதற்குக் கர்த்தர் சொன்னது, கடுகு விதையளவு விசுவாசம் உங்களுக்குண்டாயிருந்தால் நீங்கள் இந்தக் காட்டத்திமரத்தை நோக்கி, நீ வேரோடே பிடுங்கப்பட்டுக் கடலிலே நாட்டப்படுவாயாகவென்று சொல்ல அது உங்களுக்குக் கீழ்ப்படியும்.

௭ அன்றியும் உங்களிலொருவனுடைய ஊழியக்காரன் உழுதலையாவது மேய்த்தலையாவது செய்கிற

(தன்) வேலைக்காரனை வயலிலிருந்து வரக் (காணும்) பொழுது நீ போய்ச் சாப்பிடுவென்று உடனே அவனுக்குச் சொல்லுவான்.

௮ நீ எனக்காக இராப்போசனத்தை எத்தனம்பண்ணிக் கச்சைகட்டிக்கொண்டு நான் போசனபானம் பண்ணுமளவும் எனக்கூழியஞ்செய். பின்பு நீ போசனபானம்பண்ணலாமென்றல்லவா அவனுடனே சொல்லுவான்.

௯ அந்த வேலைக்காரன் தனக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்கிறபடியினாலே எசமான் அவனை உபசாரஞ்செய்வானா. அப்படிச் செய்யமாட்டானென்று நினைக்கிறேன்.

௰ அப்படிப்போல நீங்களும் உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட யாவையுஞ் செய்த பொழுதும் நாங்கள் உபசாரம் பெறத்தக்க (?) ஊழியக்காரரல்ல எங்களுக்குக் கட்டளையிடப்பட்டதை மாத்திரஞ் செய்தோமேயென்று சொல்லுவீர்களாகவென்றார்.

௰௧ அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப் போகையிற் சாமாரியா நாட்டின் வழியாயுங் கலிலேயா நாட்டின் வழியாயும் நடந்து,

௰௨ ஒரு கிராமத்திற் பிரவேசிக்கிறபொழுது குஷ்டரோகமுள்ள பத்துப்பேர் அவருக்கெதிராக வந்து தூரத்திலே நின்று,

௰௩ இயேசுவே ஐயரே எங்கள்மேலிரங்குமென்று கூப்பிட்டார்கள்.

௰௪ அவர்களை அவர் கண்டு நீங்கள் போய் உங்களை ஆசாரியருக்குக் காண்பியுங்களென்றார். அந்தப்படியவர்கள் போகையிற் சுத்தமானார்கள்.

௰௫ அப்பொழுது அவர்களிலொருவன் தான் ஆரோக்கியம் அடைந்ததைக் கண்டு,

௰௬ திரும்பி மிகுந்த சத்தத்துடனே பராபரனைத் துதித்து அவருடைய பாதத்தின் முகே சாஷ்டாங்கமாய் விழுந்து அவருக்குத் தோத்திரஞ்செலுத்தினான்.

௰௭ அவன் சாமாரியா தேசத்தான். அப்பொழுது இயேசுவானவர் சொன்னது, பத்துப்பேருமல்லவோ சுத்தமானார்கள். ஒன்பதுபேரெங்கே.

௰௮ பராபரனுக்குத் துதியைச் செலுத்தும்படிக்கு இந்த அந்நியனேயொழிய மற்றொருவனுந் திரும்பிவரவில்லையாவென்று சொல்லி,

௰௯ அவனை நோக்கி, நீ யெழுந்து போ. உன் விசுவாசம் உன்னை இரட்சித்ததென்றார்.

௨௰ பராபரனுடைய ஆளுகை யெப்பொழுது வருமென்று பரிசேயர் அவரிடத்தில் விசாரித்தபொழுது அவர் அவர்களுக்கு மறுமொழியாகச் சொன்னது, பராபரனுடைய ஆளுகை வேடிக்கைப்பிரகாரமாக வாராது.

௨௧ இதோ இங்கேயென்றும் அதோ அங்கேயென்றுஞ் சொல்லமாட்டார்கள். பராபரனுடைய ஆளுகை யுங்களுக்குள்ளிருக்கின்றதேயென்றார்.

௨௨ பின்னுஞ் சீஷருடனே அவர் சொன்னது மனிதகுமாரனுடைய நாட்களிலொன்றைக் காணும்படிக்கு நீங்கள் ஆசைப்படுங்காலம் வரும். அதைக் காணமலிருப்பீர்கள்.

௨௩ அப்பொழுது சிலர் உங்களை நோக்கி, இதோ இங்கேயிருக்கிறானென்றும் அதோ அங்கேயிருக்கிறானென்றுஞ் சொல்லுங்காலத்தில் நீங்கள் புறப்படாமலும் பின்செல்லாமலுமிருங்கள்.

௨௪ மின்னலானது வானத்தின் ஒருபக்கத்திலிருந்து மற்றொருபக்கமளவாகும் பிரகாசிக்கிறதுபோல மனிதனுடைய குமாரன் தன்னுடைய நாளிலிருப்பார்.

௨௫ அதற்குமுன்பு அவன் அநேகம்பாடுகளையனுபவித்து இந்தச் சந்ததியினாலே தள்ளப்படவேண்டியிருக்கின்றது.

௨௬ நோவாவின் நாட்களில் நடந்ததுபோல மனிதகுமாரனுடைய நாட்களிலும் நடக்கும்.

௨௭ நோவா பேழைக்குட் பிரவேசித்த நாள்வரைக்குஞ் சனங்கள் போசனபானம் பண்ணியும் பெண்கொண்டும் பெண்கொடுத்தும் வந்தார்கள். அந்நாளிலே சலப்பிரளயம் வந்து எல்லாரையும் அழித்தது.

௨௮ லோத்தினுடைய நாட்களில் நடந்ததுபோலவும் நடக்கும் சனங்கள் போசனபானம்பண்ணியும் பொருள்களைக்கொண்டும் விற்றுஞ் செடிகளை நாட்டியும் (வீடுகளைக்) கட்டியும் வந்தார்கள்.

௨௯ லோத்தென்பவன் சோதோமை விட்டுப் புறப்பட்ட நாளிலே வானத்திலிருந்து அக்கினியுங் கந்தகமும் பெய்து எல்லாரையும் அழித்தது.

௩௰ மனிதனுடைய குமாரன் வெளிப்படும் நாளில் அப்படியேயிருக்கும்.

௩௧ அந்த நாளிலே வீட்டின்மேலிருப்பவன் வீட்டுக்குள்ளிருக்கிற தன் பண்டங்களையெடுத்துக்கொண்டுபோகும்படிக்கு இறங்காமற்போகக்கடவன். அன்றியும் வயலிலிருப்பவன் பின்னிட்டுத் திரும்பாமற் போகக்கடவன்.

௩௨ லோத்தினுடைய மனைவியை நினையுங்கள்.

௩௩ எவனானாலுந் தன் சீவனை இரட்சித்துக்கொள்ளத் தேடினால் அதை யிழந்துபோவான். எவனானாலும் அதையிழந்தால் அதைக் காத்துக்கொள்ளுவான்.

௩௪ அந்த இராத்திரியில் ஒரே படுக்கையின்மேற் படுக்கும் இரண்டுபேரில் ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான். மற்றவன் விட்டுவிடப்படுவான்.

௩௫ மாவரைக்கும் இரண்டு பெண்களி லொருத்தி பிடித்துக்கொள்ளப்படுவாள். மற் றவள் விட்டுவிடப்படுவாள்.

௩௬ வயலிலிருக்கும் இரண்டு பேரிலொருவ ன் பிடித்துக்கொள்ளப்படுவான். மற்றவன் விட்டுவிடப்படுவானென்று உங்களுக்குச் சொ லுகிறேனென்று சொன்னபொழுது,

௩௭ அவர்கள் அவரை நோக்கி, ஆண்ட வரே எங்கேயென்றார்கள். அதற்கு அவர் சொன்னது, பிணம் எங்கேயோ அங்கே கழு க்கள் சேருமென்றார்.

## ௧௮. அதிகாரம்.

[(௧) மிகவும் வேண்டிக்கொண்ட கைம்பெ ண்ணை உவமையாகச் சொல்லியது. (௯) ப ரிசேயனும் ஆயக்காரனும் செபம்பண் ணினதைக் குறித்துச் சொல்லியது. (௧௫) குழந்தைகளை ஆசீர்வதித்தது. (௧௮) நித் தியசீவனைக் குறித்து விசாரித்த ஒருவனு க்கு உத்தரவு சொன்னது. (௨௨) ஐசுவ ரியவான்கள் மோட்சத்திற் பிரவேசிக்கிற தரிதென்பதைக் குறித்துச் சொல்லிய து. (௨௮) தம்மைப் பின்பற்றுகிறவர்க ளுக்கு வரும் பலனைக் காட்டியது. (௩௧) தமது பாடுகளை முன்னறிவித்தது. (௩௫) குருடனைக் குணமாக்கினது.]

அன்றியும் அவர்கள் சோர்ந்துபோகாம ல் எப்பொழுதும் செபம்பண்ணவேண்டுவ தைக் குறித்து அவர் அவர்களுக்குச் சொன் ன உவமையாவது,

௨ ஒரு பட்டினத்திலே ஒரு நியாயாதிபதி பராபரனுக்குப் பயப்படாமலும் மனிதரை யெண்ணாமலுமிருந்தான்.

௩ அல்லாமலும் அந்தப் பட்டினத்திலே ஒரு கைம்பெண்ணிருந்தாள். அவள் அவனி டத்திற் போய் எனக்கு விரோதியானவனிட த்திற் பழிவாங்கவேண்டுமென்றாள்.

௪ அவன் அநேகநாள் மனதில்லாதிருந் தான். பின்பு அவன் அவனிடத்தில் அதிக மாய்க் கேட்டபடியினாலே அவன் தனக்குள் ளே யெண்ணினது, நான் பராபரனுக்குப் பயப்படாமலும் மனிதரை யெண்ணாமலுமி ருந்தும்,

௫ இந்தக் கைம்பெண் என்னைத் தொந்த ரவு பண்ணுகிறபடியால் நான் இவளுக்காக ப் பழிவாங்கவேண்டும். இல்லாவிட்டால் இ வள் எப்பொழுதும் வந்து என்னை வருத்த ப்படுத்துவாளென்றெண்ணினானென்று கர் த்தர் சொல்லி,

௬ பின்பு அநீதியுள்ள அந்த நியாயாதி பதி சொன்னதைச் சிந்தியுங்கள்.

௭ அந்தப்படி பராபரன் தான் தெரிந்து கொண்டவர்களைக் குறித்துத் தாமதித்துத் த ம்மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிற அவர்களுக்காகப் பழிவாங்காமலிருப்பாரா.

௮ சீக்கிரத்தில் அவர்களுக்காகப் பழிவா ங்குவாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் ஆகிலும் மனுஷனுடைய குமாரன் வரும் பொழுது பூமியின்மேல் விசுவாசத்தைக் காண் பாரோவென்றார்.

௯ அன்றியும் தங்களை நீதிமான்களென்று நம்பி மற்றவர்களை அற்பமாயெண்ணினவர்க ளுக்கு அவர் சொன்ன உவமையாவது,

௧௦ இரண்டு மனிதர் செபம்பண்ணும்படி க்குத் தேவாலயத்திற்குப் போனார்கள். அவ ர்களிலொருவன் பரிசேயன். மற்றவன் ஆயக் காரன்.

௧௧ பரிசேயனானவன் தனித்து நின்று பண்ணின செபமாவது, பராபரனே நான் பறிகாரர் அநீதர் விபசாரர் இப்படிப்பட் ட மற்ற மனிதரைப்போலவும் இந்த ஆயக் காரனைப்போலவுமிராதவனானபடியினாலே உமக்கு ஸ்தோத்திரஞ்செலுத்துகிறேன்.

௧௨ வாரத்துக்குள்ளே இரண்டுதரமுப வாசிக்கிறேன். எனக்குண்டான யாவற்றி லும் பத்திலொன்றைச் செலுத்துகிறேனெ ன்றான்.

௧௩ பின்பு ஆயக்காரன் தூரமாய் நின்று தன் கண்களையும் வானத்துக்குயர்த்தத்து ணியாமல் தன் மார்பிலே யடித்துக்கொண்டு பராபரனே பாவியாகிய என்மேலிரக்கமா யிருமென்றான்.

௧௪ அவனல்ல இவனே நீதிமானாக்கப்ப ட்டவனாய்த் தன் வீட்டுக்குத் திரும்பிப்போ னானென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். தன்னையுயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவா ன். தன்னைத் தாழ்த்துகிறவனே உயர்த்தப் படுவானென்றார்.

௧௫ பின்பு குழந்தைகளை யவர் தொடும்ப டிக்கு அவரிடத்திற் கொண்டுவந்தார்கள். சீஷர் அதைக்கண்டு அவர்களையதட்டினார் கள்.

௧௬ இயேசுவானவர் அவைகளைக் கொண் டுவரும்படி கட்டளையிட்டுச் சொன்னது, பி ள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்குத் தடை பண்ணாமல் விடுங்கோள். பராபரனு டைய இராச்சியம் அப்படிப்பட்டவர்க ளையுடையதே.

௧௭ எவனாகிலும் பிள்ளையைப்போலப் பராபரனுடைய இராச்சியத்தையேற்று க்கொள்ளாவிட்டால் அதில் பிரவேசிக்க மாட்டானென்றார்.

௧௮ அப்பொழுது தலைவனொருவன் அவ ரை நோக்கி, நல்லபோதகரே நித்தியசீவனை சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான் என்னசெய்யவேண்டுமென்று கேட்டான்.

௧௯ அதற்கு இயேசுவானவர் சொன்ன து, நீர் என்னை நல்லவனென்று ஏன் சொல்லு கிறீர். பராபரனொருவரேயல்லாமல் மற் றொருவனும் நல்லவனல்லவே.

௨௰ விபசாரம் பண்ணாதிருப்பாயாக, கொலை செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, உன் தகப்பனையும் உன் தாயையுங் கனம் பண்ணுவாயாகவென்று சொல்லுகிற கற்பனைகளையறிந்திருக்கிறீரேயென்றார்.

௨௧ அதற்கு அவன் அவைகளையெல்லாம் என் சிறுவயசு முதற்கொண்டிருக்கிறேனென்றான்.

௨௨ இயேசுவானவர் அதைக் கேட்டு அவனுடனே சொன்னது, பின்னும் ஒன்றை நீர் செய்யவேண்டியதாயிருக்கின்றது. உமக்குண்டானவைகளையெல்லாம் நீர் விற்று பரமண்டலத்திலே உமக்குப் பொக்கிஷமுண்டாயிருக்கும்படிக்குத் தரித்திரருக்குப் பங்கிட்டுக் கொடுத்து பின்பு வந்து எனக்குப் பின் செல்லவேண்டுமென்றார்.

௨௩ அவன் மிகுந்த ஐசுவரியவானானபடியினாலே அந்த வசனத்தைக் கேட்டபொழுது மிகுந்த துக்கம் அடைந்து (போனான்.)

௨௪ அவன் மிகுந்த துக்கம் அடைந்ததை இயேசுவானவர் கண்டு சொன்னதாவது. ஆஸ்திகளையுடையவர்கள் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிப்பது மிகவும் அரிது.

௨௫ ஒட்டகமானது ஒரு ஊசியின் காதிலே நுழைவது எளிதானாலும் ஐசுவரியவான் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கிறதும் எளிதாயிருக்குமென்றார்.

௨௬ அதைக் கேட்டவர்கள் சொன்னது, அப்படியானால் யார் இரட்சிக்கப்படுவார்களென்றார்கள்.

௨௭ அதற்கவர் சொன்னது, மனிதராலாகமாட்டாதவைகள் பராபரனாலேயாகுமென்றார்.

௨௮ அப்பொழுது பேதுரு அவரை நோக்கி இதோ நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உமக்குப் பின்சென்று வருகிறோமென்றான்.

௨௯ அதற்கவர் சொன்னது, பராபரனுடைய இராச்சியத்தினிமித்தமாக வீட்டையாவது தாயதகப்பன்மாரையாவது சகோதரரையாவது மனைவியையாவது பிள்ளைகளையாவது விட்டயாவரும்.

௩௰ இம்மையிலே அதிகமடங்காயும் மறுமையிலே நித்திய சீவனையும் அடையாமலிருப்பதில்லையென்றார்.

௩௧ பின்பு அவர் பன்னிருவரைச் சேர்த்துக்கொண்டு அவர்களுடனே சொன்னது இதோ எருசலேமுக்குப் போகிறோம் அங்கே மனிதனுடைய குமாரனைக்குறித்துத் தீர்க்கதரிசிகளாலெழுதப்பட்ட யாவும் நிறைவேறும்.

௩௨ எப்படியெனில் அவன் புறத்தேசத்தாருக்குக் கொப்புக்கொடுக்கப்பட்டுப் பரியாசமும் நிந்தையும் அடைந்து துப்பப்படுவான்.

௩௩ அல்லாமலும் அவனை வாரினால் அடித்துக் கொலைசெய்வார்கள். மேலும் மூன்றாம் நாளிலே உயிரோடெழுந்திருப்பானென்றார்.

௩௪ அவர்கள் இவைகளிலொன்றையும் உணரவில்லை. அவைகளின் பொருள் அவர்களுக்கு மறைவாயிருந்தது. அவர் சொன்னவைகளையறியாமலிருந்தார்கள்.

௩௫ அவர் இயேரிகோவூருக்குச் சமீபமான பொழுது வழியருகே ஒருக்கார்ந்து பிச்சைகேட்டுக்கொண்டிருக்கிற ஒருகுருடன்

௩௬ சனங்கள் நடக்கிறதைக் கேள்விப்பட்டு இதென்னவென்று விசாரித்தான்.

௩௭ நாசரேத்தூரானாகிய இயேசு நடந்து போகிறாரென்று அவனுக்கறிவித்தார்கள்.

௩௮ அப்பொழுது அவன் இயேசுவே தாவீதின் குமாரனே எனக்கிரங்குமென்று அதிகமாய்க் கூப்பிட்டான்.

௩௯ முன்னடப்பார் அவன் பேசாமலிருக்கும்படிக்கு அவனை அதட்டினார்கள். அவன் தாவீதின் குமாரனே எனக்கிரங்குமென்று அதிகமாய்க் கூப்பிட்டான்.

௪௰ அப்பொழுது இயேசுவானவர் நின்று அவனைத் தம்மிடத்திற் கொண்டுவரும்படி கட்டளையிட்டார். அவன் கிட்டவந்த பொழுது அவர் அவனை நோக்கி,

௪௧ நானுனக்கு என்ன செய்யவேண்டுமென்றிருக்கிறாயென்றார் அதற்கவன் ஆண்டவரே நான் பார்வையடையும்படி செய்யவேண்டுமென்றான்.

௪௨ இயேசுவானவர் அவனை நோக்கி, நீ பார்வையடைவாயாக. உன் விசுவாசம் உன்னையிரட்சித்ததென்றார்.

௪௩ உடனேயவன் பார்வையடைந்து பராபரனைப் புகழ்ந்து அவருக்குப் பின்சென்றான். அதைக்கண்ட சனங்களெல்லாரும் பராபரனுக்குத் துதிசெலுத்தினார்கள்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) சக்கேயுவைக்குறித்துச் சொல்லியது. (௰௧) பத்துருத்தல் வெள்ளியைப்பெற்ற ஊழியக்காரரை உவமையாகச் சொல்லியது. (௨௮) அவர் ஒருகழுதையின்மேலேறி எருசலேமிற் பிரவேசித்தது. (௪௧) எருசலேமைக்குறித்து அவர் அழுது அதற்குவரும் அழிவை முன்னறிவித்தது. (௪௫) தேவாலயத்திலிருந்த வியாபாரிகளைத் துரத்தினது.]

பின்பு அவர் இயேரிகோவூரிற் பிரவேசித்து அப்புறம் நடந்துபோனார்.

௨ அப்பொழுது ஆயக்காரருக்குத் தலைவனுமாய ஐசுவரியவானுமாயிருந்த சக்கேயு என்னப்பட்டமனிதன் இயேசுவானவரையறியும்படிக்கு அவரைப்பார்க்கவலைத் தேடினான்.

௩ அவன் குட்டையனானபடியால் சனக் கூட்டத்திலே அவரைக் காணக்கூடாமலிருந்தது.

௪ அப்பொழுது அவன் அவரைப் பார்க்கும்படிக்கு முன்னாக ஓடி அவர் செல்லுகிற வழியிலே நிற்கிற காட்டத்திமரத்தின் மேலேறினான்.

௫ இயேசுவானவர் அந்த இடத்திற்கு வந்தபொழுது அண்ணாந்து பார்த்து அவனைக் கண்டு சக்கேயுவே இன்றைக்கு நான் உன் வீட்டிலே தங்கவேண்டும். ஆகையால் நீ சீக்கிரமாயிறங்கிவாவென்றார்.

௬ அந்தப்படியவன் சீக்கிரமாயிறங்கிச் சந்தோஷத்தோடேயவருக்கு உபசாரஞ் செய்தான்.

௭ அதைக்கண்ட அனைவரும் சொன்னது இவர் பாவியான மனிதனிடத்திலே தங்கும்படிக்குப் போகிறாரென்று முறுமுறுத்தார்கள்.

௮ சக்கேயு என்பவன் நின்று கர்த்தரை நோக்கி, ஆண்டவரே என் ஆஸ்திகளிற் பாதியை ஏழைகளுக்குக் கொடுக்கிறேன் அல்லாமலும் நான் ஒருவனிடத்தில் எதையாகிலும் அநியாயமாய் எடுத்திருந்தேனானால் நாலுமடங்காயப் பதிற் செலுத்துகிறேனென்றான்.

௯ அப்பொழுது இயேசுவானவர் அவனைக் குறித்துச் சொன்னது இழந்துபோனதைத் தேடியிரட்சிக்கும்படிக்கு மனிதனுடைய குமாரன் வந்திருக்கிறபடியினாலே இன்றைக்கு இந்தக் குடும்பத்திற்கு இரட்சிப்புண்டாயிற்று.

௰ இவனும் ஆபிரகாமினுடைய சந்ததியானல்லவாவென்றார்.

௰௧ அன்றியும் அவர்கள் இவைகளைக் கேட்டுக்கொண்டிருக்கையில் அவர் எருசலேமுக்குச் சமீபமானபடியினாலும் பராபரனுடைய இராச்சியஞ் சீக்கிரமாகக் காணப்படுமென்று அவர்கள் நினைத்தபடியினாலும் அவர் சொன்ன உவமையாவது,

௰௨ உயர்குலத்தானாகிய ஒருவன் ஒரு இராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு பின்பு திரும்பிவரும்படிக்குத் தூரதேசத்துக்குப் போகும்போது,

௰௩ தன்னுடைய பத்து ஊழியக்காரரை யழைத்து அவர்களுக்குப் பத்துருத்தல் திரவியங்கொடுத்து நான் வருமளவாக்கும் இதினாலே தொழில் செய்யுங்களென்று சொல்லிப்போனான்.

௰௪ அவனுடைய பட்டினத்தார் அவனைப் பகைத்து அவன் எங்களையாளுகை செய்ய எங்களுக்குச் சம்மதமில்லையென்று சொல்லும்படிக்கு அவனுக்குப் பின்னாகத் தானாபதிகளை யனுப்பினார்கள்.

௰௫ அப்படியிருந்தும் அவன் இராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு திரும்பிவந்து தான் திரவியங்கொடுக்கப்பெற்றிருந்த அந்த ஊழியக்காரர் தொழில் செய்ததினாலே ஆதாயமாகச் சம்பாதித்தது இவ்வளவென்று அறியும்படிக்கு, அவர்களைத் தன்னிடத்துக்கு அழைத்துவரச் சொன்னான்.

௰௬ அந்தப்படியே முந்தினவன் சேர்ந்து ஆண்டவனே, உம்முடைய ருத்தலப்பத்துருத்தலை ஆதாயம் பண்ணிற்றென்றான்.

௰௭ அவனுடனே எசமான் சொன்னது, நல்லது உத்தம ஊழியக்காரனே, நீ கொஞ்சத்திலே யுண்மையாயிருந்தபடியினாலே பத்துப் பட்டினங்களுக்கு அதிகாரியாயிருவென்றான்.

௰௮ பின்பு இரண்டாமூழியக்காரன் சேர்ந்து ஆண்டவனே, உம்முடைய ருத்தல் ஐந்துருத்தலை ஆதாயம் பண்ணிற்றென்றான்.

௰௯ அவனுடனேயும் அவன் சொன்னது, நீயும் ஐந்து பட்டினங்களுக்கு அதிகாரியாயிருவென்றான்

௨௰ பின்பு வேறொருவன் சேர்ந்து, ஆண்டவனே நீர் வையாததை யெடுக்கிறவரும் நீர் விதையாததை அறுக்கிறவருமாயிருக்கிற கடினமுள்ள மனிதனாயிருக்கிறதை நான் அறிந்து உமக்குப் பயப்பட்டபடியினாலே,

௨௧ உம்முடைய ருத்தலை ஒரு சீலையிலே வைத்துக்கொண்டேன். இதோ அது இருக்கிறதென்றான்.

௨௨ அவனுடனேயவன் சொன்னது, பொல்லாத ஊழியக்காரனே உன் வாக்கின்படி உனக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறேன். நான் வையாததை யெடுக்கிறவனுமாய் விதையாததை யறுக்கிறவனுமாயிருக்கிற கடினமுள்ள மனிதனென்றறிந்தாயே.

௨௩ ஆகையால் நான் திரும்பி வருகிறபொழுது என் திரவியத்தை வட்டியோடே பெற்றுக்கொள்ளும்படிக்கு நீயதை (வட்டிக்காரர்) காசுக்கடையிலே ஏன் கொடுக்கவில்லையென்று சொல்லி,

௨௪ சமீபமாய் நிற்கிறவர்களை நோக்கி, நீங்கள் அந்த ருத்தலை இவனிலிருந்தெடுத்துப் பத்துருத்தலுள்ளவனுக்குக் கொடுங்களென்று கட்டளையிட்டபொழுது.

௨௫ அவர்கள் ஆண்டவனே அவனுக்குப் பத்துருத்தலுண்டேயென்ன,

௨௬ அவன் பின்னுஞ்சொன்னது, நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, உள்ளவனுக்குக் கொடுக்கப்படும் இல்லாதவனுக்குண்டாயிருக்கிறதும் அவனிலிருந்தெடுக்கப்படும்.

௨௭ அன்றியும் நான் தங்களுக்கு இராசாவாயிருக்க மனதில்லாமலெனக்குச் சத்துருக்களான அவர்களை இங்கே கொண்டுவந்து என்முன்பாக வெட்டிப்போடுங்களென்று சொன்னானென்றார்.

௨௮ இவைகளையவர் சொன்னபின்பு அவர் எருசலேமுக்குப் போகும்படி முன்னே

நடந்தார்.

௨௯ அப்படியவர் ஒலிவமலையென்னப்பட்டமலையின்றருகேயிருக்கிற பெத்பாகே பூருக்கும் பெத்தானியாவூருக்குஞ் சமீபமானபொழுது அவர் தமது சீஷரிலிருவரை நோக்கி,

௩௰ அதோ உங்களுக்கெதிராயிருக்கிற கிராமத்துக்குப்போங்கள். அதிற் பிரவேசிக்கும்பொழுது மனிதரிலொருவனுமேறும் ஒருக்காலும் ஏறாதகழுதைக்குட்டியைக் கட்டியிருக்கக்காண்பீர்கள். அதையவிழ்த்துக்கொண்டுவாருங்கள்.

௩௧ இதையேன் அவிழ்க்கிறீர்களென்று ஒருவன் உங்களிடத்திற்கேட்டால் ஆண்டவருக்கு இதுவேண்டுமென்று அவனுக்குச் சொல்லுங்களென்றார்.

௩௨ அந்தப்படி அனுப்பப்பட்டவர்கள் போய்த்தங்களுக்கு அவர்சொன்னபிரகாரமாகக்கண்டார்கள்.

௩௩ கழுதைக்குட்டியையவர்கள் அவிழ்க்கிறபொழுது அதின் எசமான்கள் அவர்களை நோக்கிக்குட்டியை ஏன் அவிழ்க்கிறீர்களென்றார்கள்.

௩௪ அதற்கு அவர்கள் ஆண்டவருக்கு இதுவேண்டுமென்றுசொல்லி,

௩௫ அதை இயேசுவினிடத்திற் கொண்டுவந்து தங்கள் வஸ்திரங்களைக்குட்டியின்மேற்போட்டு இயேசுவை அதின்மேலேற்றினார்கள்.

௩௬ அப்படியவர்போகையில் அவர்கள் தங்கள்வஸ்திரங்களைவழியிலேவிரித்தார்கள்.

௩௭ அல்லாமலும் அவர் ஒலிவமலையின் அடிவாரமாய்ச்சேர்ந்துவருகிறபொழுது, சீஷரின் கூட்டத்தாரெல்லாருந் தாங்கள் கண்ட சகல அற்புதங்களையுங் குறித்துச் சந்தோஷப்பட்டு மிகுந்தசத்தத்துடனே பராபரனைத்துதிக்கத்தொடங்கிப் பராபரனுடைய நாமத்தினாலேவருகிற இராசா தோத்திரிக்கப்பட்டவர்.

௩௮ பரமண்டலத்திற் சமாதானமும் உன்னதங்களிற் புகழ்தலுமுண்டாவதாகவென்றார்கள்.

௩௯ அப்பொழுது கூட்டத்திலிருந்தபரிசேயரிற் சிலர் அவரைநோக்கிப் போதகரே, நீர் உம்முடையசீஷரையதட்டவேண்டுமென்றார்கள்.

௪௰ அவர்களுக்குமறுமொழியாக அவர் சொன்னது, இவர்கள் பேசாதிருந்தாற் கல்லுகள்கூப்பிடுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௪௧ அன்றியும் அவர்பட்டினத்துக்குச் சமீபமானபொழுது அவர் அதைப்பார்த்து அதைக்குறித்துக்கண்ணீர்விட்டு நீயுன் கூக்கடைத்த இந்தநாளிலே உன்சமாதானத்துக்கேற்றவைகளைச்சிந்தித்துக்கொண்டால் நலமாயிருக்கும்.

௪௨ இப்பொழுது அவைகள் உன்கண்களுக்கு மறைவாயிருக்கின்றன.

௪௩ உன்னைச்சந்திக்குங்காலத்தை நீ அறிந்துகொள்ளாமலிருக்கிறபடியினாலே உன் சத்துருக்கள் உன்னைச்சூழ்மதிலபோட்டு உன்னைவளைந்துகொண்டு,

௪௪ எங்கும் உன்னை நெருக்கிப்பிடித்து உன்னையும் உன்னிலுள்ளவர்களையுந் தரையாக்கி உன்னிடத்தில் ஒருகல் மற்றொருகல்லின்மேலிராதபடிக்குச்செய்யும் நாட்கள் உனக்குவருமென்றார்.

௪௫ பின்பு அவர் தேவாலயத்திற்பிரவேசித்து,

௪௬ அதிலே விற்கிறவர்களையுங் கொள்ளுகிறவர்களையும்நோக்கி, நம்முடைய ஆலயம் செபம்பண்ணுதற்கான ஆலயமென்றெழுதியிருக்கின்றதே. நீங்கள் இதைக்கள்ளர்குகையாக்கினீர்களென்றுசொல்லி, அவர்களைப்புறம்பேதுரத்தினார்.

௪௭ அல்லாமலும் நாடோறும் அவர் தேவாலயத்தில் உபதேசம்பண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகருஞ் சனத்தின் மூப்பரும் அவரைக்கொலைசெய்யவகைதேடி,

௪௮ சனங்களெல்லாரும் மிகுந்தசிந்தையோடேயவருக்குச்செவிகொடுத்தபடியினாலே வகையைக்காணாமற்போனார்கள்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) தமது அதிகாரத்தைக்குறித்துப் பரிசேயர்கேட்க உத்தரவுசொன்னது. (௯) திராட்சத்தோட்டக்காரரை உவமையாகச்சொன்னது. (௰௯) வரியைக்கொடுக்கிறதைக்குறித்துக்கேட்டவர்களுக்கு உத்தரவுசொன்னது. (௨௭) மறுமையைக்குறித்துச் சதுசேயருக்குஉத்தரவுசொன்னது. (௪௧) தாவீதின்குமாரனைக்குறித்து அவர்களிடத்தில்விசாரித்தது. (௪௫) தம்முடைய சீஷர்களுக்கு எச்சரிக்கைசெய்தது.]

அந்நாட்களிலொருநாளிலே அவர் தேவாலயத்திற் சனங்களுக்கு உபதேசம்பண்ணிச் சுவிசேஷத்தைப்பிரசங்கிக்கிறபொழுது, பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அவருக்கு விரோதமாயவந்தின்று,

௨ அவரைநோக்கி, நீர் எந்த அதிகாரத்தினாலிவைகளைச்செய்கிறீர். இப்படிப்பட்ட அதிகாரத்தை யுமக்குக்கொடுத்தவர் இன்னாரென்று எங்களுக்குச்சொல்லுமென்றார்கள்.

௩ அதற்குப்பிரத்தியுத்தரமாக அவர்சொன்னது, நானும் உங்களிடத்தில் ஒருகாரியத்தைக்கேட்பேன்.

௪ என்னவென்றால, யோவான கொடுத்த ஸ்நானந தேவனாலுண்டாயிறறோ மனிதராலுண்டாயிறறோ அதையெனககுச சொல்லுங்களென்றார்.

௫ அப்பொழுது அவர்கள தங்களுககுள்ளே யோசனைபண்ணினதாவது,

௬ தேவனாலுண்டாயிற்றென்று நாஞ் சொன்னால, நீங்கள அவனை ஏன விசுவாசிக்கவில்லையென்பார். அது மனிதராலுண்டாயிற்றென்று நாஞ்சொன்னால, எல்லாச்சனங்களும யோவானைத தீர்க்கதரிசியென்றெண்ணிக்கொள்ளுகிறபடியினாலே, நமமேற் கல்லெறிவார்களென்றும் யோசனைபண்ணி,

௭ பின்பு அதுவந்தவிதம எங்களுக்குத தெரியாதென்றார்கள.

௮ அதற்கு இயேசுவானவர் சொன்னது, அப்படியானால, நான இன்ன அதிகாரத்தினாலே இவைகளைச செய்கிறேனென்று நானும உங்களுக்குச சொல்லமாட்டேனென்றார்.

௯ பின்பு அவர் சனங்களுடனே சொன்ன உவமையாவது, ஒருமனிதன திராட்சத்தோட்டத்தையுண்டாககி, அதைத தோட்டககாரர்வசமாயவிட்டு, அநேககாலமாய பபுறத்தேசமபோயிருந்தான்.

௰ தகுதியானகாலத்திலே அந்தத தோட்டககாரர் திராட்சத்தோட்டத்தின கனிகளிலொருபங்கைத் தனககுககொடுத்தனுப்பும்படிக்கு, அவன ஒரு ஊழியககாரனை அவர்களிடத்துக்கனுப்பினான். அந்தத தோட்டககாரர் அவனையடித்து, வெறுமையாயனுப்பிவிட்டார்கள.

௰௧ பின்பு அவன வேறொரு ஊழியககாரனையனுப்பினான. அவனையும அவர்கள அடித்து, நிந்தைப்படுத்தி, வெறுமையாயனுப்பிவிட்டார்கள.

௰௨ அதனபின்பு அவன மூன்றாமூழியககாரனையனுப்பினான. அவனையும அவர்கள காயப்படுத்தித துரத்தினார்கள.

௰௩ அப்பொழுது திராட்சத்தோட்டத்தின எசமான எண்ணினது, நான என்ன செயயலாம. எனககுப பிரியமானகுமாரனையனுப்பினால, அவர்களகண்டு கனஞ்செயவார்களென்றெண்ணி அவனையனுப்பினான.

௰௪ தோட்டககாரர் அவனைககண்டபொழுது, இவனசுதந்தரவாளி. சுதந்தரமநமமுடையதாகும்படிக்கு இவனைககொலைசெயயவேண்டுமென்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணி,

௰௫ வாருங்களென்றுசொல்லி, அவனைத திராட்சத்தோட்டத்துககு வெளியேத்தள்ளிக்கொலைசெயதார்கள. ஆதலால திராட்சத்தோட்டத்தின எசமான அவர்களையென்னசெயவான.

௰௬ அவனவந்து அந்தத்தோட்டக்காரரையழித்துத திராட்சத்தோட்டத்தை வேறுமனிதருக்குக்கொடுப்பானல்லவாவென்றார். அதையவர்களகேட்டு, அப்படியாகாதிருப்பதாகவென்றார்கள.

௰௭ அப்பொழுது அவர் அவர்களைப்பார்த்து, வீடுகட்டுகிறவர்கள ஆகாதென்றுதள்ளின கலலே கோடிககுத்தலையான கலலாயிற்றென்று எழுதியிருககிறவேதவாககியத்தின கருத்தென்ன.

௰௮ அந்தக்கலலினமேல விழுகிறவனெவனோ அவன நொறுககபபடுவான. அன்றியும அதுவிழுபபடுகிறவனெவனோ அவனை நசுககிப்போடுமென்றார்.

௰௯ அப்பொழுது தங்களைககுறித்து அந்த உவமையைச்சொன்னாரென்று, பிரதான ஆசாரியரும வேதபாரகரும அறிந்து அந்நேரத்திலே அவர்மேற்கைகளைபபோடவிருமபினார்கள. சனங்களுககுபபயபபட்டபடியால (நிறுத்தினார்கள.)

௨௰ பின்பு அவர்கள அவரையேநோககிககொண்டு, ஆளுகைககும நியாயாதிகாரத்துககும முனபாக அவரையொபபுககொடுககிறதற்கேதுவாக, அவருடையவசனத்தில குற்றங்கண்டுபிடிககும்படிக்குத் தங்களை நீதிமானகளபோலககாணபிககிற வேவுகாரரை அவரிடத்தில அனுப்பினார்கள.

௨௧ அவர்களவந்து அவரைநோககிப போதகரே, நீர் செமமையாயபபேசியுபதேசிககிறவரென்றும பட்சபாதமில்லாம சத்தியமாயபபராபரனுடையமார்ககத்தைபபோதிககிறவரென்றும அறிந்திருககிறோம.

௨௨ நாம இராயனுககுவரிகொடுககலாமோ கொடாமலிருககலாமோவென்று, அவரிடத்திற்கேட்டார்கள.

௨௩ அவர்களுடைய தந்திரத்தை அவர் அறிந்து அவர்களைநோககி, நீங்கள என்னையேன சோதிககிறீர்கள.

௨௪ பணத்தை யெனக்குக்காண்பியுங்கள. அதிலிருககிற சொரூபமும மேலெழுத்தும யாருடையவைகளென்றார். அவை இராயனுடையவைகளென்றுமாறுத்தரஞ்சொன்னார்கள.

௨௫ அவர்சொன்னது, அப்படியானால் நீங்கள இராயனுடையதை இராயனுக்கும் பராபரனுடையதைபபராபரனுக்குஞ் செலுத்துங்களென்றார்.

௨௬ அவர்கள அவரைச்சனங்களுககுமுன்பாக ஒருவசனத்தில அகப்படுத்தக்கூடாமல்,

௩௫ அறுப்புநாள் வருகிறதற்கு நாலுமாதஞ் செல்லுமென்று நீங்கள் சொல்லுகிறதில்லையா. அதோ வயல்நிலங்களில் விளைந்து இப்பொழுதே அறுப்புக்கு வெண்மையாயிருக்கின்றனவென்று உங்கள் கண்களையுயர்த்திப் பாருங்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௬ விதைக்கிறவனும் அறுக்கிறவனும் கூடச் சந்தோஷப்படத்தக்கதாக, அறுக்கிறவன் கூலியைவாங்கி நித்தியசீவனுக்காகப் பலனைச் சேர்த்துக்கொள்ளுகிறான்.

௩௭ இதைக் குறித்து, ஒருவன் விதைக்கிறான், மற்றொருவன் அறுக்கிறானென்கிற வழக்கச்சொல் மெய்யாயிருக்கின்றது.

௩௮ நீங்கள் பிரயாசப்படாததை அறுக்கும்படிக்கு, நான் உங்களை அனுப்பினேன். மற்றவர்கள் வேலைசெய்தார்கள், நீங்கள் அவர்களுடைய வேலையிலே எத்தனமான (?) பிரவேசித்திருக்கிறீர்களென்றார்.

௩௯ அந்தஸ்திரீ தான்செய்தயாவையும் எனக்குச் சொன்னாரென்று சாட்சியிட்டவசனத்தினிமித்தம் அந்தவூரிலுள்ள சமாரியரில் அநேகர் அவர்மேல் விசுவாசமானார்கள்.

௪௰ ஆகையால் சமாரியர் அவரிடத்திலே வந்தபொழுது, தங்களிடத்திலே தங்கும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள். அந்தப்படி அவர் இரண்டுநாள் அங்கே தங்கினார்.

௪௧ அப்பொழுது மிகவும் அதிகமான மனிதர் அவருடைய உபதேசத்தினிமித்தம் விசுவாசித்து,

௪௨ பின்பு ஸ்திரீயை நோக்கி, உன்சொல்லினிமித்தமல்ல நாங்களும் அவருடைய உபதேசத்தைக் கேட்டு, அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலக இரட்சகரென்று அறிந்து விசுவாசிக்கிறோமென்றார்கள்.

௪௩ இரண்டுநாள் அங்கே தங்கின பின்பு அவர் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுக் கலிலேயா நாட்டுக்குத் திரும்பப் போனார்.

௪௪ ஆகிலும் தீர்க்கதரிசியானவன் தன் சென்மவூரிலே கனமடையானென்று இயேசுவானவர் தாமே சொல்லியிருந்தார்.

௪௫ அவர் கலிலேயா நாட்டிலே சேர்ந்தபொழுது எருசலேமிலே பண்டிகைநாளில் அவர்செய்தயாவையும் பார்த்திருந்த கலிலேயர் அவரையேற்றுக்கொண்டார்கள், பின்பு இயேசுவானவர் தாம் தண்ணீரைத் திராட்சரசமாக்கின கலிலேயாவிலுள்ள கானாவூருக்குத் திரும்பவும் போனார்.

௪௬ அப்பொழுது கப்பர்நாகூமூரிலே இராசாவின் மனிதரிலொருவனுடைய குமாரன் வியாதியுள்ளவனாய்க் கிடந்தான்.

௪௭ இயேசுவானவர் யூதேயாவிலிருந்து கலிலேயாவில் வந்ததை யந்தமனிதன் கேள்விப்பட்டவுடனே, அவரிடத்திற்குப் போய்த் தன்மகனுக்குச் சமீபித்திருந்தபடியினாலே, அவனைச் சுகமாக்கும்படிக்கு வர வேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டான்.

௪௮ இயேசுவானவர் அவனை நோக்கி நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்களையுங் காணாவிட்டால், விசுவசிக்கமாட்டீர்களென்றார்.

௪௯ அதற்கு இராசாவின் மனிதன் சொன்னது, ஆண்டவரே, என்பிள்ளை சாகிறதற்கு முன்னே வாருமென்றான்.

௫௰ இயேசுவானவர் சொன்னது, நீ வீட்டிற்குப் போ உன்னுடைய குமாரன் பிழைத்திருக்கிறானென்றார். இயேசுவானவர் சொன்ன வசனத்தை நம்பி யந்தமனிதன் போனான்.

௫௧ அவன் போகையில், அவனுடைய ஊழியக்காரர் அவனுக்கெதிராக வந்து, உம்முடைய குமாரன் பிழைத்திருக்கிறானென்று அறிவித்தார்கள்.

௫௨ அப்பொழுது எவ்வளவு மணிநேரத்திலே அவனுக்குச் சொஸ்தமாயிற்றென்று அவர்களிடத்திலே விசாரித்தான். அவர்கள் சொன்னது, நேற்று ஏழாம் மணிநேரத்திலே சுரம் அவனைவிட்டு நீங்கிற்றென்றார்கள்.

௫௩ அந்தநேரம், உன் குமாரன் பிழைத்திருக்கிறானென்று இயேசுவானவர் தனக்குச் சொன்ன மணிநேரமென்று தகப்பனானவன் அறிந்தான். பின்பு அவனும் அவனுடைய குடும்பத்தாரனைவரும் அவரிடத்திலே விசுவாசமுள்ளவர்களானார்கள்.

௫௪ இயேசுவானவர் யூதேயாவைவிட்டுக் கலிலேயா நாட்டிற்குத் திரும்பிப்போனபொழுது, இந்த இரண்டாம் அற்புதத்தைச் செய்தார்.

## ௫. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து எருசலேமுக்குப்போய், முப்பத்தெட்டு வருஷம் வியாதிப்பட்டவனைக் குணமாக்கினதும், (௰௬) அதற்காக யூதர்கள் அவரைத் துன்பப்படுத்த யோசனைபண்ணினதும், (௰௯) அவர்களுக்கு இயேசுவானவர் தமது தன்மையைக் குறித்தும், (௩௨) தமக்காக யோவான் சொன்ன சாட்சியைக் குறித்தும், (௩௬) தமது கிரியைகளின் சாட்சியைக் குறித்தும், (௩௭) பிதாவானவர் கொடுத்த சாட்சியைக் குறித்து மபுத்திகளைச் சொல்லியதும்.]

அதின்பின்பு, யூதருடைய பண்டிகையுண்டானபொழுது, இயேசுவானவர் எருசலேமுக்குப் போனார்.

௨ அந்த எருசலேம் நகரத்திலே ஆட்டுவாசலினருகே எபிரேயு பாஷையிலே பெதெஸ்தாவென்னப்பட்ட ஒருகுளமிருக்கின்றது. அதற்கு ஐந்து மண்டபங்களுண்டு.

௩ அவைகளிலே குருடர், சப்பாணிகள் சூம்பின உறுப்புடையவர்கள் முதலான அநேக

க வியாதிக்காரர் படுத்துக்கொண்டு சலம அசைவதைக்காத்திருந்தார்கள.

௪ ஏனெனறால் சிலகாலங்களிலே தேவதூதனொருவன அந்தக்குளத்திலிறங்கி சலத்தைக்கலக்குவான. சலங் கலக்கப்பட்டபின்பு, முதலாவது அதற்குட் படுகிறவனெவனோ அவன எந்தவியாதிப்பட்டவனாயிருந்தாலுஞ்சுகமடைகிறதும வழக்கமாயிருந்தது.

ரு அன்றியொருடாக, அங்கே முப்பத்தெட்டுவருஷம வியாதியுள்ள ஒருமனிதனிருந்தான.

௬ படுத்திருந்த அவனை இயேசுவானவர் கண்டு, அவன அநேகநாள வியாதியுள்ளவனென்று அறிந்து, அவனை நோக்கி, நீ சொஸ்தமடையவிரும்புகிறாயா என்றார்.

௭ வியாதிப்பட்டவன அவருக்கு மாறுத்தரமாகச் சொன்னது, ஆண்டவனே, சலங் கலக்கப்படுகிறபொழுது, என்னைக்குளத்திற்கொண்டுபோய விடுகிறதற்கு ஒருவருமில்லை. நான நடந்துபோகிறதற்குமுன்னே வேறொருவனிறங்குவானென்றான.

௮ இயேசுவானவர்சொன்னது, எழுந்திரு. உன்படுக்கையையெடுத்துக்கொண்டு நடவென்றார்.

௯ உடனே அந்தமனிதன சுகமடைந்து தன்படுக்கையையெடுத்துக்கொண்டு நடந்துபோனான. அந்தநாள ஓயவுநாளாயிருந்தது.

௰ ஆதலால யூதர்கள சுகமாக்கப்பட்டவனை நோக்கி, ஓயவுநாளாயிருக்கிறபடியால, நீ படுக்கையையெடுத்துப்போகிறது நியாயமல்லவென்றார்கள.

௰க அவர்களுக்கவன சொன்னது, என்னைச் சுகமாக்கினவர் என்னை நோக்கி, உன படுக்கையையெடுத்துக்கொண்டு நடவென்று சொன்னாரென்றான.

௰உ அதற்கவர்கள சொன்னது, உன படுக்கையையெடுத்துக்கொண்டு நடவென்று உனனுடனே சொன்னமனிதன எவன என்று கேட்டார்கள.

௰ங அவ்விடத்திற் சனக்கூட்டமிருந்தபடியினாலே, இயேசுவானவர் விலகியிருந்தார்.

௰ச ஆகையாற் சுகமாக்கப்பட்டவன அவரையறியவில்லை. அதற்குப்பின்பு இயேசுவானவர் தேவாலயத்திலே யவனைக்கண்டு இதோ சுகம அடைந்தாய அதிகக்கேடு, உனக்குவாராதபடிக்கு, இனிப் பாவஞ்செய்யாதிருப்பாயாகவென்றார்.

௰ரு அப்பொழுது அந்தமனிதன போய தன்னைச்சுகமாக்கினவர் இயேசுவென்று யூதருக்கறிவித்தான.

௰சு ஓயவுநாளிலேயவர் அப்படிச் செய்தபடியினாலே, யூதர்கள இயேசுவைத் துன்பப்படுத்தி, அவரைக்கொலைசெய்ய வகைதேடினார்கள.

௰எ இயேசுவானவர் அவர்களை நோக்கி, என பிதா இதுவரைக்குங் கிரியைசெய்துவருகிறார். நானுங் கிரியைசெய்துவருகிறேனென்றார்.

௰அ அவர் ஓயவுநாளைக்காத்துக்கொள்ளாதிருந்தததுமல்லாமற் பராபரனைத் தமமுடையசொந்தபிதாவென்றுஞ்சொல்லித் தம்மைப் பராபரனுக்குச்சமமாக்கினபடியினாலே யூதர்களபின்னும அதிகமாய அவரைக்கொலைசெய்யவகைதேடினார்கள்.

௰கூ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி மெய்யாகவே நான உங்களுக்குச்சொல்லுகிறதாவது பிதாவானவர் செய்யக்குமாரன்காணுகிறதேதுவோ அதையேயன்றி வேறொன்றையுந் தானாய்ச் செய்யமாட்டான ஆதலால அவர்செய்கிறவைகளெவைகளோ அவைகளைக்குமாரனும அப்படியேசெய்கிறான.

௨௰ எப்படியென்றாற், பிதாவானவர் குமாரனிடத்திலே அன்புகூர்ந்து தானசெய்கிறயாவையும அவனுக்குக்காண்பிக்கிறார். நீஙகள ஆச்சரியப்படத்தக்கதாக இவைகளிலும அதிகப்பெரிதான கிரியைகளையும அவனுக்குக்காண்பிப்பார்.

௨௰க எவையெனிற் பிதாவானவர் மரித்தோரை யெழுப்பி உயிரோடிருக்கச்செய்கிறதுபோலக்குமாரனுந்தனனுடைய இஷ்டப்படியே மரித்தோரை உயிரோடிருக்கச்செய்கிறார்.

௨௰உ அல்லாமலும பிதாவைக்கனமபண்ணுகிறதுபோல எல்லாருங்குமாரனைக்கனமபண்ணும்படிக்குப்பிதாவானவர் ஒருவருக்குமநியாயத்தீர்ப்புக்கொடாமல நியாயத்தீர்ப்பின அதிகாரமயாவையுங்குமாரனுக்கொப்புக்கொடுத்தார்.

௨௰ங குமாரனைக் கனமபண்ணாமலிருக்கிறவன அவரையனுப்பினபிதாவைக்கனமபண்ணாமலிருக்கிறான.

௨௰ச என்வசனங்களுக்குச் செவிகொடுத்து என்னையனுப்பினவரைவிசுவாசிக்கிறவனுக்கு நித்தியசீவனுண்டு அவன ஆக்கினைத்தீர்ப்புக்குள அகப்படாமல மரணத்தைவிட்டு நீங்கிச் சீவனுக்குட்படடிருக்கிறானென்று மெய்யாகவேயுங்களுக்குச்சொல்லுகிறேன.

௨௰ரு அல்லாமலும் மரித்தோர்பராபரனுடையகுமாரனசத்தத்தைக்கேட்குங்காலம வருகின்றது. இப்பொழுதே அதுவந்திருக்கின்றது. அதைக்கேட்கிறவர்கள பிழைப்பார்களென்று மெய்யாகவேயுங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௰சு எனனத்தினாலெனிற் பிதாவானவர் தாமேதாமே சீவனையுடையவராயிருக்கிறது போலக்குமாரனுந் தனனிலேதானே சீவனையுடையவனாயிருக்கும்படி வல்லமையை அவனுக்குக்கொடுத்தார்.

௫௯ கப்பர்நகூமிலுள்ள ஜெப ஆலயத்திலே அவர் உபதேசிக்கையில், இவைகளைத் திருவுளம்பற்றினார்.

௬௰ அவருடைய சீஷரில் அநேகர் அவைகளைக் கேட்டபொழுது, இது கடினமான உபதேசம் ஆர் இதைக் கேட்பார்களென்றார்கள்.

௬௧ சீஷர் அதைக்குறித்து முறுமுறுக்கிறார்களென்று இயேசுவானவர் தமது உள்ளத்திலே அறிந்து அவர்களுடனே சொன்னதாவது. இதுவா உங்களுக்கு இலச்சையுண்டாக்குகின்றது.

௬௨ மனிதனுடைய குமாரன்தான் முன்னிருந்த விடத்திற்கேறிப்போகிறதை நீங்கள் காண்பீர்களானால் (எப்படியிருக்கும்.)

௬௩ ஆவியே உயிருண்டாக்குகிறது. மாமிசமொன்றுக்குமுதவாது. நான் உங்களுக்குச் சொல்லுகிற வசனங்களே ஆவியாயுஞ் சீவனாயுமிருக்கின்றனவென்று சொல்லி,

௬௪ பின்பு இயேசுவானவர் விசுவாசியாதவர்கள் இன்னாரென்றுந் தம்மைக் காட்டிக்கொடுப்பவன் இன்னானென்றும் ஆதிமுதல் அறிந்துவந்தபடியால், அவர் பின்னுஞ் சொன்னது, உங்களிற் சிலர் விசுவாசிக்கிறவர்களல்ல.

௬௫ அதினாலே ஒருவன் என்பிதாவினாலே அருள்கொள்ளாவிட்டால் என்னிடத்தில் வரமாட்டானென்று, (முன்னே) உங்களுக்குச் சொன்னேனென்றார்.

௬௬ அதுமுதற்கொண்டு அவருடைய சீஷரில் அநேகர் அப்புறம் அவருடனே கூட நடவாமற் பின்வாங்கிப்போனார்கள்.

௬௭ அப்பொழுது இயேசுவானவர் பன்னிருவரையும் நோக்கிப் போகும்படிக்கு உங்களுக்கும் மனதில்லையாவென்றார்.

௬௮ அதற்குச் சீமோன்பேதுரு சொன்னது ஆண்டவரே, யாரிடத்திற்குப் போவோம். உம்மிடத்தில் நித்திய சீவனுள்ள வசனங்களிருக்கின்றனவே.

௬௯ அல்லாமலும் நீரே சீவனுள்ள பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்தென்று நாங்கள் விசுவாசித்து, அறிந்துகொண்டோமென்றான்.

௭௰ இயேசுவானவர் சொன்னது, பன்னிருவராகிய உங்களை நான் தெரிந்துகொள்ளவில்லையா. உங்களுக்குள்ளும் ஒருவன் பசாசாயிருக்கிறானென்றார்.

௭௧ பன்னிருவரிலொருவனாகிய சீமோனின் குமாரன் யூதா இஸ்காரியோத்தென்பவன் தம்மைக் காட்டிக்கொடுக்கிறதற்கேதுவாயிருந்தபடியினாலே அவனைக் குறித்து இப்படிச் சொன்னார்.

## ௭. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து தம்முடைய இனத்தாரைக் கடிந்துகொண்டதும், (௰) எருசலேமுக்குப் போனபொழுது சனங்கள் அவரைக்குறித்துப் பலவிதமாய்ப் பேசினதும், (௰௪) தேவாலயத்திலே அவர் போதித்ததும், (௨௰) சனங்கள் அவரைத் தூஷணித்தபொழுது அவர்களுக்கு மாறுத்தரஞ்சொன்னதும், (௪௰) சனங்கள் பலவிதமாய் அவரைக்குறித்துப் பேசினதும், (௪௫) சேவகர் அவரைக்குறித்துச் சொன்னதும்.]

அதின்பின்பு இயேசுவானவர் யூதர்கள் தம்மைக் கொலைசெய்யத் தேடினபடியினாலே யூதேயா நாட்டிலே சஞ்சரிக்க மனதில்லாமற் கலிலேயா நாட்டிலே சஞ்சரித்து வந்தார்.

௨ பின்பு யூதருடைய கூடாரப்பண்டிகை சமீபமாயிருந்தது.

௩ அப்பொழுது அவருடைய சகோதரர் அவரை விசுவாசியாதபடியினாலே,

௪ அவரை நோக்கி நீர் செய்கிற கிரியைகளை உம்முடைய சீஷரும் பார்க்கும்படிக்கு நீர் இவ்விடம்விட்டு யூதேயா நாட்டுக்குப் போகவேண்டும்.

௫ பிரசித்தமாயிருக்க விரும்புகிறவனும் ஒருகாரியத்தையாகிலும் அந்தரங்கத்திலே செய்யமாட்டானே நீர் இப்படிப்பட்டவைகளைச் செய்கிறபடியால் உம்மை உலகத்திற்கு வெளிப்படுத்தலாமேயென்றார்கள்.

௬ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது என்னுடைய நேரம் இப்பொழுது வரவில்லை உங்கள் நேரமெப்பொழுதும் ஆயத்தமாயிருக்கின்றது.

௭ உலகத்தார் உங்களைப் பகைக்கமாட்டார்கள். அவர்களுடைய கிரியைகள் பொல்லாதவைகளென்று நான் சாட்சிகொடுக்கிறபடியினாலே என்னைப் பகைக்கிறார்கள்.

௮ நீங்கள் இந்தப் பண்டிகைக்குப் போங்கள். என்னுடைய நேரம் நிறைவேறாதபடியினாலே நான் இப்பொழுது போகமாட்டேனென்றார்.

௯ இவைகளை அவர்களுடனே சொல்லிப் பின்னுங் கலிலேயா நாட்டிலிருந்தார்.

௰ அவருடைய சகோதரர் போனபின்பு அவரும் வெளியரங்கமாக அல்ல அந்தரங்கமாய்ப் பண்டிகைக்குப் போனார்.

௧௧ பண்டிகைக்காலத்திலே யூதர்கள் அவரைத் தேடி அவரெங்கேயிருக்கிறாரென்றார்கள்.

௧௨ அல்லாமலுஞ் சனங்களுக்குள்ளே அவரைக்குறித்து மிகுந்த பேச்சுண்டாயிற்று. சிலர் அவர் நல்லவரென்றுஞ் சிலர் அப்படியல்ல அவன் சனங்களை வஞ்சிக்கிறவனென்றுஞ் சொல்லிக்கொண்டார்கள்.

௧௩ அவர்கள் யூதருக்குப் பயப்படுகிறவர்களானபடியினாலே ஒருவனும் அவரைக்குறித்துத் தாராளமாய்ப் பேசவில்லை.

௧௪ ஏறக்குறைய பாதிப்பண்டிகை தீர்ந்தபொழுது, இயேசுவானவர் தேவாலயத்திற்குப் போய் உபதேசம்பண்ணினார்.

௰௫ அப்பொழுது யூதர்கள் ஆச்சரியப்பட்டு, கல்லாதவராகிய இவர் வேதவாக்கியங்களை எப்படி அறிந்தாரென்றார்கள்.

௰௬ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது, நான் பண்ணுகிற உபதேசம் என்னுடையதல்ல. என்னையனுப்பினவருடையதாயிருக்கிறது.

௰௭ இந்த உபதேசம் பராபரனுடையதாயிருக்கிறதோ அல்லது நான் என்னாலே பேசுகிறேனோவென்பதும் அவருடைய சித்தத்தின்படி செய்ய மனதுள்ளவனெவனோ அவனுக்குத் தெரியும்.

௰௮ தன்னாலே பேசுகிறவன் தனக்கே புகழ்ச்சிவரத் தேடுகிறவன். என்னையனுப்பினவருக்குப் புகழ்ச்சிவரத் தேடுகிறவனே சத்தியமுள்ளவன் அவனிடத்திலே கபடமிராது.

௰௯ மோசேயானவர் நியாயப்பிரமாணத்தை உங்களுக்குக் கொடுக்கவில்லையா அப்படியிருந்தும் உங்களிலொருவனும் அந்த நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறதில்லை என்னத்திற்காக நீங்கள் என்னைக் கொலை செய்யத் தேடுகிறீர்களென்றார்.

௨௰ அதற்குச் சனங்கள் சொன்னது, நீ பசாசையுடையவன். எவன் உன்னைக் கொலை செய்யத் தேடுகிறானென்றார்கள்.

௨௰௧ இயேசுவானவர் சொன்னது ஒரு கிரியையைச் செய்தேன். அதைக் குறித்து நீங்களெல்லாரும் அதிசயப்படுகிறீர்கள்.

௨௰௨ விருத்தசேதனம் மோசேயினாலேயல்ல பிதாக்களாலுண்டாயிற்று. (பின்பு) மோசே உங்களுக்கு விருத்தசேதனத்தைக் கற்பித்தார். அந்த விருத்தசேதனத்தை நீங்கள் ஓய்வுநாளிலேயும் பண்ணுகிறீர்கள்.

௨௰௩ மோசேயின் நியாயப்பிரமாணத்தைத் தள்ளாதபடிக்கு ஒரு மனிதன் விருத்தசேதனத்தை ஓய்வுநாளிலே பெறலாமென்றால், நான் ஒரு மனிதனை முழுவதையும் ஓய்வுநாளிலே சுகமாக்கினதினாலே நீங்கள் என்மேல் எரிச்சலாயிருக்கலாமா,

௨௰௪ புறம்பே தோன்றுகிறபடி தீர்மானம் பண்ணாமல் நீதியின்படியே தீர்மானம் பண்ணுங்களென்றார்.

௨௰௫ அப்பொழுது எருசலேம் நகரத்தாரிற் சிலர் சொன்னது இவனையல்லவா கொலை செய்யத் தேடுகிறார்கள்.

௨௰௬ இதோ இவன் தாராளமாய்ப் பேசுகிறான். அவர்கள் இவனுடனே ஒன்றுஞ் சொல்லவில்லையே இவன் மெய்யான கிறிஸ்துவாயிருக்கிறானென்று அதிகாரிகள் உண்மையாய் அறிந்தார்களா.

௨௰௭ நாம் இவன் வந்த இடத்தை அறிந்திருக்கிறோம் கிறிஸ்து வரும்பொழுது அவர் வந்த இடத்தை ஒருவரும் அறியமாட்டார்களேயென்றார்கள்.

௨௰௮ அப்பொழுது தேவாலயத்திலுபதேசிக்கிற இயேசுவானவர் கூப்பிட்டதாவது. என்னையறிந்திருக்கிறீர்களா நான் புறப்பட்டு வந்த இடத்தையும் அறிந்திருக்கிறீர்களா நான் என் சுயமாய் வரவில்லை. என்னையனுப்பினவர் சத்தியமுள்ளவர் அவரை நீங்கள் அறியாதிருக்கிறீர்கள்.

௨௰௯ நான் அவராலே வந்திருக்கிறபடியினாலும் அவர் என்னையனுப்பினபடியினாலும் நானே அவரையறிந்திருக்கிறேனென்றார்.

௩௰ அப்பொழுது அவரைப் பிடிக்கவகை தேடினார்கள். அவருடைய நேரம் அக்காலத்தில் வராதபடியால் ஒருவனும் அவர் மேல் கைகளைப் போடவில்லை.

௩௰௧ அக்காலத்திற் சனங்களில் அநேகர் அவரிடத்தில் விசுவாசமுள்ளவர்களாகி கிறிஸ்து வரும்பொழுது இவர் செய்கிற அற்புதங்களிலும் அதிகமானவைகளை அவர் செய்வாராவென்றார்கள்.

௩௰௨ சனங்கள் அவரைக் குறித்து இப்படிப் பேசிக்கொண்டிருக்கிறதைப் பரிசேயர் கேட்டபொழுது அவர்களும் பிரதான ஆசாரியரும் அவரைப் பிடித்துக்கொண்டுவரும்படிக்குச் சேவகரையனுப்பினார்கள்.

௩௰௩ ஆதலால் இயேசுவானவர் சொன்னது நான் இனிச் சிலகாலம் மாத்திரம் உங்களுடனேகூட இருந்து பின்பு என்னையனுப்பினவரிடத்திற்குப் போவேன்.

௩௰௪ நீங்கள் என்னைத் தேடிக் காணாமற் போவீர்கள். அல்லாமலும் தானிருக்கும் இடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்களென்றார்.

௩௰௫ அப்பொழுது யூதர்கள் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டது, அவரை நாம் காணாதபடிக்கு இவர் எங்கே போவார். கிரேக்கருக்குள்ளே சிதறியிருக்கிறவர்களிடத்திற் போவாரா? கிரேக்கருக்கு உபதேசம் பண்ணுவாரா.

௩௰௬ என்னைத் தேடிக் காணாமற் போவீர்களென்றும் நானிருக்குமிடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்களென்றும் அவர் சொன்ன வசனம் எப்படியிருக்கிறதென்றார்கள்.

௩௰௭ பின்பு பண்டிகையின் கடைசியும் பெரியதுமான நாளிலே இயேசுவானவர் நின்று கூப்பிட்டதாவது ஒருவன் தாகமாயிருந்தால் என்னிடத்தில் வந்து பானம் பண்ணக்கடவன்.

௩௰௮ வேதவாக்கியஞ் சொன்னபடி என்னிடத்தில் விசுவாசமாயிருப்பவனெவனோ அவனுள்ளத்திலிருந்து சீவத்தண்ணீருள்ள நதிகள் ஓடுமென்றார்.

௩௰௯ இப்படி அவர் தம்மிடத்தில் விசுவாசமாகிறவர்கள் அடையும் ஆவியைக் குறித்துச் சொன்னார் இயேசுவானவர் அப்பொழுது மகிமையாக்கப்படாதபடியினாலே அந்தப் பரிசுத்த ஆவி அக்காலத்திலே தானாயில்லை.

௧௩ அப்பொழுது பரிசேயர் அவரை நோக்கி நீர் உம்மைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறீர். உம்முடைய சாட்சியை மெய்யென்று ஏற்றுக்கொள்ளக்கூடாதென்றார்கள்.

௧௪ அதற்கு இயேசுவானவர் சொன்னது. நான் வந்த இடத்தையும் நான் போகும் இடத்தையும் அறிந்திருக்கிறபடியினாலே என்னைக்குறித்து நானே சாட்சிகொடுத்தாலும் என்னுடைய சாட்சியை மெய்யென்று ஏற்றுக்கொள்ளவேண்டும். நீங்கள் நான் வந்த இடத்தையும் நான் போகும் இடத்தையும் அறியாமலிருக்கிறீர்கள்.

௧௫ நீங்கள் மாம்சத்துக்கேற்றபடி தீர்மானம்பண்ணுகிறீர்கள் நான் ஒருவனைக்குறித்துந் தீர்மானம்பண்ணுகிறதில்லை.

௧௬ நான் தீர்மானம்பண்ணினாலும், நான் மாத்திரமல்ல, நானும் என்னை யனுப்பின பிதாவுங்கூடவிருக்கிறபடியினாலே என்னுடைய தீர்மானம் சத்தியத்தின்படியே யிருக்கும்.

௧௭ இரண்டுபேருடைய சாட்சியை மெய்யென்றேற்றுக்கொள்ள வேண்டுமென்று உங்கள் நியாயசாஸ்திரத்திலேயும் எழுதியிருக்கின்றதே.

௧௮ அந்தப்படி நான் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறவனாயிருக்கிறேன் என்னை யனுப்பின பிதாவும் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறாரென்றார்.

௧௯ அப்பொழுது அவர்கள் உம்முடைய பிதா எங்கேயென்றார்கள். இயேசுவானவர் சொன்னது நீங்கள் என்னையும் என் பிதாவையும் அறியாமலிருக்கிறீர்கள் என்னை யறிந்தீர்களானால் என் பிதாவையும் அறிந்திருப்பீர்களென்றார்.

௨௰ தேவாலயத்திலே இயேசுவானவர் உபதேசம்பண்ணித் தருமப்பெட்டியினருகேயிருந்தபொழுது இந்த வசனங்களைச் சொன்னார். அப்படியிருந்தும் அவருடைய நேரம் வராதபடியால் ஒருவரும் அவரைப் பிடிக்கவில்லை.

௨௧ பின்பு இயேசுவானவர் அவர்களை நோக்கி நான் போவேன் நீங்கள் என்னைத் தேடுவீர்கள் ஆகிலும் உங்கள் பாவத்திலே சாவீர்கள் நான் போகுமிடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்களென்றார்.

௨௨ அப்பொழுது யூதர்கள் (ஒருவரையொருவர்) நோக்கி நான் போகும் இடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்களென்கிறானே தன்னைத்தான் கொலைசெய்வானோவென்று பேசிக்கொண்டார்கள்.

௨௩ அவர் பின்னும் அவர்களுடனே சொன்னது நீங்கள் கீழேயிருந்து தோன்றினவர்கள். நான் உயரத்திலிருந்து தோன்றினவன். நீங்கள் இவ்வுலகத்திற்குரியவர்கள் நான் இவ்வுலகத்திற்குரியவனல்ல.

௨௪ ஆகையால் நீங்கள் உங்கள் பாவங்களிலே சாவீர்களென்று உங்களுக்குச் சொன்னேன். நானே அவரென்று நீங்கள் விசுவாசியாவிட்டால் உங்கள் பாவங்களிலே சாவீர்களென்றார்.

௨௫ அதற்கவர்கள் நீர் யாரென்றார்கள். இயேசுவானவர் சொன்னது ஆதிமுதல் நான் உங்களுக்குச் சொல்லிவந்தவனே நான்.

௨௬ நான் உங்களைக்குறித்துப் பேசி நியாயந்தீர்க்கத்தக்க அநேககாரியங்களுண்டு என்னை யனுப்பினவர் சத்தியமுள்ளவர் நான் அவரிடத்திற்கேள்விப்பட்டவைகளை யுலகத்தாருக்கு அறிவிக்கிறேனென்றார்.

௨௭ அவர் பிதாவைக்குறித்துச் சொன்னாரென்று அவர்கள் அறியாதிருந்தார்கள்.

௨௮ ஆதலால் இயேசுவானவர் பின்னும் அவர்களுடனே சொன்னது நீங்கள் மனிதனுடைய குமாரனை யுயர்த்தியிருக்கும்பொழுது நானே அவரென்றும் என்னாலே நான் ஒன்றுஞ்செய்யாமல் என் பிதா எனக்குப் போதிக்கிறபடியே இவைகளைச் சொன்னேனென்றும் அறிவீர்கள்.

௨௯ என்னை யனுப்பினவர் என்னுடனே யிருக்கிறார். பிதாவுக்குப் பிரியமானவைகளை நான் எப்பொழுதுஞ்செய்கிறபடியால் அவர் என்னைத் தனியே யிருக்கவிடவில்லையென்றார்.

௩௰ இவைகளையவர் சொல்லுகையில் அநேகம்பேர் அவரிடத்தில் விசுவாசமானார்கள்.

௩௧ ஆதலால் இயேசுவானவர் தம்மை விசுவாசித்த யூதரை நோக்கி நீங்கள் என்னுடைய உபதேசத்திலே நிலைநிற்றிருந்தால் மெய்யாய் என் சீஷராயிருப்பீர்கள்.

௩௨ சத்தியத்தையுமறிவீர்கள். சத்தியமானது உங்களை விடுதலையாக்குமென்றார்.

௩௩ அதற்கு (சிலர்) சொன்னது நாங்கள் ஆபிரகாமின் சந்ததியாராயிருக்கிறோமே யல்லாமல் நாங்கள் ஒருக்காலும் ஒருவனுக்கு அடிமைகளாயிருக்கவில்லையே ஆதலால் நீங்கள் விடுதலையாவீர்களென்று நீர் எப்படிச் சொல்லுகிறீரென்றார்கள்.

௩௪ இயேசுவானவர் சொன்னது பாவஞ்செய்கிறவனெவனோ அவன் பாவத்திற்கு அடிமையாயிருக்கிறானென்று மெய்யாகவேயுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௩௫ அடிமையானவன் என்றைக்கும் வீட்டிலே தங்கான். குமாரனே யென்றைக்கும் அதிலே தங்குவான்.

௩௬ ஆகையாற் குமாரனானவர் உங்களை விடுதலையாக்கினால் மெய்யாய் விடுதலையாயிருப்பீர்கள்.

௩௭ நீங்கள் ஆபிரகாமின் சந்ததியாரென்று அறிந்திருக்கிறேன். அப்படியிருந்தும்

ம என்னுபதேசம உங்களிலதரியாமலிருக்கிறபடியால என்னைக்கொலைசெய்யத்தேடுகிறீர்கள.

௩௮ நான என்பிதாவினிடத்திலே கண்டதைப்பேசுகிறேன. அப்படியேநீங்களும உங்களபிதாவினிடத்திலே கண்டதைச்செயகிறீர்களென்றார்.

௩௯ அதற்கவர்கள ஆபிரகாமேயெங்கள தகப்பனாயிருக்கிறானென்றார்கள. இயேசுவானவர்சொன்னது நீங்கள ஆபிரகாமினபிள்ளைகளானால ஆபிரகாமின கிரியைகளுக்கொப்பாயச்செயவீர்களே.

௪௰ நீங்களபராபரனிடத்திற்கேள்விப்பட்ட சத்தியத்தையுங்களுக்குச்சொன்னமனிதனாகிய என்னைக்கொலைசெய்யத்தேடுகிறீர்கள ஆபிரகாம இப்படிச்செய்யவில்லையே.

௪௧ நீங்களஉங்களபிதாவினகிரியைகளுக்கொப்பாயச்செயகிறீர்களென்றார் அதற்கவர்கள்சொன்னது, நாங்கள வேசைமார்கத்தினாலே பிறந்தவர்களலல ஒரேபிதா எங்களுக்குணடு பராபரனேயவனென்றார்கள.

௪௨ இயேசுவானவர் சொன்னது, பராபரனிலிருந்தே புறப்பட்டுவந்தேன. நான என்னாலேவரவிலலை அவரேயென்னையனுப்பினார் ஆகையாற்பராபரன உங்களபிதாவாயிருந்தாலநீங்கள என்னிடத்தில அன்புகூருவீர்கள.

௪௩ என்னத்தினாலேஎன்னுடைய பேச்சையறியாமலிருக்கிறீர்கள. என்னுடைய உபதேசத்தைக்கேட்கமனதிலலாதபடியினாலல்லவோ (அப்படியிருக்கிறீர்கள.)

௪௪ பசாசானவனேயுங்களபிதா. (ஆகையால) உங்களபிதாவின இச்சைகளினபடிசெயயவிரும்புகிறீர்கள ஆதிமுதற்கொண்டு அவனமனிதக்கொலைக்காறனாயிருக்கிறான. அலலாமலுஞசத்தியத்தில அவன நிலைநிலலாதபடியாற்சத்தியம அவனிடத்திலிலலை. அவனபொயயனுமாயப்பொயயினதகப்பனுமாயிருக்கிறபடியாற் பொய்பேசுகிறபொழுது தனசொந்தத்திலெடுத்துப்பேசுகிறான.

௪௫ நான் சத்தியத்தையுங்களுக்குச்சொலலுகிறபடியினாலேநீங்கள என்னைவிசுவாசிக்கிறதிலலை.

௪௬ என்னிடத்திற் பாவமுணடென்று உங்களிலெவன நிச்சயமாயச்சொலவான. ஆகையால நானசத்தியத்தைச்சொலலுகிறவனாயிருக்கநீங்கள என்னையென்னத்தினாலேவிசுவாசிக்கிறதிலலை.

௪௭ பராபரனாலுணடானவனபராபரனுடையவசனங்களுக்குச் செவிகொடுக்கிறான. நீங்களபராபரனாலுணடாயிராதபடியாற்செவிகொடாமலிருக்கிறீர்களென்றார்.

௪௮ அப்பொழுதுயூதர்களவரைநோக்கிநாங்கள உன்னைச் சமாரியனென்றும பேயையுடையவனென்றும நியாயமாயச்சொலலுகிறோமலலவோவென்றார்கள.

௪௯ இயேசுவானவர்சொன்னது நான பேயையுடையவனலல. நான என்பிதாவைக்கனமபணணுகிறேன. நீங்கள என்னைக்கனஈனமபணணுகிறீர்கள.

௫௰ ஆனாலுமநான எனக்குக்கனமவரத்தேடுகிறதிலலை அதைத்தேடிநியாயந்தீர்க்கிறவரொருவரிருக்கிறார்.

௫௧ மெயயாகவேநானுங்களுக்குச்சொலலுகிறதாவது ஒருவன என்னுடையவசனத்தைக்கைக்கொணடால அவன ஒருக்காலும மரணத்தையடைவதிலலையென்று சொன்னபொழுது,

௫௨ யூதர்களவரைநோக்கிநீபேயையுடையவனென்றிப்பொழுது அறிந்திருக்கிறோம. ஆபிரகாமுந்தீர்க்கதரிசிகளும மரித்தார்கள. நீசொலலுகிறது ஒருவனென்வசனத்தைக்கைக்கொணடால அவனொருக்காலும மரணத்தைருசிபார்க்கமாட்டானென்கிறாய.

௫௩ எங்களபிதாவாகிய ஆபிரகாமிலும நீபெரியவனோ அவ மரித்தார். தீர்க்கதரிசிகளும மரித்தார்கள. நீ உன்னை எப்படிப்பட்டவனாக்குகிறாயென்றார்கள.

௫௪ இயேசுவானவர்சொன்னது,நானே என்னைக்கனமபணணினால, அந்தக்கனம வீணாயிருக்கும. என்பிதாவேயென்னைக்கனமபணணுகிறார். அவரைநீங்கள உங்கள்தேவனென்றுசொலலுகிறீர்கள.

௫௫ அப்படியிருந்தும நீங்கள அவரையறியவிலலைநான அவரையறிந்திருக்கிறேன. அவரையறியமாட்டேனென்றுசொன்னேனாகில நானஉங்களைப்போலப்பொயயனாயிருப்பேன. அவரைநானறிந்து, அவருடைய வசனத்தைக்கைக்கொணடுவருகிறேன.

௫௬ உங்களபிதாவாகிய ஆபிரகாமென்னுடையநாளைக்காணகைக்கிப்பாய ஆசைப்பட்டு,அதைக்கணடுசந்தோஷப்பட்டானென்றார்.

௫௭ அப்பொழுதுயூதர்களவரைநோக்கி, உனக்கு ஐமபதுவயதிலலையே. நீஆபிரகாமைக்கணடாயாவென்றார்கள.

௫௮ இயேசுவானவர்சொன்னது, ஆபிரகாமபிறந்தகாலத்துக்குமுனனும நானிருக்கிறேனென்றுமெயயாகவேயுங்களுக்குச்சொலலுகிறேனென்றார்.

௫௯ அப்பொழுது அவர்மேலெறியும்படிக்குக்கலலுகளையெடுத்துக்கொணடார்கள. இயேசுவானவர்மறைந்து, அவர்களநடுவேநடந்து, தேவாலயத்தைவிட்டப்புறமபோனார்.

## ௯. அதிகாரம்.

[(௧) பிறவிக் குருடனுக்குப் பார்வை கொடுத்ததும், (௰௩) அவனாலே பரிசேயர் தருக்கம் பண்ணினதும், (௩௫) அந்தக் குருடனுக்கு இயேசுநாதர் தம்மை வெளிப்படுத்தினதும்.]

அவர் அப்புறம் போகையிற் பிறவிக் குருடனாய ஒரு மனிதனைக் கண்டார்.

௨ அப்பொழுது அவருடைய சீஷர் அவரை நோக்கி, இரபீ, இவன் குருடனாய்ப் பிறக்கும்படிக்கு, இவனோ இவனைப் பெற்றவர்களோ ஆர் பாவஞ்செய்தார்களென்று கேட்டார்கள்.

௩ அதற்கு இயேசுவானவர் சொன்னது. இவனும் பாவஞ்செய்யவில்லை. இவனைப் பெற்றவர்களும் பாவஞ்செய்யவில்லை. பராபரனுடைய கிரியைகள் இவனிடத்தில் வெளிப்படும்பொருட்டாக (இப்படிப் பிறந்தான்.)

௪ பகற்காலமிருக்குமளவும் நான் என்னை அனுப்பினவருடைய கிரியைகளைச் செய்யவேண்டும். ஒருவனும் கிரியையைச் செய்யக்கூடாதபடிக்கு இராத்திரி வருகின்றது.

௫ நான் உலகத்திலிருக்கையில் உலகத்தின் ஒளியாயிருக்கிறேனென்றார்.

௬ இப்படியவர் சொல்லிப் பின்பு தரையிலே துப்பி உமிழ்நீரினாற் சேறுண்டாக்கி அந்தச் சேற்றைக் குருடனுடைய கண்களின்மேற் பூசி,

௭ பின்பு நீ சீலோவாக் குளத்திற் போய்க் கழுவென்றார். சீலோவா என்பதற்கு அனுப்பப்பட்டவனென்று அருத்தம். அந்தப்படி அவன் போய்க் கழுவிப் பார்வையடைந்து திரும்பிவந்தான்.

௮ அப்பொழுது அயலகத்தாரும் முன்னே அவன் பிச்சைக்காரனாயிருந்ததைக் கண்டவர்களும் அவனைப் பார்த்து (இங்கே) உட்கார்ந்து பிச்சைகேட்டுக்கொண்டிருந்தவன் இவனல்லவாவென்றார்கள்.

௯ வேறுசிலர் அவன் இவன்தானென்றார்கள். வேறுசிலர் இவன் அவனுடைய சாயலாயிருக்கிறானென்றார்கள். அவன் சொன்னது. நானேயவனென்றான்.

௰ அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி உன் கண்கள் எப்படித் திறக்கப்பட்டனவென்றார்கள்.

௰௧ அவன் சொன்னது. இயேசு என்பவர் சேறுண்டாக்கி (அதை) யென் கண்களின்மேலே பூசி நீ சீலோவாக் குளத்திற்குப் போய்க் கழுவென்றார். அந்தப்படி நான் போய்க் கழுவினபொழுது பார்வையடைந்தேனென்றான்.

௰௨ அவர்கள் சொன்னது. அந்த மனிதனெங்கேயென்றார்கள். அவன் எனக்குத் தெரியாதென்றான்.

௰௩ அப்பொழுது முன்னே குருடனாயிருந்தவனைப் பரிசேயரிடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

௰௪ இயேசுவானவர் சேறுண்டாக்கி அவனுடைய கண்களைத் திறந்தநாள் ஓய்வுநாளாயிருந்தது.

௰௫ ஆதலாற் பரிசேயரும் அவனை நோக்கி நீ யெப்படிப் பார்வையடைந்தாயென்று கேட்டார்கள். அதற்கவன் சொன்னது. அவர் சேற்றை யென் கண்களின்மேல் வைத்தார். பின்பு நான் கழுவினேன். இப்பொழுது காண்கிறேனென்றான்.

௰௬ அப்பொழுது பரிசேயரிற் சிலர் சொன்னது. அம்மனிதன் ஓய்வுநாளைக் கைக்கொள்ளாதிருக்கிறபடியினாலே அவன் பராபரனாலே வந்தவனல்லவென்றார்கள். வேறுசிலர் சொன்னது. பாவியாயிருக்கிற ஒருவன் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்வதெப்படியென்றார்கள். ஆகையால் அவர்களுக்குள்ளே பிரிவினையுண்டாயிற்று.

௰௭ மறுபடியும் அவர்கள் குருடனாயிருந்தவனை நோக்கி, உன் கண்களைத் திறந்தவனைக் குறித்து நீ யென்ன சொல்லுகிறாயென்றார்கள். அவன் சொன்னது. அவர் தீர்க்கதரிசியாயிருக்கிறாரென்றான்.

௰௮ அப்பொழுது அவன் குருடனாயிருந்து பின்பு பார்வையடைந்தானென்கிறதை யூதர்கள் நம்பாமற் பார்வையடைந்தவனுடைய தாய்தகப்பன்மாரை யழைப்பித்து,

௰௯ அவர்களை நோக்கி, உங்கள் குமாரன் குருடனாய்ப் பிறந்தானென்று நீங்கள் சொல்லுகிறீர்களே. அவன் இவனோ இப்பொழுது இவனுக்கு எப்படிப் பார்வையுண்டாயிற்றென்று கேட்டார்கள்.

௨௰ அதற்கு அவனுடைய தாய்தகப்பன்மார் சொன்னது. இவன் எங்கள் குமாரனென்றும் குருடனாய்ப் பிறந்தானென்றும் அறிந்திருக்கிறோம்.

௨௰௧ இப்பொழுது இவன் பார்வையடைந்தவகை எங்களுக்குத் தெரியாது அவனுடைய கண்களைத் திறந்தவனையும் அறியமாட்டோம். இவன் பெரியவனாயிருக்கிறானே, இவனிடத்திலே கேளுங்கள். தன்னைக் குறித்து இவனே பேசுவானென்றார்கள்.

௨௰௨ அக்காலத்திற்கு முன்னே இயேசுவைக் கிறிஸ்தென்று சொல்லுபவனெவனோ அவனைச் செப ஆலயத்திற்குப் புறம்பாக்கவேண்டுமென்று யூதர்கள் தீர்மானம் பண்ணியிருந்தபடியால், குருடனாயிருந்தவனுடைய தாய்தகப்பன்மார் அவர்களுக்குப் பயந்து.

௨௰௩ இவன் பெரியவனாயிருக்கிறானே, இவனிடத்திற் கேளுங்களென்று சொன்னார்கள்.

௨௰௪ ஆதலால் அவர்கள் குருடனாயிருந்தவனை யிரண்டாந்தரம் அழைத்து நீ பராபர

னைக்கனஞ்செய்வாயாக. அம்மனிதன் பாவியாயிருக்கிறானென்று நாங்கள் அறிந்திருக்கிறோமென்றார்கள்.

௨௫ அதற்கவன் சொன்னது. அவர் பாவியோ அல்லவோ அது எனக்குத் தெரியாது, நான் குருடனாயிருந்தேன். இப்பொழுது காண்கிறேன். இதொன்றையே அறிந்திருக்கிறேனென்றான்.

௨௬ அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவனை நோக்கி. உனக்கென்ன செய்தான். உன் கண்களை யெப்படித் திறந்தானென்றார்கள்.

௨௭ அவன் சொன்னது. முன்னேயுந்தை யுங்களுக்குச் சொன்னேன். நீங்கள் செவிகொடுக்கவில்லை. அதை மறுபடியுங் கேட்க என்னத்தினாலே விரும்புகிறீர்கள். நீங்களும் அவருக்குச் சீஷராகமனதுள்ளவர்களாயிருக்கிறீர்களாவென்றான்.

௨௮ அப்பொழுது அவர்கள் அவனை வைது, நீயே அவனுடைய சீஷன். நாங்கள் மோசேயினுடைய சீஷர்.

௨௯ மோசேயினவருடனே பராபரன் பேசினதை அறிந்திருக்கிறோம். இவனவந்த இடத்தை அறியமாட்டோமென்றார்கள்.

௩௰ அதற்கு அந்தமனிதன் சொன்னது. அவர் என் கண்களைத் திறந்திருந்தும் அவர் வந்த இடத்தை நீங்கள் அறியாமலிருக்கிறது ஆச்சரியமான காரியம்.

௩௧ அல்லாமலும் பாவிகளுக்குப் பராபரன் செவிகொடுக்கிறதில்லையென்றும் அவர்மேற்பத்தியாயிருந்து அவருடைய சித்தத்தின்படி செய்கிறவனெவனோ அவனுக்குச் செவிகொடுக்கிறாரென்றும் அறிந்திருக்கிறோம்.

௩௨ குருடனாய்ப் பிறந்தவனுடைய கண்களை ஒருவன் திறந்தானென்று உலகமுண்டானது முதற்கொண்டு கேள்விப்படவில்லையே.

௩௩ அவர் பராபரனிடத்தினின்று வராதவராயிருந்தால் இப்படிப்பட்டவைகளில் ஒன்றையாகிலுஞ் செய்யத்திராணியிருக்கமாட்டாதேயென்றான்.

௩௪ அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, முழுவதும் பாவங்களில் பிறந்த நீயா எங்களுக்கு உபதேசம்பண்ணுகிறவனென்று சொல்லி, அவனைப் புறம்பே தள்ளினார்கள்.

௩௫ அவனை யவர்கள் புறம்பே தள்ளினதை இயேசுவானவர் கேள்விப்பட்டுப் பின்பு அவனைக்கண்டு நீ பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறாயாவென்றார்.

௩௬ அதற்கவன் ஆண்டவரே, நான் அவர்மேல் விசுவாசமாயிருக்கும்படிக்கு, அவர் இன்னாரென்று (காட்டவேண்டுமென்றான்.)

௩௭ இயேசுவானவர் சொன்னது, நீ அவரைக் கண்டாய். உன்னுடனே பேசுகிறவரே அவரென்றார்.

௩௮ உடனே யவன் ஆண்டவரே, விசுவாசிக்கிறேனென்று சொல்லி, அவரைத் தொழுதுகொண்டான்.

௩௯ பின்பு இயேசுவானவர் சொன்னது. காணாதவர்கள் காணவுங் காண்கிறவர்கள் குருடராகவுந்தக்கதாக, நியாயத்தீர்ப்புக் கொடுப்பதற்கு நானிவ்வுலகத்திலே வந்தேனென்றார்.

௪௰ பரிசேயரிற்சிலர் அவருடனேகூட விருந்து அதைக்கேட்டபொழுது அவரை நோக்கி, நாங்களுங் குருடராவென்றார்கள்.

௪௧ இயேசுவானவர் சொன்னது. நீங்கள் குருடராயிருந்தால், உங்களுக்குப் பாவமுண்டாயிருக்கமாட்டாது. நாங்கள் காண்கிறோமென்று சொல்லுகிறபடியால், உங்கள் பாவமிருக்கும்.

## ௰. அதிகாரம்.

[(௧) கள்ளக் கிறிஸ்துக்களைக் குறித்தும், (௰௧) தாம் நல்ல மேய்ப்பராயிருக்கிறதைக் குறித்துஞ் சொன்னதும், (௰௯) சனங்களுக்குள்ளே அவராலுண்டாகும் பிரிவினையுண்டானதும், (௨௨) தேவாலயத்திலே அவர் பிரசங்கம்பண்ணினதும்]

௧ மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது. ஆட்டுக்கிடையின் வாசல்வழியாய் அதிற்பிரவேசியாமல், வேறுவழியாய் அதிற்பிரவேசிக்கிறவன் திருடனும் மாயக்கொள்ளைக்காரனுமாயிருக்கிறான்.

௨ வாசலின்வழியாய்ப் பிரவேசிக்கிறவனே ஆடுகளின் மேய்ப்பனாயிருக்கிறான்.

௩ வாசல்காக்கிறவன் அவனுக்குத் திறக்கிறான். ஆடுகளும் அவனுடைய சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன. அவன் தன்னுடைய ஆடுகளைப் பேர்பேராக அழைத்து, அவைகளை வெளியே கொண்டுபோகிறான்.

௪ மேலும் அவன் தன்னுடைய ஆடுகளை வெளியிலே விட்டபின்பு, அவைகளுக்கு முன்னேநடந்துபோகிறான். மேலும் ஆடுகள் அவனுடைய சத்தத்தை யறிந்தபடியினாலே, அவைகள் அவனுக்குப் பின்செல்லுகின்றன.

௫ அந்நியருடைய சத்தத்தையறியாதபடியினாலே, அவைகள் அந்நியனுக்குப் பின்செல்லாமல் அவனைவிட்டோடிப்போகுமென்றார்.

௬ இந்த உவமையை இயேசுவானவர் அவர்களுடனே சொன்னபொழுது அவர்கள் தங்களுக்கு அவர் சொன்னவைகளின் அர்த்தத்தை யறியவில்லை.

எ அதல்லால் இயேசுவானவர் மறுபடியும் அவர்களை நோக்கி, நானே ஆடுகளின் வாசலென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

அ எனக்கு முன்னே வந்தவர்களெல்லாரும் திருடருமாய்க் கள்ளருமாயிருந்தார்கள். ஆடுகள் அவர்களுக்குச் செவி கொடுக்கவில்லை.

கூ நானே வாசல் ஒருவன் என்னாலே பிரவேசித்தால், அவன் இரட்சிக்கப்படுவான். அவன் உள்ளும் புறம்புமாய்ச் சென்று, மேய்ச்சலைக் கண்டுபிடிப்பான்.

ய திருடன் திருடுகிறதற்கும் கொல்லுகிறதற்கும் கெடுக்கிறதற்குமேயன்றி வேறொன்றுக்கும் வரான். நான் அவைகளுக்குச் சீவனும் பரிபூரணமுமுண்டாகும்படி வந்தேன்.

யக நானே நல்லமேய்ப்பன். நல்லமேய்ப்பன் ஆடுகளுக்காகத் தன் சீவனைக் கொடுக்கிறான்.

யஉ மேய்ப்பனல்லாதவனுமாய் ஆடுகள் தன்னுடையவைகளல்லாதவனுமாயிருக்கிற கூலிக்காரனோ ஓநாய் வரக்காணும்பொழுது ஆடுகளை விட்டோடிப்போவான். அப்பொழுது ஓநாய் அந்த ஆடுகளைப் பிடித்துச் சிதறடிக்கும்.

யங மேலும் கூலியாளானவன் கூலிக்காகச் சேவிக்கிறவனானபடியினாலும் ஆடுகளைக்குறித்து அவனுக்குக் கவலையில்லாதபடியினாலும் ஓடிப்போவான்.

யச நானே நல்லமேய்ப்பன். என்பிதா என்னையறிந்திருக்கிறதுபோலவும் நான் பிதாவையறிந்திருக்கிறதுபோலவும்,

யரு நான் என்னுடையவைகளையறிந்து, என்னுடையவைகளால் அறியப்பட்டு, ஆடுகளுக்காக என் சீவனைக் கொடுக்கிறேன்.

யசு அன்றியும் இந்தக் கொட்டையிலுள்ளவைகளல்லாமல், வேறே ஆடுகளும் எனக்குண்டு. அவைகளையும் நான் கொண்டுவரவேண்டும். அவைகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கும். அப்பொழுது ஒரே ஆட்டுக்கூட்டமும் ஒரே மேய்ப்பனுமுண்டாயிருக்கும்.

யஎ நான் என் சீவனைப் பின்னும் அடைந்துகொள்ளும்படிக்கு, அதைக் கொடுக்கிறபடியினாலே, பிதா என்னிடத்தில் அன்பாயிருக்கிறார்.

யஅ ஒருவனும் என்னிடத்திலிருந்து அதை எடுக்கமாட்டான். நான் என்னாலே யதைக் கொடுக்கிறேன். அதைக் கொடுக்கிறதற்கும் அதை மறுபடியுமெடுத்துக்கொள்ளுகிறதற்கும் என்னிடத்தில் அதிகாரமுண்டு. இந்தக் கற்பனையை என்பிதாவினாலே பெற்றுக்கொண்டேனென்றார்.

யகூ இந்த வசனங்களைக் குறித்து யூதருக்குள்ளே மறுபடியும் பிரிவினையுண்டாயிற்று.

உ0 அவர்களில் அநேகர் சொன்னது: அவன் பிசாசையுடையவன், பயித்தியக்காரனாயிருக்கிறான். என்னத்திற்காக அவனுக்குச் செவிகொடுக்கிறீர்களென்றார்கள்.

உக மற்றப்பேர்கள் சொன்னது: இப்படிப்பட்ட வசனங்கள் பேய்கொண்டவனுடையவைகளல்லவென்றும், குருடரின் கண்களைப் பேயானவன் திறப்பானோவென்றும் சொன்னார்கள்.

உஉ பின்பு மாரிகாலத்தில் எருசலேம் நகரத்திலே தேவாலயப் பிரதிஷ்டையின் பண்டிகையைக் கொண்டாடி வருகையில்,

உங இயேசுவானவர் தேவாலயத்திற் சாலோமோனுடைய மண்டபத்தில் உலாவிக்கொண்டிருக்கிறபொழுது,

உச யூதர்கள் அவரை வளைந்துகொண்டு அவரை நோக்கி, எதுவரைக்கும் எங்களாத்துமாக்களைச் சந்தேகமுள்ளவைகளாயிருக்கும்படி செய்கிறீர். நீர் கிறிஸ்துவானால் ([illegible]) எங்களுக்குத் தாராளமாய்ச் சொல்லுமென்றார்கள்.

உரு அதற்கு இயேசுவானவர் சொன்னது: அதை உங்களுக்குச் சொன்னேன், நீங்கள் விசுவாசிக்கவில்லை. என்பிதாவின் நாமத்தினாலே நான் செய்கிற கிரியைகளே என்னைக் குறித்துச் சாட்சி கொடுக்கின்றன.

உசு அப்படியிருந்தும் நீங்கள் என்னுடைய ஆடுகளல்லாதவர்களானபடியினாலே, விசுவாசியாமலிருக்கிறீர்கள்.

உஎ நான் உங்களுக்குச் சொன்னபடியே, என் ஆடுகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன. அல்லாமலும் நான் அவைகளையறிந்திருக்கிறேன். அவைகளும் எனக்குப் பின்செல்லுகின்றன.

உஅ அல்லாமலும் நான் அவைகளுக்கு நித்திய சீவனைக் கொடுக்கிறேன். அவைகள் ஒருக்காலுங் கெட்டுப்போகாது. ஒருவனும் அவைகளை யென்கையிலிருந்து பறித்துக்கொள்ளான்.

உகூ அவைகளை யெனக்குக் கொடுத்த என்பிதா எல்லாரிலும் பெரியவராயிருக்கிறார். ஒருவனும் அவைகளை யென்பிதாவின் கையிலிருந்து பறித்துக்கொள்ளான்.

ங0 நானும் பிதாவும் ஒன்றாயிருக்கிறோமென்றார்.

ஙக அப்பொழுது யூதர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்கு மறுபடியுங் கல்லுகளையெடுத்துக்கொண்டார்கள்.

ஙஉ இயேசுவானவர் அவர்களை நோக்கி: நான் என்பிதாவினாலே யநேக நற்கிரியைகளை உங்களுக்குக் காண்பித்தேன். அவைகளில் எந்தக் கிரியையினிமித்தம் நீங்கள் என்மேற் கல்லெறிகிறீர்களென்றார்.

ஙங யூதர்கள் சொன்னது: நற்கிரியையினிமித்தமல்ல, நீ மனிதனாயிருக்க, உன்னைத் தேவனென்று சொல்லி, இவ்விதமாய்த் தந்த

வதூஷணஞ்செய்கிறதினிமித்தமேயுன்மேற் கல்லெறிவோமென்றார்கள்.

௩௪ அதற்கு இயேசுவானவர் சொன்னது. தேவர்களாயிருக்கிறீர்களென்று நான் சொன்னேனென்பது உங்கள் வேதத்தில் எழுதியிருக்கவில்லையா?

௩௫ பராபரனுடைய வசனத்தைப் பெற்றுக்கொண்டவர்களையவர் தேவர்களென்று சொல்ல வேதமுந் தள்ளப்படக்கூடாததாயிருக்க,

௩௬ பிதாவினாற் பரிசுத்தமாக்கப்பட்டும் உலகத்தில் அனுப்பப்பட்டுமிருக்கிறநான் என்னைப் பராபரனுடைய குமாரனென்று சொன்னதினாலே, தேவதூஷணஞ் செய்தாயென்று சொல்லலாமா.

௩௭ நானென்பிதாவின் கிரியைகளைச் செய்யாதிருந்தால் நீங்களென்னை விசுவாசிக்கவேண்டுவதில்லை.

௩௮ (அவைகளை) நான் செய்திருக்கிறபடியால் நீங்களென்னை விசுவாசியாதிருந்தாலும் பிதா என்னிலேயும் நான் அவரிலேயுமிருக்கிறதையறிந்து விசுவாசித்துக்கொள்ளும்படிக்கு நீங்கள் அந்தக் கிரியைகளை விசுவாசிக்கவேண்டுமேயென்றார்.

௩௯ அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவரைப் பிடிக்கத் தேடினார்கள். அவர் அவர்களுடைய கைகளினின்று விலகிப் புறப்பட்டு,

௪௰ யோர்தானுக்கு அக்கரையிலே முன்னே யோவான் ஞானஸ்நானங் கொடுத்த இடத்திற்குத் திரும்பிப்போய் அங்கே தங்கினார்.

௪௧ அநேகம்பேர் அவரிடத்திற் சென்று பின்பு சொன்னது. யோவான் ஒரு அற்புதமுஞ் செய்யாதிருந்தும் இவரைக் குறித்துச் சொன்னயாவும் மெய்யாயிருக்கின்றதென்றார்கள்.

௪௨ அவ்விடத்திலே யநேகம்பேர் அவர்மேல் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) இறந்துபோன இலாசருவையெழுப்பினதும், (௪௭) ஆசாரியர்முதலானவர்கள் அவரைக்குறித்து ஆலோசனைபண்ணினதும்.]

அன்றியும் மரியாளும் அவளுடைய சகோதரியாகிய மார்த்தாளுமிருந்த பெத்தானியூரானாகிய இலாசரு என்பவன் வியாதியுள்ளவனாயிருந்தான்.

௨ அந்த மரியாள் கர்த்தர்மேற் பரிமளதயிலத்தைப் பூசித் தன் மயிரால் அவருடைய பாதங்களைத் தொடைத்தவளே. அவளுடைய சகோதரனாகிய இலாசரு வியாதிப்பட்டிருந்தான்.

௩ அப்பொழுது அவனுடைய சகோதரிகள் ஆண்டவரே உமக்கு அன்பாயிருக்கிறவன் வியாதியாயிருக்கிறானென்று சொல்லியனுப்பினார்கள்.

௪ இயேசுவானவர் அதைக்கேட்டு அந்த வியாதி மரணத்திற்கேதுவாயிராமற் பராபரனுடைய குமாரன் மகிமைப்படும்படிக்குப் பராபரனுடைய மகிமைவிளங்குதற்கேதுவாயிருக்குமென்றார்.

௫ இயேசுவானவர் அந்த மார்த்தாளிடத்திலும் அவளுடைய சகோதரியினிடத்திலும் இலாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார்.

௬ அப்படியிருந்தும் அவன் வியாதியாயிருக்கிறதையவர் கேட்டபின்பு அவர் தாமிருந்த இடத்திலேபின்னும் இரண்டுநாள் தங்கினார்.

௭ அதின்பின்பு அவர் (தம்முடைய) சீஷரை நோக்கி நாம் மறுபடியும் யூதேயா நாட்டிற்குப் போவோம் வாருங்களென்றார்.

௮ அதற்குச் சீஷர் சொன்னது. இரபீ சிலநாளுக்குமுன்னே, யூதர்கள் உம்மேற் கல்லெறியவென்றுள்ளவர்களாயிருந்தார்களே, நீர் மறுபடியும் அவ்விடத்திற்குப் போகலாமா என்றார்கள்.

௯ இயேசுவானவர் சொன்னது. பகலுக்குப் பன்னிரண்டு மணிநேரமில்லையா. பகற்காலத்திலே நடக்கிறவன் இவ்வுலகத்தின் ஒளியைக் காண்கிறபடியினாலே இடறமாட்டான்.

௰ இராத்திரிகாலத்திலே நடக்கிறவன் தனக்கு ஒளியில்லாதபடியினாலே இடறுவானென்று சொல்லி,

௰௧ பின்பு நமக்குச் சிநேகிதனாகிய இலாசரு நித்திரையடைந்தான். நான் அவனையெழுப்பப்போகிறேனென்றார்.

௰௨ அப்பொழுது அவருடைய சீஷர் சொன்னது. ஆண்டவரே அவன் நித்திரையடைந்திருந்தாற் குணமடைவானென்றார்கள்.

௰௩ இயேசுவானவர் அவனுடைய மரணத்தைக்குறித்து அப்படிச் சொல்லியிருந்தார். அவர்கள் அவர் நித்திரைபண்ணுதலைக் குறித்தே பேசினாரென்று நினைத்தார்கள்.

௰௪ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி இலாசரு மரித்தானென்று தெளிவாய்ச் சொல்லி,

௰௫ பின்பு நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு நான் அங்கேயிராததினாலே உங்கள் நிமித்தஞ் சந்தோஷப்படுகிறேன். இப்பொழுது அவனிடத்திற்குப் போவோம் வாருங்களென்றார்.

௰௬ அப்பொழுது திதிமு என்னப்பட்ட தோமாஸ் மற்றச் சீஷரை நோக்கி அவரோடேகூட மரிக்கும்படிக்கு நாமும் போவோம் வாருங்களென்றான்.

௰௭ ஆதலால இயேசுவானவர் போன பொழுது அவனகல்லறையிலவைககபபட்டு நாலுநாளாயிறறெனறு அறிநதார்.

௰௮ பெதானியூர் எருசலேமநகர்ககு சமீபமாய ஏறககுறையபபதினைநது ஸ்தாதிவழிதூரததிலிருநதது.

௰௯ அனறியுமயூதரில அநேகர் மார்ததாளமரியாள எனபவர்களுடைய சகோதரனைககுறிதது அவர்களுககு ஆறுதலசொலலுமபடிககு அவர்களிடததிற்போயிருந தார்கள.

௨௰ இயேசுவானவர்வருகிறாரெனறுமார்ததாளகேடடபொழுது அவருககெதிர்கொணடுபோனாள. மரியாள்வீடடிலேயுடகார்ந்திருநதாள.

௨௧ பினபுமார்ததாள இயேசுவினிடத திற் (சேர்நது) ஆணடவரே நீரிஙகேயிருநதீராகில எனசகோதரனமரிககமாடடான.

௨௨ இபபொழுதுநீர் பராபரனிடததிற் கேடடுககொளவதெதுவோ அதைப பராபரன உமககுககொடுபபாரெனறு அறிநதிருககிறேனெனறாள.

௨௩ அதறகுஇயேசுவானவர், உனசகோதரனஉயிரோடெழுநதிருபபானெனறார்.

௨௪ மார்ததாளசொன்னது. கடைசிநாளிலே (மரிததோர்) உயிரோடெழுநதிருககுமபொழுது. அவனுமஎழுநதிருபபானெனறறிநதிருககிறேனெனறாள.

௨௫ அதறகு இயேசுவானவர்சொனனது. நானே உயிரோடெழுபபுகிறவனுமாய சீவனுமாயிருககிறேன. எனனிடததில்விசுவாசமாயிருககிறவன மரிததாலுமபிழைபபான.

௨௬ அலலாமலும உயிரோடிருககையில எனனிடததில விசுவாசமாயிருககிறவனெவனோ அவன ஒருககாலுமமரியாமலிருபபான. இதைவிசுவாசிககிறாயாவெனறார்.

௨௭ அவளசொனனது. ஆம ஆணடவரே நீர்கிறிஸது நீர்பராபரனுடைய குமாரன. நீர் உலகததிலவரவேணடுபவரெனறு நான விசுவாசிக்கிறேனெனறாள.

௨௮ இபபடிசசொனனபினபு, அவளபோயத தனசகோதரிமரியாளை இரகசியமாய அழைதது, பபோதகர்வநதிருககிறார். உனனையழைககிறாரெனறாள.

௨௯ அதையவள் கேடடவுடனே, சீககிரமாயெழுநது, அவரிடததிறபோனாள.

௩௰ அககாலததிலே இயேசுவானவர் கிராமததிறகுளளேசெலலாமல, மார்ததாள தமமைசசநதிதத இடததிலே யிருநதார்.

௩௧ அபபொழுதுவீடடிலேஅவளுடனே கூடவிருநது அவளுககு ஆறுதலசெயகிற யூதர்கள, மரியாளசீககிரமா யெழுநதுபுறபபடடுபபோகிறதைககணடு, அவளகல்லறையினிடததிலே அழுதுகொளளுமபடி போகிறாளெனறுசொலலிககொணடு அவளுககுபபினசெனறார்கள.

௩௨ இயேசுவானவரிருநத இடததிலே மரியாளசேர்நது அவரைககணடவுடனே அவருடையபாதததினருகேவிழுநது ஆணடவரே, நீர் இஙகேயிருநதீராகில, எனசகோதரனமரிககமாடடானேயெனறாள.

௩௩ அவளுமஅவளுடனே கூடபபோன யூதருமஅழுகிறதை இயேசுவானவர் கணடபொழுது, உளளததிலிருநதுபெருமூசசுவிடடுககலஙகி,

௩௪ அவனையெஙகே வைததீர்களெனறார். ஆணடவரே நீர்வநதுபாருமெனறார்கள.

௩௫ இயேசுவானவர்கணணீர் விடடார்.

௩௬ யூதர்கள அதைபபார்தது, இதோ, அவர் அவனிடததில மிகவுமபட்சமாயிருநதாரேயெனறார்கள.

௩௭ அவர்களிறசிலர்சொனனது. குருடனுடையகணகளைததிறநதஇவர் அவனைமரியாமலிருக்கபபணணவுங கூடாதாவெனறார்கள.

௩௮ அபபொழுதுஇயேசுவானவர்மறுபடியுநதமககுளளேபெருமூசசுவிடடு, பினபுகலலறையினிடததிறசேர்நதார். அது ஒருகுகையாயிருநதது. அதினமேலேயொருகல வைககபபடடிருநதது.

௩௯ அபபொழுது இயேசுவானவர், கலலையெடுததுபபோடுஙகளெனறார். மரிததவனுடையசகோதரியாகிய மார்ததாள அவரைநோககி, ஆணடவரே, இவனபுதைககபபடடு நானகுநாளானபடியினாலே, நாறுமேயெனறாள.

௪௰ அவளை இயேசுவானவர்நோககி, நீ விசுவாசிததாற் பராபரனுடைய மகிமையைககாணபாயெனறு நானஉனககுசசொலலவிலலையாவெனறார்.

௪௧ பினபுசவமவைககபபடடகுகையிலிருநதகலலையெடுததுபபோடடார்கள. அபபொழுது இயேசுவானவர்கணகளை யுயர்தது, பிதாவே, நீர் எனககுசசெவிகொடுததபடியினாலேயுமமைததோததிரஞ செயகிறேன.

௪௨ நீர் எபபொழுதுமஎனககுசசெவிகொடுககிறதையறிநதிருககிறேன. ஆகிலுஞ்சுறறிநிறகிறசனஙகளநீர் எனனையனுபபினதை விசுவாசிககுமபடிககு அவர்களினிமிததமேயிபபடிசசொனனேனெனறுசொலலி,

௪௩ பினபு இலாசருவே வெளியேவாவெனறுமிகுநதசததததோடே கூபபிடடார்.

௪௪ அபபொழுதுமரிததவன காலகளுஙகைகளுஙகடடியிருநதசேலைகளோடுமமுககுசுறறபபடடிருநதசேலையோடும வெளியேவநதான. பினபு இயேசுவானவர்சொனனது இவனுடையகடடவிழதது, இவனைவிடடுவிடுஙகளெனறார்.

௪௫ அபபொழுது மரியாளிடததிறகுப போய இயேசுவானவர்செயத வைகளைககணடயூதரில அநேகர் அவரிடததிலவிசுவாசமானார்கள்.

௪௬ வேறு சிலர்பரிசேயரிடததிறகுப போய இயேசுவானவர்செயதவைகளையவர்களுககு அறிவிததார்கள்.

௪௭ அபபொழுது பிரதான ஆசாரியருமபரிசேயருமபெரியஆலோசனைச சஙகததார்வநது கூடிமபடிசெயது பினபுசொனனதாவது. அநதமனிசன அநேக அறபுதஙகளைச செயதுவருகிறான.

௪௮ நாம அவனுககு இடஙகொடுததால, எலலாருமஅவனிடததில விசுவாசமாவார்கள். பினபு உரோமர்வநது. நமமுடையஸதலததையுஞ சனஙகளையும எடுததுககொளளுவார்கள். ஆகையால நாம எனனசெயவோமெனறார்கள்

௪௯ அபபொழுது அவர்களிலொருவனுமாய அவவருஷததுப பிரதான ஆசாரியனுமாயிருநத காயிபாவெனபவன அவர்களைநோககி நீஙகள ஒனறுநதெரியாதவர்கள்.

௫௰ சனஙகளெலலாருங கெடடுபபோகாதபடிககு ஒருமனிதனசனஙகளுககாகமரணமடைவது நமககு நலமாயிருககுமெனறு நீஙகள சிநதியாமலுமிருககிறீர்களெனறான.

௫௧ இபபடி யவனதானாயச சொலலாமல அவன அநதவருஷததிறபிரதான ஆசாரியனாயிருகக இயேசுவானவர் யூதசசனஙகளுககாகமரணம அடைவதைத தீர்ககதரிசனமாயச சொனனான.

௫௨ மேலும அநதச சனஙகளுககாகமாததிரமலல எஙகஙகே சிதறிப போயிருககிற பராபரனுடைய பிளளைகளைபொனறாககூடடிககொளளுகிறதறகாகவும அவர்மரணம அடைவாரெனறு குறிததான.

௫௩ ஆகையால அநநாள்முதல அவர்கள அவரைககொலைசெயயுமபடிககு ஆலோசனைபணணிககொணடுவநதார்கள.

௫௪ அதினாலே இயேசுவானவர்பினனும வெளியரஙகமாய யூதருககுளளேதிரியாமல அவவிடததைவிடடு வனாநதரததிறகுச சமீபமான இடமாகிய எபபிராயீமுககுபபோய அஙகேதமமுடைய சீஷருடனேகூடச சஞசரிததார்.

௫௫ அககாலததிலே யூதருடையபஸகாபபணடிகைசமீபமாயிருநதது. அதறகுமுனனே அநநாடடிலிருநது அநேகர் தஙகளைச சுததிகரிககுமபொருடடாக எருசலேமுககுபபோனார்கள.

௫௬ அஙகே அவர்கள இயேசுவைத தேடிககொணடு தேவாலயததிலே நினறுகொணடு ஒருவரையொருவர்நோககி உஙகளுககெபபடித தோனறுகிறது. அவர் பணடிகைககு வராமலிருபபாரோவெனறு பேசிககொணடார்கள்.

௫௭ பிரதான ஆசாரியருமபரிசேயருமஅவரைபபிடிககுமபடிககு யோசிதது அவரிருககிற இடததைஒருவன அறிநதால அதை யறிவிககவேணடுமெனறு கடடளைகொடுததிருநதார்கள்.

## ௰௨. அதிகாரம்.

[௧) மரியாள கிறிஸதுவினுடையபாததததில அபிஷேகமபணணினதும, (௪) யூதாஸ அதைககுறிததுமுறுமுறுததது, (௰௨) இயேசுவானவர் எருசலேமிறபிறவேசிககையிற சனஙகள அவரைப புகழ்நதும, (௨௰) கிரேககர் அவரைககாணவிருமபினதும, (௨௩) இயேசுவானவர்தமமைககுறிததுப பிரசஙகமபணணினதும, (௪௨) பரிசேயருடைய தனமையைககுறிததுச சொனனதும, (௪௪) அவர்தாம உலகததின ஒளியெனறுபோதிததது.]

௧ பினபு பஸகாபபணடிகை வருகிறதறகு ஆறுநாளுககுமுனனே இயேசுவானவர்தமமாலே மரணததிலிருநதெழுபபபபடட இலாசரு இருககிற பெததானி யூருககுபபோனார்.

௨ அஙகே அவருககு இராவிருநதுபணணினார்கள். மார்ததாளபணிவிடைசெயதாள். இலாசருதானும அவருடனேகூடபபநதியிருநதவர்களிலொருவனாயிருநதான.

௩ அபபொழுது மரியாள விலையேறபபெறறகளஙகமிலலாத நருதெனனுநதயிலததிலொருறாததலையெடுதது அதை இயேசுவினுடைய காலகளிறபூசித தனமயிரால அவைகளைததுடைததாள. அநத தயிலததினபரிமளததினாலேவீடுநிரபபபபடடது.

௪ அபபொழுது சீஷரிலொருவனுமாய அவரைக காடடிககொடுததவனுமாயசீமோனுடையகுமாரனுமாயிருநத யூதாஸகாரியோததெனபவனசொனனது.

௫ இநதத தயிலததை முநநூறு தேநாரியுவிலைககுவிறறுத தரித்திரருககுககொடுககலாமேயெனனததினாலே யபபடிசசெயயவிலலையெனறான.

௬ அவன தரிததிரரைககுறிததுக்கவலைபபடுகிறவனாக அபபடிச சொலலாமல அவன திருடனுமபணபபையைவைததுககொணடு (அதிலே) போடடபபடடவைகளைச சுமககிறவனுமானபடியினாலே இபபடிச சொனனான.

௭ அபபொழுது இயேசுவானவர்சொனனது. இவளைவிடடுவிடு எனனையடககமபணணுமநாளுககாக இவள இதைககாததுககொணடிருநதாள.

௮ தரித்திரர் எப்பொழுதும் உங்களிடத்திலிருக்கிறார்கள். நான் எப்பொழுதும் உங்களிடத்திலே இரேனென்றார்.

௯ பின்பு யூதரில் அநேகசனங்கள் அவர் அங்கேயிருக்கிறதையறிந்து இயேசுவினிமித்தமாத்திரமல்ல அவரால் மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்ட லாசருவைக் காணும்பொருட்டாகவும் அவ்விடத்திற்கு வந்தார்கள்.

௰ லாசருவினிமித்தம் யூதர்களில் அநேகம்பேர் போய் இயேசுவினிடத்தில் விசுவாசம் வைத்தபடியினாலே,

௰௧ பிரதான ஆசாரியர் லாசருவையுங் கொலைசெய்யும்படி தீர்மானம்பண்ணினார்கள்.

௰௨ மறுநாளிலே இயேசுவானவர் எருசலேமுக்கு வருகிறாரென்று பண்டிகைக்கு வந்திருந்த திரளான சனங்கள் கேள்விப்பட்டு,

௰௩ குருத்தோலைகளைப் பிடித்துக்கொண்டு அவருக்கெதிர்கொண்டுபோகும்படி புறப்பட்டு: ஓசன்னா, கர்த்தருடைய நாமத்தினாலே வருகிற இஸ்ரவேலின் இராசா வாழ்த்தப்பட்டவரென்று சத்தமிட்டார்கள்.

௰௪ அல்லாமலும் குமாரத்தியாகிய சீயோனே நீ பயப்படாதிரு. இதோ, உன் இராசா கழுதைக்குட்டியின்மேலேறி வருகிறாரென்று எழுதியிருக்கிறபடியே,

௰௫ இயேசுவானவர் ஒரு கழுதைக்குட்டியைக் கண்டு அதின்மேலேறிப்போனார்.

௰௬ அவரைக்குறித்து அப்படி எழுதியிருக்கிறதை அவருடைய சீஷர் அக்காலத்திலே அறியவில்லை. இயேசுவானவர் மகிமையடைந்தபின் அவர்கள் அதையும் தாங்கள் அப்படியவருக்குச் செய்ததையும் நினைத்துக்கொண்டார்கள்.

௰௭ அன்றியும் அவருடனேயிருந்த சனங்கள் அவர் லாசருவைக் கல்லறையிலிருந்து வெளியே வரவழைத்து அவனை உயிரோடெழுப்பினதைக்குறித்துச் சாட்சிகொடுத்தார்கள்.

௰௮ அப்படிப்பட்ட அற்புதத்தை அவர் செய்தாரென்று சனங்கள் கேள்விப்பட்டதினாலே அவர்கள் அவருக்கெதிர்கொண்டுபோனார்கள்.

௰௯ ஆதலால் பரிசேயர் ஒருவரையொருவர் நோக்கி: நாம் செய்கிறதினாலே ஒரு பிரயோசனமுமில்லையென்று அறிவோமாக. உலகமே அவனுக்குப் பின்சென்றதேயென்று சொல்லிக்கொண்டார்கள்.

௨௰ அன்றியும் (பஸ்காபண்டிகையில்) தொழுதுகொள்ளும்படி பண்டிகைக்குப்போனவர்களுக்குள்ளே சில கிரேக்கரிருந்தார்கள்.

௨௰௧ அவர்கள் கலிலேயா நாட்டின் பெத்சாயிதா ஊரானாகிய பிலிப்புவினிடத்தில் போய்: ஐயா நாங்கள் இயேசுவானவரைக் காண விரும்புகிறோமென்று அவனை வேண்டிக்கொண்டார்கள்.

௨௰௨ பிலிப்பென்பவன் அதை அந்திரேயாவுக்குச் சொன்னான். பின்பு அந்திரேயாவும் பிலிப்புவும் அதை இயேசுவுக்குச் சொன்னார்கள்.

௨௰௩ அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது: மனிதனுடைய குமாரன் மகிமைப்படும்படிக்குக் காலம் வந்தது.

௨௰௪ மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: கோதுமை மணி நிலத்திலே விழுந்து செத்துப்போகாவிட்டால் தனித்திருக்கும். செத்ததானால் மிகுந்த பலனைக் கொடுக்கும்.

௨௰௫ தன் சீவனைச் சிநேகிக்கிறவன் அதை இழப்பான். இவ்வுலகத்திலே தன் சீவனைப் பகைக்கிறவன் அதை நித்தியசீவனுக்காகக் காத்துக்கொள்வான்.

௨௰௬ ஒருவன் எனக்கு ஊழியஞ்செய்ய விரும்பினால் எனக்குப் பின்செல்லக்கடவன். அப்பொழுது நான் இருக்குமிடம் எங்கேயோ அங்கே என் ஊழியக்காரனுமிருப்பான். அல்லாமலும் எனக்கு ஊழியஞ்செய்கிறவனைப் பிதா கனம்பண்ணுவார்.

௨௰௭ இப்பொழுது என் ஆத்துமா கலங்குகின்றது. நான் என்ன சொல்லுவேன். பிதாவே, இந்த நேரத்திலிருந்து என்னை இரட்சிக்கவேண்டுமென்று (சொல்வேனோ) இந்த நேரத்தின்பொருட்டாக வந்தேனென்று சொல்லி,

௨௰௮ பின்பு பிதாவே உமது நாமத்தின் மகிமையைக் காண்பியுமென்றார். அப்பொழுது அதின் மகிமையைக் காண்பித்தேன் இன்னமும் அதைக் காண்பிப்பேனென்று வானத்திலிருந்து சத்தமுண்டாயிற்று.

௨௰௯ அங்கே நின்ற சனங்கள் அதைக்கேட்டு இடிமுழக்கமுண்டாயிற்றென்றார்கள். வேறு சிலர் சொன்னது, தேவதூதனொருவன் அவருடனே பேசினானென்றார்கள்.

௩௰ அப்பொழுது இயேசுவானவர் சொன்னது: இந்தச் சத்தம் என்னிமித்தமுண்டாகாமல் உங்கள் நிமித்தமேயுண்டாயிற்று.

௩௰௧ இப்பொழுது இவ்வுலகத்திற்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கப்படுகின்றது. இப்பொழுது இவ்வுலகத்தின் பிரபு புறம்பாகத் தள்ளப்படுவான்.

௩௰௨ அல்லாமலும் நான் பூமியிலிருந்து உயர்த்தப்பட்டிருக்கும்பொழுது எல்லாரையும் என்னிடத்தில் இழுத்துக்கொள்வேனென்று,

௩௰௩ தாம் மரணமடையும் விதத்தைக் குறித்தார்.

௩௰௪ அப்பொழுது சனங்கள் அவரை நோக்கி: கிறிஸ்துவானவர் என்றென்றைக்குமிருக்கிறாரென்று நாங்கள் வேதத்தால் கேள்விப்பட்டிருக்கிறோமே. அப்படியிருக்க மனி

னுஷகுமாரன் உயர்த்தப்படவேண்டுமென்று நீர் எப்படிச் சொல்லுகிறீர். இந்த மனுஷகுமாரன் எவன் என்றார்கள்.

௩௫ அதற்கு இயேசுவானவர் சொன்னது. சிலகாலமாத்திரம் ஒளியானது உங்களுடனேயிருக்கும். இருள் உங்களைப் பிடியாதபடிக்கு நீங்கள் ஒளியையுடையவர்களாயிருக்கையில் (அதிலே) நடவுங்கள். இருளிலே நடக்கிறவன்தான் நடந்துபோகிறவிடம் இன்னதென்று அறியான்.

௩௬ நீங்கள் ஒளியையுடையவர்களாயிருக்க, ஒளியின் பிள்ளைகளாகும்படிக்கு, ஒளியானதின்மேல் விசுவாசமாயிருப்பீர்களாகவென்று இயேசுவானவர் சொல்லிப் புறப்பட்டு அவர்களுக்கு விலகி மறைந்தார்.

௩௭ அவர் இவ்வளவு அற்புதங்களை அவர்களுக்கு முன்பாகச் செய்திருந்தும், அவர்கள் அவர்மேல் விசுவாசமாயிருக்கவில்லை.

௩௮ அதினாலே, கர்த்தாவே, எங்கள் பிரசங்கத்தை விசுவாசித்தவன் யாவன் பராபரனுடைய புயம் யாவனுக்கு வெளிப்பட்டதென்று ஏசாயா தீர்க்கதரிசி சொன்னவசனம் நிறைவேறிற்று.

௩௯ ஏசாயாவென்பவன் அவருடைய மகிமையைக் கண்டு அவரைக்குறித்துப் பேசிக்கொண்டிருக்கிறபொழுது,

௪௰ அவன் பின்னும் சொன்னது அவர்கள் தங்கள் கண்களினாலே காணாமலும் தங்கள் இருதயத்தினாலுணராமலும் மனந்திரும்பாமலும் என்னாலே ஆரோக்கியம் அடையாமலுமிருக்கும்படிக்கு, அவர்களுடைய கண்களை அவர் குருடாக்கி, அவர்களிருதயத்தைக் கடினமாக்கினாரென்பதே.

௪௧ அதினாலே அவர்கள் விசுவாசிக்கக் கூடாதிருந்தார்கள்.

௪௨ ஆகிலும் தலைவரில் அநேகரும் அவர்மேல் விசுவாசமாயிருந்தார்கள்.

௪௩ அப்படியிருந்தும் அவர்கள் பராபரனாலே வருகிற கனத்திலும் மனிதராலே வருகிற கனத்தை அதிகமாய் விரும்பினபடியினாலே, பரிசேயராலே செப ஆலயத்திற்குப் புறம்பாக்கப்படாதபடிக்கு, (அதை) அறிக்கையிடாமலிருந்தார்கள்.

௪௪ அப்பொழுது இயேசுவானவர் சத்தத்தோடே சொன்னதாவது. என்மேல் விசுவாசமாயிருக்கிறவன் என்மேல் மாத்திரமல்ல, என்னை யனுப்பினவர் மேலும் விசுவாசமாயிருக்கிறான்.

௪௫ அல்லாமலும் என்னைக் காண்கிறவன் என்னை யனுப்பினவரைக் காண்கிறான்.

௪௬ என்மேல் விசுவாசமாயிருக்கிற யாவரும் இருளிலிராதபடிக்கு நான் உலகத்திலே ஒளியாக வந்தேன்.

௪௭ அன்றியும் நான் உலகத்தாரை ஆக்கினைக்குட்படுத்தும்பொருட்டல்ல, அவர்களை இரட்சிக்கும்பொருட்டே வந்தேன்.
ஆகையால் ஒருவன் என் வசனங்களைக் கேட்டும், விசுவாசித்துக்கொள்ளாமற்போனால், அவனை நான் ஆக்கினைக்குட்படுத்தமாட்டேன்.

௪௮ என்னைத் தள்ளி என் வசனங்களை ஏற்றுக்கொள்ளாதவனை ஆக்கினைக்குள்ளாக்கத் தீர்க்கிறதொன்றிருக்கின்றது. நான் பண்ணின உபதேசமே கடைசிநாளிலே அவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்.

௪௯ என்னத்தினாலென்றால் நானாய் ஒன்றும் பேசவில்லை. என்னை யனுப்பின பிதாவே நான் பேசவும் உபதேசிக்கவும் வேண்டியவைகளை யெனக்குக் கட்டளையிட்டார்.

௫௰ அவருடைய கட்டளையே நித்தியசீவனென்றறிந்திருக்கிறேன் ஆகையால் நான் உபதேசிக்கிறவைகளைப் பிதா எனக்குச் சொன்னபடியே உபதேசிக்கிறேனென்றார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் சீஷருடைய கால்களைக் கழுவினதும், (௰௨) மனத்தாழ்மையுள்ளவர்களாயிருக்கும்படி புத்திசொன்னதும், (௰௮) தம்மைக் காட்டிக்கொடுப்பவன் இன்னானென்று காட்டினதும், (௩௪) அன்புள்ளவர்களாயிருக்கும்படி புத்திசொன்னதும், (௩௬) தம்மைப் பேதுரு மறுதலிப்பதை முன்னறிவித்ததும்.]

பஸ்காப்பண்டிகைக்கு முன்னே இயேசுவானவர் இவ்வுலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப் போகும்படிக்குத் தம்முடைய காலம் வந்ததென்றறிந்து, இவ்வுலகத்திலுள்ள தம்முடையவர்களிடத்தில் வைத்த அன்பை முடிவுபரியந்தமும் அவர்களிடத்தில் வைத்தார்.

௨ ஆகையால் அக்காலத்திலே பசாசானவன் சீமோனுடைய குமாரனாகிய யூதா இஸ்காரியோத்தின் இருதயத்திலே அவரைக் காட்டிக் கொடுக்கும்படிக்கான (யோசனையை) வைத்திருந்தபின்பு,

௩ அவர்கள் இராப்போசனம் பண்ணிக்கொண்டிருக்கையில் இயேசுவானவர் தமக்குச் சகலத்தையும் பிதா ஒப்புக்கொடுத்ததையுந் தாம் பராபரனிடத்திலிருந்து வந்ததையும் பராபரனிடத்திற்குப் போகிறதையும் அறிந்து,

௪ இராப்போசனத்தை விட்டெழுந்து, மேலங்கியைக் களைந்து ஒரு சேலையையெடுத்துத் தம்மைச் சுற்றிக்கட்டிக்கொண்டு,

௫ பின்பு ஒரு சட்டியிலே தண்ணீர் வார்த்துச் சீஷருடைய கால்களைக் கழுவவுந் தாம் கட்டிக்கொண்டிருந்த சேலையினாலே துடைக்கவுந் தொடங்கினார்.

௬ அவர் சீமோன் பேதுருவினிடத்திற் சேர்ந்தபொழுது அவன் அவரை நோக்கி ஆண்டவரே நீர் என் கால்களைக் கழுவலாமோ வென்றான்.

மகிமைப்படுத்துவார். சீக்கிரமாய் அவனை மகிமைப்படுத்துவார்.

௩௩ பிரியமான பிள்ளைகளே இன்னுங் கொஞ்சக் காலமாத்திரம் நான் உங்களுடனேகூட இருப்பேன். நீங்கள் என்னைத் தேடுவீர்கள். எல்லாரிலும் நான் போகுமிடத்திற்கு நீங்கள் வரக்கூடாதென்று நான் யூதரோடே சொன்னதுபோல இப்பொழுது உங்களோடுஞ் சொல்லுகிறேன்.

௩௪ நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள். நான் உங்களிடத்தில் அன்பாயிருந்ததுபோல நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருங்களென்று புதிதான கற்பனையை உங்களுக்குக் கொடுக்கிறேன்.

௩௫ நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருந்தால் நீங்கள் என்னுடைய சீஷரென்று எல்லாரும் அறிவார்களென்றார்.

௩௬ சீமோன்பேதுரு அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் எங்கே போகிறீரென்றான். அதற்கு இயேசுவானவர் சொன்னது. நான் போகிற இடத்திற்கு நீ இப்பொழுது என் கூடப்பின்செல்லமாட்டாய் பின்பு எனக்குப் பின்செல்லுவாயென்றார்.

௩௭ பேதுரு சொன்னது ஆண்டவரே, நான் என்னத்தினாலே இப்பொழுது உமக்குப் பின்செல்லக்கூடாது. உமக்காக என் சீவனைக் கொடுப்பேனென்றான்.

௩௮ இயேசுவானவர் சொன்னது நீ எனக்காக உன் சீவனைக் கொடுப்பாயா சேவல் கூவுகிறதற்குமுன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.

## ௧௪. அதிகாரம்.

[(௧) சீஷர் கலக்கமில்லாதபடிக்கும், (௬) தம்மாலே பிதாவினிடத்திற்சேரும்படிக்கும், (௧௦) தம்மைமுன்னிட்டுச் செபம்பண்ணும்படிக்கும், (௧௫) தம்மிடத்தில் அன்பு கூரும்படிக்கும் புத்திசொல்லி, (௧௬) தேவ ஆவியைவாக்குத்தத்தம்பண்ணி, (௨௭) அவர்களுக்கு ஆறுதலானவைகளைச் சொன்னது.]

௧ உங்கள் இருதயங் கலங்காதிருப்பதாக, பராபரனில் நம்பிக்கையாயிருங்கள். என்னிடத்திலும் நம்பிக்கையாயிருங்கள்.

௨ என் பிதாவின் வீட்டில் அநேகம் வாசஸ்தலங்களுண்டு. அப்படியில்லாதிருந்தால் நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன். ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப் போகிறேன்.

௩ நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம்பண்ணின பின்பு, நானிருக்கிற இடத்திலே நீங்களுமிருக்கும்படிக்குத் திரும்பவந்து உங்களை என்னிடத்திற் சேர்த்துக்கொள்வேன்.

௪ நான் போகிற இடத்தை அறிந்திருக்கிறீர்கள். வழியையும் அறிந்திருக்கிறீர்களென்று சொன்னபொழுது,

௫ தோமாவென்பவன் அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் போகிற இடத்தை அறியமாட்டோமே. வழியை நாங்கள் எப்படி அறிவோமென்றான்.

௬ அதற்கு இயேசுவானவர் சொன்னது. நானே வழியுமாய்ச் சத்தியமுமாய்ச் சீவனுமாயிருக்கிறேன். என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்திற்குச் செல்லமாட்டான்.

௭ நீங்கள் என்னை அறிந்தால் என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள். மேலும் இப்பொழுது நீங்கள் அவரை அறிந்தும் அவரைக் கண்டுமிருக்கிறீர்களென்றார்.

௮ பிலிப்பு சொன்னது ஆண்டவரே, நீர் பிதாவை எங்களுக்குக் காண்பிக்க வேண்டும். அப்பொழுது எங்களுக்குத் திருப்தியுண்டாயிருக்குமென்றான்.

௯ அவனுடனே இயேசுவானவர் சொன்னது பிலிப்புவே நான் இவ்வளவு காலம் உங்களுடனேகூட இருந்தும் நீ என்னை அறியவில்லையா என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான். அப்படியிருக்கப் பிதாவை எங்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்று நீ எப்படிச் சொல்லுகிறாய்.

௧௦ நான் பிதாவிலேயும் பிதா என்னிலேயுமிருக்கிறதை நீ விசுவாசியாமலிருக்கிறாயா, நான் உங்களுடனே சொல்லுகிற வசனங்களை என்னாலே சொல்லவில்லையே, (என்) கிரியைகளையும் எனக்குள்வாசமாயிருக்கிற பிதாவானவரே செய்துவருகிறார்.

௧௧ நான் பிதாவிலேயும் பிதா என்னிலேயுமிருக்கிறதை நம்புங்கள். (என் வசனத்தினிமித்தம்) நம்பாதிருந்தால் என் கிரியைகளினிமித்தம் என்னை நம்புங்கள்.

௧௨ மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைப் போலக் கிரியைகளைச் செய்வான். இவைகளிலும் அதிகப் பெரியவைகளையே செய்வான். என்னத்தினாலெனில் நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறேன்.

௧௩ அதுவுமல்லாமல் நீங்கள் என்னுடைய நாமத்தினாலே கேட்டுக்கொள்வதெதுவோ அதைப் பிதாகுமாரனாலே புகழப்படும்பொருட்டு, நான் செய்வேன்.

௧௪ நீங்கள் என் நாமத்தினாலே கேட்டுக்கொள்வதெதுவோ அதை நான் செய்வேன்.

௧௫ நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தால் என் கற்பனைகளைக் கைக்கொள்ளுங்கள்.

௧௬ மேலும் என்றென்றைக்கும் உங்களுடனேகூட இருக்கும்படிக்கு ஆன சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனைப் பிதாவா

வர் உங்களுடனேகூட என்றைக்கும் இருக்கும்படிக்கு நான் அவரை வேண்டிக்கொள்ளுவேன்.

௰௭ அந்தச் சத்திய ஆவியை உலகத்தார் காணாமலும் அறியாமலும் இருக்கிறபடியால் அவர்கள் அவரையடைந்து கொள்ளமாட்டார்கள். அவர் உங்களுடனே கூட இருந்து உங்களுக்குள்ளே இருப்பதால் நீங்கள் அவரை அறிவீர்கள்.

௰௮ நான் உங்களை அநாதிக்கிறவர்களாக விடேன்.

௰௯ உங்களிடத்தில் வருவேன். இன்னுஞ் சிறிது காலத்துக்குப்பின்பு உலகத்தார் என்னைக் காணார்கள் நீங்கள் என்னைக் காண்பீர்கள். நான் பிழைக்கிறபடியால் நீங்களும் பிழைப்பீர்கள்.

௨௰ நான் என் பிதாவிலேயும் நீங்கள் என்னிலேயும் நான் உங்களிலேயும் இருக்கிறதை அந்நாளிலே அறிவீர்கள்.

௨௰௧ என் கற்பனைகளையடைந்து அவைகளைக் கைக்கொள்ளுகிறவனே என்னிடத்தில் அன்புகூருகிறவன். என்னிடத்தில் அன்புகூருகிறவன்மேல் என் பிதா அன்பாயிருப்பார். நானும் அவன்மேல் அன்பாயிருந்து என்னையவனுக்கு வெளிப்படுத்துவேன் என்று சொன்னபொழுது,

௨௰௨ இஸ்காரியோத்தல்லாத யூதா வென்பவன் அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் உம்மை உலகத்தாருக்கல்ல, எங்களுக்கே வெளிப்படுத்துகிறதற்குக் காரணமென்னவென்றான்.

௨௰௩ அதற்கு இயேசுவானவர் சொன்னது, ஒருவன் என்னிடத்தில் அன்புகூர்ந்தால், அவன் என் வசனத்தைக் கைக்கொள்வான். அவனிடத்தில் என் பிதா அன்பாயிருப்பார். அல்லாமலும் நாங்கள் அவனிடத்தில் வந்து, அவனோடே வாசம்பண்ணுவோம்.

௨௰௪ என்னிடத்தில் அன்புகூராமலிருக்கிறவன் என் வசனங்களைக் கைக்கொள்ளமாட்டான். நீங்கள் கேட்கிற வசனம் என்னுடையதல்ல. என்னை அனுப்பின பிதாவினுடையதாகவே இருக்கின்றது.

௨௰௫ நான் உங்களுடனே இருக்கையில், இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

௨௰௬ பின்பு பிதாவானவர் என் நாமத்தினாலே அனுப்பும் பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளன் சகலத்தையும் உங்களுக்கு உபதேசம்பண்ணி, நான் உங்களுக்குச் சொன்னயாவையும் நீங்கள் நினைக்கும்படி செய்வார்.

௨௰௭ சமாதானத்தை உங்களுக்குக் கொடுத்துப் போகிறேன். என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குத் தருகிறேன். உலகத்தார் கொடுக்கிறதுபோல, நான் உங்களுக்குக் கொடுக்கமாட்டேன். உங்கள் இருதயங் கலங்கவும் பயப்படவும் வேண்டுவதில்லை.

௨௰௮ நான் போய், பின்பு உங்களிடத்திற்குத் திரும்பி வருவேனென்று நானுங்களுடனே சொன்னதைக் கேட்டீர்களே, நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தீர்களானால் என்னிலும் பிதா பெரியவராகையால், நான் பிதாவினிடத்திற் போகிறதைக் குறித்து நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்.

௨௰௯ அது நடக்கும்பொழுது, நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு அது நடக்கிறதற்கு முன்னே இப்பொழுது அதை உங்களுக்குச் சொன்னேன்.

௩௰ இனி நான் மிகவும் உங்களுடனே பேசுவதில்லை. உலகத்தின் அதிபதி வருகிறான் அவனுக்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை.

௩௰௧ நான் பிதாவினிடத்தில் அன்புகூர்ந்து, அவர் எனக்குக் கட்டளையிட்டபடியே செய்கிறதை உலகத்தார் அறியும்படிக்கு (அப்படி நடக்கும்.) எழுந்திருங்கள். இவ்விடம்விட்டுப் போகக்கடவோம்.

## ௰௫. அதிகாரம்.

[(௧) அவர் திராட்சச்செடியென்றும் சீஷர்கள் கொடிகளென்றும் உவமை காட்டி, (௰௨) அன்பைக்குறித்தும், (௰௮) உலகத்தின் பகையைக்குறித்தும் புத்திசொன்னது.]

நானே மெய்யான திராட்சச்செடி என் பிதா திராட்சத்தோட்டக்காரர்.

௨ என்னில் கனிகொடாதிருக்கிற கொடியெதுவோ அதை அவர் எடுத்துப்போடுகிறார். கனிகொடுக்கிற கொடி அதிகக் கனிகளைக் கொடுக்கும்படிக்கு அதைச் சுத்தம்பண்ணுகிறார்.

௩ நான் உங்களுக்குச் சொன்ன உபதேசத்தினாலே நீங்கள் இப்பொழுது சுத்தமாயிருக்கிறீர்கள்

௪ என்னில் நிலைத்திருங்கள். நானும் உங்களில் நிலைத்திருப்பேன். கொடியானது திராட்சச்செடியிலே நிலைத்திராவிட்டால், அது தானாகவே கனிகொடுக்கமாட்டாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்திராவிட்டால், கனிகொடுக்கமாட்டீர்கள்.

௫ நானே திராட்சச்செடி நீங்கள் கொடிகள். என்னையன்றி, உங்களால் ஒன்றுஞ் செய்யக்கூடாதபடியினாலே என்னிடத்தில் நிலைகொண்டும் நான் நிலைகொள்ளப்பட்டும் இருக்கிறவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான்.

௬ ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால் அவன் உலர்ந்துபோன கொடியைப்போல வெளியே போடப்படுவான். அப்படிப்பட்டவைகளைச் சேர்த்து, அக்கினியிலே போட்டுச் சுட்டெரிக்கிறார்கள்.

௭ நீங்கள் என்னிலேயும் என் வசனங்கள் உங்களிலேயும் நிலைத்திருந்தால், நீங்கள் கேட்டுக்கொள்வதெதுவோ அது உங்களுக்குண்டாகும்.

அ நீங்கள் மிகுந்த கனிகளைக் கொடுத்து, எனக்குச் சீஷர்களாயிருந்தால் என்பிதா மகிமைப்படுவார்.

கூ பிதா என்னிடத்தில் அன்புகூர்ந்திருக்கிறதுபோல, நானும் உங்களிடத்தில் அன்புகூருகிறேன், என்னுடைய அன்பிலே நிலைத்திருங்கள்.

ய நான் என்பிதாவின் கற்பனைகளைக் கைக்கொண்டு, அவருடைய அன்பிலே நிலைத்திருக்கிறதுபோல, நீங்களும் என் கற்பனைகளைக் கைக்கொண்டிருந்தால், என்னுடைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள்.

யக உங்களிடத்தில் என்னுடைய சந்தோஷம் நிலைத்திருக்கும்படிக்கும், உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கும், நான் இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

யஉ நான் உங்களிடத்தில் அன்புகூர்ந்திருக்கிறதுபோல, நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருக்கவேண்டுமென்று கட்டளையிடுகிறேன்.

யங ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன் பிராணனைக் கொடுக்கும்படியான அன்பைப் பார்க்கிலும் அதிகமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை.

யச நான் உங்களுக்குக் கட்டளையிடுகிறயாவையும் நீங்கள் செய்தால், என்னுடைய சிநேகிதராயிருப்பீர்கள்.

யரு ஊழியக்காரன் தன் எசமான் செய்கிறதை அறியாதிருக்கிறபடியால், இனி நான் உங்களை ஊழியக்காரரென்று சொல்லமாட்டேன். நான் என்பிதாவினிடத்திற் கேள்விப்பட்டயாவையும் உங்களுக்கு அறிவித்தபடியினாலே, நான் உங்களைச் சிநேகிதரென்று சொல்லுகிறேன்.

யசா நீங்கள் என்னைத் தெரிந்துகொள்ளவில்லை. நீங்கள் என்னுடைய நாமத்தினாலே பிதாவானவரிடத்திற் கேட்டுக்கொள்வதெதுவோ அதையவர் உங்களுக்குக் கொடுக்கத்தக்கதாக நீங்கள் புறப்பட்டுக் கனிகளைக் கொடுக்கும்படிக்கும் உங்கள் கனிகள் நிலைத்திருக்கும்படிக்கும், நானே உங்களைத் தெரிந்துகொண்டு ஏற்படுத்தினேன்.

யஎ நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருக்கவேண்டுமென்றே உங்களுக்குக் கட்டளையிடுகிறேன்.

யஅ உலகத்தார் உங்களைப் பகைக்கும்பொழுது அவர்கள் உங்களுக்குமுன்னே என்னைப் பகைத்தார்களென்று நினைக்கக்கடவீர்கள்.

யகூ நீங்கள் உலகத்தாராயிருந்தால் உலகத்தார் தங்களைச் சேர்ந்தவர்களாகிய (உங்களைச்) சிநேகிப்பார்கள். நீங்கள் உலகத்தாராயிராமல் என்னாலே உலகத்திலிருந்து தெரிந்துகொள்ளப்பட்டவர்களாயிருக்கிறபடியினாலே உலகத்தார் உங்களைப் பகைக்கிறார்கள்.

உய ஊழியக்காரன் தன் எசமானுக்கு மேற்பட்டவனல்லவென்று நான் உங்களுக்குச் சொன்னவசனத்தை நினைத்துக்கொள்ளுங்கள். அவர்கள் என்னைத் துன்பப்படுத்தினதுபோல உங்களையுந் துன்பப்படுத்துவார்கள். அவர்கள் என்வசனத்தைக் கைக்கொண்டதுபோல, உங்களுடையதையுங் கைக்கொள்ளுவார்கள்.

உக என்னையனுப்பினவரை யறியாதபடியினாலே அவர்கள் என்னுடைய நாமத்தினிமித்தம் இப்படிப்பட்டயாவையும் உங்களுக்குச் செய்வார்கள்.

உஉ நான் வந்து, அவர்களுக்குச் சொல்லாதிருந்தேனானால், அவர்களுக்குப் பாவமுண்டாயிருக்கமாட்டாது. இப்பொழுது அவர்கள் தங்கள் பாவத்திற்குப் போக்குச்சொல்ல இடமில்லை.

உங என்னைப் பகைக்கிறவன் என்பிதாவையும் பகைக்கிறான்.

உச மற்றொருவனுஞ் செய்யாத கிரியைகளை நான் அவர்களுக்குள்ளே செய்யாதிருந்தேனானால், அவர்களுக்குப் பாவமுண்டாயிருக்கமாட்டாது. அவைகளை அவர்கள் கண்டிருந்தும், என்னையும் என்பிதாவையும் பகைக்கிறார்கள்.

உரு நிமித்தமில்லாமல் என்னைப் பகைத்தார்களென்று அவர்களுடைய வேதத்தில் எழுதியிருக்கிற வாக்கியம் நிறைவேறத்தக்கதாக (இப்படிச் செய்கிறார்கள்.)

உசா பிதாவினிடத்திலிருந்து நான் உங்களுக்கு அனுப்பப்படுபவருமாயப் பிதாவினிடத்திலிருந்து புறப்படுகிறவருமாயிருக்கிற சத்திய ஆவியாகிய தேற்றரவாளர் வரும்பொழுது, அவர் என்னைக்குறித்துச் சாட்சிகொடுப்பார்.

உஎ நீங்களும் ஆதிமுதல் என்னுடனே கூடவிருந்தபடியால் சாட்சிகொடுப்பீர்கள்.

## யசா. அதிகாரம்.

[(க) சீஷர்களுக்கு வருந் துன்பங்களைக் குறித்தும், (ரு) கிறிஸ்து தாம் பிதாவினிடத்திற்குப் போய்ப் பரிசுத்த ஆவியை அனுப்புவதைக் குறித்தும், (அ) அந்த ஆவியின் கிரியையைக் குறித்தும், (உய) சீஷருக்கு வருந் துக்கத்தையுஞ் சந்தோஷத்தையுங் குறித்துஞ் சொல்லியது.]

நீங்கள் இடறலடையாதபடிக்கு இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

உ அவர்கள் உங்களைச் செப ஆலயத்துக்குப் புறம்பாக்குவார்கள். அதுவுமல்லாமல் உங்களைக் கொலைசெய்கிறவனெவனும் அவன் பராபரனுக்கு ஆராதனைசெய்கிறேனென்று நினைக்குங்காலம் வரும்.

௩ அவர்கள் பிதாவையும் என்னையும் அறியாதபடியினாலே, இப்படிப்பட்டவைகளை உங்களுக்குச் செய்வார்கள்.

௪ அந்தக் காலம் வரும்பொழுது, நான் இப்பொழுது உங்களுக்குச் சொன்னதை நீங்கள் நினைக்கும்படிக்கு, இவைகளை உங்களுடனே சொன்னேன். நான் தானே யுங்களுடனே கூடவிருந்தபடியினாலே, நான் இவைகளை ஆதியிலே யுங்களுடனே சொல்லவில்லை.

௫ இப்பொழுது நான் என்னையனுப்பினவரிடத்திற்குப் போகிறேன். எங்கே போகிறாயென்று உங்களிலொருவனும் என்னிடத்திலே கேளாமல்,

௬ நானிவைகளையுங்களுக்குச் சொன்னதினாலே துக்கம் நிறைந்த இருதயமுள்ளவர்களாயிருக்கிறீர்கள்.

௭ நானுங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லுகிறேன். நான் போகிறது உங்களுக்குப் பிரயோசனமாயிருக்கும். எப்படியெனில் நான் போகாதிருந்தால், அந்தத் தேற்றுகிறவர் உங்களிடத்தில் வரமாட்டார், போவேனேயாகில் அவரையுங்களிடத்திற்கு அனுப்புவேன்.

௮ அவர் வந்து, பாவத்தையும் நீதியையும் நியாயத்தீர்ப்பையுங்குறித்து உலகத்தாருக்கு மெய்யறிவைக் கொடுப்பார்.

௯ அவர்கள் என்னிடத்திலே விசுவாசமாயிராதபடியினாலே பாவத்தைக் குறித்தும்,

௰ நீங்கள் இனி என்னைக் காணாதபடிக்கு நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினாலே, நீதியைக் குறித்தும்,

௰௧ இவ்வுலகத்தின் பிரபு நியாயத்தீர்ப்படைந்தபடியினாலே, நியாயத்தீர்ப்பைக் குறித்துமே அறிவைக் கொடுப்பார்.

௰௨ நான் இன்னும் அநேகங்காரியங்களையுங்களுக்குச் சொல்லவேண்டியிருக்கிறது. நீங்கள் அவைகளை இப்பொழுது சகிக்கமாட்டீர்கள்.

௰௩ சத்திய ஆவியானவர் வரும்பொழுது, சகலசத்தியத்திலேயும் உங்களை நடத்துவார். அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல், தாம் கேள்விப்படுபவைகளெவைகளோ அவைகளைப் பேசி, இனிவருங்காரியங்களையும் உங்களுக்கறிவிப்பார்.

௰௪ அவர் என்னுடையதிலே யெடுத்து உங்களுக்கறிவிப்பதால், அவர் என்னுடைய மகிமையை விளங்கப்பண்ணுவார்.

௰௫ பிதாவினுடையவைகள் யாவும் என்னுடையவைகள். அதினாலே அவர் என்னுடையதிலே யெடுத்து உங்களுக்கறிவிப்பாரென்று சொன்னேன்.

௰௬ நான் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினாலே சற்றுக்காலமானபின்பு, நீங்கள் என்னைக் காணாமலிருப்பீர்கள். மறுபடியுஞ் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்களென்றும் அவர் சொன்னபொழுது,

௰௭ அவருடைய சீஷரிற் சிலர் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டதாவது, சற்றுக்காலமானபின்பு என்னைக் காணாமலிருப்பீர்களென்றும் மறுபடியுஞ் சற்றுக்காலமானபின்பு, என்னைக் காண்பீர்களென்றும் நான் பிதாவினிடத்திற் போகிறேனென்றும் அவர் நம்முடனே சொன்னதென்ன.

௰௮ சற்றுக்காலமென்று அவர் சொன்னதென்ன. அவர் சொன்னது நமக்கு விளங்கவில்லையே யென்றார்கள்.

௰௯ பின்னுந் தம்மிடத்தில் அவர்கள் வினவவிரும்புகிறதை இயேசுவானவர் அறிந்து அவர்களுடனே சொன்னது, சற்றுக்காலமானபின்பு, என்னைக் காணாதிருப்பீர்கள். மறுபடியுஞ் சற்றுக்காலமானபின்பு, என்னைக் காண்பீர்களென்று நான் சொன்னதைக் குறித்தா நீங்கள் உங்களுக்குள்ளே விசாரிக்கிறீர்கள்.

௨௰ மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, நீங்கள் அழுது புலம்புவீர்கள். உலகத்தார் சந்தோஷப்படுவார்கள். நீங்கள் துக்கப்படுவீர்கள். உங்கள் துக்கஞ் சந்தோஷமாகும்.

௨௧ கருப்பஸ்திரீயானவளுக்குப் பிரசவகாலம் வந்தபொழுது, அவள் துக்கமடைகிறாள். பிள்ளைபெற்றபின்பு, ஒரு மனிதன் உலகத்திற் பிறந்ததினாலே வருகிற சந்தோஷத்தினிமித்தம் அந்த உபத்திரவத்தை நினையாள்.

௨௨ அதுபோல நீங்களுமிப்பொழுது துக்கமடைந்திருக்கிறீர்கள். நான் மறுபடியும் உங்களைக் காண்பேன். அப்பொழுது உங்களிருதயஞ் சந்தோஷப்படும். அல்லாமலும் உங்கள் சந்தோஷத்தை யொருவனும் உங்களிடத்திலிருந்து எடுத்துப் போடமாட்டான்.

௨௩ அந்தநாளிலே நீங்கள் ஒன்றையும் என்னிடத்திற் கேட்கமாட்டீர்கள். மெய்யாகவே நானுங்களுக்குச் சொல்லுகிறதாவது. நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்திற் கேட்டுக்கொள்வதெதுவோ அதையவர் உங்களுக்குக் கொடுப்பார்.

௨௪ இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றையுங் கேட்கவில்லை. கேட்டுக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்குப் பெற்றுக்கொள்வீர்கள்.

௨௫ இவைகளை நான் உவமைகளாய் உங்களுடனே பேசினேன். காலம் வரும் அப்பொழுது நான் பிதாவைக் குறித்து உவமைகளாய் உங்களுடனே பேசாமல் வெளிப்படையாகவே உங்களுக்கு அறிவைக் கொடுப்பேன்.

௨௬ அந்தநாளிலே நீங்கள் என் நாமத்தினாலே விண்ணப்பம் பண்ணுவீர்கள். உங்களைக்குறித்து நான் பிதாவை நோக்கிக் கே

ட்டுக்கொள்ளுகிறேனென்று உங்களுடனே சொல்லமாட்டேன்.

௨௭ நீங்கள் என்னைச் சிநேகித்து, என்னைப் பராபரனிடத்திலிருந்து வந்தவனென்று விசுவாசித்திருக்கிறபடியினாலே, பிதாவானவர் தாமே உங்களைச் சிநேகிக்கிறாரே.

௨௮ நான் பிதாவினிடத்திலிருந்து புறப்பட்டு, உலகத்திலே வந்தேன். மறுபடியும் உலகத்தை விட்டுப் பிதாவினிடத்திற்குப் போகிறேனென்று சொன்னபொழுது,

௨௯ அவருடைய சீஷர் அவரை நோக்கி இப்பொழுது நீர் உவமையில்லாமல் வெளிப்படையாய்ப் பேசுகிறீர்.

௩௰ நீர் எல்லா வற்றையும் அறிந்திருக்கிறீரென்றும் ஒருவன் உம்மிடத்தில் வினவுகிறது உமக்கு வேண்டுவதில்லையென்றும் இப்பொழுது அறிந்திருக்கிறோம். இதினாலே நீர் பராபரனிடத்திலிருந்து வந்ததை விசுவாசிக்கிறோமென்றார்கள்.

௩௧ அதற்கு இயேசுவானவர் சொன்னது: இப்பொழுது விசுவாசிக்கிறீர்கள். கேளுங்கள்.

௩௨ நீங்கள் என்னைத் தனியே வைத்துச் சிதறி அவரவரிடத்திற்குப் போகும் நேரம் வரும். அது இப்பொழுது வந்திருக்கின்றது, நான் தனித்தேன். பிதாவானவர் என்னுடனேயிருக்கிறார்.

௩௩ என்னாலே நீங்கள் சமாதானமுள்ளவர்களாயிருக்கும்படிக்கு, இவைகளை உங்களுடனே சொன்னேன்.

௩௪ இவ்வுலகத்தில் உங்களுக்கு உபத்திரவமுண்டாயிருக்கும். ஆறுதல் தயிரியங் கொள்ளுங்கள். நானே உலகத்தைச் செயித்தேனென்றார்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) இயேசுநாதர் சீஷருக்காகப் பிதாவை வேண்டிக்கொண்டது.]

இவைகளை இயேசுவானவர் சொன்னபின்பு அவர் தம்முடைய கண்களை வானத்திற்கு நேராக உயர்த்தித் திருவுளம்பற்றினதாவது.

௨ பிதாவே, நேரம் வந்தது. நீர் உம்முடைய குமாரனுக்குக் கொடுத்த யாவருக்கும் அவன் நித்திய சீவனைக் கொடுக்கும்பொருட்டாய் மனிதர் யாவர்மேலும் அவனுக்கு அதிகாரங் கொடுத்தபடியே உம்முடைய குமாரன் உம்முடைய மகிமையை விளக்கும்படிக்கு, நீர் அவனை மகிமைப்படுத்துவீராக.

௩ ஒன்றானமெய்த்தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பின இயேசுக்கிறிஸ்துவையும் அறிந்துகொள்ளுகிறதே நித்திய சீவன்.

௪ பூமியிலே நான் உம்முடைய மகிமையை விளக்கினேன். நான்செய்யும்படிக்கு நீர் கொடுத்த கிரியையை முடித்தேன்.

௫ இப்பொழுது பிதாவே உலகமுண்டாகிறதற்கு முன்னே உம்மிடத்தில் எனக்குண்டாயிருந்த உம்முடைய மகிமையினாலே என்னை மகிமைப்படுத்தும்.

௬ நீர் உலகத்தாரிலெடுத்து எனக்குக் கொடுத்த மனிதருக்கு உம்முடைய நாமத்தை வெளிப்படுத்தினேன். அவர்கள் உம்முடையவர்களாயிருந்தார்கள். அவர்களை எனக்குக் கொடுத்தீர். அவர்கள் உம்முடைய வசனத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள்.

௭ நீர் எனக்குக் கொடுத்த யாவும் உம்மாலேயுண்டாயினவென்று அவர்கள் இப்பொழுது அறிந்துகொண்டார்கள்.

௮ அல்லாமலும். நீர் எனக்குக் கொடுத்த வசனங்களை நான் அவர்களுக்குக் கொடுத்தேன். அவர்கள் அவைகளையேற்றுக்கொண்டு என்னை உம்மிடத்திலிருந்து புறப்பட்டு வந்தவனென்று மெய்யாய் அறிந்து நீர் என்னை அனுப்பினீரென்று விசுவாசித்திருக்கிறார்கள்.

௯ நான் அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன். உலகத்தாருக்காகவல்ல நீர் எனக்குக் கொடுத்தவர்கள் உம்முடையவர்களானபடியால் அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰ என்னுடையயாவையும் உம்முடையவைகள் உம்முடையவைகள் என்னுடையவைகளாயிருக்கின்றன என்னுடைய மகிமை அவர்களுக்குள்ளே விளங்கியிருக்கின்றது.

௰௧ நான் உலகத்திலே இனியிரேன் அவர்கள் உலகத்திலேயிருப்பார்கள் நான் உம்மிடத்திற்கு வருகிறேன். பரிசுத்தமுள்ள பிதாவே, நீர் எனக்குக் கொடுத்தவர்கள் நம்மைப்போல ஒன்றாயிருக்கும்படிக்கு நீர் அவர்களை உம்முடைய நாமத்திலே காத்துக்கொள்ளும்.

௰௨ இவ்வுலகத்திலே நான் அவர்களுடனே கூடவிருக்கையில் அவர்களை உம்முடைய நாமத்திலே காத்துக்கொண்டேன். நீர் எனக்குக் கொடுத்தவர்களைக் காத்துக்கொண்டுவந்தேன் வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகக் கேட்டின் மகனே கெட்டுப்போனானேயல்லாமல் அவர்களிலொருவனும் கெட்டுப்போகவில்லை.

௰௩ இப்பொழுது நான் உம்மிடத்திற்கு வருகிறேன். இவர்கள் என்னில் நிறைவாய்ச் சந்தோஷப்படும்படிக்கு இவ்வுலகத்திலே இவைகளைச் சொல்லுகிறேன்.

௰௪ நான் உம்முடைய வசனத்தை இவர்களுக்குக் கொடுத்தேன். மேலும் நான் இவ்வுலகத்தின் தன்மையில்லாதவனாயிருக்கிறது போல அவர்களும் இவ்வுலகத்தின் தன்மையில்லாதவர்களாயிருக்கிறபடியினாலே உலகத்தார் அவர்களைப் பகைக்கிறார்கள்.

௰௫ நீர் அவர்களை உலகத்திலிருந்தெடுத்துக்கொள்ளும்படியல்ல அவர்களைப்பொ

ளாகவிருக்கக் காப்பாற்றும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰௬ நான் உலகத்தானல்லாதவனாயிருக்கிறதுபோல அவர்களும் இவ்வுலகத்தாரல்ல.

௰௭ உம்முடைய சத்தியத்தினாலே அவர்களைப் பிரதிஷ்டையாக்கும். உம்முடைய வசனமே சத்தியம்.

௰௮ நீர் என்னை இவ்வுலகத்தில் அனுப்பினதுபோல நானும் அவர்களை உலகத்தில் அனுப்புகிறேன்.

௰௯ அல்லாமலும் அவர்களுஞ் சத்தியமாய்ப் பிரதிஷ்டையாக்கப்பட்டவர்களாயிருக்கும்படிக்கு அவர்களுக்காக நான் என்னைத்தானே பிரதிஷ்டையாக்குகிறேன்.

௨௰ அல்லாமலும் நான் இவர்களுக்காக மாத்திரமல்ல இவர்களுடைய போதகத்தினாலே என்னிடத்தில் விசுவாசமாகும் பேர்களுக்காகவும் எல்லாருமொன்றாயிருக்கும்படிக்கு வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௧ ஆ, பிதாவே! நீர் என்னையனுப்பினதை யுலகத்தார் விசுவாசிக்கத்தக்கதாக நீர் என்னிலேயும் நான் உம்மிலேயுமிருக்கிறதுபோல அவர்களும் நம்மிலே ஒன்றாயிருக்கும்படிக்கே (வேண்டிக்கொள்ளுகிறேன்.)

௨௨ அல்லாமலும் நாம் ஒன்றாயிருக்கிறதுபோல அவர்களும் ஒன்றாயிருக்கும்படிக்கு நீர் எனக்குக் கொடுத்த மகிமையை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்.

௨௩ அவர்கள் ஒருமைப்பாட்டிலே நிறைந்தவர்களாயிருக்கும்படிக்கும் நீர் என்னையனுப்பினதையும் நீர் என்னிடத்தில் அன்புகூருகிறதுபோல அவர்களிடத்திலும் அன்புகூருகிறதையும் உலகத்தார் அறியும்படிக்கும் நான் அவர்களிலேயும் நீர் என்னிலேயுமிருக்கவேண்டும்.

௨௪ பிதாவே, உலகந் தோன்றின காலத்திற்கு முன்னே நீர் என்னிடத்தில் அன்புகூர்ந்தபடியினாலே எனக்குக் கொடுத்த என் இடைய மகிமையை நீர் எனக்குக் கொடுத்தவர்கள் காணும்படிக்கு நான் இருக்கும் இடமெங்கேயோ அங்கேயவர்களும் என்னோடேகூடவிருக்கவேண்டுமென்று விரும்புகிறேன்.

௨௫ நீதியுள்ள பிதாவே உலகத்தார் உம்மையறியவில்லை நான் உம்மையறிந்திருக்கிறேன் அல்லாமலும் நீர் என்னையனுப்பினதையிவர்கள் அறிந்திருக்கிறார்கள்.

௨௬ அன்றியும் நீர் என்னிடத்தில் வைத்திருக்கிற அன்பு இவர்களிலேயிருக்கும்படிக்கும் நான் இவர்களிலேயிருக்கும்படிக்கும் உம்முடைய நாமத்தையிவர்களுக்குத் தெரியப்படுத்தினேன் பின்னும் அப்படியே தெரியப்படுத்துவேனென்றார்.

# ௰௮. அதிகாரம்.

[(௧) கெத்சேமனே தோட்டத்திலே பகைஞர் கிறிஸ்துவைப் பிடிக்க வருகிறபொழுது, அவருடைய வார்த்தையினாலே கீழ்விழுந்ததும், (௰௨) பின்பு அவரைப் பிடித்துக் கட்டிக் கொண்டுபோனதும், (௰௫) பேதுரு அவரை மறுதலித்ததும், (௰௯) பிரதான ஆசாரியன் அவரைப் பரிசோதித்ததும், (௨௮) பிலாத்து அவரைப் பரிசோதித்து, அவரிடத்திற் குற்றந்தொன்றுங் காணாமலிருந்ததும்.]

இயேசுவானவர் இவைகளைச் சொன்ன பின்பு, அவர் தம்முடைய சீஷருடனே கூடக் கீதரோன் என்னும் ஆற்றுக்கப்புறம் போனார். அங்கே ஒரு தோட்டமிருந்தது. அதிலே அவரும் அவருடைய சீஷரும் பிரவேசித்தார்கள்.

௨ இயேசுவானவர் தம்முடைய சீஷருடனே கூட அடிக்கடி அங்கே கூடிவந்திருந்தபடியினாலே, அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அந்த இடத்தையறிந்தான்.

௩ ஆதலால் யூதாவானவன் போர்ச்சேவகரின் கூட்டத்தையும் பிரதான ஆசாரியர் பரிசேயரென்பவர்களால் அனுப்பப்பட்ட ஊழியக்காரரையுங் கூட்டிக்கொண்டு, பந்தங்களோடுந் தீவட்டிகளோடும் ஆயுதங்களோடும் அவ்விடத்திற்குப் போனான்.

௪ அப்பொழுது இயேசுவானவர் தமக்கு மேல்வரும்யாவையும் அறிந்து, புறப்பட்டு, அவர்களை நோக்கி, யாரைத் தேடுகிறீர்களென்றார்.

௫ அதற்கவர்கள், நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோமென்றார்கள் இயேசுவானவர், நானேயவனென்றார். அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அவர்களுடனே கூட நின்றான்.

௬ நானேயவனென்று அவர் சொன்னபொழுது, அவர்கள் பின்னிட்டுத் தரையிலே விழுந்தார்கள்.

௭ பின்பு அவர் மறுபடியும் அவர்களை நோக்கி, யாரைத் தேடுகிறீர்களென்று கேட்டார், நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோமென்றார்கள்.

௮ இயேசுவானவர் சொன்னது, நானேயவனென்று உங்களுடனே சொன்னேனே. நீங்கள் என்னைத் தேடினீர்களானால் இவர்களைவிட்டுவிடுங்களென்றார்.

௯ அதனாலே, நீர் எனக்குக் கொடுத்தவர்களிலொருவனையாகிலும் நான் இழக்கவில்லையென்று அவர் சொல்லிய வசனம் நிறைவேறிற்று.

௰ அப்பொழுது சீமோன்பேதுரு தன்னிடத்திலிருக்கிற கத்தியையுருவி, பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனுடைய வல

துகாதற வெட்டினான் அந்த வேலைக்காரனுக்கு மல்குஸ் என்றுபேர்.

௰௧ இயேசுவானவர் பேதுருவை நோக்கி, கத்தியையுறையிலேபோடு. பிதா எனக்குக்கொடுத்த பாத்திரத்திலே நான் பானம்பண்ணாமலிருப்பேனோவென்றார்.

௰௨ பின்பு போர்ச்சேவகரும் ஆயிரஞ்சேனைக்குத் தலைவனும் யூதர்களுடைய ஊழியக்காரரும் இயேசுவைப்பிடித்து, அவரைக்கட்டி,

௰௩ முதலாவது அன்னாவென்பவனிடத்திற்கொண்டுபோனார்கள். அந்த அன்னா அவ்வருஷத்துப்பிரதான ஆசாரியனாகிய காய்பாவென்பவனுக்கு மாமனாயிருந்தான்.

௰௪ ஒரேமனிதன் சனங்களுக்குப் பதிலாக மடிந்துபோனால் நலமாயிருக்குமென்று யூதருக்கு ஆலோசனைசொன்னவன் அந்தக்காய்பாவே.

௰௫ சீமோன்பேதுருவும் வேறொரு சீஷனும் இயேசுவுக்குப்பின்சென்றார்கள். அல்லாமலும் அந்தச்சீஷன் பிரதான ஆசாரியனுக்கறிமுகமுள்ளவனாய், இயேசுவுடனே கூடப்பிரதான ஆசாரியனுடைய மாளிகைக்குட்பிரவேசித்தான்.

௰௬ பேதுருவெளிவாசற்படியிலே நின்றான். ஆதலாற் பிரதான ஆசாரியனுக்கறிமுகமுள்ள அந்தமற்றச்சீஷன் வெளியேபோய், வாசலைக்காக்கிறவளுடனே சொல்லிப் பேதுருவையுள்ளேயழைத்துக்கொண்டான்.

௰௭ அப்பொழுது வாசலைக்காக்கிற வேலைக்காரி பேதுருவை நோக்கி, நீயும் அந்த மனிதனுடைய சீஷரிலொருவனல்லவாவென்றாள் அவன் நான் அப்படிப்பட்டவனல்லவென்றான்.

௰௮ குளிர்ச்சியான காலமானபடியினாலே, வேலைக்காரரும் ஊழியக்காரரும் நெருப்புண்டாக்கி, நின்று குளிர்காய்ந்தார்கள். அவர்களுடனே பேதுருவும் நின்று குளிர்காய்ந்தான்.

௰௯ பிரதான ஆசாரியன் இயேசுவானவருடைய சீஷரையும் போதகத்தையுங்குறித்து அவரிடத்திலே விசாரித்தான்.

௨௰ அதற்கு இயேசுவானவர் சொன்னதாவது, அந்தரங்கத்திலே நான் ஒன்றும்பேசாமல் வெளியரங்கமாய் லோகத்துடனே பேசினேன். செப ஆலயத்திலேயும் யூதர்களெல்லாருங் கூடிவருகிற தேவாலயத்திலேயும் எப்பொழுதும் உபதேசம்பண்ணினேன்.

௨௧ என்னத்திற்கு நீர் என்னிடத்திலே விசாரிக்கிறீர். எனக்குச் செவிகொடுத்தவர்களுக்கு நான் சொல்லியவைகளைக் குறித்து அவர்களிடத்திலே விசாரிப்பீராக. நான் பேசினவைகளையறிந்திருக்கிறார்களேயென்றார்.

௨௨ இப்படியவர் சொன்னபொழுது சமீபமாய் நின்ற ஊழியக்காரரிலொருவன் பிரதான ஆசாரியனுக்கு இப்படிமாறுத்தரஞ்சொல்லலாமாவென்றுசொல்லி, இயேசுவானவரையொரு அடியடித்தான். அவனுடனே இயேசுவானவர்சொன்னது.

௨௩ நான் தகாதவிதமாய்ச் சொன்னேனானால், தகாததாயிருக்கிறதையொப்புவி. நான் தகுதியாய்ச்சொல்லியிருக்க என்னத்தினாலே என்னையடிக்கிறாயென்றார்.

௨௪ அன்னாவென்பவன் கட்டப்பட்டிருந்த அவரைப் பிரதான ஆசாரியனாகிய காய்பாவினிடத்திற்கு அனுப்பியிருந்தான்.

௨௫ சீமோன்பேதுரு நின்று குளிர்காய்ந்தான் அப்பொழுது சிலர் அவனை நோக்கி நீயும் அவனுடைய சீஷரிலொருவனல்லவாவென்றார்கள். அதற்கவன் நானல்லவென்று மறுதலித்தான்.

௨௬ பின்பு பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரரிலொருவனும் பேதுருவினாலே காதறவெட்டப்பட்டவனுக்கு இனத்தானுமாயிருந்தவன் அவனை நோக்கி நான் உன்னையவரோடேகூடத் தோட்டத்திலே காணவில்லையாவென்றான்.

௨௭ அப்பொழுது பேதுரு மறுபடியும் மறுதலித்தான். உடனே சேவல்கூவிற்று.

௨௮ விடியற்காலமே யப்பொழுதவர்கள் காய்பாவினிடத்திலிருந்து இயேசுவானவரைப் பிரியத்தோரணை நியாயஸ்தலத்திற்குக்கொண்டுபோனார்கள். அவர்கள் தீட்டுப்படாமற் பஸ்காவைப் புசிக்கும்படிக்குத் தாங்கள் அந்த நியாயஸ்தலத்துக்குட்பிரவேசிக்கவில்லை.

௨௯ ஆதலாற் பிலாத்தென்னுந் தலைவன் அவர்களிடத்திற்குப் போய் இந்த மனிதன்மேல் என்ன குற்றஞ் சாற்றுகிறீர்களென்றான்.

௩௰ அவனுடனே அவர்கள் சொன்னது, இவன் பொல்லாங்குசெய்தவனல்லாதிருந்தால், இவனை யுமக்கொப்புக்கொடுக்கமாட்டோமென்றார்கள்.

௩௧ ஆதலாற் பிலாத்தென்பவன் அவர்களை நோக்கி, இவனை நீங்களே கொண்டுபோய், உங்கள் நியாயசாஸ்திரத்தின்படி இவனுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுங்களென்றான். அதற்கு யூதர்கள் சொன்னது, ஒருவனுக்கு மரணத்தீர்ப்புக்கொடுக்கிறதற்கு எங்களிடத்திலே அதிகாரமில்லையேயென்றார்கள்.

௩௨ இயேசுவானவர் தமக்கு மரணம் வருகிற வகையைக் குறித்துச் சொன்ன வசனம் நிறைவேறத்தக்கதாக (அப்படிப் பேசினார்கள்.)

௩௩ அப்பொழுது பிலாத்தானவன் மறுபடியும் நியாயஸ்தலத்திற்குட்பிரவேசித்து, இயேசுவையழைத்து, நீ யூதருடைய இராசாவோவென்று கேட்டான்.

௩௪ அவனுடனே இயேசுவானவர் சொன்னது, இதை நீர் உம்மாலே சொல்லுகி

ரோ அல்லது மற்றவர்கள் என்னைக்குறித்து இதை யுமக்குச் சொன்னார்களோ வென்றார்.

௩௫ பிலாத்து மறுமொழியாகச் சொன்னது, நான் யூதனா? உன்னுடைய தேசத்தாரும் பிரதான ஆசாரியரும் உன்னை யெனக்கு ஒப்புக்கொடுத்தார்கள் என்ன செய்தாய் என்றான்.

௩௬ அதற்கு இயேசுவானவர் சொன்னது, என் இராச்சியம் இவ்வுலகத்தின் தன்மையுள்ளதல்ல என் இராச்சியம் இவ்வுலகத்தின் தன்மையுள்ளதானால், நான் யூதர் கையில் ஒப்படைக்கப்படாதபடிக்கு என்னுழியக்காரர் போராடுவார்கள். என் இராச்சியம் இம்மையின் தன்மையுடையதல்லவென்றார்.

௩௭ அப்பொழுது பிலாத்தானவன் அவரை நோக்கி, ஆதலால் நீ இராசனல்லவாவென்றான் இயேசுவானவர் சொன்னது, நீர் சொல்லுகிறபடி நான் இராசன்தான் சத்தியத்தைக்குறித்துச் சாட்சிகொடுக்கும்படிக்கு, நான் பிறந்தேன். அதற்காகவே யிவ்வுலகத்திற்கு வந்தேன். சத்தியத்தின் தன்மையுள்ளவனெவனோ அவன் எனக்குச் செவிகொடுக்கிறானென்றார்.

௩௮ அதற்குப் பிலாத்து சத்தியம் என்னவென்றுசொல்லி, மறுபடியும் யூதரிடத்திற்குப் போய், அவர்களை நோக்கி நான் அவனிடத்தில் ஒரு குற்றமுங்காணேன்.

௩௯ பஸ்காப்பண்டிகையிலே நான் உங்களுக்காக ஒருவனை விடுதலைபண்ணுகிறது வழக்கமாயிருக்கிறதே ஆகையால் நான் யூதருடைய இராசனை யுங்களுக்காக விடுதலைபண்ண உங்களுக்கு விருப்பமுண்டாவென்றான்.

௪௦ அப்பொழுது அவர்களெல்லாரும் இவனையல்ல பர்பாவை விடுதலைபண்ணவேண்டுமென்று கூப்பிட்டார்கள். பர்பாவென்பவன் கள்ளனாயிருந்தான்.

## ௰௯. அதிகாரம்

[(௧) பிலாத்து கிறிஸ்துவையடிப்பித்ததும், (௨) சேவகர் அவரைப் பரியாசஞ்செய்ததும், (௪) பிலாத்து மறுபடியும் அவரைப் பரிசோதித்து, (௰௬) அவரைச் சிலுவையில் அறையும்படி ஒப்புக்கொடுத்ததும், (௰௮) அவரைச் சிலுவையில் அறைந்து, (௨௩) அவருடைய வஸ்திரங்களைப் பங்கிட்டதும், (௨௬) இயேசுவானவர் தமமுடைய தாயாரைச் சீஷனிடம் ஒப்புவித்ததும், (௩௰) அவர் மரித்ததும், (௩௪) சேவகர் அவருடைய விலாவிலே குத்தினதும், (௩௮) யோசேப்பும் நிக்கொதேமும் அவரைக் கல்லறையில்வைத்ததும்.]

அப்பொழுது பிலாத்துசென்று இயேசுவைப்பிடித்து, வாரினால் அடிப்பித்தான்.

௨ அல்லாமலும் போர்ச்சேவகர் முள்ளுகளினால் ஒருமுடியைப் பின்னி, அதை அவருடைய சிரசின்மேல்வைத்து, ஒரு சிவப்பான அங்கியை யவருக்குத் தரிப்பித்து,

௩ யூதருடைய இராசாவே! வாழ்கவென்றுசொல்லி, அவருடைய கன்னத்தில் அடித்தார்கள்.

௪ பிலாத்தானவன் மறுபடியும் வெளியே போய், அவர்களை நோக்கி, இதோ, இவனிடத்தில் ஒரு குற்றத்தையும் நான் காணுகிறதில்லையென்று நீங்கள் அறியும்படிக்கு, இவனை யுங்களிடத்தில் கொண்டுவருகிறேனென்றான்.

௫ உடனே முள்முடியுஞ் சிவப்பான அங்கியுந் தரிக்கப்பட்டவராய் இயேசுவானவர் வெளியே வந்தார். அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி, இந்த மனிதனைப் பாருங்களென்றான்.

௬ பிரதான ஆசாரியரும் ஊழியக்காரரும் அவரைக் கண்டபொழுது, இவனைச் சிலுவையிலே யறையும் இவனைச் சிலுவையிலே யறையுமென்று கூப்பிட்டார்கள். அதற்குப் பிலாத்து சொன்னது, இவனிடத்தில் ஒரு குற்றத்தையுங் காணவில்லையே; ஆகையால் நீங்கள் இவனைக்கொண்டுபோய்ச் சிலுவையிலே அறையுங்களென்றான்.

௭ யூதர்கள் மறுமொழியாகச் சொன்னது, எங்களுக்கொரு நியாயப்பிரமாணமுண்டு இவன் தன்னைப் பராபரனுடைய குமாரனென்று சொன்னபடியினாலே, அந்த நியாயப்பிரமாணத்தின்படியே இவன் சாகவேண்டுமென்றார்கள்.

௮ இந்த வசனத்தைப் பிலாத்துக் கேட்டபொழுது, அதிகமாய்ப் பயந்து, மறுபடியும் நியாயஸ்தலத்திற்குள்ளே போய்,

௯ இயேசுவானவரை நோக்கி, நீ யெவ்விடத்தானென்றான். அதற்கு இயேசுவானவர் மாறுத்தரஞ்சொல்லவில்லை.

௰ ஆதலால் பிலாத்து அவரை நோக்கி நீ யெனக்கு மறுமொழிசொல்லுகிறதில்லையா உன்னைச் சிலுவையிலறையும்படி யெனக்கு அதிகாரமுண்டென்றும் உன்னை விடுதலைபண்ணும்படியும் எனக்கதிகாரமுண்டென்றும் நீ யறியாமலா இருக்கிறாயென்றான்.

௰௧ இயேசுவானவர் சொன்னது, இந்த அதிகாரம் உமக்கு உயரத்திலிருந்து கொடுக்கப்படாதிருந்தால் என்மேல் ஒன்றும் அதிகாரமாய்ச் செய்யும் அதிகாரம் உமக்குண்டாயிருக்கமாட்டாது. ஆனபடியால் என்னை உமக்கொப்புக்கொடுத்தவனே அதிகபாவமுள்ளவனென்றார்.

௰௨ அதுமுதற் பிலாத்தானவன் அவரை விடுதலைபண்ணத் தேடினான். யூதர்கள் அவனை நோக்கி இவனை விடுதலைபண்ணினால், நீர் இராயனுக்குச் சிநேகிதனல்ல தன்னை யிராசாவென்கிறவனெவனோ அவன் இராயனுக்கு விரோதியாயிருக்கிறானென்று கூப்பிட்டார்கள்.

௰௩ அந்நாள் பஸ்காவுக்கு ஆயத்தமாகப்படுகிற நாளுமாய் ஏறக்குறைய ஆறுமணி நேரமுமாயிருக்க.

௰௪ பிலாத்தானவன் இந்த வசனத்தைக் கேட்டபொழுது, அவன் இயேசுவை வெளியே அழைத்துப்போய், கல்வரிசைப்படுத்த இடமென்றும் எபிரேயுப் பாஷையிலே கப்பதாவென்றும் சொல்லப்பட்ட இடத்திலே நியாயாசனத்தின்மேல் உட்கார்ந்து, யூதர்களை நோக்கி, உங்கள் இராசாவைப் பாருங்களென்றான்.

௰௫ அவர்கள் இவனை அகற்றும் அகற்றும் இவனைச் சிலுவையிலறையுமென்று கூப்பிட்டார்கள். பிலாத்தானவன் சொன்னது, உங்கள் இராசாவை நான் சிலுவையிலறையலாமாவென்றான். அதற்குப் பிரதான ஆசாரியர் இராயனேயல்லாமல் ஒரு இராசா எங்களுக்கில்லையென்றார்கள்.

௰௬ அப்பொழுது அவரைச் சிலுவையில் அறையும்படிக்கு அவன் அவரை அவர்களுக்கு ஒப்புக்கொடுத்தான். அந்தப்படி அவர்கள் இயேசுவானவரைப் பிடித்துக்கொண்டுபோனார்கள்.

௰௭ அவர் தம்முடைய சிலுவைமரத்தைச் சுமந்துகொண்டு எபிரேயுப் பாஷையிலே கொல்கதா என்று சொல்லப்பட்ட தலையோட்டிடமென்னும் இடத்திற்குப் புறப்பட்டுப்போனார்.

௰௮ அங்கே அவர்கள் நடுவிலே அவரையும் அவருடனேகூட இரண்டு பக்கங்களிலேவே இரண்டுபேரையுஞ் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

௰௯ அன்றியும் பிலாத்தானவன் நசரேத்தூரானாகிய இயேசு யூதருடைய இராசா வென்று எபிரேயுப் பாஷையிலேயுங் கிரேக்கப் பாஷையிலேயும் இலத்தீன் பாஷையிலேயுமெழுதி, அதைச் சிலுவைமரத்தின்மேற் சேர்த்தான்.

௨௰ இயேசுவானவர் சிலுவையில் அறையப்பட்டிருந்த இடம் நகரத்திற்குச் சமீபமாயிருந்தபடியினாலே, யூதர்களில் அநேகம்பேர் அந்த மேலெழுத்தை வாசித்தார்கள்.

௨௧ அப்பொழுது யூதருடைய பிரதான ஆசாரியர் பிலாத்துவினிடத்திற்குப் போய், யூதருடைய இராசாவென்று நீர் எழுதாமல், நான் யூதருடைய இராசா என்று அவன் சொன்னானென்றே எழுதவேண்டுமென்றார்கள்.

௨௨ அதற்குப் பிலாத்து, நான் எழுதினது எழுதியாயிற்றென்றான்.

௨௩ போர்ச்சேவகர் இயேசுவைச் சிலுவைமரத்திலே அறைந்தபின்பு, அவருடைய வஸ்திரங்களையெடுத்து ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு பங்குவரும்படி, நாலு பங்காக்கினார்கள், அங்கியையும் எடுத்தார்கள். அந்த அங்கி தைத்தலில்லாமல் மேலே தொடங்கி முழுவதும் நெய்யப்பட்டிருந்தபடியால்,

௨௪ அவர்கள், இதைக் கிழியாமல் இதை [illegible] யாருக்கு வருமென்றறியும்படிக்குச் சீட்டுப்போடக்கடவோமென்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள். என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொண்டு, என் உடையின்மேற் சீட்டுப்போட்டார்களென்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாய்ப் போர்ச்சேவகர் அப்படிச் செய்தார்கள்.

௨௫ அல்லாமலும் இயேசுவின் சிலுவைமரத்தின் அருகே அவருடைய தாயும் அவளுடைய சகோதரியாகிய கிலேயோப்பாமரியாளும் மகதலேனாளாகிய மரியாளும் நின்றார்கள்.

௨௬ அப்பொழுது இயேசுவானவர் தம்முடைய தாயையும் அங்கே நின்ற தமக்கன்பான சீஷனையுங் கண்டு,

௨௭ தம்முடைய தாயை நோக்கி ஸ்திரீயே, இவனே உன் மகனென்றார் பின்பு அந்தச் சீஷனை நோக்கி, இவளே உன் தாயென்றார். அந்நேர முதற்கொண்டு அந்தச் சீஷன் அவளைத் தன்னிடமாய்ச் சேர்த்துக்கொண்டான்.

௨௮ இதின்பின்பு இயேசுவானவர் எல்லாம் முடிந்துதீர்ந்ததென்றறிந்து, வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகத் தாகமாயிருக்கிறேனென்றார்

௨௯ அங்கே காடி நிறைந்த பாத்திரம் வைக்கப்பட்டிருந்தது. ஆதலால் அவர்கள் கடற்காளானைக் காடியிலே தோய்த்து ஈசோப்புத் தண்டிற் பூட்டி அவருடைய வாயினிடத்திற்கு நீட்டிக்கொடுத்தார்கள்.

௩௰ இயேசுவானவர் காடியை வாங்கினபின்பு முடிந்ததென்று சொல்லித் தலையைச் சாய்த்து ஆவியையொப்புவித்தார்.

௩௧ அந்த நாள் பெரிய ஓய்வுநாளுக்கு ஆயத்தநாளானபடியினாலே உடல்கள் அந்த ஓய்வுநாளிலே சிலுவைமரங்களிலிராதபடிக்கு யூதர்கள் பிலாத்துவினிடத்திற்போய் அவர்களுடைய காலெலும்புகள் முறிக்கப்படும்படிக்கும் உடல்கள் எடுத்துப்போடப்படும்படிக்கும் அவனிடத்தில் உத்தரவு கேட்டுக்கொண்டார்கள்.

௩௨ அந்தப்படி போர்ச்சேவகர் போய் அவருடனேகூடச் சிலுவைகளில் அறையப்பட்ட முந்தினவனுடைய காலெலும்புகளையும் மற்றவனுடைய காலெலும்புகளையும் முறித்தார்கள்.

௩௩ அவர்கள் இயேசுவினிடத்திற் சேர்ந்தபொழுது அவர் மரித்ததைக்கண்டு அவருடைய காலெலும்புகளை முறிக்கவில்லை.

௩௪ போர்ச்சேவகரிலொருவன் ஈட்டியினாலே அவருடைய விலாவிற் குத்தினான். உடனே இரத்தமுஞ் சலமும் புறப்பட்டன.

௩௫ அதைக்கண்டவன் அதைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறான். அவனுடைய சாட்சி மெய்யாயிருக்கின்றது. நீங்கள் விசுவாசிக்கும்படிக்குத் தான் சொல்லுகிறது மெய்யென்று அவன் அறிந்திருக்கிறான்.

௩௬ அவனுடைய எலும்புகளிலொன்றும் முறிக்கப்படுவதில்லையென்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக இவைநடந்தன,

௩௭ அல்லாமலும் தாங்கள் குத்தினவனைப் பார்ப்பார்களென்றும் வேறு வேதவாக்கியஞ்சொல்லுகின்றது.

௩௮ அதற்குப்பின்பு அரிமத்தியா ஊரானாய இயேசுவானவருக்குச் சிஷனாயிருந்தும் யூதர்களுக்குப் பயப்பட்டதினாலே அதை மறைத்தவனுமாயிருந்த யோசேப்பென்பவன் இயேசுவினுடைய சரீரத்தை எடுத்துக்கொள்ளும்படிக்குப் பிலாத்துவினிடத்தில் உத்தரவு கேட்டான். பிலாத்து உத்தரவு கொடுத்தான். ஆகையால் அவன் போய் இயேசுவின் சரீரத்தையெடுத்துக் கொண்டான்.

௩௯ ஆரம்பத்திலே ஒரு ராத்திரியிலே இயேசுவினிடத்திற்குப் போயிருந்த நிக்கோதேமுவென்பவனும் சேர்ந்து, வெள்ளைப்போளமும் சரியபோளமும் கலந்த ஏறக்குறைய நூறுறாத்தல்பரிமளத்தைக் கொண்டு வந்தான்.

௪௰ அவர்கள் இயேசுவின் சரீரத்தையெடுத்துக்கொண்டு, யூதர்கள் சவங்களிற் செய்துவருகிற வழக்கத்தின்படி அதைச் சுகந்தவர்க்கங்களுடனே கூடச் சேலைகளிற் கட்டினார்கள்.

௪௧ மேலும் அவர் சிலுவையில் அறையப்பட்ட இடத்திலே ஒரு தோட்டமும் அந்தத் தோட்டத்திலே யொருக்காலும் ஒருவரும் வைக்கப்படாதிருந்த புதிய கல்லறையுமிருந்தது.

௪௨ யூதருடைய ஆயத்த நாளானபடியினாலும், அந்தக் கல்லறை சமீபமானபடியினாலும் இயேசுவானவரை அவ்விடத்திலே வைத்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) மரியாளும் பேதுருவும் யோவானுங் கல்லறையினிடத்திற் போய்க் கிறிஸ்துவினுடைய சரீரத்தைக் காணும லிருந்ததும், (௰௪) மரியாளுக்கு இரண்டு தூதர்கள் காணப்பட்டதும், (௰௪) இயேசுநாதர் அவளுக்குக் காணப்பட்டதும். (௰௯) அவர் சிஷர்களுக்குக் காணப்பட்டு பரிசுத்த ஆவியைக் கொடுத்ததும். (௨௪) நம்பிக்கையில்லாத தோமாசுக்கு அவர் தம்மைக் காட்டினதும்.]

௧ பின்பு வாரத்தின் முதலாங் கிழமைக் காலையிலே இருட்டிருக்கையில், மகதலேனூராளாகிய மரியாள் கல்லறையினிடத்திற்குப் போய், அக்கல்லறையிலிருந்த கல்லையெடுத்துப் போட்டிருக்கிறதைக் கண்டாள்

௨ ஆதலால் அவள் ஓடிச் சீமோன் பேதுருவினிடத்திலும் இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்றச் சிஷனிடத்திலும் போய்க், கல்லறையிலிருந்த கர்த்தரை யெடுத்துக்கொண்டார்கள். அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லையென்றாள்.

௩ அப்பொழுது பேதுருவும் அந்த மற்றச் சிஷனும் கல்லறையினிடத்திற்குப் போகும்படி புறப்பட்டு இருவரும் ஒருமித்து ஓடினார்கள்.

௪ பேதுருவிலும் அந்த மற்றச் சிஷன் அதிசீக்கிரமாய் ஓடி, முந்திக் கல்லறையினிடத்திற் சேர்ந்து,

௫ குனிந்து நின்று அதற்குள்ளே பார்க்கையிற் சேலைகள் வைத்திருக்கக்கண்டான்.

௬ அவன் உள்ளே போகவில்லை, சீமோன் பேதுரு அவனுக்குப் பின்சென்றும் போய்க் கல்லறைக்குள்ளே பிரவேசித்து,

௭ சேலைகள் வைத்திருக்கிறதையும், அவருடைய தலையைச் சுற்றியிருந்த சேலை மற்றச் சேலைகளுடனே வையாமல் தனியாய் ஓரிடத்திலே சுருட்டி வைத்திருக்கிறதையுங் கண்டான்.

௮ அப்பொழுது முந்திக் கல்லறையினிடத்திற்குப் போன மற்றச் சிஷனும் உள்ளே பிரவேசித்துக் கண்டு, நம்பினான்.

௯ அவர் மரித்தோரிலிருந்தெழுந்திருக்க வேண்டுமென்கிற வேதவாக்கியத்தை அவர்கள் அதுவரைக்கும் அறிந்துகொள்ளாதிருந்தார்கள்.

௰ பின்பு அந்தச் சிஷர் தங்களுடைய இடத்திற்குத் திரும்பினார்கள்.

௰௧ மரியாள் கல்லறையின் சமீபமாய் வெளியிலே அழுதுகொண்டு நின்றாள். அப்படி அழுதுகொண்டிருக்கையில், அவள் கல்லறைக்குள்ளே குனிந்து பார்த்து,

௰௨ இயேசுவின் சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்திலே வெண்மையான உடையுள்ளவர்களாய்த் தலைமாட்டிலே ஒருவனுங் கால்மாட்டிலே யொருவனுமாக இரண்டு தூதர்கள் உட்கார்ந்திருக்கிறதைக் கண்டாள்.

௰௩ அவர்கள் அவளை நோக்கி, ஸ்திரீயே என்னத்தினாலே அழுகிறாய் என்றார்கள். அதற்கவள் சொன்னது என் கர்த்தரையெடுத்துக்கொண்டுபோனார்கள். அவரைவைத்த இடம் எனக்குத்தெரியவில்லை. அதினாலே (அழுகிறேன்) என்று சொல்லிப் பின்னாகத் திரும்புகையில் இயேசுவானவர் நிற்கிறதைக் கண்டாள்.

௰௪ அவள் அவரை இயேசு என்றறியவில்லை. அப்பொழுது இயேசுவானவர் அவளை நோக்கி,

௰௫ ஸ்திரீயே என்னத்தினாலே அழுகிறாய் ஆரைத்தேடுகிறாயென்றார். அவள் அவரைத்தோட்டக்காரனென்று எண்ணி அவருடனே சொன்னது ஐயா நீர் அவரையெடுத்துக்கொண்டுபோனீரானால் அவரைவைத்த இடத்தையெனக்குச்சொல்லவேணும். நானபோய் அவரை யெடுத்துக்கொள்ளுவேனென்றாள்.

௰௬ அப்பொழுது இயேசுவானவர் மரியாளேயென்று அவளுடனேசொல்லுகிறார். உடனே யவள் திரும்பிக்கொண்டு இரபுனீயென்று அவருடனேசொன்னாள். இரபுனீயென்பதற்குப்போதகரேயென்று அர்த்தமாம்.

௰௭ இயேசுவானவர் சொன்னது, நீயென்னைத்தொடாதிரு. இன்னம் என் பிதாவினிடத்திற்குநான் எழுந்துபோகவில்லையே, இப்பொழுது நீயென் சகோதரரிடத்திற்குப்போய், என்பிதாவினிடத்திற்கும் உங்கள் பிதாவினிடத்திற்கும் என்தேவனிடத்திற்கும் உங்கள்தேவனிடத்திற்கும் எழுந்துபோகிறேனென்று அவர்களுடனேசொல்லென்றார்.

௰௮ மகதலனூராளாகிய மரியாள்போய்த்தான் கர்த்தரைக்கண்டதையும் அவர்தன்னுடனேசொன்னவைகளையுஞ்சீஷருக்கறிவித்தாள்.

௰௯ வாரத்தின்முதற்கிழமையாகியஅன்றைத்தினம் அஸ்தமானகாலத்தில் சீஷர்கள் யூதர்களுக்குப்பயப்பட்டதினாலே கதவுகளைப்பூட்டி கூடியிருக்கையில் இயேசுவானவர் தோன்றி நடுவேநின்று உங்களுக்குச் சமாதான சவுக்கியமுண்டாவதாகவென்றுசொல்லி,

௨௰ தமமுடையகைகளையும் விலாவையும் அவர்களுக்குக்காண்பித்தார். சீஷர் கர்த்தரைக்கண்டபொழுது, சந்தோஷப்பட்டார்கள்.

௨௧ பின்பு இயேசுவானவர் மறுபடியும் அவர்களுடனேசொன்னது, உங்களுக்குச் சமாதானசவுக்கியமுண்டாவதாக. பிதா என்னையனுப்பினதுபோலநானுமஉங்களையனுப்புகிறேனென்றுசொல்லி,

௨௨ அவர்கள் மேலூதிப்பின்புசொன்னது பரிசுத்த ஆவியைப்பெற்றுக்கொள்ளுங்கள்.

௨௩ எவர்களுடையபாவங்களை மன்னிப்பீர்களோ அவர்களுக்கு அவைகள்மன்னிக்கப்பட்டிருக்கும். எவர்களுடையபாவங்களைமன்னியாமலிருப்பீர்களோ அவர்களுக்கு அவைகள்மன்னிக்கப்படாமலிருக்குமென்றார்.

௨௪ அப்பொழுது இயேசுவானவர்வந்திருந்தகாலத்திலே பன்னிருவரிலொருவனாகிய திதிமுவென்னப்பட்ட தோமா அவர்களுடனேகூடவிருக்கவில்லை.

௨௫ ஆதலால்மற்றச்சீஷர் அவனைநோக்கிநாங்கள்கர்த்தரைக்கண்டோமென்றார்கள் அதற்கவன்சொன்னது அவருடைய கைகளில் ஆணிகள் அடித்ததிருந்தத்துழமையை நானகண்டு அந்தத்துழமயிலே யென்விரலைவைத்து அவருடையவிலாவிலே யெனகைகையைவையாவிட்டால் விசுவாசிக்கமாட்டேனென்றான்.

௨௬ எட்டுநாளுக்குப்பின்பு அவருடையசீஷர் மறுபடியும் அறைக்குள்ளேயிருந்தார்கள். தோமாவும் அவர்களுக்குள்ளேயிருந்தான். கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. அப்பொழுது இயேசுவானவர்தோன்றிநடுவேநின்று உங்களுக்குச்சமாதானசவுக்கியமுண்டாவதாகவென்றுசொல்லி,

௨௭ பின்புதோமாவைநோக்கி உன்விரலையிங்கேநீட்டி என்கைகளைப்பார். மேலும் உன்கையைநீட்டி என்விலாவிலேயிடு. அவிசுவாசியாயிராமல் விசுவாசியாயிருப்பாயாகவென்றார்.

௨௮ அதற்குமாறுத்தரமாகத்தோமா அவரைநோக்கி, என்கர்த்தாவே, என்தேவனே, யென்றான்.

௨௯ இயேசுவானவர்சொன்னது, தோமாவே, நீ என்னைக்கண்டபடியினாலேவிசுவாசித்தாய் காணாமலிருந்து விசுவாசிக்கிறவர்கள்பாக்கியவான்களென்றார்.

௩௰ அன்றியும் இந்தப்புஸ்தகத்தில் எழுதப்படாத அநேக அற்புதங்களையும் இயேசுவானவர்தமமுடைய சீஷருக்குமுன்பாகச்செய்தார்.

௩௧ இவைகள் இயேசுவானவர் பராபரனுடையகுமாரனாகியகிறிஸ்துவென்று நீங்கள்விசுவாசிப்பதற்கும் விசுவாசித்தபின்பு அவருடையநாமத்தினாலேசீவனையடைவதற்கும்அதுவாக எழுதப்பட்டிருக்கின்றன.

## ௨௧. அதிகாரம்.

[(௧) திபேரியாக்கடலினிடத்தில் இயேசுநாதர்சிலசீஷருக்குத் தரிசனையானதும், (௰௫) அவர்பேதுருவைமூன்றுதரம்விசாரித்ததும், (௰௮) அவனுடையமரணவகையைமுன்னறிவித்ததும்.]

அதன்பின்பு இயேசுவானவர்திபேரியாவின்கடற்கரையிலே சீஷருக்குத்தம்மைமறுபடியுங்காண்பித்தார். அங்கேகாண்பித்தவிதமாவது.

௨ சீமோன்பேதுருவுந்திதிமுவென்னப்பட்டதோமாவுங்கலிலேயாநாட்டிலுள்ளகானாவூரானாகியநாத்தான்வேலும், செபெதேயுவின்குமாரருமவருடையசீஷரில்வேறிரண்டுபேருங்கூடியிருக்குங்காலத்திலே சீமோன்பேதுருமற்றவர்களைநோக்கி, நான் மீன்பிடிக்கப்போகிறேனென்றான். அவர்க

நாங்களும் உன்னுடனே கூடவருகிறோமென்றார்கள்.

௩ உடனேயவர்கள் புறப்பட்டுப்போய் படகேறினார்கள். அந்த இராத்திரியிலே யவர்கள் ஒன்றும்பிடிக்கவில்லை.

௪ விடியற்காலமானபொழுது, இயேசுவானவர் கரையிலே நின்றார். அவரை இயேசுவென்று சீஷர் அறியாமலிருந்தார்கள்.

௫ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கப்பிள்ளைகளே, போசனம்பண்ணுகிறதற்கேதாகிலும் உங்களிடத்திலுண்டாவென்றார். அதற்கவர்கள் ஒன்றுமில்லையென்றார்கள்.

௬ அவர் சொன்னது. நீங்கள் படகுக்கு வலதுபுறமாக வலையைப்போடவேணும். அப்பொழுது உங்களுக்ககப்படுமென்றார். அந்தப்படியவர்கள் போட்டு நாளானமீன்கள் அகப்பட்டதினாலே அதையிழுக்கமாட்டாதிருந்தார்கள்.

௭ ஆகையால் இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷன் பேதுருவை நோக்கி, அவர் கர்த்தரென்றான். அவர் கர்த்தரென்று சீமோன்பேதுரு கேட்டவுடனே தான் வஸ்திரமில்லாதவனாயிருந்தபடியினாலே, சட்டையைக்கட்டிக்கொண்டு, கடலிலே குதித்தான்.

௮ மற்றச்சீஷர் ஏறக்குறைய இருநூறு முழமாத்திரங் கரைக்குத்தூரத்திலேயிருந்தபடியினாலே, மீன்களுடனே வலையையிழுத்துக்கொண்டு, படகோடே (கரையைச்) சேர்ந்தார்கள்.

௯ அவர்கள் கரையிலே சேர்ந்தபொழுது அங்கே கனலிருக்கிறதையும் அதின்மேலே மீன் வைத்திருக்கிறதையும் அப்பத்தையுங் கண்டார்கள்.

௰ பின்பு இயேசுவானவர் சொன்னது. நீங்களிப்பொழுது பிடித்த மீன்களிலே கொண்டுவாருங்களென்றார்.

௰௧ அப்பொழுது சீமோன்பேதுரு படகுக்குச்சென்று நூற்றைம்பத்துமூன்று பெரியமீன்களால் நிறைந்த வலையைக் கரையிலிழுத்தான். இவ்வளவு இருந்தும் வலை கிழியவில்லை.

௰௨ பின்பு இயேசுவானவர் அவர்களையழைத்துப் போசனம்பண்ண வாருங்களென்றார். அப்பொழுது அவரைக் கர்த்தரென்று சீஷர் அறிந்தபடியினாலே, அவர்களிலொருவனாகிலும் நீர் ஆரென்று கேட்கத்துணியவில்லை.

௰௩ அன்றியும் இயேசுவானவர் சேர்ந்து அப்பத்தையும் மீனையுமெடுத்து அவர்களுக்குப் பரிமாறினார்.

௰௪ இயேசுவானவர் மரித்தோரிலிருந்தெழுந்தபின்பு, தமது சீஷருக்குக் காட்டினதில் இது மூன்றாவது.

௰௫ அவர்கள் போசனம்பண்ணினபின்பு, இயேசுவானவர் சீமோன்பேதுருவைநோக்கி யோனாவின்குமாரனாகிய சீமோனே, இவர்களிலும் நீ என்னிடத்தில் அதிகமாய் அன்புகூருகிறாயாவென்றார். அதற்கவன் சொன்னது. ஆண்டவரே, நான் உம்மிடத்தில் அன்பாயிருக்கிறதை நீர் அறிந்திருக்கிறீரென்றான். அவர் சொன்னது. என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாகவென்றார்.

௰௬ பின்பு அவர் இரண்டாந்தரம் அவனை நோக்கி, யோனாவின் குமாரனாகிய சீமோனே, என்னிடத்தில் அன்புகூருகிறாயாவென்றார். அதற்கவன் சொன்னது. ஆண்டவரே, நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதை நீர் அறிந்திருக்கிறீரென்றான். அவர் சொன்னது. என் ஆடுகளை மேய்ப்பாயாகவென்றார்.

௰௭ பின்பு அவர் மூன்றாந்தரம் அவனை நோக்கி, யோனாவின்குமாரனாகிய சீமோனே, நீ என்னிடத்தில் அன்புகூருகிறாயாவென்றார். என்னிடத்தில் அன்புகூருகிறாயாவென்று அவர் மூன்றாந்தரந் தன்னுடனே சொன்னபடியினாலே, பேதுரு துக்கமடைந்து, ஆண்டவரே, நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர். நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதையும் அறிந்திருக்கிறீரென்றான். இயேசுவானவர் சொன்னது. என் ஆடுகளை மேய்ப்பாயாக.

௰௮ அல்லாமலும் நீ இளவயதுள்ளவனாயிருக்கையில், நீயே உன் அரையிற்கச்சைக்கட்டிக்கொண்டு, உன் இஷ்டப்படிக்கு நடந்து திரிந்தாய். நீ முதிர்வயதுள்ளவனாயிருக்கும்பொழுது உன் கைகளை நீட்டுவாய். வேறொருவன் உன் அரையிற்கச்சைக்கட்டி உனக்கிஷ்டமில்லாத இடத்திற்குக் கொண்டுபோவானென்று மெய்யாகவே யுனக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰௯ அவன் பராபரனுக்குப் புகழுண்டாகத்தக்கதாக அடையும் மரணவகையைக் குறித்து, இப்படிச்சொன்னார். அப்படிச் சொன்னபின்பு, என்பின்சென்றுவாவென்று அவனுடனே சொன்னார்.

௨௰ அந்தப்படி பேதுரு (பின்செல்லுகையில்) திரும்பிப்பார்த்து, இயேசுவுக்கு அன்பாயும் இராப்போசனம்பண்ணுகையில் அவருடைய மார்பிலே சாய்ந்து, ஆண்டவரே, உம்மைக் காட்டிக்கொடுப்பவன் யாவனென்றுங் கேட்டிருந்த சீஷனும் பின்செல்லுகிறதைக் கண்டு,

௨௰௧ இயேசுவானவரைநோக்கி ஆண்டவரே, இவனென்னமாயிருப்பானென்றான்.

௨௰௨ அதற்கு இயேசுவானவர் சொன்னது. நான்வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானால், அதினாலேயுனக்கென்ன. நீயெனக்குப் பின்செல்லென்றார்.

உ௩ அதினாலேயநதச சீஷன மரிபபதில லையெனகிற பேசசுச சகோதரருககுளளே யுணடாயிறறு. இயேசுவானவர் அவனமரி பபதிலலையென்று சொலலாமலநானவருமள வும அவனிருககக எனககுச சிததமானால, அதினாலேயுனககெனனவென்று சொனனார்.

உ௪ அநதச சீஷனே யிநதசசஙகதிகளை கருதிததுச சாட்சிகொடுதது, இவைகளை யெழுதியிருககிறான. அவனுடைய சாட்சி மெயயென்றறிநதிருககிறோம. அனறியும இயேசுவானவர் செயத மறற அநேககாரி யஙகளுமுணடு. அவைகள ஒவவொனறும எழுதபபடடால, அதினாலே யுணடாகும புததகஙகளவைககிறதறகு உலகமபோதா தென்றெணணுகிறேன்.—ஆமென்.

டாரான ஆண்டவருங் கிறிஸ்துவுமாக்கினா
ரென்று இஸ்ரவேல் குடும்பத்தார் யாவரும்
நிச்சயமாய் அறியக்கடவர்களென்றான்.

௩௭ அதை அவர்கள் கேட்டபொழுது,
இருதயத்திற் குத்தப்பட்டவர்களாய்ப் பே
துருவையும் மற்ற அப்போஸ்தலரையும்
நோக்கிச் சகோதரரே! நாங்கள் என்ன செ
ய்யவேண்டுமென்றார்கள்.

௩௮ அதற்குப் பேதுரு சொன்னதாவ
து. உங்களுக்குப் பாவமன்னிப்புண்டாகும்ப
டிக்கு, நீங்கள் மனந்திரும்பி ஒவ்வொருவ
னும் இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினா
லே ஞானஸ்நானம்பெற்றுக்கொள்ளுங்கள்.
அப்பொழுது பரிசுத்த ஆவியாகிய ஈவையு
ம்பெறுவீர்கள்.

௩௯ (ஏனென்றால்) வாக்குத்தத்த
மானது உங்களுக்கும் உங்கள் பிள்ளைகளு
க்கும் நமது தேவனாகிய பராபரன் வரவழை
க்குந் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டா
யிருக்கிறதென்று சொல்லி,

௪௰ மற்ற அநேக வார்த்தைகளாலும்
(அதைக்குறித்துச்) சாட்சியிட்டுத் தாறு
மாறான இந்தச் சந்ததியைவிட்டு இரட்சி
க்கப்படுவீர்களாகவென்று புத்திசொன்
னான்.

௪௧ அப்படியே அவனுடைய வார்
த்தையைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்
டவர்களெவர்களோ அவர்கள் ஞானஸ்நான
ம்பெற்றார்கள். அந்நாளிலே ஏறக்குறைய
மூவாயிரம்பேர் சேர்த்துக்கொள்ளப்பட்
டார்கள்.

௪௨ அவர்கள் அப்போஸ்தலருடைய
உபதேசத்திலேயும் ஒருவரோடொருவர் ஐ
க்கியப்படுதலிலேயும் அப்பம் பிட்குதலிலே
யுஞ் செபம்பண்ணுதலிலேயும் உறுதியாய்த்
தரித்திருந்தார்கள்.

௪௩ ஆத்துமாக்களியாவருக்கும் பயபக்தி
யுண்டாயிற்று. அன்றியும், அப்போஸ்தல
ர்களாலே அநேக அற்புதங்களும் அதிசய
ங்களுஞ்செய்யப்பட்டன.

௪௪ எல்லா விசுவாசிகளும் ஒருமித்திரு
ந்து, சகலத்தையும் பொதுவாய் வைத்தனு
பவித்து,

௪௫ ஆஸ்திகளையும் உடைமைகளையும் வி
ற்று, அவைகளிலே ஒவ்வொருவனுக்கு வேண்
டியவாறே அவைகளைப் பகிர்ந்துகொ
டுத்தார்கள்.

௪௬ தினந்தோறும் அவர்கள் ஒருமன
ப்பட்டுத் தேவாலயத்திலே தரித்திருந்து,
வீடுகடோறும் அப்பம்பிட்டு, மகிழ்ச்சியு
ங் கபடமில்லாமையுமுள்ள இருதயத்தோ
டு போசனம்பண்ணிப் பராபரனைப் புகழ்ந்
துகொண்டு,

௪௭ (மற்ற) சனங்களெல்லாரிடத்திலு
ங் கிருபைபெற்றிருந்தார்கள். அன்றியும் இ
ரட்சிக்கப்படுகிற (மற்றப்) பேர்களைக் கர்த்
தர் தினந்தோறுஞ் சபையோடே சேர்த்
தார்.

## ௩. அதிகாரம்.

[(௧) பேதுரு தேவாலயத்திலே ஒரு சப்பா
ணியைக் குணமாக்கினதும், (௧௨) அதைக்
குறித்துச் சனங்களுக்குப் பிரசங்கம்ப
ண்ணினதும்.]

அக்காலத்திலொருநாள் செபவேளையா
கிய ஒன்பதாமணிநேரத்திலே பேதுருவு
ம் யோவானுந் தேவாலயத்திற்குப் போனா
ர்கள்.

௨ அப்பொழுது தன் தாயின் வயிற்றிலிரு
ந்து சப்பாணியாய்ப் பிறந்த ஒருமனிதன்
சுமந்துவரப்பட்டான். தேவாலயத்திற் பிர
வேசிப்பவர்களிடத்திற் பிச்சைகேட்கும்ப
டிக்கு நாடோறும் அவனை அலங்காரவா
சலென்னப்பட்ட தேவாலயவாசலினிடத்தி
லே வைப்பார்கள்.

௩ தேவாலயத்திற் பிரவேசிக்கும்படி
போகிற பேதுருவையும், யோவானையும் அ
வன் கண்டு பிச்சை கேட்டான்.

௪ அப்பொழுது யோவானுடனேகூட
ப் பேதுரு அவனை உற்றுப்பார்த்து, எங்களை
நோக்கிப்பாரென்றான்.

௫ அவன் அவர்களுடையகையிலே ஏதா
கிலும் பெற்றுக்கொள்ளலாமென்றெண்
ணி அவர்களை நோக்கிப்பார்த்தான்.

௬ அப்பொழுது பேதுரு சொன்னது.
வெள்ளியும் பொன்னும் என்னிடத்திலில்
லை எனக்குண்டானதை உனக்குத்தருகிறேன்.
நசரேத்தூரானாகிய இயேசுக்கிறிஸ்துவி
ன் நாமத்தினாலே நீ எழுந்து நடவென்று
சொல்லி,

௭ வலதுகையினாலே அவனைப்பிடித்துத்
தூக்கிவிட்டான். உடனே அவனுடைய
கால்களும், கரண்டைகளும், ஸ்திரமடைந்
தன.

௮ அவன் குதித்தெழுந்து நின்று நடந்
து, அவர்களுடனேகூடத் தேவாலயத்திற்
பிரவேசித்து, நடந்து, குதித்து, பராப
ரனைத் துதிசெய்தான்.

௯ அவன் நடக்கிறதையும் பராபரனைத்
துதிக்கிறதையுஞ் சனங்களெல்லாருங் கண்
டார்கள்.

௰ அல்லாமலும் தேவாலயத்தின் அலங்
காரவாசலினிடத்திலே பிச்சைகேட்க உட்
கார்ந்திருந்தவன் இவன்தானென்றவர்
கள் அறிந்து, அவனுக்குச் சம்பவித்ததை
க்குறித்து மிகவும் பிரமித்து, அதிசயப்பட்
டார்கள்.

௰௧ அன்றியுங் குணமாக்கப்பட்ட சப்பா
ணி, பேதுருவையும், யோவானையும், அடுத்
துக்கொண்டிருந்தபடியால், சனங்களெல்

உ௭ தேவரீர் அபிஷேகம்பண்ணின உம்முடைய பரிசுத்த குமாரனாகிய இயேசுவுக்கு விரோதமாக மெய்யாய்க்கூடினார்கள்.

உ௯ அப்படியிருக்க கர்த்தாவே! அவர்க(ளுடைய) பயமுறுத்துதல்களைத் தேவரீர் நோக்கிப்பார்த்து,

௩௰ (பிணியாளிகளை) குணமாக்குகிறதற்கு உம்முடைய வல்லமையை வெளிப்படும்படியாய் உம்முடைய பரிசுத்த குமாரனாகிய இயேசுவின் நாமத்தினாலே அடையாளங்களும் அற்புதங்களும் நடக்கும்படியாக நீர் செய்து உம்முடைய ஊழியக்காரர் உம்முடைய வசனத்தை மிகுந்த தயிரியத்தோடே சொல்லும்படி அவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்யுமென்றார்கள்.

௩௧ அவர்கள் செபம்பண்ணினபொழுது அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்தது. அன்றியும் அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு பராபரனுடைய வசனத்தைத் தயிரியத்தோடே சொன்னார்கள்.

௩௨ அன்றியுந் திரளான விசுவாசிகளுக்கு ஒரே இருதயமும் ஒரே ஆத்துமாவுமிருந்தன. ஒருவனாகிலும் தனக்குள்ளவைகளில் ஒன்றையுந் தன்னுடையதென்று சொல்லவில்லை. சகலமும் அவர்களுக்குப் பொதுவாயிருந்தன.

௩௩ கர்த்தராகிய இயேசு உயிரோடெழுந்ததைக் குறித்து அப்போஸ்தலர்கள் மிகுந்த பலத்தோடே சாட்சிகொடுத்தார்கள்.

௩௪ மேலும் நிலங்களையும் வீடுகளையுமுடைய யாவரும் அவைகளை விற்று, விற்கப்பட்ட பொருள்களின் விலைக்கிரயத்தை அப்போஸ்தலரிடத்திற் கொண்டுபோய் அவர்களுடைய பாதத்திலே வைத்தார்கள்.

௩௫ (அதிலே) அவனவனுக்குத் தேவையின்படி பகிர்ந்து கொடுக்கப்பட்டது. ஆதலால் அவர்களிலொருவனுங் குறைவுபடவில்லை. ஆனபடியினாலே மிகுந்த கிருபை அவர்களெல்லாருக்கும் உண்டாயிருந்தது.

௩௬ லேவியனுமாய்ச் சீப்புருதீவிற் பிறந்தவனுமாய் ஆறுதலின் மகனென்று அர்த்தங்கொள்ளுகிற பர்னபாவென்று அப்போஸ்தலராலே பெயர்கொண்டவனுமாயிருந்த யோசே என்பவனுந் தனக்குண்டான நிலத்தை விற்று,

௩௭ கிரயத்தைக்கொண்டுபோய் அப்போஸ்தலருடைய பாதத்திலே வைத்தான்.

## ரு. அதிகாரம்.

[(௧) அன்னியா. சப்பீராள் என்பவர்கள் பொய்சொல்லி மரித்ததும், (௧௨) அப்போஸ்தலர் அநேக அற்புதங்களைச்செய்ததும், (௧௭) ஆசாரியர் மறுபடியும் அவர்களைச் சிறைச்சாலையிலே வைத்ததும், (௧௯) வானதூதனாலே விடுதலையாக்கப்பட்டபின்பு போய்ப் பிரசங்கம்பண்ணினதும், (௨௭) ஆசாரியர் அவர்களை மறுபடி விசாரித்ததும், (௨௯) பேதுரு அவர்களுக்கு உத்தரஞ்சொன்னதும், (௩௩) ஆசாரியர் அவர்களைக் கொலைசெய்யப் பண்ணின யோசனையைக் கமாலியேல் தவிர்த்தது, (௪௦) அவர்களை அடிப்பித்து விடுதலையாக்கி அனுப்பினதும்.]

௧ அல்லாமலும் அன்னியா என்னப்பட்டவனும் அவனுடைய மனைவியாகிய சப்பீராளுந் (தங்கள்) காணியை விற்றார்கள்.

௨ பின்பு அவன் தன் மனைவியும் அறிய, அந்தக் கிரயத்திலே கொஞ்சத்தை வஞ்சித்து வைத்து, ஒரு பங்கை மாத்திரங் கொண்டுபோய் அப்போஸ்தலருடைய பாதத்திலே வைத்தான்.

௩ அப்பொழுது பேதுரு சொன்னது: அன்னியாவே! நிலத்தின் கிரயத்திலே சிலபங்கை நீ மறைத்துவைத்துப் பரிசுத்த ஆவியினிடத்திற் பொய்சொல்லும்படிக்குச் சாத்தான் உன் இருதயத்தை நிரப்பினதென்ன?

௪ அது விற்கப்படாமலிருந்தபொழுது உன்னுடையதாயிருக்கவில்லையோ? அதை விற்றபின்பு (அதின் கிரயம்) உன் அதிகாரத்திலிருக்கவில்லையோ? அப்படியிருக்க என்னத்தினாலே நீ இந்தக் காரியத்தை உன் இருதயத்திலே வைத்தாய்? நீ மனிதரிடத்திலல்ல பராபரனிடத்திலே பொய்சொன்னாயென்றான்.

ரு இந்த வார்த்தைகளை அன்னியா கேட்டபொழுது, அவன் விழுந்து சீவனைவிட்டான். இந்தச் சங்கதியைக் கேட்ட யாவருக்கும் மிகுந்த பயமுண்டாயிற்று.

௬ சில வாலிபர் எழுந்து, அவனை ஒருசேலையிலே கட்டி வெளியே கொண்டுபோய், அடக்கம்பண்ணினார்கள்.

௭ ஏறக்குறைய மூன்றுமணிநேரத்துக்குப் பின்பு, அவனுடைய மனைவி அந்த நடக்கையை அறியாமல் உள்ளே போனாள்.

௮ அவளுடனே பேதுரு (உங்கள்) நிலத்தை இவ்வளவு கிரயத்திற்கா விற்றீர்கள்? அதை எனக்குச் சொல்லென்றான். அவள் இவ்வளவுக்கே யதை விற்றோமென்றாள்.

௯ அப்பொழுது பேதுரு சொன்னதாவது: பராபரனுடைய ஆவியைச் சோதிக்கிறதற்கு நீங்கள் என்னத்தினாலே ஒருமைப்பட்டீர்கள்? உன் புருஷனை அடக்கம்பண்ணினவர்களுடைய கால்கள் உன்னையும் வெளியே கொண்டுபோகும்படிக்கு அதோ, வாசற்படியிலே வந்திருக்கின்றனவென்றான்.

ஙரு இஸ்ரவேலரே! நீங்கள் இந்த மனிதர்களுக்குச் செய்ய நினைக்கிறதைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்.

ஙசா இந்த நாட்களுக்கு முன்னே தெயுதாவென்பவன் எழும்பித் தன்னைப் பெரியவனென்று சொல்லி வந்தான்; ஏறக்குறைய நானூறுபேர் தன்னையடுத்துக்கொண்டிருந்தும், பின்பு அவன் கொல்லப்பட்டான். அவனை நம்பியிருந்த அனைவருங் கலைந்து சிதறுண்டுபோய் விட்டார்கள்.

ஙஎ அவனுக்குப்பின்பு குடிமதிப்பெழுதப்பட்ட நாட்களில் கலிலேயனாகிய யூதா எழும்பி அநேகம் ஜனங்களைத் தன்வசமாக்கினான். அவனும் அழிந்துபோனான். அவனை நம்பியிருந்த அனைவருஞ் சிதறடிக்கப்பட்டார்கள்.

ஙஅ ஆனபடியினாலே நான் உங்களுக்குச் சொல்லுகிறதென்னவென்றால், இந்த மனிதர்களுடைய போதனை அல்லது இவர்களுடைய கிரியை மனிதரால் உண்டானதானால் அது ஒழிந்துபோம்.

ஙகூ அது பராபரனாலுண்டானால் அதை நீங்கள் ஒழித்துப்போடமாட்டீர்கள். ஆதலால் நீங்கள் பராபரனோடே போர்செய்கிறவர்களாய்க் காணப்படாதபடிக்கு இவர்களுக்கு ஒன்றுஞ்செய்யாமல் இவர்களை விட்டுவிடுங்களென்றான்.

ச௰ அவனோடே மற்றவர்கள் பொருந்தி அப்போஸ்தலரை வரவழைத்து அடித்து, இயேசுவின் நாமத்தைக்குறித்து அவர்கள் பேசாதிருக்கும்படிக்குக் கட்டளையிட்டு, அவர்களை விட்டுவிட்டார்கள்.

சக அவர்கள் தாங்கள் அவருடைய நாமத்துக்காகக் கனவீனப்படுகிறதற்குப் பாத்திரரென்றெண்ணப்பட்டபடியினாலே சந்தோஷமாய்ப் பெரியசங்கத்தைவிட்டுப் புறப்பட்டுப்போய்,

சஉ தினந்தோறும் தேவாலயத்திலேயும் வீடுகளிலேயும் ஓயாமல் உபதேசம்பண்ணி இயேசுவைக் கிறிஸ்தென்று சுவிசேஷமாயறிவித்து வந்தார்கள்.

## சா. அதிகாரம்.

[(க) சபையிலே சிலகைம்பெண்கள் முறுமுறுத்தபொழுது அப்போஸ்தலர் உபசரிக்காரராக ஏழுபேரைத் தெரிந்தேற்படுத்தினதும், (கூ) இஸ்தேவான் எதிரிகளுடனே தர்க்கம்பண்ணினதினாலே பெரியசங்கத்திற்கு முன்பாகக் கொண்டுபோகப்பட்டதும்.]

அந்த நாட்களிற் சீஷர்கள் பெருகினபொழுது கிரேக்கரானவர்களிலுள்ள கைம்பெண்சாதிகள் அனுதினமுள்ள விசாரணையிலே தக்கபடி எண்ணிக்கொள்ளாதபடியினாலே, கிரேக்கரானவர்கள் எபிரேயருக்கு விரோதமாய் முறுமுறுத்தார்கள்.

உ அப்பொழுது பன்னிருவரும் சீஷர்களாகிய கூட்டத்தை வரவழைத்துச் சொன்னது: நாங்கள் பராபரனுடைய வசனத்தைவிட்டுப் பந்திகளைக் குறித்து விசாரிக்கிறது தகாது.

ங ஆகையால் சகோதரரே! நீங்கள் உங்களுக்குள்ளே நிறைந்த ஆவியும் ஞானமும் நற்சாட்சியும் பெற்றிருக்கிற ஏழுபேரைத் தெரிந்துகொள்ளுங்கள். அவர்களை இந்த வேலைக்காக ஏற்படுத்துவோம்.

ச நாங்கள் ஜெபம்பண்ணுகிறதிலும் (தேவ) வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போமென்றார்கள்.

ரு இந்தப் போதனை சபையாரெல்லாருக்கும் பிரியமாயிருந்தது. ஆதலால் அவர்கள் விசுவாசத்தினாலும் பரிசுத்த ஆவியினாலும் நிறைந்தவனாகிய இஸ்தேவானையும், பிலிப்பையும், பிரொகோருவையும், நிக்கானோரையும், தீமோனையும், பர்மேனாவையும், யூதமார்க்கத்திலே சேர்க்கப்பட்ட அந்தியோகியா ஊரானாகிய நிக்கொலாவையும் தெரிந்துகொண்டு,

சா அவர்களை அப்போஸ்தலருக்கு முன்பாக நிறுத்தினார்கள். இவர்கள் ஜெபம்பண்ணி அவர்கள்மேல் கைகளை வைத்தார்கள்.

எ பின்பு பராபரனுடைய வசனம் வளர்ந்தது. சீஷருடைய தொகை எருசலேமிலே மிகவும் பெருகிற்று. ஆசாரியர்களில் அநேகரும் விசுவாசத்திற்குக் கீழ்ப்பட்டார்கள்.

அ அன்றியும் இஸ்தேவானென்பவன் கிருபையினாலும் பலத்தினாலும் நிறைந்து ஜனங்களுக்குள்ளே பெரிய அற்புதங்களையும் அதிசயங்களையுஞ் செய்தான்.

கூ அப்பொழுது லிபர்த்தினர் என்னப்பட்டவர்களின் ஜெப ஆலயத்தைச் சேர்ந்தவர்களிலுஞ் சிரேனேபட்டினத்தாரிலும் அலெக்சந்திரியாபட்டினத்தாரிலுஞ் சிலிசியாத்தேசத்தாரிலும் ஆசியாத்தேசத்தாரிலுஞ் சிலர் எழும்பி இஸ்தேவானுடனே தர்க்கம்பண்ணிக்கொண்டார்கள்.

௰ அவன் பேசின ஞானத்தோடும் ஆவியோடும் எதிர்த்துநிற்க அவர்களுக்கு வல்லமையில்லை.

௰க அப்பொழுது அவர்கள் இரகசியமாய்ச் சில மனிதரைச் சம்பாதித்து: இவன் மோசேக்கும் பராபரனுக்கும் விரோதமாகத் தூஷணமான வசனங்களைப் பேசக்கேட்டோமென்று சொல்லும்படி செய்து,

௰உ பின்பு ஜனங்களையும் மூப்பரையும் வேதபாரகரையும் எழுப்பி அவன்மேற் பாய்ந்து அவனைப் பெரிய சங்கத்தாருக்கு முன்பாக இழுத்துக்கொண்டுபோய்,

2

௰௩ பொய்ச்சாட்சிகளையும் ஏற்படுத்தினார்கள். அவர்கள் சொன்னது: இவன் பரிசுத்த ஸ்தலத்திற்கும் வேதநூலுக்கும் தூஷணமான வசனங்களை ஓயாமற் பேசுகிறான்.

௰௪ நாசரேத்தூரானாகிய அந்த இயேசுவென்பவர் இந்த ஸ்தலத்தை இடித்து மோசே நமக்குக் கொடுத்த முறைமைகளை மாற்றுவாரென்று இவன் சொல்லக் கேட்டோமென்றார்கள்.

௰௫ பெரிய சங்கத்திலுட்கார்ந்திருந்த யாவரும் அவன்மேற் கண்ணோட்டமானபொழுது அவனுடைய முகந் தேவதூதன் முகம்போலிருக்கக் கண்டார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) இஸ்தேவான் பெரிய சங்கத்தாருக்கு முன்பாகப் பிரசங்கம் பண்ணினதும், (௫௪) சங்கத்தார் அவனைக் கொலைசெய்வித்ததும், (௫௯) இஸ்தேவான் சந்தோஷமாய் மரித்ததும்.]

௧ பிரதான ஆசாரியன் அவனை நோக்கி இப்படியா நடந்ததென்றான்.

௨ அதற்கவன் சொன்னதாவது: சகோதரரும் பிதாக்களுமானவர்களே! கேட்பீர்களாக. நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம் காரானூரிலே குடியிருக்கிறதற்கு முன்னே மெசொப்பொத்தாமியா நாட்டிலேயிருந்தபொழுது மகிமைபொருந்திய பராபரன் அவனுக்குத் தரிசனையாகி,

௩ நீ உன் தேசத்தையும் இனத்தாரையும் விட்டுப் புறப்பட்டு நான் உனக்குக் காண்பிக்கும் தேசத்திற்குப் போவென்றார்.

௪ அப்பொழுது அவன் கல்தேயாதேசத்தை விட்டுப் புறப்பட்டுக் காரானூரிலே வாசம்பண்ணினான். மேலும் அவனுடைய தகப்பன் மரித்தபின்பு அவ்விடத்தை விட்டு நீங்களிப்பொழுது குடியிருக்கிற இந்தத் தேசத்திலே வந்து குடியிருக்கும்படி செய்தார்.

௫ இதிலே ஒரு அடி நிலத்தையாகிலும் அவனுக்குச் சுதந்தரமாகக் கொடாமல், அவன் பிள்ளையில்லாதிருந்த காலத்திலே உனக்கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் இதைக் காணியாட்சியாகத் தருவேனென்று அவனுக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்.

௬ அன்றியும் பராபரன் அவனுடனே சொன்னது: உன்னுடைய சந்ததியார் அந்நியதேசத்திலே குடியிருப்பார்கள். அந்தத் தேசத்தார் அவர்களை அடிமைகளாக்கி நானூறு வருஷம் உபத்திரவப்படுத்துவார்கள்.

௭ அவர்கள் அடிமைவேலை செய்யும் அந்தத் தேசத்தாரை நான் ஆக்கினைக்குட்படுத்துவேன். அதற்குப் பின்பு உன் சந்ததியார் புறப்பட்டு வந்து, இவ்விடத்திலே எனக்கு ஆராதனை செய்வார்களென்று பராபரன் சொன்னார்.

௮ அன்றியும் விருத்தசேதனம் பண்ணுதலை அவர் அவனுக்கு ஏற்படுத்தினார். அதன்படியே அவன் ஈசாக்கைப் பெற்றபொழுது எட்டாம் நாளில் அவனுக்கு விருத்தசேதனம் பண்ணினான். ஈசாக்கானவன் யாக்கோபையும், யாக்கோபானவன் கோத்திரத்தலைவராகிய பன்னிரண்டு பேரையும் பெற்று அவர்களுக்கு விருத்தசேதனம் பண்ணினார்கள்.

௯ பின்பு கோத்திரத்தலைவராகிய அவர்கள் பொறாமைகொண்டு யோசேப்பை எகிப்துக்கு (போன வியாபாரிகளுக்கு) விற்றுப்போட்டார்கள்.

௰ பராபரன் அவனுடனேயிருந்து எல்லா உபத்திரவங்களினின்றும் அவனைத் தூக்கியெடுத்து எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்கு முன்பாக அவனுக்குக் கிருபையையும் ஞானத்தையுங் கொடுத்தார். அந்த இராசா இவனை எகிப்து தேசத்திற்குந் தன் குடும்பமெல்லாவற்றிற்குந் தலைவனாக வைத்தான்.

௰௧ பின்பு எகிப்து கானான் தேசங்கள் எழுவதிலும் பஞ்சமும் மிகுந்த உபத்திரவமும் உண்டாயின. நம்முடைய பிதாக்களுக்கும் ஆகாரங்கிடைக்கவில்லை.

௰௨ அப்பொழுது எகிப்திலே தானியமுண்டென்று யாக்கோபு கேள்விப்பட்டு நம்முடைய பிதாக்களை முதலாந்தரம் (அவ்விடத்திற்கு) அனுப்பினார்.

௰௩ இரண்டாந்தரம் யோசேப்பு தன் சகோதரருக்கு அறியப்பட்டான். அல்லாமலும் யோசேப்பினுடைய வம்சம் பார்வோனுக்குத் தெரியவந்தது.

௰௪ பின்பு யோசேப்பு தன் தகப்பனாகிய யாக்கோபையும் (௭௫) இனத்தாராகிய யாவருமாகிய எழுபத்தைந்து பேரையும் அழைக்க அனுப்பினான்.

௰௫ அந்தப்படியாக யாக்கோபு எகிப்திற்குப் போனார். பின்பு அவரும் நம்முடைய பிதாக்களும் மரித்து, அங்கேயிருந்து சீகேமுக்குக் கொண்டுபோகப்பட்டு,

௰௬ ஆபிரகாம் சீகேமின் தகப்பனாகிய ஏமோருடைய சந்ததியாரிடத்திலே விலைக்கிரயமாக வாங்கியிருந்த சமாதியிலே வைக்கப்பட்டார்கள்.

௰௭ பின்பு ஆபிரகாமுக்குப் பராபரன் ஆணையிட்டுப் பண்ணின வாக்குத்தத்தத்தின் காலஞ் சமீபமானபொழுது யோசேப்பை அறியாத வேறே இராசா தோன்றின காலமளவும்,

௰௮ சனங்கள் எகிப்திலே அதிகமாய்ப் பெருகினார்கள்.

௰௯ அவன் நம்முடைய வம்சத்தாரைக் குறித்து வஞ்சனையாய் நடந்து நம்முடைய பிதாக்களின் குழந்தைகள் உயிரோடிராதபடிக்கு அவர்கள் அவைகளை வெளியே போ

ந்து ஊருக்குக் கைநடத்திக்கொண்டு போனார்கள்.

௯ அங்கே அவன் மூன்றுநாள் பார்வையில்லாமலும், போசியாமலும் பானம்பண்ணாமலுமிருந்தான்.

௰ அந்தத் தமஸ்குவூரில் அன்னியாவென்றுபேருள்ள ஒரு சீஷனிருந்தான். அவனுக்குக் கர்த்தர் தரிசனையாகி, அன்னியாவே! என்றார். அவன், ஆண்டவரே! இதோ, அடியேனென்றான்.

௰௧ கர்த்தர் அவனுடனே சொன்னது. செம்மையென்னப்பட்ட தெருவிலே யூதாவின்வீட்டில் தருசுவூரானாகிய சவுலென்பவன் இப்பொழுதே செபம்பண்ணுகிறான்.

௰௨ அல்லாமலும் பார்வையடையும்படிக்கு அவன் தரிசனத்திலே அன்னியாவென்னும்பேருள்ள மனிதன் உள்ளே வந்து கையைத் தன்மேல்வைக்கக் கண்டான். ஆகையால் நீயெழுந்து, அங்கேபோய், அவனைத்தேடுவாயாகவென்றார்.

௰௩ அதற்கு அன்னியா சொன்னது. ஆண்டவரே! அந்த மனிதனைக்குறித்து நான் அநேகராலே கேள்விப்பட்டிருக்கிறபடி, அவன் எருசலேமிலுள்ள உம்முடைய பரிசுத்தவான்களுக்கு எத்தனை பொல்லாங்குகளைச்செய்தான்.

௰௪ இங்கேயும் உம்முடைய நாமத்தைத்தொழுதுகொள்ளுகிறயாவரையுங் கட்டும்படிக்கு, அவன் பிரதான ஆசாரியரால் அதிகாரம்பெற்றிருக்கிறானேயென்றான்.

௰௫ அதற்குக்கர்த்தர்சொன்னது, அவன் என்னுடைய நாமத்தினிமித்தம் இவ்வளவு பாடுபடவேண்டுமென்று அவனுக்குக் காண்பிப்பேன்.

௰௬ ஆதலாற்புறதேசத்தார்களுக்கும் இராசாக்களுக்கும் இஸ்ரவேல் சனங்களுக்கும் என்னுடைய நாமத்தை யறிவிக்கும்படிக்கு, அவன் எனக்குவிசேஷமாகத்தெரிந்துகொள்ளப்பட்ட ஊழியக்காரனாயிருக்கிறான். ஆகையால் நீபோவென்றார்.

௰௭ அப்பொழுது அன்னியாபோய், வீட்டிற்குட்பிரவேசித்துக் கைகளை யவன்மேல் வைத்துச்சகோதரனாகிய சவுலே! நீ வந்த வழியிலேயுனக்குத்தரிசனையான இயேசுவென்னுங் கர்த்தரானவர் நீ பார்வையடைந்துபரிசுத்த ஆவியினாலே நிரப்பப்படும்படிக்கு என்னையனுப்பினாரென்றான்.

௰௮ உடனே அவனுடைய கண்களிலிருந்து மீன் சிலாம்புகளைப்போல விழுந்துபோக, அவன் பார்வையடைந்து எழுந்திருந்து, ஞானஸ்நானம்பெற்று,

௰௯ பின்பு போசனம்பண்ணித் திடப்பட்டான். பின்பு சவுலென்பவன் தமஸ்குவூரிலுள்ள சீஷருடனே சிலநாளிருந்தான்.

௨௰ அல்லாமலும் இயேசுவானவரே பராபரனுடைய குமாரனென்று அவன் உடனே செப ஆலயங்களிற் பிரசங்கித்தான்.

௨௧ (அதைக்) கேட்டயாவரும் பிரமிப்படைந்து, எருசலேமில் இந்த நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களைப் பாழாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக் கட்டிப் பிரதான ஆசாரியரிடத்திற்குக் கொண்டு போகும்படிவந்தவன் இவனல்லவா வென்றார்கள்.

௨௨ சவுலென்பவன் அதிகம் திடமாகத் திடன்கொண்டு, இவரே கிறிஸ்துவென்று திருஷ்டாந்தப்படுத்தித் தமஸ்குவூரிற்குடியிருக்கிறயூதர்களைக்கலங்கப்பண்ணினான்.

௨௩ அநேகநாள்சென்றபின்பு யூதர்கள் அவனைக் கொலைசெய்ய ஆலோசனை பண்ணினார்கள். அவர்களுடைய யோசனை சவுலுக்குத்தெரியவந்தது.

௨௪ அவனைக் கொலைசெய்யும்படிக்கு, அவர்கள் இரவும் பகலுங் கோட்டைவாசல்களைக்காத்துக்கொண்டிருந்தார்கள்.

௨௫ அப்பொழுது சீஷர் இராத்திரியிலே அவனையெடுத்துக்கொண்டுஒருகூடையிலவைத்து, மதில்வழியாய் இறக்கிவிட்டார்கள்.

௨௬ பின்பு சவுல் எருசலேமுக்குப்போய்ச் சீஷரைச் சேர்ந்துகொள்ளப் பார்த்தான். அவர்களெல்லாரும் அவனைச் சீஷனென்று நம்பாமல், அவனுக்குப்பயப்பட்டார்கள்.

௨௭ அப்பொழுது பருனபாவென்பவன் அவனைச்சேர்ந்துகொண்டு, அப்போஸ்தலரிடத்திற்கழைத்துக்கொண்டுபோய் வழியிலேயவன் கர்த்தரைக் கண்டவிதத்தையும் அவர் அவனுடனே பேசினதையுந் தமஸ்குவூரில் அவன் இயேசுவின் நாமத்தினாலே தயிரியமாய்ப் பிரசங்கம் பண்ணினதையும் அவர்களுக்கு விவரித்துச்சொன்னான்.

௨௮ அதின்பின்பு அவன் எருசலேமிலே யவர்களுடனே கூடப் போகிறவனுமாய் வருகிறவனுமாயிருந்து,

௨௯ கர்த்தராகிய இயேசுவின்நாமத்தினமேலே தயிரியமாய்ப்பிரசங்கம் பண்ணி கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு தர்க்கம்பண்ணினான். அவர்கள் அவனைக்கொலைசெய்யத்தேடினார்கள்.

௩௰ சகோதரர் அதையறிந்து அவனைச் செசரியாபட்டணத்திற்கழைத்துப்போய்ப் பின்பு தருசுவூருக்கனுப்பினார்கள்.

௩௧ அப்படியிருக்குங் காலத்தில் யூதேயா, கலிலேயா, சமாரியா, நாடுகளெங்குஞ் சபைகள் சமாதானம் பெற்றிருந்து, கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்திலேயும் பரிசுத்த ஆவியின்போதிப்பிலேயும் வளர்க்கப்பட்டுநடந்துபெருகின.

௩௨ பேதுருவென்பவன் அவர்களெல்லாருக்குள்ளுஞ் சென்றுவருகையில், லித்தா

ட்டணச் சீரியாத்தேசத்துக்குப்போகும்படி கப்பலேறிப்போனான். பிரிஸ்கில்லாளும் ஆக்கில்லாவும் அவனுடனே கூடப்போனார்கள்.

௰௯ அவன் எபேசுபட்டணத்துக்குச் சேர்ந்தபொழுது அவர்களை அங்கே விட்டுச் செப ஆலயத்திற் பிரவேசித்து யூதருடனே சம்பாஷணைபண்ணினான்.

௨௰ அவர்கள் அவனைச் சிலகாலந் தங்களுடனேயிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபொழுது அவன் சம்மதியாமல்,

௨௧ வருகிற பண்டிகையிலே நான் எப்படியும் எருசலேமிலிருக்கவேண்டும். பராபரனுக்குச் சித்தமானால் திரும்பி உங்களிடத்தில் வருவேனென்று சொல்லி அவர்களுடைய உத்தரவு வாங்கிக்கொண்டு கப்பலேறி எபேசுபட்டணத்தைவிட்டு,

௨௨ செசரியாப் பட்டணத்திற்குப் போய்ப்பின்பு (எருசலேமுக்குப்)போய்ச் சபையாரின் சுகத்தை விசாரித்துக்கொண்டு, பின்பு அந்தியோகியாவுக்குச் சென்று,

௨௩ அங்கே சிலகாலஞ் சஞ்சரித்தப்பின்பு, புறப்பட்டுக் கலாத்தியா நாட்டிலேயும் பிரிகியா நாட்டிலேயும் ஊர்கள்தோறுந் திரிந்து, சீஷரெல்லாரையுந் திடப்படுத்திக்கொண்டுவந்தான்.

௨௪ அக்காலத்திலே அலெக்சந்திரிபட்டணத்திற் பிறந்தவனுமாய்ச், சாதுரியவானுமாய் வேத எழுத்துக்களில் வல்லவனுமாயிருக்கிற அப்பொல்லோஸ் என்று பேர்கொண்ட ஒரு யூதன் எபேசுபட்டணத்திற்குப் போனான்.

௨௫ அவன் கர்த்தருடைய மார்க்கத்தைக் குறித்து உபதேசங் கேட்டு, யோவான் கொடுத்த ஸ்நானத்தைமாத்திரம் அறிந்தவனாயிருந்து, கர்த்தாவுக்குரியவைகளை மிகுந்த சாக்கிரதையுள்ள மனதோடே பேசித் திட்டமாய்ப் போதகம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௨௬ செப ஆலயத்திலே தயிரியமாய்ப் பேசினான். ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் அவன் பேசுகிறதைக் கேட்டபொழுது, அவனைச் சேர்த்துக்கொண்டு, பராபரனுடைய மார்க்கத்தையவனுக்கு அதிக திட்டமாய்க் காண்பித்தார்கள்.

௨௭ பின்பு அவன் அகாயா நாட்டிலே போகவேண்டுமென்றிருக்கையில், சீஷர்கள் அவனையுபசாரஞ் செய்யும்படிக்குச் சகோதரர் அவர்களுக்கெழுதினார்கள்.

௨௮ அவன் அங்கே சேர்ந்தபின்பு, அவன் வெளியரங்கமாய் யூதர்களுடனே பலமாய்த் தர்க்கம்பண்ணிக்கொண்டு, இயேசுவே கிறிஸ்து என்று வேத வாக்கியங்களாலே தெளிவாய்க் காண்பித்தபடியால் கிருபையினாலே விசுவாசிகளாயிருந்தவர்களுக்கு மிகுந்த உதவியாயிருந்தான்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) பவுல் எபேசிலே சிலருக்கு ஞானஸ்நானங்கொடுத்தபொழுது அவர்களின்மேல் ஆவிவரங்களைப் பெற்றதும், (௮) அவன் பின்னும் போதித்து அற்புதங்களைச் செய்ததும், (௰௩) ஸ்கேவாவின் மக்கள் பசாசுக்களாலே சேதிக்கப்பட்டதும், (௰௭) தேவவசனம் வளர்ந்ததும் (௨௪) தெமேத்திரியு என்பவனாலே கலகமுண்டானதும்.]

அப்பொல்லோவென்பவன் கொரிந்துபட்டணத்திலிருக்கையிற் பவுல் மேலானதேசங்களில் திரிந்துகொண்டு, எபேசுபட்டணத்திற்குப்போனபொழுது,

௨ சில சீஷரைக் கண்டு, நீங்கள் விசுவாசிகளானபொழுது, பரிசுத்த ஆவியைப்பெற்றுக்கொண்டீர்களாவென்றான். அதற்கவர்கள் பரிசுத்த ஆவியுண்டென்று நாங்கள் கேள்விப்படவுமில்லையென்றார்கள்.

௩ அப்பொழுது அவன் சொன்னது. அப்படியானால், எப்படிப்பட்ட ஞானஸ்நானம்பெற்றீர்களென்றான். அவர்கள் யோவான் கொடுத்த ஸ்நானத்தைப் பெற்றோமென்றார்கள்.

௪ அப்பொழுது பவுல் சொன்னது. யோவான் தனக்குப்பின் வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கவேண்டுமென்று ஜனங்களுக்குச் சொல்லி, மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தைக் கொடுத்தானேயென்றான்.

௫ அதையவர்கள் கேட்டபொழுது அவர்கள் கர்த்தராகிய இயேசுவினுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம்பெற்றார்கள்.

௬ அல்லாமலும் பவுல் அவர்கள்மேலே கைகளை வைத்தபொழுது, பரிசுத்த ஆவியானவர் அவர்களிடத்தில் வந்தார். அவர்கள் அந்நியபாஷைகளைப்பேசித் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்.

௭ அந்த மனிதரெல்லாரும் ஏறக்குறையப் பன்னிரண்டுபேராம்.

௮ பின்பு (பவுல்) செப ஆலயத்திற்குப் போய்த் தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, மூன்றுமாதமளவும் பராபரனுடைய இராச்சியத்திற்குரியவைகளைப் பேசித் தெளிவாய்க் காண்பித்துக்கொண்டுவந்தான்.

௯ சிலர் கடினமான மனதுள்ளவர்களுமாய் அவிசுவாசிகளுமாயிருந்து, கூட்டத்திற்கு முன்பாக இந்த மார்க்கத்தை நிந்தித்தபொழுது, அவன் அவர்களை விட்டுவிலகிச் சீஷரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு, திறன்னு என்னும் ஒருவனுடைய பள்ளிக்கூடத்திலே நாடோறுஞ் சம்பாஷித்துக்கொண்டுவந்தான்.

௩௩ அப்பொழுது யூதர்கள் அலெக்சந்தரென்பவனை முன்னிறுத்தினதினாலே கூட்டத்திற் சிலர் அவனை முன்னே விழத் தள்ளினார்கள். அலெக்சந்தர் கையினாற் சமிக்கை காட்டிச் சனங்களுக்கு உத்தரவு சொல்ல விரும்பினான்.

௩௪ அவன் யூதனென்று அவர்கள் அறிந்தபொழுது எல்லாரும் எபேசியருடைய தியானாளே பெரியவளென்று இரண்டுமணி நேரமளவும் ஏகமாய்க் கூப்பிட்டுக்கொண்டார்கள்.

௩௫ பின்பு மணியகாரனானவன் சனங்கள் பேசாமலிருக்கும்படி செய்து சொன்னதாவது: எபேசியரே, எபேசிப்பட்டினம் மகா தேவியாகிய தியானாளுக்கும் வானத்திலிருந்து விழுந்த சொரூபத்திற்குங் கோவில் பரிசாரியாயிருக்கிறதை யறியாதவனுண்டோ.

௩௬ இது எதிர்பேசப்படாத காரியமானபடியினாலே, நீங்கள் ஒன்றும் பதறிச்செய்யாமல், அமைந்திருக்கவேண்டும்.

௩௭ இந்த மனிதர் கோவிற்கொள்ளைக்காரரல்ல, உங்கள் தேவியைத் தூஷணித்தவர்களுமல்ல, இப்படியிருந்தும், இவர்களைப் பிடித்துக்கொண்டுவந்தீர்கள்.

௩௮ தேமேத்திரியுக்கும் அவனைச்சேர்ந்திருக்கிற தொழிற்காரருக்கும் ஒருவன்மேல் ஒரு காரியமுண்டாயிருந்தால், நியாயம் விசாரிக்கும் நாட்களுந் துரைகளுமிருக்கிறபடியினாலே, ஒருவருக்கொருவர் விரோதமான பிராது அங்கே பண்ணக்கடவர்கள்.

௩௯ நீங்கள் வேறொரு காரியத்தைவிசாரித்தால், அது நியாயசங்கத்திலே தீர்க்கப்படும்.

௪௰ இன்றைக்குண்டான கலகத்திற்காகநாம் உத்தரவுசொல்ல அழைக்கப்படுவதற்கு, ஏதுவுண்டாயிருக்கின்றது. இந்தக் கலகம் பண்ணுவதற்கு நிமித்தமில்லாதபடியால் நாம் அதைக்குறித்து உத்தரவுசொல்லத் திராணியில்லாதிருப்போமேயென்று சொல்லி,

௪௧ பின்பு கூட்டத்தை யனுப்பி விட்டான்.

## ௨௰. அதிகாரம்.

[(௫) பவுல் மக்கெதோனியாவுக்குப்போய் துரோவாவிலே பிரசங்கம்பண்ணி, (௯) ஐத்திகுவென்பவனை உயிரோடெழுந்திருக்கச் செய்ததும், (௰௭) மிலேத்துவிலே அவன் எபேசுச்சபையாரின் மூப்பர்களை யழைத்து அன்பாயப் புத்திகளைச்சொன்னதும்.]

கலகம் அமைந்தபின்பு பவுல் சீஷரைத் தன்னிடத்தில் அழைத்து, உத்தரவுவாங்கிக்கொண்டு, மக்கெதோனியாவுக்குப்போகப் புறப்பட்டுப்போய், அந்தப்புறங்களில் திரிந்துகொண்டு,

௨ சீஷர்களுக்கு அநேக வார்த்தைகளினாற் புத்திசொல்லிக்கொண்டு, கிரேக்கதேசத்திலே சேர்ந்தான்.

௩ அங்கே மூன்றுமாதஞ் சஞ்சரித்தபின்பு, அவன் கப்பலேறிச் சீரியா நாட்டிற்குப் போக மனதாயிருந்தபொழுது, யூதர்கள் அவனுக்குத் தீமைசெய்ய இரகசியமாய் யோசனைகொண்டிருந்தபடியால் மக்கெதோனியாநாட்டின் வழியாய்த் திரும்பிப்போகத் தீர்மானம்பண்ணினான்.

௪ அப்பொழுது ஆசியாத்தேசமட்டுங் கூட அவனோடே கூடப்போனவர்கள். பெரோகிய ஊரானாகிய சொப்பத்தர், தெசலோனிக்கேயரில் அரிஸ்தர்க்கு, செக்குந்து, தெர்பையூரானாகிய காயு, தீமோத்தேயு, ஆசியாத்தேசத்தாராகிய தீக்கிக்கு, துரோப்பீமு, இவர்களே.

௫ இவர்கள் முன்னாகப்போய்த் துரோவாப்பட்டினத்திலே நாங்கள் வரும்படி காத்திருந்தார்கள்.

௬ நாங்கள் புளியாத அப்பப்பண்டிகை நாட்களுக்குப்பின்பு, கப்பலேறிப் பிலிப்புப்பட்டினத்தைவிட்டு ஐந்துநாளைக்குள்ளே துரோவாப்பட்டினத்திலே அவர்களிடத்திற் சேர்ந்து, அங்கே ஏழுநாள் சஞ்சரித்தோம்.

௭ அப்பொழுது வாரத்தின் முதலாநாளிலே சீஷர் அப்பம்பிட்கும்படிக்குக் கூடிவந்திருக்கையில், பவுல் மறுநாளிலே புறப்படவேண்டுமென்றிருந்து, அவர்களுடனே பேசிக்கொண்டு, பாதிராத்திரியளவும் பிரசங்கத்தை நீடித்துப்பேசினான்.

௮ நாங்கள் கூடியிருந்த மேத்தைவீட்டிலே அநேக விளக்குகள் வைக்கப்பட்டிருந்தன.

௯ அப்பொழுது ஐத்திகுவென்று பேர்கொண்ட ஒரு வாலிபன் சாளரவாசலிலுட்கார்ந்திருந்து, பவுல் மித்தகாலம் பேசிக்கொண்டுவருகையில், கண்ணுறக்கம் அடைந்து, நித்திரைமயக்கத்தினாற் செயிக்கப்பட்டுச் சாய்ந்து, மூன்றாமேத்தையிலிருந்து தாழவிழுந்து, மரித்தவனாய் எடுக்கப்பட்டான்.

௰ உடனே பவுல் இறங்கிப்போய், அவன்மேலே விழுந்து, அணைத்துக்கொண்டு, பின்பு உயிர் இவனுக்குள்ளிருக்கின்றதாகையால் கலக்கப்படாதிருங்களென்றுசொல்லி,

௰௧ பின்பு ஏறிப்போய், அப்பம்பிட்டுப் போசித்து, விடிந்தமட்டும் விடியற்காலமளவும் பேசிக்கொண்டு, பின்பு புறப்பட்டான்.

௰௨ அந்த வாலிபனை அவர்கள் உயிருள்ளவனாக அழைத்துவந்து, மிகவும் ஆறுதலடைந்தார்கள்.

௰௩ பவுல் (அசுப்பட்டினம் வரைக்கும்) தானகாலால் நடக்கவிரும்பி, நாங்கள் முன்னாலே கப்பலேறி, அவ்விடத்திற்குப்போய், அங்கே தன்னை யேற்றிக் கொள்ளும்படி எங்களுக்குத் தீர்வுகொடுத்தபடியினாலே

னைப்பார்த்திருக்கிறாய். அவர்களெல்லாரும் நியாயப்பிரமாணத்துக்காக வைராக்கியமுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

௨௧ நீ புறதேசத்தாருக்குள்ளே யிருக்கிற யூதரெல்லாரும் (சங்கள) பிள்ளைகளை விருத்தசேதனம்பண்ணவும் மற்றுமுறைமைகளின்படியே நடக்கவும்வேண்டுவதில்லையென்றுசொல்லி, இவ்விதமாய் அவர்கள் மோசேயை விட்டுவிலகும்படி உபதேசிக்கிறாயென்று அவர்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.

௨௨ இப்பொழுது என்னசெய்யலாம்? நீ வந்ததையவர்கள் கேள்விப்பட்டு, மெய்யாய்க்கூட்டங்கூடுவார்கள்.

௨௩ ஆகையால் நாங்களுனக்குச் சொல்லுகிறபடி, நீ செய்யவேண்டும். என்னவென்றால், நாலுபேர் பிரார்த்தனைபண்ணிக்கொண்டு, எங்களிடத்திலிருக்கிறார்கள்.

௨௪ அவர்களை நீ சேர்த்து, அவர்களுடனேகூடச் சுத்திபண்ணிக்கொண்டு, அவர்கள் சிரசு சவரம்பண்ணுவதற்கு வேண்டிய செலவுபண்ணுவாயாக. அப்படிச்செய்தால் எல்லாருந் தங்களுக்கு உன்னைக்குறித்து அறிவிக்கப்பட்டதொன்றுமில்லையென்றும், நீதானே நியாயப்பிரமாணத்தைக் கைக்கொண்டு நடக்கிறவனென்றும், அறிவார்கள்.

௨௫ விசுவாசிகளான புறதேசத்தார் இப்படிப்பட்டவைகளைக் கைக்கொள்ளாமல், விக்கிரகங்களுக்குப் படைத்ததற்கும், இரத்தத்திற்கும், நெருக்குண்டு செத்ததற்கும், வேசித்தனத்திற்கும், மாத்திரம் விலகியிருக்கவேண்டுமென்று நாங்கள் தீர்மானம்பண்ணி, அவர்களுக்கெழுதியனுப்பினோமே யென்றார்கள்.

௨௬ அப்பொழுது பவுல் அந்தமனிதரைச் சேர்த்துக்கொண்டு, மறுநாளிலேயவர்களுடனேகூடச் சுத்திபண்ணி, பின்பு தேவாலயத்திற் பிரவேசித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காக வேண்டிய பலிகொடுக்கப்படுமளவுஞ் சுத்திகரிக்குதற்கேற்ற நாட்களை நிறைவேற்றவேண்டுமென்று அறிவித்தான்.

௨௭ அதற்கேற்ற ஏழு நாளும் நிறைவேறி வருகையில், ஆசியாதேசத்திலிருந்து வந்த யூதர்கள் தேவாலயத்திலே யவனைக்கண்டு கூட்டமெல்லாங் கூடிவர அழைத்து,

௨௮ அவன்மேற் கைகளைப்போட்டு, இஸ்ரவேலரே! உதவிசெய்யுங்கள். இவன் நம்முடைய சனத்திற்கும் வேதப்பிரமாணத்திற்கும், இந்தத்தலத்திற்கும், விரோதமாக எங்கும் எல்லாருக்கும் போதித்துவருகிறான். அதுவுமல்லாமல், இந்தத்தேவாலயத்திலே கிரேக்கரையும் அழைத்துவந்து இந்தப் பரிசுத்தத்தலத்தைத் தீட்டுப்படுத்தினானென்று கூப்பிட்டார்கள்.

௨௯ முன்பு எபேசியனாகிய திரோப்பீமு வைப்பட்டணத்திலே அவனுடனேகூட இருக்கக்கண்டிருந்து, பின்பு பவுல் அவனைத் தேவாலயத்திலே அழைத்துவந்தானென்று நினைத்தபடியினாலே அப்படிச்சொன்னார்கள்.

௩௰ அப்பொழுது நகர்முழுவதுங் கலக்கப்பட்டது. மேலுஞ் சனங்கள் கூட்டமாய் ஓடிவந்து, பவுலைப்பிடித்து அவனைத் தேவாலயத்திற்குப் புறம்பே யிழுத்தார்கள். உடனே, வாசல்கள் பூட்டப்பட்டன.

௩௧ மேலும் அவர்கள் அவனைக் கொலைசெய்ய வகைதேடுகையில், எருசலேம் முழுவதுங் கலக்கம் அடைந்திருக்கிறதென்று போர்ச்சேவகரின் சேனாபதி கேள்விப்பட்டு,

௩௨ உடனே போர்ச்சேவகரையும் அவர்களுடைய தலைவரையுஞ் சேர்த்துக்கொண்டு, அவர்களிடத்திற்கு ஓடினான். சேனாபதியையும் போர்ச்சேவகரையும் அவர்கள் கண்டபொழுது பவுலையடிப்பதைவிட்டார்கள்.

௩௩ அப்பொழுது, சேனாபதி சேர்ந்து அவனைப்பிடித்து இரண்டு சங்கிலிகளினாலே கட்டும்படி சொல்லி இவன் யாரென்றும் என்னசெய்தானென்றும் விசாரித்தான்.

௩௪ அதற்குச் சனங்கள் பலவிதமாய்க் கூப்பிட்டார்கள். அப்பொழுது கலகத்தினாலே யவன் நிச்சயத்தையறியக்கூடாதிருந்தபடியால் அவனைக் கோட்டைக்குக் கொண்டுபோகச் சொன்னான்.

௩௫ அவன் படிகள் மேலேறினபொழுது, கூட்டம் பின்சென்று அவனைக்கொலைசெய்யுமென்று கூப்பிட்டுக்கொண்டு,

௩௬ உக்கிரமாயிருந்தபடியினாலே சேவகர் அவனைத் தூக்கியெடுத்துக்கொண்டு போனார்கள்.

௩௭ அவர்கள் பவுலைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோகத் தொடங்குகையில் அவன் சேனாபதியை நோக்கி நான் உம்முடனே ஒருவார்த்தை பேசலாமாவென்றான். அதற்கவன் சொன்னது கிரேக்கபாஷை யுனக்குத் தெரியுமா.

௩௮ இந்தக் காலத்திற்கு முன்னே கலகமுண்டாக்கி நாலாயிரங் கொலைபாதகரை வனாந்தரத்திலே கொண்டுபோன எகிப்தியனல்லவாவென்றான்.

௩௯ பவுல் சொன்னது, நான் சிலிசியா நாட்டிலுள்ள சிறந்தபட்டணமாகிய தர்சுப்பட்டணத்தானாகிய யூதன். நான் சனங்களுடனே பேசும்படி, எனக்குத் தாவுகொடுக்கவேண்டுமென்று உம்மைவேண்டிக்கொள்ளுகிறேனென்றான்.

௪௰ அவனுக்குத் தாவுகொடுத்தபின்பு பவுல் படிகளின்மேல் நின்று கையினாலே சனங்களுக்குச் சயிக்கைகாட்டினான். மிகுந்த

உஉ இந்தவார்த்தைவரைக்கும் அவர்கள் அவனுக்குச் செவிகொடுத்து இப்படிப்பட்டவனைப் பூமியிலிருந்து அகற்றவேண்டும். இவன் உயிரோடிருக்கிறது நியாயமல்லவென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்கள்.

உ௩ இப்படியவர்கள் கூக்குரலிட்டுத் தங்கள் வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டு ஆகாசத்திலே புழுதியை வாரிக்கொண்டு வருகையில்,

உ௪ சேனாபதி அவனைக் கோட்டைக்குள்ளே கொண்டுவரும்படி கட்டளையிட்டு பின்பு அவர்கள் அவன்மேல் இப்படிக் கூக்குரலிட்டதற்குக் காரணத்தை அறியும்படிக்கு அவனைச் சவுக்காலேயடித்து விசாரிக்கச் சொன்னான்.

உ௫ அந்தப்படியவர்கள் அவனை வார்களிலே அழுந்தக்கட்டுகையிற் பவுலு சமீபமாய் நின்றிருந்த தலைவனை நோக்கி உரோமனுமாய் நியாயமாய் ஆக்கினைக்குட்படாதவனுமாயிருக்கிற மனிதனை நீங்கள் அடிக்கிறது நியாயமா என்றான்.

உ௬ தலைவன் அதைக்கேட்டுச் சேனாபதியினிடத்திற்குப் போய் அந்தமனிதன் உரோமன். ஆதலால் நீர் செய்வதைக்குறித்துச் சாவதானமாயிருக்கவேண்டுமென்று அறிவித்தான்.

உ௭ அப்பொழுது சேனாபதி பவுலினிடத்தில் வந்து நீ உரோமனோ எனக்குச் சொல்லென்றான். அதற்கவன் அப்படித்தானென்றான்.

உ௮ சேனாபதி சொன்னது. நான் மிகுந்த திரவியத்தினாலே இந்த மேன்மையைச் சம்பாதித்தேனென்றான். அதற்குப் பவுல் சொன்னது. நான் அப்படிப்பட்டவனாகப் பிறந்தேனென்றான்.

உ௯ ஆதலால் அவனையடித்து விசாரிக்கும்படி எத்தனமாயிருந்தவர்கள் உடனே அவனைவிட்டார்கள். மேலும் சேனாபதி அவன் உரோமனென்றறிந்து தான் அவனைக் கட்டினதினாலே பயந்தான்.

௩௰ மறுநாளிலே பவுலு யூதரால் ஏற்படுத்தப்பட்ட குற்றமின்னதென்று அவன் நிச்சயத்தையறியமனதாய் அவனுடைய கட்டவிழ்க்கும்படி செய்து பிரதான ஆசாரியரையும் அவர்களுடைய பெரிய சங்கத்தாரெல்லாரையுங் கூடிவரும்படி கட்டளையிட்டுப் பின்பு பவுலை வைத்தாழக்கொண்டுபோய் அவர்களுக்குமுன் நிறுத்தினான்.

## உ௩. அதிகாரம்

[(க) பவுல் சேனாபதிக்குமுன்பாக யூதர்களுக்கு மாறுத்தரவு சொன்னதும், (எ) அவர்களுக்குள்ளே பிரிவினையுங் கலகமுமுண்டானதும், (௰உ) சிலர் அவனைக் கொலைசெய்யும்படி சபதம்பண்ணினதும் (௰௬) பவுலின் மருமகன் அதைச் சேனாபதியினிடத்திற்குப் போய் அறிவித்ததும், (உ௩) சேனாபதி பவுலைப் பெரியதுரையாகிய பேலிக்ஸினிடத்திற்கு அனுப்பினதும்.]

க அப்பொழுது பவுல் பெரியசங்கத்தாரை நோக்கிச் சொன்னதாவது. சகோதரர்களே இந்நாள்வரைக்கும் என்மனது எனக்கு எவ்விதத்தாலும் நற்சாட்சிகொடுக்கத்தக்கதாய்ப் பராபரனுக்குமுன்பாக நடந்துவந்தேனென்று சொன்னபொழுது,

உ பிரதான ஆசாரியனாகிய அன்னியா அவனுக்குச் சமீபமாய் நின்றவர்களை நோக்கி இவன் வாயின்மேலடியுங்களென்று கட்டளையிட்டான்.

௩ அப்பொழுது பவுலு அவனுடனே சொன்னது. சாந்துபூசப்பட்ட சுவரே. பராபரன் உம்மையடிப்பார். நியாயப்பிரமாணத்தின்படியெனக்கு நியாயந்தீர்ப்புக்கொடுக்கும்படியுட்கார்ந்திருக்கிற நீர் நியாயப்பிரமாணத்துக்கு விரோதமாய் என்னையடிக்கச் சொல்லலாமா என்றான்.

௪ சமீபத்தில் நின்றவர்கள் சொன்னது. பராபரனுடைய பிரதான ஆசாரியனை வைகிறாய் என்றார்கள்.

௫ அதற்குப் பவுலு சொன்னது சகோதரரே இவர் பிரதான ஆசாரியனென்று நான் நினைக்கவில்லை. உன் சனத்தின் தலைவனைத் தீங்காகச் சொல்லாதிருப்பாயாகவென்றெழுதியிருக்கிறதேயென்றான்.

௬ பின்பு அவர்களிலொருபங்கு சதுசேயரென்றும் ஒருபங்கு பரிசேயரென்றும் அவனறிந்து மிகுந்த சத்தத்தோடே சங்கத்தாருக்குள்ளே கூப்பிட்டுச் சொன்னதாவது. சகோதரர்களே நான் பரிசேயனுமாய்ப் பரிசேயனுடைய மகனுமாயிருக்கிறேன். நித்தியசீவனுக்கேற்ற நம்பிக்கையைக்குறித்தும் மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக்குறித்தும் நான் நியாயத்தீர்ப்படையும்படியிருக்கிறேனென்று சொன்னபொழுது,

எ சதுசேயர் உயிரோடெழுந்திருக்குதலில்லை. தூதனும் ஆவியுமில்லையென்று சொல்லுகிறபடியினாலும் பரிசேயர் அவைகளை முன்னிட்டு அறிக்கைபண்ணுகிறபடியினாலும்,

அ பரிசேயருக்குஞ் சதுசேயருக்கும் வாக்குவாதமுண்டாயிற்று. கூட்டமும் பிரிவினையடைந்தது.

௯ மிகுந்த கூக்குரலுண்டாயிற்று. அப்பொழுது பரிசேயரைச்சேர்ந்த வேதபாரகர் எழுந்து மிகவும் விரோதமாய்ப்பேசி இந்த மனிதனிடத்தில் ஒரு பொல்லாங்கையுங் காணோம். ஒரு ஆவி அல்லது ஒரு தூதன் இவனுடனே பேசினதுண்டானால் ([illegible]லென்ன) என்றார்கள்.

ரிந்தபொழுது, நான் உடனே இவனை உம்மிடத்திற்கனுப்பி, குற்றஞ்சாற்றுகிறவர்களும் இவனுக்கு விரோதமாய்ச் சொல்லுகிற காரியங்களை உமக்கு முன்பாகப் போய்ச் சொல்லும்படி கட்டளையிட்டேன். சுகமாயிருப்பீராக வென்றெழுதியனுப்பினான்.

௩௧ போர்ச்சேவகர் தங்களுக்குக் கட்டளையிட்டபடியே பவுலைச் சேர்த்துக்கொண்டு, இராத்திரியிலே அந்திப்பத்திரிக்குக் கொண்டுபோய்,

௩௨ மறுநாளிலே குதிரைப்போர்ச்சேவகரை அவனுடனே கூடப்போக அனுப்பி, தாங்கள் கோட்டைக்குத் திரும்பினார்கள்.

௩௩ அவர்கள் செசரியா பட்டணத்திலே சேர்ந்து, நிருபத்தைத் துரைக்குக் கொடுத்து, பவுலையும் அவன் முன்பாக நிறுத்தினார்கள்.

௩௪ துரையதை வாசித்து, நீ எந்தத் தேசத்தானென்று கேட்டு, கிலிகியாதேசத்தானென்று அறிந்து,

௩௫ பின்பு உன்மேல் குற்றஞ்சாற்றுகிறவர்களும் வந்திருக்கும்பொழுது, உன்னிடத்தில் விசாரிப்பேனென்று சொல்லி, ஏரோதேயின் அரமனையிலே அவனைக் காவலில் வைக்கும்படி கட்டளையிட்டான்.

## ௨௪. அதிகாரம்.

[(௧) பேலிக்ஸுக்கு முன்பாகத் தெர்த்துல்லுவென்பவன் பவுலின்மேல் குற்றஞ்சாற்றினதும், (௰) பவுல் மாறுத்தரவு சொன்னதும், (௨௨) பேலிக்ஸு அவனைப் பின்னுங் காவலில் வைத்ததும், (௨௭) பேலிக்ஸுக்குப் பதிலாகப் பெஸ்துவென்பவன் துரையானதும்.

ஐந்து நாளைக்குப்பின்பு, பிரதான ஆசாரியனாகிய அனனியா மூப்பரோடும் பேசிக்கெட்டிக்காரனாகிய தெர்த்துல்லுவோடுங்கூடப்போய், பவுலுக்கு விரோதமாய்த் துரையினுடைய சந்நிதானத்திற் பிரவேசித்தார்கள்.

௨ அவன் அழைக்கப்பட்டுவந்தபொழுது, தெர்த்துல்லு குற்றஞ்சாற்றத்தொடங்கினதாவது,

௩ மிகுந்த கனம்பொருந்திய பேலிக்ஸுவே, உம்மாலே நாங்கள் மிகுந்த சமாதானசவுக்கியத்தை அனுபவிக்கிறதையும் உம்முடைய விசாரிப்பினாலே இந்தத் தேசத்தாருக்காக மிகுந்த நன்மையுள்ள கிரியைகள் நடக்கிறதையும் நாங்கள் எப்பொழுதும் எங்கும் பெரிய உபகாரமென்றெண்ணியங்கீகரிக்கிறோம்.

௪ நான் அதிக வார்த்தைகளாலே உமக்கு வருத்தமுண்டாக்காதபடிக்கு, நாங்கள் சுருக்கமாய்ச் சொல்லுகிறதை நீர் உம்முடைய பொறுமையோடே கேட்கவேண்டுமென்கிறேன்.

௫ என்னவென்றால் இந்த மனிதன் பெருவாதிக்காய்ச்சலைப்போலப் பூச்சக்கரத்திலுள்ள சகல யூதர்களுக்குள்ளுங் கலகமெழுப்பியிருக்கிறதையும் நாசரேத்தாரென்னுங் கெட்டபிரிவுக்கு முதலாளியாயிருக்கிறதையும்,

௬ எங்கள் தேவாலயத்தைத் தீட்டுப்படுத்தத் தேடினதையும் நாங்கள் கண்டறிந்து இவனைப் பிடித்து, எங்கள் வேதநூலின்படியே இவனுக்கு நியாயத்தீர்ப்புச்செய்ய மனதாயிருந்தோம்.

௭ அப்பொழுது சேனாபதியாகிய லீசியாவென்பவர் வந்து, மிகுந்த பலாத்காரமாய் இவனை எங்கள் கைகளிலிருந்து பறித்துக்கொண்டுபோய்,

௮ இவன்மேல் குற்றஞ்சாற்றுகிறவர்கள் உம்மிடத்தில் வரும்படி கட்டளையிட்டார். நீர் இவனிடத்தில் கேட்டு விசாரித்தால், நாங்கள் இவன்மேல் குற்றஞ்சாற்றுகிற காரியங்களையெல்லாம் அறிந்துகொள்வீரென்றான்.

௯ மற்ற யூதர்களும் அதற்கிசைந்து, இப்படியேயிருக்கிறதென்று சொன்னார்கள்.

௰ அப்பொழுது பவுல் பேசுகிறதற்குத் துரையினாலே சயிக்கினைபெற்றபின்பு, அவன் சொன்ன மாறுத்தரமாவது. அநேக வருஷமாய் நீர் இந்தத் தேசத்தாருக்கு நியாயாதிபதியாயிருக்கிறதை நான் அறிந்து, அதிக சந்தோஷத்தோடே எனக்காக உத்தரவு சொல்லுகிறேன்.

௰௧ நீர் அறியும்படி நான் பராபரனைத் தொழுதுகொள்ளும்படிக்கு, எருசலேமுக்குப் போனது முதல் இதுவரைக்கும் பன்னிரண்டு நாள்மாத்திரமாயிற்று.

௰௨ தேவாலயத்திலே நான் ஒருவரோடே தர்க்கம்பண்ணவும் ஜெப ஆலயங்களிலாகிலும் நகரத்திலாகிலும் ஜனங்களுக்குள்ளே கலகம் எழுப்பவும் இவர்கள் காணவில்லை.

௰௩ இப்பொழுது என்மேல் சாற்றுகிற குற்றங்களுக்குச் சாட்சிகளைக் காண்பிக்கவுமாட்டார்கள்.

௰௪ நான் உமக்கு அறிக்கையிடுகிறதென்னவென்றால், இவர்கள் கெட்டபிரிவென்னுஞ் சொல்லுகிற மார்க்கத்தின்படியே, நான் நியாயப்பிரமாணத்திலேயுந் தீர்க்கதரிசனபுஸ்தகங்களிலேயும் எழுதியிருக்கிறவைகளையெல்லாம் விசுவாசித்துக்கொண்டு எங்கள் முன்னோர்களுடைய தேவனுக்கு ஆராதனைசெய்து,

௰௫ மரித்தோராகிய நீதிமான்களும் அநீதிமான்களும் மறுபடியும் உயிரோடெழுந்திருப்பார்களென்று இவர்களும் அடைந்திருக்கிற நம்பிக்கையைப் பராபரன்மேல் வைத்திருக்கிறேன்.

அங்கேயென்னாலே யிந்தக்காரியங்களைக் குறித்து நியாயத்தீர்ப்படைய மனதிருக்கிறதாவென்றான்.

௰ அதற்குப் பவுல் சொன்னது: இராயருடைய நியாயாசனத்திற்கு முன்பாக நிற்கிறேன். அதற்கு முன்பாக நான் நியாயத்தீர்ப்படையவேண்டும். யூதருக்கு நான் ஒரு அநியாயமுஞ் செய்யவில்லை. அதை நீரும் நன்றாய் அறிந்திருக்கிறீர்.

௰௧ அநியாயமானதையாவது மரணத்திற்குப் பாத்திரமானதையாவது நான் நடப்பித்தேனாலே, நான் சாகிறதற்கு மறுக்கமாட்டேன். இவர்கள் என்மேற் சாற்றுகிற குற்றங்களெல்லாம் வீணாயிருக்கிறபடியால், ஒருவரும் என்னையவர்களுக்குச் சந்தோஷமாக ஒப்புக்கொடுக்கக் கூடாது. இராயருக்கேயபயமிடுகிறேனென்றான்.

௰௨ அப்பொழுது பெஸ்து தன் ஆலோசனைக்காரரோடே பேசிக்கொண்டு, நீ இராயருக்கபயமிட்டாய், இராயரிடத்திற்கே போவாயென்று உத்தரவு சொன்னான்.

௰௩ சில நாட்சென்றபின்பு, இராசனாகிய அகிரிப்பாவும், பெர்னிக்கேயாளும், பெஸ்துவை வாழ்த்தும்படிக்குச் செசரியாப்பட்டணத்திற்குப் போனார்கள்.

௰௪ அங்கே அவர்கள் அநேகநாட் சஞ்சரித்திருக்கையிற் பெஸ்து பவுலின் சங்கதியை இராசனுக்கு விவரித்துச் சொன்னதாவது: பேலிக்ஸ் என்பவராலே காவலிலே வைத்துவிடப்பட்ட ஒரு மனிதனிருக்கிறான்.

௰௫ நான் எருசலேமிலேயிருந்தபொழுது பிரதான ஆசாரியரும் யூதருடைய மூப்பரும் அவனுக்கு விரோதமாய்ப் பிராதுபண்ணி, அவன்மேல் ஆக்கினைத்தீர்ப்பைக் கேட்டுக்கொண்டார்கள்.

௰௬ அவர்களுக்கு நான் உத்தரவு சொன்னது: குற்றஞ்சாற்றப்பட்டவன் தன்மேற் குற்றஞ்சாற்றினவர்களுக்கு முன்பாக நின்று அவர்கள் சாற்றின குற்றத்தைக் குறித்துத் தனக்காக எதிருத்தரஞ் சொல்லும்படிக்கு அவன் இடம் அடைகிறதற்கு முன்னே, அப்படிப்பட்டவனை அவர்களுக்குத் தயவாய் அழிவுக்கு ஒப்புக்கொடுக்கிறது உரோமருக்குள்ளே வழக்கமல்லவென்றேன்.

௰௭ அந்தப்படி யவர்களிங்கே கூடிவந்தபொழுது, நான் தாமதம் எவ்வளவும் பண்ணாமல், மறுநாளிலே நியாயாசனத்திலுட்கார்ந்து, அந்த மனிதனைக் கொண்டுவரச் சொன்னேன்.

௰௮ அப்பொழுது குற்றஞ்சாற்றினவர்கள் வந்து நின்று, நான் நினைத்திருந்த குற்றங்களிலொன்றையும் அவன்மேல் ஏற்படுத்தாமல்,

௰௯ தங்கள் மார்க்கத்திற்கும், மரணமடைந்த இயேசுவென்னும் ஒருவன் உயிரோடிருக்கிறானென்று பவுல் சொன்னதற்கும் ஏற்ற சில தருக்கங்களை அவனுக்கு விரோதமாய்ச் சொன்னார்கள்.

௨௰ நான் இப்படிப்பட்ட தருக்கங்களைக் குறித்துச் சந்தேகப்பட்டபடியினாலே, நீ எருசலேமுக்குப் போய், அங்கே இவைகளைக் குறித்து நியாயம் விசாரிக்கப்பட மனதிருக்கிறதாவென்றேன்.

௨௧ அதற்குப் பவுல் தான் இராயருக்கு முன்பாக விசாரிக்கப்படுமளவும் வைக்கப்படவேண்டுமென்று அபயமிட்டபொழுது நான் அவனை இராயனிடத்திற்கனுப்புவரைக்குங் காத்துவைக்கும்படி கட்டளையிட்டேனென்றான்.

௨௨ அப்பொழுது அகிரிப்பா, பெஸ்துவுடனே சொன்னது: நானும் அந்த மனிதனுடைய வசனங்களைக் கேட்க விரும்புகிறேனென்றான். அதற்கவன், நாளைக்கு நீர் அப்படிக் கேட்கலாமென்றான்.

௨௩ அந்தப்படி மறுநாளிலே அகிரிப்பாவும் பெர்னிக்கேயாளும் மிகுந்த ஆடம்பரத்தோடே வந்து, சேனைத்தலைவரோடும் பட்டணத்திற் பிரதானமனிதரோடுங் கூட நியாயஸ்தலத்திற்குப் போனார்கள். உடனே பெஸ்துவினுடைய கட்டளையின்படி பவுல் கொண்டுவரப்பட்டான்.

௨௪ அப்பொழுது பெஸ்து சொன்னதாவது: அகிரிப்பா இராசாவே எங்களோடே கூட இவ்விடத்திலிருக்கிற மனிதர்களே நீங்கள் பார்க்கிற இந்த மனிதனைக் குறித்து யூதருடைய சங்கமெல்லாம் எருசலேமிலேயும் இவ்விடத்திலேயும் என்னை வேண்டிக்கொண்டு, இவன் இனி உயிரோடிருக்கத்தகாதென்று கூப்பிட்டார்கள்.

௨௫ நான் இவன் மரணத்திற்குப் பாத்திரமானதொன்றையுஞ் செய்யவில்லையென்றறிந்து, இவன்றானே இராயனுக்கபயமிட்டபடியினாலே இவனை அவரிடத்திற்கனுப்பும்படி தீர்மானம்பண்ணினேன்.

௨௬ இவனைக்குறித்து ஆண்டவனுக்கெழுதுகிறதற்கு நிச்சயப்பட்ட காரியம் எனக்குத் தெரியாது. ஆதலாற் காவலிற் கட்டப்பட்ட ஒருவனைக் குறித்துக் குற்றத்தைச் சுட்டியாமல் அவனையனுப்புகிறது எனக்குப் புத்தியீனமான காரியமாய்த் தோன்றுகிறபடியினாலே,

௨௭ இவனை விசாரித்துப் பார்த்தபின்பு எழுதத்தக்க விசேஷம் எனக்குண்டாகும்படிக்கு இவனை உங்கள் முன்பாகவும் விசேஷமாய் அகிரிப்பா இராசாவே உமக்கு முன்பாகவுங் கொண்டுவந்தேனென்றான்.

## ௨௬. அதிகாரம்.

[(௧) பவுல் அகிரிப்பாவுக்கு முன்பாகத் தன் காரியங்களையறிவித்ததும். (௨௪) பெஸ்து அவனைப் பித்தங்கொண்டவனென்று

சொன்னதும. (௨௭) அகிரிப்பாபவுலினுடைய உண்மையையறிவித்ததும.]

பின்பு அகிரிப்பாவானவன் பவுலை நோக்கி நீ உனக்காகப் பேசும்படிக்கு உத்தரவுகொடுத்தேனென்றான். அப்பொழுது பவுல் கையை நீட்டித் தனக்காகச் சொல்லிக்கொண்ட உத்தரமாவது.

௨ அகிரிப்பா இராசாவே யூதர்கள் என்மேற்சாற்றுகிற சகல காரியங்களைக் குறித்து நான் இன்றைக்கு உமக்கு முன்பாக உத்தரஞ்சொல்லவேண்டியதினாலே, என்னைப் பாக்கியவானென்றெண்ணுகிறேன்.

௩ விசேஷமாய் நீர் யூதருடைய சகல முறைமைகளையுந் தருக்கங்களையும் அறிந்தவராயிருக்கிறீர். ஆகையால் நீர் நீடியபொறுமையுடனே எனக்குச் செவிகொடுக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

௪ நான் என்வாலிபவயதுமுதற்கொண்டு எருசலேமிலே என் சனத்தாருக்குள்ளேயிருந்தபடியால், என்வாலிபமுதல் நான் நடந்த நடக்கையை யூதரெல்லாரும் அறிந்திருக்கிறார்கள்.

௫ நம்முடைய மார்க்கத்திலே மிகவுங் கெட்டியான பரிசேய வகுப்பிலே நான் பரிசேயனாகச் சீவனம்பண்ணினதையும் ஆதிமுதல் அறிந்திருக்கிறார்கள். அவர்களுஞ் சாட்சிசொல்ல மனதாயிருந்தால், இப்படியே சொல்வார்கள்.

௬ இப்பொழுது நம்முடைய பிதாக்களுக்குப் பராபரன் அருளிச்செய்த வாக்குத்தத்தத்திற்கேற்ற நம்பிக்கைக்காக நான் நியாயத்தீர்ப்படையும்படி நிற்கிறேன்.

௭ இரவும் பகலும் இடைவிடாமற் பராபரனுக்கு ஆராதனைசெய்கிற நம்முடைய பன்னிரண்டு கோத்திரத்தாரும் அந்த வாக்குத்தத்தம் நிறைவேறுமென்று நம்பியிருக்கிறார்கள். அகிரிப்பா இராசாவே அந்த நம்பிக்கையினிமித்தமே யூதர்கள் என்மேற் குற்றஞ்சாற்றுகிறார்கள்.

௮ பராபரன் மரித்தோரையெழுப்புகிறது நம்பப்படாதகாரியமென்று நீங்கள் எண்ணுகிறதெப்படி?

௯ முன்னே நானும் நாசரேத்தூரானாகிய இயேசுவின் நாமத்துக்கு விரோதமாய் அநேககாரியங்களை நடப்பிக்கவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்தேன்.

௰ அப்படியே எருசலேமிலே செய்தேன். நான் பிரதான ஆசாரியராலே அதிகாரம்பெற்றுப் பரிசுத்தவான்களில் அநேகரைக் காவலறைகளில் அடைத்தேன். அவர்களைக்கொல்லவுஞ்சம்மதித்தேன்.

௰௧ அநேகந்தரம் நான் சகல ஜெப ஆலயங்களிலேயும் அவர்களைத் தண்டித்துத் தூஷிக்கும்படிக்கு அவர்களைப் பலபந்தஞ்செய்தேன். நான்மிகவும் அவர்கள்மேல் மூர்க்கவெறியாயிருந்து, அந்நியபட்டினங்கள்வரைக்கும் அவர்களைத் துன்பப்படுத்தினேன்.

௰௨ இப்படிச் செய்துவருகையில் நான் பிரதான ஆசாரியரிடத்திலே பெற்ற அதிகாரத்தோடும் உத்தரவோடுந் தமஸ்குவுக்குப் போனபொழுது,

௰௩ இராசாவே வழியிலே மத்தியானகாலத்தில் நான் சூரியனுடைய பிரகாசத்திலும் அதிகமான ஒளி வானத்திலிருந்து என்னையும் என்னுடனே கூடப் பிரயாணப்பட்டவர்களையுஞ் சுற்றிப் பிரகாசிக்கக்கண்டேன்.

௰௪ உடனே நாங்களெல்லாருந் தரையிலே விழுந்தபொழுது சவுலே சவுலே என்னத்திற்காக நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய். முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாமென்று எபிரேயு பாஷையிலே சொன்ன சத்தத்தைக் கேட்டேன்.

௰௫ அதற்கு நான் ஆண்டவரே நீர் யார் என்றேன். அவர் சொன்னது. நான் நீ துன்பப்படுத்துகிற இயேசு.

௰௬ இப்பொழுது நீ எழுந்து காலூன்றிநில். நீ கண்டவைகளையும் நான் உனக்குக் காண்பிப்பவைகளையுங் குறித்து, நான் உன்னை ஊழியக்காரனென்றுஞ் சாட்சியென்றும், ஏற்படுத்தும்படிக்கு உனக்குத் தரிசனையானேன்.

௰௭ ஆதலால் நான் உன்தேசத்தாரினின்றும், புறத்தேசத்தாரினின்றும் உன்னை விடுதலையாக்கி,

௰௮ அவர்கள் என்னைப் பற்றிக்கொள்ளும் விசுவாசத்தினாலே பாவமன்னிப்பையும் பரிசுத்தவான்களிருக்கிற இடத்திலே சுதந்தரத்தையும், பெற்றுக்கொள்ளும்படிக்கு அவர்களுடைய கண்களைத் திறக்கவும், அவர்களை இருளினின்று ஒளியினிடத்திற்கும், பசாசினுடைய அதிகாரத்தினின்று பராபரனிடத்திற்குந் திருப்பவும் உன்னையவர்களிடத்தில் அனுப்புகிறேனென்றார்.

௰௯ அகிரிப்பா இராசாவே! அந்தப்பரம தரிசனைக்கு நான் கீழ்ப்படாதவனாயிராமல்

௨௰ முதலாவது, தமஸ்கு ஊரிலேயும், பின்பு எருசலேமிலேயும் யூதேயா தேசமெங்குமுள்ளவர்களுக்குள்ளும், மற்றத்தேசத்தாருக்குள்ளும் போய் அவர்கள் மனதைமாற்றிப் பராபரனிடத்திற்குத் திரும்பி மனந்திரும்புதற்கேற்ற கிரியைகளைச் செய்யவேண்டுமென்றறிவித்தேன்.

௨௧ இதனிமித்தமே யூதர்கள் தேவாலயத்திலே என்னைப்பிடித்துப் பின்பு கொலைசெய்யும்படித் தேடினார்கள்.

௨௨ பராபரன் எனக்கு உதவிசெய்ததினாலே நான் இந்நாள்வரைக்குஞ் சிறியோருக்கும் பெரியோருக்குஞ் சாட்சிசொல்லி நிற்கிறேன். தீர்க்கதரிசிகளும் மோசேயும், இப்படியாகுமென்று சொன்னதின்படியே,

மானால் அவ்விடத்திற்குத்தானே கப்பலைப் போகப்பண்ணவேண்டுமென்று யோசனையாயிருந்து,

௪௰ நங்கூரங்களையறுத்துக் கடலிலே விட்டுச் சுக்கானுடைய கயிறுகளையுந் தளரவிட்டுச் சின்னப்பாயைக் காற்றுக்கு விரித்துக் கரைக்கு நேராய்ப் போகையில்,

௪௰௧ இருபுறமுங் கடலுள்ள ஓரிடத்திலே சென்று கப்பல் தட்டிற்று. அதின் முன்பக்கம் அசையாமல் ஊன்றியிருந்தது. பின்பக்கம் அலைகளின் பலத்தினாலே உடைந்துபோயிற்று.

௪௰௨ அப்பொழுது காவலிலிருந்தவர்களில் ஒருவனும் நீந்தி ஓடிப்போகாதபடிக்கு அவர்களைக் கொலைசெய்யவேண்டுமென்று போர்ச்சேவகர் யோசனையாயிருந்தார்கள்.

௪௰௩ அவர்களுடைய தலைவன் பவுலைக் காப்பாற்ற மனதாய் அவர்களுடைய யோசனையைத் தடுத்து நீந்தத்தக்கவர்கள் முந்திக் கடலிலே விழுந்து கரையேறவும்,

௪௰௪ மற்றவர்களிற் சிலர் பலகைகளின்மேலும் சிலர் கப்பற்றுண்டுகளின்மேலும் போய்க் கரையேறவுங் கட்டளையிட்டான். இவ்விதமாய் எல்லாருந் தப்பிக் கரைசேர்ந்தார்கள்.

## ௨௮. அதிகாரம்.

[(௧) பவுல் மெலித்தாத் தீவாராலே மிகுந்த கனத்தைப் பெற்றதும், (௭) அற்புதங்களைச் செய்ததும், (௰௧) அப்புறம் பிரயாணப்பட்டு உரோமைபுரியிலே சேர்ந்ததும், (௰௭) அங்கேயுள்ள யூதர்களுக்குத் தன் காரியத்தை அறிவித்ததும், (௨௫) அவர்களுக்குக் கிறிஸ்துவைக் குறித்துப் பிரசங்கம்பண்ணினதும்.]

அவர்கள் தப்பிக் கரைசேர்ந்த பின்பு அந்தத் தீவின் பேர் மெலித்தாவென்றறிந்தார்கள்.

௨ அந்நியராகிய அந்தத் தீவார் எங்களுக்கு மிகுந்த அன்பைக் காண்பித்தார்கள். அவ்வேளையிலிருந்த மழைக்காகவுங் குளிர்ச்சிக்காகவும் அவர்கள் நெருப்பையுண்டுபண்ணி எங்களெல்லாரையுஞ் சேர்த்துக்கொண்டார்கள்.

௩ அப்பொழுது பவுல் சில விறகுகளை வாரி அந்த நெருப்பின்மேற் போடுகையில் ஒரு விரியன்பாம்பு அனலினாலே புறப்பட்டு அவனுடைய கையைச் சுற்றிக்கொண்டது.

௪ தீவார் அந்தப் பொல்லாத பூச்சி அவனுடைய கையிலே தொங்குகிறதைக் கண்டபொழுது: மெய்யாய் இந்த மனிதன் கொலைபாதகன். இவன் சமுத்திரத்திற்றப்பியுந் பழியானது இவனைப் பிழைக்க ஒட்டவில்லையென்று, தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.

௫ அவன் அந்தப் பூச்சியைத் தீயிலே உதறி ஒரு தீமையும் அடையாதிருந்தான்.

௬ அவர்கள் இவன் வீக்கங்கொண்டு சடிதியாய் மரித்து விழுவானென்று காத்திருந்தார்கள். மிகுந்தகாலம் அவர்கள் அப்படிக் காத்திருந்து சேதம் எவ்வளவும் அவனுக்கு வராததைக் கண்டபொழுது அவர்கள் வேறு நினைவையடைந்து இவன் தேவனென்று சொல்லிக்கொண்டார்கள்.

௭ மேலும் அவ்விடத்திற்குச் சமீபமாய் அந்தத் தீவுக்கு முதலாளியாகிய புபிலியு என்னும் பேர்கொண்டவனுடைய காணியாட்சியிருந்தது. அவன் எங்களை ஏற்றுக்கொண்டு மூன்றுநாளும் பட்சமாய் விசாரித்துக்கொண்டான்.

௮ அப்புபிலியுவினுடைய தகப்பன் சுரநோவுங் கழிச்சலோடுங் கிடந்தான். பவுல் அவனிடத்திற்குப் போய் ஜெபம்பண்ணி அவன்மேல் கைகளை வைத்து அவனைக் குணமாக்கினான்.

௯ அப்படி நடந்தபொழுது தீவிலேயிருந்த மற்ற வியாதிக்காரரும் வந்து குணமாக்கப்பட்டார்கள்.

௰ அவர்கள் எங்களை மிகவுங் கனஞ்செய்து நாங்கள் கப்பலேறினபொழுது எங்களுக்கு வேண்டியவைகளை ஏற்றினார்கள்.

௰௧ மூன்றுமாதஞ் சென்றபின்பு, தீவிலே மழைகாலத்திற்குத் தங்கியிருந்த மிதுனமென்னும் அடையாளமுள்ள அலெக்சந்திரியாப் பட்டினத்துக் கப்பலிலே நாங்கள் ஏறிப் புறப்பட்டுப்போய்,

௰௨ சீரக்கூசைப் பட்டினத்தைச் சேர்ந்து, அங்கே மூன்றுநாள் தங்கி,

௰௩ பின்பு அவ்விடம் விட்டு, (சிசிலித்தீவை) சுற்றியோடி, இரேகியு பட்டினத்திற் சேர்ந்து, ஒருநாளைக்குப்பின் தெற்குக் காற்றெடுக்கையில், இரண்டாம் நாளிலே புத்தேயோலிப் பட்டணத்திற்குப் போய்,

௰௪ அங்கே சகோதரரைக் கண்டோம். அவர்கள் ஏழுநாள் தங்களிடத்திலிருக்கும்படி எங்களை வேண்டிக்கொண்டார்கள். அந்தப்படி நாங்கள் (இருந்து) பின்பு உரோமைபுரிக்குப் போனோம்.

௰௫ அவ்விடத்திலுள்ள சகோதரர் எங்களைக் குறித்துக் கேள்விப்பட்டு, அப்பியுபுரமென்னும் இடமட்டுக்கும், (சிலர்) மூன்று சத்திரமென்னும் இடமட்டுக்கும் எங்களுக்கெதிர்கொண்டு வந்தார்கள். அவர்களைப் பவுல் கண்டு பராபரனைத் தோத்திரஞ்செய்து திடன்கொண்டான்.

௰௬ உரோமைபுரியிலே நாங்கள் சேர்ந்தபொழுது சேனைத்தலைவன் தன் காவலிலிருந்தவர்களைச் சேனாபதியினிடத்தில் ஒப்புக்கொடுத்தான். அப்பொழுது பவுல் தன்னைக் காத்திருக்கும்படியான சேவகனோடேகூட

தனியேயிருக்கும்படிக்கு உத்தரவு பெற்றுக்கொண்டான்.

௰௭ மூன்று நாளுக்குப்பின்பு, பவுலென்பவன் யூதருக்குள்ளே பிரதானமானவர்களைக் கூடிவரவழைத்தான். அவர்கள் கூடிவந்திருக்கும்பொழுது, அவன் அவர்களுடனே சொன்னதாவது: சகோதரர்களே (நம்முடைய) சனங்களுக்காவது முன்னோர்களின் முறைமைகளுக்காவது விரோதமானதொன்றையும் நான் செய்யாமலிருந்தும், காவலில் வைக்கப்பட்டு, எருசலேமிலிருந்து உரோமர் கைகளிலே ஒப்புக்கொடுக்கப்பட்டேன்.

௰௮ அவர்கள் என் காரியத்தை விசாரித்தபொழுது, மரணத்துக்கேதுவான குற்றமொன்றும் என்னிடத்திற்காணாதபடியினாலே, என்னை விடுதலையாக்க மனதாயிருந்தார்கள்.

௰௯ யூதர்கள் எதிர்பேசினபொழுது, நான் இராயருக்குச் சாட்சியிட்டுக்கொள்ளும்படிக்கு பலவந்தப்பட்டேன். என் சனத்தார்மேலே யாதொரு குற்றஞ்சாற்ற மனதில்லாமல் அப்படிச்செய்தேன்.

௨௰ இந்தச் சங்கிலியைச் சுமந்த நான் உங்களைக்காணவும், உங்களுடனே பேசவும், உங்களை வரவழைத்தேன். இசரவேலருடைய நம்பிக்கையினிமித்தமே இந்தச் சங்கிலியாற் கட்டப்பட்டிருக்கிறேனென்றான்.

௨௰௧ அவனுடனே யவர்கள் சொன்னதாவது: உன்னைக்குறித்து யூதேயாவிலிருந்து காகிதங்களெங்களிடத்திற்கு வரவுமில்லை. (வந்திருந்து) வந்த சகோதரரொருவனும் உன்மேல் பொல்லாங்கையறிவித்துச் சொல்லவுமில்லை.

௨௰௨ இந்த மார்க்கவகுப்பு எங்குமவிரோதமாய்ப் பேசப்படுகின்றதென்று நாங்கள் அறிந்திருக்கிறபடியால், நீ நினைக்கிறவைகளை உன்னிடத்திலே கேட்க விரும்புகிறோமென்றார்கள்.

௨௰௩ அதற்காக அவர்கள் அவனுக்குக் குறித்த நாளிலே அநேகம்பேர் அவன் தங்கினவிடத்திலே சேர்ந்தார்கள். அப்பொழுது அவன் காலைதொடங்கிச் சாயங்காலமளவாக மோசேயின் வேதநூலிலுந் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலுமிருந்து, இயேசுவுக்குரியவைகளை யவர்களுக்குப்போதித்து, பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துச் சாட்சிகொடுத்து, வியாக்கியானம் பண்ணினான்.

௨௰௪ அவன் சொன்னவைகளைச் சிலர் ஒத்துக்கொண்டார்கள். சிலர் விசுவாசியாதிருந்தார்கள்.

௨௰௫ இப்படியவர்கள் ஒருவரோடொருவர் இசைவாயிராமல் வெளிப்பட்டுப்போகையிற் பவுலவர்களுக்குச் சொன்ன ஒரு வாக்கியமாவது:

௨௰௬ இந்தச் சனங்கள் கண்களினாலே காணாமலும், காதுகளினாலே கேளாமலும், இருதயத்தினாலே உணர்ந்துகொள்ளாமலும் மனந்திரும்பாமலும் என்னாலே ஆரோக்கியமடையாமலுமிருக்கும்படிக்கு, இவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயமுடையவர்களுமாய் வருத்தத்தோடே கேட்கிற காதுள்ளவர்களுமாய் மூடிக்கொண்டிருக்கிற கண்களையுடையவர்களுமாயிருக்கிறபடியினாலே,

௨௭ நீங்கள் உறவுக்கேட்டாலுணர்ந்துகொள்ளாமலிருப்பீர்கள். உற்றுப்பார்த்தாலும் அறியாமலிருப்பீர்களென்று இந்தச் சனங்களிடத்திற்குப்போய்ச் சொல்லுவென்கிறதைப் பரிசுத்த ஆவி ஏசாயா தீர்க்கதரிசியைக்கொண்டு, நம்முடைய முன்னோர்களுடனே நன்றாய்ச்சொன்னார்.

௨௮ ஆதலாற் பராபரனுடைய இரட்சிப்பு புறதேசத்தார்களுக்கு அனுப்பப்பட்டதென்று நீங்கள் அறிந்துகொள்வீர்களாக. அவர்களே அதற்குச் செவிகொடுப்பார்களென்றான்.

௨௯ இவைகளையவன் சொன்னபின்பு யூதர்கள் தங்களுக்குள்ளே மிகவுந் தருக்கம்பண்ணிக்கொண்டுபோய்விட்டார்கள்.

௩௰ பின்பு பவுல் தனக்காகக் கூலிக்கு வாங்கியிருந்த வீட்டிலே இரண்டு வருஷம் முழுவதுந் தங்கி, தன்னிடத்தில் வந்த யாவரையுமேற்றுக்கொண்டு,

௩௰௧ மிகுந்த தயிரியத்தோடே தடையில்லாமலும் பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்கித்து, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் விசேஷங்களை உபதேசித்துக்கொண்டுவந்தான்.

முற்றும்.

அப்போஸ்தலனாகிய

# பவுலென்பவர்

## உரோமைபுரியிலுள்ள கிறிஸ்தவர்களுக்கு

# எழுதின நிருபம்.

### க. அதிகாரம்.

[(க) பவுல் தான் அப்போஸ்தல அதிகாரம் பெற்றதைக்காட்டிச் சபைக்கு வாழ்த்துதல் செய்ததையும், (அ) சபைக்காகத் தோத்திரம்பண்ணிச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கு அவர்களிடத்திற்குப் போகவிரும்பினதையும், (யஅ) விசுவாசியாமல் அக்கிரமத்தைச் செய்கிறவர்களுடைய தன்மையையுங்காட்டியது.]

மனுஷத்தன்மையின்படிக்குத் தாவீதின் சந்ததியிற் பிறந்தவருமாய்,

உ பரிசுத்தமுள்ள ஆவிக்குரிய தன்மையின்படிக்கு மரித்தோரிலிருந்தெழுந்ததினாலே பராபரனுடைய குமாரனென்று பலமாய்க்காண்பிக்கப்பட்டவருமாயத் தேவகுமாரனுமாய நமது கர்த்தருமாய,

ங தமமாலேயழைக்கப்பட்ட உங்களோடே கூட உலகத்தார் யாவரையுந் தமது திருநாமத்தினிமித்தம் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியப்பண்ணும்பொருட்டு,

ச எங்களுக்குக் கிருபையையும் அப்போஸ்தலப்பட்டத்தையுங் கொடுத்தவருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவைக் குறித்தது,

ரு பராபரன் தமது தீர்க்கதரிசிகளினாலே பரிசுத்த வேதவாக்கியங்களில் முன்வாக்குத்தத்தம்பண்ணியிருந்த சுவிசேஷத்திற்காகப் பிரித்தெடுக்கப்பட்டும் அப்போஸ்தலனாக அழைக்கப்பட்டும்,

சா இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரனுயிருக்கிற பவுல்,

எ உரோமைபுரியிலுள்ள தேவபிரியரும் அழைக்கப்பட்ட பரிசுத்தருமாகிய அனைவருக்கும் (எழுதுகிறதாவது,) நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமும் உண்டாவதாக.

அ உங்கள் விசுவாசத்தைக்குறித்து உலகத்திலெங்கும் பேசிக்கொள்ளுகிறபடியினாலே, முதலாவது, நான் உங்களெல்லாருக்காகவும் இயேசுக்கிறிஸ்து மூலமாய் என்னுடைய பராபரனைத் தோத்திரஞ்செய்கிறேன்.

கூ பராபரனுடைய குமாரனுக்குரிய சுவிசேஷத்திலே நான் என் (முழு) மனதோடும் அவருக்கு ஊழியஞ்செய்துவருகிறேனே. அவர் நான் இடைவிடாமல் உங்களை நினைத்துக்கொண்டிருக்கிறதைக்குறித்துச் சாட்சியாயிருக்கிறார்.

ய நீங்கள் ஸ்திரப்படுவதற்காகச் சில ஞானவரங்களை உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு, நான் உங்களைக்காண மிகவும் ஆசையாயிருக்கிறபடியினாலே,

யக நான் உங்களிடத்தில் வருகிறதற்குப் பராபரனுடைய சித்தம் எனக்கு நல்ல பிரயாணங் கிடைக்கப்பண்ணவேண்டுமென்று எப்பொழுதும் என் செபங்களில் வேண்டிக்கொள்ளுகிறேன்.

யஉ உங்களிலும் என்னிலுமுள்ள விசுவாசத்தினாலே நாம் ஒருவருக்கொருவர் ஆறுதலாயிருக்கும்படிக்கே அப்படிச் செய்துவருகிறேன்.

யங சகோதரர்களே! மற்றத் தேசத்தாருக்குள்ளே நான் பலனையடைந்ததுபோல, உங்களுக்குள்ளுஞ் சில பலனையடையும்பொருட்டாக உங்களிடத்தில்வர அடிக்கடி மனதாயிருந்தேன். ஆகிலும் இதுவரைக்கும் எனக்குத் தடையுண்டாயிற்றென்று அறிவீர்களாக.

யச கிரேக்கருக்கும் அந்நியசனங்களுக்கும் ஞானிகளுக்கும் மூடருக்கும் நான் கடனாளியாயிருக்கிறேனே.

யரு ஆதலால் முதலாவது, யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் எவன் கிறிஸ்துவின் சுவிசேஷத்தை விசுவாசிக்கிறானோ அவனுக்கிர்

ட்சிப்புண்டாகும்படிக்கு, அந்தச் சுவிசேஷம் தேவபெலமுள்ளதாயிருக்கிறபடியினாலே

௧௬ நான் அதைக்குறித்து வெட்கப்படாமல், என்னுடைய திராணியின்படி அதை உரோமைபுரியிலுள்ள உங்களுக்கும் பிரசங்கம்பண்ண விரும்புகிறேன்.

௧௭ விசுவாசத்தினாலே நீதிமானானவன் பிழைப்பானென்று எழுதியிருக்கிறபடி, விசுவாசத்தினாலாகுந் தேவநீதி விசுவாசத்திற்கேதுவென்று அந்தச் சுவிசேஷத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது.

௧௮ என்னத்தினாலென்றால் சத்தியத்தை அநியாயத்தினாலே அடக்கிக்கொள்ளுகிற மனிதருடைய எல்லாவித அவபத்திக்கும் அநியாயத்திற்கும் விரோதமாய்ப் பராபரனுடைய கோபமானது வானத்திலிருந்து வெளிப்படுகின்றது.

௧௯ அதெப்படியென்றால், பராபரனைக்குறித்து அறியப்படுவது அவர்களுக்குள்ளே வெளிப்பட்டிருக்கின்றது. பராபரனே அதையவர்களுக்கு வெளிப்படுத்தினார்.

௨௰ எப்படியென்றால், உலகமுண்டானதுமுதற்கொண்டு அவருடைய நித்தியவல்லமை தேவத்துவமென்பவைகள் காணப்படாதவைகளாயிருந்தும், உண்டாக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களினாலே தெளிவாய் அறியப்படும். ஆதலால் அவர்கள் போக்குச்சொல்லிக்கொள்ளுகிறதற்கு இடமில்லை.

௨௧ அவர்கள் பராபரனையறிந்தும், அவரைப் பராபரனென்று புகழாமலும் தோத்திரஞ்செய்யாமலுமிருந்து, தங்கள் யோசனைகளினாலே வீணரானார்கள். புத்தியில்லாத அவர்களுடைய இருதயம் இருளடைந்தது.

௨௨ அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லிப் பயித்தியக்காரராகி,

௨௩ அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனிதர் பறவைகள் மிருகங்கள் ஊர்வன இவைகளுடைய சொரூபமாக மாற்றினார்கள்.

௨௪ அதற்காக அவர்கள் தங்கள் இருதயங்களின் இச்சைகளினாலே ஒருவரோடொருவர் தங்கள் சரீரங்களைக் கனவீனப்படுத்தத்தக்கதாகப் பராபரன் அவர்களை அசுத்தத்திற்கு ஒப்புக்கொடுத்தார்.

௨௫ பராபரனைக்குறித்த நிசசத்தியத்தை அவர்கள் பொய்யாக மாற்றி, என்றென்றைக்குந் துதிக்கப்படத்தக்க சிருஷ்டிகரைப் பார்க்கிலும் சிருஷ்டியைத் தொழுதுகொண்டு சேவித்தபடியினாலே,

௨௬ பராபரன் அவர்களை இகழ்ச்சியுள்ள ஆசைகளுக்கு ஒப்புக்கொடுத்தார். அந்தப்படி அவர்களுடைய பெண்கள் சுபாவ அனுபோகத்தைச் சுபாவத்திற்கு விரோதமான அனுபோகமாக மாற்றினார்கள்.

௨௭ அதுபோல ஆண்களும் பெண்களைச் சுபாவப்படி அனுபவியாமல், தங்கள் மோக இச்சைகளினாலே ஒருவருக்கொருவர் பொங்கி, ஆணோடே ஆண் அவலட்சணமானதை நடப்பித்து, இவ்விதமாய்த் தங்கள் தப்பிதத்திற்குத் தக்க பலனைத் தங்களிடத்தில் பெற்றுக்கொண்டார்கள்.

௨௮ அறிவினாலே பராபரனைப் பற்றிக்கொள்ளும்படிக்கு அவர்கள் கவலைப்படாமலிருந்தபடியால், தகாதவைகளைச் செய்யும்படி மந்தமுள்ள மனதுக்குப் பராபரன் அவர்களை ஒப்புக்கொடுத்தார்.

௨௯ அவர்கள் எல்லாவித அநீதியினாலும் வேசித்தனத்தினாலும் பொல்லாங்கினாலும் பொருளாசையினாலும் தீமையினாலும் பொறாமையினாலும் கொலையினாலும் வாக்குவாதத்தினாலும் தந்திரத்தினாலும் துர்க்குணத்தினாலும் நிறைந்தவர்களுமாய்,

௩௰ புறங்கூறுகிறவர்களுமாய் நிந்திக்கிறவர்களுமாய்ப் பராபரனைப் பகைக்கிறவர்களுமாய் இறுமாப்புள்ளவர்களுமாய் அகந்தையுள்ளவர்களுமாய் வீம்புக்காரருமாய்த் தகாதவிகற்பங்களைப் பண்ணுகிறவர்களுமாய்த் தாய்தகப்பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களுமாய்,

௩௧ விவேகமில்லாதவர்களுமாய் உடம்படிக்கைகளைத் தள்ளுகிறவர்களுமாய், சுபாவ அன்பில்லாதவர்களுமாய், மன்னியாதவர்களுமாய் இரக்கமில்லாதவர்களுமாய்,

௩௨ இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் மரணத்திற்குப் பாத்திரராயிருக்கிறார்களென்று பராபரனுடைய நியாயப்பிரமாணத்தை அறிந்தும், அவைகளைத் தாங்களே செய்கிறதுமல்லாமல், அவைகளைச் செய்கிற மற்றவர்களிடத்தில் சந்தோஷப்படுகிறவர்களுமாயிருக்கிறார்கள்.

## ௨. அதிகாரம்.

[(௧) தாங்கள் தீமைகளைச் செய்து மற்றவர்களைக் கடிந்துகொள்ளுகிறவர்களுக்குப் புத்திகளைச் சொல்லியது. (௬) பராபரன் பட்சபாதமில்லாமல் நியாயத்தீர்ப்புச் சொல்லுவாரென்றுகாட்டியது. (௰௨) பராபரனுக்குமுன்பாக யூதர்களுக்கும் புறத்தேசத்தாருக்கும் வித்தியாசமில்லையென்று சொல்லியது. (௰௭) மேன்மைபாராட்டின யூதருக்குப் புத்திசொல்லியது.]

அப்படியிருக்க, (மற்றவர்களைக் குறித்து) தீர்ப்புச்சொல்லுகிறவனே! நீ தீர்ப்புச்சொல்லுகிற காரியங்களெல்லாவற்றிலும், அவைகளை நீயே செய்கிறபடியால், நீ மற்றவர்களுக்குக் கொடுக்கிற தீர்ப்பினாலே உன்னைத்தானே யாக்கினைக்குள்ளாக்குகிறாய். ஆதலால் நீ போக்குச்சொல்லிக்கொள்ளுகிறதற்கு இடமில்லை. மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி,

௨ இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்குப் பராபரன் கொடுக்கிற நியாயத்தீர்ப்பு சத்தியத்தின்படியே யிருக்கின்றது.

௩ ஆனபடியினாலே இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்குத் தீர்ப்புச்சொல்லுகிற மனிதனே! நீயே அவைகளைச் செய்தால், பராபரனுடைய நியாயத்தீர்ப்புக்குத் தப்பிப்போகலாமென்று நினைக்கிறாயோ.

௪ அல்லது பராபரனுடைய தயவு, பொறுமை, நீடியசாந்தம், இவைகளின் ஐசுவரியத்தை நீ அசட்டைபண்ணி, அவருடைய தயவு உன்மனந்திரும்புதற்கேதுவாயிருக்க வேண்டுமென்று அறியாமலிருக்கிறாயோ.

௫ நீயுன்னிருதயத்தைக் கடினப்படுத்தி மனந்திரும்பாமலிருக்கிறதால் பராபரனுடைய கோபாக்கினையும் நீதியுள்ள தீர்ப்பும் வெளிப்படும் நாளிலே யுனக்குக் கோபாக்கினைவரும்படி அதைச் சேர்த்துக் கொள்ளுகிறாய்.

௬ அப்பொழுது அவர் அவனவனுடைய கிரியைகளுக்குத் தக்கதாய் அவனவனுக்குப் பதிலளிப்பார்.

௭ இடைவிடாமல் நற்கிரியைகளைச் செய்து, மகிமையையுங் கனத்தையும் அழியாமையையுந் தேடுகிறவர்களுக்கு நித்தியசீவனையளிப்பார்.

௮ சண்டைக்காரராயிருந்து, சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல், அநியாயத்திற்குக் கீழ்ப்படிந்தவர்களோ.

௯ உக்கிரகோபாக்கினையை யடைவார்கள். பராபரனிடத்தில் பட்சபாதமில்லை.

௰ ஆதலால் முன்பு யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் எந்த மனிதன் பொல்லாங்கைச் செய்கிறானோ அவனுக்கு உபாதியும் வியாகுலமும் வரும்.

௰௧ முன்பு யூதர்களிலும் பின்பு கிரேக்கரிலும் எவன் நன்மைசெய்கிறானோ அவனுக்கு மகிமையுங் கனமுஞ் சமாதானசவுக்கியமு முண்டாகும்.

௰௨ மேலும் நியாயப்பிரமாணத்தை யடையாமல் எவர்கள் பாவஞ் செய்கிறார்களோ, அவர்கள் நியாயப்பிரமாணத்தின்படியே நியாயத்தீர்ப்படையாமற் கெட்டுப் போவார்கள். நியாயப்பிரமாண முள்ளவர்களாய் எவர்கள் பாவஞ்செய்கிறார்களோ அவர்கள் நியாயப்பிரமாணத்தின்படி ஆக்கினைக்குள்ளாக்கப்படுவார்கள்.

௰௩ நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தின்படியே இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரன் மனிதருடைய அந்தரங்கங்களைக்குறித்து நியாயத்தீர்ப்புக் கொடுக்கு நாளிலே (அப்படி நடக்கும்) அதெப்படியென்றால்,

௰௪ நியாயப்பிரமாணத்தைக் கேட்கிறவர்கள் மாத்திரம் பராபரனுக்கு முன்பாக நீதிமான்களாயிருக்கமாட்டார்கள். நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறவர்களே நீதிமான்களாக்கப்படுவார்கள்.

௰௫ அன்றியும் நியாயப்பிரமாணமில்லாத சனங்கள் இயல்பாய் நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறபொழுது, நியாயப்பிரமாணமில்லாத அவர்கள் தங்களுக்குத்தாமே நியாயப்பிரமாணமாயிருக்கிறார்கள்.

௰௬ அவர்களுடைய மனது கூடச்சாட்சி பகருகிறதினாலும் அவர்களுடைய சிந்தனைகள் ஒன்றுக்கொன்று குற்றமுண்டு, அல்லது குற்றமில்லையென்று தீர்க்கிறதினாலும் அவர்கள் தங்களிருதயங்களில் நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியை எழுதியிருக்கின்றதென்று காண்பிக்கிறார்களே.

௰௭ கேள் நீ. யூதனென்று பேர்பெற்றிருந்து, நியாயப்பிரமாணத்தை யூன்றிக்கொண்டு, பராபரனைக்குறித்துப் பெருமைபாராட்டி,

௰௮ நியாயப்பிரமாணத்தினாலே உபதேசிக்கப்பட்டவனாய் அவருடைய சித்தத்தையறிந்து, வித்தியாசமானவைகளைச் சோதித்தறிகிறாய்.

௰௯ அல்லாமலும் நியாயப்பிரமாணத்தினாலே மெய்யறிவையுஞ் சத்தியத்தையுங் காட்டியகுறிப்பிடமுள்ளவனாய், நீ உன்னைக் குருடருக்கு வழிகாட்டுகிறவனென்றும்,

௨௰ அந்தகாரத்திலுள்ளவர்களுக்கு ஒளி கொடுக்கிறவனென்றும், புத்தியீனருக்குவாத்தியென்றுங் குழந்தைகளுக்குப் போதகனென்றுஞ்சொல்லுகிறாய்.

௨௧ இப்படிப்பட்டவனானால், மற்றவனுக்குப் போதிக்கிற நீ உனக்குத்தானே போதியாமலிருக்கலாமா, களவுசெய்யக்கூடாதென்று பிரசங்கிக்கிற நீ களவுசெய்யலாமா.

௨௨ விபசாரம் பண்ணக்கூடாதென்று சொல்லுகிற நீ விபசாரம் பண்ணலாமா, விக்கிரகங்களை அருவருக்கிற நீ பரிசுத்தமானதைக் கொள்ளையிடலாமா,

௨௩ நியாயப்பிரமாணத்தைக்குறித்துப் பெருமைபாராட்டுகிற நீ நியாயப்பிரமாணத்தை மீறிநடந்து, பராபரனைக் கனவீனம் பண்ணலாமா,

௨௪ பராபரனுடைய நாமம் மற்றத்தேசத்தாருக்குள்ளே உங்களாலே தூஷணிக்கப்படுகின்றதென்றெழுதியிருக்கிறபடி (செய்கிறாயே.)

௨௫ நீ வேதப்பிரமாணத்தின்படி செய்தால், விருத்தசேதனம் மெய்யாய் உனக்குப் பிரயோசனமாயிருக்கும். நீ வேதப்பிரமாணத்தை மீறிநடந்தாயாகில், உன் விருத்தசேதனம் விருத்தசேதனமில்லாமையாயிற்று.

௨௬ மேலும் விருத்தசேதனமில்லாதவன் வேதப்பிரமாணத்துக்கேற்ற நீதிகளைக் கைக்கொண்டால், அவனுடைய விருத்தசேதனமில்லாமை விருத்தசேதனமேயென்றெண்ணப்படுமல்லவோ.

௨௭ அல்லாமலும் விருத்தசேதனமில்லாமற் சுபாவப்படிக்கேயிருந்து, வேதப்பிரமா

ணத்தை நிறைவேற்றுகிறவன் எழுத்தின்படியான விருத்தசேதனத்தினாலே யூதனாய் வேதப்பிரமாணத்தை மீறுகிற உன்னைக் குற்றப்படுத்துவானல்லவோ.

௨௮ ஆதலாற் புறம்பாக யூதனானவன் யூதனல்ல. புறம்பாகச் சரீரத்திலுண்டான விருத்தசேதனம் விருத்தசேதனமல்ல.

௨௯ உள்ளத்திலே யூதனானவனே யூதன். எழுத்தின்படியல்ல, ஆவியின்படி இருதயத்திலுண்டான விருத்தசேதனமே விருத்தசேதனம். இப்படிப்பட்டவனுடைய புகழ்ச்சி மனிதராலல்ல, பராபரனாலேயுண்டாயிருக்கின்றது.)

## ௩. அதிகாரம்.

[(௧) யூதருக்குண்டாயிருக்கிற மேன்மையின்னதென்றும், (௩) பராபரனுடைய உண்மை ஒழிந்துபோகவில்லையென்றும், (௯) அதைக்குறித்துத் தருக்கிக்கிறவனுக்குச் சொன்ன உத்தரவும், (௯) யூதரும் மற்றத்தேசத்தாருமாகிய யாவரும் பாவிகளென்றும், (௨௰) ஒருவனும் நற்கிரியைகளினாலல்ல கிருபையினாலும் விசுவாசத்தினாலும் நீதிமானாக்கப்படுவானென்றும், (௨௭) தன்மேன்மைபாராட்டலுக்கேதுவில்லையென்றும், (௩௧) விசுவாசத்தினாலே நியாயப்பிரமாணம் ஒழியாதென்றுங் காட்டியது.]

இப்படியானால், யூதருடைய மேன்மையென்ன. அல்லது விருத்தசேதனத்தினாலே பிரயோசனமென்னவென்றுக் கேட்டால்.

௨ அது எவ்விதத்திலும் மிகுதியாயிருக்கின்றது. பராபரனுடைய வாக்கியங்கள் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட படியினாலே அவர்களுக்குப் பிரதானமாய மேன்மையுண்டாயிருக்கின்றது.

௩ சிலர் விசுவாசியாமற் போனபடியால், அவர்களுடைய அவிசுவாசம் பராபரனுடைய உண்மையை அவமாக்குமல்லவோவென்று கேட்டால், அப்படியாகமாட்டாது.

௪ தேவரீர் அப்படிக் கடிந்துபேசும்பொழுது நீதிபரராகவும், நியாயந்தீர்க்கும்பொழுது, புனிதராகவுமிருப்பீரென்றெழுதியிருக்கிறபடி, மனிதர் யாவரும் பொய்யராயிருந்தாலும், பராபரன் சத்தியமுடையவரென்போமாக.

௫ பின்னும் நான் மனிதர்பிரகாரமாகப் பேசுகிறேன். நமது அநீதி பராபரனுடைய நீதியை விளங்கப்பண்ணினால், நாமென்ன சொல்லலாம். பராபரன் கோபாக்கினையைச் செலுத்துகிறது அநியாயமல்லவோவென்றால்.

௬ அப்படிச்சொல்லவேகூடாது. அப்படியானால் உலகத்தாருக்குப் பராபரன் எப்படி நியாயந்தீர்ப்புச்செய்வார்.

௭ ஆகிலும் பராபரனுக்குப் புகழ்ச்சியுண்டாகத்தக்கதாக, அவருடைய சத்தியம் என் பொய்யினாலே அதிக மேன்மையடைந்ததுண்டானால், நான் பாவியென்று தீர்க்கப்படுவதென்னவென்று (நீ சொல்லு.)

௮ நன்மைவரும்படிக்குத் தீமைசெய்யக்கடவோமென்றுஞ் சொல்லலாமல்லவோ நாங்களே அப்படிச் செய்கிறவர்களென்று நிந்திக்கப்படுகிறோம். நாங்களே அப்படிப் போதிக்கிறவர்களென்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படிப்போதிக்கிறவர்கள் ஆக்கினைக்குள்ளாகப்படுகிறது நியாயந்தான்.

௯ அப்படியானால், (கிரேக்கருக்கு) மேன்மையாயிருக்கிறோமாவென்று கேட்டால். அப்படி ஒருக்காலுமிருக்கமாட்டோம். யூதர்களுங் கிரேக்கர் யாவரும் பாவத்திற்குக் கீழானவர்களென்று முன் திருஷ்டாந்தப்படுத்தினோம்.

௰ அந்தப்படியும் எழுதியிருக்கிறதாவது, நீதிமான் ஒருவனுமில்லை.

௰௧ மெய்யுணர்வுள்ளவனில்லை. பராபரனைத் தேடுகிறவனில்லை.

௰௨ எல்லாரும் வழிதப்பி ஏகமாய்க் கெட்டுப்போகிறார்கள்.

௰௩ நன்மைசெய்கிறவன் ஒருவனுமில்லை அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட சமாதியாயிருக்கின்றது, தங்கள் நாவுகளால் வஞ்சனை செய்கிறார்கள். பாம்புகளின் விஷம் அவர்களுடைய உதடுகளின் கீழிருக்கின்றது.

௰௪ அவர்களுடைய வாய்ச்சபிப்பினாலும் பாதிக்கிற பேச்சினாலும் நிறைந்திருக்கின்றது.

௰௫ அவர்களுடைய கால்கள் இரத்தஞ்சிந்துகிறதற்குத் தீவிரமாயிருக்கின்றன.

௰௬ அழிவும் இடுக்கணும் அவர்களுடைய வழிகளிலிருக்கின்றன.

௰௭ சமாதானமார்க்கத்தை அவர்கள் அறியார்கள்.

௰௮ அவர்களகண்களுக்கு முன்பாகத் தேவபயமில்லையென்பதே.

௰௯ மேலும் வாய்களெல்லாம் அடைக்கப்படும்படிக்கும் உலகத்தாரெல்லாரும் பராபரனுடைய ஆக்கினைக்கு ஏதுவானவர்களாகும்படிக்கும் நியாயப்பிரமாணஞ் சொல்லுகிறயாவும் நியாயப்பிரமாணத்திற்குட்பட்டிருக்கிறவர்களுக்கே சொல்லப்பட்டிருக்கின்றனவென்று அறிந்திருக்கிறோம்.

௨௰ இப்படியிருக்க, நியாயப்பிரமாணத்தினாலே பாவத்தையறிகிற அறிவுவருகிறபடியால், ஒருமனிதனும் நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியைகளினாலே அவருக்கு முன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை.

௨௧ இப்பொழுது நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியையில்லாமற், பராபரனுக்கு முன்பாக நீதிமானாகுமவகை வெளிப்பட்டிருக்கின்றது, அதைக்குறித்து நியாயப்பிரமாணமுந் தீர்க்கதரிசனங்களுஞ் சாட்சியிடுகின்றன.

௨௨ இயேசுகிறிஸ்துவைபபறறுமவிசுவாசத்தினாலே பராபரனவர்பபண்ணுகிறநீதியதுவே. விசுவாசிககிற எவர்களுககுளளுமவர்களமேலுமஅதுவரும.

௨௩ வித்தியாசமேயிலலை எலலாருமபாவஞசெய்து, பராபரனுடைய மகிமையறறவர்களாயிருநது,

௨௪ கைமாறிலலாமல அவருடைய கிருபையினாலேகிறிஸது இயேசுவிலுளள மீட்பைககொணடு நீதிமானகளாககபபடுகிறார்கள.

௨௫ பராபரனதாமபொறுமையாயிருநதமுற்காலத்தில்நடநதபாவஙகளை மனனிததுவிடடதைககுறிதது நமமுடைய நீதியைககாண்பிககுமபொருடடாக, இயேசுகிறிஸதுவினுடைய இரத்தத்தில்விசுவாசமாயிருககிறதினாலே வருகிற பெககு மூலாதாரமாக அவரையேறபடுததிவைததார்.

௨௬ இயேசுவினிடததிலவிசுவாசமாயிருககிறவனை நீதிமானாககுகிறதில அவர்நீதியுளளவாயிருககுமபடிககு இககாலததிலே தமது நீதியைககாணபிககுமபொருடடாகவே (அப்படிசசெயததார்.)

௨௭ ஆனபடியினாலே மேன்மைபாராடடலெஙகே அதறககபபடடதேஎநதபிரமாணததினாலேயென்றாற், கிரியைகளைககுறிககிறபிரமாணததினாலேயலல, விசுவாசததைககுறிககிறபிரமாணததினாலேயபபடியாயிறறு.

௨௮ ஆகையால மனிதர்கள நியாயபபிரமாணததிற்சேறறகிரியைகளினாலேயலல,விசுவாசததினாலே நீதிமானகளாககபபடுகிறார்களெனறு தீர்ககிறோம்.

௨௯ அனறியும பராபரன யூதருககுமாததிரந்தேவனாயிருககிறாரோமறறதேசததாருககுநதேவனாயிருககிறாரலலவோ, மெய்யாய அவர் மறறதேசததாருககுந்தேவனாயிருககிறார்.

௩௰ தேவனொருவரேயாகையால அவர்விருததசேதனமுளளவர்களையும்விருததசேதனமிலலாதவர்களையுமவிசுவாசததினாலே நீதிமானகளாககச சிததமாயிருககிறார்.

௩௧ இபபடியானால விசுவாசமெனகிறதினாலேநாம்நியாயபபிரமாணததை யழிததுபோடுகிறோமா. அபபடியலலவே நியாயபபிரமாணததை (அதினாலே) நிலையாகவேநிறுததுகிறோம்.

## ௪. அதிகாரம்.

[(௧) ஆபிரகாம விசுவாசததினாலே நீதிமானாககபபடடானெனறும (௰) அதறகு அடையாளமாகவிருததசேதனததையும பெறறானெனறும. (௰௩) சுதநதரததையும்பெறறானெனறும. (௰௬) ஆபிரகாம விசுவாசிகள யாவருககுந தகபபனானெனறும. (௰௮) அவனவிசுவாசததிற்பலததவனெனறும. (௨௩) நமககுமவிசுவாசம நீதிககேதுவாயிருககுமெனறுஙகாடடியது.]

அனறியுமநமமுடையதகபபனாகிய ஆபிரகாமசரீர (கருமஙகளினாலே) எனனதலைதப்பெறறுககொணடான.

௨ ஆபிரகாம்கிரியைகளினாலேநீதிமானாககபபடடானாகில், அவன் (தனனை) மேன்மையாகபபாராடடலாம ஆகிலும பராபரனுககுமுனபாக அபபடியொனறுமிலலை.

௩ வேதவாககியம எபபடிசசொலலுகிறதெனறால், ஆபிரகாமபராபரனைவிசுவாசிததான. அதுவே அவனுககு நீதியெனறெணணபபடடதெனறு சொலலுகினறது.

௪ அனறியுங கிரியைகளையுடையவனுககுவருகிற கூலி கிருபையெனறெணணபபடாமற், கடனெனறெணணபபடும்.

௫ கிரியைகளையுடையவனாயிராமல அநியாயககாரரை நீதிமானாககுகிறவர்மேலவிசுவாசமாயிருநதால, அவனுடைய விசுவாசமேயவனுககு நீதியெனறெணணபபடும்.

௬ அநதபபடிதாவீதுங்கிரியைகளிலலாமறபராபரனாலேநீதிமானெனறெணணபபடுகிறமனிதனுடைய பாககியததைககாண்பிகக.

௭ எவர்களுடைய அககிரமஙகளமனனிககபபடடனவோ, எவர்களுடைய பாவஙகள் மூடபபடடனவோ, அவர்களே பாககியவானகளெனறும.

௮ எவனுடையபாவததைபபராபரனஎணணாமலிருககிறாரோ அவனே பாககியவானெனறுஞசொலலியிருககிறான.

௯ இநதபபாககியமவிருததசேதனமுளளவனுககுமாததிரமா, அனறிவிருததசேதனமிலலாதவனுககுமவருமோ. (இருவருககுமேவரும) அதெபபடியெனறால, நாஙகளநிசசயிததபடி, விசுவாசமே ஆபிரகாமுககு நீதியெனறெணணபபடடது.

௰ எபபொழுது அது அவனுககு அபபடியெணணபபடடது. அவன விருததசேதனமுளளவனாயிருநதபொழுதோ விருத்தசேதன மிலலாதவனாயிருநதபொழுதோ (வெனறால்,) விருததசேதன முளளவனாயிருநதபொழுதலல, விருததசேதனமிலலாதவனாயிருநதபொழுதே அபபடியெணணபபடடது.

௰௧ மேலும விருததசேதனமிலலாதகாலததிலே அவன விசுவாசததினாலேயடைநத நீதிககுமுததிரையாக விருததசேதன அடையாளததைபபெறறான். விருததசேதனமிலலாமல் விசுவாசமுளளவர்களும நீதிமானகளாககபபடுமபொருடடாக அபபடிபபடடவிசுவாசிகளுககு அவனதகபபனாயிருககுமபடிககும.

௰௨ விருத்தசேதனத்தை யுடையவர்களாயமாத்திரமல்ல, நமது முன்னோராகிய ஆபிரகாம் விருத்தசேதனமில்லாத காலத்திலே நடந்த விசுவாசமார்க்கத்தில் நடக்கிறவர்களாயுமிருக்கிறவர்கள் நீதிமான்களாக்கப்படும்பொருட்டாக, அப்படிப்பட்ட விருத்தசேதனமுள்ளவர்களுக்குந் தகப்பனாயிருக்கும்படிக்கும் (அந்த அடையாளத்தைப் பெற்றான்.)

௰௩ அன்றியும் உலகத்தைச் சுதந்தரிப்பானென்கிற வாக்குத்தத்தம் ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும் நியாயப்பிரமாணத்தினாலே வருகிற நீதியினாலல்ல, விசுவாசத்தினாலே வருகிற நீதியினாலே கிடைத்தது.

௰௪ ஆதலால் நியாயப்பிரமாணத்தினாலே வருகிற நீதியையுடையவர்கள் சுதந்தரரானால், விசுவாசம் வீணாய்ப்போம். வாக்குத்தத்தமும் அபத்தமாய்ப்போம்.

௰௫ மேலும் நியாயப்பிரமாணங் கோபாக்கினையை நடப்பிக்கின்றது. நியாயப்பிரமாணமில்லாவிட்டால், அக்கிரமமுமில்லையே.

௰௬ ஆதலால் அந்த வாக்குத்தத்தஞ் சந்ததியாரெல்லாருக்கும் நிச்சயமாயிருக்கும் பொருட்டாக, (அந்தச் சுதந்தரம்) கிருபையினாலுண்டாகும்படிக்கு அது விசுவாசத்தினாலே வருகின்றது. நியாயப்பிரமாணத்தை யுடையவர்களாகிய சந்ததியாருக்குமாத்திரமல்ல, அநேகந் தேசத்தாருக்கு உன்னைத் தகப்பனென்றேற்படுத்தினேனென்றெழுதியிருக்கிறபடி, நம்மெல்லாருக்குந் தகப்பனாகிய ஆபிரகாமைப்போல விசுவாசத்தையுடையவர்களான சந்ததியாருக்கும் அது நிச்சயமாயிருக்கும்.

௰௭ மரித்தோரை உயிர்ப்பித்து, இல்லாதவைகளை இருக்கிறவைகளைப்போல அழைக்கிறவராகிய பராபரனை அவன் விசுவாசித்துக்கொண்டு, அவராலே (அப்படிப்பட்டதகப்பனானான்.)

௰௮ உன் சந்ததி இவ்வளவாயிருக்குமென்று சொல்லப்பட்டபடியே, அவன் தான் அநேக தேசத்தாருக்குத் தகப்பனாவதை நம்புதற்கேதுவில்லாதிருந்தும், நம்பிக்கையோடேயதை விசுவாசித்தான்.

௰௯ அவன் விசுவாசத்திலே பலவீனமாயிருக்கவில்லை. அவன் ஏறக்குறைய நூறுவயதானபடியால், தன் சரீரஞ் செத்துப்போனதையுஞ் சாராளின் கர்ப்பமுண்டாகாமலிருந்ததையும் எண்ணாமலிருந்தான்.

௨௰ பராபரனுடைய வாக்குத்தத்தத்தைக் குறித்து அவன் அவிசுவாசமாய்ச் சந்தேகப்படாமல்.

௨௧ பராபரன் வாக்குத்தத்தம்பண்ணினதை நிறைவேற்றவும் வல்லமையுள்ளவராயிருக்கிறாரென்று உறுதியாய் நினைத்துப் பராபரனைப் புகழ்ந்து, பலத்த விசுவாசமுள்ளவனானான்.

௨௨ ஆகையால் அதுவே அவனுக்கு நீதியென்றெண்ணப்பட்டது.

௨௩ அது அவனுக்கப்படி எண்ணப்பட்டதென்பது அவனுக்காகமாத்திரமல்ல, நமக்காகவும் எழுதியிருக்கிறது.

௨௪ நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் மரணத்திற்கொப்புக்கொடுக்கப்பட்டும் நம்மை நீதிமான்களாக்கத்தக்கு.

௨௫ எழுப்பப்பட்டுமிருக்கிற நமது கர்த்தராகிய யேசுவை மரித்தோரிலிருந்து உயிரோடெழுப்பினவரை விசுவாசித்துக்கொண்டால், நமக்கும் அது அப்படியே எண்ணப்படும்.

## ரு. அதிகாரம்.

[(௧) விசுவாசத்தால் வருகிற பலனென்னவென்றும், (௧௨) ஆதாமினாலே மரணம் வந்ததுபோலக் கிறிஸ்துவினாலே ஜீவன் வருகிறதென்றும், (௨௰) பாவம் பெருகியிருந்தும், கிருபை அதிகமாய்ப் பெருகிறதென்றுங் காட்டியது.]

இவ்விதமாய் நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டபடியால், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு, நாம் பராபரனிடத்திற் சமாதானம்பெற்றிருக்கிறோம்.

௨ மேலும் நாம் நிற்கின்ற கிருபைக்குட் பிரவேசிக்குதலையும் நாம் அவரைக்கொண்டு விசுவாசத்தினாலே பெற்றும், பராபரனுடைய மகிமையையடைவோமென்று நம்பி, மேன்மைபாராட்டியுமிருக்கிறோம்.

௩ அதுவுமல்லாமல், உபத்திரவம் பொறுமையையும், பொறுமை நிச்சயத்தையும் நிச்சயம் நம்பிக்கையையுமுண்டாக்குகின்றதென்று நாங்கள் அறிந்திருந்து,

௪ உபத்திரவங்களிலேயும் மேன்மைபாராட்டுகிறோம்.

௫ மேலும் நமக்குக் கொடுக்கப்பட்ட பரிசுத்த ஆவியினாலே பராபரனுடைய அன்பு நம்முடைய இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறபடியால், அந்த நம்பிக்கை நம்மை வெட்கப்படுத்தாது.

௬ அன்றியும் நாம் பெலனற்றவர்களாயிருக்கையில் கிறிஸ்து குறித்த காலத்திலே அக்கிரமக்காரருக்காக மரித்தார்.

௭ நீதிமானுக்காக மற்றொருவன் மரிக்கிறது அருமையாயிருக்கும். நல்லவனுக்காகத் துணிந்து ஒருவேளை மற்றொருவன் மரிக்கத்துணிவான்.

௮ கிறிஸ்துவோ நாம் பாவிகளாயிருக்கையிலே நமக்காக மரித்ததினாலே பராபரன் நம்மிடத்திலே வைத்த அன்பை விளங்கப்பண்ணுகிறார்.

௯ இப்படி நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க, (வருங்) கோபாக்கினையினின்று அவராலே மிகவும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே.

௰ நாம் பராபரனுக்குப் பகைஞராயிருக்கையில், அவர் குமாரனுடைய மரணத்தினாலே அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்பட்டபின், நாம் அவருடைய சீவனாலேயும் அதிகமாய் ரட்சிக்கப்படுவோமே.

௰௧ அதுவுமல்லாமல், இப்பொழுது ஒப்புரவாகுதலை நமக்குக் கிடைக்கப்பண்ணின நமது கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து மூலமாய் நாம் பராபரனைக் குறித்து மேன்மைபாராட்டுகிறோம்.

௰௨ என்னத்தினாலென்றால், ஒரே மனிதனாலே பாவமும் பாவத்தினாலே மரணமும் உலகத்திலே பிரவேசித்தபின்பு, எல்லா மனிதரும் பாவிகளானபடியினாலே, மரணம் எல்லா மனிதருக்கும் வந்ததுபோல. (கிறிஸ்துவினாலே எல்லாருக்கும் ஒப்புரவாகுதலுண்டாயிறறு.)

௰௩ நியாயப்பிரமாணம் வருதற்கு முன்னே, பாவம் உலகத்திலிருந்தது. நியாயப்பிரமாணமில்லாதிருந்தால், பாவம் எண்ணிக்கைப்படமாட்டாது.

௰௪ அப்படியிருந்தும், மரணமானது ஆதாம் முதல் மோசேவரைக்கும் ஆதாமின் அதிலங்கனத்துக்கொப்பாய்ப் பாவஞ்செய்யாதவர்களையும் ஆண்டுகொண்டது. அந்த ஆதாம் பின்பு வந்தவருக்கு அடையாளமானவன்.

௰௫ ஆனாலுங் கிருபையுள்ள ஈவானது அந்த விழுதலைப்போலிருக்கவில்லை. ஒரே மனிதனைவிழுந்ததினாலே அநேகர் மரித்திருக்க, மிகவும் அதிகமாய்ப் பராபரனுடைய கிருபையும் இயேசுக்கிறிஸ்தென்னும் ஒரே மனிதனுடைய கிருபையினால் வருகிற ஈவும் அநேகர் மேலே பெருகியிருக்கின்றன.

௰௬ மேலும் அந்த ஈவு பாவஞ்செய்த ஒருவனாலுண்டான நியாயத்தீர்ப்பைப்போலிருக்கவில்லை. அந்தத் தீர்ப்பு ஒரே குற்றத்தினிமித்தம் ஆக்கினைக்கேதுவாயிருந்தது. கிருபையுள்ள ஈவானது அநேக பாவங்களை நீக்கி, நீதியாக்குதற்கேதுவாயிருக்கிறது.

௰௭ அல்லாமலும் ஒரே மனிதன் விழுந்தபின்பு, அந்த ஒரே மனிதனாலே மரணம் ஆண்டுகொண்டிருக்கச், கிருபையாகிய பரிபூரணத்தையும் நீதியாகிய ஈவின் பரிபூரணத்தையும் பெறுகிறவர்கள் இயேசுக்கிறிஸ்துவென்னும் ஒரே மனிதனாலே மிகவும் அதிகமாய்ச் சீவனையடைந்து ஆளுவார்கள்.

௰௮ ஆகையால் ஒரே மனிதனுடைய தப்பிதத்தினாலே எல்லா மனிதருக்கும் ஆக்கினைக்கேதுவான தீர்ப்புண்டானதுபோல, ஒரே மனிதனுடைய நீதியினாலும் எல்லா மனிதருக்குஞ் சீவனுக்கிய நீதிக்கேதுவான தீர்ப்புண்டாயிற்று.

௰௯ அன்றியும் ஒரே மனிதன் கீழ்ப்படியாமலிருந்ததினாலே, அநேகர் பாவிகளாக்கப்பட்டார்கள். அதுபோல, ஒரே மனிதன் கீழ்ப்படிந்ததினாலே அநேகர் நீதிமான்களாக்கப்படுவார்கள்.

௨௰ மேலும் நியாயப்பிரமாணந் தோன்றினதினாலே தப்பிதம் பெருகிற்று. அப்படிப் பாவம் பெருகினவிடத்திலே கிருபை அதிகமாய்ப் பெருகிற்று. ஆதலால் பாவம் மரணத்துக்கேதுவாக (மனிதனை) ஆண்டுகொண்டதுபோல.

௨௰௧ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே கிருபையானது நித்திய சீவனுக்கேதுவான நீதியினாலே ஆண்டுகொண்டது.

## ௬. அதிகாரம்.

[(௪) கிறிஸ்துவுடனே ஐக்கியப்பட்டவர்கள் பாவங்களைச் செய்யார்களென்று காட்டியது.]

ஆகையால் நாம் என்ன சொல்லலாம் கிருபை பெருகும்படிக்குப் பாவத்திலே நிலை நிற்கக்கடவோமென்று சொல்லலாமா.

௨ அப்படிக்கூடாதே பாவத்துக்கு மரித்த நாம் இனி அதிலே எப்படிப் பிழைப்போம்.

௩ கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்ற நாமனைவரும் அவருடைய மரணத்திற்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா.

௪ மேலும் பிதாவின் மகிமையினாலே கிறிஸ்து மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்டதுபோல, நாமும் புதிதான சீவனுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு, மரணத்திற்குள்ளான ஞானஸ்நானத்தினாலே அவருடனே கூட அடக்கம்பண்ணப்பட்டோம்.

௫ ஆதலால் அவருடைய மரணத்திற்கொப்பாக நாம் அவருடனே நாட்டப்பட்டவர்களாயிருக்க, அவர் உயிரோடெழுந்திருக்குதலுக்கொப்பாகவும் அப்படியேயிருப்போம்.

௬ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நாமினிப் பாவத்துக்கு அடிமையாயிராதபடிக்குப், பாவமாகிய சரீரம் அழிந்துபோகும்பொருட்டாக, நம்முடைய பழைய மனிதத்துவம் அவரோடேகூடச் சிலுவையில் அறையப்பட்டது.

௭ ஆகையால் மரித்தவன் பாவத்தினின்று விலக்கப்பட்டானே.

௮ மேலுங் கிறிஸ்துவுடனேகூட நாம் மரித்திருக்க.

௯ மரித்தோரிலிருந்தெழுந்த கிறிஸ்து இனி மரிப்பதில்லையென்றும் மரணம் இனி அவரை ஆண்டுகொள்ளாதென்றும் நாம் அறிந்தபடியால், அவருடனேகூடப் பிழைத்துமிருக்கலாமென்று நம்புகிறோம்.

௰ அன்றியும் அவர் பாவத்திற்காக ஒரே தரம் மரித்தார். பின்பு அவர் பிழைத்திருக்கிறது பராபரனுக்காகவிருக்கின்றது.

௰௧ அதுபோல நீங்களும் உங்களைப் பாவத்திற்கு மரித்தவர்களென்றும் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக் கொண்டு பராபரனுக்குப் பிழைத்திருக்கிறவர்களென்றும் எண்ணிக்கொள்ளுவீர்களாக.

௰௨ ஆகையால் சாவுக்கினமான உங்கள் சரீரத்தின் இச்சைகளுக்கு நீங்கள் கீழ்ப்படியத்தக்கதாகப் பாவம் அதிலே ஆளாதிருப்பதாக.

௰௩ அன்றியும் நீங்கள் நியாயப்பிரமாணத்தின் கீழல்ல, கிருபையின் கீழிருக்கிறபடியால் பாவம் உங்களைப் பலபந்தப்படுத்தமாட்டாது.

௰௪ ஆதலால் நீங்கள் உங்கள் அவயவங்களை அநீதிக்குரிய ஆயுதங்களாகப் பாவத்திற்கு ஒப்புக்கொடாமல், உங்களை மரித்தோரிலிருந்து பிழைக்கிறவர்களென்று பராபரனுக்கு ஒப்புக்கொடுத்து, உங்கள் அவயவங்களை நீதிக்குரிய ஆயுதங்களாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பீர்களாக.

௰௫ இதினாலே பொருளென்ன ஆயிற்று, நாம் நியாயப்பிரமாணத்தின் கீழிராமற் கிருபையின் கீழிருக்கிறபடியினாலே, பாவஞ்செய்யலாமென்ற பொருளா. அப்படியல்லவே.

௰௬ மரணத்திற்கேதுவான பாவத்துக்காகிலும் நீதிக்கேதுவான கீழ்ப்படியுதலுக்காகிலும் எதற்குக் கீழ்ப்படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக்கொடுக்கிறீர்களோ, அதற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாயிருக்கிறீர்களென்றறியாமலிருக்கிறீர்களா.

௰௭ முன்னே நீங்கள் பாவத்திற்கு அடிமைகளாயிருந்தீர்கள். இப்பொழுது உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேசத்தின் பிரமாணத்திற்கு நீங்கள் மனச்சந்தோஷமாய்க் கீழ்ப்படிந்திருக்கிறபடியினாலே பராபரனுக்குத் தோத்திரம்.

௰௮ இப்படி நீங்கள் பாவத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டபின்பு, நீதிக்கு அடிமைகளானீர்கள்.

௰௯ உங்கள் சரீரத்தின் பலஈனத்தினிமித்தம் மனிதர் பிரகாரமாகச் சொல்லுகிறேன். அக்கிரமத்தை நடப்பிக்கும்படி, (முன்னே) நீங்கள் உங்கள் அவயவங்களை அசுத்தத்திற்கும் அக்கிரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக்கொடுத்ததுபோல, இப்பொழுது பரிசுத்தமானதை நடப்பிக்கும்படி உங்கள் அவயவங்களை நீதிக்கு அடிமைகளாக ஒப்புக்கொடுப்பீர்களாக.

௨௰ பாவத்திற்கு நீங்கள் அடிமைகளாயிருந்தகாலத்திலே நீதிக்கு நீங்கலானவர்களாயிருந்தீர்கள்,

௨௰௧ இப்பொழுது நீங்கள் வெட்கப்படுகிற காரியங்களினாலே அக்காலத்திலே உங்களுக்கென்ன பிரயோசனமுண்டாயிற்று. மரணமே அவைகளின் முடிவாயிருக்கின்றது.

௨௰௨ இப்பொழுது நீங்கள் பாவத்தினின்று விடுதலையாக்கப்பட்டு, பராபரனுக்கு அடிமைகளானபின்பு, பரிசுத்தமாகுதலே உங்களுக்குப் பிரயோசனமாயிற்று. நித்திய சீவனே அதின் கடைசிப்பலனுமாயிருக்கின்றது.

௨௰௩ பாவத்தினாலே வருகிற சம்பளம் மரணம். பராபரனுடைய கிருபையுள்ள ஈவோ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலுண்டான நித்திய சீவனே.

## ௭. அதிகாரம்.

[(௧) விசுவாசிகள் நியாயப்பிரமாணத்தின் சாபத்திற்கு நீக்கப்பட்டவர்களென்பதும். (௭) அப்படியிருந்தும் நியாயப்பிரமாணம் பிரயோசனமுள்ளதென்பதும். (௰௫) விசுவாசியானவனுக்குள்ளே பாவத்தினாலுண்டாயிருக்கிற போராட்டமின்னதென்றுங் காட்டியது.]

நியாயப்பிரமாணத்தை யறிந்திருக்கிறவர்களுடனே பேசுகிறேன். சகோதரரே ஒருமனிதன் உயிரோடிருக்குமளவுமாத்திரம் நியாயப்பிரமாணம் அவனை ஆளுகின்றதென்றறியீர்களா.

௨ அதெப்படியென்றால் புருஷனைக்கொண்ட ஸ்திரி தன் புருஷனுடைய சீவகாலமட்டும் நியாயப்பிரமாணத்தின்படியே அவனோடே சேர்க்கப்பட்டிருக்கிறாள். புருஷன் மரித்தபின்பு, அவள் தன் புருஷனுடைய பிரமாணத்திற்கு நீக்கப்படுகிறாள்.

௩ மேலும் புருஷனுயிரோடிருக்கையில், அவள் வேறொரு புருஷனை விவாகம்பண்ணினால், விபசாரியென்றழைக்கப்படுவாள். புருஷன் மரித்தபின்பு அவள் அந்தப்பிரமாணத்தினின்று விடுதலையாகி, வேறொரு புருஷனை விவாகம்பண்ணினாலும், விபசாரியல்ல. அப்படிப்போல என் சகோதரரே.

௪ நாம் பராபரனுக்குக் கனியைக்கொடுக்கும்படிக்கு, மரித்தோரிலிருந்தெழுந்த கிறிஸ்து என்னும் வேறொருவருடையவர்களாவதற்கு, நீங்களும் அவருடைய சரீரத்தினாலே நியாயப்பிரமாணத்தினின்று நீங்கமரித்தவர்களானீர்கள்.

௫ நாம் சரீரத்தின்படி நடந்த காலத்திலே நியாயப்பிரமாணத்தினாலே தோன்றிய பாவமான இச்சைகள் நாம் மரணத்துக்கேதுவான கனிகளைக் கொடுக்கத்தக்கதாக நம்முடைய அவயவங்களிலே பலஞ்செய்திருந்தன.

௬ இப்பொழுது நாம் மரித்தவர்களாயிருக்க, நாம் பழமையான எழுத்தின்படியல்ல, புதுமையான ஆவியின்படி ஊழியஞ்செய்யத்தக்கதாக, நம்மைக் கட்டியிருந்த நியாயப்பிரமாணத்தினின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறோம்.

எ இதினாலே பொருள் என்னவாயிற்று. நியாயப்பிரமாணம் பாவமாயிருக்கின்றதென்றோ. அப்படியல்லவே. மேலும் இச்சியாதிருப்பாயாகவென்று நியாயப்பிரமாணஞ் சொல்லாதிருந்தால், இச்சிப்பைப் பாவமென்று நான் அறியமாட்டேன். ஆதலாற் பாவமின்னதென்று நியாயப்பிரமாணத்தினாலே யறிந்தேன்.

அ இப்படி நியாயப்பிரமாணமில்லாவிட்டாற் பாவஞ்செத்ததாயிருக்கும். ஆதலாற் பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று சகலவித இச்சைகளையும் என்னில் நடப்பித்தது.

கூ இப்படியிருக்க, முன்னே நியாயப்பிரமாணமில்லாதபொழுது, நான் சீவனுள்ளவனாயிருந்தேன். கட்டளை வந்தபொழுது, பாவந் திரும்ப உயிர்கொண்டது. நான் மரித்தேன்.

ய இப்படிப்பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று, என்னை வஞ்சித்து, அதினாலே யென்னைக் கொலைசெய்ததினாலே.

யக சீவனுக்காகக்கொடுக்கப்பட்ட கட்டளையை எனக்கு மரணத்தைக்கொடுக்கிறதென்றுகண்டேன்.

யஉ ஆகையால் நியாயப்பிரமாணமே பரிசுத்தமாயிருக்கின்றது. கட்டளையும் பரிசுத்தமாயும் நீதியாயும் நன்மையாயுமிருக்கின்றது.

யங இப்படியானால், நன்மையானது என் மரணத்திற்கு ஏதுவாயிற்றுவென்று கேட்டால், அப்படியாகவேயில்லை. பாவமே அப்படியாயிற்று. பாவங்கட்டளையினாலே மிகவும்பெரிதான பாவியாகும்படிக்கு அதுவே நலமானதினாலே எனக்குமரணமுண்டாக்குகிறதாகத் தோன்றிற்று.

யச மேலும் நமக்குத்தெரிந்திருக்கிறபடி, நியாயப்பிரமாணம் ஆவிக்குரியதாயிருக்கின்றது. (மனிதனாகிய) நானோ பாவத்துக்குக்கீழாகவிற்கப்பட்டு,

யரு மாமிசத்துக்குரியவனாயிருக்கிறேன். எப்படியெனில் நான் நடப்பிக்கிறதற்கு என்மனது சம்மதிக்கிறதில்லை நான் விரும்புகிறதைச்செய்யாமற் பகைக்கிறதையே செய்கிறேன்.

யசு இப்படி என்மனது விரும்பாததை நான்செய்திருக்க, நியாயப்பிரமாணம் நல்லதென்று ஒத்துக்கொள்ளுகிறேனே.

யஎ ஆதலால் நானல்ல, எனக்குள்வாசமாயிருக்கிற பாவமே அப்படி நடப்பிக்கின்றது.

யஅ அதெப்படியென்றால் நான் அறிந்திருக்கிறபடி, மாமிசத்தேகியாகிய எனக்குள் நன்மைவாசமாயிருக்கிறதில்லை. நன்மைசெய்வதற்கான விருப்பம் என்னுடனே யிருக்கின்றது. அப்படிச்செய்கிறதை என்னிடத்திற்காணேன்.

யகூ ஆதலால் எனக்குவிருப்பமான நன்மையை நான்செய்யாமல், எனக்கு விருப்பமில்லாத தீமையைநடப்பிக்கிறேன்.

உய அதெப்படி எனக்குவிருப்பமில்லாததைத நான்செய்கிறவனாயிருக்க, நானல்ல, எனக்குள்ளேவாசமாயிருக்கிறபாவமே யப்படிச்செய்கின்றது.

உக ஆனபடியினாலே நன்மைசெய்யவிரும்புகிற என்னிடத்திலே தீமைசெய்யப்பண்ணுகிற பிரமாணத்தைக் காணுகிறேன்.

உஉ என் உள்ளத்தின்படி பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்மேற் பிரியமாயிருக்கிறேன்.

உங என் அவயவங்களிலே என்மனதின் பிரமாணத்துக்கு எதிராய்ப்போராடுகிற வேறு பிரமாணத்தைக்காணுகிறேன். அது என் அவயவங்களிலுண்டாயிருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னை அடிமையாக்கிக்கொள்ளுகிறது.

உச ஐயோ, நான் நிற்பாக்கியமுள்ள மனிதன், இந்தமரணத்திற்கேதுவானசரீரத்தினின்று ஆர் என்னைவிடுதலையாக்குவார்.

உரு நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே (யென்னை விடுதலையாக்குகிற) பராபரனையே தோத்திரஞ்செய்கிறேன், ஆதலால நானேயென்மனதினாலே பராபரனுடைய நியாயப்பிரமாணத்துக்கும் மாமிசத்தினாலே பாவப் பிரமாணத்திற்கும் ஊழியஞ்செய்கிறேன்.

## அ. அதிகாரம்.

[(க) கிறிஸ்துவைப்பற்றித்தேவ ஆவியின்படி நடக்கிறவர்களுக்கு ஆக்கினைவாராதென்றும், (ரு) மாமிசத்தேகத்திற் சேராத சிந்தையின்னதென்றும் ஆவிக்கேற்ற சிந்தையின்னதென்றும், (யஉ) மாமிசதேகத்திந்தனையின்படி நடவாதபடிக்குப்புத்திகளின்னதென்றும், (யச) ஆவியின்படி நடக்கிற தேவபுத்திரருக்குவருகிறமகிமையின்னதென்றுங்காட்டியது.

ஆனபடியினாலே மாமிசத்தின் படியல்ல, ஆவியின்படியே நடந்து கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டிருக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்புவாராது.

உ கிறிஸ்து இயேசுவினாலேசீவனைக்கொடுக்கிற ஆவியின்பிரமாணம் என்னைப்பாவம் மரணம் என்றிவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே.

ங அதெப்படியெனில், மாமிசத்தினாலே பலஈனமாயிருந்த நியாயப்பிரமாணஞ்செய்யக்கூடாததைப்பராபரன்செய்ய, தம்முடைய குமாரனைப் பாவமாமிசத்தின் சாயலாகவும் பாவத்தைப்போக்கும் பலியாகவும் அனுப்பி, மாமிசத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத்தீர்த்தார்.

௪ மாம்சத்துக்கேற்றபடியல்ல, ஆவிக்கேற்றபடி நடக்கிற நம்மாலே நியாயப்பிரமாணத்தின் நீதி நிறைவேறும்படிக்கேயப்படியாயிற்று.

௫ இப்படியிருக்க, மாம்சத்துக்கேற்றபடி நடக்கிறவர்கள் மாம்சத்துக்கேற்றவைகளைச் சிந்திக்கிறார்கள். ஆவிக்கேற்றபடி நடக்கிறவர்கள் ஆவிக்கேற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்.

௬ மாம்சத்துக்கேற்ற சிந்தை மரணத்துக்கேதுவானது. ஆவிக்கேற்ற சிந்தை சீவனுக்குஞ் சமாதானத்துக்குமேதுவானது.

௭ எப்படியென்றால் மாம்சத்துக்கேற்ற சிந்தை பராபரனுடைய நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்படியாமலும் கீழ்ப்படியத் திராணியில்லாமலுமிருக்கிறபடியால், அது பராபரனுக்கு விரோதமான பகையாயிருக்கின்றது.

௮ ஆனதால் மாம்சத்திற்கேற்றபடி நடக்கிறவர்கள் பராபரனுக்குப் பிரியமாயிருக்கமாட்டார்கள்.

௯ பராபரனுடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறபடியால் நீங்கள் மாம்சத்துக்கேற்றபடியல்ல, ஆவிக்கேற்றபடி நடக்கிறவர்களாயிருக்கிறீர்கள். கிறிஸ்துவினுடைய ஆவியையுடையவனல்லாதவன் அவருடையவனல்ல.

௰ மேலும் கிறிஸ்து உங்களிலிருந்தபடியால், பாவத்தினிமித்தஞ் சரீரம் அழிந்துபோனாலும், ஆவியானது நீதியினிமித்தஞ் சீவனுள்ளதாயிருக்கின்றது.

௰௧ அன்றியும் இயேசுவை மரித்தோரினின்றெழுப்பினவருடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறபடியால், கிறிஸ்துவை மரித்தோரிலிருந்தெழுப்பினவர் உங்களில் வாசமாயிருக்கிற தம்முடைய ஆவியினாலே மரணத்துக்குரிய உங்கள் சரீரங்களை உயிரோடிருக்கச்செய்வார்.

௰௨ ஆகையால் சகோதரரே மாம்சத்திற்கேற்றபடி சீவனம்பண்ணத்தக்கதாக நாம் மாம்சத்துக்குக் கடனாளிகளாயிருக்கிறதில்லை.

௰௩ மாம்சத்திற்கேற்றபடி சீவனம்பண்ணினால் சாவீர்கள். ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளையழித்துப்போட்டால், பிழைப்பீர்கள்.

௰௪ மேலும் எவர்கள் பராபரனுடைய ஆவியினாலே நடத்தப்படுகிறார்களோ அவர்கள் பராபரனுடைய புத்திரராயிருக்கிறார்கள்.

௰௫ அந்தப்படி நீங்களும் பின்னும் பயப்படுகிறதற்கு அடிமையின் ஆவியையடையாமல், அப்பா, பிதாவே, யென்று கூப்பிடப்பண்ணுகிற புத்திர சுவிகாரத்தின் ஆவியையே யடைந்திருக்கிறீர்கள்.

௰௬ நாம் பராபரனுடைய புத்திரராயிருக்கிறதைக் குறித்து ஆவியானவர்தாமே நம்முடைய ஆவியுடனே கூடச் சாட்சிகொடுக்கிறார்.

௰௭ மேலும் நாம் புத்திரராயிருக்க, சுதந்தராயுமிருக்கிறோம். கிறிஸ்துவுடனே கூட நாமும் மகிமைப்படும்படிக்கு அவரோடே கூடப் பாடுபட்டால், அவரோடே கூடச் சுதந்தராயப் பராபரனுடைய சுதந்தரக்காரராயுமிருப்போம்.

௰௮ ஆதலால், இக்காலத்துப் பாடுகள் இனி நமக்கிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு ஒப்பிடப் பாத்திரமானவைகளல்லவென்றெண்ணுகிறேன்.

௰௯ மேலுந் தற்செயலாலேயல்ல சிருட்டிகளும் அழிவுக்கேற்ற அடிமைத்தனத்தினின்று விடுதலையாக்கப்பட்டு.

௨௰ பராபரனுடைய புத்திர மகிமையாகிய விடுதலைக்குட்படும்படிக்கு நம்பிக்கையோடே கீழ்ப்படுத்தினவராலே வீணுக்குக் கீழ்ப்பட்டிருக்கிறபடியால்,

௨௧ சிருட்டிகளும் பராபரனுடைய புத்திரர் வெளிப்படுகிறதற்குமிகுந்த ஆசையோடே காத்துக்கொண்டிருக்கின்றன.

௨௨ ஆனபடியால் நமக்குத் தெரிந்திருக்கிறபடி, சகல சிருட்டிகளுங்கூட இதுவரைக்குந் தவித்து வேதனைப்படுகின்றன.

௨௩ அவைகள் மாத்திரமல்ல, ஆவியின் முதற்பலன்களைப் பெற்ற நாமுங்கூட நம்முடைய சரீரம் மீட்கப்படுதலாகிய புத்திர சுவிகாரம் வருகிறதற்குக் காத்திருந்து

௨௪ நமக்குள்ளே தவிக்கிறோம். (அதினாலே உள்ள) நம்பிக்கையால் நாம் இரட்சிக்கப்படுகிறோம். காணப்படுகிற பொருளை நம்புகிறது நம்பிக்கையல்ல, ஒருவன் தான் காண்கிறதை நம்ப வேண்டுவதென்ன.

௨௫ நாம் காணாததை நம்புகிறபடியால், அது வருந்தனையும் பொறுமையோடே காத்திருக்கிறோம்.

௨௬ அல்லாமலும் நாம் தகுதியாய்ச் செபம்பண்ணவேண்டுவதின்னதென்றறியாமலிருக்கிறபடியால், (தேவ) ஆவியானவர் தாமே, சொல்லக்கூடாத பெருமூச்சுக்களாலே நமக்காக வேண்டுதல்பண்ணி, நம்முடைய பலவீனங்களில் (நமக்கு) உதவிசெய்கிறார்.

௨௭ ஆவியானவர் பராபரனுடைய சித்தத்தின்படியே பரிசுத்தவான்களுக்காக வேண்டுதல்பண்ணுகிறபடியால், இருதயங்களை ஆராய்ந்துபார்க்கிறவர் ஆவியின் சிந்தையின்னதென்று அறிந்துகொள்ளுகிறார்.

௨௮ அன்றியும் அவருடைய முன்னியமனத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய், பராபரனில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மையாகும்படிக்கே நடந்துவருகிறதென்றறிந்திருக்கிறோம்.

௨௯ அதெப்படியென்றால் பராபரன் தம்முடைய குமாரன் அநேக சகோதரருக்குள்ளே முதற்பேறானவராயிருக்கும்படிக்குத்

தாம் எவர்களை முன்னறிந்தாரோ அவர்களை தம் குமாரனுடைய சாயலுக்கொப்பாயிருப்பத்தற்கு முன்குறித்தார்.

௩௰ அல்லாமலும், எவர்களை முன்குறித்தாரோ அவர்களை அழைத்துமிருக்கிறார். எவர்களை அழைத்தாரோ அவர்களை நீதிமான்களாக்கியுமிருக்கிறார். எவர்களை நீதிமான்களாக்கினாரோ அவர்களை மகிமைப்படுத்தியுமிருக்கிறார்.

௩௰௧ இவைகளைக் குறித்து நாம் என்ன சொல்லவேண்டும். பராபரன் நம்முடைய பக்கமிருக்க நமக்கு விரோதமாயிருப்பவனெவன்.

௩௰௨ அவர் தம்முடைய சொந்தக் குமாரனென்றும் பாராமல் நம்மெல்லாருக்காகவும் அவனையே ஒப்புக்கொடுத்திருக்க, அவரோடேகூட மற்றயாவையும் நமக்கு அருளுகிறதெப்படி இல்லாமலிருப்பார்.

௩௰௩ பராபரனாலே தெரிந்து கொள்ளப்பட்டவர்கள்மேல் யார் குற்றஞ்சாற்றலாம். பராபரனே (அவர்களை) நீதிமான்களாக்குகிறவர்.

௩௰௪ யார் (அவர்களை) ஆக்கினைக்குள்ளாக்கத்தக்கவராம். கிறிஸ்துவே (அவர்களுக்காக) மரித்தார். மேலும் எழுந்தவராயுமிருக்கிறார். அதுவுமல்லாமல் அவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலிருந்து நமக்காக வேண்டுதல் செய்கிறார்.

௩௰௫ உமது நிமித்தம் நாம் எந்நேரமுங் கொலைசெய்யப்படுகிறோமென்றும் அடிக்கப்படும் ஆடுகளைப்போல எண்ணப்படுகிறோமென்றும் எழுதியிருக்கிறபடியேயிருந்தும்

௩௰௬ நம்மைக் கிறிஸ்துவின் அன்பைவிட்டுப் பிரிப்பவனியாவன், உபத்திரவமோ, வியாகுலமோ, துன்பப்படுத்தலோ, பசியோ நிருவாணமோ நாசமோசமோ, கட்கமோ,

௩௰௭ இவையெல்லாவற்றையும் நாம் நம்மில் அன்புகூருகிறவராலே அதிகமாய்ச் செயங்கொள்ளுகிறோம்.

௩௰௮ மரணமாலுஞ் சீவனாலுந் தேவதூதர்களாலும் அதிகாரிகளாலும் வல்லமைகளாலும் நிகழ்காரியங்களாலும் வருங்காரியங்களாலும்,

௩௰௯ உயர்த்தியாலுந் தாழ்த்தியாலும் வேறெருசிருட்டியாலும் நம்மை நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து யேசுவினாலுளவாகிய பராபரனுடைய அன்பைவிட்டுப் பிரிக்கமாட்டாதென்று நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

## ௯. அதிகாரம்.

[(௧) பவுலு யூதர்களைக் குறித்துத் துக்கித்ததினதென்றும், (௭) அவர்களில் இன்னார் மெய்யான புத்திரரென்றும், (௰௮) ஒருவனைத் தள்ளுகிறதற்கும் ஒருவனைச் சேர்க்கிறதற்கும் பராபரனானவர் யாதினமுள்ளவரென்றும், (௨௫) புறத்தேசத்தாரையுஞ் சேர்ப்பாரென்பது முன்னறிவிக்கப்பட்டதென்றும், (௩௰) அவர் அப்படிச்செய்கிறது நியாயமின்னதென்றுங் காட்டியது.]

௧ சரீரசம்பந்தமான என் வமிசத்தாராகிய என் இனத்தாருக்காக நானே கிறிஸ்துவினாலே சபிக்கப்பட்டவனாக வேண்டுமென்றிருந்தும்,

௨ அவர்களைக் குறித்து மிகுந்த துக்கமும் இடைவிடாத மனநோவுமுள்ளவனாயிருக்கிறேன்.

௩ இயேசுக்கிறிஸ்துவின்பேரிலே (யானை படிக்கு இப்படி) மெய்யாய்ச் சொல்லுகிறேன். பரிசுத்த ஆவியின்பேரிலே யானைப்படிக்குப் பொய்சொல்லாமலிருக்கிறேன். என் மனது கூடச் சாட்சியாயிருக்கின்றது.

௪ அவர்கள் இஸ்ரவேலசந்ததியாராயிருக்கிறார்களே. புத்திரசுவிகாரமும் மகிமையும் உடம்படிக்கைகளும் வேதப்பிரமாணமும் தேவ ஆராதனையும் வாக்குத்தத்தங்களும் அவர்களுடையவைகளே.

௫ பிதாக்கள் அவர்களுடையவர்களாயிருக்கிறார்களே. மேலுஞ் சரீரத்தின்படிக்குக் கிறிஸ்து அவர்களிலுண்டானாரே. அவர் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்ட சர்வத்திற்கும் மேலான தேவனானவர்—ஆமென்.

௬ பராபரனுடைய வசனம் அவமாய்ப் போயிற்றென்று சொல்லக்கூடாது. என்னத்தினாலென்றால், இஸ்ரவேல வமிசத்தாரெல்லாரும் இஸ்ரவேலரல்லவே.

௭ அன்றியும் அவர்கள் ஆபிரகாமின் சந்ததியானாலும் எல்லாரும் புத்திரருமல்லவே ஈசாக்கினாலே உனக்குச் சந்ததி யுண்டாகுமென்று சொல்லியிருக்கின்றதே.

௮ இதின்பொருளென்னவென்றால் சரீரமுறைமையின்படி புத்திரரானவர்கள் பராபரனுடைய புத்திரரல்ல. வாக்குத்தத்தத்தினுடைய புத்திரரல்லவோ (அப்படிப்பட்டதே) தெரிந்துகொள்ளப்பட்டபுத்திரரோ (அப்படிப்பட்ட) சந்ததியென்றெண்ணப்படுகிறார்கள்.

௯ அந்த வாக்குத்தத்தமான வார்த்தையாவன். இக்காலத்திலே வருவேன். அப்போது சாராள் ஒரு குமாரனைப் பெறுவாளென்பவைகளே.

௰ இவைமாத்திரமல்ல, நம்முடைய முன்னோராகிய ஈசாக்கென்னும் ஒருவனாலே கர்ப்பவதியான இரெபெக்காளும் அதற்குச் சாட்சி. எப்படியென்றால்,

௰௧ அவளுடைய பிள்ளைகள் பிறவாமலும் நன்மை தின்மையொன்றுஞ் செய்யாமலுமிருந்தகாலத்திலே, மூத்தவன் இளையவனுக்கு ஊழியஞ்செய்வானென்று அவளுடனே சொல்லப்பட்டது.

௰௨ அப்படிப்போல், யாக்கோபின்மேல் அன்பாயிருந்து ஏசாவைப் பகைக்கிறேனென்றும் எழுதியிருக்கின்றது.

௰௩ பராபரனுடைய சித்தந் தெரிந்து கொண்டபடியே யிருந்து, கிரியைகளினாலேயல்ல அழைக்கிறவராலே யாகும்படிக்கு அப்படிச் சொல்லியிருக்கின்றது.

௰௪ ஆகையால் நாம் என்ன சொல்லலாம், பராபரனிடத்திலே அநீதியுண்டென்று சொல்லலாமா, அப்படி யொருக்காலுஞ் சொல்லக்கூடாது. மோசேயுடனே அவர் சொன்னதாவது,

௰௫ எவன்மேல் தயையாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ அவன்மேல் தயையாயிருப்பேன், எவன்மேல் இரக்கமாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ அவன்மேல் இரக்கமாயிருப்பேனென்றாரே.

௰௬ ஆகையால் மனிதர் விரும்புகிறதினாலும் ஓடுகிறதினாலுமல்ல, பராபரனுடைய தயையினாலேயாயிருக்கின்றது.

௰௭ பின்னும் வேதத்திலே பார்வோனுடனே அவர் சொன்னதாவது, உன்னிடத்தில் என்னுடைய வல்லமையைக் காண்பிக்கும் பொருட்டாகவும், என்னுடைய நாமம் பூமியிலெங்கும் பிரஸ்தாபமாகும் பொருட்டாகவும் உன்னை நிலைநிற்கப் பண்ணினேனென்றார்.

௰௮ ஆதலால் அவர் தமது இஷ்டத்தின்படி யொருவனுக்குத் தயையாயிருக்கிறார். தமது இஷ்டத்தின்படி மற்றொருவனைக் கடினப்படுத்துகிறார்.

௰௯ இப்படியானால், ஏன் அவர் குற்றம் பிடிக்கிறார். அவருடைய சித்தத்திற்கு யாவன் எதிர்நிற்பானென்று என்னுடனே சொல்வாய்.

௨௰ ஆ! மனிதனே, பராபரனுக்கெதிராய்த் தர்க்கிக்கிற நீயாவன். உருவாக்கப்பட்டவஸ்து உருவாக்கினவனை நோக்கி நீ ஏன் என்னையிப்படியுண்டாக்கினாயென்று சொல்லுமா.

௨௰௧ அல்லது, மிதியிட்ட களிமண்ணினாலே குயவனொருபாத்திரத்தைக் கனமான காரியத்திற்கும் மற்றொன்றைக் கனவீனமான காரியத்திற்கும் பண்ணும்படி மண்ணின்மேல் அதிகாரமுள்ளவனல்லவா.

௨௰௨ ஆனதால் பராபரன் தமது கோபத்தைக் காண்பிக்கவுந் தமது வல்லமையைத் தெரியப்படுத்தவுஞ் சித்தமாய், அழிவுக்குத் தகுதியான கோபாக்கினைப் பாத்திரங்களின் மேலே மிகவும் நீடிய சாந்தத்தோடே பொறுமையை வைத்துக்கொண்டதுமல்லாமல்,

௨௰௩ தாம் மகிமைக்காக எத்தனமாக்கின தயையின் பாத்திரங்களின்மேலே தம்முடைய மகிமையின் ஐசுவரியத்தைத் தெரியப்படுத்தச் சித்தமாய் அப்படிப் பொறுத்துக்கொண்டால், (நீ எப்படித் தர்க்கிக்கலாம்)

௨௰௪ அப்படிப்பட்டவர்களாகும்படி அவர் யூதரில் மாத்திரமல்ல, புறதேசத்தாரிலுமிருந்து நம்மையழைத்தார்.

௨௰௫ அந்தப்படி ஓசெயாவின் புத்தகத்திலே யவர் சொல்லுகிறதாவது, எனக்குச் சனங்களல்லாதவர்களை என்னுடைய சனங்களென்றுஞ் சிநேகிக்கப்படாதிருந்தவளைச் சிநேகிக்கப் பட்டவளென்றும் அழைப்பேன்.

௨௰௬ நீங்கள் என்னுடைய சனங்களல்லவென்று தங்களுக்குச் சொல்லப்பட்ட இடத்திலே அவர்கள் சீவனுள்ள பராபரனுடைய பிள்ளைகளென்றழைக்கப்படுவார்களென்கிறார்.

௨௰௭ அல்லாமலும் ஏசாயாவென்பவன் இஸ்ரவேலைக்குறித்துக் கூப்பிடுகிறதாவது, இஸ்ரவேல் சந்ததியார் சமுத்திரத்தின் மணலைப்போலப் பெருக்கமாயிருந்தும் மீதியான சிலர்மாத்திரம் இரட்சிக்கப்படுவார்கள்.

௨௰௮ நீதியோடே சீக்கிரமாய்க் கர்த்தர் காரியத்தைத் தீர்த்து நிறைவேற்றுவார். சீக்கிரமாகவே அவர் காரியத்தைப் பூமியிலே தீர்த்துப்போடுவாரென்றான்.

௨௰௯ அல்லாமலும் அதற்குமுன்னே ஏசாயா சொன்னது, சேனைகளையுடைய பராபரன் நமக்குள்ளே ஒரு சந்ததியைமீதியாக வையாதிருந்தாரானால், நாம் சொதோமைப் போலாகி, கொமோருவுக்கு ஒத்திருப்போமென்றான்.

௩௰ இவைகளின் பொருளென்னவாயிற்றென்று கேட்டால், நீதியைத் தேடாமலிருந்த புறதேசத்தார் விசுவாசத்தினாலே வருகிற நீதியையே பெற்றுக்கொண்டார்கள்.

௩௰௧ நியாயப்பிரமாணத்தினாலே நீதியைத் தேடின இஸ்ரவேலரோ விசுவாசத்தினாலல்ல,

௩௰௨ நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலேயதைத் தேடினபடியால் நியாயப்பிரமாணத்தினாலே நீதியடையவில்லை.

௩௰௩ இதோ, விழுதற்கான கல்லையும் இலச்சையடைவதற்கான கன்மலையையுஞ் சீயோனிலே வைக்கிறேன். அதினிடத்தில் விசுவாசமாயிருப்பவனெவனோ அவன் வெட்கப்படுவதில்லையென்று எழுதியிருக்கிறபடி, அவர்கள் விழுதற்கான அக்கல்லின்மேல் விழுந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலர் பராபரனுக்காக வைராக்கியமுள்ளவர்களாயிருந்துங் கிறிஸ்துவினுடைய நீதியையே பெற்றுக்கொள்ளவில்லையென்றும், (௫) வேதப்பிரமாணத்தினால் வருகிற நீதியும் விசுவாசத்தால் வருகிற நீதியும் இன்னதென்றும், (௰௧) யாவரும் விசுவாசித்தால் இரட்சிக்கப்படலாமென்றும், (௰௬) யூதரில் அநேகர் விசுவா

சப்பிரமாணத்திற்குக் கீழ்ப்படியவில்லையென்றுங் காட்டியது ]

சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப்படவேண்டுமென்று நான் என் இருதயத்தோடேமிகவும் விரும்பி, பராபரனை நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன்.

௨ அவர்கள் பராபரனைக்குறித்து வயிராக்கியமாயிருக்கிறார்களென்று நானும் அவர்களுக்குச் சாட்சிசொல்லுகிறேன்.

௩ அந்த வயிராக்கியம் அறிவுக்கேற்றதல்லவெப்படியென்றால், பராபரனாலே வருகிற நீதியையவர்கள் அறியாமல் தங்கள் சுய நீதியை நிலைநிறுத்தத் தேடுகிறபடியால், அவராலே வருகிற நீதிக்குக் கீழ்ப்படியாதிருக்கிறார்கள்.

௪ விசுவாசிக்கிறவனுக்கு நீதியுண்டாகும்படியாக, கிறிஸ்து நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிறாரே.

௫ மெலும் மோசே நியாயப்பிரமாணத்தினாலே வருகிற நீதியைக்குறித்து, இவைகளைச் செய்கிற மனிதன் இவைகளால் பிழைப்பானென்று எழுதினார்.

௬ விசுவாசத்தினாலே வருகிற நீதியோ சொல்லுகிறதாவது. கிறிஸ்துவை இறங்கிவரப்பண்ணும்படிக்கு, வானத்திற்கேறிப்போபவன் யாவன.

௭ கிறிஸ்துவை மரித்தோரிலிருந்தேறிவரப்பண்ணும்படிக்கு பாதாளத்திலிறங்கிப்போபவன் யாவனென்று உன்னிருதயத்திலே நினையாதிருப்பாயாகவென்பதுமல்லாமல்,

௮ அதுபின்னுஞ் சொல்லுகிறதாவது, இந்தச் சங்கதி உனக்குச் சமீபமாய் உன்வாயிலும் உன் இருதயத்திலுமிருக்கின்றதென்று சொல்லுகின்றது. அந்தச் சங்கதி நாங்கள் பிரசங்கிக்கிற விசுவாசத்தின் சங்கதிதான்.

௯ என்னவென்றால், நீதிமான்களாக்கப்படுவதற்கு இருதயத்தோடே விசுவாசிக்கவும் இரட்சிக்கப்படுவதற்குவாயினாலே அறிக்கையிடவும்வேண்டுவதால்,

௰ நீ உன்வாயினாலே கர்த்தராகிய இயேசுவை அறிக்கையிட்டு, பராபரன் அவரை மரித்தோரிலிருந்தெழும்பப் பண்ணினாரென்று உன் இருதயத்தோடே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்.

௰௧ அந்தப்படி அவரைவிசுவாசிக்கிறவனெவனோ அவன்வெட்கப்படுவதில்லையென்று வேதமுஞ் சொல்லுகின்றது.

௰௨ அன்றியும் எல்லாருக்குங் கர்த்தரானவர் தம்மைத்தொழுதுகொள்ளுகிறயாவருக்காகவும் ஐசுவரியமுள்ளவராயிருக்கிறபடியால், யூதருக்குங் கிரேக்கருக்கும்வித்தியாசமேயில்லை.

௰௩ ஆதலால் கர்த்தருடைய நாமத்தைத்தொழுதுகொள்பவனெவனோ அவன் இரட்சிக்கப்படுவான்.

௰௪ அவரைவிசுவாசியாதவர்களெப்படியவரைத்தொழுதுகொள்ளுவார்கள். அவரைக்குறித்துக் கேள்விப்படாதவர்களெப்படி அவரை விசுவாசிப்பார்கள். மெலும் பிரசங்கிக்கிறவனில்லாவிட்டால், எப்படிக்கேள்விப்படுவார்கள்.

௰௫ மேலும் ஆ! சமாதானத்தைக்கூறி நற்காரியங்களைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடையபாதங்கள் மிகவும் அழகானவைகளென்று எழுதியிருக்கிறபடி, சிலர் அனுப்பப்படாவிட்டால், எப்படிப்பிரசங்கம்பண்ணுவார்கள்.

௰௬ ஆனாலும் இந்தச்சுவிசேஷத்திற்கு எல்லாருங்கீழ்ப்படியவில்லை. அதைக்குறித்து ஏசாயா சொன்னதாவது, கர்த்தாவே நாங்கள் பிரசங்கம்பண்ணுகிறதை யாவன் விசுவாசித்தானென்றான்.

௰௭ ஆதலால்விசுவாசங் கேள்வியினாலே வரும். கேள்வி பராபரனுடைய வசனத்தினாலே வருகின்றது.

௰௮ இப்படியிருக்க, நான்விசாரிக்கிறதென்னவென்றால், அவர்கள்கேள்விப்படவில்லையா, அவைகளின்தொனி பூமியெங்குஞ் சென்றது. அவைகளின் வசனங்கள் பூச்சக்கரக்கடைசிவரைக்கும் புறப்பட்டனவென்பதின்படி, அவர்கள்மெய்யாய்க் கேள்விப்பட்டார்களே.

௰௯ பின்னும் நான் விசாரிக்கிறதென்னவெனில் இஸ்ரவேலர் அறியவில்லையோ (அறியாமலிருக்கமாட்டார்கள். என்னத்தினாலென்றால்,) முதலாவது, மோசேசொன்னது, எனக்குச்சனங்களல்லாதவர்களைக்கொண்டு நான் உங்களுக்குப் பொறாமையுண்டாக்குவேன். புத்தியீனமுள்ளசனங்களாலே உங்களுக்குக் கோபமூட்டுவேனென்றான்.

௨௰ அல்லாமலும் ஏசாயா தயிரியமாய்ச் சொன்னது. என்னைத்தேடாதவர்களாலே கண்டறியப்பட்டேன். என்னை விசாரித்துக்கேளாதவர்களுக்கு வெளியரங்கமானேனென்றான்.

௨௧ இஸ்ரவேலரைக்குறித்துச் சொல்லியிருக்கிறதாவது, கீழ்ப்படியாதவர்களுமாய் விரோதம்பேசுகிறவர்களுமாயிருக்கிற சனங்களிடத்திற்கு முழுநாளும் என்கைகளை நீட்டினேனென்பதே.

## ௰௧. அதிகாரம்.

[(௧) பராபரன் இஸ்ரவேலரெல்லாரையுந் தள்ளவில்லையென்றும், (௫) கிருபையினாலே அவர்களிற்சிலர் தெரிந்துகொள்ளப்பட்டார்களென்றும், (௭) மற்றவர்கள் கடினமுள்ளவர்களென்றும், (௰௧) அதினாலேபுறத்தேசத்தாருக்குச் சுவிசேஷங்கிடைத்ததென்றும், (௰௭) அதற்காகப்புறத்தேசத்தார் மேன்மைபாராட்டக்கூ

டாதென்றும், (௨௫) கடைசியிலே யூதரும் இரக்கத்தைப் பெறுவார்களென்றும், (௩௩) பராபரனுடைய நடக்கை மிகவும் ஆச்சரியப்படத்தக்கதென்றுங் காட்டியது.]

இப்படியிருக்க, பராபரன் தம்முடைய சனங்களைத் தள்ளிவிட்டாரோவென்று கேட்டால், அப்படியவர் செய்யவேயில்லை.

௨ நானும் ஆபிரகாமின் சந்ததியாயும் பென்யாமீன் கோத்திரத்தானுமிருக்கிற இஸ்ரவேலனாயிருக்கிறேனே. பராபரன் தாம் முன்னறிந்துகொண்ட தம்முடைய சனங்களைத் தள்ளிவேயில்லை. எலியாவைக் குறித்து வேதஞ் சொல்லுகிறதை அறியீர்களா.

௩ அவன் பராபரனை நோக்கி, கர்த்தாவே, உம்முடைய தீர்க்கதரிசிகளையவர்கள் கொலைசெய்து, உம்முடைய பீடங்களையிடித்துப்போட்டார்கள்.

௪ நான் மாத்திரம் மீதியாயிருக்கிறேன். என் பிராணனையும் வாங்கத்தேடுகிறார்களென்று இஸ்ரவேலைக் குறித்து முறையிட்ட பொழுது, அவனுக்குண்டான தேவ உத்தரவு என்னவென்றால், பாகாலுக்கு முன்பாக முழங்கால்படியிடாத ஏழாயிரம்பேரை யெனக்காக மீதியாய் வைத்தேனென்பதே.

௫ அந்தப்படி இக்காலத்திலேயுங் கிருபையால் தெரிந்துகொள்ளப்பட்ட மீதியுண்டாயிருக்கின்றது.

௬ அது கிருபையினாலுண்டாயிருக்கிறபடியால், அது கிரியைகளினாலே ஆகவில்லை. அப்படியல்லவென்றால், கிருபையானது கிருபையாயிராது. அன்றியும் அது கிரியைகளினாலுண்டாயிருந்தால், அது கிருபையினு விராது. அல்லவென்றால் கிரியையானது கிரியையல்ல.

௭ இதினாலே என்னதோன்றுகிறதென்றால், இஸ்ரவேலர் தேடுகிறதை அடையாமலிருக்கிறார்கள். தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ அதையடைந்தார்கள். மற்றவர்கள் இன்றைத்தினம்வரைக்குங் கடினமான இருதயமுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

௮ பராபரன் கன்னித்திரையுள்ள ஆவியையுங் காணாதிருக்கிற கண்களையுங் கேளாதிருக்கிற காதுகளையும் அவர்களுக்குக் கொடுத்தாரென்றெழுதியிருக்கிறபிரகாரமாக அப்படியிருக்கிறார்கள்.

௯ தாவீதுஞ் சொல்லுகிறதாவது. அவர்களுடைய உணவிடம் அவர்களுக்குக் கண்ணியாயும் வலையாயும் விழுதற்கான கல்லாயும் பதில்பெறுதலுக்கேதுவாயுமிருக்கக்கடவது.

௰ காணாதபடிக்கு அவர்களுடைய கண்கள் அந்தகாரப்படக்கடவது. அவர்களுடைய முதுகு எப்பொழுதுங் குனியும்படி செய்யுமென்று சொல்லியிருக்கிறான்.

௰௧ இப்படியிருக்க, அழிந்துபோகும்படிக்கா இடறினார்களென்று கேட்டால், அப்படியல்ல, அவர்களுக்குள்ளே யெரிச்சலெழும்புகிறதற்காக அவர்கள் விழுந்ததினாலே புறத்தேசத்தாருக்கு இரட்சிப்புண்டாச்சுது.

௰௨ அவர்கள் விழுந்தது உலகத்திற்கு ஐசுவரியமும் அவர்கள் குறைவானது புறத்தேசத்தாருக்கு ஐசுவரியமுமானதாயிருக்க அவர்கள் நிறைவானால், மிகவும் அதிகமாய் அப்படியாகுமல்லவோ.

௰௩ புறத்தேசத்தாருக்காக நான் அப்போஸ்தலனாயிருக்கிறதினாலே புறத்தேசத்தாராகிய உங்களுடனே பேசுகிறேன்.

௰௪ அவர்களைத் தள்ளிவிட்டது உலகத்தை யொப்புரவாக்குதலாயிருக்க அவர்களை யங்கிகரித்துக்கொள்ளுதல் மரித்தோரிலிருந்து சீவனுண்டானதுபோலிருக்குமல்லவோ.

௰௫ ஆதலால் நான் எப்படியும் என் இனத்தா[illegible]வி, அவர்களிற் சிலரை இரட்சிக்கவேண்டுமென்று என் ஊழியத்தையே மேன்மைபாராட்டுகிறேன்.

௰௬ மேலும் முதற்பலவிளைச்சல் பரிசுத்தமாயிருக்க, அப்பமும் அப்படியேயிருக்கின்றது. வேரானது பரிசுத்தமாயிருக்க, கிளைகளும் அப்படியேயிருக்கின்றன.

௰௭ சில கிளைகள் ஒடித்துத் தள்ளப்பட்டிருக்கு மல்லாமற், காட்டொலிவமரமாகிய நீ அவைகளுடைய இடத்திலே ஒட்டவைக்கப்பட்டு, ஒலிவமரத்தின் வேருக்குஞ் சாரத்துக்கும் உடன்பங்காளியாயிருக்க,

௰௮ நீ அந்தக் கிளைகளுக்கெதிராய்ப் பெருமைபாராட்டாதிருப்பாயாக. பாராட்டுவாயானால் நீ வேரைச் சுமவாமல் வேரே உன்னைச் சுமக்கிறதென்று நினைத்துக்கொள்.

௰௯ நான் ஒட்டவைக்கப்படுவதற்கு அந்தக் கிளைகள் ஒடித்துப்போடப்பட்டனவென்று நீ சொல்லுகிறாய்.

௨௰ நல்லது அவிசுவாசத்தினாலே அவைகள் ஒடித்துத் தள்ளப்பட்டன. நீ விசுவாசத்தினாலே நிற்கிறாய். இறுமாப்பைக்காணாதிருப்பாயாக.

௨௰௧ சுபாவத்தின்படி கிளைகளானவைகளைப் பராபரன் தப்பவிடாதிருக்க, உன்னையுந் தப்பவிடாதபடிக்குப் பயந்திருப்பாயாக.

௨௰௨ மேலும் பராபரனுடைய தயவையுங் கண்டிப்பையும் பார்த்துக்கொள். விழுந்தவர்களிடத்திலே கண்டிப்பையும் உன்னிடத்திலே தயவையும் பார். அந்தத் தயவிலே நிலைத்திருப்பாயாக. இல்லாவிட்டால், நீயும் வெட்டுண்டுபோவாய்.

௨௰௩ அன்றியும் அவர்களும் அவிசுவாசத்திலே நிலைத்திராவிட்டால், ஒட்டவைக்கப்படுவார்கள். அவர்களைத் திரும்பவும் ஒட்டவைக்கிறதற்குப் பராபரன் வல்லவராயிருக்கிறாரே.

௨௰௪ அன்றியும் நீ சுபாவத்தின்படி காட்டொலிவாகியமரத்திலிருந்து வெட்டப்பட்ட

டு, உன் சுபாவத்திற்கு விரோதமாய் நல்ல ஒலிவமரத்திலே ஒட்டவைக்கப்பட்டிருக்க, மிகவும் அதிகமாய்ச் சுபாவக்கிளைகளாகிய அவர்கள் தங்கள் சுய ஒலிவமரத்திலே ஒட்டவைக்கப்படுவார்களல்லவா.

௨௫ அதல்லாமல் சகோதரரே, நீங்கள் உங்களைக்குறித்து மேட்டிமையாயிராதபடிக்கு, ஒரு இரகசியத்தை நீங்கள் அறியவேண்டுமென்றிருக்கிறேன். என்னவெனில், புறஜாதியாரின் நிறைவாய் பிரவேசிக்குமளவும், இஸ்ரவேலில் ஒருபங்குக்குக் கடினமான மனம் உண்டாயிருக்கும்.

௨௬ பின்பு, மீட்பர் சீயோனிலிருந்து வந்து, அக்கிரமத்தை யாக்கோபிலிருந்து நீக்குவாரென்றும்,

௨௭ நான் அவர்களுடைய பாவங்களை நீக்கும்பொழுது, இதுவே நான் அவர்களுடனே பண்ணும் உடன்படிக்கையென்றும், எழுதியிருக்கிறபடியே, இஸ்ரவேல் எல்லாரும் இரட்சிக்கப்படுவார்கள்.

௨௮ சுவிசேஷத்தைக் குறித்து அவர்கள் உங்கள் நிமித்தம் பகைஞராயிருக்கிறார்கள்.

௨௯ தெரிந்துகொள்ளுதலைக் குறித்துப் பராபரன் கிருபை கொடுத்தலும் அழைத்தலும் மாறாதவைகளானபடியால், அவர்கள் பிதாக்களின் நிமித்தம் அன்புகூரப்பட்டவர்களாயிருக்கிறார்கள்.

௩௰ ஆதலால் நீங்கள் முற்காலத்திலே பராபரனுக்குக் கீழ்ப்படியாதிருந்து இப்பொழுது அவர்களுடைய அவிசுவாசத்தினாலே இரக்கம்பெற்றிருக்கிறதுபோல, அவர்களும் இப்பொழுது கீழ்ப்படியாதிருந்து, (பின்பு) உங்களுக்குண்டான இரக்கத்தினாலே, (மேய்ப்பட்டு) இரக்கம்பெறுவார்கள்.

௩௧ எல்லார்மேலும் இரக்கமாயிருக்கத்தக்கதாகப் பராபரன் எல்லாரையும் அவிசுவாசத்திற்குள்ளே அடைத்துப்போட்டபடியால் அப்படியேயாம்.

௩௨ ஆ! பராபரனுடைய ஞானம் அறிவு என்பவைகளின் சம்பூர்ணம் மிகுந்த ஆழமுள்ளதாயிருக்கின்றது.

௩௩ அவருடைய நியாயத்தீர்ப்புகள் அளவறுக்கப்படாதவைகள். அவருடைய நெறிகள் ஆராய்ந்துபார்க்கப்படாதவைகளாயிருக்கின்றன, கர்த்தருடைய சிந்தையை அறிந்தவனெவன்.

௩௪ அல்லது அவருக்கு உசாவுதுணையாயிருந்தவனெவன்.

௩௫ அல்லது தனக்குப் பதில் கொடுக்கும்படிக்கு, அவருக்கு முந்தியொன்றைக் கொடுத்தவனெவன்.

௩௬ சகலமும் அவராலும் அவர்மூலமாயும் அவருக்காகவும் இருக்கின்றன. அவருக்கே என்றென்றைக்கும் புகழ்ச்சியுண்டாகக்கடவது. ஆமென்.

## ௧௨. அதிகாரம்.

[(௧) விசுவாசிகள் புதிய ஜீவனுள்ளவர்களாயும், (௩) விசுவாசத்தின்படி ஒருமைப்பட்டவர்களாயும், (௬) தங்கள் தங்கள் அலுவலை நன்றாய்ச் செய்கிறவர்களாயும், (௯) அன்புமுதலான நற்குணமுள்ளவர்களாயும் நடக்கவேண்டுமென்று சொல்லியது.]

அப்படியிருக்க, சகோதரரே, நீங்கள் புத்தியுள்ள ஆராதனை செய்ய உங்கள் சரீரங்களைச் ஜீவனுமாயும் பரிசுத்தமுமாயும் பராபரனுக்குப் பிரியமுமாயிருக்கிற பலியாகத் தரவேண்டுமென்று பராபரனுடைய இரக்கங்களினிமித்தம் உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.

௨ மேலும் நீங்கள் இவ்வுலகத்திற்கொப்பாய் நடவாமல், பராபரனுடைய நன்மையும் பிரியமும் நிறைவுமான சித்தமின்னதென்று நீங்கள் பகுத்தறியத்தக்கதாக, உங்கள் மனதைப் புதிதாக்குதலினாலே மறுரூபமாய் நடந்துகொள்ளுங்கள்.

௩ அல்லாமலும் எனக்குக் கொடுத்திருக்கிற கிருபையினாலே நான் இன்னுஞ் சொல்லுகிறதாவது, உங்களில் எவனும் தன்னைக் குறித்து நினைக்கவேண்டியதற்கு மேலாக நினையாமல் அவனவனுக்குப் பராபரன் பங்கிட்ட விசுவாசமெவ்வளவோ அவ்வளவின்படி புத்தியாய் நடக்கத்தக்கதாகத் (தன்னைக் குறித்து) நினைக்கவேண்டும்.

௪ அதெப்படியெனில், ஒரே சரீரத்திலே நாம் அநேக அவயவங்களை உடையவர்களாயிருக்க, அவயவங்களெல்லாம் ஒரே தொழிலில்லாதவைகளாயிருக்கிறதுபோல.

௫ அநேகராகிய நாம் கிறிஸ்துவுக்குள்ளே ஒரே சரீரமாயிருக்க, ஒருவருக்கொருவர் அவயவங்களாய்,

௬ நமக்குக் கொடுக்கப்பட்ட கிருபையின்படியே பலவிதவரங்களுள்ளவர்களாயிருக்கிறோம். அந்தப்படி தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவர்த்தையுடையவன் விசுவாச அளவுக்கேற்றதாக அப்படிச் செய்யக்கடவன்.

௭ உதவிசெய்கிற வரத்தையுடையவன் உதவிசெய்கிறதிலே சாக்கிரதையாயிருக்கக்கடவன். போதிக்கிறவன் போதிக்கிறதிலே சாக்கிரதையாயிருக்கக்கடவன்.

௮ புத்திசொல்லுகிறவன் புத்திசொல்லுகிறதிலே சாக்கிரதையாயிருக்கக்கடவன், தருமங்களைக் கொடுக்கவேண்டியவன் கபடமில்லாமையாய் அப்படிச் செய்யக்கடவன். முதலாளியானவன் சாக்கிரதையுடனேயிருக்கக்கடவன், இரக்கஞ்செய்கிறவன் உச்சாயத்துடனே அப்படிச் செய்யக்கடவன்.

௯ உங்கள் அன்பு மாயமற்றதாயிருப்பதாக, பொல்லாங்கானதை அருவருத்து, நன்மையிலே பற்றிக்கொண்டிருப்பீர்களாக.

௰ சகோதரசிநேகத்திலே ஒருவருக்கொருவர் மிகவும் பட்சமாயிருங்கள். கனம்பண்ணுகிறதில் ஒருவருக்கொருவர் முந்திக்கொள்ளுங்கள்.

௰௧ அலுவலில் நீங்கள் அசதியாயிருக்கக்கூடாது, உங்கள் ஆவியிலே கிப்பவள்ச்சியைப்போலிருந்து, கர்த்தருக்கூழியஞ்செய்யுங்கள்.

௰௨ நம்பிக்கையிலே சந்தோஷமாயிருப்பீர்களாக. உபத்திரவகாலத்திலே பொறுமையாயிருங்கள்.

௰௩ ஜெபத்திலே யுறுதியாய்த் தரித்திருங்கள். வருத்தப்படுகிற பரிசுத்தவான்களுக்கு உதவிசெய்யுங்கள். அந்நியருக்கு உபசாரஞ்செய்கிறதைத் நாடுங்கள்.

௰௪ உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களை யாசீர்வதியுங்கள், ஆசீர்வாதம்பண்ணிச் சாபமிடாதிருப்பீர்களாக.

௰௫ சந்தோஷப்படுகிறவர்களுடனே சந்தோஷப்படுங்கள். அழுகிறவர்களுடனே அழுங்கள்.

௰௬ ஒருவருக்கொருவர் ஐக்கியமானசிந்தையுள்ளவர்களாயிருப்பீர்களாக, மேன்மையானவைகளைச் சிந்தியாமல், தாழ்மையானவர்களுக்கிணங்குங்கள்.

௰௭ உங்களைச் சுயபுத்தியிரசாயாதிருப்பீர்களாக. யாவனுக்குந் தீமைக்குத் தீமைசெய்யாதிருங்கள் எந்த மனிதருக்குமுன்பாக யோக்கியமானவைகளை நடப்பியுங்கள்.

௰௮ எல்லாமனிதரோடுஞ் சமாதானமாயிருக்கக்கூடுமானால், உங்களாலானமட்டும் அப்படியேசெய்யுங்கள்,

௰௯ பிரியமானவர்களே. பழிவாங்குதல் எனக்கேற்றதுதானே பதிற்செய்வேனென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றெழுதியிருக்கிறபடியால், நீங்கள் தாமே பழிவாங்காமல், (அவருடைய) கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள்.

௨௰ ஆதலால் உன் சத்துருவுக்குப் பசியுண்டாயிருக்கும்பொழுது, அவனுக்குப் போசனங்கொடு, அவனுக்குத் தாகமுண்டாயிருக்கும்பொழுது, அவன் தாகத்தைத் தீர்ப்பாயாக, நீ இப்படிச்செய்தால், அவனுடைய தலையின்மேல் நெருப்புள்ளகரிகளைக்குவிப்பாய்,

௨௰௧ தீமையினாலே நீ வெல்லப்படாமல், தீமையை நன்மையினாலே வெல்லுவாயாக.

## ௰௩. அதிகாரம்.

[(௧) துரைத்தனத்தாருக்குச்செய்யவேண்டியதின்னதென்றும், (௮) அன்பானது நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறதென்றும், (௰௧) இரட்சிப்புக் கேற்றபடி நடக்கவேண்டுமென்றுங்காட்டியது.]

அதிகாரமுள்ளவர்கள் பராபரனாலேயன்றி யிருக்கமாட்டார்கள். ஆதலால் எந்த மனிதனும் அதிகாரமுடையவர்களுக்குக் கீழ்ப்படியக்கடவன். உண்டாயிருக்கிற அதிகாரிகள் பராபரனாலே நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்,

௨ ஆனதால் அதிகாரமுள்ளவர்களுக்கெதிர்த்து நிற்கிறவன் பராபரனுடைய நியமத்துக்கெதிர்த்து நிற்கிறான். அப்படி எதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்குத்தாமே ஆக்கினைவருவிப்பண்ணுகிறார்கள்.

௩ மேலுந் துரைகளானவர்கள் நற்கிரியைகளுக்கல்ல, துற்கிரியைகளுக்குப் பயங்கொடுக்கிறவர்களாயிருக்கிறார்கள் ஆகையால் நீ அதிகாரத்துக்குப் பயமில்லாதிருக்கவேண்டுமென்றிருந்தால், நன்மைசெய்வாயாக அதினாலுனக்குப் புகழ்ச்சியுண்டாம்.

௪ உனக்கு நன்மையுண்டாகும்பொருட்டு அவன் பராபரனுடைய ஊழியக்காரனாயிருக்கிறான் நீ தீமைசெய்தால், பயந்துகொள்வாயாக கட்கத்தை அவன் வீணாய்ப் பிடிக்கவில்லை பொல்லாங்கைச்செய்கிறவன்மேற் கோபாக்கினை வருவிப்பண்ணும்படி அவன் நீதியைச்செலுத்துகிற தேவஊழியக்காரனாயிருக்கிறான்.

௫ ஆகையால் நீங்கள் (அவர்களுக்குக்) கீழ்ப்படிய வேண்டியதாயிருக்கின்றது. கோபாக்கினையினிமித்தமாத்திரமல்ல, மனச்சாட்சியினிமித்தமும் அப்படியிருக்கவேண்டும்.

௬ அதினாலே நீங்கள் (அவர்களுக்கு) வரிப்பணத்தையுங்கொடுக்கிறீர்களே, அவர்கள் தங்கள் உத்தியோகத்தை யிடைவிடாமல் நடப்பித்துக்கொள்ளுகிற தேவஊழியக்காரர்களாயிருக்கிறார்களே.

௭ ஆனபடியினாலே எவர்களுக்குங் கடமைகளைச் செலுத்துவீர்களாக வரியைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ அவனுக்கு வரியைச் செலுத்துங்கள் தீர்வையைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ அவனுக்குத் தீர்வையைச்செலுத்துங்கள். பயப்படவேண்டியது எவனுக்கோ அவனுக்குப் பயப்படுங்கள். கனத்தைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ அவனுக்குக் கனத்தைச்செலுத்துங்கள்.

௮ ஒருவரிலொருவர் அன்பாயிருக்கிறதேயன்றி, மற்றொன்றிலும் ஒருவனுக்குங் கடன்படாதிருப்பீர்களாக. மற்றவனில் அன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறானே.

௯ எப்படியென்றால், விபசாரஞ்செய்யாதிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக. களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக. இச்சியாதிருப்பாயாக என்கிற கற்பனைகளும் வேறெந்தக்கற்பனையும், உன்மேல் அன்பு

கூருகிறதுபோலப் பிறனையும் அன்புகூர்வாயாகவென்கிற ஒரே பிரமாணத்திலே தொகையாய் அடங்கியிருக்கின்றன.

௰ அன்பானது பிறனுக்குப் பொல்லாங்கைச் செய்யாது. ஆதலால் அன்பே நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறதாயிருக்கின்றது.

௰௧ மேலும் நித்திரையைவிட்டெழுந்திருக்கத்தக்கவேளையாயிற்றென்று நாம் காலத்தை யறிந்திருக்கிறபடியால், இப்படி எச்சரிக்கிறேன். அன்றியும் நாம் விசுவாசிகளானபொழுது, இரட்சிப்பு சமீபமாயிருந்ததிலும் இப்பொழுது அது நமக்கு அதிக சமீபமாயிருக்கின்றது.

௰௨ இரவு சென்றுபோயிற்று. பகல் சமீபமாயிற்று. ஆனபடியினாலே அந்தகாரத்தின் கிரியைகளை நாம் தள்ளிப்போட்டு, ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளக்கடவோம்.

௰௩ பெருவுண்டையாவது, வெறிகொள்ளுதலையாவது, வேசித்தனத்தையாவது, காமவிகாரத்தையாவது, சண்டையையாவது, பொறாமையையாவது நடப்பியாமல், பகலிலே நடக்கிறவர்களைப்போல யோக்கியமாய் நடக்கக்கடவோம்.

௰௪ துர்இச்சைகளுக்கிடமாய் உங்கள் தேகத்தைப் போஷியாமல் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரித்துக்கொள்வீர்களாக.

## ௰௪. அதிகாரம்.

[(௧) பொசிப்பு முதலானவைகளைக்குறித்து ஒருவரையொருவர் அசட்டைபண்ணக்கூடாதென்றும், (௰௩) மற்றவர்களுக்கு விசனமுண்டாகாமலிருக்கிறது நன்மையென்றுங் காட்டியது.]

விசுவாசத்தில் பலவீனமுள்ளவனுடைய நினைவுகளை நீங்கள் குற்றமாய் எண்ணாமல், அவனைச் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௨ ஒருவன் எல்லாப்பதார்த்தங்களையும் பொசிக்கலாமென்று நம்புகிறான். பலவீனமுள்ள மற்றொருவன் மரக்கறிகளைமாத்திரம் பொசிக்கிறான்.

௩ பொசிக்கிறவன் பொசியாதிருக்கிறவனை யசட்டைபண்ணாதிருப்பானாக. பொசியாமலிருக்கிறவனும் பொசிக்கிறவனைக் குற்றமுள்ளவனென்று நினையாதிருப்பானாக. பராபரன் அவனைச் சேர்த்துக்கொண்டாரே.

௪ மற்றொருவனுடைய வேலைக்காரனைக் குற்றமுள்ளவனென்று தீர்க்கிற நீ யாவன். அவன் நின்றாலும் விழுந்தாலும் அவனுடைய சொந்த எசமானே அவனை விசாரிப்பான். மேலும் பராபரன் அவனை நிலைநிறுத்த வல்லவரானபடியால், அவன் நிலைநிறுத்தப்படுவான்.

௫ அன்றியும் ஒருவன் ஒருநாளை மற்றநாளிலும் விசேஷமாக எண்ணுகிறான். வேறொருவன் எல்லா நாட்களையுஞ் சரியாய் எண்ணுகிறான். (அதைக்குறித்து) அவனவன் தன்மனதிலே முழுநிச்சயத்தையுடையவனாயிருக்கக்கடவன்.

௬ ஒருநாளை விசேஷித்துக்கொள்ளுகிறவன் கர்த்தருக்கென்று அப்படிச்செய்கிறான். நாட்களை விசேஷித்துக்கொள்ளாமலிருக்கிறவனும் கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான். பொசிக்கிறவன் பராபரனுக்குத் தோத்திரஞ்செலுத்துகிறபடியால் கர்த்தருக்கென்று பொசிக்கிறான். பொசியாமலிருக்கிறவனும் கர்த்தருக்கென்று பொசியாமலிருந்து, பராபரனுக்குத் தோத்திரஞ்செலுத்துகிறான்.

௭ நம்மில் யாவனுந் தனக்காகப் பிழைக்கிறதுமில்லை. யாவனுந் தனக்காக மரிக்கிறதுமில்லையே. நாம் பிழைக்கிறது கர்த்தருக்காகப் பிழைக்கிறோம். மரிக்கிறது கர்த்தருக்காக மரிக்கிறோம்.

௮ ஆகையால் நாம் பிழைத்தாலும் மரித்தாலும் கர்த்தருடையவர்களாயேயிருப்போம்.

௯ அதற்காகக் கிறிஸ்துவும் மரித்தோர்மேலும் ஜீவனுள்ளோர்மேலும் ஆண்டவராயிருக்கும்பொருட்டாக, மரித்தும் எழுந்தும் உயிரடைந்துமிருக்கிறார்.

௰ இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக் குற்றமுள்ளவனென்று நினைக்கிறதென்ன. அல்லது உன் சகோதரனை யசட்டைபண்ணுகிறதென்ன. நாமெல்லாருங் கிறிஸ்துவினுடைய நியாயாசனத்திற்கு முன்பாக நிறுத்தப்படுவோமே.

௰௧ நான் ஜீவனுள்ளவன். முழங்கால்யாவும் எனக்குமுன்பாக முடங்கும். நாவுகள் யாவும் பராபரனை அறிக்கைபண்ணுமென்று பராபரன் திருவுளம்பற்றுகிறானென்றெழுதியிருக்கிறதல்லவோ.

௰௨ அந்தப்படி நம்மில் அவனவன் தன்னைக்குறித்துப் பராபரனுக்குக் கணக்கொப்புவிப்பான்.

௰௩ ஆதலால் நாம் இனிமேல் ஒருவரையொருவர் குற்றமுள்ளவர்களென்று எண்ணாதிருப்போமாக. வழுவுதற்காவது விழுகிறதற்காவது ஏதுவையாகிலுஞ் சகோதரனுக்கு முன்பாக வைத்துப்போடாதபடிக்கே எண்ணமுள்ளவர்களாவீர்களாக.

௰௪ நான் கர்த்தராகிய இயேசுவினாலே அறிந்திருக்கிறபடி, ஒருபொருள் அசுத்தமென்றெண்ணிக்கொள்ளுகிறவனுக்கு அது அசுத்தமாயிருக்கிறதேயன்றி, ஒருபொருளுந் தானாய் அசுத்தமில்லை.

௰௫ அன்றியும் பொசிக்கிறதினாலே உன் சகோதரனுக்கு விசனமுண்டாகிறதே, நீ அன்பாய் நடக்கிறவனல்ல. அவனுக்காகக்

கிறிஸ்து மரிததாரே. அபபடிபபடடவனை யுன போசனததினாலேகெடுததுபபோடா திருபபாயாக.

௰௬ உஙகளநனமை தூஷணிககபபடா திருபபதாக.

௰௭ பராபரனுடைய இராசசியமபோசி பபினாலுங்குடிபபினாலுமலல நீதியினாலுஞ சமாதானததினாலும பரிசுதத ஆவியாலவருகிறசநதோஷததினாலும பொருநதியிருககினறது.

௰௮ இவைகளாலேகிறிஸதுவுககூழியஞ செயகிறவன பராபரனுககுப பிரியமானவனுமாய மனிதருககுப பாததிரனுமாயிருககிறான.

௰௯ இபபடியிருககச சமாதானததிற்குமயாவரையும ஐககியபபடுததுதறகுமேற றவைகளைததேடிககொளளககடவோம.

௨௰ போசனததினிமிததம பராபரனுடைய கிரியையை அழிததுபபோடாதிருபபாயாக. எநதபபதாரததமுஞசுததமுளளதுதான. (மறறவன) விழுதறகேதுவாகும படி எதையாகிலும போசிககிறவனுககே அது தீமையாயிருககும.

௨௧ உனசகோதரன வழுவுதறகாவது, விழுதறகாவது பலவீனமாகுதறகாவது ஏதுவானமாமிசததைபபோசியாமலும இரசததைபபானமபணணாமலும மறறெதை யாகிலுஞ செயயாமலிருககிறதே நனமையாயிருககினறது.

௨௨ நீ நிசசய அறிவுளளவனானால, அதைபபராபரனுககு முனபாக நீதானேயககொளவாயாக. ஒருவனதான சம்மதிககிற பொருளினாலே தனககுக குறறமவரபபணணிருநதால், அவன பாககியவானாயிருபபான.

௨௩ (போசனபதாரததஙகளுககுளளே) விததியாசமபணணுகிறவன (அவைகளை)நிசசயஅறிவிலலாமற்போசிததபடியினாலே ஆககினைககேதுவாயிருபபான. நிசசய அறிவினாலேவாராதயாவும பாவமாயிருககினறன.

## ௰ரு. அதிகாரம்.

[(க) கிறிஸதுவினிமிததம ஒருவரையொருவரபொறுமையோடேசேரததுககொளளவேணடுமெனறும, (அ)புறததேசததாரும அவரைச சேர்வார்களெனபதைவேதவாககியஞசொலலியதெனறும, (௰௪) பவுலுதானபுறததேசததாருககுச செயகிற ஊழியமினனதெனறும, (௨௨) தான உரோமாபுரிககுச செலல விருபபமுணடெனறுஙகாட்டியது.]

ஆனபடியினாலே பலமுளளவர்களாகிய நாம பலவீனமுளளவர்களுடையபலவீனஙகளைபபொறுமையோடேசகிககவேணடும. அலலாமலும நாமநமககுபபிரியமாயநடவாமல்,

௨ அவனவனதனதனககடுததபிறனுடைய ஞானவளர்ப்புககேதுவான நன்மையுணடாகும்படி அவனுககுப்பிரியமாய நடக்கக்கடவோம்.

௩ கிறிஸதுவாகவருந தமககுபபிரியமாய நடவாமல, உமமை நிநதிககிறவர்களுடைய நிநதைகள எனமேல விழுநதனவெனறு எழுதியிருககிறபடி நடநதார்.

௪ அனறியும வேதவாககியஙகள திருஷடாநதப்படுததின பொறுமையினாலும ஆறுதலினாலும தாமநமபிககையுளளவர்களாகுமபொருடடாய முனபு எழுதியிருககிறவைகளெலலாமநமககுபபோதகமாக எழுதபபடடிருககினறன.

௫ அநதபபடி பொறுமையையும ஆறுதலையுஙகொடுககிறபராபரன நமமுடைய கர்ததராகிய இயேசுககிறிஸதுவுககுததேவனும பிதாவுமானவரை நீஙகள ஐககியமாய ஒரேவாயினாலேதுதிககுமபடிககு,

௬ கிறிஸது இயேசுவினுடைய சித்தத்தினபடியே ஒருவருககொருவர் ஒரேவிதமான சிநதையுளளவர்களாயிருபபதற்கு அநுககிரகஞசெயவாராக.

௭ அபபடியே பராபரனுககுபபுகழ்ச்சியுணடாகததககதாயக, கிறிஸது நமமைச சேர்ததுககொணடதுபோலநீஙகளுமஒருவரையொருவர் சேர்ததுககொளளுஙகள.

௮ (இதைககுறிதது) நான பினனுஞ சொலலுகிறதாவது, பிதாககளுககுபபணணபபடட வாக்குத்தத்தஙகளையுறுதிபபணணுமபடிககுப பராபரனுடைய சததியததினிமிததம இயேசுககிறிஸது விருததசேதனமுளளவர்களுககு ஊழியககாரரானார்.

௯ புறததேசததாரும (அவருடைய)இரககததிற்காகப பராபரனைத துதிககும்படிககு அபபடியானார், அதெலலாமெழுதியிருககிறதாவது, இதினிமித்தம நான புறததேசததாருககுளளே உமமை அறிககைபணணி, உமமுடைய நாமததைச்சொல்லிச்சஙகீதமபாடுவேனெனபதே. மறுபடியும அவனசொலலியிருககிறது.

௰ புறததேசததார்களே, அவருடையசனஙகளோடே கூடச சநதோஷபபடுஙகளெனபதே.

௰௧ மறுபடியும அவனசொனனது, எல்லாபபுறததேசத்தார்களே, பராபரனைததுதியுஙகள. எலலாசசனஙகளே, அவரைமெச்சிப் புகழுஙகளெனறான.

௰௨ ஏசாயுஞசொனனது, ஈசாயினவேர் இருககும. புறததேசததாரையாளும்படியெழுமபுவாருமிருபபார், அவரிறபுறததேசத்தார்கள நமபிககையாயிருபபார்களெனறான.

௰௩ அநதபபடியே நீஙகளபரிசுதத ஆவியினபலததினாலே அநதநமபிககையுட

நிச்சயமாய் அடையும்படிக்கு நம்பிக்கைக்கேதுவான பராபரன் விசுவாசத்தினாலுண்டாகும் எல்லாவித சந்தோஷத்தினாலும் சமாதானசவுக்கியத்தினாலும் உங்களை நிரப்புவாராக.

௰௪ என் சகோதரரே, நீங்கள் தாமே நற்குணத்தில் நிறைந்தவர்களுமாய்ச் சகல அறிவினாலும் நிறைந்தவர்களுமாய் ஒருவருக்கொருவர் புத்திசொல்ல வல்லவர்களுமாயிருக்கிறீர்களென்று நானும் உங்களைக்குறித்து நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

௰௫ அப்படியிருந்தும், சகோதரரே, பராபரன் எனக்குக் கொடுத்த கிருபையினாலே, நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தும்படிக்கு இவைகளை அதிகதயிரியமாய் எழுதினேன்.

௰௬ புறத்தேசத்தார்கள் பரிசுத்த ஆவியினாலே பரிசுத்தமாக்கப்பட்டுப் பராபரனுக்கு மிகவும் பிரியமான பலியாகும்படிக்கு, நான் புறத்தேசத்தாருக்கு இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனாய்ப் பராபரனுடைய சுவிசேஷத்துக்கேற்ற ஆராதனை செய்யும்பொருட்டு, (அந்தக் கிருபை எனக்குண்டாயிற்று.)

௰௭ ஆதலால் நான் இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு, பராபரனுக்குரியவைகளைக்குறித்து மேன்மைபாராட்டுகிறதற்கு முகாந்திரமுண்டு.

௰௮ என்படியினாலே கிறிஸ்துவானவர் என்னாலே நடப்பியாதவைகளில் ஒன்றையுங்குறித்துப் பேசத்துணியமாட்டேன்,

௰௯ புறத்தேசத்தார் வார்த்தையினாலுஞ் செய்கையினாலும் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு எருசலேம் நகர்தொடங்கி அதைச்சூழ்ந்த திசையிலேயும் இல்லீரிக்குத்தேசம் வரைக்குங் கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை விஸ்தாரமாய்ப் பிரசங்கித்ததற்காக, அற்புதங்கள் அதிசயங்களென்னுமிவைகளின் பலத்தினாலும் பரிசுத்த ஆவியினுடைய பலத்தினாலும் அவர் என்னாலே நடப்பித்தவைகளைக்குறித்துமாத்திரம் பேசத்துணிகிறேன்.

௨௰ மேலும் அவரைக்குறித்து அறிவையடையாதவர்கள் அவரைப் பார்ப்பார்களென்றுங் கேள்விப்படாதவர்கள் அறிந்துகொள்வார்களென்றும் எழுதியிருக்கிறபடியே,

௨௧ நான் மற்றொருவனுடைய அஸ்திபாரத்தின்மேலே கட்டாதபடிக்கு, கிறிஸ்துவின் நாமஞ் சொல்லப்பட்டிராத இடங்களிலே சுவிசேஷத்தையறிவிக்கும்படி அதிகக்கருத்துள்ளவனாயிருக்கிறேன்.

௨௨ அதினாலே நான் உங்களிடத்தில் வருகிறதற்கு அநேகந்தரந் தடையுண்டாயிற்று.

௨௩ இப்பொழுது நான் இந்தத்திசைகளிலேயிருக்கிறதற்கு இடமில்லாதபடியினாலும், உங்களிடத்துக்கு வரும்படி அநேகவருஷங்களாய் எனக்கு மிகுந்த விருப்பமுண்டாயிருந்தபடியினாலும்,

௨௪ நான் இஸ்பானியா தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போகும்பொழுது, உங்களிடத்தில் வந்து, உங்களைக் கண்டுபேசவும், உங்களோடிருக்கிறதினாலே முந்திச் சற்றுமன சந்தோஷம் அடைந்தபின்பு அவ்வழியே உங்களால் அனுப்பிவிடப்படவும் நம்பியிருக்கிறேன்.

௨௫ இப்பொழுது மக்கேதோனியா நாட்டிலும் அகாயா நாட்டிலுமுள்ள சபையார் எருசலேமிலிருக்கிற பரிசுத்தவான்களுக்குள்ளேயிருக்கிற ஏழைகளுக்காகச் சிலதருமங்களைச் சேர்த்துக்கொள்ளப் பிரியமானபடியினாலே,

௨௬ நான் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்யும்படி அவ்விடத்திற்குப் பிரயாணமாய்ப் போக எத்தனமாயிருக்கிறேன்.

௨௭ அப்படிப்பட்ட பிரியமுள்ளவர்களாவதற்கு அவர்களுடைய கடனாளிகளாயுமிருக்கிறார்கள். எப்படியென்றால் புறத்தேசத்தார் அவர்களுடைய ஞானநன்மைகளில் பங்குபெற்றிருக்க, (தங்கள்) சரீரநன்மைகளால் அவர்களுக்கு ஊழியஞ்செய்ய நியாயமாயிருக்கின்றதே,

௨௮ இந்த ஊழியத்தை நான் நிறைவேற்றி, இந்தப்பலனை அவர்கள் கையிலே பத்திரப்படுத்தினபின்பு, உங்களூர்வழியாய் இஸ்பானியா தேசத்திற்குச் செல்லுவேன்.

௨௯ நான் உங்களிடத்தில் வரும்பொழுது, கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்திலுள்ள சம்பூர்ணமான ஆசீர்வாதங்களோடே வருவேனென்றறிந்திருக்கிறேன்.

௩௰ மேலுஞ் சகோதரரே, யூதேயா தேசத்திலிருக்கிற அவிசுவாசிகளுக்கு நான் தப்புவிக்கப்படும்படிக்கும், பராபரனுடைய சித்தத்தினாலே நான் சந்தோஷத்துடனே உங்களிடத்திற்கு வந்து, உங்களோடே கூடச் சவுக்கியப்படத்தக்கதாக,

௩௧ நான் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்களுக்குச் செய்யப்போகிற ஊழியம் அவர்களுக்குப் பிரியமாயிருக்கும்படிக்கும்,

௩௨ என்னோடேகூட நீங்கள் எனக்காகப் பராபரனை நோக்கிப் போராட்டமாய்ச் செபம்பண்ணவேண்டுமென்று, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினிமித்தமும் ஆவியானவருடைய அன்பினிமித்தமும் உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

௩௩ சமாதானத்தையளிக்கிற பராபரன் உங்களெல்லாரோடுங் கூடவிருக்கக்கடவர்.

ஆமென்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) பவுலு பலகிறிஸதவர்களுககுவாழததுதலான வார்ததைகளைசசொலலியதை ககாட்டியது.]

பரிசுததவானகளுககேறறபடி நீஙகள செஙகிரேயாவூரினசபைககு ஊழியககாரியாகிய நமமுடையசகோதரிபெபேயாளைககர்ததரைபபறறியிருககிறவளெனறுஉபசாரஞசெயது,

௨ அவளுககுஉஙகளஉதவிவேணடியககாரியமெதாவதிலேஅவளுககுஉதவியாயிருககவேணடுமெனறு அவளை உஙகளுககொடபுவிககிறேன. அவளும அநேகருககும எனககுஙகூட ஆதரவாயிருநதாள.

௩ கிறிஸதுஇயேசுவினிடததில எனனுடனகூட வேலைபாட்களாகியபிரிஸகிலலாளையும ஆககிலாவையும வாழததுதலசெயயுஙகள.

௪ அவர்கள எனபிராணனுககாகததஙகளகழுததையும நீடடினவர்கள. அவர்களுககுநானமாததிரமலல, புறசதேசததாரிலுணடான சபையாரெலலாரும நனறியறிதலககாணபிககததககது.

௫ அவர்களுடைய வீடடிலே கூடிவருகிறசபையையும வாழததுஙகள அகாயாநாடடிலேகிறிஸதுவுககு முதறபலனாகிய எனககுபபிரியமான எப்பெனததெனபவனை வாழததுஙகள.

௬ எஙகளுககாக மிகவும பிரயாசபபடடமரியாளைவாழததுஙகள.

௭ அபபோஸதலர்களாறபுகழசசியடைநதவர்களுமாய எனககு முநதிககிறிஸதுவுககுளளானவர்களுமாய என இனததாருமாய எனனுடனேகூடககாவலில வைககபபடடிருககிறவர்களுமாயிருககிற அநதிரோனிககையும யூனியாவையும வாழததுஙகள.

௮ கர்ததாவினாலே எனககுபபிரியமான அமபிலியாவைவாழததுஙகள.

௯ கிறிஸதுவினிடததிலே நமமுடனேகூடவேலையாளாகிய உர்பானுவையும எனககுபபிரியமான இஸதாகுலவையுமவாழததுஙகள.

௰ கிறிஸதுவினிடததில உணமையான அபபெலலேயைவாழததுஙகள. அரிஸதோபுலியினுடையவர்களை வாழததுஙகள.

௰௧ எனனினததானாகியஎரோதியோனை வாழததுஙகள. கர்ததரைபபறறியிருககிறவர்களாகிய நருககீசுவினுடையவர்களைவாழததுஙகள.

௰௨ கர்ததாவினிமிததம பிரயாசபபடுகிற திரிபேனாளையுந திரிபோசாளையுமவாழததுஙகள. கர்ததாவினிமிததம மிகவும பிரயாசபபடடுஎனககுபபிரியமாயிருககிறபெர்சிசாளைவாழததுஙகள.

௰௩ கர்ததராலே தெரிநதுகொளளபபடட உரூபுவையும எனககும அவனுககுந தாயானவளையுமவாழததுஙகள.

௰௪ அசிஙகிரிததுவையும பிலேகோனையும எர்மாவையுமபதரோபாவையும எர்மேயையும அவர்களுடனேயிருககிற சகோதரரையும வாழததுஙகள.

௰௫ பிலோலோகையும யூலியாளையுமநேரேயையும அவனுடைய சகோதரியையும ஒலிமபாவையும அவர்களோடிருககிறபரிசுததவானகளெலலாரையும வாழததுஙகள.

௰௬ ஒருவரையொருவர் பரிசுததமாய முததஞசெயதுவாழததுஙகள. கிறிஸதுவினசபைகள உஙகளைவாழததுகிறார்கள.

௰௭ மேலுஞசகோதரரே, நீஙகள கறறுககொணடஉபதேசததிறகுவிரோதமாயப பிரிவினைகளையுமவிழுசசிகேதுவானவைகளையுமுணடாககுகிறவர்களை ஆராயநதுபார்ககவேணடுமெனறு உஙகளுககுபபுததிசொலலுகிறேன.

௰௮ அபபடிபபடடவர்கள நமமுடைய கர்ததராகிய இயேசுககிறிஸதுவுககலல, தஙகளவயிறறுககேஊழியஞசெயது, நயவசனஙகளையும ஆசீர்வாதஞசொலலுகிறதையும கொணடு கபடமிலலாதவர்களுடைய இருதயஙகளைவஞசிககிறவர்களானபடியினாலே, நீஙகள அவர்களைவிடடுவிலகுவீர்களாக.

௰௯ நீஙகள கீழபபடிகிறவர்களெனபது யாவருககுந தெரியவநதிருககினறது. ஆகையாலுஙகளைககுறிததுசசநதோஷபபடுகிறேன. மேலும நீஙகள நனமைககுஞானிகளுமாய்த் தீமைககுபபேதைகளுமாயிருககவேணடுமெனறு விருமபுகிறேன.

௨௰ மேலுஞ சமாதானசவுககியததையளிககிற பராபரன சீககிரமாயச்சாததானை உஙகள காலகளினகீழே நசுககிபபோடும படிசெயவார். நமமுடையகர்ததராகிய இயேசுககிறிஸதுவினுடையகிருபை உஙகளுடனேகூடவிருக்கக்கடவது.—ஆமென்.

௨௰௧ என் உடன்வேலையாளாகிய தீமோத்தேயும என் இனததாராகிய லூககியுமயாசோனுஞ் சோசிபபதரும உஙகளைவாழததுகிறார்கள.

௨௰௨ இந்தநிருபததையெழுதின தெர்ததியெனனபபடட நான கர்ததராலேயுஙகளைவாழததுகிறேன.

௨௰௩ எனககுஞசபையாரெலலாருககும வீடடிலேயுபசாரஞ செயதுவருகிற காயு வெனபவன உஙகளைவாழததுகிறான. படடணததுநிலைமைககணககனாகிய எரஸதுவுஞ சகோதரனாகிய குவர்ததும உஙகளைவாழததுகிறார்கள.

௨௰௪ நமமுடைய கர்ததராகிய இயேசுககிறிஸதுவினுடைய கிருபை உஙகளெலலாரோடுஙகூடவிருக்கக்கடவது.—ஆமென்.

உசு பூர்வகாலங்களில் மறைவாயிருந்து, இப்பொழுது தீர்க்கதரிசன ஆகமங்களினாலே அநாதியான பராபரனுடைய கட்டளையின்படி வெளியரங்கமாக்கப்பட்டது மாய்விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு எல்லாத்தேசத்தாருக்கும் அறிவிக்கப்பட்டதுமாயிருக்கிற இரகசியத்தை வெளிப்படுத்துகிறதாயும்,

உரு இயேசுகிறிஸ்துவினுடைய பிரசங்கமாயுமிருக்கிற என்சுவிசேஷத்தின்படியே உங்களை ஸ்திரப்படுத்தத்தக்க வல்லவருமாய்,

உஎ ஒருவராய ஞானமுள்ளவருமாயிருக்கிற பராபரனுக்கு இயேசுகிறிஸ்து மூலமாய் என்றென்றைக்கும் புகழ்ச்சியுண்டாவதாக.—ஆமென்.

அப்போஸ்தலனாகியபவுல்

# கொரிந்துபட்டினத்திலுள்ளகிறிஸ்தவர்களுக்கெழுதின

# முதலாம நிருபம்.

## க. அதிகாரம்.

[(க) பவுல் சபைக்கு வாழ்த்துதலையும் பராபரனுக்குத் தோத்திரத்தையுஞ் சொல்லியது. (ம) சபையார் பிரிவினைகளைச் செய்ததற்காக அவர்களைக் கடிந்தது, (மஎ) சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வேண்டியவகையைக் காட்டியது. (உசு) லவுகீகஞானத்தைப் பராபரன் வீணாக்குகிறதென்று போதித்தது.]

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாக அழைக்கப்பட்டவனும்,

உ சகோதரனாகிய சொஸ்தெனேயும் கொரிந்துவிலே பரிசுத்தவான்களாகும்படி அழைக்கப்பட்டவர்களாயுங் கிறிஸ்து இயேசுவினால் பரிசுத்தமாக்கப்பட்டவர்களாயுமிருக்கிற பராபரனுடைய சபையாருக்கும் எவ்விடத்திலேயும் நமக்குப் பொதுவாயிருக்கிற கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தைத் தொழுதுகொள்ளுகிற அனைவருக்குங்கூட எழுதுகிறதாவது,

ங நமமுடைய பிதாவாகிய பராபரனாலுங் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமும் உண்டாகக்கடவது.

ச நீங்கள் ஒருவரத்திலுங் குறைவில்லாதவர்களாயிருந்து, நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வெளிப்படுவதற்குச் சந்தோஷமாய்க் காத்திருக்கத்தக்கதாக,

ரு கிறிஸ்துவைக்குறித்துச் சொன்னசாட்சி உங்களுக்குள்ளே ஸ்திரப்படுத்தப்பட்டிருக்கையால்,

சு நீங்கள் இயேசுகிறிஸ்துவினாலே எல்லாவற்றிலும் எல்லா உபதேசத்திலேயும் எல்லா அறிவிலேயுஞ் சம்பூரணமுள்ளவர்களானபடியினாலே,

எ அவர்மூலமாய் உங்களுக்குக் கொடுக்கப்பட்ட தேவகிருபைக்காக நான் உங்களைக் குறித்து எப்பொழுதும் என் பராபரனைத் தோத்திரிக்கிறேன்.

அ அவரும் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாளிலே நீங்கள் குற்றஞ்சாற்றப்படாதவர்களாயிருக்கும்படி முடிவுபரியந்தம் உங்களை ஸ்திரப்படுத்துவார்.

கூ தமமுடைய குமாரனுமாய் நமது கர்த்தருமாயிருக்கிற இயேசுகிறிஸ்துவுடனே ஐக்கியமாயிருப்பதற்கு உங்களையழைத்த பராபரன் உண்மையுள்ளவராயிருக்கிறார்.

ம ஆகிலும் என் சகோதரரே, உங்களுக்குள்ளே வாக்குவாதங்களுண்டென்று குலோவேயாளுக்குரியதானவர்களாலே எனக்கு அறிவிக்கப்பட்டது.

மக ஆதலால் நீங்களெல்லாரும் ஒரேவிதமாய்ப் பேசவும், பிரிவினைகளில்லாமல் ஏகமனதிலும் ஏகயோசனையிலும் ஐக்கியப்பட்டிருக்கவும் வேண்டுமென்று நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

மஉ உங்களிலொருவன் நான் பவுலைச்சேர்ந்தவனென்றும் ஒருவன் அப்பொல்லோவைச்சேர்ந்தவனென்றும் ஒருவன் கேபாவைச்சேர்ந்தவனென்றும் ஒருவன் கிறிஸ்துவைச்சேர்ந்தவனென்றுஞ் சொல்லுகிறபடியால், நானிப்படிச் சொல்லுகிறேன்.

மங கிறிஸ்து பிரிந்திருக்கிறாரா. உங்களுக்காகப் பவுல் சிலுவையில் அறையப்பட்டாரா. அல்லது பவுலின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றீர்களா?

௰௪ எனனுடைய நாமததினாலே ஞானஸநானங கொடுததேனெனறு, ஒருவனுஞ சொலலாதபடிககு.

௰௫ நான் கிரிஸபுவுககுஙகாயுககுமேயனறி, உஙகள்லெவெருவருககும ஞானஸநானஙகொடாததினாலே பராபரனைததோததிரஞசெயகிறேன.

௰௬ இஸதேவானுடைய வீடடாருககும ஞானஸநானஙகொடுததேன. பினனும (உஙகளில்) வேறெருவனுககு நான ஞானஸநானஙகொடுததேனே, இலலையோ வெனறறியேன.

௰௭ சுவிசேஷததைப பிரசஙகிககுமபடிககேயலலாமல, ஞானஸநானததைககொடுககுமபடிககுககிறிஸது எனனையனுபபவிலலையே. கிறிஸதுவினசிலுவை வீணாயப போகாதபடிககு, நான அதைசலவுகசஞானவசனஙகளோடேயலல பிரசஙகிககுமபடிககு அனுபபினார்.

௰௮ அநதசசிலுவையைககுறிததுசசொலலியவசனஙகெடடுபபோகிறவர்களுககுப பயிததியமாகததோனறுகினறதேயனறி, இரட்சிககபபடுகிறநமககு அதுதேவபலனாயிருககினறது.

௰௯ அநதபபடி ஞானிகளுடையஞானததைநான அழிததுபபுததிசாலிகளுடையபுததியை மறைநதுபோகபபணணுவேனெனறு, எழுதியிருககினறதே.

௨௰ ஞானியானவன எஙகே. வேதபாரகனெஙகே. இபபிரபஞசிய தருககசாஸதிரி எஙகே, இநத உலகஞானததைபபராபரன பயிததியமாககவிலலையா.

௨௧ எபபடியெனில, பராபரனுடைய ஞானததிறகேறறதாய உலகததார்தஙகள சொநதஞானததினாலே பராபரனையறியாதபடியினாலே, பயிததியமாகததோனறுகிறபிரசஙகததினாலேவிசுவாசிகளை இரட்சிககவேணடுமெனறு, பராபரனபிரியமாயிருநதார்.

௨௨ அநதபபடியூதர்கள அடையாளததைககேட்கிறார்கள. கிரேககர்ஞானததைததேடுகிறார்கள.

௨௩ நாஙகளோசிலுவையில அறையபபடடகிறிஸதுவைககூறுகிறோம. அதுயூதர்களுககு இடறலாயுஙகிரேககருககுபபயிததியமாயுமிருககினறது.

௨௪ ஆகிலுமயூதரிலுஙகிரேககரிலும எவர்கள அழைககபபடடார்களோ அவர்களுககுககிறிஸதுதேவபலனுமாயததேவஞானமுமாயிருககிறார்.

௨௫ ஆனதாலதேவனைககுறிதது அவர்களசொலலுகிறபயிததியம மனிதருடைய ஞானததிலும அதிகஞானமாயுநதேவனைககுறிதது அவர்களசொலலுகிறபெலவீனம மனிதருடையபெலனிலும அதிகபெலனுமாயிருககினறது.

௨௬ அதறகாகசசகோதரரே,உஙகளையழைததவிதததைபபாருங்கள. அநேகலவுகிகஞானிகளாவது, அநேகவலலவர்களாவது அநேக உயர்குலததாராவது, இலலையே.

௨௭ அநத ஞானிகளைவெட்கபபடுததுமபடிககுபபராபரன உலகததிலேபயிததியனெனறெணணபபடடவர்களைத தெரிநதுகொணடார். பெலவானகளைவெட்கபபடுததுமபடிககு, பபராபரன உலகததிலேபெலவீனரானவர்களைததெரிநதுகொணடார்.

௨௮ இருககிறவர்களைத தளளுமபடிககு இலலாதவர்களையும உலகததிலே இழிநதகுலததாரானவர்களையும அறபமாய எணணபபடடவர்களையும பராபரன தெரிநதுகொணடார்.

௨௯ எநதமாமிசதேகியும பராபரனுககுமுனபாகபபெருமை பாராடடாதபடிககு அபபடிசசெயதார்.

௩௰ ஆதலாலநீஙகள அவராலேகிறிஸது இயேசுவுககுட்படடிருககிறீர்கள. அவரே நமககுததேவஞானமும நீதியுமபரிசுததமுமமீட்புமானார்.

௩௧ ஆனதால எழுதியிருககிறபடி, மேனமைபாராடடுகிறவன கர்ததரைககுறிததேமேனமைபாராடடககடவன.

## ௨. அதிகாரம்.

[(௧) தானபிரசஙகிககிற சுவிசேஷமலவுகிகஞானததிறகுமிகவும உயர்நததெனறும, (௰) சுவிசேஷததிறகேறற ஞானததைத தேவஆவியானவர்போதிககிறாரெனறும, (௰௩) அவருடையபோதனையினபடி நானுமபோதிககிறேனெனறும, (௰௪)சுபாவபபடிககானமனிதனமாததிரம அதையறியமாட்டானெனறுஙகாடடியது.]

சகோதரரே, நானுமுஙகளிடததிலவநது, பராபரனுடையசாட்சியையுயர்நதவசனிபபோடும அலலது ஞானததோடும உஙகளுககு அறிவிககவிலலை.

௨ நானதீர்மானித்தபடிசிலுவையில அறையபபடட இயேசுககிறிஸதுவையேயனறி, வேறொனறையுமுஙகளுககு அறிவிக்கவிலலையே.

௩ அலலாமலுமநான பெலவீனததோடும பயததோடுமமிகுநதநடுககததோடுமுஙகளிடததிலிருநதேன.

௪ எனபேசசும எனபிரசஙகமும மனிதஞானததிறகுரிய போதனைவார்ததைகளாயிருககவிலலை.

௫ உஙகளவிசுவாசம மனிதருடையஞானததிலல்ல, பராபரனுடைய பலததிலேநிறகததககதாக அது ஆவியையுமபெலனையுஙகாணபிததது.

௬ எபபடியுந தேறினவர்களுககுளளே நாஙகளஞானததையேபேசுகிறோம. அந

ஞானம இபபிரபஞசியததினஞானமலல. அழிநதுபோகிறவர்களாகிய இபபிரபஞசியததின பிரபுககளுடையஞானமுமலல.

௭ லோகததோறறததிற்கு முனனேபராபரன நமமுடையமகிமைககாகக்குறிதது மாயவிர்கசியததிலேமறைககபபடடதுமாயிருநததேவஞானததையேபேசுகிறோம.

௮ அதை இபபிரபஞசியததுபபிரபுககளில ஒருவனும அறிநதுகொளளவிலலை. அறிநதுகொணடிருநதார்களானால,மகிமையினகர்த்தரையவர்களசிலுவையில அறைய மாடடார்களே.

௯ வேதததில எழுதியிருககிறபடி, பராபரன தமமிடததில அனபுகூருகிறவர்களுககு எததனைமபணணினவைகளை (மனிதர) கணகாணவுமிலலை. காதுகேட்கவுமிலலை. அவைகளமனிதருடைய இருதயததிலதோனறவுமிலலை.

௰ நமககோபராபரன அவைகளைததமது ஆவியினாலேவெளிபபடுததினார். அநத ஆவியானவர் எலலாவறறையும பராபரனுடைய ஆழஙகளையும ஆராயநதிருககிறாரே.

௰௧ மனிதனிலுளள ஆவியேயனறி, மனிதரில எவனமனிதனுககுரியவைகளை அறிவான (மாடடானே.)அபபடிபபோலபபராபரனுடைய ஆவியேயலலாமல, ஒருவனும பராபரனுடைய ஆழஙகளை அறியமாடடான.

௰௨ இபபடியிருககநாஙகளபராபரனால நமககருளபபடடவைகளை அறியுமபடிககு உலகததின ஆவியையலல, பராபரனிலிருநதுபுறபபடுகிற ஆவியையேபெறறோம.

௰௩ அவைகளை நாஙகள மனிதருடைய சொநதஞானமபோதிககிறவார்ததைகளாலல்ல, பரிசுதத ஆவிபோதிககிறவார்ததைகளாலேபிரசஙகமபணணி, ஆவிககுரியவைகளை ஆவிககுரியவைகளாலே ஒததுபபார்ததுககாணபிககிறோம.

௰௪ ஆகிலுஞசென்மசுபாவததினபடியானமனிதனபராபரனுடைய ஆவிககுரியவைகளை ஏறறுககொளளமாடடான அவைகள அவனுககுப பயிததியமாகததோனறுமே. மேலும அவைகளை ஆவிககேறறபிரகாரமாய ஆராயநதறிதாணிககவேணடியபடியால அவன அவைகளையறியமாட்டான.

௰௫ ஆவிககுரியவனே எலலாவறறையும ஆராயநதறிகிறான, மறறொருவனாலும ஆராயநதறியபபடான.

௰௬ அவனுககுபபோதிககததககதாகக் கர்ததருடையசிநதையை அறிநதவனயாவன. நாஙகளோகிறிஸதுவின சிநதையைபபோலசசிநதையுளளவர்களாயிருககிறோம.

## ௩. அதிகாரம்.

[(௧) கொரிநதியர் பேதகஙகளையுடையவர்களானபடியால அவர்கள குழநதைகள போலிருககிறார்களெனறும, (௫) அபபோஸதலர்களும ஊழியககாரராகமாததிரமிருககிறார்களெனறும, (௰) அபபோஸதலர்போடட அஸதிபாரததினமேல உணமைகளைககடடவேணடுமெனறும, (௰௬) விசுவாசிகளபராபரனுடைய ஆலயமானதையால அதைககெடுககுமபடி ஒனறுஞசெயயககூடாதெனறும, (௰௯) லவுகிகஞானமவீணெனறும, (௨௰)மெயஞஞானியாகுமபடிககானவகையினனதெனறுஙகாடடியது.]

நானுஞசகோதரரே, உஙகளை ஆவிககுரியவர்களெனறெணணவும உஙகளுடனே பேசவுஙகூடாமல, உஙகளைமாமிசததிறகுரியவர்களெனறுங கிறிஸதுவிற குழநதைகளெனறுமெணணி, உஙகளுடனேபேசவேணடியதாயிருநதது.

௨ உணவை நீஙகளதாஙகததிராணியிலலாதபடியால, அதையுஙகளுககுககொடாமறபாலைக்குடிககககொடுததேன. இனனமும நீஙகளமாமிசததிற்குரியவர்களாயிருககிறபடியால, இபபொழுதும அதைததாஙகமாடடீர்கள.

௩ வயிராககியமும வாககுவாதமுமபேதகஙகளும உஙகளுககுளளிருகக, நீஙகளமாமிசததிற்குரியவர்களாயுமமனிதருடையமார்ககமாயநடககிறவர்களாயுமிருககிறீர்களலலவோ.

௪ உஙகளில ஒருவன, நானபவுலைச சேர்நதவனெனறும, வேறொருவன நான அபபொலலோவைச சேர்நதவனெனறுஞசொலலுகிறதால, நீஙகளமாமிசததிறகுரியவர்களலலவா.

௫ பவுலயாவன. அபபொலலோயாவன. அவர்கள நீஙகளவிசுவாசிகளாகிறதறகேதுவாயிருநத ஊழியககாரர்தானே. அதுவும அவனவனுககுககர்ததர் அருள அளிததபடியேயிருககிறது.

௬ நானநடடேன. அபபொலலோ நீர்பபாயசசினான. பராபரனேவளர்ததார்.

௭ அபபடியிருகக,நடுகிறவனாலும ஒனறுமிலலை,நீர்பபாயசசுகிறவனாலும ஒனறுமிலலை. வளர்ககிறபராபரனாலே எலலாமாகும.

௮ ஆகையாலநடுகிறவனும நீர்பபாயசசுகிறவனும ஒனறாயிருககிறார்கள. ஆகிலும நாஙகள பராபரனோடேகூடியவேலையாட்களானபடியால அவனவனதனதனுடைய வேலைககுததககதாயபபலனைபபெறுவான.

௯ நீஙகள பராபரனுடைய பணணையும பராபரனுடையமாளிகையுமா யிருககிறீர்கள.

௰ எனககளிககபபடட தேவகிருபையினபடியே, விவேகமுளளசிறபாசாரியைபபோல அஸதிபாரததைபபோடடேன. வேறொருவன அதினமேலேகடடுகிறான. எவனொ

ந்ததான அதின்மேலே கட்டுகிறதின்னதென்று பார்க்கக்கடவன்.

௰௧ என்னத்தினாலென்னில் இயேசுக்கிறிஸ்துவே அஸ்திபாரமாகப் போடப்பட்டிருக்கிறார். போடப்பட்ட அந்த அஸ்திபாரத்தைத்தவிர், வேறே அஸ்திபாரத்தை ஒருவனும் போடக்கூடாது.

௰௨ ஒருவன் அந்த அஸ்திபாரத்தின்மேல் பொன், வெள்ளி, இரத்தினக்கற்கள், மரங்கள், புல்லு, தாளடி, இப்படிப்பட்டவைகளைச் சேர்த்துக் கட்டினால், அவனவனுடைய கிரியை வெளிப்படும்.

௰௩ அக்கினியினாலே வெளியாக்கப்படுவதால், அது தோன்றும்நாளே அதை வெளிப்படுத்தும். அவனவனுடைய கிரியையிப்படிப்பட்டதென்று அக்கினியே சோதிக்கும்.

௰௪ அஸ்திபாரத்தின்மேலே கட்டின ஒருவனுடைய கிரியை நின்றால், அவன் பலனைப் பெறுவான்.

௰௫ ஒருவனுடைய கிரியை வெந்துபோனால், அவனுக்கு நஷ்டம் வரும். ஆகிலும் அவனே இரட்சிக்கப்படுவான். அதுவும் அக்கினியில் அகப்பட்டுத் தப்பினாற்போலவேயிருக்கும்.

௰௬ நீங்கள் பராபரனுடைய ஆலயமாயிருக்கிறீர்களென்றும் பராபரனுடைய ஆவி உங்களிடத்தில் வாசமாயிருக்கிறாரென்றும் அறியாமலிருக்கிறீர்களா, பராபரனுடைய ஆலயம் பரிசுத்தமாயிருக்கின்றது.

௰௭ ஆதலால் அவருடைய ஆலயத்தையொருவன் கெடுத்தால், அவனைப் பராபரன் கெடுப்பார்.

௰௮ நீங்களே அந்த ஆலயம். ஒருவனுந் தன்னைத்தானே வஞ்சனைசெய்யாதிருப்பானாக, ஞானிகளை அவர்களுடைய தந்திரத்திலே பிடிக்கிறாரென்றும்.

௰௯ ஞானிகளுடைய சிந்தனைகள் வீணாயிருக்கின்றனவென்று கர்த்தர் அறிந்திருக்கிறாரென்றும் எழுதியிருக்கிறபடி, இவ்வுலகத்தின் ஞானம் பராபரனுக்கு முன்பாகப் பயித்தியமாயிருக்கின்றதே.

௨௰ ஆனதால் உங்களிலொருவன் இவ்வுலகத்திலே தன்னை ஞானியென்றெண்ணினால், அவன் மெய்ஞ்ஞானியாகும்படிக்குப் பயித்தியக்காரனாகக்கடவன்.

௨௧ இப்படியிருக்க, ஒருவனும் மனிதரைக் குறித்துப் பெருமைபாராட்டக் கூடாது. எல்லாமுங்களுடையதே.

௨௨ பவுலாகிலும் அப்பொல்லோவாகிலும் கேபாவாகிலும் லோகமாகிலும் ஜீவனாகிலும் மரணமாகிலும் நிகழ்காரியங்களாகிலும் வருங்காரியங்களாகிலும் எல்லாமுங்களுடையது.

௨௩ நீங்கள் கிறிஸ்துவினுடையவர்கள். கிறிஸ்து பராபரனுடையவர்.

## ௪. அதிகாரம்.

[(௧) போதகரைக்குறித்து இப்படியெண்ணிக்கொள்ள வேண்டுமென்றும், (௬) இறுமாப்புக்கிடங்கொடுக்கக் கூடாதென்றும், (௯) அப்போஸ்தலன்பட்ட வருத்தங்களினாலே சபையார் புத்திமான்களாக வேண்டுமென்றுங் காட்டியது.]

௧ இப்படியிருக்கிறபடியால், யாவரும் எங்களைக் கிறிஸ்துவினூழியக்காரரென்றும் பராபரனுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரரென்றும் எண்ணிக்கொள்ளக்கடவர்கள்.

௨ உக்கிராணக்காரரிடத்திலே உண்மையையே காணத்தேடுவார்கள்.

௩ (அதைக்குறித்து) நான் உங்களாலே அல்லது மற்றொருமனித அதிகாரத்தினாலே நியாயத்தீர்ப்பைப்பெறுவது எனக்கு மிகவுஞ்சிறிதானகாரியமாயிருக்கின்றது. என்னைக்குறித்து நானும் நியாயத்தீர்ப்புச்சொல்லுகிறதில்லை.

௪ குற்றத்தை நான் என்னிடத்தில் அறியேன். ஆகிலும் அதினாலே நான் நீதிமானாகிறதில்லை. கர்த்தரோ என்னைக்குறித்துத் தீர்ப்புச்சொல்லுகிறவர்.

௫ ஆனபடியினாலே கர்த்தர் வருமளவும், நீங்கள் காலத்திற்கு முன்னே ஒன்றைக்குறித்துந் தீர்ப்புச்சொல்லாதிருப்பீர்களாக. அவரே இருளின் அந்தரங்கங்களை வெளியரங்கமாக்கி, இருதயங்களின் யோசனைகளையும் வெளிப்படுத்துவார். அப்பொழுது அவனவனுக்குப் பராபரனாலே புகழ்ச்சியுண்டாகும்.

௬ சகோதரரே எழுதப்பட்டதற்குமேலாகப் (போதகரை) எண்ணிக்கொள்ளாதபடிக்கு நீங்கள் எங்களாலே கற்கும்பொருட்டாகவும் ஒருவனிமித்தம் மற்றொருவனுக்கு விரோதமாய் இறுமாப்படையாதிருக்கும்பொருட்டாகவும் நான் உங்கள்நிமித்தம் என்னையும் அப்பொல்லோவையுந் திருஷ்டாந்தங்களாக வைத்து, இவைகளையெழுதினேன்.

௭ அன்றியும் உன்னை விசேஷித்தவனாக்குகிறவன் யாவன், நீ பெற்றுக்கொள்ளாமல் உனக்குண்டாயிருக்கிறதியாது. நீயும் பெற்றுக்கொண்டிருக்கப் பெற்றுக்கொள்ளாதவன்போல ஏன் பெருமைபாராட்டுகிறாய்.

௮ இப்பொழுதே திருப்தியடைந்திருக்கிறீர்கள். இப்பொழுதே ஐசுவரியமுள்ளவர்களாயிருக்கிறீர்கள். எங்களைத்தவிர் ஆண்டீர்கள். நீங்கள் ஆண்டீர்களானால் நன்மையாயிருக்கும். அப்பொழுது உங்களுடனேகூட நாங்களும் ஆளுவோமே.

௯ அப்படியன்றி, எனக்குத்தோன்றுகிறபடி, பராபரன் அப்போஸ்தலராகிய எங்களைக் கடைசியிலே மரணத்திற்குக் குறிக்க

படடவர்களைப போலககாண பபடடப பணிஞர். உலகததிறகுந தூதருககும மனி தருககுமவேடிககையாஞேம். நாஙகளகி றிஸதுவினிமிததம பயிததியககாரர்.

ய நீஙகள கிறிஸதுவிற புததிசாலிகள. நாஙகள பலவீனர். நீஙகள பலவானகள நீஙகள கனமபொருநதியவர்கள, நாஙகளக னமறறவர்கள.

யக இநநேரமவரைககும,பசியுநதாகமு மநிருவாணமு முளளவர்களாயிருககிறோம குட்டுணடும நிலையறறுமிருககிறோம.

யஉ எஙகள கைகளிஞலேவேலைசெயது பிரயாசபபடுகிறோம. வையபபடுகிற பொ ழுது ஆசீர்வதிககிறோம. துனபபபடுகிற பொழுதுசகிககிறோம.

யங தூஷணிககபபடுகிறபொழுதுவேண டிககொளளுகிறோம இதுவரைககுமநா ஙகள உலகததினகுபபைகளைப போலவும எலலாருநதொடைககிற அழுககைபபோ லவுமாஞேம.

யச உஙகளை வெட்கபபடுததுமபடிகக நான இவைகளை எழுதவிலலை. நீஙகள என ககுபபிரியமானபிளளைகளெனறு உஙகளுக குபபுததிசொலலுகிறேன.

யரு கிறிஸதுவில உஙகளுககுபபததினாயி ரம உபாததிகளிருநதாலும, அநேகநதகப பனமார் உஙகளுககிலலையே. கிறிஸது இ யேசுவிற சுவிசேஷததிஞலேநான உஙக ளைபபெறறேன.

யசு ஆகையால எனனைபபினபறறுகிறவ ர்களாகுஙகளெனறுஉஙகளுககுபபுததிசொ லலுகிறேன.

யஎ இதநிமிததமாகநான எனககுபபி ரியமுமகர்ததருககுள உணமையுமான எ னனுடையகுமாரனுகிய தீமோததேயுவை உஙகளிடததில அனுபபினேன. அவன எங கும எநதசசபையிலுமநானபோதிககிறவ கையினனதெனறு கிறிஸதுவுககுளளான எனவழிகளை உஙகளுககு நினைவுணடாககு வான.

யஅ நானதானே உஙகளிடததிறகு வரு கிறதிலலையெனகிறதாகசசிலர் இறுமாபப டைநதார்கள.

யகூ ஆகிலுஙகர்ததருககுச சிததமாஞு லநானசீககிரமாய உஙகளிடததிறகுவநது பராபரனுடைய இராசசியமவசனிபபிஞு லேயலல பலததிஞலே யுணடாயிருககிறப டியால,

உய இறுமாபபடைநதவர்களுடையவச னிபபையலல பலததை அறிநதுகொளளு வேன.

உக உஙகளுககெனனவேணடும. நான பிரமபுடனே உஙகளிடததிலவரவேணடுமோ அலலது அனபோடுஞசாநதமுளள ஆவி யோடும வரவேணடுமோ.

## ரு. அதிகாரம்.

[(க) முறைகேடனைச சபையார் புறமபாக காததிறதாக அவர்களைககடிநதுகொள ளுகிறதெனறும, (உ) அவனைப புறமபாக கவேணடுமெனறும, (ங) தஙகளைச சுதத மாககிககொளளவேணடுமெனறும, (ச) இனனுரோடேசமபநதமபணணககூடா தெனறுஞசொலலியது.]

அஞ்ஞானிகளுககுளளுஞ் சொலலபப டாததவசிததனம உஙகளுககுளளே யுண டெனறுபொதுவாகசசொலலிககொளளு கிருர்கள. எனனவெனில ஒருவன தனதகப பனுடைய மனைவியை வைததுககொளளு கிறதே.

உ மேலும இபபடிபபடடகிரியையைச செயதவனை உஙகளிலிருநது நீககததக்க தாகததுயரபபடவேணடிய நீஙகளும இறு மாபபுளளவர்களாயிருககிறீர்கள.

ங ஆதலாலநானசரீரததிஞலேஉஙகளுக குததூரமாயிருநதும, ஆவியால உஙகளோ டே கூடவிருககிறவனுய அபபடிசசெயத வனைககுறிதது இபபொழுதே கூட இருக கிறதுபோலதீர்பபுபபணணினேன.

ச (எனனவெனுல) நமமுடையகர்தத ராகிய இயேசுககிறிஸதுவினநாமததிஞலே நீஙகளும எனனுடைய ஆவியுங கூடவிருக கையில,

ரு அபபடிபபடடவனுடைய ஆவிகர்த தராகிய இயேசுககிறிஸதுவினநாளிலே இ ரட்சிககபபடுமபடிககு, நமமுடையகர்தத ராகிய இயேசுககிறிஸதுவினவலலமையோ டே அவனுடையசரீரததில அழிவுணடாக அவனைச சாததானுககு ஒபபுககொடுகக வேணடும.

சு நீஙகளமேனமைபாராட்டல நலலத லல, கொஞசமானபுளிபபுமா பிசைநதமா வினைததையும உபபபணணுகிறதெனறு அறியாமலிருககிறீர்களா.

எ ஆனபடியிஞலே கிறிஸது எனனும ந மமுடையபஸகாவும நமககாக அடிககபப டடிருககிறதால, நீஙகள புளிபபிலலாதவர்க ளாயிருககிறபடியே, புதிதாயபபிசைநத மாவாகுமபடிககு, பழையபுளிபபுமாவைப புறமபேகழிததுபபோடுஙகள.

அ அபபடிககுப பழையபுளிபபுமாவோடே யலலதுறகுணம பொலலாபபுடனும புளிபபுமாவோடுமலல, துபபுரவு உணமை யெனனும புளிபபிலலாமையோடேபணடி கையை ஆசரிககககடவோம.

கூ வேசிக்களளருடனே கலநதிருககக்கூ டாதெனறு நிருபததிலே யுஙகளுககெழுதி னேன.

ய அபபடிநான இவவுலகததாராகிய வேசிக்களளர், அலலது பொருளாசைககா ரர், அலலது கொளளைக்காரர், அலலது வி

கிர்க ஆராதனைக்காரர் இவர்களைக்குறித்துப்பொதுவாய எழுதவில்லை. அப்படியிருந்தால் நீங்கள் உலகத்தைவிட்டுப்புறப்பட்டுப்போகவேண்டியதாயிருக்குமே.

௰௧ இப்பொழுதுநான உங்களுக்கெழுதுகிறதென்னவென்றால், சகோதரனென்னப்பட்ட ஒருவன்வேசிக்கள்ளன, அல்லது பொருளாசைக்காரன, அல்லது விக்கிரக ஆராதனைக்காரன, அல்லது உதாசினன், அல்லதுவெறியன, அல்லதுகொள்ளைக்காரனானால, அவனோடேகலந்திருக்கக்கூடாது. அப்படிப்பட்டவனுடனே கூடப்போசிக்கவுங்கூடாது.

௰௨ புறத்திலிருக்கிறவர்களுக்குமநியாயத்தீர்ப்புசொல்லுகிறது என்னுடையகாரியமா, உள்ளேயிருக்கிறவர்களுக்குநீங்களும நியாயத்தீர்ப்புசொல்லுகிறீர்கள்ல்லவோ.

௰௩ புறத்திலிருக்கிறவர்களுக்குப்பராபரனே நியாயத்தீர்ப்புக்கொடுப்பார். ஆகையால அந்தப்பொல்லாதவனை உங்களிடத்திலிருந்து எடுத்துப்போடுங்கள.

## ௬. அதிகாரம்.

[(௧) கிறிஸ்தவர்கள வழக்காடுகிறதைக்குறித்து அவர்களைக் கடிந்துகொள்ளுகிறானென்றும, (௯) இன்னின்னார்மோட்சத்தையடையார்களென்றும, (௰௨) வேசித்தனஞ்செய்யாமற கர்த்தாவினோடேயொன்றாயிருக்க வேண்டுமென்றுஞ் சொல்லியது.]

உங்களிலொருவன் மற்றொருவனுக்குவிரோதமான காரியமுடையவனாயிருக்கிறபொழுது, அவன நியாயம்பெற்றுக்கொள்ளுதற்குப்பரிசுத்தவான்களிடத்திறபோகாமல, அநீதிக்காரரிடத்திலேபோகத்துணிகிறதென்ன.

௨ பரிசுத்தவான்கள உலகத்திறகு நியாயத்தீர்ப்புசொல்வார்களென்றறியாமலிருக்கிறீர்களா உலகமுழுதுங்களால நியாயந்தீர்க்கப்படுவதால, அற்பவழக்குகளைத் தீர்க்க அபாத்திரராயிருக்கிறீர்களா.

௩ தூதர்களநம்மால நியாயத்தீர்ப்பைப்பெறுவார்களென்று அறியீர்களா. இச்சீவனுக்கேற்றவைகளை நீங்கள்தீர்த்துக்கொள்ளக்கூடாதிருக்கிறதெப்படி.

௪ இச்சீவனுக்கேற்றவழக்குகளஉங்களுக்கிருக்கும்பொழுது, நீங்களசபையிலேயேஅற்பமாய எண்ணப்பட்டவர்களைவைக்கிறீர்கள.

௫ உங்களுக்கு வெட்கமுண்டாகும்படி இதைச்சொல்லுகிறேன. இப்படிச்சகோதரனுக்குஞ்சகோதரனுக்கு முண்டானவழக்கைத்தீர்க்கத்தக்கவிவேகியொருவனாகிலும உங்களுக்குள்ளேயில்லையோ.

௬ சகோதரனோடேசகோதரன்வழக்காடுகிறான. அப்படி அவிசுவாசிகளுக்குமுன்பாகவேசெய்கிறான.

௭ நீங்கள ஒருவரோடொருவர் வழக்காடுகிறதே எவ்விதத்திலுந்தப்பிதமாயிருக்கின்றது. அப்படியன்றி, நீங்கள அநியாயத்தையுஞ்சேதத்தையும அனுபவியாதிருக்கிறதென்ன.

௮ அப்படிச்செய்யாமல,நீங்களேசகோதரருக்கேஅநியாயஞ்செய்துசேதமுண்டாக்குகிறீர்கள.

௯ அநியாயக்காரர்பராபரனுடையஇராச்சியத்தைச்சுதந்தரிப்பதில்லையென்று அறியாமலிருக்கிறீர்களா, மோசம்போகாதிருங்கள. வேசிக்கள்ளருமவிக்கிரகஆராதனைக்காரருமவிபசாரக்காரருஞ்சுயபுணர்ச்சிக்காரரும ஆணபுணர்ச்சிக்காரரும,

௰ திருடருமபொருளாசைக்காரரும வெறியரும உதாசினருங்கொள்ளைக்காரரும பராபரனுடைய இராச்சியத்தைச்சுதந்தரிப்பதில்லை.

௰௧ (முன்னே) நீங்களுஞ்சிலர் இப்படிப்பட்டவர்களாய நடந்தீர்கள. இப்பொழுதுகர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினநாமத்தினாலுமநமதுபராபரனுடைய ஆவியினாலுங்கழுவப்பட்டுமபரிசுத்தமாக்கப்பட்டுமநீதிமானகளாக்கப்பட்டுமிருக்கிறீர்கள.

௰௨ நானசகலத்தையுமஅனுபவிக்கலாம. ஆகிலும எல்லாந்தகுதியாயிருக்கமாட்டாது. நானசகலத்தையும அனுபவிக்கலாம. ஆகிலுமநான ஒன்றினாலும ஆளப்படமாட்டேன.

௰௩ போசனபதார்த்தங்களவயிற்றுக்குமவயிறு போசனபதார்த்தங்களுக்குமேற்கும. பராபரன இதையும அவைகளையும அழியப்பண்ணுவார். சரீரம்வேசித்தனத்திற்கல்ல, கர்த்தருக்கேயேற்றது. கர்த்தருஞ்சரீரத்திற்கேற்றவர்.

௰௪ ஆதலாறகர்த்தரைப்பராபரன எழுப்பினதுபோலத்தமமுடைய வல்லமையினாலேநம்மையும எழுப்புவார்.

௰௫ உங்களசரீரங்களகிறிஸ்துவின அவயவங்களாயிருக்கின்றனவென்று அறியாமலிருக்கிறீர்களா, அப்படியிருக்கக் கிறிஸ்துவினுடைய அவயவங்களை நான எடுத்துக்கொண்டுவேசியின அவயவங்களாக்கலாமா அப்படிவாராதிருப்பதாக.

௰௬ அல்லது இருவரும் ஒரேசரீரமாயிருப்பார்களென்று சொல்லியிருக்கிறபடி, வேசியோடொட்டிக்கொள்ளுகிறவன அவளுடனே ஒரே சரீரமாயிருக்கிறானென்றும்,

௰௭ கர்த்தரோடொட்டிக்கொள்ளுகிறவன (அவருடனே) ஒரே ஆவியாயிருக்கிறானென்றும அறியாமலிருக்கிறீர்களா.

௰௮ வேசித்தனத்திறகு விலகியோடுங்கள. மனிதனசெய்யும எந்தப்பாவமுஞ்சரீ

தித்துப்புறம்பேயிருக்கின்றது. வேசித்தனஞ் செய்கிறவன் தன்சுயசரீரத்திற்கு விரோதமாகப்பாவஞ்செய்கிறான்.

௧௯ அல்லது உங்கள்சரீரமானது பராபரனாலே நீங்கள்பெற்றும் உங்களில்தங்கியுமிருக்கிறபரிசுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கிறதென்று அறியாமலிருக்கிறீர்களா?

௨௰ அல்லாமலும்மிகுந்தகிரயத்தினாலே நீங்கள்கொள்ளப்பட்டபடியினாலே நீங்கள் உங்களுடையவர்களல்லவே. ஆகையாற்பராபரனுக்குடையவர்களாகிய உங்கள்சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் பராபரனுடையமகிமையைப்பிரசித்தம்பண்ணுவீர்களாக.

## ௭. அதிகாரம்.

[(௧) இடுக்கணுள்ளகாலத்திலே விவாகம்பண்ணுகிறது நன்மையல்லவென்றும், (௰) விவாகம்பண்ணினவர்கள் ஒருவரைவிட்டொருவர்பிரியக்கூடாதென்றும், (௰௭) கிறிஸ்துமார்க்கத்தினிமித்தந் தொழிலைத்தள்ளவேண்டுவதில்லையென்றும், (௨௫) கன்னிகைகளைக்குறித்துச் செய்யவேண்டியதின்னதென்றுஞ்சொல்லியது.]

நீங்கள் எனக்கெழுதின காரியங்களைக்குறித்துநான் எழுதுகிறதென்னவென்றால் மனிதன் ஸ்திரியைத்தொடாமலிருந்தால் நலமாயிருக்கும்.

௨ ஆகிலும் வேசித்தனங்களிராதபடிக்கு அவனவன் தன்மனைவியையும், அவளவள் தன்புருஷனையுங் கொள்வார்களாக.

௩ புருஷனானவன் தன்மனைவிக்குச் செய்யவேண்டியகடமையைச் செய்யக்கடவன் மனைவியுந்தன்புருஷனுக்கு அப்படியேசெய்யக்கடவள்.

௪ மனைவியானவள் தன்சுயசரீரத்திற்கதிகாரியாயிராமற் புருஷனேயதற்கதிகாரியாயிருக்கிறான். அப்படியேபுருஷனுந்தன்சுயசரீரத்திற்கதிகாரியாயிராமல், மனைவியேயதிகாரியாயிருக்கிறாள்.

௫ ஒருவருக்கொருவர் விலகாதிருங்கள். உபவாசத்திற்குஞ் செபம்பண்ணுதற்குஞ் சாவகாசமுண்டாயிருக்கும்படிக்கு இருவருஞ் சிலகாலத்திற்காக விலகவேண்டுமென்றுசம்மதித்தால், அப்படிச்செய்யலாம். பின்பு உங்களுக்கு விரதத்துவமில்லாமையால், சாத்தான் உங்களையெழுப்பாதபடிக்கு, மறுபடியுங் கூடியிருங்கள்.

௬ இதை நான்கட்டளையாகவல்ல, உத்தரமாகச்சொல்லுகிறேன்.

௭ எல்லாமனிதரும்என்னைப்போலிருக்க விரும்புகிறேன். ஆகிலும் பராபரனாலே அவனவனுக்குச்சொந்தமான வரமுண்டு. ஒருவனுக்கு ஒருவிதமாயும் மற்றொருவனுக்கு ஒருவிதமாயுமிருக்கிறது.

௮ எப்படியும் விவாகமில்லாதவர்களையுங் கைம்பெண்களையுங்குறித்து நான்சொல்லுகிறதென்னவென்றால், அவர்கள் என்னைப்போ விருந்துவிட்டால் நலமாயிருக்கும்.

௯ ஆகிலும் அவர்கள்விரத்தராயிருக்கக்கூடாதிருந்தால், விவாகம்பண்ணக்கடவர்கள். வேகிறதைவிட விவாகம்பண்ணுகிறது தகுதியாயிருக்குமே.

௰ விவாகம்பண்ணினவர்களுக்கு நானல்ல, கர்த்தர் கட்டளையிடுகிறதென்னவெனில், மனைவியானவள் தன்புருஷனைவிட்டுப்பிரியாதிருப்பாளாக.

௰௧ பிரிந்துபோனால் அவள் விவாகமில்லாதிருக்கக்கடவள். அல்லதுபுருஷனுடனே ஒப்புரவாகக்கடவள். புருஷனுந் தன்மனைவியைவிட்டுப்போகாதிருப்பானாக.

௰௨ மற்றவர்களுக்குக் கர்த்தரல்ல, நான்சொல்லுகிறதாவது, சகோதரனொருவன் அவிசுவாசியானமனைவியையுடையவனாயிருந்து, தன்னுடனே அவள்வாசமாயிருக்கச்சம்மதித்தால், அவளைவிட்டு விடாதிருக்கக்கடவன்.

௰௩ மனைவியொருத்தியும் அவிசுவாசியானபுருஷனையுடையவளாயிருந்து, தன்னுடனே அவன்வாசமாயிருக்கச் சம்மதித்தால், அவனைவிட்டுவிடாதிருக்கக்கடவள்.

௰௪ என்னத்தினாலெனில் அவிசுவாசியானபுருஷன் தன்மனைவியால் பரிசுத்தமாக்கப்பட்டான். அவிசுவாசியான மனைவியும்புருஷனாற்பரிசுத்தமாக்கப்பட்டாள். இல்லாவிட்டால், உங்கள்பிள்ளைகள் அசுத்தமாயிருக்குமே. இப்பொழுது அவைகள் பரிசுத்தமாயிருக்கின்றனவே.

௰௫ ஆகிலும் அவிசுவாசிகளானவர்கள் பிரிந்துபோனாற்பிரிந்துபோகட்டும். சகோதரனாவது, சகோதரியாவது, அப்படிப்பட்டவர்களால் அடிமையாக்கப்பட்டவர்களல்ல, சமாதானமாயிருக்கும்படிக்கேபராபரன்நம்மையழைத்தார்.

௰௬ மனைவியே! நீயுன்புருஷனைச்சீர்திருத்தக்கூடாதென்றெப்படியறிந்திருக்கிறாய் அல்லதுபுருஷனே! நீயுன் மனைவியைச்சீர்திருத்தக்கூடாதென்றெப்படி யறிந்திருக்கிறாய்.

௰௭ பராபரன்அவனவனுக்குப்பகிர்ந்துகொடுத்ததெப்படியோ, கர்த்தர் அவனவனையழைத்ததெப்படியோ அப்படியேயவனவனும் நடக்கக்கடவன்எல்லாச்சபைகளிலேயுமிப்படியேதிட்டம்பண்ணுகிறேன்.

௰௮ ஒருவன் விருத்தசேதனத்தைப்பெற்றவனாய் அழைக்கப்பட்டிருந்தால், விருத்தசேதனமில்லாமையைத்தேடாமல் இருப்பானாக ஒருவன் விருத்தசேதனமில்லாத

வனாய் அழைக்கப்பட்டிருந்தால், விருத்தசேதனத்தைப் பெறாமலிருப்பானாக.

௧௯ விருத்தசேதனத்தினாலொன்றுமில்லை விருத்தசேதனமில்லாமையாலுமொன்றுமில்லை. பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே பிரயோசனமாயிருக்கும்.

௨௰ அவனவன் தான் அழைக்கப்பட்டபொழுதிருந்த நிலைமையிலே நிலைநிற்கக்கடவன்.

௨௧ அடிமையாகிய நிலைமையிலேயழைக்கப்பட்டாயானால், சுயாதீனமாயிருக்கும்படி கவலைப்படாதிருப்பாயாக.] சுயாதீனமாகக்கூடுமேயானால், அப்படியனுசரிக்கலாம்.

௨௨ கர்த்தரால் அழைக்கப்பட்ட அடிமையானவன் கர்த்தருக்குச் சுயாதீனனாயிருக்கிறான். அதுபோல அழைக்கப்பட்ட சுயாதீனன் கிறிஸ்துவுக்கு அடிமையாயிருக்கிறான்.

௨௩ மிகுந்தகிரயத்தினாலே கொள்ளப்பட்டீர்கள். மனிதருக்கு அடிமைகளாகாமலிருப்பீர்களாக.

௨௪ சகோதரரே! அவனவன் அழைக்கப்பட்டபொழுதிருந்த நிலைமையிலேதானே பராபரனுக்குமுன்பாக நிலைநிற்கக்கடவன்.

௨௫ அன்றியும் விவாகமில்லாதவர்களுக்காகக் கர்த்தருடைய கட்டளை எனக்கில்லை. அப்படியிருந்தும் நான் உண்மையாயிருக்கிறதற்குக் கர்த்தராலிரக்கம் பெற்று, யோசனைசொல்லுகிறேன்.

௨௬ ஆகையால் நான் பிரமாணிக்கிறதென்னவெனில், இப்பொழுதுண்டாயிருக்கிற இக்கட்டினிமித்தம் மனிதர் அப்படியே (விவாகமில்லாமல்) இருந்தால், அவர்களுக்கு நலமாயிருக்கும்.

௨௭ நீ ஒரு மனைவியோடே கட்டப்பட்டிருந்தால் அவிழ்க்கப்படும்படி தேடாதிருப்பாயாக, நீ ஒரு பெண்ணில்லாதவனாயிருந்தால், ஒரு பெண்ணைத் தேடாதிருப்பாயாக.

௨௮ நீ விவாகம்பண்ணினாலும் பாவமில்லை. ஒரு கன்னிஸ்திரீ விவாகம்பண்ணினாலும் பாவமில்லை ஆகிலும் அப்படிப்பட்டவர்கள் (சரீரத்திலே) உபத்திரவப்படுவார்கள். அதற்கு நீங்கள் தப்பவேண்டுமென்கிறேன்

௨௯ சகோதரரே! பின்னும் நான் சொல்லுகிறதென்னவெனில், இனிவருங்காலஞ் சுருக்கமானபடியினாலே, மனைவிகளையுடையவர்கள் மனைவிகளில்லாதோர் போலவும், அழுகிறவர்கள் அழாதார்போலவுஞ்,

௩௰ சந்தோஷப்படுகிறவர்கள் சந்தோஷப்படாதார்போலவும், பொருளைக்கொள்ளுகிறவர்கள் பொருளைக்கொள்ளாதார்போலவும்,

௩௧ இவ்வுலகத்தையனுபவிக்கிறவர்கள் அதையனுபவியாதார்போலவுமிருக்கவேண்டும். இவ்வுலகத்தின்வேஷங்கடந்துபோகின்றதே.

௩௨ நீங்கள் கவலையற்றவர்களாயிருக்க விரும்புகிறேன் விவாகமில்லாதவன் கர்த்தருக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாமென்று கர்த்தருக்குரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான்.

௩௩ விவாகம்பண்ணினவன் தன் மனைவிக்கெப்படிப் பிரியமாயிருக்கலாமென்று உலகத்திற்குரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான்.

௩௪ அதுபோல விவாகஸ்திரீக்குங் கன்னிஸ்திரீக்கும் வித்தியாசமுண்டு. விவாகமில்லாதவள் சரீரத்திலும் ஆத்துமாவிலும் பரிசுத்தமாயிருக்கும்படிக்குக் கர்த்தருக்குரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள். விவாகம்பண்ணினவள் புருஷனுக்கெப்படிப் பிரியமாயிருக்கலாமென்று உலகத்திற்குரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள்.

௩௫ இதை நான் உங்கள்மேல் வலையைப் போடுகிறதற்காகச் சொல்லாமல், கனம்பொருந்தியதாயிருக்குமென்றுந் தடையில்லாமற் கர்த்தரைப்பற்றிக்கொள்ளலாமென்றும் உங்கள் சுயபிரயோசனத்திற்காகவே சொல்லுகிறேன்.

௩௬ ஆகிலும் ஒருவன் தன் கன்னிகைப்பருவயதுசென்றுபோனவளாகக் கலியாணமில்லாமலிருந்தால், யோக்கியமல்லவென்றும் விவாகம்பண்ணுவிக்க வேண்டுமென்றும் நினைத்தால் தன் மனதின்படி செய்யக்கடவன். அது பாவமல்ல, விவாகம்பண்ணட்டும்.

௩௭ ஆகிலுந் தன் கன்னிகையைக் கொடுக்க அவசியத்தைக் காணாமல் தன் இருதயத்திலே உறுதியுள்ளவனுந் தன் சுயசித்தத்தின்படிசெய்ய அதிகாரமுள்ளவனுமாயிருந்து அவளை அப்படியேகாக்கவேண்டுமென்று தன்னிருதயத்திலே தீர்மானிக்கிறவனே நன்மைசெய்கிறவன்.

௩௮ ஆதலால் விவாகம்பண்ணிக் கொடுக்கிறவனும் நன்மைசெய்கிறான் கொடாமலிருக்கிறவனும் அதிக நன்மைசெய்கிறான்.

௩௯ மனைவியானவள் தன் புருஷன் உயிரோடிருக்குங்காலமளவுங் கட்டப்பட்டிருக்கிறாள். அவளுடைய புருஷன் மரித்தபின்பு அவள் எவனையாகிலுந் தன் இஷ்டப்படி விவாகம்பண்ண விடுதலையாயிருக்கிறாள். கர்த்தருக்குட்பட்டவனாகமாத்திரம் அப்படிச் செய்யவேண்டும்.

௪௰ அவள் விடுதலையாகவேயிருந்துவிட்டால், என்னுடைய யோசனையின்படி அதிக பாக்கியவதியாயிருப்பாள். என்னிடத்திலும் பராபரனுடைய ஆவியுண்டென்றெண்ணுகிறேன்.

## ௮. அதிகாரம்.

[(௧) விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைச் சாப்பிடக்கூடாதென்றும், (௯) நமது சுயாதீனத்தினாலே சகோதரருக்கு விக்கினமுண்டாக்கக்கூடாதென்றுஞ் சொல்லியது.]

விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைக்குறித்து, நாமெல்லாரும் அறிவுள்ளவர்களென்று அறிந்திருக்கிறோம். அறிவுமாத்திரம் இறுமாப்பாயிருக்கச் செய்கின்றது. அன்பே எழுப்புதற்கேதுவாயிருக்கிறது.

௨ ஆகையால் தன்னையறிவுள்ளவனென்று (இறுமாப்பாய்) எண்ணுகிற ஒருவன் தான் அறியவேண்டியபிரகாரமாக ஒன்றும் அறிந்தவனல்ல.

௩ பராபரனிடத்தில் அன்பாயிருக்கிறவனே அவராலே அறிந்துகொள்ளப்படுகிறான்.

௪ ஆனதால் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் போசிக்கிறதைக்குறித்து நாம் அறிந்திருக்கிறதென்னவெனில், உலகத்திலே விக்கிரகமானது ஒன்றுமில்லையல்லாமலும் ஒருவரேயன்றி, வேறொரு தேவனுமில்லை.

௫ வானத்திலேயும் பூமியிலேயுந் தேவர்களென்னப்பட்டவர்களுண்டு. இப்படியநேக தேவர்களும் அநேக கர்த்தர்களுமுண்டாயிருந்தாலும்,

௬ நமக்குப் பிதாவாகிய ஒரே தேவனுண்டு. அவரிலிருந்து சகலமுமுண்டாயிருக்கின்றது. அவரிடத்தில் நாமுமிருக்கிறோம். இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே கர்த்தாவும் நமக்குண்டு. அவராலே சகலமுமுண்டாயிருக்கின்றது. அவராலே நாமுமிருக்கிறோம்.

௭ அப்படியிருந்தும் இந்த அறிவு எல்லாரிடத்திலுமில்லை. ஆனதால் சிலர் இன்றைவரைக்கும் விக்கிரகத்தையும் (ஒரு தேவனென்று) நினைத்து, விக்கிரகத்திற்குப் படைக்கப்பட்டதைப் போசிக்கிறார்கள். அதினாலே பெலஈனமாயிருக்கிற அவர்களுடைய மனது அசுசிப்படுகின்றது.

௮ போசனமானது நம்மைப் பராபரனுக்குகந்தவர்களாக்கமாட்டாது என்னதினாலெனில் போசித்தால் நாம் பெருத்தவதுமில்லை போசியாதிருந்தால் நாம் குறைவதுமில்லையே.

௯ ஆகிலும் இதைக்குறித்து உங்களுக்குண்டாயிருக்கிற அதிகாரத்தினாலே பெலஈனருக்குத் தவறுதல்வாராதபடிக்குப் பாருங்கள்.

௰ எப்படியென்றால் அறிவுள்ள உன்னையொருவன் விக்கிரகக்கோயிலிலே போசனபந்தியிருக்கக்கண்டால், பெலஈனனாயிருக்கிற அவனுடைய மனது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் போசிக்கிறதற்கு எழுப்பப்படுமல்லவோ.

௰௧ பெலஈனனாகிய உன்சகோதரனுக்காகக் கிறிஸ்து மரித்தாரே, அவன் உன்னுடைய அறிவினாலே கெட்டுப்போகலாமா.

௰௨ இப்படிச் சகோதரருக்கு விரோதமாகப் பாவஞ்செய்து, பெலவீனமான அவர்களுடைய மனதைக் காயப்படுத்துகிறதினாலே நீங்கள் கிறிஸ்துவுக்கே விரோதமாகப் பாவஞ்செய்கிறீர்கள்.

௰௩ ஆனபடியினாலே போசனம் என் சகோதரனுக்குக் கேடுவருத்துற கேதுவானால், என் சகோதரனுக்குக் கேடுவாராதபடிக்கு, என்றைக்கும் இறைச்சியைப் போசிக்கமாட்டேன்.

## ௯. அதிகாரம்.

[(௧) பவுல் தன் அப்போஸ்தல ஊழியத்தின் அதிகாரமின்னதென்றும், (௭) சுவிசேஷத்தைப் போதிக்கிறவர்கள் அதினாலே பிழைப்படைகிறது நியாயமென்றும் (௰௫) சுவிசேஷத்திறந்தடையுண்டாகாதபடிக்குப் பவுல் அந்த நியாயத்தை அநுசரிக்கவில்லையென்றும், (௨௪) எல்லாரும் நித்தியப்பொருளையடையத்தக்கதாகப் போராட்டம் பண்ணவேண்டுமென்றுஞ் சொல்லியது.]

நான் அப்போஸ்தலனல்லவா. நான் சுயாதீனனல்லவா. நான் நமமுடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரிசிக்கவில்லையா. கர்த்தராலே நீங்கள் என்னுடைய கிரியைக்கு (ஏ திருஷ்டாந்தங்களாய்) இருக்கிறீர்களல்லவா.

௨ நான் மற்ற மனிதருக்கு அப்போஸ்தலனாயிராவிட்டாலும், உங்களுக்கல்லவோ அப்போஸ்தலனாயிருக்கிறேன். கர்த்தராலே நீங்கள் என் அப்போஸ்தல ஊழியத்தின் முத்திரையாயிருக்கிறீர்களே.

௩ என்னைக்குறித்துத் தீர்ப்புச்சொல்லுகிறவர்களுக்கு நான் என்ன உத்தரவுகொடுக்கிறேனென்றால்,

௪ (சபையின் செலவினாலே) போசனபானம்பண்ண எங்களுக்கு அதிகாரமில்லையோ.

௫ மற்ற அப்போஸ்தலருங் கர்த்தருடைய சகோதரருங் கேபாவுஞ்செய்கிறதுபோல நாங்களும் மனைவியாகிய ஒரு கிறிஸ்தவளைக் கூட்டிக்கொண்டு திரிகிறதற்கு எங்களுக்கதிகாரமில்லையோ.

௬ அல்லது கைவேலைசெய்யாதிருக்கிறதற்கு எனக்கும் பர்னபாவுக்குமாத்திரம் அதிகாரமில்லையோ.

௭ எக்காலத்திலாகிலுந் தன் சொந்தப்பணத்தைச் செலவழித்து எவன் தண்டிலே சேவகம்பண்ணுவான் எவன் திராட்சத்தோட்

டமுண்டாக்கி அதின் கனிகளிற் சிலபோசியாமலிருப்பானா அல்லது எவன் ஆடுகளை மேய்த்து அதின்பாலிலே கொஞ்சஞ்சாப்பிடாதிருப்பான்.

௮ இவைகளை மனிதர் நடக்கையின்படி மாத்திரஞ் சொல்லுகிறேனோ. நியாயப்பிரமாணமும் இப்படிச் சொல்லுகிறதில்லையா.

௯ போரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டாதிருப்பாயாகவென்று மோசேயின் பிரமாணத்திலே எழுதியிருக்கிறதே, பராபரன் மாடுகளுக்காக (மாத்திரம்) விசாரிக்கிறாரா.

௰ அதுவிசேஷமாய் நமக்காகச் சொல்லியிருக்கிறதில்லையா. உழுகிறவன் பலனில் நம்பிக்கையோடே உழவும், போரடிக்கிறவன் தான் நம்பின பலனுக்குப் பங்குள்ளவனாவேனென்கிற நம்பிக்கையோடே போரடிக்கவும் வேண்டியபடியால், அது நமக்காகவே யெழுதியிருக்கின்றது.

௰௧ நாங்கள் உங்களுக்கு ஞானநன்மைகளை விதைத்திருக்க, உங்கள் சரீரநன்மைகளை அறுத்தால், அது பெரியகாரியமாயிருக்குமா.

௰௨ வேறுபேர்கள் உங்களிடத்தில் இந்த அதிகாரத்தை யநுசரித்துக் கொண்டிருக்க அவர்களிலும் நாங்கள் அதிகமாய் அப்படிச்செய்யலாமல்லவா, அப்படியிருந்தும் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு யாதொரு தடையையுமுண்டாக்காதபடிக்கு, நாங்கள் இந்த அதிகாரத்தை அநுபவித்துக்கொள்ளாமல் எல்லாவிதமானபாடும் படுகிறோம்.

௰௩ கோயிலில் ஊழியஞ்செய்கிறவர்கள் கோயிலுக்குரியதிற் போசிக்கிறார்களென்றும் பலிபீடத்தில் ஆராதனைசெய்கிறவர்கள் பலிபீடத்திலுள்ளவைகளிற்பங்கு அடைகிறார்களென்றும், அறியாமலிருக்கிறீர்களா.

௰௪ அதுபோலக் கர்த்தரும் தமது சுவிசேஷத்தையறிவிக்கிறவர்களுக்குச் சுவிசேஷத்தினாலே பிழைப்பு வரவேண்டுமென்று கட்டளையிட்டார்.

௰௫ அப்படியிருந்தும் நான் இவைகளில் ஒன்றையும் அநுசரித்துக்கொள்ளவில்லை, இப்படி நான் மேன்மைபாராட்டுகிறதை ஒருவன் அவத்தமாக்குகிறதிலும் சாகிறதே யெனக்குப் பிரியமாயிருக்கும் ஆகலால் அப்படி இனிமேல் அநுசரிக்கவேண்டுமென்று நான் இவைகளை எழுதினதுமில்லை.

௰௬ சுவிசேஷத்தை நான் பிரசங்கிக்கிறதினாலே நான்மேன்மைபாராட்டக்கூடாது அது எனக்குண்டான கடமையாயிருக்கின்றதே. மேலுஞ் சுவிசேஷத்தை நான் பிரசங்கியாமலிருந்தால், ஐயோ எனக்கு வேதனைவருமே.

௰௭ அன்றியும் நான் மனோச்சாகமாய் அப்படிச்செய்தால், எனக்குப்பலனுண்டு. மனோச்சாகமில்லாதவனாயிருந்தாலும், உக்கிராண உத்தியோகம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது.

௰௮ ஆனதால் எனக்கு என்னபலனுண்டு. நான் சுவிசேஷத்தைப்பிரசங்கிக்கையில் அதில் எனக்குண்டாயிருக்கிற அதிகாரத்தை அநுசரியாமற் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைச் செலவில்லாமல் ஸ்தாபிப்பேன். அதுவே எனக்குப்பலன்.

௰௯ ஆகையால் நான் எல்லாரிடமும் விடுதலையாயிருந்தும், நான் அதிகசனங்களை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு, என்னைத்தானே எல்லாருக்கும் அடிமையாக்கினேன்.

௨௰ அந்தப்படி யூதரை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக, யூதருக்கு யூதனைப்போலவும் நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்களை ஆதாயப்படுத்திக் கொள்ளத்தக்கதாக நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவனைப்போலவுமானேன்,

௨௰௧ நியாயப்பிரமாணமில்லாதவர்களை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக, அவர்களுக்கு நியாயப்பிரமாணமில்லாதவனைப்போலவுமானேன், அப்படியிருந்தும் நான் பராபரனுக்குமுன்பாக நியாயப்பிரமாணமில்லாதவனாயிராமல், விசேஷமாய்க் கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்திற்குள்ளானவனாயிருக்கிறேன்.

௨௰௨ மேலும் பெலவீனரை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாகப் பெலவீனருக்குப் பெலவீனனைப்போலானேன். நான் எப்படியுஞ் சிலரை இரட்சிக்கும்படிக்கு எல்லாருக்கும் எல்லாவிதமுமானேன்.

௨௰௩ சுவிசேஷத்தின் பலனுக்கு நானுடன்பங்காளனாகும்படிக்குச் சுவிசேஷத்தினிமித்தமே இப்படிச்செய்கிறேன்.

௨௰௪ ஓடுகிறகெறடசாலையில் எல்லாரும் ஓடுவார்கள் ஆகிலும் ஒருவன்மாத்திரம் பந்தயப்பொருளைப் பெறுவானென்று அறியாமலிருக்கிறீர்களா. நீங்கள் (பந்தயப்பொருளைப்) பிடிக்கத்தக்கதாகவே ஓடுங்கள்.

௨௰௫ மேலும் போராடுகிறயாவரும் அழிவுள்ள கிரீடத்தைப்பெறும்படிக்கு எல்லா இச்சைகளையும் அடக்கிக்கொள்வார்கள், நாமழிவில்லாத கிரீடத்தைப்பெறும்படிக்கு அப்படிச்செய்கிறோம்.

௨௰௬ ஆதலால் நான் நிச்சயமில்லாமல் ஓடேன். நான் ஆகாசத்தையடித்துச் சிலம்பம்பண்ணேன்.

௨௰௭ ஆதலால் மற்றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணுகிற நான்தானே ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு, என்சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்.

## ௰. அதிகாரம்.

[(௧) பூர்வீகத்திலே இஸ்ரவேலருக்குச் சம்பவித்தவைகள் நமக்குத் திருஷ்டாந்த

ங்களாயிருக்கின்றன வென்றும், (௰௪) விக்கிரகாராதனைக்கு விலகவேண்டுமென்றும், (௨௩) நமக்கு அறிவுண்டாயிருக்கிறதினாலே மற்றவர்களுக்கு இடறலுண்டாகும்படி செய்யக் கூடாதென்றுஞ் சொல்லியது.]

இப்படியிருக்க, சகோதரரே! நீங்கள் எவைகளை நினைக்கவேண்டுமென்றிருக்கிறேனென்றால், நம்முடைய பிதாக்களெல்லாரும் மேகத்திற்குக் கீழாயிருந்தார்கள். எல்லாரும் சமுத்திரத்தின்வழியாய் நடந்துவந்தார்கள்.

௨ எல்லாரும் மோசேக்குள்ளாக மேகத்திலும் சமுத்திரத்திலும் ஞானஸ்நானம்பண்ணப்பட்டார்கள்.

௩ எல்லாரும் ஒரே ஞானபோசனபதார்த்தத்தைப் போசித்தார்கள்.

௪ கிறிஸ்து என்னும் ஞானக்கன்மலையவர்களோடேகூடச் சென்றதே அந்த ஞானக்கன்மலையின் தண்ணீரை எல்லாருங்குடித்து இப்படியே ஞானபானம் பண்ணினார்கள்.

௫ அப்படியிருந்தும் அவர்களில் அதிகமானபேர்களிடத்தில் பராபரன் பிரியமாயிருக்கவில்லை.

௬ வனாந்திரத்திலேயவர்கள் அழிக்கப்பட்டார்களே. அவர்கள் இச்சித்ததுபோல, நாமும் பொல்லாங்கானவைகளை யிச்சியாதபடிக்கு, இந்தச் சங்கதிகள் நமக்குத் திருஷ்டாந்தங்களாயிருக்கின்றன.

௭ ஆனதால் ஜனங்கள் போசிக்கவுங்குடிக்கவும் உட்கார்ந்து விளையாட எழுந்திருந்தார்களென்றெழுதியிருக்கிறபடி அவர்களில் சிலர் விக்கிரக ஆராதனைக்காரரானது போல, நீங்கள் அப்படிப்பட்டவர்களாகாதிருங்கள்.

௮ அவர்களிற்சிலர் வேசித்தனம்பண்ணி ஒரே நாளில் இருபத்துமூவாயிரம்பேர் விழுந்துபோனார்கள். அதுபோல நாம் வேசிமார்க்கமாய்ப் போகாதிருப்போமாக.

௯ அவர்களிற்சிலர் கிறிஸ்துவைப் பரீட்சைபார்த்து, பாம்புகளால் அழிக்கப்பட்டார்கள். அதுபோல, நாம் கிறிஸ்துவைப் பரீட்சைபாராதிருப்போமாக.

௰ அவர்களிற்சிலர் முறுமுறுத்து, சங்காரக்காரனாலே அழிக்கப்பட்டார்கள். அதுபோல, நீங்களும் முறுமுறுதிருப்பீர்களாக.

௰௧ திருஷ்டாந்தங்களுண்டாகத்தக்கதாக இவைகளெல்லாமவர்களுக்குச் சம்பவித்து, உலகத்தின் கடைசிக்காலத்திலுள்ள நமக்கு எச்சரிப்புண்டாகும்படி யெழுதப்பட்டிருக்கின்றன.

௰௨ ஆனபடியினாலே (தன்னை) நிற்கிறவனென்றெண்ணுகிறவன் விழாதபடிக்குப் பார்க்கக்கடவன்.

௰௩ மனிதருக்குரிய உபத்திரவமேயல்லாமல் வேறேயுபத்திரவம் இதுவரைக்கும் உங்களைப் பிடிக்கவில்லை. பராபரன் உண்மையுள்ளவராயிருக்கிறார். ஆதலால் இனிமேலும் நீங்கள் சகிக்கிறதற்கு மேலான உபத்திரவத்தை அவர் உங்களுக்கு வரப்பண்ணுமல், நீங்கள் தாங்கத்தக்கதாக உபத்திரவத்தையல்லாமற் போக்கையு முண்டாக்குவார்.

௰௪ ஆகையால் எனக்குப் பிரியமானவர்களே, விக்கிரக ஆராதனைக்கு விலகியோடுவீர்களாக.

௰௫ உங்களைப் புத்திமான்களென்றெண்ணிப் பேசுகிறேன். ஆனதால் நான் சொல்லுகிறதை நீங்களே நிதானித்துப்பாருங்கள்.

௰௬ நாம் ஆசீர்வதிக்கிற ஆசீர்வாதத்தின் பாத்திரம் கிறிஸ்துவினுடைய இரத்தத்துடனே ஐக்கியப்படுத்துகிறதல்லவோ. நாம் பிட்கிற அப்பம் கிறிஸ்துவினுடைய சரீரத்துடனே ஐக்கியப்படுத்துகிறதல்லவா,

௰௭ ஒரே அப்பமிருக்க, நாமெல்லாரும் அந்த ஒரே அப்பத்திற்குப் பங்காளிகளானபடியினாலே, அநேகரான நாம் ஒரே சரீரமாயிருக்கிறோமே.

௰௮ புறம்பான இஸ்ரவேலைப்பாருங்கள், பலிகளைப் போசிக்கிறவர்கள் பலிபீடத்தோடே ஐக்கியமாயிருக்கிறார்களல்லவோ.

௰௯ இதினாலே என்ன சொல்லுகிறேன். விக்கிரகம் ஒருபொருளென்று சொல்லுகிறேனோ. விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டது ஒருபொருளென்று சொல்லுகிறேனோ.

௨௰ இல்லையே அஞ்ஞானிகள் பலியிடுகிறவைகளைப் பராபரனுக்கல்ல பேய்களுக்குப் பலியிடுகிறார்களென்று சொல்லுகிறேன். நீங்கள் பேய்களோடே ஐக்கியமாயிருக்கவேண்டுமென்று நான் விரும்புகிறதில்லை.

௨௧ நீங்கள் கர்த்தருடைய பாத்திரத்திலும் பேய்களுடைய பாத்திரத்திலும் பானம்பண்ணக்கூடாதே நீங்கள் கர்த்தருடைய போசனபந்திக்கும் பேய்களுடைய போசனபந்திக்கும் பங்காளிகளாயிருக்கக்கூடாதே,

௨௨ அல்லது நாம் கர்த்தருக்குக் கோபத்தை மூட்டலாமா. அவரிலும் நாம் பெலவான்களாயிருக்கிறோமா.

௨௩ எல்லாப் பதார்த்தங்களையும் நான் அனுபவிக்கலாம், ஆகிலும் எல்லாம் பிரயோசனமாயிருக்கிறதில்லை. எல்லாப் பதார்த்தங்களையும் நான் அனுபவிக்கலாம் ஆகிலும் எல்லாம் எழுப்புதற்கேதுவாயிராது.

௨௪ எவனுந் தனக்காகமாத்திரம் பிரயோசனத்தைத் தேடாமல் மற்றவனுக்காகவும் அப்படித் தேடக்கடவன்.

௨௫ பூமியும் அதிலுள்ள நிறைவும் யாவும் கர்த்தருடையதென்பதினபடி,

உரு உங்கள் மனது அடைந்த அறிவினாலே நீங்கள் ஒன்றையும் விசாரியாமல் கடையிலே விற்கப்படுகிற எதையும் வாங்கிப் புசியுங்கள்.

உஎ அல்லாமலும் அவிசுவாசிகளில் ஒருவன் உங்களைப் போசனத்துக்கு அழைக்கும்பொழுது, நீங்கள் போக மனதுண்டானால், உங்கள் மனது அடைந்த அறிவினாலே ஒன்றையும் விசாரியாமல், உங்கள் முன் வைக்கப்பட்ட எதையும் புசியுங்கள்.

உஅ அப்பொழுது இது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டதென்று ஒருவன் உங்களுக்குச் சொன்னானால், அப்படி அறிவித்தவனிமித்தமும் மனதறிவினிமித்தமும் புசியாதிருங்கள். பூமியும் அதிலுள்ள நிறைவும் யாவும் கர்த்தருடையதே.

உகூ உன்னுடைய மனதைக் குறித்தல்ல மற்றொருவனுடைய மனதைக் குறித்தே சொல்லுகிறேன். ஆகிலும் என்னுடைய சுயாதீனம் மற்றொருவனுடைய மனதினிமித்தம் குற்றமாய் எண்ணப்பட வேண்டுவதென்ன.

௩௰ மேலும் நான் அதைத் தோத்திரிப்புடனே அனுபவித்தால், தோத்திரித்தனுபவிக்கிறதற்காக நான் தூஷணிக்கப்பட வேண்டுவதென்ன.

௩க அதினாலே தானே நீங்கள் புசித்தாலும் பானம்பண்ணினாலும் எதைச் செய்தாலும் சகலத்தையும் பராபரனுக்குப் புகழ்ச்சியுண்டாகச் செய்யுங்கள்.

௩உ நான் என்னுடைய (மாத்திரம்) பிரயோசனத்தைத் தேடாமல், அநேகரும் இரட்சிக்கப்படும்படிக்கு அவர்களுக்காகவும் பிரயோசனத்தைத் தேடிக்கொண்டு, எவ்விதத்திலும் எல்லாருக்கும் பிரியமாய் நடக்கிறதுபோல,

௩௩ நீங்களும் யூதருக்கும் கிரேக்கருக்கும் பராபரனுடைய சபைக்கும் விசனமுண்டாகாதபடிக்கு எச்சரிக்கையாயிருப்பீர்களாக.

## ௰க. அதிகாரம்.

[(க) சபைகூடியிருக்கிறபொழுது புருஷரும் ஸ்திரிகளும் நல்லொழுக்கங்களின்படி செய்யவேண்டுமென்றும், (௰எ) கர்த்தருடைய இராப்போசனத்தைத் தகாதவிதமாய்ச் செய்யக்கூடாதென்றும் சொல்லியது.]

நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறது போல நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயிருக்கக்கடவீர்கள்.

உ சகோதரரே, நீங்கள் எல்லாவிதத்திலும் என்னை நினைத்துக்கொண்டு, நானுங்களுக்கு ஒப்புவித்த முறைமைகளின்படியே அவைகளைக் கைக்கொண்டிருக்கிறதற்காக உங்களைப் புகழுகிறேன்.

௩ இப்பொழுது நீங்கள் என்ன அறியவேண்டுமென்றிருக்கிறேனென்றால், கிறிஸ்து புருஷனெவனுக்குந் தலையாயிருக்கிறார். புருஷன் மனைவிக்குத் தலையாயிருக்கிறான். பராபரன் கிறிஸ்துவுக்குத் தலையாயிருக்கிறார்.

௪ எந்தப் புருஷனொருவன் செபம்பண்ணிலாவது தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறபொழுது தன் தலையை மூடிக்கொண்டிருந்தால், தன் தலையைக் கனவீனப்படுத்துவான்.

ரு ஸ்திரியானவள் செபம்பண்ணிலாவது தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறபொழுது, தன் தலையை மூடிக்கொள்ளாமலிருந்தால், தன் தலையைக் கனவீனப்படுத்துவாள். அவள் சிரைக்கப்பட்டதுபோலிருக்குமே.

௬ ஆனதால் ஸ்திரியானவள் மூடிக்கொள்ளாவிட்டால் மயிரைக் கத்தரித்துப்போடக்கடவள். அப்படி மயிர் கத்தரிக்கப்படுகிறது சிரைக்கப்படுகிறது ஸ்திரீக்கு வெட்கமானபடியினாலே, மூடிக்கொண்டிருக்கக்கடவள்.

எ புருஷனானவன் பராபரனுடைய சாயலும் மகிமையுமாயிருக்கிறபடியால், தன் தலையை மூடிக்கொள்ளவேண்டுவதல்ல.

அ மேலும் புருஷன் ஸ்திரியினாலே தோன்றினவனல்ல ஸ்திரியே புருஷனாலே தோன்றினவள்.

௯ அல்லாமலும் புருஷன் ஸ்திரீக்காகச் சிருஷ்டிக்கப்பட்டவனல்ல, ஸ்திரீயே புருஷனுக்காகச் சிருஷ்டிக்கப்பட்டவள்,

௰ ஆகையால் ஸ்திரியானவள் புருஷனுடைய மகிமையாயிருக்கிறது மல்லாமல், தூதர்களினிமித்தம் அவள் தன் தலையின் மேல் மூடிவைக்கவேண்டும்.

௰க ஸ்திரீ புருஷனாலிருக்கிறதுபோலப் புருஷனும் ஸ்திரியினாலே இருக்கிறதால்.

௰உ கர்த்தருடைய முறைமையின்படி ஸ்திரியில்லாமற் புருஷனுமில்லை. புருஷனில்லாமல் ஸ்திரியுமில்லை. சகலமும் பராபரனாலேயிருக்கின்றது.

௰௩ ஸ்திரியானவள் பராபரனைத் தொழுது செபம்பண்ணுகையில், தன் தலையை மூடிக்கொள்ளாமலிருக்கிறது இலக்ஷணமாயிருக்குமோ என்று, உங்களுக்குள் நீங்களே யெண்ணிக்கொள்ளுங்கள்.

௰௪ அல்லது புருஷன் மயிரை நீளமாய் வளர்த்தால், அது அவனுக்கு ஈனமாயிருக்கின்றதென்றும்,

௰ரு ஸ்திரீ தனக்கு முக்காடாக மயிர்கொடுக்கப்பட்டிருக்கிறபடியினாலே, தன் மயிரை நீளமாய் வளர்த்தால், அது அவளுக்கு மேன்மையாயிருக்கிறதென்றும் சுபாவமே உங்களுக்குப் போதிக்கிறதில்லையோ.

௰௬ ஆகிலும் (இதைக் குறித்து) ஒருவன் வாக்குவாதஞ் செய்யப்பிரியனாயிருந்தால், எங்களுக்கும் பராபரனுடைய சபைகளுக்

டும் அப்படிப்பட்ட வழக்கமில்லையென்றறியக்கடவன்.

௰௭ பின்னும் நான் அறிவிக்கிறதென்னவென்றால், நீங்கள் கூடிவருதல் அதிக நன்மைக்கல்ல, அதிக தின்மைக்கே யேதுவாயிருக்கின்றது. அதைக்குறித்து நான் உங்களைப் புகழக்கூடாது.

௰௮ என்னவென்றால், முதலாவது நீங்கள் சபையிலே கூடிவந்திருக்கும்பொழுது உங்களில் பிரிவினைகளுண்டென்று கேள்விப்படுகிறேன்.

௰௯ பாத்திரவான்கள் வெளியாகும்படிக்கு, மார்க்கபேதங்களும் உங்களிலுண்டாயிருக்கவேண்டியதால், நான் (கேள்விப்பட்டவைகளில்) சில நம்புகிறேன்.

௨௰ ஆனதால் நீங்கள் ஏகமாய்க்கூடிவருகிறகாலத்திலே, ஒருவன் பசியாயிருக்கவும் ஒருவன் திருத்தியடையவுந் தக்கதாக, முன்னே அவனவன் தன சொந்த போசனத்தைப் பண்ணுவான்.

௨௧ அப்படிச்செய்கிறது கர்த்தருடைய இராப்போசனம் பண்ணுதலல்லவே,

௨௨ அன்றியும் போசனபானம் பண்ணுகிறதற்கு உங்களுக்கு வீடுகளில்லையா. அல்லது பராபரனுடைய சபையினவிட்டை யசட்டைபண்ணி, போசனமில்லாதவர்களை வெட்கப்படுத்துகிறீர்களா, உங்களைக்குறித்து நான் என்னசெல்லலாம் உங்களைப் புகழலாமா, அதைக்குறித்து நான் உங்களைப் புகழக்கூடாது.

௨௩ நானுங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்தராலே யடைந்தேன். என்னவென்றால் கர்த்தராகிய இயேசு தம்மைக்காட்டிக்கொடுக்கப்பட்ட அன்றிராத்திரியிலே அப்பத்தையெடுத்துக்கொண்டு, தோத்திரம்பண்ணி, அதைப்பிட்டு நீங்கள் வாங்கிப்புசியுங்கள்,

௨௪ இது உங்களுக்காகப் பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கின்றது. என்னை நினைத்துக்கொள்ளும்படிக்கு இப்படிச்செய்யுங்களென்றார்.

௨௫ அந்தப்படியே அவர் இராப்போசனம்பண்ணினபின்பு பாத்திரத்தையு மெடுத்துக்கொண்டு, இந்தப்பாத்திரம் என்னுடைய இரத்தத்திலே புதிய உடம்படிக்கையாயிருக்கின்றது. நீங்கள் பானம்பண்ணும்பொழுதெல்லாம் என்னை நினைத்துக் கொள்ளும்படிக்கு இப்படிச்செய்யுங்களென்றார்.

௨௬ ஆகையால் கர்த்தர்வருமளவும் நீங்கள் இந்த அப்பத்தைப்புசித்து இந்தப்பாத்திரத்திற்பானம் பண்ணும்பொழுதெல்லாம் அவருடையமரணத்தைக் கூறுகிறீர்கள்.

௨௭ இப்படியிருக்க, எவனாகிலுங் கர்த்தருடைய அப்பத்தையாவது பாத்திரத்தையாவது அபாத்திரமானவிதமாய்ப்போசனபானம்பண்ணினால் அவன் கர்த்தருடைய சரீரத்திற்கும் இரத்தத்திற்குங் குற்றமுள்ளவனாயிருப்பான்.

௨௮ அந்தப்படி அபாத்திரமானவிதமாய் ஏதை போசனபானம் பண்ணுகிறவன் கர்த்தருடைய சரீரத்தை விசேஷித்துக்கொள்ளாமல், தனக்கு ஆக்கினைவரும்படி போசனபானம் பண்ணுகிறபடியினாலே,

௨௯ எவனும் அந்த தன்னைத்தானே சோதித்தறிந்து, பின்பு இந்த அப்பத்தைப் பொசித்து, இந்தப்பாத்திரத்திலே பானம் பண்ணக்கடவன்.

௩௰ இந்தக் குற்றத்தினாலே உங்களில் அநேகர் பலவீனருமாய் வியாதியுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். வெகுபேரும் நித்திரைபோயிருக்கிறார்கள்.

௩௧ நம்மைநாமே வகையறுத்துப்பார்த்தால், நாம அப்படித் தண்டிக்கப்படுவதில்லை.

௩௨ நாம தண்டிக்கப்பட்டிருக்க, உலகத்தோடே நித்தியஆக்கினைக்காளாகப்படாதபடிக்குக் கர்த்தராலே தண்டிக்கப்படுகிறோம்.

௩௩ ஆகையால் என்சகோதரரே, நீங்கள் போசனம்பண்ணக்கூடிவரும்பொழுது ஒருவருக்காக ஒருவர் காத்திருங்கள்.

௩௪ ஒருவனுக்குப் பசியிருந்தால், நீங்கள் ஆக்கினைக்கேதுவாகக் கூடிவாராதபடிக்கு, அவன் வீட்டிலே சாப்பிடக்கடவன். மற்றக்காரியங்களை நான் வரும்பொழுது திட்டம்பண்ணுவேன்.

## ௰௨. அதிகாரம்.

[தேவ ஆவியின்வரங்கள் பலவிதமாயிருந்தும். எல்லாரும் ஒருமைப்பட்டவர்களாயப்பணிவிடைசெய்யவேண்டுமென்று காட்டியது.]

மேலுஞ் சகோதரரே, ஆவியால்வருகிற வரங்களைக்குறித்து நீங்கள் அறிவில்லாதவர்களாயிருக்க எனக்கு மனதில்லை,

௨ (முன்னே) நீங்கள் அஞ்ஞானிகளாய மற்றவர்களால் நடத்தப்பட்ட பிரகாரமாகவே ஊமையானவிக்கிரகங்களைச் சேர்ந்திருந்தீர்களென்று உங்களுக்குத் தெரிந்திருக்கின்றது.

௩ ஆதலால் நான் உங்களுக்கு அறிவிக்கிறதென்னவென்றால், பராபரனுடைய ஆவியினாலே பேசுகிற எவனும் இயேசுவைச் சபிக்கப்பட்டவனென்று சொல்லமாட்டான். அன்றியும் பரிசுத்த ஆவியினாலேயல்லாமல், ஒருவனும் இயேசுவைக் கர்த்தரென்றுஞ் சொல்லமாட்டான்.

௪ வரங்களில் வித்தியாசங்களுண்டு,

௫ ஆவி ஒருவரே. ஊழியங்களிலேயும் வித்தியாசங்களுண்டு, கர்த்தர் ஒருவரே.

௬ உள்ளான கிரியைகளிலேயும் வித்தியாசங்களுண்டு. எல்லாவற்றையும் எல்லாருக்குள்ளும் நடப்பிக்கிற பராபரன் ஒருவரே.

௭ ஆவியின் வரங்கள் பிரயோசனமுண்டாகும்படியே அவனவனுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.

௮ எப்படியெனில் ஒருவனுக்கு ஆவியினாலே ஞானத்தைப் போதித்தல் கொடுக்கப்பட்டது. வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே கல்வியோடே போதித்தலுண்டாயிற்று.

௯ வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே விசுவாசமுண்டாயிற்று. வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே குணமாக்கும் வரங்களுண்டாயின.

௰ வேறொருவனுக்குப் பலத்த அற்புதங்களைச் செய்கிறவைகளும், வேறொருவனுக்குத் தீர்க்கதரிசனஞ் சொல்லுதலும், வேறொருவனுக்கு ஆவிகளை வகையறுக்குதலும், வேறொருவனுக்கு அந்நிய பாஷைகளைப் பேசுதலும், வேறொருவனுக்கு அந்நிய பாஷைகளை வியாக்கியானம் பண்ணுதலும், அளிக்கப்பட்டிருக்கின்றது.

௰௧ இந்த வரங்களையெல்லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்பித்துத் தமது சித்தத்தின்படி அவனவனுக்குத் தகுதியானவைகளைப் பகிர்ந்து கொடுக்கிறார்.

௰௨ அதெப்படியெனில், சரீரம் ஒன்றாய் அநேகம் அவயவங்களுள்ளது. ஒரே சரீரத்தின் அவயவங்களெல்லாம் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றாயிருக்கின்றது. அதுபோலக் கிறிஸ்துவுமிருக்கிறார்.

௰௩ நாம் யூதராயிருந்தாலுங் கிரேக்கராயிருந்தாலும் அடிமைகளாயிருந்தாலுஞ் சுயாதீனராயிருந்தாலும், எல்லாரும் ஒரே சரீரமாக ஒரே ஆவியினாலே ஞானஸ்நானம் பண்ணப்பட்டு, எல்லாரும் ஒரே ஆவியிற் பானம் பண்ணும்படி செய்யப்பட்டோம்.

௰௪ சரீரமும் ஒரே அவயவமுள்ளதாயிராமல், அநேக அவயவங்களுள்ளதாயிருக்கின்றது.

௰௫ காலானது, நான் கையாயிராதபடியினாலே, நான் சரீரத்தின் அவயவமல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் அவயவமல்லாமற்போகுமா.

௰௬ காதானது, நான் கண்ணாயிராதபடியினாலே, நான் சரீரத்தின் அவயவமல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் அவயவமல்லாமற்போகுமா.

௰௭ சரீர முழுவதுங் கண்ணானால், செவியெங்கேயிருக்கும். அது முழுவதுஞ் செவியானால் மோந்தல் எங்கேயுண்டாயிருக்கும்.

௰௮ ஆனதால் பராபரன் தமது சித்தத்தின்படி அவயவங்களை ஒன்றொன்றாகச் சரீரத்திலே வைத்தார்.

௰௯ அவையெல்லாம் ஒரே அவயவமாயிருந்தால் சரீரம் எப்படியிருக்கும்.

௨௰ ஆனதால், அவயவங்கள் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றே.

௨௰௧ அன்றியுங் கண்ணானது கையுடனே நீ எனக்கு வேண்டுவதில்லையென்றும், தலையானது கால்களுடனே, நீங்கள் எனக்கு வேண்டுவதில்லையென்றுஞ் சொல்லமாட்டாது.

௨௰௨ அதைத்தவிர, சரீர அவயவங்களிற் பலவீனமாயக் காணப்படுகிறவைகளே மிகவும் வேண்டியவைகளாயிருக்கின்றன.

௨௰௩ எல்லாமலுஞ் சரீர அவயவங்களிற் கனவீனமாயக் காணப்படுகிறவைகளுக்கே அதிக கனத்தைக் கொடுக்கிறோம். இவ்விதமாய் நம்மிடத்தில் அவலட்சணமானவைகளுக்கே அதிக இலட்சணமுண்டாயிருக்கின்றது.

௨௰௪ இலட்சணமானவைகளுக்கு அப்படிச் செய்யவேண்டுவதில்லை. ஆனதால் சரீரத்திலே பிரிவினையுண்டாயிராமல், அவயவங்கள் ஒன்றுக்கொன்று ஒரேவிதமான கவலையாயிருக்கும்படிக்கு,

௨௰௫ பராபரன் கனத்திற் குறைவுள்ளதற்கு அதிக கனத்தைக் கொடுத்து, இப்படிச் சரீரத்தையேற்படுத்தினார்.

௨௰௬ ஆனதினாலே ஒரு அவயவம் பாடுபடும்பொழுது மற்ற அவயவங்களெல்லாங் கூடப் பாடுபடும். ஒரு அவயவம் மகிமைப்படும்பொழுது மற்ற அவயவங்களெல்லாங் கூடச் சந்தோஷப்படும்.

௨௰௭ நீங்களே கிறிஸ்துவின் சரீரமாயுந் தனித்தனியான அவயவங்களாயுமிருக்கிறீர்கள்.

௨௰௮ அவர்களிற் சிலரைப் பராபரன் சபையிலே முதலாவது அப்போஸ்தலராகவும் இரண்டாவது தீர்க்கதரிசிகளாகவும் மூன்றாவது போதகராகவும் பின்பு வல்லமைகளையும் பின்பு குணமாக்கும் வரங்களையும் உதவிசெய்தலையும் ஆளுகைகளையும் அந்நிய பாஷைகளையும் ஏற்படுத்தினார்.

௨௰௯ எல்லாரும் அப்போஸ்தலராயிருக்கிறார்களா. எல்லாருந் தீர்க்கதரிசிகளாயிருக்கிறார்களா. எல்லாரும் போதகராயிருக்கிறார்களா. எல்லாரும் வல்லமைகளைச் செய்கிறவர்களா.

௩௰ எல்லாருங் குணமாக்கும் வரங்களுள்ளவர்களா. எல்லாரும் அந்நிய பாஷைகளைப் பேசுகிறார்களா. எல்லாரும் வியாக்கியானம் பண்ணுகிறார்களா.

௩௰௧ அப்படியிருக்க, நீங்கள் அதிக நன்மையானவர்களைத் தேடிக்கொள்ளுங்கள். அதற்காக மிகவும் அதிக மேன்மையான வழியை உங்களுக்குக் காண்பிக்கிறேன்.

## ௰௩. அதிகாரம்.

[எல்லாவரங்களிலும் அன்பேபிரதானமான தென்றுகாட்டியது.]

௧ நான்மனிதர் பாஷைகளையுந் தூதர்பாஷைகளையும்பேசினாலும், அன்பு எனக்கிராவிட்டால், சத்தமிடுகிறவெண்கலம்போலவும் ஓசையிடுகிறகைத்தாளத்தைப்போலவுமிருப்பேன்.

௨ நான் தீர்க்கதரிசனங்களையடைந்தாலுஞ்சகல இரகசியங்களையுஞ் சகலகல்வியையும் அறிந்தாலும், மலைகளைப்பேர்க்கத்தக்கதாக மிகுந்த விசுவாசமுள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் வீணாயிருப்பேன்.

௩ மேலும் எனக்குண்டான ஆஸ்திகளையாவையும் ஏழைகளுக்குக்கொடுத்தாலுஞ் சுட்டெரிக்கப்படுவதற்கு என்சரீரத்தைக் கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் எனக்கு பிரயோசனமவாராது.

௪ அன்புநீடியசாந்தமுந்தயவுமுள்ளது. அன்புக்குப் பொறாமையில்லை. அன்புதன்னைப்புகழாது. இறுமாப்பாயிராது. ஆகாத்தைச்செய்யாது.

௫ தன்பொழிவைப்பாராது. உக்கிரத்தையடையாது. பொல்லாங்கானதைச் சிந்தியாது.

௬ அநியாயத்திற் சந்தோஷப்படாமற் சத்தியத்திற் சந்தோஷப்படுகின்றது. அது சகலத்தையும் மூடுகின்றது.

௭ சகலத்தையும்விசுவாசிக்கின்றது. சகலத்தையுந்நம்புகின்றது. சகலத்தையுஞ் சகிக்கின்றது.

௮ தீர்க்கதரிசனஞ்சொல்லுதலொழிந்துபோம், அந்நிய பாஷைகளும் ஓய்ந்துபோம். கல்வியும் ஒழிந்துபோம். அன்பே ஒருக்காலும் ஒழியாது.

௯ அல்லாமலும் நம்முடைய அறிவுகுறைவுள்ளது, நாம்தீர்க்கதரிசனஞ்சொல்லுதலுங்குறைவுள்ளது.

௰ நிறைவானதுவரும்பொழுதுகுறைவானது ஒழிந்துபோம்.

௰௧ நான் குழந்தையாயிருந்தபொழுது குழந்தையைப்போலப்பேசினேன். குழந்தையைப்போலச்சிந்தித்தேன் குழந்தையைப்போலயோசித்தேன். நான்புருஷனானபொழுது குழந்தைக்கேற்றவைகளை ஒழித்துவிட்டேன்.

௰௨ இப்பொழுது கண்ணாடியிலேநிழலாயப்பார்க்கிறோம். அப்பொழுது முகமுகமாகவேபார்ப்போம். இப்பொழுது நான் குறைந்தஅறிவுள்ளவன். அப்பொழுது நான் அறியப்பட்டபடி அறிந்துகொள்வேன்.

௰௩ ஆனதால இப்பொழுது விசுவாசம், நம்பிக்கை, அன்பு, இம்மூன்றும் நிற்கின்றன். இவைகளில் அன்பேபெரிதாயிருக்கின்றது.

## ௰௪. அதிகாரம்.

[(௧) சபைக்கு நன்மையுண்டாக அந்நிய பாஷைகளைப்பேசுகிறதிலுந் தேவசுத்தத்தைத்தெளிவாய்ப்போதிக்கிறது அதிகப்பிரயோசனமுள்ளதென்றும், (௨௬) சபையிலே சகலத்தையும் ஒழுங்காய்ச்செய்யவேண்டுமென்றும், (௩௪) ஸ்திரிகள் தேவாலயத்திலேபோதிக்கக்கூடாதென்றுங்காட்டியது.]

௧ அன்பையே அதிகமாய்த் தொடருங்கள். ஆவிக்குரியவரங்களையுந்நாடுங்கள். (அவைகளில்) தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவரத்தையேவிரும்புங்கள்.

௨ என்னத்தினாலெனில், அந்நியபாஷையிற்பேசுகிறவன்மனிதருக்கல்ல, பராபரனுக்குத்தெரியப்பேசுகிறான். ஆவியினாலேஅவன் இரகசியங்களைப்பேசிக்கொள்ளுகிறபடியால் ஒருவனும் அவன்பேசுகிறதையறியமாட்டானே.

௩ தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவனோ மனிதருக்கு எழுப்புதலும் புத்தியும் ஆறுதலுமுண்டாகத்தக்கதாகப்பேசுகிறான்.

௪ அந்நியபாஷையிற் பேசுகிறவன்தன்னைத்தானேயெழுப்புதலுண்டாக்குகிறான் தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவனோ சபைக்கு எழுப்புதலுண்டாக்குகிறான்.

௫ நீங்களெல்லாரும் அந்நியபாஷைகளைப் பேசவிரும்புகிறேன். ஆகிலும் அந்நியபாஷைகளிற்பேசுகிறவன் சபைக்கு எழுப்புதலுண்டாகும்படிக்கு அதின் அருத்தத்தையுஞ் சொல்லாவிட்டால், தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவன் அவனிலும்பெரியவனாயிருப்பதினாலே, நீங்கள் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவர்களாகவேண்டுமென்று அதிகமாய்விரும்புகிறேன்.

௬ அந்தப்படிசகோதரரே, நானுங்களிடத்தில்வந்து, உங்களுக்கு இரகசியங்களை வெளிப்படுத்தலுக்காவது, உயர்ந்த அறிவுண்டாக்குதற்காவது, தீர்க்கதரிசனத்தையறிதற்காவது, மற்றப்போதகமுண்டாகுதற்காவது, ஏதுவானதைச் சொன்னாலும், அந்நியபாஷைகளிற்பேசினாலே உங்களுக்கு என்னாலேயென்னப்பிரயோசனம்வரும்.

௭ சத்தமிடுகிற உயிரில்லாத வாத்தியங்களுங் குழலாகிலுஞ் சுரமண்டலமாகிலுஞ் சட்டமான தொனிகளினாலேவித்தியாசங்காட்டாவிட்டால், ஊதினது, அல்லது கொட்டினது, இன்னதென்று எப்படித்தெரியும்.

௮ அந்தப்படி எக்காளமானது சட்டமில்லாததொனியையிட்டால், எவன்யுத்தத்திற்கு எத்தனம்பண்ணுவான்.

௯ அதுபோல நீங்களுந்தெளிவானபேச்சை நாவினாலேசொனியாவிட்டால், சொல்லப்பட்டதின்னதென்று எப்படித்தெரியும். ஆகாசத்திலேசொல்லுகிறவர்களாயிருப்பீர்களே.

௰ உலகத்திலே யித்தனைவிதமான பாஷைகளிருக்கின்றன.

௰௧ [illegible] கருத்தில்லாத்தவைகளல்ல. அதினால நான பாஷையினகருத்தை அறியாமலிருந்தால், பேசுகிறவனுக்கு அந்நியனாயிருப்பேன், பேசுகிறவனும் எனக்கு அந்நியனாயிருப்பான.

௰௨ ஆனதால, நீங்களும ஆவிக்குரியவரங்களை நாடுகிறவர்களாயிருக்க, சபையாருக்கு எழுப்புதலுண்டாகிறவைகளையே அதிகமாய்ப்பெற்றுக்கொள்ளப்பாருங்கள.

௰௩ அந்தப்படி அந்நியபாஷையிற்பேசுகிறவன அதினகருத்தையுஞ்சொல்லத்தக்கதாக விண்ணப்பம்பண்ணக்கடவன்.

௰௪ என்னத்தினாலெனில், நான் அந்நியபாஷையிலேவிண்ணப்பம்பண்ணினால, என ஆவிவிண்ணப்பம்பண்ணுமேயன்றி என்னுடையகருத்து (மற்றவர்களுக்கு) பலனற்றதாயிருக்கும.

௰௫ ஆனதால நான என்ன செய்யவேண்டும ஆவியாலேநான விண்ணப்பம்பண்ணவேண்டும அதினகருத்துமவிளங்க விண்ணப்பம்பண்ணவேண்டும நான ஆவியாலே பாடவேண்டும. அதினகருத்தும விளங்கப் பாடவேண்டும.

௰௬ இல்லாவிட்டால, நீ ஆவியினாலே ஸ்தோத்திரஞ்செய்யும்பொழுது, கல்லாதகூட்டத்தாரிடத்திலிருக்கிறவன உன்பேச்சையறியாதபடியால உன்னுடையஸ்தோத்திரத்திற்கு ஆமென்றெப்படிச்சொல்லுவான.

௰௭ நீ நன்றாயஸ்தோத்திரிப்பாய. மற்றவன எழுப்பப்படமாட்டானே.

௰௮ உங்களெல்லாரிலும நான அதிகமாய்ப்பாஷைகளைப்பேசிக்கொண்டு, என தேவனைஸ்தோத்தரிக்கிறேன.

௰௯ அப்படியிருந்தும நான்சபையிலேஅந்நியபாஷையிற் பதினாயிரம்வார்த்தைகளைப்பேசுகிறதிலும மற்றவர்களுக்குப்பிரயோசனமாயஉபதேசஞ்சொல்லும்படிக்கு என கருத்துவிளங்கத்தக்கதாக ஐந்துவார்த்தைகளைமாத்திரம்பேசவே அதிகமாய விரும்புகிறேன்.

௨௰ சகோதரரே, நீங்களபுத்திக்குக்குழந்தைகளாயிராமல துற்குணத்திற்குக் குழந்தைகளைப்போலிருங்கள. புத்தியிலேதேறினவர்களாக.

௨௰௧ [illegible] பாஷைக்காரராலும அந்நிய உதடுகளினாலும இந்தஜனங்களுடனேபேசுவேன. அப்படியும அவர்கள எனக்குச்செவிகொடுப்பதில்லையென்று கர்த்தர்சொல்லுகிறாரென்று வேதத்திலெழுதியிருக்கிறதே.

௨௰௨ ஆனபடியினாலே அந்நியபாஷைகள விசுவாசிகளுக்கல்ல அவிசுவாசிகளுக்கடையாளமாயிருக்கின்றன். தீர்க்கதரிசனங்காட்டுதல் அவிசுவாசிகளுக்கல்ல, விசுவாசிகளுக்கடையாளமாயிருக்கின்றது.

௨௰௩ அப்படியிருக்க, சபையாரெல்லாரும ஏகமாயக்கூடிவந்து எல்லாரும அந்நியபாஷைகளிற் பேசிக்கொண்டால, கல்லாதவர்கள அல்லது அவிசுவாசிகள உள்ளேபிரவேசிக்கும்பொழுது நீங்கள பித்தம்பிடித்தவர்களென்பார்களல்லவோ.

௨௰௪ எல்லாருந்தீர்க்கதரிசனங்காட்டினால், அவிசுவாசி, அல்லதுகல்லாதவொருவன உள்ளேபிரவேசிக்கும்பொழுது அவன எல்லாராலுங்கண்டிக்கப்பட்டும, எல்லாராலுமநிதானிக்கப்பட்டுமிருப்பான்.

௨௰௫ அவனுடைய இருதயத்தின் அந்தரங்கங்களும வெளியரங்கமாம். இவ்விதமாய் அவன்முகங்கீழாகவிழுந்து பராபரனைப் பணிந்துகொண்டு பராபரன்மெய்யாய் உங்களுக்குள்ளேயிருக்கிறாரென்று அறிக்கையிடுவான.

௨௰௬ அப்படிக்கன்றி, சகோதரரே, நீங்களகூடியிருக்கிறபொழுது உங்களிலொருவன சங்கீதம்பாடவும ஒருவனபோதகம்பண்ணவும ஒருவன அந்நியபாஷைபேசவும ஒருவன இரகசியத்தைவெளிப்படுத்தவும் ஒருவன வியாக்கியானம்பண்ணவும் வேண்டிவந்தால். அவையெல்லாம எழுப்புதலுண்டாகத்தக்கதாக நடக்கக்கடவது.

௨௰௭ அந்தப்படிஒருவன்அந்நியபாஷையிலே பேசவேண்டுமானால் அவன் இரண்டு அல்லதுமிகுதியானால்மூன்று (வாக்கியங்களை)மாத்திரம்வெவ்வேறாகப்பேசவும், ஒருவன வியாக்கியானமபண்ணவும வேண்டும்.

௨௰௮ வியாக்கியானம் பண்ணுகிறவனில்லாவிட்டால சபையிலேபேசாமல தனக்கும் பராபரனுக்குந் தெரியப்பேசக்கடவன.

௨௰௯ தீர்க்கதரிசனங்காட்டுகிற இரண்டுபேர் அல்லது மூன்றுபேர்பேசலாம். மற்றவர்கள நிதானிக்கக்கடவர்கள.

௩௰ அப்பொழுது உளுக்கார்ந்திருக்கிற மற்றொருவனுக்கு ஏதாகிலும் வெளிப்படுத்தப்பட்டால் முந்தினவன பேசாமலிருக்கக்கடவன.

௩௰௧ எல்லாருங்கற்கிறதற்கும் எல்லாரும் ஆறுதலையடைகிறதற்கும நீங்களனைவரும ஒருவரொருவராக தீர்க்கதரிசனங் காட்டலாமே.

௩௰௨ தீர்க்கதரிசனங் காட்டுகிறவர்களுக்குண்டான ஆவிக்குரியவரங்கள அந்த [illegible] அவர்களுடைய அதிகாரத்திற்குள்ளேயிருக்கும.

௩௰௩ பராபரனுங்கலக்கத்திற் பிரியமானவரல்ல சமாதானத்திற் பிரியமானவராயிரு[illegible]

க்கிறாரே, பரிசுத்தவான்களுடைய எல்லா சபைகளிலேயும் நடக்கிறதுபோல,

௩௪ உங்கள் சபைகளிலேயும் பெண்பிள்ளைகள் பேசாமலிருக்கக்கடவர்கள். பேசும்படிக்கு அவர்களுக்கு உத்தரவில்லை. அவர்கள் கீழ்ப்படிய வேணும்.

௩௫ அப்படி வேதமுஞ்சொல்லுகின்றது அவர்கள் ஒருகாரியத்தைக் கற்றுக்கொள்ள விரும்பினால் வீட்டிலே தங்கள் புருஷரிடத்திலே விசாரிக்கக்கடவர்கள். ஸ்திரிகள் சபையிலே பேசுகிறது அவலட்சணமாயிருக்கிறதே.

௩௬ இல்லது பராபருடைய வசனம் உங்களிடத்திலிருந்தா புறப்பட்டது. அல்லது அது உங்களிடத்திற்கு மாத்திரமாவந்தது.

௩௭ ஒருவன் தன்னைத் தீர்க்கதரிசி அல்லது ஆவியைப்பெற்றவனென்றெண்ணினால், நானுங்களுக்கு எழுதுகிறவைகள் கர்த்தருடைய கற்பனைகளாயிருக்கின்றனவென்றறிக்கையிடக்கடவன்.

௩௮ ஒருவன் அறியாமற்போனால், அவன் அறியாமற்போகட்டும்.

௩௯ ஆகையால் சகோதரரே, தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவரத்தைத் தேடிக்கொள்வீர்களாக. அந்நியபாஷைகளைப் பேசுகிறதற்குத் தடைபண்ணாதிருங்கள்.

௪௦ சகலமும் நல்லொழுக்கமாயுஞ் சட்டத்தின்படியேயும் நடக்கக்கடவது.

## யரு. அதிகாரம்.

[(க) பவுல்தான் அப்போஸ்தலனாகச்செய்த ஊழியத்திற்காகத் தேவகிருபையைப் புகழுகிறனென்றும், (யஉ) விசுவாசிகளாயமரித்தோர் மெய்யாய் உயிரோடெழுந்திருப்பார்களென்றும், (௩௫) அவர்கள் இன்னவிதமாய் எழுப்பப்படுவார்களென்றும், (௫௰) மரித்தோர் உயிரோடெழுந்திருக்கும் நாளமகாமகிமையுள்ளதாயிருக்குமென்றுங் காட்டியது.]

௧ அன்றியுஞ்சகோதரரே, நானுங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேனே, நீங்களும் அதையேற்றுக்கொண்டு அதிலே நிலைநிற்கிறீர்களே.

௨ அல்லாமலும் நீங்கள் வீணாய் விசுவாசியாமல் நான் உங்களுக்குப் பிரசங்கித்தவிதமாய் அதைக்கைக்கொண்டிருந்தால், இரட்சிப்பு உங்களுக்குக் கிடைக்குமே. அந்தச்சுவிசேஷத்தை நான் உங்களுக்குமறுபடியும் அறிவிக்கிறேன்.

௩ நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததுமென்னவென்றால் கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்ததும்,

௪ வேதவாக்கியங்களின்படி அடக்கம்பண்ணப்பட்டும், மூன்றாம் நாளில் எழுந்துமிருக்கிறார்.

௫ கேபாவுக்கும் பின்பு பன்னிருவருக்குந் தரிசனையானார்.

௬ அதின்பின்பு அவர் ஐந்நூறுபேருக்கதிகமான சகோதரருக்கும் ஒருமிக்கத்தரிசனையானார். அவர்களிற்சிலர் மரித்தாம் நித்திரையடைந்தார்கள். மற்றுமநேகமானவர்கள் இந்நாள்வரைக்கும் இருக்கிறார்கள்.

௭ பின்பு யாக்கோபுக்கும் அதின்பின்பு அப்போஸ்தலரெல்லாருக்குந் தரிசனையானார்.

௮ எல்லாருக்கும் பின்பு எனக்குந்தரிசனையானார். நானோ பூரணகர்ப்பத்திற்பிறவாமல் முந்திப்பிறந்த பிள்ளையைப்போல அப்போஸ்தலனானவன்.

௯ நான் அப்போஸ்தலரெல்லாரிலுஞ்சிறியவனாயிருக்கிறேன். பராபருடைய சபையைத் துன்பப்படுத்தினபடியினாலே நான் அப்போஸ்தலனென்றழைக்கப்படுகிறதற்குப் பாத்திரனல்ல.

௰ பராபருடைய கிருபையினாலேயிருக்கிறேன். அன்றியும் அவர் என்மேல்வைத்த கிருபை வீணாயிருக்கவில்லை. மற்றெல்லாரிலும் நான் அதிகமாயுழைத்தேன். நானல்ல, என்னுடனேயிருக்கிற பராபருடைய கிருபையினாலே அப்படிச்செய்தேன்.

யக ஆகையால் நானாவது அவர்களாவது இப்படியே பிரசங்கித்துவருகிறோம். நீங்களும் இப்படியே விசுவாசித்துவருகிறீர்கள்.

யஉ இந்தப்படிக் கிறிஸ்துமரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறாரென்று பிரசங்கித்திருக்க, மரித்தோர் உயிரோடெழும்புதலில்லையென்று உங்களிற்சிலர் எப்படிச்சொல்லலாம்.

யங மரித்தோர் உயிரோடெழும்புதலில்லாவிட்டால், கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.

யச கிறிஸ்து எழும்பாமலிருந்தால், எங்கள் பிரசங்கம் அபத்தமாயிருக்குமே. உங்கள் விசுவாசமும் அபத்தமாயிருக்குமே.

யரு மரித்தோர் மெய்யாய் எழும்பாவிட்டால், பராபரன் எழுப்பாத கிறிஸ்துவை பராபரன் எழுப்பினாரென்று அவரைக்குறித்துச்சாட்சி சொன்னதினாலே, நாங்கள் பராபருக்காகப் பொய்ச்சாட்சிகளாயுமிருப்போமே.

யசு அந்தப்படி மரித்தோர் எழும்பாவிட்டால், கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.

யஎ அன்றியுங் கிறிஸ்து எழும்பாமலிருந்தால், உங்கள் விசுவாசம் வீணாயிருக்குமே. நீங்கள் எப்பொழுதும் உங்கள் பாவங்களோடேயிருப்பீர்களே.

௰௮ கிறிஸ்துவைப்பற்றி நித்திரையடைந்தவர்களுங் கெட்டிருப்பார்களே.

௰௯ அந்தப்படி நாம் கிறிஸ்துவின்மேலே இம்மைக்காக மாத்திரம் நம்பிக்கையாயிருந்தால, எல்லாமனிதர்களிலும்நாம் அதிக நிர்பாக்கிய முள்ளவர்களாயிருப்போமே.

௨௰ அப்படியல்ல, கிறிஸ்துநித்திரையடைந்தவர்களிலமுதற்பலனாகமரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறார்.

௨௧ அந்தப்படி, ஒருமனிதனாலே மரணமுண்டானபடியினாலே, ஒருமனிதனாலுமமரணத்தினின்று உயிரோடெழும்புதலும உண்டாயிருக்கின்றது.

௨௨ ஆதாமினாலே எல்லாருமமரிக்கிறதுபோல, கிறிஸ்துவினாலே யெல்லாரும உயிராக்கப்படுவார்கள்.

௨௩ அவனவனுந் தன் இன்வரிசையிலேயப்படியாவான. முதற்பலனானவர் கிறிஸ்து. பின்பு அவர்வருமபொழுது அவரைச சேர்ந்தவர்கள எழுந்திருப்பார்கள்.

௨௪ அதன்பின்பு முடிவிருக்கும. அப்பொழுது அவர்சகலதுரைத்தனத்தையும சகல அதிகாரத்தையும வல்லமையையுமபரிகரித்து, இராச்சியபரிபாலனத்தைப்பிதாவாகியபராபரனுக்கு ஒப்புக்கொடுப்பார்.

௨௫ இப்படியவர் எல்லாச்சத்துருக்களையுந்தமதுபாதத்திற்குக்கீழாக்கிப்போடுமவரைக்கும அவர் ஆளுகைசெய்யவேண்டும.

௨௬ அவர்பரிகரிக்குங்கடைசிச சத்துருமரணம.

௨௭ எல்லாவற்றையும அவருடையபாதத்துக்குக்கீழ்ப்படுத்தினாரே. ஆகிலுஞ்சகலமும அவருக்குக்கீழ்ப்படுத்தப்பட்டதென்றுசொல்லும்பொழுது, சகலத்தையும அவருக்குக்கீழ்ப்படுத்தினவர் தவிர, என்பதுவெளியாய்கமாயிருக்கின்றது.

௨௮ சகலமும அவருக்குக்கீழ்ப்பட்டிருக்கும்பொழுது, பராபரனே எல்லா இடங்களிலும எல்லாவற்றிற்குமமேலாயிருக்கத்தக்கதாகக், குமாரன்தாமுந்தமக்கெல்லாவற்றையுங் கீழ்ப்படுத்தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்.

௨௯ பின்னும்மரித்தோர் எழும்பாவிட்டால, மரித்தவர்களுக்காக ஞானஸ்நானம பெறுகிறவர்கள என்னசெய்வார்கள். மரித்தவர்களுக்காக ஏன் ஞானஸ்நானம்பெறுவார்கள்.

௩௰ நாங்களும ஏன் எந்நேரமும மோசத்திற்குள்ளாவோம.

௩௧ நாடோறுமநானமரிக்கிறேன. அதை நமமுடையகர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலே உங்களைக்குறித்து எனக்குண்டாயிருக்கும்மேன்மையின்பேரிலே நிச்சயமாயச்சொல்லுகிறேன.

௩௨ மரித்தோர் எழும்பாவிட்டால, நான் எபேசுவிலேமனிதர் வழக்கமாயத்துஷ்டமிருகங்களுடனேபோராடினதினாலேஎனக்கென்னபிரயோசனம்வரும். நாளைக்குச சாவோம். ஆகையாற்போசிக்கவுங்குடிக்கவுங்கடவோமென்றுசொல்லலாமே.

௩௩ வஞ்சிக்கப்படாதே. துர்ப்பேர்களோடு பொல்லாதசம்பாஷணைகள நல்லொழுக்கங்களைக்கெடுக்கும.

௩௪ நீங்கள்பின்னும்பாவஞ்செய்யாமல நியாயமானபடிதெளிவு உடையுங்கள். (உங்களில்) சிலர்பராபரனையறியாதிருக்கிறார்களே,. உங்களுக்கு வெட்கமவர இதைச சொல்லுகிறேன.

௩௫ மரித்தோர் எப்படி எழும்புவார்கள. எப்படிப்பட்டசரீரத்தோடே வருவார்களென்றுகேட்டால,

௩௬ ஆ! புத்தியீனனே, நீவிதைக்கிறதானியங்கெட்டாவிட்டால், புதிதானபயிர்தோன்றமாட்டாதே.

௩௭ மேலும்நீவிதைக்கிறபொழுதுநீ மேலவிளையும உடலைவிதையாமற், கோதுமையை அல்லதுமற்றொருதானியத்திலுண்டாயவெறும்மணியையேவிதைக்கிறாய்.

௩௮ அதற்குப்பராபரன்தமதுசித்தத்தின்படியே உடலைக்கொடுக்கிறார். அந்தப்படிவிதைவகைகளயாவற்றிற்கும அதற்கேற்கேற்ற உடலுண்டு.

௩௯ எல்லாமாமிசமுமஒரேவிதமானமாமிசமல்ல, மனிதருடையமாமிசமுமவேறே. மிருகங்களுடையமாமிசமுமவேறே. மச்சங்களுடையதுமவேறே, பறவைகளுடையதுமவேறே.

௪௰ பரமண்டலத்திற்குரிய தேகங்களுமுண்டு. பூமிக்குரியதேகங்களுமுண்டு. பரமண்டலத்திற்குரிய தேகங்களுடைய மகிமையுமவேறே. பூமிக்குரியதேகங்களுடையமகிமையுமவேறே.

௪௧ சூரியனுடையமகிமையுமவேறே. சந்திரனுடையமகிமையுமவேறே. நட்சத்திரங்களுடையமகிமையுமவேறே. அவைகளில ஒருநட்சத்திரத்தினுடைய மகிமைமற்றொருநட்சத்திரத்தின மகிமைக்குமேற்பட்டிருக்கிறதே.

௪௨ அப்படிபோலமரித்தோர் உயிரோடெழும்புதலுமுண்டாயிருக்கும. அழிவுள்ளசரீரமவிதைக்கப்பட்டுப்பின்பு அழிவில்லாமையாய எழுந்திருக்கும.

௪௩ கனவீனமானசரீரம விதைக்கப்பட்டுப்பின்புமகிமையாயெழுந்திருக்கும. பலவீனமுள்ளசரீரம் விதைக்கப்பட்டுப்பின்பு பலமாயெழுந்திருக்கும.

௪௪ ஜீவனுள்ளசரீரமவிதைக்கப்படும். ஆவிக்குரியசரீரம எழுந்திருக்கும. இந்தமாமிசமுடையசரீரமுண்டு. ஆவிக்குரியசரீரமுமுண்டு.

௪௫ ஆனதாலவேதத்திலே யெழுதியிருக்கிறபடி, முந்தினமனிதனாகிய ஆதாமசீவ ஆத்துமாவானான். பிந்தின ஆதாம உயிர்ப்பிக்கிற ஆவியானார்.

௪௬ ஆவியானசரீரமுந்தினதா யிராமல, சீவாத்துமாமிசமுடையசரீரமே முந்தினதாயிருக்கிறது.

௪௭ பினபு ஆவியானசரீரமுணடாம்முந்தினமனிதனபூமியினமணணானவன. இரணடாமமனிதன பரமணடலத்திற்குரியகர்த்தர்.

௪௮ மணணானவன எபபடியோ அப்படி மணணானவர்களு மிருபபார்கள. பரமணடலத்திற்குரியவர் எபபடியோ அப்படிப்பரமணடலத்திற்குரியவர்களு மிருப்பார்கள.

௪௯ மேலும்மணணானவனுடைய சாயலை நாம் அணிந்திருக்கிறதுபோலப்பரமணடலத்திற்குரியவருடையசாயலையும் அணிந்துகொள்வோம.

௫௰ சகோதரரே, மாமிசமும் இரத்தமும பராபரனுடைய இராச்சியத்தைச்சுதந்தரிக்கக்கூடாது. அழிவுள்ளது அழியாமையைச்சுதந்தரிக்கமாட்டாது. ஆனதால இவைகளைச்சொனனேன.

௫௧ மேலும நான உஙகளுககு இரகசியத்தையறிவிக்கிறேன. (எனனவெனில) நாமெல்லாரும நித்திரையடைநதுபோவதில்லை. ஆகிலும எல்லாருஙகடைசி எக்காளந்தொனிக்குமபொழுது, ஒருநிமிஷத்திலே ஒருஇமைப்பொழுதிலேமறுரூபமாக்கப்படுவோம.

௫௨ எக்காளநதொனிக்குமே. அபபொழுதுமரிததோர் அழிவில்லாதவர்களாய எழும்புவார்கள.

௫௩ ஏனெனில அழிவுள்ளதாகிய இது அழியாமையையுஞசாவுக்கினமாகிய இது சாவாமையையுந தரிததுககொள்ளவேணடியபடியால, நாமும் மறுரூபமாக்கப்படுவோம.

௫௪ அநதப்படி அழிவுள்ளதாகிய இது அழியாமையையுஞசாவுக்கினமாகிய இது சாவாமையையுநதரிததுககொள்ளுமபொழுது, மரணஞ்செயமாக விழுஙகபபட்டதென்று எழுதியிருக்கிறவார்த்தை நிறைவேறும.

௫௫ ஆ! மரணமே, உனகூர்மையெஙகே, பாதாளமே, உனசெயமெஙகே, மரணத்தினகூர்மைபாவம.

௫௬ பாவத்தினபெலன நியாயப்பிரமாணம.

௫௭ நமமுடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே நமககுச செயஙகொடுத்திருக்கிற பராபரனுககுததோததிரமுணடாவதாக.

௫௮ ஆகையால எனககுப்பிரியமானசகோதரரே! கர்த்தருககுள்ளது உஙகள பிரயாசம விருதாவாயிராதென்றறிந்து, நீஙகள உறுதிப்பட்டவர்களாயும அசையாதவர்களாயும கர்த்தருடையகிரியையிலே எபபொழுதும பெருககிக்கொள்ளுகிறவர்களாயு மிருப்பீர்களாக.

## ௰௬. அதிகாரம்.

[(௧) எருசலேமிலே கிறிஸ்தவர்களுக்குத்தருமங்களைச்சேர்ததனுப்பவேணடுமென்றும், (௫) பவுலுதனபிரயாணத்தைககுறிததும, (௰) தீமோத்தேயுவைககுறிததும,(௰௨) அப்பொல்லோவைககுறிததுஞசொல்லியது. (௰௫) சபைககு அனபுள்ள புத்திகளையும்வாழ்த்துதலையுஞசொல்லியது.]

பரிசுத்தவானகளுக்காகச சேர்க்கப்படுந்தருமஙகளைககுறிதது நான கலாத்தியதேசத்துச்சபைகளுககுப்பணணின திட்டத்தினபடியே நீஙகளுஞசெய்வீர்களாக.

௨ நான வருமபொழுது தருமஞசேர்ககுதலுணடாயிராதபடிககு, உஙகளில அவனவன வாரத்துமுதல நாட்களிலேதானுந்தனதன வாழ்வுககுததககதாக ஏதாகிலுமெடுத்துத்தனனிடத்திலே சேர்த்துவைக்கக்கடவன.

௩ நான வந்திருககும்பொழுது, உஙகளுடைய உபகாரத்தை எருசலேமுக்குக் கொணடுபோகும்படிககு, நீஙகள நிருபஙகளினாலே ஏற்படுத்துகிறவர்களெவர்களோ அவர்களையனுப்புவேன.

௪ நானுமபோகத்தகுதியானால, அவர்கள எனனுடனேகூடவரலாம.

௫ நான மக்கெதோனியாநாட்டின வழியாய்ப்போகிறேன. அதினவழியாய்ப்போகுமபொழுது உஙகளிடத்திற்கு வருவேன்.

௬ ஒருவேளை நான உஙகளிடத்திற சிலகாலந தரித்திருப்பேன. நான எஙகேபோனாலும நீஙகளென்னை வழிவிட்டனுப்பும்படிககு ஒருவேளைமாரிகாலம முடியுமளவும் இருப்பேன.

௭ ஆனதால நான இப்பொழுதுபோகிற பிரயாணத்திலே உஙகளைப்பார்ககமாட்டேன. கர்த்தர் உத்தரவுகொடுத்தால, உஙகளிடத்திற சிலகாலந தரித்திருககலாமென்று நம்பி யிருககிறேன.

௮ இநத எபேசுபட்டினத்திலே பெரிதும பெலனுமானகதவு எனககுத் திறக்கப்பட்டிருக்கிறபடியினாலும விரோதஞசெயகிறவர்களும்அநேகரிருககிறபடியினாலும்

௯ பெநதெகொஸ்துப் பணடிகைவரைககும் இஙகேயிருப்பேன.

௰ தீமோத்தேயு உஙகளிடத்திறகுவரும்பொழுது, அவன உஙகளிடத்திற்பயமில்

லாமலிருக்கும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; என்னைப்போல அவனுங்கர்த்தருடைய கிரியையை நடப்பிக்கிறானே.

௰௧ ஆனபடியினாலே ஒருவனும் அவனை அற்பமாய் எண்ணாதிருப்பானாக. அவனீயும் அவனும் அவனுடனேகூட இருக்கிற சகோதரரும் வருகிறதற்கு நான் காத்திருக்கிறபடியால், நீங்கள் அவனைச் சமாதானத்தோடே என்னிடத்தில் வரும்படிக்கு வழிவிட்டனுப்புங்கள்.

௰௨ சகோதரனாகிய அப்பொல்லோவும் இந்தச்சகோதரரோடேகூட உங்களிடத்தில் வரும்படிக்கு அவனை மிகவும் வேண்டிக்கொண்டேன்; அப்படியிருந்தும் இப்பொழுது போக அவனுக்கு மனதேயில்லை. அவனுக்குச் சமயமுண்டாயிருக்கும்பொழுது உங்களிடத்தில் வருவான்.

௰௩ விழித்திருங்கள். விசுவாசத்திலே நிலைத்திருங்கள். புருஷராயிருங்கள். பெலன்கொள்ளுங்கள்.

௰௪ உங்கள் காரியங்களையெல்லாம் அன்போடே செய்வீர்களாக.

௰௫ சகோதரரே! ஸ்தேவானுடைய குடும்பத்தார் ஆகாயதேசத்திலே முதற்பலனானவர்களென்றும், பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்கள் தங்களை நியமித்தவர்களென்றும், அறிந்திருக்கிறீர்களே.

௰௬ இப்படிப்பட்டவர்களுக்கும் உதவிசெய்து பிரயாசப்படுகிற மற்றயாவருக்கும் நீங்களுங் கீழ்ப்படிந்திருக்கவேண்டுமென்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௭ ஸ்தேவானும் பொர்த்துநாத்தும் அகாயிக்குவும் வந்துசேர்ந்ததினாலே சந்தோஷமாயிருக்கிறேன்.

௰௮ உங்கள் ஆவிக்குச்செய்ததுபோல அவர்கள் என்னுடைய ஆவிக்கும் ஆறுதல் செய்தபடியால், நீங்கள் இல்லாததினாலுண்டான குறைவை நீக்கி நிறைவுண்டாக்கினார்கள். இப்படிப்பட்டவர்களைக்கனமாய் எண்ணிக்கொள்வீர்களாக.

௰௯ ஆசியதேசத்திலுள்ள சபைகள் உங்களை வாழ்த்துதல்செய்கிறார்கள். ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் தங்கள் வீட்டிலேகூடிய சபையோடுங்கூடக் கர்த்தரைப்பற்றிய உங்களை மிகவும் வாழ்த்துகிறார்கள்.

௨௰ சகோதரரெல்லாரும் உங்களை வாழ்த்துகிறார்கள். நீங்கள் ஒருவரையொருவர் சுத்தமான முத்தத்தினாலே வாழ்த்துதல்செய்வீர்களாக.

௨௧ பவுலாகிய நான் என்கையெழுத்தோடே வாழ்த்துதல்செய்கிறேன்.

௨௨ ஒருவன் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் அன்புகூராமற்போனால் அவன் சபிக்கப்பட்டவனாயிருப்பான். அவனுக்குத் தண்டிப்பாகக் கர்த்தர் வருவார்.

௨௩ கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்களுடனேகூடவிருக்கக்கடவது.

௨௪ என்னுடைய அன்பு கிறிஸ்து இயேசுவைப்பற்றிக்கொள்ளுகிற உங்களெல்லாரோடுங்கூடவிருக்கின்றது.

ஆமென்.

அப்போஸ்தலனாகியபவுல்

கொரிந்துபட்டினத்திலுள்ளகிறிஸ்தவர்களுக்கெழுதின

# இரண்டாம் நிருபம்.

## ௧. அதிகாரம்.

[(௧) அப்போஸ்தலன் தனக்கு உபத்திரவம் வந்தகாலத்திலேயடைந்த ஆறுதலினாலே சபைக்கு ஆறுதலைச் சொல்லியது. (௰௨) தான் சுவிசேஷத்தை யுண்மையோடே பிரசங்கித்ததைக் காட்டியது. (௰௫) தான் கொரிந்துவுக்குப் போகாததைக் குறித்துச் சொல்லியது. (௰௮) தேவவாக்குத்தத்தங்கள் நிச்சயமுள்ளவைகளென்றுகாட்டியது.]

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுலும் சகோதரனாகிய தீமோத்தேயுவுங் கொரிந்துபட்டினத்திலுள்ள பராபரனுடைய சபைக்கும் அகாயதேசமெங்குமுள்ள எல்லாப் பரிசுத்தவான்களுக்குங்கூட எழுதினதாவது.

௨ நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ்சமாதானமுமுண்டாகக்கடவது.

௩ நமதுகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமாய்ப் பராபரனுமாயிருந்து தயையுடைய பிதாவுமாய்ச் சகலவிதமான ஆறுதலையும் அநுக்கிரகிக்கிறதேவன்

லல, நீஙகள (இதுவரைககும) விசுவாசத திலே நிலை நிறகிறபடியால, உஙகளசந தோஷததிற்கு உதவிககாரராககவேயிபபடி சசொலலுகிறேன.

## உ. அதிகாரம்.

[(க) தான அவர்களைத துககப படுததின தைககுறிததும, (கூ)புறமபாககபபட்ட வனுககுமனனிககவேணடியதைககுறித தும, (யஉ) தானபணணின பிரயாணஙக ளிற சர்ததர்சுவிசேஷததினபலனையெ னுநதோனறப்பணணினதைக குறிதது ஞசொலலியது.]

ஆனதால, துககததுடனே நானஉஙக ளிடததிலேதிருமபவாராதபடிககு எனககு ளளே தீர்மானஞசெயதேன.

உ நானுஙகளைத துககபபடுததினால, எ னனாலே துககம அடைநதவனே யலலாம ல, எவன எனனைசசநதோஷப படுதது வான.

ங ஆகையால எனனுடையசநதோஷம உஙகளெலலாருககுஞசநதோஷமா யிருக குமெனறு நான உஙகளெலலாரையுமநமபி ககொணடு, நானவருமபொழுது எனககுச சநதோஷமுணடாகக வேணடியவர்களால நான் துககம அடையாதபடிககு, (முன னே) அபபடிததானேயுஙகளுக கெழுதி னேன.

ச அனறியும மிகுநதவியாகுலமும மன இடுககமும அடைநதவனாய அநேககண ணீரோடேஉஙகளுககெழுதினேன. நீஙகள துககபபடுமபடிககலல, உஙகளமேலே அ திகமாயிருககிற எனனுடைய அனபை நீ ஙகள அறியும படிககே யபபடிசசெய தேன.

ரு துககமுணடாககினவன எனனை (மா ததிரமலல,) நான் அதிகபாரமவையாதப டிககு (எனனாலே) ஒருவிதமாய உஙகளெ லலாரையுந துககபபடுததினான.

சா அபபடிபபட்டவனுககு அநேகரா லுணடான இநதத்தணடனைபோதும.

எ ஆனதால அவன அதிகதுககததினா லே விழுஙகபபடாதபடிககு, நீஙகள அதி கசநதோஷமாய அவனுககுமனனிதது ஆ றுதலசெயயவேணடும.

அ அநதபபடி நீஙகள உஙகள அனபை அவனுககுககாணபிபபீர்களாகவெனறு உ ஙகளைவேணடிககொளளுகிறேன.

கூ அதறகாகவும நீஙகள சகலததிலேயு ஙகீழபபடிநதிருககிறீர்களோவெனறு உங கள குணததையறியவுமிபபடி யெழுதியி ருநதேன.

ய ஆனதால அருககு மனனிககிறீர்க ளோ அவனுககுநானும மனனிககிறேன. மேலும எதைநான (இபபொழுது) மனனி ததேனோ அதைநான உஙகளநிமிததமகி றிஸதுவினுடைய சனனிதானததிலே மன னிததேன.

யக சாததானுடையயோசனைகள எங களுககுததெரியாமலிருககவிலலை. ஆனதா ல நாம அவனாலே மேற்கொளளபபடாத படிககு அபபடிசசெயதேன்.

யஉ மேலுமநான்கிறிஸதுவினசுவிசேஷ ததைபபிரசஙகிககுமபடிககு, ததுரோவா பட்டினததிலே வநதபொழுது, கர்ததரா லே எனககுககதவு திறககபபட்டிருககை யில,

யங நான எனசகோதரனாகியதீததுவை க்காணாததினாலே என் ஆவிககுஅமைதலிரு ககவிலலை. ஆனதால நான அவர்களாலே அனுப்பபபட்டு, மககேதோனியா நாட்டு ககுபபுறபபட்டுபபோனேன.

யச கிறிஸதுவினாலே எஙகளையெபபொ ழுதுமவெறறிசிறககபபணணி எலலாவிட ஙகளிலேயும எஙகளைககொணடு அவரைப பறறிய அறிவினவாசனையை வெளிபபடுதது கிற பராபரனுககுததோததிர முணடாவ தாக.

யரு இரட்சிககபபடுகிறவர்களுககுளளே யும கெட்டுபபோகிறவர்களுககுளளேயும நாஙகள பராபரனுககுககிறிஸதுவின நறு கநதமாயிருககிறோமே.

யசா கெட்டுபபோகிறவர்களுக குளளே மரணததிற்கேதுவான மரணவாசனையாக வும இரட்சிககபபடுகிறவர்களுககுளளே ஜீ வனுககேதுவான ஜீவவாசனையாகவுமிரு ககிறோம. இவைகளை (நடபபிககததகக வ) ஆர்ததகுதியாயிருககிறார்கள.

யஎ அநேகர்செயகிறதுபோல நாஙக ளபராபரனுடைய வசனததைககலபபாய பபேசாமல, துபபுரவாகவும கர்ததராலே பெறறதாகவும பராபரனுககுமுனபாகவு ஙகிறிஸதுவைககுறிததுபபேசுகிறோம.

## ங. அதிகாரம்.

[(க) களளபபோதகர்களுககு எதிராகதத ன அபபோஸதல ஊழியஙகொரிநதியர் ட்டத்திலேமகிமையாய விளஙகிறதெனற காட்டியது. (கூ) பழைய உடமபடிககை ககுமபுது உடமபடிககைககு முணடா யிருககிற விததியாசததைக குறிததுச சொலலியது.]

எஙகளைநாஙகளேமறுபடியும மெச சிககொளளததொடஙகுகிறோமா? சிலத சிலருககுவேணடியதா யிருககிறதுபோல, உஙகளுககு உபசார்நிருபஙகளையாவது உஙகளிடததில உபசாரநிரு பஙகளைவாஙகவுமஎஙகளுககுவேணடுமோ?

உ நீஙகளேயெஙகளுககு அபபடிபப ட்டநிருபமாயிருககிறீர்கள. அது எஙகளு

த்தங்களில் எழுதப்பட்டிருக்கிறது. மேலும் அதைச் சகல மனிதராலும் அறிந்து வாசிக்கப்பட்டுவருகின்றது.

௩ நீங்கள் எங்களூழியத்தினாலுண்டான கிறிஸ்துவினுடைய நிருபமாக வெளியரங்கமாக்கப்பட்டவர்கள். அது மையினாலல்ல ஜீவனுள்ள பராபரனுடைய ஆவியினாலே கற்பலகைகளிலல்ல மாமிசமான இருதயங்களாகிய பலகைகளிலே யெழுதப்பட்டிருக்கின்றது.

௪ இப்படிப்பட்ட நம்பிக்கையை நாங்கள் பராபரனுக்கு முன்பாகக் கிறிஸ்துவின் மூலமாகக் கொண்டிருக்கிறோம்.

௫ ஒன்றை யோசிக்கிறதற்கு நாங்கள் எங்களாலே திராணியுள்ளவர்களல்ல, எங்களுடைய திராணி பராபரனாலுண்டாயிருக்கின்றது.

௬ நாங்கள் புது உடம்படிக்கையின் ஊழியக்காரராயிருக்கும்படி அவரே யெங்களுக்குத் திராணியைக் கொடுத்தார். அந்த உடம்படிக்கை எழுத்திற்குரியதல்ல, ஆவிக்குரிய உடம்படிக்கையாயிருக்கின்றது. எழுத்திற்குரியது கொலைசெய்கின்றது. ஆவிக்குரியது உயிர்ப்பிக்கின்றதே.

௭ கற்களில் எழுத்துக்களாற் பதிந்திருந்த மரணத்திற்கேதுவான ஊழியத்தை மோசே செய்தபொழுது, அவனுடைய முகத்திலே மகிமைப்பிரகாசமுண்டானதால், இஸ்ரவேல் சந்ததியார் அவனுடைய முகத்தை நோக்கிப்பார்க்கமாட்டாமலிருந்தார்களே. ஒழிந்துபோன மகிமையையுடைய அந்த ஊழியம் அப்படிப்பட்ட மகிமையுள்ளதாயிருக்க,

௮ ஆவிக்கேற்ற உடம்படிக்கையினூழியம் மிகவும் அதிகமாய மகிமையுள்ளதாயிருக்குமல்லவா?

௯ ஆக்கினைத் தீர்ப்பைக் கொடுத்த ஊழியம் மகிமையுள்ளதாயிருக்க, நீதியைக் கொடுக்கிற ஊழியம் மிகவும் அதிகமான மகிமையாயிருக்குமல்லவா?

௰ இதினிமித்தமாக, மகிமைப்பட்டிருந்த அந்த ஊழியம் இந்த ஊழியத்திற்குண்டாயிருக்கிற அதிக மகிமைக்கு முன்பாக மகிமைப்பட்டதல்ல.

௰௧ அன்றியும் ஒழிந்துபோனது மகிமைகொண்டிருப்பதால், நிலைநிற்பது மிகவும் அதிகமாய மகிமையுள்ளதாயிருக்குமே.

௰௨ ஆனதால் இப்படிப்பட்ட நம்பிக்கையையுடையவர்களாய நாங்கள் மிகுந்த தயிரியத்தோடே நடக்கிறோம்.

௰௩ அன்றியும் ஒழிந்துபோகிறதின் முடிவை இஸ்ரவேல் சந்ததியார் நோக்கிப்பாராதபடிக்கு, மோசே தன் முகத்தின்மேல் முக்காடுபோட்டதுபோல, நாங்கள் போடுகிறதில்லை.

௰௪ அவர்களுடைய புத்தி கடினமாயிருந்தது. இந்நாள்வரைக்கும் பழய ஏற்பாட்டின் புத்தகம் வாசிக்கப்படுகையில், அந்த முக்காடு அவர்களிடத்திலிருக்கின்றது.

௰௫ அந்தப் பழய உடம்படிக்கை கிறிஸ்துவினாலே நீக்கப்பட்டதென்று அவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதில்லை. ஆனதால் மோசேயினாகமங்கள் வாசிக்கப்படும்பொழுது, இந்நாள்வரைக்கும் முக்காடு அவர்களிருதயத்தின்மேலே கிடக்கின்றது.

௰௬ அவர்கள் கர்த்தரிடத்தில் மனந்திரும்பும்பொழுது அந்த முக்காடு எடுக்கப்படும்.

௰௭ கர்த்தரே யந்த ஆவியாயிருக்கிறார். கர்த்தருடைய ஆவியெங்கேயோ அங்கே விடுதலையுமிருக்கின்றது.

௰௮ ஆதலால் நாமெல்லாருந்திறந்த முகமாயக் கர்த்தருடைய மகிமையைக் கண்ணாடியிலே கண்டாற்போலக் கண்டு, ஆவியாயிருக்கிற கர்த்தரால் அந்தச் சாயலாகத்தானே மகிமையின்மேல் மகிமையடைந்து மறுரூபப்படுகிறோம்.

## ௪. அதிகாரம்.

[(௧) தானமிகுந்த உபத்திரவங்களையடைந்துவந்தும் இளப்படையாமல், (௫) நி னாலு சுவிசேஷத்தைப் போதித்து, (௰௪) பராபரனுக்குத் தோத்திரமுஞ் சபைக்கு நன்மையும் மகிமையுமுண்டாகும்படி உபத்திரவப்படுகிறதைக் குறித்துச் சொல்லியது.]

இப்படிப்பட்ட ஊழியம் எங்களுக்கு இரக்கமாயுண்டாயிருக்கிறபடியால், நாங்கள் இளைப்படையாமல்,

௨ அவலட்சணமான அந்தரங்கக்காரியங்களைத் தள்ளிப்போட்டு, தந்திரமாய் நடவாமலும் பராபரனுடைய வசனத்தைப் புரட்டாமலும் சத்தியத்தையே வெளிப்படுத்துகிறதினாலே பராபரனுக்குமுன்பாக எல்லா மனிதருடைய மனதுக்கும் எங்களை (நிசலதொன்று) ஒப்புவிக்கிறோம்.

௩ அப்படியும் நாங்கள் பிரசங்கிக்கிற சுவிசேஷம் மறைபொருளாயிருந்தால், நசங்கெடுக்கிறவர்களுக்குள்ளே மாத்திரம் அது மறைபொருளாயிருக்கும்.

௪ அவிசுவாசிகளாகிய அவர்களுக்குப் பராபரனுடைய சாயலாகிய கிறிஸ்துவின மகிமையான சுவிசேஷத்தின் ஒளிப்பிரகாசம் அவர்களுக்குப் பிரகாசியாதபடிக்கு இவ்வுலகத்தின் தேவன் அவர்களுடைய புத்தியைக் குருடாக்கினான்.

௫ நாங்கள் எங்களை (ககாத்தொன்று) பிரசங்கியாமற், கிறிஸ்து இயேசுவைக் கர்த்தரென்றும் எங்களை இயேசுவுக்காக உங்களூழியக்காரரென்றும் பிரசங்கிக்கிறோம்.

௬ இருளிலிருந்து ஒளியைப்பிரகாசிக்கச்சொன்ன பராபரனே இயேசுக்கிறிஸ்துவினிடத்திலுள்ள தமது மகிமையை யறிகிற அறிவாகிய ஒளியை (புங்களுக்கு) நந்தோன்றப்பண்ணும்பொருட்டாக, எங்களிருதயங்களிலே பிரகாசித்தார்.

௭ இப்படிப்பட்ட மகிமையானவல்லமை யெங்களாலல்ல, பராபரனாலுண்டாயிருக்கிறதென்று தோன்றும்படிக்கு, இந்தப்பொக்கிஷத்தை மண்பாண்டங்களிற் பெற்றிருக்கிறோம்.

௮ நாங்களெப்பக்கத்திலேயும் நெருக்கப்பட்டும் ஒடுங்கிப்போகிறதில்லை. கலக்கமடைந்தும், திடனற்றவர்களாகிறதில்லை.

௯ தொடரப்பட்டும், கைவிடப்படுகிறதில்லை. கீழேதள்ளப்பட்டும், கெட்டுப்போகிறதில்லை.

௰ இயேசுவினுடைய சீவனும் எங்கள் சரீரத்திலே வெளியரங்கமாகும்படிக்குக் கர்த்தராகிய இயேசுவின் மரணத்தையெப்பொழுதும் எங்கள் சரீரத்திற் சுமந்து திரிகிறோம்,

௰௧ சாவுக்கினமான எங்கள் சரீரத்திலே இயேசுவினுடைய சீவனும் வெளியரங்கமாகும்படிக்கு உயிரோடிருக்கிற நாங்கள் எப்பொழுதும் இயேசுவினிமித்தமாக மரணத்திற்கொப்புக்கொடுக்கப்படுகிறோம்.

௰௨ இப்படி மரணமானது எங்களிடத்திலும், சீவனோ உங்களிடத்திலும் கிரியைசெய்கின்றது.

௰௩ நான் விசுவாசித்திருக்கிறபடியால் பேசிக்கொள்ளுகிறேனென்றெழுதியிருக்கிறபடி, விசுவாச ஆவியையுடையவர்களாய்,

௰௪ நாங்களும் கர்த்தராகிய இயேசுவையெழுப்பினவர் எங்களையும் இயேசுவைக்கொண்டெழுப்பி உங்களோடேகூடத்தமக்குமுன்பாக நிறுத்துவாரென்றறிந்து, விசுவாசித்துப்பேசிக்கொள்ளுகிறோம்.

௰௫ திரளான கிருபை அநேகருடைய தோத்திரத்தினாலே பராபரனுடைய மகிமைவிளங்குகிறதற்கதுவாகப்பெருகும்படிக்கு இவையெல்லாம் உங்கள் (நன்மைக்காக) நடக்கின்றன.

௰௬ ஆனபடியினாலே நாங்கள் இளைப்படைகிறதில்லை. மேலும் எங்கள் புறம்பான மனிதத்துவம் அழிகையிலும், உள்ளான மனிதத்துவம் நாடோறும் புதிதாக்கப்படுகின்றது.

௰௭ மேலும் அதிசீக்கிரமாய் நீங்குவதுமாய லேசுவுமாயிருக்கிற நம்முடைய உபத்திரவம் மிகவும் மிகுதியான நித்தியகனமகிமையை நமக்குண்டாகுகின்றது.

௰௮ காணப்படுகிறவைகளையல்ல, காணப்படாதவைகளை நோக்கியிருக்கிற நமக்கிப்படியுண்டாக்குகின்றது. காணப்படுகிறவைகள் அநித்தியமானவைகள், காணப்படாதவைகளே நித்தியமானவைகள்.

## ௫. அதிகாரம்,

[(௧) தான் இந்தத்தேகத்தைவிட்டுக் கிறிஸ்துவினிடத்திற்போயிருப்பதைக்குறித்தும், (௯) அவருக்குப்பிரியமாய்நடக்கும்படி எச்சரிக்கையாயிருக்கிறதைக்குறித்தும், (௰௪) அதற்குக்கிறிஸ்துவின் அன்பினாலே ஏவப்படுகிறதைக்குறித்தும், (௰௮) எல்லாரும் பராபரனோடே ஒப்புரவாகும்படி தானூழியஞ்செய்கிறதைக்குறித்துஞ்சொல்லியது.]

அதெப்படியென்றால், பூமிக்குரிய கூடாரம்போன்ற நம்முடைய வீடு இடிந்துபோகும்பொழுது, பரமண்டலங்களிலே கையால் செய்யப்படாமல் தேவனாலுண்டாக்கப்பட்ட நித்தியமான வீடாகிய வாசஸ்தலம் நமக்குண்டென்று அறிந்திருக்கிறோம்.

௨ நாம்வீடில்லாதவர்களல்ல.

௩ தரிக்கப்பட்டவர்களாயிருக்கப் பரமண்டலத்திலுள்ள நமது வாசஸ்தலத்தைத்தரித்துக்கொள்ள மிகவும் விருப்புகிறவர்களாய் இந்தவீட்டிலே தவித்துருகிறோம்.

௪ இந்தக்கூடாரத்திலிருக்கையில் நாம் பாரஞ்சுமந்து தவிக்கிறோம். ஆனதால் நாங்கள் (இதை) பேர்க்கவிரும்பாமல், ஜீவனாலே மரணம்விழுங்கப்படத்தக்கதாக, (உடனே) யதைத்தரித்துக்கொள்ள விரும்புகிறோம்.

௫ இப்படியேயிருக்கும்படி பராபரனே எங்களை எத்தனம்பண்ணி, ஆவியென்னும் அச்சாரத்தையும் எங்களுக்குத்தந்தார்.

௬ ஆகையினாலே நாங்கள் இந்தத்தேகத்திலே குடியிருக்கையில் தரிசித்துநடவாமல், விசுவாசித்துநடக்கிறதால்,

௭ கர்த்தாவைச்சேராத வழிப்போக்கராயிருக்கிறோமென்றறிந்தும், எப்பொழுதும்) தயிரியமாயிருக்கிறோம்.

௮ நாங்கள் தயிரியமாகவேயிருந்து இந்தத்தேகத்தைவிட்டுப்போகவும் கர்த்தரிடத்திற குடியிருக்கவும் அதிகமாய்விரும்புகிறோம்.

௯ அதினிமித்தமே நாங்கள் (அவரிடத்திற) குடியிருந்தாலும், (அவரைவிட்டு) நீங்கினாலும், அவருக்குப்பிரியமானவர்களாயிருக்க முக்கியமாய் நாடுகிறோம்.

௰ நாமெல்லாரும் அவனவன் தான் நடப்பித்த நன்மைக்காகிலுந் தீமைக்காகிலும் தக்கவைகளைச் சரீரத்திலே அடையும்படி கிறிஸ்துவின் நியாயாசனத்திற்குமுன்பாக வெளிப்படவேண்டுமே.

௰௧ ஆகையால் கர்த்தருக்குப் பயப்படத்தக்கதென்று நாங்கள் அறிந்து, மனிதருக்குப் போதிக்கிறோம் இப்படிப் பராபரனுக்கு முன்பாக வெளியரங்கமாயிருக்கிறோம். உங்களுடைய மனதிலேயும் (அப்படியே) வெளியரங்கமாயிருக்கிறோமென்று நம்புகிறேன்.

௰௨ இதனாலே நாங்கள் உங்களுக்கு முன்பாக எங்களை மறுபடியும் மெச்சிக்கொள்ளாமல், இருதயத்தினாலல்ல, வெளிவேஷத்தால் மேன்மை பாராட்டுகிறவர்களுக்கெதிரே நீங்கள் எங்களைக்குறித்து மேன்மைபாராட்டும்படிக்கு ஏதுகொடுக்கிறோம்.

௰௩ (எதிலே) நாங்கள் புத்திகொண்டவர்களென்றால், பராபரனுக்காகவும், தெளிந்தபுத்தியுள்ளவர்களென்றால் உங்களுக்காகவும் அப்படியிருக்கும்.

௰௪ அதெப்படியென்றால் கிறிஸ்துவினுடைய அன்பு எங்களை நெருக்கியேவுகின்றது. எப்படியென்று நிதானிக்கிறோமென்றால், எல்லாருக்காகவும் ஒருவரே மரித்திருக்க, எல்லாரும் மரித்தார்கள்.

௰௫ மேலும் பிழைத்திருக்கிறவர்கள் இனித்தங்களுக்கென்று பிழையாமல் தங்களுக்காக மரித்தெழுந்தவருக்கென்று பிழைக்கும்படிக்கு, அவர் எல்லாருக்காகவும் மரித்தாரென்று நிதானிக்கிறோம்.

௰௬ ஆகையால் இதுமுதற்கொண்டு நாங்கள் ஒருவனையும் மாம்சத்தின்படி அறியோம். முன்னே நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்படி அறிந்தும், இப்பொழுதும் இனிமேலும் அவரை யப்படியாக அறியோம்.

௰௭ கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறவன் புதுச்சிருட்டியாயிருக்கிறான். பழையவைகள் ஒழிந்துபோயின. சகலமும் புதிதாயிற்றே.

௰௮ இவையெல்லாம் பராபரனாலேயிருக்கின்றன. அவர் இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு நம்மைத் தம்மோடே ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்குக் கொடுத்தார்.

௰௯ என்னவெனில் கிறிஸ்துவினாலே பராபரன் உலகத்தாருடைய பாவங்களை அவர்கள்மேலே சுமத்தாமல் அவர்களைத் தமக்கு ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்புரவாக்குதலாகிய உபதேசத்தை எங்களிடத்தில் ஏற்படுத்தினார்.

௨௰ ஆனபடியினாலே நாங்கள் கிறிஸ்துவுக்காகத் தானாபதிகளாயிருக்கிறோம். பராபரனே எங்களாலே புத்திசொல்லுகிறவராயிருக்க, நாங்கள் கிறிஸ்துவுக்காக (மனிதர்களை) நோக்கி,

௨௧ பாவத்தையறியாதவராலே நாம பராபரனுக்கு முன்பாக நீதிமான்களாக்கப்படும்படிக்குப் பராபரன் அவரைத் தமக்காகப் பாவமாக்கினார். ஆகையால் பராபரனோடே ஒப்புரவாகுங்களென்று வேண்டிக்கொள்ளுகிறோம்.

## ௬. அதிகாரம்.

[(௧) கர்த்தாவுக்கூழியஞ்செய்கிறதில் தன்னுடைய உண்மைகளையும் பாடுகளையுந் தயிரியத்தையுங் காட்டி, (௰௧) கொரிந்தியருக்குப் பட்சமுள்ள தன்னுடைய இருதயத்தை விரித்து, (௰௪) எல்லாரும் அவிசுவாசிகளுடனே ஐக்கியப்படாமற் கர்த்தாவுக்குப் பிள்ளைகளாக வேண்டுமென்று புத்திசொல்லியது.]

மேலும் (எனக்குத்) தகுதியான காலத்திலே நான் உனக்குச் செவிகொடுத்து இரட்சணிய நாளிலே உனக்கு உதவிசெய்தேனென்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே; பாருங்கள். இப்பொழுதே மிகவுந் தகுதியான காலம் இப்பொழுதே இரட்சணிய நாள்.

௨ ஆனதால் எங்களுடனேகூட வேலை செய்கிறவர்களே! நீங்கள் பராபரனுடைய கிருபையை வீணாய்ப் பெறுதபடிக்குப் புத்தி சொல்லுகிறேன்.

௩ நம்முடைய ஊழியத்தைக் குற்றப்படுத்தத்தக்கதாக நாம் ஒருவருக்கும் முகாந்திரத்தைக்கொடாமல், எல்லாவிதத்திலேயும் நம்மைப் பராபரனுடைய ஊழியக்காரராக ஒப்புவிக்கக்கடவோம்.

௪ உபத்திரவங்கள், இடுக்கண்கள், நெருக்கங்கள்,

௫ அடிகள், காவல்கள், கலகங்கள், பிரயாசங்கள், தூக்கமில்லாமை, உபவாசங்களுள்ள காலங்களில் மிகுந்த பொறுமையினாலும், கற்பினாலும், அறிவினாலும்,

௬ நீடியசாந்தத்தினாலுந் தயவினாலும், பரிசுத்தஆவியினாலும், வஞ்சகமில்லாத அன்பினாலும்,

௭ சத்தியமுள்ள வசனத்தினாலுந் தேவவியபலத்தினாலும் நீதியாகிய வலதிடதுபக்கத்தாயுதங்களினாலும்,

௮ கனத்தையுங் கனஈனத்தையும் பெறுங்காலத்திலேயுந் துற்கீர்த்தியையும் நற்கீர்த்தியையும் பெறுங்காலத்திலேயும், எத்தரென்னப்பட்டாலும் நிசஸ்தராகவும்,

௯ அறியப்படாதவர்களென்னப்பட்டாலும் நன்றாய் அறியப்பட்டவர்களாகவும், மரித்தவர்களென்னப்பட்டாலும் உயிரோடிருக்கிறவர்களாகவும், தண்டிக்கப்பட்டவர்களானாலும் கொலைசெய்யப்படாதவர்களாகவும்,

௰ துக்கப்படுகிறவர்களென்னப்பட்டாலும் எப்பொழுதுஞ் சந்தோஷப்படுகிறவர்களாகவுந் தரித்திரரென்னப்பட்டாலும் அநேகரை ஐசுவரியவான்களாக்குகிறவர்களாகவும், ஒன்றுமில்லாதவர்களென்னப்பட்

டாலுஞ் சகலத்தையு முடையவர்களாகவும் நம்மையொப்புவிக்கக்கடவோம்.

௰௧ ஆ கொரிந்தியரே! எங்கள் வாய் உங்களுக்குச் சமாயத் திறக்கப்பட்டிருக்கிறது. எங்களிருதயம் விஸ்தாரியாக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ எங்களுள்ளம் உங்களைக் குறித்து நெருக்கப்படவில்லை உங்கள் உள்ளமே எங்களைக் குறித்து நெருக்கப்பட்டிருக்கின்றது.

௰௩ ஆதலால் அதற்கு ஈடாக நீங்களும் விஸ்தாரமாகுங்களென்று (என்) பிள்ளைகளைப் போல உங்களிடத்திற் கேட்டுக்கொள்ளுகிறேன்.

௰௪ ஒரே நுகத்திலே அவிசுவாசிகளுடனே பூட்டப்படாதிருப்பீர்களாக என்னத்தினாலெனில், நீதிக்கும் அக்கிரமத்திற்கும் என்ன சம்பந்தமிருக்கிறது? இருளுக்கும் ஒளிக்கும் ஐக்கியமென்ன?

௰௫ கிறிஸ்துவுக்கும் பசாசுக்கும் இசைவுண்டா? அல்லது அவிசுவாசியுடனே விசுவாசிக்குப் பங்குண்டா?

௰௬ விக்கிரகக் கோவில்களுக்கும் பராபரனுடைய ஆலயத்திற்கும் சம்பந்தமுண்டா? நான் அவர்களுக்குள்ளே வாசம்பண்ணி அவர்களுக்குள்ளே நடந்துகொண்டு அவர்களுடைய தேவனாயிருப்பேனென்றும் அவர்கள் என்னுடைய சனங்களாயிருப்பார்களென்றும் பராபரன் சொன்னபடி, நீங்கள் சீவனுள்ள பராபரனுடைய ஆலயமாயிருக்கிறீர்களே.

௰௭ ஆனபடியினாலே நீங்கள் அவர்களிடத்திலிருந்து புறப்பட்டுப் பிரிந்துபோய், அசுத்தமானதைத் தொடாதிருங்கள்.

௰௮ அப்பொழுது நான் உங்களையங்கிகரித்துக்கொண்டு, உங்களுக்குப் பிதாவாயிருப்பேன்; நீங்கள் எனக்குக் குமாரருமாய்க் குமாரத்திகளுமாயிருப்பீர்களென்று சர்வவல்லமையுள்ள பராபரன் சொல்லுகிறார்.

## ௭. அதிகாரம்.

[(௧) பரிசுத்தமாய் நடக்கும்படி புத்திசொல்லி, (௨) தான் கொரிந்தியருக்குச் செய்த உண்மைகளைக் காட்டி, (௫) தன்னுடைய முந்தின புத்திகளை அவர்களட்சத்தோடே ஏற்றுக்கொண்டதினாலே மிகுந்த ஆறுதலையடைந்ததை யறிவித்து, (௰) அவர்கள் தேவெத்தனமாய்த் துக்கப்பட்டதினன்மையைக் காட்டி, (௰௩) அவர்களிடத்திலிதத்துவும் அடைந்த ஆறுதலினாலேதானும் ஆறுதலையடைந்ததைச் சொல்லியது.]

இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்கள் நமக்குண்டாயிருக்க, பிரியமானவர்களே! சரீரத்தையும் ஆவியையும் அசுசிப்படுத்துகிறயாவற்றுக்கும் நாம் விலகி, நம்மைச் சுத்திகரித்துக்கொண்டு தேவபயத்தோடே முழுவதும் பரிசுத்தவான்களாகும்படி நடந்துகொள்ளக்கடவோம்.

௨ எங்களையங்கிகரித்துக்கொள்ளுங்கள் நாங்கள் ஒருவனுக்கும் அநியாயஞ்செய்யவில்லை. ஒருவனையுங்கெடுக்கவில்லை.

௩ ஒருவனையும் வஞ்சிக்கவில்லை. உங்களைக் குற்றவாளிகளாக்கும்பொருட்டாக இப்படி நான் சொல்லுகிறதில்லை. முன்னே நான் சொன்னபடி (உங்களுடனே) கூடச்சாகவும் கூடப்பிழைக்கவுந்தக்கதாக, எங்களிருதயங்களிலிருக்கிறீர்களே.

௪ (ஆனதால்) மிகுந்த தயிரியத்தோடே உங்களுடனே பேசுகிறேன். உங்களைக் குறித்து மிகவும் மேன்மைபாராட்டுகிறேன். ஆறுதலால் நிறையப்பட்டிருக்கிறேன். எங்களுக்கு வந்திருக்கிற மிகுந்த உபத்திரவத்திலே பரிபூரணசந்தோஷப்படுகிறேன்.

௫ எப்படியென்றால், நாங்கள் மக்கெதோனியா நாட்டிலே வந்தபொழுது, எங்கள் சரீரத்திற்கு அமைதலொன்றுமில்லாமல் எப்பக்கத்திலேயும் உபத்திரவப்பட்டோம் புறம்பே போராட்டங்களும் உள்ளே பயங்களுமிருந்தன.

௬ ஆகிலுந் தாழ்மையானவர்களுக்கு ஆறுதல்செய்கிற பராபரன் தீத்துவந்ததினாலே எங்களுக்கு ஆறுதல்செய்தார்.

௭ அவன் வந்ததினாலேமாத்திரமல்ல, உங்கள் வாஞ்சையையும் உங்கள் துக்கிப்பையும் என்னைப்பற்றி உங்களுக்குள்ள பக்திவைராக்கியத்தையும் அவன் எங்களுக்கறிவித்தபொழுது, தான் உங்களாலே ஆறுதலடைந்ததினாலும், அதிகமாய்ச் சந்தோஷப்பட்டேன்.

௮ ஆனதால் நான் (என்) நிருபத்தினாலே யுங்களைத் துக்கப்படுத்தியிருந்தும், மனஸ்தாபப்படமாட்டேன். அந்த நிருபம் உங்களைக் கொஞ்சப்பொழுதாகிலும் உங்களைத் துக்கப்படுத்திற்றென்று நான் பார்த்து, மனஸ்தாபப்பட்டிருந்தும், இப்பொழுது நீங்கள் துக்கப்பட்டதினாலேயல்ல,

௯ நீங்கள் மனந்திரும்புகிறதற்கேதுவாகத் துக்கப்பட்டதினாலே சந்தோஷப்படுகிறேன். நீங்கள் ஒன்றிலும் எங்களால் நஷ்டப்படாதபடிக்குத் தேவெத்தனமான துக்கம் அடைந்தீர்களே.

௰ தேவெத்தனமான துக்கம் பின்பு மனஸ்தாபமில்லாமல் இரட்சிப்புக்கேதுவான மனந்திரும்புதலையுண்டாக்குகிறது. லவுகிகத்துக்கமோ மரணத்தை யுண்டாக்குகிறது.

௰௧ பாருங்கள். நீங்கள் (தேவெத்தனமான) துக்கம் அடைந்தது உங்களிடத்தில் எத்தனை சாக்கிரதையையும் எத்தனை நியாயஞ்சொல்லுதலையும் எத்தனை வினைத்தலையும் எத்தனை பயத்தையும். எத்தனை வாஞ்சையையும் எத்தனை பக்திவைராக்கியத்

தையும் எத்தனை தண்டனையையும் உண்டாக்கிற்று. அந்தச் சங்கதியையெல்லாங் குறித்து நீங்கள் எவ்விதத்திலேயும் உங்களைச் சுத்தவான்களென்று ஒப்புவித்தீர்கள்.

௰௨ ஆகையினாலே நான் உங்களுக்கு அப்படியெழுதியிருந்தும், அநியாயஞ் செய்தவனிமித்தமல்ல, அநியாயஞ் செய்யப்பட்டவனிமித்தமுமல்ல, பராபரனுக்கு முன்பாக உங்களைக் குறித்து எங்களுக்குண்டாயிருக்கிற சாக்கிரதையுங்களிடத்திலே வெளிப்படுவதினிமித்தமாகவே அப்படியெழுதியிருந்தேன்.

௰௩ ஆனதாலே நீங்கள் ஆறுதலடைந்ததினாலே நாங்களும் ஆறுதலுள்ளவர்களாயிருக்கிறோம். விசேஷமாகத் தீத்துவினுடைய ஆவியுங்களனைவராலும் ஆறுதலடைந்ததினாலே அவனுக்கு வந்த சந்தோஷத்தால் அதிகமாயச் சந்தோஷப்பட்டோம்.

௰௪ இப்படியிருக்க, உங்களுக்குப் புகழ்ச்சியாய் நான் அவனுடனே சொன்னதைக் குறித்து நான் வெட்கப்படமாட்டேன். நாங்கள் சகலத்தையும் உங்களுக்குச் சத்தியமாய்ச் சொன்னதுபோல, தீத்துவுடனே நானுங்களுக்குப் புகழ்ச்சியாய்ச் சொன்னதுஞ் சத்தியமாக விளங்கிற்றே.

௰௫ மேலும் அவன் தன்னை நீங்கள் பயத்தோடும் நடுக்கத்தோடும் ஏற்றுக்கொண்டதையும் நீங்களெல்லாருங் கீழ்ப்படிந்ததையும் நினைத்துக்கொண்டு தன் மனதிலேயுங்கள்மேலே அதிக அன்புள்ளவனாகிறான்.

௰௬ ஆகையால் நான் எவ்விதத்திலேயும் உங்களைக் குறித்துத் திடனாயிருக்கலாமென்று சந்தோஷப்படுகிறேன்.

## ௮. அதிகாரம்.

[(௧) கொரிந்தருந்தருமங்களைச் செய்யும்படி அவர்களை மக்கெதோனியருடைய திருட்டாந்தத்தினாலும், (௯) இயேசுக் கிறிஸ்துவினுடைய கிருபையினாலும், (௰௫) பொதுவான நன்மையினாலும் அவர்களை ஏவி, (௰௬) தருமப் பணங்களைச் சேர்க்கிறதிலே தீத்துமுதலானவர்களுஞ் செய்த சாக்கிரதையைக் காட்டியது.]

பின்னும் சகோதரரே! மக்கெதோனியா தேசத்துச் சபைகளுக்குப் பராபரன் அளித்த கிருபையையுங்களுக்கறிவிக்கிறோம்.

௨ என்னவென்றால், அவர்கள் மிகுந்த உபத்திரவத்தினாலே சோதிக்கப்படுகையில், கொடிய தரித்திரராயிருந்தும், தங்கள் பரிபூரணமான சந்தோஷத்தினாலே மிகுந்த உதாரமாய்த் (தருமத்தைக்) கொடுத்தார்கள்.

௩ மேலும் அவர்கள் தங்களாலான மட்டுந் தங்கள் பலத்திற்கு மேலாகவுங் கொடுக்கும்படிக்குத் தாங்களே மனதுள்ளவர்களாயிருந்தார்கள். அதற்கு நானே சாட்சியாயிருக்கிறேன்.

௪ மேலும் அவர்கள் தங்களுபகாரத்தையும் பரிசுத்தவான்களுக்குச் செய்யப்படுந் தருமவூழியத்தின் பங்கையும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று எங்களை மிகவும் வேண்டிக்கொண்டு,

௫ எங்கள் நம்பிக்கைக்கு மேலாகத் தங்களைத்தாமே முதலாவது கர்த்தருக்கும் பின்பு பராபரனுடைய சித்தத்தினாலே யெங்களுக்கும் ஒப்புக்கொடுத்தார்கள்.

௬ ஆனதாலே தீத்துதான் முன்னே தொடங்கினபிரகாரமாக இந்தத் தருமகாரியத்தை உங்களிடத்திலே முடிக்கவும் வேண்டுமென்று அவனிடத்தில் கேட்டுக்கொண்டோம்.

௭ அல்லாமலும் நீங்கள் விசுவாசத்திலேயும் பேச்சிலேயும் அறிவிலேயும் எல்லாவிதச் சாக்கிரதையிலேயும் எங்கள்மேலுள்ள உங்கள் அன்பிலேயும் மற்றும் பலவித நன்மைகளிலேயும் பெருகியிருக்கிறதுபோல, இந்தத் தருமகாரியத்திலேயும் பெருகவேண்டுமென்று விரும்புகிறோம்.

௮ இப்படி நான் கட்டளையாகச் சொல்லாமல், மற்றவர்களுடைய சாக்கிரதையினிமித்தமும் உங்கள் அன்பின் உண்மையைச் சோதிக்கும்பொருட்டாகவும் என்னுடைய யோசனையைமாத்திரஞ் சொல்லியிருக்கிறேன்.

௯ நம்முடைய கர்த்தராகிய இயேசுக் கிறிஸ்துவின் கிருபையை யறிந்திருக்கிறீர்களே. அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்தும், நீங்கள் அவருடைய தரித்திரத்தினாலே ஐசுவரியவான்களாகும்படிக்கு, உங்கள் நிமித்தந் தரித்திரரானாரே.

௰ மேலும் (இந்தத் தருமத்தைச்) செய்கிறதுமாத்திரமல்ல ஒருவருஷத்திற்கு முன்பு (அதைச்) செய்ய ஆரம்பம் பண்ணும்படி தோன்றின விருப்பமும் உங்களுக்குப் பிரயோசனமாயிருக்கும்.

௰௧ ஆகையால் செய்கிறதையும் இப்பொழுது நிறைவேற்றுங்கள். கொடுக்கவேண்டுமென்றும் ஆசையுண்டாயிருந்ததுபோல, உங்களுக்குண்டானவைகளில் எடுத்து அதை நிறைவேற்றுதலுமுண்டாவதாக.

௰௨ ஒருவனுக்கு மன் ஆசையிருந்தால், அவன் தனக்கில்லாததின்படியல்ல, தனக்குள்ளதின்படி அங்கிகரிக்கப்படுவானே.

௰௩ மற்றவர்களுக்குச் சந்தோஷமும் உங்களுக்கு உபத்திரவமுமுண்டாயிருக்கும்பொருட்டாகவல்ல, சம்மானநிலைமையிருக்கும்பொருட்டாகவே சொல்லுகிறேன்.

௰௪ எப்படியெனில், (மற்றொருகாலத்திலே) அவர்களுடைய பரிபூரணம் உங்கள் வறுமையை நீக்கும்படிக்கு, இக்காலத்திலே

றைத்தும நிற்குமெனறெழுதியிருக்கிற விதமாயிருக்கும.

௰ அந்தப்படிவிதைக்கிறவனுக்கு விதையையும, பொசிக்கிறதற்கு அப்பத்தையும அளிக்கிறவர் உங்களவிதையையும அதிகமாயப்பெருகப்பணணி, உங்களநீதியின விளைச்சலகளைவளர்சசெயவார்.

௰௧ அதினாலெ நீஙகளமிகுநத உதாரமுளளவர்களாயிருந்தபடிக்கு எவவிதத்திலேயுஞசம்பூர்ணமுளளவர்களாவீர்கள. அதினாலெ நாஙகளும பராபரனுக்குத தோத்திரஞ்செலுத்துதற்கு எழுப்பப்படுவோம்.

௰௨ இந்தத்தருமநடத்தையினாலேயுமப பரிசுத்தவானகளுடைய குறைவுகளை நீக்குகிறதறகுமாத்திரமல்ல, அநேகர்பராபரனைத்தோத்திரிக்கிறதறகுமமிகுநதபலனுள்ளதாயிருக்கின்றதே.

௰௩ அவர்களிவவூழியத்தினுத்தமத்தைக் கணடு, நீஙகளகிறிஸதுவினசுவிசேஷத்தை கீழப்படியுதலோடே அறிக்கைபணணுகிறதறகாகவுந்தஙகளுக்கும மறறயாவருக்கும உதாரமாயத்தருமத்தைச்செயகிறதறகாகவும பராபரனைத துதித்து,

௰௪ உஙகளுக்காக வேணடுதலசெயது, பராபரன உஙகளுக்கு அளித்தமிகவும மேனமையானகிருபையினிமித்தம உஙகள்மேல வாஞசையாயிருக்கிறார்கள.

௰௫ பராபரன் அனுக்கிரகித்தசொலல முடியாத ஈவுக்காக அவருக்குத்தோத்திரமுணடாவதாக.

## ௰. அதிகாரம்.

[(௧) இறுமாபபோடு இகழ்ச்சியைச்செயதகளளபபோதகர்களுக்குத தனனுடைய அபபோஸதல அதிகாரத்தையறிவித்து, (௰௩) தனக்கேலாதவைகளைக்குறித்துத்தானமேனமைபாராட்ட மனதிலலையெனறுகாட்டியது.]

மேலும உஙகளுக்குமுனபாக விருக்குமபொழுது தாழமையாயுந தூரத்திலேயிருக்குமபொழுது உஙகள்மேல தயிரியமாயுமிருக்கிற பவுலாகியநான கிறிஸதுவின சாநதத்தினாலுந தயையினாலும உஙகளுக்குப்புத்திசொலலுகிறேன.

௨ நானகேட்டுககொளளுகிறதெனனவெனில, நான உஙகளமுனபாக விருக்குமபொழுது, எஙகளைச்சரீரத்தினபடிநடக்கிறவர்களெனறு எணணுகிறசிலருக்கு நான துணிவாயிருக்க நினைக்கிறதால, அந்தத்துணிவோடே நானதயிரியமுளளவனாயிராதபடிக்குச்செயவீர்களாக.

௩ நாஙகளசரீரத்தோடே நடநதுதிரிநதும சரீரத்தினபடி போராட்டமபணணமாட்டோம.

௪ எஙகளுடைய போராயுதஙகளமாமிசத்திற்கேற்ற (பலவீனமுளள) வைகளாயிராமல, அரணகளை நிர்மூலமாக்குகிறதற்குத தேவபெலனுளளவைகளாயிருக்கின்றனவே.

௫ அவைகளால நாஙகள அகநதையான சிநதனைகளையும பராபரனையறிகிற அறிவுக்குவிரோதமாய உயருகிற எலலாவித மேட்டிமையையும நிர்மூலமாக்கி, எந்தப புத்தியையுங கிறிஸதுவுக்குக்கீழ்ப்படியச் சிறைப்படுத்துகிறவர்களாயிருநது,

௬ நீஙகள நிறைவாயக்கீழ்ப்படிநதிருக்குமபொழுது, எலலாக் கீழ்ப்படியாமைக்குந தக்கத்தணடனையைச் செலுத்த எத்தனமாயிருக்கிறோம.

௭ முகத்திறகு முனனிருக்கிற வைகளை (மாத்திரம) பார்க்கிறீர்களா, ஒருவனதனனைக் கிறிஸதுவுக்குரியவனெனறு நமபிக் கொணடால், அவனதான கிறிஸதுவுக்குரியவனாயிருக்கிறதுபோல, நாஙகளுங்கிறிஸதுவுக்குரியவர்களெனறு தனனாலேதானே சிந்திக்கக்கடவன.

௮ அதுவுமலலாமல உஙகளை நிர்மூலமாக்குகிறதறகலல, எழுப்புகிறதற்குக்கர்த்தர் எஙகளுக்குக்கொடுத்த அதிகாரத்தைக்குறித்து நான இனனுஞசறறேயதிகமாய மேனமைபாராட்டினாலும, நானவெட்கப்படுவதிலலை.

௯ நான நிருபஙகளாலேயுஙகளைப்பயமுறுத்துகிறவனாயத்தோனறாதபடிக்கு மாத்திரம (அப்படிமேனமை பாராட்ட மாட்டேன.)

௰ அவனுடைய நிருபஙகளபாரமும்பெலனுமுளளவைகள ஆகிலுஞ்சரீரத்தினதோற்றம பலவீனமுமாய அவனுடையவசனம அற்பமுமாயிருக்கிறதெனகிறார்களே.

௰௧ அப்படிச்சொலலுகிறவன நிருபஙகளினவசனத்தினாலே தூரத்திலிருக்கிற நாஙகள தோனறுகிறதெப்படியோ அப்படி முகத்திற்குமுனபாகவுங் கிரியையிலேயுந் தோனறுவோமெனறுசிந்திக்கக்கடவன.

௰௨ ஆகிலுந்தஙகளைத்தாமே புகழுகிற சிலருக்கு நாஙகள எஙகளைச்சரியாக்கவும, ஒப்பிடவுந்துணியமாட்டோம. அவர்களதஙகளாலே தஙகளை அளந்துகொணடு, தஙகளுக்கேதஙகளை ஒப்பிட்டுக்கொணடு (தஙகளை) யறியாதவர்களாயிருக்கிறார்கள.

௰௩ நாஙகள (எஙகளுக்கு) அளநதுகொடாதவைகளைக்குறித்து மேனமைபாராட்டாமல, உஙகளிடமவரைக்கும எட்டத்தக்கதாக பராபரன எஙகளுக்களநதுகொடுத்த அளவினபடியே மேனமைபாராட்டுகிறோம.

௰௪ கிறிஸதுவினசுவிசேஷத்தோடேநாஙகள உஙகளிடமவரைக்குமவந்தோமே. ஆகையால உஙகளிடத்திலவந்தெட்டாத

வர்களாய நாஙகள அளவுககுமிஞசிபபோ கிறதில்லை.

யரு அளவுககு மிஞசி அநநியருடைய வேலைககுட்பட்டு, மேனமைபாராட்டமாட்டோம.

யசா ஆகிலும உஙகள விசுவாசமவளர்நதிருககுமபொழுது உஙகளுககு அபபுறமான இடஙகளிற சுவிசேஷததை யறிவிககவும அநநிய எலலைகளுககுளளே செயயபபட்டவைகளை (நாஙகள செயததாக) மேனமைபாராட்டாதிருககவுநதககதாக, எஙகள அளவு உஙகளாலே மிகவுமபெருகுமெனறு நமபிககையாயிருககிறோம.

யஎ மேனமைபாராட்டுகிறவன கர்ததரைககுறிததே மேனமைபாராட்டக கடவன.

யஅ தனனைததான புகழுகிறவனல்ல, கர்ததராலே புகழபபடுகிறவனெவனோ அவனே உததமனுயிருபபானே.

## யக. அதிகாரம்.

[(க) களள அபபோஸ்தலர்வஞசனையாய நடநததினிமிததம பவுலு தனனுடைய உணமைகளைககுறிதது மேனமைபாராட்டி, (யசா) அவர்களுககுசசெவிகொடுதத கொரிநதியருககுபபுததிசொலலி, (உஉ) தனனையநதககளள அபபோஸதலரோடே ஒததுப்பார்தது, (ஙய) தனனுடைய பலவீனததிற் குரியவைகளைககுறிததுசசொலலியது.]

ஆ நீஙகள (என்) புததி யீனததிற்குச சறறேபொறுமையாயிருநதால நலமாயிருககும. எனககுபபொறுததுமிருககிறீர்களே.

உ நாஙுஙகளைககற்புளளகனனிஸதிரீயாகக்கிறிஸதுவெனனும ஒரேபுருஷனுக்கு ஒபபுககொடுக்க நியமிததபடியால, உஙகளுககாகததேவ வயிராககியமாய வயிராககியஙகொணடிருககிறேன.

ஙா ஆகிலும அநதபபாமபுதனனுடைய தநதிரததினுலே ஏவாளைவஞசிததுபோல, உஙகளமனதுஙகிறிஸதுவினமே ஙுளள பததியின உணமையைவிட்டுவிலகக்கெடுக்கபபடுமோவெனறுபயநதிருககிறேன்.

சா எப்படியெனில, (உஙகளிடததில) வநதிருககிறவன நாஙகள பிர்சஙகியாததவெறொரு இயேசுவைப பிர்சஙகிததாலுமல, அலலது, நீஙகளபெறுததவெறொரு ஆவியையும நீஙகள ஏறறுககொளளாத வேறொரு சுவிசேஷததையும (அவனுலே) பெறறீர்களானுல, அவனை நனறாய ஏற்பீர்கள.

ரு மிகவும பெரிய அநத அபபோஸதலருககு நான எவவளவாகிலுங குறைவுளளவனலலவெனறெணணுகிறேன.

சா நான பேசசிலே கலலாதவனுயிருநதாலும. அறிவிலே கலலாதவனலல. எபபொழுதும எலலாவிதஙகளிலேயும உஙகளுககுளளே (அபபடியே) வெளிபபட்டிருககிறோமே.

எ அலலது நீஙகளுயர்ததபபடுமபடிக்கு நான எனனைததாழததி, பபரனுடைய சுவிசேஷததை யிலவிசமாய உஙகளுக்கு அறிவிததினுலே குறறஞசெயதேனு.

அ (இலலையே) உஙகளுககூழியஞசெயயுமபடிககு,மறறசசபைகளைகொளளையிட்டதுபோலச சமபளமபறறிககொணடேன.

கூ நானுஙகளிடததிலிருநது, குறைசசல அனுபவிததபொழுதும, ஒருவனையும நான வருததபபடுததவிலலை. மக்கெதோனியாவிலிருநதுவநதசகோதரர் எனகுறைவை நீக்கினூர்களே. எவவிதத்திலேயும உஙகளுககுபபாரமாயிராதபடிககுப பார்ததேன. இனிமேலும அபபடியே பார்பபேன.

ய அகாயாநாட்டின திசைகளிலே இநதப்புகழ்ச்சி யெனனிடததினினறு நீஙகுவதிலலையெனறு எனனிலுளள கிறிஸதுவினுடைய உணமையைககொணடு சொலலுகிறேன.

யக எனனததினுலே (யபபடிசசெயவே ன) நாஙுஙகளைச சிநேகியாதபடியினுலோ (அபபடிசசெயவேன) அதினுலலவே தேவனறு பர்ாபர்னையறிநதிருககிறூர்.

யஉ மேலும நஙகளைபபோல மேனமை பாராட்டுகிறதினுலே யெங்களைபபோலககாணபபட்டசசமயநதேடுகிறவர்களுககுச் சமயம் தப்பபோகுமபொருட்டாகநான இபபடிச செயகிறேன. பினனும இபபடிசசெயவேன.

யங அப்படிபபட்டவர்கள களள அபபோஸதலர், கபடமுளள வேலையாட்கள, கிறிஸதுவினுடைய அபபோஸதலரின ரூபததையெடுததுநடககிறவர்களாயிருக்கிறூர்கள.

யச அது அதிசயமலல, சாததானும ஒளியையுடையதூதனைபபோனற உருவததையெடுபபானே.

யரு ஆகையால அவனுடைய ஊழியககாரரும நீதியின ஊழியககாரருடைய ரூபததையெடுததால, மிகுநத ஆச்சரியமாகமாட்டாது. அவர்களுடைய முடிவு அவர்களுடையகிரியைகளுககுததககதாயிருககும.

யசா பினனும நானசொலலுகிறதென னவெனில, ஒருவனும எனனைப்புததியீனனெனறு எணணுதிருபபானுக. எனனினும நானுஞ்சற்றேமேனமைபாராட்டுகிறதற்கு, நீஙகள எனனைபபுததியீனனைப் போலாகிலுஞ் சகிக்ககடவீர்கள.

௰௭ இப்படித் தைரியமாய் மேன்மை பாராட்டுகையில், நான் சொல்லுகிறது கர்த்தரானபடியே சொல்லாமல், புத்தியீனனைப் போலச் சொல்லுகிறேன்.

௰௮ அநேகர் சரீரத்தின்படி மேன்மை பாராட்டிக்கொள்ளுகையில், நானும் மேன்மை பாராட்டுவேன்.

௰௯ புத்தியுள்ள நீங்கள் புத்தியில்லாதவர்களைச் சந்தோஷமாய்ச் சகித்திருக்கிறீர்களே.

௨௰ ஒருவன் உங்களைச் சிறையாக்கினாலும், ஒருவன் உங்களைப் பட்சித்தாலும், ஒருவன் (உங்கள் ஆஸ்திகளை) பிடித்துக்கொண்டாலும், ஒருவன் உங்களுக்கு முன்பாகத் தன்னை உயர்த்தினாலும், ஒருவன் உங்களை முகத்திலறைந்தாலுஞ் சகித்திருக்கிறீர்களே.

௨௧ நாங்கள் பலவீனராக எங்களுக்கு வந்த நிந்தையைக்குறித்து (இப்படி) பேசுகிறேன். ஒருவன் துணிகிறது எதுவோ அதிலே நானுந் துணிவாயிருக்கிறேன். இப்படிப் புத்தியீனமாய்ப் பேசுகிறேன்.

௨௨ அவர்கள் எபிரேயரானால், நானும் எபிரேயன். அவர்கள் இஸ்ரவேலரானால் நானுமிஸ்ரவேலன். அவர்கள் ஆபிரகாமின் சந்ததியானால், நானும் ஆபிரகாமின் சந்ததியான்.

௨௩ அவர்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரரானால், நான் அவர்களுக்கு மேற்பட்டவன் (மதிப்பில்லாமல்) புத்தியீனமாய்ப் பேசுகிறேன். அவர்களிலும் நான் அதிக வேலைகளைச் செய்தேன். அதிகமாய் அடிபட்டேன். அதிகமாய்க் காவல்களில் வைக்கப்பட்டேன். அநேகந்தரம் மரணத்திற்கு ஏதுவாயிருந்தேன்.

௨௪ யூதர்களால் ஒன்று குறைய நாற்பதடியாக ஐந்துதரம் பட்டேன்.

௨௫ மூன்றுதரம் மிலாறுகளால் அடிபட்டேன். ஒருதரங் கல்லெறியுண்டேன். மூன்றுதரங் கப்பல் சேதமானதிலிருந்தேன். ஒரிராப்பகல் முழுவதும் ஆழத்திலே யிருந்தேன்.

௨௬ அநேகந்தரம் பிரயாணமாய்ப் போனேன். ஆறுகளால் வருகிற மோசங்களிலுங் கள்ளரால் வருகிற மோசங்களிலும் என் சொந்தேசத்தாரால் வந்த மோசங்களிலும் புறதேசத்தாரால் வந்த மோசங்களிலும் ஊர்களிலுண்டான மோசங்களிலும் வனாந்தரத்திலுண்டான மோசங்களிலுஞ் சமுத்திரத்திலுண்டான மோசங்களிலுங் கள்ளச் சகோதரரால் வந்த மோசங்களிலும்,

௨௭ வேலையிலும் வருத்தத்திலும் அநேகந்தரங் கண்விழிப்புகளிலும் பசியிலுந் தாகத்திலும், அநேகந்தரம் உபவாசங்களிலுங், குளிர்ச்சியிலும், நிர்வாணத்திலுமிருந்தேன்.

௨௮ புறம்பேயுண்டான இவைகளைத் தவிர, எல்லாச் சபைகளைக் குறித்துமிருக்கிற கவலை யென்னை நாடோறும் நெருக்குகின்றது.

௨௯ பலவீனமடைகிறவனெவனோ அவனுக்கு நானும் பலவீனனாயிருக்கிறதில்லையோ வழுவுகிறவனெவனோ அவனுக்கு (உதவி செய்ய) எரிச்சலில்லாமலிருக்கிறேனோ.

௩௰ மேன்மை பாராட்டவேண்டியதால், என் பலவீனத்திற்குரியவைகளைச் சொல்லி மேன்மை பாராட்டுவேன்.

௩௧ என்றென்றைக்குந் தோத்திரிக்கப்பட்ட பராபரனும் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமானவர் நான் பொய் சொல்லுகிறதில்லையென்று அறிந்திருக்கிறார்.

௩௨ தமஸ்குநகரியிலே அரேத்தாவென்னும் இராசாவினுடைய சேனைத்தலைவன் என்னைப் பிடிக்கவேண்டுமென்று தமஸ்கருடைய பட்டணத்தின் வாசல்களிற் காவல் வைத்துக்காத்தான்.

௩௩ அப்பொழுது நான் கூடையிலே வைக்கப்பட்டுப் பலகணியிலிருந்து மதில் வழியாய் இறக்கிவிடப்பட்டு, அவனுடைய கைகளுக்குத் தப்பிப்போனேன்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) பவுல் தரிசனங்களையடைந்திருந்தும், அதினாலே மேன்மை பாராட்டாமல் பலவீனங்களுள்ள தன்னிடத்திற் கிறிஸ்துவின் பலன் தோன்றினபடியினாலே மேன்மை பாராட்டி, (௰௧) தான் தன்னைக்குறித்துப் பேசும்படிக்குக் கொரிந்தர் காரணமாயிருந்தார்களென்று சொல்லியது.]

இப்படியிருக்க, மேன்மை பாராட்டுகிறது எனக்குத் தகாது. ஆகிலுங் கர்த்தர் கொடுத்த தரிசனங்களையும் வெளிப்படுத்துதல்களையுஞ் சொல்லவருகிறேன்.

௨ கிறிஸ்துவைப்பற்றிய ஒரு மனிதனை யறிந்திருக்கிறேன். அவன் பதினாலுவருஷத்திற்குமுன்னே மூன்றும் வானமவரைக்கும் எடுக்கப்பட்டான். (அவ்வேளையிலே) அவன் சரீரத்திலிருந்தானோ அதற்குப்புறம்பேயிருந்தானோ அதை யறியமாட்டேன். அது பராபரனுக்குத் தெரியும்.

௩ இப்படிப்பட்ட மனிதன் பரதீசுக்கு உயர்த்தப்பட்டு, மனிதர் பேசக்கூடாதவாக்குக் கெட்டாத வார்த்தைகளைக் கேட்டானென்று அறிந்திருக்கிறேன்.

௪ (அவ்வேளையிலே) அவன் சரீரத்திலிருந்தானோ அதற்குப் புறம்பேயிருந்தானோ அதை யறியமாட்டேன். பராபரனுக்கே தெரியும்.

௫ இப்படிப்பட்டவனைக்குறித்து மேன்மை பாராட்டுவேன். என்னைக்குறித்து என்

பலவீனங்களிலேயன்றி, வேறொன்றிலும் மேன்மைபாராட்டமாட்டேன்.

௬ சத்தியமானதை நான் பேசுகிறேன் ஆதலால் மேன்மைபாராட்டமனதிருந்தாலும், நான் புத்தியீனனல்ல ஒருவனும் என்னிடத்திலே காண்கிறதற்கும் அல்லது என்னிலே கேட்கிறதற்கும் மேலாக என்னை எண்ணாதபடிக்கு அதை நிறுத்துகிறேன்.

௭ அன்றியும் அதிக மேன்மையானவைகள் எனக்கு வெளிப்படுத்தப்பட்டதினாலே நான் என்னையுயர்த்தாதபடிக்கு, என் மாமிசதேகத்திலே ஒரு முள்ளுக் கொடுக்கப்பட்டிருக்கிறது. என்னை நானுயர்த்தாதபடிக்கு என்னைக் குட்டுஞ் சாத்தானுடைய தூதனாயிருக்கிறான்.

௮ அது என்னைவிட்டு நீங்கும்படிக்கு நான் மூன்றுதரங் கர்த்தரை வேண்டிக்கொண்டேன்.

௯ அவர் என்னுடனே சொன்னது, என் கிருபை உனக்குப் போதும். என்னுடைய வல்லமை (உன்) பலவீனத்திலே நிறைவாய்த் தோன்றுகின்றதேயென்றார். ஆகையாற் கிறிஸ்துவின் வல்லமை என்மேல் தங்கியிருக்கும்படிக்கு நான் மிகவும் அதிக விருப்பமாய் என் பலவீனங்களைக் குறித்து மேன்மைபாராட்டுவேன்.

௰ அந்தப்படி நான் பலவீனமாயிருக்கும்பொழுது, பலனாயிருக்கிறபடியால் கிறிஸ்துவினிமித்தம் எனக்கு வரும் பலவீனங்களிலும் நிந்தைகளிலும் வறுமைகளிலும் துன்பங்களிலும் நெருக்கங்களிலும் நான் பிரியமாயிருக்கிறேன்.

௰௧ மேன்மைபாராட்டினதால், நான் புத்தியீனனானேன். நீங்களே அதற்கு என்னைப் பலவந்தப்படுத்தினீர்கள். நான் பிரயோஜனமில்லாதவனாயிருந்தாலும், மிகவும் பிரதான அப்போஸ்தலருக்கும் நான் எவ்வளவாகிலுங் குறைந்தவனாயிராததால், உங்களாலே நான் மெச்சிக்கொள்ளப்பட நியாயமாயிருந்ததே.

௰௨ அப்போஸ்தலனுக்குரிய அடையாளங்கள் உங்களுக்குள்ளே எல்லாவிதமான பொறுமையோடும் அதிசயங்களாலும் அற்புதங்களாலும் வல்லமைகளாலும் (என்னாலே) நடப்பிக்கப்பட்டனவல்லவா. மற்றச் சபைகளுக்கு நீங்கள் எதிலே குறைவாயிருக்கிறீர்கள்.

௰௩ நான் உங்கள்மேலே சுமையை வையாதிருந்ததினாலேயன்றி, வேறொன்றிலுமில்லையே. இந்த அநியாயத்தை நீங்கள் எனக்கு மன்னிக்கவேண்டும்.

௰௪ இப்பொழுது உங்களிடத்திற்கு வர, மூன்றாந்தரம் ஆயத்தமாயிருக்கிறேன். (அப்பொழுதும்) நான் உங்களுடையதையல்ல, உங்களையே தேடுகிறபடியால், நான் உங்கள்மேற் சுமையை வைப்பதில்லை. பெற்றாருக்குப் பிள்ளைகளல்ல பிள்ளைகளுக்குப் பெற்றார்களே பொக்கிஷங்களைச் சேர்த்துவைக்கவேண்டுமே.

௰௫ ஆனதால் நான் உங்களுக்குக் காட்டுகிற அன்பு எவ்வளவோ அவ்வளவு குறைவாய் உங்களால் அன்புகூரப்பட்டிருந்தும், மிகவுஞ் சந்தோஷமாய் நான் உங்கள் ஆத்துமாக்களுக்காக (என்னைச்) செலவுபண்ணவுஞ் செலவுபண்ணப்படவும் விரும்புகிறேன்.

௰௬ அப்படியாகட்டும். அவன் உங்களுக்குப் பாரமாயிருக்கவில்லை. அதுமெய்தான். ஆகிலுந் தந்திரமுள்ளவனாயிருந்து, உங்களைக் கபடத்தினாலே பிடித்தானென்கிறீர்கள்.

௰௭ (அதைப்படி) நானுங்களிடத்திற்கு அனுப்பினவர்களில் ஆராலேயுங்களிடத்திற் பொழிவைத் தேடினேனா.

௰௮ தீத்து உங்களிடத்திற்குப் போகவேண்டுமென்று நான் கேட்டுக்கொண்டு, அவனுடனே கூட ஒரு சகோதரனையனுப்பினேன். தீத்து உங்களிடத்தில் ஏதுபொழிவையாகிலுந் தேடினானா? நாங்கள் ஒரே ஆவியோடேயல்லவா நடந்தோம். ஒரே மார்க்கமாய் அல்லவோ நடந்தோம்.

௰௯ உங்களுக்கு முன்பாகக் குற்றம் அடக்கும்படி பேசுகிறோமென்று மறுபடியும் எண்ணுகிறீர்களா. பிரியமானவர்களே, பராபரனுடைய சன்னிதானத்திலே கிறிஸ்துவைப்பற்றிக்கொண்டு இவைகளையெல்லாம் உங்களையெழுப்பும்படிக்கே பேசுகிறோம்.

௨௰ ஆகிலும் நான் வந்து உங்களை என் மனதின்படியிருக்கிறவர்களாகக் காணாமலும் உங்களுக்கு நானும் உங்கள் மனதின்படியிருக்கிறவனாகக் காணப்படாமலுமிருப்பேனோ, விரோதங்கள், வயிராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், புறங்கூறுதல், கோள்சொல்லுதல், இறுமாப்புகள், கலகங்களும், உங்களுக்குள்ளே உண்டாயிருக்குமோ.

௨௰௧ மறுபடியும் நான் வருகிறபொழுது என் பராபரன் உங்களிடத்தில் என்னைத் தாழ்மைப்படுத்தும்படிக்கு, முன்பாவஞ்செய்தவர்களாகிய அநேகர் தாங்கள் நடப்பித்த அசுத்தத்தையும், வேசித்தனத்தையும், காமவிகாரத்தையும், விட்டுமனந்திரும்பாமலிருக்கிறதைக் குறித்து நான் துக்கப்படவேண்டியதாயிருக்குமோ என்றுங்களைக் குறித்துப் பயந்திருக்கிறேன்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) புத்தியடையமனதில்லாதவர்களுக்குப் பயமுறுத்தி, (௫) அவர்கள் தங்களுடைய விசுவாசத்தைக் குறித்துத் தங்களைப் பரிசோதிக்கும்படி சொல்லி, (௰௧) மற்றப் புத்திகளையுஞ் சொன்னது.]

இந்த மூன்றாந்தரம் நான் உங்களிடத்திற்கு வருகிறேன். சகலசங்கதிகளும் இரண்டு

மூன்று சாட்சிகளுடைய வாக்கினால் நிலைவரப்படும்.

௨ நான் மறுபடியும் வரும்பொழுது, தப்பவிடமாட்டேனென்று முன்பாவஞ்செய்தவர்களுக்கும் மற்ற எல்லாருக்கும் முன் சொன்னேன். இப்பொழுது தூரமாயிருந்தும் உங்களிடத்திலிருந்தவனாக நான் இல்லாதிருந்தும் அப்படியே முன்னறிவித்துச் சொல்லுகிறேன்.

௩ என்னுள்ளே கிறிஸ்து பேசுகிறதைக்குறித்த திருஷ்டாந்தத்தைக் காணத்தேடுகிறீர்களே, அவர் உங்களுக்குள்ளே பலவீனரல்ல, வல்லவராயிருக்கிறார்.

௪ அல்லாமலும் அவர் பலவீனத்தினாலே சிலுவையில் அறையப்பட்டிருந்தும் பராபரனுடைய வல்லமையால் பிழைத்திருக்கிறார். அப்படி நாங்களும் அவர்நிமித்தம் பலவீனராயிருந்தும், அவருடனேகூடப் பராபரனுடைய வல்லமையால் உங்களுக்குள்ளே சீவனைக்காணப்போம்.

௫ உங்களுக்கு விசுவாசமுண்டோவதைக் குறித்து உங்களைச் சோதியுங்கள். உங்களைத்தாமே விசாரித்தறியுங்கள். அல்லது நீங்கள் உதாரணமில்லாதவர்களாயிராவிட்டால், இயேசுக்கிறிஸ்து உங்களிடத்திலிருக்கிறாரென்று உங்களைத்தாமே அறிகிறதில்லையா.

௬ நாங்கள் உதாரணமில்லாதவர்களல்லவென்பதை அறிவீர்களென்று நம்புகிறேன்.

௭ மேலும் நீங்கள் எவ்வளவாகிலும் பொல்லாங்கைச் செய்யாதிருக்கும்படியாகப் பராபரனை நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன் நாங்கள் உதாரணமுள்ளவர்களென்று காணப்படும்பொருட்டல்ல, நீங்கள் நலமானதைச் செய்யும்பொருட்டே அப்படிச் செய்கிறேன், (அப்படி நீங்கள் செய்தால்) நாங்கள் உதாரணமில்லாதவர்களாயிருக்கலாம்.

௮ சத்தியத்திற்கு விரோதமாக நாங்கள் ஒன்றுஞ்செய்யக்கூடாமல் சத்தியத்திற்கு நேராகச் செய்வோம்.

௯ ஆகையால் நாங்கள் பலவீனராயிருந்தாலும், நீங்கள் பலமுள்ளவர்களானால் சந்தோஷப்படுவோம். அந்தப்படி நீங்கள் நிறைபொருந்தும்படிக்கு வேண்டுதல் பண்ணுகிறோம்.

௰ அதினாலே நான் உங்களிடத்தில் வந்திருக்கும்பொழுது, இடிக்கிறதற்கல்ல, எழுப்பிக்கட்டுகிறதற்குக் கர்த்தர் எனக்குக் கொடுத்த அதிகாரத்தின்படியே நான் கண்டிதம்பண்ணாதபடிக்கு, இவைகளைத் தூரமாயிருந்து எழுதுகிறேன்.

௰௧ கடைசியிலே சகோதரரே, சந்தோஷமாயிருங்கள். நிறைபொருந்துங்கள், ஆறுதலையடையுங்கள், ஏகசிந்தையாயிருங்கள், சமாதானமாயிருங்கள். அப்பொழுது அன்புக்கும் சமாதானத்திற்குங் காரணராகிய பராபரன் உங்களுடனேயிருப்பார்.

௰௨ ஒருவரையொருவர் பரிசுத்த முத்தத்தினாலே வாழ்த்துங்கள்.

௰௩ பரிசுத்தவான்களெல்லாரும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.

௰௪ கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபையும் பராபரனுடைய அன்பும் பரிசுத்த ஆவியோடே ஐக்கியமும் உங்களனைவருடனேயுமிருக்கக்கடவது.

ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

# கலாத்தியருக்கெழுதின நிருபம்.

## க. அதிகாரம்.

[(௧) பவுல் சபைக்கு வாழ்த்துதலைச் சொல்லி, (௬) அவர்களுக்கு விரோதத்தைமயக்கி விக்கிறதற்கேதுவாயிருந்ததற்காகப் புத்தி சொல்லி, (௰௨) அப்போஸ்தல ஊழியத்தைத்தான் மனிதரிடத்திலல்ல கர்த்தரிடத்திற்பெற்றதைக் காட்டியது.]

மனிதரினாலுமல்ல ஒரு மனிதனாலுமல்ல இயேசுக்கிறிஸ்துவினாலும் அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின பிதாவாகிய பராபரனாலும் அப்போஸ்தலனாயிருக்கிற பவுலவும்,

௨ என்னுடனேகூடவிருக்கிற எல்லாச் சகோதரரும் கலாத்தியநாட்டிலுள்ள சபைகளுக்கு எழுதுகிறதாவது,

௩ இப்பொழுதிருக்கிற பொல்லாத பிரபஞ்சத்தினின்று நம்மை நீக்கிவிடும்படிக்கு, நம்முடைய பிதாவாகிய பராபரனுடைய சித்தத்தின்படியே நம்முடைய பாவங்களுக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்தாரே அந்நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து நம வராலும் பிதாவாகிய பராபரனாலும்,

௪ உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவது.

ரு அவருக்கு என்றென்றைக்கும் மகிமையுண்டாவதாக, ஆமென்.

சா உங்களைக் கிறிஸ்துவின் கிருபைக்குள் அழைத்தவனை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய் விட்டு வேறொரு சுவிசேஷத்திற்குத் திரும்பினதால் நான் ஆச்சரியப்படுகிறேன்.

எ (இதுவன்றி) வேறொரு சுவிசேஷமுமில்லையே அப்படியிருந்தும் சிலர் உங்களைக் கலக்கப்படுத்திக் கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை மாறுபாடாக்க மனதாயிருக்கிறார்கள்.

அ நாங்கள் உங்களுக்கு அறிவித்த சுவிசேஷத்தைத் தவிர நாங்களாவது வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனாவது வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவித்தால் சபிக்கப்பட்டவர்களாயிருக்கக்கடவோம்.

சூ ஒருவன் நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்தைத் தவிர வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவித்தால் சபிக்கப்பட்டவனாகவேயிருக்கக்கடவனென்று முன்சொன்னதுபோல மறுபடியும் சொல்லுகிறேன்.

ய இப்பொழுது நான் மனிதரை நாடுகிறேனா. அல்லது பராபரனை நாடுகிறேனா. அல்லது மனிதருக்குப் பிரியமாயிருக்கப் பார்க்கிறேனா. நான் மனிதருக்குப் பிரியமானவனானால், நான் கிறிஸ்துவினூழியக்காரனாயிருப்பதில்லை.

யக மேலும் சகோதரரே, நான் உங்களுக்கு நிச்சயிக்கிறதென்னவெனில் என்னாற் பிரசங்கிக்கப்பட்ட சுவிசேஷம் மனிதருடைய இசைக்கேற்றதல்ல,

யஉ நான் அதை ஒரு மனிதனால் அடையவுமில்லை படிக்கவுமில்லை, இயேசுக்கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தினார்.

யங நான் யூதர்மார்க்கத்திலே யிருந்தபொழுது என்னுடைய நடக்கையைக்குறித்துக் கேள்விப்பட்டிருப்பீர்கள் பராபரனுடைய சபையை நான் மிகவுந் துன்பப்படுத்தி, அதைப் பாழாக்கி,

யச என் தேசத்தாரில் என் வயதுள்ள அநேகரிலும் யூதர்மார்க்கத்திலே தேறினவனாய், என் பிதாக்களுடைய பாரம்பரை நியாயங்களுக்காக மிகுந்த பத்தி வயிராக்கியனாயிருந்தேன்.

யரு அப்படியிருக்குங்காலத்திலே, என் தாயின் கருப்பமுதல் என்னைப் பிரித்தெடுத்துத் தமது கிருபையினாலே அழைத்த பராபரன்.

யசா தமதுடைய குமாரனை நான் புறதேசத்தாரிடத்திற் சுவிசேஷமாய் அறிவிக்கும்பொருட்டாக, அவரை யெனக்குள் வெளிப்படுத்தப் பிரியச்சித்தமாயிருந்தபொழுது, நான் எவ்வளவாகிலும் மாமிச இரத்தத்தோடே யோசனைபண்ணுமலும்,

யஎ எனக்கு முன்னே அப்போஸ்தலரானவர்களிடத்திலே எருசலேமுக்குத் திரும்பாமலும், அரபு தேசத்திற்குப் புறப்பட்டுப் போய், மறுபடியுந் தமஸ்குவுக்குத் திரும்பி வந்தேன்.

யஅ அதின்பின்பு மூன்று வருஷஞ்சென்றபொழுது, பேதுருவைப் பார்த்துப் பேசும்படிக்கு, நான் எருசலேமுக்குப் போய் அவனிடத்திற் பதினைந்துநாளிருந்தேன்.

யசூ கர்த்தருடைய சகோதரனாகிய யாக்கோபைத் தவிர, அப்போஸ்தலரில் வேறொருவனையும் நான் காணவில்லை.

உய நான் உங்களுக்கெழுதுகிற இவைகள் பொய்யல்லவென்று பராபரனுக்கு முன்பாக உங்களுக்கு நிச்சயிக்கிறேன்.

உக பின்பு சீரியா சிலிசியா தேசங்களுடைய புறங்களில் வந்தேன்.

உஉ மேலும் யூதேயா நாட்டிலே கிறிஸ்துவைப் பற்றிய சபைகளுக்கு முகம் அறியாதவனாயிருந்தேன்.

உங முன்னே நம்மைத் துன்பப்படுத்தினவன் தானே அழிக்கத்தேடின சுவிசேஷத்தை இப்பொழுது அறிவிக்கிறானென்றுமாத்திரம் அவர்கள் கேள்விப்பட்டிருந்து,

உச என்னைக்குறித்துப் பராபரனைத் துதித்தார்கள்.

## உ. அதிகாரம்.

[(க) பின்னும் பவுல் தன்னுடைய நடக்கைகளைக் காட்டி, (சா) தான் புறதேசத்தாருக்கு அப்போஸ்தலனாயிருக்கிறதையும், (யக) தான் பேதுருவைக் கடிந்துகொண்டதையும் அறிவித்து, (யசா) மனிதர் நீதிமான்களாக்கப்படுகிறவிதம் இதுவென்று போதித்தது.]

பின்பு பதினாலு வருஷஞ் சென்றபொழுது, நான் தீத்துவைக் கூட்டிக்கொண்டு பர்னபாவுடனேகூட மறுபடியும் எருசலேமுக்குப் போனேன்.

உ அந்தப் பிரயாணத்தை நான் தேவ அறிவிப்பினாலே செய்து, நான் ஓடுகிறதும் ஓடினதும் வீணாகாதபடிக்குப் புறதேசத்தாரிடத்திலே நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை அவர்களுக்கும், விசேஷமாகப் பெரியோர்களுக்கும் விவரித்துக்காண்பித்தேன்.

ங அப்பொழுது என்னுடனேகூட இருந்த தீத்து கிரேக்கனாயிருந்தும், விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளும்படிக்குக் கட்டாயம்பண்ணப்படவில்லை.

ச இயேசுக்கிறிஸ்துவினால் நமக்குண்டான விடுதலையை வேவுபார்த்து நம்மை நியாயப்பிரமாணத்திற்கு அடிமைகளாக்கும்பொருட்டாகப், பக்கவழியாய் நுழைந்த கள்ளச்சகோதரர் நிமித்தமே அப்படியாயிற்று.

௫ சுவிசேஷத்தின் சத்தியம் உங்களிடத்திலே நிலைநிற்கும்படியாக, நாங்கள் ஒரு நாழிகையாகிலும் அவர்களுக்குக் கீழ்ப்படியவில்லை.

௬ அல்லாமலும் பெரியோர்களென்றெண்ணப்பட்டவர்களாலும் (நான் ஒன்றையும் அடையவில்லை) முன்னே அவர்கள் எப்பேர்ப்பட்டவர்களாயிருந்தாலும் எனக்குக் கவலையில்லை பராபரன் மனிதருடைய முகத்தைநோக்கிப்பார்க்கிறவரல்லவே, அந்தப் பெரியோர்கள் எனக்கு அதிகம் ஒன்றும் போதியாமல்,

௭ விருத்தசேதனமுள்ளவர்களுக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி பேதுருவைப் பலப்படுத்தினவர் புறதேசத்தாருக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி என்னையும் பலப்படுத்தினதால்,

௮ விருத்தசேதனமுள்ளவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி பேதுருவுக்கு ஒப்புவிக்கப்பட்டதுபோல விருத்தசேதனமில்லாதவர்களுக்கு அப்படியே செய்யும்படி எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறதென்று அவர்கள் கண்டு,

௯ அந்தப்படி எனக்களிக்கப்பட்ட கிருபையை அறிந்தபொழுது, அவர்களில் தூண்களென்றெண்ணப்பட்ட யாக்கோபுங் கேபாவும் யோவானுந் தாங்கள் விருத்தசேதனமுள்ளவர்களுக்கும் நாங்கள் புறதேசத்தாருக்குஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கு ஐக்கியப்படுதற்கு அடையாளமாக எனக்கும் பர்னபாவுக்கும் வலதுகைகளைக் கொடுத்து,

௰ தரித்திரரை நினைத்துக்கொள்ளும்படிக்குமாத்திரம் புத்திசொன்னார்கள். நானும் அப்படியே செய்ய ஜாக்கிரதையாயிருந்தேன்.

௰௧ மேலும் பேதுரு அந்தியோகியாவூருக்கு வந்தபொழுது, அவன் தப்பிதஞ்செய்ததினாலே, நான் முகமுகமாய் அவனோடெதிர்த்தேன்.

௰௨ எப்படியென்றால், யாக்கோபினிடத்திலிருந்து சிலர் வருகிறதற்கு முன்னே அவன் புறதேசத்தாருடனே சாப்பிட்டான். அவர்கள் வந்தபொழுது, விருத்தசேதனமுள்ளவர்களுக்குப் பயந்து, விலகிப்பிரிந்தான்.

௰௩ மற்ற யூதரும் அப்படியே வஞ்சகம்பண்ணினார்கள். அவர்களுடைய வஞ்சகத்தினாலே பர்னபாவுங்கூட இழுக்கப்பட்டான்.

௰௪ இப்படி அவர்கள் சுவிசேஷத்தின் சத்தியத்திற்குத் தக்கதாக நடவாததை நான் கண்டபொழுது, எல்லாருக்கும் முன்பாக நான் பேதுருவை நோக்கிச் சொன்னதாவது, யூதனாயிருக்கிற நீர் யூதர்முறைமையாகவல்ல புறதேசத்தார் முறைமையாக நடந்துகொண்டிருக்கப் புறதேசத்தாரை யூதர்முறைமையாய் நடக்கும்படி நீர் எப்படிக் கட்டாயம்பண்ணலாம்.

௰௫ ஒருமனிதனும் நியாயப்பிரமாணத்திற்கேற்றக்கிரியைகளினாலே நீதிமானாக்கப்படுவதில்லையே.

௰௬ ஆதலாற் புறதேசத்தாரிற்பிறந்த பாவிகளாயிராமற் சுபாவப்படி யூதராயிருக்கிற நாமும் இயேசுகிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலேயன்றி, நியாயப்பிரமாணத்திற்கேற்றக்கிரியைகளால் மனிதன் நீதிமானாகிறதில்லையென்றறிந்து, நியாயப்பிரமாணத்திற்கேற்றக்கிரியைகளினாலல்ல, கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே நீதிமான்களாகும்படிக்குக் கிறிஸ்து இயேசுவின் மேல் விசுவாசிகளானோம்,

௰௭ அந்தப்படி கிறிஸ்துவினாலே நீதிமான்களாகப்பார்க்கையில், நாமும் பாவிகளாகக் காணப்பட்டால் கிறிஸ்து பாவத்திற்கூழியக்காரரானாரா அப்படியாகமாட்டார்.

௰௮ நான் இடித்துப்போட்டவைகளை நானே மறுபடியுங் கட்டினால் என்னை அக்கிரமக்காரனென்று காண்பிப்பேன்.

௰௯ பராபரனுக்காகப் பிழைக்கும்படிக்கு நியாயப்பிரமாணத்தின்வழியாய் நியாயப்பிரமாணத்திற்கு மரித்தேனே.

௨௰ கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையில் அறையப்பட்டேன். அப்படியிருந்தும் பிழைத்திருக்கிறேன் நானல்ல கிறிஸ்துவே எனக்குள்ளே பிழைத்திருக்கிறார். அந்தப்படி இப்பொழுது என் தேகத்திலுள்ள ஜீவன் என்னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த பராபரனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்தினாலே பிழைக்கின்றது.

௨௧ நீதியானது நியாயப்பிரமாணத்தினாலே வந்தால் கிறிஸ்து மரித்தது வீணாயிருக்குமே ஆதலால், நான் பராபரனுடைய கிருபையைத் தள்ளிவிடேனென்றேன்.

## ௩. அதிகாரம்.

[(௧) கலாத்தியர் சுவிசேஷத்தைவிட்டுப் பிரமாணங்களைப்பற்றிக்கொள்ளவிரும்பினதற்காக அவர்களைக் கடிந்து, (௬) ஆபிரகாமைப்போல விசுவாசமுள்ளவர்கள் ஆபிரகாமின் சந்ததியாராயிருக்கிறார்களென்றும், (௰) நற்கிரியைகளினாலே ஒருவனும் நீதிமானாக்கப்படானென்றும் (௰௩) மோசேயின் பிரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்திற்குக் கொண்டுபோகிற உவாத்தியென்றுங் காட்டியது.]

அபுத்தியீனமுள்ள கலாத்தியரே! நீங்கள் சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமற்போகத்தக்கதாக, யாவன் உங்களை மயக்கப்படுத்தினான். உங்களுக்குப் பிரத்தியட்சமாய் இயேசுகிறிஸ்து உங்களுக்காகச் சிலுவையில் அறையப்பட்டவராய்க் குறிக்கப்பட்டிருந்தாரே.

௨ ஆவியை நீங்கள் நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியைகளினாலேயோ விசுவாசப்பிரசங்கத்தினாலேயோ (எதினாலே) பெற்றீர்கள். இதைமாத்திரம் உங்களிடத்தில் அறியவிரும்புகிறேன்.

௩ ஆவியினாலே ஆரம்பம்பண்ணின நீங்கள் இப்பொழுது மாமிசத்தினாலே முடிவுசெய்ய, இத்தனை புத்தியீனராயிருக்கிறீர்களா.

௪ இத்தனை பாடுகளை வீணாய்ப்பட்டீர்களோ. அது வீணாயிருக்கமாட்டாதே.

௫ அன்றியும் உங்களுக்கு ஆவியைவர்சசெய்கிறவனும் உங்களுக்குள்ளே அற்புதங்களை நடப்பிக்கிறவனுமானவன் அப்படி நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியைகளினாலேயோ விசுவாசப்பிரசங்கத்தினாலேயோ (எதினாலே) செய்கிறான்.

௬ அப்படி ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான். அதுவே அவனுக்கு நீதியென்றெண்ணப்பட்டது.

௭ ஆகையால் விசுவாசமார்க்கத்தாரே ஆபிரகாமின் பிள்ளைகளாயிருக்கிறார்களென்று அறிவீர்களாக.

௮ மேலும் பராபரன் விசுவாசத்தினாலே உலகத்தாரை நீதிமான்களாக்குவாரென்று வேதாகமம் முன்னறிந்து, உன்னாலே எல்லா உலகத்தாரும் ஆசீர்வதிக்கப்படுவார்களென்று ஆபிரகாமுக்குச் சுவிசேஷமாய் முன்னறிவித்தது.

௯ அந்தப்படி விசுவாசமார்க்கத்தார் விசுவாசமுள்ள ஆபிரகாமுடனேகூட ஆசீர்வதிக்கப்படுகிறார்கள்.

௰ நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியைக்காரராகிய யாவரும் நியாயப்பிரமாணப்புத்தகத்தில் எழுதப்பட்டவைகளையெல்லாஞ் செய்யத்தக்கதாக அவைகளில் நிலைநிற்காதவனெவனோ அவன் சபிக்கப்பட்டவனென்றெழுதியிருக்கிறபடியால், சாபத்திற்குக்கீழாயிருக்கிறார்கள்.

௰௧ மேலும் நியாயப்பிரமாணத்தினாலே ஒருவனும் பராபரனிடத்திலே நீதிமானாகிறதில்லையென்பது வெளியரங்கமாயிருக்கின்றது. எப்படியெனில் விசுவாசத்தால் நீதிமானானவன் பிழைப்பானென்று சொல்லியிருக்கிறதே.

௰௨ அன்றியும் நியாயப்பிரமாணமானது விசுவாசத்தையேற்படுத்துகிறதில்லை. இவைகளைச் செய்கிற மனிதன் இவைகளால் பிழைப்பானென்று ஏற்படுத்துகின்றது.

௰௩ இப்படியிருக்க மரத்திலே தூக்கப்பட்ட யாவனுஞ் சபிக்கப்பட்டவனென்றெழுதியிருக்கிறபடி, கிறிஸ்து நமக்காகச் சாபத்தையடைந்து, நியாயப்பிரமாணத்தின் சாபத்திற்கு நம்மை விலக்கியிரட்சித்தார்.

௰௪ ஆபிரகாமுக்குண்டான ஆசீர்வாதம் கிறிஸ்து இயேசுவினாலே புறதேசத்தாருக்கு வரும்படியாகவும் வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட ஆவியை நாம் விசுவாசத்தினாலே பெறும்படியாகவுமே அப்படியாயிற்று.

௰௫ சகோதரரே! மனிதர் முறைமையாய்ச் சொல்லுகிறேன். மனிதர்களுக்குள்ளே உறுதிபண்ணப்பட்ட ஒருடம்படிக்கையை ஒருவனுந் தள்ளவும் அதினோடே யேதையாகிலுங் கூட்டவுமாட்டானே.

௰௬ ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும் வாக்குத்தத்தங்கள் பண்ணப்பட்டன. அப்பொழுது சந்ததிகளுக்கென்று அநேகரைக்குறித்துச் சொல்லாமல், உன் சந்ததிக்கென்று ஒருவனைக்குறித்துச் சொல்லியிருக்கிறார். அந்தச் சந்ததி கிறிஸ்துவே.

௰௭ ஆனதால் நான் சொல்லுகிறதென்னவென்றால் கிறிஸ்துவுக்கு நேராகப் பராபரனாலே முன் உறுதிபண்ணப்பட்ட உடம்படிக்கையுண்டே, அப்பொழுது உண்டான வாக்குத்தத்தத்தைத் தள்ளத்தக்கதாக அந்த உடம்படிக்கையை நானூற்றுமுப்பது வருஷத்திற்குப்பின்னுண்டான நியாயப்பிரமாணம் நீக்கமாட்டாது.

௰௮ அன்றியுஞ் சுதந்தரமானது நியாயப்பிரமாணத்தினாலேயுண்டானால், அது வாக்குத்தத்தத்தினாலுண்டாயிராதே, ஆபிரகாமுக்குப் பராபரன் அதை வாக்குத்தத்தத்தினாலே அருளிச்செய்தார்.

௰௯ அப்படியானால், நியாயப்பிரமாணமென்னத்துக்கென்றால் அந்த வாக்குத்தத்தத்தைப்பெற்ற சந்ததி வருமளவுந் தேவதூதரைக்கொண்டு மத்தியஸ்தன் கையிற் கட்டளையிடப்பட்டு அக்கிரமங்களினிமித்தமாகக் கூட்டப்பட்டிருந்தது.

௨௰ மத்தியஸ்தன் ஒருவனுடையவனல்ல, பராபரன் ஒருவரோயிருக்கிறார்.

௨௰௧ அப்படியானால் நியாயப்பிரமாணம் பராபரனுடைய வாக்குத்தத்தங்களுக்கு விரோதமாயிருக்கிறதோவென்றால், அப்படியிருக்கிறதேயில்லை. எப்படியெனில், உயிரைக்கொடுக்கத்தக்க நியாயப்பிரமாணங் கொடுக்கப்பட்டிருந்ததானால் நீதியானது மெய்யாய் நியாயப்பிரமாணத்தினாலுண்டாகும்.

௨௰௨ அப்படியிராதபடியால், வேதாகமம் இயேசுகிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது விசுவாசமுள்ளவர்களுக்களிக்கப்படும்படி, எல்லாரையும் ஏகமாய்ப் பாவத்தின் கீழடைத்துப்போட்டது.

௨௰௩ ஆனதால், விசுவாசம் வருகிறதற்குமுன்னே, நாங்கள் வெளிப்படுவதாயிருந்த விசுவாசத்திற்கேதுவாக அடைக்கப்பட்டவர்களாய் நியாயப்பிரமாணத்தின் கீழ்க் காக்கப்பட்டிருந்தோம்.

௨௪ இவ்விதமாய் நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாவதற்கு, நியாயப்பிரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்திற்கு வழிநடத்துகிற உவாத்தியாயிருந்ததே.

௨௫ விசுவாசம் வந்தபின்பு நாங்கள் பின்னும் அந்த உவாத்திக்குக் கீழானவர்களல்ல.

௨௬ நீங்களெல்லாருங் கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத்தினாலே பராபரனுடைய பிள்ளைகளாயிருக்கிறீர்களே.

௨௭ உங்களிற் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம்பெற்றவர்களெத்தனைபேரோ அத்தனைபேருங் கிறிஸ்துவைத் தரித்துக்கொண்டீர்களே.

௨௮ இப்படி நீங்களெல்லாருங் கிறிஸ்து இயேசுவினாலே யொன்றாயிருக்கிறபடியால் யூதனென்றுங் கிரேக்கனென்றும் அடிமையென்றுஞ் சுயாதீனனென்றும் ஆணென்றும் பெண்ணென்றும் இவ்வேற்றுமைகளுங் கில்லையே.

௨௯ மேலும் நீங்கள் கிறிஸ்துவைச் சேர்ந்தவர்களாயிருக்க, ஆபிரகாமின் சந்ததியாராயும் வாக்குத்தத்தத்தின்படியே சுதந்திரராயுமிருக்கிறீர்கள்.

## ௪. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவருகிறவரைக்கும் நாம் நியாயப்பிரமாணத்தின் கீழிருந்தோமென்றும், (௪) பின்பு கிறிஸ்துவினாலே அதினின்று விடுதலையாக்கப்பட்டுத் தேவபுத்திரராயிருக்கிறோமென்றுங் காட்டி, (௯) கலாத்தியர் அந்தமகிமைக்கு விலகினதைக் குறித்து முறையிட்டுப்புத்திச் சொல்லியது.]

பின்னும் நான் சொல்லுகிறதென்னவெனில், சுதந்திரவாளியானவன் எல்லாவற்றிற்கும் எசமானாயிருந்தும், அவன் குழந்தையாயிருக்கிறகாலமளவும் அவனுக்கும் அடிமையானவனுக்கும் வித்தியாசமில்லை.

௨ தகப்பன் குறித்த காலம்வரைக்கும் அவன் உவாத்திமாருக்கும் வீட்டுவிசாரணைக்காரருக்குங் கீழாயிருக்கிறான்.

௩ அப்படியேபோல நாமுங் குழந்தைகளாயிருந்தகாலத்திலே இவ்வுலகத்தின்வழிபாடுகளுக்கு அடிமைப்பட்டவர்களாயிருந்தோம்.

௪ காலம் நிறைவேறினபொழுது பராபரன் தமது குமாரனையனுப்ப, அவர் நியாயப்பிரமாணத்தின்கீழானவர்களாகிய நம்மைமீட்டுக்கொண்டு புத்திரசுவிகாரம் நமக்குண்டாகும்படி செய்யும்படிக்கு,

௫ ஸ்திரியினிடத்திற் பிறந்து, நியாயப்பிரமாணத்திற்குக்கீழானார்.

௬ மேலும் நீங்கள் புத்திரராயிருக்கிறபடியினாலே, அப்பா! பிதாவே! என்றுகூப்பிடத்தக்கதாகப் பராபரன் தமது குமாரனுடைய ஆவியையுங்களிருதயங்களில் அனுப்பினார்.

௭ ஆகையால் இனி நீ அடிமையாயிராமற் புத்திரனாயிருக்கிறாய். மேலும் நீ புத்திரனாயிருக்கக் கிறிஸ்துவின் மூலமாய்ப் பராபரனுடைய சுதந்திரனுமாயிருக்கிறாய்.

௮ நீங்கள் பராபரனையறியாமலிருந்தபொழுது சுபாவத்தின்படி தேவர்களல்லாதவர்களுக்கு அடிமைகளாயிருந்தீர்கள்.

௯ இப்பொழுது நீங்கள் பராபரனையறிந்துகொண்டபின்பு அல்லது பராபரனாலே அறிந்துகொள்ளப்பட்டபின்பு, எப்படி நீங்கள் பலவீனமும் வெறுமையுமான அவ்வழிபாடுகளுக்கு மறுபடியுந் திரும்பி, மறுபடியும் அவைகளுக்கு அடிமைப்பட்டிருக்க விரும்புகிறீர்கள்.

௰ நாட்களையும் மாதங்களையும் மற்றக்காலங்களையும் வருஷங்களையும் நோக்கிப் பார்க்கிறீர்களே.

௰௧ ஆ, நானுங்களுக்காகப் பிரயாசப்பட்டது வீணாய்ப்போகுமோவென்று உங்களைக்குறித்துப் பயந்திருக்கிறேன்.

௰௨ சகோதரரே, நான் உங்களைப்போலானபடியால், நீங்களும் என்னைப்போலாகுங்களென்று உங்களைவேண்டிக்கொள்ளுகிறேன். எனக்கு நீங்கள் அநியாயமொன்றுஞ்செய்யவில்லை.

௰௩ உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, முதலாந்தரம் நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைச் சரீர பலவீனத்தோடேயறிவித்தேன்.

௰௪ அப்படியிருந்தும் எனக்குச் சோதனையான அந்தச்சரீர பலவீனத்தை நீங்கள் அசட்டைபண்ணாமலும் அரோசியாமலும் பராபரனுடைய தூதனைப்போலவுங் கிறிஸ்து இயேசுவைப்போலவும் என்னையேற்றுக்கொண்டீர்கள்.

௰௫ அப்பொழுது எவ்வளவு பாக்கியமுள்ளவர்களாயிருந்தீர்கள். நீங்கள் உங்கள் கண்களைப் பிடுங்கி யெனக்குக் கொடுக்கக்கூடுமானால் அப்படியுஞ் செய்வீர்களேயென்று உங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன்.

௰௬ நானுங்களுக்குச் சத்தியத்தைச் சொன்னபடியினாலே யுங்களுக்குச் சத்துருவானேனோ?

௰௭ அவர்கள் உங்களுக்கு வயிராக்கிய பட்சத்தைக் காண்பிக்கிறார்கள். ஆகிலும் நல்லமனதாய் அப்படிச் செய்கிறதில்லை. நல்லாமலும் அவர்கள் தங்களுக்கு நீங்கள் வயிராக்கியபட்சத்தைக் காண்பிக்கும்பொருட்டு, (என்னிலிருந்து) உங்களை நீக்கவிரும்புகிறார்கள்.

௰௮ நன்மையைக்குறித்து வயிராக்கிய பட்சமாயிருக்கிறது நல்லதுதான். அப்படியே நான் உங்களிடத்திலிருக்கும்பொழுது

மாத்திரமல்ல, எப்பொழுதும் செய்யவேணும்.

௧௯ ஆ, என் பிள்ளைகளே! கிறிஸ்து உங்களிடத்தில் வடிவுகொள்ளுமளவும், உங்களுக்காக மறுபடியும் கர்ப்ப வேதனைப்படுகிறேன்.

௨௦ மேலும் நான் உங்களைக்குறித்துச் சந்தேகப்படுகிறபடியால், நான் இப்பொழுதே உங்களிடத்தில் வந்து என் பேச்சைமாற்றிக்கொள்ள ஆசையாயிருக்கிறேன்.

௨௧ நியாயப்பிரமாணத்துக்குக் கீழாயிருக்கமனதுள்ள நீங்கள் நியாயப்பிரமாணத்தைக் கேட்கவில்லையா? இதை எனக்குச் சொல்லுங்கள்.

௨௨ எப்படியெழுதியிருக்கிறதென்றால், ஆபிரகாமுக்கு இரண்டு குமாரரிருந்தார்கள். ஒருவன் அடிமையானவளிடத்திற் பிறந்தவன். ஒருவன் சுயாதீனமுள்ளவளிடத்திற் பிறந்தவன்.

௨௩ அடிமையானவளிடத்திற் பிறந்தவன் சரீரபலத்தினாலே பிறந்தான். சுயாதீனமுள்ளவளிடத்திற் பிறந்தவன் வாக்குத்தத்தத்தினாலே பிறந்தான்.

௨௪ இவைகளஞான அர்த்தமுள்ளவைகள். எப்படியெனில், அந்த ஸ்திரீகள் இரண்டு ஏற்பாடுகளேயாம். ஒன்று அடிமைத்தனத்திற்கேதுவாகப் பிள்ளைபெறுகிற சீனாப்பர்வதத்தின் ஏற்பாடு. அதை ஆகாரென்பது குறிக்கின்றது.

௨௫ ஆகாரென்பது அரபிதேசத்திலுள்ள சீனாப்பர்வதத்துக்குப் பேராயிருக்கிறதே. மேலும் அந்த ஆகாரென்பவள் இப்பொழுதிருக்கிற எருசலேமுக்குச் சரியாயிருக்கிறாள். அது தன் பிள்ளைகளோடேகூட அடிமைப்பட்டிருக்கின்றதே.

௨௬ மேலான எருசலேமே சுயாதீனமான ஸ்திரீயினாலே குறிக்கப்பட்டது. அவள் நம்மெல்லாருக்குந் தாயானவள்.

௨௭ அந்தப்படி யெழுதியிருக்கிறதாவது, புருஷனையடைந்தவளிலும் அவாந்திரமுள்ளவளுக்கே அதிக பிள்ளைகளுண்டு. ஆகையாற் பிள்ளைபெறாத மலடியே! மகிழ்ந்திரு. கர்ப்பவேதனைப்படாதவளே! களிப்பாய் முழங்கிச் சத்தமிடு என்பதே.

௨௮ ஆனதாற் சகோதரரே, நாம் ஈசாக்கைப்போல வாக்குத்தத்தத்துப் பிள்ளைகளாயிருக்கிறோம்.

௨௯ அல்லாமலும் அக்காலத்திலே சரீரபலத்தினாலே பிறந்தவன் ஆவியினாலே பிறந்தவனைத் துன்பப்படுத்தினதுபோல இப்பொழுதும் நடக்கின்றது.

௩௦ ஆகைக்குறித்து வேதம் எழுதுகிறது எப்படிச் சொல்லுகிறதென்றால், அடிமையானவளின் மகன் சுயாதீனமுள்ளவளுடைய குமாரனோடே சுதந்திரவாளியாயிருக்கக்கூடாது. ஆகையால் அடிமையானவளையும் அவளுடைய குமாரனையும் புறம்பே தள்ளு என்றே சொல்லுகின்றது.

௩௧ இப்படியிருக்கச் சகோதரரே, நாம் அடிமையானவளுக்கல்ல சுயாதீனமுள்ளவளுக்கே பிள்ளைகளாயிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து செய்த விடுதலையையவர்கள் உறுதியாய்ப் பற்றிக்கொண்டு, (௰௩) அன்பு முதலான நற்குணங்களை நடப்பிக்கும்படி புத்திசொல்லியது.]

ஆனபடியினாலே நீங்கள் மறுபடியும் அடிமைத்தனத்தின் நுகத்தடிக்குட்படாமற் கிறிஸ்து நமக்குண்டாக்கின சுயாதீன நிலைமையிலே நிலைகொண்டிருப்பீர்களாக.

௨ பின்னுங்கேளுங்கள். பவுலென்னும் நானே யுங்களுக்குச் சொல்லுகிறதாவது, நீங்கள் விருத்தசேதனத்தைப் பண்ணிக்கொண்டாற், கிறிஸ்து உங்களுக்கொரு பிரயோசனமுமாகமாட்டார்.

௩ மேலும் விருத்தசேதனத்தைப் பண்ணிக்கொள்ளுகிற எந்தமனிதனும் நியாயப்பிரமாணமுழுவதையும் நிறைவேற்றக்கடனாளியாயிருக்கிறானென்று மறுபடியுஞ் சாட்சியாக அறிவிக்கிறேன்.

௪ நியாயப்பிரமாணத்தினால் நீதிமான்களாகவிரும்புகிற நீங்கள் கிறிஸ்துவைவிட்டு நீங்கி, அவருடைய கிருபைக்குப் புறம்பே விழுந்தீர்கள்.

௫ நாங்கள் ஆவியைக்கொண்டு விசுவாசத்தினாலே நீதிவருமென்கிற நம்பிக்கையோடே காத்திருக்கிறோம்.

௬ கிறிஸ்து இயேசுவினிடத்தில் விருத்தசேதனமும் விருத்தசேதனமில்லாமையும் ஒன்றுக்கும் உதவாதே. அன்பினாற் கிரியை செய்கிற விசுவாசமேயுதவும்.

௭ நீங்கள் நன்றாய் ஓடினீர்கள். சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமற்போகத்தக்கதாக யாவன் உங்களுக்குத் தடைசெய்தான்.

௮ நீங்கள் அடைந்த இந்தப்போதனை உங்களையழைத்தவராலேயுண்டானதல்ல.

௯ புளிப்புள்ள கொஞ்சமாகிய மாவிசை நத்தமாவையெல்லாம் உப்பப்பண்ணுகிறது.

௰ நீங்கள் வேறொரு சிந்தையாயிருப்பதில்லையென்று நான் கர்த்தராலே உங்களைக்குறித்து நம்பிக்கையானேன். உங்களைக் கலக்கப்படுத்துகிறவன் எப்பேர்ப்பட்டவனாயிருந்தாலும், ஆக்கினையைச் சுமந்துகொள்வான்.

௧௧ சகோதரரே, இதுவரைக்கும் நான் விருத்தசேதனத்தைப் பிரசங்கிக்கிறவனாயிருந்தால், இதுவரைக்கும் என்னத்திற்குத் துன்பப்படுகிறேன். சிலுவையைப் (பிரசங்கிக்கிறதினாலே) வருகிற இடறல் ஒழிந்திருக்குமே.

௰௨ உங்களைக் கலக்கப்பண்ணுகிறவர்கள் தறிப்புண்டுபோனால் நலமாயிருக்கும்.

௰௩ சகோதரரே, நீங்கள் சுயாதீனத்திற்கு அழைக்கப்பட்டீர்களே. இந்தச் சுயாதீனத்தை நீங்கள் சரீரத்திற்கேற்றதாக அநுசரியாமல், அன்பினாலே ஒருவருக்கொருவர் ஊழியஞ்செய்யுங்கள்.

௰௪ பிறனிடத்தில் உன்னைப்போல அன்பாயிருப்பாயாகவென்ற இந்த ஒரே சொற்றொடரினாலே நியாயப்பிரமாணம் முழுவதும் நிறைவேறுகின்றதே.

௰௫ நீங்கள் ஒருவரையொருவர் கடித்துப்பட்சித்து வருகிறபடியினாலே ஒருவராலொருவர் அழிக்கப்படாதபடிக்குப் பாருங்கள்.

௰௬ பின்னும் நான் சொல்லுகிறதென்னவென்றால் சரீரத்தினிச்சையை நிறைவேற்றாதிருந்து ஆவியின்படி நடந்துகொள்ளுங்கள்.

௰௭ சரீரம் ஆவிக்குவிரோதமாகவும் ஆவி சரீரத்திற்கு விரோதமாகவும் இச்சிக்கிறதே. நீங்கள் செய்யவேண்டுமென்றிருக்கிறவைகளைச் செய்யாதபடிக்கு இவைகளொன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றனவே.

௰௮ ஆவியினாலே ஏவப்படுவீர்களானால், நீங்கள் நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்களல்ல.

௰௯ சரீரத்தின் கிரியைகள் வெளியரங்கமாயிருக்கின்றன. அவையாவன, விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம்,

௨௰ விக்கிரகாராதனை, பில்லிசூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், பேதங்கள், அவமார்க்கங்கள், பொறாமைகள், கொலைகள்,

௨௧ வெறிகள், பெருந்தீனிகள் முதலானவைகளே. இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லையென்று முன்னே நான் சொன்னதுபோல இப்பொழுதும் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௨ ஆவியின் கனியோ அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியசாந்தம், தயவு, நற்குணம்,

௨௩ உண்மை, பொறுமை, இச்சையடக்கம். இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்கு நியாயப்பிரமாணம் விரோதமாயிருக்கிறதில்லை.

௨௪ மேலுங் கிறிஸ்துவின் பாரிசமானவர்கள் தங்கள் சரீரத்தை அதின் பலவித இச்சைகளோடுங்கூடச் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள்.

௨௫ நாம் ஆவியைக்கொண்டு பிழைக்கிறபடியால், ஆவியின்படி நடக்கவுங் கடவோம்.

௨௬ வீண்புகழ்ச்சியைவிரும்பாமலும் ஒருவருக்கொருவர் கோபமூட்டாமலும் ஒருவர்மேலொருவர் பொறாமைவையாமலுமிருக்கக்கடவோம்.

## ௬ அதிகாரம்.

[(௧) ஒருவருக்கொருவர் சாந்தத்தையும் மனத்தாழ்மையையுங் காட்டும்படிக்கும் (௬) மற்றவர்களுக்கு நன்மையைச்செய்யும்படிக்கும், (௰௪) கிறிஸ்துவின் சிலுவையைப்பற்றிச் சொல்லும்படிக்கும் புத்திசொல்லியது.]

சகோதரரே, ஒரு மனிதன் ஒரு குற்றத்தில் அகப்பட்டால், ஆவியையுடைய நீங்களும் தூண்டிவிடப்படாதபடிக்கு, உங்களைக் குறித்து எச்சரிக்கையாயிருந்து, அப்படிப்பட்டவனைச் சாந்தமுள்ள மனதோடே சீர்பொருந்தப்பண்ணுங்கள்.

௨ ஒருவருக்குண்டான பாரத்தையொருவர் சுமந்துகொண்டு, இப்படியே கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுங்கள்.

௩ மேன்மையில்லாத ஒருவன் தன்னை மேன்மையுள்ளவனென்றெண்ணினால் தன்னைத்தானே வஞ்சிப்பானே.

௪ அவனவன் தன்தன் சுயகிரியையைச் சோதித்துப்பார்க்கக்கடவன். அப்பொழுது மற்றவனைப்பார்க்கையிலல்ல, தன்னையே பார்க்கையிற் புகழ்ச்சியைப்பெறுவான்.

௫ அவனவன் தன்தன் சுயபாரத்தைச் சுமப்பானே.

௬ மேலுஞ் சுவிசேஷ வசனத்தைக்குறித்து உபதேசங்கேட்கிறவன் உபதேசிக்கிறவனுக்குச் சகல நன்மைகளிலும் பங்கைக் கொடுக்கக்கடவன்.

௭ உங்களை வஞ்சியாதிருப்பீர்களாக. பராபரன் தம்மைப் பரியாசம்பண்ண ஒட்டார். ஆனதால் மனிதன் விதைக்கிறதெதுவோ அதையே அறுப்பான்.

௮ தன்தேக இச்சைகளுக்குத் தக்கதாக விதைக்கிறவன் அந்தத்தேக இச்சைகளினால் அழிவை யறுப்பான். ஆவிக்குத்தக்கதாக விதைக்கிறவன் ஆவியினாலே நித்திய ஜீவனை யறுப்பான்.

௯ ஆகையால் நன்மைசெய்கிறதில் இளைப்படையாமலிருப்போமாக. நாம் தளர்ந்துபோகாதிருந்தால், ஏற்றகாலத்திலே அறுப்போமே.

௰ இப்படியிருக்க, நமக்குக் காலம் நேரிடுகிறபடி, யாவருக்கும் விசேஷமாக விசுவாசிகளாகிய குடும்பத்தாருக்கு நன்மைசெய்யக்கடவோம்.

௰௧ பாருங்கள் இவ்வளவு எனக்கையெழுத்தோடே எழுதினேன்.

௰௨ சரீரத்தின்படி நல்லவர்களாகத் தோன்ற விரும்புகிறபேர்கள் தாங்கள் கிறிஸ்துவினுடைய சிலுவையினிமித்தந் துன்பப்படா

தப்படிக்கு மாத்திரமே யுங்களை விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளக் கட்டாயம்பண்ணுகிறார்கள்.

௰௩ விருத்தசேதனத்தை யடைந்திருக்கிறவர்களும் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாமலிருக்கிறார்கள். அப்படியிருந்தும், அவர்கள் உங்கள் சரீரத்தைக்குறித்து மேன்மைபாராட்டும்படிக்கு நீங்கள் விருத்தசேதனம்பண்ணிக்கொள்ள வேண்டுமென்றிருக்கிறார்கள்.

௰௪ நானோ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் சிலுவையைக்குறித்தேயல்லாமல், வேறொன்றைக்குறித்தும் மேன்மைபாராட்டாதிருப்பேனாக. அவராலே உலகம் எனக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறது. நானும் உலகத்திற்கு அப்படியேயிருக்கிறேன்.

௰௫ கிறிஸ்து இயேசுவினிடத்திலிருந்து விருத்தசேதனத்தாலாவது விருத்தசேதனமில்லாமையாலாவது பிரயோசனமில்லையே. புதிய சிருட்டியாகிறதினாலே பிரயோசனமுண்டு.

௰௬ இந்தப்பிரமாணத்தின்படியே நடந்துவருகிறவர்களெவர்களோ, பராபரனுடைய இஸ்ரவேலராகிய அவர்களுக்குச் சமாதானமும் இரக்கமுமுண்டாயிருக்கக்கடவது.

௰௭ கடைசியிலே கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய அச்சடையாளங்களை நான் என் சரீரத்திலே சுமந்துகொண்டிருக்கிறபடியால், ஒருவனும் எனக்கு அஸ்திவருத்தமுண்டாக்காதிருப்பானாக.

௰௮ சகோதரரே, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியுடனேயிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

# எபேசியருக்கெழுதின நிருபம்.

## ௧. அதிகாரம்.

[(௧) பவுல் சபைக்கு வாழ்த்துதல் சொல்லி, (௩) கிறிஸ்துவினாலுண்டாயிருக்கிற ஆசீர்வாதங்களுக்காகப் பராபரனைத் தோத்திரித்து, (௰௫) சபைக்காக வேண்டுதல்செய்தது.]

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுல் எபேசுவூரிலே கிறிஸ்து இயேசுவினிடத்தில் விசுவாசமும் பரிசுத்தமுமுள்ளவர்களுக்கு எழுதுகிறதாவது,

௨ நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௩ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய பிதாவுமாய்த் தேவனுமாயிருக்கிறவருக்குத் தோத்திரமுண்டாவதாக. என்னத்தினாலெனில், அவர் தமக்குமுன்பாக நாம் பரிசுத்தராயும் பிழையில்லாதவர்களாயுமிருப்பதற்கு, லோகத்தோற்றத்திற்குமுன்னே இயேசுக்கிறிஸ்துவின்மூலமாய் நம்மைத் தெரிந்துகொண்டபடியே,

௪ அவர் மூலமாய்ப் பரம ஸ்தலங்களிலே பலவிதத்திவ்விய நன்மைகளால் நம்மையாசீர்வதித்தார்.

௫ அன்றியும் அவர் தமக்கு அன்பாயிருக்கிறவருக்குள் நமக்குப் பேலவைத்தருளின தமது கிருபையின் மகிமைக்குப் புகழ்ச்சியாக,

௬ தம்முடைய தயையுள்ள சித்தத்தின்படி இயேசுக்கிறிஸ்து மூலமாக நம்மைத் தமக்குப் புத்திரசுவிகாரமுள்ளவர்களாக அன்பினாலே முன்குறித்திருக்கிறார்.

௭ அன்றியும் அவர் மிகுந்த விவேகத்தோடும் புத்தியோடும் நமக்குச் சம்பூரணமாய்த் தெரியப்படுத்தின ஐசுவரியமான கிருபையின்படியே,

௮ அந்த இயேசுக்கிறிஸ்து தமது திரு இரத்தத்தைச் சிந்தினதினாலே நமக்குப் பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டாயிருக்கிறது.

௯ மேலுங் காலங்கள் நிறைவேறும்பொழுதுண்டாகும் விசாரணையிலே வானங்களிலும் பூமியிலுமுள்ளவைகளியாவுந் தலையாகிய கிறிஸ்துவுக்குக் கீழாகக் கூட்டப்படவேண்டுமென்று,

௰ தமக்குள்ளே தீர்மானித்திருந்த சந்தோஷமான சித்தத்தின் இரகசியத்தை யெங்களுக்கறிவித்தார்.

௰௧ மேலும் தமது சித்தத்தினுடைய ஆலோசனைக்குத்தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானத்தின்படியே.

௧௨ நாங்கள் கிறிஸ்துவின்மேல் முன்னே நம்பிக்கையாயிருந்தவர்களாய், அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சியாயிருக்கும்படிக்கு, முன்குறிக்கப்பட்டு, அவராலே சுதந்திரத்தையும் அடைந்தோம்.

௧௩ நீங்களும் அப்படியே (சுதந்திரராகும்படிக்கு) உங்கள் இரட்சிப்புக்கேதுவாகிய சுவிசேஷமாகிய சத்திய வசனத்தைக் கேட்டு, விசுவாசித்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்த ஆவியினாலே அவராலே முத்திரைபோடப்பட்டீர்கள்.

௧௪ சம்பாதிக்கப்பட்டவர்கள் அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சியாக மீட்கப்படுமளவும் அந்த ஆவியானவர் நம்முடைய சுதந்திரத்திற்கு அச்சாரமாயிருக்கிறார்.

௧௫ ஆனபடியினாலே கர்த்தராகிய இயேசுவின்மேலுள்ள உங்கள் விசுவாசத்தையும் எல்லாப் பரிசுத்தவான்கள்மேலுமுள்ள உங்கள் அன்பையும் நான் கேள்விப்பட்டபின்பு,

௧௬ இடைவிடாமல் உங்களுக்காக ஸ்தோத்திரம்பண்ணி, என் ஜெபங்களில் உங்களை நினைத்து,

௧௭ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் தேவனுமாய் மகிமையின் பிதாவுமாயிருக்கிறவர் அவரையறிந்துகொள்ளுதற்கேற்ற ஞானத்தையும் வெளிப்படுத்துகிற ஆவியையும் உங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்றும்,

௧௮ தாம் நம்மையழைத்ததினாலே நாம் நம்பத்தக்கபாக்கியமின்னதென்றும் பரிசுத்தவான்களுக்குத் தாம் கொடுக்கும் சுதந்திரத்தின் மகிமையின் பெருமை இன்னதென்றும்,

௧௯ தாம் கிறிஸ்துவை மரித்தோரிலிருந்தெழுப்பி, எல்லாத் துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் வல்லமையுள்ளவர்களுக்குங் கர்த்தாக்களுக்கும் இம்மையிலே மாத்திரமல்ல, மறுமையிலேயும் மற்றும் பேர்கொண்டிருக்கிற யாவற்றிற்கும் மேலுயர்ந்திருக்கத்தக்கதாக,

௨௰ அவரைப் பரமண்டலங்களிலே தமது வலதுபாரிசத்திலே யுளுக்காரும்படிசெய்து,

௨௧ இப்படிச் சகலத்தையும் அவருடைய பாதங்களின் கீழ்ப்படுத்தி, (அவருடைய) சபைக்காக அவரைச் சகலத்திற்கும் தலைவராக ஏற்படுத்தி,

௨௨ இப்படி அவரிடத்தில் வெளிப்படுத்தின தமது பலத்த வல்லமையின் தத்துவத்தின்படியே, விசுவாசிகளாகிய நம்மிடத்திலே தாங்காண்பிக்கும் வல்லமையின் மகா மேன்மையின்னதென்றும் நீங்கள் அறியும்படிக்குப் பிரகாசமுள்ள புத்தியாகிய கண்களைக் கொடுக்கவேண்டுமென்றும் (ஜெபம் பண்ணுகிறேன்.)

௨௩ (அவருடைய சபை) எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய நிறைவான சரீரமாயிருக்கின்றது.

## ௨. அதிகாரம்

[(௧) அக்கிரமத்தினாலே செத்தவர்கள் கிறிஸ்துவின் கிருபையினாலே பிழைப்பிக்கப்பட்டு நற்கிரியைகளைச் செய்யவேண்டுமென்றும், (௰.) அப்படிப் பிழைப்பிக்கப்பட்டவர்கள் பரமபிதாவினுடைய குடும்பத்திற்கு ஐக்கியப்பட்டவர்களென்றுங் காட்டியது.]

அக்கிரமங்களாலும் பாவங்களாலுஞ் செத்தவர்களாயிருந்த உங்களையும் உயிர்ப்பித்தார்.

௨ முற்காலத்திலே இப்பிரபஞ்சத்தின் வழக்கத்தின்படியேயுங் கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகளிடத்தில் இப்பொழுது கிரியை செய்கிற ஆகாசத்தின் அதிகாரமுள்ள பிரபுவாகிய ஆவியின்படியேயும் அவைகளில் நடந்துகொண்டீர்கள்.

௩ அவர்களோடேகூட நாங்களெல்லாரும் முற்காலத்திலே எங்கள் மாம்சதேக இச்சைகளின்படியே நடந்து, எங்கள் மாம்சதேகமும் சிந்தனைகளும் இச்சித்தவைகளைச் செய்து, மற்றவர்களைப்போலக் கோபாக்கினைக்குள்ளானவர்களாயிருந்தோம்.

௪ இப்படி நாம் அக்கிரமங்களினாலே செத்தவர்களாயிருக்கையில்,

௫ இரக்கத்தில் ஐசுவரியமுள்ளபராபரன் தாம் நமதுமேல்வைத்த மிகுந்த அன்பினாலே நம்மைக் கிறிஸ்துவுடனேகூட உயிர்ப்பித்தார். கிருபையினாலே இரட்சிக்கப்பட்டீர்கள்.

௬ கிறிஸ்து இயேசுவுக்குள்ளே அவர் நமதுமேல்வைத்த தயவினாலே தமது கிருபையின் மிகுந்த ஐசுவரியத்தை வருங்காலங்களிலே திருஷ்டாந்தமாய்க் காண்பிப்பதற்காக,

௭ நம்மைக் கிறிஸ்து இயேசுவுடனேகூட எழுப்பிப் பரமண்டலங்களிலே யிருக்கும்படி செய்தார்.

௮ கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்.

௯ அது உங்களாலுமல்ல, கிரியைகளினாலுமல்ல, ஒருவரும் மேன்மைபாராட்டாதபடிக்கு அது பராபரனுடைய ஈவாயிருக்கின்றது.

௰ நற்கிரியைகளைச் செய்வதற்கு நாம் கிறிஸ்து இயேசுவினாலே சிருஷ்டிக்கப்பட்டு பராபரனுடைய செய்கையாயிருக்கிறோமே. அவைகளை நாம் செய்து நடக்கும்படிக்கு அவர் நமக்குமுன்னுகளத்தனம்பண்ணியிருக்கிறார்.

௰௧ ஆனபடியினாலே முன்னே சரீரத்தின்படி புறத்தேசத்தாராயிருந்து, சரீரத்திலே

கையினாற் செய்யப்படுகிற விருத்தசேதன முள்ளவர்களாலே விருத்தசேதனமில்லாதவர்களென்னப்பட்ட நீங்கள்,

௰௨ அக்காலத்திலே கிறிஸ்துவைச் சேராதவர்களுமாய் இஸ்ரவேலருடைய காணியாட்சிக்குப் புறம்பானவர்களுமாய் வாக்குத்தத்தத்தின் உடம்படிக்கைகளுக்கு அந்நியருமாய் நம்பிக்கையில்லாதவர்களுமாய்ப் பராபரனையறியாதவர்களுமாய் இவ்வுலகத்திலே யிருந்தீர்களென்று நினைத்துக்கொள்வீர்களாக.

௰௩ முன்னே தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது கிறிஸ்து இயேசுவைச் சேர்ந்து கிறிஸ்துவினுடைய இரத்தத்தினாலே சமீபமானீர்கள்.

௰௪ எப்படியெனில், அவரே நம்முடைய சமாதானத்திற்குக் காரணமானவர், இருதிறத்தாரையும் ஒன்றாக்கி, பிரிவினையாகிய நடுச்சுவரைத் தகர்த்து,

௰௫ சடங்குச் சட்டங்களைக் குறித்த கட்டளைகளாகிய நியாயப்பிரமாணமாகிய பகையைத் தமமுடைய சரீரத்தினாலே நீக்கிப்போட்டு, இப்படிச் சமாதானம் பண்ணினதால், இருதிறத்தாரையுந் தமக்குள்ளாக ஒரே புதிய மனிதனாகச் சிருட்டித்து,

௰௬ பகைக்கேதுவானதைத் தம்மாலே அழித்தபின், சிலுவையினாலே இருதிறத்தாரையும் ஒரே சரீரமாகப் பராபரனுக்கு ஒப்புரவாக்கினார்.

௰௭ அல்லாமலும் அவர் வந்து, தூரமாயிருந்த உங்களுக்குஞ் சமீபமாயிருந்த அவர்களுக்குஞ் சமாதானத்தைச் சுவிசேஷமாக அறிவித்தார்.

௰௮ அந்தப்படியே நாம் இருதிறத்தாரும் ஒரே ஆவியால் பிதாவினிடத்திற் சேருகிற நிலைமையை அவராலே பெற்றிருக்கிறோம்.

௰௯ ஆகையால் நீங்களினிமேல் அந்நியருமாய்க் குடும்பத்தைச் சேராதவர்களுமாயிராமல், பரிசுத்தவான்களோடே கூட்டப்பட்டவர்களுமாய்ப் பராபரனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களுமாய்,

௨௰ அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகளென்பவர்களுடைய அஸ்திபாரத்தின்மேற் கட்டப்பட்டவர்களுமாயிருக்கிறீர்கள். அந்த அஸ்திபாரத்திற்கு இயேசுக்கிறிஸ்துதாமே மூலைக்கல்லாயிருக்கிறார்.

௨௧ அவர்மேலே மாளிகைமுழுவதும் இசைவாய் இணைக்கப்பட்டுக் கர்த்தருக்குப் பரிசுத்த ஆலயமாகப் பெருகுகின்றது.

௨௨ அவர்மேலே நீங்களும் ஆவியினாலே பராபரனுடைய வாசஸ்தலமாகக் கூட்டிக் கட்டப்பட்டிருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) புறதேசத்தாரும் பராபரனுடைய சபையைச் சேரும்படிக்கான தீர்மானத்தைக் காட்டி, (௰௩) எபேசியருக்காக விண்ணப்பம் பண்ணினது.]

இதுமுகாந்திரமாகப், பவுலென்னும் நான் புறதேசத்தாராயிருக்கிற உங்களுக்காகக் கிறிஸ்து இயேசுவினிமித்தங் காவலில் வைக்கப்பட்டவனாயிருக்கிறேன்.

௨ உங்களுக்காக எனக்குக் கொடுத்திருக்கிற தேவ கிருபையைக் காட்டிய உத்தியோகமின்னதென்று கேட்டிருப்பீர்களே.

௩ என்னவெனிற் புறதேசத்தார் சுவிசேஷத்தினாலே உடன்சுதந்தரருமாய், அவர்களுடனே கூட ஒரே சரீரமுமாய்க், கிறிஸ்துவின்மேல் அவர் பண்ணின வாக்குத்தத்தத்திற்கு உடன்பங்காளிகளுமாயிருக்கிறார்களென்று இந்த இரகசியத்தை அவர் எனக்கு வெளிப்படுத்தியறிவித்தார்.

௪ முன்னே நான் இதைக் குறித்துச் சுருக்கமாய் எழுதினேன்.

௫ அதை நீங்கள் வாசிக்கையிற் கிறிஸ்துவின் இரகசியத்தைக் குறித்து எனக்குண்டாயிருக்கிற அறிவையறிந்துகொள்வீர்களே.

௬ அந்த இரகசியம் இப்பொழுது அவருடைய பரிசுத்த அப்போஸ்தலருக்குந் தீர்க்கதரிசிகளுக்குந் தேவ ஆவியினாலே வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோல முன்னிருந்த தலைமுறைகளின் மனிதர்களுக்குத் தெரியப்படுத்தப்பட்டிருக்கவில்லை.

௭ இந்தச் சுவிசேஷத்திற்கு நான் பராபரனுடைய பலத்தத்துவத்தால் எனக்களிக்கப்பட்ட கைமாறில்லாத கிருபையினாலே ஊழியக்காரனானேன்.

௮ பராபரன் தம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாற் செய்துமுடித்த அநாதியான தீர்மானத்தின்படியே,

௯ ... சுவிசேஷமான சமஸ்த ஞானம் பரமண்டலங்களிலுள்ள துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்குஞ் சபையினாலே தெரியவருமபொருட்டாக,

௰ கிறிஸ்துவினுடைய அளவற்ற ஐசுவரியத்தைப் புறதேசத்தாரிடத்திற் சுவிசேஷமாயறிவிக்கிறதற்கும்,

௰௧ இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டெல்லாவற்றையுஞ் சிருட்டித்த பராபரனுக்குள்ளே ஆதிகாலங்கள்முதல் மறைந்திருந்த இரகசியமுமாய் ஐக்கியப்படுதலின்னதென்று எல்லாருக்கும் வெளிச்சமாக்காட்டுகிறதற்குமான அந்தக் கிருபையெல்லாப் பரிசுத்தவான்களிலுஞ் சிறியவனாகிய எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ அந்த இயேசுக்கிறிஸ்துவினாலே அவரைப்பற்றும் விசுவாசத்தால் நமக்குத் தைரியமுந் திடநம்பிக்கையோடே பராபர

னைச்சேருகிற நிலைமையும் உண்டாயிருக்கிறது.

௰௩ ஆகையால் உங்கள் நிமித்தமாக நான் அனுபவிக்கிற உபத்திரவங்களினாலே நீங்கள் சோர்ந்துபோகாதிருக்க வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰௪ அவைகள் உங்களுக்கு மகிமையாயிருக்கின்றனவே.

௰௫ அதற்காக நான் பரமண்டலங்களிலும் பூமியிலுமுள்ள குடும்பத்தாரெல்லாருக்கும் நாமத்தைக் கொடுத்தவராகிய நமது கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய பிதாவை நோக்கி, என் முழங்கால்களை முடக்கி,

௰௬ நீங்கள் உங்கள் உள்ளத்திலே அவருடைய ஆவியினாலே வல்லமையாய்ப் பலப்படுத்தப்படும்படியாகவும்,

௰௭ விசுவாசத்தினாலே கிறிஸ்து உங்கள் இருதயங்களில் வாசமாயிருக்கும்படியாகவும், நீங்கள் அன்பிலே வேரூன்றி அஸ்திபாரப்பட்டவர்களாய்,

௰௮ சகல பரிசுத்தவான்களோடுங்கூடக் கிறிஸ்துவினுடைய (அன்பின்) அகலமும் நீளமும் ஆழமும் உயரமுமின்னதென்று உணர்ந்துகொண்டு,

௰௯ அறிவுக்கு மேலான அவ்வன்பையறிந்துகொள்ளுகிறதற்கு வல்லவர்களாகும்படியாகவும், (இப்படி) பராபரனுடைய மிகுந்த பரிபூரணத்தால் நிறையப்படும்படியாக அவர் தமது மகிமையின் ஐசுவரியத்தின்படியே உங்களுக்கு அநுக்கிரகம்பண்ணவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௰ நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய், நமக்குள்ளே கிரியைசெய்கிற வல்லமையின்படியே செய்யவல்லமையுள்ள அவருக்கு,

௨௰௧ கிறிஸ்து இயேசுவைப்பற்றிய சபையினாலே எல்லாத் தலைமுறைகளிலேயும் என்றென்றைக்கும் துதியுண்டாவதாக. ஆமென்.

## ௪. அதிகாரம்.

[(௧) எல்லாரும் ஐக்கியப்பட்டிருக்கும்படிக்கும், (௰௩) கிறிஸ்துவினிடத்தில் தேறினவர்களாகும்படிக்கும், (௰௭) நவமான மனிதத்துவத்தைத் தரித்துச் சன்மார்க்கமாய் நடக்கும்படிக்கும் புத்திசொல்லியது.]

ஆனதால் கர்த்தர் நிமித்தங் காவலில் வைக்கப்பட்டிருக்கிற நான் உங்களுக்குச் சொல்லும் புத்தியென்னவெனில், அழைக்கப்பட்டிருக்கிற நீங்கள் அந்த அழைப்புக்குப் பாத்திரராய்,

௨ மிகுந்த மனத்தாழ்மை, பொறுமை, நீடிய சாந்தத்தோடும் நடந்துகொண்டு, ஒருவரையொருவர் அன்பாய்த் தாங்கிக்கொண்டு,

௩ சமாதானக் கட்டினாலே ஆவியின் ஒருமையைக் காத்துக்கொள்ளச் சாக்கிரதையாயிருப்பீர்களாக.

௪ உங்களுக்குண்டான அழைப்பினாலே நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல,

௫ ஒரே சரீரமும், ஒரே ஆவியும், ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும்,

௬ எல்லாருக்கும் ஒரே தேவனும் பிதாவுமுண்டு. அவர் எல்லாவற்றின்மேலும் எல்லாவற்றின் வழியாயும் உங்களெல்லாருக்குள்ளுமிருக்கிறவர்.

௭ இப்படியிருந்தும், கிறிஸ்துவினுடைய ஈவின் அளவுக்குத்தக்கதாய் நம்மில் அவனவனுக்குக் கிருபை கொடுக்கப்பட்டிருக்கிறது.

௮ ஆனதால் அவர் உன்னதத்திற்கேறிச் சிறையாக்கினவைகளைச் சிறையாக்கிக்கொண்டுபோய், மனிதருக்கு ஈவுகளைக் கொடுத்தாரென்று அவர் சொல்லியிருக்கிறார்.

௯ அவர் ஏறினதால், அதற்கு முன்னே மிகவுந் தாழ்ந்த பூதலங்களில் இறங்கினாரென்று விளங்குகின்றதல்லவா?

௰ இறங்கினவர் அவரே எல்லாவற்றையும் நிரப்பத்தக்கதாக எல்லா வானங்களின் மேலும் ஏறினவராயுமிருக்கிறார்.

௰௧ மேலும் நாமெல்லாரும் பராபரனுடைய குமாரனைப்பற்றிய விசுவாசத்திலேயும் அறிவிலேயும் ஒருமையுள்ளவர்களாகிக் கிறிஸ்துவினுடைய நிறைவான வளர்த்தியின் அளவுக்குத்தக்கதாகத் தேறினவர்களாயிருக்கக்கும்வரைக்கும்,

௰௨ கிறிஸ்துவினுடைய சரீரமாகிய சபையையெழுப்பிக்கட்டுகிறதற்கேதுவான ஊழியத்தின் கிரியைக்குப் பரிசுத்தவான்கள் நிறைவாக்கப்படும்பொருட்டாக,

௰௩ அவர் சிலரை அப்போஸ்தலராகவும் சிலரைத் தீர்க்கதரிசிகளாகவுஞ் சிலரைச் சுவிசேஷகராகவுஞ் சிலரை மேய்ப்பராகவும் உபதேசிகளாகவும் ஏற்படுத்தினார்.

௰௪ மனிதருடைய சூதும் வஞ்சிக்கிறதற்கேதுவான தந்திரமுமுள்ள போதகமாகிய பலவித காற்றினாலே நாம் இனி அடிக்கப்பட்டலைகிற பிள்ளைகளாயிராமல்,

௰௫ அன்போடே உண்மையுள்ளவர்களாயிருந்து, அவயவங்களாகிய எல்லாரையும் தலையாகிய கிறிஸ்துவினிடத்திலே வளர்கிறவர்களாயிருக்கும்படிக்கு (அப்படிச்செய்தார்.)

௰௬ அவராலே சரீரமுழுவதும் உதவியாயிருக்கிற சகல கணுக்களினாலுந் தகுதியாய்க் கூட்டியிணைக்கப்பட்டதாயிருக்க அவயவந்தோறும் தன்தன் அளவுக்குத்தக்கதாய்க் கிரியைசெய்கிறபடியே, அது அன்பி

லேதனையெழுப்பிக்கட்டுதற்கேதுவாகச் சரீரவளர்த்தியையுண்டாக்குகிறார்.

யஎ ஆனதாற் கர்த்தரைக்கொண்டு நான் உங்களுக்குச் சாட்சியாகச் சொல்லுகிறதென்னவெனில், மற்றச்சனங்கள் தங்கள் வீணான மனதின்படி நடக்கிறதுபோல,

யஅ நீங்கள் இனிமேல் நடவாமலிருப்பீர்களாக. அவர்கள் அந்தகாரப்பட்ட புத்தியுள்ளவர்களாய்த் தங்களிலுள்ள அறியாமையினாலுந் தங்களிருதயத்தின் கடினத்தினாலும் பராபரனுக்கேற்ற சீவனுக்கு அந்நியராயிருந்து,

யகூ மெய்யுணர்வில்லாதவர்களாய்ச் சகலவித அசுத்தங்களையும் ஆசையோடே நடப்பிக்கும்படி தங்களைக் காமவிகாரத்திற்கு ஒப்புக்கொடுத்திருக்கிறார்கள்.

உய நீங்கள் இப்படிக் கிறிஸ்துவைக் கற்றுக்கொள்ளவில்லை.

உக இயேசுவினிடத்திற் சத்தியமுண்டாயிருக்கிறபடியே நீங்கள் அவரிடத்திற் கேட்டறிந்து அவரால் உபதேசம் அடைந்தீர்கள்.

உஉ அந்தப்படி நீங்கள் முன்னே நடந்த பிரகாரமாக, வஞ்சனையுள்ள இச்சைகளாலே கெடுதியான பழையமனிதத்தன்மையைக் களைந்துபோட்டு,

உங உங்கள் மனதிலே புதிதான ஆவியுள்ளவர்களாகி,

உச நீதியிலும் மெய்யான பரிசுத்தத்திலும் பராபரனுடைய சாயலாகச் சிருட்டிக்கப்பட்ட நவமான மனிதனைத் தரித்துக்கொள்வீர்களாக.

உரு அன்றியும் நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாயிருக்கிறபடியினாலே பொய்யைக் களைந்து, அவனவன் தனக்கடுத்த பிறனுடனே மெய்யைப் பேசுங்கள். மேலும் பாவமில்லாமற் கோபங்கொள்ளுங்கள்.

உசா உங்கள் எரிச்சலின்மேலே சூரியன் அஸ்தமிக்க ஒட்டாமலும் பசாசுக்கிடங்கொடாமலுமிருங்கள்.

உஎ திருடினவன் இனித் திருடாமற் குறைச்சலுள்ளவனுக்குக் கொடுக்கத்தக்கதாக,

உஅ தன் கைகளினாலே நல்ல வேலையைச் செய்து பிரயாசப்படக்கடவன்.

உகூ கெட்டவார்த்தையொன்றும் உங்கள் வாயிலிருந்து புறப்படக்கூடாது. மற்றவர்களையெழுப்புதற்கேதுவான நல்லவார்த்தையுண்டானால், அதையே கேட்கிறவர்களுக்குப் பிரயோசனமுண்டாகும்படி பேசிக்கொள்ளுங்கள்.

ஙய அன்றியும் நீங்கள் மீட்கப்படும் நாள்வரைக்கும் முத்திரையாகப் பெற்ற பராபரனுடைய பரிசுத்த ஆவியைத் துக்கப்படுத்தாதிருப்பீர்களாக.

ஙக சகலவிதமான கசப்பும் மூர்க்கமுங் கோபமுங் கூக்குரலுந் தூஷணமும் மற்றெந்தத் துர்க்குணமும் உங்களைவிட்டு நீங்கக்கடவது.

ஙஉ அதைத்தவிர, நீங்கள் ஒருவருக்கொருவர் தயவாயும் மன உருக்கமாயுமிருந்து, பராபரன் கிறிஸ்துவினாலே உங்களுக்கு மன்னித்ததுபோல, ஒருவருக்கொருவர் மன்னியுங்கள்.

## ரு. அதிகாரம்.

[(க) பரிசுத்தவான்களுக்கேற்றபடியாவரும் பரிசுத்தமாய் நடக்கவேண்டுமென்று காட்டியது.]

இவ்விதமாய் நீங்கள் பிரியமான பிள்ளைகளைப்போலப் பராபரனைப் பின்பற்றுகிறவர்களாகி,

உ கிறிஸ்துவானவர் நமக்காகத் தம்மைப் பராபரனுக்குச் சுகந்தவாசனையான காணிக்கையாகவும் பலியாகவும் ஒப்புக்கொடுத்து, நம்மிடத்தில் அன்புகூர்ந்ததுபோல நீங்களும் அன்புள்ளவர்களாய் நடந்துகொள்ளுங்கள்.

ங அன்றியும் பரிசுத்தவான்களுக்கேற்றபடியே, வேசித்தனமும் மற்றெந்த அசுத்தமும் அல்லது பொருளாசையும் உங்களுக்குள்ளே சொல்லப்படவுங்கூடாது.

ச வம்புப்பேச்சும் ஈனமான பேச்சும் பரியாசமும் அப்படியேயிருக்கப்படாது. அவைகள் தகாதவைகள்; ஸ்தோத்திரஞ்செய்தலே தகும்.

ரு வேசித்தனக்காரன் அல்லது அசுத்தவான். அல்லது விக்கிரக ஆராதனைக்காரனாகிய பொருளாசைக்காரனொருவனும் பராபரனுடைய இராச்சியமாகிய கிறிஸ்துவின் இராச்சியத்திலே சுதந்தரத்தையடைவதில்லையென்றறிந்திருக்கிறீர்களே.

சா இப்படிப்பட்டவைகளுக்காகக் கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகள்மேலே பராபரனுடைய கோபாக்கினை வருவதால், ஒருவனும் உங்களை வீணான வார்த்தைகளால் வஞ்சியாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து,

எ அவர்களுக்குப் பங்காளிகளாகாதிருப்பீர்களாக.

அ முற்காலத்திலே அந்தகாரமுள்ளவர்களாயிருந்தீர்கள். இப்பொழுது கர்த்தரைக்கொண்டு ஒளியுள்ளவர்களாயிருக்கிறீர்கள். ஒளியின் பிள்ளைகளுக்கேற்றதாய் நடந்துகொள்ளுங்கள்.

கூ ஒளியின் கனி சகலவித நற்குணமும் நீதியுஞ் சத்தியமுமானது.

ய கர்த்தருக்குப் பிரியமானதின்னதென்று நீங்கள் ஆராய்ந்துபார்த்து,

யக பலனற்ற அந்தகாரக்கிரியைகளுக்கு ஐக்கியமாயிராமல், அவைகளைக் கடிந்துகொள்வீர்களாக.

௰௨ அவர்களால் ஒளிப்பிடமாய்ச் செய்யப்படுங் கிரியைகளைச் சொல்லுகிறதும் அவலட்சணமாயிருக்கிறதே.

௰௩ அவைகளெல்லாம் ஒளியினாற் கடிந்து கொள்ளப்பட்டு வெளியரங்கமாகும். வெளியரங்கமாக்குகிறதெல்லாம் ஒளியாயிருக்கின்றது.

௰௪ ஆதலால், தூங்குகிறநீ விழித்து, மரித்தோரை விட்டெழுந்திரு. அப்பொழுது கிறிஸ்து உன்னைப் பிரகாசிப்பாரென்று சொல்லியிருக்கின்றது.

௰௫ ஆனபடியினாலே நீங்கள் ஞானமற்றவர்களைப் போலல்ல, ஞானமுள்ளவர்களைப் போலவே எச்சரிக்கையாய் நடந்து கொள்ளப் பார்த்து,

௰௬ நாட்கள் பொல்லாங்குள்ளவைகளாயிருக்கிறபடியாற் காலத்தை வாங்கிக் கொள்ளுங்கள்.

௰௭ ஆகையால் நீங்கள் மதியற்றவர்களாகாமல், கர்த்தருடைய சித்தமின்னதென்று அறிந்திருக்கிறவர்களாகி,

௰௮ கெட்டமார்க்கத்திற்கேதுவாய்த் திராட்ச இரசத்தால் வெறிகொள்ளாமல், ஆவியினாலே நிறையப்பட்டு,

௰௯ சங்கீதங்களாலுங் கீர்த்தனங்களாலும் ஞானப்பாட்டுக்களாலும் ஒருவருக்கொருவர் புத்திசொல்லிக் கொண்டு, உங்கள் இருதயத்திலே கர்த்தரைப் பாடிக் கீர்த்தனம் பண்ணி,

௨௰ நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே எப்பொழுதும் எல்லாவற்றிற்காகவும் பிதாவாகிய பராபரனைத் தோத்திரித்து,

௨௧ தேவபயத்தோடே ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்.

௨௨ ஸ்திரீகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறதுபோல் நீங்கள் உங்கள் சுயபுருஷருக்குக் கீழ்ப்படுங்கள்.

௨௩ கிறிஸ்து (தமது) சபையாகிய சரீரத்திற்குத் தலையாயும் இரட்சகராயுமிருக்கிறதுபோலப் புருஷனானவனும் (தன்) மனைவிக்குத் தலையாயிருக்கிறான்.

௨௪ ஆகையாற் சபையானது கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிகிறதுபோல, மனைவிகளும் எக்காரியத்திலேயுந் தங்கள் சொந்த புருஷர்களுக்குக் கீழ்ப்படவேண்டும்.

௨௫ புருஷர்களே, கிறிஸ்து தமது சபையில் அன்புகூர்ந்து அதற்காகத் தம்மைத் தாமே ஒப்புக்கொடுத்ததுபோல, நீங்களும், உங்கள் மனைவிகளில் அன்புகூரக்கடவீர்கள்.

௨௬ அவர் தமது சபையை மாசு திரை முதலானவைகளிலொன்றுமில்லாமற் பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ளதாகத் தமக்குமுன் நிறுத்திக்கொள்ளும்பொருட்டாக,

௨௭ அதைப் பரிசுத்தமாக்கி ஜீவவசனத்தோடே கூடிய தண்ணீர் முழுக்கினாற் சுத்திகரிக்கும்படிக்கு அப்படிச் செய்தார்.

௨௮ அதுபோலப் புருஷர்களுந் தங்கள் சொந்த சரீரங்களைப்போலத் தங்களுடைய மனைவிகளில் அன்புகூரக்கடனாளிகளாயிருக்கிறார்கள். தன் மனைவியில் அன்புகூருகிறவன், தன்னில் அன்புகூருகிறான்.

௨௯ தன் சொந்த மாமிசத்தைப் பகைத்தவனொருவனுமில்லையே. கர்த்தர் (சபை) சபையைச் செய்கிறதுபோல அதைப் போஷித்துக் காப்பாற்றுகிறான்.

௩௰ அவர் தமது சரீரத்தின் நாம் அவயவங்களுமாயத் தமது மாமிசத்தினிடம் எலும்புகளினிடம் சேர்ந்தவர்களுமாயிருக்கிறபடியால் (அப்படியே செய்கிறார்.)

௩௧ அதினாலே மனிதன் தன் தகப்பனையுந் தாயையும் விட்டுத் தன் மனைவியுடனே இசைந்து, இருவரும் ஒரே மாமிசமாயிருப்பார்கள்.

௩௨ இது மிகுந்த இரகசியப் பொருளுள்ளது. கிறிஸ்துவையுஞ் சபையையுங் குறித்தே இப்படிச் சொல்லுகிறேன்.

௩௩ அன்றியும் நீங்களும் அவனவன் தன்னில் அன்புகூருகிறதுபோல, தன் தன் மனைவியினிடத்திலும் அன்புகூரக்கடவீர்கள். மனைவியானவள் புருஷனுக்குப் பயந்திருக்கக்கடவள்.

## ௬. அதிகாரம்.

[(௧) பிள்ளைகள் முதலானவர்களுக்குப் புத்திகளைச் சொல்லியது. (௰) யாவரும் பசாசு முதலான சத்துருக்களுக்கு எதிர்த்துப் போராட்டம் பண்ணச் சொல்லி, (௯) தனக்காக ஜெபம் பண்ணவேண்டுமென்றுங் கேட்டது.]

பிள்ளைகளே, கர்த்தருக்குள் உங்களைப் பெற்றவர்களுக்குக் கீழ்ப்படுங்கள். அதுவே நியாயமாயிருக்கிறது.

௨ உனக்கு நன்மையுண்டாயிருக்கும்படிக்கும் பூமியிலே நீ வாழ்நாள் மிகுதியாயிருக்கும்படிக்கும்,

௩ உன் தகப்பனையும் உன் தாயையுங் கனம்பண்ணுவாயாகவென்பதே வாக்குத்தத்தமுள்ள முதலாங் கற்பனையாயிருக்கிறது.

௪ தகப்பன்மார்களே, நீங்களும் உங்கள் பிள்ளைகளுக்குக் கோபமுண்டாக்காமல் கர்த்தருக்கேற்ற சிட்சையோடும் போதகத்தோடும் அவர்களை வளர்க்கக்கடவீர்கள்.

௫ வேலைக்காரரே, நீங்கள் கிறிஸ்துவுக்குச் செய்கிறது போல மாம்சத்தின்படி உங்களுக்கு எஜமான்களானவர்களுக்குப் பயத்தோடும் நடுக்கத்தோடும் கபடமில்லாமையுள்ள இருதயத்தோடே கீழ்ப்படிந்திருங்கள்,

௬ மனிதருக்குப் பிரியமாயிருக்க விரும்புகிறவர்கள் போல (எஜமான்கள்) காணும் பொழுது மாத்திரம் ஊழியஞ்செய்யாமல்,

௭ கிறிஸ்துவின் ஊழியக்காரர் போல மனப்பூர்வமாய்ப் பராபரனுடைய சித்தத்தை நிறைவேற்றுகிறவர்களாய் மனிதருக்கல்ல கர்த்தாவுக்கே ஊழியஞ்செய்கிறவர்களாய் நல்மனதோடே கீழ்ப்படிந்து,

௮ அடிமையானவனானாலும் சுயாதீனமுள்ளவனானாலும் அவனவன் செய்கிற நன்மையின்படியே கர்த்தரிடத்தில் பலனை அடைவானென்று அறிவீர்களாக.

௯ எஜமான்களாகிய நீங்களும் அவர்களுக்குக் கடமைப்படியே செய்து, உங்களுக்கும் பரமண்டலங்களிலே எஜமானிருக்கிறாரென்றும் அவரிடத்தில் பட்சபாதமில்லையென்றும் அறிந்து, மிரட்டுதலை விட்டுவிடுவீர்களாக.

௰ கடைசியிலே என் சகோதரரே, கர்த்தரைக்கொண்டும் அவருடைய மிகுந்த வல்லமையைக்கொண்டும் பலத்திருங்கள்.

௰௧ எல்லாமும் இரத்தத்தோடும் மாம்சத்தோடுமல்ல. ஆகாசமண்டலத்திலுள்ள துரைத்தனங்களோடும் அதிகாரங்களோடும் இவ்வுலகத்தினிருளை ஆளுகிறவர்களோடும் மற்றப் பொல்லாத ஆவிகளோடும் நாம் போராடுகிறவர்களாயிருக்கிறபடியால்,

௰௨ பசாசினுடைய தந்திரமான வகைகளுக்குப் பட்சமாய் விரோதித்து நிற்கும்படிக்கு தேவனுடைய சர்வாயுதவர்க்கத்தைத் தரித்துக்கொள்ளுங்கள்.

௰௩ பொல்லாத காலத்திலே நீங்கள் அவைகளை விரோதித்திருந்து சகலத்தையும் முடித்துப்போட்டபின்பு நிலைநிற்கவும் திராணியிருக்கும்படிக்கு தேவனுடைய சர்வாயுதவர்க்கத்தை எடுத்துக்கொள்ளுங்கள்.

௰௪ என்னவெனில் சத்தியமென்னுங் கச்சையை உங்கள் அரைகளில் கட்டி, நீதியென்னும் மார்க்கவசத்தைத் தரித்து,

௰௫ சமாதானத்தையுண்டாக்குகிற சுவிசேஷத்தையறிவிக்க எத்தனமாயிருக்கும் (பாதரட்சையைப்போல) உங்கள் கால்களில் தொடுத்து,

௰௬ பொல்லாங்கன் எய்யும் அக்கினியம்புகளையெல்லாம் நீங்கள் அவித்துப்போடத்தக்க விசுவாசமென்னும் கேடகத்தைப் பிரதான முக்கியமாய்ப் பிடித்துக்கொண்டு நில்லுங்கள்.

௰௭ மேலும் இரட்சணியமென்னுந் தலைச்சீராவையும் தேவவசனமாகிய ஆவியின் பட்டயத்தையும் நீங்கள் வாங்கிக்கொண்டு,

௰௮ ஆவியிலே சம்பூரணமான சகல விண்ணப்பத்தோடும் ஜெபத்தோடும் எப்பொழுதும் வேண்டிக்கொண்டு, இதற்காக மிகுந்த மன உறுதியோடே சகல பரிசுத்தவான்களுக்காகவும் விண்ணப்பம் பண்ணும்படி விழித்துக்கொள்வீர்களாக.

௰௯ நானோ தைரியமாய் என் வாயைத் திறந்து, சுவிசேஷத்தின் இரகசியத்தை அறிவிக்கிறதற்கு, வசனம் எனக்குக் கொடுக்கப்படும்படியாயும்,

௨௰ சுவிசேஷத்திற்காகச் சங்கிலியால் கட்டப்பட்ட ஸ்தானாபதியாயிருக்கிற நான் பேசவேண்டியபடி தைரியமாய்ப் பேசும்படியாயும் எனக்காகவும் விண்ணப்பம் பண்ணுவீர்களாக.

௨௧ அன்றியும் என் சம்பவங்களையும் என்னுடைய செய்கைகளையும் நீங்கள் அறியும்படிக்கு, அவைகளையெல்லாம் (நமக்குப்) பிரிய சகோதரனுமாய்க் கர்த்தருக்குள் உண்மையுள்ள ஊழியக்காரனுமாயிருக்கிற தீகிக்கு என்பவன் உங்களுக்கு அறிவிப்பான்.

௨௨ நீங்கள் எங்கள் செய்திகளை அறியும்படியாயும், அவன் உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யும்படியாயுமே அவனை உங்களிடத்தில் அனுப்பினேன்.

௨௩ பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் சமாதானமும் விசுவாசத்தோடே அன்பும் சகோதரருக்கு உண்டாகக்கடவது.

௨௪ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினிடத்தில் உண்மையான அன்புகூருகிற யாவரோடுங் கிருபையிருப்பதாக.

ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலிப்பியருக்கெழுதின நிருபம்.

## க. அதிகாரம்.

[(௩) பவுல் சபையாரை வாழ்த்தி, (௫) அவர்களுக்குத் தன்னுடைய அன்பைக்காட்டி, (௯) அவர்களுக்காகச் செபம்பண்ணி, (௧௨) தனக்கு வந்த பாடுகளைக் குறித்தும், (௧௫) தனக்கு விரோதமாய்ப் பிரசங்கம் பண்ணினவர்களைக் குறித்தும், (௨௰) தான் கிறிஸ்துவின் மேல்வைத்த அன்பைக்குறித்துஞ் சொல்லியது.]

இயேசுகிறிஸ்துவின் ஊழியக்காரராகிய பவுலுந் தீமோத்தேயும் பிலிப்புப்பட்டினத்திலே கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்களெல்லாருக்குங் கண்காணிகளுக்கும் ஊழியக்காரருக்கும் எழுதுகிறதாவது,

௨ நம்முடைய பிதாவாகிய பராபரனாலுங் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவது.

௩ சுவிசேஷம் அறிவிக்கப்பட்டநாள் முதலாக இதுவரைக்கும் நீங்கள் அதற்கு ஐக்கியமானவர்களானபடியால்,

௪ நான் உங்களை நினைத்து, உங்களெல்லாருக்காகவும் விண்ணப்பம்பண்ணும்பொழுதெல்லாம், என் பராபரனைத் தோத்திரிக்கிறேன்,

௫ நான் உங்களுக்காகச் சந்தோஷத்தோடே விண்ணப்பம்பண்ணி,

௬ உங்களிடத்தில் நற்கிரியையைத் தொடங்கினவர் இயேசுகிறிஸ்துவினுடைய நாள்பரியந்தம் அதை முடிய நடத்திவருவாரென்று நம்பியிருக்கிறேன்.

௭ நான் கட்டப்பட்டிருக்கையிலுஞ் சுவிசேஷத்திற்காக உத்தரவுசொல்லி அதைத் திடப்படுத்திக்கொண்டிருக்கையிலும் நீங்களனைவரும் உங்களிருதயத்திலே யென்னைத் தரித்துக்கொண்டு, என்னோடேகூடக் கிருபையிற் பங்குள்ளவர்களாயிருக்கிறபடியினாலே, உங்களெல்லாரையுங் குறித்து நான் இப்படி நினைக்கிறது நியாயமாயிருக்கின்றது.

௮ அந்தப்படி இயேசுகிறிஸ்துவினுடைய உருக்கமான அன்பைப்போலுள்ள அன்பினாலே நான் உங்களெல்லார்மேலும் மிகவும் வாஞ்சையாயிருக்கிறேனென்பதற்குப் பராபரனே எனக்குச் சாட்சியாயிருக்கிறார்.

௯ மேலும் விசேஷமானவைகளை வகையறுப்பதற்கேதுவாக நீங்கள் அறிவினாலுஞ் சகலவித மெய்யுணர்வினாலும் அதிகமதிகமான அன்புள்ளவர்களாயும்,

௰ கிறிஸ்துவின் நாள்வரைக்கும் உண்மையும் வழுவில்லாமையுமுள்ளவர்களாயும்,

௰௧ பராபரனுக்குத் துதியும் புகழ்ச்சியுமுண்டாக இயேசுகிறிஸ்துவினாலே வருகிற நீதியாகிய கனியினால் நிறைந்தவர்களாயுமிருக்கும்படிக்குச் செபம்பண்ணுகிறேன்.

௰௨ அன்றியுஞ் சகோதரரே, நான் உங்களுக்கு அறிவிக்கவிரும்புகிறதென்னவெனில், எனக்குச் சம்பவித்தவைகள் சுவிசேஷம் அதிகப்பிரபலியமாகும்படிக்கு ஏதுவாயிருந்தன.

௰௩ எப்படியென்றால் நான் கிறிஸ்துவினிமித்தங் கட்டப்பட்டிருக்கிறது இராசஅரண்மனையிலெங்குமுள்ளவர்களுக்கும் மற்றயாவருக்கும் வெளியரங்கமானது மல்லாமல்,

௰௪ கர்த்தரைப்பற்றிய சகோதரரில் அநேகமானவர்கள் நான் கட்டப்பட்டிருந்ததினாலே திடன்கொண்டு, (தெய்வ) வசனத்தைப் பயமில்லாமற் சொல்லும்படி அதிக துணிவுள்ளவர்களானார்கள்.

௰௫ சிலர் பொறாமையினாலும் விரோதத்தினாலுஞ் சிலர் நல்லமனதினாலுங் கிறிஸ்துவைப் பிரசங்கித்து வருகிறார்கள்.

௰௬ இவர்கள் சுவிசேஷத்திற்காக நான் நியாயம்பேசிக்கொள்ளும்படி வைக்கப்பட்டிருக்கிறதை அறிந்து, அன்பினாலேயப்படிச் செய்கிறார்கள்.

௰௭ அவர்கள் நான் கட்டப்பட்டதினாலேயிருக்கிற உபத்திரவத்தோடே உபத்திரவத்தைக் கூட்டலாமென்றெண்ணி, உண்மையில்லாமல் விரோதத்தினாலே கிறிஸ்துவை யறிவிக்கிறார்கள்.

௰௮ இதினாலென்னவாயிற்று, வஞ்சகத்தினாலாவது உண்மையினாலாவது பிரசங்கித்தாலுங் கிறிஸ்துவே அறிவிக்கப்படுகிறார். அதினாலே சந்தோஷப்படுகிறேன். இன்னுஞ் சந்தோஷப்படுவேன்.

௰௯ நான் ஒன்றிலும் வெட்கப்படாமல், மிகுந்த தைரியமாயிருந்து, எப்பொழுதும்போல இப்பொழுதும் ஜீவனாலாகிலுஞ் சாவினாலாகிலுங் கிறிஸ்து என்சரீரத

திலே புகழப்படுவாரென்று நானமிகவு
மாசைப்பட்டு நம்பிக்கொள்ளுகிறபடியே,

உ௰ அந்தப்பிரசங்கம் உங்களவேண்டு
தலினாலும இயேசுக்கிறிஸ்துவினுடைய ஆ
வியினுதவியினாலும் எனக்கு இரட்சிப்பாக
முடியுமென்றறிந்திருக்கிறபடியால் (அப்ப
டிச் சந்தோஷப்படுவேன்.)

உ௧ கிறிஸ்து எனக்குச் சீவனாயிருக்கிற
போ, சாவும எனக்கு ஆதாயமாயிருக்கும.

உ௨ ஆகிலும் தேகத்திற் பிழைக்கிறதினாலே எனக்கிரியைக்குப் பலனுண்டாயிருந்
தால, நான் தெரிந்துகொள்ளவேண்டிய
தின்னதென்று எனக்குத் தெரியாது.

உ௩ அவ்விரண்டினாலும நானநெருக்க
ப்படுகிறேன். பிரிந்துபோய்க்கிறிஸ்துவினி
டத்திலிருக்கும்படி மிகவும்விரும்புகிறேன
அது மிகவும் அதிகநன்மையாயிருக்குமே.

உ௪ அப்படியிருந்தாலும் தேகத்தில இரு
க்கிறது உங்களுக்காக அதிக
அவசியமாயிருக்கிறது.

உ௫ இதைநான் நிச்சயமாய அறிந்திரு
க்கிறபடியால, நானமறுபடியும் உங்களிட
த்தில வருகிறதினால் நீங்கள என்னைக்குறித
துக்கிறிஸ்து இயேசுவினாலே மேன்மைபா
ராட்டிக கொள்ளுதல பெருகும்பொருட
டாக,

உ௬ விசுவாசத்தில் நீங்கள்சம்பூரணமு
ஞ்சந்தோஷமு முள்ளவர்களாகும்படிக்கு,
நானினனும (உயிர்) தரித்துக்கொண்டு,
உங்களனைவரோடுங்கூட இருப்பேனென்று
அறிந்திருக்கிறேன.

உ௭ எப்படியும் நானவந்து உங்களைக்க
ண்டாலும், உங்களுக்குத்தூரமாயிருந்தா
லும், நீங்கள ஒரே ஆவியிலேயுறுதியாய நி
ன்று, ஒரே ஆத்துமாவினாலே சுவிசேஷத
தின விசுவாசத்திற்காகக்கூடப்போராட
ம்பண்ணி, எதிர்க்கிறவர்களால ஒன்றிலும
மருளாதிருக்கிறீர்களென்று உங்களைக்குறி
த்துநானகேட்கும்படிக்கு, நீங்கள்கிறிஸ்து
வின் சுவிசேஷத்திற்குப்பாத்திரமாக மாத
திரம் நடந்துகொள்ளக்கடவீர்கள.

உ௮ அதுவே அவர்கள கெட்டுப்போகு
தற்கும் நீங்கள இரட்சிக்கப்படுதற்கும் அ
டையாளமாயிருக்கின்றது. அதுவும்பராபர
னுடையசெயல்.

உ௯ அவராலே நீங்கள கிறிஸ்துவின்மே
லே விசுவாசமாயிருக்கிறதற்குமாத்திரமல்
ல, முன்னே என்னிடத்திலே நீங்களகண்ட
துமாய இப்பொழுது எனக்குண்டென்று
கேள்விப்படுகிறதுமாயிருக்கிற போராட்ட
மே உங்களுக்குமுண்டாயிருக்கிறதால்,

௩௰ அவர்நிமித்தம்பாடுபடுகிற தறகும்
அருளபெற்றீர்களே.

## உ. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவினிமித்தஞ் சபையார் ஒரு
மைப்பட அன்பும் மனத்தாழ்மையுமுள்ள
வர்களாயிருக்கவேண்டுமென்றும், (௰௨)
தங்கள ஆத்தும இரட்சிப்பைத்தேடிப
பரிசுத்தத்தில நடக்கவேண்டுமென்று
ஞ்சொல்லி, (௰௭) தானுந் தீமோத்தே
யுமா மற்றவர்களுஞ் செய்கிற ஊழியத
தைக்குறித்துச்சொல்லியது.]

இனமேற் கிறிஸ்துவுக்குள யாதொரு
ஆறுதலும அன்பினாலே சந்தோஷப்படுத
லும ஆவியோடே ஐக்கியமும உருக்கமா
னஇரக்கமும் இரக்கங்களுமுண்டானால்,

உ நீங்கள ஒரேவிதமாய்ச்சிந்தனைப்ப
ண்ணிக்கொண்டு, ஒரேவிதமான அன்புள்ளவ
ர்களாய, இசைந்த ஆத்துமாக்களாய ஒன
றையே சிந்தித்துக்கொண்டு இப்படி என
சந்தோஷத்தை நிறைவேற்றுவீர்களாக.

௩ ஒன்றையும் நீங்கள வாதத்தினாலே அ
லலது வீண்பெருமையினாலே செய்யாமல்
மனத்தாழ்மையினாலே ஒருவரையொருவர்
தங்களிலும் மேன்மையானவர்களென்றெ
ண்ணிக்கொள்ளுவீர்களாக.

௪ அவனவன் தங்களுக்கானவைகளை மாத
திரமல்லப், பிறருக்கானவைகளையும் நோக
குவீர்களாக.

௫ கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தை
யே உங்களிலுமிருக்கக்கடவது.

௬ அவர்பராபரனுடைய சாயலாயிருந
தும், பராபரனுக்கொப்பாயிருக்குதலைக
கொள்ளையிடப்பட்ட உடைமையென்றெ
ண்ணாமல்,

௭ தம்மைத்தாமே வெறுமையாக்கி, அ
டிமையின் உருவமெடுத்து, மனிதர்சாயலா
கப்பிறந்ததுமல்லாமல்,

௮ அவர்மனிதரூபமாகக்காணப்பட்டபி
ன்பு, மரணத்திற்குத்தம்மைத் தாழ்த்திச்சி
லுவையின் மரணத்திற்கே கீழ்ப்படிந்தவரா
னார்.

௯ அதினாலே பராபரனும அவரைமிகவு
ம் உயர்த்தி,

௰ பரமண்டலத்திலும் பூமண்டலத்திலு
ம கீழுலோகத்திலுமுள்ளயாவும் இயேசுவி
ன நாமத்தைத்தொழுது முழங்காற்படியி
டும்படிக்கும்,

௰௧ பிதாவாகியபராபரனுக்குத்துதியுண
டாக இயேசுக்கிறிஸ்து கர்த்தரென்று நா
வுகளியாவும் அறிக்கையிடும்படிக்கும் சக
லநாமங்களுக்கும மேலானநாமத்தை அவ
ருக்குக்கொடுத்தார்.

௰௨ ஆகையினாலே எனக்குப்பிரியமான
வர்களே, நீங்கள எப்பொழுதுங் கீழ்ப்படிகி
றபடி நான் உங்களுக்குச்சமீபமாயிருக்கிற
பொழுது மாத்திரமல்ல. நானதூரமாயிருக்
கிற இப்பொழுதும்மிகவும்அதிகமாயப்ப

த்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் இரட்சிப்பையடையப்பிரயாசப்படுங்கள்.

௧௩ விருப்பத்தையுஞ் செய்கையையும் பராபரனே உவப்பாய் உங்களுக்குள்ளேயுண்டாக்குகிறவராயிருக்கிறார்.

௧௪ கோணலும் மாறுபாடுமுள்ள சந்ததியாருக்குள்ளே நீங்கள் குற்றஞ்சாட்டப்படாமலிருந்தவர்களாயும் பராபரனுடைய மாசில்லாத பிள்ளைகளாயுமிருப்பதற்கு,

௧௫ சகலத்தையும் முறுமுறுப்பில்லாமலுந் தர்க்கிப்பில்லாமலுஞ் செய்வீர்களாக.

௧௬ நான்வீணாக ஓடினதுமில்லை வீணாய்ப்பிரயாசப்பட்டதுமில்லையென்கிறமகிழ்ச்சி கிறிஸ்துவின்நாளிலேயெனக்குண்டாயிருப்பதற்கு நீங்கள் ஜீவவசனத்தைப்பிடித்துக்கொண்டு, உலகத்திலே அவர்களுக்குள்ளே சுடர்களைப்போலப் பிரகாசியுங்கள்.

௧௭ நான் உங்கள்விசுவாசமாகியபலியினின்மேலும் ஊழியத்தின்மேலும் வார்க்கப்பட்டுப்போனாலும் மகிழுவேன். உங்களனைவரோடுங்கூடமகிழ்ச்சியாகவேயிருப்பேன்.

௧௮ இந்தப்பிரகாரமாக நீங்களும்மகிழுங்கள். என்னோடேகூடவேமகிழ்ச்சியாயிருங்கள்.

௧௯ அன்றியுமநானும உங்கள்செய்திகளை அறிந்து, மனதிலேசந்தோஷம அடையும்படிக்குச் சீக்கிரமாய்த் தீமோத்தேயுவை உங்களிடத்தில அனுப்பலாமென்று கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல்நம்பிக்கையாயிருக்கிறேன்.

௨௦ அவனையன்றி உங்கள்காரியங்களை உத்தமமாய் விசாரிக்கிறதற்குத் தகுதியான மனதுள்ளவேறொருவனும என்னிடத்திலில்லையே.

௨௧ மற்றவர்களெல்லாருங்கிறிஸ்து இயேசுவுக்குரியவைகளையல்லத்தங்களுக்குரியவைகளையேதேடுகிறார்கள்.

௨௨ அவன் தாதிற்குத்தகப்பனோடேபிள்ளையிருக்கிறதுபோல என்னுடனேகூடச்சுவிசேஷத்திற்கு ஊழியஞ் செய்ததினாலே அவனுடைய உத்தமகுணத்தை அறிந்திருக்கிறீர்கள்.

௨௩ ஆகையால என்காரியங்கள் இப்படிநடக்குமென்று நான் அறிந்தவுடனே, அவனையே அனுப்பநம்பியிருக்கிறேன்.

௨௪ எப்படியும்நானதாமே சீக்கிரமாய வருவேனென்றுகர்த்தராலே நினைத்திருக்கிறேன்.

௨௫ அன்றியும என் சகோதரனுமாய, உடன்வேலையாளுமாய, உடன்சேவகனுமாய, உங்கள்தானாபதியுமாய, என்குறைச்சல்களைநீக்கவிசாரிக்கிறவனுமாயிருக்கிறஎப்பாப்பிரோதித்துவென்பவன்,

௨௬ உங்கள் எல்லார்மேலும்வாஞ்சையுள்ளவனாயுத்தானவியாதிப்பட்டதைநீங்கள் கேள்விப்பட்டதினாலே மிகவுங் கலங்கிப்படடிருக்கிறபடியால, அவனையுடனே உங்களிடத்தில அனுப்பவேண்டுமென்றெண்ணினேன்.

௨௭ அவன்மரணத்திற்குச் சமீபமாகவியாதிப்பட்டிருந்தான். பராபரன் அவனுக்கிரங்கினார். அதனாலே அவனுக்குமாத்திரமல்லத்துக்கத்தின்மேலேதுக்கம எனக்குண்டாகாதபடிக்கு, எனக்குமிரங்கினார்.

௨௮ ஆகையாலநீங்கள் அவனைமறுபடியுங்கண்டு சந்தோஷப்படும்படியாகவும என்துக்கங்குறையும்படியாகவும் அதிசீக்கிரமாய் அவனையனுப்பினேன்.

௨௯ ஆனபடியினாலேகர்த்தருக்குள் அவனைமிகுந்தசந்தோஷத்தோடேயேற்றுக்கொண்டு, இப்படிப்பட்டவர்களைக்கனமாய எண்ணுவீர்களாக.

௩௦ நீங்களிங்கேயில்லாததினாலே யெனக்கு இருக்கிறகுறைச்சலைநீக்கி எனக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு, அவன்தன்பிராணனையெண்ணாமற்கிறிஸ்துவின் வேலையினிமித்தம்மரணத்திற்குச்சமீபமாயிருந்தபடியாலே அப்படிச்செய்யுங்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) கள்ளப்போதகர்களைக்குறித்து எச்சரிக்கையாயிருக்கச்சொலலி, (௭) தான கிறிஸ்துவையடையும்படி லோகமேன்மைகளைத் தள்ளினதைக்காட்டி, (௧௫) யாவரும அப்படியேசிந்தையடையும்படிசொலலியது.]

மேலும என்சகோதரரே, கர்த்தருக்குள் சந்தோஷப்படுங்கள். நான் ஒரேவிதமானகாரியங்களை உங்களுக்கெழுதுகிறது எனக்குவருத்தமல்ல, உங்களுக்கு அதுநிச்சயத்தையுண்டாக்கும.

௨ அந்த நாயகளைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள். அந்தப்பொல்லாதவேலையாட்களைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள். அந்தச்சேதக்காரரைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்.

௩ சரீரத்தின்மேலநம்பிக்கையாயிராமல ஆவியினாலேபராபரனுக்கூழியஞ்செய்து கிறிஸ்து இயேசுவுக்குள் மேன்மைபாராட்டுகிறநாமேவிருத்தசேதனக்காரர்.

௪ நானுஞ்சரீரத்தின்மேலே நம்பிக்கையாயிருக்கத்தக்கவைகளையுடையவனாயிருக்கிறேன். அல்லாமலுமவேறொருவன் சரீரத்தின்மேலநம்பிக்கையாயிருக்கநினைத்தால, அவனிலுமநான அதிகமாய அப்படியிருக்கலாம.

௫ (எப்படியெனில) நான எட்டாம்நாளிலேவிருத்தசேதனமடைந்தவன. இஸ்ரவேல்வமிசத்திற்பென்யமீன்கோத்திரத்திற் பிறந்தவன. எபிரேயரிற் பிறந்த எபிரேயன்.

ரேயன. நியாயப்பிரமாணத்தைக்குறித்து நான் பரிசேயன்.

௬ பக்திவைராக்கியத்தைக்குறித்து நான் (கிறிஸ்து) சபையைத் துன்பப்படுத்தினவன். நியாயப்பிரமாணத்தினாலவருகிற நீதியைக்குறித்து நான் பிழையில்லாதவன்.

௭ ஆகிலும் எனக்கு லாபமாயிருந்த இவைகளை நான் கிறிஸ்துவுக்காக நஷ்டமென்றெண்ணினேன்.

௮ நிச்சயமாகவே என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்றெண்ணிக்கொண்டிருக்கிறேன். அவருக்காக நான் அவைகளையெல்லாம் நஷ்டமாகத்தள்ளினேன்.

௯ நான் கிறிஸ்துவை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கும், நியாயப்பிரமாணத்தினாலவருகிற சுயநீதியையல்ல, கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே வருகிறதுமாய் விசுவாசமூலமாய்ப் பராபரனாலே வருகிறதுமாயிருக்கிற நீதியையேயுடையவனாயிருந்து, இப்படிக்கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறவனாய்க் காணப்படும்படிக்கும் சகலத்தையுங் குப்பையைப்போல எண்ணியிருக்கிறேன்.

௧௰ இப்படி நான் அவரையும் அவர் உயிரோடெழும்புதலின் வல்லமையையும் அவருடைய பாடுகளோடே ஐக்கியத்தையும் அறிந்திருக்கிறதுமல்லாமல்,

௧௧ எப்படியும் நான் மரித்தோரிலிருந்து உயிரோடெழுந்திருப்பதற்குத் தகுதியாகும்படிக்கு அவருடைய மரணத்திற்கொப்பான மரணத்திற்கேதுவாயிருக்கிறேன்.

௧௨ (அதை) நான் இப்பொழுதே அடைந்தவனாக அல்லது இப்பொழுதே தேறினவனாகச் சொல்லாமல், கிறிஸ்து இயேசுவினாலே நான் எதற்காகப் பிடிக்கப்பட்டேனோ அதைப்பிடித்துக்கொள்ளும்படி பின்தொடருகிறேன்.

௧௩ சகோதரரே நான் (அதைப்) பிடித்துக்கொண்டேனென்றெண்ணுகிறதில்லை, ஒன்று செய்கிறேன். பின்னானவைகளை மறந்து, முன்னானவைகளைச் சாக்கிரதையாய் நாடி,

௧௪ கிறிஸ்து இயேசுவினாலே பராபரன் உயர்ச்சியிலிருந்து என்னை அழைத்த அழைப்பாகிய பந்தயப்பொருளுக்காகக் குறித்திருக்கிற மார்க்கமாய்ப் பின்தொடருகிறேன்.

௧௫ ஆகையால் நம்மில் தேறினவர்கள் யாவரும் இப்படியே சிந்திக்கக்கடவோம். எதையாகிலும் நீங்கள் வேறுவிதமாய்ச் சிந்திப்பீர்களானால், அதையும் பராபரன் உங்களுக்கு வெளிப்படுத்துவார்.

௧௬ எப்படியும் நாம் எதுவரையில் வந்திருந்தாலும், இந்தப்பிரமாணத்தின்படியே நடந்துகொண்டு, ஒரேவிதமாய்ச் சிந்தனைபண்ணக்கடவோம்.

௧௭ சகோதரரே, நீங்கள் என்னோடேகூடப் பின்பற்றுகிறவர்களாகி, நாங்களுங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை நோக்குங்கள்.

௧௮ அநேகர் கிறிஸ்துவின் சிலுவைக்குப் பகைஞராக நடக்கிறார்கள். அவர்களைக்குறித்து முன்னே உங்களுக்கு அநேகந்தரஞ் சொன்னேன். இப்பொழுது அழுதுகொண்டேயும் (அப்படிச்) சொல்லுகிறேன்,

௧௯ அவர்களுடைய முடிவு அழிவு. அவர்களுடைய தேவன் வயிறு. அவர்களுடைய மகிமை அவர்கள் இலச்சையிலிருக்கிறது. பூமிக்குரியவைகளைச் சிந்திக்கிறார்கள்.

௨௰ நம்முடைய இருப்பிடம் பரமண்டலங்களிலிருக்கின்றது. அங்கேயிருந்து கர்த்தராகிய இயேசுகிறிஸ்து இரட்சகர் வரப் பார்த்துக்கொண்டிருக்கிறோம்.

௨௧ அவர் எல்லாவற்றையுந் தமக்குக் கீழ்ப்படுத்தும்படிக்கு மிகுந்த பலமுடையவராகையால், நம்முடைய அற்பமான சரீரம் மகிமையுள்ள தமது சரீரத்திற்கொப்பாயிருக்கும்படி அதை மறுரூபப்படுத்துவார்.

## ௪. அதிகாரம்.

[(௧) அவர்களுக்குத் தன்னுடைய அன்பைக் காட்டி, (௨) அவர்கள் திவ்விய பரிசுத்தமுள்ளவர்களாய் நடக்கும்படி புத்திசொல்லி, (௩) தனக்கு அவர்கள் தர்மத்தை யனுப்பினதற்காகச் சந்தோஷத்தைக் காட்டியது.]

ஆனபடியினாலே எனக்கு அன்பானவர்களும் என்னாலே ஆசிக்கப்பட்டவர்களுமாய் எனக்குச் சந்தோஷமுங் கிரீடமுமாயிருக்கிற சகோதரரே, பிரியமானவர்களே, இந்தப்படியே கர்த்தருக்குள் நிலைகொண்டிருப்பீர்களாக.

௨ கர்த்தராலே ஒரேவிதமான சிந்தையாயிருக்கும்படிக்கு ஐயோதியாளுக்குஞ் சிந்திகேயாளுக்குந் புத்திசொல்லுகிறேன்.

௩ அல்லாமலும் என் உத்தமக்கூட்டாளியே, அவர்களுக்குச் சகாயமாயிருக்கும்படிக்கு உன்னையும் வேண்டிக்கொள்ளுகிறேன். அவர்கள் கிலேமெந்தோடுமற்ற என் உடன்வேலையாட்களோடுங்கூடச் சுவிசேஷத்தைக் குறித்து என்னோடேகூட உழைத்தவர்களே, அவர்களுடைய நாமங்கள் ஜீவபுஸ்தகத்திலிருக்கின்றன.

௪ கர்த்தருக்குள் எப்பொழுதுஞ் சந்தோஷமாயிருங்கள். சந்தோஷமாயிருங்களென்று மறுபடியுஞ் சொல்லுகிறேன்.

௫ உங்களிலுள்ள சாந்தகுணம் எல்லாச் சனங்களுக்குந் தெரியவர்க்கடவது, கர்த்தர் சமீபமாயிருக்கிறார்.

௬ நீங்களொன்றையுங் குறித்துக் கவலைப்படாமல், எல்லா வற்றையுங் குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்துடனேகூடிய செபத்தினாலும் வேண்டுதலினாலும் பராபரனுக்கறிவிப்பீர்களாக.

௭ அப்பொழுது எல்லாப்புத்திக்கும் மேலான தேவசமாதானங் கிறிஸ்து இயேசுவினாலே உங்களிருதயங்களையுஞ் சிந்தனைகளையுங் காப்பாற்றும்.

௮ சகோதரரே, கடைசியிலே சத்தியமுள்ளவைகளெவைகளோ, இலட்சணமுள்ளவைகளெவைகளோ, நீதியுள்ளவைகளெவைகளோ, கற்புள்ளவைகளெவைகளோ, சிநேகத்துக்கேதுவானவைகளெவைகளோ, நற்கீர்த்தியுள்ளவைகளெவைகளோ, மற்றப் புண்ணியமெதுவோ புகழ்ச்சியுள்ள தெதுவோ அவைகளையே சிந்தித்துக்கொள்வீர்களாக.

௯ நீங்கள் என்னிடத்திற்கற்றும், அடைந்தும், கேட்டும், கண்டுமிருக்கிறவைகளைச் செய்யுங்கள். அப்பொழுது சமாதானம் பொருந்திய பராபரன் உங்களபங்கிலேயிருப்பார்.

௰ என்னை விசாரிக்கும்படிக்கு நீங்கள் இக்காலத்திலே மறுபடியும் மலர்ந்திருக்கிறபடியினாலே, கர்த்தருக்குள் மிகவுஞ் சந்தோஷப்பட்டேன். (முன்னேயும்) அப்படிச் செய்ய யத்தனமாயிருந்தீர்கள். சமயமாத்திரம் உங்களுக்கு நேரிடவில்லை.

௰௧ என் தவைச்சலினாலே நான் இப்படிச் சொல்லவில்லை. எந்த நிலைமையிலிருந்தாலும் மனசந்தோஷமாயிருக்கக் கற்றுக்கொண்டேன்.

௰௨ தாழ்ந்திருக்கவும் எனக்குத் தெரியும். பெருகியிருக்கவும் எனக்குத் தெரியும். எவ்விடத்திலேயும் எல்லாவற்றிலேயுந் திருத்தியாயிருக்கவும் பசியாயிருக்கவும் பரிபூரணப்படவுங் குறைவுபடவும் படித்தேன்.

௰௩ என்னைப் பலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே நான் எவற்றையுஞ் செய்யத் திராணியுண்டு.

௰௪ அப்படியிருந்தும் என் உபத்திரவத்திலே என்னுடனே ஐக்கியப்பட்ட நீங்கள் நன்றாய்ச் செய்தீர்கள்.

௰௫ பிலிப்பியரே. உங்களுக்குந் தெரிந்திருக்கிறபடி, சுவிசேஷத்தின் ஆரம்பத்திலே நான் மக்கெதோனியா நாட்டைவிட்டுப் புறப்பட்டபொழுது, நீங்கள்மாத்திரமேயல்லாமல், வேறொருசபையுங் கொடுக்கல்வாங்கலினபத்தைக்குறித்து, உதவியாயிருக்கவில்லை.

௰௬ நான் தெசலோனிக்கேயூரிலிருந்த பொழுதும், நீங்கள் என் தவைச்சலை நீக்கும்படிக்கு இரண்டொருதரம் அனுப்பினீர்கள்.

௰௭ காணிக்கையை நான் விரும்பாமல் உங்கள் கணக்குப் பெருகவேண்டுமென்று பலனை விரும்புகிறேன்.

௰௮ இப்பொழுது வேண்டியதெல்லாம் எனக்குவந்திருக்கிறது, பரிபூரணமுண்டாயிருக்கின்றது உங்களாலனுப்பப்பட்டவைகளைப் பராபரனுக்குச் சுகந்தவாசனையாயும் பிரியமுஞ் சந்தோஷமுமான பலியாயுமிருக்கிறவைகளை எப்பாப்பிரோதீத்துவினிடத்தில் வாங்கிக்கொண்டதால், நான் நிறைவாயிருக்கிறேன்.

௰௯ அன்றியும் என் தேவனானவர் தமது மகிமையுள்ள ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவுகளையெல்லாங் கிறிஸ்து இயேசுவினாலே நீக்கி நிறைவ அருளிச்செய்வார்.

௨௰ நம்முடைய பராபரனும் பிதாவுமானவருக்கே என்றென்றைக்கும் மகிமையுண்டாகக்கடவது. ஆமென்.

௨௰௧ கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்களெல்லாருக்கும் வாழ்த்துதல் சொல்லுங்கள். என்னுடனேயிருக்கிற சகோதரர் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

௨௰௨ பரிசுத்தவான்களனைவரும் விசேஷமாய் இராசனுடைய அரண்மனையிலுள்ளவர்களும் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

௨௰௩ நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கிருபை யுங்களனைவரோடுங்கூடவிருக்கக்கடவது. ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொலோசருக்கெழுதின நிருபம்

## க. அதிகாரம்.

[(க) பவுலு சபையாரை வாழ்த்தி, (ந) அவர்களுடைய விசுவாசத்தைக் குறித்துச் சந்தோஷத்தைக் காட்டி, (கூ) அவர்களுக்காகச் செபம்பண்ணி, (யரு) கிறிஸ்துவினுடைய மகிமையைக் காட்டி, (உச) தன்னுடைய பாடுகளையும் ஊழியத்தையுங் குறித்துச் சொல்லியது.]

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுலுவுஞ் சகோதரனாகிய தீமோத்தேயுங்,

உ கொலோசையூரிலே கிறிஸ்துவுக்குள் இருக்கிற பரிசுத்தவான்களுமாய விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரருக்கெழுதுகிறதாவது, நம்முடைய பிதாவாகிய பராபரனாலுங் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவது.

ந நீங்கள் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருக்கிறதையுஞ் சத்தியவசனமாகிய சுவிசேஷத்தினாலே முன்புகேட்டதுமாய,

ச பரமண்டலங்களிலுங்களுக்காக வைக்கப்பட்டதுமாயிருக்கிற (நித்தியசுதந்தரத்தை) நம்புகிறதினாலே சகல பரிசுத்தவான்கள்மேலும் அன்புகூருகிறதையும் நாங்கள் கேள்விப்பட்டு,

ரு உங்களுக்காக எப்பொழுதுஞ் செபம்பண்ணி, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமாய தேவனுமாயிருக்கிறவரைத் தோத்திரஞ் செய்கிறோம்.

சா இந்தச் சுவிசேஷம் உலகத்திலெங்கும் வியாபித்துப் பலனைக் கொடுக்கிறதுபோல, (அது) உங்களிடத்திலுஞ் சேர்ந்து, நீங்கள் பராபரனுடைய கிருபையை யுண்மையாய்க் கேட்டறிந்துகொண்ட நாள்முதல் உங்களுக்குள்ளும் பலனைக் கொடுக்கிறதாயிருக்கின்றது.

எ அதை நீங்கள் எங்களுக்குப் பிரியமான உடன்வேலைக்காரனுமாய் உங்களுக்காகக் கிறிஸ்துவினுடைய உண்மையான ஊழியக்காரனுமாயிருக்கிற எப்பாப்பிராவினிடத்திற் கற்றுக்கொண்டவர்களாயுமிருக்கிறீர்கள்.

அ ஆவிக்கேற்ற உங்கள் அன்பை அவன் எங்களுக்கு அறிவித்தவனுமாயிருக்கிறான்.

கூ ஆகையால் அதைக் கேள்விப்பட்ட நாள்முதல், நாங்கள் உங்களுக்காக விண்ணப்பம்பண்ணி, நீங்கள் எல்லாவிதமான நற்கிரியைகளைச் செய்கிறவர்களாயும் பராபரனை யறிகிற அறிவையதிகமதிகமாய் அடைகிறவர்களாயுஞ்,

ய சந்தோஷத்தோடே பொறுமையாயும் நீடியசாந்தமாயுமிருப்பதற்கு, அவருடைய மகிமைபொருந்திய வல்லமையினாலே யெல்லாவிதமான பலத்தையுடையவர்களாயும்,

யக ஒளியிலுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்திற்குப் பங்காளிகளாவதற்கு நம்மைத் தகுதியானவர்களாக்கி, இருளினுடைய அதிகாரத்தினின்று விடுதலைபண்ணித் தமக்கு அன்பாயிருக்கிற குமாரனுடைய இராச்சியத்திற் குட்படுத்திவைத்த பிதாவைத் தோத்திரஞ் செய்கிறவர்களாயுமிருந்து,

யஉ (இப்படிக்) கர்த்தராவுக்குப் பாத்திரமாயும் பிரியமாயும் நடக்கும்படிக்கு,

யந எல்லா ஞானத்தோடும் பரிசுத்த ஆவிக்கேற்ற விவேகத்தோடுந் தமது திருச்சித்தத்தையறிகிற அறிவினாலேயுங்களை நிரப்பவேண்டுமென்று ஓயாமல் அவரைநோக்கி, வேண்டிக்கொள்ளுகிறோம்.

யச அவருடைய குமாரன் தம்முடைய திரு இரத்தத்தைச் சிந்தினதினாலே நமக்குப் பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டாயிருக்கின்றது.

யரு அவர் அதரிசயமாயிருக்கிற பராபரனுடைய சாயலுமாய,

யசா பரமண்டலங்களிலும் பூமியிலுமுள்ள காணப்படுகிறவைகளுங் காணப்படாதவைகளுமாகிய யாவற்றையுஞ் சிங்காசனங்களிலிருக்கிறவர்களையுங் கர்த்தத்துவமுடையவர்களையும் பிரபுக்களையும் அதிகாரிகளையுமுண்டாக்கினபடியினாலே, சிருட்டிக்கெல்லாவுக்கு முதன்மையுமாயிருக்கிறார். சகலமும் அவராலும் அவருக்காகவுஞ் சிருட்டிக்கப்பட்டிருக்கின்றன.

யஎ எல்லாவற்றிற்கும் முன்னமேயிருக்கிறார். சகலவஸ்துக்களும் அவராலே நிலையாயிருக்கின்றன.

௯ என்னத்தினாலென்றால் தேவத்துவத்தின் நிறைவெல்லாம் மெய்யாய்க் கிறிஸ்துவுக்குள்ளே வாசமாயிருக்கிறது.

௰ மேலும் சகல துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்குந் தலைவராயிருக்கிற அவருக்குள் நீங்கள் நிறைவுள்ளவர்களாயிருக்கிறீர்கள்.

௰௧ அவரோடே நீங்கள் ஞானஸ்நானத்தினாலே யடக்கம்பண்ணப்பட்டவர்களானபொழுது அவர்பண்ணுகிற விருத்தசேதனத்தினாலே நீங்கள் பாவங்களுள்ள மாம்சதேகத்தைக் களைந்தபடியால், கையாற் செய்யப்படாத விருத்தசேதனத்தை அவருக்குள்ளும் பெற்றுக்கொண்டீர்கள்.

௰௨ மேலும் பராபரன் அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின பலத்தசெய்கையை விசுவாசிக்கிறதினாலே நீங்கள் அந்த ஞானஸ்நானத்திலே அவருடனேகூட எழுந்துமிருக்கிறீர்கள்.

௰௩ எப்படியெனிற் பாவங்களாலும் உங்கள் மாம்சத்தின் நுனித்தோலினாலும (அஞ்ஞானமார்க்கத்தாலும்) மரித்தவர்களாயிருந்த உங்களையவரோடேகூடவும் அவருயிர்ப்பித்துப் பாவங்களையெல்லாம் உங்களுக்கு மன்னித்து,

௰௪ நமக்காகச் செய்யப்பட்டதுமாய் நமக்கு விரோதமுமாயிருந்த கட்டளைகளின் கையெழுத்தைக் குலைத்து அதை நடுவிலிராதபடிக்கு எடுத்து அதைச் சிலுவைமரத்திற் சேர்த்து ஆணியடித்துப்போட்டு,

௰௫ துரைத்தனங்களையும் அதிகாரங்களையுங்கொள்ளையிட்டு வெளியரங்கமாய்க் காண்பித்து இவ்விதமாய் அவைகளைச்செயித்துக்கெம்பீரம் அடைந்தார்.

௰௬ ஆதலாற் போசனத்தையும் பானத்தையும் பண்டிகையையும் மாதப்பிறப்பையும் ஓய்வுநாட்களையுங்குறித்து எவனும் உங்களைக் குற்றவாளிகளாக்காதிருப்பானாக.

௰௭ அவைகள் பின்வருந்தவைகளுக்கு நிழலாயிருக்கின்றன. அவைகளின்பொருள் கிறிஸ்துவினிடத்திலேயுண்டாயிருக்கின்றது.

௰௮ (மாயமான) தாழ்மையின்மேலுந் தேவதூதருக்குச்செய்யும் ஆராதனையின்மேலும் விருப்பமுற்றிருக்கிற யாவனொருவனும் உங்கள் பந்தயப்பொருளை நீங்களிழந்துபோகும்படி செய்யாதிருப்பானாக. அப்படிப்பட்டவன் தான்காணாதவைகளைத் துணிவாய் நடத்துகிறவனுமாய்த் தன்மாம்சசிந்தையினாலே வீணாய் இறுமாப்புக்கொண்டிருக்கிறவனுமாய்,

௰௯ கணுக்களாலுங்கட்டுகளாலும் உதவிபெற்று இணைக்கப்பட்ட சரீரமெல்லாந் தேவவளர்த்தியாக வளர்ச்செய்கிற தலையைப்பற்றிக்கொள்ளாதவனுமாயிருக்கிறான்.

௨௰ அப்படியிருக்கக்கையாலுலகத்திலே அழிவுக்கேதுவானபதார்த்தங்களிலே உபயோகமாயிருக்கிற [illegible] இதைச்சாப்பிடக்கூடாது.

௨௰௧ இதைருசிபார்க்கக்கூடாது. இதைத்தொடக்கூடாதென்று சொல்லிய மனிதருடைய கற்பனைகளின்படியேயும் போதகங்களின்படியேயும் சிலர் கற்பிக்கிறார்களே.

௨௰௨ அப்படிப்பட்ட கற்பனைகள் சுயசித்த ஆராதனையினாலுந் தாழ்மையினாலுஞ் சரீரத்திற்கு வேண்டியகனஞ்செய்யாமல் ஒடுக்குகிறதினாலும் ஞானவேஷமுள்ளவைகளாயிருக்கின்றது உண்மைதான்.

௨௰௩ ஆனாலுங் கிறிஸ்துவுடனேகூட நீங்கள் உலகத்திலுள்ள கிறுமையானவழிபாடுகளுக்கு மரித்தவர்களானபடியால் நீங்கள் உலகத்தின்படி பிழைக்கிறவர்கள்போல அந்தக் கட்டளைகளைச் சுமந்துகொள்ளுகிறதென்ன?

## ௩. அதிகாரம்.

[(௧) அவர்கள் கிறிஸ்துவினிடத்திலுள்ள நித்தியமான மகிமைகளைத் தேடும்படிக்கும், (௫) அதற்கேற்றபடி புதியசீவனுள்ளவர்களாய் நடக்கும்படிக்கும் புத்திகளைச் சொல்லியது.]

நீங்கள் கிறிஸ்துவுடனேகூட எழுப்பப்பட்டிருந்தாற் கிறிஸ்துபராபரனுடைய வலதுபாரிசத்திலே உட்கார்ந்திருக்கிறபடியால் மேலானவைகளைத் தேடிக்கொள்ளுங்கள்.

௨ நீங்கள் மரித்தீர்களே; அல்லாமலும் உங்கள் சீவன் கிறிஸ்துவுடனேகூடப் பராபரனிடத்திலே மறைந்திருக்கின்றதே;

௩ ஆகையாற் பூமியிலுள்ளவைகளையல்ல மேலானவைகளையே சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௪ நமக்குச் சீவனாகிய கிறிஸ்து வெளிப்படும்பொழுது. அவருடனேகூட நீங்களும் மகிமையோடே வெளிப்படுவீர்கள்.

௫ ஆகையாற் பூமியிலே வேசித்தனமும் அசுத்தமும் விரகதாபமுந் துர்இச்சையும் விக்கிரகாராதனையான பொருளாசையுமாகிய உங்கள் அவயவங்களை யழித்துப்போடுங்கள்.

௬ அவைகளினிமித்தம் பராபரனுடைய கோபங் கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகள் மேல்வரும்.

௭ முற்காலத்திலே நீங்களும் அவைகளுடனேகூடச் சீவனம்பண்ணினபொழுது அவைகளைச் செய்துகொண்டுவந்தீர்கள்.

௮ இப்பொழுதோ கோபமும் மூர்க்கமுந் துர்க்குணமுந் தூஷணமும் நீங்கள் பேசுவ

மபுவார்த்தைகளுமாகிய அவைகளையெலலாமவிடடுவிடுஙகள.

௯ பழயமனிதனையும அதினுடையசெயகைகளையும நீஙகளகழறறிப்போடடுநதனனைசிருடடிததவருடையசாயலுககுத்தக்கதாக அறிவுணடாகுமபடிககுப்புதிதாக்கப்பபடட புதியமனிதனைததரிததுககொணடவர்களாய,

௰ ஒருவருககொருவர் பொயசொலலாதிருஙகள.

௰௧ அஙகே கிரேககனெனறும யூதனெனறும விருததசேதனமுளளவனெனறும விருததசேதனமிலலாதவனெனறும புறததேசததானெனறும இஸ்கீததனெனறும அடிமையெனறும சுயாதீனனெனறும (சொலலபபடடவேறறுமை) யிலலை. கிறிஸ்துவேயெலலாருககுளளும எலலாமுமாயிருககிறார்.

௰௨ அபபடியிருகக, நீஙகளபர்ாபரனாலேதெரிநதுகொளளபபடடவர்களாயுமபரிசுததராயுஞ சிநேகிககபபடடவர்களாயுமிருக்கையால உருககமான இரககததையுந தயையையும மனத்தாழமையையும பொறுமையையும நீடியசாநதத்தையுந தரிததுககொணடு,

௰௩ ஒருவரையொருவர் தாஙகி ஒருவனமறறொருவனமேல விரோதமாயிருநதாற் கிறிஸ்து உஙகளுககுமனனிததததுபோல நீஙகளும ஒருவருககொருவர்மனனியுஙகள.

௰௪ அனறியும அவைகளெலலாவறறினமேலும அனபைததரிததுககொளளககடவீர்கள. அதுவே பூரணசற்குணஙகளையிணைககிறகச்சையாயிருககினறது.

௰௫ அலலாமலும பர்ாபர்னுடையசமாதானம உஙகளிருதயஙகளுககுளளே ஆளுகைசெயயககடவது. நீஙகள ஒரேசரீரமாயிருக்குமபடிககு அநதசசமாதானததிற்கு அழைககபபடடவர்களே; நனறியறிதலுளளவர்களாயுமிருபபீர்களாக.

௰௬ கிறிஸ்துவினுடையவசனம உஙகளுககுளளே பரிபூர்ணமாயவாசமாயிருக்கக்கடவது. சகலஞானததோடுஞசஙகீதஙகளினாலும கீர்ததனங்களினாலும மறறஞானபபாடடுக்களினாலுமஒருவருககொருவர்போதிததுபபுததிசொலலிககொணடு பர்ாபரனையுஙகளிருதயஙகளிலேயினிதாயபபாடி,

௰௭ நீஙகளவசனஞ்சொனனாலுஙகிரியைசெயதாலும எவைசெயதாலும அவைகளையெலலாங கர்ததராகிய இயேசுவினநாமததினாலேசெயது அவர்முனனிலையாயபபிதாவாகிய பர்ாபர்னைததோததிரியுஙகள.

௰௮ ஸ்திரீகளே! கர்ததருககேற்கும படியுஙகளசொநதபபுருஷர்களுககுக கீழபபடடிருஙகள.

௰௯ புருஷர்களே! உஙகளமனைவிகளில அனபுகூருஙகள. அவர்களுககுக கசபபுககொடாதிருஙகள.

௨௰ பிளளைகளே! உஙகளைபபெறறவர்களுககு எவவிதத்திலுங கீழபபடடிருஙகள. அதுவேபர்ாபர்னுககுபபிரியமாயிருக்கினறது.

௨௧ பிதாககளே! உஙகளபிளளைகளகிடைறறுபபோகாதபடி அவர்களுககுக்கோபமூடடாதிருஙகள.

௨௨ வேலைககாரரே! சரீரததினபடியுஙகளுககு எசமானகளானவர்களுககு நீஙகள எவவிதத்திலுங கீழபபடிநது, மனிதருககுப பிரியமாயிருகக விருமபுகிறவர்களபோல எசமானகளகாணுமபொழுதுமாத்திரம ஊழியஞசெயகிறவர்களாயிராமற் பர்ாபரனுககுபபயநது கபடமிலலாத இருதயததோடே கீழபபடியுஙகள.

௨௩ மேலும நீஙகளகர்ததாவாயிருககிற கிறிஸ்துவுக கூழியஞசெயகிறபடியாற் சுதநதரமெனனும பலனைபபெறுவோமெனறறிந்தவர்களாய,

௨௪ எவைகளைசசெயதாலும அவைகளையெலலாம மனிதருககாகவலல கர்ததருககாகவேமனசநதோஷமாயச செயயுஙகள.

௨௫ அநியாயஞசெயகிறவன தானசெயத அநியாயததாலவருமபலனை யடைவான. பட்சபாதமேயிலலை.

## ௪. அதிகாரம்.

[(௧) அவர்கள நீதி, செபம முதலானவைகளைசசெயயுமபடிககுப பலபுததிகளைச சொலலியது.]

எசமானகளே! உஙகளுககும பர்மணடலஙகளில எசமானிருககிறாரெனறறிநதவர்களாய நீஙகள வேலைககாரருககு நீதியுமாயசசெவவையுமா யிருககிறதைககொடுஙகள.

௨ தோததிரததோடே விணணபபமபணணுதற்கு விழிததிருநது, உறுதியாயவிணணபபமபணணுஙகள.

௩ அவவேளையிலே கிறிஸ்துவினமறைபொருளினிமிததங கடடபபடடிருககிற நானபேசவேணடியவிர்காரமாக அதை வெளிபபடுததிபபேசுமபடிககு,

௪ பர்ாபர்ன இநதவசனததிற்குவாசலைத திறககவேணடுமெனறு எஙகளுககாகவும விணணபபமபணணுஙகள.

௫ நீஙகளகாலததைப பபறறிககொணடு புறமபானவர்களுககு முனபாக ஞானமாயநடநதுகொளவீர்களாக.

௬ நீஙகள அவனவனுககுத தகுதியானஉததர்வு சொலலுமவகைசையை யறியுமபடிககு உஙகளவசனம எபபொழுதும இனி

தாயும் உப்பால் இரசமேற்றுகிறதுபோல வுமிருக்கக்கடவது.

௭ பிரியமான சகோதரனுமாய் உண்மையுள்ள ஊழியக்காரனுமாய் என்னுடனே கூடக் கர்த்தருக்கு வேலையாளுமாயிருக்கிற தீகிக்கென்பவன் என் செய்திகளையெல்லாம் உங்களுக்கறிவிப்பான்.

௮ உங்கள் செய்திகளையறிந்து உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யும்படிக்கு,

௯ நான் அவனையும் உங்களிலொருவனாகிய உண்மையுள்ள பிரியசகோதரனான ஒநேசிமு என்பவனையும் உங்களிடத்திற்கனுப்பியிருக்கிறேன். அவர்கள் இவ்விடத்துச் செய்திகளையெல்லாம் உங்களுக்கறிவிப்பார்கள்.

௰ என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறவனாகிய அரிஸ்தர்க்கென்பவனும் பர்னபாவுக்கினத்தானாகிய மாற்கென்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள். இந்த மாற்கைக்குறித்துக் கட்டளைகளையடைந்தீர்களே; அவன் உங்களிடத்தில் வரும்பொழுது அவனையங்கிகரித்துக்கொள்ளுங்கள்.

௰௧ இயுஸ்து என்னப்பட்ட இயேசுவும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறான். விருத்தசேதனமுள்ளவர்களில் இவர்கள் மாத்திரம் பராபரனுடைய இராச்சியத்திலே யென்னுடனே கூட ஊழியக்காரராய் எனக்கு ஆறுதல் செய்துகொண்டுவந்தார்கள்.

௰௨ உங்களிலொருவனாயிருக்கிற கிறிஸ்துவினூழியக்காரனாகிய எப்பாப்பிராவென்பவன் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறான். நீங்கள் பராபரனுடைய சித்தமானதெல்லாவற்றிலேயும் நிலைநின்று தேறினவர்களுமாய் நிறைவுள்ளவர்களுமாயிருக்கும்படிக்கு அவன் எப்பொழுதும் உங்களுக்காக விண்ணப்பங்களினால் போராடுகிறான்.

௰௩ அப்படியே அவன் உங்களுக்காகவும் இலவோதிக்கேயா இயோராப்போலி யென்னுமூர்களிலுள்ளவர்களுக்காகவும் மிகுந்த சாக்கிரதையுள்ளவனாயிருக்கிறானென்பதற்கு நான் சாட்சியாயிருக்கிறேன்.

௰௪ பிரியமான வயித்தியனாகிய லூக்காவென்பவனும் தேமாவென்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.

௰௫ இலவோதிக்கேயாவிலிருக்கிற சகோதரர்களுக்கும் நிம்பாவென்பவனுக்கும் அவன் வீட்டிலே கூடுகிற சபையாருக்கும் வாழ்த்துதல் சொல்லுங்கள்.

௰௬ இந்த நிருபம் உங்களிடத்தில் வாசிக்கப்பட்டபின் இது இலவோதிக்கேயா சபையிலும் வாசிக்கப்படும்படிக்கும் இலவோதிக்கேயாவிலிருந்துவரும் நிருபத்தை நீங்களும் வாசிக்கும்படிக்கும் செய்யுங்கள்.

௰௭ அர்க்கிப்புவை நோக்கி நீ கர்த்தரிடத்திற்பெற்ற ஊழியத்தை நிறைவேற்றப்பார்ப்பாயாகவென்று சொல்லுங்கள்.

௰௮ பவுலாகிய நான் உங்களுக்கு வாழ்த்துதல் செய்து இதை யென் கையினாலே யெழுதினேன். நான் கட்டப்பட்டிருக்கிறதை நினைத்துக்கொள்ளுங்கள். கிருபை உங்களுடனே யிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

தெசலோனிக்கேயருக்கெழுதின

# முதலாம் நிருபம்.

## ௧. அதிகாரம்.

[(௧) பவுல் சபையாருக்கு வாழ்த்துதல் செய்தது, (௨) அவர்களுக்காகத் தோத்திரமும் செபமும் பண்ணி (௯) அவர்கள் திவ்விய வசனத்தை ஏற்றுக்கொண்டதைக் குறித்து அவர்களைப் புகழ்ந்தது.]

பவுலும் சில்வானும் தீமோத்தேயும் பிதாவாகிய பராபரனுக்குள்ளும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குள்ளுமிருக்கிற தெசலோனிக்கைபூரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது, நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமுமுண்டாகக்கடவது.

௨ பராபரனாலே அன்புகூரப்படுகிற சகோதரரே! எங்கள் சுவிசேஷம் வசனத்தோடே மாத்திரமல்ல, வல்லமையோடும் பரிசுத்த ஆவியோடும் மிகுந்த நிச்சயத்தோடும் உங்களுக்குள்ளே பிரவேசித்ததினாலே,

மபுததியும ஆறுதலுஞசாட்சியுஞசொனன தையறிநதிருககிறீர்கள.

௰௩ ஆகையால, நீங்கள பராபரனுடை யவசனததையெங்களாலே கேள்விபபட்டு ஏற்றுககொணடபொழுது, அதைமனிதர் வசனமெனறலல, பராபரனுடைய வசன மெனறேயேற்றுககொணடதினாலே நாஙக ள இடைவிடாமற்பராபரனுக்குததோததி ரமுஞசெலுததுகிறோம அதுமெய்யாய அ வருடையவசனநதான. விசுவாசிககிற உங களுககுளளேயதுபலனுஞசெயகினறது.

௰௪ எப்படியெனிற்சகோதரரே! நீஙக ளயூதேயாநாட்டிலேகிறிஸது இயேசுவுக குளளானபராபரனுடையசபைகளைபபின பற்றினவர்களாகி, அவர்களயூதராலேபாடுப ட்டதுபோல நீங்களும உஙகளசுயகோததி ரததாராலேபாடுபட்டீர்கள.

௰௫ அநத யூதர்களகர்ததராகிய இ யேசுவையுந தஙகள தீர்ககதரிசிகளையுங கொலைசெயது, எஙகளையுநதுனபப்படுததி யிபபடிபபராபரனுககுப்பிரியமாயிராதவர் களுமாய மனிதர்யாவருககும விரோதிக ளுமாயிருககிறார்கள.

௰௬ அவர்கள தஙகளபாவஙகளை யெப பொழுதுமநிறைவாககததக்கதாகப புறத தேசததார் இரட்சிக்கபபடுதறகு நாஙகள அவர்களோடே பேசாதபடிககுததடைபப ணணுகிறார்கள. கோபாககினையதிசீககிர மாய அவர்களுககுவருகினறது.

௰௭ சகோதரரே! நாஙகள இருதயததி னலல்ல, முகாமுகமாய (மாததிரம்) கொஞ சக்காலம உஙகளைககாணாமற் பிரிநதிருநத படியினாலே, உங்களமுகததைபபார்ககவே ணடுமெனறுமிகுநத ஆசையோடே அதிக மாயபபிரயத்தனமபணணினோம.

௰௮ ஆனபடியினாலே, உஙகளிடததிலவ ருகிறதற்குநாஙகள இரணடொருதரமமன தாயிருநதோம. பவுலாகியநானவிசேஷமா க அப்படியிருநதேன. சாததானமாததிர ம எஙகளுககுததடைபணணினான.

௰௯ நமமுடையகர்த்தராகிய இயேசுக கிறிஸதுவருமபொழுது, அவருடையசனனி தானததிலே ஆர் எஙகளுககுநமபிக்கையு ஞசநதோஷமுமபுகழச்சியாகிய கிரீடமும வருநதறதேதுவாயிருபபார்கள. நீஙகளல லவோ அபபடியிருபபீர்கள.

௨௰ நீஙகள எஙகளுககுமகிமையுமாயச சநதோஷமுமாயிருககிறீர்களே.

## ௩. அதிகாரம்.

[(க) தீமோததேயுவையவர்களிடததில அ னுபபினதையும, (௬) அவர்களைககா ண ஆசையாயிருககிறதையுஞ்குறிததுச சொலலி, (௯) அவர்களுககாகததோத திரமுஞசெபமுமபணணினது.]

க ஆகையாலநாங்கள அதிகமாயபபொ றுக்கமாட்டாமல, அததேனேபட்டினததி லேதனிததுவிடபபடவிருமபி,

௨ இநத உபததிரவஙகளினாலே ஒருவரு ம அசைககபபடாதபடிககு உஙகளைவிசு வாசததைககுறிதது உஙகளைஸதிரப்படுத துமபொருட்டாகநமமுடைய சகோதரனு மாயபபராபரனுடைய ஊழியக்காரனுமா யக்கிறிஸதுவினசுவிசேஷததில எஙகளுட ன வேலையாளுமாயிருககிற தீமோததேயு வையனுபபினோம.

௩ நீஙகளே அறிநதிருககிறபடி, இப்ப டிப்பட்டவைகளைச்சகிககிறதறகு நாமவைக்க பபட்டிருககிறோமே.

௪ மேலுமநமககு உபததிரவம வருமெ னறு நாஙகளுங்களிடததிலிருநத பொழு து உஙகளுககுமுனனறிவிததோமே. அப படியுமநடநதது. அதைநீஙகள அறிநதிருக கிறீர்கள.

௫ ஆனபடியினாலேநான அதிகமாயப பொறுக்கமாட்டாமல, எஙகளவேலைவீணா யபபோகததககதாகச சோதனைக்காரன உஙகளைச சோதனைககுட்படுததினா னோவெனறு உஙகளவிசுவாசததையறியு மபடிககு அவனையனுபபினேன.

௬ சகோதரரே! இபபொழுதுதீமோத தேயு உஙகளிடததிலிருநது எங்களிடததில வநது, நீங்களவிசுவாசமாயும அனபாயுமி ருநது எபபொழுதும எங்களைநனறாயநினை ததுககொணடு,

௭ நாங்களுங்களைக்காணமிகுநத ஆசை யாயிருககிறதுபோல, நீங்களும எஙகளைக காண ஆசையாயிருககிறீர்களெனறு, எங் களுககுநற்செயதியைச்சொனனபடியினாலே எ ங்களுடைய உபததிரவம இக்கட்டெலலாவற் றிலேயும உஙகளவிசுவாசததினாலே உங களைககுறிதது ஆறுதல அடைநதோம.

௮ நீஙகள கர்ததரிடததில நிலைநிற்கிற தால இபபொழுதுபிழைககிறோம.

௯ அல்லாமலுமநாஙகள உஙகளைககுறி ததுநமதுபராபரனுடைய சனனிதானததி லேஅடைநதிருககிறமிகுநதசநதோஷத்தி றகாகபபராபரனுககு எநதத்தோததிரஞ செலுததுவோம.

௰ உஙகளமுகததைககணடு உஙகளவிசு வாசததினகுறைவுகளை நீககிநிறைவுணடா ககுமபொருட்டாக, இரவுமபகலுமமிகவும வேணடுதலசெயகிறோம.

௰௧ அநதபபடியே நமமுடையபிதாவா கியபராபரனுமகர்ததராகிய இயேசுககிறி ஸதுவும எஙகளவழியை உஙகளிடததிற்கு (நேராக்ககடவர்.)

௰௨ அலலாமலும நாஙகளுங்களிடததில வைததிருககிற அனபுககொப்பாயநீஙகளு

ஒருவரிடத்திலொருவரும் மற்றெந்த மனிதரிடத்திலும் அதிகமாய் நிறைந்த அன்புள்ளவர்களாகும்படி கர்த்தர் செய்து,

௧௩ இவ்விதமாய் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து தமது பரிசுத்தவான்களனைவரோடுங்கூட வரும்பொழுது, நீங்கள் நம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு முன்பாகப் பிழையில்லாத பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கும்படி உங்களிருதயங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ௪. அதிகாரம்.

[(௧) பரிசுத்தமாய் நடக்கும்படிக்கும், (௰௩) மரித்தவர்களைக்குறித்துத் துக்காதிக்கப்படாதபடிக்கும் புத்திசொல்லியது.]

மேலுஞ்சகோதரரே! நீங்கள் இன்னின்னபிரகாரமாக நடக்கவும் பராபரனுக்குப் பிரியமாயிருக்கவும் வேண்டுமென்று எங்களால் ஏற்றுக்கொண்டபடியே, அதிகமதிகமாய்ப் பெருகும்படிக்குக் கர்த்தராகிய இயேசுவினாலே உங்களை வேண்டிக்கொண்டு புத்திசொல்லுகிறோம்.

௨ கர்த்தராகிய இயேசுவினால் நாங்கள் உங்களுக்குக் கொடுத்த கட்டளைகளை அறிந்திருக்கிறீர்களே.

௩ நீங்கள் பரிசுத்தமுள்ளவர்களாகிறதே பராபரனுடைய சித்தமாயிருக்கின்றது. அந்தப்படி நீங்கள் வேசிமார்க்கத்திற்கு விலகி,

௪ பராபரனையறியாத அஞ்ஞானிகளைப்போல விர்க்தாபமாகிய இச்சைக்குள்ளாகவல்ல,

௫ பரிசுத்தத்திற்குங்கனத்திற்குமுள்ளாகவே உங்களிலவனவன் தன் தன் சரீரபாண்டத்தைக் காத்துக்கொள்ளுதற்கு வகையையறிந்து,

௬ இந்தச்செய்கையினாலே தன் சகோதரனை ஒடுக்காமலும் வஞ்சியாமலுமிருக்கவேண்டும். முன்னேயும் நாங்கள் உங்களுக்குச் சொல்லிச்சாட்சிகொடுத்தபடி, இப்படிப்பட்ட எல்லாவற்றையுங்குறித்துக் கர்த்தர் நீதியாய்ப் பழிவாங்குகிறவராயிருக்கிறாரே.

௭ பராபரன் நம்மை அசுத்தத்திற்கல்ல, பரிசுத்தத்திற்கு அழைத்தாரே.

௮ ஆனதால் அசட்டைபண்ணுகிறவன் மனிதனையல்ல, தமது பரிசுத்த ஆவியை எங்களுக்குக் கொடுத்த பராபரனையே அசட்டைபண்ணுகிறான்.

௯ சகோதரசிநேகத்தைக்குறித்து நான் உங்களுக்கெழுதவேண்டுவதில்லை. நீங்கள் தாமே ஒருவரிடத்திலொருவர் அன்பாயிருக்கும்படிக்குப் பராபரனாற் போதிக்கப்பட்டவர்களாயிருக்கிறீர்களே.

௰ அந்தப்படியே மக்கெதோனியா நாட்டிலெங்குமுள்ள சகோதரரெல்லாருக்குஞ்செய்துவருகிறீர்கள்.

௰௧ இன்னுஞ்சகோதரரே! அதிலே நீங்கள் அதிகமாய்ப் பெருகவும் புறம்பேயிருக்கிறவர்களுக்கு நீங்கள் யோக்கியமாய் நடந்து,

௰௨ ஒருத்தரையும் அடையாதபடிக்கு நாங்கள் உங்களுக்குக் கட்டளையிட்டபடி அமைதலாயிருக்க மிகுதியாய் விரும்பவும், உங்களுடைய சொந்த அலுவலைப் பார்த்துக்கொள்ளவும், உங்கள் சொந்த கைகளினாலே வேலைசெய்யவும் வேண்டுமென்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறோம்.

௰௩ அல்லாமலுஞ்சகோதரரே! நம்பிக்கையற்றவர்களைப்போல நீங்கள் துக்கிக்கப்படாதபடிக்கு நித்திரையடைந்தவர்களைக்குறித்து நீங்கள் அறியாமலிருக்கிறது எனக்கு விருப்பமில்லை.

௰௪ என்னத்தினாலெனில், இயேசுவானவர் மரித்துப் பின்பு எழுந்திருக்கிறாரென்று நாம் விசுவாசிக்கிறதுபோல, இயேசுவைப் பற்றி நித்திரையடைந்தவர்களையும் பராபரன் அவரோடேகூட்டப் புறப்படப்பண்ணுவார்.

௰௫ மேலுங் கர்த்தருடைய வார்த்தையின்படி நாங்கள் உங்களுக்கு அறிவிக்கிறதென்னவென்றால், கர்த்தர் வரும்பொழுது, உயிரோடே மீதியாயிருக்கும் நாம் நித்திரையடைந்தவர்களுக்கு முந்திக்கொள்ளுவதில்லை.

௰௬ அதெப்படியெனிற் கர்த்தர்தாமே ஆர்ப்பரித்தோடும் பிரதானதூதன இடிஞ்சத்தத்தோடுந்தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்திறங்கிவருவார். அப்பொழுது கிறிஸ்துவிலிருந்து மரித்தவர்கள் முதலாவது எழும்புவார்கள்.

௰௭ பின்பு உயிரோடே மீதியான நாமும் ஆகாயத்திலே வருகிற கர்த்தாவுக்கு நேராக அவர்களோடுங்கூட மேகங்களிலே எடுத்துக்கொண்டுபோகப்பட்டு இப்படியே எப்பொழுதுங் கர்த்தருடனேகூடவிருப்போம்.

௰௮ ஆகையால் இந்த வார்த்தைகளினாலே நீங்கள் ஒருவருக்கொருவர் ஆறுதல்செய்யுங்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) கடைசிநாளைக்குறித்தும், (௪) அவர்கள் ஒளியின்புத்திரருக்கேற்றபடி நடப்பதைக்குறித்தும் புத்திகளைச் சொல்லியது.]

இவைகள் நடக்குங்காலங்களையும் நேரங்களையுங்குறித்துச் சகோதரரே! நான் உங்களுக்கெழுதவேண்டுவதில்லை.

௨ இராவிலே திருடன் வருகிறவிதமாய்க் கர்த்தருடைய நாள் வருமென்று நீங்களே நன்றாய் அறிந்திருக்கிறீர்கள்.

௩ சமாதானமுஞ்சவுக்கியமுமுண்டென்று அவர்கள்சொல்லும்பொழுது, கர்ப்பவதியானவளுக்குவேதனைவருகிறதுபோல அழிவுசடுதியாய் அவர்கள்மேல்வரும்; அவர்கள்தப்பிப்போவதில்லை.

௪ சகோதரரே! அந்தநாள் திருடனைப்போல உங்களைப்பிடித்துக்கொள்ளத்தக்கதாக நீங்கள் அந்தகாரத்திலிருக்கிறவர்களல்ல.

௫ நீங்களெல்லாரும் ஒளியின்பிள்ளைகளுமாய்ப் பகலின் பிள்ளைகளுமாயிருக்கிறீர்கள். நாம் இரவுக்கும் அந்தகாரத்திற்கும் உள்ளானவர்களல்ல.

௬ ஆகையால் மற்றவர்களைப்போல நாம் தூங்காமல் விழித்துக்கொண்டு தெளிவாயிருக்கக்கடவோம்.

௭ தூங்குகிறவர்கள் இராத்திரியிலே தூங்குவார்கள். வெறிகொள்ளுகிறவர்கள் இராத்திரியிலே வெறிகொள்ளுவார்கள்.

௮ பகலமனிதராகிய நாமவிசுவாசம்.அன்பு என்னும்மார்பின் கவசத்தையும் இரட்சிப்பின் நம்பிக்கை யென்னுந்தலைச்சீராவையுந்தரித்துக்கொண்டு தெளிவாயிருக்கக்கடவோம்.

௯ பராபரன் நம்மைக் கோபாக்கினைக்கல்ல நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து மூலமாய் இரட்சிப்பை யடைந்துகொள்ளுதற்கு ஏற்படுத்தினார்.

௰ நாம்விழித்திருப்பவர்களானாலும் நித்திரையடைந்தவர்களானாலும் தம்முடனே கூட உயிரோடிருக்கும்படிக்கு அவர் நமக்காகமரித்தார்.

௰௧ ஆகையால்நீங்கள்செய்துவருகிறது போல ஒருவருக்கொருவர் ஆறுதல்சொல்லி ஒருவரையொருவர் உணர்த்தக்கடவீர்கள்.

௰௨ அன்றியுஞ்சகோதரரே! உங்களுக்குள்ளேபிரயாசப்பட்டுக்கர்த்தருக்குள்ளாக உங்களுக்குமுதலாளிகளாயிருந்து உங்களுக்குப்புத்திசொல்லுகிற பேர்களை நீங்கள் அறிந்துகொண்டு.

௰௩ அவர்களுடைய கிரியையினிமித்தம் அவர்களைமிகவும் அன்பாய் எண்ணிக்கொள்ளும்படிக்கு உங்களைவேண்டிக்கொள்ளுகிறோம், உங்களுக்குள்ளே சமாதானமாயிருப்பீர்களாக.

௰௪ அன்றியுஞ்சகோதரரே! நாங்களுங்களுக்கு எச்சரிக்கையாகச்சொல்லுகிறதென்னவென்றால் ஒழுங்கில்லாதவர்களுக்குப்புத்திசொல்லுங்கள். திடனற்றவர்களுக்கு ஆறுதல் செய்யுங்கள் பலவீனரைத்தாங்குங்கள். எல்லாருக்கும் நீடியசாந்தமாயிருங்கள்.

௰௫ எவனுமமற்றொருவன்செய்யதீமைக்குத் தீமையைச்செய்யாமல் எப்பொழுதும் உங்களுக்குள்ளுமமற்றயாவருக்குள்ளும் நன்மைசெய்யப்பின்றொடரும்படி எச்சரிக்கையாயிருப்பீர்களாக.

௰௬ எப்பொழுதுஞ்சந்தோஷமாயிருங்கள் இடைவிடாமற்செபம்பண்ணுங்கள்.

௰௭ எல்லாவற்றிலேயுந் தோத்திரஞ்செய்யுங்கள்.

௰௮ அப்படிச்செய்கிறதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்களைக்குறித்துப் பராபரனுடையசித்தமாயிருக்கிறது.

௰௯ ஆவியை யடக்கிப்போடாதிருப்பீர்களாக.

௨௰ தீர்க்கதரிசனங்களை அசட்டைபண்ணாதிருங்கள்.

௨௧ யாவற்றையும் ஆராய்ந்துபார்த்து நலமானதைப்பிடித்துக்கொள்ளுங்கள்.

௨௨ பொல்லாங்காய்த்தோன்றுகிறயாவற்றையும்விட்டு விலகுவீர்களாக.

௨௩ சமாதானத்தின் பராபரனே முழுவதும் உங்களைப்பரிசுத்த மாக்குவாராக. இப்படி உங்கள் முழு ஆவியும் ஆத்துமாவுஞ்சரீரமும் நம்முடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவருகையிற் பிழையில்லாதவைகளாயிருக்கும்படி, காக்கப்படக்கடவது.

௨௪ உங்களை யழைக்கிறவர் உண்மையுள்ளவர். அவரும் அப்படியேசெய்வார்.

௨௫ சகோதரரே! எங்களுக்காகவிண்ணப்பம்பண்ணுங்கள்.

௨௬ எல்லாசகோதரரையும்பரிசுத்தமுத்தத்தோடே வாழ்த்துதல்செய்யுங்கள்.

௨௭ இந்தநிருபத்தைப்பரிசுத்தமான சகோதரர்யாவரும் படித்தறியும்படி செய்யவேண்டுமென்று கர்த்தர்மேல் ஆணையிட்டு உங்களிடத்திற்கேட்டுக்கொள்ளுகிறேன்.

௨௮ நம்முடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபையுங்களுடனே யிருக்கக்கடவது. ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

தெசலோனிக்கேயருக்கு எழுதின

# இரண்டாம் நிருபம்.

## க. அதிகாரம்.

[(க) பவுல் சபையாரை வாழ்த்தி (ங) அவர்கள் பட்ட உபத்திரவங்களுக்காக ஆறுதல் சொல்லியது.]

பவுலுஞ்சில்வானுந் தீமோத்தேயும் நம்முடைய பிதாவாகிய பராபரனையுங் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவையும் பற்றியிருக்கிற தெசலோனிக்கைபூரியிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது,

உ நம்முடைய பிதாவாகிய பராபரனாலுங் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவது.

ங சகோதரரே! நாங்கள் எப்பொழுதும் உங்களுக்காகப் பராபரனைத் தோத்திரிக்கக் கடனாளிகளாயிருக்கிறோம். உங்கள் விசுவாசம் மிகவும் வளருகிறபடியினாலும் நீங்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் காட்டுகிற அன்பு அதிகமாகிறபடியினாலும் நாங்கள் அப்படியே செய்யத்தக்கது.

ச ஆகையால் நீங்கள் சகிக்கிற சகல துன்பங்களிலேயும் உபத்திரவங்களிலேயும் பொறுமையையும் விசுவாசத்தையுங் காண்பிக்கிறபடியினாலே உங்களைக்குறித்து நாங்கள் பராபரனுடைய சபைகளில் மேன்மைபாராட்டுகிறோம்.

ரு பராபரனுடைய இராச்சியத்தினிமித்தம் நீங்கள் (இப்படி) பாடுபடுகிறவர்களாயிருக்க, அவ்விராச்சியத்திற்குப் பாத்திரரென்றெண்ணப்படுவதற்கேதுவாகப் பராபரன் நியாயமான தீர்ப்புச்செய்வாரென்பதற்கு அவைகள் அத்தாட்சியாயிருக்கின்றன.

சா அல்லாமலுங் கர்த்தராகிய இயேசு தம் வல்லமையுள்ள தூதரோடுஞ் சுவாலையாய் எரிகிற அக்கினியோடும் வானத்திலிருந்து வெளிப்படும்பொழுது,

எ உங்களை உபத்திரவப்படுத்துகிறவர்களுக்கு உபத்திரவத்தையும், உபத்திரவப்படுகிற உங்களுக்கு எங்களோடேகூட ஆறுதலையும் பதிற்கொடுக்கிறது பராபரனுக்கு நீதியாயிருக்கின்றது.

அ அப்பொழுது பராபரனையறியாதவர்களுக்கும் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும் நீதியுள்ள ஆக்கினையைச் செலுத்துவார்.

கூ அவர்கள் கர்த்தருடைய சன்னிதானத்திலிருந்தும் அவருடைய வல்லமையின் மகிமையினின்றும் நீங்கி, நித்தியமான அழிவாகிய தண்டனையையடைவார்கள்.

ய அவருடையமகிமை அவருடைய பரிசுத்தவான்களிடத்தில் விளங்கும்படியாயும் அவர் விசுவாசிகளெல்லாரிடத்திலும் ஆச்சரியப்படுத்தப்படும்படியாயும் வரும்பொழுது (அப்படியே நடக்கும்.) நீங்கள் எங்களுடைய சாட்சியை விசுவாசித்தபடியினாலே (உங்களிடத்திலும்) அப்படியே அந்நாளிலே (ஆச்சரியப்படுத்தப்படுவார்.)

யக ஆகையால், நம்முடைய தேவனுமாயக் கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபையின்படியே, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமம் உங்களிடத்திலும் நீங்கள் அவரிடத்திலும் மகிமைப்படுத்தப்படும்பொருட்டாக,

யஉ நம்முடைய பராபரன் உங்களைத் தமது அழைப்புக்குப் பாத்திரராகவுந் (தமது) தயையுள்ள சித்தமுழுவதையும் விசுவாசத்தின் கிரியையையும் பலமாய (உங்களிடத்தில்) நிறைவேற்றவும் வேண்டுமென்று எப்பொழுதும் உங்களுக்காக விண்ணப்பம்பண்ணுகிறோம்.

## உ. அதிகாரம்.

[(க) கிறிஸ்து வருகிறதற்குமுன்னே சபையில் நடக்குங் கெடுதிகளைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லியது.]

அன்றியுஞ் சகோதரரே! நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து வருவதையும் நாம் அவரிடத்திற் சேர்க்கப்படுவதையுங்குறித்து நாங்கள் உங்களை வேண்டிக்கொள்ளுகிறதென்னவென்றால்,

உ கிறிஸ்துவினுடைய நாள் சமீபமாயிருக்கிறதாகச் சொல்லுகிற ஆவியினாலாவ

கிறீர்களே. நாங்கள் உங்களுக்குள்ளே ஒழுங்கில்லாமையாய் நடவாமல்,

௮ ஒருவனுடைய அப்பத்தை நாங்கள் இலவசமாய்ச் சாப்பிடாமல், உங்களில் ஒருவனுக்கும் பாரமாயிராதபடிக்கு, இரவும் பகலும் பிரயாசத்தோடும் வருத்தத்தோடும் வேலைசெய்து சாப்பிட்டோம்.

௯ (அப்படிப் பாரத்தை வைப்பதற்கு) அதிகாரம் எங்களுக்கில்லையென்றல்ல, நீங்கள் எங்களைப் பின்பற்றும்படிக்கு நாங்கள் திருஷ்டாந்தமாக எங்களை உங்களுக்குக் காண்பிக்க மனதாயிருந்தபடியினாலே அப்படிச்செய்தோம்.

௰ ஒருவன் வேலைசெய்ய மனதில்லாதிருந்தால், அவன் சாப்பிடவுங்கூடாதென்று நாங்கள் உங்களிடத்திலிருந்தபொழுது உங்களுக்குக் கட்டளையிட்டோம்.

௰௧ இப்பொழுது உங்களில் சிலர் வேலையொன்றுஞ்செய்யாமல் வீணலுவலாய் நடந்து, ஒழுங்கில்லாமையாய்த் திரிகிறார்களென்று கேள்விப்படுகிறோம்.

௰௨ இப்படிப்பட்டவர்கள் அமைதலோடே வேலைசெய்து தங்கள் அன்னத்தைச் சாப்பிடவேண்டுமென்று நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலே அவர்களுக்குப் புத்தியாகக் கட்டளையிடுகிறோம்.

௰௩ சகோதரரே, நீங்கள் நன்மைசெய்கிறதிலே இளைப்படையாமலிருப்பீர்களாக.

௰௪ மேலும் ஒருவன் இந்த நிருபத்தின்படி யெங்கள் வசனத்திற்குக் கீழ்ப்படியாமற்போனால், அவனைக் குறித்துக் கொண்டு அவன் வெட்கப்படும்படிக்கு அவனுடனே கலவாதிருப்பீர்களாக.

௰௫ அப்பொழுதும் அவனைச் சத்துருவைப்போல எண்ணாமல், சகோதரனென்றெண்ணி அவனுக்குப் புத்திசொல்லுங்கள்.

௰௬ சமாதானத்தின் கர்த்தர் எப்பொழுதும் சகலவிதத்திலும் உங்களுக்குச் சமாதானத்தை யனுக்கிரகிக்கக்கடவர். கர்த்தர் உங்களெல்லாரோடுங்கூடவிருப்பாராக.

௰௭ பவுலாகிய நான் என் கையெழுத்தோடே வாழ்த்துதலை யெழுதினேன். நிருபங்கள்தோறும் இதுவே அடையாளம். அப்படியெழுதுகிறேன்.

௰௮ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபை உங்களெல்லாரோடுங் கூடவிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

தீமோத்தேயு என்பவனுக்கெழுதின

# முதலாம் நிருபம்.

## ௧. அதிகாரம்.

[(௧) பவுல் தீமோத்தேயுவை வாழ்த்தி, (௩) தான் முன்னே அவனுக்குக் கொடுத்த கட்டளையை ஞாபகப்படுத்தி, (௫) நியாயப்பிரமாணத்தின் பொருளைக் காட்டி, (௰௨) தனக்குக் கர்த்தர் செய்த இரக்கத்தைப் புகழ்ந்தது.]

நம்முடைய இரட்சகராயிருக்கிற பராபரனும் நமது நம்பிக்கைக்குரித்தான கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுங் கொடுத்த கட்டளையினாலே இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கிற பவுல்,

௨ விசுவாசத்திலே உத்தமகுமாரனாகிய தீமோத்தேயுக்கு எழுதுகிறதாவது, நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலும் கிருபையும் இரக்கமும் சமாதானமு முண்டாகக்கடவது.

௩ வேற்றுமையாய்ப் போதகம்பண்ணாதபடிக்கும் விசுவாசத்திலுள்ள விருத்தியை யெழுப்பாமல், தர்க்கங்களையுண்டாக்குகிற முடியாத வமிச அட்டவணைகளையும் கட்டுக்கதைகளையும் பற்றிக்கொள்ளாதபடிக்கும் நீ சிலருக்குக் கட்டளையிடும்பொருட்டாக,

௪ நான் மக்கெதோனியாவுக்குப் போனபொழுது உன்னை எபேசுப்பட்டணத்திலிருக்கக் கேட்டுக்கொண்டதின்படி (நீ செய்வாயாக.)

௫ கட்டளையின் கடைசிப்பொருளென்னவெனில் சுத்தமான இருதயத்திலும் நல்மனச்சாட்சியிலும் வஞ்சனையில்லாத விசுவாசத்திலும் பிறக்கிற அன்பே.

௬ சிலர் இந்தப் பொருளைவிட்டு விலகி, வீணான பேச்சுப்பேசித் திரிகிறார்கள்.

௭ அவர்கள் தாங்கள் சொல்லுகிறதின்னதென்றும் தாங்கள் [illegible] பித்து

கிற தின்னதென்றும் அறியாதிருந்தும், நியாயசாஸ்திரிகளாயிருக்கவிரும்புகிறார்கள்.

௮ நியாயப்பிரமாணத்தை யொருவன் நியாயப்படி அநுசரித்தால், அது (அவனுக்கு) நன்மையாயிருக்குமென்று அறிந்திருக்கிறோம்.

௯ அன்றியும் எங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, நியாயப்பிரமாணம் நீதிமான்களுக்கல்ல, அக்கிரமக்காரருக்கும் கீழ்ப்படியாதவர்களுக்கும் தேவபத்தியில்லாதவர்களுக்கும் பாவிகளுக்கும் அசுத்தருக்கும் லவுகீக நடக்கையுடையவர்களுக்கும் தாய் தகப்பன்மாரைக் கொலைசெய்கிறவர்களுக்கும் மற்ற மனிதரைக் கொலைசெய்கிறவர்களுக்கும்,

௰ வேசிமார்க்கருக்கும் ஆண்புணர்ச்சிக்காரருக்கும் மனிதரைத் திருடுகிறவர்களுக்கும் பொய்க்காரருக்கும் பொய்யாணையிடுகிறவர்களுக்கும்,

௰௧ பாக்கியமுள்ள பராபரனுடைய மகிமையான சுவிசேஷத்தின்படியிருக்கிற ஆரோக்கியமான உபதேசத்திற்கு விரோதமாயிருக்கிற மற்றெந்தப் பொல்லாங்கைச் செய்கிறவர்களுக்குங் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ அந்தச் சுவிசேஷம் எனக்கொப்புவிக்கப்பட்டது. என்னைப் பலப்படுத்துகிற நமது கர்த்தாவாகிய இயேசுக்கிறிஸ்து என்னைப் புண்ணியமுள்ளவனென்றெண்ணி இந்த ஊழியத்திற்கு ஏற்படுத்தினபடியால் அவருக்கு ஸ்தோத்திரஞ்செய்கிறேன்.

௰௩ முன்னே நான் தூஷணிக்கிறவனுமாய் உத்தண்டப்படுத்துகிறவனுமாய் நிந்திக்கிறவனுமாயிருந்தேன் அப்படியிருந்தும் நான் அறியாமல் அவிசுவாசத்தினாலே அப்படிச்செய்தபடியினாலே இரக்கம்பெற்றேன்.

௰௪ மேலும் நம்முடைய கர்த்தாவின் கிருபை கிறிஸ்து இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தோடும் அன்போடுங்கூட எனக்கு மிகவுஞ் சம்பூர்ணமாயுண்டாயிற்று.

௰௫ பாவிகளை இரட்சிக்கும்படிக்குக் கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தாரென்கிறது உண்மையும் எல்லா அங்கீகரிப்புக்கும் பாத்திரமுமான வார்த்தையாயிருக்கின்றது. பாவிகளில் நான் பிரதானமானவன்.

௰௬ அப்படியிருந்தும் நித்தியஜீவனையடையும்படி இனிமேல் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருப்பவர்களுக்குத் திருட்டாந்தத்தைக் கொடுக்கும் பொருட்டாகப் பிரதான பாவியாகிய என்னிடத்திலே எல்லா நீடிய பொறுமையைக் காண்பிக்கும்படிக்கு இரக்கம்பெற்றேன்.

௰௭ நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுள்ள இராசனுமாய் ஒருவராகிய ஞானமுள்ள பராபரனுமாயிருக்கிற அவருக்குக் கனமுந் துதியும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக. ஆமென்.

௰௮ என் குமாரனாகிய தீமோத்தேயுவே! உன்னைக்குறித்து முன்னுண்டான தீர்க்கதரிசனங்களின்படியே, நான் இந்தக் கட்டளையை உனக்கு ஒப்புக்கொடுக்கிறேன்.

௰௯ அந்தப்படி நீ விசுவாசமும் நற்சாட்சியையுடைய மனதுமுள்ளவனாய் அவைகளாலே நல்லபோராட்டம் பண்ணுவாயாக. அப்படிப்பட்ட மனதைச் சிலர் தள்ளி விசுவாசமாகிய கப்பலைச் சேதப்படுத்தினார்கள்.

௨௰ அவர்களில் இமெனேயும் அலெக்சந்தருமிருக்கிறார்கள். அவர்கள் தூஷணியாதபடிக்குக் கற்றுக்கொள்ளும் பொருட்டாய் அவர்களைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுத்தேன்.

## ௨. அதிகாரம்.

[(௧) யாவருக்காகவுஞ் செபம்பண்ணவேண்டுமென்றும், (௯) ஸ்திரிகள் இன்னவிதமாய் நடக்கவேண்டுமென்றுஞ் சொல்லியது.]

௧ பின்னும் நான் பிரதானமாய்ப் புத்தி சொல்லுகிறதென்னவெனில், எல்லா மனிதருக்காகவும் விண்ணப்பங்களையுஞ் செபங்களையும் வேண்டுதலையுந் தோத்திரங்களையும் பண்ணவேண்டும்.

௨ நாமெல்லாப் பத்தியோடும் யோக்கியதையோடுங் கலகமில்லாமல் அமைதலுள்ள சீவனம்பண்ணும்படிக்கு, இராசாக்களுக்காகவும் அதிகாரமுள்ள யாவருக்காகவும் அப்படியே செய்யவேண்டும்.

௩ நம்முடைய இரட்சகராகிய பராபரனுக்கு முன்பாக அது நன்மையாயும் பிரியமாயுமிருக்கின்றது.

௪ எல்லா மனிதரும் இரட்சிக்கப்படவுஞ் சத்தியத்தையறிகிற அறிவுக்குவரவும் அவர் சித்தமாயிருக்கிறார்.

௫ ஏனெனில் பராபரன் ஒருவரே. பராபரனுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே.

௬ எல்லாரையும் மீட்கும்பொருளாகத் தம்மையொப்புக்கொடுத்த மனிதனாகிய இயேசுக்கிறிஸ்து அவரே. (அந்தமீட்பு) தகுதியான காலங்களிற் சாட்சிசொல்லப்பட்டுவருகின்றது.

௭ அதற்காக நான் புறதேசத்தாருக்கு விசுவாசத்தையுஞ் சத்தியத்தையும் விளங்கப்பண்ணுகிற போதகனாகவும் பிரசங்கியாகவும் அப்போஸ்தலனாகவும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன். நான் பொய்சொல்லாமல் உண்மையே சொல்லுகிறேன்.

௮ அல்லாமலும் என்னுடைய சித்தமென்னவென்றால், எல்லா இடங்களிலேயும் புருஷர்கள் கோபமுந் தர்க்கமுமில்லாமல், பரிசுத்தமானகைகளை உயர்த்திச் செபம்பண்ணவேண்டும்.

௯ அந்தப்படி ஸ்திரிகளும் மயிரைப்பின்னுதலாலாவது, பொன்னாலாவது, முத்துக்களாலாவது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தாலாவது, தங்களை அலங்கரியாமல், தேவபக்தியைக்காண்பிக்கிற பெண்பிள்ளைகளுக்கேற்றபடியே,

௰ கற்புக்குரிய வஸ்திரத்தாலும் நாணத்தாலும் தெளிவான புத்தியாலும் நற்கிரியைகளாலுந் தங்களை அலங்கரிக்கவேண்டும்.

௰௧ ஸ்திரியானவள் அமைதலோடேபடிந்துகொண்டு இப்படியெவ்விதத்திலுங்கீழ்ப்படியுதலைக்காண்பிக்கக்கடவள்.

௰௨ உபதேசம்பண்ணும்படியாயும் புருஷன்மேலே அதிகாரஞ்செலுத்தும்படியாயும் நான் ஸ்திரியானவளுக்கு உத்தரவுகொடுக்கிறதில்லை.

௰௩ அவள் அமைதலாயிருக்கவேண்டும். என்னத்தினாலெனில், முதலாவது ஆதாமும் இரண்டாவது ஏவாளும் உருவாக்கப்பட்டார்கள்.

௰௪ மேலும் ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை. ஸ்திரியானவளே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்குட்பட்டாள்.

௰௫ அப்படியிருந்தும் அவர்கள் தெளிவான புத்தியோடே விசுவாசத்திலும் அன்பிலும் பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருந்தால், பிள்ளைகளைப்பெறுகிறதினாலே இரட்சிக்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) கண்காணிகள் இப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்றும், (௮) உதவிக்காரர் இப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்றுஞ்சொல்லியது.]

௧ கண்காணிப்பை விரும்புகிறவன், நல்ல வேலையைவிரும்புகிறான். இது மெய்யான வார்த்தை.

௨ ஆகையால் கண்காணியானவன் குற்றமில்லாதவனுமாய், ஒரேமனைவியையுடைய புருஷனுமாய், தெளிந்த புத்தியுள்ளவனுமாய், விவேகியுமாய், நல்லொழுக்கமுள்ளவனுமாய், அந்நியரை உபசரிக்கிறவனுமாய், போதிக்கிறதற்குத் தகுதியானவனுமாயிருக்கவேண்டும்.

௩ அவன் திராட்ச இரசத்துக்குப் பிரியனுமாய், அடிக்கிறவனுமாய், அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமாயிராமல், சாந்தனுமாய்ச் சண்டைபண்ணாதவனுமாய்ப் பணத்தின்மேற்பிரியமில்லாதவனுமாய்,

௪ தன்சொந்தக்குடும்பத்தை நன்றாய் நடத்துகிறவனுமாய்த் தன்பிள்ளைகளை மெய்யான விதத்திலும் யோக்கியமாய்க் கீழ்ப்படியப்பண்ணிக்கொள்ளுகிறவனுமாயிருக்கவேண்டும்.

௫ ஒருவன் தன்சொந்தக்குடும்பத்தை நடத்த அறியாதிருந்தால் பராபரனுடைய சபையை எப்படி விசாரிப்பான்.

௬ மேலும் அவன் இறுமாப்படைந்து, பிசாசுவிழுந்த ஆக்கினையிலே விழாதபடிக்கு நூதனமானவிசுவாசியாயிருக்கக்கூடாது.

௭ மேலும் அவன் நிந்தனையிலும் பிசாசினுடைய கண்ணியிலும் விழாதபடிக்குப் புறம்பானவர்களால் நற்சாட்சியைப்பெற்றவனுமாயிருக்கவேண்டும்.

௮ அந்தப்படியே உதவிக்காரரும், இருநாக்குள்ளவர்களாயும் திராட்ச இரசத்துக்குப் பிரியராயும் அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவர்களாயுமிராமல்,

௯ யோக்கியருமாய் விசுவாசத்தின் இரகசியத்தைச் சுத்தமானமனதிலே காத்துக்கொள்ளுகிறவர்களுமாயிருக்கவேண்டும்.

௰ இவர்களும் முன்பு சோதிக்கப்படவேண்டும்; அப்பொழுது குற்றமில்லாதவர்களானால், அவர்கள் உதவிக்காரருடைய உத்தியோகத்தைச்செய்யலாம்.

௰௧ அப்படிப்போல அவர்களுடைய ஸ்திரிகளும் யோக்கியருமாய் அவதூறுபண்ணாதவர்களுமாய்த் தெளிந்த புத்தியுள்ளவர்களுமாய், எவ்விதத்திலேயும் உண்மையுள்ளவர்களுமாயிருக்கவேண்டும்.

௰௨ மேலும் உதவிக்காரரானவர்கள் ஒவ்வொருவரும் ஒரேமனைவியையுடைய புருஷருமாய்த் (தங்கள்) பிள்ளைகளையுஞ் சொந்தக்குடும்பங்களையும் நன்றாய் நடத்துகிறவர்களுமாயிருக்கவேண்டும்.

௰௩ இப்படி உதவிக்காரருடைய உத்தியோகத்தை நன்றாய்ச்செய்கிறவர்கள் தங்களுக்கு நல்ல பதவியையும், கிறிஸ்து இயேசுவினிடத்திலுள்ள விசுவாசத்தின்மேல் மிகுந்த தைரியத்தையுஞ் சம்பாதிக்கிறார்கள்.

௰௪ நான் உன்னிடத்திற் சீக்கிரமாய் வருவேனென்று நம்பியிருக்கிறேன்.

௰௫ நான் தாமதித்தாற் சத்தியத்துக்குத் தூணும் ஆதாரமுமாயிருக்கிற ஜீவனுள்ள பராபரனுடைய சபையாகிய தேவாலயத்திலே நடக்கவேண்டியவகையை நீ அறியும்படிக்கு இவைகளை உனக்கு எழுதினேன்.

௰௬ அன்றியும் பராபரன் மாமிசமாய் வெளிப்பட்டும், ஆவியினாலே நீதியுள்ளவரென்று ரூபிக்கப்பட்டும், தேவதூதர்களாற் காணப்பட்டும், புறதேசத்தாருக்குள்ளே பிரசங்கிக்கப்பட்டும், உலகத்திலே விசுவாசிக்கப்பட்டும் மகிமையிலேயுயர்த்தப்பட்டுமிருக்கிறாரென்றுசொல்லிய மெய்த்தேவபக்திக்குரிய இந்த இரகசியம் யாவராலும் அறிக்கையிடப்பட்டபடி மேன்மையாயிருக்கிறது.

மெய்யத்தேவபத்திக்கேற்ற உபதேசத்தி
ற்கும் இசைவாயிராமல்,

௪ வேறுவிதமாய்ப் போதிக்கிறவன் இறு
மாப்புள்ளவனுமாய் ஒன்றையும் அறியாத
வனுமாய்த் தர்க்கங்களும் வாக்குவாதங்களு
மாகிய நோய்கொண்டவனுமாயிருக்கிறான்
அவைகளாலே பொறாமையும் சண்டையுந்
தூஷணங்களும் பொல்லாத சமுசயங்களும்,

௫ கெட்டசிந்தையுள்ளவர்களாயுஞ் சத்
தியமில்லாதவர்களாயும் மெய்த்தேவபத்தி
லாபத்தை வருவிக்கிறதென்றெண்ணுகிற
வர்களாயுமிருக்கிற மனிதர்களாலே பிறக்கப்
படும் மாறுபாடான தர்க்கங்களும் வருகி
றன, அவர்களுக்கு விலகுவாயாக.

௬ போதுமென்கிற மனதுடனே கூட
மெய்த்தேவபத்தியே மிகுந்த இலாபமுள்ள
தாகும்.

௭ உலகத்திலே நாம் ஒன்றையுங் கொ
ண்டுவந்ததுமில்லை இதிலிருந்து நாம் ஒன்
றையுங் கொண்டுபோவதுமில்லையென்று
வெளியரங்கமாயிருக்கின்றது.

௮ அப்படியிருக்க, அன்னவஸ்திரம் நம
க்குண்டாயிருக்கையில், அதுபோதுமென
றெண்ணிக்கொள்ளக்கடவோம்.

௯ ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்க
ளோ சோதனையிலேயுங் கண்ணியிலேயும் மனி
தரைக் கெடுதியிலும் அழிவிலும் அமிழ்த்துகிறவையாயி
ருக்கிற அநேகபுத்தியீனமும் சேதமுமான
இச்சைகளிலேயும் விழுகிறார்கள்.

௰ பண இச்சை தீமையாவற்றிற்கும் வேரா
யிருக்கின்றது. சிலர் அதையிச்சித்து, விசு
வாசமார்க்கத்தைவிட்டுவழுவி, அநேகவே
தனைகளாலே தங்களை உருவக்குத்திக்கொண்டிருக்கி
றார்கள்.

௰௧ பராபரனுடைய மனிதனாகிய நீ இ
வைகளுக்கு விலகியோடி நீதியையும் மெய்
த்தேவபத்தியையும் விசுவாசத்தையும் அன்
பையும் பொறுமையையுஞ் சாந்தகுணத்தையுந்
தொடர்ந்துகொள்வாயாக.

௰௨ விசுவாசத்தின் நற்போராட்டம் பண்
ணு. நித்தியசீவனைப் பிடித்துக்கொள். அ
தற்காகவே நீ அழைக்கப்பட்டிருக்கிறது
மல்லாமல், அநேகசாட்சிகளுக்கு முன்பாக
நல்ல அறிக்கையைப் பண்ணியுமிருக்கிறாய்,

௰௩ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்து பிரசன்னமாகும்வரைக்கும் நீ இந்த
கற்பனையை மாசில்லாமலுங் குற்றமில்
லாமலுங் கைக்கொள்ளும்படிக்கு,

௰௪ எல்லாவற்றையும் உயிரோடிருக்கச்செ
ய்கிற பராபரனுடைய சந்நிதானத்திலே
யும் பொந்தியுபிலாத்துவின் முன்னின்று
நல்ல அறிக்கையைச் சாட்சியாகப் பண்ணி
ன கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதா
னத்திலேயும் உனக்குக் கட்டளையிடுகிறேன்.

௰௫ அந்தப் பிரசன்னத்தைப் பாக்கிய
முள்ள ஒருவரேயான சுயாதிபதியுமாய் இரா
சாக்களின் இராசனுமாய்க் கர்த்தாக்களின்
கர்த்தாவுமாய்,

௰௬ ஒருவராய்ச் சாவாமையுள்ளவருமா
ய் ஒருவராலுஞ் சேரக்கூடாத ஒளியில் வாச
மாயிருக்கிறவருமாய் மனிதரில் ஒருவராலு
ங் காணப்படாமலும் ஒருக்காலுங் காணப்
படக்கூடாமலுமிருக்கிறவர் தமது காலத்
திலே காண்பிப்பார். அவருக்கே கனமும் வ
ல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருப்
பதாக. ஆமென்.

௰௭ அன்றியும் இவ்வுலகத்திலே ஐசுவரிய
முள்ளவர்கள் இறுமாப்பான சிந்தையுள்ள
வர்களாயிராமலும் நிச்சயமில்லாத ஐசுவ
ரியத்தின்மேல் நம்பிக்கையாயிராமலும், நா
ம் அனுபவிக்கிறதற்குச் சகலவித நன்மை
களையும் நமக்குச் சம்பூரணமாய்க் கொடுக்
கிற சீவனுள்ள பராபரன்மேலே நம்பி
க்கையாயிருக்கும்படியாயும்,

௰௮ நன்மைகளைச் செய்து நற்கிரியைக
ளில் ஐசுவரியவான்களாகும்படியாயும் மற்ற
வர்களுக்குக் கொடுக்க மனப்பூர்வமாயிருந்
து உதாரகுணமுள்ளவர்களாய்,

௰௯ நித்தியசீவனைப் பிடித்துக்கொள்ளு
ம்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்
ல அஸ்திபாரத்தைப் பொக்கிஷமாக வைக்
கும்படியாயும் அவர்களுக்குக் கட்டளையிடு
வாயாக.

௨௰ ஓ! தீமோத்தேயுவே! உனக்கு ஒ
ப்புவிக்கப்பட்டதை நீ காத்துக்கொண்டு
லவுகீகமும் வீணுமான பேச்சுகளுக்கும் கல்
வியென்று பொய்யாய்ச் சொல்லப்படுகி
கிற தர்க்கத்திற்கும் விலகுவாயாக.

௨௰௧ சிலர் அதைப் பாராட்டி விசுவாசத்
தைவிட்டு வழுவிப்போனார்கள். கிருபை உ
னனோடேயிருக்கக்கடவது. ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# எபிரேயருக்கெழுதின நிருபம்.

## க. அதிகாரம்.

[(க) இயேசுகிறிஸ்துநாதருடைய திவ்விய மகிமையைக்குறித்துச் சொல்லியது.]

பூர்வகாலத்திலே பலகாலங்களிலும் பலவிதமாயும் பராபரன் (நம்முடைய) முன்னோர்களுடனே தீர்க்கதரிசிகளின் மூலமாய்த் திருவுளம்பற்றினதுமன்றி,

உ இந்தக்கடைசிக்காலத்திலே குமாரன் மூலமாய் நம்முடனே திருவுளம்பற்றினார். அவரைச் சகலத்திற்கும் சுதந்தரவாளியாக வைத்தார். அவராலே உலகங்களையும் உண்டாக்கினார்.

ஙு இவர் பராபரனுடைய மகிமையின் பிரகாசமும் அவருடைய தன்மையின் சொரூபமுமாயிருந்து எல்லாவற்றையுந் தமது வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராயுமிருந்து, தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை நிவர்த்திசெய்து, உன்னதத்திலுள்ள மகத்துவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார்.

ச இப்படி அவர் தேவதூதரிலும் அதிகவிசேஷமாகச் சுதந்தரித்துக்கொண்ட நாமம் எவ்வளவோ அவ்வளவு அதிகமாய் அவர்களிலும் மேன்மையுள்ளவராயிருக்கிறார்.

ரு எப்படியெனில்: நீர் என்னுடைய குமாரனென்றும், இன்று நான் உம்மைச்செனிப்பித்தேனென்றும், அவருக்குப் பிதாவாயிருப்பேன். அவர் எனக்குக் குமாரனாயிருப்பாரென்றும் பராபரன் எக்காலத்திலாகிலுந் தூதர்களில் ஒருவனுக்குச் சொன்னதுண்டா?

சா மறுபடியுந் தமது முதற்பேறானவரை இவ்வுலகத்திற் பிரவேசிக்கச் செய்தபொழுது, தேவதூதர்யாவரும் அவரைத் தொழுதுகொள்ளக்கடவர்களென்றார்.

எ அன்றியுந் தேவதூதரைக்குறித்துச் சொல்லியிருக்கிறதாவது, தம்முடைய தூதர்களைக் காற்றுகளாகவுந் தம்முடைய ஊழியக்காரரை அக்கினிச்சுவாலைகளாகவுஞ் செய்தாரென்றுசொல்லியிருக்கிறது.

அ குமாரனைக்குறித்து எப்படிச்சொல்லியிருக்கிறதென்றால், பராபரனே! உமது சிம்மாசனம் என்றென்றைக்கும் முள்ளதாயிருக்கும். உம்முடைய இராச்சியத்தினுள்ள செங்கோல் செம்மையான செங்கோலாயிருக்கிறது.

கூ நீதியில் அன்புகூர்ந்து அக்கிரமத்தைப்பகைத்திருக்கிறீர் ஆதலால் பராபரனே! உம்முடைய பராபரன் உம்முடைய தோழரிலும் உம்மைமகிழ்ச்சியென்னும் எண்ணெயினாலே அபிஷேகம் பண்ணினாரென்றும்,

ய கர்த்தாவே! ஆதியிலே நீர் பூமியை அஸ்திபாரப்படுத்தினீர் வானங்களும் உமது கைகளின் கிரியைகளாயிருக்கின்றன

யக அவைகள் அழிந்துபோம் நீர்மாத்திரம் நிலைநிற்பீர். அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழமையாய்ப்போம்.

யஉ ஒரு சால்வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர். அப்பொழுது மாறிப்போம் நீர்மாத்திரம் (எப்பொழுதும்) ஒரேவிதமாயிருப்பீர். உம்முடைய ஆண்டுகள் முடிந்துபோவதில்லையென்றுஞ் சொல்லியிருக்கிறது.

யஙு மேலும், நான் உம்முடைய சத்துருக்களை உம்முடைய பாதப்படியாக்கிப்போடுமளவும், என் வலதுபாரிசத்திலுட்காருமென்று இப்படி அவர் ஒருகாலத்திலாகிலுந் தூதர்களிலொருவனுக்குச் சொன்னதுண்டா?

யச இரட்சிப்பைச் சுதந்தரிப்பவர்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்களெல்லாரும் அனுப்பப்படுகிற பணிவிடையாவிகளாயிருக்கிறார்களல்லவா?

## உ. அதிகாரம்.

[(க) நாம் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியவேண்டுமென்றும். (ரு) அதற்கு அவர் மகிமையைப்பெற்றிருக்கிறாரென்றுங் காட்டியது.]

ஆகையால் நாங் கேட்டறிந்தவைகளை விட்டுவிலகாதபடிக்கு அதிக எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

உ என்னத்தினாலெனில் தேவதூதராற் சொல்லப்பட்ட வசனத்திற்கு விரோதமான எந்தச்செய்கைக்குங் கீழ்ப்படியாமைக்கும் நீதியான தண்டனை வர்த்தகத்தாக, அவர்களுடையவசனம் உறுதிப்பட்டிருந்ததாயிருக்க,

யதாயிருக்கிறது. உண்மையல்ல, பா
லசாப்பிடத்தக்கவர்களானீர்களே.

௰௩ பாலுண்கிறவன் குழந்தையாயிருக்
கிறபடியினாலே நீதிக்குரிய வசனத்தையறி
ந்துகொள்ளத் திராணியானவனல்லவே.

௰௪ கெட்டியான உணவு நிறைவயதாய்வளர்
ந்தவர்களாய் நன்மையையுந் தீமையையு
ம் வகையறுக்கிறதற்கு முயற்சியாலே தே
றியாக்கப்பட்ட புத்தியுள்ளவர்களாயிரு
க்கிறவர்களுக்கே யேற்றதாயிருக்கிறது.

## ௬. அதிகாரம்.

[(௧) அவராலேயுண்டாயிருக்கிற நன்மை
களைத்தள்ளுகிற மதிகெட்ட அறிவில்லாதவர்
ந்து விசுவாசத்திலும் பொறுமையிலும் நிலை
ச்சிருக்கிறவர்களாயிருக்கும்படிக்குப் புத்தி
களைச்சொல்லியது.]

ஆகையால் மரணத்திற்கேதுவான கி
ரியைகளைவிட்டு மனந்திரும்புகிறதற்கும்,
பராபரனை விசுவாசிக்கிறதற்கும்,

௨ ஸ்நானங்களுக்கடுத்த உபதேசத்திற
்கும், கைகளை வைக்கிறதற்கும், மரித்தோ
ரிலிருந்து உயிரோடெழும்புகிறதற்கும், நித்திய
மான நியாயத்தீர்ப்புக்கும் ஏதுவான உப
தேசங்களினாலே நாம் மறுபடியும் அஸ்திபா
ரம்போடாதபடிக்கு, கிறிஸ்துவுக்குரிய
முதல் நியாயங்களைச்சொல்லுகிற உபதே
சத்தை நாம் இப்பொழுது நிறுத்தி, உயர்
ந்த உபதேசங்களைக்குறித்துப் பேசிக்கொ
ள்வோமாக.

௩ பராபரனுக்குச்சித்தமானால், அப்ப
டியே செய்வோம்.

௪ என்னத்தினாலென்றால், ஒருகாலத்
திலே பிரகாசமாக்கப்பட்டும் பரம ஈவை ரு
சிபார்த்தும், பரிசுத்த ஆவியைப்பெற்றும்,

௫ பராபரனுடைய நல்வார்த்தையையு
ம் இனிமேல்வரும் யுகத்தின் பெலன்களையு
ம் ருசிபார்த்துமிருக்கிறவர்கள் மறுதலித்
துவிழுந்தபின்பு,

௬ பராபரனுடைய குமாரனைத் தங்களு
க்குள்ளே மறுபடியும் சிலுவையில் அறைந்
து அவமானஞ்செய்தபடியால் மனந்திரும்ப
புதற்கேதுவாய் அவர்களை மறுபடியும் புதி
தாக்கக்கூடாதகாரியமாயிருக்கிறது.

௭ இதற்குத் திருஷ்டாந்தமாக, பூமி
யானது தனக்கு அடிக்கடிவருகிற மழை
யையுட்கொண்டு தன்னிடத்தில் பயிரிடுகிற
வர்களுக்கேற்ற பயிரை முளைப்பிக்கும்பொ
ழுது, பராபரனாலே ஆசீர்வதிக்கப்படுகின்
றது.

௮ முட்செடிகளையும் முட்பூண்டுகளையு
ம் முளைப்பிக்கிற நிலம் தகாததாயுஞ்சபிக்கப்
படுகிறதற்குச் சமீபமாயுமிருக்கிறது. கடை
சியிலே அது முழுவதுங் காய்ந்துபோம்.

௯ பிரியமானவர்களே! நாங்கள் இப்படிச்
சொல்லியும், இரட்சிப்புக்கேற்ற நன்மை
யான யோசனைகள் உங்களுக்குண்டாயிரு
க்கிறதென்று நம்பிக்கையாயிருக்கி
றோம்.

௰ பராபரனும் உங்கள் கிரியையையும்
பரிசுத்தவான்களுக்கு நீங்கள் ஊழியஞ்செ
ய்ததினாலும் செய்துவருகிறதினாலும் தம
து நாமத்திற்காகக் காண்பித்த அன்புள்ள
பிரயாசத்தையும் மறக்கத்தக்கதாக அநி
யாயமுள்ளவரல்லவே?

௰௧ ஆகையால் நீங்கள் சோம்பலாயிராம
ல், வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை வி
சுவாசத்தினாலும் நீடியபொறுமையினாலு
ம் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களைப் பி
ன்பற்றுகிறவர்களாயிருக்கும்படிக்கு,

௰௨ நீங்களியாவரும் (எங்கள்) நம்பிக்
கை பரிபூரணமுள்ளதாகும்படி முடிவுபரிய
ந்தம் ஒரே ஜாக்கிரதையைக் காண்பிக்கவேண்
டுமென்று ஆசையாயிருக்கிறோம்.

௰௩ ஆபிரகாமுக்குப் பராபரன் வாக்குத்
தத்தம்பண்ணினபொழுது, ஆணையிடும்ப
டி தம்மிலும் பெரியவரொருவருமில்லாதப
டியினாலே தம்பேரிலே ஆணையிட்டு,

௰௪ நான் உன்னைமிகவும் ஆசீர்வதித்து
உன்னை மிகவும் பெருகப்பண்ணுவேனெ
ன்றார்.

௰௫ அவனும் அந்தப்படியே பொறுமை
யாய்க்காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்
ணப்பட்டதைப் பெற்றான்.

௰௬ அதெப்படியென்றால், மனிதர்கள் தங்
களிலும் பெரியவன்பேரில் ஆணையிடுவார்க
ள். உறுதிபண்ணும்படிக்கேற்ற ஆணையே
அவர்களுக்குள்ளே சகல விவாதங்களை
யுந்தீர்க்கிறது.

௰௭ அந்தப்படி பராபரனும் வாக்குத்த
த்தம்பண்ணப்பட்டவைகளைச் சுதந்தரித்
துக்கொள்ளுகிறவர்களுக்குத் தம்முடைய யோச
னையின் மாறாத நிச்சயத்தைக் காண்பிக்கு
ம்படி அதிக சித்தமுள்ளவராய் ஓர் ஆணையி
னாலே அவைகளை ஸ்திரப்படுத்தினார்.

௰௮ பராபரன் பொய்பேசக் கூடாததா
யிருக்க, நாம் நம்பிக்கொள்ளும்படி நமக்கு
முன்வைக்கப்பட்டதைப் பிடிக்கிறதற்கு
ஓடிவந்த நாம் மாறாத இரண்டு பொருட்க
ளினாலே பலத்த ஆறுதலுள்ளவர்களாகும
பொருட்டாக அப்படிச்செய்தார்.

௰௯ அந்த நம்பிக்கை நம்முடைய ஆத்
துமாவுக்கு நிலையும் உறுதியுமான நங்கூர
ம்போலாகத் திரைச்சேலைக்குட்போகிறதா
யிருக்கிறது.

௨௰ நமக்கு முன்னோடினவராகிய இயே
சு மெல்கிசேதேக்கின் முறைமையின்படி
நித்தியமான பிரதான ஆசாரியராய் நமக்
காக அந்தத் திரைச்சேலைக்குட் பிரவேசித்
திருக்கிறார்.

௨௩ அன்றியும் அந்த ஆசாரியர் எப்பொழுதுமிருக்கக்கூடாதபடிக்கு மரிக்கிறவர்களானபடியால் அநேகராயிருந்தார்கள்.

௨௪ இவர் என்றென்றைக்குமிருக்கிறவரானதினாலே நீங்காத ஆசாரியப்பட்டமுள்ளவராயிருக்கிறார்.

௨௫ அன்றியும் தம்மாலே பராபரனைச் சேருகிறவர்களுக்காக வேண்டுதல் செய்யும்படிக்கு எப்பொழுதும் பிழைத்திருக்கிறவரானதினாலே அவர்களை முற்றும் இரட்சிக்க வல்லமையுள்ளவராயுமிருக்கிறார்.

௨௬ பரிசுத்தராயுந் தீமை செய்யாதவராயும் அசுத்தமில்லாதவராயும் பாவிகளை விட்டுப் பிரிந்தவராயும் வானங்களுக்கு மேலுயர்ந்தவராயுமிருக்கிற இப்படிப்பட்ட பிரதான ஆசாரியரே நமக்கு வேண்டும்.

௨௭ அவர் முந்தின ஆசாரியர்களைப்போல முதலாவது தன்னுடைய சொந்தப் பாவங்களுக்காகவும் பின்பு சனங்களுடைய பாவங்களுக்காகவும் நாடோறும் பலியிடவேண்டியதில்லை. அவர்களுக்காக அவர் ஒரேதரந் தம்மைப் பலியிட்டாரே.

௨௮ நியாயப்பிரமாணமானது பலவீனத்தையுடைய மனிதர்களை ஆசாரியராக ஏற்படுத்துகின்றது. நியாயப்பிரமாணத்துக்குப் பின்பு ஆணையோடேயிருந்த வசனம் என்றென்றைக்கும் பூரணராயிருக்குங் குமாரனையே ஏற்படுத்துகின்றது.

## ௮. அதிகாரம்.

[(௧) இயேசுவானவருடைய ஆசாரியப்பட்டம் நித்தியமானபடியால் லேவியருடைய ஆசாரியப்பட்டம் ஒழிந்ததென்றும் முன்னறிவிக்கப்பட்ட புதிய உடம்படிக்கை யேற்படுத்தப்பட்டிருக்கிறதென்றுங் காட்டியது.]

௧ மேற்சொல்லியவைகளின் பிரதானமானதென்னவென்றால் பரமண்டலங்களிலுள்ள மகத்துவ ஆசனத்தினுடைய வலதுபாரிசத்திலே உட்கார்ந்திருக்கிறவருமாய,

௨ மனிதர்களாலேயல்ல, கர்த்தராலே வைக்கப்பட்ட மெய்யான கூடாரமாகிய பரிசுத்த இடத்திலே ஆராதனைசெய்கிறவருமாயிருக்கிற பிரதான ஆசாரியரே நமக்குண்டு.

௩ ஆசாரியர் யாவருங் காணிக்கைகளையும் பலிகளையுஞ் செலுத்துகிறதற்கு வைக்கப்பட்டிருக்கிறதால் இவரும் (பரமண்டலத்திலே) சிலவைகளைப் பலியிடவேண்டியதாயிருந்தது.

௪ பூமியிலே இவர் இருப்பாரானால் ஆசாரியராயிருக்கமாட்டார். அங்கே நியாயப்பிரமாணத்தின்படி காணிக்கைகளைச் செலுத்துகிறவர்கள் ஆசாரியர்களாயிருக்கிறார்களே.

௫ மோசே அந்தக் கூடாரத்தை யுண்டுபண்ணப்போனபொழுது, மலையிலே யுனக்குக் காண்பிக்கப்பட்ட சாயலின்படியே நீ சகலத்தையுஞ் செய்ய எச்சரிக்கையாயிருவென்று பராபரன் அவனுக்குக் கட்டளையிட்டபடியே அந்த ஆசாரியர்கள் பரமண்டலத்திற்குரியவைகளுக்கு அடையாளமும் நிழலாட்டமுமானவைகளுள்ள (இடத்திலே) ஆராதனைசெய்கிறார்கள்.

௬ அவர் அதிகமேன்மையான வாக்குத்தத்தங்களின்மேல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற அதிகமேன்மையான உடம்படிக்கைக்கேற்ற மத்தியஸ்தராயிருக்கிறதால், அதிவிசேஷமான ஆராதனை செய்தலைப் பெற்றுக்கொண்டிருக்கிறார்.

௭ அந்த முதலாம் உடம்படிக்கை குறையில்லாததாயிருந்ததானால் இரண்டாவதிற்கு இடந்தேடப்படுவதில்லையே.

௮ அவர்களைக் குற்றவாளிகளென்று சொல்லி அவர்களுடனே திருவுளம்பற்றினதாவது, கர்த்தர் சொல்லுகிறதென்னவெனில் இஸ்ரவேல் குடும்பத்தாரோடும் யூதா குடும்பத்தாரோடும் நான் புதிய உடம்படிக்கையையேற்படுத்துங் காலம் வருகின்றது.

௯ அவர்களுடைய முன்னோர்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுவரும்படிக்கு நான் அவர்களுடைய கையைப் பிடித்துக்கொண்டநாளிலே அவர்களுடனே பண்ணின உடம்படிக்கையைப்போல இது இருப்பதில்லை. அந்த உடம்படிக்கையிலே அவர்கள் நிலைநிற்கவில்லையே. நானும் அவர்களை யோசிகதேன்.

௧௦ அந்த நாட்களுக்குப்பின்பு நான் இஸ்ரவேல் குடும்பத்தாரோடே பண்ணும் உடம்படிக்கை யென்னவென்றால், என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய மனதிலே வைப்பேன். அவைகளை அவர்களுடைய இருதயங்களின்மேலே யெழுதி, அவர்களுக்குத் தேவனாயிருப்பேன். அவர்கள் எனக்குச் சனங்களாயிருப்பார்கள்.

௧௧ அப்பொழுது சிறியவன் முதற்கொண்டு பெரியவன்வரைக்கும் எல்லாரும் என்னையறிந்துகொள்வதால், கர்த்தரையறிந்துகொள்ளென்று ஒருவன் தனக்கடுத்தவனுக்கும் வேறொருவன் தன் சகோதரனுக்கும் போதிக்கவேண்டுவதில்லை.

௧௨ நான் அவர்களுடைய அநியாயங்களை (நீக்கி,) அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் இனி நினையாமல் அவர்களுக்கு இரங்குவதால், அப்படியாகுமென்று கர்த்தர் திருவுளம்பற்றினாரே.

௧௩ புதிதான உடம்படிக்கையென்று அவர் சொல்லுகையில் முதலாவதைப் பழமையாக்கினாரே. பழமையுங் குறைவுமுள்ளதோ ஒழிந்துபோகிறதற்குச் சமீபமாயிருக்கின்றது.

உங்களைச்சபைஆலயத்திற்பிரவேசிக்கும்பொழுது,

௩ பிரகாசமுள்ளவஸ்திரத்தைத்தரித்தவனை விசேஷமாய்நோக்கிநீர் கனமாய் இவ்விடத்திலுட்காருமென்றும் தரித்திரனை நீ அங்கேநில்லு. அல்லது இங்கே என் பாதப்படியினிடத்திலே உட்காரு என்றும் நீங்கள்சொன்னால்,

௪ உங்களுக்குள்ளே பேதகம்பண்ணி துற்சிந்தனைகளோடே நியாயாதிபதிகளாவீர்களல்லவா?

௫ என்னருமையானசகோதரரே! கேளுங்கள். விசுவாசத்தில் ஐசுவரியவான்களாகவுந்தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குத்தாமவாக்குத்தத்தம்பண்ணின இராச்சியத்தைச்சுதந்தரிக்கிறவர்களாகவும் இவ்வுலகத்தின்தரித்திரரைப்பராபரன் தெரிந்துகொள்ளவில்லையா?

௬ அப்படியிருந்தும் நீங்கள்தரித்திரனைக் கனவீனம்பண்ணுகிறீர்கள். ஐசுவரியவான்களல்லவோ உங்களை யொடுக்குகிறார்கள். அவர்களல்லவோ உங்களை நியாயாசனங்களுக்குமுன்பாக இழுக்கிறார்கள்.

௭ அவர்களல்லவோ உங்களுக்குக்கொடுக்கப்பட்ட நல்ல நாமத்தைத்தூஷிக்கிறார்கள்.

௮ உன்மேல் அன்பாயிருக்கிறதுபோல பிறனிடத்திலேயுமஅன்புகூருவாயாகவென்றுவேதவாக்கியஞ்சொல்லுகிறஇராசரிகமானபிரமாணத்தை நீங்கள்நிறைவேற்றினால்நன்மைசெய்வீர்கள். பட்சபாதமாயிருப்பீர்களானாற்பாவத்தைநடப்பித்து,

௯ அக்கிரமக்காரரென்று நியாயப்பிரமாணத்தாற்கண்டிக்கப்படுவீர்களே.

௧௦ எப்படியெனில், ஒருவன்வேதநூல்முழுவதையுங்கைக்கொண்டாலும் ஒரேபிரமாணத்திற்குத்தப்பிநடந்தால் எல்லாப்பிரமாணங்களுக்கும்விரோதமாய்க் குற்றவாளியாயிருப்பான்.

௧௧ என்னத்தினாலென்றால் விபசாரம்பண்ணாதிருப்பாயாகவென்று சொன்னவர் கொலைசெய்யாதிருப்பாயாக வென்றுஞ்சொன்னார். ஆனதால்நீவிபசாரம்பண்ணாமலிருந்தாலுங் கொலைசெய்தாயானால் வேதநூலைமீறிநடந்திருப்பாயே.

௧௨ சுயாதீனத்திற்கேதுவானவேதநூலின்படி நியாயத்தீர்ப்படையப்போகிறவர்களாயப்பேசியுஞ்செய்துமிருப்பீர்களாக.

௧௩ என்னத்திற்காகவென்றால் இரக்கஞ்செய்யாதவனுக்கு இரக்கமில்லாமல் நியாயத்தீர்ப்புக்கிடைக்கும். நியாயத்தீர்ப்புக்குமுன்பாக இரக்கமமேன்மைபாராட்டும்.

௧௪ என்சகோதரரே! ஒருவன்தனக்குவிசுவாசமுண்டென்றுசொல்லியுங்கிரியைகளில்லாதவனானால் அவனுக்கு என்னபிரயோசனமவரும்? விசுவாசம அவனையிரட்சிக்குமா?

௧௫ ஒரு சகோதரன் அல்லது சகோதரிவஸ்திரமில்லாதவர்களாயும நாடோறும்வேண்டியபிழைப்பில்லாதவர்களாயுமிருக்கும்பொழுது,

௧௬ உங்களிலொருவன் அவர்களைநோக்கி நீங்கள்சமாதானத்தோடேபோய்க்குளிர்காய்ந்து பசியாறுங்களென்று சொல்லிச்சரீரத்திற்கு வேண்டியவைகளை அவர்களுக்குக்கொடாவிட்டால் அதினால் என்னபிரயோசனமிருக்கும்?

௧௭ அப்படிப்போலவிசுவாசமுங்கிரியைகளில்லாதிருந்தால்,

௧௮ தனிமையிருப்பதினாலே செத்ததாயிருக்கும். ஒருவன்வந்து உனக்குவிசுவாசமுண்டு. எனக்குக்கிரியைகளுண்டு. கிரியைகளில்லாமல உன்விசுவாசத்தை எனக்குக்காண்பி நான என்விசுவாசத்தை என்கிரியைகளாலே காண்பிக்கிறேனென்பான்.

௧௯ பராபரனொருவருண்டென்றுவிசுவாசிக்கிறாய். அப்படிச்செய்கிறது சரிதான். பசாசுகளும அப்படிவிசுவாசித்து நடுங்குகிறார்கள்.

௨௦ ஆ, வீணனமனிதனே! கிரியைகளில்லாதவிசுவாசஞ்செத்ததென்றறிய விரும்புகிறாயா?

௨௧ நமமுடைய பிதாவாகிய ஆபிரகாந்தனகுமாரனாகிய ஈசாக்கைப்பலிபீடத்தின்மேல் ஏற்றிவைத்தபொழுது கிரியைகளினாலேயல்லவோ நீதிமானாக்கப்பட்டான்.

௨௨ அவனுடைய விசுவாசம அவனுடையகிரியைகளோடே கூடமுயற்சிசெய்து அந்தக்கிரியைகளினாலே முடிக்கப்பட்டதையும்,

௨௩ ஆபிரகாம் பராபரனைவிசுவாசித்தான். (அது) அவனுக்கு நீதியாகவெண்ணப்பட்டதென்கிற வேதவாக்கியம நிறைவேற்றப்பட்டதையும அவன்பராபரனுடைய சிநேகிதனென்னப்பட்டதையும பார்த்திருக்கிறாயே.

௨௪ ஆனதால ஒருமனிதன்விசுவாசத்தினாலேமாத்திரமல்ல கிரியைகளினாலேயுமநீதிமானாக்கப்படுகிறானென்றறிவீர்களாக.

௨௫ அப்படிப்போல வேசியாயிருந்த இராகாப்பென்பவள் தூதர்களை யேற்றுக்கொண்டு வேறுவழியாய் அனுப்பிவிட்டபொழுது கிரியைகளினாலேயல்லவோ நீதியுள்ளவளாக்கப்பட்டாள்.

௨௬ ஆகையால ஆவியில்லாதசரீரஞ்செத்ததாயிருக்கிறதுபோல கிரியைகளில்லாதவிசுவாசமுஞ்செத்ததாயிருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

[(௧) நமமுடைய நாவையடக்கிக்கொள்ள வேண்டுமென்றும், (௰௩)மெய்ஞ்ஞானியினுடைய நடக்கை யின்னதென்றுங்காட்டியது.]

என்சகோதரரே! அதிக ஆக்கினையை யடைவோமென்று நாமறிந்திருக்க, (உங்களில்) அநேகர் போதகராகாதிருப்பீர்களாக.

௨ நாமெல்லாரும் அநேகவிஷயமாய்த் தவறுகிறோம். சொல்தவறாமலிருக்கிறவனே தேறினவனும் தன்சரீரமுழுவதையும் (கடிவாளச்) சுன்னத்திலே அடக்கிக்கொள்ளுகிறவனுமாயிருக்கிறான்.

௩ குதிரைகளைப்பாருங்கள். அவைகள் நமக்குக் கீழ்ப்படியும்படிக்கு வாய்களிற் கடிவாளங்களைப்போட்டு, அவைகளுடைய முழுச்சரீரத்தையும் நடத்துகிறோம்.

௪ கப்பல்களையும்பாருங்கள். அவைகள் இவ்வளவு பெரியவைகளாயக் கடுங்காற்றுகளால் அடிக்கப்பட்டாலும் அவைகளை நடத்துகிறவன் போகும்படி யோசிக்கும் இடம் எவ்விடமோ அவ்விடத்திற்கு மிகவுஞ் சிறிதான சுக்கானாலே திருப்பப்படும்.

௫ அப்படிப்போல நாவானது சின்ன அவயவமாயிருந்தும், பெருமையானவைகளைச்செய்யும். கொஞ்சநெருப்பைப்பாருங்கள். அது எத்தனைபெரியகாட்டைக்கொளுத்துகின்றது. நாவு நெருப்பு.

௬ அது அநீதியிலே நிறைந்தலோகம் அந்தப்படி நாவு நம்முடைய அவயவங்களுக்குள்ளிருந்து முழுச்சரீரத்தையுங் கறைப்படுத்துகிறதாயுஞ் சுபாவ முறைமையைக் கொளுத்துகிறதாயும் நரக அக்கினியினாற் கொளுத்தப்படுகிறதாயுமிருக்கின்றது.

௭ எல்லாக்காட்டு மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் ஊர்வனவைகளுக்கும் நீரிலுள்ளசெந்துக்களுக்குமுண்டாயிருக்கிறசுபாவங் கீழ்ப்படியப்பண்ணப்படும். அப்படியும் மனிதருடையசுபாவத்தாற் கீழ்ப்படியப்பண்ணப்பட்டதுமுண்டு.

௮ நாவையோவெனில் ஒருமனிதனுங் கீழ்ப்படுத்தமாட்டான். அது அடங்காத பொல்லாங்குள்ளதுமாயச் சாவுக்கேதுவான விஷத்தால் நிறைந்ததுமாயிருக்கிறது.

௯ பிதாவாகியபராபரனை நாம் அதினாலே தோத்திரிக்கிறோம். பராபரனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட மனிதரையும் அதினாலே சபிக்கிறோம்.

௰ ஆசீர்வதித்தலுஞ் சபித்தலும் ஒரேவாயிலிருந்து புறப்படுகின்றன. என்சகோதரரே! இப்படியிருக்கக்கூடாது.

௰௧ நீரூற்றிலொரேதுவாரத்திலிருந்துதித்திப்புங் கசப்புமுள்ள தண்ணீர் சுரக்குமா?

௰௨ என்சகோதரரே! அத்திமரம் ஒலிவப்பழங்களையும் அல்லது திராட்சச்செடி அத்திப்பழங்களையுங் கொடுக்குமா? அப்படிப்போல உவர்ப்பான நீரூற்றுத் தித்திப்பானசலத்தைக்கொடுக்கவுமாட்டாது.

௰௩ உங்களில் ஞானியுமாய் அறிவுள்ளவனுமாயிருக்கிறவனெவனோ அவன் ஞானத்திற்குரியசாந்தத்தோடே தன்கிரியைகளை நல்லநடக்கையினாலே காண்பிக்கக்கடவன்.

௰௪ உங்களிருதயத்திலே கசப்பானவைராக்கியத்தையும் விரோதத்தையும் வைத்துக்கொண்டால், நீங்கள் மேன்மைபாராட்டாமலும் சத்தியத்திற்கு விரோதமாய்ப் பொய்யைச்சொல்லாமலுமிருப்பீர்களாக.

௰௫ அப்படிச்செய்கிறது உயரத்திலிருந்துவருகிற ஞானமல்ல. அது இந்தப் பூமிக்குரும் மிருகசீவனுக்குரும் பேய்க்குமுரியதானது.

௰௬ வயிராக்கியமும்விரோதமுமெங்கேயோ அங்கேகலக்கமுஞ் சகலவிதமான துற்செய்கைகளுமுண்டே.

௰௭ உயரத்திலிருந்துவருகிற ஞானமுதலாவது சுத்தமுமாயப்பின்பு சமாதானமுள்ளதுமாய் இணக்கமுமுள்ளதுமாய் இரக்கத்தாலும் நற்கிரியைகளாலும் நிறைந்ததுமாயப் பட்சபாதமில்லாததுமாய் வஞ்சனையில்லாததுமாயிருக்கின்றது.

௰௮ இப்படிச்சமாதானத்தை நடப்பிக்கிறவர்களாலே சமாதானத்தோடேநீதியாகிய கனி விதைக்கப்படுகின்றது.

## ௪. அதிகாரம்.

[(௧) சண்டை, விபசாரம், அகந்தைமுதலானவைகளைச்செய்யாமல், (௭) தாழ்மைமுதலான நன்மைகளைச்செய்யவேண்டுமென்றும், (௰௩) நம்முடையசீவனைக் கருதி இப்படிநினைக்க வேண்டுமென்றுங்காட்டியது.]

உங்களுக்குள்ளே யுத்தங்களுஞ் சண்டைகளுமெதினாலேவருகின்றன. உங்கள் அவயவங்களிற் போர்செய்கிற செல்வத்திற்கேற்ற இச்சைகளாலல்லவோ வருகின்றன.

௨ நீங்கள் இச்சித்தும் உங்களுக்குக் கிடைக்கிறதில்லை. நீங்கள் கொலைசெய்து பொறாமையுள்ளவர்களாயிருந்தும் (இஷ்டப்படி) அடையாமற்போகிறீர்கள். நீங்கள் சண்டையும் யுத்தமும்பண்ணியும் விண்ணப்பம்பண்ணாமலிருக்கிறதால் உங்களுக்குச்சித்திக்கிறதில்லை.

௩ உங்கள் இச்சைகளுக்கேற்றதாகச் செலவழிக்கும்படிக்குத் தகாதவிதமாய் விண்ணப்பம்பண்ணுகிறதால் நீங்கள் விண்ணப்பம்பண்ணியும்பெற்றுக்கொள்ளாமலிருக்கிறீர்கள்.

௪ ஆ, விபசாரரே! விபசாரிகளே! உலகத்தோடே சிநேகமாயிருக்குதல் பராபரனுக்கு விரோதமான பகையாயிருக்கிறதென்று நீங்கள் அறியவில்லையா? ஆகையால் உலகத்திற்குச்சிநேகமாயிருக்க விரும்புகிறவன் பராபரனுக்குப்பகைஞனாகிறான்;

யோபென்பவன் காண்பித்த பொறுமையைக்குறித்துக் கேள்விப்பட்டிருப்பீர்கள். கர்த்தர் மிகுந்த உருக்கமும் இரக்கமுமுள்ளவராயிருக்கிறாரென்று கர்த்தர் செய்த முடிவினாலே யறிந்திருக்கிறீர்கள்.

௰௨ பின்னும் என் சகோதரரே! எல்லாவற்றிலும் எதை நீங்கள் செய்யவேண்டுமென்றால் வானத்தின்பேரிலாகிலும் பூமியின்பேரிலாகிலும் வேறெந்த ஆணையினாலாகிலுஞ் சத்தியம்பண்ணாதிருப்பீர்களாக. நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடிக்கு உள்ளதையுள்ளதென்றும் இல்லதை யில்லதென்றும் பேசக்கடவீர்கள்.

௰௩ உங்களிலொருவன் துன்பப்பட்டாற் ஜெபம்பண்ணக்கடவன். ஒருவன் மகிழ்ச்சியாயிருந்தாற் சங்கீதங்களைப் பாடக்கடவன்.

௰௪ உங்களிலொருவன் வியாதிப்பட்டால் அவன் சபையினுடைய மூப்பரை வரவழைப்பானாக. அவர்கள் கர்த்தருடைய நாமத்தினாலே அவனிடத்தில் எண்ணெயைப்பூசி, அவனுக்காக விண்ணப்பம்பண்ணக்கடவர்கள்.

௰௫ அப்பொழுது கர்த்தர் பிணியாளியை யெழுப்புகிறதற்கு விசுவாசமுள்ள விண்ணப்பம் அவனை யிரட்சிக்கும். அவன் பாவங்களைச்செய்தவனானால், அவை அவனுக்கு மன்னிக்கப்படும்.

௰௬ நீங்கள் சொஸ்தமடையும்படிக்கு உங்கள் அக்கிரமங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு, ஒருவருக்காக ஒருவர் விண்ணப்பம்பண்ணுங்கள். நீதிமான் உண்மையாய்ப்பண்ணுகிற விண்ணப்பம் மிகவும் பெலனுள்ளதாயிருக்கின்றது.

௰௭ எலியாவென்பவன் நம்மைப்போலப் பாடுள்ள மனிதனாயிருந்தும், மழைபெய்யாதபடிக்கு உருக்கமாய் விண்ணப்பம்பண்ணினான். அப்பொழுது மூன்று வருஷமும் ஆறு மாதமும் பூமியின்மேல் மழைபெய்யவில்லை.

௰௮ மறுபடியும் விண்ணப்பம் பண்ணினான். அப்பொழுது பூமிதன் பலனைக்கொடுக்கத்தக்கதாக வானம் மழையைத்தந்தது.

௰௯ சகோதரரே! உங்களில் ஒருவன் சத்தியத்தை விட்டுவிலகித் தப்பிப்போகும்பொழுது, மற்றொருவன் அவனைத் திருப்பினால்,

௨௰ பாவியானவனைப் பிரவேசிக்குந் தப்பான மார்க்கத்தினின்று அவனைத் திருப்புகிறவன் ஒரு ஆத்துமாவை மரணத்திற்குத் தப்புவித்து மிகுந்த பாவங்களை மறைப்பானென்று அறியக்கடவன்.

---

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின

## பொதுவான முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

[(௧) அப்போஸ்தலன் சபையாருக்கு வாழ்த்துதல் சொல்லி, (௩) திவ்விய ஆசீர்வாதங்களுக்காகப் பராபரனைத் தோத்திரித்து, (௰) அவைகளைப் பூர்வீகதீர்க்கதரிசிகள் முன்னறிவித்ததைக் காட்டி, (௰௩) சுவிசேஷத்திற்கேற்ற பரிசுத்தராய் நடக்கும்படி புத்திசொல்லியது.]

பிதாவாகிய பராபரன் முன்னறிந்தபடியே ஆவியானவர் பரிசுத்தமாக்குதலினாலே கீழ்ப்படிதலுக்கும் இயேசுக்கிறிஸ்துவினுடைய இரத்தந் தெளிக்கப்படுகிறதற்குந் தெரிந்துகொள்ளப்பட்டு,

௨ பொந்து, கலாத்தியா, கப்பத்தோக்கியா, ஆசியா, பிதினியா, தேசங்களிலே சிதறிவந்திருக்கிற அந்நிய நாட்டாருக்கு இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பேதுரு எழுதுகிறதாவது, கிருபையுஞ் சமாதானமும் உங்களுக்குச் சம்பூரணமாய் உண்டாகக்கடவது.

௩ இயேசுக்கிறிஸ்து மரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறதினாலே, அழிவும் அசுத்தமும் வாடுதலுமில்லாத சுதந்தரத்திற்கென்று,

௪ உயிருள்ள நம்பிக்கையுண்டாகும்படிக்குத் தமது மிகுந்த இரக்கத்தினாலே நம்மைப் புதிதாய்ச் ஜெனிப்பித்த நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவாகிய பராபரனுக்குத் தோத்திரமுண்டாவதாக,

௫ கடைசிக்காலத்திலே வெளிப்பட எத்தனமாக்கப்பட்டிருக்கிற இரட்சிப்புக்கேதுவாக விசுவாசத்தைக்கொண்டு பராபரனுடைய பலத்தினாலே காக்கப்படுகிற உங்களுக்கு அந்தச்சுதந்தரம் பரமண்டலங்களில் வைத்திருக்கின்றது.

௬ இதற்காகத் (துன்பங்கள்) வேண்டிய படியால், இப்பொழுது கொஞ்சக்காலமாய்ப் பலவிதமான துன்பங்களினாலே துக்கப்படுகிற நீங்கள் மிகவும் சந்தோஷப்படக்கடவீர்கள்.

௭ அழிந்துபோகிற பொன் அக்கினியினாலே சோதிக்கப்படும். அதிலும் உங்கள் விசுவாசஞ் சோதிக்கப்பட்டு அதிக விலையேறப்பெற்றதாய், இயேசுக்கிறிஸ்து வெளிப்படும்பொழுது (உங்களுக்குப் புகழ்ச்சியுங் கனமும் மகிமையுமுண்டாகக் காணப்படும்படிக்கு (அந்தத் துன்பங்களைச் சகிக்கிறீர்கள்.)

௮ அவரை நீங்கள் காணாமலிருந்தும், அவரிடத்தில் அன்புகூருகிறீர்கள். இப்பொழுது அவரைத் தரிசியாமலிருந்தும், அவரிடத்தில் விசுவாசமாயிருந்து, சொல்லமுடியாததுமாய் மகிமையால் நிறைந்ததுமாயிருக்கிற சந்தோஷத்தோடே களிகூர்ந்து,

௯ உங்கள் விசுவாசத்திற்கேற்ற பலனாகிய ஆத்தும இரட்சிப்பை அடைகிறீர்கள்.

௰ உங்களுக்குண்டான இந்தக் கிருபையைக் குறித்து முன்பேசின தீர்க்கதரிசிகள் தங்களிலுள்ள கிறிஸ்துவின்,

௰௧ ஆவியானவர் கிறிஸ்துவின் பாடுகளையும் அவைகளின் பின்வரும் மகிமைகளையும் முன்னறிவித்தபொழுது, எந்தக் (காலத்தை) எப்படிப்பட்ட காலத்தைக் குறித்திருக்கிறாரென்று சோதனைபண்ணி,

௰௨ இப்படியிந்த இரட்சிப்பைக் குறித்துமிகவும் ஆராய்ந்து பார்த்தார்கள். அவைகளை அவர்கள் தங்களைக் குறித்தல்ல, நம்மைக் குறித்தே தெரிவித்தார்களென்று அவர்களுக்கு வெளியாக்கப்பட்டது. வானத்திலிருந்தனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியைக்கொண்டு உங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துவந்தவர்களாலே அவைகள் இப்பொழுது உங்களுக்கறிவிக்கப்பட்டுவருகின்றன. அவைகளுக்குள்ளே தேவதூதரும் உற்றுப்பார்க்க ஆசையாயிருக்கிறார்கள்.

௰௩ ஆகையால் நீங்கள் உங்கள் மனதின் அரைகளிற்கச்சைகட்டிக்கொண்டு தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருந்து இயேசுக்கிறிஸ்து வெளிப்படும்பொழுது உங்களுக்குக் கொண்டுவரப்படுங் கிருபையின்மேல் இடைவிடாமல் நம்பிக்கையைவைத்து,

௰௪ கீழ்ப்படிகிற பிள்ளைகளைப்போல நீங்கள் முற்காலத்திலே அறியாமையினாலே கொண்ட இச்சைகளின்படி இனி நடவாமல்,

௰௫ உங்களை அழைத்தவர் பரிசுத்தராயிருக்கிறதுபோல, நீங்களும் சகலவிதத்திலேயும் பரிசுத்தராய் நடப்பீர்களாக.

௰௬ நான் பரிசுத்தர். ஆகையால் நீங்களும் பரிசுத்தராயிருங்களென்றெழுதியிருக்கிறதே.

௰௭ அன்றியும் பட்சபாதமில்லாமல் அவனவனுடைய கிரியைகளின்படி நியாயத்தீர்ப்புக்கொடுக்கும் பிதாவை நீங்கள் தொழுதுகொண்டிருக்கிறதால், இவ்வுலகத்திலே தங்குமளவும் பயத்துடனே நடந்துகொள்ளுங்கள்.

௰௮ அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும் பொன்னினாலுமல்ல, குற்றமும் மாசுமில்லாத ஆட்டுக்குட்டியைப்போன்ற கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்தினாலே,

௰௯ உங்கள் முன்னோர்களாற் பாரம்பரையாய்ப் பெற்ற வீணான நடக்கையினின்று மீட்கப்பட்டீர்களென்றறிந்திருக்கிறீர்களே.

௨௰ அவர் லோகத்தோற்றத்திற்கு முன்னே குறிக்கப்பட்டவராயிருந்து தமதுமூலமாய்ப் பராபரன்மேல் விசுவாசமாயிருக்கிற உங்களுக்காக இந்தக் கடைசிக்காலங்களில் வெளிப்பட்டார்.

௨௰௧ உங்கள் விசுவாசமும் நம்பிக்கையும் பராபரன்மேலேயிருக்கும்படிக்கு அவரை மரித்தோரிலிருந்தெழுப்பி, அவருக்கு மகிமையைக்கொடுத்தார்.

௨௰௨ (ஆகையால்) நீங்கள் உண்மையான சகோதர சிநேகத்திற்கேதுவாக ஆவியினாலே சத்தியத்திற்குக் கீழ்ப்படிந்து இப்படியுங்கள் ஆத்துமாக்களைச் சுத்தமாக்கிக்கொண்டிருக்கச் சுத்த இருதயங்களோடே ஊக்கமாய் ஒருவரிலொருவர் அன்பாயிருப்பீர்களாக.

௨௰௩ அழிவுள்ள வித்தினாலேயல்லவென்றென்றைக்கும் நிற்கிறஜீவனுள்ள தேவனுடைய வசனமாகிய அழிவில்லாத வித்தினாலே மறுபடியும் ஜெனிக்கப்பட்டிருக்கிறீர்களே.

௨௰௪ அந்தப்படி (சொல்லியிருக்கிறதாவது) மாம்சமெல்லாம் புல்லைப்போலவும் மனிதருடைய மகிமையெல்லாம் புல்லின் பூவைப்போலவுமிருக்கின்றது. புல்லானது உலர்ந்துபோம். அதின் பூவும் உதிர்ந்துபோம்.

௨௰௫ கர்த்தருடைய வசனமோ என்றென்றைக்கும் நிற்கும். மனபந்த உங்களுக்குச் சுவிசேஷமாயறிவிக்கப்பட்டு வருகிற வசனம் அதுவே.

## ௨. அதிகாரம்.

[(௧) கபடங்களையெல்லாம் விட்டு (௪) பராபரனுடைய சனங்களுக்கேற்றபடி கிறிஸ்துவுக்கைக்கியமாய் நடந்துகொண்டு, (௰௩) இராசா முதலான பெரியோருக்குக் கீழ்ப்பட்டு நீதியாய் நடக்கும்படிக்கும், (௰௮) வேலைக்காரர் நன்மைசெய்கிறதினாலே வருந் துன்பங்களைப் பொறுமையோடு சகித்துக் கிறிஸ்துவுக்குப் பின்செல்லும்படிக்கும் புத்திசொல்லியது.]

இப்படியிருக்கக் கர்த்தர் தயையுள்ளவரென்று நீங்கள் ருசிபார்த்தபடியாற் சகல துற்குணத்தையும்,

௰௭ தீமைசெய்து பாடனுபவிக்கிறதிலும் நன்மைசெய்து பராபரனுடைய சித்தப்படி பாடனுபவிக்கிறது மேன்மையாயிருக்குமே.

௰௮ ஆகையால் நீதியுள்ளவராகிய கிறிஸ்துவும் நம்மைப் பராபரனிடத்திற்குச் சேர்த்துக்கொள்ளும்படிக்கு அநீதியுள்ளவர்களுடைய பாவங்களுக்காக ஒருதரம் பாடுபட்டார். சரீரத்திலேயவர் கொலைசெய்யப்பட்டார். ஆவியிலே அவர் பிழைப்பிக்கப்பட்டார்.

௰௯ அந்த ஆவியாகவேயவர் காவலிலுள்ள ஆவிகளிடத்திற்குப்போய்ப் பிரசங்கம் பண்ணினார்.

௨௰ அந்த ஆவிகள் பூர்வீகத்திலே நோவாவென்பவன் பேழையை யெத்தனமாக்கின நாட்களிலே பராபரன் நீடிய சாந்தத்தோடே காத்திருந்தபொழுது கீழ்ப்படியாமற் போனவைகள். அந்தப் பேழையிலே எட்டுப்பேராகிய சிலர் மாத்திரம் பிரவேசித்து ஜலத்தினாலே காக்கப்பட்டார்கள்.

௨௧ அதுஞானஸ்நானத்திற்கு முன்னடையாளமாயிருந்தது. சரீர அழுக்கை நீக்குகிற தற்கல்லப் பராபரனுக்கு முன்பாக நல்மனச்சாட்சியுண்ணுகிற உடம்படிக்கையைக்குறிக்கிற ஸ்நானத்திற்கே அப்படியிருந்தது. இயேசுகிறிஸ்து உயிரோடெழுந்திருக்கிறதால அந்தஞானஸ்நானம் இப்பொழுது நம்மையும் இரட்சிக்கின்றது.

௨௨ அவர் பரமண்டலத்திற்குப்போய்ப் பராபரனுடைய வலதுபாரிசத்திலிருக்கிறார். தேவதூதர்களல்லாமல் அதிகாரங்களும் வல்லமைகளும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கின்றன.

## ௪. அதிகாரம்.

[(௧) அஞ்ஞானிகளுடைய விதமாய் நடவாமற் கிறிஸ்துவுக்கேற்றபடி நடக்கவேண்டுமென்றும், (௰௨) அவர் நிமித்தமவருகிற நிந்தைகளுக்காகச் சந்தோஷப்படவேண்டுமென்றுஞ் சொல்லியது.]

இப்படியிருக்கக் கிறிஸ்து நமக்காக (தமது) சரீரத்திலே பாடுபட்டபடியால் நீங்களும் அப்படிப்பட்ட சிந்தையை ஆயுதமாக அணிந்துகொள்ளக்கடவீர்கள்.

௨ சரீரத்திற்பாடுபட்டவன் பாவங்களை விட்டோயந்திருப்பானே. (நீங்கள்) சரீரத்தோடேயிருக்குங்காலமவளாகும் மனிதருடைய இச்சைகளின்படியல்ல பராபரனுடைய சித்தத்தின்படியே பிழைக்கிறதற்கேதுவாக (அப்படிச் செய்யுங்கள்.)

௩ சென்றவாழ்நாட்காலத்திலே நாம் அஞ்ஞானிகளுடைய இஷ்டத்தின்படி நடந்துகொண்டதுபோதுமே. அப்பொழுது நாம் காமவிகாரத்தையுந்துர் இச்சைகளையும் மட்டுமீறிய மதுபானத்தையும் களியாட்டத்தையும் பெருந்தீனியையும் சாப்பாட்டு வெறிகொண்டு அருவருக்கப்பட்ட விக்கிரகாராதனையைச் செய்துவந்தோம்.

௪ (இப்பொழுது) கெட்ட நடக்கையுள்ள அந்தத்துன்மார்க்கத்திலே யவர்களோடேகூட நீங்கள் ஓடாமலிருக்கிறதினாலே அவர்கள் ஆச்சரியப்பட்டு (உங்களைத்) தூஷிக்கிறார்கள்.

௫ உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தோருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்க ஆயத்தமாயிருக்கிறவருக்கு அவர்கள் கணக்கொப்புவிப்பார்கள்.

௬ இதற்காகவும் மரித்தோர் சரீரத்திலே மனிதராலே ஆக்கினைக்குள்ளாக்கப்பட்டிருந்தும் ஆவியிலே பராபரனாலே பிழைக்கும்படியாக அவர்களுக்குஞ் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டது.

௭ அன்றியும் எல்லாவற்றிற்கும் முடிவு சமீபமாயிற்று. ஆகையால் நீங்கள் விவேகமாயிருந்து விண்ணப்பம்பண்ணுதற்குத் தெளிவுள்ளவர்களாயிருக்கக்கடவீர்கள்.

௮ எல்லாவற்றிற்கும் மேலாக ஒருவருக்கொருவர் மிகுந்த அன்புள்ளவர்களாயிருங்கள். அன்பானது திரளான பாவங்களை மூடுமே.

௯ முறுமுறுப்பில்லாமல் ஒருவரையொருவர் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௰ அவனவன் பெற்ற வரத்தின்படியே நீங்கள் பராபரனுடைய பலவிதக்கிருபைகளை உக்கிராணக்காரருக்குரிய நல்ல உக்கிராணக்காரரைப்போல, ஒருவருக்கொருவர் ஊழியஞ்செய்யுங்கள்.

௰௧ போதிக்கிறவன் பராபரனுடைய வசனங்களின்படிப் போதிக்கக்கடவன். ஊழியஞ்செய்கிறவன் பராபரன் கொடுக்கிற பெலத்தாலே அப்படிச்செய்யக்கடவன். சகலத்திலேயும் பராபரன் இயேசுகிறிஸ்துவின் மூலமாய்த் துதிக்கப்படும்படியே செய்வீர்களாக. அவருக்குத் துதியும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக, ஆமென்.

௰௨ பிரியமானவர்களே! உங்களைச் சோதிக்கத்தக்கதாக உங்களுக்குள்ளேயிருக்கிற அக்கினி உங்களுக்குப் புதியது சம்பவித்ததாக அதைக்குறித்து ஆச்சரியப்படாமற்,

௰௩ கிறிஸ்துவின் பாடுகளுக்கு நீங்கள் ஐக்கியமானதாற் சந்தோஷப்படுங்கள். அவருடைய மகிமை வெளிப்படும்பொழுது நீங்களுங் களிகூர்ந்து சந்தோஷமாயிருக்கும்படிக்கு, (அப்படிச் செய்வீர்களாக.)

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின

## பொதுவான இரண்டாம் நிருபம்.

### க. அதிகாரம்.

[(க) அப்போஸ்தலன் சபையாரை வாழ்த்தி, (ங) கிறிஸ்துவையறிகிற அறிவினாலே யாவர்களும் அதிக மதிகமான தேவபத்தியுள்ள மார்க்கமுள்ளவர்களாகும்படிக்குப் புத்திசொல்லி, (யஉ) தான் சீக்கிரத்திலே சாவதினாலே இவைகளை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேனென்று சொல்லி, (யசா) சுவிசேஷத்தின் உண்மையைக் காட்டியது.]

நம்முடைய பராபரனும் இரட்சகருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவின் நீதியினால் எங்களைப்போல அருமையான விசுவாசத்தைப் பெற்றவர்களுக்கு இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரனும் அப்போஸ்தலனுமாகிய சீமோன்பேதுரு எழுதுகிறதாவது,

உ பராபரனையும் நமது கர்த்தராகிய இயேசுவையும் அறிகிற அறிவினால் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் சம்பூரணமாயுண்டாகக்கடவது.

ங மகிமையாலும் புண்ணியத்தாலும் நம்மையழைத்தவரை அறிகிற அறிவினாலே ஜீவனுக்கும் மெய்த்தேவபத்திக்கும் வேண்டியவைகளையும் அவருடைய திவ்விய வல்லமை நமக்குக் கொடுத்தபடியினாலும்,

ச நீங்கள் (தகாத) இச்சையால் உலகத்திலுள்ள கேட்டுக்குத் தப்பிக்கொண்டவர்களாய்த் திவ்விய குணத்திற்குப் பங்காளிகளாகத்தக்கதாய் மிகவும் மேன்மையும் விலையேறப்பெற்றதுமான வாக்குத்தத்தங்கள் அவராலே நமக்கு அளிக்கப்பட்டபடியினாலும்,

ரு நீங்கள் மிகுந்த சாக்கிரதையைக் கொண்டு உங்கள் விசுவாசத்தோடே தயிரியத்தையும் தயிரியத்தோடே அறிவையும்,

சா அறிவோடே இச்சையடக்கத்தையும் இச்சையடக்கத்தோடே பொறுமையையும் பொறுமையோடே மெய்த்தேவபத்தியையும்,

எ மெய்த்தேவபத்தியோடே சகோதர சிநேகத்தையும் சகோதரசிநேகத்தோடே அன்பையுங் கூட்டிக்கொள்வீர்களாக.

அ இவைகள் உங்களுக்குண்டாயிருந்து பெருகினால் நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவிலே வீணராக அல்லது கனியற்றவர்களாக விருக்கமாட்டீர்கள்.

கூ அவைகளில்லாதவனெவனோ அவன் தன் முந்தின பாவங்கள் நீக்கப்பட்டதை மறந்து குருடனுமாய்க் கண்மூடியிருக்கிறான்.

ய ஆகையால் சகோதரரே! நீங்கள் அழைக்கப்பட்டுத் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறதை உறுதியாக்கும்படி அதிக சாக்கிரதையாயிருப்பீர்களாக. அப்படிச் செய்தால் நீங்கள் ஒருக்காலும் வழுவுவதில்லை.

யக மேலும் இப்படியே நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் நித்திய இராச்சியத்திற்குட்பிரவேசிக்கத்தல பரிபூரணமாய் உங்களுக்கு அளிக்கப்படும்.

யஉ ஆனபடியால் நீங்கள் இவைகளை அறிந்து இப்பொழுது உங்களுக்குண்டாயிருக்கிற சத்தியத்தில் உறுதிப்பட்டிருந்தும் இவைகளை எப்பொழுதும் நினைக்கும்படிச்செய்ய நான் அசதியாயிருக்கமாட்டேன்.

யங அந்தப்படி நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் எனக்குத் தெரிவித்தபடி நான் என் கூடாரத்தைச் சீக்கிரமாய் விட்டுப்போகவேண்டுமென்றறிந்து,

௩ நீங்களும் எங்களோடேகூட ஐக்கியமுள்ளவர்களாகும்படிக்கு நாங்கள் கண்டுங்கேட்டுமிருந்ததை உங்களுக்கறிவிக்கிறோம். நாங்களோ பிதாவுடனேயும் அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவுடனேயும் ஐக்கியமுள்ளவர்களாயிருக்கிறோம்.

௪ உங்களுக்குச் சந்தோஷம் நிறைந்ததாயிருக்கும்படிக்கு இவைகளையுங்களுக்கெழுதுகிறோம்.

௫ மேலும் அவரிடத்தில் நாங்கள் கேட்டதுமாய் உங்களுக்கு அறிவிக்கிறதுமாயிருக்கிற விசேஷமென்னவென்றால், பராபரன் எவ்வளவாகிலும் இருளில்லாமல் ஒளியாயிருக்கிறார்.

௬ நாம் இருளிலே நடந்து அவரோடே ஐக்கியப்பட்டவர்களென்று சொல்லிக்கொண்டால், நாம் சத்தியத்தை நடப்பியாமற் பொய்பேசுகிறவர்களாயிருப்போம்.

௭ அவர் ஒளியிலிருக்கிறதுபோல நாமும் ஒளியிலே நடந்தால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம். அல்லாமலும் அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவின் இரத்தம் நம்முடைய பாவங்களெல்லாவற்றையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும்.

௮ நமக்குப் பாவமில்லையென்றோமானால், நம்மை நாமே ஏய்க்கிறவர்களாவோம்; சத்தியம் நமக்குள்ளேயிராது.

௯ நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து, எல்லா அநியாயமும் நம்மைவிட்டு நீங்க நம்மைச் சுத்திகரிப்பதற்கு உண்மையும் நீதியுமுள்ளவராயிருக்கிறார்.

௰ நாம் பாவஞ்செய்யவில்லையென்றோமானால் நாம் அவரைப் பொய்யராக்குகிறதாகவிருக்கும். அவருடைய வார்த்தையும் நமக்குள்ளேயிராது.

## ௨. அதிகாரம்.

[(௧) பாவஞ்செய்யாதபடிக்குப் புத்திசொல்லி, (௬) அன்புள்ளவர்களாயிருக்கவேண்டுமென்றும், (௰௫) உலகத்தில் அன்புகூரக்கூடாதென்றும், (௰௮) கிறிஸ்துவுக்கெதிராளிகள் இன்னாரென்றும், (௨௰) தேவ அபிஷேகத்தைக் காத்துக்கொள்ளவேண்டுமென்றுங்காட்டியது.]

௧ என்பிள்ளைகளே! நீங்கள் பாவஞ்செய்யாதபடிக்கு, இவைகளையுங்களுக்கெழுதுகிறேன். ஒருவன் பாவஞ்செய்தாலும் நீதியுள்ளவராயிருக்கிற இயேசுக்கிறிஸ்து என்னுங்காரியகர்த்தர் நமக்காகப் பிதாவினிடத்திலிருக்கிறார்.

௨ அவர் நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய்கிற பலியானவராயிருக்கிறார். நம்முடைய பாவங்களுக்காகமாத்திரமல்ல, சர்வலோகத்தினுடைய பாவங்களுக்காகவும் (அப்படியேயிருக்கிறார்.)

௩ அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொள்ளுகிறவர்களானால் அவரையறிந்துகொண்டிருக்கிறோமென்று அதினாலேயறிவோம்.

௪ அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளாமல் அவரையறிந்துகொண்டேனென்று சொல்லுகிறவன் பொய்யனாயிருக்கிறான். சத்தியம் அவனுக்குள்ளேயில்லை.

௫ அவருடைய வசனத்தைக் கைக்கொள்ளுகிறவனிடத்திலே பராபரனுடைய அன்பு மெய்யாகநிறைவேறியிருக்கின்றது. நாம் அவருக்குள்ளிருக்கிறதை அதினாலேயறிந்திருக்கிறோம்.

௬ அவரிடத்தில் நிலைத்திருக்கிறேனென்று சொல்லுகிறவன் அவர் நடந்தபடியே தானும் நடக்கவேண்டும்.

௭ பிரியமானவர்களே! நான் உங்களுக்குப் புதியகற்பனையையல்ல, ஆதிமுதல் நீங்கள் பெற்றிருக்கிற பழமையான கற்பனையையே யெழுதுகிறேன். அந்தப் பழமையான கற்பனை நீங்கள் ஆதிமுதற் கேட்டுக்கொண்ட வசனமே.

௮ அன்றியும் நான் உங்களுக்குப் புதிய கற்பனையையுமெழுதுகிறேன். இருள் நீங்கிப்போக, மெய்யான ஒளி இப்பொழுது பிரகாசிக்கிறபடியால் இது அவரைக்குறித்தும் உங்களைக்குறித்தும் மெய்யாயிருக்கின்றது.

௯ தன் சகோதரனைப் பகைத்து அந்த ஒளியிலேயிருக்கிறேனென்று சொல்லுகிறவன் இதுவரைக்குமே இருளிலிருக்கிறான்.

௰ தன் சகோதரனிடத்தில் அன்புகூருகிறவன் ஒளியிலே நிலைகொண்டிருக்கிறான். இடறல் அவனிடத்திலேயில்லை.

௰௧ தன் சகோதரனைப் பகைக்கிறவனோ இருளிலேயிருந்து, இருளிலே நடந்து, இருளவனது தன்கண்களைக் குருடாக்கினபடியால் தான் நடக்கிற இடமின்னதென்று அறியாமலிருக்கிறான்.

௰௨ பிள்ளைகளே! அவருடைய நாமத்தினிமித்தம் உங்கள் பாவங்கள் மன்னிக்கப்படுகிறதால், உங்களுக்கெழுதுகிறேன்.

௰௩ பிதாக்களே! ஆதிமுதலாயிருக்கிறவரை நீங்கள் அறிந்திருக்கிறதால் உங்களுக்கெழுதுகிறேன். வாலிபரே! பொல்லாங்கனை நீங்கள் ஜெயித்ததால் உங்களுக்கெழுதுகிறேன். குழந்தைகளே! நீங்கள் பிதாவை அறிந்திருக்கிறதால் உங்களுக்கெழுதுகிறேன்.

௰௪ பிதாக்களே! ஆதிமுதலாயிருக்கிறவரை நீங்கள் அறிந்திருக்கிறதால் உங்களுக்கெழுதினேன். வாலிபரே! தேவவசனம் உங்களிடத்தில் நிலைத்திருக்க நீங்கள் பலமுள்ளவர்களாயிருந்து பொல்லாங்கனை ஜெயித்ததால் உங்களுக்கெழுதினேன்.

௰௫ உலகத்தையும் உலகத்திலுள்ளவைகளையும் அன்புகூராதிருப்பீர்களாக. உலகத்தில் அன்புகூருகிறவன் பிதாவின்மேல் அன்பில்லாதவனாயிருக்கிறான்.

௰௬ எப்படியெனில் மாமிசத்தின் இச்சையும் கண்களுடைய இச்சையும் ஜீவனத்தின் பெருமையுமாகிய உலகத்திலுள்ளவைகளெல்லாம் பிதாவினாலுண்டாயிராமல் உலகத்தினாலுண்டாயிருக்கின்றன.

௰௭ உலகமும் அதின் இச்சையும் ஒழிந்துபோகும். பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவனோ என்றென்றைக்கும் நிலைநிற்பான்.

௰௮ குழந்தைகளே! (இது) கடைசிநேரமாயிருக்கிறது. கிறிஸ்துவின் எதிராளி வருகிறானென்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறபடி இப்பொழுதே கிறிஸ்துவின் எதிராளிகள் அநேகருண்டாயிருக்கிறார்கள். அதினாலே இது கடைசிநேரமாயிருக்கிறதென்றறிகிறோம்.

௰௯ அவர்கள் நம்மிடத்திலிருந்து புறப்பட்டார்கள். ஆகிலும் அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்களல்ல, நம்மைச் சேர்ந்தவர்களாயிருந்தார்களானால் நம்முடனே தரித்திருப்பார்களே. எல்லாரும் நம்மைச் சேர்ந்தவர்களல்லவென்று வெளியாகும்படிக்கே (புறப்பட்டார்கள்.)

௨௰ நீங்கள் பரிசுத்தராலே அபிஷேகத்தைப் பெற்றுச் சகலத்தையும் அறிந்திருக்கிறீர்கள்.

௨௰௧ சத்தியத்தை நீங்கள் அறியாததாலல்ல, நீங்கள் அதையறிந்து சத்தியத்தால் ஒரு பொய்யுமுண்டாயிராதென்பதையும் அறிந்திருக்கிறபடியால் உங்களுக்கெழுதினேன்.

௨௰௨ இயேசுவென்பவர் கிறிஸ்துவல்லவென்று மறுதலிக்கிறவனேயன்றி வேறார் பொய்யன். பிதாவையுங் குமாரனையும் மறுதலிக்கிறவனே கிறிஸ்துவுக்கெதிராளியானவன்.

௨௰௩ குமாரனை மறுதலிக்கிறவன் பிதாவையுடையவனல்ல. குமாரனையறிக்கைபண்ணிக்கொள்ளுகிறவன் பிதாவையுமுடையவனாயிருக்கிறான்.

௨௰௪ ஆகையால் ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில் நிலைத்திருக்கக்கடவது. ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில் நிலைத்திருந்தால் நீங்களுங் குமாரனிலும் பிதாவிலும் நிலைத்திருப்பீர்கள்.

௨௰௫ அவர் நமக்கு வாக்குத்தத்தம்பண்ணின பொருளானது நித்தியசீவனே.

௨௰௬ உங்களை வஞ்சிக்கிறவர்களைக்குறித்து இவைகளை உங்களுக்கெழுதினேன்.

௨௰௭ அப்படியிருந்தும் நீங்கள் அவராலே பெற்ற அபிஷேகம் உங்களில் நிலைகொண்டிருக்கிறதால் ஒருவரும் உங்களுக்குப் போதிக்கவேண்டியதில்லை. அந்த அபிஷேகமே சகலகாரியங்களையுங்குறித்து உங்களுக்குப் போதிக்கிறதே பொய்யல்லாமல் சத்தியமுமாயிருக்கிறது. ஆகையால் அது உங்களுக்குப் போதித்தபடியே அவரில் நிலைத்திருப்பீர்களாக.

௨௰௮ இப்படியிருக்க பிள்ளைகளே அவர் வெளிப்படப்போகிறவராய் வரும்பொழுது நாம் அவரால் வெட்கப்படுத்தப்படாமல் தைரியமுள்ளவர்களாயிருக்கும்படிக்கு அவரில் நிலைத்திருங்கள்.

௨௰௯ அவர் நீதியுள்ளவராயிருக்கிறாரென்பது உங்களுக்குத் தெரிந்திருக்க நீதியைச் செய்கிறவனெவனோ அவன் அவரிற் பிறந்தானென்றறிந்திருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) பிதாவின் அன்பு பெரிதென்றும், (௩) அதினாலே நாம் பரிசுத்தரும் நீதியுமுள்ளவர்களாய் நடக்கவேண்டுமென்றும், (௰௧) ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூரவேண்டுமென்றுங் காட்டியது.]

நாம் பராபரனுடைய பிள்ளைகளென்றழைக்கப்படும்படிக்கு (செய்ததினாலே) பிதாவானவர் நமக்குக் காண்பித்த அன்பை நோக்கிப்பாருங்கள். உலகத்தார் அவரையறியாதபடியினாலே நம்மையுமறியாமலிருக்கிறார்கள். பிரியமானவர்களே!

௨ இப்பொழுது பராபரனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம் (இனிமேல்) இன்னின்னவிதமாயிருப்போமென்று இன்னம் வெளியரங்கமாகவில்லை (ஆகிலும் அவர் வெளிப்படும்பொழுது அவரிருக்கிறதன்மையாய் நாம் அவரைத் தரிசிப்பதால்) அவருக்கொப்பாயிருப்போமென்றறிந்திருக்கிறோம்.

௩ மேலும் இப்படி அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிறவனெவனோ அவன் அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறதுபோலத் தன்னையுஞ் சுத்திகரித்துக்கொள்ளுகிறான்.

௪ பாவஞ்செய்கிறவனெவனோ அவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோதஞ்செய்கிறான். பாவமானது நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாயேயிருக்கின்றது.

௫ அன்றியும் நீங்கள் அறிந்துகொண்டபடி அவர் நம்முடைய பாவங்களை நீக்கும்படிக்கு வெளிப்பட்டார். அவரிடத்திலே பாவமில்லை.

௬ அவரிடத்தில் நிலைத்திருக்கிறவனெவனும் பாவஞ்செய்கிறதில்லை. பாவஞ்செய்கிறவனெவனும் அவன் அவரைக்காணவுமில்லை. அவரையறியவுமில்லை.

௭ பிள்ளைகளே! நீங்கள் ஒருவராலும் வஞ்சிக்கப்படாதிருப்பீர்களாக. நீதியைச்செய்கிறவன் அவர் நீதியுள்ளவராயிருக்கிறதுபோல நீதியுள்ளவனாயிருக்கிறான்.

௮ பசாசானவன் ஆதிமுதற் பாவஞ்செய்கிறான். ஆகையாற் பாவஞ்செய்கிறவன் பசாசினாலுண்டாயிருக்கிறான். அந்தப் பசாசினுடைய கிரியைகளை யழிக்கும்படிக்குப் பராபரனுடைய குமாரன் வெளிப்பட்டார்.

௯ பராபரனிற் பிறந்தவனெவனோ அவனுக்குள்ளே அவருடைய வித்து தரித்திருக்கிறதால் அவன் பாவஞ்செய்யான். அவன் பராபரனிடத்திலே பிறந்தபடியாற் பாவஞ்செய்யமாட்டான்.

௰ இதினாலே பராபரனுடைய பிள்ளைகளும் பசாசின்பிள்ளைகளும் வெளியரங்கமாகிறார்கள். நீதியைச்செய்யாமலுந் தன் சகோதரனிடத்தில் அன்புகூராமலுமிருக்கிறவனெவனோ அவன் பராபரனாலுண்டானவனல்ல. என்னத்தினாலெனில்,

௰௧ நாம் ஒருவரிலொருவர் அன்புகூரவேண்டுமென்பது நீங்கள் ஆதிமுதல் அறிவிக்கக்கேட்ட விசேஷமாயிருக்கின்றது.

௰௨ பொல்லாங்கனாலுண்டாயிருந்து தன் சகோதரனைக் கொலைசெய்த காயீனைப்போலிருக்கக்கூடாது. அவன் எதினிமித்தம் அவனைக் கொலைசெய்தான். தன் கிரியைகள் பொல்லாதவைகளுமாய்த் தன் சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவைகளுமாயிருந்ததினிமித்தமே யப்படிச்செய்தான்.

௰௩ என் சகோதரரே! உலகத்தார் உங்களைப் பகைத்தால் ஆச்சரியப்படாதிருப்பீர்களாக.

௰௪ நாம் சகோதரரிடத்தில் அன்புகூருகிறபடியால், மரணத்தைவிட்டு நீங்கிச் சீவனுக்குட்பட்டிருக்கிறோமென்றறிந்திருக்கிறோம். சகோதரனிடத்தில் அன்புகூராமலிருக்கிறவன் மரணத்திலே நிலைகொண்டிருக்கிறான்.

௰௫ தன் சகோதரனைப் பகைக்கிறவன் மனிதகொலைபாதகனாயிருக்கிறான். மனிதகொலைபாதகனெவனோ அவனுக்குள்ளே நித்தியசீவன் நிலைத்திராதென்று அறிந்திருக்கிறீர்கள்.

௰௬ அவர் தம்முடைய சீவனை நமக்காக விட்டுவிட்டதினாலே, அன்பு இன்னதென்றறிந்தோம். நாமுஞ்சகோதரருக்காக நமது சீவனைவிட்டுவிடக்கடனாளிகளாயிருக்கிறோம்.

௰௭ ஒருவன் இவ்வுலக சீவனமுடையவனாயிருந்து தன் சகோதரனுக்குக் குறைச்சலுண்டென்று கண்டுந் தன் இருதயத்தை அவனுக்கு அடைத்துக்கொண்டால், அவனுக்குள்ளே பராபரனுடைய அன்பு எப்படி நிலையாயிருக்கும்?

௰௮ என் பிள்ளைகளே! வசனத்தினாலும் நாவினாலுமல்ல, கிரியைகளினாலும் உண்மையினாலும் அன்புகூரக்கடவோம்.

௰௯ இதினாலே நாம் சத்தியமுள்ளவர்களென்று அறிந்து நமது இருதயத்தை அவருக்குமுன்பாக நிச்சயப்படுத்தலாம்.

௨௰ நமது இருதயம் நம்மைக் குற்றவாளிகளென்று தீர்க்குமானால் நம்முடைய இருதயத்திலும் பராபரன் பெரியவராயிருக்கிறாரென்றுஞ் சகலத்தையும் அறிந்திருக்கிறாரென்றும் (நினைப்போமாக.)

௨௧ பிரியமானவர்களே! நம்முடைய இருதயம் நம்மைக் குற்றவாளிகளென்று தீர்ப்புச்செய்யாதிருந்தால் நாம் பராபரனிடத்தில் தைரியங்கொள்வோம்.

௨௨ மேலும் அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொண்டு அவருக்குமுன்பாகப் பிரியமானவைகளைச் செய்கிறபடியினாலே நாம் வேண்டிக்கொள்வதெதோ அதை அவராலே பெற்றுக்கொள்வோம்.

௨௩ நாம் அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தை விசுவாசமாயிருந்து அவர் நமக்குக் கட்டளையிட்டபடி ஒருவரிலொருவர் அன்பாயிருக்கவேண்டுமென்று இதுவே பராபரனுடைய கட்டளையாயிருக்கிறது.

௨௪ அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறவன் அவரிடத்தில் நிலைத்திருக்கிறான். அவரும் அவனிடத்தில் நிலைத்திருக்கிறார். அவர் நம்மிடத்தில் நிலைத்திருக்கிறாரென்று அவர் நமக்குத் தந்த ஆவியினாலே அறிந்திருக்கிறோம்.

## ௪. அதிகாரம்.

[(௧) போதகர்களுடைய போதனைகளைத் திட்டப்படிப் பரிசோதிக்கவேண்டுமென்றும், (௭) பராபரன் அன்புள்ளவரானபடியினாலே நாமும் அன்புகூரவேண்டுமென்றுங் காட்டியது.]

௧ பிரியமானவர்களே! உலகத்திலே அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றினபடியால் நீங்கள் எந்த ஆவியையும் நம்பாமல் அந்த ஆவிகள் பராபரனாலுண்டானவைகளோவென்று சோதித்தறியுங்கள்.

அப்போஸ்தலனாகிய

# இயோவான் எழுதின

## இரண்டாம் நிருபம்.

[தனம்பொருந்திய ஒரு அம்மாளையும் அவளுடைய பிள்ளைகளையும் அப்போஸ்தலன் வாழ்த்தினது, விசுவாசமும், சத்தியமும், இவைகளில் நிலையாயிருக்கும்படிக்குப் புத்திசொல்லியது.]

நம்மிடத்திலே நிலைநிற்கிறதுமாய் என்றென்றைக்கும் நம்மோடிருப்பதுமாயிருக்கிற சத்தியத்தினிமித்தம் நான்மாத்திரமல்ல, சத்தியத்தையறிந்திருக்கிற மற்றயாவரும் உண்மையாய்ச் சிநேகித்திருக்கிற,

௨ தெரிந்துகொள்ளப்பட்ட அம்மாளுக்கும் அவளுடைய பிள்ளைகளுக்கும் மூப்பனாகிய நான் எழுதுகிறதாவது.

௩ பிதாவாகிய பராபரனாலும் பிதாவின் குமாரனாகிய கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினாலுங் கிருபையும் இரக்கமும் சமாதானமுஞ் சத்தியத்தோடும் அன்போடுங்கூட உங்களுக்குண்டாயிருக்கக்கடவது.

௪ உம்முடைய பிள்ளைகளிற் சிலர் பிதாவினாலே நாம் கற்பனையடைந்தபடி சத்தியத்திலே நடக்கிறவர்களென்று நான் கண்டு மிகவுஞ் சந்தோஷப்பட்டேன்.

௫ இப்பொழுது அம்மாளே! நான் உமக்குப் புதியகற்பனையாகவல்ல, ஆதிமுதல் நமக்குண்டாயிருக்கிற கற்பனையாக எழுதி வேண்டிக்கொள்ளுகிறதென்னவெனில், நாமொருவரிடத்திலொருவர் அன்புகூரவேண்டும்.

௬ நாம் அவருடைய கற்பனைகளின்படி நடக்கிறதே யன்புகூருகிறதாம். நீங்கள் ஆதிமுதற் கேட்டிருக்கிறபடி அதிலே நடந்துகொள்ள வேண்டுமென்பதே யந்தக் கற்பனையாயிருக்கின்றது.

௭ அநேக வஞ்சனைக்காரர் உலகத்திலே தோன்றியிருக்கிறார்கள். இயேசுக்கிறிஸ்துவானவர் மாம்சமாய் வந்தாரென்று அறிக்கைபண்ணாதிருக்கிறார்கள். இப்படிப்பட்டவனே வஞ்சனைக்காரனுமாய்க் கிறிஸ்துவுக்கு எதிராளியுமாயிருக்கிறான்.

௮ நாம் நம்முடைய வேலைகளை யிழந்துபோகாமல் நிறைந்தபலனைப் பெறும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

௯ கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைநில்லாமல் மீறிநடக்கிற எவனும் பராபரனையுடையானல்லாதவனாயிருக்கிறான். கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைநிற்கிறவனே பிதாவையுங் குமாரனையும் அடைந்திருக்கிறான்.

௰ ஒருவன் உங்களிடத்தில் வந்து இந்த உபதேசத்தைக் கொண்டுவாராமலிருந்தால், அவனை நீங்கள் உங்கள் வீட்டிலே சேர்த்துக்கொள்ளவும் அவனுக்கு வாழ்த்துதல் சொல்லவுங் கூடாது.

௰௧ அவனுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறவன் அவனுடைய துற்கிரியைகளுக்குப் பங்காளனாகிறான்;

௰௨ நான் பின்னும் அநேககாரியங்களை யுங்களுக்கு எழுதவேண்டும். காகிதத்தினாலும் மையினாலும் அப்படிச் செய்ய மனதில்லை. நமக்குச் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கு உங்களிடத்தில் வந்து முகமுகமாய்ப் பேசலாமென்று நம்பியிருக்கிறேன்.

௰௩ தெரிந்துகொள்ளப்பட்ட உம்முடைய சகோதரியின் பிள்ளைகள் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.—ஆமென்.

அப்போஸ்தலனாகிய

# இயோவான் எழுதின

## மூன்றாம் நிருபம்.

[அப்போஸ்தலன் காயுவென்பவனை வாழ்த்தி அவனுடைய தருமத்தைத் திடக்காகச் சந்தோஷத்தைக் காட்டிச் சத்தியத்திலே நிலைநிற்கும்படிக்குப் புத்தி சொல்லியது.]

மூப்பனாகிய நான் உண்மையாய் அன்புகூருகிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது, பிரியமானவனே!

௨ உன் ஆத்துமா வாழ்கிறதுபோல நீ சகலவிதத்திலும் வாழ்ந்து சுகமாயிருக்க வேண்டுகிறேன்.

௩ சகோதரர் வந்து, நீ சத்தியத்திலே நடந்துகொள்ளுகிறபடி உன்னுடைய உண்மையைக்குறித்துச் சாட்சிகொடுத்தபொழுது மிகவும் சந்தோஷப்பட்டேன்.

௪ என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறதை நான் கேள்விப்படுகிறதினால் (வருகிற சந்தோஷத்திற்கு) மேலான சந்தோஷம் எனக்கில்லை.

௫ பிரியமானவனே! நீ சகோதரருக்கும் பரதேசிகளுக்கும் செய்கிற கிரியைகள் யாவையும் உண்மையாய்ச் செய்கிறாய்.

௬ அவர்கள் உன்னுடைய அன்பைக்குறித்துச் சபைக்கு முன்பாகச் சாட்சிசொன்னார்கள். அவர்களை நீ பராபரனுக்கு முன்பாகப் பாத்திரமானபடி வழிவிட்டனுப்பினால் நன்மைசெய்வாய்.

௭ அவருடைய நாமத்தினிமித்தம் அவர்கள் அஞ்ஞானிகளிடத்தில் ஒன்றும் வாங்காமற் புறப்பட்டார்களே;

௮ ஆகையால் நாம் சத்தியத்திற்கு உதவிசெய்கிறவர்களாயிருக்கும்படிக்கு, இப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளக் கடனாளிகளாயிருக்கிறோம். நான் சபைக்கு எழுதினேன்.

௯ அப்படியிருந்தும் அவர்களுக்கு முதலாளியாயிருக்க விரும்புகிற தியோத்திரேப்பு எங்களை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை,

௰ ஆனபடியினாலே நான் வரும்பொழுது அவன் எங்களுக்கு விரோதமாய்ப் பொல்லாத வார்த்தைகளைப் பேசிச் செய்துவருங் கிரியைகளை நினைத்துக்கொள்ளுவேன். அவைகளும் அவனுக்குப் போதாது. அவன் தானே சகோதரரை ஏற்றுக்கொள்ளாதிருக்கிறதுமல்லாமல், ஏற்றுக்கொள்ளமனதாயிருக்கிறவர்களைத் தடைசெய்து சபைக்குப் புறம்பே தள்ளுகிறான்.

௰௧ பிரியமானவனே! நீ பொல்லாங்கானதையல்ல, நலமானதைப் பின்பற்றுவாயாக. நன்மைசெய்கிறவன் பராபரனாலுண்டாயிருக்கிறான். பொல்லாங்குசெய்கிறவன் பராபரனைக் கண்டறியவில்லை.

௰௨ தேமேத்திரியென்பவனுக்கு எல்லாராலும் சத்தியத்தாலும் நற்சாட்சி உண்டாயிருக்கிறது; நாங்களும் சாட்சிகொடுக்கிறோம், எங்கள் சாட்சி மெய்யென்றறிந்திருக்கிறீர்கள்.

௰௩ நான் அநேககாரியங்களை உனக்கெழுதவேண்டும். அவைகளை மையினாலும் இறகினாலும் எழுதமனதில்லை.

௰௪ சீக்கிரமாய் உன்னைப்பார்க்கலாமென்று நம்பியிருக்கிறேன். அப்பொழுது முகமுகமாய்ப் பேசுவோம். உனக்குச் சமாதானமுண்டாயிருக்கக்கடவது.

௰௫ (எங்களிடத்திலுள்ள) சிநேகிதர் உன்னை வாழ்த்துதல்செய்கிறார்கள். உன்னிடத்திலுள்ள சிநேகிதர்களைப் பேர்பேராக (என்னாலே) வாழ்த்துதல்செய்வாயாக.

முற்றும்.

௰௪ ஆதாம் முதற்கொண்டு ஏழாந் தலைமுறையிலுண்டாயிருந்த ஏனோக்கென்பவன் இவர்களைக்குறித்து முன்னறிவித்ததாவது: இதோ, கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படிக்கும் அவர்களில் தேவபக்தியில்லாத யாவருந் துன்மார்க்கமாய்ச்செய்த சகல துன்மார்க்கக் கிரியைகளினிமித்தமும் தமக்கு விரோதமாய்,

௰௫ தேவபக்தியில்லாத பாவிகள் பேசின கடினவார்த்தைகளெல்லாவற்றினிமித்தமும் அவர்களைக் கண்டிக்கும்படிக்கும் பதினாயிரமான சேனைகளாகிய தமது பரிசுத்தவான்களோடுங் கூடவருகிறாரென்று அறிவித்தான்.

௰௬ இவர்கள் முறுமுறுக்கிறவர்களுமாய் முறையிட்டுத் திரிகிறவர்களுமாய்த் தங்களிச்சைகளின்படி நடக்கிறவர்களுமாயிருக்கிறார்கள். இவர்கள் வாயினால் மிகவும் இறுமாப்பானவைகளைப் பேசி, பொழிவுக்காகப் பெரியோர்களைப் புகழுகிறார்கள்.

௰௭ பிரியமானவர்களே! நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலரால் முன்சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்துக்கொள்ளுங்கள்.

௰௮ கடைசிக்காலத்திலே தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்கிற பரியாசக்காரர் தோன்றுவார்களென்று உங்களுக்குச் சொன்னார்களே;

௰௯ இவர்களே பிரிந்துபோகிறவர்களும் ஜென்மசுபாவத்தாருந் (தேவ) ஆவியில்லாதவர்களுமானவர்கள்.

௨௰ பிரியமானவர்களே! நீங்கள் உங்களுக்குண்டாயிருக்கிற மிகவும் பரிசுத்தமான விசுவாசத்தின்மேல் உங்களைப் பொருத்திக் கட்டிக்கொண்டு,

௨௧ பரிசுத்த ஆவியைக்கொண்டு செபம்பண்ணி பராபரனுடைய அன்பிலே உங்களைக் காத்துக்கொண்டு, நித்தியசீவனுக்கேதுவாக நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய இரக்கம் வரப்பார்த்திருங்கள்.

௨௨ அல்லாமலும் வகைபறுக்கிறவர்களாய நீங்கள் சிலருக்கு இரங்கி, சிலரை அக்கினியிலிருந்து இழுத்துக்கொண்டு, பயத்தோடே இரட்சித்து, மாம்ச இச்சைகளால் அசுசிப்பட்டிருக்கிற அங்கியையும் வெறுத்துத் தள்ளுங்கள்.

௨௩ நீங்கள் வழுவாதபடிக்கு உங்களைக் காத்துக்கொள்ளுகிறதற்கும், மாசில்லாமல் மகிழ்ச்சியோடே உங்களைத் தமது மகிமையுள்ள சந்நிதானத்திலே நிறுத்துகிறதற்கும் வல்லமையுள்ளவருமாய்,

௨௪ நம்முடைய இரட்சகரான ஞானமுள்ள ஒருவராகிய தேவனுமாயிருக்கிறவருக்கு இப்பொழுதும் இனிமேலுக்கும் எல்லாக்காலங்களிலேயும் புகழ்ச்சியும் மகத்துவமும் வல்லமையும் அதிகாரமும் உண்டாயிருக்கக்கடவது.—ஆமென்.

---

தெய்வவசன

போதகராகிய இயோவானுக்கு

# வெளிப்படுத்தினவிசேஷம்.

## க. அதிகாரம்.

[(௧) முகவுரையாகப் பொது வாழ்த்துதல், (௪) யோவான் சபைகளேழுக்கும் வாழ்த்துதல்சொல்லி, (௯) தனக்குக் கிறிஸ்துநாதர் தரிசனையானதைச் சொன்னது.]

சீக்கிரமாய் நடக்கவேண்டியவைகளைப் பராபரன் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்கும்படிக்கு இயேசுக்கிறிஸ்துவுக்குக் கொடுத்ததும் இவர் வெளிப்படுத்தினதுமான விசேஷம். அவர் தம்முடைய ஊழியக்காரனாகிய யோவானிடத்திற்குத் தம்முடைய தூதனையனுப்பி, அவனுக்கிவைகளைக் குறிப்பாக்காட்டினார்.

௨ அவன் பராபரனுடைய வசனமும் இயேசுக்கிறிஸ்து சாட்சியிட்ட விசேஷமுமாகிய தான்கண்டயாவற்றையும் அறிவித்திருக்கிறான்.

௩ காலஞ்சமீபமாயிருக்கிறது. ஆகையாலிந்தத் தீர்க்கதரிசனமான வசனங்களை வாசிக்கிறவனுங் கேட்கிறவர்களும் இதிலெழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் பாக்கியவான்கள்.

௪ யோவான் ஆசியாவிலுள்ள சபைகளேழுக்கு எழுதுகிறதாவது. இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமானவராலும் அவருடைய ஆசனத்திற்கு முன்பாகவிருக்கிற ஏழு ஆவிகளாலும்,

ரு ஆகையால் நீ இப்படிப்பட்ட நிலைமையிலிருந்து விழுந்ததை நினைத்து, மனந்திரும்பி, ஆதியிலே செய்த கிரியைகளைச் செய்வாயாக. நீ மனந்திரும்பாவிட்டால், நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, உன் விளக்குத்தண்டை அதனிடத்தினின்று நீக்குவேன்.

சா நிக்கொலாவின் மார்க்கத்தாரின் கிரியைகளைப் பகைக்கிறாய். இது உன்னிடத்திலுண்டு. அவைகளை நானும் பகைக்கிறேன்.

எ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவனுக்குப் பராபரனுடைய பரதீசின் மத்தியிலிருக்கிற ஜீவ விருட்சத்தின் கனியைப் புசிக்கக் கொடுப்பேனென்கிறார் என்றெழுது.

அ சிமிருனாப்பட்டணத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவென்றால், மரித்து உயிரோடிருக்கிற முந்தினவரும் பிந்தினவருமானவர் சொல்லுகிறதாவது.

கூ உன் கிரியைகளையும் உபத்திரவத்தையும் ஐசுவரியமுள்ள உனக்கிருக்கிற தரித்திரத்தையும் தங்களை யூதரென்று சொல்லியும் யூதராயிராமல் சாத்தானுடைய ஆலயமாயிருக்கிறவர்கள் செய்கிற தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.

ய உனக்கு வருந் துன்பங்களைக் குறித்து எவ்வளவாகிலும் பயப்படாதிருப்பாயாக. கேள், நீங்கள் சோதிக்கப்படும்பொருட்டாகப் பிசாசு உங்களிற் சிலரைக் காவலிலே போடுவான். பத்து நாள் உபத்திரவப்படுவீர்கள். ஆகிலும் மரணபரியந்தம் உண்மையாயிரு. அப்பொழுது ஜீவ கிரீடத்தை உனக்குத் தருவேன்.

யக ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவன் இரண்டாம் மரணத்தாற் சேதப்படுவதில்லையென்கிறார் என்றெழுது.

யஉ பெருகமுப்பட்டணத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவென்றால், இருபுறமுங் கருக்குள்ள கட்கத்தையுடையவர் சொல்லுகிறதாவது.

யங உன் கிரியைகளையும் சாத்தானுடைய ஆசனமிருக்கிற இடத்தில் நீ குடியிருக்கிறதையும் சாத்தான் குடியிருக்கிற உங்களிடத்திலே எனக்கு உண்மையுள்ள சாட்சியாகிய அந்திப்பாவென்பவன் கொல்லப்பட்ட நாட்களிலேயும் என்னைப் பற்றும் விசுவாசத்தை மறுதலியாமல் என்னுடைய நாமத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

யச ஆகிலும் சில காரியங்களைக் குறித்து உன்மேல் விசனமாயிருக்கிறேன். விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிப்பதற்கும் வேசித்தனம்பண்ணுவதற்கும் ஏதுவான கேடுகளை இஸ்ரவேல் புத்திரர் முன்பாகச் சப்போடும்படிக்குப் பாலாக்கென்பவனுக்குப் போதனை செய்த பாலாமுடைய போதகத்தைப் பிடித்திருக்கிறவர்கள் உன்னிடத்திலிருக்கிறார்கள்.

யரு அல்லாமலும் நிக்கொலாவின் மார்க்கத்தாருடைய போதகத்தைப் பற்றிக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்திலுண்டு.

யசா ஆகையால் நீ மனந்திரும்புவாயாக. இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து என் வாயின் கட்கத்தால் அவர்களோடே யுத்தம்பண்ணுவேன்.

யஎ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவனுக்கு நான் மறைவான மன்னாவைப் புசிக்கக்கொடுத்து, அவனுக்கு வெண்மையான கல்லையும் அந்தக் கல்லின்மேல் எழுதப்பட்டதுமாய்ப் பெறுகிறவனேயன்றி வேறொருவனும் அறியாததுமாயிருக்கிற புதிய நாமத்தையுங் கொடுப்பேனென்கிறார் என்றெழுது.

யஅ தியத்தைராப் பட்டணத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவென்றால், அக்கினிச்சுவாலையைப்போன்ற கண்களும் உருக்கிய செம்பைப்போன்ற கால்களுமுள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது,

யகூ உன் கிரியைகளையும் உன் அன்பையும் உன் ஊழியத்தையும் உன் விசுவாசத்தையும் உன் பொறுமையையும் நீ பின்பு செய்த கிரியை முந்தின கிரியைகளிலும் அதிகமாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

உய ஆகிலும் (சிலவற்றைக் குறித்து) உன்மேல் விசனமாயிருக்கிறேன். என்னவென்றால் வேசித்தனம்பண்ணும்படிக்கும் விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிக்கும்படிக்கும், தன்னைத் தீர்க்கதரிசியென்று சொல்லிக்கொள்ளுகிற யேசபேலென்னும் ஸ்திரீ என்னுடைய ஊழியக்காரருக்குப் போதித்து வஞ்சிக்கிறாள். அவளுக்கு நீ இடங்கொடுக்கிறாய்.

உக அவள் மனந்திரும்பும்படியாய்க் காலத்தை அவளுக்குக் கொடுத்தேன். அவள் தன் வேசிமார்க்கத்தைவிட்டு மனந்திரும்பவில்லை.

உஉ (ஆகையால்) கேள், அவளும் அவளுடனே விபசாரஞ்செய்தவர்களும் தங்களுடைய கிரியைகளைவிட்டு மனந்திரும்பாவிட்டால், நான் அவளை ஒரு கட்டிலின்மேலும் அவர்களை மிகுந்த உபத்திரவத்திலும் போட்டு, அவளுடைய பிள்ளைகளைக் கொலைசெய்வேன்.

உங அப்பொழுது நானே உள்ளிந்திரியங்களையும் இருதயங்களையும் ஆராய்கிறவனென்று எல்லாச் சபைகளும் அறிந்துகொள்வார்கள். அல்லாமலும் உங்களில் அவ

௰ இருபத்துநாலு மூப்பர்களும் ஆசனத்தின்மேல் உட்கார்ந்தவருக்கு முன்பாக (வணக்கமாய்) விழுந்து, என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத் தொழுதுகொண்டு, தங்கள் கிரீடங்களை ஆசனத்துக்கு முன்பாக வைத்து,

௰௧ ஆண்டவரே! தேவரீர் சகலத்தையும் சிருஷ்டித்தீர். உம்முடைய சித்தத்தினாலே அவைகள் உண்டாயிருக்கிறவைகளும் சிருஷ்டிக்கப்பட்டவைகளுமாயிருக்கின்றன. ஆகையால் மகிமையையும் கனத்தையும் வல்லமையையும் பெற்றுக்கொள்ளுகிறதற்குப் பாத்திரமாயிருக்கிறீரென்று புகழுகிறார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) முத்திரிக்கப்பட்ட புஸ்தகத்தை விரித்துக்கொடுக்கிறதற்குத் தேவ ஆட்டுக்குட்டியானவர் பாத்திரரென்றும், (௬) அவர் அந்தப் புஸ்தகத்தை வாங்குகிறாரென்றும், (௮) ஜீவன்களும் மூப்பர்களும் உலகமீட்பராகிய அவரைத் தொழுதுகொண்டதையுஞ் சொல்லியது.]

௧ பின்பும் அந்த ஆசனத்திலேயிருக்கிறவருடைய வலதுகையிலே உள்ளும் புறம்பும் எழுதப்பட்டும் ஏழு முத்திரைகளாலே முத்திரிக்கப்பட்டுமிருந்த ஒரு புஸ்தகத்தைக் கண்டேன்.

௨ பலமுள்ள ஒரு தூதனையுங் கண்டேன். அவன் இந்தப் புஸ்தகத்தைத் திறக்கிறதற்கும் இதின் முத்திரைகளை உடைக்கிறதற்கும் பாத்திரவான் யாரென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௩ வானத்திலாவது பூமியின் மேலாவது பூமியின் கீழாவது ஒருவனும் அந்தப் புஸ்தகத்தைத் திறக்கவும் அதிலே நோக்கிப் பார்க்கவுங் கூடாதிருந்தது.

௪ ஒருவனும் அந்தப் புஸ்தகத்தைத் திறந்து அதிலே நோக்கிப் பார்க்கிறதற்குப் பாத்திரனாய்க் காணப்படாததினாலே நான் மிகவும் அழுதேன்.

௫ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை நோக்கி: அழவேண்டுவதில்லை. அந்தப் புஸ்தகத்தைத் திறந்து இதின் ஏழு முத்திரைகளையும் உடைக்கும்படிக்குத் தாவீதின் வேராகிய யூதா கோத்திரத்தில் தோன்றிய சிங்கம் ஜெயங்கொண்டிருக்கிறதென்றான்.

௬ அப்பொழுது நான் பார்த்தது: ஆசனத்துக்கும் நான்கு ஜீவன்களுக்கும் மூப்பர்களுக்கும் மத்தியிலே ஒரு ஆட்டுக்குட்டி நிற்கக்கண்டேன். அது அடிக்கப்பட்ட வண்ணமாகவும் ஏழு கொம்புகளையும் பூமியெங்கும் அனுப்பப்பட்ட பராபரனுடைய ஏழு ஆவிகளாகிய ஏழு கண்களையுமுடையதாகவுமிருந்தது.

௭ மேலும் அது வந்து ஆசனத்தின்மேலிருக்கிறவருடைய வலதுகையிலிருந்து புஸ்தகத்தை வாங்கிற்று.

௮ அந்தப் புஸ்தகத்தை அது வாங்கினபொழுது அந்த நான்கு ஜீவன்களும் இருபத்துநாலு மூப்பர்களுந் தங்கள் சுரமண்டலங்களையும் பரிசுத்தவான்களுடைய ஜெபங்களாகிய தூபவருக்கங்களாலே நிறைந்த பொற்கலசங்களையும் பிடித்துக்கொண்டு ஆட்டுக்குட்டிக்கு முன்பாக (வணக்கமாய்) விழுந்து,

௯ தேவரீர் அடிக்கப்பட்டு உம்முடைய இரத்தத்தினாலே சகல கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலும் தேசத்தாரிலும் (மற்ற) ஜனக்கூட்டங்களிலும் எங்களைப் பராபரனுக்காக வாங்கிக்கொண்டு,

௰ எங்களைப் பராபரனுக்கு (முன்பாக) ராஜாக்களும் ஆசாரியருமாக்கினீர். நாங்கள் பூமியிலே ஆளுகை செய்வோம். ஆகையால் நீர் இந்தப் புஸ்தகத்தை வாங்கி இதின் முத்திரைகளை உடைக்கிறதற்குப் பாத்திரராயிருக்கிறீரென்று புதிய பாட்டைப் பாடினார்கள்.

௰௧ பின்னும் நான் பார்த்தபொழுது அந்த ஆசனத்தையும் ஜீவன்களையும் மூப்பர்களையுஞ் சுற்றியிருந்த அநேக தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன். அவர்களுடைய இலக்கம் பதினாயிரம் பதினாயிரமும் ஆயிரத்தாயிரமுமாயிருந்தது.

௰௨ அவர்கள்: அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர் வல்லமையையும் ஐசுவரியத்தையும் ஞானத்தையும் பலத்தையும் கனத்தையும் மகிமையையும் ஸ்தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளுகிறதற்குப் பாத்திரராயிருக்கிறாரென்று மகா சத்தத்தோடே சொன்னார்கள்.

௰௩ அல்லாமலும் வானத்திலும் பூமியிலும் பூமியின் கீழுமிருக்கிற சிருஷ்டிகள் யாவும் சமுத்திரத்தின்மேலுள்ளவைகளும் இவைகளிலடங்கிய வஸ்துக்கள் யாவும் ஆசனத்தின்மேலுட்கார்ந்திருக்கிறவருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும் ஸ்தோத்திரமும் கனமும் மகிமையும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாவதாகவென்று சொல்லக் கேட்டேன்.

௰௪ அந்த நான்கு ஜீவன்களும் ஆமென் என்று சொன்னார்கள். மறுபடியும் அந்த இருபத்துநாலு மூப்பர்களும் (வணக்கமாய்) விழுந்து என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத் தொழுதுகொண்டார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) காற்றுகளைப் பிடித்த நான்கு தூதர்களும் பூமியைச் சேதப்படுத்துகிறதற்கு முன்னே பராபரனுடைய பணிவிடைக்காரர் முத்திரைப்போடப்பட்டதும், (௯) பெரியகூட்டந் தேவ ஆசனத்திற்கு முன்பாகச்சேர்ந்து துதிசெய்தலும், (௰௩) அந்தக்கூட்டத்தார் இன்னாரென்று காட்டினதும்.]

அவற்றிற்குப்பின்பு பூமியின் நான்கு திசைகளினிடத்திலும் நான்கு தூதர்கள் நின்று ஒருகாற்றுமிலும் பூமியின்மேலாவது சமுத்திரத்தின்மேலாவது ஒருமரத்தின்மேலாவது அடியாதபடிக்கு, பூமியின் நான்கு காற்றுகளையும் பிடித்திருக்கக்கண்டேன்.

௨ மேலுந் தேவனான பராபரனுடைய முத்திரைக்கோலையுடைய வேறொருதூதனை சூரியனுதிக்குந் திசையிலிருந்து ஏறிவரக் கண்டேன். அவன் பூமியையுஞ் சமுத்திரத்தையுஞ் சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம் பெற்ற அந்த நான்கு தூதரையும் நோக்கி,

௩ நாம் நமது பராபரனுடைய ஊழியக்காரரின் நெற்றிகளில் முத்திரைபோட்டுத்தீருமளவும் பூமியையுஞ் சமுத்திரத்தையும் மரங்களையுஞ் சேதப்படுத்தாதிருங்களென்று மிகவுஞ்சத்தமிட்டுக் கூப்பிட்டான்.

௪ மேலும் முத்திரை போடப்பட்டவர்களின் தொகையைக் கேட்டேன். இஸ்ரவேல் சந்ததியாராகிய சகலகோத்திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள் ௱௪௰௪௲ பேர்.

௫ அதாவது, யூதாகோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲. ரூபன் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. காத்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲.

௬ அசேர் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. நப்தலி கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. மனாசே கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲.

௭ சிமெயோன் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. லேவி கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲. இசக்கார் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲.

௮ செபுலோன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲. யோசேப்பு கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. பென்யமீன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲ பேர்.

௯ இவைகளுக்குப்பின்பு நான் பார்த்துச் சகல தேசத்தாரிலுங் கோத்திரங்களிலும் (மற்றச்) சனக்கூட்டங்களிலும் பாஷைக்காரரிலுமிருந்துவந்ததுமாய் ஒருவனும் எண்ணக்கூடாததுமாயிருந்த திரளான கூட்டமாகிய சனங்கள் வெள்ளை அங்கிகளைத் தரித்துத் தங்கள் கைகளிற் குருத்தோலைகளைப் பிடித்தவர்களாய் ஆசனத்திற்கு முன்பாகவும் ஆட்டுக்குட்டிக்கு முன்பாகவும் நிற்கக்கண்டேன்.

௰ மேலும் அவர்கள் இரட்சிப்பின் (கனம்) ஆசனத்தின்மேலிருக்கிற எங்கள் பராபரனுக்கும் ஆட்டுக்குட்டியானவருக்குஞ் செலுத்தப்படக்கடவதென்று மிகவுஞ் சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௧ அல்லாமலுந் தூதர்கள் யாவரும் ஆசனத்தையும் மூப்பரையும் நான்கு ஜீவன்களையுஞ் சூழ்ந்து நின்று, ஆசனத்திற்கு முன்பாகச் சாஷ்டாங்கமாய் விழுந்து, பராபரனைத் தொழுதுகொண்டு,

௰௨ ஆமென், எங்கள் பராபரனுக்குத் துதியும் மகிமையும் ஞானமுந் தோத்திரமுங் கனமும் வல்லமையும் பெலனும் என்றென்றைக்கு முண்டாகக் கடவது ஆமென் என்றார்கள்.

௰௩ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை நோக்கி, வெள்ளை அங்கிகளைத் தரித்திருக்கிற இவர்கள் ஆர்? எங்கேயிருந்து வந்தார்களென்று கேட்டான்.

௰௪ அதற்கு நான் என்னுடையவனே! அது உமக்குத் தெரியுமென்றேன். அப்பொழுது அவன் சொன்னதாவது. இவர்கள் மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்தவர்கள். இவர்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவருடைய இரத்தத்திலே தோயத்து வெளுத்தவர்கள்.

௰௫ ஆனபடியால் இவர்கள் பராபரனுடைய ஆசனத்திற்கு முன்பாக இருந்து இரவும் பகலும் அவருடைய ஆலயத்திலே அவருக்குப் பணிவிடை செய்வார்கள். ஆசனத்தின்மேலிருக்கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயிருப்பார்.

௰௬ இனி இவர்கள் பசியடைவதுமில்லை. தாகம் அடைவதுமில்லை. வெயிலாவது மற்றெந்த உட்டிணமாவது அவர்கள்மேற்படுவதுமில்லை.

௰௭ ஆசனத்தின் மத்தியிலிருக்கிற ஆட்டுக்குட்டியானவரே அவர்களை மேய்த்து அவர்களைச் சீவத்தண்ணீருள்ள ஊற்றுகளினிடத்திற்கு நடத்துவார். இவர்களுடைய கண்ணீர்யாவையும் பராபரன் துடைப்பாரென்றான்.

## ௮. அதிகாரம்.

[(௧) ஏழாமுத்திரை பேர்க்கப்பட்டபொழுது எக்காளங்களையுடைய ஏழு தூதர்கள் தோன்றினதும், (௩) வேறொரு தூதன் சகலசுத்தருள்ள தூபவருக்க அக்கினியைப் பூமியிலே கொட்டினதும், (௭) முதலாந்தூதன் ஊதினபொழுது கல்மழை

டபோலவும அவனுடைய காலகள அககி
னிதூணகளைபபோலவுமிருநதன.

௨ மேலும விரிககபபடட ஒருசினனபபுத
தகததை அவனதனகையிறபிடிததுககொ
ணடு, தனனுடைய வலதுபாதததைச சமு
ததிரததினமேலும இடதுபாதததைத
தரையினமேலும வைதது,

௩ சிஙகம முழஙகுகிறதுபோல மிகவுஞ
சததமிடடுககூபபிடடான. அவன கூபபி
டடபொழுது, ஏழு இடிகளுந தஙகள சத
தஙகளை முழககின.

௪ அவவேழு இடிகளுந தஙகள சததங
களை முழககினபொழுது, நான (அதை)
எழுதவேணடுமெனறிருநதேன. அபபொ
ழுது ஏழு இடிமுழககஙகள சொனனவைக
ளை நீ எழுதாமல முததிரைபபடுதது என
று வானததிலிருநது ஒரு சததமுணடாகக
கேடடேன.

௫ அனறியும நான சமுததிரததினமேலு
நதரையினமேலும நிறககககணட தூதன
தனனுடைய கையை வானததிறகு நேராக
உயரததி இனியுககாலம(வா) இலலை.

௬ பராபரன தமமுடைய ஊழியககா
ராகிய தீர்ககதரிசிகளுககுச சுவிசேஷமா
யறிவிததபடி, ஏழாந தூதன எககாளத
தை ஊதுஞ்சததததின நாள்களிலே அவரு
டைய இரகசியம நிறைவேறுமெனறு,

௭ வானததையும அதிலுளளவைகளை
யும பூமியையும அதிலுளள வைகளையுஞ
சமுததிரததையும அதிலுளள வைகளையு
ணடாககினவராயும எனறெனறைககும
பிழைககிறவராயுமிருககிறவர்மேலே ஆணை
யிடடுக (கூபபிடடான.)

௮ பினபு நானகேடடபடி வானததிலி
ருநது சததமிடடவன மறுபடியும எனனு
டனேசொனனது. சமுததிரததினமேலுந
தரையினமேலும நிறகிற தூதனுடையகை
யிலிருககிற விரிககபபடட சினனபபுததக
ததை நீபோய வாஙகிககொளளெனறான.

௯ அநதபபடி நான தூதனிடததிறபோ
ய இநதச சினனபபுததகததை எனககுக
கொடுககவேணடுமெனறேன. அபபொழு
து அவன எனனைநோககி, நீ இதையெடுத
துவிழுஙகிககொள. உனவயிறறிறகு இதுகச
ககபபணணும. ஆகிலும உனவாயககு இது
தேனைபபோல மதுரமாயிருககுமெனறான.

௰ அபபடி நான அநதச சினனபபுததக
ததைத தூதனுடைய கையிலவாஙகி அதை
விழுஙகிககொணடேன. எனவாயககு அது
தேனைபபோலம துரமாயிருநதது நானதை
விழுஙகினபினபு எனவயிறு மிகுநத நோவு
படடது.

௰க அபபொழுது அவன எனனுடனே
சொனனது. நீ மறுபடியும அநேக ஜனங
கூடடஙகளையுந தேசததாரையும பாஷை
ககாரரையும இராசாககளையுங குறிததுத தீர்
ககதரிசனஞசொலலவேணடுமெனறான.

## ௰க. அதிகாரம்.

[(க) தேவாலயததையளநதுபார்ககும படி
இடப்போவானஉததரவுபெறறதும், (௩)இர
ணடுசாட்சிகள தீர்ககதரிசனஞசொலலி
பினபுகொலைசெயயபபடடு, (௰க)மறு
படியும உயிரடைநதுபரமணடலததிற
கேறினதும (௰௩) அபபொழுதுபூமிக
வும அதிர்நததும, (௰௪) இரணடாமவ
தனையுணடானதும, (௰௫) ஏழாமதூதன
ஊதினபொழுதுவிணணுலோர்வாழததுதல
செயததும, (௰௬) இருபததுநாலுமூப
ர்களுந தோததிரஞசெயததும, (௰௯)
தேவாலயநதிறககபபடடதும.]

பினபு ஒருததடிககொபபான அளவுகோ
லை (யொருவன) எனககுககொடுததுச்சொ
னனதாவது. நீ எழுநது பராபரனுடைய
ஆலயததையும பலிபீடததையும அதிலே
தொழுதுகொளளுகிறவர்களையும அளந
துபார்ததுககொள.

௨ ஆலயததிறகுபபுறமபேயிருககிறபிர
காரம புறதேசததாருககுககொடுககபப
டடபடியால அதையளவாமலதளளிவாயா
க. பரிசுததபபடடினததையவர்கள நாற்ப
தது இரணடுமாதமளவுமமிதிபபார்கள.

௩ ஆகிலும எனனுடைய இரணடுசாட்
சிகளும இரடடுசசேலையுடுததிககொணடி
ருககிறவர்களாய் ஆயிரதது இருநூறறறு
பதுநாளளவும தீர்ககதரிசனஞ சொலலு
மபடிககு அவர்களுககு அதிகாரததைக
கொடுபபேன.

௪ அவர்களே பூமியின ஆணடவருககு மு
னபாக நிறகிற இரணடொலிவமரஙகளும
இரணடுவிளககுததணடுகளுமானவர்கள.

௫ ஒருவன அவர்களைசசேதபபடுததவி
ருமபினால, அவர்களுடைய வாயிலிருநது
அககினிபுறபபடடு அவர்களுடைய சதது
ருககளைபபட்சிககும. அவர்களைசசேதபப
டுததவிருமபுகிறவனெவனோ அவனபப
டியேசாகவேணடும.

௬ அவர்கள தீர்ககதரிசனஞ சொலலிவ
ருகிற நாள்களிலே மழைபெய்யாதபடிககு
வானததையடைககிறதறகு அதிகாரமுடை
யவர்கள. மேலும அவர்கள தணணீர்களை
யிரததமாகமாறறுகிறதறகும எககாலததி
லேயுநதஙகள இஷடபபடிபூமியைசசகல
விதவாதைகளாலுமடிககிறதறகும அதி
காரமுடையவர்கள.

௭ மேலும அவர்கள தஙகள சாட்சியை
முடிககுமபொழுது, பாதாளததிலிருநதே
றுகிறமிருகம அவர்களோடேயுததமபண
ணி, அவர்களைசசெயிதது அவர்களைககொ
லைசெயயும.

௨௰ பட்டணத்திற்குப் புறம்பேயுள்ள அந்தத் திராட்சத்தொட்டியிலே மிதிக்கப்பட்டது. அந்தத் திராட்சத்தொட்டியிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதிதூரத்திற்கு இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்கள் மட்டும் வந்தது.

## ௰௫. அதிகாரம்.

[(௧) கடைசியான ஏழு வேதனைகளைச் செலுத்துகிற ஏழு தூதர்களுந் தோன்றினதும், (௨) மிருகத்தைச் ஜெயித்தவர்கள் பாட்டைப் பாடினதும், (௫) வானத்திலே தேவாலயந் திறக்கப்பட்டதும், (௭) அந்தத் தூதர்களுக்கு ஏழு பாத்திரங்கள் கொடுக்கப்பட்டதும்.]

பின்பு வானத்திலே பெரிதும் ஆச்சரியமுமான வேறொரு அடையாளமாகிய ஏழு கடைசி வாதைகளையுடைய ஏழு தூதர்களைக் கண்டேன். அவைகளாற் பராபரனுடைய கோபம் முடிகிறபடியால் (அவைகளே கடைசி வாதைகள்.)

௨ அன்றியும் அக்கினிகலந்த பளிங்கான கடலுக்கொப்பானதையும் மிருகத்திற்கும் அதின் சொரூபத்திற்கும் அதின் அடையாளத்திற்கும் அதின் நாமத்து இலக்கத்திற்கும் முன்பாக ஜெயங்கொண்டவர்கள் தேவசுரமண்டலங்களைப் பிடித்துக்கொண்டு பளிங்கான கடற்கரையிலே நிற்கிறதையுங் கண்டேன்.

௩ அவர்கள் பராபரனுடைய ஊழியக்காரனாகிய மோசேயின் பாட்டையும் ஆட்டுக்குட்டியின் பாட்டையும் பாடுகிறார்கள். எப்படியெனிற் சருவ வல்லமையுள்ள தேவனாகிய பராபரனே! தேவரீருடைய கிரியைகள் பெருமையும் ஆச்சரியமுமானவைகள். உலகத்தாரின் இராசாவே! தேவரீருடைய வழிகள் நீதியுஞ் சத்தியமுமானவைகள்.

௪ கர்த்தாவே ஆர் உமக்குப் பயப்படாமலும், உமது நாமத்தைத் துதியாமலுமிருக்கலாம்? என்னத்தினாலெனில் நீரொருவரே பரிசுத்தமுள்ளவர். உலகத்தாரெல்லாரும் வந்து உமக்கு முன்பாக நமஸ்காரஞ்செய்வார்கள். உம்முடைய நியாயத்தீர்ப்புகள் வெளியரங்கமாயினவென்றார்கள்.

௫ இவைகளுக்குப் பின்பு நான் கண்டதாவது. பரமண்டலத்திலே சாட்சியையுடைய கூடாரமாகிய ஆலயந் திறக்கப்பட்டது.

௬ அந்த ஆலயத்திலிருந்து ஏழு வாதைகளையுடைய அவ்வேழு தூதர்கள் சுத்தமும் பிரகாசமுமான புடவையைத் தரித்து, மார்புகளிற் பொற்கச்சைகளைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள்.

௭ அல்லாமலும் அந்த நான்கு சீவன்களிலொன்று என்றென்றைக்குமிருக்கிற பராபரனுடைய கோபாக்கினையால் நிறைந்த பொற் கலயங்களேழையும் அவ்வேழு தூதர்களுக்குங் கொடுத்தது.

௮ அப்பொழுது தேவாலயமானது பராபரனுடைய மகிமையாலும் அவருடைய வல்லமையாலும் பிறந்த புகையினாலே நிரப்பப்பட்டது. (ஆதலால்) ஏழு தூதர்களுடைய ஏழு வாதைகளும் முடியுமளவும் ஒருவரும் தேவாலயத்துக்குட் பிரவேசிக்கக்கூடாததாயிருந்தது.

## ௰௬. அதிகாரம்.

[(௧) முதலாந்தூதன் தன்பாத்திரத்திலுள்ள வேதனையைப் பூமியின்மேலும், (௩) இரண்டாந்தூதன் தன்னுடையதைச் சமுத்திரத்தின்மேலும், (௪) மூன்றாந்தூதன் தன்னுடையதை ஆறுகளின்மேலும் நீரூற்றுக்களின்மேலும், (௮) நான்காந்தூதன் தன்னுடையதைச் சூரியன்மேலும், (௰) ஐந்தாந்தூதன் தன்னுடையதை மிருகத்தின் ஆசனத்தின்மேலும், (௰௨) ஆறாந்தூதன் தன்னுடையதை ஐபிராத்து நதியின்மேலும் ஊற்றினதும், (௰௩) மூன்று அசுத்த ஆவிகள் புறப்பட்டதும், (௰௭) ஏழாந்தூதன் தன்னுடையதை ஆகாசத்தின்மேல் ஊற்றினபொழுது பெரிய பட்டணம் இடிந்துபோனதும்.]

அப்பொழுது தேவாலயத்திலிருந்துண்டான பெரிய சத்தம் அந்த ஏழு தூதருடனே, நீங்கள் போய்ப் பராபரனுடைய கோபாக்கினையுள்ள கலயங்களைப் பூமியின்மேல் ஊற்றுங்களென்று சொல்லக் கேட்டேன்.

௨ அந்தப்படி முதலாந் (தூதன்) போய்த் தன் கலயத்திலுள்ளதைத் தரையின்மேல் ஊற்றினான். உடனே மிருகத்தின் அடையாளத்தையுடையவர்களும் அதின் சொரூபத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களுமாகிய மனிதர்களிற் பொல்லாத கொடிய பரு உண்டாயிற்று.

௩ பின்பு இரண்டாந்தூதன் தன் கலயத்திலுள்ளதைச் சமுத்திரத்திலே யூற்றினான். உடனே அது செத்தவனுடைய இரத்தம்போலாயிற்று. சமுத்திரத்திலுள்ள பிராணிகளியாவுஞ் செத்துப்போயின.

௪ பின்பு மூன்றாந்தூதன் தன் கலயத்திலுள்ளதை யாறுகளிலும் நீரூற்றுக்களிலும் ஊற்றினான். உடனே அவைகள் இரத்தமாயின.

௫ அப்பொழுது சலங்களின் தூதனானவன் இருக்கிறவரும் இருந்தவருமாகிய பரிசுத்தரே! தேவரீர் இப்படி நியாயந்தீர்த்ததால், நீதியுள்ளவராயிருக்கிறீர்.

௨௧ அப்பொழுது பலமுள்ள தூதனொருவன் பெரிய ஏந்திரக்கல்லைப்போலொத்த ஒருகல்லையெடுத்துச் சமுத்திரத்திலேயெறிந்து சொன்னதாவது. இப்படியே மகாப்பட்டணமாகிய பாபிலோன் வேகமாய்த்தள்ளுண்டு இனிக்காணப்படாமற்போம்.

௨௨ சுரமண்டலக்காரரும் கீதவாத்தியக்காரரும் நாகசுரக்காரரும் எக்காளக்காரருமானவர்களுடைய சத்தம் இனி உன்னிடத்திலேகேட்கப்படுவதுமில்லை. எந்தத்தொழிலாளியும் இனி உன்னிடத்திற்காணப்படுவதுமில்லை. ஏந்திரத்தின் சத்தம் இனி உன்னிடத்திற்கேட்கப்படுவதுமில்லை.

௨௩ விளக்குவெளிச்சம் இனி உன்னிடத்திற்பிரகாசிப்பதுமில்லை. மணவாளனும் மணவாட்டியுமானவர்களுடைய சத்தம் இனி உன்னிடத்திலேகேட்கப்படுவதுமில்லை. உன்வியாபாரிகள் பூமியிற்பெரியோர்களானபடியினாலும் உன் சூனியத்தால் எல்லாத்தேசத்தாரும் வஞ்சிக்கப்பட்டபடியினாலும் (அப்படியேயாம்.)

௨௪ தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும் பரிசுத்தவான்களுடைய இரத்தமும் பூமியின்மேற்கொலைப்பட்ட அனைவருடைய இரத்தமும் அதினிடத்திலே காணப்பட்டதென்றான்.

## ௧௯. அதிகாரம்.

[(௧) விண்ணோரெல்லாருஞ் சந்தோஷமாய்ப் பாடித்தொழுதுகொண்டதும், (௭) ஆட்டுக்குட்டியானவருடைய கலியாணத்தைக்குறித்துச் சொன்னதும், (௰) யோவான் அந்தத்தூதனைத்தொழுதுகொண்டிருக்கையிலே கடிந்துகொள்ளப்பட்டதும், (௰௧) வானந்திறக்கப்பட்டுக் கிறிஸ்துநாதர் மகிமையோடே தோன்றினதும், (௰௭) சூரியனில் நின்றதூதன் கூப்பிட்டதும், (௰௯) மிருகமும் அதைச்சேர்ந்தவர்களும் யுத்தம்பண்ணி நரகத்திலே தள்ளப்பட்டதும்.]

இவைகளுக்குப்பின்பு பரமண்டலத்திலே திரளான கூட்டம் இரைச்சலைப்போன்ற ஒருசத்தத்தைக்கேட்டேன். என்னவென்றால்,

௨ தன்வேசித்தனத்தினாலே பூமியைக் கெடுத்தபெரியவேசிக்கு நம்முடையபராபரன் நியாயத்தீர்ப்புக்கொடுத்துத் தம்முடைய ஊழியக்காரரின் இரத்தத்திற்காக அவளிடத்திற்பழியைவாங்கினதினாலே அவருடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமுள்ளவைகளாகையால் அல்லேலூயா இரட்சணியமும் மகிமையுங் கனமும் வல்லமையும் அவருக்குண்டாயிருக்கின்றனவென்பதே.

௩ மறுபடியும் அல்லேலூயா அவளுடைய புகை என்றென்றைக்கும் எழும்புமென்றார்கள்.

௪ அல்லாமலும் இருபத்துநான்குமூப்பரும் நான்குஜீவன்களும் (வணக்கமாய்) விழுந்து ஆமென். அல்லேலூயா வென்று சொல்லி ஆசனத்தின்மேல் உட்கார்ந்த பராபரனைத்தொழுதுகொண்டார்கள்.

௫ மேலும் நம்முடைய பராபரனுடைய ஊழியக்காரரே! அவருக்குப்பயப்படுகிற சிறியோரும்பெரியோருமானவர்களே! நீங்கள் யாவரும் அவரைத் துதியுங்களென்றொருசத்தம் ஆசனத்திலிருந்துபுறப்பட்டது.

௬ அப்பொழுது திரளானசனங்களுடைய சத்தம்போலவும் பெருவெள்ள இரைச்சல்போலவும் பலத்த இடிமுழக்கம்போலவும் ஒருசத்தமுண்டாகக்கேட்டேன். என்னவென்றால் சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரன் இராச்சியம்பண்ணுகிறார். ஆகையால் அல்லேலூயா,

௭ ஆட்டுக்குட்டியினுடைய கலியாணம் வந்தது. அவருடைய மனைவி தன்னை ஆயத்தம்பண்ணினாள். சுத்தமும் பிரகாசமுமான மெல்லியபுடவையைத் தரித்துக்கொள்ளும்படி அவளுக்கு அளிக்கப்பட்டது. ஆகையால் நாம் சந்தோஷப்பட்டுக்களிகூர்ந்து அவருக்குத் துதியைச்செலுத்தக்கடவோமென்பதே.

௮ மெல்லியபுடவை பரிசுத்தவான்களுடைய நீதிகளே!

௯ பின்னும் அவன் என்னுடனே சொன்னது. ஆட்டுக்குட்டியின் கலியாணவிருந்துக்கழைக்கப்பட்டவர்கள் பாக்கியவான்களென்றெழுதென்றான். பின்னும் இவைகள் பராபரனுடைய சத்தியமான வார்த்தைகளாயிருக்கின்றனவென்று என்னுடனே சொன்னான்.

௰ அப்பொழுது அவனைத் தொழுதுகொள்ளும்படி அவனுடைய பாதங்களுமுன்பாக விழுந்தேன். அவன் என்னுடனே சொன்னது. இப்படிச்செய்யாதபடிக்குப்பார். நான் உன்னோடும் இயேசுவின் சாட்சியையுடைய உன் சகோதரரோடுங்கூட ஊழியக்காரனாயிருக்கிறேன். பராபரனைத் தொழுதுகொள். இயேசுவின் சாட்சி தீர்க்கதரிசனத்தின் ஆவியாயிருக்கிறதேயென்றான்.

௰௧ பின்பு நான் வானந்திறந்திருக்கக்கண்டேன். உடனே இதோ, ஒருவெள்ளைக்குதிரை தோன்றிற்று. அதின்மேலிருந்தவர் உண்மையுஞ்சத்தியமுமுள்ளவரென்னப்பட்டு

௬ முதலாவது உயிர்த்தெழுந்திருக்குதலுக்குப் பங்குள்ளவன் பாக்கியவானும் பரிசுத்தனுமாயிருக்கிறான். அவர்கள்மேல் இரண்டாம் மரணம் அதிகாரத்தையடைவதில்லை. அவர்கள் பராபரனுக்குங் கிறிஸ்துவுக்கும் முன்பாக ஆசாரியராயிருந்து அவரோடேகூட ஆயிரம் வருஷம் இராச்சியம்பண்ணுவார்கள்.

௭ அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்பொழுது சாத்தான் தன் காவலிலிருந்து விடுதலையாகி,

௮ பூமியின் நான்கு திசைகளிலுமுள்ள தேசத்தாராகிய கோகையும் மாகோகையும் மருளுவிக்கும்படியாகவும் அவர்களை யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படியாகவும் புறப்படுவான். அவர்களுடைய இலக்கங் கடற்கரைமணலவ்வளவாயிருக்கும்.

௯ அவர்கள் பூமியினுடைய விசாலத்தின்மேல் ஏறிவந்து, பரிசுத்தவான்களுடைய பாளயத்தையும் பிரியமான பட்டினத்தையும் வளைந்துகொண்டார்கள். அப்பொழுது பராபரனால் வானத்திலிருந்து அக்கினி இறங்கி அவர்களைப் பட்சித்துப்போட்டது.

௰ மேலும் அவர்களை வஞ்சித்த பசாசானவன் மிருகமுங் கள்ளத்தீர்க்கதரிசியுமிருக்கிற அக்கினியுங் கந்தகமுமான கடலிலே தள்ளப்பட்டான். (அங்கே) அவர்கள் என்றென்றைக்கும் இரவும் பகலும் வாதிக்கப்படுவார்கள்.

௧௧ பின்பு நான் பெரிய வெள்ளை ஆசனத்தையும் அதின்மேலிருக்கிறவரையுங் கண்டேன். அவருடைய சமுகப்பார்வையாற் பூமியும் வானமும் விலகியோடிப்போயின. அவைகளுக்கிடங் காணப்படவில்லை.

௧௨ அன்றியும் மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் ஆசனத்திற்கு முன்பாக நிற்கக்கண்டேன். அப்பொழுது புஸ்தகங்கள் விரிக்கப்பட்டன. சீவனுக்கேதுவான வேறொரு புஸ்தகமும் விரிக்கப்பட்டது. அப்பொழுது மரித்தோர்கள் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்கதாகப் புஸ்தகங்களிலெழுதப்பட்டவைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.

௧௩ சமுத்திரந் தன்னிலுள்ள மரித்தோரைத் தந்தது. மரணமும் மரித்தோர் ஸ்தலமுந் தங்களிலுள்ள மரித்தோரைத் தந்தன. யாவருந் தங்கள் தங்கள் கிரியைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.

௧௪ பின்பு மரணமும் மரித்தோர் ஸ்தலமும் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன. அதுவே இரண்டாம் மரணமாம்.

௧௫ சீவனுக்கேதுவான புஸ்தகத்திலே யெழுதப்பட்டவனாய்க் காணப்படாதவன் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டான்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) புதியவானமும் புதியபூமியுந் தோன்றினதும், (௯) ஒரு தூதன் ஆட்டுக்குட்டியானவருடைய மனையாட்டியாகிய எருசலேமையவனுக்குக் காட்டினதும்.]

௧ அன்றியும் முந்தினவானமும் முந்தினபூமியும் ஒழிந்துபோயிற்றே. சமுத்திரமுமில்லாமற்போயிற்றே. பின்பு நான் புதியவானத்தையும் புதியபூமியையுங் கண்டேன்.

௨ அல்லாமலும் புதிய எருசலேமாகிய பரிசுத்தப்பட்டினத்தைப் பராபரனாற் பரமண்டலத்திலிருந்து இறங்கக்கண்டேன். அது தன்புருஷனுக்காக அலங்காரமாக்கப்பட்ட மணவாட்டியைப்போல எத்தனமாக்கப்பட்டிருந்தது.

௩ மேலும் பரமண்டலத்திலிருந்துண்டான ஒரு பெரிய சத்தத்தைக் கேட்டேன். அதென்னவென்றால், பாருங்கள். மனிதர்களிடத்திலே பராபரனுடைய கூடாரமிருக்கிறது. அவர்களிடத்திலே அவர் வாசமாயிருப்பார். அவர்களும் அவருடைய சனங்களாயிருப்பார்கள். பராபரன்தாமே அவர்களோடேகூடவிருந்து அவர்களுக்குத் தேவனாயிருப்பார்.

௪ அவர்களுடைய கண்ணீர்யாவையும் பராபரன் துடைப்பார். முந்தினவைகள் போனபடியினாலே இனிமேல் மரணமுமில்லை துக்கமுமில்லை அலறுதலுமில்லை வருத்தமுமில்லையென்பதே.

௫ அன்றியும் ஆசனத்தின்மேலிருக்கிறவர் சொன்னது, பாருங்கள். நான் சகலத்தையும் புதிதாக்குகிறேனென்றார். பின்னும் அவர் என்னுடனே சொன்னது. இந்த வசனங்கள் சத்தியமும் உண்மையுமானவைகளாகையால் (அவைகளை) யெழுது என்றார்.

௬ பின்னும் அவர் என்னுடனே சொன்னதாவது. ஆயிற்று. நான் அல்பாவும் ஒமேகவுமாகிய ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். தாகமாயிருக்கிறவனுக்கு நான் சீவநீரூற்றில் (தண்ணீரைக்) கைமாறில்லாமற் கொடுப்பேன்.

௭ செயங்கொள்ளுகிறவன் இவைகளைச் சுதந்தரித்துக்கொள்வான். நான் அவனுக்குத் தேவனாயிருப்பேன்.

௮ அவன் எனக்குக் குமாரனாயிருப்பான். பயப்படுகிறவர்களும் அவிசுவாசிகளும் அருவருக்கப்பட்டவர்களுங் கொலைபாதகரும் வேசிமார்க்கருஞ் சூனியக்காரரும் விக்கிரக ஆராதனைக்காரருஞ் சகலவித பொய்யருமானவர்கள் இரண்டாம் மரணமாகிய அக்கினியுங் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கையடைவார்களென்றார்.

௯ பின்பு ஏழு கடைசி வாதைகளால் நிறைந்த ஏழு கலசங்களையுடைய அந்த

